ஸ்ரீ

# பகவத்விஷயம்

## மூன்றும் பத்து

## திருவாய்மொழி மூலமும்

ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி,
இருபத்திநாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யாநங்களும்,
சீயர்அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு, த்ரவிடோபநிஷத்ஸங்கதி,
த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி, திருவாய்மொழிநூற்றந்தாதி இவைகளுடன்

---

சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு.

---

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியராலும்,
அ. வீ. நரஸிம்மாசாரியராலும்
பரிசோதிக்கப்பெற்றது.

---


திருவல்லிக்கேணி.
நோபில் அச்சுக்கூடம்.

ரக்தாக்ஷி (வருஷ)] [1924.

சே. கிருஷ்ணமாசாரியர்,

தமிழ்ப்பண்டிதர், ப்ரொப்ரைடர்,

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய புஸ்தகசாலை,

19, தென்னண்டை மாடவீதி,

திருவல்லிக்கேணி, சென்னை.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## மூன்றாம்பத்து.

### முதல்திருவாய்மொழி—முடிச்சோதி : ப்ரவேஶம்.

### ஒன்பதினாயிரப்படி.

மூன்றாம்பத்தில் முதல்திருவாய்மொழியில் இப்படி திருமலையின் போக்யதையை அநுபவித்த ஆழ்வார் வேதங்கள் வைதிகபுருஷர்கள் ப்ரஹ்மருத்ரர்கள் தொடக்கமானாருடைய ஸ்தோத்ராதிகளுக்கு அபூமியாய், ஸமாஶ்ரிதர்க்கு அத்யந்தபராதீநராய் "வடமாமலையுச்சி" என்னுமாபோலே திருமலைக்கு அவயவமாயிருப்பதொரு கல்பகதருபோலேயிருக்கிற அழகருடைய அபரிச்சேத்யமான ஸௌந்தர்யாதிகளை அநுபவித்து விஸ்மிதராகிறார்.

### பன்னீராயிரப்படி.

மூன்றாம்பத்தில், கீழிரண்டுபத்தாலும் - ப்ராப்யமான ப்ரஹ்மஸ்வரூபத்தினுடைய ஶேஷித்வஸித்தமான ரக்ஷகத்வபோக்யத்வங்கள் சொல்லிற்றாய், அநந்தரம் மூன்றாம்பத்தாலும் நாலாம்பத்தாலும் - ப்ராப்தாவான ப்ரத்யகாத்மஸ்வரூபத்தினுடைய பகவதேகஶேஷத்வஸித்தமான ததேகாநுபவத்வமும் ததேகப்ரியத்வமும் சொல்லுகிறது. அதில் ததேகாநுபவத்வபரமான இம்மூன்றாம்பத்தில் - பகவச்சேஷித்வபாரம்யஸித்தமான ஆத்மஶேஷத்வத்தினுடைய ஸ்வாபாவிகத்வத்தையும், அதுக்குவிரோதியான தேஹஸம்பந்தாதி நிவர்த்தநீயமென்னுமிடத்தையும், நிவ்ருத்தவிரோதிகனுக்கு ஶேஷவ்ருத்திப்ரகாரம் ப்ரார்த்தநீயமென்னுமிடத்தையும், ஶேஷியினுடைய ஸர்வாத்மபாவப்ரயுக்தமான சேதநனுடைய அப்ருதக்ஸித்தப்ரகாரத்வம் ஶேஷத்வவேஷமென்னுமிடத்தையும், ஏவம்வித ஶேஷத்வரஸத்தால் வந்த ப்ரேமவிகாரத்தையும், ஶேஷத்வப்ரதிஸம்பந்தி அர்ச்சாவதாரபர்யந்தமென்னுமிடத்தையும், தச்சேஷத்வாபிவ்ருத்திரூபமான ததீயஶேஷத்வகாஷ்டையையும், ததீயபாரதந்த்ர்ய நிதாநமான ததநுபவாபிநிவேஶத்தையும், அநுபவவிஶேஷமான வாசிகாநுபவ வைலக்ஷண்யத்தையும், ஸர்வப்ரகாராநுபவஸித்தமான ஸமஸ்தவிரோதிநிவ்ருத்தியையும் அருளிச்செய்து, இச்சேதநனுடைய பகவதேகாநுபவத்வத்தை ப்ரதிபாதிக்கிறார்.

இதில், முதல்திருவாய்மொழியில் - ஶேஷத்வத்தினுடைய ஸ்வாபாவிகத்வத்துக்கு மூலமான ஶேஷியினுடைய ஸர்வப்ரகாரபாரம்யத்தை ப்ரதிபாதிப்பதாக, தெற்குத் திருமலையிலே

கைங்கர்ய ப்ரதிஸம்பந்திதயா ஸந்நிஹிதரான அழகருடைய திவ்யஸௌந்தர்யத்தை அபரோக்ஷித்து ஆபரணாவயவ ஶோபையினுடைய ஸங்கடிதத்வத்தையும், உஜ்ஜ்வலமான ஸௌந்தர்யத்தினுடைய உபமாநராஹித்யத்தையும், ஸர்வப்ரகார ஔஜ்ஜ்வல்யத்தாலுண்டான ஸர்வேஶ்வரத்வத்தையும், அந்தப்பாரம்யத்தினுடைய போக்யதாதிஶயத்தையும், இந்தவைலக்ஷண்யத்தினுடைய வாசாமகோசர மாஹாத்ம்யத்தையும், ஸமஸ்தவேதங்களாலும் ஸாகல்யோக்தி பண்ணவொண்ணாமையையும், அதிஶயிதஜ்ஞாநரான ப்ரஹ்மருத்ராதி தேவதாவர்க்கமும் சொல்லநினைத்தாலும் அவ்வௌஜ்ஜ்வல்யத்துக்கு மாலிந்யாவஹமென்னுமிடத்தையும், அபூர்வனாய் அதிஶயிதஜ்ஞாநனாயிருப்பானொரு ப்ரஹ்மா தலைப்படிலும் அதேஜஸ்கரமென்னுமிடத்தையும், ஆஶ்ரிதவாத்ஸல்யாதிஶயத்துக்கு ஸங்கல்பமுகத்தாற் பண்ணும் ஸம்ஶ்ரிதரக்ஷணபாரம்யமும் திரஸ்காரகரமென்னுமிடத்தையும், ஏவம்விதமான பாரம்யத்தை அறிந்து ஈஶ்வராபிமாநிகளும் ஆஶ்ரயிக்கை ஏற்றமல்லவென்னுமிடத்தையும் அருளிச்செய்து, பரமஶேஷியான ஈஶ்வரன் ஸந்நிதியிலே தச்சேஷத்வத்தினுடைய ஸ்வாபாவிகத்வத்தை உபபாதித்தருளுகிறார்.

## இருபத்திநாலாயிரப்படி.

மூன்றாம்பத்தில், முதல்திருவாய்மொழியில் - திருமலையில் போக்யதையை அநுபவியாநிற்கச்செய்தே "வடமாமலையுச்சி" என்னுமாபோலே திருமலைக்கு அவயவபூதமாயிருப்பதொரு கல்பகதரு பணைத்துப் பூத்தாற்போலேயிருக்கிற அழகருடைய நிரதிஶயஸௌந்தர்யத்தையும் ஆபரணச்சேர்த்தியையும் வேதங்கள் வைதிக புருஷர்கள் ஜ்ஞாநாதிகரான ப்ரஹ்மருத்ரர்கள் தொடக்கமானாருடைய ஸ்தோத்ரங்களுக்கு அபூமியான மேன்மையையும் அவற்றையும் விளாக்கொலைகொள்ளும்படியான ஆஶ்ரிதபாரதந்த்ரியத்தையும் அநுபவித்து விஸ்மிதராகிறார்.

"அந்தாமத்தன்பி"லும் அழகு சொல்லிற்று; இங்கும் அழகாயிராநின்றது. இரண்டுக்கும் வாசியென்? என்னில்,—"ஆடியாடி"க்கு அநந்தரமாகையாலே "ஸ்ரக்பூஷாம்பரமயதாயதந்ததாநக:" (ஸ்ரக்பூஷாம்பரமயதாயதந்ததாநக:) என்று அடைவுகெட ஒப்பித்து வந்த அழகாயிற்று அங்கு; ஆழ்வாரோடே அநுபவிக்கைக்காக அடைவுபட ஒப்பித்துவந்த அழகு இங்கு. இவ்வழகினுடைய ஸங்கடிதத்வத்தை அநுபவித்து விஸ்மிதராகிறார்.

## ஈடு முப்பத்தாறாயிரப்படி.

*'பொருளென்றிவ்வுலகம்படைத்தவன்புகழ்மேல் மருளில்வண்குருகூர்வண்சடகோபன்' என்று அவன் கல்யாணகுணவிஷயமாக அஜ்ஞாநமில்லை யென்றார் கீழில்திருவாய்மொழியில்; அந்த குணாதிகவிஷயந்தன்னில் ஓரஜ்ஞாநம் அநுவர்த்திக்கிறபடி சொல்லுகிறார் இதில். கீழ்ச்சொன்ன அஜ்ஞாநத்துக்கு அடி கர்மமாயிருக்கும்; இங்குத்தை அஜ்ஞாநத்துக்கு அடி விஷயவைலக்ஷண்யமாயிருக்கும். நித்யஸூரிகளுக்கும் உள்ளதொரு ஸம்ஶயமாயிற்று இது. ஸ்வரூபாநுபந்தியாயிருப்பதொரு ஸம்ஶயமாகையாலே, ஸ்வரூபமுள்ளதனையும் நிற்பதொன்றிறே இது.

---

## சீயர் அரும்பதவுரை.

'முடிச்சோதி' ப்ரவேஶே, கீழில் திருவாய்மொழியில் ப்ரமேயத்தை அநுவதித்துக் கொண்டு, முதற்பாட்டோடே ரஸோக்தியாக ஸங்கதி - 'பொருளென்று' இத்யாதி. 'இப்படிசொன்னால் வ்யாஹதமன்றோ?' என்ன, 'கீழ்ச்சொன்ன' இத்யாதி; ஹேதுபேதாத் விரோதமில்லை என்றபடி. 'ஹேதுபேத முண்டானாலும் அஜ்ஞாநம் த்யாஜ்யமன்றோ?' என்ன, 'நித்யஸூரிகளுக்கும்' இத்யாதி. ஆகையாலே, த்யாஜ்யமன்று என்று கருத்து. இது "த்யாஜ்யம்" என்று சொல்லித் தவிர்க்கிறோமென்றாலும் தவிராது என்கிறார், 'ஸ்வரூபாநுபந்தி' இத்யாதியாலே. பகவத்ஸ்வரூபாநுபந்தீத்யர்த்த:. ஸ்வரூபஶப்தேந விக்ரஹவைலக்ஷண்யம் உச்யதே. பகவத்

---

* திருவாய்மொழி - ௨-௧௦-௧௧.

திருமலையை அநுபவித்துக்கொண்டு வாராநிற்கச்செய்தே, * "வடமாமலையுச்சியை" என்னுமாபோலே திருமலையில் ஏகதேசமென்னலாம்படியாய், கல்பகதரு பஹுசாகமாகப் பணைத்துப்பூத்தாற்போலே நிற்கிற அழகருடைய ஸௌந்தர்யத்தை அநுபவித்தார்; வேதங்களோடு வைதிக புருஷர்களோடு ப்ரஹ்மருத்ராதிகளோடு வாசியற ஸ்வயத்நத்தால் காணுமன்று காணவொண்ணாத படி யிருக்கிற இருப்பையும், தானேகோடுவந்துகாட்டுமென்று ஜந்மவ்ருத்தாதிகளால் குறையநின்றார்க்குங் காணலாயிருக்கிற இருப்பையும் அநுஸந்தித்து விஸ்மிதராகிறார்

## முதற் பாட்டு.

முடிச்சோதியாய் உனதுமுகச்சோதிமலர்ந்ததுவோ
அடிச்சோதிநீநின்ற தாமரையாய்அலர்ந்ததுவோ
படிச்சோதியாடையொடும் பல்கலனாய் நின்பைம்பொன்
கடிச்சோதிகலந்ததுவோ திருமாலேகட்டுரையே.

## ஆறாயிரப்படி.

*திருமலையை அநுபவித்துச் செல்லாநிற்கச் செய்தே, திருமலையிலே அழகரைக் கண்டு ப்ரீத்யதிசயத்தாலே அழகருடைய திருவணிகலன்களுக்கும் திவ்யாவயவங்களுக்கு முண்டான சேர்த்தியழகா லுள்ள அழகை விஸ்மிதராய்க்கொண்டு பேசுகிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், அழகருடைய திவ்யாவயவங்களுக்கும் திருவணிகலன்களுக்கு முண்டான ஸங்கடிதத்வத்தைக் கண்டு விஸ்மிதராகிறார்*

*[முடிச்சோதி] என்று தொடங்கி. உன்னுடைய திருமுகத்தின் ஒளி முடிச்சோதியாய் விகஸிதமாயிற்றோ? திருவடிகளின் அழகு ஆஸநபத்மமாய்க் கொண்டு விகஸிதமாயிற்றோ? [படி] என்று தொடங்கி. உன்னுடைய கடிப்ரதேசத்தின் விலக்ஷணமான ஒளி ஸ்வாபாவிகமான அழகையுடைத்தான திருப்பீதாம்பரமாயும் மற்றுமுள்ள திருவணிகலன்களாயும் திருமேனியிலே கலந்ததோ? பிராட்டியும் நீயும் கூட எனக்கு அருளிச்செய்யவேணும்.*

*ப.—முதற்பாட்டில், ஸ்ரிய:பதியான சேஷியினுடைய ஆபரணவயவசோபைகளினுடைய ஸங்கடிதத்வத்தாலே விவேகாயோக்யமாம்படி பிறந்த ஸம்சயத்தைத் தீர அருளிச்செய்யவேணு மென்று அவன்தன்னை அபேக்ஷிக்கிறார்.*

---

*விக்ரஹவைலக்ஷண்யப்ரயுக்த மித்யர்த்த:. பகவத்ஸௌந்தர்ய ஸௌகுமார்ய ப்ரயுக்தாஜ்ஞாநம் ஸூரிகளுக்கும் உண்டென்னுமிடத்தில் "ஆங்காரவாரமதுகேட்டு" இத்யாதிகளை ப்ரமாணமாக அநுஸந்திப்பது.*

*கீழில் திருவாய்மொழியோடே ஸாக்ஷாத் ஸங்கதி – 'திருமலையை' இத்யாதி. 'திருமலையில் ஏகதேச மென்னலாம்படி' என்கையாலே, சரமபர்வமான திருமலையாழ்வா ரநுபவத்தை விட்டு ப்ரதமபர்வமான அழகரை அநுபவிப்பானென்? என்கிற சங்கையும் பரிஹ்ருதம். "ஓதுவாரோத்தெல்லாம்," "வாழ்த்துவார் பலராக", "அரன்முதலா," "பிறையேறு சடையானும் நான்முகனும்" இத்யாதிகளைப் பற்ற 'வேதங்களோடு' இத்யாதி விசேஷணத்ரயம். "களிறளிப்பான்" என்றத்தைப் பற்ற 'தானே கொடுவந்து' இத்யாதி. 'விஸ்மிதராகிறார்' என்றது – ஆர்த்திகமாதல், முதற்பாட்டி னர்த்தத்தைப் பற்றவாதல். "அந்தாமத்தன்பி"லும் அழகன்றோ சொல்லிற்று; அதில் இதுக்கு வாசி எது?' என்னில்,— "ஆடியாடி"யில் வ்யஸநம்தீர "ஸுயபாயபு०ஷுயாநு:" (அயதாயதம்ததாந:) என்ற அடைவுகெட ஒப்பித்து வந்தபடி சொல்லிற்று அங்கு; இங்கு அடைவுபட ஒப்பித்து வந்தபடி சொல்லுகிறது என்று வாசி கண்டுகொள்வது.*

---

* பெரியதிருமொழி – எ, கo, ந.

உனது - உன்னுடைய, முகம் - திருமுகத்தின், சோதி - ஒளியானது, முடி - திருவபிஷேகத்தின்; சோதியாய் - ஒளியாய், மலர்ந்ததுவோ - மேலே கிளம்பிற்ருே? அடி - திருவடிகளின், சோதி - ஒளி, நீ நின்ற - நீ நின்ற, தாமரையாய் - ஆஸநபத்மமாய், அலர்ந்ததுவோ - கீழே பரம்பிற்ருே? பை - பரந்த, பொன் - அழகையுடைய, நின் - உன், கடி - கடியின், சோதி - சோதியானது, படி - ஸ்வாபாவிகமான, சோதி - ஒளியையுடைய, ஆடையொடும் - திருப்பரிவட்டத்தோடே, பல்கலனும் - பல திவ்யாபரணங்களுமாய், கலந்ததுவோ - கீழும் மேலுங் கலந்ததோ? திருமாலே - ஸ்ரீயஃபதியாகையாலே, “ ஸ்வயம் ஹ்ரீவிஷ்ணு: ஸ்ரீயா வாணீ ” (அர்த்தோவிஷ்ணுரியம்வாணீ) என்கிறபடியே ஶப்த அர்த்தங்களிரண்டுக்குங் கடவனே! கட்டுரை - இத்தை ஸம்ஶயமற அருளிச்செய்யவேணும்.

ஸம்ஶயம் இரண்டு கோடியிலுங் கிடக்கையாலே, முடிமுதலான ஆபரணஶோபை முகம் முதலான அவயவஶோபையாயிற்ருே? என்றுங் கொள்வது. படி-ஸ்வபாவம். கடி-அரைக்கட்டு. பை-விரிவு.

இ.—முதற்பாட்டில், அழகருடைய திவ்யாவயவங்களுக்கும் திவ்யாபரணங்களுக்குமுண்டான ஸங்கடிதத்வத்தைக் கண்டு விஸ்மிதராகிருர்.

[முடிச்சோதி இத்யாதி]—உன் முகச்சோதி முடிச்சோதியாய் மலர்ந்ததோ? உன் திருமுகத்தின் ஒளி முடிச்சோதியாய் மேல்நோக்கி விகஸிதமாயிற்ருே? ‘ஸமாநதர்மாத் ஸம்ஶயமாகையாலே, உபயகோடியிலும் அநுவர்த்திக்கிறது’ என்பர் பட்டர். திருவபிஷேகத்தின் ஒளியானது திருமுகத்தின் ஒளியாய்க்கொண்டு கீழ்நோக்கிச் சுழித்ததோ? ஶேஷித்வ ஸூசகமான அழகை அநுபவித்துத் தம்ஶேஷத்வாநுரூபமான திருவடிகளின் அழகை அநுபவிக்கிருர். திருமுகத்தின் அழகு நிலைகொள்ள வொண்ணுமையாலே திருவடிகளில் வர வீசிற்று; அங்ஙனல்லது அழகுக்கு அவதியுண்டாயாதல், ஆசைக்கு அவதியுண்டாயாதலன்றே. திருவடிகளின் அழகு ஆஸநபத்மமாய்க் கொண்டு விகஸிதமாயிற்ருே? நீ நின்ற தாமரை அடிச்சோதியாய் அலர்ந்ததோ? திருவபிஷேகத்தில் ஸம்ஶயம் இங்கே தீர வந்தார், இங்கும் ஸம்ஶயமாயிருந்தது. [படி இத்யாதி] - திருவடிகளின் அழகு மேல் நோக்கித்தள்ளத் திருவரையை அநுபவிக்கிருர்: உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான கடிப்ரதேஶத்தின் ஒளி, ஸ்வாபாவிகமான அழகையுடைய திருப்பீதாம்பரமாயும், மற்றுமுள்ள ஆபரணங்களாயும் கலந்ததோ? கடி - தொடைப்பற்று. நீரிலே நீர்கலந்தாற்போலே ஏகத்ரவ்யமென்னலாம் படி பரம்பிற்ருே? மற்றைப்படியுமாம்: [படிச்சோதி] - படியாணியான ஒளி யென்றுமாம்; திருமேனி யென்றுமாம். [திருமால் இத்யாதி]-நித்யாநபாயிநியாய் நித்யாநுபவம் பண்ணுகிற பிராட்டியும் அவளை அநுபவிப்பிக்கிற தேவரும் கூட எனக்கு அருளிச்செய்யவேணும். இன்று அநுபவிக்கப்புக்க இவரோடு நித்யாநுபவம்பண்ணுகிற அவளோடு அவன்தன்னோடு வாசியில்லை, இஸ் ஸம்ஶயம் அநுவர்த்திக்கைக்கு. [கட்டுரையே] - சொல்லவேணும் என்றபடி. “ மருளில்வண்குருகூர் வண்சடகோபன் ” என்று தத்வஹிதங்களில் ஸம்ஶயமற்ற இவருக்கு இது ஒரு நித்யஸம்ஶயம் விளைந்தது. விஜ்ஞாநபலமாய் விஷயவைலக்ஷண்யமடியாகப் பிறந்த ஸம்ஶயமாகையாலே நித்யமாய்ச் செல்லும் என்கை.

ஈடு.—முதற்பாட்டில், அழகருடைய திவ்யாவயவங்களுக்கும் திருவணிகலன்களுக்குமுண்டான ஸங்கடிதத்வத்தைக் கண்டு விஸ்மிதராகிருர்.

[முடிச்சோதியாய் உனதுமுகச்சோதி மலர்ந்ததுவோ] - உன்னுடைய திருமுகத்தி லுண்டான தேஜஸ்ஸானது திருவபிஷேகத்தின் தேஜஸ்ஸாய்க்கொண்டு விகஸிதமாயிற்றோ? உன்னுடைய திருவபிஷேகத்தின் தேஜஸ்ஸானது திருமுகத்தின் தேஜஸ்ஸாய்க்கொண்டு விகஸிதமாயிற்றோ? என்றும் வரக்கடவது. ஶேஷபூதனுக்கு முற்படத்தோற்றுவது தன்னுடைய ஶேஷத்வ ப்ரதிஸம்பந்தியான அவனுடைய ஶேஷித்வமிறே. அவனுடைய ஶேஷித்வப்ரகாஶகமான திருவபிஷேகத்தின் அழகு திருவடிகளிலே போரவிசிற்று. [அடிச்சோதி]-திருவடிகளின் தேஜஸ்ஸானது தேவர்நின்ற ஆஸநபத்மமாய்க்கொண்டு விகஸிதமாயிற்றோ? நீ நின்ற தாமரை அடிச்சோதியாய்க்கொண்டு விகஸிதமாயிற்றோ? [நீநின்ற]-ஏகரூபனானவனும் நீரிலே நின்றாற்போலே ஆதரித்துநிற்கும்படி. இது ப்ராப்யத்தினுடைய சரமாவதி யாகையாலே அவ்வருகு போக்கில்லையே; திருவடிகளின் தேஜஸ்ஸானது ஏறக்கொழித்தது; கடலுக்குள் பட்டதொரு த்ருணம் ஒருதிரை ஒருதிரையிலே தள்ளக்கிடந்து அலையுமாபோலே, ஓரழகு ஓரழகிலே தள்ளக் கிடந்து அவற்றை அநுபவிக்கிறார். [படிச்சோதி]-திருமேனியழகு பல்கலனாய்க் கலந்ததுவோ? பல்கலன் படிச்சோதியாய்க் கலந்ததுவோ? சோதியாடை கடிச்சோதியாய்க் கலந்ததுவோ? கடிச்சோதி சோதியாடையாய்க் கலந்ததுவோ? நின்பைம்பொற் கடிச்சோதி படிச்சோதியாடையொடும் பல்கலனாய்க்கொண்டு கலந்ததுவோ - உன்னுடைய அழகியதாய் ஸ்ப்ருஹணீயமான திவ்யகடிப்ரதேசத்தி லுண்டான தேஜஸ்ஸானது, ஸ்வாபாவிகமான தேஜஸ்ஸையுடைத்தான திருப்பீதாம்பரம் தொடக்கமான பலதிருவாபரணங்களாய்க் கொண்டு சேர்ந்ததுவோ? நீரிலே நீர்கலந்தாற்போலே பேதக்ரஹணத்துக்கு அநுபபத்தியேயாயிருக்கை. அன்

---

*முதற்பாட்டு 'முடிச்சோதி' இத்யாதி:—திருவணிகலன்கள்-திருவாபரணங்கள். 'உனதுமுகச்சோதி'-முடிச்சோதியாய் மலர்ந்ததுவோ?' இத்யாதியாலே, நாட்டில் புருஷர்களுக்கு ஆபரணங்களாலே அவயவங்களுக்கு ஔஜ்ஜ்வல்யமுண்டாம்; இவ்விஷயத்தில் அவயவங்களாலே ஆபரணங்களுக்கு ஔஜ்ஜ்வல்யமென்று தோற்றுகிறது. ஸம்ஶயம் கோடித்வயாவலம்பியாகையாலே, கோட்யந்தரத்தையுங் காட்டுகிறார் - 'உன்னுடைய திருவபிஷேகத்தின்' இத்யாதி. 'வரக்கடவதுஇதி' - ஶ்வேதாஶ்வதரத்திலே "கிங்காரணம் ப்ரஹ்ம" (கிங்காரணம் ப்ரஹ்ம) இத்யாதி வாக்யத்திலே "காரணம்ப்ரஹ்மகிம்" (காரணம்ப்ரஹ்மகிம்), "ப்ரஹ்மவா காலாதிர்வா" (ப்ரஹ்மவா காலாதிர்வா) என்று ஒருயோஜனை சொன்னார்களிறே; அங்கே கிம்ஶப்தபலத்தாலே கோட்யந்தரம் உபஸ்திதமானாற்போலே, இங்கும் 'ஓ' என்கையாலே கோட்யந்தரம் உபஸ்திதமாகிறது என்றபடி. ஶேஷத்வாநுகுணமாகத் திருவடியை அநுஸந்தியாதே, முற்படத் திருமுடியைச் சொல்லுவானென்? என்ன, 'ஶேஷபூதனுக்கு' இத்யாதி. இவ்விடத்திலே "கிரீடசூடாரத்நராஜிঃ" (கிரீடசூடாரத்நராஜிঃ) இத்யாத்யநுஸந்தேயம். 'திருவபிஷேகத்தினழகை முடிய அநுபவித்தாரோ? திருவடிகளிலே போவானென்?' என்ன, 'அவனுடைய' இத்யாதி. நீ-ஏகரூபனான நீ. ஏகரூபனானவனும் - ஸாகாங்க்ஷநிரபேக்ஷனானவனும். ஸவிகாஸமான தாமரை நீரிலே செவ்விபெறுமாபோலே, திருவடிகளும் ஆஸநபத்மத்தோட்டை ஸம்பந்தத்தாலே செவ்விபெற்று வருகிறது என்றபடி. 'ஆனால், திருவடிகளுக்குக் கீழே போகாமல் மேலேபோவானென்?' என்ன, 'இது ப்ராப்யத்தினுடைய' இத்யாதி. இது - திருவடிகள். 'போக்கில்லையே'—ஆகையாலே, மேலேறக்கொழித்தது என்றபடி. 'ஏகைகஸ்மிந் பரமவயவே அநந்தஸௌந்தர்யமாயிருக்க, அவயவாந்தரங்களிலே போகக்கூடுமோ?' என்ன, 'கடலுக்குள்' இத்யாதி. ஓரழகு ஓரழகிலே தள்ளப் போகிறாரித்தனையொழிய, அருசிபிறந்ததால், முடிய அநுபவித்ததால் அல்ல என்றபடி. "ஸௌந்தர்யதரங்கதாடநதரலசித்தவ்ருத்தி" (ஸௌந்தர்யதரங்கதாடநதரலசித்தவ்ருத்தி) என்னக்கடவதிறே. முந்தின அர்த்தத்தில், "படிச்சோதி" என்றும், "சோதியாடை" என்றும், "சோதி" என்றத்தை இரண்டிலும் கூட்டுவது. 'ஒடும்' என்றது - அவ்யயம் இப்போது. "படிச்சோதி" இத்யாதிக்கு யோஜநாந்தரம்—'நின்பைம்பொன்' இத்யாதி. இதுக்கு ஶப்தார்த்தம் - 'உன்னுடைய' இத்யாதி. 'திருப்பீதாம்பரம் தொடக்கமான' என்கிற விசேஷணத்தாலே - இந்த நிர்வாஹத்தில், "பல்கலன்" என்றது - உதரபந்தநாதி திவ்யகடிப்ரதேசத்தில் திருவாபரணங்கள். த்விதீயநிர்வாஹே "படிச்சோதியாடையொடும் பல்கலன், நின்பைம்பொற்கடிச்சோதியாய்க் கலந்ததுவோ?" என்றும் அத்யாஹார்யம். "கலந்ததுவோ" இத்யநேந ஸூசிதமர்த்தம் ஆஹ, 'நீரிலே' இத்யாதி. முந்தின அர்த்*

றியே, படிச்சோதி - படியானியான ஒளி யென்னவுமாம். [திருமாலே] - இதுவும் ஒருசேர்த்தியழகு இருக்கிறபடி. * "அகலகில்லேன்" என்று பிரியமாட்டாம லிருக்கிற பிராட்டியும், ஸ்வதஸ்ஸர்வ ஜ்ஞனை நீயுங் கூட விசாரித்து இதுக்கு ஒருபோக்கடி அருளிச்செய்யவேணும். இன்று அநுபவிக்கப் புக்க இவர் † "என்றுமோரியல்வினரெனநினைவரியவர்" என்பர்; நித்யாநுபவம் பண்ணுமவர்கள் ‡ "பண்டிவரைக்கண்டறிவதெவ்வூரில்யாம்" என்றே பயிலாநிற்பர்கள்; ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனவன் தனக்கும் தன்தன்மை அறியவரியனாயிருக்கும்; ஆக, இப்படி இன்று அநுபவிக்கப்புக்க இவரோடு நித்யாநுபவம்பண்ணுகிறவர்களோடு அவன்தன்னோடு வாசியில்லை, இஸ்ஸம்ஶயம் அநுவர்த்திக் கைக்கு. தமக்கு இந்த ஸம்ஶயம் அறுதியிடவொண்ணாதாபோலே அவர்களுக்கு மென்றிருக்கிறார். [கட்டுரையே]-சொல்லவேணு மென்றபடி. (க)

## இரண்டாம் பாட்டு.

கட்டுரைக்கில்தாமரை நின்கண்பாதம்கையொவ்வா
சுட்டுரைத்தநன்பொன் உன்திருமேனியொளியொவ்வாது
ஒட்டுரைத்துஇவ்வுலகுஉன்னைப் புகழ்வெல்லாம்பெரும்பாலும்
பட்டுரையாய்ப்புற்கென்றே காட்டுமால்பரஞ்சோதி.

*ஆ.*—மெய்சொல்லில், தாமரை கண்பாதங்கைகளுக்கு நிதர்ஶநமாகமாட்டாது. சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனிக்கு நிதர்ஶநமாகமாட்டாது. இப்படியிருக்கச்செய்தே, இவற்றை த்ருஷ்டாந்தமாகச்சொல்லி இந்தலோகம் உன்னைப் புகழாநிற்கும்; அத்த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகிறவையெல்லாம் த்ருஷ்டாந்தமாகமாட்டாமையன்றியே, உனக்கு நிகர்ஷத்தை ஆவஹிக்கு மென்றுகொண்டு திவ்யாவயவகதமான அழகைப் பேசுகிறார்.

*ஒ.*—இரண்டாம் பாட்டில், அழகருடைய அழகுக்கு ஒப்பாகப்போருவன இல்லாமை யாலே லோகத்தார் பண்ணும் ஸ்தோத்ரம் அங்குத்தைக்குக் குறைதாநம் பண்ணமாட்டாதபடி அவத்யாவஹமாமத்தனை என்கிறார்.

[கட்டுரைக்கில்] - சொல்லில், [ஒட்டு உரைத்து] - உன்னோடுகூடுவன உரைத்து, ஆவன - ஸத்ருஶங்கள். [பெரும்பாலும்]-மிகவும், [பட்டுரையாய்]-இருந்தபடி யொழியத் தோற்றிற்றுச் சொல்லுகையாலே அவாசகமாய், [புற்கென்றே காட்டுமால்]-அவத்யாவஹமாம்; [பரஞ்சோதி] - சிலவற்றை த்ருஷ்டாந்தமாகச் சொல்லி ஸ்துதிக்கும் ஸ்தோத்ரத்துக்கு நிலமல்லாத அழகின்மிகுதியை யுடையவனே!

---

தத்தில், "படி" என்று - விக்ரஹம்: த்விதீயார்த்தத்தில் ஸ்வாபாவிகமாதல்; ஆணிப்பொன்னாதல். இதுவும் ஒரு சேர்த்தி இதி - இந்தத் திருமேனி அந்தத் திருமேனியாய் விகஸித மாயிற்றோ? இத்யாதி த்ரஷ்டவ்யம். "திருமாலே கட்டுரை" என்று மேலேகூட்டித் தாத்பர்யாந்தரம்—'அகலகில்லேன்' இத்யாதி. "கட்டுரையே" என்றத்தை க்ஷேபோக்தியாக விவக்ஷித்து 'க்ஷேபிக்கிறதென்? ஒருவராலும் சொல்லப்போகாதோ?' என்ன, 'இன்று அநுபவிக்கப்புக்க' இத்யாதி. "என்றுமோரியல்வினர்" இத்யாதிக்கு - கீழ்ச்சொன்ன தொழிய, வடிவழகாலே பரிச்சேதித்து அறிய வொண்ணாதென்று அர்த்தாந்தரம் கண்டுகொள்வது. 'நித்யாநுபவம்' இத்யாதி - "பண்டிவரை" இத்யாதியும் பிராட்டிதசையில் பாசுரமாகையாலே, நித்யஸூரிகளுக்தியாகலாமிறே. 'பரபுத்தேரப்ரத்யக்ஷத்வாத் அது எப்படி இவர்க்குத்தெரியும்?' என்ன, 'தமக்கு' இத்யாதி. கட்டுரையே என்று - முழுச்சொல். (க)

* திருவாய்மொழி, ௬ - ௧0 - ௧0. † திருவாய்மொழி, ௧ - ௧ - ௬. ‡ பெரிய திருமொழி அ - ௧ - ௬.

ப.—அநந்தரம், உத்தமான வடிவழகினுடைய உபமாநராஹித்யத்தை அருளிச்செய்கிறார்.

பரஞ்சோதி - பரஞ்சோதியானவனே! கட்டுரைக்கில் - நிர்ணயித்துச் சொல்லில், தாமரை - தாமரையானவை, நின் - உன்னுடைய, கண் பாதம் கை - திருக்கண்கள் திருவடிகள் திருக்கைகளை, ஒவ்வா - ஒவ்வா; சுட்டு - ஓடவைத்து, உரைத்த - ஒப்பமிட்ட, நன்பொன் - நல்ல பொன்னானது, உன் - உன்னுடைய, திருமேனி - (அப்ராக்ருதமான) திருமேனியின், ஒளி - ஸமுதாயசோபையை, ஒவ்வாது - ஒவ்வாது; (ஆகையால்), இ உலகு - இந்த லோகம், ஒட்டு - உவமைச் செறிவை, உரைத்து - சொல்லி, உன்னை - உன்னை, புகழ்வு எல்லாம்-புகழுமது எல்லாம், பெரும்பாலும் - ப்ராயேண, பட்டுரையாய் - தோற்றிற்றுச் சொல்லிற்றாய், (தார்ஷ்டாந்திகமான வாச்யத்தை), புற்கென்றே - புல்லியதாகவே, காட்டும் - காட்டாநிற்கும்.

புற்கு - புன்மை. ஒட்டு - உவமைச்செறிவு. தாமரையும் பொன்னும் ஒவ்வாமை-ஆகந்துகவைலக்ஷண்ய யுக்தமானவை ஸ்வாபாவிகமானதோர் விலக்ஷண வஸ்துவுக்குத் தகுதியல்லாமையாலே. பெரும்பாலும் - மிகவு மென்றுமாம்.

இ.—இரண்டாம்பாட்டில், 'இவ்வழகுக்கு உபமாநமுண்டோ?' என்று பார்த்தார், உபமாநங்களுக்கு அவ்வருகாயிருக்கையாலே, உபமாநமில்லை' என்கிறார்.

[கட்டுரைக்கில்]—சொல்லில்; கட்டுரையென்று முழுச்சொல்லாய், சொல்லில் என்றபடி. நெஞ்சாலும் பரிச்சேதிக்கவொண்ணாதாயிருக்க, பாசுரமிட்டுச் சொல்லப்போகாது; சொல்லில், [தாமரை இத்யாதி] -தாமரை ஜாதியாக ஓர் அவயவத்துக்கு ஒப்பாகமாட்டாது என்கை. முதல் உறவு பண்ணும் கண், அதுக்குத் தோற்று "ஜிதந்தே" என்று விழும் திருவடிகள், அவ்விழுக்காட்டுக்குத் தோற்று அவன்தான் "ஜிதந்தே" என்று அணைக்கும் கை; [நின்கண்] என்கையாலே 'உனது முகச்சோதி' என்றத்தை நினைக்கிறது. [பாதம்] என்று 'அடிச்சோதி' என்றத்தை நினைக்கிறது. [கை] என்று நடுவு; தாம் அநுபவித்த அழகுக்கு உபலக்ஷணம். [சுட்டுரைத்த இத்யாதி] - பொன்னை உபமாநமாகப் போராதென்கைக்கு பரீக்ஷிக்கிறார்;—காய்ச்சியுரைத்த விலக்ஷணமான பொன்; "ருக்மாபம்" என்னக்கடவதிறே. [உன் திருமேனியொளியொவ்வாது] — "பரஂஜ்யோதிரூபஸம்பத்ய" (பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய), "ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமதஃ" (ஏஷஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோஹநூமதஃ) என்று தான் மதித்திருக்கும் வடிவு. [ஒட்டுரைத்து]—ஒட்டுகை - கூடுகை, அதாவது-சேருகை; ஒப்புச்சொல்லி. [இவ்வுலகு]—"மஞ்சாஃக்ரோஶந்தி" (மஞ்சாஃக்ரோஶந்தி) என்கிற ந்யாயத்தாலே லோகத்திலுள்ளார் ப்ராக்ருதபதார்த்த வைலக்ஷண்யமும் அறியமாட்டாதவர்கள். [உன்னை]— "யதோவாசோ நிவர்த்தந்தே" (யதோவாசோ நிவர்த்தந்தே) என்று ச்ருதியும் மீளும்படியான உன்னை. [புகழ்வெல்லாம்]—ஸ்தோத்ரம் பண்ணுமதெல்லாம். [பெரும்பாலும்] - மிகவும்; ப்ராயேண. [பட்டுரையாய்] - அவாசகமாய். பட்டது உரைக்கை - பட்டுரை; விஷயத்தைப் பாராதே தோன்றிற்றுச் சொல்லுகையாய். [புற்கென்றே காட்டுமால்] - அவத்யாவஹமாம்; இப்படி ஆவானென்? என்னில்,—[பரஞ்சோதி] - ரத்நமறியாதானொருவன் 'குருவிந்தக்கல்லோடு ஒக்குமே இவ்வஸ்து' என்றால், அதுக்கு அவத்யமாமிறே; அப்படியே, நீ ஸர்வவிஸஜாதீயமான அழகையுடையவனாகையாலே: "நாராயணபரோஜ்யோதிஃ" (நாராயண பரோஜ்யோதிஃ)

ஈடு.—இரண்டாம்பாட்டு. அழகருடைய ஸௌந்தர்யத்துக்கு ஸத்ருசமில்லாமையாலே லோகத்தார் பண்ணும் ஸ்தோத்ரம் அங்குத்தைக்கு அவத்யமா மித்தனை என்கிறார்.

[கட்டுரைக்கில்] - அநுபவித்துக் குமிழிநீருண்டுபோம் இத்தனை போக்கிச் சொல்லப் போகாது. கட்டுரைக்கில் - கட்டுரையென்று முழுச்சொல்லாய், சொல்லில் என்றபடி. சொல்லில், தாமரைஜாதியாக உன்னுடைய திருக்கண்களுக்கும் திருவடிகளுக்கும் திருக்கைகளுக்கும்ஒப்பாகாது. ஓரோ வ்யக்திகளுக்கும் தாமரை ஜாதியாக ஒப்பாகாது. குளிர நோக்கின கண், தோற்றுவிழும் திருவடிகள், எடுத்தணைக்கும் திருக்கைகள் இவை இருக்கிறபடி; "நமஸ்த்ரம் நைவசக்ரம:" (நமஸ்த்ரம் நைவசக்ரம:) என்கிறவிடத்தில் அடைவு சொல்லுகிறதன்றே; இவரும் அநுபவத்துக்குப் பாசுரமிட்டுச் சொல்லுகிறார் இத்தனையிறே; [நின்கண்] என்கையாலே 'உனதுமுகச்சோதி' என்றத்தை நினைக்கிறது; [பாதம்] என்று 'அடிச்சோதி' என்றத்தை நினைக்கிறது. [கை] என்று தாம் நடுஅநுபவித்த அழகுக்கு உபலக்ஷணம்.

[சுட்டுரைத்த இத்யாதி] - பொன்னை உபமானமாகப் போராதென்கைக்கு ஶிக்ஷிக்கிறார். சுட்டுரைத்த - காய்ச்சி ஓடவைத்து உரைத்த நன்றான பொன் உன்னுடைய ஸ்வாபாவிகமான திவ்யவிக்ரஹத்தின் ஒளிக்கு ஒப்பாகாது. இத்தனை ஶிக்ஷித்தாலாயிற்று ஒப்பாகச் சொல்லப் பாத்தம் போராதது. "ருக்மாபம்" (ருக்மாபம்) என்னக்கடவதிறே.

[ஒட்டுரைத்து]—ஒட்டாவது-கூடுகை; அதாவது - சேருகை: ஸத்ருஶமாயிருக்கை. உனக்கு ஸத்ருஶமாகச் சொன்னார்களாய். இவ்வுலகு "மஞ்சா: க்ரோஶந்தி" [மஞ்சா: க்ரோஶந்தி] என்கிறபடியே காண்கிற இதுக்கு மேற்பட அறியாத இந்த லௌகிகர், ப்ராக்ருதபதார்த்த வைலக்ஷண்யமும் அறியாதவர்கள். [உன்னை]-ஶாஸ்த்ரைக ஸமதிகம்யனாய், அவைதானும் புகழப்புக்

---

இரண்டாம்பாட்டு. 'கட்டுரைக்கில்' இத்யாதி. பாட்டெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - 'அழகருடைய' இத்யாதி. "ஒவ்வா" என்றத்தைப்பற்ற'ஸத்ருஶ மில்லாமையாலே'என்றது. 'புற்கென்றே காட்டும்' என்றத்தைப்பற்ற 'அவத்யம்' என்றது.'உரைக்கில்'என்ற யதி ஶப்தார்த்தம்-'அநுபவித்து' இத்யாதி. குமிழிநீருண்கை-தலஸ்பர்ஶியாய் அவகாஹிக்கை. ஶப்தார்த்தகதநார்த்தம் புநருபாதாநம் - 'கட்டுரைக்கில்' என்று. "பொற்காற்றாமரை, நூற்காற்றாமரை" என்றாற்போலே விஶேஷியாமையாலே அருளிச்செய்கிறார் 'தாமரை ஜாதியாக' என்று. "கண், பாதம், கை" என்று ப்ரத்யேகம் சொன்னதுக்கு பாவம் - 'ஓரோவ்யக்திகளுக்கு' இத்யாதி. "தாமரை" என்று - ஜாத்யைக்யம் விவக்ஷிதம். பாதாதிகேஶாந்தமாதல், கேஶாதிபாதாந்தமாதல் அநுபவியாதொழிவானென்?என்ன, த்ரேதா பரிஹரிக்கிறார் 'குளிரநோக்கின' இத்யாதி. பாவபந்தத்துக்கு ப்ரதாநஹேதுவாகையாலே சக்ஷுஷ: ப்ரதமாபிதாந மிதி பாவ:. த்விதீயபரிஹாரம் - 'நமஸ்த்ரம்' இத்யாதி. "அத்யந்தபக்தியுக்தஸ்ய நமஸ்த்ரம் நைவசக்ரம:" (அத்யந்த பக்தியுக்தஸ்ய நமஸ்த்ரம் நைவ சக்ரம:) என்று பக்திபாரவஶ்யத்தாலே சொல்லுகிற விடத்திலே, க்ரமத்தை அவலம்பித்திராதிறே யென்றபடி. கீழிற்பாட்டிலநுபவம் பின்னாடுகிறதென்று த்ருதீயபரிஹாரம் - 'நின்கண்' இத்யாதி.

பொன்னை ஶிக்ஷிக்கிறா ரித்யந்வய:. ஶப்தார்த்தம் - 'காய்ச்சி' இத்யாதி. ஓடவைத்துரைத்த - உருக்கி மெருகிட்ட. பொன்போலே திருமேனிக்கு விசேஷண மிடாமையாலே பலிதம் - 'ஸ்வாபாவிகமான' என்று. "ஒவ்வாது" என்கைக்கு இத்தனை ஶிக்ஷிக்கவேணுமோ? என்ன, 'இத்தனை' இத்யாதி. பாத்தம்,-விஷயம். "ஒப்பன்று" என்கைக்கும் இத்தனை ஶிக்ஷிக்கவேணு மென்றபடி. "ஒவ்வாது" என்கைக்கு - ஒப்பாமென்று ப்ரஸக்தியுண்டோ? என்ன,'ருக்மாபம்'இத்யாதி. "ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாமணீயாம்ஸமணீ யஸாம் । ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத்தம் புருஷம் பரம்" இதி மாநவே த்வாதஶே அத்யாயே. 'ருக்மாபம்' என்கிறது - 'ஆதித்யவர்ணம்' என்றாற்போலே தர்ஶநீயதையைப்பற்றவாதல், 'ஐந்த்ரநீலாவஸஷ்ரஶம்' என்கிறபடியே ஶ்யாமமாய்ச் சிவந்து மிருக்கையாலே, மயூரக்ரீவா ஸத்ருஶதையைப் பற்றவாதல், ஹிரண்யவர்ணையான பிராட்டியோட்டைச் சேர்த்தியாலேயாதல், 'ஹிரண்மய: புருஷ:' என்கிற அந்தராதித்ய புருஷவிஷயமாதல். ஸ்வப்நதீகம்யம் - மாநஸஜ்ஞாநகம்யம். ஸத்ருஶமாகச் சொன்னார்களாய் - (இதர பதார்த்தங்களை) ஸ்த்ருஶமாகச் சொன்னார்களாய். "இ" என்றதுக்கு பாவம் - 'காண்கிற' இத்யாதி. "உலகு" என்று - அசேதந ஸமாதியாகச்சொன்னதுக்கு பாவம்-'ப்ராக்ருத' இத்யாதி. "புகழ்வு" என்றால் போராதோ? "புகழ்வெல்லாம்" என்கிற தென்? என்ன, புகழ்தான் -

கால் *"யதோவாசோ நிவர்த்தந்தே"* (யதோவாசோ நிவர்த்தந்தே) என்னும்படியான உன்னை. [புகழ்வெல்லாம்] - உள்ளதுஞ் சோல்லி, இல்லாதது மெல்லாம் இட்டுக்கோண்டு சோன்னார்களா யிருக்கிறது மெல்லாம். [பெரும்பாலும்] - மிகவும்; ப்ராயேண. [பட்டுரையாய்] - பட்டது உரைக்கை, நெஞ்சில் பட்டதைச் சோல்லுகை; விஷயத்தைப்பாராதே ப்ரதிபந்நத்தைச் சோல்லுகை. [புற்கேன்றே காட்டுமால்] - புன்மையையே காட்டாநின்றது. 'இவன் ப்ரதிபந்நத்தைச் சோன்னாய் விஷயத்தில் ஸ்பர்ஶியாதே யிருக்குமாகில், அங்குத்தைக்குப் புன்மையே காட்டும்படி யேன்?' என்னில்;—ரத்நமறியாதானொருவன் 'குருவிந்தக்கல்லோடு ஒக்கும் இது' என்றால், அவ்வள வாகவிறே இவனுக்கு இதில் ப்ரதிபத்தி: அவ்வழியாலே அதுக்கு அவத்யமாமிறே; அப்படியே இவன் பண்ணும் ஸ்தோத்ரம் இங்குத்தைக்கு அவத்யமாயே தலைக்கட்டும். இங்குத்தைக்குப் புன்மை யைக் காட்டுகைக்கு நிபந்தநமேன்? என்னில்,—[பரஞ்சோதி] - *"நாராயணபரோஜ்யோதி:"* (நாராயணபரோஜ்யோதி:) என்கிறபடியே, நீ ஸர்வவஸ்துவிஸஜாதீய னாகையாலே. (௨)

## மூன்றாம்பாட்டு.

பரஞ்சோதிநீபரமாய் நின்னிகழ்ந்துபின் மற்றோர்
பரஞ்சோதியின்மையின் படியோவிநிகழ்கின்ற
பரஞ்சோதிநின்னுள்ளே படருலகம்படைத்த எம்
பரஞ்சோதிகோவிந்தா பண்புரைக்கமாட்டேனே.

*ஆ.—நீ இப்படி அழகினால் எல்லாரிலும் மேற்பட்டு வர்த்தியாநின்று, பின்பு மற்று உன்னைப் போலே அழகியாரில்லாமையாலே படியோவி வர்த்திக்கையாலே பரஞ்ஜோதிஸ்ஸப்தாபிதேயனாய், ஸர்வ ஜகத்காரணத்வ ப்ரயுக்த நிரவதிக தேஜஸ்ஸை யுடையனாய், நிரவதிகஸௌஸீல்ய விஸிஷ்டனாயிருந்த உன்னுடைய இந்தக் குணங்கள் எனக்குச் சொல்ல நிலமல்ல என்கிறார்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், எம்முடைய படி வேறு சிலர்க்குப் பேச நிலமல்லவாகில், நீர் பேசினாலோ வென்னில்,—எனக்கு முடியாது என்கிறார்.*

---

*உள்ளதைச் சொல்லுகையும், இல்லாததை யேறிட்டுச் சொல்லுகையுமிறே; ஆகையாலே, அவை யிரண்டையும் அருளிச்செய்கிறார் 'உள்ளது' இத்யாதி. "புகழ்வெல்லாம்" என்றவிடத்திலே "ஸ்தோத்ரஸ்ஸாம கிமாம் உநக்தி" இத்யாதி, "சந்த்ரகாந்தாநநம் ராமமதீவ ப்ரியதர்ஶநம்" இத்யாதி அநுஸந்தேயம். பட்டுரை யாய் - அவாசகமா யிதி பலிதார்த்த:. புன்மை - அவத்யம். புற்கென்றே - அவத்யமாயே. தடஸ்த ஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - 'இவன்' இத்யாதி. குருவிந்தக்கல் - காவிக்கல். இவனுக்கு - ஶ்ரோதாவுக்கு. 'அவ்வழியாலே' இதி - "குருவிந்தஶிலாஸமாநம்" இதி புத்திபோத்யத்வ ரூபம் அவ த்ய முண்டாமிறே என்றபடி. 'அப்படியே' இதி - ஆபாதத: ஸ்தோத்ரமிவ பாதி; வஸ்துதோ நிரூப்ய மாணே அவத்யாவஹமேவ பவதீத்யர்த்த:. ஆல் - அவ்யயம். இங்குத்தைக்கு - பகவத் விஷயத்துக்கு. ஸ்தோத்ரஸ்ய அவத்யாவஹத்வே ஹேது, 'ஸர்வவஸ்து விஸஜாதீயனாகையாலே' என்றது. இங்கே - ஸ்தோத் ரத்தினுடைய அவத்யாவஹத்வத்திலே ஸர்வவஸ்துவிஸஜாதீயத்வத்தை ஹேதுவாகச் சொல்லிற்று; அவ தாரிகையிலே - ஸௌந்தர்யத்துக்கு ஸாத்ருஶ்யமில்லாமையை ஹேதுவாகச் சொல்லிற்று; ஆகையாலே, இரண் டையும் ஹேதுவாகக் கண்டுகொள்வது. "பெரும்பாலும்" என்றதுக்கு - மிகவும், ப்ராயேண இதி வாக்ய த்வயஞ்ச அர்த்தத்வய பரம். ஒட்டு - உவமைச்செறிவாதல். கட்டுரைக்கில் - நிர்ணயித்துச் சொல்லில்.*

*'கட்டுரைக்கில்' இத்யாரப்ய, ஒவ்வாது; பரஞ்சோதி - இவ்வுலகு உன்னை ஒட்டுரைத்து - புகழ் வெல்லாம் - பட்டுரையாய் - பெரும்பாலும் - புற்கென்றே - காட்டுமால் இதி அந்வய:.* (௨)

[பரஞ்சோதி நீ பரமாய்] - பரஞ்சோதி நீயே; அழகால் எல்லாரிலும் மேற்பட்டு மிக்கிருக்கையால். [நின்னிகழ்ந்துபின்] என்று தொடங்கி - உன்னைத்தவிர மற்றொரு பரஞ்சோதியில்லாமையாலே ஒப்பின்றிக்கே வர்த்தியா நிற்கையாலும் பரஞ்சோதியாய், இப்ரபஞ்சத்தையெல்லாம் உன்ஸங்கல்பமாத்ரத்தாலே ஸ்ருஷ்டிக்கையாலே ஜகத்காரணத்வப்ரயுக்தமான உத்க்ருஷ்டதேஜஸ்ஸையும் உடையையாய் ஆஸ்ரித ஸுலபனானவனே! பண்பு - படி.

ப.—அநந்தரம், ஸர்வப்ரகாரஔஜ்ஜ்வல்யாதிஶயத்தையுடைய உன்ஸ்வபாவம் எனக்குச் சொல்ல முடியாது என்கிறார்.

பரமாய் - ஸர்வஸ்மாத்பரனாய்க்கொண்டு, பரஞ்சோதி - நிரதிஶயதேஜோரூபன், நீ-நீ; நின் - உன்னை, இகழ்ந்து - ஒழிந்து, பின் மற்று ஓர் பரஞ்சோதி - வேறு பரமாயிருப்பதொரு உஜ்ஜ்வலவஸ்து, இன்மையின் - இல்லாமையாலே, படி ஓவி - உபமானமில்லாதபடி, நிகழ்கின்ற - வர்த்தியாநிற்கிற, பரஞ்சோதி - பரஞ்சோதிஶ்ஶப்த வாச்யனான, நின்னுள்ளே - உன்ஸங்கல்பத்துக்குள்ளே, படர் - விஸ்தீர்ணமான, உலகம் - லோகத்தை, படைத்த - ஸ்ருஷ்டித்து, எம் பரஞ்சோதி - ஸ்ருஷ்டமான லோகத்தினுடைய ஸ்வபாவம் உனக்குத் தட்டாதபடி நிற்கிற நிரதிஶயஔஜ்ஜ்வல்யத்தை எனக்கு ப்ரகாசிப்பித்தவனாய், கோவிந்தா - அந்தப்பரத்வத்திலுங்காட்டில் கோபாலநாதிஸீலஔஜ்ஜ்வல்யத்தை யுடையவனே! பண்பு - (உன்னுடைய விலக்ஷணவிக்ரஹபாரம்யத்தாலும் உபமாநராஹித்யாதிஶயத்தாலும் ஜகத்காரணத்வபாரம்யத்தாலும் ஶீலாதிஶயத்தாலும் உன்னுடைய) ஔஜ்ஜ்வல்யஸ்வபாவத்தை, உரைக்க - பாசுரமிட்டுச் சொல்ல, மாட்டேன் - ஶக்தனல்லேன்.

இ.—மூன்றாம்பாட்டில், அவர்கள் நம்மை உள்ளபடி அறியாமையாலே சொல்லமாட்டாதொழிகிறார்கள். நம்மை உள்ளபடி அறியும் உமக்குச் சொல்லத் தட்டு என்? என்ன,—என்னாலும் முடியாது என்கிறார்.

[பரஞ்சோதி இத்யாதி] - பரமாய்ப் பரஞ்சோதி நீ—அழகாலே எல்லாரிலும் மேற்பட்டிருக்கையாலே பரஞ்சோதி நீ; "தஸ்ய ஹாஸா ஸர்வமிதம் விபாதி." [நின் இகழ்ந்து இத்யாதி]-நின் இகழ்ந்து-உன்னையொழிந்து. [மற்றோர் பரஞ்சோதி இன்மையின்]-வேறொரு பரஞ்ஜ்யோதிஸ் இல்லாமையாலே. [படி ஓவி] - ஒப்பு ஒவி. [நிகழ்கின்ற பரஞ்சோதி]-வர்த்திக்கிற பரஞ்ஜ்யோதிஸ் நீ. [நின்னுள்ளே இத்யாதி] - ஸங்கல்ப ஏகதேசத்திலே தேவாதிரூபேண விஸ்த்ருதமான ஜகத்தை ஸ்ருஷ்டிக்கையாலே பரமமான ஜ்யோதிஸ் நீ; ஜகத்காரணத்வப்ரயுக்தமான பரஞ்ஜ்யோதிஸ்ஸும் உன்னது என்கை. [கோவிந்தா] - நீர்மையைப் பார்த்தால் பசுக்களோடும் பொருந்தும்படியாயிருக்கை; "செவ்வே நெஞ்சால் நினைப்பரிதால்". ஸௌலப்யத்தையால் வந்த தேஜஸ்ஸும் உன்னது; அழகுக்கு மேற்பட்டார் இல்லாமையாலே அழகால் வந்த தேஜஸ்ஸும் உன்னது; லோகத்தில் உபமாநரஹிதன் நீயே யாகையாலே உபமாநராஹித்யத்தால் வந்த தேஜஸ்ஸும் உன்னது; ஜகத்காரணத்வ ப்ரயுக்தமான தேஜஸ்ஸும் உன்னது. [பண்பு உரைக்கமாட்டேனே] - பண்பு - படி. உன்படிகள் இவையானபின்பு என்னால் பேசப்போகாது என்கிறார்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. நம்பக்கல் முதலடியிடாத லௌகிகரை விடும்; வ்யாவ்ருத்தரே நீர்; பேசினாலோ? என்ன,—என்னாலேதான் பேசப்போமோ? என்கிறார்.

---

மூன்றாம்பாட்டு 'பரஞ்சோதி' இத்யாதி—"லௌகிகர் சொன்னது அவத்யமாம்" என்ற அநந்தரத்திலே, தாம் "உரைக்கமாட்டேன்" என்னும்போது, "நீர் சொல்லும்" என்று ஒரு உக்தி கிடந்ததாக வேணுமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார், 'நம்பக்கல்' இத்யாதி. வ்யாவ்ருத்தரே நீர் - மயர்வற மதிநலம் பெறுகையாலே வ்யாவ்ருத்தரே நீரென்றபடி. "உரைக்கமாட்டேன்" என்றதைப்பற்ற 'என்னாலேதான்' இத்யாதி.

[பரஞ்சோதி நீ பரமாய்] - பரமாய்ப் பரஞ்சோதி நீ. வடிவழகிலேயாதல் ஐஶ்வர்யத்திலே யாதல் அல்ப மேற்றமுடையா னொருவனைக் கண்டால், ‘உன்தனை தேஜஸ்ஸு உடையானொருவனில்லை, உன்தனை ஐஶ்வர்யமுடையா னொருவனில்லை’ என்பர்களிறே; அங்ஙனன்றிக்கே, ‘இனி ஒருவ்யக்தியில் அவையில்லை’ என்னும்படி பூர்ணமாக வுள்ளது உன்பக்கலிலே யாகையாலே, பரமாய்க்கொண்டு பரஞ்ஜ்யோதிஸ்ஸாயிருக்கிறாய் நீ; ‘‘**தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி**’’ (தஸ்யபாஸாஸர்வமிதம்விபாதி) என்கிறபடியே. [நின் இத்யாதி] - லோகத்தில் தன்னோடு ஒத்தாரும் தனக்கு மேற்பட்டாரும் அநேகராயிருக்கச் செய்தே ‘உனக்கு ஸமராதல் அதிகராதல் உண்டோ?’ என்னக்கடவதிறே; அங்ஙனன்றிக்கே, உன்னையொழிய வேறொரு பரஞ்ஜ்யோதிஸ் இல்லாமையாலே உபமாநரஹிதனாய்க்கொண்டு வர்த்தியாநின்றுள்ள பரஞ்ஜ்யோதிஸ்ஸு நீ.

தனக்குங்கூடக் கடவனல்லாதானொருவனை ‘நீயேயிறே நாட்டுக்கெல்லாம் கடவாய்’ என்னக்கடவது; அங்ஙனன்றிக்கே, உன்னுடைய ஸங்கல்பலவலேஶத்திலே கார்யாகாரமாய்க்கொண்டு விஸ்த்ருதமாகாநின்றுள்ள லோகங்களையெல்லாம் உண்டாக்கின எம் பரஞ்ஜ்யோதி. ‘‘**புத்ரஸ்தேஜாத:**’’ (புத்ரஸ்தேஜாத:) என்னுமாபோலே, அவற்றையுண்டாக்கின பின்பு திருமேனியிலே பிறந்த புகர். ஸ்வாபாவிகமான மேன்மை அது, காரணத்வப்ரயுக்தமான புகர் இது; இப்படியிருக்கிற மேன்மையை எல்லைகாணிலும். [கோவிந்தா] - நீர்மை தரைகாண வொண்ணாதாயிருக்கிறது. [பண்பு] - உன்னுடைய ப்ரகாரம். அது என்னால் சொல்லப் போகாது, அநுபவித்துப் போமித்தனை. [கோவிந்தா பண்புரைக்கமாட்டேனே]-*‘‘நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னு மீனச்சொல்’’ என்று, நெஞ்சால் நினைக்க வொண்ணாதது சொல்லத்தானே போகாதிறே. (௩)

---

‘‘பரஞ்சோதி’’என்ன அமையாதோ?‘‘பரமாய்’’என்று விசேஷிப்பானென்?என்ன,‘வடிவழகிலே’இத்யாதி. உன்தனை-உன்னத்தனை. ஸௌந்தர்ய ஐஶ்வர்யங்களால் வந்த பரஞ்ஜ்யோதிஷ்ட்வம் சொல்லுகிற தென்று கருத்து. பகவத்தேஜஸ்ஸு ஸர்வோத்க்ருஷ்டமென்னு மிடத்தில் ப்ரமாணம்-‘தஸ்யபாஸா’ இத்யாதி; கடவல்லியிலே. பின் - பின்பு; அதுக்குமேலே. நின்னிகழ்ந்து - உன்னையொழிந்து. மற்றோர்பரஞ்சோதி யின்மையின் - வேறொரு பரஞ்ஜ்யோதிஸ் இல்லாமையாலே. படியோவி நிகழ்கின்ற - உபமாநரஹிதமாய்வர்த்திக்கிற: ‘பரஞ்சோதி’ நீ என்று, நீ என்றத்தை இரண்டிடத்திலும் கூட்டுவது. வடிவழகாலும் ஐஶ்வர்யத்தாலும் வந்த மேன்மையை வ்யதிரேகமுகத்தாலே த்ருடீகரிக்கிறார், ‘நின்னிகழ்ந்து இத்யாதியாலே’ என்னுதல்; ஸத்ருஶவஸ்த்வபாவத்தால் வந்த மேன்மையைச் சொல்லுகிற தென்னுதல். ‘‘மற்றோர் பரஞ்சோதியின்மையின்’’ என்று விசேஷித்ததுக்கு பாவம், ‘லோகத்தில்’ இத்யாதி.

‘உலகம்படைத்த’ என்னாதே ‘நின்னுள்ளேபடர்’ என்றதுக்குக்கருத்து என்?என்ன,‘தனக்குங்கூட’ இத்யாதி ; மேலுக்கு அவதாரிகையாதல். கடவனல்லாதானொருவனை - காரணத்வேந கர்த்தாவல்லாத ப்ரஹ்மாதிகளிலே ஒருவனை. ‘படைத்த எம்பரஞ்சோதி’ என்றதுக்குக் காரணத்வப்ரயுக்தமான மேன்மையாகக் கீழ் அருளிச்செய்து அபரபாவியாக, ‘காரணத்வப்ரயுக்தமான வடிவின் தேஜஸ்ஸாகவுமாம்’ என்று அர்த்தாந்தரம்— ‘‘புத்ரஸ்தேஜாத:’’இத்யாதி.உக்தத்தை நிகமித்துக்கொண்டு மேலில் பதத்துக்கு ஸங்கதி-‘ஸ்வாபாவிகமான’இத்யாதி.மேன்மையை எல்லைகாணிலு மிதி; அநேந பரத்வமபி வக்தும் ந ஶக்யத இதி பாவஸ் ஸூச்யதே. ப்ரகாரம்-ஸௌலப்யமாதல், கீழ்ச்சொன்னதெல்லாமாதல். ‘‘உரைக்கமாட்டேன்’’என்றதுக்கு பாவம் - ‘அது என்னால்’ இத்யாதி. ‘அப்படி சொல்லப்போகாதோ?’ என்ன, கிம்புநர்ந்யாயத்தாலே ஸாதிக்கிறார், ‘நெஞ்சால்’ இத்யாதி.‘‘பரஞ்சோதி கோவிந்தா’’ என்றது - ஸம்போதனை. ‘மாயம் செவ்வேநெஞ்சால்’ இத்யாதி - திருவிருத்தம். அவனுடைய **ஆஶ்சர்ய** சேஷ்டிதமானது நேரே நெஞ்சால் நினைக்கஅரிது; ஆஶ்சர்யமேதென்ன, வெண்ணெயுண்டா **னென்று** சொல்லப்பட்ட அபக்ருஷ்டவசந மென்று பாசுரார்த்தம்.

நின்னுள்ளே படருலகம் தொடங்கி, கோவிந்தா -நீ- பரமாயிருக்கிற பரஞ்சோதி; பின்னும்நின்னிகழ்ந்து - மற்றோர் பரஞ்சோதிதொடங்கி, பரஞ்சோதியாகையாலே, பண்புரைக்கமாட்டேன் இத்யந்வய: (௩)

---

*திருவிருத்தம்—௯௮.

## நான்காம்பாட்டு.

மாட்டாதேயாகிலும் இம்மலர்தலைமாஞாலம்நின்
மாட்டாயமலர்புரையும் திருவுருவம்மனம்வைக்க
மாட்டாதபலசமயமதிகொடுத்தாய் மலர்த்துழாய்
மாட்டேநீமனம்வைத்தாய் மாஞாலம்வருந்தாதே.

**ஆ.**—இப்படி போக்யனாயிருந்த எம்பெருமானை இந்தலோகம் இழந்துபோகிறபடி காணொன்றுகொண்டு இன்னாதாகிறார்.

**ஒ.**—நாலாம்பாட்டில், ஸமஸ்தசேதநரும் அத்யந்த விலக்ஷணனாய் உபநிஷத்ரஹஸ்யனான உன்னை இழந்தே போமத்தனையாகாதே என்று கொண்டு அழகருடைய திருவழகின் மிகுதி சொல்லுவிக்கச் சொல்லுகிறார்.

[மாட்டாதே] என்று தொடங்கி - ப்ரஹ்மாதி பிபீலிகாந்தமான ஸமஸ்தசேதநரும் ப்ரக்ருதி ஸம்பந்த ப்ரயுக்தமான தங்கள் அஜ்ஞாநத்தாலே நிதிபோலே ஶ்லாக்யமாய் நிரதிஶய போக்யமாயிருந்துள்ள உன்னுடைய திருவடிவை அநுஸந்திக்கைக்கு அறிவுடையாரன்றிக்கேயிருக்கச்செய்தே அதுக்கு மேலேயும் அறிவைக் கெடுக்கும் ஸ்வபாவமாய் ஒன்றோடொன்று சேராத பாஹ்யஸமயபுத்திகளை ப்ராவர்த்திப்பித்தாய். [மலர்த்துழாய் என்று தொடங்கி]—பேரளவுடைய உன்னுடைய திருவுள்ளத்தையுங் கூட அங்யபரமாக்கவல்ல திருத்துழாய் முதலான போக்யஜாதத்திலே நீ ப்ரவண சித்தனானாய்.

**ப.**—அநந்தரம், இந்த வைலக்ஷண்யத்தினுடைய போக்யதையிலே நீ அங்யபரனானால், அறிவில்லாத ஜகத்து க்லேஶியாதோ? என்கிறார்.

மலர் - திருநாபீ கமலத்தை, தலை - (தனக்குத்) தலையாகவுடைய, இ மா ஞாலம் - இந்தப் பெரிய ஜகத்தானது, நின் - (ப்ராப்தனான) உன்னுடைய, மாட்டு ஆய - ஸ்வரூபத்திலேயாய், மலர் புரையும்-புஷ்பம்போலே ஸுகுமாரமான, திருவுருவம் - திருமேனியை, மனம் - நெஞ்சிலே, வைக்க - வைக்கைக்கு, மாட்டாதேயாகிலும் - (அநாதியாக) மாட்டாதிருக்கச் செய்தேயும், மாட்டாத-(விக்ரஹாநுஸந்தாநத்துக்கு) யோக்யமல்லாத, பல சமயம் மதி-பல ஸமயஜ்ஞாநங்களை, கொடுத்தாய் - கொடுத்தாய்; நீ - நீதான், மலர் - விகஸிதமான, துழாய்மாட்டே - திருத்துழாயினிடத்திலே, மனம் வைத்தால் - நெஞ்சை வைத்து வ்யாஸக்தனானால், மா ஞாலம் - இந்த மஹாலோகம், வருந்தாதே - (அங்யபரமாய்) க்லேஶியாதோ?.

க்லேஶித்தே விடுமிறே என்று கருத்து. மாடு-இடம். மலர்த்தலை-மலர்மேலென்றுமாம்.

**இ**—நாலாம்பாட்டில், இப்படி விலக்ஷணனாய் உபநிஷத்ரஹஸ்யனான உன்னை ஸம்ஸாரிகள் இழந்து க்லேஶப்பட்டே போமித்தனையாகாதேயென்று அழகருடைய அழகின் மிகுதியே பேசுவிக்கப் பேசுகிறார்.

[மாட்டாதே] என்று தொடங்கி - திருநாபீகமலத்தைத் தலையாகவுடைத்தான இம்மஹாப்ருதிவி, உன்பக்கலிலேயான புஷ்பஹாஸ ஸுகுமாரமான திருமேனியிலே நெஞ்சை வைக்கமாட்டாதே யிருக்கச் செய்தேயும். [நின்மாட்டு ஆய] - உன்னிடத்திலேயான, உன்பக்கலிலேயான. அன்றிக்கே, 'மாட்டு' என்று மாடாய், நிதிபோலே ஶ்லாக்யமான என்னுதல்; 'மாட்டு' என்று மட்டாய் "மத்⁴வ உத்ஸ:" என்று மதுஸ்யந்தியாகையாலே நிரதிஶயபோக்யம் என்னுதல். 'மலர்தலைமாஞாலம்' என்கிறது - மாட்டாமைக்கு நிபந்தநம், ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்யத்வங்கள் என்கை. [மாட்டாய பலசமயமதி கொடுத்தாய்]—திருவுருவம் மனம்வைக்க மாட்டாத

வையாய் ஒன்றோடொன்று சேராத பாஹ்யஸமயமதிபேதங்களை உண்டாக்கினாய்; பண்டே உன்னை அறியமாட்டாத ஸம்ஸாரிகளுக்கு இம்மதிபேதங்களையும் உண்டாக்கினாய். [மலர்த் துழாய்மாட்டே நீமனம்வைத்தாய்] — உன்திருவுள்ளத்தையும் கால்தாழப்பண்ணவல்ல திருத் துழாய் முதலான போக்யஜாதங்களிலே ப்ரவணனானாய்; மாடு - இடம், அதன்பக்கலிலே. [மாஞாலம் வருந்தாதே]—இம்மஹாப்ருதிவி உன்னையிழந்து நோவுபடாதோ? பிரானே! தமக்குப் பகவத் விஶ்லேஷம் க்லேஶகரமாயிருக்கையாலே எல்லாருக்கும் இப்படியிருக்குமென்று இருக்கிறார். பண்டே அறிவில்லாத ஸம்ஸாரிகள்; அதுக்குமேலே விலக்கடிகளும் உண்டாயிற்று; ரக்ஷகனான நீ போகப்ரவணனானாய்; இனி ஸம்ஸாரிகளுக்கு க்லேஶமேயோ ஶேஷித்தது?

ஈடு.— நான்காம்பாட்டு. தாம் "உரைக்கமாட்டேன்" என்றார்; இவனுடைய போக்யதாதிஶயம் இருந்தபடியால் சிலராலே கிட்டலாயிருந்ததில்லை; இனி ஸம்ஸாரிகள் இழந்து நோவுபட்டுப்போமித்தனையாகாதே என்று அழகருடைய அழகின்மிகுதி பேசுவிக்கப் பேசுகிறார்.

[மாட்டாதே இத்யாதி]—நின்மாட்டாய மலர் புரையும் திருவுருவம் மனம்வைக்க இம்மலர்தலைமாஞாலம் மாட்டாதேயாகிலும். 'நின்மாட்டாய - உன்னிடத்திலேயான, உன்பக்கலிலேயான. மட்டை "மாட்டு" என்று நீட்டிக்கிடக்கிறதாய், * "உயஉ தூ :" (மத்வஉத்ஸ:) என்கிறபடியே மதுஸ்யந்தியாகையாலே நிரதிஶயபோக்யமான திருமேனியை யென்னுதல். 'இம்மலர் தலைமாஞாலம்' என்கிறது - மாட்டாமைக்கு நிபந்தநம், ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்யத்வங்களென்கை. மாட்டை - மாடாய், நிதியாய்; உன்னுடைய நிதிபோலே ஶ்லாக்யமாய், புஷ்பஹாஸ ஸுகுமாரமாயிருந்துள்ள திருமேனியிலே நெஞ்சை வைக்க, திருநாபீகமலத்தை அடியாகவுடைத்தான இம்மஹாப்ருதிவியானது மாட்டாதேயாகிலும். 'ஆகிலும்' என்றது - மாட்டாதிருக்கச்செய்தே என்றபடி. இதுதானே போருமிறே அநர்த்தம்; கர்மஸம்ஸ்ருஷ்டரான சேதநர்க்கு, கர்மஸம்பந்த மற்றால் அநுபவிக்கும் உன் திருமேனியிலே நெஞ்சை வைக்கப் போகாதிறே; அவ்வநர்த்தத்துக்குமேலே. [நின்திருவுருவம் மனம் வைக்கமாட்டாத பலசமயமதி கொடுத்தாய்] - உன்திருமேனியிலே நெஞ்சை வைக்கமாட்டாதவையாய், அவைதான் பலவாயிருக்கிற சமயமுண்டு - மதாந்தரங்கள்; அவற்றின்

---

நாலாம்பாட்டு "மாட்டாதே" இத்யாதி. 'ஸ்வாநுபவத்தைவிட்டு ஸம்ஸாரிகளிழவிலே நெஞ்சு செல்லுமது "யது நாந்யஸ்வஶ்ருதி" என்னும்படியான விஷய வைலக்ஷண்யத்துக்குக் கொத்தையன்றோ?' என்ன, 'தாமுரைக்க' இத்யாதி. 'போக்யதாதிஶயம்' என்றது - 'மலர்த்துழாய்மாட்டேநீ" என்றத்தைப் பற்றவாதல், "நின்மாட்டாய மலர்புரையுந் திருவுருவம்" என்றத்தைப் பற்றவாதல். முந்தினபக்ஷத்தில், போக்யதாதிசயம் – போகப்ராவண்யம். த்விதீயபக்ஷத்தில், யதாஸ்தித ஏவார்த்த:. அந்வயிக்கிறார் 'நின்மாட்டாய' இத்யாதி. "மாட்டு" என்றதுக்கு அர்த்தத்ரயம் - இடமும், தேனும், நிதியும். முந்தின அர்த்தத்தில், "மாடு" என்னுமத்தை "மாட்டு" என்கிறது. மாடு – இடம். மட்டு – தேன். மாடு – நிதி. த்விதீயமர்த்தமாஹ – 'மட்டை மாட்டென்று' இத்யாதி. த்ருதீயமர்த்தமாஹ – 'மாட்டை மாடாய்' இத்யாதி. தலையென்று – காரணமாய், திருநாபீகமலத்தைக் காரணமாகவுடைய ஞாலமென்றபடி. "ஞாலம்" என்னாமல், "இம்மலர்தலைமாஞாலம்" என்று விசேஷிக்கிறதென்? என்ன, 'இம்மலர்தலை' இத்யாதி. "இம்மலர்தலைமாஞாலம் நின்மாட்டாய" இத்யாரப்ய, 'மாட்டாதேயாகிலும்' இத்யஸ்யஹாவமாஹ–'இதுதானே' இத்யாதி. ஏததேவவிவ்ருணோதி–'கர்மஸம்ஸ்ருஷ்டரான' இத்யாதி. ஏதத்வாக்யாநந்தரே – 'இதுதானே போருமிறே அநர்த்தம்' என்ற வாக்யம் அநுஸந்தேயம். மதியென்று மநஸ்ஸாதல், ஜ்ஞாநமாதல். மநஸ்ஸென்ற அர்த்தம் 'உன் திருமேனியிலே' இத்யாதி. "மாட்டாத" என்றது - சமயத்துக்கு விசேஷணம். திருமேனியிலே நெஞ்சை வைக்கமாட்டாதவையாய் – திருமேனியிலே நோக்கில்லாதவையாய். சமயங்களிலே – சாஸ்த்ரங்களிலே. யத்வா, "மனம்வைக்கமாட்டாத" என்கையாலே, ஸமயஸ்தபுருஷர்களைச் சொல்லவுமாம். "திருவுருவம் மனம்வைக்க" என்கிற இது – "மாட்டாதேயாகிலும்"

* யஜுஸ்ஸம்ஹிதை - உ-அஷ்டகே-க-ப்ரஶ்நே.

பக்கலிலே நெஞ்சை வைக்கப் பண்ணினாய். 'திருவுருவம் மனம்வைக்க' என்கிறஇடம் - கீழ்மேலிரண்டிடத்திலும் அந்வயிக்கிறது. உன் திருமேனியிலே நெஞ்சைவைக்க வொண்ணாதபடி பாஹ்யமான பலசமய மதிபேதங்களையும் பண்ணிவைத்தாய். பண்டே உன்னை அறியமாட்டாத ஸம்ஸாரிகளுக்கு மதிபேதங்களை உண்டாக்கினாய்; இவையித்தனையும் அஸத்ஸமமாமிறே, நீதான் இவற்றுக்கு வந்து கிட்டலாம்படி யிருந்தாயாகில்:—[மலர்த்துழாய்மாட்டே நீ மனம் வைத்தாய்] உன் திருவுள்ளத்தையும் கால்தாழப்பண்ணவல்ல திருத்துழாய் தொடக்கமான போக்யஜாதத்திலே திருவுள்ளத்தை வைத்தாய். இத்தால் - உன்னுடைய போக்யதை சிலரால் கிட்டலாயிருந்ததோ? என்றபடி. "மாடு" என்கிற இத்தை மாட்டென்று கிடக்கிறதாய், மாடு - இடம், அதின்பக்கலிலே என்றபடி. [மாஞாலம் இத்யாதி] - இம்மஹாப்ருதிவியானது இங்ஙனே நோவுபட்டேபோ மித்தனையாகாதே. கர்மவஶ்யராகையாலே, தானே உன்பக்கலிலே நெஞ்சை வைக்கமாட்டிற்றிலர்; அதுக்கு மேலே நீ பல விலக்கடிகளையும் உண்டாக்கிவைத்தாய்; நீயோ, நிரதிஶயபோக்ய ஜாதத்திலே ப்ரவணனாய்; உன்னைவிட்டால் பின்னை "[கிரந்தம்]" (புத்திநாஶாத் ப்ரணஶ்யதி) என்னும் விஷயங்களில் இவர்கள் ப்ரவணராய் இங்ஙனே நோவுபட்டேபோ மித்தனையாகாதே. (ச)

# ஐந்தாம்பாட்டு.

வருந்தாதவருந்தவத்த மலர்கதிரின்சுடருடம்பாய்
வருந்தாதஞானமாய் வரம்பின்றிமுழுதியன்றாய்
வருங்காலம்நிகழ்காலம் கழிகாலமாய்உலகை
ஒருங்காகவளிப்பாய்சீர் எங்குலக்கவோதுவனே.

---

என்றத்தோடே அந்வயித்ததிறே யென்ன, 'திருவுருவம் மனம்வைக்க என்கிறவிடம்' இத்யாதி. "மதி" என்று ஜ்ஞாநமென்ற பக்ஷத்தை அருளிச்செய்கிறார், 'உன் திருமேனியிலே' இத்யாதி. இந்தப்பக்ஷத்தில், "மனம்வைக்கமாட்டாத" என்று - க்ரியாவிசேஷணம். மனம் வைக்கவொண்ணாதபடி யித்யர்த்த:. பலசமயமதி பேதங்களை சமயங்களடியாக உண்டான புத்திபேதங்களை. கீழெல்லாம் கடாக்ஷித்து மேலுக்கு அவதாரிகை-'பண்டேஉன்னை இத்யாதி. 'இவையித்தனையும்' என்றது - ஸ்ருஜ்யத்வாதிகள். கேவலம், 'துழாய்' என்னாதே, "மலர்த்துழாய்" என்றத்தைப்பற்ற 'உன் திருவுள்ளத்தையும்' இத்யாதி. திருத்துழாய் - போக்யஜாதத்துக்கெல்லாம் உபலக்ஷணமென்றபடி. 'இத்தால்' என்றது - கீழில் பதங்களெல்லாவற்றையும் கடாக்ஷித்தாதல், கீழ்ப்பதமாத்ரத்தைப் பற்றாதல். இந்த த்விதீயபக்ஷத்தில், 'உன்னுடைய போக்யதை' என்றது-ஸௌலப்யாவண்ய மென்றபடி. "மாட்டே" என்றால்-இவ்வர்த்தத்தைக் காட்டும் படி எங்ஙனே? என்ன, 'மாடென்கிற' இத்யாதி. வருந்தாதே-வருந்தியேபோமித்தனையாகாதே. நோவுபட்டே போகைக்கு ஹேதுக்களையும், நோவுபடும் ப்ரகாரங்களையும் பாட்டின் அர்த்தங்களைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார், 'கர்மவஶ்யராகையாலே' இத்யாதி. 'கர்மவஶ்யராகையாலே' என்றது "இம்மலர்தலைமாஞாலம்" என்றத்தைப்பற்ற.'உன்னைவிட்டால்'இத்யாதி - "[கிரந்தம்] புத்திநாஶாத் ப்ரணஶ்யதி" இதி கீதாஸு த்விதீயே.

நின்மாட்டாய மலர்புரையும் திருவுருவம் மனம்வைக்க இம்மலர்தலைமாஞாலம் மாட்டாதேயாகிலும் திருவுருவம் மனம்வைக்கமாட்டாத பல சமயமதி கொடுத்தாய்; மலர்த்துழாய்தொடங்கி, வருந்தாதே இத்யந்வய

**ஆ.**—'இப்படி என்ன தபஸ்ஸு பண்ணிப் பெற்றீர்?' என்னும்படி அதிகல்யாணமாய் ஸ்வாபாவிகமாய் நிரதிசயதேஜோமயமாயிருந்த திருவுடம்பையுடையனுய், ஸ்வாபாவிக அஸங்குசித திவ்யஜ்ஞாநவிசிஷ்டனுய் ஸர்வகாலமும் ஒருபடியே ஸர்வாத்மரக்ஷணைக ஸ்வபாவனுயிருந்த உன்னுடைய குணங்களை நான் எங்கே முடியச்சொல்லுவது? என்கிறுர்.

**ஒ.**—ஐந்தாம்பாட்டில், 'அஜ்ஞமான லோகம் மாட்டாதாகில் நீர் பேசினுலோ?' என்று எம்பெருமான் அருளிச்செய்ய, 'நிஸ்ஸீமமான குணவிபூத்யாதிகளையுடைய உன்னை என்னுல் முடியப் பேசமுடியாது' என்கிறுர்.

[வருந்தாத] என்று தொடங்கி - யத்நஸித்தமன்றிக்கே ஸஹஜமாயுள்ள நிரதிசய தப: பலரூபமாய் விகஸ்வரதேஜோரூபமான திருவடிவை யுடையையாய் யத்நேந ஸம்பாதிக்க வேண்டாதே ஸஹஜமான ஜ்ஞாநத்தையும் மற்றும் எல்லையில்லாத குண விபூத்யாதிகளையும் உடையையாய்க் காலத்ரயத்திலும் லோகத்தை ஒருபடியே ரக்ஷிக்கிற உன்னுடைய குணங்களை. உலக்க - முடிய.

**ப.**—அநந்தரம், ஏவம்வித வைலக்ஷண்யயுக்தனுன உன்குணகணங்களை எங்ஙனே முடியச் சொல்லுவேன்? என்கிறுர்.

வருந்தாத - யத்நஸாத்யமன்றியிலே, அரு-பெறுதற்குஅரிய, தவத்த-தபஸ்ஸினுடைய பலமென்னலாம்படி, மலர் - விகஸிதமான, கதிரின் - ப்ரபையையுடைத்தான, சுடர் - தேஜஸ்தத்வத்தை, உடம்பு ஆய் - வடிவாகவுடையவனுய், வருந்தாத - யத்நஸித்தமன்றியே ஸ்வாபாவிகமான, ஞானமாய் - ஜ்ஞாநத்தையுடையையாய்க்கொண்டு, வரம்பு இன்றி - பரிச்சேதம் இல்லாதபடி, முழுது - ஸர்வபதார்த்தத்திலும், இயன்றுய்-வர்த்திப்பானுய், வருங்காலம் நிகழ்காலம் கழிகாலம் ஆய் - காலத்ரயத்திலும் ஸங்க்ஹிதனுய், உலகை - லோகத்தை, ஒருங்காக - ஒருபடிப்பட, அளிப்பாய் - ரக்ஷிக்குமவனே! சீர் - (உன்னுடைய ஸ்வரூபௌஜ்ஜ்வல்யத்தாலும் ஜ்ஞாநௌஜ்ஜ்வல்யத்தாலும் வ்யாப்தியாலும் ரக்ஷணத்தாலு முள்ள) குணங்களை, எங்கு - எங்கே, உலக்க - முடிய, ஓதுவன் - சொல்லுவேன்? முடியச்சொல்ல முடியாது என்று கருத்து. உலக்க - முடிய.

**இ.**—ஐந்தாம்பாட்டில், அஜ்ஞமான லோகம் மாட்டாதாகில் மயர்வற மதிநலமுடைய உமக்குச் சொல்லக் குறையென்? என்ன, 'நீ ஸாவதிகனுயாகிலன்றோ பேசலாவது' என்கிறுர்.

[வருந்தாத அருந்தவத்த]-யத்நத்தால் வந்ததன்றிக்கே ஸஹஜமாய் நிரதிசயதப: பலமென்று சொல்லலாயிருக்கை. வருந்தாதே வருமதாய்; 'தவ' என்று மிகுதியாகவுமாம். "நாகாரணாஜ காரணா:", [மலர்கதிரின் சுடருடம்பாய்] - விகஸ்வரதேஜோரூபமாய், அதில் மண்பற்றைக் கழித்த ஒளியை உடம்பாகவுடையையாய். [வருந்தாத ஞானமாய்] - ஸஹஜஸார்வஜ்ஞ்யத்தையுடையையாய். [வரம்பின்றி முழுதியன்றுய்] - எல்லையில்லாத ஸகலபதார்த்தங்களையும் நிர்வஹிக்கிறவனே! [வருங்காலம் இத்யாதி] - காலத்ரயத்திலும் லோகத்தை ஒருங்காக ஒருமடைப்பட ஒருபடியே ரக்ஷிக்கிற உன்னுடைய குணங்களை எங்கே முடிய நான் பேசுவேன்? [உலக்க] - முடிய. விலக்ஷணவிக்ரஹம், ஸஹஜஸார்வஜ்ஞ்யம், உடைமையை நிர்வஹிப்பான் உடையவனுகையாலே எல்லாவற்றையுமுடைய உன்ஸர்வரக்ஷகத்வம் இவற்றை எங்கே நான் முடிவுகாண?

**ஈடு.**—அஞ்சாம் பாட்டு. மூன்றும்பாட்டுக்கும் இப்பாட்டுக்கும் நேரே ஸங்கதி; நாட்டாரிழவு நடுவு ப்ரஸங்காத் ப்ரஸ்துத மித்தனை. "கோவிந்தா பண்புரைக்கமாட்டேனே" என்று சொல்லுவானேன்? நாட்டார்பேரிழவு கிடக்கிடீர்: மயர்வற மதிநலம் பெறுகையாலே நீர் வ்யாவ்ருத்தரே; நாட்டாரில் வ்யாவ்ருத்தரான அளவேயோ? விண்ணுளாரிலும் வ்யாவ்ருத்

ஐந்தாம்பாட்டு 'வருந்தாத' இத்யாதி. மூன்றும்பாட்டில் இப்பாட்டுக்கு ஏற்றம் 'விண்ணுளாரிலும் வ்யாவ்ருத்தர்' என்றது.

தரே; நீர் நம்மைப் பேசமாட்டீரோ? என்ன, 'என்னை வ்யாவ்ருத்தனுக்கினுயித்தனையல்லது உன்னை ஸாவதியாக்கிற்றில்லையே' என்கிறுர்.

[வருந்தாத இத்யாதி]-இவ்வடிவழகை என்னுலேதான் பேசலாயிருந்ததோ? [வருந்தாத வருந்தவத்த] - ஸ்வாபாவிகமாய் வருவதாய், மிகவும் விகஸிதகிரணதேஜோரூபமாய். தவ - மிகுதி. திருமேனியைக் கண்டவாறே, 'அரியதப:பலமோ?' என்று தோற்றியிருக்கும்; சிறிது அவகாஹித்த வாறே, 'ஒருதப:பலமல்ல; ஸஹஜபாக்யபலம்' என்று தோற்றியிருக்கும். [மலர்கதிரின்சுடருடம் பாய்] - விகஸ்வரகிரணதேஜோரூபமாய். அதுதன்னில் மண்பற்றைக் கழித்து, ரஜஸ்தமோமிஶ்ரமா யிருக்கையன்றிக்கே ஶுத்தஸத்வமயமாய், நிரவதிகதேஜோரூபமாய், ஆத்மகுணங்களுக்கும் ப்ரகா ஶகமான திவ்யவிக்ரஹத்தையுடையனுயிருக்கும் இருப்பு. கர்மநிபந்தனமான தேஹங்கள்போலன் றிறே, இச்சாக்ருஹீதமானது இருப்பது. அஸ்மதாதிகளுடைய ஶரீரங்கள், பாபத்தாலேயாயிருப்பன சிலவும், புண்யத்தாலேயா யிருப்பன சிலவும், உபயத்தாலேயாயிருப்பன சிலவுமா யிருக்குமிறே. "நாகாரணாத்காரணாத்வா காரணாகாரணாந்நச" (நாகாரணுத்காரணுத்வா காரணு காரணுந்நச) - அகாரண மென்கிறது, கார்யத்தை. காரண மென்கிறது - மூலப்ரக்ருதியை.

## ப்ரமாணத்திரட்டு.

ஶ்ரீவிஷ்ணுபுராணே ஷஷ்டாம்ஶே ஸப்தமாத்யாயே கேஶித்வஜஸம்வாதே ப்ரஹ்ம ஸ்வரூபநிரூபணாநந்தரம் ஶுபாஶ்ரயவிஷயப்ரஶ்நாநந்தரம் — "ஸமஸ்தாவரணாதீதம் நிராலம்பநபாவநம்। ஸர்வாவஸ்தாஸு ஸமதாம் யாதி யோகீ ததோ த்ருவம்॥ நாகாரணாத்காரணாத்வா காரணாகாரணாந்நச। ஶரீரக்ரஹணம் வ்யாபி தர்மத்ராணாய கேவலம்॥ நாகாரணாதித்யாதி:— காரணம் ப்ரயோஜநம்; ஸுகம். அகாரணம் அப்ரயோஜநம்; துகம். காரணாகாரணம் மிஶ்ரம். ஏதது க்தம் பவதி; ந நாரகிவத் துஷ்கர்மாநுபவாய தவ ஶரீரக்ரஹணம், ந ச ஸ்வர்கிவத் ஸுகர்மாநுபவாய, நாபி மநுஷ்யாதிவத் உபயகர்மாநுபவாய, கிந்து கேவலம் தர்மத்ராணாயேதி. யத்வா கஸ்ய ஸுகஸ்ய காரணத்வாத் ப்ராபகத்வாத் காரணம் தர்ம:. தத்விபரீத: அகாரணம் அதர்ம:. தத்த்வயம் காரணாகாரணம். ஸத்த்வாதிக்ஷேத்ரஜ்ஞாநாம் ஜந்மவதாம் இவ, கர்மவஶ்யத்வாத். கிந்து கேவலம் தர்மத்ராணாயேதி।"

பதஅவதாரிகை – 'இவ்வடிவழகை' இத்யாதி. 'வருந்தாத வருந் தவத்த' என்று பதச்சேதமாக்கி அர்த் தம்—'ஸ்வாபாவிகம்' இத்யாதி. அத்து, அ – சாரியை; அவ்யய மென்றபடி. யத்வா வருந்தாததாய் – ஸ்வாபாவிக மாய், அருந்தவத்த- அரியதப:பலமாயிருப்பதாய் என்று அர்த்தாந்தரம் விவக்ஷித்து, 'வருந்தாத' என்று வைத்து 'அருந்தவத்த' என்ருல் வ்யாஹதமன்றே? என்ன 'திருமேனியை' இத்யாதி. இந்தப்பக்ஷத்தில், 'அருந்தவத்த வருந்தாத' என்று அந்வயமாதல். 'கதிரின்சுடருடம்பு' என்றதுக்கு ஹாவம்-'அது தன்னில் மண்பற்றை' இத்யாதி வாக்யம். 'குணப்ரகாஶகத்வத்துக்கு அடியேது?' என்ன, 'கர்மநிபந்தந' இத்யாதி. இவ்வர்த்தத்துக்குமேலே ப்ர மாணம் சொல்லுவாராக, ப்ரமாணர்த்தத்தை முந்தற அருளிச் செய்கிறுர், 'அஸ்மதாதி' இத்யாதி. அதாவது— அகமென்று - து:கமாய், அரணமென்று - ப்ராபகமாய், து:கப்ராபகமான பாபத்தைச் சொல்லுகிறது 'அக ரணம்' என்று. கம் என்று ஸுகமாய், அரணமென்று – ப்ராபகமாய், ஸுகப்ராபகமான புண்யத்தைச் சொல்லு கிறது 'காரணம்' என்று. 'காரணுகாரணம்' என்று – புண்யபாபங்களைச் சொல்லுகிறது. ஹேவ்யாபி தவசரீரக்ரஹணம், அகாரணுந்ந – து : கப்ராபகாத் பாபாச்ச நபவதி; காரணுந்ந – ஸுகப்ராபகாத் புண்யாச்சநப வதி; காரணுகாரணுந்ந-உபயாச்ச நபவதி ஸ்தாவராதிஶரீரபரிக்ரஹ : கேவலம் பாபாத், தேவாதிஶரீரபரிக்ரஹ

காரணகாரண மென்கிறது - மஹதாதிகளை. † (அன்றியே, ஸுகஶரீரமோ, து:கஶரீரமோ, உபயத்தாலுமான ஶரீரமோ? கம் - ஸுகம்: அகம் - து:கம். து:கம் காரணமோ? ஸுகம் காரணமோ? ஸுகதுக்கங்களிரண்டும் காரணமோ வென்னில்;- இவை இத்தனையுமன்று.) "ஶரீர க்ரஹணம் வ்யாபிந்" (ஶரீரக்ரஹணம் வ்யாபிந்) - ஸர்வகதனாய் ஜகச்சரீரனாயிருக்கிற நீ ஶரீர க்ரஹணம்பண்ணுகிறது, "தர்மத்ராணாய கேவலம்" (தர்மத்ராணாய கேவலம்)- * "காண வாராய்" என்று விடாய்த்திருப்பார் கண்டு அநுபவிக்கைக்குத் தண்ணீர்ப்பந்தல்வைக்கிறபடியிறே; "நசாகார:-பக்தாநாம்" (நசாகார:-பக்தாநாம்) என்கிறபடியே - [வருந்தாதஞானமாய்] - ஒரு ஸாதநாநுஷ்டாநத்தாலேயாதல், மயர்வற மதிநலம்அருளப்பெற்றுதல் வந்ததன்றிக்கே, ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய். [வரம்பின்றி முழுதியன்றாய்] - வரம்பில்லாத எல்லாவற்றையும் நிர்வஹித்தாய்; உடையவனிறே உடைமையை நிர்வஹிப்பான். [இயன்றாய்] - இயலுகையாவது - நிர்வஹிக்கை. உடையவனாய்க்கடக்கநிற்கையன்றிக்கே நோக்கும்படிசொல்லுகிறது. [வருங்காலம் இத்யாதி]-காலத்ரயத்துக்கும் நிர்வாஹகனாய் லோகங்களை ஒருபடிப்பட ரக்ஷித்துக்கொண்டு போருகிற உன்னுடைய கல்யாணகுணங்களை என்னாலே முடியச்சொல்லித் தலைக்கட்டலாயிருந்ததோ? உன்னுடைய விக்ரஹவைலக்ஷண்யம் அது, ஸர்வத்தையும் யுகபத் ஸாக்ஷாத்கார ஸமர்த்தனாயிருக்கிற இருப்பு அது, ரக்ஷகத்வம் அது, ஏதென்று பேசித் தலைக்கட்டுவேன்? (௫)

# ஆறாம்பாட்டு.

ஓதுவாரோத்தெல்லாம் எவ்வுலகத்துஎவ்வெவையும்
சாதுவாய்நின்புகழின் தகையல்லால்பிறிதில்லை
போதுவாழ்புனந்துழாய்முடியினாய் பூவின்மேல்
மாதுவாழ்மார்பினாய் என்சொல்லியான்வாழ்த்துவனே.

கேவலாத் புண்யாத், மநுஷ்யஶரீரபரிக்ரஹஸ்து உபயாத், ஏவம் தவ ஶரீரபரிக்ரஹ: ஏதைர் ந பவதி; கேவலம் தர்மத்ராணாய இத்யர்த்த:. இந்த அர்த்தம் பிள்ளை யெங்களாழ்வான் அருளிச்செய்தது; இத்தை யநுஸரித்து இவ்விடத்திலே இப்படி அருளிச்செய்தது. பிள்ளையெங்களாழ்வான் அருளிச்செய்தது இன்னம் ஓரர்த்த முண்டு: அதாவது – அகாரணம் – அப்ரயோஜநம்; து:கம். காரணம் – ப்ரயோஜநம், ஸுகம். காரணகாரணம் – உபயமிஶ்ரம். நாரகியைப்போலே பாபபலாநுபவத்துக்காகவன்று உன்னுடைய ஶரீரபரிக்ரஹம்; ஸ்வர்க்கியைப்போலே புண்யபலாநுபவார்த்தமுமன்று, மநுஷ்யாதிகளைப்போலே உபயபலாநுபவார்த்தமு மன்று; கிந்து-கேவலம் தர்மத்ராணயேதி. இப்படி எங்களாழ்வான் அருளிச்செய்த அர்த்தத்வய மொழிய, த்ருதீயார்த்தம் 'அகாரணமென்கிறது' இத்யாதி. இதம்வசநம் பஞ்சமே அம்ஶே பகவந்தப்ரதி ப்ரஹ்மணோ விஜ்ஞாபநம். கார்யத்தை – ஷோடசவிகாரமாகிற கார்யத்தை. மஹதாதிகளை – மஹதாதிஸப்தகத்தை. சரீரபரிக்ரஹம் பண்ணுகிறது, இவைகளினாலேயன்றென்றபடி. கேவலம் தர்மத்ராணாய – தர்மரூபத்ராணாயேத்யர்த்தோத்ர விவக்ஷித:. ஆஶ்ரிதர் அநுபவிக்கைக்கு திவ்யவிக்ரஹபரிக்ரஹம் பண்ணுகிறானென்னுமதுக்கு ப்ரமாணம்-'நசாகார' இத்யாதி: ஜிதந்தாயாம். இதம் லிகிதம். வருந்தாதஞானமாய் – யத்நஸித்தமன்றியே ஸ்வாபாவிகமான ஜ்ஞானத்தை யுடையவனாய். வரம்பில்லாத எல்லாவற்றையும்-பரிச்சேதமில்லாத ஸர்வபதார்த்தங்களையும். 'ஒருங்காகவளிப்பாய்' என்றத்தோடு புநருக்தமாகாமைக்காக, 'முழுதியன்றாய்' என்று – சேஷித்வத்தைச் சொல்லுகிறதென்று விவக்ஷித்து, 'இயன்றாய் என்றால் – சேஷித்வத்துக்கு வாசகமாமோ?' என்ன, 'உடையவனிறே' இத்யாதி லக்ஷணயா சொல்லுகிறதென்றபடி. மேலுக்கு அவதாரிகை – 'உடையவனாய்' இத்யாதி. உடையவனாய் – சேஷியாய். வருங்காலம் – பவிஷ்யத். நிகழ்காலம் – வர்த்தமாநம். கழிகாலம் – பூதம். ஒருங்காக – ஒருபடிப்பட. உலக்க – முடிய. 'வருந்தாதவருந்தவத்த' இத்யாதி காதாமாத்ரம் பராம்ருஶ்ய ஹாவ மாஹ, 'உன்னுடையவிக்ரஹ' இத்யாதி. "யோவேத்தி யுகபத்ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதாஸ்வத:" என்றத்தைப் பற்ற – 'ஸர்வத்தையும்' இத்யாதி. 'எங்கு ஓதி – உலக்குவன்' என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் – 'ஏதென்றுபேசித் தலைக்கட்டுவனென்று.' க்ரமேண அந்வய:. (௫)

† குண்டலிதம் ப்ரக்ஷிப்தம். * திருவாய்மொழி அ-௫-உ.

**ஆ.**—ஸர்வலோகங்களிலுமுள்ள அத்யேதாக்களெல்லாராலும் ஓதப்படுகிற ஸர்வ வேதங்களாலும் அளவிடமுடியாத கல்யாணகுணங்களையுடையனாய், நிரதிஶயஸௌந்தர்யாதி கல் யாணகுணகணநிதியாய், ஸ்ரிய:பதியாயிருந்த உன்னை நானொருவன் எத்தைச்சொல்லிப் புகழ்வது? என்கிறார்.

**ஒ.**—ஆறும்பாட்டில், 'வேதங்கள் எங்ஙனே நம்மை ஸ்துதிக்கிறபடி? அப்படியே நீரும் நம்மை ஸ்துதிப்பீர்' என்ன, 'அவையும் உன்னை ஸ்துதிக்கையிலே உபக்ராந்தமாய் நிவ்ருத்த மான அத்தனை; இங்ஙனேயிருக்கிற உன்னை அளவில்லாத நான் ஸ்துதிக்க விரகு உண்டோ?' என் கிறார்

[ஓதுவார் என்று தொடங்கி] - லோகந்தோறும் தரதமஹாவேந உண்டான அத் யேதாக்களுக்கு ஈடாகச் சிறுத்தும் பெருத்து மிருக்கிற ப்ரதிபாதகமான வேதங்களெல்லாம் உன் னுடைய குணைகதேசவிஷயமாயிற்றொழியப் புறம்புபோயிற்றில்லை. வேதங்கள் உன்னுடைய கல்யாணகுணவிஷயமாயிற்று என்னும் இத்தனையல்லது உன்னை உள்ளபடி எல்லாமறிந்து பேசிற் றென்ன முடியாது என்றுமாம். [போது வாழ் என்று தொடங்கி] - பூவையுடைத்தாய்த் தன் நிலத்திலே நின்றாற்போலே செவ்விமிகாநின்றுள்ள திருத்துழாயைத் திருமுடியிலே யுடையையாய், நிரதிஶயபோக்யையானபெரியபிராட்டியார் நித்யாநுபவம்பண்ணிவாழ்கிறதிருமார்பையுடையவனே!

**ப.**—அநந்தரம், ஸர்வவேதங்களும் கூடிச்சொல்லப்புக்காலும் முழுக்கச்சொல்ல வொண்ணாத உன்னை என்னபாசுரமிட்டுச் சொல்லுவேன்? என்கிறார்.

ஓதுவார் - நியதஸாகரான அதிகாரிகளுக்கு அத்யேதவ்யமாய் ருக்யஜுஸ்ஸாமாதிபேதத் தையுடைத்தான, ஓத்து எல்லாம் - வேதங்களெல்லாம், எவ்வுலகத்து - எல்லாலோகங்களிலு முண்டான, எவ்வெவையும் - ஶாகாபேதங்களெல்லாவற்றையு முடைத்தாய், சாதுவாய் - (யதாவ தர்த்தபோதகத்வமாகிற) நன்மையையுடைத்தாய்க்கொண்டு, நின் புகழின் - உன் குணகணங்களி னுடைய, தகையல்லால் - ப்ரகாராந்வயமாத்ரத்திலே பர்யவஸிக்குமதொழிய, பிறிது - முழுக்கச் சொல்லுதல் புறம்புபோதல்செய்கை, இல்லை - இல்லை; போது - பூவையுடைத்தான, புனம் - தன் னிலத்தில், வாழ்துழாய் - செவ்வித்துழாயாலே அலங்க்ருதமான, முடியினாய் - திருவபிஷேகத்தை யுடையையாய், (அவ்வொப்பனையழகை அநுபவிக்கைக்கு), பூவின்மேல் - தாமரைப்பூவின்மேலே நித்யவாஸம்பண்ணுகிற, மாது - லக்ஷ்மியானவள், வாழ் - (அத்தைவிட்டு உகந்து) நித்யவாஸம்பண் ணுகிற, மார்பினாய் - திருமார்பையுடையவனே! என்சொல்லி - போக்யதைக்குப் பாசுரமிட்டுச் சொல்லுவேனோ? ப்ரணயித்வத்துக்குப் பாசுரமிட்டுச்சொல்லுவேனோ? எத்தைச் சொல்லி, யான் -யான், வாழ்த்துவன் - வாழ்த்துவது? சாதுவாய் - நன்றாய். தகை - ப்ரகாரம்.

**இ.**—ஆறும்பாட்டில், 'வேதங்கள் ஸ்துதிக்கவில்லையோ? அவ்வோப்ரதி நீரும் பேச மாட்டீரோ?' என்ன, 'அவையும் ஸ்துதியிலே உபக்ரமித்து முடிவுகாணமாட்டாமையாலே மீண்டனவித்தனை. என்றால் பேசப்போமோ?' என்கிறார்

[ஓதுவார் இத்யாதி] - 'ஓதுவார்' என்கையாலே, அதிகாரிவைவித்யத்தைச் சொல்லு கிறது. [ஓத்தெல்லாம்] - ருகாதி சதுர்வேதங்களும் அத்யேத்ருபேதத்தாலே பிறந்த ஶாகா பேதங்களும். [எவ்வுலகத்து எவ்வெவையும்] - ஊர்த்வலோகங்களிலுள்ளார் ஜ்ஞாநாதிகருமாய் ஆயுஸ்ஸால் அதிகருமா யிருக்கையாலே அவர்களுக்கு அநுரூபமாக அவ்வோலோகங்களிலும் இந்த பேதங்களும் உண்டு. [சாதுவாய்] - சப்தத்துக்கு ஸாதுத்வமாவது - அர்த்தத்தை இருந்த படியே காட்டுகை; ஸர்வஶப்தங்களும் அசித்ஜீவவிஶிஷ்ட பரமாத்ம பர்யந்தாபிதாநம் பண்ணுகை;

சாதுவாகைக்காக என்றுமாம். [நின்புகழ் இத்யாதி] - உன் கல்யாணகுணங்களிலே அந்வயித்தன வென்னு மித்தனையல்லது புறம்புபோயினவென்று சொல்லவொண்ணுது. கடலில் வர்ஷபிந்து போலே புறம்புபோயிற்று என்னவும் ஒண்ணுது ; எங்கும் வ்யாபித்தது என்னவும் ஒண்ணுதே யிருக்கை. தகை - அளவும், அழகும். [போது வாழ் புனந்துழாய் முடியினுய்] - பூமாருதே தன்நிலத்திலே நின்ருற்போலே செவ்விமிகாநின்ற திருத்துழாயைத் திருமுடியிலே யுடையவனே! [பூவின்மேல் இத்யாதி] - பூவிலேவர்த்திக்கிற பிராட்டி உன்மார்விற் சுவடறிந்த பின்பு அப்பூ நெரிஞ்சிமுள்ளாம்படி மார்புபடைத்தவனே! [என் சொல்லி யான் வாழ்த்துவனே] - ஸர்வேஶ்வரத்வசிஹ்நமான திருத்துழாயாகையாலே அவ்வைஶ்வர்யத்தைப் பேசவோ? பிராட்டி யோட்டைச் சேர்த்திக்கு நான் பாசுரமிட்டுச் சொல்லவோ?

ஈடு.—ஆரும்பாட்டு. "எங்குலக்கவோதுவன்" என்ருர்; வேதங்கள் நம்மைப் பேசாநின்றனவே, உமக்குப் பேசத் தட்டேன்? என்ன,—'அவையும் இவ்வளவன்றே செய்தது' என்கிருர்.

[ஓதுவாரோத்தெல்லாம்] - ஓதுவா ரென்கையாலே - அதிகாரி வைவித்யத்தைச் சொல்லுகிறது. [ஓத்தெல்லாம்] - ருகாதி சதுர்வேதங்களும். ஆக, அத்யேத்ருபேதத்தாலே ஶாகாபேதங்களாய்க்கொண்டு பிரியுண்ட வேதங்களெல்லாம். [எவ்வுலகத்தெவ்வெவையும்] - எல்லாலோகங்களிலு முண்டான வெல்லாம். ஸ்வர்க்கலோகத்திலும் ப்ரஹ்மலோகத்திலும் அங்குள்ள புருஷர்களுடைய ஜ்ஞாநாதிக்யங்களுக்குத் தக்கபடியே அவையும் பரந்திருக்குமிறே; ஸ்ரீராமாயணமென்றால், ப்ரஹ்மலோகத்தில் அநேகம் க்ரந்தமாயிருக்கச்செய்தே, இங்கு இருபத்துநாலாயிரமா யிராநின்றது. [சாதுவாய்] - ஶப்தத்துக்கு ஸாதுத்வமாவது, அர்த்தத்துக்கு போதகமாயிருக்கை. அன்றியே, சாதுவான புகழென்று குணவிஶேஷணமாகவுமாம். [சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை] - உன்னுடைய கல்யாணகுணவிஷயமான இத்தனைபோக்கிப் புறம்புபோயிற்றில்லை; விஷயந்தன்னை எங்குமொக்க விளாக்குலைகொண்டதுமில்லை. "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ

ஆரும்பாட்டு -'ஓதுவார்' இத்யாதி. 'நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை' என்றத்தைக் கடாக்ஷ ஶங்காபரிஹாரமுகேந அவதாரிகை—'எங்குலக்க' இத்யாதி. 'வேதங்கள் நம்மைப் பேசாநின்றன' என்றது— "தஸ்ய ராஜ்ஞஸ் ஸ்வகுணை:" "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி" இத்யாதியைப் பற்ற. 'இவ்வளவன்றே செய்தது' என்றது, 'தகையல்லால் பிறிதில்லை' என்றத்தைப் பற்ற.

வேதங்களெல்லாம் ஒருபடிப்பட்டிருக்க, இந்தப் பேதங்கள் எங்ஙனேயென்ன, 'ஆக' இத்யாதி. அதாவது - வேதங்களெல்லாம் ஒருபோகியாய்க் கிடக்கையாலே 'மந்தமதிகளுக்கு அதிகரிக்கக்கூடாது' என்று ஸமஸ்தமான இத்தை வ்யாஸர் ருகாதிபேதேந பிரித்தாரிறே; அன்றுதொடங்கி அத்யேத்ருபேதங்களும், காடகாண்வாதி ஶாகாபேதங்களும், தந்நிபந்தமான அத்யயநபேதங்களு மென்றபடி. 'எவ்வுலகத்தெவ்வெவையுமான - ஓதுவாரோத்தெல்லாம்' என்று அந்வயம். 'ஓத்தெல்லாம்' என்றால் அமையாதோ? 'எவ்வுலகத்தெவ்வெவையும்' என்று விசேஷிப்பானென்? இவ்விடத்திற்காட்டில் லோகாந்தரத்திலே பரந்திருக்கைக்குத்தான் அடியேது? என்ன, 'ஸ்வர்க்க' இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம்-'ஸ்ரீராமாயணம்' இத்யாதி. "சரிதம் ரகுநாதஸ்ய ஶதகோடிப்ரவிஸ்தரம்" என்னக்கடவதிறே. 'இருபத்துநாலாயிரமா யிராநின்றது, அப்படி வேதங்களும் "அநந்தா வை வேதா:" என்கையாலே பரந்திருக்கு மென்றபடி. குணவிஶேஷணமானபோது, சாதுவான புகழ் - கல்யாணகுணங்கள். நின் - சாதுவாய புகழென்றபடி. தகை - ஸ்பர்ஶம். தகையல்லால் பிறிதில்லை - ஸ்பர்ஶிக்கிறதொழிய ஸ்பர்ஶித்தவிடம்விட்டுப் புறம்புபோயிற்றில்லை யென்றபடி. 'விஷயந்தன்னை' இத்யாதி - இதுவும் 'தகை'யின் தாத்பர்யம். விளாக்குலைகொள்ளுகை - எங்குமொக்க வ்யாபிக்கை. 'விளாக்குலை கொண்டதுமில்லை - புறம்புபோயிற்றது மில்லை யென்றபடி. ஆனால், ஸம்பந்திக்கிறதுக்கு ப்ரயோஜநம் ஏது? என்ன,

**ஷஸாகஃவ்ாதூஸாஸ:"** (வர்ஷபிந்தோரிவாப்தேள ஸம்பந்தாத்ஸ்வாத்மலாப:) என்னுமாபோலே கடலிலே ஒருவர்ஷபிந்து விழுந்தால் கடலை எங்கும் வ்யாபிக்கமாட்டாதே, தன்ஸத்ஹாவத்துக்கும் அழிவில்லையிறே.

[போது இத்யாதி]-வேதங்களுங்கூட ஏங்குவது இளைப்பதாகாநிற்க, நான் இச்சேர்த்திக்குப் பாசுரமிட்டு ஏத்தவோ? பூவையுடைத்தாய், தன்னிலத்திலே நின்றாற்போலே செவ்விபெற்று வாழாநின்றுள்ள திருத்துழாயைத் திருவபிஷேகத்திலே யுடையவனே! திருத்துழாய் பூமுடிசூடிவாழாநிற்கிறது; இவ்வோப்பனை என்னாலே பேசலாயிருந்ததோ? [பூவின்மேல் இத்யாதி]-பிராட்டிபிரிந்திருக்கிலிறே வைத்த * வளையம் சருகாவது. இவ்வோப்பனையை ஒப்பனையாக்கும் அவளோட்டைச் சேர்த்திதான் என்னாலே பேசலாயிருந்ததோ? தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய பெரிய பிராட்டியார் பூஅடிகோதித்துப் போந்து வர்த்திக்கும் மார்வையுடையவனே! பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்த பின்பு பிறந்தகமான ஸ்ரீமிதிலையை நினைக்குமன்றாயிற்று, இவளும் இம்மார்வைவிட்டுப் பிறந்தகமான தாமரையை நினைப்பது. [என்சோல்லி யான் வாழ்த்துவனே] - இவ்வோப்பனைக்கும் இச்சேர்த்திக்கும் என்னாலே பாசுரமிட்டுச் சோல்லலா யிருந்ததோ? (௬)

## ஏழாம் பாட்டு.

வாழ்த்துவார்பலராக நின்னுள்ளேநான்முகனை
மூழ்த்தநீருலகேல்லாம் படையேன்றுமுதல்படைத்தாய்
கேழ்த்தசீர்அரன்முதலாக் கிளர்தேய்வமாய்க்கிளர்ந்து
சூழ்த்தமரர்துதித்தால் உன்தோல்புகழ்மாசூணாதே.

'வர்ஷபிந்தோ' ரித்யாதி. அதாவது - ஸ்வஸத்தாஸித்தியே பலம் என்றபடி; இதுக்கு அர்த்தம் - 'கடலிலே' இத்யாதி. யத்வா, வேதவிஶேஷணபக்ஷத்தில், 'சாதுவாய்' என்றதுக்கு - சாதுவாகைக்காக; ஸ்வஸத்தாலாபார்த்தமாக வென்று அர்த்தாந்தரம் - 'வர்ஷபிந்தோ ரித்யாதி' என்னுதல். ஸ்ரீரங்கராஜஸ்தவே பூர்வஶதகே "க்ஷுத்ர:தத்ரோணாகிஹமவதி ந தத்ரக்ஷவளரெ்ய: வரேஷாம் ஸூத்ரவா ஊ்ராவநயாஹணிராவிதயா தவஸ்நிஷ்ஸீகஸதாக! ஶூ்நயாநாஸீஷி ஹரி விஹவெவஷ்பிரெணாரிவாஸ்ள ஸம்பந்நாக ஸாதஜாஹோ ந தா கவமந்த ஹோதாரேவம் ந கிம் ஜெ." ஆக, 'சாதுவாய்' என்றதுக்கு அர்த்தத்ரயமாதல், அர்த்தத்வயமாதல். அதாவது - சாதுவாய் அர்த்தபோதகமா யிதி ப்ரதம: ; சாதுவான புகழிதி த்விதீய: ; சாதுவாகைக்காக - ஸத்தை பெறுகைக்காக இதி த்ருதீய:.

மேலுக்கெல்லாம் தாத்பர்யம்—'வேதங்களுங்கூட' இத்யாதி. 'போது - புனம்வாழ் துழாய்முடியினாய்' இத்யந்வயே சப்தார்த்தம்—'பூவை யுடைத்தாய்' இத்யாதி. 'திருத்துழாய் பூமுடிசூடி வாழாநிற்கிறது' இதி—ரஸோக்தி:. 'இவ்வொப்பனை' இத்யாதி வாக்யம் - பூர்வவாக்யேந ஸஹைகபாவபரம். 'பூவின்மேல்' இத்யாதிக்கு - கீழேகூட்டி, பூர்வஹாவியாகத் தாத்பர்யம் - 'பிராட்டி' இத்யாதி. மேலே கூட்டி, அபரஹாவியாகத் தாத்பர்யாந்தரம்—'இவ்வொப்பனையை' இத்யாதி. 'பூவின்மேல்மாது' என்று - புஷ்பவாஸித்வத்தை நிரூபகமாகச்சொல்லி, மார்விலே வாழ்கிறாளென்றத்தால் பலிதம்—'தாமரைப்பூவை' இத்யாதி. 'வாழ்' என்ற வர்த்தமாநார்த்தம்—'பிராட்டி' இத்யாதி. பிரித்துச்சொன்னத்தைத் தொகுத்து அருளிச்செய்கிறார், 'இவ்வொப்பனைக்கும்' இத்யாதி. ஓத்து - வேதம்.

புனந்துழாய் - போதுவாழ் முடியினாய், பூவின்மேல் மாதுவாழ்மார்பினாய் எவ்வுலகத்திலுண்டான எவ்வெவையுமான - ஓதுவாரோத்தெல்லாம் சாதுவாய் நின் புகழின் தகையல்லால் பிறிதில்லை; என்சொல்லி யான் வாழ்த்துவன் இத்யந்வய:. (௬)

* வளையம் - முடியில் வட்டமாகச் சுற்றியணியும் மாலை.

ஆ.—நீர் ஒருவராகையாலே வாழ்த்தமுடியாது என்கிறீராகில், பலரோடேநின்று வாழ்த்தினுலோ? என்னில்,—வாழ்த்துவார் பலராகவாகிறுர், நீ படைத்த ப்ரஹ்மாவாலே ஸ்ருஷ்டரான ருத்ராதி தேவதைகளிறே ஏத்துவார்; அவர்களும் உன்னுடைய குணங்களை முடிய ஏத்தவல்லரோ? ஏத்துகைக்குத்தான் அர்ஹரோ? அல்லரிறே என்கிறுர்.

ஒ.—ஏழாம்பாட்டில், 'இருந்ததே குடியாக எல்லாரும் ஏத்துதல், அதிகஜ்ஞாநரான ருத்ராதிகள் ஏத்துதல் செய்தாலோ?' என்னில்,—'த்வத்ஸ்ருஷ்டனுன ப்ரஹ்மாவாலே ஸ்ருஷ்டராகையாலே ஸங்குசித ஜ்ஞாநரானவர்களுடைய ஸ்தோத்ரமும் உன்னுடைய கல்யாணகுணங்களுக்குத் திரஸ்காரத்தைப் பண்ணுமித்தனை' என்கிறுர்.

[வாழ்த்துவார் பலராக] - ஒருவர் ஏத்தின இடம் ஒருவர் ஏத்தாதே ஸர்வாதிகாரமாக ஏத்தினுலும் ஏத்த முடியாது. [நின்னுள்ளே என்று தொடங்கி] - ஏகார்ணவத்திலே ஶயாநனுய்க் கொண்டு 'லோகங்களையெல்லாம் படை' என்று கொண்டு சதுர்முகனை உன்ஸங்கல்பத்தாலே முதவிலே படைத்தவனே! [கேழ்த்தசீர் என்று தொடங்கி] - மிக்கிருந்துள்ள ஜ்ஞாநாதிகுணங்களையுடையரான ருத்ரமுகரான தேவர்கள் ஸ்தோத்ரகரணஶக்தியோடே உத்யுக்தராய் ஓரோ ப்ரயோஜகங்களில் உன்னுடைய குணசேஷ்டிதாதிகளெல்லாம் அகப்படும்படி விரகுகளாலே காலதத்வமுள்ளதனையும் நின்று ஸ்தோத்ரம் பண்ணினுல். சூழ்த்து - சூழ்ந்து என்னவுமாம்.

ப.—அநந்தரம், அதிஶயிதஜ்ஞாநரான ருத்ராதிகளெல்லாரும் திரண்டு ப்ரயோஜகத்திலே சொல்லப்பார்த்தாலும், உன்னுடைய ஸ்வாபாவிககுணங்களுக்கு மாலிந்யாவஹம் என்கிறுர்.

வாழ்த்துவார் - (ஸ்தவப்ரியனுகையாலே உன்னை) வாழ்த்துவார், பலர்ஆக - பலர் உண்டாகைக்காக, நின்னுள்ளே - உன் ஸங்கல்ப ஸ்வரூபத்துக்குள்ளே, நான்முகனை - சதுர்முகனை, மூழ்த்த நீர் - காரணஜலமான ஏகார்ணவத்துக்குள்ளே, உலகெல்லாம் - ஸமஸ்தலோகத்தையும், படை - ஸ்ருஷ்டி, என்று - என்று, முதல் - ப்ரதமனுக, படைத்தாய் - படைத்தவனே! (அவனுலே ஸ்ருஷ்டமாய்), கேழ்த்த - கெழுமின, சீர் - ஜ்ஞாநாதி குணங்களையுடைய, அரன் - ருத்ரன், முதலா - முதலாக, கிளர் - கிளர்ந்த திவ்ய ஶக்தியுக்தராய்க்கொண்டு, அமரர் - நித்யத்வவிஶிஷ்டரான, தெய்வம் ஆய் - தேவர்கள் யாவதாயுஷம், கிளர்ந்து - உத்யுக்தராய், சூழ்த்து-(ப்ரயோஜகங்களாலே குணங்களை) வளைத்து, துதித்தால் - ஸ்தோத்ரம்பண்ணினுல், உன் - உன்னுடைய, தொல் புகழ் - ஸ்வாபாவிகமான குணௌஜ்ஜ்வல்யம், மாசூணுதே - மாசேறுதோ? மூழ்த்த - நிரம்பின. கேழ்த்த - செறிந்த.

இ.—ஏழாம்பாட்டில், 'உம்மால் தனியே முடியாதாகில் இருந்ததே குடியாகக் கூட்டிக்கொண்டு பேசுதல், ஜ்ஞாநாதிகரான ருத்ராதிகள் ஏத்துதல் செய்தாலோ? என்ன,—'லோகமடங்கத் திரண்டு ஒருவர் ஏத்தினவிடம் ஒருவர் ஏத்தாதே ஸர்வாதிகாரமாக ஏத்தினுலும் ஏத்தப்போகாது' என்கிறுர்.

[வாழ்த்துவார் பலராக] - வாழ்த்துவார் அஸங்க்யாதராயிடுக; ஆனுலும், ஏத்தமுடியாது. எத்தாலே? என்னில்,—[நின்னுள்ளே இத்யாதி] - 'மூழ்த்த நீருலகெல்லாம் படை' என்று நின்னுள்ளே நான்முகனை முதல் படைத்தாய் - ஏகார்ணவத்திலே கண்வளர்ந்து 'சதுர்த்தஶபுவநங்களையும் ஸ்ருஷ்டி' என்று ஸங்கல்பத்திலே சதுர்முகனை ப்ரதமத்திலே ஸ்ருஷ்டித்தாய். த்வத்ஸ்ருஷ்டனுன ப்ரஹ்மாவாலே ஸ்ருஷ்டரான ஸங்குசித ஜ்ஞாநர் உன் பெருமையைப் பேசமாட்டார்கள் என்கை. 'ஆனுல், இவர்களையொழிய ஜ்ஞாநாதிகரான ருத்ராதிகளைக் கூட்டிக்கொண்டா

லோ?' என்ன,—'அவர்களுக்கும் நிலமன்று' என்கிறது. [கேழ்த்த இத்யாதி] - 'கேழ்' என்று கிளர்த்தியாய்ப் பெருமையைச் சொல்லுகிறது. [சீர்] - ஜ்ஞாநாதிகள். "ஸம்ஹாரஸ ஜ்ஞா நஶ்நி வெஷு." [கிளர்தெய்வமாய்] - அதிகாராநுரூபமான ஜ்ஞாநாதிகளால். பெரிய தேவஜாதியாக. [கிளர்ந்து] - ஸ்தோத்ரத்திலே உத்யுக்தராய். [சூழ்த்து] - விரகாலே ப்ரயோஜகங்களிலே சொல்லி ; சூழ்ந்து என்றுமாம். [அமரர்] - ஆயுஸ்ஸாலும் அதிகாரானவர்கள் துதித்தால். [உன் இத்யாதி] - ஸ்வாபாவிகமாய்க் கர்மஸ்பர்ஶமில்லாமையாலே உஜ்ஜ்வலமான உன் குணங்கள் அழுக் கேருதோ ? அன்றிக்கே, வாழ்த்துவார் பலராகைக்காக என்னவுமாம். அப்போது நீ செய்தாயா கிலும் வாய்த்ததில்லை என்கை. இந்த நிர்வாஹம் ஸங்கதமேயாகிலும் சொல்லிப் போருவதொன் றன்று.

ஈடு.—ஏழாம்பாட்டு. 'வேதங்கள் கிடக்கிடும் ; வைதிகபுருஷர்களென்று சிலருண்டே, அவர்கள் நம்மை யேத்தக் குறையென்?' என்ன,—'அதுவும் உனக்கு நிறக்கேடு' என்கிறார்.

[வாழ்த்துவார்பலராக]-'ஆனால்தான் வந்ததென்? வேதங்களில் அவர்கள்செய்த ஏற்றம் என்?' என்றும் பட்டர் அருளிச்செய்வது. அன்றிக்கே, வாழ்த்துவார் பலருண்டாகைக்காக என்னுதல். [நின் இத்யாதி]-உன்னுடைய ஸங்கல்ப ஸஹஸ்ரைகதேஶத்திலே, சதுர்முகனை, 'கடல் சூழ்ந்த பூமியையெல்லாம் உண்டாக்கு' என்று முதல்படைத்தாய். மூழ்த்தநீரிலே-ஏகார்ணவத்திலே, லோகங்களை உண்டாக்கென்று சதுர்முகனை உண்டாக்கினாய் என்னவுமாம் ; உன்னாலே ஸ்ருஷ்டனான சதுர்முகனாலே ஸ்ருஷ்டரானவர்கள் உன்னை ஏத்தவென்று ஒரு பொருளுண்டோ ?

'ஆனால், இவர்களையொழிய ஜ்ஞாநாதிகரான ருத்ராதிகளையுங் கூட்டிக்கொண்டாலோ ?' என்ன,—'அவர்களுக்கும் நிலமன்று' என்கிறது, மேல். [கேழ்த்த] - இப்பங்களத்தைவிட்டுக் கால் கடியரானவர்கள் ஏத்தப்புக்கால் எல்லை காணப்போமோ? கிளர்ந்த சீருண்டு - ஜ்ஞாநாதிகுணங்கள்;

---

ஏழாம்பாட்டு - 'வாழ்த்துவார்' இத்யாதி. பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-'வேதங்கள்'இத்யாதி. இப்பாட்டுக்கு அவதாரிகையும் வ்யாக்யாநமுமெல்லாம் பட்டர்நிர்வாஹத்திலே. இது வ்யாக்யாநத்திலே வ்யக்தம். இவர் நிர்வாஹத்திலே, பூர்வார்த்தமெல்லாம் – கீழிற்பாட்டுக்கு ஶேஷம். அதாவது-நித்யநிர்த்தோஷமான வேதம் சொல்லமாட்டாத இத்தை ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்யத்வாதிகளையுடைய இவர்கள் சொல்லமாட்டுவர்களோ ? என்றபடி.

"வாழ்த்துகிற வ்யாஸாதிகள் பலருமுண்டாயிடுக" என்று காகுவாக ஶப்தார்த்தம் – 'ஆனால்தான்' இத்யாதி. நின்னுள்ளே நான்முகனை மூழ்த்த நீருலகெல்லாம் படையென்று முதல்படைத்தாய், அத்தாலே வாழ்த்துவார் பலரு முண்டாயிடுக ; ஆனால்தான் வந்ததென்? அவர்களாலேதான் ஏத்தப்போமோ? வேதங்களிற் காட்டில் இவர்கள் செய்த ஏற்றமென்? என்று பாவம். வாழ்த்துவார் பலருண்டாகைக்காக 'படைத்தாய்' என்ற இரண்டாமர்த்தத்துக்கு – படைத்தாயாகிலும் அது கார்யகரமாயிற்றில்லை யென்று கருத்து. 'நீர்மூழ்த்த' என்று ப்ரதமார்த்தத்துக்கு அந்வயம். நீர் – கடல். மூழ்த்த – சூழ்ந்த. த்விதீயார்த்தத்துக்கு, மூழ்த்தநீர் – ஏகார்ணவம். இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணம் – "ஏகார்ணவே ஶயாநோ ஜலேஶயாநம் ஹம் ப்ரஜாபதிமஜீஜநத்" என்றது. அஜீஜநத் – ஜநிப்பித்தாய் : முதல்படைத்தாய் – ப்ரதமத்திலேயுண்டாக்கினாய். இத்தால், பட்டர் நிர்வாஹத்திலே பலிதம் – 'உன்னாலே' இத்யாதி.

இவர்களையொழிய – வைதிகபுருஷர்களான வ்யாஸாதிகளை யொழிய. மேலுக்குத் தாத்பர்யம்-'இப்பங்களத்தை' இத்யாதி. பங்களம் – பதர்க்கூட்டம். கால்கடியர் – ஶக்திமான்கள். கேழ்த்தசீரான் – செறிந்த ஜ்ஞாநாதி குணங்களையுடைய ருத்ரன். கிளர்ந்த-மிக்க. 'அவற்றையுடையனான ருத்ரன்' இதி. 'ஸர்வஜ்ஞ ஜ்ஞாந

அவற்றையுடையனான ருத்ரன் தொடக்கமாக ஈச்வரனோடு மசக்குப்பரலிடலாம்படி கிளர்ந்ததேவதைகள், முசுகு வாலெடுத்தாற்போலே கிளர்ந்து, ஒருவர்சொன்னவிடம் ஒருவர் சொல்லாதே ஓரோப்ரயோஜகங்களிலே மிகைத்த ஆயுஸ்ஸுக்களையுடையராயிருக்கிறவர்கள் ஸ்தோத்ரம்பண்ணினால் உன்னுடைய ஸ்வாபாவிகமான கல்யாணகுணங்கள் மாசூணாதோ? 'இவர்கள் ஏத்துமளவோ இவன் குணங்கள்?' என்ற அவ்வழியாலே அவத்யமாய்த் தலைக்கட்டாதோ? (எ)

## எட்டாம்பாட்டு.

மாசூணாச்சுடருடம்பாய் மலராதுகுவியாது
மாசூணாஞானமாய் முழுதுமாய்முழுதியன்றாய்
மாசூணாவான்கோலத்து அமரர்கோன்வழிப்பட்டால்
மாசூணாஉனபாத மலர்ச்சோதிமழுங்காதே.

**ஆ.**—'அந்த தேவதைகளோடே கூட ஸர்வாதிபதியாய் நிர்த்தோஷஜ்ஞானனான சதுர்முகன் நின்று ஏத்தினாலோ?' என்னில்,—ஹேயப்ரத்யநீகமாய், தேஜோமயமாய், வ்ருத்திக்ஷயாதி விகாரரஹிதமான திவ்யரூபத்தை யுடையையாய், ஹேயப்ரத்யநீகஸார்வஜ்ஞாதி அசேஷகல்யாண குணங்களையுடையையா யிருந்த உன் திருவடிமலர்களை அந்தச் சதுர்முகன்தான் ஏத்தவல்லனோ? யோக்யனோ? இப்படியிருக்கிற உன்னை நான் எத்தைச்சொல்லி வாழ்த்துவது?' என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், உபயபாவனையுடையனான ப்ரஹ்மாவை வனஸ்பதிகோடியிலே நிறுத்தி 'அதிசயிதஜ்ஞானனாக உத்ப்ரேக்ஷிதனான ப்ரஹ்மா ஏத்தினாலும் உன்னுடைய வைலக்ஷண்யத்துக்குத் திரஸ்காரமாமத்தனை' என்கிறார்

[மாசூணா என்று தொடங்கி.] - ஹேய ப்ரத்யநீகமாய் சுத்தஸத்வமய தேஜோரூபமாய் ஸங்குசிதமாதல் விகஸிதமாதல் செய்யாதே நிரதிசயபோக்யமாய்க்கொண்டு என்றும் ஏகரூபமாயிருக்கிற திருமேனியை யுடையையாய், ஹேயப்ரத்யநீகமாய் ஜ்ஞானப்ரமுகமான குணவிபூத்யாதிகள் எல்லாவற்றையும் உடையையாய், அவற்றை நிர்வஹிக்கும் ஸ்வபாவனானவனே! [மாசூணாவான்கோலத்தமரர்கோன் வழிப்பட்டால்] - அப்ராக்ருதமான ஜ்ஞானாதிபூஷணங்களை யுடையனாயிருப்பான் ஓர் அமரர்கோன் உண்டாய் அவன் உன்திருவடிகளிலே ஸ்தோத்ரரூப பரிசர்

---

உநிவெசுஃ" என்று - ருத்ரனை ஜ்ஞானாதிகனாகச் சொல்லிற்றிறே யென்றபடி. மசக்குப்பரலிடலாம்படி - ஸம்சயிக்கும்படி. முசுகு - கொண்டைமுசுகு, கோலாங்கூலம். "சூழ்த்து" என்றது - 'துதித்தால்' என்கிற க்ரியைக்கு விசேஷணம். கிளர்தெய்வமாய் - மிக்க திவ்யசக்தியுக்தராய். இது - அமரர்க்கு விசேஷணம். கிளர்ந்து - உத்யோகித்து. சூழ்த்து - அவச்சேதித்துக்கொண்டு. அதாவது - ஒருவர்சொன்ன இடம் ஒருவர் சொல்லாதே கூறிட்டுக்கொண்டு என்றபடி. சூழ்த்து - ஏகதேசத்தை வளைத்துக்கொண்டு என்று நிஷ்க்ருஷ்டார்த்தம். ஓரோப்ரயோஜகங்களிலே - குணவிபூத்யாதிகளாகிற ஓரோரவச்சேதகங்களிலே. நம்ரியந்த இதி அமரா: என்றத்தைச் சொல்லுகிறது—'மிகைத்த ஆயுஸ்ஸுக்கள்' இத்யாதி. மாசூணாதோ - மாலிந்யத்தையடையாதோ? துதித்தால் மாசுண்பானென்? என்ன,—'இவர்கள்' இத்யாதி.

மூழ்த்தநீரென்று தொடங்கி, நின்னுள்ளே நான்முகனை - முதல்படைத்தாய்; வாழ்த்துவார் பலராக, கேழ்த்த சீரென்று தொடங்கி அன்வயம் பட்டர்நிர்வாஹம். பூர்வார்த்தமெல்லாம் - கீழிற்பாட்டுக்கு சேஷம் என்றே பலகாலும் அருளிச்செய்வர். (எ)

யைகளைப் பண்ணினால். சதுர்முகன் தானாகவுமாம். [மாசூணா வுனபாத மலர்ச்சோதி]-ஹேயப்ரதிபடமான உன்னுடைய திருவடிகளின் அழகு.

ப—அநந்தரம், அதிசயிதஜ்ஞானனைக்கொண்டு ஒரு ப்ரஹ்மா இருந்தி, அவன் ஸ்துத்யாதிகளிலே தலைப்பட்டாலும் உன் ஔஜ்ஜ்வல்யம் மழுங்காதோ? என்கிறார்.

மாசூணா - அவத்யஸ்பர்சமின்றியிலே, சுடர் - தேஜோரூபமான, உடம்பாய் - வடிவையுடையையாய், மலராது குவியாது - ஸங்கோசவிகாஸரஹிதமாய், மாசூணா - ஸம்சயவிபர்யயாதி ஹேயகந்தரஹிதமான, ஞானமாய் - ஜ்ஞானத்தை ஸ்வபாவமாகவுடையையாய், முழுதுமாய் - ஸமஸ்தகுணவிபூதிகளையும் ப்ரகாரமாக வுடையையாய்க்கொண்டு, முழுது - அவையெல்லாம், இயன்றாய் - உன்பக்கலிலே வர்த்திக்கும்படி ஆச்ரயமானவனே! மாசூணா - மாலிந்யரஹிதமான, வான்கோலத்து - விலக்ஷணஜ்ஞானாதி பூஷணனையுள்ள, அமரர்கோன் - தேவஸேவ்யனான ப்ரஹ்மாவானவன், வழிப்பட்டால் - ஸ்தோத்ரரூபபரிசர்யையிலே ஒருப்பட்டால், மாசூணா - ஹேயப்ரதிபடமாயிருக்கிற, உன பாதமலர் - உன் திருவடித்தாமரைகளுடைய, சோதி - தேஜஸ்ஸானது, மழுங்காதே - மஸ்ருணமாகாதோ?

ஸ்வாபாவிகௌஜ்ஜ்வல்யத்தையுடைய திருவடிகளுக்கு ஆக்கனான ப்ரஹ்மா கிட்டுகை அதேஜஸ்கரமென்று கருத்து.

இ.—எட்டாம்பாட்டில், உபயபாவனையை யுடைய ப்ரஹ்மாவை வநஸ்பதிகோடியிலே நிறுத்தி ப்ரஹ்மபாவனையேயாயிருப்பானொரு ப்ரஹ்மா உத்ப்ரேக்ஷிதனாய் அவன் ஏத்திலும் உன்வைலக்ஷண்யத்துக்குத் திரஸ்காரமாம் என்கிறார். வர்த்தமான சதுர்முகன்தானாகவுமாம்.

[மாசூணா இத்யாதி] - ஹேயப்ரத்யநீகமாய் சுத்தஸத்வமாகையாலே நிரவதிக தேஜோரூபமான விக்ரஹத்தையுடையையாய். [மலராது குவியாது] - க்ஷயவ்ருத்திகளின்றிக்கே ஏகரூபமாய் என்னுதல். [மலராது குவியாது]- * "அரும்பினை அலரை" என்னுமாபோலே செவ்விமாறாத போக்யதையைச் சொல்லுதல். [மாசூணா ஞானமாய்] - ஹேயகந்தமில்லாத ஜ்ஞானத்தை யுடையையாய். விக்ரஹத்துக்கு ஸ்வரூபாந்யதாபாவமில்லை; ஸ்வரூபத்துக்கும் ஸ்வபாவ அந்யதாபாவமில்லையென்கை. "மலராது குவியாது" என்ற இடம் - ஜ்ஞானத்துக்கும் விக்ரஹத்துக்கும் பொது. [முழுதும் இத்யாதி] - அநுக்தமான குண விபூத்யாதிகளையுடையையாய் எல்லாவற்றையும் நிர்வஹிக்கிறவனே! 'வரம்பின்றி முழுதியன்றாய்' என்கிற இடத்தில் இவற்றையுடையவனே! என்கிறது; இங்கு இத்தை நிர்வஹிக்கிறவனே! என்கிறது. [மாசூணா இத்யாதி] - அஸங்குசிதமாய் ஸமக்ரமாயிருந்துள்ள ஜ்ஞானாதி பூஷணங்களை யுடையனான ப்ரஹ்மா வென்னுதல், கீழ்ச்சொன்ன ருத்ராதிகளிலுண்டான ஆதிக்யத்தால் ப்ரஹ்மா தன்னைச் சொல்லுதல். [வழிப்பட்டால்] - ஸ்தோத்ரரூபபரிசர்யையிலே இழிந்தால். [மாசூணா இத்யாதி]-ஹேய ப்ரத்யநீகமான உன் திருவடிகளின் விஸ்த்ருதமான ஒளி திரஸ்க்ருதமாகாதோ? தம்முடைய போக்தவாநுரூபமாகத் திருவடிகளென்கிறே திருமேனியைச் சொல்லுவது.

ஈடு.—எட்டாம்பாட்டு. கீழ்ப்பாட்டில், ருத்ரன் தொடக்கமானார் ஏத்தமாட்டார்களென்றதாய், இப்பாட்டில் - 'அவன்தனக்குங்கூட ஜநகனான ப்ரஹ்மா ஸ்தோத்ரம்பண்ணினால் அதுவும் உனக்கு அவத்யமாம்' என்பாருமுண்டு; 'அவனையும் கீழ்ப்பாட்டிலே சொல்லிற்றாய், இதில் உபயபாவனையுமுடைய இவனைப்போலன்றியே கேவலம் ப்ரஹ்மபாவனையேயாயிருப்பானொரு ப்ரஹ்

எட்டாம்பாட்டு 'மாசூணா' இத்யாதி. உபயபாவனை - கர்மப்ரஹ்மபாவனைகள். பாவனையென்று யத்நமாய், ப்ரஹ்மமென்று த்யாநமாய், த்யாநவிஷயயத்நமென்றபடி. கர்மபாவனை-கர்ம விஷய யத்நம், பாவனையாவது-

* பெரிய திருமொழி எ - க0. க.

மாவை உத்ப்ரேக்ஷித்து, அவன் ஏத்திலும் தேவர்க்கு அவத்யமா மித்தனையன்றே ? என்கிறார்' என்று பட்டர் அருளிச்செய்யும்படி.

[மாசூணாச் சுடருடம்பாய்] - ஹேயப்ரத்யநீகமாய் ஶுத்தஸத்வமாகையாலே நிரவதிக தேஜோரூபமான திவ்யவிக்ரஹத்தை யுடையையாய். [மலராது குவியாது] - * "அரும்பினையலரை" என்னும்படியா யிருக்கும்; "யுவா குமார:" (யுவாகுமார:) என்கிறபடியே, ஏககாலத்திலே இரண்டு அவஸ்தையும் சொல்லலாயிருக்கை; "ஸதைகரூபரூபாய" (ஸதைகரூபரூபாய)

ப்ர.—[illegible]

"[illegible]" என்னக்கடவதிறே. 'கர்மபாவனை-கர்மாநுஷ்டானம்; ப்ரஹ்ம பாவனை - உபாஸநம்' என்றும் சொல்லுவர்கள். கர்மபாவநாநிஷ்டர் - தக்ஷாதிகள். ப்ரஹ்மபாவநாநிஷ்டர் - ஸநகாதிகள். உபயபாவநா நிஷ்டன் - ப்ரஹ்மா.

மாசூணா - மாலிந்யமடையாத, மலராது குவியாது- விகாஸ ஸங்கோச ரஹிதமாய். 'மலராது குவியாது' என்றதுக்கு இரண்டு அர்த்தம். அதாவது - யௌவநோந்முகாவஸ்தையைச் சொல்லுகிறதாதல், வ்ருத்தி க்ஷய ராஹித்யத்தைச் சொல்லுதல். முந்தின அர்த்தத்துக்கு ப்ரமாணம்—'அரும்பினை' இத்யாதி திருமொழி. இரண்டவஸ்தையும் ஏககாலத்திலே சூழ்த்துக்கொடுக்கலாம்படியிருக்கிறவனை. பாசுர விவரணம் 'யுவா' இத்யாதி. இதுக்கு இரண்டு அர்த்தம் - யுவாச குமாரஶ்ச என்னுதல்; யத்வா, யுவா அகுமாரஶ்ச என்னுதல்: யுவாவுமாய், அகுமாரனுமா யிருக்கு மென்றபடி. ப்ரஸக்தஸ்யஹி ப்ரதிஷேத: இறே; ஆகையாலே, கௌமாரமும் அல்பமுண் டென்றபடி. ததஶ்ச, யுவத்வ குமாரத்வ மத்யமாவஸ்தாவாந் இத்யர்த்த:. 'அரும்பினையலரை' என்றதுக்கும் இதுவே அர்த்தம். த்விதீயார்த்தத்தை அருளிச் செய்கிறார் 'ஸதைகரூப' இத்யாதி. ப்ரதமேப்யே த்விதீயே, [illegible]

* பெரிய திருமொழி—எ-௰-க.

என்கிறபடியே, க்ஷயவ்ருத்திகளின்றிக்கே யிருக்கு மென்றுமாம். [மாசூணா ஞானமாய்] - ஒரு ஹேது வாலே மாசேறக்கடவதல்லாத ஜ்ஞாநத்தை யுடையையாய். 'மலராது குவியாது' என்கிறது, கீழும் மேலும் அந்வயிக்கக்கடவது. ஸம்ஸாரிகள் கர்மநிபந்தநமாகப் பரிக்ரஹித்த தேஹத்துக்கு வரக்கடவதான ஸ்வரூபாந்யதாபாவமும் இல்லை, இவன் திருமேனிக்கு; அவர்கள் ஜ்ஞாநத்துக்கு வரக்கடவதான ஸ்வபாவாந்யதாபாவமும் இல்லை, இவனுடைய ஜ்ஞாநத்துக்கு என்கை. [முழுதுமாய்]-அநுக்தமான குணங்களை யுடையையாய். [முழுதுமாய்] - ஜகச்சரீரனாய் நிற்கும் நிலை. [முழுதியன்றாய்]-"வரம்பின்றி முழுதியன்றாய்" என்றதின் அநுவாதமாய், எல்லாவற்றையும் நிர்வஹித்தாய் என்றபடி. [மாசூணா இத்யாதி] - "சதுர்முகாயு:" (சதுர்முகாயு:) இத்யாதி; அப்படிப்பட்ட அமரர் கோன், உன்னை ஸ்தோத்ரம்பண்ணினால், அவனும் அடிக்கழிவு செய்தானாய்விடு மித்தனை. ஆழ்வார்களேயிறே அவனடி யறிந்து மங்களாஶாஸநம்பண்ணுவார். திரோதாநஹேதுவில்லாத ஜ்ஞாநாதி பூஷணங்களை யுடையானொரு அமரர்கோனை உண்டாக்குவது, 'உத்ப்ரேக்ஷிதனான ப்ரஹ்மா' என்கைக்கு நிதாநம் இது; இவ்வருகில் ப்ரஹ்மாவுக்குத் தன் அதிகாராவஸாநத்திலே ஜ்ஞாநத்துக்குத் திரோதாந முண்டிறே; இவனுக்கு அதின்றிக்கே யிருப்பது. வழிபடுகைக்கு உறுப்பாகச் சொல்லுகிற கோலமாகையாலே - அதுக்கு உறுப்பான ஜ்ஞாநத்திலே கிடக்கு மித்தனையிறே. அப்படி யிருக்கிற அமரர்கோன்தான் உன்னை ஸ்தோத்ரம் பண்ணினால், ஒரு ஸம்ஸர்க்கத்தால் மாசூணக்கடவதன்றிக்கேயிருக்கிற உன் திருவடிகளின் தேஜஸ்ஸானது, 'இவனேத்துமளவே இத்திருவடிகள்' என்று மழுங்காதோ? தம்முடைய ஶேஷத்வாநுரூபமாக, உன்திருமேனியென்னாதே 'உனபாதம்' என்கிறார். (அ)

---

"...ஸ்வாயவிஷயேஸுஜிஷ்யே". 'யுவாகுமார:' என்றவிடத்திலே-"...ஸ்யாதஶோஷிதஸம்ஸய:" இத்யாதி அநுஸந்தேயம். கீழும் மேலும் அந்வயிக்கையாவது - மலராது குவியாது - மாசூணாச் சுடருடம்பாய் என்று கீழே கூட்டுதலும், மலராது குவியாது - மாசூணாஞானமாய் என்று மேலே கூட்டுதலு மென்றபடி. இப்படி அந்வயித்ததுக்கு யதாக்ரமம் பாவம்-'ஸம்ஸாரிகள்' இத்யாதி. 'இவனுடைய ஜ்ஞாநத்துக்கு' என்றது-ஜ்ஞாநமயஸ்வரூபத்துக்கு என்றபடி' இதிச வதந்தி. அர்த்தாந்தரம்-'ஜகச்சரீரனாய்' இத்யாதி. புநருக்திபரிஹாரம்-'வரம்பின்றி' இத்யாதி. உத்ப்ரேக்ஷிதனான ப்ரஹ்மாவென்றதுக்கு ப்ரமாணம்-'சதுர்முகாயு' ரித்யாதி. வராஹபுராணே '...' சதுர்முகாநா மாயுரித்யர்த்த:. சேதஸ்ஸுக்கு விசுத்தத்வமாவது - ப்ரஹ்மபாவனைகநிஷ்டதைபாதல், அதிகாராந்தத்தில் வரும் ஜ்ஞாநஸங்கோசராஹித்யமாதல். அமரர்கோன் வழிப்பட்டால் - உனபாதமலர்ச்சோதி மழுங்காதே என்னுமளவுக்கும் பாவம்-'அப்படிப்பட்ட' இத்யாதி. அப்படிப்பட்ட - உத்ப்ரேக்ஷிதனான. அடிக்கழிவு - மூலஹாநி, திருவடிகளுக்கு அவத்யமும். இதம் - சாடு. இவன் அவத்யகாரனாகில், பின்னை அதிஶயகரரார்? என்ன 'ஆழ்வார்கள்' இத்யாதி. 'மாசூணாவான்கோலம்' என்றவிடத்திலே - 'மாசு' என்றதுக்கு - அவதாரிகையிலே உபயபாவனையாக ஓரர்த்தம் அருளிச்செய்து, அதிகாராந்தத்தில் வரக்கடவதான ஜ்ஞாநஸங்கோசமாக அர்த்தாந்தரம்-'திரோதாநஹேது' இத்யாதி. முந்தின அர்த்தத்தில், 'மாசூணா' என்றது - அமரர்கோனுக்கு விசேஷணம்; கேவலம் ப்ரஹ்மபாவனைகநிஷ்ட னென்றபடி. த்விதீயார்த்தத்தில், 'மாசூணா' என்றது - கோலத்துக்கு விசேஷணம். உண்டாக்குவது - புத்யாகல்பநம். 'இது' என்றது - 'மாசூணாவான்கோலம்' என்ற விசேஷண மென்றபடி. இது எப்படி நிதாநமாம்? என்ன, 'இவ்வருகில்' இத்யாதி. 'கோலம்' என்றால் ஜ்ஞாநத்தைச் சொல்லுமோ? என்ன, 'வழிபடுகைக்கு' இத்யாதி. வழிபடுகை-ஸ்தோத்ரரூபபரிசர்யையிலே யிழிகை. விக்ரஹதேஜ: ப்ரகாணத்துக்குச் சேரத் திருமேனியென்ன வேண்டாவோ? என்ன, 'தம்முடைய' இத்யாதி. வடிவுக்கு, 'மாசு' - அவத்யஸ்பர்ஶம். ஜ்ஞாநத்துக்கு, 'மாசு' - ஸம்ஶயவிபர்யயங்கள். மழுங்காதே - மஸ்ருணமாகாதோ? மாசூணாவான் கோலத்தமரர்கோன் - மாலிந்யரஹிதமான அதிவிலக்ஷண ஜ்ஞாநாதி பூஷணங்களையுடைய ப்ரஹ்மாவென்று சப்தார்த்தம். மலராது குவியாது - மாசூணாச்சுடருடம்பையுடையையாய், மலராது குவியாது மாசூணா ஞானத்தையுடையையாய், முழுதுமாய் முழுதியன்றாய்; இப்படிப்பட்ட மாசூணா உனபாதமலர்ச்சோதியானது - மாசூணாவான்கோலத்தமரர்கோன் வழிப்பட்டால் மழுங்காதே இத்யந்வய: (அ)

# ஒன்பதாம் பாட்டு.

மழுங்காதவைந்நுதிய சக்கரநல்வலத்தையாய்த்
தொழுங்காதற்களிறளிப்பான் புள்ளூர்ந்துதோன்றினையே
மழுங்காதஞானமே படையாக மலருலகில்
தொழும்பாயார்க்களித்தால் உன்சுடர்ச்சோதிமறையாதே.

ஆ.—பின்னையும் அவனுடைய குணங்களை யேத்தியல்லது தரிக்கமாட்டாமையாலே அவனுடைய குணங்களைச் சொல்லி ஏத்துகிறார். உன்னுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யமாகிற மஹா குணத்தை ஒருவருமறியாத தொருபடி ஸங்கல்பஜ்ஞாநத்தாலே ஆஶ்ரிதனான ஸ்ரீகஜேந்த்ராழ்வானை ரக்ஷித்தருளாதே, அந்த ஆஶ்ரிதவாத்ஸல்யம் ஸர்வலோகவிதிதமாம்படி திருவாழியை யேந்திக்கொண்டு பெரியதிருவடிமேலே வந்து தோன்றியருளி என்னையுண்டாக்கியருளினாய் என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், எம்பெருமானுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யத்தை த்ருஷ்டாந்த ஸஹிதமாக அருளிச்செய்கிறார்

[மழுங்காத என்று தொடங்கி.] மழுங்காத கூர்மையை யுடைய நேமியோடு கூடின திருவாழியை தர்ஶநீயமாம்படி வலவருகே தரியாநின்றுகொண்டு தொழவேணுமென்னுங் காதலை யுடைய ஸ்ரீ கஜேந்த்ராழ்வானை ரக்ஷித்தருளுகைக்காகப் பெரியதிருவடியை ப்ரேரித்து நடத்திக் கொண்டு தோற்றினாயே. [மழுங்காத என்று தொடங்கி]-அநேககார்யங்களிலே ப்ரயோகித்தாலும் மழுங்கக்கடவதன்றிக்கே மிகவும் உஜ்ஜ்வலமாகக்கடவதான உன்னுடைய ஸங்கல்பரூப ஜ்ஞாநத்தையே ஸாதநமாகக்கொண்டு திருநாபீகமலத்தை அடியாகவுடைய ஸம்ஸாரத்திலே அடிமையானார்க்கு ரக்ஷை பண்ணினால், 'பெருமுதலியாயிருந்துவைத்துத் திருவடிகளை ஆஶ்ரயித்தார்க்குத் தானே தடுமாறிக்கொண்டுவந்து உதவும்' என்னும் இவ்வழகியதேஜஸ்ஸை இழந்தாயாகாதே. தொழும்பு - அடிமை. ஆயார் - ஆனார்.

ப.—அநந்தரம், உன்னுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யாதிஶயத்துக்கு ஸங்கல்பமாத்ரத்தாலே ஸமாஶ்ரிதரக்ஷணம் பண்ணுகையாகிற மேன்மை திரஸ்காரஹேது என்கிறார்.

மழுங்காத-மழுங்குதலில்லாத, வை - கூர்மையையுடைத்தான, நுதிய - வாயையுடைய, சக்கரம்-திருவாழியை, நல்-தர்ஶநீயமான, வலத்தை ஆய் - வலத்திலேயுடையையாய், தொழும் - பரிசர்யைபண்ணுகையிலே, காதல் - அபிநிவேசத்தையுடைய, களிறு - ஆனையை, அளிப்பான் - ரக்ஷிக்கைக்காக, புள் - பெரியதிருவடியை, ஊர்ந்து-அதித்வரையோடே நடத்தி, தோன்றினையே-அதின்முன்னே வந்துதோன்றினாயே: (இப்படியிருக்க), மழுங்காத - அமோகமான, ஞானமே - ஸங்கல்பரூபஜ்ஞாநமே, படையாக - பரிகரமாக, மலர் - விகஸிதமான, உலகில் - லோகத்திலே, தொழும்பு ஆயார்க்கு-(உனக்குத்)தொழும்பானார்க்கு, அளித்தால்-உபகரித்தால், (ஆர்த்தரக்ஷணம் பண்ணுகைக்கு மடுவின்கரையிலே த்வரித்துவந்தா யென்கிற), உன் - உன்னுடைய, சுடர் - அத்யுஜ்ஜ்வலமான, சோதி - தேஜஸ்ஸு, மறையாதே - திரஸ்க்ருதமாகாதோ?

இ.—ஒன்பதாம் பாட்டில், இந்த மேன்மையையும் விளாக்குலைகொள்ளும் ஆஶ்ரித வாத்ஸல்யத்தை அருளிச்செய்கிறார்.

[மழுங்காத இத்யாதி] - அநேக கார்யங்களிலே ஏவா நின்றாலும் மழுங்கக்கடவதன்றிக்கே எதிரிகள்மேலே படப்படக் கூர்மை மிகா நின்றுள்ள வாயையுடைய திருவாழியை. வை -

கூர்மை. நுதி - வாய்; நுனி என்றுமாம். ஒருவினைசெய்யவேண்டா, இச்சேர்த்தியே அமையு மென்னும்படி தர்சநீயமாம்படி வலவருகே யுடையையாய். "வலத்துறையும் சுடராழியும் பல் லாண்டு" என்ன வேண்டும்படி யிருக்கை. [தொழுங்காதல் இத்யாதி] - ஆனையினுடைய ஆர்த்த த்வநி செவிப்பட்டவாறே கையில் திருவாழியையும் மறந்து மடுவின்கரையிலே த்வரித்துக் கொண்டு வந்தான்; இப்படி செய்யவேண்டிற்று, துக்கநிவ்ருத்திமாத்ரமே யன்றிக்கே தொழுதேனுக வல்லேனே என்றிருக்குமவனுகை. [காதல் களிறு] - காதலே நிரூபகமாயிருக்கை. [அளிப் பான்] - அதின்கையில் பூ செவ்வியழியாமே திருவடிகளிலே யிடுவித்துக்கொள்ளுகைக்காக. [புள் ளூர்ந்து] - நினைவுக்கும் அவ்வருகே போகவல்ல வேகத்தையுடையவனைக் குழைசரக்காம்படி திரு வடிகளாலே ப்ரேரித்துக்கொண்டு வந்தபடி. அவ்விடாய் தம்மதாய்த் தமக்கு உதவ வந்து தோற் றினனாயிருக்கிறபடி. [மழுங்காத இத்யாதி] - இடைவிடாமல் ஸ்ருஷ்ட்யாதிகள் பண்ணுநின்று அம் அமோகமான ஸங்கல்பஜ்ஞாநத்தையே ஸாதநமாகக்கொண்டு திருநாபீகமலமடியாகப் பிறந்த லோகத்திலே அடிமையாளுர்க்கு. தொழும்பு - அடிமை. ஆயார்க்கு - ஆனார்க்கு. ஸம்ஸாரத் திலே நித்யஸூரிகள் பரிமாற்றத்தை யுடையவர்கட்கு என்கை. [அளித்தால்] - ரக்ஷித்தால். [உன் சுடர் இத்யாதி] - மடுவின் கரையிலே அரைகுலையத் தலைகுலைய வந்தாயென்கிற நிரவதிக தேஜஸ்ஸு மறையாதோ? சிற்றுட்கொண்டான் 'மறையும் மறையும்' என்று அநுபாஷித்தான்.

ஈடு.—ஒன்பதாம் பாட்டு. மேன்மைதானே பேசவொண்ணுதென்கைக்கு நீர்மைதா னே பேச்சுக்கு நிலமாயிருக்கிறது? என்கிறார்.

[மழுங்காத] - ஶத்ருஶரீரங்களிலே படப்படச் சாணையிலே யிட்டாற்போலே புகர் பெற்று வாராநிற்குமாயிற்றுத் திருவாழி. மழுங்கக்கடவதன்றியே கூரியமுனையையுடைய திரு வாழியை * "வடிவார்சோதிவலத்துறையும்" என்னும்படியே வலவருகேயுடையையாய். [நல்வலத் தையாய்-தோன்றினையே]-கையில் திருவாழியிருந்தது அறிந்திலன்; அறிந்தானுகில், இருந்தவிடத்தே இருந்து அத்தையேவிக் கார்யங்கொள்ளலாமிறே. ஆர்த்தநாதம் செவிப்பட்டவாறே தன்னை மறந்தான். நினைத்தாலும் இருந்தவிடத்திலே யிருந்து துக்கநிவ்ருத்தி பண்ணவொண்ணுது; தொழுங் காதல்களிறுயிற்று - கையுந்திருவாழியுமான அழகு காண ஆசைப்பட்டிருக்கிறவனுயிற்று இவன். [காதல்களிறு] - 'சதுர்த்தந்தி' என்னுமாபோலே, காதல் இதுக்கு நிரூபகமாயிருக்கை. [அளிப் பான்] - இதின்கையில்பூ செவ்வியழியாமே திருவடிகளிலே யிடுவித்துக்கொள்ளுகைக்காக.

---

ஒன்பதாம் பாட்டு - 'மழுங்காத' இத்யாதி. கீழிற்பாட்டிலர்த்தத்தை அநுவதித்து, இப்பாட்டின் தாத்பர்யார்த்தத்தை அருளிச்செய்கிறார் - 'மேன்மை' இத்யாதி.

"வ்யவஸாயஸஹிவ விஷய:" இதி ந்யாயம் ஶ்ருதி நிதாயஆஹ - 'சத்ருசரீர' இத்யாதி. வை - கூர்மை. நுதி - முனை. 'நல்' என்றதுக்கு அர்த்தம் - 'வடிவார்' இத்யாதி. 'வலத்தையாய்' என்கிற இது - 'தோன்றினையே' என்கிறத்தோடே அந்வயிக்கிற தென்று காட்டுகிறார்—'நல்வலத்தை யாய்த் தோன்றினையே' என்று; இத்தால்பலிதம் ஹார்த்தபாவமாஹ - 'கையில்' இத்யாதி. 'அறியாமைக்கு அடியேது?' என்ன, 'ஆர்த்தநாதம்' இத்யாதி. கையுந்திருவாழியுமான தன்னை மறந்தானென்றபடி. மேலுக்கு அவதாரிகை—'நினைத்தாலும்' இத்யாதி. 'தொழுங்காதல்' என்கிறது ஹேதுகர்ப்ப மென்கிறார் - 'தொழுங் காதல்களிறுயிற்று' என்று; ஸேவிக்கவேணு மென்னும் காதலையுடைய களிறு. இத்தை யருளிச் செய் கிறார், 'கையும்' இத்யாதி. 'களிறு' என்னுதே, 'காதற்களிறு' என்றதுக்கு ஸ்வபாவம் - 'சதுர்த்தந்தி' இத் யாதி. ஆக, இத்தால் - திருவாழியாழ்வான் கையிலே யிருக்க, ஜ்ஞாநமிருக்க, ஸர்வாதிகனுயிருக்கிற நீதானே ஒருதிர்யக்குக்காக அரைகுலையத் தலைகுலைய விழுந்து ரக்ஷித்த இந்த நீர்மை ஒருவரால் பேசலாயிருந்ததோ? என்றபடி. 'இதின்கையில் பூ செவ்வியழியாமே' என்றது - 'க்ராஹக்ரஸ்தோ நைவபாதபொரா[illegible]

* திருப்பல்லாண்டு - க.

[புள்ளூர்ந்துதோன்றினையே] - ஸங்கல்பத்துக்கு முற்பட்டாயிற்று திருவடி வேக மிருப்பது; அவன் வேகம் போராமல் அவனையும் இடுக்கிக்கொண்டிறே வந்துவிழுந்தது. [தோன்றினையே] - இடர்ப் பட்டார் தாமாய், தமக்குத் தோற்றினாற்போலேகாணும் இருக்கிறது. [மழுங்காத ஞானமே படை யாக] - 'திருவாழியை மறந்தான்' என்கைக்கு, அதிலும் அண்ணிய ஸங்கல்பரூபஜ்ஞாநத்தையோ நினைக்கிறது? அநேககார்யங்களிலே ஏவாநின்றாலும் மழுங்கக்கடவதன்றியே புகர்பெற்று வாரா நின்றுள்ள ஸங்கல்பரூபஜ்ஞாநமே கருவியாகத் திருநாபீகமலத்தை அடியாக வுடைத்தான ஸம்ஸாரத் தில். [தொழும்பாயார்க்கு] - சேஷபூதரானார்க்கு. மலருலகில் தொழும்பாயார்க்கு - மழுங்காத ஞானமே படையாக அளித்தால் உன்சுடர்ச்சோதி மறையாதே; இருந்தவிடத்தே யிருந்து ஸங்கல்ப ரூபஜ்ஞாநத்தாலே ரக்ஷித்தாயாகில், 'ஆனையிடர்ப்பட்ட மடுவின்கரையிலே அரைகுலையத்தலைகுலைய உணர்த்தியற்று வந்துவிழுந்தான்' என்கிற நிரவதிகதேஜஸ் இழந்ததேயன்றோ? 'மறையாதே' என்ற இதுக்கு - 'மறையும் மறையும்' என்று சிற்றுட்கொண்டான் வார்த்தை. (கூ)

---

# பத்தாம்பாட்டு.

மறையாயநால்வேதத்துள் நின்றமலர்ச்சுடரே
முறையால்இவ்வுலகெல்லாம் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்தாய்
பிறையேறுசடையானும் நான்முகனும் இந்திரனும்
இறையாதல்அறிந்தேத்த வீற்றிருத்தல் இதுவியப்பே.

*ஆ.*—பக்திஹீநர்க்கு உன்னை அறியவொண்ணாதபடி மறைத்துக்கொண்டிருக்கிற ஸர்வவேதங்களினாலும் ப்ரதிபாத்யனாய், ப்ராப்தியாலே ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாராதி ஹேது பூதனா யிருந்த உன்னுடைய ஸர்வேஸ்வரத்வத்தை அறிந்து உன்னை யேத்துகைக்கு விஷயமாக உன்னைக் கொடுத்துக்கொண்டிருக்கிற இருப்பு உனக்கு ஓரேற்றமோ? அன்றிறே. இப்படி யிருக் கிற உன்னை நான் எத்தைச் சொல்லி ஏத்துவது? என்கிறார்.

---

விஹோ:'' என்றத்தைப்பற்ற. 'ஊர்ந்து' என்றதுக்கு ஹாவம் - 'ஸங்கல்பத்துக்கு' இத்யாதி. இங்கே - 'ஸம்வ ஸ்ரு நிஸ்ய ஸாஸ்ரா' இத்யாதி அநுஸந்தேயம். 'சென்றாய்' என்னாதே, 'தோன்றினையே' என்றதுக்கு ஹாவம்-'இடர்ப்பட்டார்' இத்யாதி. 'சக்கரநல்வலத்தையாய் - ஞானமே படையாக, தோன்றினையே'' என்று அந் வய விவக்ஷயா தாத்பர்யம்-'திருவாழியை மறந்தான்' இத்யாதி. 'ஞானமேபடையாக' என்றத்தை - கீழும் மேலும் அந்வயிப்பது. அண்ணிய - ஸமீபஸ்தமான. 'ஸங்கல்பரூப ஜ்ஞாநத்தையோ நினைக்கிறது' என்றது-ஸங்கல்பரூப ஜ்ஞாநத்தைக்கொண்டு ரக்ஷிக்கு மது அவத்யமா மென்னுமத்தைப் பற்ற. ஸங்கல்பரூபஜ்ஞாநத்தையும் நினைத்தா னில்லை யென்றபடி. நினைத்தவற்றைக்கொண்டு கார்யங்கொண்டாலும் அவத்யமா மென்கிறார்-'மழுங்காத ஞான மே' இத்யாதி என்று மேலுக்கு அவதாரிகை கண்டுகொள்வது. 'வ்ரு ஸக்ஷஸ்ரு ஹிவ்ரு திஷேயஃ' இதி ந்யா யம் ஹ்ருதி நிதாயாஹ - 'அநேககார்யங்களிலே' இத்யாதி. கருவியாக - ஸாதநமாக. மலர் - திருநாபீகமலம். தொ ழும்பு - அடிமை. ஆயார்க்கு- ஆனார்க்கு. இதமாஹ-'சேஷபூதரானார்க்கு' இதி. வைஶத்யார்த்தம் அந்வயிக்கிறார் - 'மலருலகில்' இத்யாதி. இப்படிஅந்வயித்ததுக்கு ஹாவம்-'இருந்தவிடத்தே' இத்யாதி. 'அரைகுலையத் தலைகுலைய' என்றது - ஸைக்ர்யாதிஶய த்யோதகம். 'மறையாதே' என்ற ஏகாரம் - பிரிநிலையேகாரம்; மறையு மென்றபடி. அதுக்கு அபியுக்தோக்தி - 'மறையாதே' இத்யாதி. ஊர்ந்து - நடத்தி. தோன்றினையே - தோன்றினாயே. படையாக - பரிகரமாக; யத்வா, ஸாதநமாக வென்னுதல். தொழுங்காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்து-மழுங்காத வைந்நுதிய சக்கரநல்வலத்தையாய் - தோன்றினையே: மலருலகில் தொழும்பாயார்க்கு - மழுங்காதஞானமே படையாக - அளித்தால், உன் சுடர்ச்சோதி மறையாதே இத்யந்வயஃ. (கூ)

ஒ.—பத்தாம்பாட்டில், வேதைகஸமதிகம்யனுய் ஸர்வேஶ்வரனுயிருந்த உனக்கு த்வத்ஸ்ருஷ்டராய் உன்னுலே லப்தஜ்ஞானரான ப்ரஹ்மாதிகள் ஈஶ்வரனென்று அறிந்து ஏத்த இருக்கும் இது விஸ்மயமோ ? என்கிருர்

[மறையாய என்று தொடங்கி] - அநாஶ்ரிதர்க்குத் தோற்றுமே ஆஶ்ரிதர்க்குக்காட்டும் ஸ்வபாவமான வேதப்ரதிபாத்யமான நிரதிஶய போக்யதையை யுடையையாய், ஸ்வாமித்வ ப்ராப்தியாலே இவ்வுலகத்துக்கு ஸ்ருஷ்ட்யாத்யுபகாரங்களைப் பண்ணினவனே !

ப.— அநந்தரம், ஈஶ்வராபிமாநிகளும் உன்ஶேஷித்வத்தை யறிந்து ஆஶ்ரயிக்க இருக்கிற இருப்பு ப்ராப்தமாகையால் ஆஶ்சர்யமல்ல என்கிருர்.

மறையாய-(ரஜஸ்தமஃப்ரசுரர்க்கு ஸ்வார்த்தத்தை) மறைப்பதாய், நால்வேதத்து-(ஸத்வப்ரக்ருதிகளுக்கு அர்த்தப்ரகாஶகமான ருகாதி)சாதுர்வித்யத்தை யுடைத்தான வேதங்களுக்கு, உள்நின்ற - ஆந்தரமான தாத்பர்யமாய் நின்ற, மலர் - விகாஸத்தை யுடைத்தான, சுடரே - ஜ்யோதீரூபனுய், முறையால் - பர்யாயந்தோறும், இ - இந்த, உலகெல்லாம் - லோகங்களை யெல்லாம், படைத்து-ஸ்ருஷ்டித்து, இடந்து - (ப்ரளயத்திலே புக்கு) இடந்தெடுத்து, உண்டு - (மஹாப்ரளயத்திலே) உண்டு, உமிழ்ந்து - உமிழ்ந்து, அளந்தாய் - (அந்யாபிமாநம்கழியும்படி) அளந்து போந்தவனே ! இறையாதல் - (இப்படி வேதைகவேத்யதையாலும் ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களாலும்) சேஷியாக, அறிந்து - (உன்னை) அறிந்து, பிறையேறு - சந்த்ரகலாதாரணத்தாலும், சடையானும் - ஜடாதாரணத்தாலும் யோகதபஸ்ஸுகளிலே தத்பரனுன ருத்ரனும், நான்முகனும்-(ஸர்வதோமுகமான ஸ்ருஷ்ட்யாதி சக்தியையுடைய) ப்ரஹ்மாவும், இந்திரனும்-(த்ரைலோக்யேஶ்வரனுன) இந்த்ரனும், ஏத்த - (ஸ்துத்யாதி முகத்தாலே) ஆஶ்ரயிக்க, வீறு - ஆஶ்ரயணீயத்வாகாரத்தாலே வ்யாவ்ருத்தனுய், இருத்தல் இது - இருக்கிற இந்த இருப்பு, வியப்பே • ஆஶ்சர்யமோ ?

ப்ரமாணோபபத்தி ஸித்தமான இது ப்ராப்தமென்று கருத்து. முறையாலென்று - உடையவனுகையாலே என்றுமாம். மலர் - மலர்த்தியாய், விகாஸம்.

இ.—பத்தாம் பாட்டில், ப்ரஹ்மாதிகள் உன்னை ஈஶ்வரனென்று அறிந்து ஏத்த இருக்கும் இது விஸ்மயமோ ? என்கிருர்.

[மறை இத்யாதி]-துஷ்ப்ரக்ருதிகளுக்கு மறையாய், ஸத்ப்ரக்ருதிகளுக்கு வேதமாயிருக்கும். [நின்ற மலர்ச்சுடரே] - வேதங்களிலே ஸர்வாதிகனுகவும் நிரதிஶயபோக்யனுகவும் ப்ரகாசிக்கிறவனே ! [முறை இத்யாதி] - ஸ்வாமித்வப்ராப்தியாலே என்னுதல், பர்யாயேண என்னுதல். [இவ்வுலகெல்லாம் படைத்து] - விஷமஸ்ருஷ்டிக்கு அடியான கர்மவிஶேஷமிறே சேதநர் பண்ணிவைப்பது. யௌகபத்யம் அநுக்ரஹகார்ய மென்கை. ஶோகமோக்ஷ மூகங்யமாய்க் கிடந்த அன்று இவற்றை உண்டாக்கி, ஸ்ருஷ்டமான ஜகத்தை ப்ரளயம்கொள்ள மஹாவராஹமாய் இடந்து திரிய ப்ரளயம்வர எடுத்து வயிற்றிலே வைத்து நோக்கிப் பின்னை வெளிநாடு காண உமிழ்ந்து மஹாபலி போல்வார் பருந்து இருயுமாப்போலே அபஹரிக்கில் எல்லை நடந்து மீட்டுக்கொண்டாய். [பிறை இத்யாதி]- பிறையை ஶிரோபூஷணமாக வுடையனுகையாலே போகப்ரதானனுகையும், ஜடாதரனுகையாலே அந்த யோகம் தபஸ்ஸாலே ஸாத்யமென்கையும். "லலாடாத் க்ரோதஜோ ஜாயதே" என்று உன்னுலே ஸ்ருஷ்டனுய் ருத்ரனுக்குங்கூட ஜநகனுன ப்ரஹ்மாவும் க்ஷேத்ரஜ்ஞதயா ஸம்ப்ரதிபந்நனுன இந்த்ரனும். [இறை இத்யாதி] - நீ ஸ்வாமி யென்று அறிந்து ஏத்த அத்தாலே ஸர்வேஶ்வரனு யிருக்கும் இது விஸ்மயமோ? உன்னுலே ஸ்ருஜ்யரான ப்ரஹ்மாதிகள் உன்னை ஸ்தோத்ரம்பண்ண நீ இருக்கும் இருப்பு உனக்கு அவஶ்யமன்றோ.

ஈடு.—பத்தாம்பாட்டு. வேதைகஸமதிகம்யனாய் ஸர்வேஶ்வரனாயிருந்த உனக்கு, த்வத்ஸ்ருஷ்டராய் உன்னாலே லப்தஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகள் 'ஈஶ்வரன்' என்று அறிந்தேத்த இருக்குமது விஸ்மயமோ? என்கிறார்.

[மறையாய] - "ஆதௌ வேதா: ப்ரமாணம் ஸ்ம்ருதிருபகுருதே ஸேதிஹாஸை: புராணை: ந்யாயை: ஸார்த்தம் த்வதர்ச்சாவிதிமுபரி பரிக்ஷீயதே பூர்வபாக: । ஊர்த்வோ பாகஸ் த்வதீஹாகுணவிபவபரிஜ்ஞாபநைஸ் த்வத்பதாப்தௌ வேத்யோ வேதைஶ்ச ஸர்வைரஹமிதி பகவந் ஸ்வேந ச வ்யாஸகர்த்த" [ஆதௌவேதா: ப்ரமாணம் ஸ்ம்ருதிருபகுருதே ஸேதிஹாஸை: புராணைர் ந்யாயைஸ் ஸார்த்தம் த்வதர்ச்சாவிதிமுபரிபரிக்ஷீயதே பூர்வபாக: (ஊர்த்வோபாக ஸ்த்வதீஹாகுணவிபவ பரிஜ்ஞாபநைஸ்த்வத்பதாப்தௌ வேத்யோவேதைஶ்சஸர்வைரஹமிதிபகவந் ஸ்வேநச வ்யாஸகர்த்த) மறை என்றும், வேதம்என்றும் இரண்டுபடியாகச் சொல்லுகிறது - பாஹ்யராய் நாஸ்திகராயிருப்பார்க்குத் தன்படிகளை மறைக்கையாலும், ஆஸ்திகராயிருப்பார்க்குத் தன் அர்த்தத்தை வெளியிட்டுக் காட்டுகையாலும்; பூர்வபாகம் - ஆராதநஸ்வரூபத்தைச் சொல்லுகிறதாய், உபரிதநபாகம் - ஆராத்யஸ்வரூபத்தைச் சொல்லுகிறதாய், "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" (வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:) என்கிறபடியே ஸகலவேதங்களும் தன்னையேப்ரதிபாதிக்கும்படியாயிருக்கையாலே வந்த புகரைச் சொல்லுகிறது. வேதங்களிலே ஸர்வாதிகனாகவும் நிரதிஶயபோக்யனாகவும் ப்ரகாஶிக்கிறவனே! [முறையால் இத்யாதி] - வேதங்கள்தான் ப்ரதிபாதிப்பது இவனுடைய ரக்ஷகத்வத்தையாயிற்று. [முறையால்] - ஸ்வாமித்வ ப்ராப்தியாலே என்னுதல், பர்யாயேண என்னுதல்; கரணகளேபரவிதுரமாய் போகமோக்ஷஶூந்யமாய்க் கிடந்தவன்று இவற்றையுண்டாக்கி, ஸ்ருஷ்ட

---

*பத்தாம்பாட்டு-'மறையாய' இத்யாதி. ப்ரதமபாதார்த்தம், 'வேதைகஸமதிகம்யனாய்' என்றது. த்விதீயபாதார்த்தம், 'ஸர்வேஶ்வரனாயிருந்த உனக்கு' என்றது. த்ருதீயபாதார்த்தம், 'த்வத்ஸ்ருஷ்டராய்' இத்யாதி. சதுர்த்தபாதார்த்தம், 'ஈஶ்வரனென்று' இத்யாதி.*

*ஸகலவேத ப்ரதிபாத்யதைக்கு ப்ரமாணம் - 'ஆதௌ' இத்யாதி. ஸ்ரீரங்கராஜஸ்தவே உத்தரஶதகே. ஸ்ம்ருதி: ஸேதிஹாஸை: புராணைர் ந்யாயைஸ் ஸார்த்தம், உபகுருதே - உபப்ரும்ஹணம் பண்ணுகிறது. இத்தால் - வேதம் ஸ்வத: ப்ரமாணம், ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்கள்-வேதோபப்ரும்ஹணதயா வேதமூலகத்வேந ப்ரமாணங்களென்றபடி. 'த்வதர்ச்சாவிதிமுபரி - தவார்ச்சாவிதேருபரீத்யர்த்த:. பரிக்ஷீயதே - பரிக்ஷீண மாகாநிற்கிறது; தத்ப்ரதிபாதநபரமாகாநிற்கிறது. பூர்வபாக: - ஸ்ம்ருத்யுபப்ரும்ஹித பூர்வபாக: இத்யர்த்த:. ஊர்த்வோபாக:-இதிஹாஸபுராணோபப்ரும்ஹித வேதாந்தபாக இத்யர்த்த:. ஈஹா-ரக்ஷணார்த்த வ்யாபார:. விபவ: - உபயவிபூத்யைஶ்வர்யம். த்வத்பதாப்தௌ "பரிக்ஷீயதே" இத்யத்ராபி யோஜநீயம்.*

*இப்படி வேதங்களெல்லாவற்றாலும் ப்ரதிபாத்யனவனென்று சொல்லுவாரார்? என்ன, வேத்யோவேதைஶ்ச ஸர்வைரித்யாதி. 'மறை' என்றும், 'வேதம்' என்றும் சொன்ன த்விருக்திக்குக் கருத்து எது? என்ன - 'மறையென்றும்' இத்யாதி. வேதயதீதி-வேத: என்னக்கடவதிறே. 'நால் வேதத்துள் நின்றமலர்ச்சுடரே' என்றதுக்கு அர்த்தம் - 'பூர்வபாகம்' இத்யாதி. ப்ரதிபாத்யாகாரமேதென்ன - 'வேதங்களிலே' இத்யாதி. 'தஸ்ய ப்ராணாம்' 'நதத்ஸமஶ்ச' இத்யாதியும், 'ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:', 'ரஸோவை ஸ:', 'யஶ்சாயம் ஹ்ருதி' இத்யாதி விவக்ஷிதம். 'மறையாய' இத்யாதி-ரஜஸ்தம:ப்ரசுரராய் நாஸ்திகராயிருப்பார்க்கு ஸ்வார்த்தத்தை மறைப்பதாய், ஸத்வப்ரசுரராய் ஆஸ்திகராயிருப்பார்க்கு ஸ்வார்த்தப்ரகாசகமான நாலுவேதங்களுக்கு ஆந்தரமான தாத்பர்யமாய் நின்ற விகாஸத்தையுடைய தேஜோரூபனானவனே யென்று சப்தார்த்தம். மேலே கூட்டித் தாத்பர்யம்- 'வேதங்கள்தான்' இத்யாதி. 'படைத்து' என்றதுக்கு - "யதோ வா இமாநி" இத்யாதி; "ஸ்ரீணிவஹ்னிவக்த்ரே", "ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர:" இத்யாதியிலே*

மான ஜகத்தை ப்ரளயங்கொள்ள மஹாவராஹமாய் இடந்து, திரிய ப்ரளயம்வர வயிற்றினுள்ளே வைத்து நோக்கி, பின்னை வெளிநாடுகாண உமிழ்ந்து,மஹாபலிபோல்வார் பருந்துஇருய்ஞ்சினாற்போலேஅபஹரிக்க, எல்லைநடந்து மீட்டுக்கொண்டு இப்படி ஸர்வவிதரக்ஷணங்களையும்பண்ணினவனே! விஷமஸ்ருஷ்டிக்கு அடியான கர்மவிசேஷமிறே சேதநர் பண்ணிவைப்பது; யௌகபத்யம் அநுக்ர ஹகார்ய மென்கை. [பிறையேறுசடையானும் இத்யாதி] - ஜடைகழற்றுதே ஸாதகவேஷத்தோடே யிருக்கச்செய்தே,கலாமாத்ரமான சந்த்ரனை தரித்துக்கொண்டு ஸாதகப்ரதாநனாயிருக்கிற ருத்ரனும்,அவ னுக்குங்கூட ஜநகனான சதுர்முகனும்,இவர்களோடொக்க எண்ணலாம்படியிருக்கிற இந்த்ரனும், நீ ஸ்வாமியான முறையறிந்து ஏத்த அத்தாலே உன்னுடைய வ்யாவ்ருத்திதோற்ற இருந்தா யென்றால், இது உனக்கு விஸ்மயமோ? ஒருவன் ஒரு குழமணனைப் பண்ணி, அதின் கழுத்திலே காக்கைப் பொன்னைத் தோற்றி, அதின் தலையிலே காலைவைத்து, 'இது என்னை வணங்கிற்று' என்று இறுமாந் திருக்குமாபோலே * "நன்மைப் புனல்பண்ணி நான்முகனைப்பண்ணி" என்கிறபடியே உன்னாலே மனையப்பட்ட ப்ரஹ்மாவும், அவனாலே ஸ்ருஷ்டரான இவர்களும் உன்னை யேத்த, அத்தாலே இறு மாந்திருந்தா யென்றால் இது உனக்கு ஏற்றமோ? ஹாஸ்யமாய்த் தலைக்கட்டு மத்தனை யன்றோ ?

## பதினோராம் பாட்டு.

வியப்பாயவியப்பில்லா மெய்ஞ்ஞானவேதியனைச்
சயப்புகழார்பலர்வாழும் தடங்குருகூர்ச்சடகோபன்
துயக்கின்றித்தொழுதுரைத்த ஆயிரத்துள் இப்பத்தும்
உயக்கொண்டுபிறப்பறுக்கும் ஒலிமுந்நீர்ஞாலத்தே.

*ஆ.—லோகத்தில் விஸ்மயநீயமானவற்றை விஸ்மயநீயமாகவுடையனன்றியே, யதா பூதவாதியான ஸர்வவேதங்களாலும் ப்ரதிபாத்யனாயிருந்தவனை, பகவத்கைங்கர்ய ஜநித்வமாகிற கல்யாணமான புகழை யுடையார் பலர் வாழுந் தடங்குருகூர்ச் சடகோபன், ஒரஜ்ஞாநகந்தமில்லாத படி ஸாக்ஷாத்கரித்துத் தொழுது உரைத்த இத்திருவாய்மொழி, பகவத்ஸாக்ஷாத்கார விரோதி ஸம்ஸாரத்தைப் போக்கும் என்கிறார்.*

*ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றாரை உஜ்ஜீவிப்பித்துப் பின்னை ஸாம்ஸாரிக துக்கத்தையெல்லாம் இத்திருவாய்மொழி தானே போக்கும் என்கிறார்.*

*[வியப்பு என்று தொடங்கி]- வேறொரு ஆச்ரயத்திலே கண்டதாகில் விஸ்மயமாம்படி யிருக்குமவையெல்லாம் இங்கே கண்டதாகில் விஸ்மயமில்லாதபடியை யுடையனாய் யதாபூதவாதி*

---

ரக்ஷகத்வம் ப்ரதிபாதிதம். பர்யாயோபபாதநபூர்வகமாக சப்தார்த்தம் - 'காணகளேபர' இத்யாதி. இருய்ஞ்சினாற் போலே - அபஹரித்தாற்போலே. கர்மாநுகுணமான ஸ்ருஷ்டி உபகாரமானபடி யென்? என்ன - 'விஷமஸ்ருஷ் டிக்கு' இத்யாதி. 'எல்லாம்' என்று - யௌகபத்யந் தோன்றுகிறதிறே. "வெநூ:" என்றத்தைப்பற்ற

'ஒக்கவெண்ணலாம்படி' என்றது. வியப்பே-விஸ்மயமோ ? பூர்வவாக்யம் ஸத்ருஷ்டாந்தம் வ்ருணோதி-'ஒருவ னொரு' இத்யாதி. குழமணன்-மரப்பாச்சி. தோற்றி- ஒட்டி. இறுமாந்து - கர்வித்து. 'நன்மைப்புனல்பண்ணி'- கார்யோத்பத்திஹேதுவான நன்மையையுடைய காரணஜலத்தையுண்டாக்கி இதி சப்தார்த்த:. இறையாதல் - ஸ்வாமியாக. க்ரமேண அந்வய:. (கo)

* திருவாய்மொழி - எ, ரு, ச.

யான வேதப்ரதிபாத்யனுயுள்ளவனை. சயப்புகழ் - ஸம்ஸாரத்தை வென்ற புகழ். துயக்கின்றி - ஸம்ஶய விபர்யய ஜ்ஞாநங்க ளில்லாதபடி.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக ஸாம்ஸாரிகஜந்ம ராஹித்யத்தை அருளிச்செய்கிறார்.

வியப்பாய - (ஏகதேஶஸம்பந்தத்தாலும் புறம்புள்ளவிடத்தில்) ஆஶ்சர்யாவஹமான குணசேஷ்டிதாதிகள், வியப்பில்லா - (ஸ்வவிஷயத்தில்) ஆஶ்சர்யமாகையன்றியே (தன்னைப்பற்றியவைதான் மினுங்கும்படி)யான, மெய்ஞ்ஞானம் - இந்த யாதாத்ம்ய ஜ்ஞாநத்தை ப்ரதிபாதிக்கிற, வேதியனை - வேதங்களாலே வேத்யனானவனை, சயம்-(ஸம்ஸார)ஜயத்தால் வந்த, புகழார்-(ஜ்ஞாந வைராக்ய)ப்ரதையை யுடையரானார், பலர் - பலரும், வாழும் - (இவருடைய வைலக்ஷண்யத்தை யநுபவித்து) வாழ்கிற, தடம்-பேரிடமுடைத்தான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், துயக்கு-(ஸம்ஶயவிபர்யயரூபமான) மனந்திரிவு, இன்றி - அற்று, தொழுது-(யதார்த்தஜ்ஞாநகார்யமான) ஶேஷவ்ருத்தியோடே, உரைத்த-அருளிச்செய்த, ஆயிரத்துள்இப்பத்தும் - ஆயிரத்து ளிப்பத்தும், ஒலி - கோலாஹலோத்தரமாய், முந்நீர் - ஆற்றுநீர் ஊற்றுநீர் வர்ஷஜலம் ஆகிற மூன்றுநீருங் கூடின கடலையுடைத்தான, ஞாலத்து - பூமியிலே, உயக்கொண்டு - (ஜ்ஞாநப்ரதாநாதிகளாலே) உஜ்ஜீவிப்பித்து, பிறப்பு-ஜந்மஸம்பந்தத்தை, அறுக்கும் - அறுக்கும்.

வியப்பு - ஆஶ்சர்யம். துயக்கு - மனந்திரிவு. இது - நாலடித்தாழிசை; கலிவிருத்தம் என்பாரு முளர்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றாரை உஜ்ஜீவிப்பித்துப் பின்னை ஸாம்ஸாரிக து:கத்தை இத்திருவாய்மொழிதானே போக்கு மென்கிறார்.

[வியப்பாய இத்யாதி] - புறம்பு விஸ்மயநீயங்களானவை இவ்விஷயத்தில் விஸ்மயநீயங்களன்றிக்கே யிருக்கிறபடி. தங்களுடைய அங்கீகாரம் புறம்புள்ளார்க்கு ஏற்றமாயிருக்கிற ப்ரஹ்மருத்ராதிகள் ஸ்தோத்ரம் பண்ணுகிறது இவன் பெருமைக்கு ஆஶ்சர்யமன்றிக்கே யிருக்கை. [மெய்ஞ்ஞானவேதியனை]-இவனைச் சொல்லும்போது சொல்லிற்றெல்லாம் மெய்யாம்படி யிருக்கிற யதாபூதவாதியான வேதமே சொல்லவேண்டாவோ? மெய்யான ஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கிற வேத ப்ரதிபாத்யனை. [சயப்புகழார்] - ஸம்ஸாரத்தை ஜயித்த புகழையுடையராயிருக்கை. ஆழ்வாரோடு ஸாம்யாபந்நராயிருக்கை. இப்படியிருப்பார் அநேகர் ஆழ்வாரை அநுபவித்திருக்கை. [தடங்குருகூர்] - ஸாத்விகருக்கு அநுபவிக்கைக்குப் பரப்புடைத்தான திருநகரி. துயக்காவது - மனந்திரிவு. ஸம்ஶய விபர்யயராஹித்யமான ஸம்யக்ஜ்ஞாநத்தாலே கண்டு ப்ரீதிப்ரேரிதராய்த் தொழுது அந்தப்ரீதி வழிந்த சொல்லான ஆயிரத்திலும் இப்பத்து. [ஒலிமுந்நீர் ஞாலத்தே உயக்கொண்டு பிறப்பறுக்கும்]-ஒலியையுடைய முந்நீரையுடைய பூமியிலே "ஈஸஞெவ" என்று அஸத்கல்பரானவர்களை "ஸஷெநம்தடெதாவிஃ:" என்று உஜ்ஜீவிப்பித்துப் பின்னை தத்விரோதியான ஜந்மத்தைப் போக்கும்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழிதானே இதுகற்றாரை உஜ்ஜீவிப்பித்துப் பின்னை ஸாம்ஸாரிகமான ஸகலதுரிதத்தையும் போக்கும் என்கிறார்.

---

நிகமம் - 'வியப்பாய' இத்யாதி. "இப்பத்து முயக்கொண்டு பிறப்பறுக்கும்" இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'நிகமத்தில்' இத்யாதி.

[வியப்பாயவியப்பில்லா] - வேறு சில வ்யக்திகளிலே கண்டால் விஸ்மயஹேதுவாயிருக்குமவையடைய, இவன்பக்கலிலே கண்டால் ப்ராப்தமாயிருக்கும். ஒருவனுக்கு நாலுபசுக் கொடுத்தால் அது விஸ்மயஹேதுவாயிருக்கும்; ‘பெருமாள் செய்தார்’ என்றவாறே ப்ராப்தமாயிருந்ததிறே. ஸர்வஸ்வதானம்பண்ணிக் கையொழிந்தவளவிலே ‘த்ரிஜடன்’ என்பானொரு ப்ராஹ்மணன் வர, அப்போது ஒன்றுந்தோற்றாமையாலே ‘உனக்கு வேண்டும் பசுக்களை அடித்துக் கொண்டுபோ’ என்ன, தண்டைச் சுழற்றியெறிந்து, அதுக்கு உட்பட்ட பசுக்களையடைய அடித்துக் கொண்டுபோனானிறே. [மெய்ஞ்ஞானவேதியனை] - யதாபூதவாதியான வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்பட்ட உத்கர்ஷத்தை யுடையவனை. [சயம் இத்யாதி] - * “இந்நின்றநீர்மையினியாமுறாமை” என்ற இவர்தம்மைப்போலே ஸம்ஸாரத்தை ஜயிக்கையால் வந்த புகழையுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள் பலரும் ஆழ்வாரையனுபவித்து வர்த்திக்கைக்கு ஈடான பரப்பையுடைத்தான திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார். [துயக்கின்றி] - துயக்காவது - மனந்திரிவு. ஸம்சய விபர்யய ரஹிதமாக ஸாக்ஷாத்கரித்து அருளிச்செய்த ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தும், [ஒலிமுந்நீர்ஞாலத்தே - உயக்கொண்டு பிறப்பறுக்கும்] - ஒலியையுடைத்தான முந்நீரையுடைய பூமியிலே “[illegible]” (அஸந்நேவ) என்று அஸத்கல்பரானவர்களை “[illegible]” (ஸந்தமேநம்ததோவிது:) என்று உஜ்ஜீவிப்பித்து விரோதிகளையும் போக்கும். அராஜகமான தேசத்தில் ராஜபுத்ரன்தலையிலே முடியை வைத்து விலங்குவெட்டி விடுமாபோலே, அழகர் திருவடிகளிலே கைங்கர்யத்திலே அந்வயிப்பித்துப் பின்னை தத்விரோதியான ஸம்ஸாரஸம்பந்தத்தை அறுத்துக்கொடுக்கும்.

முதற்பாட்டில் - அழகருடைய திருவணிகலன்களுக்கும் திருமேனிக்கும் உண்டான ஸௌகடிதத்வத்தை அநுஸந்தித்தார்; இரண்டாம்பாட்டில் - அதுக்கு நாட்டார் த்ருஷ்டாந்தமிட்டுச் சொல்லுமவையெல்லாம் உனக்கு அவத்யத்தை விளைக்குமென்றார்; மூன்றாம்பாட்டில் - ‘நாட்

*வியப்பாயவியப்பில்லா - விஸ்மயஹேதுவாய் விஸ்மயஹேதுவுமன்றிக்கே யிருக்கிற வ்யாபாரத்தை யுடையவனாய் இதி சப்தார்த்த:. இத்தைக்காட்டுகிறார் - ‘வேறுசில’ இத்யாதி. ஒருதத்ர விஸ்மயஹேதுவாயிருக்குமது இவ்விஷயத்தில் விஸ்மயஹேதுவன்றிக்கே ப்ராப்தமாயிருக்க எங்கே கண்டோம்? என்ன, ‘ஒருவன்’ இத்யாதி. அது எப்போது? என்ன, ‘ஸர்வஸ்வதானம்’ இத்யாதி, போனானிறே. அதுக்கும், ஸர்வஸ்வதானம் பண்ணினதுக்கும் விஸ்மயப்பட்டவர்க ளில்லையிறே யென்று கருத்து. அப்போத்பாகாண்ட த்வாத்ரிம்சே த்ரிஜடவ்ருத்தாந்த:, “[illegible] । [illegible] ।। [illegible] । [illegible]” மெய்ஞ்ஞான வேதியனை - யதார்த்தஜ்ஞாநோத்பாதக வேதப்ரதிபாத்யனை இதி ஶப்தார்த்த:. ‘யதாபூதவாதியாகுமிந்த யதார்த்தஜ்ஞாநஜநகத்வமுள்ளது; ஆகையாலே, ‘யதாபூதவாதியான’ என்றது. சயம்-ஜயம். தொழுது-ஸேவித்து, கண்டு என்றபடி. பகவத்தர்ஶநத்தை-சேஷத்வாநுகுணமாக, ‘ஸேவை’ என்றிறே வ்யவஹரிப்பது. முந்நீரையுடைய-கடலையுடைய. ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலமுமான மூன்றுநீரையுமுடைத்தாகையாலே ‘முந்நீர்’ என்கிறது. பிறப்பறுத்து, உயக்கொள்ளவேண்டாவோ? என்ன, ‘அராஜக’ இத்யாதி. ‘வியப்பாய வியப்பில்லா’ என்றத்தால் ப்ரகரணத்துக்கு பலிதம் - வ்யதிரிக்தர்க்கு ஆஶ்சர்யாவஹமான ப்ரஹ்மருத்ராதிகள் பண்ணுகிற ஸ்தோத்ரம் இவன்பெருமைக்கு ஆஶ்சர்யமன்றிக்கேயிருக்கை. இது வ்யாக்யானத்திலே வ்யக்தம்.

* திருவிருத்தம்—௧.

டாரைவிடும், மயர்வறமதிநலம் அருளப்பெற்ற நீர் சொல்லீர்' என்ன, 'என்றும் சொல்லி முடியாது' என்றார்; நாலாம்பாட்டில்-'இப்படி விலக்ஷணனாய் நிரதிசயபோக்யனாயிருக்கிற உன்னை நாட்டார் இழந்துபோம்படி அவர்களை மதிவிப்ரமங்களைப் பண்ணினாய்' என்றார்; அஞ்சாம்பாட்டில் - 'நாட்டாரில் வ்யாவ்ருத்தரல்லீரோ ? உம்மால் பேசவொண்ணாமைக்குக் குறையென்?' என்ன, 'என்னை வ்யாவ்ருத்தனாக்கினவோபாதி உன்னை ஸாவதியாக்கிற்றில்லையே' என்றார்; ஆறாம்பாட்டில்-'வேதங்களும் நீருங் கூடப் பேசினாலோ?' என்ன, 'அவையும் உன்னைப் பரிச்சேதிக்கமாட்டாது' என்றார்; ஏழாம்பாட்டில் - 'வேதங்கள் கிடக்கிடும்; வைதிகபுருஷர்களென்று சிலருண்டே, அவர்கள் ஏத்தக் குறையென்?' என்ன, 'அதுவும் உனக்கு நிறக்கேடு' என்றார்; எட்டாம்பாட்டில் - கர்மபாவனையின்றிக்கே ப்ரஹ்மபாவனையேயாயிருப்பானொரு ப்ரஹ்மாவை உத்ப்ரேக்ஷித்து அவனேத்திலும் தேவர்க்குஅவத்யம்' என்றார்; ஒன்பதாம்பாட்டில் - 'மேன்மை பேச வொண்ணாது' என்கைக்கு 'நீர்மையோதான் பேசலாயிருக்கிறது'என்றார்; பத்தாம்பாட்டில்-'உன்னாலே ஸ்ருஷ்டனான ப்ரஹ்மாவாலே ஸ்ருஜ்யரான இவர்கள் உன்னை யேத்துகையாவது உனக்கு அவத்யமன்றோ?' என்றார்; நிகமத்தில் - 'இத்திருவாய்மொழிதானே ப்ராப்யத்தைத் தரும்' என்றார். (கக)

---

*த்ரமிடோபநிஷத் ஸங்கதி:*— க்ஷேத்ரீயஸம்பத்தஸ்யாநாதி ஹேதோ: க்ஷபாதௌ யஸ்ய வாஸரணாதிரப்யேத்ய । வ்யூஹாதிவாமவிஷயஞ த்தோவ ஸாவம் ஸளஜ ஈஷ்டஹ்யதய: ஸம்ஜிஞ்ஞம்ஸ ॥

*த்ரவிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளி:*—ஸ்ரஷ்டாகஷ தெய்த்ராநவ தஸாஷதேவகிநிஸீதீவம்ஸாநஸாதாஸ்தெஹம் ஸாவஸஜநவதம்தணிதாஜூஜஹிஷ்யா । ஸேதாத்திக்ருணகீதிம் தநிதீரஹிதளஜ்ஜ்யதேஷள வவாஹ்யம் வீதாஸ்ராத்திணைத வ ஹ்யதிஸாராநாதிவித்ஸளநாவிதூழ.

*திருவாய்மொழி நூற்றந்தாதி:*—முடியார் திருமலையில் மூண்டு நின்றமாற, னடிவாரந் தன்னி லழகர்—வடிவழகைப், பற்றி முடியு மடியும் படிகலனும்,முற்று மனுபவித்தான் முன்.

---

## இரண்டாந்திருவாய்மொழி—முந்நீர்ஞாலம் : ப்ரவேசம்.

*ஆ.*—(முந்நீர்ஞாலம்.) இப்படி ஸாக்ஷாத்க்ருதனான எம்பெருமானோடு தம்முடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே யதாமநோரதம் ஸம்ஶ்லேஷிக்கப்பெறுமே நிர்மர்யாத வ்யஸநஸாகராந்தர்நிமக்நராய்க்கொண்டு கூப்பிடுகிறார்.

*ஒ.*—இரண்டாந் திருவாய்மொழியில், பெருவிடாய்ப்பட்டவன் ஸுஸம்ஸ்க்ருதமான தண்ணீர் ஸந்நிஹிதமாயிருக்கச்செய்தே ஆஸ்யம்பிஹிதமானால் துடிக்குமாபோலே தமக்கு போக்யமான விஷயம் ஸந்நிஹிதமாய் ஆசையும் மிக்கிருக்கச்செய்தே விஷயத்தின் பெருமையாலே தமக்கு விளாக்குலைகொள்ளவொண்ணாதொழிய, அத்தை ப்ரக்ருதிஸம்பந்தாயத்தமான கரணஸங்கோச நிபந்தநமென்று பார்த்து மிகவும் அவஸந்நராய் 'இப்ரக்ருதிஸம்பந்தத்தை யறுத்து எல்லாரும் தன்திருவடிகளைப் பெறுகைக்காக எம்பெருமான் பண்ணின ஜகத்ஸ்ருஷ்டியும் ஸ்ருஷ்ட

---

வேதங்களும் நீருங்கூடப் பேசினாலோ? என்றதுக்கு-அல்பபேதம் கண்டுகொள்வது.

சயப்புகழாரித்யாரப்ப, சடகோபன்-வியப்பாயவியப்பில்லாதவனும் மெய்ஞ்ஞானவேதியனான ஸர்வேஶ்வரனை துயக்கின்றி தொடங்கி, இப்பத்தும்-ஒலிமுந்நீர்ஞாலத்து-உய்க்கொண்டு பிறப்பறுக்கும் இத்யந்வய:.

ஜகத்தில் பண்ணின அநேகாவதாரங்களும் எனக்குக் கார்யகரமாயிற்றில்லை. இனி நான் ப்ரக்ருதி ஸம்பந்தமற்று எம்பெருமானைப்பெற விரகில்லையாகாதே'என்று நைராஸ்யத்தோடே முடியப்புக்க ஆழ்வார், அவ்வவதாராதிகளில் தப்பினார்க்கும் இழக்கவேண்டாதபடி திருமலையில் நின்றருளின படியைக் காட்டியருளக் கண்டு உஜ்ஜீவித்து ப்ரீதராய் முடிக்கிறார்.

ப.—இரண்டாந்திருவாய்மொழியில், இப்படி ஸ்வாபாவிகமான ஶேஷத்வத்துக்கு ப்ரதிஸம்பந்தியான ஶேஷியினுடைய திவ்யஸௌந்தர்யாதிகளை அநுபவிக்க ப்ராப்தமாயிருக்க, அது ஸித்தியாதொழிகிறது தத்விரோதியான ஶரீரஸம்பந்தாதிகளடியாக வென்று அநுஸந்தித்து, தந்நிவ்ருத்தியில் அபேக்ஷையாலே, அது அவன்தனக்கு விதேயமாம்படியான ஸ்ரஷ்ட்ருத்வத்தையும், ஸ்ருஷ்டமான ஜகத்தை அநந்யார்ஹமாக்கின அபதாநத்தையும், ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவத்தையும், ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமான வ்யாப்தியையும், அநுபவித்தல்லது நிற்கவொண்ணாத விலக்ஷணவிக்ரஹயோகத்தையும், ஸமஸ்தசேதநரும் ஸ்வாதீநராம்படியான பாரம்யத்தையும், வ்யாப்தியிலும் கார்யகரமான ஸௌலப்யத்தையும், அந்தஸௌலப்யமடியாக வந்த குணவிக்ரஹௌஜ்ஜ்வல்யத்தையும், ஜ்ஞாநாஜ்ஞாநவிபாகமில்லாதபடியான உபகாரகத்வத்தையும், அதுக்கு ப்ரகாஶகமான ஸகலவேதவேத்யத்வத்தையும் அநுஸந்தித்துச் சொல்லிக் கூப்பிட்டு, ஸ்வஸந்நிதியாலே ஆர்த்திஶமிப்பித்த ஸுலபனான ஈஶ்வரனை அபரோக்ஷித்து ப்ரதிஷ்டிதராகிறார்.

இ.—இரண்டாந் திருவாய்மொழியில், பெருவிடாய்ப்பட்டவன் சேர்ந்த தண்ணீர் ஸந்நிஹிதமாயிருக்க ஆஸ்யம் பிஹிதமானால் துடிக்குமாப்போலே தமக்குப் போக்யமான விஷயம் ஸந்நிஹிதமாய் விடாயும் மிக்கிருக்கச் செய்தே அபரிச்சிந்நவிஷயமாகையாலே பரிச்சேதித்து அநுபவிக்கவொண்ணாதொழிய, 'இது விஷயஸ்வபாவத்தால் வந்தது, நித்யாநுபவம்பண்ணுவார்க்கும் ஒக்கும் இது' என்று அறியாதே கரணஸங்கோசநிபந்தநமென்று பார்த்து அவஸந்நராய் 'ப்ரக்ருதி ஸம்பந்தமற்று உன்னைப்பெறுகைக்கு நீ பண்ணின ஜகத்ஸ்ருஷ்டியும் ஸ்ருஷ்டமான ஜகத்தில் நீ பண்ணின அநேக அவதாரங்களும் கார்யகரமாயிற்றில்லை; இனி நான் இழந்தேபோமத்தனையாகாதே' என்று நைராஸ்யத்தோடே முடியப்புக, ஈஶ்வரன் வந்து முகங்காட்டி 'நீர் இங்ஙனே படுகிறதென்? நித்யாநுபவம் பண்ணுவார்க்கும் உள்ளதொன்று காணும்; இவ்விடம்போடே நீர் அநுபவிக்கவன்றோ நாம் இங்கு வந்து நிற்கிறது' என்று படைக்குத்திருமலையிலே நிற்கிற நிலையைக் காட்டி ஸமாதாநம்பண்ண, ஸமாஹிதராய் ப்ரீதியோடே தலைக்கட்டுகிறார்.

ஈடு.—பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கச்செய்தே, சீராமப்பிள்ளை 'இவர் பரத்வாநுபவத்தை யாசைப்பட்டு, அது ஒரு தேஶவிஶேஷத்திலே போனால் அநுபவிக்குமதாய் நோவுபடுகிறாரல்லர்; அவதாரங்களில் அநுபவிக்க ஆசைப்பட்டு, 'பிற்பாடரானோம்' என்று நோவுபடுகிறாரல்லர்; உகந்தருளின நிலங்களிலேயாய், அதுதன்னிலும் திருமலையிலேயாகில் அநுபவிக்க இழிந்தது, பின்னை மேன்மேலென அநுபவிக்குமதொழிய இவர் இழந்து நோவுபடுகைக்குக் காரணமென்?' என்று கேட்க, 'பரவ்யூஹவிபவங்களோடு அர்ச்சாவதாரத்தோடு வாசியற தர்மியைக்யத்

'முந்நீர்ஞாலம்' ப்ரவேஶ. 'பட்டர்' இத்யாதி—கீழில் திருவாய்மொழியிலே அழகருடைய ஸௌந்தர்யத்தை அநுஸந்தித்தவர், மேன்மேலென அநுபவியாமல் இதிலே துக்கிக்கிறதென்? என்று—சீராமப்பிள்ளை ஶங்காபிப்ராயம். அழகருடைய ஸௌந்தர்யம் அபரிச்சிந்நமாகையாலே பரிச்சேதித்து அநுபவிக்கமாட்டாதே 'இதுக்கு அடி கரணஸங்கோசமன்றோ' என்று ஶோகிக்கிறாரென்று—பட்டர்பரிஹாரம் கண்டுகொள்வது. 'காரணமென்? என்று கேட்க,—காரணமென்? அர்ச்சாவதாரத்திலே போக்யதாதி குணபூர்த்தி போராமையாலேயோ? என்று கேட்க' என்று அத்யாஹார்யம். சீராமப்பிள்ளை—கேட்க இத்யந்வய:. இதுக்கு பட்டர் பரிஹாரம்—'பரவ்யூஹ' இத்யாதி. 'ஆனால், அஸ்மதாதிகளுக்கு அப்படி தோற்றவில்லையே' என்ன, 'குறைந்து' இத்

தாலே விஷயம் எங்குமொக்கப் பூர்ணமாயிருக்கும்; குறைந்துதோற்றுகிற விடம் ப்ரதிபத்தாக்களுடைய ப்ரதிபத்திதோஷத்தாலே. கடலருகே போகாநின்றால் தன்கண்ணாலே முகக்கலாமளவிறே காண்பது; அப்படியே அழகருடைய ஸௌந்தர்யாதிகளை அநுபவிக்கப் புக்கவிடத்தில் விளாக்குலை கொண்டு அநுபவிக்கலா யிருந்ததில்லை; பெருவிடாய்ப்பட்டவன், சேர்ந்த குளிர்ந்த தண்ணீர் ஸந்நிஹிதமா யிருக்க, ஆஸ்யம் பிஹிதமானால் துடிக்குமாபோலே விஷயமும் ஸந்நிஹிதமாய் விடாயும் மிக்கிருக்கச் செய்தே, அபரிச்சிந்நவிஷய மாகையாலே பரிச்சேதித்து அநுபவிக்க வொண்ணாதொழிய, 'இது விஷயதௌர்ஜந்யத்தாலே வந்தது' என்று அறியமாட்டாதே, தம்முடைய கரணஸங்கோச நிபந்தநமாக வந்த தென்று அநுஸந்தித்து, 'அவன் தான் முதலிலே இத்தைக் கழித்துத் தன்னையநுபவிக்கைக்கு உறுப்பாக ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணினான்; ஸ்ருஷ்டமான ஜகத்திலே தான் வந்து அவதரித்தான்; அதுக்குமேலே அந்தர்யாமிரூபேண நின்று ஸத்தாதிகளை நிர்வஹித்தான்; அவன் இப்படி உபகாரபரம்பரைகளைப் பண்ண, நான் அவற்றையெல்லாம் அஸத்ஸமமாக்கிக்கொண்டேன்; இனி நான் அவனைக்கிட்டுகையென்று ஒன்று உண்டோ?' என்று நிர்மர்யாத வ்யஸநஸாகராந்தர்நிமக்நராய் 'முடிந்தேனேயன்றோ' என்று இவர் சோகிக்க, 'நீர் கரணஸங்கோசத்தாலே வந்தது என்று சோகிக்கவேண்டா; கரணஸங்கோசமில்லாதாரும் நம்மை அநுபவிக்குமிடத்தில் இப்படியேகாணும் படுவது' என்று இவரிழவைப் பரிஹரிக்கக்கோலி, 'நீர் நினைத்த வகைகளெல்லாம் பரிமாறுகைக்கு ஈடாக வடக்கில் திருமலையிலே நின்றோம்; அங்கே கிட்டி அநுபவியும்' என்று தான் அங்குநிற்கிற நிலையைக் காட்டி ஸமாதாநம்பண்ண, ஸமாஹிதராய்த் தலைக்கட்டுகிறார்.

தெற்குத்திருமலையிலே நிற்கிறநிலையை அநுபவிக்கக் கோலிப் பெறாதே நோவுபட்ட இவரை வடக்குத்திருமலையில் நிற்கிறநிலையைக் காட்டி ஸமாதாநம்பண்ணினபடி என்னேன்னில்; - முலை வேண்டியழுத ப்ரஜைக்கு முலையைக்கொடுத்துப் பரிஹரிக்கநினைத்தனையிறே. 'இன்னமுலையைத் தர வேணும்' என்று அழுதால் அம்முலையையே கொடுத்து ஆற்றவேண்டாவோ?, என்னில்;-வேண்டா; இவர்தாம் வழிதிகைத்தலமருகையாலே 'அதுவே வேணும்; அதுவன்று இது' என்கிற தெளிவில்லையா

*யாதி. 'ஆனால், நோவுபடுகைக்குக் காரணமென்?' என்ன, அழகருடைய ஸௌந்தர்யம் அபரிச்சிந்நமாகையாலே பரிச்சேதித்து அநுபவிக்கமாட்டாதே, 'இதுக்கு அடி கரண ஸங்கோசமன்றோ' என்று சோகிக்கிறாரென்று ஸத்ருஷ்டாந்தமாக உத்தரம் அருளிச்செய்கிறார் - 'கடலருகே' இத்யாதி. முகக்கலாமளவிறே - க்ரஹிக்கலாமளவிறே. 'அப்படி அநுபவிக்கப்போகாவிட்டால் விட்டுப்பிடிக்க வொண்ணாதோ?' என்ன, 'அவனை அநுபவிக்க வேணும்' என்கிற ஆசையாலே விடமாட்டாரென்னுமத்தை ஸநிதர்ஶநமாக அருளிச்செய்கிறார்-'பெருவிடாய்ப் பட்டவன்' இத்யாதி, 'அநுபவிக்கவொண்ணாதொழிய' என்னுமளவும். சேர்ந்த, ஸந்நிஹதமாய் இதி பதத்வய தர்ஶநாத், சேர்ந்த என்கிறதுக்கு - ஏலாதி ஸம்ஸ்காராத் அநுரூபத்வாபிமதத்வாதௌ தாத்பர்யம். பிஹிதமானால்-வ்யாதியாலே அடைக்கப்பட்டால். ஆனால், 'ப்ரக்ருதி ஸம்பந்தத்தை யறுத்துத்தரவேணும்' என்று ப்ரார்த்திப்பானென்? என்ன, அதுக்கு உத்தரமருளிச்செய்கிறார், இது விஷயேத்யாதி வாக்யசேஷ மெல்லாவற்றாலும். இது-பரிச்சேதித்து அநுபவிக்கவொண்ணாதது. தௌர்ஜந்யம் - வைலக்ஷண்யம். இத்தைக்கழித்து-சரீரஸம்பந்தத்தைக் கழித்து. "ஞாலம்படைத்த" என்றத்தைப்பற்ற-'ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணினான்' என்றது. 'எம்வாமன' என்றத்தைப்பற்ற-'அவதரித்தான்' என்றது. 'எங்கணும்நிறைந்தவெந்தாய்' என்றத்தைப்பற்ற-'அந்தர்யாமி' இத்யாதி. 'ஆக்கையின்வழியுழல்வேன்' என்றத்தைப்பற்ற - 'அஸத்ஸமமாக்கிக்கொண்டேன்' என்றது. 'எங்கினித்தலைப்பெய்வன்' என்றத்தைப்பற்ற - 'சோகிக்க' என்றது. மேலிற்றிருவாய்மொழியைக் கடாக்ஷித்து, ஸமாதாநப்ரகாரம் - 'நீர்கரண' இத்யாதி. 'சிந்துபூமகிழும்' என்றத்தைப்பற்ற-'இப்படியேகாணும் படுவது' என்றது. 'நிலைபெற்றென்னெஞ்சம்' என்றத்தைப்பற்ற - 'ஸமாஹிதராய்த்தலைக்கட்டுகிறார்' என்றது.*

*தடஸ்தஶங்கையை அநுவதிக்கிறார் - 'தெற்குத்திருமலையிலே' இத்யாதி. ஶங்கையை மூன்றுவிதமாகப் பரிஹரிக்கிறார் - 'முலைவேண்டி' இத்யாதிநா, இன்னமுந்தானித்யாதிநா, ஆரியர்களிழந்தவித்யாதிநாச. 'முலைவேண்டி' இத்யாதிக்கு - "தென்னனுயர்பொருப்பும் தெய்வவடமலையும், மென்னுமிவையே முலையாவடிவமைந்த" இத்யத்ர ஹ்ருதயம். 'வழிதிகைத்தலமருகையாலே' என்றது - "வழிதிகைத்தலமருகின்றேன்"*

யிற்று. இன்னமுந் தான், ஒருவஸ்துதானே ஒருபோது தாரகமாய், மற்றைப்போது அதுதானே பாதகமாகக் காணாநின்றோமிறே; ஆமத்தில் பாதகமான சோறுதானே அதுகழிந்தவாறே தாரகமாகா நின்றதிறே; 'இவர்க்கு இன்னது இன்னபோது தாரகமாம், இன்னது இன்னபோது பாதகமாம்' என்று தெரியாது; குணாவிஷ்காரத்தாலே தரிப்பித்துக்கொண்டு போருகிற ஈச்வரனுக்கும் தரித்த இவருக்கும் தெரியுமத்தனை இதுதான். ஆரியர்களிழந்த ம்லேச்சபூமியிலுள்ளார்க்கு முகங்கொடுத்துக் கொண்டிருக்கிற நீர்மையிறே அங்கு; கானமும் வானரமும் வேடுமானவற்றுக்கு முகங்கொடுத்த நீர்மையுண்டிறே இங்கு.

# முதற்பாட்டு.

முந்நீர்ஞாலம்படைத்த எம்முகில்வண்ணனே
அந்நாள்நீதந்த ஆக்கையின்வழிஉழல்வேன்
வெந்நாள்நோய்வீய வினைகளைவேரறப்பாய்ந்து
எந்நாள்யானுன்னை இனிவந்துகூடுவனே.

**ஆ.**—ஸம்ஸாரியாத்மாக்களெல்லார்பக்கலிலும் சென்று வெள்ளங்கொள்ளும்படி கரை புரண்டுபெருகுகிற உன்னுடைய நிரவதிககாருண்யவெள்ளத்தாலே, உன்திருவடிகளைச் சேர்கைக்கு உபாயமாகக் கரணகளேபராத்யுபகரணங்களை ஸர்வாத்மாக்களுக்கும் கொடுத்தருளின வனே! அன்று நீ எனக்குத்தந்தருளின அந்தஉபகரணத்தைக்கொண்டு உன்திருவடிகளைச் சேரமாட்டாதே பின்னையும் ஸம்ஸாரஸமுத்ரத்திலே போய்விழுந்தேன்; இப்படி உன்னைப் பிரிந்திருக்கிற இந்தக்காலமாகிற காலாக்நிஸத்ருசமான நோய் விடும்படி உன்னைப்பிரிந்திருக்கைக்கு ஹேதுவான என்னுடைய வினைகளை வேரறப்பாய்ந்து என்று நான் உன்னைவந்து கூடுவது? என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், 'உன்னை ஸமாச்ரயிக்கைக்குத் தந்த சரீரத்தைக்கொண்டு உன்னை ஸமாச்ரயியாதே அதன்வழியே ஒழுகி அநர்த்தப்பட்டேன். நான் உன்னை என்று காண்பது?' என்று ஆர்த்தராய்க் கூப்பிடுகிறார்

[முந்நீர் என்று தொடங்கி.]—எனக்காகக் கடலோடு கூடின ப்ரபஞ்சத்தை உண்டாக்கின பரமோதாரனே! அக்காலத்திலே உன் திருவடிகளிலே சேர வுற்றன சரீரத்தை நீ தர அத்தைக்கொண்டு உன்திருவடிகளைப் பெறும் விரகு பார்க்கமாட்டாதே அதன்வழியே ஒழுகி துக்கப்படுகிற நான் உன்னோட்டை விச்லேஷத்தாலே துஸ்ஸஹமாய்க்கொண்டு செல்லுகிற நாளில் பிரிந்து நோவுபடுகைக்கிடான பாபங்களை வேரறுத்து.

---

என்றத்தைப்பற்ற. த்விதீயபரிஹாரம்- 'இன்னமுந்தான்' இத்யாதி. காணாநின்றோமிறே - அப்படியே தெற்குத்திருமலையில் நிலை அபரிச்சேத்யமாகையாலே பாதகமாய், வடக்குத்திருமலையில் நிலை கண்டுகொண்டு அநுபவிக்கலாம்படி யிருக்கையாலே அந்நிலையைக்காட்டி அநுபவிப்பிக்கிறா னென்றபடி. அப்படி ஒருவஸ்துதானே தாரகமுமாய், பாதகமுமாயிருக்குமோ? என்ன - 'ஆமத்தில்' இத்யாதி. ஆமத்தில் - அஜீர்ணதசையில். இவர்க்கு இன்னபோது பாதகமாம், இன்னபோது தாரகமாமென்று அறியும் ப்ரகாரமென்? என்ன, 'இவர்க்கு இன்னது' இத்யாதி. 'பின்னை யார்க்குத் தெரியும்' என்ன, 'குணாவிஷ்காரத்தாலே' இத்யாதி. மூன்றாம்பரிஹாரம் - 'ஆரியர்களிழந்த' இத்யாதி. இத்தால்-இங்குத்தைப்பற்றவும் ஸௌசீல்யம் அங்கு அதிசயித்திருக்கையாலே அங்குத்தைநிலையைக் காட்டி யநுபவிப்பிக்கிறா னென்றபடி. அங்கு - தெற்குத்திருமலையிலே. இங்கு - வடக்குத்திருமலையிலே. இங்கு என்ற அநந்தரம் - 'என்று அருளிச்செய்தார்' என்று சேஷம்.

**ப.**—முதற்பாட்டில், ஸகலஜகத்ஸ்ரஷ்டாவான நீ ஆஸ்ரயணார்த்தமாகத் தந்த ஸரீரத்தின் வழியே அலமருகிற நான் தத்தேதுக்களைப்போக்கி உன்னைப்ராபிப்பது என்றோ? என்கிறார்.

முந்நீர் - மூன்றுவகைப்பட்ட நீரையுடைய, ஞாலம் - ஜகத்தை, படைத்த எம் முகில்வண்ணனே - ஸ்ருஷ்டித்து (அத்தாலே ஜல ஸ்தல விபாகமில்லாத) மேகத்தின் ஸ்வபாவத்தையுடையனாய்க்கொண்டு எனக்கு உபகாரகனானவனே! அந்நாள் - அந்தஸ்ருஷ்டிகாலத்திலே, (தயமாநமநாவாய்க்கொண்டு), நீ - நீ, தந்த - (ஆஸ்ரயணார்த்தமாகத்) தந்த, ஆக்கையின் - சரீரத்தினுடைய, வழி - பந்தகத்வமார்க்கத்திலே போய், உழல்வேன் - (கர்ப்பநரகாதிகளிலே போய்) அலமருகிற நான், வெம் - (ஜ்ஞாநம்பிறந்தபின்பு) பரிதாபஹேதுவான, நாள் - நாளிலே, நோய் - (அஹங்காரார்த்தகாமாதிரூபமான) வ்யாதிகள், வீய - நசிக்கும்படி, வினைகளை - (தத்தேதுவான) கர்மங்களை, வேர் - ஸவாஸநமாக, அறப் பாய்ந்து - கொத்தியெடுத்துப்போகட்டு, யான் - (அநுகூலிக்கத்தந்த கரணங்களை ப்ரதிகூலிக்கைக்கு உறுப்பாக்கின) நான், உன்னை - (ப்ரதமோபகாரகனை) உன்னை, இனி - இப்படி க்ருதக்நனானபின்பு, வந்து - (இந்நிலையைவிட்டு) வந்து, கூடுவன் - கூடுவது, எந்நாள் - எந்நாளாயிருக்கிறது? நாள் அறுதியிடிலும் தரிக்கலாமிறே யென்று கருத்து.

**இ.**—முதற்பாட்டில், ‘உன்னை ஆஸ்ரயிக்கத்தந்த ஸரீரத்தைக்கொண்டு அதன்வழியே ஒழுகி அநர்த்தப்பட்டேன்; நான் உன்னை என்று கிட்டக் கடவேன்?’ என்று கூப்பிடுகிறார்.

[முந்நீர் ஞாலம் படைத்த] - மூவகைப்பட்ட நீரையுடைய கடல்சூழ்ந்த பூமியைப் படைத்த கட்டளைதான் தன் விசித்ரஸக்தியோகம் தோற்ற இருக்கை. ‘‘[illegible]’’ என்கிறபடியே முன்னே நீரைப்படைத்த என்றுமாம். தயநீயதஸையைக் கண்டு ‘இவை கரணங்களைப் பெற்றுக் கரைமரம் சேரவேணும்’ என்று தயாபரதந்த்ரனாய் ஸ்ருஷ்டித்தபடி. கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டியாகிலும் யௌகபத்யம் அநுக்ரஹக்ருதம் என்கை. [எம்] - ஸ்ருஷ்டி ஸர்வஸாதாரணமாகிலும் இவர் தமக்காக என்று இருக்கிறார். எங்குமொக்க வர்ஷித்தாலும் அதுகொண்டு விளைத்துக்கொண்டவன் ‘எனக்காக’ என்று இருக்குமாபோலே; எல்லாருக்கும் ஒக்க அவன் செய்தாலும் க்ருதஜ்ஞன் ‘எனக்காக’ என்று இருக்குமிறே. [முகில்வண்ணனே]- மேகம் ஜல ஸ்தல விபாகமின்றிக்கே வர்ஷிக்கிறது ப்ரத்யுபகாரம் கொள்ளுகைக்கன்றிறே. ‘‘வஹு ஸ்யாம்’’ என்று தன்பேறாக ஸ்ருஷ்டிக்கை. [அந்நாள்] - அசித்விஸிஷ்டனாய் ஸோச்யதஸாபந்நனான நாள். [நீ] - அத்தஸையிலே ‘‘ஏகாகீ ந ரமேத’’ என்று இழவு உன்னதாய் முகங்காட்டின நீ. [தந்த] - திருவடிகளிலே தலைசாய்த்து உன்னைப்பெறுகைக்கு உறுப்பாம் உடம்பை உபகரித்த; ‘‘[illegible]’’ ‘‘[illegible]’’. தன்னைப் பெறுகைக்கு உபகரணமும் தானே தரவேண்டியிருக்கிறபடி. [ஆக்கையின் இத்யாதி] - விஷயப்ராவண்யத்தை விளைத்துக்கொண்டு ஸரீரத்தின் வழியே போய் அநர்த்தப்பட்டேன். [உழல்வேன்] - சுழிதோறும் முழுகாநின்றேன். கரையேறக் கொடுத்த தெப்பத்தைக்கொண்டு அதன் வழியே போய்க் கடலிலே புகுவாரைப்போலே உடம்பின்வழியே போய் ஸம்ஸாரார்ணவத்திலே புக்கு நசிக்கை. [வெந்நாள்] - ஜ்ஞாநம் பிறந்தால் இப்ரக்ருதிஸம்பந்தத்தோடே யிருக்கிற நாள் அஸோகவநிகையில் பிராட்டி இருந்தாற்போலே. [நோய்வீய] - நோயென்று சரீரஸம்பந்தமாதல், விஸ்லேஷமாதல். வீய - முடிய. [வினைகளை] - ஸரீரஸம்பந்தத்துக்கு அடியான பாபங்களை. [வேர் இத்யாதி]-ஸவாஸநமாகப் போக்கி; ‘பாய்ந்து’ என்று சினம் தோற்றுகிறது. ஒரு ஸர்வஸக்தி செய்யுமத்தை நான் செய்யவோ? [எந்நாள்] - இன்னநாளென்று ஓரவதி பெற்றாராகிலும் அத்தைப் பற்றிக்கொண்டிருப்பர். [யான்] - உன்னைப்பெறுகைக்குத் தந்த உபகரணத்தை அழித்துக்கொண்ட நான். [உன்னை] - ‘என்பேற்றுக்குப் போக்கடி சொல்லவேணும்’ என்று வளைக்க

லாம்படி யிருக்கிற உன்னை. [இனி வந்து கூடுவனே]-'நீ தந்த கைம்முதலையும் அழித்துக்கொண்ட பின்பு கிட்டுகைக்குப் போக்கடி உண்டாகில் சொல்லவேணும்' என்கிறார்.

ஈடு.—முதற்பாட்டில்—ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணி, உன்னை வழிபடுகைக்கு உடலாகக் கரணகளேபரங்களைக் கொடுத்துவிட்டாய் நீ; நான் அவற்றை இதர விஷயப்ராவண்யத்துக்கு உடலாக்கி அநர்த்தப்பட்டுப் போனேன்; இங்ஙனேயிருக்கிற நான் உன்னை வந்து கிட்டுவதொரு நாள் சொல்லவேணும் என்கிறார்.

[முந்நீர்] - ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலமென்று சொல்லுகிறவற்றை. * "'**அபஏவ ஸஸர்ஜாதௌ**" (அபஏவஸஸர்ஜாதௌ) என்று-†முற்பட ஜலஸ்ருஷ்டியைப் பண்ணி, பின்பிறே அண்டஸ்ருஷ்டிதான் பண்ணிற்று. [ஞாலம்படைத்த]-விசித்ரமாக ஜகத்ஸ்ருஷ்டியைப்பண்ணின. தயநீயதசையைக்கண்டு, 'இவை கரணகளேபரங்களைப் பெற்றுக் கரைமரஞ்சேரவேணும்' என்று தயாபரதந்த்ரனாய் ஸ்ருஷ்டித்தபடி; [எம்முகில்வண்ணனே]-அவன் ஸர்வவிஷயமாக உபகரிக்கச் செய்தே, 'மதர்த்தம்' என்றிருக்கிறார் இவர். ஒருவன் ஸாதநாநுஷ்டாநம் பண்ணி வர்ஷிப்பிக்க நாடு வாழ்ந்துபோமாபோலே, அவன் எனக்காக ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணினான்; நாடு வாழ்ந்துபோயிற்று என்று இருக்கிறார். ஸர்வவிஷயமாக உபகரித்தபடியும், ப்ரத்யுபகாரங்கொள்ள இராமையும் பற்ற 'முகில்வண்ணனே' என்கிறார். [அந்நாள்]-கரணகளேபரவிதுரமாய் தமோபூதமாய், தயநீயதசையை ப்ராப்தமாய்க்கிடந்த அந்நாள். [நீ] - இத்தசையிலே "**ஏகாகீ ந ரமேத**" (ஏகாகீநரமேத) என்று இழவு உன்னதாய் முகங்காட்டின நீ. [தந்த]-திருவடிகளிலே தலைசாய்த்து உன்னைப் பெறுகைக்கு உறுப்பாக உடம்பை யுபகரித்த. [நீதந்த] - பரமதயாளுவான நீதந்த. இவை அர்த்திக்கச் செய்கை யன்றிக்கே, தன்தயையாலே தந்த இத்தனை. ‡ "**ஜாயமாநம்**

*முதற்பாட்டு - 'முந்நீர்' இத்யாதி. பூர்வார்த்தத்தையும், 'எந்நாள் யானுன்னை யினிவந்துகூடுவன்' என்ற பதங்களையுங் கடாக்ஷித்து அவதாரிகை - 'ஜகத்ஸ்ருஷ்டியை'இத்யாதி. எம்பெருமானார் நிர்வாஹத்திலே- இந்த அவதாரிகை. உன்னைவழிபடுகைக்கு - உனக்கு அடிமைசெய்கைக்கு.*

*ஆற்றுநீர் ஊற்றுநீர் வர்ஷஜலமென்கிற மூன்றுவகைப்பட்ட நீரையுடைய கடல்சூழ்ந்த பூமியைப் படைத்த வென்று முந்தினஅர்த்தம். முன் - முன்னே, நீர் - ஜலோபலக்ஷிதமான பூதங்களைப் படைத்து, பின்னை, ஞாலத்தை-அண்டத்தை ஸ்ருஷ்டித்தவென்று அர்த்தாந்தரம். 'அபஏவ'இத்யாதி 'அபஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத்' என்கிற வசநம், 'ஸிஸ்ருக்ஷு:' என்றதுக்குமேலே. 'முன்' இதி பதஸாமர்த்யாத் - பின்பு இதிசித்தம். 'விசித்ரமாக'என்றது, ஸ்வபாவோக்தி. 'நீ தந்த' என்றத்தைக் கடாக்ஷித்து, 'படைத்த' என்றதுக்கு பாவம் - 'தயநீய' இத்யாதி. 'எம்' என்றதுக்கு பாவம் - 'அவன்'இத்யாதி. இவரென்ற அநந்தரம் - 'க்ருதஜ்ஞதையாலே' இத்யத்யாஹார்யம். தமக்கானால் எல்லாருக்கும் உபகாரகனானபடி யென் ? என்ன, 'ஒருவன்' இத்யாதி. 'வண்ணம்' என்றத்தை - ஸ்வபாவபரமாக்கி, தத்ஸ்வபாவங்களை அருளிச்செய்கிறார், 'ஸர்வவிஷயமாக'இத்யாதி. தமோபூதமாய்-தமோவஸ்தமாய். தமோவஸ்தையாவது - ப்ரக்ருதியினுடைய ஸூக்ஷ்மாவஸ்தை. 'தமோபூதமாய்'என்றது - 'ஆஸீதிதம் தமோபூதமப்ரஜ்ஞாதமலக்ஷணம்' என்ற மநுஸ்ம்ருதி வசநத்தைப் பற்ற. 'ஏகாகீநரமேத'இதி மஹோபநிஷதி. 'தந்த' இத்யநேந - உபகாரகத்வம் ஸூச்யதஇதி ஹ்ருதிநிதாய, ப்ரக்ருதிஸம்பந்தஸ்யத்யாஜ்யத்வாத் கதம்உபகாரகத்வம்இதி ஶங்காம்பரிஹரந்நர்த்தமாஹ - 'திருவடிகளிலே'இத்யாதி. 'விவித்ராதேஹஸம்பத்திரீஶ்வராய' இத்யாதி. 'நீ' என்றதுக்கு- பித்ருத்வரூப ஸம்பந்தம் அவலம்ப்யஅர்த்தோஹிஹித:-'இத்தசையிலே'இத்யாதி. அர்த்தாந்தரமாஹ-'பரமதயாளு' இத்யாதி. ஸ்வரஸஸித்தார்த்தமாதல், 'ஜாயமாநம்' இதிவத் ஸாவதாரணமாக்கி அர்த்தமாதல்-'இவை அர்த்திக்க'*

** மநுஸ்ம்ருதி— க- அ. † 'முன்னீர்ஞாலம்' என்று பாடங்கொண்டு இவ்வாறு இரண்டாவது அர்த்தம் அருளிச்செய்கிறார். ‡ குண்டலிலம் பலஸ்ரீகோஶங்களிலில்லை யென்பர்.*

**ஹொஉா நுஷொஷெஹஃ"** (துர்லபோமாநுஷோதேஹ:), **"உா நுஷ்ஃவூரவ்"** (மாநுஷ்யம் ப்ராப்ய) இத்யாதி.) 'இத்தை உபகாரமாகச் சோல்லுகிறதேன் ? கர்மாநுகுணமாயன்றே ஸ்ருஷ்டி இருப்பது' என்னில்; ஸ்ருஷ்டிப்பது கர்மத்தைக் கடாக்ஷித்தாகிலும், யௌகபத்யம் அநுக்ரஹகார்யம்; **"அவிஷவிஸேஷிதாநுஹூலயஸீஉநிஸஂஸாரதஃ கரணகலேபரைவைெ-டயிதுஂஉயஉாநஉநாஃ"** (அசிதவிஸேஷிதாந்ப்ரலயஸீமநி ஸம்ஸரதஃ கரணகலேபரைர்க்கடயிதும்தயமாந மநாஃ) என்னக்கடவதிறே; ஓரோகாலங்களிலே சிறைவெட்டிவிடுமாபோலே தன்தயையாலே உண்டாக்குமத்தனையிறே. [ஆக்கையின்வழியுழல்வேன்]-நீ ஒன்றை நினைத்துத் தந்தாய்; நான் அதின்வழியே போந்தேன். 'தேப்பத்தை நூக்கிப்போய்ப் பெருமாளை யநுபவிக்கலாயிருக்க, 'சரீரம் பாங்கன்று' என்று நீர்வாக்காலே போய்க் கடலிலே புகுவாரைப்போலே, இதரவிஷயப்ராவண்யத்துக்கு உடலாக்கி அநர்த்தத்தை விளைத்துக்கோண்டேன்' என்றார் எம்பார். [வெந்நாள்] - ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தபின்பு ஸம்ஸாரத்திலிருக்கிற இருப்பு, பிராட்டி லங்கையிலே யிருந்தாற்போலே தோற்றாநின்றது காணும் இவர்க்கு. பகவத்விஸ்லேஷத்தோடே யிருக்கையாலே, நெருப்பையெறட்டினாற்போலே இராநின்றதாயிற்று நாள். [நோய்]-பிறவி. ஸ்ரீபரதாழ்வானுடைய நோய் - சாதுர்த்திகமாயிராதே, ராமவிரஹத்தாலேயா யிருக்குமே; அப்படியே இவர்நோயும் ப்ரஸித்தங்காணும்.[வீய]-முடிய. [வினைகளை வேரறப் பாய்ந்து]- **"ராக்ஷஸாநாஂக்ஷயஂகூ஖வாஸஂஉயிவாவராவணஂ। லஂகாஉநூலிதாஂகூ஖வாகதாகுக்ஷதிஉாஂவதிஃ"** (ராக்ஷஸாநாம் க்ஷயம்க்ருத்வா ஸூதயித்வாசராவணம்,லங்காமுந்மூலிதாம்க்ருத்வா கதாத்ரக்ஷ்யதிமாம்பதிஃ)*(என்கிறபடியே இவரும் மநோரதித்து) விஸ்லேஷவ்யஸநத்துக்கு அடியான அவித்யாதிகளை வாஸனையோடே போக்கி. 'பாய்ந்து' என்று சினம் தோற்றுகிறது. ஒரு ஸர்வஶக்தி சேய்யுமத்தை நான் சேய்

இத்யாதி. புநர்முகாந்தரேணாஶங்க்யபரிஹரதி - 'இத்தைஉபகாரமாக'இத்யாதி. நிர்ஹேதுகதயையாலே ஸ்ருஷ்டித்தானென்னுமதுக்கும், யௌகபத்யம் அநுக்ரஹகார்ய மென்னுமதுக்கும் ஸ்ரீரங்கராஜஸ்தவே ப்ரமாணம்- 'அசிதவிஸேஷிதாந்'இத்யாதி. "வராஉநிஜெஊயெவ வரவாநகரொஃ வ கூ஖திஂ உஹஉஹிஉாந ஸூதகரணாவவி கொரகிணீஂ" இத்புத்தரார்த்தம். 'ஸம்ஸரதஃ' இதி பஹுவசநேந - யௌகபத்யம் ஸூச்யதே. 'யௌகபத்யம் அநுக்ரஹகார்யம்' என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - ' ஓரோகாலங்களிலே ' இத்யாதி. ராஜாக்கள் புத்ரோத்ஸவாதிகளிலே சிறையிலேகிடந்தவர்களையெல்லாம் ஒருகாலே விடுவர்களிறே. 'ஒன்றை நினைத்து'-சரணகமல ஸமாஸ்ரயணத்துக்கு உடலாமென்று நினைத்து. ஸத்ருஷ்டாந்தமாக விவரணம்- 'தெப்பத்தை' இத்யாதி. நூக்கி - தள்ளி. 'பாங்கன்று' - பகவத்ஸமாஸ்ரயணஸமர்த்தந்நபவதி, போதப்ரேரணம்? ஸமர்த்தம் நபவதீதி சார்த்தஃ. த்ருஷ்டாந்தபூர்வகம் அர்த்தமாஹ- 'ஸ்வரூபஜ்ஞாநம்'இத்யாதி. 'வெம்' என்றதுக்கு அர்த்தாந்தரம்-'பகவத்விஸ்லேஷ' இத்யாதி-வகாரத்தமாதல். 'வெந்நாள்'என்ற- ஸம்ஸாரத்தைச் சொல்லுகிறது. ஜ்ஞாநம் பிறந்தபின்பு பரிதாபஹேதுவான நாளிலே இதிசப்தார்த்தஃ.'நோய்' என்றால்-பிறவியைச்சொல்லுமோ ? என்னில், "உபகோஸலவித்யையிலே - ஆசார்யன் தேசாந்தரத்துக்குப்போக, தந்நியமநத்தினாலே அக்நிஶுஶ்ரூஷணரதனான உபகோஸலனை அப்யவஹாரார்த்தமாக ஆசார்யபத்நி அழைக்க, அவன் 'வ்யாயிஹிஃ வரிவூணோஸ்மி' என்று வ்யாதிஶப்தத்தாலே - ஜந்மத்தையும், தத்ப்ரயுக்ததாபத்ரயங்களையும் வ்யாதியாகச் சொன்னானிறே'என்று அருளிச்செய்வர். 'நோய்' என்றதுக்கு-ஜந்மப்ரயுக்தமான நோயென்று ஓரர்த்தம் அருளிச்செய்து, பகவத்விஸ்லேஷத்தால் வந்த நோயாக அர்த்தாந்தரம் விவக்ஷித்து 'நோய்' என்றால் - விஸ்லேஷவாசகமாகக்கூடுமோ ? என்ன, 'ஸ்ரீபரதாழ்வான்'இத்யாதி. எம்பெருமானார் நிர்வாஹத்திலே "வினைகளை வேரறப் பாய்ந்து எந்நாள் யானுன்னையினிவந்துகூடுவன்" என்னுமளவுக்கும் ஸம்வாதமாக அருளிச்செய்கிறார்-'ராக்ஷஸாநாம்' இத்யாதி. ஸுந்தரகாண்டே ஷட்த்ரிம்ஶே ஹநூமந்தம்ப்ரதி ஸீதாவசநமிதம். சப்தார்த்தம்- 'விஸ்லேஷ' இத்யாதி. 'போக்கி' என்னாதே ' பாய்ந்து ' என்றதுக்கு வாஸனை - 'பாய்ந்து என்று'

* குண்டலித க்ரந்தம் - ப்ரக்ஷிப்தம்.

யவோ ? [எந்நாள்] - எனக்கு 'இப்போதே பெறவேணும்' என்னும் அபேக்ஷை யில்லை; 'இன்ன நாள் பெறக்கடவை' என்று ஒருநாளிட்டுத் தர அமையும்; "[illegible]" (பூர்ணேசதுர்த்தஶேவர்ஷே) என்னுமாபோலே. [யான்]-நீ தந்த உபகரணங்களை இதர விஷயப்ராவண்யத்துக்கு உடலாக்கி அநர்த்தத்தைச் சூழ்த்துக்கொண்ட நான். [உன்னை] - 'நான் விளைத்துக்கொண்ட அநர்த்தத்துக்குப் போக்கடி சொல்லாய்' என்று வளைக்கலாம்படி யிருக்கிற உன்னை. [இனி] - நீ தந்த கைம்முதலை யழித்துக்கொண்டபின்பு. [இனி வந்து கூடுவனே] - 'இனி வந்துகிட்டுகை என்று ஒரு பொருளுண்டோ ? என்று நிராஶராகிறார்' என்று முன்புள்ள முதலிகள் ; எம்பெருமானார் 'நிராஶராளுல் பின்னைமுடியா ரொருவர்; ஒன்பதாம்பாட்டில் - நிராஶராக, பத்தாம் பாட்டில் - அவன்வந்து ஸமாதாநம் பண்ணினுகை அமையும்' என்று அருளிச்செய்வர். 'நான் வந்து உன்னைக் கிட்டுவேனுக நீ பார்த்துவைத்த நாளைச் சொல்லாய்' என்கிறார். (க)

## இரண்டாம் பாட்டு.

வன்மாவையமளந்த எம்வாமனா ! நின்
பன்மாமாயப் பல்பிறவியில் படிகின்றயான்
தொன்மாவல்வினைத் தொடர்களை முதலரிந்து
நின்மாதாள்சேர்ந்து நிற்பது எஞ்ஞான்றுகொலோ.

---

இத்யாதி. 'வினைகளை' இத்யாதிக்கு எம்பெருமானார்நிர்வாஹம் - 'வினைகளை வாஸனையோடே போக்கி உன் திருவடிகளை நான்என்றுகிட்டுவன் ? அந்தநாளைச் சொல்லவேணும்'என்று கேட்கிறாரென்று ; முன்புள்ள முதலிகள் நிர்வாஹம் - 'நான் என்னுடைய பாவங்களை வாஸனையோடே போக்கி உன்னைஎன்றுகிட்டப்போகிறேன்? நான் கிட்டுகையென்றொரு பொருளுண்டோ'என்று நிராசராகிறாரென்று. இந்தநிர்வாஹத்திலே அருளிச்செய்கிறார்- 'ஒருஸர்வஶக்தி' இத்யாதி. ஸர்வபாபவிமோசநபூர்வகதத்ஸம்ஶ்லேஷம் ஸர்வசக்தியானவனுக்கே ஶக்யமித்தனையல்லது, எனக்கு ஶக்யமோ? என்றபடி. பாஷ்யகாரநிர்வாஹே தாத்பர்யாந்தரம் - 'எனக்குஇப்போதே' இத்யாதி. 'எந்நாள்' என்று - ப்ரஶ்நமென்றபடி. பூர்வர்கள்நிர்வாஹே, 'எந்நாள்' என்று - க்ஷேபமென்றபடி. "[illegible]" இதி யுத்த காண்டே ப்ரதிப்ரயாணே வால்மீகிவசநம். "[illegible]" என்று பரதாழ்வான் சொன்னதுக்கு ப்ரத்யுத்தரமான "[illegible]" இத்யாதியை எடாதே, "[illegible]" இத்யாதியை எடுத்தது - விசதமாயிருக்கையாலே. பூர்வர்கள் நிர்வாஹத்திலே அருளிச் செய்கிறார், 'நீ தந்த உபகரணங்களை' இத்யாதி. 'ஆக்கையின்வழி யுழல்வேன்' இத்யத்ர ஹ்ருதயம். 'வளைக்கலாம்படி'-தயாவானுயிருக்கிற உன்னை என்றபடி. பூர்வர்கள் நிர்வாஹே 'நீதந்த கைம்முதலை' இத்யாதி. கைம்முதலிதி - சாடு. இஷ்டஸாதநபூதத்ரவ்யமிதி த்வநி:; "[illegible]" இதி பகவத்ப்ரஸாதரோபகாணபூதகரணங்களை இதரவிஷயப்ரவணமாக்கி அழித்துக்கொண்ட பின்பும் இத்யர்த்த:. 'ஒருபொருளுண்டோ?' இது - க்ஷேபபக்ஷம். பூர்வர்கள் நிர்வாஹம், ஒன்பது பாட்டிலும் - நைராஶ்யம். எம்பெருமானார் நிர்வாஹம் - ஒன்பதாம்பாட்டிலே நைராஶ்யம். எம்பெருமானார் நிர்வாஹம் - ப்ரஶ்நபக்ஷம். பாஷ்யகார நிர்வாஹே, 'எனக்கு இப்போதே பெறவேணும்' இத்யாதி வாக்யோக்தம் ஹாவமேவ கிஞ்சித்விஶஷ்யதர்ஶயதி - 'நான் வந்து' இத்யாதி. க்ரமேண அந்வய:. (க)

ஆ.—(வன்மா.) இப்படி நீதந்த உபகரணத்தைக்கொண்டு பின்னையும் நான் ஸம்ஸார ஸமுத்ரத்திலே போய் விழுமளவில் என்னை எடுத்தருளுகைக்காக இங்கே புகுந்தருளினாய்; பின்னையும் உனக்கு எட்டாததொரு படி நான் அந்த ஸம்ஸாரமாகிற கடலினுள்ளே போய் அழுந்தாநின்றேன். இப்படி இக்கடலிலே அழுந்துகைக்கு ஹேதுவாய் அநாதிஸித்தமாய் மஹாபலமாயிருந்த என்னுடைய பாபபரம்பரைகளை முதலரிந்து உன்னுடைய நிரவதிகபோக்யமான திருவடிகளை நான் சேர்ந்து, பின்னை ஒருகாலமும் பிரியாதே நிற்பது என்றோ? என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், ஜலஸ்தலவிபாகமின்றிக்கே எல்லார்தலைமேலும் வைத்தருளின திருவடிகளையும் தப்பின நான் உன்திருவடிகளிலே சேர்வது என்றென்று கூப்பிடுகிறார்

[வன்மா என்று தொடங்கி.]-என்னை ஸம்ஸாரத்தினின்றும் எடுத்தருளுகைக்காக உன்னழகைக் கண்டாலும் ஈடுபடக்கடவதன்றிக்கேயிருந்துள்ள மஹாப்ருதிவியை அளந்தருளின ஸ்ரீவாமநனே! ஸத்வாதி குணபேதத்தையுடைத்தாய் துரத்யயையான ப்ரக்ருதிஸம்பந்த ப்ரயுக்தமாய் தேவமநுஷ்யாதி ரூபத்தினாலே பலபடியான ஜந்மங்களிலே அபிநிவிஷ்டனாய் விழுகிற நான். [தொன்மா என்று தொடங்கி] - பழையதாய் ஈஶ்வரனான உன்னாலும் அறுக்கமுடியாதபடியான பாபத்தொடர்ச்சிகளை முதலிலே அறுத்து உன்னுடைய பரமபூஜ்யமான திருவடிகளைச் சேர்ந்து நான் ப்ரதிஷ்டிதனாவது என்றோ?

ப.—அநந்தரம், அர்த்தியாய்வந்து ஜகத்தை அநந்யார்ஹமாக்கின உன் ஶ்லாக்யமான திருவடிகளைச் சேருவது என்றோ? என்கிறார்.

வல் - காடிந்யத்தாலே சிக்கென்ற, மா-பெரிய, வையம்-ப்ருதிவியை, அளந்த - (ஸௌகுமாரமான திருவடிகளாலே) அளந்து, எம் - அத்தாலே என்னை அநந்யார்ஹமாக்கின, வாமனா-வாமநனே! நின் - உனக்கு லீலோபகரணமாய், பல் - (குணபேதத்தாலும் கார்யபேதத்தாலும்) பலவகையாய், மா-துரத்யயையான, மாயம் - மாயையாகிற ப்ரக்ருதியடியான, பல்பிறவியில்- (தேவாதி) பஹுவிதஜந்மத்திலே, படிகின்ற-பொருந்திவர்த்திக்கிற, யான்-நான், தொல்-அநாதியாய், மா-அபரிச்சேத்யமாய், வல்-விடுவிக்க அரிதான, வினை-பாபங்களினுடைய, தொடர்களை-அநுபந்தங்களை, முதல்-ஸமூலமாக, அரிந்து-அறுத்து, நின்-(ப்ராப்தனான) உன்னுடைய, மா-(பெறுதற்கரிய) பெருமையையுடைத்தான, தாள்-திருவடிகளை, சேர்ந்து-சேர்ந்து, நிற்பது-(கதாகதம்பண்ணாதே) நிற்பது, எஞ்ஞான்றுகொல்-எக்காலமாயிருக்கிறதோ?

இ.—இரண்டாம் பாட்டில், 'எனக்குத் தந்த கைம்முதலைக்கொண்டு உன்னைக் கிட்டமாட்டாதொழிந்தால் நீ அர்த்தியாய்வந்து கிட்டின அன்றும் கிட்டப்பெற்றிலேன்' என்கிறார்.

[வன்மாவையமளந்த]-கடிநமான மஹாப்ருதிவியை ஸௌகுமாரமான திருவடிகளாலே அளந்த என்னுதல், மஹாபலிமிடுக்காலே புக்கு அளக்க அரிதான பூமியை என்னுதல்; தந்தாம் பேற்றுக்கு அவன் அர்த்தியாய் வந்த ஶீலத்துக்கும் அழகுக்கும் நெகிழாத பூமி என்னுதல். [அளந்த] - இருந்தார் இருந்த இடங்களிலே சென்று அவர்கள் தலையிலே திருவடிகளை வைத்தபடி. அவர்கள் இரங்காவிட்டாலும் தன் இரக்கத்துக்குப் பரிஹாரமில்லையே. [எம்வாமன] - இவ்வவதாரத்தில் உபகாரஸ்ம்ருதி தமக்கேயாயிருந்தபடி. எனக்காகவந்து பிறக்க 'இழந்தேன்' என்கிறார். இப்படி வரநின்ற உன்னாலும் மீட்கப் போகாதபடி ஸம்ஸாரத்திலே கைகழியப்போந்தேன் என்கிறார். [நின்பன்மாமாயம்] - "ஜஜோயா" என்று உன்னுடையதாய், தான் ஒன்றாயிருக்கக் குணத்ரயபேதத்தை யுடைத்தாய், துரத்யயையாயிருந்துள்ள ப்ரக்ருதி. நீ முடிந்த முடியை நான் அவிழ்க்கவோ? ஸுகத்திலே ஸங்கிப்பிப்பது, ப்ரவ்ருத்தியிலே மூட்டுவது, உணர்த்தியறப்

பண்ணுவது ஆகிற குணங்களைத் தப்பவோ? [பல்பிறவி] - ப்ரக்ருதிஸம்பந்த ப்ரயுக்தமான தேவாதி பேதங்கள். 'விழுகின்ற' என்னாதே 'படிகின்ற' என்கிறது, இவ்வனர்த்தத்திலே வெறுப்பின்றிக்கே பொருந்தியிருக்கை. வர்த்தமாநநிர்த்தேஶத்தால், இன்னம் தரைகண்டதில்லையென்கை. [தொல்மா இத்யாதி]-அநாதியாய் அநேகமாய் ஸர்வஶக்திக்கும் நெஞ்சுளுக்கவேண்டும்படி ப்ரபலமான பாவத்தொடர்ச்சிகளை; ஒன்றோடொன்று அநுபந்தித்திருக்கை. [முதலரிந்து]-வாஸனையோடே போக்கி. [நின்மாதாள்] - ப்ராப்தமாய் ஸுலபமாய் நிரதிஶயபோக்யமான திருவடிகளை. 'கிட்டி' என்கிற ஸ்தாநத்திலே 'சேர்ந்து' என்கிறது - கெடுமரக்கலம் கரைசேர்ந்தாற்போலேயிருக்கை. [நிற்பது] - "ஸ்நாதஸ்ஸ ஹ்ருணாவிஷாநுநவிஷிகாஸூதஸ்வஸ்ந" என்று ஸுஸ்திரனாயிருப்பது. [என்ஞான்றுகொலோ] - இன்னநாள் என்று ஓர்அவதி பெறிலும் பெற்றத்தோடு ஒக்கும்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. 'உம்முடைய உடம்புகொண்டு நாம் இருந்தவிடத்தே வந்து கிட்டமாட்டிற்றிலீராகில், நம்முடம்பைக்கொண்டு நீர் இருந்தவிடத்தே வந்து கிட்டினோமே; வாமநவேஷத்தைக்கொண்டு மஹாபலிமுன்னே வந்து நின்றோமே; அங்கே கிட்டமாட்டிற்றிலீரோ?' என்ன, 'அதுக்குந் தப்பினேன்' என்கிறார்.

[வன்மாவையமளந்த] - அவன் தானே தன்னைக்கொண்டுவந்து காட்டினவிடத்திலும் நெஞ்சில் நெகிழ்ச்சியின்றிக்கேயிருந்த பூமியிறே. ஆஸுரப்ரக்ருதியான மஹாபலிக்கு உள்ள இரக்கமும் இல்லையிறே; ஶுக்ராதிகள் விலக்கச்செய்தேயும் அவர்கள்வழி போயிற்றிலனிறே அவன். மஹாபலிமிடுக்காலே புக்குஅளக்க அரிதான பூமியென்னுதல்; இப்படி வன்மையையுடைத்தான மஹாப்ருதிவியை அளந்த. வடிவிணையில்லா மலர்மகள் மற்றைநிலமகள் பிடிக்கும் மெல்லடியைக்கொண்டுகிடீர் காடும் மலையுமான பூமியை அளந்தது என்னுதல். ஸம்ஸாரிகளுடைய நெஞ்சில் வன்மையைச் சொல்லுதல், பூமியினுடைய காடிந்யத்தைச் சொல்லுதல், மஹாபலிதோள்மிடுக்காலே ஒருவர்க்கும் ப்ரவேஶிக்க அரிதான வன்மையைச் சொல்லுதல். [எம்வாமன]-அபஹ்ருதராஜ்யனான இந்த்ரனுக்காகவல்ல; வாமநாவதாரமும் மதர்த்தமென்றிருக்கிறார். [நின்]-"மமமாயாதுரத்யயா" (மமமாயாதுரத்யயா) என்று சொன்ன இது எனக்கு ஒருவனுக்கும் பலித்துவிட்டது. [பன்மாமாயம்] - மாயமென்கிறது - மூலப்ரக்ருதியை: பன்மையாவது என்? என்

இரண்டாம்பாட்டு - 'வன்மா' இத்யாதி. பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-'உம்முடைய' இத்யாதி. 'உம்முடையஉடம்பு'என்றது-'ஆக்கையின்வழி' இத்யாதியைப் பற்ற. 'அதுவவ்விடத்தே'என்ன, 'வாமநவேஷத்தை' இத்யாதி.

'வையம்' என்றது - வையத்திலுள்ளாரையாய், வன்மையாவது - ஹ்ருதயகாடிந்யமென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரஸங்கம்அருளிச்செய்கிறார், 'அவன்தானே' இத்யாதி. தானே தன்னைக்கொண்டுவந்து காட்டினவிடத்தில் நெஞ்சுநெகிழ்ந்த பேருண்டோ? என்ன, 'ஆஸுர' இத்யாதி. அவன்தான் அப்படி யிரங்கினானோ? என்ன, 'ஶுக்ராதிகள்' இத்யாதி. அவர்கள் வழி போயிற்றிலன் - அவர்கள்சொன்னபடி செய்திலன். த்விதீயார்த்தம் - 'மஹாபலிமிடுக்காலே' இத்யாதி. ஶப்தார்த்தம் - 'இப்படி' இத்யாதி. கடிநமான பூமியென்று மூன்றாம்அர்த்தம் - 'வடிவிணை' இத்யாதி. வடிவுக்கு ஒப்பின்றிக்கே யிருக்கிற பத்மோத்பவையான பெரியபிராட்டியாரும்,மற்றையவளானபூமிப்பிராட்டியும்பிடிக்கும் ம்ருதுவான திருவடிகளையென்று பாசுரார்த்தம்.உக்தம் அர்த்தத்ரயம் வ்யுத்க்ரமேண தர்ஶயதி, 'ஸம்ஸாரிகளுடைய' இத்யாதி வாக்யத்ரயேண; இந்தமூன்றுவாக்யமும்-திருத்துவாக்யம். 'எம்' என்றதுக்கு ஹாவம் -'அபஹ்ருத' இத்யாதி. 'நின்பன்மாமாயப்பல்பிறவியிற் படிகின்றயான்' இத்யந்தஸ்ய ஹாவமாஹ - 'மமமாயா' இத்யாதி, கீதாஸு ஸப்தமே. பூர்வமேவ லிகிதம். கார்யகதமான தேவாதிநாநாத்வத்தை - தேவாதிகார்யகதமான நாநாத்வத்தை. மாயபடியாக வுண்டான பிறவியென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - 'ப்ரக்ருதிஸம்பந்த' இத்யாதி. 'மா' என்றது - 'துரத்யயா' என்றபடி.

னில்,—கார்யகதமான தேவாதி நாநாத்வத்தைக் காரணத்தே யேறிட்டுச் சொல்லுகிறதாதல்; அன்றிக்கே, குணத்ரயங்களுக்கு ஆஸ்ரயமாயிருக்கையாலே குணபேதங்களையிட்டுப் பலவாகச்சொல்லுதல். [பல்பிறவியில்]-ப்ரக்ருதிஸம்பந்தநிபந்தநமாகவிறே அநேகஜந்மங்கள்தான் உண்டாகிறது. அவற்றிலே [படிகின்ற]-தறைகாணாதே அவகாஹிக்கிற. 'விழுகின்ற' என்னாதே, 'படிகின்ற' என்கிறது - இவ்வநர்த்தத்திலே வெறுப்பின்றிக்கே பொருந்தியிருக்கை. வர்த்தமாந நிர்த்தேஸத்தால் இன்னம் தறைகண்டதில்லை யென்கை. [யான்] - ஸம்ஸாரபாந்தனான நான். [தொன்மா இத்யாதி] - இச்சேதநனுள்ளவன்றே உண்டாய், அநுபவித்தாலும் நசியாததாய் ஈஸ்வரன் போக்குமன்றும் ஒருநிலைநின்று போக்கவேண்டும்படி ப்ரபலமாய், ஒன்றோடொன்று அநுபந்தித்துத் தான் குவாலாயிருக்கிற பாபத்தை வாஸனையோடே போக்கி. தொடர்என்று - விலங்கு. [நின்மாதாள்சேர்ந்து]-பரமப்ராப்யமாய் நிரதிஸயபோக்யமாயிருக்கிற திருவடிகளைக் கிட்டி, [நிற்பது] - பறக்கிறதொன்றிலே பாரம் வைத்தாற்போலே யிருப்பதொன்றிறே, நித்யஸம்ஸாரிகளுக்கு பகவத்ஸமாஸ்ரயணம். "அதலோபயங்கதோபவதி" (அதலோபயங்கதோபவதி) என்னக்கடவதிறே. [நிற்பதென்ஞான்றுகொலோ]-அது என்றாகவற்றோ? "அபீதாநீம் ஸகாலஸ்ஸ்யாத்" (அபீதாநீம் ஸகாலஸ்ஸ்யாத்) என்னுமாபோலே. 'இந்நாள்' என்று ஓரவதி பெற்றதாகில், இன்று பெற்றத்தோடொக்குமென்றுஞ் சொல்லுவர்கள். (உ)

---

வர்த்தமாநார்த்தம் -'தறைகாணாதே'இத்யாதி. 'தறைகாணாதே' என்றதின் விவரணம் - 'வர்த்தமாந'இத்யாதி. ஸம்ஸாரபாந்தன் - ஸம்ஸாரமார்க்கசரன். ஸம்ஸாரபாந்த னென்றது - "அநேகஜந்மஸாஹஸ்ரீம் ஸம்ஸாரபதவீம் வ்ரஜந்" இத்யாரப்ய, "தஸ்மாஸம்ஸாரபாந்தஸ்ய யாதிஸோஹம் ப்ரஸூஃ" இத்யந்தம் ஆறும் அம்ஸத்தில் கேஸித்வஜோக்த வசநத்தைப் பற்ற. 'தொடர்' என்று - ஒன்றோடொன்று அநுபந்தித்திருக்கிற இதி ப்ராதமிகார்த்தஃ. பஹுவசநார்த்தம் - 'தான்குவாலாயிருக்கிற' என்று. இரண்டாமர்த்தம் - 'தொடர்'இத்யாதி; வல்வினையாகிற விலங்கென்றபடி. 'நின்' என்றதுக்கு அர்த்தம்-'பரமப்ராப்யமாய்' என்றது; பரமப்ராப்தமா யென்றபடி. 'மா' என்றதுக்கு அர்த்தம் - 'நிரதிசயபோக்யமாய்'என்று. நித்யஞன சேதநனுக்கு நிலையாவதேது? என்ன - 'பறக்கிறது'இத்யாதி. பறக்கிறது - எச்சிலிலை. உக்தார்த்தே ப்ரமாணம்- 'அத' இத்யாதி. எந்நாளாகவற்றோ?என்றது - இன்றாகவற்றோ வென்றதாய், அப்படிசொன்னபேருண்டோ?என்ன, 'அபீதாநீம்'இத்யாதி. அயோத்யாகாண்டே வநப்ரயாணோத்யுக்தம் ராமம்ப்ரதி கௌஸல்யா, "அபீதாநீம் ஸகாலஸ்ஸ்யாத் வநாத்ப்ரத்யாகதம் புநஃ । யத்த்வாம் புத்ரக பஶ்யேயம் ஜடாமண்டலதாரிணம்" ஹேபுத்ரக, ஜடாமண்டலதாரிணம் வநாத் புநஃ ப்ரத்யாகதம் த்வாம் யஸ்மாத்காலாத் பஶ்யேயம், ஸகாலஃ இதாநீம் ஸ்யாதபீத்யந்வயஃ. 'எந்நாளாகவற்றோ'? என்றதுக்கு - ப்ரஸ்நபரமாக்கி அர்த்தாந்தரம்-'இந்நாளென்று' இத்யாதி. அவன் ஒருநா ளிட்டுக்கொடுத்தால் பெற்றதாகக்கொண்டு தரித்திருக்கலா மென்றபடி. 'நின்பன்மாமாயம்' இத்யாதி - நின் - உன்னுடையதாய், உனக்குலீலோபகரணமாய், குணபேதத்தாலும் தேவாதிகார்ய பேதத்தாலும் பலவாய், மா - துரத்யயையான, மாயம் - ப்ரக்ருதியடியான தேவாத்யநேகவிதஜந்மங்களிலே பொருந்திவர்த்திக்கிற நான், தொல் - அநாதியாய், மா - அபரிச்சேத்யமாய், வல் - விடுவிக்க அரிதாம்படி ப்ரபலமான, வினைத்தொடர்களை - பாவத்தொடர்ச்சிகளை யென்று சப்தார்த்தம். 'ஸூக்ராதிகள் விலக்கச்செய்தே' என்கிறவிடத்திலே - "இதி ஸம்ஸ்தூயமாநஸ்து ஸுக்ராத்யைர் விநாநடிவ" இத்யாதி, "அதலோபயம்பேதே விகல்பே ச தபஸ்ஸ்மரணே । ஸதிஸ்மிந்நேவசாபி ப்ரணாமே நிஸ்சிதே ஹரௌ" என்ற நாரஸிம்ஹபுராணத்தில் ஸூக்ரவசநம் அநுஸந்தேயம். க்ரமேண அந்வயஃ. (உ)

## மூன்றும் பாட்டு.

கொல்லாமாக்கோல் கொலைசெய்து பாரதப்போர்
எல்லாச்சேனையும் இருநிலத்துஅவித்தஎந்தாய்
பொல்லாவாக்கையின் புணர்வினையறுக்கலறு
சொல்லாய் யான்உன்னைச் சார்வதோர்சூழ்ச்சியே.

**ஆ.**—(கொல்லா.) இப்படி ஸ்ரீவாமநனாய் வந்து புகுந்தருளின அதுவும் எனக்குக்கார்யகரமன்றியே யொழிந்தவாறே, பின்னையும் என்பக்கலுள்ள அபிநிவேசத்தாலே ஸ்ரீவஸுதேவர் திருமகனாய் வந்து பிறந்தருளி, ஸர்வஸீகரமாய் ப்ரதிஸமயாஸ்சர்யமான திவ்யசேஷ்டிதங்களைப் பண்ணியருளாநின்றுகொண்டு ஸர்வஸுலபனாய் நின்றருளின அன்றும் உன்திருவடிகளைச் சேரப்பெற்றிலேன்; இப்படி அநர்த்தகரமாய் உன்னாலல்லது அறுக்கமுடியாதிருக்கிற இந்தப்ரக்ருதிஸம்பந்தத்தை நீயே அறுத்து நான் உன்னைச் சேருவதொரு விரகு பார்த்தருளாய் என்கிறார்.

**ஒ.**—மூன்றும்பாட்டில், ஸ்ரீவாமநனை அக்காலம் தப்பினரையும் விஷயீகரிக்கைக்காக க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம் பண்ணியருள, அத்தையும் தப்பின நான் உன்னைப் பெறும் விரகு நீயே பார்த்தருளாய் என்கிறார்

[கொல்லா என்று தொடங்கி.] - என்னை விஷயீகரிக்கைக்கென்று வந்து திருவவதாரம் பண்ணியருளி அஹிம்ஸாஸாதநமான உளவுகோலைக்கொண்டு பாரதஸமரத்திலே சேனைகளை அடையக் கொன்று தறைப்படுத்தினவனே! [பொல்லாவாக்கை என்று தொடங்கி] - உன்பக்கல் நின்றும் அகற்றக்கடவதான ப்ரக்ருதிஸம்பந்தம் என்னால் அறுக்க முடியாது.

**ப.**—அநந்தரம், ஆஸ்ரிதவிரோதிநிரஸநசீலனான உன்னை நான் கிட்டுகைக்கு ஒரு விரகு அருளிச்செய்யவேணும் என்கிறார்.

கொல்லா - கொல்லுகைக்குக் கருவியன்றியே, மா - குதிரையை நடத்துவதான, கோல் - முட்கோல் கருவியாக, (''[illegible] நிஹதா:'' என்று ஸங்கல்பமாத்ரத்தாலே), கொலை செய்து - கொலையைச் செய்து, பாரதப்போர் - பாரதயுத்தத்திலே, எல்லாச்சேனையும் - (மருந்து ஸேனையோடு பாண்டவஸேனையோடு வாசியற பூபாரமான) ஸமஸ்தஸேனையையும், இருநிலத்து - (தர்மக்ஷேத்ரமான) பெரியபூமியிலே, அவித்த - நசிப்பித்த, எந்தாய் - என்னுடைய ஸ்வாமியே! பொல்லா - அநர்த்தஹேதுவான, ஆக்கையின் - சரீரத்தோடேஉண்டான, புணர்வினை - ஸம்பந்தத்தை, அறுக்கல் - அறுக்க உத்யோகித்தாலும், அறு - (என்னால்) அறுக்கலாம்படியல்ல; யான் - (இதிலே அகப்பட்ட) நான், உன்னை - (விரோதியைபழித்துக்கொடுக்கவல்ல) உன்னை, சார்வது - கிட்டலாம்படி, ஓர் சூழ்ச்சி - அத்விதீயமாயிருப்பதொரு நல்விரகு, சொல்லாய் - (அர்ஜுநனுக்குச் சொன்னாற்போலே) சொல்லவேணும்.

**இ.**—மூன்றும்பாட்டில், ஸ்ரீவாமநனைகாலத்தில் தப்பினரையும் விஷயீகரிக்க க்ருஷ்ணனாய்வந்து அவதரிக்க அத்தையும் தப்பினேன் என்கிறார்.

[கொல்லா மா இத்யாதி] - ஹிம்ஸாஸாதநமன்றிக்கே குதிரையை நடத்தக்கடவதான முட்கோலாலே கொலையை விளைத்து. ஆஸ்ரிதவிஷயத்தில் வந்தால் எடுத்ததே ஆயுதமாயிருக்கை. 'ஆயுதமெடுக்கவொண்ணாது' என்றார்கள். அவர்கள் இசைந்ததொன்றையே ஆயுதமாகக்

*கொண்டு உழக்கிப் போகட்டான். "பார்மிகுத்தபார முன்னொழிச்சுவா னருச்சுனன், தேர்மிகுத்து" என்னக்கடவதிறே. [பாரதப்போர்]-பாரதஸமரத்திலே. [எல்லாச் சேனையும்] - இரண்டு தலையிலும் அஸுராவேஶத்தாலே பூபாரமானாரெல்லாரையும். [இருநிலத்து] - "தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே" என்கிறபடியே அவர்கள்பக்கல் நன்மையில்லையேயாகிலும் அங்கேபட்டார்க்கு வீரஸ்வர்க்கம் கிட்டுந் தேஶம். [அவித்த]-பீஷ்மாதிகள் காட்டுத்தீ கிளர்ந்தாற்போலே கிளர்ந்து வர அத்தை அவித்துக்கொண்டு ஒருகாளமேகம் உலாவினாற்போலேயாயிற்று ஸாரத்ய வேஷத்தோடே தேரைக்கொண்டு உலாவினபடி. [எந்தாய்] - பாண்டவர்களுக்கு உதவினதும் தமக்கென்று இருக்கிறார். [பொல்லா ஆக்கை] - துர்யோதநன் அளவன்று, உடம்பின் ப்ராதிகூல்யம்; அவன் ப்ரதிகூலனாய்த் தோற்றினான்; இது அநுகூலம்போலே யிருந்தாயிற்று, ப்ராதிகூல்யம் பண்ணுவது. எல்லா அநர்த்தமும் பண்ணினாலும் பரிணதரானார் 'பொல்லாதாகச் செய்தாய்' என்னும் இத்தனையிறே. "ஸதவக்ஸ்ராவிததிரோயாதகாரீ" இத்யாதி. [புணர்வினை] - ஶரீரஸம்பந்தத்துக்கு அடியான கர்மமென்னுதல், ஶரீரஸம்பந்தந்தன்னை என்னுதல். [அறுக்கலுறு] - அறுக்க என்றால் போகாது; ராவணஶிரஸ்ஸைப்போலே முளையாநிற்கும் என்கை. [சொல்லாய்]- தன்னாற் பரிஹாரமில்லாதவன்று அர்ஜுநனுக்கு பயம் பிறந்த அன்று "ஶோசுவ:" என்றாற்போலே எனக்கும் "மாஶுச:" என்னாய். [யான் இத்யாதி] - சிறையிலே கிடப்பாரைப்போலே ப்ரக்ருதியில் கிடக்கிற நான் ஒரு தேஶவிஶேஷத்திலே நித்யஸூரிகள் அநுபவிக்கும் உன்னைக் கிட்டலாவதொரு விரகு சொல்லவேணும். நான் கிட்டவும் வேணும்; நான் அறியில் இருப்பன்; நான் அறியாதபடி சூழ்ச்சியாகவும் வேணும்; இது இன்ன நாளென்று சொல்லவும் வேணும் என்கிறார்.*

ஈடு.—மூன்றாம்பாட்டு. 'வாமநாவதாரம் முற்காலத்திலே யாகையாலும், நீர் பிற்பாடராகையாலும் இழந்து அங்குக் கிட்டப்பெற்றிலீராகில், ஒருத்தியுடைய மங்களஸூத்ரத்துக்காகப் பாண்டவர்களுக்குச் சோலிற்றுச்செய்து திரிந்தோமே; அங்கே வந்து கிட்டமாட்டிற்றிலீரோ?' என்ன,—'அங்குந் தப்பினேன்' என்கிறார்.

[கொல்லா] - துர்யோதநனும் அர்ஜுநனுமாக க்ருஷ்ணன் பள்ளிகொண்டருளாநிற்கச் செய்தே படைத்துணை வேண்டி வந்து, துர்யோதநன் திருமுடிப்பக்கத்திலே யிருந்தான்; அர்ஜுநன் திருவடிகளின் பக்கத்திலே யிருந்தான்; பள்ளியுணர்ந்தருளி, 'ராஜாக்கள் போந்ததென்?' என்ன, துர்யோதநன் 'நான் முற்படவந்தேன்' என்ன, "பவாநபிகத: பூர்வமத்ர மே நாஸ்தி ஸம்ஶய:" (பவாநபிகத:பூர்வமத்ரமேநாஸ்திஸம்ஶய:)என்று 'நீர் முற்பட வந்ததுக்குக் குறையில்லை; நங்கண் முற்படப் பட்டது இவன்பக்கலிலே' என்று அவனுக்காகத் தான் சில வழக்குச் சொல்லி, 'உங்களுக்கு வேண்டுவது என்?' என்ன, 'படைத்துணை வேண்டிவந்தோம்' என்ன, 'ஆகில், நாராயண கோபாலர்களை ஒருவன் கொள்ளுவது, என்னை ஒருவன் கொள்ளுவது' என்ன, அசேதநக்ரி

---

*மூன்றாம் பாட்டு - 'கொல்லா' இத்யாதி. 'எல்லாச்சேனையு மிருநிலத்தவித்த வெந்தாய்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-'வாமநாவதாரம்' இத்யாதி. முற்காலத்திலே யென்றது - 'அளந்த' என்கிற பூதநிர்த்தேச தாத்பர்யம்.*

*கொல்லா - கொலைக்குஸாதநமன்றிக்கே யிருக்கிற, மாக்கோல் - குதிரையை நடத்துகிற கோலாலே, கொலைசெய்து - கொலையைச்செய்து. கொலை - சொல்லுகை; முடிக்கை யென்றபடி. திவ்யாயுதங்களிருக்க, மாக்கோலாலே கொலைசெய்வானேன்? என்ன, 'துர்யோதநனும்' இத்யாதி. 'நங்கண் முற்படப் பட்டது இவன் பக்கலிலே' என்றது - "பவாநபிகத: பூர்வம் அத்ர மே நாஸ்தி ஸம்ஶய: । மயா து த்ருஷ்ட: ப்ரதமம் குந்தீபுத்ரோ தநஞ்ஜய:" என்றத்தைப்பற்ற. படைத்துணை-யுத்தஸஹாயம். அசேதந ஶப்த*

யாகலாபங்களைப் பற்றுவாரைப் போலே துர்யோதநன் அவர்களைக் கொண்டுபோக, பீஷ்மாதிகள் கேட்டு, 'தப்புச் செய்தாய்; இனி க்ருஷ்ணன் ஆயுதமெடாதொழிவானாக வேண்டிக் கொண்டு போராய்' என்ன, அவனும் வந்து 'நீ ஆயுதம் எடாதொழியவேணும்' என்ன, 'அப்படியேயாகிறது' என்று சொல்லிவிட்டு, கோலுக்குப் பரிகரமன்றிக்கே குதிரையை நடத்துகிற கோலைக் கொண்டு முடித்துப் போகட்டான். [பாரதப்போர்] - பாரதஸமரத்திலே. [எல்லாச்சேனையும்] - துர்வர்க்கமடையத் திரண்டதிறே உபயஸேனையிலும். இங்கே நாலைந்துபேரும் அங்கே ஒன்றிரண்டுபேரும் ஒழிய முடித்துப் போகட்டானாயிற்று. [இருநிலத்து] - அவர்கள்பக்கல் நன்மையில்லையேயாகிலும், அங்கே பட்டார்க்கு வீரஸ்வர்க்கங் கிட்டுந் தேசத்திலே. [அவித்த] - பீஷ்மாதிகள் காட்டுத்தீ கிளர்ந்தாற்போலே வர, காளமேகம் வர்ஷிக்குமாபோலே அவித்தான். *'மழைகொலோ வருகின்றதென்'றிறே அவன் வரத்துத்தான் இருப்பது. [எந்தாய்] - பாண்டவர்களுக்கு அன்று உதவிற்றும் தமக்கென்று இருக்கிறார். [பொல்லாவாக்கை] - நீ யறியச்செய்த துர்யோதநாதிகளளவல்லகிடாய் இதின்தண்மை; அநுகூலம் போலேயிருந்து பாதகமாமிறே இது. தன்பக்கலிலே போக்யதாபுத்தியைப் பிறப்பித்து ஈஶ்வரனுடைய போக்யதையைத் திரஸ்கரிப்பிக்கும். ஶிஷ்டர்கள், ஒருவனுக்கு அநேகதோஷ முண்டானால் 'அவன் தண்ணியன்' என்று விடுமித்தனையிறே; அப்படியே இவர் இதின் தன்மைகளை யெல்லாம் திரளநினைத்து, 'பொல்லாவாக்கை' என்கிறார். சரீரத்துக்கடியாய் ஒன்றோடொன்று பிணைந்திருக்கிற பாபங்களான வை. 'புணர்வினை' என்று - சரீரஸம்பந்தந்தன்னை யென்னுதல். [அறுக்கலுறு] - ராவணன் தலைபோலே முளையாநிற்கும். [சொல்லாய்] - இத்தைக்கழித்து நான் உன்னைக் கிட்டுமதொரு விரகு அருளிச்செய்யவேணும். நான் அறியில் தப்புவன்: நான் அறியாதபடி விரகுபார்க்கவேணும்; அதுதன்னை எனக்குச் சொல்லவும் வேணும் என்கிறார். [யான்] - சிறையிலே கிடப்பாரைப்போலே ப்ரக்ருதியோடே பிணையுண்டிருக்கிற நான். [உன்னை] - ஒரு தேசவிசேஷத்திலே நித்யஸூரிகள் அநுபவிக்கும் உன்னை. [சார்வதோர் சூழ்ச்சியே] - சேருவதொரு ப்ரகாரஞ் சொல்லாய். அதாவது- "ஸவ பூவாவெ ஹொ ஜொக்ஷயிஷ்ஹாஜி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்று அருளிச் செய்கையிறே. (௯)

த்தாலே - பலப்ரதாநாஶக்தியும் க்ரியாஶப்தத்தாலே - த்ரிக்ஷணாவஸ்தாயித்வமும் விவக்ஷிதம். 'பீஷ்மாதிகள் கேட்டு' இத்யாதி - 'ந்ருஹஸஶஸ்ர ஹஜைக தஃ' என்றது கேட்டிருக்கச்செய்தேயும், பீஷ்மாதிகள்சொன்ன பின்பு துர்யோதநன் மீளவும்வந்து 'ஆயுதமெடாதொழியவேணும்' என்று வேண்டிக்கொண்டது பாரதத்தில் இல்லாவிட்டாலும், இவர்அருளிச்செய்கையாலே கல்பபேதங்களிலேயாதல், புராணாந்தரங்களிலேயாதல் இப்படியு முண்டென்று கண்டுகொள்வது. துர்யோதநனேனைமாத்ர மொழிய, உபயஸேனையையும் அழிக்கிறதென்? என்ன, 'துர்வர்க்கம்' இத்யாதி. 'உபயகோடியிலும் எல்லாச்சேனையையும் கொன்றானோ?' என்ன, 'இங்கே நாலைந்து' இத்யாதி. 'இங்கே நாலைந்துபேர்' என்றது - தர்மபுத்ராதிகளை. 'அங்கே ஒன்றிரண்டுபேர்' என்றது- அஶ்வத்தாம க்ருபாசார்ய க்ருதவர்மாக்களை. இருமை - பெருமையாய், மஹநீயதையைச் சொல்லுகிறது. இருநிலத்து - புண்யபூமியிலே. வீரஸ்வர்க்கங் கிட்டுந் தேசமென்றது - 'யஜ்ஞக்ஷேத்ரம் குருக்ஷேத்ரம்' என்றத்தைப் பற்ற. 'அடர்த்த' என்னாதே, 'அவித்த' என்றதுக்கு பாவம்-'பீஷ்மாதிகள்' இத்யாதி. அவன்தான் அப்படி மழையோ? என்ன, 'மழைகொலோ' இத்யாதி. பெரியாழ்வார்திருமொழி. மேகமோ வருகிறது? இத்யர்த்தஃ. எந்தாய் தாத்பர்யம் - 'பாண்டவர்கள்' இத்யாதி. 'இதின்தண்மை யேது?' என்ன, 'அநுகூலம்போலே' இத்யாதி. ஏதத்விவரணம் - 'தன்பக்கலிலே' இத்யாதி. இந்தவாக்யம் - 'ஹஹவக்ஷஸ ஷெ திஜாயா நக்ஷீ' இத்யாதியைப் பற்ற. 'பொல்லாவாக்கை' என்று ஸாமாந்யேந சொன்னால், ஏதாத்ருஶ அநேகதோஷங்கள் தோன்றுமோ? என்ன, 'ஶிஷ்டர்கள்' இத்யாதி; விஶிஷ்ய சொல்லுவதில்லையிறே யென்று கருத்து. ஶப்தார்த்தம் - 'சரீரத்துக்கு' இத்யாதி. விரகு என்னாதே, 'சூழ்ச்சி' என்றதுக்கு பாவம் - 'நானறியில்' இத்யாதி. சூழ்ச்சியாவது-அறியாதபடி செய்கை. 'விரகு' என்றதின் பலிதம் - 'ப்ரகாரம்' என்றது; ஸர்வபாபேப்ய இத்யாதிக்கு- பூர்வார்த்தத்திலே நோக்கு. அறுக்கல் - அறுக்கப்பார்க்கில். அறா-அறுக்கலாம்படியிராது. க்ரமேண அந்வயஃ. (௯)

* பெரியாழ்வார் திருமொழி-௩-௪-௧.

## நான்காம்பாட்டு.

சூழ்ச்சிஞானச்சுடரொளியாகி என்றும்
* ஏழ்ச்சிகேடின்றி எங்கணும்நிறைந்தஎந்தாய் !
தாழ்ச்சிமற்றெங்கும் தவிர்ந்து நின்தாளிணைக்கீழ்
வாழ்ச்சி யான்சேரும்வகை அருளாய்வந்தே.

**ஆ.**—(சூழ்ச்சி.) ஸர்வாத்மாக்களையும் உன்கருத்தில் வர்த்திப்பிக்க வற்றாய் நித்ய ஸித்தமாய் ஸர்வகதமாயிருந்த உன்னுடைய திவ்யஜ்ஞாநமும் எனக்குக் கார்யகரமன்றியே யொழிந்தது; இப்படி உன்னுடைய ஜகத்ஸ்ருஷ்டி திவ்யாவதாரசேஷ்டித திவ்யஜ்ஞாநாதிகளை எனக்குக் கார்யகரமாகாமே ப்ரதிபந்திக்கிற ஸமஸ்த ப்ராக்ருத விஷயப்ராவண்யத்தையுந் தவிர்ந்து, நின் தாளிணைக்கீழ் வாழ்ச்சி யான்சேரும்படி சக்ரவர்த்திதிருமகனும் ஸ்ரீவஸுதேவர்திருமகனும் வந்து பிறந்தருளினாற்போல இன்னமும் வந்து பிறந்தருளியே செய்தருளவேணும் என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், எல்லாரையும் ரக்ஷிக்கைக்காக நீ ஸர்வகதனாயிருக்கிற இருப்பும் எனக்குக் கார்யகரமாயிற்றதில்லை. நான் உன்னைப்பெறும் வழி நீயே பார்த்தருளவேணும் என்கிறார்

[சூழ்ச்சி என்று தொடங்கி.]-ஸமஸ்தசேதநரையும் உன்பக்கலிலே சூழ்த்துக்கொள்ள வற்றான அத்யந்தவிலக்ஷண ஜ்ஞாநத்தையுடையையாய், வ்ருத்தி நாசங்க ளின்றிக்கே என்றும் எங்கும் என்னை அடிமை கொள்ளுகைக்காக வ்யாபித்தவனே ! [தாழ்ச்சி என்று தொடங்கி] - திருவடிகள் ஒழிய பாஹ்யவிஷயங்களில் நசையெல்லாம் அற்று உன் திருவடிகளில் நிரதிசய போக்யமான கைங்கர்யத்தை இன்னும் ஓர் திருவவதாரம் பண்ணியாகிலும் நான் பெறும்படி பண்ணியருளவேணும்.

ப.—அநந்தரம், ரக்ஷணார்த்தமான வ்யாப்தியையுடைய உன்திருவடிகளை நான் கிட்டும் ப்ரகாரம் என்முன்னேவந்து முகந்தோன்றநின்று அருளிச்செய்யவேணும் என்கிறார்.

சூழ்ச்சி - (எல்லாவற்றையுஞ்)சூழ்ந்திருக்கிற, ஞானம் சுடர் - ஜ்ஞாநப்ரபையையுடைத்தான, ஒளி ஆகி - ஸ்வயம்ப்ரகாசஸ்வரூபனாய், என்றும் - ஸர்வகாலத்திலும், ஏழ்ச்சி-விகாஸமும், கேடு - ஸங்கோசமும், இன்றி - இன்றிக்கே, எங்கணும் - ஸர்வப்ரதேசத்திலும், நிறைந்த - பரிபூர்ணமாக வ்யாபித்து, எந்தாய் - (ஊரைவளைந்துஒருவனைப்பிடிக்குமாபோலே) என்னையங்கீகரித்த ஸ்வாமியே! மற்று - (உன்னை) ஒழிந்த, எங்கும் - ஸமஸ்தவிஷயங்களிலும், தாழ்ச்சி - கால்தாழ்கை, தவிர்ந்து - தவிர்ந்து, நின் - (ப்ராப்தனான)உன்னுடைய, தாள் - (போக்யமான) திருவடிகள், இணை-இரண்டின், கீழ்-கீழே,வாழ்ச்சி-(பரதந்த்ரனாய்)வாழும் வாழ்க்கையை, யான்-(இதுக்கு முன் அந்வயித்தறியாத) நான், சேரும் - ப்ராபிக்கும், வகை - ப்ரகாரத்தை, வந்து - (அவதார முகத்தாலே என்முன்னே)வந்து நின்று, அருளாய் - அருளிச்செய்யவேணும். வ்யாப்தமான ஸ்வரூபத்தால் போராது என்று கருத்து.

**இ.**—நாலாம்பாட்டில், அவதாரங்களுக்கும் தப்பின வளவேயோ? "ஊஹாபோஹயோமமதி" என்கிறபடியே நினைவுக்கு வாய்த்தலையான நெஞ்சிலே வந்து புகுந்து நல்வழிபோக்குகைக்கு நிற்கிற நிலையும் எனக்குக் கார்யகரமாயிற்றில்லை என்கிறார்.

* 'ஏழ்ச்சிக்கேடின்றி' என்று வழங்குகின்றனர்.

[சூழ்ச்சி இத்யாதி] - எல்லாரையும் சூழ்க்துக்கொள்ளவற்றாய விசததமமான ஜ்ஞாநத்தை யுடையையாய், [என்றும்] - இவன் இல்லாத காலத்திலும். [ஏழ்ச்சி]- எழுச்சி; விகாஸம். [கேடு] - குறைவு; ஸங்கோசம். ஸங்கோச விகாஸரஹிதமான ஜ்ஞாநமென்கை. [எங்கணும்]- எல்லாப்பதார்த்தங்களிலும். கண் - இடம். [நிறைந்த] - ஜாதி, வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலே. [எந்தாய்] - ஒருவனைப்பிடிக்க நினைத்து ஊரைவளையுமாபோலே வ்யாப்தியும் என்னை உத்தேசித்து என்கை. உன்பக்கலிலே அகப்படுத்திக்கொள்ளுகைக்கு விரகு தேடியுணர்ந்து என்னை வ்யாபித்துக்கொண்டு நிற்கச்செய்தேயும் விஷயப்ரவணனாய்த் தப்பினேன் என்கை. [தாழ்ச்சி இத்யாதி] - உன்னை யொழிந்த விஷயங்களில் ப்ராவண்யத்தைத் தவிர்ந்து. நீயன்றிக்கே ஒழிய அமையும், நான் மேல்விழுகைக்கு. [நின்தாள் இத்யாதி] - வகுத்த திருவடிகளில் அநுபவத்தை. 'தாழ்ச்சி' என்னாதே 'வாழ்ச்சி' என்கிறார்; வகுத்த விஷயமுமாய் போக்யமுமாயிருக்கையாலே. "ஊாயாவாஸ ...", "வாஸ...யா" என்னக்கடவதிறே. "ஸவ...ஃவிழ" என்று விஷயாந்தரம் அப்ராப்தமாகையாலே துக்கரூபமென்றிட்டு 'தாழ்ச்சி' என்கிறார். [யான்] - இதுக்கு முன்பு புதியது உண்டறியாத நான். [சேரும் வகை அருளாய்] - சேரும்வகை அருளவேணும். அது செய்யுமிடத்து முகம் தோற்றாத அந்தர்யாமித்வத்தால் ஒண்ணாது; வந்து அவதரித்து உன் குணசேஷ்டிதங்களாலே புறம்புபோகாதபடி பண்ணிச் சேர்த்தருளவேணும்.

ஈடு.—நாலாம்பாட்டு. இப்படி நீர் இருந்தவிடத்தே நாம் வரச்செய்தேயும் இழந்தீராகில், அவதாரங்களைப்போலே ஒருகாலவிசேஷத்திலேயாகாதே எல்லாக்காலத்திலும் அந்தர்யாமித்வேந உகவாதார்பக்கலிலும் விடமாட்டாமையாலே புகுந்துநின்றோமே; அங்கே அநுகூலித்து உம்முடைய அபேக்ஷிதம்பெற்றுப் போகமாட்டிற்றிலீரோ? என்ன, அதுக்கும் தப்பினேன் என்கிறார்.

[சூழ்ச்சி இத்யாதி] - சேதநரைத் தப்பாதபடி அகப்படுத்திக்கொள்ளுகையாலே, வ்யாப்தியை - சூழ்ச்சி யென்கிறது. எங்குமொக்க வ்யாபித்திருப்பதாய் விசததமமாயிருக்கிற ஜ்ஞாநப்ரபையை யுடையையாய். ஜ்ஞாநத்துக்குஆச்ரயமான ஸ்வரூபத்தைச் சொல்லுதல், ஜ்ஞாநத்தைச் சொல்லுதல். ஸ்வரூபவ்யாப்தியும் ஜ்ஞாநவ்யாப்தியும் இரண்டும் சொல்லக்கடவதிறே; இரண்டும் பரார்த்தமாகையாலே. [என்றும் ஏழ்ச்சி கேடின்றி] - எல்லாக்காலத்திலும் ஏழ்ச்சியாதல் கேடாதல் இன்றிக்கே. கர்மமடியாக ஆத்மாவுக்கு வரக்கடவதான ஸங்கோசவிகாஸங்களின்றிக்கேயிருக்கை. ஏழ்ச்சி - எழுச்சி, விகாஸம். கேடு - குறைவு, ஸங்கோசம். [எங்கணும் நிறைந்த] - இப்படி

---

நாலாம்பாட்டு - 'சூழ்ச்சி' இத்யாதி. 'எங்கணும் நிறைந்த வெந்தாய்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'இப்படி' இத்யாதி.

'சூழ்ச்சிஞானச் சுடரொளி' இத்யாதியாலே - ஸ்வரூபத்தையாதல், ஜ்ஞாநத்தையாதல் சொல்லுகையாலே, ஸ்வரூபவ்யாப்தி பக்ஷத்திலே அருளிச்செய்கிறார் - 'சேதநரை' இத்யாதி. ஜ்ஞாநவ்யாப்திபக்ஷத்திலே அருளிச்செய்கிறார்-'எங்குமொக்க' இத்யாதி. சூழ்ச்சி - சூழ்ந்திருக்கிற, சூழ்ச்சி - வலையும், விரகும். 'சுடரொளி' என்கிற வீப்ஸைக்கு அர்த்தம் - 'விசததமம்' என்று. 'சுடரொளி - ஞானமாகி' இத்யந்வய:. அர்த்தத்வயத்துக்கும் ப்ரயோஜநமேது ? என்ன, 'ஸ்வரூப' இத்யாதி. பரார்த்தம் - பரரக்ஷணார்த்தம். ப்ரஸக்தஸ்யஹி ப்ரதிஷேத:, ஸங்கோசாதிகளுக்கு ப்ரஸக்தி யேது ? என்ன, 'கர்மமடியாக' இத்யாதி. கீழ், ஜ்ஞாநசப்தம் - ஜ்ஞாநாஸ்ரயமான ஸ்வரூபத்தைச் சொல்லுகிற பக்ஷத்திலே, 'சூழ்ச்சி' என்று - வ்யாப்தியைச் சொல்லிற்றே யென்ன, அந்தச் சொன்ன வ்யாப்தி ப்ராதேசிகமாகவும் கூடுமென்று, க்ருத்ஸ்நவ்யாப்தியைச் சொல்லுகிறது இங்கே யென்று விவக்ஷித்து அருளிச் செய்கிறார் - 'இப்படி வ்யாபிப்பது' இத்யாதி. பூர்வோக்த வ்யாப்த்யநுபாஷணமாது. 'சூழ்ச்சிஞானம்' என்ற விடத்திலே - ஜ்ஞாநவ்யாப்தியைச் சொல்லுகிறபோது, 'எங்கணும் நிறைந்த' என்றது - ஸ்வரூபவ்யாப்தி பரமென்று கண்டுகொள்வது. இதுவும் ஒரு பக்ஷம். 'நிறைந்த' என்றது

வ்யாபிப்பது ஒரு ப்ரதேசத்திலேயோ வென்னில், — [எங்கணும்] - கண்ணேன்று - இடமாய், * " இடந்திகழ்பொருள்தோறும் கரந்து " என்கிறபடியே, எல்லாவிடத்திலு முண்டான எல்லாவற்றிலும், ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலே பூர்ணமாக வ்யாபித்திருக்கும். [எந்தாய்]-ஒருவனைப் பிடிக்க நினைத்து ஊரை வளைவாரைப் போலே, வ்யாப்தியும் தமக்காக வென்று இருக்கிறார். உன்பக்கலிலே அகப்படுத்திக்கொள்ள விரகு தேடி யுணர்ந்து என்னை வ்யாபித்துக்கொண்டு நிற்கச்செய்தேயும், விஷயப்ரவணனாய்த் தப்பினேன் என்கை. [தாழ்ச்சி மற்றெங்குந்தவிர்ந்து] - உன்னை யொழிந்த மற்றுள்ள விடத்தில் வரக்கடவதான தாழ்ச்சியையும் தவிர்ந்து. †"யாதானும்பற்றி"என்கிறபடியே, நீயன்றிக்கே யொழிய அமையுமே, நான் மேல்விழுகைக்கு. [நின்தாளிணைக்கீழ் வாழ்ச்சி] - வகுத்ததாய் நிரதிசயபோக்யமா யிருக்கிற உன் திருவடிகளிலுண்டான கைங்கர்யத்தை, இதுக்கு முன் புதியது உண்டறியாத நான் கிட்டுவதோரு ப்ரகாரம் அருளிச் செய்யவேணும். இரண்டிடத்திலும் ப்ராவண்யம் ஒத்திருக்க, தாழ்ச்சி யென்றும் வாழ்ச்சி யென்றும் சொல்லுகிறார்—"ஸர்வம் பரவஶம் து:கம்" (ஸர்வம்பரவஶம்து:கம்) என்றும், "ஸேவாஶ்வவ்ருத்தி:" (ஸேவாஶ்வவ்ருத்தி:) என்றும் அவற்றைச் சொல்லாநின்றதிறே ; "சாயாவாஸத்த்வமநுகச்சேத்" (சாயாவாஸத்த்வமநுகச்சேத்) என்று இத்தை விதியா நின்றது; அவற்றைப்பற்ற. இவ்வாழ்ச்சிக்கு இட்டுப்பிறந்துவைத்து அத்தை யிழந்திருக்கிற நான், கிட்டுவதோரு ப்ரகாரம் அருளிச்செய்ய வேணும். [வந்தே] - அதுதானும் முகம் தோற்றுதபடி நின்றருளவொண்ணாது; என் கண்ணுக்கு இலக்காம்படி ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள்போலே எனக்காக ஓரவதாரத்தைப் பண்ணியே யாகிலும் வந்தருளவேணும். (௪)

---

க்கு அர்த்தம் - 'ஜாதி வ்யக்திதோறும்' இத்யாதி. இத்தால் தாத்பர்யம் - 'உன்பக்கலிலே' இத்யாதி. 'சூழ்ச்சி ஞானம்' இத்யாதி - ஸ்வரூபபரமானபோது, 'என்று மேழ்ச்சி கேடின்றி - சூழ்ச்சி - சுடரொளி - ஞானமாகி - எங்கணும் நிறைந்த வெந்தாய்' என்று அந்வயித்து - ஸர்வகாலத்திலும் ஸங்கோசவிகாஸங்களின்றியிலே யிருப்பதாய், சேதநரைத் தப்பாதபடி விரகாலே யகப்படுத்திக்கொள்ளுமதாய், மிக்கதேஜஸ்ஸை யுடைத்தான ஜ்ஞாநஸ்வரூபத்தை யுடையனாய், அந்தஸ்வரூபத்தாலே எங்கு முண்டான எல்லா வஸ்துக்களிலும் வ்யாபித்த எந்தா யென்று சப்தார்த்தம். ஜ்ஞாந பரமானபோது, கீழ்ச்சொன்னபடியே அந்வயித்து, ஸர்வகாலத்திலும் கர்மமடியாக ஆத்மாவினுடைய தர்மபூதஜ்ஞாநத்துக்கு வரக்கடவதான ஸங்கோசவிகாஸங்களின்றிக்கே யிருப்பதாய், எங்குமொக்க வ்யாபித்திருப்பதாய், விஶததமமா யிருக்கிற ஜ்ஞாநத்தை யுடையனாய, ஜ்ஞாநத்தாலே எங்குமுண்டான எல்லாவஸ்துக்களிலும் வ்யாபித்திருக்கிற எந்தா யென்று சப்தார்த்தம். 'மற்றெங்கும் - தாழ்ச்சி தவிர்ந்து' என்று அந்வயித்து அர்த்தம் - 'உன்னை யொழிந்த' இத்யாதி. 'மற்று' என்றதுக்கு ஹார்த்த ஸாவம். 'வகுத்ததாய்' என்றது-'நின்' என்றத்தைப் பற்ற. 'நிரதிசயபோக்யமாய்' என்றது - 'இணை' என்றத்தைப் பற்ற. 'யான்' என்றதுக்கு மேலையும் கூட்டிக்கொண்டு ஸாவம்-'இதுக்கு முன்' இத்யாதி. புதியது உண்டறியாத - ஏகதேசாநுபவமு மறியாத. புதிய துண்கை - ஏகதேசாநுபவம். 'இரண்டிடத்திலும் ப்ராவண்ய மொத்திருக்க' என்றது - இத்திருவாய்மொழியிலோடுகிற விஷயப்ராவண்யாநுஸந்தாநமும், பகவத்ப்ராவண்யமும் ஒத்திருக்க வென்றபடி. 'வாழ்ச்சி என்றும் சொல்லுகிறார் — இதுக்குக் கருத்தென் என்னில்' என்று கூட்டுவது. இதுக்குத் தாத்பர்யம்-'ஸர்வம்' இத்யாதி. அவற்றைப்பற்ற-அந்த ப்ரமாணங்களைப்பற்ற. 'யான்' என்றதுக்குத் தாத்பர்யாந்தரம்-'இவ்வாழ்ச்சிக்கு' இத்யாதி. இட்டுப் பிறந்துவைத்து - யோக்யனாய் வைத்து. 'வந்தே' என்றதுக்கு ஸாவம்-'அதுதானும்' இத்யாதி. "ஸேவாஶ்வவ்ருத்திராக்யாதா தஸ்மாத்தாம் பரிவர்ஜயேத்" இதி மாநவே தர்மஶாஸ்த்ரே. பகவச்சாஸ்த்ரே மூலஸம்ஹிதாயாம், "யதா த்ருணவத் த்யக்த்வா தேஹாவாரோஹணம் சாயாவாஸத்த்வமநுகச்சேத்". க்ரமேண அந்வய:. (௪)

---

* திருவாய்மொழி க-க-க௦ † திருவிருத்தம் - ௬௫

# ஐந்தாம்பாட்டு.

வந்தாய்போலேவந்தும் என்மனத்தினைநீ
சிந்தாமல்செய்யாய் இதுவே இதுவேயிதுவாகில்
கொந்தார்காயாவின் கொழுமலர்த்திருநிறத்த
எந்தாய் யான்உன்னை எங்குவந்தணுகிற்பனே.

**ஆ.** (வந்தாய்.) அப்படி வருகை திருவுள்ளமன்றாகில், ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்தாற்போலேயாகிலும் வந்து என்மனத்தினை நீ சிந்தாமற் செய்கிறிலை. நீ செய்யாதொழிந்தால் நான் என்னுடைய யத்நத்தால் உன்னை வந்து சேருகையென்று ஒருபொருளில்லை; இனி உன்னுடைய அழகைக் காணப்பெறாதே இழந்துபோமித்தனைபாகாதே நான் என்கிறார்.

**ஒ.**—அஞ்சாம்பாட்டில், நீயே வந்து என்னை விஷயீகரித்து தரிப்பியாயாகில் என் ஸாமர்த்யத்தாலே உன்னை ப்ராபிக்கைக்கு உபாயமில்லை. அத்யந்த போக்யமான உன்திருவழகை நான் இழந்தேபோமித்தனையாகாதே என்கிறார்

[வந்தாய் என்று தொடங்கி.] - ராமக்ருஷ்ணாதிகளாய்த் திருவவதாரம் பண்ணினாற் போலே யன்றிக்கே ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்தாற்போலேயாகிலும் வந்து பரமதயாளுவான நீ என் மநஸ்ஸு ஶிதிலமாகாதபடி பண்ணுகிறிலை. என்னை அங்கீகரியாமையாகிற இதுவே உருவச் செல்லுமாகில். [கொந்தார் என்று தொடங்கி] - பூங்கொத்துக்களாலே நிறைந்திருந்துள்ள காயாவின் கொழுவிய பூப்போலே யிருக்கிற திருநிறத்தைக் காட்டி என்னை அடிமை கொண்டவனே

**ப.**—அநந்தரம், விலக்ஷணவிக்ரஹயுக்தனை நீ வந்து என்னெஞ்சை தரிப்பியாயாகில் உன் அழகை நான் இழக்குமித்தனையிறே என்கிறார்.

வந்தாய்போலே - (ப்ரஹ்லாத கஜேந்த்ரர்களுக்கு) வந்தாற்போலே, வந்தும் - (ஒரு ப்ராதுர்ப்பாவம் பண்ணி) வந்தாகிலும், என் - (உன்னைக்கிட்ட ஆசைப்பட்ட) என்னுடைய, மனத்தினை - நெஞ்சை, நீ - (ஆபத்திலேயுதவின) நீ, சிந்தாமல் - (விரோத்யநுஸந்தாநத்தாலே)ஶிதிலமாகாதபடி, செய்யாய் - பண்ணுகிறிலை; இதுவே - (உதவாமையாகிற) இதுவே, இது - (ஸ்வபாவமென்னும்) இதுவாய், ஆகில் - நடக்குமாகில், கொந்து - கொத்துக்களாலே, ஆர் - நிறைந்த, காயாவின் - காயாவினுடைய, கொழு மலர் - செவ்விப்பூவின், திருநிறத்த - நிறத்தை யுடையனாய், எந்தாய் - (அவ்வழகைக்காட்டி என்னையடிமைகொண்ட) ஸ்வாமியே! யான் - (உன்னழகுழியச்செல்லாத)நான், உன்னை - (இவ்வழகைக்காட்டின)உன்னை, எங்கு - எங்கே, வந்து - வந்து, அணுகிற்பன் - கிட்டவல்லேனாவது?

**இ.**—அஞ்சாம்பாட்டில், நீ முகந்தோற்ற வந்து அவதரித்து தரிப்பியாயாகில் உன் அழகை நான் இழந்தேபோமித்தனையோ? என்கிறார்.

[வந்தாய்போலே வந்தும்] - நெடுநாள் இங்கே கால்தாழவேண்டும் ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள் போலன்றிக்கே ஆனைக்கு உதவினாற்போலேயாதல், தூணிலே தோற்றினாற்போலே யாதல் வந்தாகிலும். [என் மனத்தினை] - "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்" என்னும் மநஸ்ஸை. [நீ] -உருவழிந்தவற்றையும் உண்டாக்கவல்ல நீ. [சிந்தாமல் செய்யாய்]-நீராய் மங்கிப் போகாதபடி பண்ணுகிறிலை. [இதுவே இதுவாகில்] - உதவாதொழிகையே ஸ்வபாவமாய்ச்

செல்லுமாகில். [கொந்தார் இத்யாதி] - நீ உதவாதபோது ஆறியிருக்கலாயோ உன்வடிவு ...கிறது? கொத்துக்களாலே நிறைந்த காயாவினுடைய கொழுவிய பூப்போலேயிருக்கிற விலக்ஷணமான வடிவழகைக் காட்டி என்னை அநந்யார்ஹனுக்கினவனே! உதவாதொழியப் பார்த்த நீ உன் வடிவைக் காட்டிற்று என்? [யான்]- உன்னைக்கிட்டுகைக்குக் கைம்முதலில்லாத நான். [உன்னை] - "தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" என்று நீயே அநுபவிப்பிக்கும் உன்னை. [எங்கு இத்யாதி] - எங்கே கிட்டப் புகுகிறேன்?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. 'நீர் 'வந்தேயருளவேணும்' என்று நின்றீர்; இது நமக்குத் தட்டுப் படும்; ஒருவிசை பதினோராயிரமாண்டு இருந்தோம்; ஒருவிசை நூறுண்டு இருந்தோம்; வருகை நமக்குப் பணியுண்டுகாணும்' என்ன, 'எனக்கும் அவைபோலேசிலநாளிருந்து உபகரித்தருளப்பெறில் அழகியது; அதுசெய்யத் திருவுள்ள மல்லவாகில், ஆனைக்குத்தோற்றினாற்போலேயும் ப்ரஹ்லாதனுக்குத் தோற்றினாற்போலேயும் எனக்கும் ஒருதோற்றரவு தோற்றியே யாகிலும் உதவவேணும்' என்கிறார்.

[வந்தாய்போலே வந்தும்] - வந்து சிலநாள் இருந்தவைபோலன்றிக்கே, வந்தாய்போலே வந்தும். [என்மனத்தினை நீ] - உன்னையொழியத் தரியாதபடியான என்மநஸ்ஸை தன்மையறிந்து தரிப்பிக்கும் நீ; உருவழிந்தவற்றையுண்டாக்கவல்ல நீ. [சிந்தாமல் செய்யாய்] - இது த்ரவீபூதமாய் மங்கிப்போகாதபடி செய்கிறிலை. 'இதுவே இதுவாகில் எங்குவந்தணுகிற்பன்' என்கிறார். [இதுவே இதுவாகில்] - உன்னையொழிய மங்கிப்போகையும் இதுக்கு ஸ்வபாவமாய், இது மங்கக்கொடுத்துப் பார்த்திருக்குமது உனக்கு ஸ்வபாவமாய்விட்டதாகில். [கொந்தார் இத்யாதி]-'சிறியதுக்கு இனியதிடேன்' என்று இப்படி செய்யக்கடவதாக இருந்த நீ இவ்வடிவில் சுவட்டை எனக்கு அறிவித்ததேன்? கொந்தார்ந்து தழைத்திருந்துள்ள காயாவினுடைய கொழுவிய மலர்போலே குளிர்ந்திருந்துள்ள திருநிறத்தைக் காட்டி என்னை யெழுதிக்கொண்டவனே! [யான் இத்யாதி] - உன்னைக் கிட்டுகைக்கு ஒரு கைம்முதலில்லாத நான். இவ்வடிவில் போக்யதையறிந்த நான். பிரியில் தரியாத வடிவுபடைத்திருக்

---

அஞ்சாம்பாட்டு - 'வந்தாய்' இத்யாதி. 'வந்தாய்போலேவந்தும்'என்ற பதத்திலே நோக்காக அவதாரிகை - 'நீர் வந்தேயருளவேணும்' இத்யாதி. தட்டுப்படும் - ப்ரதிபத்தமாம்; ப்ரயாஸப்படு மென்றபடி. ததேவ விவ்ருணோதி - 'ஒருவிசை' இத்யாதி. ஒருவிசை - ஒருகால். பணியுண்டு - கார்யமுண்டு; ப்ரயாஸ ஸாத்ய மென்றபடி. அவைபோலே - ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள்போலே. தோற்றரவு - அவதாரம். தோற்றியே யாகிலும் - பண்ணியேயாகிலும்.

வந்தாய்போலே வந்தும்-ப்ரஹ்லாத கஜேந்த்ராதிகளுக்கு வந்தாற்போலே ஒருப்ராதுர்பாவம் பண்ணி வந்தாகிலும். 'வந்திருந்து' என்னாதே, 'வந்தாய்போலே' என்கையாலே - வந்திருந்தவையை வ்யாவர்த்திக்கிறதாக அருளிச்செய்கிறார்-'வந்துசிலநாள்' இத்யாதி. 'வந்தும்' என்ற சப்தம் - அந்வாசயத்திலே. 'தன்மையறிந்து' என்கிறது - 'என்மனத்தினை-நீ' என்ற ஸமபிவ்யாஹார விசேஷத்தம். விவரணம்-'உருவழிந்த' இத்யாதி. இது-மநஸ்ஸை. சிந்தாமல்செய்யாய் - சிதிலமாகாதபடி செய்கிறிலை. 'இதுவே' என்றதுக்கு அர்த்தம்-'உன்னையொழிய' இத்யாதி. 'இதுவாகில்' என்றதுக்கு அர்த்தம் - 'இது மங்கக்கொடுத்து' இத்யாதி. 'திருநிறத்தை செய' என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - 'சிறியதுக்கு' இத்யாதி. 'என்று' என்ற அநந்தரம் - 'இராமல்' என்று சேஷம். 'சிறியதுக்கு இனியதிடேனென்றிராமல் - எனக்கு அறிவித்ததென்' என்று அந்வயிப்பது. ஸப்தார்த்தம்-'தழைத்திருந்துள்ள' இத்யாதி. கொந்தார்-கொந்தார்ந்து; கொத்துக்களினாலே நிறைந்து. கொழுவிய - ஸ்நிக்தமான. 'யான்' என்றதுக்கு அர்த்தத்வயம்-'உன்னைக்கிட்டுகைக்கு' இத்யாதிவாக்யத்வயேந. அர்த்தஸித்தம் - கைம்முதலில்லாமை. உக்தார்த்தத்வயாநுகுணம் - 'உன்னை' என்றதுக்கும் அர்த்தத்வயம் வ்யுத்க்ரமேணாஹ - 'பிரியில் தரியாத' இத்யாதிநா, 'தஸ்யைஷ' இத்யாதிநாச. தரியாத-தரிக்கவொண்ணாத. ஆக, இந்த இரண்டர்த்தமும் - 'யான்' என்கிற சப்தத்தினுடைய இரண்டர்த்தத்துக்கும் ப்ரதிகோடியா யிருக்கிறது. அதில் முந்தின அர்த்தத்துக்கு இதில் இரண்டாமர்த்தம், அதில் இரண்டாமர்த்தத்துக்கு இதில் முந்தின அர்த்தம். 'என்னஸாதநாநுஷ்டாநத்தைப் பண்ணி' இத்யாதி வாக்யத்வயமும் - க்ரமேண எம்பெருமானார் பூர்வாசார்ய

கிற உன்னை. “[illegible]” (தஸ்யைஷ ஆத்மாவிவ்ருணுதே தநூம்ஸ்வாம்) என்று - நீயே அநுபவிப்பிக்கும் உன்னை என்ன ஸாதநாநுஷ்டாநத்தைப் பண்ணி எங்கே வந்து கிட்டக்கடவேன்? ‘நான் உன்னைக் கிட்டுகை’ என்று ஒரு பொருளுண்டோ?

## ஆறும் பாட்டு.

கிற்பன்கில்லேனென்றிலன் முனநாளால்
அற்பசாரங்களவை சுவைத்தகன்றொழிந்தேன்
பற்பல்லாயிரம்உயிர்செய்தபரமா! நின்
நற்பொற்சோதித்தாள் நணுகுவதெஞ்ஞான்றே?

ஆ.—(கிற்பன்.) இதுக்கு முன்புள்ள காலமெல்லாம், உன்திருவடிகளைச் சேருகைக்கு ஈடாயிருப்பதொரு ஸுக்ருதத்தைச் செய்வோமென்று செய்தல், அதுக்கு விரோதியான துஷ்க்ருதத்தைத் தவிருவோமென்று தவிர்தல் செய்திலேன்; எடுத்தபடி செய்து திரிந்தேன். இப்படி செய்து திரிந்து அதிக்ஷுத்ரமான விஷயரஸத்தை புஜித்து உன் திருவடிகளைச் சேருகைக்கு அர்ஹனன்றிக்கே அகன்றுபோனேனென்று நசைபற்றுப்போய்த் துவளப்புக்கவாறே, பின்னையும் அவனுடைய ஸர்வாத்மநிர்மாணாநுகுண நிரதிசயசக்தியோகத்தை அநுஸந்தித்துப் போய் உஜ்ஜீவித்து, இந்த அபர்யந்தமான ஆத்மாக்களெல்லாரையும் ஸ்ருஷ்டித்தருளின உனக்கு என்னை யொருவனையும் உன்திருவடிகளுக்கு ஈடாம்படி பண்ணியருளுகை, ஒரு பொருளோ? ஆனபின்பு, உன் திருவடிகளை என்று நான் சேர்வது? என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், மீளவும் சாபலாதிசயத்தாலே நிரதிசயபோக்யமான உன்னுடைய திருவடிகளை நான் கிட்டுவது என்று? என்கிறார்

[கிற்பன் கில்லேன் என்று தொடங்கி.] - போன காலமெல்லாம் அல்பயத்நமாய்ப் பஹுபலமான புண்யங்களைப் பண்ணுவேன் என்றுதல் செய்திலேன், அல்பபலமாய்ப் பஹ்வனர்த்தமான பாபத்தைப் பண்ணுவேனல்லேன் என்றுதல் செய்திலேன். அல்பாஸ்வாதமான விஷய ரஸங்களை அநுபவித்து ஸர்வசக்தியான உன்னுடைய அப்ரதிஸமாதேயமாம்படி அகன்றேன். [பற்பல என்று தொடங்கி] - ப்ரளயகாலத்திலே மங்கி அசித்கல்பராய் அஸங்க்யேயரான ஆத்மாக்களைக் கரணகளேபரங்களோடே கூட்டி உண்டாக்கின அபரிமிதசக்தியுக்தனானவனே!

ப.—அநந்தரம், அநாதிகாலம் விஷயப்ரவணனாய் அகன்ற நான், எல்லாவற்றையும் நினைத்தபடி செய்யவல்ல நிரவதிக சக்தி யுக்தனான உன்னைக் கிட்டுவது என்று? என்கிறார்.

முனநாளால் - முற்காலமெல்லாம், கிற்பன் (என்றிலன்) - (“க[illegible]ஸ்மி” என்று நன்மை செய்ய அதிக்குமென்றுதல்) வல்லேனென்று இசைந்திலேன்; கில்லேன் [illegible]என்றிலன் - (“நகர்த்தாஸ்மி” என்று தீமை செய்யமாட்டேனென்றுதல்) மாட்டேனென்று தவிர்ந்தி[illegible] இப்படி விதிநிஷேதங்களுக்கு அவிஷய பூதனாய்க்கொண்டு, அற்பம் - அத்யல்பமான, சா[illegible] - பசையையுடைத்

---

நிர்வாஹ த்வயாநுகுணம். கொந்தார் காயாவின் வ்யாக்யாநம்ப, எந்தாய் வந்தாய்[illegible]லே தொடங்கி, இதுவே இதுவாகில் - யான் உன்னை எங்குவந்தணுகிற்பன் இதி நிர்வாஹத்வயேப்யங்[illegible]ங்கு’ என்றது - பூர்வர்கள் நிர்வாஹே, க்ஷேபம் பாஷ்யகார நிர்வாஹே, ப்ரஸ்ந:. அணுகிற்பன் - கிட்[illegible]லேன். (ரு)

தான, அவை - நாநாவித துர்விஷயங்களை, சுவைத்து - (பசையுண்டாக ப்ரமித்து எதிர்ப்பசை கொடுத்து)புஜித்து, அகன்று ஒழிந்தேன் - (அதடியாக) தூரஸ்தனாய்விட்டேன்; பற்பல - நாநா விதமாய், ஆயிரம் - அஸங்க்யாதமான, உயிர் - ப்ராணிஜாதங்களை, செய்த - (நினைத்தபடி) உண் டாக்கவல்ல, பரமா - ஶக்திபாரம்யத்தை யுடையவனே! நின் - (வகுத்தஸ்வாமியான) உன்னு டைய, நல் - அப்ராக்ருதமாய், பொன் - அதிரமணீயமாய், சோதி - தேஜோமயமான, தாள் - திரு வடிகளை, நணுகுவது - கிட்டுவது, எஞ்ஞான்று - எக்காலம்?

ஶக்திமானான நீ கிட்டுமதொழிய, என்னைப்பார்த்தால் கிட்ட விரகில்லை யென்று கருத்து.

இ.—ஆறும்பாட்டில், என்னைப் பார்த்தால் கிட்ட விரகில்லை; உன்னைப் பார்த்தால் தப்ப விரகில்லை. ஆனபின்பு, நிரதிஶய போக்யமான திருவடிகளைக் கிட்டுவது என்று? என்கிறார்.

[கிற்பன்] - 'அல்பயத்நமாய் பஹுபலமான ஸுக்ருதத்தைச் செய்' என்றால் 'ஓம்' என்று இசைந்திலேன். மித்ர பாவத்தாலே அபுநராவ்ருத்தி லக்ஷணமான போகத்தைப் பெற லாம் என்றால் அத்தைச் செய்வேன் என்றிலேன். [கில்லே னென்றிலன்] - 'இப்போது அல்ப மாய் மேலே பஹ்வனர்த்தமா யிருக்கிற விஷயப்ராவண்யத்தைத் தவிரும்' என்றால், 'அத்தைத் தவிர்வேன்'என்றிலேன். 'இப்படி செய்கிறது எத்தனை நாள் போரும்?' என்ன,—[முன நாளால்]- நீ விஶேஷகடாக்ஷம் பண்ணுவதுக்கு முன்பெல்லாம். 'இந்நெடுநாளெல்லாம் நம்மையகன்றது எத்தாலே?' என்ன,—[அற்பசாரங்கள்] - உன்னை யிழப்பிக்க வேண்டுவது உண்டு; அநுபவிக்க லாவது ஒன்றில்லை. [அவை] - இப்படியிருப்பன அநேகம். [சுவைத்து] - இவை யெல்லாவற்றி லுமாக நா நனையப்பெற்றதோ? என்னில்,—நாவில் பசைகொடுத்துக் கைகொடுத்துப் புஜிக்கவேண் டும்படி யிருக்கை. 'இத்தால் பெற்றது ஏது?' என்ன, - [அகன்று ஒழிந்தேன்] - ஸர்வஶக்தியான உனக்கும் எட்டாதபடி கைகழிந்தேன். நான் என்னை முடித்துக்கொண்டேன்; உடைய நீ எடுத் துக் கொள்ளில் கொள்ளுமித்தனை. 'நீர்' நின்ற நிலை அஸமாதேயம் என்னும்படியா யிருந்ததீ!' என்ன,—[பற்பல்லாயிரம் இத்யாதி] - இல்லாதவன்று உண்டாக்கின உனக்கு உள்ள தொன்றுக்கு ஒரு குணாதானம் பண்ணுகை அரிதோ? 'பற்பல்லாயிரம்' என்று ஜீவாநந்த்யம். உயிர் செய்கையா வது - ஶரீரத்தோடே ஸம்பந்திப்பிக்கை. [பரமா] - நிரவதிகஶக்தி யுக்தனானவனே! [நின் இத் யாதி] - ப்ராப்தமாய் அப்ராக்ருதமாய் ஸ்ப்ருஹணீயமாய் நிரவதிகதேஜோரூபமான திருவடி களை. [நணுகுவது எஞ்ஞான்றே] - என்னைப் பார்த்தால் பெற விரகில்லை, உனக்கு ஶக்தியில் குறையில்லை; இனி நாள் அறியுமித்தனை என்கிறார்.

ஈடு.—ஆறும்பாட்டு. என்னைப் பார்த்தால் கிட்ட விரகில்லை;உன்னைப்பார்த்தால் தப்ப விரகில்லை; ஆனபின்பு, நிரதிஶய போக்யமான உன் திருவடிகளைக் கிட்டுவது என்று? என்கிறார். விதிநிஷேதங்களுக்கு வஶ்யனன்றிக்கே இதரவிஷய ப்ரவணனாய்க் கைகழிந்துபோன நான் உன் திருவடிகளைக் கிட்டுவது என்று? என்கிறார்.

[கிற்பன் கில்லே னென்றிலன்] - 'ஆழ்வீர்! பகவத்விஷயத்தில்வந்தால் இச்சைக்கு மேற் பட ஓராயாஸ மின்றிக்கே, பேற்றில்வந்தால் அபுநராவ்ருத்திலக்ஷண மோக்ஷமாயிருக்கும்; அதுக்கு

---

ஆறும்பாட்டு - 'கிற்பன்' இத்யாதி. தம்முடைய பூர்வாவஸ்தையையும், அவனுடைய ஸ்ருஷ்டியையும் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்யாநின்றுகொண்டு, 'நின்னற்பொற்சோதித்தாள் நணுகுவதெஞ் ஞான்று' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை அருளிச்செய்கிறார், 'என்னைப் பார்த்தால்' இத்யாதி. கீழ்வாக்ய விவரணம் - 'விதிநிஷேத' இத்யாதி.

'கிற்பன் என்றிலன், கில்லேன் என்றிலன்' என்று அந்வயிப்பது; வல்லேனென்றிலன், மாட்டே னென்றில னென்றபடி. 'கிற்பன்' இத்யாதிக்கு அர்த்தம்- 'ஆழ்வீர்' இத்யாதி. அதுக்கு ஈடாக - மோக்ஷத்துக்கு

ஈடாக ஒன்றைச் செய்யவல்லீரே' என்றால், 'ஓம், அப்படிசெய்கிறேன்' என்றிலன். 'இதரவிஷய ப்ராவண்யமாகிறது-ஆயாஸம்கனத்துப் பேற்றில் ஒன்றின்றிக்கே யிருப்பதொன்று ; அத்தைத் தவிர வல்லீரே?' என்றால், 'ஓம்,தவிருகிறேன்' என்றிலன். இப்படி விஹிதத்தைச் செய்யாமையும், அவிஹிதத்தைச் செய்கையும் என்று தொடங்கி? என்ன, - [முனநாளால்] - காலமெல்லாம் எனக்கு இது வேயன்றோ யாத்ரை ? இப்படி நெடுநாள்பட, நம்மையொழியப் புறம்பே துவக்கவல்லபடி போக்ய பூதமான விஷயங்களும் உண்டாயிற்றே ? என்னில், -[அற்பசாரங்கள்] - உன்பக்கல் வாராதபடி தகைய வேண்டுவது உண்டு; அது தன்பக்க லொன்றில்லை. முள்ளிப்பூவில் ரஸம்போலே தான் அல்பமாய், அவைதாம் பலவாய், தன்னுவில் பசைகொடுத்து புஜிக்கவேண்டும்படி யிருக்கிற விஷயங்கள்தோறும் கால்தாழ்ந்து, ஸர்வஶக்தியான தேவரை * "ஓடினேன்" என்கிறபடியே கைகழியப்போனேன். 'நெடுநாள் இப்படி நம்மைக் கைகழிந்தீராகில் நம்மை இனிச் செய்யச் சொல்லுகிறது என் ?' என்ன, -[பற்பல்லாயிரமுயிர்செய்தபரமா]-உயிர்செய்கையாவது-ஸ்திதி கமந ஶயநாதிகளுக்கு யோக்யமாம்படி ஶரீரத்தோடே ஸம்பந்திப்பிக்கை. எண்ணிறந்த பதார்த்தங்களை யுண்டாக்கின ஸர்வாதிகனே! இல்லாத வஸ்துவை யுண்டாக்கின உனக்கு உள்ளவஸ்துவுக்கு ஒரு குணாதாநம் பண்ணுகை அரிதோ ? [நின் இத்யாதி] - உன்னுடைய நன்றாய் ஸ்ப்ருஹணீயமாய் நிரவதிக தேஜோரூபமான திருவடிகளை நான் என்று வந்து கிட்டக்கடவேன் ? (சு)

## ஏழாம் பாட்டு.

எஞ்ஞான்றுநாம் இருந்திருந்து இரங்கிநெஞ்சே
மெய்ஞ்ஞானமின்றி வினையியல்பிறப்பழுந்தி
எஞ்ஞான்றும்எங்கும் ஒழிவறநிறைந்துநின்ற
மெய்ஞ்ஞானச்சோதிக் கண்ணனைமேவுதுமே.

ஆ.—(எஞ்ஞான்றும்.) பகவத்ப்ராப்த்யுபாயமான தத்ஸ்வரூபரூபகுண விபூதி விஷய யாதாத்ம்ய ஜ்ஞாநஹீநராய், தத்ப்ராப்திவிரோதி ஸம்ஸாரத்திலே ப்ரவணருமாயிருப்பது, ஸர்வஜ்ஞனுகையாலே நம்முடைய இந்த அநர்ஹதையை அவன் அறிவது; எஞ்ஞான்று நாம் இருந்திருந்து அவனைக் காணவேணுமென்று வ்யஸநப்படுகை? அவனைக்காண்கைக்கு நமக்கு எங்கே உபகரணம் ? என்கிறார்.

ஈடாக. ஒன்றை - இச்சையை; அத்வேஷாதிகளையாதல். 'ஓம்' இதி அங்கீகார ஸூசகம் அவ்யயம். இத்தால்- விஹிதாநுஷ்டாநமும் நிஷித்தாநுஷ்டாநமும் பண்ணிப்போந்தே னென்றபடி. தாத்பர்யம் - 'உன்பக்கல்' இத்யாதி. அல்பதையை ஸதிதர்ஶநமாக அருளிச் செய்யா நின்றுகொண்டு, 'சாரங்கள்' என்கிற பஹுவசநத்துக்கும், 'சுவைத்தகன்றொழிந்தேன்' என்கிறதுக்கும் அர்த்தம்-'முள்ளிப்பூவில்' இத்யாதி. 'தன்னுவிற்பசைகொடுத்து'- புஜிக்கிற தன்னுக்கில் ஈரத்தாலே ஆர்த்ரதையை உண்டாக்கி. உயிர்செய்கை - சேதநஸ்ருஷ்டி. நித்யமான ஆத்மவஸ்துவைச் செய்கையாவதென் ? என்ன, 'உயிர்செய்கையாவது' இத்யாதி. சப்தார்த்தம் - 'எண்ணிறந்த' இத்யாதி. பலிதம்- 'இல்லாத' இத்யாதி. 'குணாதாநம் பண்ணுகை அரிதோ' என்று உத்தாக்ரந்த மிருக்கையாலே, "வ திவநவ காரெணவ ஶாயெ-ராவண-நீயஃ" என்கிற ந்யாயத்தாலே, 'நம்மை இனிச் செய்யச் சொல்லுகிறதென் ? என்ன' என்கிற ப்ரஶ்நவாக்யத்திலேயும் - 'இதஃபரம் நம்மால் உஜ்ஜீவிப்பிக்கப் போமோ?' என்று அபிப்ராயங் கண்டுகொள்வது.

பற்பல்லாயிரமுயிர்செய்தபரமா - நிற்பன் கில்லேன் இத்யாரப்ய அந்வயஃ. 'நணுகுவதெஞ்ஞான்றே' என்று - பாடம் அருளிச்செய்யும்படி. சாரம் - ஸாரம். முனநாள் - முற்காலமெல்லாம். ஆல் - அவ்யயம். (சு)

* பெரிய திருமொழி, க. க. க.

ஒ.—ஏழாம்பாட்டில், திருவடிகளில்போக்யதையை அநுஸந்தித்துப்பதறுகிற திருவுள்ளம் பதறுமைக்காக அயோக்யரான நாம் அவனை ஆசைப்பட்டால் ப்ரயோஜநமுண்டோ? என்கிறார்.

[எஞ்ஞான்று என்று தொடங்கி.] - ஸம்யக்ஜ்ஞாநமின்றிக்கே அவித்யாகர்மாதிகளைப் பிறப்பிக்கும் ஸம்ஸாரத்திலே அழுந்தியிருக்கிற நாம் நெஞ்சே! காலமுள்ளதனையும் இருந்திருந்து துஃகப்பட்டு. [எஞ்ஞான்றுமென்று மேவுக்கு] - எல்லாக்காலத்திலும் ஒன்றொழியாமே எல்லாப் பதார்த்தங்களிலும் வ்யாபித்திருப்பதும் செய்து இவர்களுடைய ஜ்ஞாநங்களெல்லாம் அஸத்கல்பமாம்படி விஸதமான ஜ்ஞாநப்ரபையையுடைய க்ருஷ்ணனை ப்ராபிக்க விரகுஉண்டோ? எஞ்ஞான்று மேவுதும்? என்றுமாம்.

ப.—அநந்தரம், வ்யாப்தனானவன் ஸுலபனானனென்றால், ப்ராப்திஸாதநமில்லாதார் புக்குக் கிட்டப்போமோ? என்கிறார்.

நெஞ்சே - நெஞ்சே! எஞ்ஞான்றும் - எப்போதும், இருந்து இருந்து - இருந்திருந்து, இரங்கி - (ப்ராப்யாகாங்க்ஷையாலே) துஃகித்து, மெய்ஞ்ஞானம்-(தத்ஸாதநமான) தத்த்வஜ்ஞாநம், இன்றி - இன்றியே, வினை - (தத்விரோதியான) பாபத்தாலே, இயல் - ப்ரவ்ருத்தமான, பிறப்பு - ஜந்மங்களிலே, அழுந்தி - அழுந்தி, நாம் - (இதுவே யாத்ரையான) நாம், எஞ்ஞான்றும் - என்று மொக்க, எங்கும் - எல்லாவஸ்துக்களிலும், ஒழிவு அற - ஒன்றுஞ்சோராதபடி, நிறைந்து - பரிபூர்ணமாக வ்யாபித்து, நின்ற - நின்ற, மெய்ஞ்ஞானம் - நித்யஜ்ஞாநமான, சோதி - தேஜஸ்ஸையுடையனாய், கண்ணனை - (ஆஸ்ரிதஸௌலப்யார்த்தமாக வந்து அவதரித்த) க்ருஷ்ணனை, மேவுதுமே - எக்காலங் கூடக்கடவோம்?

இ.—ஏழாம்பாட்டில், 'நின்றநற்பொற்சோதித்தாள்' என்று ப்ரஸ்துதமான போக்யதையை நினைத்துப் பதறுகிற திருவுள்ளத்தைக்குறித்து 'அயோக்யரான நாம் அவனை ஆசைப்பட்டால் ப்ரயோஜநமுண்டோ?' என்கிறார்.

[எஞ்ஞான்று இத்யாதி] - அநாதிகாலம் மூலையடியே திரிந்த நாம் இனி அநந்தகாலம் இருந்து க்லேஶப்பட்டால் என்ன ப்ரயோஜந முண்டு? [நெஞ்சே] - அநாதிகாலமெல்லாம் பண்ணின அதிக்ரமத்துக்குக் கூட்டு நீயன்றோ? 'நமக்குக் குறை என்?' என்ன,-[மெய்ஞ்ஞானமின்றி]- புருஷார்த்தோபயோகியான ஸம்யக்ஜ்ஞாந மின்றிக்கே. [வினையியல் இத்யாதி] - அவித்யாதிகளைப் பிறப்பிக்கும் ஸம்ஸாரத்திலே முழுகியிருக்கிற நாம்; அவித்யாதிகளடியான பிறப்பிலே அழுந்தியிருக்கிற நாம் என்றுமாம். [எஞ்ஞான்றும் இத்யாதி] - இப்படி நாம் இருந்தாலும் அவன் அஸந்நிஹிதனாதல், அஜ்ஞனாதலாகப் பெற்றோமாகிலு மாமிறே. ஸர்வகாலமும் ஸகலபதார்த்தங்களிலும் குறைவற வ்யாபித்து நிற்குமவனுமாய் விஶததமமான ஜ்ஞாநத்தையுடைய க்ருஷ்ணனை; நினைவுக்கு வாய்த்தலையிலே புகுந்து நம்படியை உள்ளபடி அறியுமவனானவனை. [கண்ணனை] - ஸுலபனென்றால், அவனைக் கிட்டப்போமோ? என்னுதல். நிர்வாஹகனென்றால் அவனைக் கிட்டலாமோ? என்னுதல். யதாபாடம் அந்வயமாதல், எஞ்ஞான்றுமேவுதும் என்னுதல். "ஸநெகாஹஜ்ஞெஸி தவ உநூஸெஷம் நஹஜூஹயம் வெகிஉஸிம்வஸாாணஜ । யொவெஷிதாகஉஃணஃ வாவகஸூ தஸூாஷிகெஷூம் வூஜிநஂகரொஷி."

ஈடு.—ஏழாம்பாட்டு. "நின்றநற்பொற்சோதித்தாள்" என்று திருவடிகளின் போக்யதையை அநுஸந்தித்தவாறே திருவுள்ளம் பதறத்தொடங்கிற்று; கெடுவாய்! உன்படி ஆராயாதே நல்லத்தை ஆசைப்பட்டால் கிடைக்குமோ? என்கிறார்.

---

ஏழாம்பாட்டு – 'எஞ்ஞான்றுநாம்' இத்யாதி. 'எஞ்ஞான்று நாமிருந்திரங்கி – மேவுதும்' என்றத்தைக் கடாக்ஷித்து ஶங்காபரிஹாரரூபேண அவதாரிகை – 'நின்றநற்பொற்சோதி' இத்யாதி. 'மெய்ஞ்ஞானமின்றி' இத்யாதியைப் பற்ற – 'கெடுவாய் உன்படி' இத்யாதி.

[எஞ்ஞான்று இத்யாதி] - காலமேல்லாம் நாம் இருந்து ‡ சிழகிச்சிழகி யழுதால் என்ன ப்ரயோஜந முண்டு ? [நெஞ்சே] - உன்னை நீ அறியாயோ ? இதுக்கு முன்பெல்லாம் பந்தஹேது வாய்ப் போந்தாயல்லையோ ? ஏன்தான், நமக்குப் பேறுகைக்குக் குறையேன் ? அல்பாநுகூல்யம அமையும் விஷயத்தைப் பேற என்ன, இதுவன்றோ நம்முடைய பூர்வவ்ருத்தம் ? மெய்ஞ்ஞான மில்லை கண்டாயே; *"தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்" (தஜ்ஜ்ஞாந மஜ்ஞாநமதோந்யதுக்தம்), †"வித்யாந்யாஶில்பநைபுணம்" (வித்யாந்யாஶில்பநைபுணம்) என்று புறம்பே சில ஜ்ஞாந முண்டத்தனையல்லது ஸம்யக்ஜ்ஞாநமில்லை கண்டாயே. ஆமாறறிவிலோமே. மெய்ஞ்ஞானமில்லாத வளவேயோ? பாபங்களிலே கோண்டுபோய் மூட்டக்கடவதான ஜந்மங்களிலே அழுந்திப்போரும் படியாயன்றோ நம்நிலை இருக்கிறது. [எஞ்ஞான்றும் எங்கும் ஒழிவறநிறைந்து நின்ற] - எல்லாக் காலத்திலும் எல்லா வஸ்துக்களிலும் ஒன்றும் பிரிகதிர்ப்படாமே குறைவற வ்யாபித்து நின்ற. [மெய்ஞ்ஞா

* ப்ர:—ஸ்ரீவிஷ்ணுபுராணே ஷஷ்டேம்ஶே கேஶித்வஜோக்தௌ... ஸ ஜ்ஞாநம் ... "... தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம் ॥" ... ஸம்யக்ஜ்ஞாநம் ... விஷயம் ஜ்ஞாநம், அஜ்ஞாநம் — அஜ்ஞாநாவரணம்; ... விஷயாக; ... விஷயாக; ... விஷயாக, தேஷாம்ஶ்ச ...

† ... "வித்யான்யாஶில்பநைபுணம் ॥ ..." ... விஷ்ணுநிரூபணம் ... ॥

சிழகி - விக்கி. ஸம்போதிக்கிறவருடைய ஹார்த்தபாவம் - 'உன்னை நீ' இத்யாதி. '...' இத்யாதியைப் பற்ற, 'அல்பாநுகூல்யமமையும்' என்றது. 'மெய்ஞ்ஞானமின்றி' என்கையாலே - அல்பாநுகூல்யமு மில்லை யென்று கருத்து. 'மெய்ஞ்ஞானம்' இதி விசேஷண வ்யாவர்த்யம் தர்ஶயந் அர்த்த மாஹ- 'தத் ஜ்ஞாநம்' இத்யாதி. ஸம்யக்ஜ்ஞாநாபாவமேவோபபாதயதி-'ஆமாறறிவிலோமே' இதி. சப்தார்த்தகதநபூர்வகமாகத் தாத்பர்யம் - 'மெய்ஞ்ஞானமில்லாத' இத்யாதி. வினையியல்பிறப்பு - கர்மங்களிலே ப்ரவர்த்திப்பிக்கிற ஜந்மம். இயலுகை - ப்ரவர்த்திப்பிக்கை; மூட்டுகை யென்றபடி. நாம் பண்ணின பாபமெல்லாம் அவன் அறிந்திருக்கிறானே? என்ன, 'எஞ்ஞான்றும்' இத்யாதி. ஒழிவற - ப்ரச்யுத்யபாவேந. பிரிகதிர்ப்படாமே - தப்பிப்

‡ 'சீழ்கிச் சீழ்கி' என்பது பாடமென்பர் சிலர்.

னச் சோதிக்கண்ணனை]-நம்நிலையறியாதா னொருவனைக் கிட்டப்பார்க்கிறோமோ? நித்யவஸ்துவா யிருக்கச்செய்தே ஜ்ஞாநஸங்கோசவிகாஸார்ஹ மாகாநின்றதிறே இவ்வஸ்து; அங்ஙனன்றிக்கே, மெய்யான ஞானச்சோதியையுடைய க்ருஷ்ணனை; "ஏகோஹமஸ்மீதிச மந்யஸேத்வம்" (ஏகோ ஹமஸ்மீதிச மந்யஸேத்வம்) என்னும்படியே. [நெஞ்சே மெய்ஞ்ஞானச்சோதிக்கண்ணனை மேவுதுமே]-'ஸுலபன்' என்று நம்மாலே கிட்டப்போமோ? என்னுதல்; நிர்வாஹகனானவனை நம்மால் கிட்டப்போமோ? என்னுதல். மெய்ஞ்ஞானச்சோதிக் கண்ணனை மேவுதுமே - நம்மாலேகிட்டப் போமோ? நெஞ்சே! மெய்ஞ்ஞானச்சோதிக் கண்ணனை எஞ்ஞான்று மேவுதும்? என்று அந்வயமாக வுமாம். (எ)

# எட்டாம் பாட்டு.

மேவுதுன்பவினைகளை விடுத்துமிலேன்
ஓவுதலின்றி உன்கழல்வணங்கிற்றிலேன்
பாவுதொல்சீர்க்கண்ணா! என்பரஞ்சுடரே!
கூவுகின்றேன்காண்பான் எங்கெய்தக்கூவுவனே.

ஆ.—(மேவு.) கர்மயோகமாதல், பக்தியோகமாதல், ஜ்ஞாநயோகமாதல் ஒன்றும் செய்கிறிலேன்; செய்யாதிருந்துவைத்து, ஸௌஶீல்யவாத்ஸல்யகாருண்யாத்யஸங்க்யேய திவ்யாத்மகுணங்களாலும் நிரதிஶயௌஜ்ஜ்வல்ய ஸௌந்தர்ய ஸௌகந்த்யாத்யஸங்க்யேய திவ்யரூப குணங்களாலும் பரிபூர்ணனாயிருந்த உன்னைக் காணவேணு மென்றென்று கூப்பிடாநின்றேன்; இப்படி கூப்பீடு உன்னைக் காண்கைக்கு எங்கே கார்யகரமாகிறது? என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், உன்னைப் பெறுகைக்கு ஈடான விரகுகள் என்பக்கல் ஒன்று மின்றிக்கே யிருக்கச்செய்தே உன்னைக்காணவேணும் என்று கூப்பிடாநின்றேன். எங்கே வந்து பலிக்கக் கூப்பிடுகிறேன்? என்கிறார்

---

போகாமே. 'மெய்' என்கிற விஶேஷணவ்யாவ்ருத்தி - 'நித்யவஸ்துவாய்' இத்யாதி. இவ்வஸ்து-ஆத்மவஸ்து. 'எல்லார்படியுமறியும்' என்னுமதுக்கு ப்ரமாணம் - 'ஏகோஹம்'இத்யாதி. 'கண்ணனை'என்றதுக்கு இரண்டு அர்த்தம் – ஸுலபனென்னுதல், நிர்வாஹகனென்னுதல். இந்த இரண்டர்த்தத்தையும் அருளிச்செய்கிறார், 'ஸுலபன்' இத்யாதி வாக்யத்வயேந. பூர்வர்கள் நிர்வாஹத்திலே 'நம்மாலே கிட்டப்போமோ' என்று. ஏகாரம் – ப்ரஶ்நத்திலே; கிட்டமாட்டோ மென்றபடி. இந்தப்பக்ஷத்தில், 'எஞ்ஞான்றும்' என்றதுக்கு – யதாந்வயம். எம்பெருமானார் நிர்வாஹத்துக்குச் சேர அர்த்தம்-'நெஞ்சே மெய்ஞ்ஞானம்' இத்யாதி. நெஞ்சே மெய்ஞ்ஞான மின்றி வினையியல்பிறப்பழுந்தி – நாமிருந்திருந்திரங்கி – எஞ்ஞான்று மெங்குமென்று தொடங்கி, கண்ணனை – எஞ்ஞான்று – மேவுதுமே இத்யந்வய:; அஸ்மிந்பக்ஷே, ஏகாரம் – ஈற்றசை. அவ்யயமித்யர்த்த:. மெய்ஞ்ஞானச் சோதி – நித்யஜ்ஞாநதேஜஸ்ஸை யுடையவன்.

'தஜ்ஜ்ஞாநம்' இத்யாதி ஷஷ்டேம்ஶே பஞ்சமே மைத்ரேயம்ப்ரதி பராஶர: 'ஸஜ்ஞாயதேயேந' இத்யாதி மஹாப்ரவேஶே லிகித:. ப்ரதமேம்ஶே ஏகோநவிம்ஶேத்யாயே, 'தத்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்' இத்யாத்யபி லிகிதம் தத்ரைவ. ஸம்பவபர்வணி அஷ்டாத்ரிம்ஶே துஷ்யந்தம் ப்ரதி ஶகுந்தலா- "ஏகோஹமஸ்மீதி ச மந்யஸே த்வம் ந ஹ்ருச்சயம் வேத்ஸி முநிம் புராணம். யோ வேதிதா கர்மண: பாபகஸ்ய தஸ்யாந்திகே த்வம் வ்ருஜிநம் கரோஷி" (எ)

[மேவு என்று தொடங்கி.] - துஃகத்தை விளைப்பதாய் அநாதிகாலம் அநுஸரித்திருக்கிற த்வத்ப்ராப்தி விரோதிகளை ஏதேனும் ஒருவிரகாலே போக்கவும் மாட்டிற்றிலேன். நிரந்தரமாக உன் திருவடிகளை ஆஶ்ரயிக்கவும் பெற்றிலேன். [பாவு என்று தொடங்கி] - எங்கும் ப்ரஸித்தமான கல்யாணகுணங்களையுடைய உன்னுடைய அழகை எனக்குக் காட்டினவனே!

ப.—அநந்தரம், ஸௌலப்யகாரிதமான குணவிக்ரஹௌஜ்ஜ்வல்யத்தை அநுஸந்தித்து, நிஸ்ஸாதநனான நான் எங்கே காணக் கூப்பிடுவது? என்கிறார்.

மேவு துன்பம் - அவிநாபூததுஃகத்தையுடைத்தான, வினைகளை - பாபங்களை, விடுத்துமிலேன் - (தந்நிவர்த்தகமான தபோஜ்ஞாநஸமாதிகளாலே) போக்குவதுஞ் செய்திலேன்; ஓவுதல் இன்றி - நிரந்தரமாக, உன் - (ப்ராப்தனான) உன், கழல் - திருவடிகளை, வணங்கிற்றிலேன் - (வணக்குடைத்தவநெறியாலே) வணங்குவதுஞ் செய்திலேன்; பாவு - (எங்குமொக்கப்) பரம்பி, தொல் - ஸ்வாபாவிகமான, சீர் - ரக்ஷணைகாந்தகுணங்களையுடைய, கண்ணா-க்ருஷ்ணனாய், என் - எனக்கு ஆஶ்ராஜநகமான, பரஞ்சுடரே - நிரவதிகதேஜோரூபனானவனே! காண்பான் - காணவேணுமென்று, கூவுகின்றேன் - (ஸாதநாநுஷ்டாநம்பண்ணி யிழந்தார் கூப்பிடுமாபோலே) அழைத்துக்கூப்பிடாநின்றேன்; எங்கு - எங்கே, எய்த - கிட்டுவதாக, கூவுவன் - கூப்பிடுவேன்?

இ.—எட்டாம்பாட்டில், உன்னைக் கிட்டுகைக்கு என்பக்கல் ஒன்றுமின்றிக்கேயிருக்கக் காணவேணுமென்று கூப்பிடாநின்றேன். எங்கே பலிக்கக் கூப்பிடுகிறேன்? என்கிறார்.

[மேவு இத்யாதி] - இவ்வாத்மாவுக்கு நிரூபகமோ வென்னும்படி பொருந்தின ஸாம்ஸாரிகமான துக்கத்தை விளைப்பதான த்வத்ப்ராப்தி விரோதிகளை "யமேண பாபமபநுததி" என்ற விஹிதாநுஷ்டாநத்தாலே போக்கவும் மாட்டிற்றிலேன். "நிதித்யாஸிதவ்ய:" என்கிறபடியே அநவரதபாவநாரூபமான பக்தியைப் பண்ணப்பெற்றிலேன். ஓவுதலின்றி மேவுதுன்பவினைகளை யென்றுமாம். [பாவு இத்யாதி] - "விதித:", ஸ்ருக்கள் கோஷ்டியிலும் ப்ரஸித்தமாய் ஸ்வாபாவிகமான கல்யாணகுணங்களையுடைய க்ருஷ்ணனே! [என் பரஞ்சுடரே] - தாழநின்று இவ்வழகை எனக்கு முற்றூட்டாக்கித் தந்தவனே! "பரஞ்சுடருடம்பாய்" என்னக்கடவதிறே. [கூவுகின்றேன் காண்பான்] - ஸாதநாநுஷ்டாநம்பண்ணிப் பலம்தாழ்த்தாரைப்போலே கூப்பிடாநின்றேன். [எங்கெய்தக் கூவுவனே]-ஒரு ஸாதநமின்றிக்கேயிருக்கிற நான் கூப்பிடு எங்கே பலிக்க? என்றபடியிறே.

ஈடு.—எட்டாம்பாட்டு. ஸாதநாநுஷ்டாநம் பண்ணினார் பலம்தாழ்த்துக்கூப்பிடக்கடவ கூப்பீட்டை, பேற்றுக்கு ஈடாயிருப்பதொரு கைம்முதலில்லாத நான் எங்கே வந்து கிட்டக் கூப்பிடுகிறேன்? என்கிறார்.

[மேவு] - "திலதைலவத் தாருவஹ்நிவத்" (திலதைலவத் தாருவஹ்நிவத்) என்கிறபடியே இவ்வாத்மாவோடு பிரிக்கவொண்ணாதபடி யிருப்பதாய், துஃகத்தைவிளைப்பதா யிருக்கிற பாபங்களை, "தர்மேண பாபமபநுததி" (தர்மேணபாபமபநுததி) என்கிறபடியே விஹித

---

எட்டாம்பாட்டு - 'மேவுதுன்பம்' இத்யாதி. பூர்வார்த்தத்தையும், "கூவுகின்றேன் காண்பான் எங்கெய்தக்கூவுவன்" என்றத்தையும் கடாக்ஷித்து அவதாரிகை- 'ஸாதநாநுஷ்டாநம்' இத்யாதி. கைம்முதல் - ஸாதநம்.

மேவு - அவிநாபூதமாய்ப் பொருந்தி வர்த்திக்கிற. ஆத்மாவோடே பொருந்தியிருக்குமதுக்கு ப்ரமாணம் - 'திலதைலவத்' இத்யாதி; கத்யத்ரயே. இதம் - ப்ரக்ருதிபாத்மலிஷ்யாபி, துர்விவேசத்வே த்ருஷ்டாந்ததயா உக்தம். துன்பவினை - துஃகத்தையுண்டாக்குகிற வினை. தர்மாசரணம் பாபநிவர்த்தகமென்கைக்கு ப்ரமாணம் - 'தர்மேண' இத்யாதி. இயம் ஶ்ருதி: தைத்திரீயகே. பாபங்களை - நிஷித்தகார்யகர்ம

கர்மாநுஷ்டாநத்தாலே போக்கிற்றிலேன். [ஓவுதலின்றி உன்கழல் வணங்கிற்றிலேன்]-"நிதித்யாஸிதவ்ய:" (நிதித்யாஸிதவ்ய:) என்கிறபடியே அநவரதபாவநைபண்ணி உன்னை ஸாக்ஷாத்கரிக்க விரகுபார்த்திலேன். "ஓவுதலின்றி மேவுதுன்பவினைகளை விடுத்துமிலேன்; ஓவுதலின்றி உன்கழல் வணங்கிற்றிலேன்" என்று எம்பார் அருளிச்செய்யும் படி. 'கண்ணாலப்பெண்டாட்டிக்கு உண்ண அவஸரமில்லை' என்னுமாபோலே, இந்த்ரியங்களுக்கு இரையிட்டுத் திரிந்தேனித்தனை; எனக்கு ஒன்றும் ஹிதம்பார்த்திலேன். [பாவுதொல்சீர்க்கண்ணா] - இங்ஙனேயிருக்க, உன்னை அநுஸந்தித்த வாறே விடமாட்டுகிறிலேன்; "விதித:" (விதித:) என்கிறபடியே, உகவாதார்கோஷ்டியிலும் ப்ரஸித்தமான ஸ்வாபாவிககல்யாணகுணங்களையுடைய க்ருஷ்ணனே! [என் பரஞ்சுடரே] - ஸர்வ ப்ரகாரத்தாலும் உண்டான உத்கர்ஷத்தை எனக்கு அறிவித்தவனே! [கண்ணா என் பரஞ்சுடரே]-தாழநின்று இவ்வடிவழகை எனக்கு முற்றூட்டாக்கினவனே! என்றுமாம். "பரஞ்சுடருடம்பாய்" என்னக்கடவதிறே. [கூவுகின்றேன் காண்பான்] - ஸாதநாநுஷ்டாநம்பண்ணி பலம்கைப்புகுராதார் கூப்பிடுமாபோலே, காணவேணுமென்று கூப்பிடாநின்றேன். [எங்கெய்தக்கூவுவனே]-'ஒருகோசுகு கூப்பிட்டது' என்று ப்ரஹ்மாவின்லோகத்திலே கேட்கப்புகுகிறதோ? எங்ஙனே வந்து கேட்கக் கூப்பிடுகிறேன்? (அ)

## ஒன்பதாம் பாட்டு.

கூவிக்கூவிக் கொடுவினைத்தூற்றுள்நின்று
பாவியேன்பலகாலம் வழிதிகைத்துஅலமருகின்றேன்
மேவியன்றுநிரைகாத்தவன் உலகமெல்லாம்
தாவியஅம்மானை எங்குஇனித்தலைப்பெய்வனே.

ஆ.—(கூவிக்கூவி.) அஶக்யநிஷ்க்ரமணமாய் நிரதிஶயதுஃகாஸ்பதமாயிருந்த கொடுவினைத்தூற்றுள்ளே நின்று பாவியேன் பலகாலமும் கூவிக்கூவி, எம்பெருமான் திருவடிகளிற்சென்று சேர் வழி யறியாதே திகைத்து அலமருகின்றேன்; திருவாய்ப்பாடியிலே ஸர்வஸுலபனாய்க்கொண்டு

---

ங்களை. விஹிதகர்மாநுஷ்டாநத்தாலே - பலாபிஸந்திரஹிதகர்மாநுஷ்டாநத்தாலே. 'ஓவுதலின்றி' இதி - நிரந்தரமாக உன்திருவடிகளை வணக்குடைத்தவநெறியாலே வணங்குவது செய்திலேன். கர்மபக்தியோக ராஹித்யஞ் சொன்னது - ஜ்ஞாநயோகராஹித்யத்துக்கும் உபலக்ஷணம். ஸந்தம்ஶந்யாயத்தாலே யோஜநாந்தரம் - 'ஓவுதலின்றி' இத்யாதி. ஓவாதே - விச்சேதியாதே, பொருந்தியிருக்கிற துஃக்காவஹபாபங்களைப் போக்கிற்றிலேன் என்று சப்தார்த்தம். ஸர்வதா இந்த்ரியவஶ்யனாயே யிருந்தே னென்றபடி. தேஹைகவஹேதுநா ஸாதநாநுஷ்டாநாக்ஷமஸ்சாஸ மித்யர்த்த:. அமுமேவார்த்தமாஹ - 'கண்ணாலப்பெண்டாட்டிக்கு' இத்யாதி. யத்வா, வ்யதிரேகத்தால் பலிதம் - 'கண்ணாலம்' இத்யாதி. 'ஓவுதலின்றி' என்றது - 'மேவு' என்றதுக்கு விசேஷணமாதல், வினைகளுக்கு விசேஷணமாதல். இரை - ஆஹாரம். பாவுதல் - பரம்புதல். கீழேகடாக்ஷித்து ஹாவம் - 'இங்ஙனே' இத்யாதி. சப்தார்த்தம் - 'விதித' இத்யாதி. "விதித: ஸ ஹி தர்மஜ்ஞ: ஶரணாகதவத்ஸல: । தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி" இதி ஸுந்தரகாண்டே ராவணம்ப்ரதி ஸீதா. 'பரஞ்சுடர்' என்றதுக்கு இரண்டர்த்தம் - ஸர்வப்ரகாரோத்கர்ஷமாதல், வடிவழகாதல். த்விதீயார்த்தத்தில் 'கண்ணா' என்றத்தைக் கூட்டி ஹாவம் - 'தாழநின்று' இத்யாதி. முற்றூட்டாக்கினவன் - பூர்ணபோஜநமாக்கினவன். 'எங்கெய்தக்கூவுவன்' என்ற விடத்தில் - "யச்ச ப்ரஹ்மாணமுத்திஶ்ய ச க்ரோஶந்தி நராஸ்ஸதா । ஹம்ஸ க்ரோஶதி வாசஸ்ய வாசமேவாநுக்ரோஶதி" என்றது அநுஸந்தேயம். பாவு தொல்சீர்க் கண்ணா என் பரஞ்சுடரே - மேவுதுன்ப மித்யாரப்ய அந்வய:. (அ)

வர்த்தித்தருளினவன் திருவடிகளைச் சேரமாட்டிற்றிலேன்; அன்று ஒருதேஶவிஶேஷத்திலே வர்த்திக்கையாலே சேரப்பெறுதொழிபவும் ஸம்பவிக்குமன்றோ ? என்னில், —ஸர்வதேஶவர்த்திகளான ஸர்வாத்மாக்களும் தன் திருவடிகளினுள்ளே அகப்படும்படி உலகமெல்லாம் தாவியருளின அன்று உன் திருவடிகளைச் சேரப்பெற்றிலேன். அன்று சேரப்பெறாத நான் என்று சேர இருக்கிறேன் ? சேராதொழியில் இவ்வாத்மா முடிகை நிஶ்சிதம். இனி அவனுடைய ஈஶ்வரத்வம் விகலமாகவாகாதே புகுகிறது; இனி ஆத்மாவதிகமாக அவன் திருவடிகளைச் சேருகையென்று ஒரு பொருளில்லை யென்று நசையற்றுக் கூப்பிடுகிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், க்ருஷ்ணனாயும் ஸ்ரீ வாமனனாயும் நீ லோகத்துக்குப் பண்ணின மஹாநுக்ரஹத்துக்குப் புறம்பானேன். இனி நான் உன்னைப் பெறுகையென்று ஒருபொருளுண்டோ? என்று நிராஶராகிறார்

[கூவி என்று தொடங்கி.] - ஸம்ஸாரத்திலே நின்று அத்தோடு பொருந்தமில்லாமையாலே பெரியஆர்த்தியோடே பலகாலும் கூப்பிட்டு என்னுடைய பாபத்தின் மிகுதியாலே அவனைப் பெறுகைக்கு விரகும் அறியாதே நெடுங்காலம் அலமராநின்றேன். [மேவி என்று தொடங்கி]- திருவுள்ளத்தில் பொருத்தத்தோடே கூடப் பசுநிரைமேய்ப்பதும் செய்து அதுபோலேயன்றிக்கே தன்னுடைய திருவடிகளை எல்லார்தலைமேலும் படும்படி லோகத்தையெல்லாம் அளப்பதும்செய்து இச்செயலாலே லோகத்தைபடைய அடிமைகொண்டிருக்கிறவனை அன்றும் தப்பின நான் இனிப் பெறுகைக்கு விரகுஉண்டோ ?

ப.—அநந்தரம், அறிவில்லாதாரோடு அறிவுடையாரோடு வாசிபறப்பற உபகரித்த உபகாரத்துக்குத் தப்பின நான் கிட்டுவது எங்கே? என்கிறார்.

கொடு - க்ரூரமான, வினை - பாபங்களுக்கு ஆகரமாய், தூற்றுள் - (புக்கால் புறப்படவொண்ணாத ஸம்ஸாரமாகிற) தூற்றில் அகப்பட்டு, நின்று - நின்று, பலகாலம் - அநேக காலம் புறப்பட, வழி திகைத்து - வழி அறியாதே ப்ரமித்து, அலமருகின்றேன் - (அதுக்குள்ளே) அலமராநிற்கிற, பாவியேன் - மஹாபாபியான நான், அன்று - (கோபாலர்ந்தர்கள் பசுமேய்க்கக் கோலைக்கொடுத்த) அன்று, மேவி - (கார்யப்பாடாகவன்றியே) நெஞ்சுபொருந்தி, ஆநிரை - பசுக்களை, காத்தவன் - ரக்ஷித்தவனாய், உலகமெல்லாம் - (இப்படி ப்ரதேஶிகமன்றியே) ஸர்வலோக விஷயமான, தாவிய - த்ரைவிக்ரமாபதாநத்தையுடைய, அம்மானை - ஸர்வஸ்வாமியை, இனி - அன்றைக்குத்தப்பினபின்பு, கூவிக்கூவி-(ஆர்த்தியாலே) பலகாலும் கூப்பிட்டுக் கூப்பிட்டு, எங்கு - எங்கே, தலைப்பெய்வன் - கிட்டுவேன் ?

இ.—ஒன்பதாம்பாட்டில், கீழ் ப்ரஸ்துதமான ஸ்ரீவாமநாவதாரத்தையும் க்ருஷ்ணாவதாரத்தையும் சொல்லி அவற்றைத் தப்பின நான் இனிக் கிட்டவென்று ஒரு பொருளுண்டோ? என்று இன்னாதாகிறார்; நிராஶராகிறாரென்றுமாம்.

[கூவிக்கூவி] - ஸம்ஸாரத்தோடு பொருந்தமாட்டார், காலக்ஷேபத்துக்கு யோக்யதையில்லை; 'காணவாராய்' என்று கூப்பிடுகிறார். ஒருகால் கூப்பிட்டுப் பின்பு ஸ்வஸ்தஜ்ஞாநத்தாலே ஆறியிருக்கமாட்டாதே மேன்மேலெனக் கூப்பிடுகிறபடி. இவர் கூப்பிட்டால் ஈஶ்வரனுக்குக் கை நீட்டியெடுக்கவொண்ணாத தூற்றிலேயாயிற்று, இவர் புக்கு நிற்கிறது. [கொடுவினைத்தூற்றுள் நின்று]-கொடிதான பாபத்தை விளைக்கவற்றாய்ப் புக்கவிடமும் புறப்பட்டவிடமும் தெரியாததான ஸம்ஸாரத்திலே யாயிற்று நிற்கிறது. [பாவியேன்] - ஸ்ரீஜநகராஜன்திருமகள் ஸ்ரீவால்மீகிபகவான் ஆஶ்ரமபரிஸரத்திலே கூப்பிட்டாற்போலே சிலர் 'ஐயோ! என்னைக் கூப்பிடுகிறீரோ ?' என்

னுதல், 'உன்னைக்கிட்ட விரகறியாதே அலமருகைக்கு அடியான பாபத்தைப் பண்ணினேன்' என்னுதல். [பலகாலம் இத்யாதி]-நெடுங்காலம் உன்னைப்பெறும் விரகறியாதே அலமராநின்றேன். [மேவி இத்யாதி] - ஆபத்துக்கு உதவாதானாய்த் தான் படுகிறேனோ? நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான தன்கையிலே கோலைத் தந்து 'பசுமேய்' என்றால், 'ரக்ஷகரான நமக்கு விஹிதமிறே' என்று இருக்கையன்றிக்கே அலப்யலாபமாகப் பொருந்தி. [அன்று] - அதுவும் ஒருகாலமே! [உலகமெல்லாம் தாவிய] - அது ஒருநாளவேயாய்த் தப்பவுமாம்; எல்லார்தலையிலும் திருவடிகளாம்படி ஸர்வலோகங்களையும் அளந்த அன்று எம்மூலையிலே கிடந்தேன்? [அம்மானே]-எல்லாரையும் அடிமைகொண்டவனே. [எங்கு இனித் தலைப்பெய்வனே] - அந்த தூளிதானத்திலும் தப்பின நான் இனி எங்கே கிட்டப் புகுகிறேன்? அவன்தான் வந்து உபகரித்த அன்று தப்பின நான் ஸாதநாநுஷ்டாநம்பண்ணி அங்கேசென்று கிட்டப்புகுகிறேனோ? என்று நிராசராகிறார்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. வரையாதே எல்லார்க்குமொக்க முகங்கொடுத்த அவதாரங்களுக்குத் தப்பின நான் இனி உன்னைக்கிட்டுகையென்று ஒரு பொருளுண்டோ? என்றுநிராசராகிறார்.

[கூவி] - ஸ்வரூபஜ்ஞாநத்தாலே ஆறியிருக்கமாட்டாதே ஸம்ஸாரத்திலே யிருந்து கூப்பிடா நிற்பர். [கூவி] - ஒருகால் கூப்பிட்டு அநுபவித்து மீளுமதன்றிக்கே மேன்மேலெனக் கூப்பிடாநிற்பர். [கொடுவினைத்தூற்றுள் நின்று] - கூப்பீடுகேட்டுஇரங்கி எடுப்பதாக ஈஶ்வரன் கை நீட்டினால், நீட்டின கை வாங்கவொண்ணாத நிலத்திலே யிருந்தாயிற்றுக் கூப்பிடுவது. [பாவியேன்]- ஒருவால்மீகிபரிஸரத்திலே யிருந்துதான் கூப்பிடப்பெற்றேனோ? [பலகாலம் வழிதிகைத்து அலமருகின்றேன்] - காலமெல்லாம் அறிவுகேட்டுத் தமோறுகிற நான். [மேவி இத்யாதி] - ஆபத்துக்கு உதவாதவனாய்த் தான் படுகிறேனோ? * "கோகோபீஜநஸங்குலம் அதீவார்த்தம்" (கோகோபீஜநஸங்குலம் அதீவார்த்தம்) என்கிறபடியே நோவுபட்ட அன்று ஒருபசுவின்மேலே ஓரிடையன் மேலே ஒருதுளி விழாதபடி தோற்றிற்று ஒருமலையை யெடுத்து உபகரித்தவனே. [மேவி] - நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான தன் கையிலே கோலைத் தந்து 'பசுமேய்'என்றால், 'ரக்ஷகனான நமக்கு விஹிதமிறே' என்றிருக்கையன்றிக்கே அலப்யலாபமாகப் பொருந்தி. [அன்று]-அதுவும் ஒருகாலமே.

---

ஒன்பதாம்பாட்டு - 'கூவி' இத்யாதி. த்விதீயத்ருதீயகாதைகளிற் சொன்ன வாமந க்ருஷ்ணவதாரங்களை அநுவதித்துக்கொண்டு 'நிராசராகிறார் இப்பாட்டில்'என்கிறார் - 'வரையாதே' இத்யாதி. 'நிராசராகிறார்' என்றது - 'எங்கினித்தலைப்பெய்வன்' என்றத்தைப் பற்ற.

"தத்ஸ்வஸ்த்யஸம்ஹவேகு"'என்றிராதே கூப்பிடுவானென்?'என்கிற ஶங்கையையும் பரிஹரித்துக்கொண்டு அர்த்தம் - 'ஸ்வரூபஜ்ஞாந' இத்யாதி; ப்ராப்யத்வராதிஶயாதிதி பாவ:. 'கொடுவினைத்தூற்றுள் நின்று - கூவி' என்று அந்வயம் விவக்ஷிதம் இவ்வாக்யத்தில். ஸம்ஸாரமாகிற பெருந்தூறு என்றபடி. வீப்ஸைக்கு பாவம் - 'ஒருகால்' இத்யாதி. அநுபவித்து - ஸ்வரூபவிரோதாநுஸந்தாநத்தால் இதி பாவ:. 'கொடுவினை' இத்யாதிக்கு - க்ரூரமான பாபங்களுக்கு ஆகரமாய், புக்கால் புறப்படவொண்ணாத ஸம்ஸாரமாகிற தூற்றிலே அகப்பட்டுநின்று என்று ஸப்தார்த்தம்.'கூப்பீடுகேட்டிரங்கி' இதி- "ராஜ்ஞாம்ஶ்ரோதவ்யோ வ்யவஸ:"

இத்யாதி. 'தூற்றுள்நின்று - கூவிக்கூவி' என்ற பதத்தைக் கடாக்ஷித்து, 'பாவியேன்' என்றதுக்கு பாவம் - 'ஒருவால்மீகி' இத்யாதி. வால்மீக்யாஶ்ரமஸமீப வர்த்தநத்தால் பிராட்டிக்கு அப்போதே க்லேசம்போயிற்றிறே யென்றபடி. இங்குப் பாவமாவது - தார்மிகபரிஸராலாபம். வழிதிகைத்து - புறப்படவழியறியாதே ப்ரமித்து. தாத்பர்யார்த்தம்- 'அறிவுகெட்டு' என்று. இவ்வபதாநத்தைச் சொல்லுகிறவருடைய ஹார்த்தபாவம் - 'ஆபத்துக்கு' இத்யாதி. 'காத்தவன்' என்றதுக்கு இரண்டர்த்தம் - ரக்ஷித்தானென்னுதல், மேய்த்தானென்னுதல். 'மேவி' என்றதுக்கும் இரண்டர்த்தம் - ஸாவதாநமாக வென்னுதல், ஸ்வப்ரயோஜநமாக வென்னுதல். ப்ரதமார்த்தம் - 'கோகோபீ' இத்யாதி. அன்று - ஆபத்தசையிலே. த்விதீயார்த்தம் - 'நித்யஸூரிகளுக்கு' இத்யாதி. 'அன்று' என்றதுக்கு பாவம் - 'அதுவும்' இத்யாதி. ஆபத்திலே உதவி அவன்தானே ரக்ஷித்ததும் ஒருகாலமே

---

* ஸ்ரீ விஷ்ணுபுராணம்-ரு, ௧௧, ௧௩.

[வழிதிகைத்தலமருகின்றேன் - மேவி அன்று ஆநிரைகாத்தவன்] - காட்டிலே வழிதிகைத்தார்க்கு இடையர்போலேகாணும் வழிகாட்டுவோர்; "மாமேகம்ஶரணம்வ்ரஜ" (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்று வழிகாட்டினவனிறே, வேறுவழி காட்டினு ரில்லையே. திருத்தேர்த்தட்டிலே நின்று ஸகலாத்மாக்களும் உஜ்ஜீவிக்கும்படி வழிகாட்டினான் அவனிறே. [உலகம் இத்யாதி]-ஓரூர்க்கு உதவின வளவன்றிக்கே, ஸகலபதார்த்தங்களிலும் ஒன்றும் பிரிகதிர்ப்படாதபடி எல்லார்தலைகளிலுமொக்கத் திருவடிகளை வைத்து 'தான் ஸ்வாமி' என்னுமிடத்தை அறிவித்தவனை. [எங்கு இனித் தலைப்பெய்வனே]-எங்ஙனே கிட்டப்போகிறேன்? அந்த தூளிதாநத்துக்கும் தப்பின நான் பரீக்ஷை சொல்லிப் பெறப்புகுகிறேனோ? இத்தால், அவன்தானே வந்து உபகரித்தவன்று தப்பின நான் ஸாதநாநுஷ்டாநம் பண்ணி எங்கேசென்று கிட்டப்புகுகிறேனோ? என்று நசையறுகிறார். (௯)

## பத்தாம் பாட்டு.

தலைப்பெய்காலம் நமன்தமர்பாசம்விட்டால்
அலைப்பூணுண்ணும் அவ்வல்லலெல்லாம்அகலக்
கலைப்பல்ஞானத்து என்கண்ணனைக்கண்டுகொண்டு
நிலைப்பெற்றுஎன்னெஞ்சம்பெற்றது நீடுயிரே.

*ஆ.—(தலைப்பெய்.) உத்க்ராந்திவ்யஸநம்போலே அதிகோரமாய் அதிது:ஸஹமாயிருந்த என்னுடைய அந்தபகவத்விஶ்லேஷஜநித நிரவதிகவ்யஸநமும் 'அவனுடைய ஸர்வேஶ்வரத்வத்துக்கு வைகல்யம் வருகிறது' என்றுள்ள மஹாபயமும் நிஶ்ஶேஷமாக எல்லாம் போய், என் நெஞ்சும் நிலைநின்று என்னுடைய ஆத்மாவும் நித்யமாம்படி ஶாஸ்த்ரைகஸமதிகம்யனான எம்பெருமானைத் திருமலையிலே கண்ணாலே காணப்பெற்றேன் என்கிறார்.*

*ஒ.—பத்தாம்பாட்டில், இப்படி நிராஶராய் முடியப்புக்க ஆழ்வார், எம்பெருமான் தம்முடைய ஆர்த்தியெல்லாம் தீரத் திருமலையிலே நின்றருளினபடியைக் காட்டியருளக் கண்டு தரிக்கிறார்*

*[தலைப்பெய் என்று தொடங்கி.] - கிட்டுங்காலம் யமபடர் பாசத்தை வீசினால் படும் துக்கம்போலேயிருக்கிற பகவத்விஶ்லேஷஜநிதமான நிரதிஶய துக்கமெல்லாம் அகல. [தலை*

---

யென்றபடி. பதச்சேர்த்திக்கு ரஸோக்தியாக பாவம் - 'காட்டிலே' இத்யாதி. அப்படி வழிகாட்டினானோ இவன்? என்ன, 'மாமேகம்' இத்யாதி. 'அது அர்ஜுநனுக்கன்றோ, எல்லார்க்குமில்லையே' என்ன '.வாயும் வைபவ நூல்ஸ்ரு ஸாஸவதாரணம் க்ருதம்'' என்கிறத்தை உட்கொண்டு, எல்லார்க்கும் உஜ்ஜீவிக்க வழி காட்டினவன் இவனென்கிறார் - 'திருத்தேர்' இத்யாதி. மாமேக மித்யாதி வாக்யத்ரயம் - 'அத்ர ப்ரக்ஷிப்தம்' என்றும் சொல்லுவர்கள். அப்போது, 'காட்டிலே' இத்யாதி வாக்யத்துக்கு - 'இத்தால் ஸம்ஸாரத்திலே ப்ரமிக்கிறவர்களுக்குச் சரமஶ்லோகத்தைக் காட்டி ரக்ஷிக்குமவனென்று பாவம்' என்று அருளிச்செய்வர். 'உலகமெல்லாம்' இத்யாதிக்கு அர்த்தம் - 'ஓரூர்க்கு' இத்யாதி. ' அந்த தூளிதாநம் ' இதி - ரஸோக்தி:. தூளிதாநம் - பூரிதாநமிதி த்வநி: ; ஸ்ரீபாததூளிதாந மிதி ஸ்வபாவார்த்த:. பரீக்ஷையென்றதுக்கு - ஸாதநாநுஷ்டாநமென்று ஸ்வபாவார்த்தம்; வேதசாஸ்த்ராதிபரீக்ஷையிதி த்வநி:. ரஸோக்தியாலே சொன்னத்தை ஸ்வபாவோக்தியாலே அருளிச்செய்கிறார், 'இத்தால்' இத்யாதி. நசை - ஆசை. தலைப்பெய்கை -கிட்டுகை. "[illegible] [illegible]'' க்ரமேண அந்வய:. (௯)

என்று தொடங்கி] - வேதைகஸமதிகம்யனுயிருக்கிற க்ருஷ்ணனை அவனுடைய ப்ரஸாதத்தாலே ஸாக்ஷாத்கரிக்கப்பெற்று என்னுடைய மநஸ்ஸூம் நிலைநின்று ஆத்மநித்யத்வமும் நிலைநின்றது.

ப.—அநந்தரம், "எங்கினித்தலைப்பெய்வன்" என்கிற நைராஶ்யத்தைக் கண்ட க்ருஷ்ணன் தான் பிற்பாடர்க்கு உதவும்படி ப்ரமாணஸித்தமான ஆஸத்தியை ப்ரகாஶிப்பிக்க, அத்தாலே க்லேஶநிவ்ருத்தி பிறந்து ஸந்துஷ்டராகிறார்.

நமன்தமர் - நமன்தமர், தலைப்பெய் காலம் - தலைப்படுங் காலம், பாசம் - பாசத்தை, விட்டால் - வீசினல், அலைப்பூண் - (அவர்களால்) அலைக்கப்படுகையை, உண்ணும் - அநுபவிக்குமா போலே (விரோதிதர்ஶநத்தால்) வந்த, அ - அந்த, அல்லலெல்லாம் - து꞉கமெல்லாம், அகல விட்டுப்போம்படியாக, பல் - பலவகைப்பட்ட, கலை - வேதங்களாலே, ஞானம் - அறியப்பட்டு, என் - எனக்கு ஸுலபனன, கண்ணனை - க்ருஷ்ணனை, கண்டுகொண்டு - கண்டுகொண்டு, என் நெஞ்சம் - (ஶிதிலமான) என்நெஞ்சு, நிலை - ஸ்தைர்யத்தை, பெற்று - பெற்று, உயிர் - (ஆர்த்தியாலே முடியப்புக்க) ஆத்மாவும், நீடு - நித்யதையை, பெற்றது - பெற்றது.

இ.—பத்தாம்பாட்டில், இப்படி நிராஶராய் முடியப்புக்கவளவிலே 'அவதாரத்துக்குப் பிற்பட்டார்க்கன்றோ நாம் திருமலையிலே வந்து நிற்கிறது' என்று திருமலையிலேவந்துநின்றருளினபடியைக் காட்டக் கண்டு தரிக்கிறார்.

[நமன்தமர் தலைப்பெய் காலம்] - யமபடர் கிட்டுங் காலம். ஏற்கவே முகங்காட்டினார்களாகில் இவர் பாபம் பண்ணாரிறே. "ஜஷுகஷுாயி நஹி." [பாசம்விட்டால்] - ஶரீரவிஶ்லேஷத்துக்குப் பாசத்தை வீசினல். [அலைப்பூணுண்ணும்] - வாஸனை இங்கே இழுக்க அவர்கள் சரீரத்தை விஶ்லேஷிப்பிக்கத் தேட, படும் வ்யஸநம், 'அவ்வல்லல்' என்னுமித்தனை; த்ருஷ்டாந்த மில்லை. அந்தத் துக்கம்போலே யிருக்கிற பகவத்விஶ்லேஷஜநித துக்கமெல்லா மாதல். "[illegible]". 'பகவதலாபமேயான பின்பு யமவஶ்யதையும் வந்ததன்றோ?' என்று பணிக்குமாம் ஆண்டான். [கலை இத்யாதி] - பல கலைகளாலும் அறியப்படுமவன். "[illegible]" என்று வேதைகஸமதிகம்யனை க்ருஷ்ணனைக் கண்டுகொண்டு, [நிலைப்பெற்று என்நெஞ்சம்] - "என்மனத்தினை நீ சிந்தாமற் செய்யாய்" என்று சிதிலமான நெஞ்சம்தான் தரித்தது. [உயிர் நீடு பெற்றது] - "எங்கினித் தலைப்பெய்வன்" என்று முடியப்புக்க ஆத்மவஸ்துவும் நித்யமாயிற்று. நித்யவஸ்துவுக்கு நாஶமாவது - தாஸ்யாஸித்தி. தாஸ்யமே நிரூபகமானல் ததலாபத்தில் நிரூப்யமும் இல்லையாமிறே. 'சேதநாதிவிஸஜாதீயம்' என்ன பகவதலாபத்தில் அழியாதொழியுமோ?

ஈடு.—பத்தாம்பாட்டு. இவர் நசையற்றவாறே 'க்ரமப்ராப்தி பற்றுதுபோலே யிருந்தது' என்று 'நீர் ஒரு பெருவிடாய ருண்டு என்று அறிந்து, உமக்காக வன்றோ வடக்குத்திருமலையிலே நிற்கிறது?' என்று அந்நிலையைக் காட்டித் தரிப்பிக்கத் தரித்து இனியராகிறார்.

[தலைப்பெய்காலம் நமன்தமர்] - தலைப்பெய் காலம் - யமபடர் வந்து கிட்டுங் காலம். இவன் ஜீவிக்கும் நாள் * ("நமக்கு எதிருண்டோ?" என்று மூலையடியே நின்று வேண்டிற்றுச் செய்து

பத்தாம்பாட்டு - 'தலைப்பெய்' இத்யாதி. நசையற்றவாறே என்றது - 'எங்கினித்தலைப்பெய்வன்' என்றத்தைப் பற்ற. பற்றுது - பொருது. 'கண்ணனைக் கண்டுகொண்டு' என்றத்தைப் பற்ற - 'அந்நிலையைக் காட்டி' இத்யாதி. இனியராகிறார் - ப்ரீதராகிறார்.

'தலைப்பெய்காலம்' என்று விசேஷித்ததுக்கு பாவம் - 'இவன் ஜீவிக்கும்' இத்யாதி. 'நமன்தமர் தலைப்பெய்காலம் - நமன் தமர் பாசம் விட்டால்' இதி காகாக்ஷிந்யாயேந உபயத்ர அந்வேதவ்ய꞉.

* குண்டலிதம் பல ஸ்ரீகோஶங்களில் இல்லை யென்பர்.

3—9

திரியும்; நமன் தமர், நாடோறும்) செய்த குற்றங்களுக்குப் பட்டோலை யெழுதி, பலாநுபவ ஸமயத்திலே வந்து முகங்கட்டுவோர்கள். [பாசம் விட்டால்] - அவர்கள் தங்கள்கையில் பாசத்தை வீசினல். [அலைப்பூணுண்ணும்] - இவனுக்கு இவ்வருகே நசை கிடக்கையாலே அது இங்கே இசிக்க, அவர்கள் அங்கே இசிக்க, படும் க்லேசத்துக்கு ஓரவதியில்லையிறே. 'அவ்வல்லல்' என்னுமித்தனை, த்ருஷ்டாந்த மில்லை. 'அதேல்லாம் காணக்காண விட்டுக் கடக்கநிற்க, அத்தோடு ஸஜாதீயமான அல்லல்' என்று எம்பார் அருளிச்செய்வது: அவ்வோபாதி க்லேசம் போருமாயிற்று பகவத் விச்லேஷத்தால் வருமது, இவர்க்கு. அன்றிக்கே, 'பகவதலாபமேயான பின்பு யமவச்யதையும் வந்ததே யன்றோ? என்று அந்த யமவச்யதை போம்படியாக' என்று ஆண்டான் நிர்வஹிக்கும்படி. [கலை இத்யாதி]-"வெடெஸ்வஸெவெரஹமெவவெஷ்ரு:" [வேதைச்சஸர்வைரஹமேவவேத்ய:] என்கிறபடியே பலகலைகளாலும் அறியப்பட்ட உத்கர்ஷத்தை யுடையனா யிருந்துவைத்து, நெடுங்கைநீட்டாக ப்ரமாணங்களிலே கேட்டுப்போகாதபடி கண்ணுக்கு விஷயமாக க்ருஷ்ணனாய் வந்து அவதரித்தவனைக் கண்டுகொண்டு. [நிலைப்பெற்று என்நெஞ்சம்] - 'சிந்தாமற் செய்யாய்' என்ற நெஞ்சும் ஒருபடி தரிக்கப் பெற்றது. [உயிர் நீடு பெற்றது]-அச்சேத்யமாய் அதாஹ்யமா யிருக்கிற ஆத்மவஸ்துவும் அழியப்புக்கது, இப்போதாயிற்று நித்யத்வம் பெற்றது. நித்யமான ஆத்மவஸ்துவுக்கு நாசமாவது - தாஸ்யாஸித்தி. "ஶெஷ்ராதிவிஸஜாதீயம்" என்ற இத்தனை போக்கி, தன்னில் ஸூக்ஷ்மமாய்ப்புக்கு வ்யாபித்து அழிக்கவல்ல பகவத்குணங்களுக்கு அழியாமையில்லையிறே; சேஷவஸ்துவுக்கு சேஷத்வம் நிரூபகமானால், நிரூபகத்தை யொழிய நிரூப்யாஸித்தி யில்லையே. (௧௦)

அலைப்பு - அலைதல். ஊண் - அதாகிற ஊண். உண்ணும் - அநுபவிக்கும். அவ்வல்லலெல்லாம் - அந்தத் து:கமெல்லாம். அவர்களால் அலைக்கப்படுகையை அநுபவிக்கும் அந்த து:கமெல்லா மென்று சப்தார்த்தம். அது - நசை. இசிக்க-இழுக்க. 'இவனுக்கு இவ்வருகே நசைகிடக்கையாலே' இதி—அத்ர-[illegible] இத்யநுஸந்தேயம். தச்சப்த தாத்பர்யம் - 'அவ்வல்லல்' இத்யாதி. [illegible] 'பகவதாலாபவிஷயம் [illegible]' என்றிருக்க, வைஷ்ணவனுக்கு யமவச்யதை யுண்டாகக் கூடுமோ? என்ன, தத்வதா பரிஹரிக்கிறார்-'அத்தோடு ஸஜாதீய' இத்யாதிநா; 'அன்றிக்கே' இத்யாதிநாச. விவரணம்-'அவ்வோபாதி' இத்யாதி. அவ்வோபாதி - யமவச்யதையோபாதி. ஆண்டான் நிர்வாஹத்துக்குக் கருத்து - ஸ்வதந்த்ரனான ஈச்வரன் உபேக்ஷித்தால் யமவச்யதையுண்டா மென்று; நித்யஸூரிகளோபாதி நித்யாநுபவயோக்யதை யுண்டாயிருக்க விச்லேஷம் கூடினாற் போலே; இது ஸ்ரீபராசுர்வான்பக்கலிலே கண்டதிறே. கலைகளாலும் அறியப்பட்ட இதி—ஜ்ஞாயத இதி ஜ்ஞாநமென்றாய், அறியப்பட்ட வென்றபடி. நெடுங்கை நீட்டாக - அதிதூரமாக. 'உயிர் நீடு பெற்றது' என்றதுக்கு இரண்டு பாவம்; முந்தினது-'அச்சேத்யமாய்' இத்யாதி. இரண்டாவது-'நித்யமான' இத்யாதி. முந்தின அர்த்தத்திலே 'இப்போதாயிற்று நித்யத்வம் பெற்றது' என்கைக்கு, அச்சேத்யமான ஆத்மவஸ்துவுக்கு அழிவுண்டோ? என்ன, 'சேத்யாதி' இத்யாதி. த்விதீயார்த்தத்திலே, தாஸ்யாஸித்தி விநாசமானபடி யென்? என்ன, 'சேஷவஸ்துவுக்கு' இத்யாதி. நமன்தமர் - தலைப்பெய்காலம் - நமன்தமர் பாசம் விட்டால் இத்யாரப்ய, கண்டுகொண்டு - என் நெஞ்சம் - நிலைப்பெற்று - உயிர் நீடு பெற்றது இத்யந்வய:. நிலை - ஸ்தைர்யம். நீடு - நித்யத்வம். பெற்று - கடைக்குறைத்தல், பெற்றது. கீதாஸு பஞ்சதசே, "ஸவஸ்யவாஹம் ஹ்ருதிஸந்நிவிஷ்டோ மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச। வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ வேதாந்தக்ருத்வேதவிதேவ சாஹம்॥" தத்ரைவ த்விதீயே, "அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோஶோஷ்ய ஏவ ச। நித்யஸ்ஸர்வகதஸ்ஸ்தாணுரசலோயம் ஸநாதந:" (௧௦)

# பதினோராம் பாட்டு.

உயிர்களெல்லாவுலகமு முடையவனைக்
குயில்கொள்சோலைத் தென்குருகூர்ச்சடகோபன்
செயிரில்சொல்லிசைமாலை ஆயிரத்துள் இப்பத்தும்
உயிரின்மேலாக்கை ஊனிடையொழிவிக்குமே.

ஆ.—(உயிர்கள்.) இப்படி ஆழ்வார் உளராகையாலே எம்பெருமானுடைய ஸர்வேச்வரத்வமும் அவிகலமாய், திருநகரியும்அடங்க ஸம்ருத்தமாயிற்று என்கிறது - 'உயிர்களெல்லாவுலகமுமுடையவனைக் குயில்கொள்சோலைத்தென்குருகூர்' என்கிற இடம். இனிமேல் இத்திருவாய்மொழி பகவதநுபவவிரோதியான ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் போக்கும் என்கிறது.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் தம்மைப்போலே நோவுபடாதே ஸம்ஸாரவிமோசநத்தைப் பெறுவர் என்கிறார்

[உயிர்கள் என்று தொடங்கி.] - தம்மைப்பெறுகையாலே பூர்ணமான ஐச்வர்யத்தையுடையனானவனை, தாம் உஜ்ஜீவிக்கையாலே ஸம்ருத்தமான திருச்சோலையோடு கூடின திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த நிர்த்தோஷமான சப்தஸந்தர்ப்பத்தையுடைய ஆயிரத்திலும் இத்திருவாய்மொழியானது தன்னை அப்யஸித்தார்க்கு ஆத்மாவுக்கு ப்ரக்ருதிஸம்பந்தஹேதுவான கர்மத்தைப் போக்கும்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக, தாம் அபேக்ஷித்த சரீரஸம்பந்த நிவ்ருத்தியை அருளிச்செய்கிறார்.

எல்லாவுயிர்கள் - எல்லாவுயிர்களையும், எல்லாவுலகமும் - எல்லாலோகங்களையும், உடையவனை - உடையவனை, குயில்கொள் - குயில்களையுடைத்தான, சோலை-சோலைகளையுடைய, தென்-அழகிய, குருகூர்ச் சடகோபன்-திருநகரிக்குநிர்வாஹகரான ஆழ்வார் அருளிச்செய்த,செயிர்-லக்ஷணக்குறை, இல் - அற்ற, சொல் - சொல்லையுடைத்தாய், இசை - இசையோடுங்கூடின, மாலை - தொடையையுடைத்தான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இப்பத்தும் - இப்பத்தும், உயிரின்மேல்-ஆத்மாவுக்கு வந்தேறியாய் பந்தகமான, ஊன்ஆக்கையிடை - மாம்ஸாதிமயசரீரத்தினிடைநின்றும், ஒழிவிக்கும் - கழியும்படி பண்ணும். செயிர் - குற்றம். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தார்க்கு சரீரஸம்பந்தத்தை அறுத்துக்கொடுக்கும் என்கிறார்.

[உயிர் இத்யாதி] - 'உயிர்பெற்றது' என்று இவர் தரித்தவாறே அவன் எல்லாவுயிர்களையும் எல்லாலோகங்களையும் உடையவனானான். ஸர்வரக்ஷகனுக்கு ரக்ஷ்யத்திலே ஒன்று குறையிலும் ரக்ஷகத்வமொன்று ஒறுவாயாமிறே. [குயில் இத்யாதி] - இவர் உருவினவாறே "அவி வ்ருக்ஷா: வநௌகஸ:" என்று திருச்சோலையும் உருவி, இவர்தரித்தவாறே "அகாலபலிநோ வ்ருக்ஷா:" என்கிறபடியேயாய் அங்குள்ள குயில்களும் ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டுக் களிக்கும்படியாயிற்று. [செயிர் இத்யாதி] - செயிர் - குற்றம், இல் - இல்லாமை; ஆக, நிர்த்தோஷமான சப்தஸந்தர்ப்பத்தையுடைய ஆயிரம். இப்பத்துக்குக் குற்றமில்லாமையாவது-"எங்கினித் தலைப் பெய்வன்" என்றது மெய்யாயிருக்கை. [உயிரின்மேல் ஊனிடைஆக்கை ஒழிவிக்கும்] - சரீரஸம்பந்தஹேதுவான கர்மத்தைப் போக்கும்.

ஈடு.—நிகமத்தில், * (இத்திருவாய்மொழி, அப்யஸித்தார்க்கு ஶரீரஸம்பந்தத்தை அறுத்துக்கொடுக்கும் என்கிறார்.) தம்முடைய ஆர்த்தியெல்லாம் போம்படி அவன் வந்து முகங்காட்ட, 'நிலைப்பெற் றேன்னெஞ்சம் பெற்றது நீடுயிர்' என்றார் இவர்; அவன் முகத்தைப் பார்த்தவாறே அவனுயிர் நீடுபெற்றதாயிருந்தது.

[உயிர்கள் இத்யாதி] - இவர் தரித்தபின்பாயிற்று அவன் எல்லாவுலகமும் எல்லாவுயிருமுடையவனாயிற்று; இங்கு இவரொருவரையுமிறே இழக்கப்புக்கது, அங்கு ஸவிபூதிகனானவனையாயிற்று இழக்கப்புக்கது. ஏகாங்கம் விகலமானாலும் அங்கவைகல்யமுண்டிறே; இவரைப் பெற்ற பின்பாயிற்று ஈஶ்வரத்வம் பூர்ணமாயிற்று. [குயில் இத்யாதி] - ப்ரகாரியானவன் தரித்து, ப்ரகாரபூதரான இவரும் தரித்து, இவர் தம்மளவன்றிக்கே திருநகரியும் தரித்து, அங்கு உண்டான சோலைகளும் தரித்து, அங்குஉண்டான திர்யக்குகளுடைய ஹர்ஷஸூசகமான த்வநியும் கேட்கும்படியாயிற்று. "அகாலபலிநோவ்ருக்ஷா:" [அகாலபலிநோவ்ருக்ஷா:] என்னும்படியாயிற்று. [செயிரில்சொல் இத்யாதி] - குற்றமற்ற இயலையும் இசையையுமுடைத்தான மாலை. தேஹஸம்பந்தத்தோடே பொருத்தமுண்டாயிருக்கச் சொல்லுதல், பகவல்லாபமொழியச் செல்லும்படியாயிருத்தல் செய்யச் சொன்ன வார்த்தையல்ல.'எங்கினித்தலைப்பெய்வன்' என்கிற உக்திக்கு நினைவு தப்பியிருக்குமாகில் அது குற்றமிறே. இப்பத்துஞ் செய்வ தேன்? என்னில்,—[உயிரின்மேல் - ஊனிடை - ஆக்கையொழிவிக்குமே] - ராஜபுத்ரனையும் வேடனையும் கூடப் பிணைத்தாற்போலே, நித்யமாய் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் ஈஶ்வரஶேஷமாயிருக்கிற வஸ்துவையும், பரிணாமித்ரவ்யமான அசித்தையும் தன்னிலேபந்தித்துக்கிடக்கிற அவித்யாதிகளை வாஸனையோடே போக்குவிக்கும். இவர்க்கு இப்போது உண்டாய்ப் போக்குவிக்குமென்கிறதல்ல; "பொல்லாவாக்கையின் புணர்வினையறுக்கலுறு" என்கிறது, பாயிதாநுவ்ருத்தியாலே; † "இந்நின்றநீர்மையினியாமுறாமை" என்ற போதே

நிகமம் - 'உயிர்கள்' இத்யாதி. இத்திருவாய்மொழி அப்யஸித்தார்க்கு ஶரீரஸம்பந்தத்தை யறுத்துக் கொடுக்கு மென்கிறா ரென்று பாட்டுக்கு அவதாரிகை கண்டுகொள்வது.

பத அவதாரிகை-'தம்முடைய' இத்யாதி. ப்ரணயித்வத்தைப்பற்றத் தாத்பர்யம் - 'இவர் தரித்த' இத்யாதி. 'எல்லாம்' என்றத்தை இரண்டிடத்திலுங்கூட்டி அருளிச்செய்கிறார் - 'எல்லாவுலகமும் எல்லாவுயிரும்' என்று. உக்தார்த்தத்தை த்ருடீகரிக்கிறார் - 'இங்கிவர்' இத்யாதி. இங்கு - ஆழ்வார்திருவுள்ளத்திலே. அங்கு - ஈஶ்வராபிப்ராயத்திலே. "ஐயிஜீவிதஶாயத்ஶாவவஸ்யஹோதந:। ஶாத்ணாணூஹோவா ஹோதவாஜகமவஸ்ய", "கூயிகிஷுப்ஶாவம்ணு" இத்யாதி அநுஸந்தேயம். வஸ்துஸ்திதியைப் பற்றத் தாத்பர்யாந்தரம்-'ஏகாங்கம்' இத்யாதி. அங்கவைகல்யமுண்டிறே யென்ற அநந்தரம் - 'அப்படியன்றிக்கே' இதி அத்யாஹார்யம். செயிர்-குற்றம். இயலுக்குக் குற்றமேது? என்ன, 'தேஹஸம்பந்தம்' இத்யாதி. 'எங்கினித்தலைப்பெய்வன் பொல்லாவாக்கையின் புணர்வினை யறுக்கலுறு என்கிற உக்திகளுக்கு' என்று கூட்டுவது. உக்தியும் நினைவும் ஏகரூபமாயிராமை குற்ற மென்றபடி. மநஸோ தேஹஸங்கித்வம், பகவதநுபவேந விநா நாரணஞ்ச உக்தேர்த் தோஷோ பவதி கிம் இத்யத்ராஹ-'எங்கினி' இத்யாதி. 'மேல்' என்று - இடமாய், உயிரினிடத்திலும் ஊனிடத்திலு முண்டான ஆக்கை யொழிவிக்கு மென்றபடி. 'மேல்' என்றது - ஸப்தமி. ஆக்கை - அவித்யாதிபந்தம். உயிரினிடத்திலும் ஊனிடத்திலும் உண்டாகையாவது-இரண்டையும் தன்னிலே பந்தித்துக்கொண்டிருக்கை. ஶரீரமாத்மாநஞ்ச பந்தயந்தோவித்யாதய இதி யாவத். "ஸாக்ஷிணவ்யஶக்ஷஸ்யகொஹதஸ்வாக்ஷிணை" என்று, தாம் 'பொல்லாவாக்கையின் புணர்வினையறுக்கலுறு' என்று கூப்பிடாநிற்க, ஸ்வப்ரபந்தத்தாலே தம்மையிட்டு அவர்களுக்கு ப்ரக்ருதிஸம்பந்தம் அறக் கூடுமோ? என்ன, 'இவர்க்கு இப்போது' இத்யாதி. ஆனால், 'அறுக்கலுறு' என்று ப்ரார்த்திக்கைக்கு அடியேது? என்ன, 'பொல்லாவாக்கையின்' இத்யாதி. பாதிதாநுவ்ருத்தியாவது - ரஜ்ஜுவில் வந்த ஸர்ப்பப்ராந்தி பாதிதமாயிருக்கச்

* குண்டலிதம் - அரும்பதவிருத்தம்; சில ஸ்ரீகோஶங்களில் இல்லை யென்பர். † திருவிருத்தம்—க.

ஈஶ்வரன் இவர்க்கு இதுபோவதாக நினைப்பிட்டான்; ஆனாலும், இவர்கூப்பிட்டுக்கும் ஒருபலம் வேணுமே? இவரோடு ஸம்பந்தமுடையாரானவர்கள் ஶரீரஸம்பந்தத்தை அறுத்துக்கொடுக்கும்.

முதற்பாட்டில்- 'நீ தந்த கரணங்களைக்கொண்டு அநர்த்தத்தை விளைத்துக்கொண்ட நான் உன்னை வந்துகிட்டுகை என்று ஒன்றுண்டோ?' என்றார்; இரண்டாம்பாட்டில் - 'இப்படிசூழ்த்துக் கொண்ட பாபங்களைப் போக்கித் தேவரீரை நான் எப்போது வந்து கிட்டக்கடவேன்?' என்றார்; மூன்றாம்பாட்டில் - 'இதுக்குமுன்பு உன்னைப்பெறுகைக்குத் தந்த கரணகளேபரங்களைக்கொண்டு நான் சூழ்த்துக்கொண்ட பாபங்கள் 'நான்போக்கிவர' என்றால் அது செய்யப்போகாது; இனி நான் அறியாததாய் நீ அறிந்திருப்பதொரு உபாயத்தை அருளிச்செய்யவேணும்' என்றார்; நாலாம்பாட்டில் - 'உன்னை யொழிந்த வ்யதிரிக்தங்களிலே என்னுடைய தாழ்ச்சியைத் தவிர்த்து உன்திருவடிகளிலே வாழ்ச்சியேயாம்படி பண்ணவேணும்' என்றார்; அஞ்சாம்பாட்டில்-'அப்படிசெய்யப்பார்த்திலையாகில் உன்போக்யதையை எனக்கென்றிய அறிவித்தாய்?' என்றார்; ஆறும்பாட்டில் - 'இல்லாதவன்று உண்டாக்கின அருமையுண்டோ உண்டாக்கின இதுக்கு ஒரு க்ருதஜ்ஞதாநம் பண்ண?' என்றார்; ஏழாம்பாட்டில் - 'நம்படியறியாதே நாம் அவனை வெறுக்கிறதேன்?' என்றார்; எட்டாம்பாட்டில் - 'தீரக்கழிய ஸாதநாநுஷ்டாநம்பண்ணினேனோ, நான் இங்ஙனங்கூப்பிடுகைக்கு?' என்றார்; ஒன்பதாம் பாட்டில் - 'அந்த த்ரைவிக்ரமாபதாநத்துக்குத் தப்பின நான் இனி எங்கே கிட்டப்போகிறேன்?' என்றார்; பத்தாம்பாட்டில் - அவ்வளவிலே வந்து அவன் முகங்காட்டித் தரிப்பிக்கத் தரித்தார்; நிகமத்தில் - பலஞ்சொல்லித் தலைக்கட்டினார். (கக)

---

*த்ரவிடோபநிஷத் ஸங்கதி:*—ஸம்கோசிதஸ்வகரணஸ்வஹரிம் யதேஷ்டம் ஸஞ்ஜீவநாஹ்ருதி விநஷ்டஶரீரிண: । ஸ்வஶ்ராவிதஸ்வஹ்ருதிணா ஸ்வஸ்வஹிதயைவ ஹாரமேஷ்வ ஶக்திரிதி தச்சதகம் விதயே ॥

*த்ரவிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளி:*—ஸ்வாத்மஜ்ஞாநாவலோகாநுரூப யாரணிஹரோதந்த்ரோத்ரஜ்ஞ்யஸ்ய ஹ்ருஷ்டிஜோதந்த்ரநிகோசிவோ நிரவதிரஸத்வஸாமிரய்ய க்ஷேமதிஷ: । நித்யாவாஸ்யஸ்வாமோ நிவிஷ்வஸம்ஶ்ரேமாவநஸாஜ்ஞிவத்ருதிஷ்ட ஷண்ணதிஷ்டிக்ருதயாயிவர்வஶதாம் வைக்ஷிணோமேகநாயஃ ॥

| | |
|---|---|
| *திருவாய்மொழி நூற்றந்தாதி:*— | *முன்னமழகரெழில் மூழ்குங்குருகையர்கோன்*<br>*இன்னவளவென்ன வெனக்கரிதாய்த்—தென்னக்*<br>*கரணக்குறையின் கலக்கத்தைக் கண்ணன்*<br>*ஒருமைப்படுத்தா னொழித்து.* |

---

*செய்தேயும் மீளவும் அநுவர்த்திக்கை. அப்படி முன்பே பாதிதமோ இது? என்ன, 'இங்நின்றநீர்மை' இத்யாதி. ஆனால் இவர் இப்படி சொன்னதுக்குக் கருத்தென்? என்ன, 'ஆனாலும்' இத்யாதி.*

*இரண்டாம்பாட்டுத் தொடங்கி அஞ்சுபாட்டு வ்யாக்யாநாவஸரத்திலும், பூர்வார்த்தத்திலே நோக்காக - அவதாரிகை அருளிச்செய்து; நிகமத்திலே - உத்தரார்த்தத்திலே நோக்காக அருளிச்செய்கிறாரென்று கண்டுகொள்வது.*

*உயிர்களெல்லா வித்யாரப்ய, இப்பத்தும் உயிரின்மேல்-ஊனிடையாக்கை யொழிவிக்கு மித்யந்வய:. ''ஸுகாநாமுசிதோ நித்யம் து:காநாமவிசேஷவா: । ஸமந்தாதேவஸம்ப்ராப்ய வநவாஸமிதம் வ்ரதம்'' இதி யுத்தகாண்டாந்தே பரத்வாஜம்ப்ரதி ராம:.* (கக)

*ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே சரணம்.*

## மூன்றாந்திருவாய்மொழி—ஒழிவில்காலம்-ப்ரவேசம்

ஒ.—மூன்றாந் திருவாய்மொழியில், உன்னை அநுபவிக்கைக்கு விரோதியான ப்ரக்ருதியைப் போக்கவேணு மென்று எம்பெருமானை ஆழ்வார் அர்த்திக்க, 'உமக்கு அப்ரக்ருதி நம் மோட்டைப் பரிமாற்றத்துக்கு விரோதியல்ல; அநுகூலம்; இப்ரக்ருதியோடேகூட உம்மை அடிமைகொள்ளுகையி லுள்ள அபிநிவேசத்தாலேயன்றோ இங்கு நிற்கிறது' என்று வேதைக ஸமதிகம்யனான தான் திருமலையில் நின்றருளுகிறபடியைக் காட்டியருளக் கண்டு ப்ரீதராய், அவன் திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட அடிமைகளும் செய்யவேணு மென்று பாரிக்கிறார்.

ப.—மூன்றாந்திருவாய்மொழியில், இவர் 'சேஷத்வவிரோதியான தேஹஸம்பந்தாதிகளை நிவர்த்திப்பிக்கவேணும்' என்று அபேக்ஷிக்க, 'நிவ்ருத்தவிரோதிகரைக் கொள்ளும் சேஷவ்ருத்தியைக் கொள்ளுகைக்கன்றோ நாம் ஸந்நிஹிதராயிற்று?' என்று பெரியதிருமலையில் நிற்கிற நிலையை ப்ரகாசிப்பித்த ஈச்வரனுக்கு 'ஸர்வப்ரகாரசேஷவ்ருத்தியும் பண்ணுகையே சேஷபூதனுக்கு ஸ்வரூபம்' என்று அறுதியிட்டு அதிலே உத்யோகத்தைப் பண்ணுவதாக, கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியினுடைய ஸர்வாதிகசேஷித்வத்தையும், சேஷியினுடைய குணவிக்ரஹாதி வைலக்ஷண்யத்தையும், ஸர்வப்ரகாரவிலக்ஷணனுடைய ஸௌசீல்யத்வத்தையும், இப்படி ஸர்வாதிகனுடைய சீலாதிசயத்தையும், சீலவானுடைய போக்யதையையும், போகார்த்தமான ஆச்ரயண ஸௌகர்யத்தையும், அவன் நிற்கிற திருமலைதானே பரமஸாம்யப்ரத மென்னுமிடத்தையும், அது தன்னை அநுபவிக்கவே ப்ரதிபந்தகம் ஸ்வயமேவ நிவ்ருத்தமாமென்னுமதையும், அந்த தேச ஸம்பந்தத்தாலே தேசிகனான ஈச்வரனும் அநிஷ்டநிவர்த்தகனா மென்னுமதையும், அவன் தேசமான திருமலைதானே பரமப்ராப்யமென்னுமிடத்தையும் அருளிச்செய்து, ஏவம்வித தேசவர்த்தியான ஈச்வரன்பக்கல் கைங்கர்யமே ஸ்வரூபாநுரூப புருஷார்த்தமென்று உத்யுக்தராகிறார்.

இ.—மூன்றாந்திருவாய்மொழியில், உன்னை யநுபவிக்கைக்கு விரோதியான ப்ரக்ருதியைப் போக்கவேணு மென்று இவர் ப்ரார்த்திக்க, 'இப்ரக்ருதி நம்மோட்டைப் பரிமாற்றத்துக்கு விரோதியல்ல; இப்ரக்ருதியோடே உம்மை அடிமைகொள்ளுகையி லுள்ள அபிநிவேசத்தாலேயன்றோ இங்கு நிற்கிறது' என்று வேதைகஸமதிகம்யனான தான் திருமலையிலே நின்றருளுகிற படியைக் காட்டியருளக் கண்டு, ப்ரீதராய், அவன் திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட அடிமைகளும் செய்யவேணுமென்று "ஸஹவைதேஹ்யா ரம்ஸ்யஸே" என்று பாரிக்க இளையபெருமாளைப் போலே மநோரதிக்கிறார்.

ஈடு.—"நிலைப்பெற்றேனென்னெஞ்சம் பெற்றதுநீடுயிர்" என்று-அவனைக்கிட்டித் தம்முடைய ஸ்வரூபம் பெற்றவாறே, ஸ்வரூபாநுரூபமான அடிமை பெறவேணுமென்று பாரிக்கிறார் இத்திருவாய்மொழியில்.

ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே வந்த கரணஸங்கோசத்தை அநுஸந்தித்து நினைத்த வகைகளெல்லாம் பரிமாறப்பெறுமையாலே நொந்து, 'அவன் முதலிலே இத்தைத்தவிர்த்துத் தன்னை யநுபவிக்கைக்கு உறுப்பாக அநேகமுபாயங்களைப் பார்த்துவைத்தான்; அவற்றைத் தப்பினேன்; அவதா

---

'ஒழிவில்கால' ப்ரவேசே, ஸங்க்ரஹஸங்கதி – 'நிலைப்பெற்று' இத்யாதி. ஸ்வரூபம்பெற்றவாறே–'சேஷத்வவிசிஷ்ட ஸ்வரூபதாரணாநந்தர மித்யர்த்த:.

வ்ருத்தாநுவாதபூர்வகமாக விஸ்தரஸங்கதி – 'ப்ரக்ருதிஸம்பந்த' இத்யாதி. 'அநேகமுபாயங்கள்' என்றது தன்னைக் காட்டுகிறார், 'அவதாரங்களை' இத்யாதி. இது கீழ்த்திருவாய்மொழியில் த்விதீய த்ருதீய காதாப்ரமேயம். அந்தராத்மதை – சதுர்த்தகாதா ப்ரமேயம். 'இனிக்கிட்டி' இத்யாதி – நவமகாதா ப்ரமே

அதாவது - ஶ்ரமஹரமான வடிவைப் புகர் முட்டாக்கிட்டிருக்குமென்கையும், அந்தப்புகர்தன்னையே ஶ்ரமஹரமான வடிவுதான் க்ரஸித்துக்கொண்டிருக்குமென்கையும். இத்தால், ஒன்றையொன்று விடாதே இரண்டும் நிரபேக்ஷமென்கை. † (பீதாபா என்றது - ஸ்வதேஜஸ்ஸை விக்ரஹந்தான் பாநம்பண்ணிக்கொண்டிருக்குமென்றபடி.) ‘‘[illegible]’’ (தேஜஸாம் ராஶிமூர்ஜிதம்) என்னக்கடவதிறே. [எல்லாவுலகுந்தொழும் ஆதிமூர்த்தியென்றால் அளவாகுமோ]- இப்படி சொன்னால்தான் அவனுக்கு ஏற்றமாகப்போருமோ? ‘எல்லாவுலகுந் தொழு மாதிமூர்த்தியென்று லளவாகுமோ’ என்கைக்கு, ‘எல்லாவுலகுந் தொழு மாதிமூர்த்தி’ என்றுரோ பின்னை என்னில்?—‘ எண்ணில் தொல்புகழ் வானவரீசன் ’ என்று, ‘ ஈசன்வானவர்க்கென்பன்’ என்று அநுபாஷித்தவோபாதி, இங்கும் அப்படிசொன்னுரோ? என்னில்,—விழுக்காட்டாலே சொன்னுர். எங்ஙனே சொன்னபடி? என்னில்,—கீழே, ‘‘நீசனேன் நிறைவொன்றுமிலேன்’’ என்றுரே தம்மைத் தாழ்வுக்குத் தம்மை எல்லாரிலும் இவ்வருகாகச் சொன்னுரே; தாம் தொழுதபோதே எல்லாலோகங்களும் விழுக்காட்டாலே தொழுததாயிற்று; ‘எல்லாவற்றுக்கும் மேல்படி யமிழ்ந்தது’ என்றால்

---

[illegible]

*தோற்றும்படி ‘நீலமுண்டமின்னன்னமேனி’ என்பதே என்று ஈடுபட்டு அருளிச் செய்வர். ‘வஸ்துநோ த்வைரூப்யாஸம்பவாத் உக்தாகாரத்வயம் எப்படிகூடும்? என்ன, இத்தால் இத்யாதி. இத்தால்-முட்டாக்கிட்டிருக்குமென்கையும், க்ரஸித்துக்கொண்டிருக்கு மென்கையும் என்கிற இத்தால். நிரபேக்ஷம் - பூர்ணம். அதாவது -ஒரொன்றைப் பார்த்தால் ‘இதுவே ஸ்வரூபம், இதுவே ஸ்வரூபம்’ என்று தோன்றுமென்று தாத்பர்யம். பயில்கழுத்துப் போலேயிருக்குமிதி பாவ:. இத்தால், ‘நீலதோயத’ இத்யாதியாலே, வ்யுத்பத்தித்வயத்தாலும், ஶ்யாமளதையும் தேஜஸ்ஸும் உண்டென்று சொல்லாநிற்கச் செய்தே, ‘‘பீதாபா’’ என்று விசேஷிக்கையாலே - தேஜஸ்ஸே விஞ்சியிருக்குமென்று கருத்து; யத்வா, பீதாபா என்கிறது - பிராட்டியோட்டைச் சேர்த்தியாலேயாதல். ‘சோதியாகி’ என்கிற மூலபதத்துக்கு ப்ரமாணம் - ‘தேஜஸாம்’ இத்யாதி. அளவு - ஏற்றம். ‘எனக்குத் தன்னைத் தந்தான்’ இத்யாத்யவதாரிகாவாக்யத்திலே - புரோவாதாநுகுணமாக அநுவாதத்துக்கு அர்த்தம் சொல்லி, இங்கே - அநுவாதாநுகுண்யேந புரோவாதத்துக்கு அர்த்தத்தை ஶங்காபூர்வகமாக பலிப்பிக்கிறுர் - ‘எல்லாவுலகுந்தொழும்’ இத்யாதி. ‘எல்லாவுலகுந்தொழும்’ என்று - கீழே சொல்லவேணுமோ? என்ன, ‘எண்ணில்தொல்புகழ்’ இத்யாதி. என்று - என்றுசொல்லி. விழுக்காட்டாலே - அர்த்தாத். விவரணம் - ‘தாழ்வுக்கு’ இத்யாதி. இதுக்கு உதாஹரணம் - ‘எல்லாவற்றுக்கும்’ இத்யாதி. ‘மேல்படி’ என்று தாழ்வுக்கு ஸர்வாதிக்யம் சொல்லுகிறதென்று கருத்து. ‘சோதியாகையாலே - எல்லாவுலகுந்தொழும்’ என்று ஹேதுஹேதுமத்பாவேந தாத்பர்யம் - ‘யதார்ஹம்’ இத்யாதி. இதுக்கு அர்த்தம் - ‘தொழக்கடவோமல்*

---

*† குண்டலிதம் பல ஸ்ரீகோஶங்களி லில்லை யென்பர்.*

'கீழ்ப்படி யமிழ்ந்தது' என்று சொல்லவேண்டாவிறே. [தொழும்] - "**யதார்ஹம் கேஶவே வ்ருத்திமவஶா: ப்ரதிபேதிரே**" (யதார்ஹம் கேஶவேவ்ருத்தி மவஶா: ப்ரதிபேதிரே)-'தொழக் கடவோமல்லோம்' என்று ஸங்கல்பித்திருந்தவர்களும் தொழுதார்களாயிற்று, கண்டவாறே. [ஆதி மூர்த்தி]-ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸ்யமென்ன, ஜிஜ்ஞாஸ்யமான ப்ரஹ்மத்துக்கு லக்ஷணம் ஏது? என்ன, ஜகஜ்ஜந்மாதிகாரண மென்றதிறே. * (காரணவாக்யங்கள் ஒருங்கவிட்டது எங்ஙனே? என்னில்;— "**யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே - தத்விஜிஜ்ஞாஸஸ்வ - தத்ப்ரஹ்ம**" (யதோவாஇமாநி பூதாநிஜாயந்தே - தத்விஜிஜ்ஞாஸஸ்வ-தத்ப்ரஹ்ம) என்று) ஆஶ்ரயணீயவஸ்து ஏது? என்ன, '**காரணந்து த்யேய:**' (காரணந்துத்யேய:), "**யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் — முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்யே**" (யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம் - முமுக்ஷுர்வைஶரணமஹம்ப்ரபத்யே) என்று) ஜகத்காரணவஸ்து வென்றதிறே; அப்படியே, கீழ் எல்லா வுலகும் தொழு மென்று ஆஶ்ரயணத்தைச் சொல்லி, ஆதிமூர்த்தியென்று ஆஶ்ரயணீயவஸ்துவைச் சொல்லிற்றிறே. அளவாகாதென்று சொல்லும்போதும் சிறிதிடஞ்சொல்லிப் பின்னை "**யதோவாசோ நிவர்த்தந்தே**" (யதோவாசோ நிவர்த்தந்தே) என்னும் வேதம் வேண்டாவோ? [வேதியர் முழுவேதத்தமுதத்தை] - "**ஸாஹி ஶ்ரீரம்ருதா ஸதாம்**" (ஸாஹிஶ்ரீரம்ருதாஸதாம்) என்கிற படியே வேததரான ப்ராஹ்மணருடைய எல்லாவேதங்களாலும் ப்ரதிபாதிக்கப்பட்ட போக்யதா ப்ரகர்ஷத்தையுடையவனை. "**ஸர்வே வேதா யத்பதமாமநந்தி**" (ஸர்வேவேதாயத்பதமாமநந்தி) "**ஸர்வே வேதா யத்ரைகம் பவந்தி**" (ஸர்வேவேதாயத்ரைகம்பவந்தி), "**வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:**" (வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:) என்கிறபடியே எல்லா வேதங்களாலும் ப்ரதிபாதிக்கப்படுகிற ஆநந்தகுணத்தை யுடையவனை; "**ஆநந்தோ ப்ரஹ்ம**" (ஆநந்தோப்ரஹ்ம), "**ரஸோ வை ஸ:**" (ரஸோவைஸ:) என்னக்கடவதிறே. [தீதில்சீர்த் திரு வேங்கடத்தானையே] - தீதென்று குற்றம், இல்லென்று இல்லாமை; குற்றமற்ற குணங்களையுடை யவனை. விஷயீகரிக்குமிடத்தில் 'இன்னார் ஆவர், இன்னார் ஆகார்' என்னும் குற்றமின்றிக்கே

---

*லோம்' இத்யாதி. "த்ருஷ்ட்வா க்ருஷ்ணம் ததா யாதம் வ்யதவந்திவளஜஸா। யதார்ஹம்" இத்யாதி, ஸபாபர்வணி ராஜஸூயே பஞ்சஸப்ததிதமேத்யாயே. "தம் த்ருஷ்ட்வா தேத தா தேவா ஶ்ரத்தவந்த: மஹாயாஜ்ய: ஸர்வேப்யோ வேஷம் ஸ்தாநம் தேஜஸா ராஶிமப்யஜித்" இதி ப்ரதமேம்ஶே நவமே. ஆதி மூர்த்தி-காரணபூதனான ஸர்வேஶ்வரன். ஆதிமூர்த்தியாகையாலே - காரணவஸ்துவாகையாலே, 'எல்லாவுலகும் தொழும்' என்று விவக்ஷித்து, காரணவஸ்துவே உபாஸ்யமென்கைக்கு ஸூத்ரத்தையும் ஶ்ருதியையும் அருளிச் செய்கிறார் க்ரமேண; அதில் முற்பட "அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா, ஜந்மாத்யஸ்ய யத:" என்கிற ஸூத்ரத்தை அருளிச்செய்கிறார் 'ப்ரஹ்மஜிஜ்ஞாஸ்யம்' இத்யாதி. காரணவாக்யங்களென்று திருத்துவாக்யம்; அநந்தரம் "த்யேய: காரணந்து த்யேய:" என்கிற ஶ்ருத்யர்த்தம்-'ஆஶ்ரயணீயவஸ்துவேதென்ன' இத்யாதி. இயம்ஶ்ருதி: அதர்வஶிகாயாம். தத்வத்ப்ராக்ருதே கிமித்யத்ராஹ - 'அப்படியே' இத்யாதி. மேலுக்கு அவதாரிகை - 'அளவாகாதென்று' இத்யாதி. 'ஸாஹிஶ்ரீரம்ருதாஸதாம்' இதி - யஜுஷி. ஸா-ஶ்ருதி:, ஸதாம்-அம்ருதா-நித்யா, ஶ்ரீ:-தநமித்யர்த்த:. "ப்ராஹ்மணாநாம் யந்நம் வேத:" என்னக்கடவதிறே. வேதியர் - வேததரர். 'அமுதத்தை' என்றதுக்கு, ஸ்வரூபநிஷ்டபோக்யதாபரமாகக் கீழ் அருளிச்செய்து, குணக்ருத போக்யதாபரமாக அர்த்தாந்தரம் - 'ஸர்வேவேதா:' இத்யாதி. 'வேதைஶ்சஸர்வை'ரித்யாதி - கீதாஸு பஞ்ச தஶே, பூர்வமேவ லிகிதம். ஸ்வரூபபோக்யதைக்கு ப்ரமாணம் - 'ஆநந்தோப்ரஹ்ம' இத்யாதி. சீருக்குக் குற்ற மேது? என்ன, 'விஷயீகரிக்கும்' இத்யாதி. 'எல்லாவுலகுந்தொழுமாதிமூர்த்தி என்றதிற்காட்டில் 'தீதில் சீர்'*

---

* *குண்டலித க்ரந்தம் ப்ரக்ஷிப்த மென்பர்.*

யிருக்கை. கீழ் "எல்லாவுலகுந்தொழு மாதிமூர்த்தியென்று ளளவாகுமோ" என்றதிற்காட்டில் ஏற்றமாகச்சொன்ன அர்த்தம் என்? என்னில்,—"ஈசன் வானவர்க்கென்பன்" என்றதிற்காட்டில், "என் கண்பாசம்வைத்த" என்னுமிடத்தில் ஏற்றங் கண்டோம்; அவ்வோபாதி 'எல்லாவுலகுந்தொழும்' என்றதிற்காட்டில் 'தீதில்சீர்' என்றவிடத்தில் ஏற்றமேன்? என்னில்,—என்னை விஷயீகரித்தானென்ற இது ஏற்றமோ? என்னில் தாழ்ந்தாரைத் தேடிக் கிடையாமையாலே பட்டினிவிட்டு **"ஆஶயாயதிவாராமஃ"** (ஆஶயாயதிவாராமஃ) என்கிறபடியேஅவஸரப்ரதீக்ஷனாயிருக்கிறவனுக்கு. "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்ற இவருடைய குற்றத்தைக் குணமாகக்கொண்டு ஸ்வீகரித்து, இவருக்கு அவ்வருகு குற்றமுடையாரைத் தேடிக் கிடையாமையாலே நிற்கிறானாயிற்று. ரக்ஷகனுக்கு ரக்ஷ்யவர்க்கம் பெற்றவளவிலே த்ருப்திவருமது ரக்ஷகத்வத்துக்குக் குற்றமாமிறே; **"ஸந்துஷ்டஃக்ஷத்ரியஸ்ததா"** (ஸந்துஷ்டஃக்ஷத்ரியஸ்ததா). சீருக்குத் தீதாவது - ஆஶ்ரயிப்பார் குணகுணநிரூபணம் பண்ணுகை. (ரு)

# ஆறாம் பாட்டு.

வேங்கடங்கள் மெய்ம்மேல்வினைமுற்றவும்
தாங்கள்தங்கட்கு நல்லனவேசெய்வார்
வேங்கடத்துறைவார்க்கு நமவென்ன
லாங்கடமை அது சுமந்தார்கட்கே.

**ஆ.**—(வேங்கடங்கள்.) இந்தப்ராப்யத்தைப் பெறுகைக்கு உபாயம் ஏது? என்னில், ஸர்வாதிகாரமாய் அத்யந்தஸுகரமாயிருந்த வேங்கடத்துறைவார்க்கு நமஃ என்கிற இச்சொல்லைச் சொல்லவே அந்தக் கைங்கர்யப்ரதிபந்தகமான பாபங்களும் கரிஷ்யமாணமான பாபங்களும் எல்லாம் நிஶ்ஶேஷமாக நஷ்டமாய்ப்போம்; பின்னைத் தந்தாமுகந்தபடியெல்லாம் செய்யப்பெறலாம் எ      ா.

ஒ.—ஆறும்பாட்டில், ப்ரதிபந்தககர்மங்கள் அடிமைக்கு விக்நத்தைப் பணணுமோ? என்னில்,—'அடிமைசெய்வோம்' என்று இசையவே, தானே நசிக்கும் என்கிறார்

[வேங்கடங்கள் என்று தொடங்கி.] - ருணத்ரயங்களும் தேஹாபாதிகமான பாபங்களும் தானே நசிக்கும்; உத்தரபூர்வாகங்கள் நசிக்கும்; இது ஸத்யம் என்றுமாம். [தாங்கள் தங்கட்கு நல்லனவேசெய்வார்] - தாங்கள் தங்களுக்கு ப்ராப்யம் என்று இருந்த அடிமைகளைச் செய்ய அமையும். [வேங்கடத்து என்று தொடங்கி] - திருவேங்கடமுடையானுக்கே ஶேஷம்; எனக்கு

---

என்கிறவிடத்தில் ஏற்றம் சொல்லுகைக்காகத் தடஸ்தஶங்கையை அநுவதிக்கிறார் - 'கீழ் எல்லாவுலகும்' இத்யாதி. ஏற்றமாகச்சொன்ன - இவ்விடத்தி லேற்றமாகச்சொன்ன. ஏற்றம்சொல்லவேணுமோ? என்ன, 'ஈசன்' இத்யாதி. தீதில்சீரின் அர்த்தம் - 'என்னில் தாழ்ந்தாரைத் தேடி' இத்யாதி. திருவேங்கடத்தானின் அர்த்தம்- 'ஆஶயாயதிவா' இத்யாதி. "ஶ்ரீஹநஸாயஞ்ச தஶ்சைத்ர வஸிஷ்டோக்ஷிஷ்வஸாநஶ்ரேஷ்ட்ரம் | ஆஶயாயதிவாராமஃ ஸுநஶ்ஶ்ராவயேதிதி" இதம் அயோத்யாகாண்டே ஏகோநஷஷ்டிதமே தஶரதம் ப்ரதி ஸுமந்த்ரஃ. விவரணம் - 'நீசனேன்' இத்யாதி. 'தீதில்சீர்' என்றதுக்கு அர்த்தாந்தரம் - 'ரக்ஷகனுக்கு' இத்யாதி. இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணம் - 'ஸந்துஷ்டஃ' இத்யாதி. "அஸந்துஷ்டா த்விஜா நஷ்டா ஸந்துஷ்டஃ க்ஷத்ரியஸ்ததா | ஸலஜ்ஜா கணிகா நஷ்டா நிர்லஜ்ஜா வ குலாங்கநா||". 'தீதில்சீர்' என்றதின் முந்தின அர்த்தவிவரணம் - 'சீருக்கு' இத்யாதி. உததரார்த்த பூர்வகம் பூர்வார்த்தாநுஸந்தாந மந்வயஃ. (ரு)

உரியேனல்லன் என்று ஆத்மாவுக்கு ப்ராப்தமாய் எளிதுமாயிருக்கிற இந்த உக்திமாத்ரத்திலே உத்யுக்தரானவர்களுக்கு.

ப.—அநந்தரம், அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமான பகவதநுபவபோகத்துக்கு உறுப்பான ஆஶ்ரயணஸௌகர்யத்தை அருளிச்செய்கிறார்.

வேங்கடத்து - திருமலையிலே, உறைவார்க்கு - (ஸர்வஸமாஶ்ரயணீயனும்படி வந்து) நித்யவாஸம்பண்ணுகிற ஸ்வாமிக்கு அநந்யார்ஹமாம்படி, நமவென்னலாம் - (ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியுக்தமான அத்யந்தபாரதந்த்ர்யஸூசகமாய் ஸுலபமாய் ஸ்வரூபப்ராப்தமான நமோ வாசகமாகிற, அது கடமை - ("ஹரிஷ்யதே நமஉக்திம் விதேம" என்று ஶ்ருதிஸித்தமான) அந்த வ்யாபாரத்தை, சுமந்தார்கட்கு - (அதிகாரவிஶேஷத்யோதகமாம்படி தங்கள் தலையிலே) சுமந்தவர்களுக்கு, கடங்கள் - (அநுபவவிநாஶ்யமாம்படி) ருணரூபமான பூர்வார்ஜிதபாபங்கள், மேல்வினை-(ஆஶ்ரயணாநந்தரபாவியான) உத்தராகங்கள், முற்றவும் வேம் - ("தீயினில் தூசாகும்" என்கிறபடியே) தக்தங்களாம்; மெய் - (இது நிர்த்தோஷவேதாந்தஸித்த மாகையாலே) ஸத்யம்; (இப்படி அநிஷ்டம் ஸ்வயமேவ நிவ்ருத்தமாதலால்), தாங்கள் - (ஆஶ்ரிதரான) தாங்கள், தங்கட்கு - தங்கள் ஸ்வரூபத்துக்கு, நல்லனவே - இனிமையை விளைப்பதான பகவத்ஸ்வரூபாத்யநுபவத்தையே, செய்வார் - செய்வார்கள். கடமென்று - ருணத்ரயத்தையும், மெய்ம்மேல்வினையென்று - தேஹாநுபந்திகர்மங்களையுஞ் சொல்லுவர். உத்தராகத்தை வேமென்றது - பலப்ரரோஹமில்லாத ஸாம்யத்தாலே. சுமந்தா ரென்றது - 'அஞ்சலிபரம்' என்னுமாபோலே, ஈஶ்வர ஹ்ருதயத்தாலே கனத்திருக்கை.

ஈ.—ஆறும்பாட்டில், 'அவன்படி இதுவானாலும் ப்ரதிபந்தககர்மங்கள் விக்நத்தைப் பண்ணாதோ?' என்னில்,—'அடிமையில் இழியவே தானே நசிக்கும்' என்கிறார்.

[வேங்கடங்கள்] - கடமென்று கடனை, ருணத்ரயத்தைச் சொல்லுகிறது. [மெய்ம்மேல் வினை] - 'தேஹோபாதிகமான கர்மங்களும் அடங்க நசிக்கும்' என்று ஆளவந்தார். 'உத்தரபூர்வாகங்கள் நசிக்கும்; இது மெய்' என்று எம்பெருமானார். உத்தராகத்துக்கு விநாஶம் சொல்லுகிறது, நாஶபர்யாயமான நைஷ்பல்யத்தைப் பற்ற. இரண்டும் இவனை ஸ்பர்ஶியாது என்கை. 'மெய்' என்கிறது-துஷ்டகாரண ப்ரஸங்கமுள்ள ப்ரத்யக்ஷம்போ லன்றிக்கே நிர்த்தோஷஶாஸ்த்ரஸித்தம் என்கை. 'ஆனால், கர்த்தவ்யம் என்?' என்னில்,—[தாங்கள் இத்யாதி] - தாங்கள் தங்களுக்கு நன்றென்று இருந்த அடிமைகளைச் செய்ய அமையும்; 'நன்றென்றிருக்கிறது என்?' என்னில்,—[வேங்கடத்து உறைவார்க்கு] - சதுர்த்தியில் ப்ரார்த்தனையைச் சொல்லுகிறது. [நம:] - தனக்காயிருக்கும் இருப்பைக் கழிக்கிறது. [என்னல்]-உக்திமாத்ரமே அமையும். வருணனுக்குத் தொடுத்த அம்பை மருகாந்தாரத்திலே விட்டாற்போலே. இவ்விடத்தில் பட்டர் மொட்டைத்தலையன் விஷயமான இதிஹாஸம். [ஆம்] - ஸுஶகம். [கடமை] - ப்ராப்தம். [அதுசுமந்தார்கட்கே] - 'இக்கோட்டையெல்லாம் சுமந்தார்கட்கு' என்று ஆழ்வார்கருத்தாலேயாதல், இதுதான் குவாலாயிருக்கும் பகவதபிப்ராயத்தாலேயாதல். "ஹரிஷ்யதே நமஉக்திம் விதேம".

ஈடு.—ஆறும்பாட்டு. கீழ் திருமந்த்ரார்த்தத்தை அருளிச்செய்தார்; அதிலே அருளிச்செய்யாததோ ரர்த்த முண்டிறே நமஶ்ஶப்தார்த்தம். * (அதாவது - அவித்யாதிகளும் கழிகை.) அத்தை அருளிச்செய்கிறார். அவன் ரக்ஷ்யவர்க்கத்திலே பேற்றவளவால் பர்யாப்தனன்றிக்கே யிருந்தாலும், நாம்

ஆறும்பாட்டு – 'வேங்கடங்கள்' இத்யாதி. பரமப்ரக்ருதத்துக்குச் சேர முதற்பாட்டோடே ஸங்கதி- 'கீழ்' இத்யாதி. கீழிற்பாட்டோடே ஸங்கதி 'அவன்ரக்ஷ்ய' இத்யாதி. 'சரீரஸம்பந்தநிபந்தமாக' என்றது-ஆளவந்

* குண்டலித வாக்யம், பல ஸ்ரீகோசங்களி லில்லை யென்பர்.

அபிநிவிஷ்டராலும், ஶரீரஸம்பந்த நிபந்தநமாக அநாதிகாலம் நாம் பண்ணிவைத்த பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தக கர்மங்கள் செய்வதேன்? என்ன, நாம் இதிலே துணியவே அவையெல்லாம் தன்னடையே நசிக்கு மென்கிறார்.

[வேங்கடங்கள்] - கடமென்று கட னென்றபடி. கடங்களென்றது - கடன்க ளென்றபடி. அவையாவன-"த்ரிபிர்ருணவாஜாயதே" (த்ரிபிர்ருணவாஜாயதே) என்கிறபடியே மூன்றுருணத்தோடேகூடவாயிற்றுஇவன்வந்துபிறப்பது;*("ப்ரஹ்மசர்யேணருஷிப்ய: யஜ்ஞேநதேவேப்ய: ப்ரஜயாபித்ருப்ய:" (ப்ரஹ்மசர்யேணருஷிப்யஃயஜ்ஞேநதேவேப்யஃப்ரஜயாபித்ருப்யஃ) என்கிறபடியே) ப்ரஹ்மசர்யத்தாலும் யாகத்தாலும் ப்ரஜோத்பத்தியாலும் ருஷிகளுக்கும்,தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும் தனிசு இறுக்கக்கடவன். "ருணாநித்ரீண்யபாக்ருத்ய" (ருணாநித்ரீண்ய பாக்ருத்ய) என்னாநின்றதிறே. [மெய்ம்மேல்வினைமுற்றவும்] - ப்ரக்ருதிஸம்பந்தநிபந்தநமாக வரக்கடவ பாபங்களைச் சொல்லுகிறது. ஆக, 'கடன்கள், மெய்ம்மேல் வினைமுற்றவும், வேம்-நசிக்கும் என்று இங்ஙனே ஆளவந்தார் அருளிச்செய்யும்படி. இத்தை எம்பெருமானார் கேட்டருளி, 'இதுக்கு வேதாந்தத்திற் சொல்லுகிற கட்டளையிலே பொருளாக அமையாதோ?' என்று இங்ஙனே அருளிச்செய்வர். அதாவது - "உத்தரபூர்வாகயோரஶ்லேஷவிநாஶௌ" (உத்தரபூர்வாகயோ ரஶ்லேஷவிநாஶௌ) என்றும், "ஏவம் ஹாஸ்யஸர்வேபாப்மாந: ப்ரதூயந்தே" (ஏவம் ஹாஸ்யஸர்வேபாப்மாநஃப்ரதூயந்தே) என்றும் சொல்லுகிறபடியே, வேம்என்கையாலே - பூர்வாகத்துக்கு விநாஶமும்,உத்தராகத்துக்கு † அஶ்லேஷமுமாகச் சொல்லுதல்; அன்றிக்கே, இவ்விநாஶந்தான் மற்றையதுக்கும் உபலக்ஷணமாய், ஶ்லேஷியாமையைச் சொல்லிற்றாகவுமாம். பூர்வாகமாவது - ஜ்ஞாநம்பிறப்பதற்குமுன்பு புத்திபூர்வகமாகப் பண்ணிப்போரும் ப்ராதிகூல்யம். உத்தராகமாகிறது-

---

தார்நிர்வாஹத்தைப்பற்ற 'வேங்கடத்துறைவார்க்கு நமவென்னல்' இத்யாதியைப்பற்ற - 'நாம் இதிலே துணிய' இத்யாதி. இதிலே - கைங்கர்யத்திலே. அவை-கர்மங்கள்.

'கடனென்றபடி' இதி - "மனக்கள் உழறிவருர்" என்றுகொண்டு - மகார னகாரங்கள் மாறாடிவரு மென்றபடி. "ருணவா" - ருணவா நித்யர்த்த:. "ப்ரஹ்மசர்யேணருஷிப்யோயஜ்ஞேநதேவேப்ய: ப்ரஜயாபித்ருப்ய:" இதி வாக்யம் ஹ்ருதிஸ்தாயாஹ - 'ப்ரஹ்மசர்யத்தாலும்' இத்யாதி. தனிசு - கடன். தனிசு இறுக்கவேணுமோ? என்ன, 'ருணாநி' இத்யாதி. "ருணாநித்ரீண்யபாக்ருத்ய மநோ மோக்ஷே நிவேஶயேத் । அநபாக்ருத்ய மோக்ஷந்து ஸேவமாநோ வ்ரஜத்யத:". 'மோக்ஷே' என்றது - மோக்ஷாஶ்ரமத்திலே, ஸந்யாஸாஶ்ரமத்திலே யென்றபடி. ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு, 'கடங்கள்' என்று - ருணங்களையும், 'மெய்ம்மேல்வினைமுற்றவும்' என்று - பூர்வோத்தராகங்களையும் சொல்லுகிறது. மெய் - சரீரம். எம்பெருமானார்நிர்வாஹத்திலே, 'கடங்கள்' என்று - கடன்போலே அவஶ்யாநுபாவ்யகர்மங்களைச் சொல்லி, 'மேல்வினைமுற்றவும்' என்று - உத்தராகத்தைச் சொல்லுகிறது. 'அஶ்லேஷமுமாகச் சொல்லுதல்' என்றது - "அஶ்லேஷவிநாஶௌ", "பாபம் கர்ம ந ஶ்லிஷ்யதே" என்ற ஸூத்ரஶ்ருதிகளுக்குச் சேர, சாரா வென்ற பதம் அத்யாஹார்ய மென்றபடி. மற்றையதுக்கும்- அஶ்லேஷத்துக்கும். உபலக்ஷணமாய் - நாசபர்யாயமான நைஷ்பல்யத்தை லக்ஷிக்கிறதா யித்யர்த்த:. ஆக, கடங்கள்-வேம், மேல்வினை முற்றவும் சாரா இதி ப்ரதமநிர்வாஹ:. சாராவென்கிற பதத்தை அத்யாஹரியாதே, நாசவாசகமான 'வேம்' என்கிற பதந்தானே - "ஹுத்வாஹ்நௌ ஸமுத்ப்ருத்ய" இத்யத்ர சத்ர்யச்சத்ரி ஸமுதாயவாசக சத்ரிஶப்தவதஜஹல்லக்ஷணயா அஶ்லேஷத்தையும் சொல்லும் என்று இரண்டாம் நிர்வாஹம். 'அஶ்லேஷமுமாகச்சொல்லுதல்' என்கிறவிடத்திலே, அஶ்லேஷசப்தத்தைச் சொல்லுதலென்று பாடமானபோது - அஶ்லேஷப்ரதிபாதகமான சாராவென்கிற பதத்தை யென்றபடி. உத்தரபூர்வாகங்களை விவிச்ய தர்ஶயதி - 'பூர்வாகமாவது'

---

* குண்டலிதம் அரும்பத விருத்தம். † அஶ்லேஷம் - போஷியாமை ; ஸம்பந்தியாமற்போய்விடுகை.

ஜ்ஞாநம்பிறந்தபின்பு ப்ராமாதிகமாகப் பண்ணும் ப்ராதிகூல்யம். பின்பும் விரோதியான தேஹஸம்பந்தம்அநுவர்த்திக்கையாலேபாபங்களிலேப்ரவர்த்தியாநிற்கும்; அநந்தரம்,ஜ்ஞாநம்பிறவா, கடுகமீண்டு முன்பு செய்ததுக்கு 'நாம் என்செய்தோமானேம்?' என்று அநுதபித்துப்படும். கடங்கள்-மேல்வினை முற்றவும்-வேம்; இது மெய்-இது ஸத்யம். "*ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே*" [ஏவம்ஹாஸ்யஸர்வேபாப்மாந:ப்ரதூயந்தே] என்றதிறே. ப்ரத்யக்ஷாதிகள் ப்ரமத்துக்குமூலமாய் ப்ரமநிவர்த்தகமுமாயிருக்கும்; அங்ஙனன்றியே, "*யதாபூதவாதிஹிஸாஸ்த்ரம்*" (யதாபூதவாதிஹிஸாஸ்த்ரம்) என்கிறபடியே ஸாஸ்த்ரஞ் சொல்லிற்றென்றால், அவ்வர்த்தம் மெய்யாயிருக்குமிறே. முதற்பாட்டிலே சொல்லவேண்டுவதோ ரர்த்தஞ் சொல்லாதேபோந்ததிறே; அவ்வம்ஸம் இங்கே சொல்லுகிறார். கடலுக்குத்தொடுத்த அம்பை, அவன் நாலடிவர நின்றவாறே, அநந்தரத்தே 'உன் விரோதிகளைச் சொல்லாய்' என்றானிறே. இவ்விடத்திலே பட்டர் ஒரு இதிஹாஸம் அருளிச்செய்வர்; "பண்டு, தலையில்மயிரின்றிக்கேயிருப்பானொருவன் நெற்பரிமாறாநின்றானாய், அங்கே ஒருவன் சென்று 'மயிரைப்பேணாதே நீர் தனியேநின்று பரிமாறாநின்றீர்' என்ன, 'ஏன்தான் நடந்ததீ!' என்ன, 'ஒன்றுமில்லை; கண்டுபோக வந்தேன்' என்ன, 'ஆகில், ஒருகோட்டையைக் கொண்டுபோகலாகாதோ?' என்று எடுத்துவிட, அவன் அத்தைக்கொண்டுவோராநிற்கச்செய்தே எதிரே ஒருவன் வந்து 'இது எங்கே பெற்றது?' என்ன, 'உன்தன மொட்டைத்தலையன் தந்தான்' என்றானாய், அவன் அத்தைச்சென்று அங்கே 'இன்னான் உம்மை வைதுபோகாநின்றானீ!' என்ன, 'அடா! என் நெல்லையுங் கொண்டு என்னையும் வைதுபோவதே?' என்று தொடர்ந்துவந்தானாய், அவன் புரிந்து பார்த்து 'ஏன்தான் குழல்கள் அலையவலைய ஓடிவராநின்றதீ!' என்ன, 'ஒன்றுமில்லை இன்னம் ஒரு கோட்டை கொண்டுபோகச் சொல்ல வந்தேன்' என்றானும்; அப்படியே, கடலை முகங்காட்டுவித்துக்

---

*இத்யாதி வாக்யத்வயேந. ப்ரபந்நனுக்குஉத்தராகப்ரஸக்தியுண்டோ? என்ன, 'பின்பும் விரோதியான' இத்யாதி. "[illegible] | [illegible] ஸ்வதத்த்யய:" என்னக்கடவதிறே. பூர்வாகத்துக்கு விநாசமென்றும், உத்தராகத்துக்கு அஸ்லேஷமென்றும் நியமிக்கிறதென்? அஸ்லேஷவிநாசங்களை மாறாடிச்சொன்னாலோ? என்னில்;—'பாபமாவது - பகவந்நிக்ரஹமாகையாலே, இவன்பக்கல் ஆநுகூல்யம் பிறந்தபின்பு "நஸ்மரத்யபகாராணாம் ஸதமபி" இத்யாதிப் படியே பூர்வாகத்தை விஸ்மரிக்கும், "அவிஜ்ஞாதா ஹி பக்தாநாமாகஸ்ஸு கமலேக்ஷண:" இத்யாதிப் படியே ப்ராமாதிகத்தில் கண்வையாமையாலே அதில் நெஞ்சு செல்லாது; ஆகையாலே, "பூர்வாகத்துக்கு நாசமும் உத்தராகத்துக்கு அஸ்லேஷமும் ஒழிய மாறாடிச் சொல்லப்போகாது" என்று அருளிச்செய்வர். பிறவா-பிறந்தவுடனே. எம்பெருமானாருடைய த்விதீயநிர்வாஹத்தில் அந்வயங்காட்டுகிறார்-'கடங்கள்' இத்யாதி. இது ஸத்ய மென்று எப்படி அறியலாமென்ன, 'ஏவம்ஹாஸ்ய' இத்யாதி. வேதம்சொன்னால் மெய்யாகவேணுமோ? என்ன, 'ப்ரத்யக்ஷாதிகள்' இத்யாதி. 'யதாபூதவாதிஹிசாஸ்த்ரம்' இதி த்ரமிடபாஷ்யே. 'ப்ரமத்துக்கு மூலமாய்' என்றது - "ஜந்மஜாதம்" இத்யாதியைப் பற்ற. 'ப்ரமநிவர்த்தகம்' என்றது - "நேஹநாநாஸ்தி" என்றத்தைப் பற்ற. 'தாங்கள் தங்கள்' இத்யாதிக்கு அவதாரிகை - 'முதற்பாட்டிலே' இத்யாதி. ஓரர்த்தப்-நயஸம்ஸப்தார்த்தம். யத்வா, இத்தால் சொல்லிற்றாயிற்று எது? என்ன, 'முதற்பாட்டிலே' இத்யாதி என்னுதல். இங்கே சொல்லுகிறார்-வ்யாக்யாதமான 'வேங்கடங்கள்' என்கிற வாக்யத்திலேசொல்லுகிறாரென்றபடி. ஸிம்ஹாவலோகநந்யாயேந, மேல்வினைமுற்றவும் சாராவாகில் அவற்றுக்குப் போக்கடியேது? என்ன, 'கடலுக்கு' இத்யாதி. யத்வா, ஆபிமுக்யம்பண்ணின மாத்ரத்திலே பூர்வோத்தராகங்களை க்ஷமிக்குமோ? என்ன, க்ஷமிக்கிறமாத்ரமன்றிக்கே ஸத்ருக்கள்மேலே போக்கும் என்கிறார் - 'கடலுக்கு' இத்யாதி என்றுமாம். ஆபிமுக்யம் பண்ணின மாத்ரத்திலே இவன்பண்ணின தோஷங்களை மறக்குமென்கைக்கு ஓரைதிஹ்யம் அருளிச்செய்கிறார் - 'இவ்விடத்திலே பட்டர்' இத்யாதி. இவ்விடத்திலே - 'அவன் நாலடிவரநின்றவாறே அநந்தரத்தே உன்விரோதிகளைச் சொல்லாயென்றான்' என்றவிடத்திலே. கடலுக்கு அம்புதொடுத்த ப்ரஸங்கத்திலே இதிவார்த்த:. மொட்டைத்*

கொள்ளுகைக்காகக் காலைப்பிடிப்பது கோலைத் தொடுப்பதாகாநிற்க, அவன் வந்து முகங்காட்டினவாறே, 'உனக்கு அம்புதொடுத்தோம்' என்ன லஜ்ஜித்து, 'உன்விரோதிகளைச் சொல்லு, நாம் இத்தைவிட' என்றாரிறே. [தாங்கள் இத்யாதி]-இதுதான், பலபோக்தாவானவனுக்கு உத்தேஸ்யத்தோபாதி ப்ரார்த்தித்துப் பெறவேண்டியிருக்குமோ? என்னில்,—'அது வேண்டா; தாங்கள் தங்களுக்கு நன்றான கைங்கர்யத்தைப் பண்ணுநிற்க அமையும்; இவ்விரோதி தன்னடையே போம்' என்கிறார். 'தாங்கள் தங்களுக்கு நன்றான ப்ரதிபந்நத்தைச் செய்ய அமையும்' என்னவொண்ணுதிறே, "வழுவிலா வடிமைசெய்யவேண்டும்நாம்" என்கிற அதிகாரியைக்குறித்துச் சொல்லுகையாலே. அதிகாரி வைலக்ஷண்யமும் வ்ருத்தி வைலக்ஷண்யமும் தோன்றும்படி - 'தாங்கள் தங்கட்கு' என்று இங்ஙனே ஊன்றிச்சொல்லுமாம் அநந்தாழ்வான். [தாங்கள்] - இதரவிஷயங்களில் விரக்தராய்க் கைங்கர்ய ருசியுடையராயிருக்குமவர்கள். [தங்கட்கு] - இப்படிப்பட்ட ருசியுடையராயிருக்கிற தங்களுக்கு. [நல்லனவே செய்வார்] - தங்கள் ஸ்வரூபத்தோடுசேர்ந்த கைங்கர்யத்தையே பண்ணுவார். 'தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வார்' என்கிறது - இவர்களை எங்ஙனேயாக நினைத்து ?' என்னில்,—[வேங்கடத்து இத்யாதி]-'வேங்கடத்துறைவார்க்கு' - சதுர்த்தியின் அர்த்தஞ் சொல்லுகிறது: 'நமஃ' எனக்கு அன்று, அவனுக்கு என்றபடி. [என்னல்]-'இதுதான் நெஞ்சிலுண்டாகவும் வேண்டா ; உக்தி மாத்ரமே அமையும், இது தான் அல்பமாகிலும் இவன்தனக்கு அருமையாயிருக்குமோ ?' என்னில்,—ஆம் - ஸுலபகம். 'எளிது' என்னு, ஸ்வரூபத்தோடே சேராததாயிருக்குமோ ? என்னில்,—[கடமை]-ப்ராப்தம். [அதுசுமந்தார்கட்கே] - பெறுகிறபேற்றின் கனத்தையும் இவனுனுடைய நேர்த்தியில் அல்பதையையும் பார்த்து, 'இப்பேற்றுக்கு இவன் இம்மலையைச் சுமந்?' என்பாரைப்போலே. 'அது சுமந்தார்கட்கு' என்று தம்கருத்தாலே சொல்லிற்றாகவுமாம்.

தலையன் - மழுங்கல்தலையன். காலை - விற்காலை. கோலை - அம்பை. 'நாம் இத்தைவிட என்றாரிறே' என்ற அநந்தரம் - 'முதற்பாட்டிலே சொல்லவேண்டுவது' இத்யாதி வாக்யம் அநுஸந்தேயம். இதுதான் - விரோதி நிவ்ருத்திதான். உத்தேஸ்யத்தோபாதி - பலத்தோபாதி. 'தாங்கள்' இத்யாதிக்கு - தங்களுக்கு ஸுகரூபமான ஸ்வேச்சாவிஹாரங்களைச் செய்வாரென்று அர்த்தமானாலோ? என்ன, 'தாங்கள் தங்களுக்கு நன்றான ப்ரதிபந்நத்தை' இத்யாதி. அதிகாரியைக்குறித்துச் சொல்லுகையாலே யிதி—உபதேஸ்யமும் அதிகாராநுகுணமாயிருக்க வேணுமென்று கருத்து. ஆனால், 'தாங்கள்' என்ன அமையாதோ? 'தங்கட்கு' என்ற த்விருக்திக்கு ப்ரயோஜநமேது? என்ன, 'அதிகாரிவைலக்ஷண்யமும்' இத்யாதி. யத்வா, 'நல்லன' இத்யத்ர - கைங்கர்யமேவ விவக்ஷிதமென்னுமதுக்கு ஸம்வாதம்-'அதிகாரிவைலக்ஷண்யமும்' இத்யாதி என்னுதல். தாத்பர்யஸித்தஸப்தார்த்தம்-'இதரவிஷயங்களில்' இத்யாதி. 'எங்ஙனேயாக நினைத்து' என்றது - எந்தஸாதநாநுஷ்டாதாக்களாக நினைத்து என்னுதல், எந்த அதிகாரிகளாக நினைத்து என்னுதல். இந்தஸங்கதி - 'நமவென்னல்' என்றத்தைப் பற்ற. அதாவது - அல்பாநுகூல்யஸூசகோக்தியையுடையவர்களுக்கு என்றபடி. 'நல்லனவேசெய்வார்' என்கிற பேர் எப்படிப் பட்டவர்களென்னில்' என்று நிஷ்க்ருஷ்டார்த்தம். 'வேங்கடத்துறைவார்க்கு' என்கிற வாக்யமும் - நமஸ்ஸப்தார்த்த மென்கிறார் - 'வேங்கடத்துறைவார்க்கு' இத்யாதி. சதுர்த்தியின் அர்த்தம் - அகாராத்பரலுப்தசதுர்த்தியின் அர்த்தம்; "[illegible]" என்றாரிறே பட்டர். 'உக்திமாத்ரமேயமையும்' இதி. "[illegible]" என்று 'ப்ரூயாத்' என்று-உக்திமாத்ரத்தையே சொல்லிற்றிறேயென்று கருத்து. 'அல்பமாகிலும் இவன்தனக்கு அருமையாயிருக்குமோ ? என்னில்' என்றது - ஔஷதஸேவை அல்பமாகிலும் அருமையாகக் காண்கையாலே. 'ஸுலபகம்'-ஸுலபகமாம். ஸுலபகமானல்'சுமந்தார்கட்கு' என்கிறதென்? என்ன, த்ரேதா பரிஹரிக்கிறார்,'பெறுகிற' இத்யாதி. நேர்த்தியில் - ப்ரயாஸத்தில். முந்தின நிர்வாஹத்வயமும் - ஆழ்வாரபிப்ராயத்தாலேயாய், முந்தினது - க்ஷேபோக்தி, இரண்டாவது - தத்த்வகதநத்தைப்பற்ற ; மூன்றாவது - பகவதபிப்ராயத்தாலே. அவன்நினைவு

யிஷ்டாம்'' (பூயிஷ்டாம்) என்றிறே அவன் இருப்பது. த்ரௌபதி திருநாமஞ்சொல்ல ''கோவிந்தா'' என்றவாறே, ''நம்பேரைச் சொன்னாள்'' என்று திருவுள்ளம்புண்பட்டிருக்குமவனிறே. ''க்ருஷ்ணாமாம்தூரவாஸிநம்'' (க்ருஷ்ணாமாம்தூரவாஸிநம்). அவளைக் கொண்டாடா, தன்னை நிந்தியா, வ்யஸநப்பட்டானிறே. அப்போது ஸதஸ்ஸில் பிறந்த பரிபவம் பரிஹ்ருதமாகச்செய்தேயும், 'நம் பேரைச்சொல்லிக் கூப்பிட்டவளுக்கு ஆற்றாமையிலே முகங்காட்டப்பெற்றிலோம்' என்று உள்ள தனையும் இழவுபட்டிருந்தானிறே. 'நம்பேர் தன்காரியஞ்செய்ததத்தனை போக்கி, நாம் இவளுக்கு ஒன்றும் செய்திலோமிறே' என்று இருந்தான். அஸங்கதமாக இரண்டேப்ததத்தைச் சேர்த்துச்சொல்ல அது விஷஹரணத்துக்கு உடலாகாநின்றதிறே, ஶப்தசக்தியாலே; அவ்வோபாதியும் போராமையில்லை யிறே திருநாமம். (வேங்கடத்துறைவார்க்கு நமவென்னலாம்கடமை யதுசுமந்தார்கட்கு - கடங்கள் மெய்ம்மேல் வினைமுற்றவும் வேம். மெய், ஆகையால், தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வார்.) (கூ)

# ஏழாம்பா

சுமந்துமாமலர்நீர் சுடர்தூபங்கொண்டு<br>
அமர்ந்துவானவர் வானவர்கோனொடும்<br>
நமன்றெழும் திருவேங்கடம் நங்கட்குச்<br>
சமன்கொள்வீடுதரும் தடங்குன்றமே.

ஆ.—(சுமந்து.) இஸ்ஸம்ருத்தி பெறுகைக்குத் திருவேங்கடமுடையானை இப்படி வருந்தவேணுமோ? பரமப்ராப்யபூத பகவத் கைங்கர்யாபேக்ஷராயிருந்த நம்பக்கல் குணநிரூ பணபூர்வகமாக நமக்கு அந்த ப்ராப்யத்தைத் தவிருகையாகிற இப்பழுதொன்றும் வாராதபடி நிர்

அப்படியிருக்குமோ? என்ன, 'பூயிஷ்டாம்' இத்யாதி. யஜுஷி ''நமஉக்திம்'' இத்யாதி. 'பூயிஷ்டாந்தே நமஉக்திம்விதேம':—தே-பூயிஷ்டாம் நம உக்திம் விதேம; நமஇத்யுக்திமாத்ரம் அபி பகவதபிப்ராயேண பூயிஷ்டம் பவதீத்யர்த்தஃ. நினைத்திருக்கிறமாத்ரமன்றிக்கே அநுஷ்டாநமுமுண்டு என்கிறார் - 'த்ரௌபதி' இத்யாதி. ''கோவிந்தேதியதாக்ரந்தத் க்ருஷ்ணாமாம்தூரவாஸிநம் । ருணம்ப்ரவ்ருத்தமிவமே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி'' இதி உத்யோகபர்வணி ஏகோநபஞ்சாஶே த்ருதராஷ்ட்ரம்ப்ரதி ஸஞ்சயோக்தம் க்ருஷ்ணவசநம். நிந்தியா - நிந்தித்து. கொண்டாடா - கொண்டாடி. தூரவாஸிநமென்று - தன்னை நிந்தியா வென்றபடி. பூர்வவாக்ய விவரணம்-'அப்போது' இத்யாதி. 'ருணம்ப்ரவ்ருத்தம்' இத்யாதியைப் பற்ற, 'உள்ளதனையும் இழவு' இத்யாதி. இழவுபடுகிறதென்? கார்யஞ் செய்யவில்லையோ? என்ன, 'நம்பேர்' இத்யாதி. க்ருஷ்ணனை யொழியத் திருநாமமே கார்யஞ் செய்ய வற்றோ? என்ன, 'அஸங்கதமாக' இத்யாதி. தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வாராய் வேங்கடத்துறைவார்க்கு இத்யாரப்ய, சுமந்தார்கட்கு - கடங்களும் மெய்ம்மேல் வினைமுற்றவும் - வேம் என்று ஆளவந்தார் நிர்வாஹத்தில் அந்வயம். முன்புபோலே தாங்களித் யாரப்ய, அது சுமந்தார்கட்கு - கடங்கள் - வேம்; மேல்வினை முற்றவும் சாரா; இது மெய்யென்று எம்பெருமானார்நிர்வாஹத்தில் அந்வயம். நமவென்னல் - நமோவாசகத்தை; நமஶ்ஶப்தத்தை யித்யர்த்தஃ. ''ஆம், கடமை, அது'' என்கிற மூன்றுபதமும் - 'நமவென்னல்' என்கிறதுக்கு விசேஷணம். அதாவது - வேங்கடத்தில் நித்யவாஸம்பண்ணுகிறவர்க்கு அநந்யார்ஹமாம்படி ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தியுக்தமான அத்யந்த பாரதந்த்ர்யஸூசகமாய் ஸுஶகமாய் ப்ராப்தமாய், ''பூயிஷ்டாந்தே நமஉக்திம்விதேம'' என்ற ஶ்ருதி ப்ரஸித்தமாயிருக்கிற நமோவாசகத்தை அதிகாரிவிசேஷ த்யோதகமாம்படி சுமந்தவர்களுக்கென்று ஶப்தார்த்தம்.

* குண்டலிதம் பல ஸ்ரீகோசங்களி லில்லை யென்பர்.

ஹேதுகமாகத் திருமலைதானே அயர்வறு மமரர்களுக்குக் கொடுத்தாற்போலே திருவேங்கடமுடையான் திருவடிகளிலே தான்செய்யும் சேஷவ்ருத்தியெல்லாம் நமக்குத் தரும் என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், நம்முடைய அபிலஷிதமான அடிமைகளெல்லாம் பெறுகைக்குத் திருவேங்கடமுடையானை ஆஶ்ரயிக்கவேண்டுவதில்லை; திருமலைதானே தரும் என்கிறார்

[சுமந்து என்று தொடங்கி.] - ஶ்லாக்யமான புஷ்பாத்யுபகரணங்களை ஸாதரமாகத் தரித்துக்கொண்டு. [அமர்ந்து என்று தொடங்கி] - பரமைகாந்திகளைப்போலே இந்த்ராதி தேவர்களும் ப்ரயோஜநாந்தரங்களை மறந்து பூண்டு அடிமைசெய்து உஜ்ஜீவிக்கும்படியான நிலமிதியையுடைய திருவேங்கடமான தடங்குன்றமே நமக்குத் தன்னுடைய சேஷத்வம்போலேயிருக்கும் சேஷத்வத்தைத் தரும். [சமன்கொள்] என்றது - ஆத்மாவுக்கு ஸத்ருஶமாகவுமாம்.

ப.—அநந்தரம், ப்ரஸ்துதமான ஆஶ்ரயணத்தினுடைய காஷ்டாஸூசநார்த்தமாக அவன் நின்றருளின திருமலைதானே பரமஸாம்யாபத்தியைத் தரும் என்கிறார்.

மா - ஶ்லாக்யமான, மலர் - புஷ்பங்களையும், மா - நன்றான, நீர் - ஜலத்தையும், மா- விலக்ஷணமான, சுடர் - தீபத்தையும், மா தூபம் - அகுருதூபத்தையும், சுமந்துகொண்டு - ஸாதரமாக வஹித்துக்கொண்டு, அமர்ந்து - (ப்ரயோஜநாந்தரங்களில் பரகுபரகற்று) அநந்யப்ரயோஜநராய் அமர்ந்து, வானவர் - நித்யஸூரிகள், வானவர்கோனொடும் - (தங்களுக்கு நிர்வாஹகரான) ஸேனைமுதலியாரோடேகூட, நமன்று -(அத்யந்த பாரதந்த்ர்ய ப்ரகாஶகமான)நமநத்தைப் பண்ணி, எழும் - (ஸ்வரூபலாபம்பெற்று)க்ருதார்த்தராம்படியாய், திருவேங்கடம் - திருவேங்கடமென்று திருநாமத்தையுடைத்தாய், தடம் - (லக்ஷ்மீஸஹாயனான ஸர்வேஶ்வரன் ஸ்வைரவிஹாரம்பண்ணும்படி) ஸுவிஸ்தீர்ணமான, குன்றம் - திருமலை, நங்கட்கு - (ப்ராப்யருசியையுடைய) நமக்கு, சமன் - பரமஸாம்யாபத்தியை, கொள் - உடைத்தான, வீடு - மோக்ஷாநந்தத்தை, தரும் - தரும்.

பகவச்சேஷதைகரஸமான ஸ்வஸாம்யத்தை மோக்ஷரூபபலமாகத் தரு மென்றுமாம். நமன்று - வணங்கி. 'வானவர்வானவர்கோனொடுமென்று - ப்ரஹ்மாதிகளோடு கூடின தேவர்கள்' என்றுஞ் சொல்லுவர்.

இ.—ஏழாம்பாட்டில், அபேக்ஷிதமான அடிமையைத் திருமலை தானே தரும் என்கிறார்.

[சுமந்து இத்யாதி] - ஶ்லாக்யமான புஷ்பாத்யுபகரணங்களைச் சுமந்துகொண்டு;'சுமந்து' என்கிறது, கனத்த ஆதரத்தோடே செய்கை என்னுதல்; இவ்வாதரத்தை அவன்தான் கனக்க நினைத்திருக்கையாலே என்னுதல்; ஸ்ரீபுருஷோத்தமமுடையான் செண்பகப்பூவின் கனத்தைப் பொறுக்கமாட்டாதாப்போலே. [அமர்ந்து இத்யாதி] - நித்யஸூரிகள் ஸ்ரீஸேநாபதியாழ்வானோடே யென்னுதல், தேவர்களோடே ப்ரஹ்மா வென்னுதல். அமர்ந்து-அநந்யப்ரயோஜநராய். [நமன்றெழும்] - 'தொழுதெழு' என்னும் தம்மைப்போலே யென்கை. பக்நாபிமாநராய் உத்யோகிக்கும். [திருவேங்கடம்] - ப்ரயோஜநாந்தரபரரை அநந்யப்ரயோஜநராக்கும், நிலமிதியாலே· [நங்கட்கு] - ருசியுடைய நமக்கு. [சமன்கொள் வீடு தரும்] - "பரமம் ஸாம்யமுபைதி" "ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி" என்கிறபடியே ஸாம்யாபத்தி என்னுதல், ஸ்வரூபத்துக்கு ஸத்ருஶமானது என்னுதல்; திருமலையாழ்வார் தம்முடைய சேஷத்வத்தை நமக்குத் தருவர் என்னுதல். [தடங்குன்றமே] - திருவேங்கடமுடையானுக்கு ஸ்வைரஸஞ்சாரம் பண்ணுகைக்கு இடமுடைத்தாயிருக்கை.

ஈடு. — ஏழாம்பாட்டு. முதற்பாட்டில் ப்ரார்த்தித்த கைங்கர்யத்தைத் திருமலை தானே தரும் என்கிறார். ப்ராப்திபலமாய் வருமதிறே கைங்கர்யம்.

[சுமந்து இத்யாதி] - மாமலர் நீர் சுடர் தூபம் இவற்றைச் சுமந்துகொண்டு என்னவுமாம்; அன்றிக்கே, மாமலர் - சுமந்து, நீர்சுடர்தூபங் கொண்டு என்னவுமாம். ஒரு கருமுகைமாலையே யாகிலும், 'இத்தைக் கண்டருளக்கடவனே, சாத்தியருளக் கடவனே, நம்மை விசேஷ கடாக்ஷம் பண்ணக்கடவனே' என்றிருக்கிற இவர்கள் ஆதராதிசயத்தாலே கனத்துத் தோற்றிற்றாகவுமாம்; அன்றிக்கே, அநுகூல னிட்டதாகையாலே ஸர்வேச்வரன் தனக்குக் கனத்துத் தோற்றிற்றாகவுமாம். ஸ்ரீபுருஷோத்தமமுடையானுக்கு ராஜபுத்ரன் செண்பகப்பூக்கொண்டு சாத்தினபடியை நினைப்பது. அதாவது - ஸ்ரீபுருஷோத்தமமுடையான் செண்பகம் உகந்து சாத்துவர்; சில ராஜபுத்ரர்கள் செண்பகங்கொண்டு சாத்தத் தேடி, முன்பே பூவெல்லாம் விற்றுப்போய் ஒரு பூ இருந்தது கடையிலே; அப்பூவுக்குச் செருக்காலே ஒருவர்க்கொருவர் த்ரவ்யத்தைப் போர ஏற்றி இவர்களில் ஒருவன் நினைக்க வொண்ணாதபடி த்ரவ்யத்தைப் போர இட்டுக்கொண்டுவந்து சாத்தினான்; அன்று இரா அவன் ஸ்வப்நங்காண்கிறான்; "நீயிட்ட பூ எனக்குக் கனத்துச் சுமக்க வொண்கிறதில்லை" என்று அருளிச்செய்தார். [அமர்ந்து இத்யாதி] - நித்யஸூரிகளையும் ஸ்ரீஸேநாபதியாழ்வானையும் சொல்லிற்றாகவுமாம்; தேவர்களையும் ப்ரஹ்மாவையும் சொல்லிற்றாகவுமாம். அமர்ந்து - பொருந்தி. ப்ரஹ்மாதிகளைச் சொல்லிற்றானபோது, அவர்கள் ப்ரயோஜநாந்தரபரரேயாகிலும் அவர்களையும் அநந்யப்ரயோஜநராக்குமாயிற்று இதுதன்னின் ஸ்வபாவம். இப்படி ஸமாராதநோபகரணங்களைக் கொண்டு, நமன்றெழுவர்களாயிற்று - வணங்கிக்கொண் டெழுவர்களாயிற்று. "துயரறுசுடரடிதொழுதெழு" என்கிற தம்வாஸநை அவர்களுக்கும் உண்டென்று இருக்கிறார். [நங்கட்கு] - கைங்கர்ய ருசியை யுடைய நமக்கு. [சமன்கொள் வீடுதரும்] - "ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி" (ப்ரஹ்மவேதப்ரஹ்மைவபவதி) என்றும், "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" (நிரஞ்ஜந: பரமம்ஸாம்யமுபைதி), "மம ஸாதர்ம்யமாகதா:" (மமஸாதர்ம்யமாகதா:), "தம்மையேயொக்க அருள்செய்வர்" என்றுஞ் சொல்லுகிறபடியே அவனோடு ஸாம்யாபத்திரூபமான மோக்ஷத்தைத் தருமென்னுதல்; அன்றிக்கே, "ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே" (ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்

---

ஏழாம்பாட்டு - 'சுமந்து' இத்யாதி. 'வீடுதரும்' என்றால் - ப்ராப்தியைத்தருமென்றன்றோ சொல்லும்; கைங்கர்யத்தைச் சொல்லும்படி யென்? என்ன, 'ப்ராப்திபலமாய்' இத்யாதி.

ப்ரதமநிர்வாஹே, 'சுமந்துகொண்டு' என்று - முழுச்சொல். மாலை சுமையாமோ? 'சுமந்து' என்கிறதென்? என்ன, 'ஒருகருமுகை' இத்யாதி. அநுகூலனிட்டது கனத்துத்தோற்று மென்னுமதுக்கு ஸம்வாதம் - 'ஸ்ரீபுருஷோத்தமம்' இத்யாதி. அமர்ந்து - அநந்யப்ரயோஜநராய். ப்ரஹ்மாதிகளுக்கு அமர்கை கூடுமோ?. என்ன, 'ப்ரஹ்மாதிகளை' இத்யாதி. இதுதன்னின் ஸ்வபாவம் - இந்நிலத்தின் ஸ்வபாவம். நமன்று-வணங்கி. ப்ரயோஜநாந்தரபரரை 'எழும்' என்கிறதென்? என்ன, 'துயரறு' இத்யாதி. கீழே - திருமலையின் ஸ்வபாவத்தாலே அநந்யப்ரயோஜந ரென்று வைத்து, இங்கே 'தம்வாஸனை' என்றது - அவர்களுடைய ஸ்வாபாவிகாகாரத்தைப் பற்ற. 'சமன்' என்றதுக்கு, முந்தின அர்த்தமும் மூன்றாமர்த்தமும் - ஸாம்ய மென்றபடி. 'சமன்கொள் வீடு' - சமனைக்கொண்டிருக்கிற - ஸாம்யாபத்திரூபமான, மோக்ஷத்தை யித்யர்த்த:. இரண்டாமர்த்தம் - தகுதியிலேயாய், ஸ்வரூபத்துக்கு ஸத்ருசமான மோக்ஷத்தை யென்றபடி. 'ப்ரஹ்மைவ' என்றது - "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" இத்யாத்யநுகுணமாக ப்ரஹ்மேவ என்றபடி. "விஷ்ணுரேவ ஹி ஸ்ருதா" என்றவிடத்தில் - விஷ்ணுரிவ என்று கொண்டாற்போலே. "ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி" "நிரஞ்ஜந:" இத்யாதி ச முண்டகோபநிஷதி. "இதம் ஜ்ஞாநமுபாச்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா: । ஸர்கேऽபி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யதந்தி ச" இதி கீதாஸு சதுர்த்தசே. 'ஸ்வேந ரூபேண' இத்யாதி

யதே) என்கிறபடியே இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூபமான மோக்ஷத்தைத் தருமேன்னுதல்; அங்ஙனுமன்றிக்கே, திருமலைதானே தன்னுடோத்த பேற்றைப் பண்ணித்தரு மேன்னுதல். திருவேங்கடமுடையானைத் திருமுடியிலே எழுந்தருளுவித்துக்கோண்டிறே திருமலையாழ்வார்தாம் இருப்பது; அப்படியே *"நின்சேம்மாபாதபற்புத்தலைசேர்த்து" என்று இவர் ப்ரார்த்தித்த பேற்றை, [தடங்குன்றமே தரும்] - திருமலையாழ்வார்தாமே தந்தருளுவர். [தடங்குன்றம்] - திருவேங்கடமுடையானுக்கு ஸ்வைரஸஞ்சாரம் பண்ணலாயிருக்கும்படி இடமுடைத்தாயிருக்கை. "ஸாநுமாந்" (ஸாநுமாந்) - வீறுடைத்தாயிருக்கை. "கிரிராஜோபம:" (கிரிராஜோபம:) - திருமலையோடு ஒத்திருக்கை. "யஸ்மிந்வஸதி" (யஸ்மிந்வஸதி)-அதுக்கு ஹேது சோல்லுகிறது. "காகுத்ஸ்த:" (காகுத்ஸ்த:)-போகத்துக்கு ஏகாந்தமான ஸ்தலம் தேடி அநுபவிக்கும் குடியிலே பிறந்தவர் விடாதே விரும்பி வர்த்தித்தாரேன்பது யாதோன்று உண்டு. "குபேரஇவநந்தநே"(குபேரஇவநந்தநே)-துஷ்டஸத்த்வப்ரசுரமான தேசத்திலே சேருக்கனான வைஶ்ரவணன் போதுபோக்குகைக்காகத் தன் உத்யாநத்தில் உலாவுமாபோலே ஸஞ்சரித்தார். (எ)

## எட்டாம் பாட்டு.

குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன்
அன்றுஞாலம் அளந்தபிரான் பரன்
சேன்றுசேர் திருவேங்கடமாமலை
ஒன்றுமேதொழ நம்வினையோயுமே.

---

*சாந்தோக்யே. கீழ்வாக்யவிவரணம்-'திருவேங்கடமுடையானை' இத்யாதி. அவதாரணார்த்தம் - 'திருமலையாழ்வார்' இத்யாதி. 'தடம்' என்றதுக்கு ஹாவம் - 'திருவேங்கடமுடையானுக்கு' இத்யாதி. 'ஸ்வைரஸஞ்சாரம் பண்ணலாயிருக்கும்படி' என்றதுக்கு - ஸம்வாதமாதல், த்ருஷ்டாந்தமாதல்- 'ஸாநுமாந்' இத்யாதி. நந்தநே குபேர இவ காகுத்ஸ்தோ யஸ்மிந் வஸதி, கிரிராஜோபமோஸௌ சித்ரகூடோ கிரிஸ் ஸாநுமாந் இத்யந்வய:. ஸாநுமாந் - பாக்யவாநித்யர்த்த:. இதம்அயோத்யாகாண்டே அஷ்டநவதிதமே. வீறு-ஶ்லாக்யதை. அதுக்கு-திருமலையோடே ஒத்திருக்கைக்கு. 'வஸதி' என்ற வர்த்தமாநார்த்தம் - 'விடாதே' இத்யாதி. 'யாதொன்று உண்டு' அது ஹேதுவென்று கூட்டுவது. 'துஷ்டஸத்வப்ரசுரமான தேசத்திலே யென்றதுக்கு - ஸஞ்சரித்தாரென்றத்தோடே அந்வயம். சேருக்கனான - மத்தனான. நந்தயதீதி - நந்தந: இதி வ்யுத்பத்த்யா, நந்தநஶப்தேந - குபேரோத்யாநமுச்யதே. வானவர்வானவர்கோனொடும் - மாமலரென்று தொடங்கி, அமர்ந்து - நமன்றெழும்படியிருக்கிற - தடங்குன்றமான - திருவேங்கடம் நங்கட்கு சமன்கொள் வீடுதரு மித்யந்வய:. மாமலர் - ஶ்லாக்யமான புஷ்பம். சுடர் - தீபம். எழும் - ஸ்வரூபம்பெற்று உஜ்ஜீவிக்கும்படியிருக்கிற; திருமலைக்கு விசேஷணம்.*

*ஸ்ரீபுருஷோத்தமமுடையானுக்கு ராஜபுத்ரன் சேண்பகப்பூக்கொண்டு சாத்தின கதையாவது - ஸ்ரீபுருஷோத்தமத்திலே கடைவீதியிலே ஒருராஜபுத்ரனும் ஒரு செட்டிப்பிள்ளையுமாக ஒரு த்வாதசிநாள் அந்தியம்போதாகக் கூடவாராநிற்க, ஒரு கடையிலே ஒரு சேண்பகப்பூவைக் கண்டு 'இது ஸ்வாமிக்கு ஆகவேணும்' என்று 'இது நான் கொண்டு சாத்துவன், நான் கொண்டு சாத்துவன்' என்று ஒன்றுக்கொன்று இசலி, அவன் 'ஒரு காசு கொடுக்கிறேன்' என்ன, 'நான் இரண்டுகாசு கொடுக்கிறேன்' என்ன, இங்ஙனே கோடிதநத்தளவாக ஏற்ற, அவ்வளவிலே செட்டிப்பிள்ளை இளைத்துக் கைவாங்க, ராஜபுத்ரன் தநமுடையவனுகையாலே அந்தத்ரவ்யத்துக்கு அந்தப் பூவைக்கொண்டு ஸ்ரீபுருஷோத்தமமுடையானுக்குச் சாத்த, அவனும் அவ்வளவிலே திருவுள்ளமுகந்து 'ராஜபுத்ரன் நமக்கு ஆதரத்தோடேயிட்ட பூச் சுமக்கவொண்கிறதில்லை' என்று ஸ்வப்நத்திலே திருவுள்ளமாயருளினாராம்.* (எ)

---

* *திருவாய்மொழி உ-கூ-க.*

ஆ.—(குன்றமேந்தி.) 'ஸ்வரூப குண சேஷ்டிதாதிக ளெல்லாவற்றாலும் ஸ்வஸ்ய பரஸ்யச நிரதிஶயபோக்யபூதனான எம்பெருமானுக்குங் கூடப் பரமப்ராப்யமான திருமலை, தான் வேறொன்றைத் தரவேணுமோ? தானே பரமப்ராப்யமன்றோ? ஆதலால், திருமலைதன்னையே அநுபவிக்க, நம்முடைய க்லேஶமெல்லாம் போம்' என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், கோவர்த்தநோத்தரணாதிகளாலே நிரதிஶயபோக்யனான எம்பெருமானுக்கும் கூடப் பரமப்ராப்யமான திருமலைதான் நமக்கு ஒன்றுதரவேணுமோ? அது தானே பரமப்ராப்யம் என்கிறார்

[குன்றம் என்று தொடங்கி.] - கோவர்த்தநோத்தரணம் பண்ணி ஆஶ்ரிதருடைய ஆபத்தைப் போக்கும் ஸ்வபாவனாய், அவ்வளவன்றிக்கே ஆஶ்ரிதருக்காக லோகத்தையெல்லாம் அளக்கையாகிற மஹோபகாரத்தைப் பண்ணின ஸர்வேஶ்வரன். [சென்று என்றுதொடங்கி]- சென்று தனக்குப் பரமப்ராப்யமாகப்பற்றும் திருமலையொன்றையுமே அநுபவிக்க, ஒரு ப்ராப்யம் பெற்றிலோம் என்னும் வ்யஸநம் நீங்கும். ஆஶ்ரயிப்பார்க்கு உண்டான அடிமைக்கு விரோதியைத் திருமலைதானே போக்கும் என்றுமாம்.

ப.—அநந்தரம், ஏவம்பூதமான திருமலையை அநுபவிக்க, ப்ராப்திப்ரதிபந்தகங்கள் ஸ்வயமேவ நஶிக்கும் என்கிறார்.

குளிர்மழை-கல்மாரியாலே (கோகோபீஜநங்கள் ஈடுபட்டவன்று), குன்றம்-ஒருமலையை, ஏந்தி - சுமந்து, காத்தவன் - காத்தவனாய், அன்று - (மஹாபலியாலே அபஹ்ருதமான) அன்று, ஞாலம் - பூமியை, அளந்த - அளந்து வ்யாபரித்து, பிரான் - (அநந்யார்ஹமாக்கிக்கொண்ட) உபகாரகனான, பரன் - பரமஶேஷியானவன், (ஒருமலையைமேற்கொண்டு ரக்ஷிக்கலாமென்றும், நின்றவிடத்தேநின்று ரக்ஷிக்கலாமென்றும்), சென்று - சென்று, சேர் - சேர்ந்த, திருவேங்கடம் - திருவேங்கடமாகிற, மா - பெரிய, மலை - திருமலை, ஒன்றுமே-ஒன்றையுமே, (தேசிகனளவுஞ் செல்லவேணுமென்கிற நிர்ப்பந்தமற்று), தொழ -அநுபவிக்க, நம் - நம்முடைய, வினை - (தேசிகாநுபவ) ப்ரதிபந்தகபாபங்கள், ஓயும் - (தன்னடையே) கழலும்.

இ.—எட்டாம்பாட்டில், 'திருமலைதானே நம்விரோதியைப் போக்கும்'என்கிறார். அவனுக்கும் ப்ராப்யமான திருமலை நமக்கு ஒன்று தரவேணுமோ? அதுதானே ப்ராப்ய மென்கிறார் என்றுமாம்.

[குன்றமேந்தி] - ஒருமலையைக் கொண்டாயிற்று து:கநிவ்ருத்திபண்ணிற்று. "மொமொவீஜநவஸஂக-ஷஂஜூ-கடீவாதஃஜூ" என்று அவர்கள் குளிரடியுண்கிற தஶையிலே ரக்ஷித்தவன். [அன்று இத்யாதி] - அது ஒரூரளவிலேயிறே; இந்த்ரனுடைய பூமியை மஹாபலி பறித்துக்கொள்ள, எல்லைநடந்து மீட்டுப் பூமியை ரக்ஷித்த உபகாரகன். [பரன்] - ஸர்வேஶ்வரன். [சென்று இத்யாதி] - ஶேஷியானவன் விரும்புகிற தேஶம் ஶேஷபூதனுக்கு ப்ராப்யமாகச் சொல்லவேணுமோ? [ஒன்றுமேதொழ] - ஒன்றையுமே அநுபவிக்க; உள்நிற்கிறவனைத் தேடிப்போகவேண்டாவென்கை. [நம்வினை ஓயுமே] - அடிமைக்கு விரோதியைத் திருமலைதானே போக்குமென்னுதல், 'ஒரு ப்ராப்யம் பெற்றிலோம்' என்னும் வ்யஸநம் நீங்கும் என்னுதல்.

ஈடு.—எட்டாம் பாட்டு. 'வேங்கடங்கள்' என்கிற பாட்டிற் சொன்ன விரோதிநிவ்ருத்தியையும் திருமலையாழ்வார் தாமே பண்ணித்தருவர் என்கிறார். ஒருபுருஷார்த்தத்தைத் தரவேணுமோ? திருமலைதானே நமக்குஉத்தேஶ்யம்; ஶேஷிக்கு உத்தேஶ்யமானது ஶேஷபூதனுக்கு உத்தேஶ்யமாகச் சொல்லவேணுமோ? என்கிறு ராகவுமாம்.

எட்டாம்பாட்டு - 'குன்றம்' இத்யாதி. 'நம்வினையோயும்' என்றதின் அர்த்தத்வயாநுகுணமாக அவதாரிகா த்வயம். த்விதீயாவதாரிகைக்கு - கீழிற்பாட்டோடே ஸங்கதி. இதுக்கு அடியேது? என்ன, 'ஶேஷிக்கு' இத்யாதி. 'சென்றுசேர்' என்றத்தைப் பற்ற, 'ஶேஷிக்கு உத்தேஶ்யம்' என்றது.

[குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன்] - என்றும் துஃகநிவ்ருத்திக்குப் பரிகரம் மலையே யாயிற்று. "கோகோபீஜநஸங்குலம் | அதீவார்தம்" (கோகோபீஜநஸங்குலம்-அதீவார்த்தம்) என்கிறபடியே, பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே தோலையப்புக, கண்ணுக்குத்தோற்றிற்று ஒருமலையைப் பிடுங்கி ஏழுநாள் ஒருபடிப்படத் தரித்துக்கொண்டுநின்று அவற்றை ரக்ஷித்தவன். [அன்று இத்யாதி] - ஒரு ஊருக்காக உதவினபடி சொல்லிற்றாயிற்று - கீழ்; ஒருநாட்டுக்காக உதவினபடி சொல்லுகிறது - மேல்; விரோதியான மஹாபலியாலே பூமி அபஹ்ருதையான அன்று, எல்லை நடந்து மீட்டுக்கொண்ட உபகாரகன். ஸர்வரக்ஷகனுமாய் ஆஶ்ரிதரக்ஷகனுமா யிருக்கிற படி சொல்லுகிறது. [பரன்] - ஸர்வஸ்மாத்பரன். [சென்று சேர் திருவேங்கடமாமலை] - அவன் 'தனக்கு உத்தேஶ்யம்' என்று வந்து வர்த்திக்கிற தேஶம். [ஒன்றுமேதொழ] - உள்ளேயெழுந்தருளி யிருக்கிறவன் தானும் வேண்டா, திருமலையாழ்வார்தாமே அமையும். [நம்வினை ஓயுமே] - 'ப்ராப்யத்தைப் பெற்றிலோம்' என்கிற வினையென்னுதல், 'வேங்கடங்கள்' என்கிற பாட்டிற் சொன்ன ப்ராப்திப்ரதிபந்தகங்களைப் போக்கும் என்னுதல். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

ஓயுமூப்புப் பிறப்பிறப்புப்பிணி
வீயுமாறுசெய்வான் திருவேங்கடத்
தாயன் நாண்மலராம் அடித்தாமரை
வாயுள்ளும்மனத்துள்ளும் வைப்பார்கட்கே.

*ஆ.—(ஓயுமூப்பு.) திருவேங்கடமுடையானன்றோ ப்ராப்யம்; திருமலையே ப்ராப்யமென்று சொல்லுவானென்? என்னில்;— திருவேங்கடமுடையானுடைய ப்ராப்யத்வமும் திருமலையோடு உள்ள ஸம்பந்தத்தாலே வந்ததாதலால், திருமலையே ப்ராப்யம் என்கிறார்.*

*ஒ.—ஒன்பதாம் பாட்டில், அடிமை தருகைக்கும் அதுக்கு விரோதி நிரஸநத்துக்கும் திருமலையெல்லாம் வேண்டா; திருமலைக்கு அவயவபூதனை திருவேங்கடமுடையானே அமையும் என்கிறார்.*

[ஓயும் மூப்பு பிறப்பு இறப்பு] - ஜந்மாதி ஸகலதுஃகங்களும் ஓயும். [பிணி என்று தொடங்கி] - ஸகலதுஃக நிவர்த்தகனாய்த் திருமலையிலே நின்றருளின ஸர்வஸுலபனை திரு

*'திருவேங்கடமாமலை' இத்யாதியையுங் கடாக்ஷித்து ஹாவம் - 'என்றும் துஃகநிவ்ருத்திக்கு' இத்யாதி. தொலைய - நசிக்க. அவரோஹக்ரமேண பதத்வயபலிதம் - 'ஸர்வரக்ஷகனுமாய்' இத்யாதி. யத்வா, ஆஶ்ரிதனென்றது - இந்த்ரனையாதல். "ரக்ஷிதாஜீவலோகஸ்ய - ஸ்வஜநஸ்யசரக்ஷிதா" என்னக்கடவதிறே. 'ஒன்றுமே' என்கிற அவதாரணத்துக்கு அர்த்தம்-'உள்ளே' இத்யாதி. த்விதீயாவதாரிகாநுகுணம் ப்ரதமாவதாரிகாநுகுணஞ்ச க்ரமேண ஹாவமாஹ - 'ப்ராப்யத்தை' இத்யாதி வாக்யத்வயேந. முந்தின அர்த்தத்திலே, 'வினை' என்று - லக்ஷணயா, பாபகார்யமான துஃகத்தைச் சொல்லுகிறது. ஓயும் - விட்டுக்கழியும். சென்றுசேர் - வந்துவர்த்திக்கிற. மாமலை - பெரியமலை. "ததஸ்தேகாநநம்ஸர்வம் கோகோபீஜநஸங்குலம் | அதீவார்தம் ஸமாலோக்ய த்ராஹி த்ராஹீதி சாப்ருவந்" இதி பஞ்சமேம்ஶே ஏகாதஶே; க்ரமேண அந்வயஃ.* (அ)

வேங்கடமுடையானுடைய நிரதிஶயபோக்யமான திருவடிகளை மநோவாக்காயங்களினால் அநுபவிப்பார்க்கு.

ப.—அநந்தரம், தேஶிகனான திருவேங்கடமுடையானுக்கும் விரோதிநிவர்த்தகத்வம் தேஶஸம்பந்தத்தாலே என்கிறார்.

நாள்மலராம் - ("நாட்பூ மலர்ந்தது" என்னலாம்படி) ஸுகுமாரமான, அடித்தாமரை - திருவடித்தாமரைகளை, வாயுள்ளும் - வாக்குள்ளும், மனத்துள்ளும் - நெஞ்சினுள்ளும், வைப்பார்கட்கு - வைக்குமவர்களுக்கு, ஓயும்-பலஹாநியைப் பிறப்பிக்கக்கடவ, மூப்பு-மூப்பு, பிறப்பு-(அந்த ஶரீரத்துக்கு அடியான) பிறப்பு, இறப்பு-(அதின்)விநாஶம், பிணி - (மூப்போடு பிணைந்து வருகிற) வ்யாதிகள் (இவற்றை), வீயுமாறு - நஶிக்கும்படி, செய்வான் - பண்ணுமவன், திருவேங்கடத்து - திருமலையிலே வர்த்திக்கிற, ஆயன் - க்ருஷ்ணன்.

இ.—ஒன்பதாம் பாட்டில், து:க நிவ்ருத்திக்குத் திருமலையாழ்வாரெல்லாம் வேணுமோ? திருமலைக்கு அவயவபூதனான திருவேங்கடமுடையானே அமையும் என்கிறார்.

[ஓயும் இத்யாதி] - ஜந்மஜராமரணாதிகள் ஓயும். 'ஓயும்' என்கையாலே, இதுக்குமுன்பு உச்சிவீடும் விடாதே சென்றது என்கை. [பிணி] -ஶரீரஸம்பந்த ஹேதுவான கர்மம். [வீயும் இத்யாதி] - து:கநிவ்ருத்திக்காகத் திருமலையிலே வந்து நின்று ஸுலபனானவன். [நாள் மலராம் அடி இத்யாதி] - நிரதிஶயபோக்யமான திருவடிகளை. [வாயுள்ளும் இத்யாதி] - மநோவாக்காயங்களாலே அநுபவிக்கப் பார்ப்பார்க்கு. இதுவிறே து:கநிவர்த்திக்குக் குடிக்கிற வேப்பங்குடிநீர்.

ஈடு.— ஒன்பதாம் பாட்டு. நம்விரோதியையும் போக்கி ப்ராப்யத்தையும் திருமலையாழ்வார்தாமே தருவர் என்றார், கீழ் இரண்டுபாட்டாலே; இப்படி விரோதிபாபங்களைப் போக்கி ப்ராப்யத்தைத் தருகைக்குத் திருமலையாழ்வாரேல்லாம் வேணுமோ? திருமலையாழ்வாரில் ஏகதேசம் அமையாதோ? என்கிறார் இதில். *('ஏகதேஶம்' என்கிறது, அப்பனை;) †"வடமாமலையுச்சி" என்னக்கடவதிறே, திருவேங்கட முடையானை.

[ஓயும் மூப்புபிறப்பு இறப்பு] - ஜந்மஜராமரணாதிகள் ஓயும். இப்போது ஓயு மென்கையாலே, முன்பு அநாதிகாலம் உச்சிவீடும் விடாதே போந்த தென்னு மிடம் தோன்றுகிறது. பிணிவீயு மாறுசெய்வான் - திருவேங்கடத்தாயன் என்று அவனோடே அந்வயம். பிணிவீயுமாறு செய்கைக் காகத் திருமலையிலே நிற்கிறவன். 'இவர்கள் பிணியும் இங்ஙனே சேன்றிடுவேதாக' என்றிருந்தானாகில் கலங்காப்பெருநகரத்திலே இரானோ? இங்கு, பிணியேன்கிறது, சரீரஸம்பந்த நிபந்தநமாக வருமவை யெல்லாவற்றையும் நினைத்து. கீழே, 'ஓயுமூப்புப்பிறப்பிறப்பு' என்றதாகில், இனி 'பிணிவீயுமாறு

ஒன்பதாம்பாட்டு - 'ஓயும்' இத்யாதி. கீழே - சரமாவதியான திருமலையைப் பற்றினவர், ப்ரதமாவதியான திருவேங்கடமுடையானைச் சொல்லுவானென்? என்ன, 'இப்படிவிரோதி' இத்யாதி. ஏகதேசமோ? என்ன, 'வடமாமலை' இத்யாதி; திருமொழி.

ஓயும் - விச்சிந்நமாம். உச்சிவீடு - மத்யாஹ்நத்தில் விடுகை. 'அவனோடே அந்வயம்' என்றது, 'பிணிவீயுமாறுசெய்வான்' என்றது - ப்ரதமைகவசநமாய், இவற்றைப்போக்கும் ஸ்வபாவனென்று திருவேங்கடத்தாயனுக்கு விசேஷண மென்றபடி. தமுந்ப்ரத்யயாந்தமாக அர்த்தாந்தரம் - 'பிணிவீயுமாறு செய்கைக்காக' இத்யாதி. 'திருவேங்கடத்தாயன்' என்றதுக்கு பாவம் - 'இவர்கள்பிணியும்' இத்யாதி. பிணிவீயுமாறு செய்கைக்காக வந்த திருவேங்கடத்தாயனை ஆஶ்ரயித்தால் பிணிவீயு மென்ன வேண்டியிருக்க, 'மூப்புப்பிறப்பிறப்பு ஓயும்' என்கிறதென்? என்ன, 'இங்குப் பிணி' இத்யாதி. அதாவது - ஷட்பாவவிகாரங்களுக்கும் உபலக்ஷண மென்றபடி. புநருக்தியை ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் - 'கீழே ஓயும்' இத்யாதி. 'து:கத்தைப்போக்க வேணும்' என்று ஸங்கல்பித்துக்கொண்டு வந்துநின்றானென்றபடி. 'பிணிவீயுமாறு செய்கைக்காகத் திருவேங்

* குண்டலிதம் பலஸ்ரீகோசங்களில் இல்லை யென்பர். †பெரிய திருமொழி - எ-௧0-உ.

செய்வான்' என்றதுக்குக் கருத்தேன்? என்னில்,—இவனுடைய இங்குத்தை துஃகநிவ்ருத்தியைப் பண்ணிக் கொடுக்கைக்காக வென்கை. ஆக, துஃகத்தைப்போக்கும் ஸ்வபாவனேன்கை. அவனே வந்து போக்கானாகில் இவ்வெலியெலும்பனுக்குப் போக்கிக்கொள்ளப் போகாதிறே. [நாள்மலராம் இத்யாதி] - அவன் கால்காண, "மூப்புப்பிறப்பிறப்புப்பிணி" என்கிற இவையெல்லாம் நசிக்கும். இவ்வேப்பங்குடிநீராயிற்று குடிக்கச்சொல்லுகிறது, விரோதிபோகைக்கு. செவ்விப்பூவைத் தலையிலே வைப்பாரைப்போலே யிருப்ப தோன்றிறே. [வாயுள்ளும் இத்யாதி] - இவையிரண்டும் காயிகத்துக்கும் உடலக்ஷணமாய், திருவடிகளை மநோவாக்காயங்களாலே அநுஸந்திப்பார்க்கு. வாயுள்வைக்கையாவது - *"ஓவாதுரைக்குமுரை" என்கிறபடியே உரைக்கை. மனத்துள்வைக்கையாவது - மறவாதிருக்கை. இப்படி கரணங்களுக்கு அடுத்த காரியங்களைக் கொள்ளவே, ஸ்வரூபவிரோதியாய் வந்தேறியானவை தன்னடையே போம். பிணிவீயுமாறுசெய்வான் திருவேங்கடத்தாயனுடைய நாண்மலராமடித்தாமரை வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கு மூப்புப்பிறப்பிறப்பு ஓயும். (௯)

# பத்தாம் பாட்டு.

வைத்தநாள்வரை எல்லைகுறுகிச்சென்று
எய்த்திளைப்பதன்முன்னம் அடைமினோ
பைத்தபாம்பணையான் திருவேங்கடம்
மொய்த்தசோலை மொய்பூந்தடந்தாழ்வரே.

*ஆ.—(வைத்த.) 'ஆதலால் ஈண்டெனச்சென்று திருமலையை அநுபவியுங்கள்' என்கிறார்.*

*ஒ.—பத்தாம் பாட்டில், தம்முடைய ப்ரீதிப்ரகர்ஷத்தாலே எல்லீரும் திருத்தாழ்வரையை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்*

*[வைத்த நாள் வரை என்று தொடங்கி.]-திருமலைக்குப் போகைக்காக ஈஶ்வரன் நியமித்த ஆயுஸ்ஸின் எல்லையளவில் அணித்தாகச் சென்று திருமலையை அநுஸந்திக்க வொண்ணாத*

---

*கடத்தாயனானவனுடைய நாண்மலராம்' இத்யாரப்ய, வைப்பார்கட்கு - மூப்புப்பிறப்பிறப்பு - ஓயும் இத்யந்வயஃ. 'வீயுமாறுசெய்வான்' என்று - ப்ரதமைகவசநமான பக்ஷத்தை விவரிக்கிறார் - 'ஆக, துஃகத்தை' இத்யாதி. ஆகவென்று - அன்றிக்கே யென்றபடி. அவன் வந்து போக்கவேணுமோ? இவனாற் போக்கிக்கொள்ள வொண்ணாதோ? என்ன, 'அவனே' இத்யாதி. எலியெலும்பன் - அல்பசக்திகன். 'மூப்புப்பிறப்பிறப்பு' இத்யாரப்ய 'வைப்பார்கட்கு - மூப்புப்பிறப்பிறப்புப்பிணி - ஓயும்' என்று அந்வயவிவக்ஷயா பாவம் - 'அவன்கால்காண' இத்யாதி. 'நாண்மலர்' என்ற விசேஷணத்துக்கு பாவம் - 'இவ்வேப்பங்குடி' இத்யாதி. இவ்வேப்பங்குடிநீரை - இதி வ்யங்க்யோக்திஃ. 'தாமரை - நாண்மலராமடியை' இத்யந்வயஃ. தாமரையினுடைய ஸத்யோவிகஸிதமான புஷ்பமென்னலாம்படி ஸுகுமாரமாய் நிரதிஶயபோக்யமான திருவடிகளென்று சப்தார்த்தம். அப்படி வாங்மநஸ்ஸுகளிலே வைக்கைக்கு போக்யமா யிருக்குமோ? என்ன, 'செவ்விப்பூ' இத்யாதி. வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கு - மூப்புப்பிறப்பிறப்பு - ஓயும் என்கிற விடத்தில் - ஸாதநத்வஶங்கையைப் பரிஹரிக்கிறார் - 'இப்படி' இத்யாதி. அந்வயங்காட்டுகிறார்-'பிணிவீயுமாறு' இத்யாதி. மூப்பு - வ்ருத்தத்வம். பிணி - வ்யாதி. வீயுமாறு - நசிக்கும்படி. (௯)*

---

** இயற்பா-முதல் திருவந்தாதி-௬௫.*

படி கலங்கி அவஸந்நராவதற்கு முன்பே ஆஶ்ரயியுங்கோள். [பைத்தபாம்பணை என்று தொடங்கி]- தன்னோட்டை ஸ்பர்ஶஸுகாதிஶயத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவநந்தாழ்வானைக்காட்டிலும் எம்பெருமானுக்கு நிரதிஶய போக்யமான திருமலையினுடைய செறிந்திருந்துள்ள திருச்சோலைகளையும் அழகிய பூத்த பொய்கைகளையு முடைய திருத்தாழ்வரையை.

ப.—அநந்தரம், நிரதிஶயபோக்யமான திருமலையைப் பரமப்ராப்யமாகப் பற்றுங்கோள் என்று ஸ்வஜநத்தைக் குறித்து உபதேஶிக்கிறார்.

பைத்த - விரிகிற பணங்களையுடைய, பாம்பு - அநந்தனை, அணையான்-அணையாகவுடையனான ஸர்வேஶ்வரன், திருவேங்கடம்-(தத்ஸாரூப்யத்தாலே ஆதரிக்கிற) திருமலையில்,மொய்த்த - செறிந்த, சோலை - சோலையினுடைய், மொய் - அழகிய, பூ - பூக்களையுடைத்தான, தடம் - இடமுடைய, தாழ்வர் - திருத்தாழ்வரையை, வைத்த - (உங்களுக்கு) ஸங்கல்பித்து வைத்த, நாள் - நாளினுடைய, வரை - அவதியான, எல்லை - முதலெல்லையானது, குறுகி - உங்களைக்கிட்டி, எய்த்து - (கரணங்களுக்கு) பலஹாநிபிறந்து, இளைப்பதன் முன்னம் - (அதடியாக நெஞ்சு) இளைப்பதற்கு முன்னே, சென்று - ("போம்குமரருள்ளீர்புரிந்து" என்கிறபடியே) சென்று, அடைமின் - ப்ராபியுங்கோள். தாழ்வர் - தாழ்வரை. மொய் - செறிவும், அழகும்.

இ.—பத்தாம் பாட்டில், திருமலையே ப்ராப்யமானபின்பு எல்லாரும் கரணபாடவமுள்ளபோதே திருத்தாழ்வரையை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[வைத்த நாள் இத்யாதி] - திருமலைக்குப் போகைக்காக ஈஶ்வரன் நியமித்த ஆயுஸ்ஸின் இறுதியினுடைய எல்லையான நாள் குறுகி. [எய்த்து இத்யாதி] - ஶரீரத்தையேயாய்க் கரணபாடவமின்றியே யிருக்கும் தசையிலே சென்று திருமலையை அநுபவிக்க வொண்ணாதபடி கலங்கி அவஸந்நராவதுக்கு முன்னே ஆஶ்ரயியுங்கோள். இருந்ததே குடியாக அபேக்ஷிக்கிறார். [பைத்த இத்யாதி] - ஸ்வஸ்பர்ஶ ஸுகாதிஶயத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவநந்தாழ்வானிற்காட்டிலும் விரும்பிவர்த்திக்கிற திருமலை. திருமலையைத் திருவநந்தாழ்வானாகவும் சொல்லக்கடவது. [மொய்த்த இத்யாதி]-செறிந்த சோலையையும் பரப்புமாறப்பூத்த பொய்கையையு முடைய திருத்தாழ்வரையை. தாழ்வரையை எய்த்து இளைப்பதன் முன்னம் அடைமினோ; வைத்த நாள்வரை எல்லை குறுகி எய்த்து இளைப்பதன் முன்னம் சென்று அடைமினோ என்றுமாம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. ஆக, திருமலையாழ்வார் எல்லார்க்குமொக்க உத்தேஶ்யமான பின்பு எல்லாரும் ஒக்கத் திருமலையாழ்வாரை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[வைத்த நாள் வரை யெல்லை குறுகி] - ஸர்வேஶ்வரன் இச்சேதநனுக்கு ஶரீரஸம்பத்தியைக் கொடுத்தது நரகாவஹமான விஷயங்கள் இருந்த விடம் தேடிப்போகைக்கு அல்ல, திருமலைக்குப் போகைக்கு என்றாயிற்று; "விசித்ராதேஹஸம்பத்தி ரீஶ்வராய நிவேதிதும்" (விசித்ராதேஹஸம்பத்தி ரீஶ்வராய நிவேதிதும்) என்னக்கடவதிறே. "ஸ்ரஷ்

---

பத்தாம்பாட்டு - 'வைத்த' இத்யாதி. 'தாழ்வர் - சென்று - அடைமினோ' என்ற பதத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-'ஆக' இத்யாதி. 'எல்லார்க்குமொக்க உத்தேஶ்யம்' என்றது, "வானவர் வானவர்கோனொடும்" இத்யாதியாலே-நித்யஸூரிகளுக்கும், "பரன்சென்றுசேர்" என்று ஈஶ்வரனுக்கும் உத்தேஶ்யமென்றபடி.

'அடைமினோ' என்னுமளவும் கடாக்ஷித்து 'வைத்த' என்றதுக்கு பாவம் - 'ஸர்வேஶ்வரன்' இத்யாதி. வைத்த - ஸ்ருஷ்டித்து வைத்த. என்றாயிற்று - கொடுத்தது என்று அந்வயிப்பது. உக்தத்துக்கு ப்ரமாணமும் த்ருஷ்டாந்தமும்-'விசித்ரா' இத்யாதி. "விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராயநிவேதிதும் - பூர்வமேவக்ருதா ப்ரஹ்மந்ஹஸ்தபாதாதிஸம்யுதா" இதி ஸ்ரீவிஷ்ணுதத்த்வே. 'ஸ்ருஷ்டஸ்த்வம்'

ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய" (ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய) - 'ஐயர் சொல்லிற்றுச் செய்ய வேண்டு கையாலே பெருமாள் காடேற எழுந்தருளாநின்றார்; நானும் கூட ஸேவித்துப்போவேன்' என்ன, அவர் காட்டிலே எழுந்தருளாநிற்கப் படைவீட்டிலே யிருக்கைக்கோ, நாம் உம்மைப் பெற்றது? நீர் இப்படிசெய்தீராகில் நான் உம்மைப்பெற்ற ப்ரயோஜநம் பெற்றேனாகி றேன். அவர்க்கு யாதொரு போது துணைவேண்டிற்று, அப்போது நீர் துணையாகைக்காகவன்றோ, நான் உம்மைப்பெற்றது. "ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே" (ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே) - நீர் ஸுஹ்ருஜ்ஜநத்தின்பக்கல் ஸ்வநுரக்தரல்லீரோ? ஆகையாலே, எல்லார்க்கும் வேர்ப்பற்றான பெருமாளை நோக்கித் தாரீர். அன்றிக்கே, "ஸுஹ்ருஜ்ஜநேராமே" (ஸுஹ்ருஜ்ஜநேராமே) என்றாய், பெருமாள்பக்கல் பண்டே ஸ்நேஹித்தன்றோ நீர் இருப்பது; இப்போது 'போம்' என்று நான் உமக்குச் சொல்லவேண்டியிருந்ததோ? "ராமேப்ரமாதம்மாகார்ஷீ:" (ராமேப்ரமாதம்மாகார்ஷீ:) - இப்படியிருக்கிற உம்மை நியமிக்கவேண்டுவதொன்று உண்டு-ப்ரமாதத்தைப் பண்ணாதேகொள்ளும். என்தான்? ப்ரமாதமேன்? என்னில்,—"புத்ரப்ராதரிகச்சதி" (புத்ரப்ராதரிகச்சதி)-உங்கள் தமையனார் நடப்பார்கிடீர்; அவர் நடையிலே நடைகொள்வர்; அவர்நடையழகிலே கண்வைத்துக் காவற்சோர்வுபட விடாதே கொள்ளும். அப்படியே, இச்சேதநனையும் இங்குவைத்தது திருமலைக்குப்போகைக்காகவாயிற்று. [வைத்தநாள்வரையெல்லை குறுகிச்சென்று] - ஈஶ்வரன் நியமித்துவைத்த ஆயுஸ்ஸினுடைய முடிவான எல்லையைச் சென்றுகிட்டி. [எய்த்து இளைப்பதன்முன்னம் அடைமினோ] - 'திருமலைக்குப் போகவேணும்' என்னும் ஶ்ரத்தையும் அநுவர்த்தியாநிற்கச்செய்தே 'பாவியேன் கரணபாடவதசை யுண்டாகப்பெற்றிலேன்' என்னும் தசை வருவதற்குமுன்னே போகுங்கோள். [பைத்த இத்யாதி] - தன்னேற்றை ஸ்பர்ஶத்தாலே விரித்த பணங்களையுடைய திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரன் அப்படுக்கையிற்காட்டிலும் விரும்பிவர்த்திக்கிற தேசம். * அன்றியே, திருமலையாழ்வார்தம்மைத் திருவநந்தாழ்வானாகவும் சொல்லக்கட

---

இத்யாதி. "ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாயஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே। ராமேப்ரமாதம்மாகார்ஷீ:புத்ரப்ராதரிகச்சதி" இதி அயோத்யாகாண்டே சத்வாரிம்ஶே லக்ஷ்மணம்ப்ரதி ஸுமித்ரா. "ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய" என்று சொல்லுகைக்கு ப்ரஸங்கம் அருளிச்செய்கிறார் - 'ஐயர்' இத்யாதி. இப்படி செய்தீராகில் - பெருமாள்பின்னேபோனீராகில் இத்யர்த்த:. 'பெருமாள் காடேறப்போகக் கூடப்போகவேணும்' என்று ஏற்கவே அறிந்தோ என்னைப்பெற்றது? என்ன, 'அவர்க்கு யாதொருபோது' இத்யாதி. அனுப்புகிறவள் இருக்கைக்கு ஹேதுவானத்தைச் சொல்லலாமோ? என்ன, 'நீர் ஸுஹ்ருஜ்ஜநத்தில்' இத்யாதி. ப்ரமாதமென்று - அநவதாநத்தைச் சொல்லுகிறது. "வஶமநவதாநதா" இத்யமர:. 'நடையிலேநடைகொள்வர்' - தம்முடைய நடையழகாலே "காலாழும் நெஞ்சழியும்" என்கிறபடியே உம்மை ஈடுபடுத்துவர். காவற்சோர்வுபட விடாதே - ஸாவதாநதைக்கு நழுவுதலுண்டாம்படி விடாதே யித்யர்த்த:. படுகை - உண்டாகை. உக்தார்த்த நிகமநம் - 'அப்படியே' இத்யாதி. 'வைத்த' என்றதுக்கு - ஸங்கல்பித்துவைத்த என்று அர்த்தாந்தரம் - 'ஈஶ்வரன் நியமித்துவைத்த' இத்யாதி. நாள் - ஆயுஸ்ஸு. வரையான எல்லை - முடிவான எல்லை. 'சென்று-குறுகி' என்று அந்வயிப்பது. 'குறுகி' - கிட்டி. முடிவான எல்லையாவது - வார்த்தக்யம். எய்த்து - கரணங்களுக்கு பலஹாநிபிறந்து. இளைப்பதன்முன்னம் - அதடியாக நெஞ்சு இளைப்பதற்குமுன்னே. பாம்பணையானுடைய - திருவேங்கடமென்று முந்தின அர்த்தம். த்விதீயார்த்தத்துக்கு † ("மனக்களுழறிவரும்" என்கிற ந்யாயத்தாலே பாம்பணையாம் திருவேங்கட மென்றபடி.) அணை - படுக்கை. திருவநந்தாழ்வானாகிற படுக்கை

---

* "பாம்பணையாந் திருவேங்கடம்" என்று பாடங்கொண்டு அருளிச்செய்தது, இந்த வாக்யம்.

† குண்டலிதம் - அஸம்பத்தம்.

வதிறே. [மோய்த்த இத்யாதி] - செறிந்த சோலையையும், பரப்புமாறப்பூத்த தடாகங்களையும் உடைத்தான திருத்தாழ்வரையை எய்த்து இளைப்பதன்முன்னம் சென்று அடைமினே. எய்த்திளைக்கையாவது - ஒன்று நெஞ்சிளைப்பு, ஒன்று சரீரத்தினிளைப்பு. (கo)

## பதினோராம் பாட்டு.

தாள்பரப்பி மண்தாவியஈசனை
நீள்போழிற்குருகூர்ச் சடகோபன்சோல்
கேழிலாயிரத்து இப்பத்தும்வல்லவர்
வாழ்வர்வாழ்வெய்தி ஞாலம்புகழவே.

ஆ.—(தாள்பரப்பி.) ஸர்வாத்மாக்களுக்கும் புஜிக்கலாம்படி திருவடிகளைப் பரப்பி இந்தலோகத்தை அளந்தருளின திருவேங்கடமுடையானைச் சொன்ன இத்திருவாய்மொழியை வல்லார், லோகமெல்லாம் புகழும்படி எல்லாவற்றிலும் மேற்பட்ட திருமலையாகிற மஹாஸம்பத்தைப் பெற்று வாழ்வர் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார் ஆழ்வார் மநோரதித்தபடியே எப்பேர்ப்பட்ட அடிமையும் செய்யப்பெறுவர் என்கிறார்

[தாள் என்று தொடங்கி.] - ஸ்ரீவாமநனாய் தன்னுடைய குணசேஷ்டிதாதிகளாலே லோகத்தையடைய அடிமைகொண்ட திருவேங்கடமுடையானைப் பரம்பியிருந்த திருச்சோலையாலே அலங்க்ருதமான திருநகரியையுடைய ஆழ்வாரருளிச்செயலான ஒப்பில்லாத ஆயிரத்து இப்பத்தும் வல்லவர். [வாழ்வர் என்று தொடங்கி] - இஜ்ஜகத்திலுள்ளார் இவனைப்புகழப்பெற்று க்ருதார்த்தரானோம் என்று புகழும்படி இத்திருவாய்மொழியில் தாம் மநோரதித்தாற்போலே அடிமைசெய்யப் பெறுவர்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாகக் கைங்கர்யைஶ்வர்யலாபத்தை அருளிச்செய்கிறார்.

(படிக்களவாக), தாள் - திருவடிகளை, பரப்பி - பரப்பி, மண் - பூமியை, தாவிய - அளந்துகொண்ட, ஈசனை - ஸர்வேஶ்வரனை, நீள் - உயர்ந்த, பொழில் - பொழிலையுடைத்தான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, கேழ் இல் - ஒப்பு இல்லாத, ஆயிரத்து - ஆயிரத்து, இப்பத்தும் - இப்பத்தையும், வல்லவர் - (அர்த்தாநுஸந்தாநத்தோடே அப்யஸிக்க) வல்லார்கள், வாழ்வு - (இவர் ப்ரார்த்தித்த) கைங்கர்யஸாம்ராஜ்யத்தை, எய்தி - பெற்று, ஞாலம் - லோகமடங்க, புகழ - கொண்டாடும்படி, வாழ்வர் - அடிமை செய்து வாழப்பெறுவர். இது - கலிவிருத்தம்.

---

தானுயிருக்கிற திருவேங்கட மித்யர்த்த꞉. பைத்த - விசித்த; பணங்களையுடைய வென்று கூட்டுவது. மொய்த்த - செறிந்த, நிபிடமான. மொய்பூந்தடம் - அழகிய பூக்களையுடைய தடாகங்களையுடைய. மொய் - அழகும், செறிவும். தடம் - தடாகங்கள். புநருக்தியைப் பரிஹரிக்கிறார் - 'எய்த்திளைக்கையாவது' இத்யாதி. வைத்தநாள்வரை யெல்லையை - சென்று - குறுகி - எய்த்திளைப்பதன்முன்னம் - பைத்த பாம்பணையானித்யாரப்ய, தாழ்வரையை - அடைமினே இத்யந்வய꞉. யத்வா, 'சென்று' என்கிற பதத்தை - சென்றடைமினே வென்று மேலே அந்வயிக்கவுமாம். இதுக்கு ஸூசகம் - 'செறிந்தசோலை' இத்யாதி வாக்யம். தாழ்வர் - தாழ்வரை. தாழ்வரையை யென்று அர்த்தம். (கo)

*இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார் ஆழ்வார்மநோரதித்த படியே அடிமைசெய்யப்பெறுவர் என்கிறார்.*

*[தாள் பரப்பி] - கடிநமான தரையிலே நாட்பூவைப் பரப்பினாற்போலேயாயிற்று, திருவடிகளைப் பரப்பிற்று. [மண்தாவிய ஈசனை] - "உலகமளந்தபொன்னடி" என்று, திருவேங்கடமுடையானை ஸ்ரீவாமநனாகச் சொல்லக்கடவது, வரையாதொழிகையாலும், ஜகத்தையடையத் திருவடிகளின்கீழே சேர்த்துக்கொள்ள நிற்கிற நிலையாலும். [ஈசனை] - ஸ்வாமியை. [நீள்பொழில் இத்யாதி] - இவர்க்கு அடிமையில் மநோரதத்தில் பரப்போபாதி போருமாயிற்று, திருச்சோலையில் பரப்பு. [கேழில்] - ஒப்பில்லாத, இப்பத்து. ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைச் சொல்லுகையாலே ஒப்பில்லாத என்கிறது. [வாழ்வெய்தி ஞாலம்புகழ வாழ்வர்] - இவர் ப்ரார்த்தித்த கைங்கர்யத்தைப் பெற்றுச் சிறியார்பெரியாரென்றின்றிக்கே தம்தாம்பேருகப் புகழும்படி அடிமைசெய்யப் பெறுவர்கள்.*

**ஈடு.**—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸிக்க வல்லார் ஆழ்வார் ப்ரார்த்தித்தபடியே திருவேங்கடமுடையான்திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட அடிமைகளும் செய்யப்பெறுவர் என்கிறார்.

[தாள்பரப்பி மண்தாவிய ஈசனை] - கடிநஸ்தலத்திலே பூவைப்பரப்பினாற்போலே ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு காடும்மலையுமான பூமியை அநாயாஸேந அளந்துகொண்ட ஸர்வேஶ்வரனையாயிற்றுக் கவிபாடிற்று. திருவேங்கடமுடையானையன்றோ கவி பாடிற்று? என்னில்,— * "கொண்டாய் குறளாய் நிலமீரடியாலே விண்தோய்சிகரத் திருவேங்கட மேயவண்டா" என்றும், † "மண்ணளந்த இணைத்தாமரைகள்" என்றும், ‡ "உலகமளந்தபொன்னடியே யடைந்துய்ந்து" என்றும் ஆழ்வார்கள் அருளிச்செய்யாநிற்பர்கள்; எல்லாரையும் க்ரமத்திலே திருவடிகளின் கீழே இட்டுக்கொள்ளுகைக்காக நிற்கிற நிலையாலும், வரையாதே கானமும் வானரமுமான இவற்றுக்கு முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிறபடியாலும், திருவேங்கடமுடையானை ஸ்ரீவாமநனாகச் சொல்லக் கடவதிறே. [நீள்பொழில் இத்யாதி] - திருவுலகளந்தருளின திருவடிகளுக்கு அணுக்கனிட்டாற்போலே நிழல்செய்யும்படி வளர்ந்த பொழிலையுடைய திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார் அருளிச்செய்த. [கேழிலாயிரம்] - கேழென்று ஒப்பாய், ஒப்பில்லாத இப்பத்தையும் அப்யஸிக்க வல்லார்கள். இப்பத்துக்கு ஒப்பில்லாமையாவது - ஆத்மாவினுடைய ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தை மநோரதித்த பத்தாகையாலே வந்த ஒப்பில்லாமை. [வாழ்வர்வாழ்வெய்தி] - கைங்கர்யத்தை மநோரதித்து விடுகை யன்றிக்கே, இவருடைய மநோரதமே மநோரதமாகக் கைங்கர்யமாகிற ஸம்பத்தை ப்ராபித்து அநுபவிக்கப்பெறுவர்கள். [ஞாலம்புகழவே வாழ்வர்] - 'இளையபெருமாளொருவரே? அவர்பெற்ற பேறுஎன்?' என்று இங்ஙனே படைவீடாகக் கொண்டாடினாற்போலே.

*நிகமம் - 'தாள்பரப்பி' இத்யாதி. "வாழ்வெய்தி - வாழ்வர்" என்றதைப்பற்ற அவதாரிகை.*

*'தாவிய' என்கையாலே-'அநாயாஸேந' என்றது. தடஸ்த ஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - 'திருவேங்கடமுடையானை' இத்யாதி. "கொண்டாய்" இத்யாதி திருமொழி. வாமநனாய்ப் பூமியை இரண்டடியாலே அளந்துகொண்டாய். விண்ணிலே-ஆகாசத்திலே, கிட்டின சிகரங்களையுடைய திருமலையிலே வர்த்திக்கிற ஸ்வாமியானவனே! இத்யர்த்த:. ப்ரமாணங்காட்டி உபபத்தியைக் காட்டுகிறார் - 'எல்லாரையும் க்ரமத்திலே' இத்யாதி. 'க்ரமத்திலே' இதி - ரஸோக்தி:. க்ரமத்திலே - பதவிக்ஷேபத்திலே; "க்ரமேணாவாப விக்ஷேபே" இதி - தாது:; காலக்ரமேணேதிச. பதச்சேர்த்திக்கு ஹாவம் - 'திருவுலகளந்தருளின' இத்யாதி. அணுக்கன் - குடை. "கேழில் - இப்பத்து" என்று அந்வயித்து அர்த்தம் - 'கேழென்று ஒப்பாய்' இத்யாதி. 'வாழ்வர்' என்னாதே, 'வாழ்வெய்தி - வாழ்வர்' என்று விசேஷிக்கிறதென்? என்ன, 'கைங்கர்யத்தை' இத்யாதி. வாழ்வெய்தி - கைங்கர்யத்தைப்பெற்று, ஞாலம்புகழ வாழ்ந்த பேருண்டோ? என்ன, 'இளையபெருமாள்' இத்யாதி. "ஸிஹாயம் ஸமஹாஸத்ர்யஹ விஹவோஷம் । ஸஹோஷ்க்ஷிராஹஸ்ய ராஜீவாக்ஷம் ஹேஹாத்ருதி" என்று ஸ்ரீபராதாழ்வான் கொண்டாடினது - படைவீட்டுக்கும் உபலக்ஷணம். 'ஞாலம்புகழவே-*

* பெரியதிருமொழி க - க௦ - சு. † திருவாய்மொழி சு - க௦ - சு. ‡ பெரியதிருமொழி ரு - அ - சு.

அன்றிக்கே, வாழ்வெய்தி, ஞாலம்புகழ - வாழ்வர் என்னவுமாம்; க்ரூரராயிருக்கும் ப்ரபுக்களை அவர்கள் க்ரௌர்யமும் நெஞ்சிலே கிடக்கச்செய்தே ஏத்தாநிற்பர்களிறே ஜீவிக்கவேண்டுகையாலே; அங்ஙனன்றிக்கே, 'இவனை ஏத்தப்பெற்றோமே, இற்றைவிடிவும் ஒருவிடிவே !' என்று ப்ரீதியோடே ஏத்துவர்கள். [ஞாலம்புகழவே] - விசேஷஜ்ஞரானோர் ஏத்துகையன்றிக்கே, அதுதன்னிலும் சிலர் நெஞ்சிலே த்வேஷமுங் கிடக்கையன்றிக்கே, இருந்ததே குடியாக எல்லாரும் ப்ரீதியோடே புகழ்வர்கள்.

முதற்பாட்டில் -'திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் எப்பேர்ப்பட்ட அடிமைகளும் செய்யவேணும்' என்று மநோரதித்தார்; இரண்டாம் பாட்டில் - 'அது ஒருதேசவிசேஷத்திலே போனால் பெறுமதன்றோ?' என்ன, 'அங்குள்ளாரும் இங்கே வந்து அடிமைசெய்கிற தேசமன்றோ? நமக்கு இங்கே பெறத் தட்டில்லை' என்றார்; மூன்றாம்பாட்டில் - 'நிறைவாளர்க்குத் தன்னைக்கொடுத்தவன் குறைவாளர்க்குத் தன்னைத் தரச் சொல்லவேணுமோ?' என்றார்; நாலாம்பாட்டில் - 'அவர்களுக்குத் தன்னைக் கொடுத்தானென்றது ஓரேற்றமோ; எனக்குங்கூடத் தன்னைத்தந்தவனுக்கு?' என்றார்; அஞ்சாம்பாட்டில்-'எனக்குத் தன்னைத்தந்தானென்றது ஓரேற்றமோ, என்னிலும் தண்ணியாரைத் தேடிக்கிடையாமே நிற்கிறவனுக்கு?' என்றார்; ஆறாம் பாட்டில் - 'இவ்வடிமையிலேஇழிய, விரோதிகளும் தன்னடையேபோம்' என்றார்; ஏழாம்பாட்டில்- 'இக்கைங்கர்யத்தைத் திருமலையாழ்வார் தாமே நமக்குத் தருவர்' என்றார்; எட்டாம்பாட்டில் - 'அத்திருமலையாழ்வார் தாமே நம்விரோதிகளைப் போக்கித் தம்மையும் தருவர்' என்றார்;ஒன்பதாம்பாட்டில்- 'திருமலையாழ்வாரேல்லாம் வேணுமோ நமக்கு ப்ராப்யத்தைத் தருகைக்கு? அவரோட்டை ஸம்பந்தமுடையார் அமையும்' என்றார்; பத்தாம்பாட்டில் - 'சேஷிக்கு உத்தேச்யமாகையாலே சேஷபூதரானரேல்லாரும் திருமலையாழ்வாரை ஆச்ரயியுங்கோள்' என்றார்; நிகமத்தில்-பலஞ்சொல்லித் தலைக்கட்டினார். (கக)

வாழ்வெய்தி - வாழ்வர்' என்று முந்தின நிர்வாஹம். 'ஞாலம் - வாழ்வெய்தி - புகழ - வாழ்வர்' என்று இரண்டாம் நிர்வாஹம். த்விதீயபக்ஷே வாழ்வெய்தி - ப்ரீதியையடைந்து. து:கித்துக்கொண்டு புகழுமது முண்டோ? என்ன, 'க்ரூரராயிருக்கும்' இத்யாதி. இற்றைவிடிவு - இன்றையில்விடிவு. 'ஞாலம்' என்றதுக்கு ஸ்வரவம்- 'விசேஷஜ்ஞர்' இத்யாதி. தாள்பரப்பி இத்யாரப்ய, வல்லவர் - ஞாலம்புகழ - வாழ்வெய்தி - வாழ்வரித்யந்வய:. வாழ்வெய்தி - ஞாலம்புகழவே - வாழ்வரிதிவா அந்வய:. நிறைவாளர் - பூர்ணர். குறைவாளர் - தாழ்ந்தவர்.(கக)

---

த்ரவிடோபநிஷத் ஸங்கதி.—ஸவபூத ஸவபூஸ2யே ஸகலா ஸவஸாவஸ்ய யபூயநுநிவிஷாஸ்ய ரஸாநுாநீஜ்ரு: । ஸ்ரீவெஂகடாத்ரிநிலயஸ்ய வரஸ்யவாஂஸோநிஷ்ஸீ2ஶீஸமாணவெய்வதத்ரதீயெ.

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி: —ஸூாநோக்தஷபூாஸ்தாநீவ்தம் ஶ்ரீஹரவபாஷம் ஸ்வாமிவரபராஸ்தஷம் தெஜ்ஷஸ்வயோரக வணிதஷவநம் வாவநம் ஸஞ்தாநா। வராவ்யஹபூஸாநஂஹ: ஶநவிஷயம் ஸியுவிஜ்வாஹம் ஜெஜ ஶீவராஷியாநக்ஷஶஹவஸதிம் ஙிதாவபூாஹிஷவ்யு.

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஒழிவிலாக்காலமுடனாகிமன்னி
வழுவிலாவாட்செய்யமாலுக்கு - எழுசிகர
வேங்கடத்துப்பாரித்த மிக்கநலம்சேர்மாறன்
பூங்கழலைநெஞ்சே புகழ்.

## நான்காந் திருவாய்மொழி — புகழுநல்லொருவன் : ப்ரவேஶம்.

ஆ.—(புகழும்.) இப்படி திருவேங்கடமுடையானை புஜிக்கவாருங்க ளென்று தம்முடைய திருவுள்ளத்தையும், திருவுள்ளம்போலே பகவத்கைங்கர்யைகரதிகளாயிருப்பாரையும் அழைத்து, அவனைபுஜிக்கையிலே ப்ரவ்ருத்தராய்ச் செல்லாநிற்க, நடுவே திருமலையினுடைய போக்யதையைக் கண்டு திருமலையை அநுபவித்து, பின்னையும் திருவேங்கடமுடையானுடைய ஸர்வவஸ்து ஶரீரித்வத்தையும், ஸர்வவஸ்துகதாஶேஷ தோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டத்வத்தையும், திவ்யரூபபூஷணாயுத மஹிஷீபரிஜநஸ்தாந விஶிஷ்டத்வத்தையும் சொல்லி புஜிக்கிறார்.

ஒ.—நாலாந்திருவாய்மொழியில், தாம் முன்பு ப்ரார்த்தித்த அடிமை கொள்கைக்காக எம்பெருமான் தன்னுடைய ஸர்வாத்மபாவத்தைக் காட்டியருளக் கண்டு ஸம்ப்ராந்தரான ஆழ்வார் பூதங்களையும் பௌதிகங்களையும் விளக்குக்களில்உஜ்ஜ்வலபதார்த்தங்களையும் ரஸ்யமானபதார்த்தங்களையும் செவிக்கினிய கானாதிகளையும் மோக்ஷாதிபுருஷார்த்தங்களையும் ஜகத்துக்கு ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதிகளையும் ஜகத்துக்கெல்லாம் காரணமான ப்ரக்ருதிபுருஷர்களையும் விபூதியாகவுடையனாய் அந்தஶரீரபூதமான விபூதியிலே ஆத்மதயா வ்யாபித்துத் தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாக மாத்ரமன்றிக்கே இவ்விபூதியோகத்தாலே தன்னுடைய அஸாதாரணமான திருமேனியால் பெறும் ஏற்றத்தையு முடையனாய் ஸ்ரீய:பதியாயிருந்துள்ள எம்பெருமானை அநுஸந்தித்துப் பகவத்குணாநுஸந்தாநம் பண்ணினால் "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்னுங் கணக்காலே காயிகமானஅடிமையில் க்ஷமரல்லாமையாலும்,"கோவைவாயா"ளிற்படியாலே எம்பெருமான் இவர் தாம்பேசினபேச்சை எல்லாஅடிமையுமாகக் கொள்ளுவா னொருவனாகையாலும், விபூதிவாசகமான ஶப்தம் விபூதிமுகத்தாலே அவனுக்கு ப்ரதிபாதகமாகையாலும், அவற்றைச் சொல்லும் சொல்லாலே அவற்றையுடையனான இவனைச் சொல்லி வாசிகமான அடிமையிலே ப்ரவ்ருத்தராகிறார்.

ப.—நாலாந் திருவாய்மொழியில், கீழ் ப்ரஸ்துதமான கைங்கர்யத்துக்கு ப்ரதிஸம்பந்தி ஸகலசேதநாசேதந விஶிஷ்டனான நாராயணனாகையாலே அவனுடைய ஸர்வப்ரகார விஶிஷ்டத்வத்தையும் அநுஸந்தித்து, பூதபௌதிகாத்மக ஸகலப்ரகாரத்வத்தையும், பூதகார்யவிஶேஷப்ரகாரத்வத்தையும், அஸாதாரண விக்ரஹயோகத்தையும், ரத்நாதிவிலக்ஷணபதார்த்தப்ரகாரத்வத்தையும், ஸரஸமான போக்யவஸ்துப்ரகாரத்வத்தையும், வேதவைதிகரூபமான காநபர்யந்த ஶப்தராஶிப்ரகாரத்வத்தையும், போகமோக்ஷரூபமான புருஷார்த்தப்ரகாரத்வத்தையும், லோகப்ரதாநரான ப்ரஹ்மாதிஶரீரகத்வத்தையும், இப்படி ஸமஸ்த சேதநாசேதநப்ரகாரத்வத்தையும், தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டத்வத்தையும் அநுஸந்தித்து, ப்ரகாரவாசகஶப்தங்களாலே ப்ரகாரியான தன்னைச் சொல்லும்படியான அவிநாபாவத்தை ப்ரகாஶிப்பிக்கையாலே அவனுக்கு ப்ரகாரதயா ஶேஷபூதராயிருக்கிற இவர், ப்ரகாரவாசகஶப்தங்களும் அஸாதாரண திவ்யநாமங்களோபாதி அங்குத்தைக்கு வாசகமாகையாலே தத்தச்சப்தங்களாலே தம்முடைய ஸ்வரூபாநுரூபமான வாசிககைங்கர்யம் பண்ணுகிறார்.

இ.—நாலாந்திருவாய்மொழியில், தாம் முன்பு ப்ரார்த்தித்த அடிமைகொள்ளுகைக்காக ஸர்வேஶ்வரன் தன் ஸர்வாத்மபாவத்தைக் காட்டியருளக் கண்டு பகவத்குணங்களோபாதி விபூதியும் ததீயத்வாகாரேண உத்தேஶ்யமாகையாலே பூதங்களையும் பௌதிகங்களையும் அஸாதாரணவிக்ரஹத்தையும் மாணிக்யாதிஸ்ப்ருஹணீயபதார்த்தங்களையும்போக்யமானரஸவத்பதார்த்தங்களையும் காநாதிஶப்தராஶியையும் மோக்ஷாதிபுருஷார்த்தங்களையும் ஜகத்துக்கு ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதிகளையும் ஸர்வகாரணமான ப்ரக்ருதி புருஷர்களையும் விபூதியாகவுடையனாய், அந்தஶரீரபூத

மான விபூதியிலே ஆத்மதயா வ்யாபித்து தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாய், அவ்வளவன்றிக்கே இவனுக்கு இது தகுதியாயிருக்கிறபடியையும் அநுஸந்தித்து "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்கிறபடியே காயிகமான அடிமையில் க்ஷமரல்லாமையாலும் "கோவைவாயா"ளிற்படியே இவர்பேச்சை எல்லாவடிமையுமாக அவன் கொள்ளுகையாலும், விபூதிவாசகமான ஶப்தம் விபூதிமுகத்தாலே அவனுக்கு ப்ரதிபாதகமாகையாலும், விபூதிவிஷயமான ஶப்தத்தோடு நாராயணாதி நாமங்களோடு வாசியற்றிருக்கிறபடியாலே ஸர்வஶப்தங்களாலும் அவனைச்சொல்லி வாசிகமான அடிமையிலே ப்ரவ்ருத்தராகிறார்.

ஈடு.—கீழே "ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமைசெய்யவேண்டும் நாம்" என்று - அடிமைசெய்யப் பாரித்தார்; இவர்பாரித்த பாரிப்புக்கெல்லாம் போரும்படி ஈஶ்வரனும் தன்னுடைய ஸர்வாத்மபாவத்தைக் காட்டிக்கொடுத்தான். இருவரும் இலையகலப்படுக்குமித்தனைபோக்கி அவனும் அடிமைகொள்ளமாட்டான், இவரும் அடிமைசெய்யமாட்டார்; "நசேச்சதிஜநார்த்தந:"(நசேச்சதிஜநார்த்தந:)என்கிறபடியே ஸ்வாராதனாய் இத்தலையில்பெற்றது கொண்டுதிருப்தனுமவனே அவன்; இவரதுதானே * ஆராதகாதலிறே;இவருடையபாரிப்புக்கு ஈடாக அவன் ஸர்வாத்மபாவத்தைக் காட்டிக்கொடுத்தவிடத்தில் அடிமைசெய்கையின்றிக்கே, அவனுடையகுணங்களை அநுஸந்தித்து ஶிதிலாந்தஃகரணராய், †"காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்"என்னும் ஸ்வபாவரே இவர். "புனையும்கண்ணியெனதுடையவாசகஞ்செய்மாலையே வான்பட்டாடையுமஃதே" என்று - இவருடையஉக்திமாத்ரத்தை எல்லாமாகக் கொள்ளும் ஸ்வபாவனிறே அவனும். அவன்ஸ்வரூபத்தோடு குணத்தோடு விபூதியோடு சேஷ்டிதங்களோடு வாசியின்றிக்கே எல்லாம் உத்தேஶ்யமாயிருக்குமிறே இவருக்கு. அவைதன்னைக் கண்டகண்டவிடங்களிலே அநுபவிக்கையன்

---

புகழுநல்லொருவன் ப்ரவேஶே, கீழில் ப்ரமேயத்தை அநுவதித்துக்கொண்டு இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி-'கீழே ஒழிவில்காலம்' இத்யாதி. ஸர்வாத்மபாவத்தைக்காட்டிக்கொடுத்தான் என்ற அநந்தரம் - 'அத்தையநுஸந்தித்து வாசிகமான அடிமை செய்கிறார் இத்திருவாய்மொழியில்' என்று அத்யாஹரிப்பது. "வழுவிலா வடிமை செய்ய வேண்டும் நாம்" என்று பாரித்துவைத்து, வாங்மாத்ரத்தாலே அடிமைசெய்வானென்? என்ன, 'இருவரும்' இத்யாதி. இலையகலப்படுக்கை - மிகவும்பாரிக்கை. இருவரும் மாட்டாமைக்கு அடியேது? என்ன, 'நசேச்சதி' இத்யாதி வாக்யத்வயேந. இந்த வாக்யத்வயத்தையும் வ்யுத்க்ரமமாக விவரிக்கிறார்- 'இவருடைய' இத்யாதி வாக்யத்வயேந. 'காலாழும்' இத்யாதி - பெரியதிருவந்தாதி. திருப்பாற்கடலிலே நீ கண்வளர்ந்தருளுகிற அழகையும் குணங்களையும் நாம்கேட்டமாத்ரத்திலே அவ்வளவும் வாராதபடி கால் தடுமாறுகின்றது, நெஞ்சு ஶிதிலமாகாநின்றது, கண் சுழலாநின்றது இதி பாசுரார்த்த:. 'புனையும்' இத்யாதி - சாத்தும் திருமாலை என்னுடைய வாக்வ்ருத்தியான ஶப்தத்தாலே தொடுக்கப்பட்ட மாலையேயாயிராநின்றது; சீரியதான பரிவட்டமும் அந்தவாக்வ்ருத்தியே. இத்தால் - இவர் பக்திபாரவஶ்யத்தாலே எல்லாவடிமைகளும் செய்யமாட்டாமையாலும், அவனும் வாசிகமான அடிமையையே எல்லாவடிமையுமாகக் கொள்ளும் ஸ்வபாவனாகையாலும், பாரித்தபடியே இவரும் செய்து தலைக்கட்டமாட்டார்; அவனும் கொள்ளமாட்டானென்றபடி. போக்யமான ஸ்வரூபாதிகளோடே ஹேயமான லீலாவிபூதியைச் சேர்த்து அநுபவிக்கிறதென்? என்ன, 'அவன் ஸ்வரூபத்தோடு' இத்யாதி. ஆனால், வையதிகரண்யத்தாலே அநுபவியாதே ஸாமாநாதிகரண்யத்தாலே அநுபவிக்கிறதென்? என்ன, 'அவைதன்னை' இத்யாதி. அதாவது - மாணிக்யாதிகளின் சேர்த்தியைப்போலே, அவன்பக்கலிலே சேர்த்தால் போக்யதாதிஶயம் பிறக்கையாலே சேர்த்து அநுபவிக்கிறாரென்றபடி. கண்டகண்டவிடங்களிலே யென்றது - வையதிகரண்யத்தாலே யென்றபடி. வையதிகரண்யேநாநுபவாதபி பகவத்ப்ரகாரத்வேநைவ ஸாமாநாதிகரண்யேநாநுபவே போக்யதாப்ரகர்ஷோஸ்தீதி பாவ:. "[illegible]" என்னக்கடவதிறே. 'அவன் ஸ்வரூபத்தோடு' இத்யாதி வாக்யவிவரணம் - 'இவர்க்கு

---

* திருவாய்மொழி உ - க - கக. † பெரிய திருவந்தாதி - ௩௪.

றிக்கே, மாணிக்கத்தையும் வயிரத்தையும்முத்தையும்ஓராரத்திலே சேர்த்துஅநுபவிப்பாரைப்போலே, அவற்றையுடைய அவன்பக்கலிலே சேர்த்து அநுபவிக்கிறார். இவர்க்கு அவன்குணங்களோடு விபூதியோடு வாசியின்றிக்கேயிறே இருப்பது. குணங்களுக்குப் பிரித்து ஸ்திதியாதல் உபலம்பமாதலில்லாதாபோலே, விபூதிக்கும் அவனையொழிய ஸ்திதியாதல் உபலம்பமாதலில்லாத படியும். இன்னமும் முக்தனுக்குலீலாவிபூதியும்அநுபாவ்யமாகாநின்றதிறேததீயத்வாகாரத்தாலே;"நோபஜநம் ஸ்மரந்" (நோபஜநம்ஸ்மரந்) என்கிறவிடத்தில் கர்மநிபந்தநமான ஆகாரத்தை ஸ்மரியானென்கிற இத்தனையிறே. கர்மநிபந்தநமான ஆகாரம் ஸ்ம்ருதிவிஷயமாகாதபடியான பாகம் பிறந்தால், ததீயமாயே தோற்றி எல்லாமொக்க அநுபாவ்யமாக இருக்குமிறே. இவ்விபூதி தன்னிலே*"எண்ணுதமானிடத்தையெண்ணுத போதெல்லா மினியவாறே" என்று சிலரைச்சொல்லி,†"பேராளன்பேரோதும் பெரியோரையொருகாலும் பிரிகிலேனே" என்று சிலரை ஒருகாலும் மறக்கவொண்ணுதபடியாகவும் சொல்லாநின்றதிறே; ஜ்ஞானம்பிறந்த தசையிலே யிருக்கும்படியாயிற்று, இது; ப்ராப்திஸமயத்தில் வந்தால் இவ்வாசியின்றிக்கே எல்லாமொக்க அநுபாவ்யமாகாநின்றதிறே. ஈஶ்வரவிபூதியாயிருக்கச் செய்தேயிறே சிலரை ‡ "பொல்லாததேவரைத் தேவரல்லாரைத் திருவில்லாத்தேவரைத் தேறேன்மின்" என்கிறது; நின்ற நின்ற நிலைகளிலே ஹேயோபாதேயவிபாகம்பண்ணி யநுஸந்திக்கவேண்டிவருமிறே, ஶாஸ்த்ரங்களெங்குமொக்கச் சேரக்கிடக்கும்படி பார்க்கும்போது. இவர்க்கு அவன்குணங்களோடு விபூதியோடு வாசியற அநுபாவ்யமாம்படியிறே மயர்வறமதிநலமருளிற்று; கர்மநிபந்தநமான

*அவன்' இத்யாதி. குணங்களுக்குப்போலே த்ரவ்யமான விபூதிக்கும் ப்ருதக்ஸ்தித்யுபலம்பாதிகளில்லாமையாலே ஸாமாநாதிகரண்யத்தாலே அநுபவிக்கிறுரென்று பரிஹாராந்தரம்-'குணங்களுக்கு'இத்யாதி. இதுப்ரபாப்ரபாவாந்களிலே கண்டுகொள்வது. த்யாஜ்யமான விபூதி ஸ்வரூபகுணுதிகளோபாதி உத்தேஶ்யமாகைக்கு அடியேது? அப்படி ததீயத்வாகாரேண அநுபவித்தபேர்தா னுண்டோ? என்ன, 'இன்னமும்' இத்யாதி. "ஸவஏகஹவ ஸ்யாத்ஸஸ்யாதி" என்று விவக்ஷிதம். 'இன்னமும்' என்றது - வார்த்தைப்பாடு. ஆனுல், "நோபஜநம் ஸ்மரந்" என்றுநின்றதே என்ன, 'நோபஜநம்' இத்யாதி. முமுக்ஷுவான இவர்க்கு முக்தர்படி கூடுமோ? என்ன, 'கர்மநிபந்தந' இத்யாதி. ஶங்காவாக்யம் - 'இவ்விபூதி' இத்யாதி. 'சொல்லாநின்றதிறே' - எல்லாம் உத்தேஶ்யமானுல் இதுசேருமோ? என்று அத்யாஹார்யம். அவஸ்தாபேதேந விரோதமில்லையென்று பரிஹரிக்கிறுர் - 'ஜ்ஞானம்பிறந்த' இத்யாதி. ஜ்ஞானம்பிறந்த தசை - முமுக்ஷுதசை. ப்ராப்திஸமயம் - முக்தாவஸ்தை. 'ஈஶ்வரவிபூதியாயிருக்கச்செய்தே' இத்யாதி வாக்யம், 'இவ்விபூதிதன்னில்'-இத்யாதிஶங்காவாக்யத்துக்கு ஶேஷமாகையாலே, 'ஈஶ்வரவிபூதியாய்' இத்யாதி வாக்யத்தை முந்துற அநுஸந்தித்து, அநந்தரம் - 'இவ்விபூதிதன்னிலே எண்ணுத' இத்யாதி வாக்யம் அநுஸந்தேயம். ** அதாவது - "தேறேன்மின்" என்கிறது,'இனியவாறேயென்று சிலரைச்சொல்லி' என்று மேலேயிருக்கிற வாக்யத்தை இங்கே அந்வயித்துக்கொண்டு, அநந்தரம் 'பேராளன்பேரோதும்' இத்யாத்யநுஸந்திப்பதென்றபடி. 'எண்ணுதமானிடத்தை' இத்யாதி-திருமொழி. கண்ணமங்கைநகராளனுடைய திருவடிகளை ஶிரஸாவஹித்து அவனை நெஞ்சிலேயெண்ணுத மநுஷ்யரை எண்ணுதபோதெல்லாம் இனியதாயிருக்குமிறே. 'பேராளன்' இத்யாதி - திருமொழி. ஸர்வேஶ்வரன் திருநாமங்களை ஸங்கீர்த்தநம்பண்ணும் மஹாப்ரபாவவான்களை ஒருக்ஷணகாலமும் பிரிய க்ஷமனல்லேன். 'பொல்லாத' இத்யாதி-நான்முகன்திருவந்தாதி. பொல்லாத வடிவையுடையவராய், ஏறிட்டுக்கொண்ட தேவத்வத்தையுடையராய், தேவத்வஹேதுவான ஸ்ரீஸம்பந்தமுமில்லாத ருத்ராதிக்ஷுத்ரதேவதைகளை ஆஶ்ரயணீயதேவதைகளாக விஶ்வஸியாதே கொள்ளுங்கோ ளிதி பாசுரார்த்தஃ. இப்படி அவஸ்தாபேதேந விஷயவிஹாகம் பண்ணுகிறதென்? என்ன, 'நின்றநின்ற' இத்யாதி. சேரக்கிடக்கும்படி பார்க்கும்போது - அவிரோதேந நிர்வஹிக்கும்போது இத்யர்த்தஃ. கர்மநிபந்தநமான ஆகாரம் ஸ்ம்ருதிவிஷயமாகாதபடியான பாகம் பிறக்கைக்கு அடியேது? என்ன, 'இவர்க்கு அவன் குணங்களோடு' இத்யாதி. விவரணம் - 'கர்மநிபந்தந' இத்யாதி. பாட்டுக்களின் பாவங்களை அருளிச்*

* பெரியதிருமொழி - கக - சு - எ. † பெரிய திருமொழி - எ-ச-ச. ‡ நான்முகன்திருவந்தாதி - ருஙு.

** விவரண அரும்பத வாக்யம் விமர்ஶநீயம்,

ஸ்ம்ருதி பின்னுடாதபடியிறே இவர்க்கு ஈஶ்வரன் வெளிச்சிறப்புப் பண்ணிக்கொடுத்தது. இவர்க்குத் தன் ஸ்வரூபரூபகுணாதிகளை அடையக் காட்டிக்கொடுக்கக் கண்டு, விபூதிகாரணமான பூதங்கள் பௌதிகங்கள் அவற்றில் உஜ்ஜ்வலமான மாணிக்யாதிகள் ரஸ்யமான பதார்த்தங்கள் செவிக்கினிய கானாதிகள் மோக்ஷாதி புருஷார்த்தங்கள் இஜ்ஜகத்துக்கு ப்ரதாநரான ப்ரஹ்மாதிகள் இவற்றுக்கு அடையக் காரணமான ப்ரக்ருதி புருஷர்கள் இவற்றையடைய விபூதியாகவுடையனாய், இதினுள்ளே அந்தராத்மதயா அநுப்ரவேசித்து இவற்றோடே கலசிநிற்கச்செய்தேயும் தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாய், "அநஶ்நந்நந்ய:" (அநஶ்நந்நந்ய:) என்கிற ப்ரமாணபலத்தாலே இச்சேதநனுக்கு வரக்கடவதான ஸாம்கித்வது:கித்வாதிகள் தன்பக்கல் தட்டாதபடி நிற்கையேயன்றிக்கே நியாமகத்வத்தால் வந்த புகரையுடையவனுமாய், விபூதியில் அவ்வோபதார்த்தங்களுக்கு வாசகமான ஶப்தங்கள் அசித்தையும் அசித்துக்கு அபிமாநியான ஜீவனையும் காட்டுகிற கணக்கிலே ததந்தர்யாமியான பரமாத்மாவையும் காட்டி இஸ்ஸங்காதத்துக்கு வாசகங்களாய் அவன்பக்கலிலே பர்யவஸித்திருக்கையாலே, அஸாதாரணமான நாராயணாதி ஶப்தங்களோடு விபூதிவாசகமான ஶப்தங்களோடு வாசியற ஸர்வஶப்தங்களும் அவனையே சொல்லுகிறனவா யிருக்கிறபடியையும், இவ்விபூதிதான் புறம்பாய் விஞ்சிக்காட்டுகையன்றிக்கே தோளில்தோள்மாலையோபாதி தததியாய் அநுபாவ்யத்திலே அந்தர்ப்பூதமாயிருக்கிறபடியையும் அநுஸந்தித்து க்ருதார்த்தராய், பாரித்தபடியே எல்லாவடிமையும் செய்யமாட்டாமையாலும், அவன்தான் "கோவைவாயா"ளிற்படியே ஒன்றையே எல்லாவடிமையுமாகக் கொள்ளும் ஸ்வபாவனாகையாலும் வாசிகமான அடிமையிலே ப்ரவ்ருத்தராய், மஹாவாதத்தில் பலோபாதாநம் பண்ணுவாரைப்போலே, அத்தைச்சொல்லுவேனோ? இத்தைச்சொல்

---

*செய்யாநின்றுகொண்டு, ஸங்கதியை நிகமிக்கிறார் - 'இவர்க்குத் தன்ஸ்வரூப' இத்யாதி. "உணர்வின்மூர்த்தி" "அமலனென்கோ" இத்யாதி, "பங்கயக்கண்ணனென்கோ" "ஒளிமணிவண்ணன்" "கொண்டல்போல்வண்ணன்" இத்யாதி, "புகழுநல்லொருவன்" "பாவுசீர்க்கண்ணன்" இத்யாதிகளைப் பற்ற 'ஸ்வரூபரூபகுண' இத்யாதி. ஆதிஶப்தேந - விபூதிசேஷ்டிதாந்யுச்யந்தே. விபூதிவாசகஶப்தங்கள் ஸ்புடங்கள். சேஷ்டிதங்கள் - "கடல்கடைந்தமுதங்கொண்டவண்ணலை" இத்யாதிகளிலே சொல்லப்படுகிறது. முதற்பாட்டிலே - 'பூதங்கள்', இரண்டாம்பாட்டிலே - 'பௌதிகங்கள்'. "சாதிமாணிக்கம்" இத்யாதியைப்பற்ற - 'உஜ்ஜ்வலமான மாணிக்யாதிகள்' என்றது. "நலங்கடலமுதம்" இத்யாதி பதங்களைப் பற்ற 'ரஸ்யமான' இத்யாதி. "நடங்குகேள்வியிசை" இத்யாதியைப்பற்ற 'செவிக்கினிய' இத்யாதி. "வானவராதியென்கோ" இத்யாதி பாட்டைப் பற்ற 'மோக்ஷாதி' இத்யாதி. "ஒளிமணிவண்ணனென்கோ" என்கிற எட்டாம்பாட்டைப்பற்ற, 'ஜகத்துக்கு ப்ரதாந' இத்யாதி. "யாவையும் யவரும் தானே" என்றத்தைப்பற்ற-'ப்ரக்ருதிபுருஷர்கள்' இத்யாதி. "யாவையும்யவரும் தானாய்"என்கிற பாட்டைப்பற்ற-'இவற்றையடைய விபூதியாக' இத்யாதி."தோய்விலன்" என்றத்தைப் பற்ற-'தத்கததோஷை:' இத்யாதி. "அபிவாகஶீதி" என்றதின் அர்த்தம் - 'நியாமகத்வத்தால்' இத்யாதி. "தோய்விலன்" என்றதினாலே - நியாமகத்வத்தால் வந்த புகரும் ஸித்தம். "கண்ணனை", "சங்குசக்கரத்தன்" இத்யாத்யஸாதாரணஶப்தங்களோடே விபூதிவாசகஶப்தங்களுக்கு ஸாமாநாதிகரண்யம் சொல்லுகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் - 'விபூதியில் அவ்வோ' இத்யாதி. வாசகமான ஶப்தங்கள் - தேவமநுஷ்யாதிஶப்தங்கள். 'காட்டுகிற கணக்கிலே' இத்யாதி—ப்ரகாரவாசிஶப்தாநாம் ப்ரகாரிபர்யந்த ஸ்வார்த்தாபிதாயித்வ நியமாதிதி பாவ:. கணக்கிலே - ந்யாயத்திலே. "யாவையும் யவரும் தானாய்" இத்யாதியாலே - அர்த்தத:நாராயணஶப்தமும் அபிஹிதமித்யபிப்ராயேணாஹ-'நாராயணாதி' இத்யாதி. "கூடிவண்டறையும்தண்டார்" என்றத்தைப் பற்ற, 'தோளில்தோள்மாலையோபாதி' என்றது. 'இவரதுதானே ஆராதகாதலிறே' என்றத்தையும், "புனைபுங்கண்ணி" இத்யாதியையும் மீளவும்அநுவதிக்கிறார் - 'பாரித்தபடியே' இத்யாதி. "என்கோ"இதி ஸம்ஶயம் ஹ்ருதிநிதாயாஹ - 'மஹாவாதத்தில்' இத்யாதி. விஸ்தரேணோக்தமர்த்தம் ஸங்க்ரஹேண தர்ஶயந் யதோபக்ரமம் நிகமயதி-*

லுவேனே ? என்று இங்ஙனே அலமருகிறார். ஆக, இத்தால் - "வழுவிலா வடிமைசெய்யவேண்டும் நாம்" என்று தாம் பாரித்தபடியே அடிமைசெய்து தலைக்கட்டுகிறார்.

## முதற்பாட்டு.

புகழுநல்லொருவனென்கோ? பொருவில்சீர்ப்பூமியென்கோ?
திகழுந்தண்பரவையென்கோ? தீயென்கோ? வாயுவென்கோ?
நிகழுமாகாசமென்கோ? நீள்சுடரிரண்டுமென்கோ?
இகழ்விலிவ்வனைத்துமென்கோ? கண்ணனைக்கூவுமாறே.

*ஆ.—ஸர்வைஸ்ஸம்ஸ்துயமானனாய் ஸகலகல்யாணகுணவிஶிஷ்டனாய் நிருபமனா யிருந்தவனென்று சொல்லுவேனோ? க்ஷமாதிகுணயுக்தமான ப்ருதிவ்யாதி பூதங்களுக்கு அந்த ராத்மபூதனென்று சொல்லுவேனோ? ப்ரக்ருஷ்டதேஜோவிஶிஷ்டரான சந்த்ரஸூர்யாதிகளுக்கு அந்தராத்மபூதனென்று சொல்லுவேனோ? அன்றியே, ஒன்று ஒழியாமே இந்த ஸர்வபதார்த்தங் களுக்கும் அந்தராத்மபூதனென்று சொல்லுவேனோ? இவனை எங்ஙனே சொல்லுவேன்? என் கிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற அர்த்தத்தை ஸங்க்ர ஹேண அருளிச்செய்கிறார்.*

*[புகழுநல்லொருவனென்கோ] - ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளாலே புகழப்பட்ட நன்மையை யுடையனான அத்விதீயபுருஷன் என்பேனோ? [பொருவில்சீர்ப் பூமியென்கோ] - ஒப்பில்லாத க்ஷமாதிகுணங்களையுடைய பூமி யென்பேனோ? [நிகழும் ஆகாச மென்கோ] - ஸ்வவ்யதிரிக்தபூத சதுஷ்டயம் ஸம்ஹ்ருதமானாலும் சிலநாள் வர்த்திக்கும் ஆகாச மென்பேனோ? [நீள்சுடரிரண்டு மென்கோ] - மிக்க ஒளியையுடைய சந்த்ரஸூர்யர்க ளென்பேனோ ? [இகழ்விலிவ்வனைத்து மென் கோ] - ஒன்று ஒழியாமே இப்பதார்த்தங்களெல்லா மென்பேனோ ?*

*ப.—முதற்பாட்டில், பூதபௌதிகாத்மக ஸகல ப்ரகாரத்வத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.*

*கண்ணனை - (ஸர்வாத்மபாவ ப்ரகாஶகனான) க்ருஷ்ணனை, கூவுமாறு - சொல்லும்ப்ர காரம், புகழும் - (வேதங்களாலும் வைதிகபுருஷர்களாலும்) புகழப்பட்ட, நல் - விலக்ஷணகுண விக்ரஹவிபூதியுக்தனான, ஒருவன் - அத்விதீயன், என்கோ - என்பேனோ? பொரு இல் - ஒப்பு இல்லாத, சீர் - (தாரகத்வாதி) குணபூர்த்தியையுடைய, பூமியென்கோ—? திகழும் - ப்ரஸந்நதை யாலே உஜ்ஜ்வலமாய், தண் - சீதளஸ்வபாவமான, பரவையென்கோ - ஜலராசியென்கோ? தீயென்*

---

'ஆக இத்தால்' இத்யாதி. 'இத்திருவாய்மொழியிலே - தத்கததோஷாஸ்பர்ஶம், ஸர்வஶப்தவாச்யத்வம்' தோளில் தோள்மாலையோபாதி பொருந்தியிருக்கை, இவருக்கு முக்தாவஸ்தாப்ராப்தி முதலான அதிக அர்த்த விசேஷங்க ளுண்டானாலும், விபூதியோகமும், ஸாமாநாதிகரண்யமும், 'என்கோ' 'என்கோ' என்கிற ஸம்ஶயமு மாகிற அர்த்தத்ரயமும் ப்ராதாந்யேந ஶங்கித்துப் பரிஹரித்து ஸ்தாபிக்கிறார்'என்று ப்ரவேசத்தினடியிலே ஸங்க்ர ஹார்த்தமாக அருளிச்செய்வர். ஸம்ஶயமென்றதுக்கு ஸூசகம் - 'மஹாவாததத்தில் பலோபாதாநம்' இத்யாதி வாக்யம். "க்ஷநூவி தூணைஃகூரஃவாஂக-ஹூரஃநூவிதாஃாவநெஜநாகூ। க்ஷநூகஊஶஷஸம் வஶநூா ந ஜெவஹ திஜநாஃஃநஃ" இதி உத்யோகபர்வண் யேகோந நவதிதமே. "க்ஷநஶநந நெநூாகஊஷிவாகூஶ்தி" இதி முண்டோபநிஷதி. "நொவஜநஂஷூரஷிஃஂஶரீரஃ" இதிச் சாந்தோக்யே.

கோ - (ஜாட்யநிவர்த்தகமான) அக்நியென்கோ? வாயுவென்கோ - (ப்ராணநாதி ஹேதுவான) வாயுவென்கோ? நிகழும் - (ஸ்வகார்யவஸ்துக்களை ஆவரித்து) ஸங்க்ஹிதமான, ஆகாசமென்கோ - ஆகாசமென்கோ? நீள் - (கிரணத்வாரத்தாலே) எங்கும்போய் ப்ரகாசகமான, சுடரிரண்டுமென்கோ - சந்த்ராதித்யர்களாகிற இரண்டு தேஜஸ்ஸுமென்கோ? இகழ்வில் - ஒன்றொழியாமல், இவ்வனைத்துமென்கோ - இவை யெல்லா மென்கோ? 'இகழ்வில்'என்றது - த்யஜிக்கப்படாத உபாதேய மென்றுமாம்.

இ.—முதற்பாட்டில், இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற அர்த்தத்தை ஸங்க்ரஹேண சொல்லுகிறார்.

[புகழு நல்லொருவ னென்கோ] - ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளாலே புகழப்பட்ட நன்மையையுடையனான அத்விதீயபுருஷன் என்பேனோ? 'என்கோ' என்றது, என்பேனோ? என்றபடி. பிள்ளான் 'ஸர்வைஸ்ஸம்ஸ்துயமாநன் என்பேனோ?' என்னும். கீழ்ச்சொன்ன குணயோகத்தாலே வந்த வைலக்ஷண்யத்தோடொக்க விபூதியோகம் சொல்லுகிறது மேல்: [பொருவில்சீர் இத்யாதி] - ஒப்பில்லாத க்ஷமாதிகுணங்களையுடைய பூமி யென்பேனோ? பொரு - ஒப்பு. [திகழும் இத்யாதி] - காரணத்வத்தால் வந்த ஔஜ்ஜ்வல்யத்தையும் குளிர்த்தியையு முடைய ஜலதத்த்வம், தத்காரணமாய் ஊர்த்வஜ்வலநமான அக்நி, தத்காரணமான வாயு; [நிகழும் ஆகாசம்] - நிகழுகையாவது - வர்த்திக்கை; இதரபூதங்களுக்கு முன்னே ஸ்ருஷ்டமாய், இவை ஸம்ஹ்ருதமானாலும் சிலநாள்நிற்கு மென்னுதல், தன்னையொழிந்தவை தன்னுள்ளே வர்த்திக்கும்படியா யிருக்கு மென்னுதல். [நீள்சுடர் இரண்டும்] - மிக்க ஒளியையுடைய சந்த்ரஸூர்யர்கள்; கார்யவர்க்கத்துக்கு உபலக்ஷணம். தாபத்தை ஆற்றுகைக்கும் நீர்க்களிப்பை யறுக்கைக்கும் உறுப்பான சந்த்ரஸூர்யர்கள். [இகழ்வில் இவ்வனைத்து மென்கோ] - ஒன்று ஒழியாமே எல்லா மென்னுதல்; உபாதேயதமமான எல்லா மென்னுதல். [கண்ணனைக் கூவுமாறே] - அர்ஜுநன் 'ஹேக்ருஷ்ண ஹேயாதவ' என்றத்தோடு 'பூமி' என்றத்தோடு வாசியற்றிருக்கிறதிறே.

ஈடு.—முதற்பாட்டில் - அவனுடைய குணங்களையும், விபூதிகாரணமான பூதபஞ்சகங்களையும் சேரப்பிடித்து, இத்திருவாய்மொழியிலே மேல் பரக்கச்சொல்லுகிற அர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[புகழுநல்லொருவனென்கோ] - ''உயர்வறவுயர்நலம்'' தொடங்கி இவ்வளவும்வரத் தாம் அநுபவித்த குணங்களையடைய ஒருசொல்லாலே திரள அருளிச்செய்கிறார். ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸாதிகளெல்லாம் கையெடுத்துக்கூப்பிடாநின்றுள்ள வைலக்ஷண்யத்தையுடையவனை அத்விதீயபுருஷனென்பேனோ? 'என்கோ' என்றது - என்று சொல்லுகேனோ? என்றபடி. குணயோகத்தால்வந்த வைலக்ஷண்யத்தைச் சொல்லி, மேல் விபூதியைச் சொல்லுகிறது. [புகழுநல் இத்யாதி] - ஸர்வைஸ்

முதற்பாட்டு—'புகழுநல்லொருவன்' இத்யாதி. 'நிகழுமாகாச மென்கோ' என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - 'அவனுடைய' இத்யாதி. பரக்கச்சொல்லுகிற அர்த்தமாவது - விபூதியோகம்.

'புகழுநல்லொருவன்' என்றதுக்கு மூன்று அர்த்தம். அதாவது - 'நல்' என்று - குணங்களைச்சொல்லி, அன்றுலே புகழப்பட்ட குணங்களையுடைய ஒருவனென்று முந்தினது; இத்தை அருளிச்செய்கிறார் - 'உயர்வற' இத்யாதி. யத்வா, 'நல்' என்று - ஸ்வரூபாதி வைலக்ஷண்யமாய், ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளாலே புகழப்பட்ட வைலக்ஷண்யத்தை யுடையவனென்று, இரண்டாவது; இத்தை அருளிச் செய்கிறார் - 'ஶ்ருதிஸ்ம்ருதி' இத்யாதி. அதவா, ப்ரத்யேகபதங்களாக மூன்றும் அர்த்தம் - 'ஸர்வைஸ்ஸம்ஸ்தூயமாநன்' இத்யாதி. இதில் 'நல்' என்று ஆநந்தமாய், குணாந்தரங்களுக்கும் உபலக்ஷணம். முந்தின இரண்டர்த்தத்திலும், 'புகழும்' என்றது - 'நல்' என்றதுக்கு விசேஷணம்; த்ருதீயார்த்தத்தில், 'புகழும், நல், ஒருவன்' என்று - ப்ரத்யேகம் பகவத்வாசகம், ப்ரத்யேகம் 'என்கோ' என்கிற க்ரியாந்வயி. மேலிற் பதத்துக்கு அவதாரிகை - 'குணயோகத்தால்' இத்யாதி;

ஸம்ஸ்துயமாந னென்பேனே? நல் - ஆநந்தாதிகுணங்களையுடைய னென்பேனே? [ஒருவன்]- ஸமாப்யதிக தரித்ர னென்பேனே? [பொருவில் இத்யாதி] - "முடிச்சோதியா யுனது முகச்சோதி மலர்ந்ததுவோ" என்று திருமுகத்தினழகையும் திருவபிஷேகத்தினழகையும் சேர்த்து அநுபவித்தாற்போலே, குணங்களுக்கும் விபூதிகளுக்கும் உண்டான சேர்த்தியாலே குணங்களோடு ஒக்க விபூதியையும் சேர்த்து அநுபவிக்கிறார். பொரு வென்று - ஒப்பு, இல் என்று - இல்லாமை. ஒப்பில்லாத க்ஷமாதிகுணங்களையுடைய பூமி யென்பேனே? அடியிலே பிறந்துடைய தோன்றிறே; ஆகையாலே, ஒப்பில்லாத பூமி யென்கிறார். "பத்ப்யாம் பூமிः" (பத்ப்யாம்பூமிः) இறே. [திகழும் இத்யாதி] - கீழ்ச்சொன்ன பூமிதான் கடிநையாயிறே இருப்பது; அத்தைக்கொண்டு காரியங்கொள்ளும்போது காடிந்யத்தை நெகிழ்த்துக்கொள்ள வேணுமிறே; அத்தை நெகிழ்த்துத் தரும் ஜலத்தைச் சொல்லுகிறது. காரணத்வப்ரயுக்தமான புகரையுடைத்தாய் ஶ்ரமஹரமான ஜலமென்பேனே? [தீயென்கோ] - அந்நெகிழ்ச்சி கார்யங்கொள்ள வொண்ணாத அளவானால் அத்தை வலிக்கப்பண்ணித் தரும் தேஜःபதார்த்தத்தைச் சொல்லுகிறது. ஊர்த்வஜ்வலந ஸ்வபாவமான அக்நி யென்பேனே? [வாயுவென்கோ] - அது உறைத்தால் அத்தை ஆற்றிக் காரியங்கொள்ளவேணுமிறே; அத்தை ஆற்றக்கடவதான காற்று என்பேனே? [நிகழும்] - எல்லார்க்கும் மூச்சுவிடுகைக்கு அவகாசப்ரதாநம் பண்ணவேணுமே; நிகழுகையாவது - வர்த்திக்கை. இவ்வருகில் பூதசதுஷ்டயமும் அழிந்து தன்பக்கலிலே வருமளவும் வர்த்திக்கு மென்றுதல்; அன்றிக்கே, பதார்த்தங்க ளெல்லாம் தன்பக்கலிலே வர்த்திக்கும்படி அவகாஶ ப்ரதாநம் பண்ணு மென்றுதல். ஆக, காரணமான பூதபஞ்சகத்தையும் சொல்லிற்று. [நீள்சுடரிரண்டு மென்கோ] - கார்யவர்க்கத்துக்கு அடைய உபலக்ஷணமாகச் சந்த்ர ஸூர்யர்களைச் சொல்லுகிறது, இவற்றின் நீர்க்களிப்பை யறுக்கைக்கும் தாபத்தை யாற்றுகைக்கும், [இகழ்வில்] - ஒன்றொழியாமே எல்லாம் என்பேனே? "ஜ்யாவிநாயஸ்ய்ாஸு, நதத்வ்தி"

---

அநுபாவ்யமான குணங்களோடொக்க விபூதியைச் சொல்லுவானென்? என்ன, 'முடிச்சோதி' இத்யாதி 'சேர்த்தியாலே' என்றது - குணவத் அப்ருதக்ஸித்தமாகையாலே யென்றபடி. யத்வா, 'ஸ்வரூபரூபகுணவிபூதி' என்கிற நிர்த்தேஶ ப்ரத்யாஸத்தியாதல். 'பொருவில்' என்றத்தை - சீருக்கு விசேஷணமாக்கிக் கீழே அருளிச் செய்து பூமிக்கு விசேஷணமாக்கி, ஒப்பில்லாமையேது? என்ன, 'அடியிலே' இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - 'பத்ப்யாம்' இதி. பூம் யநந்தரம் ஜலத்தைச் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் - 'கீழ்ச்சொன்ன' இத்யாதி. ஶப்தார்த்தம் - 'காரணத்வ' இத்யாதி. திகழும் - விளங்காநின்றுள்ள. 'கார்யங்கொள்ள வொண்ணாத' இதி - அண்டாதிஸ்ருஷ்ட்யுபயோகியாகாத இத்யர்த்தः. 'ஊர்த்வஜ்வலநேதி' ஸ்வபாவகதநம். அக்நி - அக்நிகாரண தேஜஸ்தத்த்வம். வாய்வநந்தரமாகாசகதநஸ்யஸங்கதிமாஹ - 'எல்லார்க்கும்' இத்யாதி. நிகழுகை - வ்யாபரிக்கை. அதாவது - மூச்சுவிடுகையாய், உச்ச்வாஸ நிஶ்ஶ்வாஸங்கள் விடுகை. நிரவகாஶமாகில் மூச்சுவிடப் போகாதிறே. நிகழுகைக்கு ஹேதுவான ஆகாஶ மென்றபடி. இத்தால் - வாய்வாகாசங்களுக்குக் கார்யமுகேந ஸம்பந்தஞ் சொன்னபடி. வாய்வவஸ்தா விஶேஷோச்ச்வாஸ நிஶ்ஶ்வாஸாவகாஶ ப்ரதத்வாத் வாயோ ரநந்தரம் ஆகாஶகதநமிதி பாவः. இதுவாயிற்று இவர் கீழே பூதங்களுக்குக் கார்யமுகதஸ் ஸம்பந்தஞ் சொல்லிக்கொண்டு போந்ததுக்கு நிதாநம். நிகழும் என்றதுக்கு அர்த்தாந்தரம் - 'நிகழுகையாவது' இத்யாதி. அதாவது - பூதசதுஷ்டயமும் தன்பக்கல்வருமளவும் நிற்கு மென்னுதல், தன்னை யொழிந்தவையடையத் தன்பக்கலிலே வர்த்திக்கும்படியாயிருக்கிற வென்னுதல். சந்த்ரஸூர்ய ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் - 'இவற்றின்' இத்யாதி. நீள்சுடர் - மிக்கவொளியையுடைய சந்த்ரஸூர்யர்கள். நீட்சி - பெருமை. இவற்றின் - கீழ்ச்சொன்னபூதபஞ்சகத்தினுடைய "ஸூர்யாம்ஶுஜநிதம் தாபம் நிந்யே தாராபதிஶ்ஶமம்" என்றத்தைப் பற்ற, 'நீர்க்களிப்பை' இத்யாதி. 'இகழ்வில்' என்றது - குறையாத வென்னுதல், த்யாஜ்யமல்லாத வென்னுதல். 'எல்லாமென்பேனே

(மயாவிநா யத் ஸ்யாத், நததஸ்தி) என்ருனிறே; அன்றிக்கே, இவைதான் சில பதார்த்த மாத்ரமாய்த் தோன்றுகையன்றிக்கே அவனுக்கு விபூதியாய்த் தோற்றுகையாலே, அநுபாதேய மொன்று மன்றிக்கே உபாதேயதமமான எல்லாம் என்பேனே? [கண்ணனைக் கூவுமாறே] - அர்ஜுநன் "ஹேக்ருஷ்ண" (ஹேக்ருஷ்ண) என்றத்தோடு, தாம் "பொருவில்சீர்ப்பூமி" என்றத்தோடு ஒருவாசியற்றிருக்கிறதாயிற்று இவர்க்கு. கண்ணனைக் கூவுமாறு - புகழுநல்லொருவன் இத்யாதி. (க)

# இரண்டாம் பாட்டு.

கூவுமாறறியமாட்டேன் குன்றங்களனைத்துமென்கோ?
மேவுசீர்மாரியென்கோ? விளங்குதாரகைகளென்கோ?
நாவியல்கலைகளென்கோ? ஞானநல்லாவியென்கோ?
பாவுசீர்க்கண்ணனெம்மான் பங்கயக்கண்ணனையே.

*ஆ.—(கூவுமாறு.) மஹீதரவர்ஷ நக்ஷத்ர ஶ்ருதிஸ்ம்ருதிதிஹாஸபுராணதிரூபஶப்த தஜ்ஜந்யஜ்ஞாநாதிகளுக்கு ஆத்மபூத னென்கிறது.*

*ஒ.—இரண்டாம்பாட்டில், பூதங்களிந்தினுடைய கார்யமான பதார்த்தங்களையும் அடைவே பேசி அவற்றை விபூதியாகவுடையனுன தன்மையை அருளிச்செய்கிருர்.*

*[நாவியல்கலைக ளென்கோ] - நாவாலே இயற்றப்படாநின்றுள்ள வாயுகார்யமான வித்யைக ளென்பேனே? வித்யைகளுக்கு வாயுகார்யத்வமாவது - வித்யாரூபஶப்தோச்சாரணம் வாயு ஜந்யப்ரயத்நகார்யம். [ஞான நல்லாவி யென்கோ] - ஆவியென்று லக்ஷணையாலே ஶரீரத்தைச் சொல்லுகிறது. ஜ்ஞாநத்துக்கு ஶரீரமென்று ஜ்ஞாநஸாதநமான ஶப்தத்தைச் சொல்லுகிறது.*

*ப.—அநந்தரம், உக்தமான மஹாபூதங்களினுடைய கார்யவிஶேஷத்தை அருளிச் செய்கிருர்.*

குன்றங்களனைத்தும்-காடிந்யத்தாலே பூமி கார்யமான எல்லாப் பர்வதங்கள், * என்கோ மேவு சீர் - ஸகலஜீவநத்வரூபகுணோந்மேஷத்தை யுடையதாய் ஜலகார்யவிஶேஷமான, மாரி யென்கோ - வர்ஷம்; விளங்கு - (ஔஜ்ஜ்வல்யத்தாலே) தேஜஃகார்யமான, தாரகைகளென்கோ - நக்ஷத்ராதிகள், (வாயுகார்யமான), நா-நாவில், இயல் - இயற்றியையுடைத்தான, கலைகளென்கோ -

---

*என்றதுக்கு நியாமகம் – 'மயாவிநா' இத்யாதி. அஸாதாரண நாமத்தையிட்டுக் கண்ணனைக் கூவவொண்ணாதோ? 'பூமி' என்பானென்? என்ன, 'அர்ஜுநன்' இத்யாதி. அஸாதாரணஶப்தத்தோடு ஸாதாரணஶப்தத்தோடு வாசி யில்லை யென்றபடி. அந்வயிக்கிருர் – 'கண்ணனை' இத்யாதி.* "யஸ்யாவிஸ்வரூபஹேதாநாம்ஸீஜம்தஸ்ய ஜஜந்ம । நதஸ்விவிநாயதஸ்ராஹ்யாஹேதம்வராவர்ஷ்"ஐதி ஶீதாஸு உஶெ. "ஸவேதி கேஷாவ ஸஹம்யஸ்தம் ஹேக்ருஷ்ண ஹேயாதவஹேஸவேதி । ஜாநதாஹிமாநம்தவேதம் மயாவமாதாத்ணயேநவாபி" இதி தத்ரைவ ஏகாதஶே. (க)

* 'என்கோ' என்பது பலமுறை வருவதால், பன்னீராயிரப்படியில் இறுதியில் வருகிற 'என்கோ' என்பதற்கு மாத்ரம் என்று சொல்வேனே? என்று அருளிச்செய்தனர் : மற்றை இடங்களிலும் ஸேவிப்பவர் இப்படியே பொருள் காணக்கடவர்.

வித்யாஸ்தாநங்கள்; ஞானம் - அர்த்தஜ்ஞாநத்துக்கு, நல்லாவியென்கோ - சரீரமாய் ஆகாசகார்ய மான ஶப்தவிஶேஷங்களென்று சொல்வேனோ? பா - பரந்த, சீர் - குணவிபூதிகளையுடையனாய், கண்ணன் - எனக்கு ஸுலபனாய், பங்கயம் - பங்கயம்போன்ற, கண்ணனை - கண்ணழகாலே, எம்மான் - என்னைத் தோற்பித்துக்கொண்ட ஸ்வாமியை, கூவுமாறு - சொல்லும் ப்ரகாரம், அறிய மாட்டேன் - அறியமாட்டுகிறிலேன்.

'நல்லாவி' என்றது - ஜ்ஞாநத்துக்கு அவ்யவதாநேந உத்பாதகமாகை.

இ.—இரண்டாம்பாட்டில், கார்யவர்க்கத்தைச் சொல்லுகிறது.

[கூவுமாறு இத்யாதி] - பக்திபாரவஶ்யத்தாலே பாசுரமிட்டுச் சொல்லமாட்டே னென்னுதல், இயத்தாராஹித்யத்தாலே சொல்லமாட்டே னென்னுத லல்லது அர்த்தங்களில் அவிஶத மாயிருப்பதொன்று உண்டாய்ச் சொல்லுகிறாரல்லர். [குன்றங்கள் இத்யாதி] - கீழ்ச்சொன்ன "பூமியென்கோ"என்கிறதன் கார்யமாய் அதனுடைய காடிந்யம் திரண்டாற்போலேயாய்ப் பூமிக் குத் தாரகமான பர்வதங்கள் என்பேனோ? [மேவுசீர் இத்யாதி] - திகழுந்தண்பரவையினுடைய கார்யம். வடிவழகாலும் குளிர்த்தியாலும், எல்லாராலும் மேவப்படும் ஸ்வபாவத்தை யுடைய மேக மென்பேனோ? இவர்க்கு இரண்டொருகார்யமா யிருக்கிறதிறே, திருமேனிக்குப் போலியா யிருக்கையாலே. [விளங்கு இத்யாதி] - 'தீயென்கோ' என்கிறதன் கார்யம். விளக்கத்தை யுடைய நக்ஷத்ராதிகள். [நாவியல்கலைகள்] - 'வாயுவென்கோ' என்கிறதன் கார்யம். நாவாலே இயற்றப்பட்ட சதுஷ்ஷஷ்டிகலைகள். வாயுகார்யம் - ப்ரயத்நம். ப்ரயத்நாபிவ்யங்க்யமிறே வித்யை: ஆகையாலே, சொல்லுகிறது. [ஞானநல்லாவி] - 'நிகழுமாகாசம்' என்றதன் கார்யம். ஜ்ஞாநத் துக்கு ஸாதநமான ஶப்தம். 'ஆவி' என்று லக்ஷணையாலே ஶரீரத்தைச் சொல்லுகிறது. ஜ்ஞாந ஶரீரம் என்று ஜ்ஞாநஸாதநமான ஶப்தத்தைச் சொல்லுகிறது. குணவாசிஶப்தத்தாலே குணியை நினைக்கிறது. 'நல்லாவி' என்று இந்த்ரியங்களை வ்யாவர்த்திக்கிறது. [பாவுசீர்க் கண் ணன்] - பரந்த குணங்களையுடைய க்ருஷ்ணன். [எம்மான் பங்கயக்கண்ணனை] - தன்கண்ணழ காலே என்னை அநந்யார்ஹனாக்கினவனை.

ஈடு.—இரண்டாம்பாட்டு. கீழ்ச்சொன்ன பூதபஞ்சகங்களுடைய காரியங்களை க்ரமத் திலே பேசுகிறார்.

[கூவுமாறு] - பாசுரமிட்டு அழைக்கும்படி அறிகிறிலேன். கூவுதலாவது - அழைக் கை. * "கூவக்கூவ நீ போதியேல்" என்னக்கடவதிறே. பகவத்ப்ரஸாதத்தால் வந்த வெ ளிச்சிறப்பாலே அர்த்தமடைய ஜ்ஞாதமாயிராநின்றது; பக்திபாரவஶ்யத்தாலே பேச மாட்டுகி றிலேன் என்னுதல், இயத்தாராஹித்யத்தாலே பேசமாட்டேன் என்னுதல். [குன்றங்கள்] - "பொருவில்சீர்ப்பூமி" என்றதினுடைய கார்யம்; பூமியினுடைய காடிந்யம் ஓரிடத்திலே திரண் டாற்போலேயாய், பூமிக்கு ஆதாரமாயிருக்கிற பர்வதங்க ளேன்பேனோ? [மேவுசீர்] - "தண்பரவை"

---

இரண்டாம்பாட்டு - 'கூவுமாறு' இத்யாதி. 'குன்றங்கள்' என்று தொடங்கி, 'ஞானநல்லாவியென்கோ' என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - 'கீழ்ச்சொன்ன' இத்யாதி.

'கூவக்கூவ' இதி-பெரியாழ்வார் திருமொழி. பலகால் அழையாநிற்க, நீபோவுதியாகில் இத்யர்த்தஃ. கூவமாட்டாமைக்கு அடியேது?என்ன,பகவத்ப்ரஸாத'இத்யாதி. வெளிச்சிறப்பு-ஜ்ஞாநவைஶத்யம்.பூமியினுடைய என்றது - பார்த்திவத்வ த்யோதநார்த்தம். 'பூமிக்கு ஆதாரமா யிருக்கிற' என்றது - 'மேவுசீர், விளங்கு, நாவியல்,

---

* பெரியாழ்வார் திருமொழி. க-ச-ரு.

என்றதனுடைய கார்யம். கண்டார் மேவும்படியான வடிவழகையும் குளிர்த்தியையு முடைய மேகமென்பேனோ? இவர்தமக்கு இரண்டொருகார்யமிறே இது; திருமேனியிலழகுக்குப் போலியா யிருக்கையாலேயும், விடமாட்டார். [விளங்கு] - "தீயென்கோ" என்ற தேஜஃகார்யமான விளக்கத்தையுடைய நக்ஷத்ராதிக ளென்பேனோ? இவை - எல்லாத்தேஜஃகார்யங்களுக்கும் உபலக்ஷணம். [நாவியல்] - "வாயுவென்கோ" என்ற வாயுகார்யம். நாவாலே இயற்றப்பட்ட சதுஷ்ஷஷ்டி கலைகள். சப்தங்களினுடைய அபிவ்யக்தி வாயுகார்யமிறே, * ப்ரயத்நாபிவ்யங்க்யமாயிருக்கையாலே. ப்ரயத்நந்தான் வாயுவைத் தோற்றியிறே இருப்பது. [ஞானநல்லாவியென்கோ] - "ஆகாசமென்கோ" என்ற ஆகாசகுணமிறே ஶப்தம். த்ரவ்யத்தினுடைய காரணகுணமேயிறே தத்கத குணத்துக்கும் காரணம்; † தந்துகதமான ஶௌக்ல்யமேயிறே படகதமான ஶௌக்ல்யத்துக்கும் காரணம்; பாரிஶேஷ்யாத் ப்ரயத்நத்தாலே ஆகாசகுணத்தையே சொல்லிற்றுமத்தனையிறே இதில். ஆவியென்றுகொண்டு லக்ஷணையாலே ஶரீரத்தைச் சொல்லுகிறது. ஜ்ஞாநத்தைப் போதிந்துகொண்டிறே ஶப்த மிருப்பது.

*ஞானநல்' என்று விசேஷிக்கிற ப்ரகரணமாகையாலே, பூமிக்கு ஆதாரத்வரூப விசேஷணம் இதுக்கும் மென்று திருவுள்ளம்பற்றி. 'குன்றங்களனைத்தும்' என்று - குலபர்வதங்கள் விவக்ஷிதங்கள். 'சீர்' என்று - குணமாய், வடிவழகையும் குளிர்த்தியையுஞ் சொல்லுகிறது. மேவுகை - விரும்புகை. மாரி - மேகம். இத்தை 'மேவு சீர்' என்று விஶேஷிப்பானென்? என்ன, 'இவர்தமக்கு' இத்யாதி. இரண்டொரு கார்யம் என்றது - ததீயத்வாகாரேணவும் உத்தேஶ்யமாய், ஸாத்ருஶ்யத்தாலும் உத்தேஶ்யமாயிருக்கு மென்றபடி. இரண்டொரு கார்யமிறே - ப்ரயோஜநத்வயாயாத மித்யர்த்தஃ. ததீயத்வாகாரேண உத்தேஶ்யத்வம் ஒரு நிமித்தம்: நிமித்தாந்தரமேது? என்ன, 'திருமேனியிலழகுக்கு' இத்யாதி. 'இருக்கையாலேயும்' என்ற ச சப்தத்தாலே - ததீயத்வாகாரேணவும் விடமாட்டா ரென்றபடி. ஆகாஶகுணமான ஶப்தம் வாயுகார்யமானபடி என்? என்ன, 'ஶப்தங்களினுடைய' இத்யாதி. அதுக்கு அடியேது? என்ன, 'ப்ரயத்ந' இத்யாதி. ப்ரயத்நாபிவ்யங்க்யமானால் வாயுகார்யத்வம் எப்படி? என்ன, 'ப்ரயத்நந்தான்' இத்யாதி. வாயுவைத் தொற்றியிறே யிருப்பது - வாயுவைக் காரணமாக வுடைத்தாயிறே இருப்பது. ஆக, தால்வோஷ்டபுடாதி வ்யாபாரரூப ப்ரயத்நத்துக்கு நாபிவாயு காரணமாகையாலே பரம்பரயா ஶப்தம் வாயுகார்ய மென்றபடி. நாவாலே இத்யாதி வாக்யம் - ஶப்தார்த்தம். இயற்றப்பட்ட - சொல்லப்பட்ட. அபிவ்யக்தி - ப்ரகாஶஃ. 'ஞானநல்லாவி யென்கோ' என்று - 'நிகழுமாகாசமென்கோ' என்ற ஆகாஶகார்யத்தைச் சொல்லுகிறது. 'நல்லாவி' என்று - அர்த்தபோதகமான ஸ்தூலாகாஶ குணபூத ஶப்தத்தைச் சொல்லுமதொழிய, காரணகாஶகார்யமான ஸ்தூலாகாஶத்தைச் சொல்லாதே என்ன, 'ஆகாசமென்கோவென்ற' இத்யாதி. 'ஆகாசகுணமிறே ஶப்தம்'என்றது-இங்குச் சொல்லுகிற ஶப்தம் காரணகாஶகுணகார்யமான ஶப்தமிறே இத்யர்த்தஃ. ஆகையாலே, காரணகாஶ குணகார்யத்தை குணகுணிநோரைக்யவிவக்ஷயா ஆகாஶகார்ய மென்கிறதென்றபடி. காரணகுணம் கார்யகுணத்துக்குக் காரணமோ? என்ன, 'த்ரவ்யத்தினுடைய' இத்யாதி. த்ரவ்யத்தினுடைய - கார்யத்தினுடைய, காரணம் யாதொன்று உண்டு, அதினுடைய குணம் கார்யகதகுணத்துக்குக் காரண மென்றபடி. அது எங்கே கண்டோம்? என்ன, 'தந்துகத' இத்யாதி. அப்போதும் ஆகாஶகுணகார்யமாகையாலே குணகுணிகளுக்கு ஐக்யத்தை விவக்ஷித்து, காரணகாஶ கார்யமென்னலாம் என்று ஶப்தத்தைச் சொல்லுமதொழிய, கார்யாகாசத்தைச் சொல்லாதே யென்ன, 'பாரிசேஷ்யாத்' இத்யாதி. 'பாரிசேஷ்யாத்' என்றது - கீழே காரணமான பூதங்களினுடைய கார்யங்களைச் சொல்லுகிற ப்ரகரணமாகையாலே இத்யர்த்தஃ. ப்ரயத்நத்தாலே - க்ருச்ச்ராத். ஆகாஶகுணத்தையே சொல்லிற்றுமத்தனை யென்றது - குணம் நிராதாரமா யிராமையாலே குணிபர்யந்தாபிதாநம் பண்ணி, கார்யாகாஶத்தையே சொல்லுகிற தென்றபடி. 'ஆவியென்று' இதி-'ஆவி' என்று - ப்ராணனாய், ப்ராணாஶ்ரயமான ஶரீரத்தை லக்ஷிக்கிற தென்றபடி. ஆனாலும், 'ஆவி' என்று - ஶப்தத்தைச் சொல்லும்படி எப்படி? என்ன, 'ஜ்ஞாநத்தை' இத்யாதி. பொதிந்துகொண்டிருக்கை - நிறைத்துக் கொண்டிருக்கை. ஸாதநத்வேந வர்த்தநம் இத்யர்த்தஃ. ஆக, அர்த்தஜ்ஞாநத்துக்கு ஶரீரமாம்போது ஶப்தமாக வேணுமிறே என்று இவ்வழியாலே 'ஆவி' என்று - ஶப்தத்தைச் சொல்லுகிற தென்றபடி. ஜ்ஞாநஸாதந

* ப்ரயத்நாபி வ்யங்க்யம் - ப்ரயத்நத்தாலே உண்டாக்கத்தக்கது. † தந்துகதஶௌக்ல்யம் - நூலிலுள்ள வெண்மை. படம்-வஸ்த்ரம்.

இந்த்ரியாதிகளைப்போலன்றிக்கே ஶப்தத்துக்கு ஸ்வதோதோஷமில்லாமையாலே, 'நல்லாவி' என்கிறார். [பாவுசீர்க்கண்ணன்]-"விதித:" (விதித:) என்கிறபடியே எங்குமோக்கப் பரம்பின கல்யாண குணங்களையுடைய க்ருஷ்ணன். [எம்மான் இத்யாதி] - கண்ணழகாலேயாயிற்று இவரை ஒடியெறிந்தது. "பங்கயக்கண்ணன்" என்றத்தோடு, "குன்றங்களனைத்தும்" என்றத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்று இவர்க்கு. *' "பெரும்புறக்கடல்" என்கிற திருமொழி நிர்வஹிக்கிற க்ரமத்திலே குன்றங்களனைத்தும் என்றது "நின்றகுன்றத்தினைநோக்கி" என்னுமாபோலே வடிவுக்குப் போலியாய், 'மேவுசீர்மாரி' என்று மேகத்தைச்சொன்ன இடம் திருநிறத்துக்குப் போலியா யிருக்கிறது ' என்று நிர்வஹிப்பாரு முண்டு. (௨)

## மூன்றாம் பாட்டு.

பங்கயக்கண்ணனென்கோ? பவளச்செவ்வாயனென்கோ?
அங்கதிரடியனென்கோ? அஞ்சனவண்ணனென்கோ?
செங்கதிர்முடியனென்கோ? திருமறுமார்பனென்கோ?
சங்குசக்கரத்தனென்கோ? சாதிமாணிக்கத்தையே.

ஆ.—(பங்கயக்கண்ணன்.) அஶேஷதோஷ ப்ரத்யநீகமாய்க் கல்யாணைகதாநமாய் நிரதிஶயதேஜோமயமாய் நிரதிஶயதீப்தியுக்த திவ்யபூஷணயுத விஶிஷ்டமான திவ்யரூபத்தையுடையவ னென்று சொல்லுகிறது.

ஒ.—மூன்றாம்பாட்டில், இந்த விபூதியோகம் அவனுடைய அப்ராக்ருதமாய்த் திவ்ய பூஷணாதிகளாலே அலங்க்ருதமான திருமேனியோடொக்கத் தகுதியாயிருக்கு மென்னுமிடம் தோற்றுகைக்காக விபூதிகதநத்தின் நடுவே அவனுடையதிருமேனியின் அழகைப் பேசுகிறார்.

மற்றைப்பாட்டுக்களிலும் அவனுடைய அஸாதாரணமானபடியைப் பேசின இடங்களுக்கும் இதுவே ப்ரயோஜநம். கதிர் என்று - ஒளி. [சாதிமாணிக்கத்தை]- சாதிமாணிக்கம் என்கிறது - நிர்த்தோஷமாய் ஸஹஜமான அழகையுடையவ னென்கை.

ப.—அநந்தரம், இந்த ப்ரகாரங்களினுடைய ஆநுரூப்யஸூசநார்த்தமாக மத்யே அஸாதாரணவிக்ரஹத்தை அநுஸந்திக்கிறார்.

---

ஶப்தத்துக்கு நன்மையேது ? என்ன, 'இந்த்ரிய' இத்யாதி. ஆதிஶப்தேந - அநுமாந முச்யதே. இத்தால் - ஆவிஶப்தம் - ஶப்தகுணககார்யாகாஶபரம் ; 'கலைகளென்கோ' என்கிற விடத்தில் கலாஶப்தம் - ஶப்தாபிவ்யஞ்சக ப்ரயத்ந ஜநகவாயுபரம். இப்படி சொல்லுகிறதுக்கு அடி - பூதங்களினுடைய அவஸ்தாவிஶேஷங்களான கார்யங்களைச் சொல்லுகிற ப்ரகரணமாகையாலே. பாவுகை - பரவுகை. ஒடி யெறிந்தது - காற்கட்டிற்று; அப்பாற் போகவொட்டாதே பண்ணிற் றென்றபடி. 'பங்கயக்கண்ணன்' என்றத்தோடே 'குன்றங்களனைத்துமென்கோ' என்றத்தைச் சேர்த்துச் சொல்லுவானென் ? என்ன, 'பங்கயக்கண்ணனென்றத்தோடு' இத்யாதி. பெரும்புறக்கடல் இத்யாதி - 'பெரும்புறக்கடல்' என்கிற திருமொழியிலே - ஸாமாநாதிகரண்யமாக வன்றிக்கே, பெரும்புறக்கடல்போலே இருக்கிறவ னென்று போலியாக நிர்வஹிக்கிற க்ரமத்திலே யென்றபடி. பாவுசீர்க்கண்ணனெம்மான் பங்கயக்கண்ணனை - குன்றங்களனைத்து மென்கோ வித்யாரப்ய, நல்லாவியென்கோ - கூவுமாறறியமாட்டேன் இத்யந்வய:. "விதித: ஸஹி஧ர்மஜ்ஞ: ஶரணாகதவத்ஸல: । தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி" இதி ஸுந்தரகாண்டே ராவணம்ப்ரதி ஸீதா. (௨)

---

* பெரிய திருமொழி. எ-௧௦.

சாதி - ஆகரஜமான, மாணிக்கத்தை - மாணிக்கம்போலே அத்யுஜ்ஜ்வலமான விக்ரஹத்தையுடையவனை, பங்கயம் - பங்கயம்போலும், கண்ணனென்கோ - கண்ணையுடையவன்; பவளம் - பவளம்போலும், செம் - சிவந்த, வாயனென்கோ - வாயன்; அம் - தர்ஶநீயமாய், கதிர்- ஒளிவிடுகிற, அடியனென்கோ - திருவடிகளையுடையவன்; அஞ்சனம் - அஞ்சநம்போலும், வண்ணனென்கோ - நிறத்தையுடையவன்; செம்-சிவந்த, கதிர் - ப்ரபையையுடைத்தான, முடியனென்கோ - திருவபிஷேகத்தையுடையவன்; திரு - லக்ஷ்மீஸ்தாநமான, மறு - (ஸ்ரீவத்ஸத்தாலே) சிஹ்நிதமான, மார்பனென்கோ - திருமார்பையுடையவன்; சங்குசக்கரத்தனென்கோ - (அந்தஃபுரத்துக்குக் காவலென்னலாம்படியான) ஆயுதபூர்த்தியையுடையவனென்று சொல்லுவேனோ?

இ.—மூன்றும்பாட்டில், அஸாதாரணமான விக்ரஹத்தை அநுபவிக்கிறார். விபூதியின் நடுவே திவ்யமங்கள விக்ரஹத்தைச் சொல்லுகிறது, விபூதியும் திருமேனியோபாதி தகுதியாயிருக்குமென்னுமிடம் தோற்றுகைக்காக.

[பங்கயக்கண்ணன் இத்யாதி] - கிட்டினாரோடு முதல் உறவு பண்ணும் கண். [பவளச்செவ்வாயன்] - கண்ணழகிலே துவக்குண்டாரை ஆதரித்து ஸ்மிதம் பண்ணும்போதைத் திருவதரத்தின் பழுப்பை அநுபவிக்கிறார். [அங்கதிரடியன்] - நோக்குக்கும் முறுவலுக்கும் தோற்றார் விழும் திருவடிகள். [அஞ்சனவண்ணன்]-திருவடிகளிலே விழுந்தார்க்கு அநுபாவ்யமாய் ஶ்ரமஹரமாய் ஶுபாஶ்ரயமான வடிவு. [செங்கதிர்முடியன்] - அநுபவிக்கிற விஷயம் ப்ராப்தமுமாய் ஸர்வாதிகமுமா யிருக்கிற படியைக் கோள்சொல்லித் தருகிற திருவபிஷேகம். செம்மை - அழகு. [திருமறுமார்பன்] - அவன் ஸ்வாதந்த்ர்யத்தைக் கண்டு அகலவேண்டாதபடியான லக்ஷ்மீஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. திருவையும் மறுவையுமுடைய மார்பையுடையவன். [சங்கு] - 'இவர்கள் சேர்த்திக்கு என்வருகிறதோ!'என்று பயப்படவேண்டாதபடி ஆழ்வார்களையுடையவன். ''வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு'' என்று ''வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு'' என்னக்கடவதிறே. [சாதிமாணிக்கத்தையே] - ஆகரத்திலே பிறந்த தாய்ப் பெருவிலையனான ரத்நம்போலே ஶ்லாக்யமான திருமேனியையுடையவன். நிர்த்தோஷமாய் ஸஹஜமான அழகையுடையவனென்கை.

ஈடு.— மூன்றும் பாட்டு. ஜகச்சரீரனாய் நின்றத்தோடு அஸாதாரண விக்ரஹ யுக்தனாய் நின்றத்தோடு வாசியற்றிருக்கையாலே, ஜகதாகாரனாய் நின்ற நிலையோடே அஸாதாரண விக்ரஹத்தையும் சேர்த்து அநுபவிக்கிறார்.

[பங்கயக்கண்ணனேன்கோ] - சேதநரோடு கலப்பது கண்வழியேயிறே. தம்மோடு முதலுறவு பண்ணின கண்ணழகைச் சொல்லுகிறார். [பவளச்செவ்வாயனேன்கோ] - அந்நோக்குக்குத் தப்பினாலும் தப்பவொண்ணாத முறுவலைச் சொல்லுகிறது. [அங்கதிரடியனேன்கோ] - நோக்குக்கும் ஸ்மிதத்துக்கும் தோற்றார் விழும் நிலத்தைச் சொல்லுகிறது. அழகிய புகரையுடைய திருவடிகளையுடையவ னென்பேனோ? [அஞ்சனம்]-அத்திருவடிகளிலே விழுந்தார்க்கு அநுபாவ்யமான வடிவைச்சொல்

---

மூன்றும்பாட்டு—'பங்கயக்கண்ணன்' இத்யாதி. விபூதியோகம் சொல்லுகிற ப்ரகரணமான இத்திருவாய்மொழியில் அஸாதாரண விக்ரஹயோகஞ் சொல்லுகிறதென்? என்ன, 'ஜகச்சரீரனாய்' இத்யாதி. வாசியற்றிருக்கையாலே – ததீயத்வேநோத்தேஶ்யதாயாம் விசேஷ மில்லாமையாலே.

முந்துறக் கண்ணழகைச் சொல்லுவானென்? என்ன, 'சேதநரோடு' இத்யாதி. கண்வழியே – த்ருஷ்டிபந்தபூர்வக மித்யர்த்தஃ. ஆகையாலே, 'தம்மோடுமுதலுறவுபண்ணின' என்று கூட்டுவது. ஸமபிவ்யாஹார தாத்பர்யம், 'அந்நோக்குக்கு' இத்யாதி. தாத்பர்யம் – 'நோக்குக்கும்' இத்யாதி. ஶப்தார்த்தம்–'அழகிய' இத்யாதி.

லுகிறது. [செங்கதிர் முடியனென்கோ] - இது ப்ராப்தவிஷயத்தில் அநுபவ மேன்னுமிடத்தைக் காட்டித்தருவது ஶேஷித்வ ப்ரகாஶகமான திருவபிஷேகமிறே. [திருமறுமார்பனென்கோ]-திருவபிஷேகத்தைக் கண்டால் ஸ்வாதந்த்ர்யத்தை அநுஸந்தித்து இறுய்க்குமத்தைத் தவிர்த்துத் தருவது லக்ஷ்மீ ஸம்பந்தமிறே. திருவையும் மறுவையும் மார்பிலேயுடைய னென்பேனோ? [சங்கு இத்யாதி] - 'இச்சேர்த்திக்கு என்வருகிறதோ?' என்று அஸ்தாநே பயஶங்கைபண்ணும் ப்ரேமாந்தருடைய வயிறெரித்தலைத் தவிர்ப்பது திவ்யாயுதங்களிறே; ''வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு'' என்று, ''சுடராழியும் பல்லாண்டு'' என்றுநின்றார்களிறே. [சாதி இத்யாதி] - போலியன்றிக்கே ஆகரத்திலே பிறந்து நன்றான மாணிக்கம்போலே நிர்த்தோஷமாய் ஸ்வதஸ்ஸித்தமான வடிவழகையுடையவனை. (௩)

## நான்காம் பாட்டு.

சாதிமாணிக்கமேன்கோ? சவிகோள்பொன்முத்தமேன்கோ?
சாதிநல்வயிரமேன்கோ? தவிவில்சீர்விளக்கமேன்கோ?
ஆதியஞ்சோதியேன்கோ? ஆதியம்புருடனேன்கோ?
ஆதுமில்காலத்தேந்தை அச்சுதனமலனையே.

*ஆ.—(சாதிமாணிக்கம்) ஏவம்வித திவ்யரூபத்தையுடையனாய்க்கொண்டு திருநாட்டிலே எழுந்தருளியிருக்கும் என்கிறது.*

*ஒ.—நாலாம்பாட்டில், தேஜோவிஶிஷ்டமான மாணிக்யாதிபதார்த்தங்களை விபூதியாகவுடையனான படியைப் பேசுகிறார்.*

*[சாதிமாணிக்க மென்கோ] - ஆகரத்திலே பிறந்த மாணிக்க மென்பேனோ? [சவிகொள் பொன் முத்த மென்கோ] - நிறைந்த ஒளியையுடைய பொன் என்பேனோ? நீர்மையுடைய முத்த மென்பேனோ? [தவிவில்சீர் விளக்க மென்கோ] - விச்சேதியாத அழகையுடைய ப்ரகாச மென்பேனோ? [ஆதியஞ்சோதி யென்கோ] - விலக்ஷணதேஜோரூபமான திருநாட்டைத் தனக்கு விபூதியாக இருக்கிற இருப்பு. [ஆதியம்புருட னென்கோ] - ஸர்வகாரணமாய் ஸர்வவிலக்ஷணனாய்த் திருநாட்டிலே எழுந்தருளியிருக்கிற இருப்பு. [ஆதுமில்காலத்து எந்தை அச்சுத னமலனையே]- எனக்கு ஒருதுணையில்லாத காலம் நிர்ஹேதுகமாக அடிமைகொண்டு என்னை நழுவாதபடி காத்தவன்.*

*ப.—அநந்தரம், உஜ்ஜ்வலமான ரத்நாதி ப்ரகாரத்வத்தை அருளிச்செய்கிறார்.*

*ஆதும் - ஒன்றும், இல்-இல்லாத, காலத்து-ஸம்ஹ்ருதிகாலத்தில், எந்தை-நிருபாதிகஸம்பந்தமடியாக அவிபக்தநாமரூபசிதசிச்சரீரியாய், அச்சுதன்- (ஸ்வஸ்வரூபாதிகளுக்கு) ப்ரச்யுதியின்றியே, அமலனை - ஶரீரபூத சிதசித்தோஷம் தட்டாத ஹேயப்ரத்யநீகனை, சாதி- ஆகரோத்பத்தி வைலக்ஷண்யத்தையுடைய, மாணிக்கம் என்கோ - மாணிக்கம்; சவி கொள் - ஒளியை யுடைய,*

தாத்பர்யம் - 'இது ப்ராப்த' இத்யாதி. செங்கதிர்முடியன் - சிவந்த ப்ரபையையுடைய திருவபிஷேகத்தையுடையவ னித்யர்த்தஃ. திருவபிஷேகாநந்தரம் பிராட்டியைச் சொல்லுகிறதுக்கு ஹாவம் - 'திருவபிஷேகத்தை' இத்யாதி. ஶப்தார்த்தம் - 'திருவையும்' இத்யாதி.பிராட்டிக்கநந்தரம் ஆழ்வார்களைச் சொல்லுகிறதென்? என்ன, 'இச்சேர்த்திக்கு' இத்யாதி. வயிறெரித்தலைத் தவிர்க்கைக்கு உடலாயிருக்குமோ? என்ன, 'வடிவாய்' இத்யாதி. 'சாதி' என்றதிலே நோக்காக, 'போலியன்றிக்கே' இத்யாதி. ரத்நஸத்ருஶ மித்யேதாவந் மாத்ரமன்றிக்கே இத்யர்த்தஃ. சாதிமாணிக்கத்தை - பங்கயக்கண்ணனென்கோ இத்யாரப்ய அந்வயஃ. (௩)

பொன்-பொன், முத்தம் என்கோ-முத்துக்கள்: சாதி-ஆகரஜமாய், நல்-ரத்நாந்தரவிலக்ஷணமான. வயிரம் என்கோ - வயிரம்: தவிவு இல் - விநாசரஹிதமாய், சீர் - ப்ரகாச குணவிசிஷ்டமான, விளக்கம் என்கோ - தீபம்: ஆதி - ப்ரதமஹவியாய், அம் - ஸௌந்தர்ய குணயுக்தமான, சோதி என்கோ - தேஜோமய திவ்யவிக்ரஹவிசிஷ்டன்; ஆதி - ப்ரதாநபூதனாய், அம் - ஆநந்தாதி குண விசிஷ்டனான, புருடன் என்கோ - பரமபுருஷனென்று சொல்வேனோ?

'* ஆதிவிக்ரஹம்' என்றது - பரமபதநிலயவிக்ரஹத்தை. 'ஆதிபுருடன்' என்றது-திவ்யாத்மஸ்வரூபத்தை. இவற்றினுடைய ஔஜ்ஜ்வல்யத்தோபாதி உஜ்ஜ்வலரத்நாதிகளும் அஸாதாரணப்ரகார மென்று கருத்து. சவி - ஒளி. தவிவு - விநாசம். விளக்கம்-ப்ரகாசகத்வ மாகவுமாம்.

இ.—நாலாம்பாட்டில், தேஜோவிசிஷ்டமான மாணிக்யாதி பதார்த்தங்களை விபூதியாகவுடையனானபடியைப் பேசுகிறார். வேதாந்த வ்யுத்பத்தி பிறந்தால் "[illegible]" என்கிறபடியே ஸ்வதந்த்ரமன்றிக்கே ஸகலபதார்த்தங்களும் அவனுக்கு விபூதியாய்த் தோற்றுகையாலே அருளிச்செய்கிறார்.

[சாதிமாணிக்கம்] - ஆகரத்திலே பிறந்த மாணிக்கம் என்பேனோ? [சவிகொள் பொன்முத்தம்] - புகர்விஞ்சின பொன் என்பேனோ? நீர்மைமிக்க முத்து என்பேனோ? 'சவி' என்று பொன்னிலேயான போது புகராய், முத்திலேயானபோது நீர்மையாகக் கடவது. [சாதி நல்வயிரம்] - ஆகரத்திலே பிறந்த நன்றான வைரம். [தவிவில் சீர் விளக்கம்] - விச்சேதமில்லாத நன்றான விளக்கு என்பேனோ? விளக்கம் என்று அந்தத் தீபத்தினுடைய ப்ரகாசாம்சத்தைச் சொல்லிற்றாகவுமாம். [ஆதியஞ்சோதி] - ஜகத்காரணமாய் நிரவதிகதேஜோரூபமான பரமபதம். "[illegible]" "[illegible]". ஸ்ரீகௌஸ்துபத்தைப்பற்றி ஜீவஸமஷ்டியும், ஸ்ரீவத்ஸத்தைப்பற்றி அசேதநமும் கிடக்கும் என்கிற அஸ்த்ரபூஷணத்யாய க்ரமத்தாலே திருமேனியைச் சொல்லிற்றாகவுமாம். [ஆதியம்புருடன்] - ஸர்வகாரணமாய் அத்தேசத்திலே எழுந்தருளியிருக்கிற புருஷோத்தமன். [ஆதுமில் காலத் தெந்தை] - எனக்கு ஒருதுணையில்லாத ஸம்ஸாராவஸ்தையிலே தன்னோடு உண்டான ஸம்பந்தத்தை அறிவித்தவன். [அச்சுதன்] - என்னை நழுவவிடாதவன். [அமலனை] - இந்தச் செயல் ஒரு ப்ரயோஜநத்துக்காக வன்றிக்கே தன்பேறாகச் செய்தவன்; அன்றிக்கே, ப்ரளயகாலத்திலே தன் ஸ்வாமித்வ ப்ராப்தியாலே இவை நழுவாமே தன்மேல் ஏறிட்டுக்கொண்டு நின்று தத்கததோஷை: அஸம்ஸ்ப்ருஷ்டனாய் நிற்கிறவன் என்றுமாம்.

ஈடு.—நாலாம்பாட்டு. நம்முதலிகளிலே ஒருவரை ஒருவன் 'எனக்கு எம்பெருமானை நினைக்க விரகு சொல்லவேணும்' என்ன, 'நான் உனக்கு அது சொல்லுகிறேன்; நீ எனக்கு அவனை மறக்க ஒரு விரகு சொல்ல வல்லையே?' என்றாராம். அதுக்குக் கருத்து - பகவத்வ்யதிரிக்த ஸமஸ்தபதார்த்தங்களுக்கும் அவனை யொழிய வஸ்துத்வநாமபாக்த்வங்கள் இல்லாமையாலே, ஏதேனுமொரு பதார்த்தம் தோற்றும்போதும் அவனை முன்னிட்டுக் கொண்டாயிற்றுத் தோற்றுவது. ஜாதிகுணங்களுக்குப் பிரித்து ஸ்திதியாதல் உபலம்பமாதல் இல்லாதாப்போலே, த்ரவ்யமாயிருக்கச் செய்தேயும் அவனையொழியப் பிரித்து ஸ்திதியாதல் உபலம்பமாதல் இல்லையாம்படி யிருக்

நாலாம்பாட்டு - 'சாதிமாணிக்கம்' இத்யாதி. ஸமஸ்தவஸ்துக்களும் அவனுக்கு ப்ரகாரமாயிருக்கு மென்னுமதுக்கு ஐதிஹ்யம் - 'நம்முதலிகளிலே' இத்யாதி. முன்னிட்டுக்கொண்டு - ப்ரதாநமாகப் பண்ணிக்கொண்டு; விசேஷ்யமாகப் பண்ணிக்கொண் டென்றபடி. ஜாதிகுணங்களுக்கொழிய த்ரவ்யமான இவற்றுக்கு அப்ருதக்ஸித்தவிசேஷணத்வம் கூடுமோ? என்ன, 'ஜாதிகுணங்களுக்கு' இத்யாதி. ப்ரமாணபலத்தாலே - "[illegible]

* 'ஆதியஞ்சோதி' என்று இருக்கவேணும்.

கிறதிறே ப்ரமாணபலத்தாலே. அல்லாதார்க்கு விஶேஷணம்ஶம் தோற்றுகிற வோபாதி விஶேஷ்யம் தோற்றும்படியா யிருக்கிறதிறே இவர்களுக்கு. விஶேஷணம்ஶத்திலே தாத்பர்யமின்றிக்கே யிருக்குமதுவு மன்றிக்கே, விஶிஷ்டத்திலும் விஶேஷ்யமே தோற்றுகிறதாயிற்று, விஶேஷ்யப்ராதாந்யத்தாலே.*(விஶேஷ்யமே அதிஸ்புடமாயிருக்கும் என்றபடி.) இதிறே வேதாந்தஶ்ரவணமுடையாருக்கு இருக்கும்படி. "வேதாந்தஶ்ரவணே நஹி வ்யுத்பத்திः பூர்யதே" (வேதாந்தஶ்ரவணேநஹி வ்யுத்பத்திःபூர்யதே) என்னுநின்றதிறே. இத்தால் ஸமஸ்தவஸ்துக்களும் ப்ரகாரமாகத் தான்ப்ரகாரியாயிருக்கும்படியைச் சொல்லுகிறது. இதுதன்னிலும் "யத்யத்விபூதிமத்ஸத்த்வம் ஶ்ரீமதூர்ஜிதமேவவா। தத்ததேவாவகச்சத்வம் மமதேஜோம்ஶஸம்பவம்" (யத்யத்விபூதிமத்ஸத்த்வம் ஶ்ரீமதூர்ஜ்ஜித மேவவா-தத்த தேவாவகச்சத்வம் மமதேஜோம்ஶஸம்பவம்) என்கிறபடியே - எல்லாம் தனக்கு விபூதியாயிருக்கச் செய்தேயும் உத்க்ருஷ்டமான பதார்த்தங்கள் விஶேஷித்து என்னுடைய விபூதி யென்றானிறே; அப்படியே இவரும் உஜ்ஜ்வலமான மாணிக்யாதி பதார்த்தங்கள் அவனுக்கு விபூதியாயிருக்கிறபடியை அநுபவிக்கிறார்.

[சாதிமாணிக்கம் என்கோ] - நல்ல ஆகரத்திலே பிறந்த மாணிக்ய மென்பேனோ ? **[சவி கோள்]** - சவியென்று பொன்னிலே வந்தால் புகராகக் கடவது; முத்திலே வந்தால் நீர்மையாகக் கடவது. புகரையுடைத்தான பொன் என்பேனோ ? நீர்மையையுடைத்தான முத்து என்பேனோ ? **[சாதி]**-நல்ல ஆகரத்திலே பிறந்த நன்றான வைரமென்பேனோ? **[தவிவில் சீர் விளக்கம் என்கோ]**-[தவிவென்று]-விச்சேதம். விச்சேதமில்லாத அழகையுடைய விளக்கமென்பேனோ ? ப்ரகாஶவத்த்ரவ்யத்தைச் சொல்லுதல், ப்ரகாஶாம்ஶத்தைச் சொல்லுதல் ; அதாவது - ஆதித்யாதிகளைச் சொல்லுதல்: ஆதித்யாதி தேஜஸ்ஸுக்களைச் சொல்லுதல். [ஆதியஞ்சோதி யென்கோ] - "கார்யாணாம்காரணம் பூர்வம்" (கார்யாணும்காரணம் பூர்வம்) என்கிறபடியே இவ்வருகுண்டான காரியங்களுக்கெல்லாம் தான் காரணமாய், இவற்றினுடைய உத்பத்திக்கு முன்னே யுண்டாய்த் தான் ஏகரூபமாய்

---

*ஶரீரம், யஸ்யப்ருதிவீஶரீரம்"* இத்யாதி ப்ரமாணபலத்தாலே யென்றபடி. ஆனால், நமக்கு விஶேஷணம்ஶமொழிய விஶேஷ்யாம்ஶம் தோற்றவில்லையே யென்ன, 'அல்லாதார்க்கு' இத்யாதி. 'இவர்களுக்கு' என்றது - நம் முதலிகளுக் கென்னுதல், ஆழ்வார்களுக்கு என்னுதல். ஆனால், இவர்களுக்கு விஶேஷணம்ஶத்தில் தாத்பர்யமில்லையோ? என்ன, 'விஶேஷணம்ஶத்திலே' இத்யாதி. அதாவது - மாயாவாதிகளைப்போலே விஶேஷணம்சத்தில் தாத்பர்யமின்றிக்கே யிருக்கையன்றிக்கே, விஶேஷண விசேஷ்யங்களிரண்டிலும் தாத்பர்யமுண்டாயிருக்கச்செய்தே விஶேஷ்யப்ரதாநரா யிருப்பா ரென்றபடி. இதுக்கு அடியேது? என்ன, 'இதிறே' இத்யாதி. வேதாந்த ஶ்ரவணமே ஹேதுவாகவேணுமோ?என்ன,'வேதாந்த ஶ்ரவணே' இத்யாதி. இதம்வாக்யம்-வேதார்த்த ஸங்க்ரஹே. கீழுக்தத்தையெல்லாம் பராமர்ஶிக்கிறார், 'இத்தால்' என்று. ஆக, கீழெல்லாம் இத்திருவாய்மொழியில் ப்ரமேயத்தை ப்ராஸங்கிகமாக அருளிச்செய்து, இப்பாட்டுக்கு அவதாரிகை—'இதுதன்னிலும்' இத்யாதி; விபூதிதன்னிலு மித்யர்த்தः. 'யத்யத்விபூதிமத்ஸத்வம்'இத்யாதி-கீதாயாம் தஶமே. தேஜோம்ஶஸம்பவம்-ஸங்கல்பைகதேஶ ஸம்பவ மித்யர்த்தः.

சவி - ஒளி, காந்தி. முத்துக்கு நீர்மையாவது - அழகாதல், குளிர்த்தியாதல். வயிரம் - வஜ்ரம். உக்தார்த்த த்வயவிவரணம்-'ஆதித்யாதி' இத்யாதி. "கார்யாணாம் காரணம் பூர்வம் வசஸாம் வாச்யமுத்தமம்। யோகாநாம் பரமாம் ஸித்திம் பரமம் தே பதம் விது:" இதி ஜிதந்தாயாம். "குத்ருஷ்டி நஷ்டதத்வானாம் தத்த்வஜ்ஞானம் விஶேஷத: । ஸஹைவ ஹயராஜஸ்ய ப்ரதீக்ஷம் தேவ ப்ராணவம்:" இதி ஆரண்யபர்வணி ஆர்ஷ்டிஷேணः. ஆதிஶப்தார்த்தம் - 'இவ்வருகுண்டான' இத்யாதி; முன்னே யுண்டாய் இத்யந்தம். 'அம்' என்றதின் அர்த்தம் - 'தான் ஏகரூபமாய்' என்று. 'சோதி' என்றதின்

---

* குண்டலித க்ரந்தம் க்வாசித்கம்,

"[Grantha]" (அத்யர்க்காநலதீப்தம்தத்ஸ்தாநம்) என்கிறபடியே நிரவதிகதேஜோரூபமா யிருந்துள்ள பரமபதத்தை விபூதியாகவுடையவன் என்பேனோ? *("[Grantha]" (கார்யாணும்காரணம்) என்கிற க்ரந்தத்துக்கு நித்யவிபூதி விஷயமாகவும் யோஜநை யுண்டு:) கார்யத்துக்கு நியமேந பூர்வக்ஷணவர்த்தியானதுக்கிறே காரணத்வம் உள்ளது. அன்றிக்கே, * (ஆதித்வம் - ஈஶ்வரத்வாரா.) ஆதி என்கிறது - அஸ்த்ரபூஷணாத்யாயத்தின்படியே சொல்லிற்றாகவுமாம். ஸ்ரீவத்ஸரூபத்தாலே ப்ரக்ருத்யம்ஶத்தை தரிக்கு மென்றும், ஸ்ரீகௌஸ்துபத்தாலே ஜீவஸமஷ்டியை தரிக்கு மென்றும் சொல்லா நின்றதிறே. அந்தத் திருமேனிதானும் அந்த விபூத்யந்தர்ப்பூதமா யிருக்குமிறே. * (நித்யவிபூதி, ஸ்வாந்தஸ்ஸ்திதேஶ்வரவிக்ரஹாந்தர்ப்பூதாஸ்த்ரபூஷணாதித்வாரா காரணம் என்றபடி.) 'ஆதியஞ்சோதியென்கோ' என்றதும், 'சாதிமாணிக்கமென்கோ' என்றதுபோலே இருக்கிறது. [ஆதியம் புருடனென்கோ]-விபூதிமானைச்சொல்லுகிறது. ஸர்வகாரணபூதனாய், உபயவிபூதியுக்தனாய், புருஷஶப்தத்தாலும் புருஷோத்தம ஶப்தத்தாலும் சொல்லப்படாநின்றுள்ள ஸர்வேஶ்வரனென்பேனோ? [ஆதுமில் இத்யாதி]-ஆதுமில்காலத்திலே-ஸம்ஸாரகாலத்திலே; எனக்குத் தன்னைப் பெறுகைக்கு முதலொன்றுமில்லாத காலத்திலே, தான் எந்தையான முறையை எனக்கு அறிவித்து, பின்பு ஒருகாலமும் நழுவவிடாதே ரக்ஷித்து, இதுதான் என்பக்கலிலே ஒரு ப்ரயோஜநங்கொண்டன்றிக்கே நிர்ஹேதுகமாகத் தன்பேறாக ரக்ஷித்தவனை. அதவா, ஆதுமில்காலமுண்டு - ப்ரளயகாலம். கார்யாகாரமான இது அடங்கலும் அழிந்து ஸூக்ஷ்மாவஸ்தமாய்க் கிடக்கிற அன்று, தான் ஸ்வாமியான ப்ராப்தியைக் கொண்டு நாமரூபங்களை யிழந்த இவற்றை ஸத்தை இழந்துபோகாமே தன்பக்கலிலே ஏறிட்டுக் கொண்டு இவற்றைத் தரித்து, 'தான்' என்று சொல்லலாம்படி இவை தன்பக்கலிலே கலந்தவன்றும்

*அர்த்தம் - 'அத்யர்க்க' இத்யாதி. நித்யவிபூதி காரணமானபடி யென்? என்ன, 'கார்யத்துக்கு' இத்யாதி. உபபாதநம்-'ஸ்ரீவத்ஸ' இத்யாதி. 'ஆதியஞ்சோதி' என்றதுக்கு மூன்றாம் அர்த்தம்-'அந்தத் திருமேனி தானும்' இத்யாதி. அதாவது-ஸவிக்ரஹனாய்க்கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகையாலே பரமபதஸ்தமான விக்ரஹம் காரண மென்றபடி. 'ஆதியஞ்சோதி' என்று விக்ரஹந்தன்னைச் சொல்லலாயிருக்க, பரமபதஸ்தமென்கிறது - 'அந்தத்திருமேனிதானும் அந்த விபூத்யந்தர்ப்பூதமா யிருக்குமிறே' என்றத்தைப் பற்ற. ஆக, நியதபூர்வக்ஷணவர்த்தித்வத்தாலே யாதல், ஸ்வாந்தஸ்த்திதேஶ்வர விக்ரஹாந்தர்ப்பூதாஸ்த்ர பூஷணாதி த்வாராவாதல், ஸ்வாந்தர்ப்பூதேஶ்வர விக்ரஹத்வாரா வாதல், நித்யவிபூதி லீலாவிபூதிக்குக் காரணமென்று த்ரேதா நிர்வாஹ:. 'அஸ்த்ரபூஷண' இதி ப்ரதமேம்ஶே த்வாவிம்ஶே, "[Grantha] । [Grantha] । [Grantha]" இத்யாதி. ஆத்மாநமித்யேகவசநம் - ஸமஷ்ட்யபிப்ராயம். ஸ்ரீவத்ஸ: - ரோமாவர்த்த விஶேஷ:, "[Grantha]" இதி ஹரிவம்ஶோக்தே:. ஸ ச லக்ஷ்மீநிவாஸஸ்தாநம். லீலாவிபூதியோகம் சொல்லுகிற விடத்திலே நித்யவிபூதியோகம் சொல்லுவானென்? என்ன, 'ஆதியஞ்சோதி' இத்யாதி. நித்யவிபூதியும் லீலாவிபூதியைப்போலே ப்ரத்யக்ஷமா யிருக்கிறதென்னுதல், 'ஆதியஞ்சோதி' என்றவோபாதி 'சாதிமாணிக்கம்' என்கிறதும் போக்யமா யிருக்கிற தென்னுதல். இந்தப்பக்ஷத்தில், 'ஆதியஞ்சோதி யென்கோ' என்றதுபோலேயிருக்கிறது - 'சாதிமாணிக்கமென்கோ' என்றதும் என்று அநுஸந்தித்துக்கொள்வது. 'ஆதி' என்றதின் அர்த்தம் - 'ஸர்வகாரணபூதனாய்' என்றது. 'அம்' என்றதின் அர்த்தம் - 'உபயவிபூதியுக்தனாய்' என்றது. "[Grantha]" என்றத்தைப் பற்ற, 'புருஷஶப்தத்தாலும்' என்றது. "[Grantha]" என்றத்தைப்பற்ற 'புருஷோத்தம சப்தத்தாலும்' என்றது. உக்தவிவரணம் - 'எனக்குத் தன்னை' இத்யாதி. ஸம்ஸாரகாலத்திலே - அத்வேஷாபிமுக்யாதிகளொன்று மில்லாத காலத்திலே. முதல் - அத்வேஷாதி:. எனக்கு அறிவித்தென்றதுக்கு "மயர்வற மதிநலமருளினன்" என்றதிலே தாத்பர்யம். ந ச்யாவயதீதி - அச்யுத: என்கிற வ்யுத்பத்தியைப் பற்ற 'நழுவவிடாதே ரக்ஷித்து' என்றது. 'அமலன்' என்றதின் அர்த்தம் - 'தன்பேறாக ரக்ஷித்தவன்' என்றது. 'அமலன்' என்றதுக்கு - தத்கததோஷாஸம்ஸ்ப்ருஷ்டனென்று இரண்டாமர்த்தம் சொன்னால், 'தோய்விலன்' என்றத்தோடு புநருக்தமன்றோ? என்ன, 'நாமரூபங்களை' இத்யாதி. இங்கு - காரணாவஸ்தையில் தோஷாஸம்ஸ்ப்ருஷ்டத்வமும், அங்கு - கார்யாவஸ்தையில் தோஷைரஸம்ஸ்ப்ருஷ்டத்வமுஞ் சொல்லுகிறதாகையாலே விரோதமில்லை யென்றபடி. 'தானென்றுசொல்லலாம்படி' - "[Grantha]" என்கிற*

* குண்டலித க்ரந்தங்கள் க்வாசித்கம்.

இவற்றில் தோஷங்கள் தன்பக்கல் தட்டாதபடி யிருக்கிறவனே. 'நாமரூபங்களை யுடையனவாய் வஸ்துவாகச் சொல்லலாம்படி பிரியநின்றபோதும் இவற்றோடே கலந்து இவற்றின் தோஷம் தன்பக்கல் தட்டாதபடி நிற்கும்; இவை 'தான்' என்கிற சொல்லுக்குள்ளேயாம்படி கலந்து நின்றபோதும் தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கும் என்றதாகிறது' என்று அருளிச்செய்வர். அதுக்கு அடி - ப்ரவேஶஹேதுவிஶேஷம். (ச)

## ஐந்தாம் பாட்டு.

அச்சுதனமலனேன்கோ? அடியவர்வினைகெடுக்கும்
நச்சுமாமருந்தமேன்கோ? நலங்கடலமுதமேன்கோ?
அச்சுவைக்கட்டியேன்கோ? அறுசுவையடிசிலேன்கோ?
நெய்ச்சுவைத்தேறலேன்கோ? கனியேன்கோ? பாலேன்கேனோ?

ஆ.—(அச்சுதன்.) அஶேஷதோஷப்ரத்யநீகனாய் ஆஶ்ரிதரோடு நித்யஸம்ஶ்லேஷ ஸ்வபாவனாய் ஆஶ்ரிதஜநஸமஸ்தது:கநிரஸந ஸ்வபாவனாய்ப் பரமபோக்யனாயிருக்கும் என்கிறது.

ஒ.—அஞ்சாம்பாட்டில், ரஸவஸ்துக்களெல்லாம் அவனுக்கு விபூதி யென்கிறார்.

[அச்சுதன் அமலன் என்கோ] - நித்யவிபூதியோடே கூடியிருக்கும் இருப்புக்கு ஒருநாளும் ஓரழிவு இல்லாதானாய்த் தன்பக்கல் ஆஶ்ரயணலேசமுடையாரை உபேக்ஷிக்கைபாகிற தோஷமின்றிக்கே அவர்களை அங்கீகரிக்கும் ஸ்வபாவன் என்பேனோ? [நச்சுமாமருந்தம்] - நச்சப்படும் மஹௌஷதம். [அச்சுவை] - கீழ்ச்சொன்ன அம்ருதம்போலே யிருந்த சுவை. [நெய்ச்சுவைத்தேறலேன்கோ] - நெய்ச்சுவை யென்பேனோ? மது வென்பேனோ?

ப.—அநந்தரம், விலக்ஷணரஸவத்பதார்த்த விபூதித்வத்தை அருளிச்செய்கிறார்.

அச்சுதன் - போக்தாக்களை நழுவவிடாத இனிமையையுடையவன், அமலன் என்கோ - (தன்பேறாக அநுபவிப்பிக்கும்) நைர்மல்யத்தையுடையவன்: அடியவர் - உறவுடையாரை, வினை - ஹோஹாலாஹக்லேசத்தை, கெடுக்கும்-போக்குமதாய்,நச்சும்-(ஸாரஸ்யத்தாலே) நச்சப்படுவதான, மாமருந்தம் என்கோ - பசுமருந்து: நல் - (க்ஷீராத்மகதையால்வந்த) வைலக்ஷண்யத்தையுடைத்தாய், அம் - (பகவத்ஸம்பந்தத்தாலே) தர்ஶநீயமான, கடல் - கடலில், அமுதம்என்கோ - (அவன் கடைந்தெடுத்த) அம்ருதம்: அ - அந்த அம்ருதத்தினுடைய, சுவை - ரஸத்தையுடைத்தான, கட்டி என்கோ - கருப்புக்கட்டி: அறுசுவை - (மதுராம்லலவணகடுகஷாயதிக்தாத்மக) ஷட்ரஸயுக்தமான, அடிசில் என்கோ - அடிசில்: நெய் - நெய்யின், சுவை - சுவையையுடைத்தான, தேறல்

---

படியே தானென்கிற சொல்லுக்குள்ளேயாம்படி யித்யர்த்த:. 'தட்டாதபடி நிற்கும்' என்கிறது - அவ்விடத்திலே யென்றபடி. 'அஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கு மென்றதாகிறது' - இவ்விடத்திலென்றபடி. ஜீவனைப்போலன்றிக்கே தத்கததோஷாஸ்பர்ஶத்துக்கு அடியேது? என்ன, 'அதுக்கு அடி' இத்யாதி. அதுக்கு அடி - தத்கததோஷா ஸம்ஸ்ப்ருஷ்டத்வத்துக்கு அடி. ப்ரவேஶஹேதுவிஶேஷமாவது-சேதநன் கர்ம மடியாக ப்ரவேஶிக்கும்,ஈஶ்வரன் அநுக்ரஹமடியாக ப்ரவேஶிக்கும்; ஆகையால், ஈஶ்வரனுக்கு வாராதென்றபடி. ஆதுமில்காலத்தெந்தை யச்சுதனமலனை - சாதிமாணிக்கமென்கோ வித்யாரப்ய அந்வய:. ஆதுமில் காலத்து - ஒன்றுமில்லாத ஸம்ஸ்ருதி ஸமயத்தில். எந்தை - தன்னோடு உண்டான ஸம்பந்தத்தை எனக்கு அறிவித்தவன். அச்சுதன் - என்னை நழுவ விடாதவன். அமலன் - நிர்மலன். (ச)

என்கோ - மது: கனிஎன்கோ - (பக்வமாய் புஜித்தல்லது நிற்கவொண்ணாத) கனி: பால்என் கேனோ - (ஸ்வாஹாவிகரஸவத்தான) பாலென்று சொல்லுவேனோ?

பசுமருந்தென்று - விக்ரஹம். மருந்தென்கிறது - க்லேசநாசகத்வத்தாலே; கடைய வேண்டாத கடலில் கிடந்த அம்ருத மென்றுமாம். நெய்த்தலையுஞ் சுவையையு முடைத்தான தேற லென்றுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், ரஸவத்பதார்த்தங்கள் அவனுக்கு விபூதி யென்கிறார்.

[அச்சுதன் அமலன்] - அச்சுதனென்கிறது, பரமபதத்திருப்பை. [அமலன்] - ஹேய ப்ரத்யநீகனாய்க் கல்யாணகுணகனாயிருக்கும் என்கை. [அடியவர்வினைகெடுக்கும்] - தன்பக்கலிலே நிக்ஷிப்தபராராயிருப்பாருடைய ஸகலதுரிதங்களையும் போக்குமவன். [அடியவர் இத்யாதி] - தூர ஸ்தன் என்று கூசாதே விஸ்வஸிக்கலாம்படி மடுவின்கரையிலே ஆனைக்கு வந்து உதவுகை. [நச்சுமா மருந்தம்] - நச்சப்படும் மஹௌஷதம். மாமருந்தம் - வ்யாதியின் அளவன்றிக்கே யிருக்கை; அபத்யஸஹமான ஔஷதம். [நலங்கடலமுதம்] - கடையவேண்டாதே கடலிலேகிடக்கிற அம் ருதம். [அச்சுவைக்கட்டி] - கீழ்ச்சொன்ன அம்ருதத்தின் சுவையையுடைய கருப்புக்கட்டி. [அறுசுவையடிசில்] - ஷட்ரஸயுக்தமான அடிசில். [நெய்ச்சுவைத் தேறல்] - சுவையையுடைய நெய் என்பேனோ? சுவையையுடைத்தான மதுவென்பேனோ? [கனி] - ஓரவஸ்தையிலே ரஸிக்கு மது. [பால்] - நைஸர்க்கிகமான ரஸம்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ரஸவத்பதார்த்தங்களை விபூதியாக வுடையனா யிருக்கிற படியை அருளிச்செய்கிறார்.

[அச்சுதன் அமலன் என்கோ]-நித்யவிபூதியோடே கூடியிருக்கும் இருப்புக்கு ஒருநாளும் அழிவில்லாதபடி யிருப்பானாய் ஹேயப்ரத்யநீகனாய் கல்யாணைகதானனா யுள்ளவன் என்பேனோ? [அடியவர் இத்யாதி] - இப்படி 'தூரஸ்தன்' என்று ஆஸ்ரிதர்க்கு இடர்படவேண்டாதபடி, ஆனை யீடர் பட்ட மடுவின் கரையிலே விழும் ஸ்வபாவன். [அடியவர் வினை கெடுக்கும்]-தன்பக்கலிலே ந்யஸ்தபரராநாருடைய ஸகல துரிதங்களையும் போக்கி ரக்ஷிக்குமவன். [நச்சுமாமருந்தம்] - இடர் பட்டபோதாகப் போய் மலைபுக வேண்டாதே, 'அவன் தூரஸ்தனானானேயாகிலும் நாம் ஆபந்நரான ஸமயத்திலே வந்து ரக்ஷிக்கும்' என்று விஸ்வஸிக்கலாம்படி யிருப்பா னொருவன். [நச்சுமாமருந் தம்] - ஆசைப்படும் ஓர் ஔஷதம். [மாமருந்தம்] - மஹௌஷதம்: வ்யாதியினளவல்லாத பேஷ ஜம்; அதாவது - மேல்காற்றிலே காட்ட நோய்தீருமா யிருக்கை; ஏகமூலிகையாய் ஸக்ருத்ஸேவ்ய மாயிருக்கை; அன்றிக்கே, அபத்யஸஹமான ஔஷத மென்னுதல்; அதாவது-இவன் ப்ராமாதிகமா

---

அஞ்சாம்பாட்டு - 'அச்சுதன்' இத்யாதி. 'நலங்கடலமுதம்' இத்யாதிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை- 'ரஸவத்' இத்யாதி.

"[illegible]" இத்யாதிகம், ஹேயப்ரத் யநீகத்வ வ்யாப்தம் கல்யாணைகதாநத்வமிதி ச ஹ்ருதிநிதாயாஹ - 'நித்யவிபூதியோடே' இத்யாதி. 'நித்யவிபூதி யோடே கூடியிருக்கும் இருப்புக்கு' என்றது - கீழிற்பாட்டிலே "ஆதியஞ்சோதியென்கோ" என்றத்தைப் பற்ற. தாத்பர்யம் - 'இப்படி தூரஸ்தன்' இத்யாதி. கீழே நித்யவிபூதியி லிருப்பைச் சொல்லுகையாலே 'இப்படி தூரஸ்தன்' என்றது. நச்சுதல் - விஸ்வஸித்தலாதல், ஆசைப்படுதலாதல். 'மா' என்றதுக்கு மூன்று அர்த்தம்: முந்தினது - 'வ்யாதியினளவல்லாத' இத்யாதி. 'மேல்காற்றிலே காட்ட' என்று இதுக்கு உதாஹரணம் - "நமனும்முற்கலனும்" இத்யாதி. த்விதீயார்த்தம் - 'ஏகமூலிகை' இத்யாதி. ஏகமூலிகையாவது - ஸஹா யாந்தர நைரபேக்ஷ்யம். ஸக்ருத்ஸேவ்யமென்றது - "[illegible]" இத்யாதியைப் பற்ற. மூன்றாம் அர்த்தம் - 'அன்றிக்கே' இத்யாதி. அதாவது - அபத்யஸஹத்வமாவது. "[illegible]" என்று விஶே

கப் பண்ணும் பாபங்களையும் காணக்கண்ணிடவல்லனு யிருக்கை. புத்திபூர்வக மாகப் பண்ணு மன்று, பிறந்த ஜ்ஞாநத்தோடு விரோதிக்குமிறே; தன்னை யறிந்தபின்பு முதலிலே இவற்றில் மூளான்; ஆனபின்பும்,விரோதியான தேஹம் அநுவர்த்திக்கையாலே நெஞ்சிருண்டு பாபங்களிலே ப்ரவர்த்தியா நிற்கை தவிரான்; அநந்தரம் ஜ்ஞாநம்பிறவா அநுதபித்துக் கைவாங்கும்; அங்ஙனன்றிக்கே, புத்திபூர் வம் ப்ரவர்த்தித்தானாகில் ஜ்ஞாநம் பிறந்த தில்லையேயாம் இத்தனை. [நலங்கடலமுதம் என்கோ] - கடலிலே கடையாதே வந்த அம்ருத மென்பேனோ? [அச்சுவைக்கட்டி என்கோ] - அம்ருதாநந் தரம் சொல்லுகிற கட்டியாகையாலே, கருப்புக்கட்டியா மித்தனை. ப்ரஸ்துதமான அம்ருதத்தோ டொத்த ரஸத்தையுடைத்தான கருப்புக்கட்டி யென்பேனோ? [அறுசுவை]-அவையாவன - கைப்பு புளிப்பு கார்ப்பு தித்திப்பு துவர்ப்பு உவர்ப்பு: இப்படி ஆறுபடிப்பட்ட ரஸத்தையுடைத்தான அடிசி லென்பேனோ ? [நெய்ச்சுவைத்தேறல் என்கோ] - நெய்-மிகுதி: மிக்கசுவையையுடைய தேன். சுவையையுடைத்தான நெய்யென்பேனோ? சுவையையுடைத்தான மதுவென்பேனோ? [கனி இத் யாதி] - ஒருகாலத்திலே இனியதாம் பழமென்பேனோ? இனியதான பாலென்பேனோ? (௫)

## ஆறும் பாட்டு.

பாலென்கோ? நான்குவேதப்பயனென்கோ? சமயநீதி
நூலென்கோ? நுடங்குகேள்வியிசையென்கோ? இவற்றுள்நல்ல
மேலென்கோ? வினையின்மிக்கபயனென்கோ? கண்ணனென்கோ?
மாலென்கோ? மாயனென்கோ? வானவராதியையே.

ஆ.—(பாலென்கோ.) பாலென்று சொல்லுவேனோ? ஸர்வவேதங்களாலும், ஸர்வவே தார்த்தநிர்ணயகமாய் ஹேதுமத்தாயிருந்த ப்ரஹ்மஸூத்ரபதங்களாலும் பரமபுருஷார்த்ததயா ப்ரதிபாத்யமானன் என்று சொல்லுவேனோ? போக்யதையால் அவன் நுடங்குகேள்வி யிசை யென்று சொல்லுவேனோ ? இங்குச்சொல்லப்பட்ட போக்யபதார்த்தங்களெல்லாவற்றிலும் மேற் பட்ட போக்யமென்று சொல்லுவேனோ? ஸகலபுண்யபலமென்று சொல்லுவேனோ? ஆஶ்ரித ஸுலபனென்று சொல்லுவேனோ? ஆஶ்ரிதவத்ஸலனென்று சொல்லுவேனோ? ஆஶ்சர்யபூத னென்று சொல்லுவேனோ? வானவராதியை எங்ஙனே சொல்லுவேன்? என்கிறார்.

---

ஷிக்கிறதென்? என்ன, 'புத்திபூர்வகம்' இத்யாதி. "[illegible] [illegible]" இத்யாத்யநுஸந்தேயம். ஆனால், பாபங்களிலே மூளும் ப்ரகார மென்? என்ன, 'ஆனபின்பும்' இத்யாதி: ப்ரக்ருதிவஶ்யனுகையாலே புத்திபூர்வகமாகவும் ஸம்பவிக்கு மென்றபடி;வாலியைக்கொன்ற வ்யாஜம் மஹாராஜர்க்கு முண்டாயிருக்க,ரக்ஷித் தாரிறே. யத்வா, ப்ராமாதிகமாகத்தான் வரும் வழி யேது? என்ன, 'ஆனபின்பும்' இத்யாதி என்னுதல். நெஞ் சிருண்டு பாபங்களிலே ப்ரவர்த்தித்தால் அது ப்ராமாதிகமானபடியென்? என்ன, 'அநந்தரம்' இத்யாதி. பிறவா- பிறந்தவுடனே. அங்ஙனன்றிக்கே – அநுதபித்துக் கைவாங்குகை யன்றிக்கே. நலங்கடலமுதம் – கடலில் நல மான அமுதம் என்றபடி. நன்மை – அயத்நஸித்தத்வம். சுவை – ரஸம். அச்சுவைக்கட்டி - அந்த அம்ருதத் தோடொத்த ரஸத்தையுடைய கட்டி. கட்டி – வெல்லக்கட்டி. கார்ப்பு – க்ஷாரம். "நெய்" என்றதுக்கு அர்த் தாந்தரம் – 'சுவையையுடைத்தான' இத்யாதி. க்ரமேண அந்வயः, (௫)

ஒ.—ஆறும்பாட்டில், வேதம் தொடக்கமான இயலும் இசையுமான ஶப்தராஶியை விபூதியாகவுடையனாயிருக்கிறபடியைப் பேசுகிறார்.

[நான்கு வேதப்பய னென்கோ] - ப்ரமாணஜாதத்தில் ஸாரபூதமான வேதம் நாலு மென்பேனோ? [சமயநீதி நூலென்கோ] - வைதிகஸமயத்துக்கு உபப்ரும்ஹணமான ஶாஸ்த்ரங்களென்பேனோ? [நுடங்கு கேள்வி யிசை யென்கோ] - ஶ்ரவணமாத்ரத்திலே ஈடுபடுத்தவல்ல இசை யென்பேனோ? [இவற்றுள் நல்ல மேலென்கோ] - இவற்றிலும் அறவிலக்ஷணபோக்யதமம் என்பேனோ? [வினையில்மிக்க பயனென்கோ] - ஸாதநரூபமான யத்நத்தின் அளவன்றிக்கே அதிமாத்ரமான பலரூப மென்பேனோ? 'வானவர்' என்றது, ப்ரஹ்மாதிகளை.

ப.—அநந்தரம், வேதவைதிகாத்மகமாய் காநபர்யந்தமான ஶப்தராஶிப்ரகாரத்வத்தை அருளிச்செய்கிறார்.

வானவர் - ஸமஸ்ததேவர்களுக்கும், ஆதியை - ஸத்தாதி ஹேதுபூதனானவனை,—(நான்குவேதம்) - வேதங்களினுடைய, பால் என்கோ - ஶாகாதிவிபாகங்கள்: நான்குவேதம் - ததாவிதசதுர்விதவேதங்களின், பயன்என்கோ - ப்ரயோஜநம்: சமயம் - அர்த்தவ்யவஸ்தாபகமான, நீதி - ந்யாயத்துக்கு ப்ரதிபாதகமாயுள்ள, நூல்என்கோ - மீமாம்ஸாஶாஸ்த்ரம்: நுடங்கு - (ஶ்ரோதாக்களை) ஈடுபடுத்தும், கேள்வி - கேள்வியையுடைத்தான, இசை என்கோ - கீதம்: இவற்றுள் - (உக்தமான) இவற்றுக்குள்ளே, நல்ல - விலக்ஷணமாய், மேல்என்கோ - (அநவதிகாதிஶயமான) போக்யம்: வினையில் - ஸாதநத்தினளவன்றியே, மிக்க - அதிஶயிதமான, பயன்என்கோ - பலம்: கண்ணன் என்கோ - (அந்தப்பலரூபனாய் ஆநந்தாத்மகனான க்ருஷ்ணன்: மால் என்கோ - (தன்னைபுஜிக்குமவர்களை) வ்யாமுக்தனாய் புஜிக்குமவன்: மாயன்என்கோ - (ததநுரூபமான) ஆஶ்சர்யசேஷ்டிதாதியுக்த னென்பேனோ? பாலென்று - பகுதியாய், ஶாகாதி விஶாகம்.

இ.—ஆறும்பாட்டில், வேதம் தொடக்கமான இயலும் இசையுமான ஶப்தராஶியை விபூதியாகவுடையனாயிருக்கிற படியைப் பேசுகிறார்.

[பாலென்கோ] - முன்புத்தை ரஸம் பின்னாடுகிறபடி. [நான்குவேதப்பயன்] - ப்ரமாணஜாதத்தில் ஸாரபூதமான நாலுவேதம்: அதவா, ப்ரயோஜநரூபமான நாலுவேதம். [சமயநீதி நூல்] - வைதிகஸமயத்துக்கு நிர்வாஹகமான ஶாஸ்த்ரம்; வேதோபப்ரும்ஹணமான இதிஹாஸ புராணாதிகள். [நுடங்கு இத்யாதி] - ஶ்ரவணமாத்ரத்திலே ஈடுபடுத்தவல்ல இசை. [இவற்றுள் நல்ல மேலென்கோ] - இவற்றிலும் விலக்ஷணமான போக்யமென்பேனோ? [வினை இத்யாதி]- அல்பயத்நத்தாலே நிரதிஶயபலத்தைத் தருமது என்பேனோ? ஸாதநரூபமான யத்நத்தளவல்லாத அதிமாத்ரபல மென்பேனோ? மித்ரபாவமடியாக யாவதாத்மபாவியான அநுபவத்தைத் தருமென்கை. [கண்ணனென்கோ] - உனக்கு நான் உளேன்; "மாஶுச:"- நீ சோகியாதே கொள் என்னுமவ னென்பேனோ? [மால் என்கோ] - ஆஶ்ரிதவிஷயத்தில் வ்யாமுக்தன் என்பேனோ? [மாயன் என்கோ] - தாத்யஸாரத்யங்கள் பண்ணும் ஆஶ்சர்யசேஷ்டிதங்களையுடையவன் என்பேனோ? [வானவராதியை] - ப்ரஹ்மாதிகளுக்கும் ஸத்தாஹேதுவானவனை. தன்ஸத்தை ஆஶ்ரிதாதீநையாயிருக்கும் என்கை.

ஈடு.—ஆறும்பாட்டு. வேதம் தொடக்கமான இயலும் இசையுமான ஶப்தராஶியை விபூதியாகவுடையனா யிருக்கிறபடியைப் பேசுகிறார்.

---

ஆறும்பாட்டு - 'பாலென்கோ' இத்யாதி. 'நான்குவேதப்பயனென்கோ' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'வேதம் தொடக்கமான' இத்யாதி.

[பால் என்கோ] - கீழில் ரஸ்யதை பின்னுடினபடி; [நான்குவேதப்பயனேன்கோ]-நாலு வகைப்பட்ட ப்ரமாணஜாதத்தில் ஸாரபூதமான வேதமாகிற ப்ரயோஜநம் என்பேனே? வேதத்திலே வேறேயும் ஓரம்ஶம் ஒருவனை ஸ்துதிக்கிலிறே, 'நான்குவேதத்தில் பயனேன்கோ' என்ன வேண்டுவது? அங்ஙனன்றியே, வேதந்தான் ஆராதநஸ்வரூபஞ் சொல்லுமிடமும் ஆராத்யஸ்வரூபஞ் சொல்லுமிடமுமாய்க் கட்டடங்க இவனையே சொல்லுகையாலே, வேதத்தில் நாலுமூலைக்குமுள்ள ப்ரயோஜநமில்லாத இடம் இல்லை; "वेदैश्च सर्वैरहमेव वेद्यः" (வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:) என்றுனிறே. [சமயம்] - வைதிக ஸமயத்துக்கு நிர்வாஹகமான இதிஹாஸ புராணங்கள் என்பேனே? வேதார்த்தத்தை விஶதீகரிக்குமவையிறே இவை: "इतिहासपुराणाभ्यां वेदं समुपबृंहयेत्" (இதிஹாஸ புராணுப்யாம் வேதம்ஸமுபப்ரும்ஹயேத்). [நுடங்கு]- கேட்டாரை நஞ்சுண்டாற்போலே நுடங்கப்பண்ணக்கடவ ஶ்ரவணத்தையுடைத்தான இசை என்பேனே? [இவற்றுள் நல்ல மேல் என்கோ]-எல்லாம் சொல்லவேணும், எல்லாம் சொல்ல மாட்டார். கீழ்ச்சொன்னவற்றிலெல்லாம் விலக்ஷணமாய் அவ்வருகாயிருப்பதொன்று என்பேனே? [வினையில் மிக்க]-அல்பயத்நத்தாலே அநேகபலத்தைப் பலிப்பதொன்று என்பேனே? கலநெல்லை வித்தி நூறுயிரக்கலமாக விளைத்துக்கொள்வாரைப்போலே, இத்தலையிலுள்ளது மித்ரபாவமாய்அதுக்கு "न त्यजेयम्" (நத்யஜேயம்) என்னும்படி யிருக்கை. [கண்ணன் என்கோ]- 'உனக்கு நான் இருந்தேனே' என்று "मा शुचः" (மாஶுச:) என்னும்க்ருஷ்ணன் என்பேனே? 'நாம் தரும்அத்தை நீ விலக்காதே ஸ்வீகரிக்க மித்தனையே வேண்டுவது-உனக்கு நான் இருந்தேன்' என்னுமவனிறே. [மால் என்கோ] - * (ஆஶ்ரிதவிஷயத்தில் வ்யாமுக்தனென்பேனே?) இப்பாசுரத்தைச் சொல்லா, "[illegible]

---

*புநருக்திபரிஹாரம் - 'கீழில்' இத்யாதி. பயனுன நான்குவேதமென்பேனே இதி ஶப்தார்த்த:. 'ப்ரமாண ஜாதத்தில்' இதி-"अङ्गानि वेदाश्चत्वारो मीमांसा न्यायविस्तरः। पुराणं धर्मशास्त्रञ्च" இத்யாதி. நான்குவேதமாகிற பயனென்பானென்? நான்குவேதத்திற் பயனென்றுலோ? என்ன, 'வேதத்திலே' இத்யாதி. அங்ஙனன்றியே - அப்படி ஒருவனை ஸ்துதிக்கையன்றியே. 'ப்ரயோஜநமில்லாதவிடமில்லை' யிதி - பகவத்பர்யந்தத்வவ்யதிரேகேண கேவல தேவமநுஷ்யாதி ப்ரதிபாதகப்ரதேசமில்லை யென்றபடி. ஸர்வவேதங்களும் அவனையே சொல்லுகிற தென்னுமிடத்தில் ப்ரமாணம் - 'வேதைஶ்சஸர்வை:' இதி. கீதாஸு பஞ்சதஶே; பூர்வமேவ லிகிதம். 'சமயம்' என்று - ஸித்தாந்தமாய், ஸமயேதே அநயா இதி - நீதி என்றுய், அதாவது - நிர்வாஹகமென்றுய், வைதிகஸித்தாந்தத்துக்கு நிர்வாஹகமான வென்றபடி. நூல் - ஶாஸ்த்ரம். நிர்வாஹகத்வமாவது - விஶதீகரிக்கை. நிர்வாஹகத்வத்தை உபபாதிக்கிறுர் - 'வேதார்த்தத்தை' இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - 'இதிஹாஸ' இத்யாதி. "बिभेत्यल्पश्रुताद्वेदो मामयं प्रतरिष्यति" இத்யுத்தரார்த்தம். இதம் பார்ஹஸ்பத்யஸ்ம்ருதௌ. நுடங்க - மயங்க; ஈடுபடும்படி யித்யர்த்த:. கேட்டமாத்ரத்திலே ஈடுபடுத்தவல்ல காநமென்பேனே? இதி நிஷ்க்ருஷ்டார்த்த:. "[illegible]" என்னும்படி பண்ணுகை - நுடங்கப்பண்ணுகையாவது. மேலும், விபூதியோகம் சொல்லாதே, 'இவற்றுள் நல்ல' என்று தொடங்கி நிஷ்க்ருஷ்ட ரூபத்தைச் சொல்லுவானென்? என்ன, 'எல்லாம் சொல்ல' இத்யாதி. வினையைப்பற்றவும் அதிஶயிதமான ப்ரயோஜநமென்று ஶப்தார்த்தம் விவக்ஷித்து, இத்தால் பலிதமாஹ—'அல்பயத்ந' இத்யாதி. ஸத்ருஷ்டாந்தமாக விவரணம் - 'கலநெல்' இத்யாதி. "मित्रभावेन सम्प्राप्तं न त्यजेयं कथञ्चन" இத்யாதி யுத்தகாண்டே அபயப்ரதாந ப்ரகரணே ராமவாக்யம். 'நான் இருந்தேனே' என்றது - அஹம்ஶப்தார்த்தம். பூர்வார்த்தத்திலர்த்தத்தையுங் கூட்டி விவரிக்கிறுர்—'நாம் தரும் அத்தை' இத்யாதி. தரும் அத்தை-தருகிற பலத்தை. இப்பாசுரத்தை - சரமஶ்லோகத்தை. வ்யாமுக்தன் - ஆஶ்ரிதர்பக்கல் வ்யாமோஹத்தையுடையவன். இது வ்யாமோஹகார்யமாக*

---

* குண்டலிதம் - க்வாசித்கம்.

தேநாதவஹாய'' (இதம்தேநாதபஸ்காய) என்னும் வ்யாமுக்தன் என்பேனே? ''இதம் தே நா ... ஸ்ய வக்ஷ்யாமி'' (இதம்துதேகுஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி, என்றவோபாதி, ''இதம்தே நாதவ ஸ்காய'' (இதம்தே நாதபஸ்காய) என்றதுவும் முன்னேசோல்லிக்கோள்ளவிறே அடுப்பது; அங்ஙனன்றிக்கே, முந்துறச் சோல்லி, பின்னை ''இதந்தே நாதவஸ்காய'' (இதந்தேநாதபஸ்காய) என்றானிறே. 'இதுதனக்கு அடியேன்?' என்று சீயர் பட்டரைக்கேட்க, ''த்ரௌபதி குழலைவிரித்துக் கிடக்கையாலே அதுமுடிக்கைக்காக, செய்வதறியாமையாலே மூலையில் கிடந்தாரை முற்றத்தே யிட்டான்; பின்னை அர்த்தத்தின் சீர்மையை அநுஸந்தியா, 'ஆர் அதிகாரிகளாகச் சோன்னேம்? கைப்பட்ட மாணிக்கத்தைக் கடலிலே யிட்டோம்' என்று, பதண்பதண் என்றான்காணும்'' என்று அருளிச்செய்தார். [மாயன் என்கோ]-(ஆஶ்ரிதர்க்கு தூத்யஸாரத்யாதிகளைப் பண்ணும் ஆஶ்சர்யபூதன் என்பேனே? ''க்ருதார்த்தா புஞ்ஜதே தூதா:'' (க்ருதார்த்தா புஞ்ஜதே தூதா:). [வானவராதியையே] - ப்ரஹ்மாதிகளுடைய ஸத்தாதிகள் தன் அதீநமாம்படி யிருக்கிறவன் என் அதீநமான ஸத்தாதிகளை யுடையனாயிருக்கிற இருப்பை நான் எத்தையென்று சோல்லுவது? (கூ)

## ஏழாம் பாட்டு.

வானவராதியேன்கோ? வானவர்தேய்வமேன்கோ?
வானவர்போகமேன்கோ? வானவர்முற்றுமேன்கோ?
ஊனமில்சேல்வமேன்கோ? ஊனமில்சுவர்க்கமேன்கோ?
ஊனமில்மோக்கமேன்கோ? ஒளிமணிவண்ணனையே.

**ஆ.**—(வானவர்.) வானவருடைய யாரகமென்று சொல்லுவேனே? அவருடைய தைவமென்று சொல்லுவேனே? அவர்களுடைய போகமென்று சொல்லுவேனே? அவர்களுடைய ஸர்வஸ்வமென்று சொல்லுவேனே? ஐஹிகமான பூர்ணஸம்பத்துக்கு ஆத்மபூதனென்று சொல்லுவேனே? பூர்ணஸ்வர்க்க புருஷார்த்தத்துக்கு ஆத்மபூதனென்று சொல்லுவேனே? பரம புருஷார்த்தலக்ஷண மோக்ஷத்துக்கு ஆத்மபூதனென்று சொல்லுவேனே? இவனை எங்ஙனே சொன்னால் பூர்ணமாகச் சொல்லிற்றாவது? என்கிறார்.

---

வேணுமோ? என்ன, 'இதம்துதே' இத்யாதி. ''இதம்தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந। நசாஶுஶ்ரூஷவே வாச்யம் நசமாம்யோऽப்யஸூயதி'', ''இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே। ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுபாத்'', வ்யாமோஹத்தாலே சரமஶ்லோகத்தைச் சொன்னனென்றதுக்கு ஸம்வாதம்-'இதுதனக்கு' இத்யாதி. 'மால்' என்ற வ்யாமோஹம் - த்ரௌபதிவிஷய மென்றபடி. அநுஸந்தியா - அநுஸந்தித்தவுடனே. பதண்பதணென்றான் - தபித்தான். தூதுபோனதுக்கு ப்ரமாணம் - 'க்ருதார்த்தா' இத்யாதி. உத்யோகபர்வணி சதுர்நவதிதமே, ''ஸஹ ஸர்வைரிஹாஶ்நீஷ்வ'' இத்யுக்தவந்தம் துர்யோதநம்ப்ரதி க்ருஷ்ண:- ''க்ருதார்த்தா புஞ்ஜதே தூதா: பூஜாம் க்ருஹ்ணந்தி சைவ ஹி। க்ருதார்த்தம் மாம் ஸஹாமாத்ய ஸமர்சிஷ்யஸி பாரத''. இதுக்கு அர்த்தம்-க்ருஷ்ணன் தூதெழுந்தருளினபோது, துர்யோதநன் 'என் அகத்திலே அமுதுசெய்யவேணும்' என்ன, தூதுவந்தவன் தான் வந்த கார்யமானால் தூதுவந்த க்ருஹத்திலே புஜிக்கும்; அப்படியே நானும் உன்னிடத்தில் தூதுவருகையாலே நான் வந்த கார்யம் செய்தால் உன்னகத்திலே புஜிக்கிறேனென்று னென்றபடி. 'மாயனென்கோ' என்றதுக்குச் சேரஹாவம்-'ப்ரஹ்மாதிகள்' இத்யாதி; 'ஆஶ்ரிதர்க்குள்ளே தாமும் அந்தர்ப்பூதராகையாலே என் அதீநமான ஸத்தாதிகளை யுடையன்' என்று. எத்தையென்று சொல்லுவது - எவ்வளவென்று பரிச்சேதித்துச் சொல்லுவது? வானவராதியை - பாலென்கோ இத்யாரப்ய அந்வய:. (கூ)

ஒ.—ஏழாம்பாட்டில், ஐச்வர்யாதி புருஷார்த்தங்களெல்லாவற்றையும் விபூதியாக வுடையனா யிருக்கிற படியைப் பேசுகிறார்

[வானவர் என்று தொடங்கி.] - அயர்வறும் அமரர்களுக்கு ஸ்வரூபஸ்தித்யாதிகளும் மற்று உள்ளனவெல்லாம் என்பேனோ? [ஊனமில் என்று தொடங்கி] - பரிபூர்ணமான மோக்ஷாதி புருஷார்த்தம் என்பேனோ? [ஒளிமணிவண்ணனை] - விலக்ஷணமான அழகையுடையவனை.

ப.—அநந்தரம், போகமோக்ஷவிபூதித்வத்தை அருளிச்செய்கிறார்.

ஒளி - உஜ்ஜ்வலமான, மணி - மாணிக்கம்போலே யிருக்கிற, வண்ணனை - வடிவையுடைய வனை, வானவர் - (போகஸக்தரான) தேவர்களுக்கு, ஆதி என்கோ - உத்பாதகன்; வானவர் - அவர்களுக்கு, தெய்வம் என்கோ - ஆராத்யதைவதம்: வானவர்- அவர்களுக்கு, போகம் என்கோ- (ஆராதநபலமான) போகம்: வானவர் - அவர்களுடைய, முற்றும் என்கோ - ஸர்வவிதரக்ஷணம்: ஊனம் இல் - அநச்வரமான, செல்வம் என்கோ - ஐச்வர்யம்: ஊனம் இல்- ஆகல்பாவஸாநஸ்தாயி யான, சுவர்க்கம் என்கோ - ஸ்வர்க்கஸ்தாநம்; ஊனமில் - (இந்த போகத்துக்கு அவ்வருகுபட்ட கைவல்யம்போலன்றியே) அஸங்குசிதமான, மோக்கம் என்கோ - மோக்ஷாநந்த மென்பேனோ?

'வானவரென்கிற இடம் - ஸூரிகளைச் சொல்லுகிறது' என்பாருமுளர்.

இ.—ஏழாம்பாட்டில், ஐச்வர்யாதி புருஷார்த்தங்களை விபூதியாகவுடையனா யிருக்கிற படியைச் சொல்லுகிறார்.

[வானவராதியென்கோ]-நித்யஸூரிகளுக்கு ஸத்தாஹேது வென்பேனோ? அவர்களுக்கு "சூட்டுநன்மாலை"ப்படியே ஆராத்யன் என்பேனோ? அவர்களுக்கு "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம்" ஆனவன். [முற்றும்] - அநுக்தமான ஸர்வவிதபந்தமும். [ஊன மில் செல்வம்] - அநச்வரமான ஸம்பத்து. [ஊனமில் சுவர்க்கம்] - 'த்வம்ஸ' என்னுதை ஆகல்பா வஸாநமான ஸ்வர்க்கம். [ஊனமில் மோக்கம்] - ஆத்மாநுபவமாத்ர மன்றிக்கே பரமபுருஷார்த்த லக்ஷண மோக்ஷம். [ஒளிமணிவண்ணனை] - ச்லாக்யமான மணிபோலே யிருக்கிற திருநிறத்தை யுடையவனை; விலக்ஷணமான அழகையுடையவ னென்கை. கீழ்ச்சொன்னவையோடு இவ்வழ கோடு வாசியற அநுபவிக்கிறார்.

ஈடு.—ஏழாம்பாட்டு. ஐச்வர்யாதி புருஷார்த்தங்களெல்லாம் தனக்கு விபூதியாகவுடை யனா யிருக்கிறபடியைப் பேசுகிறார்.

[வானவராதியென்கோ] - கீழ், "வானவராதி" என்ற இடம் ப்ரஹ்மாதிகளுக்குக் கார ணபூத னென்னு மிடம் சொல்லிற்று; இங்கு நித்ய ஸூரிகளுக்கு நிர்வாஹகனாய் அவர்கள் ஸத்தா ஹேதுவா யிருக்கும்படியைச் சொல்லுகிறது. இரண்டிடத்திலும் சப்தம் ஒத்திருக்க, இவ்விபாகம் பண்ணித்தருவார் ஆரென்னில்,—ப்ரஹ்மாதிகளுக்கு அவர்களுத்பத்தியிலே உபகரித்துவிடுமித்தனை; அவ்வளவன்றிக்கே,நித்யஸூரிகளுக்கு"எல்லாம்கண்ணன்" என்கிறபடியே எல்லாம் தானேயாயிருக் கும் அவர்கள்தாங்களும்: "வாஸுதேவஸ்ஸர்வம்" (வாஸுதேவஸ்ஸர்வம்) என்கிறபடியே எல்

ஏழாம்பாட்டு - 'வானவர்' இத்யாதி. 'ஊனமில்செல்வம்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'ஐச்வர்யாதி' இத்யாதி.

இரண்டிடத்திலும் - கீழும் இவ்விடத்திலும். 'இவ்விபாகம்' - கீழ் ப்ரஹ்மாதிபரம்; இங்கு ஸூரிபர மென்கிற விபாகம். ப்ரஹ்மாதிகளைச் சொல்லில், 'வானவர்போகம்' இத்யாதி சேராது; ஆனபின்பு * 'வான வர்போகம்' இத்யாதி பதத்வயமே இவ்விபாகஜ்ஞாபகமென்று கருத்து. எல்லாம் தானேயாயிருக்கும் - தாரக போஷகபோக்யங்களெல்லாம் தானேயாயிருக்கும். அர்த்தஸ்திதி அப்படியானாலும் அவர்க்கு அந்நிலையில்லா

* 'வானவர்போகமென்கோ வானவர்முற்றுமென்கோ' இதி பதத்வயமேவ—அடையவளைந்தா னரும்பதம்.

லாம் தானேயாக நினைத்திருப்பர்கள். [வானவராதியென்கோ]-நித்யஸூரிகளுக்கு ஸத்தாஹேதுவா னவனென்பேனே? 'ஸத்தாஹேதுவாகையாவது என்? அது பின்னை நித்யையாயன்றோ விருப்பது?' என்னில்,—நித்யையாகவுமாம், அநித்யையாகவுமாம். அவனுடைய நித்யேச்சையாலே யிருக்கும் இதினுடைய நித்யத்வம்; அந்த இச்சை நெகிழில் இதினுடைய நித்யத்வமும் மாறும்படியா யிருக்கும். * "எத்தேவர்வாலாட்டும் எவ்வாறு செய்கையும் அப்போ தொழியும்" என்கிற படியே அவன் நெகிழ்ந்த வன்று பின்னை யில்லையிறே; [வானவர்தெய்வமென்கோ] - அவர்களுக்கு ஆஶ்ரயணீய னென்பேனே? [வானவர்போகமென்கோ] - அவர்களுக்கு உண்ணும் சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாமானவ னென்பேனே? [வானவர்முற்றுமென்கோ] - அவர்களுக்கு அநுக்தமான எல்லா மென்பேனே? [ஊனமில்செல்வமென்கோ] - சிலநாள் நின்று வற்றுமதன்றிக்கே, ஒருநாளும் அழியாத ஸம்பத்து என்பேனே? [ஊனமில்சுவர்க்கமென்கோ] - சிலநாளிருந்து பின்னை "த்வம்ஸ" (த்வம்ஸ) என்று தள்ளும்படியான தன்றிக்கே ஒழிவில்லாத ஸ்வர்க்க மென்பேனே? இவைதானும் அவனுக்கு விபூதியன்றோ, இங்ஙன் சொல்லுவானேன்? என்னில்,—"ஶ்ரீமதூர்ஜிதமேவவா" (ஶ்ரீமதூர்ஜிதமேவவா) என்று விஶேஷித்துச்சொல்லா நின்றதிறே. [ஊனமில்மோக்க மென்கோ] - ப்ரகாரமான ஆத்மாநுபவமாத்ரத்திலன்றிக்கே ப்ரகாரி யளவும் செல்ல அநுஸந்திக்கையாலே, பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷ மென்பேனே? [ஒளிமணி வண்ணனையே] - இவ்வஸாதாரணவிக்ரஹத்தோபாதி யிருக்கிறதாயிற்றுக் கீழ்ச்சொன்னவையு மெல்லாம். (எ)

## எட்டாம் பாட்டு.

ஒளிமணிவண்ணனென்கோ? ஒருவனென்றேத்தநின்ற
நளிர்மதிச்சடையனென்கோ? நான்முகக்கடவுளென்கோ?
அளிமகிழ்ந்துலகமெல்லாம் படைத்தவையேத்தநின்ற
களிமலர்த்துளவனெம்மான் கண்ணனைமாயனையே.

---

விடில் ப்ரயோஜநமில்லையே என்ன, 'அவர்கள் தாங்களும்' இத்யாதி. நித்யேச்சையாலே இத்யத்ர "நித்யைவைஷா ஜகந்மாதா" இத்யாத் யநுஸந்தேயம். தாததீந்யோபபாதநம் - 'அந்த இச்சை' இத்யாதி. அவன் உபேக்ஷித்தால் ஸத்தையில்லை யென்னுமதுக்கு ப்ரமாணம் - 'எத்தேவர்' இத்யாதி. நாலாந்திருவந்தாதி - "அகைப்பில்" இத்யாதி. உகைக்குமேல் - உபேக்ஷிக்குமாகில், எத்தேவர் - எத்தனையேனும் தங்களைப் போரப்பொலிய நினைத்திருக்கும் ப்ரஹ்மாதி தேவர்களுடைய, வாலாட்டும் - கர்வமும். 'எவ்வாறுசெய்கையும்' - ஆறு - ஸாதநாநுஷ்டாநம்; அவர்களை உத்தேசித்து இங்குள்ளவர்கள் பஹுவிதமான யாகாதிஸாதநங்களை அநுஷ்டிக்குமதுவும். அழைப்பு - "இந்த்ர ஆகச்ச ஹரிவ ஆகச்ச" என்று அழைக்கையும், அவ்வோகர்மங்களை அநுஷ்டிக்குமிடத்தில், "பஹூநாம் வாஹயாமி" என்றாற்போலே யுண்டான தத்தத்தேவதாஹ்வாநங்களும். அப்போது - அவன் உபேக்ஷித்த அந்தக்ஷணத்திலே, ஒழியும் - இன்றிக்கே போய்விடும். ஆஶ்ரயணீயன் - ஆராத்யன். 'வானவராதியென்கோ' இத்யாதி பதத்ரயத்தாலும் - ஶேஷித்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்களைச் சொல்லுகிறது. அநுக்தமான எல்லாம்- அநுக்தமான ஸர்வவிதபந்துவும். 'சுவர்க்கம்' என்று - ஸ்வர்க்காநுபவத்தைச் சொல்லுகிறது; 'த்வம்ஸ என்று தள்ளும்படியான தன்றிக்கே' என்றிருக்கையாலே. 'செல்வம்' என்று - இஹலோகைஶ்வர்யம். 'இவைதானும் அவனுக்கு விபூதியன்றோ' என்றது - ஊனமுண்டான ஐஶ்வர்யாதிகளும் அவனுக்கு விபூதியன்றோ? 'ஊனமில்' என்று விசேஷிப்பானென்? என்னில் என்றபடி. 'ஊனமில்மோக்கம்' என்றவிடத்திலே, ஊனமென்று-ஸங்கோசத்தைச் சொல்லுகிறது. இத்தால் - கைவல்யவ்யாவ்ருத்தி. விபூதியைச் சொல்லுகிறவிடத்திலே, 'ஒளிமணிவண்ணன்' என்கிறதென்? என்ன, 'இவ்வஸாதாரண' இத்யாதி. ஒளிமணிவண்ணனை - வானவ ராதியென்கோ இத்யாரப்ய அந்வய:. "யத்யத்விபூதிமத்ஸத்த்வம் ஶ்ரீமதூர்ஜிதமேவ வா। தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ஶஸம்பவம்" இதி கீதாஶாஸ்த்ரம். (எ)

---

* நாலாந்திருவந்தாதி - நஅ.

ஆ.—(ஒளிமணிவண்ணன்.) ஸர்வலோகஸம்ரக்ஷணைகஸோமனாய் ஸர்வஜகத்ஸ்ரஷ்டாவாய் சதுர்முகாதிஸர்வஜனைஸ்ஸம்ஸ்துயமானனா யிருக்கும் களிமலர்த்துளவன் எம்மான்கண்ணனை மாயனை நிரவதிகஸௌந்தர்யமஹோததி யென்று சொல்லுவேனோ? லோகமெல்லாம் ஐஶ்வர்யத்தினாலே அத்விதீயனென்று சொல்லி யேத்தும்படி ருத்ரனுக்கு ஐஶ்வர்யத்தைக்கொடுத்து அவனுக்கு ஆத்மபூதனானவன் என்று சொல்லுவேனோ? சதுர்முகாந்தராத்மபூதனென்று சொல்லுவேனோ? எங்ஙனேசொல்லுவேன்? என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், ஜகத்ப்ரதாநரான ப்ரஹ்ம ருத்ராதிகளை விபூதியாகவுடையனான படியைப் பேசுகிறார்.

[ஒருவனென்று ஏத்தநின்ற நளிர்மதிச்சடைய னென்கோ] - ப்ரதாநனென்று ஏத்துகைக்குப் பாத்தமுண்டாய் நின்ற ருத்ர னென்பேனோ? [நளிர்மதி] - குளிர்ந்த சந்த்ரன். [நான்முகக்கடவு ளென்கோ] - சதுர்முகனான தைவ மென்பேனோ? [அளிமகிழ்ந்து] - க்ருபையை உகந்து. களியென்று தேன்.

ப.—அநந்தரம், லோகப்ரதாநகாரணேஶ்வர விபூதித்வத்தை அருளிச்செய்கிறார்.

அளி - ரக்ஷணோபகாரநிமித்தமான, மகிழ்ந்து - உகப்பையுடையனாய்க்கொண்டு, உலகமெல்லாம் - ஸமஸ்தலோகங்களையும், படைத்து - ஸ்ருஷ்டித்து, (உபகாரஸ்ம்ருதியாலே), அவை-அவை, ஏத்த - ஸ்தோத்ரம்பண்ண, நின்ற - (அத்தாலே க்ருதக்ருத்யனாய்) நிற்பானாய், களி - மதுஸ்யந்தியாய், மலர் - விகஸிதபுஷ்பமான, துளவன் - திருத்துழாய்மாலையழகாலே, எம்மான் - என்னை அநந்யார்ஹனாக்கின, மாயனை - நவநீதசௌர்யாத்யாஶ்சர்யசேஷ்டிதயுக்தனான, கண்ணனை - க்ருஷ்ணனை, ("ஆயர்கொழுந்தா யவராற்புடையுண்ணும் மாயப்பிரானை யென் மாணிக்கச்சோதியை" என்கிறபடியே அவர்கள் கட்டியடிக்க), மணி - (சாணையிலேறிட்ட) மாணிக்கம்போலே, ஒளி - ஒளிபெற்று ஶ்லாக்யமான, வண்ணன் என்கோ - வர்ணத்தையுடையவன்; ஒருவன் என்று-("ஏக ஏவ ருத்ர:" என்கிறபடியே ஸ்வாஶ்ரிதர்)ஒருவனென்று, ஏத்த-ஸ்துதிக்கும்படி, நின்ற - நிற்குமவனாய், நளிர் - குளிர்ந்த, மதி - சந்த்ரகலாதாரணத்தாலும், சடையன் என்கோ - ஜடாதரத்வத்தாலும் ஸோமதப:பரனான ருத்ரன்; நான்முகன் - (தேவதாவர்க்கம் கையெடுக்கும்படி) சதுர்முகனான, கடவுள் என்கோ - தைவமென்பேனோ?

இ.—எட்டாம்பாட்டில், ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதிகளை விபூதியாகவுடையனான படியை அருளிச்செய்கிறார்.

[ஒளிமணி இத்யாதி] - கீழில் வடிவழகு பின்னாடினபடி. [ஒருவன் இத்யாதி] - தம:ப்ரசுரராயிருப்பார் அத்விதீயனென்று ஏத்தாநின்றால் தான் ஈஶ்வரனாக ப்ரமித்து ஆஶ்ரயணீயனாயிருக்கும். [நளிர்மதிச்சடையன்] - அது ப்ரமமென்னுமிடத்தைக் காட்டுகிறது, ஸாதகவேஷமும் போகப்ராதாந்யமும். [நளிர்மதி] - குளிர்ந்த சந்த்ரன். [நான்முகக்கடவுள்]-அவனுக்கு ஜநகனான சதுர்முகனான தைவம். [அளிமகிழ்ந்து] - க்ருபையை உகந்து; ஸ்ருஷ்ட்யாதி ரக்ஷணத்தை விரும்பி. [உலகம் இத்யாதி] - லோகத்தையெல்லாம் ஸ்ருஷ்டித்து அந்தஸ்ருஷ்டிப்ரயோஜநம் பெற்று அவர்கள் ஏத்தும்படி நின்ற. [களிமலர் இத்யாதி] - தேனையும் மலரையுமுடைய திருத்துழாயாலே அலங்க்ருதனாய்,அத்தாலே என்னை அநந்யார்ஹனாக்கினவன். களி-தேன். [கண்ணனை மாயனை]-'எத்திறம்!' என்று மோஹிக்கும்படியான ஆஶ்சர்ய சேஷ்டிதங்களையுடைய க்ருஷ்ணனை.

ஈடு.—எட்டாம்பாட்டு. ஜகத்தில் ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதிகளை விபூதியாகவுடையனானபடியைப் பேசுகிறார்.

---

எட்டாம்பாட்டு - 'ஒளிமணி' இத்யாதி. 'நளிர்மதிச்சடையன்' இத்யாதியைப் பற்ற அவதாரிகை - 'ஜகத்தில்' இத்யாதி.

[ஒளிமணிவண்ணன் என்கோ] - கீழ்ச்சொன்ன வடிவழகு பின்னுடினபடி. [ஒருவன் இத்யாதி] - 'இவன் ஜகத்துக்கு ப்ரதாநன்' என்று அவிவேகிகள் ஏத்தும்படியாய், குளிர்ந்தமதியையும் சடையையுமுடைய ருத்ரன் என்பேனோ? [நளிர்மதிச்சடையன் என்கோ] - தலையான மதியையுடையவன் என்பேனோ? அவர்கள்ப்ரமம்போக்கித் தன்பக்கல் ஒன்றுமில்லை. அவனுக்குங் கூட ஜநகனுன சதுர்முகனுகிற தைவம் என்பேனோ? [அளிமகிழ்ந்து] - ரக்ஷணத்தையே ஆதரித்து லோகங்களையடைய ஸ்ருஷ்டித்து அவையேத்தநின்ற. யாதொருப்ரயோஜநத்தை நினைத்து ஸ்ருஷ்டித்தான், அந்தப்ரயோஜநம் பெற்றுநின்ற. [களிமலர் இத்யாதி] - களியென்று = தேன், மலரென்று - பூ: மதுவையும் மலரையுமுடைத்தான திருத்துழாய்மாலையை யுடையனுய், அம்மாலையாலே என்னை அநங்யார்ஹமாக எழுதிக்கொண்டவனுமாய், எனக்கு ஸுலபனுமாய், ஆஸ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையவனு மானவனை. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

கண்ணனைமாயன் தன்னைக் கடல்கடைந்தமுதங்கொண்ட
அண்ணலையச்சுதனையனந்தனை அனந்தன் தன்மேல்
நண்ணிநன்குறைகின்றானை ஞாலமுண்டுமிழ்ந்தமாலை
எண்ணுமாறறியமாட்டேன் யாவையும்யவரும்தானே.

*ஆ.—(கண்ணனை.) ஆஸ்ரிதஸுலபத்வார்த்தமாக தத்ஸஜாதீயதயா அவதீர்ணனாய், ஆஸ்சர்யஅதிமநோஹரதிவ்யசேஷ்டிதங்களை யுடையனாய், ஆஸ்ரிதரைக்கைவிடாத ஸ்வபாவனாய், அநந்தகல்யாணகுண விஸிஷ்டனாய், அநந்தகல்யாணகுண மஹோததியான திருவநந்தாழ்வானை திவ்யஸய்யாஸநாதிகளாக வுடையனாய், ஸர்வலோகபரிபாலகனாய், ஸர்வாந்தராத்மபூதனான எம்பெருமானை இங்ஙனே சொல்லுவேனென்று அறிகிலேன் என்கிறார்.*

*ஒ.—ஒன்பதாம்பாட்டில், அவனுடைய விபூதி விஸ்தாரங்கள் தனித்தனியே பேச முடியாது. கார்யகாரணரூபமான சேதநா சேதநங்களடைய அவனுக்குவிபூதியென்று ப்ரயோஜகத்தாலே சொல்லலாமத்தனை யென்கிறார்.*

*[கடல்கடைந் தமுதங்கொண்ட அண்ணலை] - க்ஷுத்ர புருஷார்த்தத்தை இரந்தார்களென்று பாராதே தானே ஆயாஸித்து அவர்களுடைய ப்ரயோஜநங்களை முடித்துக்கொடுத்த பெரியோனை. [அச்சுதனை] - ஆஸ்ரிதர்க்கு ச்யுதியில்லாதபடி யிருக்கிறவனை.*

*ப.—அநந்தரம், உக்தவிபூதிமாத்ரமன்றியே ஸகல சேதநாசேதநங்களும் தானேயானவனைப் பரிச்சேதிக்கும் ப்ரகாரம் அறியேன் என்கிறார்.*

---

*புநஸ்ச சொல்லுவானென்? என்ன, 'கீழ்ச்சொன்ன' இத்யாதி. "ஸகலஸுராஸுரநதிதநயாயதநெள" என்றத்தைப் பற்ற - 'ஏத்தும்படி' என்றது. 'சடையன்' என்ற பதஸாமர்த்யத்தைப் பற்ற, 'அவிவேகிகளேத்தும்படியாய்' என்றது. ஒருவன் - அத்விதீயன்; ப்ரதாந னென்றபடி. ஒருவனென்று ப்ரமித்து ஏத்த அத்தாலே தேவதையாக நின்ற இத்யர்த்தஃ. சாடுவுக்கு, தலையான மதி - ஸ்லாக்யமான ஜ்ஞானம்; தலையிலேயான சந்த்ரனென்று ஸ்வபாவார்த்தம். 'சடையன்' என்றதுக்கு பாவம் - 'அவர்கள் ப்ரமம்' இத்யாதி. நளிர் - குளிர்த்தி. கடவுள் - தேவதை. அளி - ரக்ஷணம். பலிதம் - 'யாதொரு' இத்யாதி. உத்தரார்த்தாநுஸந்தாந பூர்வகம் பூர்வார்த்தாநுஸந்தாநம் அந்வயஃ. (அ)*

யாவையும் - எல்லாவகைப்பட்ட அசேதநமும், யவரும்-எல்லாவகைப்பட்டசேதநரும், தான் - தானேயாய்வைத்து, கண்ணனை - ஆஶ்ரிதஸுலபனை, மாயன்தன்னை -ஆஶ்சர்யாவஹமான குணசேஷ்டிதநிரூபணீயனை, (அர்வாசீநப்ரயோஜநார்த்திகளுக்கும்), கடல் - கடலை, கடைந்து - கடைந்தும், அமுதம்கொண்ட - கார்யஞ்செய்யும், அண்ணலை - ஸர்வஸ்வாமியாய், அச்சுதனை - ஆஶ்ரிதரைநழுவவிடாதவனை, அனந்தனை - அபரிச்சிந்நஸ்வரூபாதி வைபவத்தை யுடையனை, அனந்தன்தன்மேல் - (அத்தனையும் தனக்குள்ளே யடங்கும்படியான) திருவநந்தாழ்வான் மேலே, நண்ணி - பொருந்தி, நன்கு உறைகின்றானை - உகந்து கண்வளராநிற்குமவனை,ஞாலம் - ரக்ஷ்யத்துக்கு ஆபத்துவந்தால், உண்டு - வயிற்றிலேவைத்து நோக்குவது, உமிழ்ந்த - வெளிநாடு காட்டுவதான, மாலை - வாத்ஸல்யத்தையுடையவனானவனை, எண்ணும்ஆறு-பரிச்சேதித்து நினைக்கும்படி, அறியமாட்டேன் - அறிகிறிலேன்.

இ.—ஒன்பதாம்பாட்டில், "நாஹஸ்ய ஜோவிஷஸ்ய" என்று அவன் படிகள் என்னால் பேச முடியாது. கார்ய காரண உபயாவஸ்தமான ஸகல சேதநா சேதநங்களும் அவனுக்குவிபூதி யென்று ப்ரயோஜகத்தில் சொல்லலாமித்தனை யென்கிறார்.

[கண்ணனை இத்யாதி] - ஸௌலப்யமும் ஆஶ்சர்யகுண சேஷ்டிதங்களும் பின்னாடுகிறபடி. [கடல் இத்யாதி] - 'க்ஷுத்ரப்ரயோஜநத்தை அபேக்ஷித்தார்கள்' என்னாதே உடம்புநோவக் கடல் கடைந்து அவர்கள் ப்ரயோஜநத்தைக் கொடுக்கும் ஸ்வாமியை. [அச்சுதனை] - அநந்ய ப்ரயோஜநராய்க் கிட்டினாரைத் துஃகஸாகரத்தில் நழுவவிடாதவனை.' [அனந்தனை] - ஸ்வரூபரூப குணங்களுக்கு எல்லையில்லாதவனை. [அனந்தன் இத்யாதி] - அபரிச்சிந்நனான தன்னையும் விளாக்குலை கொள்ளவல்ல அவன்மேலே கிட்டி நாய்ச்சிமாராலும் எழுப்பவொண்ணாதபடி கண்வளர்ந்தருளுகிறவனை. [ஞாலம் இத்யாதி]-ஆபத்துக்கண்டால் படுக்கையில் பொருந்தாதே ரக்ஷிக்கும் ஸர்வேஶ்வரனை. [எண்ணும் ஆறு அறியமாட்டேன்] - இவன் படிகளுக்கு என்னால் பாசுரமிட்டுச் சொல்லப் போகாது. [யாவையும் யவரும் தானே] - சேதநாசேதநங்களை யுடையனென்று ப்ரயோஜகத்தைச் சொல்லலாமித்தனை என்கிறார்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. அவனுடைய விபூதி விஸ்தாரங்கள் தனித்தனியே பேசமுடியாது, கார்யகாரணரூபமான சேதநாசேதநங்கள் அவனுக்குவிபூதி யென்று ப்ரயோஜகத்திலே சொல்லலா மித்தனை என்கிறார்.

[கண்ணனை மாயன்தன்னை] - 'எத்திறம்!' என்னவேண்டும்படியான குணசேஷ்டிதங்களை யுடையவனை.[கடல்இத்யாதி]-ப்ரயோஜநாந்தரபரரானவர்களுக்கும், உடம்புநோவக் கடல்கடைந்து அவர்களபேக்ஷிதஸம்விதாநம் பண்ணும் ஸ்வாமியை. [அச்சுதனை] - தன்னையாஶ்ரயித்தாரை ஒரு நாளும் நழுவவிடாதே ரக்ஷிக்கும் ஸ்வபாவனானவனை. [அனந்தனை] -ஸ்வரூபரூபகுணவிபூதிகளால் அபரிச்சிந்நனானவனை. [அனந்தன் இத்யாதி]-ஶேஷத்வகாஷ்டையிலே நிற்கையாலே ஶேஷியானவனையும் விளாக்குலைகொள்ளவல்லனான திருவனந்தாழ்வான்மேலே கிட்டி, பிராட்டிமார் திருமுலைத்

ஒன்பதாம்பாட்டு-'கண்ணனை' இத்யாதி. 'எண்ணுமாறறியமாட்டேன் யாவையும் யவருந் தானே' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை 'அவனுடைய' இத்யாதி. ப்ரயோஜகத்திலே சேதநத்வாசேதநத்வரூபோபாதிக்ரோடீகாரேண இத்யர்த்தஃ.

பதச்சேர்த்திக்கு அர்த்தம் - 'எத்திறம்' இத்யாதி. குணசேஷ்டிதங்களையுடைய க்ருஷ்ணனை யென்று கூட்டுவது. ஸாவகர்ப்பிதஸாப்தார்த்தம் – 'ப்ரயோஜநாந்தர' இத்யாதி. ஸம்விதாநம் - நிறைவேற்றிக் கொடுக்கை. நழுவவிடாதே-நச்யாவயதீதி அச்யுதஃ என்ற கருத்து. அனந்தனை - அபரிச்சிந்நனை. 'அனந்தன்' என்று ஶேஷத்வத்தில் உத்தராவதி இல்லாதவ னென்றபடி. விளாக்குலை கொள்ளுகை - கபளீகரிக்கை. அதாவது – வ்யாமுக்தனாக்குகை. 'நன்கு' என்ற பதத்துக்கு வாஸனை – 'பிராட்டிமார்'இத்யாதி. 'நன்குறைகின்றானை

தடத்தாலும் நெருக்கியெழுப்ப வொண்ணாதபடி கண்வளர்ந்தருளுகிறவனை. [ஞாலமுண்டுமிழ்ந்த மாலை]-ஆபந்நர்உண்டானால்அப்படுக்கையிலும் பொருந்தாதவனை. [எண்ணுமாறுஅறியமாட்டேன்]-அவனும் விபூதிவிஷயமாகப் பரக்கச்சொல்லிக்கொண்டுபோரா, "நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே" (நாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே) என்றானிறே; அப்படியே இவரும் கீழே சிலவற்றைச் சொல்லா, இவனைச் சொல்லும் ப்ரகாரம் அறிகிறிலேன் என்கிறார்; ஆனாலும், ப்ரயோஜகத்திற் சொன்னாலோ வென்னில்,—[யாவையும் யவரும் தானே] - சேதநாசேதநங்களுடைய ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாயிருக்குமித்தனை. (௯)

## பத்தாம் பாட்டு.

யாவையும்யவருந்தானாய் அவரவர்சமயந்தோறும்
தோய்விலன்புலனைந்துக்குஞ்சொலப்படான் உணர்வின்மூர்த்தி
ஆவிசேருயிரினுள்ளால் ஆதுமோர்பற்றிலாத
பாவனையதனைக்கூடில் அவனையுங்கூடலாமே.

ஆ.—(யாவையும்.) இப்படி ஸர்வவஸ்துக்களோடும் ஆத்மதயா ஸம்பந்த முண்டாயிருக்கச்செய்தே, ஹேயப்ரத்யநீகதயா ஸ்வேதரஸமஸ்தவஸ்து விஸஜாதீயனாய் ஜ்ஞாநஸ்வரூபனாயிருக்கையாலே ஸ்வஶரீரபூத ஸமஸ்தவஸ்துகத ஸர்வதோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கும். இது கூடுமோ? என்னில்,—இந்த ஶரீரத்திலே வர்த்திக்கிற இந்த ப்ரத்யகாத்மாவுக்கு இந்த ஶரீரகத தோஷங்களினால் அஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கையாகிற இஸ்ஸ்வபாவம் கூடுமாகில் எம்பெருமானுக்கும் இது கூடும் என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், சேதநாசேதநங்களுக்கு அந்தராத்மதயா வ்யாபித்துநின்றால் தத்கததோஷை: அஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கும் என்கிறார்

[யாவையும் என்று தொடங்கி.] - சேதநா சேதநங்களுக்கு அந்தராத்மாவாய்வைத்து அவற்றினுடைய து:கித்வபரிணாமித்வாதி வ்யவஸ்தைகளொன்றிலும் தோய்விலன். 'அவரவர்' என்று இரண்டுக்கும் உபலக்ஷணம். [புலனைந்துக்கும் சொலப்படான்]-சக்ஷுராதிகரணங்களுக்கு விஷயமாகச் சொல்லப்படான். [உணர்வின் மூர்த்தி] - ஜ்ஞாநஸ்வரூபன். [ஆவி என்று தொடங்கி] - அநாதிகாலம் கார்யகாரண உபயரூபமான ப்ரக்ருதியோடே கலசியிருக்கிற ப்ரத்யகாத்மாவுக்கு ப்ரக்ருதியினுடைய பரிணாமித்வாதிகள் தட்டாதே யிருக்கிறாப்போலே எம்பெருமானுக்கும் இரண்டோடு கலசியிருந்துவைத்தே அவற்றினுடைய ஸ்வபாவம் தட்டாதே யிருக்கக் கூடும்.

ப.—அநந்தரம், இப்படிப்ரகாரபூத சிதசித்துக்களின்படி அவன்தனக்குத் தட்டாத படியை அநுஸந்திக்கிறார்.

---

ஞாலமுண்டுமிழ்ந்தமாலை' என்கிற சேர்த்திக்கு பாவம்-'ஆபந்நர்' இத்யாதி. 'அறியமாட்டேன்' என்கிறதென்? முடியச்சொல்லப் போகாதோ? என்ன, 'அவனும்' இத்யாதி. "அதவா பஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந। விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்திதோ ஜகத்" என்ற கீதாவசநம் அநுஸந்தேயம். சொல்லா-சொல்லி. கார்யே காரணோபசார இத்யபிப்ராயேணாஹ-'சொல்லும் ப்ரகாரம்' இதி. ப்ரயோஜகம் - ஸங்க்ஷேபம். "ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹ்யாத்மவிபூதய:। ப்ராதாந்யத: குருஶ்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே" இதி கீதாஸு தஶமே.

யாவையும் - எல்லா அசேதநமும், யவரும் - எல்லாச்சேதநரும், தானுய் - தானேயாய், அவரவர் - அந்தந்தச்சேதநருடைய, சமயந்தோறும் - (அசித்ஸம்ஸர்க்கநிபந்தநமான) தேவாதி வ்யவஸ்தைகளில், தோய்விலன் - (அவர்களைப்போல் தனக்கு) ஸங்கமில்லாதவனுய், புலனைந்துக்கும் - இந்த்ரியபஞ்சகத்துக்கும், சொலப்படான் - (விஷயமாகச்) சொல்லப்படாதவனுய், உணர்வின்மூர்த்தி - ஸ்வயம்ப்ரகாஶஜ்ஞாநஸ்வரூபனுயிருக்கும்; (ஆதலால்), ஆவி - ப்ராணுஶ்ரயமான ஶரீரத்தோடு, சேர் - சேர்ந்த, உயிரின்-ஆத்மாவினுடைய, உள் - ஸ்வரூபத்தில், ஆதும் - (ஶரீரகதமான) ஜடத்வபரிணுமித்வாதிஸ்வபாவங்கள், ஓர் - ஒன்றிலும், பற்று இலாத - தொற்று இல்லாத, பாவனை - ப்ரதிபத்தியானது, அதனை - அந்தஸ்வரூபத்தை, கூடில் - கிட்டுமாகில், ஆதும் ஓர்பற்றிலாத பாவனை-(ஸமஸ்தசேதநாசேதநஸ்வபாவங்களிலும்) ஒரு தொற்றில்லையென்கிற ப்ரதிபத்தி, அவனையும் - (கீழ்ச்சொன்ன ஸ்வயம்ப்ரகாஶஜ்ஞாநஸ்வரூபனுன) ஈஶ்வரனையும், கூடலாம்-சேரலாம்; ஏ - நிஶ்சிதம்.

இ.—பத்தாம்பாட்டில், சேதநா சேதநங்களுக்கு அந்தராத்மாவாய் நின்றுல் தத்கத தோஷை: அஸம்ஸ்ப்ருஷ்டனுயிருக்கும் என்கிறுர்.

[யாவையும் இத்யாதி]-ஸகலசேதநாசேதநங்களுக்கு அந்தராத்மாவாய் அவற்றினுடைய து:கித்வபரிணுமித்வங்கள் தட்டாதபடியாயிருக்கிறவன். அவரவர் என்று இரண்டுக்கும் உபலக்ஷணம். [சமயம்] - வ்யவஸ்தை. அசித்துக்குப் பரிணுமித்வமும், தத்ஸம்ஸ்ருஷ்டசேதநனுக்கு து:கித்வாதிகளும் வ்யவஸ்திதம் என்கை. [புலன் இத்யாதி] - சக்ஷுராதி கரணங்களுக்கு விஷயமாகச் சொல்லப்படான்; அவற்றுல் அறியப்படா னென்கை. [உணர்வின்மூர்த்தி] - ஜ்ஞாநஸ்வரூபன். [ஆவி இத்யாதி] - ஆவியென்று ஶரீரம்; அத்தோடு சேர்ந்த ஆத்மாவில் ஶரீரத்திலுண்டான பரிணுமித்வாதிதோஷங்கள் தட்டா தென்கிற விவேகாநுஸந்தாநம் ஆத்மாவின் பக்கலிலே கூடுமாகில். [உள்ளால்] - உள்ஆல், ஆல்-அசை. உள் - உள்ளே. [ஆதுமோர்பற்றிலாத]-ஏதேனும் ஒரு தொற்று இல்லாத. [அதனை] - ஆத்மாவை; ஆத்மாவின் பக்கலிலே என்றபடி. [அவனையும் கூடலாம்] - அசித்கத பரிணுமாதிகளும் சேதநகதமான து:கித்வாதிகளும் தட்டா தென்கிற இதுவும் ஸர்வேஶ்வரன்பக்கலிலே கூடலாம். இப்பாட்டில், பக்தியுடையார்க்கு அவனைக்கிட்டலாவது என்கிறுர் என்பாரு முண்டு. இதரவிஷய ஸங்கமற்றுர்க்கு அவனைக்கிட்டலாவ தென்கிறுர் என்பாரு முண்டு. அந்திமஸ்ம்ருதியுடையார்க்குக் கிட்டலா மென்பாரு முண்டு. ஸர்வாத்மபாவம் சொல்லிநிற்கையாலே அவற்றின்பக்கல் தோஷம் தட்டாதானெருவன் என்னுமிடம் சொல்லவேணும்; அத்தைச் சொல்லுகிறது என்பர் எம்பெருமானுர்.

ஈடு.—பத்தாம்பாட்டு. சேதநாசேதநங்களுக்கு அந்தராத்மதயா வ்யாபித்துநின்றுல் தத்கததோஷை: அஸம்ஸ்ப்ருஷ்டன் என்கிறுர்.

[யாவையும் யவரும் தானுய்] - சேதநாசேதநங்களடைய 'தான்' என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய். [அவரவர் இத்யாதி] - அவரவ ரேன்கிறது - சேதநருடைய பன்மையைப்பற்ற. கீழே "யாவையும் யவரும்" என்று ஒக்க எடுக்கையாலே, அநு

---

பத்தாம் பாட்டு-'யாவையும்' இத்யாதி. 'தோய்விலன்' என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை-'சேதநா சேதநங்களுக்கு' இத்யாதி. நின்றுல் – நின்றுலும்.

தானென்கிற சொல்லுக்குள்ளேயடங்குகை – ஸர்வேஶ்வரனுடைய அஹம்ஶப்தத்தோடே ஸமாநாதிகரிக்க யோக்யமாயிருக்கை. வீப்ஸைக்கு பாவம் – 'அவரவர்' இத்யாதி. 'யாவையும் யவரும்' என்றத்தை அநுபாஷிக்கிறுராகில், 'அவரவர்' என்றவோபாதி, அவையவை என்றும் அநுபாஷியாதொழிவானென்? என்ன,

பாஷிக்கிற விடத்திலும், அவையவை என்று அசித்தும் தன்னடையே வரும். அவைதன்னை எடா தோழிவா னேன்? என்னில்,—அப்ராதாந்யத்தாலும் ப்ரகரணபலத்தாலும் தன்னடையேவருமென்னு மிடங் கோண்டும். 'சமயம்' என்கிறது - வ்யவஸ்தைகளை; அசித்தினுடைய பரிணாமாதிகளையும் சேதநத்தினுடைய ஸுகித்வதுஃகித்வங்களையும் நினைக்கிறது. [தோய்விலன்] - சேதநாசேதநங்கள் 'தான்' என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி அவற்றோடே கலந்துநிற்கச்செய்தே, அவற்றினுடைய தோஷங்கள் தன்பக்கல் தட்டாதபடி நிற்கும். சேதநர்க்கு அசித்கதமான பரிணாமாதிக ளில்லையே யாகிலும், அந்த அசித்ஸம்ஸர்க்கத்தாலே ஸுகித்வதுஃகித்வங்கள் உண்டாகாநின்றதே; அப்படியே இச்சேதநாசேதநங்களெங்கும் புக்கு வ்யாபித்துநின்றால், தத்கததோஷம் இவனை ஸ்பர்ஶியாதோ? என்றால்,—அவற்றால் அஸம்ஸ்ப்ருஷ்டனாயிருக்கும். எல்லாம்செய்தாலும் இவற்றுக்கு ஸுகித்வ துஃகித்வங்களின்றியிலே யிருக்க, இவ்வசித்தோட்டைச் சேர்த்தியாலேயன்றோ உண்டாகிறது; அப்படி இவனுக்கும் கூடாதோ வென்னில்;—கூடாது, அதுக்கு அடி - ப்ரவேஶஹேதுவிஶேஷத்தாலே. இவனைப்போலே கர்மமடியாகவன்றிக்கே அநுக்ரஹமடியாகவிறே அவனுக்கு இவற்றோட்டை ப்ரவேஶம் இருப்பது. சிறைக்கூடத்திலே சிறையனும் கிடந்தான், ராஜகுமாரனும் இருந்தான்; சிறையன் கர்மமடியாக ப்ரவேசிக்கையாலே துஃகஹேதுவாயிற்று; ராஜகுமாரன் இச்சையாலே ப்ரவேசிக்கையாலே போகரூபமாயிருந்தது; "ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே - அநஶ்நந்நந்ய:" (ஸமாநம்வ்ருக்ஷம்பரிஷஸ்வஜாதே - அநஶ்நந்நந்ய:) என்னாநின்றதிறே. [புலனைந்துக்கும் சொலப் படான்] - ஶ்ரோத்ராதிகளைந்துக்கும் விஷயதயா சொல்லப்படான் என்னுதல்; அன்றிக்கே, நினைத்திறே சொல்லுவது, அச்சொலவுக்கும் முன்பில்நினைவை லக்ஷித்து, அவற்றால் ஸ்மரிக்கப்படான் என்னுதல். பின்னை அவன்தான் இருக்கும்படி யேன்? என்னில்,—[உணர்வின் மூர்த்தி] - ப்ரகாஶத்

'கீழே யாவையும்' இத்யாதி. இத்தை ஶங்காபூர்வகமாக விவரிக்கிறார்-'அவைதன்னை' இத்யாதி. * 'என்னுமிடங் கொண்டும்' என்ற ச ஶப்தத்துக்கு அர்த்தமில்லை. வ்யவஸ்தைகள்தானேது? என்ன, 'அசித்தினுடைய' இத்யாதி. 'தோய்வு' என்று - ஸ்பர்ஶமாய், 'இல்' என்று - இல்லாமையாய், சேதநாசேதநகதமான தோஷஸ்பர்ஶ மில்லாதவ னென்றபடி. 'சேதநாசேதநங்கள்' இதி - பால்யயௌவநாத்யவஸ்தா யதா ஜீவாத்மாநம் ந ஸ்ப்ருஶந்தி, தத்வதிதி பாவ:. தத்ர ஶங்கதே, 'சேதநர்க்கு' இத்யாதி. "ஸம்போகப்ராப்திரிதி சேந்ந வைஶேஷ்யாத்" என்ற ஸூத்ரத்தை உட்கொண்டு உக்தார்த்தவிவரணம் - 'எல்லாம் செய்தாலும்' இத்யாதி. 'அப்படி இவனுக்குங்கூடாதோ? என்னில்' என்கிறது - "ஸம்போகப்ராப்திரிதி சேத்" என்றதின் அர்த்தம். "ந வைஶேஷ்யாத்" என்றதின் அர்த்தம் - 'கூடாது' இத்யாதி. ஸூத்ரார்த்தஸ்து - பாஷ்யே, "ஜீவஸ்யேவ பரஸ்யாபி ப்ரஹ்மண: ஶரீராந்த:வர்த்தித்வேந ததேவ ஶரீரஸம்பந்த யாத்ருஶஸுகது:கோபபோகப்ராப்திரிதி சேத், தந்ந, ஹேத்வைஶேஷ்யாத்.—ந ஹி ஶரீராந்த:வர்த்தித்வமேவ ஸுகது:கோபபோகஹேது:; அபி து புண்யபாபரூபகர்மபரவஶத்வம். தச்சாபஹதபாப்மந: பரமாத்மநோ நாஸ்தீதி. ததா ச ஶ்ருதி: — "தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந் நந்யோ அபிசாகஶீதி" இதி" இதி. ஹேதுவிஶேஷம் ஏது? என்ன, 'இவனைப்போலே' இத்யாதி. உபபாதிதப்ரவேஶஹேதுவிஶேஷத்தை லௌகிகத்ருஷ்டாந்தேந த்ருடீகரோதி - 'சிறைக்கூடத்திலே' இத்யாதி. ஸாதிதேர்த்தே ப்ரமாணம் தர்ஶயதி - 'ஸமாநம்வ்ருக்ஷம்' இத்யாதி. 'சேதநர்க்கு அசித்கதமான' என்று தொடங்கி 'அநஶ்நந்நந்ய:' என்னுமளவும் - 'ஆவிசேர்' இத்யாதியான மூலவாக்யத்தால் பரிஹரித்ததின்மேலே வந்த ஶங்காபரிஹாரமாகையாலே, 'அப்பொருள் அவனையுங்கூடத் தட்டில்லை' என்ற வாக்யாநந்தரே அநுஸந்தித்தால் மிகவும் சேரும் என்று அருளிச்செய்வர். அவற்றால் ஸ்மரிக்கப்படான் - இந்த்ரியங்களால் அறியப் படான். 'உணர்வின்மூர்த்தி'—உணர்வு - ஜ்ஞாநம். மூர்த்திஶப்தம் - ஸ்வரூபவாசி. உணர்விலேயான ஸ்வ

* 'ப்ரகரணபலத்தாலும்' என்ற ச ஶப்தத்துக்கு என்று இருக்கவேணுமென்று தோற்றுகிறது.

தையே வடிவாகவுடையனுயிருக்கும். * (மூர்த்திரூப்தம்-ஸ்வரூபவாசி.) எல்லாஞ்செய்தாலும் இவற்றோடு உண்டான ஸம்ஸர்க்கம் மெய்யாயிருக்க, இவற்றினுடைய தோஷம் தன்பக்கல் தட்டாதபடியிருக்கு மென்னு மிது கூடுமோ? என்னில்,- [ஆவிசேர் இத்யாதி] - ஆவியுண்டு - ப்ராணாஶ்ரயமான ஶரீரம். அத்தோடு சேர்ந்திருந்துள்ள உயிருண்டு - ஆத்மா; அதின்பக்கல் அந்த ஶரீரகதமான பால்ய யௌவநாதிகளொன்றாலும் ஒரு ஸம்பந்தமு மில்லையாம்படியாக அநுஸந்திக்கிற அநுஸந்தாநமானது அந்த ஆத்மாவுக்குக் கூடாநின்றபின்பு, அப்பொருள் அவனையுங் கூடத் தட்டில்லை. இங்ஙனன்றிக்கே, 'இதுக்கு வேறேயும் இரண்டுபொருள் சொல்லுவர்கள்' என்று அருளிச்செய்வர்:—அவன்பக்கலிலே பக்தியுண்டாகில் அவனைக்கிட்டலா மென்றும்; புறம்புண்டான உபாயாந்தரங்களி லுண்டான பற்று அடைய விட்டு, அவனையே பற்றில் அவனைக் கிட்டலா மென்றும். அன்றியே, அந்திம ப்ரத்யயம் உண்டாமாகில் அவனைக்கூடலா மென்றுமாம். இத்தை எம்பெருமானார் கேட்டருளி,'கீழ் வ்யாப்தியைச் சொல்லி நின்றபின்பு, இனி வ்யாப்யவஸ்துகதமான தோஷங்கள் வ்யாபகனானவனுக்குத் தட்டா தென்னுமிடம் அவஶ்யம் சொல்லவேணும்; ஆனபின்பு, இத்தையே சொல்லிற்றாக அமையும்' என்று அருளிச்செய்வர். (க0)

---

ரூபத்தையுடையவன்; ஸ்வயம்ப்ரகாஶஜ்ஞாநஸ்வரூப னென்றபடி. 'ஆவிசேர்' இத்யாத்யுத்தரார்த்தாவதாரிகை- 'எல்லாம்செய்தாலும்' இத்யாதி. இவ்வாக்யத்திலே - ''ஶரீரகதகாஷ்டவஹ், வாதகிஸம்ஸருஷ்ட தாதகிவஹ்'' என்ற த்ருஷ்டாந்தத்வயம் அநுஸந்தேயம். அசித்கததோஷ ஸங்க்ரமணத்துக்கு த்ருஷ்டாந்தம் - ''ஶரீரகதகாஷ்டவஹ்'' என்றது. சேதநகததோஷம் தத்ஸம்ஸர்க்கத்தால் வருமென்றதுக்கு த்ருஷ்டாந்தம் - ''வாதகி ஸம்ஸருஷ்ட தாதகிவஹ்'' என்றது. ரூமா - உப்பளம். - உயிரினுள் - உயிரினிடத்தில். ஆல் - அசை; அவ்யயம். பாவனை - அநுஸந்தாநம். அதனை - அந்த ஆத்மாவுக்கு. இது - அர்த்தசதுஷ்டய ஸாதாரணம். அவனையும் - அந்தப் பரமாத்மாவுக்கும். அர்த்தத்ரயஞ் சொல்லாநிற்க, வேறேயும் இரண்டுபொருளென்றது - பக்திப்ரபத்திக ளிரண்டையும் ஏககோடியாக நினைத்து. பக்திபரமானபோது, 'ஆவி' என்று - ஆத்மா; 'உயிர்' என்று - பரமாத்மா. ஆத்மாவோடு சேர்ந்த பரமாத்மாவின் பக்கலிலே ப்ரயோஜநாந்தரங்க ளொன்றிலும் ஒருபற்றில்லாத தைலதாராவத் அவிச்சிந்ந ஸ்ம்ருதி ஸந்தாநரூபமான, பாவனையுண்டு - பக்தி, அது அந்த ஆத்மாவுக்குக் கூடில் அவனையும் கிட்டலா மிதி ஶப்தார்த்த:. ப்ரபத்தியோஜனையில், ஆதுமோர் பற்றிலாத பாவனை - உபாயாந்தரங்களொன்றிலும் ஒருபற்றின்றிக்கேயிருக்கிற பாவனை. ததேகோபாயத்வாத்யவஸாயவிசேஷ மென்றது விஶேஷம். அந்திமஸ்ம்ருதி பக்ஷத்தில், ஆவி - ப்ராணனானது, சரீரத்தைவிட்டு ஆத்மாவிலே சேருகிறவளவிலே யென்னுதல்; பரமாத்மாவின்பக்கலிலே சேருகிறவளவிலே யென்னுதல். ஆதுமோர்பற்றிலாத - வ்யதிரிக்தவிஷயங்களொன்றிலும் ஒரு ஸங்கமில்லாத. பாவனை - அந்திமஸ்ம்ருதி யென்றபடி. பாவனை - ப்ரதமபக்ஷத்தில், நிதித்யாஸநம்: த்விதீய பக்ஷத்தில், உபாயாத்யவஸாயம்; த்ருதீயபக்ஷத்தில், அந்திமஸ்ம்ருதி. எம்பெருமானார் நிர்வாஹத்தில், அநுஸந்தாநமிதி பேத:. 'ஆதுமோர்பற்றிலாத' என்றதுக்கு - ஶரீரகதமான பால்யாதி தோஷங்களொன்றிலும் ஒரு ஸம்பந்தமில்லாத வென்றும்; பக்திபக்ஷத்தில், ப்ரயோஜநாந்தரங்களில் பற்றில்லாத வென்றும்; ப்ரபத்திபக்ஷத்தில், உபாயாந்தரங்களில் பற்றின்றிக்கே யென்றும்; அந்திமஸ்ம்ருதிபக்ஷத்தில், வ்யதிரிக்தவிஷயங்களில் ஸங்கமில்லாத வென்றும் பேதம். இத்தை - கீழ்ச்சொன்ன மூன்றர்த்தத்தையும். இத்தையே சொல்லிற்றாக அமையு மென்றது - ஶரீரகதமான பால்யாதிகள் சேதநனுக்கு வாராதாப்போலே சேதநாசேதநகத தோஷமும் ஈஶ்வரனுக்கு வாராதென்று முந்துற அருளிச்செய்த அர்த்தமே சொல்லிற்றாக அமையு மென்றபடி. எம்பெருமானார் நிர்வாஹ மொழிந்த யோஜநாத்ரயத்திலும், அதனை யென்று - பாவனைக்கு விசேஷணமாய், 'அந்தப்பாவனை' என்று - அப்பன் ஸ்ரீகோசத்தின்படி. (க0)

---

* குண்டலிதம் - ப்ரக்ஷிபதமென்பர்.

## பதினோராம் பாட்டு.

கூடிவண்டறையுந்தண்தார்க் கோண்டல்போல்வண்ணன்தன்னை
மாடலர்பொழில் குருகூர்வண்சடகோபன்சொன்ன
பாடலோராயிரத்துள் இவையுமோருபத்தும்வல்லார்
வீடிலபோகமெய்தி விரும்புவரமரர்மொய்த்தே.

ஆ.—(கூடி.) இத்திருவாய்மொழிவல்லார் ஸர்வகாலமும் பகவத்கைங்கர்யத்தைப் பெற்று அயர்வறுமமரர்களுக்குப் பரமபோக்யராவர் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், இப்பத்தும் கற்றவர்கள் நித்யகைங்கர்யத்தைப் பெற்று அயர்வறும் அமரர்களாலே விரும்பப்படுவர் என்கிறார்.

[கூடி வண்டு என்று தொடங்கி] - வண்டுகளெல்லாம் கூடி வந்து அலைக்கும்படியான போக்யதையையுடைத்தான மாலையையும் வர்ஷுகவலாஹகம்போலேயிருக்கிற நிறத்தையுமுடையவனை. இத்திருவாய்மொழியிற் பேசின விபூதி, தோளில் தோள்மாலையோடும் நிறத்தோடும் ஒக்கத் தகுதியென்னுமிடத்தை நிகமத்திலே சொல்லுகிறது என்று கருத்து. ஏவம்வித திவ்ய ரூபத்தையுடையனைக்கொண்டு என்றும், திருநாட்டிலே எழுந்தருளியிருக்கும்என்றும் சொல்லுவர். அசேஷதோஷப்ரயத்யநீகனை ஆஸ்ரிதரோடு நித்யஸம்ஶ்லேஷஸ்வபாவனை ஆஸ்ரிதஜந ஸமஸ்த து:காபநோதந ஸ்வபாவனை; பரமோதாரனை யிருக்கும் என்றும் சொல்லுவர். மாடு - பர்யந்தம். பாடல் - கானம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக அவிச்சிந்நபகவதநுபவத்தை அருளிச்செய்கிறார்.

வண்டு - வண்டுகள், கூடி - கூடி, அறையும் - மதுபாநப்ரீதியாலே ஶப்திக்கிற, தண் - குளிர்ந்த, தார் - திருமாலையையுடையவனாய், கொண்டல்போல் - காளமேகம் போலேயிருக்கிற, வண்ணன்தன்னை - நிறத்தையுடையனானவனை, மாடு - சுற்றும், அலர் - அலர்ந்த, பொழில் - சோலைகளையுடைத்தான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, வண் சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்த, பாடல் - இசையோடுகூடின, ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரத்துக்குள்ளும், இவையும் - அஸாதாரணவிக்ரஹத்தோபாதியாக அகிலவிபூதிப்ரகாரத்வத்தை ப்ரதிபாதித்த, ஒரு - அத்விதீயமான, பத்தும் - இப்பத்தையும், வல்லார் - அப்யஸிக்க வல்லவர்கள், வீடு இல - அவிச்சிந்நமான, போகம் - பகவதநுபவத்தை, எய்தி - பெற்று, அமரர் - நித்யஸூரிகள், மொய்த்து - மொய்த்துக்கொண்டு, விரும்புவர் - விரும்பும்படியாவர்கள். இது - அறுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இப்பத்தைக் கற்றவர்கள் நித்ய கைங்கர்யத்தைப் பெற்று நித்யஸூரிகளாலே விரும்பப்படுவர் என்கிறார்.

[கூடி இத்யாதி] - கிண்ணகத்தில் இழிவாரைப்போலே வண்டுகள் திரண்டு மதுபானம் பண்ணி த்வநிக்கிற தோள்மாலையையும் வர்ஷுகவலாஹகம்போலே ஶ்ரமஹரமான வடிவையுமுடையவனை யாய்த்து, கவிபாடிற்று. கீழ்ச்சொன்ன விபூதி தோள்மாலையோபாதி தகுதியாயிருக்கும் என்றதாய்த்து. [மாடு அலர் இத்யாதி] - பர்யந்தமடைய அலர்ந்த பொழிலையுடைய திருநகரி. [பாடலோராயிரம்] - பாடல் - கானம். புஷ்பம் பரிமளத்தோடே அலருமாபோலே இசை

*முன்னாகத் தோற்றின ஆயிரம். [வீடிலபோக மெய்தி]-விச்சேதமில்லாத கைங்கர்யஸோகத்தைப் பெற்று. [விரும்புவர் இத்யாதி] - நித்யஸூரிகள் சூழ்ந்துகொண்டு ஆதரிக்கும்படி ஆவர். ததீயத்வாகாரேண லீலாவிபூதியை அநுஸந்திக்குமது தங்களதேயாகையாலே இங்கேயிருந்து இவ்வநுஸந்தாநமுடையார் சென்றால் ஆதரிப்பர்கள்.*

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றவர்கள் நித்யகைங்கர்யத்தைப்பெற்று அயர்வறுமமரர்களாலே விரும்பப்படுவர்கள் என்கிறார்.

[கூடிவண்டறையும் இத்யாதி]-கீழ் பரக்கச்சொன்ன விபூதியடைய, தோளில் தோள் மாலையோபாதி அவனுக்குத் தகுதியாயிருந்தபடியைச் சொல்லுகிறது. கிண்ணகத்திலே யிழிவாரைப் போலே வண்டுகளானவை திரண்டு மதுபாநம்பண்ணி த்வநியாநின்றுள்ள ஶ்ரமஹரமான மாலையையும், ஶ்ரமஹரமான மேகம்போலேயிருக்கிற திருமேனியையு முடைய ஸர்வேஶ்வரனையாயிற்றுக் கவி பாடிற்று. [மாடலர் இத்யாதி] - பர்யந்தங்களிலே அலர்ந்த பொழிலையுடைய திருநகரிக்கு நிர்வாஹகராய்ப் பரமோதாரரான ஆழ்வார் அருளிச்செய்த. [பாடலோராயிரம்] - புஷ்பம் பரிமளத்தோடே அலருமாபோலே இசையோடேகூடின ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தையும் அப்யஸிக்க வல்லவர்கள். [வீடிலபோகமெய்தி] - ஒருநாளும் விச்சேதஶங்கை யில்லாத மோக்ஷஸுகத்தை ப்ராபித்து. [விரும்புவர்அமரர்மொய்த்தே] - அமரராலே மொய்த்து விரும்பப்படுவர். லீலாவிபூதியைத் ததீயத்வாகாரத்தாலே அநுஸந்திப்பார் நித்யஸூரிகளாகையாலே, 'தாங்கள் அநுபவிக்கக்கடவ அநுபவத்தை, 'ஸம்ஸாரத்தே யிருந்துவைத்து இப்படியிருப்பதொரு ஜ்ஞாநபாகம் பிறந்து அநுஸந்திப்பதே!' என்று ஆழ்வார்பக்கல் பண்ணின ப்ரேமாதிஶயத்தாலே, அவருடைய ப்ரபந்தங்களை அப்யஸித்தவர்களை, ஸர்வேஶ்வரனைவிட்டு இவர்களை நெருங்கி ஆதரியாநிற்பர்கள் நித்யஸூரிகள்.

முதற்பாட்டில்-இத்திருவாய்மொழியில் பரக்க அருளிச்செய்த அர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்தார்; இரண்டாம்பாட்டில் - கீழ்ச்சொன்ன பூதங்களினுடைய கார்யத்தை க்ரமத்திலே பேசினார்; மூன்றாம்பாட்டில்-ஜகதாகாரனாய்நின்ற நிலையோடே அஸாதாரணவிக்ரஹத்தைச் சேர்த்தநுபவித்தார்; நாலாம்பாட்டில் - உஜ்ஜ்வலமான மாணிக்யாதிபதார்த்தங்களை விபூதியாகவுடையவன் என்றார்; அஞ்சாம்பாட்டில் - ரஸவத்பதார்த்தங்களை விபூதியாகவுடையனாயிருக்கிறபடியை அருளிச்செய்தார்; ஆறாம்பாட்டில் - வேதம்தொடக்கமான இயலும் இசையுமான ஶப்தராஶியை விபூதியாகவுடையன் என்றார்; ஏழாம்பாட்டில் - ஐஶ்வர்யாதிபுருஷார்த்தங்களை விபூதியாகவுடையன் என்றார்; எட்டாம்பாட்டில் - ஜகத்தில் ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதிகளை விபூதியாகவுடையன் என்றார்; ஒன்பதாம்பாட்டில் - அவனுடைய விபூதிவிஸ்தாரங்கள் தனித்தனியே பேசமுடியாமையாலே சேதநாசேதநங்களை விபூதியாகவுடையன் என்று ப்ரயோஜகத்திலே அருளிச்செய்தார்; பத்தாம்பாட்டில் - இவற்றுக்கும் அந்தராத்மாவாய் வ்யாபித்துநின்றால் தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டன் என்றார்; நிகமத்தில் - இதுகற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினார். (கக)

---

*நிகமம் - 'கூடி' இத்யாதி. 'இவையுமொருபத்து' இத்யாதி மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை.*

*இப்போது மாலையோட்டைச்சேர்த்தி சொன்னதுக்கு ப்ரயோஜநமேது? என்ன, 'கீழ் பரக்க' இத்யாதி. கிண்ணகம் - ப்ரவாஹம். கூடி - திரண்டு. அறைகை - சப்திக்கை. 'கீழ் பரக்கச்சொன்ன' என்றவிடத்திலே - "யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்திதா । பரப்ரஹ்மஸ்வரூபஸ்ய ப்ரணமாமஸ்தமவ்யயம்" என்றது அநுஸந்தேயம். மாடு - பர்யந்தம். அமரர்விருப்புகைக்கு அடியேது? என்ன, 'லீலாவிபூதியை' இத்யாதி. அமரர் - அமரராலே. விரும்புவர் - விரும்பப் படுவர்.*

(கக)

**த்ரவிடோபநிஷத் ஸங்கதி:—** [illegible]

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:—** [illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி**

புகழொன்றுமா லெப்பொருள்களுந்தானாய்
நிகழ்கின்றநேர்காட்டிநிற்க—மகிழ்மாறன்
எங்குமடிமைசெயவிச்சித்து வாசிகமாய்
அங்கடிமைசெய்தான் மொய்ம்பால்.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஐந்தாந்திருவாய்மொழி—மொய்ம்மாம்பூம்பொழில் : ப்ரவேசம்.

**ஆ.**—(மொய்ம்மாம்பூம் பொழில்.) ஏவம்பூதனை எம்பெருமானுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யாதி கல்யாணகுணங்களை அநுபவித்து, அவ்வநுபவஜநிதமான ப்ரீத்யதிஶயத்தாலே அப்ராக்ருதிங்கதராய்க்கொண்டு அக்குணங்களைச் சொல்லிப் பிதற்றி ஊர்பலபுக்கும் புகாதும் உலோகர் சிரிக்க நின்றாடி ஆர்வம்பெருகிக் குனிக்குமவர்களுடைய மாஹாத்ம்யத்தையும், இப்படிசெய்யாதாருடைய அவஸ்துத்வத்தையும் சொல்லுகிறார்.

ஒ.—அஞ்சாந்திருவாய்மொழியில், மதுவநம்புக்க ஹநுமத்ப்ரமுகரான முதலிகளைப்போலே பகவத்குணபலாத்க்ருதராய்க்கொண்டு அடிமைசெய்யப்பெற்று ஹ்ருஷ்டராய்க் களித்த ஆழ்வார் ஸ்ரீகீதையில் எம்பெருமான் தேவாஸுரவிபாகம் பண்ணியருளி ஆஸுரப்ரக்ருதிகளை நிந்தித்து தைவப்ரக்ருதிகளைக் கொண்டாடினாற்போலே அறிவில்லாதாரையும் பகவத்ஸம்பந்திகளன்றிக்கே ஶிஷ்டாபிமாநிகளாயிருப்பாரையும் சதிரடிப்பாரையும் அபஹாஸ்யக்ருதரையும் எம்பெருமானையும் ஆஶ்ரயித்து ப்ரயோஜநாந்தரபரரானவர்களையும் ராக்ஷஸப்ரக்ருதிகளையும் ஆஸுரப்ரக்ருதிகளையும் அகப்பட ஆரேனுமாக எம்பெருமானுடையகுணங்களைஅநுஸந்தித்தால் பரவஶராய்க் கும்பிடுநட்டமிட்டாடிக் கோகுகட்டுண்டுழலாதாரை நிந்தித்து பகவத்குணப்ரஸ்தாவத்திலே கலங்கும் ப்ரக்ருதியானவர்களுடைய படி நமக்கு நினைக்கவும் பேசவும் நிலமல்லவென்று இவர்களைக் கொண்டாடுகிறார். ஸாத்விகாக்ரணிகளாயிருக்கிற ஆழ்வாருக்குக் களிக்கையும் சிலரை இகழ்கையும் கூடின படி என்? என்னில்,—விஷயாஸ்வாதத்தால் பிறந்த உர்ப்பமும் ஒரு ஹேதுவின்றிக்கேயிருக்கச் சிலரை இகழ்கையும் ஆகாது என்றுய்த்து, ஶாஸ்த்ரம் சொல்லுகிறது. பகவத் தாஸ்யாநுபவத்தால் வந்த களிப்பும் அதுஇல்லாதாரை இகழ்கையும் ஶாஸ்த்ரங்களோடு அவிருத்தமென்னுமிடமும், முக்தருடையவும் ஸ்ரீநாரதபகவானுடையவும் வ்ருத்தாந்தங்களிலே பகவதநுபவஜநிதமான ப்ரீதியில் அவை ஆம் என்றும் கொள்வது.

ப.—அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ்ச்சொன்ன பகவத்ப்ரகாரதயா ஶேஷத்வத்தில் தமக்குப் பிறந்த ரஸாதிஶயத்தாலே அத்யந்தஹ்ருஷ்டராய்; ப்ரதிஸம்பந்தியானஶேஷியினுடைய ஆபந்நிவாரகத்வத்தையும், அஸுரநிரஸநஸாமர்த்யத்தையும், ஆர்த்தஸம்ரக்ஷணத்தையும், அபிமதவிரோதிநிவர்த்தகத்வத்தையும், அவதாரப்ரயோஜநத்தையும், அதிஶயிதபோக்யதையையும், ஆஶ்ரிதபக்ஷபாதத்தையும், அர்ச்சாவதார ஸௌலப்யத்தையும், உபயவிபூதிநாதத்வத்தையும், விலக்ஷணவிக்ரஹயோகத்தையும் அநுஸந்தித்து ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸம்ப்ராந்தராகாதாரை நிந்தித்தும், உகந்தாடுவது பாடுவதாவாரை உகந்தும் இந்தஶேஷத்வஸாரஸ்யத்தை உபபாதிக்கிறார்.

இ.—அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ் தமக்கு உண்டான பகவதநுபவப்ரீதிப்ரகர்ஷத்தாலே களித்து அதுக்கு தூரஸ்தராணரை இகழ்ந்து அதுக்குக் கூட்டானரைக் கொண்டாடுகிறார். ''முந்நீர்ஞால''த்தில் இவர்க்கு உண்டான ஶோகம் நமக்கு நிலமாகிலாய்த்து, இந்தஹர்ஷம் நமக்கு நிலமாவது. வீதராகராயிருப்பார்க்கு ஶோகஹர்ஷங்களும் தத்ப்ரயுக்தமான ராகத்வேஷங்களும் ஶாஸ்த்ரங்களிலே நிஷேதியாநிற்க,ஸாத்த்விகாக்ரேஸரரான இவர்க்கு இவைகூடினபடி எங்ஙனே? என்னில்,— விஷயச்செருக்கால் வந்த ஹர்ஷமும் தஜ்ஜாவத்தில் பிறக்கும் ஶோகமும் தத்ப்ரயுக்தமான ராகத்வேஷமு மாயிற்று,ஶாஸ்த்ரங்களில்நிஷேதித்தது. பகவதநுபவத்தால் வந்த ஹர்ஷமும், அதுக்கு தூரஸ்தரை நிந்திக்கையும், இவ்வநுபவத்துக்குக் கூட்டானரைக் கொண்டாடுகையும் ஶாஸ்த்ரஸித்தம். இதுதான் முக்தர்பக்கலிலும் ''ஹாவு ஹாவு ஹாவு'' என்கிற ஸ்ரீநாரதபகவான் பக்கலிலும், மதுவநமழித்த திருவடி முதலான முதலிகள்பக்கலிலும் காணலாம். இவரும் பகவதநுபவபலாத்க்ருதராய் அஜ்ஞரையும் விஷயப்ரவணரையும் பகவத்ஸம்பந்தமின்றிக்கே ஶிஷ்டாபிமாநிகளானரையும் பரபரக்கு அற்று அவிஶேஷஜ்ஞரானரையும் எம்பெருமானை ஆஶ்ரயித்து ப்ரயோஜநாந்தரபரரானரையும் ராக்ஷஸப்ரக்ருதிகளையும் ஆஸுரப்ரக்ருதிகளையும் நிந்தித்து பகவத்குணப்ரஸ்தாவத்திலே விக்ருதராயிருக்குமவர்களைக் கொண்டாடுகிறார்.

ஈடு.—''புகழுநல்லொருவ''னிலே-பகவதநுபவத்தைப்பண்ணி, அத்தால் வந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே களித்து, அதில்லாதாரை நிந்தித்து உடையாரைக் கொண்டாடிச் சொல்லுகிறது - மொய்ம்மாம்பூம்பொழில். இவர்க்கு ''முந்நீர்ஞால''த்தில் - ப்ரக்ருதிஸம்பந்தத்தை அநுஸந்தித்தும், இதரவிஷயப்ராவண்யத்தை அநுஸந்தித்தும் ஶோகித்த ஶோகம் சிலர்க்கு நிலமாகிலாயிற்று, இத்திருவாய்மொழியில் பகவதநுபவத்தாலே ஹ்ருஷ்டரான இவருடைய ஹர்ஷம் சிலர்க்கு நிலமாவது. இவரும் பகவதநுபவம்பண்ணுகிறாராகில் நாமும் அவ்விஷயத்திலே கைவைத்தோமாகில், இவர்க்கு இங்ஙனிருப்பானேன்? நமக்கு இங்ஙன் இராதொழிவானேன்? என்னில்;—நாமாகிறோம் கண்டார்க்கு ஒளிக்கவேண்டுமவையாய், ஶாஸ்த்ரங்களெல்லாம் ஒருமுகஞ்செய்து நிஷேதிக்கிறவையாய்,

---

மொய்ம்மா ப்ரவேஶ, ஸங்க்ரஹஸங்கதி – 'புகழுநல்' இத்யாதி.

இத்திருவாய்மொழியிலோடுகிற ஹர்ஷத்துக்கு அவதியேது? என்ன, 'இவர்க்கு முந்நீர்' இத்யாதி. 'நாமாகிறோம்' இத்யாதி வாக்யாநந்தரம், இவ்வாழ்வாராகிறார் பகவத்விஷயலாபாலாபங்களில் பிறக்கும் ஶோகஹர்ஷங்களொழிய மற்றொன்று அறியாதே ''நின்னலாலிலேன்'' என்னும்படியான ஆராதகாதலை யுடையராகையாலே இவர்க்கு இங்ஙனிருக்கக்கூடுமென்று வாக்யசேஷத்தைஅத்யாஹரித்துக்கொள்வது.சோகஹர்ஷங்களேயாயிற்று அறிவது இறி:—ஆகையால், இந்தஇதரவிஷயப்ராவண்யமே பகவத்விஷயலாபாலாபங்களில்பிறக்கும் ஶோகஹர்ஷங்களில்லாமைக்கு அடியென்று ஶங்கைக்குப் பரிஹாரம். 'சாஸ்த்ரங்களெல்லாம் ஒருமுகஞ்செய்து

முதல்தன்னிலே கிடையாதவையாய், கிடைத்தாலும் நிலைநில்லாதவையாய், அநந்தரம் நரகத்திலே மூட்டி அநர்த்தத்தை விளைக்கக்கடவதான இதரவிஷயங்களுடைய லாபாலாபங்களில் பிறக்கும் ஶோகஹர்ஷங்களே யாயிற்று அறிவது. வீதராகராய் ஸாத்த்விகாக்ரேஸரராயிருக்கிற இவர்க்கு ஶாஸ்த்ரங்கள் 'ஆகாது' என்று நிஷேதித்த ஶோகஹர்ஷங்கள் கூடினபடி எங்ஙனே? என்னில்,— இவரது ஶாஸ்த்ரங்களிலே நிஷேதித்த ஶோகஹர்ஷங்களன்று, ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஸர்வேஶ்வரனை அநுபவித்து அவ்வநுபவஜநித ப்ரீதியாயிற்று இவர்க்கு ஹர்ஷமாகிறது; "இப்படி வகுத்தவிஷயத்தை அநாதிகாலம் இழந்து இதரவிஷயப்ரவணராய் அநர்த்தப்படுவோமே" என்னுமது தாயிற்று ஶோகம். "காமம் ஆகாது" என்று நிஷேதியாநிற்கச்செய்தேயும், "நிதித்யாஸிதவ்ய:" (நிதித்யாஸிதவ்ய:)என்றுகொண்டுபகவத்காமத்தை ஶாஸ்த்ரங்கள் விதியாநின்றதிறே; இனி முக்தரும் பகவதநுபவத்தாலே "அஹமந்நமஹமந்நமஹமந்நம்" (அஹமந்நமஹமந்நமஹமந்நம்)என்று களியாநிற்பர் களிறே; "ஸர்வஸம்ஶயநிர்முக்தோ நாரதஸ்ஸர்வதர்மவித்" (ஸர்வஸம்ஶநிர்முக்தோநாரதஸ்ஸர்வதர்மவித்) என்று சொல்லப்படுகிற நாரதாதிகளும் பகவத்ஸந்நிதியிலே வந்தவாறே ஆடுவது பாடுவதாகாநிற்பர்களிறே; விரக்தரில்தலையான திருவடியும் பிராட்டியைக்கண்டுவந்த ஹர்ஷத்தாலே முதலிகளைப் பார்த்து "நீங்கள் மதுவநத்தை யழித்து புஜியுங்கோள்; "அஹமாவாரயிஷ்யாமி யுஷ்மாகம்பரிபந்திந:" (அஹமாவாரயிஷ்யாமியுஷ்மாகம்பரிபந்திந:) என்று காத்திருந்த ததிமுகாதிகளை நான் தொட்டுத்தருகிறேன்" என்றானிறே; மஹாராஜர்க்கு 'உம்முடைய காவற்காடு அழிந்தது' என்று அறிவிக்க, "நம்மோடு பண்ணிப்போன ஸமயமுந் தப்பி, நாந்தாம் 'தீக்ஷ்ணதண்டர்' என்று அறியச்செய்தேயும் இவர்கள் காவற்காட்டை யழிக்கும்போது, "நைஷாமக்ருதக்ருத்யாநா மீத்ருஶஸ்ஸ்யாதுபக்ரம:" (நைஷாமக்ருதக்ருத்யாநா மீத்ருஶஸ்ஸ்யாதுபக்ரம:) என்று ஸர்வதா பிராட்டியைத் திருவடிதொழு

---

'நிஷேதிக்கிறவையாய்' என்றது - "த்யாஜ்யம் விஷயம் ... உபாதாநம் ... [illegible]", "நாவிரதோ துஶ்சரிதாந்நாஶாந்தோ நாஸமாஹித: । நாஶாந்தமாநஸோ வாபி ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத்" "ஸங்கராத்ஸஞ்ஜாயதே காம: காமாத்க்ரோதோ... [illegible]" "ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்த்ரியைஶ்சரந் । ஆத்மவஶ்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி", "விஷயா விநிவர்த்தந்தே" இத்யாதியைப் பற்ற. உபரத: - 'சமதமங்களுண்டு' என்னும் அபிமானமில்லாதவன். திதிக்ஷு: - க்ஷமாசீல:. 'ஶம்பாசலம்' இத்யாதியைப் பற்ற - 'கிடைத்தாலும்' இத்யாதி. 'ஶாஸ்த்ரங்கள் ஆகாதென்று நிஷேதித்த ஶோகஹர்ஷங்கள்' என்றது - "நித்யஞ்ச ஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு", "அநபேக்ஷ: ஶுசிர்தக்ஷ:", "த்யக்த்வா நித்ய ஸுகாநி ச" "த்யஜேத்ஸர்வஸுகாந்யபி", "த்யக்த்வா ப்ரியாப்ரியே", "ஹர்ஷஶோகௌ ஜஹாதி" இத்யாதியைப் பற்ற. பகவத்விஷயத்தைப் பற்றி வந்தவையானாலும் ஶோகஹர்ஷங்கள் த்யாஜ்யமன்றோ? என்ன, 'காமம்' இத்யாதி. அதாவது - "ஶாந்தோதாந்த:" இத்யாதியாலே காமத்தை நிஷேதிக்கச்செய்தேயும், "நிதித்யாஸிதவ்ய:" என்று விதிக்கையாலே பகவத்காமம் உத்தேஶ்யமானவோபாதி, இதரவிஷயங்களைப் பற்றிவரும் ஶோகஹர்ஷங்கள் த்யாஜ்யமானாலும் பகவத்விஷயத்தைப் பற்றிவரும் ஶோகஹர்ஷங்கள் உத்தேஶ்ய மென்றபடி. பகவத்விஷயத்தில் ஹர்ஷபர்யாயமான காமம் த்யாஜ்யமன்றென்னுமதுக்கு அநுஷ்டாநங்காட்டுகிறார், 'இனிமுக்தரும்' இத்யாதி. 'ஸர்வஸம்ஶய' இத்யாதி - பாரதே ராஜஸூயே. 'க்ருத்யஞ்ச ஹர்ஷாவிஷ்டோ ... [illegible]' இதி பூர்வார்த்தம்.* "இஷ்டம் மது ... க்ஷயிஷ்யாம: । அஹமாவாரயிஷ்யாமி யுஷ்மாகம் பரிபந்திந:" இதி ஸுந்தரகாண்டே. (௬௨ - க) பரிபந்திந: - ஶத்ருக்களை. தொட்டு-ப்ரஹரித்து. 'நைஷாம்' இத்யாதி. "வநம

---

* இந்த ஶ்லோகம் அச்சிட்ட ஸ்ரீகோஶத்தில் இல்லை யென்பர்.

தார்களாக வேணுமென்று அப்போது பிறந்த ஹர்ஷம் இருந்தவிடத்திலிருக்கவொட்டாமே,வாலானது ருஶ்யமூகபர்வதத்தின் கொடுமுடியிலே சென்று அறைந்ததாயிற்று; நடுவே ‘காவற்காடு’ என்று ஒன்று உண்டாயிற்று ராஜபுத்ரர்களுடைய ஜீவநாத்ருஷ்டமாயிற்று, அன்றுகில்; முதலிகளுடைய ஹர்ஷம் ராஜபுத்ரர்கள் முதுகோடே போமாயிற்று. அல்பம் வெற்றிலேச்சாறு மிடற்றுக்குக்கீழே யிழிந்த வன் தன்னைத்தான் அறிகிறிலன்; உள்கலந்தார்க்குஓரமுதமாய் அமுதிலுமாற்றவினியனாய் “எனக்கே தன்னைத்தந்த கற்பக மென்னமுதம்” என்று தாமே முற்றூட்டாக இவ்வம்ருதத்தை புஜித்த இவர்க்கு ஹர்ஷமுண்டாகச் சொல்லவேண்டாவிறே; இப்படிப்பட்ட பகவதநுபவத்தால் வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே - முதலிலே இதில் அறிவில்லாதாரையும்,அறிவுண்டாய்ப் புறம்பே அந்யபரராயிருப்பாரையும், ஶிஷ்டாபிமாநங் கொண்டாடி “அநுஷ்டாநகாலங்களில் திருநாள் சேவிக்கலாகாது” என்று இருப்பாரையும், அறிவுண்டாயே புறம்பே பரபரக்கற்று ‘அதுக்கும் இதுக்கும் வாசியென்?’ என்று ஸமாநபுத்தி பண்ணியிருப்பாரையும், தங்களை ஆஸ்திகராக புத்திபண்ணி அவ்வாஸ்திக்யத்துக்கு ‘புறம்பே விநியோகம்’ என்று இருப்பாரையும், ரஜஸ்தமஸ்ஸுக்களுக்கு அநுரூபமான க்ஷுத்ர பலங்களைக்கொண்டு போவாரையும், ததர்த்தமாகத் தாமஸதேவதைகளை ஆஶ்ரயிப்பாரையும் எடுத்து, அவர்களுக்குப்புறம்பே எல்லாநன்மைகளு முண்டேயாகிலும் பகவத்குணங்களை அநுஸந்தித்தால் அவிக்ருதராகில் ‘அவர்கள் அவஸ்துக்கள்’ என்று அவர்களை நிந்தித்து, ஒருஜந்மவ்ருத்த ஜ்ஞாநங்களின்றிக்கே யிருக்கச்செய்தேயும் பகவத்குணநுபவம்பண்ணி விக்ருதராமது உண்டாகில் அவர்களுக்கு நான் அடிமை யென்று அவர்களைக் கொண்டாடி ப்ரீதராகிறார்.

## முதற் பாட்டு.

மொய்ம்மாம்பூம்பொழில்பொய்கை முதலைச்சிறைப்பட்டுநின்ற
கைம்மாவுக்கருள்செய்த கார்முகில்போல்வண்ணன்கண்ணன்
எம்மானைச்சொல்லிப்பாடி எழுந்தும்பறந்தும்துள்ளாதார்
தம்மால்கருமமென்? சொல்லீர் தண்கடல்வட்டத்துள்ளீரே.

*ஆ.—முதலைச்சிறையிலே யகப்பட்டுத் தன்னால் ஒரு செயலின்றிக்கே நின்ற கைம்மாவுக்குத் தன்னளவிலே அருள்செய்த நிரவதிகாஶ்ரிதவாத்ஸல்யத்தை யுடையனான எம்பெருமானைச் சொல்லிப்பாடி யெழுந்தும் பறந்தும் துள்ளாதார்தம்மால் என்ன ப்ரயோஜந முண்டு? என்று அவர்களை நிந்திக்கிறார்.*

---

*ஓாஹிவஹாஸெஸாயிதம் கஉூவா நமெரெ:” இத்யுத்தரார்த்தம். அப்போது பிறந்த ஹர்ஷமென்றது - ‘வெ்ரீ திஸீ தாக்ஷள ஸம்வ ஹரூஷ ளகஊாரள ஊரூஷ்டா ஸிஜாயூள வாநராணாஜ ராஜா। சுவெஜஸ்லா ஹரூஷெஷ: கஉூவிஜிம் விஜிகவா பாஹொராஸநாம் வொகிரோதரூம் நநாஞ” இத்யாதியைப் பற்ற. “ததஃ ஶ்ருக்வாநிநாஞஜம் கவீநாம்கவிஸதஜ: ஸூயூதா ஜீதஜாஜூஜி ஜவெஜாஹவஜரூஷோநஸ:” என்றத்தைப் பற்ற, ‘வாலானது’ இத்யாதி. ப்ராஸங்கிகம் - ‘நடுவே’ இத்யாதி. பட்டர் ரஸோக்தி. முதுகோடே போம் - தீங்குவரும். இப்படி அத்யந்தஹர்ஷங் கூடுமோ? என்ன, கிம்புநர்ந்யாயத்தாலே பலிப்பிக்கிறார், ‘அல்பம்’ இத்யாதி. முற்றூட்டாக - க்ருத்ஸ்நபோஜநமாக. யதேஷ்டாநுபவமாக வித்யர்த்தஃ. இத்திருவாய்மொழியால் பலிதமான ப்ரமேயங்களை ஏழுவகையாக ஸங்க்ரஹித்து அருளிச்செய்கிறார், ‘இப்படிப்பட்ட’ இத்யாதி. ஶிஷ்டாபிமாநம் கொண்டாடி என்றது - ‘ஓதியுணர்ந்தவர்’ இத்யாதியைப் பற்ற. ‘க்ஷுத்ரபலங்களைக்கொண்டுபோவாரையும்’ என்றது - ‘அமரத்துணியவல்லார்’என்ற கேவலரைப் பற்ற. முதலிலே இதில் அறிவில்லாதாரையும் இத்யாதிகளுக்கும் - பாட்டுக்களின் வ்யாக்யாநங்களிலே கண்டு கொள்வது.*

ஒ.—முதற்பாட்டில், ஸ்ரீகஜேந்த்ராழ்வானை ரக்ஷித்தருளின எம்பெருமானுடைய இந்த ஆஸ்ரிதவாத்ஸல்யத்தை அநுஸந்தித்தும் அவிக்ருதராயிருப்பார் வ்யர்த்தஜந்மாக்கள் என்கிறார்.

[மொய்ம்மாம் பூம்பொழில்] - மநோஹரமாய்ப் பெருத்திருக்கிற திருச்சோலை. கைம்மா-யானை. [கார்முகில்போல் வண்ணன் கண்ணன் எம்மானை]-வடிவழகாலே என்னை அடிமை கொண்ட க்ருஷ்ணனை. சொல்லிப் பாடி யென்று மேலுக்கெல்லாம்; வாயாலே பேசி, நுணைஜிதராய்ப் பாடி இருந்தவிடத்தில் இருக்கமாட்டாதே பறப்பாரைப்போலே நெஞ்சுதுடிக்கமாட்டாதார் தங்களுடைய ஸத்பாவத்தால் இஹலோக பரலோகங்களில் கொண்ட ப்ரயோஜநம் என்? இப்பூமியிலுள்ளீர்! சொல்லிகோள். [தண்கடல் வட்டத்துள்ளீர்] - இப்பூமியிற் பிறந்தது அவனுடைய குணாநுஸந்தாநம் பண்ணுகைக்கு என்று கருத்து.

ப.—முதற்பாட்டில், ஆபந்நமான ஆனைக்கு உதவினபடியை அநுஸந்தித்து ஹர்ஷ விகாரம் பிறவாத அங்கத்தை யுடையரால் என்ன ப்ரயோஜநமுண்டு? என்று லௌகிகரைப் பார்த்து அருளிச்செய்கிறார்.

மொய் - செறிந்து, மா - உயர்ந்து, பூ - பூத்த, பொழில் - பொழில்களையுடைத்தான, பொய்கை - பொய்கையிலே, முதலை - முதலையாலே, சிறைப்பட்டு - சிறைப்பட்டு, நின்ற - (கரையேறமாட்டாமல்) நிஶ்சேஷ்டமாய்நின்ற, கைம்மாவுக்கு - ஆனைக்கு, அருள்செய்த - (அதின்கையிற் புஷ்பத்தைச் செவ்விகுலையாமல் அலங்கரிக்கையாகிற) அருளைப்பண்ணினவனாய், (அது தன் ஆர்த்தி தீரக் கண்டு உகக்கும்படியாய்), கார் - ஶ்ரமஹரமாய், முகில்போல் - காளமேகநிபமான, வண்ணன் - வடிவையும், கண்ணன் - (உள்ளேயிழிந்தெடுத்துக் கரையேற்றும்படியான) ஸௌலப்யத்தையும், எம்மானை-(இரண்டுக்கும் அடியான) உறவையுமுடையவனை, சொல்லி-வாயாலேபேசி, பாடி-உகப்பாலே பாடி, எழுந்தும் பறந்தும் - இருந்தவிடத்தி லிராதே தரையில் கால்பாவாதபடி பறந்து, துள்ளாதார்தம்மால் - ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணாதாருடைய ஸத்பாவத்தால், என் கருமம் - என்ன கார்யமுண்டு? தண் - குளிர்ந்த, கடல் - கடலாலே சூழப்பட்ட, வட்டத்து - பூமியிலே, உள்ளீரே - (பகவதநுபவார்த்தமாக) உளரான நீங்களே, சொல்லீர் - சொல்லுங்கோள்.

இங்கு 'கைம்மா' என்று ஆனையைச் சொல்லிற்று - துதிக்கையொழிய அழுந்தினபடியை நினைத்து.

இ.—முதற்பாட்டில், ஆனைக்கு உதவின நீர்மையை அநுஸந்தித்து ஈடுபடாதே அவிக்ருதராயிருப்பார் வ்யர்த்தஜந்மாக்கள் என்கிறார்.

[மொய்ம்மாம்பூம்பொழில்]-செறிந்து பரந்து தர்ஶநீயமான பொழிலென்னுதல்,செறிந்து பூத்த மாம்பொழிலென்னுதல்; [மாபொழில் மொய் பூ பொய்கை] - மாம்பொழிலையும் செறிந்த பூவையுமுடைய பொய்கை யென்னுதல்.நெடுநாள் பூத்தேடி விடாய்த்த ஆனைக்கு விடாய் கெடுகைக்கு உடலாகையாலே பொய்கையோபாதி சோலையும் உத்தேஶ்யமாயிருக்கிறது இவருக்கு. [பொய்கை முதலைச் சிறைப்பட்டு] - வெளிநில மல்லாமையாலே, யானைக்கு நிலமன்றிக்கே முதலைக்கு நிலமாகையாலே சிறைப்பட்டதாய்த்து. [முதலைச் சிறைப்பட்டு] - க்ஷுத்ரஜந்துவின்கையிலே அகப்பட்டது; ஸிம்ஹமன்று, ஸஜாதீயமான ஆனையன்று, புலியன்று. [நின்ற] - "திவ்யம் வர்ஷஸஹஸ்ரகம்" என்று நெடுநாள் செல்லுகை; வ்யாபாரஶூந்யமாய் நின்ற என்றுமாம். [கைம்மா] - எல்லாவற்றையும் கையாலே தள்ளிப்போகடவற்று என்னுதல், துதிக்கையொழிய முழுத்தும்படி முதலையின் கையிலே அகப்பட்டு வ்யாபரிக்கமாட்டாதே நின்றது என்னுதல். "முழுவலி முதலை"யிறே. [அருள்செய்த] - அதன்கையில் பூவைச் செவ்வியழியாதபடி

திருவடிகளிலே இடுவித்துக்கொண்டு அத்தை ஆஸ்வஸிப்பித்தபடி. [கார்முகில்போல் வண்ணன்]- அதன்விடாய் கெடும்படியான ஸ்ரமஹரமான வடிவும் ஸௌலப்யமும். ஆனையின் நோவாற்ற வந்த விஸால்யகரணியும் ஸந்தாநகரணியு மாயிற்று இவை. [எம்மானை] - அவன் வந்தபோதே ஆனையின் சிறை போயிற்று; அந்நீர்மையில் இவர் சிறைப்பட்டார்; தன்மேன்மை பாராதே ஒருதிர்யக்குக்கு உதவுவதே யென்று தாம் எழுதிக்கொடுக்கிறார். [சொல்லி] - அந்நீர்மையை வாயாலே பேசி ப்ரீதிப்ரேரிதராய்ப் பாடி இருந்தவிடத்தில் இருக்கமாட்டாதே எழுந்திருந்து தரையிலே கால்பாவாதே ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுதவர்கள். "நமக்கு ஓர் ஆபத்து வந்தால் இருந்தவிடத்தில் இராதே விக்ருதனும்போதும் அவனே வேணும், அவன் நூறுயிரம்செய்தாலும் அவிக்ருதராம் போதும் நாமே வேணும்" என்று பட்டர் அருளிச்செய்வர். [தம்மால் கருமமென்] - தங்கள் ஸத்பாவத்தால் இஹலோக பரலோகங்களில் கொண்ட ப்ரயோஜநம் என்? தங்கள் கருத்தால் கண்ட ப்ரயோஜநம் என்? [தண்கடல் இத்யாதி] - சதுஸ்ஸாகர பர்யந்த பூமியிலுள்ள நீங்கள் சொல்லிகோள்; இப்பூமியில் பிறந்தது பகவதநுபவத்துக்காக என்கை. ப்ரஹ்மதேசத்தில் அப்பன் பிள்ளையோடே திருவாய்மொழிகேட்டபோதை வார்த்தை நினைப்பது.

ஈடு.—முதற்பாட்டில், ஆஸ்ரிதன் இடர்ப்பட்ட மடுவின்கரையிலே, கலங்காப்பெருநகரில்நின்றும் அரைகுலையத் தலைகுலைய வந்துவிழுந்த நீர்மையை அநுஸந்தித்தால் விக்ருதராகாதார் அவஸ்துக்க ளென்கிறார்.

[மொய்ம்மாம்பூம்பொழில்] - வண்டுகள் மொய்க்கப்பட்ட பொழில்; மா - வண்டு. மொய் என்று - நெருக்கமாய், சோலைச்செறிவு. அச்செறிவுதான் மநோஹரமாயிருக்குமிறே. [மாம் பொழில்] - மாவாலுண்டான பொழி லென்னுதல், பரந்த பொழி லென்னுதல். [பூம்பொழில்] - பூத்த பொழி லென்னுதல்; கீழ், செறிவுமாத்ரத்தைச் சொல்லிற்றாகில் இங்கு மநோஹரத்வத்தைச் சொல்லிற்றுகிறது. [பொய்கை இத்யாதி] - பூவார்கழல்களிலே பணிமாறப் பூத்தேடிக் கிடையாமையாலே இடர்ப்பட்டுவருகிறவன், தூரத்திலே குளிர்ந்தசோலையும் பூத்தபொய்கையுமாய்த் தோற்றக் கண்டு மேல்விழுந்து வந்து பறித்தானாயிற்று 'உள்ளே துஷ்டஸத்த்வம் கிடந்தது' என்று அறியாதே; அச்சோலையோடு பொய்கையோடு வாசியற இவர்க்கு உத்தேஸ்யமாயிருக்கிறதாயிற்று, அப்

---

முதற்பாட்டு - 'மொய்ம்மா' இத்யாதி. 'உம்பரால்' இத்யாதியைப் பற்ற, 'கலங்காப் பெருநகரத்தில்' இத்யாதி. உம்பராலறியலாகா வொளி யென்று - பரமபதம். 'தம்மாற் கருமமென் சொல்லீர்' என்கையாலே 'அவஸ்துக்கள்' என்கிறார்.

'மா' என்று - வண்டாய், 'மொய்' என்று - மொய்க்கப்பட்ட வென்றாய், 'பூ' என்று - பூவாய், 'மா மொய் பூம் பொழில்' என்று அந்வயித்து அர்த்தம் - 'வண்டுகள்' இத்யாதி. "மாவே கருமையும் பெருமையும் நிறமும், மேவிய நாற்காலுடையவும் வண்டும், பூவுறைதிருவென வாறையும் பொருந்தும்" என்று நிகண்டு ப்ரயோகம் உண்டாகையாலே 'மா - வண்டு' என்கிறார். யத்வா, 'மொய்' என்று - செறிவாய், 'மா' என்று - மாமரமாய், 'பூ' என்று-தர்ஸநீயதையாய், செறிந்த மாவாலுண்டான அழகிய பொழிலென்று அர்த்தாந்தரம்—'மொய் யென்று நெருக்கமாய்' இத்யாதி. மொய் என்று அழகாய், அதாவது மநோஹரத்வமாய், மா என்று பரப்பாய், பூ என்று பூத்ததாய், மநோஹரமாய்ப் பரந்திருந்துள்ள, பூத்தபொழி லென்று அர்த்தாந்தரம், 'அச்செறிவுதான்' இத்யாதி. 'பூத்தபொழிலென்னுதல்' என்ற அநந்தரம், 'தர்ஸநீயமான பொழிலென்னுதல்' என்றும் அத்யாஹார்யம். 'பூ' என்று - தர்ஸநீயதையைச் சொல்லும்போது, 'மொய்' என்றத்தோடு புநருக்தமன்றோ? என்ன, 'கீழ் செறிவுமாத்ரத்தை' இத்யாதி. ஆக, 'மொய்' என்றதுக்கு அர்த்தத்ரயம் - படிதலும், செறிவும், அழகும். 'மா' என்றதுக்கும் அர்த்தத்ரயம் - 'ம், மஹத்தையும், மாமரமும், 'பூ' என்றதுக்கு அர்த்தத்வயம் - புஷ்பமும், அழகும். 'மா' என்கிற மகாரத்தின்மேல் பிந்துவான அர்த்தாக்ஷரம் மாமரத்தைச் சொல்லாதபோது சந்தோபங்க நிவ்ருத்யர்த்தகமென்று கண்டுகொள்வது. சிறைப்படுகைக்கு அடியேது? என்ன, 'பூவார்' இத்யாதி. உத்தேஸ்யனை ஈஸ்வரனைவிட்டு, பொழிலையும் பொய்கையையும் வர்ணிக்கிறதென்? என்ன, 'அச்சோலையோடு' இத்யாதி. அதாவது - ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு உத்தேஸ்யமான வழியாலே தமக்கு

போது அவனுக்கு உத்தேஶ்யமானாற்போலே ; தயரதன்பெற்ற மரதகமணித்தடத்துக்குப் போலியா யிருக்குமிறே இப்பொய்கையும்; *“தாமரைக்காடு மலர்க்கண்ணோடு கனிவாயுடையதுமாய்” என்று உபமாநமுகத்தாலும் மநோஹரமாயிருக்குமிறே. பொய்கை முதலைச்சிறைபட்டு நின்றதாயிற்று- தன்னில மல்லாததிலே விஸஜாதீயமானவதின் கையிலே யகப்பட்டது. வெளிநிலமாகில் ஆனையேவெல்லுமிறே; ஆனைக்கு ஆனையன்று, ஆனைக்கு ஸிம்ஹமன்று, க்ஷுத்ரமாயிருப்பதோரு நீர்ப்புழுவின்கையிலே அகப் பட்டது. [சிறைப்பட்டுநின்ற] - “திவ்யம் வர்ஷஸஹஸ்ரகம்” (திவ்யம்வர்ஷஸஹஸ்ரகம்) என்கிற படியே அநேகமாயிரமாண்டு முதலை நீருக்கு இழுக்க, ஆனை கரைக்கு இழுக்க, இரண்டினுடையவும் வ்யாபாரமாய்ப் போந்தது, “கஜஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே” (கஜஆகர்ஷதேதீரே க்ராஹஆகர்ஷதேஜலே) என்கிறபடியே; பின்பு அதுதவிர்ந்து, முதலையின் வ்யாபாரமேயாய் ஆனை யின் வ்யாபாரம் ஓவிநின்ற நிலை. ஆனைக்குத் தன்நிலமல்லாமையாலே பலக்ஷயம் பிறக்கும்; முதலை க்குத் தன்நிலமாகையாலும், அபிமதஸித்தியாலும்,பலம் இரட்டித்திருக்குமிறே; † “முழுவலிமுதலை” என்னக்கடவதிறே-‘தன் அபிமதஸித்திக்கு ஒரு கறையடி காணவல்லோமே’ என்று ஹ்ருதயக்லேசத் தோடே கிடக்கையாலே பலக்ஷயம் பிறந்திருக்கும், இப்போது அதுபெறுகையாலே முழுவலியா மிறே. தன் அபிமதஸித்திக்கு இதுதான் கால்வாசி யறிந்திறே பற்றிற்று; முன்பு ஒன்றைப் பிடித்த தில்லையே. நெடுங்காலமெல்லாம் ‘நம் ஶாபமோக்ஷத்துக்கு ஒரு கறையடி காணவல்லோமே’ என்று கிடக்கிறது, அதுபெற்றால் விடாதிறே. கறையடி யென்று-ஆனைக்குப் பேர். [கைம்மாவுக்கு]- ‘ஏதேனுமொன்று வந்தாலும் நம்மைக் கைம்மிஞ்சி வாராது’ என்று கைகண்டிருக்கிற இது நோவு பட்ட தென்கையும், துதிக்கை முழுத்திற் றென்கையும். இடர்ப்படும்போதும் தன்கனத்திலேயிறே படுவது, “ஆனையின் துயரம்” என்னக்கடவதிறே. [அருள்செய்த] - துதிக்கை முழுத்தச்செய்தே யும் பூவுக்கு ஒருவாட்டம் வாராதபடி எடுத்துப் பிடித்துக்கொண்டு நின்றதாயிற்று; அதிற் செவ்வி மாறாதபடி திருவடிகளிலே இடுவித்துக்கொண்டு நின்ற நிலை. முதலையின்வாயிலே அகப்பட்ட

---

*உத்தேஶ்யமாய் வர்ணிக்கிறார் என்றபடி. ‘பொய்கை’ என்றபோதே - ‘பூத்த’ என்று ஸித்தமாதல், ‘பூ’ என்றத் தைப் பொய்கையோடேயும் அந்வயித்தாதல். அவனுக்கு-ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு. உத்தேஶ்யதைக்கு ஹேத்வந் தரம் - ‘தயரதன்’ இத்யாதி. போலியான ப்ரகாரத்தை விஶதீகரிக்கிறார் ‘தாமரைக்காடு’ இத்யாதி. திருவாசிரி யம். தாமரைக்காடுபோலே யிருக்கிற திருக்கண்ணோடேகூடக் கனிந்த வாயையுடைத்தாயிருக்கிற இதி பாசுரார் த்தஃ. ‘பொய்கை, முதலை’ என்கிற பதத்வயத்துக்கும் பாவம் - ‘தன்நிலம்’ இத்யாதி. ஏதத்தாத்பர்யகத நார்த்தம் அதிஷ்டிகை - ‘பொய்கை’ இத்யாதி வாக்யம். தன்நிலமானால் தப்பலாமென்னுமத்தையும், “க்ஷுத் ரன்கையிலே தோற்றோம்” என்றதுக்கு உண்டாம் துஃகாதிஶயத்தையும் விஶதீகரிக்கிறார், ‘வெளிநிலமாகில்’ இத்யாதி. க்ஷுத்ரன் கையிலே தோற்குமது துஃகமாகையிறே, “யஸ்ய நாஸீத் ஹவிதா நவாஸ்வஸ்த்ய ஶஃவாநோ । திவிவாஹ விவாஶோகேஸஜேஹ நாஸவெதி” —தன்னில் தாழ்ந்தார் கையிலே படாதே தன்னைப்பற்ற ப்ரபலனானவன் கையிலே படவேணும் என்று கார்த்தவீர்யார்ஜுநன் வரம்வேண்டிக் கொண்டது. பொய்கையிலிருக்கிற முதலையாலே துஃகப்பட்டுநின்ற இதி ஶப்தார்த்தஃ. ‘நின்ற’ என்றதுக்கு - நிர்வ்யாபாரமாய் நின்றவென்று அர்த்தம் விவக்ஷித்து, முன்புத்தையில் வ்யாபாரத்தையும் ஸப்ரமாணமாக அருளிச் செய்கிறார், ‘திவ்யம்’ இத்யாதி. “கஜஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே । தயோர்த்வந்த்வ ஸமம்யுத்தம் திவ்யம் வர்ஷஸஹஸ்ரகம்” இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே அஷ்டஷஷ்டிதமே. இதுக்கு அடியேது? என்ன, ‘ஆனைக்குத் தன்னிலம்’ இத்யாதி. அப்படி இரட்டித்திருக்குமோ? என்ன, ‘முழுவலி’ இத்யாதி. திரு மொழி. அதிகபலமுடைய முதலை யித்யர்த்தஃ. இதுக்கு அர்த்தம் - ‘தன் அபிமத’ இத்யாதி. ‘கறையடி’ இதி சாடு, கறுத்தவடி, ஆனைக்காலென்று ஸ்வபாவார்த்தம்: உரலென்று - சாடு. ‘கால்வாசி’ என்று சாடு. இதுக்கு நியாமகம் - ‘முன்பு ஒன்றை’ இத்யாதி. இது பற்றினதி னுரப்பை அருளிச்செய்கிறார் - ‘நெடுங் காலம்’ இத்யாதி. ஆனையென்னாதே, ‘கைம்மா’ என்றதுக்கு பாவம் - ‘ஏதேனும்’ இத்யாதி. பலிதம் - ‘இடர்ப்படும்’ இத்யாதி. தன்கனத்திலேயிறே - தன்பெருமைக்குத்தக்கபடி யிறே. தாத்பர்யம் - ‘துதிக்கை’ இத்யாதி. ‘அருள்செய்த’ என்றதுக்கு ‘கண்ணன்’ என்றத்தைக் கடாக்ஷித்து, தாத்பர்யாந்தரம் - ‘முதலையின்’*

---

* திருவாசிரியம் - ரு. † பெரியதிருமொழி - ஞ - அ - ஈ.

ஆனையின்காலைத் திருக்கையாலே ஸ்பர்ஶித்துக் குளிரக்கடாக்ஷித்துநின்றநிலை. ஆனைக்கு நெடுங்கை நீட்டாகவொண்ணாதென்று தூவாய புள்ளூர்ந்து வந்திறே பூ இடுவித்துக்கொண்டது. [அருள்செய்த]- ஆனையின்காலில் விலங்கையிறே வெட்டிவிட்டது; கொடியவாய் விலங்கிறே. முதலையின் வாயிலே யகப்பட்ட ஆனையின்காலைத் திருக்கையாலே ஸ்பர்ஶித்து அதினுடைய க்ராஹத்தைப் போக்கி நின்ற நிலை. "க்ராஹம் சக்ரேண மாதவ:" (க்ராஹம்சக்ரேணமாதவ:) இறே. "காலைக்கதுவிடு கின்ற": ஸ்ரீகோபிமார் கரையிலே திருப்பரிவட்டங்களை யிட்டுவைத்துப் பொய்கையில் இழிந்தவாறே பரிவட்டங்களையெல்லாம் வாரிக்கொண்டு ஒருகுருந்தின்மேலே ஏறிநிற்க, தங்களால் ஆனவளவெல் லாம் அநுநயித்துப் பார்த்தவிடத்திலும் அவன் பின்னையுங் கொடாதே யொழிய, அவர்களிலே ஈஶ்வரமர்மஜ்ஞையா யிருப்பாளொருத்தி சொல்லுகிற வார்த்தையாயிற்று; கயலோடே கூட வாளையா னது காலைக் கதுவாநின்றது. தன்னை ஆஶ்ரயித்ததொரு யானையை ஒருநீர்ப்புழு நலிய, அது பொறுக்கமாட்டாமே த்வரித்துக்கொண்டு வந்து விழக்கடவ அவன், அந்தரங்கரான நாம் நோவுபடா நின்றால் வாராதிரா னென்னுமத்தாலே சொல்லுகிறாள். ஆனையை ஒரு நீர்ப்புழுவாயிற்று அங்கு நலிகிறது, அபலைகளான எங்களை இரண்டுநீர்ப்புழுகிடாய் நலிகிறது என்கிறாள். இத்தைக்கேட்ட போதே பரிவட்டங்களையுங் கொண்டு அரைகுலையத் தலைகுலைய வந்து விழுமென் றிருக்கிறாள்; வைஷ்ணவஸந்தாநத்திலே பிறந்தார்க்கு ஈஶ்வரமர்மங்கள் தெரியுமிறே-'இன்னதுக்கு வருவர் இரங்கு வர்' என்று அறிவர்களிறே. [கார்முகில் இத்யாதி] - ஆனையினிடரைப் போக்கினபோது வடிவிற் பிறந்த துடிப்பும், குணத்திற்பிறந்த துடிப்பும். வடிவழகையநுபவிப்பித்து ஆனைக்குக் கையாளாய் நின்ற நிலை; 'க்ருஷ்ணன்' என்றால் - தன்னையநுபவிப்பார்க்குக் கையாளாயிருக்கு மென்னுமிடம்

---

இத்யாதி. இப்போது, 'கண்ணன்' என்றதுக்கு-கண்ணையுடையவனென்று அர்த்தம். முந்தின அர்த்தவிவரணம்- 'ஆனைக்கு' இத்யாதி. நெடுங்கைநீட்டு - அதிதூரம். 'தூவாய' இத்யாதி - திருமொழி. பரிசுத்தமான வாயை யுடைய பெரியதிருவடியை மேற்கொண்டு வந்திறே யித்யர்த்த:. த்விதீயார்த்தத்தின் விவரணம் - 'ஆனையின் காலில்' இத்யாதி, 'மாதவ:இறே' என்னுமளவும். விலங்கென்று - திர்யக்காய், முதலையைச் சொல்லுகிறதென்று ஸ்வஹாவார்த்த:. சாடு - ஸ்புடம். விலங்கென்றால் - முதலையைச் சொல்லுமோ? என்ன, 'கொடியவாய்' இத்யாதி: க்ரூரமான வாயையுடைய முதலை யித்யர்த்த:. அதினுடைய க்ராஹத்தை - அதுக்கு விரோதியான முதலையை யென்று ஸ்வஹாவார்த்தம். க்ராஹமென்று - து:கத்துக்கும், ஆக்ரஹத்துக்கும் பேர். அப்படி க்ராஹத்தைப் போக்கினானோ? என்ன, 'க்ராஹம் சக்ரேண' இத்யாதி. "க்ராஹக்ரஸ்தம் கஜேந்த்ரம் தம் க்ராஹம் ஜலாஶயாத் । உஜ்ஜஹாராப்ரமேயாத்மா தரஸா மது ஸூதந: ॥ ஸ்தஸ்தம் உஜ்ஜஹாராஸ க்ராஹம் சக்ரேண மாதவ:" இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே அஷ்டஷஷ்டிதமே. ஆக, 'அருள் செய்த' என்றதின் அர்த்தத்வயாநுகுணமாக, 'சிறை' என்று - து:கமாய், அத்தை - செவ்விமாறாமல் பூப்பணி மாறப்பெறாமையால் வந்த து:கமென்றும், முதலையாலுண்டான து:கமென்றும் த்வேதா கண்டுகொள்வது. அல்லாத சேஷ்டிதங்களுக்குமுன்னே கஜேந்த்ரமோக்ஷத்தைச் சொல்லுவானென்? என்னில்;—ஈஶ்வரனுக்கு அத்யந்தாபிமதத்வேந தத்வப்ரகாரஸாதநமென்று விவக்ஷித்து அதுக்கு ஸம்வாதம்-'காலை' இத்யாதி; நாய்ச்சியார் திருமொழி.(ஈ-ரு)இதுக்கு அவதாரிகை- 'ஸ்ரீகோபிமார்' இத்யாதி.'மர்மஜ்ஞை' இதி—மர்மமாவது – ஈஶ்வரத்வ மும், இன்னதுக்கு இரங்குவ ரென்னுமதுவும். பதப்ரயோகத்துக்கு ஹாவம் - 'தன்னையாஶ்ரயித்தது' இத்யாதி. கயல் வாளை – மத்ஸ்யபேதங்கள். "கயலொடுவாளை" என்றதுக்கு ஹாவம் - 'ஆனையை' இத்யாதி; ஹார்த்த பாவமாதல். 'தன்னையாஶ்ரயித்ததொரு' இத்யாதியை விவரிக்கிறார்-'இத்தைக்கேட்ட' இத்யாதி. இடைச்சிகளுக்கு ஈஶ்வரமர்மம் தெரியுமோ? என்ன, 'வைஷ்ணவஸந்தாந' இத்யாதி. அதாவது – இடைச்சியாக அநுகரிக்கிறவள் பெரியாழ்வார்திருமகளாகையாலே தெரியுமென்று கருத்து. விவரணம் – 'இன்னதுக்கு' இத்யாதி. 'கண்ணன்' என்னுமளவுக்கும் அபரபாவியாக ஹாவம் – 'ஆனையினிடரை' இத்யாதி. துடிப்பு – அதிசயம். பூர்வபாவியாக ஹாவம் – 'வடிவழகை' இத்யாதி. 'கண்ணன்' என்றால் – கையாளாயென்று காட்டுமோ? என்ன, 'க்ருஷ்ண னென்றால்' இத்யாதி. வடிவழகையும் குணத்தையும் சொல்லுகிறதிலே ஒரு ரஸோக்தி – 'ஆனையி

ப்ரஸித்தமிறே. ஆனையினிடரைப் போக்கின விஶல்யகரணியும் ஸந்தாநகரணியும் இருக்கிறபடி. தன்னையநுபவிப்பித்துத் தாழநின்றுறையிற்றுப் போக்கிற்று. [எம்மானை] - ஆனைக்கு உதவின அத்தாலே அதின்சிறை விட்டது, அந்நீர்மையிலே தாம் சிறைப்பட்டார். ஒருஜந்மமாதல், ஒருஜ்ஞாநமாதல், ஒருவ்ருத்தமாதல் ஒன்றுமின்றிக்கே ருசிமாத்ரமேயான ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு உதவின படியை அநுஸந்தித்து, 'இது என்ன நீர்மை?' என்று அதிலேயாயிற்று இவர் அநந்யார்ஹராயிற்று. பட்டர் இவ்விடத்தை அருளிச்செய்யாநிற்கச்செய்தே மேலேயும் இயலைச்சொல்லப்பண்ணி "அவன் நூறாயிரஞ்செய்தாலும் விக்ருதராகாதிருக்கும்போதும் நாமே வேணும்; நமக்கு ஒருஆபத்துஉண்டானால் இருந்தவிடத்திலே இருக்கமாட்டாதே விக்ருதராம்போதும் அவனே வேணும்" என்று அருளிச்செய்தார். [சொல்லி இத்யாதி] - ஆனைக்கு உதவின நீர்மையை வாயாலே சொல்லி, ப்ரீதிப்ரேரிதராய்ப் பாடி, பின்னை உடம்பு இருந்தவிடத்தில் இராதே எழுந்தும் தரையில் கால்பாவாதே பறந்தும் இப்படி ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுதார். [தம்மாற் கருமமென்] - தன்னுடைய உத்பத்தியால் ப்ரயோஜநங்கொள்வான் தானிறே: இவன் தன் ஸ்ருஷ்டியால் கொண்ட ப்ரயோஜநமென்? தான் ஶரீர பரிக்ரஹம்பண்ணின இத்தால் என்ன ப்ரயோஜநங்கொண்டானென்? [தண்கடல்வட்டத்துள்ளீர் சொல்லீர்] - எங்களைப்போலே வ்யாவ்ருத்தரன்றியே யிருந்திகோளாகிலும், ஶரீரபரிக்ரஹத்தைப் பண்ணி பகவத்பஜநம்பண்ணதே இதரவிஷயப்ரவணராயிருக்கிறவர்களோடு ஸஜாதீயராய்ப் போருகிற நீங்கள்தான் சொல்லிக்காணுங்கோள். கடலுக்குட்பட்ட பூமியிலுள்ளாரடைய விஶேஷஜ்ஞராயிரார்களிறே; விஶேஷஜ்ஞரோடு அல்லாதாரோடு வாசியற எல்லார்க்கும் இவ்வர்த்தம் ப்ரஸித்தமென்றிருக்கிறார். (க)

# இரண்டாம் பாட்டு.

தண்கடல்வட்டத்துள்ளாரைத் தமக்கிரையாத்தடிந்துண்ணும்
திண்கழற்காலசுரர்க்குத் தீங்கிழைக்குந்திருமாலைப்
பண்கள்தலைக்கொள்ளப்பாடிப் பறந்துந்தனித்துழலாதார்
மண்கொளுலகிற்பிறப்பார் வல்வினைமோதமலைந்தே.

*னிடரை' இத்யாதி. விகதஶல்யம் கரோதீதி - விஶல்யகரணீ; சிந்நசர்மமாம்ஸாதீநாம் பரஸ்பரம் ஸந்தாநம்கரோதீதி - ஸந்தாநகரணீ. ஆனையின் மநோதுஃகமாகிற ஹ்ருச்சல்யத்தைப் போக்குகையாலும், தாழநின்று திருக்கையாலே ஸ்பர்ஶித்துப் புண்ணைப் பொறுப்பிக்கையாலும், வடிவழகையும் ஸௌலப்யத்தையும் - 'விசல்யகரணியும் ஸந்தாநகரணியும்' என்கிறது. பூர்வபாவியான அர்த்தத்தில் பலிதம் - 'தன்னை' இத்யாதி. "கைம்மாவுக்கருள்செய்த" என்ற அநந்தரம், 'எம்மானை' என்றதுக்கு ஹாவம் - 'ஆனைக்கு' இத்யாதி வாக்யத்வயத்தாலே. பூர்வவாக்யவிவரணம் - 'ஒருஜந்மம்' இத்யாதி. ப்ராஸங்கிகம் - 'பட்டர்' இத்யாதி. மேலேயும் இயலைச்சொல்லப்பண்ணி யென்றது - 'எழுந்தும் பறந்தும் துள்ளாதார்' என்றிருக்கையாலே மேல் பாட்டுக்குறையும் சொல்லுவித்தென்றபடி. 'தம்மால்' என்றதுக்கு ஹாவம் - 'தன்னுடைய' இத்யாதி வாக்யத்வயேந. பூர்வவாக்யத்வயவிவரணம் - 'தான்ஶரீர' இத்யாதி. 'தண்கடல்வட்டத்துள்ளீர்' என்றதுக்கு ஹாவம்- 'எங்களைப்போலே' இத்யாதி. 'இதரவிஷயப்ரவணர்' என்றது - துள்ளாதாரை. அவர்களோடு ஸஜாதீயராய்ப் போருகிற நீங்க ளென்றது - 'துள்ளாதார்' என்று அவர்களைப் பரோக்ஷமாகச் சொல்லி, அநந்தரம் 'தண்கடல் வட்டத்துள்ளீர்' என்று ஸம்போதித்ததைப் பற்ற. விஶேஷஜ்ஞர்மாத்ரத்தைக் கேளாதே அவிஶேஷமாக எல்லாரையும் கேட்கிறதென்? என்ன, 'கடலுக்குள்' இத்யாதி. இதரவிஷயப்ரவணரான அவிஶேஷஜ்ஞரைக் கேட்டால் அவர்களுக்குத் தெரியுமோ? என்ன, 'விஶேஷஜ்ஞரோடு' இத்யாதி. ப்ரஸித்தமென்றிருக்கிறார், 'வாயுந்திரையில்' வாஸனையாலே யென்றபடி. துள்ளாதார்தம்மால் - துள்ளாதாராயிருக்கிற தங்களாலே.* ***தண் கடல்வட்டத்துள்ளீர்*** *- குளிர்ந்த கடலாலே சூழ்ந்த பூமியிலே பகவதநுபவார்த்தமாக வுளரான நீங்கள். க்ரமேண அந்வயஃ.* (க)

ஆ.—(தண்கடல்.) பரதுஃகாஸஹிஷ்ணுதையாலே பரதுஃகநிரஸநைக ஸ்வபாவனா யிருந்தவனைப் பண்கள் தலைக்கொள்ளப் பாடிப் பறந்தும் குனித்து உழலாதார் நித்யஸம்ஸாரிகள் என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், ஸகலஜகத்தினுடைய உபத்ரவங்களைப் போக்கி ரக்ஷிக்கும் ஸ்வபாவனான ஸ்ரீயஃபதியினுடைய இந்நீர்மையில் அகப்படாதார் மஹாதுஃகம் பொறுக்கவொண் ணாதபடி வந்து அபிபவிக்க ஸம்ஸாரத்திலே வந்து பிறக்கிறவர்கள் என்கிறார்.

[தண்கடல் என்று தொடங்கி] - ஜகத்திலுள்ளாரை நிர்நிபந்தநமாகக் கொன்று தந்தா முக்கு இரையாகப் புஜித்து இங்ஙனே யிருக்கும் அநீதிகள் பண்ணுகைக்குக் காலிலே ஒருவரால் தவிர்க்கவொண்ணாத வீரக்கழலிட்டிருக்கிற அஸுரர்க்குப் பிராட்டியும் தானும் கூட அநர்த்தங்களை எண்ணாநிருக்குமவனை. [பண்கள் என்று தொடங்கி] - பண்கள் உஜ்ஜ்வலமாம்படி பாடி, நெஞ்சம் அலமந்து கூத்தாடி இதுவே படியாய்த் திரியாதார்.

ப.—அநந்தரம், விபூதியையழிக்கும் ஆஸுரப்ரக்ருதிகளை நிரஸிக்கும் ஸாமர்த்யத்தை அநுஸந்தித்து விக்ருதராகாதவர்கள் ஸம்ஸாரத்தில் மஹாபாபம் மேலிடப் பிறந்தவர்கள் என் கிறார்.

தண் - குளிர்த்தியைக் குணமாகவுடைய, கடல் - கடல்சூழ்ந்த, வட்டத்து - பூமியில், உள்ளாரை - உண்டானவர்களை, தமக்கு இரையா - தங்கள் ஶரீரபோஷணமே ப்ரயோஜநமாக, தடிந்து - கொன்று, உண்ணும் - ஜீவிப்பாராய், (இந்தப்பாதகத்வத்துக்கு இட்ட), திண் - திண் ணிய, கழல் - வீரக்கழலை, கால் - காலிலேயுடையரான, அசுரர்க்கு - அஸுரர்க்கு, தீங்கு - (விநாஶமாகிற) தீமையை, இழைக்கும் - நிரூபித்து, திருமாலை - அத்தாலே பிராட்டியுகப்புக்கு விஷயமானவனை, பண்கள்-பண்கள், தலைக்கொள்ள - மேலாம்படி, பாடி - பாடி, பறந்தும் - ஆகா சத்தே கிளம்பி, குனித்து - ஆடி, உழலாதார் - எங்குந்திரியாதார்,—மண்கொள் - மண்மிஞ்சின, உலகில்-லோகத்திலே, வல்வினை - கழிக்கவரிய மஹாபாபங்கள், மலைந்து - மேலிட்டு, மோத - தரையோடே எற்றும்படி, பிறப்பார் - பிறக்குமவர்கள். தடிதல் - கொல்லுதல்.

இ.—இரண்டாம் பாட்டில், தங்களுக்கு இடருண்டு என்றும் அறியாத ஸம்ஸாரி களுடைய விரோதியைப் போக்கும் நீர்மையிலே அகப்படாதார் மஹாபாபம் அபிபவிக்கப் பிறக் கிறவர்கள் என்கிறார்.

[தண்கடல் இத்யாதி] - துஷ்ப்ரக்ருதிகள் நலிகைக்குப் பண்ணும் அபகாரம் ஏக தேஶவாஸித்வமான பாந்தவமே யுள்ளது. தண்கடல்வட்டத்தில் உண்டு உடுத்துத் திரியுமதுவே ஹேதுவாக ''தெவயஂ ஹவதாரக்ஷா௱ஃ ஹவஉிஷயவாஸிநஃ'' என்று ஈஶ்வரனுக்கு ரக்ஷிக் கைக்குப் பற்றாசானதுவே இவர்களுக்கு நலிகைக்குப் பற்றாசு. [தமக்கு இரையா] - தங்கள் ஶரீரபோஷணத்துக்கு உடலாக. [தடிந்து உண்ணும்] - கொன்று ஜீவிக்கும். [திண்கழல் இத் யாதி] - திண்ணிய வீரக்கழலை ஹிம்ஸார்த்தமாகக் காலிலேயிட்டிருக்கும் அஸுரர்க்கு. ''வ்ரத அ தஂ௨௨'' என்று ரக்ஷகன் தீக்ஷித்திருக்குமாபோலேயாயிற்று, இவர்கள் ஹிம்ஸையிலே தீக்ஷித் திருக்கும்படி. அவனுக்கு க்ருபைபோலே யாயிற்று, இவர்களுக்கு க்ரௌர்யமும். [தீங்கு இத்யாதி] - ''தித ஶாவெந'' என்னுமவனும் ''ஹவெயஂ ஶரணஂஹிவஃ'' என்னுமவளுமாக இவர்களை முடிக்கும் விரகுகளை எண்ணாநிற்பர்கள். [பண்கள் தலைக்கொள்ளப் பாடி] - பண்கள் உஜ்ஜ்வலமாம்படி என்னுதல், ஹர்ஷத்தாலே ஒரு பண்ணிலே எல்லாப்பண்ணும் கூடும்படி. அடைவு கெடப் பாடி என்னுதல். [பறந்து இத்யாதி] - தரையில் கால்பாவாதே ஆடி: இதுவே யாத்ரை

யாய்த் திரியாதார். [வல்வினை மலைந்து மோத மண்கொள் உலகில் பிறப்பார்] - மஹாபாபம் மேலிட்டு ஏற்றுகையாயிற்றுப் பிறவிக்குப் பலம்; பகவத்குணம் கேட்டால் இறக்குவாதம் வலித்து அவிக்ருதராயிருப்பர்கள். சாதுர்த்திகம் எடுத்து அறையும்போது செய்பலாவதில்லையே.

ஈடு.—இரண்டாம்பாட்டு. ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு உதவினது ஸூரிகளுக்கு உதவிற்றென்னலாம்படியன்றே, 'தங்களுக்கு இடருண்டு' என்றறியாத ஸம்ஸாரிகள் விரோதியைப் போக்கும் நீர்மையை அநுஸந்தித்தால் அவிக்ருதராயிருப்பார், மஹாபாபம் அபிபவிக்கப் பிறக்கிறவர்கள் என்கிறார்.

[தண்கடல் இத்யாதி] - அஸுரர்கள் ப்ராணிகளை ஹிம்ஸித்து ஜீவிப்பர்களாயிற்று. இவர்களை ஹிம்ஸிக்கைக்கு இவர்கள் பண்ணின அபகாரம் என்? என்னில், —[தண்கடல்வட்டத்துள்ளார்] - ஏகதேசவாஸித்வத்தால் வந்த பாந்தவமே ஹேதுவாகவாயிற்று நலிவது. ஸர்வேச்வரனுக்கு ரக்ஷிக்கைக்கு ஹேது யாதொன்று, அதுவேயாயிற்று இவர்களுக்கு ஹிம்ஸாஹேதுவும்; [**தேவயம்பவதாரக்ஷ்யா:**] (தேவயம்பவதாரக்ஷ்யாः) - ஆர்த்தரான நாங்கள் ஆர்த்தரக்ஷணத்திலே அதிகரித்த தேவர்க்கு ரக்ஷ்யர். உங்களை நமக்கு ரக்ஷிக்கவேண்டுகிறதேன்? பண்ணின உபாஸநங்கொண்டு வளைக்கிறிகோளோ? என்ன,—அதுசொல்லில் தேவர்க்குக் கண்ணழிவுசொல்லிவிடலாம்; [**பவத்விஷயவாஸிந:**] (பவத்விஷயவாஸிநः)-தேவருடைய விஷயத்திலே நாங்கள் கிடக்கிறமை யுண்டே, இதில் சொல்லலாம் கண்ணழிவு இல்லையிறே. 'நாம் காக்கிற எல்லைக்குப் புறம்புகாண்' என்று சொல்லலாமாகில் சொல்லிக்காணும். *"இவற்றின்புறத்தா ளேன்றேண்ணே" என்னக்கடவதிறே. இவர்கள், தங்கள் கண்வட்டத்திலே உண்டு உடுத்துத் திரிகிற இதுவே ஹேதுவாக ஹிம்ஸிப்பர்களாயிற்று. [தமக்கு இரையா] - தங்களுடைய ஶரீரபோஷணத்துக்காகவாயிற்று. [தடிந்துண்ணும்] - ஹிம்ஸித்து ஜீவிக்கிற. [திண்கழற்காலசுரர்க்கு] - திண்ணிய வீரக்கழலைக் காலிலேயுடைய அஸுரவர்க்கத்துக்கு அவன் ரக்ஷிக்கைக்கு "**ஸதஸ்த்வம**"

இரண்டாம்பாட்டு - 'தண்கடல்' இத்யாதி. ஜகத்திலுள்ளார்க்காக அஸுரநிரஸநம் பண்ணுகிற இது முதற்பாட்டில் அருளிச்செய்த குணத்தைப் பற்றவும் மஹாகுண மென்று அருளிச்செய்யாநின்றுகொண்டு, 'குனித்துழலாதார் - வல்வினைமோத' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு' இத்யாதி. விரோதியைப் போக்கும் நீர்மையை அநுஸந்தித்தால்—போக்கும் நீர்மை அந்தநீர்மையை அநுஸந்தித்தாலென்று கூட்டுவது.

பத அவதாரிகை - 'அஸுரர்கள்' இத்யாதி. பலிதம்-'ஸர்வேச்வரனுக்கு' இத்யாதி. ஏகதேஶவாஸித்வம் ரக்ஷணஹேது வென்றதுக்கு ப்ரமாணம் - 'தேவயம்' இத்யாதி. "தேவயம் பவதாரக்ஷ்யா பவத்விஷயவாஸிந: । நகரஸ்தோ வநஸ்தோவா த்வம் நோ ராஜா ஜநேச்வர:" இதி ஆரண்யகாண்டே ப்ரதமே ராமம்ப்ரதி தண்டகாரண்யவாஸிநோ முநய:. ஶ்லோகார்த்தம் – 'ஆர்த்தரான' இத்யாதி. 'ஆர்த்தரான' என்றது - "ஸஹிவ ஸர்வ ஶரீராணி" இத்யாதிநா உக்தாகாரபராமர்ஶியான 'தே' என்கிற தச்சப்தார்த்தம். அது - உபாஸநம். 'கண்ணழிவுசொல்லி' இதி: அங்கோபாங்காதி வைகல்யம் சொல்லிவிடலாம் இத்யர்த்த:. விஷய: - தேஶ:. "உக்ஷாக்ஷணாதீயம் ஸ்ஞ்சிதி ஸுஸெளவநகாநநா" இதி ரக்ஷகனுடைய அபிமாநமுள்ள தேஶமும் ப்ரபத்தியாகக் கண்டோமிறே, நிஷாதகாகாதிகள்பக்கலிலே. அப்படி புறம்பன்றே? என்ன, 'இவற்றின்' இத்யாதி. திருவிருத்தம். ரக்ஷணீயமான இந்தவிபூதிகளுக்குப் புறம்பாயிருப்பா ளொருத்தி என்கிற நினைவோ? அன்றே இதி பாசுரார்த்த:. குளிர்ந்த கடல்சூழ்ந்த பூமியிலுள்ளவர்களை இதி சப்தார்த்த:. தார்ஷ்டாந்திகத்திலே நிகமிக்கிறார் - 'இவர்கள்' இத்யாதி. 'தமக்கிரையா' என்கையாலே - "நவம் ஶவதீஜம் வாணஸ்ய" என்ற கண்டாகர்ண வ்யாவ்ருத்தி. தாத்பர்யம் - 'அவன்ரக்ஷிக்கைக்கு' இத்யாதி. திண்மைக்கு

* திருவிருத்தம் – ருரு.

(ஏதத்வ்ரதம்மம) என்று தீக்ஷித்திருக்குமாபோலேயாயிற்று, இவர்கள் பரஹிம்ஸைக்கு தீக்ஷித்து வீரக் கழலிட்டிருக்கும்படி. அவனுடைய ரக்ஷணத்துக்கு ஈடான க்ருபையைத் தவிர்க்கிலும், இவர்கள் பரஹிம்ஸைக்குஇட்ட வீரக்கழலைத் தவிர்க்கவொண்ணுது.[தீங்கிழைக்கும் திருமாலே]-'இவர்களும் நம்மாலே ஸ்ருஷ்டரன்றோ' என்று குடல்தொடக்கைப் பார்த்திருப்போமாகில் நம்விபூதி அழியும்; இவர்களை யழியச்செய்தாகிலும் விபூதியைநோக்கும் விரகு ஏதோ வென்று, "மித்ரபாவேந" (மித்ரபாவேந) என்னும் தானும், "பவேயம்ஶரணம்ஹிவ:" (பவேயம்ஶரணம்ஹிவ:) என்னு மவளும் கூட இருந்து மநோரதிப்பர்களாயிற்று. 'களைபிடுங்கி ஆஶ்ரிதரை ரக்ஷித்தோமாம் விரகு ஏதோ?' என்று இருவருங் கூட விசாரியாநிற்பர்கள். [பண்கள் தலைக்கொள்ளப் பாடி] - திரு மாலைப் - பண்கள்தலைக்கொள்ளப் பாடி - "ஶ்ரியஃபதியைப் பாடாநின்றார்கள்" என்று, பண்கள் தான் 'என்னைக்கொள், என்னைக்கொள்' என்று வந்து தலைக்காட்ட; அதாவது - பண்சுமக்கப் பாடி யென்றபடி. அன்றிக்கே, பண்கள் தலைமைபெறும்படி பாடி; தலையான பண்ணிலே பாடி. அன்றிக்கே, ப்ரீதியாலே அடைவுகெட்டு, ஒருபண்ணிலே எல்லாப்பண்ணும் வந்து மேய்க்காட் டிடும்படி என்னவுமாம். [பறந்தும் இத்யாதி] - கால் தரையில் பாவாதே கூத்தாடி, அதுவே யாத்ரையாய்த் திரியாதார். பறந்துகொண்டு குனித்து இதுவே யாத்ரையாகாதார். [மண்கொள் இத்யாதி] - வல்வினை மலைந்து மோத மண்கொளுலகிற் பிறப்பார், பகவத்குணநுபவம்பண்ணும் அத்தனை போதுமிறே அவர்கள்,'நாம் அவிக்ருதராயிருக்கவேணும்' என்றுகுறிக்கொண்டு இறுக்குவாதம் பற்றினாற்போலே யிருப்பது; சாதுர்த்திகம் வந்தெடுத்தெடுத்து எற்றப் புக்கால் இவனாற் செய்யலாவ தில்லையே. பிறப்பு என்கிற இது - அல்லாத துஃகங்களுக்கு மெல்லாம் உபலக்ஷணம். (௨)

---

ஸாவம் - 'அவனுடைய' இத்யாதி. நிருபாதிகபந்துக்களான தாங்கள் தீங்கு இழைக்கக்கூடுமோ? என்ன, 'இவர் களும்' இத்யாதி; விவரணம் - 'களைபிடுங்கி' இத்யாதி. இழைக்கை - * விசாரிக்கை. "ந த்யஜேயம் கதஞ்சந ஸ்யாதேஷ ஸதாம் ரூபம் ந த்யஜேத் । தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத கர்ஹிதம்" என்னக்கடவதிறே. 'பண்கள் தலைக்கொள்ளப்பாடி' என்றதுக்கு அஞ்சர்த்தம்; அதாவது- பண்கள் இவனுக்கு வந்து முகங்காட்ட வென்று முந்தினது. அத்தை அருளிச்செய்கிறார்—'ஶ்ரியஃபதியை' இத்யாதி. தலைக்காட்ட - முகங்காட்ட. பண்கள் மிகப் பாடி யென்று இரண்டாமர்த்தம். 'அதாவது - பண் சுமக்க' இத்யாதி. சுமக்க - மிக. பண்கள் தலைமைபெறும்படி யென்று மூன்றாமர்த்தம்; 'அன்றிக்கே பண்கள்' இத்யாதி. தலைமை - ப்ராைஷ்ட்யம். தலைக்கொண்ட பண்ணிலே - ப்லாக்யமான பண்ணிலே யென்று நாலாமர்த்தம் - 'தலையானபண்ணிலேபாடி' என்று. பண்கள் தலைக்கொள்ள - தலைக்கொண்ட பண்ணிலே யென்றபடி. ஒருபண்ணிலே எல்லாப்பண்ணும் வந்து முகங்காட்டப் பாடி யென்று அஞ்சாமர்த்தம் – 'அன் றிக்கே ப்ரீதியாலே' இத்யாதி. பறக்கையும் குனிக்கையும் பிந்நவ்யாபாரங்களன்று என்கிறார் – 'பறந்துகொண்டு' இத்யாதி. மலைந்து - மேலிட்டு. மோத - எற்ற; அறைய இத்யர்த்த:. 'துள்ளாதார் - மலைந்து - மோத - பிறப்பார்' என்றத்தால் பலித்த ஸாவம் - 'பகவத்குண' இத்யாதி. குறிக்கொண்டு - 'இன்னபடியிருப்போம்' என்று நிஶ்சயித்து. இறுக்குவாதம் - வளைத்துக்கொள்ளும் வாதம். தண்கடல் இத்யாரப்ய, உழலாதார்-வல்வினை-மலைந்து – மோத-மண்கொளுலகிற் பிறப்பா ரித்யந்வய:. கழல்-வீரக்கழல். தடிதல் - கொல்லுதல். "ஏதத்வ்ரதம் மம", "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம்" இத்யாதி பூர்வமேவ லிகிதம். ஸுந்தரகாண்டே அஷ்டபஞ் சாஶே, "ததஸ்தாம் ஹ்ரீமதீ த்வாஶ்ரமாஹ தர்ஜிதாம் ஜயஹஷிதா । அவோசத்யதி தத்யதா பவேயம் ஶரணம் ஹி வ:". (௨)

---

* விசாரிக்கை-விசாரித்துச் செய்கை.

# மூன்றாம் பாட்டு.

மலையையெடுத்துக்கல்மாரிகாத்துப் பசுநிரைதன்னைத்
தொலைவுதவிர்த்தபிரானைச் சொல்லிச்சொல்லிநின்றெப்போதும்
தலையினோடாதனந்தட்டத் தடுகுட்டமாய்ப்பறவாதார்
அலைகொள்நரகத்தழுந்திக் கிடந்துழைக்கின்றவம்பரே.

ஆ.—(மலையை.)உபகாராநபிஜ்ஞபஶ்வாதிரக்ஷணைக போகத்வமாகிற மஹாகுணத்தையுடையனானவனை அநுஸந்தித்து அப்ரக்ருதிங்கதராகாதார் யாவர் சிலர், அவர்கள் ரௌரவாதி நரக யாதநையை அநுபவிக்கிறார்கிடீர் என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், உபகாரமறியாத பசுக்களுக்கும் தத்ப்ராயருக்கும் வந்த ஆபத்தை நீக்குகைக்காகக் கோவர்த்தநோத்தரணம் பண்ணியருளின இம்மஹாகுணத்தை அநுஸந்தித்துவைத்து அவிக்ருதராயிருக்கும் இருப்புக்கிடீர் நரகாநுபவமாவது என்கிறார்.

[தொலைவுதவிர்த்த பிரானை] - விநாஶத்தைத் தவிர்த்த மஹோபகாரகனை. [தலையென்று தொடங்கி]-கும்பிடுநட்டமும் குணலையும் இட்டு ஸம்ப்ராந்தராகாதார் து:கபஹுளமான நரகத்திலே நாடோறும் து:கப்படாநின்றுகொண்டு யமபடர்க்கு ஹாஸ்யதயா அபூர்வவத் லாலநீயரானவர்கள்.

ப.—அநந்தரம், ஆர்த்தங்களான கோக்களை ரக்ஷித்தபடியை அநுஸந்தித்து ஸம்ப்ராந்தராகாதார் நரகவாஸிகளாய் க்லேசிப்பர் என்கிறார்.

மலையை - கோவர்த்தநத்தை, எடுத்து - எடுத்து, கல்மாரி - (ஆராதநபங்கமடியாக இந்த்ரனால் வந்த) கல்மாரியை, காத்து-தகைந்து, பசுநிரைதன்னை - (அபேக்ஷிக்கவும் அறியாத) பசுத்திரளை, தொலைவு - விநாஶம், தவிர்த்த - (அனுகாதபடி) நீக்கின, பிரானை - உபகாரகனை, சொல்லிச்சொல்லி - பலகாலுஞ்சொல்லி, எப்போதும் - ஸர்வகாலமும், நின்று - ஓவாதே நின்று, ஆதனத்தோடு தலை தட்ட - தரையோடே தலை தட்டும்படியாக, தடுகுட்டமாய் - கீழது மேலாய், பறவாதார்-பறவாதார்,— அலைகொள் - அநேகது:கங்களையுடைத்தான, நரகத்து - மஹாநரகத்திலே, அழுந்தி - (கரையேறாதபடி) அழுந்தி, கிடந்து - கிடந்து, உழைக்கின்ற - க்லேசிக்கிற, வம்பர் - புதுமைமாறாதவர்கள்.

தொலைவு - நாஶம். ஆதனம் - நிலம். தடுகுட்டம் - கீழது மேலதாகை. வம்பர்-புதியராகை. 'துலைவு' என்றுமாம்.

இ.—மூன்றாம் பாட்டில், உபகாரமறியாத பசுக்களுக்கும் தத்ப்ராயர்களுக்கும் வந்த ஆபத்தை நீக்கின மஹாகுணத்தை அநுஸந்தித்து அவிக்ருதராயிருக்குமவர்கள் நித்யஸம்ஸாரிகளாய்ப் போவர்கள் என்கிறார்.

[மலையை இத்யாதி] - இந்த்ரன் பசிக்கோபத்தாலே கல்வருஷமாக வர்ஷிக்க,'நம்மாலே வந்ததிறே இது' என்று தாம் ரக்ஷகமாக அருளிச்செய்த மலையை எடுத்து ரக்ஷித்தபடி. அவனை அழியச்செய்ய வேண்டும் அபராதமுண்டாயிருக்க இயற்றியில்லாதாரைப்போலே மலையைத் தரித்துக்கொடு நிற்பான் என்? என்னில்,—அநுகூலனுக்குக் காதாசித்கமாக வந்ததாகையாலே அஸுரர்கள்திறத்தில் செய்யுமத்தைச் செய்யவொண்ணாது என்று இருந்தான். நீர்வர்ஷமாகில் கடலையெடுத்து ரக்ஷிக்குமாயிற்று. [பசுநிரை இத்யாதி] - உபகாரமறியாத பசுக்களுடைய விநாஶத்தைத் தவிர்த்த மஹோபகாரகனை. பிரானை - அது தமக்குஉபகரித்தது என்று இருக்கிறார்.

[சொல்லிச் சொல்லி] - "ஸக்ருத் ஸ்மரண மாத்ரேண ..." என்று ஒருகால் சொல்லிவிடுவது பலார்த்தமாகிலிறே. [எப்போதும்] - ராகப்ராப்தமானதுக்குக் காலநியதி இல்லையிறே. [தலை இத்யாதி] - தலை தரையிலே தட்டப் பண்ணும் அங்கவிகாரத்தை யுடையராய் ஸம்ப்ராந்தராகாதார். [அலைகொள் நரகம்] - து:கோர்மிபஹுலமான ஸம்ஸாரத்திலே புறப்பட விரகறியாதே க்லேசிக்கிற வம்பர். [வம்பரே] - யமபடர்க்கு அபூர்வவத் ஆதரணீயராகை. அப்பாபங்களுக்கு அபூர்வவத்லாலநீயரா யிருக்கை. பகவத்குணாநுபவத்திலே அவிக்ருதராயிருக்கும் இருப்புத்தானே நரகாநுபவம் என்றுமாம். புநரபி [மலையை இத்யாதி] - ஆஶ்ரிதருடைய ஆபத்தில் அரியனசெய்து ரக்ஷிக்குமவன். [பசுநிரை இத்யாதி] - ரக்ஷணத்துக்கு வேண்டுவது ஆபத்தும், விலக்காமையும். [பிரானை]- தென்றல் தண்ணீர் போலே பரார்த்தமாயிருக்குமவன். [சொல்லி இத்யாதி]-"ஸ்வாகூதோநாத:" என்கிறவன் இப்படி விக்ருதனுய் ரக்ஷிக்கிற மஹாகுணத்தை அநுஸந்தித்து அவிக்ருதராயிருக்குமவர்கள் நித்யஸம்ஸாரிகளாய்ப் போவர்கள். அவன் தன்னைத் தங்களுக்காக ஒக்கினால் அவனுக் காகத் தங்களை ஒக்காதார் அவஸ்துக்களென்கை. [தடுகுட்டம்] - குணலைக்கூத்து.

ஈடு.—மூன்றாம்பாட்டு. உபகாரமறியாத பசுக்களுக்கும் தத்ப்ராயர்க்கும் வந்த ஆபத்தை நீக்கின மஹாகுணத்தை அநுஸந்தித்து அவிக்ருதராயிருக்குமவர்கள் நித்யஸம்ஸாரிகளாய்ப்போவர்கள் என்கிறார்.

[மலையை இத்யாதி] - இந்த்ரனுக்கு ஆட்டைக்கு ஒருபோஜநமாயிற்று இடையர் இடுவது; அவனுக்கு விருந்திடுகைக்கு இவர்கள் பாரிக்கிறபடியைக் கண்டு, 'நீங்கள்செய்கிற இது என்னென்பது?' என்றுகேட்க, 'வர்ஷார்த்தமாக இந்த்ரனுக்குச் சோறிடுகையாயிருக்கும்' என்ன, 'தான் பிறந்துவளருகிற ஊரில் ஒரு த்ரவ்யத்தை ஒருதேவதாந்தரம் கொள்ளுகையாகிற இது மஹிஷீஸ்வேதம் பிறராதானவோபாதி' என்று பார்த்து, 'அவ்வாகாசவாயனுக்கோ இடுவது? நமக்கும் மழைக்கும் காற்றுக்கும் இடந்தந்து பசுக்களுக்கும் புகலாய்ப் புல்லுந்தண்ணீருமுண்டாயிருக்கிற இம்மலைக் கன்றே இடுவது?' என்று அருளிச்செய்ய, இடையராகையாலே 'அப்படியேசெய்வோம்' என்று அவர்களும் இசைந்து துன்னுசகடத்தால் புக்க பெருஞ்சோற்றை அம்மலையோடொக்கக் குவித்தார்கள்; அத்தையடைய, அப்படியேயிருப்பதொரு வடிவைக் கொண்டு "கோவர்த்தநோஸ்மி" (கோவர்த்தநோஸ்மி) என்று அமுதுசெய்துவிட்டான்; உண்ண இருந்தவன் உண்ணப்பெறாமையாலும் பசிக்கோவத்தாலுமாகக் கல்வர்ஷத்தை வர்ஷிக்க, மலையையெடுத்துக்கல்மாரிகாத்து-"ரக்ஷகம்"(ரக்ஷகம்)என்றுசொன்ன மலைதன்னை யெடுத்து ரக்ஷித்தான். வினைமுடுகினால் எதிரியுடையஆயுதந்தன்னைக் கொண்டு அவரை வெல்லுவர்களிறே வீரராயிருப்பார்; அப்படியே முன்னேநின்ற கல்லை யெடுத்துக்

---

மூன்றாம்பாட்டு – 'மலையை' இத்யாதி. 'பசுநிரைதன்னைத் தொலைவுதவிர்த்த பிரானை, தடுகுட்டமாய்ப் பறவாதார் அலைகொள்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை – 'உபகாரமறியாத' இத்யாதி. தத்ப்ராயர் – இடையர் முதலானோர்.

பத அவதாரிகை – 'இந்த்ரனுக்கு' இத்யாதி. ஆட்டைக்கு – ஸம்வத்ஸரத்துக்கு. என்னென்பது – என்ன வித்யர்த்த:. அவர்கள் இந்த்ரனுக்குச் சோறிட்டால் விலக்குவானென்? என்ன,'தான்பிறந்து' இத்யாதி. மஹிஷீஸ்வேதம் - மஹிஷீபோகம் விவக்ஷிதம். 'ஆகாசவாயன்' என்றது – ஆகாசத்தை இருப்பிடமாகவுடையவ னென்று ஸ்வஹாவார்த்தம்; இருப்பிடமில்லாதவ னென்று த்வநி. 'துன்னுசகடத்தால்' இதி – பெரியதிருமடல். நெருங்கின சகடத்தாலே கொண்டுபோன பெருஞ்சோற்றை இத்யர்த்த:. ஸங்கல்பத்தாலே ரக்ஷியாமல் மலையையெடுத்து ரக்ஷிப்பானென்? என்ன, இரண்டுவிதமாக உத்தரம் அருளிச்செய்கிறார் – 'ரக்ஷகமென்று' இத்யாதி வாக்யத்ரயேண. 'வினைமுடுகினால்' –யுத்தத்தில் கார்யம் கிட்டிவந்தால். முன்னேநின்ற கல்லை யெடுத்து –

கல்மாரியைக் காத்தான். அவன் பண்ணின அபகாரத்துக்குத் தோளைக் கழிக்கவேண்டியிருக்க, 'பாவி, பசிக்கோவத்தாலே செய்தானாகில் செய்வதேன்? ஆஸுரப்ரக்ருதிகள்பக்கல் செய்யுமத்தை இவனோடு செய்யவொண்ணாது; தானே கையோய்ந்துபோகிறான்' என்று, அவனால்வந்த நலிவைக் கணக்கிட்டு ஏழுநாள் ஒருபடிப்பட மலையை யெடுத்துக்கொண்டு நின்றானாயிற்று. [கல்மாரிகாத்த] - நீராலேவர்ஷித்தானாகில் கடலையெடுத்துக் காக்கு மித்தனை காணும். [பசுநிரைதன்னை] - ஆனையையும் ஸம்ஸாரிகளையும் ரக்ஷித்தது தான் நித்யஸூரிகளை ரக்ஷித்தவோபாதியாம்படியிறே இடையருடையவும் பசுக்களுடையவும் நிலை. 'பசுநிரைதன்னைத்தொலைவுதவிர்த்த' என்பானேன்? என்னில்;—ரக்ஷித்தவர்களில் ப்ரதாநரைச் சொல்லவேணுமே, பண்ணின உபகாரத்தை யறிந்திருப்பாரைச் சொல்லவேணுமே; இடையரிளிம்பு கண்டால் சிரிப்பன பசுக்களிறே. "க்ருதாநுகாராநிவகோபிராஜவே" (க்ருதாநுகாராநிவகோபிரார்ஜவே) என்கிறபடியே. [தொலைவுதவிர்த்த] - பசுக்களும் இடையரும் மாளாதபடி ரக்ஷித்த. [பிரானை] - அன்று அம்மழையிலும் காற்றிலும் அடியுண்டாரும் தாமாய், உதவிற்றும் தமக்காக வென்றிருக்கிறார். [சொல்லிச்சொல்லி] - ஒருப்ரயோஜநத்துக்காகச் சொல்லிலிறே ஸக்ருதுச்சாரணம் அமைவது. [நின்று] - ஒருகால் சொல்லிவிடுகையுமன்றிக்கே, ஒருகாலத்திலே பலகால்சொல்லிவிடுகையு மன்றிக்கே. [எப்போதும்]-ஆள்கண்டபோதாகவன்றிக்கே ஸர்வகாலமும். [தலையினோடு ஆதனம் தட்ட] - தலை தரையிலே தட்டும்படி. [தடுகுட்டமாய்ப் பறவாதார்] - தடுகுட்டமாவது - குணலை. அதாவது - அடைவுகேடப்பண்ணும் விகாரம். கால் தரையில் பாவாதபடி யாடாதார். [அலைகொள் இத்யாதி] - து:கோர்மிபரம்பரைகளையுடைத்தான நரகத்திலே தரைகாணவொண்ணாதபடியாக அழுந்தி க்லேசப்படுகிற. [வம்பர்]- என்றுமொக்க யமபடர்க்குப் புதியராவர். வம்பு - புதுமை. முனநாள் நலிந்தால், பிற்றைநாள் வந்துதோற்றினால், "முனநாள் நாம் நலிந்தவன்" என்று க்ருபைபண்ணாதே, மோம்பழம்பெற்றாற்

---

முன்னேதோற்றின தொரு மலையை யெடுத்து. இந்த்ரனை நிரஸியாதொழிவானென்? என்ன, 'அவன்பண்ணின' இத்யாதி. 'ஆஸுரப்ரக்ருதிகள்' என்றது - கீழிற்பாட்டைக் கடாக்ஷித்து. பதச்சேர்த்தியால் பலித்த அர்த்தம்-'நீராலே' இத்யாதி. இது பட்டர் அருளிச்செய்த ரஸோக்தி. 'கீழிற்பாட்டுக்களைப் பற்ற, இப்பாட்டுக்கு வாசியென்?' என்ன, 'ஆனையையும்' இத்யாதி. பசுநிரையைச் சொன்னது - இடையருக்கும் உபலக்ஷணம். ஶங்கதே - 'பசுநிரை' இத்யாதி. ப்ரதாநரான இடையரைச் சொல்லாதே, பசுநிரைதன்னைத் தொலைவுதவிர்த்த என்பானென்? என்னில் என்று ஶங்காபிப்ராயம். இடையரைப்பற்றப் பசுக்களுக்கு விலக்காமையுண்டாகையாலே ப்ரதாந மென்றபடி. பரிஹாராந்தரம் - 'பண்ணின' இத்யாதி. யத்வா, ப்ராதாந்யமேது? என்ன, 'பண்ணின' இத்யாதி என்னுதல். பசுக்களுக்கு அப்படி ஜ்ஞாநமுண்டோ? என்ன, - 'இடையரிளிம்பு' இத்யாதி. இளிம்பு - அசாதுர்யம். பசுக்கள் இடையரைச் சிரிக்குமென்னுமிடத்தில் ப்ரமாணம் - 'க்ருதாநுகாராந்' இத்யாதி. கிராதார்ஜுநீயே சதுர்த்தே, "மதாநுஶூந்நாம்ஸஹஜநவநாம்ஹாஸ்யம்வெ ஶவநெஷ்வஹுதை: உஜ்ஸுவொவாநவயெநவாணவ:க்ருதாநுகாராநிவகொஹிராஜவெ", ஆர்ஜவே - அகௌடில்யே. அநுகார:-ஹாஸ:. தொலைவு - விநாசம். ஸாமாந்யமாக, 'பிரான்' என்றதுக்கு பாவம்-'அன்று அம்மழையிலும்' இத்யாதி. "ஸக்ருதுச்சரிதம்யேந" என்றிருக்க, 'சொல்லிச்சொல்லி' என்கிறதென்? என்ன, 'ஒருப்ரயோஜந' இத்யாதி. 'நின்று' என்றதுக்கு பாவம் - 'ஒருகால்' இத்யாதி. இத்தால், 'சொல்லிச்சொல்லி' என்றத்தோடே புநருக்தி பரிஹரித்தாராயிற்று. சொல்லிச்சொல்லி - பலகாலும்சொல்லி. நின்று - ஸர்வகாலமும் ஓவாதே நின்று. 'எப்போதும்' என்றத்தால் வ்யாவ்ருத்தி - 'ஆள்கண்டபோது' இத்யாதி. தலையினோடாதனந்தட்ட - ஆதனத்தோடு தலைதட்ட வென்றபடி. ஆதனம் - ஆஸநம், தரை யென்றபடி. நரகத்துக்கு அலைக ளேது? என்ன, 'து:கோர்மி' இத்யாதி. 'வம்பர்' என்றதுக்கு அர்த்தம் - 'என்றுமொக்க' இத்யாதி. புதியராம் ப்ரகாரங் காட்டுகிறார் - 'முனநாள்' இத்யாதி. மோம்பழம் - மோக்கிற பழம்: ஸௌரப்யாதிஶயத்தாலே மோந்துகொண்டே யிருக்கவேண்டும் பழம்: அத்யந்தாபிமதபல மென்றபடி. இவ்வளவிலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எழுந்தருள, அவர்க்காக விஶேஷார்த்தங்களைக் கூட்டிக்

போலே, "வாரீரோ! உம்மையன்றே தேடித் திரிகிறது'என்னும்படியாவர். புநரபி, [மலையையெடுத்துக் கல்மாரிகாத்து]-ஆஶ்ரிதார்த்தமான ப்ரவ்ருத்தியாமித்தனையே வேண்டுவது, அரியனசெய்தாலும் எளியதாய்த் தோற்றும். [பசுநிரைதன்னை] - அரியனசெய்து ரக்ஷிக்கைக்குப் பண்ணும் ரக்ஷணத்தை விலக்காதொழியுமத்தனையே வேண்டுவது; இத்தலையில் தரமில்லை யென்கிறது. [பிரானை]- நிலவு தென்றல் சந்தநம் தண்ணீர்போலே பரார்த்தமாயாயிற்று வஸ்து இருப்பது. [சொல்லி இத்யாதி]-"அவாக்யநாதர:" (அவாக்யநாதர:) என்றிருக்கக்கடவ தத்த்வம் "அலவலைவந்தப்பூச்சி காட்டுகின்றான்" என்னும்படி அலவலையாயத் தன்னைத் தங்களுக்காக ஓக்கிவைத்தால், தங்கள் வாய்கொண்டு மானிடம்பாடாதே, "என்தஞ்சனே - நஞ்சனே - வஞ்சனே என்னும் எப்போதும் என்வாசகம்" என்கிறபடியே 'வாய்படைத்த ப்ரயோஜநம் பெற்றோம்' என்று ஏத்தாதார். [அலைகொள் இத்யாதி] - இந்நரகத்திலே போய்ப் புகுவர்க ளென்கிறார். தடுகுட்டமாய்ப் பறவாமை தானே நரக மென்கிறார். "யஸ்த்வயாஸஹ ஸஸ்வர்கோ நிரயோ யஸ்த்வயாவிநா" (யஸ்த்வயாஸஹஸ ஸ்வர்க்கோநிரயோயஸ்த்வயாவிநா) ஸ்வர்க்கநரகங்கள்தான் வ்யக்திகள்தோறும் வ்யவஸ்திதமாயிறே இருப்பது. தமக்கு இருந்தபடியாலே சொல்லுகிறார். (௩)

## நான்காம் பாட்டு.

வம்பவிழ்கோதைபொருட்டா மால்விடையேழுமடர்த்த
செம்பவளத்திரள்வாயன் சிரீதரன்தொல்புகழ்பாடிக்
கும்பிடுநட்டமிட்டாடிக் கோகுகட்டுண்டுழலாதார்
தம்பிறப்பாற்பயனென்னே சாதுசனங்களிடையே.

*ஆ.—(வம்பவிழ்.) சிரீதரனுகையாலே நப்பின்னைப்பிராட்டியோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காக எருதேழடர்க்கப் பெற்றதினு லுள்ள ப்ரீத்யதிஶயத்தினாலே புகுக்கணித்த திருப்பவளத்தை யுடையவனுடைய இந்த ப்ரணயித்வாதி குணாநுஸந்தாந ஜநித ப்ரீத்யதிஶயத்தாலே அப்ரக்ருதிங்கதராகாதார் பகவதேகபோகரான ஸ்ரீவைஷ்ணவர்கள் நடுவே என்ன ப்ரயோஜநத்துக்காகப் பிறந்தார்கள்? என்கிறார்.*

---

*கொண்டு மீளவும் அருளிச்செய்கிறார் - 'மலையையெடுத்து' இத்யாதி. அரியன - துஷ்கரங்கள். எளியதாயென்றது - சுமந்தென்னுதே 'எடுத்து' என்றதின் தாத்பர்யம். 'பசுநிரை' என்றத்தால் பலித்த தாத்பர்யம் - 'அரியனசெய்து' இத்யாதி. விலக்காதொழியும் - நிஷேதியாதொழியும். தரம் - அதிசயம். 'பிரான்' என்று இத்தை அவனுக்கு நிரூபகமாகச் சொன்னத்தால் பலித்த ஹாவம் - 'நிலவு தென்றல்' இத்யாதி. 'மலையையெடுத்து' இத்யாதியால் பலித்த பகவதாஶ்ரிதபாரதந்த்ர்யத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, 'சொல்லிச் சொல்லிநின்றெப்போதும்' இத்யாதி பதபலிதம்ஹாவமாஹ-'அவாக்யநாதர:' இத்யாதி. அவாகீ-உக்திரஹித:. அநாதர: ஆதரரஹித:. அலவலை - பஹுஜல்பாக:. ஓக்கி - ஆக்கி. மானிடம்பாடாதே - மநுஷ்யரை ஸ்துதியாதே. 'நரகம்' என்றதுக்கு, கீழ்ச்சொன்னபடியன்றிக்கே அர்த்தாந்தரம் - 'இந்நரகத்திலே' இத்யாதி. விவரணம் - 'தடுகுட்டமாய்' இத்யாதி. யமன்தண்டலன்றோ - நரகம்: இது நரகமோ? என்ன,—'யஸ்த்வயா' இத்யாதி "உத்திஷ்ட நந்த்ராம் விஹரஸ்வ ஸஹ" இத்யுத்தரார்த்தம். அயோத்யாகாண்டே த்ரிம்ஶே ராமம் ப்ரதிஸீதா. ப்ரமாணநுக்ராஹகோபபத்திமாஹ-'ஸ்வர்க்கநரக' இத்யாதி. எல்லார்க்கும்இப்படியிருக்கவில்லையே என்ன, 'தமக்கு'இத்யாதி. கல்மாரிகாத்து-கல்வர்ஷத்தைத் தகைந்துரக்ஷித்து. பசுநிரைதன்னை,ஐகாரம்- நிரர்த்தகாவ்யயம்; பசுநிரைதன்னுடைய. தொலைவு தவிர்த்த - விநாசத்தைப் போக்கின. 'பசுத்திரளை விநாசமணுகாதபடி நீக்கின' என்று உரையி லர்த்தம். 'தடுகுட்டம் - கீழதுமேலதாகை' என்றும் உரை. நாகத்து அழுந்திக்கிடந்து - நரகத்திலே அழுந்திக்கிடந்து. உழைக்கின்ற - க்லேசிக்கிற, வம்பர் - புதியர். க்ரமேண அந்வய:* (௩)

ஒ.—நாலாம்பாட்டில், நப்பின்னைப்பிராட்டிக்காக எருதேழடர்த்து அவளோடே ஸம்ஸ்லேஷித்த ப்ரணயித்வகுணத்தை அநுஸந்தித்து ஈடுபடாதவர்கள் வைஷ்ணவர்நடுவே என் செய்யப் பிறந்தார்? என்கிறார்.

[வம்பு அவிழ் என்று தொடங்கி]-நறுநாற்றம் புறப்படாநின்றுள்ள பூமாலையையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காகப் பெரிய விடையேழையும் ஊட்டியாக நெருக்கி அவை பாத்தம்போராமே முறுவல்செய்கையாலே சிவந்து தோன்றின திருப்பவளத்தையுடையனாய் இத்தாலே பிறந்த வீரஸ்ரீயையுமுடையனான க்ருஷ்ணனுடைய ப்ரணயித்வகுணத்தை ப்ரீத்யா சொல்லி. [கும்பிடுநட்டம் என்று தொடங்கி]-ஹர்ஷப்ரகர்ஷத்தாலே கும்பிடுநட்டமிட்டுக் கூத்தாடி அமர்யாதமான ப்ரவ்ருத்திகள் மிக்கு இதுவே போக்யமாய் வர்த்தியாதார்.

ப.—அநந்தரம், அபிமதவிரோதிநிவ்ருத்தியால் வந்த ப்ரணயித்வத்திலே விக்ருதராகாதார்ஜந்மத்தாலே ப்ரயோஜந மென்? என்கிறார்.

வம்பு - செவ்வியையுடைத்தாய், அவிழ் - மலர்ந்த, கோதை பொருட்டா - மாலையையுடையளான நப்பின்னைப்பிராட்டியைக் கிட்டுகையாகிற புருஷார்த்தமே ஹேதுவாக, மால் - மிகவும் பெரியதான, விடை ஏழும் - எருது ஏழையும், அடர்த்த - நெரித்துக்கொன்ற அத்தாலே, செம்பவளம் - சிவந்த பவளம்போலே, திரள் - திரண்ட, வாயன் - அதரத்தின் ஸ்புரத்தையையுடையனாய்க் கொண்டு, சிரீதரன் - (வீரஸ்ரீயோடே நின்ற) க்ருஷ்ணனுடைய, தொல் - ஸ்வாபாவிகமான, புகழ் - குணத்தை, பாடி - பாடி, கும்பிடு நட்டமிட்டாடி - தலைகீழாகக் கூத்தாடி, கோகு உகட்டு உண்டு - அக்ரமமான ஆரவாரத்தைச் செய்து, உழலாதார்தம் - திரியாதார் தங்களுடைய, பிறப்பால்-ஜந்மத்தால், சாதுசனங்கள் - ஸாத்விகஸங்கத்தின், இடையே-நடுவே, என் பயன் - என்ன ப்ரயோஜந முண்டு? கோகுகட்டுண்கை - ஆரவாரங்கொட்டுகை. 'கோகு கொட்டு' என்றும் பாடம்.

இ.—நாலாம்பாட்டில், நப்பின்னைப்பிராட்டிக்காக எருதேழடர்த்த ப்ரணயித்வகுணத்துக்கு ஈடுபடாதவர்கள் ஸாத்விகர்நடுவே என்ன ப்ரயோஜநத்துக்காகப் பிறந்தார்கள்? என்கிறார்.

[வம்பு அவிழ் இத்யாதி] - வம்பு - பரிமளம், அவிழ்கை - அத்தைப்புறப்படவிடுகை, கோதை - மாலை, பொருட்டா-அவ்வொப்பனையழகுக்குத்தோற்று; "தவாஸ்மி" என்ற படி.[மால் விடை]-எருதுகளின் பெருமை கணிசிக்கவொண்ணாதே பிற்காலிக்கவேண்டும்படியிருக்கை. [ஏழுமடர்த்த] - அவளையணைக்கையில் த்வரையாலே க்ரமத்தாலன்றிக்கே ஏழையும் ஒருகாலே ஊட்டியாக நெரித்தபடி. [செம்பவளம் இத்யாதி] - இவளை அணையப்பெறுகையிலுண்டான ஹர்ஷத்தாலே ஸ்மிதம்பண்ணினன். எருதுகள் தனக்கு இரைபோராமையாலே ஸ்மிதம் என்றுமாம். பவளத்திரள்போல் சிவந்து தோற்றின திருப்பவளத்தையுடையவன். [சிரீதரன்] - எருதுகளை நிரஸித்து வீரலக்ஷ்மியோடே நின்ற நிலை. "ஹதபூர்வம்வபரிஷ்வஜே" என்று அவள்தான் வந்து அணைக்கவேண்டும்படி நின்ற நிலை. [தொல்புகழ்]-ஸ்வரூபாநுபந்தியான ப்ரணயித்வ குணத்தை. [பாடி]-அந்தஃபுரத்திலுள்ளாரைப்போலே பாடி; கும்பிடு நட்டமிட்டுக் கூத்தாடி. [கோகுகட்டு] - கோகு - அடைவுகேடு. உகட்டு - தலைமண்டையிட்டு. [உண்டு] - இதுவே ஜீவநமாகை. [உழலாதார்] - அதுவே யாத்ரையாக இராதார். [தம்பிறப்பால் இத்யாதி] - பகவத்குணங்களிலே விக்ருதராய் வர்த்திக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் நடுவே பிறந்த இத்தால் பெற்ற ப்ரயோஜநம் என்? பிள்ளைப்பிள்ளையாழ்வான் வார்த்தை.

ஈடு.—நாலாம்பாட்டு. நப்பின்னைப் பிராட்டிக்காக எருதேழடர்த்து அவளோடே ஸம்ஶ்லேஷித்த ப்ரணயித்வகுணத்தை அநுஸந்தித்து ஈடுபடாதவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள்நடுவே என்ன ப்ரயோஜநத்துக்காகப் பிறந்தார்கள்? என்கிறார்.

[வம்பு அவிழ் கோதைபொருட்டா] - வம்பென்று - பரிமளம். அவிழ்கையாவது - அது ப்ரவஹிக்கையாய், கோதையென்று - மாலையாய், அத்தையிட்டு மயிர்முடியை லக்ஷிக்கிறது. நறு நாற்றம் கமழாநின்றுள்ள மாலையையுடைய ளென்றபடி. நப்பின்னைப்பிராட்டியை ஒப்பித்து நிறுத்தினார்களாயிற்று, 'இந்த ருஷபங்களை வென்றார்க்கு இவளைக் கொடுக்கக்கடவோம்' என்று; ஒப்பனை யழகையும் மயிர்முடியையுங் கண்டவாறே தன்னைப்பேணாதே "தவாஸ்மி"(தவாஸ்மி) என்று அவளுக்காகத் தன்னை யொக்கினான். [மால்விடை] - பெரியருஷபங்கள். வடிவில் பெருமைதன்னைக் கண்டபோதே பிற்காலிக்கும்படியாயிற்று இருப்பது. [ஏழும்] - "ஶ்ரேயாம்ஸி பஹுவிக்நாநி" (ஶ்ரேயாம்ஸிபஹுவிக்நாநி) என்று சொல்லுகிறபடியே, ஒன்றிரண்டன்றிக்கே ஏழு விரோதிகளிறே. [அடர்த்த] - அநந்தரம் அணையப்புகுகிறது அவள்தோளை யாகையாலே க்ரமப்ராப்தி பற்றாமே ஒருகாலே ஊட்டியாக நெரித்தானாயிற்று. [செம்பவளத்திரள்வாயன்] - அபிமதவிரோதி போகையாலே ஸ்மிதம்பண்ணினபடி. அன்றிக்கே, அவை திருத்தோளுக்கு இரைபோராமையாலே ஸ்மிதம்பண்ணிநின்றபடி யென்றுமாம். [சிரீதரன்] - இவ்விடையேழையும் வென்று வீரலக்ஷ்மியோடே நின்ற நிலை. "பர்த்தாரம் பரிஷஸ்வஜே" (பர்த்தாரம்பரிஷஸ்வஜே) என்று அவளணைக்கும்படியாக நின்ற நிலை. [த்ருஷ்ட்வா] (தந்த்ருஷ்ட்வா) - ப்ரணயதாரையில் ரஸிகத்வமேயாயிற்று முன்புகண்டுபோந்தது, "அந்தப்போகத்துக்கு விரோதிகளானவற்றைப் போக்கவல்லர்" என்று கண்டது இன்றாயிற்று. வேட்டைக்குப்போனால், 'இன்ன துஷ்டம்ருகத்தைக் கொன்றார், இன்ன ராக்ஷஸனைக் கொன்றார்' என்று கூடப்போனவர்கள் சொல்லக் கேட்குமத்தனை முன்பு; அவ்வளவன்றிக்கே, கண்ணாலேகண்டது இன்றாயிற்று. [ஶத்ருஹந்தாரம்] (ஶத்ருஹந்தாரம்) - தம்திரு

---

நாலாம்பாட்டு - 'வம்பவிழ்' இத்யாதி. பாட்டெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - 'நப்பின்னை' இத்யாதி.

'லக்ஷிக்கிறது' இதி-அஜஹத்ஸ்வார்த்தலக்ஷணாஅத்ர விவக்ஷிதா. பலிதார்த்தம்-'நறுநாற்றம்' இத்யாதி. நறுநாற்றம் கமழாநின்றுள்ள மாலையையுடைய மயிர்முடியையுடையவளுக்காக வென்று அர்த்தம். 'பொருட்டா' என்ற தாதர்த்யே சதுர்த்திக்கு அர்த்தம் - 'நப்பின்னைப்பிராட்டியை' இத்யாதி. நறுநாற்றம் - ஶ்லாக்யபரிமளம். ஒக்கினான் - ஆக்கினான். மால் - பெருமை. இதின்தாத்பர்யம் - 'வடிவில்' இத்யாதி. ஸங்க்யாதாத்பர்யம் - 'ஶ்ரேயாம்ஸி' இத்யாதி. ஊட்டி - கழுத்து. ஊட்டியாக நெரித்தான் - கழுத்துக்களைப் பிடித்து நெரித்தான். 'செம்பவளம்' இத்யாதி—சிவந்தபவளம் திரண்டாற்போலே யிருக்கிற திருப்பவளத்தையுடையவன் இதிவா, பவளத்திரள்போலே சிவந்த வாயையுடையவன் இதிவா ஶப்தார்த்தஃ. 'சிரீதரன்' என்றதுக்கு - வீரலக்ஷ்மியோடே நின்ற நிலையாதல், ஸாக்ஷாத் பிராட்டியோட்டைச் சேர்த்தியாக விவக்ஷித்து, "பர்த்தாரம் பரிஷஸ்வஜே" இத்யாதிப்படியே பிராட்டி அணைக்கும்படியாக நின்ற நிலையாதலென்று விவக்ஷித்து, அர்த்தத்வயத்தையும் க்ரமேண ஆஹ - 'இவ்விடையேழையும்' இத்யாதி வாக்யத்வயேந. 'பர்த்தாரம்' இத்யாதி - இது நப்பின்னைப்பிராட்டி அணைத்ததுக்கும் உபலக்ஷணம். "தம் த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் । பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே" இத்யாரண்ய காண்டே த்ரிம்ஶே. 'தம்' என்றதுக்கு பாவம் - 'ப்ரணய' இத்யாதி. தச்சப்தம் - "ராகவோ வீதபயா ஸாயம் விஜஹாரவஹூந்ருதூந்" இத்யாதிகளில் உக்தமான ஆகாரபராமர்ஶீத்யபிப்ராயஃ. இப்போது ஶத்ருஹந்தாவாகக் கண்டதா ளாகையாலே - முன்பு ஆகாராந்தரம் கண்டிருப்ப ளென்னுமிடம் ஸித்தமிறே; ததாஹ - 'ப்ரணய' இத்யாதி ஆதல். "த்ருஷ்ட்வா" என்றதுக்கு பாவம் - 'வேட்டைக்கு' இத்யாதி. "ஸவ்யம் வாக்யம் ஸாவதாரணம்" இதி ந்யாயம் ஹ்ருதிநிதாயாஹ - 'தம்திருமேனியில் ஒருவாட்டம்

மேனியில் ஒருவாட்டம் வாராமே எதிரிகளே நோவுபடும்படியாக. அம்போடே வேட்டோடே போகாமே எதிரிகளை முதலற மாய்த்து வந்தவரை. [மஹர்ஷீணாம் ஸுகாவஹம்] (மஹர்ஷீணும் ஸுகாவஹம்) - பார்யைபக்கல் முகம்பெறுகைக்கு ப்ரஜையை யெடுத்துக்கோண்டுபோவாரைப் போலே; ருஷிகளுக்கு விரோதிகளான ராக்ஷஸரைக் கோன்று, பிராட்டியை அணைக்கைக்கு அது பச்சையாக வந்தார். [பபூவ] (பபூவ) - ராக்ஷஸருடைய க்ரௌர்யத்தையும் பெருமாள் ஸௌகுமார்யத்தையும் அநுஸந்தித்து, 'என்புகுருகிறதோ?' என்று 'ஸத்தையில்லை' என்னும்படி யிருந்தவள், வேற்றியோடே கண்டு உளளானாள். [ஹ்ருஷ்டா] (ஹ்ருஷ்டா) - தர்மியுண்டானால் தர் மங்களும் உண்டாமிறே. [வைதேஹீ] (வைதேஹீ) - வீரவாசியறியுங் குடியிலே பிறந்தவ ளேன்னுதல்; அன்றிக்கே, 'ஒருவில்லை முறிக்க என்னைக்கோடுத்த எங்கள்ஐயர், தனியேநின்று பதி னலாயிரம் ராக்ஷஸரைக் கோன்ற வீரவாசியைக் கண்டாராகில் என்படவேரோ?' என்று அவரை நினைத்தாளாகவுமாம். [பர்த்தாரம்] (பர்த்தாரம்) - "தாராः பித்ருக்ருதாः"(தாராःபித்ருக்ருதாः) போலே, 'ஐயர் நீர்வார்த்துக்கோடுத்தவர்' என்று விரும்பிப்போந்தாள் முன்பு; இப்போதாயிற்று 'ஆண் பிள்ளை' என்று அணைத்தது; "ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்" (ஸ்த்ரியம்புருஷவிக்ரஹம்) என்ற வளிறே. [பரிஷஸ்வஜே] (பரிஷஸ்வஜே) - யுத்தவடு உள்ளவிடமேங்கும் திருமுலைத்தடத்தாலே வேதுகோண்டாள். அப்படியே அவள் அணைக்க நின்ற படி. [தோல்புகழ்] - ஸ்வரூபாநுபந்தி யான ப்ரணயித்வகுணத்தைப் பாடி; அந்தःபுரபரிகரத்திலுள்ளாரைப்போலே; "மங்கையும் பல் லாண்டு" என்பர்களிறே. [கும்பிடு இத்யாதி] - வணங்குவது ஆடுவது. அஞ்சலியுடன் ஆடவுமாம். [கோது உகட்டு]-அடைவுகேடு தலைமண்டையிட்டு. [உண்டு] - அதுவே ஜீவநமாய். [உழலாதார்]- இதுவே யாத்ரையாக நடத்தாதார். [தம்பிறப்பால் இத்யாதி] - கும்பிடுநட்டமிட்டாடிக் கோது

---

வாராமே எதிரிகளே நோவுபடும்படி' இதி. வாட்டம் - நலிவு. "ஹந்தாரம்" என்றதின் அர்த்தம் - 'அம் போடே' இத்யாதி. 'ஶத்ருஹந்தாரம்' இத்யாதி விசேஷணத்வயம் - பரிஷ்வங்கே ஹேதுகர்ப்பம்; தத்ராபி, மஹர்ஷீணும் ஸுகாவஹத்வமேவ ப்ராதாநமிதி தர்ஶயதி - 'பார்யைபக்கல்' இத்யாதி. பச்சை - உபஹாரம். பபூவ - "ஸேஸத்தாயாம்" இதி தாத்வர்த்தே ஹ்ருதயம். வெற்றி - ஜயம். இப்போது ஸத்தைபெற்று ளென்கையாலே - முன்பு ஸத்தையின்றிக்கே யிருந்தமை வித்தம். அத்தை ஹேதுபூர்வகமாக அருளிச்செய் கிறார், 'ராக்ஷஸருடைய' இத்யாதி. தர்மிஇதி - "ஹ்ருஷ்டா பபூவ" என்று இவர்க்கு விவக்ஷிதம். விதேஹராஜகுலோத்பவாத்வா, ததாநீம் விதேஹராஜஸ்மரணயோகாத்வா - வைதேஹீதிப்ரயுக்தவாந் வால்மீகி ரிதி பாவः. பிபர்த்தீதி - பர்த்தா என்றத்தைப் பற்ற, 'இப்போதாயிற்று' இத்யாதி. முன்பு அணைக்கவில்லை யோ? என்ன 'ஸ்த்ரியம்' இத்யாதி. ஆண்பிள்ளை - பும்ஸ்த்வகார்யவாந்: பாலகாண்டே சரமஸர்க்கே, "ப்ரியா து ஸீதா ராமஸ்ய தாராः பித்ருக்ருதா இதி । குணாத்ரூபகுணாச்சாபி ப்ரீதிர்பூயோ வ்யவர்த்தத". அயோத்யாகாண்டே த்ரிம்ஶே ராமம்ப்ரதி ஸீதா. "கிம் த்வாமந்யத வைதேஹः பிதா மே மிதிலாதிபः । ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்." "பரிஷஸ்வஜே" என்றத்தைப் பற்ற, 'யுத்தவடு' இத்யாதி. வேதுகோண்டாள் - காய்ச்சியொ த்தினள். "ஶீதகாலே யதா த்வக்ஷ்ணா த்வக்ஷ்ணா காலேऽதிஶீதலே । க்ஷிப்ரோஷ்ணகம் வஹ்நிர்யதா ஸ்த்ரீ க்ஷாமயாமாஸ தயா" என்னக்கடவதிறே. 'சிரீதரன் தொல்புகழ் பாடி' என்று கூட்டி பாவம் - 'ஸ்வரூபாநுபந்தி' இத்யாதி. உள்ளாரைப்போலே - ப்ரணயித்வகுணத்தைப் பாடி என்று அந்வயம். அந்தःபுரபரிகரத்திலுள்ளார் அப்படி பாடியாடின இட முண்டோ? என்ன, 'மங்கையும்' இத்யாதி. கும் பிடுகை - ஸாஷ்டாங்கப்ரணாமः, கேவலாஞ்சலி மாத்ரம் வா இத்யர்த்தத்வயம் - 'வணங்குவது'இத்யாதி. கும்பிடு வது. நட்டமிட்டாடுவதென்னுதல்; கும்பிடுடனே நட்டமிட்டாடுவதென்னுதல் இத்யர்த்தத்வயம். நட்டம் -ந்ருத்த விஶேஷம். ந்ருத்தவிசேஷத்தையிட்டாடி-கூத்தாடி யென்றபடி. கோகு - அடைவுகேடு. உகட்டு - தலைமண்டையி

கட்டுண்டுழலுகிறவர்கள் நடுவே இவர்கள்பிறந்த இத்தால் தாங்கள் கொண்ட ப்ரயோஜநமேன்? வைஷ்ணவர்கள்நடுவே இவர்கள் ஶரீரபரிக்ரஹம்பண்ணிற்று என்ன ப்ரயோஜநத்துக்காக? 'திருப்புன்னைக்கீழ் ஒருவர் இருக்குமிடத்திலே நம்முதலிகள் பத்துப்பேர் கூட நெருக்கிக்கொண்டிருக்கச் செய்தே, க்ராமணிகள், மயிரேழுந்த பிசல்களும் பெரியவடிவுகளும் மேலேசுற்றின இரட்டைகளுமாய் இடையிலே புகுந்து நெருக்குமாபோலே காண்' என்று பிள்ளைப்பிள்ளை. (௪)

## ஐந்தாம் பாட்டு.

சாதுசனத்தைநலியும் கஞ்சனைச்சாதிப்பதற்கு
ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப்பிறந்த
வேதமுதல்வனைப்பாடி வீதிகள்தோறும்துள்ளாதார்
ஓதியுணர்ந்தவர்முன்னு என்சவிப்பார்மனிசரே?

ஆ.—(சாது.) ஸர்வவேதங்களாலும் ஸர்வேஶ்வரத்வேந ப்ரதிபாத்யமாநனாயிருந்து வைத்து ஆஶ்ரிதஜநவிரோதி கம்ஸாத்யஸுரநிரஸநார்த்தமாக ஸ்வாஸாதாரண திவ்யரூபவிஶிஷ்டனாய்க்கொண்டு இந்தலோகத்திலே மநுஷ்யனாய் வந்துபிறந்த மஹாகுணத்தையுடையனாயிருந்தவனைப் பாடி வீதிகள்தோறும் திரியாதார் எத்தனையேனும் அறிவுடையாரேயாகிலும் அவர்களால் ஒரு ப்ரயோஜநமில்லை என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஆஶ்ரிதவிரோதிநிரஸநார்த்தமாக ஸ்வாஸாதாரண திவ்யரூபவிஶிஷ்டனாய்க்கொண்டு திருவவதாரம்பண்ணின குணத்தைக் கேட்டால் அவிக்ருதராயிருக்குமவர்கள் வஸ்துபூதரன்று என்கிறார்.

[ஆதி என்று தொடங்கி] - நித்யமாய் அப்ராக்ருததேஜோரூபமான திருவுடம்பை அங்கு இருந்தபடியே வைத்துக்கொண்டு இங்கே வந்து பிறப்பதும் செய்து இப்படி வேதப்ரதிபாத்யனானவனை. [ஓதியுணர்ந்தவர் முன்னு] - ஓதியுணர்ந்துவைத்து ஜ்ஞாநபலமில்லாமையாலே அவர்கள் நிந்த்யரில் ப்ரதமஹ்ராவிகள் என்று கருத்து. [என் சவிப்பார் மனிசரே] - எத்தை ஜபிப்பது? அவர்கள் சேதநரோ?

ப.—அநந்தரம், ஆஶ்ரிதவிரோதிநிரஸநார்த்தமாகிற அவதாரத்துக்கு ஈடுபடாதார் என்ன ஜபாதிகள் பண்ணுவது? என்கிறார்.

சாதுசனத்தை - ஸாத்த்விகஜநமான தேவகீவஸுதேவாதிகளை, நலியும் - நலியும், கஞ்சனை - கம்ஸனை, சாதிப்பதற்கு - நியமிக்கைக்காக, ஆதி - ப்ரதாநமாய், அம் - அப்ராக்ருதமான, சோதி - திவ்யதேஜஸ்ஸையுடைய, உருவை - விக்ரஹத்தை, அங்கு - பரமபதத்தில் வைத்த கணக்கிலே, இங்கு வைத்து-இவ்விடத்திலும் வைத்துக்கொண்டு, பிறந்த-பிறந்தவனாய், வேதம் - ("அஜாயமாந:" இத்யாதியாலே) வேதப்ரதிபாத்யமான அவதாரவைலக்ஷண்யத்தையுடையனான,

---

ட்டு; அதிசயித்துஇத்யர்த்த:. கீழ் வாக்யவிவரணம்-'வைஷ்ணவர்கள்' இத்யாதி. அவிக்ருதராயிருக்குமவர்கள் நடுவே வந்தால் அவர்களுக்கு அஸஹ்யமாயிருக்குமென்று விவக்ஷித்து, அதுக்கு ஆப்தஸம்வாதம் 'திருப்புன்னை' இத்யாதி. பிசல் - தோள். இரட்டை - த்விபட. வம்பவிழ் தொடங்கி, உழலாதார் - சாதுசனங்களிடையே - தம்பிறப்பால் பயனென்னே? இத்யந்வய:. உழலாதார் - இதுவே யாத்ரையாய்த் திரியாதார். தம்பிறப்பாற் பயனென் - தங்கள் ஜந்மத்தால் கொண்ட ப்ரயோஜநமென்? ஏகாரம்-பாதபூரணார்த்தம். "ஶ்ரேயாம்ஸி லப்ஸ்யந்தி ஹரிம் ப்ரபந்நா: । ஶ்ரேயஸ்ஸு வைஷ்ணவ ஸம்கா ஸ்ஸர்வதா ஶிவ ஸேவிதா:" (௬)

முதல்வனை - ப்ரதாநபூதனை, பாடி - (இவ்வைலக்ஷண்யத்தைப்) பாடி, வீதிகள்தோறும் - எல்லா வீதியிலும், துள்ளாதார் - ஆடாதார், ஓதி - ஶாஸ்த்ராப்யாஸயுக்தரான, உணர்ந்தவர் முன்னு - ஜ்ஞாநாதிகர் ஸந்நிதியிலே, மனிசர் - மநுஷ்யரைப்போலே, என் சவிப்பார் - என்ன ஜபம்பண்ணுவது? மநுஷ்யருமல்லர், ஜபமும் நிரர்த்தகமென்று கருத்து.

இ.—அஞ்சாம்பாட்டில், ஆஶ்ரிதவிரோதிநிரஸநார்த்தமாக திவ்யமங்களவிக்ரஹ விஶிஷ்டனுய்க்கொண்டு திருவவதாரம்பண்ணின குணத்தை அநுஸந்தித்தால் அவிக்ருதராயிருக்குமவர்கள் அவஸ்துக்கள் என்கிறுர்.

[சாதுசனத்தை நலியும்] - 'ஸாதுஜநம்' என்று நினைக்கிறது, ஶ்ரீவஸுதேவரையும் தேவகி முதலானுரையும். தான் அவதரிக்க நினைத்த ஸ்தலத்திலே நலிந்து நெடுநாள் சிறைவைத்துப்போந்த கம்ஸனை நிரஸிக்கைக்காக. [ஆதி இத்யாதி] - நித்யமாய் அப்ராக்ருததேஜோரூபமான திவ்யவிக்ரஹத்தை அங்கு இருக்கிறபடியே தன்பக்கலிலே வைத்துக்கொண்டு இங்கே பிறந்த. [வேதமுதல்வனை] - இப்படி வேதப்ரதிபாத்யனைவனை. "அஜாயமாநோ பஹுதா விஜாயதே", "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:", "ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்தி:". [பாடி]-அவதரித்த ப்ரகாரத்தை ப்ரீதிப்ரேரிதனுய்ச் சொல்லி "தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம்", "பிறந்தவாறும் வளர்ந்தவாறும்". [வீதிகள் இத்யாதி] - ஓரளவில்நில்லாதே நெடுந்தெருவோடு குறுந்தெருவோடு வாசியற ஆடாதார். மிளகாழ்வான்வார்த்தை. [ஓதியுணர்ந்தவர் முன்னு]- பரபரக்கற்ற அறிவுடையவராகத் தங்களை நினைத்திருக்குமவர்கள் ஜ்ஞாநபலமில்லாமையாலே நிந்த்யரில் ப்ரதமஹாவிக ளென்கை. "வித்யாவிநய ஸம்பந்நே". [என்சவிப்பார்] - எத்தை ஜபிப்பது? [மனிசரே] - ஶாஸ்த்ராதிகாரிகளு மல்லர். ஜப்யனையறியாமையாலே ஜபமும் நிஷ்பலம். ஶாஸ்த்ரப்ரதிபாத்யனை அறியாமையாலே ஶாஸ்த்ராதிகாரிஜந்மமும் அஸத்ஸமம். "ஆன்விடையேழன்றடர்த்தாற்கு ஆளானுரல்லாதார் மானிடவரல்லரென்று என்மனத்தே வைத்தேனே."

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஆஶ்ரிதவிரோதிநிரஸநார்த்தமாக அஸாதாரண திவ்யரூபவிஶிஷ்டனுய்க்கொண்டு திருவவதாரம்பண்ணின குணத்தை அநுஸந்தித்தால் விக்ருதராகாதார் அவஸ்துக்கள் என்கிறுர்.

[சாதுசனத்தை நலியும்]-ஸாதுஜந மென்றது - ஶ்ரீவஸுதேவரையும், தேவகியாரையும். "பிதரம்ரோசயாமாஸ" (பிதரம்ரோசயாமாஸ) என்று தான் அவதரிக்க நினைத்த விஷயத்தையிறே அவன் நலிந்து நெடுநாள் சிறையிட்டுவைத்தது. "பரித்ராணாய ஸாதூநாம்" (பரித்ராணயஸாதூநாம்) இத்யாதி. கம்ஸனை ஸாதிக்கைக்காக. [ஆதியஞ்சோதியுருவை] - இவ்வருகுண்டான கார்யவர்க்கத்துக்கெல்லாம் மூத்தாய், ஜ்ஞாநாதிகுணங்களுக்கு ப்ரகாஶகமாய், 'குணஸமுதாயமே விக்ரஹம்' என்று ப்ரமிப்பார்க்கும் ப்ரமிக்கலாம்படியிறே திருமேனிதான் இருப்பது. [அங்கு வைத்து இங்குப் பிறந்த] - அங்கு இருந்தபடியே வைத்துக்கொண்டு இங்கே வந்து

அஞ்சாம்பாட்டு - 'சாது' இத்யாதி. 'கஞ்சனைச்சாதிப்பதற்கு' ஆதியஞ்சோதி யுருவை அங்குவைத்து இங்குப்பிறந்த, பாடி, துள்ளாதார் - மனிசரே' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'ஆஶ்ரித' இத்யாதி.

அப்படிச் சாதுசனத்தை நலிந்தானே? என்ன, 'பிதரம்' இத்யாதி. பாலகாண்டே பஞ்சதஶே, "வக்ஷ்யமாணபிதா புத்ரம் ஶுஶ்ரூஷமாணம் ராஜாநம் ... பிதரம்ரோசயாமாஸ ததாதஶரதம் ந்ருபம்". ஸாதுத்வம் - பகவதபிமாந விஷயத்வம். "சாதுசனத்தைநலியும்" இத்யாதியாற் சொன்ன ஸாதுபரித்ராணத்துக்கும் துஷ்க்ருத்விநாசத்துக்கும் ப்ரமாணம் - 'பரித்ராணய' இத்யாதி. கீதாஸு சதுர்த்தே. பூர்வமேவ லிகிதம். சாதிப்பதற்கு - நிரஸிக்கைக்காக. 'இவ்வருகுண்டான' இதி: அஸ்த்ரபூஷணுத்யாயோக்த ப்ரகாரோத்ரவிவக்ஷித:. 'அங்குத்தையில் - ஆதியஞ்சோதியுருவை - வைத்துக்கொண்டு - இங்கே வந்துபிறந்த'

பிறந்த. "𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯" (ப்ரக்ருதிம்ஸ்வாமதிஷ்டாய). நித்யஸூரிகள் அநுபவிக்கிறபடியே லீலாவிபூதியிலுள்ளாரும் அநுபவிக்கும்படியாகவிறே அவதரித்தது. படியென்று - திருமேனிக்குப் பேர்; "படிகண்டறிதியே" என்றும், "செவ்விப்படிக்கோலம்" என்றும் அருளிச்செய்து வைத்தார்களிறே. 'பலபடிகளாலும் இவர்களை நாம் ரக்ஷிக்கவேணும்' என்று அவன் அவதரித்தால் ஒருபடியாலும் திருந்தாதபடியிறே இவர்கள்படி யிருப்பது. "𑌅𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑍋 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌵𑌿𑌜𑌾𑌯𑌤𑍇" (அஜாயமானோபஹுதாவிஜாயதே), "𑌨 𑌭𑍂𑌤𑌸𑌙𑍍𑌘𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑍋 𑌦𑍇𑌹𑍋𑌽𑌸𑍍𑌯 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃" (நபூதஸங்கஸம்ஸ்த்தானோதேஹோஸ்யபரமாத்மநः), "𑌨 𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌾 𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌃" (நதஸ்யப்ராக்ருதாமூர்த்திः), "𑌕𑌲𑍍𑌪𑍇 𑌕𑌲𑍍𑌪𑍇 𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑌃 𑌸𑍍𑌵𑌮𑍂𑌰𑍍𑌤𑍍𑌯𑌾" (கல்பே கல்பே ஜாயமாநஸ் ஸ்வமூர்த்யா) "முன்னைவண்ணம் பாலின்வண்ணம் முழுதும்நிலைநின்ற பின்னைவண்ணம் கொண்டல் வண்ணம்" என்றும், "பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம், போலுநீர்மை பொற்புடைத்தடத்துவண்டுவிண்டுலாம், நீலநீர்மை" என்றும் சொல்லுகிறபடியே பலபடிகளாலேயிறே திருவவதரிப்பது; பலவிக்ரஹங்களாலே யென்றபடி. இப்படி பிறவாநின்றாலும், "𑌨𑍈𑌷 𑌗𑌰𑍍𑌭𑌤𑍍𑌵𑌮𑌾𑌪𑍇𑌦𑍇 𑌨 𑌯𑍋𑌨𑍍𑌯𑌾𑌮𑌵𑌸𑌤𑍍 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃" (நைஷகர்ப்பத்வமாபேதே நயோந்யாமவஸத்ப்ரபுः) என்கிறபடியே கர்ப்பத்தில் அந்வயமில்லை. 'இதுதான் கூடுமோ?' என்னவொண்ணுதிறே; இக்ஷ்வாகு வம்ஶத்திலே யுவநாஶ்வன் என்பானொருவன் மந்த்ரபூதமான ஜலத்தைப் பாநம்பண்ண, அவன்வயிற்றிலே கர்ப்பமுண்டாயிற்றிறே ஒருஶக்தி விஶேஷத்தாலே; மிதுநமாய் ஸம்ஸர்க்கித்துப் பிறந்தமை யில்லையிறே அங்கு; அப்படியே இங்கும் ஸர்வஶக்தியோகத்தாலே இவ்வர்த்தம் உபபந்நமாகத் தட்டில்லையிறே. இதில் ப்ரமாணம் "𑌅𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑌃" (அஜாயமாநः) என்ற ஶ்ருதியிறே; அத்தைச் சொல்லுகிறார், [வேதமுதல்வனை என்று] -

---

என்று அந்வயம். பரமபதத்திலே யிருக்கிற ஸர்வகாரணமாய் அப்ராக்ருததேஜோமயமான விக்ரஹத்தை, பரமபதத்திலிருந்தபடியே தன்பக்கலிலே வைத்துக்கொண்டு இங்கே வந்து பிறந்த வென்று ஶப்தார்த்தம். அப்ராக்ருத திவ்யவிக்ரஹத்தோடே அவதரித்தா னென்னுமிடத்தில் ப்ரமாணம் - 'ப்ரக்ருதிம்ஸ்வாம்' இத்யாதி. "𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌾𑌯𑌯𑌾". இதமபி லிகிதம். ப்ரக்ருதிः-அப்ராக்ருதஸ்வபாவः; அஜஹத்ஸ்வபாவனைக்கொண்டு இத்யர்த்தः. எடுத்த ப்ரமாணத்துக்கு பாவம் – 'நித்யஸூரிகள்' இத்யாதி. படி - விக்ரஹமும், ப்ரகாரமும். ஸ்வபாவார்த்தம் தர்ஶயதி - 'படியென்று' இத்யாதி. 'படி' என்றதுக்கு - விக்ரஹவாசகத்வே ப்ரமாணத்வயம் - 'படிகண்டு' இத்யாதி. முதல்திருவந்தாதி; (அரு) திருமேனியைக் கண்டறிதியே யித்யர்த்தः. 'செவ்வி' இத்யாதி - இரண்டாந்திருவந்தாதி-(அ௨) செவ்வியையுடைய வடிவினழகைக்கண்டு பிரியாள் இத்யர்த்தः. க்ருஷ்ணாவதாரம் - அவதாராந்தரங்களுக்கும் உபலக்ஷணமித்யபிப்ராயேண—ரஸோக்தி - 'பலபடிகளாலும்' இத்யாதி. இவர்கள்படி - இவர்கள்ஸ்வபாவம். பலபடிகளாலே அவதரிக்குமோ? என்ன, 'அஜாயமாநः' இத்யாதி. ஶ்ருதிः அப்ராக்ருதவிக்ரஹத்தோடே அவதரிக்குமென்னுமதுக்கு ப்ரமாணாந்தரங்கள் - 'நபூத' இத்யாதி. பலபடிகளாலும் அவதரிக்குமென்னுமதுக்கு ப்ரமாணாந்தரங்கள் - 'முன்னைவண்ணம்' இத்யாதி. முன்னைவண்ணம் பாலின்வண்ணமென்றது - க்ருதயுகத்தில் நிறம் வெளுத்திருக்கு மென்றபடி. நிலைநின்ற பின்னைவண்ணம் - முழுதும் - கொண்டல்வண்ணம். 'பாலினீர்மை' என்ற பாட்டுக்கு - யுகக்ரமத்திலே வர்ணபேதம் கண்டுகொள்வது. 'பலபடிகளாலேயிறே' என்றது - சாடு. பிறந்தால் கர்ப்பஸம்பந்த நிபந்தநமான ஶுக்லஶோணிதபரிணாம முண்டாயிராதோ?'அங்குவைத்திங்குப்பிறந்த' என்னக்கூடுமோ? என்ன, 'இப்படிபிறவாநின்றாலும்' இத்யாதி. கர்ப்பத்வமென்று - கர்ப்பவாஸப்ரயுக்தமான தோஷத்தைச் சொல்லுகிறது. 'யோந்யாம்நாவஸத்' என்று - யோநிநிஷ்க்ரமணப்ரயுக்த தோஷம் இல்லை யென்றபடி. இதுதான் - கர்ப்பத்தில் அந்வயமில்லாமைதான். இது உபபந்நமென்னுமதுக்கு உதாஹரணம் - 'இக்ஷ்வாகு' இத்யாதி. மேலுக்கு அவதாரிகை-'இதில் ப்ரமாணம்' இத்யாதி. இதில் - கர்ப்பஸம்பந்தமில்லை யென்னுமதில். வேதத்தை, முதலாக - ஜ்ஞாபகஹேதுவாக வுடையவனை யென்று விவக்ஷித்து அர்த்தம் - 'வேதைக' இத்யாதி. அர்த்தாந்

வேதைகஸமதிகம்யனைப் பாடி. வேதங்களாலே முதல்வனாக ப்ரதிபாதிக்கப்பட்டவனைப் பாடி. 'பிறந்தவாறு எத்திறம்' என்று, வளர்ந்தவாற்றில் போகமாட்டாதேயிறே இருப்பது. எத்திறம் என்றால், பின்னையும் 'எத்திறம்' என்னுமித்தனை; "தஸ்ய தீராঃ பரிஜாநந்தி யோநிம்" (தஸ்ய தீரா꞉பரிஜாநந்தியோநிம்) என்கிறபடியே அத்தைச் சுற்றும் சுற்றும் வாராநிற்குமித்தனை; [வீதிகள் தோறும் துள்ளாதார்] - மிளகாழ்வான் வார்த்தையை நினைப்பது. மனிசருள்ள பெருந்தெருவே யன்றிக்கே, சிறுந்தெருவோடு நெடுந்தெருவோடு வாசியற ஆடாதார். இப்படி ஆடாதாருமாய் அறிவு கேடருமா யிருப்பாரையோ நீர் நிந்திப்பது? என்னில்,—[ஓதியுணர்ந்தவர்முன்னே] - கற்றுக் கேட்டு ஸர்வஜ்ஞராயிருக்கிறவர்கள் முன்னாக. விதுஷோதிக்ரமே தண்டபூயஸ்த்வமிறே. [என்சவிப்பார்]- அவர்கள் இருந்து செவிப்பறை பறைந்து ஜபிக்கிறது என் என்பது ? என்னுதல். [என்சவிப்பார்]- அவர் சாபாநுக்ரஹஸமர்த்தரோ? என்னுதல். [மனிசரே] - அவர்கள் சாஸ்த்ரவச்யராய் மநுஷ்ய ஜந்மத்திலே பிறந்தமை யுண்டாகமாட்டாது என்னுமதிலும் நிச்சங்கை பண்ணுகிறார். [மானிடவரல்லரேன்று என்மனத்தேவைத்தேனே] - மநுஷ்யஜந்மத்துக்குப் பலம் - பகவத்ஸமாச்ரயணமாயிருக்க, அது இல்லாதார் மநுஷ்யரேயல்ல ரேன்கிறார். [என் மனத்தே வைத்தேனே] - இனி ஈச்வரன் க்ருபையாலும் செய்யலாவதில்லை; "செம்பிலும் கல்லிலும் வெட்டிற்று" என்னுமாபோலே. ஈச்வரன் கைவிட்டாலும் விடாத என்நெஞ்சிலும் அவர்களை உபேக்ஷித்தேன் என்கிறார்.

கீழில் திருவாய்மொழியிலே - ததீயத்வாகாரத்தாலே இவ்விபூதியாக உத்தேச்யமென்று அநுபவித்தார்; இத்திருவாய்மொழியிலே - இவ்விபூதிதன்னிலே, "எண்ணுதமானிடத்தை யேண்

---

*தாம் - 'வேதங்களாலே' இத்யாதி. பிறந்த வேதமுதல்வனைப் பாடுகிற தென்? வளர்ந்த ப்ரகாரங்களையும் பாடவொண்ணாதோ? என்ன, 'பிறந்தவாறு எத்திறம்' இத்யாதி. அவதாரத்திலே ஈடுபட்டிருப்ப ரென்னுமதுக்கு ப்ரமாணம் - 'தஸ்ய' இதி. தீரா꞉, தஸ்ய - ஸர்வேச்வரஸ்ய, யோநிம் - அவதாரம், பரிஜாநந்தி - பரிதோ ஜாநந்தீத்யர்த்தம் ஹ்ருதிநிதாயாஹ - 'சுற்றும்சுற்றும்' இத்யாதி. அதாவது - அவ்வருகே போகமாட்டாதே இதிலே ஈடுபட்டிருப்ப ரென்றபடி. அப்படி துள்ளினால் லௌகிகர் நிந்தியார்களோ? என்ன, 'மிளகாழ்வான்' இத்யாதி. "ந்யாஸவித்யைகநிஷ்டாநாம் வைஷ்ணவாநாம் விசேஷத꞉ । ப்ராக்ருதாபிஹிதா நிந்தா நிந்தாஹேதுர் நிரர்த்திகா" இத்யாதிப்படியே - லௌகிகருடைய நிந்தைதானே பூஷணமாய் விடுமிதி பாவ꞉. மிளகாழ்வான் வார்த்தை - எட்டாம்பாட்டிலே அருளிச்செய்கிறார்; அங்கே கண்டுகொள்வது. "வீதிகள் தோறும்" என்றதுக்கு பாவம் - 'மனிசருள்ள' இத்யாதி. முன்னே - முதலாக. கற்று - வேதாதி சாஸ்த்ரங்களைக் கற்று. கேட்டு - அர்த்தத்தைக் கேட்டு. உணர்ந்தவர் - ஜ்ஞாநாதிகராயிருக்குமவர்கள். இவர்கள் நிந்த்யரில் ப்ரதாநரானபடி எப்படி? என்ன, 'விதுஷ꞉' இத்யாதி. "அஜ்ஞ꞉ ஸததநவிஜ்ஞேய கேவலம் ஸாநுகூல்யதே । ஜ்ஞாநயோகாத꞉ ஸர்வவிதநிந்த்யவிஜ்ஞாயதே" என்னக்கடவதிறே. "ஓதியுணர்ந்தவர்முன்னே" என்று - அவர்களுடைய மாஹாத்ம்யம் சொல்ல வந்ததன்று; தௌராத்ம்யம் சொல்ல வந்த தித்தனை. செவிப்பறைபறைந்து - ஏகாந்தமாகச் சொல்லி; ரஹஸ்யமாகச் சொல்லி யித்யர்த்த꞉. என்சவிப்பார் - என்ன ஜபம்பண்ணுவார்? என்னுதல், என்ன சபிப்பார்? என்னுதல் அவர்கள் ஜபிக்கிறதேது? சபிக்கிறதேது? இத்யர்த்த꞉. என்னென்பது - என்னுவது. 'மனிசரே' என்ற ஏகாரம் - பிரிநிலையாக அர்த்தம்—'அவர்கள்' இத்யாதி. பிரிநிலை - வ்யதிரேகம்; மனிசரன்றென்றபடி. மநுஷ்யரன்றென்னு மிடத்தில் ப்ரமாணம் - 'மானிடவரல்லர்' இத்யாதி. திருமொழி-(கக-எ-க). எடுத்த ப்ரமாணத்துக்கு அர்த்தம் - 'மநுஷ்ய ஜந்மத்துக்கு' இத்யாதி. 'என்மனத்தே' என்றதுக்கு பாவம்-'இனிஈச்வரன்' இத்யாதி. 'செம்பிலும்' இதி - தாம்ரத்திலும் கல்லிலும் எழுதினாற்போலே இத்யர்த்த꞉. தாம்ரசிலாலிகித ப்ராய மென்றத்தை உபபாதிக்கிறார்- 'ஈச்வரன்கைவிட்டாலும்' இத்யாதி.*

*கீழில்திருவாய்மொழியிலே - விபூதியடங்க உத்தேச்யமாக அநுபவித்தவர், இப்போது - சிலரை உத்தேச்யமாகவும் சிலரை அநுத்தேச்யமாகவும் அநுஸந்திக்கை வ்யாஹதமன்றோ? என்று சங்கித்துப் பரிஹரிக்கிறார் - 'கீழிற்றிருவாய்மொழியிலே' இத்யாதி. இங்குச்செய்ததாகிறது என்? - இத்திருவாய்மொழி*

ணுதபோதெல்லா மினியவாறே'' என்றும், "பேராளன்பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரிகிலேனே'' என்றும் சொல்லுகிறபடியே சிலரைக் கழித்துச் சிலரைக் கூட்டிக்கொள்ளாநின்றார்; இங்குச்செய்ததாகிறது என்? என்னில்;—இவ்வாகாரமும் கிடக்கச்செய்தே, கீழ் - உபாதேய மென்று அநுஸந்தித்தார்; ததீயத்வாகாரமே தோற்றி, ஆகாராந்தரம் தோற்றாதபடியான பாகம் பிறந்தவாறே. "இவர்தாம் எல்லார்படிகளு முடையராயிறே இருப்பது, முக்தர்படியையுடைய ரேன்னுமிடம் சொல்லிற்று, கீழ்த்திருவாய்மொழியாலே; முமுக்ஷுக்கள்படியை யுடைய ரேன்னுமிடம் சொல்லிற்று, இத்திருவாய்மொழியாலே" என்று அருளிச்செய்வர். (ரு)

# ஆறாம் பாட்டு.

மனிசரும்மற்றும்முற்றுமாய் மாயப்பிறவிபிறந்த
தனியன்பிறப்பிலிதன்னைத் தடங்கடல்சேர்ந்தபிரானைக்
கனியைக்கரும்பினின்சாற்றைக் கட்டியைத்தேனையமுதை
முனிவின்றியேத்திக்குனிப்பார் முழுதுணர்நீர்மையினாரே.

ஆ.—(மனிசரும்.) ஸ்வேதர ஸமஸ்தவஸ்துவிஸஜாதீயனாய், கர்மாதீநஜநநரஹிதனாய், க்ஷீரார்ணவநிகேதநனாய், ஆச்ரிதபரித்ராணார்த்தமாக ஸ்வஸங்கல்பத்தினாலே ப்ராக்ருததோஷங்களொன்றும் கந்தியாமே மநுஷ்யாதி ஸர்வயோநிகளிலும் வந்து அவதீர்ணனாய், நிரதிசயபோக்யபூதனாயிருந்தவனை அநஸூயுக்களாய்க்கொண்டு ஏத்திக் குனிப்பார் யாவர் சிலர், அவர்கள் ஸர்வஜ்ஞராகிறார் என்கிறார்.

யிலே சிலரை நிந்தித்துச் சிலரை ஆதரித்துச் செய்ததாகிற இது எங்ஙனே சேருகிறபடி? என்றபடி. இவ்வாகாரமும்-முமுக்ஷுத்வாகாரமும். முமுக்ஷுத்வாகாரம் கிடக்கச்செய்தே முக்தர்படி கூடுமோ? என்ன, 'இவர்தாம்' இத்யாதி. இத்தால் - இருவர்படியுமுடைய ராகையாலே விரோதமில்லை யென்று கருத்து. 'முக்தர்படியை' இத்யாதி வாக்யாத் பூர்வம் ஆகையாலே இத்யத்யாஹார்யம். "[illegible]" இத்யாதி - மஹாபாரதே. "[illegible]" மௌஸல பர்வணி-"[illegible]", "[illegible]". 'பாலினீர்மை' இத்யாதி - திருச்சந்தவிருத்தம் - நாற்பத்துநாலாம்பாட்டு. க்ருதயுகத்திலே பாலினுடைய நிறத்தைக் கொள்ளும். நீர்மை - ஸ்வபாவம்; நிற மென்றபடி. த்ரேதாயுகத்தில் சிவந்த பொன்போன்ற நிறத்தைக் கொள்ளும். த்வாபரயுகத்தில் பாசியினுடைய புறத்தில் பசுமைபோலே யிருக்கிற நிறத்தைக் கொள்ளும். கலியுகத்தில் அழகுடைய தடாகங்களிலே வண்டுகள் சிறகுவிரித்து உலாவாநின்றுள்ள நீலம்போன்ற நிறத்தையுடையனாயிருக்கும். பொற்பு-அழகு, நீலம் - கருநெய்தற்பூ. விள்ளல் - அலர்தல். 'மானிடவரல்லர்' இதி திருமொழி-நூற்றேழாந் திருமொழி - ஒன்பதாம்பாட்டு. "தேனொடுவண்டாலும்" இத்யாதி. ருஷபங்களேழையும் கொன்றவற்கு ஆளாகாதார் மநுஷ்யரல்ல ரென்று என்மநஸ்ஸிலே வைத்தேன். 'எண்ணாத' இதி: இதுக்குமுன் திருமொழி - ஏழாம்பாட்டு—'மண்ணாடும்' இத்யாதி. திருக்கண்ணமங்கைக்கு நிர்வாஹகனானவனுடைய திருவடிகளை யிரஸ்ஸிலே வஹித்து அவனை ஹ்ருதயத்திலே யெண்ணாத மநுஷ்யரை எண்ணாதபோதெல்லாம் அழகியதாயிருக்குமிறே. 'பேராளன்' இதி; அறுபத்துநாலாந்திருமொழி - நாலாம்பாட்டு; 'தேராளும்' இத்யாதி. ஸர்வாதிகனுடைய திருநாமங்களைச் சொல்லுகிற பெரியோர்களை க்ஷணகாலமும் பிரிய க்ஷமனல்லேன் இத்யர்த்த:. க்ரமேண அந்வய:. (ரு)

ஒ.—ஆறும்பாட்டில், மநுஷ்யாதி ரூபேண வந்து திருவவதாரம்பண்ணியருளின எம்பெருமானுடைய போக்யதையை அநுஸந்தித்துப் பரவமாரா யிருப்பர்க ளாகில், அவர்கள் எல்லாவறிவினுடைய பலமும் கைவந்தவர்கள் என்கிறார்.

[மனிசரும் என்று தொடங்கி] - மநுஷ்யாதிரூபேண ஆச்சர்யமான பிறவியை யுடையனுய்க்கொண்டு வந்து பிறப்பதும் செய்து, இந்நீர்மையில் தனக்கு ஒருவரும் அகப்படாதே தானேயாம்படி தனியனுல் சோம்பிவிடக்கடவனன்றிக்கே இதுக்குமுன்பு ஆஸ்ரிதர்க்காகப்பிறவா தானுய்த் திருவவதாரங்களுக்கெல்லாம் அடியாகத் திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தருளி ஸகலஜந்துக்கள்பக்கலும் அநுக்ரஹ ஸீலனுனவனை. [கனியை என்று தொடங்கி] - நிரதிசய போக்யனுனவனை அநஸூயுக்களாய் ஏத்திக் குனிப்பார். முநித்வமாகிற தெளிவின்றிக்கே ஏத்திக் குனிப்பா ரென்றுமாம்.

ப.—அநந்தரம், அவதாரத்திலும் அவதாரகந்தத்திலு முண்டான போக்யதையை அறிந்து விக்ருதரானவர்களே ஸர்வஜ்ஞ ரென்கிறார்.

(ராமக்ருஷ்ணதிரூபேணவும் உபேந்த்ராதிரூபேணவும் மத்ஸ்யகூர்மாதிரூபேணவும்), மனிசரும் - மநுஷ்யரும், மற்றும் - மற்ற தேவஜாதியும், முற்றுமாய் - அல்லாத திர்யக்ஜாதியு மெல்லாமாய்க்கொண்டு, மாயம் பிறவி பிறந்த தனியன் - ஆச்சர்யமான அவதாரங்களைப் பண்ணி ஸஜாதீயனுயிருக்கச்செய்தே அத்யந்தவ்யாவ்ருத்தனுன அத்விதீயனுய், பிறப்பிலிதன்னை- (இந்தவ்யாவ்ருத்திக்கு ஹேதுவான கர்மாதீந) ஜன்மராஹித்யத்தையுடையனுய், (இவ்வவதாரார்த்த மாக), தட கடல் - இடமுடைத்தான க்ஷீராப்தியிலே, சேர்ந்த - கண்வளர்ந்தருளும், பிரானை - உபகாரகனுய், கனியை - (கண்டபோதே நுகரவேண்டும்) கனியும், இன் - கோதற்ற இனிய, கரும் பின் சாற்றை - கருப்பஞ்சாறும், கட்டியை-(ஸர்வதோமுகமான ரஸத்தையுடைய) அதின் கட்டி யும், தேனை - (ஸர்வரஸஸமவாயமான) தேனும், அமுதை - (போக்தாவை நித்யனுக்கும்) அம்ருத மும்போலே போக்யபூதனுனவனை, முனிவு இன்றி - (அவதாரத்தில் நிகர்ஷபுத்தியாகிற) த்வே ஷம் இன்றியே, ஏத்தி - (அவதாரப்ரயுக்த சீலஸௌலப்யாதிகளை) ஸ்தோத்ரம்பண்ணி, குனிப் பார் - (அந்தப்ரீதியாலே) ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணுவார், முழுது உணர் - ஸகலஶாஸ்த்ரங் களையும் அறிந்த, நீர்மையினுர் - ஸ்வபாவத்தையுடையவர்கள்.

கனியையென்று தொடங்கி, தேனென்னுமளவும் - போஜ்யமாயும், பேயமாயும், காத்ய மாயும், லேஹ்யமாயுமுள்ள சதுர்விதபோஜ்யத்தையுஞ் சொல்லிற்றுகவுமாம்.

இ.—ஆறும்பாட்டில், ஈஶ்வரன் போக்யதையை அநுஸந்தித்தால் விக்ருதராவர்களா கில், அவர்கள் எல்லாவறிவின்பலமும் கைவந்தார் என்கிறார்.

[மனிசரும் மற்றும் முற்றுமாய்] - 'மற்றும்' என்கிறது, தேவர்களை. 'முற்றும்' என் கிறது, திர்யக் ஸ்தாவரங்களை. "ஸுரநரதிரஶ்சாமவதாரு". [மாயப்பிறவி] - ஆச்சர்ய மான பிறவி; ஒரு ஹேது இன்றிக்கே யிருக்கச்செய்தே ஹேதுவுடையார்க்கும் அவ்வருகே பிறக்கை. [தனியன்] - இவ்வவதாரத்தில் நீர்மைக்கு ஒருவரும் அகப்படாமையாலே போம் போது தனியே போமித்தனை. "[illegible] [illegible]" [பிறப்பிலிதன்னை] - அநேகஅவதாரங்கள் பண்ணின உபகாரத் தாலும் ஆஸ்ரிதர்க்கு ஒன்றும் செய்தானு யிரா தொழிகை. [தடங்கடல் இத்யாதி] - அவதரிக் கைக்கு உடலாக அவதாரகந்தமான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற மஹோபகாரகனை; "வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை" என்னக்கடவதிறே. [கனியை இத்யாதி] - அதில்

சாய்ந்த போதையழகை அநுபவிக்கிறார். கண்டபோதே நுகரலாய்க் கோதுகழிந்த ரஸமாய் ஸர்வதோமுகமான போக்யமாய் ஆயாஸிக்கவேண்டாதபடி பருகலாம்படியாய் இனிமையேயன்றிக்கே சாவாமைக்கு மருந்துமா யிருக்கை. [முனிவு இன்றி] - அவதாரமாகிற மஹாகுணத்திலே அநீஶ்வரத்வதோஷத்தை அநுஸந்திக்கிற அஸூயையில் இழியாதே. 'முனிவு' என்று முநித்வமாய் அவதாரத்தை அநுஸந்தித்துத் தெளிவுடையராய் அவிக்ருதராகை யின்றிக்கே யிருக்கை. [ஏத்திக் குனிப்பார்] - வாசிக காயிகமான விக்ருதிகளை யுடையராகை. [முழுது உணர்]-முழுதும் உணர்ந்த ஸ்வபாவத்தையுடையவராவர்கள். ஒன்றும் கற்றிலரேயாகிலும் "ஸகலவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநம்" என்கிறபடியே எல்லாம் அறிந்த பூர்த்தியை யுடையவர்கள்.

ஈடு.—ஆறாம்பாட்டு. ஈஶ்வரபோக்யதையை அநுஸந்தித்தால் விக்ருதராவர்களாகில், அவர்கள் எல்லாவறிவின்பலமும் கைவந்தார் என்கிறார்.

[மனிசரும் மற்றும் முற்றுமாய்]-மநுஷ்யர் தேவர்கள் அநுக்தமான திர்யக்ஸ்தாவரங்களெல்லாமாய். "ஸுரநரதிரஶ்சாமவதரந்" (ஸுரநரதிரஶ்சாமவதரந்). [மாயப்பிறவிபிறந்த] - ஒரு ஹேதுவின்றிக்கே யிருக்கச்செய்தே, ஹேதுவுடையார்க்கும் அவ்வருகே பிறக்க வல்லவன். அகர்மவஶ்யனாயிருந்து கர்மவஶ்யரும் பிறக்கமாட்டாத ஜன்மத்திலே வந்துபிறக்கை. ஆஶ்சர்யமான அநேகாவதாரங்களைப் பண்ணுமவன். [தனியன்] - இப்படி அவதரித்தால், போமன்று உடுத்த ஒலியலோடேயாயிற்றுப்போவது. இவ்வவதாரபரம்பரைகளில் ராமாவதாரமொன்றிலும் 'நாலிரண்டுபேர் கூடப்போனார்கள்' என்று கேட்டோமித்தனையிறே. 'இவன் நமக்காகப் பிறந்தான்' என்று நினைக்கைக்கும் ஒருவருமில்லாதிருக்கிறதிறே; 'பிறந்தான்' என்றது தன்னையே குற்றமாக உபபாதிப்பாரேயிறே உள்ளது. [பிறப்பிலிதன்னை] - இப்படி பரார்த்தமாக அவதரியாநின்றால் அது பலபர்யந்தமன்றிக்கே யொழிந்தாலும், 'நாம் வருந்தச் செய்தேயும் இது பலித்ததில்லையே!' என்று கைவாங்குகையன்றிக்கே, 'இவர்களுக்கு ஒன்றுஞ் செய்யப்பெற்றிலோம்' என்று, பிறந்திலனாய்ப் பிறக்கைக்கு ஒருப்பட்டானாயிருக்கும். [தடங்கடல்சேர்ந்தபிரானை] - இன்னமும் பிறக்கைக்கு தபஶ்சர்யை பண்ணுகிறபடி. திருப்பாற்கடலிலே அநிருத்தரூபியாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிற இடம் அவதாரகந்தமிறே. வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்திறே. இவர்கள் பிறவியென்னும் பெருங்கடலைப் போக்குகைக்கிறே அவன் கடலிலே வந்து கிடக்கிறது. [கனியை] - கடல் பழுத்தபடி. பாலிலே பழுத்தபடி. அங்குச் சாய்ந்துகிடக்கிறபோதை வடிவழகால் வந்த போக்யதை "ஸர்வரஸ:" (ஸர்வரஸ:)

ஆறாம்பாட்டு - 'மனிசரும்' இத்யாதி. 'கனியை' இத்யாதியைப் பற்ற, 'போக்யதையை' என்றது. 'முழுதுணர்நீர்மையினார்' என்றத்தைப் பற்ற, 'எல்லாவறிவின்' இத்யாதி.

தேவமநுஷ்யாதி ரூபேண அவதரிக்குமென்றதுக்கு ப்ரமாணம் - "ஸுரநர" இத்யாதி. விவரணம் - 'அகர்மவஶ்யன்' இத்யாதி. மாயார்த்தம் - 'ஆஶ்சர்ய' இத்யாதி. ஒலியல் - வஸ்த்ரம். 'தனியன்' என்கிறதென்? ஒருவரும் கூடப்போன பேர் இல்லையோ? என்ன, 'இவ்வவதார' இத்யாதி. போமன்று இல்லையேயாகிலும் இங்கு இருந்தநாளில் பரிவருண்டே என்ன, 'இவன் நமக்காக' இத்யாதி. பின்னை எப்படி நினைப்பர்கள்? என்ன, 'பிறந்தான்' இத்யாதி. "ஸுஜாநஜ்" இத்யாதியைப் பற்ற, 'குற்றமாக' என்றது. 'பிறந்த' என்றுவைத்து 'பிறப்பிலி' என்றதுக்கு பாவம் - 'இப்படி பரார்த்த' இத்யாதி. வருந்த - ப்ரயாஸப்பட. 'பிறக்கைக்கு ஒருப்பட்டானாய்' என்றது - 'தடங்கடல்சேர்ந்த' என்றத்தைப் பற்ற. ஆக, தனியனாவது - கூடப்போவாரில்லாமையும், இங்கு உகப்பாரில்லாமையும். உபபாதகம் - 'திருப்பாற்கடலிலே' இத்யாதி. 'வெள்ளத்தரவில்' இதி - திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளின அவதாரபீஜமானவனை யித்யர்த்த:. திருப்பாவை, "புள்ளும்சிலம்பின" இத்யாதி. தபஶ்சர்யைபண்ணுகைக்கு அடியேது? என்ன, 'இவர்கள்' இத்யாதி. 'கடல் சேர்ந்த' என்ற அநந்தரம், 'கனியை' என்றதுக்கு இரண்டு ரஸோக்தி - 'கடல்' இத்யாதி. கடல் - க்ஷீராப்தி. பலிதம் - 'அங்கு' இத்யாதி. "ஸர்வரஸ:" என்று ஒரு சொல்லால் சொல்லாதே பிரித்துச்சொல்லுகிற

என்று ஒரு சொல்லாலே சொல்லமாட்டார்; எல்லாம் சொல்லப்புக்கால் சொல்லித் தலைக்கட்டமாட்டார்; பலிதாம்ஶத்திலே சிலவற்றைச் சொல்லு மித்தனை யாகையாலே'கனியை' என்கிறார். கண்டபோதே நுகரலாம்படியாய், அதுதான் கோதுகழிந்த ரஸாம்ஶமாய், அதுதன்னைத் திரட்டினதாய், அதுதான் பருகலாம்படியாய், போக்யதையையன்றிக்கே சாவாமல்காக்குமதா யிருக்கை. கீழில் திருவாய்மொழியில் "நலங்கடலமுதமென்கோ" என்று தொடங்கி அநுபவித்த போக்யதை பின் நாடினபடி. கண்டபோதே நுகரவேண்டும் கனியும், கோதற்ற இனிய கருப்பஞ்சாறும், ஸர்வதோமுகமான ரஸத்தையுடைத்தான கட்டியும், ஸர்வரஸஸமவாயமான தேனும், போக்தாவை நித்யனுக்கும் அம்ருதமும்போலே போக்யனானவனை. [முனிவின்றியேத்திக்குனிப்பார்]-முனிவின்றி - பகவத்குணங்களைக் கேட்டால் அஸூயைபண்ணாதே ஏத்துமவர்கள். தன்னோட்டையானொருவனுக்கு ஓர் உத்கர்ஷம் சொல்லுகையன்றிக்கே, ஈஶ்வரனுக்கு ஓர் உத்கர்ஷம் சொன்னால் அது பொறாதேயிறே இருப்பது; இம்மஹாகுணத்தில் ஒரு பொறாமை கொண்டாடாதே; குணம்கண்டவிடத்தே தோஷாவிஷ்கரணம் பண்ணுவர்கள் அநேகரிறே. "இதந்துதே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே" (இதந்துதேகுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே)-நம்முடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளைச் சொன்னவிடத்தில் சிவீலென்றிருந்திலை; உன்தனையதிகாரிகளைக் கண்டிலோம், இன்னம் சொல்லிச் சொல்லாததையும் சொல்லும்படி கிட்டவாராய் என்றானிறே. ஶங்கநிதி பத்மநிதிகளைக் கொண்டுவந்து கொடுத்து, கடலைச்செறுத்துப் படைவீடுசெய்து, தங்களேதிரிகளோடே புறப்பட்டு மாரிலே அம்பேற்று, இப்படி ரக்ஷியாநின்றால், சோறுசுட்டவாறே "இது ஒரு க்ருஷ்ணனும், நடுவில் பெருங்குடியாட்டமும், என்னென்பதுதான்?" என்னாநிற்பர்கள். "தாஸ்யமைஶ்வர்யவாதேந" (தாஸ்யமைஶ்வர்யவாதேந) ரக்ஷகத்வம் என்று ஒரு வ்யபதேஶமாத்ரமாய் இவர்களுக்கே தாழ்வு செய்து திரிந்தேன்; நல்லது கண்டால் 'எனக்கு என்று இராதே பகுத்திட்டு ஜீவித்துப் போந்தேன்; இங்ஙனேயிருக்கச்செய்தே இவர்கள்பண்ணும் பருஷபாஷணங்களையெல்லாம் பொ

---

தென்? என்ன, 'ஸர்வரஸ: என்று' இத்யாதி. பலிதாம்ஶத்திலே - தம்பக்கல் பலித்த அநுபூதாம்ஶத்திலே. 'கனியை' இத்யாதி பஞ்சதாபிதாநபலிதமாஹ - 'கண்டபோதே' இத்யாதி. பகவத்குண விக்ருதரையும் அவிக்ருதரையும் கொண்டாடியும் நிந்தித்தும் போருகிற இத்திருவாய்மொழியிலே பகவத்போக்யதையைச் சொல்லுகைக்கு அடியேது? என்ன, 'கீழில்' இத்யாதி. 'பின்னாடினபடி' என்று "புகழுநல்லொருவ"னுக்கு விபூதி யோகம் சொல்லுகிற யோஜனை யன்றிக்கே, "பெரும்புறக்கடல்" நிர்வாஹக்ரமத்திலே உபமாநமுகத்தா லுண்டான யோஜனையைப் பற்ற. முனிவு - அஸூயை. ஸஜாதீயரிடத்திலொழிய ஈஶ்வரனிடத்திலே அஸூயை பண்ணுவர்களோ? என்ன, 'தன்னோட்டையான்' இத்யாதி. உத்கர்ஷம் சொல்லுகையன்றிக்கே - சொன்னால் அஸூயை பண்ணுகையன்றிக்கே. அஸூயாஸ்வரூபம் விஶதயதி, 'இம்மஹாகுண' இத்யாதி. மஹாகுணத்திலே பொறாமைகொண்டாடுகையாவது - அவதாரஸௌலப்யமாகிற மஹாகுணத்திலே அநீஶ்வரத்வமாகிற தோஷத்தை ஆரோபிக்கை. அவதரித்த குணம் சொன்னது - குணாந்தரங்களுக்கும் உபலக்ஷணம். 'தன்னோட்டையான்' இத்யாதி வாக்யவிவரணம் - 'குணம் கண்டவிடத்தே' இத்யாதி. "குணாநிர்ரீக்ஷ்யாஸூயாதோஷாரோபோமஹாஜநேஷ்வபி" என்னக்கடவதிறே. அநஸூயுக்கள் துர்லபரென்னுமதுக்கு ப்ரமாணம் - 'இதந்துதே' இத்யாதி. கீதாஸு நவமே, "ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுபாத்" இத்யுத்தரார்த்தம். சிவீலென்றிருந்திலை-அஸூயைபண்ணியிருந்திலை. "ப்ரவக்ஷ்யாமி" இத்யுபஸர்க்கார்த்தமாஹ - 'இன்னம்சொல்லி' இத்யாதி. அநுகூலர் அஸூயை பண்ணுவர்களோ? என்ன, 'ஶங்கநிதி' இத்யாதி. செறுத்து - நெருக்கி. சோறுசுட்டவாறே - அல்பநிமித்தத்தினாலே. பெருங்குடியாட்டம் - க்ராமண்யம். என்னென்பதுதான் - என்ன? அப்படியெல்லாம் செய்தாலும் அஸூயைபண்ணுவர்களோ? என்ன, 'தாஸ்யம்' இத்யாதி. ஶ்லோகார்த்தம் - 'ரக்ஷகத்வம்' இத்யாதி. பகுத்திட்டு - பாகம்கொடுத்து. ஜ்ஞாதிகளுடைய அஸூயையை ஸ்யமந்தகமணிவ்ருத்தாந்தமுகேநாபி தர்ஶயதி - 'ஒருமணி' இத்யாதி. ஸ்யமந்தகமணிகதையிலே, "ஸிம்ஹ: ப்ரஸேநமவதீத்

றுத்துப்போங்தன்' என்றுனிறே. ஒருமணிகெட்டு ஆரேனுங்கொண்டுபோக, க்ருஷ்ணன்தலையிலே ஏறிட்டு, நம்பிமூத்தபிரானும் இதுசுட்டித் தீர்த்தயாத்ரைபோகவேண்டும்படியாயிற்றிறே. அன்றிக்கே, ''முனிவாகிறது - முநித்வமாய், அதின்றிக்கே யொழிகையாவது - கலங்குகையாய், அடைவுகெட்டு ஏத்திக் குனிப்பாரென்னவுமாம்'' என்று அருளிச்செய்வர். [முழுதுணர்நீர்மையினரே] - ''ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநம்'' (ஏகவிஜ்ஞாநேநஸர்வவிஜ்ஞாநம்) என்றபடி அவர்கள் எல்லா வற்றையும் அறிந்தார்களாகிறுர்: அவர்கள் ஸர்வஜ்ஞர்களாகிறுர்: ஜ்ஞாநபலமான இது உண்டான போதே அவர்களுக்கு ஜ்ஞாநாம்ஶத்தில் இல்லாததில்லையிறே. அவர்கள்ஶரீரத்தில் பிறந்த விகாரத்தைக்கொண்டே அவர்களுடைய ஜ்ஞாநாதிக்யம் அறியலாம். முழுதையும் உணர்ந்த ஸ்வபாவத்தையுடையவர்க ளாகிறுர்கள். (சு)

## ஏழாம் பாட்டு.

நீர்மையில்நூற்றுவர்வீய ஐவர்க்கருள்செய்துநின்று
பார்மல்குசேனையவித்த பரஞ்சுடரைநினைந்தாடி
நீர்மல்குகண்ணினராகி நெஞ்சங்குழைந்துநையாதே
ஊன்மல்கிமோடுபருப்பார் உத்தமர்கட்கென்செய்வாரே?

*ஆ.*—(நீர்மையில்.) பாண்டவர்கள்பக்கலுள்ள வாத்ஸல்யத்தாலே தத்விரோதிகளான துர்யோதநாதிகளையும் மற்றுமுள்ள ப்ரதிகூலவர்க்கத்தையும் அடங்க நிரஸித்ததுவே தனக்கு நிரதிஶயதேஜஸ்ஸாக இருந்தருளினவனை நினைத்து நீர்மல்கு கண்ணினராகி நெஞ்சம்குழைந்து நையாதே, கேவலம் ஶரீரபோஷகராயிருப்பார் இந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் வர்த்திக்கிற தேஶத்திலே என்செய்ய உளரானுர்? என்கிறுர்.

*ஒ.*—ஏழாம்பாட்டில், ஆஸ்ரிதரான பாண்டவர்களுடைய விரோதிகளைப் போக்கின எம்பெருமானுடைய குணநுஸந்தாநத்தாலே ஶிதிலராகாதார் ஜநநீக்லேஶகாரிகள் என்கிறுர்.

[நீர்மை என்று தொடங்கி] - பந்துக்கள் ஜீவிக்கவேணுமென்னும் நீர்மையொன்றுமின்றிக்கே யிருக்கிற துர்யோதனுதிகள் நூற்றுவரும் முடியும்படி பாண்டவர்களுக்கு ப்ரஸாதத்தைப் பண்ணி நின்று பூமிக்குப் பாரமாம்படி பல்கின ஸேனையெல்லாம் முடிப்பதும் செய்து ஸாரத்யவேஷ

---

ஹோஜ்ஜ்வலதாஹத:। ஸங்கர்ஷணோ ரோஹிணேயஸ்ததஸ்ஸ்வஹ்ருஷ்யஸ்ஸ்பந்நகஃ'' என்று அருளிச்செயவர். நம்பிமூத்தபிரான் - பலராமஃ. இதுசுட்டி - இதுநிமித்தமாக. 'முனிவின்றி' என்றதுக்கு அர்த்தாந்தரம்- 'அன்றிக்கே' இத்யாதி. முநித்வம் - ஐகாக்ர்யம். 'ஏகவிஜ்ஞாநேந' இதி - காரணபூத ப்ரஹ்மவிஜ்ஞாநேந கார்யபூதஸமஸ்தத்தையும் அறியலா மித்யர்த்தஃ. விவரணம் - 'அவர்கள்' இத்யாதி. முனிவின்றியேத்திக்குனிப்பாரெல்லார்க்கும் காரணபூத ப்ரஹ்மஜ்ஞாநாத் கார்யஜகத்ஜ்ஞாந முண்டாகைக்கு அவர்கள் வேதாந்தஶ்ரவணம் பண்ணிஞர்களோ? என்ன, 'ஜ்ஞாநபலமான' இத்யாதி. இது - ஏத்திக்குனிக்கையாகிற இது. ஆந்தரமான ஜ்ஞாநத்தை யறியும்படியென்? என்ன, 'அவர்கள்சரீரத்தில்' இத்யாதி. சப்தார்த்தம் - 'முழுதையும்' இத்யாதி. ''ஜயம்வேயம் ஹி வேஷ்டிதாயங்கிதேஷ்ஷ்விஹ்ருதயேவிஹத்நாம் ஶ்ரேயஸாநபிராஸ்யவந்து। ஸஜாத்யஶேஷ்டாஜிதிதவிஹவாவ்யாஶேவிஹஜ்நரீஶகம்வந்ணேயாவரமணமணேஸ்தாநுஷ்யஸி'' இதி வரதராஜஸ்தவே. ஹாரதே - ''ஊஸ்யஶௌர்யவாஶேநஜ்ஞாத்நாஜ்ஞகரோத்யஹம் । கயஹோத்காவஹோமாநாம்வாதுர்ரக்தாநிவக்ஷஸே''. க்ரமேண அந்வயஃ.

மாகிற விலக்ஷணமான அழகையுடையவனை நினைத்து ஹர்ஷப்ரகர்ஷத்தாலே ஆடி. [நீர்மல்கு என்று தொடங்கி] - கண்ணநீர் செற்றி ஶிதிலாந்தகரணராய் ஓசியாதே ஶரீரங்கள் மாம்ஸளமாய்ப் பிசல்பருத்திருக்குமவர்கள் வைஷ்ணவர்களுக்கு ஒருப்ரயோஜநத்துக்கு உறுப்பல்லர்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதபக்ஷபாதத்துக்கு ஈடுபடாதார் பாகவதர்க்கு எதுக்கு உறுப்பு? என்கிறார்.

நீர்மை இல் - ("பந்துக்களோடே புஜிக்கவேணும்" என்கிற) நீர்மை இல்லாத, நூற்றுவர் - துர்யோதநாதிகள் நூற்றுவரும், வீய - நசிக்கும்படி, ஐவர்க்கு - பாண்டவர்களைவர்க்கும், அருள் செய்து - நிரவதிக க்ருபையைப் பண்ணி, நின்று - ("க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவா:" என்னும்படி அவர்களுக்கு ஸர்வவிதபந்துவுமாய்) நின்று, பார் மல்கு - பூமி நிரம்பும்படி விஞ்சின, சேனை - சேனையை, அவித்த -(விளக்கு அவித்தாற்போலே) நசிப்பித்த, பரஞ்சுடரை - நிரவதிகௌஜ்ஜ்வல்யயுக்தமான வடிவழகையுடையவனை, நினைந்து - (இக்குணஸௌந்தர்யவித்தராய்க்கொண்டு) நினைந்து, ஆடி - (ப்ரேமபரவஶராய்) ஆடி, நீர் மல்கு - ஆநந்தாஶ்ருபூர்ணமான, கண்ணினராகி - கண்களையுடையராய், நெஞ்சம் - (நினைக்கிற) நெஞ்சு, குழைந்து - கட்டுக்குலைந்து, நையாதே - (ரோமாஞ்சாதிகளாலே) சிதிலசரீரராகாதே, ஊன்மல்கி - மாம்ஸோத்தரமாய், மோடு பருப்பார் - பிடரியிற் பிசல்பெருக்கும்படி உடம்பைவளர்ப்பார், உத்தமர்கட்கு - (ஜ்ஞாநாதிகராய்) உத்தமரான பாகவதர்களுக்கு, என் செய்வார் - எது செய்கைக்கு உறுப்பாவர்? அநுபயுக்த ஸ்வரூபரென்று கருத்து.

இ.—ஏழாம்பாட்டில், ஆஶ்ரிதபக்ஷபாதமாகிற மஹாகுணத்தில் ஈடுபடாதே ஶரீர போஷணபரராய்த் திரிகிறவர்கள் வைஷ்ணவர்களுக்கு எதுக்கு உறுப்பாகப் பிறந்தார்கள்? என்கிறார்.

[நீர்மை இல் இத்யாதி] - பந்துக்கள் ஜீவிக்கவேணுமென்றிருக்கும் நீர்மையில்லாதவர்கள். 'ஒருமுட்குத்தும் கொடோம், பந்துக்கள் ஜீவிக்கில் ஜீவியோம்' என்றார்களிறே, நிர்க்ருணராகையாலே. ஆஸுரப்ரக்ருதிகளென்று நூற்றுவரும் முடியும்படி பாண்டவர்களுக்கு அருள் செய்து. "க்ருஷ்ணாஶ்ரயா:" என்கிறபடியே தன்பக்கலிலே ந்யஸ்தபரராயிறே அவர்கள் இருப்பது. "யேஷாமபெக்ஷிதாஸ்ஸந்தி:" என்றிறே இத்தலையில் நீர்மை யிருப்பது. "யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச" என்று தானே அவர்களுக்கு எல்லாமாய் நின்றபடி. பூமிக்குப் பாரமாம்படி மிக்க ஸேனையையெல்லாம் விளக்கவித்தாற்போலே அநாயாஸேந முடித்தபடி. [பரஞ்சுடரை] - ஸேநாதூளியும் முட்கோலும் சிறுவாய்க்கயிறுமாய் ஸாரத்ய வேஷத்தோடே நின்ற அழகையுடையவனை. ஆஶ்ரிதார்த்தமாய் நின்ற இவன் வ்யாபாரத்தை நினைத்து விக்ருதராய் ஆடி, "ஆஹ்லாதஶீதநேத்ராம்பு:" என்று ஆநந்தாஶ்ருவையிட்டு நிரூபிக்கவேண்டும்படி அகவாயும் நெகிழ்ந்து ஶிதிலராகாதே மாம்ஸளமாய்ப் பிசல்பருத்திருக்கும்படி ஶரீரபோஷண பரரா யிருக்கிறவர்கள். [உத்தமர்கட்கு என்செய்வாரே] - பகவத்குணாநுஸந்தாநத்தாலே வார்ந்துவடிந்த ஶரீரங்களையுடைய வைஷ்ணவர்களுக்கு வையயவங்ஷூம் பண்ணுகைக்கு உறுப்பாகிறார்களோ? வைஷ்ணவர்களுக்கு உறுப்பாமதுவே ஜந்மத்துக்கு ப்ரயோஜநம் என்கிறார். ஈஶ்வரன், தன்னையும் தன் விபூதியையும் ததீயஶேஷமாக்கியிறே வைப்பது.

எடு.—ஏழாம்பாட்டு. ஆஶ்ரிதபக்ஷபாதமாகிற மஹாகுணத்தில் ஈடுபடாதே ஶரீரபோஷணபரராய்த்திரிகிறவர்கள் வைஷ்ணவர்களுக்கு எதுக்கு உறுப்பாகப் பிறந்தார்கள்? என்கிறார்.

ஏழாம்பாட்டு-'நீர்மையில்' இத்யாதி. 'ஐவர்க்கருள்செய்துநின்று, பரஞ்சுடரை நினைந்து - நையாதே, ஊன்மல்கி மோடுபருப்பார்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'ஆஶ்ரித' இத்யாதி.

[நீர்மை இத்யாதி] - முற்பட ஸஞ்சயனைப் போகவிட்டு அநந்தரமாகத் தான்போய் 'இவர்களையும் அவர்களையும் சேரவிடலாமோ?' என்று பார்த்தவிடத்து, அவர்கள் ஒருபடியாலும் இசையாதே, 'எங்கள்பந்துக்கள் ஜீவிக்கில் நாங்கள் ஜீவிப்பதில்லை; அவர்களுக்கு ஒரு குடியிருப்பும் கோடோம்; நாங்கள் பலராகையாலே பூமிப்பரப்படங்க எங்களுக்கே இடம்போருமத்தனை; அவர்களுக்கு க்ருஷ்ணனும் தர்மமும் உண்டு; அதுக்குப் பலமான ஸ்வர்க்கத்தை யநுபவிக்கக்கடவர்கள்; நாங்கள் பூமியை ஆளுவோம்' என்று வெட்டிதாக வார்த்தை சொல்ல, அவர்கள் நெற்றியைக்கீறிப் பார்த்தவிடத்தில் ரக்தம் புசியாமையாலே 'அவர்களை அழியச்செய்வோம்' என்று பார்த்தான். பாண்டவர்களை ரக்ஷிக்கைக்கு ஹேது-'நாங்கள் பந்துக்களையொழிய ஜீவிப்பதில்லை' என்றது; **"யேஷாமர்த்தே காங்க்ஷிதந்நோ ராஜ்யம்போகாஸ்ஸுகாநிச"** (யேஷாமர்த்தேகாங்க்ஷிதந்நோ ராஜ்யம்போகாஸ்ஸுகாநிச) நாட்டார் அர்த்தம் தேடுகிறதும் ராஜ்யங்கள் ஸம்பாதிக்கிறது மெல்லாம் பந்துக்களும் தாங்களும்கூட ஜீவிக்கைக்கன்றோ? ஆனபின்பு,நாங்கள் பந்துவதம்பண்ணி ஜீவிக்கப்பார்க்கிலோமென்னும் நீர்மையாலேயாயிற்று; அவர்கள் இங்ஙனன்றிக்கே 'இவர்களுக்கு ஒருகோல்குத்துநிலமும் கொடுப்பதில்லை;அவர்கள் ஜீவிக்கில் நாங்கள் ஜீவியோம்'என்ன,'இவர்கள் ஆஸுரப்ரக்ருதிகளாயிருந்தார்கள்; இவர்களை அழியச்செய்யாவிடில் விபூதியும் அழியும்' என்று பார்த்து அதுக்கீடாக ஒருப்பட்டான். ஒருபடியாலும் ஒருநீர்மையில்லாத துர்யோதநாதிகள் முடிந்துபோம்படிக்கு ஈடாக. [ஐவர்க்கு அருள்செய்துநின்று] - தானல்லது தஞ்சமில்லாத பாண்டவர்களுக்கு. **"க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவா:"** (க்ருஷ்ணாஶ்ரயா:க்ருஷ்ணபலா:க்ருஷ்ணநாதாஶ்சபாண்டவா:) என்றிருக்குமவர்கள். [நின்று] - **"யஸ்யமந்த்ரீச கோப்தாச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தந:"** (யஸ்யமந்த்ரீசகோப்தாசஸுஹ்ருச்சைவஜநார்த்தந:) என்று இவர்களிழந்த பரிகரமெல்லாம் தானேயாய் நின்று. [பார்மல்குசேனையவித்த]-பூமி நெளியும்படிக்கு ஈடாக மிகைத்துவந்த ஆஸுரவர்க்கத்தை, விளக்கவித்தாற் போலே பிணங்காணவொண்ணாதபடி முடித்துப்போகட்ட. [பரஞ்சுடரை]-'ஆயுதமெடுக்கவொண்ணாது' என்றார்களே; அதுக்காக ஸேநாதூளியும் முட்கோலும் சிறுவாய்க்கயிறும் தேருக்குக்கீழே நாற்றின திருவடிகளும் சிறுசதங்கையுமாய் ஸாரத்யவேஷத்தோடே நின்ற நிலையைச் சொல்லுகிறது. [நினைந்தாடி] - அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தை அநுஸந்தித்து, அவ்வநுஸந்தாநம் இருந்தவிடத்தே இருக்கவொட்டாமையாலே ஆடி. [நீர்மல்குகண்ணின

---

*நிரஸநஹேது, நீர்மையில்லாமையென்று உபபாதிக்கிறார் - 'முற்பட' இத்யாதி. வெட்டிதாக - க்ரூரமாக. பாண்டவர்களை ரக்ஷிக்கைக்கு ஹேது அவர்கள்நீர்மை யென்கிறார் - 'பாண்டவர்களை' இத்யாதி. அவர்கள் அப்படி சொன்னார்களோ? என்ன, 'யேஷாம்' இத்யாதி. "த இமேऽவஸ்திதா யுத்தே ப்ராணாம்ஸ்த்யக்த்வா தநாநிச" இத்யுத்தரார்த்தம். கீதாஸு ப்ரதமே. ஶ்லோகத்துக்கு அர்த்தம் - 'நாட்டார்' இத்யாதி. 'யேஷாமர்த்தே' இத்யாதிவசநம் - யுத்தபூமியில் அஸ்தாந ஸ்நேஹகாருண்யத்தாலே சொன்னதாகையாலே அதர்மமாகிலும், இந்நினைவு எப்போதும் இவர்களுக்கு உண்டாகையாலே மற்றைப்போது இந்நினைவு மஹாகுணமிறே யிதி ஹாவ:. 'நீர்மையாலே ஆயிற்று'-பாண்டவர்களை ரக்ஷித்தது இதி ஶேஷ:.பாண்டவர்களுக்கு ப்ரதிகோடித்வேந புநஶ்ச அவர்களுடைய நீர்மையில்லாமையை உபபாதிக்கிறார் - 'அவர்கள்' இத்யாதி. கோல் - அம்புகோல். சப்தார்த்தம் - 'ஒருபடியாலும்' இத்யாதி. வேறு தஞ்சமில்லாமைக்கு ப்ரமாணம் - 'க்ருஷ்ணாஶ்ரயா:' இத்யாதி; பாரதே. "க்ருஷ்ண: பராயணம் தேஷாம் ஜ்யோதிஷாமிவ சந்த்ரமா:" என்று மேல். நெளியும்படிக்கு - நெகிழ்ந்துகொடுக்கும்படிக்கு ஈடாக. 'அவித்த' என்றதின் அர்த்தம் - 'விளக்கு' இத்யாதி. பூமி நிரம்பும்படி மிஞ்சின ஸேனையை யிதி ஶப்தார்த்த:. பரஞ்சுடரை - நிரவதிகௌஜ்ஜ்வல்ய யுக்தமான வடிவழகை யுடையவனை. இங்கு - ஸாரத்யம்பண்ணுகையால் வந்த புகரைச் சொல்லுகிறது. முட்கோல் - தாற்றுக்கோல், சிறுவாய்க்கயிறு - கடிவாளம், நாற்றின - நீட்டின, 'யஸ்யமந்த்ரீச' இத்யாதி-பாரதே ராஜஸூயே ஸஞ்சயம்ப்ரதி த்ருதராஷ்ட்ர:, "ஹரிர்யேஷாம் கோப்தா நாயமஸ்தி நிராஸஸ்தஸ்ய நநிர்ஜிதம்" இத்யுத்தரார்த்தம். நீர்மல்குகையை நிரூபகமாகச் சொன்னதுக்கு ஹாவம் - 'ஆற்றலாத' இத்யாதி.*

ராகி]-"ஆஹ்லாதஶீதநேத்ராம்பு:" (ஆஹ்லாதஶீதநேத்ராம்பு:) என்கிறபடியே, கண்ணநீரை யிட்டு நிரூபிக்கவேண்டும்படியான கண்ணையுடையராய். [நெஞ்சம் குழைந்து] - ஶரீரஶைதில்ய மேயன்றிக்கே ஹ்ருதயஶைதில்யமுமுடையராய் நைந்துபோகாதே. [ஊன்மல்கிமோடுபெருப்பார்] - மாம்ஸளமாம்படி ஶரீரத்தைப் பருக்கப்பண்ணி, கனத்தபிசல்களும் நெடிய வலிய ஶரீரங்களுமா யிருக்குமவர்கள். [உத்தமர்கட்கு என்செய்வாரே]-பகவத்குணாநுஸந்தாநத்தாலே மெலிகின ஶரீரத் தையுடையராயிருந்துள்ள மஹாபுருஷர்களுக்கு போதயந்த:பரஸ்பரம்பண்ணுகைக்கு உசாத்துணையா வார்களோ? ஜந்மத்துக்கு ப்ரயோஜநம் வைஷ்ணவர்களுக்கு உறுப்பாமதுவே என்கிறார். ஈஶ்வரன், தன்னையும் தன்விபூதியையும் ததீயஶேஷமாக்கியிறே வைப்பது, ஆயிரத்தளியிலே ராஜா இருக்கச் செய்தே பெரியநம்பியையும் ஆழ்வானையும் நலிந்தானாய், ஆழ்வான்மடியிலே சாய்ந்துகிடக்கச்செய்தே பெரியநம்பி திருநாட்டுக்கு எழுந்தருளினார்; அவ்வளவிலே 'ஒருவருமில்லாதாரை ப்ரதிபத்தி பண்ணக் கடவோம்' என்று திரிகிறார் சிலர் அங்கே வந்து ஆழ்வானைக்கண்டு 'ஒருவனுண்டிறே' என்று போகப் புக, ஒருவரையும் ஒருகுறை சொல்லியறியாதவன், 'வாரிகோள் மாணிகாள்! வைஷ்ணவனுமாய் ஒருவனுமில்லாதானொருவனைத் தேடி ப்ரதிபத்திபண்ண இருக்கிறிகளோ நீங்கள்? ஈஶ்வரனும் ஈஶ்வரவிபூதியும் வைஷ்ணவனுக்குக் கிஞ்சித்கரிக்க இருக்க, வைஷ்ணவனுமாய் அறவையுமாயிருப்பானொருவனை நீங்கள் எங்கே தேடுவிகோள்?' என்றானும். (எ)

*ஸ்ரீ விஷ்ணுதத்த்வே. "ஆஹ்லாதஶீதநேத்ராம்பு: புலகீக்ருதகாத்ரவாந் । ஸதா பரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்ய: ஸர்வதேஹிபி:". குழைந்து-ஶிதிலமாய், ஊன்மல்கி - மாம்ஸம்மிக்கு, மோடு-பிசல்கள், அம்ஸங்கள், பருப்பார் - பெருக்கும்படி உடம்பை வளர்ப்பார். மெலிகின - ம்ருதுவான, ஸ்ருஷ்டி ப்ரயோஜநம் - 'உசாத்துணையோ' என்ன, 'ஜந்மத்துக்கு' இத்யாதி. "விவிதாஸ்தேஹஸம்பத்திர்தேவாய நிவேதிதா:" இத்யாதிப்படியே ஈஶ்வரனுக்கு உறுப்பாகையன்றோ ஸ்ருஷ்டி ப்ரயோஜநம் என்ன, 'ஈஶ்வரன் தன்னையும்' இத்யாதி. ததீயசேஷமாக்கி வைக்குமென்றதுக்கு ஐதிஹ்யம் 'ஆயிரத்தளியிலே' இத்யாதி. ஆயிரத் தளி - க்ரிமிகண்டன் பட்டணம். ப்ரதிபத்தி - ஸம்ஸ்கார:., "அநாயமேதஸம்ஸாராதுத்தரேயமஹம் ப்ரபோ" என்னக்கடவதிறே. இங்கே "வணிஜநவணிஜவஹ்ய:" இத்யாதி, "நதேஶநியம:" இத்யாத்யநுஸந்தேயம். மாணி - ப்ரஹ்மசாரி. அறவை - தீநன்; ஒருவருமில்லாதவன் இத்யர்த்த:. 'ஜந்மத் துக்கு ப்ரயோஜநம்' இதி அத்ர - கூரத்தாழ்வானை மாருதியாண்டான் கினவ எழுந்தருளினபோது எம்பெருமானார் ஸந்நிதிக்கு ஆழ்வான் அருளிச்செய்த ஶ்லோகம் ப்ரஸ்துதம். "த்ரிஶோஷகாஞ்சயாநாஸ்யாயீவிஶேஷவதாம்ந்ருணாம் । தத்ர பஶ்சிமபூர்வாந்தம் நஹ்யத்யுக்நாயமத்யம:" அஸ்யார்த்த:, அஷ்டகா: - அஷ்டாக்ஷராத்யேதார:, தீவிஶேஷவதாந்ந்ருணாம் - ஸ்வரூபோபாயபுருஷார்த்த ஜ்ஞாநவதாம் நராணாம், திஸ்ர:ஆக்யா: - ஸ்வரூபநிஷ்ட உபாயநிஷ்ட: புருஷார்த்தநிஷ்டஶ்சேதி த்ரீணிநாமாநி, அயாந் - ப்ராபு:, அங்கீசக்ருரித்யர்த்த:; தத்ர - தேஷாமத்யே, மத்யம: - மத்யமபதைக தேஶஉஷஷ்ட்யந்த மகாரவாச்யோபாயவிரோதீ, பூர்வம்மாம்-ஸ்வரூபநிஷ்டம்மாம், ஸ்வஸ்ய பூர்வதேஶ வாஸித்வஞ்ச வ்யஜ்யதே, அந்தாய - மந்நாஶாய, நஹ்யதி-நிபத்நாதி; ஹேபஶ்சிம - கைங்கர்யைகநிஷ்ட, பாஷ்யகாரஸ்ய பஶ்சிமதேசவாஸித்வஞ்சவ்யஜ்யதே; பஶ்சிமபூர்வப (தாப்யாமந்விதோ) மத்யம: - த்ருதீயபதாந்வித மகாரார்த்தபூத புருஷார்த்தவிரோதீ, மாம்பாததே; ஜாதமபிஜ்ஞாநம் பாகவதாசார்ய கைங்கர்யாலாபே அகிஞ்சித்கரம்; அதோபவத்ஸேவயா யஜ்ஜீவநம் கதா ஸேத்ஸ்யதீதி பாவ:; அயந்தாத்த்விகார்த்த:. வ்யாகரணரீத்யாது, அஷ்டகா: - அஷ்டாத்யாய்யத்யேதாரோ வையாகரணா:; தீவிஶேஷவதாம் ந்ருணாம் - அஸ்தீதி நாஸ்தீதி திஷ்டமிதிபுத்தி விஶேஷவதாம் மநுஷ்யாணாம், திஸ்ர: ஆக்யா: - ஆஸ்திக இதி நாஸ்திகஇதி தைஷ்டிக இதிச த்ரீணி நாமாநி, அயாந் - ஜ்ஞாதவந்த:; "அஸ்திநாஸ்திதிஷ்டம்மதி:" இதி ஸூத்ரேணேதிபாவ:; தத்ர - ஆஸ்திகாதிமத்யே, ஹேபஶ்சிம - தைஷ்டிக, யதிவர, பூர்வம் - ப்ரதமம், ஆஸ்திகம் மாம், மத்யம: - நாஸ்திக: க்ரிமிகண்ட:, அந்தாய - நாஶாய, நஹ்யதி - நிபத்நாதி; அஹம் கிம் கரவாணி, பவத்ஸேவாகதா ஸேத்ஸ்யதீதி பாவ:.* (எ)

## எட்டாம் பாட்டு.

வார்புனலந்தண்ணருவி வடதிருவேங்கடத்தெந்தை
பேர்பலசொல்லிப்பிதற்றிப் பித்தரென்றேபிறர்கூற
ஊர்பலபுக்கும்புகாதும் உலோகர்சிரிக்கநின்றாடி
ஆர்வம்பெருகிக்குனிப்பார் அமரர்தொழப்படுவாரே.

ஆ.—(வார்புனல்.) நிரதிசயபோக்யமான திருமலையிலே நின்றருளி என்னை அடிமை கொண்ட திருவேங்கடமுடையானுடைய திருநாமங்களைச் சொல்லிப் பிதற்றி, வைஷ்ணவர்களல்லாதார் பித்தரென்று சொல்லும்படி மநுஷ்யர் ஸந்நிதாநத்தோடு அஸந்நிதாநத்தோடு வாசியின்றிக்கே லௌகிகர் சிரிக்க அதுவே உத்தம்பகமாம்படி ஸஸம்ப்ரமசேஷ்டிதத்தையுடையராய் அபிநிவேசம் மிகுத்து ஆடுமவர்கள், அயர்வறுமமரர்களிலும் ச்ரேஷ்டர் என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், ஸம்ஸாரத்திலே யிருந்துவைத்து ஸர்வகாலத்திலும் ஸர்வாச்ரயணீயனான திருவேங்கடமுடையானுடைய குணங்களுக்கு ஈடுபடுமவர்கள் அயர்வறுமமரர்களிலும் ச்ரேஷ்டர் என்கிறார்.

[வார் புனல் என்று தொடங்கி] - நிரதிசயபோக்யமான திருமலையிலே நின்றருளி என்னைஅடிமைகொண்ட திருவேங்கடமுடையானுடைய விபூதிமுகமாக வாசகமான நாமங்களையும் அஸாதாரணமான நாமங்களையும் சொல்லிப் பிதற்றி. [பித்தரென்றே பிறர்கூற] - வைஷ்ணவர்களல்லாதார் பித்தரென்று சொல்லும்படி. வைஷ்ணவர்களுடைய விஷயீகாரத்திலும் அவைஷ்ணவர்கள் இகழ்கையே புருஷார்த்தம் என்று கருத்து. [ஊர்பல என்று தொடங்கி] - மநுஷ்யர் ஸந்நிதாநத்தோடு அஸந்நிதாநத்தோடு வாசியின்றிக்கே லௌகிகர் சிரித்த அச்சிரிப்பே தாளம் போலே உத்தம்பகமாம்படி ஸஸம்ப்ரம சேஷ்டிதத்தையுடையராய் அபிநிவேசம் மிக்குக் கூத்தாடுமவர்கள்.

ப.—அநந்தரம், திருமலையிலே அர்ச்சாவதாரமாய் ஸுலபனான ஸர்வேச்வரனுடைய நீர்மைக்கு ஈடுபட்ட ப்ரவ்ருத்திகளையுடையவர்கள் ஸூரிகளாலே ஆதரிக்கப்படுவார்கள் என்கிறார்.

வார் புனல் - வீழாநிற்கிற புனலையுடைத்தாய், அம் - தர்சநீயமாய், தண் - குளிர்ந்த, அருவி - அருவிகளையுடைய, வடக்கு - (தமிழுக்கு) வடவெல்லையான, திருவேங்கடத்து - பெரிய திருமலையில்நிற்கிற, எந்தை - ஸ்வாமியுடைய, பேர் - (ஸ்வரூபரூபகுணவிபூதிவிஷயமான) திருநாமங்களை, பல - பலவும், சொல்லி - சொல்லி, பிதற்றி - அடைவுகெடப் பிதற்றி, (அத்தாலே), பிறர் - (பகவத்ப்ரேமமில்லாத) அந்யர், பித்தரென்று - பித்தரென்று, கூற - சொல்லும்படியாக, பலஊர் - (மநுஷ்யர்நடையாடுகிற) பலஊர்களிலே, புக்கும் - புக்கும், புகாதும் - மநுஷ்யர்நடையாடாதவிடங்களிலும், உலோகர் சிரிக்க - லௌகிகர் சிரிக்கும்படியாக, நின்று - (பரவசராய்க்கொண்டு) நின்று, ஆடி - நடையாடி, ஆர்வம் பெருகி - அபிநிவேசம் விஞ்சி, குனிப்பார் - ஸஸம்ப்ரம ந்ருத்தம் பண்ணுவார், அமரர் - நித்யாநுபவபரரான ஸூரிகளாலே, தொழப்படுவார் - ஆதரிக்கப்படுவார்கள்.

இ.—எட்டாம்பாட்டில், திருவேங்கடமுடையானுடைய நீர்மைக்கு ஈடுபடுமவர்களைக் கொண்டாடுகைக்கு நாம் ஆர்? நித்யஸூரிகளன்றோ அவர்களைக் கொண்டாடுமவர்? என்கிறார்.

[வார்புனல் இத்யாதி] - வீழாநின்ற புனலையுடைத்தாய் தர்ஶநீயமாய் ஶ்ரமஹரமான திருவருவியுடைத்தாய் வடக்கேயான திருமலையிலே நின்றருளி என்னை அடிமைகொண்ட திருவேங்கடமுடையானுடைய. [பேர்பல சொல்லி] - விபூதிவிஷயமாகவும் ஸ்வரூப ரூப குணவிஷயமாகவும் தாம் "புகழுநல்லொருவ"னில் அநுபவித்தவற்றை நினைக்கிறார். [பிதற்றி] - அக்ரமமாகவும் சொல்லி. [பித்தர் இத்யாதி] - "பூமியென்கோ என்னு "கண்ணனைக்கூவுமாறே" என்னு நின்றார், வ்யாஹதமாயிராநின்றதீ! ப்ராந்தரோ?" என்று என்னைச் சொல்லுமாபோலே தங்களையும் கண்டார் கண்டவிடத்தே சொல்லும்படி: ஸ்ரீவைஷ்ணவர்களங்கீகாரத்திற்காட்டில் அவைஷ்ணவர் நிந்தையே உத்தேஶ்யம் என்று இருக்கிறார். மிளகாழ்வான் அகரம்பெறப் போனவிடத்தில் வார்த்தை. "பேயரே யெனக்கு யாவரும்" இத்யாதி. [ஊர்பல இத்யாதி] - மநுஷ்ய ஸங்நிதாநத்தோடு அஸங்நிதாநத்தோடு வாசியற.விஶேஷஜ்ஞர் உள்ளவிடத்தோடு இல்லாத இடத்தோடு வாசியற லௌகிகர் சிரிக்க அதுவே தாளமாக நின்று ஆடி. [ஆர்வம் இத்யாதி] - அபிநிவேஶம் மிக்கு விக்ருதராமவர்கள். [அமரர் இத்யாதி] - பகவதநுபவத்தாலே களித்து. "ஹாஉ ஹாஉ ஹாஉ" என்னுமவர்களாலே கொண்டாடப்படுவர்கள்.

௮.---எட்டாம்பாட்டு. திருவேங்கடமுடையானுடைய நீர்மைக்கு ஈடுபடுவாரைக் கொண்டாடுகைக்கு நாம் ஆர்? நித்யஸூரிகளன்றோ அவர்களைக்கொண்டாடுவார்கள்? என்கிறார்.

[வார்புனல் இத்யாதி] - ஒழுகாநின்றுள்ள புனலையுடைத்தாய் தர்ஶநீயமாய் ஶ்ரமஹரமாயிருந்துள்ள அருவிகளையுடைத்தான வடக்குத்திருமலையிலே வந்துநின்றான் என்ஸ்வாமி. [பேர் இத்யாதி] - அவனுடைய திருநாமம் பலவற்றையும் அக்ரமமாகச் சொல்லி. தாம் "ஒழிவில்காலத்"திலும் "புகழுநல்லொருவ"னிலுமாகச் செய்தவற்றைச் சொல்லுகிறார். [பலசொல்லி] - ஸ்வரூபரூபகுணங்களுக்கு வாசகமாயும்,விபூதிக்கு வாசகமாயுமுள்ளவற்றை அடையப்பேசி.[பித்தரென்றேபிறர் கூற]-பகவத்குணங்களைக்கேட்டால் அவிக்ருதராயிருக்குமவர்கள். " 'பொருவில்சீர்ப்பூமியென்கோ' என்னு,'கண்ணனைக்கூவுமாறே' என்பது;'குன்றங்களனைத்துமென்கோ' என்னு,'பங்கயக்கண்ணனையே' என்பது; 'ஞாலமுண்டுமிழ்ந்தமாலையெண்ணுமாறறியமாட்டேன் யாவையும் யவருந்தானே' என்பதாகாநின்றார்; இவர் ப்ராந்தரோ?" என்று தம்மைப் பிறர் சொல்லுமாபோலே, இவர்கள் ப்ராந்தரோ வென்று சொல்லும்படி. "அத்தாவரியேயென்றுன்னையழைக்கப் பித்தாவென்றுபேசுகின்றார்பிறரென்னை" என்றும், "பேயரே யெனக்கு யாவரும் யானுமோர், பேயனே யெவர்க்கும்" என்றும் சொல்லுகிறபடியே, அவர்கள்செயல் இவர்களுக்கு அடைவுகேடாய்த் தோற்றுமாபோலே இவர்

---

எட்டாம்பாட்டு – 'வார்புனல்' இத்யாதி. 'திருவேங்கடத்தெந்தை' இத்யாதி, 'ஆர்வம்பெருகிக்குனிப்பார் அமரர்தொழப்படுவார்' என்கிறத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை – 'திருவேங்கடமுடையான்' இத்யாதி.

சொல்லிப்பிதற்றி – அடைவுகெடப் பிதற்றி. பலவற்றையு மென்றது – எத்தை விவக்ஷித்து? என்ன, 'தாம் ஒழிவில்' இத்யாதி. அதாவது – தாம்சொன்னாற்போலே சொல்லி யென்றபடி. ஒழிவில்காலத்தில், "வானவரீசன்" "ஈசன்வானவர்க்கு" என்றது – ஸ்வரூபவாசகம், "காரெழிலண்ணல்" "கருமாணிக்கம்" இத்யாதி – ரூபவாசகம்; "திருவேங்கடத்தந்தமில்புகழ்" என்றது-குணவாசகம்; புகழுநல்லொருவனில், "வானவராதியென்கோ" இத்யாதி – ஸ்வரூபவாசகம்; "பங்கயக்கண்ணன்" இத்யாதி – ரூபவாசகம்; "புகழுநல்லொருவன்" இத்யாதி – குணவாசகம்; விபூதிவாசகம் அதிஸ்புடம். உக்தமேவார்த்தம் ப்ரதீகோபாதாநபூர்வகம் விஶதயதி – 'பலசொல்லி ஸ்வரூப' இத்யாதி. 'பல' என்று – ஸாதாரணாஸாதாரண நாமங்களெல்லாவற்றையும் சொல்லுகிறது. 'இவர் ப்ராந்தரோ' இதி – விபூதிவாசக ஶப்தங்களுக்கு பகவத்பர்யந்தத்வ ஜ்ஞாநமில்லாமையாலே இவர் ப்ராந்தரோ? என்று சொல்லுவர்களென்றபடி.பிறர்க்கு வைஷ்ணவர்கள்செயல் ப்ராந்தர்என்னும்படி அடைவுகேடாய்த்தோற்றுமோ? என்ன, 'அத்தா' இத்யாதி. "கறவாமடநாகு" என்கிற திருமொழியில் எட்டாம்பாட்டு. எனக்கு ஜநகனானவனே! விரோதிநிரஸநஶீலனே என்று உன்னைச்சொல்ல, பித்தனென்று என்னைப் பிறர்சொல்லாநின்றார்களித்யர்த்தः. 'பேயரே' இத்யாதி – பெருமாள்திருமொழி.(௩-அ)எனக்குயாவரும் – பேயரே, அவர்க்கும் – யானும் ஓர்

கள் செயலும் அவர்களுக்கு அடைவுகேடாய்த் தோற்றுமிறே. [பிறர்கூற] - வைஷ்ணவர்களங்கீகாரம் பெறுமதிலும் அவைஷ்ணவர்கள் 'இவன் நமக்கு உடலல்லன்' என்று கைவிடுகைதான் உத்தேஶ்யமாயிருக்குமிறே; ராவணன் "[illegible]" (த்வாந்துதிக்குலபாம்ஸநம்) என்றதுதன்னை உத்தேஶ்யமாக நினைத்திருந்தானிறே விபீஷணாழ்வான்; மிளகாழ்வான்வார்த்தை ராஜா அகரம் வைக்கிருனாய் அங்கே செல்ல, 'உமக்குப் பங்கில்லை' என்ன, 'அது என்? வேதபரீக்ஷைவேணுமாகில் அத்தைச்செய்வது, ஶாஸ்த்ரபரீக்ஷை வேணுமாகில் அத்தைப் பரீக்ஷிப்பது' என்ன, 'உமக்கு அவையெல்லாம் போதும்; அதுக்கு உம்மைச் சொல்லவொண்ணாது' என்ன, 'ஆனால் எனக்குக் குறையேன்?' என்ன, 'நீர் ஸ்ரீவைஷ்ணவரன்றே, ஆகையாலே காண்' என்ன, புடைவையை முடிந்து எறிட்டுக் கூத்தாடினானாயிற்று,தன்னை அவர்கள் கைவிட்டதுக்கு; ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநமேயிறே வேண்டுவது. [ஊர்பல இத்யாதி] - மநுஷ்யருள்ளவிடத்தோடு இல்லாத இடத்தோடு வாசியற எங்கும் புக்கு, இவ்வாசியறியாத லௌகிகர் 'இவன் செய்யும்படியேன்?' என்று சிரிக்க, அதுவே தாளமாக நின்று ஆடி, அபிநிவேசமானது மேன்மேலெனக் கரைபுரண்டு குனிக்குமவர்கள். [அமரர்தொழப்படுவாரே] -நித்யஸூரிகளாலே கொண்டாடப்படுவார். பகவத் ஸந்நிதியிலே யிருந்து "[illegible]" (அஹமந்நமஹமந்நமஹமந்நம்) என்கிறபடியிலே களித்தாடுவது பாடுவதான நித்யஸூரிகள்இவர்களைக் கொண்டாடுவர்கள் என்கிறார்.

பேயனே இத்யந்வய꞉. ஸ்பஷ்டோர்த்த꞉. கூற - சொல்லும்படியாக. 'பிறர்கூற' என்று உத்தேஶ்யமாக, சொல்லுகிறதென்? பிறர் 'பித்தர்' என்கை உத்தேஶ்யமோ? என்ன, 'வைஷ்ணவர்கள்' இத்யாதி. அத்ர - "[illegible]" இதம்வித் - ப்ரஹ்மவித், அநிதம்விதா - அப்ரஹ்மவிதா, நஸமுத்திசேத் - நஸஹவஸேத், ஸமுத்தேஶ꞉ - ஸஹவாஸ꞉. நஸம்புஞ்சீத - தத்ஸஹபங்க்தௌ நபுஞ்சீதேத்யர்த்த꞉. நவசதமாதீஸ்யாத் - தஸ்யக்ருஹே நபுஞ்சீதேத்யர்த்த꞉. "[illegible]", "[illegible]", "[illegible]" "[illegible]" ஶௌண்டிகீ - மத்யவிக்ரயணீ. "[illegible]", "[illegible]" இத்யாத்யநுஸந்தேயம். அவைஷ்ணவபரித்யாகம் உத்தேஶ்யமென்னுமதுக்கு உதாஹரணம் - 'ராவணன் த்வாந்துதிக்' இத்யாதி. "[illegible]". மிளகாழ்வான்வார்த்தை யென்றது - ததீயவ்ருத்தாந்தம் இங்கே அநுஸந்தேய மென்றபடி. பலிதம் - 'ப்ராதிகூல்யஸ்ய' இத்யாதி. ப்ராதிகூல்யவர்ஜநமாவது - ப்ராதிகூலர் தன்னைவிடும்படி தான் அவர்களை விடுகை யென்னுதல், ப்ரதிகூலரை விடுகை யென்னுதல். 'ஊர்பலவும் புகாதும் புக்கு' என்று அந்வயமாய்; லக்ஷணயா, ஊர்பலவுமென்று - மநுஷ்யருள்ளவிடமெங்கு மென்றாய், புகாது மென்று - மநுஷ்யரில்லாதவிடத்தைச் சொல்லுகிறதென்று அர்த்தம் 'மநுஷ்யருள்ளவிடத்தோடு' இத்யாதி. எங்குமென்றது - அர்த்தஸித்தம். நித்யஸூரிகள் கொண்டாடுகைக்கு ஹேதுகதநமுகேந விவரணம் - 'பகவத்ஸந்நிதியிலே' இத்யாதி. க்ரமேண அந்வய꞉. (அ)

# ஒன்பதாம் பாட்டு.

அமரர்தொழப்படுவானை அனைத்துலகுக்கும்பிரானை
அமரமனத்தினுள் யோகுபுணர்ந்தவன்தன்னோடொன்றாக
அமரத்துணியவல்லார்களொழிய அல்லாதவரெல்லாம்
அமரநினைந்தெழுந்தாடி அலற்றுவதேகருமமே.

ஆ.—(அமரர்.) அயர்வறுமமரர்கள் அதிபதியாய் ஸர்வலோகேச்வரனாயிருந்த எம்பெருமானை கைவல்யார்த்தமாக ஆச்ரயிக்கும் அந்த க்ஷுத்ரரானவர்களொழிய அல்லாதாரெல்லாம் இப்படி எம்பெருமானை அநுஸந்தித்து அப்ரக்ருதிங்கதராம்படியாக அவனை ஆச்ரயியுங்கள் என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், கைவல்யபுருஷார்த்தநிஷ்டரை நிந்தித்து மற்றுள்ளாரெல்லாரும் ப்ரேமபரவசராய்க் குணங்களை அநுபவியுங்கோள்; இதுவே புருஷார்த்தம் என்கிறார்.

[அமரர் என்று தொடங்கி] - அயர்வறுமமரர்களதிபதியாய் ஸர்வேச்வரனாயிருந்துள்ள எம்பெருமானை மநஸ்ஸிலே தயலுற யோகாப்யாஸம் பண்ணி அவனோடு ஸாம்யத்தை ப்ராபிக்கவேணு மென்று துணியவல்லாரை யொழிய. [அல்லாதவர் என்று தொடங்கி] - அல்லாதவரெல்லாம் பகவத்குணங்களை நெஞ்சிலே ஈடுபடும்படி அநுஸந்தித்துக் கிளம்பியாடி அவற்றைச் சொல்லிக் கூப்பிடுகையே கர்த்தவ்யம்.

ப.—அநந்தரம், உபயவிபூதிநாதனானவன்விஷயத்தில் யோகஜநிதபக்திவிகார யுக்தரானவர்களன்றியே அதுஇல்லாத அல்லாதார்க்கும் அவர்களைக் கணிசித்தும் அவர்கள் வ்யாபாரங்களைப் பண்ணுகை கர்த்தவ்யம் என்கிறார்.

அமரர் - நித்யஸூரிகளுக்கு, தொழப்படுவானை-நிரதிசயபோக்யபூதனாய், அனைத்துலகுக்கும்-ஸமஸ்தலோகத்துக்கும், பிரானை-மோக்ஷப்ரதனான ஸர்வேச்வரனை, அமர-ஸ்திரமாம்படி, மனத்தினுள் - மநஸ்ஸிலே, யோகு புணர்ந்து-யோகமுகத்தாலே செறிந்து, அவன்தன்னோடு ஒன்றாக - பரமஸாம்யாபத்திபெறும்படி, அமர துணியவல்லார்கள் - நிலைநின்ற அத்யவஸாயத்தைப் பண்ண வல்ல பக்திநிஷ்டர்கள், ஒழிய-அன்றியே, அல்லாதவர் எல்லாம்-(இந்தயோகஜந்யபக்தி) கைவாராதவர்களெல்லாரும், அமர - இதிலே அமரவேணுமென்று, நினைத்து - நினைந்து, எழுந்து - உத்யுக்தராய், ஆடிஅலற்றுவதே - (அவர்களைப்போலே) ஆடுவது அலற்றுவதாகையே, கருமம் - கர்த்தவ்யம்.

பக்திபாகம் பிறவாதார்க்கும் நிஷ்பந்நபக்திக ப்ரவ்ருத்தியை அநுவிதாநம் பண்ணுகை ப்ராப்த மென்று கருத்து.

இ.—ஒன்பதாம்பாட்டில், ஶீலாதிகுண விஶிஷ்டனான இவனை விட்டு ஆத்மமாத்ரத்தையே விரும்புகிற கேவலரை நிந்தித்து மற்றுள்ளாரெல்லாரும் ப்ரேமபரவசராய்ப் பகவத்குணங்களை யநுபவிக்கும் இதுவே புருஷார்த்தம் என்கிறார்.

[அமரர் இத்யாதி] - நித்யஸூரிகளுக்கும் அவ்வருகான பெருமையையுடையவனை. [அனைத்துலகு இத்யாதி]-நித்யவிபூதியோடு லீலாவிபூதியோடு வாசியற ஸர்வலோகேச்வரனை. [அமர மனத்தினுள் யோகுபுணர்ந்து] - அவனை நெஞ்சிலே உற்றிருக்கும்படி யோகாப்யாஸம் பண்ணி. [அவன் தன் இத்யாதி] - சரமதசையிலே அவனோடு ஸாம்யத்தை ப்ராபிக்கவேணு

மென்று ஆத்மமாத்ரத்தையே விரும்பும் ஸாஹஸிகரையொழிய. ஸாம்யமாகிறது - ஸாத்தி யோகத்தால் வந்த ஸாம்யம். 'ஒன்றாகவென்று ஸாம்யத்தைச் சொன்னபடியென்?' என்னில்,— "ஹஜத்யேகத்வமாஸ்தித:" என்று அருளிச்செய்ய, "ஸாம்யேநயோகஸ்ஸந" என்று அநு பாஷித்தானிறே. அங்ஙனன்றிக்கே, இதுதான் விலக்ஷணாதிகாரிகளைச் சொல்லிற்றாய் அல்லாதவ ரென்று அத்தனையளவன்றிக்கேயிருக்கிற யாத்ருஸதாத்ருஸரை இங்ஙனே செய்யுங்கோள் என்ற தாணலோ வென்னில்,—'ஓதியுணர்ந்தவர்' என்று விலக்ஷணரையும் நிந்தித்து "முழுதுணர்நீர்மை யினார்" என்று ஒன்றும் கற்றிலர்களே யாகிலும் விக்ருதியையுடையார் ஸர்வஜ்ஞரென்றும் கொண் டாடிப்போருகிற ப்ரகரணமாகையாலே அங்ஙனாகவொண்ணாது. [அல்லாதவரெல்லாம்]-கைவல்யத் தில் அகப்படாதே பகவத்குண ஜிதராணரெல்லாரும். [அமர நினைந்து] - பகவத்குணங்களை நெஞ்சிலே உற்றிருக்கும்படி ஸ்வயம்ப்ரயோஜநமாக அநுஸந்தித்து. [எழுந்து ஆடி] - கிளர்ந்து ஆடி; அக்ரமமாகச் சொல்லுமதுவே ப்ரயோஜநம்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. கைவல்யபுருஷார்த்தத்தை எடுத்து, ஶீலாதிகுண விஶிஷ்ட மான வஸ்துவைப் பற்றாதே மின்மினிபோலேயிருக்கிற ஆத்மாநுபவமாத்ரத்திலே நிற்பதே! என்று அவர்களை நிந்தித்து; அவர்களையொழிந்தாரையெல்லாம் பகவத்வ்யதிரிக்த லாபங்களை 'புருஷார்த்தம்' என்றிராதே, பகவத்குணங்களை அநுஸந்தித்து விக்ருதராய் ஆடுவது பாடுவதாகுங்கோள்; இதுவே கர்த் தவ்யம் என்கிறார்.

[அமரர்தொழப்படுவானை] - ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் அவ்வருகான நித்யஸூரிகளாலே தொழப்படுகிறவனை. [அனைத்துலகுக்கும் பிரானை] - ஸர்வலோகேஶ்வரனை. [அமர மனத்தினுள் யோகுபுணர்ந்து] - நெஞ்சிலே ஊன்றி யிருக்கும்படி யோகாப்யாஸத்தைக் கனக்கப்பண்ணி. [அவன் தன்னோடு ஒன்றாக அமரத் துணியவல்லார்கள் ஒழிய] - சரமதசையிலே வந்தவாறே, அவனோடே இவ்வாத்மவஸ்துஸமாநமென்று புத்திபண்ணவல்ல ஹேயரையொழிய. ஒன்றாக என்னுங்காட்டில் - ஸமாநமாக என்னும் இவ்வர்த்தத்தைக் காட்டுமோ? என்னில்;—"ஸர்வபூதஸ்திதம்யோமாம்பஜத்யேகத்வமாஸ்தித:" (ஸர்வபூதஸ்திதம்யோமாம்பஜத்யேகத்வமாஸ்தித:) என்று - ஏகத்வத்தைச் சொல்லி, அத்தன்னை அநுபாஷிக்கிறவிடத்திலே "யோயம்யோகஸ்த்வயாப்ரோக்தஸ்ஸாம்யேநமதுஸூதந" (யோயம்யோகஸ்த்வயாப்ரோக்தஸ்ஸாம்யேநமதுஸூதந) என்று ஸாம் யத்தைச் சொல்லிற்றிறே. சரமதசையில் இவ்வஸ்து அவனோடொத்த ஸாத்தியையுடைத்தாக

ஒன்பதாம்பாட்டு—'அமரர்' இத்யாதி. உத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'கைவல்ய' இத்யாதி. 'சீலாதிகுணவிசிஷ்டமான' என்றது - கீழ்ப்பாட்டிலே "வேங்கடத்தெந்தை" என்றதைப் பற்ற. பற்றாதே - ப்ராப்யமாகப் பற்றாதே. 'அவர்களையொழிந்தாரை' இதி - 'நாம் முமுக்ஷுக்களன்றோ' என்கிற துரபிமானம் கேவலர்க்கு இருக்கையாலே அவர்களிடத்தில் உபதேசம் கார்யகரமாகாதென்று கருத்து.

பிரானைக்குறித்து - யோகுபுணர்ந்து இத்யர்த்த:. 'மனத்தினுள்-அமர' இத்யந்வய:. அமர-பொருந்த; ஸ்வயம் ப்ரகாஶமான ஆத்மஸ்வரூபம் நெஞ்சிலே விசதமாம்படி யித்யர்த்த:. சரமதசை - முக்திதசை. அவன்தன் னோடு ஒன்றாக-அவனோடு ஸமாநமாக. அதாவது-ஆத்மவஸ்து அவனோடு ஒத்த ஸாத்தியையுடைத்தாக. அமரத் துணியவல்லார்களொழிய - நன்றாக அத்யவஸிக்க வல்லார்களொழிய. அவனோடொன்றாகையை-ஸாம்யத்தை, அமர - பெறும்படி, துணியவல்லார்களொழிய - நிலைநின்ற வ்யவஸாயத்தைப்பண்ணினவர்களை யொழிய என்று உரையில் அர்த்தம். 'ஒன்றாக' என்றால் - ஐக்யத்தைச் சொல்லுமதொழிய, ஸாம்யத்தைச் சொல்லும்படி எங்ஙனே? என்று ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் - 'ஒன்றாகவென்னும்' இத்யாதி. கீதாஷஷ்டே, "ஸர்வபூதஸ்திதம் யோமாம்பஜத்யேகத்வமாஸ்தித: । ஸர்வதா வர்த்தமாநோபி ஸயோகீமயிவர்த்ததே ॥ அர்ஜுந உவாச ॥ யோயம் யோகஸ்த்வயா ப்ரோக்தஸ்ஸாம்யேந மதுஸூதந । ஏதஸ்யாஹம் ந பஶ்யாமி சஞ்சலத்வாத் ஸ்திதிம் ஸ்திராம்". 'சரமதசையிலே' இத்யாதி வாக்யவிவரணம்-

அத்யவஸிக்கவல்ல ஸாஹஸிகரை யொழிய. இவ்விடத்தில் - விலக்ஷணாதிகாரிகளைச் சொல்லிற்றுக்கி, அல்லாதவரெல்லாம் என்கிறவிடம் - யாத்ருஶாதாத்ருஶரானவர்க ளெல்லாம் அவனை அநுஸந்தித்துப் பாடுவது ஆடுவதாகுங்கோள் என்றதா ஞைலோ? என்னில்;— அது செய்யவொண்ணாது; கீழே - 'ஓதியுணர்ந்தவர்முன்ஞ' என்று - பகவத்குணங்களைக் கேட்டால் அவிக்ருதராயிருப்பர்களாகில் அவர்கள் ஜந்மவ்ருத்தாதிகளாலே எத்தனையேனும் நன்மையுடையராகிலும் அவர்கள் அவஸ்துக்களென்றும் சொல்லி, ஜந்மவ்ருத்தாதிகளால் தண்ணியரேயாகிலும் பகவத்குணநுஸந்தாநம்பண்ணி விக்ருதராம் ஸ்வபாவராகில் அவர்கள் முழுதுணர் நீர்மையினு ரென்றும் சொல்லி, இவர்களைக் கொண்டாடியும் அவர்களை ''என்சவிப்பார் மனிசரே'' என்று நிந்தித்தும் வருகிற ப்ரகரணமாகையாலே, இங்கு ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயித்து க்ஷுத்ரப்ரயோஜநங்களைக் கொண்டு அகலப்போகிறவர்கள் அவஸ்துக்க ளென்றதே யாகவேணும். [அல்லாதவரெல்லாம்] - கேவலாத்மாநுஸந்தாநத்தைப் பண்ணி, ஶீலாதிகுணவிஶிஷ்டமான வஸ்துவிலே நெஞ்சுபோகாதபடி நெஞ்சை இறுகப்பிடிக்கவல்ல ஹேயரை யொழிய நீக்கியுள்ளாரெல்லாம். [அமர நினைந்து எழுந்து ஆடி] - அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அவனை நெஞ்சிலே பொருந்த அநுஸந்தித்து, அவ்வநுஸந்தாநத்தாலே வந்த ஹர்ஷம் கொண்டு கிளர, அக்கிளர்த்தியோடே ஆடி அக்ரமமாக ஏத்தும் இதுவே கர்த்தவ்யம். (௯)

## பத்தாம் பாட்டு.

கருமமும்கருமபலனுமாகிய காரணன்தன்னைத்
திருமணிவண்ணனைச் செங்கண்மாலினைத்தேவபிரானை
ஒருமைமனத்தினுள்வைத்து உள்ளங்குழைந்தெழுந்தாடிப்
பெருமையும்நாணும்தவிர்ந்து பிதற்றுமின்பேதைமைதீர்ந்தே.

*ஆ.—(கருமமும்.) புண்யபாபகர்மங்களுக்கும் கர்மபலங்களுக்கும் நியந்தாவாய், ஸர்வஜகத்காரணமாய், நிரதிஶயௌஜ்ஜ்வல்ய நீலரத்நஸத்ருஶ திவ்யரூபனாய், பத்மபத்ரேக்ஷணனாய், மோக்ஷமோக்ஷாஶநாத்யபரிமிதபரமஸௌரிபில்ஸேவ்யமாநனாயிருந்த எம்பெருமானை அநந்யப்ரயோஜநமநஸ்கராய், நிரதிஶயபக்தியுக்தராய், நிரஸ்தாஹங்காராதிதோஷராய், பகவத்வ்யதிரிக்த விஷயஸங்கரஹிதராய்க்கொண்டு ஏத்துங்கள் என்கிறார்.*

*ஒ.—பத்தாம்பாட்டில், பகவத்குணங்களைக் கேட்டால் விக்ருதரன்றிக்கேயிருக்கும் இருப்பாகிற அறிவுகேட்டைத் தவிர்ந்து எல்லீரும் அவனுடைய குணங்களை அநுஸந்தித்துப் பரவஶராய் லஜ்ஜாபிமாநங்களை விட்டு அவனை ஏத்துங்கோள் என்கிறார்.*

*[கருமமும் என்று தொடங்கி]-புண்யபாபரூபமான கர்மங்களுக்கும் கர்மபலங்களுக்கும் நியந்தாவாய் ஸர்வஜகத்காரணமுமாய் வடிவழகையும் கண்ணழகையும் காட்டி அயர்வறுமமரர்களைப் போலே என்னையடிமைகொண்டவனை. [ஒருமை என்று தொடங்கி] - அநந்யப்ரயோஜநராய்க் கொண்டு ஹ்ருதயத்திலேவைத்து ஶிதிலாந்தஃகரணராய்க் கிளம்பி ஆடி.*

---

*'சரமதசையில் இவ்வஸ்து' இத்யாதி. சுத்தியை - அபஹதபாப்மத்வாதிகளை. விலக்ஷணாதிகாரிகள் - உபாஸகர். யாத்ருஶதாத்ருஶர் - பக்த்யநதிகாரிகள். 'க்ஷுத்ரப்ரயோஜநங்களை' என்ற பஹுவசநத்தாலே - ஐஶ்வர்யகாமரையும் நினைக்கிறது. 'அலற்றுவதே' என்றதின் அர்த்தம் - 'அக்ரமமாக' என்றது. கருமமென்றது - க்ரியத இதி கர்மமென்று - கார்யமாய், கர்த்தவ்ய மென்றபடி. க்ரமேண அந்வயஃ.* (௯)

ப.—அநந்தரம், கீழ் - விலக்ஷணவிக்ரஹவிசிஷ்டனானவன் விஷயத்தில் உபாஸகருடைய பக்திபாரவஶ்யத்தை அதில் அந்வயமில்லாதாரும் அநுவிதாநம்பண்ண ப்ராப்தமென்றார்; இதில் - அநந்யஸாதநரான அநந்யப்ரயோஜநரும் பகவத்ப்ராவண்ய பாரவஶ்யத்தாலே விக்ருதராய் வர்த்தியுங்கோள் என்கிறார்.

கருமமும் - (ஸாதநரூபமான) கர்மங்களும், கருமபலனும் - தத்ஸாத்யமான பலங்களும், ஆகிய காரணன்தன்னை - தானிட்ட வழக்காம்படி ஸமஸ்தகாரணபூதனாய், திரு - (தன்னையே உபாயமாகவும் உபேயமாகவும் பற்றுவார்க்கு) தர்ஶநீயமான, மணி - மாணிக்கம்போன்ற, வண்ணனை-(ஶுபாஶ்ரயமான) வடிவையுடையனாய், (அவர்களைப் பூர்ணகடாக்ஷம்பண்ணும்), செம் கண்-சிவந்த கண்களையும், மாலினை - வாத்ஸல்யத்தையுமுடையனாய், தேவபிரானை - ஸூரிகளுக்குப் போலே அவர்களுக்கு அநுபாவ்யனானவனை, ஒருமை - (உபாயோபேயங்களில் பேதம்பிறவாதபடி) ஒருமைப்பட்ட, மனத்தினுள் - நெஞ்சிலே, வைத்து - வைத்து, உள்ளம்குழைந்து - (இவ்வாகாரத்வயத்துக்குஈடுபட்டு) நெகிழ்ந்தநெஞ்சையுடையராய், எழுந்து - கிளர்ந்து, ஆடி - ஆடி, பெருமையும் - (துர்மாநகார்யமான) பெருமையையும், நாணும் - (அதடியான 'மனிசர்முன்னே ஆடும்படியென்?' என்கிற) லஜ்ஜையையும், தவிர்ந்து - தவிர்ந்து, பேதைமை - (இப்பாரவஶ்யம் நிகர்ஷமாகநினைக்கும்) அறிவுகேட்டையும், தீர்ந்து - தவிர்ந்து, பிதற்றுமின் - (அவனுடையகுணகணங்களை) அக்ரமமாகப் பிதற்றுங்கோள். அநந்யஸாதநர்க்கும் ஶேஷத்வஸாரஸ்யகாரிதமான பாரவஶ்யம் உத்தேஶ்யமென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டு. கேவலரை நிந்தித்தார் கீழிற்பாட்டில். இதில், அநந்யப்ரயோஜநரெல்லாம் பகவத்குணங்களை பக்திபாரவஶ்யத்தாலே அக்ரமமாகப் பேசுங்கோள் என்கிறார்.

[கருமமும் இத்யாதி] - புண்யபாபரூபமான கர்மங்களுக்கும் நியந்தாவாய், கர்மபலங்களுக்கும் நியந்தாவாய். [காரணன்தன்னை] - "காரணந்து த்யேய:" என்கிறபடியே ஸமாஶ்ரயணீயனானவனை. [திருமணிவண்ணனை] - உபாஸிப்பார்க்கு ஶுபாஶ்ரயமான வடிவையுடையவனை. 'திரு' என்று - காந்தி; காந்தியையுடைத்தான நீலமணிபோலேயிருக்கிற நிறத்தையுடையவனை. [செங்கண்மாலினை] - ஸமாஶ்ரயணீயன் புண்டரீகாக்ஷனிறே. [தேவபிரானை] - இவ்வடிவழகையும் கண்ணழகையும் நித்யஸூரிகளை அநுபவிப்பிக்குமாபோலே என்னையும் அநுபவிப்பித்தவனை. [ஒருமை இத்யாதி] - ஒருபடிப்பட நெஞ்சிலே வைத்து; அநந்யப்ரயோஜநராய் ஹ்ருதயத்திலே வைக்கை. ஒருபலத்துக்காக வன்றிக்கே, நெஞ்சு ஈஶிதிலமாய் ப்ரீதியாலே கிளர்ந்து ஆடி, அபிமாநக்ருத்யமான பெருமையையும் நின்றாரெதிரே விக்ருதராகவொண்ணாதென்கிற லஜ்ஜையையும் இத்தைத் தாழ்வாக நினைக்கும் மதிகேட்டையுந் தவிர்ந்து அக்ரமமாக ஏத்துங்கோள். "புகழுநல்லொருவ"னில் விபூதியாகத் ததீயத்வாகாரேண உத்தேஶ்யமாக அநுஸந்தித்தார்; இங்குச் சிலரை நிந்தித்துச் சிலரைக் கொண்டாடினார்; இத்தால் சொல்லிற்றாய்த்து— அவன் ஸர்வஶேஷியாகையாலே ஸர்வமும் ததீயமாய்த் தோற்றக்கடவது; அந்தஶேஷித்வத்தைக் குறைவற அநுஸந்தித்தார் அங்கு; தம்முடைய ஶேஷத்வத்தை அநுஸந்தித்தவாறே அஜ்ஞர்புறம்பாய் பகவத்குணஜிதர் உள்ளாராய்த் தோற்றிற்று; அந்தஶேஷத்வத்தைக் குறைவற அநுஸந்தித்தார் இங்கு.

ஈடு.—பத்தாம்பாட்டு. கீழே - கேவலரை நிந்தித்தார்; இதில் - 'அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அவன்குணங்களை யநுஸந்தித்து விக்ருதராகுங்கோள், உங்களுக்கு இதுவே புருஷார்த்தம்' என்கிறார்.

---

பத்தாம்பாட்டு – 'கருமமும்' இத்யாதி. உத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-'கீழே கேவலரை' இத்யாதி.

[கருமமும் இத்யாதி] - புண்யபாபரூபமான கர்மங்களுக்கும் கர்மபலங்களுக்கும் நியாமகனாய். கர்மங்களுண்டானாலும் கர்மாநுஷ்டாதாவாயிருப்பானொருவன் வேணுமே, கர்மாநுஷ்டாதாவுமாய். அநுஷ்டாத்ருத்வாரா கர்மநிர்வாஹகனென்றபடி. [கருமபலனுமாகிய] - கர்மங்களையநுஷ்டித்தாலும் அவற்றுக்கு ஒருவன் பலப்ரதானம்பண்ணுதபோது அவை பழுதையோபாதியாய்க் கிடக்குமித்தனையிறே, அவை அசேதநக்ரியையாகையாலே; அவற்றுக்குப் பலப்ரதாதாவுமாய். [காரணன்தன்னை] - புண்யங்களிலே ப்ரவர்த்திப்பிக்கவும் பாபங்களைப்போக்கவும் அவற்றுக்குப் பலங்கொடுக்கவும்ஒருகர்த்தாவேணுமே, அவற்றுக்குக்காரணபூதனுயுமுள்ளவனை. [திருமணிவண்ணனை] - உபாஸகனுக்கு விக்ரஹத்தை சுபாஶ்ரயமாகச் சொல்லாநின்றதிறே; இவனுக்கு உத்தேஶ்யமாயிருந்துள்ள விக்ரஹத்தையுடையவனை. திரு என்று - காந்தி. காந்தி மிக்கிருந்துள்ள நீலமணிபோலே ஶ்ரமஹரமான வடிவையுடையவனை. [சேங்கண்மாலினை] - அகவாயில் வாத்ஸல்யத்துக்கு ப்ரகாஶகமான திருக்கண்களையுடையவனை. காரணவஸ்துவுக்கு லக்ஷணமாகப் புண்டரீகாக்ஷத்வத்தை விதியாநின்றதிறே. [தேவபிரானை]-அவ்வடிவழகையும் கண்ணழகையும் நித்யஸூரிகளை அநுபவிப்பிக்குமாபோலே என்னையநுபவிப்பித்து, எனக்கு உபகாரகனுனவனை. [ஒருமைமனத்தினுள்வைத்து] - ஒரு ப்ரயோஜநத்துக்காக வன்றிக்கே, நெஞ்சிலேயிருக்கைதானே ப்ரயோஜநமாக நெஞ்சிலேவைத்து. இத்தால் - கீழிற்பாட்டிலே ப்ரயோஜநாந்தரபரரை நிந்தித்தா ரேன்னுமிடம் தோற்றுகிறதிறே. இப்படி அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு நெஞ்சிலே வைத்தவாறே, அகவாய் ஶிதிலமாய் அந்தஶைதில்யத்தோடே இருந்தவிடத்தில் இராதே ஆடி, 'பகவத்குணங்களைக் கேட்டார் விக்ருதராகை நமக்குப் போருமோ?' என்கிற அபிமாநகார்யமான மேன்மையையும், 'நாம் பிறரறிய விக்ருதராம்படி எங்ஙனே?' என்றிருக்கிற லஜ்ஜையையும், 'எல்லாவளவிலும் நம் அகவாய் ஒருவர்க்கும் தேரியாதபடி திரஸ்கரித்துக்கோண்டிருக்கவேண்டாவோ?' என்றிருக்கிற அறிவுகேட்டையும்,

---

*ஶாஸ்த்ரஸித்தமான கர்மங்களுக்கு நியாமகனுகையாவ தேது? என்ன, 'கர்மங்களுண்டானாலும்' இத்யாதி. உண்டானாலும் - ஶாஸ்த்ரஸித்தமானாலும். அநுஷ்டாதாவுமாய் - அநுஷ்டாதாவுக்கு அந்தர்யாமியாய் நின்று கர்மநிர்வாஹகனாய். கர்மந்தானே பலப்ரதமாகாதோ? என்ன, 'கர்மங்களை' இத்யாதி. பலப்ரதாதாவுமாய் - பலப்ரதாதாவுக்கு அந்தர்யாமியுமாய். ஆக, கர்மத்துக்கு நிர்வாஹகனுகையாவது - கர்மாநுஷ்டாதாக்களுக்கு அந்தர்யாமியாய்க்கொண்டு அநுஷ்டிப்பித்து நிர்வஹிக்கை. கர்மபலத்துக்கு நிர்வாஹகனுகையாவது - பலப்ரதாதாக்களுக்கு அந்தர்யாமியாய் நிர்வஹிக்கை யென்றபடி. 'காரணன்தன்னை' என்று - கீழுக்தார்த்தத்தை அநுவதித்து, எல்லாவற்றுக்கும் காரணபூதனென்கிற தென்கிறார் - 'புண்யங்களிலே' இத்யாதி. 'கருமமும் கருமபலனுமாகிய' என்றது - முமுக்ஷுக்களுடைய கர்மகர்மபலநிர்வாஹகத்வத்துக்கும் உபலக்ஷணம். 'காரணன் தன்னை' என்றதும் - முமுக்ஷுக்களுடைய கர்மகர்மபலங்களுக்குக் காரண மென்னுமதுக்கும் உபலக்ஷணம். 'உபாஸகனுக்கு விக்ரஹத்தை ஶுபாஶ்ரயமாகச் சொல்லாநின்றதிறே' என்றிருக்கையாலே. உபாஸகனுக்கு - முமுக்ஷுவுக்கு. 'மால்' என்று - வ்யாமோஹமாய், அதாவது - வாத்ஸல்ய மென்கிறார், 'அகவாயில்' இத்யாதி. அர்த்தாந்தரம் - 'காரணவஸ்துவுக்கு' இத்யாதி. 'காரணன்தன்னை செங்கண்மாலினை' என்று சேர்ப்பது. இந்தவாக்யத்தில், 'காரணன்தன்னை' என்றது - ஜகத்காரணத்வத்துக்கும் உபலக்ஷணம். சிவந்தகண்ணையுடைய வத்ஸலனை யென்று முந்தின அர்த்தம்; மாலினை - ஸர்வாதிகனையென்று த்விதீயார்த்தம். விதியாநின்றதிறே யென்றது - "[Grantha text] ", "[Grantha text]" இத்யாதியைப் பற்ற. தேவபிரானை - நித்யஸூரிகளுக்குப்போலே எனக்கு உபகாரகனுனவனை யென்று விவக்ஷித்து அர்த்தம் - 'அவ்வடிவழகையும்' இத்யாதி. ஒருமைமனத்தினுள் வைத்து - ஒருபடிப்பட நெஞ்சிலே வைத்து; அநந்யப்ரயோஜநனுய்க்கொண்டு நெஞ்சிலே வைத்து என்றபடி. இங்கு - "[Grantha text] । [Grantha text]" என்றது அநுஸந்தேயம். பலிதம் - 'இத்தால்' இத்யாதி. அதிகாரிவிஶேஷாநிர்த்தாரணேந அநந்யப்ரயோஜநத்வஸ்யைவ விதாநாதித்யர்த்தః. ப்ரயோஜநாந்தரபரரை - கேவலரை. குழைந்து - ஶிதிலமாய்.*

இவற்றையடையப் போகட்டு அடைவுகேட ஏத்துங்கோள். இதுவே உங்களுக்குப் புருஷார்த்தம் என்கிருர். (க௦)

## பதினோராம் பாட்டு.

தீர்ந்தவடியவர்தம்மைத் திருத்திப்பணிகோள்ளவல்ல
ஆர்ந்தபுகழச்சுதனை அமரர்பிரானை *எம்மானை
வாய்ந்தவளவயல்சூழ் தண்வளங்குருகூர்ச்சடகோபன்
நேர்ந்தவோராயிரத்திப்பத்து அருவினைநீறுசெய்யுமே.

ஆ.—(தீர்ந்த.) தன்திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமு மென்று அத்யவஸித்திருக்கும் ஆஶ்ரிதரை நிரஸ்தப்ரதிபந்தகராக்கி அடிமைசெய்வித்துக் கொள்ளவல்ல ஆர்ந்தபுகழை யுடையனும், அயர்வறு மமரர்களோடே ஸம்ஶ்லேஷிக்குமாபோலே ஆஶ்ரிதரோடு ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனும், எனக்கு ஸ்வாமியாயிருந்த எம்பெருமானைச் சொன்ன இத்திருவாய்மொழி பகவத்பக்திவிரோதிகளைப் போக்கும் என்கிருர்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பகவத்குணாநுஸந்தாநத்தால் ஒரு விக்ருதி பிறவாமையாகிற மஹாபாபத்தை இதுதானே நிஶ்ஶேஷமாகப் போக்கும் என்கிருர்.

[தீர்ந்த என்று தொடங்கி] - எம்பெருமானையே ப்ராப்யமும் ப்ராபகமு மென்று அத்யவஸித்திருக்கும் ஆஶ்ரிதரை நிரஸ்த ஸமஸ்த ப்ரதிபந்தகராக்கி அடிமை செய்வித்துக்கொள்ளும் மிக்கிருந்துள்ள புகழையுடையனுய் அவர்களோடு நித்யஸம்ஶ்லிஷ்டனுனவனை. [அமரர்பிரானை எம்மானை] - தான் ஒருவன் உளனென்று அறியாத என்னை அயர்வறுமமரர்களோடு ஒக்க அடிமை கொண்டவனை. [வாய்ந்த என்று தொடங்கி] - வாய்ந்த திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக அநுபவவிரோதி நிவ்ருத்தியை அருளிச்செய்கிருர்.

தீர்ந்த - (ஈஶ்வரனுடைய உபாயோபேயத்வங்களில்) வ்யவஸிதரா யிருக்கும், அடியவர்தம்மை - அடியவர்களை, திருத்தி - (ப்ரதிபந்தக நிவ்ருத்தி பூர்வகமாகப் பரபக்தி பரஜ்ஞாநாதிகளைக் கொடுத்துத்) திருத்தி, பணி கொள்ளவல்ல - நித்யகைங்கர்யத்தைக் கொள்ளவல்ல, ஆர்ந்த புகழ் - (ஸர்வஶக்தியுக்தனுகையாலே) பரிபூர்ணமான குணகணங்களையுடையனுய், அச்சுதனை - ஆஶ்ரிதரை நழுவவிடாதவனுய், அமரர்பிரானை அம்மானை - நித்யஸூரிகளோடொக்க அடிமைகொள்ளும் ஸர்வேஶ்வரனை, வாய்ந்த - நன்றான, வளம் - வளப்பத்தையுடைய, வயல் - வயல், சூழ் - சூழ்ந்து, தண் - ஶ்ரமஹரமாய், வளம் - ஸர்வஸம்பத்ஸம்ருத்தமான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், நேர்ந்த - (பக்திபரவசருடைய உத்கர்ஷத்தையும் அல்லாதாருடைய நிந்தையையும்) நேர்ந்து அருளிச்செய்த, ஓர் - அத்விதீயமான, ஆயிரத்து - ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு, இ பத்து-இந்தப் பத்தும், அருவினை - (பகவத்குணாநுஸந்தாநத்தில் விக்ருதராகாதபடி பண்ணும்) மஹாபாபங்களை, நீறுசெய்யும் - பஸ்மஸாத்தாம்படி பண்ணும். வளங்குருகூர் - வாய்ந்த - சடகோப னென்ருகவுமாம். இது-அறுசீராசிரியவிருத்தம்.

---

எழுந்து - இருந்தவிடத்தி லிராதே. பெருமை - மேன்மை. நாண் - லஜ்ஜை. பேதைமை - அறிவுகேடு. அடி தொடங்கி, நாணும்தவிர்ந்து - பேதைமைதீர்ந்து - பிதற்றுமின் இத்யந்வய:. (க௦)

* அம்மானை என்பது உரையின் பாடம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார்க்கு பகவத்குணாநுபவத்தால் விக்ருதி பிறவாமையாகிற பாபத்தை இதுதானே நிஸ்ஸேஷமாய்ப் போக்கும் என்கிறார்.

[தீர்ந்த இத்யாதி] - அவனே ப்ராப்யமும் ப்ராபகமு மென்று அத்யவஸித்த ஆஸ்ரிதரை ப்ரதிபந்தகங்களைப் போக்கி அடிமை கொள்ளும் ஸக்தியையுடையவன். "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்று இருப்பாரை "க்ரியதாமிதிமாம்வத" என்று அடிமை கொள்ளும் என்றுமாம். [ஆர்ந்த புகழ்] - மிக்க புகழ். [அச்சுதனை] - அடிமையில் நழுவவிட்டுக்கொடாதவனை. [அமரர் இத்யாதி] - நித்யஸூரிகளைக் கொள்ளும் அடிமையை ஆஸாலேஸமில்லாத என்னைக் கொண்டருளினவனை. [வாய்ந்த] - கிட்டின. பகவத்குணங்களில் அவிக்ருதரை நிந்தித்து விக்ருதரைக் கொண்டாடும்படி தாம் இவ்விஷயத்திலே உள்புகுந்தபடி. [வளவயல் இத்யாதி] - வயலுக்கும் நகரத்துக்கும் சொல்லும் சிறப்பெல்லாம் உண்டா யிருக்கை. [நேர்ந்த] - சொன்ன. [அருவினை நீறுசெய்யும்] - பகவத் குணங்களைக் கேட்டால் அவிக்ருதரா யிருக்கைக்கு அடியாகிற மஹாபாபத்தைப் போக்கும்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றார் பகவத்குணாநுஸந்தாநம் பண்ணினால் அவிக்ருதராயிருக்கைக்கு அடியான மஹாபாபத்தை இதுதானே நிஸ்ஸேஷமாகப் போக்கும் என்கிறார்.

[தீர்ந்த அடியவர்தம்மை] - 'ப்ராப்யப்ராபகங்கள் அவனே' என்று இருக்குமவர்களாயிற்று - தீர்ந்தவடியவராகிறார். அவர்களைத் திருத்திப் பணிகொள்ளுகையாகிறது - அவர்களுடைய ப்ராப்யப்ராபகவிரோதிகளைப் போக்கி அடிமைகொள்கை. "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" (அஹம் ஸர்வம்கரிஷ்யாமி) என்று இருந்தாலும், "க்ரியதாமிதிமாம்வத" (க்ரியதாமிதிமாம்வத) என்று அடிமை கொள்ளவேணுமே. [ஆர்ந்தபுகழச்சுதனை] - குறைவற்ற கல்யாண குணங்களையுடையவனாய், 'தன்னை யாஸ்ரயித்தாரை நழுவவிட்டான்' என்னும் வார்த்தையை ஒருநாளுங் கேட்டறியாதவனை. [அமரர்பிரானை எம்மானை] - அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார கந்தரான நித்யஸூரிகளைக் கொள்ளும் அடிமையைத் தன்பக்கல் ஆஸாலேஸமின்றிக்கே யிருக்கிற என்னைக் கொண்டவனை. அச்யுதத்வம் கேட்டார்வாய்க் கேட்டன்றிக்கே, தம்பக்கலிலே அநுஷ்டாநபர்யந்தமாகக்கண்டு சொல்லுகிறார். [வாய்ந்த]-பகவத்குணங்களை யநுஸந்திக்கையும் அவ்வநுஸந்தாநத்தை யொழியச்செல்லாமையு மாகிற இவ்வளவன்றிக்கே, பகவத்குணங்களைக் கேட்டால் அவிக்ருதரா யிருப்பாரை நிந்தித்தும் விக்ருதராயிருப்பாரைக் கொண்டாடியும் போரும்படி அவ்விஷயத்திலே அவகாஹித்துச் சொன்ன. வாய்கை - கிட்டுகை. [வளவயல் இத்யாதி]-வயலுக்குச் சொல்லுகிற சிறப்பையும் நகரங்களுக்குச் சொல்லுகிற சிறப்பையுமுடைத்தான திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார் அருளிச்செய்த.

---

நிகமம் - 'தீர்ந்த' இத்யாதி, 'அருவினை நீறுசெய்யும்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'இத்திருவாய்மொழி' இத்யாதி.

விரோதியைப் போக்கினால் தானே அடிமை செய்யானோ? பணிகொள்ள வேணுமோ? என்ன, 'அஹம்ஸர்வம்' இத்யாதி; யத்வா, அர்த்தாந்தரமாதல். அதாவது - தீர்ந்திருக்கையாவது - "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்று இருக்கை; திருத்தி - ஏவி. ப்ராப்யவிரோதி - விஷயாந்தரங்கள். ப்ராபகவிரோதி - உபாயாந்தரங்கள். ந வித்யதே ச்யுதோ யஸ்மாத் ஸ: - அச்யுத இதி விவக்ஷிதம். அடிமை - வாசிக கைங்கர்யம். பலிதம் - 'அச்யுதத்வம்' இத்யாதி. 'வாய்ந்த' என்றது - சடகோபனுக்கு விசேஷணம். அவகாஹிக்கையைச் சொல்லுகிறது - இத்திருவாய்மொழியின் அர்த்தாநுகுணமாக. அருவினைக்கு அர்த்தம் - 'பகவத்குணங்கள்' இத்யாதி. தீர்ந்த அடியவர் தொடங்கி, எம்மானை - வளவயல்சூழ் தண்வளம் குருகூர்ச் சடகோபன் - ஆயிரத்

தண் - குளிர்த்தி. நேர்ந்த - சொன்ன என்றபடி. பகவத்குணநுஸந்தாநத்தாலே விக்ருதராய்க் கொண்டு சொன்ன ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்து, [அருவினை நீறுசெய்யும்] - பகவத் குணங்களைக் கேட்டால் விக்ருதராகாதே திண்ணியராயிருக்கைக்கு அடியான மஹாபாபங்களை பஸ்மஸாத்தாக்கும். (கக)

---

*திலும் வைத்துக்கொண்டு – வாய்ந்து – நேர்ந்த – இப்பத்து அருவினை நீறு செய்யும் என்று அந்வயம். எம் மானை – வாய்ந்த – சடகோப னென்றுமாம். ஸம்ருத்தியுடைய வயல் சூழ்ந்து ப்ரமஹரமாய் ஸர்வஸம்பத்ஸம் ருத்தமான திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வா ரித்யர்த்தः. (கக)*

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.**—[illegible]

---

**த்ரவிடோநிஷத் தாத்பர்யரத்நாவளி.**—[illegible] ॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

*மொய்ம்பாரும்மாலுக்கு முன்னடிமைசெய்துவப்பால்*
*அன்பாலாட்செய்பவரையாதரித்தும்—அன்பிலா*
*மூடரைநிந்தித்தும் மொழிந்தருளும் மாறன்பால்*
*தேடரியபத்திநெஞ்சேசெய்.*

*ஆழ்வார் திருவடிகளே சரணம். எம்பெருமானார் திருவடிகளே சரணம். சீயர் திருவடிகளே சரணம்.*

## ஆறாந்திருவாய்மொழி—செய்யதாமரை: ப்ரவேசம்.

**ஆ.**—(செய்யதாமரைக்கண்ணன்.) "பிறற்றுமின் பேதைமைதீர்ந்து" என்றுகொண்டு எம்பெருமானை ஆஶ்ரயியுங்கள் என்று முன்பு சொல்லப்பட்டவர்களைக் குறித்து எம்பெருமா னுடைய ஸௌலப்யகாஷ்டையை அருளிச்செய்கிறார்.

*ஒ.*—ஆறாந் திருவாய்மொழியில், 'எம்பெருமான் இப்படி அடிமையாலே உகப்பிக்கக் கடவனாயிருக்கச் சேதநர் இவன்பக்கல் விமுகராய் ஸ்தப்தராயிருக்கைக்குக் காரணம் பகவத் குண ஜ்ஞாநமில்லாமை' என்று பார்த்தருளி, முதல்திருவாய்மொழியே தொடங்கி இவ்வளவும் வரத் தாம் அநுபவித்த ஐஶ்வர்ய ஸௌலப்யாதிகளை அநுபாஷித்து "பத்துடையடியவ"ரிற் சொன்ன ஸௌலப்யமும் முதல்திருவாய்மொழியிற் சொன்ன பரத்வத்தோடு ஒக்கும் என்னும் படியான அர்ச்சாவதார ப்ரயந்தமான ஸௌலப்ய காஷ்டையை அருளிச்செய்து அவனை ஆஶ்ரயி யுங்கோள் என்கிறார். "பத்துடையடியவ"ரிற் காட்டிலும் அர்ச்சாவதார ஸௌலப்யமாவது என்? என்னில்,—எல்லாக் காலத்திலும் அநுபவிக்கலாம்படி ஸந்நிதியுண்டாகையும் ஆஶ்ரிதனானவன் ஏதேனும் த்ரவ்யத்தைத் திருவுடம்பாகக் கோலினால் அத்தையே மிகவும் விரும்பக்கடவனாயும் எல்லாருக்கும் அநுபவிக்கலாம்படி கைவந்து போஜந ஸம்பாஷணை ஆஸந ஶயநாதிகள் தொடக்க மான ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் ஆஶ்ரிதபராதீநமாகையும் இவை தொடக்கமான இப்படி களை ஶ்ரிய:பதியான தான் ஒரு ஹேதுவாலன்றிக்கே நைஸர்க்கிகமாகவுடையனாயிருக்கை.

ப.— ஆறுந்திருவாய்மொழியில், கீழ் மோக்ஷத்வ ஸாரஸ்யத்தால் பிறந்த ப்ரீதிவிகாரம் உத்தேஶ்யமென்றுஅருளிச்செய்தவர்அந்தஇனிமையில்லாமையாலேஅவிக்ருதரானஸம்ஸாரிகளுக்கும் பகவச்சேஷத்வத்தை உபதேசிப்பதாக மோக்ஷியினுடையஅர்ச்சாவதார பர்யந்தமான ஸௌலப்யத்தை உபபாதிப்பதாக நினைத்து,அந்த ஸௌலப்யத்துக்கு ஊற்றான ஜகத்ஸ்ரஷ்ட்ருத்வத்தையும், ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமான அவதாரகந்தத்வத்தையும், அவதீர்ணனுடைய அதிஶயிதசேஷ்டிதத்வத்தையும், ஈஶ்வராபிமாநிகளுக்கும் ஆஶ்ரயணீயனான சீலாதிஶயத்தையும், அவதாரதசையிலும் அகிலவிபூதித்வம் தோற்றும்படியான ஆதிக்யத்தையும், ஆஶ்ரித விஷயத்தில் அதிஶயித வாத்ஸல்யத்தையும்,நிரவதிகபோக்யதையையும், பற்றினாரை நழுவவிடாத பக்ஷபாதத்தையும், ஸர்வவிதபந்துவுமாய்க்கொண்டு ஆஶ்ரிதரிட்ட வழக்கான அர்ச்சாவதார பாரதந்த்ர்யத்தையும், ஆஶ்ரிதபாரதந்த்ரனான அவன்பக்கல் தமக்குப் பிறந்த அபிநிவேஶத்தையும் அருளிச்செய்து, பகவச்சேஷத்வத்தை ப்ரதிபாதித்தருளுகிறார்.

இ.—ஆறுந்திருவாய்மொழியில், கீழ் பகவத்குணங்களிலே அவிக்ருதராய்த் தம்மாலே நிந்திதரா யிருந்துள்ளவர்களைப் பார்த்து 'இவர்களுக்கும் ஈஶ்வரனோடு ஸம்பந்தம் ஒத்திருக்க இங்ஙன் அவிக்ருதராகைக்கு அடி - பகவத்குண ஜ்ஞாநமில்லாமை' என்று பார்த்து,''பத்துடையடியவ''ரிற் பிறந்த ஸௌலப்யம் முதல்திருவாய்மொழியில் பரத்வத்தோடு ஒக்கும்படியான அர்ச்சாவதார பர்யந்தமான ஸௌலப்யகாஷ்டையை உபதேசிக்கிறார். அர்ச்சாவதார ஸௌலப்யத்துக்கு ஏற்றமென்? என்னில்,—''[illegible]'' என்று சேதநன்பண்ணும் அபசாரங்களைத் தன் பொறைக்கு விஷயமாக்கக் கடவனாயிருக்கும். அவதாரமாவது - அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீயமாக்குகை. இங்கு ஆஶ்ரிதன் உகந்ததொரு த்ரவ்யத்தைத் திருமேனியாக நினைத்தால் அத்தை அஸாதாரணமான விக்ரஹத்தோபாதி அபிமாநித்திருக்கும். ஸ்வவ்யதிரிக்தங்களுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகள் ஸ்வாதீநமாக நடத்தக்கடவதான தன் ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகள் அர்ச்சகாதீநமாம்படி யிருக்கும். இவன் அநுகூலித்தபோது அவ்விருப்பிலே போகமோக்ஷங்களைக் கொடுக்கக்கடவனா யிருக்கும். ஒரு தேஶவிஶேஷத்திலே விலக்ஷணஶரீரத்தைப் பெற்றுப்பண்ணும் அடிமையை ஹேயவிஷயங்களுக்குப் பணிசெய்துபோந்த ஶரீரத்தைக்கொண்டு கொள்ளக்கடவனா யிருக்கும். இப்படிப்பட்ட ஸௌலப்ய காஷ்டையை உபதேசிக்கிறார்.

ஈடு.—ஸர்வேஶ்வரன் திருவடிகளில் கைங்கர்ய ருசியுடையார்க்கு அத்தைக்கொடுக்கக் கடவனுமாய் அவ்வடிமைதான் அவன்தனக்கு இனியதா யிருக்கக்கடவதுமாய் அவ்வழியாலே இச் சேதநனுக்கு உத்தேஶ்யமாகக்கடவதுமாயிருக்க, அத்தையிழக்கையாலே சிலரைநிந்திக்கவேண்டும்படியிறே கீழில் திருவாய்மொழியில் நின்றது; இவ்வடிமையிலே அந்வயித்தாரைக் கூட்டிக்கொண்டு அதில்லாதாரை உபேக்ஷித்தாராய் நின்றார்; இனி, தாமே விழுவாரைத் தடிகொண்டு அடிக்குமோபாதி யென்றுபார்த்து இவர்கள் பண்டே அறிவுகேட்டாலே வழிதப்பிப்போய் அனர்த்தப்படாநின்றார்கள்; நாம் இவர்களைக் கைவிடவொண்ணாது; ஹிதத்தைச் சொல்லுவோமென்று பார்த்து ஹிதத்தை அருளிச்செய்கிறார். ராவணன் பிராட்டிபக்கல் 'ஜநநி' என்னும் ப்ரதிபத்தி யின்றிக்கே திரு

---

'செய்யதாமரை' ப்ரவேஶே, தாம் உபதேசிக்கிற அதிகாரிகளுக்கும் தம்மோபாதி கைங்கர்யத்திலே ப்ராப்தியுண்டென்று காட்டுகைக்காக 'ஒழிவில்கால' ப்ரமேயம்தொடங்கி ஸங்கதி – 'ஸர்வேஶ்வரன்' இத்யாதி. கீழில் திருவாய்மொழியில் ப்ரமேயம் – 'இவ்வடிமையிலே' இத்யாதி. 'இப்படி நிந்திதானவர்களுக்கு உபதேசிக்கைக்கு அடி யேது? என்ன, 'தம்முடைய தயாதிசயம்' என்கிறார் – 'இனித் தாமே' இத்யாதி. ப்ரதிகூலரைக்குறித்து தயையாலே உபதேசித்த பேருண்டோ? என்ன, 'ராவணன்' இத்யாதி. ''[illegible]

முன்பே சிலவற்றை ஜல்பிக்கப் புக்கவாறே, "ஐயோ! இவன் நினைவு இருந்தபடி யேன் ? இவனு க்கு ஒரு நல்வார்த்தை சொல்லுவாரின்றிக்கே யொழிவதே!" என்று வெறுத்து, அவன் தனக்கே "மித்ரமௌபயிகம்கர்த்தும்" (மித்ரமௌபயிகம்கர்த்தும்) என்று பிராட்டி ஹிதம் அருளிச்செய் தாற்போலே. "த்வந்நீசஶஶவத்" (த்வந்நீசஶஶவத்) என்றுவைத்துப் பின்னையும் அவன்தனக்கே ஹிதம் அருளிச்செய்தாற்போலே யிருப்பதொன்றிறே; இவரும் கீழ்த்திருவாய்மொழியில் அவர்களைநிந் தித்துவைத்து, இங்கு ஹிதஞ்சொல்லுகிறவிடமும். "மித்ரமௌபயிகம்கர்த்தும்ராமஃ" (மித்ரமௌ பயிகம்கர்த்தும்ராமஃ)—'பெருமாளை நீ சரணம்புகு' என்றால் அப்பையல் அது தனக்கு எளிவரவாக நினைத்திருக்குமே; அதுக்காகத் தோழமைகொள் என்கிறாள். தங்களைச் சரணம்புக்காரை, தங்களிற் காட்டில் குறைய நினைத்திருப்பதில்லையே இவர்கள்; "மித்ரபாவேந" (மித்ரபாவேந) என்றும், "மித்ரமௌபயிகம் கர்த்தும்" (மித்ரமௌபயிகம் கர்த்தும்) என்றுமிறே இருவர் படியும். "ஸ்தாநம்பரீப்ஸதா" (ஸ்தாநம்பரீப்ஸதா) - வழியடிப்பார்க்கும் தரையிலே கால்பாவிநின்று வழி யடிக்கவேணுமே; உனக்குஓரிருப்பிடம் வேண்டியிருந்ததாகிலும் அவரைப்பற்றவேணுங்காண். எளி மையாக எதிரிகாலிலே குனிந்து இவ்விருப்பு இருப்பதில் பட்டுப்போக அமையுமென்றிருந்தாயோ ? "வதஞ்சாநிச்சதாகோரம்" (வதஞ்சாநிச்சதாகோரம்) - அப்படி உன்னை நற்கோலைப்பட விடுவே ரோ? உன்னைவைத்து உன்முன்னே உன்ஸந்தாநஜாதரை ஹிம்ஸித்துப் பின்னை உன்னைச்சித்ரவதம் பண்ணுகையாகிற இவ்வதத்தை இச்சித்திலையேயாகிலும் அவரைப் பற்றவேணுங்காண்; "த்வயா" (த்வயா) - உன்நிலை இருந்தபடியால் விஶேஷித்து உனக்கு அவரைப் பற்றவேணும். "அஸௌ" (அஸௌ) - உருவெளிப்பாட்டாலே முன்னிலையா யிருக்குமிறே, இவளுக்கு; அவனுக்கும் தானே மாயாம்ருகத்தின் பின்னே போகிறபோது கண்ட காட்சியாலே அச்சத்தாலே எப்போதும் முன்னி லையா யிருப்பரிறே. "புருஷர்ஷபஃ" (புருஷர்ஷபஃ)-'நான்பண்ணின அபகாரத்துக்கு என்னை அவர் கைக்கொள்ளுவரோ?' என்றிருக்கவேண்டா; இவற்றை ஒன்றாக நினைத்திரார்காண்; அவர் புருஷோத்தமர்காண். அஸௌ - புருஷர்ஷபஃ - ராமஃ - த்வயா-மித்ரம்-கர்த்தும் - ஔபயிகம். இப் படி பிராட்டி ராவணனுக்கு ஹிதம் அருளிச்செய்தாற்போலே இவரும் இவர்களுக்கு ஹிதம் அருளிச் செய்கிறார். 'இவர்கள்தான் வழிதப்பிப்போய் அநர்த்தப்படுகிற முகம் ஏதோ? ப்ராப்தி ஒத்திருக்க' என்று பார்த்தார்; பகவத்குணஜ்ஞாந மில்லாமையும் அவனுடைய ஸௌலப்யஜ்ஞாந மில்லாமை

---

வாஸஸி" இத்யாதியைப்பற்ற, 'இவனுக்கு ஒருநல்வார்த்தை' இத்யாதி. கீழே நிந்தித்துவைத்து இங்கே உப தேசிக்கைக்கு த்ருஷ்டாந்தம் – 'த்வந்நீச' இத்யாதி. ஸுந்தரகாண்டே ஏகவிம்ஶதிதமே, "மித்ரமௌபயிகம்க ர்த்தும்ராமஸ்ஸ்தாநம்பரீப்ஸதா । வதஞ்சாநிச்சதாகோரம்த்வயாஸௌபுருஷர்ஷபஃ" த்வா விம்ஶதிதமே, "யதாஶ்ருகஶ்ச ஶஶவதோஹிதௌவநே । ததாத்வமப்யத்ய மஹாத்மநீசஶஶ வத்ஸ்ம்ருதஃ," ஔபயிகம் – யுக்தம். 'மித்ரபாவேந' இத்யாதி – பூர்வமேவ லிகிதம். "விதிதஸ்ஸஹிதர்ம ஜ்ஞஶ்ஶரணாகதவத்ஸலஃ" என்று வக்ஷ்யமாணநுகுணமாக ஶரணம்புகு என்னாதே, "மித்ரமௌபயிகம் கர்த்தும்" என்கிறதென்? என்ன, 'பெருமாளை' இத்யாதி. பரிஹாராந்தரம் – 'தங்களை' இத்யாதி. பையல் – க்ஷுத்ரன். எளிவரவாக – லகுதரமாக. "ராவணம்ஶரணம்கதஃ" என்றவனையிறே, தாஸஹாவேநஎன்னாதே "மித்ரபாவேந" என்றது. "ஸர்வலோகஶரண்யாய" என்றத்தைப் பற்ற, 'உனக்கு ஓரிருப்பிடம்' இத்யாதி. எளிமையாக – லகுவாக. அஸந்நிஹிதரான இவரை "அஸௌ" என்னக்கூடுமோ? என்ன, 'உருவெளிப்பாட் டாலே' இத்யாதி. உருவெளிப்பாடு – ஜ்ஞாநவைஶத்யம். "தோஷோயத்யபி" இத்யாதியைப்பற்ற 'ஒன் றாகநினைத்திரார்காண்' என்றது. ஹிதம் அருளிச்செய்யும் ப்ரகாரமேது? என்ன, 'இவர்கள்தான்' இத்யாதி.

யுமா யிருந்தது. 'ஈஶ்வரனுகிறன் பெரியானெருவனன்றே? அவன் விசைக்கொம்பு; நமக்கு அவனை எட்டப்போகா தொன்று யிருந்தது' என்று ஸம்ஸாரிகள் கைவாங்க, 'அவனுடைய ஸௌலப்யத்தை உபபாதிப்போம்' என்று பார்த்து, 'நீங்கள் அவன் அரியவன் என்று கைவாங்கவேண்டா; அவன் ஆஶ்ரிதஸுலபன்; அவனை யாஶ்ரயியுங்கோள்' என்கிறார். கீழ் 'பத்துடையடியவர் தொடங்கி ஸௌலப்யமேயன்றே சொல்லிக் கொண்டு போந்தது; இப்போதாக ஸௌலப்யஞ் சொல்லவேண்டுகிற தென்?' என்னில்;—அங்குச்சொன்ன ஸௌலப்யந்தான்பரத்வம் என்னும்படி அர்ச்சாவதார பர்யந்தமான ஸௌலப்யகாஷ்டையை அருளிச்செய்கிறார். "அர்ச்ய:" (அர்ச்ய:) - ஸம்ஸாரிகளுக்கும் அர்ச்சிக்கலாம்படி அர்ச்யனுயிருக்கும்: ஸம்ஸாரிகளாகில் அர்ச்சிக்கிறார்; அவர்கள்அபராதமேயன்றேபண்ணுவது? என்னில்,—"ஸர்வஸஹிஷ்ணு:"(ஸர்வஸஹிஷ்ணு:)- அவற்றையடையப் பொறுத்துக்கொண்டு நிற்கும்; ஆனாலும், நினைவு இரண்டா யிராநின்றதீ! என்னில்,—"அர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி:" (அர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி:) - 'நமக்கு ஒரு நினைவும் அவர்களுக்கு ஒருநினைவு மாகி லன்றே சேராச்சேர்த்தியாவது' என்று அவர்களுக்கு ஈடாகத் தன்னை அமைத்துநிற்கும். "தமருகந்ததெவ்வுருவ மவ்வுருவந்தானே" இத்யாதி.—"யேயதாமாம்ப்ரபத்யந்தே" (யேயதாமாம்ப்ரபத்யந்தே) - யாவர்சிலர் அதிகாரிகள் யாதொருபடியாகவேணு மென்று நம்மை பஜிக்கிறார்கள், அவர்களைக்குறித்து அப்படி கிட்டலாம்படிக்கு ஈடாக நம்மை அமைத்துக்கொண்டு நிற்போம்; "மமவர்த்மாநுவர்த்தந்தே" (மமவர்த்மாநுவர்த்தந்தே) இத்யாதி - இப்படி அவர்கள் நினைவே நமக்கு நினைவாம்படி யிருக்கையாலே அவர்களெல்லாம் நம்வழி போமுராவர்களிறே. "ஸ்ம்ருதம்ஸங்கல்பநாமயம்" (ஸ்ம்ருதம்ஸங்கல்பநாமயம்) - பரம

பகவத்குணஜ்ஞாநம் - பகவத்பரத்வஜ்ஞாநம். விவரணம் - 'ஈஶ்வரனுகிறன்' இத்யாதி. விசைக்கொம்பு - பிடித்துவிட்டகொம்பு. அதாவது-நாலுபேராய்ப்பிடித்து வளைத்தபோது தாழ்ந்து விட்டவாறே எட்டாதிருக்கை. இத்தால்,ஸுலபனைப்போலே யிருந்து பெரியானெருவனுயிருக்கு மென்றபடி. தடஸ்தசங்கையைஅநுவதித்துப் பரிஹரிக்கிறார் - 'கீழ் பத்துடை' இத்யாதி. அங்குச்சொன்ன ஸௌலப்யம் - அவதாரஸௌலப்யம். 'அர்ச்சாவதாரபர்யந்தமான ஸௌலப்யகாஷ்டையை அருளிச்செய்கிறார்' என்ற அநந்தரம்-'கிளரொளியிளமை தொடங்கி அர்ச்சாவதார ஸௌலப்யம் அருளிச்செய்யவில்லையோ?' என்ன, 'அவை-ஸ்வயம்வ்யக்தங்களாய் ஸர்வஸாதாரணங்களா யிருக்கும்; அங்ஙனன்றிக்கே, தான் உகந்ததொரு த்ரவ்யத்தைத் திருமேனியாகக்கொண்டு தனக்கு அஸாதாரணமா யிருக்கும் க்ருஹார்ச்சையைச் சொல்லுகிறது இங்கு' என்று அருளிச்செய்வர். க்ருஹார்ச்சாபர்யந்தமான ஸௌலப்யத்துக்குப் பல ப்ரமாணங்கள் - 'அர்ச்ய' இத்யாதி. ஸ்ரீரங்கராஜஸ்தவே, "[illegible] ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி: [illegible]". 'தமருகந்தது' இத்யாதி, முதல்திருவந்தாதி - நாற்பத்துநாலாம்பாட்டு. ஆஶ்ரிதரானவர்கள் ஸ்வர்ண ரஜதாதிகளான த்ரவ்யங்களாலே உகந்து எழுந்தருளப்பண்ணினது யாதொரு விக்ரஹம், அந்த விக்ரஹத்தை அஸாதாரணமான விக்ரஹத்தோபாதி தானே ஆதரித்துப் பரிக்ரஹியா நிற்கும் இத்யர்த்த:. கீதாஸு சதுர்த்தே, "யேயதாமாம் ப்ரபத்யந்தே தாம் ஸ்ததைவ பஜாம்யஹம்। மமவர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வஶ:". ப்ரமாணத்துக்கு அர்த்தம் - 'யாவர்சிலர்' இத்யாதி. பஞ்சமேம்ஶே ஸப்ததஶே அக்ரூர மநோரத:, "[illegible] ஸ்ம்ருதம்ஸங்கல்பநாமயம் । [illegible]". 'ஸங்கல்பநாமயம்- அதிதிதேவக்யாதீநாம் ஸங்கல்பாநுரூபம்ஹி பகவதோ தேவமநுஷ்யாதி ஸஜாதீயம் ரூபம். இதம் விபவார்ச்சாவதார ஸாதாரணம்; யதாஹ, 'யேயதாமாம் ப்ரபத்யந்தே இதி'. அஸ்யஶ்லோகஸ்ய விஷ்ணுசித்தார்யைரேவம் வ்யாக்யாநம் க்ருதம். ஸங்கல்பநா-ஸங்கல்ப:. ஸங்கல்பநாமயம் - ஸங்கல்பாநுரூப மித்யர்த்த:. ஸங்கல்பநாமய மென்றால் - பரவிக்ரஹாதிகளைச் சொல்லவொண்ணுதோ? அர்ச்சாவதாரவிக்ரஹத்தைச் சொல்லுகிற

பதத்தில் அஸாதாரண விக்ரஹத்தோடும் குணங்களோடும் இருக்கும்; விபவங்களில் வந்தால் அதுதன்னை இதரஸஜாதீயமாக்கிற்று யிருக்கும்; இங்ஙனன்றிக்கே, ஆஸ்ரிதன் தான் உகப்பது ஏதேனும் ஒரு த்ரவ்யத்தைத் திருமேனியாகக் கோலினால் அத்தையே தனக்குத் திருமேனியாகக் கொண்டு அதிலே அஸாதாரணவிக்ரஹத்தில் பண்ணக்கடவ அபிமாநத்தைப் பண்ணி, இவ்வழியாலே முகங்கொடுக்கும்படியாயிறே இந்நிலை இருப்பது. ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களினுடையவும் ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளடைய ஸ்வாதீநமாம்படி யிருக்கிறவன், தன்னுடைய ஸ்வரூபஸ்தித்யாதிகள் ஆஸ்ரிதாதீநமாம்படியாய் அவர்களுக்கு க்ருஹக்ஷேத்ராதிகளோபாதி கூறுகொள்ளலாம்படி நின்ற நிலையிறே. இவனுக்கு ருசி பிறந்தபோது மற்றொருவிடத்திலே போகவேண்டாதே இங்கே அநுபவிக்கலாம்படி நிற்கிற நிலையாய், இஸ்ஸரீர ஸம்பந்தமற்று ஒருதேசவிஸேஷத்திலே போய் அதுக்கு ஈடாயிருப்பதொரு ஸரீரத்தைப் பெற்றுச் செய்யக்கடவவான அடிமைகளை இதரவிஷயப்ராவண்யத்துக்கு உறுப்பான இவ்வுடம்போடே செய்யலாம்படியாய், இவன் அங்யபரனான அன்றும் இவன்கையையே பார்த்திருக்கக்கடவனாய், இவன்தான் பசித்தபோது புஜிக்கும் த்ரவ்யத்தை 'அமுதுசெய்யவேணும்' என்று அபேக்ஷித்தால் அப்போதே அமுதுசெய்யக்கடவனாய், ஆஸநஸயநபூஷணாதிகளெல்லாம் இவனிட்ட வழக்காக்கி, ஸ்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனானவன் ஆஸ்ரிதபராதீநனாய், இவன் ஏதேனும் ஒருத்ரவ்யத்தை யிட்டால் அத்தைத் திருவாய்ப்பாடியில் யசோதாதிகள் வெண்ணெயோபாதி விரும்பக்கடவனாய், இப்படி தன்னை யமைத்துக்கொண்டு நிற்கிற இடமிறே அர்ச்சாவதாரமாவது. பரத்வமே தொடங்கி அவதாரங்களிலே வர அவன்குணங்களைச் சொல்லிக்கொண்டுபோந்து அர்ச்சாவதாரபர்யந்தமான ஸௌலப்யகாஷ்டையை உபதேசிக்கிறார். இப்போது ஸௌலப்யமாகில் உபதேசிக்கப் புகுகிறது, பரத்வமே தொடங்கி உபதேசிக்க வேண்டுவானென்? என்னில்;—'மேன்மையையுடை

---

தென்கைக்கு நியாமகமேது? என்ன, 'பரமபதத்தில்' இத்யாதி வாக்யத்ரயேண. அதாவது-அவ்வோவிடங்களிலே ஆஸ்ரிதஸங்கல்பம் இட்ட வழக்காயிருக்கும், ஆகாரமில்லை; அவ்வாகாரமுள்ளது அர்ச்சாவதாரத்திலே யாகையாலே இதுவே அர்ச்சாவதாரவிக்ரஹத்தைச் சொல்லுகிற தென்கைக்கு நியாமக மென்றபடி. அஸாதாரணவிக்ரஹத்தில் பண்ணக்கடவ அபிமாநத்தைப் பண்ணி யென்கையாலே – 'ஸவிக்ரஹனாய் பிம்பத்தை அதிஷ்டிக்கும்' என்கிற வடவாசார்யர்களிற்காட்டில் வ்யாவ்ருத்தி பலிக்கிறது. "[illegible]" என்றிறே தூப்புல்பிள்ளை கத்ய வ்யாக்யாநத்திலே அருளிச் செய்தது. பின்னையும் சிலப்ரமாணங்களை உட்கொண்டு அர்ச்சாவதார வைபவத்தை அருளிச்செய்கிறார் – 'ஸ்வவ்யதிரிக்த' இத்யாதி. 'கூறுகொள்ளலாம்படி' என்றது – "[illegible]" இத்யாதியைப் பற்ற. "[illegible]" என்றத்தைப் பற்ற, 'இவன்தான் பசித்தபோது' இத்யாதி. முதற்பாட்டுத்தொடங்கிப் பாட்டுக்களுக்கு ஸங்க்ரஹேண தாத்பர்யம் – 'பரத்வமே தொடங்கி' இத்யாதி. 'ஸௌலப்யகாஷ்டையை உபதேசிக்கிறார்' என்ற அநந்தரம், 'உபாயங்களில் ப்ரபத்தி' இத்யாதி வாக்யம் அநுஸந்தேயம். 'தானுகந்த த்ரவ்யத்தைத் திருமேனியாகக்கொண்டு ஸந்நிதிபண்ணினவிடத்திலே கௌரவப்ரதிபத்தி கூடுமோ?' என்ன, ப்ராமாணிகனானவனுக்குக் கூடுமென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறார்–'ஜநநிக்கும்' இத்யாதி. "[illegible]" என்றும், "[illegible]

யவன் தாழநின்றான்' என்றாலிறே குணமாவது; தாழ்வுப்ரக்ருதியானவன் தாழநின்றால் ஸ்வரூபமாமித்தனையிறே; இப்படி தாழநிற்கிறவன் மேன்மையையுடையவனென்கைக்காகச் சொல்லிற்று. உபாயங்களில் ப்ரபத்திபோலே ஸௌலப்யங்களில் அர்ச்சாவதார ஸௌலப்யம். ஜநநிக்கும் ஸ்த்ரீ ஸாமாந்யம் ஒத்திருக்கச்செய்தே பண்ணுகிற உபகாரங்களை ப்ரத்யக்ஷிக்கையாலும் ஶாஸ்த்ரஞ் சொல்லுகையாலுமிறே கௌரவிக்கிறது; அப்படியே ப்ராமாணிகனானவனுக்கு ஆஶ்ரயணீயஸ்தலம் அர்ச்சாவதாரம்போக்கி இல்லையென்று இவ்வளவான ஸௌலப்யகாஷ்டையை உபதேசிக்கிறார்.

## முதற் பாட்டு.

செய்யதாமரைக்கண்ணனாய் உலகேழுமுண்டஅவன்கண்டீர்
வையம்வானம்மனிசர்தெய்வம் மற்றும்மற்றும்மற்றும்முற்றுமாய்ச்
செய்யசூழ்சுடர்ஞானமாய் வெளிப்பட்டிவைபடைத்தான் பின்னும்
மோய்கோள்சோதியோடாயினான் ஒருமூவராகியமூர்த்தியே.

ஆ.—ஸங்கல்ப ஸஹஸ்ரைகதேஶத்தாலே வையம் வானம் மனிசர் தெய்வம் மற்றும் மற்றும் மற்றும் முற்றுமாய்க்கொண்டு தோற்றுகிற இவற்றுக்கு ஸ்ரஷ்டாவாய், பின்னையும் தேஜஃப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாணகுண விஶிஷ்டனாய், ப்ரஹ்மருத்ராந்தராத்மதயாவஸ்தாய ஸர்வஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹார ஹேதுபூதனாய், ஸ்வேநரூபேண அவஸ்தாய ஸர்வஜகத்ரக்ஷகனாயிருந்த ஸர்வேஶ்வரனாகிறான், செய்யதாமரைக்கண்ணனாய் உலகேழும் உண்ட அவன்கண்டீரென்றுகொண்டு, ஸமாஶ்ரயணீய புருஷன் இன்னான் என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், ஜக்த்ஸ்ரஷ்ட்ருத்வாதி குணகனான எம்பெருமானை உத்தேசித்து அவனுக்குப் புண்டரீகாக்ஷத்வாதிகளை விதியாநின்றுகொண்டு ஸமாஶ்ரயணீயபுருஷன் இன்னான் என்கிறார்.

[செய்ய தாமரைக்கண்ணன் என்று தொடங்கி] - ஶ்ருதிஇதிஹாஸபுராணாதிகளில் ஈஶ்வரத்வைகாந்தமாகச் சொல்லப்படுகிற அப்போதுஅலர்ந்த செந்தாமரைப்பூப்போலேயிருந்த திருக்கண்களையுடையனாய் ப்ரளயார்ணவத்திலே அந்தரப்படாதபடி ஜகத்தைத் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்த அவன்கிடீர். பூமியும் மேலுள்ள லோகங்களும் அவற்றில் வர்த்திக்கக் கடவ மநுஷ்யரும் தேவதைகளும் திர்யக்ஸ்தாவரங்களும் ஜகதாரம்பகமான பூதபஞ்சகங்களும் மஹதாதி விகாரங்களுமாய்க்கொண்டு ப்ரத்யக்ஷாதிப்ரமாணப்ரதிபந்நமான இவற்றையெல்லாம் வருத்தமின்றிக்கே வ்யாபியாநின்ற விஶததமமான தன்னுடைய ஸங்கல்பரூபஜ்ஞாநத்தாலே படைத்தான். [பின்னும் மொய்கொள்சோதியோடாயினான்] - இதுக்குமேலே அப்ராக்ருத நித்யவிபூதியுக்தனானான். தேஜஃப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாணகுண விஶிஷ்டதையும் என்பர். [ஒருமூவராகிய மூர்த்தி] - ப்ரஹ்மாவுக்கும் ருத்ரனுக்கும் அந்தர்யாமியாய் ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப் பண்ணி ஸ்வேநரூபேண ஜகத்ரக்ஷணம்பண்ணுகிற ஸர்வேஶ்வரன். ப்ரஹ்மருத்ரேந்த்ரர்கள் மூவரையும் மூர்த்தியாக வுடையனென்றுமாம்.

---

ணம்ஶோதாமஸ்ரவெணாதிஸிவ்ருதெ" என்றும் ஶாஸ்த்ரம் சொல்லுகையாலு மென்றபடி. கீழில் திருவாய்மொழியிலே சிலரை நிந்தித்துச் சிலரைக்கொண்டாடினதுக்கு ஹேதுகதநபூர்வகமாகக் கீழில்திருவாய்மொழியில் ப்ரமேயத்தை அநுவதித்துக்கொண்டு, இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி அருளிச்செய்கிறார்-'ஸர்வேஶ்வரன் இத்யாதி' என்று ப்ரவேசத்தின் அடியிலே வாக்யத்துக்கு ஸங்கதியானால் நல்லது.

ப.—முதற்பாட்டில், அப்யயபூர்விகையான ஸ்ருஷ்டி அவனிட்ட வழக்கு என்கிறார்.

செய்ய - (ஸர்வஸ்மாத்பரத்வத்தால் வந்த ஐஶ்வர்யஸூசகமாய்) சிவந்த, தாமரை - தாமரைபோலும், கண்ணனாய் - கண்ணழகையுடையனாய்க்கொண்டு, (ஸம்ஹ்ருதிஸமயத்திலே "கூதூரவாரவாரஹ ஹணாக" என்கிறபடியே), உலகேழும்-ஸகலலோகங்களையும், உண்ட - தனக்குள்ளே யொடுக்கின, அவன்கண்டீர் - அவன்கிடீர், ஒரு-அத்விதீயமான, மூவராகிய மூர்த்தி - ப்ரஹ்மவிஷ்ணு ஶிவாத்மக மூர்த்தித்ரயத்தையுடையனாய்க்கொண்டு, வையம் - பூமியும், வானம்-ஊர்த்வலோகங்களும், (தத்வாஸிகளான), மனிசர் - மநுஷ்யரும், தெய்வம்-தேவரும், மற்றும்-மற்றும் திர்யக்குக்களும், மற்றும் - மற்றும் ஸ்தாவரங்களும், மற்றும் - மற்றும் பூதபஞ்சகமும், முற்றும்-மஹதாதி ஸமஷ்டியும், ஆய் - உண்டாம்படி உபாதாநமாய், செய்ய - (அமோகமாகையாலே) செவ்விதாய், சூழ் - (ஸ்ருஜ்யபதார்த்தங்களை யடையச்) சூழ்வதாய்க்கொண்டு, சுடர் - ப்ரகாசிக்கிற, ஞானமாய் - ஸங்கல்பரூபஜ்ஞானஸ்வரூபனாய், வெளிப்பட்டு - ஸ்ருஷ்ட்யபிமுகனாய்க்கொண்டு தோற்றி, இவை - உக்தமான ஸமஸ்தபதார்த்தங்களையும், படைத்தான் - (நிமித்தமாய்க்கொண்டு) ஸ்ருஷ்டித்து, பின்னும் - அதுக்குமேலே, மொய்கொள் - செறிந்த, சோதியோடு - தேஜோமயமான திவ்யதேசத்தோடு, ஆயினன் - கூடியிருந்தவன்.

முற்றுமாயென்கிற ஸாமாநாதிகரண்யம் - கார்யகாரணபாவத்தாலே. ஞானமாயென்கிற இடம் - குணகுணிபாவத்தாலே. மூவரென்று ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களைச் சொல்லவுமாம்.

இ.—முதற்பாட்டில், ஜகத்ஸ்ரஷ்ட்ருத்வாதி குணகனானவனை உத்தேஶித்துப் புண்டரீகாக்ஷத்வாதிகளை விதியாநின்றுகொண்டு ஸமாஶ்ரயணீயன் இன்னான் என்கிறார். ஸௌலப்யமாகில் இங்குச்சொல்லுகிறது, பரத்வம் சொல்லுகிறது என்? என்னில்,—ஸர்வாதிகன் தாழ நின்றான் என்னிலிறே குணமாவது; எளியவன் தாழநின்றால் ஸ்வரூபமாமத்தனையிறே.

[செய்ய இத்யாதி] - "தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ" என்றும், "யஜ்ஜுஶோயஜ்ஜுவராஹஷ்புண்டரீகாக்ஷஸம்ஜ்ஞக" என்றும் ஶ்ருதிஸ்ம்ருதிகளிற் சொல்லுகிறபடியே செவ்வியையுடைத்தாய்ச் சிவந்த தாமரைப்பூப்போலே யிருக்கிற கண்ணழகையுடையனாய் ப்ரளயார்ணவத்திலே அந்தரப்படாதபடி ஜகத்தைத் திருவயிற்றிலே வைத்தவன்கிடீர். வடிவழகில் புண்டரீகாக்ஷத்வம் போலே குணங்களில் ப்ரளயாபத்ஸகத்வமும். [வையம் இத்யாதி] - பூமியும் மேலுள்ள லோகங்களும் அவற்றில் வர்த்திக்கக்கடவ மநுஷ்யரும் தேவதைகளும். * [மற்றும்] - திர்யக்ஸ்தாவரங்களும். [மற்றும்] - ஜகதாரம்பகமான மஹாபூதங்களும். [மற்றும்] - மஹதாதிகளும். [முற்றுமாய்] - முற்றுமான இவையெல்லாம். [வெளிப்பட்ட இவை செய்ய சூழ் சுடர் ஞானமாய்ப் படைத்தான்] - 'வெளிப்பட்டிவை' என்கிறது, ப்ரமாணப்ரதிபந்நமான இவை யென்கை. [செய்ய] - ஞானத்துக்குச் செவ்வையாவது - வருத்தமற்றிருக்கை. [சூழ்] - கார்யஜாதத்தையெல்லாம் வ்யாபிக்க வற்றா யிருக்கை. [சுடர்] - விஶததமமாயிருக்கை. [ஞானமாய்] - இப்படிப்பட்ட ஸங்கல்பஜ்ஞானத்தாலே படைத்தா னென்னுதல்; முற்றவும் உண்டாக்குகைக்காக 'செய்யசூழ்சுடர்ஞானமாய்' என்னுதல். அப்போது, 'வெளிப்பட்டு' என்றது - ஸ்ருஷ்ட்யுந்முகனாய் என்றபடி. [பின்னும் இத்யாதி] - லீலாவிபூதியுக்தனானதுக்கு மேலே "கூதூகூராநவதீவம்தகஸூாநழ" என்கிற நித்யவிபூதியுக்தனாய். [மொய்கொள்

* இது தொடங்கி முற்றுமாய் என்பதன் வ்யாக்யாநம் வரையிலும் '[மற்றும்]-ஜகதாரம்பகமான மஹாபூதங்களும், [மற்றும்] - மஹதாதிகளும், [மற்றும்] - மூலப்ரக்ருதியும், முற்றுமாய் - இதிலே காந்து கிடக்கிற ஆத்மஸமஷ்டி' என்று ஒருகோஶத்திலே பாடங்காண்கிற தென்பர்.

சோதி] - செறிந்த தேஜஸ்ஸு; தேஜஃப்ரப்ருதி கல்யாணகுணங்களையுடையவனென்னவுமாம். தேஜஸ்ஸு - குணங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். [ஒருமூவராகிய மூர்த்தி] - ப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தர்யாமியாய் ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப் பண்ணி ஸ்வேநரூபேண பாலநத்தைப்பண்ணும் ஸர்வேஶ்வரன். ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களைச் சொல்லிற்றாகவுமாம். மூவராகிய மூர்த்தி செய்யதாமரைக்கண்ணனாய் உலகேழுமுண்ட அவன் கண்டீர் என்று அந்வயம்.

ஈடு.—முதற்பாட்டில் - ஜகத்காரணத்வ புண்டரீகாக்ஷத்வாதி குணங்களையுடையவன் ஆஶ்ரயணீயன்; அவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார். ஜகத்காரணவஸ்துவை உத்தேசித்து அவ்வஸ்துவுக்கே புண்டரீகாக்ஷத்வாதிகளை விதிக்கிறார்.

[செய்யதாமரைக்கண்ணனாய்]-"தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ" (தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ) என்றும், "யஜ்ஞேஶோயஜ்ஞபுருஷ: புண்டரீகாக்ஷஸம்ஜ்ஞித:" (யஜ்ஞேஶோயஜ்ஞபுருஷஃபுண்டரீகாக்ஷஸம்ஜ்ஞிதஃ) என்றும் ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளிற் சொல்லப்படாநின்றுள்ள அப்போதலர்ந்த செவ்வித்தாமரைபோலேயிருந்துள்ள திருக்கண்களை யுடையனாய். [உலகேழும் இத்யாதி] - வடிவழகில் புண்டரீகாக்ஷத்வம்போலே குணங்களில் ப்ரளயாபத்ஸகத்வமும். [வையம் இத்யாதி] - வையமென்கிறது - பூமியை. வானமென்கிறது - உபரிதநலோகங்களை. மனிசரென்கிறது - வையத்திலுள்ளாரை. தேய்வமென்கிறது - வானத்திலுள்ளாரை. மற்றுமென்கிறது - திர்யக்ஸ்தாவரங்களை. திரிய, மற்றுமென்கிறது - அவற்றுக்கு ஆரம்பகமான பூதபஞ்சகங்களை. திரிய மற்றுமென்கிறது - அவைதனக்கும் காரணமான மஹதாதிகளை. முற்றுமென்றது - கீழ்ச்சொன்னவை யெல்லாவற்றையும். முற்றுமாய் - வெளிப்பட்ட இவற்றை - செய்ய சூழ்சுடர் ஞானமாய் - படைத்தானென்னுதல்; அன்றிக்கே, * "தனிமாப்புகழே யெஞ்ஞான்றும் நிற்கும்படியாத் தான்தோன்றி" என்றும், "பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்றுஞ் சொல்லுகிறபடியே, முற்றவும் உண்டாகைக்காக இவையாய்க்கொண்டு தான்தோன்றி இவற்றைப்படைத்தானென்னுதல். அப்போது, வெளிப்பட்டேனென்கிறது - ஸ்ருஷ்ட்யுந்முகனாய்த் தோற்றி யென்றபடி. [செய்ய இத்யாதி] - ஞானத்துக்குச் சேவ்வையாவது - வருத்த

---

முதற்பாட்டு—'செய்யதாமரை' இத்யாதி. த்விதீயாவதாரிகை - 'ஜகத்காரண வஸ்துவை' இத்யாதி. முந்தின அவதாரிகைக்கு - "பரவுமினோ" என்ற மேலிற்பாட்டில் க்ரியையே இதுக்கும் க்ரியை. இரண்டாம் அவதாரிகைக்கு - 'அவன் கண்டீர்' என்றதே க்ரியை.

திருக்கண்கள் தாமரைபோலேயிருக்குமென்கைக்கு ப்ரமாணம் - 'தஸ்ய' இத்யாதி; சாந்தோக்யே. ஸ்ரீவிஷ்ணுதர்மே "ஶ்ரியஃகாந்தோ நாராயணோ வேதவேதாந்தநிஶ்சய: । யஜ்ஞேஶோ யஜ்ஞபுருஷ: புண்டரீகாக்ஷஸம்ஜ்ஞித: । ஸர்வேஶ்வரோ ஹரிர்தேவோ நாராயண ..." "செய்யதாமரைக்கண்ணனாய்" என்ற அநந்தரம், "உலகேழுமுண்ட அவன்" என்றதுக்கு வாக்யசேஷம் - 'வடிவழகில்' இத்யாதி. முற்றுமாய் வெளிப்பட்ட இவற்றை - முற்றுமாய் ப்ரமாண ப்ரதிபந்நமான இவற்றை. அர்த்தாந்தரம் - 'அன்றிக்கே தனிமா' இத்யாதி. இந்த அர்த்தத்துக்கு - 'வையம்' என்று தொடங்கி, முற்றுமாய்-முற்றமுண்டாகைக்காக என்றபடி. 'இவையாய்க்கொண்டு' - இவையுண்டாக்குகைக்காக. இந்தப்பக்ஷத்திலே 'வெளிப்பட்டு' என்றதுக்கு அர்த்தம் - 'அப்போது' இத்யாதி. ஞானமாய் - ஞானத்தையுடையனாய். முந்தின அர்த்தத்திலே 'வெளிப்பட்டிவை' என்றதுக்கு அர்த்தம் - 'வெளிப்பட்டிவை யென்றது' இத்யாதி. இப்போது - உபதேஶவேளையிலே. ஸ்ருஷ்டி ப்ரஹ்மாவுக்கும், ரக்ஷணம் ஸர்வேஶ்வரனுக்கும், ஸம்ஹாரம் ருத்ரனுக்கும் சொல்லாநிற்க, இவன் ஸ்ருஷ்டித்தானென்கிறதென்? என்ன, 'ஒரு மூவராகிய மூர்த்தி' என்று : அத்விதீயரான மூவராயிருக்கிற ஸர்வேஶ்வரன் இத்யர்த்தஃ. மூர்த்தி ஶப்தஸ்ய ஸர்வேஶ்வர வாசித்வம் எப்படி? என்ன, 'மூர்த்திசப்தம்' இத்யாதி. முந்தின அவதாரிகைக்குச் சேர அந்வயங் காட்டு

* திருவாய்மொழி - அ - கo - எ.

மற்றிருக்கை. அன்றிக்கே,சேவ்வையாவது-''**யதாபூர்வமகல்பயத்**''(யதாபூர்வமகல்பயத்) என்கிறபடியே தத்தத்கர்மாநுரூபமாகப் படைத்த சேவ்வையாதல். [சூழ்] - கார்யஜாதத்தையெல்லாம் வ்யாபித்திருக்கை. [சுடர்] - மழுங்காத ஞானமாய் விஶததமமாயிருக்கை. [ஞானமாய்] - இப்படிப்பட்ட ஸங்கல்பரூப ஜ்ஞாநத்தை யுடையனாய். வெளிப்பட்டிவை யென்றது - ப்ரமாண ப்ரதிபந்நமான இவை யென்றபடி. ஆக, இதுக்குக்கீழ் - ஜகத்காரணத்வஞ் சொல்லிற்று. மேல்-நித்ய விபூதியுக்தனா யிருக்கிறபடி சொல்லுகிறது. [பின்னும் இத்யாதி] - லீலாவிபூதியுக்தனானதுக்குமேல், ''**அத்யர்காநலதீப்தம்தத்ஸ்தாநம்**'' (அத்யர்காநலதீப்தம்தத்ஸ்த்தாநம்) என்கிறபடியே செறிந்திருந்துள்ள தேஜஸ்ஸையுடைத்தான நித்யவிபூதியுக்தனா யிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. [மொய்கொள்சோதி] - தேஜ:ப்ரப்ருதி கல்யாண குணங்களையுடைய னென்னவுமாம். தேஜஸ்ஸு - குணங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். இப்போது குணஞ்சொல்லுகிறதேன்? என்றால்;—குணாதிக வஸ்துவிறே ஆஶ்ரயணீயமாவது. [ஒரு மூவராகிய மூர்த்தியே] - ப்ரஹ்மருத்ரர்களுடைய ஶரீரத்தையும் ஆத்மாவையும் தனக்கு ஶரீரமாகக்கொண்டு அவற்றில் அந்தராத்மாவாய் நின்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப் பண்ணியும், ஸ்வேநரூபேண நின்று பாலநகர்மத்தைப் பண்ணியும் போருகிற ஸர்வேஶ்வரன். மூர்த்திஶப்தம் - பரத்வவாசி. அன்றிக்கே, ப்ரஹ்மருத்ரர்களோடே இந்த்ரனையுங்கூட்டி மூவரென்று சொல்லவுமாம். மொய்கொள்சோதியோடாயினான் ஒரு மூவராகிய மூர்த்தி - பின்னும் - வையம் வானம் மனிசர் தெய்வம் மற்றும் மற்றும் மற்றும் முற்றுமாய் - வெளிப்பட்டிவற்றை - செய்ய சூழ் சுடர் ஞானமாய் - படைத்தான் - செய்ய தாமரைக்கண்ணனாய் உலகேழுமுண்ட அவன்கண்டீர்;

---

கிமர் - 'மொய்கொள் சோதி' இத்யாதி. பரவுங்கோளென்றது - மேலிற்பாட்டில் க்ரியையே இதுக்கும் க்ரியை யென்றபடி. த்விதீயாவதாரிகைக்கும் அந்வயம் இதுவேயாய், 'உலகேழுமுண்ட அவன்கண்டீர்' என்றே க்ரியாபதம். 'முற்றுமாய்' என்கிற ஸாமாநாதிகரண்யம் - கார்யகாரணபாவ நிபந்தநம். 'ஞானமாய்' என்கிற விடம் - குணகுணிபாவத்தாலே. ஒரு மூவராகிய மூர்த்தி - 'அத்விதீயமான ப்ரஹ்ம விஷ்ணு ஶிவாத்மக மூர்த்தித்ரயத்தையு முடையனானவன்' என்று உரையில் அர்த்தம். ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களை ஶரீரமாகவுடைய ஸர்வேஶ்வர னென்னுதல். 'மூவராகிய மூர்த்தி' என்கிற ஸாமாநாதிகரண்யம் - கார்யகாரணபாவநிபந்தநம். மொய்கொள் - செறிவையுடைய, சோதியோடாயினான் - செறிந்த தேஜோமயமான நித்யவிபூதியோடே கூடியிருக்கிறவன். ''அத்யர்காநலதீப்தம் தத்ஸ்தாநம் விஷ்ணோர்மஹாத்மந: । ஸ்வயைவ ப்ரபயா ராஜந் துஷ்ப்ரேக்ஷம் தேவதாநவை:'' இதி ஆரண்யபர்வணி ஆர்ஷ்டிஷேண வசநம். ''யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ'' என்றதுக்கு ஸித்தாந்தார்த்தம் மூன்று. 'கம்' என்று-ஜலமாய், அப்யாஸமென்கிறவிடத்தில்-அகாரம் ''அவாப்யோருபஸர்கயோ:'' என்கிற (ஸூத்ர)ப்ரக்ரியையாலே லுப்தமாய் ''ப்யாஸ'' என்றிருக்கிறதாய், கப்யாஸ:புண்டரீகமென்று - ஜலத்திற்பிறந்திருக்கிற புண்டரீகம்போலே யிருக்கிற திருக்கண்களென்னுதல்; இந்தஅர்த்தத்தில் ''அஸ க்ஷேபணே'' என்கிற தாது. அன்றிக்கே, கம்பிபதீதி - கபி: என்று - நாளத்தைச் சொல்லி, அதிலே யிருக்கிற தாமரையென்னுதல்; இந்த அர்த்தத்தில், ''ஆஸ உபவேஶநே'' என்கிற தாது. அன்றிக்கே, கம்பிபதீதி - கபி: - ஸூர்ய:, தேநாஸ்யதே - க்ஷிப்யதே இதி கப்யாஸம். ஸூர்யனாலே அலர்த்தப்பட்ட தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கண்களென்னுதல்; இந்த அர்த்தத்துக்கு, கபியென்று - ஸூர்யனைச்சொல்லுமோ? என்ன, ''கபிர்பிப்ரூஹதிர்தேஜ:'' என்னக்கடவதிறே இந்த மூன்று அர்த்தத்தையும் ஸ்ரீபாஷ்யகாரர் வேதார்த்தஸங்க்ரஹத்திலே, ''கம்பீராம்பஸ்ஸமுத்பூத ஸம்ம்ருஷ்ட நாலரவிகரவிகஸித புண்டரீகதலாமலாயதேக்ஷண:'' என்று அருளிச்செய்தார். இதுக்குப் பூர்வ பக்ஷார்த்தம் மூன்று உண்டு. அதாவது, கபியென்று - கிஞ்சித் என்றாய், கப்யாஸம் புண்டரீகமென்று - ஈஷத்விகஸிதமான தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கண்களென்னுதல். அன்றிக்கே, 'கபி சலநே' என்கிற தாதுவினாலே, கபிஶப்தத்தாலே ஸூர்யனைச்சொல்லி, ஆஸமென்று ஆதித்யனுடைய மண்டலமாய், புண்டரீகமென்று ஹ்ருதயகமலமாய், ஆதித்யமண்டலமும் ஹ்ருதயகமலமும் யாதொருபடி உபாஸ்யனான ஸர்வேஶ்வரனுக்கு வாஸஸ்தாநமாயிருக்கும் ; ஏவம் - அப்படியே அக்ஷிகளும் உபாஸ்யனான ஸர்வேஶ்வர

ஆனபின்பு, அவனைப் பரவுங்கோள். * (முற்றுமாய் என்கிற ஸாமாநாதிகரண்யம்-கார்யகாரண பாவத்தாலே. ஞானமா யென்ற இடம் - குணகுணிபாவத்தாலே.) (௧)

# இரண்டாம் பாட்டு.

மூவராகியமூர்த்தியை முதல்மூவர்க்கும்முதல்வன்தன்னைச்
†சாவமுள்ளனநீக்குவானைத் தடங்கடற்கிடந்தான்தன்னைத்
தேவதேவனைத் தென்னிலங்கையெரியெழச்செற்றவில்லியைப்
பாவநாசனைப் பங்கயத்தடங்கண்ணனைப்பரவுமினே.

ஆ.—(மூவராகிய.) இதின்மேல் ஸமாஸ்ரயணீயனான எம்பெருமானுடைய எளிமையைச் சொல்லுகிறது.

இப்படி த்ரிமூர்த்திரூபேண அவஸ்திதனாய், ஸர்வலோக நிர்வாஹகரான ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுக்கு நிர்வாஹகனாய், அவர்களுடைய வேதாபஹாரகுருபாதக தைத்யபீடாதி ஆபத்விமோசநகரனாய், க்ஷீரார்ணவநிகேதநனாயிருந்துவைத்து ஆஸ்ரிதஸமாஸ்ரயணீயத்வார்த்தமாக தஸரதாத்மஜனாய் வந்து அவதீர்ணனாய், இப்படி மநுஷ்யனாயிருக்கச்செய்தே ரூப குண விபவ சேஷ்டிதாதிகளால் மநுஷ்யரிற்காட்டில் தேவர்கள் யாதொருபடி விலக்ஷணராயிருப்பார்; அப்படியே தேவர்களிற்காட்டிலும் விலக்ஷணனாய், ஆஸ்ரிதவிரோதிநிரஸநைகபோகனாய் தர்ஸநமாத்ரத்தாலே ஸர்வஜந்தூநாம் ஸர்வபாபக்ஷயகரனாயிருக்கிற எம்பெருமானைப் பரவுமினோ என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டுத் தொடங்கி மேலெல்லாம் அவனுடைய ஸௌலப்யம் சொல்லுகிறது. இரண்டாம்பாட்டில், இப்படி ஸர்வேஸ்வரனாயிருந்தானேயாகிலும் ஆஸ்ரயிப்பார்க்கு எளியனாகைக்காக அவர்களோடு ஸஜாதீயனாய் வந்து திருவவதாரம் பண்ணியருளின ஸ்ரீதசரதசக்ரவர்த்திதிருமகனை ஆஸ்ரயியுங்கோள் என்கிறார்.

[மூவராகிய மூர்த்தியை] - ப்ரஸ்துதமான ஸாமாநாதிகரண்யநிபந்தநம் சொல்லுகைக்காகக் கீழ்ச்சொன்ன ஸாமாநாதிகரண்யத்தை அநுபாஷிக்கிறது. ஜகத்துக்குப் ப்ரதாநரான ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுக்குக் காரணமானவனை. இஸ்ஸாமாநாதிகரண்யம் கார்யகாரணபாவநிபந்தநமென்கிறது. [சாவமுள்ளன நீக்குவானை] - அவர்களுக்குள்ள பாபங்களை அநாயாஸேந போக்குமவனை. [தடங்கடல் கிடந்தான்தன்னை] - தேவர்களுடைய ஆபந்நிவாரணாதிகளுக்காக அவர்களுக்கு அணித்தாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனை. [தேவதேவனை] - அங்குக் கண்வளர்ந்தருளுகிறது, தேவர்களுக்கு ஸமாஸ்ரயணீயனாய். மநுஷ்யஸஜாதீயனாய் வந்து திருவவதாரம்பண்ணியருளினாலும் மநுஷ்யரைக்காட்டில் தேவர்கள் விலக்ஷணராயிருக்கிறாப்போலே தேவர்களைக்காட்டிலும் விலக்ஷணனானவனையென்றுமாம். [தென்னிலங்கை என்று தொடங்கி] - ராவணனுக்கு அஞ்சியிருந்த அக்நி தட்டும்தடையுமின்றிக்கே வ்யாபரிக்கும்படி தன்வில்வலியாலே லங்கையைச் செற்றுக் கையும் வில்லும் கண்டாருடைய ஸகலபாபங்களையும் போக்கும் ஸ்வபாவ

னுக்கு வாஸஸ்தாநமா யிருக்கு மென்னுதல். அன்றிக்கே, கப்யாஸமென்று - மர்க்கடப்ருஷ்டத்தைச் சொல்லி, மர்க்கட ப்ருஷ்டம்போலே யிருக்கிற யாதொரு புண்டரீகமுண்டு, அதுபோலே யிருக்கிற அக்ஷிகளென்னுதல். இப்படி பூர்வபக்ஷத்திலே மூன்று அர்த்தமும், ஸித்தாந்தத்திலே மூன்று அர்த்தமும் கண்டுகொள்வது. (௧)

* குண்டலிதக்ரந்தம் பலஸ்ரீகோஸங்களில் இல்லை. † 'சாபமுள்ளன' என்று பலஸ்ரீகோஸங்களிலும் பாடம்.

னாய் ஒரு பாபங்களையும் போக்காவிடிலும் காண்கையே ப்ரயோஜநம்போரும்படியான உத்புல்ல புண்டரீகதடாகம்போலே யிருக்கிற திருக்கண்களையு முடையவனை.

ப.—அநந்தரம், ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாய் அவதாரகந்தமான க்ஷீரார்ணவஶாயி ஆஶ்ரயணீயன் என்கிறார்.

மூவராகிய மூர்த்தியை - ("ஸ஍ஹ்மாஸஶிவஸ்ஸொ"" என்கிறபடியே) ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களும் தானென்னலாம்படி அவர்களுக்கு ஶரீரியாயிருப்பானாய், முதல்மூவர்க்கு - (ஶரீரபூதராய்)லோகப்ரதாநரான அவர்கள் மூவர்க்கும், முதல்வன்தன்னை-காரணபூதனாய், (சாவம் உள்ளன - (அவர்களுக்கு குருபாதகாதி) ஶாபங்கள் உள்ளவற்றை, நீக்குவானை - போக்குமவனாய், (பின்பு கூப்பிட்டகுரல்கேட்கும்படி), தட கடல் - இடமுடைத்தான க்ஷீராப்தியிலே, கிடந்தான்தன்னை - கண்வளர்ந்தருளி, தேவதேவனை - ராவணவதார்த்திகளான தேவர்களுக்கு ஆஶ்ரயணீயனாய்க்கொண்டு அவதரித்து, தென் இலங்கை எரி எழ - லங்கையில், செல்லப் பெறாத அக்நி தலையெடுக்கும்படி, செற்ற - ஶத்ருநிரஸநம்பண்ணின, வில்லியை - வில்லையுடையனாய், பாவநாசனை - (ஸேதுவில் வரதாநாதிமுகத்தாலே) பாபவிநாசகனான, பங்கயத்தடங்கண்ணனை - புண்டரீகாக்ஷனை, பரவுமின் - ஸ்தோத்ரமுகத்தாலே ஆஶ்ரயியுங்கோள்.

இ.—இரண்டாம்பாட்டில், 'இப்படி ஸர்வேஶ்வரனாயிருக்கிற இவனைக் கிட்டப் போமோ?' என்னில்,—ஆஶ்ரயணார்த்தமாக ஸஜாதீயனாய் வந்து அவதரித்த சக்ரவர்த்திதிருமகனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[மூவராகிய மூர்த்தியை] - ப்ரஸ்துதமான ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் சொல்லுகைக்காக அநுபாஷிக்கிறது. [முதல் இத்யாதி] - ஜகத்துக்கு ப்ரதாநரான ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுக்குக் காரணமானவனை. இஸ்ஸாமாநாதிகரண்யம், கார்யகாரணபாவ நிபந்தநம் என்கிறது. [சாவம் இத்யாதி] - வேதாபஹாரகுருபாதக தைத்யபீடாதிகளால் இவர்களுக்கு வரும் ஆபத்துக்களைப் போக்குமவனை. [சாவமுள்ளன என்கிறது] - அவன் க்ருபைக்கு இவர்கள் பண்ணும் அபராதம் போராது என்கை. [தடம் இத்யாதி] - இன்னம் இவர்களுக்கு இடர்வந்தபோது தூரஸ்தனாகவொண்ணாதென்று க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளினபடி. [தேவதேவனை] - அங்குக்கிடக்கிறது ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயனாகைக்கு; அவர்கள் அபேக்ஷிக்க வந்து அவதரித்தபடி. 'ஸஷாமு' இத்யாதி. [தென் இலங்கை இத்யாதி] - அக்நிபுகப் பயப்படும் ஊரிலே நினைத்தபடி புக்கு வ்யாபிக்கப்பண்ணவல்ல வில்வலியை யுடையவனை. 'தென்னிலங்கை யெரியெழச் செற்ற வில்லியைத் தேவதேவனை' என்று மநுஷ்யத்வே பரத்வத்தைச் சொல்லிற்றாகவுமாம். நித்யஸூரிகள் ஏத்துகிறவனை ஆஶ்ரயியுங்கோள் என்றுமாம். [பாவநாசனை] - ஹேயப்ரதிபடனை. கையும் வில்லுமாயிருக்கிறபடியைக் காண ஸர்வருடைய பாபங்களும் போம். "வாவநஸ்வஹ்யொகாநாம தஓெவாவஸூநஜந". [பங்கயம் இத்யாதி]-பாபத்தையுண்டாக்கிலும் விடவொண்ணாத வடிவழகையுடையவனை. "ஶாஉஂகஉஷவதாக்ஷஃ". [பரவுமினோ]-"ஜிதவெஹஷ்வஸூணாஶிகாக்ஷ" என்று அக்ரமமாகப் புகழுங்கோள்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. ஜகத்காரணத்வபுண்டரீகாக்ஷத்வாதிகளைச் சொல்லி, 'ஆஶ்ரயியுங்கோள்' என்னாநின்றீர்; அவை பரத்வத்துக்கு ஏகாந்தமான லக்ஷணங்களாயிற்று; ஆனபின்பு, எங்களாலே அவனை ஆஶ்ரயிக்கப்போமோ? என்ன, அப்படிப்பட்டவன்தானே உங்களோடு ஸஜாதீயனாய்ச் சக்ரவர்த்திதிருமகனாய் வந்து அவதரித்தான்; அங்கே ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

---

இரண்டாம்பாட்டு - 'மூவராகிய' இத்யாதி. கீழே பரத்வத்தைச் சொல்லி, இங்கே அவதாரத்தைச் சொல்லுகையாலே பரத்வத்துக்கு அந்யதாஸித்திஶங்கித்து அவர்களுக்கு அவதாரம் ஆஶ்ரயணத்துக்கு ஏகாந்தமென்று பரிஹரித்ததாயிருக்கிறது என்கிறார், 'ஜகத்காரணத்வ' இத்யாதி.

[மூவராகிய மூர்த்தியை] - ப்ரஸ்துதமான ஸாமாநாதி கரண்யத்துக்கு நிபந்தநஞ் சொல்லு கைக்காக அநுபாஷிக்கிறது. [முதல் இத்யாதி] - இஸ்ஸாமாநாதிகரண்யம் ஸ்வரூபேண அன்று, கார்யகாரணபாவநிபந்தநமென்கிறது. ஜகத்துக்குக் காரணபூதனாயிருந்துள்ள தன்னோடேகூடின மூவர்க்கும் காரணபூதனா யுள்ளவனை. ப்ரஹ்மருத்ரர்களுக்கும் காரணபூதனாகிறான், தனக்குக் காரணபூதனாகையாவதென்? என்னில்,—தான் இவர்களுக்குக்காரணபூதனானவோபாதி தனக்கு அவ்வருகு காரணாந்தரமின்றிக்கே யிருக்குமென்றபடி; "அகாரணம்" (ஆத்மேச்வரம்) என்கிறபடியே. அன்றிக்கே, இந்த்ரனையுங் கூட்டி, ஜகத்துக்கு ப்ரதாநராயிருந்துள்ள ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுக்கும் காரணபூதனாயுள்ளவனை யென்றுமாம். [சாவமுள்ளன நீக்குவானை] - "வேதாபஹாரகுருபாதக தைத்யபீடா" (வேதாபஹாரகுருபாதகதைத்யபீடா) என்றாற்போலே சொல்லுகிறவற்றைப்போக்கும் ஸ்வபாவனாயுள்ளவனை. [உள்ளன]-போக்குகிற அவன்பாரிப்புக்கு இவை அல்பமாயிருக்கிறபடி. [தடங்கடல் இத்யாதி]-'இன்னம் இவற்றுக்கு ஆபத்துவந்தபோது நம்மைத்தேடித்திரியவொண்ணாது' என்று ஏற்கவே கடலில் இடங்கொண்டவனை. [தேவ தேவனை]-ப்ரஹ்மாதிகளுக்கு ஆச்ரயணீயனாய்க் கொண்டாயிற்றுக் கண்வளர்ந்தருளுகிறது. [தேன் இலங்கை எரியெழச் செற்ற வில்லியை]-அவர்கள் கூப்பீடு கேட்டு எழுந்திருந்து செய்யுந்தொழில் சொல்லுகிறது. அக்நியானது ராவணபயத்தாலே ப்ரவேசிக்கமாட்டாத ஊரிலே தான் நினைத்தபடி வ்யாபரிக்கப்பண்ணவல்ல வில்வலியையுடையவனை. 'தேவதேவனை - தென்னிலங்கை எரியெழச்செற்ற வில்லியை என்று'-மநுஷ்யத்வே பரத்வஞ்சொல்லிற்றாகவுமாம்; நித்யஸூரிகளேத்துகிறவனை ஆச்ரயியுங்கோள்என்றுமாம். [பாவநாசனை] - கையும் வில்லுமாயிருக்கிறபடியைக் காண, ஸர்வருடைய பாபங்களும் போம்: "பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந" (பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவரகுநந்தந) என்கிறபடியே, அந்நிலையிலே சேதநருடைய ஸகலபாபங்களையும் போக்கும் ஸ்வபாவனை. [பங்கயத்தடங்

---

புநச்ச, 'மூவராகியமூர்த்தி' என்று அநுபாஷிக்கிறதுக்கு ப்ரயோஜநம் - 'ப்ரஸ்துதமான' இத்யாதி' ஸாமாநாதிகரண்யஸ்யஹேதுமாஹ - 'இஸ்ஸாமாநாதிகரண்யம்' இத்யாதி. தடஸ்தசங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - 'ப்ரஹ்மருத்ரர்' இத்யாதி. அன்றிக்கே, இந்த்ரனையும் இதி: ஏவஞ்ச, 'முதல்' என்றதுக்கு - காரணபூதர், ப்ரதாநபூதரென்று அர்த்தத்வயம். சாவமுள்ளன நீக்குவானை - சாபம்போலே அநுபாவ்யமான வேதாபஹாராதி து:கங்களுள்ளவற்றைப் போக்குமவனை. தைத்யபீடை - இந்த்ரனுக்காதல்; குருபாதக தைத்ய பீடைகள் இரண்டும் - ருத்ரனுக்காதல். தலையிலே கையைவைக்க வந்த வ்ருகாஸுராதி பீடை யுண்டிறே. வேதாபஹாராத்யாபத்துக்கள் பஹுவாயிருக்க, உள்ளனவென்று - லகுவாகச்சொல்லுகிறதென்? என்ன, 'போக்குகிற அவன்' இத்யாதி. சாபம்நீக்குவானை யென்ன அமைந்திருக்க, 'உள்ளன' என்கையாலே - உள்ளத்தைப் போக்கினான், இல்லாததுக்கு என்செய்வான்? என்று தோன்றுமிறே; அத்தாலே - பாரிப்பினுடைய மிகுதியும், சாபத்தினுடைய பல்குத்வமும் தோன்றுகிறது. 'சாவமுள்ளனநீக்குவானை' என்ற அநந்தரம், 'தடங்கடற்கிடந்தான்தன்னை' என்று சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் - 'இன்னம்' இத்யாதி. கீழிற்பதத்தோடே கூட்டி - ஹாவம் - 'ப்ரஹ்மாதிகளுக்கு' இத்யாதி. ஆச்ரயித்த ப்ரஹ்மாதிகளுக்குப் பலம்கொடுக்கைக்காகச் சக்ரவர்த்திதிருமகனாய்வந்து அவதரித்தானென்கிறார் - 'அவர்கள்' இத்யாதி. 'எரியெழச்செற்றவில்லியை' என்றதுக்கு வாஸநை - 'அக்நியானது' இத்யாதி. தென்னிலங்கையிலே செல்லப்பெறாத அக்நியானது தலையெடுக்கும்படி சத்ருநிரஸநம்பண்ணின வில்லையுடையவனை. 'தேவதேவன்' என்கிறஇத்தை-சக்ரவர்த்தித்திருமகனுக்கு விசேஷணமாக்கி, அத்தால் பலித்த தாத்பர்யம் - 'தேவதேவனை' இத்யாதி. "பவாந்நாராயணோ தேவ:" என்று ப்ரஹ்மாதிகள் ஸ்தோத்ரம் பண்ணும்படியான மநுஷ்யத்வே பரத்வத்தை யென்றபடி. 'தேவதேவன்' என்றதுக்கு - நித்யஸூரிகளாலே ஸ்தோத்ரம்பண்ணப்படுமவனென்று அர்த்தாந்தரம் - 'நித்யஸூரிகள்' இத்யாதி. இவர்கள் ஏத்தினமைக்கு "பரதனும்தம்பிசத்துருக்கனும்" இத்யாதியை ப்ரமாணமாக அநுஸந்திப்பது. 'தென்னிலங்கை' இத்யாதியோடே 'பாவநாசனை' என்றத்தையும்கூட்டி ஹாவம் - 'கையும்வில்லுமாய்' இத்யாதி. பாபங்கள்போம் என்கைக்கு ப்ரமாணம்-'பாவந' இத்யாதி. உத்தரஸ்ரீராமாயணே த்வ்யசீதிதமே அகஸ்த்ய:— "ஸுத்ருஷ்டஸ்த்வம் மஹாபாஹோ ராக்ஷஸஸ்ய வதாத் த்வயா" இதி பூர்வார்த்தம். 'பாவநாசனை' என்ற அநந்தரம்,

கண்ணனை] - பாபவர்த்தகனுலும் விடவொண்ணுதபடியான கண்ணழகையுடையவனை. [பரவுமினோ]-அக்கண்ணழகிலேதோற்று"ஜிதந்தே புண்டரீகாக்ஷ"(ஜிதந்தேபுண்டரீகாக்ஷ) என்று அக்ரமமாகப் புகழுங்கோள். (உ)

## மூன்றும் பாட்டு.

பரவிவானவரேத்தநின்ற பரமனைப்பரஞ்சோதியைக்
குரவைகோத்தகுழகனை மணிவண்ணனைக்குடக்கூத்தனை
அரவமேறியலைகடலமரும் துயில்கொண்டஅண்ணலை
இரவும்நன்பகலும்விடாது என்றுமேத்துதல்மனம்வைம்மினோ.

ஆ.—(பரவி.) அயர்வறுமமரர்களாலே அநவரதஸம்ஸ்துயமானனாய், நிரதிசயதேஜோ விசிஷ்டனாய், நாகபர்யங்கசாயியாயிருந்துவைத்து வஸுதேவக்ருஹே அவதீர்ணனாய், ஆச்ரித ஸம்ச்லேஷைகஸ்வபாவனாய், ஆச்ரிதஸுலபனாய், அதிமநோஹரதிவ்யசேஷ்டிதனை யிருந்தவனை இரவும் நன்பகலும் விடாது என்றும் ஏத்துதல் மனம்வைம்மினோ என்கிறார்.

ஒ.—மூன்றும்பாட்டில், தசரதாத்மஜனானவனிற்காட்டிலும் ஸுலபனாய் வந்து திருவவதாரம் பண்ணியருளின ஸ்ரீநந்தகோபர்திருமகனை நிரந்தரமாக ஆச்ரயிக்கப்பாருங்கோள் என்கிறார்.

[பரவி வானவர் என்று தொடங்கி] - ஒத்தாரும் மிக்காரும் இன்றிக்கே தன்னுடைய ஸௌந்தர்யாதிகளுக்குத் தோற்று அயர்வறுமமரர்கள் அக்ரமமாக ஏத்தும்படியை யுடையனாய், அவர்கள் ஏத்துகையாலே தீப்யமானனுமாய் இங்ஙனே விலக்ஷணனாயிருந்துவைத்து ஸ்ரீநந்த கோபர்திருமகனாய்த் திருக்குரவைகோத்தருளி இடைப்பெண்களை ஈடுபடுத்தி அவர்களோடே கலக்கவல்லனுமாய், அத்தாலே பெருவிலையனான மாணிக்கம்போன்ற அழகையுடையனுமாய், பெண்களே வாழ்ந்துபோகையன்றிக்கே எல்லாரும் கண்டு வாழும்படி குடமாடியருளுவதும் செய்து அத்தாலுண்டான இளைப்பு ஆறும்படி திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளின நிரதிசயபோக்யபூதனை.

ப.—அநந்தரம், அந்த க்ஷீரார்ணவசாயியினுடைய ராமாவதாரத்திலுங்காட்டில் ஆச்ரிதார்த்த ப்ரவ்ருத்திகளையுடைய க்ருஷ்ணாவதார ஸௌலப்யத்தை அநுஸந்தித்து அவனை ஆச்ரயியுங்கோள் என்கிறார்.

(பூபாரநிர்ஹரணார்த்தமாக), பரவி - (குணகணங்களைப்)பரக்கச்சொல்லி, வானவர் - தேவர்கள், ஏத்த - ஸ்தோத்ரம்பண்ண, நின்ற - (அவர்களுக்கு ஸந்நிதிபண்ணி) நின்ற, பரமனை - (அவதீர்ணதசையிலே "தைவதைவதம்" என்னும் பாரம்யத்தையுடையனாய், பரஞ்சோதியை - (அவதாரஸௌந்தர்யத்தில் அகப்பட்ட கோபகந்யபடியான) நிரவதிக ஜ்யோதிஸ்ஸையுடையனாய், (அவதாரஸௌந்தர்யத்தில் அகப்பட்ட கோபகந்ய கைகளுக்கு), குரவைகோத்த - திருக்குரவைகோத்த முகத்தாலே, குழகனை - இஷ்டவிநியோ

கண்ணழகைச் சொன்னதுக்கு பாவம் – 'பாபவர்த்தகன்' இத்யாதி. 'பரவுமினோ' என்றதுக்கு அர்த்தம் – 'அக்கண்ணழகிலே' இத்யாதி. "ஜிதந்தே புண்டரீகாக்ஷ நமஸ்தே விச்வபாவந" இத்யாதி. க்ரமேண அந்வயஃ. (உ)

கார்ஹமாம்படி பவ்யனாய், மணி வண்ணனை - மாணிக்கம்போலே முடிந்து ஆளலாம்படி ஸுலபமான வடிவையுடையனாய், (பெண்களையன்றியே ஊராக அநுபவிக்கும்படி), குடக்கூத்தனை - குடக்கூத்தாடினவனாய், (இப்படி ஆஸ்ரிதகார்யஞ்செய்கைக்காக), அரவம் - திருவநந்தாழ்வான் மேலே, ஏறி - ஏறி, அலை கடல் - (தன்ஸந்நிதியாலே) கொந்தளித்து அலையெறிகிற கடலிலே, அமரும் - (ரக்ஷணசிந்தையிலே) பொருந்தின, துயில் கொண்ட - நித்ரையை ஸ்வீகரித்த, அண்ணலை - ஸ்வாமியை, நன் - (ஸ்தோத்ரோபயோகத்தாலே) நன்றான, இரவும் பகலும் - அஹோராத்ரவிபாகமின்றியே, விடாது - ஓவாதே, என்றும் - என்றும், ஏத்துதல் - ஸ்தோத்ரம்பண்ணுகையிலே, மனம் வைம்மின் - நெஞ்சை வையுங்கோள். விஷயவைலக்ஷண்யத்தாலே அதுதானே கொண்டு முழுகுமென்று கருத்து.

இ. —மூன்றும் பாட்டில், கீழ்ச்சொன்ன ராமாவதாரம் பரதமை யென்னும்படியான க்ருஷ்ணவதாரத்திலே ஆஸ்ரயியுங்கோள் என்கிறார்.

[பரவி வானவரேத்த நின்ற பரமனை] - நித்யஸூரிகள் அக்ரமமாக ஏத்த அத்தாலே ஸமாதிகரஹிதனாய் நின்றவனை. நித்யஸூரிகள் ஏத்தினாலும் பரிச்சேதிக்கவொண்ணாதே அவ்வருகாய் நின்றவனை யென்றுமாம். [பரஞ்சோதியை] - அவர்கள் ஏத்த அத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்கிறவனை. ''விவஸ்வொஜா ஷுவாஂஸஸ்ஸிஂயதெ'' என்று அவர்கள் ஏத்துகை தன் பேறாக நினைத்து அது வடிவிலேதோற்ற இருக்கிறபடி. ''வரஂஜ்யோதிரூவஸஂவஜ்ய''. ஸேஷிக்கு அதிஸயத்தைப் பண்ணுகை ஸேஷபூதனுக்கு ஸ்வரூபமிறே. [குரவைகோத்த குழகனை] - இப்படி விலக்ஷணனாயிருந்துவைத்து நித்யஸூரிகளோடு இடைப்பெண்களோடு பரிமாற்றத்தில் வாசியறக் கலக்கவல்லவனை. [மணிவண்ணனை] - அவர்களை அநந்யார்ஹைகளாக்கவல்ல வடிவழகையுடையவனை. [குடக்கூத்தனை] - இப்பெண்களில் தாழ்ந்தார் இழந்துபோகையன்றிக்கே திருக்குரவையில் தப்பினார் இழவாதபடி மன்றிலே நின்று குடக்கூத்தாடி அவ்வடிவழகை ஸர்வஸ்வதானம் பண்ணினவனை. [அரவம் இத்யாதி] - குடக்கூத்தாடின ஸ்ரமம் தீர க்ஷீராப்தியிலே சாய்ந்தபடி. [அலைகடல்] - தன்ஸந்நிதியாலே கிளர்த்தியையுடைத்தாயிருக்கை. [அமரும் துயில்] - நாச்சிமாராலும் உணர்த்தவொண்ணாதிருக்கை. [அண்ணலை] - சாய்ந்துகிடக்கிற போது ஸர்வாதிகனென்று தோற்ற இருக்கை. ''ஸயோவொயிதஸ்ரீஶ ஸுவஸுஃ வரஜவஃ'' என்னக்கடவதிறே. [இரவு இத்யாதி] - ஏத்துகைக்கு உறுப்பான காலமாகையாலே நல்ல இரவும், நல்ல பகலும். காலம்நடையாடாத தேஸத்திலே சென்று அநுபவிக்கவேண்டும் விஷயத்தைக் காலம்நடையாடும் தேஸத்திலே யிருந்தே அநுபவிக்கலா மென்கை. [என்றும் இத்யாதி] - எப்போதும் ஏத்துகையிலே மநஸ்ஸைவைக்க அமையும்; தானே கொண்டு முழுகும்; பின்னை உபதேசிக்கவேண்டா.

ஈடு.—மூன்றும்பாட்டு. கீழ்ச்சொன்ன ராமாவதாரம் பரத்வமென்னும்படியான க்ருஷ்ணவதாரத்திலே ஆஸ்ரயியுங்கோள் என்கிறார்.

---

மூன்றும்பாட்டு - 'பரவி' இத்யாதி. 'குரவைகோத்த குழகனை' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'ராமாவதாரம்' இத்யாதி. பரத்வமென்னும்படியான க்ருஷ்ணவதாரத்திலே - பரத்வமென்னும்படி அத்யந்தஸுலபமான க்ருஷ்ணவதாரத்திலே. 'ராமாவதாரத்திலே ஆஸ்ரயிக்கச் சொல்லாநின்றீர், அந்த அவதாரம் கட்டும்காவலுமாய் வஸிஷ்டாதிகள் ஓலக்கம் கொடுக்க மேன்மைதோற்ற ஸிம்ஹாஸநஸ்த்தராயிருக்கிற இருப்பிலே நாங்கள் ஆஸ்ரயிக்கும்படி எங்ஙனே? என்னில்' என்று அவதாரிகையடியிலே சில கூட்டிக்கொண்டு, அநந்தரம் - 'கீழ்ச்சொன்ன ராமாவதாரம்' இத்யாத்யநுஸந்திப்பது. ஏத்துகையாலே - பரமனென்னுதல், ஏத்தினாலும் பரமனாயிருக்கு மென்னுதல். 'வானவர்-பரவி-ஏத்த-பரமனாய்-நின்றவனை' இத்யந்வயஃ. இரண்டாமர்த்தத்துக்கு - ''நிரவத்யஃவரஃவ ராவெ்ஃ'' இத்யாதியை நினைப்பது. ப்ராப்தியாவது - ஸ்தோத்ரமென்று தாத்பர்யம்.

[பரவிவானவரேத்தநின்றபரமனை] - அக்ரமமாக நித்யஸூரிகள் ஏத்த, அத்தாலே ஸமாதிக தரித்ரனாய் நின்றவனை. நித்யஸூரிகள் ஏத்தினாலும் பரிச்சேதிக்கவொண்ணாதே அவ்வருகாய் நின்றவனை யென்றுமாம். [பரஞ்சோதியை] - அவர்களேத்த, அத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்கிறவனை. "விபந்யவோஜாக்ருவாம்ஸஸ்ஸமிந்ததே" (விபந்யவோஜாக்ருவாம்ஸஸ்ஸமிந்ததே) என்று அவர்கள் ஏத்துமது தன்பேறாக நினைத்து, அது தன் வடிவிலே தோற்ற இருக்கிறபடி. "பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய" (பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய). ஶேஷிக்கு அதிஶயத்தைப்பண்ணுகை ஶேஷபூதனுக்கு ஸ்வரூபமிறே. [குரவைகோத்த குழகனை] - நித்யஸூரிகளோடு பரிமாறும் பரிமாற்றத்தை இடைப்பெண்களோடு பரிமாறுமிடத்தில், வாசியறக் கலக்க வல்லவனை. குழகன் - பவ்யன். [மணிவண்ணனை] - அவர்களை வஶீகரிக்கைக்கு மருந்திடும் பரிகரத்தையுடையவனை. நீலமணிபோலே ஶ்ரமஹரமாயிருந்துள்ள விக்ரஹத்தையுடையவனை. [குடக்கூத்தனை] - திருக்குரவையில் அந்வயியாதார்க்கும் இழக்கவொண்ணாதபடி மன்றிலே தன்னுடைய வடிவழகை முற்றூட்டாக அநுபவிப்பிக்குமவனை. [அரவமேறி] - குடக்கூத்தாடின ஶ்ரமம் ஆறும்படிக்கு ஈடாகப் போய்த் திருப்பாற்கடலிலே சாய்ந்தருளினபடி. [அலைகடல்] - ஸ்வஸந்நிதாநத்தாலே கிளர்த்தியையுடைத்தாயிருக்கை. **[அமருந்துயில்]** - நாச்சிமாராலும் உணர்த்தவொண்ணாதிருக்கை. [அண்ணலை] - அநந்தஶாயித்வத்தால் வந்த ஈஶ்வரத்வவுறைப்பைய யுடையவனை. [இரவும் இத்யாதி] - காலம்நடையாடாத தேசத்தில் அநுபவத்தையன்றோ காலம்நடையாடுந் தேசத்திலே நான் உங்களை அநுபவிக்கச் சொல்லுகிறது. ஏத்துகைக்கீடான காலமாகையாலே - நல்லிரவும் நன்பகலு மென்கிறார். [என்றுமேத்துதல்] - "விபந்யவ:" (விபந்யவ:) என்கிறபடியே. [மனம்வைம்மினோ] - நீங்கள் அங்கே நெஞ்சைவைக்குமித்தனையே வேண்டுவது; விஷயம் தன்னடையே கொண்டு முழுகும். நீங்களேத்தவென்று ஒருப்படு மித்தனையே வேண்டுவது, பின்னை உங்களுக்கு உபதேசிப்பார்

---

'பரவி' இத்யாதியோடே கூட்டி ஶாவம்-'அவர்களேத்த' இத்யாதி. விவரணம்-'விபந்யவ:' இத்யாதி. தத்-பரமம்பதம், விப்ராஸ: - மேதாவிந:, விபந்யவ: - "பநஸ்துதௌ" என்கிற தாதுவித்தமாய், தாச்சீல்யே உப்ரத்யயமாய், ஸ்துதிஶீலா: என்றபடி. ஜாக்ருவாம்ஸ:-ஜாகரணஶீலா:, அஸ்கலிதஜ்ஞாநா இதி யாவத். ஸமிந்ததே - விளங்காநின்றார்கள். "ஞிஇந்தீ தீப்தௌ" என்றிறே தாது. பரமபதத்தை ஸதா ஸ்தோத்ரம்பண்ணாநின்று கொண்டு அத்தாலுண்டான ஹர்ஷம் வடிவிலே தோற்ற இருப்பர்களென்றபடி. இது ருக்வேதத்திலே. 'பரஞ் சோதியை'' என்றதுக்கு சாந்தோக்யே ப்ரமாணம் - 'பரஞ்ஜ்யோதி:' இத்யாதி. அவர்களேத்துமது அவர்களுக்கு ஸ்வரூபஸித்தியொழிய, தன்பேறானபடி எங்ஙனே?என்ன,'ஶேஷிக்கு' இத்யாதி. அதாவது - "விஜ்வரப்ரமுமோத ஹ" என்கிறபடியே, ஶேஷபூதன் ஏத்தித் தன்ஸ்வரூபம் பெறுமது தன்பேறாக நினைத்திருக்குமிறே யென்றபடி. யத்வா, இவர்களேத்துகிறது எதுக்காக? என்ன, 'ஶேஷிக்கு' இத்யாதி என்னுதல். 'பரவி வானவர்' இத்யாதியோடே கூட்டி ஶாவம்-'நித்யஸூரிகளோடு' இத்யாதி. குழகனை - ஏகரஸனை. அவர்களை-பெண்களை. 'குரவைகோத்த' என்ற அநந்தரம் - 'குடக்கூத்தனை' என்றதுக்கு ஶாவம் - 'திருக்குரவையில்' இத்யாதி. அந்வயியாதார்க்கு - கோபாலவ்ருத்தைகள் முதலானார்க்கு. மன்றிலே - நாற்சந்தியிலே. முற்றூட்டாக - பூர்ணபோஜநமாக. கீழ்ப்பதத்தையும் கூட்டி ஶாவம் - 'குடக்கூத்து' இத்யாதி. கிளர்த்தி - உச்ச்ராயம். 'அமரும்' என்றதுக்கு ஶாவம் - 'நாச்சிமாராலும்' இத்யாதி. 'அரவமேறி - அண்ணல்' என்று கூட்டி ஶாவம் - 'அநந்த' இத்யாதி. திருவனந்தாழ்வான்மேலே யேறி ஸ்வஸந்நிதாநத்தாலே அலையெறிகிற கடலிலே ரக்ஷணசிந்தையிலே பொருந்தின நித்ரையை ஸ்வீகரித்த ஸ்வாமியை இதி ஶப்தார்த்த:. உறைப்பு - தார்ட்யம். 'ஏத்துமினோ' என்னாதே, 'இரவும்நன்பகலும்' என்று விசேஷித்ததுக்கு ஶாவம் -'காலம்நடையாடாத' இத்யாதி. "நக்தமஸ்தமேவ ஹா:" என்னக்கடவதிறே. "வெந்நாள்'' என்றாற்போலே சொல்லாதே, 'நன்பகல்' என்கிறதென்? என்ன, 'ஏத்துகைக்கீடான' இத்யாதி. விபந்யவ: என்றது - தாச்சீல்யே உப்ரத்யயமாய், ஸதா ஸ்துதிசீலர் என்றபடி. 'ஏத்துமினோ' என்னாதே, 'மனம்வைம்மினோ' என்கிறதென்? என்ன, 'நீங்கள்' இத்யாதி. இவ்வாக்யவிவரணம் - 'நீங்களேத்த' இத்யாதி. 'வானவரேத்த' இத்யாதி விசே

வேண்டா; நித்யஸூரிகளேத்தும் விஷயத்தையன்றோ நான் உங்களை யேத்தச்சொல்லுகிறது; ஸர்வாதிகனையன்றோ நான் உங்களை யேத்தச் சொல்லுகிறது; நீங்கள் ஏத்துகிற இது தன்பேறென்னுமிடம் வடிவிலே தோற்ற இருக்கிறவனையன்றோ நான் உங்களை யேத்தச் சொல்லுகிறது, உங்களுடைய விலக்காமையே பற்றாசாக வந்து கலக்குமவனையன்றோ நான் உங்களை ஏத்தச்சொல்லுகிறது; யாதானும் நேர்ந்து அணுகவேண்டும் வடிவழகையுடையவனையன்றோ ஏத்தச்சொல்லுகிறது; உங்களோட்டைக் கலவியாலே செருக்கியிருக்கிறவனையன்றோ ஏத்தச்சொல்லுகிறது; அநந்தசாயியையன்றோ ஏத்தச்சொல்லுகிறது; ஸர்வஸ்வாமியையன்றோ ஏத்தச்சொல்லுகிறது; ஒரு காலநியதி யுண்டா யிருக்கிறீர்களோ? ஏத்துகைக்குப் பரிகரமூன்யராயிருக்கிறீர்களோ? அதில் அருமையுண்டாய்த்தா னிருக்கிறீர்களோ? ஆயிட்டு, [மனம்வைம்மினோ] - விஷயங்களிலே ஓடித்திரிந்த மநஸ்ஸை மீட்டு இவ்விஷயத்திலே வைக்கப் பாருங்கோள். (௩)

## நான்காம் பாட்டு.

வைம்மின்நும்மனத்தென்று யானுரைக்கின்றமாயவன்சீர்மையை
எம்மனோர்களுரைப்பதென் அதுநிற்கநாடோறும் வானவர்
தம்மையாளுமவனும்நான்முகனும் சடைமுடியண்ணலும்
செம்மையால்அவன்பாதபங்கயம் சிந்தித்தேத்தித்திரிவரே.

*ஆ.—(வைம்மின்) இப்படி ஆஶ்ரயித்தால் அவன் நம்மை விஷயீகரித்தருளுமோ? என்னில்;—ஐஶ்வர்யப்ரவணராய், அதிக்ஷுத்ரரான ப்ரஹ்மேஶாநாதிகளுக்குங்கூட ஒருதடையின்றியே ஆஶ்ரயிக்கலாம்படி தன்திருவடிகளைக் கொடுத்துக்கொண்டிருக்கிற அளவிறந்த நீர்மையையுடையனாயிருந்தவன், அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆஶ்ரயிக்குமவர்களைக் கைவிடுமோ? என்கிறார்.*

*ஒ.—நாலாம்பாட்டில், மிகவும் அபிமாநிகளான ப்ரஹ்மேஶாநாதிகளுக்கும் தடையின்றிக்கே புக்கு ஆஶ்ரயிக்கலாம்படியிருக்கிற எம்பெருமானுடைய ஶீலவத்தையைப் பேசுகிறார்.*

*[வைம்மின் நும்மனத்து என்று தொடங்கி] - உங்கள்மநஸ்ஸிலே வைத்து ஆஶ்ரயியுங்கோள் என்று நான் சொல்லுகிற ஸௌந்தர்யாதிகளால் அத்யாஶ்சர்யபூதனான அவனுடைய சீர்மையை என்போல்வார் உரைத்தால் பக்திவாத மென்கிறீகோள்; அதுகிடக்கிடீர். [நாடோறும் என்று மேலுக்கு] - தேவாதிபதியான இந்த்ரனும் சதுர்முகனும் ஸாதகனாயிருந்து வைத்து ஈஶ்வரத்வேந அபிமாநியான ருத்ரனும் என்று மொக்கத் தடையின்றிக்கே புக்கு அவனை ஸமாஶ்ரயித்து வேண்டினபடி ஸஞ்சரியாநிற்பர்கள்.*

*ப.—அநந்தரம், ஈஶ்வராபிமாநிகளுக்கும் ஆஶ்ரயிக்கலாம்படியான ஶீலாதிஶயத்தையுடையவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.*

---

*ஷணங்களிலே நோக்காக அருளிச்செய்கிறார் - 'நித்யஸூரிகள்' இத்யாதி. யாதானும்நேர்ந்து அணுகவேண்டும் - ஏதேனுமொன்றைச் செய்தாகிலும் கிட்டவேண்டும். 'யாதானும்நேர்ந்தணுகாவாறு' என்று, பெரிய திருவந்தாதியில் "யாதானுமொன்றறியில்" என்கிற (௩௩-ஆம்) பாட்டில் பாசுரம் இது. செருக்கி - கர்வித்து. 'மனம்' என்றத்தைப்பற்ற, 'பரிகரம்' என்றது. 'வைம்மினோ' என்றதுக்கு ஹாவம் - 'அதிலருமை' இத்யாதி. ஆயிட்டு - ஆகையாலே. பரவிவானவரித்யாதி க்ரமேண அந்வய꞉. ஏத்துதல் - ஸ்தோத்ரபண்ணுகையிலே. குரவை - ராஸக்ரீடை.* (௩)

'நும் மனத்து - உங்கள் நெஞ்சிலே, வைம்மின் - வையுங்கோள்,' என்று - என்று, யான் உரைக்கின்ற - நான் சொல்லுகிற, மாயவன் - ஆச்சர்யகுணசேஷ்டிதங்களை யுடையவனுடைய, சீர்மையை - சீரிதான சீலவத்தையை, எம் அனோர்கள் - (ப்ரவணரான) எம்போல்வார், உரைப்பது - சொல்லுவது, என் - என்? அதுநிற்க - அதுகிடக்க; வானவர்தம்மை ஆளுமவனும் - (தனித்தனியே பதஸ்தரான) வானவர்தங்களையும் (தன்னளவிலே) ஆளும்படியான இந்த்ரனும், நான்முகனும் - (ஸர்வதோமுகமான ஸ்ருஷ்ட்யுபதேசாதிகளைப்பண்ணும்) ப்ரஹ்மாவும், சடைமுடி அண்ணலும் - ஜடாமகுடதரத்வத்தால் வந்த தபோமாஹாத்ம்யத்தாலே லோகத்துக்கு ஈச்வரனான ருத்ரனும், செம்மையால் - (தங்கள்துரபிமாநத்தால் வந்த அடைவு கேட்டைவிட்டு சேஷசேஷிஹாவத்தால்வந்த)ஆர்ஜவத்தாலே, அவன்-(சேஷியான)அவனுடைய, பங்கயம் பாதம் - நிரதிசயபோக்யமான திருவடிகளை, நாடொறும் - நாடோறும், சிந்தித்து - சிந்தித்து, ஏத்தி - ஸ்தோத்ரம்பண்ணி, திரிவர் - (இதுதானேயாத்ரையாக) வர்த்தியாநிற்பர். ஆதலால், அவனை ஆச்ரயியுங்கோள் என்று கருத்து.

இ.—நாலாம்பாட்டில், அபிமாநப்ரசுரரான ப்ரஹ்மாதிகளுக்கும் தடையின்றிக்கே புக்கு ஆச்ரயிக்கலாயிருக்கிற சீலவத்தையைப் பேசுகிறார்.

[வைம்மின் இத்யாதி] - உங்களுடைய ஹ்ருதயத்திலே வையுங்கோள் என்று நான் சொல்லுகிற ஆச்சர்யமான ஸௌந்தர்யாதிகுணசேஷ்டிதங்களை யுடையனான அவனுடைய சீலவத்தையை. [எம்மனோர் இத்யாதி] - ஸ்நேஹிகளான என்போல்வார் சொல்லுமது என்? அது கிடக்கிடீர். [நாடொறும் வானவர் இத்யாதி] - ஸர்வகாலமும் தேவர்களுடைய நன்மைதீமைகள் ஆராய்ந்து அவர்களுக்கு சேஷியான இந்த்ரனும் சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவும், ஸாதகவேஷத்தோடே ஈச்வராபிமாநியான ருத்ரனும். [செம்மையால் இத்யாதி] - அநந்யப்ரயோஜநரோபாதி தடையின்றிக்கே புக்கு நிரதிசயபோக்யமான திருவடிகளை நினைத்தும் அது உள்ளடங்காமே புகழ்ந்தும் அதுதானே யாத்ரையாய் ஸஞ்சரிப்பர்கள். நாடொறும் செம்மையால் என்னவுமாம்.

ஈடு.—நாலாம்பாட்டு. அபிமாநப்ரசுரரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் தடையின்றிக்கே புக்கு ஆச்ரயிக்கலாயிருக்கிற சீலவத்தையைப் பேசுகிறார்.

[வைம்மின் இத்யாதி] - உந்தம்ஹ்ருதயத்திலே வையுங்கோள் என்று நான்சொல்லுகிற ஆச்சர்யமான ஸௌந்தர்யாதி குண சேஷ்டிதங்களை யுடையனானவனுடைய சீலவத்தையை. அன்றிக்கே, அதிகாரிபுருஷர்களான ப்ரஹ்மருத்ராதிகளேல்லாம் வந்து ஆச்ரயிக்கும்படியன்றோ அவன் பெருமை யென்று, ஆச்ரயணத்துக்கு உறுப்பாக அவன்பரத்வத்தைச் சொல்லிற்றாகவுமாம். [எம் அனோர்கள் உரைப்பதேன்] - எம்போல்வார் சொல்லவேண்டுகிறதேன்? நாங்கள் சொன்னவாறே பக்திபாரவச்யத்தாலே சொன்னோம் என்பர்கள். [அது நிற்க] - அதுகிடக்க. [நாடொறும் இத்யாதி] - அதிகாரிபுருஷர்களான ப்ரஹ்மருத்ராதிகளேல்லாம் அநந்யப்ரயோஜநரைப் போலே வந்து ஆச்ரயிக்கும்படியன்றோ அவனுடைய சீலவத்தை. அன்றிக்கே, அதிகாரிபுருஷர்களான ப்ரஹ்மருத்ராதிகளேல்லாம் வந்து ஆச்ரயிக்கும்படியன்றோ அவன்பெருமை யென்று

---

நாலாம்பாட்டு - 'வைம்மின்' இத்யாதி. உத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'அபிமாந' இத்யாதி.

அர்த்தத்வயத்தாலும், 'சீர்மை' என்று - பரத்வஸௌலப்யங்கள் இரண்டையும் சொல்லுகிறது; இரண்டும் ஆச்ரயணத்துக்கு உறுப்பாகையாலே. நீர்சொன்னால் விரோதமேது? என்ன, 'நாங்கள்' இத்யாதி. 'நாடொறும்' இத்யாதிக்கு அவதாரிகை - 'அதிகாரிபுருஷர்கள்' இத்யாதி. கீழே அந்வயம் - கீழோடே கூட்டுதல். 'ஆளும்' என்கிறதோடே கூட்டுதல்; 'நாடொறும் - ஆளும்' இத்யர்த்தம். கீழே கூட்டின போதைக்கு

ஆஶ்ரயணத்துக்கு உறுப்பாக அவன்பரத்வத்தைச் சொல்லிற்றாகிறது. 'நாடோறும் சிந்தித்தேத் தித்திரிவரே' என்று மேலே அந்வயம்; கீழே அந்வயம்: [வானவர்தம்மையாளுமவனும்] - தேவர்களைச் சனியும் புதனும் மெய்க்காட்டுக்கொண்டு அவர்கள் மிகுதிகுறைகள் ஆராய்ந்து போருகிற இந்த்ரனும், சதுர்த்தஶபுவந ஸ்ரஷ்டாவான சதுர்முகனும். [சடைமுடியண்ணலும்] - ஸாதகவேஷங் கிடக்கச்செய்தே ஈஶ்வராபிமாநியான ருத்ரனும். [செம்மையால் இத்யாதி] - ப்ரயோஜநாந்தர பரதையும் நெஞ்சிலேகிடக்கச்செய்தே அநந்யப்ரயோஜநரைப்போலே வந்து ஆஶ்ரயியாநிற்பர்கள். ஹாவதோஷமுங் கிடக்கச்செய்தே தன்னையேபற்றினரைப்போலே யிருக்க, புகுவதுபுறப்படுவதாய்த் திரியும்படியன்றோ அவன்படி யிருக்கிறது என்கிறார். செம்மை - செவ்வை. அதாவது - அநந்யப்ரயோஜநரைப்போலே அவன் திருவடிகளை அநுஸந்தித்து, 'அவ்வநுஸந்தாநம் வழிந்துபுறப்பட்ட சொல்' என்று தெரியும்படி ஏத்தி, அத்தாலே தரித்துக் கால் நடைதந்தாராய் ஸஞ்சரியாநிற்பர்கள். "பாடித்திரிவனே" என்னுமாபோலே. வானவர்தம்மை யாளுமவனும் நான்முகனும் சடைமுடியண்ணலும் செம்மையால் அவன்பாதபங்கயம் நாடோறும் சிந்தித்தேத்தித் திரிவரென்று அந்வயம். (ச)

## ஐந்தாம் பாட்டு.

திரியுங்காற்றோடுஅகல்விசும்பு திணிந்தமண்கிடந்தகடல்
எரியுந்தீயோடுஇருசுடர்தெய்வம் மற்றும்மற்றும்முற்றுமாய்க்
கரியமேனியன்செய்யதாமரைக்கண்ணன் கண்ணன்விண்ணோரிறை
சுரியும்பல்கருங்குஞ்சி எங்கள்சுடர்முடியண்ணல்தோற்றமே.

*ஆ.—(திரியும்.) ஸ்வஸங்கல்பாதீநமான வாய்வாகாஶாதி ஸகலபதார்த்தங்களையும், மஹத்வாத்வவிஶாலத்வாதி தத்தர்மங்களையு முடையனாய், இந்தீவரதளஶ்யாமனாய், பத்மபத்ரேக்ஷணனாய், நீலாளகபந்தபந்துரனாய், ஶேஷஶேஷாஶநவைநதேயப்ரப்ருத்ய ஸங்க்யேய நித்யஸித்த பரமஸூரிபிஸ்ஸேவ்யமாநனாயிருந்த எம்பெருமானை நான் காணப்பெற்றேனாகாதே என்கிறார்.*

*ஒ.—அஞ்சாம்பாட்டில், தன்விபூதியிலே ஒன்றைப்பிரியில் தனக்குச் செல்லாமையாலே எப்போதும் அவற்றோடே கூடி எம்பெருமானுடைய தோற்றரவு இருப்பது என்கிறார். "ஹரிதா நாஶீஸ்ரோவிஸ்ஸு" என்னும்படியாலே ஐஶ்வர்யாதிகளோடே கூட வந்து திருவவதாரம் பண்ணும் என்றுமாம்.*

---

*அர்த்தம் - 'தேவர்களைச் சனியும்' இத்யாதி. சனியும் புதனும் - சனிக்கிழமையும், புதன்கிழமையும். மெய்க் காட்டுக்கொண்டு - எண்ணிக்கொண்டு. சடைமுடியண்ணலும் - ஜடையை ஶிரஸ்ஸிலேயுடைய ஈஶ்வராபி மாநியான ருத்ரனும். செம்மையால் - செவ்வையால்; ஆர்ஜவத்தால்: அநந்யப்ரயோஜநதையால் இத்யர்த்தஃ. ப்ரயோஜநாந்தரபரர்க்குச் செம்மையேது? என்ன, 'ப்ரயோஜநாந்தரபரதையும்' இத்யாதி. விவரணம் - 'ஹாவ தோஷம்' இத்யாதி. யத்வா, 'பாதபங்கயம்' என்றத்தைக் கடாக்ஷித்து, 'திரிவரே' என்றதுக்கு ஹாவமாதல். 'போலேயிருக்க' - முழுச்சொல். பற்றினரைப்போலே; சப்தார்த்தம் - 'அநந்யப்ரயோஜநரைப்போலே' இத் யாதி. ஏத்தினால் கால்நடைதருமோ? என்ன, 'பாடி' இத்யாதி. கண்ணி நுண்சிறுத்தாம்பு. பாவோடேபூண்ட இனிய இசையைப்பாடி அதுவே தாரகமாக ஸஞ்சரிப்பன் இத்யர்த்தஃ. வைம்மின் இத்யாரப்ய,அதுநிற்க, வான வர்தம்மை - நாடொறும் - ஆளுமவனுமென்றுதொடங்கி, திரிவர்இத்யந்வயஃ. யத்வா, வைம்மினித்யாரப்ய, அவன் பாதபங்கயம் - நாடொறும் - சிந்தித்தேத்தித் திரிவ ரித்யந்வயோவா.* (ச)

[திரியும் என்று தொடங்கி] - தனித்தனியே நியதஸ்வபாவமான பூதபஞ்சகங்கள் சந்த்ரஸூர்யர்கள் தேவர்கள் மநுஷ்யர்கள் திர்யக் ஸ்தாவரங்கள் இவையித்தனையோடும் கூடி. [கண்ணன் என்று தொடங்கி] - க்ருஷ்ணனாக நீர்மையாலே அயர்வறுமமரர்களை அடிமைகொண்டு, சுழன்று தனித்தனியேஎண்ணிக்கொள்ளலாம்படியான திருக்குழலையுடையனாய், ஆஸ்ரிதபாரதந்த்ரயா நிரவதிகதேஜஸ்ஸான திருவபிஷேகத்தையுடையனான ஸர்வேஸ்வரனுடைய தோற்றரவு.

ப.—அநந்தரம், அவனுடைய அவதாரம் அகிலவிபூதியோடும் அவிநாபூதம் என்கிறார்.

கரிய மேனியன் - ஸ்யாமளமான வடிவையுடையனாய், செய்ய தாமரை கண்ணன் - (அதுக்குப்பரபாகமாய்ச்) சிவந்த தாமரைபோன்ற கண்களையுடையனாய், விண்ணோர் இறை - நித்யஸூரிகளுக்கு நித்யாநுபாவ்யமான மேன்மையையுடையனாய், சுரியும் பல் கரும் குஞ்சி - சுருண்டு வெடித்து அலகலகாய்க் கருகின குழலையுடையனாய், எங்கள் - எங்களையும் அடிமைகொள்ளும், சுடர் - ஔஜ்ஜ்வல்யத்தையுடைய, முடி - திருவபிஷேகத்தையுடையனான, அண்ணல் - ஸ்வாமியாயுள்ள, கண்ணன் - க்ருஷ்ணனுடைய, தோற்றம் - ஆவிர்ப்பாவமானது, திரியும் காற்றோடு - ஸதாகதியாயுள்ள வாயுவோடேகூட, அகல் விசும்பு - விஸ்தீர்ணமான ஆகாசம், திணிந்த மண் - கடினையான பூமி. கிடந்த கடல் - கரைகடவாதுகிடந்த கடல், எரியும் தீயோடு - ஊர்த்வஜ்வலநமான அக்நியோடேகூட (வ்யஷ்டிஸ்ருஷ்டியந்தர்க்கதமான), இருசுடர் - சந்த்ராதித்ய ப்ரமுகமான, தெய்வம் - தேவதாவர்க்கம், மற்றும் - மற்றும் மநுஷ்யர், மற்றும் - மற்றும் திர்யக்குக்கள், முற்றுமாய் - ஸ்தாவரமான முற்றுமாயிருக்கும். 'முற்றுமாய்' என்ற ஸாமாநாதிகரண்யம் - விஸ்வரூபாத்யாய க்ரமத்திலே யார்யாரகத்வாதி நிபந்தநமான ஶரீராத்மபாவப்ரயுக்தம். அவனை ஏத்துதல் மனம் வைம்மி னென்று அந்வயம்.

இ.—அஞ்சாம்பாட்டில், வாத்ஸல்யத்தாலே எப்போதும் விபூதியோடே கூடி அவன் தோற்றரவு இருப்பது என்கிறார். அதவா, ''ஹ்ருதா நாரீஶ்ரோவிஸநு'' என்னும்படியாலே ஐஶ்வர்யாதிகளோடே கூட வந்து அவதரிக்கும் என்னுதல்.

[திரியும் காற்று] - ஸததகதியான வாயு. [அகல்விசும்பு இத்யாதி] - ஸ்வேதரஸமஸ்தத்துக்கும் அவகாஶப்ரதாநம்பண்ணும் ஆகாஶம், கடிநஸ்வபாவையான பூமி, கரையை அதிக்ரமிக்கமாட்டாதே கிடக்கிற கடல், ஊர்த்வஜ்வலநமான வஹ்நி, ப்ரகாஶகரான சந்த்ரஸூர்யர்கள், தேவதிர்யங் மநுஷ்யஸ்தாவரங்கள், [ஆய்] - தச்சரீரியாய். ஆக, ஜகதாகாரத்வம் சொல்லிற்று. [கரியமேனியன்] - அஸாதாரண விக்ரஹத்தைச் சொல்லுகிறது. [செய்ய இத்யாதி] - வாத்ஸல்யஸூசகமான கண்ணழகையுடையவன். [கண்ணன்]-ஸர்வஸமாஶ்ரயணீயனுகைக்காக ஸுலபனானவன். [விண்ணோரிறை] - அந்நிலையிலே நித்யஸூரிகளும் வந்து ஆஶ்ரயிக்கும்படியான பரத்வத்தை யுடையவன். [சுரியும் இத்யாதி]-சுழன்று அலகலகாக எண்ணிக்கொள்ளலாம் ஶரமஹாரமான மயிர்முடியை யுடையனாய். [எங்கள் சுடர் இத்யாதி] - அநந்யப்ரயோஜநர்க்கு அநுபாவ்யமாய் ஆதிராஜ்யஸூசகமாய் ஒளியையுடைத்தான திருவபிஷேகத்தையுடைய ஸர்வேஶ்வரனுடைய. [தோற்றம்]-ப்ரகாஶ மென்னுதல், அவதார மென்னுதல்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. வாத்ஸல்யத்தாலே எப்போதும் விபூதியோடே கூடி மயில் தோகைவிரித்தாற்போலே ஸவிபூதிகனாய்க்கொண்டு அவனுடைய தோற்றரவு இருப்பது என்னுதல்,

அஞ்சாம்பாட்டு – 'திரியும்' இத்யாதி. கரியமேனியன் இத்யாரப்ய, அண்ணல் தோற்றம் - முற்றுமாயிருக்கும் என்று அந்வயித்து; இதுதான் ஜகதாகாரதைக்கும், அஜஹத்ஸ்வபாவனுகையாலே தன் ஐஶ்வர்யாதிகளோடே கூட வந்து அவதரிக்கும் அவதாரத்துக்கும் ஸாதாரணமென்று திருவுள்ளம்பற்றி இரண்டுவகையாக அவதாரிகை – 'வாத்ஸல்யத்தாலே' இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'மயில் தோகைவிரித்தாற்போலே' என்

*"ஸ்ரீதா நாஸீஸ்வரோऽவிஸக்" (பூதாநாமீஸ்வரோபிஸந்) என்னும்படியாலே ஐஸ்வர்யாதிகளோடே வந்து அவதரிக்கும் என்னுதல்.

[திரியும் இத்யாதி] - ஸததகதியான வாயு, ஸ்வேதரஸமஸ்தவஸ்துக்களுக்கும் அவகாஸ ப்ரதாநம்பண்ணும் ஆகாஸம், கடிநஸ்வபாவையான பூமி, பகவதாஜ்ஞையாலே கரையேறமாட்டாதே கிடக்கிற கடல், ஊர்த்வஜ்வலந ஸ்வபாவமான அக்நி, ப்ரகாஸகரான சந்த்ரஸூர்யர்கள். [தேய்வம் இத்யாதி] - தங்களையொழிந்தார்க்கெல்லாம் தங்களை ஆஸ்ரயித்து அபிமதம்பெறவேண்டியிருக்கிற தேவஜாதி, அவர்களை ஆஸ்ரயிக்கிற மநுஷ்யர்கள், திர்யக்ஸ்தாவரங்கள். [முற்றுமாய்] - இப்படி சொல்லலாம்படியாயிற்று அவனுடைய தோற்றம் இருப்பது. ஆய் - தச்சரீரியாய். இத்தால்-ஜகதாகாரத்வம் சொல்லுகிறது. மேல், அஸாதாரணவிக்ரஹயுக்தனாயிருக்கும் இருப்புச் சொல்லுகிறது: [கரியமேனியன்] - கண்டார்க்குத் தாபத்ரயங்கள் ஆறும்படி ஸ்ரமஹரமான திருமேனியையுடையவன். [செய்யதாமரைக்கண்ணன்] - அகவாயில் வாத்ஸல்யப்ரகாஸகமான திருக்கண்களையுடையவன். [கண்ணன்] - ஆஸ்ரிதர்க்குக் கையாளாயுள்ளவன். [விண்ணோரிறை] - அந்நிலை தன்னிலே நித்யஸூரிகளுக்கு வந்து ஏத்தவேண்டும்படியான மநுஷ்யத்வே பரத்வத்தையுடையவன். [சுரியும் இத்யாதி] - சுருண்டிருப்பதாய், அலகலகாக எண்ணிக்கோள்ளலாய், கண்டார்கண்களுக்கு அஞ்சநமிட்டாற்போலே குளிர்ந்திருந்துள்ள மயிர்முடியையுடையனாய். [எங்கள்சுடர்முடியண்ணல்தோற்றமே] - அநந்யப்ரயோஜநர்க்கு அநுபாவ்யமாய் ஆதிராஜ்யஸூசகமான ஒளியையுடைத்தான திருவபிஷேகத்தையுடைய ஸர்வேஸ்வரனுடைய, தோற்றம் - ப்ரகாசமேன்னுதல், அவதார மேன்னுதல். (ரு)

---

*ப்ர — ஸம்பவாமி... "அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீஸ்வரோऽபி ஸந் । ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா"

---

றது - "[illegible] ... நஃ । [illegible] ..." என்றத்தைப் பற்ற.

விசும்புக்கு அவகாஸமாவது எது? என்ன, 'ஸ்வேதர' இத்யாதி. "[illegible] ... ப்ரபவந்தியாஃ" என்றத்தைப் பற்ற - 'பகவதாஜ்ஞையாலே' இத்யாதி. 'திரியுங்காற்று' இத்யாதிக்கு விஸேஷணமுண்டாகையாலே, 'தெய்வம்' என்றதுக்கும் விஸேஷணமிட்டு அருளிச்செய்கிறார்- 'தங்களை' இத்யாதி. 'ஆய்' என்கிற இது - தாதாத்ம்யத்தைச் சொல்லுகிறதோ? என்ன, 'தச்சரீரியாய்' என்று. இத்தால் - பூர்வார்த்தத்தால். கறுப்பாலே குளிர்த்தியை விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - 'கண்டார்க்கு' இத்யாதி. க்ருஷ்ணனை நிலைதன்னிலே நித்யஸூரிகளேத்துமதுக்கு ப்ரமாணம் - "விண்ணின்மீதமரர்கள்விரும்பித்தொழ" இத்யாதியை அருளிச்செய்வர். சுருண்டு - வக்ரமாய். அலகலகாக - ஒன்றோடொன்று கூடாதே. ஜகதாகாரதைக்கு அநுகுணமாகவும் அவதாரத்துக்கு அநுகுணமாகவும் அருளிச்செய்கிறார் - 'ப்ரகாஸம்' இத்யாதி வாக்யத்வயத்தாலே 'தோற்றம்' என்றது - உபயவிபூதி விஸிஷ்டனைக்கொண்டு ஸாஸ்த்ரங்களிலே ப்ரகாசிக்கு மென்னுதல்; அவதரிக்கு மென்னுதல். முந்தினபக்ஷத்தில், கரியமேனியனென்று தொடங்கி, முற்றுமாய்க்கொண்டு - தோற்றமென்று அந்வயம். தோற்றம் - தோற்றம். மற்றபக்ஷத்தில், திரியுங்காற்றோடு என்றுதொடங்கி, முற்றுமாய்க்கொண்டு - அண்ணல் தோற்றமாயிருக்கும் இத்யந்வயஃ. அதாவது - ஐஸ்வர்யவிசிஷ்டனைக்கொண்டு அவதரிக்கு மென்றபடி. (ரு)

## ஆறும் பாட்டு.

தோற்றக்கேடவையில்லவனுடையான் அவனொருமூர்த்தியாய்ச்
சீற்றத்தோடருள்பெற்றவனடிக்கீழ்ப் புகநின்றசெங்கண்மால்
நாற்றத்தோற்றச்சுவையொலி உறலாகிநின்றஎம்வானவ
ரேற்றையேயன்றி மற்றொருவரையானிலேன்எழுமைக்குமே.

**ஆ.**—(தோற்றம்.) ஜந்மமரணாதிதோஷ ரஸம்ஸ்ப்ருஷ்டனாய், ஜந்ம மரணாதி தோஷயுக்தபதார்த்தங்களுக்கு நியந்தாவாய், ஆஶ்சர்யதம ந்ருஸிம்ஹவேஷபூஷிதனாய் ஹிரண்யவிஷயநிரவதிக க்ரோதத்தாலே அத்யந்தம் அநபிபவநீயனாயிருக்கச் செய்தே, ஆஶ்ரிதனான ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் கூசாதே சென்று திருவடிகளின்கீழே புகலாம்படி அவனுக்கு ஸுலபனாய், தத்ஸம்ஶ்லேஷஜநித நிரதிஶயப்ரீதியாலே ஆதாம்ராயதலோசநனாயிருந்த எம்பெருமான், அயர்வறுமமரர்களுடைய ஸர்வகரணங்களுக்கும் போக்யமானாற்போலே என்னுடைய ஸர்வகரணங்களுக்கும் போக்யமானான்; இனி ஆத்மாந்தமாக இவனல்லது எனக்கு மற்றொருப்ராப்யமில்லை என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், அபர்வறுமமரர்களுக்குப்போலே எல்லாப்படியாலும் எனக்கு போக்யனான நரஸிம்ஹத்தை யொழியக் காலமுள்ளதனையும் மற்றொருவரை எனக்கு ய்ராகாதிகளாக வுடையேனல்லேனாகப்பெற்றே னென்று ஹ்ருஷ்டராகிறார்.

[தோற்றக்கேடு என்று தொடங்கி] - உத்பத்திவிநாஶாதிரஹிதனாய் ஜந்மாதிதோஷயுக்தபதார்த்தங்களுக்கெல்லாம் நியாமகனானவன் அத்யந்த விலக்ஷணமான திருமேனியையுடையனாய், ஹிரண்யன்பக்கல் சீற்றம் செல்லாநிற்கச்செய்தே தன்னுடைய அநுக்ரஹபாத்ரமான ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு வந்து அணையலாம்படிநிற்பதும்செய்து ஹிரண்யன்மேலுள்ள சீற்றத்தாலும் பிள்ளைபக்கலுள்ள வாத்ஸல்யத்தாலுமாகக் கலங்கிச் சிவந்த திருக்கண்களையுமுடையனாய், அவன்பக்கல் வ்யாமுக்தனுமாய், அயர்வறுமமரர்களுக்கு ஸர்வப்ரகார போக்யமானாற்போலே எனக்கு எல்லாப்படியாலும் போக்யமானவனை யல்லது மற்றொருவரைக் காலமுள்ளதனையும் உஜ்ஜீவநஹேதுவாக வுடையேனல்லேன்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதவிஷயத்தில் அநவதிகவாத்ஸல்யத்தை யுடையவனை யொழிய எனக்கு ஸர்வகாலமும் ஸர்வப்ரகாரோத்தேஶ்யராயிருப்பார் வேறொருவரை உடையேனல்லேன் என்கிறார்.

அவை - இதரஸஜாதீயமான, தோற்றக் கேடு - உத்பத்திவிநாஶங்கள், இல்லவன் - இல்லாதவனாய், உடையான் - (கார்யகாலங்களிலே ஆஶ்ரிதார்த்தமான ஆவிர்பாவதிரோபாவங்களை) உடையனாக, அவன் - ப்ரமாணப்ரஸித்தனானவன், ஒரு - (லோகத்தில்நடையாடாத) அத்விதீயமான, மூர்த்தியாய் - நரஸிம்ஹமூர்த்தியாய், சீற்றத்தோடு - (ஹிரண்யவிஷயத்தில்) சீற்றத்தோடே, அருள்பெற்றவன் - (ஸ்வவிஷயத்தில்) அருளைப்பெற்ற ப்ரஹ்லாதனானவன், அடிக்கீழ்-தன்திருவடிகளின்கீழே, புக - ஒதுங்கும்படி, நின்ற - (அவனுக்குஸுலபனாய்) நின்ற, செம் கண்-சிவந்த கண்ணையும், மால் - வாத்ஸல்யத்தையுமுடையவனாய், நாற்றத் தோற்றச் சுவை யொலி உறலாகி நின்ற எம்வானவரேற்றையே அன்றி - கந்த ரூப ரஸ ஶப்த ஸ்பர்ஶங்களையுடைத்தான வஸ்துக்களுக்கு நியந்தாவாய்க்கொண்டு நின்று எங்களுக்கு ஸூரிகளை அநுபவிப்பிக்கும் மேன்

மையோடொக்க அநுபாவ்யனானவனையே ஒழிய, யான் - நான், எழுமைக்கும் - ஸர்வகாலத்திலும், மற்றொருவரை - வேறொருவரை, இலேன் - (உத்தேஶ்யமாக) உடையேனல்லேன்.

ஆதலால் - தொழுமினென்று மேலே அந்வயம். சீற்றத்தோடு அருள்பெற்றவனென்று-சிசுபாலனாகவுஞ் சொல்லுவர்.

இ.—ஆறும்பாட்டில், இவர்களைப்போலே கேட்க இராதே உபதேஶநிரபேக்ஷமாக நிரதிஶய போக்யமான நரஸிம்ஹத்தை யொழிய வேறொருவராரகம் இல்லையாகப் பெற்றேனிறே என்கிறார்.

[தோற்றக்கேடவை யில்லவன்]-உத்பத்தி விநாஶாதி ஷட்பாவவிகாரங்க ளில்லாதவன். [உடையான்] - ஜந்மாதிதோஷயுக்தமான ஸகலபதார்த்தங்களுக்கும் நிர்வாஹகனானவன். [அவன்] - கர்மமடியான ஜந்ம மில்லாதவன். [ஒரு மூர்த்தியாய்] - அத்விதீயமான அத்யந்த விலக்ஷணமான நரஸிம்ஹமாய். [சீற்றத்தோடு அருள்பெற்றவன்] - ஹிரண்யன்பக்கல் சீற்றம் செல்லாநிற்கச்செய்தே ப்ரஸாதத்துக்குப் பாத்ரபூதனானவன். ஹேதுவின்றிக்கேயிருக்கப் பிறந்தாற்போலே யிருப்பதொன்றிறே, கோபமும் ப்ரஸாதமும். [அடி இத்யாதி] - திருவடிகளிலே கிட்டலாம்படி நின்ற. சீற்றத்தோடேயிருக்கக் கிட்டலாம் படி எங்ஙனே? என்னில், இவன்பக்கல் வாத்ஸல்ய கார்யமாகையாலே அச்சீற்றம் இவனுக்குக் கிட்டத் தட்டல்ல. [செங்கண்மால்] - ஹிரண்யன்பக்கல் சீற்றத்தாலும் ப்ரஹ்லாதன்பக்கல் வாத்ஸல்யத்தாலும் சிவந்த திருக்கண்களையும், [மால்] - ஹிரண்யனுக்குக் கிட்டவொண்ணாத பெருமையையும், ப்ரஹ்லாதனுக்குக் கிட்டலாம்படியான வ்யாமோஹத்தையு முடையவன். நாற்றம் - கந்தம். தோற்றம் - ரூபம். சுவை - ரஸம். ஒலி - ஶப்தம். உறல் - ஸ்பர்ஶம். [ஆகின்ற] - ஶப்தாதிகளெல்லாம் எனக்குத் தானே யாகின்ற. என்போலே யென்னில்,—[வானவரேற்றையே] - நித்யஸூரிகளுக்கு எல்லா போக்யமும் தானேயாயிருக்குமாபோலே. [அன்றி மற்றொருவரை] - காலதத்த்வமுள்ளதனையும் வேறே சிலரை உத்தேஶ்யமாக வுடையேனல்லேன்.

ஈடு.—ஆறும்பாட்டு. இவர்களைப்போலே கேட்க இராதே, உபதேஶநிரபேக்ஷமாக நித்யஸூரிகளைப்போலே, நிரதிஶயபோக்யனான நரஸிம்ஹத்தையொழிய வேறொருவரை தாரகாதிகளாக உடையேனல்லேன், காலதத்த்வமுள்ளதனையும் என்கிறார்.

[தோற்றக்கேடவையில்லவன்] - உத்பத்தி விநாஶங்க ளில்லாதவன். இதுதான் ஷட்பாவவிகாரங்களுக்கும் உபலக்ஷணம். [உடையான்] - தோற்றக்கேடுள்ள பதார்த்தங்களடையத் தனக்கு ஶேஷமாகவுடையான்: நிருபாதிக ஶேஷி. [அவன் ஒருமூர்த்தியாய்] - கர்மமடியான ஜந்ம

---

ஆறும்பாட்டு - 'தோற்றக்கேடு' இத்யாதி. நாலாம்பாதத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'இவர்களைப்போலே' இத்யாதி. இவர்களை - ஸம்ஸாரிகளை. பரோபதேஶப்ரகரணத்திலே ஸ்வநிஷ்டையை அருளிச்செய்தது - தம்மைப்போலே ஸம்ஸாரிகளும் இருக்கவேணு மென்கைக்காக; "யதா³சரதி ஶ்ரேஷ்ட²:" என்னக்கடவதிறே.

'தோற்றக்கேடவை தொடங்கி, அவனொருமூர்த்தியாய்' என்னுமளவும் - ஸ்ரீ கீதையில் சதுர்த்தாத்யாயத்தில் "அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூ⁴தாநாமீஶ்வரோऽபி ஸந் । ப்ரக்ருதிம் ஸ்வாமதி⁴ஷ்டா²ய ஸம்ப⁴வாம்யாத்மமாயயா" என்கிற ஶ்லோகார்த்தம் சொல்லுகிறது" என்று அருளிச்செய்வர். இதுதான் - உத்பத்திவிநாசங்கள்தான். தோற்றக்கேடுள்ளவை உபஸ்திதமாகையாலே, அவை 'உடையான்' என்கிறதுக்கு ப்ரதிஸம்பந்தியென்று திருவுள்ளம்பற்றி, 'தோற்றக்கேடுள்ளபதார்த்தங்கள்' இத்யாதி. பலிதம் - 'நிருபாதிக' இத்யாதி. தோற்றமில்லை யென்றுவைத்து, 'அவனொருமூர்த்தியாய்' என்றால் வ்யாஹதமன்றோ? என்ன, 'கர்ம

மில்லாதவன் ஆஶ்ரிதார்த்தமாக ஒருவிக்ரஹத்தையுடையனாய். [ஒருமூர்த்தி] - அத்விதீயமாய் அத்யந்தவிலக்ஷணமான நரஸிம்ஹமாய். அழகியான்தானே அரியுருவன்தானேயிறே. [சீற்றத்தோடு அருள்பெற்றவன்]-ஒருவிக்ரஹத்தை யுடையனானவதுக்கு மேலேயும் ஒன்றிறே சீற்றத்தையும் அருளை யும் ஏககாலத்திலே யுடையனானதுவும்.[சீற்றம்இத்யாதி]-ஹிரண்யன்பக்கல் சீற்றமும் செல்லாநிற்கச் செய்தே, அருளுக்குப் பாத்ரபூதனான ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்குத் திருவடிகளின்கீழே வந்து புகுர லாம்படி நின்ற. சீற்றத்தோடே அருள்பெற்றவ னென்கிறதாயிற்று - ஹிரண்யன் த்வேஷத்துக்கு விஷயமானாற்போலேயாயிற்று, இவன் அருளுக்கு விஷயமானபடி. அவன் ஒருமூர்த்தியாய்ச் சீற்றத் தோடு என்னவுமாம். [அடிக்கீழ்ப் புகநின்ற செங்கண்மால்] - 'ஹிரண்யன்பக்கல் சீற்றமும் செல்லா நிற்க, ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்குக் கிட்டலாயிருந்தபடி எங்ஙனே?' என்று எம்பெருமானாரைச் சிலர் கேட்க, 'ஸிம்ஹம் ஆனைமேலே சீறினாலும் குட்டிக்கு முலையுண்ணலாம்படி யிருக்குமிறே' என்று அருளிச்செய்தார். 'ஆஶ்ரிதவாத்ஸல்யத்தாலே அவர்கள்விரோதிகள்மேலே சீறின சீற்றமானால் பின்னை அவர்களுக்கு அணையவொண்ணாதபடி யிருக்குமோ?' என்று அருளிச்செய்தார். [செங்கண் மால்] - இரண்டினுடையவும் கார்யம். ஹிரண்யன்பக்கல் சீற்றத்தாலும் சிவந்திருக்கும், ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வான்பக்கல் வாத்ஸல்யத்தாலும் சிவந்திருக்குமிறே. [மால்] - "மஹாவிஷ்ணும்" (மஹாவிஷ்ணும்) என்கிறபடியே, ஹிரண்யனுக்குக் கிட்டவொண்ணாதபடி பெரியனாயிருக்கும் இருப்பைச்சொல்லுதல்; ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்குக் கிட்டலாம்படி வ்யாமோஹத்தை யுடையனா யிருக்கு மென்னுதல். [நாற்றம் இத்யாதி] - நாற்றம் - கந்தம். தோற்றம் - ரூபம். சுவை - ரஸம். ஒலி - ஶப்தம். உறல்-ஸ்பர்ஶம். [ஆகின்ற] - ஶப்தாதிகளெல்லாம் எனக்குத் தானேயாய் நின்ற. ஆருக்குப்போலே யென்னில்,-[எம்வானவர் இத்யாதி] - நித்யஸூரிகளுக்கு ஸர்வவிதபோக்யமும் தானேயாய் நிற்குமாபோலே. [மற்று இத்யாதி] - வேறொருவரை உத்தேஶ்யமாக உடையேனல் லேன். 'இது எத்தனைகுளிக்கு நிற்கும்?' என்னில்,—[எழுமைக்குமே] - காலதத்த்வமுள்ளதனை யும். அவன் நித்யஸூரிகள்பக்கலிலே இருக்கக்கடவ இருப்பை என்பக்கலில் இருக்க, நான் வே றொன்றை போக்யமாக நினைத்திருப்பேனோ? அவர்கள் அவனை யொழிய வேறொன்றை போக்ய மாக நினைக்கிலன்றோ நான் வேறொன்றை போக்யமாக நினைப்பது? (௬)

---

*மடியான' இத்யாதி. கர்மம் அடியான ஜந்மமின்றிக்கே ஆஶ்ரிதார்த்தமான விக்ரஹத்தையுடையவனென்றபடி. ஒருவிக்ரஹத்தை - இரண்டுவடிவுடைய விக்ரஹத்தை. அத்விதீயமாகையாலே அதிவிலக்ஷண மென்றபடி. அதிவிலக்ஷணமா யிருக்கு மென்கைக்கு ப்ரமாணம் - 'அழகியான்' இத்யாதி. நாலாந்திருவந்தாதியில் இருபத் திரண்டாம்பாட்டு. தான் நரஸிம்ஹரூபியாய் நரத்வஸிம்ஹத்வங்களாகிற இரண்டுவடிவைச் சேர்த்துக்கொண்டு தோற்றினால் வைரூப்யம் தோற்றியிராதே தான் அழகியனா யிருக்குமவனாய் இத்யர்த்தঃ. 'ஒருவிக்ரஹத்தை யுடையனான அதுக்குமேலே' - நரத்வஸிம்ஹத்வங்களிரண்டையு முடைத்தான ஒருவிக்ரஹத்தை யுடையனான அதுக்குமேலே. இப்படி ஏககாலத்தில் கூடின அகடிதமும் விஷயபேதத்தாலே கூடு மென்கிறார் - 'ஹிரண் யன்பக்கல்' இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் - 'சீற்றத்தோடு' இத்யாதி. இத்தை விவரிக்கிறார் - 'ஹிரண் யன்த்வேஷத்துக்கு' இத்யாதி. அவன் ஒருமூர்த்தியாய்ச் சீற்றத்தோடு என்னவுமா மென்றது - சீற்றத்தோடே அவன் ஒருமூர்த்தியா யென்றபடி; அதாவது - சீற்றம் ஒருவடிவுகொண்டாற்போலே யிருக்கிறவ னென்ற படி. 'சீற்றத்தோடு' இத்யாதி - ஹிரண்யன்விஷயத்தில் சீற்றத்தோடே ஸ்வவிஷயத்தில் அருளைப்பெற்ற ப்ரஹ்லாதனானவன் தன்திருவடிகளின்கீழே ஒதுங்கும்படி அவனுக்கு ஸுலபனாய்நின்ற சிவந்தகண்ணையுடைய மாலென்று சப்தார்த்தம். ப்ராஸங்கிகம் - 'ஹிரண்யன்பக்கல்' இத்யாதி. 'ஸிம்ஹம் ஆனைமேலே' இத்யாதிக்கு ஸம்வாதமாக, "இழவுதரியாததோரீற்றுப்பிடி" இத்யாதியை நினைப்பது. தார்ஷ்டாந்திகத்தில் பலிதம் - 'ஆஶ் ரிதவாத்ஸல்ய' இத்யாதி. விஷயபேதாத் விரோதமில்லை யென்று கருத்து. விவரணம் - 'ஹிரண்யன்' இத் யாதி. மால் - பெருமையும், வ்யாமோஹமும். "மஹாவிஷ்ணும்" என்கிறது - ந்ருஸிம்ஹமந்த்ரஸ்தபதம். "உக்ரம்வீரம்மஹாவிஷ்ணும்" இத்யாதி. 'எம்' என்றதுக்கு அர்த்தம் - 'சப்தாதிகளெல்லாம்' இத்யாதி. 'எம்வானவரேற்றையேயன்றி' என்றத்தைக் கடாக்ஷித்து பாவம்-'அவன் நித்யஸூரிகள்பக்கல்' இத்யாதி. 'நாற் றத்தோற்றம்' இத்யாதியைக் கடாக்ஷித்துத் தாத்பர்யம் - 'அவர்கள் அவனை' இத்யாதி. க்ரமேண அந்வயঃ. (௬)*

# ஏழாம் பாட்டு.

எழுமைக்கும்எனதாவிக்குஇன்னமுதத்தினை எனதாருயிர்
கெழுமியகதிர்ச்சோதியை மணிவண்ணனைக்குடக்கூத்தனை
விழுமியஅமரர்முனிவர்விழுங்கும் கன்னற்கனியினைத்
தொழுமின்தூயமனத்தராய்இறையும்நில்லா துயரங்களே.

ஆ.—(எழுமைக்கும்.) எற்றைக்கும் எனக்குப் பரமபோக்யமாய், மத்ஸம்ச்லேஷைக போகமாயிருக்கையாகிற மஹாகுணத்தையுடையனாய், விழுமிய அமரர் முனிவர் விழுங்கும் கன்னற் கனியாயிருந்துவைத்து எனக்கு ஸுலபனாய் அதிமநோஹர திவ்யசேஷ்டிதனா யிருந்த எம்பெருமானை 'அரியன்' என்று கூசாதே தொழுங்கோள்; தொழ, உங்களுடைய ஸமஸ்ததுக்கங்களும் போம் என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், இப்படி ஆச்ரிதஸுலபனானபின்பு அவன்பக்கல் நீங்கள் பண்ணின துர்லபத்வசங்கையைத் தவிர்ந்து அவனை ஆச்ரயியுங்கோள்,உங்கள்துக்கங்கள் நிச்சேஷமாகப்போம் என்கிறார்.

[எழுமைக்கும் என்று தொடங்கி] - காலமுள்ளதனையும் எனக்கு நிரதிசயபோக்யனாய், அத்யந்த நிக்ருஷ்டமான என் ஆத்மாவோடே வந்து கலந்து பெறாப்பேறு பெற்றாற்போலே உஜ்ஜ்வலனுமாய், எல்லாரையும் தன்பக்கலிலே ஆகர்ஷித்துக்கொள்ளவற்றான ஸௌந்தர்ய சேஷ்டிதங்களை யுடையனுமாய், பேரளவுடைய வைகுந்தத்தமரர்க்கும் முனிவர்க்கும் ஸ்ப்ருஹணீயமான போக்யதையை யுடையவனை.

ப.—அநந்தரம், இப்படி நிரதிசயபோக்யனாய்க்கொண்டு ஸுலபனானவனை ஆச்ரயியுங்கோள் என்கிறார்.

எழுமைக்கும் - ஸர்வாவஸ்தையிலும், எனது ஆவிக்கு - என் ஆத்மாவுக்கு, இன் அமுதத்தினை - நிரதிசயபோக்யபூதனாய், எனது உயிர் ஆர் - என்னுடைய ஸ்வரூபத்தோடே செறிய, கெழுமிய கதிர் - கலந்து அத்தாலே ப்ரகாசிதமான, சோதியை-தேஜஸ்ஸையுடையனாய், மணிவண்ணனை - (என்னோடுகலக்கைக்கு அடியான) வடிவழகையும், குடக்கூத்தனை - சேஷ்டிதத்தையுமுடையனாய், விழுமிய - சீரியரான, அமரர் - வைகுந்தத்தமரரும், முனிவர் - முனிவரும், விழுங்கும் - புஜிக்கும், கன்னல் கனியினை - கன்னல்சேர்ந்த கனிபோலே நிரதிசயபோக்யனானவனை, தூய மனத்தராய் - (ப்ரயோஜநாந்தரத்தாலே நெஞ்சை தூஷியாதே) அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு, தொழுமின் - ஆச்ரயியுங்கோள்; துயரங்கள் - (அநுபவப்ரதிபந்தகமான) துரிதங்கள், இறையும் - ஏகதேசமும், நில்லா - நில்லாது.

இ.—ஏழாம்பாட்டில், இப்படி ஸுலபனான பின்பு அவன்பக்கல் துர்லபத்வசங்கையைத் தவிர்ந்து அவனை ஆச்ரயியுங்கோள் என்கிறார்.

[எழுமைக்கும் இத்யாதி]-காலதத்த்வமுள்ளதனையும் தன்சுவடு அறியாதே இதரவிஷய ப்ரவணமான என் நெஞ்சுக்குப் பரமபோக்யனானவனை. [எனது ஆர் உயிர் இத்யாதி] - அநாதியாக ஸம்ஸரித்துப்போந்த என் ஆத்மாவோடே கலந்து அத்தாலே உஜ்ஜ்வலனானவனை. தம்மைக் கிட்டுகை அங்குத்தைக்கு நிறக்கேடென்றிருந்தார்; மற்றைப்படியே தம்மைச் செறியச்செறிய தீப்தனாயிருந்தான் அவன். [மணிவண்ணனைக் குடக்கூத்தனை] - இத்தலையில் இசைவுபாராதே

மேல்விழுந்து அகப்படுத்திக் கொள்ளுகைக்கு ஹேதுக்கள் இருந்தபடி. வடிவழகையும் மநோ ஹாரியான சேஷ்டிதங்களையு முடையவனை. நீலமணிபோலே முடிந்து ஆளலாம்படி யிருக்கிறவ னென்றுமாம். [விழுமிய இத்யாதி] - ஆக்கரான தேவதைகளன்றிக்கே சீரியரான வைகுந்தத் தமரர்க்கும் முனிவர்க்கும் கன்னல்போலேயும் கனிபோலேயும் நிரதிசயபோக்யனானவனை. "ஸர்வரஸ:" என்னக்கடவதிறே. [கன்னல்கனியினைத் தொழுமின்] - இதுவன்றோ உங்களை நான் குடிக்கச்சொல்லுகிற வேப்பங்குடிநீர். பாலைக்குடிக்கைக்கிறே காலைப் பிடிக்கிறது. ஸ்வயம் ப்ரயோஜநமாகத் தொழுங்கோள். [தூய மனத்தராய்] - துர்லபனோ? ஸுலபனோ? என்று ஸம்சயாக்ராந்தராகாதே. [இறையும் இத்யாதி] - ஸாம்ஸாரிகமான துக்கங்கள் நிஶ்ஶேஷமாகப் போம்.

ஈடு.—ஏழாம்பாட்டு. இப்படி ஸுலபனானவன்பக்கல் துர்லபத்வஶங்கையைத் தவிர்ந்து அவனை ஆஶ்ரயியுங்கோள், உங்களுடைய ஸர்வதுக்கங்களும் போம்படி என்கிறார்.

[எழுமைக்கும் எனதாவிக்கு இன் அமுதத்தினை] - காலதத்த்வமுள்ளதனையும் தன்சுவடறியாதே இதர விஷய ப்ரவணமான என்நெஞ்சுக்குப் பரமபோக்யனானவனை. பெரியவற்றை - ஏழ்ழாகச் சொல்லக்கடவதிறே; காலமெல்லாம் என்றபடி. [எனது ஆருயிர் இத்யாதி] - அநாதியாக ஸம்ஸரித்துப்போந்த என் ஆத்மாவோடே கலந்து அத்தாலே உஜ்ஜ்வலனானவனை. தாம் கிட்டுகை அத்தலைக்கு நிறக்கேடு என்றிருந்தார் இவர்; அது மற்றைப்படியாய்த் தம்மைச் செறியச் செறிய தீப்தனாயிருந்தான். [மணிவண்ணனை இத்யாதி] - இத்தலையில் இசைவுபாராதே அகப்படுத்திக் கொள்ளுகைக்கு ஹேதுக்கள் இருக்கிறபடி. வடிவழகையும் மநோஹாரிசேஷ்டிதங்களையு முடையவனை. வண்ணம் - நிறம். நீலமணிபோலே முடிந்து ஆளலாம்படி யிருக்கிறவ னென்றுமாம். ஆக்கரான தேவர்களன்றிக்கே சீரியரான வைகுந்தத்தமரர்க்கும் முனிவர்க்கும் கன்னல்போலவும் கனிபோலவும் நிரதிசயபோக்யனானவனை. "ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:" (ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:) என்னக்கடவதிறே. [கன்னல்கனியினைத் தொழுமின்] - "மாங்கனி" என்னுமாபோலே, கன்னல் பழுத்த பழங்காணும் இது. இதுவன்றோ நான் உங்களுக்கு இடுகிற வேப்பங்குடிநீர்; பால்குடிக்கக் கால்பிடிக்கிறேனன்றோ? [தூயமனத்தராய்] - 'கிட்ட அரியனோ? எளியனோ? அறியவரியனோ? எளியனோ? இவனைப்பற்றுவோமோ? அன்றிக்கே, ப்ரயோஜநத்தைக்கொண்டு அகலுவோமோ?'

---

ஏழாம்பாட்டு - 'எழுமைக்கும்' இத்யாதி. 'குடக்கூத்தனை, தூயமனத்தராய் - தொழுமின் - இறையும் நில்லா துயரங்கள்' என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - 'இப்படி' இத்யாதி. இப்படி ஸுலபனானவ னென்றது - கீழிற்பாட்டில் நரஸிம்ஹாவதாரத்தை. காலதத்த்வமுள்ள தனையும் - போக்யனானவனை இத்யந்வய:.

'எழுமைக்கும்' என்றால் - காலதத்த்வமுள்ளதனையு மென்று காட்டுமோ? என்ன, 'பெரியவற்றை' இத்யாதி. 'சொல்லக்கடவதிறே' ஆகையாலே, இத்யத்யாஹார்யம். 'எனது' என்றதுக்கும் 'கதிர்ச்சோதி' என்றதுக்கும் ஸமுதாயேந ஹாவம் - 'தாம்கிட்டுகை' இத்யாதி. செறியச்செறிய - நெருங்கநெருங்க. கெழுமுகை - சேருகையாய், கலந்த வென்றபடி. என் ஆத்மாவோடே கலந்தத்தால் ப்ரகாசிதமான தேஜஸ்ஸையுடையவனை இதி ஶப்தார்த்த:. 'மணிவண்ணனை' இத்யாரப்ய, 'கன்னல்கனியினை' என்னுமளவுக்கு ஹாவம்- 'இத்தலையில்' இத்யாதி. 'ஹேதுக்கள்' என்றத்தை விவரிக்கிறார் - 'வடிவழகையும்' இத்யாதி. வண்ணம் - நிறமாதல், ஔதார்ய ஸ்வபாவமாதல். ஆக்கரான - ஸ்ருஷ்டரான. விழுமிய - ஶ்லாக்யரான. விழுங்கும்- புஜிக்கும். இது - எல்லாவற்றுக்கும் உபலக்ஷணமென்று திருவுள்ளம்பற்றி, அதுக்கு ப்ரமாணம் - 'ஸர்வகந்த:' இத்யாதி. கன்னலினுடைய பழமென்று ரஸாதிசயத்திலே அர்த்தாந்தரம் - 'மாங்கனி' இத்யாதி. முந்தினது- த்வந்த்வம். இரண்டாவது - ஷஷ்டீதத்புருஷன். 'கன்னற்கனியினைத் தொழுமின்' என்கிறவருடைய ஹார்த்த ஹாவம் - 'இதுவன்றோ' இத்யாதி வாக்யத்வயேந. கிட்ட அரியனோ? என்கிற ஸம்ஶயத்துக்கு - 'எனதாருயிர் கெழுமிய' இத்யாதி நிவர்த்தகம். 'எனதாவிக்கின்னமுதத்தினை' என்றத்தைக் கடாக்ஷித்து - 'அறியவரியனோ' இத்யாதி; ஜ்ஞாநமுண்டாய் புஜிக்கவேணுமே. 'விழுமியவமரர்' இத்யாதி - 'இவனைப்பற்றுவோமோ' இத்

என்று இங்ஙனே ஸம்ஶயாக்ராந்தராய்ப் போகாதே, இவன்தன்னையே ப்ரயோஜநமாக ஆஶ்ரயியுங்கோள். [இறையுமில்லா துயரங்களே] - இப்படி ஸம்ஶயிக்கைக்கு அடியான மஹாபாபங்கள் வாஸனையோடே பறிந்துபோம். ஸாம்ஸாரிகமான து:கங்கள் நிஶ்ஶேஷமாகப்போம் என்றுமாம். (௭)

## எட்டாம் பாட்டு.

துயரமேதருதுன்பவின்பவினைகளாய் அவையல்லனாய்
உயரநின்றதோர்சோதியாய் உலகேழுமுண்டுமிழ்ந்தான்தன்னை
அயரவாங்குமநமன்தமர்க்குஅருநஞ்சினை அச்சுதன்தன்னைத்
தயரதற்குமகன்தன்னையன்றி மற்றிலேன்தஞ்சமாகவே.

ஆ.—(துயரமேதரு.) ஸ்வாதீந புண்யபாபஸ்வரூபனாய், அகர்மவஶ்யனாய், நிரவதிக தேஜோவிஶிஷ்டனாய், ஸர்வலோகரக்ஷகனாய், ஸ்வாஶ்ரிதஜநங்களை யமகிங்கரர் பாதியாதபடி அவர்களை ரக்ஷித்தருளும் ஸ்வபாவனாய், அவர்களோடு ஆத்மாந்தமாக ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனாயிருந்த தயரதற்கு மகன்தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாக; நீங்களும் ஆஶ்ரயியுங்கள் என்கிறார்.

ஒ.—எட்டாம் பாட்டில், மற்றுள்ளாரும் தம்முடைய பக்ஷத்தை அறிந்து அதிலே ருசி பண்ணுகைக்காக நான் தஶரதசக்ரவர்த்திதிருமகனை யல்லது மற்றொருவரை ஆபத்தநமாகப் பற்றியிரேனென்று ஸ்வஸித்தாந்தத்தைச் சொல்லுகிறார்.

[துயரம் என்று தொடங்கி] - து:கைகஹேதுவான புண்யபாபரூப கர்மங்களுக்கு நியாமகனாய், தான் அகர்மவஶ்யனாய், தமஸ:பரஸ்தாத் வர்த்தமாநமாய் அப்ராக்ருததேஜோரூபமான திருநாட்டையுடையனாய், இங்ஙனே புஷ்கலனாயிருந்துவைத்துத் தன்னதான க்ஷுத்ரஸம்ஸாரவிபூத்யேகதேஶத்துக்கு ப்ரளயாத்யாபத்துக்கள் வந்தால் தானே கைதொட்டு நோக்குமவனை. [அயர என்று தொடங்கி] - அங்ஙனே பொதுவான ரக்ஷணத்தை யொழியத் திருவடிகளை யாஶ்ரயித்தார்க்கு யமாதிபாதைகள் மறுவிடாதபடி போக்கவல்லனுமாய் அவர்களோடு நித்யஸம்ஶ்லேஷம் பண்ணும் ஸ்வபாவனானவனை. 'தயரதற்குமகன்' என்று விதேயத்வம் சொல்லு

ப.—அநந்தரம், ஆஶ்ரிதரை நழுவவிடாத சக்ரவர்த்திதிருமகனையொழிய வேறு தஞ்சமில்லை என்கிறார்.

துயரமே தரு - நிஷ்க்ருஷ்டபரிதாபத்தையே தரக்கடவதான, துன்பம் - து:கத்துக்கும், இன்பம் - (து:கஸாத்யத்வது:கமிஶ்ரத்வது:கோதர்க்கத்வ விஶிஷ்டமாகையாலே நிஷ்க்ருஷ்டபரிதாபகரமான) ஸுகத்துக்கும் ஹேதுவான, வினைகளாய் - பாபரூபமாயும் புண்யரூபமாயுமுள்ள கர்மங்களுக்கு நிர்வாஹகனாய், அவை - அவற்றுக்கு, அல்லனாய் - தான் வஶ்யனல்லனாய், உயர - ("விஶ்வத: ப்ருஷ்டேஷு ஸர்வத: ப்ருஷ்டேஷு" என்கிற) உயர்த்தியையுடைத்தாய், நின்றது

---

யாதி ஸம்ஶயத்துக்கு நிவர்த்தகம். தூயமனத்தராய் - பரிசுத்தமான நெஞ்சையுடையராய். சுத்தியாவது - ஸம்ஶயராஹித்யம். முந்தின நிர்வாஹத்திலே, 'துயரங்கள்' என்கிற இது - து:கஹேதுபாபபரம். இரண்டாம் நிர்வாஹத்திலே, துயரம் - து:கம். இறையும் - அத்யல்பமும். க்ரமேண அந்வய:. (௭)

ஓர்-நித்யமாய் அத்விதீயமான, சோதியாய்-தேஜோமய திவ்யதேஹத்தையுடையனாய்,உலகேழும்-(கர்மவஶ்யமான) ஸகலலோகங்களுக்கும் ப்ரளயாபத்துவந்தால், உண்டு - உண்டு, உமிழ்ந்தான் தன்னை - உமிழ்ந்து ரக்ஷிக்குமவனாய், அயர - மோஹிக்கும்படி, வாங்கும் - ப்ராணாபஹாரம்பண்ணும், நமன்தமர்க்கு - யமபடர்க்கு, அரு - மீட்க அரிய, நஞ்சினை - நஞ்சாய்க்கொண்டு, அச்சுதன்தன்னை - ஆஶ்ரிதரை நழுவவிடாத ஸ்வபாவனை, தயரதற்குமகன்தன்னை - சக்ரவர்த்தி திருமகனை, அன்றி - ஒழிய, மற்று - மற்றொரு பகவத்வ்யக்தியும் அகப்பட, தஞ்சமாக இலேன்-உடையேனல்லேன். தஞ்சம் - ஆபத்துக்கு உறுதுணை.

இ.— எட்டாம்பாட்டில், அல்லாதார்க்கும் ருசிபிறக்கைக்காக, 'நான் சக்ரவர்த்தி திருமகனை யல்லது ஆபத்தநமாகப் பற்றியிரேன்' என்று ஸ்வஸித்தாந்தத்தை அருளிச்செய்கிறார்.

[துயரம் இத்யாதி] - து:கைகஹேதுவான புண்யபாபரூப கர்மங்களுக்கு நியாமகனாய். [அவையல்லனாய்] - தான் அகர்மவஶ்யனாய். [உயர இத்யாதி] - தமஸ:பரஸ்தாத்வர்த்தமாந பரமபதத்தையுடையனாய். [உலகேழும் இத்யாதி] - இப்படி புஷ்கலனான தான் விபூத்யேகதேஶமான ஸம்ஸாரத்துக்கு ப்ரளயாபத்துவந்தால் அத்தை வயிற்றிலேவைத்து நோக்கி ஸ்ருஷ்டிகாலத்திலே வெளிநாடுகாண உமிழுமவனை. [அயர இத்யாதி] - தன்னையாஶ்ரயித்தாரை அறிவுகெடும்படி ஶரீரவிஶ்லேஷத்தைப் பண்ணும் யமபடர்க்குக் காற்றவொண்ணாத நஞ்சானவனை. [அச்சுதன்தன்னை] - அவர்களை நழுவவிடாதே நித்யஸம்ஶ்லேஷம் பண்ணுமவனை. எங்கே கண்டோமென்னில்,—[தயரதற்குமகன்தன்னை] - ராவணவத ஸமநந்தரத்திலே முதலிகளிலே சிலரைக் காணதொழிய தேவதைகளைக் கொண்டு மீட்டும், ஒருபாலனுக்கு அகாலம்ருத்யு வர அம்பாலே மீட்டுக்கொடுத்தும் செய்த சக்ரவர்த்திதிருமகனையன்றி. "ஃஜௌகௌஶிகவாதூய" என்றும். ராஜ்யத்தைத் தந்தேன் என்ன அத்தைத் தவிர்ந்து காடேறப்போம் என்ன ஒரு ஸம்ஸாரிக்கு இஷ்டவிநியோகார்ஹனானவனை. "ஹவாஶாராயணோதெவ:"என்று ஈஶ்வராபிமாநிகள் தாங்கள் வந்து சொன்னால், "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்னுமவன். [மற்றிலேன் தஞ்சமாகவே] - மற்றென்று பகவத் வ்யக்த்யந்தரங்களை நினைக்கிறார். தஞ்சம்-ஆபத்தநம்.

ஈடு.—எட்டாம்பாட்டு. ஸம்ஸாரிகளுக்கும் ருசிபிறக்கைக்காக, 'நான் சக்ரவர்த்திதிருமகனை யல்லது ஆபத்தநமாகப் பற்றியிரேன்' என்று ஸ்வஸித்தாந்தத்தை அருளிச்செய்கிறார்.

[துயரம் இத்யாதி] - து:கத்தையே தரக்கடவதான புண்யபாபரூபமான கர்மங்களுக்கு நியாமகனாய். துன்பவினையோடு இன்பவினையோடு வாசியற இரண்டும் து:கத்தையே பண்ணித்தருமென்றாயிற்று இருக்கிறார் இவர்; பகவச்சேஷத்வ விரோதியாய்க்கொண்டு பந்தகமாகை இரண்டுக்கும் ஒக்குமிறே; "**வுணாவாவெவியூய**" (புண்யபாபேவிதூய) என்னக்கடவதிறே. [அவையல்லனாய்] - அகர்மவஶ்யனாய். "**அநஶ்நந்ந**" (அநஶ்நந்நந்ய:) என்கிறபடியே, தான் இவற்

---

எட்டாம்பாட்டு - 'துயரமே' இத்யாதி. ஆறும்பாட்டிற்போலே பரோபதேசப்ரகரணத்திலே ஸ்வஸித்தாந்தம் அருளிச்செய்கைக்கு இன்னம் ஒரு ப்ரயோஜநம் அருளிச்செய்யாநின்றுகொண்டு, 'தயரதற்கு' இத்யாதி நாலாம்பாதத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'ஸம்ஸாரிகளுக்கும்' இத்யாதி. ருசிபிறக்கைக்காக - 'அருளிச்செய்கிறார்' இத்யந்வய:.

இன்பவினையும் து:கத்தைத் தருமோ? என்ன, 'துன்பவினையோடு' இத்யாதி. இவர் இப்படியிருக்கைக்கு அடியேது? என்ன, 'பகவச்சேஷத்வ' இத்யாதி. பந்தகத்வோபபாதநம்'புண்யபாபேவிதூய' என்று. இல்லையாகில் விதூநநம் பண்ணவேண்டாவிறே. அகர்மவஶ்யனென்னுமதுக்கு ப்ரமாணம் - 'அநஶ்நந்நந்ய:'

ருல் வஶ்யனல்லாமை யன்றிக்கே நியாமகத்வத்தால் வந்த புகரையுடையனாயிருக்கை. [உயர இத்யாதி] - "க்ஷயந்தமஸ்யரஜஸ:பராகே" (க்ஷயந்தமஸ்யரஜஸ:பராகே) என்றும், "தமஸ:பரஸ்தாத்" (தமஸ:பரஸ்தாத்) என்றும் சொல்லுகிறபடியே, இங்குள்ளாராற் சென்று கிட்டவொண்ணாதாயிருக்கிற தமஸ:பரஸ்தாத் வர்த்தமாநதேஶத்திலே நிரவதிகதேஜோரூபமான திவ்யவிக்ரஹத்தையுடையனாயிருக்கிற இருப்பைச் சொல்லுகிறது. "விஶ்வத:ப்ருஷ்டேஷு ஸர்வத:ப்ருஷ்டேஷு" (விஶ்வத:ப்ருஷ்டேஷு ஸர்வத:ப்ருஷ்டேஷு) என்கிற உயர்த்தியை யுடைத்தாய் நித்யமாய் அத்விதீயமான தேஜோமய திவ்யதேஶத்தையுடையவனாய் என்றுமாம். [உலகு இத்யாதி] - இப்படி புஷ்கலனாயிருந்தானேயாகிலும், விபூத்யேகதேஶமான ஸம்ஸாரத்தை ப்ரளயங் கொண்டதென்றால் இங்கேவந்து வயிற்றிலே எடுத்துவைத்து நோக்கி, "இத்தனைபோதும் காணப்பெறுமையாலே இவை என்படுகிறனவோ?" என்று உமிழ்ந்து பார்க்குமவனை; வழிபறிக்கும் நிலத்திற் போவார் சீரிய தநங்களை விழுங்கி, பின்னை அமர்ந்தநிலத்திலே புக்கால் புறப்படவிட்டுப் பார்க்குமா போலே. [அயர] - தன்திருவடிகளை ஆஶ்ரயித்தாரை அறிவுகலங்கும்படிக்கு ஈடாக ப்ராணவியோகத்தைப் பண்ணக்கடவராயிருந்துள்ள யமபடர்க்குக் காற்றவொண்ணாத நஞ்சாயுள்ளவனை. [அச்சுதன்தன்னை]-தன்னையாஶ்ரயித்தாரை யமவஶ்யராக விட்டுக்கொடாதவனை. உயிர்கொண்டு உடலொழிய ஓடும்போது ஓடி அயர்வென்ற தீர்க்குமவனிறே. எங்ஙனே கண்டோம்? என்ன, [தயரதற்குமகன்தன்னை] - தான் ராஜ்யம்பண்ணாநிற்கச்செய்தே ஒருப்ராஹ்மணகுமாரனுக்கு அகாலம்ருதி யுண்டாக, அவனை வாளாலே மீட்டும்; ராவணவதம்பண்ணிப் படைக்குறிகாணாநிற்கிறவளவிலே முதலிகளிலே சிலரைக் காணாதொழிய, இந்த்ரனை அழைத்துப்போகவிட்டு வரங்கேட்கிற வ்யாஜத்தாலே அவனையிடுவித்து அவர்களையுங் கூட்டிக்கொண்டு போன சக்ரவர்த்திதிருமகனை; ஒரு ருஷிபுத்ரனுக்கு அகாலம்ருதி வர, அம்பாலே மீட்டுக்கொடுத்துஞ் செய்தவை. தயரதன்மகன்

---

இத்யாதி. இந்த ஶ்ருதியில் "க்ஷிவாக்ஸீதி" என்கிற பதத்துக்கு அர்த்தம் - 'தான் இவற்றால்' இத்யாதி. அவையல்லனாய் - அவற்றுக்குத் தான் வஶ்யனல்லனாய். இதினுடைய ஔந்நத்யத்துக்குச் சரமாவதியை ப்ரமாணமுகேந தர்ஶிப்பியாநின்றுகொண்டு, ஶப்தார்த்தம் - 'க்ஷயந்தம்' இத்யாதி. மூலப்ரக்ருதி, ரஜஸ்தமஸ்ஸுக்களோடே கூடியிருக்கையாலே, "ரஜஸ:",என்றும், "தமஸ:" என்றும் மூலப்ரக்ருதியைச் சொல்லி, இதினுடைய, பராகே - உபரிபாகத்திலே, க்ஷயந்தம் - "க்ஷிநிவாஸே" என்று இதுக்கு தாதுவாகையாலே, வஸிக்குமவனை யென்றபடி. 'உயர' என்கிற விடத்திலே - "ஸமஸ்தகாரணகாரணஜாதம்" இத்யாதி கத்யவாக்யம் அநுஸந்தேயம். 'சோதி' என்றதுக்கு அர்த்தாந்தரம் - 'விஶ்வத:' இத்யாதி. சோதி - திவ்யமங்கள விக்ரஹமாதல், திவ்யதேசமாதல். கீழ்ற்பதத்தைத் தளமாகக்கொண்டு, 'உலகேழும்' இத்யாதிக்கு அர்த்தம் - 'இப்படி' இத்யாதி. உமிழ்ந்துபார்க்கு மவனை யென்றதுக்கு த்ருஷ்டாந்தம் - 'வழிபறிக்கும்' இத்யாதி. சீரிய - ஶ்ரேஷ்டமான. வாங்கு - ப்ராணனையிதி ஶேஷ:. அயர - அறிவுகலக்கும்படி, மோஹிக்கும்படி. ப்ராணனைவாங்குகிற யமபடர்க்கு மீட்கவரிய நஞ்சானவனை யிதி சப்தார்த்த:. காற்றவொண்ணாத - பரிஹரிக்கப் போகாத. யமவஶ்யராக விட்டுக்கொடாமைக்கு ப்ரமாணம் - "உயிர்கொண்டு" இத்யாதி. நான்முகன்திருவந்தாதி - எண்பத்தெட்டாம்பாட்டு. ஆத்மா ஶரீரத்தைப் போகட்டு ப்ராணனைக்கொண்டு யமபடனாலே ப்ரேரிதனாய்ப்போம்போது தானே விரைந்துசென்று அவர்கள்தர்ஶநத்தால் வந்த அறிவுகேடு முதலான துரிதமென்று பேர்பெற்றவையெல்லாம் போக்கும் ஸ்வபாவனிதி பாசுரார்த்த:. அயர்வென்ற-அஜ்ஞாநமென்று பேர்பெற்றவையெல்லாம்; முழுச்சொல்லு.'அவனை வாளாலே மீட்டும்' என்றது - சம்பூகனை வாளாலே கொன்று அவனை மீட்டுமென்றபடி. படைக்குறி-ஸேநாஶோதநம். அம்பாலே மீட்டுக்கொடுத்து மென்றது - தர்மைக்யத்தாலே க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபநிபுத்ராநயநத்தை ஹரிவம்ஶே ஷட்த்ரிம்ஶச்சததமே - "விஜித்ய யமம் ஸம்ரோஷம் ப்ரஹ்ஸந்தவதுஹி: । குரோஸ்ஸுதம் ஸநிராநீத: க்ருஷ்ணாநாத: ததக்ஷணா" என்னக் கடவதிறே. 'தயரதற்கு' என்கிற தாதர்த்த்யே சதுர்த்திக்கு ஹாவம் - 'தயரதன்மகன்' இத்யாதி. 'தயரதற்கு'

என்னுதே, 'தயரதற்குமகன்தன்னை' என்கிறது - ஒருகால் வெற்றிலைச்சேருக்கிலே 'ராஜ்யத்தைத் தந்தேன்' என்று, புரிந்து ஸ்த்ரீபரதந்த்ரனுய் 'நான் தந்திலேன், நீ காடேறப்போ' என்று, இப்படி சொல்லலாம்படி அவனுக்கு இஷ்டவிநியோகார்ஹனுன புத்ரனை. [அன்றி மற்றிலேன் தஞ்ச மாகவே] - இவ்விடத்தைப் பட்டர் அருளிச்செய்யாநிற்க, சீயர் 'இவர் புக்கவிடமெங்கும் இப்படியே சொல்லுவர்; இவர்க்கு இது பணியிறே' என்ன, 'இவர் மற்றேரிடத்தில் தலை நீட்டுவது பாவநத்வத்தைப்பற்ற; இவர் தஞ்சமாக நினைத்திருப்பது சக்ரவர்த்திதிருமகனையே' என்று அருளிச்செய்தார்; "பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ" (பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ) என்கிற தில்லையோ இவரையும்? என்னில்,—"அவனும் இவரோடொத்தா னொருத் தனிறே; இவர் 'போக்யவஸ்து வேறில்லை' என்றிருக்குமோபாதி, அவன் 'பாவநத்வத்துக்கும் இவரொழிய வேறில்லை' என்றிருப்பான் ஒருவனுயிற்று". பட்டர் ராமாவதாரத்தில் பக்ஷபாதத் தாலே அருளிச்செய்யுமது கேட்கைக்காக, சிறியாத்தான் "பெருமாளுக்கு எல்லாவேற்றங்களும் அருளிச்செய்ததேயாகிலும், பாண்டவர்களுக்காகக் கழுத்திலே ஓலைகட்டித்தூதுபோன க்ருஷ்ண னுடைய நீர்மை யில்லையே சக்ரவர்த்திதிருமகனுக்கு" என்ன, "அதுவோ! பெருமாள் தூது போகாமை யன்றுகாண்; இக்ஷ்வாகுவம்ஶ்யரைத் தூதுபோக விடுவாரில்லாமைகாண்", என்று அருளிச்செய்தார். "அவ்வவதாரத்தில் இழவுதீருகைக்காகவிறே க்ருஷ்ணனுய் அவ தரித்துத் தூதுபோயிற்று; * அவனே பின்னேர்தூது ஆதிமன்னர்க்காகிப் பெரு நிலத்தார் இன் னுர்தூதனென நின்றுனிறே; பாரதந்த்ர்யரஸம் அநுபவிக்கைக்காகப் போந்தபின் இதில் ஒன்று குறைந்ததாகிறது என்று இருக்குமே. "எம்பெருமானுர் திருவாராதநம் பண்ணிப்போருவது ஒருபிள்ளை யிறே; இங்ஙனேயிருக்கச்செய்தே ஒருநாள் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் சக்ரவர்த்திதிருமகனை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து கொடுத்தாராய், அவரைப்பார்த்து "இந்த "மாமேகம்ஶரணம்வ்ரஜ" (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்று தேவையிடாதார் எழுந்தருளினர்" என்றாராம். ஆபிமுக்யத்தாலே பெறலா மென்றால், அவ்வாபிமுக்யந்தானும் பரமபக்தியோபாதி அரியதாயிருக்குமிறே இச்சேதநனைப்

---

*என்கிறத்தை - ஶேஷே ஷஷ்டியாகவும் சில அரும்பதங்களிலே வ்யாக்யாநம் பண்ணியிருக்கிறது' புரிந்து - திரும்பி. ப்ராஸங்கிகம் - 'இவ்விடத்தை' இத்யாதி. இவர் - ஆழ்வார். இப்படியே சொல்லுவரென் றதுக்கு - "ஞானப்பிரானையல்லாலில்லை", "வானவரேற்றையேயன்றி", "கண்ணனல்லாலில்லைகண்டீர்" இத் யாதியிலே நோக்கு. தஞ்சமாக - போக்யமாக. 'தஞ்சமாக' என்றதுக்கு - அவதாரிகையிலே ரக்ஷகத்வபரமாக அருளிச்செய்தாலும், பட்டருக்கு அபிப்ராயம் போக்யதையிலே; ஆபத்தநத்துக்குத் தஞ்சமான ஆகாரமேயன் றிக்கே போக்யமான ஆகாரமு முண்டாகையைப் பற்ற, ரக்ஷகத்வகதநமே மூலத்துக்குச் சேரும். அவனும் - அகஸ்த்யபகவானும். விவரணம் - 'இவர் போக்யவஸ்து' இத்யாதி. 'போக்யவஸ்து சக்ரவர்த்திதிருமகனையொழிய வேறொருவருமில்லை' என்னுமது - பக்ஷபாதத்தாலே சொன்னுரென்று சித்தவத்கரித்து, இந்தப்ரஸங்கத்திலே வேறொருகதையை அருளிச்செய்கிருர் - 'பட்டர்' இத்யாதி. எதாலும் தூதுபோகாத குறையுண்டேயென்ன, 'அவ்வவதாரத்திலிழவு' இத்யாதி. அப்படி வந்து அவதரித்தானேவென்ன, 'அவனே' இத்யாதி. திருமொழி - பன்னிரண்டாந்திருமொழி - மூன்றும்பாட்டு: "முன்னேர்தூது" இத்யாதி. அரக்கனுரை முனிந்தவனே, பின்பு த்வாபராந்தத்திலே ராஜ்யத்துக்கு ப்ராப்தரான பாண்டவர்களுக்குத் தூதாகி மஹாப்ருதிவியிலுள்ளார், இன்னர்தூதனென - பாண்டவதூதனெனத் தன்பேரிட்டு அழைக்கும்படி நின்றவ னென்று பாசுரார்த்தம்' "அவ்வவதாரத்தில் இதொன்று குறைந்தது என்றதுக்காக அவதரிக்கவேண்டுமோ?" என்ன, 'பாரதந்த்ர்யரஸம்' இத்யாதி. அவதாராந்தரத்திலே ஈடுபட்டிருப்பாரும் ராமாவதாரத்திலே ப்ரவணராயிருப்பா ரென்னுமதுக்கு ஐதிஹ்யம் - 'எம்பெருமானுர்' இத்யாதி. பிள்ளை - வெண்ணெய்க்கு ஆடும் பிள்ளை; க்ருஷ்ண னென்றபடி. 'தேவையிடாதார்' - விதியாதே "ஸ்ரீஹாவெந" என்றவர். "மாமேகம் ஶரணம் வ்ரஜ" என்றது - அப்ரதிஷேதமன்றே? இது தேவையோ? என்ன, 'ஆபிமுக்யத்தாலே' இத்யாதி. ஆனல், ஆபிமுக்யமும் வேண்*

பார்த்தால். "இத்தலையில் ஆபிமுக்யத்துக்கு மேற்படவேண்டா" என்று சொல்லுகிறவையெல்லாம்-ஸரண்யனுடைய நீர்மையைப்பற்றச் சொல்லுகிறது; இவனுக்கு வேண்டுவது சொல்லப்புக்கால் "மஹாவிஶ்வாஸபூர்வகம்" (மஹாவிஶ்வாஸபூர்வகம்) என்னவேண்டும்படியா யிருக்குமிறே. "ஒருசிறுயை விஶ்வஸித்து ஆறுமாஸத்துக்குவேண்டும் சோறும் தண்ணீரும் ஏற்றிக்கொண்டு கடலிலே இழியாநின்றான்; அவ்வோபாதி விஶ்வாஸமாகிலும் வேண்டாவோ பகவத்விஷயத்தைப் பற்றுவார்களுக்கு?" என்று அருளிச்செய்வர்.　　(அ)

## ஒன்பதாம் பாட்டு.

தஞ்சமாகியதந்தைதாயொடு தானுமாய்அவையல்லனாய்
எஞ்சலிலமரர்குலமுதல் மூவர்தம் முள்ளுமாதியை
அஞ்சிநீருலகத்துள்ளீர்கள் அவனிவனென்றுகூழேன்மின்
நெஞ்சினால்நினைப்பான்யவன் அவனாகும்நீள்கடல்வண்ணனே.

ஆ.—(தஞ்சமாகிய.) எம்பெருமான் திருவவதாரம்பண்ணி ஸர்வஸுலபனாய் வர்த்தித்தருளுகிற காலத்தில் உதவப்பெற்றிலோம்; ஸ்ரீவைகுண்டத்திலே எழுந்தருளியிருக்கும் இருப்பு நமக்கு கோசரமன்று; ஆனபின்பு, எங்ஙனே அவனை ஆஶ்ரயிக்கும்படி? என்னில்,—ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுக்கும் த்யேயனாய், காரணபூதனுமாய், அபர்வருமமரர்களதிபதியாய் ஆஶ்ரிதர்க்கு ஸர்வாவஸ்தைகளிலும் ரக்ஷகனாய்ப் பிதாவுமாய் மாதாவுமாய்த் தானுமாய் மற்றுமெல்லாமாயிருந்த எம்பெருமானை உகந்தருளப்பண்ணி ஆஶ்ரயிப்பது; நாம் அவனுக்கு ஒருரூபத்தை ஸங்கல்பித்தால் அது அவனுக்கு ரூபமோ? ஸ்ரீவைகுண்டத்தில் யாதொருரூபத்தையுடையனாய்க் கொண்டு எழுந்தருளியிருக்கும், அதுவன்றோ அவனுக்கு ரூபம்?—என்னில்;—அஞ்சி நீர் உலகத்துள்ளீர்கள்-இப்படி ஸம்ஶயிக்கவேண்டா; யாதொன்றை அவனுக்கு ரூபமாக நினைத்திகோள், அத்தையே அவன் திவ்யரூபமாகக் கொண்டருளும் என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், எம்பெருமான் ஸ்ரீவைகுண்டத்திலே எழுந்தருளுயிருக்கும் இருப்பு எங்களுக்கு கோசரமன்று, திருவவதாரம்பண்ணி ஸர்வஸுலபனாய் வர்த்தித்தருளுகிற காலத்தில் உதவப்பெற்றிலோம்; எங்ஙனே அவனைக் கண்டு ஆஶ்ரயிக்கும்படி?என்னில்,—நீங்கள் ஏதேனும் ஒருபடி உகந்தருளப்பண்ணி ஆஶ்ரயிப்பது; அது ஆஶ்ரிதர்க்கு அத்யந்த ஸுலபமாகையால் அத்திருவுடம்பையே அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநத்தோடொக்க விரும்பும் என்கிறார்.

[தஞ்சமாகிய என்று தொடங்கி] - தங்களை அழியமாறி நோக்கும் தாயும் தந்தையும் போலே பரிவுடையனாய், ஆத்மா தான் தனக்குப் பண்ணும் ஸ்நேஹத்தையும் பண்ணி இங்ஙன்

டாவோ? என்ன, 'இத்தலையில்' இத்யாதி. யத்வா, ஆபிமுக்யமாத்ரம் போருமோ? என்ன, 'இத்தலையில்' இத்யாதி என்னுதல். அப்படி மஹாவிஶ்வாஸம் வேணுமோ? என்ன, கிம்புநர்ந்யாயத்தாலே பலிப்பிக்கிறார் - 'ஒருசிறுயை' இத்யாதி. சிறுய் - சம்பான்; ஒடமித்யர்த்த꞉. இந்தப்பாட்டிலே, இந்த்ரனை அழைத்துப்போகவிட்டுத் தம்முகேந ம்ருதரான வாநரமுதலிகளை யெழுப்பி அவர்களைக்கூட்டிக்கொண்டு போனதாகச் சொன்ன இது ஸ்ரீராமாயணத்தில் இல்லையானாலும், புராணாந்தரத்தில் இருக்கிறதாகக் கண்டுகொள்வது. "யாணத்வா வெவியாஷ்ய" இத்யாதி ஶ்ருதி꞉, முண்டகோபநிஷதி. "க்ஷயந்தஸ்ய" இத்யாதி யஜுஸ்ஸம்ஹிதாயாம் "யாவநஸ்யந்வொகாமா" இத்யாதி, "பாவநாசனை" இத்யத்ரைவ லிகிதம். தஞ்சம் - ஆபத்துக்கு உறுதுணை. க்ரமேண அந்வய꞉.　　(அ)

சிலத்ருஷ்டாந்தங்களால் அளவிடவொண்ணாத நிரவதிகஸ்நேஹத்தையுமுடையனாய், பகவதநுபவ ஸங்கோசமின்றிக்கே பரஸ்பரம் கூடியல்லது செல்லாதபடியான அமரஸமூஹத்துக்கு உஜ்ஜீவந ஹேதுவாயிருந்துவைத்து ப்ரஹ்மருத்ரர்களுடைய ஹ்ருதயத்திலேயும் வந்து நின்றருளி அவர்களுக்கு நியாமகனுமானவனை. மூவரிலும் வைத்துக்கொண்டு ஆதியானவனை என்றுமாம். [அஞ்சி நீர் என்று தொடங்கி] - லோகத்திலுள்ள நீங்கள் கலங்கி 'அவன் அப்ராக்ருததிவ்யஸம்ஸ்தாநயுக்தன்; இங்கு நாங்கள் காண உகந்தருளினபடியாவானன்று; ஆகையால், ஸமாஶ்ரயணம் கூடாது' என்று ஸம்ஶயிக்கவேண்டா; யாதொன்றை அவனுக்கு ஸ்வரூபமாக நினைத்திகோள், அத்தையே அவன் தன்னுடைய ஸம்ஸ்தாநத்தோடொக்க விரும்பும். இங்கு உகந்தருளின இடத்தை நீள் கடல்வண்ணனை இடத்துக்கு விபூதி யென்று நினையாதே உகந்தருளின இடத்துக்கு நீள்கடல் வண்ணனை இடம் விபூதியாகக் கொள்ளுங்கோள் என்றுமாம்.

ப.—அநந்தரம், கீழ் உக்தமான பரத்வமும் அவதாரங்களும் அஸ்மதாதிகளுக்கு நிலமன்றென்று இராதே, பிற்பட்டார்க்கும் ஆஶ்ரயிக்கலாம்படி ஸுலபமுமாய் ஸர்வவிதபந்துவுமான அர்ச்சாவதாரத்தை ஸம்ஶயரஹிதராய்க் கொண்டு ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

தஞ்சமாகிய - (ஓரவஸ்தையிலே போகட்டுப்போம் தாயுந் தந்தையு மன்றியே இவன் விடுமளவிலும் தான்விடாத) தஞ்சமாய், தந்தைதாயொடு - (ஹிதபரத்வத்தாலும் ப்ரியபரத்வத்தாலும்) தந்தையுந் தாயுமாய், (அவர்களோடுகூட), தானும் ஆய் - (தனக்கு விநாசகரனன்றித் தஞ்சமாய்த்) தனக்குநன்மையைப்பார்க்குந் தானுமாய், அவை அல்லனாய்-அவ்வளவல்லாத ஸர்வவிதபந்துவுமாய், எஞ்சல் இல் - அநுபவஸங்கோசரஹிதரான, அமரர் குலம் முதல் - நித்யஸூரிஸமூஹத்துக்கு ஸத்தாதிஹேதுபூதனாய், மூவர்தம்முள்ளும் - ப்ரஹ்மாதிமூர்த்தித்ரயத்திலும் வைத்துக்கொண்டு, ஆதியை - ப்ரதாநனானவனைப்பற்ற, உலகத்து உள்ளீர்கள் - லௌகிகரான, நீர்-நீங்கள், அஞ்சி - (மேன்மையைக்கண்டு) கலங்கி, அவன் - (அபரிச்சிந்நமஹிமனானவன்) அவன், இவன் - (நாம்நினைத்தது வடிவானவன்) இவன், என்று - என்கிற உத்கர்ஷாபகர்ஷபுத்தியாலே, கூழேன்மின் - (இவன் ஆஶ்ரயணீயனாகக்கூடுமோ? கூடாதோ? என்று) ஸம்ஶயியாதே, நெஞ்சினால் - நெஞ்சாலே, நினைப்பான் - நினைத்துஉகந்தருளுவிக்கப்பட்டவன், யவன் - யாவனொருவன், அவன் - அவன், கடல் - கடல்போலே, நீள் - அளவிறந்த, வண்ணன் - ஸ்வபாவத்தையுடைய ஸர்வேஶ்வரன், ஆகும் - ஆகும்.

"ததிச்சதி" என்கிற கணக்கிலே ஆஶ்ரயணீயமான இந்தவிக்ரஹத்துக்குள்ளே "ததேவ வ்யூஹவிரதி" என்று ப்ராப்யவிக்ரஹமும் அந்தர்ப்பூதமென்று கருத்து. கூழ்ப்பு - ஸம்ஶயம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், 'பரத்வம் எங்களுக்கு கோசரமன்று; அவதாரத்துக்குப் பிற்பாடரானோம்; நாங்கள் ஆஶ்ரயிக்கும்படி என்?' என்ன,—'நீங்கள் உகந்தபடியே உகந்தருளப் பண்ண அதிலே அப்ராக்ருதஸம்ஸ்தாநத்தோடொக்க விரும்பும் அர்ச்சாவதாரத்தில் ஆஶ்ரயியுங்கோள்' என்கிறார். இத்திருவாய்மொழிக்கு நிதாநமான பாட்டாயிற்று, இது.

[தஞ்சம் என்று தொடங்கி] - க்ஷாமகாலம்வந்தால் தூற்றடியிலே வைத்துப்போதல், விற்று உண்ணுதல் செய்யுமவர்களைப் போலன்றிக்கே தங்களை அழியமாறிநோக்கும் தாயும் தந்தையுமாய்: "ஸவ்யாஸவிதா". தந்தையானவன் தாயாகமாட்டான்; "ஏஷ ஹ்யேவ ஸா தா பிதா தாவஸாயவ". [தஞ்சமாகியதானுமாய்] - வயிறுநொந்த போதாகக் கழுத்திலே கயிற்றையிட்டுக்கொள்ளும் தானுமன்றியிலே யிருக்கை. [அவையல்லனாய்] - தந்தை தாய் தான் என்னும் இவ்வளவன்றியே அல்லாத பந்துவர்க்கமுமாய். [எஞ்சல் இத்யாதி] - எஞ்சலாகிறது -

*சுருங்குதல். பகவதநுபவத்தில் ஸங்கோசமில்லாத நித்யஸூரிகள் குலமுண்டு - திரள், அதுக்கு நிர்வாஹகனை; அவர்களுக்கு ஜீவநஹேதுவானவனை யென்றுமாம். [மூவர் இத்யாதி] - ப்ரஹ்ம ருத்ரேந்த்ரர்களுக்கு அந்தர்யாமியாய் நிர்வாஹகனுமானவனை. மூவரிலும் வைத்துக்கொண்டு ப்ரதாநனானவனை யென்றுமாம். [அஞ்சி] - ஸர்வாதிகனை ஆஶ்ரயிக்கப்போமோ? என்று அஞ்சி; உலகத்துள்ளீர்களான நீங்கள் கலங்கி. [அவனிவனென்று கூழேன்மின்] - அவனாகிறான் விலக்ஷண தேஶத்திலே அஸாதாரணவிக்ரஹ விஶிஷ்டனாயிருப்பானொருவன்; இங்கு நாம் உகந்திட்டதொரு த்ரவ்யத்தைத் திருமேனியாக விரும்புமவனாயிருக்கையாலே இவ்விடம் பரிச்சிந்நம்; அவ்விடம் அபரிச்சிந்ந மென்று ஸம்ஶயியாதே. [நெஞ்சினால் நினைப்பான் யவன்] - மநஸ்ஸாலே யாதொருவன் றை ஸ்வரூபமாக நினைத்திகோள். [அவனாகும் நீள்கடல் வண்ணன்] - அபரிச்சேத்யமஹிமனான ஸர்வேஶ்வரன் அத்தையே தனக்கு அஸாதாரணமாக விரும்பும். “ஷடிஙாவஷவாஙாநாஓ” என்னும் ருஷிகளைப்போலே தம்வாயாற் சொல்லமாட்டாமையாலே ‘அவனிவன்’ என்கிறார். [நீள் கடல்வண்ணன்] - ‘அங்குத்தைக்கு உகந்தருளின இடத்தை விபூதியாக நினையாதே இங்குத்தைக்கு அவ்விடத்தை விபூதியாக நினையுங்கோள்’ என்று நிர்வஹிக்கும் ஆண்டான்; குணாதிக்யம் இங்கேயாகையாலும், குணாதிக்யத்தாலே வஸ்துவுக்கு ஏற்றம் சொல்லுகையாலும்.*

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. பரத்வமே தொடங்கி அவதார ஸௌலப்யத்தளவும் வர உபதேசித்து, ‘ஆஶ்ரயியுங்கோள்’ என்னாநின்றீர்; பரத்வம் அவாங்மநஸகோசரம்; அவதாரத்துக்குப் பிற்பாடரானோம்; நாங்கள் எங்கே யாரை ஆஶ்ரயிப்பது? என்ன, நீங்கள் உகந்தபடியே உகந்தருளப்பண்ண, அத்திருமேனியையே அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநத்தோடொக்க விரும்பும் அர்ச்சாவதாரத்தை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார். இத்திருவாய்மொழிக்கு நிதாநம் இப்பாட்டு.

[தஞ்சமாகிய தந்தைதாயொடு தானுமாய்]-புறம்புள்ளார், ‘தாய், தமப்பன்’ என்று ஒரு பேராய், இவனுக்கு ஓர் இடர் வந்தவாறே போகட்டுப்போவர்கள்; இவனுக்கு ஏதேனும் ஒரு இடர் வந்தாலும் அப்போது முகங்காட்டி ரக்ஷிப்பான் இவனொருவனுமேயாயிற்று. மாதாபிதாக்கள் ‘இவன் பிறந்த முஹூர்த்தம் பொல்லாதது’ என்று நாற்சந்தியிலே வைத்துப் போவாரும், ஆபத்காலத்திலே அறவிட்டு ஜீவிப்பாருமா யிருக்கும்; அவர்களைப்போலன்றிக்கே, தங்களை அழிய

---

*ஒன்பதாம்பாட்டு - ‘தஞ்சமாகிய’ இத்யாதி. பரத்வாதிகளைச் சொன்ன அநந்தரம் அர்ச்சாவதாரத்தைச் சொல்லுகையாலே - பரத்வாதிகளுக்கு ஆளாக மாட்டோம் என்று ஶங்கித்த ஸம்ஸாரிகளுக்கு ‘ஆஶ்ரயணீயத்வே ஸௌலப்யம் அர்ச்சாவதாரம்’ என்னுமிடம் தோற்ற அருளிச்செய்கிறார் - ‘பரத்வமே தொடங்கி’ இத்யாதி. அத்ர - “ஸ்ரீமதெஷ்யாஜீநஸீவோஜ்நவெயாஷவெடிவதாராஃகவிகாமெவிஶஜநீநஓ”* இத்யாதி ஶ்லோகோநுஸந்தேயஃ. ‘நெஞ்சினால் நினைப்பான் யவன் அவனாகும்’என்றதைப்பற்ற, ‘நீங்கள் உகந்தபடியே’ இத்யாதி. நீங்களுகந்த படியே உகந்தருளப் பண்ண - உங்களுக்கு அபிமதமான விக்ரஹத்தையே அவனும் உகக்கும்படி ப்ரார்த்தித்து எறியருளப்பண்ண.*

*“ தந்தைதாய் ” என்னாதே ‘தஞ்சமாகிய’ என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யத்வயம் : அதாவது - மாதாபிதாக்கள் ஸ்வார்த்தபரராகையாலே தஞ்சமல்லரென்னுதல் ; கர்மநிபந்தநமான ஸம்பந்த முடையராகையாலே அநித்யர், ஆகையாலே தஞ்சமல்ல ரென்னுதல். அதில், ஸ்வார்த்தபரதையை த்ரேதா தர்ஶிப்பிக்கிறார் - ‘புறம்புள்ளார்’ இத்யாதி. இடர்வந்தவாறே போகட்டது - காகத்தினிடத்திலும், நாற்சந்தியிலே போகட்டது - ஜராஸந்தனிடத்திலும், அறவிட்டு ஜீவித்தது - விஶ்வாமித்ரன் மருமகன் ஶுநஶ்ஶேபனிடத்திலும் கண்டுகொள்வது. அறவிட்டு - விக்ரயித்து. த்விதீயார்த்தம் - இவர்களோடு இத்*

---

*“ஷதஷிதியீஃ ஸ்ரீரஜுயாஜேநுயஶ கூதஷுவஜாமதிமெகெஃ கூவாகஷஓஷிமெதரா மொகிமெதராஜூயநு விஶதூரணவிமேநுஸஷிதயா நிஜூாவஸி ஜாமயஜுயா” என்பது ஶ்லோகஶேஷம்.

மாறியும் நோக்கும் தாயும் தந்தையுமாய் இவர்களோடு உண்டான பந்தந்தான் கர்மமடியாக வந்த தாகையாலே அக்கர்மம் க்ஷயிக்க க்ஷயிக்கும்; இங்கு அங்ஙனன்றிக்கே, "ஹூதாநாம்யோऽவ்யயஃ பிதா" (பூதாநாம்யோவ்யயஃபிதா), "ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதாமாதாசமாதவஃ" (ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவஃ) என்கிறபடியே * ஸத்தாயோகி ஸகல பதார்த்தங்களுக்கும் பிதாவாயிருக்கும்; அதுதன்னிலும் இழவுக்குக் கண்ணநீர் பாய வேண்டாத பிதாவாயிருக்கும். [தானுமாய்] - தந்தையானவன் தாயாகமாட்டான்; தாயானவள் தந்தையாகமாட்டாள்; இவர்களிருவரும் இவன்தானாக மாட்டார்கள்; இவன் தான் இவர்களிருவரு மாகமாட்டான்; இவையெல்லாமாய். [தானுமாய்] - மாதாபிதாக்கள் போகட்டுப்போனவன்றும் 'நான் ஜீவிக்கவேணும், எனக்கு நன்மை உண்டாகவேணும்' என்றிறே தான் இருப்பது; இப்படி தனக்கு நன்மைபார்க்கும் தானுமாய். தஞ்சமாகிய தந்தை, தஞ்சமாகிய தாய், தஞ்சமாகிய தான் என்று எல்லாவிடத்திலும் தஞ்சம் வரக்கடவது. தாயும் தமப்பனும் வேணுமாகில் தஞ்சமன்றிக்கே யொழிகிறார்கள்; தான் தனக்குத் தஞ்சமன்றோவென்னில்;—அன்று, "விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும்" (விசித்ராதேஹஸம்பத்தி ரீஶ்வராய நிவேதிதும்) என்கிறபடியே ஸர்வேஶ்வரன் இவனுக்குக் கரசரணாத்யவயவங்களைக் கொடுத்துவிட்டால், "அந்நாள் நீதந்த வாக்கையின்வழி யுழல்வேன்" என்கிறபடியே அபதே ப்ரவ்ருத்தனுமவனிறே; ஆகையாலே, தனக்குத் தான் தஞ்சமல்லன். [அவையல்லனாய்] - தந்தை, தாய், தான் என்னும் இவ்வளவன்றிக்கே, "மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்கதிர்நாராயணஃ" (மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயணஃ) என்றும், "பித்ருமாத்ருஸுதப்ராத்ருதாரமித்ராதயோऽபிவா । ஏகைகபலலாபாய ஸர்வலாபாயகேஶவஃ" (பித்ருமாத்ருஸுதப்ராத்ருதாரமித்ராதயோபிவா ஏகைகபலலாபாய ஸர்வலாபாயகேஶவஃ) என்றும் சொல்லுகிறபடியே ஸர்வோபகாரகனும் ஸர்வவிதபந்துவும் அவனேயிறே. [எஞ்சலில் அமரர்

யாதி. கர்மம் க்ஷயித்தால் ம்ருதராவர்களென்றபடி. பாரதே, "பவித்ராணாம் பவித்ரம்யோ மங்களாநாஞ்ச மங்களம் । தைவதம் தைவதாநாஞ்ச பூதாநாம் யோऽவ்யயஃ பிதா". தத்ரைவ மார்க்கண்டேயஃ "ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவஃ । கச்சத்வமேநம் ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷபாஃ". "பூதாநாம், ஸர்வேஷாம்" என்றதுக்கு அர்த்தம் - 'ஸத்தாயோகி' இத்யாதி. "அவ்யயஃபிதா" என்றதுக்கு அர்த்தம்-'அதுதன்னிலும்' இத்யாதி. தானும் என்றசஶப்தம் உக்தஸமுச்சயபர மென்கிறார், 'தந்தையானவன்' இத்யாதி. 'தஞ்சமாகிய' என்றத்தை - தானுமாய் என்றதிலும் கூட்டி அர்த்தம் - 'மாதா பிதாக்கள்' இத்யாதி. ஸ்வார்த்தபராதிகளாலே தஞ்சமன்றிக்கேயிருக்கிற மாதா பிதாக்களைப்போ லன்றிக்கே, எப்போதும் தனக்கு நன்மையே பார்க்குமவனாகையாலே தான் தனக்குத் தஞ்சமன்றோ ? என்ன, விஷயப்ராவண்யாதிகளாலே தான் தனக்கு நாசகனாகையாலே தான் தனக்குத் தஞ்சமல்லன். அவற்றில் ப்ரவணனாகாதபடி தன்னை நோக்குகையாலே ஈஶ்வரனே தஞ்சமென்று தன்னைப் பற்ற ஈஶ்வரனுக்குஉண்டான வ்யாவ்ருத்தியை அருளிச்செய்கைக்காக அதிஷ்டிகையிடுகிறார், 'தஞ்சமாகிய தந்தை' இத்யாதி. அந்த வ்யாவ்ருத்தியை ஶங்காபரிஹாரமுகேந அருளிச்செய்கிறார், 'தாயும் தமப்பனும்' இத்யாதி. அவையல்லனாய் - அவ்வளவல்லாத ஸர்வவித பந்துவுமாய். "விசித்ராதேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும் । பூர்வமேவக்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா" இதி ஸ்ரீவிஷ்ணுதத்த்வே. "மாதா பிதா ப்ராதா" இத்யாதி "ஸர்வலாபாயகேஶவஃ" இத்யந்தம் †ஸுபாலோபநிஷதி. 'ஸர்வலாபாய' என்றத்தைப் பற்ற. 'ஸர்வோபகாரகனும்' என்றது. "மாதாபிதா" இத்யாதியைப்பற்ற 'ஸர்வவிதபந்து

* ஸத்தாயோகி - உள்ளனவான. † 'மாதாபிதாப்ராதா' என்றதற்குப்பின் 'ஸுபாலோபநிஷதி' என்றதைக் கூட்டிக்கொள்ளவேண்டும். 'ஸர்வலாபாயகேஶவஃ' ஐதஹ்யம் என்றதற்கு 'ஜ்ஞாதாக்ரம்' என்று சேஷமென்பர்.

இத்யாதி]-இப்படி யிருக்கிறவன் ஆர் என்னில்;-நித்யஸூரிகளுக்கு ஜீவநஹேதுவானவ னென்கிருர். எஞ்சல்-சுருங்கல். இல்-இல்லாமை. பகவதநுபவத்தில் ஸங்கோசமில்லாத நித்யஸூரிகள் குல முண்டு - திரள், அதுக்கு நிர்வாஹகனை. [மூவர்தம்முள்ளும் ஆதியை] - மூவர்தாம் உள்ளுகிற ஆதியை - த்யேயவஸ்துவை. "காரணந்து த்யேய:" (காரணந்து த்யேய:) இறே. ப்ரஹ்ம ருத்ரேந்த்ரர்களுக்கும் அந்தர்யாமியாய் நிர்வாஹகனுமானவனை யென்றுமாம்; மூவரிலும் வைத்துக் கொண்டு ப்ரதாநனானவனை யென்றுமாம். அப்போது, இந்த்ரனை யொழியக்கடவது. மூவரென் கிற இது - கணனையாய், மூவரிலும் வைத்துக்கொண்டு காரணபூத னென்றபடி. [அஞ்சி] - கீழ்ச் சொன்னவையெல்லாம் அச்சத்துக்கு உடலிறே. ஜகத்துக்கு ஸர்வவித பந்துவுமாயிருக்கிறவனை நம்மாலே கிட்டப்போமோ? நித்யஸூரிகளுக்கு ஸத்தாஹேதுவா யிருக்கிறவனை நம்மாலே கிட்டப் போமோ? ப்ரஹ்மருத்ரர்களுக்கு நிர்வாஹகனா யிருக்கிறவனை நம்மாலே கிட்டப்போமோ? என்று இங்ஙனே அஞ்சி. [நீர் உலகத்துள்ளீர்கள்] - லௌகிகரான நீங்கள். [அவனிவனென்று கூழேன் மின்] - அவனுகிருன் - தேசகாலவஸ்துக்களால் அபரிச்சிந்நனாய் அஸாதாரண விக்ரஹத்தோடே நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யனாய்க்கொண்டிருக்கிறு னொருவன்; இவனுகிருன் - தேசகால வஸ் துக்களாற் பிற்பட்டு, நாம் உகந்ததொரு த்ரவ்யத்தைத் தனக்குத் திருமேனியாகக்கொண்டு இவ் வழியாலே நம் புத்யதீநனா யிருப்பானொருவன். ஆனபின்பு, அவன் அபரிச்சிந்நன்; இவன் பரிச் சிந்நனென்று இங்ஙனே ஸம்ஸயாக்ராந்தராகாதே கொள்ளுங்கோள். * (கூழ்ப்பு-ஸம்ஸயம்.) [நெஞ் சினுல் நினைப்பான் யவன்] - மநஸ்ஸாலே யாதொன்றைத் திருமேனியாகக் கோலினிகோள். [அவ னுதம் நீள்கடல்வண்ணனே] - அபரிச்சேத்யமஹிமனான ஸர்வேஸ்வரன் அத்தையே தனக்கு அஸாதாரணவிக்ரஹமாகக் கொண்டு விரும்பும். "ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்" (ப்ரதிமாஸ்வ ப்ரபுத்தாநாம்) என்று ருஷிகளைப்போலே தம் வாயாற் சொல்லமாட்டாமையாலே 'அவனிவன்' என் கிருர். "அங்குத்தைக்கு உகந்தருளின இடத்தை விபூதியாக நினையாதே, இங்குத்தைக்கு அவ்வி

---

வும்' என்றது. 'மூவர்தம்முள்ளுமாதியை' என்றதுக்கு அர்த்தத்ரயம். முந்தினது-'மூவர்தாம்' இத்யாதி. அதாவது- ப்ரஹ்மருத்ரேந்த்ரர்கள் த்யாநம் பண்ணுகிற காரணபூதனை யித்யர்த்த:. இரண்டாமர்த்தம், 'ப்ரஹ்மருத்ரேந்த் ரர்களுக்கு' இத்யாதி. உள்ளும் ஆய் - அந்தர்யாமியாய். த்ருதீயார்த்தம் - 'மூவரிலும்' இத்யாதி. இவ்வர்த்தத் தில், 'மூவர் தம்முள்ளும்' என்று முழுச் சொல்லாய், த்ரயாணும் மத்யே என்றபடி. 'மூவர்தம்முள் ளும்' என்றால் - மூவரிலும் வைத்துக்கொண்டு என்று நிர்த்தாரணமாக அர்த்தம் சொல்லும் க்ரமம் எப்படி? என்ன, 'மூவரென்கிற' இத்யாதி. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார ரூபமான கார்யங்கள் மூன் றுக்கும் மூன்று பேரைக் காரணமாக கணனை பண்ணின இத்தனை. அவர்களுக்கும் கடவனிவனுகை யாலே, அவர்களுக்குள்ளே காரணபூதன் இவனே யென்றபடி. அச்சத்துக்கு ப்ரஸக்தி யேது? என்ன, 'கீழ்ச்சொன்ன' இத்யாதி. இத்தை உபபாதிக்கிருர். 'ஜகத்துக்கு' இத்யாதி. 'ஸர்வவித பந்துவுமாயிருக்கிற வனை' என்றது, ஸாதாரண பந்துவன்ருே? நம்மால் கிட்டப்போமோ? என்று அச்சத்துக்கு ஹேது வென்றபடி. உலகத்துள்ளீர்கள் நீர் இத்யந்வய:. லௌகிகரான நீங்கள் கூழேன்மின்; கூழ்ப்பு - ஸம்ஸயம்; ஸம்ஸயப்படாதே கொள்ளுங்கோள். 'நெஞ்சினுல் நினைப்பான் யவன் - நீள் கடல்வண்ணன் - அவனுதும்' என்று அந்வயித்து அர்த்தம்-'மநஸ்ஸாலே' இத்யாதி. அத்தையே- நீங்கள் கோலின விக்ரஹத்தையே. அர்ச்சாவதார விக்ரஹத்தைச் சொல்லுகிருராகில், நெஞ்சினுல் நினைப்பது யாதொன்று என்று தொழிவானென்? என்ன 'ப்ரதிமாஸு' இத் யாதி. "ஜலே திஷ்டதி விப்ராணாம் ஹ்ருதி திஷ்டதி யோகிநாம் । ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம் ஸர்வத்ர ஸமதர்சிநாம்" இதுக்கு ஆகரம் கண்டுகொள்வது. 'நெஞ்சினுல் நினைப்பான் யவன், அவனே நீள்கடல் வண்ணனுதும்' என்று அந்வயித்து அர்த்தம் - 'அங்குத்தைக்கு' இத்யாதி. இந்த யோஜனையில் - அர்ச் சாவதாரத்துக்கு ப்ராதாந்யம். முந்தின யோஜனையில் - பரமபதநாதனுக்கு ப்ராதாந்யம். அங்குத்தைக்கு - பரமபத நாதனுக்கு. உகந்தருளின இடத்தை - அர்ச்சாவதாரத்தை. விபூதியாக-ஸேஷமாக. இங்குத்தைக்கு -

---

* குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்.

டத்தை விபூதியாக நினையுங்கோள்'' என்று பணிக்கும் ஆண்டான்; ''யெயதாமாம்ப்ரபத்யந்தே'' (யேயதாமாம்ப்ரபத்யந்தே) என்றும், ''மநஸாபிக்லுப்தஃ'' (மநஸாபிக்லுப்தஃ) என்றும், ''ஸம்ருதம் ஸங்கல்பநாமயம்'' (ஸம்ருதம் ஸங்கல்பநாமயம்) என்றும், ''ஸுவர்ணரஜதாதிபிஃ'' (ஸுவர்ணரஜதாதிபிஃ) என்றும் சொல்லுகிறபடியே. அஸாதாரணவிக்ரஹத்தை நாம் ஆதரிக்கிறதும் 'அவன் பரிக்ரஹித்தது' என்றிறே; அவ்வோபாதி இதுவும் அவன் பரிக்ரஹித்தானாகையால் ஆதரிக்கத் தட்டில்லையிறே. முதல்தன்னிலே அவன் திருமேனியைப் பரிக்ரஹித்ததும், ''பக்தாநாம்'' (பக்தாநாம்) என்கிறபடியே ஆஸ்ரிதார்த்தமாகவிறே, அது கார்யகரமாமிடத்திலேயிறே மிகவும் உறைக்க இருப்பது; ஆகையாலே, நீள்கடல்வண்ணன் அவனுகும். (க)

## பத்தாம் பாட்டு.

கடல்வண்ணன்கண்ணன் விண்ணவர்கருமாணிக்கம்எனதாருயிர்
படவரவினணைக்கிடந்த பரஞ்சுடர் பண்டுநூற்றுவர்
அடவரும்படைமங்க ஐவர்கட்காகிவெஞ்சமத்துஅன்றுதேர்
கடவியபெருமான்கனைகழல் காண்பதுஎன்றுகொல்கண்களே.

ஆ.—(கடல்வண்ணன்.) அபரிச்சேத்ய மாஹாத்ம்யனை அயர்வறுமமரர்களுக்கு போக்யமாய் நாகபர்யங்கஸாயியா யிருந்துவைத்து வஸுதேவக்ருஹேவதீர்ணனை எனக்கு ப்ராண

அர்ச்சாவதாரத்துக்கு. ஆண்டான் நிர்வாஹத்தில் - குணாதிக்யத்தாலே வஸ்துவுக்கு ப்ராதாந்யமாகையாலே குணாதிக்யமுள்ள அர்ச்சாவதாரமே ப்ரதாநமென்று கருத்து. நெஞ்சினால் நினைப்பான் யவன் - மநஸ்ஸாலே திருமேனியாக நினைத்து ஏறியருளுவிக்கப்பட்டது யாதொன்று, அவனுகும்-அத்தையே திருமேனியாகவுடையனும், கடல் நீள் வண்ணன் இத்யந்வயஃ; கடல்போலே நீண்ட அபரிச்சேத்யமான ஸ்வபாவத்தையுடைய ஸர்வேஸ்வரனித்யர்த்தஃ. வண்ணம்-ஸ்வபாவம். நீள்-நீண்ட, அபரிச்சேத்யமானவென்றபடி. மூந்தின யோஜனைக்கு ப்ரமாணம்- 'யேயதா'இத்யாதி, கீதாஸு பூர்வமேவ லிகிதம். ஸங்கல்பநாமயமிதிச பஞ்சமேம்ஸே பூர்வமேவ லிகிதம். ''ஹ்ருதா மநீஷா மநஸாபிக்லுப்தோ யஎநம்விதுரம்ருதாஸ்தே பவந்தி'' இதி ஸ்ரீமதி நாராயணே. ஸ்ரீ விஷ்ணுதர்மே ஸௌநகஃ ''ஸுராமப்ரமேயம் ப்ரதிமாம் விஷ்ணோஃ ப்ரஸந்நவதநேக்ஷணாம் । க்ருத்வாத்மந: ப்ரீதிகரீம் ஸுவர்ணரஜதாதிபிஃ தாமர்ச்சயேத்'' இத்யாதி. அப்ராக்ருதவிக்ரஹத்தில் பண்ணக்கடவ ஆதரத்தை அர்ச்சாவதாரத்திலே பண்ணக்கூடுமோ? என்ன, கூடுமென்னுமத்தை ஸஹேதுகமாகக் காட்டுகிறார், 'அஸாதாரண விக்ரஹத்தை' இத்யாதி. ஈஸ்வரன் அஸாதாரண விக்ரஹத்திற்போலே அர்ச்சாவதார விக்ரஹத்திலே ஆதரத்தைப் பண்ணிக் கொண்டு வர்த்திக்கக்கூடுமோ? என்ன, அதிலும் மிகவும் ஆதரித்து வர்த்திக்குமென்கிறார் - 'முதல்தன்னிலே' இத்யாதி. உறைக்க இருப்பது-பூர்ணதயாதிஷ்டாநம். உலகத்துள்ளீர்கள் - நீர் தஞ்சமாகிய வித்யாரப்ய ஆதியைப் பற்ற - அஞ்சி - அவனிவனென்று கூழேன்மினித்யாரப்யாந்வயஃ. 'ஹ்ருதா மநீஷா'' இத்யாதேரயமர்த்தஃ :— ஹ்ருதா - பக்த்யா, மநீஷா - மநீஷயா, த்ருத்யா- ''ஸுபாம்ஸுலுக்'' இதி த்ருதீயாயாலோபஃ. த்ருதிஃ - ஈப்ஸிதார்த்தே மநஸோ நிஸ்சஞ்சலாவஸ்தாநம். பக்த்யா த்ருத்யாச விஸிஷ்டேமநஸா, அபிக்லுப்தஃ கல்பிதஃ நிர்மித இத்யர்த்தஃ.யே, ஏநம் இத்தம் நிர்மிதம் விதுஃ;தே அம்ருதாபவந்தீத்யர்த்தஃ. அபிக்லுப்தஃ- அபிநிஷ்பாதிதஇதி ஹ்ருதா மநீஷா மநஸா யதிஹ அபிக்லுப்தோ ப்ரஸ்ஸோபாஸக வ்யாபாரஸாபேக்ஷஃ ஸ்வயம் வ்யக்தே, ஸதயாஹமேவேதி ஹ்ருதா. தயாவஸ்யமேவ மீதவாந், 'யேயதாமாம்ப்ரபத்யந்தே' இதி '' ஏவம் நாராயணயதிநா வ்யாக்யாதம். (க)

ளுய், துர்யோதநாதிகள் ஸஸைந்யமாக நசிக்கும்படி பாண்டவர்களுக்காக ஸாரத்யேஸ்திதனாயிருந்த எம்பெருமானுடைய திருவடிகளை என்றோ என்னுடைய * கரணங்கள் காண்பது? என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், தாம் உபதேசிக்கத் தொடங்கின ஸௌலப்யகாஷ்டையை உபதேசித்துச்சமைந்து ப்ரஸ்துதமான க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தை ஸ்மரித்துத் திருத்தேரிலே யிருந்து ஸாரத்யம்பண்ணினவனுடைய நிரதிசயபோக்யமான திருவடிகளை என்றோ நான் காணப் பெறுவது? என்கிறார்.

[கடல்வண்ணன் என்று தொடங்கி] - கடல்வண்ணனான கண்ணன், விண்ணவர்க்கு போக்யமானாற்போலே எனக்குபோக்யமாகைக்கு ஈடாக வருகைக்காகத் திருப்பாற்கடலிலே தன்னோட்டை ஸ்பர்சத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே கண் வளர்ந்தருளுகையாலே அத்யுஜ்ஜ்வலனுயுள்ளான். [பண்டுநூற்றுவர் என்று மேலுக்கு]-பண்டு பாதகமாய் வருகிற ஸேனையோடுகூடின நூற்றுவர் மங்கும்படி பாண்டவர்களுக்காக யுத்தம் செல்லா நிற்க. கணைக்கை - த்வநிக்கை, செறிகை யென்றுமாம். பண்டு என்னச்செய்தே திரியவும் 'அன்று' என்பானென்? என்னில், - ஒன்று போனகாலத்திலே இங்ஙன் வ்ருத்த மென்கிறது; ஒன்று அன்றைக்கு உதவாதே நான் இழந்தே னென்கிறது.

ப.—அநந்தரம், இப்படி ஆச்ரித பராதீநதைக்குச் சிரமஞ்செய்த க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தை அநுஸந்தித்து உபதேசாநந்தரம் தாம் அநுபவிக்க ஆசைப்படுகிறார்.

விண்ணவர் - பரமபதவாஸிகளுக்கு, கருமாணிக்கம் - நீலரத்நம்போலே அவிகாராகாரனாய்க்கொண்டு போக்யனாய், (லீலாவிபூதிநிர்வஹணார்த்தமாக), படம் - (ஸ்வஸ்பர்சத்தாலே விகஸித) பணங்களையுடையனாய், அரவின் - (ஜாதிப்ரயுக்தமான மென்மை குளிர்த்தி நாற்றங்களையுடைய) அநந்தனாகிற, அணைக் கிடந்த - அணையின்மேலே, பரஞ்சுடர் - (பரபாகத்தால் வந்த தேஜஸ்ஸாலே ஸர்வாதிகனென்று தோன்றும்படியான) பேரொளியையுடையனாய், (அபரிச்சிந்ந மாஹாத்ம்யத்தையுடையனாய்), கடல்வண்ணன் - கடல்போலே அளவிறந்த குணங்களையுடையனாய் ச்ரமஹரமான வடிவையுடைய, கண்ணன் - க்ருஷ்ணன், எனது - எனக்கு, ஆர் உயிர் - தன்னை யொழியச்செல்லாதபடி தாரகனாய்க்கொண்டு, பண்டு - முற்காலத்திலே, நூற்றுவர் - (துர்யோதநாதிகள்) நூற்றுவராய், அட வரும் - தன்பக்கலிலே திங்குநினைத்து வருகிற, படை - படையானது, மங்க - நசிக்கும்படியாக, ஐவர்கட்கு - பாண்டவர்களைவர்க்கும், ஆகி - ஸர்வப்ரகார ரக்ஷகனாய், வெம் சமத்து - வெவ்விதான ஸமரத்திலே, அன்று - (சத்ருக்கள் மேலிட்டு வந்த) அன்று, தேர் கடவிய - தேரை (ஸாரதியாய்நின்று) நடத்தின, பெருமான் - ஸ்ரீலாதிகனுடைய, கனை கழல் - ஸுஸ்வநமான வெற்றிவீரக்கழல் செறிந்த திருவடிகளை, கண்கள் - கண்கள், காண்பது - (தம் ஆசைதீரக்) காண்பது, என்றுகொல் - என்றோ ?

இ.—பத்தாம்பாட்டில், தாம் உபதேசிக்கத் தொடங்கின ஸௌலப்யகாஷ்டையை உபதேசித்துச் சமைந்து கீழ் ப்ரஸ்துதமாய்த் தாம் அகப்பட்ட துறையான க்ருஷ்ணாவதாரத்தை அநுபவிக்க ஆசைப்படுகிறார். திருவடி, போகிற இடம் விலக்ஷணமென்று அறியாநிற்கச்செய்தே "ஹாவொ-நா-நு ரு மஹு தி" என்று அவ்வருகு போகமாட்டாதாப்போலே இவரும் அர்ச்சாவதார ஸௌலப்யம் அறிந்திருக்கச்செய்தே "எத்திறம்!" என்று மோஹிக்கப்பண்ணும் க்ருஷ்ணாவதாரத்துக்கு இவ்வருகு போகமாட்டாதிருக்கிறார்.

[கடல்வண்ணன் இத்யாதி] - விண்ணவர் கருமாணிக்கம் படவரவினணைக்கிடந்த பரஞ்சுடர் கடல் வண்ணன் கண்ணன் எனது ஆருயிர் - நித்யஸூரிகளுக்கு போக்யமானவன்

* 'கண்கள்' என்று பாடமிருக்கலாம்.

கலங்காப் பெருநகரை விட்டு ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயனுகைக்காக ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணங்களையுடையனுய், அரவு என்கையாலே மென்மை குளிர்த்தி நாற்றங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளினவனுய். [பரஞ்சுடர்] - திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தபடியாலே தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே புகர்மிக்கிருந்தபடி யென்னுதல், ஸர்வாதிகனென்று தோற்றும்படி யிருக்கு மென்னுதல். [கடல்வண்ணன் கண்ணன்] - அபரிச்சேத்யமஹிமனுன க்ருஷ்ணன் என்னுதல், ஶ்ரமஹரமான வடிவையுடைய க்ருஷ்ணன் என்னுதல். [எனதாருயிர்] - எனக்கு தாரகாதிகளெல்லாம் தானே யானவன். [பண்டு] - முன்பு ஒருநாளிலே துர்வர்க்கமாய் ப்ரதாநரான நூற்றுவரோடே முடிக்கவந்த ஸேனை நசிக்கும்படி 'ஸாரதீ! ஸாரதீ!' என்று வாய்பாறிவந்த ஸேனையிறே. [ஐவர்கட்காகி] - "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா:" என்று தானல்லது தஞ்சமில்லாத பாண்டவர்கட்காக. [வெஞ்சமத்து இத்யாதி]-யுத்தத்திலே அன்று தேரிலே ரதியாயன்றிக்கே கையாளாய் ஸாரத்யம் பண்ணினவனுடைய நிரதிஶய போக்யமான திருவடிகளை, "காண்பது எஞ்ஞான்றுகொலோ?" என்கிறபடியே பட்டினியாய்க் கிடக்கிற கண்கள் காண்பது; ஸேநாதூளியும் உளவுகோலும் சிறுவாய்க்கயிறுமான வடிவைக் காண்பது என்றே? கனைக்கை - த்வநிக்கை யென்னுதல், செறிகை யென்னுதல்.

ஈடு.—பத்தாம்பாட்டு. தாம் உபதேசிக்கத்தொடங்கின ஸௌலப்யத்தை அர்ச்சாவதார பர்யந்தமாக அருளிச்செய்து, அநந்தரம், தன்துறையான க்ருஷ்ணுவதாரத்திலே போய், 'நான் கண்ணுலே கண்டு அநுபவிக்கப் பெறுவது என்றே?' என்னும் அநவாப்தியோடே தலைக்கட்டுகிறுர். அருமையும் எளிமையும் பாரார்களிறே, ஓரோவிஷயங்களிலே ப்ரவணராயிருப்பார்; பரத்வத்துக்கு உத்கர்ஷமுண்டாய், போவாரும் பலருண்டா யிருக்கச்செய்தேயும் "பாவோநாந்யத்ர கச்சதி" (பாவோநாந்யத்ரகச்சதி) என்றுனிறே திருவடி; அப்படி, க்ருஷ்ணுவதாரத்திற்காட்டில் அர்ச்சாவதாரத்துக்கு நீர்மை மிக்கிருந்ததேயாகிலும், இவர் "எத்திறம்!" என்று ஆழங்காற்பட்டது க்ருஷ்ணுவதாரத்திலேயாயிற்று. "தயரதற்குமகன்தன்னை யன்றி மற்றிலேன்" என்றது செய்வதென்? என்னில்,—இவ்வருகில் நீர்மைகாணுமளவுமிறே இது சொல்லுகிறது. ஆனுல், அதில் நீர்மை மிக்கவிடமன்றே அர்ச்சாவதாரம்? என்னில்;—அதுக்குமுன்பே பரிஹாரஞ் சொல்லிற்றிறே.

[கடல்வண்ணன்இத்யாதி]-[விண்ணவர்கருமாணிக்கம்]-நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யமான விக்ரஹத்தையுடையவன். [படவரவினணைக் கிடந்த பரஞ்சுடர்] - அங்குநின்றும் பேர்ந்து, ப்ரஹ்மாதிகள் கூக்குரல்கேட்கைக்காகத் திருப்பாற்கடலிலே அணித்தாகவந்து கண்வளர்ந்தருளினவன். [கடல்வண்ணன்கண்ணன்] - அங்குநின்றும் பேர்ந்து எல்லார்க்கும் அநுபவிக்கலாம்படி க்ருஷ்ணனுய் வந்து அவதரித்தவன். நித்யஸூரிகளுக்கு போக்யனுனவன், கலங்காப் பெருநக

---

பத்தாம்பாட்டு - கடல்வண்ணன் இத்யாதி. கீழே-அர்ச்சாவதார ஸௌலப்யத்தை அருளிச் செய்ததுக்கும், இப்பாட்டிலே க்ருஷ்ணன் திருவடிகளைக் காண்பதென்றே ? என்கைக்கும் ஸங்கதி - 'தாம் உபதேசிக்க' இத்யாதி. ஸுலபமான அர்ச்சாவதாரத்தை விட்டு அதீதமான அவதாரத்திலே போவானென்? என்ன, 'அருமையும்' இத்யாதி. இப்படி ப்ராவண்யத்தாலே அருமையும் எளிமையும் பாராதிருந்த பேருண்டோ? என்ன, 'பரத்வத்துக்கு' இத்யாதி. உத்தர ஸ்ரீராமாயணே ஹநுமாந், "ஸ்நேஹோமேபரமோராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித: । பக்திஶ்ச நியதா வீர பாவோநாந்யத்ர கச்சதி". அருமையும் எளிமையும் என்றது - வைலக்ஷண்யாவைலக்ஷண்யங்களை; இது வ்யாக்யாநத்திலே விஶதம். இவ்வருகில்நீர்மை - க்ருஷ்ணுவதாரத்தில் நீர்மை. முன்பே பரிஹாரம் சொல்லிற்றிறே - 'அருமையும் எளிமையும்' இத்யாதியாலே சொல்லிற்றிறே.

விண்ணவர் கருமாணிக்கம் - படவரவினணைக்கிடந்த பரஞ்சுடர் - கடல்வண்ணன் கண்ணன் - எனதாருயிர் - என்று அந்வயித்து அர்த்தம் - 'நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யமான' இத்யாதி. கூக்குரல் - கூப்பீடு. அணித்தாக - ஸமீபமாக. உக்தத்தை யெல்லாம் கூட்டி அருளிச் செய்கிறுர் - 'நித்யஸூரிகளுக்கு போக்

ரத்தை விட்டு, ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயனுகைக்காக ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதபண னான திருவநந்தாழ்வான்மேலே க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி, அவனுடைய ஸ்பர்ஶத்தாலே தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே மிக்க அழகையுடையனாய், 'ஸர்வாதிகன்' என்று தோற்றும் படியாய், ஶ்ரமஹரமான வடிவையுடையனாய், அபரிச்சேத்யமஹிமனான க்ருஷ்ணன். [எனது ஆருயிர்] - எனக்கு ப்ராணாதிகளெல்லாம் தானேயானவன். [படவரவு இத்யாதி] - தன்னுடைய ஸ்பர்ஶஸுகத்தாலே விகஸிதமான பணங்களை யுடையனாயிருக்கும் இவன்; இவனுடைய ஸ்பர்ஶம் தனக்கு ஆகர்ஷகமா யிருக்கும்படி சொல்லுகிறது. - 'அரவு' என்கையாலே; நாற்றக்குளிர்த்தி மென்மைகள் ப்ரக்ருதியாயிருக்குமிறே ஸர்ப்பஜாதிக்காக. [பரஞ்சுடர்] - இவன்மேலே சாய்ந்தாலாயிற்று, இவன் ஸர்வாதிகனென்று தோற்றுவது. [பண்டு] - முன்பு ஒரு நாளிலே. [நூற்றுவர் இத்யாதி] - துர்வர்க்கமடையக் குடிகொண்டதிறே துர்யோதநாதிகளோடே. [அடவரும்படை மங்க] - 'ஸாரதீ! ஸாரதீ!' என்று வாய்பாறிக்கொண்டிறே பையல்கள் வருவது. கொல்லவருகிற படை நசிக்கும்படியாக. "அஸ்மாந்ஹந்தும்" (அஸ்மாந்ஹந்தும்) என்கிறபடியே தம்மை முடிக்கவந்தாற்போலே யிருக்கிறதாயிற்று, அங்கே நலிய வருகிற இது. [ஐவர்கட்காகி] - "க்ருஷ்ணாஶ்ரயா:" (க்ருஷ்ணாஶ்ரயா:) என்கிறபடியாலே தானல்லது தஞ்சமில்லாத ஐவர்கட்காகி. [வெஞ்சமத்து] - யுத்தத்திலே. 'நம்முடைய ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தை லோகமாகக் காணவேணும்' என்றுபார்த்து "பார்த்தம்ரதிநமாத்மாநஞ்சஸாரதிம் ஸர்வலோகஸாக்ஷிகஞ்சகார" (பார்த்தம்ரதிநமாத்மாநஞ்சஸாரதிம் ஸர்வலோகஸாக்ஷிகஞ்சகார) என்கிறபடியே எல்லார் கண்ணுக்கும் இலக்காக்கினான். [அன்று] - உகவாதாரும் கண்டு வாழ்ந்த நாளிலே இழந்த நான் இனிப் பெறுகை யென்று ஒன்றுண்டோ? என்று வெறுக்கிறார் இழவுக்கு. [தேர் இத்யாதி] - ஸேநாதூளியும் உளவுகோலும் சிறுவாய்க்கயிறும் தேருக்குக்கீழே நாற்றின திருவடிகளும் அதிலேசாத்தின சிறுச்சதங்கையுமாய் ஸாரத்யவேஷத்தோடே நின்றபோதைத் திருவடிகளில் ஆபரணத்வநி சேவிப்படவும் அவ்வடிவைக் காணவுங்காணும் ஆசை. [கனைகழல்] - செறிந்த என்னுதல், த்வநிக்

---

யனான' இத்யாதி. 'பரஞ்சுடர்' என்றதுக்கு அர்த்தத்வயம் - பரபாகத்தால் வந்த அழகென்னுதல், அநந்தஶாயித்வத்தால் வந்த மேன்மையாதல். இரண்டையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார், அவனுடைய ஸ்பர்ஶத்தாலே' இத்யாதி. 'கடல்வண்ணன்' என்ற வண்ணம் - வர்ணமாதல், ஸ்வபாவமாதல். உபயத்தையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார், 'ஶ்ரமஹரமான' இத்யாதி. படவரவு பரஞ்சுடர் என்ற பதத்வயத்துக்கும் அடைவே பாவம் - 'தன்னுடைய ஸ்பர்ஶ' இத்யாதி. அன்றிக்கே, மூன்றாம் அர்த்தமாதல். அதாவது - தன்னுடைய ஸ்பர்ஶஸுகத்தாலே அவன் விகஸிதபணனாயிருக்க, அத்தாலே தன்வடிவிற்பிறந்த புகரென்றபடி. கீழே 'ஸர்வாதிகன்' என்றத்தை விவரிக்கிறார் - 'இவன்மேலே' இத்யாதி. பாண்டவர்களுக்கும் ஸேனையுண்டாயிருக்க அத்தைச் சொல்லாதே துர்யோதநாதிகளுடைய ஸேனை யென்று விசேஷித்ததுக்கு பாவம்-'துர்வர்க்கம்' இத்யாதி. 'அடவரும்' இத்யஸ்ய கர்மாகாங்க்ஷாயாமாஹ - 'ஸாரதீ' இத்யாதி. வாய்பாறுகை - அலற்றுகை, ஶப்தார்த்தம் - 'கொல்ல வருகிற' இத்யாதி. 'நூற்றுவரதாய்க் கொல்லவருகிற படை நசிக்கும்படியாக' என்று உரை. அடவரும் என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் - 'அஸ்மாந்' இத்யாதி; யத்வா, ஸாமாந்யோக்திக்கு பாவமாதல். யுத்தகாண்டே விபீஷணஶரணாகதம் த்ருஷ்ட்வா ஹநூமத்ப்ரமுகாந் ப்ரதி ஸுக்ரீவ: "வதஷவஸுக்ராயமேவா வெதஸுஷதவ்லுஹராக்ஷஸெஸ: ராக்ஷஸோஹ்யஸிவஷ்யவ லோககநெ நவஸாமயஃ". ஹாஹாரதெ"க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவா: । க்ருஷ்ண: பராயணம் தேஷாம் ஜ்யோதிஷாமிவ சந்த்ரமா:". 'வெஞ்சமத்து' என்று விசேஷித்ததுக்கு பாவம்-'நம்முடைய' இத்யாதி. பார்த்தம்ரதி மித்யாதி - கீதாபாஷ்யே. பண்டு என்று சொல்லியிருக்க, மீளவும் 'அன்று' என்று விசேஷிக்கிறதுக்கு பாவம் - 'உகவாதாரும்' இத்யாதி. பதப்ரயோகத்துக்கு பாவம் - 'ஸேநாதூளி' இத்யாதி. **செறிந்த - அழகு செறிந்தவென்னுதல்**, பரஸ்பர ஸத்ருஶமான வென்னுதல். 'கனைகழல்' என்றத்தாலே - ஆப

கிற என்னுதல். [காண்பது இத்யாதி] - இக்கண்கள் அடிப்படுவது எப்போதோ? இவை முடியப் பட்டினிவிட்டே போந்தவை இப்பட்டினி விடக்கடவது என்றோ? 'அவ்வடிவைக்காணவேணும்' என்று விடாய்த்த கண்கள் காணப்பெறுவது என்றோ? (கo)

## பதினோராம் பாட்டு.

கண்கள்காண்டற்கரியனாய்க் கருத்துக்குநன்றுமெளியனாய்
மண்கோள்ஞாலத்துயிர்க்கெல்லாம் அருள்செய்யும்வானவரீசனைப்
பண்கோள்சோலைவழுதிநாடன் குருகைக்கோன்சடகோபன்சொல்
பண்கோளாயிரத்திப்பத்தால் பத்தராகக்கூடும்பயிலுமினே.

*ஆ.—(கண்கள்.) அயர்வறுமமரர்களுக்கு அருள்செய்யுமாபோலே ஸ்வாஶ்ரிதரான மநுஷ்யாதிகளுக்கும் அருள்செய்யும் ஸ்வபாவனாயிருந்துவைத்து என்னுடைய கருத்துக்கு நன்று மெளியனாய், என்கண்கள் காண்டற்கரியனாயிருந்த எம்பெருமான்விஷயமான இத்திருவாய் மொழியை வல்லார் வைஷ்ணவராவர்; இத்தைச் சொல்லுங்கள் என்கிறார்.*

*ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கப் பழுதில்லாத பக்தராகை நிஶ்சிதம்; ஆனபின்பு, இத்திருவாய்மொழியை அப்யஸியுங்கோள் என்கிறார்.*

*[கண்கள் காண்டற்கரியனாய்க் கருத்துக்கு நன்று மெளியனாய்] - கண்ணால்காண அரியனாய் ஹ்ருதயத்திலே மிகவும் ஸுலபனாய்; இது ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களுக்கு ப்ரயோஜகம். [மண்கொள் ஞாலத்து உயிர்க்கெல்லாம் அருள்செய்யும் வானவரீசனை] - அயர்வறுமமரர்களுக்கு ஸுலபனானாற்போலே ஸம்ஸாரிகளெல்லாருக்கும் ஸுலபனாகைக்கீடான அர்ச்சாவதார பர்யந்தமான ஸௌலப்யத்தையுடையவனை. [பண்கொள் சோலை] - வண்டுகளினுடைய த்வநியை யுடைத்தாகை.*

*ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவத்பக்திலாபத்தை அருளிச் செய்கிறார்.*

*கண்கள்-கண்கள், காண்டற்கு-அபரோக்ஷிக்கைக்கு, அரியனாய்-அரியனாய், கருத்துக்கு-நெஞ்சுக்கு, நன்றும் எளியனாய் - விஶதாநுபவவிஷயபூதனாய், மண்கொள் ஞாலத்து - ப்ருதிவீப்ரதாநமான லோகத்தில், உயிர்க்கெல்லாம் - ப்ராணிகளுக்கெல்லாம், அருள்செய்யும் - (அர்ச்சாவதாரமுகத்தாலே) உபகரித்துக்கொண்டு, வானவரீசனை - ஸூரிகளுக்குக்கொடுக்கும் அநுபவத்தைப் பண்ணுவிக்கும் ஸ்வாமியானவனை, பண்கொள் - (வண்டுகளொலியாலே) பண்விஞ்சின, சோலை - சோலையையுடைத்தான, வழுதிநாடன் - திருவழுதிநாட்டுக்கு நிர்வாஹகராய், குருகைக்கோன் - திருநகரிக்கு ஸ்வாமியான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, பண்*

---

*ரணத்வநிஶ்ரவணப்ரிவேசம் ஸூசிதம். அடிப்படுவது - திருவடிகளிலேபடுவது. விவரணம் - 'அவ்வடிவை' இத்யாதி. * 'செறிந்த' என்கிற அர்த்தத்தில், கனை என்கிற ஐகாரம் அவ்யயம்; கனகழலென்றபடி. கனம் - கநம். விண்ணவர் கருமாணிக்கம் - படவரவினணைக் கிடந்த பரஞ்சுடர் - கடல்வண்ணன் - கண்ணன் என தாருயிர்- பண்டு நூற்றுவரித்யாரப்ய அந்வய:. நூற்றுவரோடே முடிக்க வந்த ஸேநை நசிக்கும்படி என்று சப்தார்த்தம்.* (கo)

* இந்தவாக்யம் அநந்விதம்.

கொள் - பண்ணோடு கூடின, ஆயிரத்து - ஆயிரத்தில், இப்பத்தால்-(அர்ச்சாவதாரஸௌலப்ய ப்ரகாஶகமான) இப்பத்தாலே, பத்தர் - (''ஸகிஹாஸ்ராஸுரகுஹா:'' என்னும்படி பெறுதற்கரிய) பக்தியுடையர், ஆகக்கூடும் - ஆகை ஸித்திக்கும்; பயிலுமின் - (இத்திருவாய்மொழியை) அப்யஸியுங்கோள்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸிக்க பகவத்ப்ரேமம் உண்டாம்; இத்தை அப்யஸியுங்கோள் என்கிறார்.

[கண்கள் இத்யாதி] - கண்ணுக்கு விஷயமன்றிக்கே அகவாயிலே மிகவும் ப்ரகாஶிக்கிறபடி. இவர்க்கு எங்கும் இதுவே ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களுக்கு ப்ரயோஜகம். ஸம்ஶ்லேஷமாகிறது - மாநஸாநுபவம். விஶ்லேஷமாகிறது - பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷையாலே மாநஸாநுபவத்துக்கு வரும் குலேதல். [மண்கொள் இத்யாதி] - நித்யஸூரிகளுக்கு ஸுலபனானாற்போலே ஸம்ஸாரிகளென்று வாசிவையாதே அர்ச்சாவதாரமுகத்தாலே வந்து ஸுலபனானவனே. [பண்கொள் சோலை] - வண்டுகளின்மிடற்றோசையாலே பண்மிக்கிருந்துள்ள சோலை. திருவழுதிவளநாட்டுக்கும் திருநகரிக்கும் நிர்வாஹகரான ஆழ்வார் அருளிச்செய்த. [பண்கொளாயிரம்] - வண்டுகளின் நினைவையொழிய அவற்றின் மிடற்றோசை பண்ணாய் விழுந்தாற்போலே பகவத்குணாநுபவம் வழிந்த பேச்சுக்கள் விழுக்காட்டாலே பண்ணோடே கூடியிருந்தபடி. [பத்தராகக்கூடும்] - எல்லாம் கிடைக்கிலும் கிடையாதாயிற்று பகவத்பக்தி; அதுவே நிரூபகமாகை நிஶ்சிதம். [பயிலுமினே] - அர்ச்சாவதாரபர்யந்தமான ஸௌலப்யத்தைச் சொல்லுகிற இத்திருவாய்மொழியை அப்யஸியுங்கோள்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸிக்கவே பகவத்ப்ரேமம் உண்டாம்; இத்தை அப்யஸியுங்கோள் என்கிறார்.

[கண்கள் காண்டற்கரியனாய்க் கருத்துக்கு நன்று மெளியனாய்] - காணப்பெறாத இன்னாப்போடே சொல்லுகிறார். கண்ணாற் காண அரியனாய், 'காணவொண்ணாது' என்று மறந்து பிழைக்கவொண்ணாதபடி நெஞ்சுக்கு முன்னிலையாய் மிகவும். இவர்க்கு விஶ்லேஷமாவது-பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷையாலே மாநஸாநுபவத்துக்கு வரும் கலக்கம். ஸம்ஶ்லேஷமாவது-ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமான ஜ்ஞாந ஸாக்ஷாத்காரம். [மண்கோள் இத்யாதி] - நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யனானாற்போலே, ஸம்ஸாரிகளென்று வாசி வையாதே அர்ச்சாவதாரமுகத்தாலே வந்து ஸுலபனானவனே. [பண்கோள்சோலை] - வண்டுகளின் மிடற்றோசையாலே பண்மிக்கிருந்துள்ள சோலை. முக்கோட்டைபோலே காணும் சோலை யிருப்பது. [வழுதிநாடன்] - திருவழுதிநாட்டுக்

நிகமம்—'கண்கள்' இத்யாதி. ' பத்தராகக் கூடும் பயிலுமின் ' என்றத்தைப் பற்ற அவதாரிகை.

''தேர்கடவிய பெருமான்'' என்று - ஸுலபனென்று சொல்லிவைத்து, ''காண்டற்கரியன்'' என்கிறதென்? என்ன, 'காணப்பெறாத' இத்யாதி. 'கருத்துக்குநன்றுமெளியன்' என்றதுக்கு ஭ாவம்-'காணவொண்ணாதென்று' இத்யாதி. திருவாய்மொழியில் எங்கும் ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களுக்கு நியாமகம் - இப்படியென்று விவக்ஷித்து, அவற்றுக்கு லக்ஷணம் அருளிச்செய்கிறார் - 'இவர்க்குவிஶ்லேஷமாவது' இத்யாதி. 'கண்களாற் காணவரியனாய்' என்கையாலே, இங்கே விஶ்லேஷம் தோன்றுகிறதென்று ஭ாவம். அர்ச்சாவதாரமுகேந முகங்கொடுக்குமென்கிற விடத்திலே, 'வானவரீசன்' என்றது த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் - 'நித்யஸூரிகளுக்கு' இத்யாதி. 'மண்ணைக்கொண்டிருக்கிற பூமியிலே ப்ராணிகளுக்கெல்லாம் அர்ச்சாவதாரமுகத்தாலே க்ருபைபண்ணும் நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியானவனே' என்று சப்தார்த்தம். வண்டுகளின் மிடற்றோசையெல்லாம் பண் மிக்கிருக்கைக்கு ஹேதுவெது? என்ன, 'முக்கோட்டை' இத்யாதி. வண்டுகளுடைய பண்ணுக்கு அடியான முக்கோட்டை என்றபடி. யத்வா, ஆழ்வார் கவிபாடுகைக்கு அடியான சோலை யென்னுதல். * முக்கோட்டை - மூகாம்பிகை, துர்க்கி. விநாயகாலயோவா. 'இவற்றை நினைத்தவர்களுக்கும் பார்த்தவர்

* ச - ரு - உ - இல் அரும்பதவுரையில் 'முக்கோட்டை - எல்லார்க்கும் கவிதோற்றுவிக்கும் விநாயக ஸ்தலம்' என்று எழுதப்பட்டிருக்கிறது.

கும் திருநகரிக்கும் நிர்வாஹகரான ஆழ்வார் அருளிச்செய்த. [பண்கோளாயிரம்]-வண்டுகளின் நினைவின்றிக்கே அவற்றின் மிடற்றோசை பண்ணானாற்போலே, பகவத்குணாநுபவம் வழிந்த பேச்சுக்கள் விழுக்காட்டாலே பண்ணானபடி. [பத்தராகக்கூடும் பயிலுமினே] - எல்லாம் கிடைக்கிலும் கிடையாததாயிற்று, சேதநர்க்கு பகவத்பக்தி; அதுவும் கிடைக்கும் இத்திருவாய்மொழியை அப்யஸிக்க. பரத்வஜ்ஞாநத்துக்கு அடியான ஸுக்ருதமாதல், ஶாஸ்த்ரஜ்ஞாநமாதல், ஸதாசார்யோபதேஶமாதல், நிர்ஹேதுக பகவத்கடாக்ஷமாதல், இவையனைத்தும் இல்லாதார்க்கும் அர்ச்சாவதார ஸௌலப்யத்தை அநுஸந்திக்கவே பகவத்பக்தி யுண்டாகக்கூடும்; அவாப்த ஸமஸ்தகாமனான ஸர்வேஶ்வரன் ஆஶ்ரிதவாத்ஸல்யத்தாலே இவனுகந்ததொன்றைத் திருமேனியாக விரும்பி, இவன் அமுது செய்வித்ததை அமுது செய்து அகங்கள் தோறும் புக்கு விடமாட்டாதேயிருந்தால், இவன் நம்மை விடமாட்டாதே யிருந்த பின்பு நாமும் இவனுக்கு ஸ்நேகித்தாலாகாதோ? என்னக்கூடுமிறே. 'நிதி இங்கே உண்டு' என்று சொல்லக் கல்லுவர்களிறே; அப்படியே பக்தியுண்டு என்ன, அப்யஸிப்பர்களென்று அருளிச்செய்கிறார். (கக)

*களுக்கும் கவித்வமுண்டாம்' என்று சொல்லுவர். 'பண்கொள் சோலை, பண்கொளாயிரம்' என்ற பதச்சேர்த்திக்கு ஹாவம் - 'வண்டுகளின் நினைவு' இத்யாதி. விழுக்காட்டாலே - ஸ்வபாவத:. 'கூடும்' என்கைக்கு அப்படி துர்லபமோ? என்ன, 'எல்லாம்கிடைக்கிலும்' இத்யாதி. 'கூடும்' என்கையாலே - தௌர்லப்யம் தோன்றுகிறதென்றபடி. கூடும் ப்ரகாரத்தைக் காட்டுகிறார் - 'பரத்வஜ்ஞாநத்துக்கு' இத்யாதி. விவரணம் - 'அவாப்த' இத்யாதி. இருந்தால் - இருக்குமென்று சொன்னபடி. 'பயிலுமின்' என்றால் அப்யஸிப்பர்களோ? என்ன, 'நிதி இங்கே' இத்யாதி. பத்தராகக் கூடும் - பக்தியையுடையராகை ஸித்திக்கும். பயிலுமின் - இத்திருவாய்மொழியை அப்யஸியுங்கோள். க்ரமேண அந்வய:.* (கக)

---

*த்ரவிடோபநிஷத் ஸங்கதி:*—தாஞ்நிர்தாநவிஹாதஸோவஶக்த்யௌ ரோக்ஷாராவஸ்தயா விஶ்வாந்வாஹ| அர்ச்சாவதார ஸௌலப்யஶ்வாவதேஷாவேஷஶு தேஷு விஶேஷு ஶேஷாவஷ்டே.

---

*த்ரவிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளி:*—வக்ஷாக்ஷீம் வாவஹஞ்ம் ஶ்ரீரா விஶேராயீஶவிஷ்யர்ஷ்வஷாம் தத்தாஷ்யக்ஷஞஶ்ரீஸவபிதகேஷ்டாம்ஹாவக்யாவ்யவாஷாம் | ஶுஷ்யாஷ்வாஷ்ய ஷ்வஹாவாம் பஶோடஶேநீம் ஹக்தயீவ்ருத்திஹவ்யாம் நீவொத்வாஷீஷ் வ்ருத்திம் ஹரிதநவேஷஞிஶேஷாவ்ராநாரக்த:.

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி:—**

*செய்யபரத்துவமாய்ச் சீரார்வியூகமாய்த்*
*துய்யவிபவமாய்த் தோன்றிவற்றுள்—எய்துமவர்க்கு*
*இந்நிலத்திலர்ச்சாவதாரமெளிதென்றான்*
*பன்னுதமிழ்மாறன்பயின்று.*

*ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், சீயர் திருவடிகளே சரணம்.*

---

## ஏழாந்திருவாய்மொழி—பயிலும் : ப்ரவேஶம்.

---

**ஆ.**—(பயிலுஞ்சுடரொளி.) இப்படி எம்பெருமானுடைய நிரவதிக ஸௌலப்யஸ்வரூப மஹாகுணாநுபவஜநித நிரவதிகப்ரீதியாலே பகவச்சேஷத்வகாஷ்டாரூப பாகவதஶேஷதைகபோகராய், அந்த பாகவதஶேஷத்வம் தமக்கு ப்ராப்யம் என்கிறார்.

ஒ.—ஏழாந்திருவாய்மொழியில் - பகவத்தாஸ்யம் வருந்திக் கற்க வேண்டும்படியான அவர்களோட்டைப் பரிமாற்றத்தாலே உருவின ஆழ்வார் அவ்வுருவுதல் தீர எம்பெருமானுக்கு அடிமைசெய்யவென்றால் அடைத்தேற்றலன்றிக்கே அடிமையே தாரகமாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஜந்மவ்ருத்தஸ்வபாவங்களால் குறைய நின்றார்களேயாகிலும் அவர்கள் எனக்கு நாதரென்றும், நான் அவர்களுக்கு அடிமையென்றும், அவர்களோட்டை ஸம்பந்தத்தை அநுபவித்து ப்ரீதராகிறார். எம்மாவீடு - ப்ராப்யத்தினுடைய ப்ரதமாவதி. இத்திருவாய்மொழி - சரமாவதி.

ப.—ஏழாந்திருவாய்மொழியில், கீழ் சேஷத்வ ப்ரதிஸம்பந்தியினுடைய சேஷித்வம் அர்ச்சாவதாரபர்யந்த மென்று அருளிச்செய்தாராய், அந்த சேஷத்வப்ரீத்யபிவ்ருத்தியாலே சேஷத்வமும் தத்விஷயமாத்ரத்திலே நில்லாதே ததீயபர்யந்தமாக அபிவ்ருத்தமாக; அவர்களுடைய ஜந்மவ்ருத்தாதிநிரபேக்ஷமான பகவத்ஸம்பந்தோத்கர்ஷத்தையே பற்றி, அந்த உத்கர்ஷத்துக்கு அடியான ஸர்வேஸ்வரனுடைய க்ஷீரார்ணவஸாயித்வத்தால் வந்த பாரம்யத்தையும், அவதார விக்ரஹ வைலக்ஷண்யத்தையும், அந்நிலையிலே விபூதித்வயத்துக்கும் அநுபாவ்யமான போக்யதையையும், போக்யதாவர்த்தகமான ஆபரணசோபையையும், ஆஸ்ரிதாபேக்ஷிதார்த்த ப்ரதத்வத்தையும், அநந்யப்ரயோஜநர்க்குத் தன்னைக்கொடுக்கும் உபகாரகத்வத்தையும், கொடுக்குமிடத்தில் ஸ்வரூப ஆவிர்பாவத்தைப் பிறப்பித்து அடிமைகொள்ளும்படியையும், அடிமைக்கு விஷயமான ஸ்ரிய:பதித்வத்தையும், ஆஸ்ரிததோஷ நிவர்த்தகமான பாவநத்வத்தையும், ஆபத்ஸகத்வத்தையும் அநுஸந்தித்து, இந்தகுணங்களிலே ஈடுபட்ட பாகவதருடைய ஸம்பந்திபரம்பரா பர்யந்த சேஷத்வத்தை அநுபவிக்கிறார்.

இ.—ஏழாந்திருவாய்மொழியில், பகவத்விஷயமென்றால் மேட்டிமடையாய்த் தம்மாலே நிந்திதரான ஸம்ஸாரிகளோட்டைப் பரிமாற்றத்தாலே உருவின ஆழ்வார் அவ்வுருவுதல் தீர 'பகவத்குணங்களே தாரகமாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஜந்மவ்ருத்தங்களால் குறைய நின்றார்களேயாகிலும் அவர்கள் எனக்கு நாதர்; நான் அவர்களுக்கு அடியன்' என்று அவர்களோட்டை ஸம்பந்தத்தை அநுபவிக்கிறார். அங்ஙனன்றிக்கே, பகவத்ஸௌலப்யத்தை அர்ச்சாவதார பர்யந்தமாக உபதேசித்தார், கீழே ஸம்ஸாரிகளுக்கு; உபதேசநிரபேக்ஷமாக பகவத்ப்ரவணராயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களோட்டை ஸம்பந்தத்தை அநுபவித்து ப்ரீதராகிறார் என்றுமாம். "எம்மாவீடு" - ப்ராப்யத்தினுடைய ப்ரதமாவதி; இது - சரமாவதி. "மஹ தாரோதஉ ஊஒஷு"

ஈடு.—ஏழாந்திருவாய்மொழியில் - அர்ச்சாவதாரஸௌலப்யத்தை அருளிச்செய்யச்செய்தேயும் நெஞ்சில் நெகிழ்ச்சியின்றிக்கே விஷயப்ரவணராயிருக்கிற ஸம்ஸாரிகள் ஸ்வபாவத்தை அநுஸந்தித்தார்; "தேர்கடவியபெருமான் கனைகழல் காண்ப தென்றுகொல் கண்கள்" என்ற இவர்க்கு, நிழலும் அடிதாறுமாயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக் காட்டிக்கொடுக்க, உபதேசநிரபேக்ஷமாகவே

"பயிலும்சுடரொளி"ப்ரவேசே ஸங்கதிமாஹ - 'அர்ச்சாவதார' இத்யாதி. 'அநுஸந்தித்தார்' என்ற அநந்தரம், 'அத்தைவிட்டு' என்று கூட்டுவது. அதவா, இப்படி ஏகவாக்யமன்றிக்கே பிந்நவாக்யமாய், ஸம்ஸாரிகள் ஸ்வபாவத்தை அநுஸந்திக்கையாலும் கனைகழல் காணப்பெறாமையாலும் உண்டான து:கத்வயத்தையும் பரிஹரித்தானென்கிறார் - 'நிழலும் அடிதாறும்' என்னுதல். இந்தப்பக்ஷத்திலே, 'ஸம்ஸாரிகள் ஸ்வபாவத்தை யநுஸந்தித்தார்' அத்தாலு மென்றும், 'தேர்கடவியபெருமான் கனைகழல் காண்பதென்றுகொல் கண்கள்' என்ற கனைகழல் காணப்பெறாமையாலும் து:கிதரான இவர்க்கு என்றும் அத்யாஹரித்துக்கொண்டு, 'நிழலு மடிதாறுமா யிருக்கிற' இத்யாதி வாக்யம் அநுஸந்திப்பது. இந்த பிந்நவாக்யபக்ஷத்திலே - து:கத்வயமும், முந்தின ஏகவாக்யபக்ஷத்திலே கனைகழல்காணப்பெறாத து:கமொன்றுமேயும் விவக்ஷிதம். ஸம்ஸாரிகள் திருந்தாத து:கத்தைப் பரிஹரித்ததுக்கு ஸூசகம் - 'உபதேசநிரபேக்ஷமாகவே' இத்

பகவத்விஷயமென்றால் நெஞ்சுபள்ளமடையாயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டார்; அவர்கள் பக்கலிலே தம்திருவுள்ளம் சென்று, 'இவர்களுஞ் சிலரே' என்று அவர்களைக் கொண்டாடி, 'நான் ஸர்வேஸ்வரனுக்கு அடிமை அன்று; ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமை; அதுதன்னிலும் நேர்கோடு நேர் இவர்களுக்கு அடிமையாகவேணுமோ? இவர்களோடு ஸம்பந்திஸம்பந்திகள் அமையாதோ?' என்று இங்ஙனே பாகவதசேஷத்வம் உத்தேஸ்யமாய் அவர்களை ஆதரிக்கிறார். "எம்மாவீட்டி"லே, ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணினார் - "தனக்கேயாக வெனைக்கொள்ளு மீதே" என்று; இங்கே - பாகவதசேஷத்வம் உத்தேஸ்ய மென்னாநின்றார்; ப்ராப்யம் இரண்டாயிருக்கிறதோ பின்னை? என்னில்,- அன்று: "தனக்கேயாக வெனைக்கொள்ளு மீதே" என்கிற அதினுள்ளேயாயிருக்கிறது இதுவும்; பகவச்சேஷத்வத்தின் எல்லையாகிறது பாகவதசேஷத்வத்தளவும் வருகையிறே. நமக்கு ஜ்ஞாதவ்யமான அர்த்தங்களில் திருமந்த்ரத்திற்சொல்லாத தொன்றில்லையிறே; அத்தையறியும் திருமங்கையாழ்வாரும் இத்தை அதுக்கு அர்த்தமாக அருளிச்செய்தாரிறே; "நின்திருவெட்டெழுத்தும் கற்று நான் - உற்றது முன்னடியார்க்கடிமை" என்றாரிறே; திருமந்த்ரத்துக்கு அர்த்தம் - இவனுடைய அநந்யார்ஹசேஷத்வஞ் சொல்லுகையிறே: அதாவது - ததீயர்க்கு க்ரயவிக்ரயார்ஹமாம்படியாகையிறே; "தத்பக்திநிக்நமநஸாம் க்ரயவிக்ரயார்ஹா:" (தத்ஸக்திநிக்நமநஸாம் க்ரயவிக்ரயார்ஹா:), "எந்தம்மை விற்கவும் பெறுவார்களே". பிதாவுக்கு ஒருக்ஷேத்ரம் ஸ்வமானால் அது புத்ரனுக்கும் க்ரயவிக்ரயார்ஹமாயிருக்கும்; அப்படியிராதவன்று பிதாவினுடைய ஸ்வத்திலே கோத்தையாமிறே. "தத்பக்தைர்வா ஸமாகம:" (தத்பக்தைர்வா ஸமாகம:) என்கிறவிடத்தில்,

---

யாதி வாக்யம். அடிதாறு - பாதரேகையாதல்; தாறென்று - அளவாய், அத்தால் - பாதுகையென்னுதல். "இன்றுதாறும் திரிகின்றது" என்னக்கடவதிறே. "எம்மையாளும்பரமரே" என்ற ஏவகாரத்தைப் பற்ற, 'ஸர்வேஸ்வரனுக்கு அடிமையன்று' இத்யாதி. "அடியாரடியார்" இத்யாதியைப்பற்ற, 'இவர்களோடு ஸம்பந்திஸம்பந்திகள்' இத்யாதி. ஆதரிக்கிறார், இத்திருவாய்மொழியி லென்றபடி. ஆக, ஸம்ஸாரிகளுடைய ஸ்வபாவாநுஸந்தாநத்தாலும், களைகழலைக்காணப்பெறாமையாலும் து:கிதரான இவர்க்கு அந்தது:கத்வயமும் போம்படி பாதரேகைபோலே யிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களைக் காட்டிக்கொடுக்கக் கண்டு அவர்களை அநுபவிக்கிறாரென்று- ஸங்கதிக்ரந்தார்த்த:. தடஸ்தஸங்கை - 'எம்மாவீட்டிலே' இத்யாதி. ப்ராப்யம் இரண்டாயிருக்கிறதோ? நாகிஞ்சித்குர்வதஸ்ஸேஷத்வமாகையாலே பயிலுஞ்சுடரொளியிற் சொன்ன சேஷத்வமும் கைங்கர்யபர்யந்தமாக விவக்ஷித்து, கைங்கர்யத்வயமும் உத்தேஸ்யமா யிருக்கிறதோ? என்றபடி. பரிஹரிக்கிறார், 'அன்று' இத்யாதி. அதினுள்ளே யாயிருக்கிறது - அதுக்குள்ளே அந்தர்ப்பூதம். அது எப்படி? என்ன, 'பகவச்சேஷத்வத்தின்' இத்யாதி. பாகவதசேஷத்வமே உத்தேஸ்யமென்னுமதுக்கு ப்ரமாணமுண்டோ? என்ன, 'நமக்கு' இத்யாதி. இத்தை - பாகவதசேஷத்வத்தை. அதுக்கு - திருமந்த்ரத்துக்கு. 'நின்திருவெட்டெழுத்தும்' இத்யாதி - திருமொழி - எண்பதாந்திருமொழி; மூன்றாம்பாட்டு, "மற்றுமோர்" இத்யாதி. நீ சொன்ன முதல்வார்த்தையான திருமந்த்ரத்தைக் கற்று நான் அறுதியிட்டிருக்கும் அர்த்தமும், உன்னடியார்க்கு சேஷமென்னுமது இத்யர்த்த:· திருமந்த்ரத்திலே பகவச்சேஷத்வமொழிய பாகவதசேஷத்வம் சொல்லும்படியென்? என்ன, 'திருமந்த்ரத்துக்கு' இத்யாதி. அதாவது - அநந்யார்ஹத்வமாவது. ததீயர்க்கு க்ரயவிக்ரயார்ஹ மென்கைக்கு ப்ரமாணம் - 'தத்பக்தி' இத்யாதி. "ஸஸ்வபாவநிவேதகேப்யோ யோகிநோ ம்ருக்ய: ஸஹாயகணைர்ம்ருக்ய: | தத்பக்திநிக்நமநஸாம் க்ரயவிக்ரயார்ஹா வாஸிதாஸிதாபவகவாஸிதோபவந்தி". 'எந்தம்மை' இத்யாதி - பெரியாழ்வார்திருமொழி - முப்பத்துநாலாந்திருமொழி, பத்தாம்பாட்டு, "காசின்வாய்" இத்யாதி. 'பேசுவாரடியார்க ளெந்தம்மை' இத்யாதி - "கேசவா புருடோத்தமா" இத்யாதியான அவன் ஸ்வபாவத்தைப் பேசுமவர்களுக்கு அடிமையாயிருக்குமவர்கள் தங்களுக்கு சேஷமாகையே புருஷார்த்த மென்றிருக்கிற என்னை விற்றுக்கொள்ளவும் உரியர் இத்யர்த்த:. கீழே ப்ரமாணங் காட்டி உபபத்தி காட்டுகிறார் - 'பிதாவுக்கு' இத்யாதி. பிதாவுக்கு ஸ்வமானால் புத்ரனுக்கும் க்ரயவிக்ரயார்ஹமாக வேணுமோ? என்ன, 'அப்படி' இத்யாதி. பாகவதசேஷத்வத்துக்கு ப்ரமாணாந்தரம் - 'தத்பக்தை:' இத்

‘வா’ என்றத்தை அவதாரணத்திலேயாக்கி, ‘உத்தேச்யந்தானே இங்கே ஸித்திக்குங் காண்’ என்று எம்பெருமானார் அருளிச்செய்த வார்த்தை. ப்ராப்யத்தில் ப்ரதமாவதி - பகவச்சேஷத்வத்தளவிலே நிற்கை; சரமாவதி - பாகவதசேஷத்வத்தளவிலே வருகை. “கச்சதா” (கச்சதா)-இதுக்கு எம்பெருமானார் ‘“பயிலும்சுடரொளி”யிலும் “நெடுமாற்கடிமை”யிலும் சொல்லுகிற அர்த்தத்தை ஸ்ரீசத்ருக்நாழ்வான் அநுஷ்டித்துக் காட்டினான்’ என்று அருளிச்செய்வர்; இவ்வர்த்தத்துக்கு அடி திருமந்த்ரமாயிற்றிறே; அதுமூலமாக அநுஷ்டிக்கவே இதிற்சொன்னத்தைச் செய்ததாமிறே. ஆசாரப்ரதாநமான அவதாரமாய், அதில் பெருமாள், ‘பிதாசொல்லிற்றுப் புத்ரன்செய்யக்கடவன்’ என்கிற மர்யாதை குலையாதே அத்தை நிலைநிறுத்துகைக்காகப் பித்ருவசநபரிபாலநாதிரூபமான ஸாமாந்யதர்மத்தை அநுஷ்டித்தார்; ‘இதுதான் ப்ராப்தவிஷயத்திலே செய்யக்கடவது’ என்னுமிடத்தை அநுஷ்டித்துக்காட்டினார், இளையபெருமாள்; ‘அதுசெய்யுமிடத்தில் அவனுகந்த அடிமை செய்யக்கடவது’ என்னுமிடத்தை ஸ்ரீபரதாழ்வான் அநுஷ்டித்துக் காட்டினான்; ‘அதுதான் பாகவதசேஷத்வ பர்யந்தமாயிருக்கும்’ என்னுமிடத்தை ஸ்ரீசத்ருக்நாழ்வான் அநுஷ்டித்துக்காட்டினான். பெருமாள், ‘பிதாசொல்லிற்றுச் செய்யக்கடவது’ என்னுமிடத்தை அநுஷ்டித்தார்; அதுதன்னிலும் நேரே பிதாவையநுவர்த்திக்கக்கடவதென்னுமிடத்தை இளையபெருமாள் அநுஷ்டித்தார்; அதுதன்னிலும் “குருஷ்வ” (குருஷ்வ) என்று நிர்ப்பந்திக்கக்கடவரல்லர்; ‘ராஜ்யத்திலே யிரும்’ என்னில், அது இன்னாதாகிலும் அதிலிருந்து அடிமைசெய்யக்கடவதென்னுமிடத்தை அநுஷ்டித்தான் ஸ்ரீபரதாழ்வான்; அதினெல்லையை அநுஷ்டித்தான் ஸ்ரீசத்ருக்நாழ்வான்; அவன்படிசொல்லுகிறது இச்ச்லோகம். “மாதுலகுலம் கச்சதா பரதேந நீத:” (மாதுலகுலம்கச்சதாபரதேநநீத:) - மாதுலகுலம் உத்தேச்யமாய்ப் போனான் அவன்; அவன்தான் உத்தேச்யமாய்ப் போனான் இவன்; யுதாஜித்து அழைத்தது ஸ்ரீபரதாழ்வானையிறே. “கச்சதா” (கச்சதா) - இவ் வர்த்தமாநநிர்த்தேசத்தால், பூர்வக்ஷணத்திலும் தன்னெஞ்சிலும் இல்லை; பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்தமையும் இல்லை; சக்ரவர்த்தியைக் கேள்விகொண்டமையும் இல்லை யென்கை. “பரதேந” (பரதேந)-

---

*யாதி. “ஸம்ஸாரவிஷவ்ருக்ஷஸ்ய த்வே ஃபலே ஹ்யம்ருதோபமே । கதாசித் கேசவே பக்தி: தத்பக்தைர்வா ஸமாகம:”. தத்பக்தைர்வா - தத்பக்தைரேவ என்றபடி. வாசப்த: - அவதாரணே; “ஸ்யுரேவம் து புநர்வைவேத்யவதாரணவாசகா:” என்னக்கடவதிறே. உத்தேச்யந்தானே - பாகவதசேஷத்வமாகிற உத்தேச்யந்தானே. “கதாசித் கேசவே பக்தி:” என்றது உத்தேச்யமன்றோ? என்ன, ‘ப்ராப்யத்தில்’ இத்யாதி. கீழே ப்ரமாணோபபத்திகள் காட்டி, அநுஷ்டாநமும் காட்டுகிறார் - ‘கச்சதா’ இத்யாதி. அயோத்யாகாண்டே ப்ரதமே, “கச்சதா மாதுலகுலம் பரதேந ததாநக: । சத்ருக்நோ நித்யசத்ருக்நோ நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:”. ஸ்வாபிப்ரேதார்த்தஸ்ய ஸம்மதித்வேநாஹ - ‘இதுக்கு எம்பெருமானார்’ இத்யாதி. பயிலும்சுடரொளி நெடுமாற்கடிமைகள் பச்சாத்பாவிகளன்றோ? இதிற்சொல்லுகிற அர்த்தத்தை அநுஷ்டிக்கக்கூடுமோ? என்ன, ‘இவ்வர்த்தத்துக்கு’ இத்யாதி. இவ்வர்த்தத்துக்கு - பயிலும்சுடரொளி நெடுமாற்கடிமைகளிற் சொல்லுகிற அர்த்தத்துக்கு. இத்தால்-சத்ருக்நாழ்வான் அநுஷ்டிக்கைக்கு அடி திருமந்த்ரமாகையாலேயும், ஆழ்வார் அருளிச்செய்ததும் திருமந்த்ரார்த்தமாகையாலேயும், இவரருளிச்செய்த அர்த்தத்தை அநுஷ்ட்டித்தா னென்னக் குறையில்லை யென்றபடி. இதில் சொன்னத்தை - இத்திருவாய்மொழியிற் சொன்னத்தை. ச்லோகாவதாரிகை - ‘ஆசார’ இத்யாதி. இவர்தாம் இப்படி அநுஷ்டித்தது, அவதாரம் தர்ம ஸம்ஸ்த்தாபநார்த்தமாகையாலே யென்றபடி. ‘ப்ராப்தவிஷயத்திலே’ இதி - “பிதா வை குரவ:” என்று-இவரே ப்ராப்தரானபிதாவென்றாரிறே யென்றபடி. அவனுகந்த அடிமை - படைவீட்டிலிருக்குமது. விவரணம் - ‘பெருமாள்’ இத்யாதி. “கர்துரீப்ஸிததமம் கர்ம” என்ற ஸூத்ரத்தைப்பற்ற, ‘மாதுலகுலமுத்தேச்யமாய்’ என்றது. “கர்த்து: க்ரியயா ஆப்துமிஷ்டதமம் காரகம் கர்மஸம்ஜ்ஞம் பவதி” என்று வ்ருத்தி. இவனும் மாதுலகுலம் உத்தேச்யமாய்ப் போனானென்னவொண்ணாதோ? என்ன, ‘யுதாஜித்து’ இத்*

பெருமாளும் போகட்டுப்போய், இளையபெருமாளும் அவரை அநுவர்த்தித்துப்போய், சக்ரவர்த்தியும் துஞ்சி, ஸ்ரீஶத்ருக்நாழ்வானும் தன்னையல்லது அறியாதேயிருக்க, பெருமாளதான ராஜ்யத்தை ஹரித்துக்கொண்டிருக்கையாலே-பரதனேன்கிறது; "**ஹாதஇதிராஜ்யஸ்யஹாணாத்**" (பரத இதிராஜ்யஸ்யபரணாத்). "**தஜா**" (ததா) - தானும் ராஜபுத்ரனாய் நாளும் வேறுபட்டிருந்தால், பிரித்துத் தனக்குப்பொருந்தும் முஹூர்த்தத்திலே போக ப்ராப்தமிறே; அதுசெய்யாதே அவன்புறப் பட்டதே தனக்கு முஹூர்த்தமாகப் போனான். "**அநகஃ**" (அநகஃ) - அபாபஃ. அப்படைவீட் டில், அல்லாதாரதெல்லாம் பாபமிஶ்ரஜீவநம்போலே காணும். அதாவது - ராமபக்தி கலந்திருக் குமே. அத்தைப் பாபமென்னலாமோ? என்னில், - பாபத்திற்காட்டில் புண்யம் உத்தேஶ்யமா யிருக்கச்செய்தேயும், இரண்டும் த்யாஜ்ய மாகாநின்றதிறே: மோக்ஷவிரோதித்வாத்; இங்கும் உத் தேஶ்யவிரோதி யாகையாலே சொல்லலாமிறே. இது பின்னை உத்தேஶ்ய விரோதியோ? என்னில்,- ப்ரதமாவதியில் நிலை விரோதியிறே சரமாவதியைப்பற்ற. "**ஶத்ருக்நஃ**" (ஶத்ருக்நஃ) - பிறந்த போதே 'எதிரிகள் மண்ணுண்ணும்படி வளரும்' என்று தோற்றியிருக்கையாலே இப்படி திருநாமஞ் சாற்றினான் வஸிஷ்டன். "**நித்யஶத்ருக்நஃ**" (நித்யஶத்ருக்நஃ)-பாஹ்யஶத்ருக்களை வெல்லுகை யன்றிக்கே ஆந்தரஶத்ருக்களான இந்த்ரியங்களை வென்றிருக்கும். அதாவது - "**பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்**" (பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிற விஷயத்தில் கண்வை யாமை; அங்கும் 'இவனுக்கு இனிது' என்று இவ்வழியாலே புகுமித்தனை. "**அநகஃ**" (அநகஃ) என்கிற இதுக்கும், "**நித்யஶத்ருக்நஃ**"(நித்யசத்ருக்நஃ)என்கிற இதுக்கும் வாசியென்? என்னில்,- பாவநத்வத்தில் ஸ்ரீபரதாழ்வானை யொவ்வார் பெருமாள் என்கிறது - அநகஃ என்கிற இத்தால்; நித்ய ஶத்ருக்நஃ என்கிற இத்தால் - போக்யதைக்கு ஸ்ரீபரதாழ்வானை யொவ்வார் பெருமாள் என்கிறது. "**நீதஃ**" (நீதஃ) - ஒருகுற்றுடைவாள் சாயை யுள்ளிட்டவையோபாதியாய்ப் போனான். த்ரவ்யத் துக்கு த்ரவ்யாந்தரஸம்யோகம் உபயநிஷ்டமாயிறே யிருப்பது; த்ரவ்யமாயிருக்கச்செய்தேயும் ஜாதி

---

*யாதி. உக்தார்த்தத்துக்கு ஶப்தநிர்வாஹம் - 'பரதஇதி' இத்யாதி. 'நாளும்வேறுபட்டிருந்தால்' என்றது - "ஸம்ஶ்லேஷஜாதஸ்ய...ஸாவஶேஷஜாதஸ்ய" என்றத்தைப் பற்ற. நாள்-நக்ஷத் ரம். "ஸஹததா" என்றதிலே அர்த்தஸித்தமன்றோ? "ததா" என்றதென்? என்னில்,—அங்கு - மமதாநிவ் ருத்தியைச் சொல்லிற்று, இங்கு - அதுக்கு ஆஶ்ரயமான அஹங்காரநிவ்ருத்தியைச் சொல்லுகிறது; ஆகை யாலே, புநருக்திதோஷ மில்லை. 'சேஷத்வ விரோதியிறே இரண்டும்' என்று கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக் யாநத்திலே யிருக்கிறது. "நாஹம்ஸ்வவிஜிஜாமஹிதபோவாயபும்விஷயநு" என்றில்லையோ? என்ன, 'அங்கும் இவனுக்கு' இத்யாதி. "ஐந்த்ரவஶ்யவிஶேஷாதாஶத்ருக்நோஹாதவிப்ரியஃ" என்று உத்த ரார்த்தம். "அநகஃநித்யஶத்ருக்நஃ" என்ற பதத்வயத்துக்கும், கீழே - ராமபக்திகலசாதவரென்றும் ராம ஸௌந்தர்யத்தில் கண்வையாதவரென்றும் அருளிச்செய்து, இங்கே அர்த்தாந்தரம் - 'பாவநத்வத்தில்' இத்யாதி. இவ்வர்த்தத்வயமும் கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யாந ஈட்டிலே வ்யக்தம். முந்தின அர்த்தத்தில் போக்யதை சொல்லுகிறது, இரண்டாம் அர்த்தத்தில் பாவநத்வபோக்யத்வங்கள் இரண்டும் சொல்லுகிறது. பெருமாளைக் காட்டிலும் ஸ்ரீபரதாழ்வானிடத்தில் பாவநத்வாதிசயமுண்டாகையாலே 'பெருமாள் பாவநர்' என்று அவரிடத் தில் நெஞ்சைவையா ரென்கிறது - "அநகஃ" என்கிற இத்தால்; பெருமாளைப்பற்றவும் ஸ்ரீபரதாழ்வானிடத் தில் போக்யதாதிசயமுண்டாகையாலே 'பெருமாள் போக்யர்' என்றும் அவரிடத்தில் நெஞ்சைவையா ரென் கிறது - "நித்யஶத்ருக்நஃ" என்கிற இத்தா லென்றபடி. பரதேந ஸஹகதஃ என்னாதே, "நீதஃ" என் றதுக்கு அர்த்தம் - 'ஒருகுற்றுடைவாள்' இத்யாதி. பலிதம் - 'த்ரவ்யத்துக்கு' இத்யாதி. யத்வா, தடஸ்த்த சங்கை - 'த்ரவ்யத்துக்கு' இத்யாதி ஆதல். உபயநிஷ்டமாயிறே யிருப்பது; ஆனபின்பு, 'சாயையுள்ளிட்டவை யோபாதி போனான்' என்னக்கூடுமோ? என்று சங்கையைப் பூரித்துக்கொள்வது. பரிஹாரம் - 'த்ரவ்யமா*

குணங்களோபாதி பரதந்த்ரனாய்ப் போனான். "ப்ரீதிபுரஸ்க்ருத:" (ப்ரீதிபுரஸ்க்ருத:) 'தமையன்பின்னே தம்பி போகக்கடவன்' என்னும் முறையாலே தேவைபோலேயிருக்குமோ? என்னில்,- அங்ஙனன்று; 'படைவீட்டிலே யிருந்தால் ஒருவன்சோற்றைப் பகுந்து உண்ணுமாபோலே படைவீடாகப் பெருமாளுக்கு அடிமைசெய்வர்கள்; ஏகாந்தஸ்தலத்திலே நமக்கு எல்லாவடிமையும் செய்யலாம்' என்று - "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்று இளையபெருமாள் காடேறப் போனாற்போலே, இவனும் 'நமக்கு எல்லாவடிமையும் செய்யலாம்' என்கிற ப்ரீதி பிடரி தள்ளத் தள்ளப் போனான். எம்பெருமானார் இச்ச்லோகத்துக்கு வாக்யார்த்தமாக, 'ஸ்ரீசத்ருக்நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி - பெருமாளைக் காற்கடைக்கொண்டு, பெருமாளுக்கு நல்லனான ஸ்ரீபரதாழ்வானை யல்லது அறியாதபடியானான்' என்று அருளிச்செய்தார். இது ப்ரயோஜகமானபின்பு, சொன்ன மிகையெல்லாம் பொறுக்குமிறே; அல்லது, ஒருசேதநனுக்கு ஒருசேதநன் உத்தேச்யனாகையாவது - ஓட்டையோடத்தோடு ஒழுகலோடமிறே; "அநந்யா:" (அநந்யா:) என்கிற நிலை இவர்களுக்கு உண்டானால், இவர்களை யநுவர்த்திக்குமது அவனையநுவர்த்தித்ததாமிறே. ப்ராஹ்மணஜாதி ஒன்றாயிருக்கச்செய்தே குலசரணகோத்ராதிகளாலே பிரித்து ஸம்பந்திக்குமாபோலே வைஷ்ணவர்களுக்கு நிரூபகம் - அவனுடைய குணசேஷ்டிதாதிகளிறே; அவ்வழியாலே, அவனுடைய வடிவழகிலே துவக்குண்டிருக்குமவர்கள், குணங்களிலே துவக்குண்டிருக்குமவர்கள், சேஷ்டிதங்களிலே துவக்குண்டிருக்குமவர்கள் என்று இவ்வழியாலே அவர்களைப் பிரித்து, அவர்களெல்லாரோடும் தமக்கு ஒரு ஸம்பந்தத்தை ஆசைப்பட்டு, அவர்களெல்லாரும் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

## முதற் பாட்டு.

> பயிலுஞ்சுடரொளி மூர்த்தியைப் பங்கயக்கண்ணனைப்
> பயிலவினியநம்பாற்கடற்சேர்ந்த பரமனைப்
> பயிலுந்திருவுடையார் யவரேலும்அவர்கண்டீர்
> பயிலும்பிறப்பிடைதோறு எம்மையாளும்பரமரே.

*ஆ.*—பிராட்டியுடைய ஜந்மபூமியாகையாலே திருப்பாற்கடலைத் தனக்கு ப்ரியமான க்ராமமாகவுடையனாய், ஸர்வதா அநுபூதனானாலும் அபூர்வவத்விஸ்மயபூதனாய், நிரதிசயதீப்தியுக்த

---

*யிருக்கச்செய்தேயும்' இத்யாதி. த்ரவ்யமாயிருக்கச்செய்தேயும் ப்ரபாப்ரபாவான்களுக்கு ப்ரதாநாப்ரதாநபாவம் கண்டோமாகையாலே, ஜாதிகுணங்களோபாதி போனானென்று தாத்பர்யம். உபயநிஷ்டம் - உபயப்ரதாநம். ப்ரீதிபிடரிதள்ள-ப்ரீத்யாபுரஸ்க்ருத: என்றபடி. இப்படி ஸ்ரீபரதாழ்வானையே பற்றினால் "ஸத்ருக்நோ நித்யசத்ருக்ந:" "ஸத்ருக்நோவநநூசர" என்னும்படி சத்ருக்நாழ்வான் ப்ரீதிவிஷயமானபடி யென்? என்ன, 'எம்பெருமானார்' இத்யாதி. ஆனால் "ஜநவ:, நித்யஸத்ருக்ந:" என்கிற பதங்களுக்கு அத்யுக்தியாக அர்த்தம் சொல்லுவானென்? என்ன, 'இது ப்ரயோஜகம்' இத்யாதி. இது - பகவதீயத்வம். மிகை - ஏற்றம். ஓட்டையோடம் - அதிச்சித்ரமான ஓடம். ஒழுகலோடம் - அல்பச்சித்ரமான ஓடம். ஆனால், பின்னை அவனையே அநுவர்த்திக்கவொண்ணாதோ? என்ன, 'அநந்யா:' இதி. கீதாஸ்யநவமே, "அநந்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே । தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்". இத்திருவாய்மொழியில் பாகவதர்களை அநுபவிக்க இழிந்தவர், பாட்டுக்களில் பூர்வார்த்தங்களாலே பகவத்குணசேஷ்டிதாதிகளை வர்ணிப்பானென் ? என்ன, 'ப்ராஹ்மணஜாதி' இத்யாதி.*

ணுய், திவ்யரூபனுய், பங்கயக்கண்ணனுயிருந்த எம்பெருமானுடைய அநுபவஸம்பூத ப்ரீதிகாரித தாஸத்வ ஸம்பத்தையுடையார் ஆரேனுமாகிலும் அவர்களே நமக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், எம்பெருமானுடைய அழகிலும் குணங்களிலும் தோற்று அடிமைசெய்யுமவர்கள் ஆரேனுமாகிலும் எனக்கு ஸ்வாமிகளென்று தமூகார்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[பயிலும் என்று தொடங்கி] - அத்யந்த விலக்ஷணமாய்ச் செறிந்திருந்துள்ள தேஜஸ்ஸையே திருவுடம்பாகவுடையனுய், இவ்வடிவழகிலும் அகப்படாதாரையும் அகப்படுத்திக்கொள்ள வற்றான அழகிய திருக்கண்களையுடையனுமாகையாலே பயில இனியனுமாய், ஆஸ்ரிதஅநுக்ரஹார்த்தமாகத் திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தருளுவதும் செய்து குணவத்தையால் எல்லார்க்கும் மேலாயுள்ளவனை. [பயிலும் என்று தொடங்கி]-ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு அகலாதே நிரதிஶயபோக்யனுன தன்னையே செறிகையாகிற மஹாஸம்பத்தையுடையராய் ஏதேனும் ஜந்மவ்ருத்தாதிகளையுடையரேயாகிலும் அவர்களே வைஷ்ணவத்வவிரோதியான அபிமாநஹேதுவான ஜந்மவ்ருத்தங்களில் குறைய நின்றாரேயாகிலும் உத்தேஶ்யரென்று கருத்து. [பயிலும் என்று தொடங்கி] - ஒன்றின்மேல் ஒன்றாக நிரந்தரமாக வருகிற ஜந்மங்களின் இடந்தோறும் என்னை அடிமை கொள்ளக்கடவ ஸ்வாமிகள்.

ப.—முதற்பாட்டில்,விலக்ஷணவிக்ரஹ குணவிஶிஷ்டனுய்க்கொண்டு க்ஷீரார்ணவசாயியான ஸர்வாதிகனை ஸம்ஶ்லேஷிக்கும் ஸம்பத்தையுடைய பாகவதர்கள் ஜந்மவ்ருத்தாதிகளில் தாழநின்றாரேயாகிலும் எனக்கு ஶேஷிகள் என்கிறார்.

பயிலும் - செறிந்த, சுடர் - (ஸௌந்தர்யலாவண்யாதிகளாகிற) சுடரையுடைத்தான, ஒளிமூர்த்தியை - தேஜோமய திவ்யவிக்ரஹத்தையுடையனுய், பங்கயக்கண்ணனை - (ஸர்வஸ்மாத் பரத்வஸூசகமான) புண்டரீகாக்ஷத்வத்தையுடையனுய், பயில இனிய - (இவ்வடிவழகிலே) செறிந்தார்க்கு நிரதிஶயபோக்யனுய்க்கொண்டு, நம் - ஆஶ்ரிதார்த்தமாக, பாற்கடல்-திருப்பாற்கடலிலே, சேர்ந்த - கண்வளர்ந்தருளின, பரமனை - விக்ரஹகுணஸௌக்யதாபாரம்யத்தையுடையவனை, பயிலும் - நிரந்தராநுபவம்பண்ணிச்செறிகையாகிற, திரு - ஸம்பத்தை, உடையார் - உடையவர்கள், யவரேலும் - (அபிஜநவித்யாவ்ருத்தங்களால் எத்தனையேனுங்) குறைய நின்றாரேயாகிலும், அவர்-அந்நிலையிலே, பயிலும் - (எங்களுக்குமேன்மேலெனச்) செறிந்துவருகிற, பிறப்பிடைதோறு - ஜந்மாவகாசங்கள்தோறும், எம்மை - எங்களை, ஆளும் - அடிமையாகக்கொள்ளும், பரமர்கண்டீர் - பரமஶேஷிகள்கிடீர். அவனுடைய பாரம்யாநுபவம் இவர்களுடைய பாரம்யத்துக்கு அடியென்று கருத்து.

இ.—முதற்பாட்டில், வடிவழகிலும் குணங்களிலும் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்று இத்திருவாய்மொழியிற்சொல்லுகிற அர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[பயிலும் இத்யாதி] - செறியாநின்றிருந்துள்ள மிக்க தேஜஸ்ஸையே விக்ரஹமாகவுடையவனை. பயிலுகை - செறிகை. சுடர் என்றும் ஒளி என்றும் தேஜஸ்ஸாய், மிக்க தேஜஸ்ஸு என்கை. சுத்தஸத்த்வமயமாய் ஸ்வரூபப்ரகாஶகமான விக்ரஹத்தையுடையவன் என்கை. இவ்வடிவிலே துவக்குண்டாரை அநந்யார்ஹமாக்கும் கண். அகவாயில் தண்ணளிக்கு ஆனைத்தாளாயிருக்கை. [பயிலவினிய] - இதரவிஷயங்கள் பயின்றால் து:கஹேதுவாயிருக்குமாபோலே, இவ்விஷயம் பயிலப்பயில இனியதாயிருக்கும். [நம்பாற்கடல்சேர்ந்த] - ஆஸ்ரிதாநுக்ரஹார்த்தமாகத் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்த; வடிவழகில் குறைவற்றாற்போலே நீர்மையிலும் குறை

வற்றிருக்கிறபடி. [பரமனை] - ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் குறைவற்றிருக்கையே யன்றிக்கே இவனுக்கு மேற்பட்டாரில்லை யென்னும்படியிருக்கை. [பயிலும் திருவுடையார்] - ப்ரயோஜநாந்தரங்களைக் கொண்டு அகலாதே நிரதிசயபோக்யனானவனைச் செறிகையாகிற மஹாஸம்பத்தை யுடையார். பகவதநுபவமேயிறே ஸ்வரூபாநுகூலமான ஐச்வர்யம். "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:", "ஸ து நாகவர: ஸ்ரீமாந்" "அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்". உடையாரென்கிறார், 'வைச்ரவணன்' என்றாற்போலே. [யவரேலும்] - ஜந்மத்தாலும் வ்ருத்தத்தாலும் ஜ்ஞாநத்தாலும் குறையநின்றாரே யாகிலும். [அவர்கண்டீர்] - அந்நிலையிலே அவர்கள் எனக்கு உத்தேச்யர். வைஷ்ணவத்வவிரோதியான அபிமாநஹேதுவான ஜந்மாதிகளில் குறையநின்றவர்களே அல்லாதாரில் உத்தேச்யரென்று கருத்து. [பயிலும் இத்யாதி] - ஒன்றன்மேல் ஒன்றாக நிரந்தரமாய் வருகிற ஜந்மங்களில் அவகாசந்தோறும் என்னை அடிமைகொள்ளும் ஸ்வாமிகள். "நின் பன்மாமாயப் பல்பிறவி" என்று நிந்தித்த ஜந்மத்தையும் அநுமதிபண்ணுகிறார், ததீயசேஷத்வ ரஸத்தாலே. [பரமரே]-'முன்பு அவனைப் பரமனென்றிர்; இங்கே இவர்களைப் பரம ரென்னாநின்றீரே' என்ன, அநுபாவ்யகுணாதிக்யத்தாலே சொல்லிற்று அங்கு; இங்கு அக்குணத்துக்குத் தோற்றவர்களைச் சொல்லுகிறது; தத்ஸம்பந்தமொழியச் சொல்லில், பகவத்ஸம்பந்தமற்றதாம்.

ஈடு.—முதற்பாட்டில் - வடிவழகிலும் குணங்களிலும் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் எனக்கு ஸ்வாமிக ளென்று இத்திருவாய்மொழியின் அர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[பயிலும்] - பயிலுகை - செறிகை. அதில் வர்த்தமாநத்தாலே - இதர விஷயங்களில் ஒளி கர்மநிபந்தநமாக வளருகையாலே, வளருமாபோலே குறைந்துவருமிறே; இது அங்ஙனன்றிக்கே, என்று மொக்கப் புகர்விஞ்சி வாராநிற்கு மென்கை. [சுடரொளி மூர்த்தியை]-நிரதிசயமான தேஜஸ்ஸையே வடிவாக வுடையவனை. [பயிலும்சுடர்] - அன்றிக்கே, நித்யத்வமாவது - ஸர்வகாலவர்த்தித்வமாகையாலே, நித்யத்வத்தைச் சொல்லிற்றாகவுமாம். [சுடரொளி மூர்த்தியை] - சுடரென்றும், ஒளியென்றும் - தேஜஸ்ஸாய், மிக்கதேஜஸ்ஸென்கை. அன்றியே, ஒளி யென்று - அழகுக்குப் பேராயிற்று. சுத்த ஸத்த்வமயமாய் ஸ்வரூப ப்ரகாசகமான விக்ரஹத்தையுடையனென்கை. நிஷ்க்ருஷ்ட ஸத்த்வமேயாய், "தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத் ப்ரகாசகம்" (தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத் ப்ரகாசகம்) என்றும், "தேஜஸாம் ராசிமூர்ஜிதம்" (தேஜஸாம்

முதற்பாட்டு - 'பயிலும்' இத்யாதி. பூர்வார்த்தத்தையும், "பயிலும் திருவுடையார் - எம்மையாளும் பரமர்" என்றத்தையும் கடாக்ஷித்து அவதாரிகை - 'வடிவழகிலும்' இத்யாதி.

'பயிலும்' என்றத்தைச் சுடரொளிக்கு விசேஷணமாக்கி அர்த்தம்-'பயிலுகை - செறிகை' இத்யாதி. 'பயிலும்' என்றத்தை மூர்த்திக்கு விசேஷண மாக்கி அர்த்தாந்தரம்-'அன்றிக்கே, நித்யத்வம்' இத்யாதி. இந்தப் பக்ஷத்தில், பயிலுகை - காலத்தோடே செறிகையாய், அதில் வர்த்தமாநத்தாலே, ஸர்வகாலத்தோடும் செறிகையைச் சொல்லுகிறது. விக்ரஹவிசேஷண மென்னுமது, மேலே இத்தை அநுவதிக்கிற 'நித்யமாய் நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்தையும்' என்கிற வாக்யத்திலே வ்யக்தம். செறிகை - சேருகையும், நெருங்குகையும். 'சுடரொளி' என்று - மீமிசையென்னுதல், தேஜஸ்ஸையும் அழகையுஞ் சொல்லுதல். மிக்கதேஜஸ்ஸென்கிற முந்தின அர்த்தத்தில் பலிதம்-'சுத்தஸத்த்வமயம்' இத்யாதி. சுத்தஸத்த்வமயமாகையாலே ஸ்வரூபப்ரகாசகமென்றபடி. ஸத்த்வம் ப்ரகாசக மென்னுமதுக்கு ப்ரமாணகதநபூர்வகமாக, விக்ரஹம் நிரவதிகதேஜோரூப மென்னுமதுக்கும் ப்ரமாணம் காட்டுகிறார் - 'நிஷ்க்ருஷ்டஸத்த்வ' இத்யாதி. நிஷ்க்ருஷ்ட ஸத்த்வமேயாய் தேஜோரூபமாய் ப்ரகாசகமான விக்ரஹமென்று அந்வயம். கீதாஸு சதுர்த்தசே, "தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத் ப்ரகாசகம்

ராமிமூர்ஜிதம்) என்றும், “ திவிஸூர்யஸஹஸ்ரஸ்ய ” (திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய) என்றும் சொல்லுகிறபடியே நிரவதிகதேஜோரூபமாய், “ஷாட்குண்யவிக்ரஹம்” (ஷாட்குண்யவிக்ரஹம்) என்று ப்ரமிப்பார்க்கும் ப்ரமிக்கலாம்படியாய், ஜ்ஞாநாதிகுணங்களுக்கும் ஸ்வரூபத்துக்கும் ப்ரகாசகமான விக்ரஹமிறே. [பங்கயக்கண்ணனை] - வடிவழகெல்லாம் பாதியும், கண்ணழகு பாதியுமாயிருக்கும். “ராமஃகமலபத்ராக்ஷஃ” (ராமஃகமலபத்ராக்ஷஃ) என்னுமாபோலே வடிவிலே துவக்குண்பாரை வளைத்துக்கொள்வது கண்ணழகாயிற்று. ஒரு சுடர்க்கடல்போலே யாயிற்று வடிவு, அது பரப்புமாறத் தாமரை பூத்தாற்போலேயாயிற்றுக் கண்ணழகு. வடிவுதானே ஆகர்ஷிக்க வற்று; அதுக்குமேலே அகவாயில் வாத்ஸல்யாதி குணங்களுக்கும் ப்ரகாசகமா யிருக்குமிறே கண். [பயிலும் இத்யாதி] - நித்யமாய் நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்தையும், அதிலும் ஆகர்ஷகமான கண்ணழகையு முடையவனை. [பயில இனிய] - இப்படி வடிவழகும் கண்ணழகும் கண்ணழிவற்றிருக்கையாலே இனியதாயிருக்குமிறே. இதர விஷயங்கள் கிட்டுந்தனையும் ஒன்றுபோலேயாய், கிட்டினவாறே அகல வழிதேடும்படியாயிருக்கும்; அவற்றினுடைய ஹேயதை யறிகைக்கும் அங்கே செறிய அமையும்; பகவத் விஷயத்தினுடைய நித்யப்ராப்யதை அறிகைக்கும் அங்கே நெருங்க அமையும். ஆகையாலேயிறே, இவ்வஸ்து நித்யப்ராப்யமாகிறது. இவ்விஷயத்தில் அநுபூதமான அழகைப்பற்ற அநுபாவ்யமான அழகு, “நோபஜநம்ஸ்மரந்” (நோபஜநம்ஸ்மரந்) என்று - முக்தன் ஸம்ஸாரயாத்ரையை மறக்குமாபோலே, அநுபூதாம்சத்தை

---

நாயஃ। ஸர்வஸந்தேஹநவஹ்நாதிஜ்ஞாநஸந்தேஹவாநவ.” ஏகாதசே, “திவிஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத்யுகபதுத்திதா। யதிபாஸ்ஸத்ருசீஸாஸ்யாத்பாஸஸ்தஸ்ய மஹாத்மந:.” ஸ்ரீவிஷ்ணுபுராணே, “தஸ்யஷாட்குண்யவிஸ்தரவாஸுதேவஸ்ய மஹாத்மந:। ஸமஸ்தகல்யாணகுணாத்மகோஸௌ ஸ்வஸக்திலேஸாத்ருதபூதஸர்க்க: தேஜோபலைஸ்வர்யமஹாவபோதஸுவீர்யஸக்த்யாதிகுணைகராசி:.” வடிவழகைச்சொன்ன அநந்தரம் ஏகாவயவத்தைச் சொன்னதுக்கு பாவம்- ‘வடிவழகெல்லாம்’ இத்யாதி. “பயிலும்சுடரொளிமூர்த்தியை, பங்கயக்கண்ணனை” என்ற பதத்வயத்துக்கும் ப்ரமாணம் - ‘ராமஃ’ இத்யாதி. ஸுந்தரகாண்டே ஸீதாம்ப்ரதி மாருதிஃ, “ராமஃகமலபத்ராக்ஷஸ்ஸர்வஸத்வமநோஹர: ரூபதாக்ஷிண்யஸம்பந்ந: ப்ரஸூதோஜநகாத்மஜே.” ‘ரூபதாக்ஷிண்ய-ராமஃ’ என்கிற இது-வடிவழகாலே யென்று கருத்து. வடிவழகைச்சொல்லி, கண்ணழகைச் சொன்ன இக்க்ரமத்துக்கு பாவம் - ‘வடிவிலே’ இத்யாதி. வளைத்துக்கொள்ளுகை - அவயவாந்தரங்களிற் போகவொட்டாம லிருக்கை. பதத்வயத்துக்கும் ஸமுதாயதாத்பர்யம் - ‘ஒருசுடர்க்கடல்’ இத்யாதி. ‘பங்கயக்கண்ணனை’ என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் - ‘வடிவுதானே’ இத்யாதி. வடிவென்று - அழகாய், திருக்கண்களினழகுதானே ஆகர்ஷிக்கவற்று என்றபடி. இத்தால் - அழகாலும் குணப்ரகாசகத்வத்தாலும் கண்ணழகைச் சொல்லுகிறதென்று தாத்பர்யபேதம். ‘பயிலும்’ என்றதின் இரண்டாமர்த்தத்தை உட்கொண்டு, இரண்டுபதத்தாலும் சொன்ன அர்த்தத்தை நிகமிக்கிறார் - ‘நித்யமாய்’ இத்யாதி. பயிலவினியனானைக்கு ஹேது கீழ்ச்சொன்னவை யென்னுமிடந் தோன்ற அருளிச்செய்கிறார் - ‘இப்படி’ இத்யாதி. ‘பயிலவினிய’ என்கையாலே - இதரவிஷயத்தைப்பற்ற இவ்விஷயம் வ்யாவ்ருத்தமாயிருக்கு மென்று விவக்ஷித்து, இதரவிஷயத்துக்குள்ள ஆகாரத்தையும் அருளிச்செய்கிறார் - ‘இதரவிஷயங்கள்’ இத்யாதி. அத்தை உபபாதிக்கிறார் - ‘அவற்றினுடைய’ இத்யாதி. அங்கே செறிய அமையும் - இதரவிஷயங்களிலே செறிய அமையும்; செறிய - கிட்ட. அங்கே நெருங்க - பகவத்விஷயத்திலே நெருங்க. “மாற்பால்மனஞ்சுழிப்ப”, “பராபூதமியோபரக்த:” என்னக்கடவதிறே. ‘பயிலவினிய’ என்றவிடத்திலே - “ஸதாஹம்ஸாரஹ்ருதாம்நிஸமேத்யபூவாணீமுபாதிஷ்டதஸாவிதி। வதிக்ஷணம்நவ்யவதுத்யதஸ்யய ஸ்மேவிதாநாதிவஸாயபவாதயா” என்று அருளிச்செய்வர். ‘பயில்வினிய’ என்றதின் சாமாவதி - ‘இவ்விஷயத்தில்’ இத்யாதி. நித்யப்ராப்யதையின் சாமாவதியாதல். நித்யப்ராப்யமென்றதுக்கு ப்ரமாணம் - “பண்டிவரை” இத்யாதி. திருமொழி - எழுபத்தோராந் திருமொழி-

நினைக்கவொண்ணாதபடியிறே இருப்பது. "பண்டு இவரை" இத்யாதி - முதல்நாள் கண்டால், ஸ்வாபாவிகஸௌஷித்வத்தாலும் முகத்தில் தண்ணளியாலுமாக, காணாது கண்டவனுக்கும் 'பண்டு கண்டுவிட்ட முகமோ?' என்று தோற்றியிருக்கும்; சிலநாள் பரிசீலித்தால், 'பண்டு இவரை நாம் கண்டறியோம்!' என்று தோற்றியிருக்கும். இரண்டுக்கும் ஶப்தம் ஒத்திருக்க இவ்வர்த்தத்தைக் காட்டும்படி எங்ஙனே? என்று நான் கேட்டேன்; "பயில்கின்றாளால்" என்று ப்ரதம தசையோடு சரமதசையோடு வாசியற வார்த்தை இதுவேயாயிருந்தது கண்டீரே என்று அருளிச் செய்தார். [நம்இத்யாதி] - வடிவழகு குறையற்றுக் குணத்திற் கோத்தையாலே கிட்ட வொண்ணாதபடி யிருக்குமோ? என்னில்; - கலங்காப் பெருநகரத்தை இருப்பிடமாக வுடையவன் திருப்பாற்கடலிலே வந்து ஆஶ்ரிதர்க்கு முகங்கொடுக்கைக்கு ஒருப்பட்டிருக்கும். [நம்] - ஆஶ்ரிதார்த்தமாக என்றபடி. அல்லாதார் வடிவுபடைத்தால் 'வடிவில் வீறுடையோம்' என்று, அணைய நசை பண்ணினால் அருமைப்படுத்திப் புறப்படத் தள்ளுவர்கள்; இப்படி அழகுடையவன், தானே ஆஶ்ரிதரை அநுபவிப்பிக்கைக்காக அணித்தாக வந்து சாய்ந்தபடி. [பரமனை] - வடிவழகாலும் குணங்களாலும் அல்லாதாரைக் கழித்து இங்கே ஓரேற்றம் சொன்னீர்; மேன்மைக்கு இவனுக்கு அவ்வருகேதான் ஒருவிஷய முண்டோ? என்னில்;—மேன்மைக்கும் இவனுக்கு அவ்வருத ஒரு விஷய மில்லை. [பரமனைப் பயிலுந் திருவுடையார்] - 'நல்லவாய்ப்பாயிருந்தது' என்று முகங் காட்டுவித்துக்கொண்டு ப்ரயோஜநத்துக்த மடியேற்கை யன்றிக்கே, அவன் தன்னையே ப்ரயோஜந மாகப் பற்றி நெருங்கும் ஸம்பத்துடையார். ஒருப்ரயோஜநத்துக்குப் பற்றினவர்கள் அது பெற்றவாறே அவனை விட்டுப்போவர்களிறே; அவன்தன்னையே பற்றினவர்கள் பின்னை அங்கே நெருங்குமத்தனையிறே. [திரு] - அவன் ஸௌஷித்வத்துக்கு எல்லையாய் முடி கவித்தாற்போலே இவர்கள் ஸௌஷத்வத்துக்கு எல்லையாய் முடி கவித்திருப்பார்கள்; "अन्तरिक्षगतः श्रीमान्" (அந்தரிக்ஷகதஶ் ஶ்ரீமாந்), "सतु नागवरः श्रीमान्" (ஸது நாகவரஶ் ஶ்ரீமாந்), "लक्ष्मणो लक्ष्मिसंपन्नः" (லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நः) இத்யாதிகளிற்படியே. "अन्तरिक्षगतः श्रीमान्" (அந்தரிக்ஷகதஶ்ஶ்ரீமாந்) - லங்கையை விட்

---

ஒன்பதாம்பாட்டு - "வண்டமரும்" இத்யாதி. "பண்டிவரை - யாம் - எவ்வூரில் - கண்டறிவது - என்றே பயில்கின்றாள்" இத்யந்வயः. பயிலுகை - சொல்லுகை. 'எவ்வூரில்' என்றால் - எங்கேயோ கண்டாற்போலேயிருக்கிற தென்றும், எங்கே கண்டறிவோம்? ஓரிடத்திலும் கண்டறியோ மென்றும் தோற்றுகையாலே உபயத்தையும் அருளிச்செய்கிறார் - 'முதல் நாள்' இத்யாதி. இவ்வர்த்தத்வயமும் - "எவ்வூரில்கண்டறிவது" என்கிற ஸ்வரத்தாலே காட்டப்படுகிறது. இரண்டுக்கும் சப்தம் ஒத்திருக்க - 'கண்டறிவோம், கண்டறியோம்' என்கிற இரண்டுக்கும் 'எவ்வூரில்' என்கிற சப்தம் ஒத்திருக்க. இவ்வர்த்தத்தை - ப்ரதமதர்ஶநத்திலே கண்டறிவோமென்றும், அநந்தரதர்ஶநத்திலே கண்டறியோ மென்றும் சொல்லுகிற இவ்வர்த்தத்தை. பரிஹாரவாக்யத்துக்கு- நித்யாநுபவம்பண்ணாநிற்க, "பண்டிவரைக்கண்டறிவதெவ்வூரில்" என்னும்போது, தசாபேதேந அர்த்தம்கொள்ள வேணும்; அல்லாதபோது, லௌகிகவிஷயவிலக்ஷணமான நித்யப்ராப்யதை இவ்வஸ்துவுக்கு ஸித்தியா தென்று தாத்பர்யம். யத்வா, சப்தம் ஒத்திருக்க - சப்தம் ஏகமானாலும் அஸக்ருதாவ்ருத்தமாகையாலே தசாபேதேந அர்த்த போதகத்வம் அர்த்தௌசித்யத்துக்குக் கூடுமென்று ப்ரிஹாரவாக்யத்துக்குத் தாத்பர்யமாதல். பண்டு - முன்பு. 'பரமன் - நம்பாற்கடல்சேர்ந்தவன்' என்று அந்வயித்து அர்த்தம் - 'கலங்காப்பெரு' இத்யாதி. 'நம்' என்ற பஹுவசநதாத்பர்யம் - 'ஆஶ்ரிதார்த்தமாக' இத்யாதி. 'கலங்காப்பெருநகரம்' இத்யாதி வாக்யத்திற் சொன்ன அர்த்தத்தை லௌகிகவ்யாவ்ருத்திகதநமுகேந விசதீகரிக்கிறார் - 'அல்லாதார்' இத்யாதி வாக்யத்வயேந. 'பாற்கடல்சேர்ந்த' என்றத்தாலே 'குணங்களாலும்' என்றது. பரோ மாऽஸ்மாதிதி - பரமः. 'பயிலும்' என்ற வர்த்தமாநார்த்தத்தை உட்கொண்டு அருளிச்செய்கிறார் - 'நல்ல வாய்ப்பாய்' இத்யாதி. மடியேற்கை - யாசிக்கை. விவரணம் - 'ஒருப்ரயோஜந' இத்யாதி. இத்தை ஸம்பத்தாகச்சொன்ன இடமுண்டோ? என்ன, 'அந்தரிக்ஷ' இத்யாதி. இந்த ப்ரமாணங்களில் த்ருஷ்டைஶ்வர்யங்களைச் சொல்லுகிறதென்றாலோ வென்ன, 'லங்கையை'

டுப் பெருமாள் திருவடிகளிலே வரவேண்டு ஓரடியிட்டபோதே, ராவண ஸம்பந்தத்தாலே வந்த அஸ்ரீ போய் ஸ்வரூபாநுரூபமான ஸ்ரீ குடிபுகுந்ததிறே. "ஸதுநாகவரஶ்ரீமாந்" (ஸதுநாகவரஸ்ஸ்ரீமாந்)-ஸர்வேஸ்வரன் அரைகுலையத் தலைகுலைய வந்து விழவேண்டும்படியான ஆர்த்தி தன்னை ஒரு ஸம்பத்தாகச் சொல்லிற்றிறே, ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு. "ஸர்வாத்மநா பர்யநுநீயமாநஃ" (ஸர்வாத்மநா பர்யநுநீயமாநஃ) என்று இளையபெருமாளை 'நீர் யௌவராஜ்யத்திலே முடிசூடாவிடில் நாம் முடிசூடோம்' என்று பெருமாள் அருளிச்செய்யச் செய்தேயும் முடி வைக்க இசையாத இளையபெருமாளையிறே, "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நஃ" (லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நஃ) என்றது. ஸ்ரீபரதாழ்வானை "பிள்ளாய்! உன் உள்வேதுப்பு ஆறுவது எப்போதோ?" என்று கேட்க, "யாவந்நசரணௌ ப்ராதுஃ பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ। ஶிரஸா தாரயிஷ்யாமி" (யாவந்நசரணௌப்ராதுஃ பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ ஶிரஸாதாரயிஷ்யாமி) என்று பெருமாளும் தமக்கு வகுத்த முடி சூடி, நானும் எனக்கு வகுத்த முடிசூடின அன்று ஆறும்" என்றானிறே; "அரசமர்ந்தானடிசூடு மரசு" இறே. அடியிலே தலையாக வாழ அடியிடுகிறானிறே. [உடையார்] - 'வைஶ்ரவணன்' என்னுமாபோலே, பாரதந்த்ர்யமாகிற ஸம்பத்தை யுடையவர்கள். இஸ்ஸம்பத்தை யுடையராகிறார்கள்: மற்று என்ன ஏற்றமுண்டாகவேணும் இவர்களை யாதரிக்கைக்கு? என்னில்,—[யவரேலும்] - ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்கள் ஏதேனுமாகவுமாம்; இது உண்டாமத்தனையே வேண்டுவது. [அவர்கண்டீர்] - ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களால் வரும் அபிமாநம் பகவச்சேஷத்வத்துக்கு விரோதியாகையாலே அதில்லாதார் உத்தேஶ்யரென்கிறார். 'ததீயர்' என்றே தங்களை நிரூபிக்க வேண்டும்படியாய், வைஷ்ணவத்வ விரோதியான ஜந்மாதிகளால் வரும் அபிமாநமில்லாதார் நமக்குத்தேட்டமென்கிறார். அவர்கள் எத்தனை நாளைக்கு உத்தேஶ்யரென்ன, [பயிலும் பிறப்பிடைதோறு]-மேன்மேலென நெருங்கிவருகிற ஜந்மங்களில் அவகாசங்கள்தோறும். "நின்பன்மாமாயப்பல்பிறவியிற்படிகின்றயான்" என்று த்யாஜ்யமாகச்சொன்ன

---

*இத்யாதி. ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு ஆர்த்தியை 'ஸம்பத்து' என்றபோதே, ததநந்தரபாவியான பகவத்ஸம்பந்தம்.- 'ஸம்பத்து' என்னுமது கிம்புநர்ந்யாயஸித்த மென்றபடி. 'சேஷத்வத்துக்கு எல்லையாக முடிகவித்திருப்பர்கள்' என்றதுக்கு, 'லக்ஷ்மிஸம்பந்நஃ இத்யாதிகளிற்படியே' என்றவிடத்தில் ஆதிஶப்தவிவக்ஷிதமாக ப்ரமாணாந்தரம் - 'ஸ்ரீபரதாழ்வானை' இத்யாதி. "பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ" என்றத்தாலே - 'பெருமாளும் தமக்கு வகுத்த முடிசூடி' என்றது. "ஶிரஸாதாரயிஷ்யாமி" என்றத்தாலே - 'நானும் எனக்குவகுத்தமுடிசூடின' என்றது. "பார்த்திவவ்யஞ்ஜநம்" என்று - திருவடிகளில் த்வஜாரவிந்தாதி ரேகாதிக ளென்று, திருவபிஷேகம்கொண்டருளின அநந்தரம் திருவடிகளுக்கு அஸாதாரணமாகச் சாத்தும் அலங்காரங்கள். திருவடிகளில் சாத்தின அந்த அலங்காரங்கள்தான் அவர்க்கும் பார்த்திவத்வ வ்யஞ்ஜநமாய், தன்தலையிலே திருவடிகள் வரும்போது தனக்கும் பார்த்திவத்வவ்யஞ்ஜநமா யிருக்கு மென்றபடி. "ஶிரஸாதாரயிஷ்யாமி" என்றால்-எனக்கு வகுத்த முடிசூடியென்றாகவேணுமோ? என்ன, 'அரசமர்ந்தான்' இத்யாதி. பெருமாள்திருமொழி - பத்தாந்திருமொழி - ஏழாம்பாட்டு - "குரைகடல்" இத்யாதி. திருச்சித்திரகூடத்தில் ராஜ்யம்பண்ணியிருக்கிறவன் திருவடிகளை ஶிரஸாவஹிக்கையாகிற ராஜ்யமுடையவ னிதி பாசுரார்த்தஃ. எடுத்த சந்தைக்குச் சாடேக்தி-'அடியிலே' இத்யாதி. திருவடிகளிலே தலையைவைத்துக்கொண்டு வாழவென்று ஸ்வபாவார்த்தம். முன்னே நன்றாக வாழவென்று சாடு. பயிலுகை திருவென்றும், சேஷத்வம் திருவென்றும், பாரதந்த்ர்யம் திருவென்றும் சொன்னவற்றுக்கு - பின்னார்த்தங்களாக நிர்வஹிக்குமதில்லை. 'உடையார்' என்ற மதுப்பு, பூமாவிலே. மற்று என்ன ஏற்றம் உண்டாகவேணும்? என்றது - ஆபிஜாத்யாதிக ளுண்டாக வேணுமோ? என்றபடி. இது உண்டாமத்தனையே - ததீயத்வ மூண்டாமத்தனையே. 'யவரேலும்' என்ன அமைந்திருக்க, 'அவர்கண்டீர்' என்றதுக்குக் கருத்து ஏது? என்ன, 'ஜந்மவ்ருத்தங்களால்' இத்யாதி. விவரணம் - 'ததீயரென்றே' இத்யாதி. பிறப்பிடை- பிறப்புக்கும் இறப்புக்கும் நடு. த்யாஜ்யமாகச்சொன்ன ஜந்மத்தை விரும்புகிறதென்? என்ன, 'நின்பன்மா' இத்*

ஜந்மந்தன்னையே விரும்புகிருரிறே இப்போது, பாகவத சேஷத்வத்துக்கு உறுப்பாகையாலே. மேன் மேலென ஜந்மங்களுண்டாகவும் அமையும், ஒரு பாகவதன் ஸ்ரீபாதத்திலே வர்த்திக்கப் பேறில் என்கிருர். [எம்மையாளும் பரமர்]-என்னை அடிமைகொள்ளக்கடவ ஸ்வாமிகள். 'முன்பு அவனை 'பரமன்' என்றீர்; இங்கே இவர்களை 'பரமர்' என்ருநின்றீர்; இது இருக்கும்படி யேன்?' என்னில்,—அநுபாவ்ய குணுதிக்யத்தாலே சொல்லிற்று - அங்கு; இங்கு - அக்குணத்துக்குத் தோற்றவர்களைச் சொல்லுகிறது; தத்ஸம்பந்த மொழியச் சொல்லில் பகவத்ஸம்பந்த மற்றதாம். (௧)

# இரண்டாம் பாட்டு.

ஆளும்பரமனைக்கண்ணனை ஆழிப்பிரான்தன்னைத்
தோளுமோர்நான்குடைத் தூமணிவண்ணனெம்மான்தன்னைத்
தாளுந்தடக்கையுங்கூப்பிப் பணியுமவர்கண்டீர்
நாளும்பிறப்பிடைதோறு எம்மையாளுடைநாதரே.

*ஆ.—(ஆளும்.) திருப்பாற்கடலில்நின்றும் ஆஸ்ரிதபரித்ராணார்த்தமாக சதுர்ப்புஜத்வ ஶங்கசக்ரகதாஶார்ங்காதி திவ்யாயுதஸ்வாஸாதாரணாகாரவிஶிஷ்டனாய்க்கொண்டு வஸுதேவக்ருஹே அவதீர்ணனாய், ஸமஸ்தஹேய ப்ரத்யநீகனாயிருந்த எம்பெருமானைத் தாளுந் தடக்கையும் கூப்பிப் பணியுமவர்கண்டீர் நமக்கு என்றைக்கும் ஸ்வாமிகள் என்கிருர்.*

*ஒ.—இரண்டாம்பாட்டில், எம்பெருமானுடைய திவ்யாவயவஸௌந்தர்யவஶீக்ருதரான ஸ்ரீவைஷ்ணவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிருர்.*

*[ஆளும் பரமனைக் கண்ணனை] - ஆளக்கடவ ஸ்வாமியான க்ருஷ்ணனை. [ஆழிப்பிரான் என்று தொடங்கி]-கையுந் திருவாழியுமான அழகைக் காட்டி அநுகூலரை வாழ்விக்கும் ஸ்வபாவனாய், கல்பகதரு பணைத்தாற்போலே விலக்ஷணமான நாலு திருத்தோள்களையுமுடையனாய், பழிப்பற்ற நீலமணிபோலே குளிர்ந்திருக்கிற நிறத்தையுடையனாய், அவ்வழகாலே என்னை அடிமைகொண்டவனை. [தாளும் என்று தொடங்கி] - தன்னைத் தொழுவென்ருல் தடத்துக்கொடுக்கக்கடவதான அங்கங்களோடே கூடப் பணியுமவர்கண்டீர் பிறந்த இடந்தோறும் அதிலே வைத்துக்கொண்டு நாடோறும் என்னை அடிமைகொள்ளக்கடவ நாதர்.*

*ப.—அநந்தரம், அவதாரவிக்ரஹ வைலக்ஷண்யத்துக்கு ஈடுபட்டு இறைஞ்சும் பாகவதர் எனக்கு நாதபூதர் என்கிருர்.*

---

*யாதி. தாத்பர்யம் - 'மேன்மேலென' இத்யாதி. அநுபாவ்யகுணுதிக்யத்தாலே - பாகவதர்களுக்கு அநுபாவ்யமான குணுதிக்யத்தாலே. இத்தால் - பகவச்சேஷத்வம் குணக்ருதம், பாகவதசேஷத்வம் ஸ்வரூபப்ரயுக்தமென்று கருத்து. ஆனல், 'பயிலும்திருவுடையார்' என்று விசேஷிக்கவேணுமோ? 'யவரேலும்' என்ருல் அமையாதோ? என்ன, 'தத்ஸம்பந்தமொழிய' இத்யாதி. "ஜஸிக்ஷமதஃஸ்ரீமாநுஸ்த்ரா தாமெவாக்ஷஸாயிவடு" இதி யுத்தகாண்டே, லிகிதம்பூர்வமேவ. ஸ்ரீவிஷ்ணுதர்மே, "வரமேவஞமவணோமநஸாZவிஜயஞரிடு। ஸதாநாமவரஃஸ்ரீமா ஊாராயணவராயணஃ." பாலகாண்டே, "ஸவஹுவி யகாரஷுஸ்யாமஸ்யா விஶரீரதஃ। ஐக்ஷணொஐக்ஷிஸம்வணோவஷிஃஹ்ராணஐவாவரஃ". யுத்தகாண்டே சரமஸர்க்கே லக்ஷ்மணம்ப்ரதி ராமஃ - "ஸவஹுாத்நாவயஹுநநீயமொநாயதாநஸௌமித்ரமெவெதிஷொமடு। நியஜ்யாமொநாவிவயளவராஜெ்யதமொஹ்யஷிஞ்ஹாரதம்ஹொதாஃ". அயோத்யாகாண்டே பரதஃ- "யாவஞவரணஸாத்மஃ" இத்யாதி பூர்வமேவ லிகிதம், க்ரமேண அந்வயஃ. (௪)*

ஆளும் பரமனை - (ஆஶ்ரிதரை) அடிமைகொள்ளுகைக்கு அடியான ஶீலாதிபாரம்யத்தையுடையனாய், கண்ணனை - அதுக்கு ப்ரகாஶகமான அவதாரஸௌலப்யத்தையுடையனாய், ஆழிப்பிரான்தன்னை - (ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக அவதார தசையிலும்) கையும் திருவாழியுமாயிருக்குமவனாய், (அதுக்குமேலே ஆஶ்ரிதர்க்கு ஒதுங்க நிழலாய்), ஓர் - அத்விதீயமான, நான்கு தோளும்உடை - நாலு திருத்தோளையுடையனாய், தூ - (அவர்களுக்கு) அநுபாவ்யமாய், மணி - (முடிந்தாளலாம்படி) நீலரத்நம்போலே விலக்ஷணமான, வண்ணன் - வடிவையுடையனாய், எம்மான் தன்னை - (அவ்வடிவைக்காட்டி) என்னையடிமைகொண்ட ஸ்வாமியை, தடம் தாளும் கையும் கூப்பி - தங்களொடுக்கம் தோன்றும்படி காலையும் கையையும் கூட்டி, பணியுமவர் கண்டீர் - ப்ரணாமம்பண்ணுமவர்கள்கிடீர், நாளும் - என்றும், பிறப்பிடை தோறு - ஜந்மாவகாஶந்தோறும், எம்மை ஆள் உடை - எம்மை அடிமையாகவுடைய, நாதர் - நாதபூதர்.

இ.—இரண்டாம்பாட்டில், அவனுடைய அவயவஶோபைக்குத் தோற்றிருக்குமவர்கள் எனக்கு நாதர் என்கிறார்.

[ஆளும்பரமனை]-இவ்வஸ்துவை ஆளும்போது ஒப்பில்லாதவனை; "அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்" என்னக்கடவதிறே. [கண்ணனை]- தான் கையாளாய் நின்றாய்த்து ஆட்கொள்வது; "ஆட்கொள்ளத்தோன்றிய ஆயர்தங்கோவினை". [ஆழிப்பிரான்தன்னை] - ஆஶ்ரிதரக்ஷணத்தில் பகலை இரவாக்குகைக்குப் பெருநிலைநின்ற திருவாழியை யுடையனாய்க் கொண்டு உபகரிக்குமவனை. கையுந் திருவாழியுமான சேர்த்தியைக் காட்டி அநந்யார்ஹமாக்குமவனை. [தோளும் இத்யாதி] - அதுக்குமேல் கல்பகதரு பணைத்தாற்போலே அத்விதீயமான நாலுதிருத்தோளையுடையனாய்; "சதுர்பாஹும்". [தூமணி இத்யாதி] - பழிப்பற்ற நீலமணிபோலே குளிர்ந்த திருநிறத்தையுடையனாய்; அத்தாலே என்னை அநந்யார்ஹனாக்கினவனை. [தாளும் தடக்கையும்] - இவனைத் தொழவென்றால் பணைக்கக்கடவ அங்கங்களாயிருக்கை. கைகூப்புகையொழியத் தாள்கூப்புகையாவது - நிரபிமாநியாயிருக்கிறமை தோற்ற அவயவங்களை ஒடுக்குகை. கூப்பிப்பணிகையாவது-"நிர்மம: நிரஹங்கார:"என்கிறபடியே நிர்மமராய்த் தொழுகை. [நாளும் இத்யாதி] - என்று மொக்க ஜந்மங்களில் அவகாஶந்தோறும் என்னை அடிமைகொள்ளும் நாதர்; அவன் தன் குணத்தைக் காட்டி அடிமைகொள்ளும்; அக்குணத்துக்குத் தோற்று அடிமை கொள்வர்கள் இவர்கள்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. அவனுடைய அவயவ ஶோபைக்குத் தோற்றிருக்குமவர்கள் எனக்கு நாதர் என்கிறார்.

[ஆளும் பரமனை] - நாம் உகந்தத்தை உகக்கிறோம்; இவ்வஸ்துவையாளுமிடத்தில் இங்ஙன் அவன்தனை ஆளவல்லாரில்லை: "அடியார்க் கேன்னை யாட்படுத்த விமலன்" என்

இரண்டாம்பாட்டு - 'ஆளும்' இத்யாதி. 'தோளுமோர் நான்குடை' என்றத்தைப்பற்ற அவதாரிகை - 'அவனுடைய' இத்யாதி.

கீழே, ததீயரை - 'ஆளும்பரமர்' என்றுவைத்து, இங்கே, ஈஶ்வரனை-'ஆளும்பரமன்' என்கிறதென்? என்ன, 'நாமுகந்தத்தை' இத்யாதி. அதாவது - நாம் தன்னைவிட்டு பாகவதர்களையே உகந்தோமாகிலும், இவ்வஸ்துவை யாளுமிடத்தில் நம்முடைய நினைவின்படியே பாகவதர்களுக்கு ஶேஷமாக்கி, 'அவர்களே பரமப்ராப்ய ப்ராபகர்' என்னும் நினைவைப் பிறப்பித்து அடிமைகொள்வான் அவனை யொழிய இல்லை யென்றபடி. "ஶரணாகதி ஶாஸ்த்ரம்" என்று விவக்ஷிதம். இத்தால்-கீழ்ச்சொன்ன ஶங்கைக்குப் பரிகாரம்-பாகவத விஷயத்தை விரும்புகிறதும். அவனுடைய க்ருஷியாலே வந்ததாகையாலே, ஈஶ்வரனை-'ஆளும்பரமன்' என்கிறாரென்றபடி. அப்படி ததீயஶேஷமாக்கி ஆளுமோ? என்ன, 'அடியார்க்கு' இத்யாதி. அமலனாதிபிரான் - (௧) தன்பக்கலிலே நிக்ஷிப்தபரராயிருக்குமவர்களுக்குத் தன்னிடையாட்டமும் அறியாத என்னை, ஶேஷபூதனாக்கின

னக்கடவதிறே; இவ்வுகப்புக்கு அடி அவ னென்கிறார்; ததீயரை விரும்புகிறது அவனடியாகவிறே. [கண்ணனை] - ஆள் செய்து ஆட்கொள்ள வல்லார் அவன்தனையில்லை; தான் தூத்ய ஸாரத்யங்களைப்பண்ணியிறே ஆட்கொள்வது. "அஞ்சேலென்றடியேனை யாட்கொள்ளவல்லானை" என்றும், "ஆட்கொள்ளத்தோன்றிய வாயர்தங் கோவினை" என்றுஞ் சொல்லுகிறபடியே; எதிர்சூழல்புக்கு ஒரு ஜன்மத்திலே இவனை அடிமை கொள்ளுகைக்காகத் தான் அநேக ஜன்மங்களைப் பிறந்து திரியுமாயிற்று. [ஆழிப்பிரான்தன்னை] - தான் தாழநின்று ஆட்கொள்ளுமிடத்து, பகலை இரவாக்குகைக்கும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுக்கைக்கும் பெருநிலைநிற்கும் பரிகரத்தையுடையவனை. "ஸக்ருத் ஸம்சிந்திதமாத்ரமாஸ்ய தஸ்யாக்ரஹஸ்தம் ஸ்வயமாருரோஹ" (ஸக்ருத்ஸம்சிந்திதமாத்ரமாஸ்ய தஸ்யாக்ரஹஸ்தம்ஸ்வயமாருரோஹ) என்று ஒருகையிலே யேறி விரோதிகளை அழியச்செய்யுமே. நினைவறிந்து கார்யஞ் செய்யுமவனிறே. கையுந்திருவாழியுமான அழகை ஆஸ்ரிதர்க்காக்கி, அத்தைக்கொண்டு விரோதியைப் போக்குவார்க்கு விரோதியைப்போக்கி அதுதன்னைக் கைகண்டு அநுபவிப்பார்க்கு அநுபவிப்பிக்கும் உபகாரகனை. [தோளும் இத்யாதி] - விரோதி போக்குகைக்கும் அழகுக்கும் வேறொன்று வேண்டாதே, தோள்தானே அமைந்திருக்கை. "ஆயதாஸ்ச ஸுவ்ருத்தாஸ்ச - கிமர்த்தம்" (ஆயதாஸ்சஸுவ்ருத்தாஸ்ச - கிமர்த்தம்)—கோலின கார்யத்

---

சத்தன் இதி பாசுரார்த்தம். பாசுரத்துக்கு பாவம் - 'இவ்வுகப்புக்கு' இத்யாதி. "முடிந்தநிலம் ஈஸ்வரன்பக்கல் க்ருதஜ்ஞதை" என்னக்கடவதிறே. இவ்வுகப்புக்கு அடி - பாகவதர்களை உத்தேஸ்யரென்று நினைத்திருக்கிற உகப்புக்கு அடி. அப்படி ததீயரை விரும்புகைக்கு ஹேது ஈஸ்வரனாயிருக்குமோ? என்ன, 'ததீயரை' இத்யாதி. இப்படி அடிமைகொள்ளுமிடத்தில் "ஊஹ வஹ" என்றல்ல அடிமைகொள்வது; தான் பரதந்த்ரனாய் நின்று அடிமைகொள்ளு மென்கிற இது 'கண்ணன்' என்கிற பதத்தாலே ஸித்திக்கிற தென்கிறார் - 'ஆட்செய்து' இத்யாதி. அப்படி ஆட்செய்தானோ? என்ன, 'தான் தூத்ய' இத்யாதி. ஆட்கொள்ளுமதுக்கு ப்ரமாணம் - 'அஞ்சேலென்று' இத்யாதி. 'நான் உண்டே, நீ அஞ்சாதே கொள்' என்று அடியேனை அடிமைகொள்ளவல்லவனை யென்றபடி. திருமொழி - எழுபத்தொன்பதாந் திருமொழி - ஆறும்பாட்டு. "எஞ்சா வெந்நரகத்து" இத்யாதி. 'ஆட்கொள்ள' இத்யாதி - ஸர்வரையும் அடிமைகொள்ளுகைக்காக வந்து ஆவிர்ப்பவித்த கோபநிர்வாஹகனானவனை யென்றபடி. பெரியாழ்வார்திருமொழி - ஏழாந்திருமொழி - சாற்றுப்பாட்டு. "ஆட்கொள்ளத்தோன்றிய" என்றதுக்கு பாவம் - 'எதிர்சூழல்' இத்யாதி. எதிர்சூழல்புக்கு - திருவவதரித்து. 'கண்ணன்' என்றத்தைத் தளமாக்கிக்கொண்டு, 'ஆழிப்பிரான்' என்றதுக்கு ஸங்கதி - 'தான்தாழநின்று' இத்யாதி. பெருநிலைநிற்கை - செய்தல்லது போகாதே நிற்கை. பெருநிலை - பக்ஷபாதமும், ஸாக்ஷியும், செய்தல்லது போகாமையும். இப்படி பெருநிலைநிற்குமோ? என்ன, 'ஸக்ருத்' இத்யாதி. "உத்தீக்ஷமாணாவஸ்தா ஹாநாஹாவஸ்த்வாரவக்ருத்ப்ரதிஸிதம் வாரணம்" இதி பூர்வார்த்தம். இதம் பீஷ்மபர்வணி. "ஹஸ்தம் ஸ்வயமாருரோஹ" என்றதுக்கு அர்த்தம் - 'ஒருகையிலே' இத்யாதி. ஒருகையிலே யென்றது - ரஸோக்தி. கையிலே - யுத்தத்திலே. சிந்திதமாத்ர மென்றதுக்கு அர்த்தம் - 'நினைவறிந்து' இத்யாதி. 'பிரான்' என்றதுக்கு பாவம் - 'கையும்' இத்யாதி. அத்தை - திருவாழியை. அதுதன்னை - திருவாழியை. 'ஓர்' என்றதுக்கு பாவம் - 'விரோதி' இத்யாதி. விரோதியைப்போக்குகைக்கும் அழகுக்கும் தோளே அமைந்திருக்குமென்றதுக்கு ப்ரமாணம் - 'ஆயதாஸ்ச' இத்யாதி. "விஸித்ரோ பாஹவ:" என்று விரோதிநிரஸநம். 'கோலின கார்யத்தளவல்ல பாரிப்பு' என்றது - யத்நித்த கார்யத்தோடே நிற்குமதல்ல மநோரத மென்றபடி. கோலின - யத்நித்த. அளவு - பரிச்சேதம்; முடிவு என்றபடி. பாரிப்பு - மநோரதம். கோலின கார்யமாவது - வடிவழகு முதலானவைகளாலே சேதநரை வசீகரிக்கை. அது ஆபரணச்சேர்த்தியாலும் கூடும்; அப்படியன்றிக்கே, கேவலம் வடிவழகாலே யாகவேணுமோ? என்றபடி. திருவடிக்கு பாவம் - சேதநரிலே அந்யதமனான என்னை வசீகரிக்கைக்கு அலங்கரித்தாலும் போராதோ? அலங்கரியாதே வைத்ததென்? என்று. "கிமர்த்தம்" என்றதுக்கு - ஸ்தலாந்தரங்களிலே இன்னமோரர்த்த முண்டு: அதாவது - தோளழகுக்குக் கண்ணெச்சில் வாராமைக்கு ஆபரணங்களையிட்டு மறையாதே வைத்ததென்? என்று மங்களாசாஸநமாக. "பாஹவ:" என்ற பஹுவசநம் - இளையபெருமாளையும் கூட்டியாதல்; ப்ரேமயுக்தனான திருவடிக்கு நாலாகவும் தோற்றுமிறே, அத்தைப்பற்றவாதல். கிஷ்கிந்தாகாண்டே - ஹநுமத்வசநம், "ஆயதாஸ்ச ஸுவ்ருத்தாஸ்ச பாஹவ: பரி

தளவல்ல இப்பாரிப்பு. [நான்கு] - பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கச்செய்தே அநந்தாழ்வான் கண்டு, 'பரமபதத்தில் ஸர்வேஶ்வரன் சதுர்ப்புஜனோ? த்விபுஜனோ எழுந்தருளியிருப்பது?' என்ன, 'ஏகாயநர் த்விபுஜன் என்னாநின்றார்கள்; நம்முடையவர்கள் 'சதுர்ப்புஜன்' என்னாநின்றார்கள்' என்ன, 'இரண்டிலும் வழியேது?' என்ன, 'த்விபுஜனாயிருந்தானாகில் பெரியபெருமாளைப்போலே யிருக்கிறது; 'சதுர்ப்புஜன்' என்று தோற்றிற்றாகில் பெருமாளைப்போலே யிருக்கிறது' என்று அருளிச்செய்தார்; நம்மளவன்றியே தெரியக்கண்டவர்கள் "கையினார்சுரிசங்கனலாழியர்" என்றார்களிறே பெரியபெருமாளை; இடைப்பெண்களுக்கு நாலாய்த் தோற்றி உகவாத கம்ஸாதிகளுக்கு இரண்டாய்த் தோற்றுமாபோலே; ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்து இங்குப்பிறந்தவிடத்துச் சதுர்ப்புஜனாயிறே வந்து அவதரித்தது; "உபஸம்ஹர" (உபஸம்ஹர) என்னச் செய்ததிறே மற்றையது. நிலாத்துக்குறிபகவர், பட்டரை, 'ஸ்ரீவைகுண்டத்திலே சதுர்ப்புஜனாயிருக்கு மென்னுமிடத்துக்கு ப்ரமாண முண்டோ?' என்ன, "தமஸ: பரமோ தாதா ஶங்கசக்ரகதாதர:" (தமஸ:பரமோ தாதா ஶங்கசக்ரகதாதர:) என்று உண்டாயிருந்ததே' என்ன, உத்தரமில்லாமையாலே விக்ருதனாக, 'ப்ரமாணகதி இதுவாயிருந்தது போறுக்கலாகாதோ?' என்று அருளிச்செய்தார். கல்பகதரு பணைத்தாற்போலே அத்விதீயமான நான்கு தோள்களையுடைய. [தூமணி இத்யாதி]- சிலரை யகப்படுத்துகைக்குத் தோள்தானும் மிகையாம்படியாயிற்று வடிவழகு இருப்பது. பழிப்பற்ற நீலமணிபோலே யிருக்கிற வடிவழகைக் காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவனை. ததீயர்பக்கலிலே அபஹ்ருதராய்ப்போவாரை நடுவே வழிபறிக்கும் வடிவழகையுடையவனை. ததீயரை விரும்பும்படி பண்ணிற்றும் இவ்வடிவழகாலே

---

*மொசாவசர:। ஸவபூஷணபூஷாஹா: கிமேபூம்நவிபூஷிதா:". 'நான்கு' என்ற ப்ரஸங்கத்திலே ஐதிஹ்யம் - 'பட்டர்' இத்யாதி. ஏகாயநரித்யாதி வாக்யம் - பட்டர்வாக்யம். அன்றிக்கே, இரண்டிலும் வழியேது? என்ன என்னுமளவும் - அநந்தாழ்வான் வார்த்தையாதல். அப்போது, என்னவென்றது- அவ்யயம். இரண்டிலும் வழியேதென்ன - அந்யதரநிர்த்தாரணத்துக்கு ப்ரமாணமேதென்ன. த்விபுஜனாயிருந்தானாகில் பெரியபெருமாளைப்போலே யிருக்கிறது என்றது - பெரியபெருமாள் சதுர்ப்புஜராயிருக்கச்செய்தே அஜ்ஞர்க்கு 'த்விபுஜர்' என்று தோற்றுகிறவோபாதி, பரமபதநாதனும் சதுர்ப்புஜனாயிருக்கச்செய்தே அஜ்ஞர்க்கு 'த்விபுஜன்' என்று தோற்றுமென்று கருத்து. முக்தகண்டமாகப் பரிஹரியாதே, 'த்விபுஜனா யிருந்தானாகில்' என்றது-அநந்தாழ்வான் தமக்கு கௌரவ்யராகையாலே தாம் அறிந்ததாக அவர்முன்னே சொல்லவொண்ணாதென்கைக்காக. பெரியபெருமாள் அஜ்ஞர்க்கு த்விபுஜராய்த் தோற்றச்செய்தே, ஜ்ஞாநாதிகர்க்குச் சதுர்ப்புஜராய்த் தோற்றின இடமுண்டோ? என்ன, 'நம்மளவன்றியே' இத்யாதி. 'கையினார்' இத்யாதி-அமலனாதிபிரான், (எ). திருக்கையிலே அழகுநிறைந்து சுரியையுடைய சங்கையும், ப்ரதிபக்ஷத்தின்மேலே நெருப்பையுமிழாநின்றுள்ள திருவாழியையு முடையவர் இத்யர்த்த:. ஆனால், அஸ்மதாதிகளுக்குத் தோன்றாதிருப்பானென்? என்ன, 'இடைப்பெண்களுக்கு' இத்யாதி. நாலாய்த்தோற்றுகைக்கு அவன்சதுர்ப்புஜனாய் அவதரித்தானோ?என்ன, 'ஆதியஞ்சோதி' இத்யாதி. இப்படிபிறக்கை விபவார்ச்சாஸாதாரண மென்று கருத்து. அங்குண்டான ஆதியஞ்சோதியுருவை வைத்துக்கொண்டு இங்கே பிறந்த வித்யர்த்த:. ஆனால் அவதரித்தபடியே சதுர்ப்புஜனா யிராதொழிவானென்? என்ன, 'உபஸம்ஹர' இத்யாதி.* [Grantha text] *'நான்கு' என்ற ப்ரஸங்கத்திலே ஐதிஹ்யாந்தரம் - 'நிலாத்துக்குறி' இத்யாதி. "ஜநாதிஶ்ய ... தமஸ: பரமோ தாதா" இத்யாதி, யுத்தகாண்டே மண்டோதரீப்ரலாபே. விக்ருதனாக - குபிதனாக. தாத்பர்யம் - 'சிலரை' இத்யாதி. ஶப்தார்த்தம் - 'பழிப்பற்ற' இத்யாதி. ததீயர்பக்கலிலே ப்ரவணராய்ப்போகுகிறவா 'எம்மான்' என்பானென்? என்ன, 'ததீயர்பக்கல்' இத்யாதி. அதாவது-குணக்ருத மென்றபடி. பரிஹாராந்தரம் -'ததீயரை' இத்யாதி. அதாவது-ஶாஸ்த்ரதசேஷத்வமளவாக வா நிறுத்தினது*

யிறே. [தாளும் தடக்கையும் கூப்பி] - இவ்வழகை அநுபவித்துத் தொழவேன்றால் தாளும் தோளும் பணைத்துக்கொடுக்குமவர்கள். தாள்கூப்புகையாவது - அநந்யகதியாகை; கைகூப்புகையாவது - அகிஞ்சநனாகை. ஆக, இரண்டிலும் ஒக்க ஏறின ப்ரயோஜநம் - பக்நாபிமாநனாகையிறே. "நிஹதஃ" (நிப்ருதஃ) - ஒரு அவயவத்திலே எல்லாவவயவங்களும் ஒடுங்கும்படியாகை. "ஹணதஃ" (ப்ரணதஃ) - வேறே சிலர் எடுக்கவேண்டும்படி சிதிலனாய் விழுந்துகிடக்கை. "ஹ்ஹ்வஃ" (ப்ரஹ்வஃ) - 'இப்படி கிடந்தோம்' என்னுமது நெஞ்சில் நடையாடாதிருக்கை. [நாளும் பிறப்பிடைதோறு] - ஜந்மங்களில் அவகாசங்கள்தோறும், அதுதன்னில் நாள்தோறும். [எம்மை ஆளுடைநாதரே]-வடிவழகாலேயாதல், குணங்களாலேயாதல், ஏதேனுமொரு ஹேதுவாலே அடிமை கொள்ளவேண்டுவது ஈஶ்வரனுக்காயிற்று; நிர்ஹேதுகமாக அடிமைகொள்வார் இவர்கள். அவனதானால், இவர்களுக்கு அடிமையாமிடத்தில் ஈஶ்வரனநுமதியும் வேண்டா, இவன்நினைவும் வேண்டா, இவ்வளவும் வந்தேயிருக்கும். "எந்தம்மை விற்கவும் பெறுவார்களே." (உ)

## மூன்றாம் பாட்டு.

நாதனைஞாலமும்வானமுமேத்தும் நறுந்துழாய்ப்
போதனைப் பொன்னெடுஞ்சக்கரத்தெந்தைபிரான்தன்னைப்
பாதம்பணியவல்லாரைப் பணியுமவர்கண்டீர்
ஓதும்பிறப்பிடைதோறு எம்மையாளுடையார்களே.

*ஆ.—(நாதனை.) ஸர்வஸ்வாமியாய், தேவமநுஷ்யாத்யாஶ்ரிதருடைய உத்கர்ஷாபகர்ஷம் பாராதே அவர்களெல்லார்க்குமொக்கத் தன்னைக்கொடுத்தருளும் ஸ்வபாவனாய், திருவாழியாழ்வானாலே அலங்க்ருதனாயிருந்த எம்பெருமானைப் பாதம்பணியவல்லாரைப் பணியுமவர்கண்டீர் நமக்கு என்றைக்கும் ஸ்வாமிகள் என்கிறார்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், திருத்துழாயாலே அலங்க்ருதனான எம்பெருமானுடைய அழகிலே ஈடுபட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.*

*[நாதனை என்று தொடங்கி] - இருந்ததேகுடியாக எல்லார்க்கும் நாதனாய் விஶேஷஜ்ஞரோடு அவிஶேஷஜ்ஞரோடு வாசியின்றிக்கே எல்லாருக்கும் ஆகர்ஷகமான திருத்துழாய்மாலை*

---

*வடிவழகாகையாலே அதுக்குத் தோற்று 'எம்மான்' என்கிறாரென்றபடி. 'தடம்' என்றதைத் தாளிலும் கையிலும் கூட்டி அருளிச்செய்கிறார் -'இவ்வழகை' இத்யாதி. அநந்யகதித்வம்-ரக்ஷகாந்தர ஶூந்யத்வம். ஆகிஞ்சந்யம்-உபாயாந்தரஶூந்யத்வம். பக்நாபிமாநனாகவேணுமென்றதுக்கு ஸம்வாதம்-'நிஹ்ரு தஃ'இத்யாதி. யுத்தகாண்டே ஷோடஶஸர்கமே ஹநூமதஸ் ஸீதாபிவந்தநம், "வ்ருக்ஷா [illegible] ஸீதாம் [illegible] நிஹ்ருதஃ ப்ரணதஃ ப்ரஹ்வஃ [illegible]". பதத்ரயத்துக்கும் அர்த்தபேதம் காட்டுகிறார் - 'ஓரவயவத்திலே' இத்யாதி. ப்ரணதஃ - ப்ரகர்ஷேண நதஃ. ப்ரஹ்வஃ தாவிப்ரகர்ஷேணஹ்வஃ *"ஹ்வாகௌடில்யே" இதி ஹிதாதுஃ. இத்தால் - மாநஸத்யாகமென்று அர்த்தம். ஒருஹேதுவைச் சொல்லாதே, ஸாமாந்யேந - 'எம்மையாளுடைநாதர்' என்றதுக்கு பாவம்- 'வடிவழகாலே' இத்யாதி. அவதாரணார்த்தம் - 'அவனதானால்' இத்யாதி. யத்வா, ஹேதுவில்லையென்கிறதென்? பகவதநுமத்யாதிகள் வேண்டாவோ? என்ன, 'அவனதானால்' இத்யாதி என்னுதல். இதுக்கு ப்ரமாணம்-'எந்தம்மை' இத்யாதி. இதுக்கு அர்த்தம் - கீழேசொல்லிற்று. க்ரமேண அந்வயஃ. (உ)*

---

* "ஹ்வ்ருகௌடில்யாபாவே" என்று இருக்கவேணுமென்று தோன்றுகின்றது.

யாலே அலங்க்ருதனுவதும்செய்து, ஒளியையுடைத்தாய் அறப்பெருத்திருக்கிற திருவாழியின் அழகைக் காட்டி என்னை அடிமைகொண்ட உபகாரகனை. [பாதம் என்று தொடங்கி] - அபிமாநத்தைத் தவிர்ந்து திருவடிகளிலே பணியும் மஹாத்மாக்களைப் பணியுமவர்கிடீர் 'பிறந்தான்' என்ற சொல்மாத்ரம் அமையும்படியான பிறப்பிடைதோறும் என்னை அடிமைகொள்ளக்கடவர். [ஓதும் பிறப்பு] - ஶாஸ்த்ரங்களிலே நிஷேத்யதயா ஓதுகிற பிறப்பு என்றுமாம்.

ப.—அநந்தரம், உபயவிபூதியும் மேல்விழுந்தநுபவிக்கும் போக்யதையிலே ஈடுபட்ட பாகவதர்க்கு சேஷபூதரானவர்கள் எம்மை அடிமைகொள்ளும் ஸ்வாமிகள் என்கிறார்.

நாதனை - நிருபாதிகஸ்வாமியாய், ஞாலமும் - (அவிஶேஷஜ்ஞரான) ஸம்ஸாரிகளோடு, வானமும் - (விஶேஷஜ்ஞரான) நித்யஸூரிகளோடு வாசியற, ஏத்தும் - கொண்டாடும்படி, நறுந்துழாய்ப்போதனை - பரிமளப்ரசுரமான திருத்துழாய்த்தாராலே அலங்க்ருதனாய், பொன் - தர்ஶநீயமாய், நெடும் - (போக்யதையால்) விஞ்சியிருக்கிற, சக்கரத்து - திருவாழியுங் கையுமான அழகாலே, எந்தைபிரான்தன்னை - எனக்கு நிரவதிகஸ்வாமியானவனை, பாதம் - திருவடிகளிலே, பணிய வல்லாரை - தாழவல்லாரை, பணியுமவர் கண்டீர் - தாழ்ந்து அநுவர்த்திக்குமவர்கிடீர், ஓதும் - (ஶாஸ்த்ரங்களிலே) ஓதப்பட்ட, பிறப்பு இடைதோறு - பிறப்பினுடைய அவகாசந்தோறும், எம்மை - எங்களை, ஆளுடையார்கள் - அடிமையாகவுடையவர்கள்.

இ.—மூன்றாம்பாட்டில், தோளும் தோள்மாலையுமாயிருக்கிற இருப்பிலே தோற்றவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

[நாதனை] - நிருபாதிகஶேஷியை. [ஞாலம் இத்யாதி]-தோளும் தோள்மாலையுமாயிருக்கும் இருப்பைக் கண்டால் நித்யஸூரிகளோடு அவிஶேஷஜ்ஞரான ஸம்ஸாரிகளோடு வாசியறப் புகழாநிற்பர்கள். [நறுந்துழாய்ப்போது] - ஸ்வஸ்பர்ஶத்தாலே செவ்விபெற்ற திருத்துழாய்ப்பூ. [பொன் நெடுஞ் சக்கரம்]-ஸ்ப்ருஹணீயமுமாய் அழகுக்கும் ஆபரணத்துக்கும் தனக்கு அவ்வருகின்றிக்கே யிருக்கை: போக்தாக்களுக்குப் பிடிதோறும் நெய்வேண்டுமாபோலே அடிக்கடியும் கையுந்திருவாழியுமான சேர்த்தியை அநுபவிக்கிறார். [எந்தை பிரான் தன்னை] - கையுந்திருவாழியுமான சேர்த்தியழகைக் காட்டிஎன்னையெழுதிக்கொண்ட உபகாரகனை.[பாதம்பணிய வல்லாரை]-பிறருடைய உத்கர்ஷம்பொறுத ஸம்ஸாரிகளிலே நிர்மமனாய்த் திருவடிகளிலே விழுகையில் அருமை இருக்கிறபடி. ''ஈநஸூயவெ'' என்று கொண்டாடவேண்டும்படி ஈஶ்வரனுடைய உத்கர்ஷம் பொறுதேயிறே ஸம்ஸாரிகள் இருப்பது. [பணியுமவர்] - ஸஜாதீயராய் அங்கபாநாதிகளை யாரகமாகவுடையவர்களைத் ததீயத்வாகாரேண யாரகரென்று இருக்கும்போது பேரளவுடையனாக வேணுமிறே. 'அவர்கிடீர் என்னை ஆளுடையார்' என்கிறார் இவர். [ஓதும்பிறப்பிடைதோறு]- ''ஜாயஸ்வ ம்ரியஸ்வ'' என்று அல்பமாகச்சொல்லும் பிறப்பில் அவகாஶந்தோறும்; ஶாஸ்த்ரங்களிலே நிஷேத்யதயா சொல்லும் ஜந்மமாகவுமாம். [எம்மையாளுடையார்களே] - ''ஜெவாநாஂ ஊாநவாநாஂ'' என்ற பொதுவானவனன்று; எனக்கு ஸ்வாமிகள் இவர்களே. அடியார்கள் குழாங்களிறே இவர்க்கு ப்ராப்யம், ''உ—ராவாரொவி''.

ஈடு.—மூன்றாம்பாட்டு. தோளும் தோள்மாலையுமான அழகிலே தோற்றிருக்குமவர்களுக்கு ஶேஷபூதரான்வர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

---

மூன்றாம்பாட்டு - 'நாதனை' இத்யாதி. 'நறுந்துழாய்ப்போதனை, பாதம்பணியவல்லாரைப் பணியுமவர், எம்மையாளுடையார்கள்' என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'தோளும்' இத்யாதி.

[நாதனை] - நிருபாதிக சேஷியானவனை. [ஞாலம் இத்யாதி]-தோளும் தோள்மாலையுமான அழகைக் கண்டால் திருத்திரையெடுத்த அநந்தரம்போலே நித்யஸூரிகளோடு நித்யஸம்ஸாரிகளோடு வாசியறப் புகழாநிற்பர்கள். "ஸ்த்ரீபாலயுவவ்ருத்தாநாம்" (ஸ்த்ரீபாலயுவவ்ருத்தாநாம்). 'தந்தாம் கற்பழியும் வார்த்தைசொன்னால்' என்றிருக்கும் ஸ்த்ரீகள், முதலிலே வார்த்தை சொல்ல அறியாத பாலர்கள், வாய்விட்டு ஒன்றுஞ்சொல்லாத யுவாக்கள், கரணபாடவமில்லாத வ்ருத்தர்கள் இவர்களித்தனைவரும் வாய்விட்டு ஏத்தும்படியாயிற்றுப் பெருமாளழகு. [நறுந்துழாய்ப் போதனை]-திருமேனியின் ஸ்பர்சத்தாலே நறுநாற்றத்தை யுடைத்தாய்ச் செவ்விபெற்றிருக்கிற திருத்துழாய்ப் பூவையுடையவனை. [பொன் இத்யாதி] - பொன்போலே ஸ்ப்ருஹணீயமாய், அழகுக்கும் ஆபரணத்துக்கும் மிடுக்குக்கும் தனக்கு அவ்வருகின்றிக்கேயிருப்பதாய், போக்யதை அளவிறந்திருப்பதான திருவாழியையுடையனாய் அவ்வழியாலே என்னையெழுதிக்கொண்ட உபகாரகனை. போக்தாக்களுக்குப் பிடிதோறும் நெய் வேண்டுமாபோலே, அடிக்கடி கையுந்திருவாழியுமான சேர்த்தியை அநுபவிக்கிறார், "ஆழிப்பிரான்" என்பது, "பொன்னெடுஞ் சக்கரத்தெந்தைபிரான்" என்பதாய். [பாதம் இத்யாதி]-இவ்வழகைக்கண்டு இதிலேஅஸூயையைபண்ணாதே,இதிலேதோற்றுத்திருவடிகளிலேவிழ வல்லவர்களை. விஷயத்தைப் பாராதேயிறே அஸூயையைபண்ணுகிறது.ஸர்வேஸ்வரனும்"அநஸூயவே" (அநஸூயவே) என்றும், "நசமாம்யோப்யஸூயதி" (நசமாம்யோப்யஸூயதி) என்றும் அருளிச்செய்தானிறே.முன்புள்ளார் அநுஷ்டிக்கையாலே நமக்கெளிதான இத்தனையல்லது, புறம்புள்ளார்பக்கலிலேயிறே இதினருமை தெரிவது. [வல்லாரைப் பணியுமவர்கண்டீர்]-ஈஸ்வரன் பக்கலுட்பட அஸூயை பண்ணாநின்றால் ததீயர்பக்கல் சொல்லவேணுமோ? ஈஸ்வரத்வப்பிடாராலே வணங்கவுமாம்; அன்றிக்கே, "நநமேயம்"(நநமேயம்) என்றிருக்கவுமாம், அவன்பக்கல்; அங்கபாநாதிகளாலே தரிக்கிற இவர்கள்பக்கல் பணியக்கூடாதிறே. தோற்றுகிற ஆகாரத்தைப் போகட்டுத் ததீயத்வாகாரத்தையே பார்த்து விரும்பும்போது அதுக்குத்தக்க அளவுடையனாக வேணு

---

எடுத்த - நீக்கின. ஸர்வரும் புகழுமதுக்கு ப்ரமாணம் - 'ஸ்த்ரீபால' இத்யாதி. யுத்தகாண்டே த்ரிம்ஶச்சததமே பௌரஜநா:, "ததோ ஹ்ருஷ்டா: ஸமுத்க்ருஷ்டா நிஷ்பேதுர்விஜிதாரய: ஸ்த்ரீபாலயுவவ்ருத்தாநாம் ராமோ ஜயதி திக்ஷு திக்ஷு தே". ஸாமாந்யேந மநுஷ்யாணாம் என்னாதே, "ஸ்த்ரீபாலயுவவ்ருத்தாநாம்" என்று விசேஷித்ததுக்கு பாவத்தை தர்சிப்பியாநின்றுகொண்டு அவர்கள் ஸ்தோத்ரம்பண்ணுகைக்கு ஹேதுவையும் தர்சிப்பிக்கிறார் - 'தந்தாம்' இத்யாதி. கற்பு - ஸ்த்ரீத்வம், அடக்கம். உத்ததராகையாலே வாய்விட்டு ஒன்றும் சொல்லமாட்டா ரென்றபடி. நறுநாற்றம் - பரிமளம். செவ்விபெற்று - 'தழைக்கும்துழாய்' என்னக்கடவதிறே. 'நெடும்' என்று - ஸர்வப்ரகாரத்தாலு முண்டான நெடுமையாதல், போக்யதையால்வந்த நெடுமையாதல். இரண்டையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார் - 'அழகுக்கும்' இத்யாதியாலே. பலகால் திருவாழியைச் சொல்லுவா னென்? என்ன, 'போக்தாக்களுக்கு' இத்யாதி. 'வல்லாரை' என்றத்தாலே-பகவத்ஸமாஸ்ரயணம் அஶக்யமென்று தோன்றுகிறதென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் - 'இவ்வழகை' இத்யாதி.பகவத்விஷயத்திலே அஸூயையைபண்ணுவர்களோ? என்ன,'விஷயத்தை' இத்யாதி. அஸூயை பண்ணுவர்க ளென்னுமதுக்கு பகவதுக்தியையும் காட்டுகிறார் - 'ஸர்வேஸ்வரனும்' இத்யாதி. கீதாஸு நவமே, "இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே". அஷ்டாதஶே, "நசாஶுஶ்ரூஷவே வாச்யம் நசமாம்யோப்யஸூயதி"-பூர்வமேவ லிகிதம். எதானாலும் பகவத் விஷயத்தில் அநஸூயுவாயிருக்கிறது அருமையோ? என்ன, 'முன்புள்ளார்' இத்யாதி. முன்புள்ளார் - நம் ஆசார்யர்கள். இதின் அருமை-அஸூயை பண்ணா தொழிகையிலுண்டான அருமை. கண்ணீர் என்றதுக்குக் கிம்புநர்ந்யாயத்தாலே பணிகையில் உண்டான அருமையை ஸாதிக்கிறார் - 'ஈஸ்வரன்பக்கல்' இத்யாதி. உபபாதநம் - 'ஈஸ்வரத்வ' இத்யாதி. பிடார்-பெருமை. கூடாதென்கிறதென்?கூடின விடமில்லையோ?என்ன, 'தோற்றுகிற' இத்யாதி. அளவு-ஜ்ஞாநாதிக்யம். பெருமக்களுள்ளவராய் வைத்து, "ப்ராதுர்பாவைஸ்ஸுரநரஸம:" இத்யாதிப்படியே

மிறே. ஸௌலப்யந்தானே நறுகுமுறுகேன்று முடிந்துபோகைக்கு உடலாயிற்றிறே சிசுபாலாதி களுக்கு. "பிள்ளையாத்தான் என்று போர நல்லனாயிருப்பானொருவன், சீயர் ஸ்ரீ பாதத்திலே வந்து 'எனக்கு ஒருரு திருவாய்மொழி அருளிச்செய்யவேணும்' என்ன, 'உனக்கு விசதமாவன பிள்ளை யோடே கேட்டாலாயிற்று; அங்கே கேள்' என்ன, 'அவரைத் தேண்டனிடவேணுமே' என்ன, 'அது ஒன்று உண்டோ? வேணுமாகில் செய்கிறாய்' என்று என்னையழைத்து, 'இவனுக்குப் பாங் கானபடி ஒருரு திருவாய்மொழி சொல்லும்' என்ன, இவ்வளவும் வரக் கேட்டவாறே என்னை மிக வும் அநுவர்த்திக்கப்புக, நான் ஒட்டாதொழிய, சீயர்பாடே சென்று 'இவ்வர்த்தத்தினுடைய சீர்மை யறியாமையாலே முன்பு அப்படி சொன்னேன்; இனி நான் அநுவர்த்தித்ததுக்கு இசையும்படி அரு ளிச்செய்யவேணும்' என்று சீயரையிட்டு நிர்ப்பந்தித்து அநுவர்த்தித்தான்" என்று அருளிச்செய்வர்.

[ஓதும் இத்யாதி] - 'பிறந்தான், செத்தான்' என்கிற வ்யபதேசமாத்ரமான ஜந்மமும் அமையும், இது பெறில் என்னுதல்; அன்றிக்கே, சாஸ்த்ரங்களிலே நிஷித்ததயா ஓதிப் போருகிற ஜந்மங்களில் அவகாசந்தோறு மேன்னவுமாம். [எம்மையாளுடையார்களே] - "அடியார்கள் குழாங்கள்" என் றும், "அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்தமை" என்றும் ஒரு தேச விசேஷத்திலே அடிமை செய்வது இவர்களுக்கிறே; அத்தை இங்கே கொள்ளக்கடவர்கள் இவர்கள். [எம்மை] - "தேவா நாம் தாநவாநாம்ச" (தேவாநாம்தாநவாநாஞ்ச) என்று பொதுவான சேஷித்வமிறே அவ னது; மயர்வறமதிநலமருளி விசேஷகடாக்ஷம்பெற்ற என்போல்வார்க்கு சேஷிகள் இவர்களிறே. இவ்வருகுள்ளவை பார்க்க வொண்ணுதபடியிறே பகவத்ப்ரபாவத்தைப் பார்த்தால் இருப்பது; "துராசாரோபி" (துராசாரோபி)-ஏதேனும் தண்மையுண்டானாலும், அவனை யாஸ்ரயித்தா னாகில் இவனை நிர்த்தோஷனாக ப்ரதிபத்தி பண்ணவேணும். தோஷங் கிடக்கச்செய்தே நிர்த் தோஷனாக நினைக்கவேண்டுகிற தேன்? என்னில்,—"ப்ரபாவாத் பரமாத்மந:" (ப்ரபாவாத் பரமாத்மந:); பின்பு இவனைக் குறைய நினைக்கையாவது - 'இவனைச் சுத்தனாக்குகைக்கு ஈடான சக்தி அவனுக்கில்லை' என்று பகவத் ப்ரபாவத்தைக் குறைய நினைக்கையாமிறே. வீரப்பிள்ளையும்,

---

அவதரித்து ஸுலபரானவர்களைத்தோற்றின ஆகாரத்தையிட்டு அநாதரிக்கக்கூடுமோ? என்ன, 'ஸௌலப்யந்தானே' இத்யாதி; பாகவத விஷயத்தில் கிம்புந: என்றபடி. நறுகுமுறுகு - பொருமை; ஸப்தாநுகாரம். பாகவத சேஷத்வம் துர்லபமென்கைக்கு ஐதிஹ்யம் - 'பிள்ளையாத்தான்' இத்யாதி. பாங்கானபடி - இவனை உந்நத ஸ்த்தாநத்திலே வைத்தாகிலும். அருளிச் செய்வர் - நம்பிள்ளை யென்றபடி. பிறந்தான் செத்தான் என்கிற வ்யபதேசமாவது - பிறந்தவன் உடனே செத்தானென்கிற பேர்மாத்ர மொழிய, 'ஜீவித்தான்' என்கைக்கு அவகாச மில்லை யென்றபடி. ஓதிப்போருகிற - சொல்லிப்போருகிற. ஓதும் பிறப்பிடைதோறு - பிறந் தான் செத்தானென்கிற வ்யபதேசமாத்ரமான ஜந்மலயங்களில் அவகாசங்கள் தோறும் என்று முந்தின அர்த்தம். ஒரு தேசவிசேஷத்திலே ஸர்வேஸ்வரன் திருவடிகளிற் பண்ணும் கைங்கர்யமன்றோ ப்ராப்யம்? இவர் களை 'எம்மையாளுடையார்கள்' என்கிறதென்? என்ன, 'அடியார்கள்' இத்யாதி. "தேவாநாம்தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம்" இதி ஜிதந்தாயாம். குழாங்கள் - கூட்டங்கள். அந்தமின்றிக்கே - அபரிச் சிந்நமான ஆநந்தத்தையுடையரான அடியரோடே கூடி யிருந்த ப்ரகாரத்தை யித்யர்த்த:. பகவதீயத்வமே போருமோ? ஜந்மவ்ருத்தாதிகளும் பார்க்கவேண்டாவோ? என்ன, 'இவ்வருகுள்ளவை' இத்யாதி. பகவத்ப்ர பாவத்தைப் பார்த்தால் இவ்வருகுள்ளவை பார்க்கவொண்ணு தென்னுமதுக்கு ப்ரமாணம் - 'துராசாரோபி' இத்யாதி. மஹாபாரதே ஸாத்த்வதேச, "துராசாரோபிஸர்வாஸீ க்ருதக்நோ நாஸ்திக: புரா। ஸமாஸ்ரயேதாதிதேவம் ஸ்ரத்தயா ஸரணம் யதி। நிர்தோஷம் வித்தி தம் ஜந்தும் ப்ரபாவாத் பரமாத் மந:". பாகவதசேஷத்வம் துர்லபமென்னுமதுக்குப் பின்னையுமொரைதிஹ்யம்-'வீரப்பிள்ளையும்' இத்யாதி.

பாலிகைவாளிப்பிள்ளையும் என்று இருவர் சீயர்ஸ்ரீபாதத்துக்கு ஏகாந்தராய், தங்களிலே செறிந்து போந்தார்களாய்த் தேசாந்தரம் போனவிடத்தே வெறுப்புண்டாய்த் தங்களில் வார்த்தைசொல்லாதே யிருக்க, இவர்களைப்பார்த்து “பிள்ளைகாள்! அர்த்தகாமங்கள் த்யாஜ்யமல்லாமையோ, பகவத் விஷயம் அராட்டுப்பிராட்டாயோ, ஒரு ஸ்ரீ வைஷ்ணவனும் ஸ்ரீ வைஷ்ணவனும் தங்களிலே வார்த்தை சொல்லாதே வெறுத்திருக்கிறது?” என்ன, இருவரும் எழுந்திருந்து தெண்டனிட்டு ஸங்கதராய்ப்போனார்கள். (௩)

## நான்காம் பாட்டு.

உடையார்ந்தஆடையன் கண்டிகையன்உடைநாணினன்
புடையார்பொன்னூலினன் பொன்முடியன் மற்றும்பல்கலன்
நடையாவுடைத்திருநாரணன் தொண்டர்தொண்டர்கண்டீர்
இடையார்பிறப்பிடைதோறு எமக்குஎம்பெருமக்களே.

ஆ.—(உடையார்ந்த.) நிரதிசயஸௌந்தர்யமாய், நிரதிசயஸுகஸ்பர்சமாய், நிரதிசயௌஜ்ஜ்வல்யமாய், நித்யஸித்தமாய், அஸங்க்யேயமான திவ்யபூஷணங்களாலே பூஷிதனாயிருந்த எம்பெருமானுடைய அழகுக்குத் தோற்று அடிமையாயிருப்பார்க்கு அடிமையாயிருப்பார்கிடீர் இடையார் பிறப்பிடைதோறு எமக்கு எம்பெருமக்கள் என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், திருவணிகலன்களின் அழகிலே ஈடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமை புக்கிருக்குமவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

[உடையார்ந்த ஆடையன்] - திருவரையிலே பூத்தாற்போலே தகுதியான திருப்பரிவட்டம் திருக்கழுத்திலே சாத்துவன திருவரையில்சாத்தும்கோவை திருயஜ்ஞோபவீதம் திருவபிஷேகம் முதலான மற்றும் அநேகம் திருவாபரணங்களை நித்யமாகவுடையனாய் ஸ்ரீமானான நாராயணனுடைய அடியாரடியார்கிடீர் எங்களுக்கு நிரந்தரமான ஜந்மந்தோறும் ஸ்வாமிகள். புடையார்கை - தான்கிடந்த பார்ஸ்வம் தன் ஒளியாலே பூர்ணமாகை.

ப.—அநந்தரம், அவனுடைய ஆபரணசோபையில் ஈடுபட்டு அடிமைபுக்கவர்களுடைய அடியார் எங்களுக்குப் பெரிய சேஷிகள் என்கிறார்.

உடை ஆர்ந்த - உடையோடு பொருந்தின, ஆடையன் - திருப்பரிவட்டத்தையுடையனாய், கண்டிகையன் - கண்டாபரணத்தையுடையனாய், உடை நாணினன் - பரிவட்டத்தின்மேலே சாத்தின கோவைநாணையுடையனாய், புடை ஆர் - ஒருபக்கத்திலே சேர்ந்த, பொன்நூலினன் - பொற்பூணூலையுடையனாய், பொன் முடியன் - ஸ்ப்ருஹணீயமான அபிஷேகத்தையுடையனாய், மற்றும் - மற்றும், பல் கலன் - பலவகைப்பட்ட ஆபரணங்களையும், நடையா உடை - ஸ்வாபாவிகமாக உடையனாய், திரு நாரணன் - ஸ்ரீமானான நாராயணனுக்கு, தொண்டர் - சேஷபூதரானவர்களுக்கு, தொண்டர்கண்டீர் - சேஷபூதரானவர்கள்கிடீர், இடை ஆர் - நிரந்தரமான, பிறப்பு இடைதோறு - பிறப்பினுடைய அவகாசந்தோறும், எமக்கு - எங்களுக்கு, எம்பெருமக்கள் - அஸாதாரணபரமசேஷிகள். இந்நாலுபாட்டாலும் - பாகவதருடைய சேஷித்வம் சொல்லிற்று.

---

செறிந்து - கூடி. வெறுப்பு - மனக்குறை. அராட்டுப்பிராட்டு - போரும்போராதது; அல்ப மென்றபடி. க்ரமேண அந்வயః. (௩)

இ.—நாலாம்பாட்டில், அவனுடைய ஆபரணஶோபையிலே வித்தராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தோற்றிருக்குமவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

[உடையார்ந்த ஆடையன்] - திருவரையிலே பூத்தாற்போலேயிருக்கிற திருப்பீதாம்பரம்; "கௌஶேயம்". [கண்டிகையன்] - திருக்கழுத்திலே சாத்துமவை. [உடைநாணினன்] - திருவரையிற் சாத்தும் கோவை. [புடையார் பொன்னூலினன்] - தான் கிடந்த ப்ரதேஶத்துக்கு வேறோராபரணம் வேண்டாதபடி மேகத்திலே மின்னினாற்போலே விளங்குகிற திருயஜ்ஞோபவீதம். [பொன் முடியன்] - ஸ்ப்ருஹணீயமாய் உபயவிபூதிக்கும் சூடின திருவபிஷேகம். [மற்றும் பல்கலன் நடையாவுடை] - அநுக்தமாய் அநேகமான திருவாபரணங்களை நித்யமாகவுடையவன். [நடை]- தனக்குத் தானே ஒப்பாய் வேறு ஒப்பின்றிக்கேயிருக்கை யென்றுமாம். [திருநாரணன்] - ஸ்ரீமந்நாராயணன். ஆபரணங்களிலே அந்யதமமாயிருக்கிறபடி. லக்ஷ்மீஸம்பந்தமும். ஆபரணஶோபையினுடைய போக்யதையாலே சொல்லாதொழியமாட்டார்; அஸங்க்யாதமாகையாலே பேசமாட்டார். [தொண்டர்தொண்டர் இத்யாதி] - அந்த ஆபரணச்சேர்த்திக்கும் மிதுநத்துக்கும் தோற்று அடிமை புக்கவர்களன்று; அவர்கள் தோற்ற தோல்விக்கு அடிமைபுக்கவர்கள் எனக்கு நிரந்தரமான ஜந்மத்தில் அவகாஶந்தோறும் ஶேஷிகள்.

ஈடு.—நாலாம்பாட்டு. அவனுடைய ஆபரண ஶோபையிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஶேஷபூதரானவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

[உடையார்ந்த ஆடையன்] - திருவரை பூத்தாற்போலே யிருக்கை. "கௌஶேய புஷ்பிதகடீதடம்" (கௌஶேய புஷ்பிதகடீதடம்), "பீதாம்பரதர:" (பீதாம்பரதர:). "தாஸாமாவிரபூத்" (தாஸாமாவிரபூத்) - ஸ்ரீப்ருந்தாவநத்திலே உலாவாநிற்கச்செய்தே, அவர்கள் படும் அலமாப்புக் காண்கைக்காக மறைய நின்றான்; 'இனி இவர்கள் தரிக்கமாட்டார்கள்' என்று தோற்றினவாறே வந்து தோற்றினான். "தாஸாம்" (தாஸாம்) - கமர் பிளந்த விடத்தே ஒரு பாட்டம் மழைவிழுந்தாற்போலே யிருக்கை. "ஸ்மயமாநமுகாம்புஜ:" (ஸ்மயமாநமுகாம்புஜ:)-தன்னை யொழியச் செல்லாமை யுண்டானால், பின்பு அவன்முகமிருக்கும்படி இதுபோலே காணும். "பீதாம்பரதர:" (பீதாம்பரதர:) - இவன்பக்கல் இடைப்பெண்கள் நெஞ்சிற் பிறந்த ப்ரணயரோஷத்தா லுள்ள மறமெல்லாம் ஆறும்படியாயிற்று, உடை வாய்ப்பு இருப்பது. நெஞ்சுகளிற்பிறந்த புண்ணெல்லாம் தீர்ந்து இத்தோடே பணிபோரும்படி யாயிற்று

---

நாலாம்பாட்டு - 'உடையார்ந்த' இத்யாதி. 'மற்றும்பல்கலன்' இத்யாரப்ய, 'தொண்டர் தொண்டர் கண்டீர் எம்பெருமக்கள்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'அவனுடைய' இத்யாதி.

உடை - திருவரை. ஆர்ந்த - பொருந்தின. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணங்கள் - 'கௌஶேய' இத்யாதி. இஶ்ஶ்லோகம் காணாது. ஸ்ரீபாகவதே தசமே கோபிகாகீதாநந்தரே, "தாஸாமாவிரபூச்சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ:। பீதாம்பரதரஸ்ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மத:". இங்கே - "கௌஶேயம்" என்றது அநுஸந்தேயம். ப்ரஸ்துதஶ்லோக வ்யாக்யாநார்த்தம் பதோபாதாந பூர்வகமாக அவதாரிகை - '"தாஸாமாவிரபூத்" - ஸ்ரீப்ருந்தாவநத்திலே' இத்யாதி. தாஸாம் - க்ருஷ்ணவிரஹாஸஹிஷ்ணுதயா வ்யாகுலா நாம் ... - 'கமர்பிளந்தவிடத்தே' இத்யாதி. இதுபோலே - ஸ்மயமாநமா யிருக்கும்போலே. "தர:" என்றதுக்கு அர்த்தம் - 'இவன்பக்கல்' இத்யாதி. மறமென்று ரோஷகார்யங்களைச் சொல்லுகிறது. அவையாவன - "மின்னிடைமடவா"ரிற் சொன்னவைகள். விவரணம் - 'நெஞ்சுகளில்' இத்யாதி. பணிபோருகை - தத்விஷயவிசாரமேயாய்ச் செல்லுகை. அத்தை உப

இருப்பது. "படிச்சோதி யாடையோடும் பல்கலனாய் நின்னைப்போற்கடிச்சோதி கலந்ததுவோ" என்று இதுவே பணிபோந்திருக்குமிறே. "ஸாக்ஷாந்மந்மதமந்மத:" (ஸாக்ஷாந்மந்மதமந்மத:), "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிற படியே. [கண்டிகையன்]- கூறையுடையழகு மேலே எழவிசிப் போகாநிற்க, நடுவே வழிபறித்துக் கொள்ளும் திருக்கழுத்தில் ஆபரணம். இவரை மடி பிடித்துக் கொண்டுபோய்க் கழுத்தளவு ஸௌந்தர்யத்திலே நிறுத்திற்று. மடியென்பது - புடைவை. கண்டிகை-ஆரம்; கண்டத்திலே சாத்துமவை. [உடைநாணினன்] - அரை நூல்வடம். கழுத்தே கட்டளையாக அநுபவியாநிற்க, கண்டகதமான ஸௌந்தர்யதரங்கங்கள் கீழே போரவீச நடுவே நின்று அநுபவிக்கிறார். [புடையார் பொன்னூலினன்] - தான்கிடந்த பக்கத்துக்கு வேறொரு ஆபரணம் வேண்டாதே, காளமேகத்திலே மின்னினாற்போலே யிருக்கிற திருயஜ்ஞோபவீதத்தை யுடையவன். இந்த ஸௌந்தர்ய ஸாகரத்தின் நடுவே அலையப் புக்கவாறே, தமக்கு ஆலம்பநமாக ஒரு நூலைப் பற்றினார்காணும். [பொன் முடியன்] - "தேர்கடவிய பெருமான்" என்கிறபடியே, ஆஶ்ரிதர்க்கு ஆட்செய்கைக்கு முடிகவித்திருக்கிறவன். ஒருநூலைப் பற்றி நின்றவர்களை அதுதானே ஒருதலை சேர்த்துவிடுகை நிஶ்சிதமிறே. பொன்முடி - ஸ்ப்ருஹணீயமான முடி. [மற்றும் பல்கலன் நடையாவுடை] - வேறும் எண்ணிறந்த திருவாபரணங்களை ஸ்வாபாவிகமாக வுடையவன். ஒருதலை சேர்ந்தால் பின்னை எல்லாம் வேண்டினபடி அநுபவிக்கலாமிறே. [மற்றும் பல்கலன்]- மின்மினி பறவாநின்றதுகாணும். அபரிமிதமாகையாலே முடியச் சொல்லமாட்டார்; ஆசையாலே சொல்லாதொழியமாட்டார்; இதிறே படுகிற பாடு! [திருநாரணன்] - அவ்வாபரணங்களோபாதிகாணும் லக்ஷ்மீஸம்பந்தமும் அங்குத்தைக்கு. * "மார்வத்துமாலை" என்னக்கடவதிறே. திருவாபரணாழ்வார்களாகிறார் நித்ய ஸித்த புருஷர்களாகையாலே

---

*பாதிக்கிறார் - 'படிச்சோதி' இத்யாதி. இதுவே பணிபோந்திருக்குமிறே - இதுவே கார்யமாய்ப் போந்திருக்குமிறே. அதாவது - 'திருமேனிகாந்தி திருவாபரணமாய்க் கலந்ததுவோ? திருவாபரணங்கள் திருமேனிகாந்தியாய்க் கலந்ததுவோ? ஆடை கடிச்சோதியாய்க் கலந்ததுவோ? கடிச்சோதி ஆடையாய்க் கலந்ததுவோ?' என்று இந்த ஸம்ஶயத்துக்கே காலம்போருமித்தனை போக்கி, சிற்றத்துக்கு அவகாச மில்லை யென்றபடி. ஸ்த்ரீகளுக்கோ இப்படி ஆகர்ஷகமாவது? என்ன, "ஸாக்ஷாந்மந்மதமந்மத:" இத்யாதி. பீதாம்பரத்தைவிட்டு அவயவாந்தரத்திலே போகிறது முடிய அநுபவித்தோ? என்ன, 'கூறையுடை' இத்யாதி. சாடு - 'இவரை' இத்யாதி. ஆரம் - பதக்கம். 'கண்டிகை' என்றதுக்கு அர்த்தாந்தரம் - 'கண்டத்திலேசாத்துமவை' என்று; 'கண்டிகா கண்டபூஷணம்' என்று திருக்கழுத்து நிறையச் சாத்தும் ஆபரணங்க ளென்றபடி. சாடு - 'கழுத்தே கட்டளையாக' இத்யாதி. புடை - பார்ஶ்வம். ஆர் - பொருந்தின. ரூபகஸமாதியாலே அருளிச்செய்கிறார் - 'இந்த ஸௌந்தர்ய' இத்யாதி. நூல் - திருயஜ்ஞோபவீதமும், சாஸ்த்ரமும். நூலென்றது - ஸமுத்ரயாநம்பண்ணுகிறவர்கள் கடலிலே சம்பான்மேலே மேல்தட்டிலே யிருந்து படிக்கிற நக்ஷத்ரஶாஸ்த்ரம். ஒருதலைசேர்த்துவிடுகை - ஒருகரைசேர்த்துவிடுகை. நடை - ஸ்வபாவம். சாடு - 'ஒருதலை' இத்யாதி. அந்த ஸமுத்ரத்துக்குள்ளே ஓடத்திலே யிருக்கிறவன் ஒருஶாஸ்த்ரத்தைக்கொண்டு கரையேறினால், அநந்தரம் வேண்டினபடி மௌக்திகாதிகளை அநுபவிக்கலாமிறே யென்றபடி. தனித்தனியே சொல்லாதே, 'மற்றும்' என்று ஸமுதாயேந சொல்லுவானென்? என்ன, 'மின்மினி' இத்யாதி. மின்மினிபறக்கை - வெறியோடுகை; அதாவது - கண்வெறித்துப்போகை: அத்தாலே சொல்லுகிறா ரென்றபடி. பரிஹாராந்தரம் - 'அபரிமித' இத்யாதி. ஆபரணப்ரகரணத்திலே பிராட்டியைச் சொன்னதுக்கு பாவம் - 'அவ்வாபரணங்களோபாதி' இத்யாதி. அதாவது - ஸமுத்ரயநாயத்தாலே, இவளையும் ஆபரணமாகச் சொல்லுகிற தென்றபடி ஸமுத்ரயநாய மாவது - அக்ர்யமத்யகதனுக்கும் அக்ர்யத்வம் வருகை. [Sanskrit quotation in Grantha script] - 'மார்வத்து' இத்யாதி. 'திரு' என்றதுக்கு - கீழ்ப்பதங்களிலே நோக்காக ஆபரண கோடியிலே சேர்த்து அருளிச்செய்து, 'நாரணன்' என்ற பதத்தோடே கூட்டி ஶேஷித்வத்திலே நோக்காகத்*

---

* திருவாய்மொழி - ௧௦, ௧௦, உ.

இவர்களையுடையவன் திருநாரண னென்கையாலே, இம்மிதுநமே ஜகத்துக்கு ஶேஷி யென்கிறார். [தொண்டர் தொண்டர்கண்டீர்]-ஶேஷித்வத்துக்கு எல்லை அம்மிதுநமாயிருக்கிறாப்போலே, ஶேஷத்வத்திலும் எல்லையாயிருக்கிறவர்கள். [இடையார் இத்யாதி]- உச்சிவீடும் விடாதே நடுநேருங்கிவருகிற ஜந்மங்களில் அவகாஶந்தோறும், ஓர் ஒப்பனையாலன்றிக்கே வெறும்புறத்திலே நமக்கு சேஷிகள். ஸ்ரீமானான நாராயணனுக்கு அடிமை புக்கிருப்பார்க்கு, 'இச்சேர்த்தியறிந்து இவர்கள் ஆஶ்ரயிப்பதே'! என்று *இவர்களுக்கு அடிமைபுக்கார்க்கு அடியே னென்கிறார். அவர்கள் தங்களை யெண்ணுதே யிருந்தபோதும் நமக்கு ஸ்வாமிகள் என்கிறார். எங்களுக்கு அஸாதாரண ஶேஷிகள். (௪)

## ஐந்தாம் பாட்டு.

பெருமக்களுள்ளவர்தம்பெருமானை அமரர்கட்கு
அருமையொழிய அன்றாரமுதூட்டியஅப்பனைப்
பெருமைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர்
வருமையும் இம்மையும் நம்மையளிக்கும்பிராக்களே.

*ஆ.*—(பெருமக்கள்.) ப்ரஹ்மேஶாநாதி ஸர்வதேவர்களுக்கும் ஈஶ்வரனாய், அம்ருதப்ரதாநாதிகளாலே அவர்களுக்கு ரக்ஷகனாயிருந்த அவனுடைய இப்பெருமையைப் பிதற்ற வல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர் ஸர்வகாலமும் நமக்கு ரக்ஷகரான ஸ்வாமிகள் என்கிறார்.

*ஒ.*—அஞ்சாம்பாட்டில், ப்ரயோஜநாந்தரபாருடைய அபேக்ஷிதத்தைக் கொடுக்கும் ஸ்வபாவனான எம்பெருமானுடைய தன்மையை அநுஸந்தித்துக் கலங்கி அவற்றைச்சொல்லுமவர்களுடைய குணத்தைப் பிதற்றுமவர்கள் இஹலோகபரலோகங்களில் நம்மை ரக்ஷிக்கும் ஸ்வாமிகள் என்கிறார்.

*[பெருமக்கள் என்று தொடங்கி] - எம்பெருமானுக்கு அடிமையென்று இசைகையாலே என்றும் உளரான அயர்வறுமமரர்களுக்கு அதிபதியாய் இந்த்ராதிதேவர்களுக்கு தாரித்ர்யம் நீங்கும்படி நிரதிஶயபோக்யமான அம்ருதத்தைப் புஜிப்பித்த பரமபந்துவை இம்மஹோபகாரத்திலே ஈடுபட்டு அக்ரமமாகப் பேசுமவர்கள்.*

*தாத்பர்யாந்தரம் - 'திருவாபரணழ்வார்கள்' இத்யாதி. அன்றிக்கே, கீழெல்லாவற்றாலும் பலிதமாகவுமாம். 'தொண்டர்தொண்டர்' என்றத்தால் பலிதத்தை அருளிச்செய்கிறார் - 'சேஷித்வத்துக்கு' இத்யாதி. 'திரு' என்றதின் அர்த்தத்வயாநுகுணமாக, 'தொண்டர்' என்று - ஒப்பனையழகிலே தோற்றவர்க ளென்னுதல், சேர்த்தியழகிலே தோற்றவர்க ளென்னுதல். முந்தின அர்த்தம் - 'உச்சிவீடும்' இத்யாதி. 'இடை' என்று - நடுவாய், ஆர்தல் - நெருங்குதலாய், நடுவே உச்சிவீடும்விடாதே நெருங்கிவருகிற என்றபடி. ஓரொப்பனையாலன்றிக்கே- ஓரொப்பனையழகைக்காட்டித் தோற்பித்து சேஷியன்றிக்கே. த்விதீயார்த்தம் - 'ஸ்ரீமானான' இத்யாதி. எம் பெருமக்கள் - எம்பெருமான்கள்; ஸ்வாமிக ளென்றபடி. 'எமக்கு' என்று என் நினைவாலே ஸ்வாமிக ளென்கிறார் - 'அவர்கள் தங்களை' இத்யாதி. யத்வா, 'பெருமக்களே' என்ற ஏவகாரார்த்தமாதல். 'அவர்கள் தங்களை எண்ணுதே யிருந்தபோதும்' என்றது - தொண்டர்க்குத் தொண்டரானவர்கள் தங்களை ஶேஷிகளாகத் தங்கள் நினைவாலே எண்ணுதிருந்தபோது மென்னுதல்; அன்றிக்கே, 'அவர்கள்தங்களை' என்றது - அம்மிதுநத்தை யென்றபடியாய், நாரணன் தொண்டரானவர்கள் ஒருகால் மிதுநத்தை ஆஶ்ரயித்துப் பின்பு அவர்களை யெண்ணுதிருந்தபோதும் என்னுதல். அயோத்யாகாண்டே தஶரதவாக்யம், "வஹ காஹா-ந-ந௱ரா॰॰ஹேவவி யஃ ஶ-ஃ-நீ । ர-ஃவ்ளஃா௺ஃ௵ெணெஃவஃ॰ஸா॰ஃ௺ஷிவி-ரவஹாரிணீ". க்ரமேண அந்வய:.*

* 'இவர்களுக்கு' என்ற இச்சொல் ப்ரக்ஷிப்தமாயிருக்கலாம்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதர் ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷிக்கிலும் அவர்கள் அருமைப் படாமற் கொடுக்குமவனுடைய உபகாரகத்வாதிஶயத்தை ஸ்துதிப்பாரை ஸ்துதிக்குமவர்கள் உபய விபூதியிலும் தமக்கு உபகாரகர் என்கிறார்.

பெருமக்கள் உள்ளவர் - பரமஸாம்யாபத்தியாலேவரும் பெருமையையுடைய நித்ய ஸூரிகளுக்கு, தம் பெருமானை - அஸாதாரணனான அதிபதியாய், அமரர்கட்கு - சாவாமை வேண்டியிருக்கும் தேவர்களுக்கு, அருமை ஒழிய - அருமைப் படாதபடி, அன்று - (துர்வாஸஶ்ஶாபோபஹதரான) அன்று, ஆர் அமுது ஊட்டிய - பூர்ணமாக அம்ருதத்தைப் புஜிப்பித்து, அப்பனை - ஸத்தையைநோக்கினவனை உத்தேசித்து, பெருமை - அவனுபகாரகத்வ மஹத்தையை, பிதற்றவல்லாரை -(ப்ரீதிபாரவஶ்யத்தாலே அக்ரமமாகப்)பிதற்றவல்லாரை, பிதற்றுமவர்கண்டீர் - (தாங்களும் ப்ரீதிபரவஶராய்ப்) பிதற்றுமவர்கிடீர், வருமையும் இம்மையும் - ஐஹிகாமுஷ்மிகங்களில், நம்மை அளிக்கும் - நம்மை உஜ்ஜீவிப்பிக்கும், பிராக்கள் - உபகாரகர்.

இ.—அஞ்சாம்பாட்டில், ப்ரயோஜநாந்தரபரர்க்கும் அபேக்ஷிதஸம்விதாநம்பண்ணும் ஔதார்யத்திலே தோற்றவர்கள் ஸ்வபாவத்துக்குத் தோற்றவர்கள் எனக்குஸ்வாமிகள் என்கிறார்.

[பெருமக்கள்]- நித்யஸூரிகள். ''பேராளன்பேரோதும் பெரியோர்'' என்றும், ''ஸ மஹாத்மா ஸுதுர்லப:'' என்றும் முமுக்ஷுக்களையும் ஸர்வோத்க்ருஷ்டராகச் சொல்லக்கடவதாகில், நித்யஸித்தரைச் சொல்லவேண்டாவிறே. [உள்ளவர்]- நிருபகமான ஶேஷத்வஜ்ஞாநம் நித்யமாகையாலே தாங்களும் நித்யராயிருக்கை. இங்குள்ளாரைப் போலே ''ஸந்தமேநம்'' என்பது ''அஸந்நேவ'' என்பதாக வேண்டாதவர்கள். [தம் இத்யாதி] - அவர்களுக்கு நிர்வாஹகனை. [அமரர்கட்கு]- ப்ரயோஜநாந்தரபரரான இந்த்ராதிகளுக்கு. [அருமை யொழிய] - கடல் கடையும் வருத்தத்தைத் தன்தலையிலேயாக்கி அவர்களுக்கு அம்ருதஹோமத்திலே அந்வயமாம்படி பண்ணி. [அன்று] - துர்வாஸஶ்ஶாபத்தாலே அஶ்ரீ ப்ரவேஶித்து அஸுரர்கள் அபிபவித்துப் போக்கற்ற தஶையிலே. [ஆரமுது இத்யாதி] - நிரதிஶயபோக்யமான அம்ருதத்தை புஜிப்பித்த க்ருபாதிஶயத்தை. இவர்கள் பேறு தன்பேறு யிருக்குமவன். [பெருமை பிதற்றவல்லாரை] - ப்ரயோஜநாந்தரபரரையும் ''உதாரா:'' என்னுமவனுடைய ஔதார்யகுணத்திலே ஈடுபட்டு அக்ரமமாகப் பேசுமவர்களை. [பிதற்றுமவர் கண்டீர்] - அவர்கள் பகவத் விஷயத்தில் இருக்கும் இருப்பை அவர்கள் தங்கள்பக்கலிலே இருக்குமவர்கள். [வருமையும் இம்மையும்]- ஐஹிக ஆமுஷ்மிகங்கள் இரண்டிலும்; ''இஹ சாமுத்ர ச'' என்கிறபடியே. [நம்மையளிக்கும் பிராக்கள்] - ஸம்ஸாரிகளிலே அந்யதமராயிருக்கிற எங்களை அவர்களில் வ்யாவ்ருத்தராக்கி இங்கு ஆமுஷ்மிகத்தில் நித்யஸூரிகளோடே ஒருகோவையாக்கும் ஸ்வாமிகள்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ப்ரயோஜநாந்தரபரர்க்கும் அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணுமவனௌதார்யத்திலே தோற்றவர்கள்ஸ்வபாவத்துக்குத் தோற்றவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

[பெருமக்கள்] - நித்ய ஸூரிகள்: பேரியோ ரேன்றபடி; ''பேராளன் பேரோதும் பெரியோர்'' என்னக்கடவதிறே. ''மஹாத்மாநஸ்து'' (மஹாத்மாநஸ்து) என்றும், ''ஸ மஹாத்மா

அஞ்சாம்பாட்டு - 'பெருமக்கள்' இத்யாதி. 'அமரர்கட்கருமை' என்று தொடங்கி, 'அளிக்கும்பிராக்கள்' என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - 'ப்ரயோஜநாந்தர' இத்யாதி.

இஶ்ஶப்தம் - நித்யஸூரிகளை எப்படிச்சொல்லும்? என்ன, 'பெரியோர்' இத்யாதி. முமுக்ஷுவிஷயத்தில் மஹச்சப்த ப்ரயோகம் காண்கையாலே, தந்ந்யாயேந ஸூரிகளையும் சொல்லு மென்கிறார் - 'பேராளன்' இத்யாதி. திருமொழி-(எ,௪,௪) இதுக்கு அர்த்தம் - முன்பே யெழுதிற்று. கீதாஸூக்தமே,''மஹாத்மாநஸ்தோ

ஸுது3ர்லப4:" (ஸமஹாத்மாஸுதுர்லப:) என்றும், "ஏதேவைஸுமஹாத்மாந:" (ஏதேவைஸுமஹாத்மாந:) என்றுமிறே ஶேஷிவார்த்தையும். ஸம்ஸாரத்திலே முமுக்ஷுவாய் ஆபிமுக்யம்பண்ணின மாத்ரத்திலே சொல்லுகிறபடி இதுவாகில், நித்ய ஸூரிகளை இப்படிச் சொல்லக் கேட்க வேண்டாவிறே. [உள்ளவர்]- "அஸந்நேவ" (அஸந்நேவ) என்பது ஒருநாள்வரையிலே "ஸந்தமேநம்" (ஸந்தமேநம்) என்பதாகாதே, என்று மோக்க உள்ளவர்கள். அதாவது - ஸ்வரூபமான ஶேஷத்வம் அழியாமையாலே. நிரூபகமில்லையாகில் நிரூப்யம் இல்லையாமிறே. ஶேஷத்வ ப்ரதிபத்திக்கு ஒருநாளும் குறைதல் வாராதவர்கள். [தம்பெருமானை]- அவர்களுக்கு ஸத்தாஹேதுவாய் அந்த உண்மையை நடத்திக்கொடுக்குமவனை. [அமரர்கட்கு]- நம்மிற்காட்டில் நாலுநாள் சாவாதே யிருக்கிறத்தை யிட்டு அவர்கள்பேரைச் சுமந்துகொண்டிருக்கிற இந்த்ராதிகளுக்கு. [அருமையொழிய] - அஸுரர்கள்கையிலே படும் எளிவரவு தீரும்படியாகக் கடலைக் கடைந்து அவர்கள் பலத்திலே அந்வயிக்கும்படி பண்ணினவனிறே. கடலைக்கடையும் வருத்தத்தைத் தன்பக்கலிலேயாக்கி, இவர்களுக்கு அம்ருதபோகத்திலே அந்வயமாம்படி பண்ணினபடி. [அன்று]-துர்வாஸஶ்ஶாபோபஹதரான தசையிலே.[ஊட்டியஅப்பனை] - வானவரைப் பெண்ணாகி அமுதூட்டும் பெருமானிறே. அப்பன் - உபகாரகன். ப்ரஜைக்குத் தாய்பண்ணும் உபகாரமாவது - அதின்முகம் வாடாமே வளர்க்கையிறே. [பெருமை இத்யாதி]- "உதா3ரா:" (உதாரா:) என்கிறபடியே, தன்னையே ப்ரயோஜநமாகப் பற்றினார்க்குப் போலே, ஐஶ்வர்யாதிகளை உகந்தார்க்கும் 'இத்தையாகிலும் நம்பக்கலிலே கொள்ளப்பெற்றோமே; இவர்கள் நமக்கு ஸர்வஸ்வதாநம் பண்ணுகிறார்களன்றோ' என்றிருக்கும் பெருமை. நாட்டார்படியல்ல இவனது. நாட்டில் கொடுப்பார் உதாரராயிருப்பர்: இங்குக் கொள்வார் உதாரராயிருப்பர். ஏதேனுமாகக் குறைதீர்ப்பார் உதாரராமித்தனையிறே. [பிதற்றவல்லாரை]- *"அறவனை" என்கிறபடியே 'ப்ரயோஜநாந்தரபரராளவிலும் இப்படியிருப்பதே!' என்று இத்தை நெஞ்சிலே யநுஸந்தித்து அடைவுகெடக் கூப்பிட்டு ஏத்துமவர்களை. [பிதற்றுமவர் கண்டீர்]- 'இந்நீர்மை இவர்களுக்கு நிலமாவதே'! என்று அவர்கள் அவன்பக்கலிருக்கும் இருப்பை கண்டீர். 'இவர்கள் உத்தேஶ்யராவது எத்தனை நாளைக்கு?' என்ன, அவர்கள்பக்கலிலே இருக்குமவர் கிடீர்.

---

வாயுர்தைவிகம் ஸ்ருதிஶ்ரீதாஹ்யஜஸ்ரந்ந்ருஹநவொஜஹ்தாக்ஷாஹா்ம்ராதாஷிஶவ்யுப்ரா". ஸப்தமே "பஹா்ஙநாம்ஜஸ்ருநாஶ்ஞெஜ்ஞா நவாநுஶோம்வஸுதெ। வாஸுதெவஸ்வஸுஷிதிஸஹோதாஸுது3ர்லப4:". இந்த ப்ரமாணங்களெல்லாம் - ஸூரிகள் விஷயமன்றே; முமுக்ஷுக்கள் விஷயங்களன்றோ? என்ன, 'ஸம்ஸாரத்திலே' இத்யாதி. உண்மை ஸர்வஸாதாரணமன்றோ? இவர்களை 'உள்ளவர்' என்று விசேஷிக்கிறதென்? என்ன, 'அஸந்நேவ' இத்யாதி. சேஷத்வஜ்ஞாநாபாவத்தில் ஸ்வரூபம்போமோ? என்ன, 'நிரூபகம்' இத்யாதி. பலிதம் - 'சேஷத்வ' இத்யாதி. ஶேஷத்வம் அழியாமையாலே - ஶேஷத்வஜ்ஞாநம் அழியாமையாலே. 'ஸத்தாஹேதுவாய்' என்றதின் விவரணம் - 'அந்த உண்மையை' இத்யாதி. ஆவது அழிவதாகிறவர்களை 'அமரர்' என்கிறது எத்தாலே? என்ன, 'நம்மில்' இத்யாதி. அருமையொழிய - ஆயாஸம் தீரும்படியாக; அஸுரர்களால் வந்த க்லேசம் போம்படியாக வென்று முந்தின அர்த்தம் -'அஸுரர்கள்' இதி. எளிவரவு - க்லேசம். கடைகையிலுள்ள ஆயாஸம் அவர்களுக்கொழிய வென்று அர்த்தாந்தரம் - 'கடலை' இத்யாதி. உக்தார்த்தே ப்ரமாணம் - 'வானவரை' இத்யாதி. திருமொழி-(உ, சு, க.) 'நண்ணுத' இத்யாதி. தேவர்களை ஸ்த்ரீவேஷத்தையுடையனாய்க்கொண்டு அம்ருதத்தைப் புஜிப்பிக்கும் ஸ்வாமியானவர் இத்யர்த்த:. ப்ரயோஜநாந்தரத்தைக் கொடுக்கை உபகாரமோ? என்ன, 'ப்ரஜைக்கு' இத்யாதி. இதில் அவனுக்குப் பெருமையேது? என்ன, 'உதாரா:' இத்யாதி. கீதாஸு ஸப்தமே, "உதா3ராஸ்ஸர்வஏவைதே ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம் । ஆஸ்தி2தஸ்ஸஹியுக்தாத்மா மாமேவாநுத்தமாம் க3திம்". கொள்வார் உதாரராம்படியென்? என்ன, 'நாட்டார்' இத்யாதி. அவர்களிடத்தில் ஔதார்யமேது? என்ன, 'ஏதேனும்' இத்யாதி. அறவனை - தார்மிகனை.

* திருவாய்மொழி - க, எ, க.

[வருமையும் இம்மையும்] - "[illegible]" (அத்ரபரத்ரசாபி) - இஹலோகபரலோகங்களிரண்டிலும். இஹலோகத்தில் நாட்டாரோடியல்வொழிந்து, பரலோகத்தில் நாரணனை நண்ணுவித்து அடியார்கள் குழாங்களிலே உடன்கூட்டும் உபகாரகர். [நம்மை யளிக்கும் பிராக்கள்]- நம்மை உஜ்ஜீவிப்பிக்கும் ஸ்வாமிகள். ஸர்வேச்வரன் ஒருநாள் வரையிலே உபஸம்ஹரித்திட்டுவைத்து, ஒருநாள் வரையிலே ஸம்ஸாரத்திலே தருதுயரந்தடாதே வைக்குமிறே; ஸ்ரீ வைஷ்ணவர்களோடே ஸஹவாஸம் பண்ணப்பேறில், 'ஸம்ஸாரந்தானே நன்று' என்னும்படியிறே அவர்கள்படி. "நறுமா விரைநாண்மலரடிக்கீழ்ப் புகுதலுறுமோ" என்றாரிறே. (ரு)

## ஆறாம் பாட்டு.

அளிக்கும்பரமனைக்கண்ணனை ஆழிப்பிரான்தன்னைத்
துளிக்கும்நறுங்கண்ணித் தூமணிவண்ணனெம்மான்தன்னை
ஒளிக்கொண்டசோதியை உள்ளத்துக்கொள்ளுமவர்கண்டீர்
சலிப்பின்றியாண்டெம்மைச் சன்மசன்மாந்தரங்காப்பரே.

*ஆ.—(அளிக்கும்.) தேவமநுஷ்யாதி ரூபேண அவதீர்ணனாய், ஸர்வஜகத்ரக்ஷகனாய், ஶங்கசக்ராதி திவ்யாயுததரனாய், திவ்யமால்யோபஶோபிதனாய், ஹேயப்ரத்யநீகனாய், நிரதிஶய தேஜோவிஶிஷ்டனாயிருந்த எம்பெருமானை உள்ளத்துக்கொள்ளுமவர்கண்டீர் ஒருசலநமில்லாதபடி ஆண்டு எம்மைச் சன்மசன்மாந்தரம் காப்பார் என்கிறார்.*

*ஒ.— ஆறாம் பாட்டில், கீழ்ச் சொன்ன ஸௌந்தர்யாதிகளை யெல்லாம் திரள நெஞ்சிலே அநுபவிக்குமவர்கள் எனக்கு ஸர்வகாலமும் ரக்ஷகர் என்கிறார்.*

*[அளிக்கும் பரமனைக் கண்ணனை] - ரக்ஷண ஸ்வபாவத்தில் தனக்கு மேற்பட்டார் இல்லாத க்ருஷ்ணனை. [ஆழிப்பிரான்தன்னை என்று தொடங்கி] - கையும் திருவாழியுமான அழகைக் காட்டிச் சேதநரை உஜ்ஜீவிப்பதும் செய்து திருமேனியின் ஸ்பர்ஶத்தாலே மதுஸ்யந்திகளான மாலைகளை யுடையனாய்ப் பழிப்பற்ற நீலரத்நம்போலே ஶ்ரமஹரமான திருநிறத்தை யுடையனுமாய், அத்தாலே என்னை அடிமை கொள்வதும் செய்து விலக்ஷணமான அழகை யுடையவனை நெஞ்சாலே அநுபவிக்கு மவர்கள் கிடீர். [சலிப்பின்றி ஆண்டு] - "[illegible]" என்*

---

*நிலமாவதே யென்று 'அவர்கள்பக்கலிலே யிருக்குமவர்கிடீர்' என்று அந்வயிப்பது. அவர்கள் அவன்பக்கலிலே யிருக்கும் இருப்பாவது - 'ப்ரயோஜநாந்தரபரர்க்கு அத்தைக் கொடுத்துவிடுவதே; இதென்னநீர்மை' என்று அநுஸந்தித்துப் பிதற்றுகை. 'வருமையுமிம்மையும்' என்கிறது - காலவாசியாகிலும், தது பலக்ஷித தேசங்களைக் காட்டுகிறது. 'அத்ரபாத்ரசாபி' இதி - ஸ்தோத்ரரத்நே, "[illegible]" இத்யாதி. அளிக்கும் ப்ரகாரமேது? என்ன, 'இஹலோகத்தில்' இத்யாதி. பிராக்கள் - உபகாரகர். 'பிராக்கள்' என்றதுக்கு - ஸ்வாமிகளென்று அர்த்தாந்தரம் - 'நம்மை' இத்யாதி. ஏகாரத்துக்கு பாவம் - 'ஸர்வேஶ்வரன்' இத்யாதி. உபஸம்ஹரித்திட்டுவைத்து - மோக்ஷத்தைக்கொடுத்துவைத்து. 'தருதுயரம் தடாதே' - நீயேதருகிற துக்கத்தை நீயே போக்காதே இத்யர்த்தః. பெருமாள்திருமொழி. (ரு, க.) உக்தத்துக்கு ப்ரமாணம் - 'நறுமாவிரை' இத்யாதி. ஸ்ரீவாமநனுடைய மிக்கபரிமளத்தையும் ஶ்லாக்யமான மதுவையுமுடைத்தான செவ்விப்பூப்போலே யிருக்கிற திருவடிகளின்கீழே புகுதல் சீரியதோ? இத்யர்த்தః. அப்படி உத்தேசித்து, அவனுபகாரமஹத்தையைப் பிதற்ற வல்லாரை இதி ஶப்தார்த்தః. க்ரமேண அந்வயః. (ரு)*

னும்படியாலே ஜகஜ்ஜநநியான பெரியபிராட்டியார்சாயலாகையாலே குற்றங் கண்டாலும் என்னை விடாதபடியாகப் பரிக்ரஹித்து.

ப.—அநந்தரம், அநந்யப்ரயோஜநர்க்குத் தன்வடிவழகை அநுபவிப்பிக்கும் உஜ்ஜ்வல ஸ்வபாவனை அநுபவிப்பார் நமக்கு ரக்ஷகர் என்கிறார்.

அளிக்கும் பரமனை - (உபகரிக்குமிடத்தில்) மேலில்லாதபடியாகத் (தன்னை) உபகரிப்பானாய், கண்ணனை - (அவர்களிட்டவழக்காம்படி) பவ்யனாய், ஆழி - கையுந் திருவாழியுமான அழகையும், துளிக்கும் நறும் கண்ணி - மதுஸ்யந்தியாய்ப் பரிமளோத்தரமான மாலையழகையும், தூ மணி - அழுக்கற்ற மாணிக்கம்போன்ற, வண்ணம் - வடிவையும், பிரான் தன்னை - உபகரித்து, எம்மான் தன்னை - என்னையெழுதிக்கொண்ட ஸ்வாமியாய், ஒளிக்கொண்ட - (அத்தாலே) மிகவும் நிறம்பெற்ற, சோதியை - தேஜஸ்ஸை யுடையனானவனை, உள்ளத்து - நெஞ்சாலே, கொள்ளுமவர் கண்டீர் - அநுபவிக்குமவர்கள்கிடீர், எம்மை - எம்மை, சலிப்பு இன்றி - (ப்ரயோஜநாந்தரங்களிற் போகாமல்) நிஶ்சலமாக, ஆண்டு - அடிமைகொண்டு, சன்மம் - இஜ்ஜந்மத்தோடு, சன்மாந்தரம் - ஜந்மாந்தரங்களோடு வாசியற, காப்பர் - ரக்ஷிக்குமவர்கள்.

இ.—ஆறும்பாட்டில், கீழ்ச்சொன்ன ஸௌந்தர்யாதிகளையெல்லாம் திரள அநுபவிக்குமவர்கள் எனக்கு ரக்ஷகர் என்கிறார்.

[அளிக்கும் இத்யாதி] - ரக்ஷிக்குமிடத்தில் தனக்குமேற்பட்டா ரில்லாதவனை. [கண்ணனை]- உபகரித்தது தன்னையாயிற்று. [ஆழிப்பிரான்தன்னை] - "நாயுதாநி" என்கிறபடியே தன்னோடு ஆயுதங்களோடு வாசியற "ஹேதிநாத" என்று இருக்குமவனை. "ஆளும் பரமனை" என்கிற பாட்டை நினைக்கிறது. [துளிக்கும் நறுங்கண்ணி] - ஸ்வஸ்பர்ஶத்தாலே செவ்வி பெற்றுத் துளியாநிற்கிற மதுவையும் பரிமளத்தையு முடைய திருத்துழாய்மாலையை யுடையனாய்; "நறுந்துழாய்ப் போதனை" என்றத்தை நினைக்கிறது. [தூமணிவண்ணன் எம்மான்தன்னை] - பழிப்பற்ற நீலமணி போலே யிருக்கிற திருநிறத்தைக் காட்டி என்னை அகப்படுத்திக்கொண்டவனை; "தோளு மோர் நான்குடைத் தூமணிவண்ணன்" என்றத்தை நினைக்கிறது. [ஒளிக்கொண்ட சோதியை]- ஒளிமிக்க தேஜஸ்ஸை; "பயிலுஞ் சுடரொளி மூர்த்தியை" என்றத்தை நினைக்கிறது. [உள்ளத்துக் கொள்ளுமவர் கண்டீர்] - குணங்களை அநுபவித்து வித்தராய் வாய்விடமாட்டாதே யிருக்குமவர் கண்டீர். [சலிப்பின்றி யாண்டெம்மை]- பகவத் ஸமாஶ்ரயணம் பண்ணினார் ப்ரஹ்மாதிகளாய், 'ஈஶ்வரோஹம்' என்று மீளலாம்; ததீயஶேஷத்வபர்யந்த மானாலாயிற்று மீளாதொழிவது. [சன்மசன்மாந்தரம் காப்பரே] - ஜந்ம பரம்பரைகளிற் புகாதபடி ரக்ஷிப்பர்கள். முன்பு ஜந்மத்தையும் அநுமதிபண்ணினார், அவர்கள் பக்கல் ஆதரத்தாலே; இங்கு அவர்கள் செய்யும்படி சொல்லுகிறார்.

ஈடு.—ஆறும்பாட்டு. கீழ்ச்சொன்ன ஸௌந்தர்யாதிகளைத் திரள அநுபவிக்குமவர்கள் எனக்கு ரக்ஷகர் என்கிறார்.

[அளிக்கும் பரமனை] - இவ்வாத்மாக்களை ரக்ஷிக்குமிடத்தில் தனக்கு அவ்வருகில்லாதவனை. * (அன்றிக்கே, உபகரிக்குமிடத்தில் மேலில்லாதவ னென்னுதல். அளிக்கை - ரக்ஷிக்

ஆறும்பாட்டு - 'அளிக்கும்' இத்யாதி. பாட்டெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - 'கீழ்ச்சொன்ன' இத்யாதி. கீழ்ச்சொன்ன - பயிலும்சுடரொளி தொடங்கிச் சொன்ன. திரள - ஸங்க்ரஹமாக. அளிக்கை யென்றதுக்கு - ரக்ஷிக்கை யென்று கீழேசொல்லி, கொடுக்கையென்று அர்த்தாந்தரம் -

* குண்டலிதக்ரந்தம் வ்யாக்யாந விருத்தமாகையாலே ப்ரக்ஷிப்தமாகவேணும்.

கையும், கொடுக்கையும்.) [கண்ணனை] - அளிப்பது தன்னையிறே; "எனக்கே தன்னைத் தந்த கற்பகம்". [ஆழிப்பிரான் தன்னை] - "நாயுதாநி" (நாயுதாநி) என்கிறபடியே, தன்னோடு ஆயுதத்தோடு வாசியற "ஸக்தாநாடீ" (பக்தாநாம்) என்றிருக்குமவனை; "ஆளும் பரமனை" என்கிற பாட்டை நினைக்கிறது. [துளிக்கும் இத்யாதி] - அவ்வளவிலகப்படாதாரை அகப்படுத்துகைக்கு ஈடான கண்ணி யிருக்கிறபடி. [துளிக்கும் நறுங்கண்ணி] - திருமேனியில் ஸ்பர்ஶத்தாலே சேவ்விபெற்று மதுஸ்யந்தியாநிற்பதாய், நறுநாற்றத்தையுடைய திருத்துழாய்மாலையையுமுடையனாய்; "நறுந்துழாய்ப்போதனை" என்கிறத்தை நினைக்கிறது. [தூமணிவண்ணன் எம்மான்தன்னை] - பழிப்பற்ற நீலமணிபோலேயிருக்கிற திருநிறத்தைக் காட்டி என்னை அநந்யார்ஹமாக்கினவனை: "மணியை வானவர் கண்ணனை" என்கிறபடியே நித்யஸூரிகளை எழுதிக் கொண்டபடியே காணும் இவரையும் எழுதிக்கொண்டது; "படிகண்டறிதியே" என்னக்கடவதிறே; "தோளுமோர் நான்குடைத் தூமணிவண்ணன்" என்றத்தை நினைக்கிறது. [ஒளிக்கொண்ட சோதியை] - நிரவதிக தேஜோரூபமான விக்ரஹத்தையுடையவனை; "பயிலுஞ் சுடரொளி" என்றத்தை நினைக்கிறது. [உள்ளத்துக்கொள்ளுமவர் கண்டீர்] - குணங்களை யநுஸந்தித்து வித்தராய் வாய்விடமாட்டாதே யிருக்குமவர்கள் கிடீர். [சலிப்பின்றி ஆண்டு எம்மை] - பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணினால் ப்ரஹ்மாத்யைஶ்வர்யங்களைக்கொண்டு மீளவுமாம், ததீயஶேஷத்வ பர்யந்தமானாலாயிற்று மீளாதொழிவது. மீண்டார்களாகிலும் * திரிதந்தாகிலும் தேவபிரானுடைக் கரியகோலத் திருவுருக் காணுமித்தனையிறே. "தெரிவைமாருருவமே மருவி" என்கிறபடியே, பலவுருச் சொல்லிப் போகவேண்டாதே இவ்வோருருவிலும் போரும்படியிறே அவர்கள் சொல்லுவது. [சன்மசன்மாந்தரம் காப்பரே] - ஜந்மபரம்பரைகளிற் புகாதபடி ரக்ஷிப்பார்கள். கீழிற்பாட்டுக்களிலே, ஜந்மத்தை யாதரித்தார், ஸ்ரீவைஷ்ணவர்கள்பக்க லாதரத்தாலே; இங்கு அவர்கள்செய்யும்படிசொல்லுகிறார்.



'அளிப்பது தன்னையிறே' என்று. 'அளிக்கும்' என்றதின் த்விதியார்த்தத்துக்குச் சேர ஹாவம் - 'நாயுதாநி' இத்யாதி. ஜிதந்தாயாம், பூர்வமேவ லிகிதம். 'கீழ்ச்சொன்ன ஸௌந்தர்யாதிகளைத் திரள அநுபவிக்குமவர்கள்', என்று அவதாரிகையிற் சொன்ன அர்த்தத்தைத் தத்தத்பதங்களாலே காட்டுகிறார் - 'ஆளும் பரமனை' இத்யாதியாலும், 'நறுந்துழாய்' இத்யாதியாலும், 'தோளுமோர் நான்குடை' இத்யாதியாலும், 'பயிலுஞ் சுடரொளி' இத்யாதியாலும். கீழ்ப்பதத்தையும் கூட்டி மேலுக்கு ரஸோக்தியாக ஸங்கதி - 'அவ்வளவில்' இத்யாதி. ஒரு ம்ருகத்தை வளைத்தால் அதுக்குத் தப்பினால் கண்ணியிட்டுப் பிடிப்பார்களிறே யென்று ரஸோக்தி. கண்ணி-குளச்சிட்ட கயிறும், மாலையும். நறுநாற்றம்-மிக்க பரிமளம். பழிப்பு - மாலிந்யம். படியே - விக்ரஹமே. படியென்று-விக்ரஹத்தைச் சொல்லுமோ? என்ன, 'படிகண்டு' இத்யாதி. முதல் திருவந்தாதி-(அ௩.) "மணியை வானவர் கண்ணனை" என்றவிடத்திலே, 'மணி' என்று-ஸௌலப்யபரமாகக் கீழ் வ்யாக்யாதமானாலும், இவ்விடத்தில் இப்படி அருளிச்செய்கையாலே, வடிவழகும் ஓரர்த்தமாகக் கண்டுகொள்வது. 'எத்துமவர்' என்னாதே, 'உள்ளத்துக்கொள்ளுமவர்' என்றதுக்கு ஹாவம் - 'குணங்களை' இத்யாதி. 'சலிப்பின்றி' என்று விசேஷித்ததுக்கு ஹாவம் - 'பகவத்ஸமாஶ்ரயணம்' இத்யாதி. சலிப்பு - சலநம். அதாவது - ப்ரயோஜநாந்தரபரதை. ததீயசேஷத்வபர்யந்தம் போனாலும் மீளுகிற பேரில்லையோ? என்ன, 'மீண்டார்களாகிலும்' இத்யாதி. 'திரிதந்தாகிலும்' இத்யாதி - மீண்டார்களாகிலும் தேவபிரானுடைய கறுத்த அழகிய திருமேனியைக் காணுமத்தனை யித்யர்த்தஃ. 'திருவுரு' என்ற ஏகவசநத்துக்கு ஹாவம் - 'தெரிவைமார்' இத்யாதி ரஸோக்தி. திருமொழி - முதல்திருமொழி - மூன்றாம்பாட்டு, "சேமமேவேண்டி" இத்யாதி; ஸ்த்ரீகளுடைய தேஹத்தையே ஆதரித்து இத்யர்த்தஃ. பலவுருச்சொல்லுகை வாய்க்கு ஆயாஸமென்று த்வந்யர்த்தம். அவர்கள் - பாகவதர்கள். சன்மசன்மாந்தரம் காப்பர்-இந்தஜந்மநிமித்தமாகவும் ஜந்மாந்தர நிமித்தமாகவும் காப்ப ரென்றபடி. முதற்பாட்டுத் தொடங்கி இவ்வளவாக, ஜந்மத்தை யாதரித்து, இப்பாட்டிலே த்யாஜ்யமாகச் சொல்லுவானென்? என்ன, 'கீழிற்பாட்டுக்களிலே' இத்யாதி. க்ரமேண அந்வயஃ. (சு)

* கண்ணி நுண்சிறுத்தாம்பு - எ.

# ஏழாம் பாட்டு.

சன்மசன்மாந்தரம்காத்து அடியார்களைக்கொண்டுபோய்த்
தன்மைபெறுத்தித் தன்தாளிணைக்கீழ்க்கொள்ளுமப்பனைத்
தொன்மைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர்
நன்மைபெறுத்துஎம்மை நாளுய்யக்கொள்கின்றநம்பரே.

ஆ.—(சன்மசன்மாந்தரம்.) ஜந்மங்கள்தோறும் இந்தலோகத்திலே தானும் வந்து பிறந்தருளி ஆஸ்ரிதரை ரக்ஷித்து, பின்னை அவர்களைக் கொண்டுபோய் அஸங்குசிதஜ்ஞாநராக்கித் தன்தாளிணைக்கீழ்க் கொள்ளும் அப்பனுடைய இந்த ஸ்வாபாவிகமான குணத்தைப் பிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர், ஸ்வஸேஷதைகரதித்வஸம்பத்தை நமக்குத் தந்து அத்தை நித்ய ஸித்த மாக்குவர் என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், ஆஸ்ரிதவிஷயத்தில் அவன் பண்ணும் மஹோபகாரங்களை அநுஸந்தித்து அப்படிகளைப் பிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கள்கிடீர், எனக்கு எற்றைக்கும் ஸ்வாமிகள் என்கிறார்.

[சன்மம் என்று தொடங்கி] - ஜந்மங்கள் தோறும் வந்து ரக்ஷித்து ஆஸ்ரிதரைக் கொண்டுபோய்ப் பரிபூர்ணஜ்ஞாநராக்கித் தன்திருவடிக்கீழே நிரந்தரகைங்கர்யத்தைக்கொள்ளும் பரமபந்துவை. [தொன்மை என்று தொடங்கி] - நைஸர்க்கிகமான குணங்களிலே ஈடுபட்டுப் பேசுமவர்களைப் பிதற்றுமவர்கிடீர், பாகவதஸேஷத்வஸம்பத்தை நமக்குத் தந்து அத்தை என்றும் நடத்தக்கடவ முதலிகள்.

ப.—அநந்தரம், ஸ்வாநுபவம்பண்ணுவாரை ஸ்வரூபாவிர்பாவத்தைப் பிறப்பித்து அநுபவிப்பிக்குமவனைப் புகழுமவரைப் புகழுமவர்கள் நமக்கு நித்யபுருஷார்த்தப்ரதர் என்கிறார்.

சன்மசன்மாந்தரம் - ஜந்மபரம்பரைகள், காத்து - (வாராதபடி) பரிஹரித்து, அடியார்களை - ஸேஷத்வஜ்ஞாநமுடையவர்களை, கொண்டுபோய் - (ஒருதேசவிசேஷத்திலே) கொண்டுபோய், தன்மை பெறுத்தி - ஸ்வரூபாவிர்பாவத்தைப் பிறப்பித்து, தன் தாளிணைக்கீழ் - தன்திருவடிகளின்கீழே, கொள்ளும் - அடிமைகொண்டருளும், அப்பனை - ஸ்வாமியானவனை, தொன்மை- ஸ்வாபாவிகோபகாரகத்வத்தை, பிதற்ற வல்லாரை - சொல்லி அக்ரமமாகப் புகழவல்லாரை, பிதற்றுமவர்கண்டீர் - தாங்களும் ப்ரேமவித்தராய்ப் புகழுமவர்கள்கிடீர், எம்மை-நம்மை, நன்மை பெறுத்து - (அந்தமில்பேரின்பத்தடியரோடிருக்கும்) நன்மையைப் பெறும்படிபண்ணி, நாள் - யாவதாத்மபாவி, உய்யக்கொள்கின்ற - உஜ்ஜீவிப்பித்துக்கொள்வாராக, நம்பர் - விஸ்வஸிக்கப்படுமவர்கள். நம்பர் - நம்பப்படுமவர்கள். இம்மூன்றுபாட்டாலும் - பாகவதருடைய ஸரண்யத்வம் சொல்லிற்று.

இ.—ஏழாம்பாட்டில், ஆஸ்ரிதவிஷயத்தில் அவன்பண்ணும் மஹோபகாரங்களிலே வித்தரானவர்களுக்குத் தோற்றிருக்குமவர் கிடீர், எனக்கு எற்றைக்கும் ஸ்வாமிகள் என்கிறார்.

[சன்மசன்மாந்தரம் காத்து] - ஜந்மபரம்பரைகளிற் புகாதபடி பரிஹரித்து. [அடியார்களை] - தன்பக்கலிலே ஸர்வபரந்யாஸம் பண்ணியிருக்குமவர்களை. [கொண்டுபோய்த் தன்மை பெறுத்தி] - ஒருநாடி விஸேஷத்தாலே புறப்படுத்தி அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒருதேஸவிஸேஷத்திலே கொண்டுபோய், "ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே" என்று ஸ்வஸ்வரூபத்தைக் கொடுத்து. [தன் தாளிணை இத்யாதி] - ஸர்வாதிகனை தனக்குச் சரணோபதாநத்தோபாதி

யாகக் கொள்ளும் நிருபாதிக ஶேஷியை. [தொன்மை இத்யாதி] - ஸ்வாபாவிகமான ஔதார்ய குணத்திலே ஈடுபட்டு அக்ரமமாகப் புகழுமவர்கள்விஷயத்திலே வித்தராமவர்கள்கீழ்: "க்ஷிவாதி" என்னுமது ஸோபாதிகம்: ஔதார்யமே இவனுக்கு ஸ்வரூபம். [நன்மைபெறுத்து]-ததீயஶேஷத்வபர்யந்தமான பகவச்சேஷத்வஸம்பத்தைத் தந்து. [எம்மை நாளுய்யக்கொள்கின்ற நம்பரே] - அத்தை யாவதாத்மபாவி நடத்தக்கடவ விஶ்வஸநீயர்; முதலிகள் என்றபடி.

ஈடு.—ஏழாம்பாட்டு. ஆஶ்ரிதவிஷயத்தில் அவன்பண்ணும் மஹோபகாரங்களிலே வித்தரானவர்களுக்குத் தோற்றிருக்குமவர்கள்கீழ் எனக்கு எற்றைக்கும் ஸ்வாமிகள் என்கிறார்.

[சன்மசன்மாந்தரம்காத்து] - பஞ்சாக்நிவித்யையிற் சொல்லுகிறபடியே மேகத்திலே புக்கு வர்ஷரூபத்தாலே பூகதமாய், வ்ரீஹியிலே புக்கு அந்நரூபத்தாலே புருஷன்பக்கலிலே புக்கு, பின்பு பஞ்சமியான ஆஹுதியிலே புக்கு, பின்பிறே கர்ப்பமாவது; இப்படிவருகிற ஜந்மபரம்பரைகளை வேர்ப்பற்றோடே அறுத்து. வர்த்தமாநதேஹாவதியாக்கிப் பின்பு ஒருதேஹத்திற் புகாதபடி பண்ணி. இப்படி செய்வது ஆரையென்னில்,—[அடியார்களை] - தன்திருவடிகளிலே ஸர்வபரந்யாஸம் பண்ணி யிருக்குமவர்களை. [கொண்டுபோய் இத்யாதி] - * "மரணமானால்" என்கிறபடியே ஶரீரவிஶ்லேஷத்தளவும் பொறுத்திருந்து அந்திமஸ்ம்ருதியும் பக்தியும் இவர்களுக்குப் பணியாக்காதே "அஹம் ஸ்மராமி" (அஹம்ஸ்மராமி) என்கிறபடியே - தானே நினைத்து, வழிதெரியாதபடி யிருக்கிற ஶதாதிகையான நாடியாலே "ஹார்தாநுக்ருஹீத:" (ஹார்தாநுக்ருஹீத:)

ஏழாம்பாட்டு – 'சன்மசன்மாந்தரம்' இத்யாதி. 'தொன்மைபிதற்றவல்லாரை' இத்யாதி மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை – 'ஆஶ்ரித' இத்யாதி. எற்றைக்கும் – எல்லாக்காலத்துக்கும்.

காத்து – பரிஹரித்து. 'சன்மசன்மாந்தரம்' என்கைக்கு அப்படி ஜந்மபரம்பரைகளுண்டோ? என்ன, 'பஞ்சாக்நி' இத்யாதி. பஞ்சாக்நிகளாவன – அக்நித்வேந ரூபிதங்களான த்யு பர்ஜந்ய ப்ருதிவீ புருஷ யோஷித்துக்கள். இவ்விடத்தில், அக்நியென்றும், ஆஹுதியென்றும் பர்யாயம். இந்த ஐந்திலும் சேதநன் ப்ரவேசிக்கும் க்ரமமாவது – யாதநாஶரீரத்தாலே நரகாநுபவம்பண்ணி, அந்தஶரீரத்தை விட்டு, புண்யசரீரத்தையெடுத்து ஸ்வர்க்காநுபவம்பண்ணி, அநந்தரம் கோட்டைக்குப்புறம்பே "த்வம்ஸ" என்று தள்ள, அந்தசரீரத்தை ராக்ஷஸர் பக்ஷிக்க, ஸூக்ஷ்மசரீரத்தோடே நிராலம்பநமாக ஆகாசத்திலே விழ, ஆதித்யன் தன்கிரணத்தாலே ஹிமங்களை க்ரஹித்து அந்த ஈரத்தாலே ஆகாசத்திலே மங்கிக்கிடக்கிற ஆத்மாவையெடுத்து மேகத்திலே போகட, அந்த ஹிமம் மேகத்திலே வர்ஷரூபேண பரிணதமாய் வர்ஷத்வாரா பூகதமாய் ஸஸ்யதாரகஜலத்வாரா ஸஸ்யகதமாய் அந்நரூபேணபரிணமிக்குமளவும் கிடந்து, அந்நத்வாரா புருஷஶரீரகதமாய் ஶுக்லமாய்ப் பரிணமிக்குமளவும் கிடந்து, ஶுக்லத்வாரா ஸ்த்ரீசரீரகதமாய் "பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோ பவந்தி" என்று புருஷஶப்தவாச்யனுகைப்ரதமாஹுதியே தொடங்கி-அநுவர்த்தமாநங்களான ஸூக்ஷ்மங்களான அப்புக்கள் புருஷசப்தவாச்யங்களா மென்றபடி. ஆப: என்றது - பூதாந்தரங்களுக்கும் உபலக்ஷணமாய், அத்தாலே ஸூக்ஷ்ம சரீர விசிஷ்டரான சேதநரை லக்ஷிக்கிறது. "தஸ்மிந்நேதஸ்மிந்நக்நௌ தேவா: ஶ்ரத்தாம் ஜுஹ்வதி" இத்யாதி ஶ்ருதியிலே, தேவா: என்ற பதங்கள்-ப்ராணவாசிகள். ஶ்ரத்தாம் என்று-"ஶ்ரத்தா வா ஆப:" என்கிற ஶ்ருதிப்ரக்ரியையாலே அப்புக்களைச் சொல்லி, இவை பூதாந்தரங்களுக்கும் உபலக்ஷணமாய், அத்தாலே ஸூக்ஷ்ம சரீர விசிஷ்டனான சேதநனை லக்ஷிக்கிறது. "ஸோமோ ராஜா ஸம்பவதி" என்றது - அம்ருதமய தேவசரீர முண்டா மென்றபடி. இந்த ஜந்மந்தானே உண்டாய்விட்டதே: இனி ஜந்ம பரம்பரைகளிலே போகாதபடி எப்படி? என்ன, 'வர்த்தமாந' இத்யாதி. "உபாயபக்தி: ப்ராரப்தவ்யதிரிக்தாகநாசிநீ । ஸாத்யபக்திஸ்து ஸாஹந்த்ரீ ப்ராரப்தஸ்யாபி பூயஸீ ॥ ஶ்ரேஷ்டா நாஶேஷ ஜந்மநாம் தேஹாந்தர நிவாரிணீ" என்னக்கடவதிறே; இதுதான் ப்ரபந்நவிஷய மென்று கீழ் அருளிச்செய்தத்தை மூலத்திலே ஏறிட்டு அருளிச் செய்கிறார் 'இப்படி' இத்யாதி. கொடுபோகிற ப்ரகாரத்தை வேதாந்த ப்ரக்ரியையாலே காட்டுகிறார் – 'மரணமானால்' இத்யாதி. 'பரமாத்மப்ரவேசத்தைப் பண்ணுவித்து' என்றத்தை-

* திருவாய்மொழி – க, கo, ரு.

என்கிறபடியே தான்கூடக்கொண்டு புறப்பட்டு, அந்தஶரீரவிஶ்லேஷஸமயத்தில் இவன்பட்ட க்லேசமெல்லாம் தீரும்படியாக அவ்வளவிலே ஒருபரமாத்மப்ரவேஶத்தைப் பண்ணுவித்து, சிறுப்ரஜைகள் நோந்தால் தாயானவள் சிசிரோபசாரம்பண்ணுமாபோலே அவ்வளவிலே மேல்வழி போகைக்குத் தரிப்புண்டாம்படி பண்ணி, * "உயிர்கொண்டுடலொழிய வோடும்போதோடி யயர் வென்றதீர்ப்பான்" என்கிறபடியே சென்று முகங்கொடுத்து, கர்மஸம்பந்தமறச் செய்தேயும் வித்யா மாஹாத்ம்யத்தாலே விரஜையளவும் ஸூக்ஷ்மஶரீரம் நிற்கும்படி பண்ணி, அர்ச்சிராதிகணங்களோ டொக்க ஆளிட்டிராதே, "நயாமி" (நயாமி) என்கிறபடியே - தானே வந்து, "மாதவன்தன்துணை யாநடந்தாள்" என்கிற "கள்வன்கொல்"லில் பிராட்டியைப்போலே தன்சிறகின்கீழே கொண்டு, வழியிலுள்ளார் ஶிரஸாவஹிக்கும்படி இவ்வருகுள்ளவற்றைக் கழித்துப் பரமபதத்திலே கொண்டு புக்கு, "ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" (ஸ்வேநரூபேணுபிநிஷ்பத்யதே) என்கிறபடியே ஸ்வஸ்வரூபப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்து, பின்னையும் விடாதே பாதோபதாநமாகத் தன் திரு வடிகளின்கீழே யிட்டுக்கொண்டு, இதுதான் இவனுக்கு உபகரித்தானாயிருக்கை யன்றிக்கே தன் பேறாக நினைத்திருக்கும் மஹோபகாரகனை. "ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே" (ஸாயுஜ்யம்ப்ரதி பந்நாயே) இத்யாதி. [தன்மைபெறுத்தி] - ஸ்வஸ்வரூபாவிர்பாவத்தைப் பிறப்பித்து. [அப்பனை]- இதுதன்னை இவன் சேதநனுகையாலே உபகாரமாக நினைத்திருக்கும்; பாரதந்த்ர்யத்தாலே அவன் தனக்காகச் செய்தானாயிருக்கும். [தொன்மைபிதற்றவல்லாரை] - ஸ்வாபாவிகமான ஔதார்ய குணத்திலே ஈடுபட்டு அக்ரமமாகப் புகழுமவர்களை. "தாநஹம்த்விஷதஃ" (தாநஹம்த்விஷதஃ) என்று தள்ளுமது இவன்செய்த குற்றங்களைக் கண்டாகையாலே ஔபாதிகமிறே; ஸ்வாபாவிகமான நிலையாவது - இப்படி ரக்ஷிக்கை. [பிதற்றுமவர்கண்டீர்] - 'அந்தஃபுரவ்ருத்தாந்தம் இவர்களுக்கு நிலமாவதே!' என்று அவர்கள்விஷயத்திலே ஈடுபட்டு ஏத்துமவர்கள்கிடீர்;[நன்மைபெறுத்து] - பாக வதஶேஷத்வபர்யந்தமான பகவச்சேஷத்வஸம்பத்தை யுண்டாக்கி. [எம்மைநாளுய்யக்கொள்கின்ற

---

பாஷ்ய ப்ரக்ரியைக்கும் அர்ச்சிராதிகதிக்கும் சேர, நாடீவிசேஷ நிஷ்க்ரமணத்துக்கு முன்னாகக் கண்டுகொள் வது. "ஊர்த்வமேகஸ்தயோராயந்" இத்யாரப்ய, "தேஜஃ பரஸ்யாம் தேவதாயாம்" என்று பரமாத்ம ப்ரவேசத்துக்கு ப்ரமாணம். நாடீ நிஷ்க்ரமணத்துக்கு ப்ரமாணம் - "ஶதம் சைகா ச ஹ்ருதயஸ்ய நாட்ய:" இத்யாதி, "தஸ்யோத்க்ராந்தஸ்ய ப்ராணாஃ" இத்யாதி. பரமாத்மப்ரவே ஶஸ்ய ப்ரயோஜநமாஹ-'சிறுப்ரஜைகள்' இத்யாதி. அத்தசையில் அவன் இப்படி செய்கைக்கு ப்ரமாணம்-'உயிர் கொண்டு' இத்யாதி: பூர்வமேவ வ்யாக்யாதம். 'மாதவன் தன் துணை' இத்யாதி- ஶ்ரியஃபதியே துணையாக நடந்தா ளென்றபடி;திருமொழி-மூன்றாம்பத்து,கள்வன்கொல்லிலேநாலாம்பாட்டு:"ஏதவன்' இத்யாதி.'தன்மைபெறுத்தி' என்றதுக்கு பாவம் - 'ஸ்வேநரூபேண' இத்யாதி. உபதாநம் - அணை. வைக்குமென்னாதே, 'கொள்ளும்' என்றதுக்கு பாவம் - 'இதுதான்' இத்யாதி. "ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி" என்று - ஐக்யம் மோக்ஷ மென்னாநிற்க, தாளிணைக்கீழ்க்கொள்ளுகை யாவது ஏது? என்ன, 'ஸாயுஜ்யம்' இத்யாதி. "கிஞ்சராஜேந்த்ர நித்யம்பவதி" இத்யத்ர ஹ்ருதயம். அவன் தன்பேறாக நினைத்திருக்குமாகில், அது இவனுக்கு உபகார மானபடி யென்? என்ன, 'இதுதன்னை' இத்யாதி; சரீரதயா பாரதந்த்ர்யத்தாலே யென்றபடி. "தாநஹம் த்விஷதஃ" என்னாநிற்க, ஔதார்யம் ஸ்வாபாவிக மென்கிறதென்? என்ன, 'தாநஹம்' இத்யாதி. 'அந்தஃபுர வ்ருத்தாந்தம்' என்றது - இப்படி இவனுக்கு வரிசையாக அர்ச்சிராதிமார்க்கத்தாலே கொண்டுபோகை முதலா னவை பரமரஹஸ்ய மென்றபடி. நம்பர் - விஶ்வஸநீயர், பூர்ண ரென்னுதல். தன்மைபெறுத்தி-ஸ்வரூபா விர்பாவத்தைப் பிறப்பித்து. தொன்மை - ஸ்வாபாவிகோபகாரகதை. நன்மைபெறுத்து - நன்மையைப் பெறும்படி பண்ணி. நாளுய்யக்கொள்கின்ற நம்பர் - நாள்தோறும் யாவதாத்மபாவி உஜ்ஜீவிப்பித்துக்

---

* நான்முகன் திருவந்தாதி - அஅ.

நம்பரே] - நமக்கு அவன்திருவடிகளில் கைங்கர்யத்தை யாவதாத்மபாவி நடத்தக்கடவ விஸ்வஸ நீயர்; முதலிக ளென்றுமாம். (௭)

# எட்டாம் பாட்டு.

நம்பனைஞாலம்படைத்தவனைத் திருமார்பனை
உம்பருலகினில்யார்க்கும் உணர்வரியான்தன்னைக்
கும்பிநரகர்களேத்துவரேலும் அவர்கண்டீர்
எம்பல்பிறப்பிடைதோறு எந்தொழுகுலம்தாங்களே.

*ஆ.—(நம்பனை.) ஸர்வஸ்வாமியாய், ஜகத்ஸ்ரஷ்டாவாய், ஸ்ரீயஃபதியாய், ப்ரஹ்மாதிகளுக்கு வாங்மநஸாபரிச்சேத்ய மஹிமனாயிருந்தவனை அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஏத்துவார் கும்பீநரகயாதநாநுபவாநுகுணபாபங்களைப் பண்ணினாரேயாகிலும் அவர்கண்டீர் எம்பல்பிறப்பிடைதோறு எம்தொழுகுலம் தாங்கள் என்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், அவனுடைய ஸர்வஸம்பத்துக்கும் நிதாநமான ஸ்ரீயஃபதித்வத்தை அநுஸந்தித்திருக்குமவர்கள் எனக்குப் பிறந்த பிறவிகளெல்லாம் ஸஸந்தாநமாக வந்த்யர் என்கிறார்.*

*[நம்பனை என்று தொடங்கி] - ஏதேனும் தசையிலும் ஆத்மாவுக்குத் தஞ்சமாக நம்பப்படுமவனுமாய் ஜகத்தையெல்லாம் உண்டாக்குவதும்செய்து இந்நீர்மைக்கு அடியான ஸ்ரீயஃபதியுமாய், மேலானலோகங்களில் எத்தனையேனும் அளவுடைய ப்ரஹ்மாதிகளுக்கும் உணரமுடியாதிருக்கிறவனை. 'ஞாலம்படைத்தவனை' என்றது, கரணகளேபரங்களைக் கொடுத்து ஸ்ருஷ்டிக்கையாலே தஞ்சமென்னுமிடத்துக்கு உதாஹரணம். [கும்பிநரகர்கள் என்று தொடங்கி] - கும்பீபாகமான நரகத்தை அநுபவியாநின்றே ஏத்தினாரேயாகிலும் அவர்கள்கிடீர். 'கும்பிநரகர்கள்' என்றது, ஏதேனும் தூர்க்கதரேயாகிலும் அவ்விருப்பிலே நமக்கு ப்ராப்யரென்று கருத்து.*

*ப.—அநந்தரம், ப்ராப்யபூதனான ஸ்ரீயஃபதியை ஸ்துதிக்குமவர்கள் எங்களுக்குக் கைங்கர்யப்ரதிஸம்பந்தியா ப்ராப்யர் என்கிறார்.*

---

கொள்ளுகிற விஸ்வஸநீயர். நம்பர் - நம்பப்படுமவர்க ளித்யர்த்தஃ. பஞ்சாக்நிவித்யாயாம் சாந்தோக்யே, "தஸ்மிந்நேதஸ்மிந்நக்நௌ தேவாஃ ஸ்ரத்தாம் ஜுஹ்வதி" இத்யாரப்ய, "தஸ்யா ஆஹுதேர் கர்ப்பஸ் ஸம்பவதி" இத்யந்தம் கண்டுகொள்வது. வாராஹே பூமிம் ப்ரதி பகவாந், "ததஸ்தம் ம்ரியமாணம் து காஷ்டபாஷாணஸந்நிபம் । அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்". ஸூத்ரபாஷ்யே சதுர்த்தாத்யாயே த்விதீயபாதே, "ததோகோக்ரஜ்வலநம் தத்ப்ரகாஸிததத்வாரோ வித்யாஸாமர்த்யாத் தச்சேஷகத்யநுஸ்ம்ருதியோகாச்ச ஹார்தாநுக்ருஹீதஸ் ஸதாதிகயா". சாந்தோக்யே, "பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே" "ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே தீவ்ரபக்தாஸ் தபஸ்விநஃ । கிங்கரா மம தே நித்யம் பவந்தி நிருபத்ரவாஃ". கீதாஸு ஷோடஸே, "தாநஹம் த்விஷதஃ க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாம்யஜஸ்ரமஸுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு". (௭)

நம்பனை - (நிருபாதிகமாகத்) தஞ்சமாமவனும், ஞாலம்படைத்தவனை - (தன்னையாச்ரயித்து அநுபவிக்கைக்கு உறுப்பாக) ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணுமவனும், திருமார்பனை-(ஸ்ருஷ்டிதசையோடு ஆச்ரயணதசையோடு ப்ராப்யதசையோடு வாசியற அநுவ்ருத்தமான) ஸ்ரிய:பதித்வத்தையுடையனும், உம்பருலகினில்-(ஸ்வஸ்ருஷ்டமான) உபரிதநலோகங்களில், யார்க்கும் - எத்தனையேனும் அதிசயிதஜ்ஞாநர்க்கும், உணர்வு அரியான்தன்னை - அறியவரிய பெருமையையுடையவனை, கும்பிநரகர்களும் - கும்பீபாகநரகவாஸிகளான பாபப்ரசுரர்களும், ஏத்துவரேல் - ஏத்தினர்களாகில், அவர் தாங்கள் கண்டீர் - அவர்கள்தாங்கள்கிடீர், எம் பல் பிறப்பிடைதோறு- எங்கள் பலவகைப்பட்ட ஜந்மாவகாசந்தோறும், எம் தொழு குலம் - எங்கள் சேஷவ்ருத்திக்கு ப்ரதிஸம்பந்தியான குலம்.

இப்பாட்டு - ப்ராப்யபரம். இதினுடைய விவரணம் - ''நெடுமாற்கடிமை''.

இ.—எட்டாம்பாட்டில், அவனுடைய ஸ்ரிய:பதித்வத்திலே வித்தராயிருக்குமவர்கள் எனக்கு நாதர் என்கிறார்.

[நம்பனை] - நம்பப்படுமவனை; ஏதேனும் தசையிலும் ஆத்மாவுக்குத் தஞ்சமாமவனை; கீழ்ச்சொன்னவர்களும் நம்பராகைக்கு அடியானவனை. இவனையொழிந்த பந்துக்கள் விச்வஸநீயரல்ல ரென்கை. ''ஸபித்ராஸ''. எங்கே கண்டோ மென்னில்,—[ஞாலம் படைத்தவனை] - தனக்குத் தானுமின்றிக்கே பிறருமின்றிக்கே அசித்கல்பனான தசையிலே புருஷார்த்தோபயோகியான சரீரத்தை யுண்டாக்கினவனை. [திருமார்பனை] - இப்படி உபகரித்தது பிராட்டிக்கு ப்ரியமாக என்கை. ''யஸ்யாவீக்ஷ்யமுகம்''. [உம்பர் இத்யாதி] - உபரிதநலோகங்களில் எத்தனையேனும் அதிசயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும் உணரமுடியாதிருக்கிறவனை. [கும்பி இத்யாதி] - மஹாபாபபலமான கும்பீபாகநரகத்திலே கிடந்தும் அங்கே திருநாமத்தைச் சொல்லுவர்களாகில். [அவர்கண்டீர்] - ஏதேனும் துர்க்கதரேயாகிலும் அவ்விருப்பிலே நமக்கு ப்ராப்யரென்கை. பலவகைப்பட்ட ஜந்மங்களில் அவகாசந்தோறும் திருநாமத்தைச் சொன்னவர்களேயன்று உத்தேச்யர், அவர்கள் குலமாக எங்கள்குலத்துக்கு ஆசார்யஸந்தாநம்.

ஈடு.—அவனுடைய ஸ்ரிய:பதித்வத்திலே தோற்றிருக்குமவர்கள் எனக்கு நாதர் என்கிறார்.

[நம்பனை]-நம்பப்படுமவனை. ஏதேனும் துர்த்தசையிலும் ஆத்மாவுக்குத் தஞ்சமானவனை. கீழ்ச்சொன்னவர்களும் நம்பராகைக்கு அடியானவனை. இவனையொழிந்த பந்துக்கள் விச்வஸநீயரல்ல ரென்கை; **''ஸபித்ராஸ''** (ஸபித்ராச). ''பெற்றார்பெற்றொழிந்தார்'' இத்யாதி. மஹாவ்யாதியாளனு

---

எட்டாம்பாட்டு – 'நம்பனை' இத்யாதி. 'திருமார்பனை, ஏத்துவரேலும் அவர்கண்டீர், எந்தொழுகுலம் தாங்களே' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை – 'அவனுடைய' இத்யாதி.

நம்பன் – ரக்ஷகத்வேந விச்வஸநீயன். காதாசித்கமாகத் தஞ்சமாகை அல்லாதார்க்கும் உண்டாகையாலே அத்தை வ்யாவர்த்திக்கிறார் – 'ஏதேனும்' இத்யாதி. ஏதேனும் துர்த்தசையிலும் – காகாஸுரனுக்குப் போலே தான் பகையான தசையிலும். கீழே ததீயரை – 'நம்பர்' என்றீரே யென்ன, 'கீழ்ச்சொன்னவர்களும்' இத்யாதி. இவனை 'நம்பன்' என்றதால் பலிதம் – 'இவனையொழிந்த' இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணங்கள் – 'ஸபித்ராச' இத்யாதி. ஸுந்தரகாண்டே மாருதிம்ப்ரதி ஸீதா, ''ஸபித்ராவபரித்யக்தஸ்ஸு ரேச ஸஹஹஷிபுஹி: । த்ரீநு லோகாநு ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத:''. 'பெற்றார்' இத்யாதி – திருமொழி – எட்டாம்பத்து, ஒன்பதாம்திருமொழி – ஏழாம்பாட்டு. 'பெற்றார்பெற்றொழிந்தார்'; சரீரமாத்ரத்தை உத்பாதித்த பித்ராதிகள் பெற்று அவ்வளவிலே விட்டுப்போனார்கள்; பின்னும் – அவர்கள் விட்ட பின்பும்; நின்று – அவர்கள்வழியாலே நின்று; அடியேனுக்கு-தன்கைபார்த்திருக்க வேண்டும்படியான எனக்கு;

னவன், 'எனக்கு இன்னபோதிலே இன்ன வ்யாதி வந்து நலியும்; அப்போது நான் என்னையறியேன்; பிரானே! அப்போது என்னை ரக்ஷிக்கவேணும்' என்று ஸ்வஸ்த்ததசையிலே அறிவித்துவைத்தால் அவர்கள் உணர்ந்திருந்து நோக்குமாபோலே, தான் தனக்கு உதவாத தசையிலும் ஈஶ்வரன் ரக்ஷிக்கும்படி. "**ஸ பித்ரா ச**" (ஸபித்ராச இத்யாதி)-ஈஶ்வரன் தனக்கும் ஆகாதவன்றும் தஞ்சமாவான் தானேயாயிற்று. பெருமாள்பக்கல் பண்ணின அபகாரத்தைக் கண்டு தமப்பன் கைவிட்டான். 'சகாரத்தாலே-தாயும் கைவிட்டாளென்கிறது; அவள்பற்று முன்னாகப் பற்றும் இவன் விடும்போது அவளும் விட்டாளாகவேணுமிறே. வாத்ஸல்யம் உறைத்த இடத்திலேயிறே முந்துற விழுவது; ஆகையாலே, அவள் காலிலே முந்துற விழுந்தான்; அவள் மையெழுதி மஞ்சள் பூசிப் புறப்பட்டு நின்றாள்; இவனும் குடநீர்வழித்து நின்றான். "**பரித்யக்த:**" (பரித்யக்த:) - இவன் வ்ருத்தஹாநி கண்டு 'பண்டே விட்டிலோமோ?' என்றார்கள். "**ஸுரைஶ்ச**" (ஸுரைஶ்ச) - மாதாபிதாக்கள் கைவிட்டாலும் ஸஜாதீயர் விடாதே கைக்கொள்ளுவர்களாயிற்று, 'இவர்கள் முடிய விடுகிறார்களோ?' என்னுமத்தாலே 'அவர்களுக்கு ப்ரியம்' என்று நினைத்து. "**ஸமஹர்ஷிபி:**" (ஸமஹர்ஷிபி:)-அவர்கள் விட்டாலும் விடாத ஆந்ருஶம்ஸ்யப்ரதாநரான ருஷிகளும் விட்டார்கள். ஆந்ருஶம்ஸ்யத்துக்கு விஷய வ்யவஸ்த்தை உண்டிறே. பெற்றவர்கள் கைவிட்டால் நாட்டார்க்குப் பணியன்றிறே காக்கை நோக்குகை; ஆகையாலே, "**த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய**" (த்ரீந்லோகாந் ஸம்பரிக்ரம்ய)-லோகங்களில் திறந்துகிடந்த வாசலெல்லாம் ஒருகால் நுழைந்தாற்போலே ஒன்பதின்கால் நுழைந்தானாயிற்று; 'ஒருகாலல்லாவொரு காலாகிலும் க்ருபை பிறக்கக் கூடுமோ?' என்று; இவன் புகப்புகத் தள்ளிக் கதவை யடைத்தார்கள். "**தமேவ ஶரணம் கத:**" (தமேவஶரணங்கத:)-தன்மேலே ப்ரஹ்மாஸ்த்ரத்தைத் தொடுத்துக்கொண்டு நிற்கிறவர் திருவடிகளிலே வந்து விழுந்தானாயிற்று. அதாவது - "அரிசினத்தா லீன்றதா யகற்றிடினும் மற்றவள்தனருள்நினைந்தே யழுங்குழவி" என்கிறபடியே, அவன் திருவடிகளை யொழியப் புகலில்லாமை. இப்படி எல்லாவவஸ்தைகளிலும் விஶ்வஸநீயன் ஸர்வேஶ்வரனே. எங்கே கண்டோம்? என்னில்,—[ஞாலம்படைத்தவனை]-

---

*உற்றானாய் வளர்த்து - ஸர்வவிதபந்துவும் தானேயாய் நின்று என்னை வளர்த்து; என் உயிராகி நின்றானை - எனக்கு தாரகனுமானவனை. எடுத்த பாசுரத்துக்கு பாவம் - 'மஹாவ்யாதி' இத்யாதி. கீழெடுத்த ஶ்லோகத்துக்கு அர்த்தம் - 'ஈஶ்வரன் தனக்கும்' இத்யாதி. ஆகாத அன்றும் - ஈஶ்வரன் தனக்கும் ப்ரதிகூலனான அன்றும். யத்வா, ஈஶ்வரன் இச்சேதநனுக்குத் தஞ்சமாகாத வன்று மென்னுதல். தானே - ஈஶ்வரனே. இது - ஶ்லோகத்துக்கெல்லாம் தாத்பர்யம். சகாரம் - அநுக்தஸமுச்சயபரம். தாயார் முற்பட விட்டாளாகச் சொல்லுகிறதென்? என்ன, 'அவள்பற்று' இத்யாதி. அவன்தான் முந்துற மாதாவைப் பற்றுவானென்? என்ன, 'வாத்ஸல்யம்' இத்யாதி. 'பரி' என்கிற உபஸர்க்கார்த்தம் - 'அவள் மையெழுதி' இத்யாதி. குடநீர்வழித்து - ஸஜலகடப்ரஹாரம்பண்ணி. "த்யக்த:" என்ற பூதார்த்தத்துக்கு பாவம் - 'இவன்' இத்யாதி. "ஸுரைஶ்ச" என்ற சஶப்தம் - ப்ராதாந்யத்திலே. மாதாபித்ருபரித்யாகத்திலே ஸுரமஹர்ஷிபரித்யாகம் சொல்லவேணுமோ? என்ன, 'மாதாபிதாக்கள்' இத்யாதி. ஆந்ருஶம்ஸ்ய ப்ரதாநராகில் விடுவானென்? என்ன, 'ஆந்ருஶம்ஸ்யத்துக்கு' இத்யாதி. காக்கைநோக்குகை யென்றது - சாடு. காகத்தை ரக்ஷிக்கையென்று ஸ்வபாவார்த்தம், காக்கை குத்தாமல் ரக்ஷிக்கை யென்று த்வநி. இங்கே "[illegible]" என்றது, அநுஸந்தேயம். 'ஸம், பரி' என்ற உபஸர்க்கதாத்பர்யம் - 'லோகங்களில்' இத்யாதி. அப்படிசெய்வானென்? என்ன, 'ஒருகாலல்லா' இத்யாதி. அப்படி நிற்கிறவர் திருவடிகளிலே வீழ்கைக்கு ஹேது ஏது? என்ன, 'அதாவது' இத்யாதி. "அரிசினத்தால்" இத்யாதி-பெருமாள் திருமொழி. "தருதுயரம்" இத்யாதி. அரிசினத்தால் - அரிந்துபோகடவேண்டும்படியான கோபத்தையுடையளாய்; ஈன்ற தாய் அகற்றிடினும் - பெற்றதாய் கைவிட்டாலும்; மற்றவள்தன் அருள்நினைந்தே யழும் குழவியது போன்று - அந்தத்தாயினுடைய அருளையே அபேக்ஷித்தே யழுகிற சிறுப்ரஜைபோலே யித்யர்த்த:. ப்ரக்ருதத்திலே உபஸம்ஹரிக்கிறார் - 'இப்படி' இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - 'யஸ்யா:' இத்*

தனக்கு, தானுமின்றிக்கே பிறருமின்றிக்கே அசிதவிஶேஷமாய்க்கிடக்கிற தசையிலே, புருஷார்த்தோபயோகியான ஶரீரத்தையுண்டாக்கினவனை. அது ஆருக்கு ப்ரியமாக? என்னில்,—[திருமார்பனை]-அவளுக்கு ப்ரியமாக; "யஸ்யாவீக்ஷ்யமுகந்ததிங்கிதபராதீநஃ" (யஸ்யாவீக்ஷ்யமுகந்ததிங்கிதபராதீநஃ) என்னக்கடவதிறே. [உம்பர் இத்யாதி] - உபரிதநலோகங்களில் எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞானர்க்கும் அறிய வொண்ணாதவனை. [கும்பிநரகர்கள்]-மஹாபாப பலமாகக் கும்பீபாகமான நரகத்திலே கிடந்தும் அங்கே திருநாமத்தைச் சொல்லுவர்களாகில். [அவர்கண்டீர்] - ஏதேனும் துர்க்கதரேயாகிலும், அவ்விருப்பிலே நமக்கு ப்ராப்யரென்கை. [எம் பல் பிறப்பிடைதோறு எம் தொழுகுலம் தாங்களே] - நம்முடைய பலவகைப்பட்ட ஜந்மங்களில் அவகாசங்கள்தோறும் திருநாமத்தைச் சொன்னவர்களே யன்று எனக்கு உத்தேஶ்யர்; அவர்கள் குலங்களாக எங்கள் குலத்துக்கு ஆசார்ய ஸந்தாநம். அந்த துஃகாநுபவம் பண்ணுநிற்க, திருநாமத்தைச் சொல்லக்கூடுமோ? என்னில்,—க்லேஶாதிஶயத்தாலே, 'அம்மே! அப்பா!' என்னக்கூடாதோ? என்றுகாணும் இவர்க்கு நினைவு. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

குலந்தாங்குசாதிகள்நாலிலும் கீழிழிந்து எத்தனை
நலந்தானிலாத சண்டாளசண்டாளர்களாகிலும்
வலந்தாங்குசக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்றுஉள்
கலந்தாரடியார்தம்அடியார் எம்அடிகளே.

*ஆ.—(குலம்.) வலந்தாங்குசக்கரத்தண்ணல் மணிவண்ணற்கு அடிமைசெய்யும் இதுவே ப்ரயோஜநமாக ஆஶ்ரயிப்பார், ஜாத்யாசாராதிகளால் எத்தனையேனும் தண்ணியரேயாகிலும் அவரடியார் நமக்கு ஸ்வாமிகள் என்கிறார்.*

*ஒ.—ஒன்பதாம்பாட்டில், கையும் திருவாழியுமான அழகைக் கண்டு அடிமைபுக்கவர்களுடைய அடியார் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.*

*[குலந்தாங்கு என்று தொடங்கி] - ஸந்தாநங்களைத் தரிக்கக்கடவதான ப்ராஹ்மணாதி ஜாதிகள் நாலிலும் கீழ்ப்பட்டு ஒருநீர்மையுமின்றிக்கே ப்ராஹ்மணர்க்குச் சண்டாளர் நிக்ருஷ்டராறுற்போலே சண்டாளர்க்குங்கூட நிக்ருஷ்டராறுராகிலும். [வலந்தாங்கு என்று தொடங்கி] - ஶ்ரமஹரமான திருநிறத்தையுடையனாய் அதுக்குமேலே வலவருகே தரியாநின்றுள்ள திருவாழியையுடையனாய், அவ்வழகாலே எல்லாரையும் அடிமைகொண்டவனுக்கு அடிமையே ப்ரயோஜநமென்றிருக்குமவர்களுக்கு அஸாதாரணரான அடியார் எனக்கு ஸ்வாமிகள்.*

---

*யாதி. ஸ்ரீஸ்துதௌ, "ஸவிஸ்ரீ ஷிபுஶதாஃஶேஷஜஐதாஂஸஜொபுவஸபுவிதீ ஸபுஂ ஃஂமபுகிராவவமிபுகவஃஂஸவபுஞகஂவபுநுஹஙிஃ । யஸ்யாவீக்ஷ்யஂவஂதஜிதவராயீநாவியஂதவிஶஂ க்ரூஜெயஂவஜஂநாநுயாஸ்யுஸஃா ஸ்யாஜெகாஸ்யாதயா".*
*ஏத்துகை-திருநாமம்சொல்லுகை. இவர்க்கு நினைவென்கையாலே - மஹாதுஃகாநுபவஸமயத்தில் திருநாமம் சொல்லக் கூடாதென்று கருத்து. எம்தொழுகுலம் தாங்கள் - எங்களுக்குத் தொழப்படும் குலத்தையுடையவர்களென்றபடி. யத்வா, தொழுகுலம்தாங்கள் - முழுச்சொல்லு. தொழுகுலங்களென்றபடி. க்ரமேண அந்வயஃ. (அ)*

ப.—அநந்தரம், ஆஶ்ரிதருடைய ஜந்மாதிப்ரயுக்த தோஷநிவர்த்தகமான பரமபாவநத்வத்தை யுடையவனை அநந்யப்ரயோஜநராய் அநுபவிப்பார் திருவுள்ளம் எனக்கு ஶேஷிகள் என்கிறார்.

குலம் - (அநுலோம ப்ரதிலோம விவாஹத்தாலே) ஸகலகுலங்களுக்கும், தாங்கு - ஆதாரபூதரான, சாதிகள் - (ப்ராஹ்மணாதி) ஜாதிகள், நாலிலும் - நாலிலும், கீழ் இழிந்து - கீழே போந்து, எத்தனை நலந்தான் இலாத - மிகவும் ('நாம் அபக்ருஷ்டஜந்மாக்கள்' என்கிற) அறிவுமின்றியேயிருக்கும், சண்டாளர் - சண்டாளர், (ப்ராஹ்மணஸ்த்தாநத்திலேயாம்படி), சண்டாளர்கள் ஆகிலும் - (அவர்களுக்கும் அநாதரணீயர்களான) சண்டாளர்களாகிலும், வலம் தாங்கு-வலத்திலே ஏந்தப்பட்டு, சக்கரத்து - ("உரணாவலி-த்ருடை" என்கிறபடியே பவித்ரபூதனான) ஆழ்வானையுடைய, அண்ணல் - ஸ்வாமியாய், மணி - (ஸ்வஸம்பந்தத்தாலே எல்லாரையும் பரிசுத்தராக்கும்) ரத்நம்போலே பவித்ரமாய், வண்ணற்கு - (உஜ்ஜ்வலமான) வடிவையுடையவனுக்கு, ஆள் - (நாம்) ஶேஷபூதர், என்று - என்று நினைத்து,உள் கலந்தார் - அநந்யப்ரயோஜநராய்க் கலந்தவர்களுக்கு, அடியார்தம் - அடியார்க்கு, அடியார் - அடியாரானவர்கள், எம் - எங்களுக்கு, அடிகள் - ஸ்வாமிகள்.

இ.—ஒன்பதாம்பாட்டில், கையுந்திருவாழியுமான சேர்த்தியழகிலே வித்தராயிருப்பாருடைய அடியார் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

[குலந்தாங்கு இத்யாதி] - க்ரமவிவாஹத்தாலும் அநுலோமப்ரதிலோமவிவாஹத்தாலு முள்ள குலங்களை தரிப்பதான ப்ராஹ்மணாதியான நாலு ஜந்மத்திலும் கீழேகீழே போய். [எத்தனை நலந்தானிலாத] - அந்தச்சண்டாளஜந்மத்துக்கு அடைத்த ஜ்ஞாநமும் வ்ருத்தமு மின்றிக்கே யிருக்கை. [சண்டாளர் இத்யாதி] - நாம் சண்டாளரைக்கண்டால் விலங்குமாபோலே அவர்கள் தாங்கள் விலங்குமவர்களாகிலும். இவர்களை ஆதரிக்கைக்கு ஹேது சொல்லுகிறது, [வலந்தாங்கு இத்யாதி] - வலவருகே தரிக்கப்பட்ட திருவாழியையுடையனாய், அதுக்கு ஆஶ்ரயமான நீலமணிபோலே ஶ்ரமஹரமான திருநிறத்தையுடைய ஸர்வாதிகனுக்கு. [ஆளென்று]- ஸ்வரூபஜ்ஞாநம் முன்னாக அடிமைசெய்கையே ப்ரயோஜநமென்று இருக்குமவர்களுடைய ஸம்பந்தி ஸம்பந்திகள் எனக்கு நாதர் என்கிறார்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. கையும் திருவாழியுமான அழகிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஶேஷபூதரானவர்கள் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார்.

[குலம் இத்யாதி] - க்ரமவிவாஹத்தாலும் அநுலோமப்ரதிலோமவிவாஹத்தாலு முள்ள குலங்களை தரிப்பதான ப்ராஹ்மணாதியான நாலு ஜந்மத்திலும் கீழேகீழே போய். [எத்தனை இத்யாதி] - அந்தச் சண்டாளஜந்மத்துக்கு அடைத்த ஜ்ஞாநவ்ருத்தமின்றிக்கே யிருப்பாருமாய், நாம்

ஒன்பதாம்பாட்டு - 'குலந்தாங்கு' இத்யாதி. 'வலந்தாங்குசக்கரத்தண்ணல்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை – 'கையும்' இத்யாதி.

க்ரமவிவாஹமாவது - ப்ரஹ்மக்ஷத்ரவைஶ்யஶூத்ரர்கள் ஸ்வஸ்வஜாதியிலே பண்ணும் விவாஹம்; அநுலோமவிவாஹமாவது - ப்ராஹ்மணன் உத்தரவர்ணத்ரயத்திலும், க்ஷத்ரியன் உத்தரவர்ணத்வயத்திலும், வைஶ்யன் ஶூத்ரவர்ணத்திலும் பண்ணும் விவாஹம். ப்ரதிலோமவிவாஹமாவது - ஶூத்ரன் பூர்வவர்ணத்ரயத்திலும், வைஶ்யன் பூர்வவர்ணத்வயத்திலும், க்ஷத்ரியன் பூர்வவர்ணத்திலும் பண்ணும் விவாஹம். இது-ருஶ்யஶ்ருங்கன்பக்கலிலும் யயாதிபக்கலிலும் காணலாம். தாங்கு – தரித்திருக்கிற. சாதிகள் - ப்ராஹ்மணாதிவர்ணங்கள். 'நலந்தான் – எத்தனையும் – இலாத' என்று அந்வயித்து அர்த்தம் – 'அந்தச்சண்டாளஜந்மத்துக்கு'

'சண்டாளர்' என்றால் நோக்காதே போமாபோலே அவர்கள்தாங்கள் விலங்குமவர்களாகிலும். இவர்கள் உத்தேஶ்யராகைக்கு என்ன வலக்குறியுண்டு? என்ன; வ்ருத்தவான்களன்றே இவர்க ளென்று கைமேலே காட்டிக்கொடுக்கிறார் மேல் ; [வலந்தாங்கு சக்கரம் இத்யாதி] - "வடிவாய்நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்று, "வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு" என்னுமாபோலே; இவரும் கீழ்ப்பாட்டிலே "திருமார்பனை" என்றார்; இங்கே "வலந்தாங்குசக்கரம்" என்றார். வலவருகே தரிக்கப்பட்ட திருவாழியையுடையனாய் அதுக்கு ஆஶ்ரயமான நீலமணிபோலே ஶ்ரமஹரமான வடிவழகையுடைய ஸர்வாதிகனுக்கு. [ஆளென்று]- ஸ்வரூபஜ்ஞாநம் முன்பாக 'அடிமை செய்கையே ப்ரயோஜநம்' என்றிருக்குமவர்களுடைய அடியார் எனக்கு ஸ்வாமிகள் என்கிறார். வ்ருத்தவானபிமாநத்திலே ஒதுங்கும் இதுவேயிறே வேண்டுவது. அவர்கள் அவனிலும் உத்தேஶ்யராவர்களிறே. (கூ)

## பத்தாம் பாட்டு.

அடியார்ந்தவையமுண்டு ஆலிலையன்னவசஞ்செய்யும்
படியாதுமில்குழவிப்படி யெந்தைபிரான்தனக்கு
அடியாரடியார் தம்மடியாரடியார்தமக்கு
அடியாரடியார் தம்மடியாரடியோங்களே.

*ஆ.—(அடியார்ந்த.) இந்தலோகத்தை அளந்தருளி உண்டருளி ஆலிலையிலே கண் வளர்ந்தருளின அவனுடைய காருண்ய ஸௌந்தர்யாதிகுணங்களுக்குத் தோற்று அடிமையா யிருப்பார் அடியார்தம்மடியாரடியார் தமக்கு அடியாரடியார் தம்மடியாரடியோங்கள் என்கிறார்.*

*ஓ.—பத்தாம்பாட்டில், ஐஶ்வர்யார்த்திகள் ஐஶ்வர்யத்தில் இனியில்லையென்ன மேற் பட்ட நிலத்தை ஆசைப்படுமாபோலே வடதளஶாயியினுடைய ஆஶ்சர்யமான படிகளில் ப்ரவண ராயிருந்துள்ளவர்களுடைய தாஸ்யத்தைத் தொடங்கி தாஸ்யத்தினுடைய பர்யவஸாநபூமியை ஆசைப்படுகிறார்.*

---

*இத்யாதி. எத்தனை-அல்பமும். சண்டாள சண்டாளர்-சண்டாளர்க்கும் சண்டாளரென்றபடி. எத்தனைநலந்தானிலாத வென்றது - த்விதீயசண்டாளர்க்கு விசேஷணம். 'வலக்குறி' இதி - ஸாடு. ஹலவச்சிஹ்நமும், வலபார்ஶ்வத்தில் லக்ஷணமும். வலக்குறி-வலபார்ஶ்வத்தில் திருவாழி யென்று ஸ்வஹாவார்த்தம்; ஸாடுவுக்கு, குறியென்று- மறு. வ்ருத்தம் - ஆசார இதி த்வநி:; வர்த்துலம் - ஸுதர்ஶநமிதி ஸ்வஹாவார்த்த:. வ்ருத்தவான்கள் – ஆசாரவான்கள்; திருவாழியை ரக்ஷகமாகவுடையவர்களென்றுமாம். கைமேலே யென்றதும் ஸாடு: அவனுடைய திருக்கைமேலே ; ஹஸ்தகதமாக வென்றுமாம். 'வடிவாய்' இத்யாதி - திருப்பல்லாண்டு. உனக்கு நிறமாய் உன்னுடைய வலமார்பிலே ஸோகரூபமாக நித்யவாஸம்பண்ணுகிற பிராட்டியும் பல்லாண்டு;'வடிவார்' இத்யாதி- ஶ்யாமளமான திருமேனியிலே வ்யாப்தமான தேஜஸ்ஸையுடையனாய் வலப்பக்கத்திலே நித்யவாஸம்பண்ணுமவனாய்ப் பிறர்க்கு அநஹிஸவநீயனாயிருக்கிற ஆழ்வானோட்டைச் சேர்த்தியும் நித்யமாய்ச்செல்லவேணுமென்றபடி. 'வலந்தாங்குசக்கரத்து - மணிவண்ணன் - அண்ணற்கு' என்று அந்வயித்து அர்த்தம் – 'வலவருகே' இத்யாதி. 'ஆள்' என்றதுக்கு ஹாவம் – 'ஸ்வரூபஜ்ஞாநம்' இத்யாதி. உள்கலக்கை - ஒரு நீராகக் கலக்கையாய், அநந்யப்ரயோஜநராய்க் கலக்கை யென்றபடி; உள்கலந்தாரான அடியாரென்றபடி. அடியாரென்று வ்ருத்திபர்யந்தம் விவக்ஷிதம். அத்யந்தநிஹீநராஜலும் பாகவதாஹிமாநந்தர்க்கதரே உத்தேஶ்யரென்னக் கூடுமோ? என்ன, ரஸோக்த்யா பரிஹாரதி – 'வ்ருத்தவான்' இத்யாதி. வ்ருத்தவான் – ஈஶ்வரன். 'மணிவண்ணற்கு' இத்யாதி- மணிவண்ணற்கு நாம் சேஷபூதரென்று உள்கலந்தாரான அடியாருடைய அடியார் எங்களுக்கு ஸ்வாமிகள் இத்யர்த்த:. 'அடியார்தம்' என்று முழுச்சொல்லு: அடியாரென்றபடி; பர்வத்ரயமாகவும் சொல்லுவர்கள். க்ரமேண அந்வய:. (கூ*

[அடியார்ந்த வையம் என்று தொடங்கி] - திருவடிகளுக்கு அளவான ஜகத்தைத் திருவயிற்றிலேவைத்துக்கொண்டு அதுக்ஈடாக ஆலிலையிலே இடம்வலங்கொள்ளும் ஸ்வபாவனாய், ஒப்பு ஒன்றுமின்றிக்கேயிருக்கிற தன்னுடைய பிள்ளைத்தனத்தாலே என்னை அடிமைகொண்டு என்னை உஜ்ஜீவிப்பித்தவனுக்கு.

ப.—அநந்தரம், ப்ரளயாபத்ஸகனான வடதளசாயிக்கு சேஷபூதரானவர்களுடைய ஸம்பந்திபரம்பரையான ஏழுபடிகாலுக்கு நாம் அடிமை என்கிறார்.

(த்ரைவிக்ரமாபதாநத்திலே), அடி - தன்திருவடிகளோடு, ஆர்ந்த - சேர்ந்த, வையம் - பூமியை, உண்டு- (ப்ரளயாபத்திலே) அமுதுசெய்து, ஆலிலை - ஓராலிலையிலே, அன்னவசஞ்செய்யும் - (உண்டதுஜரியாதபடி) கண்வளர்ந்தருளக்கடவனாய், படி யாதும் இல் - ஒப்பு ஒன்றும் இல்லாத, குழவிப்படி - முக்யசிசுவிக்ரஹத்தையுடையனாய், பிரான் எந்தை தனக்கு - (அந்தஸ்வபாவத்தாலே) எங்களுக்கு ஸ்வாமியானவனுக்கு, அடியாரடியார்தம்மடியாரடியார்தமக்கடியாரடியார்தம்அடியார் - அடியாரானவர்களுடைய ஸம்பந்திபாரம்பர்யத்தின் எல்லைநிலத்துக்கே, அடியோங்கள் - அடியோங்கள் (நாங்கள்). பாட்டு முடிந்தவாறே ஏழுபடிகாலிலே நின்றுரித்தனை. சேஷத்வப்ரீதிக்கு முடிவில்லாமையாலே, ததீயரான சேஷிபாரம்பர்யத்துக்கு முடிவில்லையென்று கருத்து. படி - ஒப்பு. குழவிப்படி - குழவிவடிவு.

இ.—பத்தாம்பாட்டில், ஐஸ்வர்யார்த்திகள் அதுக்குப் பர்யவஸாநமான ப்ரஹ்மபதத்தை ஆசைப்படுமாபோலே இவரும் தாஸ்யபர்யவஸாநபூமியை ஆசைப்படுகிறார்.

[அடியார்ந்த இத்யாதி] - திருவடிகளுக்கு அளவான பூமியை அமுதுசெய்து ஒருபவனை ஆலிலையிலே உணவுக்கு ஈடாக இடம்வலங்கொள்ளும்; அதாகிறது - அமுதுசெய்த ஜகத்து ஜரியாதபடி வலக்கை கீழ்ப்படக் கண்வளர்ந்தருளுகை. [படியாதுமில்குழவிப்படி] - ஒப்பொன்றுமின்றிக்கே யிருக்கிற பிள்ளைத்தனத்தாலே.யசோதாஸ்தநந்தயமும் ஒப்பன்று, வடதளசாயிக்கு; தொட்டில் நின்றும் விழுவோம் என்று அறியாத மௌக்த்யம் அவனுக்கு; ஆலிலையில்நின்றும் ப்ரளயத்திலே விழுவதோம் என்று அறியாத மௌக்த்யமிறே இவனது. [எந்தைபிரான்]- அந்த அகடிதகடநாஸாமர்த்யத்தாலே என்னைத் தோற்பித்த உபகாரகன். [அடியார் இத்யாதி] - "தஸ்யாணாஂ வரம் மஹேஶ்வராஂ" என்று சேஷித்வத்துக்கு அவனுக்கு அவ்வருகில்லாதாப்போலே சேஷத்வத்துக்குத் தமக்கு அவ்வருகில்லாதபடி அதன் எல்லையிலே நிற்கிறார். தம்முடைய ருசிக்கு அவதியுண்டாய் மீண்டாரல்லர்; சந்தஸ்ஸு முடியவேண்டுகையாலே மீண்டாராமத்தனை.

ஈடு.—பத்தாம்பாட்டு. அவனுடைய அகடிதகடநா ஸாமர்த்யத்திலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய சேஷத்வத்தின் எல்லைநிலம் நான் என்கிறார்.

[அடியார்ந்தவையம் உண்டு] - அமுதுசெய்ய முன்பே அடியிட்டபடியிறே இது. தன் படிக்குக்காற்கூறும் போராதத்தையிறே அமுதுசெய்தது.திருவடிக்குஅளவான பூமியை அமுதுசெய்து. [ஆலிலை அன்னவசஞ்செய்யும்] - ஒருபவனை ஆலந்தளிரிலே உணவுக்கீடாக இடம்வலங்கோள்

---

பத்தாம்பாட்டு - 'அடியார்ந்த' இத்யாதி. 'ஆலிலையன்னவசஞ்செய்யும்' இத்யாதியைக் கடாக அவதாரிகை - 'அவனுடைய' இத்யாதி.

பதச்சேர்த்தியிலே சாடு - 'அமுதுசெய்ய' இத்யாதி. அடியிட்டபடியிறே - உத்யோகித்தபடியிறே யென்று சாடு. படி - பூமிஃ, ப்ரகாரஃ, விக்ரஹஸ்ச. காற்கூறு - கால்அம்ஸம்; பாதப்ரமாணமும். 'போராதத்தையிறே' இதி - 'ஆர்ந்த' என்கையாலே - போராமை ஸித்தம். ஸப்தார்த்தம் - 'திருவடிக்கு' இத்யாதி. ஆர்ந்த - அளவான . பவனை - ஜிவனை: உத்பவியாநிற்கிற இத்யர்த்தஃ. உணவுக்கீடாக - புக்தத்துக்கீடாக. அன்ன

ளும். அமுதுசெய்தபடி ஜரியாமே வலக்கை கீழ்ப்படவாயிற்று கிடப்பது. எல்லார்க்கும் ஒக்குமே தந்தாம் ஜீவநஹாநி வாராமற் பரிஹரிக்கை. கூழாட்படுகை அவனுக்கும் ஒத்திருக்கிறபடி. [படியாதுமில்குழவிப்படி]- ஒப்பொன்று மின்றிக்கேயிருக்கிற பிள்ளைத்தனத்தாலே. யஶோதா*ஸ்தநந்தயமும் ஒப்பன்று, வடதளஶாயிக்கு; 'தொட்டில்நின்றும் தரையிலே விழப்புகுகிறோம்' என்று அஞ்ச அறியாத பால்யமிறே அங்கு, 'ஆலிலையினின்றும் ப்ரளயத்திலே விழுகிறோம்' என்று அஞ்சவறியாத †மௌக்த்யமிறே இங்கு. [எந்தைபிரான்]-அந்த அவடிதவடநா ஸாமர்த்யத்தாலே என்னைத் தோற்பித்த உபகாரகன். [அடியார் இத்யாதி]-"தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்" (தமீஶ்வராணும் பரமம்மஹேஶ்வரம்) என்று - ஶேஷித்வத்துக்கு அவனுக்கு அவ்வருகில்லாதாப்போலே, சேஷத்வத்துக்குத் தமக்கு அவ்வருகில்லாதபடி அதினெல்லையிலே நிற்கிறார். ஐஶ்வர்யத்தை யாசைப்பட்டவர்கள் தன்னோடு ஸஜாதீயரிலேற்றத்தை ஆசைப்பட்டு க்ஷத்ரியர்க்குமேலே ஆசைப்பட்டு இந்த்ர பதத்தை ஆசைப்பட்டு ப்ரஹ்மாவினளவில் ஆசைப்படுமாபோலே, இவரும் இவ்வருகிலெல்லையை ஆசைப்படுகிறார். இப்போதும் தம்முடைய ருசிக்கு அவதியுண்டாய் இவ்வளவிலே நின்றாரல்லர்; சந்தஸ்ஸில் இதுக்கு அவ்வருகு போகவொண்ணாமே நின்றதித்தனையிறே. 'இப்படி வைஷ்ணவர்களை விரும்பினால் இது லௌகிகரோடு சேராதிருந்ததாகில் ஆழ்வார்விரும்பினத்தை விஶ்வஸித்தோமாகிறோம்' என்று சீயர் அருளிச்செய்யும்படி. (௧௦)

## பதினோராம் பாட்டு.

அடியோங்குநூற்றுவர்வீய அன்றைவர்க்கருள்செய்த
நெடியோனைத் தென்குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள்
அடியார்ந்தவாயிரத்துள் இவைபத்துஅவன்தோண்டர்மேல்
முடிவுஆரக்கற்கிற்கில் சன்மஞ்செய்யாமைமுடியுமே.

*ஆ.*—(அடியோங்கு.) பாண்டவர்பக்கலுள்ள நிரவதிகவாத்ஸல்யத்தாலே, தத்விரோதிகளாய் ஐஶ்வர்யபலதர்ப்பிதரான துர்யோதநாதிகளை நிரஸித்தருளின எம்பெருமானுடைய வாத்

---

வசம்செய்யும் - அன்னத்துக்கு வசமாக - அன்னத்துக்கு அநுகுணமாகச் செய்யுமவனாய்; அதாவது - உண்டது ஜரியாதபடி கண்வளர்ந்தருளக்கடவன் யிதி சப்தார்த்தஃ. விவரணம் - 'அமுதுசெய்தபடி' இத்யாதி. அர்த்தாந்தரமாதல். அப்போது, 'அன்னவசம்செய்யும்' என்றதுக்கு - புக்தமான அந்நத்துக்கு அநுகுணமாக: அதாவது - அதிகமாக புஜித்த அந்நம் ஸாத்மிக்கைக்காக இடம்வலங்கொள்ளுமவ னென்று முந்தினஅர்த்தம்; இரண்டாமர்த்தம் - அந்நத்துக்கநுகுணமாக: அதாவது - அந்நத்துக்கு ஹாநி வாராதபடி வலங்கொள்ளு மென்றபடி. வலக்கை கீழ்ப்படக் கிடப்பானென்? என்ன, 'எல்லார்க்கும்' இத்யாதி. ஜீவநம் - ஆஹாரமென்று ஸ்வஶாவார்த்தம்; ப்ராணனென்று த்வநி. ரஸோக்த்யந்தரம் - 'கூழாட்படுகை' இத்யாதி. கூழுக்காக ஆட்படுகை யித்யர்த்தஃ. அதாவது - சேதநர்க்குக் கூழ்நிமித்தமாக அடிமைப்படுகை ஸ்வஹாவம்; ஈஶ்வரனுக்குக் கூழைநோக்குகைக்காக அடிமைப்படுகை ஸ்வஹாவ மென்றபடி. சப்தார்த்தம் - 'ஒப்பொன்றும்' இத்யாதி. 'யாதும்' என்றதுக்கு ஶாவம் -'யசோதா' இத்யாதி. அதெப்படி? என்ன, 'தொட்டில்' இத்யாதி. குழவிப்படி - பிள்ளைத்தனம். தாத்பர்யம் - 'தமீஶ்வராணும்' இத்யாதி. லோகத்தாரெல்லாரும் மேன்மே லேபதங்களை அபேக்ஷிக்க, இவர் கீழே கீழே அபேக்ஷிக்கிறதென்? என்ன, 'ஐஶ்வர்யத்தை' இத்யாதி. அதாவது - அஜ்ஞராகையாலே விஶ்வாமித்ராதிகள் அப்படி ஆசைப்படுகிறார்க ளென்றபடி. ஆனால், இவ்வளவிலே நின்றது ருசியளவு பட்டோ? என்ன, 'இப்போது' இத்யாதி. "சண்டாளசண்டாளர்களாகிலும்" என்று இப்படி விரும்பினால் லோகவிருத்தமன்றோ? என்ன, 'இப்படி' இத்யாதி. க்ரமேண அந்வயஃ. (௧௦)

---

* ஸ்தநந்தயம் - முலைப்பாலுண் ணும்பிள்ளை. † மௌக்த்யம் - அறியாமை.

ஸல்யஸௌஶீல்யகாருண்யஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்யாதி அஸங்க்யேயகல்யாணகுணங்களுக்குத் தோற்று அடிமையாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆரேனுமாகிலும் அவர்களுக்கு அடிமை பரமப்ராப்யமென்று சொன்ன இத்திருவாய்மொழியை ஆரக் கற்கவல்லாராகில் அவர்களுடைய பாகவதஶேஷதைகாதித்வ விரோதிகளெல்லாம் போம் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், பாகவதஶேஷத்வப்ரதிபாதகமான இத்திருவாய்மொழியை அப்யஸித்தவர்கள் இப்புருஷார்த்தத்துக்கு விரோதியான ஸம்ஸாரத்தைக் கடந்தேவிடுவர் என்கிறார்.

[அடியோங்கு என்று தொடங்கி] - ராஜ்யத்திலே வேர்விழுந்த துர்யோதநாதிகள் நூற்றுவரும் முடியும்படி பாண்டவர்களுக்குப் பண்ணலாம் ப்ரஸாதங்களெல்லாம் பண்ணிப் பின்னையும் ஒன்றும்செய்யப்பெற்றிலோம் என்று இருக்கும் ஸ்வபாவத்தையுடைய எம்பெருமானை. [குற்றேவல்கள் என்று தொடங்கி] - அந்தரங்கவ்ருத்திரூபமாய்ப் பாதங்கள் பூர்ணமான ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி வைஷ்ணவஶேஷத்வமே புருஷார்த்தமென்று உபபாதித்தது. இத்தை நெஞ்சிலே படும்படி கற்க ஶக்தராகில்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக ஜந்மநிவ்ருத்தியை அருளிச்செய்கிறார்.

அடி ஓங்கு - தங்கள் ராஜ்யப்ரதிஷ்டை உயர்ந்துவரும்படியான, நூற்றுவர் - துர்யோதநாதிகள் நூற்றுவரும், வீய - முடியும்படி, அன்று-(அவர்களாலே நிரஸ்தரான) அன்று, ஐவர்க்கு-பாண்டவர்களைவர்க்கும், அருள்செய்த - ஸர்வப்ரகாரோபகாரத்தைப் பண்ணி, நெடியோனை - (பின்பு ஒன்றுஞ்செய்யாதாரைப்போலே) பெரிய பாரிப்பையுடையவனைப்பற்ற, தென்குருகூர் - கட்டளைப்பட்ட திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடைய, குற்றேவல்கள் - அந்தரங்கவ்ருத்திரூபமாய், அடி ஆர்ந்த - பாதபந்தாதிலக்ஷணங்களால் பூர்ணமான, ஆயிரத்துள்-ஆயிரத்துள்ளும், அவன் தொண்டர்மேல் - அவன் தொண்டர்மேல், முடிவு - முடிவான, இவை பத்து - இவைபத்தையும், ஆர-(நெஞ்சிலே) பொருந்த, கற்கிற்கில் - அப்யஸிக்கவல்லாராகில், சன்மம் செய்யாமை - (ததீய ஶேஷத்வப்ரதிபந்தகமான) ஜந்மம் உண்டாகாதபடி, முடியும் - முடிந்து போம். இது - கலித்துறை.

இ.—நிகமத்தில், பாகவதஶேஷத்வப்ரதிபாதகமான இத்திருவாய்மொழியை அப்யஸித்தவர்கள் இதுக்கு விரோதியான ஸம்ஸாரத்தைக் கடப்பார் என்கிறார்.

[அடியோங்கு இத்யாதி]-பாண்டவர்களைவநசாரிகளாக்கிப் புத்ரமித்ராதிகளாலே பல்கி ராஜ்யத்திலே வேர்விழுந்த துர்யோதநாதிகள் நூற்றுவரும் முடியும்படி. [ஐவர்க்கு] - தானல்லது தஞ்சமில்லாதவர்களுக்கு. [அருள்செய்த]- அவர்களிழவெல்லாம் தீர "யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச" என்று ஸர்வமும் தானேயாய்ப் பின்னையும் "நாதிஸ்வஸ்தமநா:" என்கிறபடியே ஒன்றும் செய்யாதானாயிருக்கிறவனை. [குற்றேவல்கள்] - ஆழ்வார் வாசிகமாக அந்தரங்கஶேஷவ்ருத்தி பண்ணினபடி. [அடியார்ந்த ஆயிரம்] - பாதங்கள் பூர்ணமான ஆயிரம். "பாதபத்தாக்ஷரஸம:" என்கிறபடியே. [இவைபத்து அவன்தொண்டர்மேல் முடிவு] - இத்திருவாய்மொழி ததீயஶேஷத்வத்தை ப்ரதிபாதித்தது. ஈஶ்வரனைச் சொன்ன இடங்கள் உபஸர்ஜநகோடியிலேயாமித்தனை. [ஆரக் கற்கிற்கில்] - நெஞ்சிலேபடும்படி கற்க ஶக்தராகில். இதில் ஒருபாட்டும் விழாதபடி என்றுமாம். [சன்மம்செய்யாமை முடியும்] - ததீயஶேஷத்வத்துக்கு விரோதியான ஜந்மாந்வயம் அறும்.

ஈடு.—நிகமத்தில், பாகவதஶேஷத்வ ப்ரதிபாதகமான இத்திருவாய்மொழியை அப்யஸித்தவர்கள் இப்புருஷார்த்தத்துக்கு விரோதியான ஸம்ஸாரத்தைக் கடப்பர்கள் என்கிறார்.

---

நிகமம் - 'அடியோங்கு' இத்யாதி. 'அவன்தொண்டர்மேல்முடிவான - இவைபத்து - ஆரக் கற்கிற்கில் சன்மம்செய்யாமைமுடியும்' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'பாகவத' இத்யாதி.

[அடியோங்கு நூற்றுவர் வீய] - பாண்டவர்களை அரக்குமாடத்திலே யகப்படுத்தியும், சூதிலே தோற்பித்தும், வநவாஸாதிகளைப்பண்ணுவித்தும், தாங்கள் புத்ரமித்ராதிகளாலே பல்கி ராஜ்யத்திலே வேர்விழுந்த துர்யோதநாதிகள் நூற்றுவரும் முடியும்படி. [அன்று] - அவர்களாலே நிரஸ்தரான அன்று. [ஐவர்க்கு அருள்செய்த நெடியோனை] - இரண்டிடத்திலும் ஒக்குங்காணும் ஐவர்க்கு அருள்செய்கை. இங்கு திசைதிசை வலித்தெற்றுகின்ற ஐவர்க்கு அருள்செய்தானிறே, அங்கு அவர்களாலே எற்றுண்ட ஐவர்க்கு அருள்செய்தான். [ஐவர்க்கு] - இவர்களுடைய ஆனை குதிரை யுள்ளிட்டவை அவர்கள் பறித்துக்கொள்ள, "யஸ்யமந்த்ரீச கோப்தாச" (யஸ்யமந்த்ரீச கோப்தாச) என்கிறபடியே இழந்தவையெல்லாம் தானேயாய் நின்றான். [நெடியோனை] - பாண்டவர்கள் கார்யஞ்செய்து போகிற அன்றும், "நாதிஸ்வஸ்த்தமநா:" (நாதிஸ்வஸ்த்தமநா:) என்று அவர்கள் கார்யமொன்றும் செய்யப்பெற்றிலோம் என்றிருந்தபடி. [தென்குருகூர் இத்யாதி] - ஆழ்வார் பாகவதசேஷத்வபர்யந்தமான கைங்கர்யத்தை வாசிகமாகப்பண்ணுகையாலே அந்தரங்க வ்ருத்தியாயிற்று ஸர்வேஶ்வரனுக்கு. [அடியார்ந்த ஆயிரத்துள்] - ருக்வேதம்போலவும், "பாதபத்தோக்ஷரஸம:" (பாதபத்தோக்ஷரஸம:) என்கிற ஸ்ரீராமாயணம் போலவும், பாதங்கள் பூர்ணமான ஆயிரம். [அவன்தொண்டர்மேல் முடிவு] - இதில் ஸர்வேஶ்வரனைச் சொன்னவிடங்கள்- உபஸர்ஜ்ஜநகோடியிலே யாமித்தனை. [ஆரக் கற்கிற்கில்] - நெஞ்சிலேபடியும்படி கற்க ஶக்தராகில். இதில் ஒருபாட்டும் விழவிடாதே யென்றும். [சன்மஞ்செய்யாமை முடியும்] - ததீயசேஷத்வ விரோதியான ஜந்மாந்வயம் அறும். (கக)

---

*அடியோங்குகை - வேர்விழுகை. 'ஐவர்க்கு' என்றத்தையும் கடாக்ஷித்து, பாண்டவர்களிருக்க இவர்கள் ரூடமூலரானபடி எங்ஙனே? என்கிற ஶங்கையையும் பரிஹரியாநின்றுகொண்டு அர்த்தம் - 'பாண்டவர்களை' இத்யாதி. பல்கி - ஸம்ருத்தராய். ஹார்த்தபாவம் - 'இரண்டிடத்திலும்' இத்யாதி. திசைதிசைவலித்தெற்றுகின்ற ஐவரால் வரும் து:க மில்லாதபடி அருள்செய்தா னென்றபடி. எற்றுண்ட - பாதிக்கப்பட்ட. 'அருள் செய்த' என்றதுக்கு அர்த்தம் - 'இவர்களுடைய' இத்யாதி. க்ருபையாற் பெரிய னென்று அர்த்தம் - 'பாண்டவர்கள்' இத்யாதி: வ்யாமோஹத்தால் பெரியோனென்னுதல். அடியார்ந்த - பாதங்களாலே பூர்ணமான. ருக்வேதம்போலவுமிதி - மற்றவேதங்களும் பாரதாதிகளும் ஸர்வத்ர பரிபூர்ண ஸமபாதங்களாயிரா தென்று கருத்து. "தேஷாமேவஹ்ருதாய ஸர்வபாதவ்ருத்தா" என்று பாதபந்தமுண்டானதாக ப்ரமாணப்ரஸித்த மாகையாலே இவையிரண்டையும் எடுத்தது ஸர்வேஶ்வரனைச் சொன்னவிட மில்லையோ? என்ன, 'இதில் ஸர்வேஶ்வரனை' இத்யாதி. உபஸர்ஜ்ஜநகோடியிலே யென்றது - 'நித்யாதிகளை யுடையவன்' என்னுமாபோலே விசேஷணதயா சொல்லிற்றித்தனை யென்றபடி தொண்டர்மேல்முடிவு - தொண்டர்மேலே இதுக்குப் பர்யவஸாநம்; தத்விஷய மென்றபடி. ஆரக்கற்கையாவது - பொருந்தக்கற்கை யென்னுதல், பூர்ணமாக வென்னுதல். ஆர்தல் - பொருந்துதலாய், 'நெஞ்சிலேபடியும்படி' என்று முந்தினது. ஆர்தல் - பூர்த்தியாய், 'ஒரு பாட்டும்விழவிடாதே' என்று இரண்டாவது. என்று மென்றது - என்றுமா மென்றபடி. ப்ரகரணாநுகுணமாகத் ததீயசேஷத்வ முண்டா மென்ன வேண்டாவோ? என்ன, 'ததீய' இத்யாதி. விரோதிநிவ்ருத்தியைச் சொன்னால் தன்னடையே சொல்லிற்றா மென்றபடி. சன்மம்செய்யாமை முடியும் - ஜநியாமை ஸித்திக்கு மிதி ஶப்தார்த்த:. 'ததீயசேஷத்வவிரோதியான ஜந்ம முண்டாகாதபடி முடிந்துபோம்' என்று உரையில் சப்தார்த்தம்.* (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி:—தத்ராகஶாஹி விஷயேஷ்வரீணாம் ஸாதாஷாவிஷ்க்ருதாநு ஸ்வகுணவேஷ்டிதஹோமஶீலாநு। க்ஷோகாத்யவேஷ்ணவஜநாநுநிராதநாயா நாவ்யாயதாநதிஜஹஷ்டுவஸவ்தவேஷ: ॥

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி—ஸ்ரீதாமோகாதிஸம்ஹாரவ்யய ஸஹஸ்ரஜயாதிவ்யோமவ்யாஸ்ஸுஹாஜா ஸவஸுஸாகவஶக்ஷ்வ்யத்வ்யாதி உஶாஶஸக்ருதாஶக்ஷணைநு

வ்யவஸ்தா । [illegible]
[illegible]

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

பயிலுந்திருமால்பதந்தன்னில் நெஞ்சம்
தயலுண்டுநிற்குந்ததியர்க்கு—இயல்வுடனே
ஆளானர்க்காளாகும்மாறனடியதனில்
ஆளாகார்சன்மம்முடியா.

ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாந்திருவாய்மொழி—முடியானே: ப்ரவேசம்.

**ஆ.**—(முடியானே.) "தேர்கடவிய பெருமான் கனைகழல் காண்பதென்றுகொல் கண்கள்" என்று பிறந்த அபேக்ஷையானது மிகவும் உத்பூதையாய், அந்த அபேக்ஷாநுகுணமாகக் காணப்பெறாத வ்யஸநத்தினாலே அத்யந்தம் அவஸந்நராய்க்கொண்டு, தம்முடைய ஸர்வகரணங்களாலும் ஸர்வப்ரகாரத்தாலும் எம்பெருமானை அநுபவிக்கவேணுமென்று சொல்லிக்கொண்டு கூப்பிடுகிறார்.

ஒ.—எட்டாந்திருவாய்மொழியில், "அன்று தேர்கடவிய பெருமான் கனைகழல் காண்பது என்றுகொல் கண்கள்" என்று "செய்யதாமரைக்கண்ண"னில் எழுந்த ஆசையானது உத்தம்பகமான "பயிலுஞ் சுடரொளி"யில் அநுஸந்தாநத்தாலும் ஸாதஸாகமாகப் பணைத்துத் தாம் அபேக்ஷித்தபடி காணப்பெறாமையாலே அத்யந்தம் அவஸந்நராய் ஒரோவொன்றே ஸர்வேந்த்ரிய வ்ருத்தியையும் ஆசைப்படுகிற தம்முடைய இந்த்ரியங்களும் அப்படியே விடாய்த்த ஆழ்வார் தாமும், துர்ப்பிக்ஷகாலத்தில் தரித்ரனாய் பஹுப்ரஜனானவன் ப்ரஜைகளுடைய பசிக்கும் தன் பசிக்கும் ஆற்றாமே கூப்பிடுமாபோலே, திவ்யபூஷணங்களையும் திவ்யாயுதங்களையும் அப்ராக்ருதமாய் ஸ்வாஸாதாரணமான திருமேனியையும் ஸமஸ்தகல்யாணகுணங்களையும் ஆஸ்ரிதார்த்தமான சேஷ்டிதங்களையு முடையனான எம்பெருமானைக் காணவேணுமென்று கூப்பிடுகிறார். இந்த்ரியங்கள் ஆசைப்பட்டனவென்றும், ஒரோ இந்திரியமே இந்த்ரியாந்தரங்களுடைய விஷயங்களையும் ஆசைப்பட்டதென்றும் சொல்லுகிற இவற்றால் ஆழ்வாருடைய அபிநிவேசத்துக்கு அளவில்லாமை சொல்லிற்றாய்விட்டது.

ப.—எட்டாந்திருவாய்மொழியில், கீழ், இவர் அநுபவித்த பாகவதசேஷத்வத்துக் கடியான பகவத்குணவைலக்ஷண்யமானது இவர் திருவுள்ளத்திலே அநுபவாபிநிவேசத்தைஜநிப்பிக்க, அத்தாலே ப்ரஸ்துதமான பாகவதஸம்ஸ்லேஷம் விடாய்க்கு உத்தம்பகமாக, நெஞ்சு முதலான தம்முடைய கரணங்களோடு தம்மோடு வாசியற அநுபவாலாபத்தாலே ஆர்த்தி பிறந்து, அநுபாவ்யனுடைய சேஷித்வாத்யாகாரத்தையும், அநிஷ்டத்தைப்போக்கி அநந்யார்ஹமாக்கும் படியையும், ஆஸ்ரிதவ்யாமோஹத்தையும், அவதாரமூலமான அநந்தஸாயித்வத்தையும், ஆஸ்ரிதர்க்கு முகங்காட்டுகைக்கு ஈடான வாஹநவத்தையையும், அவர்களுக்கு அநுபாவ்யமாம்படி கையுந் திருவாழியுமான அழகையும், இவ்வாஹநாயுதவிஸிஷ்டவஸ்துவே தாரகாதிகளானபடியையும், அநுபவிப்பிக்கும் ஸௌந்தர்ய ஸ்வபாவத்தையும், அநுபவப்ரதிபந்தக நிவ்ருத்திப்ரகாரத்தையும், நிவர்த்தநத்தில் அநாயாஸத்தையும் அநுஸந்தித்து, அநுபவம் கிட்டாத ஆர்த்தியாலே அதிஸயிதமாகக் கூப்பிடுகிறார்.

**இ.**—எட்டாந்திருவாய்மொழியில், "அன்று தேர்கடவிய பெருமான் கனைகழல் காண்பது என்றுகொல் கண்களே" என்று "செய்யதாமரைக்கண்ண"னில் எழுந்த ஆசைக்கு "பயிலுஞ்

சுடரொளி''யில் அநுஸந்தாநமும் பாகவதஸ்வரூபநிரூபகமான பகவத்ஸ்வரூபம் பும்ஸாம்த்ருஷ்டி
சித்தாபஹாரியாகையாலே பாகவதர்களோடு போயபக்தஃ பரஸ்பரம் பண்ணி யரிக்கைக்கு உட
லன்றிக்கே ஸ்மாரகமாய் ''மாமெந்த்ரு ஸ்ரோகாஹிகமிபுமெகஃ'' இத்யாதிப்படியே விடாய்க்கு
உத்தம்பகமாய் பதமாகமாக விடாய்பிறந்தவாறே ஒன்றொன்றே ஸர்வேந்த்ரியவ்ருத்தியை ஆசைப்
படுகிற தம்முடைய கரணக்ராமமும் அப்படியே விடாய்த்த தாமும், 'நாம் அவனை என்றோ காண்
பது?' என்று துர்ப்பிக்ஷகாலத்திலே தரித்ரனாய் பஹுப்ரஜனானவன் ப்ரஜைகள்பசிக்கும் தன்பசிக்
கும் ஆற்றுமே கூப்பிடுமாபோலே ஆபரணங்களையும் திவ்யாயுதங்களையும் இவற்றுக்கு ஆஶ்ரய
மான வடிவழகையும் குணங்களையும் சேஷ்டிதங்களையு முடையவனைக் காணப்பெறுவது என்றோ?
என்று கேட்டாரடைய நீர்ப்பண்டமாம்படி கூப்பிடுகிறார். ''மாஹெநஸாஶுமதமெகெ வஷிதொ
ஜவஷிஷிவஸாநஹூரிநு'' என்று ஸுமந்த்ரனுக்குக் குஹஸஹவாஸமானாற்போலே இவர்க்கும்
பாகவதஸஹவாஸம். அசேதநமாய் ஜ்ஞாநப்ரஸரத்வாரமான இந்த்ரியங்கள் சேதநஸமாதியாலே
ஆசைப்பட்ட தென்றும், ஒரோ இந்த்ரியமே இந்த்ரியாந்தரங்களினுடைய விஷயங்களை ஆசைப்
பட்டதென்றும் சொல்லுகிற இவற்றால், ஆழ்வாருடைய விடாய்க்கு அளவில்லாமையைச் சொன்ன
படி. இந்த்ரியாந்தர விஷயம் இந்த்ரியாந்தரத்துக்கு விஷயமாகக்கூடுமோ? என்னில், — ஈஶ்வரேச்
சையாலே ஸர்ப்பத்துக்கு சக்ஷுஶ்ஶ்ரவஸ்த்வம்கூடினாற்போலே இவற்றுக்கும் அதுஅடியாகக்கூடும்.

ஈடு. — ''தேர்கடவியபெருமான் கனைகழல் காண்ப தென்றுகொல் கண்கள்'' என்று
தம்முடைய கண்கள் அவனைக் காணவேணுமென்று விடாய்த்தபடி சொன்னார், ''செய்யதாமரைக்
கண்ண''னில்; நிழலும் அடிதாறுமான ஸ்ரீவைஷ்ணவர்களைக் காட்டிக்கொடுக்க, அநந்தரம் ப்ரவ்
ருத்தமான பாகவதஸம்ஶ்லேஷம் போதயந்தஃபரஸ்பரம்பண்ணி தரிக்கைக்கு உடலன்றிக்கே பக
வத்குணங்களுக்கு ஸ்மாரகமாய்க் கீழ்ப்பிறந்த விடாய்க்கு உத்தம்பகமாயிற்று. கீழே பாகவதர்களு
டைய ஸ்வரூபநிரூபகத்வேந அவனையும் சொல்லிற்றிறே; வேறொன்றுக்காகப் புகுந்தாலும் தன்னை
யொழியப் புறம்பு ஒன்றுக்கு ஆளாகாதபடி தன்பக்கலிலே துவக்கிக்கொள்ள வற்றாயிறே பகவத்
விஷயம் இருப்பது. அத்தாலும் அபிநிவேஶம் கரைபுரண்டு, ''என்றுகொல் கண்கள் காண்பது''
என்னுமளவன்றிக்கே மற்றை இந்த்ரியங்களும் விடாய்த்து, ஓரிந்த்ரியத்தினுடைய வ்ருத்தியை
மற்றையிந்த்ரியங்களும் ஆசைப்பட்டும், மற்றையிந்த்ரியங்களினுடைய வ்ருத்தியை மற்றையிந்த்ரி
யம் ஆசைப்பட்டும், அவையெல்லாவற்றினுடைய வ்ருத்தியையும் தாம் ஆசைப்பட்டும், தம்மிலும்

---

''முடியானே'' ப்ரவேஶே, ''தேர்கடவிய'' இத்யாதியில் விடாய்தீர, ''பயிலும்சுடரொளி''யில் ஸமா
தாநம்பண்ணியிருக்க, இத்திருவாய்மொழியில் ஆற்றாமையாலே கூப்பிடுகைக்கு அடியேது? என்ன, தேர்கட
விய இத்யாதி. கீழ்ப்பிறந்த விடாய் - கனைகழலைக்காணப்பெறாமையால் வந்த விடாய்.

விடாய்க்கு உத்தம்பகமானபடி யென்? என்ன, கீழே பாகவதர்களுடைய இத்யாதி. அதாவது -
குணங்களிலே ஈடுபட்டவர்கள், வடிவழகிலே ஈடுபட்டவர்கள், சேஷ்டிதங்களிலே ஈடுபட்டவர்களென்று அவ
னையும் சொல்லிற்றிறே யென்றபடி. நிரூபகத்வேந சொன்னால் உத்தம்பகமாகக் கூடுமோ? என்ன, வேறொன்றுக்
காக இத்யாதி. அன்றிக்கே, தேர்கடவிய இத்யாதியும், நிழலும் அடிதாறும் இத்யாதியும், கீழே பாகவதர்
களுடைய இத்யாதியு மாகிற வாக்யத்ரயமும் - ஆற்றாமையாலே கூப்பிடுகைக்கு ஹேதுத்ரயபரமாதல். அத்தா
லும் - ஸ்மாரகஸந்நிதியாலும், நிரூபகத்வேந ப்ரஸ்துதமாகையாலும். யத்வா, 'கனைகழல்காண்பதென்றுகொல்'
என்கிற விடாயாலும், கீழில் பாகவதஸம்ஶ்லேஷம் அதுக்கு உத்தம்பகமாகையாலு மென்னவுமாம். ஓரிந்த்ரியத்தி
னுடைய இதி: இரண்டாம்பாட்டுத் தொடங்கி ஆறுபாட்டளவும் - ஓரிந்த்ரியத்தினுடைய வ்ருத்தியை இந்த்ரி
யாந்தரம் ஆசைப்பட்டபடி; 'ஆவியே' இத்யாதி மேல் மூன்றுபாட்டையும் பற்ற, அவையெல்லாவற்றினுடைய
வ்ருத்தியையும் தாம் ஆசைப்பட்டு என்றது. ஏகேந்த்ரியவ்ருத்தியை ஆசைப்பட்டது - மற்றை இந்த்ரியசதுஷ்
டயவ்ருத்தியை ஆசைப்பட்டதுக்கும் உபலக்ஷணம். இது - வ்யாக்யாநத்திலே வ்யக்தம். மற்றைஇந்த்ரியங்களும்
விடாய்த்து என்கையாலே - போக்த்ருத்வமும் தோன்றுகையாலே, தம்முடைய வ்ருத்தியை இந்த்ரியங்கள்

விடாய்த்த கரணங்களும் கரணங்களிலும் விடாய்த்த தாமுமாய்,—க்ஷாமகாலத்திலே பஹுப்ரஜனனவன் தன்பசிக்கு ஆற்றமாட்டாதே ப்ரஜைகள் பசிக்கு ஆற்றமாட்டாதே, அவற்றின்வாயிற் சோற்றைத் தான் பறித்து ஜீவிப்பது தன்வாயிற் சோற்றை அவை பறித்து ஜீவிப்பதாய், 'என்பசிக்கு என்செய்வேன்? என்ப்ரஜைகளின்பசிக்கு என்செய்வேன்?' என்னுமாபோலே, தாமும் தம்முடைய * கரணக்ராமமுமாக நோவுபட்டுக் கூப்பிடுகிறார். "காத்ரைஶ் ஶோகாபிகர்ஶிதை:" (காத்ரைஶ் ஶோகாபிகர்ஶிதை:) என்று சிலர் பட்டினிகிடக்கச் சிலர் ஜீவிக்குமோபாதி, இவ்வுடம்பைக் கொண்டு அணைய ஆசைப்பட்டு இவ்வாசையோடே முடிந்துபோய் இனி ஒருஶரீரபரிக்ரஹம் பண்ணி அவரை அநுபவிக்க இராமே, ஆசைப்பட்ட இக்கரணங்களைக்கொண்டே நான் அநுபவிக்கும்படி பண்ணித்தரவேணுமென்றாளிறே பிராட்டியும்; அப்படி இவரும் நோவுபட்டு, ஆயுதங்களையும் ஆபரணங்களையும் அவற்றுக்கு ஆஶ்ரயமான திருமேனியையும் குணங்களையும் சேஷ்டிதங்களையுமுடைய எம்பெருமானைக் காணவேணுமென்று 'முன்புபோலே ஈஶ்வரனுக்கு ஒரு குணாவிஷ்காராதிகளாற் பட்டினி பரிஹரிக்கவொண்ணாது' என்னும்படி, கேட்டாரெல்லாம் நீராம்படி, பெருந்தானத்திலே பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார். "குஹேந ஸார்த்தம் தத்ரைவ ஸ்த்திதோஸ்மி திவஸாந் பஹூந்" (குஹேநஸார்த்தம் தத்ரைவஸ்த்திதோஸ்மி திவஸாந்பஹூந்) - ஸ்ரீகுஹப்பெருமாளோடே கூட, பெருமாளைப்பிரிந்த இடத்தினின்றும் கால்வாங்கமாட்டாதே நின்றானாயிற்று ஸுமந்த்ரன்; அங்குநின்றது ஒன்றிரண்டுநாளாயிருக்கச்செய்தே "பஹூந்" (பஹூந்) என்னநின்றதாயிற்று, பிரிவாலே காலம்நெடுகினபடி. 'ஸ்ரீகுஹப்பெருமாளோடே நிற்க, காலம்நெடுகுவானேன்?' என்று மிளகாழ்வானைக் கேட்க, 'ஸ்மாரகஸந்நிதியில் ஆற்றாமை இரட்டிக்குமிறே' என்று அருளிச்செய்தாராம். "மேகக்குழாங்கள்காள் காட்டேன்மின் நும்முரு வென்னுயிர்க் கதுகாலன்" என்றாரிறே. † சைதந்யப்ரஸ்ருதித்வாரமான கரணங்கள் விடாய்க்கையாவது என்? என்னில்,—ஆழ்

---

ஆசைப்பட்டமை தோன்றுகிறது. கரணங்களும் தாமும் தனித்தனியே விடாய்த்ததுக்கு த்ருஷ்டாந்தம் - காத்ரை: இத்யாதி. ஶ்லோகதாத்பர்யம் - சிலர் இத்யாதி. ஸுந்தரகாண்டே சத்வாரிம்சே ஹநுமந்தம் ப்ரதி ஸீதா, "யதா தம் புருஷவ்யாக்ரம் காத்ரைஶ் ஶோகாபிகர்ஶிதை: । ஸம்ஸ்ப்ருஶேயம் ஸகாமாஹம் ததா குரு தயாம் மயி". "ஶோகாபிகர்ஶிதை:" என்கிற பஹுவசநத்தாலே - தனித்தனியே கரணங்களும், "ஸகாமாஹம்" என்று தாமும், விடாய்த்தபடி சொல்லுகிறது. ஆயுதங்களையும் என்றது - 'பொன்னெடுஞ் சக்கரத்தன்னையே" என்றத்தைப் பற்ற. ஆபரணங்களையும் என்றது - 'முடியானே' என்றத்தைப் பற்ற. குணங்களையும் என்றது - "மூவுலகுந்தொழுதேத்துஞ்சீர்" "எனதாவியை யீர்கின்ற சீலமே" இத்யாதியைப் பற்ற. பெருந்தானத்திலே என்றது-"முடியானே" "தஞ்சனே", "வஞ்சனே" "வானவர்தம்நாயகனே" இத்யாதி ஸம்போதநங்களைப் பற்ற. தானம் - ஸ்வரம். ஸிம்ஹாவலோகந ந்யாயேந ஸ்மாரகஸந்நிதி விடாய்க்கு உத்தம்பகமென்றதுக்கு ஸம்வாதம் - குஹேந இத்யாதி. "ஆஶயா யதி மாம் ராம: புநஶ் ஶப்தாபயேதிதி" இத்யுத்தரார்த்தம். இதம் தஶரதம்ப்ரதி ஸுமந்த்ரவாக்யம். இஶ்லோகத்துக்கு அர்த்தம்-ஸ்ரீகுஹப்பெருமாளோடு இத்யாதி. "தத்ரைவ" என்ற ஏவகாரார்த்தம் - கால் வாங்கமாட்டாதே என்றது. சக்ரவர்த்தி, பெருமாளைப் பிரிந்த அஞ்சாம்நாள் ஸ்வர்க்கஸ்த்தனானையாலே ஸுமந்த்ரன் தமஸாதீரத்திலும் கங்காகூலத்திலுமாகப் பெருமாளோடே இரண்டுநாள் கூடியிருந்து, குஹப்பெருமாளோடே ஶ்ருங்கிபேரபுரத்திலே இரண்டுநாள் கூடியிருந்து, அஞ்சாம்நாள் சக்ரவர்த்தி ஜீவிக்கச்செய்தேயிறே வந்தது; அத்தைப்பற்ற, ஒன்றிரண்டுநாளாயிருக்க என்றது. உத்தரார்த்தத்துக்கு ஆப்தஸம்வாதம் - ஸ்ரீகுஹப் பெருமாளோடே இத்யாதி. இவ்வர்த்தத்திலே ஆழ்வார் ஸ்ரீஸூக்தி - மேகக்குழாங்கள் இத்யாதி. மேகஸமூஹங்காள்! உங்கள்வடிவைக் காட்டாதே கொள்ளுங்கோள்; என்னுயிர்க்கு அந்தவடிவு காலனாயிராநின்றதென்ற

---

* கரணக்ராமம்-இந்த்ரியஸமூஹம்.

† சைதந்யப்ரஸ்ருதித்வாரம் - ஜ்ஞானம் வெளிப்படும் வழி.

வாருடைய அபிநிவேஶாதிஶயத்தைச் சொன்னபடி. இந்த்ரியங்களும் தனித்தனியே சேதந ஸமாதியாலே விடாய்க்கும்படியாயிற்று, பகவத்விஷயத்தில் இவர்க்குப்பிறந்த வாஸநை. இதரவிஷயங்களில் வாஸநை விடாயைப் பிறப்பியாநின்றால் குணாதிகவிஷயத்திற் சொல்லவேண்டாவிறே. பகவத்விஷயத்தில் வாஸனைபண்ணுகிறார் பண்ணுகிறது ஸாதநபுத்யாவல்ல, இதரவிஷயங்களோபாதி இவ்விஷயம் ரஸிக்கவேணுமென்று; "யாப்ரீதிரவிவேகாநாம்" (யாப்ரீதிரவிவேகாநாம்). ஒரு இந்த்ரியத்தின் வ்ருத்தியை இந்த்ரியாந்தரம் ஆசைப்படக்கூடுமோ? என்னில்;-சக்ஷுஶ்ஶ்ரவா:- கண்ணாலே காண்பதுஞ்செய்து கேட்பதுஞ்செய்யாநின்றதிறே; அதுவும் அவன்கொடுத்ததே; அது நமக்குத்தட்டென்ன அவன் தந்தால்? ஒருதேஶவிஶேஷத்திலே தன்னையநுபவிப்பார்க்குக் கொடாநின்றானிறே, தம்மையே ஒக்க அருள வேண்டுகையாலே.*தூதுசெய்கண்கள்கொண்டு ஒன்றுபேசித் தூமொழியிசைகள் கொண்டு ஒன்று நோக்கியிறே அவன்தன்படி. அதாவது - ஆறு கிண்ணகமெடுத்தால் பலவாய்த்தலைகளாலும் போகச்செய்தேயும் கடலில்புகும் அம்ஶம் குறைவற்றுப்போமாபோலே, இவருடைய அபிநிவேஶாதிஶயம் இவருடைய கரணங்களாகிற வாய்த்தலைகளாலே பெருகுகிறபடி.

## முதற் பாட்டு.

முடியானே! மூவுலகுந்தொழுதேத்துஞ்சீ
ரடியானே! ஆழ்கடலைக்கடைந்தாய்! புள்ளூர்
கொடியானே! கொண்டல்வண்ணா! அண்டத்தும்பரில்
நெடியானே! என்றுகிடக்கும் என்நெஞ்சமே.

*ஆ.*—*ஸர்வலோகாதிபத்ய ஸூசகமாய் நிரதிஶயதீப்தியுக்தமாய் அதிரமணீயதர்ஶநமாயிருந்த திருவபிஷேகத்தாலே அலங்க்ருதனாய், ப்ரஹ்மேஶாநாதிகளுக்கும் ஈஶ்வரனாய்வைத்து அநாலோசித விஶேஷாஶேஷலோகஶரண்யனாய், ஆஶ்ரிதஜநஸமீஹிதநிர்வர்த்தகனாயிருந்தவனே! பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போலே பெரியதிருவடிதிருத்தோளின்மே லேறியருளி இந்த*

*படி. ஶங்கைக்குப் பரிஹாரம்* - ஆழ்வாருடைய *இத்யாதி. விவரணம்* - இந்த்ரியங்களும் *இத்யாதி; பரிஹாராந்தரமாதல். வாஸநை விடாயைப் பிறப்பிக்குமோ? என்ன,* இதரவிஷயங்களில் *இத்யாதி.* இதரவிஷ*யங்கள் ஸ்வயம்போக்யங்களாகையாலே அவற்றில் வாஸனை விடாயைப் பிறப்பிக்கும்; தேவதையான இவனிடத்தில் வாஸனை பண்ணுகிறது "ஸாதநத்வேந" என்று - பலஸாதநத்வேநவன்றோ? இது விடாயைப் பிறப்பிக்குமோ? என்ன,* பகவத்விஷயத்தில் *இத்யாதி. அப்படி இது ரஸிக்கவேணுமென்ற பேருண்டோ? என்ன,* யாப்ரீதி *ரித்யாதி. "யாப்ரீதிரவிவேகாநாம்விஷயேஷ்வநபாயிநீ| த்வாமநுஸ்மரதஸ்ஸா மே ஹ்ருதயாந்மாபஸர்பது" இதி ப்ரதமேம்ஶே பகவந்தம்ப்ரதி ப்ரஹ்லாத:. இது ஸர்ப்பத்துக்கொழிய மநுஷ்யர்க்குக்கூடுமோ? என்ன,* அதுவும் *இத்யாதி. ஆஶ்ரிதர்க்கு அவன்கொடுக்க எங்கேகண்டோம்? என்ன,* ஒருதேச *இத்யாதி.* தம்மையேயொக்க அருளவேண்டுகையாலே-*ஸாம்யாபத்தியைக் கொடுக்கவேண்டுகையாலே. தனக்கு உண்டாயே கொடுக்கவேணுமே, ஈஶ்வரனுக்குக் கரணநியமராஹித்ய முண்டோ? என்ன,* தூதுசெய் *இத்யாதி. தூதக்ருத்யத்தைப் பண்ணும் கண்களைக்கொண்டு ஸ்வாபிப்ராயத்தைச் சொல்லி, பரிசுத்தமான வ்ருத்தியையுடைய இசையைக்கொண்டு ஸ்வாபேக்ஷிதங்களைக் கடாக்ஷித்தென்று பாசுரார்த்தம். "ஸர்வத:ஶ்ருதிமத்" இத்யாத்யநுஸந்தேயம். கரணங்களும் சேதநஸமாதியாலே விடாய்த்தால், தம் அபிநிவேசம் மட்டமாகாதோ? என்ன,* அதாவது *இத்யாதி. அதாவதென்றது - வார்த்தைப்பாடு; ஸகலகரணங்களாலும் அவனை அநுபவிக்க ஆசைப்படுகிறாரென்றபடி.*

* *திருவாய்மொழி - ௧ - ௧ - ௧.*

லோகத்திலே வந்துதோன்றாய் என்று எம்பெருமானைக் காண ஆசைப்பட்டபோதே காணப் பெறாமையாலே குறைப்பட்டுக் கிடக்கும் என்நெஞ்சம் என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், திருவுள்ளம் எம்பெருமானைக் காணவேணுமென்று ஆசைப் பட்டுப் பெறாமையாலே அவஸந்நமாய்க் கிடக்கிறபடியை அருளிச்செய்கிறார்.

[முடியானே என்று தொடங்கி] - ஆதிராஜ்யஸூசகமாய் எப்போதும் தர்ஸநீயமான திருவபிஷேகத்தையுடையையுமாய் குணகுணநிரூபணம்பண்ணாதே ஸகலலோகங்களுக்கும் ஸரண்யனானவனே! அழகிய திருவடிகளை என்தலையிலே வைக்கப்பெறுகிறதில்லையென்று கருத்து. [ஆழ்கடலை என்று தொடங்கி] - ப்ரயோஜநாந்தரபரர்க்குங்கூட மஹாவ்யாபாரங்களைப் பண்ணி அபேக்ஷிதங்களைக் கொடுப்பதும் செய்து நினைப்பதுக்குமுன்னே ஆஸ்ரிதர் இருந்தவிடத்தில் செல்லுகைக்கும் செல்லுமதுக்கு முன்னே தூரத்திலேகண்டு வாராநின்றானென்று உகக்கைக்கும் ஈடாகப் பெரியதிருவடியை வாஹநமாகவும் த்வஜமாகவும் உடையையுமாய், பெரியதிருவடிமேலே மேருவின்மேலே வர்ஷுகவலாஹகம்போலே யிருந்தருளுவதும்செய்து ஐஸ்வர்யாதிகளால் ப்ரஹ்மாதிகளிற்காட்டில் அதிகனானவனே!

ப.—முதற்பாட்டில், ப்ராப்தமுமாய் ஸுலபமுமாய் ப்ராப்யமுமான பகவத்விஷயத்திலே தம்முடைய நெஞ்சுக்கு உண்டான அபிநிவேசத்தை அருளிச்செய்கிறார்.

முடியானே - (உபயவிபூதிக்கும் ஶேஷியான மேன்மைக்கு ஸூசகமான) முடியை யுடையவனே! (அந்த உறவடியாக), மூவுலகும் - ஸர்வலோகமும், தொழுது ஏத்தும் - ஆஸ்ரயித்து ஸ்துதிக்கும், சீர் அடியானே - சரண்யத்வைகாந்தகுணபூர்ணமான திருவடிகளையுடையவனே! (ஆஸ்ரிதர் ப்ரயோஜநாந்தரங்களை வேண்டிலும்), ஆழ்கடல் - ஆழ்கடலை, கடைந்தாய் - கடைந்து கொடுக்கும் உபகாரகனே! புள் ஊர் கொடியானே - (ஆஸ்ரிதர் இருந்தவிடத்திலே வருகைக்கும் அவர்கள் தூரத்தில் கண்டு உகக்கைக்கும் அடியான) பெரியதிருவடியை வாஹநமும் த்வஜமு மாகவுடையவனே! கொண்டல் - (அவர்களுக்கு அநுபாவ்யமாம்படி ஸ்ரமஹரமாய்க்)காளமேகம் போன்ற, வண்ணா - வடிவையுடையவனே! (இவ்வடிவழகை அநுபவிப்பித்து), அண்டத்து - பரம பதவாஸிகளான, உம்பரில் - ஸூரிகளுக்கு நிர்வாஹகனான, நெடியானே - பெரியவனே! என்று - என்று (தனித்தனியே இந்தஸ்வபாவங்களை) அநுஸந்தித்து, என்நெஞ்சம் - என்நெஞ்சானது, கிடக்கும் - (ஒருப்ரவ்ருத்திக்ஷமமன்றிக்கே சிதிலமாய்க்) கிடவாநின்றது.

அண்டத்து உம்பரென்று - ப்ரஹ்மாதிகளாகவுமாம்.

இ.—முதற்பாட்டில், தம்முடைய திருவுள்ளத்துக்கு உண்டான அபிநிவேசாதி ஶயத்தை அருளிச்செய்கிறார்.

[முடியானே] - ஆதிராஜ்யஸூசகமாய் உபயவிபூதிக்கும் கவித்த முடியிறே. ஶேஷி பூதனுக்கு ஶேஷித்வமிறே முதல் காணப்படுவது. அவன் ஶேஷித்வப்ரகாசகமான திருவபி ஷேகத்திலே முந்துறக் கண்வைக்கிறார். தர்ஸநீயமான திருவபிஷேகம். இவருடைய அபிநி வேஸாதிஶயம் இசையில் ஓசையிலே அறியுமித்தனை. [மூவுலகும் இத்யாதி] - அவனுடைய ஶேஷித்வத்தை அநுஸந்தித்தால் தம்முடைய ஶேஷத்வாநுரூபமாகத் திருவடிகளிலேயிறே விழுவது. குணகுணநிரூபணம் பண்ணாதே அஶேஷலோகஸரண்யமான திருவடிகளையுடை யவனே! "[illegible]" என்று வகுத்த திருவடிகளை என்தலையிலே வைக் கப்பெறுவது எப்போதுகாண்? என்று கருத்து. [ஆழ்கடலைக் கடைந்தாய்] - இந்தஸம்பந்தாநு ரூபமான புருஷார்த்தமன்றிக்கே க்ஷுத்ரங்களை அபேக்ஷிக்கிலும் உடம்புநோவக் கடைந்து கொடுக்குமவன். "[illegible]" என்கிறபடியே அத்யகாதமான கடலைக் குளப்

படிபோலே கலக்கினபடி. [புள்ளூர்கொடியானே] - பெரியதிருவடியை வாஹநமாகவும் கொடியாகவுமுடையவனே! ஆஶ்ரிதர் இருந்தவிடத்தே செல்லுகைக்கு வாஹநமாய் தூரத்திலே கண்டு வாராநின்றானென்று தரிக்கைக்கு த்வஜமாகை. [கொண்டல்வண்ணா] - மேருவின்மேலே ஒரு காளமேகம் படிந்தாற்போலே யாயிற்றுப் பெரியதிருவடிமுதுகில் இருப்பு. [அண்டத்துஉம்பரில் நெடியானே] - பெரியதிருவடியின் முதுகிலிருப்பைக் கண்டால் ப்ரஹ்மாதிகளுடைய ஐஶ்வர்யம் க்ஷுத்ரமாய் 'இவனே ஸர்வாதிகன்' என்று தோற்றும்படி யிருக்கை. வடிவழகோபாதி இவர்க்கு ஐஶ்வர்யமும் ஆகர்ஷகமாயிருக்கிறபடி. [என்று கிடக்கும்] - இப்படிகளைச் சொல்லி அச்சொல்லைத் தலைக்கட்டமாட்டாமே கிடக்கும். 'உக்தாயேதி ஸக்ருஜ்ஜ்ஞாநம்...' என்ற ஸ்ரீபரதாழ்வானைப்போலே. [என்நெஞ்சமே] - "என்மனனே" என்கிறாரல்லர்; நான் செய்தபடி செய்ய, இப்ப்ரஜையைக் கொண்டு என்செய்வேன்? என்கிறார்.

ஈடு.—முதற்பாட்டு. தம்முடைய திருவுள்ளத்துக்கு அவன்பக்க லுண்டான சாபலாதிஶயத்தைச் சொல்லுகிறார்.

[முடியானே]-ஆதிராஜ்ய ஸூசகமாய் உபயவிபூதிக்கும் கவித்த முடியிறே; அவன் சேஷித்வப்ரகாசகமான திருவபிஷேகத்திலே முந்துறக் கண்வைக்கிறார். அல்லாதார் முடிகளைப் போய்ம்முடியாக்கும்படி தலையான முடியிறே. உபயவிபூதிக்கும் ஒருமுடியிலே கட்டுண்ணும்படி கவித்த முடியிறே. [முடியானேஎ]- இவர்க்கு இதிலோடுகிற விடாயின் பெருமை இசையினோசையிலே காணுமித்தனை. புதும் க்ரமங்களேல்லாம் இல்லை இதில்: முதலிலே உயர்ந்ததானமா யிருக்கும். [முடியானேஎ]- கீழ் "பொன்முடியன்" என்றதுதான் முடிய அநுவர்த்திக்கிறபடி. [மூவுலகும் இத்யாதி] - குணகுண நிரூபணம் பண்ணாதே அஶேஷலோக ஶரண்யமான திருவடிகளை யுடையவனே! திருவபிஷேகத்தின் அழகை அநுஸந்தித்துத் தோற்றுத் திருவடிகளிலே விழுகிறார். ஒருகாலும் அடிவிடாரே. "தன் தாளிணைக்கீழ்க் கொள்ளும்" என்றது வடிம்பிடுகிறபடி. ஸர்வ ஸாதாரணமான திருவடிகளை என்தலையிலே வையா யென்று கருத்து. [ஆழ்கடலைக் கடைந்தாய்] - "ஆரமுதூட்டியவப்பனை" என்றது பின்னாடுகிறபடி. இத்திருவடிகளில் போக்யதையை விட்டு ப்ரயோஜநாந்தரத்தை ஆசைப்பட்டார்க்கும் வருந்தி அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணுமவனே!

---

முதற்பாட்டு.-முடியானேஎ இத்யாதி. 'நெடியானேஎ என்று கிடக்குமென்னெஞ்சம்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை – தம்முடைய இத்யாதி.

முடியை முற்படச்சொல்லுவானென்? என்ன, ஆதிராஜ்ய இத்யாதி. கவித்தமுடியிறே என்ற அநந்தரம் ஆகையாலே யென்று கூட்டுவது, ப்ரஹ்மாதிகளுக்கும் முடியுண்டே என்ன, ரஸோக்தி – அல்லாதார் இத்யாதி வாக்யத்வயம். போய்ம்முடியாக்கும் – அஸத்ஸமமாக்குமென்று ஸ்வஹாவார்த்தம். சப்பரையான முடியென்று சாடு. தலையானமுடி – தலையிலேயிருக்கிற முடி. ஶ்ரேஷ்டமான முடியென்று சாடு. ஒருமுடியிலே– ஒருபந்தத்திலேயிதி சாடு; திருவபிஷேகத்திலே யிதி ஸ்வஹாவார்த்தः. தலையானமையைக் காட்டுகிறார் – உபய விபூதிக்கும் இத்யாதி. முடியானேஎ என்கிறது – ஹ்ரஸ்வதீர்க்கப்லுதங்களிலே அதிப்லுதமாகையாலே. ஆர்த்திஸூசகமாயிருக்கிறதென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் – இவர்க்கு இதில் இத்யாதி. ஹ்ரஸ்வதீர்க்க ப்லுதங்களென்கிற அடைவிலே வரவேண்டாவோ? என்ன, புதும்க்ரமங்கள் இத்யாதி. உயர்ந்ததானம் – அதிப்லுதமான உச்சஸ்வரம். ப்ரவேசத்திலே – பாகவதஸ்வரூபநிரூபகத்வேந ப்ரஸக்தங்களான அவனுடைய அவயவஸௌந்தர்யங்கள் விடாய்க்கு உத்தம்பகங்களாயின வென்றதுக்கு நியாமகபதங்களை மூதலிக்கிறார் – கீழ்ப் பொன்முடியன் இத்யாதி. மேலே மூதலிக்கிற வாக்யங்களுக்கும் இப்படியே ஸங்கதி கண்டுகொள்வது. 'மூவுலகும்' என்றத்தால் பலிதம் – குணகுண இத்யாதி. முடிக்கு அநந்தரம் அவயவாந்தரங்களைவிட்டுத் திருவடியைச் சொல்லுவானென்? என்ன, திருவபிஷேகத்தின் இத்யாதி. ரஸோக்தி – ஒருகாலும் இத்யாதி. வடிம்பிடுகை – ப்ரேரிக்கை. 'மூவுலகும்' இத்யாதிக்கு ஹாவம் – ஸர்வஸாதாரணமான இத்யாதி. திருவடிகளுக்கு அநந்தரம் 'ஆழ்கடலைக்கடைந்தாய்' என்றதுக்கு ஹாவம் – இத்திருவடிகளில் இத்யாதி. 'ஆழ்'

“அப்ரமேயோமஹோததி:” (அப்ரமேயோமஹோததி:) என்ற ஒருவரால் அளவிடப்போகாத படி யிருக்கிற கடலைக் குளப்படிபோலே கலக்கினபடி. [புள்ளூர் கொடியானே] - தன்னை யுகந் தார்பக்கல் வந்து தோற்றும்படி பெரிய திருவடியை வாஹநமாகவும் கொடியாகவு முடையவனே! ஆஶ்ரிதர் இருந்தவிடத்தே செல்லுகைக்கு வாஹநம், தூரத்திலே கண்டு ‘வாராநின்றான்’ என்று தரிக்கைக்கு த்வஜமாகை. கடலைக்கடையப்புக்கு தேவஜாதி இளைத்துக் கைவாங்கினவளவிலே சாய்கரகம்போலே அம்ருதத்தைக் கொண்டுவந்து கொடுக்கைக்குத் திருவடிமுதுகிலே வந்து தோன் றினபடி யென்றுமாம். [கொண்டல்வண்ணா] - திருவடிமுதுகிலே தோற்றினபோது ஒருமேருவைக் கினிய காளமேகம் படிந்தாற்போலே யாயிற்று இருப்பது. “நீலம்மேராவிவாம்புதம்” (நீலம்மேராவிவாம்புதம்). [அண்டத்து உம்பரில்] - அவன் தோளில் இருக்கும் இருப்பைக் கண் டால் ‘இவனே ஸர்வாதிகன்’ என்று தோற்றும்படியாயிற்று இருப்பது. ப்ரஹ்மாதிகளுடைய ஐஶ் வர்யம் அடையப் பரிச்சிந்நமாய்த் தன் ஐஶ்வர்யம் மேலாய்த் தோற்றும்படியிறே இருப்பது. வடிவழ கோபாதி அவனைஶ்வர்யமும் ஆகர்ஷகமா யிருக்கிறபடி. [என்று கிடக்கும்]-‘நெடியானே’ என்றால் காணவேணும் கேட்கவேணு மென்கிற சொல்லால் தலைக்கட்ட மாட்டுகிறதில்லை; ‘நெடியானே’ என்று பாடோடிக் கிடவாநின்றது; “உத்வார்யேதி ஸக்ருத்தீநம் புநர்நோவாசகிஞ்சந” (உத்வார்யேதி ஸக்ருத்தீநம் புநர்நோவாசகிஞ்சந) என்ற ஸ்ரீ பரதாழ்வானைப்போலே. [என்நெஞ் சமே] - “கொடியவென்னெஞ்சம்” என்னுமாபோலே, கொண்டாடிச் சொல்லுகிறாரல்லர்; நான் செய்தபடி செய்ய, இதின் விடாய்க்கு என் செய்வேன்? என்கிறார். பர்த்தாவே ரக்ஷிக்கவேண் டாவோ? இவ்வயிறுதாரி நெஞ்சை என்னால் பரிக்கப்போமோ? என்கிறார். (க)

---

*என்ற விசேஷணத்துக்குத் தாத்பர்யம் -* **அப்ரமேய:** *இத்யாதி.* “ஸ ... ராவணோ ராஜா ஸம்ரக்ஷணம் ... ஹுதி । வாநிதஸம்ப்ரேணாயவே அப்ரமேயோ மஹோததி:” *இதி யுத்தகாண்டே ஏகோந விம்ஶே விபீஷண:. அநந்யப்ரயோஜநர்விஷயமாக* ஸாவம்-**தன்னையுகந்தார்** *இத்யாதி. புள்ளூர் கொடியானே— ஊர்என்று - ஊருகிறதாய், அதாவது - வாஹநமாய், புள்ளை வாஹநமாகவும் கொடியாகவு முடையவனே யென்ற படி. வாஹநமும் கொடியும் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் -* **ஆஶ்ரிதர்** *இத்யாதி. கீழ்ப்பதத்தோடே கூட்டி ப்ரயோஜநாந்தரபரவிஷயதயா தாத்பர்யாந்தரம் -* **கடலைக்கடைய** *இத்யாதி. சாய்கரகம் - விடாய்த்தவன் முகத்திலே நீர்விழும்படியாக உயரவைத்த கரகம். தண்ணீர்ப்பந்தலிற் கரகமென்றபடி. கினிய - கபளீகரிக்க. அப்படியிருக்குமோ? என்ன, நீலம்மேரோ இத்யாதி. ராஜதர்மே.* “ததோ ராமோ ஹந்தி வ்ருத்தேஷு ஸ்ரேணிகா ஸந்நிதிதே । உபஸ்ருத்ய ஸ்திதம் ஸீநம் நீலம்மேராவிவாம்புதம்”. *ஸ்யதே ப்ராவஸ்ய ... ஸ்ரேணிகாயா: ஊர்த்வஷ்டாதயோ கஜ ஸ்திதவ்ய:. ‘புள்ளூர்கொடியானே - அண்டத்தும்பரில் நெடியானே’ என்று கூட்டி* ஹாவம் - **அவன்தோளில்** *இத்யாதி. ‘அண்டத்தும்பரிற்காட்டில் நெடியானே’ என்றத்தால் பலிதம் -* **ப்ரஹ்மாதிகளுடைய** *இத்யாதி. ஆகாசத்திலிருக்கிற ப்ரஹ்மாதிதேவர்களிற்காட்டில் பெரியவனே யிதி சப்தார்த்த:. அண்டம் - ஆகாசம். உம்பர் - தேவதைகள். மேலும், ‘கொண்டல்வண்ணா வண்டத்தும்பரில்நெடியானே’ என்று கூட்டி* ஸாவம் - **வடிவழகோபாதி** *இத்யாதி. ‘கிடக்கும்’ என்றதுக்கு வாஸனை -* **நெடியானே** *இத்யாதி வாக்யத்வயமும்.* **பாடோடிக்கிடக்கை** *- திரும்பமாட்டாதபடி ஒருபக்கமாகவே படுத்துக்கொண்டு கிடக்கை. அப்படிகிடந்தபேருண்டோ? என்ன,* **உக்த்வார்ய** *இத்யாதி.* “ஏவமுக்த்வா ஹிதோ ராஜ்யம் ராஜ்யவ்ருத்தோ ராமஹோதரம்” *இதி பூர்வார்த்தம். இதம் சித்ரகூடே ராமதர்ஶநாநந்தரம் பரத:. தீநமிதி க்ரியாவிசேஷணம். ‘கொடியவென்னெஞ்சம்’ என்கிற இது கொண்டாட்டமாகையாவது- பிறர் தோஷம்சொன்னாலும் அவனை விடாதே அவன்பக்கலிலே பற்றிக்கிடக்கப்பெற்றோமே இந்நெஞ்சென்று உபஶ்லோகித்துச் சொல்லுகை. ‘என்செய்வேன்’ என்கிறதென்? தமக்கு நோக்கவொண்ணாதோ? என்ன,* **பர்த்தாவே** *இத்யாதி* **வயிறுதாரி**-*குக்ஷிம்பரி. என்னெஞ்சமித்யாதி க்ரமேண அந்வய:* (க)

## இரண்டாம் பாட்டு.

நெஞ்சமேநீள்நகராக இருந்தவென்
தஞ்சனே! தண்ணிலங்கைக்கிறையைச்செற்ற
நஞ்சனே! ஞாலங்கொள்வான் குறளாகிய
வஞ்சனே! என்னும் எப்போதும்என்வாசகமே.

ஆ.—(நெஞ்சமே.) ஆஸ்ரிதஸமீஹித விரோதிநிரஸந ஸமர்த்தனாய் தத்ஸமீஹித நிர்வர்த்தநோபாயஜ்ஞனாயிருந்த நீ, நெஞ்சு உன்னை நினைக்க அருள்செய்தாற்போலே நானும் உன்னை நினைக்க அருள்செய்தருளவேணும் என்று எப்போதும் அலற்றாநிற்கும் என்வாசகம் என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், "உநஃவாஞெவெ-ாவாமாஜூரஃ" என்னும் கணக்காலே மநஸ்ஸுக்கு அநந்தரமான வாகிந்த்ரியத்தினுடைய சாபலத்தை அருளிச்செய்கிறார்.

[நெஞ்சமே நீள்நகராக இருந்த என்தஞ்சனே]- ஹ்ருதயத்தை இட்டளமில்லாத நகரமாகக் கொண்டிருந்த என்ஆபத்ஸகனே! நெஞ்சமேயென்கிற ஏவகாரம் வாக்கு மநோவ்ருத்தியை ஆசைப்பட்டமையை ஸூசிப்பிக்கிறது. ஸர்வேந்த்ரியவ்ருத்தியையும் ஆசைப்பட்டமைக்கு உபலக்ஷணம். இப்படி எல்லாப்பாட்டுக்களிலும் அநுஸந்திப்பது. [தண் இலங்கை என்று தொடங்கி]- ஆஸ்ரிதவிரோதிநிரஸநஸமர்த்தனாய் அவர்களுடைய அபேக்ஷிதம் முடிக்கும் விரகறியுமவனே!

ப.—அநந்தரம், அநிஷ்டத்தைக் கழித்து அநந்யார்ஹமாக்கும்படியை என்வாக்கு எப்போதும் சொல்லாநின்றது என்கிறார்.

என் வாசகம் - என் வாசகமானது, எப்போதும் - ஸர்வகாலமும், நெஞ்சமே - நெஞ்சையே, நீள் நகராக - பெரிய திவ்யநகரியாகக்கொண்டு, இருந்த - வர்த்திக்கையாலே, என் தஞ்சனே - எனக்கு நற்றுணையானவனே! தண் - (குளவிக்கூடு போலே ராக்ஷஸர்சேர்ந்த) தண்மையையுடைத்தான, இலங்கைக்கு - லங்கைக்கு, இறையை - நிர்வாஹகனான ராவணனை, செற்ற - முடித்த, நஞ்சனே- நஞ்சானவனே! (மஹாபல்யபிமாநத்தைக்கழித்து), ஞாலம் - பூமியை, கொள்வான் - அநந்யார்ஹமாக்கிக்கொள்ளுகைக்காக, குறளாகிய - வாமநவேஷனான, வஞ்சனே - க்ருத்ரிமனே! என்னும் - என்னாநிற்கும்.

ராவணனை யழித்தாற்போலே இந்த்ரியபாரவஸ்யத்தைத் தவிர்த்து, பூமியைக்கொண்டாற்போலே என்னை அநந்யார்ஹனாக்கவேணு மென்று கருத்து.

இ.—இரண்டாம்பாட்டில், "உநஃவாஞெவெ-ா வாமாஜூரஃ" என்று மநஸ்ஸுக்கு அநந்தரமான வாக்குத் தன்வ்ருத்தியையும் நெஞ்சின் வ்ருத்தியையும் ஆசைப்படாநின்றது என்கிறார்.

[நெஞ்சமே இத்யாதி] - வாகிந்த்ரியத்தின்வார்த்தை இருக்கிறபடி. அவதாரணத்தால் மநோவ்ருத்தியை வாக்கு ஆசைப்பட்டதென்கை. நெஞ்சின்பக்கலேயோ எப்போதும் இருக்கலாவது? என்பக்கலில் ஒருகால் இருந்தால் ஆகாதோ? [நீள்நகராக] - கலங்காப்பெருநகரில் இருக்கும் இட்டளம் தீரும்படியாயிற்று, இவர் திருவுள்ளத்திற் பரப்பு. [என் தஞ்சனே] - ஆபத்ஸகனே! விடாய்த்துக் கூப்பிடப்பண்ணின உபகாரம். ஸம்ஸாரிகள் விஷயாந்தரங்களைப்பற்றி

கூப்பிடாநிற்க, இவர் இவ்விஷயத்திலே கூப்பிடுகிறது, நெஞ்சிலேயிருக்கையிறே. [தன்இலங்கை இத்யாதி] - கட்டளைப்பட்ட லங்கைக்கு இறைவனான ராவணனை நிரஸித்து அவனுக்கு நஞ்சான வனே! "[illegible]" என்று பரமவிரக்தனான திருவடியும் மதித்த ஐஸ்வர்யமிறே. [ஞாலம் இத்யாதி] - ராவணனைப்போலே மஹாபலியைத் தலையை அறு விட்டது உதாரனாகையாலே; அவனாலே அபஹ்ருதையான பூமியை மீட்கைக்கு விரகறியுமவனே! ஸர்வாதிகனான தன்னை அர்த்தியாக்கி இந்த்ரனுக்கு ராஜ்யத்தை வாங்கிக்கொடுத்த விரகு. [வஞ்சனே] - சிறுகாலாலே மூவடியென்று வேண்டிப் பெரிய காலாலே இரண்டடியிலே அடக்கின வஞ்சநம். 'கொள்வான்' என்கிறார், இந்த்ரன்பேறு தன்பேறாயிருக்கையாலே. அவ்வஞ்சநத்தையே ஸர்வகாலமும் சொல்லாநின்றது என்வாக்கானது. அவ்வஞ்சநத்தை அநுஸந்தித்தபின்பு ராமாவதாரத்தில் செவ்வையிலும் போகிறதில்லை. ஸ்வரூபம் அழியாமே செய்த இடமிறே அவ்வவதாரம்; தன்னை அழியமாறின இடமிறே இது. [எப்போதும்] - கலியர் "சோறு சோறு" என்னுமா போலே.

ஈடு.—இரண்டாம்பாட்டு. "[illegible]" (மநஃபூர்வோவாகுத்தர:) என்று மநஸ்ஸுக்கு அநந்தரமான வாக்கு மநோவ்ருத்தியையும் தன் வ்ருத்தியையும் ஆசைப் படாநின்றது என்கிறார்.

[நெஞ்சமே இத்யாதி] - வாக்கின் வார்த்தை இருக்கிறபடி. என்றும் நெஞ்சிலேயிருந்து போமித்தனையோ? என்பக்கலும் ஒருகா லிருக்கலாகாதோ? என்னாநின்றது. அவதாரணத்தாலே- இந்த்ரியாந்தரங்கள், பரமபதம், க்ஷீராப்தி தொடக்கமான இடங்கள் என்படுகிறதோ? "கல்லுங் கனைகடலும் வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தனகொ லேபாவம்" என்னுமாபோலே, பரமபத மும் அவ்விருப்பும் என்படுகிறதோ! கலங்காப் பெருநகரத்திற் பண்ணும் ஆதரத்தை இதிலே பண்ணாநின்றான். பரமபதத்தில் இட்டளமும் தீர்ந்தது இங்கேயாயிற்று. மநஸ்ஸை இட்டளமில் லாத நகரமாகக்கொண் டிருந்தான். இல்லையாகில், மறந்துகூப்பீடு மாறுமிறே. [என் தஞ்சனே]-

---

இரண்டாம்பாட்டு- நெஞ்சமே இத்யாதி. நெஞ்சுக்கநந்தரம் வாக்கைச்சொன்னதுக்கு பாவம்-மநஃபூர்வ இத்யாதி. யஜுஸ்ஸீயம் ஶ்ருதி:.

வாக்கின் வார்த்தையை உபபாதிக்கிறார்- என்றும்நெஞ்சிலே இத்யாதி. அர்த்தாந்தரம் - அவதாரணத் தாலே இத்யாதி. இது-வ்யாக்யாநத்திலே வ்யக்தம். ஏகாரத்தமென்றே நிர்வஹிப்பது. ப்ரமாணகதநமுகேந கீழ் வாக்ய விவரணம்-கல்லும் இத்யாதி. பெரிய திருவந்தாதி, அறுபத்தெட்டாம்பாட்டு. திருமலையும், ஸ்வஸந்தா நத்தாலே கோஷிக்கிற கடலும், வைகுண்ட ஶப்தவாச்யமான போகபூமியும் இவன் ஸந்நிதியில்லாமையாலே புல் லியவாய்ப் போய்விட்டன; ஏபாவம் - என்னே பாவம்! தம்முள்ளே அவன் புகுந்துபோகமாட்டாதே நிற்கிற படியைக் கண்டு,ஹ்ருஷ்டராய் என்னேபாவம்! என்கிறாரென்று பாகசார்த்தம். புல்லெனல்-அழகழிதல்; "புல்லெ னன்மழுங்கல் பொலிவழிதலாகும்"(திவாகரம்)என்னக்கடவதிறே.'நகர்' என்றதுக்கு பாவம்-கலங்காப்பெருநக ரத்தில் இத்யாதி. கலங்காப் பெருநகர்-பரமபதம். நீட்சிக்கு பாவம் -பரமபதத்தில் இத்யாதி. இட்டளம்-ஸங் கோசம். மநஸ்ஸை நீணகராகக்கொண்டா னென்று தான் அறிந்தபடி எங்ஙனே? என்ன, இல்லையாகில் இத் யாதி. அதாவது - நெஞ்சிலேயிருக்கையாலே யன்றோ வாக்குக் கூப்பிடாநின்றது என்றபடி. 'கரணங் கள் தனித்தனியே சேதநஸமாதியாலே கூப்பிடுகிறனவாகச் சொல்லுகிற ப்ரகரணத்துக்கு, அவன் நெஞ்சிலேயிருக்கையாலே வாக்குக் கூப்பிடுகிறதென்கை விருத்தமாகையாலே, இவ்வாக்யம் - ஸந்திக்தம்' என்பர். யத்வா, நெஞ்சிலேயிருந்தானில்லையாகில் மறந்து நெஞ்சுக்குக் கூப்பீடு மாறுமிறே என்றபடியாதல். கார்யாத்காரணமுந்நேய மென்றபடி. 'என்தஞ்சனே' என்றது - வாக்கின் வார்த்தையாயிருக்க, ஆழ்வார்வார்த் தையாக அருளிச்செய்ததும் ஸந்திக்தம். அன்றிக்கே, 'சைதந்யப்ரஸ்ருதித்வாரமான கரணங்கள் விடாய்க்கை யாவது என்?என்னில்,—ஆழ்வாருடைய அபிநிவேஶாதிஶயத்தைச் சொன்னபடி என்ற பரிஹாரவாக்யத்துக்குச்

இப்படி கூப்பிடப்பண்ணின உபகாரகத்வத்தை நினைத்துச் சொல்லுகிறார். ஸம்ஸாரிகளில் இப்படி கூப்பிடுகிறு ரில்லையிறே. இவர் நெஞ்சிலே யிருக்கையிறே இவ்விஷயத்திற் கூப்பிடுகிறது. [தண் இலங்கை இத்யாதி] - கட்டளைப்பட்ட லங்கைக்கு இறைவனை ராவணனை நிரஸித்து அவனுக்கு நஞ்சானவனே! ஒன்றுக்கும் விக்ருதனாகாத திருவடியும் லங்கையில் கட்டளையைக் கண்டு "அஹோவீர்யமஹோதைர்யமஹோஸத்த்வமஹோத்யுதி:" (அஹோவீர்ய மஹோ தைர்ய மஹோஸத்த்வ மஹோத்யுதி:) என்று மதித்த ஐஶ்வர்யமிறே. தண்மையாலே - கட்டளைப் பாட்டை லக்ஷிக்கிறது. [ஞாலம் இத்யாதி] - மஹாபலியாலே அபஹ்ருதையான பூமியை மீட் கும் விரகறியுமவனே! ராவணனைப்போலே தலையை அறுவிட்டது, ஔதார்யமென்பதொரு குண லேஶ முண்டாகையாலே. 'இவன் கையிலே ஒரு தர்மாபாஸ முண்டாயிருந்தது' என்று இவனை அழியாதே, ஸர்வாதிகனை தன்னை அர்த்தியாக்கி இந்த்ரனுக்கு ராஜ்யத்தை வாங்கிக்கொடுத்த விரகு. [வஞ்சனே] - கள்ளக்குறளாய் மாவலியை வஞ்சித்து, சிறுகாலைக் காட்டி 'மூவடி' என்று வேண்டிப் பெரிய காலாலே அளந்து, இரண்டடியிலே அடக்கி ஓரடிக்குச் சிறையிலே யிட்டுவைத்த வஞ்சநம். 'கோள்வான்' என்கிறார், இந்த்ரன்பேறு தன் பேறாகையாலே. இவ்வஞ்சநத்தையே ஸர்வகாலமும் சொல்லாநின்றது என் வாக்கானது. இவ்வஞ்சநத்தை அநுஸந்தித்தபின்பு ராமாவ தாரத்தின் செவ்வையிலும் போகிறதில்லை; தன்பெருமை அழியாமற் செய்த இடமிறே ராமாவதாரம்; தன்பெருமையை அழிய மாறின இடமிறே இது. [எப்போதும்]- கலியர் 'சோறு சோறு' என்னுமா போலே. (௨)

## மூன்றாம் பாட்டு.

வாசகமேயேத்த அருள்செய்யும்வானவர்தம்
நாயகனேஎ! நாளிளந்திங்களைக்கோள்விடுத்து
வேயகம்பால் வெண்ணெய்தொடுவுண்ட ஆனாயர்
தாயவனேஎ! என்று தடவும்என்கைகளே.

*சோ, கரணங்களுக்கும் ஆழ்வார்க்கும் பேதமில்லாமையாலே அபேதத்தை விவக்ஷித்து இப்படி அருளிச்செய் கிறா ரென்று விரோதபரிஹாரம் பண்ணவுமாம். மேலும் இப்படி விருத்தமான வாக்யங்கள் உண்டாகில், இப் படியே பரிஹாரம் கண்டுகொள்வது. கூப்பிடப்பண்ணுகை உபகாரமோ? என்ன, ஸம்ஸாரிகளில் இத்யாதி. இல்லையாகில் இத்யாதி வாக்யத்தில் - வ்யதிரேகத்தாலே உபபாதிதமான அர்த்தத்தை, அந்வயமுகேந த்ருடீகரிக்கிறார்-இவர்நெஞ்சிலே இத்யாதி. 'தண்' என்று - அழகாய், கட்டளைப்பாட்டைச் சொல்லுகிறது. அப்படி கட்டளைப்பாடுடைத்தாயிருக்குமோ? என்ன, ஒன்றுக்கும் இத்யாதி. "அஹோ ராக்ஷஸ ராஜஸ்ய ஸர்வலக்ஷணயுக்ததா" இத்யுத்தரார்த்தம். ஸுந்தரகாண்டே ராவண ஸமீபகத ஹநூ மத்வாக்ய மிதம். 'வஞ்சனே' என்றதால் - விரகறியுமவனே என்றது. வஞ்சனையென்று - விரகாதல், வஞ்சனையாதல். ஒருவிரகறியவேணுமோ, விக்ரஹித்து வாங்க வொண்ணாதோ? என்ன, ராவணனைப் போலே இத்யாதி. விரகேது? என்ன, இவன் கையிலே இத்யாதி. ஒரு தர்மாபாஸமாவது - ஔதார்யம். 'வஞ்சனே' என்றதுக்கு ஸாவம்--'கள்ளக்குறளாய்' இத்யாதி. திருமொழி-அஞ்சாம்பத்து.அறிவதில், இரண்டாம் பாட்டு. க்ருத்ரிமமான வாமநவேஷத்தை யுடையனாய் மஹாபலியை வஞ்சித்து இதி பாசுரார்த்த:. கொண்டு கொடுப்பா னென்னாதே, 'கொள்வான்' என்கிற தென்?என்ன, கோள்வானேன்கிறார் இத்யாதி. 'வாசகமே' என்கிற ஏவகாரத்தை வஞ்சநத்திலே கூட்டி ஸாவம் - இவ்வஞ்சநத்தை இத்யாதி. ஏவகாரவ்யாவர்த்யமாஹ- இவ்வஞ்சநத்தை யநுஸந்தித்த இத்யாதி. இவ்வாக்யம் - "இலங்கைக்கிறையைச் செற்ற" என்றத்தைப்பற்ற. ராமாவதாரத்திலே வாசியேது? என்ன, தன்பெருமை இத்யாதி. கலியர் - பசியர். என்வாசகம் - எப்போதும் - ௐமே இத்யாரப்ய, என்னுமித்யந்வய:.* (௨)

**ஆ.**—(வாசகமே.) வானவர்தம் நாயகனுப் வைத்து வாசகமேயேத்த அருள்செய் தருளினாற்போலே, அபிநவபூர்ண சந்த்ரகிரணம்போலே திருமுத்தினொளி புறப்படும்படி திருப் பவளத்தைத் திறந்து, வெண்ணெய் தொடுவுண்ட உன்னுடைய அவ்வழகை நாலும் ஏத்தும்படி அருள்செய்யவேணும் என்று தடவும் என்கைகள் என்கிறார்.

**ஒ.**—மூன்றாம்பாட்டில், தம்முடைய கைகளுக்குத் தனக்கு அடைத்த வ்ருத்தியிலும் வாக்வ்ருத்தியிலும் அகப்பட உண்டான சாபலத்தை அருளிச்செய்கிறார்.

[வாசகமேயேத்த அருள்செய்யும் வானவர்தம் நாயகனே] - அபர்வருமமரர்களுக்கு அதிபதியாய்வைத்து வாக்குக்கே ஸ்துதிஸாமர்த்யத்தைத் தந்தாய்; அப்படி நாங்களும் ஏத்தும்படி பண்ணவேணு மென்று கைகளுக்குக் கருத்து. [நாள் இளந்திங்கள் என்று மேலுக்கு] - இடைய ருடைய மூங்கிற்குடில்களிலே வெண்ணெய்களவுகாணப்புக்கு வெண்ணெயைப் பெற்ற ப்ரீதிப்ரகர் ஷத்தாலே பூர்ணனாய், நாளால் இளையனான சந்த்ரனைப்போலே யிருக்கிற திருமுத்தின் ஒளி புறப் படும்படியாக ஸ்மிதம்பண்ணி வெண்ணெயமுதுசெய்து ஆனாயர்பக்கல் தாய்போலே பரிவனான வனே!

**ப.**—அநந்தரம், ஆஶ்ரிதவ்யாமோஹத்தாலே அவர்கள்பதார்த்தங்களை விரும்பும்படி யான க்ருஷ்ணனை என்கைகள் ஆராயாநின்றன என்கிறார்.

வாசகமே - வாசகமே, ஏத்த - ஏத்தும்படி, (அதுக்கே), அருள்செய்யும் - அருளைச் செய்யுமவனாய், வானவர்தம் - (அத்தாலே) ஸூரிகளுங் கொண்டாடும்படி, நாயகனே - நிர்வாஹக னானவனே! நாள் - அபிநவனாய், இளம் திங்கள் - இளையனான உதயசந்த்ரனுடைய, கோள் - (அநு ரக்தமான) தேஜஸ்ஸை, விடுத்து - (விரிக்குமாபோலே அதரஶோபாவிஶிஷ்டமான ஸ்மிதசந்த்ரி கையை) ப்ரகாசிப்பித்து, வேயகம்பால் - மூங்கிற்குடிலின் அகவாயிலே வைத்த, வெண்ணெய் - வெண்ணெயை, தொடு உண்ட - களவுகண்டு அமுதுசெய்தத்தாலே, ஆனாயர் - இடையருடைய, தாயவனே - ஸத்தாதிகளுக்கு வர்த்தகனானவனே! என்று - என்று, என்கைகள் - என்கைகளான வை, தடவும் - (களவுகாணப்புக்கவிடத்தே) தடவிப் பிடிக்கத் தேடாநின்றன.

நாள் - புதுமை. இளமை - உதயாவஸ்தை. கோள் - ஒளி. விடுத்தல் - விரித்தல். நாளிளந் திங்களைக் கோள்விடுத்தென்று - உபமாநமுகத்தாலே உபமேயமான ஸ்மிதத்தை லக்ஷிக்கிறது.

**இ.**—மூன்றாம்பாட்டில், கைகளானவை வாக்வ்ருத்தியையும் தன்வ்ருத்தியையும் ஆசைப்படாநின்றது என்கிறார்.

[வாசகமே இத்யாதி] - கைகளின் வார்த்தை இருக்கிறபடி. இவ்வாக்கே ஏத்திப்போ மித்தனையோ? நான் ஒருகால் ஏத்தினால் ஆகாதோ? என்னாநின்றது. "தஸ்மிந் ராஶோவிவந்த்வஃ" என்கிறபடியே நித்யஸூரிகள் ஏத்த இருக்கிற உனக்கு வாக்கு ஏதேனும் பச்சையிட்டது உண்டோ? நித்யஸூரிகளைப்போலே வாக்குக்கு ஏத்துகையே ஸ்வபாவமாகக்கொடுத்தவன் என்னுதல், நித்யஸூரிகளைப்போலே எனக்கும் ஏத்துகையே ஸ்வபாவமாகவேணும் என்னுதல். [நாள் இத் யாதி] - நாளால் இளையனான சந்த்ரனைப்போலே; அபிநவமான சந்த்ரனைப்போலே யென்கை. [கோள்] - ஒளி. திருமுத்தின் ஒளி புறப்படும்படி ஸ்மிதம்பண்ணி. [வேய் இத்யாதி] - இடைய ருடைய மூங்கிற்குடில்களிலே வெண்ணெய்களவுகண்ட. இடைச்சிகள் மறையச் சேமித்துவைத்த வெண்ணெயைக் களவுகாணப்புக்கு நிறத்தின் இருட்சியாலும் அவ்விடத்தில்இருளாலும் தெரி யாமையாலே தடவ ஸாக்யவசத்தாலே கையிலேதட்டின ஹர்ஷத்தாலே ஸ்மிதம்பண்ணி அதுவே கைவிளக்காக வெண்ணெய் அமுதுசெய்யும் என்கை. [ஆனாயர் இத்யாதி] - இடையருக்குத்

தாய்போலே பரிவனானவனே! [என்று தடவும் என்கைகளே] - அவன் வெண்ணெய் களவுகாணப் புக்கவிடத்தே வழியைக் கட்டிப் பிடித்துக்கொள்ளத் தேடாநின்றது என்கைகள். நவநீதசௌர்ய வ்ருத்தாந்தத்தை அநுஸந்தித்தவாறே கைகளுக்குக் கண் தோற்றுகிறதில்லை என்னவுமாம். "ராமம் மேகநாதமதாஜ்யஷி:".

ஈடு.—மூன்றாம்பாட்டு. கைகளானவை வாக்வ்ருத்தியையும் தன் வ்ருத்தியையும் ஆசைப்படாநின்றன என்கிறார்.

[வாசகமே ஏத்த இத்யாதி] - கைகளானவை-'இவ்வாக்கே யேத்திப் போமித்தனையோ? நானும் ஒருகால் ஏத்தின லாகாதோ?' என்னாநின்றது. "விபர்யய:" (விபர்யய:) என்கிற படியே நித்யஸூரிகள் ஏத்த இருக்கிற உனக்கு, வாக்கு ஏதேனும் பச்சையிட்டதுண்டோ? நித்ய ஸூரிகளைப்போலே வாக்குக்கு உன்னையேத்துகையே ஸ்வபாவமாகக் கொடுத்தவ னென்னுதல். நிரபேக்ஷனா யிருக்கச் செய்தேயன்றோ வாக்குக்கு ஏத்தலாம்படி ஸாபேக்ஷனாயிற்று; அந்த நைர பேக்ஷ்யம் என்பக்கலிலே யாயிற்றே? [நாளிளந்திங்களைக் கோள்விடுத்து] - படலடைத்த சிறு குரம்பை நுழைந்து புக்குப் பசுவெண்ணெய் களவுகாணப் புக்கவிடத்திலே—உறிகளிலே சேமித்து வைப்பர்களிறே; தன்நிறத்தின் இருட்சியாலும் அவ்விடத்தின் இருட்சியாலும் தெரியாமையாலே தடவாநிற்கச்செய்தே, கையிலே வெண்ணெய்த்தாழிகள் தட்டின ப்ரியத்தாலே ஸ்மிதம் பண்ணு மிதுவே கைவிளக்காக அமுதுசெய்யுமாயிற்று. ஆள் தட்டிற்றாகில் வாயை மூட அமையுங்காணும்; ஆள்தட்டுகைதான் அபிமத மாகையாலே ஸ்மிதம் மாறுமே. பின்னை ஸ்ரீ கௌஸ்துபத்தைக் கையாலே புதைக்க அமையுமே. அபிநவசந்த்ரனைப் போலேயாயிற்று முறுவல் இருக்கிறது. "சேக் கரிடை நுனிக்கோம்பில் தோன்றும் சிறுபிறை முளைப்போல் நக்க செந்துவர்வாய்த்திண்ணைமீதே நளிர் வெண்பல் முளையிலக" என்னக்கடவதிறே. திங்கள்போ லென்னாதே, திங்களென்றது -

---

மூன்றாம்பாட்டு - வாசகமே இத்யாதி. 'வாசகமேயேத்த - தாயவனே என்று தடவும்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - கைகளானவை இத்யாதி.

அவதாரணார்த்தம் - கைகளானவை இத்யாதி. அருள்செய்யும் நாயக னென்னாதே 'வானவர்தம் நாயகனே' என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம். முந்தினது - விபர்யய: இத்யாதி. நித்யஸூரிகளேத்த நிரபேக்ஷனாய் இருக்கிற உனக்கு என்றபடி. த்விதீயதாத்பர்யம் - நித்யஸூரிகளைப்போலே இத்யாதி. இந்த யோஜனையில், 'வாசகமேத்தவே - அருள்செய்யும்' இத்யந்வய:. ஏத்தவே - ஏத்துகையே ஸ்வபாவமாக. ப்ரத மார்த்தவ்வரணம் - நிரபேக்ஷனாய் இத்யாதி. வெண்ணெய் தொடுவுண்கிற வளவிலே நாளிளந்திங்களைக் கோள்விடுக்கைக்கு ப்ரஸக்தி யேது? என்ன, படலடைத்த இத்யாதி. அன்றிக்கே, பதாவதாரிகையா தல். காணப்புக்கவிடத்திலே - தட்டின இத்யந்வய:. திருமொழி - நாலாம்பத்து - நாலாந்திருமொழி - மூன்றாம் பாட்டு, 'படல்' இத்யாதி. படலாலேயடைத்துவைத்த சிற்றகங்களிலே படலைத்திறந்து நுழைந்துபுக்கு அன்றுகடைந்த செவ்விய வெண்ணெயிதி பாசுரார்த்த:. அமுதுசெய்யும்போது ஆரேனும்வந்தாலோ? என்ன, ஆள்தட்டிற்றாகில் இத்யாதி. ஸ்மிதம்பண்ணாநிற்க, வாயைமூடும்படியென்? என்ன, ஆள்தட்டுகைதான் இத் யாதி. ஆனால் கௌஸ்துபமுண்டே என்ன, பின்னை இத்யாதி. நாளால் இளைய சந்த்ரனைப்போலே யிருக்கிற திருமுத்தினொளி புறப்படும்படி ஸ்மிதம்பண்ணி யிதி சப்தார்த்த:. கோள் - தேஜஸ்ஸு. விடுக்கை - ப்ரவ ஹிப்பிக்கை; ஸ்மிதம்பண்ணி யென்றபடி. 'திங்களை' என்கிற ஐகாரம் - அவ்யயம். திங்களினுடைய என்ற படி. அப்படி அபிநவசந்த்ரனைப்போலே யிருக்குமோ? என்ன, சேக்கரிடை இத்யாதி. பெரியாழ்வார்திரு மொழி-எட்டாந்திருமொழி-இரண்டாம்பாட்டு: செக்கர்வானத்திடையிலே பாகாக்ரத்திலே தோன்றும்படி உந் நேயமான பாலசந்த்ராங்குரம்போலே ஸ்மிதம்பண்ணுகிற மிகச்சிவந்திருந்துள்ள திருவதரமாகிற உயர்ந்தநிலத் தின்மேலே குளிர்ந்து வெளுத்திருக்கிற திருமுத்தின் அங்குரத்தினுடைய தேஜஸ்ஸானது ப்ரகாசிக்கவென்று பாசுரார்த்தம். செக்கர் - செவ்வானம். பிறை - பாலசந்த்ரன். நக்க - ஸ்மிதம்பண்ணுகிற. 'செம்' என்றும் 'துவர்' என்றும் - சிவப்பாகையாலே, மிகுதியைச் சொல்லுகிறது. நளிர் - குளிர்த்தி. முற்றுவமைக்கு உதா

முற்றுவமை யிருக்கிறபடி; "தாவி வையங்கொண்ட தடந்தாமரை" என்னுமாபோலே. [கோள் விடுத்து]-தேஜஸ்ஸைப் புறப்படவிட்டு திருவதரம் மறைக்குமத்தைத் தவிருகை. [வேயகம்]-மூங்கி லாலே சமைந்த அகம். [பால்வெண்ணெய் தொவுண்ட] - அவ்வகங்களில் பாலையும் வெண் ணெயையும் களவுகண்டு அமுதுசெய்த. அகத்திடத்து வெண்ணெ யென்றுமாம். [வேயகம்பால் வெண்ணெய் தொவுண்ட] - வேய்த்தகத்திடத்து வெண்ணெயைக் களவு கண்டு அமுது செய்த என்றுமாம். வேய்த்து - அவஸரம்பார்த்து. வேய்த்திறே களவு காண்பது; "போரார்வேல்" இத்யாதி. [ஆயர்தாயவனே என்று] - ஆயர்க்குத் தாய்போலே பரிவனானவனே என்று. [தட வும் என்கைகள்] - படலையடைத்து உள்ளேபுக்குக் கொண்டியிலே பிடிக்கக் காணுந் தேடுகிறது. நவநீதசௌர்ய வ்ருத்தாந்தத்தை அநுஸந்தித்தவாறே கைகளுக்குக் கண் தோற்றுகிறதில்லை, "ராமம் மேநுகதா த்ருஷ்டி:" (ராமம் மேநுகதாத்ருஷ்டி:) இத்யாதி. - கடல் கொண்ட வஸ்து மீளுமோ? அறுபதினாயிரமாண்டு மலடு நின்று பட்டினிவிட்ட என்கண்கள் மீளுமோ? நல்லது கண்டு கால்தாழ்ந்தத்தை, இனி நம்மது என்று வழக்குப்பேசினால் பசையுண்டோ? "அத்யாபி" (அத்யாபி) - தன்னைக்கொண்டு கார்யங்கொள்ளவேண்டும் இற்றைக்கும் உதவுகிறதில்லை. அவ ரைக் காணவிட்டால், அவரைப்பெற்ற ஸௌபாக்யமுடைய உன்னைக் கண்டு தரிக்கவேண்டும் இவ்வளவிலும் மீளுகிறதில்லை. (௩)

## நான்காம் பாட்டு.

கைகளாலாரத்தொழுதுதொழுது உன்னை
வைகலும்மாத்திரைப்போதும் ஓர்வீடின்றிப்
பைகொள்பாம்பேறி யுறைபரனே! உன்னை
மெய்கொள்ளக்காண விரும்புமென்கண்களே.

ஆ.—(கைகளாலார.) பைகொள்பாம்பேறியுறை பரனே! உன்னை ஒரு க்ஷணமாத்ரமும் ஒழியாமே எப்போதும் கைகளாலே ஆரத்தொழுது, மெய்கொள்ளக்காண விரும்பாநிற்கும் என் கண்கள் என்கிறார்.

---

ஹரணம் - தாவி இத்யாதி. பூமியை யளந்துகொண்ட விஸ்த்ருதமான தாமரைபோன்ற திருவடிகளிதி சப் தார்த்த:. தாமரையென்று உபமேயம் லுப்தமாய் உபமாநமாத்ரமே சொல்லுகையாலே, முற்றுவமை யென் கிறது. முற்றுவமை - பூர்ணோபமை. 'வேய்' என்று - மூங்கிலென்னுதல்; வேய்த்தென்னுதல். வேய்த்து - வேயைப்பார்த்து, வேவுபார்த்தென்றபடி. பாலென்று - க்ஷீரமாதல், இடமாதல். அகம் - க்ருஹம். தொடு வுண்ட - திருடியுண்ட. தொடுவு - களவு. களவுகண்டு - திருடியென்றபடி. வேவுபார்க்கவேணுமோ? என்ன, வேய்த்திறே இத்யாதி. தடவுகிறது - கொண்டியிலே பிடிக்கைக்காக வென்னுதல், கண்தெரியாமையாலே யென்னுதல். இவ்வர்த்தத்வயமும் - வ்யாக்யாநத்திலே விஶதம். இவ்வர்த்தத்வயத்தையும் அடைவே அருளிச் செய்கிறார் - படலையடைத்து இத்யாதி வாக்யத்வயத்தாலே. படல் - தடுக்கு. கொண்டியிலே - களவிலே. பிடித்துக்கொள்ளவொண்ணுமோ? தடவவேணுமோ? என்ன, நவநீத இத்யாதி. ஈடுபாட்டாலே கண்தோற்று மைக்கு ஸம்வாதம் - ராமம் இத்யாதி. "ராமம் மேநுகதா த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே। நகஸா வஸ்யாதிகௌஸல்யே வாணி நாஸ்ப்ருஶ" இத்யயோத்யாகாண்டே த்விசத்வாரிம்ஶே கௌ ஸல்யாம்ப்ரதி தஶரத:. 'ராமம்' என்றதுக்கு பாவம் - கடல்கொண்ட இத்யாதி. 'மே' என்றதுக்குத் தாத் பர்யத்வயம் - அறுபதினாயிரமாண்டு இத்யாதி வாக்யத்வயமும். பசை - ப்ரயோஜநம். விவரணம் - அவரை இத் யாதி. "வாணி நாஸ்ப்ருஶ" என்றதுக்கு - ஸ்பர்ஶநேந்த்ரியமுண்டோ? இல்லையோ? தொட்டுப்பார் என் றத்தை நினைப்பது. என்கைகளித்யாதி க்ரமேண அந்வய:. (௩)

ஒ.—நாலாம்பாட்டில், கண்களானவை 'கைகளுடைய பரிமாற்றமும் வேணும், ஸ்வவ்ருத்தியான தர்ஶநமும் வேணும் என்னுநின்றன' என்கிருர்.

[கைகளால் என்று தொடங்கி] - விடாய்தீரும்படி கைகளாலே உன்னை மிகவும்தொழுது என்றும் ஒருக்ஷணமும் இடைவிடாதே. [பைகொள் என்று தொடங்கி] - உன்னுடைய ஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே யுறைகையாலே அதிஶ்லாக்யனுயுள்ளவனே! உருவெளிப்பாடுபோலன்றியே மெய்யாகக்காணவேணுமென்று விரும்பாநிற்கும்.

ப.—அநந்தரம், இவ்வவதாரமூலமான அநந்தசாயியைக் காண ஆசைப்படாநின்றது என் கண்கள் என்கிருர்.

என் கண்கள் - என் கண்களானவை, கைகளால் - கைகளாலே, உன்னை - உன்னை, ஆர தொழுதுதொழுது - பரிபூர்ணமாகப் பலகாலுந் தொழுது, வைகலும் - காலதத்த்வமுள்ளதனையும், ஓர் மாத்திரைப்போதும் - ஒரு க்ஷணமாத்ரமும், வீடு இன்றி - விடாதே, பைகொள் - விரிகிற பணங்களை யுடைய, பாம்பு ஏறி உறை - திருவநந்தாழ்வான்மேலே நித்யவாஸம்பண்ணுகிற, பரனே - பரமபுருஷியே! உன்னை - உன்னையே,மெய்கொள்ள காண - அபரோக்ஷித்துக் காணவேணுமென்று, விரும்பும் - ஆசைப்படாநின்றன.

கண்கள் கையாலேதொழுகையாவது - அதினுடைய வ்ருத்தியிலும் அந்வயிக்கத் தேடுகை. பை - பணம்.

இ.—நாலாம்பாட்டில், கண்களானவை கைகளின்வ்ருத்தியையும் ஸ்வவ்ருத்தியான தர்ஶநத்தையும் ஆசைப்படாநின்றது என்கிருர்.

[கைகளால்] - தொழுகைக்காகக் கண்ட கைகளால். [ஆர] - பசியர் வயிறுநிறைய உண்ணவேணுமென்னுமாபோலே. வீப்ஸையாலே தொழுகைதானே ப்ரயோஜநம் என்கை. ஒரு ப்ரயோஜநத்துக்குத் தொழில் அநுகிட்டினவாறே தவிரும். அநந்யப்ரயோஜந னுனுலும் ஸாதநபுத்த்யா தொழில் ஸாத்யஸித்தியளவிலே மீளும். இதுதானே ப்ராப்ய மாகையாலே நித்யமாயிருக்கும்; "நித்யாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா:" என்னக் கடவதிறே. [உன்னை] - அஞ்சலிக்குவகுத்த உன்னை. இத்தலை தொழுதல்லது தரிக்கமாட்டாதாப்போலே தொழுவித்துக்கொண்டல்லது தரிக்க மாட்டாத உன்னை. [வைகலும் இத்யாதி] - ஸர்வகாலமும் ஒருக்ஷணமும் இடைவிடாதே; நித்யாக்நிஹோத்ரவ்யாவ்ருத்தி. [பைகொள் இத்யாதி] - இப்படி தொழுகைக்கு அடியான ஸர்வாதிகத்வமும் ஸ்ப்ருஹணீயத்வமும் சொல்லுகிறது. ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே நித்யவாஸம் பண்ணுகையாலே தகட்டிலழுத்தின மாணிக்கம் போலே ஸ்ப்ருஹணீயமாயிருக்கை. "அநந்தஶாயீ" என்கிறபடியே ஸர்வாதிகத்வம் சொல்லிற்றுகவுமாம். [உன்னை] - இப்படி ப்ராப்தனுய் போக்யனுன உன்னை. [மெய்கொள்ள இத்யாதி] - மாநஸாநுபவமாத்ரமாய் பாஹ்யஸம்ஶ்லேஷத்துக்கு எட்டாதொழிகையன்றிக்கே மெய்யாகக் காணவேணு மென்று விரும்பாநின்றன.

ஈடு.—நாலாம் பாட்டு. கண்களானவை கைகளின்வ்ருத்தியையும் ஸ்வவ்ருத்தியையும் ஆசைப்படாநின்றது என்கிருர்.

---

நாலாம்பாட்டு - கைகளால் இத்யாதி. 'கைகளால்ஆரத்தொழுது, காணவிரும்பும்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - கண்களானவை இத்யாதி.

**[கைகளால்]** - காமிநியாய் முலையெழுந்துவைத்துக் காந்தனுடைய கரஸ்பர்சம்பெறாத வோபாதியிறே இவற்றுக்குத்தொழாதொழிகை. கைவந்தபடி செய்யவிறே இவர் ஆசைப்படுகிறது; **"தேஹஸம்பத்திரீச்வராய"** (தேஹஸம்பத்திரீச்வராய) இறே. [ஆரத்தொழுது] - 'பசியர் வயிறாவுண்ண' என்னுமாபோலே, 'உன்னைத்தொழவேணும்' என்று ஆசைப்பட்டுப் பெறாமையாலே யுருவிக்கிடக்கிற இக்கைகளானவை நிறையத் தொழுது. வாய்வந்தபடிசொல்லவும், கைவந்தபடி செய்யவுமிறே இவர் ஆசைப்படுகிறது. வாய்க்குஏத்துகையோபாதியிறே கைக்குத் தொழுகையும். [தொழுதுதொழுது]-ப்ரயோஜநாந்தரத்துக்காகத்தொழில் ப்ரயோஜநத்தளவிலே மீளும்;ஸாதநபுத்த்யா தொழில் ஸாத்யம் ஸித்தித்தவளவிலே மீளும்; அங்ஙனன்றிக்கே, இதுவே யாத்ரையாய். **"முக்தாநாம்லக்ஷணம்ஹ்யேதத்"** (முக்தாநாம்லக்ஷணம்ஹ்யேதத்) என்று - முக்தர்க்கு லக்ஷணஞ் சொல்லுகிறவிடத்தில் ச்வேதத்வீபவாஸிகள் படியாகச் சொல்லி, அவர்களையிறே **"நித்யாஞ்ஜலிபுடா:"** (நித்யாஞ்சலிபுடா:) என்கிறது. **"ஹ்ருஷ்டா:"** (ஹ்ருஷ்டா:) - பசியிலே யுண்ணப் பெற்றாற்போலேயாயிற்று, தொழுதால் இருக்கும்படி. **"நமஇத்யேவவாதிந:"** (நமஇத்யேவவாதிந:)- இதுவே சீலமாயிருக்கை.[உன்னை]-இத்தலைதொழுது ஸத்தைபெறுமாபோலே,தொழுவித்துக் கொண்டு ஸத்தைபெறும் உன்னை. கைவந்தபடிசெய்யச்சொல்லிவிட்ட உன்னை,ப்ராப்தனானஉன்னை; **"ஸேவாச்வவ்ருத்தி:"** (ஸேவாச்வவ்ருத்தி:) இறே புறம்பு தொழுவது. தொழுதல்லது தரியாத கையாலே தொழுவித்துக்கொண்டல்லது தரியாத உன்னை. [வைகலும் இத்யாதி] - நாள்தோறும் அதுதன்னிலும் ஒருக்ஷணமும் இடைவிடாதே. ஒருநாளைக்கு ஒருகால் தொழுது தேவையற்றிராதே, இடைவிடாதே தொழுது. நித்யாக்நிஹோத்ராதிகளோபாதியாகப் போராது. [பைகொள் இத்யாதி] - தொழுவித்துக்கொள்ளுகைக்கு ஈடான * உச்ச்ராயத்தையும், † ஸ்ப்ருஹணீயதையையும், தொழுமவர்களிருக்கும்படியையும் சொல்லிற்று. திருமேனியோட்டைஸ்பர்சத்தாலே விகஸித

---

*தொழுவது கைகளாலே யாயிருக்க, 'கைகளால்' என்று விசேஷிக்கிறதுக்கு ஸாபிப்ராயமாக பாவம் - **காமிநியாய் இத்யாதி.** கீழ்ச்சொன்னத்தை ரஸோக்தியாலே விசதீகரிக்கிறார் - **கைவந்தபடி** இத்யாதிவாக்ய த்வயேந. ஆகையாலே, கைவந்தபடி என்று கூட்டுவது. கைவந்தபடி - ஸ்வேச்சையான படியென்று ரஸம். அவனுக்காகக் கண்ட கைகளென்று கீழே அருளிச்செய்து, தொழப்பெறாமையாலே உருவின கைகளென்று தாத்பர்யாந்தரம் - **உன்னைத்தொழ** இத்யாதி. 'காமிநியாய்' இத்யாதி வாக்யவிவரணமாதல். கீழ்ப்பாட்டையும் கடாக்ஷித்துச் சாடு - **வாய்வந்தபடி** இத்யாதி. விவரணம் - **வாய்க்கு** இத்யாதி. வீப்ஸைக்குத்தாத்பர்யம்- **ப்ரயோஜநாந்தர** இத்யாதி. ப்ரயோஜநத்தளவிலே - ப்ரயோஜநஸித்தியளவிலே. **இதுவேயாத்ரையாய்** - ப்ராப்யமாகையாலே யென்றபடி. தொழுகையே யாத்ரையானபேருண்டோ? என்ன, **முக்தாநாம்** இத்யாதி. நாராயணீயே, "முக்தாநாம்லக்ஷணம்ஹ்யேதத்ச்வேதத்வீபநிவாஸிநாம் । நித்யாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா நமஇத்யேவவாதிந:". ஹ்ருஷ்டா: என்கிற பதம் - அஞ்ஜலிகரணத்தினுடைய அத்யந்தாபீஷ்டதமத்வத்தை ஸூசிப்பிக்கிறது. நமஇத்யேவவாதிந: என்கிற இது - வாசிகநமஸ்காரத்தினுடைய நித்யதையை ஸூசிப்பிக்கிறது. "வாதிந:" என்றதுக்கு - தாச்சீல்யே ணிநிப்ரத்யயமாகையாலே, **இதுவே சீலமாயிருக்கை** என்று. 'உன்னை' என்றதுக்குத் தாத்பர்யத்ரயம் - **இத்தலை** இத்யாதி வாக்யத்ரயத்தாலே. தொழுகைக்கு ப்ராப்தனாகவேணுமோ? என்ன, **ஸேவா** இத்யாதி. மாநவே, "ஸேவாச்வவ்ருத்திராக்யாதா தஸ்மாத்தாம் பரிவர்ஜயேத்". 'உன்னை' என்றதின் முந்தினஅர்த்தவிவரணம் வ்யதிரேகமுகேந-**தொழுதல்லது**இத்யாதி. 'வைகலும்'என்றபோதே-தொழுகையில் அவிச்சேதம் ஸித்தமாயிருக்க, 'மாத்திரைப்போதுமோர்வீடின்றி' என்று தனித்துச் சொன்னதுக்கு பாவம் - **ஒருநாளைக்கு** இத்யாதி. இத்தால் வ்யாவர்த்திக்கப்படுமவற்றை அருளிச்செய்கிறார் - **நித்யாக்நி** இத்யாதி. 'பான்' என்றதுக்கு - உச்ச்ராயமும், ஸ்ப்ருஹணீயதையும் அர்த்தமாக்கி இரண்டையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார் - **தொழுவித்து** இத்யாதி. 'பைகொள்' என்ற விசேஷணத்துக்கு பாவம் - **தொழுமவர்களிருக்கும்படியையும்** என்றது. 'ஸ்ப்ருஹணீயதையையும்' என்றதின் விவரணம் -*

---

* உச்ச்ராயம் - உயர்ந்திருக்கை. † ஸ்ப்ருஹணீயதை - விரும்பத்தக்கதாகை.

மான பணங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளுகையாலே, தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே யிருக்கையாலே 'பரன்' என்கிறது. அநந்தசாயியிறே ஸர்வேஶ்வரனுவான். பர்யங்கவித்யையிற் சொல்லுகிற பேற்றை ஆசைப்படாநின்றது. [உன்னை] - ப்ராப்தனுமாய் போக்யனுமான உன்னை. [மெய்கொள்ளக்காண] - பத்தும்பத்தாக மெய்யே காண. மாநஸாநுபவம் பாவநாப்ரகர்ஷத்தாலே ப்ரத்யக்ஷஸமாநமாம்படி விஶததமமாக, 'இனிக் கிட்டிற்று' என்று அணைக்கத் தேட, கைக்கு எட்டாமையாலே கூப்பீட்டோடே தலைக்கட்டிவிடுகையன்றிக்கே ப்ரத்யபிஜ்ஞார்ஹமாம்படி காணத் தேடாநின்றது. [விரும்பும்] - ஆசைப்படாநின்றது. கிடைப்பது, கிடையா தொழிவது, ஆசைப்படாநின்றது. [என்கண்களே] - என்கண்கள் தன்கைகளாலே தொழவும் தான் காணவும் ஆசைப்படாநின்றது. ஸ்ரீபரதாழ்வான், பெருமாள்பின்னே போன இளையபெருமாளை 'அவரும் ஒருவரே' என்று கொண்டாடி, அவர்போய்ச் செய்த அடிமையையுந் தான் ஆசைப்பட்டாற்போலே. (ச)

## ஐந்தாம் பாட்டு.

கண்களாற்காண வருங்கொலென்றுஆசையால்
மண்கொண்டவாமனனேற மகிழ்ந்துசெல்
பண்கொண்டபுள்ளின் சிறகொலிபாவித்துத்
திண்கொள்ளவோர்க்கும் கிடந்து என்செவிகளே.

*ஆ*,— (கண்களால்.) மண்கொண்ட வாமநன் ஏறியருள, மதுபாநம் பண்ணின வண்டுபோலே களித்துக்கொண்டு செல்லும் பெரிய திருவடிமேலே அவன் ஏறியருளி வரும்படியைக் காணவேணுமென்றும், வரும்போது பெரியதிருவடியினுடைய அத்திருச்சிறகினொலி கேட்கவேணுமென்றும் ஆசைப்படாநிற்கும் என் செவிகள் என்கிறார்.

*ஒ*.—அஞ்சாம்பாட்டில், ஶ்ரோத்ரேந்த்ரியம் 'காணவும்வேணும், கேட்கவும்வேணும்' என்னுநின்றது என்கிறார்.

[கண்களால் என்று தொடங்கி] - கண்களாலே காணவருமோ வென்னும் ஆசையாலே ஆஶ்ரிதர் இருந்தவிடத்தே தானேவந்து அவர்களபேக்ஷிதங்களை முடிக்கும் ஸ்வபாவனான ஸ்ரீவாம

**தகட்டில்** இத்யாதி. உச்ச்ராயத்தையும் என்ற அர்த்தவிவரணம் - **அநந்தசாயி** இத்யாதி. பதப்ரயோகத்துக்கு ப்ரயோஜநம் - **பர்யங்கவித்யையில்** இத்யாதி. 'பரன்' என்றதின் அர்த்தத்வயத்தையும் பற்ற, **ப்ராப்தனுமாய்** இத்யாதி. 'பத்தும்பத்தாக'என்றத்தை விஶதீகரிக்கிறார்-**மாநஸாநுபவம்** இத்யாதி. பாவநாப்ரகர்ஷம்-நிரந்தரஸ்ம்ருதி ஸந்தாநாதிஶயம். **ப்ரத்யபிஜ்ஞார்ஹமாம்படி**-யாதொன்று முன்பு மநஸ்ஸாலே அநுபூதமாயிற்று, அதுவே இப்போது கண்ணாலும் அநுபவிக்கப்படுகிறதென்று ப்ரத்யபிஜ்ஞார்ஹமாம்படி இத்யர்த்தః. "நேத்ரே ஸவக்ஷுஷா [illegible]"இத்யேதத் ஶ்ருதி நிதாயாஹ-**கிடைப்பது** இத்யாதி. அவதாரிகைக்குச்சேர வலிதம் -**என்கண்கள்** இத்யாதி. **தன்கைகளாலேயிதி**-இது, கரணியான இவருடைய வ்ருத்தியை ஆசைப்பட்டபடி. காரணம் கரணாந்தரத்தின் வ்ருத்தியை ஆசைப்பட்டமைக்கு த்ருஷ்டாந்தம்-**ஸ்ரீபரதாழ்வான்** இத்யாதி. **அவரும் ஒருவரே யென்று கொண்டாடியென்றது**—"[illegible]" என்றத்தைப் பற்ற. கரணங்கள் கரணாந்தரத்தின் வ்ருத்தியை ஆசைப்பட்டமை - இப்பாட்டுத் தொடங்கி ஸாப்தமாகையாலே ஸ்புடம்; கீழிற்பாட்டுக்களிலே **அவகாரார்த்த ஸித்தம்**. (ச)

நன் எறுகையாலே ஹ்ருஷ்டனைக்கொண்டு நடவாநின்றுள்ள பெரியதிருவடியினுடைய பண்ணை யென்றிருக்கிற திருச்சிறகிலுண்டான ப்ருஹத்ரதந்தராதி ஸாமத்வநியை நினைந்து. [திண்கொள்ள என்று தொடங்கி] - அவன்வர உத்யோகத்திலே தொடங்கி இந்தத்வநி கேட்கவேணு மென்று மிகவும் குறிக்கொண்டிராநின்றன.

ப.— அநந்தரம், என் செவிகளானவை காணவும் ஆசைப்பட்டு, காட்சிகொடுக்க வரும்போது பெரியதிருவடியின் சிறகொலியைக் கேட்கவும் ஆசைப்படாநின்றன என்கிறார்.

கண்களால் -(காண்கைக்குக் கரணமான) கண்களாலே, காண - அபரோக்ஷித்துக் காணும் படி, வருங்கொல் - வரக்கூடுமோ? என்று - என்கிற, ஆசையால் - ஆசையாலே, மண்கொண்ட - (தன்வஸ்துவைப் பிறர்க்குக்கொடாமல் அர்த்தியாய்ச்சென்று) பூமியைக் கொண்ட, வாமனன்-ஸ்ரீ வாமநனானவன், ஏற - (ஆசைப்பட்டார்க்கு முகங்காட்டுகைக்காகத்) தன்னைமேற்கொள்ள, மகிழ்ந்து - (அத்தாலே) ப்ரீதனாய், செல் - செல்லக்கடவனான, புள்ளின் - பெரியதிருவடியினுடைய, பண்கொள் - ஸாமஸ்வரத்தை யுடைத்தான, சிறகொலி - சிறகொலியை, பாவித்து - நினைத்து, என்செவிகள்-என்செவிகளானவை, கிடந்து - (பரவசமாய்க்) கிடந்து, திண்கொள்ள - திண்ணிய தாக, ஓர்க்கும் - நிரூபியாநின்றன. பண்கொண்ட என்று - கலனையுடைத்தான என்றுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், செவிகளானவை 'காணவேணும், கேட்கவேணும் என்னா நின்றது' என்கிறார்.

[கண்களால் இத்யாதி.] - "சக்ஷுஸ்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயணஃ" என்கிறபடியே கண்ணுக்கு வகுத்த விஷயத்தைக் காண வருமோ? என்னாநின்றது. எத்தாலே யென்னில்,— [ஆசையால்] - அபிநிவேசமே ஹேதுவாக. [மண்கொண்ட இத்யாதி] - தன் வஸ்துவைப் பிறர்க்கு விட்டுக் கொடாமைக்காகத் தன்னை அர்த்தியாக்கினவன். [ஏற மகிழ்ந்துசெல்] - அவன் மேற் கொள்ளுகையா லுண்டான ஹர்ஷத்தாலே அதுக்குப் போக்குவிட்டு ஸஞ்சரியாநிற்கை. [பண் கொண்ட புள்] - பரிஷ்க்ரியை யுடைய என்னுதல், ப்ருஹத்ரதந்தராதி ஸாமத்வநியை யென்ற சிறகொலி என்னுதல். [பாவித்து] - சிறகொலியாலே அவன் வரவை அநுஸந்தித்து. [திண்கொள்ள ஓர்க்கும் கிடந்து] - முன்னே நின்று சிலர் சொன்ன வார்த்தையும் கேளாதபடி திண்ணிய தாக அவதாநம் பண்ணிக்கொண்டே யிராநின்றன. ஸ்ரீபரதாழ்வான் கிலிகிலாரவத்துக்குச் செவிமடுத்துக்கொடு கிடந்தாற் போலே.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. செவிகளானவை கண்ணினுடைய வ்ருத்தியையும் தன்னு டைய வ்ருத்தியையும் ஆசைப்படாநின்றன என்கிறார்.

[கண்களால் இத்யாதி] - 'தன்னைக்காணவேணும்' என்று விடாய்த்த இக்கண்ணாலே ஒருகால் காணவருமோ? என்னும் ஆசையாலே. கன்னமிட்டுங் காணவேண்டும்படியிறே வஸ்து வைலக்ஷண்யம் இருப்பது. "சக்ஷுஸ்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயணஃ" (சக்ஷுஸ்சத்ரஷ்ட வ்யஞ்ச நாராயணஃ) என்கிறபடியே கண்ணுக்கு வகுத்த விஷயத்தைக் காணவருமோ? என்னா

அஞ்சாம்பாட்டு. - கண்களால் இத்யாதி. 'கண்களாற்காணவருங்கொல், திண்கொள்ளவோர்க்கும் கிடந்தென்செவிகள்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - செவிகளானவை இத்யாதி.

காண்கிறது கண்ணாலேயாயிருக்க, 'கண்களால்' என்று விசேஷிக்கிறதுக்கு பாவம் - தன்னைக் காண இத்யாதி. தன்வ்ருத்தியையே யன்றிக்கே கண்ணின் வ்ருத்தியையும் ஆசைப்படுகைக்கு அடியேது? என்ன, வைலக்ஷண்யமென்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - கன்னமிட்டும் இத்யாதி. கன்னம் - கர்ணமும், சுரங்கமும். கன்னமிட்டாகிலும் - சுரங்கமறுத்தாகிலு மென்று த்வநி. காதாலேயு மென்று ஸ்வஹா வார்த்தம். ப்ராக்ருதத்திலே கன்னமிட்டுமாவது - தனக்கில்லாத கண்ணையிட்டுக்கொண்டு மென்றபடியாதல், கண்ணாலேகாண்கிற மாத்ரமன்றிக்கே கன்னமிட்டும் காணவேண்டும்படி யென்னுதல். 'தன்னைக்காணவேணும்' இத்யாதி வாக்யவிவரணம் - சக்ஷுஸ்ச இத்யாதி. "த்ரஷ்டவ்யஞ்ச" என்றதுக்கு - 'வகுத்தவிஷயத்தை'

நின்றது. "காத்ரைஃபோகாபிகர் ஸம்ஸ்ப்ருஷேயம்" (காத்ரைஸ்ஸோகாபிகர் ஸம்ஸ்ப்ருஷேயம்)என்னுமாபோலே. அவனும் வருவானோ? என்னில்,—அதொன்றில்லை. [ஆசையால்] - தன் சாபலத்தாலே. அன்றியே, தன் ஆசையைப் பார்க்க அவன் வரவு தப்பாதென்றும். அவ்வளவு அமையுமோன்றிறே; பகவத்விஷயத்தில் இட்ட படை கற்படையிறே; "நேஹாபிக்ரமநாஸோஸ்தி" (நேஹாபிக்ரமநாஸோஸ்தி). [மண்கொண்ட வாமனன்] - மண்கொண்ட பின்பும் 'வாமனன்' என்கிறார்காணும்; முடிசூடினபின்பும் கருந்தரையில் பேர்சொல்லும் அந்தரங்கரைப்போலே. வளர்ந்தபின்பும் வாமனன் என்கிறார், இதிலே தாம் துவக்குண்டபடியாலே. [ஏற மகிழ்ந்துசெல்] - தன்னை மேற்கொள்ள, அத்தால் வந்த ஹர்ஷப்ரகர்ஷத்துக்குப் போக்குவிட்டு ஸஞ்சரியாநிற்கை. [பண்கொண்டபுள்]-பண்என்று-வாஹநபரிஷ்க்ரியையைச் சொல்லுதல்; அன்றியே, வேதாத்மாவாகையாலே ப்ருஹத்ரதந்தராதி ஸாமங்களைச் சொல்லுதல். [சிறகொலி பாவித்து] - திருவடிசிறகில் த்வநியையே பாவித்து. [திண்கொள்ள ஓர்க்கும்] - முன்னேநின்று சிலர் வார்த்தை சொன்னால் அதிலே செவி தாழ்கிறதில்லை, இத்தையே திண்ணிதாகப் புத்திபண்ணுகின்றது. அதின் பக்கல் பக்ஷபாதமிறே இதுக்கு அடி. (ரு)

# ஆறும் பாட்டு.

சேவிகளாலார நின்கீர்த்திக்கனியென்னும்
கவிகளே காலப்பண்தேனுறைப்பத்துற்றுப்
புவியின்மேல் பொன்னெடுஞ்சக்கரத்துஉன்னையே
அவிவின்றி ஆதரிக்கும் எனதாவியே.

என்கையாலே, காணப்படுகிறவற்றுக்குஅந்தர்யாமி யென்கிற அர்த்தமன்றிக்கே, இதுவும் ஓரர்த்தம் விவக்ஷிதம். அசேதநமான கரணங்களுக்கு 'வருங்கொல்' என்று விடாய்க்கை கூடுமோ? என்ன, காத்ரைஃ இத்யாதி. ப்ரவேஶஏவ விஹித:. 'ஆசையால் - கண்களாற்காணவருங்கொல்' என்று அந்வயித்துத் தாத்பர்யாந்தரம் - அன்றியே இத்யாதி. ஆசையைப்பார்க்க - ஆசையைப்பார்த்தால்; ஆசை ஹேதுவாக வென்றபடி. 'தப்பாதென்றும்' - இப்படியும் தாத்பர்ய மாகலா மென்றபடி. ஆசாமாத்ரம் போருமோ? என்ன, அவ்வளவு இத்யாதி. ஹேதுமாஹ - பகவத் இத்யாதி. உக்தத்துக்கு ப்ரமாணம் - நேஹ இத்யாதி. "நேஹாபிக்ரமநாஸோஸ்தி ப்ரத்யவாயோ நவித்யதே । ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத்" இதி ஶ்ரீகீதா த்விதீயே. 'மண்கொண்ட திரிவிக்கிரமன்' என்னாதே, 'வாமனன்' என்கிறதென்? என்ன, மண்கொண்ட பின்பும் இத்யாதி. கருந்தரை - ஶைஶவஸ்தலம். அதாவது - முடிசூடுகிறதுக்கு முன்பு உண்டான சிறுபேர் என்றபடி. பரிஹாராந்தரம் - வளர்ந்த இத்யாதி. பண்கொண்ட - பண்ணையுடைத்தான. பண் என்று - வாஹந பரிஷ்காரமாதல், ஸ்வரோபலக்ஷிதமான ஸாமங்களாதல். 'வாமதேவ்யாதி' என்னுமல், ப்ருஹத்ரதந்தராதி' என்றது - "ப்ருஹத்ரதந்தரே பக்ஷௌ" என்று பக்ஷங்களை ப்ருஹத்ரதந்தர ஸாமங்களாகச்சொல்லுகையாலே ப்ருஹத்ரதந்தராதி ஸாமாகாரத்தையுடைத்தான சிறகொலி யென்றபடி. திண்ணிதாக - த்ருடமாக. இப்படிசெய்கைக்கு அடியேதோ? என்ன, சாடு-அதின்பக்கல் இத்யாதி. சிறகொலியின்பக்கல் தனக்கு உண்டான அபிநிவேஶம், திருவடிபக்கலுண்டான பக்ஷபாத மென்று சாடு. பாவித்து - பாவனைபண்ணி; நினைத்து என்றபடி. கிடந்து - பரவசமாய்க் கிடந்து. ஓர்க்கும் - நிரூபியாநிற்கும்; புத்திபண்ணுநிற்கு மென்றபடி. என் செவிகள் - கண்களா வித்யாதி, ஆசையால் - கிடந்து - மண்கொண்ட இத்யாதி க்ரமேண அந்வய:. (ரு)

**ஆ.**—(செவிகளாலார.) உன்னுடைய கீர்த்திக்கவியென்னும் கனிகளை, காலப்பண்ணுகிற தேனிலே கலந்து என் செவிகளாரத் துற்று, பொன்னெடுஞ் சக்கரத்து உன்னை இந்தலோகத்திலே காணவேணுமென்று அவிவின்றி ஆதரிக்கும் எனது ஆவி என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், என்னுடைய ப்ராணனானது உன்னுடைய கீர்த்தியைக் கேட்க வேணுமென்று ஆசைப்படாநின்றது என்கிறார்.

[செவிகளால் என்று தொடங்கி] - உன்னுடைய கீர்த்திரூபமான கவியாகிற கனிகளைக் காலப்பண்ணுகிற தேனை மிகக்கலந்து செவிகளாலே பூர்ணமாக புஜித்து. [புவியின்மேல் என்று மேலுக்கு] - அற அழகியதாய்ப் பெருத்திருக்கிற திருவாழியைத் திருக்கையிலே உடையையா யிருக்கிற உன்னை இங்ஙனே காணலாந் திருநாட்டிலே போயன்றியே காணக்கடவதல்லாத ஸம்ஸாரத்திலே காணவேணுமென்று ஆசைப்படாநின்றது, என்னுடைய ப்ராணன்.

ப.—அநந்தரம், கையும் திருவாழியுமான அழகை அநுபவிக்கவேணுமென்று என் ப்ராணன் ஆசைப்படாநின்றது என்கிறார்.

எனது - என்னுடைய விளம்பாக்ஷமமான, ஆவி - ப்ராணனானது, நின் - உன்னுடைய, கீர்த்தி கனி - கீர்த்தியின் பக்வபலம், என்னும் - என்னலாம்படியான, கவிகளே - கவிகளையே, காலம் பண் - காலாநுரூபமான பண்ணுகிற, தேன் - தேனிலே, உறைப்ப - மிகவும்செறிய, துற்று - துற்று, செவிகளால் - செவிகளாலே, ஆர - நிரம்ப அநுபவிக்கைக்காக, புவியின்மேல் - பூமியிலே, பொன் - தர்சநீயமாய், நெடு - நிரதிசயபோக்யமான, சக்கரத்து - திருவாழியை யுடைய, உன்னையே - உன்னையே, அவிவு இன்றி - விச்சேதரஹிதமாய், ஆதரிக்கும் - ஆதரியா நிற்கும்.

**இ.**—ஆறும்பாட்டில், என்னுடைய ப்ராணனானது உன்னுடைய கீர்த்தியைக் கேட்க வேணுமென்று ஆசைப்படாநின்றது என்கிறார்.

[செவிகளால் ஆர] - செவிகள் வயிறுநிறையும்படியாக, உன்கீர்த்திரூபமாய்க் கனி போலேயிருக்கிற கவிகளை. கவி கனிபோலேயிருக்கை யன்றிக்கே கனி கவியாயிற்று என்கிறதிறே போக்யதாதிஸயத்தாலே. [காலம் இத்யாதி] - செருக்கர் நல்லபலங்களைத் தேனிலேதோய்த்து புஜிக்குமா போலே காலப்பண்ணுகிற தேனை மிகக்கலந்து அநுபவித்து. [புவியின்மேல்] - இவ்வநுபவம் ஒருதேஸவிஸேஷத்திலே ஆகாதபடி பூமியின்மேலே. ஒருதேஸத்திலே விடாய்த்தாரை ப்ரதேஸாந்தரத்திலே விடாய் தீர்க்குமாபோ லன்றியே, ஆசைப்பட்ட கரணங்களோடே இங்கே பெறவேணுமென்கை. [பொன் நெடு இத்யாதி] - தேஸம் இதுவேயானவோபாதி விஷயமும் இதுவே யாகவேணும். ஸ்ப்ருஹணீயமாய்ப் போக்யதைக்கு எல்லையின்றிக்கே யிருக்கிற திருவாழியை நிரூபகமாகவுடைய உன்னை. "தவேஹவாஸோயாதாஸது மஹாயாஃ". [அவிவின்றி ஆதரிக்கும்] - விச்சேதமில்லாதபடி ஆதரியாநின்றது; துர்லபமென்று பாராதே கைபுகுருவிஷயத்திற்போலே சாபலம்பண்ணுகின்றது. [எனது ஆவியே] - அவனருள்பெறுமளவு ஆவி நில்லாது என்கிற ஆவி.

**ஈடு.**—ஆறும்பாட்டு. என்னுடைய ப்ராணனனது உன்னுடைய கீர்த்தியைத் தன் செவியாலே கேட்க ஆசைப்படாநின்றது என்கிறார்; கன்ன மிட்டுக்கொண்டும் கேட்க வேண்டும் படியிறே பகவத்கீர்த்தி இருப்பது.

---

ஆறும்பாட்டு - செவிகளால் இத்யாதி. 'செவிகளாலார நின் கீர்த்திக்கனியென்னும், அவிவின்றி யாதரிக்கு மெனதாவி' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - என்னுடையப்ராணன் இத்யாதி. ப்ராணனுக்குச் செவியுண்டோ? என்ன, கன்னமிட்டு இத்யாதி. தனக்கில்லாத செவியையும் இட்டுக்கொண் [illegible] என்று ஸ்வஹாவார்த்தம்; சாடுவுக்கு, கன்னமிடுகை - திருடுகை.

[செவிகளால் ஆர] - செவிகள் வயிறு நிறையும்படியாக. [நின் கீர்த்திக் கனியென்னும் கவிகளே] - கீர்த்திருபமாய்க் கனிபோலே யிருக்கிற கவிகளை. கவி கனிபோலிருக்கை யன்றிக்கே, கனி கவியாயிற்று என்கிறதிறே போக்யதாதிசயத்தாலே. [காலம் இத்யாதி] - செருக்கராயிருக்கும் ராஜபுத்ரர்கள் நல்ல பழங்களைத் தேனிலேதோய்த்து புஜிக்குமாபோலே, உன்கீர்த்தியாகிற கனிகளைக் காலங்களுக்கு அடைத்த பண்ணுகிற தேனிலே, அத்தேன் மிஞ்சும்படி கலந்து. [துற்று] - அநுபவித்து. அது பரமபதத்தேபோய்ப் பெறுவதொன்றன்றோ? என்ன, [புவியின்மேல்] - எங்கேனும் விடாய்த்தாரை எங்கேனும் விடாய் தீர்க்கவொண்ணாது, பசித்தவிடத்தே சோறிடவேணும். [பொன்னெடுஞ்சக்கரம் இத்யாதி] - தேசம் இதுவேயானவோபாதி விஷயமும் இதுவேயாகவேணும். “தமஸ:பரமோ தாதா ஸங்கசக்ரகதாதர:” (தமஸ:பரமோதாதா ஸங்கசக்ரகதாதர:) ஸ்ப்ருஹணீயமாய் போக்யதை எல்லையின்றிக்கே யிருக்கிற திருவாழியை நிருபகமாகவுடைய உன்னையே. [அவிவின்றி ஆதரிக்கும்] - விச்சேத மில்லாதபடி ஆதரியா நின்றது. “துர்லபம்” (துர்லபம்) என்று பாராதே கிடைக்கும் விஷயத்திற்போலே சாபலம் பண்ணாநின்றது. [எனது ஆவியே] - ‘தன்னுடையே வரப் பெறவேணுங்காண்’ என்றால் அது கேளாது, ‘அவனருள் பெறுமளவில் நில்லாது’ என்னும்படியான ஆவி. (சு)

## ஏழாம் பாட்டு.

ஆவியே! ஆரமுதே! என்னையாளுடைத்
தூவியம்புள்ளுடையாய்! சுடர்நேமியாய்!
பாவியேன்நெஞ்சம் புலம்பப்பலகாலும்
கூவியுங்காணப்பெறேன் உனகோலமே.

ஆ.—(ஆவியே.) என்னுடைய ப்ராரகமே! என்னுடைய போக்யமே! உன்னை விஸ்லேஷித்து நான் அவஸந்நனான இந்தத்தையிலே நான் முடிவதற்கு முன்னே இக்ஷணத்திலே வந்து என்னை அடிமைகொள்ளுகைக்காகப் பெரிய திருவடியை திவ்யவாஹநமாகவுடையவனே! த்வத் ஸம்ஸ்லேஷவிரோதியான என்னுடைய வினை கடிகைக்காக எப்போதும் கைகழலாநேமியாய்! பாவியேன் நெஞ்சம் புலம்பப் பலகாலும் கூவியுங் காணப்பெறுகிறிலேன் உன்னழகை என்கிறார்.

‘ஆல்’ - அசை. ஆனால், கனிபோலென்னாதே, ‘கனியென்னும் கவிகள்’ என்கிறதென்? என்ன, கவி கனிபோல் இத்யாதி. ‘காலப்பண்தேனுறைப்ப’ என்றதுக்கு பாவம்-செருக்கராய் இத்யாதி. உன்கீர்த்தியாகிற கனிகளையென்றது - கீர்த்திப்ரதிபாதகமான கவியாகிற கனிகளையென்றபடி. உறைப்ப - மிஞ்சும்படி கலந்து. அது - அநுபவம். பரமபதத்தே போய்ப் பெறுவ தென்றது - “ஸதத்தாமோயநாஸ்து” என்றத்தை நினைத்து. ‘புவியின்மேல்’ என்றவருடைய ஹார்த்தபாவம் - எங்கேனும் இத்யாதி. விஷயமும் இதுவேயாக வேணும் - பரமபதத்தில் அஸாதாரணவிக்ரஹமே யாகவேணும். பரமபதத்திலே பொன்னெடுஞ்சக்கரத்தோடேயிருக்குமோ? என்ன, தமஸ:இத்யாதி. இதம் மண்டோதரீவாக்யம், பூர்வமேவ லிகிதம். சப்தார்த்தம் - ஸ்ப்ருஹணீயமாய் இத்யாதி. நெடுமைக்கு அர்த்தம் - போக்யதை இத்யாதி. சப்தார்த்தம் - விச்சேதம் இத்யாதி. விவரணம் - துர்லபமென்று இத்யாதி. துர்லப மென்றது-‘பொன்னெடுஞ்சக்கரத்துன்னை’ என்றத்தைப் பற்ற. ‘எனதாவி’ என்றதுக்கு வாஸனை-தன்னுடையே இத்யாதி. நீர் சொன்னது கேளாதோ உம்முடைய ஆவி? என்ன, அவனருள் இத்யாதி. அவன்க்ருபை பெறுமளவும் ப்ராணன் நில்லாது என்றபடி. எனதாவி - செவிகளால் இத்யாதி க்ரமேண அந்வய:. (சு)

ஒ.—ஏழாம்பாட்டில், மஹாபாபியாகையாலே நெஞ்சின்விடாய் தீர்க்கவும் பெற்றிலேனான நான் நெடுநாள் கூப்பிட்டவிடத்திலும் உன்னுடைய அழகுகாணவும்பெற்றிலேன் என்கிறார்.

[ஆவியே ஆரமுதே] - தாரகனுமாய் மிகவும் போக்யமுமானவனே! [என்னை என்று தொடங்கி]-பெரியதிருவடிமேலே யிருந்த இருப்பைக் காட்டி என்னை அடிமைகொள்வதும் செய்து நிரவதிகதீப்தியுக்தமான திருவாழியையுடையவனே! இவையிரண்டு பதத்தாலும் வருகைக்கும் விரோதிநிரஸநத்துக்கும் பரிகரவத்தையைச் சொல்லிற்று என்றுமாம்.

ப.---அநந்தரம், இப்படி ஆஶ்ரிதஸுலபனாய் போக்யனான உன்னை அநுபவிக்கப்பெறுகிறிலேன் என்று கரணங்களோபாதி கரணியான தம்முடைய இழவு சொல்லுகிறார்.

ஆவியே - (வ்யதிரேகத்தில் முடியும்படி தாரகமான) ப்ராணனாய், ஆர் - பரிபூர்ணமான, அமுதே - நித்யபோக்யபூதனாய், என்னை ஆளுடை - என்னை அடிமைகொள்ளுகைக்கிடான, அம் தூவி - அழகிய சிறகையுடைய, புள் - பெரியதிருவடியை, உடையாய் - வாஹநமாகவுடையனாய், சுடர் - (ப்ரதிபந்தகத்தைக்கழிக்கும்) உஜ்ஜ்வலமான, நேமியாய் - திருவாழியையுடையவனே! உன - உன்னுடைய, கோலம் - (நிரதிஶயபோக்யமான) வடிவழகை, பாவியேன் - மஹாபாபியான என்னுடைய, நெஞ்சம் - நெஞ்சானது, புலம்ப - ஆசைப்பட்டுக்கூப்பிட, (அவ்வாசையடியாக), பலகாலும் - அநேககாலம், கூவியும் - நான் கூப்பிட்டவிடத்திலும், காணப்பெறேன் - கண்டநுபவிக்கப் பெறுகிறிலேன். "தத்த்வஸ்யஸத்ருஶம்" என்கிற ஸ்வரூபமும் இழந்தேன், அபிமதமும் இழந்தேன் என்று கருத்து.

இ.—ஏழாம்பாட்டில், கரணங்களையொழியத் தம்முடைய இழவு சொல்லுகிறார்.

[ஆவியே] - அபிநிவேசம்மிக்காலும் ப்ராப்யனாகிறான் ஶேஷியானால் வருந்தனையும் பாடாற்றவேண்டாவோ? என்னில்,—'ப்ராணனையொழியத் தரிக்கவல்லோமோ?' என்கிறார். [ஆரமுதே] - தாரகமாமளவன்றிக்கே போக்யமுமாயிருக்கை. [என்னை இத்யாதி] - மற்றை அம்ருதத்தைக்கொண்டு வருமவனை இவ்வம்ருதத்தையுங் கொண்டுவருவான். பெரிய திருவடியின் முதுகில் இருப்பைக் காட்டி என்னையெழுதிக்கொண்டவனே! என்னையாளுடைத்தூவியம்புள் என்று பெரியதிருவடியோடே அந்வயித்துச் சொல்லவுமாம். சேர்க்குமவர்களுக்கு ஶேஷமென்றிறே இவர் இருப்பது. [சுடர் நேமியாய்] - போக்யதைக்கும் ப்ரதிபந்தக நிவ்ருத்திக்கும் தானே அமைந்திருக்கை. 'தாரகமுமாய் போக்யமுமாய்ச் சேர்ப்பாருமுண்டாய் ப்ரதிபந்தகம் போக்குவாரும் உண்டாயிருக்க, நான் இழக்கும்படி எங்ஙனே?' என்கிறார். [பாவியேன்] - பகவத் விஷயத்தில் ஆசைப்பட்டாரில் இழந்தார் இல்லைகிடீர். [பாவியேன் நெஞ்சம்] - எனக்குக் கரணமாயிறே இதுக்கும் இழக்கவேண்டிற்று. "[illegible]" இத்யாதி. [புலம்ப]- இழவோடே கூப்பிட. [பலகாலும் இத்யாதி] - அதுக்குமேலே நான் பலகாலும் கூப்பிடவும். ஒருக்திமாத்ரத்துக்கு முகங்கொடுக்கும் விஷயத்தைக்கிடீர் இப்படி பட்டும் காணப்பெறுதொழிகிறது. [கூவியும் காணப்பெறேன்] - ஸ்வரூபம் பெற்றேனல்லேன், அபிமதம் பெற்றேனல்லேன் என்கிறார். "தத்த்வஸ்யஸத்ருஶம்ஸவேக்ஷ" என்று இருக்கப்பெற்றிலேன். மடலூர்ந்தார் பெற்ற பேற்றைப் பெற்றேனல்லேன். என் ஸ்வரூபத்தை நோக்கினேனல்லேன்; அவன்ஸ்வரூபத்தை நோக்கினேனல்லேன். உன்னுடைய நீர்மையையும் அழித்தேன்; என்னுடைய ஶேஷத்வத்தையும் அழித்தேன். [உனகோலமே] - இரண்டுதலையையும் அழித்தேயாகிலும் பெறவேண்டும் விஷயவைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது. வ்யதிரேகத்தில் புறம்பே போதுபோக்குதல் கண்ணுறங்குதல் செய்யும் விஷயமன்றிறே.

ஈடு.—ஏழாம்பாட்டு. கரணங்களை யொழியத் தம்முடைய இழவு சொல்லுகிறார். ப்ரஜைகளினிழவும் பசியும் சொன்னார்-கீழ்; தம் இழவும் பசியும் சொல்லுகிறார் - மேல். இப் பாட்டில், 'நான் மஹாபாபியாகையாலே நெஞ்சின்விடாயுந் தீரப்பெற்றிலேன், என்விடாயுந் தீரப் பெற்றிலேன்' என்கிறார்.

[ஆவியே] - அபிநிவேசம் மிக்காலும், ப்ராப்யஸ்திரன் சேஷியானால் வருந்தனையும் பாடாற்ற வேண்டாவோ? என்ன, ப்ராணனை விட்டிருக்கப்போமோ? என்கிறார். * "ஆவியாவியும் நீ" என்கிற படியே அவனிறே ஆவி. [ஆரமுதே] - தாரகமுமாய் போக்யமுமாயிருக்க, விட்டிருக்கப்போமோ? ஆரமுது-ஆர்ந்த அமுது; பூர்ணமான அம்ருதம். தேவஜாதியினுடைய அம்ருதத்தில் வ்யாவ்ருத்தி. உள்ளுந்தோறும் தித்திக்கும் அமுது. அமுதிலுமாற்ற வினிய அமுதமிறே. [என்னை இத்யாதி] - மற்றை அம்ருதத்தைக் கொண்டு வருமவனே காணும், இவ்வம்ருதத்தையும் கொண்டுவருவான். பெரியதிருவடி திருத்தோளி லிருக்கும் இருப்பைக் காட்டி என்னை யெழுதிக்கொண்டவனே! அதவா, 'என்னையாளுடைத் தூவியம்புள்' என்று பெரிய திருவடியோடே அந்வயித்துச் சொல்லவுமாம். சேர்க்குமவர்களுக்கு சேஷமென்றிறே இவர் இருப்பது. தாரகமுமாய் போக்யமுமா யிருப்பதொன்றைக் கொண்டுவந்து தருவா ருண்டாயிருக்க, ஆறியிருக்க விரகு உண்டோ? [சுடர்நேமியாய்]-அழகுக்கும் விரோதி நிரஸநத்துக்கும் தானேயாயிருக்கும் பரிகரமிறே. வரும் வழியில் ப்ரதிபந்தகங்கள் உண்டாகிலும் கைம்மேலே தீர்த்துக்கொண்டு வருகைக்குப் பரிகரமுண்டே. [பாவியேன்] - பகவத் விஷயத்தை ஆசைப்பட்டாரில் இழந்தாரில்லை கண்டீர்; "ஆரே துயருழந்தார்" இத்யாதி. [பாவி

---

ஏழாம்பாட்டு. - ஆவியே இத்யாதி. பேடிகாஸங்கதி கதநபூர்வகமாக இப்பாட்டுக்கு அவதாரிகையையும் அருளிச்செய்கிறார்-கரணங்களையொழிய இத்யாதி. சொல்லுகிறார் மேல் என்கிறது - மேலிற்பாட்டுக்களெல்லாவற்றாலு மென்றபடி. இப்பாட்டில் இத்யாதி - 'நெஞ்சம்புலம்ப' என்றும், 'கூவியும்காணப்பெறேன்' என்றும் சொல்லுகையாலே, நெஞ்சின்விடாயும் தம்விடாயும் தீரப்பெற்றிலே னென்கிறா ரென்றபடி. இப்பாட்டிலும் - நெஞ்சின்விடாய் சொல்லிற்றேயாகிலும், முதற்பாட்டுத்தொடங்கி நெஞ்சுமுதலான கரணங்களின் விடாய் கீழேசொல்லுகையாலே, கரணியான தம் விடாய் சொல்லுகிறதே ப்ரதாந மென்றபடி.

ஆவியே - சரீரத்துக்கு ப்ராணனைப்போலே தமக்கு இவன் ப்ராண னென்றபடி. அபிநிவேசம் மிக்காலும் - 'கூவியும் காணப்பெறேன்' என்னும்படி அபிநிவேசம் மிக்காலு மென்றபடி. பாடாற்ற - துக்கம் பொறுக்க. அவனேறே ஆவி யென்ன, ஆவியாவி இத்யாதி. "ப்ராணஸ்ய ப்ராண:" என்னக்கடவதிறே. தாரகமுமாய் போக்யமுமாய் - தாரகமுமாய், தத்தேதுவான போக்யதையையு முடைத்தா யென்றபடி. 'ஆவி' என்றத்தாலே - தாரகத்வம். 'அமுது' என்றத்தாலே - போக்யத்வம். 'ஆரமுது' என்றத்தாலே வ்யாவ்ருத்தி-தேவஜாதி இத்யாதி. வ்யாவ்ருத்தியேது? என்ன, உள்ளுந்தோறும் இத்யாதி வாக்யத்வயத்தாலே. உள்ளுந்தோறும்-உள்ளத்திலே வைத்து அநுஸந்திக்குந்தோறும். ஆற்ற இனியன் - மிகவும் போக்யமானவன். 'கொண்டுவருமவனே காணும்' என்றது - விநதைக்காகக் கொண்டுவந்தமையைப்பற்ற. 'தூவியம்புள்ளுடை - என்னையாளுடையாய்' என்றுகூட்டி ஹாவம் - பெரியதிருவடி இத்யாதி. அவனிருக்க, 'என்னையாளுடை - தூவியம்புள்' என்கிறதென்? என்ன, சேர்க்குமவர் இத்யாதி. ஆவியே இத்யாதி பதத்ரயத்தையும் கடாக்ஷித்து நிகமிக்கிறார் - தாரகமுமாய் இத்யாதி. சுடர் - அழகு. 'சுடர்' என்றத்தாலே - அழகுக்குப் பரிகரம்; 'நேமி' என்றத்தாலே - விரோதிநிரஸநத்துக்குப் பரிகரம். பதப்ரயோகத்துக்கு ஹாவம் - வரும்வழியில் இத்யாதி. 'கைமேலே' இதி - ரஸோக்தி:. கைமேலே - ஸத்ய: என்று சாடு. கையில் திருவாழியாலே யென்று ஸ்வஹாவார்த்தம். 'பாவியேன் - கூவியுங்காணப்பெறேன்' என்றுகூட்டி ஹாவம் - பகவத்விஷயத்தை இத்யாதி. அப்படி இழந்தாரில்லையோ? என்ன, ஆரேதுயருழந்தார் இத்யாதி. மூன்றாந்திருவந்தாதி - இருபத்தேழாம்பாட்டு. எம்பெருமானை யாஸ்ரயித்துவைத்து, துன்புற்றார் - து:கஹேதுவான பாபத்தைப்பண்ணினவர்களாயிருக்கிற, ஆண்டையார் - ஆஸ்ரயித்த பழையாரில், ஆரே துயருழந்தார்-ஆர்தான் பாபபலமான து:கத்தை யநுபவித்தா ரித்யர்த்த:. பாவியேனாகையாலே யிழந்தே னென்றார் - கீழ்; அன்றிக்கே, பாவியேன் நெஞ்சாகையாலே இழக்கவேண்

* திருவாய்மொழி - உ, ரு, ச.

யேன்நெஞ்சம்] - எனக்குக் கரணமாயிறே இது இழக்கவேண்டிற்று. "நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள்கோன் வசுதேவன் பெற்றிலனே" தமப்பனை ப்ராப்தி யோத்திருக்க, ஸுக்ருதம் பண்ணாத என்னைக் கைப்பிடிக்கையிறே ஸ்ரீவஸுதேவர் இழந்தது என்னுமாபோலே. "**மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித்**" (மமைவதுஷ்க்ருதம்கிஞ்சித்) என்னக்கடவதிறே. [புலம்ப] - நெஞ்சானது காணப்பெறாத இழவோடே கூப்பிட. "கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான்" என்னுமா போலே, நெஞ்சத்துப் பேராதுநிற்கும் பெருமானையிறே நெஞ்சு காணப்பெறாமல் கூப்பிடுகிறது. [பல காலும்] - ஒருகால் கூப்பிட்டார்க்கும் இழக்க வேண்டாத விஷயத்திலே பலகால் கூப்பிட்டும். [கூவியும் காணப்பேறேன்] - ஒன்றில் அபிமதம் பெற்றேனல்லேன்; ஸ்வரூபம் பெற்றேனல்லேன் என்கிறார். "**தத்தஸ்யஸத்ருசம்பவேத்**" (தத்தஸ்யஸத்ருசம்பவேத்) என்றிருக்கப்பெற்றேனல்லேன், மடலூர்ந்தார் பெற்றபேற்றைப் பெற்றேனல்லேன். என் ஸ்வரூபத்தையும் அழித்தேன், அவன் ஸ்வரூபத்தையும் அழித்தேன். அவன் நீர்மையையும் அழித்தேன், என் சேஷத்வத்தையும் அழித்தேன். அவனீஸ்வரத்வத்தையும் அழித்தேன். என்னுடைய சேஷித்வயத்வமும் போயிற்று. இனிக் கொள்ள இருக்கிறார் ஆர்? கொடுக்க இருக்கிறார் ஆர்? [உனகோலமே] - இரண்டு தலையையும் அழித்துப் பெறவேண்டும் விஷயவைலக்ஷண்யம் சொல்லுகிறது. வ்யதிரேகத்தில் கண்ணுறங்குதல், சூது சதுரங்கங்களோடே போதுபோக்குதல் செய்யலாம் விஷயமாகப் பெற்றேனோ?

*டிற்று என்று அர்த்தாந்தரம் -* **எனக்குக்காணம்** *இத்யாதி. முந்தின அர்த்தம் - 'பாவியேன்காணப்பெறேன்' என்று தம் இழவுக்கு உறுப்பாகச் சொல்லுகிறது; இரண்டாவது - பாவியேன்நெஞ்சாகையாலே புலம்புகிறதென்றபடி. ஸ்வஸம்பந்தத்தாலே இழக்கவேண்டிற்று என்றதுக்கு ஸம்வாதம் -* **நந்தன் இத்யாதி.** *பெருமாள் திருமொழி - அறுபத்துமூன்றாம்பாட்டு, "முந்தைநன்முறை" இத்யாதி. ஸ்ரீநந்தகோபர்பெற்ற பாக்யமெல்லாம் பாக்யஹீநையான என்னைக் கைப்பிடித்த ஸ்வாமியானஸ்ரீவஸுதேவர் பெற்றிலரேயென்று பாவார்த்தம். இதுக்கு அர்த்தம் -* **தமப்பனை** *இத்யாதி. முந்தின அர்த்தத்துக்கு ஸம்வாதம் -* **மமைவ** *இத்யாதி. "மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹதஸ்தி ந ஸம்சய: । ஸமர்த்தாவபி தௌ யந்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ" இதி ஸுந்தரகாண்டே அஷ்டாத்ரிம்சே ஹநுமந்தம்ப்ரதி ஸீதா. காணப்பெறாதது அஸந்நிஹிதனையோ? என்ன,* **கடிக்கமலத்து** *இத்யாதி. முதற்றிருவந்தாதி - ஐம்பத்தாறாம்பாட்டு, "பேரோவாப்பிதற்றல்" இத்யாதி. நேரேகடிக்கமலத்துள் இத்யாதி - அவ்யவதாநேந, பரிமளத்தையுடைய திருநாபீகமலத்திலே நிரந்தரவாஸம்பண்ணாநிற்கச்செய்தேயும் ப்ரஹ்மாவானவன் ஸர்வேச்வரன் திருவடித்தாமரையைக் காணமாட்டுகிறிலனிதி சப்தார்த்த:.* **நெஞ்சத்துப்போராது** *இதி - மூன்றாந்திருவந்தாதி, எண்பத்தோராம்பாட்டு. "நெஞ்சால் நினைப்பரியன்" இத்யாதி. நெஞ்சத்துப்பேராதுநிற்கும் பெருமானை - நெஞ்சைவிட்டுப் போகமாட்டாதே நித்யவாஸம்பண்ணும் ஸர்வேச்வரனை யித்யர்த்த:.* **ஒருகால்கூப்பிட்டார்க்கும்** *இதி - ஸ்ரீகஜேந்த்ராழ்வான் ஒருகால் கூப்பிட, வந்து முகங்காட்டினனிறே யென்றபடி. சப்தார்த்தம் -* **ஒன்றில்** *இத்யாதி. வ்யுத்க்ரமேண பூர்வவாக்யவிவரணம் -* **தத்தஸ்ய** *இத்யாதி. "[illegible]" இத்யாதி, ஹநுமந்தம் ப்ரதி ஸீதா, பூர்வமேவ லிகிதம். மடலூர்ந்துபெற்றவள் - உஷை. 'ஸ்வரூபம்பெற்றேனல்லேன்' என்றத்தை ஸங்க்யந்தரேண த்விவிதமாக விவரிக்கிறார் -* **என்ஸ்வரூபத்தையும்** *இத்யாதி. வ்யுத்க்ரமேண விவரணம்-* **அவன் நீர்மையையும்** *இத்யாதி. நீர்மையை அழிக்கையாவது - 'ஆஸ்ரிதருடைய ஆபத்திலே வந்து உதவி ரக்ஷிக்கும் பரமக்ருபாவான்' என்று சொல்லப்படுகிற நீர்மையை, இப்போது இவர்க்கு உதவாமையாலே, 'இப்படி இவர் நோவுபட்டுக் கூப்பிடவும் வந்து உதவிற்றிலன்' என்று நாட்டார் அந்நீர்மையை இல்லைசெய்வர்களாகையால், இவ்வழியாலே நீர்மையை அழித்தேனென்றபடி. பங்க்யந்தரேண 'அவன் ஸ்வரூபத்தையும் அழித்தேன்' என்றதின் விவரணம் -* **அவனீஸ்வரத்வத்தை** *இத்யாதி. மேலுக்கு அவதாரிகை -* **இரண்டுதலையையும்** *இத்யாதி. 'இரண்டுதலையையும் அழித்து' இத்யாதியாற் சொன்ன அர்த்தத்தை வ்யதிரேகமுகேந த்ருடீகரிக்கிறார்-* **வ்யதிரேகத்தில் இத்யாதி.** *வ்யதிரேக: - விஸ்லேஷ:. அப்படி போதுபோக்கவொண்ணாத விஷயமோ? என்ன,*

"உண்டோ கண்கள் துஞ்சுதல்" என்றும், "என்னினைந்து போக்குவர்ப்போது" என்றும் கண்ணுறங்காதே போதுபோக்கவும் அரிதாயிறே இருப்பது. (எ)

## எட்டாம் பாட்டு.

கோலமே! தாமரைக்கண்ணதோரஞ்சன
நீலமே! நின்றெனதாவியையீர்கின்ற
சீலமே! சென்றுசெல்லாதன முன்னிலாங்
காலமே! உன்னை எந்நாள்கண்டுகொள்வனே?

ஆ.—(கோலமே.) கோலமே! தாமரைக்கண்களை யுடையதொரு அஞ்சனநீலமே! இப்படியிருந்துவைத்து என்னுடைய நிகர்ஷம்பாராதே என் நெஞ்சமே நீள்நகராக இருந்த நிரவதிகஸௌசீல்யத்தாலே என்னை மயக்குகிறவனே! உன்னை என்று நான் காண்பது? என்று சொல்ல, எம்பெருமானும் 'காணக்கடவிய காலம் வந்தாலன்றோ காணலாவது' என்று அருளிச்செய்ய, 'அக்காலந்தான் நீ யிட்ட வழக்கன்றோ? ஆனபின்பு, இக்காலந்தன்னையே அந்தக் காணக்கடவிய காலமாக்குவோம் என்றால் உன்னால் ஆக்க முடியாதோ?' என்கிறார்.

ஓ.—எட்டாம்பாட்டில், உம்முடைய அபேக்ஷிதம் செய்கைக்கு ஈடான காலம் வர வேண்டாவோ? என்னும் பக்ஷத்தில், அதுவும் நீயிட்டவழக்கன்றோ? ஆனபின்பு, நான் இழக்கப்போமோ? என்கிறார்.

[கோலமே] - அழகு ஒருவடிவுகொண்டாற்போலே யிருக்கிறவனே! [தாமரை என்று தொடங்கி] - மநோஹரமான திருக்கண்களையும் விலக்ஷணமாய் ப்ரமஹரமாய் நீலவர்ணத்தை வகுத்தாற்போலேயிருக்கிற வடிவையுடையையாய் நீ நெடுநாள் போகட்டாலும் மறக்கவொண்ணாதபடி என்னை யீர்கிற சீலமே ஸ்வபாவமானவனே! அதாகிறது - செய்யதாமரைக்கண்ணனில் சீலவத்தை. [சென்று என்று தொடங்கி] - பூதபவிஷ்யத்வர்த்தமாந காலத்ரயமும் நீ இட்டவழக்காம்படி யிருக்கிறவனே!

ப.—அநந்தரம், அநுஸந்தேயமான ஸௌந்தர்யாதிகளையுடைய உன்னை எந்நாள் கண்டு அநுபவிக்கப் பெறுவது? என்கிறார்.

கோலமே - (ஒப்பனை ரூபம்தரித்தாற்போலே) தர்சநீயனாய், தாமரை - தாமரை போன்ற, கண்ணது - கண்களையுடைத்தாய், ஓர் - அத்விதீயமான, அஞ்சனம் - அஞ்சநத்ரவ்யத்தினுடைய, நீலமே - நீலநிறந்தான் வடிவானவனாய், (இந்நிரூபகுணத்தளவன்றியே), நின்று - ஸ்திரமாய் நின்று, எனது ஆவியை - என் ஆத்மாவை, ஈர்கின்ற - ஈராநிற்கிற, சீலமே - சீலமே நிரூபகமானவனாய், சென்று - சென்ற பூதகாலமும், செல்லாதன - செல்லாத பவிஷ்யத்காலமும், முன்னிலாம் காலமே - முன்னே வர்த்தமாநமாயுள்ள காலமும் நீ யிட்ட வழக்காம்படியானவனே!

---

**உண்டோகண்கள்** இத்யாதி. திருவிருத்தம் - தொண்ணூற்றேழாம்பாட்டு, "எழுவதும்" இத்யாதி - கண்களுறங்குதலுண்டோ? இத்யர்த்தஃ. **என்னினைந்து** இத்யாதி - பெரியதிருவந்தாதி, எண்பத்தாறாம்பாட்டு. "கார் கலந்த" இத்யாதி. சூழ்ந்துகிடக்கிற பாபபலமாய்த் தரைகாணவொண்ணாத துஃகத்தை இக்காலம் எத்தை அநுஸந்தித்துப் போதுபோக்குவ தென்று அர்த்தம். கோலம் - அழகுடைய விக்ரஹம். ஆவியே இத்யாரப்ய, உன **கோலத்தை** - கூவியுங்காணப்பெறேன் இத்யந்வயஃ. (எ)

உன்னை - (எவ்விதனான) உன்னை, எந்நாள் - என்று? கண்டுகொள்வன் - கண்டு அநுபவிப்பது? கோலமேய்ந்த தாமரைக்கண்ணா னென்றுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், உம்முடைய அபேக்ஷிதம் செய்கைக்கு ஈடான காலம் வர வேண்டாவோ? என்னில்,—'அதுவும் நீ இட்ட வழக்கன்றோ?' என்கிறார்.

[கோலமே] - அழகென்றும் ததாச்ரயமென்றும் இரண்டின்றிக்கே அழகுதான் ஒரு வடிவுகொண்டாற்போலே யிருக்கை. ஜ்ஞாநஸ்வரூபனென்றும், ஜ்ஞாநகுணகனென்றும் சொல்லக் கடவதிறே ஜ்ஞாதாவை. [தாமரை இத்யாதி] - தாமரையை ஒருபோலியாகச் சொல்லலாம் படியான திருக்கண்களையுடையையாய், அதுக்குப் பரபாகமாய் ச்ரமஹரமான வடிவையுடைய வனே! அஞ்சனமென்றும் நீலமென்றும் சொல்லுகையால் ஒன்று ஒப்பாகமாட்டாமையாலே கதிர் பொறுக்குகிறார். நீலந்தன்னை வடிவாக வகுத்தாற்போலே யிருக்கை. [நின்று இத்யாதி]-வ்யதிரே கத்தில் வடிவை மறக்கிலும் பின்புநின்று பின்னடி மறக்கவொண்ணாதபடி என்நெஞ்சை யீரா நின்றிருந்துள்ள சீலமே ஸ்வரூபமானவனே! "செய்யதாமரைக்கண்ண"னில் "நெஞ்சினால் நினைப் பான் யவன்" என்கிற அர்ச்சாவதாரத்திலே நீர்மையையிறே இவர் நினைக்கிறது. [சென்று இத் யாதி] - தேஹகுணங்களும் ஆத்மகுணங்களும் குறைவற்றிருந்தாலும் இன்னகாலத்திலே பெறக் கடவது என்றன்றோ இருப்பது என்னில்,—பூதபவிஷ்யத்வர்த்தமாநகாலத்ரயமும் நீயிட்ட வழக் கன்றோ? என்கிறார். "காலஸ்ய ச ஹி ம்ருத்யோஶ்ச ஜங்கமஸ்தாவரஸ்ய ச । ஈஶதே பகவாநேக: ஸத்யமேதத் ப்ரவீமி தே". ஸத்யம் இத்யாதி-பகவத்விஷயத்தில் அர்த்தவாதமில்லை. [முன்னி லாங்காலமே] - முன்னே வர்த்திக்கிற காலமே. [உன்னை] - ஸர்வப்ரகாரவிலக்ஷணனைக் காலத்ர யமும் நீ இட்ட வழக்கான உன்னை. [எந்நாள் கண்டுகொள்வனே]- நான் பெறும் நாள் இன்னநாள் என்னவேணும். "வாஹிநீ பதிநா ஸார்த்தம் ஏஹி பஶ்யேம மைதிலீம்" என்று ஸ்ரீபரதாழ்வானுக்குச் சொன் னாற்போலே சொல்லவேணும் என்கிறார்.

ஈடு.—எட்டாம்பாட்டு. உம்முடைய அபேக்ஷிதம் செய்கைக்கு ஒரு காலமில்லையோ? அது வருங்கிடரேன்ன; அதுவும் நீயிட்ட வழக்கன்றோ? என்கிறார்.

[கோலமே] - அழகும் அதுக்கு ஆஶ்ரயமும் என்று இரண்டின்றிக்கே, அழகுதானே வடிவாயிருக்கிறபடி. ஜ்ஞாதாவின் பக்கலிலே ஜ்ஞாநவ்யபதேஶம் பண்ணுகின்றதிறே தத்குண ஸாரத்வத்தாலே; அப்படி அழகே விஞ்சி அத்தையிட்டு நிரூபிக்கவேண்டும்படி யிருக்கையாலே 'கோலமே' என்கிறார். [தாமரை இத்யாதி] - அதுக்கு ஆஶ்ரயமான திருவுடம்பு இருக்கிறபடி. அது தன்னிலும் ஒரோ அவயவங்களே அமைந்திருக்கிறபடி. சிவப்பாலும் விகாஸத்தாலும் மார்த் தவத்தாலும் தாமரையை ஒருவகை உபமை சொல்லலாம்படி யிருக்கிற கண்ணழகையுடையவனே!

---

எட்டாம்பாட்டு—கோலமே இத்யாதி. 'சென்று சேர்வாதன முன்னிலாங்காலமே' என்றத்தைக் கடாக்ஷித்து உக்திப்ரத்யுக்திரூபேண அவதாரிகை- உம்முடைய இத்யாதி.

கோலத்தையுடையனென்னுதே கோலந்தானைச் சொன்னதுக்கு பாவம் - அழகும் இத்யாதி. கோலம்-வடிவழகு. குணத்தையிட்டு குணியை நிரூபிக்கலாமோ? என்ன, ஜ்ஞாதாவின் இத்யாதி. ஜ்ஞாநவ்யப தேஶம்பண்ணுகின்றதிறே யென்றது - "விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே" என்கிற ஶ்ருதி சொல்லாநின்ற திறே யென்றபடி. தத்குணஸாரத்வத்தாலே - ஜ்ஞாநகுணஸாரத்வத்தாலே. 'அஞ்சனநீலமே' என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - அதுக்காஶ்ரயமான இத்யாதி. 'தாமரைக்கண்' என்றது - ஸர்வாவயவங்களுக் கும் உபலக்ஷண மென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் - அதுதன்னிலும் இத்யாதி. 'தாமரை' என்ற துக்கு பாவம் - சிவப்பாலும் இத்யாதி. நீலம் - செய்தல். இரண்டையும் சொல்லவேணுமோ? என்ன,

[அஞ்சனநீலமே]-அஞ்சனமே! நீலமே! என்றபடி. ஒன்றே உபமானமாவ தோன்றில்லாமையாலே அங்கு மிங்கும் கதிர்பொறுக்குகிறார். நைல்ய குணந்தன்னை வடிவாக வகுத்தாற்போலே யாயிற்று இருப்பது. அழகும் வடிவமேயாய் அகவாயில் ஒருபசையற்றிருக்குமோ? என்னில், -[நின்று இத்யாதி]-வ்யதிரேகத்தில் வடிவை மறக்கிலும் மறக்கவோண்ணுதபடி பின்னடி, என்னெஞ்சை யீராநின்றுள்ள சீலமே ஸ்வரூபமானவனே! "செய்ய தாமரைக் கண்ண"னில் "நெஞ்சினல் நினைப்பான் யவன் அவனுகும் நீள்கடல்வண்ணன்" என்கிற அர்ச்சாவதாரத்தின் நீர்மையையிறே இவர் நினைக்கிறது. அன்றியே, "வாராவேழுல"கில் தம்மைச் சேரவிட்டுக்கோண்ட சீலமாதல். இப்படி அழகும் குணங்களும் உண்டானலும், பேறுமிடத்தில் இன்னகால மேன்றில்லையோ? என்னில்,—[சென்று இத்யாதி]-அக்காலமும் நீ யிட்ட வழக்கன்றே? "[கிரந்த எழுத்து வாக்கியம்]" (காலஸ்யசஹிம்ருத்யோர்ச ஜங்கமஸ்த்தாவரஸ்யச! ஈஸதேபகவாநேகஸ்ஸத்யமேதத்ப்ரவீமிதே)பதார்த்தங்களினுடைய உத்பத்திக்கு முன்பும் நின்று இவையழிந்தாலும் நிற்கக்கடவ காலத்துக்கும், இவற்றினுடைய ஸம்ஹர்த்தாக்களுக்கும் ஸ்ரஷ்டாக்களுக்கும்; "[கிரந்த எழுத்து வாக்கியம்]" (ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம்) என்று, ஸம்ஹர்த்தாக்களை - ம்ருத்யுசப்தத்தாலே சோல்லக்கடவதிறே. ஸ்ருஷ்டிக்குக் கர்ப்பவித்த பதார்த்தங்களினுடைய உத்பத்திக்குமுன்பும் உளனுய், அழிந்தாலும் உளனுய், என்று மொக்க உணர்ந்திருந்து ஸ்ரஷ்டாக்களும் ஸம்ஹர்த்தாக்களும் ஸ்ருஜ்யருமான இத்தையடையத் தன் புத்த்யதீநமாக நியமிக்கிற ஞருவனே! "ஸத்யமித்யாதி"- பகவத் விஷயத்தில் அர்த்தவாத மில்லை; தன்னை 'ஆப்தன்' என்று விஸ்வஸித்தவனுக்குப் போய்சோல்வாரில்லை.'சென்று' என்கிறது- பூதகாலத்தை. 'செல்லாதன' என்றது - பவிஷ்யத்காலத்தை. முன்னிலாங்காலம் என்கிறது - முன்னே வர்த்திக்கிற வர்த்தமாநகாலத்தை. [காலமே] - காலத்ரயத்தையும் நீ யிட்ட வழக்காக வுடையவனே! [உன்னை இத்யாதி] - வடிவழகும் குணங்களும் விடலாயிருந்ததில்லை; காலக் கழிப்புச் சோல்லவோண்ணுதபடியா யிருந்தது. ஆனபின்பு, நான் உன்னைக் காண்பது என்று?

---

ஒன்றே இத்யாதி. அஞ்சநத்தின் நைல்யமென்று அர்த்தாந்தரம் - நைல்யகுணம் இத்யாதி. அஞ்சனம் – மை. அஞ்சனம்போலவும் மெப்தல்போலவுமிருக்கிற திருமேனியையுடையவனே! என்று முந்தினஅர்த்தம். அஞ்சநத்தின் நைல்யம்போன்ற வடிவையுடையவனேயென்று இரண்டாமர்த்தம். இங்கு எந்த சீலத்தைச் சொல்லுகிறது? என்ன, செய்யதாமரை இத்யாதி. காலம் அவனிட்டவழக்கென்னுமதுக்கு ப்ரமாணம் - காலஸ்ய இத்யாதி. "[கிரந்த எழுத்து வாக்கியம்]" இத்யுத்யோகபர்வணி அஷ்டஷஷ்டிதமே த்ருதராஷ்ட்ரம்ப்ரதி ஸஞ்ஜயஃ. "[கிரந்த எழுத்து]" என்கிற சப்தம் - ப்ராதாந்யத்திலே. 'காலத்துக்கு ப்ராதாந்யமேது?' என்ன, பதார்த்தங்களினுடைய இத்யாதி. "[கிரந்த எழுத்து]" என்ற சப்தம் - அநுக்த ஸமுச்சயமாக்கி, ஸ்ரஷ்டாக்களுக்கும் என்றது. "[கிரந்த எழுத்து]" என்றது - ஸம்ஹர்த்தாக்களுக்கெல்லாம் உபலக்ஷணம். ம்ருத்யுசப்தம் - யமவாசகமொழிய, ஸம்ஹர்த்ருவாசகமாயோ? என்ன, ம்ருத்யுர்யஸ்ய இத்யாதி. கடவல்ல்யாம் இயம்ஸ்ருதிஃ. உக்தநிகமபூர்வகமாக, "[கிரந்த எழுத்து]" என்றதுக்கு அர்த்தம்- ஸ்ருஷ்டிக்கு இத்யாதி. உணர்ந்திருந்து என்னுமளவும் காலத்துக்கு நிர்வாஹகனும் க்ரமம். "[கிரந்த எழுத்து]" என்றதுக்கு அர்த்தம் - பகவத்விஷயத்தில் இத்யாதி. 'தே' என்றதுக்கு பாவம்-தன்னை இத்யாதி. 'எந்நாள்' என்று -அவதி கேட்கைக்கு, அபேக்ஷிதம் பெறுகை நிஸ்சிதமோ? என்ன, வடிவழகும் இத்யாதி. கழிப்பு-கண்ணழிவு. அறுதியிட்டுக்கொடுத்தது – "[கிரந்த எழுத்து]

சொல்லாய். "வ-ஜிணெ-ுவ த-ூ-ுமெவஷெ-ு வ-வசூூ" (பூர்ணேசதுர்த்தமேவர்ஷே பஞ்சம்யாம்) என்றாற்போலே நீயும் நம்மை இந்நாள் காணக்கடவை' என்று சொல்லாய். (அ)

# ஒன்பதாம் பாட்டு.

கோள்வன்நான்மாவலி! மூவடிதாவென்ற
கள்வனே! கஞ்சனைவஞ்சித்து வாணனை
உள்வன்மைதீர ஓராயிரந்தோள்துணித்த
புள்வல்லாய்! உன்னைஎஞ்ஞான்றுபொருந்துவனே?

**ஆ.**—(கொள்வன் நான்.) கோலினவை முடிக்க விரகறிவானொருவனாய், ஆஶ்ரித விரோதி நிரஸநஸ்வபாவனாய், விரோதிநிரஸந ஸமர்த்தனாயிருந்த உன்னை எஞ்ஞான்று பொருந்துவன்? என்கிறார்.

**ஒ.**—ஒன்பதாம்பாட்டில், ஆஶ்ரிதரக்ஷணோபாயஜ்ஞனுமாய் ப்ரதிகூல நிரஸநஸமர்த்தனுமாயிருக்கிற உன்னை நான் சேர்வது என்று? என்கிறார்.

[கொள்வன் என்று தொடங்கி] - 'மஹாபலீ! எனக்கு மூவடி வேணும், தா' என்று முக்யமான பேச்சாலே அவனை ஸர்வஸ்வாபஹரணம் பண்ணினவனே! [கஞ்சனை என்று தொடங்கி]-கம்ஸன் உன்திறத்துச் செய்ய நினைத்த தீங்கு அவன் தன்னோடே போம்படி பண்ணி 'ருத்ரனையுடையம்' என்கிற அபிமானமெல்லாம் பக்நமாம்படி பாணனை அநாயாஸேந ஆயிரந்தோளையும் துணிப்பதும் செய்து பெரியதிருவடியை யுத்தத்தில் கருத்தறிந்து நடத்தவல்லவனே!

**ப.**—அநந்தரம், ஸமஸ்தப்ரதிபந்தக நிவர்த்தகனான உன்னை நான் ப்ராபிப்பது என்று? என்கிறார்.

'மாவலி - மாவலீ! நான் - நான், மூவடி கொள்வன் - மூவடி கொள்வன், தா - தா', என்ற - என்று (முக்யோக்தியாலே அவனை வசிகரித்த), கள்வனே - க்ருத்ரிமனாய், கஞ்சனை வஞ்சித்து - கம்ஸனுடைய வஞ்சநம் அவன்தன்னோடேபோம்படிபண்ணி, வாணனை - வாணனை, உள் வன்மை தீர-நெஞ்சுவலி அழியும்படி, ஓர் தோள் ஆயிரம் - அத்விதீயமான தோள் ஆயிரத்தையும், துணித்த - துணித்துப்போகட்ட, புள்வல்லாய் - கருடவாஹநனே! உன்னை - (இப்படி ஆஶ்ரிதவிரோதிநிவர்த்தநஸமர்த்தனான) உன்னை, எஞ்ஞான்று பொருந்துவன் - என்று சேர்வது?

**இ.**—ஒன்பதாம்பாட்டில், ரக்ஷணோபாயஜ்ஞனுமாய் விரோதிநிரஸநசீலனுமாயிருந்த உன்னை நான் சேர்வது என்றோ? என்கிறார்.

---

ஹி வ-வ-ஜிணெ-ு" இத்யாதி ஶ்லோகமாயிருக்க, "வ-ஜிணெ-ுவ த-ூ-ுமெவஷெ-ு" என்றதை யெடுத்தது - ஸ்புடார்த்தமாகையாலே, "வ த-ூ-ுமெஹி வ-வ-ஜிணெ-ு வஷெ-ு ஹமிரவ-ஜதூ। நஜுகூ௱ாஜி யதிகூாதெ- ஷுவெகூ௱ாஜிஹ-தாமநு। தயெதி வ ஷுதிஜ்ஞாய தம்வஸிஷ்ஜ ஸாஜுஷு" இத்யாதி. யுத்தகாண்டே, "வ-ஜிணெ-ு வத-ூ-ுமெவஷெ-ு வ-வஜூ ஸக்ஷணாஜ: । ஹாஅாஜாமு ஶ-ஷுாவ வவநெநியதொ ஶ-நிஷு". க்ரமேண அந்வய:. (அ)

கோள்வன்] - பெற்றல்லது போகேனென்னுதல், அந்தவேஷத்தைக் கண்டு நம் பக்கலிலே ஒன்றைக்கொள்வது காண் என்று நிற்க அவன் நினைவறிந்து 'நான் கொள்வன்' என்னுதல். [மாவலி] - இதுக்குமுன்பு ஒருப்படியாக்குத் தாழ்வுசொல்லியறியானே. அவதாரத்துக்கு முன்பு அறியான், ப்ரபு இல்லாமையாலே; அவதரித்தபின்பு பிறந்த அன்றே பிக்ஷையில் அதிகரிக்கையாலே கற்கைக்கு அவஸரமில்லை; அவன் தன்னை முகந்தேபர் சொல்லக் கண்டறியாமையாலே இவனைப் பார்த்து இவன் பருவத்தாலே ப்ரீதனாய் 'உனக்கு வேண்டுவது என்?' என்ன, 'மூவடி' என்றான். தன்னை வேண்டிக் காயன்றிக்கொடுக்கையாலே அநாதரிக்க, 'தா' என்றான். [என்ற கள்வனே] - ஶுக்ராதிகள் விரோதிக்க, அவர்கள் வார்த்தை செவிப்படாதபடி உன் முக்யமான பேச்சாலே அவனை அபஹரித்தவனே! [கஞ்சனை வஞ்சித்து] - கம்ஸன் குவலயாபீடத்தாலே நலிய நினைக்க அந்நினைவை அவன் தன்னோடே போம்படி பண்ணி. [வாணனை உள்வன்மை தீர] - க்ஷுத்ரதேவதையைப் பற்றி "ஜயஶோஸயம்ஹதோஸவதி" என்றிருக்குமாபோலே யிருந்த வாணன் நெஞ்சுவலி போம்படியாகப் பெரியதிருவடிமேலே ஏறிச் சாரிகை வந்து அவனுடைய பாஹுவநத்தைச் சேதித்தவனே! [புள்வல்லாய்] - 'வாள்வல்லான் தோள்வல்லான்' என்றாற் போலே. [உன்னை]-ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாய் ப்ராப்தனாயிருந்துள்ள உன்னை. [எஞ்ஞான்று பொருந்துவனே] - பிரிந்தவன் கூடினாற்போலேயிறே இவர்க்கு ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தபடி. அநந்யார்ஹையான பிராட்டி அஶோகவநிகையிலே இருந்தாற்போலேயாயிற்று, ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் ஸம்ஸாரத்தில் இருக்கும் இருப்பு.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ரக்ஷ்யோபாயஜ்ஞனுமாய் விரோதிநிரஸந ஶீலனுமான உன்னை நான் கிட்டுவது என்று? என்கிறார்.

[கோள்வன்] - மலையாளர் வளைப்புப்போலே, கொண்டல்லது போகே னென்றானாயிற்று. அன்றியே, இவனுடைய விநீத வேஷத்தைக் கண்டு 'இவன் நம்பக்கலிலே ஒன்றைக் கோள்வது காண்' என்று நினைந்தமை தோற்ற இருந்தானாயிற்று மஹாபலி; அவன் நினைத்தத்தை யறிந்து, நான்கோள்வ னென்கிறான்; அன்றியே, இவன் வடிவில் நைரபேக்ஷ்யத்தைக் கண்டு, 'இவன் நம்மை யொன்று கோள்ளுமோ?' என்று இருந்தான்; நீ அங்ஙன் நினைக்கவேண்டா; நான் ஸாபேக்ஷ னென்கிறார். [நான்] - உன்பக்கல் பெற்றாலன்றி ஓரடியிடாத நான். [மாவலி] - பிறந்தவன்றே பிக்ஷையிலே அதிகரிக்கையாலே ப்ரபுக்களை யுபசரித்து வார்த்தை சொல்லியறியானே. முன்பு சிலர்க்குத் தாழ்வுசொல்லியறியான்; பிறந்த பின்பு வாஸனை பண்ணுகைக்கு நாளில்லை; அத்தாலே, 'மாவலி' என்கிறான். எல்லாரும் தன்னை உயரச் சொல்லுமதொழிய இப்படிச் சொல்லக் கேட்டறியாமையாலே, இவன் ஒருபாலன் தன்முன்பே நின்று சிறுபேரைச்சொல்லி யழைத்தவாறே இனியனாய் முகத்தைப்பார்த்து, 'உனக்கு வேண்டுவதேதென்?' என்றான். [மூவடி] - தன்பக்கல் கோள்ளுமவர்களில், இப்படி சிறுக அர்த்திப்பா ரில்லாமையாலே அநாதரித்திருந்தான்; அந்ய

---

ஒன்பதாம்பாட்டு - கோள்வன் இத்யாதி. 'கள்வனே கஞ்சனைவஞ்சித்து' இத்யாதி, 'எஞ்ஞான்று பொருந்துவன்' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - ரக்ஷ்யோபாயஜ்ஞனுமாய் இத்யாதி.

முந்தின அர்த்தம் - யாசகத்வசாதுர்யத்திலே. நீ தாராவிட்டாலும் நான் கொள்வனென்று கருத்து. மலையாளர் வளைப்பாவது-மலையாளர் ஒருவன்பக்கலிலே ஒன்றைவாங்கநினைத்தால் வாங்கியல்லதுபோகாதபடி வளைத்துக்கொள்வர்கள், அதுபோலே யென்றபடி. த்விதீயார்த்தம் - வைஶிஷ்ட்யத்திலே. த்ருதீயார்த்தம் - நைரபேக்ஷ்யத்திலே. ப்ரதமார்த்தத்துக்குச் சேர - உன்பக்கல் இத்யாதி. அர்த்தியானல் 'மஹாராஜாவே' என்னவேண்டாவோ? என்ன, பிறந்தவன்றே இத்யாதி, மாவலியென்கிறான் இத்யந்தம். அவதாரிகை - எல்லாரும் இத்யாதி. உயர - உத்க்ருஷ்டமாக. இனியனாய் - ரஸிகனாய். ப்ரீதனாயித்யர்த்தః. களவேதென்ன, இந்த்

பரநத பண்ணாதே, ‘தா’ என்கிறான். [என்ற கள்வனே]- இந்த்ரன் ஶரணம்புக்கு நின்றான், உதாரனாயிருப்பானொருவன் அவனுடைய ராஜ்யத்தைப் பறித்துக்கொண்டான்; “ராவணாதிகளைப் போலே அழியச்செய்யப் போயிற்றில்லை, ஒரு தர்மாபாஸத்தை யேறிட்டுக்கொண்டு நிற்கையாலே. *இவனோ ஶரணம் புக்குநின்றான்; இனிப் போம்வழி யேன்?” என்று பார்த்துத் தன்னை இரப்பாளனாக்கி, ஶுக்ராதிகள் ‘இவன் தேவகார்யஞ் செய்ய வந்தான்’ என்னச்செய்தேயும் அவன் நெஞ்சில் படாதபடி அவனை வடிவழகாலும் பேச்சழகாலும் வாய்மாளப்பண்ணின வஞ்சநங்களெல்லாவற்றையும் நினைத்து ‘கள்வனே’ என்கிறார். [கஞ்சனை வஞ்சித்து] - கம்ஸன் மாதுலனாய், ப்ரமாதத்தாலே புகுந்ததாகத் தானும் துகேயாய்க் கண்ணீர் பாய்த்துவானாக வாசலிலே குவலயாபீடத்தையும் மல்லரையும் நிறுத்திவைக்க, அத்தையடைய நிரஸித்து, கம்ஸன்கோலின வஞ்சநத்தை அவன் தன்னோடே போக்கினவனே! [வாணன் இத்யாதி] - க்ஷுத்ர தேவதையைப் பற்றி “அத ஸோऽபயங்கதோ பவதி” (அதஸோபயங்கதோபவதி) என்றிருக்குமாபோலே யிருந்த வாணனுடைய நெஞ்சு வலி கைமேலே போம்படியாகப் பெரியதிருவடியின்மேலே யேறிச் சாரிகைவந்தவனே! [ஆயிரந்தோள் துணித்த] - ‘இவன் கைவிஞ்சினான்’ என்று இவனைக் கைகழியவிட்டான். [புள்வல்லாய்] - ‘வாள்வல்லாய், தோள்வல்லாய்’ என்றாற்போலே. [உன்னை என்ஞான்று பொருந்துவனே] - அவன்பக்கல்நின்றும் பிரிந்தாற்போலே யிருக்கிறதுகாணும், ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவாறே. “அநந்யா ராகவேணாஹம்” (அநந்யாராகவேணாஹம்)என்கிற பிராட்டி அஶோகவநிகையிலே பிரிந்திருந்தாற்போலே யிருக்கிறது காணும், ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவாறே உடம்புடனிருக்கும் இருப்பு. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவாறே அநாதிகாலம் ஸம்ஸாரியாய் நின்ற நிலை வந்தேறியாய்த் தோற்றிற்று. ஸர்வஜ்ஞனாய் ஸர்வ ஶக்தியாய் ஶீலாதிகுணங்களையுடைய உன்னைப் பார்த்தால் இழக்கவேண்டுவதில்லை: நான் இழக்கமாட்டாதவனா யிருந்தேன்; ஆனபின்பு, உன்னைக் கிட்டுங்காலம் சொல்லாய் என்கிறார். ஸர்வாத்மாக்களுக்கும் ஶேஷத்வம் அவிஶிஷ்டமாயிருக்கச் செய்தேயும் பத்தரும் முக்தரும் நித்யருமென்கிற பிரிவோபாதியிறே மஹிஷிகளும்; ‘அநந்யா’ என்கிற பிராட்டியினுடைய வார்த்தை எல்லார்க்குஞ் சொல்லலாம்படியிறே ஸ்வரூபத்தை யுணர்ந்தால்

---

ரன் இத்யாதி. வஞ்சிக்குமது தோஷமன்றிக்கே குணமாகைக்காக அருளிச்செய்கிறார், கம்ஸன் இத்யாதி. என்றிருக்குமாபோலே - என்று பகவச்சிஷ்டன் இருக்குமாபோலே. க்ஷுத்ரதேவதையைப்பற்றி - இருந்த வாணன் இத்யந்வயம். உள்வன்மை-நெஞ்சுவலி. கைமேலே-உடனே. கைபோமென்று ஸ்வஹாவார்த்தம். சாரிகை - வையாளி. ‘வாணன் - ஆயிரந்தோள்துணித்த’ என்றதுக்கு ரஸோக்தி - இவன்கைவிஞ்சினான் இத்யாதி. அவிதேயனானானென்று த்யஜித்தானென்று ரஸோக்தி. கைபெருத்தானென்று கையைக்கழித்துவிட்டானென்று ஸ்வஹாவார்த்தம். வாள்வல்லாய் இத்யாதி: இந்தப்புள்ளை நடத்தும்போது இவனேயாகவேணுமென்றபடி. பொருந்துகை - கூடுகை. கூடிவைத்தேனென்றுதே ‘பொருந்துவன்’ என்று பிராட்டியார் பாசுரத்தைச் சொல்லுவானென்? என்ன, அவன்பக்கல்நின்றும் இத்யாதி. விவரணம் - அநந்யா இத்யாதி ‘‘ஶக்யா லோபயிதும் நாஹம் ஐஶ்வர்யேண தநேந வா। அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா’’ இதி ஸுந்தரகாண்டே ராவணம்ப்ரதி ஸீதா. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் அவன் பக்கல்நின்றும் பிரிந்தவை தோன்றும்படி எங்ஙனே? என்ன, ஸ்வரூபஜ்ஞாநம் இத்யாதி. ‘பொருந்துகை நிஶ்சிதமோ, என்ஞான்று? என்கைக்கு’ என்ன, ஸர்வஜ்ஞனாய் இத்யாதி. ‘கள்வனே’ என்கையாலே - ஸர்வஜ்ஞத்வம். ‘கஞ்சனைவஞ்சித்து’ இத்யாதியாலே - ஸர்வஶக்தித்வம். ‘சார்ந்த சீலமே’ என்கையாலே - ஶீலாதி குணங்களையுடையனென்றது. ‘‘[illegible]’’ என்ற,அநபாயிநியானவளைப்போலே ‘என்ஞான்றுபொருந்துவன் என்னும்படி யென்?’என்ன,ஸர்வாத்மாக்களுக்கும் இத்யாதி.ஆகையாலே,‘அநந்யா’என்கிற என்று கூட்டுவது.‘‘[illegible]’’,‘‘[illegible]’’ என்று - ஈஶ்வரனோடு ஐக்ய கதநமுகேந ஈஶ்வரகோடியாகச் சொல்லாநிற்க, பிராட்டியைச் சேதநகோடியாகச்

* இவனோ ஶரணம் புக்குநின்றான் என்பது - ‘இந்த்ரன் ஶரணம்புக்குநின்றான்’ என்றதன் அநுவாதம்.

இருப்பது: ஈஸ்வரனில் பிராட்டிமார்க்கு பேதஞ் சொல்லுகிற ப்ரமாணங்களெல்லாம் - அல்லாதாரோபாதி பிரிவுண்டென்னுமிடம் சொல்லுகிறன ; ஐக்யஞ்சொல்லுகிற விடமெல்லாம் - 'பாரதந்த்ர்ய காஷ்டையைப்பற்றச் சொல்லுகிறன' என்று ப்ராஸங்கிகமாக ஒருருவிலே அருளிச்செய்தார். [ஆயிரந் தோள் இத்யாதி] - 'கரபாதையிறே இவனை இப்படி கலங்கப்பண்ணிற்று' என்று அடுத்தேறுக வந்த கரத்தைக் கழித்து ப்ராப்த கரத்திலே நிறுத்தினவனே ! "ஆயிரங்கரங்கழித்த ஆதிமால்" இறே. [உன்னை என்ஞான்று பொருந்துவனே] - வாணனுடைய கைப்பற்றையுங் கழித்து இறையிலியாக்கின உன்னை எந்நாள் வந்து கிட்டுவன்? என்கிறார். (௯)

## பத்தாம் பாட்டு.

பொருந்தியமாமருதினிடைபோய எம்
பெருந்தகாய்! உன்கழல்காணியபேதுற்று
வருந்திநான் வாசகமாலைகொண்டு உன்னையே
இருந்திருந்து எத்தனைகாலம்புலம்புவனே?

ஆ.—(பொருந்திய.) பொருந்தின மாமருதினிடை யகப்படாதே போய் என்னை ரக்ஷித்தருளின பரமகாருணிகனே! உன்திருவடிகளைக் காண ஆசைப்பட்டுப் பெருதொழிந்து இப்படி முடியவும்பெருதே யிருந்து பெரிய வருத்தத்தோடே உன்குணங்களைச் சொல்லிக்கொண்டு நான் இன்னம் எத்தனை காலம் கிடந்து அலற்றக்கடவேன்? என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், உன்னுடைய குணஜிதனாய் உன்னைக்காணப்பெருத வ்யஸநத்தாலே துக்கப்படுகிற நான் இன்னம் எத்தனைகாலம் துக்கப்படக்கடவன்? என்கிறார்.

[பொருந்திய என்று தொடங்கி] - அல்பவிவரமாய்ப் பெருத்திருக்கிற மருதுகளின் நடுவே அகப்படாதே போய் என்னை ரக்ஷித்த மஹாப்ரபாவனே! மருதின்நடுவே தவழ்ந்துபோன திருவடிகளைக் காணவேணுமென்று ஆசைப்பட்டு. [வருந்தி என்று மேலுக்கு]- பெரிய வருத்தத்தோடே உன் குணத்தைச் சொல்லிக்கொண்டு.

ப.—அநந்தரம், ப்ரதிபந்தகத்தை அநாயாஸேந போக்கும் உன் திருவடிகளைக் காண ஆசைப்பட்டு எத்தனைகாலம் கூப்பிடக்கடவேன்? என்கிறார்.

பொருந்திய - (தன்னில்தான்) செறிந்துநிற்கிற, மா மருதின், இடை - பெரிய மருதுகளின் நடுவே, போய - (அநாயாஸேந) போய் அத்தை முறித்து, எம்பெருந்தகாய்-(உன்னை) எங்களுக்கு ஸ்வாமியாகத்தந்த பெரியவனே! உன் - உன்னுடைய, கழல்-(அக்காலத்திலேமறியவிட்ட) சிவந்த திருவடிகளை, காணிய-காணவேணுமென்கிற, பேது-ஈடுபாட்டை, உற்று - உடையேனாய்,

---

சொல்லுவானேன்? என்ன, ஈஸ்வரனில் இத்யாதி. ப்ராஸங்கிகமாக வென்றது – 'ஸர்வாத்மாக்களுக்கும்' என்று தொடங்கியாதல், 'ஈஸ்வரன்' இத்யாதி வாக்யம் தொடங்கியாதல். சாடுப்ரயோகார்த்தம் புநஸ்ச பதோபாதானம் - ஆயிரம் இத்யாதி. கரம் - கப்பம். "காமும் கடமும் குடியிறையாகும்' என்னக்கடவதிறே. அடுத்தேறுக - அதிகமாக; அடுத்தடுத்தேறினவென்று ஸ்வபாவார்த்தம். கரம்கழித்தமைக்கு ஸம்வாதம் - ஆயிரம் இத்யாதி. திருச்சந்தவிருத்தம், ஐம்பத்துமூன்றாம்பாட்டு – "மோடியோடு" இத்யாதி. பாணனுடைய ஆயிரந் தோளையும் கழித்த காரணபூதனான ஸர்வேஸ்வரனித்யர்த்தஃ. கைப்பற்றையும் – கைவசமானத்தையு மென்று சாடு, கைகளைப்பற்றி உடையனாயிருந்தமையையும் என்று ஸ்வபாவார்த்தம். இறையிலியாக்கி- இறையில்லாதவனாக்கி. இறை - தேவதையும், கரமும். க்ரமேண அந்வயஃ. (௯)

வருந்தி - க்லேஶித்து, நான் - (விஶ்லேஷமுடையனான) நான், வாசகம் - (உன்னுடைய) குணவாசக மான, மாலைகொண்டு - ஶப்தஸந்தர்ப்பத்தைக் கொண்டு, உன்னையே-(நிரதிஶயபோக்யனான) உன் னையே நோக்கி, இருந்து இருந்து - இளைத்திருந்திருந்து, எத்தனைகாலம் - எத்தனைகாலம், புலம் புவன் - கூப்பிடக்கடவேன்? காணிய - காண்கைக்கு.

இ.—பத்தாம்பாட்டில், உன்னைக்காணப்பெறாத வ்யஸநத்தாலே க்லேஶப்படுகிற நான் இன்னம் எத்தனை காலம் கூப்பிடக்கடவேன்? என்கிறார்.

[பொருந்திய] - இவனை நலிய நினைத்து க்ருதஸங்கேதராய் நின்றபடி; நிர்விவரம் என் னவுமாம். [மாமருது] - 'அவ்வருகே சாய்ந்தது அவன்மேலே சாய்ந்ததாகில் என்படக்கடவேன்!' என்று வயிறுபிடிக்கிறார். [இடைபோய] - ஒன்றேன்னலாம்படி அவகாஶமின்றியே நிற்க, அவ காசமுள்ளவிடத்திற் போமா போலே அதன்நடுவே போனபடி. [எம் பெருந்தகாய்] - அதில் அகப்படாதே ஶேஷியான உன்னை எனக்குத் தந்த பெரியோனே! [உன்கழல் காணிய பேதுற்று]- உன் திருவடிகளைக் காணவேணுமென்று ஆசைப்பட்டு. ""ஸரோஜோஜ்ஜ்வலநயநயோஶ்சரணயோஶ்சாருசிகைஶ் ஶௌக்ஷ்ணை:! ததஃகடகடாரவஶ்ரவணஜாதத்ராஸ:"" என்று மருதுமுறிந்த ஓசையைக் கேட் டுப் புரிந்துபார்த்தபோதைச் சிவந்த திருக்கண்களையும் அப்போதைத் திருவடிகளின் சிவப்பையும் காணவாய்த்து இவர் ஆசைப்பட்டது. [பேதுற்று] - மயர்வறமதிநலம் அருளப்பெற்ற ஜ்ஞாநமும் போயிற்று. [வருந்தி]-ஆசைப்பட்ட விஷயாநுகுணமாயிறே நோவுபாடும் இருப்பது. ஒருசொல் தொடை எடுக்கையாகிறது, ஒருமலையை எடுத்தாற்போலேயிருக்கை. [நான்]-விரஹம் பொறுக்க மாட்டாத மென்மையையுடைய நான். [வாசகமாலைகொண்டு] - உன்குணத்துக்கு வாசகமான சொல்தொடையைக்கொண்டு. [உன்னையே] - ""யதோவாசோ நிவர்த்தந்தே"" என்னும்படியான உன்னையே. [இருந்து இருந்து] - ஒருவார்த்தை தலைக்கட்டுகைக்கு நடுவே பலபடி இளைப்பாற வேண்டியிருக்கை. [எத்தனை காலம் புலம்புவனே] - 'இதுக்கு முடிவு என்று?' என்கிறார். ஸாதந புத்யா சொல்லமாட்டார்; ப்ராப்யபுத்தியாலே தவிரமாட்டார்.

ஈடு.—பத்தாம்பாட்டு. உன்னைக் காணப்பெறாத வ்யஸநத்தாலே க்லேசப்படுகிற நான் இன்னம் எத்தனைகாலம் கூப்பிடக் கடவேன்? என்கிறார்.

[பொருந்திய மாமருது] - மருது, மாமருது, பொருந்திய மாமருது. மருதென்கையாலே - மரத்தைச் சொல்லி; ""மரங்கள்போல் வலிய நெஞ்சம்"" என்று வன்மைக்கு மரத்தையிறே சொல்லுவது; அத்தாலே - நெஞ்சின் வன்மையைச் சொன்னபடி. மாமருது என்கையாலே - மாவென்று - கறுப்பாய், இத்தால் - சீற்றத்தைச் சொன்னபடி. அன்றியே, மஹத்தையாய், வேறு வினை செய்யாதே மேலேவிழ அமைந்திருக்கை. நினைத்த காரியத்துக்குப் பொருந்திய மாமருது. இவற்றின் நெஞ்சில் பொருத்தம். ஆக,*இப்படி க்ருதஸங்கேதராய், சீற்றத்தையுடையராய், க்ருஷ்ண தர்ஶநத்தாலும் நெஞ்சு நெகிழாத வன்மையை யுடையவை. [இடை போய] - இப்படி நிற்கிற

பத்தாம்பாட்டு - பொருந்திய இத்யாதி. 'கழல்காணியபேதுற்று வருந்தி நான், எத்தனைகாலம் புலம்பு வன்' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - உன்னைக் காணப்பெறாத இத்யாதி.

மரங்கள்போல் இத்யாதி - மரங்கள்போலே கடினமான நெஞ்ச மென்றபடி. திருமாலை. (உஎ). வன்மை - காடிந்யம். வினை-யுத்தம். நினைத்தகாரியத்துக்கு-முடிக்கைக் கென்றபடி. 'பொருந்திய' என்றதுக்கு அர்த்தம்-இவற்றின் இத்யாதி. சப்தம் இருந்த அடைவுக்குச் சேர நிகமிக்கிறார் - ஆக இத்யாதி. 'மருதினிடை' என்கிற ஏகவசந தாத்பர்யம் - ஒன்றிலே வேளிகண்டு இத்யாதி. 'போய' என்ற அநந்தரம், 'எம்' என்றதுக்கு

* ஆவேஶித்துள்ளவர் அஸுரரென்பதைப்பற்ற 'க்ருதஸங்கேதராய், சீற்றத்தையுடையராய்' என்று உயர் திணையாகவும், மருதாக இருக்கின்றமையைப்பற்ற 'வன்மையை யுடையவை' என்று அஃறிணையாகவும் அரு ளிச் செய்தது.

வற்றின் அருகே போகையுங்கூட பயங்கரமாயிருக்க, இவற்றின் நடுவே, ஒன்றிலே வெளிகண்டு போவாரைப்போலே போருறாயிற்று. [போய எம்பெருந்தகாய்] - அவற்றின்நடுவே அவற்றைத்தப்பிப்போய் எனக்கு ஶேஷியான உன்னைத் தந்த பெரியோனே! **[உன்கழல் இத்யாதி]**-**"ததஃ கட கடாஶப்தஸமாகர்ணநதத்பரஃ"** (தத்கடகடாஶப்தஸமாகர்ணநதத்பரஃ) என்று - அவை முறிந்துவிழுகிறபோதை யோசை கேட்டுப் புரிந்துபார்த்து, அபூர்வதர்ஶநத்தாலே விகஸிதமான அக்கண்போலே சிவந்திருக்கிற திருவடிகளைக் காணவேணு மென்று ஆசைப்பட்டு. **"ஜகாமகமலேக்ஷணஃ"** (ஜகாமகமலேக்ஷணஃ) - புரிந்துபார்த்த கண்களைக் காண ஆசைப்பட்டான் ருஷி; தவழ்ந்துபோகிற போதைத் திருவடிகளைக் காண ஆசைப்படுகிருர் இவர். எல்லாவவஸ்தை தயிலும் அவனை அடிவிடாரே. தந்தாம் ஜீவநத்தை நோக்கத் தேடு மித்தனையிறே எல்லாரும்; இவரும் தம்முடைய ஜீவநத்தை நோக்கத் தேடுகிருர். [பேதுற்று] - அறிவுகேட்டு. **[வருந்தி]** - இழந்தவிஷயத்துக்குத் தக்கபடியிறே க்லேசமும் இருப்பது. [நான்] - அடியேபிடித்து ஜீவித்துப்போந்த நான். "நின்செம்மாபாதபற்புத்தலைசேர்த்தோல்லை" என்கிறபடியே அத்திருவடிகள் பேறில் தலையாக ஜீவித்து, அதில்லையாகில் இல்லையாம் நான். **[வாசகமாலைகோண்டு]** - ஒருமலையெடுத்தாற்போலேயாயிற்று, இவர்க்கு ஒருசொற்கோண்டு சொல்லுகை. [உன்னை] - பேசித் தலைக்கட்டவோண்ணுதை உன்னை. **"யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ"** (யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ) இறே. [இருந்துஇருந்து] - ஒருகால் ஒன்று சொல்லப் புக்கால் அது

---

*வாஸனை - இவற்றின் நடுவே இத்யாதி. பெருந்தகாய் - பெரியவனே! மருதை யொடித்த அநந்தரம் திருவடிகளை அருளிச் செய்தது - ருஷிக்குத் திருக்கண்களிலே ஆதரம் நடந்தாற்போலே, தமக்குத் திருவடிகளிலே ஆதரம் நடந்த தென்று தோற்றுகைக்காக என்கிருர் - ததஃகடகடாசப்த இத்யாதி. "வ்ருக்ஷயா உயுத ஸ்யாவ கஷ்டேரண உதஷிதவந்த : யசோஜநாநயோநிந்ய ஜகாமகமலேக்ஷணஃ ॥ கஷ்டகாவ்ருக்ஷயோஸ்தஸ்ய தியந்தஃஶப்தவந்தஃ! ஶ்ருத்வாத்த்ரமஸாவாஸ ஸ தைந தவயசோஜிநாநன । ததஃ கடகடாஶப்த ஸமாகர்ணநதத்பரஃ । ஜகாம ஸ ஜநநா ஸஹஸாஸஹா ஸஹ"* இதி பஞ்சமேம்ஶே ஷஷ்டே. "ததஃகடகடா" இத்யாதி பதம் - வ்ரஜ ஜந விசேஷணமாயிருக்க, கமலேக்ஷண ஹைக்கு ஹேதுத்வேந எடுத்தது - முறிந்து விழுகிற போதில் சப்த ஶ்ரவணைத்கண்டியம் த்வனுக்கும் உண்டானமையைப் பற்ற. விகஸிதமான அக்கண்போலே யென்றது - "கமலேக்ஷணஃ" என்றத்தைப் பற்ற இத்தால் - ருஷியிற் காட்டில் வ்யாவ்ருத்தி. ஜகாம இத்யாதி - சேஷத்வாத குணமாகத் திருவடிகளை அநுஸந்திக்கிறு ரென்றபடி. பிரிந்து நோவுபடுகிற அவஸ்த்தையிலும் ஸ்வரூபம் குலையாமலிருக்கிற ஆகாரம் இவர்க்கு உண்டாயிருக்கிற தென்னுமிடம் தோற்ற அருளிச்செய்கிருர் - எல்லாவவஸ்த்தையிலும் இத்யாதி. அடிவிடாரே யிதி - சாடு. அடி - திருவடிகள். முதலிதி த்வநிஃ. ருஷியைப்போலே கண்ணழகைக் காண ஆசைப்படாதே, இவர் திருவடிகளழகைக் காண ஆசைப்படுகிற தென்? என்ன, தந்தாம் ஜீவநம் இத்யாதி. ஜீவநத்தை நோக்க வென்றதுக்கு-ப்ராணனை ரக்ஷிக்க வென்று த்வந்யர்த்தம்; தமக்கு ப்ராணனான திருவடிகளைக் காண வென்று ஸ்வரூபார்த்தம். நோக்குகை - ரக்ஷிக்கையும், பார்க்கையும். அமலங்களாக விழிக்கும் கண்களைப்பற்ற,தேனே மலரும் திருப்பாதம் இவர்க்கு போக்யமென்று கருத்து. காணிய பேதுற்று - காணவேணுமென்று அறிவுகெட்டு. காணிய - காண்கைக்கு. வருந்தி - க்லேசித்து. க்லேசிக்கைக்கு அடியேது? என்ன, இழந்த இத்யாதி. "துயரறு சுடரடி" என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிருர் - அடியேபிடித்து. இத்யாதி. 'விவரணம் - நின்செம்மா இத்யாதி. இந்தவாக்யத்வயமும் - ரஸோக்தி. அடியே பிடித்து - திருவடிகளையே பற்றி யென்று ஸ்வரூபார்த்தம்; முதலிலேபிடித்து இதி சாடு. தலையாக ஜீவித்து- தலையிலே வைத்துக்கொண்டு ஜீவித்து; நன்ருக ஜீவித்து இதி சாடு. 'கொண்டு' என்றதுக்கு ஹாவம்- ஒருமலை இத்யாதி. அப்படி' பேசித் தலைக்கட்ட வொண்ணுதோ? என்ன, யதோவாசஃ இத்யாதி. வீப்ஸைக்கு அர்த்தம்- ஒருகால் இத்யாதி. பட்டைப் பொதிசோறு - கமுகம் பட்டையிலே கட்டின பாதேயம். இத்தால் - 'உண்ணும் சோறு' இத்யாத்யுக்த ப்ரகாரவிஶிஷ்டத்வாத் மத்யே மத்யே பகவத் ஸ்மரணத்தாலே இளைப்பாறவென்று கருத்து.*

தலைக்கட்டுங்காட்டில் நடுவே பதின்கால் பட்டைப்போதிசோறு அவிழ்க்கவேணுங் காணும். [எத்தனைகாலம் புலம்புவனே] - ஸாதநபுத்யா சொல்லமாட்டார், ப்ராப்யபுத்யா தவிரமாட்டார்; இதுக்கு முடிவு என்? என்கிறார். (க0)

# பதினோராம் பாட்டு.

புலம்புசீர்ப் பூமியளந்தபெருமானை
நலங்கொள்சீர் நன்குருகூர்ச்சடகோபன்சொல்
வலங்கொண்டவாயிரத்துள் இவையுமோர்பத்து
இலங்குவான் யாவருமேறுவர்சொன்னலே.

**ஆ.**—(புலம்புசீர்.) எல்லாராலும் ஏத்தப்படுங் குணங்களையுடையனான பூமியளந்த எம்பெருமானை, குணைகதாரகத்வமாகிற கல்யாணகுணத்தை யுடையனாயிருந்த நன்குருகூர்ச்சடகோபன் சொன்ன இத்திருவாய்மொழியைச் சொன்னாரெல்லாரும் திருநாட்டிலே புகப் பெறுவர் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி இயல்மாத்ரத்தை தரித்தவர்கள் ஆரேனுமாகிலும் இதில் ப்ரார்த்தித்தபடியே அநுபவிக்கையில் தட்டில்லாத நிரதிசயபோக்யமான திருநாட்டிலே செல்வர் என்கிறார்.

[புலம்பு என்று தொடங்கி] - எல்லாராலும் ஏத்தப்படும் குணங்களையுடையனைக்கொண்டு பூமியை அளந்து இக்குணத்தாலே எல்லார்க்கும் ஸ்வாமியாயிருக்கிறவனை. [நலங்கொள் என்று தொடங்கி] - இத்திருவாய்மொழியிற் சொன்னபடியே பக்தியையுடைய ஆழ்வார் அருளிச்செயலுமாய் எம்பெருமானை உள்ளபடி ப்ரதிபாதித்த ஆயிரத்திலும் இப்பத்து.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாகப் பரமபதப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

புலம்பு சீர் - (எல்லாருங்) கொண்டாடப்படியான குணங்களையுடையனைக்கொண்டு, பூமி - பூமியை, அளந்த - அளந்த, பெருமானை - ஸர்வேஶ்வரனை, நலம் கொள் - (அநுபவாபிநிவேசமாகிற) நன்மையை யுடைய, சீர் - ஜ்ஞாநாதிகுணவிஶிஷ்டராய், நல் - நன்றான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, வலம் கொண்ட ஆயிரத்துள் - அர்த்தப்ரதிபாதகபலத்தையுடைத்தான ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளும், ஓர் - அத்விதீயமான, இவைபத்தும் - இப்பத்தையும், சொன்னால்—, யாவரும் - எல்லாரும், இலங்குவான் - அத்யுஜ்ஜ்வலமான பரமபதத்திலே, ஏறுவர் - ஏறப்பெறுவர்கள். இது - கலிவிருத்தம்.

**இ.**—நிகமத்தில், இத்திருவாய்மொழியில், பாடமாத்ரத்தாலே இதில் ப்ரார்த்தித்தபடியே அநுபவிக்கைக்குத் தட்டில்லாத பரமபதத்திலே செல்லப்பெறுவர் என்கிறார்.

[புலம்பு இத்யாதி] - இருந்ததே குடியாக ஏத்தும்படியான குணங்களையுடையனை, தன்விபூதியை அளந்துகொள்ளுகையினாலே ஸர்வஸ்வாமியானவனை யாய்த்துக் கவிபாடுகிறது.

---

புலம்புவன் - கூப்பிடக் கடவேன். 'புலம்புவனே' என்று துக்கப்படுவானேன்? சொல்லவொண்ணாதோ? என்ன, **ஸாதநபுத்யா** இத்யாதி. ஆனால், தவிர வொண்ணாதோ? என்ன, **ப்ராப்யபுத்யா** இத்யாதி. வாசகமாலே கொண்டு - குணவாசகமான சொற்றொடையைக்கொண்டு, க்ரமேண அந்வய:, (கo)

[நலங்கொள் இத்யாதி] - இதில் சொன்ன பெருவிடாயையுடைய ஆழ்வார் சொல். [வலங்கொண்ட ஆயிரத்துள் இவையும் ஓர் பத்து] - ப்ரதிபாத்யனை விளாக்குலைகொண்டிருக்கும் என்னுதல், ப்ரதிபாதநஸாமர்த்யத்தையுடைய ஆயிரம் என்னுதல். அத்விதீயமான இப்பத்தைச் சொன்னால் இன்னார் இனையார் என்னாதே பகவதநுபவத்துக்கு விச்சேதமில்லாத வைலக்ஷண்யத்தையுடைய பரமபதத்தை ப்ராபிக்கப் பெறுவர்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியில் ஶப்தமாத்ரத்தாலே இதில் ப்ரார்த்தித்தபடியே அநுபவிக்கலான பரமபதத்தைச் செல்லப்பெறுவர் என்கிறார்.

[புலம்புசீர்] - இவர்புகழுமாபோலே லோகமடையப் புகழும்படியாயிற்று அவன் குணங்கள். [பூமியளந்த பெருமானை]-பூமியையளந்து அந்யஶேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யத்தைத் தவிர்த்த ஸர்வஸ்வாமியையாயிற்றுக் கவிபாடிற்று. [நலங்கொள்சீர்] - கரணங்களும் சேதநஸமாதியாலே விடாய்த்து, அவைதான் ஓரிந்த்ரியவ்ருத்தியை ஓரிந்த்ரியம் ஆசைப்பட்டு, இவையெல்லாவற்றின் வ்ருத்தியையுந் தாம் ஆசைப்பட்டு, இப்படி பகவத்விஷயத்திலே விடாய்க்கும்படியான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையுடைய ஆழ்வார். அநுஸவாஹிநிவேஶமாகிற நன்மையையுடைய ஜ்ஞாநாதிகுண விஶிஷ்டராய் நன்றான திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார் சொல். [வலங்கொண்ட இத்யாதி] - ப்ரதிபாத்யத்தை வலம்வந்து விளாக்குலைகொண்ட வென்னுதல், ப்ரதிபாதநஸாமர்த்த்யத்தையுடைய வென்னுதல். [இலங்கு வான் இத்யாதி] - அத்விதீயமான இப்பத்தைச் சோன்னால், இன்னாரினையாரேன்னாதே, பகவதநுபவத்துக்கு விச்சேதமில்லாத வைலக்ஷண்யத்தை யுடைய பரமபதத்தை ப்ராபிக்கப்பெறுவர். "**ஸஏகதாபவதி**" (ஸஏகதாபவதி) என்று ஓதுகிறபடியே - அநேகஶரீரங்களைப் பரிக்ரஹித்து, அவ்வோஶரீரங்களில் கரணங்களும் பூர்ணாநுபவம் பண்ணலாம்படியான தேசத்திலே புகப்பெறுவர் என்றபடி. (கக)

நிகமம் - புலம்பு இத்யாதி. 'இவையுமோர்பத்து - சொன்னால் - யாவரும் - இலங்கு வான் - ஏறுவர்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை.

த்ருஷ்டாந்தபூர்வகமாக அர்த்தம் - இவர்புகழும் இத்யாதி. 'சீர்' என்று-வைஷ்ணவஸ்ரீயாய், அதுக்கு நன்மையேது? என்ன, கரணங்களும் இத்யாதி. நலங்கொள்சீர் - பரிபூர்ணமாய் பக்வமான பக்தியாகிற ஸம்பத்தையுடையவ ரென்றபடி. வலம் - ப்ரதக்ஷிணமும், பலமும். விளாக்குலைகோண்ட-வ்யாபித்த. ப்ரதிபாத்யத்தை வலம்வருகையாவது - உள்ளபடி ப்ரதிபாதிக்கை. 'ஓர்' என்றதின் அர்த்தம் - அத்விதீயமான என்றது. இன்னார் - எதத்ஸ்வரூபாः. இனையார் - எதத்ஸ்வபாவாः. புலம்புசீரித்யாரப்ய, ஆயிரத்துள் இவையுமோர்பத்தை-சொன்னால் - யாவரும் - இலங்கு வான் - ஏறுவர் இத்யந்வயः. (கக)

* த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:—[illegible]

[illegible]

[illegible]

[illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

முடியாதஆசைமிக முற்றுகரணங்கள்
அடியார்தமைவிட்டு அவன்பாற்—படியா
ஒன்றொன்றின்செயல்விரும்ப உள்ளமிதல்லாம்தாம்விரும்பத்
துன்னியதேமாறன்தன்சொல்.

---

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

* இந்தத்திருவாய்மொழிக்கு உரிய த்ராவிடோபநிஷத் ஸங்கதி ஶ்லோகம் கிடைக்கவில்லை.

# ஒன்பதாந்திருவாய்மொழி—சொன்னால் : ப்ரவேஶம்.

ஒ.—ஒன்பதாந்திருவாய்மொழியில், இப்படி தாமும் தம்முடைய கரணக்ராமமும் எம்பெருமானைக் காண ஆசைப்பட்டு நெடும்போது கூப்பிட்டுப் பெறாமையாலே மிகவும் அவஸந்நரான ஆழ்வார் 'நம்மோடு ஸமதுঃகிகளாயிருப்பாருண்டோ?' என்று பார்த்தவிடத்துத் தாம் ஒழிய வ்யதிரிக்தரெல்லாம் தாம் பகவத்ப்ரவணரானாற்போலே ஶப்தாதிவிஷயங்களிலே மிகவும் ப்ரவணராய் அதுக்கு உறுப்பாக மநுஷ்யாதிகளைக் கவிபாடித் திரிகிறபடியைக் கண்டு தம்முடைய வ்யஸநமெல்லாம் மறந்து ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் அத்யந்தஸுந்தரனாய் ஸ்ரிய:பதியாய் இப்படியிருக்கையாலே கவிபாடுகைக்கு விஷயம் போந்து தன்னைப்பாடின கவியைக் கொண்டாடுகைக்கு ஈடான பரிஜநங்களையுமுடையனாய்க் கவிபாடினார்க்கு வழங்குகைக்கு ஈடான விபூதிகளையுமுடையனாய் ஸ்வாராதனாய் அவர்களுக்கு ஹோமமோக்ஷாதி ஸகலபுருஷார்த்தங்கள் கொடாவிடிலும் தன்னைப்பாடுகையே ப்ரயோஜநம் போந்திருக்கிற எம்பெருமானையொழியக் கவிபாடுகைக்கு ஈடான நன்மைகளொன்றுமின்றிக்கே கவிபாடினார்க்குத் தருவதும் ஒன்றுமின்றிக்கே தாங்கள் நிஸ்ஸ்ரீகராய் அதுக்குமேலே கவிபாடினவர்கள் ஸந்திக்குந்தனைநாள் நிலைநிற்பதுஞ்செய்யாதே முடியும் ஸ்வபாவராய்க் கவிபாடினால் ஒருப்ரயோஜநம் பெறுமையே யன்றியே கவிபாட்டுண்கிறவனுக்கு இல்லாத நன்மைகளை ஏறிட்டுப் பாடுகையாலே அவனுக்குள்ள தோஷங்களை வெளியிட்டு அவ்வழியாலே அவனுக்கு அவத்யாவஹராய் அப்ராப்தவிஷயத்திலே பாடுகையாலே கவிபாடினார் நரகம்புகும்படியிருக்கிற க்ஷுத்ரரை 'பகவதர்ஹமான உங்களுடைய அழகிய கவிகளைக்கொண்டு ஸ்துதிக்கை ஈடன்று' என்று அருளிச்செய்து, 'உங்களைப்போலே யன்றியே நான் வேறு சிலரை ஸ்துதிக்கைக்கு அநர்ஹகரணனாகப்பெற்றேன்' என்று ப்ரீதராய் முடிக்கிறார். "ஊனில் வாழுயி"ரில் ப்ரீதிக்கு நித்யஸூரிகளை ஸஜாதீயராகத் தேடினாற்போலே இங்கு வ்யஸநத்துக்கு ஸம்ஸாரிகளை ஸஜாதீயராகக் கருதி இங்ஙனல்லாமையாலே அவர்களைத் திருத்தப் பார்க்கிறார்.

ப.—ஒன்பதாந்திருவாய்மொழியில், இப்படி தாமும் கரணக்ராமமுங் கூப்பிட்டபடியைக் கண்ட ஈஶ்வரன் 'லோகமடங்க இதரஸ்தோத்ரம்பண்ணி அநர்த்தப்படாநிற்க, நீர் நம்மை ஸ்தோத்ரம்பண்ணும்படி பண்ணினோமே' என்று இவருடைய பேற்றை ப்ரகாஶிப்பிக்கக் கண்டு ஸந்துஷ்டராய்; அவனுடைய ஸ்துத்யத்வத்துக்கு ஏகாந்தமான ஸௌலப்யாதிஶயத்தையும், ஶீலபனுடைய ஸம்பந்தோத்கர்ஷத்தையும், நித்யஸூரிநிர்வாஹகத்வத்தையும், ஸ்துத்யதைக்கு அநுரூபமான ஶேஷித்வத்தையும், அபேக்ஷிதபலப்ரதத்வமான ஔதார்யாதிஶயத்தையும், அதுக்கு ஏகாந்தமான ஸ்ரிய:பதித்வத்தையும், ஸ்துதிவிஷயமான குணநாமபூர்த்தியையும், அவனுடைய ப்ராப்யஹாவத்தையும், புருஷார்த்தப்ரதத்வத்தையும், ஜகத்ஸ்ரஷ்ட்ருத்வத்தையும் அநுஸந்தித்து 'ஏவம்பூதவிஷயத்தை ஸ்தோத்ரம்பண்ணாதே, நிஷ்ப்ரயோஜநமான இதரஸ்தோத்ரங்களைப் பண்ணி, அநர்த்தப்படுகிறிகோளே' என்று லௌகிகரைக் குறித்து ஸ்வநிஷ்டையை உபதேஶித் தருளுகிறார்.

இ.—ஒன்பதாந்திருவாய்மொழியில், இப்படி தாமும் தம்முடைய கரணக்ராமமும் நெடும்போது கூப்பிட்டும் பெறாமையாலே மிகவும் அவஸந்நரானவர், 'நம்மோடு ஸமதுঃகிகளாயிருப்பாருண்டோ?' என்று பார்த்தவிடத்துத் தாம் பகவத்ப்ரவணராயிருக்கிறாப்போலே ஸம்ஸாரிகள் ஶப்தாதிவிஷயங்களிலே மிகவும் ப்ரவணராய் அதுக்கு உறுப்பாக மநுஷ்யாதிகளைக் கவி

பாடித் திரிகிறபடியைக் கண்டு, தம்முடைய இழவை மறந்து இவர்கள் துர்க்கதியைப் பார்த்து, ஸ்ரிய:பதியாய், ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய், அதிஸுந்தரனாயிருக்கையாலே கவிபாடுகைக்கு விஷயம் போந்து பாடின கவி கொண்டாடுகைக்கு "கேட்டாரார் வானவர்கள்" என்றும், "தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள் சொன்னேன்" என்றும் சொல்லுகிறபடியே பரிஜநங்களையுடையனாய், கவிபாடினார்க்குக் கொடுக்க உபயவிபூதியையும் உடையனாய், "எங்ஙனே சொல்லிலும் இன்பம் பயக்கும்" என்று ஸ்வாராதனுமாய், ஒரு ப்ரயோஜநமில்லையேயாகிலும் கவிபாடுகைதானே ப்ரயோஜநம் போந்திருக்கிற ஈஸ்வரனையொழிய அதுக்கு எதிர்த்தலையாய் அப்ராப்தவிஷயமாகையாலே நரகாவஹமுமான க்ஷுத்ரவிஷயங்களைக் கவிபாட்டுண்கிறவனுக்கு இல்லாத குணங்களை ஏறிட்டுப் பாடுகையாலே அவனுக்குள்ள தோஷங்களை வெளியிட்டு அவ்வழியாலே அவத்யாவஹராய்ப் பகவதர்ஹமான கவியைக்கொண்டு ஸ்துதிக்கை ஈடன்று என்று அருளிச்செய்து, 'இவர்களைப்போலன்றியே நான் வேறுசிலரைப் புகழ்கைக்கு அநர்ஹகரணனாகப் பெற்றேன்' என்று ப்ரீதராய் முடிக்கிறார். "ஊனில்வாழுயி"ரில் ப்ரீதிக்கு நித்யஸூரிகளை ஸஜாதியராகத் தேடினாற்போலே இங்கு ஸம்ஸாரிகளை இழவுக்கு ஸஜாதியராகக்கருதி அங்ஙனல்லாமையாலே அவர்களைத் திருத்தப் பார்க்கிறார். இவர் தம்முடைய இழவுக்குக் கூப்பிடுகை தவிர்ந்து தங்களிழவுக்குக் கூப்பிடும்படி பண்ணுவதே ஸம்ஸாரிகள்!

ஈடு.—இப்படி தம் இழவுக்குக் கூப்பிடுகிற இது தவிர்ந்து தங்களிழவுக்குக் கூப்பிடும்படி பண்ணினார்கள் ஸம்ஸாரிகள். தாமும் தம்முடைய கரணக்ராமமுமாய்க் கேட்டாரெல்லாம் நீராம்படி கூப்பிட்டார் - கீழில்திருவாய்மொழியிலே; "பருகிக்களித்தேனே" என்று 'பகவதநுபவம் பண்ணிக் களித்து அநந்தரம் போதயந்த:பரஸ்பரம் பண்ணுகைக்கு "அடியார்கள் குழாங்களை உடன்கூடுவ தென்றுகொலோ" என்று நித்யஸூரிகள் திரளிலே புகத் தேடுமாபோலே, இவர் இழவாலே கூப்பிட்ட அநந்தரம் 'இவ்விழவுக்குக் கூட்டாவர்களிறே' என்று ஸம்ஸாரிகளைப் பார்த்தார்; அவர்கள் பேற்றுக்குக் கூட்டல்லாதாப்போலே இழவுக்கும் கூட்டன்றிக்கே யிருந்தார்கள்; "அறியார் சமண ரயர்த்தார் பவுத்தர், சிறியார் சிவப்பட்டார்" என்கிறபடியே அநுபபந்நங்களைச்சொல்லுவாரும், ப்ரத்யபிஜ்ஞார்ஹமாம்படி ஒரு சேதநனைக் கொள்ளாதே ஜ்ஞாநஸந்தாநத்தைக் கொள்ளுவாரும், தன்னோட்டையா னொருக்ஷேத்ரஜ்ஞனையே 'ஈஸ்வரன்' என்று இருப்பாரும், தேவதாந்தரங்

---

சொன்னால்விரோத ப்ரவேஶே, கீழே அப்படி விடாய்த்தவர் அவ்விடாய்தீர்ந்து பரோபதேசம் பண்ணுகிறாரோ? என்கிற ஶங்கையிலே, அது தீராதிருக்கச்செய்தே ஸம்ஸாரிகளிழவு ஸஹிக்கமாட்டாமல் பரோபதேசம்பண்ணுகிறாரென்று ஸங்கதி - இப்படி இத்யாதி. விவரணம் - தாமும் தம்முடைய இத்யாதி. கூட்டன்றிக்கேயிருந்தபடியென்? என்ன, தேவதாந்தரப்ராவண்ய விஷயப்ராவண்ய அஸேவ்யஸேவா இதரஸ்தோத்ரகரணாதிகளாலே யென்கிறார் - அறியார் இத்யாதி. நான்முகன்திருவந்தாதி, ஆறும்பாட்டு. "ஸ்யாதஸ்தி ஸ்யாந்நாஸ்தி" இத்யாதியான ஸப்தபங்கியை அங்கீகரித்துக்கொண்டு, ஜகத்து த்ரவ்ய பர்யாயரூபேண ஸத்தும் அஸத்தும், நித்யமும் அநித்யமும், பிந்நமும் அபிந்நமுமாயிருக்குமென்று தோற்றிற்றுச் சொல்லுகிற ஆர்ஹதர் தத்த்வஸ்த்திதியை அறியார்கள்; சமணர் - ஆர்ஹதர். க்ஷணிகமான ஜ்ஞாநஸந்ததியை ஆத்மா என்று சொல்லுகிற பௌத்தர் நித்யமான ஆத்மாவையும் தத்தர்மமான ஜ்ஞாநத்தையும் தத்விஷயஜகத்தையும் உள்ளபடியறியாமல் மறந்தார்கள்; பவுத்தர் - பௌத்தர். 'அயர்த்தார் - மறந்தார்கள். ஸ்ருஜ்யத்வகர்மவஶ்யத்வாதிகளாலே அநீஶ்வரனுக்ஸப்ரதிபந்நனான ருத்ரனைப் பரதத்த்வமாகச் சொல்லுகிற ஶைவமதநிஷ்டரானவர்கள் அதிக்ஷுத்ரராயிருப்பர்கள்; சிவப்பட்டார் - சைவமதநிஷ்டர். இதி பாசுரார்த்த:. பாட்டுக்கு அர்த்தம் - அநுபபந்நங்களை இத்யாதி. அநுபபந்நங்களை யென்றது - ஸப்தபங்கியைப்பற்ற. ஸப்தபங்கியாவது-"ஸ்யாதஸ்தி, ஸ்யாந்நாஸ்தி, ஸ்யாதஸ்தி ச நாஸ்தி ச, ஸ்யாதவக்தவ்ய:, ஸ்யாதஸ்தி சாவக்தவ்ய:, ஸ்யாந்நாஸ்தி சாவக்தவ்ய:, ஸ்யாதஸ்தி ச நாஸ்தி சாவக்தவ்யஶ்ச" இதி. ப்ரத்யபிஜ்ஞார்ஹமாம்படி யென்றவிடத்திலே - "ஜகஜ்ஜந்மாதிஸூத்ரம்" இத்யாத்யநுஸந்தேயம். ஜ்ஞாநஸந்தாநத்தைக் கொள்ளுவார் - பௌத்தர். க்ஷேத்ரஜ்ஞனை ஈஶ்வரன் என்றிருப்பார் - சைவர். "சிவப்பட்டார்" என்றதுக்கு அர்த்தம் - தன்னோட்டையான் இத்யாதி. "சிறியார்" என்றதுக்கு அர்த்தம் - தேவதாந்தரங்களை இத்யாதி. தேவதாந்தரங்கள் - க்ஷு-

களைப் பற்றியிருப்பாரும், 'அவர்கள் தாங்கள் ஸர்வஜ்ஞர்' என்னும்படி ஸம்பந்திகளைப்பற்றி அவற்றைப் பெறுகைக்காகப் பிறரைக் கவிபாடித் திரிவாருமாயிருந்தார்கள்; அவர்களைக் கண்டவாறே, வாளேறுகாணத் தேளேறு மாயுமாபோலே தம்மிழவை மறந்தார்; பராநர்த்தங்கண்டால் அத்தைப் பரிஹரித்துப் பின்பு தம் இழவு பரிஹரிக்க நினைப்பாரொருவராகையாலே, 'இவர்களநர்த்தத்தைப் பரிஹரித்து இவர்களையுங் கூட்டிக்கொண்டு போவோம்' என்று அவர்களுக்குப் பரமஹிதமான நல்வார்த்தை அருளிச்செய்ய, அவர்கள் அதுகேளாதே பழையபடியே நிற்க, அவர்களைவிட்டுத் தம் நிலையிலே போருகிற இவர், அவர்களில் தமக்கு உண்டான வ்யாவ்ருத்தியைப் பேசிக்கொண்டு போருகிறார். அவர்கள் தாங்கள்—ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய், ஸ்ரிய:பதியாய், அத்யந்த ஸுந்தரனாகையாலே கவிபாடுகிறது பொய்சொல்லிற்றாகாதே கவிக்கு விஷயம் போரும்படியாய், இவன் பாடின கவியைக் கேட்பித்துக் கொண்டாடுகைக்கு ஈடாக * "கேட்டாரார் வானவர்கள்" என்றும், † "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்" என்றும் சொல்லுகிற பரிஜநங்களையுடையனாய், கவிபாடினார்க்கு வழங்குகைக்கு "வேண்டிற்றெல்லாம் தருங் கோதிலென் வள்ளல்" என்கிறபடியே பரமோதாரனாய், அவர்களுக்குக் கொடுக்கைக்கு உபயவிபூத்யைஶ்வர்யத்தை யுடையனாய், ‡ "வல்லதோர் வண்ணஞ் சொன்னாலதுவே யுனக்காம் வண்ணம்" என்கிறபடியே இவன் ஏதேனுமொன்றைச் சொன்னாலும் தன்னையே சொல்லிற்றாம்படி ஸர்வஶப்தவாச்யனாய், பாடின கவி கேட்பிக்க இருந்தவிடம் தேடிப்போய் அருமைப்பட வேண்டாதே § "எங்குமுளன் கண்ணன்" என்கிறபடியே ஸர்வத்ர ஸந்நிஹிதனாய், ஸுலபனுமாய், கவிபாடினவர்களுக்கு போகமோக்ஷாதி ஸகல புருஷார்த்த ப்ரதனாய், அவை கொடாவிடிலும் தன்னைக் கவிபாடுகை தானே ப்ரயோஜநம் போரும்படி யிருக்கிற ஸர்வேஶ்வரனை விட்டு, கவிபாடுகைக்கு ஈடான நன்மை

கள். "அறியார்சமணர்" இத்யாதியிற் சொல்லுகிறவர்களுக்கெல்லாம் ஹிதம் அருளிச்செய்யாமல், பரஸ்தோத்ரம் பண்ணுகிறவர்களுக்குமாத்ரம் ஹிதம் அருளிச்செய்கிறதுக்குத் தாத்பர்யம் - அல்லாதவர்களுக்கும் முதல் திருவாய்மொழிதொடங்கி அருளிச்செய்கையாலே யென்று கண்டுகொள்வது. வாளேறுகாணத் தேளேறு மாயுமாபோலே என்றது - தேள்கொட்டி நோவுபடுகிறவொருத்தனைப் பரிகாரர் வெட்டினால், தேள்கொட்டினத்தாலுண்டான வேதனை போமாபோலே யென்னுதல்; யத்வா, ஒருவன் தேள்கொட்டி நோவுபடாநிற்க, வேறொருவன் வெட்டுப்பட்டு நோவுபடக் கண்டால் தேள்கொட்டின நோவு போமாபோலே யென்னுதல். நல்வார்த்தை - 'பிறரைஸ்துதிக்கை ஆகாது' என்று சொன்ன நல்வார்த்தை. இத்திருவாய்மொழியில் இதரஸ்தோத்ரம் ஆகாதென்றது - "ஒன்றுந்தே"வில் தேவதாந்தரபரத்வத்தையும், விபரீதஶாஸ்த்ரநிஷ்டையும் ஆகாதென்றதுக்கும் உபலக்ஷணம். இதில் "நந்நமக்காட்டப்படுத்திறல்" என்றதிறே. தமக்கு உண்டான வ்யாவ்ருத்தியை யென்றது - "பச்சைப்பசும்பொட்களிப்பேச - மாண்கிலேன்" இத்யாதியைக் கடாக்ஷித்து. பாட்டுக்களிலே யிறங்கி, பகவத்ஸ்தோத்ரத்தில் நன்மையையும் இதரஸ்தோத்ரத்தில் ஈநத்தனத்தையும் அருளிச்செய்து கொண்டு உக்தார்த்தத்தை விவரிக்கிறார் - அவர்கள்தாங்கள் இத்யாதி. அவர்கள்தாங்கள் என்கிற இதுக்கு - 'ஸர்வேஶ்வரனைவிட்டு க்ஷுத்ரரைக் கவிபாடித் திரிகிறபடியைக் கண்டு' என்றத்தோடே அந்வயம். ஸமஸ்தகல்யாணேத்யாதி விசேஷணத்ரயமும்-"ஆயபெரும்புகழெல்லையிலாதன", "என்திருமாலுக்கு", "மணிவண்ணன்" என்றத்தைப்பற்ற. கேட்டாரார் - கேட்டு த்ருப்தராகார், ஸூரிகள். தொண்டர்க்கு இத்யாதி - பகவத்விஷயத்திலே தொண்டுபட்டிருக்கிறவர்களுக்கு அம்ருதவத் போக்யமாக அநுபவிக்கும்படி சொல்மாலைகளைச் சொன்னேனென்றபடி. வேண்டிற்றெல்லாம் இத்யாதி - அபேக்ஷிதமெல்லாம் தரும் கோதில்லாத என்னுடைய பரமோதாரனென்றபடி. 'விண்ணவர்தாதை' என்றத்தைப்பற்ற, உபயவிபூத்யைஶ்வர்யத்தையுடையனாய் என்றது. வல்லதோரித்யாதி - வல்லதொரு ப்ரகாரம் சொன்னாலும் அதுவே உனக்கு ப்ரகாரமாமித்யர்த்த:. "கண்ணன்குறுங்குடி" என்றத்தைப்பற்ற, ஸுலபன் என்றது. "வேண்டிற்றெல்லாம்தரும்" என்றத்தைப்பற்ற, போகமோக்ஷாதி இத்யாதி. 'விண்ணவர்தாதையைப்பாடினால் தன்னையேகொண்டு" இத்யாதியைப்பற்ற, தன்னைக்கவிபாடுகைதானே இத்யாதி. "பாரிலோர்பற்றை" என்றத்தைப்பற்ற, கவிபாடுகைக்

* திருவாய்மொழி - ௧0, ௯, ௧௧. † மேற்படி ௯, ௪, ௯. ‡ திருவாய்மொழி-௭, ௮, ௧0. § ஷை ௨, ௮, ௯.

களொன்று மின்றியே, தலையில்மயிரில்லாதானொருவனை ‘பனியிருங்குழலன்’ என்றும், இளி கண்ணனை ‘புண்டரீகாக்ஷன்’ என்றும் இப்புடைகளிலேயாயிற்றுக் கவிபாடுவது; கவிபாடினால் தான் தருவதொன்றில்லாமையாலே * நூறுகற்றையாதல் ஒருபோய்த்தரவாதலாயிற்று எழுதுவது; இவன்தான் நெடுநாள்கூடி நெஞ்சுகன்றக் கவிபாடி ஸஹகாரிகளையுங் கூட்டிக்கொண்டு கேட்பிக்கச் செல்லுங்காட்டில் ‘அவரே மாண்டார்’ என்று எதிரே வரும்படி நிலைநில்லாதாருமாய், ஆக, இருந்தும் இழவாய்ப் போயும் இழவாய் இப்படி அவனுக்கு இழவோடே தலைக்கட்டும்படியாய்; கவிபாடி ஒரு ப்ரயோஜநம் பெறுதொழிகை யன்றிக்கே, கவிபாட்டுண்கிறவனுக்கு இல்லாத நன்மைகளை யிட்டு ‘இருமருங்குந் துய்யான்’ என்னுமாபோலேயிறே கவிபாடுவது: ஆனால், வருவதென்? என்னில்,—உத்பத்தியிலே சில குறைகள் உண்டாயிருக்குமே இவன்தனக்கு: மறந்தவற்றையிறே இது கேட்ட நாட்டார் நினைப்பது; அவனுடைய தோஷங்களை வெளியிட்டு அவ்வழியாலே அவத்யாவஹராய், அப்ராப்த விஷயத்தைக் கவிபாடுகையாலே மேல் நரகமாய், ‘இன்னானைக் கவிபாடினவனன்றோ இவன்’ என்று ‘தீண்டாதே கடக்கப்போ’ என்னும்படியாயிருக்கிற க்ஷுத்ரரைக் கவிபாடித் திரிகிறபடியைக் கண்டு ‘ஆத்மா ஈஶ்வரஶேஷமாயிருக்க, அநந்யார்ஹமான உங்களுடைய கரணங்களைக் கொண்டு பிறரை ஸ்துதிக்கை ஈடல்ல’ என்று ஹிதத்தை அருளிச்செய்ய, ராவணனுக்கு ஸ்ரீவிபீஷணாதிகள் சொன்ன ஹிதம்போலே அது பலியாதொழிய, ‘ஹிதஞ் சொல்லச் செய்தேயும் செவிதாழாத இவர்களோடொத்த ப்ராப்தியிறே நமக்கு உள்ளது’என்று பார்த்து, ‘இவர்கள் நடுவே இத்தேசத்தில் இத்தேஹத்தோடே வர்த்திக்கிற நாம் முந்துறமுன்னம் பகவதர்ஹகரணராகப் பெற்றோமிறே’ என்று, வழி பறிக்குமிடத்துத் தன்

---

ச்டானை இத்யாதி. இளிகண்ணன்-புளிச்சைக்கண்ணன். “கொள்ளும்பயனில்லை” என்றத்தைப்பற்ற, கவிபாடினால் தான் இத்யாதி. போய்த்தரவு - பொய்யோலை. இவ்விடத்திலே - “வார்த்தைபதின்கலம் வழியிலோரெண்கலம் கூட்டிலறுகலம் கொடுப்பதுமுக்கலம், ஆள்கலம்போக்கிப் பதர்கலம்போக்கி, நான்கலம்பெற்றே னென்னும் பிள்ளை காங்கயர்க்கே” என்றத்தை நினைப்பது. “மன்னுமணிசரை” என்றத்தைப்பற்ற, இவன்தான் நெடுநாள்கூடி இத்யாதி. கவிபாடுகைக்குஹேது - ஸ்வார்த்தம், பரார்த்தமென்று இரண்டு; அதில் ஸ்வார்த்தம் - த்ருஷ்டா த்ருஷ்ட ப்ரயோஜநபேதேந த்விவிதம்; அதில் த்ருஷ்டப்ரயோஜநாபாவத்தை த்வேதாகாட்டினார்-கவிபாடினால் தான் இத்யாதியாலே. அத்ருஷ்டப்ரயோஜநமும் ஐஹலௌகிக பாரலௌகிகபேதேந த்விவிதமாகையாலே உபயாபாவத்தையும் வ்யுத்க்ரமமாகக் காட்டுகிறார் - அப்ராப்தவிஷயத்தை இத்யாதியாலும், இன்னானைக்கவி பாடினவன் இத்யாதியாலும். பரார்த்தாபாவத்தைக் காட்டுகிறார், கவிபாடி ஒருப்ரயோஜநம் இத்யாதி. இருந்தும் இழவாய் - அகத்திலிருந்தும் து:கமாய். போயும் இழவாய் - அங்கேபோயும் து:கமாய். இருமருங்கும் துய்யான் - உபயகுலபரிசுத்தன். மருங்கு - பார்ஶ்வம். இருமருங்கு - இரண்டுபார்ஶ்வம்: உபயகுலமென்றபடி. ஒருப்ரயோஜநம் பெறுதொழிகை யன்றிக்கே அவ்வழியாலே அவனுடையதோஷங்களை வெளியிட்டு - அவத்யாவஹராய் என்று அந்வயம். இன்னானைக் கவிபாடினவனன்றோ இத்யாதி - ஐஹலௌகிகமான புருஷார்த்தம் சிஷ்டர்கள் அங்கீகரிக்கை; அது இல்லாமையாலே, ஐஹலௌகிகபுருஷார்த்தஹாநி யென்றபடி. “[illegible] ஹரணாத்வி[illegible]” , “[illegible]” இத்யாதிப்படியே ஒருவனை ஸ்துதிக்கையாவது ஸமஸ்தபாபாவஹமாய் அவனுக்கு தாஸனாகை யென்றாகையாலே, ‘நீ க்ஷுத்ரனுக்கு தாஸனல்லையோ? கடக்கப்போ’ என்பர்க ளென்றபடி. உத்பத்தியிலே சிலகுறைகளுண்டாயிருக்குமே என்றவிடத்திலே - “[illegible]

* ‘என்னாவ தெத்தனை நாளைக்குப் போதும்’ இத்யாதியைப்பற்ற, ‘நூறுகற்றையாதல்’ இத்யாதி—அடைய.

கையிற்பொருள்கொண்டு தப்பிப்போனார் உகக்குமாபோலே தமக்கு உண்டான வ்யாவ்ருத்தியை அநுஸந்தித்து ஸ்வலாபத்தைப் பேசி ப்ரீதியோடே தலைக்கட்டுகிறார்.

## முதற் பாட்டு.

சொன்னால்விரோதமிது ஆகிலும்சொல்லுவன்கேண்மினோ
என்னாவிலின்கவி யானொருவர்க்குங்கொடுக்கிலேன்
தென்னாதெனாவென்று வண்டுமுரல்திருவேங்கடத்து
என்னானைஎன்னப்பன் எம்பெருமான்உளனாகவே.

**ஆ.**—(சொன்னால்.) இப்படி தம்முடைய ஸர்வகரணங்களும் தனித்தனியே ஸ்வேதர கரணங்களினுடைய வ்ருத்திகளை எம்பெருமான்திறத்திலே ஆசைப்பட்டபடியே பெருமையாலே அத்யந்தம் அவஸந்நரான ஆழ்வார், இத்தசையில் தமக்குத் துணையாகைக்காக, 'இந்தலோகத்திலே ஸ்ரீவைஷ்ணவர்கள் உளரோ?' என்று பார்த்தவிடத்தில், இந்தலோகமெல்லாம் பகவத்வ்யதிரிக்தவிஷய ப்ரவணமாய் பகவத்பராங்முகமாய் மநுஷ்யாதிகளைக் கவிபாடிக்கொண்டு திரிகிறபடியைக் கண்டார்; கண்டு, தம்முடைய இழவெல்லாம் மறந்து 'எம்பெருமானுக்கு அர்ஹமானவரும் அந்தக்கரணங்களை அவஸ்துபூத மநுஷ்யாதிகள்பக்கலிலே விநியோகிக்கிறபடி என்னகாண்!' என்று இன்னாதாய், அவர்களைக்குறித்து, கல்யாணமாய் பகவதநுரூபமான கவிகளை க்ஷுத்ரமநுஷ்யாதிகள்பக்கலிலே விநியோகிக்கலாகாதென்று பார்த்து, 'நிஷேத்யதயாவும் சொல்லுகை ஈடன்று; ஆகிலும், எம்பெருமானுக்கீடான அழகிய கவிகளை இழக்கமாட்டாமையாலே சொல்லுகிறேன் கேளுங்கள்' என்று வைத்து, 'இப்படி பகவத்பராங்முகமான லோகத்திலே நான் எம்பெருமானையல்லது மற்றொருவரைக் கவிபாடுகைக்கு ஈடல்லாத ப்ரக்ருதியாகப் பெற்றேனே' என்று கொண்டு ஸ்வலாபத்தைப் பேசுகிறார்.

**ஒ.**—முதற்பாட்டில், வேறு சிலரைக் கவிபாடுகிறவர்களுக்கு ஹிதம் உபதேசிக்கைக்காக ப்ரவ்ருத்தரான ஆழ்வார் அவர்களுக்கு ருசிபிறக்கைக்காகத் தம்முடைய மதத்தை அருளிச்செய்கிறார்.

[சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன்] - ப்ரயோஜநாந்தரபரராயிருக்கிற உங்களுக்கு நான் சொல்லுகிற ஹிதம் அஸஹ்யமாகக் கடவது. ஆகிலும், உங்களநர்த்தம் பொறுக்க மாட்டாமையாலே சொல்லத் தவிரேன். எம்பெருமானை யொழிய வேறு சிலரைக் கவி பாடாதே கொள்ளுங்கோளென்று நிஷேத்யதயா சொல்லுகையும் ஈடல்லவாகிலும் பகவதநுரூபமாயிருக்கிற உங்களுடைய கவிகள் அவனுக்கேயாகவேணும் என்னும் லோபத்தாலே சொல்லுகிறேனென்றுமாம். [கேண்மினோ] - நான் சொன்ன பொருள் அநுஷ்டிக்கமாட்டிகோ ளாகிலும் இத்தனையும் கேட்டுத் தீரவேணும். [என்னாவிலின்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன்] - நிரதிசய போக்யமாய் எம்பெருமானுக்கே அர்ஹமான கவிகளை அவனைத் தவிர மற்றொருவர்க்கு நான் கொடுக்க க்ஷமனல்லேன். [தென்னா என்று தொடங்கி] - நிரதிசய போக்யமான திருமலையிலே எனக்கு நித்யாபூர்வமாய்க் கவிபாட விஷயம் போந்து எனக்கு மஹோபகாரத்தைப் பண்ண

உகாரயுஜெ । கூ மெவகாஜீ நீஉ-ஒமெ காஜாகிவணிகஐ நா" என்றத்தை நினைப்பது. ஈடல்ல - அநுரூபமல்ல. "உலகம்படைத்தான் கவியாயினேற்கு" என்று - ஸ்வவ்யாவ்ருத்தி.

வல்லனாய் அப்ராப்தஸ்தலத்திலே கவிபாடுகை ஆகாதபடி எனக்கு நாதனுமாயிருக்கிறவன், என்னைக் கவிபாடுவித்துக்கொள்ள வந்து நிற்க.

ப.—முதற்பாட்டில், என்னை ஸ்துதிப்பிக்கைக்காகத் திருமலையிலே ஸந்நிதிபண்ணின உபகாரகனையொழிய வேறொருவரை ஸ்தோத்ரம்பண்ணேனென்று ஸ்வமதத்தை அருளிச்செய்கிறார்.

இது - (நீங்கள் இதரஸ்தோத்ரம் தவிருகைக்கு உறுப்பான) இந்தஹிதம், சொன்னால்- சொன்னால், விரோதம் - (உங்களபிமதத்துக்கு) விரோதம்; ஆகிலும் - ஆயிருக்கிலும், சொல்லுவன் - (உங்களநர்த்தம் பொறுக்கமாட்டாமையாலே) சொல்லக்கடவேன்; கேண்மின் - (நீங்கள் செவிதாழ்த்துக்) கேளுங்கள்; வண்டு - வண்டுகளானவை, தென்னாதெனாவென்று - (மதுபாநப்ரீதியாலே) தென்னாதென்னாவென்று, முரல் - (ஆளத்திவைப்பாரைப்போலே) ஶப்திக்கிற, திருவேங்கடத்து - திருமலையிலே ஸந்நிஹிதனாய், என்னானை - எனக்குக் கவிபாடுகைக்கு விஷயம்போந்து, என் அப்பன் - (கவிக்குப் பரிசிலாகத்) தன்னைத்தரும் உபகாரகனாய், எம்பெருமான்-ப்ராப்தனான ஸ்வாமியானவன், உளனாக - (இக்கவிபாட்டாலே) தான் உளனாயிருக்க, என் நாவில் - என் நாவினுடைய ஸத்தைக்கு ப்ரயோஜநமாய், இன் கவி - (கவிபாட்டுண்கிற ஈஶ்வரனுக்கு) இனிதான கவியை, யான் - (அவனுக்கு அநந்யார்ஹஶேஷபூதனான) நான், ஒருவர்க்கும் - வேறொருவர்க்கும், கொடுக்கிலேன் - கொடுக்க ஶக்தனல்லேன்.

ஈ.—முதற்பாட்டில், க்ஷுத்ரவிஷயங்களைக் கவிபாடுகை ஹிதமன்றென்று உபதேசிக்கையிலே ப்ரவ்ருத்தரானவர் அவர்களுக்கு ருசிபிறக்கைக்காக 'நான் இருக்கிறபடி கண்டீர்களே' என்று தம்முடைய மதத்தை அருளிச்செய்கிறார்.

[சொன்னால் விரோதம் இது] - நீங்கள் சில ப்ரயோஜநங்களை நினைத்துக் கவிபாடாநிற்க, நான் அத்தைத் தவிருங்கோளென்றால், உங்களுக்கு அது அஸஹ்யமாகிலும் உங்களநர்த்தம் பொறுக்கமாட்டாமையாலே சொல்லத் தவிரேன்; அஸேவ்யஸேவை நிஷேத்யதயா சொல்லவும் ஆகாதபடியாயிருக்க, சொல்லுகிற எனக்கே விரோதமாய்ப் பலிக்கிலும் உங்களநர்த்தங்கண்டு சொல்லப்புக்கேனாகையாலே, நீங்கள் மீளுந்தனையும் சொல்லத் தவிரேன். சொன்னால் உங்களுக்கு விரோதமென்று ப்ரதிபந்நமாயிருந்ததேயாகிலும் சொல்லுகிறேன் என்றுமாம். "யோzவஸா ஊஹஸஉஹ்ருதா:" என்று திருநாமத்தைச் சொன்னால் அநந்தரம் இடிவிழுமென்று வரும் அநர்த்தத்தைச் சொன்னிகோளாதல், திருநாமத்தைச் சொன்னிகோளாதல் செய்யுங்கோள் என்கிறானிறே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான். 'நீங்கள் அஹிதத்திலே ப்ரவணராய் மீளமாட்டாதாப்போலே உங்கள் ஹிதத்திலே ப்ரவணனான நானும் மீளமாட்டேன்' என்கிறார். [கேண்மினே]-அநுஷ்டிக்கவேண்டா; நீங்கள் செவி தாழ்க்க அமையும். 'ஶ்ரவணம் அநுஷ்டாநஶேஷமாக வேண்டாவோ? ஶ்ரவணமாத்ரம் அமையுமோ?' என்னில்,—'விஷயஸ்வபாவத்தாலே அநுஷ்டாந பர்யந்தமாய் முடியும்' என்று இருக்கிறார். பஹுவசநத்தாலே அநர்த்தம் ஸர்வஸாதாரணமாகையாலே, எல்லாரையு மொக்கக் கால்பிடிக்கிறார். [என்நாவில் இத்யாதி] - "யமெஷ ஜெதஸஷ்ருதஉநம்" என்கிறபடியே தம்மைப்போலே தம்முடைய நாவும் அவனுக்கு அநந்யார்ஹஶேஷம் என்கிறார். நாப்படைத்த காரியங்கொண்டேன் நான் ஒருவனுமேயன்றோ? என்கிறார். "இவளிராப்பகல் வாய்வெரீஇ" என்னும்படியான நாவிறே. [இன்கவி] - அவனுக்கு இனிதாகையாலே தமக்கும் இனிதாயிருக்கிறபடி, ஶேஷிக்கு இனிதான வழியாலே தனக்கு இனிதாகையிறே, ஶேஷத்வத்தினுடைய எல்லை. [யான்] - அநந்யார்ஹ ஶேஷபூதனான நான். [ஒருவர்க்கும் கொடுக்கிலேன்] - அத்யந்த பரதந்த்ரமாகச் சொல்லிவைத்து 'கொடுக்கிலேன்' என்பானென்? என்னில்,—

அவன்தான் இத்தாலே அநேகம் பெற்றானாயிருக்கையாலே 'புறம்புகொடேன்' என்கையாலே இங்குத்தைக்கே அநந்யார்ஹமென்கை. [கொடுக்கிலேன்] - கொடுக்க க்ஷமனல்லேன். [தென்னா இத்யாதி] - நிரதிசயபோக்யமாய்க் கவிபாடுகைக்கு விஷயம் போந்திருக்கும் விஷயத்தையாயிற்று இவர் கவிபாடுகிறது. வண்டுகள் மதுபாநம் பண்ணிப் ப்ரீதிக்குப் போக்குவிட்டு ஆளத்திவைத்தாற் போலே யாயிற்று, இவர் கவிபாடுகிறது. பகவத்விஷயத்தில் ப்ரத்யாஸத்தியுடைய திர்யக்குக் களோடு முமுக்ஷுக்களோடு வாசியற்றிருக்கிறபடி. [திருவேங்கடத்து என் ஆனை] - வேதத்திற் காட்டில் ஸ்ரீராமாயணத்துக்கு உண்டான வாசிபோலே ஸ்ரீவால்மீகிபகவான் கவிபாடின விஷ யத்திற்காட்டில் தாம் கவிபாடுகிற விஷயத்துக்கு உண்டான ஏற்றம் அருளிச்செய்கிறார். "செந் தமிழ்பாடுவார் தாம் வணங்குந் தேவர்" என்னக்கடவதிறே. [என் ஆனை] - கவிபாடிப் பெற்ற ஆனை; தன்னையொழிய வேறொன்றைக் கொடுக்குமவனையன்றிறே இவர் கவிபாடிற்று. 'ஆனை' என்கையாலே, கவிபாடுகைக்கு விஷயம் போந்திருக்கை. [என் அப்பன்] - நாட்டார் பிறரைக் கவி பாடித் திரியாநிற்க, அவர்களுக்கும் ஹிதம் சொல்லும்படி பண்ணின மஹோபகாரகன். [எம் பெருமான்] - அபகாரங்களையே பண்ணினாலும் விடவொண்ணாத ப்ராப்தி யிருக்கிறபடி. [உள னாகு] - சேதநர் தன்னைக் கிட்டாதபோது "அஸந்நேவ" வாயிருக்குமா போலே என்வாயால் ஒரு சொற் கேளாத அன்று உளனாகாதவனா யிருக்கை. ஸுலபனாய்க் கவிபாடுகைக்கு விஷயம் போந்து உபகாரகனாய் ப்ராப்தனாய் வத்ஸலனாயிருக்கிற இவனையொழிய வேறு சிலரை நான் கவி பாட ஶக்தனோ? என்கிறார். நான் செய்கிறபடியேயன்றோ உங்களுக்குச் செய்ய அடுப்பது என்று கருத்து.

ஈடு.—முதற்பாட்டில் - க்ஷுத்ரவிஷயங்களைக் கவிபாடுகை உங்களுக்கு ஹிதமல்ல வென்று உபதேசிக்கையிலே ப்ரவ்ருத்தரானவர், அவர்களுக்கு ருசிபிறக்கைக்காக, நான் இருக்கிற படி கண்டிகோளே யென்று தம்முடைய மதத்தை அருளிச்செய்கிறார்.

[சொன்னால் விரோதம் இது] - ப்ரயோஜநாந்தரபரராய்க் கவிபாடுகிற உங்களை, 'கவி பாடாதே கொள்ளுங்கோள்' என்கையாவது - உந்தம் ப்ரயோஜநத்தைத் தவிர்க்கையிறே; 'நம் முடைய ப்ரயோஜநத்துக்கு இழவாக வார்த்தை சொல்லாநின்றான்' என்று விரோதமாய்த் தலைக் கட்டுமிறே உங்களுக்கு. ஆயிருக்க, சொல்லுகிறேன். அன்றிக்கே, "யோவஸாதஸ்ஸ உச்யதாம்" (யோவஸாதஸ்ஸ உச்யதாம்) என்று 'திருநாமத்தைச் சொன்னால் அநந்தரம் இடிவிழும்' என்று வரும் அநர்த்தத்தைச் சொன்னிகோளாதல், திருநாமத்தைச் சொன்னிகோளாதல் செய்யுங்கோ ளென்றானிறே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் ஆஸுரப்ரஜைகளை; அப்படியே, இது உங்களுக்கு 'அநர்த் தம்' என்று ப்ரதிபந்நமா யிருந்ததேயாகிலும் சொல்லுகிறேன். அன்றிக்கே, "கணாம்ருதம்"

---

முதற்பாட்டு - சொன்னால் இத்யாதி. ஹிதோபதேசம்பண்ணுகிறாராகில், 'யாதொருவர்க்கும்கொடுக் கிலேன்' என்று - தம்முடைய படியைச் சொல்லுவானேன்? என்ன, க்ஷுத்ரவிஷயங்களை இத்யாதி.

'சொன்னால்விரோதம்' என்றதுக்கு மூன்று அர்த்தம்: அதில் - உங்களுக்கு விரோதமென்று இரண்டு அர்த்தம். அதாவது - அஸேவ்யஸேவை பண்ணவேண்டா வென்றும், ப்ராப்தமான பகவத்விஷயத்தை ஸ்து தியுங்கோ ளென்றும் சொல்லுகிறது உங்களுக்குவிரோத மென்று. இந்த அர்த்தத்வயத்தை அருளிச்செய்கிறார்- ப்ரயோஜநாந்தரா இத்யாதியாலும், அன்றிக்கே யோவஸாத இத்யாதியாலும். ஆயிருக்கச் சொல்லுகிறேனென் றது - பார்த்திருக்கப்போகாத நிரவதிகக்ருபையாலே யென்றபடி. "ஹரிஸ்ஸர்வேஷு லோகேஷு ஈஸ்வரோ விதிவஜ்ஜகத்। யோஸாவஸ்மாத் யோவஸாதஸ்ஸ உச்யதாம்" இதி ப்ரஹ்லாதஃ. "ஸர்வாஸ்ஸமஸ்த ஹிவீக்ஷ்யவாஸஸஹஸ்ரம் வததியஃ கிமதஸ்யகணாம்ருதம்" இத்யாதி, த்ருதீ யேம்ஸே யமகிங்காஸம்வாதே. இனி இவர்கள் உபதேசத்தாலே தமக்கு விரோதமென்று மூன்றாந் தாத்பர்யத்தை

(கர்ணமூலே) என்று ராஜதாரப்ராவண்ய நிஷேதத்தோபாதி, ஓலக்கத்திற் சொல்லும் வார்த்தை யன்று இது. அஸேவ்யஸேவை நிஷேத்யதயாவும் என்வாயாற் சொல்லவொண்ணாது; இங்ஙனே யிருக்கச் செய்தேயும் சொல்லும்படியிறே நீங்கள் நிற்கிற தெளர்க்கத்யம்: ஆகையாலே, நான் சொன்னால் அது எனக்கு விரோதமாமிறே. [ஆகிலும் சொல்லுவன்] - ஆயிருக்கவுஞ் சொல்லுகிறேன். இப்படியாகிலும் சொல்லுகிறதேன்? என்னில்,—நீங்கள் மமதமாத்யுபேதராய் ஸமித்பாணிகளாய் வர, சொல்லுகிறேனன்றே; உங்களநர்த்தம் பொறுக்க மாட்டாமையாலே சொல்லுகிறேன்; ஆகையால், அதுக்குப் பரிஹாரம் பிறக்குமளவும் சொல்லுகை தவிரேன். நீங்கள் உங்களபிமதத்தினின்றும் மீளமாட்டாதாபோலே நானும் உங்களுடைய ஹிதத்தினின்றும் மீளமாட்டாதபடி. [கேண்மினோ] - 'இதுகேட்ட வநந்தரம் அநுஷ்டாநபர்யந்தமாக வேணுமிறே' என்று அஞ்சவேண்டா; செவிதாழ்க்க அமையும்; அநுஷ்டிக்கவேண்டா. அதுவேன்? ஹிதகாமராயன்றே சொல்லுகிற தென்னில்,—கேட்கவே, சேதநராகையாலே மேல்விழுவர்களிறே; ராகப்ராப்தமாய் வருமதுக்கு நாம் சொல்லவேண்டாவிறே; ஆகையாலே, நாம் அத்தை விதித்தோமாகிறதேன்? என்று 'கேண்மின்' என்கிறார். கடலோசைக்குச் செவிபுதையாதே கேட்கிறமை உண்டிறே, அவ்வோபாதியாகிலும் கேளுங்கோள். பன்மையால் - அநர்த்தம் எல்லார்க்கும் ஒத்திருக்கையாலே எல்லார்க்குஞ் சொல்லுகிறார். பால்குடிக்கக் கால்பிடிப்பாரைப் போலே பகவத் விஷயம் கேட்கக் கால்பிடிக்கிறாரிறே இவர்செல்லாமை. [என்நாவில் இத்யாதி] - வழிகெடப் போகிற நீங்கள், ஒருவன் வழியே போகாநின்றால் 'நாமும் அப்படியே போகவேணும்' என்று இருக்க வேண்டாவோ சேதநரானால்? நான் இருக்கிறபடி கண்டிகோளே; அப்படியே யன்றோ உங்களுக்கும் இருக்க அடுப்ப தென்கிறார். [என்நா] - "யஸ்யைதே தஸ்ய தத்தநம்" (யஸ்யைதே தஸ்ய தத்தநம்) என்கிறபடியே நான் அவனுக்கு சேஷமாகையாலே எனக்குக் கரணமாய் அவனுக்கு சேஷமான என்நா. என்னைப்போலே நாவால் கார்யங்கொண்டாருண்டோ? என்கிறார்;

---

*இரண்டுவிதமாக அருளிச்செய்கிறார் - அன்றிக்கே, கர்ணமூலே இத்யாதி வாக்யத்வயத்தாலே. அதாவது - அஸேவ்யஸேவைநிஷேத்யதயாப்ரஸங்கிக்கிலும், தண்டதாரனை ஈஶ்வரன் திருவுள்ளத்துக்கு அஸஹ்யமாகையாலே தமக்கு விரோதமென்னுதல்; பகவத்விஷயத்தில் அன்பிலின்பீன்தேறலமுதவெள்ளத்தாநும் சிறப்பாகையாலே, தத்வ்யதிரிக்தவிஷயங்களை நிஷேத்யதயா ப்ரஸங்கிக்கிலும் அதிலுண்டான அஸஹ்யதையாலே வாய் வக்ரிக்குமென்னுதல். 'என்வாயாற்சொல்லவொண்ணாது' என்ற அநந்தரம் - ஆகையாலே, நான்சொன்னால் இத்யாதி. வாக்யம் அநுஸந்தேயம். ஆயிருக்கவும் - உங்களுக்கும் எனக்கும் விரோதமாயிருக்கவும். 'இங்ஙனே யிருக்கச் செய்தேயும்' இத்யாதியை ஶங்காபூர்வகமாக விவரிக்கிறார் - இப்படியாகிலும் இத்யாதி. இப்படியாகிலும் - எங்களுக்கும் விரோதமாய் உமக்கும் விரோதமா யிருக்கச்செய்தேயும். அநர்த்தம் பொறுக்கமாட்டாத தயையுண்டென்று, எங்களுக்கு அநிஷ்டமானவற்றைச் சொல்லலாமோ? என்ன, நீங்கள் உங்களபிமதத்தில் இத்யாதி. 'கேண்மினோ' என்ற ஸ்வரஸஸூசிதமான அர்த்தம் - இதுகேட்டவநந்தரம் இத்யாதி. செய்யுங்கோளென்னாதே, 'கேண்மினோ' என்றதுக்கு வாஸநை - செவிதாழ்க்க இத்யாதி. ஹிதகாமராயன்றோ சொல்லுகிறது: அநுஷ்டியுங்கோளென்று சொல்லவொண்ணாதோ? என்னில் என்றபடி. 'செவிதாழ்க்க அமையும்' இத்யாதி வாக்ய விவரணம் - கடலோசைக்கு இத்யாதி. யத்வா, 'ஓ' என்றதுக்கு ஹாவமாதல். ப்ரஹ்மவித்யையாகையாலே உபதேசம் அவஹிதகர்ணமாக வேண்டாவோ? என்ன, பன்மையால் இத்யாதி. பன்மை - பஹுவசநம். 'கேண்மினோ' என்றதுக்கு - ஶப்தமாத்ரம் போக்யமென்று விவக்ஷித்துத் தாத்பர்யாந்தரம் - பால்குடிக்க இத்யாதி. "செவிக்கினியசெஞ்சொல்" என்று ஶப்தஶ்ரவணமே போக்ய மென்றபடி. ஸ்வமதம் அருளிச்செய்கிறதுக்கு ப்ரயோஜநம் - வழிகெட இத்யாதி. அத்தை விஶதீகரிக்கிறார் - நான் இருக்கிறபடி இத்யாதி. 'என்நா' என்று மமகாரம்பண்ணலாமோ? என்ன, யஸ்யைதே இத்யாதி. " த்ரய ஏவாதநா ராஜந் பார்யா தாஸஸ்ததா ஸுத: | யத்தே ஸமதிகச்சந்தி யஸ்யைதே தஸ்ய தத்தநம்" இதி பாரதே. 'என்' என்றதுக்கு ஸந்தோஷகர்ப்பதயா பாவார்த்தம் - என்னைப்போலே இத்யாதி. அதாவது - பகவத்ப்ரவணமான நாவாகை*

“வஞ்சனே யென்னு மெப்போது மென்வாசகம்” என்னும்படியான நாவிறே. [இன்கவி] - இவர்கவியை ஈஶ்வரன் கேட்டு ப்ரஸந்நனாய் இனியனாக, அவ்வழியாலே தமக்கு இனியதா யிருக்கிறபடி. ஶேஷிக்கு இனியதான வழியாலேயிறே ஶேஷபூதனுக்கு இனியதாவது. மிதுநமாய்க் கலவாநின்றால் இரண்டுதலைக்கும் உள்ள ரஸம், ஶேஷஶேஷிகள் பரிமாற்றத்திலும் உண்டிறே. அவனுக்கு இனியதாய் அவ்வழியாலே தனக்கு இனியதாகையிறே ஶேஷபூதனுக்கு வாசி. [யான்] - அவனுக்கு அநந்யார்ஹஶேஷபூத னென்றிருக்கிற நான். இத்தை நினைத்திறே கீழே “யஸ்யைதே” (யஸ்யைதே) என்றது. [ஒருவர்க்கும் கொடுக்கிலேன்] - கீழ்ச்சொன்ன அத்யந்த பாரதந்த்ர்யத்தோடு சேர்ந்திருந்ததில்லையிறே இது; ‘புறம்பொருவர்க்குங்கொடேன்’ என்கையாலே இவ்விஷயத்தில் கொடுப்பேனென்கையாயிற்றிறே; தனக்கென்று ஒன்று உண்டாய்க் கொடுப்பது கொள்ளுவதாகை சேருமோ ஸ்வரூபத்துக்கு? என்னில்,—அடியிலே ஈஶ்வரன் அநுஸந்தாந ஸாமர்த்யத்தை *(யும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஶக்தியையும்) கொடுத்து வைத்தால், பின்பு, நான் கொடுத்தேன் என்னலாமிறே. அவனதானதுதன்னை ‘நான் என்னத்தைக் கொடுத்தேன்?’ என்னலாம்படியிறே ஸம்பந்தம் இருப்பது. கோதாநத்தில், பிதா புத்ரன்கையிலே நீர்வார்த்துக்கொடுத்து, மீளவும் அவன் கொடுக்க, அவன் கையிலே தான் பெற்றானாயிருக்குமாபோலே; இவனும் தனக்கே ஸ்வம்மானத்தைத் தந்தானாய், இவன் ஸர்வஸ்வதாநம் பண்ணத் தான் பெற்றானாக நினைத்திருக்கும் ஈஶ்வராபிப்ராயத்தாலே சொல்லுகிறார். “என்னால் தன்னையின்தமிழ்பாடிய” என்று தான் இவரையிட்டுப் பாடுவித்து, இவர் தன்னைப்பாடினாராக நினைத்திருக்குமவனிறே. அல்லாதார் புறம்புள்ளார்க்குத் தங்கள் கவியைக் கொடுத்துவைக்கையாலே, யான் ஒருவர்க்குங் கொடுக்கமாட்டேனென்கிறார். [தென்னா இத்யாதி] - இதுகாணும் இவர் கவிபாடின படி. வண்டுகள் மதுபாநமத்தமாய் ப்ரீதிக்குப் போக்குவிட்டு முரன்றது இசையாய்விழுந்தாற்போலே யாயிற்று, இவரும் பகவதநுபவஜநித ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டது கவியானபடி. திர்யக்குக்களோடு முமுக்ஷுக்களோடு

---

யாலே அத்தோடே தமக்கு ஒரு ஸம்பந்தம் அபேக்ஷித மென்றபடி. யத்வா, பகவத்ப்ரவணமான நாவைக் கொண்டாடுகிறா ரென்னுதல். தம்முடைய நா பகவத்விஷயத்தில் எப்போதும் ஸ்துதிக்குமென்னுமதுக்கு நியாமகம் - வஞ்சனே இத்யாதி. ‘இன்கவி’ என்று - ஸ்வபோக்த்ருத்வம் தோற்றச் சொல்லலாமோ? என்ன, இவர்கவியை இத்யாதி. ஶேஷவ்ருத்திசெய்கிற இவனுக்கு இனிமைக்கு ப்ரஸக்தியுண்டோ? என்ன, மிதுநமாய் இத்யாதி. பரிஹாராந்தரம்-அவனுக்கு இனியதாய் இத்யாதி. முந்தின பரிஹாரம்-தத்ப்ரஸாத ஹேதுத்வேந உத்தேஶ்யம்; இரண்டாவது - அவனுக்கு போக்யமாகையாலே உத்தேஶ்ய மென்றபடி. அன்றிக்கே, விவரணமாதல். என்னாவிலின்கவி - என்னுடைய நாவிலேயுண்டான போக்யமான கவி இத்யர்த்தம். ‘யான்’ என்றது - ‘என்’ என்றதோடு புநருக்தமன்றோ? என்ன; இத்தைநினைத்திறே இத்யாதி. இங்கே - அஹங்காரநிவ்ருத்தி சொல்ல நினைத்திறே, கீழே - “யஸ்யைதே” என்று மமகாரநிவ்ருத்தியைச் சொல்லிற்றென்றபடி. கீழ் வாக்ய விவரணம் - புறம்பொருவர்க்கும் இத்யாதி. ஈஶ்வரன் இவனுக்கு ஜ்ஞாத்ருத்வஶக்தியைக் கொடுக்கையாலே “நான்கொடுத்தேன்” என்கைக்கு விரோதமில்லை யென்கிறார்-அடியிலே இத்யாதி. அநுஸந்தாநஸாமர்த்யம் - ஜ்ஞாத்ருத்வஸாமர்த்யம். ஆனாலும், பகவதாயத்தமன்றோ? என்ன, அவனதான இத்யாதி. இதுக்கு உதாஹரணம் - கோதாநத்தில் இத்யாதி. பிதாவினுடைய ஸ்வத்தைப் புத்ரன் ‘தன்னது’ என்று அபிமாநிக்கலாமிறே யென்று கருத்து. ப்ரஹ்மோபதேஶவேளையிலே கோதாநம் விவக்ஷிதம். அப்படி ஈஶ்வரன் நினைத்திருக்குமோ? என்ன - என்னால் தன்னை இத்யாதி. ‘யானொருவர்க்கும் கொடுக்கிலேன்’ என்கைக்கு ப்ரஸங்கமேது? என்ன-அல்லாதார் இத்யாதி. வஸ்துதஃஸ்வத்தைக் கொடுக்கை இங்கில்லை, லோகவ்யவஹாரத்தாலே சொன்னதித்தனை யென்றபடி. கொடுத்துவைக்கையாலே-கொடுத்ததாக வ்யவஹரிக்கையாலே. கவிபாடுகிற ப்ரகரணத்திலே வண்டுகள் முரன்றத்தை அருளிச்செய்கைக்கு அடியேது? என்ன, இதுகாணும் இத்யாதி. விவரணம் - வண்டுகள் இத்யாதி. முரன்றது - சப்தித்தது. இசையாய் - காநமாய். வண்டுகள் தென்னாதென்னாவென்கிறது ஸஹஜமென்கிறார்-திர்யக்குக்களோடு இத்யாதி. ஈஶ்வரனுக்கும் அப்படியோ? என்ன, பகவத்ப்ரத்யாஸந்நர்

---

* குண்டலித க்ரந்தம் - அரும்பதத்தி லெடுக்கப்படாமையால் ப்ரக்ஷிப்த மென்பர்.

அவன்தன்னோடு வாசியறத் தேன்னுதேன்னுவேன்னு மித்தனை. பகவத் ப்ரத்யாஸந்நரேல்லார்க்கும் இதுவே பாசுரமானல் அவன்தனக்குச் சோல்லவேண்டாவிறே; தேன்னுவேன்னு மேன்னமானிறே. [திருவேங்கடத்து என் ஆனை] - வேதத்திற்காட்டில் ஸ்ரீராமாயணத்துக்கு உண்டான ஏற்றம்போலே, ஸ்ரீவால்மீகிபகவான் கவிபாடின விஷயத்திற் காட்டில் தாம் கவிபாடின விஷயத்துக்கு உண்டான ஏற்றஞ் சோல்லுகிறர். [திருவேங்கடத்து என் ஆனை] - ஆனைபேறக் கவிபாடுமேவர்காணும் இவர்; இவர் கவிபாடிக் கட்டின யானையாயிற்று அவன். அவ்வண்டுகளோடே * ஸகோத்ரிகளாய் அநுபவிக்கிறர். அல்லாதாரைப்போலே, கவி பாடினவர்க்குத் தன்னையொழிய வேறோரானையைக் கோடுத்துவிடுமேவனன்றே. ஸதா தர்ஶநீயமாய் எப்போதும் ஸ்தோத்ரம்பண்ண வேண்டி யிருக்குமவன். வண்டுகளானவை மதுபாநப்ரீதியாலே தேன்னுதேன்னு வேன்று ஆளத்தி வைப்பாரைப்போலே ஶப்திக்கிற திருமலையிலே ஸந்நிஹிதனுய் எனக்கு ஆனைபோலே அநுஸாவ்யனவனை. [என் அப்பன்] - நாட்டார் பிறரைக் கவிபாடித் திரியாநிற்க, அவர்களுக்கும் ஹிதஞ் சோல்லவல்லேனும்படி பண்ணின மஹோபகாரகன். [எம்பெருமான்] - அபகாரமேபண்ணினுலும் விடவோண்ணுதப்ராப்தி. [உளனுகவே] - "**ஆஶயாயதிவாராம:**" (ஆஶயாயதிவாராமஃ) என்று ப்ரார்த்திக்கப்படுமேவன் என் வாயாலே ஒரு சோற்கேட்டுத் தான் உளனுகாநிற்க, நான் வேறொருவரைக் கவிபாடுவேனோ? "**அஸந்நேவ**" (அஸந்நேவ) என்று தன்னைக்கிட்டாத அன்று ஸம்ஸாரிசேதநருடைய ஸத்தை யில்லாதாப்போலே, தான் என்னைக் கிட்டாதவன்று தன்ஸத்தை யில்லையாம்படி அவன் வந்து நிற்க. அவன் என்னைக்கோண்டு கவிபாடுவித்துக் கோள்ளுகைக்காக இங்கே வந்துநிற்கிற நிலை என்னுவது, நான் புறம்பேபோய் ஒருவரைக் கவிபாடினல்? ஆனபின்பு, என்னைப்போலே யிருக்கை காணுங்கோள் உங்களுக்கும் அடுத்திருப்பது. (க)

## இரண்டாம் பாட்டு.

உளனாகவேயெண்ணித் தன்னையொன்றாகத்தன்செல்வத்தை
வளனாமதிக்குமிம்மானிடத்தைக் கவிபாடியேன்?
தளனார்கழனிசூழ் கண்ணன்குறுங்குடிமெய்ம்மையே
உளனாயவெந்தையை எந்தைபெம்மானையொழியவே.

இத்யாதி. பகவத்ப்ரத்யாஸந்நர் எல்லார்க்கும் இதுவே பாசுரமானல் - அவன் ஆநந்திப்பிக்க ஆநந்தமக்நராய் 'தென்னுதென்னு' என்னு மிதுவே பாசுரமானல். அவன்தனக்கு - ஸ்வத: ஆநந்தியானவனுக்கு. அவன்தான் அப்படி பாடினது உண்டோ? என்ன, தேன்னுவேன்னும் இத்யாதி. ஏற்றம்சொல்லுகிறரிதி - ஏற்றமாவது-அர்ச்சாவதாரபர்யந்தமான ஸௌலப்யாதிகள். 'என்னானை' என்கிறதினுடைய பாவத்தை உத்தரோத்தரம்ஶ்லோக்தியாலே அருளிச்செய்கிறர் - ஆனைபேற இத்யாதி. ஆனைபெற்றரோ? என்ன, இவர்கவிபாடி இத்யாதி. கட்டுகை - ஸம்பாதிக்கை. 'வண்டுமுரல்திருவேங்கடத்தென்னானை' என்கிறதினுடைய பாவத்தை ஶ்லோக்தியாலே காட்டுகிறர் - அவ்வண்டுகளோடே இத்யாதி. கோத்ரசப்தம் - பர்வதவாசி. 'என்' என்றதுக்கு பாவம் - அல்லாதாரை இத்யாதி. ஆனையாகச் சொன்னத்தால் பலிதம் - ஸதாதர்ஶநீயமாய் இத்யாதி. அதாவது - ஆனையின்தனைபோகம். 'உபகாரகன்' என்கிறது எத்தாலே? என்ன, நாட்டார் இத்யாதி. 'உளனுக' என்றது - ஸத்தைபெறுவானுயிருக்க வென்னுதல், கவி கேட்கைக்காக த்ருக்விஷயமாயிருக்க வென்னுதல். முந்தின அர்த்தம் - ஆஶயா இத்யாதி வாக்யத்வயத்தாலே. "வாநஶஸுபாவயெஸ" என்று தன்னுடைய இனியசொற்கேட்க ஆசைப்படும்படி யிருக்குமவ னென்றபடி. த்விதீயார்த்தம் - அவன் என்னை இத்யாதி. பரோபதேசப்ரகரணத்திலே ஸ்வவிஷயத்தாந்தம் சொல்லுகிறதுக்கு அவதாரிகையிற் சொன்ன ப்ரயோஜநத்தை இங்கும் அருளிச்செய்கிறர் - ஆனபின்பு இத்யாதி. சொன்னல்விரோதமித்யாரப்ய, கேண்மினே; தென்னுதெனுவித்யாரப்ய, உளனுக - என்னுவிலின்கவி யாதொருவர்க்கும் கொடுக்கிலே னித்யர்வய:. (க)

* ஸகோத்ரி - ஒருமலையில் வஸிக்கும் பொருள்.

ஆ.—(உளனாகவே.) நிரவதிகஸம்பத்தையுடையனாய், நித்யநிர்த்தோஷநிஸ்ஸீமகல்யாணகுண மஹோததியாயிருந்த எம்பெருமானை யொழிய, தன்னையும் ஒரு வஸ்துவாகப் பார்த்துத் தன் ஸம்பத்தையும் ஒரு ஸம்பத்தாக மதித்திருக்கிற இம்மநுஷ்யரைக் கவிபாடி என்ன ப்ரயோஜநமுண்டு? என்றுகொண்டு பூர்வப்ரக்ருதத்தை அருளிச்செய்கிறார்.

ஒ.—இரண்டாம் பாட்டில், ஸத்யமாய் ஸமக்ரமாயிருந்த கல்யாணகுண ஸம்பத்துக்களையுடையனாயிருந்துள்ள எம்பெருமானை விட்டு அஸத்கல்பராய் அவஸ்துபூத ஸம்பத்துக்களையுடையராானவர்களைக் கவிபாடுவாரை நிந்திக்கிறார்.

[உளனாகவே என்று தொடங்கி] "அஸந்நேவ ஸ பவதி" என்னும் கணக்காலேயின்றிக்கே யிருக்கிற தன்னை ஒரு சரக்காக அநுஸந்தித்துத் தனக்குத் தக்க க்ஷுத்ரஸம்பத்தை ஒரு ஸம்பத்தாகக் கொண்டாடும் இம்மதிகேடரைக் கவிபாடி என்னப்ரயோஜநம் உண்டு? [குளனார் என்று தொடங்கி]-நல்ல பொய்கைகளாலே அலங்க்ருதமான கழனி சூழ்வதுஞ்செய்து எம்பெருமான் 'என்னது' என்று அபிமாநிக்கவேண்டும்படி நன்றாயிருந்துள்ள திருக்குறுங்குடியிலே சொன்ன குணங்களெல்லாம் பத்தும்பத்தாகவுடையனாய் எனக்கு நாதனுமாய் என்குடிக்கு நாதனுமாய் நிற்கிறவனை யொழிய.

ப.—அநந்தரம், இந்தஸௌலப்யாதிகுணங்களோடே திருக்குறுங்குடியிலே நிற்கிற என்குலநாதனையொழிய மநுஷ்யரைக் கவிபாடி ப்ரயோஜநமென்? என்கிறார்.

குளன் ஆர் - நீர்நிலங்களால் நிறைந்த, கழனி சூழ் - கழனி சூழ்ந்து, கண் - இடமுடைத்தாய், நல் - நன்றான, குறுங்குடியே - திருக்குறுங்குடியிலே, மெய்ம்மை - பரமார்த்தமான ஸௌலப்யாதிகுணங்களை ப்ரகாசிப்பித்துக்கொண்டு, உளன் ஆய - நித்யஸந்நிதிபண்ணின, எந்தையை - உபகாரகனை, எந்தைபெம்மானை - என்குலநாதனை, ஒழிய - ஒழிய, தன்னை - (பகவத்ஜ்ஞாநமில்லாமையாலே அஸத்ஸமனாயிருக்கிற) தன்னை, உளனாகவே - ஸத்தாவானாய்க் கொண்டே, ஒன்றாக - ஒரு வஸ்துவாக, எண்ணி - நினைத்து, தன் செல்வத்தை - தனக்கின்றியே யிருக்கத் தன்னதாக அபிமாநித்த க்ஷுத்ரஸம்பத்தை, வளனா - அத்யந்த விலக்ஷணமாக, மதிக்கும் - தானே அபிமாநித்திருக்கும், இ மானிடத்தை - அதிக்ஷுத்ரையான இந்தமநுஷ்யஜாதியை, கவிபாடி என் - கவிபாடி என்ன ப்ரயோஜநமுண்டு? பரமார்த்தகுண விபூதி விசிஷ்டனை யொழிய, ஆபிமாநிககுணஸம்பத்தையுடையாரைக் கவிபாடி ப்ரயோஜநமில்லையென்று கருத்து.

இ.—இரண்டாம் பாட்டில், ஸத்யமாய் ஸமக்ரமாயிருந்துள்ள குண ஸம்பத்துக்களையுடையனானவனை யொழிய இதுக்கு எதிர்த்தலையானவர்களைக் கவிபாடினால் என்ன ப்ரயோஜநமுண்டு? என்கிறார்.

[உளனாகவே எண்ணி] - "அஸந்நேவ", என்றும், "நேஹ நாநாஸ்தி" என்றும் ப்ரமாணம் சொல்லுகையாலே இல்லையென்று அத்யவஸித்திறே இவர் இருப்பது. தன்னைக் கட்டிக்கொண்டு போகச்செய்தே "நேயமஸ்தி புரீ லங்கா ந யூயம் ந ச ராவண: । யஸ்மாதிக்ஷ்வாகுநாதேந பத்தம் வைரம் மஹாத்மநா" என்றானிறே திருவடி. [தன்னை] - என்றும் உளனாயிருக்கிற ஈஸ்வரனை இல்லையென்றிருக்கையாலே அஸத்கல்பனான தன்னை. "உளன் கண்டாய் நன்னெஞ்சே" என்னுமன்றிறே தானும் உளனாவது. [தன்னை ஒன்றாக] - தன்னை ஒருசரக்காகப் புத்திபண்ணி. [தன் செல்வத்தை] - தனக்குத்தான் இன்றியே யிருக்கத் தனக்கு ஓர் ஐஸ்வர்யமுண்டாக நினைத்து; "ஸதியஸ்ய புண்யஸம்ருத்தே". அதிக்ஷுத்ரமான ஸம்பத்தை. [வளனாமதிக்கும்] - வளனென்று அழகாதல், ஏற்றமாதல்: ஸர்வேஸ்வரனுடைய ஐஸ்வர்யத்துக்

கும் அவ்வருகாக நினைத்திருக்கை. தானேயாயிற்று இத்தை ஒன்றாக நினைத்திருப்பான். வேறொருத்தன் நினைத்திருக்கும்போது இவன் தன்னை அவஸ்துவாகவிறே நினைத்திருப்பது. கல்ப்ரஹ்மதேசத்தில் கரிக்கால்ப்ரஹ்மராயன் வார்த்தை. [இம்மானிடத்தை] - கீழ் ப்ரஸ்துதரான அஜ்ஞரை; மநுஷ்யரென்று சொல்லப் பாத்தம் போராமையாலே மானிடம் என்கிருர். [கவிபாடிஎன்]- இவர்கள் மறைத்திட்டுவைத்த குற்றங்களை ப்ரபந்தீகரித்து வெளியிட்டால் உங்களுக்கு என்ன ப்ரயோஜநமுண்டு? [குளனர் கழனிசூழ்] - விளைநிலத்திற்காட்டில் நீர்நிலம் விஞ்சியிருக்கை. குளன் - குளம். ரக்ஷ்யத்திற்காட்டில் ரக்ஷகம் விஞ்சியிருக்கை. [கண்ணன் குறுங்குடி] - ஸர்வேஶ்வரன் என்னதென்று அபிமாநித்த தேஶம். கண் நல் குறுங்குடி என்று நிர்வஹித்தான் ஒரு தமிழன். [மெய்ம்மையே உளனய] - சொன்ன குணங்களெல்லாம் பத்தும் பத்தாக வுடையனயிருக்கை. இவ்விஷயத்தில் அர்த்தவாதமில்லை; புறம்புள்ளதில் அர்த்தவாதம் அல்லாததில்லை. இவ்விஷயத்தில் உள்ளதெல்லாம் சொல்லவொண்ணுது. புறம்புள்ளத்தில் சொல்லலாவது ஒன்றில்லை. [எந்தையை] - நான் கவிபாடுகைக்குத் தன் குணங்களை ப்ரகாசிப்பித்துவைத்த உபகாரகனை; கவிபாடுகைக்குப் ப்ராப்தவிஷய மென்னவுமாம். ப்ராப்தி தம்மளவில் பர்யவஸியாமையாலே, என்குலநாதன் என்கிருர். ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய் ப்ராப்தனுமா யிருந்துள்ள அவனை யொழிய க்ஷுத்ரமநுஷ்யரைக் கவிபாடி என்ன ப்ரயோஜந முண்டு? என்கிருர்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. ஸத்யமுமாய் ஸமக்ரமுமான ஐஶ்வர்யத்தையுடையனாய், ஸ்வரூபரூபகுணங்களால் பூர்ணனுமாய், ப்ராப்தனுமான ஸர்வேஶ்வரனை விட்டு, ஒருசொல்லுக்குப் பாத்தமில்லாத ஐஶ்வர்யமுமாய், அதுதான் நிரூபித்தால் நிலைநில்லாமையாலே அஸத்யமுமாய், அதுதனக்கு ஆஶ்ரயமும் தேடிப்பிடிக்கவேண்டும்படியாயிருக்கிற க்ஷுத்ரரைக் கவிபாடி என்ன ப்ரயோஜந முண்டு? என்கிருர்.

[உளனாகவேயெண்ணி] - இலனாகவே அத்யவஸித்திருக்கிரு ராயிற்று இவர். "**நேஹ நாநாஸ்தி**" (நேஹநாநாஸ்தி) என்று அவனுக்குப் புறம்பாயிருப்பதோரு வஸ்துவில்லை யென்றிருக்கும்படியாலே. ப்ரதிபத்தியிலும் வந்தால் அவனை உளனாக நினையாதபோது "**அஸந்நேவ**" (அஸந்நேவ) என்று தாம் உளரன்றிக்கே யிருப்பரிறே. தான் உளனாகையாவது - ப்ரஹ்மவேதந முண்டாகையிறே. அவனை 'உளன்' என்று நினைத்துத் தான் உளனாகவேண்டியிருக்க, அவனை 'இல்லை' என்று தான் உளனாக விரகில்லையே. தன்னைக் கட்டிக்கொண்டுபோகாநிற்க, "**நையஶ்ஸ்திவஶீ**

இரண்டாம்பாட்டு - உளனாகவே இத்யாதி, 'மெய்ம்மையே – உளனாய' என்றத்தைப்பற்ற, **ஸத்யமுமாய்** இத்யாதி. 'குறுங்குடி – உளனாய – கண்ணன்' என்றத்தாலே விதித்த அர்த்தம் – **ஸ்வரூபரூப** இத்யாதி. **பாத்தம்** – விஷயம். 'உளனாகவேயெண்ணி' என்றத்தைப்பற்ற, **அதுதான் நிரூபித்தால்** இத்யாதி. 'இம்மானிடம்' என்றத்தைப்பற்ற, **அதுதனக்கு** இத்யாதி. 'உளனாகவேயெண்ணி' என்கையாலே – தர்மிஸ்வரூபமே பிடித்து இல்லை யென்றபடி.

'உளனாகவேயெண்ணி' என்று அவன்நினைவைச் சொல்லுகையாலே, தத்ப்ரதிகோடியாக இவர் நினைவை அருளிச்செய்கிருர் - இலனாகவே இத்யாதி. அதுக்கு ஹேதுவேது? என்ன, **நேஹநாநாஸ்தி** இத்யாதி. அதாவது - அவனுக்குப்புறம்பாய் ஸ்வதந்த்ரமான வஸ்து இல்லையென்றபடி. இந்தஹேது - தத்வஸ்திதியைப்பற்ற. இலனாகவே அத்யவஸிக்கைக்கு ஹேத்வந்தரம் – **ப்ரதிபத்தியிலும்** இத்யாதி. ப்ரதிபத்தி விஶேஷ ததபாவப்ரயுக்தமான ஸத்வாஸத்வங்கள் விவக்ஷிதமென்று கருத்து. **தாமுளரன்றிக்கே** இதி-"அன்று நான்பிறந்திலேன்" என்றிருக்குமவராகையாலே, அவர்களையும் அப்படியே இவர் நினைத்திருப்ப ரென்று கருத்து. 'உளனாகவேயெண்ணி' என்று வ்யங்க்யமாகச்சொல்லுகிறது என்தான்? உளனன்றோ? என்ன, **தானுளனாகையாவது** இத்யாதி. 'ப்ரதிபத்தியிலும்' என்ற வாக்யத்திற் சொன்ன அர்த்தத்தை ஸ்திரீகரிக்கிருர் – **அவனை** இத்யாதி. இலனாகவே அத்யவஸிக்கைக்கு த்ருதீயஹேதுவை உதாஹரணபூர்வகமாக அருளிச்செய்கிருர் - **தன்னைக்**

[illegible] ।  [illegible]"
(நேயமஸ்திபுரீலங்கா நயூயம்நசராவணஃ-யஸ்மாதிக்ஷ்வாகுநாதேந பத்தம்வைரம்மஹாத்மநா) என்றா னிறே திருவடி. [எண்ணி] - ஓர் ஊசி நிற்கிறதாகவும், அதின்மேலே ஒருமேரு நிற்கிறதாகவும் நினைக்குமாபோலே குவாலாக மநோரதித்து. [தன்னை] - "உளன்கண்டாய் நன்னெஞ்சே யுத்தம னென்று முளன்கண்டாய்" என்று 'அவன் நமக்கு உளன்காண்' என்றால் பின்னை நிர்ப்பரனாய் மார் விலேகைவைத்து உறங்கலாம்படி இருப்பானொருவனை, உளனென்றுதான் நினைக்கிறதோ? தன்னு டைய ஸத்பாவம் அவனுடைய உண்மையாலேயா யிருக்க, அவனையொழிய, "அஸந்நேவ" (அஸந்நேவ) என்று இன்றிக்கேயிருக்கிற தன்னை. [ஒன்றாக] - போரப்போலிய அநுஸந்தித்து. [தன்செல்வத்தை] - "ஸதி தர்மிணி தர்மாঃ" (ஸதி தர்மிணி தர்மாঃ) என்று தான் உண்டானா லிறே தர்மம் உண்டாவது; தன்னையே தேடிப்பிடிக்க வேண்டும்படியாயிருக்க, தனக்கு ஒரு ஸம்பத்து உண்டாக நினைக்கிறானிறே. [வளர] - வளமாக வென்றபடி. அதாவது - அழகியதாக வென்னு தல், மேலாக வென்னுதல். ஈஶ்வரனைஶ்வர்யத்துக்கு மேலாகவிறே தன் ஐஶ்வர்யத்தை நினைத் திருப்பது. [மதிக்கும்] - தானே இத்தைக் குவாலாக மதிக்கு மித்தனையிறே; புறம்பு இத்தை ஒன் றாக நினைக்கைக்கு இவன்தனை அவஸ்துக்க ளில்லையே. கல்ப்ரஹ்மதேசத்திலே கரிக்கால்சோழ ப்ரஹ்மராயன் 'திருவாய்மொழிக்கு வ்யாக்யாநஞ்செய்தேன்' என்று சீர்க்குக் காட்ட, அவன்பக்கல் உபஜீவநங்களை நினைத்து, பிள்ளையை 'நீர் இத்தைக்கேட்டு ஸம்பாவியும்' என்று அருளிச்செய்ய, அவரும் கேட்டு, 'ஆழ்வார்திருவுள்ளத்தை அடியொற்றி அவர் போனவழியே போம்படியே!' என்ன, 'ஆ ஆ! பிள்ளை, ஆழ்வார்க்கும் எனக்கும் வாசி புத்திபண்ணிற்றில்லையோ? க்ராமகார்யஞ் செய்து இடையிலே இதுவுஞ் செய்யவேண்டிற்றே எனக்கு' என்றான். [இம்மானிடத்தை] - கீழே உரித்து வைத்தாரிறே அவர்கள்ஸ்வரூபத்தை. [இம்மானிடத்தை] - மநுஷ்யரென்று சொல்லவும் பாத்தம் காண்கிறிலர்காணும்; அசேதநங்களைச் சொல்லும்படியிலே சொல்லுகிறார். தன்னை மெய்யாக அறியா

**கட்டிக்கொண்டு இத்யாதி.** *அஸத்தைர்பத்தாலும் இல்லையென்று நினைத்திருக்கிறு ரென்றபடி.* **நேயமஸ்தி இத்யாதி** *- ஸுந்தரகாண்டே, த்ரிசத்வாரிம்ஶே மாருதிঃ.* **என்றானிறே திருவடி** *- அப்படி விநாசம் ஸங்கிஹித மாகையாலே "நேயமஸ்தி" என்று அவன் சொன்னாற்போலே, இவரும் க்ஷணபங்குரதையை நினைத்து இவர்கள் தங்களை நித்யராக நினைத்திருப்பதே யென்கிறாரென்று கருத்து.* **குவாலாக** *- அதிகமாக. 'தன்னை உளனாகவே' என்றதுக்கு வ்யங்க்யமாக பாவம் -* **உளன்கண்டாய் இத்யாதி** *வாக்யத்வயத்தாலே. முதல்திருவந்தாதி-தொண் ணூற்றொன்பதாம்பாட்டு. "அவனொருவனுளன்" என்று சொன்னால் உகக்கும் நல்லநெஞ்சே! புருஷோத்தமன் நம்முடையரக்ஷணத்தாலே தன்ஸத்தையாம்படி அவனுளனாமவன்கிடாய்; நாமுளரானவன்றோடு இலரானவன் றோடு வாசியற ஸர்வகாலத்திலும் நம்மை ரக்ஷிக்கையிலே தீக்ஷித்தனாயிருக்குமவன்கிடாய் இதி பாசுரார்த்தঃ.* **போரப்போலிய** *- மிகவும். 'தன்செல்வத்தை வளரமதிக்கும்' என்றதுக்கு வ்யங்க்யமாகத் தாத்பர்யம் -* **ஸதி தர்மிணி இத்யாதி** *வாக்யத்வயேந.* **ஆர்க்குமேலாக** *வென்ன,* **ஈஶ்வரன் இத்யாதி.** *'மதிக்குமிம் மானிடத்தை' என்று தத்கர்த்ருகத்வேந சொன்னதுக்கு பாவம் -* **தானே இத்யாதி** *வாக்யத்வயேந.* **இத்தை** *- செல்வத்தை.* **இவன்தனை அவஸ்துக்களில்லை** *- இவனுக்கு ஸத்ருஶமான அவஸ்துக்க ளில்லை.* **தன்னை உள னாகவே யெண்ணி** *- அஸத்ஸமனாயிருக்கிற தன்னை ஸத்தாவானாகவே நினைத்து.* **தன்னை ஒன்றாக** *- தன்னை ஒருவஸ்துவாகவும்.* **தன்செல்வத்தை** *- தன்னுடைய ஸம்பத்தை,* **வளர** *- வளரவும், அத்யந்தவிலக்ஷணமாக வும்;* **மதிக்கும்** *- அபிமாநித்திருக்கிற. தன்னைத்தானே குவாலாக நினைத்திருக்கு மென்றவிடத்திலே ஓரை திஹ்யம் -* **கல்ப்ரஹ்ம தேசத்திலே இத்யாதி.** **உபஜீவநம்** *- ப்ரயோஜநம்.* **இம்மானிடத்தை** *- இந்த க்ஷுத்ர மநுஷ்யஜாதியை இதி ஶப்தார்த்தঃ. 'இ' என்றதுக்கு பாவம் -* **கீழே உரித்து இத்யாதி.** **கீழே** *-* **'உளனாகவே'** *என்றவிடத்திலே.* **உரித்துவைத்தார்** *- வெளிப்படுத்திவைத்தார். 'மானிடம்' என்ற அசேதநஸமாதிக்கு பாவம் -* **மநுஷ்யரென்று இத்யாதி.** *'ஈஶ்வரனுக்கு சரீரம்' என்கிற ஜ்ஞாநமில்லாமையாலே அசேதநவாசி சப்தத்தாலே சொல்லுகிறாரென்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார்,* **தன்னைமெய்யாக இத்யாதி.**

தவன் அபிப்ராயமிறே. [கவிபாடிஎன்] - இவர்கள் மறைத்திட்டுவைக்கிற குற்றங்களை ப்ரபந்தீகரித்து வெளியிட்டால் உங்களுக்கு என்ன ப்ரயோஜநமுண்டு? குளன் - குளம். ஆர்தல் - மிகுதல். [குளனார்கழனிசூழ்] - விளைநிலங்களிற்காட்டில் ஏரிக்கட்டே விஞ்சியிருக்குமாயிற்று; இல்லையாகில் சாவிபோமிறே. ரக்ஷ்யத்திலும் ரக்ஷகமே விஞ்சின ஊராயிற்று. [கண்ணன்குறுங்குடி] - ஸர்வேஶ்வரன் 'என்னது' என்று அபிமாநித்து வர்த்திக்கும் நகரமாயிற்று. 'கண் நல் குறுங்குடி' என்று வ்யாக்யாநம்பண்ணினார்கள் தமிழர்; அப்போது, இடமுடைத்தாய் நன்றான திருக்குறுங்குடியிலே யென்று பொருள். [மெய்ம்மையே உளானை] - கவிகளில் கேட்டுப்போமித்தனையாய்த் தன்பக்கல் ஒரு நன்மையின்றிக்கேயிருக்கை யன்றிக்கே, சொன்னவையெல்லாம் மெய்யே பத்தும்பத்தாகக் காணலாம்படியிருக்கும் ஸ்வாமி. இவ்விஷயத்தில் அர்த்தவாதமில்லை, புறம்புள்ளவற்றில் அர்த்தவாதமல்லதில்லை. இவ்விஷயத்திலுள்ளதெல்லாம் சொல்லவொண்ணாது, புறம்புள்ளவற்றிற் சொல்லலாவதில்லை. [எந்தையை] - நான் கவிபாடுகைக்குத் தன்குணங்களை ப்ரகாசிப்பித்துவைத்த உபகாரகனை. கவிபாடுகைக்கு ப்ராப்தவிஷய மென்னவுமாம். திருக்குறுங்குடியிலே சொன்ன குணங்களெல்லாம் பத்தும்பத்தாக வுடையனாய், நமக்கு நாதனுமாய். [எந்தை இத்யாதி] - ப்ராப்தி தம்மளவிலே பர்யவஸியாமையாலே, என்குலநாத னென்கிறார். ஸமஸ்தகல்யாண குணாத்மகனுமாய் ப்ராப்தனுமான இவனையொழிய, ஒருகுணலேசமுமின்றிக்கே அதிக்ஷுத்ரருமாய் அப்ராப்தருமாயிருக்கிற மநுஷ்யரைக் கவிபாடி என்ன ப்ரயோஜநமுண்டு? (௨)

## மூன்றாம் பாட்டு.

ஒழிவொன்றில்லாத பல்லூழிதோறூழிநிலாவப் போம்
வழியைத்தரும் நங்கள்வானவரீசனைநிற்கப்போய்க்
கழியமிகநல்லவான்கவிகொண்டு புலவீர்காள்!
இழியக்கருதி ஓர்மானிடம்பாடலென்னாவதே?

*ஆ.—(ஒழிவொன்றில்லாத.) இப்படி ஸமஸ்தகல்யாண குணாத்மகனான எம்பெருமானை உங்களுடைய கழிய மிக நல்ல வான்கவிகொண்டு பாடப்பெறலாவது; பாடினால் பின்னையும் பெறும் பேறு, அநாக்ராதது:கேங்கர்யமாய் நிரதிஶய ஸுகரூபமாய் நித்யஸித்தமான பகவத்*

---

மெய்யாக - பகவச்சரீரமாக, ஸத்யமாக வென்றும். 'என்' என்கிறதென்? ப்ரயோஜநமில்லையோ? என்ன, இவர்கள் இத்யாதி. 'குளம்மிக்க கழனி' என்றதால் பலிதம் - விளைநிலங்கள் இத்யாதி. இத்தால், இங்கிருக்கிற ஸர்வேஶ்வரனுக்கு பலித்த குணத்தை அருளிச்செய்கிறார் - ரக்ஷ்யத்திலும் இத்யாதி. தமிழர் நிர்வாஹத்துக்கு, கண் - இடமுடைத்தாய், நல் - விலக்ஷணமான குறுங்குடி யென்று சப்தார்த்தம். 'மெய்ம்மை' என்றதுக்கு வாஸனை - கவிகளில் இத்யாதி. அவதாரணத்துக்கு அர்த்தம் - இவ்விஷயத்தில் இத்யாதி. அர்த்தவாதம் - ஸ்துதி. இத்தால், ஈஶ்வரனுடைய குணாதிகள் அபரிச்சிந்நங்களென்னுமிடமும், புறம்புள்ளார்க்குக் குணாதிகளொன்றுமில்லையென்னுமிடமும் பலித்ததென்கிறார் - இவ்விஷயத்திலுள்ளதெல்லாம் இத்யாதி. 'எந்தையை' என்றதுக்கு உபகாரகனென்றும் ஸ்வாமியென்றும் இரண்டர்த்தம் - நான்கவிபாடுகைக்கு இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'மெய்ம்மையே' இத்யாதி பதத்ரயத்தாலும் பலிதமான ப்ரமேயத்தை அருளிச்செய்துகொண்டு அதுக்கு ப்ரதிகோடியையும் அருளிச்செய்கிறார் - ஸமஸ்த இத்யாதி. குறுங்குடிமெய்ம்மையே உளானை எந்தையை - திருக்குறுங்குடியிலே சொன்னகுணங்களையெல்லாம் மெய்யாகக் காணலாம்படி யுடையனாய் நிற்கிற உபகாரகனை. எந்தைபெம்மானை - என்பிதாவுக்கு ஸ்வாமியானவனை: என்குலநாதனை யென்றபடி. உத்தரார்த்தபூர்வகமாக, தன்னை - உளனாகவே - ஒன்றாக - எண்ணி - தன்செல்வத்தை வளாமதிக்கும் இம்மானிடத்தைக் கவிபாடி யென்? இத்யந்வய:. (௨)

கைங்கர்யலக்ஷணை மோக்ஷமாவது ; அவன் தூதராய் நிர்ப்பாக்யரான மநுஷ்யரையாவது கவிகளைக் கொண்டு பாடுவது ; பாடினால் பின்னைப் போய் அதோகதியிலே விழுவது ; ஆனபின்பு, அவனையொழிய இம்மநுஷ்யரை எதுக்காகப் பாடுகிறீர்கள்? என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், அப்பக்க விலக்ஷணனாய் மஹோபகாரகனான எம்பெருமானையொழிய க்ஷுத்ரமநுஷ்யரைக் கவிபாடி என்னப்ரயோஜநம் உண்டு? என்கிறார்.

[ஒழிவு என்று தொடக்கி] - காலமுள்ளதனையும் இடைவிடாதே ப்ரக்ருதிஸம்பந்தமற்று ஈச்வரபாரதந்த்ரனாய் வர்த்திக்கைக்கு ஈடான உபாயத்தை அபர்வாமயார்களும் தானும் கூட விரும்பித் தருமவனைத் தவிர வேறே கவிபாடுகைக்கு விஷயம் தேடிப்போய். ‘வழி’ என்று அர்ச்சிராதிமார்க்க மென்றும் ப்ராப்யமான கைங்கர்ய மென்றும் சொல்லுவர். [கழிய என்று தொடங்கி] - அறமிக நல்லவாய் வலியவான கவிகளைக்கொண்டு விசேஷஜ்ஞரான நீங்கள் உங்களுக்கு ஸ்வரூபஹாநி வரும்படி பார்த்து.

ப.—அநந்தரம், நித்யஸூரிஸேவ்யனான ப்ராப்யனைக்காட்டியொழிய, உங்களுடைய விலக்ஷணமான கவிகளைக்கொண்டு க்ஷுத்ரஸ்தோத்ரம்பண்ணினால் ஒருநன்மையில்லை யென்கிறார்.

ஒன்று ஒழிவு இல்லாத - ஒரு விச்சேதம் இல்லாதபடி, பல் ஊழிதோறு ஊழி - யாவதாத்மபாவியான காலமெல்லாம், நிலாவ - நிலைநின்று அநுபவிக்கும்படி, போம் - செல்லக்கடவதாயுள்ள, வழியை - வழிப்பாடான கைங்கர்யத்தை, தரும் - தரும், நங்கள் வானவரீசனை - நமக்கு சேஷியான நித்யஸூரிஸேவ்யனை, நிற்க - ஒழிய, போய் - புறம்பேபோய், கழிய-அதிலோகமாம்படி, மிக நல்ல - மிக்க நன்மையையுடைத்தான, வான் கவி கொண்டு - சீரிய கவிகளைக்கொண்டு, புலவீர்காள் - அறிவுடையரான நீங்கள், இழிய கருதி - (அறிவில்லாதாரைப்போலே) அதபதிக்க நினைத்து, ஓர் மானிடம் - ஓர்பற்றுசில்லாத மநுஷ்யஜாதியை, பாடல் - பாடுகையாலே, என் ஆவது - என்ன லாபமுண்டாம்? ஸ்தோதாக்களான உங்களுக்கும் ஸ்துத்யரானவர்களுக்கும் ஸ்துதிக்கும் ஒருநன்மையில்லை யென்று கருத்து.

இ.—மூன்றாம்பாட்டில், விலக்ஷணனாய் உபகாரகனா யிருக்குமவனையொழிய க்ஷுத்ரமநுஷ்யரைக் கவிபாடி என்னப்ரயோஜநமுண்டு? என்கிறார்.

[ஒழிவு இத்யாதி] - காலதத்வமுள்ளதனையும் இடைவிடாதே. [நிலாவ] - வர்த்திக்கைக்கு;“நவனாராவதகுகே” என்கிறபடியே யாவதாத்மபாவி ப்ரக்ருதிஸம்பந்தமற்று ஈச்வராதீநனாய் வர்த்திக்கைக்கு. [போம் வழியைத் தரும்]-பெற்றிற்காட்டில் வழிப்போக்கே அமைந்திருக்கும் அர்ச்சிராதிமார்க்கத்தைத் தரும் என்னுதல், தன்னைக் கிட்டும் உபாயத்தைத் தரும் என்னுதல், ப்ராப்யம் என்னுதல். வழியைத்தருகையாகிறது - உபாயமாகை. ப்ராப்யமானபோது தான்போம் ரீதியாய், அதாகிறது-ஸ்வபாவமாய், ஸஹஜகைங்கர்யத்தைச் சொல்லுகிறது. [நங்கள் வானவரீசனை] - அவன் எல்லா ஏற்றங்களையும் தந்தாலும் செய்தது போராது என்னும் ஓலக்கம். [நிற்க] - இப்படிப்பட்டவன் இவன்வாயாலே ஒருசொல்கேட்கை தன்பேறாக நினைத்து நிற்க. [போய்] - அப்ராப்தராய்க் கவிக்குப்பரிசில்கொடுக்க க்ஷமரல்லாமையாலே ஒளித்துப்போமவர்களையிறே தேடிப்போவது. [கழியமிகநல்ல] - எத்தனையேனும் மிகநல்ல. [வான்கவி] - கனத்த கவி. “தகுவமதஸாஸஸூர்யோமழ்” என்று சொல் சேர்த்திருக்கை. [புலவீர்காள்] - கவிக்கும் விஷயத்துக்கும் வாசியறியும் விசேஷஜ்ஞரான நீங்கள். [இழியக்கருதி] - நின்றநிலையும் அழியும்படி பார்த்து. த்ருஷ்டத்தில் ஸ்வரூபஹாநி; அத்ருஷ்டத்தில் நரகம். அறிவுக்கு ப்ரயோஜநம் மேன்மேலென உயரத்தேடுகையன்றோ? க்ஷுத்ரமநுஷ்யரைக் கவிபாடுகிறது எதுக்காக? [என்

ஆவதே] - பகவத்சேஷபூதராயிருக்கிற உங்கள்ஸ்வரூபத்துக்குச் சேர்ந்ததோ? உங்கள் கவிக்குச் சேர்ந்ததோ? பாட்டுண்கிறவனுக்கு ஒருநன்மையுண்டாகவோ ?

ஈடு.—மூன்றாம்பாட்டு. விலக்ஷணனாய் உபகாரகனா யிருக்குமவனை யொழிய, க்ஷுத்ரமநுஷ்யரைக் கவிபாடி என்ன ப்ரயோஜந முண்டு? என்கிறார்.

[ஒழிவு இத்யாதி]-காலதத்த்வமுள்ளதனையும் இடைவிடாதே, நிலாவ-வர்த்திக்கைக்கு. "நசபுநராவர்த்ததே" (நசபுநராவர்த்ததே) என்கிறபடியே யாவதாத்மபாவி ப்ரக்ருதிஸம்பந்தமற்று, வழுவிலா அடிமைசெய்கைக்கு. காலக்ருதபரிணாமமில்லாத தேசத்தில் அநுபவத்தைச் சொல்லாநிற்கச்செய்தேயும், காலம் நடையாடும் தேசத்திலே வர்த்திக்கிறவராகையாலே அத்தையிட்டுச் சொல்லுகிறார். [போம்வழியைத்தரும்] - 'போய் அநுபவிக்குமது பரிச்சிந்நம்' என்னும்படி நிரவதிகபோக்யமான அர்ச்சிராதிமார்க்கத்தைத் தரு மென்னுதல்; அன்றிக்கே, தன்னைக்கிட்டும் உபாயத்தைத் தருமென்னுதல்; என்றுமொக்க அநுவர்த்தித்துக்கொண்டு நடக்கையே ரீதியாயிருக்குமிறே. வழியென்று - ப்ராப்யமாதல். வழியைத் தருகையாகிறது - தான் உபாயமாகை. ப்ராப்யமான போது, தான் போம் ரீதியாய், அதாகிறது - ஸ்வபாவமாய், ஸஹஜகைங்கர்யத்தைச் சொல்லுகிறது. [நங்கள்வானவரீசனைநிற்க] - "புணைக்கொடுக்கிலும் போகவொட்டார்" என்கிற பேற்றை, கவிபாடினார்க்கு அவன்கொடுத்தாலும், 'இவன்செய்ததுக்கு நாம்செய்தது போருமோ?' என்று மேன்மேலெனக் கொடுப்பிக்கும் பரிகரமுடையவனை விட்டு, அவன் 'இவன் ஒருசொல் சொல்லவல்லனோ?' என்று அவஸரப்ரதீக்ஷனாய் நிற்க வென்றுமாம். [போய்] - புறம்பே பாடுகைக்கு விஷயந் தேடிப்போய். 'இவன் கவிபாடி வாராநின்றான்' என்று கேட்டவாறே கழியப்போம், இவன்கவி

---

மூன்றாம்பாட்டு - ஒழிவொன்று இத்யாதி. 'போம்வழியைத்தரும் நங்கள்வானவரீசனைநிற்க, ஓர் மானிடம்பாடலென்னாவது' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - விலக்ஷணனாய் இத்யாதி.

'பல்லூழிதோறூழி - ஒழிவொன்றில்லாத - நிலாவ' என்று அந்வயித்து அர்த்தம் - காலதத்த்வம் இத்யாதி. ஒழிவொன்றில்லாத - ஒருவிச்சேத மில்லாதபடி. 'நிலாவ' என்று - கைங்கர்யபர்யந்தம் விவக்ஷிதமென்கிறார் - நசபுநஃ இத்யாதி. "நகாலஸ்தத்ர வை ப்ரபு:" அன்றோ? 'பல்லூழிதோறூழி' என்கிறதென்?என்ன, காலக்ருத இத்யாதி. பரமபதத்தைத்தரு மென்னாதே,'போம்வழியைத்தரும்' என்றதுக்கு பாவம்-போயநுபவிக்கும் இத்யாதி. 'போம் வழி' என்றதுக்கு மூன்றாமர்த்தம் - என்றுமொக்க இத்யாதி. அதாவது - "யேநயேநதாதா கச்சதி" "ஸாயாவாஸ்த்ர உநௌ மஹேஷு" இத்யாதிப்படியே அநுவர்த்தித்துக்கொண்டு என்றபடி. கீழ் வாக்யவிவரணம்-வழியென்று ப்ராப்யமாதல் என்று. ரீதியாயிருக்குமிறே-ஆகையாலே 'வழியென்று ப்ராப்யமாதல்' என்று கூட்டுவது. த்விதீயார்த்தவிவரணம் - வழியைத்தருகையாகிறது இத்யாதி. த்ருதீயார்த்தத்தை ஸ்புடமாக விவரிக்கிறார் - ப்ராப்யமானபோது இத்யாதி. போம் - நடக்கிற. வழி - ரீதி. ஆக, 'போம்வழி' என்றதுக்கு - போகிற அர்ச்சிராதிமார்க்க மென்னுதல், கிட்டும் உபாயமென்னுதல்; போம்வழி - நடக்கிற ரீதியாய், அதாவது - அநுவர்த்தந ஸ்வபாவமாய், ஸஹஜகைங்கர்ய மென்னுதலென்று மூன்றர்த்தம். 'நங்கள்' என்றது - வானவர்க்கு விசேஷணம். 'நிற்க' என்றதுக்கு - விட்டு என்று முந்தின அர்த்தம்; அவஸரப்ரதீக்ஷனாய்நிற்க என்று இரண்டாமர்த்தம். த்விதீயார்த்தத்துக்கு, ஐகாரம் - அவ்யயம். வானவரீச னென்றபடி. 'வழியைத்தரும்' என்ற அநந்தரம், நித்யஸூரிகளைச் சொல்லுகிறதுக்கு பாவம் - புணைக்கொடுக்கிலும் இத்யாதி. நித்யமுக்தரைப் புணையிடிலும் போகவொட்டார்க ளித்யர்த்தஃ. புணை - ப்ராதிபாவ்யம். பெரியாழ்வார்திருமொழி - நாலாம்பத்து - ஐந்தாந்திருமொழி - இரண்டாம்பாட்டு - "சீயினாற்செறிந்தேறிய" இத்யாதி. 'கழிய' என்ற பதத்தை - கவிக்கு விசேஷணமாக்கி, அதிலே, 'போய்' என்றதுக்கு அர்த்தம் - புறம்பேபாடுகைக்கு இத்யாதி. கவியானவன் விஷயந்தேடிப்போயென்றபடி; கழிய - கவிபாட்டுண்கிறவனைவிட்டுக் கழிகிற. அன்றிக்கே, 'கழிய - போய்' என்று அந்வயித்து, கவியானவனுக்கு விசேஷணமாக்கி அருளிச்செய்கிறார் - இவன்கவிபாடி இத்யாதி. அப்ராப்தவிஷயமாகை

கேட்டு ஏதேனும் தனக்குக்கொடுக்கவேண்டுகிறதாகக் கொண்டு; இவனும் அவன்புக்கவிடம் புக்கு 'இத்தைக் கேட்பித்து ஒன்றுபெற்றோமாய் விடவேணும்' என்று தொடர்ந்துபோமே; ஆக, அவன் போக இவன்போகப் போகாநிற்குமித்தனை. "ஆஜகாம"(ஆஜகாம) என்று பகவத்விஷயத்திலே ஓரடி வாராநின்றவாறே, பரக்ருஹத்தினின்றும் ஸ்வக்ருஹத்திலே புகுந்தாற்போலேயிருக்கும்; வேறே சிலரைப் பற்றி அருகேயிருக்கிலும் கழியப்போயிற்றதாயிருக்குமிறே. [கழிய இத்யாதி] - கவிபாட்டுண்கிறவனுக்கு இல்லாத நன்மைகளை யிட்டுச்சொல்லுகையாலே அவனுக்கு அடங்காததாயிருக்குமிறே; 'இவன் ஆரைச் சொல்லுகிறது? நம்மையன்றோ?' என்று ப்ரமித்திருக்குமிறே; ஆகையாலே, இவனைவிட்டுக் கழிய. இவனுக்கு இல்லாதவற்றை இட்டுப்பாடினால் அவற்றையுடையவனை யிறே அக்கவி காட்டும். [மிகநல்ல] - எத்தனையேனும் நன்றான. வான்கவி - கனத்தகவி. "தத்துபகதஸமாஸஸந்தியோகம்" (தத்துபகதஸமாஸஸந்தியோகம்)என்கிறபடியே சொற்செறிவுடைத்தாயிருக்கை. மிகவும் நல்லவாய் அரணியவான கவிகளைக்கொண்டு. [புலவீர்காள்] - இக்கவிக்கும் பாட்டுண்கிற விஷயத்துக்கும் வாசியறியும் நீங்கள். விசேஷஜ்ஞரான நீங்கள் இப்படி செய்யக் கடவிகோளோ? [இழியக்கருதி] - அறிவுடையரானால் நின்றநிலைக்குமேலே ஓரேற்றம் தேடிக்கொள்ளுமதொழிய, கீழேபோய் அத:பதிக்கத் தேடுவாருண்டோ? [ஓர்மானிடம் பாடல்] - ஒருக்ஷுத்ரனைப் பாடுகை. [என் ஆவது] - உங்கள் விசேஷஜ்ஞதைக்குச் சேருமதாயோ? அவர்களுக்கு ஒரு நன்மையுண்டாயோ? உங்களுக்கு ஒருப்ரயோஜநமுண்டாயோ? கவிக்கு அநுரூபமாயோ? எதுக்காகப் பாடுகிறீர்கள்? (௩)

*யாலே கழியப்போகுமயிறே. யத்வா, போய் - கவியானவன் உதாரனைத் தேடிப்போய், கழிய - உதாரனான வனோடே என்று அர்த்தமாக்கி அருளிச்செய்கிறார் - இவன்கவிபாடி இத்யாதி என்னுதல். அப்படி அப்ராப்த விஷயத்தைப் பாடினால் கைகழியப்போனதாயிருக்குமோ? என்ன, ஆஜகாம இத்யாதி. கழியப்போய் - தூரப் போகாநிற்கிற; 'புலவீர்காள்' என்று அந்வயிப்பது. ஜகாம என்னுதே, 'ஆஜகாம' என்கையாலே, ஸ்வக்ருஹத் திலே புகுந்தாற்போலே என்றது. 'கழிய' என்ற பதம் - கவிக்கு விசேஷணமான முக்தினபக்ஷத்தை அருளிச் செய்கிறார் - கவிபாட்டுண்கிறவனுக்கு இத்யாதி. அவனுக்கு அடங்காதென்று நாம் எதுகொண்டு நிஶ்சயிப் பது? என்ன, இக்கவி அவனுக்கு அடங்காததாயிருக்குமென்று நாம் நிஶ்சயிக்கவேண்டுவதில்லை, கவிபாட்டுண் கிறவன் தனக்கே 'இது நமக்கு அடங்காது' என்று நெஞ்சிலே தோன்றியிருக்குமென்கிறார் - இவன் ஆரை இத்யாதி. நம்மையன்றே - நம்மையன்று என்றபடி. அவனுடைய ப்ரமத்துக்கு ஹேதுவை அருளிச்செய் கிறார் - இவனுக்கு இல்லாத இத்யாதி. அரணியவான - சொற்செறிவையுடைத்தான. புலவர் - விசேஷஜ்ஞர். "கவிர்மநீஷீ பரிபூ:" என்னக்கடவதிறே. 'புலவீர்காள் - இழியக்கருதி' என்றதுக்கு வாஸநை அருளிச் செய்கிறார் - அறிவுடையரானால் இத்யாதி. 'என்னாவது' என்று - அநேககோடிகள் தோன்றுகையாலே, 'புல வீர்காள்' இத்யாதி பததாத்பர்யவிஷயமானவற்றை அருளிச்செய்கிறார் - உங்கள் இத்யாதி. 'புலவீர்காள்' என் றத்தைப்பற்ற, உங்கள் விசேஷஜ்ஞதைக்குச்சேருமதாயோ என்றது. 'ஓர்மானிடம்' என்கையாலே அவர் களுக்கு ஒரு நன்மையுண்டாயோ என்றது. 'இழியக்கருதி' என்கையாலே உங்களுக்கொரு ப்ரயோஜந முண்டாயோ என்றது. 'வான்கவி' என்கையாலே கவிக்கு அநுரூபமாயோ என்றது. "இத்யுக்த்வா பருஷம் வாக்யம் ராவணம் ராவணாநுஜ: । ஆஜகாம முஹூர்த்தேந யத்ர ராம: ஸலக்ஷ்மண:" இதி யுத்தகாண்டே ஸப்ததஶே. "தத்துபகதஸமாஸஸந்தியோகம் ஸமமதுரோபநதார்த்த வாக்யபத்தம் । ரகுவரசரிதம் முநிப்ரணீதம் தஶஶிரஸஶ்ச வதம் நிஶாமயத்வம்" இதி பால காண்டே. புலவீர்காள் - ஒழிவொன்றில்லாத இத்யாரப்ய அந்வய:. (௩)*

## நான்காம் பாட்டு.

என்னாவது? எத்தனைநாளைக்குப்போதும்? புலவீர்காள்!
மன்னுமனிசரைப்பாடிப் படைக்கும்பெரும்பொருள்
மின்னார்மணிமுடி விண்ணவர்தாதையைப்பாடினால்
தன்னாகவேகொண்டு சன்மஞ்செய்யாமையுங்கொள்ளுமே.

ஆ.—(என்னாவது.) மநுஷ்யரைப்பாடியும் சிலப்ரயோஜநங்கள் ஸித்திக்கக் காணாநின்றோமிறே என்னில், - அஸ்திரரான மநுஷ்யரைப் பாடி என்னப்ரயோஜநம்பெறுவது? பெற்றால்தான் எத்தனைநாளைக்குப் போதும்? புலவீர்காள்! ஆனபின்பு, மின்னார்மணிமுடி விண்ணவர்தாதையைப்பாடுங்கள்; பாடினால் வேறொரு ப்ரயோஜநமும் வேணுமோ? ஸ்வஸேஷதைகரதிகளாக்கி ஸ்வவிஷய கைங்கர்யவிரோதியான ஸம்ஸாரத்தையும் போக்கும் என்கிறார்.

ஒ.—நாலாம் பாட்டில், தன்னைக் கவிபாடினார்க்குத் தன்னோடொத்த வரிசையைக் கொடுக்குமவனைத் தவிர மந்தாயுஸ்ஸுக்களாயிருக்கிற மநுஷ்யரைக் கவிபாடினால் பெறுவது அத்யல்பம் என்கிறார்.

[என் ஆவது என்று தொடங்கி] - கவிபாடினார் கவிகொண்டு வந்து கேட்பிக்குந்தனை நாள்இருக்கைக்கு ஆயுஸ்இல்லாத மநுஷ்யரைக் கவிபாடினால் அவர்கள் இருந்தார்களாகிலும் பெறுமது ஒன்று பெற்றாலும் அத்யல்பம். 'பெரும்பொருள்' என்று உபாலம்பம். [மின்னார் மணிமுடி என்று மேலுக்கு] - ஒளிமிக்கிருந்துள்ள மணிகளோடுகூடின முடியையுடைய அயர்வறுமமரர்கள் அதிபதியைக் கவிபாடினால் தன்னோடொத்த வரிசையைக் கொடுத்துப் பின்னை ஸம்ஸாரத்தையும் அறுக்கும். [தன்னாகவே கொண்டு] - தனக்கு ஆக்கிக்கொள்ளும் என்றுமாம். 'மின்னார்மணிமுடிவிண்ணவர்தாதை' என்றதுக்குக் கருத்து - கவிபாடினவர்கள் தலையிலே முடியை வைத்து அயர்வறுமமரர்களும் தானும் கொண்டாடும் என்று.

ப.—அநந்தரம், ஸர்வாதிகனானவனையொழிய அஸ்திரரான மநுஷ்யர்களைக் கவிபாடி என்ன ப்ரயோஜநமுண்டு? என்கிறார்.

புலவீர்காள் - (சப்தார்த்தங்களில் வாசியறியும்) புலவீர்காள்! மன்னு - (நீங்கள் பாடிச் செல்லுந்தனையும்) நிலைநில்லாத, மனிசரை - மநுஷ்யர்களை, பாடி - கவிபாடி, படைக்கும்-பெறப் பெறுகப் படைக்கும், பெரும் பொருள் - (உங்கள்பாரிப்பாலே) பெரிய அர்த்தமானது, என் ஆவது - எது உண்டாம்? (உண்டானாலும்), எத்தனை நாளைக்கு போதும் - எத்தனைநாளைக்கு விநியோகார்ஹமாம்? மின் ஆர் - பேரொளியை யுடைத்தான, மணி முடி - ரத்நாபிஷேகத்தையுடையனாய், விண்ணவர் தாதையை - பரமபதவாஸிகளுக்கு ஸத்தாதிஹேதுபூதனான ஸர்வாதிகனை, பாடினால்-பாடினால், தன்னாகவே கொண்டு - தனக்கே அநந்யார்ஹமாக நினைத்து, சன்மம் செய்யாமையும் - இதர ஸ்தோத்ரஹேதுவான ஜந்மம் கழியும்படியும், கொள்ளும் - அங்கீகரிக்கும். தன்னாகவே கொண்டென்று - ஸாம்யாபத்தியைப் பண்ணிக்கொடுக்கு மென்றுமாம்.

இ.—நாலாம்பாட்டில், கவிபாடினார்க்குத் தன்னோடொத்த வரிசையைக் கொடுக்குமவனைக் கவி பாடுகிற தொழிய மந்தாயுஸ்ஸுக்களான க்ஷுத்ரரைக் கவிபாடப் போவது என்? என்கிறார்.

[என் ஆவது] - ஒன்றும் ஆவதில்லை; ஒன்றுமில்லை யென்கிறது என்? கவிபாடுவாரும் கொடுப்பாருமாயன்றோ செல்லுகிறது என்ன,— [எத்தனைநாளைக்குப் போதும்] - நிரூபித்தால் கவிபாட்டு இட்டிறைபாயிறே இருப்பது. ஸஹகாரிகளையுங் கூட்டிக் கவிபாடினால் பெறுமது பாடின நாளைக்குப் போராததாக வாயிற்று இருப்பது. [புலவீர்காள்] - உங்கள்வாசியறிவுக்குப் போருமோ இது? [மன்னு மணிசுடர்] - நிலையில்லாத மநுஷ்யரை. கவிபாடக் கேட்பிக்குந்தனை நாள் அவர்கள் இருக்கிலிறே அல்பந்தானும் உள்ளது. [பாடிப் படைக்கும் பெரும்பொருள்] - 'இந்த ஸ்ரீயப்பதி குறைவறக் கொடானோ?' என்று கேஷபோக்தி. [மின்னூர் இத்யாதி] - ஒளிமிக்க மணிகளையுடைய முடி. விண்ணவர்க்கு விசேஷணமானபோது "தமி(ழ்)...லைவில்லை டை..." என்று புகழ்ந்து முடிபெற்றவர்கள் என்கிறது. 'முடி' அவன்தனக்கு விசேஷணமானபோது கவிபாடினார்க்குக் கொடுக்கச்சூடின முடி யென்கை. [தன்னாகவே கொண்டு] - தனக்காகக் கொண்டு என்னுதல், ஸாம்யாபத்தியைக்கொடுக்கும் என்னுதல். சிசுரைக் கவிபாடுகைக்கு அடியான ஸம்ஸாரஸம்பந்தத்தை அறுக்கும். தலையிலே முடியை வைத்து விலங்கை வெட்டி விடுமாபோலே நித்யஸூரிகள் பேற்றைக் கொடுத்தாயிற்று ஸம்ஸாரஸம்பந்தத்தை அறுப்பது.

ஈடு.—நாலாம் பாட்டு. கவிபாடினார்க்குத் தன்னோடொத்த வரிசையைக் கொடுக்குமவனைக் கவிபாடுமதொழிய, மந்தாயுஸ்ஸுக்களான க்ஷுத்ரரைக் கவிபாடிப் பெறுவது என்? என்கிறார்.

[என் ஆவது] - ஒன்றும் ஆவதில்லை. ஒருப்ரயோஜநத்துக்காகவன்றோ பிறரைக் கவிபாடுகிறது நீங்கள் ? அதில் நீங்கள் நினைக்கிறது ஸித்தியாது. ஆனால், ஸித்திப்பதேன்? என்னில்,—கீழ்ச் சொன்ன தண்மையே ஸித்திப்பது. [என் ஆவது] - உங்கள்நினைவால் சில அர்த்தஸித்தி; அர்த்த ஸ்திதியில் அதப்பதிக்கையே என் நினைவால். ஒன்றுமில்லையாவதேன் ? கவிபாடுவோரும் பாடினவர்களுக்குக் கொடுப்பார்களு மாயன்றோ போருகிறது என்ன, [எத்தனைநாளைக்குப்போதும்] - 'இல்லை' என்றவோபாதியாயன்றோ அதுதான் இருப்பது.நிருபித்தால் கவிபாட்டு* இட்டிறையாயிறே யிருப்பது. கவி கேட்பிக்கைக்கு ஸஹகாரிகளையுங் கூட்டிக் கேட்பித்துப் பெறுமதும், கவிபாடின நாளைக்குப் பணையம்வைத்து வாங்கி ஜீவித்தது கொடுத்து மீட்கவும் போராது. [புலவீர்காள்] - உங்கள் விசேஷஜ்ஞதைக்குப் போருமோ இது? 'பாடின கவியின் நேர்த்தியிது, பேறு இது; இதுக்கு இதுபோரும், போராது' என்று நீங்களே அறியவேண்டாவோ? புலவீர்காள் - சப்தார்த்தங்களின் வாசியறியுமவர்களே! [மன்னுமணிசுடர்] - சிறிது உண்டாய் அல்பமாகிலும் நீங்கள் பெறுவது, நீங்கள் செல்லு

நாலாம்பாட்டு - என்னாவது இத்யாதி. தன்னாகவேகொண்டு, மன்னுமணிசுடர்ப்பாடிப் படைக்கும் பெரும்பொருள் - என்னாவது என்கிற பதங்களைச் சேர்த்து அவதாரிகை - கவிபாடினார்க்கு இத்யாதி. வரிசை - பஹுமாநம்.

'என்னாவது' என்று - ஸங்க்ஷேபமாக அருளிச் செய்கிறார் ஒன்றும் ஆவதில்லை என்று. 'புலவீர்காள்' என்று ஸம்போதித்து, 'ஒன்றுமாவதில்லை' என்கிறவருடைய ஹார்த்த பாவம் - ஒருப்ரயோஜனத்துக்காக இத்யாதி. 'ஸித்தியாது' என்றதால் பலிதத்தை பரங்காபரிஹாரமுகேந அருளிச் செய்கிறார் - ஆனால் இத்யாதி. கீழ்ச்சொன்ன தண்மையென்றது - 'இழியக்கருதி' என்றதைப் பற்ற. 'என்னாவது' என்றதால் பலிதம் - உங்கள் நினைவால் இத்யாதி. இல்லைஎன்றவோபாதியாய் - அத்யல்பமாய். லோகவிடங்களிலே பஹுப்ரதாநமும் காண்கிறதே என்ன, நிருபித்தால் இத்யாதி. கவிபாட்டுஇட்டிறையாய் - கவிபாடினதுக்கு எதிர்ப்பையிடவேண்டும்படியாய். இட்டிறை - எதிர்ப்பையிடுகை. 'தத்விவரணம் - கவிகேட்பிக்கைக்கு இத்யாதி. பணையம் - கொதுவை. ஜீவித்தது - பஜித்தது. தத்துபபாதகம் - பாடினகவி இத்யாதி. நேர்த்தி - வைலக்ஷண்யம். கவிபாட்டுண்கிறவருடைய அஸ்தைர்யத்தைச் சொல்லுகிறவருடைய ஹார்த்த ஹாவம் - சிறிதுஉண்டாய் இத்யாதி. அவரோ மாண்டார் என்றதுக்கு - ஸ்பஷ்டோர்த்தஃ. திருமொழி, ஆறும்பத்து, இரண்

* இட்டிறை - பாடியிட்டதற்காகப் பின்னும் இறுக்கவேண்டுவது; (இறுத்தல்—கொடுத்தல்.) என்னலாமென்றுதோன்றுகின்றது.

மாவம் அவர்கள்தான் இருக்கிலிறே; "அவரே மாண்டார்" என்று எதிரே வருவரே. [பாடிப் படைக்கும் பெரும்பொருள்] - இந்த ஸ்ரீயஃபதி குறைவறக் கொடானோ? என்று க்ஷேபிக்கிறார். [மின்னார் இத்யாதி] - கவிபாடி முடிபெற்றவர்களன்றோ சென்று காணும் திரள். ஒளிமிக்க மணிகளையுடைய முடியுடை வானவரிறே. "விபந்யவஃ" (விபந்யவஃ) என்று கவிபாடி முடி சூடி யிருக்கிறவர்களிறே. கவிபாடிச் சென்றவர்களுக்கு ஓலக்கங்கொடுத்துக் கொண்டாடிக் கேட்பிப்பாரும் அவர்களன்றோ; கேட்டு ஆரார் வானவர்களிறே. [விண்ணவர்தாதையைப் பாடினால்] - நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவனைக் கவிபாடினால். முடி - அவன் தனக்கு விசேஷணமானபோது, கவிபாடினார்க்குக் கொடுக்கச் சூடின முடியென்கை. [பாடினால்] - இது தானே ப்ரயோஜநம் போருமிறே. அதுக்குமேலே [தன்னாகவேகொண்டு] - தனக்கேயாக வென்னுதல்; "மமஸாதர்ம்யமாகதாஃ" (மமஸாதர்ம்யமாகதாஃ), "பரமம்ஸாம்யமுபைதி" (பரமம்ஸாம்யமுபைதி), "தம்மையேயொக்க அருள்செய்வர்" என்கிறபடியே தன்னோடொக்கப் பண்ணியென்னவுமாம். [சன்மஞ் செய்யாமையுங் கொள்ளுமே] - பின்னை ஒருவன் கீழேயிருந்து கவிபாடுகைக்கு அடியான ஜந்மத்தைப் போக்கும். பிறரைக் கவிபாடுகைக்கு அடி ஜந்மமிறே. நித்யஸூரிகள் தரத்தைக் கொடுத்து, பின்னைகாணும் ஸம்ஸார ஸம்பந்தத்தை யறுப்பது; ராஜபுத்ரன் தலையில் அபிஷேகத்தை வைத்து, பின்னை விலங்கு வெட்டிவிடுமாபோலே. ஸ்ரீவிபீஷணாழ்வானை அபிஷேகம்பண்ணி, பின்பு ராவணனை வதித்தாற்போலே. (௪)

## ஐந்தாம் பாட்டு.

கொள்ளும்பயனில்லை குப்பைகிளர்த்தன்னசெல்வத்தை
வள்ளல்புகழ்ந்து நும்வாய்மையிழக்கும்புலவீர்காள்!
கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாந்தரும்கோதில் என்
வள்ளல்மணிவண்ணன் தன்னைக் கவிசொல்லவம்மினோ.

---

டார்திருமொழி - ஐந்தாம்பாட்டு, "பாண்டேன்" இத்யாதி. 'பெரும்பொருள் - என்னுவது' என்கையாலே அவர்களை க்ஷேபிக்கிறமை தோற்றுகிறதென்கிறார் - இந்த ஸ்ரீயஃபதி இத்யாதி. 'மின்னார்மணிமுடி' என்றத்தை விண்ணவர்க்கு விசேஷணமாக்கி அருளிச்செய்கிறார் - கவிபாடி இத்யாதி. சென்றுகாணும் - போய்க் காணும். சப்தார்த்தம் - ஒளிமிக்க இத்யாதி. அவர்களுக்கு முடியுண்டோ? என்ன, முடியுடை இத்யாதி. 'மின்னார்மணிமுடி' என்று விசேஷிக்கிறதென்? என்ன, விபந்யவஃ இத்யாதி. 'விண்ணவர்தாதை' என்று விசேஷித்ததுக்கு ஸாவம் - கவிபாடி இத்யாதி. அவர்கள் கொண்டாடுவர்களோ? என்ன, கேட்டாரார் இத்யாதி. சப்தார்த்தம் - நித்யஸூரிகள் இத்யாதி. யோஜநாந்தரம் - முடி அவன்தனக்கு இத்யாதி. யதிசப்தார்த்தம் - இதுதானே இத்யாதி. 'பாடினால்' என்று - அலப்யதை தோன்றுகிறதிறே. 'சன்மம் செய்யாமையும்' என்ற சப்தார்த்தம் - அதுக்குமேலே என்றது. தனக்கேயாக-தன்னாகவேயாக; தனக்கே சேஷமாக. த்விதீயார்த்தம் - தன்னாகவேகொண்டு: தன்னோடொக்கப்பண்ணி; அதாவது - தன்னோடு ஸாம்யாபத்தியைப் பண்ணியென்றபடி. "இதம்ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மமஸாதர்ம்யமாகதாஃ । ஸர்கேऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச" இதி கீதாஸு சதுர்த்தஶே. "நிரஞ்ஜநஃ பரமம் ஸாம்யமுபைதி" இதி முண்டோபநிஷதி. தம்மையேயொக்க அருள் செய்வர் தம்மைப்போலேயாம்படி க்ருபைபண்ணுவரித்யர்த்தஃ.—திருமொழி, பதினோராம்பத்து, மூன்றாந்திருமொழி - ஐந்தாம்பாட்டு. இக்க்ரமத்துக்கு ஸாவம்- நித்யஸூரிகள் இத்யாதி. தாம் - அதிசயம். இதுக்கு த்ருஷ்டாந்தத்வயம் - ராஜபுத்ரன் இத்யாதி. சன்மம் செய்யாமையும் கொள்ளும் - ஜந்மம்கழியும்படியாயும் அங்கீகரிக்குமிதி சப்தார்த்தஃ. புலவீர்காள், மன்னுமனிசரைப் பாடிப் படைக்கும் பெரும்பொருள் - என்னுவது? எத்தனை நாளைக்குப் போதும்? மின்னார்மணிமுடி இத்யாரப்ய, கொள்ளுமே இத்யந்வயஃ. (௪)

ஆ.—(கொள்ளும்.) ப்ரயோஜந ஸாபேக்ஷமாய் ஹேயவிஷயங்களைக் கவிபாடி உங்களுடைய அழகிய கவிகளை இழவாதே, தன்னுடைய நிரவதிக நித்ய நிர்த்தோஷ கல்யாண குணங்களாலே உங்களுடைய கவிகளை க்ருதார்த்தமாக்க வல்லனாய், உங்களுக்கு வேண்டிற்றெல்லாந் தரும் பரமோதாரனாய், தந்தாலும் ஒன்றும் செய்யாதானாய் 'இவர்களுக்கு என்செய்வோம் ?' என்றிருக்கும் ஸ்வபாவனாய், ஆச்ரிதஸுலபனாயிருந்த எம்பெருமானைக் கவிசொல்ல வல்லீர்களோ? என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஹேயகுணராய் உபகாரகருமன்றிக்கே யிருந்துள்ள ஜநங்களைவிட்டு ஸமஸ்தகல்யாணகுணாகரனாய் நமக்கு அபேக்ஷிதமெல்லாம் தரும் ஸ்வபாவனான எம்பெருமானைக் கவிபாட வாருங்கோள் என்கிறார்.

[கொள்ளும் என்று தொடங்கி] - அவர்கள்பக்கல் கொள்ளக்கடவது ஒரு ப்ரயோஜநமின்றிக்கே குப்பையைக்கிளறினாற்போலே ஆராயப்புகில் ஹேயமாயிருக்கிற ஸம்பத்தை நன்றாகப் புகழ்ந்து அவர்களுடைய தோஷத்தை வெளிப்படுத்தி உங்களுடைய வாக்மிதையையும் இழந்திருக்கிற நீங்கள் விசேஷஜ்ஞராயிருக்கிறீர்கோள்.[கொள்ளக் குறைவிலன் என்று மேலுக்கு]- நம்முடைய கவிக்கு விஷயமாக வேண்டும் பௌஷ்கல்யத்தை யுடையனாய் அபேக்ஷிதமான போக மோக்ஷாதிகளையெல்லாம் தரும் ஸ்வபாவனாய் உபகரிக்குமிடத்தில் ஜலஸ்தலவிபாகம்பாராதே புஷ்கலமாகக் கொடாநின்றால் 'இங்ஙனே கொடாநின்றோம்' என்னும் அபிமாநமுமின்றிக்கே இந்நீர்மைகளொன்றுமில்லையேயாகிலும் கைக்கூலிகொடுத்துக் கவிபாடவேண்டும் அழகையுடையனானவனைக் கவிசொல்ல வாருங்கோள்.

ப.—அநந்தரம், நிஷ்ப்ரயோஜநமான இதரஸ்தோத்ரத்தைத் தவிர்ந்து ஸர்வபலப்ரதனான மஹோதாரனைக் கவிபாட வாருங்கோள் என்கிறார்.

கொள்ளும் பயன் - கொள்ளலாவது ஒரு ப்ரயோஜநம், இல்லை - இன்றியே, குப்பை கிளர்த்து அன்ன - குப்பையைக் கிளறினாற்போலே' தோஷமே தோற்றும்படியான, செல்வத்தை - ஸம்பத்தையுடைய க்ஷுத்ரஜாதியை, வள்ளல் - மஹோதாரையாக, புகழ்ந்து - புகழ்ந்து, நும் வாய்மை - உங்கள் ஸத்யவாதித்வமாகிற வாக்மித்வத்தை, இழக்கும் - இழக்கிற, புலவீர்காள்- புலவீர்காள்! கொள்ள - (கவிபாடுகைக்கு உள்ளுறையாகக்) கொள்ளுகைக்கும் (கவிக்குப்ரயோஜநங்) கொள்ளுகைக்கும், குறைவிலன் - குறைவற்ற பூர்ணனாய், வேண்டிற்று எல்லாம் - நாம்வேண்டினவற்றையெல்லாம், தரும் - தருமிடத்தில், கோது இல் - (தாரதம்யம்பார்த்தல் ப்ரத்யுபகாரம் பார்த்தல் கொடுத்ததை நினைத்தல்செய்யும்) குற்றம் இல்லாதவனாய் (இதுக்கு உதாஹரணமென்னலாம்படி), என் வள்ளல் - எனக்குத் தன்னையுபகரித்த மஹோதாரனாய், (உபகாரமில்லையேயாகிலும் விடவொண்ணாதபடி), மணி வண்ணன் தன்னை - நீலரத்நம்போலே ச்லாக்யமான வடிவையுடையவனை, கவிசொல்ல - கவிசொல்லும்படி, வம்மின் - வாருங்கோள்.

இ.—அஞ்சாம்பாட்டில், ஹேயராய், கவிபாடினால் பெறுவதும் ஒன்றின்றியே இருக்கிறவர்களையொழிய, ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் ஸகலபலப்ரதனான ஸர்வேச்வரனைக் கவிபாட வாருங்கோள் என்கிறார்.

[கொள்ளும் பயனில்லை] - கவிபாடுவது தங்களுக்கு ஒருப்ரயோஜநத்துக்கும் எதிர்த்தலைக்கு ஒருநன்மைக்குமிறே; அத்தைப் பார்க்கலாகாதோ? பெறக்கடவது ஒருப்ரயோஜநமில்லை; அப்ராப்த விஷயமாகையாலே இதுதானே ப்ரயோஜநமாகக் கவிபாடும் விஷயமன்று. [குப்பை இத்யாதி] - அவர்களுக்கு ப்ரயோஜநமாகாதொழியுமோ வென்னில்,—அதுவும் விபரீதபலம். குப்

*பையைக் கிளறினாற்போலே யிருக்கிற ஸம்பத்தை. அவர்கள் மறைத்திட்டுவைத்த தோஷங்களை வெளியிடுகையாலே அவர்களுக்கு அவத்யாவஹமாமித்தனை. [வள்ளல் புகழ்ந்து] - நன்றாகப் புகழ்ந்து. மஹாவம்ஶப்ரஸூதன், உதாரன் என்றிறே கவிபாடுவது. அதுக்கு எதிர்த்தலையான அவர்கள் தோஷத்தையாயிற்று அது ப்ரகாஶிப்பிப்பது. இது, அவர்களுக்கு ப்ரயோஜநம். [நும் வாய்மை இழக்கும்] - உங்களுக்கு ப்ரயோஜநம் உங்களுடைய வாக்மிதையை இழக்கை. வாய்மையாகிறது, மெய்; அத்தையிழந்து 'பொய்ச்சொல்லிகள்' என்று ப்ரஸித்தராமித்தனை. [புலவீர்காள்] - உங்கள் விஶேஷஜ்ஞாநம் இருந்தபடி என்? [கொள்ளக் குறைவிலன்] - கீழ்ச்சொன்னதுக்கு எதிர்த்தலையாயிருக்கை. நீங்கள் வைத்துச் சொல்லும் நன்மைகளையெல்லாம் ஸ்வீகரிக்கைக்கு ஒரு குறைவுடையனல்லன்; ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாகையாலே. [வேண்டிற்றெல்லாம் தரும்] - "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி...", "ஸகல ஹேய ப்ரத்யநீக...". [கோதில் என் வள்ளல்] - கொடைக்குக் கோதாவது-கொடுத்தோமென்றிருக்கையும், ப்ரத்யுபகாரத்தை நினைத்துக் கொடுக்கையும், வரைந்து கொடுக்கையும். 'நீர் இது அறிந்தபடி என்?' என்ன,—[என் வள்ளல்] - அநுபூதார்த்தத்தைச் சொல்லுகிறேன். [மணிவண்ணன்] - ஒரு ப்ரயோஜநமில்லையேயாகிலும் கைக்கூலிகொடுத்துக் கவிபாடவேண்டும் அழகையுடையவன் என்கை. ரூபாபாஸம் கண்டவிடத்தே உங்களுடைமையைக் கொடுத்தும் மேல்விழாநின்றீகோள்; இப்படிப்பட்ட விஷயத்தைப் பிற்காலியாதே கவிபாட வாருங்கோள் என்கிறார்.*

ஈடு.—அஞ்சாம்பாட்டு. உபகாரகருமன்றிக்கே, கவிபாடுகிறவர்களுக்கு அவத்யமாம்படி ஹேயருமா யிருக்கிறவர்களைக் கவிபாடாதே, ஸமஸ்தகல்யாண குணாத்மகனுமாய் ஸர்வாபேக்ஷிதப்ரதனுமான ஸர்வேஶ்வரனைக் கவிபாட வாருங்கள் என்கிறார்.

[கொள்ளும் பயனில்லை] - பிறரைக் கவிபாட இழிகிறது அவர்களுத்தேஶ்யராயன்றே: ஒரு ப்ரயோஜநத்துக்காகவே; அதில்லை யேன்கிறார். 'நீங்களும் இசையவே ஸ்வயம்ப்ரயோஜநமன்றே: ப்ரயோஜநபரராயே கவிபாடுகிறது; அதில்லை' என்னவே மீளுவரேன்று பார்த்து, முந்துறமுன்னம் 'இல்லை' என்கிறார். [கொள்ளும்பயனில்லை] - நெஞ்சு கன்றக் கவிபாடுகிற இதுக்குப் பெரியலாபங்காணும், கொள்ளும்பயனில்லை யென்கை: கொள்ளக்கடவதொரு ப்ரயோஜநமில்லை யென்கை. ஆக, உங்களுக்காக ஒரு ப்ரயோஜநம் இல்லையாயிருந்தது. தங்களுக்க ஒரு ப்ரயோஜநமில்லையேயாகிலும், பரஹிதமாகவும் ப்ரவர்த்திக்கக் கடவதிறே; அதுதான் உண்டோ? என்னில்,—[குப்பை இத்யாதி] - குப்பையைக் கிளறினாற்போலே யிருக்கிற ஸம்பத்தை. அதாவது - மறைந்துகிடக்கிற தோஷத்தை வெளியிடுகையாலே அவர்களுக்கு அவத்யாவஹமாமித்தனை. குப்பைகிளறினால் உள்மறைந்துகிடக்கிற கறைச்சீரை முதலாவுள்ளவை

---

*அஞ்சாம்பாட்டு - கொள்ளும் இத்யாதி. 'கொள்ளும்பயனில்லை குப்பைகிளர்த்தன்னசெல்வத்தை, கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாந்தரும்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - உபகாரகரும் இத்யாதி.*

*'கொள்ளும்பயனில்லை' என்று - ப்ரயோஜநாபாவத்தை எதுக்காகச் சொல்லுகிறார்? என்ன, பிறரை இத்யாதி. விவரணம் - **நீங்களும்** இத்யாதி. 'இல்லை' என்கைக்குப் பலமேது? என்ன, **அதில்லை என்னவே** இத்யாதி. இல்லையென்கிறார், ஹிதகாமராகையாலே யென்றபடி. வ்யாக்யாதாவினுடைய - **நெஞ்சுகன்ற** இத்யாதி. சப்தார்த்தம் - **கொள்ளக்கடவது** இத்யாதி. 'கொள்ளும்பயனில்லை' என்றதால் பலிதம் - **ஆக இத்**யாதி. இத்தால் - கீழ்ப்பண்ணின சங்கைக்குப் பரிஹாரமேது? என்ன, **அதாவது** இத்யாதி. உத்தார்த்தத்தை விஶதீகரிக்கைக்காக த்ருஷ்டாந்தகர்ப்பிதமான அர்த்தத்தை விவிச்ய தர்சிப்பிக்கிறார் - **குப்பையைக்கிளறினால் இத்யாதி. கறைச்சீரை** - அழுக்குக்கந்தை. அத்தால்பலித்த விசேஷத்தைக் காட்டுகிறார் - **அவர்களுக்கு இத்***

யிறே வெளிப்படுவது. அவர்களுக்கு அவத்யாவஹமாமாவன்றிக்கே, தங்களுக்கும் அமாநி ஸ்பர்ச முண்டாமென்கை. [வள்ளல்புகழ்ந்து] - உதாரனாகப் பாடி. அவன்தனக்கும் ஒருநன்மையின் றிக்கே பிறர்க்கும் உறுப்பன்றிக்கே யிருக்கச்செய்தே, அவனுக்கு நன்மையுண்டாகவும் அதுதான் ஸ்வப்ரயோஜநத்துக்கடியா யிருக்கிறதாகவும் நன்றாகப்புகழ்ந்து. [நும்வாய்மையிழக்கும்] - நீங்கள் கொள்ளும் பயன் இதுவே. இரண்டுமில்லை யென்ற சொன்னீரே; ஆகையாலே, நீங்கள் 'வாக்மி கள்' என்கிற ப்ரஸித்தியை இழக்குமித்தனை. அன்றிக்கே, வாய்மையென்ற-மெய்யாய், நாடறிய இல்லாத அர்த்தங்களைச் சொல்லுகையாலே பொய்ச்சொல்லிகளாமித்தனை நீங்கள். [புலவீர்காள்]- பேறிழவறியும் நீங்கள் செய்யுமதோ இது? உங்கள்ஹிதம் நான் சொல்ல வேண்டும்படியிருப்பதே: வர்ணாச்ரமங்களுக்குச் சேருமோ நீங்கள் செய்கிறவை? ஸர்வசப்தவாச்யன் அவனுனால் அந்த சப்தங்கள் தனக்குச் சேருமோ? நீர் சொல்லுகிற விஷயத்துக்கு, நாங்கள் கவிபாடுகிறவர்களிற் காட்டில் நன்மையுண்டோ? என்னில், [கொள்ளக்குறைவிலன்] - கீழ்ச்சொன்ன இரண்டையும் மாறுடிச் சொல்லுகிறார். கொள்ளும் பயனுமுண்டு, குப்பை கிளர்த்தன்ன செல்வமுமல்ல. நீங்கள் யாவை யாவை சில ஏற்றங்களை யிட்டுக் கவிபாடினீகோள், அவற்றை ஸ்வீகரிக்குமிடத்தில் ஒரு குறையுடையனல்லன்; ஸமஸ்த கல்யாண குணாத்மகன். [வேண்டிற்றெல்லாம் தரும்] - கொள் ளும் பயனும் பெரிது. நீங்கள் கவிபாடினால் ஹோமமோக்ஷங்கள் வேண்டுமவையெல்லாம் தரும். இவனை யொழிந்தார், ஒருவனுக்கு ஒன்றைக்கொடுத்தால், கொள்ளுகிறவனுக்கு மற்றொன்று அபே க்ஷிதமானால் அது கொடுக்கமாட்டார்களிறே; இங்கு அபேக்ஷிப்பார் தாழ்வாலே இழக்கில் இழக்கு

*யாதி. 'குப்பைகிளர்த்தன்ன' என்றத்தால் - இருவர்க்கும் அவத்ய மென்றபடி. இந்த உஹயாவத்யத்துக்கும் ப்ரதிகோடியாக அருளிச்செய்கிறார் -* அவன்தனக்கும் *இத்யாதி. 'கொள்ளும்பயனில்லை' என்றத்தோடே, 'வாய்மையிழக்கும்' என்றத்தைக் கூட்டி அவர்களை க்ஷேபிக்கிறார் -* நீங்கள்கொள்ளும் பயன் இதுவே *என்று,* இரண்டுமில்லையென்று சொன்னீரே *யென்றது - 'கொள்ளும்பயனில்லை, குப்பைகிளர்த்தன்ன' என்று ஸ்வ ப்ரயோஜந பரப்ரயோஜநங்க ளிரண்டுமில்லை யென்று சொன்னீரே யென்றபடி. 'வாய்மை - வாக்மிதை.* ப்ர ஸித்தியையென்றது *- அர்த்தஸித்தம். இரண்டாமர்த்தம் - ஸத்யதை. வாய்மை - வாயினுடைய தர்மமான மெய், வாய்க்கு நிரூபகதர்மமிறே ஸத்யதை. புலவீர்காள் - விசேஷஜ்ஞர்காள். விசேஷஜ்ஞராகையாவது - இவர்களைப் பாடினத்தால் தனக்குவரும் ப்ரயோஜநத்தையும், 'பாட்டுண்கிறவன் இன்னஜாதியன், தான் இன்ன ஜாதியன்' என்னுமத்தையும், 'சப்தங்களுக்கு முக்யவாச்யன் இன்னான்' என்னுமத்தையும் அறிகையிறே; இம் மூன்றுக்கும் விருத்தமிறே நீங்கள் கவிபாடுகிறது. ஆகையால், உங்கள் ஹிதத்தையறிந்து நீங்கள் ப்ரவர்த்திக்க வேண்டாவோ? என்கை - 'புலவீர்காள்' என்கிறவருடைய ஹார்த்தபாவம்: இத்தை அருளிச்செய்கிறார்-*பேறிழ வறியும் *இத்யாதி நாலுவாக்யத்தாலே.* உங்கள்ஹிதம் *இத்யாதிவாக்யம் - ஸர்வசப்தவாச்யன் இத்யாதி வாக்யாநந்தரே அநுஸந்தேயம்.* கீழ்ச்சொன்ன இரண்டையும் மாறடிச்சொல்லுகிறார் *என்றது - 'கொள்ளும்பயனில்லை, குப்பைகிளர்த்தன்ன' என்ற இரண்டுக்கும் ப்ரதிகோடியை மாறடிச் சொல்லுகிறார் - 'கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம்தரும்' என்று என்றபடி: அதாவது - அங்குக்கொள்ளும் பயனில்லை; இங்குவேண்டிற் றெல்லாம் தரும்; அங்குக் குப்பைகிளர்த்தன்ன செல்வம்: இங்குக் கொள்ளக் குறைவிலன் என்று இங்ஙனே மாறடிச்சொல்லுகிறா ரென்றபடி. கொள்ளக்குறைவிலன் - நீங்கள் சொல்லுகிற ஏற்றங்களெல்லாவற்றையும் ஸ்வீகரிக்கைக்குக் குறைவில னென்றபடி. மாறடிச்சொல்லுகையாவது - அங்கில்லை யென்றத்தை இங்கு உண் டென்றும், அங்கு உண்டானத்தை இங்கு இல்லையென்றும் சொல்லுகை. "வனகாநேகவ்யாவாய" என்றுவைத்து, "ஹூஷ்டவஸ்ஷூகூநநகிமோ" என்றாற்போலே யிருக்கிறது என்று அருளிச்செய்வர். புத்திஸௌகர்யார்த்தமாகக் கீழ்ச்சொன்ன இரண்டுக்கும் ப்ரதிகோடியை க்ரமேண அருளிச்செய்கிறார் -* கொள் ளும்பயனும் *இத்யாதி. கவிகளைக் கொள்ளுமிடத்தில் - ஸ்வீகரிக்குமிடத்தில், குறையையுடையனல்ல னித் யர்த்தஃ.* ஏற்றங்களையிட்டு *இதி - ஏற்றமாவது - ஸ்வரூபரூபகுணவிபூதிகளால் வந்த வைலக்ஷண்யம். விவர ணம் -* ஸமஸ்த *இத்யாதி. 'இவன்தரும்' என்கையாலே - மற்றொருவரும் கொடுக்கமாட்டார்க ளென்று தோற்று கிறது; அத்தைக் காட்டுகிறார் -* இவனையொழிந்தார் *இத்யாதி. பகவத்ஸமாச்ரயணம் பண்ணினார்கள்தாம் எல் லாரும் ஹோமமோக்ஷங்களைப் பெறுகிறார்களோ? என்ன,* இங்கு *இத்யாதி. அவன் அப்படி ஸகலபலப்ரதனே?*

மித்தனே; அவன் தரமாட்டாமையாலே இழக்கவேண்டா; "[Grantha text]" (பௌமம் மநோரதம் ஸ்வர்க்யம் ஸ்வர்க்கி வந்த்யஞ்ச யத்பதம்-ததாதி த்யாயிநாம்நித்ய மபவர்க்க ப்ரதோஹரி:) "[Grantha text]" (ஸகலபல ப்ரதோஹிவிஷ்ணு:). [கோதில்]- ஒருவனுக்கு ஒன்று கொடுக்குமிடத்தில் கோதற்றிருக்கும். கொடைக்குக் கோதில்லாமையாவது - தேச கால பாத்ரங்கள் பார்த்துக் கொடுத்தல், கொடுக்கிறவனுக்கு 'கொடுத்தோம்' என்கிற அபிமாநம் அநுவர்த்தித்தல், கொள்ளுகிறவனுக்கு ப்ரத்யுபகாரம் தேடி நெஞ்சாறல்படுதல் செய்யவேண்டாதபடி யிருக்கை. நீர் இது அறிந்தபடி யென்? என்ன,—[என்வள்ளல்] - நான் அநுபவித்தத்தைச் சொல்லுகிறேன். [மணிவண்ணன்] - கொள்ளும்பயனுமின்றிக்கே ஐஶ்வர்யமுமின்றிக்கே யொழிந்தாலும் விடவொண்ணாதபடி யாயிற்று வடிவழகு. ரூபாபாஸம் கண்டு மேல்விழாநின்றதிறே புறம்பு. வடிவழகு கண்டு கவிபாடினாலும் இவனையே பாடவேணும். கைக்கூலி கொடுத்து விரும்பாநின்றதிறே ரூபாபாஸங்களையும். [மணிவண்ணன்தன்னைக் கவிசொல்ல வம்மினோ] - நான் சொல்லுகிறபடியை யுடையவனைக் கவிபாட வாருங்கோள். [வம்மின்] - பிற்காலியாதே கடுகப் புகுரப் பாருங்கோள். (௫)

## ஆறாம் பாட்டு.

வம்மின்புலவீர்! நும்மெய்வருத்திக்கைசெய்துய்ம்மினோ
இம்மன்னுலகினில் செல்வரிப்போதில்லைநோக்கினோம்
நம்மின்கவிகொண்டு நந்நுமிட்டாதெய்வமேத்தினால்
செம்மின்சுடர்முடி என்திருமாலுக்குச்சேருமே.

ஆ.—(வம்மின்.) மநுஷ்யரைக் கவிபாடியேயாகிலும் தேஹயாத்ரையை நிர்வஹிக்க வேண்டாவோ? என்னில்,—அதுக்குஉபாயம் சொல்வேன், வாருங்கள். எங்ஙனேயென்னில்,—க்ருஷ்யாதிகளைப் பண்ணி ஜீவியுங்கள். க்ருஷ்யாதிகள் ஆயாஸாத்மகமாகையாலே அவை துஷ்கரமல்லவோ? அவற்றிற்காட்டில் ஸ்ரீமான்களான மநுஷ்யர்களை ஜீவநார்த்தமாகக் கவிபாடுகையே

---

என்ன, பௌமம் இத்யாதி. "[Grantha text]" "[Grantha text]" இதி ஸ்ரீமாங்கள்யஸ்தவே. 'நித்யம்' என்கையாலே - இதுவே இவனுக்கு ஸ்வரூப மென்றபடி. 'வேண்டிற்றெல்லாம்தரும், கொள்ளக்குறைவிலன்' என்கிற இரண்டையும் கடாக்ஷித்து ஹாவம் - கொள்ளும்பயனும் இத்யாதி. வடிவழகு விடவொண்ணாமையைக் கிம்புநர்ந்யாயத்தாலே ஸாதிக்கிறார்- நபாபாஸம் இத்யாதி. 'மணிவண்ணன்' என்றதுக்குக் கீழே கூட்டி ஹாவம் அருளிச்செய்தார் - கொள்ளும்பயனும் இத்யாதி வாக்யத்திலே. மேலே கூட்டி ஹாவாந்தரம் - வடிவழகு இத்யாதி. 'கொள்ளும்பயனின்றிக்கே யொழிந்தாலும் விடவொண்ணாத வடிவழகு' என்றதுக்கு நபாபாஸம் இத்யாதியாலே உதாஹரணம் அருளிச்செய்த அநந்தரம், 'ஐஶ்வர்யமின்றிக்கேயொழிந்தாலும் விடவொண்ணாத வடிவழகு' என்றத்தை உதாஹரண முகேந விஶதீகரிக்கிறார் - கைக்கூலி இத்யாதி. 'கவிசொல்லவம்மினோ' என்றத்தோடே 'மணிவண்ணன்' என்றத்தைக்கூட்டி ரஸோக்தி - நான்சொல்லுகிற இத்யாதி. படி - ப்ரகாரமும், வடிவும். வம்மின் - வாருங்கோள். 'ஓ' என்கிற ஸ்வாத்துக்கு ஹாவம் - பிற்காலியாதே இத்யாதி என்னுதல், விதிக்கு ஹாவமாதல். ஓ- அசை. க்ரமேண அந்வய:.

(௫)

நன்றன்றோ? என்னில்,—உங்கள் அபேக்ஷித ப்ரதரான ஸ்ரீமான்கள் இந்த லோகத்தில் உளரோ? என்று பார்த்தோம்; பார்த்தவிடத்தில் ஒருவருமின்றியே யிருந்தது. ஸ்ரீமான்களான மநுஷ்யர்கள் இல்லையாகில் இந்த்ராதிகளை யேத்துகிறேனோ? என்னில்;—உங்களுடைய அழகிய கவிகளைக் கொண்டு உங்களாபிஷ்டதேவதைகளை நீங்கள் ஏத்தினாலும்,பின்னையும்அதெல்லாம் அந்த இந்த்ராதிதேவதைகளுக்கு அந்தராத்மபூதனுப் ஸ்ரீய:பதியாயிருந்த எம்பெருமான்திருவடிகளிலே சேரும்; ஆனபின்பு, எம்பெருமான்தன்னையே ஏத்துங்கள் என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், 'ஜீவநார்த்தமாக மநுஷ்யாதிகளை ஸ்துதிக்கிறோம்' என்று அவர்கள் சொல்ல, 'அதிக்ஷுத்ரரான மநுஷ்யரை ஆஸ்ரயித்து ஜீவநம்பெறுமதைக்காட்டிலும் ஶரீரங்கள் நோவச் சுமைசுமந்தும் கைத்தொழில்கள் செய்தும் ஜீவிக்கை நன்று' என்ன, அவர்களும் 'அத்தால் எங்களுக்கு வேண்டுவதெல்லாம் கிடையாது; ஆதலால், எங்கள் இஷ்டதேவதைகளைக் கவிபாடி எங்களபேக்ஷிதங்கள் பெறுவோம்' என்ன, 'நீங்கள் அவர்களை ஸ்துதிக்கைக்கு ஈடான நீர்மைகள் அவர்களுக்கு இல்லாமையாலே அந்நீர்மைகளையுடைய எம்பெருமான்பக்கலிலே சேரும்; உங்களுக்குச் சௌர்யமே ஸித்திப்பது; ஆனபின்பு, எம்பெருமானையே கவிபாட வாருங்கோள்' என்கிறார்.

[வம்மின்] - வாருங்கோள். [இம் மன் என்று தொடக்கி] - நித்யமாய்வருகிற இவ்வுலகத்தில் உங்கள் கவியின்தரம் அறிந்து கொண்டாடிக் கொடுக்கும் செருக்குடையாரை இப்போது ஆராய்ந்து பார்த்தவிடத்தில் கண்டிலோம். கவிபாடுகின்ற தேவதையின் பேரும் அவ்வளவும் சென்று அவற்றுக்கு வாசகமாம் வகையாலும் அவனையே கவி பாடிற்றும்.

ப.—அநந்தரம், நீங்கள் ஆரையேனுங் கவிபாடிலும் ஸ்ரீய:பதியான ஸர்வஶேஷிக்கே அது சேருமித்தனை என்கிறார்.

புலவீர் - புலவராகையாலே விசேஷஜ்ஞரான நீங்கள், வம்மின் - (இதரஸ்தோத்ரத்தைத் தவிர்ந்து) வாருங்கோள்; (தேஹயாத்ராஶேஷமாக), நும் மெய் வருத்தி-உங்கள் ஶரீரத்தை வருத்தி, கை செய்து - கைத்தொழில் செய்து, உய்ம்மினோ - உஜ்ஜீவியுங்கோள்; மன்-ப்ரவாஹநித்யமான, இ - இந்த, உலகினில் - லோகத்தில், செல்வர் - ஸ்ரீமான்களாயிருப்பார், இப்போது-இக்காலத்தில், இல்லை - இல்லை, நோக்கினோம் - ஆராய்ந்துபார்த்தோம்; (இனி), நும் - உங்களுடைய, இன் கவி கொண்டு-ஶ்லாக்யமான கவிகளைக் கொண்டு, நும் நும்-உந்தம்முடைய ருச்யநுகுணமாக, இட்டா தெய்வம் - இஷ்டதேவதைகளை, ஏத்தினால் - ஸ்துதித்தால், (அவர்களுக்கு நீங்கள் சொல்லுகிற குணங்கள் ஸித்தியாமையாலே அவர்களுக்குச் சேராதே), செம் மின் சுடர் முடி - அப்ரதிஹதப்ரகாசமான தேஜஸ்ஸையுடைத்தாயிருக்கிற திருவபிஷேகத்தையுடையனுய், என் திருமாலுக்கே - எனக்குஸ்வாமியான ஸ்ரீய:பதிக்கே, சேரும் - சேருமித்தனை.

உங்களுக்கு பகவத்குணசௌர்யமே பலம். ஶப்தார்த்தங்களிரண்டும் ஸ்ரீய:பதிக்கே சேருவதென்று கருத்து.

இ.—ஆறும்பாட்டில், 'ஜீவநார்த்தமாக மநுஷ்யாதிகளைக் கவிபாடுகிறோம்' என்ன, 'க்ஷுத்ரரைக் கவிபாடி ஜீவிப்பதில் உடம்புநோவப் பணிசெய்து ஜீவிக்கை நன்று' என்கிறார்.

[வம்மின்] - காட்டுத்தீயிலே அகப்பட்டாரைப் பொய்கையைக் காட்டி யழைப்பாரைப் போலே 'வாருங்கோள்' என்கிறார். [புலவீர்] - நல்லதும் தீயதும் அறியும் நீங்கள். 'நீர் அழைக்கிறதென்? பிறரைக் கவிபாடியாகிலும் தேஹயாத்ரையை நடத்தவேண்டாவோ?' என்ன, 'உங்கள் தரம் குலையாதே ஜீவிக்கலாகாதோ?' [நும் மெய்வருத்தி இத்யாதி] - உங்கள் ஶரீரத்தை வருத்தி

யும் கைத்தொழில் செய்து ஜீவிக்கப் பாருங்கோள். 'சுமைசுமந்தும் புல் சிதைத்தும் ஜீவிக்கப் பாருங்கோள்' என்பர் எம்பார். 'அத்தால் ஜீவநம் பூர்ணமாகாது, பிறரைக் கவி பாடி யாகிலும் ஜீவிக்கவேணும்' என்ன,—[இம்மன்னுலகினில் இத்யாதி] - ப்ரவாஹரூபேண நித்யமாய்ச் செல்லுகிற இஜ்ஜகத்தில் செல்வர் இல்லை; உங்களுக்குப் பின்னையும் சிலரை அர்த்தியாமல் பூர்ணமாகத் தருகைக்கு ஈடான ஸம்பத்துடையா ரில்லை. [இப்போது நோக்கினோம்] - பண்டே ஸம்ஸாரிகளில் செல்வர் இல்லை. இவர் ஸம்ஸாரயாத்ரையில் கண்வைக்குமவரல்லர்; இவர்கள் ப்ரயோஜநத்துக்காக இப்போது ஆராய்ந்துபார்த்தால் இவர்கள்குறை தீர்க்கவல்லா ரின்றிக்கே இருந்தது. [நும் இன் இத்யாதி] - 'மநுஷ்யர்பக்கலன்றோ பசையில்லாதது. எங்கள் இஷ்டதேவதைகளைக் கவிபாடுகிறோம்' என்ன,—' உங்கள்கவி அவர்களுக்கு ஸ்துதியாகமாட்டாது ' என்கிறார். [நும் இன் கவிகொண்டு] - பகவத்விஷயத்துக்குச் சேரும் கவிகளைக் கொண்டு உங்களிஷ்டதேவதைகளை ஏத்தினால்—உங்கள் குணாநுரூபமாக ராஜஸராயும் தாமஸராயுமுள்ள தேவதைகளை ஏத்தினால், அப்புகழ்ச்சிக்கு அடியான குணங்க ளில்லாமையாலே அவர்களுக்குச் சேராது. 'ஆருக்குச் சேர்வது?' என்னில், — [செம்மின் இத்யாதி] - ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்தை யுடைய ஸ்ரீயஃபதிக்குச் சேரும். புண்டரீகாக்ஷன் என்றும், ஸ்ரீமான் என்றும், மஹோதாரன் என்றுமிறே கவி பாடுவது. அது உள்ளவிடத்திலே செல்லுகையாலே அவனையே கவி பாடிற்று மித்தனை. கவிபாட்டுண்கிற தேவதையின் பேரும் ததந்தர்யாமியளவும் செல்லுகையாலே, அவனையே கவிபாடிற்றுமித்தனை. உங்களுக்குச் சௌர்யமே ஸித்திப்பது. 'பகவத்விஷய மொழியக் கவிபாடவேணும்' என்னும் நிர்ப்பந்தம் உங்களுக்கு உண்டானாலும் அது கிட்டாதபின்பு இவனையே கவிபாட வாருங்கோள் என்கிறார். " யெயஜஷிவிதூநுஷெவாநு ஸ ராஹணாநுவா ஹாதாஸநாநு ! ஸவபூஹூதாஜுராதூநவிஷூஸெவயஜஷிதெ."

ஈடு.—ஆறும்பாட்டு. ஜீவநார்த்தமாக மநுஷ்யாதிகளைக் கவிபாடுகிறோ மென்ன, 'க்ஷுத்ரரைக் கவிபாடி ஜீவிப்பதிலும் உடம்புநோவப் பணிசெய்து ஜீவிக்கை நன்று' என்கிறார்.

[வம்மின்]-காட்டுத்தீயிலேஅகப்பட்டாரை மடுவைக்காட்டிஅழைப்பாரைப்போலே வாருங்களேன்கிறார். [புலவீர்]-நல்லதறியும் நீங்கள் வாருங்கோள். 'எங்களை நீர் அழைக்கிறதேன்? எங்களுடைய தேஹயாத்ரை நடக்க வேண்டாவோ, பிறரைக் கவிபாடியாகிலும்?' என்ன, மெய்யே ஜீவிக்க வேண்டினாலும் உங்கள் தரம் குலைய ஜீவிக்கவேணுமோ? உங்கள் தரம் குலையாமல் ஜீவிக்க வொண்ணாதோ? [நும் மெய் இத்யாதி] - உங்கள் ஶரீரத்தை வருத்தியும் கைத்தொழில் செய்தும் ஜீவிக்கப் பாருங்கோள். இதுக்கு எம்பார் அருளிச்செய்யும்படி - 'கோட்டைசுமத்தல் புற்சிரைத்தல் செய்ய மாட்டீர்களோ?' என்று. அத்தால் எங்களுக்குப் பூர்ணமாக ஜீவிக்கக்கிடையாதே! பிறரைக் கவிபாடினால் எங்களுக்கு வேண்வேது வாங்கி ஜீவிக்கலாமேன்ன, அதுஆமிறே பெறில்: [இம்மன்னுலகினில் செல்வர் இப்போதில்லை நோக்கினோம்]-ப்ரவாஹரூபேண நித்யமான இந்த லோகத்தில் உங்கள் கவிகேட்டு இதுக்குத் தரமாகத்தருகைக்கு உதாரராயிருக்கும் ஸ்ரீமான்கள்

---

ஆறும்பாட்டு - வம்மின் இத்யாதி. 'நும்மெய்வருத்திக்கைசெய்துய்ம்மினோ' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஜீவநார்த்தமாக இத்யாதி.

மீளவும் 'வம்மின்' என்றதுக்கு த்ருஷ்டாந்தமுகேந ஹாவம் - காட்டுத்தீயிலே இத்யாதி. மடுவின் ஸ்தாநம்-மெய்வருத்துகை. தாத்பர்யம் - மெய்யே இத்யாதி. மெய்யே - ஸத்யமாக, சரீரமே யென்றும். தரம் - ஆதிக்யம், யோக்யதையுமாம். ஆத்மாவினுடைய ஜீவநத்தை உபேக்ஷித்து, 'சரீரமிருந்தால் அமையும்' என்றிருந்திகோளாகி லென்றபடி. வருத்தியும் - ப்ரயாஸப்படுத்தியும். உக்தார்த்தத்துக்கு ஆப்தவசநம் - இதுக்கு எம்பார் இத்யாதி. கோட்டைசுமத்தல் என்றது - 'மெய்வருத்தி' என்றதுக்கு. புற்சிரைத்தல் என்றது - 'கைசெய்து' என்றதுக்கு: சிரைத்தல் - செதுக்குகை. மன்னுலகு - நித்யமான லோகம். லோகயாத்ரையில்,

இல்லை. [இப்போது நோக்கினேம்] - 'இவர்கள் நெஞ்சுகன்றக் கவிபாடுகிற இதுக்கு ப்ரயோஜநமுண்டோ?' என்று இப்போது ஆராய்ந்து பார்த்தோம்; ஒருகாரியமில்லையாயிருந்தது. அர்த்தாந்தரமாகில், 'இப்போது இல்லை' என்னவேண்டாவே; முன்பு மில்லையே. முன்பு இவர்தாம் லோகயாத்ரையில் கண் வைத்தவரன்றே, 'இவர்கள் வ்யர்த்தமே துக்கப்படுகிறார்களோ? ஏதேனும் ப்ரயோஜநமுண்டோ?' என்று இப்போது பார்த்தோமென்கிறார். மநுஷ்யரிலன்றோ இல்லாதது; தேவர்கள் மநுஷ்யரில் வ்யாவ்ருத்தரே; இக்கவிகளைக் கொண்டு எங்களுடைய இஷ்டதேவதைகளை ஸ்தோத்ரம் பண்ணுகிறோமென்ன, [நும் இத்யாதி]-உங்களுடைய இனிய கவிகளைக்கொண்டு, ராஜஸராயும் தாமஸராயுமிருக்கிற உங்களுக்குப் பொருந்தும் ராஜஸராயும் தாமஸராயுமுள்ள தேவதைகளை ஸ்துதித்தால். அது, [செம்மின் இத்யாதி] - நீங்கள் சில ஏற்றங்களைச் சொல்லியிறே கவி பாடுவது; அது அவர்களுக்குக் கூடாது; "புண்டரீகாக்ஷன்" என்றால் அது உள்ளவிடத்தே போம்: விரூபாக்ஷன்பக்கல் போகாதே; ஆகையாலே, ஆதிராஜ்ய ஸூசகமான திருவபிஷேகத்தையுடைய ஸ்ரீயஃபதிபக்கலிலே வந்து சேரும். ஆகையால், உங்களுக்கு ஸித்திப்பது சௌர்யபலமே. 'ஸர்வாதிகன், ஸமஸ்தகல்யாண குணாத்மகன், ஸர்வரக்ஷகன்' என்றாற்போலேயிறே கவிபாடுவது; அது உள்ளவிடத்திலே வந்து சேருமிறே. அப்ரதிஹதப்ரகாஶமான தேஜஸ்ஸை யுடைத்தாயிருக்கிற திருவபிஷேகத்தை யுடையனை. [என் திருமாலுக்குச் சேரும்]-உங்கள் ப்ரதிபத்தியொழிய, கவியின் ஸ்வபாவத்தாலும் ஸ்ரீயஃபதிக்குச் சேரும்: "ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிறபடியே ஜ்ஞாநமாகில் அவனையே நோக்குமாபோலே, கவிகளானவை ஶப்தஸந்தர்ப்பமா யிருக்கையாலே, ஸர்வ ஶப்தவாச்யன் அவனாகையாலும் அவனுக்கே சேரும். அதாவது-ஸர்வ ஶப்தங்களும், அசித்தும் தததிமாநிஜீவனும் தத்தந்தர்யாமியான பரமாத்மாவுமான இஸ்ஸங்காதத்துக்குவாசகங்களாகையாலேவிஶேஷ்யப்ராதாந்யத்தாலேஅவனையே சொல்லிற்றாம்; "*யேயஜந்தி*" (யேயஜந்தி) இத்யாதிவத். (௬)

*கண்வையாதவர் இப்போது ஆராய்கைக்கு அடியேது? என்ன. இவர்கள்நெஞ்சுகன்று இத்யாதி. கன்று - உலர. 'இப்போது-நோக்கினேம்' என்று அந்வயிக்கவேணுமோ? 'இப்போதில்லை, நோக்கினேம்' என்றிருந்தபடியே அர்த்தஞ்சொன்னாலோ? என்ன, - அர்த்தாந்தரமாகில் இத்யாதி. ஆனால் இப்போதோ நோக்கிற்று, முன்பு நோக்கவில்லையோ? என்ன, முன்பு இவர்தாம் இத்யாதி. ஆனால் இப்போதுதான் கண்வைத்தாரோ? என்ன, இவர்கள் வ்யர்த்தமே இத்யாதி. இவர்களுடைய துக்காதிஶயத்தைக் கண்டு தயையாலே கண்வைத்தாரென்றபடி. 'நும்நும்' எனகிற அதிகாரி பேதத்தைக் காட்டுகிறார். ராஜஸராயும் இத்யாதி. இன்கவி - இனிய கவி, ஶ்லாக்யமான கவி. நுந்நும் - உங்களுக்களுடைய. இட்டதெய்வம் - இஷ்டதேவதைகளை. 'திருமாலுக்குச்சேரும்' என்றதுக்கு இரண்டு ஹேது - அர்த்தஸ்வபாவத்தாலும், ஶப்தஸ்வபாவத்தாலும் சேருமென்று. அதில், அர்த்தஸ்வபாவத்தாலே சேருமென்றத்தை அருளிச்செய்கிறார் - நீங்கள் சில இத்யாதி. எப்படி கூடாது? என்ன, புண்டரீகாக்ஷன் இத்யாதி. சௌர்யபலமே - சௌர்யமே பலமென்றபடி. கீழ்ச்சொன்ன ஹேதுவை மீளவும் விஶதீகரிக்கிறார் - ஸர்வாதிகன் இத்யாதி. செம்மின் சுடர்முடி - அப்ரதிஹதப்ரகாஶமான தேஜஸ்ஸையுடைத்தாயிருக்கிற திருவபிஷேகத்தையுடையனை. செம்மை - செவ்வை. அதாவது - அப்ரதிஹதமாகை. ஶப்தஸ்வபாவத்தாலும் சேருமென்று இரண்டாம் ஹேதுவை அருளிச்செய்கிறார் - உங்கள்ப்ரதிபத்தி இத்யாதி என் என்றதின் தாத்பர்யம். கவியின் ஸ்வபாவத்தாலும்-திருமாலின் தாத்பர்யம். 'ஸ்ரீயஃபதிக்கே சேரும்' என்றத்தை உபபாதிக்கிறார் - ஒண்டாமரையாள் இத்யாதி. அழகிய தாமரைப்பூவை யிருப்பிடமாகவுடைய பெரியபிராட்டியார்க்கு வல்லபனான ஸர்வேஶ்வரனொருவனையே சென்று சேராநிற்கும் ஜ்ஞாநமானது இதி பாசுரார்த்தஃ. முதல் திருவந்தாதி - அறுபத்தேழாம்பாட்டு: "பெயரும் கருங்கடலே" இத்யாதி. தத்வாசகசப்தங்கள் வேணுமாகில் அவனைச்சொல்லுகிறது,சிதசித்வாசகஶப்தங்கள் அவனைச்சொல்லும்படியென்? என்ன, விஶேஷ்யப்ராதாந்யத்தாலே சொல்லு மென்கிறார் - அதாவது இத்யாதி. ஆராதநங்கள் விஶேஷ்யதயா ப்ரதாநனாகையாலே ஈஶ்வரனையே விஷயமாகவுடைத்தாயிருக்கும்படி, ஸர்வசப்தங்களும் விஶேஷ்யதயா ப்ரதாநனான ஈஶ்வரனுக்கே வாசகமென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார்-யேயஜந்தி இத்யாதிவத் என்று. "யேயஜந்தி பித்ருந் தேவாந் ப்ராஹ்மணாந் ஸஹுதாஶநாந் ஸர்வபூதாந்தராத்மாநம் விஷ்ணுமேவ யஜந்தி தே" இதி தக்ஷஸ்ம்ருதௌ. க்ரமேண அந்வயஃ.* (௬)

# ஏழாம் பாட்டு.

சேருங்கொடைபுகழெல்லையிலானை ஓராயிரம்
பேருமுடையபிரானையல்லால் மற்றுயான்கிலேன்
மாரியனையகை மால்வரையொக்குந்திண்டோளென்று
பாரிலோர்பற்றையைப் பச்சைப்பசும்பொய்கள்பேசவே.

ஆ.—(சேரும்.) ஸ்ரியப்பதியான தனக்கு ஸத்ருசமான நிரவதிகௌதார்யாத்யஸங்க்யேய கல்யாணகுணங்களையுடையனாயிருந்த எம்பெருமானையல்லால், மற்று இந்தலோகத்தில் த்ருணகல்பரான மநுஷ்யாதிகளை, மாரியனையகை மால்வரையொக்கும் திண்தோளென்று பச்சைப் பசும்பொய்கள்பேசேன் என்றுகொண்டு ஸ்வலாபத்தைப் பேசுகிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், எம்பெருமானையொழிய வேறுசிலரைக் கவிபாடுகைக்கு நான் க்ஷமனன்றிக்கே யொழியப்பெற்றேனென்று ப்ரீதராகிறார்.

[சேரும் என்று தொடங்கி] - ஏதேனும் கொடுத்தானென்றாலும் அவனுக்கு ஆகிற்கும் என்றிருக்கிற தன்னுடைய கொடையாலே வந்த புகழுக்கு எல்லையில்லாதானுமாய்க் கவிபாடுகைக்கு ஈடாக குணசேஷ்டிதாதிகளுக்கு ப்ரதிபாதகமான அஸங்க்யாதமான திருநாமங்களையுடையவனை ஒழிய. [மாரியனைய என்று மேலுக்கு] - ஔதார்யத்துக்குக் கை மேகத்தோடு ஒக்கும்: திண்மைக்குத் தோள் மலையோடு ஒக்கும் என்று பூமியிலே த்ருணஸமாநனாயிருப்பானொருவனாகிற க்ஷுத்ரஜந்துவைக் கவிபாடுகையாகிற கலப்பில்லாத பொய் சொல்ல. பாரிலோர்பற்றையை - குடிப்பற்றில்லாத அகிஞ்சனை யென்றுமாம்.

ப.—அநந்தரம், ஸ்துத்யமான குணங்களையும் திருநாமங்களையும் பூர்ணமாகவுடையவனை யொழிய, வேறொரு விஷயத்தைப் பொய்க்கவிபாட ஶக்தனல்லேன் என்கிறார்.

சேரும் - (தனக்குத்)தகுதியான, கொடை - கொடையும், புகழ்- (அத்தால்வந்த) குணப்ரதையும், எல்லை இலானை - எல்லையிறந்திருக்குமவனாய், ஓர் ஆயிரம் - அத்விதீயமாய் ஸஹஸ்ர ஸங்க்யாதமான, பேரும் உடைய - திருநாமங்களையும் உடைய, பிரானை - மஹோபகாரகனை, அல்லால் - ஒழிய, மற்று - வேறு, பாரில் - பூமியிலே, ஓர் பற்றையை - தூறுபோலே நிஷ்ப்ரயோஜநமாயிருப்பதொரு பதார்த்தத்தை, கை - கைவழக்கங்கள், மாரி அனைய என்று - மேகத்தை ஒத்தனஎன்றும், திண் தோள் - திறலிய தோள்கள், மால் வரை - பெரிய மலையை, ஒக்கும் என்று- ஒக்குமென்றும், பச்சை பசும் பொய்கள் - மெய்கலவாத புதுப்பொய்களை, பேச - பேச, யான்- (பூர்ணவிஷயத்தைப்பற்றின) நான், கிலேன் - ஶக்தனல்லேன்.

இ.—ஏழாம்பாட்டில், 'வழியடிக்குமிடத்திலே தன்கைப்பொருள்கொண்டு தப்பினவன் உகக்குமாபோலே இவர்களைப்போலன்றியே பகவத்விஷயத்தையொழிய வேறுசிலரைக் கவிபாடுகைக்கு நான் க்ஷமனன்றிக்கே ஒழியப்பெற்றேன்' என்று ப்ரீதராகிறார்.

[சேரும் கொடை இத்யாதி] - கொடையாலே சேர்ந்த புகழுக்கு எல்லையில்லாதவனை; தகுதியான கொடையாலுண்டான புகழுக்கு எல்லையில்லாதவனை என்றுமாம். [ஓராயிரம்பேர் இத்யாதி] - "வேனமேவிஸ:" என்று ஒருஸந்தஸ்ஸிலேவைத்துக் கவிபாடவொண்ணாதாயிருக்கையன்றிக்கே கவிபாடுகைக்கு விஷயமான குணசேஷ்டிதங்களுக்கு வாசகமாய், அஸங்க்யேயமான திருநாமங்களையுடையவனை. [ஓராயிரம்] - ஓரொன்றே கவிபாடுகைக்கு விஷயம் போந்திருக்கும்

படி அத்விதீயமாயிருக்கை. [பிரானை] - அவற்றை எனக்கு ப்ரகாசிப்பித்த மஹோபகாரகனை. [மற்று யான் இலேன்] - வேறுசிலரைக் கவிபாடுகைக்கு நான் க்ஷமனல்லேன். 'இவர் பாடாதொழிகிறது என்?' என்னில்,-[மாரியனைய கை] - கொடுக்கைதானே ப்ரயோஜநமாகக் கொடுத்து, கொடுக்கப்பெறுதபோது உடம்பு வெளுக்குமவன். [மால்வரைபோக்கும் திண்தோள்] - பெரிய மலைபோலே திண்ணிதான தோளையுடையவன். 'கொடுக்க' என்றால் நிமிர்கிற தோளை, 'கொடுக்கக்கொடுக்கப் பணைக்குந் தோள்'என்கை. [பாரில்] - போகபூமியிலன்றிக்கே கர்மபூமியிலே வர்த்திக்கிற. [பற்றையை] - உத்பத்திஸ்திதிவிநாசங்கள் தனக்கும் உறப்பன்றிக்கே பிறர்க்கும் உறுப்பன்றிக்கேயிருக்கும் சிறுதூற்றை. ஒருதமிழன் 'பாரில் என்கிறது, ஒரு நத்தமில்லையென்கை; பற்றை என்கிறது, கண்டதெல்லாம் பற்றக்கடவனாய் விடக்கடவதொன்றுமின்றிக்கே யிருக்கை' என்றான்; 'த்ருணஸமனென்றுப்த்துச் சொல்லிப்போருவது. [பச்சைப்பசும் பொய்கள் பேச] - மெய்கலவாத பொய் சொல்ல நான் க்ஷமனல்லேன். ஆயிரம்பேருமுடைய பிரானை யல்லால் மற்று பாரில் ஓர்பற்றையைப் பச்சைப்பசும்பொய்கள் பேச யான் இலேன்.

ஈடு.—ஏழாம்பாட்டு. வழிபறிக்குமிலத்தில் தன்கைப்பொருள்கொண்டு தப்பினவன் உகக்குமாபோலே இவர்களைப்போலன்றிக்கே பகவத்விஷயத்தையொழிய வேறுசிலரைக் கவிபாடுகைக்கு நான் க்ஷமனன்றிக்கே ஒழியப்பெற்றேன் என்று ப்ரீதராகிறார்.

[சேரும் இத்யாதி] - கொடையாலே சேர்ந்த புகழுக்கு எல்லையில்லாதவனை; அன்றிக்கே, தகுதியான கொடையாலுண்டான புகழுக்கு எல்லையில்லாதவ னென்னுதல்: அதாவது - ஒருவன் ஒருவனுக்கு ஒருபசுக் கொடுத்தானாகில், 'இவனுக்கு இதுக்கு அடியேன்?' என்று இருப்பர்கள்; பெருமாள், ஸிம்ஹாஸநமும் ஸ்ரீஶத்ருஞ்சயனுமகப்படக் கொடுத்து வேறுவியராய் நிற்கிறவளவிலே த்ரிஜடன் வந்து அர்த்திக்க, 'ஸரயூதீரத்துக்கு இவ்வருகுபட்ட பசுக்களையடையக் கொண்டுபோ' என்று பெருமாள் கொடுக்க, 'பெருமாள் கொடுத்தாராகில் சேரும்' என்றார்களிறே; அப்படியே தகுதியான கொடையால் வந்த புகழுக்கு எல்லையில்லாதவனை. இவ்விஷயத்தையாயிற்றுக் கவிபாடுகிறது. [ஓராயிரம் இத்யாதி] - கவிபாடுமிடத்தில் ஒன்றிரண்டுபேராய், அதுதானும் 'ஜலபிலஃ' என்றாற்போலேயாய், ஒருசந்தஸ்ஸிலடங்காதபடி யிருக்கையன்றிக்கே, நினைத்தபடி பாசுரமிட்டுக் கவிபாடலாம்படி அநேகந்திருநாமங்களை யுண்டாக்கிவைத்த மஹோபகாரகனை. [ஓராயிரம்]-ஒரோன்றேகவிபாடுகைக்கு விஷயம்போரும்படி அத்விதீயமாயிருக்கை. [பிரானை]-அவற்றை எனக்கு ப்ரகாசிப்பித்த மஹோபகாரகனை. [அல்லால் இத்யாதி] - இவனையொழிய வேறொருவரைக் கவிபாட நான் ஶக்தனாகிறிலேன். எதுதான் நீர் மாட்டாதொழிகிறது? என்ன, [மாரியனைய கை]-கொடுக்கைக்கு முதலின்றிக்கேயிருக்

---

ஏழாம்பாட்டு - சேரும் இத்யாதி. இப்படி உபதேசிக்கச்செய்தேயும் அவர்கள் திருந்தாமையாலே ஸ்வலாபாநுஸந்தாநத்தால் ப்ரீதரானபடியை ஸந்தர்ப்பமாக அருளிச்செய்கிறாரென்றுகொண்டு, 'பிரானையல்லால் மற்றுயான்இலேன்' என்ற பதத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-வழிபறிக்கும் இத்யாதி.

கொடை சேரும்புகழென்னுதல், சேருங்கொடைபுகழ் என்னுதல். த்விதீயார்த்தத்தில், 'சேரும்' என்றது - கொடைக்கு விசேஷணம். கொடை - தாநம். அவனுடையகொடை தகுதியாயிருக்குமென்னுமத்தை த்ரிஜடவ்ருத்தாந்தமுகேந காட்டுகிறார் - அதாவது இத்யாதி. ஸ்ரீசத்ருஞ்சயன் - பெருமாளானை. வேறுவியராய் - இல்லாதவராய். இவ்விஷயத்தை - ப்ரக்ருதகுணவிஶிஷ்டவிஷயத்தை. இப்ப்ரகரணத்திலே 'ஆயிரம்பேருமுடைய' என்றதுக்கு பாவம்-கவிபாடுமிடத்தில் இத்யாதி. ஒருசந்தஸ்ஸிலிதி - ஒன்றிரண்டாகிவிடே இவனுக்கு வேண்டின சந்தஸ்ஸி லடங்காதொழிவ தென்றபடி. 'ஓர்' என்றதுக்கு பாவம் - ஒரோன்றே இத்யாதி. இப்போது, 'பிரான்' என்றதுக்கு பாவம் - அவற்றை இத்யாதி. கொடை மேகத்தோடு துல்யமாகை எந்தப்ரகாரத்தாலே? என்ன, அதாவது இத்யாதி. மாரி - மேகம். அனைய - ஸத்ருஶமான. கை - கொடை.

கிற ஞேருவனை, கோடைக்கு மேகத்தை யொக்குமென்கை. அதாவது - ப்ரயோஜந நிரபேக்ஷமாகக் கோடுக்கையும், கோடுக்கப்பெருதபோது உடம்பு வெளுக்கையுமாகிற இத்யாதிகள். கையென்றது- கோடை. [மால்வரையொக்கும் இத்யாதி] - கோடையைநினைத்துத் தேம்புகிற தோளைக்குறித்து, கோடுத்துப் பணைத்திருக்கிற தென்றும், இத்தோள்நிழலிலேயன்றே லோகமாக ஜீவித்துக்கிடக்கிற தென்றும். [பாரில் ஓர்பற்றையை] - ஜோமபூமியிலுள்ளார் சிலராகில் ஆமிறே; பூமியிலுள்ளார் சிலராய், பற்றையாய்; அதாவது - முளைத்தெழுந்து தீந்துபோவன சில சிறுதூறு உண்டாயிற்று; அப்படியே, உத்பத்தியேதொடங்கி விநாசத்தளவும், தனக்கு உறுப்பாதல் பிறர்க்கு உறுப்பாதல் செய்யாதவர்களை. அன்றிக்கே, 'பாரேன்று - நத்தமாய், அத்தால் - ஒரு குடிப்பற்றின்றிக்கேயிருக்கை. பற்றையை - கைப்பட்டத்தை இறுகப்பிடித்து ஒருவர்க்கு ஒன்று ஈயாதவர்களை' என்று ஒருதமிழன் வ்யாக்யாநம் பண்ணினன். 'த்ருணஸமன்' என்று சொல்லிப்போருவது. [பச்சைப்பசும்பொய்கள்பேசவே] - மெய்கலவாத பொய்களைச் சொல்ல. ஆயிரம்பேருமுடைய பிரானையல்லால் மற்று - பாரிலோர்பற்றையைப் பச்சைப்பசும்பொய்கள்பேச - யான் கிலேன். (எ)

## எட்டாம் பாட்டு.

வேயின்மலிபுரைதோளி பின்னைக்குமணாளனை
ஆயபெரும்புக ழெல்லையிலாதனபாடிப்போய்க்
காயங்கழித்து அவன்தாளிணைக்கீழ்ப்புகுங்காதலன்
மாயமனிசரை என்சோல்லவல்லேன்என்வாய்கோண்டே ?

*ஆ.—(வேயின்.) நிரஸ்த ஸமஸ்த ப்ரதிபந்தகனுய்க்கொண்டு வேயின்மலிபுரைதோளி பின்னைக்கு மணாளனைக் கல்யாண நிஸ்ஸீம நிரவதிககுணங்களைப் பாடி அவன்தாளிணைக்கீழ்ப் புகும் காதலையுடையவனுன நான் அவனையொழிய 'இந்த ப்ரக்ருதிவஸ்யரான மநுஷ்யரைக் கவி பாடுவேன்' என்ருல்தான் என்வாய் எனக்கு விதேயமோ? என்கிருர்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், அகிலஹேயப்ரத்யநீக கல்யாணகுணஸாகரமாய் நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனுயிருக்கிறவனையொழிய வேறுசில க்ஷுத்ரமநுஷ்யரைக் கவிபாட நான் உபக்ரமிக்கிலும் என்வாய் அதுக்குப் பாங்காகாது என்கிருர்.*

---

இத்யாதிகள் என்கிற ஆதிசப்தத்தாலே - அர்த்தித்வ நிரபேக்ஷத்வ ஜலஸ்த்தலவிபாகராஹித்யாதிகள் சொல்லப்படுகிறன. வரையோடு ஒத்திருக்கிறதும் திண்ணியதாயிருக்கிறதும் எவ்வாகாரத்தாலே? என்ன, கோடையை நினைத்து இத்யாதி. தேம்புகிற - இளைக்கிற. திண்மைக்கு அர்த்தம் - இத்தோள்நிழலிலே இத்யாதி. மால்வரை - பெரிய மலை. திண்தோள் - த்ருடமான தோள். மால்வரையொக்கும் ஆகாரம் இவனுக்கில்லையென்றவோபாதி, திண்மையும் இவனுக்கில்லையென்னுமிடம் கண்டுகொள்வது. அதாவது - தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்ளவும் மாட்டாதே சத்ருவுக்கு அஞ்சிக் காடுபாய்ந்து திரிகிறவனை,'லோகமாக உன்தோள்நிழலிலே ஜீவித்துக்கிடக்கிறது' என்னுநிற்பர்களென்ற. ஜோமபூமி - ஸ்வர்க்காதிகள். தீந்து - நசித்து. தூறு என்று-இவ்விடத்திலே த்ருணத்தைச் சொல்லுகிறது. பாரில் - பூமியிலே. ஓர்பற்றையை - நிஷ்ப்ரயோஜநமாயிருப்பதொரு த்ருணத்தை யென்னுதல்; பாரேன்று - நத்தமாய், இலோர் - இல்லாதவர்க ளென்னுதல். நத்தம் - இருப்பிடம். பற்றையென்ற - த்ருணமாதல், லோபியாதல். பற்றிக்கொண்டு விடாதேயிருக்குமவனை - பற்றையென்கிறது. முந்தின அர்த்தமே நிர்வஹித்துப்போருவ தென்கிருர் - த்ருணஸமன் இத்யாதி. 'பச்சைப் பசும்பொய்' என்ற - மிகவும்பொய்யென்ருய் மெய்கலவாதபொய் என்கிருர். பசிசைப்பசுமை-நல்லபசுமை. அதாவது - அல்பமும் வாட்டமில்லாமை. பொய்க்கு வாட்டமாவது - மெய்கலச்கை. அந்வயிக்கிருர் - ஆயிரம் இத்யாதி. சேரும்கொடைபுகழ்த்யாரப்ய, பிரானையல்லால் மற்று - பாரிலோர்பற்றையை - மாரியனையகை மால்வரையொக்கும் திண்தோளென்று - பச்சைப்பசும்பொய்கள்பேச - யாண்கிலேன் இத்யந்வயஃ. (எ)

[வேயின் என்று தொடங்கி] - வேயிற்காட்டிலும் அழகியதாய் பரஸ்பரம் ஒத்த தோளையுடைய நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனுடைய கல்யாணமாய் அஸங்க்யாதமான மஹாகுணங்களை நெடுநாள் இனிதாக அநுபவித்துப் பின்னை இந்தப்ராக்ருதசரீரத்தை விட்டு பகவதர்ஹமான அப்ராக்ருதசரீரத்தைப் பெற்று அவன்திருவடிக்கீழே புகவேண்டியிருந்த நான்.

ப.—அநந்தரம், பரமப்ராப்யபூதனான க்ருஷ்ணனைக் கவிபாடி அவனைப்பெற ஆசைப் பட்டிருக்கிற நான், க்ஷுத்ரரைக் கவிபாடவல்லேனோ? என்கிறார்.

வேயின் - (பசுமைக்கும் திரட்சிக்கும் செவ்வைக்கும்) வேயொப்பாமிடத்தில், மலி - அதிலும்மிகைத்து, புரை - விளங்குவதான, தோளி - தோளையுடைய, பின்னைக்கு - பின்னைக்கு, மணாளனை - நித்யாபிமதனான க்ருஷ்ணனை, ஆய - ஸ்வரூபாநுபந்தியாய், பெரும் - தனித்தனி அபரிச்சிந்நமாய், எல்லையிலாதன - அஸங்க்யாதமான, புகழ் - குணங்களை, பாடி - பாடி, போய் - நெடுங்காலம்நடந்து, காயம் - சரீரத்தை, கழித்து - கழித்து, அவன்தாளிணைக்கீழ் - (பரமப்ராப்யபூதனான) அவனுடைய திருவடிகளிலே, புகும் - ஒதுங்குகையிலே, காதலன் - ஆசையையுடைய நான், மாயம் மனிசரை - ப்ரக்ருதிவஶ்யரான மநுஷ்யரை, என்வாய்கொண்டு - (பகவத்ஸ்துதியோக்யமான) என்வாக்கைக்கொண்டு, என் சொல்ல வல்லேன்-எத்தைச் சொல்ல வல்லேன்? போயென்றது - காயங்கழித்து ஒருதேசவிசேஷத் தேறப்போ யென்றுமாம்.

இ.—எட்டாம் பாட்டில், நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனாய் ஹேயப்ரத்யநீககல் யாணகுணகனாயிருக்கிறவனை, உள்ளத்தைக் கவிபாடி சரீரஸம்பந்தத்தையறுத்து அவன்திருவடிகளிலே அடிமைசெய்யவேணு மென்னும் அபிநிவேஶத்தையுடைய நான் க்ஷுத்ரமநுஷ்யரை என் கரணத்தைக்கொண்டு கவிபாட க்ஷமனல்லேன் என்கிறார்.

[வேயின் இத்யாதி] - பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் வேயைக்காட்டிலும் விஞ்சின அழகையுடைத்தாய், பரஸ்பரஸத்ருஶமான தோள்களையுடைய நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனை. பிறரைக்கவிபாடுகைக்கு யோக்யமான சரீரஸம்பந்தத்தை அறுக்கைக்கும், விலக்ஷணசரீரத்தைப் பெற்றுத் திருவடிகளைக் கிட்டுகைக்கும் புருஷகாரம் நப்பின்னைப்பிராட்டி என்கை. அச்சேர்த்தியிலே கவிபாடக்கடவ நான் மற்றும் சிலரைக் கவிபாடவோ? [பின்னைக்குமணாளனை]- "யஸ்யாஸா ஜநகாத்மஜா, அப்ரமேயம் ஹி தத்தேஜ:". [ஆய] - ஆயப்பட்டிருக்கை. ஹேயப்ரதிபடமாயிருக்கை. ஆய என்று ஆன என்று ஆய், ஸ்வரூபாநுபந்தி யென்றுமாம். [பெரும்புகழ்]- ரூபகுணத்தோடு ஆத்மகுணத்தோடு வாசியற ஒரோவொன்றே நிரவதிகமாயிருக்கை. [எல்லையிலாதன] - இப்படிப்பட்ட குணங்கள் அஸங்க்யாதமாயிருக்கை. [பாடிப்போய்க் காயம்கழித்து]- இக்குணங்களை ப்ரீதிப்ரேரிதனாய்ச் சொல்லி இதுவே யாத்ரையாய்ப் பின்னை இச்சரீரத்தை விட்டு. "வாநப்ரஸ்தவதாஸ்யாயாம் ஜரிதம் வய:" என்று சக்ரவர்த்தி ப்ரஜாரக்ஷணார்த்தமாகச் சுற்றும் பயணந் திரிந்து முத்துக்குடை நிழலிலே சரீரத்தை ஜரிப்பித்தாற்போலே பகவத்குணாநுபவத்தாலே சரீரத்தை ஜரிப்பித்து என்கிறார். [அவன் இத்யாதி] - அவன் பக்கலிலே ப்ரயோஜநாந்தரங்களைக் கொள்ள இராதே விலக்ஷணசரீரத்தைப் பெற்றுத் தாய் முலைக்கீழே யொதுங்கும் ஸ்தநந்தயப்ரஜையைப்போலே திருவடிகளின்கீழே ஒதுங்கிடுவன் என்னும் அபிநிவேஶத்தையுடைய நான். [மாயமனிசரை] - உத்பத்தியோடே வ்யாப்தமான விநாஶத்தையுடையவர்களை. [என்வாய்கொண்டு என்சொல்ல வல்லேன்] - பகவத்விஷயத்துக்கு அர்ஹமான இக்கரணத்தைக்கொண்டு பிறரைக்கவிபாட வல்லேனோ? என்கிறார். ப்ரேமம் அவன் திருவடிகளிலே கிடக்க, விஷயாந்தரத்துக்கு நானும் என்கரணமும் இல்லை யென்கை. வேறே ஒருகரணம் பெற்றேனாகில் வேறே சிலரைக் கவிபாடலாயிற்று.

ஈடு.—எட்டாம் பாட்டு. 'நான் பிறரைக்கவிபாடுவே னென்னிலும், என்வாக்கானது அவனை யொழியப் பாடாது' என்கிறார்.

[வேயின் இத்யாதி] - நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனுமாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனுமான ஸர்வேஶ்வரனைக் கவிபாடி இப்படியிலே இஶ்ஶரீரத்தைக் கழித்து, இதின் அநந்தரம் அடிமைக்கு ஈடாயிருப்பதொரு சரீரத்தைப் பெற்று அவனுக்கு அடிமைசெய்ய வேணுமென்று ஆசைப்பட்டிருக்கிற நான் என்வாயைக்கொண்டு நீர்க்குமிழிபோலேயிருக்கிற க்ஷுத்ரரைக் கவிபாடவல்லேனோ? என்கிறார். [வேயின் இத்யாதி] - பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் வேயிலும் விஞ்சின அழகையுடைத்தாய், பரஸ்பர ஸத்ருஶமான தோளை யுடைய நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனை. மலிதல் - மிகுதி. புரை - ஒப்பு. பிறரைக் கவிபாடுகைக்கு யோக்யமான ஶரீரஸம்பந்தம் அறுக்கைக்கும் விலக்ஷணமான ஶரீரத்தைப் பெற்றுத் திருவடிகளிலே அடிமை செய்கைக்கும் புருஷகாரமான நப்பின்னைப்பிராட்டி யென்கை. அச்சேர்த்தியிலே கவிபாடின நான் வேறுசிலரைக் கவிபாடவோ? இனி, கை கழியப் போகவல்லரோ, பிராட்டிகைப்புடையிலே நின்று கவிபாடுகிறவர்? [பின்னைக்குமணாளனை] - அவள் சேவ்விகொள்ள இட்டுப்பிறந்தவனை. [ஆய] - ஆயப்பட்டிருக்கை, ஹேயப்ரதிபடமாயிருக்கை. அன்றியே, ஆயவென்றது - ஆனவென்றாய், ஸ்வரூபாநுபந்தி யென்றுமாம். [பெரும் புகழ்] - ரூபகுணத்தோடு ஆத்மகுணத்தோடு வாசியற ஓரோவொன்றே நிரவதிகமாயிருக்கை. [எல்லையிலாதன] - இப்படிப்பட்ட குணங்கள் அஸங்க்யாதமாயிருக்கை. [பாடிப்போய்க் காயங்கழித்து]- "வாண்டரஸ்யாதபத்ரஸ்யச்சாயாயாம்ஜரிதம்மயா" (பாண்டரஸ்யாதபத்ரஸ்யச் சாயா யாம்ஜரிதம்மயா)என்று சக்ரவர்த்தி ப்ரஜாரக்ஷணார்த்தமாகச் சுற்றும்பயணம் திரிந்து முத்தின்குடை நிழலிலே ஶரீரத்தை ஜரிப்பித்தாற்போலே, பகவத்குணங்களை ப்ரீதிப்ரேரிதனாய்ச் சொல்லி இதுவே யாத்ரையாய்ச் சரீரத்தைவிட்டு. [அவன் இத்யாதி] - இத்தைக்கழித்த அநந்தரம், ஸ்வாநுபவம்

---

*எட்டாம்பாட்டு - வேயின் இத்யாதி. கவிபாடமாட்டேனென்னுதே, 'வாய்கொண்டு - என்சொல்ல வல்லேன்' என்றதுக்கு பாவம் - நான்பிறரை இத்யாதி.*

*பாட்டுக்கெல்லாம் தொகுத்து அருளிச்செய்கிறார்* - நப்பின்னைப்பிராட்டிக்கு இத்யாதி. அடிமைக்கீடாயிருப்பதொரு சரீரத்தைப் பெற்று *என்றது-அர்த்த ஸித்தம். ப்ரதமபாதத்துக்கு அர்த்தம் -* பசுமைக்கும் *இத்யாதி. 'வேயின்' என்றது - பஞ்சமி. அழகையென்றது - அர்த்தஸித்தம்.* நப்பின்னைப்பிராட்டியைச் *சொல்லுகிறதுக்கு பாவத்வயம் - ப்ராபகப்ராப்யதசையில் புருஷகாரமாக வென்னுதல், கவிக்குவிஷயமாக வென்னுதல். ப்ரதமம்பாவமாஹ - பிறரை இத்யாதி. த்விதீயமாஹ - அச்சேர்த்தியிலே இத்யாதி. 'தோளி' என்றதுக்கு ரஸோக்தியாக பாவம் -* இனிக் கைகழிய இத்யாதி. கைகழிய - *கைவிட்டு.* கைப்புடை - *கைப் பக்கம். *குடவறையென்று த்வநி. 'மணாளன்' என்றதுக்கு பாவம் -* அவள்சேவ்விஇத்யாதி. சேவ்விகொள்ள இட்டுப்பிறக்கை - *காந்திஸௌந்தர்யாதிகளை அநுபவிக்கைக்காகப் பிறக்கை.* இட்டுப்பிறக்கை - *ததர்த்தமாகப் பிறக்கை.* ஆயப்பட்டிருக்கை - *சோதிக்கப்பட்டிருக்கை. கீழையும் உட்கொண்டு பாவம் -* ரூபகுணத்தோடு *இத்யாதி. 'பின்னைக்குமணாளன்' என்றதிலே - ரூபகுணமும் ஸித்தம். 'பாடிப்போய்க் காயங்கழித்து' என்றதுக்கு வாக்யம் -* பாண்டரஸ்ய இத்யாதி. *அயோத்யாகாண்டே பௌராந்ப்ரதி தஶரதஃ, "உதம் ஶரீரம் க்ருத்ஸ்நஸ்ய லோகஸ்ய சரதாஹிதம்" இதி பூர்வார்த்தம். "வாண்டரஸ்ய" என்றத்தைப்பற்ற,* முத்தின் குடை *என்றது. 'போய்'-இதுவே யாத்ரையாய், காலைகதத்பராய், யாவத்காலம் ஸஞ்சரித்து என்றபடி. 'காயம்கழித்து' என்ற அநந்தரம், 'அவன்தாளிணைக்கீழ்ப்புகுங்காதலன்' என்கையாலே -* கேவலரையும் *ப்ரஹ்மாதிகளையும் வ்யாவர்த்திக்கிறதென்கிறார்,* இத்தைக்கழித்த இத்யாதி. *கீழ்வாக்யத்தால் பலிதம் -* அதா

* *மத்யஸ்தலமென்று த்வநி யென்பது அடையவளைந்தான்.*

பண்ணியிருத்தல், ப்ரயோஜநாந்தரங்களைக்கொள்ளுதல் செய்யாதே, அடிமைக்குப்பாங்கான ஶரீரத்தைப் பெற்று, தாய்முலைக்கீழேபோய் ஒதுங்கும் ஸ்தநந்தயப்ரஜைபோலே திருவடிகளின்கீழே ஒதுங்குவேனென்னும் அபிநிவேஶத்தையுடைய நான். [மாயமனிசரை] - உத்பத்தியோடே வ்யாப்தமான விநாஶத்தையுடையவர்களை. அதாவது - பாடத்தொடங்கின கவி முடிவதற்குமுன்னே முடியும் மநுஷ்யரை. [என்வாய்கொண்டு - என்சொல்லவல்லேன்] - கழுத்துக்குமேலே சொல்ல என்னிலும் இசைகிறதில்லை. [என்வாய்கொண்டு] - வேறே சிலர்வாக்காலே பாடினால் பாடலாம்; **“மந:பூர்வோ வாகுத்தர:”** (மந:பூர்வோவாகுத்தர:): அங்கே காதலைப்பண்ணிப் புறம்பே சிலரைக் கவிபாடப்போமோ? ஆசைப்படுவது ஒரு விஷயமாய், பேசுவது ஒருவிஷயமா யிருக்குமோ? எல்லா இந்த்ரியங்களுக்கும் அடி மநஸ்ஸிறே; அத்தை அநுவர்த்திக்குமத்தனையிறே அல்லாத கரணங்கள். இப்போது இப்படி சொல்லுகைக்கு ப்ரஸங்கமென்? என்னில்;- ப்ராப்தி ஒத்திருக்கப் புறம்பே சிலர் சிலரைக் கவிபாடக் காண்கையாலே, நான் முந்துறமுன்னம் இதில்நின்றும் தப்பப் பெற்றேனென்கிறார். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

வாய்கொண்டுமானிடம்பாடவந்த கவியேனல்லேன்
ஆய்கொண்டசீர்வள்ளல் ஆழிப்பிரான்எனக்கேயுளன்
சாய்கொண்ட இம்மையும்சாதித்து வானவர்நாட்டையும்
நீகண்டுகொள்ளென்று வீடுந்தரும்நின்றுநின்றே.

*ஆ.—(வாய்கொண்டு.)மநுஷ்யரைக்கவிபாடுகைக்கு ஈடல்லாத ப்ரக்ருதியாய்ப் பிறக்கப் பெற்றேன் ; ஸமஸ்தகல்யாணகுணோததியாய் ஶங்கசக்ரதரனாயிருந்த எம்பெருமான், தன்னுடைய பரமௌதார்யத்தாலே என்னுடைய கவிகளுக்குத் தன்னை விஷயமாகத் தந்தருளப்பெற்றேன்; இன்னமும் இப்படி இஹலோகத்திலே தன்னை எனக்கு அநுபவிக்கத் தந்தருளி, பின்னை ஸர்வகாலமும் திருநாட்டையும் கைக்கொள் என்று அத்திருநாட்டையும் எனக்குத் தந்தருளும் என்கிறார்.*

*ஒ.—ஒன்பதாம்பாட்டில், பரமோதாரனாயிருக்கிற எம்பெருமானாலே தன்னைக் கவி பாடுகையே ஸ்வபாவமாகப் பண்ணப்பட்டேனான எனக்கு இதரஸ்தோத்ரங்களில் அதிகாரமில்லையென்கிறார்.*

---

வது இத்யாதி. *மாயமனிசரை - முடியும்மநுஷ்யரை.* மாய்தல் - விநாசம். *சொல்லுகிறது வாயாலேயாயிருக்கச் செய்தே, ‘வாய்கொண்டு’ என்று விஶேஷிக்கிறதுக்குத் தாத்பர்யம் - கழுத்துக்குமேலே இத்யாதி.* இது சாடு. கழுத்துக்குமேலே - *அஹ்ருதயமாக. முடியானேயிற் கரணங்கள் ஆகையாலே இசைகிறதில்லையென்றபடி.* ‘என்வாய்’ *என்றதுக்கு - அவதாரிகையில் தாத்பர்யமொழியத் தாத்பர்யாந்தரம்* - வேறேசிலர் *இத்யாதி. தம்முடைய வாய்கொண்டு சொல்லவொண்ணாமைக்கு ஹேது - மந:பூர்வ: இத்யாதி.* அங்கே காதலைப்பண்ணி - *மநஸ் அங்கே ப்ரவணமாயிருக்க. அங்கே மநஸ்ஸு ப்ரவணமானால் இவர்களையும் சொல்லவொண்ணாதோ? என்ன,* ஆசைப்படுவது இத்யாதி. *மநஸ்ஸு பூர்வமாய் வாக்கு உத்தரமாகைக்கு அடியேது? என்ன,* எல்லா இந்த்ரியங்களுக்கும் *இத்யாதி.* இப்போது - *பரரை நிஷேதிக்கிற ப்ரகரணத்திலே.* இப்படிசொல்லுகைக்கு - *‘நான் பிறரை ஸ்துதியேன்’ என்று சொல்லுகைக்கு.* ப்ரஸங்கமென்? *என்றால்,-‘நீர்பிறரைக்கவிபாடும்’ என்று சொன்னாருண்டோ? என்னில். பிறரை நிஷேதிக்கிற ப்ரகரணத்திலே ஸ்வநிஷ்டோபதேசத்துக்குச் சேர்த்தியுண்டோ? என்றபடி.* பரிஹாரம் - ப்ராப்தி இத்யாதி. *கார்த்தார்த்யாநுஸந்தாநம் பண்ணுகிறாரென்றபடி.* ப்ராப்தி-ஸம்பந்தம். *காதலன் -* ஆசையையுடைய *நான். காதல்-*ஆசை. வேயின் *இத்யாரப்ய, மாயமனிசரை -* என் வாய்கொண்டு - *என் சொல்லவல்லேன் இத்யந்வய:.* (அ

[ஆய் கொண்ட என்று தொடங்கி] - ஸமஸ்தகல்யாணகுணாத்மகனைத் திருவாழி முத லான திவ்யாயுதங்களையுடையவன் பரமௌதார்யத்தாலே என்னுடைய கவிகளுக்கே தன்னை விஷயமாகத் தந்தருளினன். [சாய்கொண்ட என்று தொடங்கி] - மோக்ஷஸுகத்திலும் நன்ரும் படி இஹலோகத்திலே ஸ்வாநுபவத்தை எனக்குப் பண்ணித்தந்து ஸ்ரீவைகுண்டத்தை நீ கண்டு கொள் என்று கொண்டு அந்தமோக்ஷத்தையும் தரும்; பின்னையும் ஒன்றும் செய்யப்பெற்றிலோம் என்று மிறுக்குப்படாநிற்கும். [நின்று நின்றே] - கீழ்ச்சொன்னவை தருமிடத்து அடைவடைவே தரும் என்றுமாம்.

ப.—அநந்தரம், பரமபுருஷார்த்தப்ரதனனவன்தானே விஷயமாயிருக்க, இதர ஸ்தோத்ரத்துக்கு நான் அதிக்ருதனல்லேன் என்கிருர்.

வாய்கொண்டு - (ப்ராப்தவிஷயஸ்தோத்ரகரணமான) வாகிந்த்ரியத்தைக்கொண்டு, மானிடம் - (அப்ராப்தவிஷயமான) மநுஷ்யரை, பாட - பாடுகைக்கு, வந்த - வந்த, கவியேன் அல்லேன் - கவியானவன் அல்லேன்; ஆய் - (வேதாந்தங்களிலே) மீமாம்ஸிக்கப்பட்ட, சீர் - ஆநந்தாதி குணங்களை, கொண்ட - உடைய, வள்ளல் - மஹோதாரனாய், ஆழி - (கவிபாடுவார்நெஞ்சு தன் வசத்திலேயாம்படி நியமித்துக்கொடுக்கும்) திருவாழியையுடைய, பிரான் - மஹோபகாரகன், எனக்கே உளன் - எனக்கே அஸாதாரணவிஷயமாயுளன்; (அவன்தான்), சாய்கொண்ட - அதிசயி தௌஜ்ஜ்வல்யத்தையுடைத்தான, இம்மையும் - ஐஹிகமான அர்ச்சாவதாராநுபவத்தையும், சாதித்து - உண்டாக்கித்தந்து, வானவர் நாட்டையும் - நித்யஸூரிகளதான பரவிபூதியையும், (ஸேனைமுதலியாரைப்போலே), நீ கண்டுகொள் என்று - நீ ஆராய்ந்து நிர்வஹியென்று, வீடும் - (ஸ்வகைங்கர்யஜநிதமான) மோக்ஷாநந்தத்தையும், நின்றுநின்று - க்ரமத்திலே நின்றுநின்று, தரும் - கொடுக்கும். சாய்கொண்ட என்று தொடங்கி-'உஜ்ஜ்வலமான ஐஹிகைஸ்வர்யத்தையும் ஸ்வர்க்காதி ஸுகத்தையும் மோக்ஷத்தையும் தரும்' என்பாரு முளர்.

இ.—ஒன்பதாம்பாட்டில், பரமோதாரனை அவன் என்கவிக்குத் தன்னை விஷய மாக்கிவைத்தபின்பு இதரஸ்தோத்ரங்களுக்கு அதிகாரியல்லேன் என்கிருர்.

[வாய்கொண்டு இத்யாதி] - "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய" என்கிறபடியே அவன் தன்னை ஏத்துகைக்குத் தந்த வாக்கைக்கொண்டு க்ஷுத்ரரைக் கவிபாடப் பிறந்தேனல்லேன். "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்கிற விஷயத்தைக் கவிபாடப்போமோ? என்னில்,—தன்னை எனக்கு விஷயமாக்கித்தந்தால் கவிபாடக் குறை என்? என்கிருர். [ஆய்கொண்ட சீர்] - ஆயப்பட்ட சீர்; ஹேயப்ரத்யநீககல்யாணகுணகன். [வள்ளல்] - பரமோதாரன். [ஆழிப்பிரான்] - இக்குணங்களைக் காத்தூட்டவல்ல பரிகரத்தையுடையவன். [எனக்கே உளன்] - என்கவிக்கே தன்னை விஷய மாக்கினன். [சாய்கொண்ட இத்யாதி] - ஒளியையுடைத்தான ஐஹிகஸுகத்தையும் தந்து. சாய் - ஒளி. கொள்கை - உடைத்தாகை. மோக்ஷஸுகத்திலும் நன்ரும்படி ஐஹிகத்தில் ஸ்வாநு பவமே யாத்ரையாம்படி பண்ணித்தருகை. [வானவர் நாட்டையும்] - அத்தேசம் நித்யஸூரி கள் இட்டவழக்காயிருக்கை; குடியிருப்பாரோபாதியாயிற்று ஸ்ரீவைகுண்டநாதனுக்கு. [நீ கண்டு கொள் என்று] - "க்ருதம் உபதர்ஶணம்" என்று பண்டாரத்தை வளர்த்துவைத்துப் பெருமாள் மீண்டு எழுந்தருளினபோது ஸ்ரீபரதாழ்வான் காட்டிக்கொடுத்தாற்போலே, நித்யஸூரிக ளோபாதி இவர்கையிலே காட்டிக்கொடுக்கை. அபூர்வலாபமன்றிக்கே இழந்தது கண்டானயிருக்கை என்றுமாம். [வீடும்தரும்] - கைங்கர்யஸுகத்தையும் தரும். "ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந்." [நின்று நின்றே] - 'இப்படி முழுக்கக்கொடுத்தாலும் இவனுக்கு என்செய்தோம்? என்று குறைப் பட்டிருக்கும்' என்று நம்முடைய பூர்வர்கள் நிர்வஹிப்பர்கள். ஒருதமிழன் 'அடைவடைவே'

*என்றான்; முற்பட ஐஹிகத்திலே அநுபவிப்பித்தும் பின்பு ருசிகாயிசேஷத்தைக் காட்டிக் கொடுத்தும் பின்பு கைங்கர்யரஸத்தைக் கொடுத்தும். இவை க்ரமேணத்தில் ஸாத்மிக்க ஸாத்மிக்கத் தரும் என்றுமாம்.*

௯.—ஒன்பதாம் பாட்டு. பரமோதாரனானவன் என்கவிக்குத் தன்னை விஷயமாக்கி வைத்தபின்பு இதரஸ்தோத்ரத்துக்கு அதிகாரியல்லேன் என்கிறார்.

[வாய்கொண்டு இத்யாதி] - வாய்வந்தபடி சொல்லவல்லார் இவரேயிறே. **"ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய"** (ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய)-'ஐயரையும், ஆய்ச்சியையும் அநுவர்த்தித்துப் பெருமாள் காடேற எழுந்தருளாநின்றார்; நானும் அவரை அநுவர்த்தித்துப் போகிறேன்' என்று இளைய பெருமாள் அறிவிக்க, உமக்கு முடிவேணுமென்று அபேக்ஷையுண்டாகில், 'முடிசூடுகைக்கு யோக்யனாயிருப்பானொருவன் வேணும்' என்றதுக்கு ஈடாக நோன்பு நோற்றேனே? அவரை அநுவர்த்திக்கைக்காகவன்றோ நான் உம்மைப் பெற்றது; **"ஸ்வநுரக்தஸ் ஸுஹ்ருஜ்ஜநே ராமே"** (ஸுஹ்ருஜ்ஜநே ராமே-ஸ்வநுரக்தஃ)-உபதேசநிரபேக்ஷமாகப் பெருமாள்திருவடிகளுக்கு நீரே பரிவரிறே; நான் இன்று இருந்து சொல்லவேண்டுவதொன்று உண்டோ? அடிமையிலுண்டான ருசி செவி கண்ணுகைக் கண்டு அடிமை செய்யுமவரிறே. அன்றிக்கே, **"ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே"** (ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே) - "கருமுகைமாலையை வெயிலிலேயிட்டாற்போலே, பெருமாள் தம்மையொருமார்யம்பாராதே பித்ரநுவர்த்தநம்பண்ணிக் காட்டிலே போகாநின்றார்; என்படுகிறதோ?" என்று வயிறெரிந்திருக்கிற ஸுஹ்ருஜ்ஜநங்களுக்கு நல்லீரிறே. ஸுஹ்ருஜ்ஜநமென்கிறது - திருத்தாயார் தொடக்கமான படைவீட்டிலுள்ளாரை. அவர்களுக்கு வேர்ப்பற்றான இவரை நோக்கித் தாரீரென்றும். **"ராமே"** (ராமே) - நடக்கை மிகையாம்படி, வெறுமனேயிருந்தாலும் ஆகர்ஷகமான வடிவழகையுடையவர். **"ராமேப்ரமாதம்மாகார்ஷீஃ"** (ராமேப்ரமாதம்மாகார்ஷீஃ) - **"பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்தஃ"** (பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்தஃ) என்று-அவதாரகாலமே தொடங்கி அந்வயத்தில் பரித்து

*ஒன்பதாம்பாட்டு - வாய்கொண்டு இத்யாதி. 'ஆய்கொண்டசீர் வள்ளலாழிப்பிரானெனக்கே யுளன், ஆனபின்பு - வாய்கொண்டு மானிடம்பாடவந்த கவியேனல்லேன்' என்று விவக்ஷித்து அவதாரிகை - பரமோதாரன் இத்யாதி.*

*பாடுவது வாய்கொண்டேயாயிருக்க,'வாய்கொண்டு'என்று விசேஷித்ததுக்கு ரஸோக்தியாக ஸாவம்-வாய்வந்தபடி இத்யாதி. எத்தனைக்கு உறப்பாக வாக்கு ஸ்ருஷ்டமானபடியே என்று ஸ்வஸாரார்த்தம்; வாய்க்குவந்தபடியென்று சாடு. "விவிக்தாரெளஸாவஸ்து" இத்யாதிப்படியே அவனை ஸ்துதிக்கக் கடவ வாயைக்கொண்டு என்றபடி. "ஸாஜிஹ்வாயாஹரிம்ஸ்தௌதி" இறே. எத்தனைக்கு உறப்பாக வாக்கு ஸ்ருஷ்டமாயிற்றென்கிறதுக்கு த்ருஷ்டாந்தம் - ஸ்ருஷ்டஸ்த்வம் இத்யாதி. "ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாயஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே ராமேப்ரமாதம்மாகார்ஷீஃ புத்ர ப்ராதரிகச்சதி" இத்யயோத்யாகாண்டே லக்ஷ்மணம்ப்ரதி ஸுமித்ரா. "ஸ்ருஷ்டஸ்த்வம்" என்றதுக்கு அர்த்தம் - ஐயரையும் இத்யாதி. அபேக்ஷையுண்டாகில் - எனக்குஅபேக்ஷையுண்டாகில்."ஸ்வநுரக்தஃ" என்றதே,"ஸு" என்றுவிசேஷித்ததுக்கு ஸாவம்-உபதேச இத்யாதி. அப்படி பெருமாளுக்குப் பரிவரோ? என்ன, ரஸோக்தியாக உத்தரம் - அடிமையில் இத்யாதி. ருசி - ருசியாலே. செவி கண்ணுகை - திருவநந்தாழ்வானிறே; சக்ஷுஶ்ரவாவிறே. "ஸுஹ்ருஜ்ஜநேராமே-ஸ்வநுரக்தஃ" என்று அந்வயித்து, உபதேச இத்யாதி வாக்யத்தாலே அர்த்தம்சொல்லி, "ஸுஹ்ருஜ்ஜநே-ஸ்வநுரக்தஃ। ராமே-ப்ரமாதம்மாகார்ஷீஃ" என்று அந்வயித்து இரண்டாமர்த்தம்-அன்றிக்கே இத்யாதி. ரமயதீதி - ராமஃ என்கிற வ்யுத்பத்தியைப்பற்ற, நடக்கைமிகை இத்யாதி. 'ப்ரமாதம்' என்றதுக்கு - ஹிம்ஸையாகவன்றிக்கே, அநவதாநமாக அர்த்தம் அருளிச்செய்கிறார்-பால்யாத் இத்யாதி.*

வ்யதிரேகத்தில் யரியாதவர்க்கு, இன்றாக ஒருப்ரமாதம் புதருகைக்கு ஶங்கையில்லையிறே; ஸம்பா விதமான தோன்றைச் சொல்லுகிருளாகவேணுமே. "ப்ராதரிகச்சதி" (ப்ராதரிகச்சதி) - அவர் உம்முடையமுன்னே நடப்பர்கிடீர்; அவ்வழகிலே கண்வைத்து, நீர் அதிகரித்ததுக்குச் சோர்வுபிற வாதபடி குறிக்கொள்ளும். "அக்ரதஃப்ரயயௌ" (அக்ரதஃப்ரயயௌ) - நடைச்சக்ரவத்துப் பிடிக்கலாம்படி. "ஆடல்பாடல்" இத்யாதி. [வாய்கொண்டு இத்யாதி] - அவன் தன்னையேத்து கைக்குத் தந்த வாயைக்கொண்டு க்ஷுத்ரரைக் கவிபாடுகைக்குப் பிறந்தவனல்லேன். நான் பிற ரைக் கவிபாடினுல் என்னுடைய ஸ்ருஷ்டி ப்ரயோஜநம் அவன் பேற்றாகும்படியேன்? ஸ்வமுத் திஶ்யவிறே ஸ்ருஷ்டி. [ஆய்கொண்ட இத்யாதி] - நீர் 'அவனைக் கவிபாடக்கடவேன்' என்றிருந் தாலும், வேதங்களும் "யதோவாசோநிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்று மீளு கிற விஷயமன்றோ? கவிபாடப் போமோ? என்ன, அவன் "பக்தாநாம்" (பக்தாநாம்) என்கிறபடி யே தன்னை எனக்கு ஆக்கிவைத்தான்; எனக்குக் கவிபாடக் குறையேன்? என்கிருர். [ஆய்கொண்ட சீர்] - ஆயப்பட்ட சீர். ஹேயப்ரத்யநீக கல்யாண குணங்கள். [வள்ளல்] - பரமோதாரன். [ஆழிப் பிரான்] - இக்குணங்களைக் காத்தூட்டவல்ல பரிகரத்தையுடையவன். [எனக்கே உளன்] - என் கவிக்கே தன்னை விஷயமாக்கினுன். [ஆழிப்பிரான் இத்யாதி] - தானும் தன்பரிகரமுமாயிருக்கிற இருப்பை எனக்குக் கவிபாடலாம்படி எனக்கு விஷயமாக்கினுன். * "வலக்கையாழி" இத்யாதி.

[சாய்கொண்ட இம்மையும் சாதித்து] - ஒளியையுடைத்தான ஐஹிகலோகத்தையும் தந்து. சாய் - ஒளி. கொள்கை - உடைத்தாகை. மோக்ஷலோகத்திலும் நன்றாம்படி ஐஹிகத்திலே ஸ்வாநுபவமே யாத்ரையாம்படி பண்ணித்தருகை. [சாதித்து] - ஐஹிகங்களோடு மேலுள்ளவற்

---

"ப்ரதி- ப்ராஞ்ஜலிர்ஜாஷீஃ" இத்யந்வயஃ. "ப்ராஞ்ஜலிர்நவயாநதா". சோர்வு - ப்ரச்யுதி. அப் படி நடை ஆகர்ஷகமாயிருக்குமோ? என்ன, அக்ரதஃ இத்யாதி. 'ப்ர' என்கிற உபஸர்க்கார்த்தம் - நடைச்சக்ர வத்து இத்யாதி. ப்ரகர்ஷேண யயௌ என்றபடி. நடைச்சக்ரவத்துப்பிடிக்கையாவது - நடைச்சக்ரவர்த்தி வந்தானென்று விருதுபிடிக்கவேண்டும்படி யிருக்கை. ஸ்வாதாந்தரம் - ஆடல்பாடல் - இத்யாதி; 'உலாவி புலாவி' என்றதிலே நோக்கு. ஆடல்பாடலவை மாறினர்தாமே - ஆடலும் பாடலுமாகிற அவற்றைத் தவிர்ந்தார்க ளித்யர்த்தஃ. பெரியாழ்வார்திருமொழி - மூன்றாம்பத்து, ஆறாந்திருமொழி, நாலாம்பாட்டு - "தேனுகன்" இத் யாதி. கீழ் பரக்க உபபாதித்ததால் பலிதத்தை "வாய்கொண்டு" இத்யாதிக்கு ஶப்தார்த்தமாக அருளிச்செய் கிருர் - அவன் தன்னை இத்யாதி. ஏத்துகைக்கு ஸ்ருஷ்டமான வாயைக்கொண்டு க்ஷுத்ரரைக் கவிபாடினுலோ? என்ன, நான் பிறரை இத்யாதி. ஸ்ருஷ்டிப்ரயோஜநம் ஸகலமல்லாபமோ? என்ன, ஸ்வம்உத்திஶ்ய இத்யாதி. "[illegible]" இதி ஸ்ரீரங்கராஜஸ்தவே. "அக்ரதஃப்ரயயௌராமஃ ஸீதா மத்யே ஸுமத்யமா । ப்ருஷ்டதஸ்து தநுஷ்பாணிர்லக்ஷ்மணோநுஜகாம ஹ" இத்யாரண்ய காண்டே. "[illegible]" இதி பாலகாண்டே. கவி பாடப்போமோ? என்ன இதி - கவிபாடலாம்படி ஸுலபனுயிருக்குமோ? இதி பாவஃ. 'எனக்கேயுளன்' என் றத்தைக் கடாக்ஷித்து உத்தரம் - அவன் பக்தாநாம் இத்யாதி. ஜிதந்தாயாம். "நதேரூபம்" இத்யாதி. 'ஆழிப்பிரான்' என்றத்தை "ஆய்கொண்டசீர்" என்றத்தோடே கூட்டி பாவம் - இக்குணங்களை இத்யாதி. காத்தூட்டுகை - காத்தநுபவிப்பிக்கை. இக்குணங்களை அநுபவிக்குமிடத்தில் விரோதியை வாராமல் காத் தூட்டவல்ல பரிகரத்தையுடையவனென்றபடி. 'ஆழிப்பிரான் - எனக்கேயுளன்' என்று மேலேகூட்டி பாவம்- தானும் இத்யாதி. அப்படிபாடினுரோ? என்ன, வலக்கையாழி இத்யாதி. "மலக்குநாவுடையேற்கு" என்ற திலே நோக்கு.

சாய் - சாயை, ஒளி. இம்மை-ஐஹிகலோகம். ஐஹிகலோகத்துக்கு ஒளியேது என்ன, மோக்ஷலோகத் திலும் இத்யாதி. பலிதம் - ஐஹிகங்களோடு இத்யாதி. நாடு ஸம்ஸாரிகளதானுல் இவனுக்கு ஸ்த்தாநமேது?

* திருவாய்மொழி - ௪, ௪, ௬.

ரோடு வாசியற அவனே ஸாதநமாகக்காணும் இவர்பேறுவது. [வானவர்நாட்டையும்] - குடியிருப்பாரோபாதியாயிற்று, பரமபதத்தில் ஸ்ரீவைகுண்டநாதனுக்கு; ப்ராப்திதேசம் நித்யஸூரிகள் இட்ட வழக்காயிருக்கும். **"பவத்விஷயவாஸிந:"** (பவத்விஷயவாஸிந:) என்னுமதுவும் தன்பக்கலிலேயாயிருக்கிறது. [நீ கண்டுகோள் என்று] - **"க்ருதம் தஸ்ய குணம் மயா"** (க்ருதம்தஸ்யகுணம் மயா) என்று ஸ்ரீபண்டாரத்தை வளர்த்துவைத்து, பெருமாள் மீண்டெழுந்தருளினபோதே ஸ்ரீபரதாழ்வான் காட்டிக்கொடுத்தாற்போலே. வானவர்நாட்டையும் நீ கண்டுகோள் என்கையாலே - முன்பே அங்கே உளரான நித்யஸூரிகளோடு இன்றுபுக்கவனோடு வாசியற்றிருக்கை. அன்று ஈன்ற கன்றின்பக்கல் வாத்ஸல்யத்தாலே முன் ஈன்ற கன்றைக் காற்கடைக்கொள்ளும் ஸுரபியைப் போலே. **"த்வயி கிஞ்சித் ஸமாபந்நே"** (த்வயிகிஞ்சித்ஸமாபந்நே) இத்யாதிவத். [என்று] - இப்படியே ஆதரத்தோடே சொல்லி. [வீடும்தரும்] - கைங்கர்யஸுகத்தைத் தரும்; **"மோக்ஷோ மஹாநந்த:"** (மோக்ஷோமஹாநந்த:). [நின்றுநின்றே] - 'இப்படி முழுக்கக்கொடுத்தாலும் 'இவனுக்கு நாம் ஒன்றும் செய்யப்பெற்றிலோம்' என்று **"ருணம் ப்ரவ்ருத்தமிவ மே"** (ருணம்ப்ரவ்ருத்தமிவமே) என்று திருவுள்ளத்தாலே மிறுக்குப்பட்டு நிற்கும்' என்று நம் ஆசார்யர்கள் நிர்வஹிக்கும்படி. ஒருதமிழன் 'அடைவடைவே தரும் சொன்னவற்றை' என்றான். முதல் ஐஹிகத்தில் அநுபவிப்பித்து, பின்பு ஒருதேச விசேஷத்தைக் காட்டிக்கொடுத்து, பின்பு கைங்கர்யஸுகத்தைக் கொடுக்குமென்று. அதவா, சாய்கொண்ட இத்யாதிக்கு - ஐஹிகத்தில் ஸ்வாநுபவஸம்ருத்தியையும், தேச

---

என்ன. குடியிருப்பார் இத்யாதி. குடியிருப்பார் - கூட்டுக்குடியிருப்பார். 'நித்யவிபூதி ஸூரிகளது' என்னுமிடத்தில் ப்ரமாணம் - "தேவாநாம் பூரயோத்யா" இதி ச்ருதி என்று அருளிச்செய்வர். ஸர்வேச்வரனைக்குறித்து சேஷபூதர் சொல்லும் பாசுரம் சேஷிக்குமுண்டாயிருக்கிறது என்கிறார்-பவத்விஷயவாஸிந: இத்யாதி: "தேவம் பவந்தாம் ரக்ஷ்யா பவத்விஷயவாஸிந: । நகரஸ்தா வநஸ்தா வா த்வம் நோ ராஜா ஜநேச்வர:" இத்யாரண்யகாண்டே ராமம்ப்ரதி முநய:. "பவத்விஷயவாஸிந:" இத்யாதிக்கு - ஸூரிகளுடைய தேசவாஸித்வமும் தத்ரக்ஷ்யத்வமும் விவக்ஷிதம். 'கொடுத்து என்னாதே' 'கண்டுகொள்' என்றதுக்கு பாவம் - இவனதானத்தையே இவனுக்குக்கொடுத்தாற்போலே யிருக்கிறதென்று. இத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - க்ருதம்தஸ்யகுணம் இத்யாதி. "ஜவேக்ஷிதாம் கோஷ்டாகாரம் கோஷாகாரம் பலம் ச மே । பவதஸ்தேஜஸா ஸர்வம் க்ருதம் தஸ்ய குணம் மயா" இதி யுத்தகாண்டே ராமம்ப்ரதி பரத:'வானவர்நாடு'என்றுவைத்து'நீகண்டுகொள்'என்றது நித்தச்சேதநனுக்குமுன்பேஉண்டானத்தைக் காட்டிக்கொடுக்கிறதாகச் சொல்லக்கூடுமோ? என்ன-வானவர்நாட்டையும் இத்யாதி. வாசியற்றிருக்கை இதி வாசியற்றிருக்கைக்கு அடி - ஸூரிகளிற்காட்டில் இவன்பக்கலுண்டான வாத்ஸல்யாதிசயமென்று கருத்து. பழையவர்களிற்காட்டில் இன்றுவந்தவன்பக்கலிலே வ்யாமோஹமுண்டாகக்கூடுமோ? என்ன, அன்று ஈன்ற இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - த்வயிகிஞ்சித் இத்யாதி. "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம" இதி யுத்தகாண்டே ராவணமகுடபங்காநந்தரே ஸுக்ரீவம்ப்ரதி ராம:. 'வீடு' என்று - மோக்ஷமாய் கைங்கர்யஸுகத்தைச் சொல்லுகிறது. வீடு என்றால் ஸுகத்தைக் காட்டுமோ? என்ன, மோக்ஷ இத்யாதி. "முக்திர் மோக்ஷோ மஹாநந்த:" இதி நிகண்டு:. 'நின்றுநின்று' என்றதுக்கு மூன்று அர்த்தம்: மூன்றிலொன்று - இப்படிமுழுக்க இத்யாதி. மிறுக்குப்பட்டு - க்லேசப்பட்டு. மோக்ஷாதிகளைக் கொடுத்த அநந்தரம் 'நின்றுநின்று' என்கையாலே - திருவுள்ளத்திற் குறைபோடே நின்றமை தோன்றுகிறதென்றபடி. "கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம் । ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி" இத்யுத்யோகபர்வண்யேகோநபஞ்சாசே த்ருதராஷ்ட்ரம்ப்ரதி ஸஞ்சயோக்த க்ருஷ்ண வசநம். இரண்டாமர்த்தம் - **ஒருதமிழன்** இத்யாதி. **அடைவடைவே** - க்ரமேண க்ரமேண. பூர்வவாக்யவிவரணம் - **முதல் ஐஹிகத்தில்** இத்யாதி. ஐஹிகஸுகமாவது - இங்கேயிருந்து அநுபவிக்கிற பகவதநுபவஸுகம். மூன்றாமர்த்தம் - **அதவா** இத்யாதி. மானிடம்பாடவந்த கவியேனல்லேன் - மநுஷ்யரைக் கவிபாடுகைக்குப் பிறந்த

விஶேஷப்ராப்தியையும், கைங்கர்ய ஸுகத்தையும் தருமிடத்தில், ஸாத்மிக்க ஸாத்மிக்கத் தருமென்றுமாம். (௯)

## பத்தாம் பாட்டு.

நின்றுநின்றுபலநாளுய்க்கும் இவ்வுடல்நீங்கிப்போய்ச்
சென்றுசென்றாகிலுங்கண்டு சன்மங்கழிப்பானெண்ணி
ஒன்றியொன்றிஉலகம்படைத்தான் கவியாயினேற்கு
என்றுமென்றும் இனிமற்றொருவர்கவியேற்குமே?

**ஆ.**—(நின்று.) என்றேனுமாக ஒருகாலம் நம்மையறிந்து, நின்றுநின்று பலநாள் இஸ்ஸம்ஸாரத்திலே இவ்வாத்மாக்களை ப்ரவேஶிப்பிக்கும் இவ்வுடலத்தை நீங்கிப்போய் இவ்வாத்மாக்களை ஸம்ஸாரத்தைக்கழிக்கவேணுமென்று பார்த்தருளி, ததர்த்தமாக அவஹிதனாய்க்கொண்டு ஜகத்ஸ்ருஷ்டிபண்ணியருளின பரமகாருணிகனுடைய கவியான எனக்கு மற்றொருவரைக் கவிபாடப் போருமோ? என்கிறார்.

ஒ.—பத்தாம் பாட்டில், ஸர்வேஶ்வரன்கவியான எனக்கு இதரஸ்தோத்ரகரணமானது அநநுரூபமன்று என்கிறார்.

பத்தாம்பாட்டு எல்லாவற்றுக்கும்—நெடுங்காலம் கூடவாகிலும் நின்றுநின்று பலநாளும் ஆத்மாவுக்கு பாதகமான ஶரீரத்தை விட்டுப்போய் இனிப்பிறவாதபடி இவ்வாத்மாக்களைப்பண்ணவேணுமென்று எண்ணி அதிலே மிகவும் ஒருப்பட்டு லோகத்தையெல்லாம் உண்டாக்கினவனுடைய கவியான எனக்குக் காலமுள்ளதனையும் வேறுசிலரைக் கவிபாடுகை தகுதியன்று. [சென்று சென்றாகிலும் கண்டு] - நெடுநாள் கூடவாகிலும் தன்னைக்கண்டு என்றுமாம்.

ப.—அநந்தரம், ஸ்துத்யர்த்தமான கரணகளேபரப்ரதனான அவனுக்குக் கவியான எனக்கு வேறொருவரைக் கவிபாடுகை அநநுரூபமன்று என்கிறார்.

பலநாள் - காலமுள்ளதனையும், நின்றுநின்று - இடைவிடாதேநின்று, உய்க்கும் - (தன் வஶத்திலே சேதநனை) ஆக்கும், இவ்வுடல் - இஶ்ஶரீரத்தை, நீங்கிப் போய் - விட்டுப்போய், சென்றுசென்றாகிலும் - நெடுங்காலங்கழித்துச்சென்றாகிலும், கண்டு - (இச்சேதநன் தன்னை) அபரோக்ஷித்து, சன்மம் கழிப்பான் - ஜந்மத்தைக் கழிக்கைக்காக, எண்ணி - திருவுள்ளம்பற்றி, ஒன்றியொன்றி - ஸ்ருஷ்டிதோறும் நெஞ்சுபொருந்திப்பொருந்தி, உலகம் படைத்தான் - லோகத்தை ஸ்ருஷ்டித்தவனுடைய, கவியாயினேற்கு - கவியான எனக்கு, இனி - இனி, என்றுமென்றும் - காலமுள்ளதனையும், மற்றொருவர் கவி - மற்றொருவரைக் கவிபாடுகை, ஏற்குமே - தகுதியோ?

**இ.**—பத்தாம் பாட்டில், ஸர்வேஶ்வரன் கவியான எனக்கு இதரஸ்தோத்ரகரணம் அநநுரூபமன்று என்கிறார்.

[நின்று நின்று இத்யாதி] - பலநாள் நின்றுநின்று அநாதிகாலம் இடைவிடாதே. [உய்க்கும்] - அநுபவிப்பிக்கும்; பாதிக்கும். [இவ்வுடல்] - த்ருஷ்டிவிஷம்போலே பயஸ்தாநமா

---

கவியானவனல்லேன். எனக்கேயுளன் - கவிபாடுகைக்கு எனக்கே அஸாதாரணவிஷயமாயுள்ளவன். **சாதித்து- தந்து.** ஆய்கொண்டசீரித்யாரப்ய, நீ கண்டுகொள்ளென்று - நின்றுநின்று - வீடும்தரும்; **ஆன்பின்பு - வாய் கொண்டு மானிடம்பாடவந்த கவியேனல்லேன் இத்யந்வய:.** (௯)

யிருக்கிறபடி. [நீங்கிப்போய்] - விட்டுப்போய். [சென்று சென்றாகிலும்] - நெடுங்காலம் கூட வாகிலும். [கண்டு] - நம்மை இவன் கண்டு. [சன்மங்கழிப்பான்] - ஜந்மஸம்பந்தம் அறும்படி பண்ணவேணுமென்று. [எண்ணி] - மநோரதித்து. [ஒன்றி ஒன்றி உலகம் படைத்தான்] - ஸ்ருஷ்டிகள் பலித்ததில்லையென்று கைவாங்காதே மிகவும் ஒருப்பட்டு லோகங்களை உண்டாக்கினான். [கவியாயினேற்கு] - கவியாயினேனுக்கு; அவன் ஸ்ருஷ்டி பலித்து அநந்யார்ஹனான எனக்கு. [என்றும் என்றும் இனி மற்றொருவர்கவியேற்குமே] - காலதத்த்வமுள்ளதனையும் வேறுசிலருடைய கவியில் எனக்கு அந்வயமுண்டாகை தகுமோ? வேறுசிலர்க்குக் கவியாக நான் தகுவேனோ? என்றுமாம். இப்போது பகவத்குணங்களைப் பாடி மேலும் "ஸுஹ்ருதேஸ்ஸுஹ்ருதேஸ்ஸுஹ்ருதேஸ்ஸு, வனதஸ்வாமிமாயணாஸ்து" என்று பாடப்புகுகிற நான் வேறுசிலர்க்குத் தகுவேனோ? சென்று சென்றாகிலும் கண்டு நின்றுநின்று பலநாளுய்க்கும் இவ்வுடல் நீக்கிப்போய்ச் சன்மம் கழிப்பான் எண்ணி ஒன்றி ஒன்றி உலகம்படைத்தான் கவியாயினேற்கு என்றும்என்றும் இனி மற்றொருவர்கவி ஏற்குமே?

ஈடு.—பத்தாம்பாட்டு. ஸர்வேஶ்வரன்கவியான எனக்கு இதரஸ்தோத்ரகரணம் அநுரூபமன்று என்கிறார்.

[நின்றுநின்று இத்யாதி] - அநாதிகாலம் இடைவிடாதே, [உய்க்கும்] - செலுத்தும். இவ்வாத்மாவுக்கு நாயகத்வேந நடத்தும். [இவ்வுடல்] - கூற்றங்கண்டாற்போலே பயாவஹமாயிருக்கிறபடி. [இவ்வுடல்] - வர்த்தமாநஶரீரத்தையும், அத்தோடு ஸஜாதீயமான முன்புள்ள ஶரீரங்களையும். முன்புள்ளவையும், வர்த்தமாநம்போலே ஒருபோகியாய்த் தோற்றுகிறதாயிற்று இவர்க்கு. [நீங்கிப்போய்] - விட்டுப்போய். [சென்றுசென்றாகிலும்] - ஒன்றல்லாவொரு ஜந்மத்திலேயாகிலும். [கண்டு] - நம்மை இவன் கண்டு. [சன்மங்கழிப்பான் எண்ணி] - ஜந்மஸம்பந்தமறும்படி பண்ணவேணுமென்று மநோரதித்து. அன்றியே, சென்றுசென்றாகிலும் கண்டென்று - ஒரு சொல்லாய், நெடுங்காலங்கூடவாகிலும் நம்மையறிந்து இவை ஜந்மங்களிற் புகாதபடி பண்ணவேணுமென்று சிந்தித்து

---

பத்தாம்பாட்டு - நின்றுநின்று இத்யாதி. 'உலகம்படைத்தான் கவியாயினேற்கு - மற்றொருவர்கவியேற்குமே' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஸர்வேஶ்வரன் இத்யாதி.

'பலநாள் - நின்று நின்று - உய்க்கும்' என்று அந்வயித்து அர்த்தம் - அநாதிகாலம் இத்யாதி. வீப்ஸையாலே - ப்ரதிக்ஷணம் ஒருக்ஷணம் விச்சேதமில்லையென்று தோன்றுகிறது. விவரணம் - இவ்வாத்மாவுக்கு இத்யாதி. 'இ' என்றதுக்கு பாவம் - கூற்றம் இத்யாதி. கூற்றம் - ம்ருத்யு. 'இவ்வுடல்' என்று கேவலமாகச் சொன்ன வர்த்தமாநசரீரம் - முன்புள்ளவற்றுக்கும் உபலக்ஷணமென்கிறார் - வர்த்தமாந இத்யாதி. ஶரீரங்களையும் சொல்லுகிறதென்று கூட்டுவது. 'இவ்வுடல் நீங்கிப்போய்' என்றதுக்கு - வர்த்தமாநமான இஶ்ஶரீரம் நீங்கிப்போயென்று இவ்வளவே கொள்ளலாயிருக்க, முன்புள்ள சரீரங்களையும் என்கிறது - ஈஶ்வரன் ஸ்ருஷ்டிக்கிறபோதெல்லாம் 'இவ்வுடலைக்கொண்டு ஸ்வசரணகமலஸமாஶ்ரயணத்தைப்பண்ணி இவ்வுடலைக் கழிப்பானாக வேணும்' என்று ஸங்கல்பித்திறே கரணகளேபரங்களைக் கொடுப்பது; ஆகையாலே 'இவ்வுடல்' என்று - முன்புள்ள சரீரங்களுக்கெல்லாம் உபலக்ஷணமாகவேணுமென்னுமத்தைப் பற்ற. யத்வா, மேலேயும் 'சன்மம் கழிப்பானெண்ணி' என்றிருக்கையாலே, அத்தோடு 'இவ்வுடல் நீங்கிப்போய்' என்றது புநருக்தமாகாமைக்காக, 'சன்மம் கழிப்பான்' என்கிறது-இனிமேலுண்டாகக்கடவ ஶரீரம் கழிப்பானென்றாகவேணுமே: ஆகையாலே, 'இவ்வுடல்' என்று முன்புள்ள ஶரீரங்களையும் சொல்லுகிறதென்றுமாம். இத்தால் - முன்புள்ள ஶரீரங்கள், வர்த்தமாந ஶரீரம், மேலுண்டாகக்கடவ ஶரீரம் இவற்றையெல்லாம் கழிப்பான் இச்சேதநனென்று ஈஶ்வரன் ஸங்கல்பித்து இவற்றை ஸ்ருஷ்டிக்குமென்றபடி. சன்மங்கழிப்பானெண்ணி - ஜந்மத்தைக் கழிக்கைக்காக மநோரதித்து. முன்புள்ள ஶரீரங்களையும் 'இவ்வுடல்' என்று சொல்லும்படியென்? என்ன, முன்புள்ளவையும் இத்யாதி; ஜ்ஞாநவைஶத்யத்தாலே யென்றபடி. ஒருபோகியாக - ஏகபோகமாக. சென்று சென்றாகிலும் – ஒன்றல்லாவொருஜந்மத்திலேயாகிலும் என்னுதல்; அன்றிக்கே, சென்றுசென்றாகிலும் – என்று முழுச்சொல்லாய், நெடுங்காலங்கூடவாகிலும் என்னுதல். கண்டு-அறிந்து. சென்றுசென்றாகிலும் கண்டு என்று

என்றுமாம். [ஒன்றியோன்றி யுலகம்படைத்தான்] - "சோம்பாதிப்பல்லுருவையெல்லாம் படர்வித்த வித்தா" என்கிறபடியே, ஒருகால் ஸ்ருஷ்டித்து பலியாவிட்டால் சோம்பிக் கைவாங்காதே, ஒருப்பட்டு ஒருப்பட்டு லோகங்களை ஸ்ருஷ்டித்தவனுடைய; கர்ஷகன் ஒருகால் பயிர்செய்து பதர்த்தால் பின்பும் பயிர்தன்னையே செய்யுமாபோலே, இவனும் 'ஒருநாளல்லாவோருநாளாகிலுமாம்' என்றிறே ஸ்ருஷ்டிப்பது; பத்தியுழவன் பழம்புனமிறே இதுதான். ஒருநாளல்லாவோருநாளாகிலும் நம்மையறிந்து, பலநாளும் இடைவிடாதே இவ்வாத்மாவுக்கு [illegible]கமாய்க்கொண்டு நடத்துகிற இம்ஶரீரத்தை விட்டுப்போய் இனி இவ்வாத்மாக்கள் பிறவாதபடி பண்ணவேணுமென்று மநோரதித்து, ஒன்றியோன்றி உலகம்படைத்தானாயிற்று. [உலகம்படைத்தான் கவியாயினேற்கு] - அவன் எதிர்சூழல்புக்குத் திரிந்து பண்ணின க்ருஷி பலித்து, அவனுக்குக் கவியாகப்பெற்ற எனக்கு. [என்றும் என்றும் இத்யாதி] - காலதத்த்வமுள்ளதனையும் வேறுசிலரைக் கவிபாடத் தகுமோ? அவன் ஸௌஹார்த்தமாகில் இப்படி பலித்தது, பின்னை எல்லார்க்கும் பலிக்கவேண்டாவோ? என்னில்,—அவனுடைய ஸங்கல்பந்தானும், சென்றுசென்றாகிலுமென்றிறே - ஒருநாளில் பலிக்குமதன்றிறே; ஆகையால், பலிக்கப்பலிக்கக்காணு மித்தனை. [என்றும் என்றும் இத்யாதி] - இனிமேல் அநேகமாயுள்ள காலமெல்லாம் இஶ்ஶரீரமுள்ளதனையும் இதுவே யாத்ரையாயிருந்து, மேல்"[illegible]" (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்றும், "[illegible]" (அஹமந்நமஹமந்நமஹமந்நம்) என்றும் பாடப்புகுகிற எனக்கு. [மற்றொருவர்கவியேற்குமே] - இப்படி யிருந்தபின்பு பகவத்வ்யதிரிக்தக் கவிபாடுகை போருமோ? வேறுசிலர்க்கு நான் கவியாகத்தகுமோ? என்னுதல், வேறுசிலர் கவியிலே நான் அந்வயிக்கத்தகுமோ? என்னுதல். (௧௦)

## பதினோராம் பாட்டு.

ஏற்கும்பெரும்புகழ் வானவரீசன்கண்ணன்தனக்கு
ஏற்கும்பெரும்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்சொல்
ஏற்கும்பெரும்புகழ் ஆயிரத்துள்ளிவையுமோர்பத்து
ஏற்கும்பெரும்புகழ் சொல்லவல்லார்க்கில்லைசன்மமே.

---

*ஒரு சொல்லா யென்றது - சென்றுசென்றாகிலு மென்று ஒருசொல்லா யென்றபடி. ஒன்றி - ஒருப்பட்டு. உத்தரோத்தரம் லோகஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் - சோம்பாது இத்யாதி. ஒருகாலல்லா வொருகாலாகிலும் பலிக்கிறதென்று ஸ்ருஷ்டிக்கிறா னென்றபடி. சோம்பிக் கைவாங்காதே இந்தப் பலவகைப்பட்ட ஸம்ஸாரிசேதநரை யெல்லாரையும் விஸ்த்ருதராக்கின காரணபூதனே யிதி பாசுரார்த்தஃ. பெரியதிருவந்தாதி-பதினெட்டாம்பாட்டு - "தாம்பால்" இத்யாதி. உக்தார்த்தம் த்ருஷ்டாந்தேந ஸமர்த்தயதி -* **கர்ஷகன்** *இத்யாதி. அவனைக் கர்ஷகனாகவும், லீலாவிபூதியை க்ஷேத்ரமாகவும் சொல்லலாமோ? என்ன,* **பத்தியுழவன்** *இத்யாதி. பக்தி கர்ஷகனான க்ருஷ்ணனுடைய அநாதியாய்ப்போருகிற ஸம்ஸாரமாகிற விளைநில மிதி பாசுரார்த்தஃ. பந்தி - பக்தி. புனம் - விளைநிலம். நான்முகன் திருவந்தாதி - இருபத்துமூன்றாம்பாட்டு- "வித்துமிட" இத்யாதி. "சென்றுசென்றாகிலுங்கண்டு - நின்றுநின்று பலநாளுய்க்கும்இவ்வுடல் நீங்கிப்போய்-சன்மம் கழிப்பானெண்ணி யொன்றியொன்றி யுலகம்படைத்தான்" என்று அந்வயித்து அர்த்தம் -* **ஒருநாளல்லா** *இத்யாதி. ஸ்ருஷ்டியைச்சொல்லி 'இவனுடையகவியாயினேற்கு' என்றதுக்கு பாவம் -* **அவனெதிர்** *இத்யாதி. தடஸ்தஶங்கை -* **அவன்ஸௌஹார்த்தம்** *இத்யாதி. பரிஹாரம்-* **அவனுடைய** *இத்யாதி. 'என்றுமென்றும் உலகம்படைத்தான் கவியாயினேற்கு' என்றுகூட்டித் தாத்பர்யாந்தரம் -* **இனிமேல் அநேகமாயுள்ள** *இத்யாதி. கவியென்று - ஆழ்வாரைச்சொல்லுதல், ப்ரபந்தத்தைச் சொல்லுதல். அதாவது - வேறுசிலரைக் கவிபாடுமவனுகை தகுமோ? என்னுதல், வேறுசிலரைக் கவிபாடுகை தகுமோ? என்னுத லென்றபடி.* **வேறுசிலர்கவியிலே நான் அந்வயிக்கத் தகுமோ?** *என்றது - வேறொருவர்கவிகளைக்கேட்டு ஸம்பாவிக்கத்தகுமோ? என்றபடி. சென்று சென்றாகிலும் கண்டு - நின்றுநின்று பலநாளுய்க்கும் இவ்வுடல் நீங்கிப்போய் - சன்மம் கழிப்பானெண்ணி ஒன்றியொன்றி இத்யாத்ய அந்வயஃ.* (௧௦)

ஆ.—(ஏற்கும்.) ஸ்லோகிதயான கல்யாணகுணங்களை யுடையனான வானவரீசன் கண்ணன்தனக்கு ஏற்கும் பெரும்புகழான வண்குருகூர்ச்சடகோபன் சொல்லான தன்மைக்கு ஸத்ருசமான அர்த்தவத்வமதுரத்வாதி குணங்களையுடையவான ஆயிரத்துள் ஏற்கும்பெரும் புகழையுடைய இப்பத்தைச் சொல்லவல்லார்க்கு இல்லை சன்மம் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியைப் பாடமாத்ரத்தைச் சொல்லவல்லார்க்கு வேறுசிலரைக் கவிபாடவேண்டாவென்று கற்பிக்கவேண்டும்படியான ஸம்ஸாரத்தில் ஜந்மமில்லை என்கிறார்.

[ஏற்கும்] - இப்பாட்டுக்குத் தகுதியான மிக்க புகழையுடையனாய் அமரர்களதிபதியாயிருந்துள்ள க்ருஷ்ணன்தனக்கு ஏற்றிருந்துள்ள பெரும்புகழையுடைய ஆழ்வார் அருளிச்செயலாய்ச் சொன்ன புகழெல்லாம் தக்கிருந்துள்ள ஆயிரத்துள்ளே ஏற்கும்பெரும்புகழான இத்திருவாய்மொழி சொல்ல வல்லார்க்கு.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி சொல்லவல்லார்க்கு ஜந்மமில்லை யென்று பலத்தை அருளிச்செய்கிறார்.

ஏற்கும் - (பரத்வஸௌலப்யங்களுக்குத்) தகுதியான, பெரும்புகழ் - குணப்ரதையை யுடையனாய், வானவர் ஈசன் - நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனை மேன்மையோடே, கண்ணன் தனக்கு - (ஸுலபனாய் அவதரித்த) க்ருஷ்ணனுக்கு, ஏற்கும்-(ஸ்தோதாக்களாகைக்கு) அநுரூபமான, பெரும்புகழ் - ஜ்ஞாநாதிகுணப்ரதையையுடையராய், வண்குருகூர் சடகோபன் - அழகிய திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, ஏற்கும் - (பகவத்குணப்ரதிபாதநத்துக்கு) அநுரூபமான, பெரும்புகழ்-லக்ஷணப்ரதையையுடைத்தாயிருக்கிற, ஆயிரத்துள்-ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே, ஏற்கும் - (இதரஸ்தோத்ரத்தைத்தவிர்ந்து பகவத்ஸ்தோத்ரத்தைப்ரதிபாதிக்கையாகிற) ஸ்வரூபாநுரூபமான, பெரும்புகழ் - குணப்ரதையையுடைத்தாய்க் கொண்டு, ஓர் - அத்விதீயமான, இவைபத்தும் - இவைபத்தையும், சொல்ல வல்லார்க்கு-சொல்ல வல்லார்க்கு, சன்மம் - (இதரஸ்துதிஹேதுவான) ஜந்மம், இல்லை - இல்லை. இது - கலித்துறை.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியில் இயல்மாத்ரத்தைச் சொல்லவல்லார்க்குப் பிறரைக் கவிபாட யோக்யமான நீசஜந்ம மில்லை என்கிறார்.

[ஏற்கும் பெரும்புகழ் இத்யாதி] - தகுதியான மிக்கபுகழையுடையனாய் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாய் அம்மேன்மையோடே வந்து அவதரித்து மநுஷ்யத்வேபரத்வத்தை யுடையவனுக்கு. [ஏற்கும் பெரும்புகழ் இத்யாதி] - 'உபயவிபூதியுக்தன்' என்றால் அவனுக்குத் தக்கிருக்குமாபோலே, 'ஸர்வேஶ்வரன்கவி' என்றால் அதுக்குப் போரும்படியிருக்கிற ஆழ்வார். [சொல் ஏற்கும் பெரும்புகழ் ஆயிரம்] - "யதோவாசோ நிவர்த்தந்தே" என்கிற விஷயத்தை விளாக்குலைகொண்ட ப்ரபந்த மென்றால் அதுக்குப்போரும்படியான ஆயிரம். [இவையும் ஓர் பத்து ஏற்கும் பெரும்புகழ்]-ஆயிரத்திலும் இப்பத்துத் தகுதியான புகழையுடைத்து, ஸ்வரூபாநுகுணமாக அப்ராப்தவிஷயத்தைத் தவிர்ந்து ப்ராப்தவிஷயத்திலே கவிபாடச் சொல்லிற்றாகை யாலே, ஏறிட்ட நன்மையெல்லாம் பொறுக்கை. [இல்லை சன்மமே]-'பிறரைக் கவிபாடவேண்டா' என்று உபதேசிக்கவேண்டுகிறது, இஸ்ஸம்ஸாரத்திற் பிறப்பிறே; அந்தஜந்மஸம்பந்தம் அறும் என்கிறார்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியின் இயல்மாத்ரத்தை அப்யஸித்தவர்களுக்கு, பிறரைக்கவிபாட யோக்யமான ஜந்மம் இல்லை யென்கிறார்.

[ஏற்கும் இத்யாதி]-தகுதியான மிக்க புகழையுடையனாய் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாய், அம்மேன்மையோடே வந்து அவதரித்து மநுஷ்யத்வே பரத்வத்தையுடையவன்தனக்கு; ஒன்பதாமோத்திலே நின்று மநுஷ்யத்வே பரத்வத்தைப் பரக்கப்பேசாநின்றதிறே. [ஏற்கும் இத்யாதி]-'அவன் உபயவிபூதியுக்தன்' என்றால் தக்கிருக்குமாபோலே, 'ஸர்வேஶ்வரன்கவிகள் இவர்' என்றால் அதுக்குப் போரும்படியிருக்கிற ஆழ்வார் அருளிச்செய்த. [ஏற்கும்பெரும்புகழாயிரம்] - "யதோ வாசோ நிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்ற விஷயத்தை விளாக்குலைகொண்ட ப்ரபந்தம்' என்றால் அதுக்குப்போரும்படியான ஆயிரம். [இவையும் ஓர்பத்து ஏற்கும் பெரும்புகழ்]-ஆயிரத்திலும் இப்பத்துத் தகுதியான பெரும்புகழையுடைத்து. அதாவது - இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபத்துக்கு அநநுரூபமாகப் பிறரைக் கவிபாடாதே கொள்ளுங்கோ ளென்றும், ஸ்வரூபப்ராப்தமான விஷயத்தைக் கவிபாட வாருங்கோ ளென்றும் சொன்ன பத்தாகையாலே சொன்ன சொன்ன ஏற்றமெல்லாம் தகும்படி இருக்குமாயிற்று. [இல்லைசன்மமே] - நித்யஸூரிகளை 'பிறரைக்கவி பாடாதேகொள்ளுங்கோள்' என்று கற்பிக்கவேண்டுகிறதில்லையிறே; பிறக்கைசுட்டியிறே பிறரைக் கவிபாட வேண்டுகிறது. பிறரைக் கவிபாடாதே கொள்ளுங்கோ ளென்று கற்பிக்கவேண்டும்படியான தண்ணிய ஜந்மத்திலே அந்வயியார்கள். (௧௧)

---

நிகமம் - ஏற்கும் இத்யாதி. 'இவையுமோர்பத்தும் - சொல்லவல்லார்க்கு - சன்மம் - இல்லை' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை. இயல் - சப்தம்.

மநுஷ்யத்வே பரத்வம் எங்கே சொல்லிற்று? என்ன, ஒன்பதாம் இத்யாதி. ஒன்பதாம் ஓத்து - கீதையில் ஒன்பதாம் அத்யாயம். ஆழ்வார்க்குப் புகழாவது - ஜ்ஞாநாதிகுணப்ரதை. போரும்படி - தகும்படி. விளாக்குலைகொண்ட - வ்யாபித்த. விவரணம் - அதாவது இத்யாதி. கேவலரைப்போலே ஜந்மநிவ்ருத்தியை பலமாகச்சொல்லுவானென்? என்ன, நித்யஸூரிகளை இத்யாதி. பரஸ்தோத்ரத்துக்கு அடியான ஜந்மம்அறுகையும் மஹாபலமென்று கருத்து. க்ரமேண அந்வய:. (௧௧)

---

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி**— ஸநூஷவெநவிஷயாநயிமஞாஜிவூ நாஜொகூவிஸூநிஜவூஸெநா ஊயாமாஃ। தஸ்ரீணிவாநூஜாதிஷவஸூஸளஜநா ஷநஹுகாரணம் நவெஷெவூகூ.

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:**—ஈ[illegible] ஸாநாஷியொமாதஷிதவிஷவதஸதய[illegible]ாவககவா ஸூஜூஸாய[illegible]ஜூநாஊநவவிதரணாதஷவ[illegible]ஷஹிகுவிஷாஃ। வூவூதாவூஸஹஜெஷஜவதரணாஜவெஸஹு[illegible]கூஜாஜிஃவூஜெதொகெவூதா ஊநாவஸூதிவிஷயதஃ வூஹஜணிநிதாநூஃ.

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி :—**

சொன்னாவில்வாழ்புலவீர்! சோறுகூறைக்காக
மன்னுமனிதரைவாழ்த்துதலால்—என்னாகும்?
என்னுடனேமாதவனையேத்துமெனும்குருகூர்
மன்னருளால்மாறுஞ் சன்மம்.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.



ஆ.—(சன்மம்பலபல.) எம்பெருமானையொழிய மற்றொருவரைக் கவிபாடுகைக்கு ஈடல்லாத ப்ரக்ருதியாகப் பெற்ற பேற்றை அநுஸந்தித்துச் சென்ற ப்ரீதி - கீழ்; இனிமேல் எம்பெருமானைக் கவிபாடப்பெற்ற பேற்றை அநுஸந்தித்துச் செல்லுகிற ப்ரீதி.

ஒ.—பத்தாந்திருவாய்மொழியில், இப்படி ஹேயரான ஸம்ஸாரிகளைப்போலன்றியே எம்பெருமானுடைய திவ்யாவதாரங்களையும் திவ்யகுணங்களையும் பலவகையாய் ஜகத்ரக்ஷணார்த்தமாகவுள்ள சேஷ்டிதங்களையும் அநுஸந்தித்துக்கொண்டு பொதுபோக்கப் பெற்றேனுக்கு இதிற்காட்டில் வேண்டுவது ஒன்று உண்டோ? என்று தாம் பகவத்ஹகரணராய்க் க்ருதார்த்தரானபடியை அநுஸந்தித்து மிகவும் ப்ரீதராகிறார்.

ப.—பத்தாந்திருவாய்மொழியில், கீழ் - இதரஸ்தோத்ரத்தினுடைய ஹேயத்வாதிகளையும் பகவத்ஸ்தோத்ரத்தினுடைய வைலக்ஷண்யத்தையும் உபதேசித்து, இப்படி விலக்ஷணமான பகவத்விஷயத்தை நாம் ஸர்வப்ரகாரத்தாலும் அநுபவிக்கப்பெறுவதே யென்று அதிப்ரீதராய், அநுஹாவ்யனான ஸர்வேஶ்வரனுடைய அவதாரப்ஸமான விரோதிநிரஸநத்தையும், அவதாரத்துக்கு மூலமான க்ஷீரார்ணவஶாயித்வத்தையும், அவதீர்ணதிஶையான ஸர்வஶக்தியோக்யதையையும், ஸோகப்ரதிஸம்பந்தி ஸமஸ்தவிரோதி நிவர்த்தகத்வத்தையும், ஆர்த்தர்களுக்கு ஆர்த்திநிவர்த்தகாரித்வத்தையும், அவதாரதஶையிலும் அதிமாநுஷசேஷ்டிதத்தையும், அவதாரநிர்வாஹ்யமான லீலாவிபூதியோகத்தையும், இந்தநிலையிலும் பரத்வஸூசகமான லக்ஷ்மீபதித்வத்தையும், ஸர்வப்ரகாரரக்ஷகத்வத்தையும், ஸர்வாந்தராத்மத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்விதனான ஸர்வேஶ்வரனை ஸர்வப்ரகாராநுபவம் பண்ணப்பெற்ற எனக்கு ஒரு வைகல்யம் விச்சேதம் மநஃபீடை மிறுக்கு க்லேசம் அப்ரீதி அலமாப்பு து:கம் அவஸாதம் விகாஸம் என்று சொல்லப்பட்ட ஸமஸ்ததுரிதங்களும் இல்லை யென்று அதிப்ரீதராய், இப்பத்துக்குத் தாத்பர்யமான ஸ்வரூபத்தினுடைய ததேகாநுபவத்வத்தையும் உபபாதித்து முடிக்கிறார்.

இ.—பத்தாந்திருவாய்மொழியில், கீழ் உபதேசித்த ஹிதம் நெஞ்சில்படாத ஹேயரான ஸம்ஸாரிகள் நடுவே இருந்துவைத்து பகவத்விஷயத்துக்கு அர்ஹமான கரணங்களையுடையேனாகப் பெற்றேன். அதுதன்னிலும் ஆஸ்ரிதார்த்தமாகக் கர்மவஶ்யரைப்போலே ஸம்ஸாரிகள் நடுவே வந்து அவதரித்த திவ்யாவதாரங்களையும் அவதாரஸித்தமான திவ்யகுணங்களையும் திவ்யசேஷ்டிதங்களையும் அநுஸந்தித்து 'இதுவே பொதுபோக்காகப்பெற்ற எனக்கு இனி வேண்டுவது உண்டோ?' என்று மிகவும் ப்ரீதராகிறார். "முடியானே"யில் தம்முடைய ஆற்றாமையையும் நித்யஸூரிகளுடைய அநுபவத்தையும் அநுஸந்தித்தவாறே இழவாய்த் தோற்றிற்று; "சொன்னால் விரோத"த்தில் ஸம்ஸாரிகள்படியைப் பார்த்தவாறே அவ்விழவுதானே பேறாகத் தோற்றிற்று.

ஈடு.—கீழில் திருவாய்மொழியிலே பிறரைக் கவிபாடுகிறவர்களை பகவத்விஷயத்தில் மீட்கப்பார்த்து, அவர்கள் மீளாதொழிய, இவர்களைப்போலேயாகாதே நான் முந்துறமுன்னம் இதரஸ்தோத்ரம்பண்ணுகைக்கு அநர்ஹகரணனாகப்பெற்றேனென்கிறார்; இதரஸ்தோத்ரம்பண்ண அநர்ஹகரணனான மாத்ரமேயோ? பகவத்ஸ்தோத்ரத்துக்கு அர்ஹகரணனாகவும் பெற்றேனென்கிறார் - இத்திருவாய்மொழியில். "முடியானே"யில்-தாம் அவனை அநுபவிக்கக் கோலி, அதுபெறாமையாலே தாமும் தம்முடைய கரணக்ராமமும் பெருவிடாய்ப்பட்டுக் கூப்பிட்டார்; தாம் இவ்விஷயத்திலே

சன்மம்பலபல ப்ரவேசம். ஸங்க்ரஹஸங்கதி - கீழில் திருவாய்மொழியிலே இத்யாதி. இத்திருவாய்மொழியிலே இப்படி நிரதிஶய ப்ரீதியுண்டாகைக்கு ஹேதுவைக் காட்டாநின்றுகொண்டு விஸ்தாரஸங்கதி -

கூப்பிடுகிறப்போலே ஸம்ஸாரிகள் இதரவிஷயங்களைப்பற்றிக் கூப்பிடுகிறபடியை அநுஸந்தித்து, அவர்களநர்த்தத்தைக் கண்டவாறே தமக்கு "முடியானே"யில் பிறந்த இழவுதானே பேருய்த் தோற்றிற்று; அதுக்குமேலே ஆஶ்ரிதார்த்தமாகக் கர்மவஶ்யரைப்போலே ஸம்ஸாரிகள்நடுவே அவர்களோடொத்த வடிவைக்கொண்டு அவதரித்த திவ்யாவதாரங்களையும் அவதாரஸித்தமான திவ்யசேஷ்டிதங்களையும் வடிவழகையும் பூஷணங்கள்சேர்ந்த சேர்த்தியையும் திவ்யாயுதங்கள் சேர்ந்த சேர்த்தியையும் அகடிதகடநாஸாமர்த்யத்தையும் இவற்றையெல்லாம் அநுபவிக்கப்பெற்றேன்; எனக்கு * ஒரு குறைகளும் இல்லையென்கிறார்.

## முதற் பாட்டு.

சன்மம்பலபலசெய்துவெளிப்பட்டுச் சங்கொடுசக்கரம்வில்
ஒண்மையுடையவுலக்கையொள்வாள் தண்டுகொண்டுபுள்ளூர்ந்து உலகில்
வன்மையுடையவரக்கரசுரரை மாளப்படைபொருத
நன்மையுடையவன்சீர்பரவப்பெற்ற நான்ஓர்குறைவிலனே.

ஆ.—அஸங்க்யேய திவ்யாவதாரங்களைப்பண்ணி ஸகலமநுஜநயந விஷயதாங்கதனும் ஶங்கசக்ர ஶார்ங்க முஸல கட்காதி திவ்யாயுததரனும்கொண்டு இந்தலோகத்திலே அதிபலபராக்ரமரான அஸுரராக்ஷஸரை ஸஸைந்யமாக நிரஸித்த மஹாகுணத்தை யுடையனானவனுடைய அந்தக்குணங்களை இப்படி வாழ்த்தப்பெற்ற எனக்கு இனி என்னகுறையுண்டு? என்கிறார்.

ஓ.—முதற்பாட்டில், ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமாகப் பலகாலும் வந்து திருவவதாரம் பண்ணியருளி அவர்கள்ஶத்ருக்களை நிரஸியாநின்றுள்ள எம்பெருமானுடைய கல்யாணகுணங்களை ப்ரீதிபூர்வகமாக அநுபவிக்கப்பெற்றேன் என்று இத்திருவாய்மொழியில் ப்ரதிபாதிக்கிற பொருளை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[சன்மம் பலபல செய்து வெளிப்பட்டு] - அஸங்க்யாவதாரங்களைப் பண்ணிக்கொண்டு ஒருவரால் காணமுடியாத தான் தோற்றி. [வன்மை] - தன் அழகு கண்டால் ஶிதிலராகாமை. படை - ஆயுதம். [நன்மை] - ப்ரதிகூலவிஷயத்தில் ஆந்ருஶம்ஸ்யம் பண்ணுமை. [சீர்பரவப் பெற்ற நான்] - கல்யாணகுணங்களை ஶிதிலகரணனாய் அநுஸந்திக்கப்பெற்ற நான்.

ப.—முதற்பாட்டில், அநேகாவதாரமுகத்தாலே ஆஶ்ரிதவிரோதிநிரஸநம்பண்ணின வன்குணகணங்களை ஸ்துதிக்கப்பெற்ற நான் ஒருகுறையுடையேனல்லேன் என்கிறார்.

("அஜாயமாநः" என்கிறபடியே அகர்மவஶ்யனாய்வைத்து), பல - தேவாதிஜாதிபேதத்தையும், பல - ஒவ்வொன்றில் அவாந்தரபேதத்தையுமுடைத்தான, சன்மம்-ஜந்மவிஶேஷங்களை, செய்து - (ஸங்கல்பமாத்ரத்தாலன்றியே இதர ஸஜாதீயனாய்க்கொண்டு) பண்ணி, வெளிப்

முடியானேயில் இத்யாதி.'சன்மம்பலபலசெய்து'என்றதைப் பற்ற,திவ்யாவதாரங்களையும் என்றது.'அசுரரை மாளப்படைபொருத' என்றதைப்பற்ற, திவ்யசேஷ்டிதங்கள் என்றது. 'எங்குமழகமர்' இத்யாதியைப்பற்ற, வடிவழகையும் என்றது. 'மட்டவிழ்தண்ணந்துழாய்முடியான்' என்றதைப்பற்ற, பூஷணங்கள் என்றது. 'சங்கொடுசக்கரம்வில்' இத்யாதியைப்பற்ற, திவ்யாயுதங்கள் என்றது. 'துக்கமில்ஞானம்' என்கிற பாட்டிலே - அகடிதகடநாஸாமர்த்யம்.

ஒரு குறைகளும் - குறைகளில் ஒன்றும்,

பட்டு - (அதீந்த்ரியமான விக்ரஹம் ஸம்ஸாரிகள் கண்ணுக்கு விஷயமாம்படி) ப்ராதுர்பவித்து, (அவதாரப்ரயோஜநமான ஸாது பரித்ராண துஷ்க்ருத்விநாசத்துக்கு உறுப்பாயுள்ள), சங்கொடு சக்கரம் - (தன்னில் தான் பிரியாத) சங்கசக்ரங்கள், வில் - ஸ்ரீசார்ங்கம், ஒண்மையுடைய உலக்கை - விரோதிகளைச் சேர்க்கும் ஸாதநம், ஒள் வாள் - எதிரிகளை அழிக்குமிடத்தில் கைவிடாத நந்தகம், தண்டு - கதை (ஆகிற இவற்றை), கொண்டு - உபகரணமாகக்கொண்டு, புள் - பெரிய திருவடியை, ஊர்ந்து - நடத்தி, உலகில் - (தனக்கு ரக்ஷணீயமான) லோகத்தில், வன்மை உடைய - (இவ்வழகு கண்டுகூடுபடாத) வன்மையை யுடையரான, அரக்கரை - ராக்ஷஸரையும், அசுரரை - அஸுரர்களையும், மாள - மாண்டுபோம்படியாக, படை பொருத - எதிரெதிரே படைவகுத்துப் பொருத, நன்மை - செவ்வையாகிற நன்மையை, உடையவன் - உடையவனுடைய, சீர் - சௌர்யவீர்ய பராக்ரமங்களையும் ஆச்ரிதவிஷயத்தில் ஸ்வாமித்வவாத்ஸல்யங்களையும், பரவப்பெற்ற - பரக்கப் பேசி ஸ்துதிக்கப்பெற்ற, நான் - நான், ஓர் குறைவு இலன் - (தேசாந்தரத்திலும் காலாந்தரத்திலும் தேஹாந்தரத்திலும் பகவத்விஷயத்தில் இன்ன அம்சம் அநுபவிக்கப்பெற்றிலோமென்று) ஒரு குறை யுடையேனல்லேன். குறைவு - வைகல்யம்.

இ.—முதற்பாட்டில், இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற அர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[சன்மம் இத்யாதி] - ஜந்மஹேது வின்றிக்கே யிருக்க, ஸம்ஸாரிஜாதியனுப் பிறக்கிற இவ்வவதாரத்தை அடியறியுமவர்கள் அவதாரத்துக்கு அவ்வருகு பரத்வத்திலும் போக மாட்டாதேயிறே இருப்பது. "தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம்" என்னக்கடவதிறே. வேதபுருஷனும் "பஹுதா விஜாயதே" என்னுமித்தனையிறே. "ஜந்மகர்ம ச மே திவ்யம்" என்றும், "பஹூநி மே" என்றும், அவன்தானும் நெஞ்சு உளுக்கியிறே இருப்பது. "எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்றும், "பிறப்பில் பல்பிறவிப் பெருமான்" என்றும், "பிறந்தவாறும்" என்றும், யோகாங்கஸ்வரான இவரும் வித்தராயிருப்பர். ஆக, ப்ரமாணச்ரேஷ்டமான வேதத்தோடு ப்ரமேயபூதனான ஈச்வரனோடு ப்ரமாதாக்களான இவரோடு வாசியறப் பரிச்சேதிக்கமாட்டாதே வித்தராயாயிற்று இருப்பது. [பல] - ஓர் அவதாரத்தை அநுஸந்தித்தால் "எத்திறம்!" என்று வித்தராமவர் அநேகாவதாரத்தைப் பொறுக்கமாட்டாரிறே. [பலபல] - தேவாதியோநிபேதங்களும், அவாந்தரபேதங்களும். [செய்து] - தன் தரம் குலைய ஆவிர்ப்பவித்துத் தான் கார்யம் செய்யப்பெற்றதோ? "ததஸ்ச த்வாதசே மாஸே" என்றும், "பன்னிருதிங்கள்" என்றும் நாட்டார் பத்துமாஸம் கர்ப்பவாஸம்பண்ணில் தான் பன்னிரண்டுமாஸம் கர்ப்பவாஸம் பண்ணியிறே அவதரித்தது. "பிதாமஹம் த்ருணவித்தயோநியோநிநா, ...வேதவிதநாதேதம் வை ஜந்" என்கிறபடியே ஸர்வகாரணனான தான் ஸ்வகார்யங்களிலே ஒன்றுக்குக் கார்யமாயிறே அவதரித்தது. [வெளிப்பட்டு] - "நமஸக்ஷாஸோத்ஸ்யதே" என்கிற தன்னைக் கண்ணுக்கு விஷயமாக்கி. ஸதா ஸஞ்சரிக்கிற இடத்தே நிதிகண்டு எடுக்குமாபோலே யாயிற்று, கண்ணுக்கு விஷயமாக்கினபடி. [சங்கு இத்யாதி] - அவதரிக்கும்போதும் திவ்யாயுதங்களோடே வந்தாயிற்று அவதரிப்பது. தன்னை வெளியிடிலும் திவ்யாயுதங்களோட்டைச் சேர்த்தி மறைக்கவேண்டியிறே இருப்பது. "உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதச்சதுர்புஜம்! ஜாநாது மாவதாரம் தேஹம்மோயம் திதிஜநந:" என்னக்கடவதிறே. [சங்கொடு சக்கரம்] - தன்னிற்பிரியாத சேர்ப் ராத்ரம். "ஹஸ்தாபோதலக்ஷணம்" இத்யாதி. 'வில் ஒண்மையுடைய உலக்கை ஒள்வாள்' என்று இவர்க்கு எல்லாம் ஆபரணமா யிருக்கிறபடி. ஒருகல்பகதரு பணைத்துப் பரப்புமாறப் பூத்தாற் போலேயாயிற்று, வடிவழகும் தோளும் திவ்யாயுதச்சேர்த்தியும் இருப்பது. [புள்ளூர்ந்து] - இது

வும் ஒருசேர்த்தியழகு. ஒருமேருவைக் கினிய ஒருமேகம் படிந்தாற்போலேயாயிற்று, பெரியதிரு வடியை மேற்கொண்டால் இருப்பது, "மஞ்சுயர்பொன்மலேமேல்." ஆஸ்ரிதர் இருந்த இடங் களிலே சென்று காட்சிகொடுக்கை. [உலகில்] - நித்யஸூரிகளுக்குத் தகுதியாயிருக்க, ஸம்ஸாரி களுக்குக் காட்சி கொடுத்தபடி. [வன்மையுடைய] - இவ்வழகைக்கண்டும் நெஞ்சுநெகிழாதவர் கள். இவ்விஷயத்தில் தம்முடைய மென்மைபோலே எல்லார்க்கும் இருக்குமோ? என்று இருக் கிறார். திருவடிதிருத்தோளிலே காணவே வணங்கிப்போகலாயிருக்க, எதிரிடுவதே பையல்கள்! அழகுக்கு இலக்காய் வாழ்ந்துபோகலாயிருக்க, அம்புக்கு இலக்காவதே![மாளப் படை பொருத]- படை-ஆயுதம். "ஜைவாநாஂஷாநவாநாஂவ" என்று ஸம்பந்தம் ஒத்திருக்க, ஆஸ்ரிதவிரோதிகள் என்னுமத்தைப்பார்த்து அழியச்செய்யும்.[படைபொருத நன்மை]-அவர்கள்பால் ஆந்ருஸம்ஸ்யம் பண்ணுதொழிகை. ஸங்கல்பத்தைக்கொண்டு கார்யங்கொள்ளுகை தீமையென்கை. [சீர்]- வீர குணம், அதுக்குஅடியான ஆஸ்ரிதவாத்ஸல்யம், அதுக்குஅடியான ஸ்வாமித்வம் இவைமுத லான கல்யாணகுணங்கள். [பரவப்பெற்ற நான்] - இக்குணங்களை அடைவுகெட ஏத்தப் பெற்ற நான். [ஓர் குறைவிலனே] - முதலிலே ஸம்ஸாரிகளைப்போலே அறியாதொழிதல் அவதரித்துக் கண்ணுக்கு இலக்காய்ப் பாசுரமிட்டுப்பேச நிலமன்றிக்கே யிருத்தல்,ஶிஶுபாலாதி களைப்போலே நம்மிலே ஒருத்தன் என்று பரிபவித்து முடிந்துபோதல், ஸ்ரீவிஸ்வரூபத்தில் அர்ஜ ஜுநனைப்போலே நிச்சுநீராயிருத்தலன்றிக்கே இவ்விஷயத்தைப் புகழப்பெற்ற எனக்கு ஒருகுறை யுமில்லை என்கிறார். "ஸோஶ்நுதே ஸர்வாந்காமாந்" என்று ஒருதேஸவிஸேஷத்திலே அநு ஹவிக்கக்கடவ குணாநுபவத்தை இங்கே அநுபவிக்கப்பெற்ற எனக்கு 'பரமபதத்தில் போகப் பெற்றிலேன்' என்கிற குறை யுண்டோ? என்கிறார்.

ஈடு.—முதற்பாட்டில் - இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற அர்த்தத்தை ஸங்க்ர ஹேண அருளிச்செய்கிறார்; திவ்யாயுதங்களோடே அவன் வந்து அவதரிக்கும்படியை அநுஸந் திக்கப்பெற்ற எனக்கு ஒரு குறைகளும் இல்லையென்கிறார்; ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாக அநேகாவதா ரங்களைப்பண்ணி அவர்கள் விரோதிகளை நிரஸியாநின்றுள்ள எம்பெருமானுடைய கல்யாணகுணங் களைப் புகழப்பெற்ற எனக்கு ஒருகுறைவில்லை யென்கிறார். [சன்மம் பலபல இத்யாதி] - அகர்ம வஸ்யனான தான் கர்மவஸ்யருங்கூடப் பிறவாத ஜந்மங்களை ஏறிட்டுக்கொண்டு வந்து ரக்ஷிப்பானா யிருக்கிறபடியை அநுஸந்திக்கப்பெற்ற எனக்கு ஒரு குறைகளு மில்லை யென்கிறார்; ஸர்வேஸ்வரனாய் மேன்மையடித்து இவற்றாலே தோய்வின்றிக்கே யிருக்கை யன்றிக்கே, இவைபட்ட இடரைத் தானுமொக்க வந்துபட்டு ரக்ஷிப்பானாயிருக்கிறபடியை அநுஸந்திக்கப்பெற்ற எனக்கு ஒரு குறைகளு மில்லை யென்கிறார்.

[சன்மம் பலபல செய்து] - அநேகாவதாரங்களைப் பண்ணாநிற்குமாயிற்று. இவ்வவதா ரத்தை அடியறியுமவர்கள் அவதாரத்துக்கவ்வருகு பரத்வத்திலும் போகமாட்டாதேயிறே இருப்பது;

---

முதற்பாட்டு - சன்மம் இத்யாதி. இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற அர்த்தத்தை யென்றது - பகவத்ஸ்தோத்ரத்துக்கு அர்ஹகாரணராகப் பெறுகையாலே ஹ்ருஷ்டராகை யாகிற அர்த்தத்தை யென்றபடி. திவ்யாயுதங்களோடே இத்யாத்யவதாரிகா சதுஷ்டயத்துக்கும் - அந்வயபேதேந பேதமாகக் கொள்வது. 'சங் கொடுசக்கரம்' என்று தொடங்கி, 'தண்டுகொண்டு - சன்மம் பலபலசெய்துவெளிப்பட்டவன் - சீர்பரவப்பெற்ற நானோர்குறைவிலன்' என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார்-திவ்யாயுதங்களோடே இத்யாதி. ஏதத்விவரணம்- ஆஸ்ரித இத்யாதி. இதுக்கு - 'அசுரரைமாளப்படைபொருத' இத்யாதியிலே நோக்கு. 'சன்மம்பலபலசெய்து வெளிப்பட்டு - புள்ளூர்ந்து' இத்யாதி, மேலெல்லாம் கூட்டி அருளிச்செய்கிறார் - அகர்மவஸ்யனான இத்யாதி. ஏதத்விவரணம் - ஸர்வேஸ்வரனாய் இத்யாதி. இந்த அவதாரிகைக்கு - சிலஸ்ரீகோசங்களிலே பாடமில்லை. இந்த அவதாரிகா சதுஷ்டயமும் - ஒரோபதங்களிலே நோக்காக உத்தரோத்தரவிவரணமாதல்.

ஜந்மம் த்யாஜ்யமாயிருக்க ஈடுபடக்கூடுமோ?என்ன, இவ்வவதாரத்தை இத்யாதி. அடியறியுமவர்கள்- 'அடி - நிர்ஹேதுகக்ருபை' என்றறியுமவர்க ளென்றபடி. 'அவதாரத்திலே ஈடுபட்டிருப்பர்கள்' என்றதுக்கு

**"தஸ்ய தீராঃ பரிஜாநந்தி யோநிம்"** (தஸ்யதீராঃபரிஜாநந்தியோநிம்) என்னக்கடவதிறே; **"ஜந்ம கர்ம ச மே திவ்யம்"** (ஜந்மகர்மசமேதிவ்யம்) என்று தானும் நெஞ்சுளுக்கியிறே இருப்பது, "பிறந்தவாறும்" என்று தீமதாமக்ரேஸரரான இவரும் வித்தராயிருப்பர். அஜ்ஞாநாதிக்யமாயிருந்ததிறே ஆழங்காற்படுகைக்கு ஹேது. இனியதுவிஞ்சின இடங்களிலே மிகவும் ஆழங்காற்படுகைக்கு உடலாமித்தனையிறே. [பல] - ஓரவதாரத்தை அநுஸந்தித்தால்"எத்திறம்!" என்று *வித்தராமவர் அநேகாவதாரத்தைப் பொறுக்கமாட்டாரிறே. [பலபல] - கர்மவஶ்யன்பிறவிக்கு எல்லை காணுநின்றோம்; அகர்மவஶ்யன்பிறவிக்கு எல்லை காண்கிற்றோமோ வென்றதாயிற்று. கர்மத்துக்கு அவதியுண்டு, அநுக்ரஹத்துக்கு அவதியில்லை. தன்னுடைய ஜந்மங்களைத் தானே சொல்லப்புக்காலும் **"பஹூநி"** (பஹூநி) என்னும்படியாயிறே இருப்பது. [பலபல] - தேவாதியோநிபேதங்களும், அவாந்தர பேதங்களும். [செய்து] - ஆவிர்பாவமாத்ர மன்றிக்கே, கர்மவஶ்யன் பத்துமாஸம் கர்பவாஸம் பண்ணுமாகில், **"ததஸ்ஸத்வாதஶே மாஸே"** (ததஶ்சத்வாதஶேமாஸே) என்று பன்னிரண்டு மாஸம் கர்பவாஸம்பண்ணி வந்து அவதரிக்கை. "பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்டவப்பாங்கினால்" என்றார்களிறே பெற்றவர்களும். **"பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ, நாவேதவிந் மநுதே தம் ப்ருஹந்தம்"** (பிதாபுத்ரேணபித்ருமாந்யோநியோநௌ,நாவேதவிந்மநுதேதம்ப்ருஹந்தம்) என்கிறபடியே ஸர்வகாரணபூதனான தான் ஸ்வகார்யங்களிலே ஒன்றுக்குக் கார்யமாயிறே வந்து அவதரித்தது. [வெளிப்பட்டு] - **"நசக்ஷுஷா க்ருஹ்யதே"** (நசக்ஷுஷா க்ருஹ்யதே) என்கிற தன்னைக் கண்ணுக்குவிஷயமாக்கி. எப்போதும் போகிறவிடத்திலே நிதி கண்டெடுப்பாரைப்போலே, அப்ராக்ருததிவ்யஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீயமாக்கி வந்து அவ

*ப்ரமாணம் - தஸ்ய இத்யாதி. தீராঃ - ஜ்ஞாநாதிகாঃ. பரிஜாநந்தி - பரிதோஜாநந்தி யென்றும், சுற்றிச்சுற்றிப் பார்ப்பர்க ளென்றபடி. ப்ரமாணங்காட்டி அநுவதிட்டாமுக் காட்டுகிறார்-ஜந்மகர்மச இத்யாதி வாக்யத்வயேந. "ஜந்மகர்ம ச மே திவ்யம்", "பஹூநி மே வ்யதீதாநி" இத்யாதி கீதாயாம் விதிதம். தீமதாமக்ரேஸரர்க்கு வித்தராகக்கூடுமோ? என்ன, ஜ்ஞாநாதிக்யம் இத்யாதி. ஆழங்காற்படுகை மக்நமாகை. சேதநன் பிறவிக்கு எல்லையுண்டாகைக்கும், அவன் பிறவிக்கு எல்லையில்லாமைக்கும் ஹேதுவை அருளிச்செய்கிறார் - கர்மத்துக்கு இத்யாதி வாக்யத்வயேந.'பிறவிக்கு எல்லையில்லை'என்றதுக்கு ஸுவதக்திடங்காட்டுகிறார்-தன்னுடைய இத்யாதி. 'பலபல' என்ற மீமிஸைக்கு - அஸங்க்யேயமென்று நிஷேதசொல்லி, தேவாதிபேதோ பேதஞ்சொல்லுகிறதென்று அர்த்தாந்தரம் - தேவாதி இத்யாதி. 'செய்து' என்றதுக்கு அர்த்த த்வயம் - பத்துமாஸமன்றிக்கே பன்னிரண்டு மாஸம் கர்ப்பவாஸம்பண்ணி யென்னுதல், ஸ்வகார்யங்களிலே ஒன்றுக்குக் கார்யமாய்ப் பிறந்து என்னுதல். முந்தின அர்த்தம்-ஆவிர்ப்பாவமாத்ரம் இத்யாதி.பாலகாண்டே, "ததஶ்ச த்வாதஶே மாஸே சைத்ரே நாவமிகே திதௌ" இத்யாரப்ய, "கௌஸல்யாஜநயத்ராமம் ஸர்வலக்ஷணஸம்யுதம்".'பன்னிரண்டு மாஸம் கர்ப்பவாஸம்பண்ணி' என்னுமதுக்கு ப்ரமாணாந்தரம்-பன்னிரு திங்கள் இத்யாதி. பன்னிரண்டு மாஸம் வயிற்றிலே பேணிவைத்துக்கொண்டிருந்த அந்த நன்மையாலே இதி பாசுரார்த்தঃ. பாங்கு - நன்மை, கேடு மென்றபடி. பெரியாழ்வார்திருமொழி-மூன்றாம்பத்து, இரண்டாந்திருமொழி-எட்டாம்பாட்டு. ஸ்வகார்யங்களிலே ஒன்றுக்குக் கார்யமாகப் பிறந்து என்று இரண்டாமர்த்தம்-பிதாபுத்ரேண இத்யாதி. யோநியோநௌ-யோநௌயோநௌ, யோநிகள்தோறும்; அவதாரங்கள்தோறு மென்றபடி. பிதா - ஜகத்பிதா; ஸர்வகாரணபூத னென்றபடி. புத்ரேண பித்ருமாந் - புத்ரனைப் பிதாவாகவுடையவன். ஸ்வகார்யங்களுக்குக் கார்யமாயிருப்ப னென்றபடி. நாவேதவித் இத்யாதி-"அஜாயமாநோ பஹுதா விஜாயதே தஸ்ய தீராঃ பரிஜாநந்தி யோநிம்" "பிதா புத்ரேண பித்ருமாந்" இத்யாதி ஶ்ருதிகளை அறியாதவன் இந்த அவதாரமாஹாத்ம்யத்தைஅறியாதே, 'பரப்ரஹ்மத்துக்கு ஜந்மமுண்டோ?' என்றுவிசிகித்ஸைபண்ணுவனென்றபடி. "பிதா புத்ரேண என்றதுக்கு அர்த்தம்-ஸர்வகாரணபூதனான இத்யாதி. 'வெளிப்பட்டு' என்றதுக்கு பதார்த்தம்-நசக்ஷுஷா இத்யாதி.'வெளிப்பட்டு' என்ற பதஸாமர்த்யத்துக்கு ஸாவம் - எப்போதும் இத்யாதி. 'போலே' என்ற அநந்*

* *வித்தராமவர் - ஈடுபடுபவர்.*

தரிக்கை. அப்ராக்ருதமான த்ருஷ்டிகளாலே ஸதா தர்ஶநம்பண்ணக்கடவ வடிவை மாம்ஸ சக்ஷுஸ்ஸுக்களுக்கு விஷயமாக்கிக்கொண்டுவந்து காட்டுகை. ''என்றேனும் கட்கண்ணாற்காணா அவ்வுருவை''யிறே கண்ணுக்கு இலக்காக்குகிறது. [சங்கொடு இத்யாதி] - தன்னிற்பிரியாத ஸௌ ராத்ரம்; ''ஶங்க சக்ர கதாபாணே'' (கச்சதாமாதுலகுலம்பரதேந) இத்யாதிவத். அவ தரிக்கும்போது திவ்யாயுதங்களோடே வந்தாயிற்று அவதரிப்பது. இங்குநின்றும் போவார்க்கு ப்ராப் ராமவர்களோடே கூட வந்தாயிற்று அவதரிப்பது. கண்டநுபவித்த அநந்தரம் ''அடியார்கள்குழா ஙளை - உடன்கூடுவதென்றுகொலோ'' என்று ப்ரார்த்திக்கவேண்டாதபடி அவர்களோடே கூட காட்சிகொடுக்கை. [சங்கொசக்கரம்]-ஒன்றேயமைந்திருக்கச்செய்தே. [வில்] - ஒருகோத்துக்கு ஒ வரைக்கொண்டு வருகையன்றிக்கே. [ஒண்மையுடைய உலக்கை] - ஒண்மை-அறிவு. கருதுமிட போரும்படி ஜ்ஞாநாதிகராயிருப்பார்களே. [ஒள்வாள் தண்டுகொண்டு]-கையிலே திவ்யாயுதங்களை கண்டால் 'இவை வினைக்கு உடலாக தரித்துக்கொண்டிருக்கிறான்' என்றிருப்பார் ஸம்ஸாரிகள யிற்று; அங்ஙனன்றிக்கே, நித்யஸூரிகள் 'அழகுக்கு உடலாக தரித்துக்கொண்டிருக்கிறான்' என்றிரு பார்கள்; இவரும் அவர்களிலே ஒருவராகையாலே அழகுக்கு உடலாகவே அநுஸந்திப்பது. ஒ கற்பகத்தரு பணைத்துக் கணுத்தோறும் அரும்பினாற்போலேயாயிற்று வடிவும் திவ்யாயுதங்களு சேர்ந்த சேர்த்தி இருப்பது. [புள் ஊர்ந்து] - இதுவும் ஒரு சேர்த்தியழகு; * பொன்மலையின்மீமிசை கார்முகில்போலேயிறே இருப்பது. [உலகில்] - இவ்வழகுதான் ஒருதேஶவிஶேஷத்தே நித்யஸூரி கள் அநுபவிக்குமதிறே; அங்ஙனேயிருக்கச்செய்தே இங்கே அநுபவிக்கும்படி பண்ணினான் [வன்மை இத்யாதி] - இவ்வழகைக்கண்டு நெஞ்சுநெகிழாதவர்களான ராக்ஷஸர்களையும் அஸுர களையும் இவ்விஷயத்தில் தம்முடைய மென்மைபோலே எல்லார்க்கும் இருக்குமோ? என்றிருக்கிற † நினைதோறும் சொல்லுந்தோறும் நெஞ்சிடிந்துகுமே தமக்கு. அவனைக் காணாதபோது ''ஈஶ்வரே

தரம் - காணும்படியென்று சேஷம். ''நவக்ஷுஷாக்ஷா த்ருஶ்யதே'' இத்யாதி வாக்யவிவரணம் - அப்ராக்ரு மான இத்யாதி. 'கண்ணுக்கு அவிஷயம்' என்கிறதுக்கு ப்ரமாணாந்தரம் - என்றேனும் இத்யாதி. ஒருநாளு காண்கைக்குப் பரிகரமல்லாத புறக்கண்ணாலே காணவொண்ணாத அந்தத்திருமேனியை இதி பாசுரார்த்த பெரியதிருவந்தாதி - இருபத்தெட்டாம்பாட்டு. 'சங்கொடுசக்கரம்' என்கிற த்ருதீயைக்கு ஹாவம் - தன்னி பிரியாத இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - ஶங்க இத்யாதி. 'சங்கொடு' என்றுதொடங்கி,'தண்டுகொண் சன்மம் பலபல செய்து' என்று அந்வயித்து ஹாவம் - அவதரிக்கும்போது இத்யாதி. அவற்றோடே அவதர கைக்கு ப்ரயோஜநமேது? என்ன, இங்குநின்றும் இத்யாதி. அநுபாவ்யனான தான் வந்து அவதரித்தாற் போ தோ? திவ்யாயுதங்களோடே வந்து அவதரிக்கவேணுமோ? என்ன, கண்டநுபவித்த இத்யாதி. 'ஒடு' என்றது குத் தாத்பர்யாந்தரம் - ஒன்றேயமைந்திருக்கச்செய்தே என்று; ஸௌந்தர்யாநுபவாதிமுகத்தாலே ஸாதுபரி ராண துஷ்க்ருத்விநாசாதிகளுக்கு ஒன்றே அமைந்திருக்கச்செய்தே யென்றபடி. ஒருகோத்துக்கு ஒருவ யென்றது - ஆயுதவர்க்கத்துக்குத் திருவாழியைக்கொண்டு வருகையன்றிக்கே யென்றபடி. ஒண்மை - அறிவு அழகும். ஒண்மை - ஆயுதங்களுக்கெல்லாம் விசேஷணமாகக் கண்டுகொள்வது. உபபாதநம் - கருதுமிட இத்யாதி. வாளுக்கு விசேஷணமான ஒண்மையையும் எல்லாவற்றுக்கும் விசேஷணமாக்கி, அத்தால் ப்ராப் மென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - கையிலே இத்யாதி. இந்த ஒண்மை - அழகு. ஆக, ஜ்ஞாநா கருமாய் அழகியருமாயிருப்பர்கள் என்றபடி. ''தேஜோபலைஶ்வர்யமஹாவபோதஸுவீர்ய ஶக்த்யாதிகுணைகராஶி:'' என்றது - ஒன்றின்விசேஷணம் எல்லாவற்றுக்குமானதுக்கு த்ருஷ்டா மாகக் கண்டுகொள்வது. வினை - யுத்தம். நித்யஸூரிகள் அப்படியிருந்தால் இவர்க்கு ஏது? என்ன, இவரு இத்யாதி. திவ்யாயுதங்கள் அழகுக்கு உடலாம் ஆகாரத்தை ரூபகமாக அருளிச்செய்கிறார் - ஒரு கற்பகத்த இத்யாதி. கணுத்தோறும் - கணுக்கள் தோறும். வன்மை - காடிந்யம். அவர்களுக்கு நெஞ்சு நெகிழ்ச்சிய லாமை ஸித்தமாயிருக்க, அத்தைச் சொல்லுகிறதுக்குத் தாத்பர்யம் - இவ்விஷயத்தில் இத்யாதி. மென்மை மார்த்தவம். இவர்க்கு மென்மையுண்டென்னு மதுக்கு ப்ரமாணம் - நினைதோறும் இத்யாதி. அவ்வழகை

* திருவாய்மொழி - ௩, ௨, ௩. † திருவாய்மொழி - ௩, ௩, ௨.

ஹம்” என்றிருக்கலாம்; திவ்யாயுதங்களோடே அழகிய வடிவழகைத் திருவடி திருத்தோளிலே கண்டால், ‘ஶரணம்’ என்னுதல், எழுத்துவாங்குதல் செய்கையன்றிக்கே எதிரிடுவதே பையல்கள்! என்கிறார். அழகுக்கு இலக்காய் வாழமாட்டாதே, அம்புக்கு இலக்காய் முடிந்துபோவதே! என்கிறார். [மாளப்படைபொருத] - அவர்கள் முடியும்படி ஆயுதத்தாலே பொருத. யுத்தத்திலே புக்குநின்று, ஆரோதமடித்தல், ‘ஸ்வகீயஜந்துக்கள்’ என்று ஆந்ருஶம்ஸ்யங்கொண்டாடுதல் செய்யாதே, ‘ஆஶ்ரித விரோதிகள்’ என்று அழியச்செய்த நன்மையுடையவன். அன்றியே, ஸங்கல்பத்தாலே செய்யாதே, அவதரித்து யுத்தம்பண்ணிமுடித்த நன்மை யாகவுமாம். ‘மழுங்காதஞானமே படையாக மலருலகில் தொழும்பாயார்க்கு அளித்தால் உன்சுடர்ச்சோதிமறையுமிறே’ என்றாரிறே இவர்தாம். அக்நீஷோமீயஹிம்ஸைகளில் கைகூசிறோகில் ப்ராயஶ்சித்தம் பண்ணவேண்டாநின்றதிறே. [நன்மையுடையவன்சீர் பரவப்பெற்ற நான்] - அவனுடைய கல்யாணகுணங்களை அக்ரமமாகச் சொல்லப்பெற்ற நான். [ஓர் குறைவிலனே] - முதலிலே ஸம்ஸாரிகளைப்போலே அறியாதொழிதல், அவதரித்துக் கண்ணுக்கு இலக்காய்ப் பாசுரமிட்டுப்பேச நிலமன்றிக்கே யிருத்தல், ஶிஶுபாலாதிகளைப்போலே ‘நம்மிலேயொருத்தன்’ என்று பரிபவித்து முடிந்துபோதல், ஶ்ரீவிஶ்வரூபத்தில் அர்ஜுநனைப்போலே நீச்சுநீராதலன்றிக்கே இவ்விஷயத்தைப் புகழப்பெற்ற எனக்கு ஒருகுறைகளுமில்லை யென்கிறார். “**ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந்**”(ஸோஶ்நுதே ஸர்வாந்காமாந்)என்று ஒரு தேஶவிஶேஷத்திலே அநுபவிக்கக்கடவ குணாநுபவத்தை இங்கே அநுபவிக்கப்பெற்ற எனக்கு ‘பரமபதத்திற் போகப்பெற்றிலேன்’ என்கிற குறையுண்டோ? (க)

## இரண்டாம் பாட்டு.

குறைவில்தடங்கடல்கோளரவேறித் தன்கோலச்செந்தாமரைக்கண்
உறைபவன்போலவோர்யோகுபுணர்ந்த ஒளிமணிவண்ணன்கண்ணன்
கறையணிமூக்குடைப்புள்ளைக்கடாவி அசுரரைக்காய்ந்தவம்மான்
நிறைபுகழேத்தியும்பாடியுமாடியும் யானொருமுட்டிலனே.

*ஆ.—(குறைவில்.) இப்படி எம்பெருமானுடைய திவ்யாவதார திவ்ய சேஷ்டிதங்களைத் திரள அநுபவித்து, பின்னை அவற்றைத் தனித்தனியே அநுபவிக்கிறார்.*

---

*கண்டு நெஞ்சுநெகிழாத ப்ரகாரத்தை ஆஶ்சர்யப்படுகிறார் - அவனை இத்யாதி. பையல்கள் - க்ஷுத்ரர்கள். அழகுக்கு இலக்காய் இத்யாதி - விவரணமாதல், மேலுக்கு அவதாரிகையாதல். ‘தண்டுகொண்டு’ என்றதை மேலே கூட்டி ஶாவாந்தரம்-அவர்கள் முடியும்படி இத்யாதி. படை-ஆயுதமும் யுத்தமும். மாளும்படி பொருதால் அது நன்மையோ? ஹிம்ஸை நன்மையாமோ? என்ன, ஆஶ்ரிதார்த்தமாகையாலே நன்மை யென்கிறார்-யுத்தத்திலே இத்யாதி. ஆரோதமித்யாதி-அர்ஜுநனைப்போலே ஆரோதமடித்தல், ஆந்ருஶம்ஸ்யம் கொண்டாடுதலென்றபடி. ஆரோதம் - நிவ்ருத்திவ்ரதம். “[illegible]” என்று ஹிம்ஸை பண்ணவொண்ணாதென்றிருத்தலென்றபடி. ஸங்கல்பத்தாலே செய்தால் அது ப்ரயோஜநமாகாதே குணத்துக்கு அவத்யமாமென்னுமதுக்கு ப்ரமாணம் - மழுங்காத இத்யாதி. ‘ஆஶ்ரிதவிரோதிகள்’ என்று அழித்தாலும் ஹிம்ஸை தோஷமன்றோ? என்ன, அக்நீஷோமீய இத்யாதி. இத்தால் - “[illegible]” இத்யாதிக்கு இவர்கள் விஷயமன்றென்றபடி. ‘ஓர்குறைவிலன்’ என்கையாலே - ஸம்பாவிதமான குறைகளைக் காட்டுகிறார் - முதலிலே இத்யாதி. நீச்சுநீராவது-தரைகாணவொண்ணாமை. ‘குறைவிலன்’ என்றதுக்குத் தாத்பர்யம் - ஸோஶ்நுதே இத்யாதி; யத்வா, ‘குறைவிலன்’ என்றதுக்கு இரண்டாம் தாத்பர்யமாதல். உலகில் - சங்கொடு சக்கரம் வில் இத்யாரப்ய, தண்டுகொண்டு - சன்மம்பலபலசெய்து வெளிப்பட்டு மீளவும், சங்கொடுசக்கர மித்யாரப்ய, க்ரமேண அந்வயः. (க)*

தன்னுள்ளே எம்பெருமான் கண்வளர்ந்தருளுகையாலே குறைவற்று அவாப்தகாமமான தடங்கடலிலே பணாமணி வ்ராத மயூக மண்டல ப்ரகாசமானோதர திவ்யதாமனாயிருந்த திருவநந்தாழ்வான்மேலே ஏறியருளித் தத்ஸம்ஸ்பர்சஜநித நிரதிசயஸுகாநுபவ நிரதனாயிருந்து, ஆஸ்ரித பரித்ராணார்த்தமாக வஸுதேவக்ருஹே அவதீர்ணனாய், ஹேயப்ரத்யநீகனாய், கறையணி மூக்குடைப் புள்ளைக் கடாவி அசுரரைக்காய்ந்த அம்மான் நிறைபுகழ்களை நிரஸ்த ஸமஸ்த ப்ரதிபந்தகனாய்க்கொண்டு ஏத்தியும் பாடியும் ஆடியும் அநுபவிக்கப்பெற்றேனென்கிறார்.

ஒ.—இரண்டாம் பாட்டில், திருவவதாரம் பண்ணியருளுகைக்கு அடியாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி ஸ்ரீவஸுதேவர்திருமகனாய் வந்து திருவவதாரம்பண்ணி யருளி ஆஸ்ரிதவிரோதிநிரஸநம்பண்ணாநின்றிருந்துள்ள க்ருஷ்ணனுடைய கீர்த்தியை ப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டு பலபடியும் அநுபவிக்கப் பெறுகையாலே எனக்கு ஒரு தட்டில்லை என்கிறார்.

[குறைவில் தடங்கடல் கோளரவேறி] - தன்னுடைய ஸந்நிதாநத்தாலே குறைவற்றுக் கண்வளர்ந்தருளப் போரும்படியான பெரிய கடலிலே நிரவதிக தீப்தியுக்தனான திருவநந்தாழ்வான்மேலே யேறி. கோளாகிறது மிடுக்கு என்றும் சொல்லுவர். கண்ணுறைகை - கண்வளர்ந்தருளுகை. [ஓர் யோகு புணர்ந்த என்று தொடங்கி] - திருவநந்தாழ்வானோட்டை ஸ்பர்சத்தாலும் ஸ்வகுணாநுஸந்தாநத்தாலும் உஜ்ஜ்வலமான திருநிறத்தையுடையனாய் ஆஸ்ரிதாபந்நிவாரணார்த்தமாக க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம் பண்ணியருளி ப்ரதிகூலருடைய ருதிரத்தாலே கறையேறி அதுவே ஆபரணமான திருமூக்குடைய பெரியதிருவடியை நடத்தி அஸுர நிரஸநம்பண்ணின ஸர்வேஸ்வரனுடைய பரிபூர்ணமான புகழை ஹ்ருஷ்டனாய்க்கொண்டு மிகவும் அநுபவிக்கப்பெறுகையாலே நான் ஒன்றும் ப்ரதிஹதனாகிறேனல்லேன்.

ப.—அநந்தரம், இவ்விரோதிநிரஸநார்த்தமான அவதாரத்துக்கு மூலமான க்ஷீரார்ணவசாயியினுடைய ரக்ஷணார்த்த ப்ரவ்ருத்தியால் வந்த புகழை ப்ரீதிபூர்வகமாக அநுபவிக்கப்பெற்ற நான் ஒரு விச்சேதமுடையேனல்லேன் என்கிறார்.

குறைவு இல் - தன்னுடைய ஸம்ஸ்லேஷத்தாலே பரிபூர்ணமாய், தடம் கடல் - (கண்வளருகைக்கு) இடமுடைத்தான கடலிலே, கோள் அரவு - பெருமிடுக்கனான திருவநந்தாழ்வான் மேல், ஏறி - ஏறி, தன் கோலம் - தன் ஈஸ்வரத்வ ஸூசகமான அழகை யுடைத்தாய், செந்தாமரைக் கண்ணுறைபவன்போல - சிவந்த தாமரைபோலே யிருக்கிற திருக்கண்கள் மலரும்படி உறங்குவான்போலே, ஓர் யோகு புணர்ந்த - அத்விதீயமான திவ்யாத்மஸ்வரூபாநுஸந்தாநத்திலும் ஜகத்ரக்ஷணசிந்தையிலும் பொருந்தி, மணி - தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே, ஒளி - பேரொளியை யுடைத்தான, வண்ணன் - வடிவை யுடையனாய், கண்ணன் - (அக்கிடையை விட்டு "ஆநகதுந்துபிரேவ..." என்று) க்ருஷ்ணனாய் அவதரித்து, கறை அணி-(அண்டம்பக்வமாவதற்கு முன்னே உடைக்கையாலே அக்ரத்திலே) கருகுதலாகிற அடையாளத்தை ஆபரணமாக வுடைத்தான, மூக்குடை - திருமூக்கையுடைய, புள்ளை - பெரிய திருவடியை, கடாவி - நடத்தி, அசுரரைக் காய்ந்த - அஸுரரை ஸ்வப்ரதாபத்தாலே நசிப்பித்த, அம்மான் - ஸர்வாதிகனுடைய, நிறை புகழ் - பரிபூர்ணமான விஜயப்ரதையை, ஏத்தியும் - (ப்ரீதியுக்தனாய்க்கொண்டு) ஸ்தோத்ரம் பண்ணியும், பாடியும் - இசையிலே வைத்துப் பாடியும், ஆடியும் - (ஹர்ஷத்தாலே) ந்ருத்தம் பண்ணியும் வர்த்திக்கிற, யான் - நான், ஒரு முட்டு இலன் - ஒரு விச்சேதம் உடையேனல்லேன். முட்டு - விலக்கு. கறையணி மூக்கென்று - விரோதிகளைத் துண்டிக்கையாலே கறையேறின மூக்கென்றுமாம். கோள் - மிடுக்கு; ஒளியுமாம்.

கடலேயென்ஞேற்றுய்'' என்னுமாபோலே அவனேட்டை ஸ்பர்ஶஸுகத்தாலே குறைவற்றிருக்கை. யஶோதைப்பிராட்டி க்ருஷ்ணனைத் தன்மடியிலே வளர்த்தி உகக்குமாபோலே, ஸர்வேஶ்வரனைத் தன்னுள்ளே யிட்டுக்கொண்டு அத்தாலே யுகந்து குறைவற்றிருக்கை. [தடங்கடல்] - அஸங்குசிதமாகக் கண்வளர்ந்தருளும்படி இடமுடைத்தான கடல். [கோளரவு ஏறி] - கோளென்று - ஒளியாய், திருமேனியோட்டை ஸ்பர்ஶத்தாலே நிரவதிகதேஜஸ்ஸையுடையனுன திருவநந்தாழ்வான்மேலே ஏறி யென்னுதல்; அன்றிக்கே, கோளென்று - மிடுக்காய், **"ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந பலைகதாமநி"** (ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி) என்கிறபடியே ஸர்வேஶ்வரனும் ஸர்வேஶ்வரியுங் கூடித் துகையாநின்றால் பொறுக்கைக்கு ஈடான தாரணஸாமர்த்த்யத்தையுடையனுயிருக்குமென்னுதல். [அரவு] - மென்மை குளிர்த்தி நாற்றம் இவற்றை ப்ரக்ருதியாகவுடையனுயிருக்கை. [தன் இத்யாதி] - வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியாய், ஸர்வைஶ்வர்யஸூசகமாய், பெரிய பிராட்டியாரோட்டைக் கலவியாலே வந்த ஆநந்தஸூசகமாய், அப்போதலர்ந்த செவ்வித் தாமரையை ஒருபமைசொல்லலாம்படி அழகியதாய்ச் சிவந்திருந்துள்ள திருக்கண்கள்.*([உறைகை]- உறங்குகை). கண்ணுறைகை-கண்வளர்ந்தருளுகை. கண்வளருகையென்று பேராய், ஜகத்ரக்ஷண சிந்தாயுக்தனுகை. [ஓர்யோகுபுணர்ந்த] - 'ஸகலப்ராணிகளும் நம்மைக்கிட்டிக் கரைமரஞ்சேர்ந்த தாம் விரகேதோ?' என்று இவற்றினுடைய ரக்ஷணோபாயசிந்தை பண்ணினுல் அவ்வநுஸந்தாநம் பொறுமையாலே நாக்கு உலரும்; அப்போது, கர்ப்பூரநிகரம் வாயிலே யிடுவாரைப்போலே, **"ஆத்மாநம்வாஸுதேவாக்யம்சிந்தயந்"** (ஆத்மாநம்வாஸுதேவாக்யம்சிந்தயந்) என்று தன்னைத் தானே அநுஸந்தியாநிற்கும். இப்படி அநுஸந்தித்தவாறே ரக்ஷணோபாயம் தோற்றுமே: [ஒளி மணிவண்ணன்கண்ணன்] - ரக்ஷ்யவர்க்கத்தைத் தன்வடிவழகாலே கரைமரஞ்சேர்க்கைக்காக

*"மாலும்கருங்கடலே" இத்யாதி. ஸர்வகாலமும் அவன் திருமேனியை நீ ஸ்பர்ஶிக்கப்பெற்று, அந்தஸ்பர்ஶஸுகத்தாலே மயங்காநிற்கிற கறுத்த கடலே! இப்பேறுபெறுகைக்கு என்ன ஸாதநாநுஷ்டாநம்பண்ணினுய்? இத்யர்த்தஃ. த்ருஷ்டாந்தபூர்வகமாக விவரணம் - **யஶோதை** இத்யாதி. **கோள்** - தேஜஸ்ஸும், மிடுக்கும். ப்ரக்ருஷ்டவிஜ்ஞாந இத்யாதி - ஸ்தோத்ரே. "தயாஸஹாஸீநம்" இத்யாதி. **தன்கோலம்** - தன்னதான கோலத்தையுடைய இதி சப்தார்த்தஃ. கோலம் - அழகு. **ஆலத்திவழிக்க** - ஆலத்தியெடுக்க; த்ருஷ்டி பரிஹாரம் பண்ண வென்றபடி. **வெறும்புறத்திலே ஆலத்திவழிக்க** வென்றது - ஒரு ஒப்பனையால் வந்த அழகுக்கன்றிக்கே ஸ்வதஃ உண்டான அழகுக்கு ஆலத்தி வழிக்கவேண்டும்படியா யென்றபடி. இத்தால் - இதரநிரபேக்ஷஸ்வாபாவிக ஸௌந்தர்யத்தையுடைய திருக்கண்களென்றபடி. 'செம்' என்றதுக்கு பாவம் - **ஸர்வைஶ்வர்ய** இத்யாதி விசேஷணங்கள். 'போல' இத்யாதிக்கு பாவம் - **கண்வளருகையென்று** இத்யாதி. 'போல' என்கையாலே, போர யென்றது. "யோமஹஸஹஸ்ரநாவாயஞ்ஜாநஸஹ்ருதியஸ்திஷ்ட" என்றதில் - உபாயத்தையும் த்யாநத்தையும் அடைவே காட்டுகிறுர் - ஸகல இத்யாதி. ரக்ஷணோபாய சிந்தை பண்ணினுல் என்னுமளவும் - ஓரர்த்தம். அவ்வநுஸந்தாநமென்று தொடங்கி - இரண்டாமர்த்தம். ஓர் - அத்விதீயம். யோகுபுணர்ந்த - ரக்ஷணோபாயசிந்தைபண்ணுகிற வென்றும், ஸ்வாத்மத்யாநம்பண்ணுகிற வென்றும் அர்த்தத்வயம். "ஆத்மாயாமேஶ்வர்யம்யோமஹிநம்ஸஶோஷிதஃ। ஆத்மாநம்வாஸுதேவாக்யம்சிந்தயந்ஸுதஃ" இதி ஷஷ்டேம்ஶே. 'உபாயசிந்தை பண்ணி' என்றதுக்கு அநுகுணமாக மேலிற் பதத்துக்கு அவதாரிகை - இப்படி இத்யாதி. **இப்படி அநுஸந்தித்தவாறே** - ஆத்மத்யாநம் பண்ணினவாறே யென்றபடி. **தோற்றுமே** - அவதாரமே உபாயமன்றென்றபடி. கரைமரம் சேர்கைக்கு க்ருஷ்ணனுய்வந்து அவதரித்தானென்னுமதுக்கு ப்ரமாணம் - **ஆட்கொள்ள** இத்யாதி. எல்லாரையும் அடிமைகொள்ளுகைக்காக வந்து அவதரித்த கோபநிர்வாஹகனை யித்யர்த்தஃ. பெரியாழ்வார் திருமொழி, முதற்பத்து, எழாந்திருமொழி—சாற்*

* குண்டலிதம் - ப்ரக்ஷிப்தமாக இருக்கலாம்.

க்ருஷ்ணனாய்வந்து அவதரித்தவன். "ஆட்கொள்வாத்தோன்றிய ஆயர்தங்கோ" இறே. ஒளியை யுடைய நீலமணிபோலேயிருக்கிற வடிவையுடைய க்ருஷ்ணன். [கறையணி இத்யாதி] - ப்ரதி பக்ஷத்தைக் கொன்று கறைகழுவ அவஸரமின்றிக்கேயிருக்கையாலே கறையேறி அதுவே ஆபரண மாயிருக்கும் மூக்கு என்னுதல்; அன்றிக்கே, தாயார் 'புத்ரமுகங் காணவேணும்' என்னும் அபிநி வேசத்தாலே முட்டையாயிருக்கிற பருவத்திலே ஒருஉத்யோகத்தைப் பண்ணினாள், அத்தால் ஓரடையாளம்பிறந்து, அதுதான் எம்பெருமானுக்கு ஸ்ரீவத்ஸத்தோபாதியாய், அத்தை ஆபரணமாக வுடைய புள் என்றுமாம். [கடாவி] - ரதாதிகளை நடத்துமாபோலே, திருமேனியோட்டை ஸ்பர் சத்தாலே திமிர்ந்து, வடிம்பிட்டுத் தாக்கி நடத்தவேண்டியிருக்கிறபடி. "**த்வதங்க்ரிஸம்மர்த்தகிணாங்கசோபிநா**" (த்வதங்க்ரிஸம்மர்த்தகிணாங்கசோபிநா) என்னக்கடவதிறே. [அசுரரைக் காய்ந்த] - இப்படி பெரியதிருவடியை நடத்தாநின்றுகொண்டு ஆஸுரவர்க்கத்தை நசிப்பித்த. ஆஸ்ரிதருடைய ஹேயோபகரணமே ஆஸ்ரிதவிரோதிநிரஸந பரிகரமு மென்கை. [அம்மான்] - இப்படி சிறியத்தைப் பெரியது நலியாதபடி நோக்கும் நிருபாதிகசேஷி. [நிறைபுகழ் இத்யாதி] - இந்த ரக்ஷணத்தாலே குறைவற்ற புகழை, ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஏத்தியும் பாடியும், ப்ரேமபாரவஸ்ய யத்தாலே இருந்தவிடத்திலிராதே ஆடியும் வர்த்திக்கிற நான், பகவத்போகத்துக்கு ஒரு ப்ரதிஹதி யுடையேனல்லேன் என்கிறார். முட்டு - விலக்கு. (௨)

## மூன்றாம் பாட்டு.

முட்டில்பல்போகத்தோர்தனிநாயகன் மூவுலகுக்குரிய
கட்டியைத்தேனையமுதை நன்பாலைக்கனியைக்கரும்புதன்னை
மட்டவிழ்தண்ணந்துழாய்முடியானைவணங்கி அவன்திறத்துப்
பட்டபின்னை இறையாகிலும் யானென்மனத்துப்பரிவிலனே.

*ஆ.—(முட்டில்.) நித்யவிபூதியிலுக்கும் நிரவதிகவர்த்தமான ஸர்வேஸ்வரனாயிருந்துவைத்து, மநுஷ்யலோகத்திலே மநுஷ்யஸஜாதீயராய் அவதரித்தவனாய், ஸர்வலோகத்துக்கும் பொதுவாய்ப் பரமபோக்யபூதனான எம்பெருமானை வணங்கி அவன் திறத்துப் பட்ட பின்னை என் மநஸ்ஸில் துக்கமெல்லாம் போயிற்று என்கிறார்.*

*ஒ.—மூன்றாம் பாட்டில், ஸர்வேஸ்வரனுடைய போக்யதாநுஸந்தாநப்ரீதிப்ரகர்ஷ ரத்தாலே அவனுக்கு அடிமைசெய்கையிலே ப்ரவ்ருத்தனான எனக்கு ஒருதோதுக்க மில்லை என் கிறார்.*

*[முட்டில்பல்போகத்து என்று தொடங்கி] - அப்ரதிஹத அஸங்க்யேய போகனாய், நிரஸ்த ஸமஸ்த ஸமாதிகனான ஸர்வேஸ்வரனாய். [மூவுலகுக்குரிய கட்டி என்று தொடங்கி] - எல் லாருக்கும் ஒக்க ப்ராப்தமான ஜகத்தில் ரஸவஸ்துக்களெல்லாம் போலேயுமாய் இவ்வனைவன்று*

---

*றப்பாட்டு. சப்தார்த்தம்-ஒளியை இத்யாதி. 'கடாவி' என்றதுக்கு ஸ்வாரஸ்யம்-ரதாதிகளை இத்யாதி. திமிர்ந்து- ஸ்தப்தமாய். வடிம்பிட்டுத் தாக்கினால் துக்கரூபமாயிராதோ? என்ன, போக்யமாயிருக்குமென்கிறார் - த்வதங்க்ரி இத்யாதி. ஸ்தோத்ரே. வடிம்பிட்டுத்தாக்கி - தங்கிபோட்டுக்கிளப்பி. 'புள்ளைக்கடாவியசுரரைக்காய்ந்த' என்ற துக்கு ஹாவம் - ஆஸ்ரிதருடைய இத்யாதி. ஆஸ்ரிதனானவன் ஈஸ்வரனை அநுபவிக்குமிடத்தில் அதுக்கு வர்த்த கத்வேந உபகரணமாயிருக்கு மென்றபடி. ப்ரதிஹதி -ப்ரதிபந்தகம்.* (௨)

பரிச்சேதிக்கவொண்ணுதபடி நிரதிசயபோக்யமாயிருந்துள்ள அவன்திருவடிகளிலே அடிமையிலே அந்வயித்த பின்பு. மூவுலகுக்குரிய ஒருதனிநாயகன் என்று கூட்டிக்கொள்ளவுமாம்.

ப.—அநந்தரம், நிரவதிக ஸர்வப்ரகாரபோக்யதையை அநுபவித்த நான் ஒரு மநஃபீடையையுடையேனல்லேன் என்கிறார்.

மூவுலகுக்கு உரிய-த்ரிவிதசேதநாசேதநங்களுக்கு அஸாதாரணபூதனுய், முட்டு இல் - அவிச்சிந்நமாய், பல்போகம் - பஹுவிதமான போகஸம்ருத்தியையுடைய, ஒரு-அத்விதீயனை, தனிநாயகன் - ப்ரதாநநாயகனுய், நல்கட்டியை - அந்தர்ப்பஹிஸ்சரஸகநமான கருப்புக்கட்டி, நல் தேனை - ஸர்வரஸஸமவாயமான தேன், நல் அமுதை - நித்யபோக்யமான அம்ருதம், நல் பாலை - ஸ்வாபாவிகரஸமான நன்மையையுடைய பால், நல் கனியை - அப்போதே நுகரவேண்டும் பக்வமான கனி, நல் கரும்புதன்னை - கணுத்தோறுமினிதான கரும்பு, (என்னலாம்படி ஸர்வவிதபோக்யதையையுடையனுய்), மட்டு - (இந்தபோக்யதாஸூசகமாய்) மதுஸ்யந்தியாய், அவிழ் - விகஸிதமாய்க்கொண்டு, தண் - குளிர்ந்து, அம் - அழகியதான, துழாய் - திருத்துழாயாலே அலங்க்ருதமான, முடியானை - திருவபிஷேகத்தையுடையவனை, வணங்கி - (இந்த போக்யத்வஶேஷித்வங்களுக்குத் தோற்று) வணங்கி, அவன்திறத்து - அவன்விஷயத்திலே, பட்ட பின்னை- (அநந்யார்ஹமாம்படி) உட்பட்டபின், யான் - (பரிபூர்ணவிஷயாவகாஹியான) நான், இறையாகிலும் - ஏகதேசமாகிலும், பரிவு - (இதரவிஷயஸம்பாவிதமான அலாபவைகல்யவிச்சேததுஃகோத்தரத்வாதிநிபந்தநமான) பரிப்பானது,என் மனத்து - என்மநஸ்ஸில், இலன் - உடையேனல்லேன். பரிவு - பரிப்பாய், மநஃபீடை யென்கிறபடி. மூவுலகுக்குரிய கட்டி யென்று - ஶேஷித்வத்தோபாதி போக்யதையும் ஸாதாரண மென்றுமாம்.

இ.—மூன்றும் பாட்டில், ஈஶ்வரனுடைய போக்யதாநுஸந்தாநத்தாலே அவனுக்கு அடிமைசெய்கையிலே ப்ரவ்ருத்தனுன எனக்கு க்ஷுத்ரவிஷய ப்ராவண்யத்தால்வரும் மநோதுஃகமில்லை என்கிறார்.

[முட்டில் இத்யாதி]-சிலநாள் சென்றவாறே முட்டுப்படக் கடவ தன்றிக்கே பலவகைப்பட்ட போகங்களை யுடையனுயிருக்கை. அப்ரதிஹத அஸங்க்யேய போகனுயிருக்கை. [ஒரு தனிநாயகன்] - ப்ரஹ்மாதிகளுக்கும் ஏகாதிபத்யம் சொல்லக்கடவது. அங்ஙனன்றியிலே அத்விதீயனை தனிநாயகன்; நிரஸ்த ஸமாப்யதிகனுயிருக்கை. மூவுலகுக்குரிய தனிநாயகனென்று கீழே கூட்டுதல். "ஜெதூ-ஸொகூஷவி நாயெநயெநவ௱நு நாயவ-தாஂ" என்கிறபடியே ஸர்வலோகஸாதாரணனை. "வஷ-ஸொகஶரணஂாய" என்று என்னேபாதி பெருமாளுக்கு உங்களால் சொல்லலாவது உண்டோ? என்னும்படியிறே இருப்பது. மூவுலகுக்குரிய கட்டியை என்று மேலோடே கூட்டுதல். போக்யதையும் ஸர்வஸாதாரணமா யிருக்கை. [கட்டியை] - உள்வாயோடு புறவாயோடு வாசியற ஏகரஸமாய் ரஸகநமாயிருக்கை.;"ஈஸொவெஸஃ".[தேனை]- அதில் காடிந்யம் தவிர்ந்திருக்கை. [அமுதை] - விலக்ஷண போக்யமாயிருக்கை. [நன்பாலை] - அவிலக்ஷணர்க்கும் போக்யமா யிருக்கை; 'நன்மை' எங்கும் கூட்டக்கடவது. [கனியை] - கண்டபோதே நுகரலாம்படி யிருக்கை. [கரும்புதன்னை] - கைதொட்டு ரஸிப்பிக்கவேண்டாதிருக்கை. ஆக, "ஸவ-ரஸஃ" என்கிறபடி. இவையெல்லாம் உபமாநமாகப் போராமையாலே, அது தன்னையே சொல்லுகிறது. [மட்டு அவிழ் இத்யாதி] - தேன்விரிகிற திருத்துழாயாலே அலங்க்ருதமான திருவபிஷேகத்தை யுடையவனை. ஆக, ஆஶ்ரயணீய வஸ்துவுக்கு ஸ்வரூபம் சொல்லிற்று. [வணங்கி] - அவன்தந்த கரணங்களைக்கொண்டு அவன்திருவடிகளைக் கிட்டுகை ஶேஷபூதனுக்கு ஸ்வரூபம். [அவன்திறத்துப் பட்டபின்னை] - அவனிடையாட்டத்திலே பட்டபின்பு.

[இறையாகிலும்] - அத்யல்பமும். [யான்] - விஷயாந்தரவிமுகனான நான். [என் மனத்துப் பரிவிலன்] - என்மநஸ்ஸில் துக்கமுடையேனல்லேன்.

௩௫.—மூன்றாம்பாட்டு. ஸர்வேஶ்வரனுடைய போக்யதாநுஸந்தாநப்ரீதிபலாத்காரத்தாலே அவனுக்கு அடிமை செய்கையிலே ப்ரவ்ருத்தனான எனக்கு, க்ஷுத்ரவிஷய ப்ராவண்யத்தால் வரும் ஹ்ருதயதுக்கம் இல்லையென்கிறார்.

[முட்டில் இத்யாதி] - சிலநாள் சென்றவாறே முட்டுப்படக்கடவதன்றிக்கே அஸங்க்யேயமான போகங்களையுடையனாய் அத்விதீயனான தனிநாயகன். அதாவது - தன்னை 'நாயகன்' என்றால், பின்னை இரண்டாம்விரலுக்கு ஆளில்லாதபடியிருக்கை. ப்ரஹ்மாதிகளுக்கும் ஏகாதிபத்யஞ் சொல்லக்கடவது; அவர்களை வ்யாவர்த்திக்கைக்காக - அத்விதீயனான தனிநாயகனென்கிறார். 'மூவுலகுக்கு உரிய - ஒரு தனிநாயகன்' என்று கீழே கூட்டுவது. * ([முட்டில்பல்போகம்] - ஐஶ்வர்ய கைவல்யங்களை வ்யாவர்த்திக்கிறது.) "த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம்" (த்ரைலோக்யமபிநாதேந யேநஸ்யாந்நாதவத்தரம்) என்கிறபடியே. "ஸர்வலோக ஶரண்யாய" (ஸர்வலோகஶரண்யாய) என்று என்னோபாதி பெருமாளுக்கு உங்களால் சொல்லலாவது உண்டோ? என்னும்படியிறே இருப்பது. அன்றிக்கே, "மூவுலகுக்குரிய - கட்டியைத்தேனை" என்று - லோக்யதையும் ஸர்வ ஸாதாரணமாயிருக்கை. [கட்டியை] - உள்ளோடு புறம்போடு வாசியற ரஸகநமாயிருக்கை; "ரஸோ வை ஸ:" (ரஸோவைஸ:.) [தேனை] - கட்டியின் காடிந்யம் தவிர்ந்திருக்கை. [அமுதை]-சாவாமல் காப்பதுமாய் விலக்ஷணபோக்யமுமா

மூன்றாம்பாட்டு - முட்டில் இத்யாதி. 'மூவலகுக்குரிய கட்டியை' இத்யாதி, 'என்மனத்துப்பரிவிலன்' என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - ஸர்வேஶ்வரனுடைய இத்யாதி.

முட்டுப்பட - தட்டுப்பட; அந்த்யமென்றபடி. 'ஒரு தனி' என்கிற விப்ஸைக்கு அர்த்தம்-தன்னை நாயகனென்றால் இத்யாதி. 'தனிநாயகன்' என்றால் போராதோ? 'ஒரு' என்று விசேஷிக்கிறதென்? என்ன, ப்ரஹ்மாதிகளுக்கும் இத்யாதி. அத்விதீயனான தனிநாயகன் - அத்விதீயனாகையாலே தனிநாயகனென்று ப்ரவிஷ்டன். 'மஹாவ்ருக்ஷம், பாலுண்ணி' என்றாற்போலே யென்றபடி. 'மூவலகுக்குரிய' என்றதைக் கீழே கூட்டினபோதைக்கு ப்ரமாணங்கள் - த்ரைலோக்யமபி இத்யாதி. "[illegible] [illegible] த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம்" இத்யயோத்யாகாண்டே பௌராந்ப்ரதி தஶரத:. "ஸர்வலோகஶரண்யாய ராகவாய மஹாத்மநே நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம்" இதி யுத்தகாண்டே ஸுக்ரீவப்ரமுகாந் வாநராந் ப்ரதி விபீஷண:. 'மூவுலகுக்குரிய' என்கிற இத்தால், இவன் ரந்த்ரத்தைக் காட்டி ஈஶ்வரன் தன் ஸ்வாதந்த்ர்யத்தாலே கைவிடநினைத்தால் வழக்குப்பேசிப் பற்றலா மென்னும் ஆகாரம் தோற்றுகிறதென்னுமத்தை உதாஹரணபூர்வகமாக அருளிச் செய்கிறார்-ஸர்வலோக இத்யாதி. "ஸர்வலோகஶரண்யாய" என்றதுக்கு அர்த்தம் - என்னோபாதி இத்யாதி. அதாவது - ஓபாதியென்று - அம்ஶமாய், ஸர்வாம்ஶத்திலே தானும் அந்தர்ப்பூதனாகையாலே எனக்கு ஶரண்யரான அம்ஶத்தையுடைய பெருமாளுக்கு உங்களாற் சொல்லலாம் கண்ணழிவு உண்டோ? என்றபடி. அன்றிக்கே, என்னோபாதி - என்னைப்போலே யென்றாய், 'ராவணாநுஜன், அதேஶ காலத்திலே வந்தான்' என்று எனக்கு தோஷம் சொன்னாற்போலே, பெருமாளை 'ஸர்வலோகஶரண்யரன்று' என்னப்போமோ? என்னை இந்த லோகத்திலே அந்தர்ப்பூதனன்று என்னப்போமோ? என்றபடி யென்னுதல். ஸர்வலோக ஶரண்யாய என்று எனக்கும் கூறு கொள்ளலாம்படியான பெருமாளுக்கு என்று பாடாந்தரமுண்டு. அப்போதைக்கு - அர்த்தம் இதுவே. ரஸகநமாயிருக்கை - 'ரஸோ வை ஸ:" என்கிற ஶ்ருதியோடே ஸமாநார்த்த மென்றபடி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - ரஸோ வை ஸ:

* குண்டலிதம் இவ்விடத்துக்கு ஏற்காது; வ்யாக்யாந அஸம்ஸ்ப்ருஷ்டம்.

யிருக்கை. [நன்பாலை] - அவிலக்ஷணர்க்கும் போக்யமாயிருக்கை. 'நன்மை' எங்கும் கூடக்கடவது. [கனியை] - கண்டபோதே நுகரலாம்படி பக்வபலமாயிருக்கை. [கரும்பு தன்னை] - கைதொட்டு ரஸிப்பிக்கவேண்டுங் குற்றமின்றிக்கே யிருக்கை. ஆக, **"ஸர்வரஸ:"** (ஸர்வரஸ:) என்கிறபடியே கீழ்ச்சொன்னவை யெல்லாம் உபமாநமாகப் போராமையாலே அதுதன்னையே சொல்லுகிறது. இவருடைய ஷட்ரஸம் இருக்கிறபடி. [மட்டவிழ் இத்யாதி] - மதுஸ்யந்தியாநிற்கிற திருத்துழாயாலே அலங்க்ருதமான திருவபிஷேகத்தை யுடையவனை. ஆக, ஆஶ்ரயணீய வஸ்துவுக்கு ஸ்வரூபம் சொல்லிற்று. [வணங்கி அவன்திறத்துப் பட்ட பின்னை] - வணங்கிக்கொண்டு அவன்திருவடிகளிலே கிட்டுகை ஶேஷபூதனுக்கு ஸ்வரூபம். காலயவநஜராஸந்தாதிகளைப்போலே படைவீட்டை அடைமதிட்படுத்தி வந்து கிட்டுகையன்றிக்கே, முறையிலே அவன்பக்கலிலே அந்வயித்த பின்பு. [இறையாகிலும்] - அத்யல்பமாகிலும். [யான்] - விஷயாந்தரவிமுகனான நான். [என் மனத்துப் பரிவிலனே] - "**ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா நந்தீ பவதி**" (ரஸம்ஹ்யேவாயம்லப்த்வாநந்தீபவதி) என்று ஒரு தேச விஶேஷத்திலே போனால் பூர்ணாநுபவம் பண்ணலாவது, இங்கேயிருந்து குறைய அநுபவியாநின்றேன்' என்னுமத்தால் வரும் மநோதுஃகமுண்டோ எனக்கு? என்கிறார். (௩)

## நான்காம் பாட்டு.

பரிவின்றிவாணனைக்காத்துமென்று அன்றுபடையோடும்வந்தெதிர்ந்த
திரிபுரஞ்செற்றவனும்மகனும் பின்னும்அங்கியும்போர்தொலையப்
பொருசிறைப்புள்ளைக்கடாவியமாயனை ஆயனைப்பொற்சக்கரத்து
அரியினை அச்சுதனைப்பற்றி யான் இறையேனும் இடரிலனே.

*ஆ.—(பரிவின்றி.) ஓரநிஷ்டமும் வாராதபடி வாணனைரக்ஷிக்கவென்று ப்ரதிஜ்ஞை பண்ணிக்கொண்டு ஸஸைந்யனாய்வந்து ப்ரத்யவஸ்திதனான த்ரிபுரதஹநஜநித நிரவதிக ஶௌர்ய கர்வாதிரூடனான ருத்ரனும், அவனிலும் அதிக்ரூரனாயிருந்த அவன்மகனும், பின்னையும் அதிப்ரபல பராக்ரமனான அக்நியும் யுத்தத்திலே நிரஸ்தராம்படி அஸுரரக்ஷோவிநாஶநமான திருச்சிறகை யுடையனான பெரியதிருவடியைக் கடாவிய ஆஶ்சர்யபூதனை, வாணனுடைய தோள்களைத் துணித்தருளுகைக்காகத் திருவாழியைச் சுழற்றியருளினபோதைத் திருவாழியும் கையும் இருந்த அழகாலே ஸகலஜநமநோநயநஹாரியாய், ஆஶ்ரிதஜநங்களோடு நித்யஸம்ஶ்லேஷஸ்வபாவனாய், நிரதிசய ஸௌஶீல்ய விஶிஷ்டனாயிருந்தவனைப் பற்றி யான் இறையேனும் இடரிலேன் என்கிறார்.*

---

என்றது. எங்கும்-கட்டி முதலானவற்றிலும். கண்டபோதே - பாகாதி நிரபேக்ஷமாக வென்றபடி. **நுகருகை** - புஜிக்கை. கனியில் வ்யாவ்ருத்தி - கைதொட்டு இத்யாதி. 'கட்டியை' இத்யாதிக்குத் தொகுத்து பாவம் - ஆக இத்யாதி. **அது தன்னையே** - தார்ஷ்டாந்திகமான வஸ்துதன்னையே. அவனுடைய போக்யதையை ஆறுகச் சொன்னதிலே ரஸோக்தி - இவருடைய இத்யாதி. 'அவன் திறத்துப் பட்ட பின்னை' என்ன அமையாதோ? 'வணங்கி' என்று விசேஷிக்கிறதென்? என்ன, **காலயவந இத்யாதி. அடைமதிட்படுத்தி** - முற்றுகைபோட்டு. **முறையிலே** - சேஷத்வப்ராப்தியிலே. **அவன் திறத்துப்பட்டபின்னை**- அவன் பக்கலிலே அந்வயித்தபின்பு. **பரிவு** - துஃகம். 'பரிவிலன்' என்றதுக்கு - அவதாரிகையிலே '**க்ஷுத்ர** விஷய ப்ராவண்யத்தால் வரும் ஹ்ருதய துஃகமில்லை' என்று அருளிச்செய்து 'இங்கேயிருந்து குறைய அநுப வியாநின்றேனென்னுமத்தால் வரும் மநோதுஃகமுண்டோ?' என்று அர்த்தாந்தரம் இவ்விடத்திலே அருளிச் செய்கிறார் - "ரஸோவை ஸ:" "ரஸம் ஹ்யேவாயம்" இத்யாதி. **தனிநாயகன்** - ப்ரதாந நாயகன். **உரிய** - தகுதியான. **மட்டு** - தேன். **அவிழுகை** - ப்ரவஹிக்கை. க்ரமேண அந்வய:. (௩)

ஒ.—நாலாம் பாட்டில், தேவதாந்தரங்கள் ஆஶ்ரிதருடைய ஆபத்துக்குத் துணையல்லவென்னுமிடத்தைக் காட்டின எம்பெருமானை ஆஶ்ரயித்து உஜ்ஜீவித்தமைசொல்லுகிறார்.

[பரிவின்றி] - வருத்தமின்றி. படை - சேனை. [திரிபுரஞ் செற்றவன்] - த்ரிபுரதஹனாபதாந ஸஞ்ஜாதாபிமானனான ருத்ரன். [மகன்] - ஸுப்ரஹ்மண்யன். [அங்கி] - அக்நி. [போர் தொலைய என்று தொடங்கி] - பலஹீநராம்படி பொருகிற சிறுச்சிறகையுடைய பெரியதிருவடியை அத்யாஶ்சர்யமாம்படி நடவி. ரமணீய தர்ஶநமான திருவாழியைத் தரிக்கையாலே ஶத்ருக்களுக்கு அப்ரத்ருஷ்யனாய்த் திருவடிகளை ஆஶ்ரயித்தார்க்கு ஒருசோர்வு வாராதபடி பண்ணும் ஸ்வபாவனான ஆயனைப் பற்றுகையாலே.

ப.—அனந்தரம், ஸ்ரீப்ரதிபக்ஷஸமஸ்தவிரோதிநிவர்த்தகனாய் ஆஶ்ரிதரைக் கைவிடாத அவனைப் பற்றின நான் ஒருமிறுக்குடையேனல்லேன் என்கிறார்.

அன்று - (அநிருத்தனுக்காகத் தானெழுந்தருளின) அன்று, வாணனை - வாணனை, பரிவு இன்றி - மிறுக்கு அற, காத்தும் - காக்கக்கடவோம், என்று - என்று பஹுமாநோக்தி பண்ணி, படையொடும் - ஆயுதங்களோடே, வந்து எதிர்ந்த - வந்து எதிரேறின, திரிபுரம்செற்றவனும் - த்ரிபுரதஹநஶாக்த்யபிமாநியான ருத்ரனும், மகனும் - அவன்மகனாய் தேவஸேநாபதியான ஏற்றத்தையுடைய ஸுப்ரஹ்மண்யனும், பின்னும் - அதுக்குமேலே, அங்கியும் - ('ருத்ரன் தான்' என்னலாம்படி க்ரௌர்யத்தையுடைய) அக்நியும், போர் தொலைய - 'இனி ஒரு யுத்தம் என்று வாரோம்' என்று நிவ்ருத்தராய்ப் போம்படி, பொரு - பொருகிற, சிறை - சிறுச்சிறகையுடைய, புள்ளை - பெரிய திருவடியை, கடாவிய - நடத்தின, மாயனை - ஆஶ்சர்யபூதனாய், ஆயனை - அவதாரமுகத்தாலே தன்னைத் தாழவிட்டு நிற்குமவனாய், பொன் - தர்ஶநீயமான, சக்கரத்து - திருவாழியையுடையனாய்க்கொண்டு, அரியினை - விரோதிகளை யழியச்செய்து, அச்சுதனை - ஆஶ்ரிதரைக்கைவிடாதவனை, பற்றி - ப்ராபித்து, யான் - (அநுபவிக்கிற) நான், இறையேனும் - ஏகதேசமும், இடர் இலன் - மிறுக்கை யுடையேனல்லேன். இடர் - இடைஞ்சலாய், மிறுக்கு என்றபடி.

இ.—நாலாம்பாட்டில், தேவதாந்தரங்களைப் பற்றினார்க்கு அவர்கள் தஞ்சமல்லவென்னுமிடத்தையும், தன்னைப்பற்றினாரைத் தான் கைவிட்டுக்கொடானென்னுமிடத்தையும் காட்டின இவனைப்பற்றின எனக்கு ஒருதுக்கமில்லை என்கிறார்.

[பரிவின்றி இத்யாதி] - அநிருத்தாழ்வானைப்பற்ற க்ருஷ்ணன் எடுத்துவிட்ட தசையிலே ருத்ரன் பாணனுக்குப் பண்ணின ப்ரதிஜ்ஞை. வருத்தமற வாணனைக் காக்கக்கடவோமென்று தன் ஓலக்கத்திலே சொன்னான். காக்கக்கடவேனல்லேன் என்றுவிட்டது, தன்னைக் குவாலாக நினைத்திருக்கை. [அன்று] - அநிருத்தாழ்வானைச் சிறைவைத்த அன்று. [படையொடும் வந்தெதிர்ந்த] - தனிவீரம் செய்யக்கடவதாக நினைத்துத் தன் வெற்றி காண்கைக்குப் படை திரட்டிக்கொண்டு வந்தபடி; "முண்டனீறன்". படை - ஆயுதமென்றுமாம். "ஶார்ங்கஸ்ரோவஸி பாதஃ ஶங்கஜ்யோஹணதேஜஸா" என்று கையில் ஆயுதத்தோடே மோஹித்தபடி. தன்வெறுமையை முன்னிட்டு அஞ்சலியைக்கொண்டுவரும் விஷயத்தை எதிர்க்கைக்கு ஹேது வென்? என்னில்,—[திரிபுரம்செற்றவனும்] - த்ரிபுர தஹநமாகிற அபதாநத்தாலே ஸஞ்ஜாதாபிமாநனாகையாலே. த்ரிபுரதஹநஸமயத்தில் வில்லுக்கு மிடுக்காய் நாணிக்குத் திண்மையாய் அம்புக்குக் கூர்மையாய்த் தனக்கு அந்தராத்மாவாய் எதிரிகளைத் தலைசாயும்படி பண்ணினபடியை மறந்து தானே

செய்தானை ப்ரமித்தவ னென்கை. [மகனும்] - தன்னிலும் மிடுக்கனாய் தேவஸேநாபதியான ஸுப்ரஹ்மண்யனும். [பின்னும் அங்கியும்]-அதுக்குமேலே நாற்பத்தொன்பது அக்நியும். [போர் தொலைய] - 'இனி ஒரு யுத்தத்திலும் புகக்கடவோமல்லோம்' என்னும்படி; போரிலே மாள என்றுமாம். [பொருசிறை] - இப்படி தொலைத்தார் ஆர்? என்னில்,—பெரியதிருவடியின் சிறகு. [கடாவிய மாயனை] அவன் கருத்தறிந்து நடத்தவல்ல ஆஸ்சர்யபூதனை. [ஆயனை] - அவன் தோற்றது தன்தரம் குலையாதே நிற்கிற நிலையிலே; இவன் வென்றது தன்னைத் தாழவிட்ட விடத்திலே. [பொற்சக்கரத்தரியினை] - அநுகூலர்க்கு ஸ்ப்ருஹணீயமான திருவாழியைத் தரித்து ஶத்ருக்களுக்கு அப்ரத்ருஷ்யனானவனை. "க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம்" - தோள்வலி கண்டபின்பு ஆயிற்று ஸர்வேஶ்வரனென்று அறிந்தது. [அச்சுதனை] - ஆஶ்ரிதரை நழுவவிடாதவனை. அநிருத்தாழ்வானுக்காக மார்பிலே அம்பேற்கையாலே ஆஶ்ரிதர்க்குத் தஞ்சமென்று விஶ்வஸிக்கத் தட்டில்லையிறே. [பற்றி யான் இறையேனும் இடரிலனே] - இவனைப்பற்றின எனக்கு அல்பதுக்கமும் இல்லை; பேரனென்றிருக்கையாலே அநிருத்தாழ்வானுக்கு நாலுநாள் சிறையிருக்கவேண்டிற்று; 'அடியேன்' என்று பற்றினவனாகையாலே, எனக்கு அதுவும் வேண்டிற்றில்லை.

ஈடு.—நாலாம்பாட்டு. தேவதாந்தரங்களைப்பற்றினார்க்கு அவர்கள் தஞ்சமல்லரென்னுமிடத்தையும், தன்னைப்பற்றினார்களைத் தான் விட்டுக்கொடா னென்னுமிடத்தையும் காட்டின இவனைப்பற்றின எனக்கு ஒருதுக்கமில்லை யென்கிறார்.

[பரிவின்றி இத்யாதி] - அநிருத்தாழ்வானைப்பற்ற க்ருஷ்ணன் எடுத்துவிட்ட வளவிலே வாணன் ருத்ரன் பக்கலிலே சென்று, 'க்ருஷ்ணன் நமக்கு எதிரியாய் வாராநின்றான்' என்று சொன்னவாறே, தலையில்வைத்த பூ வாடாமல் வருத்தமற வாணனைக் காக்கக்கடவோ மென்று சொன்னானாயிற்று, க்ருஹத்துக்குள்ளே யிருந்து தந்தாம் சேவகஞ் சொல்லுவாரைப்போலே: இச்சக்ரவர்த்திதிருமகன் "ஏதத் வ்ரதம் மம" (எதத்வ்ரதம்மம) என்கிறானோ? [அன்று] - அநிருத்தாழ்வானைச் சிறையில்வைத்த வன்று. [படையொடும் வந்தெதிர்ந்த] - 'தனக்கு விஜயம் வ்யவஸ்திதம்' என்று அது காண்கைக்கு ஸேனையைத்திரட்டிக்கொண்டு வந்த; "முண்டனீறன்" இத்யாதி. படை - ஆயுத மென்றுமாம்; "பாரவஶ்யம் ஸமாயாதஸ்ய" (பாரவஶ்யம் ஸமாயாதஸ்

---

நாலாம்பாட்டு-பரிவின்றி இத்யாதி. 'பின்னுமங்கியும் போர்தொலைய, புள்ளைக் கடாவிய, அச்சுதனை' இத்யாதிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை - தேவதாந்தரங்களை இத்யாதி.

வாணன் 'என்னைக் காக்கவேணும்' என்றபோது ருத்ரன் பண்ணின ப்ரதிஜ்ஞையை துச்சீகரிக்கிறார் - அநிருத்தாழ்வான் இத்யாதி வாக்யத்வயத்தாலே. அநிருத்தாழ்வானைப்பற்ற-அநிருத்தாழ்வான்நிமித்தமாக. பரிவின்றி - வருத்தமற. காந்துமென்று - காக்கக்கடவோமென்று. சேவகம் - பௌருஷம். சேவகம் சொல்லுகிற மாத்ரமேயோ? ஸாமர்த்யமில்லையோ? என்ன, இச்சக்ரவர்த்தி திருமகன் இத்யாதி. தான் பலவானாக அபிமானித்திருக்கையாலே, தனக்கு ஸஹாயத்வேனவென்று ஸேனையைக் கூட்டிக்கொண்டு வருகிறது; தன்ஶௌர்யம் பார்க்கைக்காகவிறே என்கிறார்-தனக்குவிஜயம் இத்யாதி. ஸேனையோடே வந்ததுக்கு ப்ரமாணம்-முண்டனீறன் இத்யாதி. முண்டிதனாய் பஸ்மச்சன்னனான ருத்ரன். மக்கள்-ஸுப்ரஹ்மண்யன் முதலான புத்ரர்கள். வெப்பு-ஜ்வரம். மோடி - பிடாரி. அங்கி - நாற்பத்தொன்பது அக்நிக்கும் கூடஸ்த்தனான அக்நி. ஓடிட - ஓடிப்போக இதி பாசுரார்த்தம். திருச்சந்தவிருத்தம் - எழுபத்தோராம் பாட்டு. "வண்டுலாவு கோதை" இத்யாதி. ஆயுதத்தோடே வந்தானோ? என்ன, ப்ரமாணம் - பாரவஶ்ய இத்யாதி. "பாரவஶ்யம் ஸமாயாதஸ்ய ஶிவஸ்ய ஸமரே தேஜஸா । பாணஸம்ரக்ஷணார்த்தாய ஶூலம் ஶ்ரீஶிவஸ்ய தேஜஸா". 'சூலி' என்று -

மாலி) என்று ஆயுதத்தோடே மோஹித்தபடி. தன் வேறுமையை முன்னிட்டு அஞ்சலியைக் கொண்டுவந்துகிட்டும் விஷயத்தை இப்படி ஸாதநமாக எதிரே வைக்கை ஹேதுவேன்னென்ன. [திரிபுரம் செற்றவனும்] - த்ரிபுரதஹநமாகிற அபதாநத்தாலே ஸஞ்ஜாதாபிமாநனாகையாலே. கடல் கடைகிற போது எட்டுவடிவுகொண்டுநின்று கடைந்தாற்போலே, த்ரிபுரதஹநஸமயத்திலே வில்லுக்கு மிடுக்காயும், நாணிக்குத் திண்மையாயும், அம்புக்குக் கூர்மையாயும், தனக்கு அந்தராத்மாவாயும் எதிரிகளைத் தலைசாயும்படிபண்ணி த்ரிபுரத்தை மறித்துக்கொடுத்தான்; அத்தை அறியாதே அஜ்ஞரான வர்கள் இத்தை அவன்தலையிலே வைத்துக் கவிபாட, இத்தைத் தானும் கேட்டு 'மெய்யிறே' என்று ப்ரமித்து, 'அதுசெய்த நமக்கு இவனை வெல்லத் தட்டேன்?' என்று வந்து எதிரிட்டானாயிற்று. இத்தால் சொல்லிற்றாயிற்று - ருத்ரன் தன்னை அபாஸ்ரயமாகப் பற்றினாரை ஆபத்து வந்தவாறே காட்டிக்கொடுத் தோடுமென்னுமிடமும், ஸர்வேஸ்வரன் தன்னைப் பற்றினாரை எல்லா வளவிலும் ரக்ஷிக்குமென்னுமிடமும். [மகனும்] - பிதாவான ருத்ரன் வளர்ந்த பின்பு செய்தவற்றைப் பருவம் நிரம்புவதற்கு முன்னே செய்த இளமறியாய்ப் பெருமிடுக்கனாய் தேவ ஸேநாதிபதியான ஸுப்ரஹ்மண்யனும். [பின்னும் அங்கியும்]-அவனுக்குமேலே நாற்பத்தொன்பது அக்நிகளும். [போர்தொலைய] - போரிலே மாள. [பொருசிறைப்புள் இத்யாதி] - ப்ரதிபக்ஷத்தின் மேலே பொருகிற பக்ஷத்தையுடைய பெரியதிருவடியைக் கருத்தறிந்து நடத்தவல்ல ஆஸ்சர்ய பூதனை. இங்கு ஆஸ்சர்யமாவது - வாணனுடைய கரத்தைக் கழித்து அவனை இறையிலிசெய்து, நாட்டுக்குத் தானே நின்றிறையான ஆஸ்சர்யம். "வாணனாயிரங் கரங்கழித்த ஆதிமால்" இறே. [ஆயனை] - அவன்தோற்றது தன் தரம் குலையாதே நிற்கிற நிலையிலே; இவன் வென்றதும் தன்னைத் தாழவிட்டவிடத்திலே. [பொற்சக்கரத்தரியினை] - அநுகூலர்க்கு ஸ்ப்ருஹணீயமான திருவாழியைத் தரித்து ஸத்ருக்களுக்கு அப்ரத்ருஷ்யனானவனை. "க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம்" (க்ருஷ்ணக்ருஷ்ண மஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம்) - தோள்வலி கண்ட பின்பாயிற்று ஸர்வேஸ்வரனென்றறிந்தது. [அச்சுதனை] - ஆஸ்ரிதரை நழுவ விடாதவனை. ருத்ரன் தன்னை ஆஸ்ரயித்த வாணனைக் கைகழியவிட்டு ஓடினானிறே; "சடையானோட அடல்வாணன் தடந்தோள் துணித்த தலைவன்" இறே இவன். தலைமையாவது - வாண

---

மோஹித்தபடி சொல்லுகிறதென்றபடி. மோஹமாவது - ஸாத்ருஸ்யஜ்ஞானத்தால் வந்துகிட்டும் விஷயத்தை ஸாத நபாணியாய்வந்துகிட்டுகைக்கு ஹேதுவான அஜ்ஞானம். இது பரமபத ஸந்தார்த்தமன்று, "நூல்" என்கிற பதத்தில் ஆர்த்திகமான அர்த்தம். வேறுமை - ஆகிஞ்சந்யம். 'திரிபுரஞ்செற்றவன்' என்றதைப்பற்ற தனக்குவிஜயம் வ்யவஸ்த்திதம் என்றது. திரிபுரஞ்செற்றது ஸர்வேஸ்வரன் அந்தராத்மாவாகையாலேயன்றோ? அது அபி மாநஹேதுவானபடி எப்படி? என்ன, கடல்கடைகிற இத்யாதி. இத்தால்-இத்யாதி. இத்தால் சொல்லிற்றாயிற்று இத்யாதிவாக்யம் - பாட்டின் வ்யாக்யாநத்தின் முடிவிலேயாகக் கடவது. பருவம் நிரம்புவதற்குமுன்னே செய்தது - க்ரௌஞ்சபர்வதத்தை எய்கை. ருத்ரன் ப்ரௌடனாயிறே த்ரிபுரதஹநம்பண்ணிற்று. இளமறி - இளங்குட்டி. கரம்-பல்; கப்பமும், ஹஸ்தமும். இறையிலிசெய்து - கப்பங்கொடாதவனாக்கி யென்றபடி. ஸ்வதந்த்ர தேவதையாகிற ஸ்வாமியில்லாதவனாக்கப்பண்ணி யென்றபடி. நின்றிறை - ஸ்திரமான ஸ்வாமி. அவன்கரத் தைக் கழித்துத் தான் ஸ்வாமியானதுக்கு ப்ரமாணம்-வாணனாயிரம் இத்யாதி. வாணனுடைய ஆயிரம் கரத்தை யும் கழித்த காரணபூதனான ஸர்வேஸ்வரனிதி பாகரார்த்தம். திருச்சந்த விருத்தம் - ஐம்பத்து மூன்றாம்பாட்டு. "மோடியோடு" இத்யாதி. 'திரிபுரஞ்செற்றவன்' என்று அவனைச்சொல்லி, 'ஆயனை' என்று இவனைச் சொல்லுகையாலே பலித்த பாவம் - அவன்தோற்றது இத்யாதி. அரி - விப்ரஹரஸ்ரேஷ்டம். அத்தாலே - அப் ரத்ருஷ்யத்வம். அப்ரத்ருஷ்யத்வே ப்ரமாணம் - க்ருஷ்ணக்ருஷ்ண இத்யாதி. "[illegible] நாதி நிய நம்வாஸ்ய" இத்யுத்தரார்த்தம். பஞ்சமேயுமே ருத்ரஸ. "[illegible] மஹா - [illegible] ஜாநே" என்றதுக்குத் தாத்பர்யம் - தோள்வலி இத்யாதி. 'அச்சுதன்' என்றதின் வ்யதிரேகவிவக்ஷித மான அர்த்தத்தை அருளிச்செய்கிறார், ருத்ரன் தன்னை இத்யாதி. தலைமைக்குப்ப்ரமாணம் சடையான்-இத்யாதி.

னைக் கைம்முதலறுத்துத் தலையழியாமே வைத்த தலைமை. அநிருத்தாழ்வானுக்காக மார்விலே அம்பேற்கையாலே 'ஆஶ்ரிதர்க்குத் தஞ்சம்' என்று விஶ்வஸிக்கத் தட்டில்லை. [பற்றி யான் இறையேனும் இடரிலனே] - இவனைப்பற்றின எனக்கு அல்பதுஃகமு மில்லை. 'பேரன்' என்றிருக்கையாலே அநிருத்தாழ்வானுக்கு நாலுநாள் சிறையிலிருக்க வேண்டிற்று; 'அடியேன்' என்று பற்றின எனக்கு அதுவும் வேண்டிற்றில்லை. (௪)

## ஐந்தாம் பாட்டு.

இடரின்றியேஒருநாளொருபோழ்தில் எல்லாவுலகுங்கழியப்
படர்புகழ்ப்பார்த்தனும்வைதிகனும் உடனேறத்திண்தேர்கடவிச்
சுடரொளியாய்நின்றதன்னுடைச்சோதியில் வைதிகன்பிள்ளைகளை
உடலொடுங்கொண்டுகொடுத்தவனைப்பற்றி ஒன்றுந்துயரிலனே·

*ஆ.—(இடரின்றியே.) ஸ்வசரணாரவிந்தபோஷைதைகநித்வமாகிறப்ரதிதமானதேஜஸ்ஸையுடையனான பார்த்தனும் வைதிகனும் உடன் ஏற, ஒருநாள் ஒருபோதில், எல்லாவுலகும்கழிய அநாயாஸேந திண்தேர்கடவி, நிரவதிகதேஜோவிஶிஷ்டமான தன்னுடைய ஸ்ரீவைகுண்டத்திலேயிருந்த வைதிகன்பிள்ளைகளை அவ்வுடலோடுங் கொண்டு கொடுத்தவனைப் பற்றி ஒன்றுந் துயரிலேன் என்கிறார்.*

*ஒ.—அஞ்சாம் பாட்டில், வைதிகபுத்ராநயந மஹாபதாநத்தை யநுஸந்தித்துத் துஷ்டராகிறார்.*

*[இடரின்றியே என்று தொடங்கி] - ஒருநாளிலே ஒருமுஹூர்த்தத்திலே ஒருவருத்தமின்றிக்கே அண்டத்துக்குப் புறம்பான ஆவரணலோகங்களும் கழியும்படி தன்னையே நாதனாகவும் தோழனாகவும் தூதனாகவும் ஸாரதியாகவும் மற்றும் எல்லாப்பரிஜநமாகவும் உடையனான பெரும்புகழையுடைய அர்ஜுநனும் வைதிகனும் உடனே ஏறக் கார்யரூபமாய்வைத்துத் தன் ஆகாரம் அழியாதிருக்கச்செய்தே கார்யங்களுக்கெல்லாம் மூலகாரணமான ப்ரக்ருதிபர்யந்தமாகப் போம்படி திருத்தேரை நடத்தி. [சுடரொளியாய் என்று மேலுக்கு] - அப்ராக்ருத தேஜோரூபமாய்த் தனக்கு அஸாதாரணமான திருநாட்டிலே புக்கருளி வைதிகபுத்ரர்களை அவ்வுடம்போடே அப்பருவத்தோடே கொண்டுவந்து கொடுத்தவனைப் பற்றுகையாலே நிர்த்துஃகனானேன்.*

*ப.— அநந்தரம், அர்த்தியான வைதிகனுடைய அர்த்திதார்த்தகாரியானவனைப் பற்றின நான் ஒருக்லேஶமுடையே னல்லேன் என்கிறார்.*

இடர் இன்றியே - மிறுக்கு இன்றிக்கே, ஒருநாள் - ஒருதிவஸத்திலே, ஒருபோழ்தில்- (ஒருகர்மம் சமைந்து கர்மாந்தராநுஷ்டாநத்துக்கு இடையா யிருப்பது)ஒருகாலத்திலே, எல்லாவுலகும் - ஸர்வலோகத்துக்கும், கழிய - அவ்வருகே கழிந்துபோம்படியாக, படர்புகழ் - (க்ருஷ்ணாஶ்

---

*ருத்ரனோட, மிடுக்குடைய வாணனுடைய பெரிய தோள்களைத் துணித்த ஶ்ரேஷ்ட்ட னிதி பாசுரார்த்தஃ. திருமொழி ஐந்தாம்பத்து முதல்திருமொழி ஏழாம்பாட்டு. தலைமை - ஶ்ரைஷ்ட்யம். இவனை ஆனால் நம்பலாமோ? என்ன, அநிருத்த இத்யாதி. பற்றி - ஆஶ்ரயித்து. 'எனக்கு அல்பதுஃகமுமில்லை' என்கையாலே அநிருத்தாழ்வானுக்கு அல்பதுஃக முண்டென்று திருவுள்ளம்பற்றி, அவனுக்கு துஃகமுண்டாகைக்கும் தமக்கு இல்லாமைக்கும் ஹேதுவை அருளிச்செய்கிறார் - பேரன் இத்யாதி வாக்யத்வயத்தாலே. க்ரமேண அந்வயஃ.* (௪)

ரயத்வாதியாலே) விஸ்தீர்ண யஶாவான, பார்த்தனும் - அர்ஜ்ஜுநனும், வைதிகனும் - ப்ராஹ்மண னும், உடன்ஏற - கூட ஏறிப்போம்படி, திண் தேர் - (காரணதத்த்வாந்வயத்திலும் கார்யரூப வைஶித்ல்யம் பிறவாதபடி) திண்மையையுடைத்தான தேரை, கடவி-கடவி, சுடர் ஒளியாய் நின்ற- அத்யுஜ்ஜ்வல தேஜோமயமாய்ப் பரிணாமரஹிதமாய் நின்ற, தன்னுடைச் சோதியில்- தன்னதான பரஞ்ஜ்யோதிஶ்ஶப்தவாச்யமான தேசத்திலே, வைதிகன்பிள்ளைகளை - அந்தவைதிகபுத்ரர்கள் நால்வரையும், உடலொடும் - (காலக்ருதபரிணாமமில்லாத தேசமாகையாலே) அந்தஶரீரத்தோடே யும், கொண்டு கொடுத்தவனை - கொண்டுவந்து அவனுக்குக்கொடுத்தவனை, பற்றி - கிட்டியநு பவித்து (அத்தாலே), ஒன்றும் - ஒரு ப்ரகாரத்தாலும், துயர் இலன் - ஸம்ஸாரக்லேஶம் இன்றி யிலே யொழிந்தேன்.

இ.—அஞ்சாம்பாட்டில், வைதிகபுத்ராநயநத்தை அநுஸந்தித்து இவனைப்பற்றின எனக்கு ஒருதுக்கமில்லை என்கிறார்.

[இடரின்றியே] - வருத்தமின்றியே. [ஒருநாள்] - ஏகாஹதீக்ஷையான க்ரதுவிலே. [ஒருபோழ்தில்] - ப்ராதஸ்ஸவநம் தலைக்கட்டி மாத்யந்திநஸவநத்துக்குமுன்னே. [எல்லாவுலகும் கழிய] - ஆவரணஸப்தகத்துக்கும் அவ்வருகுபடுத்தி. [படர்புகழ்] - "யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்தந:" என்கிறபடியே ஸர்வவிதபந்துவுமாகப் பற்றின புகழையுடைய அர்ஜ்ஜுநனும். [வைதிகனும்] - க்ருஷ்ணன் திருவடிகளிலே நிரவதிகமான ஸ்நேஹத்தையுடைய ப்ராஹ்மணனும். [உடன்ஏற] - தன்னோடே கூட ஏற. [திண்தேர் கடவி] - கார்யாகாரம் குலை யாமே மூலகாரணமான ப்ரக்ருதிபர்யந்தமாகத் தேருக்குத் திண்மையைக்கொடுத்து நடத்தி. [சுடரொளியாய் நின்ற] - நிரவதிகதேஜோரூபமாய் ஏகரூபமாய் நின்ற. [தன்னுடைச் சோதியில்]- தனக்கு அஸாதாரணமான தேஶம். "[illegible]" என்கிறபடியே தன்னுடைய காந்தி வெள்ளமிட்டாற் போலேயிருக்கை. "[illegible]". [வைதிகன் இத் யாதி] - ஶரீரஸம்பந்தம் அற்றால் போகக்கடவதாயிருக்க, இஶ்ஶரீரத்தோடேயாயிற்று இவர் களைக் கொண்டுபோயிற்று. காலக்ருதபரிணாமமில்லாத தேஶமாகையாலே அவ்வுடம்போடே அப்பருவத்தோடே கொண்டுவந்து கொடுத்தவனைப் பற்றுகையாலே ஒரு துக்கமுமில்லை என்கிறார். புத்ரார்த்தியான அளவன்றியே ஸ்வரூபத்தை அறிந்துபற்றின எனக்கு ஒருதுக்கமில்லை என்கிறார்.

ஈடு.—அஞ்சாம் பாட்டு. வைதிகபுத்ராநயநத்தை அநுஸந்தித்து, இவனைப்பற்றின எனக்கு ஒருதுக்கமுமில்லை யென்கிறார்.

[இடரின்றியே] - ஒருவருத்தமு மின்றியே. [ஒருநாள்] - ஏகாஹதீக்ஷையான க்ரது விலே. [ஒரு போழ்தில்] - ப்ராதஸ்ஸவநம் தலைக்கட்டி மாத்யந்திநஸவநத்துக்குமுன்னே. [எல்லா வுலகும் கழிய] - ஆவரண ஸப்தகங்களுக்கும் அவ்வருகுபட. [படர்புகழ் பார்த்தனும்]-"யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்தந:" (யஸ்யமந்த்ரீச கோப்தாச ஸுஹ்ருச்சைவ ஜநார்தந:) என்கிறபடியே க்ருஷ்ணனையே ஸர்வவித பந்துவாகப் பற்றின புகழையுடைய அர்ஜ் ஜுநனும். [வைதிகனும்] - க்ருஷ்ணன் திருவடிகளிலே நிரவதிகமான ஸ்நேஹத்தையுடைய ப்ராஹ்மணனும். [உடன் ஏற] - தன்னோடே கூட ஏற. [திண்தேர்கடவி] - இவர்களைத் தேரிலே

---

அஞ்சாம்பாட்டு. - இடரின்றியே இத்யாதி. 'வைதிகன் பிள்ளைகளை' இத்யாதி, மேலெல்லாம் ஸ்பஷ்டம். அவதாரிகை - வைதிகபுத்ர இத்யாதி.

'படர்புகழ் - வைதிகன்' என்று கூட்டி அர்த்தம் - க்ருஷ்ணன் இத்யாதி. படர்புகழ் - உபயார்த்தமி யென்று பாவம். படர் - பரந்த. தேருக்குத் திண்மையேது? என்ன, இவர்களைத்தேரிலே இத்யாதி. ப்ர

பேற்றுக்கொண்டு, கார்யாகாரம் குலையாமே, மூலகாரணமான ப்ரக்ருதிபர்யந்தமாகத் தேருக்குத்திண் மையைக்கொடுத்து நடத்தி; * பிண்டாவஸ்த்தையிலும் கடம் அநுவர்த்திக்குமாபோலே. ஒளி - அழகு. [சுடரொளியாய்நின்ற] - நிரவதிகதேஜோரூபமாய் ஏகரூபமாய் நின்ற. [தன்னுடைச் சோதியில்] - தனக்கு அஸாதாரணமான தேசம். தன்னுடைய காந்தி வெள்ளமிட்டாற்போலே யிருக்கை. "ஆதித்யவர்ணம் தமஸஸ்து பாரே" (அத்யர்க்காநலதீப் தந்தஸ்த்தாநம் விஷ்ணோர்மஹாத்மந:) என்கிறபடியே ஆயிரங்கோடி அக்ந்யாதித்யர்களுடைய தேஜஸ்ஸை ஒடவைத்து ஒருதேசமாக வகுத்தாற்போலே யிருக்கையாலே இவர்களுக்குக் கண் கொண்டுபார்க்க வொண்ணாது; ஆகையாலே, தமஸ்ஸளவிலே இவர்களை நிறுத்தி, தன்னிலமாகை யாலே தானேபோய்ப் புக்கான். ஜலத்திலே மத்ஸ்யம் உலாவுமாபோலே தேசிகரே புகவேண்டும் நிலமிறே. [வைதிகன் பிள்ளைகளை] - ப்ராஹ்மண புத்ரர்களை. [உடலோடும் இத்யாதி] - கொண்டு போகிறபோதைப்படியில் ஒன்றுங் குறையாதபடி கொண்டுவந்து கொடுத்தானுமிற்று, காலக்ருத பரி ணாமமில்லாத தேசமாகையாலே. [உடலோடும் இத்யாதி] - பூசின மஞ்சளும், உடுத்தின பட்டும், இட்ட சவடிப்பூணூலும், இட்ட காதுபணிகளுமான ஒப்பனையில் ஒன்றுங்குறையாதபடி கொண் டுவந்து கொடுத்தவனை யென்றுமாம். 'பிறக்கப் பிறக்கக் கொண்டுபோனார்களாகில் இப்போது இவையெல்லாம் உண்டோ?' என்று பட்டரைக் கேட்க, 'ருஷிபுத்ரர்களாகையாலே பிறக்கிற போதே அவற்றோடே பிறப்பர்காணும்' என்று அருளிச்செய்தார். [பற்றி இத்யாதி]-ஸமுத்ரத்தில் நீரை ஸஹ்யத்திலே ஏற்றுமதுவே வருத்தமுள்ளது; ஸஹ்யத்தில் நீரைஸமுத்ரத்திலே கொண்டுவருமென்று ஒரு வருத்தமில்லையே; அப்படியே அங்குப் புக்காரை இங்கே மீட்கையாகிறது அவன் திருவுள்ளத்தோடு சேராது; இங்குள்ளாரை அங்கே கொண்டுபோகையாயிற்று அவன்திருவுள்ளத்திற் பொருந்துவது. புத் ராரத்தியான வைவன்றியே ஸ்வரூபாநுரூபமாக அவன் திருவுள்ளத்துக்குப் பொருந்தின செயலை ஆசைப்பட்ட எனக்கு ஒருகுறையுமுண்டோ? என்கிறார். கர்மஸம்பந்த மற்றுப் போகாமையாலேயா

*க்ருதிப்ரேவைபோல தேருக்குத் திண்மையைக் கொடுத்து நடத்தினதுக்கு அஸம்பாவிதமான த்ருஷ்டாந்தம்-பிண் டாவஸ்த்தையிலும் இத்யாதி. ஒளி அழகு என்றபடி. மிக்கையாக்கி அர்த்தாந்தரம்-நிரவதிக இத்யாதி. மூந் தின அர்த்தம் - தேஜஸ்ஸாய் அழகிதாயிருக்கிற தென்றபடி. ஏகரூபமாய் என்றது - 'நின்ற' என்றதின் அர்த்தம். இது - வைதிகபுத்ரர்களுடைய ஜகரூப்யத்துக்கு ஹேதுவாகச் சொன்னபடி. 'தன்னுடைச் சோதி' என்றதுக்கு அதிலே அர்த்தத்வயம் - தனக்கு அஸாதாரண இத்யாதி வாக்யத்வயத்தாலே. பரமபதத் திலுடைய நீட்சியிலே சொல்லுகைக்கு ப்ரயோஜநம் - ஆதித்ய இத்யாதி வாக்யத்வயத்தாலே. தன்னில மானால் இவர்களுக்கு அங்கே போகப்போகாதோ? என்ன, ஜலத்திலே இத்யாதி. சிலகாலம் சென்றிருக்க, ஒன் றும் குறையாதேயிருக்குமோ? என்ன, காலக்ருத இத்யாதி. 'உடலொடும்' என்றதுக்கு - இங்கிருந்த பால சரீரத்தோடே யென்று முந்தின அர்த்தம்; இட்ட ஆபரணங்களோடே யென்று த்விதீயார்த்தம். உடல் - சரீ ரமாதல், ஆபரணமாதல். சவடிப்பூணூல் - பொன்யஜ்ஞோபவீத மென்னுதல், சவடியும் பூணூலு மென்னுதல். சவடி - உடைஞாண். பிறக்கிறபோதே - பிறக்கப்பிறக்க இத்யாதி. இவருக்குத் துயராவது - அவன் திருவுள் ளத்துக்குப் பொருந்தாத செயலை ஆசைப்படுகை யென்று விவக்ஷித்து, அவன் திருவுள்ளத்துக்குப் பொருந்தாத செயல் எது? என்கிற சங்கையிலே, அவன்திருவுள்ளத்துக்குப்பொருந்தாதது இன்னது,பொருந்துமது இன்னது என்றுமத்தை ஸதர்சநமாக அருளிச்செய்கிறார் - ஸமுத்ரத்தில் இத்யாதி நாலு வாக்யத்தாலே. இப்படி திருவுள்ளத்துக்குப் பொருந்தாதத்தை அவன்செய்தது ப்ராஹ்மணனுடைய நிர்ப்பந்தத்துக்காக வென்று அரு ளிச்செய்யாரென்றுகொண்டு, இப்படிக்கொத்த துயர் தமக்கில்லை யென்கிறார் - புத்ரார்த்தி இத்யாதி. வைதிக புத்ரர்களுக்குப் பரமப்ராப்தி வருமாசிற்று இதுக்கு - கர்மஸம்பந்தமற்றுப்போகாமை யென்றும், இவர்கள் அங்கே போகைக்கு ஹேது இன்னதென்றும் அருளிச்செய்யாரென்றுகொண்டு, தாம் நிர்வேதத்தோடே, 'அவனைப்பெற வேணும்' என்று ஆசைப்படுகையாலே தமக்குப் பராக்ருதிரூபமான துக்கமில்லை யென்று அர்த்தாந்தரம்*

* பிண்டாவஸ்தை - மண் பிண்டமாயிருக்கும் நிலை.

கிறது, இவர்களுக்கு ஈவேண்டிற்று. கர்மஸம்பந்தமற்றார் போகக்கடவ தேசத்திலே இவர்கள் போனபடி என் பின்னை? என்னில்;-நாய்ச்சிமார் தங்கள் ஸ்வாதந்த்ர்யம் காட்டுகைக்காக இவர்களை அங்கே அழைப்பித்தார்களாயிற்று. அங்ஙனன்றிக்கே, * "நீர்ச்சென்றீர் நடை யினியாமுறுமை" என்று தொடங்கி, † "மங்கவொட்டு" என்று மடியிடுத்துக் கூப்பிடும்படி ஸம்ஸாரத்தில் விரக்திபிறந்தும், ‡ "காதல்கடலின் மிகப்பெரிதால்" என்றும், $ "மண்திணிஞாலமும் ஏழ்கடலும் நீள்விசும்பும் கழியப் பெரிதால்" என்றும், ¶ "அதனிற் பெரிய வென்னவா" என்றும் இப்படி பகவத்விஷயத்திலே கண்ணழிவற்ற பக்தி விளைந்துபோக ஆசைப்படுகிற எனக்கு ஒருதுக்கமில்லையென்கிறார். (௫)

## ஆறாம் பாட்டு.

துயரில்சுடரொளிதன்னுடைச்சோதி நின்றவண்ணம்நிற்கவே
துயரின்மலியும்மனிசர்பிறவியில் தோன்றிக்கண்காணவந்து
துயரங்கள்செய்துதன்தெய்வநிலையுலகில் புகவுய்க்குமம்மான்
துயரமில்சீர்க்கண்ணன்மாயன்புகழ்துற்ற யானோர்துன்பமிலனே.

*ஆ.—(துயரில்.) ஸமஸ்தஹேயப்ரத்யநீக நிரதிசய தேஜோவிசிஷ்ட ஸ்வாஸாதாரண திவ்யரூபத்தோடே கூட, ஸமஸ்தஹேயாஸ்பத மநுஷ்ய ஸஜாதீயதயா அவதீர்ணனாய், ஸகலமநுஜ நயந விஷயதாங்கதனாய், அநேகஜநமநோஹாரி திவ்யசேஷ்டிதாநி குர்வாணனாய்க்கொண்டு தன்னுடைய ஐச்வர்யமான ஸ்வபாவத்தை இந்த லோகத்திலே ஆவிஷ்கரிக்குமவனும் ஸ்வபாவனாய், ஆச்சர்யபூதனாய், ஹேயப்ரத்யநீக கல்யாணகுண விசிஷ்டனான கண்ணன் புகழ்துற்ற யான் ஓர் துன்பமிலேன் என்கிறார்.*

*ஒ.—ஆறாம் பாட்டில், க்ருஷ்ணனுடைய [illegible] அழகை அநுபவிக்க எனக்கு ஒருதுக்கமில்லையென்கிறார்.*

*[துயரில் என்று தொடங்கி] - ஹேயப்ரத்யநீகமாய்த் தேஜோரூபமாய் ஸ்வாஸாதாரணமான திவ்யரூபத்தைக் கூடக்கொண்டே துக்காகரமக்களான மநுஷ்யருடைய பிறவியிலே அவர்களை ரக்ஷிக்கருளுகைக்காக வந்து திருவவதாரம் பண்ணியருளி அவர்களுடைய சக்ஷுர்விஷயமாய் வந்து தன்செளசீல்யாதிகளாலே அவர்களை மிகவும் ஈடுபடுத்தி. [தன் தெய்வநிலை என்று தொ*

அருளிச்செய்கிறார் - கர்மஸம்பந்தம் இத்யாதி சாதுர்வர்ணத்தாலே. அவர்கள் ருசி முன்னாகப் போகவில்லை. நாய்ச்சிமார் 'க்ருஷ்ணனைக்காணவேணும்' என்று ஆசைப்பட்டு அழைப்பிக்கப் போனார்களித்தனை; நான் அங்ஙனன்றிக்கே ருசிமுன்னாகப்பற்றினவனாகையாலே துக்கமில்லையென்கிறேனென்றபடி. முந்தின அர்த்தத்தில் - வைதிகனில் வ்யாவ்ருத்தி; த்விதீயார்த்தத்தில் - தத்புத்ரர்களில் வ்யாவ்ருத்தி. அங்ஙனன்றிக்கே யென்றது - ஸம்ஸாரத்தில் விரக்திபூர்வகமாக ஈச்வரனை ஆச்ரயிக்கையாலே கர்மஸம்பந்த மறுமற்போகையன்றிக்கே யென்றபடி. இந்நின்ற இத்யாதி - இவற்றின் நிலைநின்ற ஸ்வபாவத்தை இனி நான் அடையாதபடி. மங்கவொட்டு - நசிக்க ஸம்மதி. காதல் - அபிநிவேசம். மண்திணிஞாலம் - மண்சேர்ந்த பூமி. கழிய - தனக்குக் கீழேயாம்படி. "யஸ்யௌஜஸ்வி [illegible] ஜநார்த்தநஃ । ஹரிமேவா [illegible] லோகஸ்ய நாயவஸ்திந்து கஸ்யநிஜீசகம்" இதி ராஜவசநே த்ருதராஷ்ட்ரஃ. "ஸுத்ருஷ்டாநஸ்த்ரீ [illegible] ஹ்ருதாநஃ । [illegible] தேவதாநவைஃ" இத்யாரண்யபர்வண் யார்ஷ்டிஷேணவசநம். (௬)

* திருவிருத்தம் - க. † திருவாய்மொழி - ௧௦, ௭, ௧௦. ‡ திருவாய்மொழி - ௭, ௩, ௯.
$ திருவாய்மொழி - ௭, ௩, ௮. ¶ திருவாய்மொழி - ௧௦, ௧௦, ௧௦.

டக்கி மேலுக்கு] - தன்னுடைய அப்ராக்ருத ஸ்வபாவத்தை லோகத்திலே ஆவிஷ்கரித்து அத்தாலே எல்லாரையும் அடிமை கொண்டு ஆச்சர்யலாலே அத்யாச்சர்யபூதனாய் ஹேயப்ரத்யநீக கல்யாண குணகனான க்ருஷ்ணனுடைய புகழை.

ப.—அநந்தரம், இதர ஸஜாதீயனாய் அவதரித்து நிற்கிற நிலையிலே அதிமாநுஷவ்யாபாரங்களைப் பண்ணும் க்ருஷ்ணனுடைய குணங்களைப் பூர்ணமாக அநுபவிக்கப் பெற்ற நான் ஒரு அப்ரீதியை யுடையேனல்லேன் என்கிறார்.

துயர்இல் - (அப்ராக்ருதமாகையாலே) து:கோதிப்ரதிபடமாய், சுடர் ஒளி-(சுத்த ஸத்த்வாத்மகமாகையாலே) அத்யுஜ்ஜ்வல தேஜோரூபமாய், தன்னுடைச் சோதி - ஸ்வாஸாதாரணமான பரஞ்ஜ்யோதிஸ்ஸப்தவாச்யமான விக்ரஹமானது, நின்றவண்ணமே-யதாபூர்வாவஸ்த்தாயியாயே, நிற்க - நிற்க, (வியாக்தியப்ரவ்ருத்திபோலே தத்ஸஜாதீயமான அப்ராக்ருதவிக்ரஹத்தையுடையனாய்க்கொண்டு). துயரில் - து:கத்திலே, மலியும் - வர்த்தித்து வரக்கடவதான, மனிசர் பிறவியில்-மநுஷ்யருடைய ஜந்மத்திலே, தோன்றி- ஆவிர்ப்பவித்து, கண் காணவந்து - (அதீந்த்ரியவிக்ரஹத்தை)மாநுஷ சக்ஷுஸ்ஸுக்கு விஷயமாக்கிக்கொண்டுவந்து ஸந்நிஹிதனாய்,துயரங்கள்செய்து-(ஸௌந்தர்ய குணங்களாலும் ஸௌர்யவீர்யாதிகுணங்களாலும் ஆஸ்ரிதாநாஸ்ரிதவிஷயமாக) ஈடுபடுத்தி. (ஆஸ்சர்ய வ்யாபாரங்களைப் பண்ணித் தாழநிற்கிற நிலையிலே), தன்-தனக்கு அஸாதாரணமாய், தெய்வம் நிலை-திவ்யமான பரத்வஸ்திதியை, (வைஸ்வரூப்யாத்யாவிஷ்காரத்தாலே), உலகில்-(தன்வாசியறியாத) லோகத்திலே, புக உய்க்கும் - நிலைநிறுத்தக்கடவனான, அம்மான் - ஸர்வாதிகனாய், துயரமில் சீர் - ஹேயப்ரத்யநீகனாய் கல்யாண குணாத்மகனான, கண்ணன் - க்ருஷ்ணனாகிற, மாயன் - ஆஸ்சர்யவானுடைய, புகழ் - குணசேஷ்டிதாதிப்ரதையை, துற்ற - நெருங்க அநுபவிக்கப்பெற்ற, யான் - நான், ஓர் துன்பம் - ஒரு அப்ரீதியை, இலன் - உடையேனல்லேன். துன்பம் - இன்பத்துக்கு எதிர்த்தட்டான அப்ரீதி.

இ.—இப்பாட்டில், தன்னுடைய அப்ராக்ருத திவ்யவிக்ரஹத்தை இதரஸஜாதீயமாக்கி ஸம்ஸாரிகள்கண்ணுக்கு விஷயமாக்கின க்ருஷ்ணனுடைய குணங்களை அநுபவிக்கப்பெற்ற எனக்கு ஒருது:கமில்லை என்கிறார்.

[துயரில் இத்யாதி] - ஹேயப்ரத்யநீகமாய் ஸுத்தஸத்த்வமயமாகையாலே நிரவதிக தேஜோரூபமாய்ப் பிறர்க்கு உள்ளது ஒன்றுஅன்றிக்கே தனக்குஅஸாதாரணமான விக்ரஹமானது. [நின்றவண்ணம் நிற்கவே] - அவ்வுருப்பில் ஒன்றும் குறையாமே விளக்கிலே கொளுத்தின விளக்குப்போலே அங்குநின்றவண்ணம் இங்குநிற்க. [துயரில் இத்யாதி] - து:கோத்தரமான மநுஷ்யருடைய ஜந்மத்திலே வந்து ஆவிர்ப்பவித்து மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கு விஷயமன்றிக்கே நித்யஸூரிகளுக்கு ஸதா தர்ஸநவிஷயமான தன்னை மாம்ஸத்ருஷ்டிக்கு விஷயமாக்கி. [துயரங்கள் செய்து]- அநுகூலரை அழகாலே ஈடுபடுத்தி, ப்ரதிகூலரை ஆயுதத்தாலே அழியச் செய்து. “க்ஷ்வாஹா [illegible]” - ப்ரதிகூலரை முட்கோலாலே சாடியும் அநுகூலரைக் கண்ணழகாலே சாடியும் போனபடி. [தன் தெய்வநிலை] - தன்னுடைய அப்ராக்ருதமான ஸ்வபாவத்தை. [உலகில்] - இதுக்கு இட்டுப்பிறவாத ஸம்ஸாரத்திலே. [புக உய்க்கும்] - ப்ரவேசிப்பிக்கும்; பரமபதத்திலே நடையாடக்கடவ ஸ்வபாவத்தை ஸம்ஸாரிகளுக்குத் தெரிவித்தவன். தூதுபோயும் ஸாரத்யம்பண்ணியும் தன்படியைத் தெரிவித்தவன் என்றுமாம். உய்க்கும் - செலுத்தும். [அம்மான்] - அபேக்ஷா நிரபேக்ஷமாக இவர்களுக்குத் தன்படிகளை வெளியிடுகைக்கு வேண்டும் ப்ராப்தியைச் சொல்லுகிறது. இச்செயலாலே லோகத்தை எழுதிக்கொண்டவன் என்றுமாம். [துயரம் இத்யாதி] -

*ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுணங்களையும் அப்ராக்ருதமான திவ்யவிக்ரஹத்தையுமுடைய க்ருஷ்ணனுடைய புகழை நிரதிசய புக்திக்குப்போந்த எனக்கு ஒரு துக்கமில்லையென்கிறார்.*

௭௩.—ஆறும்பாட்டு. தன்னுடைய அப்ராக்ருத விக்ரஹத்தை ஸஜாதீயமாக்கி ஸம்ஸாரிகள் கண்ணுக்கு விஷயமாக்கின க்ருஷ்ணகுணங்களை அநுபவிக்கப்பெற்ற எனக்கு ஒரு துக்ககந்தமில்லையென்கிறார்.

[துயர் இல் இத்யாதி]-ஹேயப்ரத்யநீகமாய், சுத்த ஸத்வமயமாகையாலே ஜ்வலிதகதே ஜோரூபமாய், பிறர்க்கு உள்ளதொன்றன்றிக்கே தனக்கு அஸாதாரணமான விக்ரஹமானது. [நின்ற வண்ணம்நிற்கவே]-அங்கிருக்கும்படியில்ஒன்றுங்குறையாமே,விளக்கிற்கொளுத்தினவிளக்குப்போலே அங்குநின்ற வண்ணம் இங்கு நிற்க.“ஸ்வாம் ப்ரக்ருதிமதிஷ்டாய”(ஸ்வாம்ப்ரக்ருதி மதிஷ்டாய) இறே. [துயரில் இத்யாதி] - துக்கஸாகரத்திலே அழுந்தாநின்றுள்ள மநுஷ்யருடைய ஜந்மங்களிலே ஆவிர்ப்பவித்து. “தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம்” (தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம்)என்கிறபடியே வந்து தோற்றி. [கண்காணவந்து]-மாம்ஸசக்ஷுஸ்ஸுக்குவிஷயமன்றியே நித்யஸூரிகளுக்கு ஸதா தர்சநவிஷயமான தன்னை மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கு விஷயமாக்கி.[துயரங்கள்செய்து] - அநுகூலரை அழகாலே நோவபடுத்தியும், ப்ரதிகூலரை ஆயுதத்தாலே நோவபடுத்தியும். “க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:” ... “க்ருத்வா பாராவதரணம் ப்ருதிவ்யா: ப்ருதுலோசந: மோஹயித்வா ஜகத்ஸர்வம் கதஸ்ஸ்வம்ஸ்தாநமுத்தமம்” (க்ருத்வாபாராவதரணம் ப்ருதிவ்யா:ப்ருதுலோசந: - மோஹயித்வா ஜகத்ஸர்வம் கதஸ்ஸ்வம்ஸ்தாநமுத்தமம்) - ப்ரதிகூலரை முட்கோலாலே சாடியும், அநுகூலரைக் கண்ணழகாலே சாடியும் போனபடி. * “இணைக்கூற்றங்கொலோ” என்னும்படியிறே கண்ணற்று நலியும்படி. [தன் தெய்வநிலை] - தன்னுடைய அப்ராக்ருதமான ஸ்வபாவத்தை. [உலகில்] - இதுக்கிட்டுப்பிறவாத ஸம்ஸாரத்திலே. [புக உய்க்கும்] - ப்ரவேசிப்பிக்கும். [அம்மான்] - அபேக்ஷா நிரபேக்ஷமாக ஸம்ஸாரிகளுக்குத் தன்படிகளை வெளியிடுகைக்கு வேண்டும் ப்ராப்தி சொல்லுகிறது. பரமபதத்திலே நடையாடக்கடவ ஸ்வபாவத்தை ஸம்ஸாரிகளுக்குத் தெரிவித்தது,அங்குள்ளாரோடு உள்ள ப்ராப்தி இங்குள்ளாரோடும் ஒத்திருக்கையாலே. தாத்பர்யத்தைப் பண்ணித் தன்படி

---

*ஆறும்பாட்டு - துயரில் இத்யாதி. ‘தன்னுடைச் சோதி நின்றவண்ணம் நிற்கவே, கண்காணவந்து புகழ்நுற்ற பான்’ இத்யாதிகளைச் சுடாக்ஷித்து அவதாரிகை - தன்னுடைய இத்யாதி.*

*சப்தார்த்தம் - ஹேயப்ரத்யநீகமாய் இத்யாதி. அங்கு இருக்கும்படி - பரமபதத்தி லிருக்கும்படி. பலிதம் - விளக்கில் இத்யாதி; அங்கு நின்றவண்ணம் இங்கு நிற்கச்செய்தே யென்றபடி. வர்ணம் - ப்ரகாரம். அஜஹத்ஸ்வபாவதைக்கு ப்ரமாணம் - ஸ்வாம் ப்ரக்ருதிம் இத்யாதி. நிதானம்; பூர்வமேவ விவ்ருதம். மலிதல் - மிகுதியாய், அழுந்துகையைச் சொல்லுகிறது. ‘தோன்றி’ என்றதுக்கு அபிப்ராயம் - தேவகீ இத்யாதி. இதுவும் பூர்வமேவ விவ்ருதம். வக்ஷ்யமாண ச்லோகத்தை உட்கொண்டு அருளிச்செய்கிறார் - அநுகூலரை இத்யாதி. “க்ருஷ்ணாச்ரயா:” இத்யாதி. யோஜநையுமவ்வண்ணம். ச்லோகார்த்தம் - ப்ரதிகூலரை இத்யாதி. ‘ப்ருதிவ்யா:பாராவதரணம் க்ருத்வா ப்ருதுலோசந: ஜகத்ஸர்வம் மோஹயித்வா’ என்றதால் பலித்த அர்த்தம் இது. முட்கோல் - அங்குசம், தாற்றுக்கோலும். சாடுகை - கொல்லுகையும், நலிகையும். கண்ணழகு ஸ்வாபதேசமோ? என்ன, இணைக்கூற்றம் இத்யாதி. இரண்டு ம்ருத்யுக்களோ? இத்யர்த்தம். கண்ணற்று - தயையில்லாதே. ப்ராப்தி - ஸ்வாமித்வம். ‘அப்ராக்ருதமான ஸ்வபாவத்தை’ என்று தொடங்கி, ‘அம்மான்’ என்னுமளவும் சொன்ன அர்த்தத்தை விவரிக்கிறார் - பரமபதத்திலே இத்யாதி. ஸ்வபாவத்தை - பரமபதத்திலே வர்த்திக்கிற அப்ராக்ருத விக்ரஹத்தை. கீழே - ‘அம்மான்’ என்றத்தைப் பூர்வஹாவியாக்கி அருளிச்செய்து, இங்கே - அபரஹாவியாக்கி,‘தெய்வநிலை’ என்றதுக்கு அர்த்தாந்தரம்- தாத்பர்ய இத்யாதி. ‘தெய்வநிலை’ என்றதுக்கு - அப்ராக்ருதமானவிக்ரஹமென்று முந்தின அர்த்தம்; ஆச்ரித*

---

* *திருவாய்மொழி - எ, எ, க.*

யைத் தெரிவித்து, இச்செயலாலே லோகத்தை எழுதிக்கொண்டவ னென்றுமாம். [துயரமில் சீர்க்கண்ணன்] - ஹேயப்ரத்யநீக கல்யாண குணங்களையுடைய க்ருஷ்ணன். [மாயன்] - ஆஶ்சர்யமான குண சேஷ்டிதங்களை யுடையவன். [புகழ் துற்ற யான்] - அவனுடைய கல்யாண குணங்களை நெருங்க புஜிக்கப்பெற்ற நான். [ஓர் துன்பமிலனே] - 'அவன் தன் அப்ராக்ருத திவ்ய மங்களவிக்ரஹத்தைக்கொண்டு இவ்வுடம்போடே அணையலாம்படி கிட்டவோணுயிற்ற பின்பு, நான் இஶ்ஶரீரத்தைவிட்டு அங்கேபோய் அவ்வுடம்போடே அணைவேன்' என்றால் எனக்கு அவன் அருமைப்படுத்துமோ? (௬)

## ஏழாம் பாட்டு.

துன்பமுமின்பமுமாகிய செய்வினையாய்உலகங்களுமாய்
இன்பமில்வெந்நரகாகி இனியநல்வான்சுவர்க்கங்களுமாய்
மன்பல்லுயிர்களுமாகிப் பலபலமாயமயக்குக்களால்
இன்புறுமிவ்விளையாட்டுடையானைப்பெற்று ஏதுமல்லலிலனே.

**ஆ.**—(துன்பமும்.) புண்யபாபரூப கர்மங்களுக்கும் ஃபலபோக ஸ்தாநமான லோகங்களுக்கும் கர்மபலஸாதநமான ஸ்வர்க்க நரகங்களுக்கும் ஸ்வர்க்கநரகாதி பலபோக்தாக்களான ஆத்மாக்களுக்கும் அந்தராத்மபூதனாய், நிகிலஜகதுதய விபவலயாதிலீலனா யிருந்தவனைப் பெற்று ஏதும் அல்லலிலேன் என்கிறார்.

ஒ.—ஏழாம் பாட்டில், லீலோபகரணத்தாலே எம்பெருமானுக்கு உண்டான ரஸத்தை அநுபவித்து நிர்த்துःகனானேன் என்கிறார்.

[துன்பமுமின்பமுமாகிய செய்வினையாய்] - ஸுகதுःகங்களை விளைக்கக்கடவ புண்ய பாபரூப கர்மங்களுக்கு நியாமகனாய். [உலகங்களுமாய்] - அவை ஆர்ஜிக்கும் கர்மபூமிக்கு நிர்வாஹகனாய்; பலாநுபவ பூமி யென்றுமாம். [இன்பமில் வெந்நரகாகி இனியநல்வான் சுவர்க்கங்களுமாய்] - ஸுகமந்தமில்லாத துःகமே அநுபவிக்கக்கடவதான நரகத்துக்கு நிர்வாஹகனாய். ஶுத்த ஸுகமே அநுபவிக்கக்கடவதான ஸ்வர்க்கத்துக்கு நிர்வாஹகனாய். நரகென்றும் சுவர்க்கமென்றும் ஸுகதுःகங்களாகவுமாம். [மன் பல்லுயிர்களுமாகி] - ஸ்வர்க்கநரகாதிகளை என்றும் புஜிக்கக்கடவதான ஆத்மாக்களுக்கு நிர்வாஹகனாய். [பலபல மாயமயக்கு என்று மேலுக்கு] - இப்படியுள்ள அஸங்க்யேயமான ப்ரக்ருதிவிகாரமுகத்தா லுண்டான சேதநருடைய மதிவிப்ரமங்களாலே ப்ரீத்யாவஹமான லீலைகளையுடையவனைப் பெற்று. பரமகாருணிகனான எம்பெருமானுக்குப் பிறருடைய துःகாநுஸந்தாநம் ப்ரீதிஹேதுவானபடி எங்ஙனேயென்னில்,— தன்னுடைய கருணையாலே அவற்றை ரக்ஷிக்கநினைத்தால் அந்தக்ஷணம் அவற்றுக்கு அநிஷ்டமாயிருக்கிற இருப்பு அவனுக்கு ஹாஸ்யஹேதுவாய் அவ்வழியாலே லீலாரஸஸாதநமாய்விட்டன.

---

பாரதந்த்ர்யமென்று இரண்டாமர்த்தம். தன்படியை - தன்னுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யமாகிற ஸ்வபாவத்தை. உய்க்கும் - செலுத்தும். லெஸ்ரீகோஶங்களிலே 'இச்செயலாலே லோகத்தை யெழுதிக்கொண்டவனென்றுமாம்' என்று விஶதமாகத் திருத்து உண்டு. 'தனக்கு அஸாதாரணமாய் திவ்யமான பரத்வஸ்த்திதியை லோகத்திலே நிலைநிறுத்தக்கடவனான' என்று உரை. 'துயரம்' என்று - துःகமாய், அது ஹேயமாகையாலே ஹேயம் என்றது. துற்றுகை - நெருங்க புஜிக்கை. க்ரமேண அந்வயः. (௬)

ப.—அநந்தரம், கர்மாநுரூபமாக லீலாவிபூதியை நிர்வஹிக்கிறவனைப் பெற்று ஏக தேஶமும் அல்லலிலேன் என்கிறார்.

துன்பமும் - (அப்ரீதிரூபமான) து:கமும், இன்பமும் - (ப்ரீதிரூபமான) ஸுகமும், ஆகிய - உண்டாம்படி, செய் - (சேதநனால்) செய்யப்பட்ட, வினை - (பாபரூபமாயும் புண்யரூபமாயுமுள்ள) கர்மங்களுக்கு, ஆய் - நிர்வாஹகனாய், உலகங்களும் - (இவற்றையநுஷ்டிக்கைக்கீடான) பூலோகப்ரதேஶங்களுக்கு, ஆய்-நிர்வாஹகனாய், (இக்கர்மபலங்களாய்),இன்பம் இல் வெம் நரகு-ஸுககந்தரஹிதமான நரகத்துக்கும், ஆகி-நிர்வாஹகனாய், இனிய-ப்ரீதிகரமான போக்யவஸ்துக்களாலே, நல் - நன்றாய், வான் - சீரியதான, சுவர்க்கங்களும் - ஸ்வர்க்கப்ரதேசங்களுக்கும், ஆய் - நிர்வாஹகனாய், மன்-(கர்மாநுஷ்டாநதஶையோடு ஃபலபோகதஶையோடு வாசியற அநுவ்ருத்தராகையாலே)நித்யராய், பல் உயிர்களும் - அஸங்க்யாதரான ப்ராணிகளுக்கும், ஆகி-நிர்வாஹகனாய், பலபல - (குணபேதத்தாலும் மதிபேதத்தாலும் ருசிபேதத்தாலும்) அஸங்க்யேயமாய், மாயம் மயக்குக்களால் - ப்ரக்ருதிகார்யமான சேதநனுடைய மோஹவிகாரங்களாலே, இன்புறும் - ரஸாவஹமான, இவ்விளையாட்டுடையானை - இவ்விபூதியில் லீலையையுடையவனை, பெற்று - உள்ளபடி அறிந்து கிட்டப்பெற்று, ஏதும் - ஏகதேசமும், அல்லல் - (இக்கர்மவஶ்யமான ஸம்ஸாரத்தில்) அலமாப்பு, இலன் - உடையேனல்லேன். அல்லல் - அலமாப்பு.

இ.—ஏழாம்பாட்டில், அகர்மவஶ்யனாகையாலே ஈஶ்வரனுக்கு இவ்விபூதியிலுள்ளது லீலாரஸமாத்ரமாகையாலே அத்தை அநுஸந்தித்த எனக்குக் கர்மவஶ்யதை யில்லை; இந்த லீலா விபூதியில் அந்தர்ப்பவிக்கவும் வேண்டா என்கிறார்.

[துன்பம் இத்யாதி] - ஸுகது:கங்களை விளைக்கக்கடவதான புண்யபாபரூப கர்மங்களுக்கு நியாமகனாய். [உலகங்களுமாய்] - அவற்றை ஆர்ஜிக்கும் கர்மபூமிக்கு நிர்வாஹகனாய் என்னுதல்; போகபூமிகளான ஸ்வர்க்கநரகங்களுக்கு நிர்வாஹகனாய் என்னுதல். [இன்பம் இத்யாதி]-ஸுககந்தமின்றிக்கே கொடிதான து:காநுபவமேயான நரகத்துக்கு நிர்வாஹகனாய் ஶுத்த ஸுகாநுபவமேயான ஸ்வர்க்கத்துக்கு நிர்வாஹகனுமாய். 'உலகங்களுமாய்' என்ற இடம் - கர்மபூமியானபோது ஸ்வர்க்கநரகங்களைச் சொல்லுகிறது. அங்கு போகபூமியைச் சொன்னபோது ஸுகது:கங்களைச் சொல்லிற்றாகக்கடவது. [மன்பல் உயிர்களுமாகி] - கர்மகர்த்தாக்களும் தத்ஃபல போக்தாக்களுமாய் நித்யராய் அஸங்க்யாதரான சேதநர்க்கு நிர்வாஹகனாய். [பலபல இத்யாதி] - இப்படிப் பலபலவான ப்ரக்ருதிவிகாரமுகத்தாலே சேதநர்க்குப் பிறக்கும் மதிவிப்ரமங்களாலே ப்ரீத்யாவஹமான லீலைகளையுடையவனைப் பெற்று. பரமகாருணிகனானவனுக்குப் பரது:காநுஸந்தாநம் ப்ரீதிக்கு ஹேதுவானபடி என்? என்னில்,—இவற்றைத் தன்தயையாலே ரக்ஷிக்க நினைத்தால் அது இவற்றுக்கு அநிஷ்டமாயிருக்கிற இருப்பு அவனுக்கு ஹாஸ்யஹேதுவாய் அவ்வழியாலே லீலாரஸஸாதநமாய்விட்டன. [ஏதும் அல்லலிலனே] - அவனுடைய அகர்மவஶ்யதையை அநுஸந்திக்கப்பெற்ற எனக்குக் கர்மவஶ்யனாகையும் தத்பலமான லீலாவிபூத்யந்வயமுமாகிற து:கமில்லை என்கிறார். "[Grantha quotation, partly illegible]", "[Grantha quotation, partly illegible]" என்னக் கடவதிறே.

ஈடு.—ஏழாம்பாட்டு. அகர்மவஶ்யனாகையாலே ஈஶ்வரனுக்கு இவ்விபூதியிலுள்ளது லீலாரஸமாத்ரமாகையாலே, அத்தை யநுஸந்தித்த எனக்குக் கர்மவஶ்யதையுமில்லை; இந்த லீலா விபூதியில் அந்தர்ப்பவிக்கவும் வேண்டா என்கிறார்.

---

ஏழாம்பாட்டு - துன்பம் இத்யாதி. 'இவ்விளையாட்டுடையானைப்பெற்று' இத்யாதியிலே நோக்காக அவதாரிகை - அகர்மவஶ்யன் இத்யாதி.

[துன்பம் இத்யாதி] - ஸுகதுஃகங்களுக்கு ஹேதுவான புண்யபாபரூபகர்மங்களுக்கு நியாமகனாய். [உலகங்களுமாய்] - இவற்றை ஆர்ஜிக்கும் பூமியைச் சோல்லுதல், ஹோக பூமியைச் சோல்லுதல். [இன்பமில் வெந்நரகாகி] - ஸுகலேஶமின்றிக்கே யிருக்கிற நரகத்துக்கு நிர்வாஹகனாய். [இனிய நல் வான் சுவர்க்கங்களுமாய்] - நரகத்திற்காட்டில் அல்பஸுகத்தையுடைத்தான ஸ்வர்க்காதிகளுக்கு நிர்வாஹகனாய். 'உலகங்களுமாய்' என்ற இடம் - ஆர்ஜநபூமியைச் சோல்லிற்றாகில், இவை ஹோகபூமிக ளாகிறன; அன்றிக்கே, அங்கே - ஹோக பூமியைச் சோல்லிற்றாகில், இங்கு - ஸுகதுஃகமாத்ரங்களிலே யாகிறது. [மன்பல்உயிர்களு மாகி] - கர்ம கர்த்தாக்களும் தத்பலஹோக்தாக்களுமாய், நித்யராய் அஸங்க்யாதரான ஆத்மவர்க்கத்துக்கு நிர்வாஹகனாய். [பல பல இத்யாதி] - அஸங்க்யேயமான ப்ரக்ருதிவிகாரமுகத்தா லுண்டான சேதநருடைய மதி விப்ரமங்களாலே ப்ரீத்யாவஹமான லீலைகளை யுடையவனைப் பெற்று. ஸர்வ ஸுஹ்ருத்தாய்ப் பரமகாருணிகனான ஸர்வேஶ்வரனுக்கு, தன்னையகன்று சேதநர் துஃகப்படுகிற இது ப்ரீதிஹேதுவாகிறபடி எங்ஙனே? என்னில்;—இவற்றைத் தன் தயையாலே ரக்ஷிக்க நினைத்தால் அது இவற்றுக்கு அநிஷ்டமா யிருக்கும் இருப்பு அவனுக்கு ஹாஸ்யஹேதுவாய், அவ்வழியாலே லீலாரஸஸாதநமாய்விட்டது; இதுக்கு நேர்கோடு நேரே தாத்பர்யம் இது. கோடுத்த சைதந்யந்தான் போதுவாய் ருசிபேதத்தாலே வழிவிலங்கிப்போய் அநர்த்தத்தை விளைத்துக்கோண்டிருக்கிற படியைக் கண்டு, 'நாம் ஒன்றை நினைத்துச்செய்ய இவை ஒன்றைச் சூழ்த்துக்கோண்டபடி கண்டாயே' என்று பிராட்டி முகத்தைப் பார்த்து ஸ்மிதம்பண்ண, அது கோல்விழுக்காட்டாலே லீலாரஸமாய்த் தலைக்கட்டும். [ஏதும் அல்லலிலனே] - அவனுடைய அகர்மவஶ்யதையை அநுஸந்தித்த எனக்குக் கர்மவஶ்யதை இல்லை; ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளை அவனுடைய லீலையாக அநுஸந்தித்த எனக்கு லீலாவிபூத்யந்வய மாகிற துஃகமில்லை யென்கிறார். "𑌨 𑌮𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑌿𑌮𑍍𑌪𑌨𑍍𑌤𑌿 𑌨 𑌮𑍇 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑍇 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾 । 𑌇𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌯𑍋𑌽𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌰𑍍𑌨 𑌸 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥" (நமாம் கர்மாணி லிம்பந்தி நமே கர்மபலேஸ்ப்ருஹா - இதிமாம்யோபிஜாநாதி கர்மபிர்நஸபத்யதே), "[illegible] ।

---

'துன்பமுமின்பமுமாகிய' என்கிற ஸாமாநாதிகரண்யம் - கார்யகாரணபாவ நிபந்தந மென்கிறார் - ஸுகதுஃகங்களுக்குஹேதுவான இத்யாதி. அப்ரீதிரூபமான துஃகமும், ப்ரீதிரூபமான ஸுகமும் உண்டாம்படி சேதநனாலே பண்ணப்பட்ட புண்யபாபரூபமான கர்மங்களுக்கு நியாமகனா யென்று சப்தார்த்தம். 'வினையாய்' என்கிற ஸாமாநாதிகரண்யம் - நியாம்யநியாமகபாவநிபந்தந மென்றபடி. மேலும் இப்படியே கண்டுகொள்வது. 'வினையாய்' என்றதோடே 'உலகங்களுமாய்' என்றதுக்கு இரண்டுவகையாக ஸங்கதி-இவற்றை இத்யாதி வாக்யத்வயத்தாலே. ஆர்ஜந பூமியைச் சொன்ன பக்ஷத்தில், 'உலகங்கள்' என்கிற பஹுவசநம் - தேஶபேதத்தைப் பற்ற வென்று கண்டுகொள்வது. வெந்நரகு - க்ரூரமான நரகம். இனியநல்வான்சுவர்க்கங்களுமாய் - ப்ரீதிகரமான போக்யவஸ்துக்களாலே நன்றாய்ச் சீரியதான ஸ்வர்க்கப்ரதேசங்களுக்கும் நிர்வாஹகனாய். ஸுகாநுபவமேயான ஸ்வர்க்க மென்ன வேண்டியிருக்க, அல்பஸுகத்தையுடைத்தான வென்றது - முமுக்ஷுக்களுக்கு அவற்றிலே ஶ்ரத்தை பிறவாமைக்காக. புநருக்தியைப் பரிஹரிக்கிறார் - உலகங்களுமாய் என்றவிடம் இத்யாதி. நரகு-நரகமென்னுதல், துஃகமென்னுதல். சுவர்க்கம் - ஸ்வர்க்கமென்னுதல், ஸுகமென்னுதல். கீழே - கர்மங்களையும் தத்பலங்களையுஞ் சொல்லுகையாலே, ததநுகுணமான அர்த்தம் - கர்மகர்த்தாக்களும் இத்யாதி. கர்மத்தைப்பண்ணி, அநந்தரம் கர்மபலத்தையநுபவிக்குமவர்களுமாய் என்றபடி. சப்தார்த்தம்-நித்யராய் இத்யாதி. மாயங்களாலுண்டான மயக்குக்கள் - ப்ரக்ருதிவிகாரங்களாலுண்டான மதிவிப்ரமங்கள். இன்புறுமிவ்விளையாட்டுடையானை - சேதநருடைய மதிவிப்ரமங்களாலே ப்ரீத்யாவஹமான இவ்விபூதியில் லீலையையுடையவனை. தடஸ்த்தசங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார்-ஸர்வஸுஹ்ருத்தாய் இத்யாதி. இதுக்கு - லீலைக்கு. 'இவற்றைத் தன்தயையாலே' இத்யாதி வாக்யவிவரணம் - கோடுத்த சைதந்யம் இத்யாதி. போதுவாய் - பந்தமோக்ஷங்களுக்குப் பொதுவா யென்றபடி. கோல்விழக்காட்டாலே-பர்யவஸாநகத்யா. அவனுடைய அகர்மவஶ்யதையை அநுஸந்தித்தவனுக்குக் கர்மவஶ்யதை யில்லையென்றதுக்கு ப்ரமாணம்-𑌨 𑌮𑌾𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌲𑌿𑌮𑍍𑌪𑌨𑍍𑌤𑌿 இத்யாதி. ஜகத்ஸ்ருஷ்டியை அவனுக்கு லீலையாக அநுஸந்தித்தால் லீலாவிபூத்யந்வய மில்லை யென்றதுக்கு ப்ரமா

**𑌮𑌾𑌮𑍇𑌵 𑌯𑍇 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌯𑌾𑌮𑍇𑌤𑌾𑌂 𑌤𑌰𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇"** (மமமாயாதுரத்யயா - மாமேவயே ப்ரபத்யந்தே மாயாமேதாந்தரந்திதே) என்றும் இப்படி நம்மை யறிந்தவன் கர்மங்களால் பந்திக்கப்பட மாட்டானென்றும் ; நான் பந்தித்த பந்தத்தை யாவனொருவன் என்னையே கால்கட்டி அவிழ்க்கப் பார்க்கிறான், அவன் இத்தைக் கடக்கு மென்றும் அவன் சொல்லிவைத்தபடியே, அவன்தன்னையே பற்றி விடுவித்துக்கொள்ள இருக்கிற எனக்கு ஒரு க்லேச மில்லை யென்கிறார். (எ)

## எட்டாம் பாட்டு.

அல்லலிலின்பமளவிறந்து எங்குமழகமர்சூழொளியன்
அல்லிமலர்மகள்போகமயக்குக்க ளாகியும்நிற்குமம்மான்
எல்லையில்ஞானத்தன் ஞானமஃதேகொண்டெல்லாக்கருமங்களுஞ்செய்
எல்லையில்மாயனைக்கண்ணனைத்தாள்பற்றி யானோர்துக்கமிலனே.

*ஆ.—(அல்லலில்.) துஃகாஸம்பிந்ந நிரவதிகாநந்த விசிஷ்டனாய், கல்யாணதம நிரதிசய யௌஜ்ஜ்வல்ய விசிஷ்டனாய், நிரதிசயஸௌகுமார்யஸௌந்தர்யாதி கல்யாணகுண பரிபூர்ணையாயிருந்த பெரியபிராட்டியாரோடு உள்ள அநவரதஸம்ச்லேஷ ஜநித ப்ரீதியாலே அப்ரக்ருதிங்கதனாய் தத்ஸம்ச்லேஷாநுகுண நிரதிசய திவ்யஜ்ஞாநனாய் அந்தஜ்ஞாநத்தையேகொண்டு பிராட்டியுடைய ப்ரீத்யர்த்தமாக ஜகத்ஸ்ருஷ்ட்யாதி லீலைகளைப் பண்ணியருளுகிற ஆச்சர்யபூதனான வண்துவரைப்பெருமாளுடைய திருவடிகளைப் பற்றி நான் நிரஸ்தஸமஸ்த துஃகனானேன் என்கிறார்.*

*ஓ.—எட்டாம் பாட்டில், எம்பெருமான் நித்ய விபூத்யநுபவம் பண்ணும்படியைப் பேசி அநுபவிக்கிறார்.*

*[அல்லலில் என்று தொடங்கி] - துஃகஸம்பந்தமின்றிக்கே நிரவதிகமான ஆநந்தத்தை யுடையனாய் நிரதிசய ஸௌந்தர்யத்தை யுடையனாய், போக்யையான பெரியபிராட்டியாரோட்டைக் கலவியாலே வந்த நிரதிசய ஆநந்தங்களையுடையனா யிருக்கையாகிற ஐச்வர்யத்தை யுடையனை. [எல்லையில் ஞானத்தன்] - அக்கலவிக்கு ஈடான பேரளவையுடையான். [ஞானமஃதே கொண்டு என்று மேலுக்கு] - ஸஹகாராந்தர நிரபேக்ஷமான தன் ஸங்கல்பரூபஜ்ஞாநத்தாலே பெரிய பிராட்டியார்க்கும் ப்ரியமாகக் கார்யபூதஜகத்தை யெல்லாம் உண்டாக்கும் ஸ்வபாவனாய் இப்படிப்பட்ட முடிவில்லாத ஆச்சர்யங்களை யுடையனான க்ருஷ்ணனுடைய திருவடிகளைச் சேர்ந்து.*

*ப.—அநந்தரம், ஸர்வஸ்மாத்பரனாய் ஸ்ரிய:பதியாய்க்கொண்டு ஸங்கல்பமாத்ரத்தாலே ஸகலநிர்வாஹகனானவன் திருவடிகளை ஆச்ரயித்த நான் ஒரு துஃகத்தையுடையேனல்லேன் என்கிறார்.*

அல்லல் இல் - க்லேசப்ரஸங்கரஹிதமான, இன்பம் - ஆநந்தகுணத்துக்கு, அளவு இறந்து - அவதி யின்றியே, எங்கும் அமர் - ஸர்வப்ரதேசங்களிலும் பரம்பின, அழகு - அவயவ ஸௌந்தர்யத்தோடு, சூழ் - சேர்ந்த, ஒளியன் - ஸமுதாயரூபலாவண்யப்ரபையையுடையனாய், (இவ்வாநந்தத்தோடும் வடிவழகோடும்), அல்லிமலர் மகள் - தாமரைப்பூவை வாஸஸ்த்தாநமாக

---

ணம் - [illegible] இத்யாதி. ஏதத்ப்ரமாணத்வயமபி கீதாயாம். இந்தச்லோகத்வயத்துக்கும் அடைவே அர்த்தம் - இப்படி நம்மை இத்யாதி. க்ரீடாப்ரவ்ருத்தேந - தேவேந-நிர்மிதா - தைவீ என்று, ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் லீலையாயிருக்கு மென்றபடி. 'திவுக்ரீடா' இத்யாதி தாது:. க்ரமேண அந்வய:. (எ)

வுடையளாகையாலே நிரதிஶயபோக்யபூதையாய் நாரீணாமுத்தமையான பிராட்டியோட்டை, போகம்-கலவியாலே, மயக்குக்களாகியும்-("கூரேந்த்ராத்ராதெஷ்தநிஷாவஸநாஸமஹநாது" என்று ஸ்வபரவிஸ்மரணப்ரதிபத்திமயங்கும்படியான) போகாநந்தரூபனாய்க்கொண்டும், நிற்கும் - நிற்கிற, அம்மான் - ஸர்வாதிகனாய், எல்லை இல் - (கீழுக்தமான ஆநந்தமும் அழகும் போகமும்போலே) எல்லையிறந்திருக்கக்கடவதான, ஞானத்தன் - ஜ்ஞாநவைபவத்தையுடையனாய், அஃது - நிரபேக்ஷமான அந்த, ஞானமே - ஜ்ஞாநத்தையே, கொண்டு - கொண்டு, எல்லாக்கருமங்களும் - கார்யபூதஸமஸ்தஜகத்தையும், செய் - (ஸங்கல்பமாத்ரத்தாலே) நிர்வஹிக்குமவனாய், எல்லை இல் - அபர்யந்தமான, மாயனை - ஆஶ்சர்யசேஷ்டிதங்களையுடையனான, கண்ணனை - க்ருஷ்ணனை, தாள்பற்றி - திருவடிகளைச் சிக்கெனப்பிடித்து, யான் - நான், ஓர் துக்கம் - ஒரு துஃகத்தை, இலன் - உடையேனல்லேன். துஃகமாவது - அநிஷ்டாநுபவம்.

இ.— எட்டாம்பாட்டில், நித்ய விபூதியை அநுபவித்துக் கொண்டிருக்கிற மேன்மையை யுடையவன் ஜகத்ரக்ஷணம் பண்ணும் நீர்மையை அநுஸந்திக்கப் பெற்ற எனக்கு ஒரு துஃகமில்லை என்கிறார். பிராட்டி புருஷகாரமாக "ஶரணம்" என்ற க்ருஷ்ணனைப் பற்றின எனக்கு ஒரு துஃகமில்லை யென்கிறார் என்றுமாம்.

[அல்லல் இல் இத்யாதி] - ஸ்வர்க்காதிகளைப்போலே துஃகமிஶ்ரமாய்ப் பரிச்சிந்நமான ஸுகமன்றிக்கே துஃகஸம்பந்தரஹிதமாய் அபரிச்சிந்நமான ஆநந்தத்தை யுடையவன். [எங்கும் அழகு அமர்] - த்ரிபாத்விபூதியெல்லாம் வெள்ளமிடும் காந்தியை யுடையவன். [சூழொளியன்] - அழகென்று அவயவஶோபையாய், சூழொளி யென்று ஸமுதாயஶோபையைச் சொல்லுகிறது. [அல்லிமலர் இத்யாதி]-இவ்வழகு காட்டில் எறித்த நிலாவாகாதபடி அநுபவிப்பார் உண்டு என்கிறது. புஷ்பத்தில் பரிமளம் ஒருவடிவுகொண்டாற்போலே யிருக்கிற பிராட்டியோட்டைக் கலவியாலே பிறந்த. [மயக்குக்கள்] - ஆநந்தங்கள். [ஆகியும் நிற்கும்] - தன்னுடைய ஆநந்தத்துக்கு மேலே ஸ்ரீயஃபதித்வத்தால் வந்த ஆநந்தத்தையுடையனாயிருக்கும். [அம்மான்] - ஆநந்தமயனாய் ஸ்ரீயஃபதியானவனிறே ஸர்வேஶ்வரன். [எல்லையில் ஞானத்தன்] - "ஸ்நவஸீ" என்னுமாபோலே ப்ரணயதாரையில் அவளுக்கு ஆணைக்குக் குதிரை வைக்கவல்ல ஜ்ஞாநாதிக்யத்தை யுடையவன். [ஞானமஃதே கொண்டு] - அவளடியாகப்பிறந்த ஸஹகாரிநிரபேக்ஷமான ஸங்கல்பரூபஜ்ஞாநத்தாலே கார்யபூதமான ஜகத்தையெல்லாம் அவளுக்கு ப்ரியமாக உண்டாக்கினவன். "யஸ்யாவீக்ஷ்ய முகம் ததிங்கிதபராயீநோவிதத்தேவிலம்" என்றாரிறே. [எல்லை இல் மாயனை] - ஸங்கல்பரூபஜ்ஞாநத்தாலே ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணவல்ல ஆஶ்சர்யஶக்தியுக்தனை. இப்படியிருக்கிறார் ஆர்? என்னில்,—[கண்ணனை] - க்ருஷ்ணனை. "க்ருஷ்ணஷவஹியொகாநாம்". [கண்ணனைத் தாள்பற்றி யான் ஓர்துக்கமிலனே]-பிராட்டிபுருஷகாரமாக ஸஹகாரிநிரபேக்ஷமாக நம்கார்யம் செய்யுமவனாய், "ஸஷஷெஹ்வாநநுயாதி" என்கிறபடியே ஆநந்தாவஹனானவனைப் பற்றின எனக்கு ஒருதுஃகமில்லை என்கிறார்.

ஈடு.—எட்டாம்பாட்டு. நித்யவிபூதியை அநுபவித்துக்கோண் டிருக்கிற மேன்மையை யுடையவன் ஜகத்ரக்ஷணம் பண்ணும் நீர்மையை அநுஸந்திக்கப்பெற்ற எனக்கு ஒரு துஃகமில்லை யென்கிறார்.

---

எட்டாம்பாட்டு - அல்லலில் இத்யாதி. 'அல்லலிலின்பம்' இத்யாதியைப் பற்ற, நித்யவிபூதியை இத்யாதி. 'கண்ணன்' என்றத்தைப்பற்ற, நீர்மையை என்றது.

[அல்லல் இத்யாதி] - ஸ்வர்க்காதிகளிற்போலே துஃகமிஶ்ரமாய்ப் பரிச்சிந்நமாயிராதே, துஃகமந்தரஹிதமாய் ஸுகைகதாநமாய் அபரிச்சிந்நமான ஆநந்தத்தையுடையவன். [எங்கும் அழகமர்] - த்ரிபாத்விபூதி யெல்லாம் வெள்ளமிடும் காந்தியை யுடையவன். [சூழொளியன்] - அழகென்று - அவயவ ஶோபையாய், சூழொளியென்று - ஸமுதாய ஶோபையைச் சொல்லுகிறது. அன்றிக்கே, [எங்குமழகமர்] - பாதாதிகேஶம் அவயவங்களைத் தனித்துப்பார்த்தால் 'இங்கே அழகு குடிகொண்டது, இங்கே அழகு குடிகொண்டது' என்னும்படி பாதாதிகேஶம் பழிப்பற்று. [சூழொளியன்] - த்ரிபாத்விபூதியடங்கலும் காந்திபூரத்தாலே வெள்ளமிடாநிற்குமாயிற்று. லாவண்யமானது எங்குமொக்க வ்யாபித்து அலையெறியும்படியா யிருக்கை. [அல்லிமலர்மகள் இத்யாதி] - இவ்வழகு காட்டிலெறித்த நிலாவாகாதபடி நெஞ்சோடே அநுபவிப்பாரைச் சொல்லுகிறது. புஷ்பத்தில் பரிமளம் வடிவுகொண் டிருக்கிறாப்போலே நிரதிஶயபோக்யையான பெரியபிராட்டியாரோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே பிறந்த ஆஶ்சர்யமான மயக்கத்தையுடையனான ஸர்வேஶ்வரன். மயக்குக்கள் - ஆநந்தங்கள். மயங்கல் - கூடலும், கலத்தலும். [ஆகியும் நிற்கும்] - தன்னுடைய ஆநந்தத்துக்குமேலே ஸ்ரீயஃபதித்வத்தால் வந்த ஆநந்தத்தையுடையனா யிருக்கும். [அம்மான்] - ஆநந்தமயனாய் ஸ்ரீயஃபதியாமவனிறே ஸர்வேஶ்வரன். [எல்லையில் ஞானத்தன்] - "உதக்ஷ்வீ" (மநஸ்வீ) என்னுமாபோலே, ப்ரணயதாரையில் அவளுக்கும் ஆனைக்குக் குதிரை வைக்கவல்ல ஜ்ஞாநாதிக்யத்தையுடையவன். [ஞானமஃதே கொண்டு இத்யாதி] - தானும் அவளுமான சேர்த்தியிற் பிறந்த வெளிச்சிறப்பே ஸஹாயாந்தர நிரபேக்ஷமான ஸாதநமாகக்கொண்டு, இக்கார்யஜாதத்தை யெல்

---

*'அல்லலில் - அளவிறந்த - இன்பம்' என்றதுக்கு வ்யாவர்த்ய பூர்வகமாக அர்த்தம் ஸ்வர்க்காதிகளிற்போலே இத்யாதி - துஃகரஹிதமாய் அளவிறந்த ஆநந்தத்தையுடையவ னித்யர்த்தஃ. 'எங்கும் அழகமர், எங்கும் சூழொளியன்' என்றபடி. இதுக்கு மூன்றர்த்தம்: முந்தினது, 'அழகு' என்று - தேஜஸ்ஸாய், 'சூழொளியன்' என்று - திருமேனியெங்கும் சூழ்ந்த ஒளியை யுடையவ னென்றபடி; அதாவது - ஸமுதாய ஶோபை. இத்தை அருளிச்செய்கிறார் - த்ரிபாத்விபூதியெல்லாம் இத்யாதி. இந்த அர்த்தத்துக்கு, மேலே யிருக்கிற 'லாவண்யமானது' இத்யாதி வாக்யம் - இங்கே 'சூழொளியன்' என்றதுக்கு அர்த்தமாக அநுஸந்தேயம். இரண்டாமர்த்தம் - அழகென்று அவயவஶோபையாய் இத்யாதி. அதாவது - அவயவங்களெங்கும் தனித்தனியே பூர்ணமான அழகையுடையனாய்; ஒளி என்று - ஸமுதாயஶோபையாய், திருமேனியெங்கும் சூழ்ந்திருக்கிற ஸமுதாய ஶோபையை யுடையவ னென்றபடி. மூன்றாமர்த்தம் - அழகென்று - ஸௌந்தர்யம்; ஒளியென்று - தேஜஸ்ஸு, இத்தை அருளிச் செய்கிறார் - பாதாதிகேஶம் இத்யாதி. ஆக, 'அழகு' என்று - தேஜஸ்ஸாதல், ஸௌந்தர்யமாதல்; ஒளி - லாவண்யமாதல், தேஜஸ்ஸாதல். ஸௌந்தர்யம் - அவயவஶோபை. லாவண்யம் - ஸமுதாயஶோபை. காந்தியும் தனியே ஒரு விக்ரஹகுணம். இத்தைத் தளமாக்கிக்கொண்டு மேலிற்பதத்துக்கு ரஸோக்தியாக அர்த்தம் - இவ்வழகு இத்யாதி. நெஞ்சோடே அநுபவிப்பார் என்றது-சாடு. ஸஹ்ருதயமாக வென்றும், வக்ஷஸ்த்தலத்திலிருந் தென்றும். இரண்டர்த்தமும் இங்கே உபயுக்தம். சப்தார்த்தம் - புஷ்பத்தில் இத்யாதி. 'ஆகியும்' என்ற சஶப்தார்த்தம் - தன்னுடைய ஆநந்தத்துக்கு இத்யாதி. 'இன்பமளவிறந்து' என்று - ஸ்வாபாவிகமான ஆநந்தம் சொல்லிற்றிறே. 'அல்லலிலின்பம்' இத்யாதியையும் 'அல்லிமலர்மகள்' இத்யாதியையுங் கூட்டி பாவம் - ஆநந்தமயனாய் இத்யாதி. 'எல்லையில்ஞானத்தன்' என்று - ப்ரணயதாரையில் விதக்த னென்னுதல், ஸ்ருஷ்டிஹேதுவான ஸங்கல்பரூபஜ்ஞாநத்தை யுடையவ னென்னுதல். பிராட்டியோட்டைச் சேர்த்தி சொன்ன அநந்தரம், 'எல்லையில் ஞானத்தன்' என்கையாலே - போக ப்ரகாரங்களை அறிகைக்கீடான ஜ்ஞாநாதிக்யத்தை இதுக்கு அர்த்தமாக அருளிச்செய்கிறார் - உதக்ஷ்வீ இத்யாதி. "உதக்ஷ்வீ தஃதஸஸ்யாஃ" இத்யாதி பாலகாண்டே. பூர்வமேவ விகிதம். ஆனைக்குக் குதிரை வைக்க வல்ல வென்றது - ஆனைக்குக் குதிரை சரியாகாதாப்போலே, அவளுடைய ஜ்ஞாநத்திலும் விஞ்சின வென்றபடி. 'எல்லையில் ஞானத்தன்' என்றதுக்கு - பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே விஶதமாகப் பிறந்த ஸங்கல்பரூபஜ்ஞாநத்தையுடையவ னென்று அர்த்தாந்தரம் விவக்ஷித்து, 'ஞானமஃதேகொண்டு' என்றதுக்கு அர்த்தம் - தானும் அவளுமான இத்யாதி. க்ரியத இதி-கர்ம என்று விவக்ஷித்து, இக்கார்யஜாதத்தையெல்லாம் என்றது,*

லாம் உண்டாக்குமாயிற்று. "யஸ்யாவீக்ஷ்ய முகந்ததிங்கிதபராதீநோ விதத்தேகிலம்" (யஸ்யாவீக்ஷ்ய முகந் ததிங்கிதபராதீநோ விதத்தேகிலம்) என்றுரிறே. இம்முகத்தாலேயிறே "பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்பது. அல்லாதார்க்கடைய, விஷயங்களோட்டைச்சேர்த்தி ஜ்ஞாநஹாநியையும் பலஹாநியையும் ரூபஹாநியையும் பண்ணுவிக்கும்; இவ்விஷயம் அவற்றுக்கு எதிர்த்தட்டாயிருக்கும். [எல்லையில் மாயனை] - ஸங்கல்ப ரூபஜ்ஞாநத்தாலே ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணவல்ல ஆஶ்சர்ய ஶக்தியுக்தனை. இப்படிப்பட்டவன் ஆரென்னில்,—[கண்ணனை] - க்ருஷ்ணனை. "க்ருஷ்ண ஏவஹி லோகாநாம்" (க்ருஷ்ண ஏவஹி லோகாநாம்). [கண்ணனைத் தாள் பற்றி யான் ஓர் துக்கமிலனே] - பிராட்டி ஸந்நிதியும் உண்டாய், அவள் புருஷகாரமாக ஸஹகாரி நிரபேக்ஷமாக நம் காரியம் செய்யுமவனுமாய், "ஏஷஹ்யேவாநந்தயாதி" (ஏஷஹ்யேவாநந்தயாதி) என்கிறபடியே ஆநந்தாவஹனுனவனைப் பற்றின எனக்கு ஒரு துக்கமில்லை யென்கிறார். (௮)

## ஒன்பதாம் பாட்டு.

துக்கமில்ஞானச்சுடரொளிமூர்த்தி துழாயலங்கல்பெருமான்
மிக்கபன்மாயங்களால்விகிருதஞ்செய்து வேண்டுமுருவுகொண்டு
நக்கபிரானேடயன்முதலாக எல்லாருமேவையுந் தன்னுள்
ஒக்கவொடுங்கவிழுங்கவல்லானைப்பெற்று ஒன்றுந்தளர்விலனே.

சேர்த்தியிற்பிறந்த ஜ்ஞாநத்தாலே ஸ்ருஷ்டிக்கும்படி எங்ஙனே என்ன, யஸ்யாவீக்ஷ்ய இத்யாதி. அதாவது - ஸம்ஶ்லேஷ ஸமயத்தில் ஓடமேற்றிக் கூலிகொள்ளுமளவானபோது 'இவள் ஒரு கார்யம் நம்மை ஏவுவதுகாண்' என்றிருக்குமளவில் ஜகத்திதத்தை அவள் நியமிக்க, அத்தாலே தயமாநமநாவாய்க்கொண்டு "பஹுஸ்யாம்" என்று ஸ்ருஷ்ட்யாதிகளிலே ஒருப்படு மென்றபடி. "ஸ்வஸ்தி ஶ்ரீர்திஶதாதஶேஷஜகதாம் ஸர்க்கோபஸர்க்கஸ்திதீஸ்ஸ்வர்க்கம் துர்க்கதிமாபவர்க்கிகபதம் ஸர்வாஞ்ச குர்வந்ஹரி:। யஸ்யாவீக்ஷ்ய முகந்ததிங்கிதபராதீநோ விதத்தேகிலம் க்ரீடேயம் கலு நாந்யதாஸ்ய ரஸதா ஸ்யாதைகரஸ்யாத்தயா" இதி ஶ்ரீஸ்துதௌ. "பஹுஸ்யாம்" என்று - தான் ஸங்கல்பித்தன்றோ ஸ்ருஷ்டிப்பதென்ன, இம்முகத்தாலே இத்யாதி; சாடு. இம்முகத்தாலே-இவள் முகத்தாலே, இப்ப்ரகாரத்தாலே யென்றும். இத்தால் - அவன் ஸங்கல்பிக்கிறதும் அவள் நியமிக்கையாலே என்று கருத்து. ஸ்த்ரீகளோட்டைச் சேர்த்தி ஜ்ஞாநமாந்த்யஹேதுவன்றோ? என்ன, அல்லாதார்க்கு இத்யாதி. இவ்விஷயமிதி - 'எல்லையில் ஞானத்தன் ஞானமஃதே கொண்டு, எல்லையில் மாயனை, அழகமர் சூழொளியன்' என்று - ஜ்ஞாந ஶக்தி ஸௌந்தர்யங்களைச் சொல்லுகையாலே, இவ்விஷயம் அவற்றுக்கு எதிர்த்தட்டாயிருக்கு மென்றபடி. இந்த அதிஶயங்களெல்லாம் அவள்சேர்த்தியாலே யென்று கருத்து. கண்ணனை "க்ருஷிர்பூவாசகஶ்ஶப்தோ ணஶ்ச நிர்வ்ருதிவாசக: । விஷ்ணுஸ்தத்பாவயோகாச்ச க்ருஷ்ணோ பவதி ஸாத்வத" என்கிறபடியே ஆநந்தாவஹனென்றபடி. க்ருஷ்ணனுக்கு ஸ்ரஷ்ட்ருத்வமுண்டோ? என்ன, க்ருஷ்ண ஏவஹி இத்யாதி. "க்ருஷ்ண ஏவஹி லோகாநாமுத்பத்திரபி சாவ்யய: । க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விஶ்வம் சராசரம்" இதி ராஜஸூயே. பிராட்டி ஸந்நிதியைச் சொன்ன அநந்தரம், ஜகத்ஸ்ருஷ்டியைச் சொன்னதுக்கு ஹாவம் - பிராட்டிஸந்நிதியு முண்டாய் இத்யாதி. 'ஞானமஃதே கொண்டு எல்லாக் கருமங்களும் செய்' என்றத்தைப் பற்ற - அவள் புருஷகாரமாக இத்யாதி. 'கண்ணன்' என்றதுக்கு அர்த்தம் - ஆநந்தாவஹன் என்றது. அல்லிமலர்மகளென்று தொடங்கி, அம்மான்-அல்லலிலின்பம் என்று தொடங்கி, எல்லையில் ஞானத்தன் என்று தொடங்கி, யானோர் துக்கமிலன் இத்யந்வய:.

(௮)

ஆ.—(துக்கமில்.) ஸமஸ்தஹேயரஹிதனும், ஸர்வஜ்ஞனும், நிரதிஶயதேஜோமய திவ்யரூபனும், திருத்துழாயாலே அலங்க்ருதனும், தன்னுடைய விசித்ர ஶக்திகளாலே ஸ்வாபிமத திவ்யரூபங்களைக்கொண்டு ஆஶ்சர்ய திவ்யசேஷ்டிதங்களைச் செய்து, ப்ரஹ்மாதி ஸர்வாத்மாக்களையும் ஒருகாலே திருவயிற்றிலே ஒடுங்கவிழுங்கவல்லானைப்பெற்று ஒன்றுந் தளர்விலேன் என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஸர்வாஶ்சர்ய பூமியான வடதளஶாயியை அநுபவிக்கப் பெற்ற எனக்கு ஒரு தளர்வுமில்லை என்கிறார். மஹாப்ரளய வ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறார் என்றுமாம்.

[துக்கமில்ஞானம் என்று தொடங்கி] - ஹேயரஹிதமான ஜ்ஞானத்தையும் நிரதிஶய தேஜோமயமான திவ்ய ரூபத்தையு முடையனும் ஸர்வேஶ்வரத்வ ஸூசகமான திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதனும். [மிக்கபன்மாயங்களால் என்று தொடங்கி] - அபரிச்சேத்யமான அநேக ஆஶ்சர்ய ஶக்திகளாலே ஸ்வாபிமத திவ்ய தேஹங்களைக் கொண்டு ஆஶ்சர்ய சேஷ்டிதங்களைப் பண்ணி ப்ரதாநரான ருத்ரன் ப்ரஹ்மா என்கிற இவர்கள் தொடக்கமாகச் சேதநாசேதநங்களையடையத் தன் திருவயிற்றிலே ஒருகாலே சென்று சேரும்படி விழுங்கவல்லவனை.

ப.—அநந்தரம், ஸர்வ ப்ரகார ரக்ஷகனை ஆபத்ஸகனைப்பற்றி நான் ஒருதளர்த்தியையுடையேனல்லேன் என்கிறார்.

துக்கம் இல் - து:கஸ்பர்ஶம் இல்லாத, ஞானம்-ஜ்ஞானத்தையுடையனும், சுடரொளி - அத்யுஜ்ஜ்வலதேஜோமயரூபமான, மூர்த்தி - விக்ரஹத்தையுடையனும், துழாய் அலங்கல் - திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதனான, பெருமான் - ஸர்வாதிகனும்வைத்து, மிக்க - ("பராஸ்யஶக்திர்விவிதைவ" என்கிறபடியே) அநவதிகாதிஶயையாய், பல் மாயங்களால் - பஹுவிதைகளான ஆஶ்சர்யசக்திகளாலே, வேண்டும் உருவு-(இச்சாக்ருஹீதமான) அபிமத விக்ரஹங்களை, கொண்டு-பரிக்ரஹித்து, விகிருதம் செய்து-இதரஸஜாதீயப்ரதிபத்தி பண்ணலாம்படியான சேஷ்டா விகாரங்களைப் பண்ணுமவனும், (அவ்வளவன்றியே), நக்கபிரானோடு-திகம்பரனும் ஈஶ்வராபிமாநியான ருத்ரனும், அயன் - (அவனுக்கு உத்பாதகனும்) அஜனென்று ப்ரஸித்தனான ப்ரஹ்மாவும், முதலாக-முதலாக, எல்லாரும்-எல்லாச் சேதநரையும், எவையும்-அசேதநங்களையும், ஒக்க - தாரதம்யமில்லாதபடி, தன்னுள் ஒடுங்க - அகவாயில் ஏகதேசத்திலே யொதுங்கும்படியாக, விழுங்கவல்லானை - விழுங்கவல்ல ரக்ஷணஶக்தியுக்தனை, பெற்று - லபித்து, ஒன்றும் தளர்வு - ஒரு தளர்த்தியை, இலன் - உடையேனல்லேன். தளர்வு - பலஹாநி.

இ.—ஒன்பதாம்பாட்டில், அகடிதகடநா ஸமர்த்தனான வடதளஶாயியை அநுபவிக்கப்பெற்ற எனக்கு ஒரு தளர்வில்லை என்கிறார்; மஹாப்ரளய வ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறார் என்றுமாம்.

[துக்கமில் இத்யாதி] - அஜ்ஞானம் கலசாத ஜ்ஞானத்தையும் நிரதிஶய தேஜோமய திவ்ய விக்ரஹத்தையும் உடையனும், அதுக்கு ஒப்பனையான திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதனான ஸர்வேஶ்வரன். [மிக்க பன்மாயங்களால்] - அபரிச்சேத்யமாய்ப் பலவகைப்பட்ட ஆஶ்சர்ய ஶக்தியோகத்தாலே. [வேண்டும் உருவுகொண்டு விகிருதம் செய்து] - இச்சாக்ருஹீதமான விக்ரஹங்களைப் பரிக்ரஹித்து, சிறிய வடிவைக்கொண்டு பெரிய லோகங்களைத் திருவயிற்றிலேவைத்து ஒரு பவனை ஆலந்தளிரிலே கண்வளர்ந்து இப்படி சேராச்சேர்த்தியான சேஷ்டிதங்களைப் பண்ணி. [நக்கபிரான் இத்யாதி] - ஸ்வகோஷ்டியிலே உபகாரகனாக ப்ரஸித்தனான ருத்ரன், அவனுக்கு ஜநகனான ப்ரஹ்மா தொடக்கமான ஸகல சேதநாசேதநங்களையும் தன் திரு

வயிற்றிலே ஏககாலத்திலே ப்ரளயம் தேடிலும் காணவொண்ணாதபடி வைத்து ரக்ஷிக்கவல்லவனை. நைமித்திக ப்ரளயமானபோது அவர்களுக்கு ரக்ஷ்யமான த்ரைலோக்யத்தை ரக்ஷிக்கையாலே அவர்களுக்கு ரக்ஷகன் என்கை. [பெற்று ஒன்றும் தளர்விலனே] - ஸர்வ ஶக்தியாய் ப்ரஹ்மாதிகளுக்கு ரக்ஷகனானவனை அநந்ய ப்ரயோஜநனாய் ஆஶ்ரயித்த எனக்கு ஒரு து:கமுண்டோ? என்கிறார்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. அவடிதகடநாஸமர்த்தனான வடதளஶாயியை அநுபவிக்கப் பெற்ற எனக்கு ஒரு தளர்வு மில்லை யென்கிறார். மஹாப்ரளய வ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறா ரென்னவுமாம்.

[துக்கமில் இத்யாதி] - ஹேயப்ரத்யநீகமான ஜ்ஞாநத்தையும், நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்தையு முடையனாய், அவ்வடிவுக்கு அலங்காரமாகப் போரும்படியான திருத்துழாய் மாலையை யுடையனான ஸர்வேஶ்வரன். அலங்கலென்பது - மாலை. [மிக்க இத்யாதி] - அபரிச்சேத்யமாய்ப் பலவகைப்பட்ட ஆஶ்சர்ய ஶக்தியோகத்தாலே. [வேண்டு முருவு கொண்டு] விகிருதஞ்செய்து] - இச்சாக்ருஹீதமான விக்ரஹங்களைப் பரிக்ரஹித்து விக்ருதங்களைப் பண்ணாநிற்கும். அதாவது - சிறிய வடிவைக்கொண்டு பெரியலோகங்களை வயிற்றிலேவைத்து ஒரு பவனான ஆலந் தளிரிலே கண்வளர்ந்தருளுகை யாகிற அவடிதகடநா ஸாமர்த்யத்தைச் சொல்லுகிறது. [நக்க பிரான் இத்யாதி] - ஸ்வகோஷ்டிக்கு உபகாரகனாக ப்ரஸித்தனா யிருக்கிற ருத்ரனோடே கூட, அவனுக்கும் ஜநகனான ஏற்றத்தையுடைய சதுர்முகன் தொடக்கமான எல்லாச்சேதநாசேதநங்களையும் ஒருகாலே ப்ரளயம் தேடிலுங் காணவொண்ணாதபடி வயிற்றிலேவைத்து ரக்ஷிக்கவல்ல ஸர்வ ரக்ஷகனை. ஒடுங்க விழுங்குகையாவது - "ஏழுலகுமுண்டு மிடமுடைத்து" என்கிறபடியே சிறுவயிற்றிலே பெரிய லோகங்களை வைத்தால், ஈர்க்கில் அத்திக்காய் கோத்தாற்போலே விசைத்து வேறாயிராதே அடங்கித் தகுதியாயிருக்கை. இப்படிப்பட்டவனை, [பெற்று ஒன்றும் தளர்விலனே] - ஸர்வசக்தியாய், ப்ரஹ்மாதிகளுக்கும் ரக்ஷகனானவனை அநந்ய ப்ரயோஜநனாய் ஆஶ்ரயித்த எனக்கு

ஒன்பதாம்பாட்டு - துக்கம் இத்யாதி. 'விழுங்க' என்கிற பத ஸ்வாரஸ்யத்தைப்பற்ற - முந்தின அவதாரிகை. 'நக்கபிரான்' இத்யாதியாலே ப்ரஹ்மாதிகளையும் விழுங்கினதாகச் சொல்லுகையாலே, மஹாப்ரளய வ்ருத்தாந்தம் என்றது. அப்போது, விகிருதஞ்செய்கையாவது - ஸ்தூலாகாரத்தை ஸம்ஹரித்து ஸூக்ஷ்மாகாரத்திலே நிறுத்துகை. 'விழுங்க' என்றதுக்கு - "ஈஶ்வரானுக்ரஹணாக" என்னக்கடவதிறே. விழுங்குகையாவது - தன் ஸ்வரூப ஸங்கல்பாதிகளாலே ஸத்தையை நோக்குகை.

'சுடரொளி' என்கிற மீமிசைக்கு அர்த்தம் - நிரவதிக இத்யாதி. விகிருதம் - விருத்தையான க்ருதி யித்யர்த்த:. 'விக்ருதங்கள்' என்றத்தை விவரிக்கிறார் - அதாவது இத்யாதி. பவனான - முகிழ் விரியாத. நக்கன் - நக்நன். அவன் இவருக்கு உபகாரகனோ? என்ன, ஸ்வகோஷ்டிக்கு இத்யாதி. ஒடுங்குகை - அடங்குகை. ஏழுலகுமுண்டு மிட முடைத்து இதி: ஸ்பஷ்டோர்த்த:. திருமொழி - பதினோராம் பத்து - ஐந்தாந்திருமொழி - மூன்றாம்பாட்டு - "ஆழ்கடல்சூழ்" இத்யாதி. விசைத்து - மிகுத்து. தளர்வு - தைதில்யம். அதாவது - து:கம். ஸர்வ சக்தியாய் இதி : 'வேண்டுமுருவுகொண்டு விகிருதஞ்செய்து' என்கையாலே - ஸர்வஶக்தித்வம். நைமித்திக ப்ரளயத்தில் ப்ரஹ்மாதிகளுக்குச் சலநம் சொல்லலாமோ? என்ன, நைமித்திக இத்யாதி. த்ரைலோக்யத்தையும் அளக்கப்புக்க பாரிப்பாலே ப்ரஹ்மலோகத்தளவும் அளந்தாற்போலே, இவர்களையும் ரக்ஷகனான தன் பாரிப்பாலே வயிற்றிலேவைத்தா னென்றால் விரோதமில்லை யென்றபடி. "எச்சில்தேவரல்லாதார்தாமுளரே" என்னக்கடவதிறே. நைமித்திக ப்ரளயமானபோது என்றது - சொன்ன யோஜனையி லென்றபடி. அதாவது - நைமித்திக ப்ரளயத்தில் லோகங்களை வயிற்றிலேவைத்து வடதளசாயியாயிருந்தபோது ப்ரஹ்மருத்ராதிகளை வயிற்றிலே வைத்ததில்லையிறே; ஆகையாலே அவர்களை வயிற்றிலேவைத்து

ஒரு துஃகமுண்டோ? என்கிறார். நைமித்திகப்ரளயமானபோது, அவர்களுக்கு ரக்ஷ்யமான த்ரை லோக்யத்தை ரக்ஷிக்கையாலே அவர்களுக்கும் ரக்ஷக னென்கை. (௯)

# பத்தாம் பாட்டு.

தளர்வின்றியேயென்றுமெங்கும்பரந்த தனிமுதல்ஞானமொன்றாய்
அளவுடையைம்புலன்களறியாவகையால் அருவாகிநிற்கும்
வளரொளியீசனைமூர்த்தியைப் பூதங்களைந்தையிருசுடரைக்
கிளரொளிமாயனைக்கண்ணனைத்தாள்பற்றி யானென்றுங்கேடிலனே.

ஆ.—(தளர்வின்றியே.) அநாயாஸேந ஸர்வதா ஸர்வத்ர நியந்த்ருதயா வ்யாப்தனாய், ஜகத்காரணபூதனாய், ஜ்ஞாநரூபனாய், ஸ்வேதர ஸமஸ்தவிஸஜாதீயனாய், வ்யாப்யபூதரான ஆத்மாக்களுடைய பரிச்சிந்நவஸ்து க்ராஹகமான இந்த்ரியங்களுக்கு அபூமியாய், வ்யாப்யவஸ்துகத தோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாய், ஸ்வாஸாதாரண திவ்ய ரூபவிசிஷ்டனாய், ப்ருதிவ்யாதி பூத சந்த்ர ஸூர்யாதி ஜகச்சரீரனாய், தன்னுடைய நிரவதிக தேஜோவிசிஷ்ட ரூபத்தோடே கூட வந்து வஸுதேவ க்ருஹே அவதீர்ணனான எம்பெருமானுடைய திருவடிகளைப்பற்றி இனி யொருநாளும் கேடிலேன் என்கிறார்.

ஒ.—பத்தாம் பாட்டில், ஸமஸ்தவஸ்துக்களிலும் ஆத்மதயா வ்யாப்தனாய் அவர்களுடைய இந்த்ரியங்களுக்கும் கோசரமன்றிக்கே ஜகச்சரீரனான க்ருஷ்ணனை வணங்கப்பெற்ற எனக்கு ஒருநாளும் ஒருகேடில்லை என்கிறார்.

[தளர்வு என்று தொடங்கி] - ஏகரூபமாக என்றும் எல்லாவிடத்திலும் வ்யாபிப்பதும் செய்து ஜகத்துக்கு ஸஹாயாந்தர நிரபேக்ஷமான காரணமாய் விலக்ஷண ஜ்ஞாநஸ்வரூபனாய்ப் பரிச்சிந்நவஸ்து க்ராஹகமான இந்த்ரியங்களால் அறிய வொண்ணாதபடி அவற்றுக்கு விஷயமாய் நிற்கும். [வளரொளியீசனை என்று தொடங்கி] - வ்யாப்யவஸ்துகததோஷைஃஅஸம்ஸ்ப்ருஷ்டனாய் அவற்றுக்கு நியாமகனாய் மிக்கிருந்துள்ள ஔஜ்ஜ்வல்யத்தையுடைய திவ்யதேஹயுக்தனாய் பூதபௌதிகமான ஜகத்தை ஶரீரமாகவுடையனாய் நிரவதிக தேஜோவிஶிஷ்ட திவ்யரூபத்தோடேவந்து வஸுதேவக்ருஹே அவதீர்ணனான எம்பெருமானுடைய திருவடிகளை.

ப.—அநந்தரம், ஸர்வாந்தராத்மபூதனான க்ருஷ்ணனைப் பற்றின நான் ஒரு அழிவை யுடையேனல்லேன் என்கிறார்.

என்றும் - ஸர்வ காலத்திலும், எங்கும் - ஸர்வ தேசத்திலும், தளர்வு இன்றியே - (தன்னுடைய நியந்த்ருத்வஶக்திக்குத்) தளர்த்தியில்லாத பூர்த்தியோடே, பரந்த-வ்யாபித்திருக்குமவனாய், தனி - அத்விதீயமாய், முதல் - ஸமஸ்தகாரணமான, ஞானம் ஒன்றாய் - ஜ்ஞாநைக நிரூபணீயனாய், அளவுடை - விஷய பரிச்சேதகங்களான, ஐம்புலன்கள்-இந்த்ரியங்களைந்துக்கும், அறியாவகை - அறிய வொண்ணாதபடி, அருவாகி - நிரவயவஸ்வரூபனாய், நிற்கும் - வர்த்திக்குமவனாய், வளர் - (இப்படி வ்யாப்தியால் வந்த நியந்த்ருத்வத்தாலே) அபிவ்ருத்தமான, ஒளி - ஔஜ்ஜ்வல்யத்தையுடைய, ஈசனை - ஸ்வாமியாய், மூர்த்தியை - அஸாதாரண திவ்ய விக்ரஹ யுக்த

ரக்ஷிக்கையாவது - அவர்களுக்கு ரக்ஷ்யமான த்ரைலோக்யத்தை ரக்ஷிக்கை யென்றபடி. மஹாப்ரளயமான போது, லயஸ்தாநமாகையாலே – 'தன்னுள்' என்கிறது. க்ரமேண அந்வயஃ.

ணுய், பூதங்களைந்தை - ஸமஷ்டிரூப பூதங்களையும், இருசுடரை - வ்யஷ்டிரூப சந்த்ராதித்யர்களை யும் (சரீரமாகவுடையனுகையாலே அவை தானென்று சொல்லலாம்படியாய்), கிளர் - அவதாரப்ர யுக்தமான அபிவ்ருத்தியை யுடையவாய், ஒளி - அத்யுஜ்ஜ்வலமான, மாயனை - ஆஶ்சர்ய குணங் களையுடைய, கண்ணனை - க்ருஷ்ணனை, தாள்பற்றி - திருவடிகளை ஆஶ்ரயித்திருக்கிற, யான் - நான், என்றும் - ஸர்வகாலத்திலும், கேடு இலன் - ஒரு அழிவை உடையேனல்லேன்.

இ.—பத்தாம்பாட்டில், ஜகச்சரீரியாய் ஸர்வத்தையும் நோக்கி ஆபிமுக்யம் பண்ணி னுரை அஸாதாரண விக்ரஹத்தோடே வந்து அவதரித்து ரக்ஷிக்குமவனைப் பற்றின எனக்கு ஒரு கேடில்லை என்கிருர்.

[தளர்வின்றியே இத்யாதி] - ஒரு பதார்த்தத்திலும் குறையாதபடி என்று மொக்க ஏக ரூபமாக எல்லாக்காலத்திலும் வ்யாபித்து இவற்றை ஸ்ருஷ்டிக்குமிடத்தில் த்ரிவிதகாரணமும் தானேயாய் விலக்ஷண ஜ்ஞாந ஸ்வரூபனுய். [அளவுடையைம்புலன்கள்] - அளவுபட்ட இந்த்ரி யங்கள், பரிச்சிந்ந விஷய க்ராஹகங்களிறே. அவற்றுக்கு அறிய வொண்ணுதபடி அவிஷயமாய் நிற்கும். [வளரொளி யீசனை] - வ்யாப்யகததோஷம் தட்டாதே "ஸுநஸ்ருநு ஸுநோ ஸுஹிவாஸு ஸீதி" என்று நியந்த்ருத்வத்தாலே வந்த ஔஜ்ஜ்வல்யத்தையுடையவனை. [மூர்த்தியை]-இப்படி ஜகத்தைத் தனக்கு ஶரீரமாகவுடையனு யிருக்கச்செய்தே அஸாதாரண விக்ரஹத்தையுடையனு யிருக்கும். [பூதங்களைந்தை இருசுடரை] - வ்யாபிக்குமிடத்தில் கார்யத்தோடு காரணத்தோடு வாசியற வ்யாபித்திருக்கும். 'பூதங்கள்' என்று காரணத்துக்கு உபலக்ஷணம்; 'இருசுடர்' என்று கார்யத்துக்கு உபலக்ஷணம். [கிளரொளிமாயனைக் கண்ணனை] - நிரவதிகதேஜோரூபமான விக்ர ஹத்தை இதர ஸஜாதீய மாக்கிக்கொண்டு வஸுதேவக்ருஹே அவதீர்ணனுனவனை. [தாள்பற்றி யான் என்றும் கேடிலனே] - இவன் விமுகனுன அன்றும் வ்யாப்தியாலே ஸத்தையை நோக்கி இவன் ஆபிமுக்யம் பண்ணின அன்று கண்ணுக்குத் தோற்ற நின்று ரக்ஷிக்குமவன் திருவடிகளை முறையிலே பற்றின எனக்கு ஒரு நாளும் ஓர்அநர்த்தமில்லை.

ஈடு.—பத்தாம்பாட்டு. ஜகச்சரீரியாய் ஸத்தையையும் நோக்குமவனுய், ஆபிமுக்யம் பண்ணினுரை அஸாதாரணவிக்ரஹத்தோடே வந்து அவதரித்து ரக்ஷிக்குமவனைப் பற்றின எனக்கு ஒரு கேடில்லை என்கிருர்.

[தளர்வின்றியே இத்யாதி] - என்றுமுண்டாய் எங்குமொக்க வ்யாபியாநின்றுல் ஒரு தளர்த்தியின்றிக்கே, ஸ்ருஷ்டிக்குமிடத்தில் அத்விதீயகாரணமாயுள்ள ஸங்கல்பரூபஜ்ஞாநத்தை யுடையனுய். அன்றியே, தளர்வு இத்யாதிக்கு - ஒரு பதார்த்தத்திலும் குறைவுபடாதபடி எங்கு மொக்க ஏகரூபமாக எல்லாக்காலத்திலும் வ்யாபித்து, இவற்றை ஸ்ருஷ்டிக்குமிடத்தில் த்ரிவிதகார ணமும் தானேயாய், விலக்ஷணஜ்ஞாநஸ்வரூபனுய். [அளவுடை இத்யாதி] - உழக்காலே கடலை

---

பத்தாம்பாட்டு - **தளர்வின்றியே** இத்யாதி. 'எங்கும்பரந்த' இத்யாதியைப்பற்ற, **ஜகச்சரீரியாய்** இத்யாதி. 'கிளரொளிமாயனைக்கண்ணனை' இத்யாதியைப்பற்ற, ஆபிமுக்யம்பண்ணினுரை இத்யாதி.

என்றும் - நித்யமாயிருப்பதாய், எங்கும் - தளர்வின்றியே - பரந்த - எங்குமொக்க ஸங்கோசமின் றிக்கே பரந்திருப்பதாய், தனிமுதல் - அத்விதீயகாரணமாய், ஞானமொன்ருய் - அத்விதீயமான ஸங்கல்பரூப ஜ்ஞாநத்தை யுடையனு யென்று மூந்தின அர்த்தம். இந்த அர்த்தத்தில், 'ஞானமொன்ருய்' என்று ஜ்ஞாநத் துக்கு அத்விதீயத்வமாவது - ஸ்வாபதசையிலும் க்ஷயியாதிருக்கை. **தளர்த்தி** - ஸங்கோசம். இரண்டாமர்த்தத் திலே, தளர்வின்றியே - **குறைவுபடாதபடி** என்று அர்த்தம். த்ரிவிதகாரணமுமிதி: 'தனி' என்று - நிமித்தத் வமும், 'முதல்' என்று - உபாதாநத்வமும், 'என்று' என்று - ஸஹாயாந்தர நைரபேக்ஷ்யமும் **சொல்லுகிறது.** ஆக, நிமித்தஸஹகார்யந்தர நிரபேக்ஷமான உபாதாநகாரண மென்றபடி. 'ஞானம்' என்று - தர்மபூதஜ்ஞாநமாதல், ஸ்வரூபஜ்ஞாநமாதல். அளவுடையைம்புலன்களாகையாலே அவற்ருல் அறியவொண்ணுதபடி நிற்கு மென்கிருர்- **உழக்காலே** இத்யாதி. 'அளவுடை' என்றத்தைப்பற்ற, **உழக்காலே** என்றது; விஷயபரிச்சேதகங்களான **பஞ்**

முகக்கவோண்ணுதாப்போலே, பரிச்சிந்நவஸ்து க்ராஹகமான இந்த்ரியங்களாலே அபரிச்சேத்ய வஸ்துவை க்ரஹிக்கவோண்ணுதிறே. [அருவாகிநிற்கும்] - அவற்றால் அறியவோண்ணுதபடி அவிஷயமாயிருக்கும். [வளரொளியீசனை] - இப்படி சேதநாசேதநங்களோடே கூடி அவற்றுக்கு அந்தராத்மாவாய்ப் புக்குநின்றல் தத்கததோஷங்கள் அவனுக்கு ஸ்பர்ஶியாதோ? என்னில்;— "அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி" (அநஶ்நந்நந்யோஅபிசாகஶீதி) என்கிறபடியே தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாய், நியந்த்ருத்வத்தால் வந்த புகரையுடையனாயிருக்கும். [மூர்த்தியை] - இப்படி ஜகச்சரீரியாயிருக்கச்செய்தே அப்ராக்ருத திவ்யவிக்ரஹயுக்தனாய்க்கொண்டு நித்யவிபூதியிலிருக்கு மிருப்பைச் சொல்லுகிறது. [பூதங்களைந்தை இருசுடரை] - அஸாதாரணவிக்ரஹத்தோபாதி ஜகச் சரீரியாய்நிற்கிற அதுவும் இவர்க்கு அநுஸந்தேயமாம்படியிறே; அத்தோடொக்க, [பூதங்களைந்தை இரு சுடரை என்றது]-காரணமான ப்ருதிவ்யாதி பூதபஞ்சகங்களையும், கார்யவர்க்கத்தில் தலையான சந்த்ர ஸூர்யர்களையுமுடையனாய்லீலாவிபூதிக்குநிர்வாஹகனாயிருக்குமிருப்பைச்சொல்லுகிறது.[கிளரொளி மாயனைக் கண்ணனை] - இவ்விபூதிக்குள்ளே அப்ராக்ருத திவ்யஸம்ஸ்த்தாநத்தை இதரஸஜாதீய மாக்கிக்கொண்டுவந்து க்ருஷ்ணனாய் வந்து அவதரித்தவனை. [கண்ணனைத் தாள்பற்றி] - "மாமேகம் ஶரணம் வ்ரஜ" (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்றவன் திருவடிகளைப் பற்றி. [யான் என்றும் கேடிலனே] - இவன் விமுகனான அன்றும் ப்ராப்தியாலே ஸத்தையை நோக்கி, இவன் ஆபிமுக்யம் பண்ணின அன்று கண்ணுக்குத் தோற்றி நின்று ரக்ஷிக்குமவன் திருவடிகளை முறையிலே பற்றின எனக்கு ஒருநாளும் அநர்த்தமில்லை. மூர்த்தியை - தனிமுதல் ஞானமொன்றாய் - பூதங்களைந்தை இருசுடரை - என்றுமெங்கும்பரந்து - தளர்வின்றியே - அளவுடையைம்புலன்களறியாவகையால் அருவாகிநிற்கும் வளரொளியீசனை - கிளரொளிமாயனைக் கண்ணனைத்தாள்பற்றி யானென்றுங்கேடில னித்யந்வயஃ. (௧௦)

## பதினோராம் பாட்டு.

கேடில்விழுப்புகழ்க்கேசவனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன
பாடலோராயிரத்துளிவையுமோருபத்தும் பயிற்றவல்லார்கட்கு அவன்
நாடும்நகரமும்நன்குடன்காண நலனிடையூர்திபண்ணி
வீடும்பெறுத்தித்தன்மூவுலகுக்குந்தரும் ஒருநாயகமே.

*ஆ.*—(கேடில்.) *நித்யஸித்தகல்யாணகுணவிசிஷ்டனான கேசவனைக் குருகூர்ச்சட கோபன் சொன்ன பாடல் ஓராயிரத்துள்* இவையும் ஓர்பத்தும் பயிற்ற வல்லார்கட்கு அவன்

---

*சேந்த்ரியங்களால் அறியவொண்ணுதபடி ஸூக்ஷ்மரூபனாயிருக்குமென்று சப்தார்த்தம்.* அரு - *ஸூக்ஷ்மம். அறியா வகையால், ஆல் - அசை.* **அறியாவகை** - *அறியவொண்ணுதபடி.* 'அருவாகிநிற்கும்' என்ற அநந்தரம், 'வள ரொளி' என்றதுக்கு ஸாவம் - இப்படி இத்யாதி. ஈசனு கையாலே, வளரொளியாயிருக்கு மென்றபடி. **'மூர்த்தி'** என்று - விக்ரஹமாய், அஸாதாரண விக்ரஹவிசிஷ்டனென்றபடி. 'மூர்த்தியை' என்ற அநந்தரம், 'பூதங்க ளைந்தை யிருசுடரை' என்றதுக்கு ஸாவம்-**அஸாதாரண** இத்யாதி. பூதபஞ்சகத்தையும் இருசுடரையும் சொன் னல் - ஜகச்சரீரித்வம் சொன்னதாமோ? என்ன, **காரணமான** இத்யாதி.'இருசுடரை' என்று-கார்யவர்க்கத்தைச் சொல்லுகையாலே, 'பூதங்களைந்தை' என்றது - *காரணமான பூதபஞ்சகபரம்.* **கிளரொளிமாயனை** - *அபிவ்ருத்த மாய் அத்யுஜ்ஜ்வலமான ஆஶ்சர்யகுணங்களையுடையவனை யிதி சப்தார்த்தஃ.* 'அருவாகி - எங்கும்பரந்த - கண் ணனைத் தாள்பற்றி யானென்றும் கேடிலன்' என்று கூட்டி ஸாவம் - **இவன்விமுகனான** இத்யாதி. 'ஞானம்' என்று, ஸ்வரூபஜ்ஞாநமாகச் சொன்ன இரண்டாமர்த்தத்தைக் கடாக்ஷித்து அந்வயம் அருளிச்செய்கிறார் - **மூர்த்தியை** இத்யாதி. *தர்மபூதஜ்ஞாநபரமான மூந்தின அர்த்தத்தில், க்ரமேண அந்வயஃ.* (௧௦)

நாடும் நகரமும் நன்கு உடன்காண நல்ல ஸம்பத்துக்களை இந்தலோகத்திலே அநுபவிப்பித்து, அவர்களை நிரஸ்த ஸமஸ்தஸாம்ஸாரிக து:கராக்கி அவர்களுக்குத் தன்னுடைய ஸர்வேச்வரத்வத்தையும் தரு மென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்குமவர்களை இந்த லோகத்திலே எல்லாரும் அறியும்படி வைஷ்ணவ ஸ்ரீயிலே நடத்திப் பின்னைத் திருநாட்டில் கொண்டுபோவதும் செய்து தன்னுடைய ஐச்வர்யமெல்லாம் இவர்கள் இட்ட வழக்காக்கும் என்கிறார்.

[கேடில் என்று தொடங்கி] - நித்யஸித்த கல்யாண குணங்களை யுடையனான கேசிஹந்தாவை ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார்க்கு. [நாடு நகரமும்] விசேஷஜ்ஞரும் அவிசேஷஜ்ஞரும்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக ஸ்வாராஜ்யப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

கேடு இல் - (ஹேயப்ரத்யநீகமாகையாலே) அழிவற்று, விழு - (கல்யாணமாகையாலே) விழுப்பத்தையுடைத்தான, புகழ் - குணப்ரதையையுடைய, கேசவனை - கேசிஹந்தாவான க்ருஷ்ணனை, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்த, பாடல் - கீதரூபமாய், ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், ஒரு - பகவதநுபவப்ரதிபாதகமான, இவை பத்தும் - இவைபத்தையும், பயிற்ற வல்லார்கட்கு - சப்தார்த்தங்களிற் செறிவுதோன்றும்படி சொல்லவல்லார்களுக்கு, - அவன் - அந்த க்ருஷ்ணன், நாடும் - (அவிசேஷஜ்ஞப்ரசுரமான) நாடும், நகரமும் - (விசேஷஜ்ஞப்ரசுரமான) நகரமும், நன்குடன் - ச்லாகாரூபமான நன்மையோடேகூட, காண - காணும்படியாக, நலனிடை - பகவத்பாகவதவிஷயத்திலே சேஷத்வஸம்பத்தோடே, ஊர்திபண்ணி - நடக்கும்படி பண்ணி, வீடும் - மோக்ஷாநந்தத்தையும், பெறுத்தி - கொடுத்து, தன் மூவுலகுக்கும் - தன்னுபாதி சேதநாசேதநங்களையும் தத்ஸம்பந்தாநுஸந்தாநத்தாலே ஸ்வபோக்யத்வேந அபிமாநிக்கும்படி, (அவற்றுக்கு), ஒருநாயகம் - அத்விதீயநாயகத்வத்தை, தரும் - தரும். இவனுக்கு அத்விதீயநாயகத்வம் - பகவத்ஸ்வரூபாந்தர்பாவத்தால் வந்த ததாத்மகத்வத்தா மென்று கருத்து. பயிற்றவல்லாரென்று - பயிலுவிக்கவல்லா ரென்றுமாம். இது - அறுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸித்தாரை ஸர்வலோக ப்ரஸித்தமாம்படி ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயிலே நடத்திப் பரமபதத்திலே சென்றால் தன் ஐச்வர்யம் இவர்களிட்ட வழக்காக்கும் என்கிறார்.

[கேடில் இத்யாதி] - கேடின்றிக்கே விழுப்பத்தை யுடைத்தான. [புகழ்] - நித்யஸித்த கல்யாண குணங்களையுடைய கேசிஹந்தாவை யாயிற்று இவர் கவிபாடிற்று. [குருகூர் இத்யாதி]- "ஸ்வாவதாரசரிதம் ஸ்வநிவர்ணிதம்" என்கிறபடியே அவதாரத்துக்கு அவ்வருகுபோகமாட்டாத ஆழ்வாராயிற்றுக் கவிபாடினர். [பாடல்ஓராயிரம்] - புஷ்பம் பரிமளத்தோடே அலருமாபோலே இசையோடே யாயிற்றுப் பிறந்தது. [பயிற்ற வல்லார்கட்கு] - பயிலவல்லார்கட்கு என்னுதல், ப்ரவர்த்திப்பிக்க வல்லார்களுக்கு என்னுதல்; அவன் தரும் என்று அந்வயம். [நாடு]- அவிசேஷஜ்ஞரும் த்ரவ்ய விசேஷங்களறிந்திருக்கும் விசேஷஜ்ஞரும். [நன்குடன் காண] - நன்மையோடே காண; இவனும் ஒருவனேயென்று கொண்டாட. [நலனிடை யூர்திபண்ணி] - நன்மையாவது - ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ. ஸ்ரீவைஷ்ணவனும்படி பண்ணி. [வீடும்பெறுத்தி] - இங்கேயிருந்த நாள் வைஷ்ணவ ஸ்ரீயோடே நடக்கும்படிபண்ணி,பின்பு நிரதிசய புருஷார்த்த மோக்ஷத்

ஷ்தைக் கொடுக்கும். [தன் மூவுலகுக்கும் தரும்] - தன்னுடையதான த்ரிவிதாத்மவர்க்கத்துக்கும் இவன்தான் அத்விதீயநாயகனும்படி பண்ணிக்கொடுக்கும். அவன்தன்னதான ஐஶ்வர்யத்தை இவன் என்னது என்னும்படி பண்ணும்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸித்தாரை ஸர்வலோக ப்ரஸித்தமாம்படி ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயிலே நடத்தி, மேலே பரமபதத்திலே சென்றால் தன் ஐஶ்வர்யம் இவர்களிட்ட வழக்காக்கு மென்கிறார்.

[கேடுஇல் இத்யாதி] - கேடின்றிக்கே விழுப்பத்தையுடைத்தான, புகழ் - நித்யஸித்த கல்யாணகுணங்களையுடைய, கேசிஹந்தாவையாயிற்றுக் கவிபாடிற்று. [குருகூர்ச்சடகோபன் சொன்ன] - "ரகுவரசரிதம்முநிப்ரணீதம்" (ரகுவரசரிதம்முநிப்ரணீதம்) என்கிறபடியே அவதாரத்துக்கு அவ்வருகு போகமாட்டாத ஆழ்வாராயிற்றுக் கவிபாடினார். [பாடல் ஓராயிரம்] - "பாட்யேகேயேசமதுரம்" (பாட்யேகேயேசமதுரம்) என்னுமாபோலே, இசையோடேயாயிற்றுப் பிறந்தது. [இவையும் ஒரு பத்தும்] - முத்துமுகமறிந்துகோத்துச் சேர்வைபார்க்குமாபோலே, 'இவையும் ஒருபத்து' என்கிறார். [பயிற்ற வல்லார்கட்கு] - சொல்ல வல்லார்க்கு. பயிற்ற என்கிற இத்தை - பயில என்றாக்கி, அப்பஸிக்க வல்லார்கட்கு என்னுதல். அவன் தருமென்று அந்வயம். [நாடு]-அவிஶேஷஜ்ஞர். [நகரம்]-த்ரவ்ய விசேஷமறிந்திருக்கும் விஶேஷஜ்ஞர். [நன்குடன் காண] - நன்மையோடே காண. "இவனுமொருவனே" என்று கொண்டாட. [நலனிடையூர்தி பண்ணி] - நன்மைக்குநடுவே நடக்கும்படி பண்ணி. நன்மையாவது - ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ. [வீடும் பெறுத்தி] - பரமபுருஷார்த்தமோக்ஷத்தையுங் கொடுத்து. [தன்மூவுலகுக்குந் தரும் ஒருநாயகம்] - தன்னதான த்ரிவிதாத்மவர்க்கத்துக்கும் இவன்தான் அத்விதீயநாயகனும்படி பண்ணிக்கொடுக்கும். அவன்தன்னதான ஐஶ்வர்யத்தை இவன் 'என்னது' என்னும்படி பண்ணும். அதாகிறது - இவனுக்கு ஐஶ்வர்யங் கொடாநிற்கச்செய்தே, இதுதனக்குப் புறம்பாம்படி யிருக்கையன்றிக்கே தன்ஐஶ்வர்யத்திலே அந்தர்ப்பூதமாம்படி பண்ணிக்கொடுக்கும். (கக)

*நிகமம் - கேடில் இத்யாதி. 'இவைபத்தும் பயிற்றவல்லார்கட்கு' என்று தொடங்கி, 'தருமொருநாயகம்' என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை-இத்திருவாய்மொழியைஅப்யஸித்தாரை இத்யாதி. 'நாடும் நகரமும்' இத்யாதியைப் பற்ற, ஸர்வலோகப்ரஸித்தமாம்படி என்றது. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயாவது - ஜ்ஞாநஷக்தி வைராக்யங்கள்.*

விழு-ஶ்லாக்யமான. மேலிற்பதத்தையும் கூட்டிக்கொண்டு இதுக்கு அர்த்தம்-நித்யஸித்த இத்யாதி. 'கேசவனைக் குருகூர்ச்சடகோபன் சொன்ன' என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - ரகுவரசரிதம் இத்யாதி. "தஸ்யவம்ஶஸ்ய" இத்யாதி, "பாட்யேகேயேசமதுரம்" இத்யாதிச, பாலகாண்டே. பூர்வமேவ லிகிதம். அவதாரத்துக்கு - க்ருஷ்ணாவதாரத்துக்கு. வால்மீகி ராமாவதாரத்துக்கு அவ்வருகு போகமாட்டாதாப்போலே, இவரும் க்ருஷ்ணாவதாரத்துக்கு அவ்வருகு போகமாட்டா ரென்றபடி. பாடலோராயிரம் - கானரூபமான அத்விதீயமான ஆயிரம். 'இவையுமொருபத்து' என்றதுக்கு - விஸ்மயத்திலே நோக்கென்று அருளிச்செய்கிறார் - முத்து இத்யாதி. பயிலுகை - அப்யஸிக்கை. பயிற்றுகை - அப்யஸிப்பிக்கை. 'பயிற்ற' என்றால் சொல்லவென்று காட்டுமோ? என்ன, பயிற்றவென்கிற இத்தை இத்யாதி. காட்சிக்கு நன்மையேது? என்ன, இவனும் இத்யாதி. ஊர்தி - நடக்கை. 'மூவுலகு' என்று - த்ரிவிதாத்மவர்க்கம். "லோகஸ்ஸமஸ்தஜநே" என்று லோகஶப்தம் - ஜநவாசி. ஈஶ்வரனோபாதி இவனும் ஒரு ராஜாவோ? என்ன, அவன்தன்னதான இத்யாதி. விவரணம் - அதாகிறது இத்யாதி. யத்வா, ஈஶ்வரனன்றோ அத்விதீயநாயகன்? ஆனபின்பு, இவனும் அப்படியானால் அவனுடைய நாயகத்வத்துக்குக் குறையாமே யென்ன, அவன்தன்னதான இத்யாதி என்னுதல். இவனுக்கு அத்விதீய நாயகத்வம் - பகவத்ஸ்வரூபாந்தர்ப்பாவத்தாலே வந்த ததாத்மகத்வத்தாலே யென்று கருத்து. ஒருநாயகம் - அத்விதீயநாயகத்வம். கேடிலித்யாரப்ய, வல்லார்கட்கு நாடுநகரமித்யாரப்ய, ஒருநாயகம் - அவன் - தரும் இத்யந்வய꞉. (கக)

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி:**—[illegible]

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளி:**—[illegible]

[illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி:**—

சன்மம் பலசெய்து தானிவ்வுலகளிக்கும்
நன்மையுடைய மால்குணத்தை நாடோறும்—இம்மையிலே
யேத்துமின்பம் பெற்றேனெனும் மாறனை உலகீர் !
நாத்தழும்ப வேத்தும் ஒருநாள்.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

மூன்றும்பத்து ஸம்பூர்ணம்.



## ங - ஆம் பத்து — பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கஉ | எ | யோக்யனாயிருந்த | ஹோக்யனாயிருந்த |
| ,, | ஙஅ | [மாட்டாய | [மாட்டாத |
| உச | கஎ | யுடைய | யுடையனான |
| ஙக | ஙரு | [illegible] | [illegible] |
| ஙச | ங | ஒருவனுக்கு | ஒருவன், ஒருவனுக்கு |
| ஙரு | கக | [illegible] | [illegible] |
| ,, | ஙங | ஸ்ருஷ்ட | ஸ்ருஷ்டமான |
| ,, | ஙரு | சயப்புகழாரித்யாரப்ப | சயப்புகழாரித்யாரப்ய |
| ஙகூ | கஅ | படைத்த | படைத்த. |
| ச௰ | ச௰ | குண்டலிலம் பலஸ்ரீகோஶங்களில்லை | குண்டலிதம் பலஸ்ரீகோஶடங்களி [வில்லை |
| சஉ | ஙசா | கிஞ்சித்விஶஷ்ய | கிஞ்சித்விஶிஷ்ய |
| சரு | கச | என்னாகவற்றோ? | எந்நாளாகவற்றோ ? |
| சஅ | கரு | தன்மைகளை | தண்மைகளை |
| ரு௰ | சக | களில் அநுபவத்தை. | களில். அநுபவத்தை |
| ருஉ | ச | இதுவே இதுவே யிதுவாகில் | இதுவேயிதுவாகில் |
| ருங | ங௰ | அந்வாசயந்திலே. | அந்வாசயத்திலே. |
| ருஎ | ஙச | [illegible] | [illegible] |
| ருஅ | ச | அல்பாநுகூல்யம | அல்பாநுகூல்யம் |
| சாரு | உ | ப்ரஸாதத்தலே | ப்ரஸாதத்தாலே |
| சாசா | ங | முகங்கட்டுவார்கள் | முகங்காட்டுவர்கள் |
| அ௰ | உஅ | ப்ரகாஶமான | ப்ரகாஶகமான |
| அகூ | கூ | '[illegible]' | *('[illegible]' |
| ,, | ஙகூ | குண்டலிதக்ரந்தம் | குண்டலிதக்ரந்தங்கள் |
| கூஉ | ச௰ | அஶ்லேஷம் - போஷியாமை; ஸம்பந்தியாமற் போய்விடுகை | அஶ்லேஷம் - ஸம்பந்தியாமற் போய்விடுகை. |
| கூச | கக | னுடைய | டைய |
| கூஎ | ஙஎ | ப்ரஹ்மேவ | ப்ரஹ்மைவ |
| ககரு | கங | (கூவுவாறு.) | (கூவுமாறு.) |
| கஉ௰ | ரு | மார்பிலேயுடைய | மார்பிலேயுடையவ |
| கஉ௰ | ஙஎ | பங்கயக்கண்ணெனென்கோ | பங்கயக்கண்ணனென்கோ |
| கஉங | ச | யோஜகை | யோஜனை |
| கருசா | அ | அலவலையாபத் | அலவலையாய்த் |
| கசாங | சா | பெருந்தேருவே | பெருந்தெருவே |
| கசாஅ | அ | இல்லாததிதில்லையிறே. | இல்லாததில்லையிறே. |
| கஎ௰ | அ | புசியாமையாலே | பொசியாமையாலே |
| கஎ௰ | ஙஅ | மிஞ்சின | விஞ்சின |
| கஎஉ | கங | திவேங்கடமுடையானுடைய | திருவேங்கடமுடையானுடைய |
| ,, | உங | அந்தரம், | அநந்தரம், |
| கஎச | சா | காழ்வான் வார்த்தை | காழ்வான்வார்த்தை :— |
| ககூ௰ | உங | மூத்தித்ரத்யத்தையு | மூர்த்தித்ரயத்தையு |
| ககூஅ | ஙசா | 'வைம்பின்' | 'வைம்மின்' |
| உ௰சா | உகூ | நரஹிம்ஹாவதாரத்தை | நரஸிம்ஹாவதாரத்தை |
| உ௰கூ | கசா | அயர்வென்ற | அயர்வென்று |
| உருகூ | உஉ | யஶோதாஸ்நந்தயமும் | யஶோதாஸ்தநந்தயமும் |
| உஎஉ | ஙஉ | விக்ரஹித்து | நிக்ரஹித்து |
| உஎஅ | ஙக | வலி | பலி |
| உகூ௰ | உரு | நம்கை | நம்மை |
| ஙஙசா | கஅ | பகவத்வ்யதிரிக்குக் | பகவத்வ்யதிரிக்தர்க்குக் |
| ஙசசா | உஉ | [illegible] | [illegible] |

ஸ்ரீ

# பகவத்விஷயம்

நான்காம் பத்து

## திருவாய்மொழி மூலமும்

ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி,
இருபத்தினாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யானங்களும்,
சீயர்அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு, த்ரவிடோபநிஷத்ஸங்கதி,
த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி, திருவாய்மொழிநூற்றந்தாதி இவைகளுடன்

---

சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு.

---

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியராலும்,
அ. வீ. நரஸிம்மாசாரியராலும்
பரிசோதிக்கப்பெற்றது.

---

சென்னை.
கணேச அச்சுக்கூடம்.

ரக்தாக்ஷி ௵] [1924.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## நான்காம்பத்து.

### முதல்திருவாய்மொழி—ஒருநாயகமாய்: ப்ரவேஶம்.



### ஆறாயிரப்படி.

இப்படி எம்பெருமானுடைய நிரதிஶயபோக்யமான ஸ்வரூபரூபகுண விபவசேஷ்டித ஐஶ்வர்யாதிகளை யநுபவித்து ப்ரீதராய், அந்தப்ரீதியாலே பரரை உத்திஶ்ய, 'ஐஶ்வர்ய கைவல்யங்களை விட்டு, ஸ்ரீய:பதியாய் நிரவதிகபோக்யனாயிருந்த எம்பெருமானுடைய திருவடி மலர்களையே பரமப்ராப்யமாக ஈண்டெனச் சென்று பற்றுங்கோள்' என்கிறார்.

### ஒன்பதினாயிரப்படி.

நாலாம்பத்தில், முதல்திருவாய்மொழியில் இப்படி எம்பெருமானை அநுபவித்து மிகவும் ப்ரீதரான ஆழ்வார், ஹர்ஷப்ரகர்ஷத்தாலே இவனையொழிய ஐஶ்வர்யாதிகளை ஆசைப்பட்டுள்ளவர்களுக்கு அவற்றினுடைய அல்பாஸ்திரத்வாதி தோஷங்களைக் காட்டி ஹேயதையை ஸாதியாநின்றுகொண்டு பரமபுருஷார்த்தபூதமான எம்பெருமான்திருவடிகளை ஸமாஶ்ரயியுங்கோள் என்கிறார். "வீடுமின்முற்றவும்" - பகவத்ஸமாஶ்ரயணப்ரதிபாதநபரம். இத்திருவாய்மொழி - வைராக்ய ஜநநார்த்தமாக இதர புருஷார்த்தங்களுடைய ஹேயதாப்ரதிபாதநபரம்.

### பன்னீராயிரப்படி.

மூன்றாம்பத்தில், இப்படி பகவச்சேஷபூதனான சேதநனுடைய ததேகாநுபவத்வத்தை ப்ரதிபாதித்த அநந்தரம், ததேகப்ரியத்வத்தை நாலாம்பத்தாலே ப்ரதிபாதிப்பதாக; அஸ்திரமாய் அல்பமான ஐஶ்வர்யகைவல்யங்களிற்காட்டில் பகவத்ப்ராப்தியினுடைய உத்கர்ஷோபதேஶத்தாலே சேதநனுடைய அநந்யபோக்யத்வத்தையும், அவனுடைய பஹுவித போக்யத்வத்தாலே இவனுக்குப்பிறந்த விப்ரக்ருஷ்டார்த்த போகேச்சையையும், இவனுடைய ஆத்மாத்மீயங்கள் தனக்கு போக்யமாம்படி ஈஶ்வரன்தான் இவனோடுகலந்த ப்ரணயத்தையும், அநுபவாலாபத்தில் துல்யஸம்பந்தி வஸ்துதர்ஶநத்திலும் ஸ்மாரகத்வேந ஆர்த்தி பிறக்கும்படியையும், ஆர்த்தி ஶமிக்கும்படி ஸம்ஶ்லேஷித்த போக்யவிஷயத்தில் ஸ்தோத்ரத்தாலே போக்தாவுக்கு உண்டான ஹர்ஷோத்கர்ஷத்தையும், அவஸந்ததையிலும் அங்யஸ்பர்ஶம்பொறுதபடியான ததநுபந்தமே ஆஶ்வாஸகரமென்னு மிடத்தையும், போக்யபூதனுடைய குணாநுபவேச்சையாலே தீவ்ரஶைதில்யம் பிறக்கும்படியையும், அவன் ஆதரியாத ஆத்மாத்மீயங்கள் அஸஹ்யங்களாகையாலே அநாதரணீயங்களென்னுமிடத்தையும், அதிதுஸ்ஸஹ ஸம்ஸார நிவ்ருத்திபூர்வகமாக ஸ்ரீய:பதிசரணங்களே அதிஶயிதபுருஷார்த்த மென்னுமிடத்தையும், ஸர்வாதிக

ஶேஷியானவனுடைய கைங்கர்யமே உத்கர்ஷமாய் உசிதமான ப்ராப்யமென்னுமிடத்தையும் அருளிச்செய்து, ஶேஷபூதனுடைய ததேகப்ரியத்வத்தை உபபாதிக்கிறார்.

அதில் முதல்திருவாய்மொழியில், சேதநனுடைய அநந்யபோக்யத்வத்தை ப்ரதிபாதிப்பதாக, போக்யபூதனுடைய நிருபாதிகஸம்பந்தத்தையும், ஸர்வாதிகத்வஸூசகமான ஶ்ரிய:பதித்வத்தையும், போக்யத்வ விஶிஷ்டமான ஸௌலப்யத்தையும், போகப்ரதிபந்தக விரோதிநிவர்த்தகத்வத்தையும், விலக்ஷண விக்ரஹாதி யோகத்தையும், அவதாரபோக்யதைக்கு மூலமான அர்ணவஶாயித்வத்தையும், அதுக்குமடியான பரத்வோத்கர்ஷத்தையும், ஆஶ்ரித ஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்தையும், பலப்ரதத்வ ஸூசகமான கருடத்வஜத்வத்தையும், நிரவதிக நியந்த்ருத்வத்தையும் அருளிச்செய்து , இப்படி ப்ராப்யபூதனை ஈஶ்வரனை, அஸ்திரமாயும் அல்பமாயுமுள்ள ஐஶ்வர்யகைவல்யங்களில் அகப்படாதே ஆஶ்ரயியுங்கோள் என்கிற உபதேஶ முகத்தாலே ஆத்மாவினுடைய அநந்யபோக்யதையை அருளிச்செய்கிறார்.

## இருபத்திநாலாயிரப்படி.

த்வயத்தில் உத்தரகண்டார்த்தத்தை அருளிச்செய்தார், கீழ் மூன்றுபத்தாலும்; இனி மூன்றுபத்தாலே பூர்வகண்டார்த்தத்தை அருளிச்செய்கிறார். முதல் திருவாய்மொழியில் கீழ் பகவதநுபவத்தாலே ஹ்ருஷ்டரானவர் அந்தப்ரீதிப்ரகர்ஷத்தாலே இவ்விஷயத்தையொழிய ஐஶ்வர்யாதிகளிலே மண்டிக் கிடக்கிறவர்களைப் பார்த்து 'இவர்கள் இவற்றினுடைய அல்பாஸ்திரத்வாதி தோஷங்களை அறியாமையாலே இவற்றை விரும்புகிறார்' என்று இவற்றினுடைய தோஷங்களை உபபாதியாநின்றுகொண்டு பரமபுருஷார்த்தபூதனை எம்பெருமான் திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார். "வீடுமின்முற்ற"த்தில் பகவத்ஸமாஶ்ரயணத்திலே நோக்கு. "சொன்னால் விரோத"த்தில் பகவதர்ஹகரணங்களைக் கொண்டு அப்ராப்தமாய் நிஷ்ப்ரயோஜநமான விஷயங்களைக் கவிபாடிப் பாழேபோக்காதே கொள்ளுங்கோள் என்கிறார். அத்தாலே ஸித்தித்த த்ரவ்யமும் அஸ்திரம் என்கிறது இதில்.

## ஈடு முப்பத்தாறாயிரப்படி.

த்வயத்தில் உத்தரகண்டார்த்தத்தை அருளிச்செய்தார், கீழ் மூன்றுபத்தாலும் ; இனி மேல் மூன்றுபத்தாலே அதில் பூர்வகண்டார்த்தத்தை அருளிச்செய்கிறார். கீழ் மூன்றுபத்தாலுஞ் சொன்ன புருஷார்த்தத்துக்கு உபாயத்தை அடியிலே அறுதியிடுகிறார். இவ்வடியறியாதார்றே

---

## சீயர் அரும்பதவுரை.

பேடிகாஸங்கதி - 'த்வயத்தில்' இத்யாதி. த்வயார்த்தத்தை வ்யுத்க்ரமமாக அருளிச்செய்தது - த்வயம் போலே அநுஷ்டாநபரமன்றிக்கே, வ்யுத்பத்திதஶையாகையாலே பலம் முற்பட வேண்டுகையைப் பற்ற. "ப்ரயோஜந ஜ்ஞாநாபூர்வக ப்ரவ்ருத்த்யநுபபத்தே:" என்னக்கடவதிறே. உத்தரகண்டார்த்தமான பலத்துக்கு உபாயம் ஏதென்ன, 'கீழ்மூன்று' இத்யாதி. அடியிலே - இத்திருவாய்மொழியிலே. திருவடிகளிலே யென்னும்போது, 'உபாயத்தை' என்றது, உபாயத்வத்தை யென்றபடி. உபேயாந்தரத்யாகமே கண்டரவேண சொல்லிற்றேயாகிலும், 'சிந்தித்தும்மின்' இத்யாதிகளிலே உபாயத்வமும் விவக்ஷிதம். த்வயநிஷ்டனுக்கு உபேயாந்தரத்யாகமும் சொல்லவேண்டுவதொன்றிறே, அத்தை ஸங்கதி விஶேஷத்தாலே இங்கே சொல்லுகிறது. அந்தஸங்கதி விஶேஷமும் "பாலனாயேழுலகு" ப்ரவேஶத்திலே "அல்லாதார் தந்தாமுடைய கரணங்களைப் பாழேபோக்குகைக்கு அடி" இத்யாதி வாக்யத்திலே ஸ்பஷ்டம். அல்லாதார் கர்மாதிகளை உபாயமாகக் கொள்ளாநிற்க, இவர் திருவடிகளை உபாயமென்கிற தென்னென்ன, 'இவ்வடியறியாதார்' இத்யாதி. அடி-திருவடிகள். விலக்கடிகளில்- துர்மார்க்கங்களில்.

உபாயாந்தரங்களாகிற விலக்கடிகளிற் போகிறவர்கள். இவர்க்கு நிரவதிகப்ரீதியோடேயிறே, கீழில் திருவாய்மொழியிற் சென்றது. தாமும் குறைவற்று, பற்றினர் குறையும் தீர்க்கவல்லராம்படி யிருந்தார் கீழ். ஸம்ஸாரிகளைப்பார்த்து, 'நீங்கள் பற்றின விஷயங்கள் தண்ணிதானபின்பு அவற்றைவிட்டு ஸ்ரீயஃபதியைப் பற்றுங்கோள்' என்று பரோபதேஸ ப்ரவ்ருத்தராகிறார். "வீடுமின் முற்ற"த்திலும் பரோபதேசம் பண்ணினார்; "சொன்னால் விரோத"த்திலும பரோபதேசம் பண்ணினார்; இத்திருவாய்மொழியும் பரோபதேஸமாயிருந்தது; இவையெல்லாவற்றிலும் எல்லாவர்த்தங்களும் உண்டேயாகிலும் ஒன்றுக்கு ஓரர்த்தத்திலே நோக்காயிருக்கும். "வீடுமின்முற்ற"த்தில் 'இதர விஷய வைராக்யபூர்வகமாக பகவத்பக்தியைப் பண்ணுங்கோள்' என்றார்; "சொன்னால்விரோத"த்தில் 'பகவதர்ஹமான கரணங்களைக்கொண்டு பிறரை ஸ்துதியாதே ஸர்வேஸ்வரனை ஸ்துதிக்கப் பாருங்கோள்' என்றார்; இதில் 'இவர்கள்தான் இதரஸ்தோத்ரம் பண்ணுகிறது சிலப்ரயோஜநத்துக்காகவா யிருக்குமிறே' என்று அவற்றினுடைய அல்பாஸ்த்திரத்வாதி தோஷபூயஸ்தையை அருளிச்செய்கிறார். ஐஸ்வர்யம் அல்பாஸ்திரத்வாதி தோஷத்தை யுடைத்தாகையாலே தண்ணிது; ஆத்மலாபம் அபுருஷார்த்தமாய்க்கொண்டு நிலைநிற்குமாகையாலே தண்ணிது; இப்படி ஐஸ்வர்ய கைவல்யங்களுக்கு உண்டான தண்மையைச் சொல்லி, 'ஸர்வேஸ்வரனாகிறான் ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் ஸர்வாபேக்ஷிதப்ரதனாயிருப்பா னொருவன்; ஆனபின்பு, அவற்றை விட்டு பகவத்பஜநம்பண்ணப் பாருங்கோள்' என்று இங்ஙனே பகவத்ஸமாஸ்ரயணத்துக்கு உண்டான நன்மையை உபபாதியா நின்றுகொண்டு, பரோபதேஸப்ரவ்ருத்த ராகிறார். இவர் தாம், ஸம்ஸாரிகள் தாந்தராய் வந்து 'எங்களுக்கு ஹிதஞ்சொல்லவேணும்' என்ன, சொல்லுகிறாரன்றே; பிராட்டியும் ஸ்ரீவிபீஷணாழ்வானும் ராவணனை நோக்கி ஹிதஞ்சொன்னாற்போலே யிருப்பதொன்றிறே; "ப்ரதீப்தம்ஸரணம்யதா" (ப்ரதீப்தம்ஸரணம்யதா) - வெந்து அற்ற க்ருஹத்திலே 'ஒருகம்பாகிலும் கிடைக்குமோ?' என்று அவிக்கப் பார்ப்பாரைப்போலே.

---

*கீழே பேடிகாஸங்கதி அருளிச்செய்து, இனிக் கீழ்த்திருவாய்மொழியோடே ஸங்கதி 'இவர்க்கு' இத்யாதி. இத்திருவாய்மொழியில் இவர் ஸம்ஸாரிகளுக்கு ஹிதோபதேசம் பண்ணும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார், 'ஸம்ஸாரிகளைப்பார்த்து' இத்யாதி. "வீடுமின்முற்றவும்", "சொன்னால் விரோதம்" இவற்றில் இதுக்கு வாசி யேதென்ன, 'வீடுமின்முற்றத்திலும்' இத்யாதி. உபபாதகம்—வீடுமின்முற்றத்தில் 'இதர விஷய' இத்யாதி. "அஸ்திரத்வாதி" என்ற ஆதிஸப்தத்தாலே துஃகமிஸ்ரத்வ அநர்த்தாவஹத்வாதிகளைச் சொல்லுகிறது. ஆத்மாநுபவம் நித்யமாகையாலே அதுக்குக் குறையேதென்ன, 'ஆத்மலாபம்' இத்யாதி. "ஆதியஞ்சோதிகுணங்கள்" என்றத்தைப்பற்ற 'ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய்' என்றது. 'திருநாரணன்' இத்யாதியிலே ஸர்வாபேக்ஷிதப்ரதத்வம். ஸமித்பாணியாய் உபஸந்நனானவனுக்கொழிய, 'உய்ம்மின்' என்று பலர்க்கும் உபதேசிப்பானென்னென்ன, 'இவர்தாம்' இத்யாதி. தயையாலே உபதேசிக்கிறாரென்றபடி. தயையாலே விமுகர்க்கு ஹிதம் சொன்னதுக்கு த்ருஷ்டாந்தம் 'பிராட்டியும்' இத்யாதி. "மித்ரமௌபயிகம் கர்த்தும்", "உஹஸனோ நவாஸதி" என்று பிராட்டி ஹிதம் சொன்ன ஸ்லோகமும் விவக்ஷிதம். "செய்யதாமரைக்கண்ண"னில் பிராட்டியினுடைய வசநமான "மித்ரமௌபயிகம்" என்கிற ஸ்லோகம் எடுத்து வ்யாக்யாதமாகையாலே, ஸ்ரீவிபீஷணாழ்வான் உபதேசித்ததுக்கே ஸ்லோகமெடுக்கிறார் "ப்ரதீப்தம் ஸரணம்யதா" என்று. "ஸங்காரவஸ்யைஸ நவஸங்ஹோதாவஹாஸிணா । நநஸ்யத்ஸௌவெக்ஷயம் ப்ரதீப்தம்ஸரணம்யதா." இனிக் கைகழிந்தேனாகில், எனக்கு உபதேசிக்கிற தென்னென்றாயாகில், 'வெந்தற்ற க்ருஹத்திலே' இத்யாதி. கம்பு - கழி; கோலென்றபடி. உபாயபரமான ஒருநாயகத்திலே உபேயாந்தரங்களான ஐஸ்வர்யகைவல்யங்களை விடச்சொன்னது, புபுக்ஷுக்களை முமுக்ஷுக்களாக்கவும், அதிலும் அநந்யப்ரயோஜநராக்கவும்.*

# முதற்பாட்டு.

ஒருநாயகமா யோடவுலகுடனாண்டவர்
கருநாய்கவர்ந்தகாலர் சிதைகியபானையர்
பெருநாடுகாண விம்மையிலேபிச்சைதாங்கொள்வர்
திருநாரணன்தாள் காலம்பெறச்சிந்தித்துய்ம்மினே.

ஆ.—ஸ்வவஶாநுவர்த்தி ஸகலமநுஜராய், ஸப்தத்வீபவதியான மேதிநியெல்லாவற்றுக்கும் அத்விதீயாதிபதிகளாய்க்கொண்டு ராஜ்யம்பண்ணினவர்களே, உத்தரக்ஷணம் அபஹ்ருதஸகலராய் அதிக்ருபணராய் க்ஷுதார்த்தராய் ஸர்வஜநங்களும் காண ஆஹாரார்த்திகளாய்த் திரிவர்; இப்படி ஐஸ்வர்யம் அஸ்திரமாதலால் அத்தைவிட்டு ஸ்ரிய:பதியாயிருந்த நாராயணன் திருவடிகளை ப்ராப்யமாகப் பற்றி உஜ்ஜீவியுங்கோள் என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், ஸார்வபௌமரானவர்கள் ராஜ்யத்தையிழந்து இரந்து ஜீவிக்கும்படி துர்க்கதராவர். ஆனபின்பு, நித்யைஶ்வர்யயுக்தனான திருநாராயணனுடைய திருவடிகளையே பரமப்ராப்யமாக ஆஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோள் என்கிறார்.

[ஒருநாயகமாய்] என்று தொடங்கி. ஏகாதிபதிகமாய் நெடுங்காலம் லோகத்தையெல்லாம் ஆண்டவர்கள் ராஜ்யத்தையிழந்து கரியவான நாய்களாலே கவரப்பட்ட கால்களையுடையராய்ப் பொளிந்த பாண்டங்களைக் கொண்டு பண்டு தங்களைக் காண அவஸரம் பெறாத மநுஷ்யரெல்லாம் காணும்படி தாங்கள் ஸம்ருத்தராய்வாழ்ந்த இந்தலோகத்திலே பிக்ஷையை விரும்பிக் கொள்வர்.

ப.—முதற்பாட்டில், ஏகாதிபத்யம் நடத்தின ராஜாக்களே பிக்ஷுக்களாய்க் க்லேஶிப்பர்கள்; ஆதலால், நிருபாதிகஸம்பந்தயுக்தனாய் நித்யஸ்ரீயான நாராயணன் திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

ஒருநாயகமாய் - மண்டலநாதத்வரூபமான ஏகாதிபத்யத்தையுடையராய்க்கொண்டு, ஓட - (நெடுங்காலம்) நடக்கும்படி, உலகு - லோகத்தோடே, உடன் - பொருந்தி, ஆண்டவர் - ராஜ்யரக்ஷணம் பண்ணிப்போந்தவர்கள், (அந்த ஐஶ்வர்யம் பக்நமானவாறே லஜ்ஜித்து ராத்ரியிலே பிக்ஷைபுகத்தேடி), கரு - (இருளிற்காட்டில்வாஸியறக்) கறுத்த, நாய் - நாயாலே, கவர்ந்த - கவ்வப்பட்ட, காலர் - கால்யுடையராய், சிதைகிய - (உபயோகார்ஹமன்றியே) பொளிந்துபோகட்ட, பானையர் - பானையைப் பாத்ரமாகக்கொண்டு, பெருநாடு - (தாங்கள் நிர்வஹித்த) மஹாப்ருதிவியிலுள்ளாரெல்லாரும், காண - காணும்படியாக, இம்மையிலே - இந்தஜந்மந்தன்னிலே, பிச்சை-பிக்ஷையை, தாம்-(லஜ்ஜையையும்விட்டுச்சென்று அர்த்தித்து), கொள்வர் - கொள்வர்; (இப்படி ஐஶ்வர்யம் அஸ்திரமாதலால்), திரு - நித்யஸ்ரீயாய், நாரணன் - (நிருபாதிகஶேஷியான) நாராயணனுடைய, தாள் - திருவடிகளை, காலம்பெற - காலவிளம்பம் பிறவாமல் சடக்கென, சிந்தித்து-அநுஸந்தித்து, உய்ம்மின் - உஜ்ஜீவியுங்கோள்.

ஸ்ரிய:பதியான நாராயணன் திருவடிகளிறே ஆஶ்ரயணீயமும், ப்ராப்யமும்.

இ.—முதற்பாட்டில், ஸார்வபௌமரானவர்களே ராஜ்யத்தை யிழந்து இரந்து ஜீவிக்க வேண்டும்படி துர்க்கதராவர்; ஆனபின்பு, நித்யஸ்ரீயான ஸர்வேஶ்வரனைப் பற்றப் பாருங்கோள் என்கிறார்.

[ஒருநாயகமாய்] - ஸர்வபூமிக்கும் வேறு எதிரின்றிக்கே ஏகாதிபதிகளாய்; "வதிம்விஶ்வஸ்ய" என்கிற ஸர்வேஶ்வரனாக வாய்த்து பாவிப்பது. [ஓட] - காலமும் அறுபதினாயிரமாண்டிறே சக்ரவர்த்தி ஜீவித்தது; அப்படியே நெடுங்காலம். [உலகுடனாண்டவர்] - தன்னோடே லோகம் மருவும்படி ஆண்டவர் என்னுதல்; பாபம் பண்ணினார் முன்னே கையும் வில்லுமாய் நின்ற ஸஹஸ்ர பாஹ்வர்ஜுநனைப் போலே லோகமெங்கும் ஆண்டவரென்னுதல். "ஈகாய புஜிஷா ஹஸ்தேகாமுகேசவ" என்கிறபடியே பாபசிந்தை பண்ணினார்முன்பே கையும் வில்லுமாய்க் கொண்டு போந்த கார்த்தவீர்யார்ஜுநனைப் போலே என்னுதல். "ராஜ்யம்நாஸேஹாவ்யாயிஃ க்ஷிதிக்ஷேத்ராவிநாஸநஃ। ஶ்ராதரம்வாஸுதம்வாபி த்யஜதிவதுஹுந்பிவாஃ". [கருநாய் கவர்ந்த காலர்] - ராஜ்யத்தை யிழந்து பிக்ஷையொழிய ஜீவநமின்றிக்கே பகல்புறப்பட லஜ்ஜித்து இருளிலே புறப்பட்டால் இருட்செறிவுபோலே கிடந்த நாய்களின் வாயிலே காலையிடுகையாலே அவற்றாலே கவ்வப்பட்ட காலையுடையவர். 'கருநாய்'—கருமை - சிற்றமாய், வெட்டிய நாய் என்றுமாம். 'கருநாய்' - குட்டியிட்ட நாய் என்றுமாம். முன்பு 'ஸார்வபௌமன்' என்று சொல்லுமதுவும் போய் 'நாய்கவர்ந்தகாலன்' என்று நிரூபகமாய். [சிதைகிய பானையர்] - கண்டவிடமெல்லாம் பொளிந்து உபயோகார்ஹ மன்றிக்கே போகட்டுக்கிடந்த தோன்றை எடுக்கும்; பண்டு பொற்கலத்திலல்லது ஜீவியானே. [பெருநாடுகாண] - முன்பு ராஜாக்கள் தங்களைக் காண அவஸரம் பெறாதே நிற்கும்படி யிருந்தவர்கள் இருந்ததே குடியாகத் திரண்டு காணும்படி; தாங்கள் ஸம்ருத்தராய் வாழ்ந்த தேசத்தி லுள்ளாரெல்லாரும் காணும்படி. [இம்மையிலே] - தாங்கள் ஜீவித்த ஜந்மத்திலே. [பிச்சை] - முன்பு ராஜாக்களுக்கு ராஜ்யம் வழங்கும்; இன்று பிக்ஷை தனக்குத் தேட்டமாயிருக்கும். முன்பு ராஜாக்கள் ரத்நாதிகளைப் பச்சையாகக் கொண்டுவந்தால் அநாதரித்திருக்குமவனுக்கு பிக்ஷை தேட்டமானபடி. [தாம் கொள்வர்] - முன்பு ராஜாக்கள் கொண்டுவந்த பச்சையை ஆளிட்டிறே வாங்குவது; இப்போது இவன் அபேக்ஷையே போக்கி இடுவாரில்லை. ராஜ்யஸ்ரீ இங்ஙனே யானபின்பு, [திருநாரணன்]—"இடர்கெடுத்த திருவாள னிணையடி", "தத்ர நாராயணஃ ஸ்ரீமாந்" ஸ்ரீயப்பதியை ஆஶ்ரயியுங்கோள். ஒரு மிதுநமிறே ஆஶ்ரயணீயமும், ப்ராப்யமும். ஒரு மிதுநத்துக்கு ஶேஷமிறே இது. [தான்] - ஶேஷபூதன் பற்றுவது திருவடிகளையிறே. [காலம்பெற] - "ஜீவிதம்மரணாந்தம்ஹிஜராஜௌவநாபஹா। ஸம்வத்ஸராணாஃ ஜாநுகொயத்திராவ்யாஸ" நாளைச் செய்கிறோமென்னுமதன்று; "யந்ஹ்நதம் க்ஷணம்வாவிவாஸுதெவொநவிந்தெ", "வாஸுதேவதராஸ்யாயாஸாகிலயம்ந வேஸ்யதெ". [சிந்தித்து] - ரக்ஷகன் என்கிற ப்ரதிபத்தியே அமையும். ப்ரதிபத்திக்கும் இதுவே அர்த்தம் என்கிறார். [உய்ம்மினோ] - இனிவோடே வ்யாப்தமாயாயிற்று உஜ்ஜீவநம் இருப்பது. அநர்த்தம் எல்லாருக்கும் ஒத்திருக்கையாலே எல்லாரையும் அபேக்ஷிக்கிறார்.

ஈடு.—முதற்பாட்டில், ஸார்வபௌமராய்ப்போந்த ராஜாக்கள் அந்த ராஜ்யஸ்ரீயை யிழந்து இரந்து ஜீவிக்கவேண்டும்படி துர்க்கதராவர்கள்; ஆனபின்பு, "ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீஃ" (ஸ்ரீவத்ஸவக்ஷாநித்யஸ்ரீஃ) என்கிறபடியே நித்யஸ்ரீயான ஸர்வேஶ்வரனைப் பற்றப் பாருங்கோள் என்கிறார்.

---

முதற்பாட்டு 'ஒருநாயகம்' இத்யாதி. அடிதொடங்கி, 'பிச்சைதாங்கொள்வர்' என்னுமளவும்-ராஜ்யஸ்ரீயினுடைய அஸ்த்தைர்யத்தை அருளிச்செய்து, "திருநாரணன்தாள்" இத்யாதியிற் சொன்னத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-'ஸார்வபௌமன்' இத்யாதி. துர்க்கதர்-தரித்ரர். "ஸ்ரீவத்ஸவக்ஷாநித்யஸ்ரீரஜய்யஶ்ஶாஶ்வதொத்ருவஃ" இதி மண்டோதரீவாக்யம்.

[ஒருநாயகமாய்] - நிலைநில்லாத ஐஸ்வர்யத்தைப்பற்றி நீர்க்குமிழிபோலே உடைந்துபோகிற மநுஷ்யர் ; "பதிம்விஸ்வஸ்ய" (பதிம்விஸ்வஸ்ய) என்கிற ஈஸ்வரனுடைய ஐஸ்வர்யத்தை அநுகரிக்கும்படி சொல்லுகிறதிறே, பௌண்ட்ரகவாஸுதேவனைப்போலே ; ஏகாதபத்ரமாக. [ஓட] - இப்படி யாளுவது எத்தனை கால மேன்றால், நெடுங்காலம். "அறுபதினாயிரமாண்டு, எழுபதினாயிரமாண்டு" என்கிறபடியே நெடுக. இப்படி நெடுங்காலம் ஆள்வது எவ்வளவென்னில்,—[உலகு] - கடல்சூழ்ந்த பூமிப் பரப்படங்கலுமு; "[Grantha]" (மாந்தாதுஃக்ஷேத்ரமுச்யதே) என்கிறபடியே முந்திரிகைநில முடையவனைப்போலே யாயிற்று ஆள்வது. [உடனாண்டவர்] - இப்பரப்பில் ஓரிடம் குறை கிடவாதபடி ஆண்டவ ரென்னுதல், "[Grantha]" (அகார்யசிந்தாஸமகாலமேவ ப்ராதுர்ப்பவம்ஸ்சாபதரஃ புரஸ்தாத்) என்கிறபடியே பாபசிந்தனைபண்ணினார்முன்பே கையும்வில்லுமாய் நின்று நோக்கிக்கொண்டு போந்த கார்த்தவீர்யார்ஜுநாதிகள்படியைப் பற்றச் சொல்லுதல். இப்படி ஏகாதிபத்யமாக நெடுநாள் லோகத்தை ஆண்டுபோந்தவர்கள் பின்னை யென்செய்வர்க ளென்னில் ?— "[Grantha]" (ராஜ்யம்நாமமஹாவ்யாதி ரசிகித்ஸ்யோ விநாஸநஃ | ப்ராதரம்வாஸுதம்வாபித்யஜந்திகலுபூமிபாஃ) என்கிறபடியே, அவற்றையிழந்து க்லேசிப்பரென்கிறார், மேல். [கருநாய்கவர்ந்தகாலர்]—இப்படி நெடுநாள் மதிப்போடே ஜீவித்துப்போந்தவன் 'எளிமைப்பட்டு ஜீவிக்கிறதேன்? ஒருபட்டினிவிடுவோம்' என்றிருக்கமாட்டானே ; ஜீவிக்கையிலுண்டான நசையாலே பிக்ஷைபண்ணப் பார்க்கும்; முன்பு குறைவற ஜீவித்துப்போந்தவனாகையாலே, பலர்காண வெளியில் புறப்படமாட்டானே ; நிலாநாளில் இருட்டுப்புரைகளிலும் இருட்டுநாளிலுமாயிற்றுப் புறப்படுவது; இருள் ஓரிடத்திலே திரண்டாற்போலே கறுத்த நாய்கள் கிடக்கும்; அதறியாதே அவற்றின்வாயிலே காலையிடும் ; அவை கடிக்கும். [கருநாய்]—கருமை - சீற்றமாய், வெட்டிய என்னவுமாம். கருநாய் - கருவையுடைத்தான நாய்; குட்டியிட்ட

*'ஆய்' என்றதுக்கு க்ஷேபமாகத் தாத்பர்யம்-'நிலைநில்லாத' இத்யாதி. 'மாமழைமொக்குளின்' என்றத்தைப்பற்ற 'நீர்க்குமிழிபோலே' என்றது. அநுகரிக்கும்படிக்கு த்ருஷ்டாந்தம் - பௌண்ட்ரகேத்யாதி. தாத்பர்யம், 'ஏகாதபத்ரமாக' என்று உபபாதகம்-'அறுபதினாயிரம்' இத்யாதி. "[Grantha] | [Grantha] ||" விஷ்ணுபுராணே சதுர்த்தேம்ஸே த்விதீயே. "க்ஷேத்ரம்" என்றதுக்கு ஸாவம்-'முந்திரிகை' இத்யாதி. முந்திரிகை - க்ஷேத்ரத்தினுடைய அல்பாம்சம். "உடன்" என்றதுக்கு ஸர்வதேசங்களுடன் என்னுதல், ரக்ஷ்யவர்க்கங்களுடன் என்னுதல். இரண்டர்த்தத்தையும் அடைவே அருளிச்செய்கிறார், 'இப்பரப்பில்' இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'உலகுடன்'-உலகெல்லாமென்று முந்தின அர்த்தம்: உலகை ரக்ஷ்யவர்க்கங்களோடொக்க நின்று ஆண்டவரென்று இரண்டாமர்த்தம். 'அகார்யசிந்தா' இத்யாதி - ரகுவம்ஸே ஷஷ்டே. "[Grantha]" இதி உத்தரார்த்தம்.*

*மேலுக்கு அவதாரிகை-'இப்படி யேகாதிபத்யம்' இத்யாதி. 'ராஜ்யம் நாம' இத்யாதி "விநாஸநஃ" என்றதிலேநோக்கு."விநாஸநஃ" என்றதுக்கு உபபாதகம்-உத்தரார்த்தம். இப்படி ராஜ்யமாண்டவர்கள்பிக்ஷைபுகுருவானென்? பட்டினியிருந்து முடியலாகாதோ? என்ன 'இப்படி நெடுநாள்' இத்யாதி. ஆகில் என்செய்யுமென்ன, 'ஜீவிக்கை' இத்யாதி: "ஜீவந்நரோ பத்ராணிபஸ்யதி","ஸதிஜீவநஸௌநநஃ" என்று ஜீவிக்கையிலுண்டான நசையாலே யென்றபடி. ஆனால், கருநாய்கவருகைக்கு ப்ரஸக்தி யேது? என்ன, 'முன்பு குறைவற' இத்யாதி. இருட்டுப்புரைகள் - இருட்டுஇருந்துள்ள ப்ரதேசங்கள். கருநாய் - கறுத்தநா யென்னுதல் ; கருமையை - சீற்றத்தை யுடைய நாயென்னுதல்; கருவை [குட்டியை] யுடைய நாயென்னுத லென்று அர்த்தத்ரயம். "கவர்ந்தகாலர்" என்று - அதுவே நிரூபகமாகச் சொன்னதுக்கு ஸாவம் - 'வீரக்கழல்'*

நாய் என்றும் குட்டியைக் காத்துக்கிடக்கிறதாகையாலே 'அதுக்கு ஏதேனும் தீங்குவருகிறதோ'? என்று கண்டாரை ஓடிக்கடிக்குமே, அத்தைச்சொல்லுதல். [காலர்]—"வீரக்கழலிட்ட கால்" என்றிறே முன்பு நிரூபிப்பது; இப்போது "நாய்கடித்த கால்" என்றாயிற்றுச் சொல்லுவது. [சிதைகியபானையர்]—சண்டவிடமெங்கும் பொளிந்து உபயோகயோக்யமன்றிக்கே போகட்டுக்கிடந்ததொன்றை எடுத்துக்கொள்ளும். முன்பு பொற்கலத்திலே ஜீவித்தவன் இப்போது ஒரு புத்தோடு கிடையாதபடியாயிற்று. இட்டது உண்டாகில் ஒரு மூலையிலே சீழ்ப்போம்படியாயிற்று இருப்பது. [பெருநாடுகாண]—முன்பு பச்சை கொண்டுவேந்தவர்கள் ஓராண்டு ஆறுமாசமும் உள்ளும்புகப்பெறாதே நின்று உலரு மித்தனையிறே; அதுக்கும் போர இப்போது தடையற்று இருந்ததே குடியாகக் காணும்படியாக. முன்பு போர ஜீவித்து எளிமைப்பட்டவனாகையாலே எல்லாருங் காண வருவர்களே. இப்படி செய்வது ஒருஜந்மம் ஜீவித்து மற்றொருஜந்மத்திலேயோ வென்னில்? [இம்மையிலே]—அப்படிஜீவித்த இந்தஜந்மந்தன்னிலே. [பிச்சை]—முன்பு ராஜாக்களுக்கு ராஜ்யம் வழங்கினனாயிறே போருவது; இப்போது ஒரு பிக்ஷைமாத்ரமேயாயிற்று இவன் அபேக்ஷிப்பது. [தாம்கொள்வர்]—முன்பு ராஜாக்கள் கொண்டுவேந்த பச்சை ஆளிட்டிறே வாங்குவது, சிலரிடக் கொண்டாராகாமைக்கு; இப்போது இடுகிறவர்கள்பக்கல் நினைவின்றிக்கே பாதிஸம்வாதமே உள்ளது.

ராஜ்யஸ்ரீ இங்ஙனேயானபின்பு, [திருநாரணன்தாள்]—"இடர்கெடுத்ததிருவாளனிணையடி". ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளை ஆஸ்ரயித்து உஜ்ஜீவித்துப் போருங்கோள். "ததோ நாராயண: ஸ்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசித:" (தத்ரநாராயணஸ்ஸ்ரீமாந்மயாபிக்ஷாம்ப்ரயாசித:) என்னக்கடவதிறே. ஓடுகொண்டு இரப்பார்க்செல்லாம் இவனையொழியக் கதியில்லை; "ஓட்டேனேழித்த" என்றிறே. [தாள்]—"யாவத் சரணௌ ப்ராது: பார்த்திவவ்யஞ்சநாந்விதௌ" [யாவந்சரணௌப்ராது:பார்த்திவவ்யஞ்சநாந்விதௌ]-'பிள்ளாய்! உன்உள்வெதுப்பு ஆறுவது எப்

இத்யாதி. பொளிந்து - சில்லியாய். "சிதைகிய" என்றதுக்கு ஸாவம், - 'முன்பு' - இத்யாதி. பெருநாடு காண்கிறது எதுக்காக வென்ன, 'முன்பு பச்சை' இத்யாதி. இருந்ததே குடியாக-எல்லாரு மென்றபடி. எல்லாரும் காண்கைக்கு அடியேதென்ன, 'முன்புபோரஜீவித்து' இத்யாதி. "பிச்சை" என்கிறதுக்கு ஸாவம்-'முன்பு ராஜாக்களுக்கு' இத்யாதி. "தாம்கொள்வர்" என்றதுக்கு, ராஜாக்கள்கொண்டுவேந்த பச்சையை ஆளிட்டு வாங்கும்படி யிருந்த தாம் கொள்வரென்று கீழே அருளிச்செய்து, "தாம்கொள்வர்" என்று - ஸ்வரத்திலேயாய், தான் அபேக்ஷிக்கிறதித்தனை போக்கி அவர்களிடார்களென்று அர்த்தாந்தரம் 'இப்போதிடுகிறவர்கள்' இத்யாதி. பாதிஸம்வாதம் - அர்த்தாங்கீகாரம்: தன் அபேக்ஷாமாத்ர மென்றபடி.

"பிச்சை கொள்வர்" என்று இடர்பட்டமை சொல்லுகையாலே, ஈஸ்வரனை ஆஸ்ரயித்தால் இடரில்லையோ? என்ன, 'இடர்கெடுத்த' இத்யாதி - பிச்சைபுக்குத்திரிந்த ருத்ரனுடைய து:கத்தைப் போக்கின ஸ்ரிய:பதியினுடைய திருவடிகளை யென்று பாசுரத்துக்கு அர்த்தம். திருமொழி ஆறாம்பத்து ஒன்பதாம் திருமொழி முதற்பாட்டு "பெடையடர்த்த" இத்யாதி. சப்தார்த்தம் - 'ஸ்ரீமானான நாராயணன்' இத்யாதி. ஸ்ரீமந் நாராயணனை யாஸ்ரயித்தால் இடர் போமோ? என்ன, 'ததோ' இத்யாதி. மாத்ஸ்யே, "ததோ நாராயண: ஸ்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசித:" இதி உத்தரார்த்தம். ஸ்லோகத்துக்கு ரஸோக்தியாக ஸாவம் - 'ஓடு கொண்டு' இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - 'ஓட்டேன்' இத்யாதி. "நக்கனூன்முகமார்தலையோட்டூணொழித்தவெந்தை" - ருத்ரனுடைய மாம்ஸப்ரசுரமான தலையோட்டில் இரந்து உண்கிற ஊணையொழித்த ஸ்வாமியென்று பாசுரத்துக்கு அர்த்தம். திருமொழி மூன்றாம்பத்து நாலாந்திருமொழி இரண்டாம் பாட்டு; "நான்முகன்" இத்யாதி. 'தாள்' என்றதுக்கு ஸம்வாதம் - 'யாவத்' இத்யாதி. இதுக்கு அர்த்தம் - 'பிள்ளாய்' இத்யாதி. உள்வெதுப்பு - அந்தஸ்தாபம். "பார்த்திவவ்யஞ்சநாந்விதௌ" என்றதுக்கு ஸாவம் - 'நானும்' இத்யாதி. "பார்த்திவவ்யஞ்சநாந்விதௌ" என்று த்வஜாரவிந்தாதி ரேகை

போது?' என்ன; 'நானும் எனக்குவகுத்தமுடி சூடி அவரும் தமக்கு வகுத்தமுடி சூடின அன்றே' என்றானிறே; அப்படி தலையாக ப்ரார்த்திக்கப்பட்ட திருவடிகளை. "அடிசூடுமரசு" என்னக்கடவதிறே. [காலம்பெற]—அரைநாழிகையாகிலும் முற்பட்டது உடலாக. "ஜீவிதம்மரணஞ்சம்ஹிஜராங்தேருபயேளவநே | ஸம்பதஶ்சவிநாஶாங்தாஜாநங்கோத்ருதிமாப்நுயாத்) ஆகையால், "நாளைச்செய்கிறோம்" என்னுமதன்று; "யந்முஹூர்த்தம்க்ஷணம்வாபி வாஸுதேவோநசிந்த்யதே | ஸாஹாநிः)—அதுவே இவனுக்கு "அஸங்நேவ" (அஸங்நேவ) என்னும் படி வருகிற அநர்த்தமாகிறது. "தந்மஹச்சித்ரம்" (தந்மஹச்சித்ரம்)—அநர்த்தம்வருகைக்கு அவகாஶமும் அதுவே. "ஸாப்ராந்திः" (ஸாப்ராந்திः) விபரீதஜ்ஞாநமாகிறதும் அதுவே. "ஸாசவிக்ரியா" (ஸாசவிக்ரியா) நிஷித்தாநுஷ்டாநமாகிறதும் அதுவே. [சிந்தித்து]—இனி "பரிகாமில்லை" என்று கண்ணழிவுசொல்லவேண்டா; அவன்தந்த கரணங்களை அவனுக்காக்க அமையும்; நெஞ்சிலேயடிபட அநுஸந்திக்க அமையும்; "ஸ்ம்ருதோயச்சதிஶோபநம்" (ஸ்ம்ருதோயச்சதிஶோபநம்). [உய்ம்மினோ]—அவ்வநுஸந்தாநம் பலத்தோடே வ்யாப்தம். "பேறு எல்லார்க்கும் வேணும்" என்றிருக்கையாலே எல்லார்க்குமாக அருளிச்செய்கிறார். [உய்ம்மினோ]—அடியற்றால் வாடுமத்தனை கிடிகோள்; அடியைப்பேணி நோக்கி உய்ந்து போருங்கள். (க)

---

## இரண்டாம்பாட்டு.

உய்ம்மின்திறைகொணர்ந்தென்றுலகாண்டவ ரிம்மையே
தம்மின்சுவைமடவாரைப் பிறர்கொள்ளத்தாம்விட்டு
வெம்மினொளிவெயிற்கானகம்போய்க் குமைதின்பர்கள்
செம்மின்முடித்திருமாலை விரைந்தடிசேர்மினோ.

---

*களோடே யிருக்கிற திருவடிகளைச் சொல்லி, தத்கார்யமான சத்ரசாமரங்களோடே அபிஷிக்தராயிருக்கிற இருப்பைச் சொல்லுதல்; அன்றிக்கே, "சரணை" என்று திருமேனிக்கு உபலக்ஷணமாய், பார்த்திவ வ்யஞ்ஜநங்களென்று சத்ரசாமராதிகளோடே கூடியிருக்கிற இருப்பைச் சொல்லுதல். தலையாக-தலையிலே யாம்படியாக. இதுக்கு ப்ரமாணம்-'அடிசூடும்' இத்யாதி. "அரசமர்ந்தானடிசூடு மரசையல்லால்"- ராஜ்யம்பண்ணியிருக்கிறவன் திருவடிகளைச் சூடுகையாகிற ராஜ்யமொழிய என்றபடி. பெருமாள் திருமொழி பத்தாந்திருமொழி ஏழாம்பாட்டு.*

*ஶரீரம் அஸ்திரமாகையாலே காலம்பெறச் சிந்திக்கவேணு மென்று அர்த்தமாக்கி அதுக்குப்ரமாணம்-'ஜீவிதம்' இத்யாதி. சிந்தியாதபோது ஸத்தாஹாநியாய் விடுகையாலும், "காலம்பெற" என்கிறாரென்று விவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் - 'யந்முஹூர்த்தம்' இத்யாதி. மநஸ்ஸு ஸர்வகரணங்களுக்கும் உபலக்ஷணமாகத் தாத்பர்யம் -'அவன் தந்த' இத்யாதி. 'நெஞ்சிலேயடிபட'—சாடு; திருவடிகள் படும்படி. அப்படி சிந்தித்தால் உஜ்ஜீவிக்கலாமோ? என்ன, 'ஸ்ம்ருதோயச்சதி' இத்யாதி. "ஆயாஸஸ்மரணே கோஸ்யஸ்ம்ருதோயச்சதிஶோபநம் | பாபக்ஷயஶ்சபவதிஸ்மரதாம்தமஹர்நிஶம்) இதி ப்ரதமேமஶோ பாலாங்ப்ரதி ப்ரஹ்லாதः. பஹுவசநார்த்தம் - 'பேறெல்லார்க்கும்' இத்யாதி. "தாள் - சிந்தித்துய்ம்மினோ" என்று கூட்டி பாவம் - 'அடியற்றால்' இத்யாதி; சாடு. பேணி-ஆதரித்து. அடி-திருவடிகள், மூலமும். (க)*

ஆ.—இப்படி அபஹ்ருதராஜ்யராய்ப்போமித்தனையன்றியே, அபஹ்ருதஸ்வாபிமத களத்ராதிகளாய் அவ்வவதேஸாத் ப்ரஷ்டருமாய் வநசரராய் தத்ராபி பூர்வஸத்ருபிர்ப்பாத்ய மாநருமாவர்; ஆனபின்பு, கிரீடமகுடாதி திவ்யபூஷணபூஷிதனாய் ஸ்ரீயஃபதியாயிருந்தவன் திருவடிகளை ஈண்டென ஆஸ்ரயியுங்கோள் என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், தங்களாலே அபிபூதரான ஸத்ருக்களாலே தங்களுடைய மஹிஷிகளையும் இழப்பர் என்கிறார்.

[ உய்ம்மின் என்று தொடங்கி ] - 'எனக்குத் திறையிட்டுப் பிழைத்திருங்கோள்' என்று ராஜாக்களைச் சொல்லி இந்த உக்திமாத்ரத்தினாலே இந்தலோகத்தையடைய ஆண்டவர்தாங்கள் இப்படி வாழ்ந்த இப்பிறவியிலே தாங்கள் ஜீவிக்கைக்காகத் தங்களுக்கு நிரதிஸயபோக்யைகளான ஸ்த்ரீகளை ஸத்ருக்கள் பரிக்ரஹிக்கப் போக்கற்றுத் தாங்களே அவர்களைக் கொண்டுபோகவேணுமென்று ப்ரார்த்தித்துவிட்டு. [வெம்மின் என்று தொடங்கி]-நாடுகளில் ஸஞ்சரிக்கப்பெறாதே கொடியவெயிலையுடைய காட்டிலே போய் அங்கும் ஸத்ருக்களால் நலிவுபடாநிற்பர். இப்படி பரிபூதராகாதே வாழவேண்டியிருந்திகோளாகில், சிவந்த ஒளியையுடைய திருவபிஷேகத்தையுடையனை ஸ்ரீயஃபதியை ஈண்டென ஆஸ்ரயியுங்கோள். ஆஸ்ரயித்தார் தலையிலே வைக்கச் சூடின முடியென்று கருத்து.

ப.—அநந்தரம், ஐஸ்வர்யபங்கமே யன்றிக்கே அபிமதவியோகமும் பிறக்குமாதலால், ஸர்வாதிகபுருஷியான ஸ்ரீயஃபதியை ஆஸ்ரயியுங்கோள் என்கிறார்.

திறை - திறையை, கொணர்ந்து - கொண்டுவந்து, உய்ம்மின் - உஜ்ஜீவியுங்கோள், என்று - என்று (இந்த உக்திமாத்ரத்தாலே), உலகு - லோகத்தை, ஆண்டவர் - ஆண்டவர்கள், இம்மையே - இப்படிவாழ்ந்த ஜந்மந்தன்னிலே, தம் - தங்களுக்கு அஸாதாரணைகளாய், இன் - அபிமதைகளாய், சுவை - போக்ரஸத்தையுடையராய், மடவாரை - (தங்களையொழியச்செல்லாத பாரதந்த்ர்யத்தை யுடையரான) ஸ்த்ரீகளை, பிறர் - அந்யர், கொள்ள - பரிக்ரஹிக்கும்படி, தாம் - தாங்களே, விட்டு - கைவிட்டு, (அத்தேசத்திலுமிருக்கப்பெறாதே), வெம் - வெவ்வியதாய், மின்ஒளி - (பார்த்தவர் கண் வெறியோடி) மின்னொளி பரக்கும், வெயில் - வெயிலையுடைய, கானகம் - காட்டுள்ளே, போய் - போய், குமைதின்பர்கள் - (அங்கும் அந்யராஜாக்களாலே) பீடிதராவர்கள்: (ஆதலால்), செம் மின் - அப்ரதிஹததேஜஸ்ஸான, முடி - அபிஷேகத்தையுடைய, திருமாலை - ஸ்ரீயஃபதியை, விரைந்து - ஸத்வரராய்க் கொண்டு, அடிசேர்மின் - பதாஸ்ரயணம் பண்ணுங்கோள்.

செம்மினென்கிறது - சிவந்த வொளி யென்றுமாம்.

இ.—இரண்டாம்பாட்டில், ராஜ்யத்தை இழக்கையே யன்றிக்கே ஸத்ருக்கள்கையிலே அபிமதைகளான ஸ்த்ரீகளையும் பறிகொடுப்பர் என்கிறார்.

[உய்ம்மின் திறை கொணர்ந்து] - ராஜாக்களை 'உங்கள் ஸர்வஸ்வத்தையும் தந்து ப்ராணனைக்கொண்டு பிழைத்துப் போங்கோள்' என்றாய்த்துச் சொல்வது. "ஹீஷாஸ்மாத் வாத: பவதே" என்கிற இத்தை அநுகரிக்கிறார்கள். [என்று உலகாண்டவர்] - படையும் குதிரையுங் கொண்டு திறைகொள்ளவேண்டா; ஓர் உக்திமாத்ரத்தாலே லோகத்தையடையச் செலுத்தினவர்கள். [இம்மையே] - இப்படிவாழ்ந்த இஜ்ஜந்மந்தன்னிலே. [தம் இன் சுவை மடவாரைப் பிறர்கொள்ள] - தங்களுக்கு போக்யைகளாய் அஸாதாரணைகளான ஸ்த்ரீகளை ஸத்ருக்கள் பரிக்ரஹிக்க. நஹுஷன் இந்த்ராணியை ஆசைப்

*பட்டதும், துர்யோதனன் த்ரௌபதியை ஆசைப்பட்டதும் உதாஹரணம். [தாம்விட்டு] - ப்ராணரக்ஷணத்துக்காகத் தாங்களே ப்ரார்த்தித்துவிட்டு. [வெம் மின் இத்யாதி] - அவர்களுக்குச் செல்லும் நாட்டிலே வர்த்திக்கப்பெறுதே நிர்மாநுஷமான காட்டிலே போய், வெவ்விய மின்னொளியுண்டு - பேய்த்தேர்; அத்தையும் வெயிலையுமுடைத்தான காடு என்னுதல், கொடிய மின்னொளிபோலே யிருக்கிற வெயிலை யுடைத்தான காடுஎன்னுதல். [குமைதின்பர்கள்] - இவர்கள் போனவிடத்தே ஶத்ருக்களாலே நலிவுபடுவர்கள்; தப்பிப்போனாலும் விநாஶத்தோடேயாயிற்றுத் தலைக்கட்டுவது. [செம் மின் இத்யாதி] - இப்படி பரிபூதராகாதே வாழவேண்டியிருக்கில், சிவந்து மின்னாநின்ற திருவபிஷேகத்தையுடைய ஶ்ரிய:பதியை ஆஶ்ரயியுங்கோள். ஆஶ்ரயித்தார்தலையிலே வைக்க முடியுண்டு, தருவிப்பாரு முண்டு என்கை; விரையாமையா லுள்ள இழவே உள்ளது. அவன் முடியைத்தரிலும் நீங்கள், [அடிசேர்மினோ] - திருவடிகளிலே தலையைச் சேருங்கோள். "யாவஞ்சரணௌ ப்ராதுः".*

ஏ௫.—இரண்டாம்பாட்டு. ராஜ்யத்தை யிழக்கையேயன்றிக்கே, ராஜ்யம்பண்ணுகிற நாளில் போக்யைகளாகப் பரிக்ரஹித்த ஸ்த்ரீகளையும் ஶத்ருக்களுக்குக் கொடுத்து எளிமைப்படுவர் என்கிறார்.

[உய்ம்மின்திறைகொணர்ந்து] - எதிரிகளுடைய ராஜ்யத்தைத் தனக்காக்கக் கோலினால் பொருதாக்கிக் கொள்ளுகையன்றிக்கே, 'நீ உன்ப்ராணனை நோக்கிக்கொள்ள வேண்டியிருந்தாயாகில், உன் ஸர்வஸ்வத்தையும் நம்பக்கலிலே கொண்டுவந்து தந்து உன்னைக்கொண்டு பிழைத்தோடிப் போ' என்கிற உக்தியாலேயாயிற்றுத் தனக்காக்குவது. படையும் குதிரையுங் கொண்டு பொருது தனக்காக்கிக் கொள்ளவேண்டா; திறையைக்கொண்டுவந்து ஜீவித்துப்போகுங்கள் என்கிற சொல்லாலே லோகத்தை யாண்டவர்கள். [இம்மையே] - இப்படி யாண்ட இந்தஜந்மந்தன்னிலே. [தம் இன் சுவைமடவாரைப் பிறர்கொள்ள] - தான் ராஜ்யம் பண்ணுகிற நாளில் அந்த ராஜ்யத்திலுள்ள ஸ்த்ரீரத்நங்களை யெல்லாம் திரட்டுமே; இவன் திரட்டினபடியே வேறொருவன் வந்து கைக்கொள்ளும்; இது நரகபுரமழிந்தவன்று கண்டதிறே; பாண்டவர்களுடைய ராஜஸூயமும் செருக்குமெல்லாங் கிடக்க, த்ரௌபதி ஸதஸ்ஸிலே பரிபூதையானவதுவேயிறே இதில் ப்ரமாணம். தந்தாமுக்கு நிரதிஶயபோக்யைகளான ஸ்த்ரீகளை ஶத்ருக்கள் பரிக்ரஹிக்க. [தாம்விட்டு] - தன்ப்ராணரக்ஷணத்தி லுண்டான நசையாலே, ஸஹ்ருதயமாகத் தானே கூறைப்பையும் சுமந்துகொண்டுபோய் விட்டுப்போரும். "ஆபதர்த்தம் தநம்

*இரண்டாம்பாட்டு. 'உய்ம்மின்' இத்யாதி. "தம்மின்சுவைமடவாரைப் பிறர்கொள்ள" இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'ராஜ்யத்தை' இத்யாதி.*

*திறை - கப்பம். "என்று" என்றதுக்கு பாவம் - 'எதிரிகளுடைய' இத்யாதி. கொணர்ந்து - கொண்டுவந்து. பொருது - யுத்தம்பண்ணி. "திறைகொணர்ந்து - உய்ம்மின் - என்று உலகாண்டவர்" என்று ஶப்தாந்வயமாக்கி அர்த்தம் - 'படையும்' இத்யாதி. "மடவார்" என்கிற பஹுவசநார்த்தம் - 'தான் ராஜ்யம்' இத்யாதி. பிறர்கொள்ளக் கண்டதுண்டோ? என்ன, 'இது நரகபுரம்' இத்யாதி. உதாஹரணாந்தரம் 'பாண்டவர்களுடைய' இத்யாதி. ஶப்தார்த்தம் - 'தந்தாமுக்கு' இத்யாதி. தம் - தங்களுக்கு, இனியராய் - அபிமதைகளாய், சுவை - போகரஸத்தையுடையராய், மடவாரை - பவ்யைகளான ஸ்திரீகளை யென்றபடி. "தாம்விட்டு" என்றதுக்கு பாவம் - 'தன்ப்ராண' இத்யாதி. கூறைப்பை - புடைவை யிடுகிற பை. தான்கொடுபோய் விடவேணுமோ? என்ன, 'ஆபதர்த்தம்' இத்யாதி; "ஆபதர்த்தம் தநம் ரக்ஷேத் தாராந் ரக்ஷேத் தநைரபி। ஆத்மாநம் ஸததம் ரக்ஷேத் தாரைரபி தநைரபி". இதில் - ஆபதர்த்தம் தநத்தை வ்யயம்பண்ணாமல் ரக்ஷிக்கச்சொல்லி, அந்த தநத்தாலே தாரங்களை ரக்ஷிக்கச்சொல்லுகையாலே, வ்யயம்பண்ணி ரக்ஷிக்கவென்று விதித்தம்; அப்படியே தாரங்களாலும்*

-ரக்ஷக" (ஆபதர்த்தம்தநம்ரக்ஷேத்) என்கிறபடியே. [வெம்மின் இத்யாதி] - "பின்னையும் இவன்இங்கேகாணில் நலியும்" என்று, ஜலவர்ஜிதமுமாய் மநுஷ்யஸஞ்சாரங்களில்லாத காடேறப் போம். பேய்த்தேரையும் வெயிலையுமுடைத்தான காட்டிலே போம்; வெவ்விய மின்னின்ஒளிபோலே யிருந்துள்ள வெயிலையுடைத்தான காட்டிலே போ யென்னவுமாம். [குமைதின்டர்கள்] - அர்த்தவானுக்கு எங்கும் ஆளோடுமே; "அவன்போனவிடத்தே போய்க் கொன்று வருகிறோம்; எங்களுக்கு வெற்றிலையிட்டருளீர்" என்பர்கள்; அருகே நின்று, "அப்படிசெய்து வாருங்கோள்" என்று அவர்களுக்கு வேண்டுவதெல்லாங் கொடுத்துவிடும்; அங்கும்போய்க் கொலை தப்பாது. [குமைதின்பார்கள்] - நலிவுடவோர்கள். அடியிலே நாய் அடியிட்டு நலியத்தொடங்கிற்றிறே. நாய் முதலிலே காற்கூறு கொண்டதிறே.

ஆனபின்பு, [செம் மின் இத்யாதி]-சிவந்து மின்னுநின்றுள்ள முடியையுடைய ஸ்ரீயஃபதிதிருவடிகளைக் கடுக ஆஸ்ரயிக்கப் பாருங்கோள். தன்னையாஸ்ரயித்தார்க்குக் கொடுக்கைக்குத் தலையான முடியுண்டு; கொடுப்பிக்கைக்கு அருகே யிருப்பாரு முண்டு; விரையாமையாலுள்ள இழவே உள்ளது. [அடிசேர்மினோ] - அவன் முடியைத் தரிலும் நீங்கள் திருவடியைச் சேருங்கோள். நீங்கள் உங்களடிவிடாதே கொள்ளுங்கோள். (௨)

---

## மூன்றாம் பாட்டு.

அடிசேர்முடியினராகி அரசர்கள்தாந்தொழ
இடிசேர்முரசங்கள் முற்றத்தியம்பவிருந்தவர்
பொடிசேர்துகளாய்ப்போவர்க ளாதலில்நொக்கெனக்
கடிசேர்துழாய்முடிக் கண்ணன்கழல்கள்நினைமினோ.

*ஆ.—இப்படி ஐஸ்வர்யம் அஸ்திரமன்றியே, ஐஸ்வர்யபோக்தாக்களானவர்கள் தாங்களும் அத்யந்தம் அஸ்திரர்; ஆதலால், ஈண்டென நிரதிஸயபோக்ய பூதனுய் ஆஸ்ரிதஸுலபனுயிருந்த எம்பெருமானை நினையுங்கோள் என்கிறார்.*

---

*தநங்களாலும் தன்னை ரக்ஷித்துக்கொள்ளக் கடவ னென்கையாலே, தாரவ்யயமும் தநவ்யயமும் விதிக்கிறது. ஆக, ஸ்வப்ராணரக்ஷணார்த்தமாகத் தாங்களே கொடுபோய் விடுவர்களென்கிற தென்றபடி. 'வெம்மினொளி' என்று பேய்த்தேராய், அதாவது - ம்ருகத்ருஷ்ணிகையென்று முந்தின அர்த்தம். காட்டிலே அவர்கள் குமையுண்ணும் ப்ரகாரத்தை விஸதமாக உபபாதிக்கிறார் - 'அர்த்தவானுக்கு' இத்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே. கொலை - ஹிம்ஸை. "இவன் இருந்தால் என்வருமோ" என்னும் அதிஸங்கையாலே ப்ராணஹாநிபர்யந்தமாகப் பண்ணு மென்றபடி. கீழ்ப்பாட்டோடே கூட்டி ரஸோக்தி - 'அடியிலே' இத்யாதி வாக்யத்வயமும். அடியிலே - முதற்பாட்டிலே, காலிலே யென்றும். அடியிட்டு - தொடங்கி, காலிலே பிடித்தென்றும். ரஸோக்தியாலே உக்தத்தை விவரிக்கிறார்-'நாய் முதலிலே' இத்யாதி.காற்கூறு - காலாகிற பாகத்தை; நாலத்தொருபாகத்தை யென்றுமாம். 'காற்கூறு கொண்டதிறே' - முக்காற்கூறும் வெற்றிலை பிடித்தவர்கள் கொள்ளுகிறார்களென்று த்வநி. "செம்மின்முடி" என்றதுக்கு பாவம்-'தன்னை' இத்யாதி. "அடிசேர்மினோ" என்றால் "செம்மின்முடி" என்றத்தோடு விரோதியாதோ? என்ன, 'அவன் முடியை' இத்யாதி. சாடு - 'நீங்கள்' இத்யாதி.* (௨)

ஒ.—மூன்றும்பாட்டில், மற்றுள்ள ராஜாக்கள் தங்களை ஆஶ்ரயித்து. அவர்களை ஒன்றாக மதியாதே வாழ்ந்தவர்கள் அந்த ஐஶ்வர்யத்தை யிழந்து ஒருவரும் மதியாதபடியாவர் என்கிறார்.

[அடிசேர் என்று தொடங்கி] - தங்கள் காலிலே முடி படும்படியாக அந்யராஜாக்கள் வந்து தொழுது க்ருதார்த்தராகாநிற்க, இடியிடித்தாற்போலே வாத்யங்கள் முற்றத்திலே த்வநிக்க இருந்தவர். [பொடி என்று தொடங்கி] - க்ஷுத்ரதூளிபோலே அவதீரணம் பண்ணினோ மென்று நினைக்கப் பாத்தம் போராதபடி மதிப்புக்கெடுவர். ஆகையாலே, இங்ஙன் எளிவரவுபடாதே பெருமதிப்பு உண்டாம்படி ஸர்வைஶ்வர்ய ஸூசகமாய்த் தன் திருக்குழலின் செவ்வியாலே க்ஷணந்தோறும் பரிமளம் மிகாநின்றுள்ள திருத்துழாயாலே அலங்க்ருதனாய்ப் பரமபோக்யனான க்ருஷ்ணன் திருவடிகளை ஈண்டென நினையுங்கோள்.

ப.—அநந்தரம், காலில்விழுந்த ராஜாக்களையும் மதியாதிருந்தவர்கள், ஒருவன் காலிலேதட்டினால் ஒருவஸ்துப்ரதிபத்திபிறவாதபடி யாவர்கள்; ஆதலால், போக்யனான க்ருஷ்ணன் திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

அடி - தங்கள்காலோடே, சேர் - சேர்ந்த, முடியினராகி - முடியை யுடையராய்க்கொண்டு, அரசர்கள் - ராஜாக்கள், தாம் - (இந்தஆஸத்திதான் தரமாக அவர்கள் அநாதரித்திருக்கச்செய்தே) தாங்களே, தொழ - தொழாநிற்க, இடிசேர் - இடியோடு ஒத்த, முரசங்கள் - முரசங்கள், முற்றத்து - முற்றவெளியிலே, இயம்ப - சப்திக்க, இருந்தவர் - (அதிலே செவிமடுத்து அந்யபரதை) பாவித்திருக்குமவர்கள், பொடி - ஒருபதார்த்தைகதேஶத்தோடு, சேர் - சேர்ந்த, துகளாய் - பரமாணுவாம்படி, போவர்கள் - மதிப்பற்றுப்போவர்கள்; ஆதலில் - ஆதலால், நொக்கென - சடக்கென, கடி சேர் - பரிமளஸமவாயத்தை யுடைய, துழாய் - திருத்துழாயாலே அலங்க்ருதமான, முடி - திருமுடியையுடைய, கண்ணன் - க்ருஷ்ணனுடைய, கழல்கள் - திருவடிகளை, நினைமின் - நினையுங்கோள்.

இ.—மூன்றும் பாட்டில், ராஜாக்கள் தங்கள் காலிலே விழுந்தால் அநாதரித்திருக்கும் மதிப்புடையவர்கள் ஒருசேதநனென்று ஒருவர் நினையாதபடி மதிப்பறுவர்கள் என்கிறார்.

[அடிசேர் இத்யாதி] - தூரத்தண்டனிடுகையன்றிக்கே தங்கள் முடியும் இவன் காலும் சேரும்படி தண்டனிடுகை, [அரசர்கள்] - ஈஶ்வராபிமாநிகள். [தாம்தொழ] - ஸ்ரீபாதத்தே தண்டனிடப் பெற்றோமென்று அந்தரங்கஸேவைபண்ணினோமாய் த்ருப்தராவர்கள். இவன் அநாதரித்திருக்கத் தான் அறிந்த அறிவாகத் தொழுது என்றுமாம். [இடி இத்யாதி] - இடிபோலே யிருந்த வாத்யங்கள் முற்றத்திலே முழங்க இருந்தவர். வந்தவன் தண்டனிட்டுக் கிடக்க அநாதரித்து, ஆடல்பாடல் கண்டிருந்தானாயிற்று. "ஶிரஸாயாசதஸ்தஸ்ய" என்னும் விஷயத்தையன்றோ தண்டனிட்டது. [பொடிசேர் இத்யாதி] - பொடியோடே சேர்ந்த தூளியாய்ப் போவர்கள். தனித்து ப்ரதிபத்தி பண்ணவொண்ணாதே ஒன்றோடேகூட்டி ப்ரதிபத்திபண்ணவேண்டும்படி யாவர்கள். துகைத்தால் ஒருசேதநனென்று கூசவேண்டாதபடி மதிப்பறுவர்கள். [ஆதலில்] - ஆனபின்பு, [நொக்கென] - சடக்கென, [கடிசேர் இத்யாதி] - ஸர்வேஶ்வரத்வஸூசகமான திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதமான க்ருஷ்ணன் திருவடிகளை நினையுங்கோள். [கடிசேர்துழாய்] - திருமுடியோட்டைஸ்பர்ஶத்தாலே நாட்செல்ல நாட்செல்லப் பரிமளம் மிகாநிற்கை. "வரிஹாஶ்யாஸுதநவ்வஹோ" என்று யமாதிகள்அஞ்சும் மதிப்பைப் பெறுவர்.

ஈடு.—மூன்றும்பாட்டு. ராஜாக்கள் தங்கள்காலிலேவிழுந்துகிடந்தால் அநாதரித்திருக்கும் மதிப்பையுடையவர்கள், 'ஒருசேதநன்' என்று நினையாதபடி மதிப்பறுவர்கள் என்கிறார்.

[அடிசேர் முடியினராகி] - தன்னோடொக்க 'அரசு' என்றிருந்த ராஜாக்கள் தன் காலிலே சேர்க்கப்பட்ட முடியை யுடையராய். [அரசர்கள்] - ராஜாக்கள். [தாம்தொழ] - தாங்கள் அறிந்ததாகத் தொழுமித்தனை போக்கி, 'இவன் இப்படி தொழுதான்' என்னும் ப்ரதிபத்தி அவனுக்கில்லை. 'இன்று ஸ்ரீபாதத்திலே தலைதாக்கத் தெண்டனிடப்பெற்றோம்' என்று இவன்தான் நினைத்திருக்குமித்தனை. "ஶிரஸாயாசதஸ்தஸ்யவசநம்நக்ருதம்மயா" (ஶிரஸா யாசதஸ்தஸ்யவசநம் நக்ருதம்மயா) என்று 'பிள்ளை தலையாலேயிரக்க,நாம் மறுத்துப்போந்தோம்' என்று புண்பட்டுத் தலைசீய்க்கும் விஷயத்தைத் தொழுகிறானன்றே. இவன் இப்படி தொழ, அவன்செய்ததேன்? என்னில்,—[இடிசேர் இத்யாதி]-'இன்னராஜா காணப்புகுகிறான்' என்று ஓலக்கமிருந்து, நாடகச்சாலையிலுள்ளாரை அழைத்து அருளப்பாடிட்டு நாட்டில் மரங்களை யடையத்தோளைத்துத் தோலைமேவி அத்தை இடியையொக்க த்வநிப்பித்து அநாதரித்திருக்கும். 'இன்னான் வந்து காலிலே விழுந்துகிடந்தான்; அவன், இத்தை அநாதரித்துக் கூத்துக்காண்பது பாட்டுக்கேட்பதானான்' என்று லோகத்திலே ப்ரஸித்தமாம்படி யிருக்கவேணும்' என்றாயிற்று இவனிருப்பது. [இருந்தவர்]-அங்குநிற்கிற ஸ்தம்பத்திற்காட்டில் ஒரு வாசியில்லைகாணும் இவருடைய நினைவால். இப்படியிருந்தவர்கள் என்செய்வ ரென்றால்,—பொடிபடுவ ரென்கிறார் மேல். [பொடிசேர்துகளாய்ப்போவர்கள்]-'தனக்கு' என்றொ ராகாரமின்றிக்கே, 'பொடியோடே சேர்ந்த தூளி' என்று வேறொன்றோடே சேர்த்து நிரூபிக்கவேண்டும்படி யாவர்கள். தன்காலிலே ஒருவன் குனிந்தால் அநாதரிக்கும்படியான மதிப்பையுடையவன், தன்தலையிலே ஒருவன் அடியிட்டால் 'நாம் இவன்தலையிலே அடியிட்டோம்' என்று நினைக்கவேண்டாதபடி க்ஷுத்ரதூளியாய்ப் போவர்கள்.

[ஆதலில்] - அர்த்ததத்வம் இதுவானபின்பு. [நோக்கென] - சடக்கென. [கடி இத்யாதி] - முடிகொடுத்தால் மாலையுங்கொடுக்க வேணுமே ! திருமேனியின் ஸ்பர்ஶத்தாலே நாட்செல்ல நாட்செல்லப் பரிமள மேறிவாராநின்றுள்ள திருத்துழாய்மாலையைத் திருவபிஷே

---

மூன்றும்பாட்டு.'அடிசேர்' இத்யாதி. "அடிசேர்முடியினராகி அரசர்கள்தாம்தொழப் பொடிசேர்துகளாய்ப்போவர்கள்" என்ற பதங்களைக் கடாக்ஷித்து [illegible] 'ராஜாக்கள்' இத்யாதி.

"அரசர்கள் - அடிசேர்முடியினராகி - தாம்தொழ" என்று அந்வயித்து அர்த்தம்-'தன்னோடொக்க' இத்யாதி. "தொழ" என்ன அமைந்திருக்க, "தாம்" என்றதுக்கு பாவம்-'தாங்களறிந்ததாக' இத்யாதி. "தாங்களறிந்ததாகத்தொழும்" என்றத்தை உபபாதிக்கிறார், 'இன்று ஸ்ரீபாதத்திலே' இத்யாதி. தொழுகிறவனுக்கு ஆதர முண்டாயிருக்க, தொழப்படுகிறவன் அநாதரிக்கிறது குணஹீந ஞகையாலே யெனனுமத்தை க்ஷேபோக்தியாக அருளிச்செய்கிறார்.'ஶிரஸேத்யாதி'. ராவணவதாநந்தரே ராமஃ-"ஶோசிதவ்யஸ்த்வயா ஸௌமித்ரே ஸுக்ருதம் க்ருதம்" இதி பூர்வார்த்தம். மறுத்து - நிஷேதித்து. தலைசீய்க்கும் - க்லேஶப்படும். தோலைமேவி - தோலைக்கட்டி. இப்படியிருந்தால் ப்ரயோஜநமேது? என்ன, 'இன்னான்' இத்யாதி. பத ப்ரயோகத்துக்கு பாவமாக வ்யாக்யாதாவின் ஈடுபாடு, 'அங்குநிற்கிற' இத்யாதி. இவருடைய - ஆழ்வாருடைய. வேறொன்றோடே - ஒருக்ஷுத்ரனோடே. 'சேர்த்து'- "அவனுடையவன்" என்று நிரூபிக்கும்படி யாவர்க ளென்றபடி. "துகளாய்ப்போவர்கள்" என்றத்தால் பலிதம் – 'தன்காலிலே' இத்யாதி.

ரஸோக்தி – 'முடி' இத்யாதி. கீழ் - முடிகொடுத்தமை சொல்லிற்று; இங்கு - மாலைகொடுத்தமை சொல்லுகிற தென்றபடி ; கீழிற்பாட்டிலே "செம்மின்முடித்திருமாலை விரைந்தடிசேர்மின்" என்றதிறே. "கடிசேர்" என்கிற வர்த்தமாநார்த்தம் 'திருமேனியின்' இத்யாதி. நினைக்கை போருமோ? எத்தித் தொழ

கத்திலே யுடையனாய் ஆஶ்ரித ஸுலபனான க்ருஷ்ணன் திருவடிகளை அநுஸந்திக்கப் பாருங்கோள். நினைக்கவே கொண்டு முழுகுமிறே திருவடிகளின் போக்யதை. இவ்வடியை நினைக்கவே ஸம்ஸாரம் அடியறுமே. "யஸ்ய ஸ்மரண மாத்ரேண" (மதுஸூதநப்ரபந்நாந்) என்று யமாதிகள் அஞ்சும் மதிப்பைப் பெறுவர். (ங)

---

## நான்காம் பாட்டு.

---

நினைப்பான்புகின் கடலெக்கலின் நுண்மணலிற்பலர்
எனைத்தோருகங்களும் இவ்வுலகாண்டுகழிந்தவர்
மனைப்பால் மருங்கற மாய்தலல்லால் மற்றுக்கண்டிலம்
பனைத்தாள்மதகளிறட்டவன் பாதம்பணிமினோ.

*ஆ.*—ஐஶ்வர்யபோக்தாக்களானவர்க ளெல்லாரும் ஸாந்வயமாக நஶித்துப்போன இத்தனையல்லது, மற்றும் ஸ்திரராயிருப்பாரொருவரையும் கண்டிலோம்; ஆதலால், ஆஶ்ரித விரோதிநிரஸநஸ்வபாவனாயிருந்தவன் திருவடிகளைப் பணியுங்கள் என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், ஐஶ்வர்யம் ஒன்றுமேயன்று நிலைநில்லா தொழிகிறது, போக்தாக்களானவர்களும் ஸபரிகரமாக நஶிப்பர் என்கிறார்.

[எனைத்தோருகங்கள்] - அநேகயுகங்கள். [மனைப்பால் என்று தொடங்கி] - வாழ்ந்த ஸ்தலமும் அருகும் தெரியாதபடி நசித்துப் போமித்தனை போக்கி ஸ்திரராயிருப்பாரொருவரையும் கண்டிலோம். ஆஶ்ரயணவிரோதிகளைப் போக்கும் ஸ்வபாவனானவனுடைய திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள்.

ப.—அநந்தரம், மதிப்புக்கேடேயன்றியே ஆயுஸ்ஸும் நிலைநில்லாதாகையாலே விரோதிநிவர்த்தகனான க்ருஷ்ணன் திருவடிகளை வணங்குங்கோள் என்கிறார்.

நினைப்பான் - (பகவதநுபவத்தை விட்டுச் செத்த ராஜாக்களை) நிரூபிக்க, புகில் - இழியில், எனைத்தோருகங்களும் - அநேகயுகங்களும், இ உலகு - இந்த லோகத்தை, ஆண்டு - ஆண்டு, கழிந்தவர் - கழிந்துபோனவர்கள், கடல் எக்கலில் - கடல் ஏக்கலிட்ட, நுண்மணலில் - நுண்மணலிற்காட்டில், பலர் - அநேகர்; (இவர்கள்முடியுமளவில்), மனைப்பால் - (தாங்களிருந்த)

---

வேண்டாவோ? என்ன, 'நினைக்கவே' இத்யாதி. "நினைமினோ" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம்-'இவ்வடியை' இத்யாதி. முந்தினபாவம் - போக்யதையைப்பற்ற; இரண்டாவது - விரோதிநிவர்த்தகத்தைப் பற்ற. 'நினைக்கவே கொண்டு முழுகு' மென்று ப்ராப்யத்வஞ் சொல்லிற்று. 'ஸம்ஸாரம்அடியறு'மென்று ப்ராபகத்வம் சொல்லிற்று. "துகளாய்ப் போவர்கள்" என்று மதிப்பறுகை சொன்னதுக்கு ப்ரதிகோடியாகத் தாத்பர்யம் - 'மதுஸூதந' இத்யாதி. "ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாஶஹஸ்தம் வததி யம: கில தஸ்ய கர்ணமூலே। பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்" இதி ஶ்ருதிமேம்ஸே யமகிங்கரஸம்வாதே. க்ரமேண அந்வய:. முற்றத்தியம்ப - "முற்றத்தின் வெளியிலே ஶப்திக்க. என்று உரை. "முற்றத்திலே முழங்க விருந்தவர்" என்று இருபத்துநாலாயிரத்திலே. (ங)

க்ருஹப்ரதேசத்துக்கும், மருங்கு - அதின்பரிஸரத்துக்கும், அற - வாசி தெரியாதபடி, மாய்தல் அல்லால் - அழியுமதொழிய, மற்று - வேறு அவஶேஷிப்பதொன்று உண்டாக, கண்டிலம்-கண்டிலோம் : (ஆதலால்), பனை - பனைபோலே பருத்த, தாள் - அடிப்பரப்பையுடைத்தான, மத களிறு - மத்தகஜத்தை, அட்டவன் - அழித்தவனுடைய, பாதம் - திருவடிகளை, பணிமின் - வணங்குங்கோள். 'நுண்மணலிற்பல' ரென்று, ஐந்தாம்வேற்றுமை - உவமைப்பொருவாய், நுண்மணல்போலே அஸங்க்யாத ரென்றுமாம்.

இ.—நாலாம்பாட்டில், ஐஶ்வர்யமும் மதிப்புமேயன்று நிலைநில்லாதது, போக்தாக்களும் ஸபரிகரராக நஶிப்பர் என்கிறார்.

[நினைப்பான் புகில்]—கடலிலே இழிந்தாரைப்போலே எல்லைகாணப்போகாது என்னுதல், தாம் லோகயாத்ரையை நினையாதவர் என்னுதல், "கண்டு ஆற்றேன்" என்ற பரதுஃகாஸஹிஷ்ணுக்கள் என்னுதல். [கடலெக்கலின் நுண்மணலிற் பலர்] - கடலில் எக்கலில் நுண்ணியமணலில் அநேகர். [எனைத்தோருகங்களும்] - அநேகயுகங்கள். [கழிந்தவர்] - முடிந்தவர். "ஸஹஸ்ரயுகபர்யந்தமஹர்யத்ப்ரஹ்மணோ விது:", "ஸ்ரீமாநாஸீத்தாயாநாயஶாஸவாஷ்டிகாவாஸவோ ஶக்ரோமணி [illegible]". [மனைப்பால் இத்யாதி] - வாழ்ந்த மனையிடம், மருங்கு - பார்ஶ்வம், அற - இரண்டுக்கும் பேதம் தெரியாதபடி. கனக்கஜீவித்தானாகில் அசலிட்டுப் பார்ஶ்வஸ்தர்க்கும் அநர்த்தமாம்; பெருமரம் விழும்போது அருகுநின்றவற்றையும் நசிப்பிக்கும். நசிக்குமதொழிய ஸ்திரராயிருப்பாரொருவரையும் கண்டிலோம். [பனை இத்யாதி] - பனைபோலே பயாவஹமான காலையுடைத்தாய் மத்தகஜமான குவலயாபீடத்தைக் கொன்றவன் திருவடிகளிலே தலைசாயுங்கோள். கீழிற்பாட்டிலே 'மா' மின் அர்த்தம்; இதில், 'அஹ' மின் அர்த்தம். வலிய ப்ரதிபந்தகங்களை நிர்யத்நமாகத் தள்ளவல்லவனை ஆஶ்ரயியுங்கோள்.

ஈடு·—நாலாம்பாட்டு. ஐஶ்வர்யத்தின் நிலையாமையும் மதிப்பறுகையும் கிடக்கச்செய்தே, போக்தாக்களுடைய நிலையாமையாலும் அவனைப் பற்றவேணும் என்கிறார்.

[நினைப்பான்புகில்]—நினைக்கப்புக்கால். கடலிலேயிழிவாரைப்போலே, நினைத்ததாய்த் தலைகட்ட வொண்ணாதபடியா யிருக்கிற இருப்பும், தாம் லோகயாத்ரை நினையாரேன்னுமிடமும் தோற்றுகிறது; ஆனாலும், பரஹிதமாக அநுஸந்திக்குமது உண்டிறே. [கடலெக்கலில் நுண்மணலிற் பலர்]—அலைவாயிலெக்கலில் நுண்ணிய மணலிற்காட்டில் அநேகர். இப்படி யாண்டுமுடிந்துபோகிறவர்கள் தாங்கள் ஆரேன்னில்,—க்ஷத்ரமநுஷ்யரல்லர், "ஸஹஸ்ரயுகபர்யந்தமஹர்யத்ப்ரஹ்மணோ விது:" (ஸஹஸ்ரயுகபர்யந்தமஹர்யத்ப்ரஹ்மணோ விது:) என் கிறபடியே ஆயிரம் சதுர்யுகங் கூடிற்று ஒருபகலாய், இப்படி ராத்ரியாய், இங்ஙனே நூறாண்டிரு

நாலாம்பாட்டு 'நினைப்பான்' இத்யாதி. கீழ்மூன்றுபாட்டின் ப்ரமேயத்தையும் அநுவதித்துக்கொண்டு, "இவ்வுலகாண்டுகழிந்தவர், மாய்தலல்லால் மற்றுக்கண்டிலம்" என்கிற பதங்களிலே நோக்காக அவதாரிகை 'ஐஶ்வர்யத்தின்' இத்யாதி. "புகில்" என்கிற யதிஶப்தத்துக்கு அர்த்தம்-'நினைக்கப்புக்கால்' இத்யாதி.கடலிலே யிழிவாரைப்போலே-கடலிலேயிழிவார்நீந்தித்தலைக்கட்டவொண்ணாதாப்போலேயென்றபடி.ஆனால் இப்போது நினைக்கிறதென் என்ன,'ஆனாலும்' இத்யாதி. எக்கல்-மணற்குன்று."ஸஹஸ்ரயுகபர்யந்தமஹர்யத்ப்ரஹ்மணோ விது: । ராத்ரிம்யுகஸஹஸ்ராந்தாம் தேஹோராத்ரவிதோஜநா:" இதி கீதாஸப்தமே. 'நூறாண்டிருந்து' என்னச்செய்தே, த்விபரார்த்தகால மென்றது - "த்விபரார்த்தாவஸாநேமாம்"

ந்து த்விபரார்த்தகாலம் ஜீவித்து முடிந்துபோம் ப்ரஹ்மாதிகள். அநேகயுகங்களும் இவ்வுலகாண்டு இதுகுறியழியாதேயிருக்க, இவர்கள் 'என்னது' என்று அபிமாநித்து முடிந்துபோவர்கள். [எனைத்தோருகங்களும் இவ்வுலகாண்டுகழிந்தவர் - நினைப்பான் புகில் கடலெக்கலில் நுண்மணலிற் பலர்]—"கங்காயாஸ்ஸிகதாதாரா யதாவர்ஷதிவாஸவே। ஶக்யாகணயிதும்லோகே நவ்யதீதா꞉பிதாமஹா꞉" [கங்காயாஸ்ஸிகதாதாரா யதாவர்ஷதிவாஸவே | ஶக்யாகணயிதும்லோகே நவ்யதீதா꞉பிதாமஹா꞉]. [மனைப்பால்மருங்கற]—சிறுகஜீவித்தானுகில் தன்னளவிலே போம்; பாக்க ஜீவித்தானுகில் தன்னயலிலுள்ளாரையுங் கோண்டுபோம்; பெருமரம் முறிந்தால் அருகுள்ளவற்றையும் கோண்டுபோமிறே. மனைப்பால் - மனையிடம். மருங்கு-அயல். அசலிட்டுப் பார்ஶ்வஸ்தருக்கும் நாசமாம். [மாய்தலல்லால் மற்றுக்கண்டிலம்]—இப்படிமுடியுமதொழிய ஸ்திரராயிருப்பாரோருவரையும் கண்டிலோம். ஆனுல், செய்ய அடுப்பதேன்? என்னில்,—[பனைத்தாள் இத்யாதி]—பனைபோலே யிருக்கையாலே பயாவஹமான காலையுடைத்தான மத்தகஜமுண்டு, குவலயாபீடம; அத்தை முடித்தவன்திருவடிகளை ஆஶ்ரயிக்கப் பாருங்கோள். அவன் உங்கள் ப்ரபலப்ரதிபந்தகத்தைப் போக்க, நீங்கள் அவன்காலிலே தலைசாய்க்கப் பாருங்கோள். கீழிற்பாட்டில் - 'மா' மின் அர்த்தம் சோல்லிற்று; இதில் - 'அஹ' மின் அர்த்தம் சோல்லுகிறது. (ச)

---

## ஐந்தாம்பாட்டு.

பணிமின்திருவருளென்னும் அஞ்சீதப்பைம்பூம்பள்ளி
அணிமென்குழலா ரின்பக்கலவியமுதுண்டார்
துணிமுன்புநாலப் பல்லேழையர்தாமிழிப்பச்சேல்வர்
மணிமின்னுமேனி நம்மாயவன்பேர்சோல்லிவாழ்மினே.

ஆ.—இந்த ஆஜ்ஞாரஸம்போலே ஸ்த்ர்யாதி விஷயரஸமும் அத்யந்த அல்பத்வ அஸ்திரத்வாதி தோஷதூஷிதமாதலால் அவற்றைவிட்டு நிரதிஶயௌஜ்ஜ்வல்ய ஸௌந்தர்யாதி கல்யாணகுணகணநிதியாய் ஆஶ்ரித வத்ஸலனுயிருந்தவன் திருநாமங்களைச் சொல்லி வாழுங்கள் என்கிறுர்

ஒ.—அஞ்சாம்பாட்டில், அங்கநாஸம்ஶ்லேஷஸுகமும் செல்வக்கிடப்புப் போலே அஸ்திரத்வாதி தூஷிதம் என்கிறுர்.

---

என்கிற ஶ்லோகத்தைக் கடாக்ஷித்து. "இவ்வுலகாண்டு" என்றத்தைக் கடாக்ஷித்து, "கழிந்தவர்" என்றதுக்கு பாவம் - 'இது குறியழியாதே' இத்யாதி. ப்ரவாஹரூபேண நித்யமாகையைப் பற்ற, 'இதுகுறியழியாதேயிருக்க' என்றது. இவ்வுலகு - ப்ரத்யக்ஷஸித்தமான உலகு. அந்வயங் காட்டுகிறுர், 'எனைத்தோர்' இத்யாதி. எனைத்தோர் - அநேகம். உகங்கள் - யுகங்கள். "நுண்மணலிற்பலர்" என்றதுக்கு ப்ரமாணம் 'கங்காயா' இத்யாதி; வைஷ்ணவே தர்மஶாஸ்த்ரே. மனைப்பால் மருங்கற - மனையிடத்துக்கு அசலிலுள்ளாரும் நசிக்கும்படி. பார்ஶ்வஸ்தர்க்கு நாசம் வருவானேன்? என்ன, 'சிறுக' இத்யாதி. ராவணதுர்யோதநாதிகளைப்போலே யென்றபடி. அசலிட்டு - அசலிலேயிருக்கிற. மாய்தலுக்குப்பின்பு, "மற்று" என்கிறது-ஸ்திரராகையிறே, அத்தைப்பற்ற, 'ஸ்திரராயிருப்பார்' என்கிறது. பனை - பனைமரம். குவலயாபீட நிரஸநத்துக்கு ப்ரயோஜநம் - 'அவன் உங்கள்' இத்யாதி. இரண்டும் இருவருக்கும் ஸ்வரூபமென்றபடி, "கண்ணன்" என்று ஸௌலப்யமும், "களிறட்ட" என்று சக்தியும் சொல்லுகையாலே, "மாம், அஹம்" என்கிற பதத்வயார்த்தமும் சொல்லுகிறதென்றபடி. க்ரமேண அந்வய꞉. (ச)

[பணிமின் என்று தொடங்கி.] - அழகியதாய்க் குளிர்ந்து பரம்பியிருந்துள்ள பூம் படுக்கைகளிலே யிருந்து ரஸிகத்வத்தின் மிகுதியாலே போக்தாவானவன் தான் 'பணிமின் திருவருள்' என்று கீழ்மை சொல்லவேண்டும்படி வேண்டற்பாடுடையராய், இவன் கொண்டாட்டத்தை அங்கீகரியாதே குழலைப் பேணுநின்றுள்ள அந்த ஸ்த்ரீகளுடைய அநங்கீகாரப்ரமுகமான ஸம்ஶ்லேஷாம்ருதத்தைப் பானம் பண்ணினவர்கள். 'பணிமின்திருவருள்' என்று கீழ்மைசொல்லுகிறார், ஸ்த்ரீகளென்றும் சொல்லுவர். [துணி முன்பு என்று தொடங்கி] - ஆச்சாதிக்கப்போராமையாலே துணி முன்பு நாலும்படிக்ருபணராய் இவனைப் பெறுவிடில் செல்லாதபடியான ஸ்த்ரீகள் பலவகைகளாலே உபேக்ஷிக்க, அத்தைப் புத்திபண்ணுதே பின்னையும் அவர்களிருந்த இடங்களிலே செல்லாநிற்பர். நிரதிஶய போக்யமான திருவழகையும், ஆஶ்ரிதரைவிடில் தரிக்கமாட்டாதபடி அதிமாத்ரமாய் நிருபாதிகமான ஸ்நேஹத்தையுமுடையவனென்று ப்ரஸித்தனை எம்பெருமானுடைய திருநாமத்தை வாயாலே சொல்லி வாழுங்கோள்.

ப.—அநந்தரம், அபிமதைகளான அங்கனைகளோடு ஸம்ஶ்லேஷமும் அஸ்திரமாதலால், அபிரூபனை ஸர்வேஶ்வரன் திருநாமத்தைச் சொல்லி வாழப் பாருங்கோள் என்கிறார்.

அம் - அழகியதாய், சீதம் - சீதளமாய், பை - பரந்த, பூ பள்ளி - பூப்படுக்கையிலே, திருவருள் - திருவருளை, பணிமின் - பண்ணியருளவேணும், என்னும் - என்னும் ஆதரத்தையுடைய, அணி - அலங்காரோத்தரமாய், மெல் - ம்ருதுதரமான, குழலார் - குழலையுடையவர்களுடைய, இன்பக்கலவியமுது - ஆநந்தாத்மகஸம்ஶ்லேஷாம்ருதத்தை, உண்டார் - புஜித்தவர்கள்,—துணி - துணிச்சீலையானது, (பின்னுக்கெட்டாமையாலே), முன்பு - முன்னளவிலே, நால - நாலும்படியாக, பல் - பலவகைப்பட்ட, ஏழையர்-முன்பு சபலைகளான அந்த ஸ்த்ரீகள், தாம் - தாங்களே, இழிப்ப - அநாதரோக்தியைப்பண்ணச்செய்தே, செல்வர் - (ஆஶாபலத்தாலே பின்னையும் அங்கே) செல்லுவார்கள் ; (ஆதலால்), மணி - நீலரத்நம்போலே, மின்னு - ஒளியையுடைத்தான, மேனி - திருமேனியையுடையவனாய், நம் - (ஆஶ்ரிதரான) நமக்குத் தன்னையநுபவிப்பிக்கும், மாயவன் - ஆஶ்சர்யபூதனுடைய, பேர் - திருநாமங்களை, சொல்லி - சொல்லி, வாழ்மின் - ஆநந்திகளாகுங்கோள்.

இ.—அஞ்சாம்பாட்டில், செல்வக்கிடப்போபாதி அங்கநாஸம்ஶ்லேஷஸுகமும் அஸ்திரம் என்கிறார்.

[பணிமின்திருவருளென்னும்] - படுக்கையிலே ஸ்த்ரீகளை வைத்துத் தான் தாழநின்று 'திருவுள்ளத்து ஓடுகிறது என்? அருளிச்செய்யலாகாதோ?' என்னுமாயிற்று. தன்னையொழிந்தாரெல்லாரும் தன்னை அநுவர்த்திக்கத் தான் ஸ்த்ரீகளை அநுவர்த்திக்கிறானிறே, தன் ரஸிகதை தோற்ற. [அஞ்சீதம் இத்யாதி] - தர்ஶநீயமாய்க் குளிர்ந்து பரந்து பூவாலே செய்த படுக்கையிலேயாயிற்று அவர்களை வைப்பது. [அணிமென்குழலார்] - இவர்கள் கொண்டாட்டத்தை அநாதரித்துக் குழலைப் பேணுவது, ஆபரணத்தைத் திருத்துவது ஆகாநிற்பர்கள். [இன்பக்கலவியமுதுண்டார்] - அவர்கள் அநங்கீகாரப்ரமுகமான ஸம்ஶ்லேஷத்தால் வந்த ஆநந்தாம்ருதத்தைப் புஜித்தவர்கள். "அல்லிமலர்மகள்போகமயக்கு"க்களை அநுகரிக்கிறார்கள். 'பணிமின் திருவருள்' என்கிற இத்தை 'அணிமென்குழலா'ரிலே சேர்த்து நிர்வஹிப்பர்கள் பூர்வர்கள். பட்டர் 'இன்பக்கலவியமுதுண்டா'ரிலே சேர்த்து நிர்வஹிப்பர். [துணிமுன்புநால]-அந்த ஸ்த்ரீ

களை வேறே சிலர் அபஹரித்து அநுபவிக்கிற இடத்திலே தன் சாபலாதிஶயத்தாலே துணி யாய்ப் பின்புத்தைக்கு எட்டம் போராமையாலே முன்பை மறைத்துச் செல்வர்கள். ,,ஶாடீஶ்வாஜ்யஹாஹாம்'' என்ற த்ரிஜடையைப்போலே. [பல்ஏழைபர்தாம்]—முன்பு இவனை யொழியத் தங்களுக்குச் செல்லாத சபலகளானவர்கள் தாங்களே. [இழிப்ப] - இவனுடைய கார்ப்பண்யத்தையும் கார்ஶ்யத்தையும் சொல்லி அநாதரவசநங்களைப் பண்ண. [செல்வர்] - 'நம்மோட்டை ஸாவபந்தத்தாலேயன்றோ சொல்லுகிறது' என்று அத்தையும் புத்திபண் ணுதே செல்வர். ,,த்யஜெஷ்காஶிராவதா'' இறே. [மணிமின்னுமேனி] - ஆனபின்பு ,,ஸுகதாநாம்'' என்று இருக்குமவனுடம்பைப் பற்றுங்கோள். ,,ஸுஷஸ்வவஸ்மத்தஸ''. ஸாலப்மாய் நிரவதிகதேஜோரூபமான வடிவையுடையவன். [நம்மாயவன்] - ஆஶ்ரிதவிஷயத் தில் செய்தது போராது என்று இருக்குமவன். 'இப்பேற்றுக்குச் செய்யவேண்டுவது என்?' என்னில்,—[பேர்சொல்லிவாழ்மின்] - திருநாமத்தைச்சொல்லி நிரதிஶய போகத்திலே அந்வயியுங்கோள்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. செல்வக்கிடப்போபாதி அங்கநாபரிஷ்வங்கமும் அஸ்திரம் என்கிறார்.

'பணிமின்திருவருளென்னும் - அஞ்சீதப்பைம்பூம்பள்ளியணிமென் குழலார்' என்று ஸ்த்ரீகளோடேசேர்த்து நிர்வஹிப்பார்கள் முன்புள்ள முதலிகள்; பட்டர், அங்ஙனன்றிக்கே, 'பணிமின்திருவருளென்னும்' என்கிற இத்தை - 'இன்பக்கலவியமுதுண்டார்' என்கிறவர்க ளோடே சேர்த்து அருளிச்செய்வர். தான் ராஜ்யம்பண்ணுகிற நாளில் தன்ராஜ்யத்தை அவர்க ளுக்குப் படுக்கைப்பற்றாக்கி, அவர்களைப் படுக்கையிலே வைத்துத் தான் தாழ நின்று : [பணி மின் திருவருளென்னும்]—'திருவுள்ளத்திற் கிடக்கிறத்தை அருளிச்செய்யலாகாதோ ?' என் னும். தன்னையநுவர்த்திப்பார் புறம்பே யுண்டே; இனி, ரஸிகத்வமாவது - தான் இவர்களுக்குத் தாழநிற்கையிறே. [அஞ்சீதப்பைம்பூம்பள்ளி] - தர்ஶநீயமாய்க் குளிர்ந்து பரந்து பூவாலே செய்த படுக்கையிலே. அவன் இப்படுக்கையிலே வைத்து 'திருவருள்பணிமின்' என்னாநின்றால், அவர்

---

அஞ்சாம்பாட்டு - 'பணிமின்' இத்யாதி. கீழிற்பாட்டுக்களில் ப்ரமேயத்தைத் தளமாக்கி, "அணி மென்குழலார் இன்பக்கலவி" இத்யாதிகளைக் கடாக்ஷித்து இப்பாட்டுக்கு அவதாரிகை - 'செல்வக்கிடப்போ பாதி' இத்யாதி. செல்வக்கிடப்பு - ஸம்பத்ஸம்ருத்தி.

"பணிமின் திருவருளென்னும்" என்கிற ஶப்தம்-ஸாமாந்யமாகையாலே, ஸ்த்ரீகளுக்கும் அவர்களை அநுபவிக்கிறவர்களுக்கு மாக்கி, இரண்டுவகையாக அருளிச்செய்கிறார், 'பணிமின்' இத்யாதி வாக்யத்வயத் தாலே. பூர்வர்கள் நிர்வாஹம், "பணிமின் திருவருள்" என்றது - புருஷர்களைக்குறித்து ஸ்த்ரீகள் சொல்லுகிற தென்று ; இந்தயோஜனைக்கு, அஞ்சீதப் பைம்பூம்பள்ளியிலே ராஜாவானவன்இருந்து, "பணிமின்திருவருள்" என்று சொல்லுகிற அணிமென் குழலாருடைய இன்பக்கலவியமுதுண்டாரென்று ஶப்தார்த்தம். பட்டர் நிர்வாஹத்துக்கு, அஞ்சீதப்பைம்பூம்பள்ளியிலே யிருக்கிற அணிமென்குழலாரோடே திருவருள்பணிமி னென்று ஆதரித்துச் சொல்லாநிற்கிற இன்பக்கலவியமுதுண்டார் என்று அர்த்தம். பட்டர்நிர்வாஹம் ரஸிகத்வத்துக்குச் சேரும்: பட்டர்நிர்வாஹத்திலே அர்த்தம் - 'தான்ராஜ்யம்' இத்யாதி. படுக்கைப்பற்று - ஸ்த்ரீதநம். பூர்வர்கள் நிர்வாஹம் சப்தத்துக்கு ஸ்வரஸமாயிருக்க, இப்படி நெருக்கி அர்த்தம் சொல்லுகிற தென் ? என்ன, 'தன்னை யநுவர்த்திப்பார்' இத்யாதி. யத்வா, இப்படி தாழநின்றால் தன்பெருமைக்குக் கொத் தையன்றோ? என்ன, 'தன்னை இத்யாதி' என்னுதல்: அதாவது - "அடிசேர்முடியினர்" இத்யாதிப்படியே புறம்பே ஸாமந்த ராஜாக்கள் அநுவர்த்திக்கும்படியா யிருக்கிறவனுக்கு, ஸ்த்ரீகள் அநுவர்த்திக்க இருக்கிற இது ஓரேற்றமன்றிறே ; ஆகையாலே, ரஸிகத்வத்துக்குச் சேர இங்ஙனேயாகவேணு மென்றபடி. இந்தப்

கள் செய்வதேன்? என்னில், [அணிமேன்குழலார்] - அவர்கள் கொண்டாட்டத்தை அநாதரித்து, ஆபரணத்தைத் திருத்துவது குழலைப் பேணுவதாகாநிற்பர்கள். [இன்பக்கலவியமுதண் டார்] - அவர்கள் அந்த அநங்கீகாரப்ரமுகமான ஸம்ஶ்லேஷத்தால் வந்த ஆநந்தாம்ருதத்தை புஜித்தவர்கள். அநாதராம்ருதபாநம் பண்ணினவர்க ளென்றுமாம். * "அல்லிமலர்மகள்போகமயக் கு" க்களை அநுகரிக்கிறார்களிறே. வேறொருவன்வந்து அவர்களை ஸ்வீகரித்து இன்பக்கலவியமு துண்ணாநிற்குமே; இவன் பின்னைத் தன்னுடைய ஶரீரதாரணத்துக்காக அவர்கள்பக்கலிலே போய் இரக்கத்தொடங்கும். [துணிமுன்புநால] - "ஶாடீஶேஷாஸ்வஸ்ரா" (ஶாடீமாச்சாத் யதுஶ்சதாம்) என்கிறபடியே பின்பு கொண்டு வந்து இணைக்க எட்டம் போராமையாலே முன் னே நாலாநிற்கும். [பல்லேழையர்தாமிழிப்ப] - தாங்கள் பலராயிருப்பர்களே; இவன்பக்கல் தங்களுக்கு உண்டான சாபலம் தோற்றச் செத்துக் காட்டுவர்கள் முன்பு; இப்போது, தங்களை ஸ்வீகரித்தவனுக்கு ப்ரியமாக, இவனுக்கு போகயோக்யதை யில்லாமையையும் க்ருபணதை யையுஞ் சொல்லி உபேக்ஷாவாதங்கள் பண்ணாநிற்பர்கள். [செல்வர்] - 'நம்மோட்டை பாவபந்த மிறே சொல்லுகிறது இங்ஙன்' என்று அத்தையும் புத்திபண்ணாதே செல்வர். முன்பு "பணி மின்திருவருள்' என்றபோதை அநாதரத்தோபாதியாக இத்தையும் நினைத்துச் செல்வர். "த்ரு ஷ்ணாநிருபத்ரவா" (த்ருஷ்ணகாநிருபத்ரவா) இறே.

---

பக்ஷத்திலே, "பல்லேழையர்தாமிழிப்ப" என்கிறதுக்கு - அப்படி ஆத்ரிக்கப்பட்டவர்கள் கிடீர், இப்போது இப்படி நிர்த்தயராய் அநாதரிக்கிறார்களென்று கருத்து. 'அநங்கீகார ப்ரமுகமான' என்றது - "ஊடலுணர் தல் புணர்த லிவை காமம், கூடியார் பெற்ற பயன்" என்றத்தைப் பற்ற. ஊடல்-ப்ரணயரோஷம். உணர்தல்- தன்குறையை யறிவித்து ஸமாதாநம் பண்ணுகை. புணர்தல் - ஸம்ஶ்லேஷம். நாயகி ப்ரணயரோஷம் பண் ணிக்கொண்டிருக்க, அவளை இவன் தாழநின்று அநுவர்த்திக்க, அத்தாலே இவள் உணர்ந்து ஸமாஹிதை யாய் அநந்தரம் ஸம்ஶ்லேஷமுண்டாமென்று தமிழர்சொன்னபடியே ரஸிகத்வத்துக்குச் சேரு மென்றபடி. அணிமென்குழலார் - ஆபரணங்களையும் ம்ருதுவான மயிரையு முடையவர்கள். "அணிமென் குழலார்" என் கையாலே 'அநாதரித்து' என்கிறது. "கலவி யின்ப வமுதுண்டார்" என்று அந்வயம். இதுக்கு இரண்டு தாத்பர்யம்; முந்தினது -'அவர்கள் அந்த' இத்யாதி. அநங்கீகாரம் சொன்ன இது - ஸமாதாநத்துக்கும் உபலக்ஷணமென்று திருவுள்ளம்பற்றி 'அநங்கீகாரப்ரமுகமான ஸம்ஶ்லேஷத்தால்' என்கிறார். அநாதரந் தன்னையே கலவியின்பவமுதாக புஜித்தவர்கள் என்று அர்த்தாந்தரம் - 'அநாதராம்ருத' இத்யாதி; ஊடலும் காமத்தாற் பெற்ற பய னுகையாலே உத்தேஶ்ய மென்றபடி. க்ஷேபோக்தியாதல், ஈடுபாடாதல் 'அல்லிமலர் மகள்' இத்யாதி. மேலுக்கு அவதாரிகை - 'வேறொருவன்' இத்யாதி. "துணிமுன்புநால" என்றதுக்கு பாவம் - 'ஶாடீம்' இத்யாதி. "ஸஹாஸ்ரவந்த்ரு க்ஷாஶாடீஶேஷாஸ்வஸ்ரா | ஸவ்யாதிஷ்டவ்யா நக்னா நிவேஶநம்" இதி அயோத்யாகாண்டே த்ரிஜடவ்ருத்தாந்தः. எட் டம் - நீளம். நாலாநிற்கும் - தொங்காநிற்கும். "ஏழையர்" என்றதுக்கும், "இழிப்ப" என்றதுக்கும் வாசனை - 'இவன் பக்கல்' இத்யாதி. 'தங்களைஸ்வீகரித்தவனுக்கு ப்ரியமாக' என்றதுக்கு பாவம் - நெடுநாள் கூடியிருந்து புஜித்தவனும், இன்று பிச்சைபுகவந்தால் பிச்சையிடமாட்டாமை யில்லையிறே; இவர்கள் பிச்சையிடில் "இப் போது ஸ்வீகரித்தவன் 'இன்னம் இவனிடத்திலே இவர்களுக்கு ஸ்நேஹம் கிடக்கிறது' என்று தங்களை உபே க்ஷிக்கப்புகுகிறான்" என்று விசாரித்து, அவனுக்கு ப்ரியமாக இவனிடத்திலே நசையற்றமை தோற்ற இவன்குற் றங்களைச் சொல்லி உபேக்ஷிப்பர்க ளென்று. உபேக்ஷாவாதம்பண்ணாநிற்கச் செய்தே, "பாவபந்தத்தாலேயிறே சொல்லுகிறது" என்று நினைக்கைக்கு அடியேதென்ன, 'முன்பு பணிமின்' இத்யாதி. போகயோக்யதை யின்றிக்கேயிருக்க, செல்லுகைக்கு அடியேது? என்ன, 'த்ருஷ்ணகா' இத்யாதி. "ஜீர்யந்தி ஜீர்யதः கேஶாः தந்தா ஜீர்யந்தி ஜீர்யதः। சக்ஷுஶ்ரோத்ரே ச ஜீர்யேதே த்ருஷ்ணைகா நிருபத்ரவா".

* திருவாய்மொழி - ரு, க0, அ.

ஆனபின்பு, "ஶக்தாநாம்" (பக்தாநாம்) என்றிருக்கிற உடம்பைப் பற்றப்பாருங்கோள். [மணி இத்யாதி]-நீலரத்நம்போலே காந்தியையுடைத்தாய் அதிற்காட்டில் விஞ்சினஅழகை யுடைத்தான திருமேனி. "ஏஷஸர்வஸ்வபூதஸ்துபரிஷ்வங்க:" (ஏஷஸர்வஸ்வபூதஸ்துபரிஷ்வங்க:) என்று கொடுக்கும்படியிறே. 'ஏஷ:'-தான் அநுபவித்து "தனக்கு ரஸித்தது" என்று பிறர்க்குக்கொடுப்பாரைப்போலே; "இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:" (இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:) என்னக்கடவதிறே. 'இச்சாக்ருஹீதம்' என்கையாலே, கர்மநிபந்தநமல்ல வென்று தோற்றுகிறது; 'அபிமதம்' என்கையாலே, தனக்கும் போக்யமென்று தோற்றுகிறது. "ஸர்வஸ்வபூத:" (ஸர்வஸ்வபூத:) - இதொழிய மற்றொன்றைக் கொடுத்தாலும் இது கொடாதத்தால் வரும் குறை கிடக்குமே! திருமேனியைக் கொடுக்கவே எல்லாம் கொடுத்ததாமிறே; ஸர்வ அபாஶ்ரயமாயிறே திருமேனிதான் இருப்பது; மற்றுக்கொடுக்குமதிலும் இதுக்கு உண்டான வ்யாவ்ருத்தி தோற்றியிருக்கிறது "பரிஷ்வங்கோஹநூமத:" (பரிஷ்வங்கோஹநூமத:) - * அம்ருதாஶிக்குப் புல்லையிடவொண்ணாதே! "ஸ்நேஹோமேபரம:" (ஸ்நேஹோமேபரம:) என்று இவ்வுடம்பைவிரும்பினவனுக்கு இத்தையே கொடுக்கவேணுமே. "மயாகாலமிமம்ப்ராப்யதத்த:" (மயாகால மிமம்ப்ராப்ய தத்த:) -"இவன் ஒன்றுகொள்வானொருவனல்லன்; நாம் இவனுக்கு ஒன்று கொடுக்கப்பெறுவது காண்" என்று குறைப்பட்டிருந்தவர், இவன்விலக்காததொரு ஸமயம் பெற்று இப்படிகொடுத்துக்கொண்டு நின்றார். "தஸ்யமஹாத்மந:"(தஸ்யமஹாத்மந:)-ஒருபடி கொடுத்தாராய் ஒன்று செய்த இத்தனைபோக்கி, இரண்டு உடம்புகொடுத்தவனுக்கு ஒருடம்புதரமன்றிறே. †வேண்யுத்க்ரதநத்திலே

---

தாத்பர்யம் - 'ஆனபின்பு' இத்யாதி. மணிமின்னுமேனி - மணிபோலே ப்ரகாசிக்கிற திருமேனி யென்னுதல். மணியிற்காட்டில் ப்ரகாசிக்கிற திருமேனி யென்னுதல். திருமேனி பக்தர்க்காயிருக்குமோ? என்ன, 'ஏஷ:' இத்யாதி. "ஏஷஸர்வஸ்வபூதஸ்துபரிஷ்வங்கோஹநூமத:" இத்யாதி யுத்தகாண்டே ப்ரதமே. படி - திருமேனி. "ஏஷ:" என்றதுக்கு ஸாவம் - 'தான் அநுபவித்து' இத்யாதி. "ஏஷ:" என்றத்தாலே, தன்திருமேனி தனக்கு போக்யமாயிருக்கு மென்கிறது. தனக்கு ரஸித்ததென்னுமதுக்கு ப்ரமாணம் - 'இச்சேத்யாதி'. ஷஷ்டேம்ஶே பஞ்சமே, "ஸமஸ்தகல்யாணகுணாத்மகோஸௌ" இத்யாதி. "இச்சாக்ருஹீத" என்றதுக்கும், "அபிமத" என்றதுக்கும் பேதம் - 'இச்சாக்ருஹீதம்' இத்யாதி வாக்யத்வயத்தாலே. இது ஸர்வஸ்வபூத மென்னுமர்த்தை வ்யதிரேக அந்வயாப்யாம் தர்ஶயதி. 'இதொழிய' இத்யாதி வாக்யத்வயே. "எல்லாம்கொடுத்ததாம்" என்கைக்கு ஹேது -'ஸர்வ அபாஶ்ரயம்' இத்யாதி. ஸமஸ்தபோக்யஜாதங்களுக்கெல்லாம் ஆஶ்ரயம் திருமேனியாகையாலே, அப்படிப்பட்ட திருமேனியைக் கொடுக்கவே எல்லாம் கொடுத்ததா மென்றபடி. 'து' ஶப்தார்த்தம் - மற்றுக்கொடுக்குமதிலும் இத்யாதி. 'தோற்றியிருக்கிறது' - 'து' சப்தத்தாலே யென்று சேஷம். இத்தையொழிய மற்றொன்றைக்கொடுத்தாலோ? என்ன, 'அம்ருதாஶிக்கு' இத்யாதி. இவன் அப்படி பெருமாளுடைய திருமேனியிலே ஆதரமுடையவனோ? என்ன, 'ஸ்நேஹ' இத்யாதி. "ஸ்நேஹோமேபரமோராஜம்ஸ்த்வயிநித்யம் ப்ரதிஷ்டித:। பக்திஶ்சநியதாவீரபாவோநாந்யத்ரகச்சதி" இதிஉத்தர ஸ்ரீராமாயணே சத்வாரிம்ஶஸர்க்கே ஹநூமாந். 'கொள்வானொருவனல்லன்'-விரக்தனாகையாலே என்றபடி. 'விலக்காததொருஸமயம்பெற்று' என்றது - பெருமாளுக்கு ஶோபநவார்த்தை சொல்லி உகப்பிக்கிற காலமாகையாலே அநிஷ்டம் செய்யமாட்டாத கால மென்றபடி. 'உத்கூலமானப்ரீதியாலே கொடுத்தது கொள்ளாதபோது ப்ரீதிக்கு அழிவுவருமிறே' என்று கருதி விலக்கானென்று தாத்பர்யம். "மஹாத்மந:" என்றதுக்கு ஸாவம்-'ஒருபடி' இத்யாதி. படி-திருமேனி, ப்ரகாரமும். இரண்டு உடம்பு கொடுத்தமைக்கு உபபாதநம் - 'வேண்யுத்க்ரதநத்திலே' இத்யாதி. அவகாஹ்யஇத்யாதி.—"தஸ்யோபேந்த்ரவதாதஸ்யஜாதிவேஷாவிதா

---

* அம்ருதாஶி - அம்ருதத்தையுண்ணுபவன். † வேண்யுத்க்ரதநம்-(உயிரைவிட்டிடும் பொருட்டுத்) தலைப்பின்னலைக் (கழுத்திற்சுற்றி மரக்கிளையிலேனும்) கட்டினமை.

பிராட்டி ஒருப்பட்டவன்று அவனை உள்ளாக்கினன்; "அவதாஹ்யார்ணவம்ஸ்வப்ஸ்யே" (அவகாஹ்யார்ணவம்ஸ்வப்ஸ்யே) என்ற பெருமானை மீட்டு அவரை உளராக்கி இப்படி இவர்க்கு இரண்டுஉடம்பு கொடுத்தானிறே அவன். அவன் பலபடி உபகரிக்கையாலே இவர் ஒருபடி உபகரித்தார். [நம்மாயவன்]-ஆஶ்ரிதவிஷயத்தில் அவனிருக்கும்படி எல்லைகாணப்போமோ? இப்பேற்றுக்குச் செய்யவேண்டுவதென்? என்னில்,—[பேர்சொல்லி] - நேர்த்தி இவ்வளவே; பின்னை வாழ்வோடே தலைக்கட்டும். வாழ்கைக்கு ஒருபேரோ! "அச்சுவைபெறினும் வேண்டேன்" என்னும் படியிறே இதுதன்னுடைய போக்யதையிருப்பது. (ரு)

---

ஷா। ராதிர்நிவம்ஶரீரஞ்சஹ்யேதசநாதிநா ॥ அவகாஹ்யார்ணவம்ஸ்வப்ஸ்யேஶ்வஸாதிதே ஹவதாவிநா। அயம்விதஜ்வநார்ஷஸோஷ்பஞ்ஜயேஜஹைஞ்" இதி யுத்தகாண்டே ஸமுத்ரதீரே ஸௌமித்ரிம்ப்ரதி ஜாநகீவிரஹஸந்தப்தசேதா ராமஃ. "உயிஜீவிதஹாயத்தம் ராவவஸ்யஹாதநஃ। ஹாதநாணாஞ்சஹாவாவேஹாதஸ்யராஜகுவஸ்யவ", "அஹஞ்வரவவஶஶஜணஶஹா வஜஃ। வெவெஹ்யாஜஶவேநநாஜ்ய யாதஃவரிரக்ஷிதாஃ." இத்யாதியை உட்கொண்டு தாத்பர்யாந்தரம் – 'அவன் பலபடி' இத்யாதி. மாயவன் – வ்யாமுக்தன். நேர்த்தி-ப்ரயாஸம். ஏகவசநத்துக்கு ஹாவம் – 'வாழ்கைக்கு' இத்யாதி. அதாவது – எல்லாம் சொல்லவேண்டா; ஒருபேரைச் சொல்ல அமையும்; வாழ்வோடே தலைக்கட்டிவிடும்; ஆகையாலே, வாழ்கைக்கு ஒரு பேரோ! என்று, ஈடுபடுகிறாரென்றபடி. கீழே "பேர்சொல்லிவாழ்மின்" என்று – உபாயமாக அருளிச்செய்து, பேர்சொல்லுகைதானே வாழ்ச்சியென்று ப்ராப்யபரமாக அர்த்தாந்தரம் – 'அச்சுவை' இத்யாதி. அதாவது – வாழ்வென்று வேறொன்று வேணுமோ? "எனக்கென்றும் தேனும் பாலுமமுதுமாய திருமால்திருநாமம்" என்கிறபடியே திருநாமந்தானே போக்யமாயிருக்கு மென்றபடி. "பேர்" என்று ஜாத்யேகவசநம். 'அச்சுவை' இத்யாதி – திருமாலை இரண்டாம்பாட்டு "பச்சைமாமலைபோல்" இத்யாதி. "இச்சுவைதவிர யான்போ யிந்திரலோக மாளு மச்சுவைபெறினும் வேண்டேன்". சுவை – ரஸம். இச்சுவைதவிர – திருநாமத்தினுடைய உக்திமாத்ரத்தாலே பிறந்த இந்த ரஸத்தைவிட்டு, யான் – விளம்பஸஹனன நான், போய் – இஶ்ஶரீரத்தைவிட்டு தேஶவிசேஷத்திலே போய், இந்திரலோகமாளும் – நிரவதிகஐஶ்வர்யயுக்தனுடைய லோகமான பரமபதத்தை யாளுகிற, அச்சுவைபெறினும் வேண்டேன்- ஶ்ருதிப்ரஸித்தமான அந்தரஸம்பெற்றாலும் எனக்கு வேண்டாவென்று பாசுரத்துக்கு அர்த்தம். இத்தால் சொல்லிற்றாயிற்று – இங்கேயிருந்து திருநாமத்தை யநுபவிக்கும் இனிமைக்குப் பரமபதாநுபவமும் ஸத்ருஶமன்றென்னும்படி தமக்குத் திருநாமம் ரஸித்தபடியைச் சொல்லுகிறது.

"பணிமின்திருவருள்" இத்யாதிக்கு – பூர்வர்கள் நிர்வாஹத்தில், "பாண்டேன் வண்டறையும் குழலார்கள்" இத்யாதியை அநுஸந்திப்பது. (ரு)

---

## ஆறாம்பாட்டு.

வாழ்ந்தார்கள்வாழ்ந்தது மாமழைமொக்குளின்மாய்ந்துமாய்ந்து
ஆழ்ந்தாரென்றல்லால் * அன்றுமுதலின்றறுதியா
வாழ்ந்தார்கள்வாழ்ந்தேநிற்ப ரென்பதில்லைநிற்குறில்
ஆழ்ந்தார்கடற்பள்ளி யண்ணலடியவராமினே.

**ஆ.**—ஐஶ்வர்யத்தைப்பெற்று வாழ்ந்தார் ஒருவருமில்லையோ வென்னில்; வாழ்ந்தார்கள் வாழ்ந்ததும் வர்ஷஜலபுத்புதம்போலே அத்யல்பகாலம்வாழ்ந்து நஶித்துப்போனவத்

---

* அன்றுமுதலின்றிறுதியா என்று வழங்கும் பாடம் ஏற்கும்.

தனை: பண்டுவாழ்ந்தவர்கள் தாங்கள் வாழப்புக்கஅன்றுமுதல் இன்றுஅறுதியாக வாழ்ந்தே நிற்கக்கண்டிலோம்; ஆனபின்பு, நித்யஸித்தமான ஐஶ்வர்யத்தை வேண்டியிருக்கில், ஆஶ்ரித பரித்ராணார்த்தமாக வந்து திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற பரமபுருஷன் திருவடிகளிலே அடிமைசெய்கையாகிற நித்யஸித்த திவ்யைஶ்வர்யத்தைப் பற்றுங்களென்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், ஸ்ருஷ்டிகாலம் தொடங்கி இன்றளவும் ஐஶ்வர்யவான்களாய்க்கொண்டு ஜீவித்தாரொருவரையும் கண்டிலோம் என்கிறார்

[வாழ்ந்தார்கள் என்று தொடங்கி.] - ஐஶ்வர்யத்தைப்பெற்று வாழ்ந்தார் ஒருவருமில்லையோ? என்னில், - வாழ்ந்தவர்கள் வாழ்ந்தது வர்ஷஜலபுத்புதம்போலே நஶித்து நஶித்து ஜீவித்த நாள் பண்ணின பாபத்தாலே அதோகதியிலே விழுந்து போன அத்தனை போக்கி. 'மாமழைமொக்குள்' என்றது,மஹாவர்ஷத்தில் குமிழி சடக்கென மாயுமென்னுமிடம் தோற்றுகைக்காக. ['நிற்குறில்' என்றுதொடங்கி]-நிலைநின்ற புருஷார்த்தம் வேண்டியிருக்கில், ஆழ்ந்து அகன்றிருந்துள்ள திருப்பாற்கடலிலே ஸமாஶ்ரயணீயனாய்க் கொண்டு கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரனுக்கு அடியாராகுங்கோள்.

ப.—அநந்தரம், நிலைநின்ற ஜீவநமில்லாமையாலே, ஸ்திரஜீவநம் வேண்டியிருப்பார் க்ஷீரார்ணவஶாயிக்கு ஶேஷபூதராகுங்கோ ளென்கிறார்.

வாழ்ந்தார்கள் - வாழ்ந்தார்களாகத் தந்தாமைநினைத்திருக்கிறவர்கள், வாழ்ந்தது - ஜீவித்தது, மா மழை - பெருமழையில், மொக்குளின்-குமிழிபோலே, மாய்ந்துமாய்ந்து - நசித்துநசித்து, ஆழ்ந்தார் - அதஃபதித்தார்கள், என்று அல்லால் - என்னுமித்தனையொழிய, அன்றுமுதல் - உத்பத்திவேளைதொடங்கி, இன்று அறுதியா - இன்றெல்லையாக, வாழ்ந்தார்கள் - ஜீவித்தவர்கள், வாழ்ந்தேநிற்பர் - ஏகரூபமாக ஜீவித்தேநிற்பர், என்பது - என்கிற அர்த்தந்தான், இல்லை - இல்லை: நிற்குறில் - நிலைநின்றவாழ்வு கிட்டவேண்டில், ஆழ்ந்து - ஆழ்ந்து, ஆர் - நிறைந்த, கடல் - கடலை, பள்ளி - படுக்கையாகவுடைய, அண்ணல் - ஸர்வஸ்வாமிக்கு, அடியவர் - அடியார், ஆமின் - ஆகுங்கோள். ஆர்தல் - இடமுடைமையுமாம்.

இ.—ஆறும்பாட்டில், 'நாட்டிலே நிலைநிற்கஜீவிக்கிறாரும் சிலர் இல்லையோ?'என்னில்,—'ஸ்ருஷ்டிகாலம் தொடங்கி இற்றையளவும் வர ஏகரூபமாக ஜீவித்தா ரொருவருமில்லை' என்கிறார்.

[வாழ்ந்தார்கள் இத்யாதி] - லோகத்தில் ஜீவித்தவர்கள் ஜீவித்தது. இவர் விநாஶமாக நினைத்திருக்குமத்தையிறே அவர்கள் வாழ்வாக நினைத்திருக்கிறது; "இன்னங்கெடுப்பாயோ" என்றாரிறே இவர். [மாமழைமொக்குளின்] - பெருமழைக்குமிழிபோலே ; "ஜலபுத்புதவத்" [illegible]. 'மாமழை' என்கிறது, அநந்தரம் விழுந் துளியோடே நசிக்கு மென்கைக்காக. [மாய்ந்துமாய்ந்து] - நசித்துநசித்து. [ஆழ்ந்தார் இத்யாதி] - ஜீவித்தநாள் பண்ணின பாபத்தாலே அதோகதியிலே விழுமதொழிய ஸ்ருஷ்டிகாலமே தொடங்கிஇற்றையளவும் வர ஜீவித்தவர்கள் ஒருபடிப்பட ஜீவித்தார்கள் என்னும் அர்த்தந்தான் முதலிலே இல்லை. அர்த்தந்தான் முதலில் உண்டாகிலிறே இவர்களுக்கு உண்டு இல்லை யென்னவேண்டுவது. [நிற்குறில்] - நிலைநின்ற புருஷார்த்தம் வேண்டியிருக்கில். [ஆழ்ந்துஆர்கடல்] - ஆழ்ந்து பரந்த கடலைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரன். உறுத்தாதபடி ஆழத்தையும் அஸங்குசிதமாகக் கண்வளர்ந்தருளுகைக்குப் பரப்பையும் உடைத்தாகை; திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தது, கர்மநிபந்தநமாகவன்றிறே; ஆஶ்ரயணீயனாகைக்கிறே. அவன் நினைவோடே சேர ஸ்வரூபாநுகுண

-மான புருஷார்த்தத்தைப் பற்றுங்கோள். [ஆமின்] - ஶேஷமல்லாதவஸ்து இன்று ஶேஷமாயிற்றாக நினைத்திருக்கும் ஸர்வேஶ்வராபிப்ராயத்தாலே சொல்லுகிறது.

ஈடு.—ஆரும்பாட்டு. வைத்யர்கள் பிழைத்தாரையெண்ணுமாபோலே முடிந்தவர்களை யெண்ணுகிறதேன்? ஜீவித்தவர்களும் சிலரில்லையோ? என்ன, அது இருந்தபடி கேட்கலாகாதோ பின்னை? என்கிறார்.

[வாழ்ந்தார்கள் இத்யாதி] - ஜீவித்தாராயிருக்கிறவர்கள் ஜீவித்ததெல்லாம். அவர்கள் வாழ்ந்தாராக நினைத்திருக்கிறார்கள்: இவர் 'விநாஶம்' என்று இருக்கிறார். அவர்கள் வாழ்வாக நினைத்திருக்கிற இத்தையிறே, * "இன்னங்கெடுப்பாயோ" என்று கேடாகவே நினைத்திருக்கிறது. [மாமழை மொக்குளின்]—பெருமழைக்குமிழிபோலே; "ஜலபுத்புதவத்ஸமம்" (ஜலபுத்புதவத்ஸமம்). 'மாமழை' என்கிறது - அநந்தரம் விழுந்த துளியோடே நசிக்குமென்கைக்காக. 'மாய்ந்துமாய்ந்து' - நசித்துநசித்து. [ஆழ்ந்தாரென்றல்லால்]—ஜீவித்தநாள்பண்ணினபாபத்தாலே அதோகதியிலே விழுந்து தறைப்படுமேதொழிய. [அன்று இத்யாதி] - ஸ்ருஷ்டி காலந்தொடங்கி இற்றை யளவும் அவர்கள் ஜீவித்தவர்கள் ஒருபடிப்பட ஜீவித்தேபோந்தார்களென்னு மிவ்வர்த்தந்தானும் முதலிலே யில்லை. [நிற்குறில்] - நிலைநின்ற புருஷார்த்தம் வேண்டியிருந்திகோளாகில். [ஆழ்ந்தார் இத்யாதி] - ஆழ்ந்து பரந்த கடலைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரன். திருமேனியின் ஸௌகுமார்யத்துக்கீடாக உறுத்தாதபடியான ஆழத்தையுடைத்தாய், திவ்யாவயவங்களைப் பரப்பிக்கொண்டு கண்வளருகைக்கு ஈடான பரப்பையுடைத்தாகை. திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது கர்மவஶ்யனன்றிறே, ஆஶ்ரயணீயனாகைக்கிறே; ஆனபின்பு, அவன் நினைவோடே சேர ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தைப் பற்றுங்கோள். [அடியவராமினோ] - அவன்ஶேஷியாயிற்றபின்பு நீங்கள் உங்களுடைய ஶேஷத்வத்தை இசையப் பாருங்கோள். அதவா, [அடியவராமினோ] - அடிமையல்லாததோரு வஸ்துவை இன்றுஅடிமையாக்கிக்கொடுத்ததாக நினைத்திருக்கும் பகவதபிப்ராயத்தாலே சொல்லிற்றாகவுமாம். (சா)

---

ஆரும்பாட்டு – வாழ்ந்தார்கள் இத்யாதி. "அன்று முதலின்றறுதியா வாழ்ந்தார்கள் வாழ்ந்தேநிற்பரென்பதில்லை' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை – 'வைத்யர்கள்' இத்யாதி.

'வாழ்ந்தார்கள்' என்று – தம்மோடு ஒட்டறச் சொல்லுவானேன்? என்ன, 'அவர்கள்' இத்யாதி. அப்படி அவர்கள் வாழ்வாகநினைத்திருந்தத்தை இவர் "விநாசம்" என்று நினைத்திருப்பரோ? என்ன, 'அவர்கள்' இத்யாதி. 'மொக்குளின்' என்றது – உபமாநார்த்தே பஞ்சமீ. 'ஜலபுத்புதவத்ஸமம்' என்றது, ஏககாலத்திலே பிறந்து போகிறதுக்கு ப்ரமாணம். ஸமம் – யுகபத். "நக்ஷத்ரேணவிநஶ்யந்தி ஜலபுத்புதவத்ஸமம் । ஸம்பத்யந்தே விநஶ்யந்தி ஜாயந்தே ச ஸஹஸ்ரஶ:" இதி ப்ரதமேஶ்லோகே த்விதீயே. 'மழைமொக்குள்' என்னுமல், 'மாமழைமொக்குள்' என்றதுக்கு பாவம் 'மாமழையென்கிறது' இத்யாதி. மாமழை – நிரந்தரவர்ஷம். மொக்குள் – குமிழி. 'முதலிலேயில்லை' – 'வாழ்ந்தேநிற்பர்' என்கிற வஸ்துஸ்வரூபமே யில்லை; இனி இவற்றுக்கு தர்மிகளைத் தேடுவானேன்? என்றபடி. ஆர்தல் – மிகுதியாய், பரப்பைச் சொன்னபடி. 'ஆழ்ந்து, ஆர்' என்கிற விசேஷணத்வயத்துக்குபாவம்–'திருமேனியின்' இத்யாதி. "கடற்பள்ளியண்ணல்" என்று விசேஷித்ததுக்கு பாவம் 'திருப்பாற் கடலிலே' இத்யாதி. 'புருஷார்த்தத்தைப் பற்றுங்கோள்'இதி - 'அடியவராமினோ' என்றதுக்கு பாவம்;வ்ருத்தி பர்யந்தம் விவக்ஷிதமென்றபடி. "தாஸஸ்ஸத்வஸ்ஸத்வ" என்னுநிற்க, 'அடியவராமின்' என்று இப்போது விதிக்கிறதென்? என்ன, தாத்பர்யத்வயம் 'அவன்' இத்யாதி வாக்யத்வயத்தாலே. முந்தினதுக்கு – ஶேஷத்வ ஸம்ப்ரதிபத்தியிலே தாத்பர்யம்; இரண்டாவது – ஈஶ்வராபிப்ராயத்தைப்பற்ற. க்ரமேண அந்வய:. (சா)

---

* திருவாய்மொழி, 6, 9, 8.

## ஏழாம் பாட்டு.

ஆமின்சுவையவை யாறோடடிசிலுண்டார்ந்தபின்
தூமென்மொழிமடவார் இரக்கப்பின்னுந்துற்றுவார்
ஈமினெமக்கொருதுற்றென்று இடறுவராதலின்
கோமின்துழாய்முடி யாதியஞ்சோதிகுணங்களே.

ஆ.—அந்நபாநாதி விஷயரஸங்களும் அத்யந்தம் அஸ்திரம் அதிக்ஷுத்ரமாதலால் துழாய்முடிஆதியஞ்சோதிகுணங்களைக் கோமின்கள் என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், அந்நபாநாதிபோகங்களுடைய அநித்யதையை அருளிச்செய்கிறார்

['ஆமின்' என்று தொடங்கி.] இனிதான ரஸம் ஆறோடு ஸபஹுமானமாக இட்ட சோற்றை உண்டு சமைந்தபின்பு பேச்சின் இனிமையாலே சொல் மறுக்கவொண்ணாதபடியான ஸ்த்ரீகள் இரக்க, மறுக்கமாட்டாமையாலே பின்னையும் உண்ணுநிற்குமவர்கள். ['ஈமினெமக்கு' என்று மேலுக்கு]—அந்தஸ்த்ரீகள்வாசலிலே சென்று 'எல்லீரும்கூடி எனக்கு ஒரு பிடியிடவேணும்' என்று வேண்டித் தட்டித் திரிவர். இப்படி விஷய போகங்கள் அநித்யமாகையாலே, ஜகத்துக்குக் காரணமாய் நிரவதிகஸௌளந்தர்ய யுக்தனுமாய்த் திருத்துழாயாலே அலங்க்ருதனானவனுடைய கல்யாணகுணங்களை அநுஸந்தியுங்கோள்.

ப.—அநந்தரம், தேஹபோஷணஹேதுவான அந்நபாநாதிபோகமும் அநித்யமாகையாலே ஸர்வகாரணபூதனை ஸர்வஸ்மாத்பரனுடைய குணங்களை அநுஸந்தியுங்கள் என்கிறார்.

ஆம் - ப்ரக்ருத்யநுகுணமாய், இன் - ஹ்ருத்யமாய், அவை - லோகப்ரஸித்தமான, ஆறுசுவையோடு - (மதுர அம்ல லவண திக்த கடு கஷாய மாகிற) ஆறுரஸத்தோடே கூடின, அடிசில் - (விலக்ஷணமான) அந்நத்தை, உண்டு - புஜித்து, ஆர்ந்தபின் - பூர்ணரானபின்பு, தூ - (பரிவாலுண்டான ஸஹ்ருதயத்வத்தாலே) சுத்தமாய், மென் - (ஶ்ராவ்யமாம்படி) ம்ருதுவான, மொழி - பாஷணத்தையுடைய, மடவார் - (பவ்யைகளான) ஸ்த்ரீகள், இரக்க - அபேக்ஷிக்கையாலே, (அதுமறுக்கமாட்டாமல்), பின்னும் - பின்னும், துற்றுவார் - வருந்தி புஜித்துப்போருமவர்கள், (அந்த ஸம்பத்துநசித்தவாறே அந்தஸ்த்ரீகளிருந்த விடத்தே சென்று, நீங்களெல்லீருங்கூட), எமக்கு - எங்களுக்கு, ஒரு துற்று - ஒரு பிடிசோறு, ஈமின் - இடவேணும், என்று - என்று அபேக்ஷித்து, இடறுவர் - (அதுகிடையாதொழியிலும் வாசல்தோறும்) தட்டித்திரிவர்: ஆதலின் - ஆதலால், துழாய் - திருத்துழாயாலே அலங்க்ருதமான, முடி - திருமுடியையுடையனாகையாலே நிரதிசயபோக்யனாய், ஆதி - ஸர்வகாரணபூதனாய், அம் - தர்ஶநீயமாய், சோதி - தேஜோமயமான திவ்யவிக்ரஹத்தையுடையனான ஸர்வேஶ்வரனுடைய, குணங்கள் - குணங்களை, கோமின் - ("ஸங்க்ராஹ்யாணி" என்கிறபடியே) சேர்த்து புஜியுங்கோள்.

கோத்தல் - சேர்த்தல். எமக்கு என்னும் பன்மையால் - அவ்வவஸ்தையிலும் ஸ்வபஹுமாநம் தோற்றுகிறது.

இ.—ஏழாம் பாட்டில், அந்நபாநாதி போகங்களும் அநித்யம் என்கிறார்.

[ஆம் இன் சுவை] - இனிதானசுவை. [ஆம்] என்றது, ஆன என்றபடி; ஸித்தமானவையென்கை. [அவை ஆறோடு]-ஷட்ரஸமென்று ப்ரஸித்தமானவற்றோடேகூட, [அடிசில்] என்று

க்ஷேபிக்கிருர். 'முதலியார்' என்றும், 'அடிசில்' என்றுமிறே வ்யவஹரிப்பது. [உண்டார்ந்த பின்] - பூர்ணமாக ஜீவித்தபின். [தூமென் இத்யாதி] - பரிவாலும் பேச்சின் இனிமையாலும் மறுக்க வொண்ணுதபடி அஸாதாரணைகளான ஸ்த்ரீகள் இரக்கப் பின்னும் ஜீவிக்குமவர்கள். [ஈமின் இத்யாதி] - அவர்களை வேறே சிலர் கொண்டுபோனவிடங்களிலே தன்வயிறு வாழாமை யாலே சென்று எல்லாருமாக 'எனக்கு ஒரு பிடிதரவேணும்' என்னும். [எமக்கு] - பண்டுநல்லது கண்டால் தன்வாயில்இடாதே அவர்களுக்குக் கொடுக்குமவன் தன்செல்லாமையாலே 'எமக்கு' என்கிருனிறே. [இடறுவர்] - அவர்கள் முகம்பாராதொழிந்தாலும் தட்டித்திரிவர். [ஆதலின்]- ஜீவனத்தினுடைய நிலையாமை இதுவானபின்பு. [கோமின் இத்யாதி] - ஜகத்காரணபூதனுய் நிரவதிகஸௌந்தர்யயுக்தனுய் ஒப்பனையழகையுடையனுன ஈஸ்வரனுடைய நிரவதிகக்ல்யாண குணங்களைச் சேர்த்து அநுபவியுங்கோள்; "ஜுஷாஉம், வொஸூஷெ" என்று. "ஓவாதவூணாக வுண்" என்கிறபடியே அநுபவியுங்கோள்.

ஈடு—ஏழாம்பாட்டு. 'ஐஸ்வர்யத்துக்கு நீர் சொல்லுகிற தோஷம் உண்டேயாகி லும், அந்நபாநாதிகள் தாரகமுமாய் போக்யமுமாயிருக்கிற ஆகாரமுண்டே' என்ன, 'அதுவும் நிலை நில்லாது' என்கிருர்.

[ஆமின் சுவை] - ஆன இனியசுவை; நன்றான நல்ல ரஸம். [அவையாறேடு] - "ஷட் ரஸம்" என்று ப்ரஸித்தமானவற்றேடேகூட. [அடிசிலுண்டு] - முன்பு இரந்துண்டு திரிந்தவன், நாழியரிசிபெற்று ஜீவிக்கப்புக்கவாறே ஒருவெள்ளாட்டியையும் ஸம்பாதித்து 'முதலியார்' என்ன வும்பண்ணி 'அடிசிலுண்ணுநின்றுர்' என்னவும்பண்ணும். [ஆர்ந்தபின்]-கண்டதடைய இட்டு வயிற்றைநிரப்பி, உதிரங்குடித்து வாய்விட்ட அட்டைபோலே பெயரவும் திரியவும் மாட்டாதே கிடந்து புரளாநிற்குமே; அவ்வளவிலே இவனுக்கு ஸ்நேஹிகளாயிருப்பார் சில ஸ்த்ரீகள் வந்து, 'உடம்பு பதர்போலேயிருந்தது; இதுகொண்டு எங்ஙனே ரக்ஷ்யவர்க்கமான எங்களை நோக்கப் பார்க்கிறது?' என்பர்கள்; அத்தைக் கேளா, 'நாம் உண்டிலோமோ?' என்று இவன்தானும் ப்ர மிக்கும். முன்புஇவர்கள்அபேக்ஷித்தால் மறுக்குமே; ஒருதிரளையைத் திரட்டி, 'இதுஎன்? பிடி' என்பர்கள். பின்னை புஜியாதொழியமாட்டானே; அப்பேச்சின் இனிமையிலே துவக்குண்டு பின் னையும் புஜியாநிற்கும். இவர்களை இக்கட்டளையிலே வேறே யொருவன் கைக்கொள்ளுமே; அவர்களையும் முன்புத்தையவனைப்போலே இரந்துஊட்டாநிற்பர்களே இவர்கள்; அங்கே, தன் வயிறுவாழாமல் சென்று 'நீங்களெல்லாருமாக எனக்கு ஒருபிடி தரவேணும்' என்னும். [எமக்கு] - பண்டு நல்லது கண்டால் தன்வாயில்இடாதே இவர்களுக்கு ஆக்கிப்போந்தவன், தன் செல்லாமை யாலே எனக்கு என்கிருனிறே. அப்போதையவனுக்கு ப்ரியமாக அவர்கள்முகம்பாரார்களிறே. [இடறுவர்] - பின்னையும் தட்டித்திரிவர்கள்.

---

ஏழாம்பாட்டு 'ஆமின்' இத்யாதி. 'அடிசிலுண்டார்ந்தபின், ஈமினெமக்கொரு துற்றென்று இடறு வர்' இத்யாதிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'ஐஸ்வர்யத்துக்கு' இத்யாதி.

'நன்றான நல்ல' என்ற மீமிசையால்-ஆதிக்யம் விவக்ஷிதம். மதுர அம்ல லவண திக்த கடு கஷாய மிறே - ஷட்ரஸமாவது. 'சோறுண்டு' என்னுதே, 'அடிசிலுண்டு' என்கிறதென்? என்ன, 'முன்புஇரந்து' இத்யாதி. அவர்கள் வெள்ளாட்டிகள் சொல்லுகிற வார்த்தையை அநுவதிக்கிறபடியென்று கருத்து. முதலி யார் - ஶ்ரேஷ்டவாசி. வாய்விட்ட - கடித்தஇடத்தை விட்ட. பெயரவும் - சலிக்கவும். 'ப்ரமிக்கும்'—ப்ர மத்துக்கு ஹேது - தூய்மையும் மென்மையும் பவ்யதையும். 'மடவாரிரக்க' என்ன அமைந்திருக்க, 'தூமென் மொழி' என்று விசேஷிக்கிறதென்? என்ன, 'முன்பு இவர்கள்' இத்யாதி. பரிவாலுண்டான ஸஹ்ருதயத்வ த்தாலே சுத்தமாய் ஶ்ராவ்யமாம்படி ம்ருதுவான பேச்சையுடையவர்க ளென்று சப்தார்த்தம். 'தூமென் மொழி' என்றத்தைப் பற்ற 'அப்பேச்சினினிமையாலே' என்றது. 'ஈமின்' என்கிற பன்மைக்கும், 'ஒரு துற்று' என்றத்துக்கும் சேர,'நீங்களெல்லாருமாக எனக்கொரு பிடி' என்றது. இடறுவர் - தட்டித்திரிவர்கள்.

[ஆதலின்] - ஆனபின்பு, ஜீவநத்தின் நிலையாமை இதுவானபின்பு. [கோமின் இத்யாதி]- ஸர்வைஶ்வர்ய ஸூசகமான திருத்துழாய்மாலையைத் திருமுடியிலேயுடையனாய், ஜகத்காரண பூதனாய், நிரவதிக தேஜோரூபமான விக்ரஹத்தையுடையனா யிருந்துள்ளவனுடைய குணங்களைக் கோமின். [ஆதியஞ்சோதிகுணங்களைக் கோமின்] - ஸ்வரூபகதமாயும் விக்ரஹகதமாயுமுள்ள கல்யாணகுணங்களைச் சேர்த்து அநுபவியுங்கோள், "அஹமந்நாத:", "ஸோஶ்நுதே" (அஹமந்நாத:), (ஸோஶ்நுதே)என்று. "ஓவாதவூணாகவுண்" என்கிறபடியே அநுபவியுங்கோள். (எ)

---

## எட்டாம்பாட்டு.

---

> குணங்கொள்நிறைபுகழ்மன்னர் கோடைக்கடன்பூண்டிருந்து
> இணங்கியுலகுடனாக்கிலும் ஆங்கவனையில்லார்
> மணங்கொண்டபோகத்துமன்னியும் மீள்வர்கள் மீள்வில்லை
> பணங்கொளரவணையான் திருநாமம்படிமினே.

*ஆ.—தாநாதி க்ஷத்ரதர்மோபேதராய்க்கொண்டு ராஜ்யாநுபவத்திலே ப்ரவ்ருத்தரானாலும் எம்பெருமானை ஆஶ்ரயியாதொழியில் அந்தராஜ்யம் ஸித்தியாது; அவனையாஶ்ரயித்துப் பெற்றாலும் சிலகாலம் அநுபவித்து நிவ்ருத்தராவர்; ஆதலால், தன்திருவடிகளை ப்ராபித்தாரை ஒருநாளும் கைவிடாத எம்பெருமான்திருவடிகளையே ப்ராப்யமாகப் பற்றுங்கள். 'அவன் திருவடிகளை ப்ராபித்தாரைக் கைவிடானோ?' என்னில்,—'திருவநந்தாழ்வானைக் கைவிடிலன்றோ திருவடிகளை ப்ராபித்தாரைக் கைவிடுவது' என்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், இந்த ராஜ்யாதிபோகங்கள் எம்பெருமானை ஆஶ்ரயியாவிடின் கிடையா; ஆஶ்ரயித்துப் பெற்றாலும் நிலைநில்லா என்கிறார்*

[குணங்கொள் என்று தொடங்கி] - மேலுக்குக் குணவான்களாய் குணவத்தாப்ரதையையுமுடையரான ராஜாக்கள் தங்களுக்குள்ள தநத்தை எல்லாருக்கும் கொடுக்கையே ஸ்வபாவமாய் இவ்வழியாலே எல்லாரோடும் சேர்ந்து தங்களைப் பிரிய வொண்ணாதபடி சேர்த்துக்கொண்டார்களாகிலும், எம்பெருமான் ப்ரஸாதமில்லையாகில் ராஜ்யந்தான் கிடையாது. [மணங்கொண்ட என்று தொடங்கி] - ராஜ்யஸுகம்பெற்றாலும் நிலைநில்லாது; ஆனபின்பு,தன்னுடைய நாமோச்சாரணம் பண்ணினாரைத் திருவநந்தாழ்வானைப்போலே ஶேஷமாக்கிக்கொள்ளு

---

விவரணம் - 'ஜீவநத்தின்' இத்யாதி. 'ஆதி' என்றத்தைப் பற்ற, 'ஸ்வரூபகதமாயும்' என்றது; 'அஞ்சோதி' என்றத்தைப் பற்ற, 'விக்ரஹகதமாயும்' என்றது. கோமின், கோக்கை - சேர்க்கையாய், சேர்த்து அநுபவியுங்கோ ளென்றபடி. 'ஷட்ரஸமான அந்நங்களைப் புஜித்தவர்கள்' என்றதுக்கு ப்ரதிகோடியாக அர்த்தம் - 'அந்நாத' இத்யாதி; ஜ்ஞாநஶக்த்யாதி ஷட்குணங்களாகிற ;ஷட்ரஸயுக்தமாக ஈஶ்வரனாகிற அந்நத்தை புஜியுங்கோ ளென்று கருத்து. 'ஓவாதவூணாகவுண்' இதி- "கணைநாணி லோவாத்தொழிற் சார்ங்கன்தொல்சீரை நன்னெஞ்சே, யோவாதவூணாகவுண்"- திருச்சரங்கள் நாணினின்றும் மாறாதசெயலையுடைய ஸ்ரீசார்ங்கத்தையுடைய சக்ரவர்த்திதிருமகனுடைய ஸ்வாபாவிகமான ஸௌர்யாதி கல்யாணகுணங்களை நல்லநெஞ்சே! நித்யபோகமாக புஜியென்று பாசுரத்துக்கு அர்த்தம். ஓவாதவூணாக - நித்யபோகமாக. பெரிய திருவந்தாதி எழுபத்தெட்டாம்பாட்டு - 'துணைநாள்' இத்யாதி.

ஆமின்சுவைதொடங்கி, இடறுவாரதலின் - துழாய்முடி யாதியஞ்சோதிகுணங்களை - கோமின் இத்யந்வய:. (எ)

மவனுடைய திருநாமங்களிலே ப்ரவணராகுங்கோள். போகத்துக்கு மீள்வில்லை. தாநதர்மத்துக்குப் பலமாக எம்பெருமானைப் பற்றாதே ஸ்வர்க்காதி போகங்களைப் பற்றினால் நிலைநில்லா என்றுமாம்.

ப.—அநந்தரம், பகவத்ப்ரஸாதமில்லாதபோது லப்தமான ராஜ்யமும் நிலைநில்லாதாதலால் அநந்தசாயி திருநாமங்களை அப்யஸியுங்கோள் என்கிறார்.

குணம் - சீலாதிகுணங்களுக்கு, கொள் - ஆகரபூதராய், நிறை - (இக்குணங்களையுடைய லோகமெல்லாம் கொண்டாடுகையாலே) பூர்ணமான, புகழ் - புகழையுடையராய், மன்னர் - அபிஷிக்தக்ஷத்ரியபுத்ரர்களாய், கொடை - (ஸ்வஸம்பத்தை லோகோபஜீவ்யமாக்கும்) ஔதார்யமாகிற, கடன் - ஸ்வபாவத்தை, பூண்டு - ஏறிட்டுக்கொண்டு, இருந்து - ப்ரதிஷ்டிதராய், இணங்கி - ("[illegible]" என்கிறபடியே)பொருந்தி, உலகு - லோகம், உடன் ஆக்கிலும் - உடன்படும்படி ரக்ஷித்துப்போரிலும், ஆங்கு - அந்த ஐஶ்வர்யவிஷயமாக, அவனை - (ஐஶ்வர்யப்ரதனை) ஸர்வேஶ்வரனை, இல்லார் - ஆஶ்ரயித்துக்கொண்டுபோருகையில்லாதவர்கள்,-மணம் - நித்யோத்ஸவமான செவ்வியை, கொண்ட - உடைத்தான, போகத்து - ஐஶ்வர்யபோகத்திலே, மன்னியும் - இப்படி நிலைநின்றார்களேயாகிலும், மீள்வர்கள்- நிவ்ருத்தைஶ்வர்யராவர்கள் ; மீள்வு இல்லை - புநராவ்ருத்தியில்லாத புருஷார்த்தம் ஸித்திக்கும்: பணம் கொள்-(ஸ்வஸ்பர்ஶத்தாலே) விரிகிற பணங்களையுடைய, அரவு - திருவநந்தாழ்வானை, அணையான் - அணையாகவுடையனாகையாலே ஆஶ்ரித ஸம்ஶ்லேஷ ஸ்வபாவனானவனுடைய, திருநாமம் - திருநாமங்களை, படிமின் - ("[illegible]" என்னுங்கணக்கிலே) அப்யஸியுங்கோள்.

இ.—எட்டாம்பாட்டில், ராஜ்யத்தினுடைய அஸ்தைர்யம் புருஷதோஷத்தாலேயன்றோ? இவன்திருந்தவே அதுவும் ஸ்திரமாகாதோ? என்னில்,----ஆனாலும், இந்ராஜ்யாதிபோகங்கள், எம்பெருமானை ஆஶ்ரயியாவிடில் கிடையா; ஆஶ்ரயித்துப் பெற்றாலும் அவை தன் ஸ்வபாவத்தாலே நிலைநில்லா ; ஆனபின்பு அவன்தன்னையே ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[குணங்கொள் இத்யாதி] - குணவான்களாய் குணவத்தாப்ரதையையு முடையராயிருக்கை. குணவானாகிலும் அப்ராப்தனாகில் உபேக்ஷிப்பர்கள்: [மன்னர்] - அபிஷிக்த க்ஷத்ரிய புத்ரராகை. ப்ராப்தனாகிலும் கிட்டுவாரில்லையே லுப்தனாகில். [கொடை இத்யாதி] - கொடுக்கையே ஸ்வபாவமாயிருப்பது. ஔதார்யம் பண்ணினாலும் மேன்மைபாவித்திருக்குமாகில் பொருத்தமின்றிக்கேயிருக்குமிறே. [இணங்கி] - எல்லாரோடும் பொருந்திவர்த்திக்கை. [உலகுடனாக்கிலும்] - லோகத்தைத் தங்களோடே சேர்த்துக்கொண்டார்களேயாகிலும். "[illegible]" என்னக்கடவதிறே. [ஆங்கவனையில்லார்] - அவன்ப்ரஸாதமடியாகப் பெறாதார்க்கு ராஜ்யந்தான் கிடையாது. [மணங்கொண்டபோகம்] - செவ்வியையுடைத்தான ஐஶ்வர்யம். [மன்னியும்] - அது கிட்டினாலும் அதுக்கு அஸ்திரத்வம் ஸ்வபாவமாகையாலே, மீள்வர்கள். [மீள்வில்லை] - புநராவ்ருத்தியில்லை; எத்தாலேயென்னில்,—[பணங்கொள் இத்யாதி] - ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவநந்தாழ்வானை நிரூபகமாகவுடையவனுடைய திருநாமங்களிலே ப்ரவணராகுங்கோள்; திருநாமத்திலே ப்ரவணரானாரைத் திருவநந்தாழ்வானோபாதி விடானென்கை. "[illegible]" என்னும் படுக்கையையுடையனென்றுமாம். பலாபிஸந்திரஹிதமாக தாநதர்மத்தை அநுஷ்டித்து எம்பெருமானை உத்தேஶ்யமாக்காதே பலாபிஸந்தி யுக்தமாக அநுஷ்டித்து ஸ்வர்க்காதிபோகங்களைப் பற்றினால் நிலைநில்லா என்றுமாம்.

ஈடு.—எட்டாம்பாட்டு. ராஜ்யஸ்ரீ நிலைநில்லாதொழிவது நாட்டோடுபொருந்தி வர்த்தியாதொழியிலன்றே? அவர்களோடு பொருந்திவர்த்திக்கவே அது நிலைநிற்குமே என்ன,—பொருந்திவர்த்தித்தாலும் எம்பெருமானை ஆஶ்ரயியாவிடில் கிடையாது; அவனை ஆஶ்ரயித்துப் பெற்றாலும் அவற்றின் ஸ்வபாவத்தாலே நிலைநில்லா; ஆனபின்பு, அவன்தன்னையே ப்ரயோஜநமாக ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[குணங்கோள் இத்யாதி] - குணங்கொண்டிருப்பாராய்-குணாதிகராயிருப்பாராய்: நிறைந்தபுகழையுடையராய்; பூர்ணையான குணவத்தாப்ரதையை யுடையராய். இப்படியிருந்தாலும் உபேக்ஷிப்பர்கள் அப்ராப்தனாகில்; [மன்னர்] - அபிஷிக்தக்ஷத்ரிய புத்ரர்களாவது. ப்ராப்தராகிலும் கிட்டுவாரில்லையே லுப்தனாகில்; கொடுக்கையே ஸ்வபாவமாயிருப்பது. உதாரனானாலும் ப்ரதாபியாயிருக்குமாகில் கிட்டுவாரில்லையிறே: [இணங்கி] - ஸுலபனாய் எல்லாரோடும் பொருந்தி. [உலகுடன்ஆக்கிலும்]-லோகத்தைத் தங்களோடே சேர்த்துக்கொண்டார்களேயாகிலும்; "ராமோ ராஜ்யமுபாஸித்வா" (ராமோராஜ்யமுபாஸித்வா) என்கிறபடியே சேர்த்துக்கொள்வது. [ஆங்கவனையில்லார்] - அவ்வர்த்தத்தில் அவன் ப்ரஸாதமில்லையாகில் அந்த ராஜ்யஸ்ரீதான் கிடையாது. [மணங்கொண்ட இத்யாதி] - பகவத்ப்ரஸாதத்தாலே ஐஶ்வர்யத்தை ப்ராபிப்பது. [மணங்கொண்டபோகம்] - செவ்வியையுடைத்தான ஐஶ்வர்யம். அந்த ஐஶ்வர்யம் கிட்டினாலும் அதுதன்னின் ஸ்வபாவத்தாலே மீளுவர்கள்.

[மீள்வில்லை] - ஆனபின்பு * "ந ச புநராவர்த்ததே" (நசபுநராவர்த்ததே) என்கிற பேற்றைப் பெற அமையும். எத்தாலேயென்னில்,—[பணங்கோள் இத்யாதி] - ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவநந்தாழ்வானை நிரூபகமாகவுடையவனுடைய திருநாமங்களிலே அவகாஹியுங்கோள். திருநாமத்திலே அவகாஹித்தாரைத் திருவநந்தாழ்வானோபாதி விடானென்கை. அன்றிக்கே, "ஏவம்வித்பாதேநாத்யாரோஹதி" (ஏவம்வித்பாதேநாத்யா

எட்டாம்பாட்டு—'குணங்கொள்' இத்யாதி. 'இணங்கியுலகுடனாக்கிலும்' இத்யாதி, 'திருநாமம் படிமின்' இத்யந்தம் கடாக்ஷித்து அவதாரிகை - 'ராஜ்யஸ்ரீ' இத்யாதி.

விவரணம் - 'குணாதிகராய்' இத்யாதி. பூர்வவாக்யவிவரணம் - 'பூர்ணையான' இத்யாதி. பதங்களுக்கு ப்ரயோஜநம் - 'இப்படி யிருந்தாலும்' இத்யாதி. கொடை - ஔதார்யம். கடன் - ஸ்வபாவம், பூண்டு - ஏறிட்டுக்கொண்டு. இருந்து - ப்ரதிஷ்டிதராய் இதி ஶப்தார்த்த꞉. கொடுக்கையே ஸ்வபாவமாக வுடையரா யிருந்து என்றபடி. கொடுக்கையே கடனென்று - அநதிலங்க்யத்வ குணயோகத்தாலே ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது. உலகுடனாக்கிலும் - லோகங்களை ஸ்வவிதேயமாகப் பண்ணிக்கொண்டார்களேயாகிலும் இத்யர்த்த꞉. இப்படி சேர்த்துக்கொண்ட பேருண்டோ? என்ன, 'ராம' இத்யாதி. "ராமோ ராஜ்யமுபாஸித்வா ப்ரஹ்மலோகம் கமிஷ்யதி" இதி ஸங்க்ஷேபே. 'ஆண்டு' என்னாதே, "உபாஸித்வா" என்கையாலே - எல்லாரையும் அநுஸரித்தாரென்று தோற்றுகிறது. ஆங்கு-அந்த ஐஶ்வர்யத்தில். அவ்வர்த்தத்தில் - கீழ்ச்சொன்ன ராஜ்யஸ்ரீயில். ஆங்கவனையில்லார் - அந்த ஐஶ்வர்யவிஷயமாக, ஐஶ்வர்யப்ரதனான ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயித்துக்கொண்டு போருகை யில்லாதவர்கள் இத்யர்த்த꞉. மணங்கொண்ட போகத்து மன்னியும் - நித்யோத்ஸவமான செவ்வியையுடைய ஐஶ்வர்யபோகத்திலே நிலைநின்றார்களேயாகிலும் இதி ஶப்தார்த்த꞉. 'மன்னியும்' என்ற அபிஶப்தார்த்தம் - 'பகவத்ப்ரஸாத' இத்யாதி.

ஶப்தார்த்தம் - 'ஸ்வஸ்பர்ஶத்தாலே' இத்யாதி. 'அரவணையான்' என்று திருவநந்தாழ்வானோட்டைச் சேர்த்தியை அருளிச்செய்ததுக்கு ஸாவத்வயம்: முந்தினது - 'திருநாமத்திலே' இத்யாதி; இரண்டாவது - 'அன்றிக்கே' இத்யாதி. 'மீள்வர்கள்' என்னும்போது - உயரஏறி மீள்வர்கள் என்று தோற்றுகையாலே,

* சாந்தோக்யே-அ, கடு.

'ரோஹதி) என்கிறபடியே துகைத்தேறலாம்படியான படுக்கையையுடையவ னென்னுதல். பலாபிஸந்திரஹிதமாக தாநதர்மத்தை அநுஷ்டித்து எம்பெருமானை உத்தேஶ்யமாக்காதே, பலாபிஸந்தியுக்தமாக அநுஷ்டித்து ஸ்வர்க்காதிபோகங்களைப் பற்றினால் நிலைநில்லா என்றுமாம். (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

---

படிமன்னுபல்கலன் பற்றோடறுத்துஐம்புலன்வென்று
செடிமன்னுகாயம்செற்றார்களும் ஆங்கவனையில்லார்
குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியும் மீள்வர்கள் மீள்வில்லை
கொடிமன்னுபுள்ளுடை அண்ணல்கழல்கள்குறுகுமினே.

**ஆ.**—இப்படி ஐஹிகமான ஐஶ்வர்யம் அல்பமுமாய் அஸ்திரமுமாயிருந்ததாகில், ஸ்வர்க்காத்யைஶ்வர்யத்தை ப்ராப்யமாகப்பற்றினாலோ? என்னில், ஸ்வர்க்காத்யைஶ்வர்யவாஞ்சையாலே ஐஹிகவிஷயஸங்க பரித்யாக பூர்வகமாக இந்த்ரியங்களை ஜயித்து ஸ்வர்க்கப்ராப்தி விரோதி ஶரீரத்தைப் பரித்யஜித்தவர்களுக்கும் எம்பெருமானை ஆஶ்ரயியாதொழியில், அந்த ஸ்வர்க்காத்யைஶ்வர்யம் ஸித்தியாது; ததாஶ்ரயணத்தாலே ஸித்தித்தாலும் அஸ்திரம்; ஆதலால், இப்படி அல்ப அஸ்திரத்வ பஹுளதுःகத்வ அநர்த்தஹேதுத்வாதி அநேகதோஷதூஷிதமான இந்தஐஶ்வர்யத்தை விட்டு, பெரியதிருவடியைக் கைவிடினும் ஸ்வாஶ்ரிதரை ஒரு நாளும் ஒருதஶையிலும் கைவிடாத எம்பெருமான்திருவடிகளையே பரமப்ராப்யமாகப் பற்றுங்கள் என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஐஹிகமான ராஜ்யாதிகளே யல்ல, உடம்பையொறுத்துப் பெறும் ஸ்வர்க்காத்யைஶ்வர்யஸுகங்களும் நிலைநில்லா என்கிறார்

[படிமன்னு என்று தொடங்கி] - பழையதாய் வருகிற பூமியையும் ஆபரணங்களையும் அவற்றில்நசையோடே கூட விட்டு ஐந்து இந்த்ரியங்களையும் வென்று தபஸ்ஸுக்காக உண்டான தீர்க்ககாலாவஸ்தாநத்தாலே தூறுமண்டும்படி உடம்பைச் செறுத்தவர்களும், அவனைப் பற்றாராகில் ஸ்வர்க்கம் கிடையாது. [கொடிமன்னும் என்று தொடங்கி] - பூமியைப்போலேயன்றியே நெடுநாளிருக்கலாம் ஸ்வர்க்கத்தைப் பெற்றும் இழப்பர். ஆனபின்பு, ஆஶ்ரிதரைத் தனக்கு வ்யாவர்த்தகவிஶேஷணமான பெரியதிருவடியைப்போலே அந்தரங்கராக விஷயீகரிக்கும் ஸ்வபாவனான ஸர்வேஶ்வரன்திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள். [மீள்வில்லை] - உடம்பையொறுத்துத் தபஸ்ஸுபண்ணினாலும் அதுக்குப் பலதயா எம்பெருமானைப்பற்றாதே ஸ்வர்க்கப்ராப்தியைப் பற்றினால் அது நிலைநில்லாது என்றுமாம்.

---

ஐஹலௌகிகம் ஐஶ்வர்யம் அஸ்திரமென்று கீழ் அருளிச்செய்த யோஜனையன்றிக்கே, இத்தைப்பற்றப் பாரலௌகிக ஐஶ்வர்யமான ஸ்வர்க்காதிகள் நித்யமாயிருக்குமே யென்ன, அதுவும் அஸ்திரமென்று யோஜநாந்தரம் - 'பலாபிஸந்திரஹித' இத்யாதி. 'ஸ்வர்க்கஸித்திக்கு இந்த்ரத்யும்நன் குணவத்தாப்ரதையையுண்டாக்கிக் கொண்டான்' என்று சொல்லக்கடவதிறே; ஆகையாலே, குணவான்களானமை போராது, குணவத்தாப்ரதையும் வேணுமென்று கருத்து. மீள்வில்லை - மீட்சியில்லை; புநராவ்ருத்தியில்லை. குணங்கொள் இத்யாரப்ய, மீள்வர்கள்; ஆனபின்பு; பணங்கொள் தொடங்கி, படிமின்; மீள்வில்லை இத்யந்வயஃ. (அ)

ப.—அநந்தரம், இப்படி பாரலௌகிகமான ஸ்வர்க்காதிஸுகமும் நிலைநில்லாமையாலே, நிலைநின்ற புருஷார்த்தத்தைக் கொடிகட்டிக்கொடுக்கும் ஈஶ்வரனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

படி-க்ஷேத்ரத்தையும், மன்னு-(கழற்றுமல்) என்றும் பூண்டுபோந்த, பல்-பலவகைப்பட்ட, கலன்-ஆபரணங்களையும், பற்றோடு-ஸங்கத்தோடேகூட, அறுத்து - விட்டு, ஐம்புலன் - (விஷயாந்தரப்ரவணமான) இந்த்ரியங்களைந்தையும், வென்று - (ஸ்வவஶமாம்படி) வென்று, செடி மன்னு - (தீர்க்ககாலம் தபஸ்ஸுபண்ணுகையாலே) தூறுமண்டிக்கிடக்கிற, காயம் - ஶரீரத்தை, செற்றார்களும் - (உபவாஸாதிகளாலே) ஒறுத்துப்போந்தவர்களும், மன்னும் - (இந்தத்தபஃபலமாய் கல்பாவஸாந) ஸ்தாயியான, குடி-குடியிருப்பையுடைத்தாய், இன் - ஸுகோத்தரமான, சுவர்க்கம் - ஸ்வர்க்கத்தை, எய்தியும்-பெற்றார்களேயாகிலும், (அந்த போகஸ்தைர்யத்துக்கு உறுப்பாக), அவனை - (பலப்ரதனான) அவனை, ஆங்கு-அங்குமிருந்து, இல்லார்-ஆஶ்ரயிக்கையில்லாதவர்கள், மீள்வர்கள் - நிவ்ருத்தராய்ப்போவர்கள்; மீள்வில்லை - நிவ்ருத்தியில்லாத பலமுண்டாகைக்கு, கொடி - த்வஜத்திலே, மன்னு-நித்யஸந்நிதிபண்ணும், புள் - பெரியதிருவடியை, உடை-உடைய, அண்ணல் - ஸர்வேஶ்வரனுடைய, கழல்கள்-திருவடிகளை, குறுகுமின் - கிட்டப்பாருங்கோள். படிமன்னு என்று-சரீரத்தோடு பொருந்தின என்றுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், கீழ் எட்டுப் பாட்டாலே 'ஐஹிகபோகம் அஸ்திரம்' என்றது. ஐஹிகமான ராஜ்யாதிகளேயன்று நிலைநில்லாதவை. உடம்பையொறுத்துப் பெறும் ஸ்வர்க்காத்யைஶ்வர்யங்களும் நிலைநில்லாதன என்கிறார்.

[படிமன்னு பல்கலன்] - க்ரமாகதமாய் வருகிற ஆபரணஜாதங்களென்னுதல், படிகால்படிகால் வருகிற ஆபரணமென்னுதல். [பற்றோடறுத்து] - அவற்றை விட்டு வர்த்திக்கையன்றிக்கே வாஸனையும் போகை. [ஐம்புலன்வென்று]-அவற்றில் ருசிக்கு அடியான இந்த்ரியங்களை ஜயித்து. "ஜித்யாணிவஶராஜிகவா". [செடிமன்னு இத்யாதி] - தபஸ்ஸுக்காக தீர்க்காஸநத்தாலே தூறுமண்டும்படி ஶரீரத்தைச் செறுத்துத் தபஸ்ஸைப்பண்ணினாலும்; "நெறியார் குழற்கற்றை". [ஆங்கவனையில்லார்] - அவன்ப்ரஸாதமொழிய; அவன்தன்னை உத்தேஶ்யமாகப் பண்ணாதபோது என்னவுமாம். [கொடிமன்னுமின்சுவர்க்கம்] - பூமியிற்போலேயன்றிக்கே தீர்க்ககாலம் இருக்கலாய் விலக்ஷணமான ஸ்வர்க்கம் பெற விரகில்லை; பெற்றாலும் மீள்வர்கள். [மீள்வில்லை] - புநராவ்ருத்தியில்லை. [கொடிமன்னு இத்யாதி] - ஆஶ்ரிதரைத் தனக்கு நிரூபகமாகக்கொள்ளும் ஸர்வாதிகன் திருவடிகளைக் கிட்டப் பாருங்கோள். நித்யாஶ்ரிதரோடு இன்று ஆஶ்ரயிக்குமவனோடு வாசியற முகங்கொடுக்குமவனென்கை.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. கீழெட்டுப்பாட்டாலே-ஐஹிகபோகம் அஸ்திரமென்றார்; இதில், காயிகக்லேஶாத்மகமான தபஸ்ஸைப் பண்ணி அந்தத்தபஃபலம் ஸ்வர்க்கமாகக் கொண்டு ஸ்வர்க்கத்தை ப்ராபிக்கும்போது பகவத்ப்ரஸாதம் வேணும்; அது உண்டாய் ப்ராபித்தாலும் அதுதன்னின் ஸ்வபாவத்தாலே நிலைநில்லாது என்கிறார்.

---

ஒன்பதாம்பாட்டு-'படிமன்னு' இத்யாதி. "மீள்வர்கள்" என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - 'கீழெட்டுப்பாட்டாலே' இத்யாதி. கீழிற்பாட்டிலே"மீள்வர்கள்" என்கிற பதஸாமர்த்த்யத்தைக்கொண்டு ஸ்வர்க்கத்தைப்ராபித்தாலும் மீள்வர்களென்று சொன்னது போக்கி கண்டோக்தி யில்லை; ஆகையால், இப்பாட்டிலே கண்டோக்தமாகவே அருளிச்செய்கிறா ரென்று கருத்து.

[படி] - இவன் தபஸ்ஸிலே அந்வயிக்கும்போது விடுமவை சொல்லுகிறது. படி - பூமி. [மன்னுபல்கலன்] - க்ரமாகதமாயிருக்கிற ஆபரணஜாதம். அன்றியே, [படிமன்னுபல்கலன்] - தன்வம்சத்திலுள்ளார் பரம்பரையாகப் பூண்டுபோருகிற ஆபரண மென்னுதல். [பற்றோடு அறுத்து] - அவற்றைவிட்டு வர்த்திக்கையன்றிக்கே வாஸநையும்போகை. [ஐம்புலன்வென்று] - அவற்றில் ருசிக்கு அடியான ஶ்ரோத்ராதிகள் விஷயங்களிற் போகாதபடி வென்று; * "ஐந்தியாணிபுராஜித்வா" (இந்த்ரியாணிபுராஜித்வா). [செடிமன்னுகாயம்செற்றார்களும்] - தபஸ்ஸுக்காக நெடுங்காலம் ஓரோ ஆஸநங்களிலே யிருந்தால் சலியாமையாலே உடம்பிலே தூறுமண்டும்படி ஶரீரத்தையொறுத்துத் தபஸ்ஸுபண்ணினவர்களும்; "நெறியார்குழற்கற்றைமுன்னின்றுபின் தாழ்ந், தறியாதிளங்கிரியென்றெண்ணிப் - பிறியாது, பூங்கொடிக்கள்வைகும்" என்னக்கடவதிறே. [ஆங்கவனையில்லார்] - அவன் ப்ரஸாதமில்லையாகில் தானே ஸித்தியாது. அவன்ப்ரஸாதமுண்டாய்ப்பெற்றதாகில், [குடிமன்னும் இன்சுவர்க்கமெய்தியும்] - "இதுக்கும் ஆள்பற்றுவதே!" என்று பட்டர். குடிநெருக்கத்தையுடைத்தாய், நரகாத்வ்யாவ்ருத்தமான இனிமையையுடைத்தான ஸ்வர்க்கத்தை ப்ராபித்தாலும். [மீள்வர்கள்] - மீளுவர்கள். புண்யக்ஷயம்பிறந்தவாறே "த்வம்ஸ" என்று தள்ளுவர்களிறே.

[மீள்வில்லை] - அங்குஞ்ருமீட்சியில்லை. அவனுடைய புண்யத்துக்கு க்ஷயமில்லையே அப்படி; † "புணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே." [கொடிமன்னுபுள்] - கொடியாய் மன்னு நின்றுள்ள புள். தன்னையாஶ்ரயித்தாரையும் தனக்கு வ்யாவர்த்தகவிஶேஷணமாகக் கொள்ளுமவனென்கை. அவன்தன்னை வ்யாவர்த்தக விஶேஷணமாகக் கொள்ளவேண்டுவானேன் அல்லாதாரிற்காட்டில்? என்னில்;—அவனுடைய மூக்குவலியும் அவன்பக்கல் பக்ஷபாதமும் அதுக்குஅடி. [புள்

---

தாத்பர்யம் - 'இவன்' இத்யாதி. த்விதீயார்த்தத்தில், "எழ்படிகால்" என்கிற கணக்கிலே, படியென்று - வம்ஶமாய், வம்சத்திலுள்ளார் நித்யமாகப்பூண்டுபோந்த பலவகைப்பட்ட ஆபரணங்க ளென்றபடி. படி-படிபடியாக வென்றாக்கி, வம்ஶ பரம்பரையாக வென்றபடி. "பற்றோடு" என்றதுக்கு ஸாவம் - 'அவற்றை' இத்யாதி. உபாஸகனுக்கொழிய, ஐஶ்வர்யகாமனுக்கு விஷயாநுபவம்பலமாயன்றோ இருப்பது; இந்த்ரியஜயம் வேணுமோ?' என்ன, 'இந்த்ரியாணி' இத்யாதி. "இந்த்ரியாணிபுராஜித்வாஜிதம் த்ரிபுவநம் த்வயா । ஸ்மரத்பிரிவ தத்வைரமத்யேந்த்ரியைர்ஜிதஃ" இதி மண்டோதரீ. தூறுமண்டுகைக்கு ஹேதுவை அருளிச்செய்துகொண்டு, ஶப்தார்த்தம் - 'தபஸ்ஸுக்காக' இத்யாதி. உடம்பிலே தூறுமண்டும்படி தபஸ்ஸுபண்ணுவர்களோ? என்ன, 'நெறியார்' இத்யாதி. திருமலையாழ்வாரே உத்தேஶ்யமாக அநுஸந்தித்து மற்றொன்றறியாதே வழிபட நெடுங்காலம் ஆஶ்ரயிக்கிறவர்களுடைய குழற்கற்றையிலே முன்னே முளைத்துப் பின்னளவும் வளர்ந்து தாழ விழுந்து, சலியாமலிருக்கிற இருப்பைக் கண்டு, 'சேதநர்' என்று அறியாதே சிறுமலைகளாயிருக்குமென்று புத்திபண்ணி அவ்விடத்தைவிட்டு நீங்காதே பூத்த கொடிகளானவை நித்யவாஸம்பண்ணும் ஸ்தலமாயென்று பாசுரத்துக்கு அர்த்தம். இரண்டாந்திருவந்தாதி - ஐம்பத்துமூன்றாம் பாட்டு. 'குடிமன்னும்' என்றதுக்கு ஸாவம் - 'இதுக்கும்' இத்யாதி. மீளுகைக்கு ஹேது 'புண்யக்ஷயம்' இத்யாதி.

மீட்சியில்லாமைக்கு ஹேது எது! என்ன, 'அவனுடைய' இத்யாதி. அவனுடைய - முக்தனுடைய. சித்ததர்மமாகையாலே யென்றபடி; "க்ஷீணம் புண்யம் ந நஶ்யதி" இத்யாதி. அப்படிமீள்வற்றிருக்குமோ? என்ன, 'புணைகொடுக்கிலும்' இத்யாதி. நித்யமுக்தரைப் புணையிடிலும் போகவொட்டாரென்று பாசுரத்துக்கு அர்த்தம். பெரியாழ்வார்திருமொழி "சீயினல்" இத்யாதி. பெரியதிருவடியோட்டைச் சேர்த்திசொன்னதுக்கு ஸாவம் - 'தன்னை' இத்யாதி. மூக்குவலி - பலம். 'பக்ஷபாதம்' பக்ஷஃபாதஃ - பக்ஷபாதஃ. ரஸோக்தி -

---

* ஸ்ரீரா. யுத்த. ௧௧௪-௧௮-மண்டோதரீப்ரலாபம்.

† பெரியாழ்வார் திருமொழி-௪,௫;௨.

ளுடையண்ணல்] - "ஸ்ரியஃபதி" என்னுமாபோலே ஈஸ்வரனுக்கு நிரூபகமிறேஅவன். [அண்ணல்]- சேஷி. [கழல்கள்குறுகுமினோ] - உங்கள்ஸம்ஸாரம்கழல அவன்கழல்களைக் குறுகுங்கோள். "திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ" என்றார் முதற்பாட்டில்; இங்கே புள்ளுடையண்ணல்கழல்கள் குறுகுமினோ என்கிறார்காணும், அவளோபாதி இவனும் அங்குத்தைக்கு நிரூபகதர்ம மென்று. (௯)

---

# பத்தாம்பாட்டு.

---

குறுகமிகவுணர்வத்தொடுநோக்கி எல்லாம்விட்ட
இறுகலிறப்பென்னும்ஞானிக்கும் அப்பயனில்லையேல்
சிறுகநினைவதோர்பாசமுண்டாம் பின்னும்வீடில்லை
மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில்வீடஃதே.

**ஆ.**—*அஸ்திரத்வாதிதோஷாஸம்பிந்நமான கைவல்யத்தை ப்ராப்யமாகப் பற்றிறுலோ? என்னில்; - ப்ராக்ருதவிஷய வைராக்யபூர்வகமாக ஜ்ஞாநயோகநிஷ்டனானவனுக்கும் எம்பெருமானை ஆஸ்ரயித்தாலல்லது ஆத்மாவலோகநவிரோதிகர்மம் போகாது ; பகவத்ஸமாஸ்ரயணத்தாலே ஆத்மாவலோகநம் பிறப்பது; பிறந்தாலும் அந்திமதசையிலே பகவதநுஸந்தாநம்பண்ணி ப்ரதிபந்தகத்தைப்போக்காதொழியில் பின்னை ஆத்மயாதாத்ம்யாவிர்ப்பாவ லக்ஷண மோக்ஷம் ஸித்தியாது; முக்யமான மோக்ஷமாகிறதும்அந்தபகவத்கைங்கர்யமே; இப்படி கைவல்யோபாயதயா பகவத்ஸமாஸ்ரயணம் பண்ணவேண்டுகையாலும், பகவத்கைங்கர்யந்தானே பரமமோக்ஷமாகையாலும், அந்தபகவத்கைங்கர்யாபேக்ஷயா அத்யல்பஸுகமான கைவல்யத்தை விட்டுப் பகவத்கைங்கர்யத்தையே பரமப்ராப்யமாகப் பற்றுங்கள் என்கிறார்.*

ஒ.—*பத்தாம்பாட்டில், கைவல்யபுருஷார்த்தம் துஸ்ஸாத மென்றும், அதுதான் அபுருஷார்த்த மென்றும் ப்ரதிபாதிக்கிறார்*

*[குறுக என்று தொடங்கி.] - பாஹ்யார்த்தங்களிலே தூரப்போய்ப்பழகின மநஸ்ஸை அவற்றினின்றும் மீட்டு ப்ரத்யகாத்மாவின்பக்கலிலே ப்ரவணமாக்கி விஸததமமாம்படி ஆத்மாவலோகநத்தைப் பண்ணி ஆத்மவ்யதிரிக்த ஸகலபுருஷார்த்தங்களிலும் தொற்றற்ற அந்த ஸங்குசிததசையை மோக்ஷமென்னும் ஜ்ஞாநநிஷ்டனுக்கும் ஸ்வயம்புருஷார்த்தரூபமான எம்பெருமானை ஸாஹாஸ்ரயமாகப் பற்றுவிடில் ஆத்மாவலோகநவிரோதியான கர்மம் போகாதே நிற்கும். [பின்னும் என்று தொடங்கி] - ஆத்மாவலோகநம் கைவந்தாலும் ஹேயப்ரத்யநீகனாய் ஜ்ஞாநைகாகாரனான ஸர்வேஸ்வரனை அநுஸந்தித்து அவனோடு ஸஜாதீயமென்று ஆத்மாவை அநுஸந்திக்கையாகிற இந்தஅந்திமஸ்ம்ருதி இல்லையாகில் மோக்ஷத்துக்கு உபாயமில்லை. இப்படி துஸ்ஸாதமாகையாலும், ஸாதிக்குமிடத்திலும் எம்பெருமானைப் பற்றியே ஸாதிக்கவேண்டுகையாலும், தத்கைங்கர்யத்தைக்குறித்துத் தண்ணிதாகையாலும், பகவத்கைங்கர்யமே பரமபுருஷார்த்தம்.*

---

'உங்கள்' இத்யாதி. கழல - நிவ்ருத்தமாம்படி. குறுகுகை - கிட்டுகை. 'ஸ்ரியஃபதி யென்னுமாபோலே' என்ற வாக்யவிவரணம் 'திருநாரணன் 'இத்யாதி. படிமன்னு இத்யாரப்ய, மீள்வர்கள் ; கொடிமன்னு இத்யாரப்ய, குறுகுமினோ ; மீள்வில்லை இத்யந்வயஃ. (௯)

ப.—அநந்தரம், இப்படி அஸ்திரமன்றியே ஸ்திரமான கைவல்யமும் பரமபுருஷார்த்தத்தைப்பற்றப் பசையற்றிருக்கையால் நியந்தாவான ஸர்வேஶ்வர பகவத்ப்ராப்தியே அதிஶயிதபுருஷார்த்தம் என்கிறார்.

குறுக - (விஷயாந்தரங்களில் அகலப்போகாதபடி ப்ரத்யக்விஷயத்திலே) ஆஸந்நமாக, உணர்வத்தொடு-ஜ்ஞாநைகநிருபணீயமான ஆத்மவஸ்துவோடேகூடி, மிகநோக்கி-(தர்ஶநஸமாநாகாரமாம்படி) மிகஅநுஸந்தித்து, எல்லாம் - (ஆத்மவ்யதிரிக்த) ஸகலபுருஷார்த்தங்களையும், விட்ட - விட்டவனாய், இறுகல் - ஆத்மமாத்ரத்திலே பர்யவஸித்த, இறப்பு - மோக்ஷத்தை, என்னும் - புருஷார்த்தமென்றிருக்கும், ஞானிக்கும் - ஜ்ஞாநிக்கும், அப்பயன் - (ஸ்வயம்ப்ரயோஜநரூபமான ஸர்வேஶ்வரனை) உபாயமாகப்பற்றுகை, இல்லையேல் - இல்லையாகில், சிறுக - அபக்ருஷ்டபுருஷார்த்தங்களை, நினைவது - ஸ்மரிக்கைக்கடியான, ஓர் பாசம்-ஸங்கம், உண்டாம்- உண்டாம்; பின்னும்-அதுக்குமேலே, வீடு - (ஆத்மப்ராப்திரூபமான) மோக்ஷமும், இல்லை - ஸித்தியாது; (ஆனபின்பு), மறுகல் இல்-ஸ்வஹாவபேதாதிரூபஸமஸ்தஹேயப்ரதிபடனாய், ஈசனை-(ஸ்வாபாவிக) ஸமஸ்தநியந்த்ருத்வாதி ஸமஸ்தகல்யாணகுணாத்மகனை ஸ்வாமியை, பற்றி - (ப்ராப்யத்வேநவும் ப்ராபகத்வேநவும்) ஸமாஶ்ரயித்து, விடாவிடில் - (அதிகார்யந்தரங்களைப் போலே ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு) அகலாதொழியில்,அஃதே - அதுவே, வீடு - பரமபுருஷார்த்தம்.

இறுகல்-ஸங்கோசமும், சிக்கெனவும். மறுகல்-ஸ்வபாவ்பேதம்.

இ.—பத்தாம்பாட்டில், 'ஐஶ்வர்யம் நிலைநில்லாதாகில் நிலைநின்ற புருஷார்த்தமான கைவல்யத்தைப் பற்றுகிறோம்' என்ன, கைவல்யபுருஷார்த்தம் துஸ்ஸாதமென்றும், அதுதான் அபுருஷார்த்த மென்றும் ப்ரதிபாதிக்கிறார்.

[குறுக] - கிட்டவிட்டு; தூரம்போய் விஷயங்களை க்ரஹிக்கும் மநஸ்ஸை ப்ரத்யக்த்த விஷயமாக்கி : ப்ரத்யாஹ்ருதேந்த்ரியனுக்கிறே இவ்வநுஸந்தாநம் உண்டாவது. [மிகவுணர்வத்தொடு நோக்கி] - அந்தமநஸ்ஸை ஜ்ஞாநஸ்வரூபனான ஆத்மாவோடே சேர்த்து ஆத்மப்ரவணமாக்கி. [மிகநோக்கி] - விஶததமமாக அநுஸந்தித்து ஆத்மாவலோகநத்தைப் பண்ணி. [எல்லாம்விட்ட] - ஐஶ்வர்யத்தோடு பகவதநுபவத்தோடு வாசியற விட்ட. [இறுகலிறப்பென்னும் ஞானிக்கும்] - இந்தஸங்கோசத்தையே மோக்ஷமாக நினைத்திருக்கும் ஜ்ஞாநநிஷ்டனுக்கும். [இறுகல்] - பகவதநுபவத்தைப்பற்றத் தமக்கு ஸங்குசிதமாயிருக்கை. [இறப்பு] - மோக்ஷம். [அப்பயனில்லையேல்] - எம்பெருமானை ஶரணமாகப் பற்றுவிடில் ஆத்மாநுஸந்தாநம் பண்ணவொண்ணாது. இவர்தாம் ப்ரயோஜநமாக நினைத்திருக்கிறத்தை யாயிற்று, அவன் ஆத்மப்ராப்திக்கு ஸாதநமாகப் பற்றுகிறது. [சிறுகநினைவதோர் பாசமுண்டாம்]-"ஜெவொZஹஂ௨ந-ஷெ௶ாZஹஂ"என்கைக்கு அடியான பந்தமுண்டாம்.அவித்யாதிகள் ஶதஶாகமாகப் பணைக்கும். [பின்னும் வீடில்லை] - அவனை ஶரணமாகப்பற்றினாலும் அந்திமஸ்ம்ருதியில்லையாகில் மோக்ஷஸித்தியில்லை. ஆதிபரதனைப்போலே மாறாய்ப்போமித்தனை. [மறுகல்இல் ஈசனைப்பற்றி]-ஹேயப்ரத்யநீகனாகவும் ஜ்ஞாநைகாகாரனாகவும் அநுஸந்தித்து அவனோடு ஸஜாதீயனாகவும் ஆத்மாவை அநுஸந்தித்து. [மறுகலில்]-மறுகுகிற ஸமயத்தில்; ஶரீரவிஶ்லேஷஸமயத்திலென்னவுமாம். [வீடுஅஃதே] - இப்படி துஸ்ஸாதமாகையாலும், ஈஶ்வரஸாபேக்ஷமாகையாலும், பகவதநுபவத்தைக்குறித்துத் தண்ணிதாகையாலும், தண்ணிதானதுதானே ஸ்திரமாகையாலே மிகவும் அபுருஷார்த்தமாகையாலும், அப்ராப்தபுருஷார்த்தமாகையாலும், அண்ணல்கழல்கள் குறுகுமினோ என்று கீழ்ச்சொன்ன கைங்கர்யமே புருஷார்த்தம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. பூமியில் ஐஶ்வர்யம், ஸ்வர்க்காநுபவம் இவை நிலைநில்லா என்றார், கீழ் ; இவைபோலன்றிக்கே ஆத்மலாபம் நிலைநின்ற புருஷார்த்தமே யென்னில்;—கீழ்ச் சொன்னத்தைக் குறித்து ஒருநன்மை யுண்டேயாகிலும் பகவதாநந்தத்தைப்பற்ற இது ஏகதேசமா யிருக்கையாலே அதுவும் தண்ணிது; ஆனபின்பு, அவனைப்பற்றப் பாருங்கோள் என்கிறார்.

[குறுக இத்யாதி] - முதல்தன்னிலே ப்ரத்யாஹ்ருதேந்த்ரியனுக்கிறே ஆத்மப்ராப்தியில் அதிகார முள்ளது. பாஹ்யவிஷயங்களிலே தூரப்போய் க்ரஹிக்கும் மநஸ்ஸை ப்ரத்யக்ஷத்த விஷய மாக்குவது. அதாவது - கண்ணையிட்டுக் கண்ணைப்பார்த்தாற்போலே யிருப்பதொன்றிறே. சிரகா லம் பாஹ்யவிஷயங்களில் பண்ணிப்போந்த வாஸநையுடைய ஆத்மாவிலேயாம்படி விஶததம மாக அநுஸந்தித்து. [எல்லாம்விட்ட] - ஸ்ரிய:பதி பெரியதிருவடி திருத்தோளிலே தோளும் தோள் மாலையுமாய் வந்து நின்றாலும் சாணகச்சாற்றேபாதி ஶக்திமாத்ரத்தையே உபஜீவித்து, போக்ய தையில் நெஞ்சுசெல்லாதபடி அவனையும் விடுவது. [இறுகலிறப்பென்னும் ஞானிக்கும்]- ஸங்கோ சத்தை மோக்ஷமென்று சொல்லுகிற ஆத்மஜ்ஞானிக்கும். இவ்வருகுள்ளத்தைப்பற்ற 'விஸ்த்ரு தம்' என்றிருந்தானேயாகிலும், அவ்வருகுங்கண்டவ ராகையாலே 'ஸங்கோசம்' என்றிருக்கிறார், இவர். இறப்பு-மோக்ஷம். [அப்பயனில்லையேல்]-அந்த பகவதுபாஸநமில்லையாகில் ஆத்மாநுஸந்தா நம்பண்ணவொண்ணாது. உபாஸநந்தான் ஸ்வரூபமாயிருக்கையாலே, பயனேன்கிறது. அவனு டையஸாதநம் இவருக்கு ப்ரயோஜநமாயிருக்கிறது. [சிறுக இத்யாதி] - தன்னை முன்புத்தையிற் காட்டில் அதிக்ஷுத்ரனாக நினைக்கும்படி, பந்தகமானஅவித்யாதிகள் ஶதஶாகமாகப்பணைக்கும் ; "தேவோஹம், மநுஷ்யோஹம்" என்கைக்குஅடியான பந்த முண்டாம்.

[பின்னும்வீடில்லை மறுகலிலீசனைப்பற்றிவிடாவிடில்] - இந்த்ரியநியமநாதிகளுண்டாய், பின்பு பகவதுபாஸநத்தைப் பண்ணிக் கர்மக்ஷயத்தைப்பிறப்பித்து ஆத்மாவை லக்ஷிக்கப்பார்க்கு

---

*பத்தாம்பாட்டு—'குறுக' இத்யாதி. "இறுகலிறப்பென்னும் ஞானிக்கும் அப்பயனில்லையேல்" இத்யாதி யைக் கடாக்ஷித்து அவதாரிகை - பூமியில் இத்யாதி. நன்மை - நித்யத்வாதி. தண்ணிது - அதிக்ஷுத்ரம்.*

*குறுக-குறுக்கி; மநஸ்ஸை ப்ரத்யாஹரித்தல்-ப்ரத்யக்ஷத்தவிஷயமாக்குத லென்றபடி. உணர்வத்தொடு - ஆத்மாவோடேகூடி. தத்குணஸாரத்வத்தாலே, உணர்வென்று - ஆத்மாவைச் சொல்லுகிறது. மிகநோக்கி - விஶதமாக அநுஸந்தித்து இதி ஶப்தார்த்த:. குறுக்குகை-பாஹ்யவிஷயங்களினின்றும் மநஸ்ஸைத் திருப்புகை யாகையாலே, அத்தை அருளிச்செய்கிறார்-'முதல்தன்னிலே' இத்யாதி. பாஹ்யவிஷயப்ரவணமான மநஸ்ஸை ப்ரத்யக்ஷத்தவிஷயமாக்குகையி லுண்டான அருமையை அருளிச்செய்கிறார்-'அதாவது' இத்யாதி. 'கண்ணை யிட்டுக் கண்ணைப்பார்த்தாற்போலே' என்றது - தர்மபூதஜ்ஞாநத்தாலே ஜ்ஞாநஸ்வரூபனான ஆத்மாவை யறிகையாகையாலே. "உணர்வத்தொடு, மிக-நோக்கி" என்று அந்வயித்து அர்த்தம் - 'சிரகாலம்' இத்யாதி. எல்லாம்விட்ட-ஆத்மவ்யதிரிக்தங்களையெல்லாம் விட்டவனாய். 'எல்லாம்விட்ட' என்ற ஸர்வத்யாகத்தின் சரமா வதி-'ஸ்ரிய:பதி' இத்யாதி. சாணகச்சாறு-பஞ்சகவ்யம். இறுகல்-ஸங்கோசம்.ஸங்கோசமாவது-ஈஶ்வரனளவும் போகாதே அணுவான ஆத்மமாத்ரத்திலே பர்யவஸித்திருக்கை. 'ஸங்கோச மென்கிற தென்? முக்திதசை யில் அநுபவமாகையாலே விபுவாயிராதோ?' என்ன, 'இவ்வருகு' இத்யாதி. இவ்வருகுள்ளத்தைப்பற்ற - ஐஶ் வர்யாதிகளைப்பற்ற. "ஒண்டொடியாள்" இத்யாதியைப் பற்ற, 'அவ்வருகும் கண்டவராகையாலே' என்றது. கீழ்ப்பாட்டில் "ஆங்கவனையில்லார்" இத்யேதத்விவக்ஷயா - 'அப்பயன்' இத்யத்ர தச்சப்தம். ஆனால், உபாஸநமில்லையேல் என்றன்றோ சொல்லவேணும் என்ன, 'உபாஸநந்தான்' இத்யாதி. அவனுக்கு ஸ்வரூ பதையுண்டோ? என்ன, 'அவனுடைய' இத்யாதி. ஆத்மாநுஸந்தாநம் பண்ணவொண்ணாமையே யன்றிக்கே விரோதியும் அபிவ்ருத்தமாமென்னுமிடஞ் சொல்லுகிறது - 'தன்னை' இத்யாதி. முன்புத்தையிற்காட்டில் - ஸ்வர்க்காத்யைஶ்வர்யத்தைப்பற்றி நின்ற போதையிற் காட்டில்.*

*அந்தமோக்ஷம்-ஆத்மாநுபவம். 'மறுகல்' என்று-ஹேயமாய், 'இல்'-என்றுஇல்லாமையாய் ஹேயப்ர த்யநீகனான ஈசனை யென்னுதல்; "மறுகலில்" என்று - ஸப்தமீவிபக்தியாய், மறுகுகிறஸமயத்திலே யென்னு*

மன்றும், ஸர்வேஶ்வரன்பக்கல் அந்திமஸ்ம்ருதிபண்ணி இஶ்ஶரீரத்தைவிடப் பாராநுகில் அந்த மோக்ஷந்தா னில்லை. [மறுகல் இல் ஈசனை] -ஹேயப்ரத்யநீகனுன ஸர்வேஶ்வரனை. அன்றியே, [மறுகலில்] - மறுகுகிறஸமயத்தில்; ப்ராணவியோகஸமயத்தில் வருங் கலக்கத்தி லென்னுதல். [ஈசனைப் பற்றி விடாவிடில்] - அந்திமஸ்ம்ருதியில்லையாகில்; ஆதிபரதனைப்போலே மாறுதல் மரையாதலா மித்தனை. [வீடுஅஃதே] - "திருநாரணன்தாள்காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ" என்று நான் சொல்லுகிற அதுவே புருஷார்த்தம். (கo)

---

# ப தி ற் று ர ா ம் ப ா ட் டு.

---

அஃதேஉய்யப்புகுமாறென்று கண்ணன்கழல்கள்மேல்
* கோய்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்குற்றேவல்
செய்கோலத்தாயிரம் சீர்த்தொடைப்பாடலிவைபத்தும்
அஃகாமல்கற்பவர் ஆழ்துயர்போய்உய்யற்பாலரே.

ஆ·—ஆழ்வார் ஸர்வோஜ்ஜீவநார்த்தமாக எம்பெருமானைப் பாடின இத்திருவாய்மொழியைத் தப்பாமல் கற்பார் நிரஸ்தாகிலதுஃகராய்க்கொண்டு பகவத்கைங்கர்ய மஹாரஸத்தைப் பெறுவார் என்கிறுர்.

ஒ·—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றுர் ஐஶ்வர்யாதி க்ஷுத்ரபுருஷார்த்தத்தைத் தவிர்ந்து பகவத்கைங்கர்யைகபோகராவர் என்கிறுர்

[அஃதே என்று தொடங்கி.] - அதுவே உஜ்ஜீவநோயாய மென்று எம்பெருமான் திருவடிகளிலே ஆழ்வார் அருளிச்செய்த விலக்ஷணமான ஆயிரத்தில் அவனுடைய கல்யாண குணங்களையே தொடுத்த இத்திருவாய்மொழி. அஃகாமை - தப்பாமை.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக துஃகநிவ்ருத்தி பூர்வகமான ஆத்மோஜ்ஜீவநத்தை அருளிச்செய்கிறுர்.

உய்ய - உஜ்ஜீவிக்கைக்கு உறுப்பாக, புகும் - கிட்டும், ஆறு - உபாயம், அஃதே - அதுவே, (என்று அறுதியிட்டு), கண்ணன்-க்ருஷ்ணனுடைய, கழல்கள்மேல்-திருவடிகளின்மேலே, கொய் - கொய்யப்படும், பூ - புஷ்பஸம்ருத்தியையுடைத்தான, பொழில் - பொழிலையுடைத்தான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், குற்றேவல்கள் - அந்தரங்கமான கைங்கர்யரூபங்களாக, செய் - செய்த, கோலம் - அலங்காரபூர்ணமாய், ஆயி

---

தல். விவரணம்-'ப்ராணவியோக' இத்யாதி. விடாவிடில் - விடாவிட்டால். சரீரத்தை விடப்பாராநுகி லென்றபடி. பற்றி-அநுஸந்தித்து; ஸ்மரித்து என்றபடி. அந்திமஸ்ம்ருதியில்லாவிட்டாலேது?என்ன, 'ஆதிபரதனை' இத்யாதி. மரை - கவயம்.

குறுகவென்று தொடங்கி, அப்பயனில்லையேல் ஆத்மாநுஸந்தாநம்பண்ண வொண்ணுது; அதுக்கு மேலே சிறுக நினைவதோர் பாசமுண்டாம்; பின்னும் - மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில் - வீடில்லை; ஆனபின்பு, அஃதே - வீடு இத்யந்வயஃ. (கo)

---

*கொய்பூம்பொழில்குருகூர்ச்சடகோபன்குற்றேவல்கள்' என்று உரையின் பாடம்.

ரம் - ஸஹஸ்ரஸங்க்யாதமாம்,சீர்த் தொடை - சீருந் தொடையுமுடைய, பாடல் - பாடலான திருவாய்மொழியில், இவைபத்தும் - இவைபத்தையும், அஃகாமல் - நழுவாதபடி, கற்பவர் - கற்பவர், ஆழ் - (ஐஶ்வர்யகைவல்யங்களிலே) ஆழங்காற்பட்டு வரும், துயர் - துஃகம், போய் - போய், உய்யற்பாலர் - (பகவத்பக்திரூபமான) ஆத்மோஜ்ஜீவநப்ரகாரத்திலே யாவர்கள்.

இது - கலித்துறை.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார் ஐஶ்வர்யாதி க்ஷுத்ரபுருஷார்த்தத்தைத் தவிர்ந்து பகவத்கைங்கர்யைகபோகராவர் என்கிறார்.

[அஃதே உய்யப்புகுமாறென்று]-நான் சொன்னதுவே ஆத்மாவுக்கு உஜ்ஜீவநோபாயமென்று; அது ஏதென்னில்,—"கண்ணன்கழல்கள் நினைமினோ" என்றது. [கண்ணன் கழல்கள் மேல்] - ஸுலபனை க்ருஷ்ணனையாயிற்றுக் கவிபாடிற்று. [கொய்பூம்பொழில் இத்யாதி]-நித்யவஸந்தமான சோலைசூழ்ந்த திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வாராயிற்றுக் கவிபாடினார். [செய்]-செய்த கவி; வாசிகமான அடிமை யென்னுதல். [கோலத்துஆயிரம்]-கவிக்குச்சொல்லுகிற அலங்காரங்களால் குறைவற்றிருக்கை. [சீர்த்தொடை இத்யாதி]- கல்யாணகுணங்களைத் தொடுத்துச் சொன்ன இத்திருவாய்மொழி. [அஃகாமல்] - தப்பாமல். இவற்றில் ஒருபாட்டும் விடாதபடி கற்றுலாய்த்து ஐஶ்வர்யாதிகளுடைய தோஷம் விஶதமாவது. [ஆழ்துயர்போய்]-ஐஶ்வர்யாதிகளில் உபாதேயபாவத்தால் வரும் துஃகம் போய். [உய்யற்பாலர்]-உஜ்ஜீவநமே ஸ்வபாவமாக வுடையாராவர். "காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ"என்று தாம்சொன்னபடியை உடையராகை.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி பத்துங் கற்றார், ஐஶ்வர்யாதி க்ஷுத்ர புருஷார்த்தத்தைத் தவிர்ந்து பகவத்கைங்கர்யைகபோகராவர் என்கிறார்.

[அஃதேஉய்யப்புகுமாறென்று]-"திருநாரணன்தாள்" என்று நான்சொன்னஅதுவே உஜ்ஜீவிக்கைக்குஉபாயமும் உபேயமு மென்று. [கண்ணன்கழல்கள்மேல்] - *"கண்ணனைத்தாள்பற்றி" என்று தாமுஞ்சொல்லி, "கண்ணன்கழல்கள்நினைமினோ" என்று பிறர்க்குமுபதேசித்துநின்றாரே; அதுதன்னையே சொல்லுகிறார். 'இப்படி அடியுடையார் புறம்பில்லை' என்றிறே இவ்வடிகளைத்தாம் பற்றிற்று.† "துயரறுசுடரடிதொழுதெழு" என்று தம்திருவுள்ளத்துக்கு அருளிச்செய்தார்,‡ "வண்புகழ்நாரணன்திண்கழல்சேர்" என்று பரோபதேஶம் பண்ணினார் அங்கு; இங்கே|| "கண்ணனைத் தாள்பற்றி யானென்றும்கேடிலன்" என்றார், "கண்ணன் கழல்கள் நினைமினோ" என்று பரோபதேஶம்பண்ணினார்; இதுஎன்னஅடிப்பாடுதான்! §"கண்ணனல்லா லில்லைகண்டீர்சரண்" என்றிறே பரோபதேஶம் நிகமிக்கிறதும். [கொய்பூ இத்யாதி] - நித்யவஸந்தமான திருச்சோலைசூழ்ந்த திருநகரி

---

நிகமம் - "அஃதே" இத்யாதி. "இவைபத்தும் அஃகாமல்கற்பவ ராழ்துயர் போ யுய்யற்பாலர்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'நிகமத்தில்'இத்யாதி.

"ஆறு" என்றதுக்கு 'உபேயம்' என்று அர்த்தம்சொன்ன - கீழ்ச்சொன்ன உபேயாந்தர ப்ரதிகோடித்வேந. உபாயாந்தரங்களைக் கழித்து, "அவனையொழிய வேறுஉபாயமில்லை" என்றுசொல்லுகிறது- இம்மூன்றுபத்தும் உபாயவிஷயமாகையைப் பற்ற. "உபாயமும் உபேயமும்" என்றத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் – 'இப்படிஅடியுடையார்' இத்யாதி. அடி – மூலமும், திருவடிகளும். 'கழல்கள்மேல்' என்றத்தை உபஜீவித்து அருளிச்செய்கிறார் -"துயர்" இத்யாதி. அடிப்பாடு – அடியிலே படுகை; ப்ராவண்ய மென்றபடி; ஏகப்ரகாரமும். பரோபதேசம் நிகமிக்கிறது மென்றது – விரோதிஸ்வரூபவிஷயமான பரோபதேசம் நிகமிக்கிறது மென்றபடி. பரோபதேசநிகமநம் – கண்ணன் கழலிணையாலும், அது – ஸாமாந்யதः பரோபதேசமாகையாலே, விரோதிஸ்வரூபவிஷயமான "வீடுமின்முற்றம்", "சொன்னால் விரோதம்", "ஒருநாயகம்", "கொண்டபெண்டிர்" என்கிற நாலுதிருவாய்மொழிகளிலும் வைத்துக்கொண்டு,

---

* திருவாய்மொழி - ௩-௧௦-௧௦. †ஷை - ௧-௧-௧. ‡ஷை - ௧-௨-௧௦. || ஷை௩ - ௧௦ - ௧௦. § ஷை - ௬-௧-௬.

க்கு நிர்வாஹகரான ஆழ்வார், ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே அந்தரங்கவ்ருத்தி பண்ணினவை இவைதான். செய் - செய்த கவியென்னுதல்; 'குற்றேவல் செய்' - என்று கீழேகூட்டி, வாசிக மான அடிமையென்னுதல். [கோலத்தாயிரம்]-கவிக்குச்சொல்லுகிற அலங்காரத்தால் குறைவற்ற ஆயிரம். [சீர்இத்யாதி] - அவன்குணங்களைத்தொடுத்துப்பாடின இவற்றில் ஒன்றுங் குறையாமே கற்றவர்கள் பகவத்வ்யதிரிக்த புருஷார்த்தங்களான ஐஶ்வர்யகைவல்யங்களாகிற அநர்த்தங்கள் போய் உஜ்ஜீவிக்கும் ஸ்வபாவராவர். அஃகல் - சுருங்கல். [உய்யற்பாலர்]-உஜ்ஜீவநமே ஸ்வபாவ மாக வுடையராவர். "காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ" என்று தாம்சொன்னபடியை யுடைய ராகை. (கக)

---

"கொண்டபெண்டிர்" விரோதிஸ்வரூபவிஷயமான பரோபதேசநிகமந மென்னக் குறையில்லை யென்று கருத்து. கொய்பூம்பொழில் - கொய்யப்படும் புஷ்பங்களையுடைத்தான சோலையையுடைய. 'செய்தகவியென்னுதல்' என்றது - சடகோபன் குற்றேவலாயிருப்பதாய்ச் செய்த கவியான கோலத்தாயிர மென்று ஆயிரத்துக்கு விசேஷண மென்றபடி. த்விதீயார்த்தத்தில், 'குற்றேவல்செய்' என்று - முழுச்சொல்லாய், வாசிக மான அடிமையென்னுத லென்றபடி. அதுதா னேது? என்ன, 'கோலம்' இத்யாதி. கோலம் - அலங்காரம். அஃகாமல் - குறையாமல். ஆழ்துயர் - ஆழுங்கால்பட்டுவரும் துஃகம். ஐஶ்வர்யகைவல்யப்ராவண்யமாகிற மஹாநர்த்த மென்றபடி. பால் - ஸ்வபாவம்.

அஃதே உய்யப்புகுமாறு இத்யாரப்ய, குற்றேவலுமாய், செய்கோலத்தாயிரமென்று தொடங்கி அந்வயமாதல்; அன்றிக்கே, கொய்பூத் தொடங்கி, சடகோபன் - அஃதேஉய்யப்புகுமாறென்று கண்ணன்கழல்கள்மேல் - செய்த - குற்றேவலாய், கோலத்தாயிரமென்று தொடங்கி அந்வயமாதல். (கக)

---

த்ரவிடோபநிஷத் ஸங்கதி:—[illegible] ॥ [illegible] ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:—[illegible] ॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.** ஒருநாயகமாயுலகுக்குவானோ
ரிருநாட்டிலேறியுய்க்குமின்பம் - திரமாகா
மன்னுயிர்ப்போகந்தீது மாலடிமையேயினிதாம்
பன்னியிவைமாறனுரைப்பால்.

---

# இரண்டாந்திருவாய்மொழி—பாலனாய் : ப்ரவேசம்.

ஆ.—(பாலனாய்) இப்படி பரமப்ராப்யபூதனான எம்பெருமானோடே கலந்து பரிமாறவேணுமென்று ஆசைப்பட்டுப் பெறாத நிரவதிகவ்யஸநத்தாலே தாம் அலற்றுகிறபடியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார்.

ஒ.—இரண்டாந்திருவாய்மொழியில், இதரபுருஷார்த்தங்களுடைய தோஷாநுஸந்தாநபூர்வகமாக பகவத்வைலக்ஷண்யாநுஸந்தாநத்தைப் பண்ணிப் பரமபோக்யனான எம்பெருமானோடே கலந்து பரிமாறவேணுமென்று ஆசைப்பட்டுப் பெறாமையாலே கலங்கி "முடியானே" யிற் பிறந்த விடாய் ரஸாந்தரங்களாலே அபிபூதமானது தலையெடுத்து அதுக்குமேலே தேசகாலங்களினாலே விப்ரக்ருஷ்டமான அவன்படிகளையும் காணவேணு மென்னும் அபிநிவேசம் மிகப்படர்ந்து நினைத்தபடி கிடையாமையாலே அப்ரக்ருதிங்கதராய்த் தம்முடைய தசையைக் கண்டு பந்துக்கள் சோகிக்கிற படியை, எம்பெருமானை ஆசைப்பட்டுப் பெறாதே நோவுபடுகிறாள் ஒரு பிராட்டியுடைய திருத்தாயார் பேச்சாலே அவனுக்கு விண்ணப்பஞ் செய்கிறார்.

ப.—இரண்டாந்திருவாய்மொழியில், கீழ் - இதரபுருஷார்த்தங்களுடைய அபகர்ஷோபதேச பூர்வகமாக ஈச்வரனுடைய பரமப்ராப்யத்வத்தை உபதேசிக்கையாலே, ஆத்மாவினுடைய அநந்யபோக்யதையை அநுஸந்தித்து, அவ்வழியாலே, பஹுவிதஸஹஜபோக்யாகாரயுக்தனான ஸர்வேச்வரனுடைய விப்ரக்ருஷ்டாபதாநங்களில் போகாபிநிவேசயுக்தராய்; அவனுடைய வடதளசாயித்வத்தையும், கோபிகாலீலாஸங்கித்வத்தையும், த்ரைவிக்ரமப்ரகாரத்தையும், பரத்வவைபவத்தையும், ஸப்தருஷபநிரஸநத்தையும், ஸ்ரீவராஹப்ராதுர்ப்பாவத்தையும், அம்ருதமதநவ்ருத்தாந்தத்தையும், லங்காநிரஸநத்தையும், அஸாதாரணசிஹ்நங்களையும், ஆபரண்சோபையையும் அநுஸந்தித்து, ஏவம்விசிஷ்டனான ஸர்வேச்வரன் திருவடிகளிலே போக்யதாஸூசகமான திருத்துழாய்விஷயமாகத் தமக்குப்பிறந்த ஆதரவிசேஷத்தைப் பரிவர் பார்ச்வஸ்தர்க்குச் சொல்லுகிற பாசுரத்தை, விச்லிஷ்டையான நாயகியினுடைய ஆர்த்தயதிசயங் கண்ட நற்றாயானவள் வினவினார்க்கு உரைத்த பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

இ.—இரண்டாந்திருவாய்மொழியில், ஐச்வர்யாதிகளுடைய தோஷாநுஸந்தாநபூர்வகமாக பகவத்வைலக்ஷண்யத்தை உபதேசிக்க, அது அவர்களுக்கு பலியாதே தம்பக்கல் விடாய்க்கு உத்தம்பகமாயிற்று: ராவணனுக்குச் சொன்ன ஹிதம் அவன் செவிப்படாதே ஸ்ரீவிபீஷணாழ்வானுக்குப் பெருமாளைப்பற்றுகைக்கு உறுப்பானாற்போலே. "வீடுமின் முற்ற" த்திலும் "சொன்னால் விரோத" த்திலும் "ஒருநாயக" த்திலும் பரோபதேசம்பண்ணின இது நமக்கு வைசத்யத்துக்கு உறுப்பாய் மூன்று களை பறித்த பயிர்போலே தம்முடைய ப்ரேமத்தை சதசாகமாக்கிற்று. "முடியானே" யிற் பிறந்த விடாய் ரஸாந்தரங்களாலே அபிபூதமானது தலையெடுத்து தேசகாலங்களால் விப்ரக்ருஷ்டமான அவன்படிகளை இப்போதே காணவேணுமென்னும் விடாயைப் பிறப்பித்து அப்போதே அநுபவிக்கப்பெறாமையாலே அப்ரக்ருதிங்கதராய்த் தம்முடைய தசையைக் கண்ட பந்துக்கள் சோகிக்கிற படியை, எம்பெருமானை ஆசைப்பட்டுப் பெறாதே மோஹங்கதையாய் நோவுபடுகிறாள் ஒரு பிராட்டியைக் கண்ட திருத்தாயார்பேச்சாலே அருளிச்செய்கிறார். "[Grantha text] । [Grantha text]" என்று திருவடியைக் கண்ட அநந்தரம் 'கடல்கடந்த

'உன்னுடைய வடிவைக் காட்டவேணும்' என்றான்; 'பூதகாலத்தே செய்ததைக் காட்ட வல்லன்' என்கிற ஶக்தியை அறிகையாலே: அப்படியே அவன் ஶக்தியை அறிகையாலும் தன் சாபலத்தாலும் இவளும் தேஶகாலவிப்ரக்ருஷ்டமானவற்றைக் காணவேணுமென்று ஆசைப் படுகிறாள்.

ஈடு.—ராமவிரஹத்தில் திருவயோத்யையிலுள்ளார் கூப்பிட்டாற்போலே, தாமும் தம்முடைய கரணக்ராமமுமாய்ப் பெருவிடாய்ப்பட்டுக் கூப்பிட்டார் - "முடியானே"யில்; இக் கூப்பீட்டை அல்லாதார் க்ஷுத்ரப்ரயோஜநங்களுக்காகப் புறம்பே கூப்பிடுகிறபடியைக் கண்டு, 'இது இவ்விஷயத்திலே யாகப் பெற்றதில்லையே!' என்று நொந்து, நாம் முந்துறமுன்னம் இவ்விஷயத்திலே கூப்பிடப்பெற்றோமிறே' என்று உகந்தார், "சொன்னால்விரோத"த்தில்; 'அவ்வளவேயோ? ஶகவதர்ஹகரணனாகவும் பெற்றோம்' என்றார் - "சன்மம்பலபல" வில்; அல்லாதார், தந்தாமுடைய கரணங்களைப் பாழேபோக்குகைக்குஅடியான ஐஶ்வர்யகைவல்யங்களிலே ப்ரவணராய் அநர்த்தப்படுகிறபடியைக் கண்டு, அவற்றினுடைய அல்பஅஸ்திரத்வாதி தோஷங்களையும், ஸர்வேஶ்வரன் பரமப்ராப்யனாயிருக்கிறபடியையும் உபதேசித்து, 'அவற்றைவிட்டு அவனைப்பற்றுங்கோள்' என்றார் - "ஒருநாயக" த்தில். ப்ரஸங்காத், 'இவ்வொருநாயகம்' அருளிச்செய்தவரேகிடீகோள் 'சூழ்விசும்பணிமுகி' லும் அருளிச்செய்தார்; 'இத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவுள்ளம் பற்றுங்கோள்' என்று பிள்ளை அருளிச்செய்வர். அதாவது - இது ப்ரத்யக்ஷிக்கிறாப்போலே இஶரீரஸமநந்தரம் அதுவும் காணவன்றோ நாம் புகுகிறது; இனி எத்தனைநாள் என்று. ஆக, மூன்று திருவாய்மொழியாலும் - இப்படி பரோபதேசம்பண்ணினஇது ஸம்ஸாரிகள் திருந்துகைக்கு உடலன்றிக்கே, அத்தாலும் தமக்கு பகவத்விஷயத்திலே விடாய்பிறந்தபடி சொல்லுகிறார் - இதில். அதாவது - இதரவிஷயங்களினுடைய தோஷாநுஸந்தாநபூர்வகமாக ஶகவத்வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்திறே, 'அவனைப்பற்றுங்கோள், இதரவிஷயங்களை விடுங்கோள்' என்கிறது; அது அவர்களுக்கு உடலன்றிக்கே தமக்கு வைஶத்யம்பிறக்கைக்கு உடலாயிற்று; ஸ்ரீவிபீஷணாழ்வான் ராவணனுக்குச்சொன்ன ஹிதம் அவனுக்கு உடலன்றிக்கே தனக்குப் பெருமாளைப்பற்றுகைக்கு உடலானாற்போலேயும், ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் ஹிரண்யனுக்குச்சொன்ன ஹிதம் அவன் நெஞ்சிலே படாதே தனக்கு பகவத்பக்தி மிகுகைக்கு உடலானாற்போலேயும்; "வீடுமின்முற்ற" த்திலும் "சொன்னால்விரோத" த்திலும் "ஒருநாயக" த்திலும் - பிறரைக்குறித்துச்சொன்ன ஹிதம் அவர்களுக்குஉறுப்பன்றிக்கே, மூன்று களையும் பறித்துச் சங்காயமும் வாரின பயிர் ஶதஶாகமாகப்

பாலனாய் ப்ரவேஶ, "முடியானே"யில் ஆற்றாமை தலையெடுத்ததென்கைக்காக அந்தநாலுதிருவாய்மொழிகளின் ப்ரமேயத்தை அநுவதியாநின்றுகொண்டு, இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி - 'ராமவிரஹத்தில்' இத்யாதி 'விடாய்பிறந்தபடி சொல்லுகிறார் இதில்' என்னுமளவும். புறம்பே - தேவதாந்தரவிஷயத்திலே. பாழே - பகவத்விஷயமாக்காதே வ்யர்த்தமே. "பணங்கொளரவணையான்" என்றத்தைப் பற்ற, 'பரமப்ராப்யனாய்' என்றது. அவற்றை - ஐஶ்வர்யகைவல்யங்களை. ப்ராஸங்கிகமான ஓரர்த்தம் அருளிச்செய்கிறார்- 'ப்ரஸங்காத்' இத்யாதி. இது - "ஒருநாயக"த்திற்படி. அதுவும் - "சூழ்விசும்பில்" ப்ரகாரமும். 'இனி எத்தனைநாள்' என்றது - தேஹஸம்ஸ்ருஷ்டராய் து:கப்படுகிறமை எத்தனைநாள்? என்றபடி. 'மூன்றுதிருவாய்மொழியாலும்' என்றது-வக்ஷ்யமாணமான "வீடுமின்முற்றவும்", "சொன்னால்விரோதம்," "ஒரு நாயகம்" ஆகிற மூன்று திருவாய்மொழியாலு மென்றபடி. "வீடுமின்முற்ற"வும் பரோபதேசமுகேந புத்திஸ்தமென்றத்தைப் பற்ற - 'ஆக' என்றது; அல்லது, "வீடுமின் முற்றத்"தின் ப்ரமேயம் கீழுக்தமன்றே. அத்தாலும் - பரோபதேசத்தாலும். 'அத்தாலும்' என்ற சஶப்தத்தாலே - "முடியானே"யிற்பிறந்த விடாயை ஸமுச்சயிக்கிறது. இதுக்கு ஸூசகம் - மேலே 'இவ்வபிநிவேசமும் இப்படிசெல்லாநிற்க' இத்யாதி வாக்யத்திலே விசதமாகக் கண்டுகொள்வது. அந்யார்த்தமாகச் சொன்னது தமக்குச் சாபல்யம் பிறக்கைக்கு உடலாமோ? என்ன, 'அதாவது' இத்யாதி. அவர்களுக்கு - ஸம்ஸாரிகளுக்கு. உகதார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தகதநமுகேந 'ஆக மூன்று திருவாய்மொழியாலும்' இத்யாதியை விவரிக்கிறார்-'ஸ்ரீவிபீஷணாழ்வான்' இத்யாதி. சங்காயம்-

பணைத்துப் பலிக்குமாபோலே தமக்கு அவன்பக்கலிலே அபிநிவேஶம் ஶதஶாகமாகப் பணைக்கைக்கு உடலாயிற்று. இவர்களுக்குக் களையாவது - பகவத்வ்யதிரிக்தவிஷயங்களும், அஸேவ்ய ஸேவைபண்ணித்திரிகையும், 'ஐஶ்வர்யகைவல்யங்கள் புருஷார்த்தம்' என்றிருக்கையும்; சங்காய மாவது - பயிர்தன்னிலே யுண்டாய் அறியாதார்க்குப் பயிர்போலே ப்ரதிஹாஸித்து அச்சங்காயம் வாரிப்போகடாதபோது நெல் பதர்க்கும்படியாயிருப்பதொன்று; அப்படியே கைவல்யமும். இவ்வபிநிவேஶமும் இப்படிச் செல்லாநிற்கச்செய்தே முன்பு "முடியானே" யிற் பிறந்த விடாய் ரஸாந்தரங்களாலே அபிபூதமாய்க்கிடந்தது; அந்தவிடாய் தலையெடுத்து, 'தேஶகாலங்களால் விப்ரக்ருஷ்டமான அவன்படிகளையும் தத்தத்தேஶகாலவிஶிஷ்டமாக்கி இப்போதே பெற்று அநுபவிக்கவேணும்' என்னும் விடாயும் பிறந்தது; அது அப்போதே கிடையாமையாலே, அந்தவிடாய்தான் அவஸ்தாந்தரத்தைப் பிறப்பித்தது. அவ்வவஸ்தாந்தரந்தான் - ஸர்வேஶ்வரனோடேகலந்து பிரிந்தாளொரு பிராட்டிதஶையாய் - பிராட்டிதான் மோஹங்கதையாய்க் கிடக்க அவள்தஶையை அநுஸந்தித்த திருத்தாயார் 'தேசகாலங்களால் விப்ரக்ருஷ்டமான அவன்படிகளையும் தத்தத்தேஶகால விஶிஷ்டமாக்கி இப்போதே பெற்று அநுபவிக்க வேணு மென்னாநின்றாள்' என்கிற பாசுரத்தாலே ஸ்வதஶையைப் பேசுகிறார். திருவடியைக்கண்ட பீமஸேநன், "[illegible]" (ஸாகரம்தர்த்துமுத்புக்தம் ரூபமப்ரதிமம்மஹத் । த்ரஷ்டுமிச்சாமி) என்று நீ முன்புகடல்கடந்த வடிவை நான் இப்போது காணவேணு மென்றானிறே, 'இவன்சக்திமான்' என்று தோற்றுகையாலே; அப்படியே இவளும் பகவச்சக்தியை யறிந்தபடியாலேயும், தன்சாபலாதிஶயத்தாலேயும், அவாவின்மிகுதியாலேயும், பூதகாலத்திலுள்ளவற்றையும் இப்போதே பெறவேணு மென்று ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

---

## முதற்பாட்டு.

---

> பாலனாய் ஏழுலகுண்டுபரிவின்றி
> ஆலிலைஅன்னவசஞ்செய்யும் அண்ணலார்
> தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே
> மாலுமால் வல்வினையேன்மடவல்லியே.

**ஆ.**—எம்பெருமான் ஒருபிள்ளையாய்ப் பிள்ளைத்தனத்தாலே முன்புகாணப்படுகிற இந்த ஏழுலகங்களையும் உண்டு அதனால் ஓர் அநிஷ்டகந்தமின்றியே ஆலிலையிலே கண்வளர்ந்

---

ஆனைப்புல். சங்காயத்துக்கு ஸ்வாபதேசமாகக் கைவல்யத்தை வேறே சொல்லுகையாலே, 'ஐஶ்வர்யகைவல்யங்கள்' என்கிறவிடத்தில் கைவல்யசப்தத்தில் தாத்பர்யமில்லை. இத்திருவாய்மொழியில் அபிநிவேஶம், கீழில் பரோபதேசம்பண்ணின வழியாலும், "முடியானே"யில் இழவாலும் உண்டாயிற் றென்கைக்காக, இரண்டு ஹேதுவையும் காட்டுகிறார்,—'இவ்வபிநிவேசமும்' இத்யாதி. இவ்வபிநிவேசமும் - இப்படிபரோபதேசமடியான அபிநிவேசமும். ரஸாந்தரங்கள் - களையும் சங்காயமுமான ஐஶ்வர்ய கைவல்யங்கள். 'அவன்படிகளையும்' என்ற ச ஶப்தம் - விரோதஸூசகம். அவஸ்தாந்தரம் - நாயக்யவஸ்தை. துர்ல்லபத்திலே சாபலம்பண்ணுகைக்கு அடி யேது? என்ன - ஸத்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறார், 'திருவடியை' இத்யாதி. அவாவென்று - சாபலத்திலே ஓர் அவஸ்தாவிசேஷமாய், ரஸாந்தரங்களால் மாற்றவொண்ணாதே பெற்றன்றித் தரியாத அவஸ்தாவிசேஷத்தைச் சொல்லுகிறது. சாபலம் - பற்றிற்றுவிடாமை, "[illegible]" இத்யாதி.

தருளினபோது அவன் திருவடிகளிலே யணிந்த திருத்துழாயை இக்காலத்திலே பெறவேணு மென்று ஆசைப்படாநின்றாள்; இப்படி ஸர்வஶக்தியான எம்பெருமான்தன்னாலும் ஸம்பாதிக்கவொண்ணாத ஒன்றை இவள் ஆசைப்படுகிறது என்னுடைய பாபமிறே என்று இவளுடைய திருத்தாயார் அலற்றுகிறாள்.

ஒ.—முதற்பாட்டில், வடதளஶாயியான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளிலே சாத்தின திருத்துழாயை இப்போதே பெறவேணுமென்று ஆசைப்படாநின்றாளென்று திருத்தாயார் ஶோகிக்கிறாள்.

[பரிவின்றி] - நோவின்றிக்கே. [அன்னவசம்செய்கை] - இடம்வலங்கொள்ளுகை. [மாலுமால்] - மயங்காநின்றாள். 'வல்வினை' என்கிறது, இவள் இங்ஙன் துர்க்கடங்களை ஆசைப்படுகைக்குக் காரணம் என்கர்மம் என்கிறாள். மடம் - தான்நினைத்ததே நினைக்கை.

ப·—முதற்பாட்டில், வடதளஶாயிதிருவடிகளில் திருத்துழாயைப் பெறவேணு மென்று ப்ரமியாநின்றாள் என்கிறாள்.

பாலனாய் - அதிபால்யமான வடிவையுடையனாய், ஏழ்உலகு-ஸமஸ்தலோகங்களையும், உண்டு - அமுதுசெய்து, (அத்தால்), பரிவு இன்றி-ஒருமிறுக்கு இன்றியே, ஆலிலை-ஆலந்தளிர் மேலே, அன்னவசம்செய்யும் - உண்டதுக்கு ஈடாகக் கிடக்கும், அண்ணலார் - ஸ்வாமியானவருடைய, தாளிணைமேல் - திருவடிகளிரண்டின்மேலே, அணி - (இவ்வபதாநத்துக்குத்தோற்று அன்புடைய ஸூரிகள்) சாத்தின, தண் - குளிர்ந்த, அம் - செவ்வியையுடைய, துழாய் - திருத்துழாயை (ப்பெறவேணும்), என்றே - என்றே, மாலும் - ('அதீதகாலத்திலது இப்போது கிட்டாது') என்றறியாதே ப்ரமியாநின்றாள்; வல்வினையேன் - இக்கலக்கம் காண்கைக்கு அடியான பாபத்தையுடையளான என்னுடைய, மடம்-பற்றிற்றுவிடாத துவட்சியையுடையளாய், வல்லி - உபக்நாபேக்ஷமான கொடிபோலே யிருக்கிற இவள். அகடிதங்களை கடிப்பிக்கும் ஸர்வஶக்திக்குச் செய்யவொண்ணாததில்லை யென்றிருக்கை. 'காலிணைமேலணிதண்ணந்துழாய்' என்று பாடம் சொல்வாரு முளர்.

இ.—முதற்பாட்டில், வடதளஶாயிதிருவடிகளிற் சாத்தின திருத்துழாயை 'செவ்வி மாறாமே இப்போதே பெறவேணும்' என்னாநின்றாள் என்கிறாள்.

[பாலனாய்] - "ஜ்ஞாநம் ந ஷ்ஷ்டம்" என்று மணிச்சுக்கு அவ்வருகு அறியாதாப்போலே இவ்வவஸ்தைக்கு அவ்வருகு திருவுள்ளத்திலும் இன்றிக்கேயிருக்கை. "ஶைஶவம்" என்றும், "தூயகுழவியாய்", "படியாதுமில்குழவிப்படி" என்றும் சொல்லுகிறபடியே அதிஶைஶவம் இருந்தபடி. [ஏழுலகுண்டு] - பால்யத்தின்கார்யம் இருந்தபடி. ப்ரளயாபந்நமான லோகங்களை 'ஸாத்மிக்கும் ஸாத்மியாது' என்று அறியாதே எடுத்துத் திருவயிற்றிலே வைத்தான். [பரிவின்றி] - பரிவு - வருத்தம்; லோகங்களைத் திரள வயிற்றிலே வைத்தால் ஸாத்மியாமல் வரும் நோவு இன்றிக்கேயிருக்கை. [ஆலிலை] - ஒரு பவனான ஆலிலையிலே. லோகங்கள் ஸாத்மியாது என்று அறியாதாப்போலேயாயிற்று, இது படுக்கையாகப் போராது என்று அறியாதபடியும். [அன்னவசம்செய்யும்]-அன்னமென்று உணவு; அதுக்கு அநுகுணமான வ்யாபாரத்தைப் பண்ணுமவன். அஶைஶவத்திலும் ரக்ஷணத்தில் அவதாநம் இருந்தபடி. இடக்கைகிழ்ப்படக் கிடந்தானாகில் லோகங்கள் ஜரித்துப்போமிறே. [அண்ணலார்] - ஸர்வரக்ஷகனான ஸ்வாமி. அவன் ஶைஶவத்திலும் ரக்ஷணத்தில் அவதாநம்போலே யாய்த்து, இவள் மோஹத்திலும் முறையில் கலக்கமற்றிருந்தபடி. 'ஸம்ஸாரிகளை ஆபத்தே முதலாக

ரக்ஷித்த ஸர்வரக்ஷகனானவன் ஓர் அபலைக்கு உதவானோ?' என்னாநின்றாள். [அண்ணலார் தாளிணை] - ஶேஷபூதன் பற்றுவது ஶேஷியுடைய திருவடிகளையிறே. [தாளிணைமேலணி தண்ணந்துழாய்]-வடதளஶாயியினுடைய திருவடிகளில் திருத்துழாயைச் செவ்விமாறாமே அநுபவிக்கவேணும் என்னாநின்றாள். அவன் அகடிதங்களைச் செய்திலனாகில் இவள் துர்லபங்களை ஆசைப்படாள்கிடீர். [துழாயென்றே] - கலியர் 'சோறு சோறு' என்னுமாபோலே பலகாலும் இத்தையே சொல்லாநின்றாள். ஒருகாலத்திலே செய்து அற்றுப்போனது இனிக்கிடையாது என்று நான் சொன்ன ஹிதவசநம் செவிப்படாதே தான்நினைத்தத்தையே சொல்லாநின்றாள். [மாலுமால்]-மாலுதல் - மயங்குதல்; மோஹியாநின்றாள். கிடையாதத்தை ஆசைப்பட்டால் மோஹமேயாய்த் தலைக்கட்டவேணுமோ? மணியிலே அக்நிபுத்தி பிறந்தால் சுடவேணுமோ? [வல்வினையேன்] - இவளை இப்படி காணும்படியான பாபத்தைப் பண்ணினேன். மோஹித்தவளுக்கு து:காநுபவமில்லை. உணர்ந்திருந்து க்லேஶப்படுகிறாள் தானாகையாலே, 'வல்வினையேன்' என்கிறாள். [மடவல்லியே] - மடப்பமாவது - பற்றிற்றுவிடாதே நின்று அத்தையே நினைக்கை. [வல்லி] - ஒருகொள்கொம்பிலே சேராவிடில் தரியாதபடியான பருவம். "[illegible]".

ஈடு.—முதற்பாட்டு. வடதளஶாயியினுடைய திருவடிகளில் சாத்தின திருத்துழாயைச் செவ்வியோடே இப்போதே பெறவேணு மென்று ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[பாலனாய்] - பருவம்நிரம்பினபின்பு லோகத்தையெடுத்து வயிற்றிலேவைத்து ஆலிலையிலே சாய்ந்தானாகில் என்மகள் இப்பாடுபடாள்கிடீர்; 'அவன் ஒருதசையிலேகாண் ரக்ஷகனாவது' என்று மீட்கலாமிறே. [ஆய்] - "[illegible]" (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) என்கிறபடியே, இவ்வவஸ்தையையொழியப் பூர்வாவஸ்தை நெஞ்சிற்படாமை; * "படியாதுமில்குழவிப்படி" என்னக்கடவதிறே. கலப்பற்ற பிள்ளைத்தனத்தையுடையனாய். [ஏழுலகுண்டு]-"இது † ஸாத்மிக்கும், இது ஸாத்மியாது" என்று அறியாதே, ஏதேனுமாக முன்புதோன்றினத்தை வாயிலேயெடுத்துஇடும்படியாயிற்றுப் பருவம். ரக்ஷகவஸ்துவினுடைய வ்யாபாரமாகையாலே இது ரக்ஷண

முதற்பாட்டு—'பாலனாய்' இத்யாதி. 'ஆலிலையன்னவசம்' இத்யாதி 'மாலுமால்' என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - 'வடதளஶாயியினுடைய' இத்யாதி.

பாலனாய்க்கொண்டு லோகங்களை வயிற்றிலேவைத்து ஆலிலையிலே சாய்ந்தவன் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படுகிறாளென்று சொல்லுகிற திருத்தாயாருடைய ஹார்த்தபாவத்தை அருளிச்செய்கிறார் - 'பருவம்' இத்யாதி. அது எப்படி? என்ன, 'அவன்ஒரு' இத்யாதி. ஒருதசையிலே-ப்ரௌடதசையிலே. 'அதாவது-லோகத்துக்கு ஓராபத்து வந்தபோதுகாண் தத்ரக்ஷணார்த்தமாக இச்செயலைச் செய்தது : இப்போது செய்யுமதுவோ அது?' என்று மீட்கலாம், பருவம் நிரம்பினபின் செய்தால்; அங்ஙனன்றிக்கே, கார்யாகார்ய விவேகத்துக்கு யோக்யதையில்லாத பருவத்திலே செய்ததாகையாலே இப்போது செய்யத் தட்டு என்? என்று மகளுக்குக்கருத்து என்றபடி. 'ஆய்' என்றதுக்கு வாஸனை-'ஆத்மாநம்' இத்யாதி. "[illegible]" இத்யாதி பூர்வமேவ லிகிதம். யுத்தகாண்டே ப்ரஹ்மாதீந்ப்ரதி ராம:."பாலன்"என்னுமதுக்கு ப்ரமாணம் – 'படியாதும்' இத்யாதி. படி-உபமாநம்; ஒப்பு ஒன்றும் இன்றிக்கே யிருக்கிற பிள்ளைத்தனத்தையுடையவ னென்றபடி. சப்தார்த்தம் – 'கலப்பற்ற' இத்யாதி. அதி பால்யத்திலே ஏழுலகுமுண்ணக்கூடுமோ? என்ன, 'இதுஸாத்மிக்கும்' இத்யாதி. இந்தப்பருவத்தில் வ்யாபாரம் ரக்ஷணமாகக்கூடுமோ? என்ன, 'ரக்ஷகவஸ்து' இத்யாதி. தாயாருடைய ஹார்த்தபாவம் – 'அவன் பொறுக்

* திருவாய்மொழி - ௩ - எ - ௧௦. † ஸாத்மிக்கும் - ஜரிக்கும்.

மாய்த் தலைக்கட்டின இத்தனை. அவன் பொறுக்குஞ் செயலைச் செய்தானாகில், இவளும் பொறுக்கும்படியானவற்றை ஆசைப்படாளோ? [ஏழுலகுண்டு] - ஆபத்து உண்டானால் வரைந்துநோக்குமதில்லை. [பரிவின்றி] - ஒருவருத்தமின்றிக்கே; லோகங்களையெடுத்து வயிற்றிலே வைக்கிறவிடத்தில் அத்தால் ஒருவருத்தமின்றிக்கே. [ஆலிலை]-ஒரு பவனான ஆலிலையிலே. அவ்வடம்பண்ணிக் கோடுத்த ஶுத்தபத்ரத்திலே. [அன்னவசம்செய்யும்] - தன்வசமாகவன்றிக்கே "அஹமந்நம்" (அஹமந்நம்) என்கிற அந்நத்துக்கு வசமாக. புக்தம்ஜரியாதபடி அதுக்கீடாகச் சாய்ந்தான். [அண்ணலார்]-அவன் ஶைஶவத்திலும் ரக்ஷணத்தில் அவதாநம்போலேயாயிற்று இவள்மோஹத்திலும் முறையில் கலக்கமற்றுஇருந்தபடி. [அண்ணலார்] - ஸர்வரக்ஷகருமாய் ஸர்வஸ்வாமியுமானவர். ஸர்வரக்ஷகரானவர்க்கு உம்மையாசைப்பட்ட அபலையான என் அபேக்ஷிதம் செய்யத் தட்டுண்டோ? என்கிறாள். [அண்ணலார்தாளிணை] - ஶேஷபூதன் பற்றுவது சேஷியினுடைய திருவடிகளேயிறே. [தாளிணைமேலணிதண்ணந்துழாய்] - இப்படி இவள் ஆசைப்படுகைக்கு அடியிலே பச்சையிட்டாள்காணும். ப்ராஹ்மணன் பிச்சேறினாலும் ஓத்துச்சோல்லுமாபோலே, இவளும் அடியில் அப்யஸித்தத்தையே சொல்லாநின்றாள்; தாட்பட்டதண்டுழாய்த் தாமத்திலேயிறே வாஸனை பண்ணிற்று. [துழாயென்றே] - எப்போதும் அத்தையே சொல்லாநின்றாள். 'கெடுவாய், இது துர்க்கடங்காண், பூதகாலத்திலுள்ளதொன்றுகாண்' என்றால், அது செவியிற்படுகிறதில்லை. யுக்திஸாத்மையன்றிக்கே யிருக்கை. [மாலும்]-மோஹிக்கும். மாலுதல் - மயங்குதல். இது ஒருக்திமாத்ரமாய் அகவாயில் இன்றிக்கே யிருக்கையன்றிக்கே உள்ளழியாநின்றாள். மணிப்ரபையிலே அக்நிபுத்தி பிறந்தால் அது பின்னைச் சுடவும் வேணுமோ? [வல்வினையேன்] - மோஹங்

கும்' இத்யாதி. பொறுக்கும்செயல் - 'இது யோக்யம்' என்று நிரூபணத்தைப் பொறுக்குமதான செயல். பொறுக்கும்படியானவற்றை - 'இது ஆசைப்படுகைக்குயோக்யம்' என்னும் நிரூபணத்தைப் பொறுக்கும்படியானவற்றை. 'உலகு' என்றதுக்கு பாவம் - 'ஆபத்துண்டானால்' இத்யாதி; புத்திபூர்வகமாக என்று பாவாந்தரமாதல். வரைந்து - தாரதம்யம்பார்த்து. * (சாடு - 'அவ்வடம்' இத்யாதி. வடம்-இடமும், வடமும்.) 'அவ்வடம்பண்ணிக்கொடுத்த' என்றது-வேறுபடுக்கை படுப்பாரில்லை யென்றபடி. நிருதியோக்யமானதொன்றிலே ஸௌகுமார்யத்துக்கு அநுகுணமாக ம்ருதுவானவற்றைப் படுக்கலாமிறே: அதில்லை யென்கிறார்,'சுத்தபத்ரத்திலே' என்று. ஶுத்தபத்ரம்-வெறும்இலையென்று ஸ்வபாவார்த்தம்; விசுத்தியோலை யென்று சாடு. 'அஹமந்நம்' என்கிற ஜீவர்களாகிற அந்நமென்றபடி. அர்த்தாந்தரம் - 'புக்தம்ஜரியாதபடி' இத்யாதி; விவரணமாதல். அதுக்கீடாக வென்றது - வலக்கைகீழாக வென்றபடி. கலங்கினதஶையிலே 'அண்ணலார்' என்னக்கூடுமோ? என்ன, 'அவன்ஶைஶவத்திலும்' இத்யாதி. முறை-சேஷத்வப்ராப்தி. 'ஏழுலகுண்டு' என்றதின் த்விதீயார்த்தத்துக்குச் சேர பாவம் - 'ஸர்வரக்ஷகரானவர்க்கு'இத்யாதி; பாட்டுக்கெல்லாம் பாவமாதல். அவயவாந்தரங்கள் கிடக்க, 'தாளிணை' என்கிறதென்? என்ன, 'ஶேஷபூதன்' இத்யாதி. சாடு - 'இப்படி' இத்யாதி. அடியிலே- முதலிலே, திருவடிகளிலே. பச்சை–உபஹாரம், திருத்துழாயும். 'ஆனாலும் பிராட்டியான அவஸ்தைக்குச் சேராதே' என்ன,'ப்ராஹ்மணன்' இத்யாதி. ஓத்து-வேதம். அடியிலேயப்யஸித்தது எங்கே?என்ன, 'தாட்பட்ட' இத்யாதி. 'என்றே' என்கிற அவதாரணத்துக்கு பாவம் - 'எப்போதும்' இத்யாதி. எப்போதும் சொல்லும்போது 'வேண்டா' என்றாரில்லையோ? என்ன, 'கெடுவாய்' இத்யாதி. இது-துழாய். 'அதுசெவியிற்படுகிறதில்லை—என்றே என்று பேச்சினுடைய அநுவ்ருத்தியைச் சொல்லுகையாலே, வேறொன்று செவிப்படாமை ஸித்தமிறே. யத்வா, 'எப்போதும்' இத்யாதி வாக்யம் - சப்தார்த்தமாய், 'கெடுவாய்' இத்யாதி வாக்யம்-ஏவகாரார்த்தமாதல். இத்தால் பலிதம் - 'யுக்திஸாத்மை' இத்யாதி. 'என்றே' என்ற அநந்தரம், 'மாலுமால்' என்றதுக்கு பாவம் - 'இது ஒருக்திமாத்ரமாய்' இத்யாதி. அகடிதத்தை ஆசைப்பட்டுக் கிடையாவிட்டால் மோஹிக்குமத்தை, அஸம்பாவித த்ருஷ்டாந்தத்தாலே அருளிச்செய்கிறார் - 'மணிப்ரபையிலே' இத்யாதி. துர்லபத்திலே 'கிடைக்கும்' என்று புத்திபிறந்தால் மோஹம்வரவேணுமோ ? என்று கருத்து. அதீத

* குண்டலிதம் ப்ரக்ஷிப்தமென்று தோன்றுகிறது.

கதையாய்க்கிடக்கிற இவளுக்கு ஒரு து காநுஸந்தாந மில்லையிறே, உணர்ந்திருந்து அநுஸந்திக்கிற என்பாபமிறே. [மடவல்லியே] - பற்றிற்றுவிடாமை, மடப்பம். ஒருகோள்கோம்போடே சேர்க்க வேண்டும் பருவமாயிருக்கை. [வல்லி] - ‹‹பதிஸம்யோகஸுலபம்வய:›› (பதிஸம்யோகஸுலபம்வய:) என்கிறபடியே யிருக்கை. (க)

---

# இரண்டாம் பாட்டு.

---

வல்லிசேர்நுண்ணிடை ஆய்ச்சியர்தம்மோடும்
கொல்லைமைசெய்து குரவைபிணைந்தவர்
நல்லடிமேலணி நாறுதுழாயென்றே
சொல்லுமால் சூழ்வினையாட்டியேன்பாவையே.

*ஆ.*—(வல்லிசேர்.) தன்னுடைய ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்யாதி கல்யாணகுணவிஷ்காரத்தாலே திருவாய்ப்பாடியில் பெண்பிள்ளைகளை வாயடித்துத் தம்திருவடிகளிலே வந்துவிழும்படி வசீகரித்து அவர்களோடே திருக்குரவைகோத்தருளின வண்டுவரைப்பெருமானுடைய அவ்வழகியதிருவடிகளிலே யணிந்த நாறுதுழாயை ஆசைப்படுகிறாள் என்கிறாள்.

*ஒ.*—இரண்டாம்பாட்டில், திருக்குரவையில் க்ருஷ்ணனுடைய லீலாசேஷ்டிதங்களைக் காண ஆசைப்படாநின்றாள் என்கிறாள்

[வல்லிசேர் என்று தொடங்கி.] - வல்லிபோலேயிருக்கிற வடிவையும் நுண்ணிய இடையையு முடைய இடைப்பெண்களைத் தன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே வரம்பழித்து அவர்களோடே திருக்குரவை கோத்தருளினவருடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளில். [சூழ்வினை] - தப்பாமே அகப்படுத்தும் பாபம்.

*ப.*—அநந்தரம், திருக்குரவைகோத்த க்ருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாயை எப்போதும் பிதற்றிடாநின்றாள் என்கிறாள்.

வல்லி - வல்லியோடு, சேர் - ஒத்த, நுண் - நுண்ணிய, இடை - இடையையுடைய, ஆய்ச்சியர்தம்மொடும் - ஆய்ச்சியர்தங்களோடு ஒருகோவையாக (அவர்கள் வரம்பழியும்படி), கொல்லைமை - அமர்யாதமான வ்யாபாரத்தை, செய்து - பண்ணி, குரவை - குரவையை, பிணைந்தவர் - கோத்தவருடைய, நல் - (ந்ருத்தத்துக்கிடாக மிதிக்கிற) அழகிய, அடிமேல் - திருவடிகளிலே, அணி - அணியப்பட்ட, நாறு - பரிமளோத்தரமான, துழாயென்றே - திருத்துழாயென்றே, சொல்லும் - சொல்லாநின்றாள்; சூழ் - (இவளை இப்படிகாணும்படி தப்பாமல்) சூழ்ந்த, வினையாட்டியேன் - பாபத்தையுடைய என், பாவை - பெண்பிள்ளையானவள்.

---

காலத்திலுள்ளத்தை ஆசைப்படுகை, மணிப்ரவைபயிலே அக்நி புத்தி பிறந்த வோபாதியிறே. அது-அக்நி- நாயகனை விஶ்லேஷித்த நாயகியதன்றோ பாபம்? என்ன, 'மோஹங்கதையாய்' இத்யாதி. 'வல்லி' என்றதுக்கு ஹாவம் - 'ஒருகொள்கொம்பு' இத்யாதி. விவரணம் - 'பதிஸம்யோக' இத்யாதி. ‹‹பதிஸம்யோகஸுலபம் வயோத்ருஷ்ட்வா ச மே பிதா । சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாதாப்லவோயதா›› இதி அயோத்யாகாண்டே அநஸூயாம் ப்ரதி ஸீதா. வல்வினையேன் மடவல்லி, பாலனாய் இத்யாரப்ய, மாலுமால் இத்யந்வய:. (க)

இ·—இரண்டாம்பாட்டில், திருக்குரவையில் க்ருஷ்ணனுடைய லீலாசேஷ்டிதங்களைக் காண ஆசைப்படாநின்ருள் என்கிருள்.

[வல்லிசேர் இத்யாதி] - ''வள்ளிமருங்குல்'' என்ருற்போலே வள்ளிக்கொடிபோலேயிருக்கிற இடையையுடையவர்கள் என்னுதல், வல்லிபோலேயிருக்கிற வடிவையுடையவர்கள் என்னப்புக்கு இடைக்கு உபமானமில்லாமையாலே 'நுண்ணிடை' என்னுதல். [ஆய்ச்சியர் தம்மொடும்]-என்பருவத்திற் பெண்களநேகர்க்கு உதவினவன் எனக்கு உதவானே? என்கிருள். [கொல்லைமைசெய்து]-வரம்பழிந்த செயல்களைச் செய்து; தன் ஸௌந்தர்யாதிகளாலே அவர்கள் மர்யாதைகளை அழித்து. [குரவைபிணைந்தவர்] - பெண்கள் கோவையிலே தன்னைத் தொடுத்தான்; அவனுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளில். [நாறுதுழாய்] - பெண்களடியும் இவனடியும் பட்ட அடிச்சுவடு கந்தத்திலே தோற்றும்படியான திருத்துழாயையாயிற்று, இவள் ஆசைப்படுகிறது. ப்ரஹ்மசாரியெம்பெருமான்திருவடிகளில் ஆசைப்படுமவளன்றே; [என்றே சொல்லுமால்] - பாவியேன் நினைத்தபடி வாய்விடக்கடவளன்றியிலே யிருக்கிற இவளுடைய ஸ்த்ரீத்வமெல்லாம் எங்கேபோயிற்று? [சூழ்வினையாட்டியேன்] - தப்பாமல் அகப்படுத்தும் பாபத்தைப் பண்ணினேன். [பாவையே]-நிருபாதிகமான ஸ்த்ரீத்வத்தையுடையவள். [பாவை சொல்லுமால்] - நினைத்தது வாய்விடக்கடவதன்றிக்கேயிருக்கும் ஸ்த்ரீத்வமெல்லாம் போய்த் தன்அபிமதத்துக்குத் தான் வாய்விடவேண்டும்படியாயிற்று என்னுடைய பாபமிறே.

ஈடு·—இரண்டாம்பாட்டு. 'ஸர்வரக்ஷகனை ஸர்வேஶ்வரன் ப்ரளயாபத்திலே தன் விபூதிரக்ஷணம்பண்ணினுகில், அதுவும் பேற்றுக்குஉடலாமோ?' என்ன, 'அது' உடலன்ருகில் தவிருகிறேன், என்பருவத்திற்பெண்களுக்கு உதவினவிடத்திலே எனக்கு உதவத் தட்டு என் ?' என்ருநின்ருள் என்கிருள்.

[வல்லிசேர்நுண்ணிடை] - ''வள்ளிமருங்குல்'' என்ருற்போலே, வள்ளிக்கோடிபோலேயிருக்கிற இடையையுடையவர்க ளென்னுதல் ; வல்லிபோன்ற வடிவையுடையராய், இடைக்கு உபமாநமில்லாமையாலே - நுண்ணிடை யென்னுதல். [ஆய்ச்சியர்தம்மொடும்] - என்பருவத்திற்பெண்கள்பலருக்கும் உதவினவர் அவர்களெல்லார்விடாயுமுடைய எனக்கு உதவத் தட்டு என் ? என்ருநின்ருள். திருவாய்ப்பாடியில் இவள்பருவத்திற்பெண்கள்பலர்க்கும் உதவினுனிறே. [கொல்லைமைசெய்து] - வரம்பழிந்த செயல்களைச் செய்து; ஸௌந்தர்யாதிகளாலே அவர்கள்மர்யாதையை அழித்து. [குரவைபிணைந்தவர்] - அவர்களோடே தன்னைத் தொடுத்தபடி. [நல்லடி] - பெண்களுந் தானுமாய் மாறிமாறித் துகைத்த திருத்துழாய் பெறவே

இரண்டாம்பாட்டு - 'வல்லிசேர்' இத்யாதி. 'ஆய்ச்சியர்தம்மொடும் கொல்லைமைசெய்து' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'ஸர்வரக்ஷகனை' இத்யாதி. பேற்றுக்கு - அநுபவத்துக்கு. கீழே 'மடவல்லி' என்று தன்னைச்சொல்லி, இவர்களையும் 'வல்லிசேர் ஆய்ச்சியர்' என்று த்விதீயார்த்தத்திலே சொல்லுகையாலே, 'என்பருவத்திற்பெண்கள்' என்கிருர்.

வல்லியை இடைக்கு உபமாநமாகச் சொன்னதுக்கு ஸம்வாதம்—'வள்ளிமருங்குல்' இத்யாதி. திருமொழி—''கள்வன்கொல்'' இத்யாதி. வள்ளியென்று - ஒருவல்லிக்குப் பேர். மருங்குல் - மத்யம். 'அவர்கள் அநேகராகையாலே, ''[illegible]'' அன்ருே? என்ன, 'அவர்களெல்லார் விடாயும்' இத்யாதி. அப்படியுதவினுனே ? என்ன, 'திருவாய்ப்பாடியில்' இத்யாதி. கொல்லை - வரம்பில்லாதது. கொல்லைமை – வரம்பழிந்தசெயல். விவரணம் – 'ஸௌந்தர்ய' இத்யாதி. இவ்[illegible]ல ''கண்டவர் தம்மனம்வழங்கும்'' இத்யாத்யநுஸந்தேயம். 'அவர்களோடே ஸம்ஶ்லேஷித்தவர் திருவடிகளில் திருத்துழாய்' என்றத்தால் பலிதம் - 'பெண்களும்' இத்யாதி. இவ்வளவாக ஸாவம் - 'ப்ரஹ்மசாரி' இத்யாதி. 'பெண்

ணும் என்று ஆசைப்படுகிறது. ப்ரஹ்மசாரியெம்பெருமான்திருவடிகளில் திருத்துழாய் ஆசைப்படு மவளன்றே இவள். [நாறுதுழாய்] - அவர்களும் அவனுமாகத் துகைத்ததென்று அறியுங்காணும் இவள் பரிமளத்தே; * கலம்பகன் நாறுமே. [என்றேசொல்லுமால்] - நினைத்தது வாய்விடமாட்டாத ஸ்த்ரீத்வமெல்லாம் எங்கேபோயிற்று? [சூழ்வினையாட்டியேன்] - தப்பாதபடி அகப்படுத்திக் கொள்ளும்படியான பாபத்தைப் பண்ணினேன். ''நைவமாம் கிஞ்சிதப்ரவீத்'' (நைவமாம் கிஞ்சிதப்ரவீத்) என்றிருக்குமவள் வார்த்தைசொல்லுகிறது என்பாபமிறே. [பாவையே] - எல்லா அவஸ்தையிலும் தன்னகவாயிலோடுகிறது பிறரறியாதபடி இருக்கக்கடவ நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடைய இவள், தன்பேற்றுக்குத் தான் வார்த்தை சொல்லும்படியாவதே! (உ)

---

## மூன்றும்பாட்டு.

---

பாவியல்வேத நன்மாலைபலகொண்டு
தேவர்கள்மாமுனிவர் இறைஞ்சநின்ற
சேவடிமேலணி செம்பொன்துழாயென்றே
கூவுமால் கோள்வினையாட்டியேன்கோதையே.

ஆ.—(பாவியல்.) ஸாதுபதவிரசிதமாய் அதிமங்களமாய் அஸங்க்யேயமாயிருந்த வேதங்களாகிற மாலைகளைக்கொண்டு சதுர்முகாதிதேவர்களும் ஸநகாதிமுநிகளும் இறைஞ்சும்படி தன்னைக்கொடுத்துக்கொண்டு பாற்கடல்சேர்ந்த பரமனுடைய அழகிய திருவடிகளிலே யணிந்த செம்பொற்றுழாயென்று இவள் கூப்பிடாநிற்கும் என்கிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், திருவுலகளந்தருளின எம்பெருமான் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்

[பாவியல் என்று தொடங்கி.]-நல்ல சந்தஸ்ஸையுடைத்தான ருக்வேதத்தில் வைஷ்ணவமான பலஸூக்தங்களைக் கொண்டு தேவர்களும் ருஷிகளும் ஆஶ்ரயிக்கலாம்படி தன்னைக் கொடுத்துக்கொடு நின்ற. [கோள்வினை] - முடித்தல்லது போகாத பாபம். [கோதை] - தன்னுடைய மயிர்முடியையும் மாலையையும் கண்டாரை இப்பாடுபடுத்தவல்ல ளென்று கருத்து.

ப.—அநந்தரம், ஸர்வலோகமும் ஸ்துதிக்கும்படியான த்ரிவிக்ரமன் திருவடிகளில் திருத்துழாயைச் சொல்லி அழையாநின்றாள் என்கிறாள்.

பா - சந்தஸ்ஸிலே, இயல் - வர்த்திப்பதான, வேதம் - வேதஸூக்தங்களையும், நல் - திவ்யமாய், பல - பலவகைப்பட்ட, மாலை - மாலைகளையும், கொண்டு - கொண்டு, (''ஸஹஸ்ர வஸூ நாரணாழ்'' என்கிறபடியே), தேவர்கள் - தேவர்களும், மா முனிவர் - ஶ்லாக்யரான ஸநகாதி முனிகளும், இறைஞ்ச - ஆராதிக்கும்படி, நின்ற - (லோகத்தையளந்து) நின்ற, சே அடிமேல்-

---

களும் அவனும் துகைத்தது' என்றறியும்படியென்? என்ன, 'அவர்களும்' இத்யாதி. அறியும் ப்ரகாரமேது? என்ன, 'கலம்பகன்' இத்யாதி. 'ஆல்' என்றதுக்கு ஹாவம் - 'நினைத்தது' இத்யாதி. பாபமேது? என்ன, 'நைவமாம்' இத்யாதி. ''கூஜ்யந்தமிவ ஸாந்த்வம் நாராஜவாத்யஸ்வநீ । தேநதூ:கே நாவதீநைவமாம் கிஞ்சிதப்ரவீத்'' இதி, அயோத்யாகாண்டே ஸுமந்த்ர:. (ஸர். ருஅ) ஏகாரத்தின்ஸ்வாரஸ்தம்-'எல்லா-அவஸ்தையிலும்' இத்யாதி. சூழ்வினையாட்டியேன்பாவை - வல்லிசேர் இத்யாரப்ய அர்வய: (உ)

---

* கலம்பகன் - கல்ப்புவாசனை.

சிவந்த திருவடிகளின்மேலே, அணி - (அவர்கள்) அணிந்த, செம் - சிவந்த, பொன் - பொன் போலே ஸ்ப்ருஹணீயமான, துழாயென்றே - திருத்துழாயைச்சொல்லியே, கூவும் - கூப்பிடா நின்றாள்: கோள் வினை யாட்டியேன் - ப்ரபலமான பாபத்தையுடையேனான என்னுடைய, கோதை - பூமாலைபோலேயிருக்கிறவள். மாலையையுடையவளாகவுமாம். கோள் - மிடுக்கு. கூவு தல் - அழைத்தலாய், கூப்பிடுதல்.

இ.—மூன்றாம்பாட்டில், திருவுலகளந்தருளினவன் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[பாவியல்வேதம்]-பாக்களாலே இயலப்பட்ட வேதம், சந்தஸ்ஸுக்களை யுடைத்தான வேதம். அதில் நன்றான மாலைகளைக் கொண்டு - ஸ்ரீபுருஷஸூக்தாதிகளைக் கொண்டு. ‟ஸவெ வெதாயத் பதமாமநந்தி" என்கிறபடியே அல்லாதஇடங்களுக்கும் ப்ரதிபாத்யனேயானாலும் ஆரா தநத்திலேயாதல், விபூதியிலேயாதல் பரந்திருக்கும். [தேவர்கள் இத்யாதி] - தேவர்களும், ஸந காதிகளும். ‟ஸஂவெஸூராணாஂ" என்கிறபடியே ஸ்தோத்ரம்பண்ணத் திருவுலகளந்தபடி. [சேவடி] - எடுத்ததிருவடியில் கவிழ்வில் சிவப்பு எல்லாருக்கும் அநுபவிக்கலாயிருந்தபடி. எல் லார்தலைகளிலும் திருவடிகளை வைத்து ரக்ஷித்தவன் எனக்கு உதவாதொழியுமோ? என்றுநின் றாள். அவன் திருவடிகளில் சாத்தின ஸ்ப்ருஹணீயமான திருத்துழாயைச் சொல்லிக் கூப்பிடா நின்றாள். [கோள்வினை] - கொள்ளும் வினை; முடிக்கும்வினை யென்னுதல். கோளென்று மிடுக் காய் வலியபாப மென்னுதல். [கோதையே] - இவள்மாலையையும் மயிர்முடியையும் கண்ட நாய கன் படும் பாட்டை இவள்தான் படாநின்றாள் என்கிறாள்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. ஓரூருக்காக உதவினதேயன்றிக்கே, ஒருநாட்டுக்காக உதவினவன்பக்க லுள்ளது பெறத் தட்டேன்? என்றுநின்றாள் என்கிறாள்.

[பாவியல்வேதம்] - பாவாலே இயற்றப்பட்ட வேதம். சந்தஸ்ஸுக்களாலே சொல்லப் பட்ட வேதம். அநுஷ்டுப் என்றும், த்ரிஷ்டுப் என்றும், ப்ருஹதீ என்றும் இத்யாதி சந்தஸ்ஸுக்களை யுடைத்தான வேதம். [நல்மாலை]-அதின் நன்றான மாலைகளைக்கொண்டு-ஸ்ரீபுருஷஸூக்தாதிகளைக் கொண்டு. ‟ஸவ்வெவெதாயத் பதமாமநந்தி" (ஸர்வேவேதாயத்பதமாமநந்தி), ‟வெதெஶ் ஸவ்வெ ரஹமெவவெத்யஃ" (வேதைஶ் சஸர்வைரஹமேவவேத்யஃ) என்கிறபடியே-அல்லாதவிடங்களிலும் ப்ரதிபாத்யன் அவனேயாகிலும், ஸ்வரூபரூபகுணங்களுக்கு வாசகமானவற்றைக்கொண்டு. அன்றிக் கே, வேதம் நன்மாலை என்று பிரித்து - ஆராதநத்திலும் விபூதிவிஷயமாகவும் பரந்திருக்கும் வேதத் தையும் ஸ்ரீபுருஷஸூக்தாதிகளையும் கொண்டு என்றுமாம். [தேவர்கள்மாமுனிவரிறைஞ்சநின்ற]- தேவர்களும் ஸநகாதிகளும் ‟ஸஂவெஸூராணாஂ" (ஸங்கைஸ்ஸுராணம்) என்கிறபடி யே ஸ்தோத்ரம் பண்ணி ஆஶ்ரயிக்கத் திருவுலகளந்து நின்ற. [சேவடி] - ‟மாமுதலடிப்

---

மூன்றாம்பாட்டு - 'பாவியல்' இத்யாதி. கீழும் மேலும்-அவதாரபரமாகையாலே, இதுவும்-அவதார பரம் என்கிறார் - 'ஓரூருக்காக' இத்யாதி. ஓரூர் - திருவாய்ப்பாடி. ஒருநாடு - பூமிமுதலானது. உதவின வன் - வாமநன்.

விவரணம் - 'சந்தஸ்ஸுக்களாலே' இத்யாதி. 'சந்தஸ்ஸுக்கள்தான் எவை?' என்ன, 'அநுஷ்டுப்' இத்யாதி. நன்றான மாலைகளெவை? என்ன, 'ஸ்ரீபுருஷ' இத்யாதி. ஸர்வவேதப்ரதிபாத்யன் ஈஶ்வரனாயி ருக்க, 'நன்மாலை' என்று புருஷஸூக்தாதிகளை விசேஷிக்கிறதென்? என்ன, 'ஸர்வேவேதா' இத்யாதி; கடவல்யாம். ‟வெதெஶ் ஸவ்வெரஹமெவ" இத்யாதி, கீதாயாம் பஞ்சதஶே. வேதத்தின் நன் மாலையென்று மூந்தின அர்த்தம்; வேதத்தையும் நன்மாலையையு மென்று அர்த்தாந்தரம் - 'அன்றிக்கே' இத்யாதி. 'மாமுதல்' இத்யாதி - ஆஶ்ரிதர்க்குப் பரமப்ராப்யமான திருவடிகளாகிற செவ்விப்பூவொன்றைக்

போதோன்றுகவிழ்த்தலர்த்தி" என்கிறபடியே, தலையிலே பூப்போலே வந்திருக்கிறபோது மேலேபார்த்தவாறே அநுபாவ்யமாயிருந்த சிவப்பையுடைத்தாயிருக்கை. அடியில் ராகமிறே இப்படியாக்கிற்று இவளை. அன்றிக்கே, சேவ்விய அடியென்றாய், அடிக்குச் சேவ்வியாவது - "போதுநின்றபோன்னங்கழல்" என்கிறபடியே, ஆஶ்ரிதாநாஶ்ரிதவிபாகமற எல்லார்தலையிலும் வைத்த சேவ்வை. "தளிர்புரையுந்திருவடியென்தலைமேலவே" என்று ஈடுபேடும்படியிறே அடியில்ஆர்ஜவம் இருப்பது. [சேவடிமேலணிசேம்போற்றுழாய்] - அத்திருவடிகளிற் சாத்தின ஸ்ப்ருஹணீயமான திருத்துழாயேன்று சொல்லிக் கூப்பிடாநின்றாள். [என்றேகூவுமால்] - தோளில்சாத்தின மாலை கோடுக்கிலும் கோள்ளாள். ஆல் - ஆஶ்சர்யத்திலே; அசை. [கோள்வினையாட்டியேன்] - முடித்தல்லது விடாத பாபத்தைப் பண்ணின என்னுடைய. அன்றியே, கோளேன்று - மிடுக்காய், அநுபவைக விநாஶ்யமான பாப மேன்னுதல். [கோதையே] - தன்மாலையையும் மயிர்முடியையும் கண்டார் படுமத்தைத் தான் படுவதே! இம்மாலையையுடையஇவள் வேறோருமாலையை ஆசைப்படுவதே! மார்வத்துமாலையானஇவள் வேறோருமாலையை ஆசைப்படுவதே! மார்வத்துமாலைக்கு மால் அவன், அம்மாலுக்கு மால் இவள். (௩)

## நான்காம்பாட்டு.

கோதிலவண்புகழ் கோண்டுசமயிகள்
பேதங்கள்சோல்லிப் பிதற்றும்பிரான்பரன்
பாதங்கள்மேலணி பைம்போன்துழாயேன்றே
ஓதுமால் ஊழ்வினையேன் தடந்தோளியே.

*ஆ*—(கோதில.) - ஒரோருகுணவிஶேஷத்தை அநுபவித்தால், "இந்தக்குணமல்லது மற்றொன்று அறியேன்" என்று அந்தக்குணத்துக்குத் தோற்று அடிமையாயிருக்கும் திவ்யபுருஷர்களாலே, இதராநுபூதகுணங்களிற்காட்டில்ஸ்வாநுபூதகுணத்துக்குவைலக்ஷண்ய

---

கவிழ்த்துப் பரப்பியென்று பாசுரத்துக்கு அர்த்தம். திருவாசிரியம், அஞ்சாம்பாட்டு. சாடு - 'அடியில்' இத்யாதி. 'போதுநின்ற போன்னங்கழல்' - ஸர்வாஶ்ரித ஸாதாரணமாய் ஸ்ப்ருஹணீயமாய் அழகியதாயிருந்துள்ள திருவடிகளை இத்யர்த்தஃ. மூன்றாந்திருவந்தாதி எண்பத்தெட்டாம் பாட்டு - "அதுநன்று" இத்யாதி. அப்படி ஆர்ஜவமுண்டோ திருவடிகளுக்கு? என்ன, 'தளிர்புரையும்' இத்யாதி. திருநெடுந்தாண்டகம் - "மின்னுருவாய்" இத்யாதி. தளிரோடொத்திருந்துள்ள திருவடிகள் எனக்குஶிரோபூஷணமாயிற்று இத்யர்த்தஃ. "என்தலைமேலவே" என்கையாலே - ஆர்ஜவம் தோற்றுகிறது. 'என்றே' என்கிற ஏவகாரார்த்தம் - 'தோளில்' இத்யாதி. அசை - அவ்யயம். 'கோள்' என்று க்ரவிக்கையாய், முடிக்கையாதல்; மிடுக்காதல். இரண்டர்த்தத்தையும் அடைவே அருளிச்செய்கிறார் - 'முடித்தல்லது' இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'கோதை' என்று பூப்புனைமாலைக்கும், பெண்மயிருக்கும், மாலைபுனைமாதர்க்கும் பேர். மூன்றின இரண்டர்த்தத்தையும் அருளிச்செய்கிறார்- 'தன்மாலையையும்' இத்யாதி. மூன்றுமர்த்தம்– 'இம்மாலையை' இத்யாதி. 'கோதை' என்று பிராட்டி தன்னைச் சொல்லுகிறதாக நாலாமர்த்தம் - 'மார்வத்துமாலை' இத்யாதி. அதாவது - மாலையையுடையவளன்றிக்கே, மாலைதானா யிருக்கிறவ ளென்றபடி. சாடுவுக்குஅர்த்தம் - 'மார்வத்து' இத்யாதி. மார்வத்துமாலை - பிராட்டி. 'சேவடிமேலணி செம்பொற்றுழாயென்றே கூவுமால்' என்கையாலே - மார்வத்துமாலையினுடைய மாலுக்கு விஷயபூத னென்றபடி. 'கோதை' என்றதைப் பற்ற - 'அம்மாலுக்குமால்இவள்' என்றது; அவனுடைய வ்யாமோஹத்துக்கு விஷயபூதை இவ ளென்றபடி. மால் - வ்யாமோஹமும், ஸர்வஸ்மாத்பரனும். 'கோதையே' என்கிற அவதாரணம் - ஸ்வரத்திலே. "[Grantha text illegible] யேஹரிஃ" இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே. (௩)

த்தை விவஹாரய்க்கொண்டு பரஸ்பரம் சொல்லிப் பிதற்றப்படுகிற எம்பெருமானுடைய பாதங்கள்மேலணி பைம்பொன்துழாயிலே யுள்ள ஆசையாலே அத்துழாயென்றே இவள் பலகாலும் அலற்றும் என்கிறாள்.

ஒ·—நாலாம்பாட்டில், ஸர்வஸ்மாத்பரனுய்த் திருநாட்டிலே எழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்

[கோதில என்று தொடங்கி.] - ஒருகுணத்தை அநுஸந்தித்தால் குணாந்தரத்திற் போகவொட்டாதபடி கால்கட்டவல்லவான அவ்வவகுணங்களிலே நிஷ்டரானவர்கள். [பேதங்கள் என்று தொடங்கி] - அவ்வவகுணங்களில் வாசிகளைச் சொல்லி ஈடுபட்டு அடைவுகெடச் சொல்லும்படியான ஔதார்யகுணத்தையுடையனுய் எல்லாப்படியாலும் எல்லாரிலும்மேற்பட்டிருந்தவனுடைய. [ஊழ்வினையேன்] - இப்படி து:காநுபவத்துக்கு ஈடாம்படி முன்னமே பாபத்தைப்பண்ணினேன். [தடந்தோளி] - எம்பெருமானைப் பிச்சேற்றவல்ல தோள்களையுடையவள் என்றவாறு.

ப·—அநந்தரம், ஸூரிபோக்யனை ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளில் திருத்துழாயைச்சொல்லிப் பாராயணம்பண்ணாநின்றாள் என்கிறாள்.

கோது - (ஸ்வோத்கர்ஷார்த்தமாகிற) கோது, இல - இன்றியே (பரார்த்தமாயேஅநுபாவ்யமா) யிருக்கிற, வண் - விலக்ஷணமான, புகழ் - குணங்களை, கொண்டு - கொண்டு, சமயிகள் - ஶீலாதிகளாயும் ஶௌர்யாதிகளாயும் ஆநந்தாதிகளாயு மிருக்கிற குணங்களிலே தனித்தனியே வ்யவஸ்திதராய், பேதங்கள் - (தத்தத்குணோத்கர்ஷ) பேதங்களை, சொல்லி-சொல்லி, பிதற்றும் - (ஸரஸமான) அக்ரமோக்திகளைப் பண்ணும்படி இவர்களை அநுபவிப்பிக்கிற, பிரான் - மஹோபகாரகனை, பரன் - ஸர்வஸ்மாத்பரனுடைய, பாதங்கள்மேல் - திருவடிகளிலே, அணி-(குணவித்தரான ஸூரிகள்) சாத்தின, பை - பசுத்து, பொன் - நன்றான, துழாயென்றே - திருத்துழாயென்றே, ஓதும் - (எப்போதும்) சொல்லாநின்றாள்; ஊழ்வினையேன்-அநாதிஸித்தமான மஹாபாபத்தையுடையேனை என்னுடைய, தடம் - சுற்றுடைத்தான, தோளி - தோளையுடையவள். ஊழ்வினை - பழவினை.

இ·—நாலாம்பாட்டில், ஸர்வஸ்மாத்பரனுய்ப் பரமபதத்தே எழுந்... வனுடைய திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[கோதில] - கோதின்றிக்கேயிருக்கை: குணத்துக்குக் கோதில்லாமையாவது-குணாந்தரத்திற் போகாதபடி கால்கட்டுகை. [வண்புகழ்]-கல்யாணகுணங்களைக் கொண்டு. [சமயிகள்]-'ஶீலகுணம் துவக்கவற்று, அதிற்காட்டில் வீரகுணம் துவக்கவற்று, அதிற்காட்டில் ரூபகுணமான ஸௌந்தர்யாதிகள் துவக்கவற்று'என்று ஓரோர்கோடியிலே நிஷ்டரானவர் என்னுதல்; தஹர உபகோஸலஶாண்டில்யாதி வித்யாநிஷ்டர்களைச் சொல்லவுமாம். [பேதங்கள்சொல்லி] - தாங்கள் பற்றின குணங்களுக்கு ஏற்றம் சொல்லி. [பிதற்றும்] - அவற்றிலே ஈடுபட்டு ஜ்வரஸந்நிபதிதரைப்போலே அடைவு கெடச் சொல்லுகை. [பிரான்]-இப்படி இவர்கள் பேசும்படி குணங்களை உபகரித்தவன். [பரன்பாதங்கள்மேலணி] - ஸ்ர்வஸ்மாத்பரனை ஸ்ரீவைகுண்டநாதன் திருவடிகளிலே நித்யஸூரிகள் சாத்தின. [பைம்பொன்துழாய்] - ஸ்ப்ருஹணீயமான திருத்துழாய். [ஓதுமால்]-இத்தை எப்போதும் சொல்லாநின்றாள். [ஊழ்வினையேன்]•ஊழ்என்று முறை; இதுவும் ப்ராப்தமாம்படியான பாபத்தைப் பண்ணினேன். [தடந்தோளியே]-நாயகனைப் பிச்சேற்றவல்ல தோளழகையுடையவள் என்கை. அவனன்றோ இப்பாடுபடுவான் என்கிறாள்.

ஈடு.—நாலாம்பாட்டு. பெருக்காறு வற்றினாற்போலே ஒருகால் எல்லாரையும் வாழ்வித்துப்போன அவதாரத்திலுள்ளத்தை நான் இப்போது எங்கே தேடுவேன்? என்ன, அது தவிருகிறது, என்றுமொக்க ஏக்ரூபமாயிருக்கிற 'பரமபதநிலயன்திருவடிகளில் திருத்துழாய் பெறத் தட்டு என்? என்னாநின்றாள் என்கிறாள்.

[கோதில] - குற்றமற்ற; ஹேயப்ரத்யநீகமான. குணத்துக்குக் கோதில்லாமையாவது- ஒருகுணத்தை அநுஸந்தித்தால் குணாந்தரத்திற் போகாதபடி காற்கட்டுகை. அப்படியிராதாகில் அல்லாதவிஷயங்களிற்காட்டில் வாசியில்லையிறே. [வண்புகழ்] - கல்யாணகுணங்கள். இக்குணங்களை அநுஸந்தித்துக்கொண்டு. [சமயிகள்] - ஓரோகுணங்களிலே கால்தாழ்ந்து குணாந்தரத்திற் போகமாட்டாதவர்கள். 'ஶீலகுணம் துவக்கவற்று; அதிலும் வீரகுணம் துவக்கவற்று; அதிலும் ரூபகுணமான ஸௌந்தர்யாதிகள் துவக்கவற்று' என்று இவற்றிலே நிஷ்டரானவர்கள். சொன்னஇவர்களையொழிய, ஸத்வித்யாநிஷ்ட தஹரவித்யா நிஷ்ட உபகோஸலசாண்டில்யாதி வித்யாநிஷ்டரைச் சொல்லவுமாம். [பேதங்கள்சொல்லி] - தாங்கள்அநுபவிக்கிற குணங்களுக்கு ஏற்றங்களைச் சொல்லி. அதாவது - சீலகுணத்தைஅநுபவித்து 'இதுவும்ஒருகுணமே, இதுபோலேயோ வீரகுணம்?' என்றாற்போலே சொல்லி. [பிதற்றும்] - அக்குணங்களிலே ஈடுபட்டு ஜ்வரஸந்நிபதிதரைப்போலே அடைவுகெடக் கூப்பிடாநிற்பர்கள். [பிரான்பரன்]-அவர்களுக்கு இப்படி உபகாரகனான ஸ்ரீவைகுண்டநாதன். அவர்களுக்குஉபகாரகனாகையாவது - "இமையோர் தமக்கும்- செவ்வே நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்" என்கிறபடியே, இக்குணங்களை அவர்களுக்கு நிலமாக்கி அநுபவிப்பிக்கையாலே, 'பிரான்' என்கிறார். [பரன்பாதங்கள்மேலணி பைம்பொற்றுழாயென்றே யோதுமால்]-"சூட்டுநன்மாலைகள்தூயனவேந்தி" என்கிறபடியே மிக்கசீர்த்தொண்டரான நித்யஸூரிகள் அவன்திருவடிகளில் சாத்தினதாய், அதுவே அத்

நாலாம்பாட்டு – 'கோதில' இத்யாதி. 'பரன்பாதங்கள்மேலணி' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை – 'பெருக்காறு' இத்யாதி.

விவரணம் - 'ஹேய' இத்யாதி. 'இப்படியிருக்கவேணுமோ?' என்ன, 'அப்படி' இத்யாதி. 'கொண்டு' என்றதுக்கு அர்த்தம் - 'இக்குணங்களையநுஸந்தித்துக்கொண்டு' என்றது. சமயிகள் - ஸித்தாந்திகள். மூந்தின அர்த்தத்தில், சமயிகள் - குணநிஷ்டரான நித்யமுக்தர். 'ஸத்வித்யா' இத்யாதி - "ஸர்வஜ்ஞத்வாதி குணவிஶிஷ்டஸ்வரூபம் உபாஸ்யம்" என்று இருப்பார் - ஸத்வித்யாநிஷ்டர். "ஸ்வரூபமும் குணமும் உபாஸ்யம்" என்று இருப்பார் - தஹரவித்யாநிஷ்டர். "அக்ஷ்யந்தர்வர்த்தி உபாஸ்யன்" என்று இருப்பர்கள் - உபகோஸலவித்யாநிஷ்டர். "ஜகச்சரீரன் உபாஸ்யன்" என்று இருப்பர்கள் – சாண்டில்யவித்யாநிஷ்டர். இந்தப்பக்ஷத்திலே, 'சமயிகள்' என்று - முமுக்ஷுக்கள். பேதம் – அதிஶயம். விவரணம் – 'அதாவது' இத்யாதி. 'பிதற்றும்' என்று – 'ஸ்வாபிமதகுணம் நல்லது' என்று சொல்லவந்து, பிறர்க்குஅபிமதமான குணத்தைச் சொல்லுகை. உபகாரகத்வத்தைக் காட்டுகிறார் - 'அவர்களுக்கு' இத்யாதி. "இமையோர்தமக்கும்" என்கிற ப்ரமாணத்திலே தரித்திருந்து அநுபவிக்கவொண்ணாமை சொல்லுகையாலே, அத்தைத்தரித்திருந்துஅநுபவிக்கும்படி பண்ணி அநுபவிப்பிக்கையாலே – உபகாரகனென்றபடி. 'நிலமாக்கி' என்றது-அவர்களுக்குத் தரிப்பையுண்டாக்கி அந்தக்குணங்களை அநுஸந்திக்கும்படி பண்ணியென்றபடி. 'இமையோர்தமக்கும்' இத்யாதி—திருவிருத்தம் தொண்ணூற்றெட்டாம்பாட்டு, "துஞ்சாமுனிவரும்" இத்யாதி. நித்யஸூரிகளுக்கும் தன்னுடைய ஆஶ்சர்ய சேஷ்டிதமானது நேரே நெஞ்சால் பரிச்சேதித்து நினைக்க அரிது; அவ்வாஶ்சர்ய மேது? என்ன, வெண்ணெயமுதுசெய்தான்என்று சொல்லப்பட்ட அபக்ருஷ்டவசந மிதி பாசுரார்த்தஃ. 'பை' என்றும், 'பொன்' என்றும் – அழகாய், 'அத்யந்தம் ஸ்ப்ருஹணீயமான' என்றது. திருவிருத்தம் இருபத்தோராம்பாட்டு – "சூட்டுநன்மாலைகள்தூயனவேந்தி." சூட்டுகைக்குத் தகுதியாய் நன்றானவையாய்ப் பரிசுத்தமுமான மாலைகளைப் பாரதந்த்ர்யத்தாலே யாவதங்கீகாரம் ஏந்திக்கொண்டு என்று பாசுரத்துக்குஅர்த்தம். செவ்வி ஒண் மாண்பு பைம் பூம் பொன் என்றிவை அழகுக்குப் பேர். ரு–

யந்தம் ஸ்ப்ருஹணீயமான திருத்துழாயென்று எப்போதும் சொல்லாநின்ருள். [ஊழ்வினையேன்] - வந்ததடைய முறையாம்படியான பாபத்தைப் பண்ணினேன். ஊழென்பது - முறை. [தடந்தோளியே] - இப்படி கைவிஞ்சின அழகையுடையவள் குணநாம்ஆகரமான அவன்திருவடிகளிலே திருத்துழாயை ஆசைப்படாநின்ருள். இத்தோளழகுக்கு இலக்கானரோ இவளோ இப்படி அடைவுகேடப் பிதற்றுவார்!! (ச)

## ஐந்தாம்பாட்டு.

தோளிசேர்பின்னைபொருட்டு எருதேழ்தழீஇக்
கோளியார் கோவலனர் குடக்கூத்தனர்
தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே
நாளுநாள் நைகின்றதால் என்தன்மாதரே.

ஆ.—(தோளிசேர்.) - தன்திருத்தோளினழகாலே வண்டுவரைப்பெருமாளிலும் அதிகதரையாய் மற்றுமுள்ள தன்னுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யத்தினல் அவனேடு ஸத்ருசையாயிருந்த நப்பின்னைப்பிராட்டியைத் திருமணம்புணருகைக்காக எருதேழ் தழுவிக்கொண்டு ஆஸ்ரிதஜந நயநஸம்ருத்யர்த்தமாகக் குடக்கூத்தாடியருளின வண்துவரைப்பெருமானுடைய தாளிணைமேல் அணி தண்ணந்துழாயென்றே நாளும்நாள் நைகின்றதால் என்தன்மாதர் என்கிருள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், நப்பின்னைப்பிராட்டிக்காக, எருதேழடர்த்தருளின க்ருஷ்ணனுடைய திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்ருள் என்கிருள்

[தோளி என்று தொடங்கி.]-தன்னேடுதுல்யமான ஶீலவயோவ்ருத்தங்களையுடையளாய்த் தனக்கேஅஸாதாரணமான தோளழகையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக எருதேழையும் தழுவிக்கொள்வதும் செய்து, அவர்களுக்கு ஸத்ருஶமான ஆபிஜாத்யத்தையும் செருக்கையுமுடையவர். [நாளுநாள்] - நாள்தோறும் நாள்தோறும்.

ப.—அநந்தரம், எருதேழடர்த்த க்ருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாயைச் சொல்லி ஶிதிலையாகாநின்ருள் என்கிருள்.

தோளி - (அவன்விரும்பும்படியான) தோளையுடையளாய், சேர்-(ஶீலாதிகளால் அவனுக்கு) ஸத்ருஶையான, பின்னைபொருட்டு - நப்பின்னைக்காக, எருதுஏழ் - எருது ஏழையும், தழீஇக்கோளியார் - (ஒருகாலே) தழுவிக்கொள்ளும் ஸ்வபாவராய், கோவலனர் - (அவர்களுக்கு

---

முறை - ப்ராப்தாம்ஶம். வந்ததடைய - வந்ததுஃகமடைய. 'தடம்' என்று - அழகால்வந்த பரப்பைச்சொல்லுகிறது. 'ஊழ்வினையேன்தடந்தோளி - கோதில' இத்யாரப்ய, 'ஓதுமால்' என்றுஅந்வயமுகேந தாத்பர்யம் - 'இப்படிகைவிஞ்சின' இத்யாதி· கைவிஞ்சின - அதிகமான; கை - தோள், அதிலே விஞ்சின அழகையுடையவளென்றபடி; 'கோதிலவண்புகழ்' என்கையாலே, 'குணநாமாகரம்' என்கிறது. 'தோளியே' என்கிற ஏவகாரத்துக்கு அர்த்தமாதல், ஸ்வரத்துக்கு பாவமாதல் - 'இத்தோள்' இத்யாதி·

ஊழ்வினையேன்தடந்தோளி, சமயிகள் - கோதிலவண்புகழ்கொண்டு - பேதங்கள் சொல்லி இத்யாரப்ய, ஓதுமால் இத்யந்வயஃ. மிக்கசீர்த்தொண்டர் - அநந்யப்ரயோஜநர். (ச)

அநுரூபமான) கோபகுலத்தையுடையராய், குடக்கூத்தனார்-குடக்கூத்தாலே மநோஹரசேஷ்டிதரானவருடைய, தாளிணைமேல்-திருவடிகளிரண்டின்மேலே, அணி - (அந்தவீராபதானத்துக்குத்தோற்று அவர்கள்) இட்ட, தண் -குளிர்ந்து, அம் - அழகிய, துழாயென்றே - திருத்துழாயென்றே, நாளும்நாள் - நாடோறும் நாடோறும், என்தன் மாதர்-என்பெண்பிள்ளை, நைகின்றது - நைகிறது.

இ.—அஞ்சாம்பாட்டில், நப்பின்னைப்பிராட்டிக்காக எருதேழடர்த்த க்ருஷ்ணன்திருவடிகளில் சாத்தின திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[தோளிசேர்பின்னைபொருட்டு] - க்ருஷ்ணனோடு துல்யஶீலவயோவ்ருத்தையான நப்பின்னைப்பிராட்டிக்காக. "அஸிதேக்ஷணா" என்றாற்போலே க்ருஷ்ணனிற்காட்டில் இவளுக்குத் தோளழகு தன்னேற்றம். இகாரத்தை அவ்யயமாக்கி, தோள்சேர் பின்னை என்று ஒருதமிழன் சொன்னான். [எருதேழ்தழீஇக்கோளியார்]-எருதுகளேழையும் தழுவிக்கொள்ளுமவர். அவளைப் பெறுகைக்கு ஹேதுவாகையாலே போகரூபமாயிருந்தபடி. [கோவலனார் இத்யாதி] - அவளைப் பெறுகைக்கு ஈடான ஆபிஜாத்யத்தையும் செருக்கையு முடையவர். வில்லை முறித்தாலும் இக்ஷ்வாகுவம்ஶ்யர்க்கல்லது பெண்கொடாத ஜநகனைப்போலே எருதேழடர்த்தாலும் இடைத்தனத்தில் புரையுண்டாகில் பெண்கொடார்களிறே. அவளுக்கு உதவின க்ருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாயையாயிற்று இவள் ஆசைப்பட்டது. [நாளுநாள் நைகின்றதால்] - ஒருநாள் நைகைக்கு ஆஶ்ரயம்போராத மார்த்தவத்தையுடையவள், நாள்தோறும் நாள்தோறும் நையாநின்றாள். ஆஶ்ரயத்தையும் கொடுத்து நையப்பண்ணும் விஷயமிறே. [நைகின்றதால் என்தன்மாதரே] - நையாநின்றது என்பெண்பிள்ளை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. 'ஸர்வஸ்மாத்பரனாய்ப் பரமபதநிலயனாய் அப்ராப்யனாயிருக்கிறவன் திருவடிகளில் சாத்தின திருத்துழாயை என்னாலே தேடப்போமோ?' என்ன, 'ஆனால், இங்கே என்னோட்டையா ளொருத்திக்காகத் தன்னைப்பேணாதே எருதேழடர்த்த க்ருஷ்ணன் திருவடிகளிற் சாத்தின திருத்துழாய்பெறத் தட்டேன்? என்னாநின்றாள்' என்கிறாள்.

[தோளிசேர்பின்னை] - * "துல்யஶீலவயோவ்ருத்தாம்" (துல்யஶீலவயோவ்ருத்தாம்) என்றுஆபிஜாத்யாதிகளால் பெருமாளுக்கு ஸத்ருஶையாய், "அஸிதேக்ஷணா" (அஸிதேக்ஷணா) என்று அவரிலும் இவளுக்கு ஏற்றமானாற்போலே, அல்லாத அழகெல்லாம் க்ருஷ்ணனோடு ஒத்

அஞ்சாம்பாட்டு - 'தோளிசேர்' இத்யாதி. பரமபதநிலயனைச்சொன்ன அநந்தரம் க்ருஷ்ணாவதாரத்தைச் சொல்லுகைக்குத் தாத்பர்யம் - 'ஸர்வஸ்மாத்பரனாய்' இத்யாதி. 'கோவலனார்குடக்கூத்தனார்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை. அப்ராப்யனாய் - ப்ராப்தும்அஶக்யனாய்.

'தோளி' இத்யாதி-அவன்விரும்பும்படியான தோளையுடையளாய் ஶீலாதிகளால்அவனுக்கு ஸத்ருஶையான நப்பின்னைக்காக என்று சப்தார்த்தம். 'சேர்பின்னை' என்னாநிற்க, 'தோளி' என்று விசேஷித்ததுக்கு ஹ்ருதயம்-'துல்யஶீல'இத்யாதி. "துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் ராகவோऽர்ஹதி வைதேஹீம் தம்சேயமஸிதேக்ஷணா" இதி ஸீதாம் த்ருஷ்ட்வா ஹநுமத்விசார:. 'சேர்' என்று - இருவர்க்கும் அவயவஸௌந்தர்யம் ஸத்ருஶமென்று சொல்லுகையாலே, 'தோளி' என்று விசேஷித்துச்சொன்னத்தாலே – தோளழகு விஞ்சியிருக்குமென்று தோன்றுகிறது; "துல்ய......லக்ஷணாம்" என்று அவயவஸௌந்தர்யங்களுடைய ஸாத்ருஶ்யத்தைச் சொல்லிவைத்து, "அஸிதேக்ஷணா" என்று விசேஷித்துச்சொல்லுகையாலேயிறே – கண்ணழகு விஞ்சியிருக்கு மென்றது. ஶீலவயோவ்ருத்தஆபிஜாத்யாதிகள் லோகத்தில் ஸாதாரணங்களாயிருக்கும் தர்மங்களிறே. அவயவஸந்நிவேஶவிஶேஷரூபஸௌந்தர்யம் வ்யக்திதோறும் அஸாதாரணமாயிறே இருப்பது; ஆகையாலே, லக்ஷணஶப்தத்தால் அத்தைச் சொல்லுகிறது. இனி, இந்த

* ஸுந்தர. கசு, ரு.

திருக்கும்; தோளழகு அவனில் இவளுக்கு ஏற்றம். அவளுடைய அவயவஶோபையிலே தோற்று அத்தோளோடே அணைக்கைக்காக. [எருதேழ்தழீஇக்கோளியார்] - எருதுகளேழையும் தழுவிக் கொள்ளுமவர். அநந்தரம் அவளைத் தழுவப்பார்க்கிறுளுகையாலே, அவளைத்தழுவினற்போலே யிருக்கிறதாயிற்று எருதுகளோடு பொருததும். ஆகையாலிறே 'எருதேழ்தழீஇ' என்றது. அவளைப் பெறுகைக்கு ஹேதுவாகையாலே, அவற்றின்கொம்போடே பொருததும் இக்கொம்போடே சேர்ந் தாற்போலே போகரூபமாயிருக்கிறபடி. [கோவலனுர் குடக்கூத்தனுர்]-அவளைப்பெறுகைக்கு ஈடான ஆபிஜாத்யத்தையும் செருக்கையு முடையவர். வில்முறித்தாலும் இக்ஷ்வாகுவம்ஶ்யர்க்கல்லது பெண்கொடாத ஜநகனைப்போலே, எருதேழடர்த்தாலும் இடைத்தனத்தில் குறையுண்டாகில் பெண்கொடார்களிறே. [தாளிணை இத்யாதி] - அவளுக்குஉதவின க்ருஷ்ணன் திருவடிகளிற் சாத்தின திருத்துழாயையாயிற்று இவள் ஆசைப்பட்டது. [நாளுநாள் நைகின்றதால்] - ஒருநாள் நைகைக்கும் ஆஶ்ரயமில்லாத மார்த்தவத்தை யுடையவள், நாள்தோறும் நாள்தோறும் நையா நின்றுள். ஆஶ்ரயத்தையுங் கொடுத்து நையப்பண்ணும் விஷயமிறே. [என்தன்மாதர்]-என்பெண் பிள்ளை. தன்னைப்போலே, பிறந்து விலங்குமுறித்துக்கொண்டுபோய்ப் பூதநாசகடயமளார்ஜுநாதி களோடேபொருது, "தழும்பிருந்ததாள்சகடஞ்சாடி" என்கிறபடியே தழும்பேறியிருப்பாளொருத்தி யோ என் பெண்பிள்ளை? தோடுங்கால் ஒசியுமிடை யிளமானன்றே? என்கிருள். (ரு)

---

# ஆரும்பாட்டு.

---

மாதர்மாமண்மடந்தைபொருட்டு ஏனமாய்
ஆதியங்காலத்து அகலிடம்கீண்டவர்
பாதங்கள்மேலணி பைம்பொன்துழாயென்றே
ஓதும்மால்எய்தினள் என்தன்மடந்தையே.

---

*இருவருடையவும் ஸௌந்தர்யங்களுக்கு ஸாத்ருஶ்யமாவது - இருவருடையவும் தத்ததவயவோசித ஸௌந் தர்யங்கள் ஸஜாதீயஸர்வாதிசாயியாயிருக்கை. 'பொருட்டு' என்று-தாதர்த்யே சதுர்த்தீ. தழீஇக்கோளியார் - தழுவிக்கொள்ளுமவர். 'பொருது' என்னுதே 'தழீஇ' என்கிறதென்? என்ன, 'அநந்தரம்' இத்யாதி. உக்தார்த் தத்தை ஸஹேதுகமாக விவரிக்கிருர் - 'அவளை' இத்யாதி. 'இக்கொம்போடே' என்றது - "அடலாயர்தம் கொம்பினுக்கே" என்றத்தைப் பற்ற. கொம்பு - ஸ்த்ரீயும், ஶ்ருங்கமும். அவளைப்பெறுகைக்கு ருஷபநிரஸ நம் போராதோ? ஆபிஜாத்யமும் வேணுமோ? என்ன, 'வில்முறித்தாலும்' இத்யாதி. ஆகையாலிறே, வஸிஷ்டர் இவருடைய வம்ஶாநுக்ரமணம் பண்ணிற்று. ஒருநாள் நைகைக்கும் ஆஶ்ரயம்போராதாகில் நாள்தோறும் நையக்கூடுமோ? என்ன, 'ஆஶ்ரயத்தையும்' இத்யாதி. "நாளுமுயிர்ப்பெய்து கூத்தாட்டுக்காணும்" என்னக் கடவதிறே. 'மாதர்' என்று மார்த்தவத்தையுடையவ ளென்னுதல், பெண்பிள்ளை யென்னுதல். மார்த்தவ பக்ஷத்திலே 'என்' என்றதுக்கு வ்யாவ்ருத்தி - 'தன்னைப்போலே' இத்யாதி. விலங்குமுறித்துக்கொண்டு - காவலைத்தப்புவித்துக்கொண்டு. 'தழும்பிருந்த தாள் சகடஞ்சாடி'-திருவடிகளானவை சகடத்தை முறித்து அத் தாலே வந்த தழும்பைச் சுமந்தன வென்று பாசுரத்துக்குஅர்த்தம். தழும்பு - காய்ப்பு, கிணம். முதற்றிரு வந்தாதி இருபத்துமூன்றும் பாட்டு - "தழும்பிருந்த சார்ங்கநாண்" இத்யாதி. இவள்படி யென்? என்ன, 'தோடுங்கால்' இத்யாதி. தொடவேதுவளும் மத்யத்தையுடைய பாலை யென்றபடி. திருவிருத்தம் முப்பத் தேழாம்பாட்டு - "கொடுங்காற்சிலையர்" இத்யாதி. என்தன்மாதர் - தோளிசேர்இத்யாரப்ய, நைகின்றதால் இத்யந்வயஃ.* (ரு)

ஆ.—(மாதர்.) நிரதிசய ஸௌந்தர்ய ஸௌசீல்யாதி கல்யாணகுணமஹோததியான ஸ்ரீபூமிப்பிராட்டிக்காகப் போய்க் கல்பத்தினுடைய ஆதிகாலத்திலே அதிரமணீய திவ்ய வராஹரூபனாய்த் தன்னுடைய திவ்யதம்ஷ்ட்ரையாலே ப்ரளயஸமயத்தில் ரஸாதலஸ்தமான பூமண்டலத்தை இடந்தெடுத்தருளினவன் பாதங்கள் மேலணி பைம்பொன்துழாயென்றே ஓதும் மாலெய்தினள் என்தன்மடந்தை என்கிறாள்.

ஒ.—ஆறும்பாட்டில், ஸ்ரீவராஹமாய் ப்ரளயார்ணவத்தில் பூமியை எடுத்தருளின போதில் திருவடிகளில் திருத்துழாயைப் பெறவேணுமென்று ஆசைப்படுகிறபடியைச் சொல்லுகிறாள்

[மாதர் என்று தொடங்கி.] - ஸ்நேஹயுக்தையாய் அதிஶ்லாக்யையான ஸ்ரீபூமிப்பிராட்டிக்காக. [ஏனமாய் என்று தொடங்கி] - பகவதவதாரகாலமாகையாலே ஶ்லாக்யமான வராஹகல்பத்தின் ஆதியிலே நீரும் சேறும் காண இறாயாத வராஹவேஷத்தைக் கொண்டு மஹாப்ருதிவியை எடுத்தருளினவருடைய. ஓதுகை - சொல்லுகை.

ப.—அநந்தரம், ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு உதவின ஸ்ரீவராஹநாயனார் திருவடிகளில் திருத்துழாயென்று எப்போதும் சொல்லும்படி இவள் பிச்சேறினாள் என்கிறாள்.

மாதர் - நாரீணாமுத்தமையாய், மா - ஶ்லாக்யையான, மண்மடந்தைபொருட்டு - ஸ்ரீபூமிப்பிராட்டிக்காக, ஏனம் ஆய் - (நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத) வராஹவேஷத்தையுடையனாய், ஆதி-கல்பாதியாய், அம் - (ப்ராதுர்பாவயோக்யதையாகிற) நன்மையையுடைய, காலத்து-காலத்திலே, அகல் இடம் - விஸ்தீர்ணையான ப்ருதிவியை, கீண்டவர் - (அண்டத்தினின்றும்) ஒட்டுவிடுவித்து எடுத்துக்கொண்டு ஏறினவருடைய, பாதங்கள்மேல் - திருவடிகளின்மேலே, அணி - (ஸநகாதிகள்) சாத்தின, பை-பசுத்த, பொன் - தர்ஶநீயமான, துழாய் என்றே - திருத்துழாயென்றே, ஓதும் - (எப்போதும்) சொல்லும்படியான, மால் - ப்ரமத்தை, எய்தினள் - அடைந்தாள், என்தன் மடந்தை - விலக்ஷணமான மடப்பத்தையுடையவள்.

இ.—ஆறும்பாட்டில், மணிச்சு அழியாமல் நப்பின்னைப்பிராட்டிக்கு உதவினாற் போலன்றியே ஸ்ரீபூமிப்பிராட்டிக்காகத் தன்னை அழிய மாறினவனுடைய திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[மாதர்] - நிருபாதிகமான ஸ்த்ரீத்வத்தையுடையவள் என்னுதல், ஸ்நேஹயுக்தை என்னுதல். [மாமண்மடந்தைபொருட்டு]-ஶ்லாக்யையான ஸ்ரீபூமிப்பிராட்டிக்காக. [ஏனமாய்]- "பாசிதூர்த்து" இத்யாதி, நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத வடிவைக்கொண்டு. [ஆதி இத்யாதி] - வராஹகல்பாதியாய் அவதாரகாலமாகையாலே ஶ்லாக்யமான காலத்திலே மஹாப்ருதிவியை அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்தருளினவருடைய திருவடிகளிலே. "ஸநகாத்யா ஸ்துவந்தி" என்று ஸநகாதிகள் இட்ட திருத்துழாயையாயிற்று, இவள் ஆசைப்படுகிறது. [ஓதும்மால் எய்தினள்] - எப்போதும் இத்தையே சொல்லும்படியான ப்ரமத்தையுடையவளானாள். [என்தன்மடந்தையே] - இவள்பருவத்தைக் கண்டாராயிற்று மாலெய்துவார்; அத்தலை இத்தலையாவதே!

ஈடு.—ஆறும்பாட்டு. மனிச்சழியாமல் நப்பின்னைப்பிராட்டிக்கு உதவினாற்போலன்றிக்கே, ஸ்ரீபூமிப்பிராட்டிக்காகத் தன்னையழியமாறியும் உதவினவனுடைய திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[மாதர்] - அழகு. நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடையவ ளென்னுதல்; மாதரென்று - காதலாய், ஸ்நேஹயுக்தை யென்னுதல். [மாமடமடந்தைபொருட்டு]-ஶ்லாக்யையான ஸ்ரீபூமிப்பிராட்டியின்பொருட்டு. [ஏனமாய்]-"பாசிதூர்த்துக்கிடந்தபார்மகள்" என்கிறபடியே * ப்ரணயிநி யுடம்பு பேணாதே கிடக்க, ப்ரணயிஉடம்புபேணியிருக்கையாவது ப்ரணயித்வத்துக்குப் போராதே; "மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப்பன்றியாம் தேசு" என்கிறபடியே நீருக்கும் சேற்றுக்கும் இளையாத வடிவையுடையவனாய். [ஆதி]-வராஹகல்பத்தினாதியிலே. [அம்காலத்து] - அழகிய காலத்து. ரக்ஷகனானவன் தன்விபூதிரக்ஷணத்துக்காகக் கொண்ட கோலத்தை அநுபவிக்கிற காலமாகையாலே-அழகியகாலமென்கிறார்.[அகலிடம்கீண்டவர்இத்யாதி]-மஹாப்ருதிவியைஅண்டபித்தியினின்றும்ஒட்டுவிடுவித்துஎடுத்துக்கொண்டுஏறினவனுடைய திருவடிகளிலே, "ரொமாந்தரஸ்த்தா முநயஸ்ஸ்துவந்தி" (ரோமாந்தரஸ்த்தாமுநயஸ்ஸ்துவந்தி) என்று ஸநகாதிகள் இட்ட திருத்துழாயையாயிற்று இவள் ஆசைப்படுகிறது. [ஓதும்மாலெய்தினள்] - இத்தை எப்போதும் சொல்லும்படி பிச்சேறினாள். [என்தன்மடந்தையே] - 'அவனன்றோ பிச்சேறுவான்' என்றிருக்கிறாள் இவள். இப்பருவத்தைக்கண்டார் படுமத்தை இப்பருவமுடைய இவள் படுவதே! (சா)

---

ஆறும்பாட்டு-'மாதர்' இத்யாதி. க்ருஷ்ணாவதாராநந்தரம் வராஹாவதாரகதநத்துக்கு ப்ரயோஜநம் - 'மனிச்சழியாமல்' இத்யாதி. 'ஏனமாய்' என்றத்தைப்பற்ற அவதாரிகை. மனிச்சு - பௌருஷம்; பும்ஸ்த்வம் அழியாமல் என்றபடி. அழியமாறி - பும்ஸ்த்வத்தையழித்து; திர்யகவதாரம்பண்ணி யென்றபடி.

'நிருபாதிகஸ்த்ரீத்வத்தை' - அல்லாதாரைப்போலே கர்மோபாதிக மன்று என்றபடி. "ஸ்நேஹ ஶீலவதீ ஸ்நேஹாவகாஶயிநீ" என்றதில், "பக்தாசத்வயி" என்றத்தைப் பற்ற, 'ஸ்நேஹ யுக்தை'என்றது. 'ஏனம்' என்றதுக்குத் தாத்பர்யம் - 'பாசிதூர்த்து' இத்யாதி. நாய்ச்சியார் திருமொழி - "தாமுகக்"கில் எட்டாம்பாட்டு. பாசிபடிந்துகிடந்த பூமிப்பிராட்டிக்கு என்றபடி. 'மாசுடம்பில்' இத்யாதி - அழுக்கேறின உடம்பிலே நீர்வாராதே ஈஶ்வரத்வாபிமாநமுமில்லாத பன்றியாயிருக்கிற தேஜஸ்ஸை யுடைய தேவர் என்றபடி. 'போராதே' என்ற அநந்தரம் - ஆகையாலே யென்று கூட்டிக்கொள்வது. 'மாசுடம்பில்', இத்யாதி வாக்யம் - "ஆய்" என்றதுக்கு ஸாவம். இளையாத - ஶ்ரமப்படாத. காலத்துக்கழகேது? என்ன, 'ரக்ஷகனானவன்' இத்யாதி. கோலமென்றது - சாடு; அழகும், வராஹமும். அப்போது திருத்துழாய் சாத்துவாருண்டோ? என்ன, 'ரோமாந்தரஸ்த்தா' இத்யாதி. "[illegible] ரொமாந்தரஸ்த்தா முநயஸ்ஸ்துவந்தி" இதி ப்ரதமேம்ஶே சதுர்த்தே. ரோமாந்தரஸ்த்தாஸ்ஸந்தஃமுநயஸ்ஸ்த்துவந்தீத்யர்த்தஃ.'ஓதும்' என்கிற வர்த்தமாநார்த்தம் – 'இத்தை' இத்யாதி. ஓதும்மாலெய்தினள் - ஓதும்படியான வ்யாமோஹத்தையடைந்தாள். 'என்' என்றதுக்கு வ்யாவ்ருத்தி-'அவனன்றோ' இத்யாதி. 'மடந்தை' என்றதுக்கு ஸாவம்-'இப்பருவத்தை' இத்யாதி. மடந்தை - வயோவிசேஷவிசிஷ்டை. "பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண்" என்கிற அவஸ்தைகளில் வைத்துக்கொண்டு, 'மடந்தை' என்கிற அவஸ்த்தையைச் சொல்லுகிற தென்றபடி. என்தன்மடந்தை - மாதர்மாமண்மடந்தை இத்யாரப்ய அந்வயஃ. (சா)

---

* ப்ரணயிநி - காதலி. ப்ரணயி - காதலன். ப்ரணயித்வம் - காதல்.

# ஏழாம்பாட்டு.

மடந்தையை வண்கமலத்திருமாதினைத்
தடங்கொள்தார்மார்பினில்வைத்தவர் தாளின்மேல்
வடங்கொள்பூந்தண்ணந்துழாய்மலர்க்கே இவள்
மடங்குமால் வாணுதலீர்! என்மடக்கோம்பே.

ஆ.—(மடந்தையை.) ஸர்வலோகேஶ்வரியாய் ஸௌந்தர்ய ஸௌகுமார்யாத்யநவதிககுணகண விபூஷிதையாயிருந்த பெரியபிராட்டியை, அதிவிஶாலமாய் அதிபரிமள துளஸீ விலஸிதமான திருமார்பில் வைத்தவர் தாளின்மேல் வடங்கொள்பூந்தண்ணந்துழாய்மலரை ஆசைப்பட்டுப் பெருமையாலே முடிந்தாளென்று அலற்றுகிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், அம்ருதமதநதஶையிலே பெரியபிராட்டியாரைத் திருமார்பிலே வைத்தருளின எம்பெருமானுடைய திருவடிகளிலே திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[மடந்தை] - பருவம். [தடங்கொள் தார்மார்பினில்] - இடமுடைத்தாய்த் திருமாலையையுடைய திருமார்பிலே. [வடங்கொள் என்று தொடங்கி]-தொடையுண்டு போக்யமாயிருந்துள்ள தண்ணந்துழாய் மலரையே ஆசைப்பட்டுச் சுருண்டுவிழாநின்றாள்; ஏதேனும் தஶையிலும் விக்ருதையாகாதிருக்கக்கடவ என்மகள். [வாள்நுதலீர்] - ஒளியையுடைய நுதலையுடையீர். உங்களைப்போலே இவளைக் காணப்பெறுவதுகாண் என்று கருத்து.

ப.—அநந்தரம், அம்ருதமதநதஶையிலே பிராட்டியைத் திருமார்பிலே வைத்தவனுடைய திருவடிகளில் திருத்துழாய்நிமித்தமாக இவள் துவளாநின்றாள் என்கிறாள்.

மடந்தையை - (நித்யாநுபாவ்யமான) மடந்தைப்பருவத்தையுடையளாய், வண்- ("விகாஸிகஜலேஶயா" என்கிறபடியே) தர்ஶநீயமான, கமலம்-தாமரைப்பூவை இருப்பிடமாகவுடையளாய், திரு - ("ஸ்ரீர்தேவீ"என்கிறபடியே) திருநாமத்தையுடையளாய், மாதினை- ("ஸுந்தரீ" என்கிறபடியே) மாதுமையாலுண்டான ஸௌந்தர்யாதிகளையுடையவளை, தடம் கொள் - பரப்பை உடைத்தாய், தார் - (ஈஶ்வரத்வஸூசகமான) மாலையையுடைய, மார்பினில் - திருமார்பிலே, வைத்தவர் - ("பஶ்யதாம் ஸர்வதேவாநாம்" என்கிறபடியே அவளேறும்படி) வைத்தருளினவருடைய, தாளின்மேல் - திருவடிகளில் (தத்காலவர்த்திகளான தேவர்கள் சாத்தின), வடம்-தொடையை, கொள்-உடைத்தாய், பூ-தர்ஶநீயமாய், தண்-குளிர்ந்த, அம் - செவ்விய, துழாய்மலர்க்கு - திருத்துழாய்ப்பூந்தாருக்கு, வாள்நுதலீர் - உஜ்ஜ்வலமான நெற்றியையுடையவர்களே! என் - எனக்கு, மடம்-பவ்யையாய், கொம்பு - வஞ்சிக்கொம்புபோலே தர்ஶநீயையான, இவள் - இவள், மடங்கும் - (அவஸந்நையாய்ச்) சுருளாநின்றாள். உங்களைப் போலே இவளையும் உஜ்ஜ்வலாவயவையாகக் காணவல்லேனே என்று கருத்து. வடங்கொள்கை - தழைத்த லாகவுமாம்.

இ.—ஏழாம்பாட்டில், அம்ருதமதநதஶையிலே பிராட்டியைத் திருமார்பிலே வைத்தவருடைய திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[மடந்தையை] - ஸர்வகாலமும் அநுபவயோக்யையாயிருக்குமவள் என்னுதல், பருவத்தைச் சொல்லுதல். பருவமும் எழிலும் ஒன்றன்றிறே. [வண்கமலத்திருமாதினை]-நல்ல தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய திருவாகிற மாதை; ஸாக்ஷாத் லக்ஷ்மியை.[தடங்கொள் தார்மார்பினில்] - அவளுக்கு அந்தஃபுரமாய்ப் போரும் பரப்பையுடைத்தாய் ஸர்வேஶ்வரத்வ ஸூசகமான தோள்மாலையையுடைத்தான திருமார்பிலே வைத்தவர். "பஶ்யதாம்ஸர்வதேவாநாம் யயௌவக்ஷஸ்த்தலம்ஹரே:" என்று தேவஜாதியடங்கப் பார்த்திருக்க, திருமார்பிலேயேற ஆதரித்துத் தம்பேறாக வைத்தவர் திருவடிகளில் ஸ்பர்ஶத்தாலே தன்நிலத்திற்போலே வடம் கொள்ளாநிற்பதாய் அழகியதாய்க் குளிர்ந்து செவ்வியையுடைத்தான திருத்துழாயை ஆசைப்படாநின்றாள். அழகியதாகத் தொடையுண்ட துழாய் என்னவுமாம். [இவள்மடங்குமால்] - 'நையாநின்றாள்', 'மாலெய்தினள்' என்னுமளவன்றியே சொல்லப்புக்குச் சொல்ல மாட்டாதே சுருண்டுவிழாநின்றாள். [வாள்நுதலீர்] - ஒளியையுடைய நுதலையுடைய நீங்கள். உங்களைப்போலே இவளைக் காணப்பெறுவது, எப்போது? [என்மடக்கொம்பே]-என்னைப்பிரியாதே அவிக்ருதையாயிருந்துள்ளவள் படும் பாடே (எ)

ஈடு.—ஏழாம்பாட்டு. அம்ருதமதநதசையிலே பெரியபிராட்டியாரைத் திருமார்பிலே வைத்தருளினவனுடைய திருவடிகளிற் சாத்தின திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[மடந்தையை] - எப்போதுமொக்க போகயோக்யமான பருவத்தையுடையவளை. [வண்கமலத்திருமாதினை] - அழகிய தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய திருவாகிற பெண்பிள்ளையை. ஸாக்ஷாத்லக்ஷ்மியை. [தடங்கொள்இத்யாதி] - பெரியபிராட்டியாருக்கு திவ்யாந்தஃபுரமாகப் போரும்படி இடமுடைத்தாய், ஐஶ்வர்யஸூசகமான மாலையையுடைத்தான மார்விலே வைத்தவர். "பஶ்யதாம்ஸர்வதேவாநாம் யயௌவக்ஷஸ்த்தலம் ஹரே:" (பஶ்யதாம்ஸர்வதேவாநாம் யயௌவக்ஷஸ்த்தலம்ஹரே:) என்கிறபடியே - அம்ருதமதநஸமயத்திலே அம்மா நமக்கு இம்மார்வு பெறவேணும் என்று தன்பாடு ஏற வர, அவளையும் மார்விலே வைத்துக்கொண்டவனுடைய திருவடிகளின்மேலே, செறியத்தொடையுண்டு தர்ஶநீயமாய்க்குளிர்ந்து செவ்வியையுடைத்தான திருத்துழாய்ப்பூவை ஆசைப்பட்டுக் கிடையாமையாலே சுருண்டுவிழுந்து கிடவாநின்றாள். [வாள்நுதலீர்] - ஒளியையுடைய நுதலை யுடையவர்களே! உங்களைப்போலே இவளைக் காண்பது

ஏழாம்பாட்டு - 'மடந்தையை' இத்யாதி. அவதாரம்சொல்லுகிற ப்ரகரணமாகையாலே இதுவும் ஓரவதாரமாக வேணு மென்று, அம்ருதமதநாவதார மென்கிறார் – 'அம்ருத' இத்யாதி. அடியேதொடங்கிப் பாதத்ரயத்தையும் கடாக்ஷித்து அவதாரிகை.

'எப்போதுமொக்க'இதி-நாட்டிலே பிறந்தபோது ஶைஶவமாய் அநந்தரமிறே போகயோக்யமான பருவம் உண்டாவது; அங்ஙனன்றிக்கே, பிறந்தவன்றே திருமார்பிலே யேறுகையாலே எப்போதுமொக்க போகயோக்யமான மடந்தைப்பருவத்தை யுடையவ ளென்றபடி. விவரணம்-'ஸாக்ஷாத்லக்ஷ்மியை' என்றது. திவ்யாந்தஃபுரமென்றவிடத்திலே-"உபயஜஶஸி ஜிஷ்ணோ" இத்யாதியும், ஐஶ்வர்யஸூசகமான மாலை யென்றவிடத்திலே - "வக்ஷஸ்த்யா ஶ்ரீகௌஸ்துபம்" இத்யாதியும் அநுஸந்தேயம். 'வைத்தவர்' என்கையாலே – "யயௌவக்ஷஸ்த்தலம்ஹரே:" என்றதுகொண்டு அம்ருதமதநஸமயத்தைச் சொல்லுகிறது. பிராட்டியைத் திருமார்பிலே வைத்தமை ஸாமாந்யமாயிருக்கச்செய்தே அம்ருதமதநதசையில் வ்யாபாரமாகச் சொல்லுகிறது, கீழும் மேலும் அவதாரங்களைச் சொல்லுகையாலே. 'அம்மா' என்றது – சாடு; ஸ்வாமியென்றும், அந்தலக்ஷ்மி யென்றும். மடங்கும் – சுருண்டுவிழுந்துகிடக்கும். 'வாணுதலீர்' என்றதுக்கு ஹாவம் – 'உங்களைப்போலே' இத்யாதி. கொம்பு வ்ருக்ஷத்தைப் பிரியாததுகொண்டு 'என்னைப்பிரியாதே' என்கிறார். மடப்ப

எப்போது? [என்மடக்கோம்பே] - என்னைப்பிரியாதே எல்லாவளவிலும் அவிக்ருதையா யிருக்குமவள் படும் பாடே இது! (எ)

---

## எட்டாம்பாட்டு.

---

கோம்புபோல்சீதைபோருட்டு இலங்கைநகர்
அம்பெரியுய்த்தவர் தாளிணைமேலணி
வம்பவிழ்தண்ணந்துழாய்மலர்க்கே இவள்
நம்புமால் நான் இதற்குஎன்செய்கேன்? நங்கைமீர்!

**ஆ.**—(கொம்பு.) அவையெல்லாம் ஆசைப்படலாம்; திவ்யாத்மகுணங்களாலும் திவ்யரூபகுணங்களாலும் பரமபுருஷ திவ்யமஹிஷியாய் ஸர்வமஹேஶ்வரியான பெரியபிராட்டியிலும் உத்க்ருஷ்டதரையாயிருந்த ஸ்ரீஜநகசக்ரவர்த்திதிருமகளுக்காக இலங்கைநகர் அம்பெரியுய்த்த தயரதற்குமகன் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படுவா ருளரோ? இவள் திருத்துழாயைஆசைப்படாநின்றாள்; நான் இதற்கு என்செய்கேன் நங்கைமீர்? என்று கூப்பிடுகிறாள்.

**ஒ.**—எட்டாம்பாட்டில், ஸ்ரீஜநகராஜன்திருமகளுக்காக லங்காதஹநம்பண்ணியருளின சக்ரவர்த்திதிருமகனுடைய திருவடிகளில் நிரதிஶயபோக்யமான திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[அம்பெரியுய்த்தவர்] - ஶராக்நியைப் புகவிட்டவர்.

**ப.**—அநந்தரம், ஜநகராஜன்திருமகளுக்காக லங்காநிரஸநம்பண்ணின சக்ரவர்த்திதிருமகன்திருவடிகளில் திருத்துழாய்க்கு விருப்பத்தையுடையளாகாநின்றாள் என்கிறாள்.

கொம்புபோல் - வஞ்சிக்கொம்புபோலே அபிரூபையாய், சீதைபொருட்டு - ("க்ஷேத்ரே ஹலமுகக்ஷதே" என்கிறபடியே அயோநிஜையான) ஸ்ரீஜநகராஜன்திருமகளுக்காக, இலங்கைநகர் - லங்காநகரத்திலே, அம்பு எரி-சராக்நியை, உய்த்தவர் - ப்ரவேஶிப்பித்தவருடைய, தாளிணைமேல் - திருவடிகளின்மேலே, அணி - ("பவாந்நாராயணோதேவ:" என்று ஸ்துதித்த ப்ரஹ்மாதிகள்) சாத்தின, வம்புஅவிழ் - அபிநவபரிமளவிகாஸியாய், தண் - குளிர்ந்து, அம் - அழகிய, துழாய் - திருத்துழாயினுடைய, மலர்க்கு - பூந்தாருக்கு, இவள்-இவள், நம்பும்-விருப்பத்தையுடையளாகாநின்றாள்; நங்கைமீர் - பூர்ணைகளானவர்களே! இதற்கு-இந்த அதீதவிஷயாபிநிவேஶத்துக்கு, நான்-நான், என்செய்கேன் - எத்தைச் செய்வேன்?

அவன்தான் இன்னமும்அவதரித்து உபகரிக்குமதொழிய என்னாற்செய்யலாவதில்லையென்று கருத்து.

**இ.**—எட்டாம்பாட்டில், ஸ்ரீஜநகராஜன்திருமகள் விரோதியைப் போக்கின சக்ரவர்த்திதிருமகன் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

---

மாவது - பற்றிற்று விடாமையாய், அத்தால் ப²லிதம் - 'எல்லாவளவிலும்' இத்யாதி. "ஶிவஶ்ரோயஶ்ராவிரயநாஸ்தாநாஹ்விஷணஹவிஷிதா। வஶ்யதாம்ஸவஸுதேவாநாம்யபளவக்ஷஸமும்ஹரே:" இதி, ப்ரதமேஶ்லோ நவமே. வாணுதலீர், என்மடக்கொம்பு-இவள் - மடந்தையை இத்யாரப்ய அந்வய:. (எ)

[கொம்புபோல் இத்யாதி] - வஞ்சிக்கொம்புபோலே யிருக்குமவள் என்னுதல், ஏக வஸ்த்வேகதேஶம் என்னுதல். [இலங்கைநகர்] - சந்த்ராதித்யர்களும் புகப் பயப்படும் ஊர். [அம்புஎரிஉய்த்தவர்] - ஶராக்நியை ப்ரவேஶிப்பித்தவர். கேவலாக்நி சோற்றை வேவிக்கும தொழிய ப்ரவேஶிக்கக் கூசும் ஊர். கையாலே ஶராக்நியை ப்ரவேஶிப்பித்தான். ‹‹யயௌ ராவவநிஃ..›› என்று திருவடி புகிலும் ஶரஸ்தாநீயனாயிறே புகுந்தது. [வம்புஅவிழ் தண்ணந்துழாய்] - பரிமளத்தையுடைத்தாயிருக்கும் என்னுதல், நித்யாபூர்வமாயிருக்கும் என்னுதல். 'பண்டு ஒருத்திக்கு உதவினவன் எனக்கு உதவானோ' என்று ஆசைப்படாநின்றாள். அஸாதாரணவிக்ரஹத்தை இதரஸஜாதீயமாக்கினாற்போலே ஏதேனும் ஒருபுஷ்பத்தைச் சாத்தி லும் திருத்துழாய் இதரஸஜாதீயமாயிற்றாகக்கடவது. [நான் இதற்கு என்செய்கேன்]-க்ருஷ்ண னைப்போலே ஸாதாரணனன்றிக்கே ஏகதாரவ்ரதன்திருவடிகளில் திருத்துழாயை எங்கே தேடு வேன் ? அவளும் அவனுமான சேர்த்தியிலே ஆசைப்பட்டா ளென்று அறிகிறிலள். [நங்கை மீர்]-பூர்ணைகளான நீங்கள் சொல்லவல்லிகோளே? என்கிறாள்.

ஈடு·—எட்டாம்பாட்டு. ஸ்ரீஜநகராஜன் திருமகளுடைய விரோதியைப் போக்கின சக்ரவர்த்திதிருமகன்திருவடிகளிற் சாத்தின திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

[கொம்புபோல்] - வஞ்சிக்கொம்புபோலே யென்னுதல், ‹‹கூநந்யா›› (அநந்யா) என்கிற படியே ஏகவஸ்துவில் ஏகதேச மென்னுதல்.[சீதைபொருட்டு]-சீதைக்காக. [இலங்கைநகர்]-சந்த் ராதித்யர்கள் ஸஞ்சரிக்கப் பயப்படும் ஊர். [அம்புஎரிஉய்த்தவர்] - ஶராக்நியை ப்ரவேசிப்பித்தவர். சக்ரவர்த்திதிருமகன் இத்தைக்கைதொட்டு ஶிக்ஷித்து குணவானாக்கிப் பினபிறே போகவிட்டது; ஆகையாலே, கேவலாக்நி ப்ரவேசிக்கக் கூசும் ஊரிலே தன் வாய்வலியாலே புக்கதாயிற்று. இப் படி தான் முதுகிட்டாரையும் கூட, குணவான்களாக்கும்படி ஏக் கற்றவருடைய திருவடிகளிற் சாத்தப்பட்ட. [வம்பு அவிழ் தண்ணந்துழாய்மலர்க்கே] - பரிமளத்தையுடைத்தான மலரேன்னு

---

எட்டாம்பாட்டு - 'கொம்புபோல்' இத்யாதி. 'சீதைபொருட்டு' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதா ரிகை - 'ஸ்ரீஜநகராஜன்' இத்யாதி.

வஞ்சிக்கொம்பு-நீர்வஞ்சிக்கொம்பு. வேதஸஶாகை. கொம்பு வ்ருக்ஷைகதேசமாகையாலே, 'ஏகவஸ்து வில் ஏகதேசம்' என்றது. "இருசுடர்மீதினிலியங்கா" என்றதைப் பற்ற, 'சந்த்ராதித்யர்கள்' இத்யாதி. சந் த்ராதித்யர்கள் புகுர பயப்படும் ஊரிலே ஶராக்நியை ப்ரவேசிப்பித்தபடி யென்? என்ன, 'சக்ரவர்த்தி' இத் யாதி. இதுக்கு த்வ்யர்த்தம்-யுத்தத்தில் தோற்றோடுகிறவனை பயப்படாதபடி கையாலே ஸ்பர்சித்து, அணி வகுக்கும் ப்ரகாரங்களைக் கற்பித்து, குணவானாக்கிப் பின்பிறே போகவிட்ட தென்று; ஸஹஜார்த்தம் - பெரு மாள் அம்பை ஸ்பர்சித்து, கணுக்களைநிமிர்த்து நாணியிலே யேறிட்டுப் பின்பிறே போகவிட்டதென்று.'குண வானாக்கி' என்றவிடத்திலே - அர்ஜுநன் உத்தரனைத் திருத்தின கதையை நினைப்பது. வாய்வலி - வாக் பலம்; அம்புவாயினுடைய பல மென்னுதல். முதுகிட்டாரையு மென்றது - முதுகில் அம்பறுத்தூணியிலே யிருக்கிற அம்பைச் சொல்லுகிறது; குணவான்களாக்கும்படி - நாணியோடேகூடினவராக்கும்படி; நாணி யிலே யேறிடுகை யென்றபடி. 'ஏக்கற்றவர்' என்றது - ஏ என்று அம்பாய், அத்தையெய்யக் கற்றவ ரென்ற படி. இது ஸஹஜார்த்தம். சாடுவுக்கு, கைதொடுகையாவது - பிடிக்கையும், அடிக்கையும்; சிக்ஷிக்கையா வது - ருஜுவாக்குகையும், நியமிக்கையும்; குணவானாக்குகையாவது-நாணியிலேயேறிடுகையும், ப்வ்யனாக்கு கையும்; முதுகிடுகையாவது - முதுகிலே தூணீரத்தை வைக்கையும், சொன்னவார்த்தைகேளாமல் ப்ருஷ்டீ கரிக்கையும்; முதுகிட்டாரையு மென்றது - முதுகுகாட்டி யோடினாரையும், முதுகிலேயிடப்பட்டாரையு மென்றபடி என்றுமாமென்று கண்டுகொள்வது. வம்பு - மணமாதல்; புதுமையாதல். நித்யாபூர்வமாவது -

தல், நித்யாபூர்வமாயிருக்குமென்னுதல். அவன் சக்ரவர்த்திதிருமகனுயிருக்கச்செய்தேயும் அப்ராக்ருததிவ்யஸம்ஸ்தாநமேயாயிருக்கிறப்போலே, அவன் ஏதேனும் ஒன்ருலே வளையம்வைத்தாலும் இவர்களுக்குத்தோற்றுவது திருத்துழாயாயே. [நம்புமால்] - அத்தை எப்போதும் விரும்பாநின்ருள். [நான் இதற்கு என்செய்கேன் நங்கைமீர்] - க்ருஷ்ணனைப்போலே ஊர்ப்போதுவன்றிக்கே ஏகதாரவ்ரதனுனவன் திருவடிகளில் திருத்துழாயை நான் எங்கே தேடும்படி?சொல்லவல்லிகோளே. [நங்கைமீர்] - நீங்கள் பூர்ணைகளாயிருக்க, இவள் இப்படி படுகிறபடி கண்டிகோளே. (அ)

## ஒன்பதாம்பாட்டு.

நங்கைமீர் நீரும் ஓர்பெண்பெற்றுநல்கினீர்
எங்ஙனேசொல்லுகேன் யான்பெற்றஏழையைச்
சங்கென்னும்சக்கரமென்னும் துழாயென்னும்
இங்ஙனேசொல்லும் இராப்பகல்என்செய்கேன்?

**ஆ.**—(நங்கைமீர்.) நங்கைமீர்! உங்களுடைய பெண்பிள்ளைகளும் எம்பெருமானை ஆசைப்பட்டுப் பெருமையாலே அத்யந்தம் அவஸந்நைகளானவர்கள் இப்பாடு பட்டாருமுளரோ? இவள்பட்டது என்தான்? என்னில், - எம்பெருமான் திருவாழியும் திருச்சங்கமும் ஏந்தியிருந்தருளும் அவ்வழகைக் காணவேணுமென்றும், மத்ஸ்யகூர்மவராஹாத்யஸங்க்யேய திவ்யாவதார விஸிஷ்டனுயும் திவ்யக்ரீடாவிஸிஷ்டனுயும் ஸ்ரீவைகுண்டநாதனுயு மிருந்தவனுடைய திருவடிகளில் திருத்துழாயைத் தத்தத்தஸையிலே பெறவேணுமென்று சொல்லப்புக்கு முடியச்சொல்லமாட்டாதே, சங்கென்னும், சக்கரமென்னும், துழாயென்னும்; இங்ஙனே இராப்பகல் கூப்பிடாநிற்கும்; என்செய்கேன்? என்கிருள்.

**ஒ.**—ஒன்பதாம்பாட்டில், அவனுடைய ஆயுதங்களைக் காணவேணுமென்று சொல்லப்புக்கு முடியச்சொல்லமாட்டாதே நோவுபடாநின்ருள் என்கிருள்.

நல்குகை - வளர்க்கை. ஏழையை - கிடையாதத்தை ஆசைப்படுகிற சபலையை.

**ப.**—அநந்தரம், அவனுடைய அஸாதாரணசிஹ்நங்களை எப்போதும் சொல்லாநின்ருள் என்கிருள்.

நங்கைமீர் - பரிபூர்ணைகளான, நீரும் - நீங்களும், ஓர் பெண் - ஒரு பெண்ணை, பெற்று - பெற்று, நல்கினீர் - ஸ்நேஹித்துவளர்த்திகோள்; யான் - நான், பெற்ற - பெற்ற, ஏழையை - சபலையான இவளை, எங்ஙன் - எப்படி, சொல்லுகேன் - சொல்லுவேன்? (ஆனமட்டும்சொல்லில்), சங்கு என்னும் - (அவனுக்கு அஸாதாரணசிஹ்நமான) சங்கென்பது, சக்கரமென்னும் - சக்கரமென்பது, துழாயென்னும் - (அவன்திருவடிகளில்) திருத்துழாயென்பதாய்க்கொண்டு, இராப்பகல் - அஹோராத்ரவிபாகமில்லாதபடி, இங்ஙனே - இப்படி தனித்தனியே, சொல்லும் - சொல்லாநின்ருள்; என்செய்கேன் - இதற்கு ஏது செய்வேன்?

---

அதுவே. சக்ரவர்த்தி திருமகனுக்குத் திருத்துழாயுண்டோ? என்ன, 'அவன் சக்ரவர்த்தி' இத்யாதி. திருத்துழாயால் நினைக்கிறது - ஸம்ஶ்லேஷத்தையாய், ஏகதாரவ்ரதன் ஸம்ஶ்லேஷத்துக்கு இசையப்போகிருனே என்கிருள் - 'க்ருஷ்ணனை' இத்யாதி. 'நங்கைமீர்' என்றதுக்கு பாவம் - 'நீங்கள்' இத்யாதி. ‘‘ஶக்யா லோபயிதும் நாஹமைஶ்வர்யேண தநேந வா । அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா’’ இதி ஸுந்தரகாண்டே ராவணம்ப்ரதி ஸீதா. க்ரமேண அந்வய꞉. (அ)

ஸ்வரூபத்தைப்பார்த்து இவள் வாய்மூடும்படி பண்ணவோ? தாத்காலிகமான அஸாதாரண சிஹ்நத்தைச் சொல்லும்படி பலத்தையுண்டாக்கவோ? அவைதன்னை இப்போது ஸங்கிஹிதமாக்கவோ? ஒன்றும் செய்யமுடியாது என்று கருத்து. நீரும் ஓர்பெண்பெற்று நல்கினீரென்ற விடம் - இவ்வாழ்வாருடைய ப்ரேமதசைக்கு அல்லாத ஆழ்வார்களுடைய ப்ரேமதசை ஒவ்வாதென்கிற பாவத்தை ஸூசிப்பிக்கிறது.

இ.—ஒன்பதாம்பாட்டில், அவனுடைய ஆயுதாதிகளைக் காணவேணுமென்று சொல்லப்புக்கு முடியச்சொல்லமாட்டாதே நோவுபடாநின்றாள் என்கிறாள்.

[நங்கைமீர்] - உங்கள்பூர்த்தி, நான்சொல்லக் கேட்டு அறியவேணுமே உங்களுக்கு? நீங்களும் ஒருபெண்பிள்ளையைப் பெற்றுவளர்த்திகோளே. நல்குகை - வளர்க்கை. இவள் பட்டது பட்டாருண்டோ? உன்பெண்பிள்ளைக்கு வாசியென்? என்ன,—[எங்ஙனே இத்யாதி] - என்னுடைய பெண்பிள்ளைபடி என்னாலே பாசுரமிட்டுச் சொல்லலாயோ இருக்கிறது? நங்கைமீர்! என்று ஸம்போதிப்பது ஸஜாதீயரை; இவளுக்கு ஸஜாதீயர் - ஆழ்வார்களாமத்தனை. நீங்களும் பகவத்விஷயத்திலே ப்ரவணராகிலும் நான் பட்டது பட்டா ருண்டோ? என்று கருத்து. "யதோவாசோநிவர்த்தந்தே" என்கிற விஷயத்தை முடியப் பேசிலும் இவ்விஷயத்திலே அவகாஹித்தார்படி பாசுரமிட்டுச் சொல்லமுடியாது என்கை. "ஸதாவரநமாணா விஷ்ணு ஸம்ஸ்லேஷவிஸ்லேஷைகஹேதவ:" என்று கண்டிருக்குமத்தனை போக்கிப் பேசப்போகாது. "ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தம்" என்றிறே அவன்வார்த்தையும். கிடையாததிலே கிடைக்குமதிற் பண்ணும் சாபலத்தைப் பண்ணுகிறவளை. 'உன்னால் சொல்லலாம் அம்சத்தைச் சொல்லிக்காண்' என்ன, - [சங்குஎன்னும்] - பெருவருத்தத்தோடே 'சங்கு' என்னாநின்றாள். இப்படி அருமைப்பட்டோமென்று மீள அறிகிறிலள். [சக்கரம்என்னும்] - சொல்லவும் மாட்டுகிறிலள், மீளவும் மாட்டுகிறிலள். இவையிரண்டுக்கும் நடுவே கிடக்கிற தோள் மாலையை நினைத்து, [துழாய் என்னும்] - 'சங்குசக்கரங்கள்' என்றும், "கூராராழிவெண்சங்கேந்தி" என்றும் கூடச் சொல்லமாட்டுகிறிலள்; ஆபத்து மிக்க தசையிலும் ஒருத்தி "ஶங்கசக்ரகதாபாணே" என்றாளிறே. [இங்ஙனே சொல்லும் இராப்பகல்] - சொல்லித் தலைக்கட்டமாட்டாதே மீள மாட்டாதே இப்படி ஸர்வகாலமும் சொல்லாநின்றாள். [என்செய்கேன்]-தன் ஸ்த்ரீத்வத்தைப் பார்த்து மீளப்பண்ணவோ? சொல்லித்தலைக்கட்டப்பண்ணவோ? என்கிறாள்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. 'அவனுடைய ஆயுதாதிகளைக் காணவேணும்' என்று சொல்லப்புக்கு முடியச்சொல்லமாட்டாதே நோவுபடாநின்றாள் என்கிறாள்.

[நங்கைமீர்] - உங்கள்பூர்த்தி, இவள்படுகிற பாடு நான் சொல்லக் கேட்டறியவேண்டியிருக்கிறதிறே உங்களுக்கு. [நீரும் ஓர்பெண்பெற்று நல்கினீர்] - நீங்களும் ஒருபெண்பிள்ளையைப் பெற்று வளர்க்கிறிகோளன்றே? நல்குகை - வளர்க்கை. இவள்பட்டது பட்டாருண்டோ? எங்கள்பெண்பிள்ளைகளிற்காட்டிலும் உன்பெண்பிள்ளைக்கு வாசியென்? என்னில், - [எங்ஙனே சொல்லுகேன்]-இவள்படி பேச்சுக்கு நிலமாகிலிறே நான்சொல்லுவது. "யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ" (யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ) என்கிற பகவத்

ஒன்பதாம்பாட்டு - 'நங்கைமீர்' இத்யாதி. "சங்கென்னும் சக்கரமென்னும்" இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'அவனுடைய' இத்யாதி.

'நங்கைமீர்' என்ற ஸம்போதநத்துக்கு பாவம் - 'உங்கள்' இத்யாதி. ஸ்வாபதேசத்தில், ஜ்ஞாநபூர்த்தி. நல்குகை-ஸ்நேஹிக்கையாய் வளர்க்கையாகிறது.'பெண்பெற்றுநல்கினீர்' என்றதுக்கு பாவம் 'இவள்' இத்யாதி. ஸ்வாபதேசம் - 'யதோவாச:' இத்யாதி. சொல்லப்போகாதென்றதால் பலிதம் - 'ஸதா' இத்யாதி.

குணங்கள் நிலமாய்ப்பேசிலும், * குணவகாடர் படி பேச்சுக்கு நிலமல்லவிறே. "ஸதாபரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபி:" (ஸதாபரகுணவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபி:) என்று கண்டிருக்கு மத்தனை போக்கிப் பேசமுடியாது. "ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தம்" (ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தம்)என்றிறே அவன் வார்த்தையும். தேஶகால விப்ரக்ருஷ்டமான பதார்த்தங்களைத் தத்தத்தேஶகாலவிஶிஷ்டமாகப்பெறவேணு மென்கிற இவள்படி என்னாலே பேசலாயிருந்ததோ? ஆனாலும், எங்களிலும் நீ ஆஸந்நையன்றோ? தெரிந்தமட்டு அத்தைச்சொல்லிக்காணாய் என்ன, கைமேலே சொல்லுகிறாள்:—[சங்கென்னும்] - மலையெடுத்தாற்போலே பெருவருத்தத்தோடே சங்கென்னும்; அது ஸாத்மித்தவாறே [சக்கரமென்னும்] - மீளவும் மாட்டுகிறிலள், சொல்லவும் மாட்டுகிறிலள். இரண்டுக்கும் நடுவேகிடக்கிற மாலையை நினைத்து, [துழாயென்னும்] - †"சங்குசக்கரங்கள்" என்றும், ‡ "கூராராழிவெண்சங்கு" என்றும் சொல்லமாட்டுகிறிலள். ஆபத்து மிக்கவாறே ஒருத்தி "ஶங்கசக்ரகதாபாணே" (ஶங்கசக்ரகதாபாணே) என்றாளிறே. [இங்ஙனே சொல்லும்] - சொல்லத்தொடங்குவது, சொல்லித் தலைக்கட்டமாட்டாதொழிவதாய்ப் படாநின்றாள். இப்படிசொல்லுவது எத்தனைபோது? என்னில்,—[இராப்பகல்] - ஸர்வகாலமும். [என்செய்கேன்] - இவளைத் தொடங்கினதுசொல்லித் தலைக்கட்டப்பண்ணவோ? ஸ்த்ரீத்வத்தைப்பார்த்து மீளப்பண்ணவோ? (௬)

ஸ்ரீவிஷ்ணுதத்த்வே — "ஸம்ஸாரஸ்ய நிதாநம் ஹி பக்திஹீநதமோ வ்யது" இதி பூர்வார்த்தம். குணவகாடர்படி பேசமுடியாதென்னுமதுக்கு பகவதுக்தியுங் காட்டுகிறார்-'ப்ரியோஹீத்யாதி'. "தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர்விஶிஷ்யதே । ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய:" இதி கீதாஸு ஸப்தமே. கீழ்ஶ்லோகத்திலே, 'த்ரஷ்டவ்ய:' இதி. த்ரஷ்டவ்ய ஏவ, ந து வாச்ய இத்யர்த்த:. 'அத்யர்த்தம் ப்ரிய:' என்றது - அர்த்தசப்தம் - அபிதேயவசநமாய், வாசாமகோசரமாம்படி ப்ரீதிவிஷயபூத னென்றபடி. 'அஹம் ஜ்ஞாநிநோத்யர்த்தம் ப்ரிய:, ஸ ச மம அத்யர்த்தம் ப்ரிய:' என்று இரண்டிடத்திலும் அந்வயிப்பது. அதிக்ராந்தம் அபிதேயம் யதாபவதி ததேதி-வாசாமகோசரத்வம் விவக்ஷிதம். 'எங்ஙனேசொல்லுகேன் என்றதுக்கு அர்த்தாந்தரம்-'தேசகால' இத்யாதி. 'ஏழை' என்றதுக்கு பாவம்-'தேசகால' இத்யாதி என்னுதல். ஏழை-சபலை. கைமேலே - திருக்கைகளிலிருக்கும் திவ்யாயுதங்களை, ஹஸ்தகதமாகவென்றும். பதங்கள்தோறும் "என்னும், என்னும்" என்றதுக்கு பாவம் - 'மலையெடுத்தாற்போலே' இத்யாதி. ஏழையாகையாலே மீளவும்மாட்டுகிறிலள், பலஹாநியாலே சொல்லவும் மாட்டுகிறில ளென்றபடி. இரண்டுக்கும் நடுவே - சங்குசக்கரங்களுக்கு நடுவே. கூராராழிவெண்சங்கு - கூர்மைமிக்கஆழி; வெளுத்த சங் கென்றபடி. அப்படி "சங்குசக்கரங்கள்" என்று கூட்டிச்சொன்னபேருண்டோ? என்ன, 'ஆபத்து' இத்யாதி. "ஶங்கசக்ரகதாபாணே த்வாரகாநிலயாச்யுத । கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷ மாம் ஶரணாகதாம்" இதி ஸபாபர்வணி த்ரௌபதீ. இந்தப்ரமாணம்எடுத்தது-ஆபத்துமிக்கவர்களுக்கெல்லாம் விரோதிநிவர்த்தகங்களான இந்தஶங்கசக்ரங்களைச்சொல்லுகையே பாசுர மென்கைக்காக. ஆபத்துமிக்கிருக்கையாலே அவள் அப்படி சொன்னாள், இவளாபத்து அவளிலும் மிக்கிருக்கையாலே அங்ஙனும் சொல்லமாட்டுகிறில ளென்றபடி. ஸ்த்ரீத்வத்தைப்பார்த்து - "ந ஸ்த்ரீ ஸ்வாதந்த்ர்யமர்ஹதி" என்றிருக்கவேண்டும் ஸ்த்ரீத்வத்தைப் பார்த்து. "என்செய்கேன்" - ஸ்வரூபத்தைப்பார்த்து இவள் வாய்மூடும்படி பண்ணவோ? அஸாதாரணசிஹ்நங்களைச் சொல்லித் தலைக்கட்டும்படி பலத்தையுண்டாக்கவோ? அவைதன்னை இப்போது ஸந்நிஹிதமாக்கவோ? ஒன்றும் செய்யமுடியாது என்று கருத்து. 'நீருமோர்பெண்பெற்று நல்கினீர்' என்றவிடம்-இவ்வாழ்வாருடைய ப்ரேமதசைக்குஅல்லாத ஆழ்வார்களுடைய ப்ரேமதசை ஒவ்வாதுஎன்கிற பாவத்தை ஸூசிப்பிக்கிறது" என்றுஉரை. நங்கைமீர் இத்யாரப்ய, இராப்பகல் - இங்ஙனேசொல்லும்; என்செய்கேன்? இத்யந்வய:. (௬)

* குணவகாடர்-குணங்களில் அவகாஹித்தவர்: ஆழ்வார்கள். † திருவாய்மொழி-௭-௨-௧. ‡ ஷை-௬-௧.

# பத்தாம்பாட்டு.

என்செய்கேன் என்னுடைப்பேதை என்கோமளம்
என்சொல்லும் என்வசமுமல்லள் நங்கைமீர்
மின்செய்பூண்மார்பினன் கண்ணன்கழல்துழாய்
பொன்செய்பூண்மென்முலைக்கென்று மெலியுமே·

ஆ·—(என்செய்கேன்.)விவேகரஹிதையாய் விரஹவ்யஸநாஸஹ என்னுடையபெண்பிள்ளை என்சொல்லும் என்வசமுமல்லள்; நங்கைமீர்! நிரதிஶயௌஜ்ஜ்வல்ய மௌக்திக ஹாராதி திவ்யபூஷண பூஷித வக்ஷஸ்தலனுயிருந்த வண்டுவரைப்பெருமாள் திருவடிகளில் திருத்துழாய், தத்ஸம்ஶ்லேஷார்த்தம் மங்களமான பூஷணங்களாலே அலங்க்ருதமான தன்னுடைய மென்முலைக்கென்று மெலியாநிற்கும்; என்செய்கேன்? என்று அலற்றுகிறுள்.

ஒ.—பத்தாம்பாட்டில், 'உன் மகள் நீ இட்ட வழக்கன்ருே? அவளுக்கு ஹிதம் சொல்லாய்' என்றவர்களைக்குறித்துத் தான் சொல்லிற்றுக்கேளாதே அவனை ஆசைப்பட்டு மிகவும் அவஸந்நையாகாநின்ருள் என்கிருள்

[என்செய்கேன் என்று தொடங்கி.]-ஹிதங்கொள்ளுகைக்குஈடான விவேகமின்றிக்கே வ்யஸநஸஹையு மன்றிக்கேயிருந்துள்ள என்மகள் நான் சொல்லிற்றுக் கொள்ள, முதலிலே நான் இட்ட வழக்கல்லள். விளங்காநின்றுள்ள கௌஸ்துபாத்யாபரணங்களைத் திருமார்பிலேயுடைய க்ருஷ்ணனுடைய திருவடிகளில் திருத்துழாயை விரஹவைவர்ண்யத்தையே ஆபரணமாகவுடைத்தாய்த் துவண்டிருக்கிற முலைக்கு வேணு மென்று சொல்லப்புக்கு முடியச்சொல்லமாட்டாதே மெலியாநின்ருள்; இதுக்கு நான் செய்வதென்? [பொன்செய்பூண்] - பொன்னாலே செய்யப்பட்ட ஆபரணமென்றும் சொல்லுவர்.

ப·—அநந்தரம், எனக்குவிதேயையன்றியே க்ருஷ்ணனுடைய ஆபரணஶோபையிலே அகப்பட்டு அவனுடையதிருவடிகளில் திருத்துழாய் தன்முலைக்கு அலங்காரமாகவேணு மென்று உடம்பு இளையாநின்ருள் என்கிருள்.

நங்கைமீர் - நங்கைமீர்! என்னுடை - என்னுடைய, பேதை - (ஹிதம்கேட்கும்பருவமல்லாத) பேதையாய், என்கோமளம் - (ஹிதஞ்சொல்லப் பொறுக்கமாட்டாத) மார்த்தவத்தையுடைய இவள், என்சொல்லும் - என்சொல்லிலும், என்வசமும் - என்நினைவிலும், அல்லள் - வருகிறிலள்; என்செய்கேன் - (நான் இதற்குச்)செய்வதுண்டோ? (இவள்அவஸ்த்தை இருந்தபடி!) மின்செய் - ஒளியையுடைத்தான, பூண் - கௌஸ்துபாத்யாபரணஶோபிதமான, மார்பினன்-மார்பையுடைய,கண்ணன் - க்ருஷ்ணன், கழல்-திருவடிகளில், துழாய்-திருத்துழாயை, பொன் - (விரஹவைவர்ண்யமாகிற) பொன்மையாலே, செய்-செய்யப்பட்ட, பூண் - ஆபரணஶோபையையுடைய, மெல் - (விஶ்லேஷாஸஹமாய்த்) துவண்ட, முலைக்கு-முலைக்கு (அலங்காரமாகவேணும்), என்று - என்று ஆசைப்பட்டு, மெலியும் - (அது கிடையாமையாலே) க்ருஶஶரீரையாகாநின்ருள்.

இ.—பத்தாம்பாட்டில், 'உன்மகள் நீ யிட்ட வழக்கன்ருே? ஹிதம் சொல்லத் தட்டென்? என்றவர்களைக் குறித்து 'நான் சொல்லிற்றுக் கேளாதே அவனை யாசைப்பட்டு மிகவும் அவஸந்நையாகாநின்ருள்' என்கிருள்.

[என்செய்கேன் இத்யாதி]—[என்னுடைப்பேதை] - சொன்ன ஹிதம் கேட்கும் பருவமன்று. [என்கோமளம்] - 'ஹிதம் கேட்டிலள்' என்று விடவொண்ணுதபடி வ்யஸநஸஹமல்லாத ஸௌகுமார்யத்தையுடையவள். [என்சொல்லுமல்லள் என்வசமுமல்லள்] - சொன்ன ஹிதம் கேட்பதும் செய்யாள், ஹிதம்சொல்லலாம்படியும் இருக்கிறிலள். [நங்கைமீர்] - இவளைப்பெற்ற என்னைப்போலன்றிக்கே நீங்கள் பூர்ணைகளிறே. இவளைப்போலே யிருக்கும் பெண்பிள்ளையைப்பெறுதவர்களாகையாலேகுறைவற்றவர்களிறே. [மின்செய்பூண்மார்பினன்]- மின்னுநின்ற ஆபரணமுண்டு - கௌஸ்துபம்; அத்தைத் திருமார்பிலேயுடைய க்ருஷ்ணனுடைய திருவடிகளில் திருத்துழாய் விரஹவைவர்ண்யத்தையே ஆபரணமாகவுடைய முலைக்கு; பொன்னாலேசெய்த ஆபரணத்தையுடைய முலை யென்றுமாம். ஸ்ரீகௌஸ்துபம் புருஷோத்தமலக்ஷணமானாற்போலே விரஹத்தில் வைவர்ண்யம் ஸ்த்ரீத்வலக்ஷணமிறே. [மென்முலைக்கு என்று மெலியுமே] - விரஹத்தாலே துவண்ட முலைக்கு வேணுமென்று சொல்ல நினைத்து முடியச்சொல்லமாட்டாதே மெலியாநின்றாள். "மணிமிகுமார்பினில்முல்லைப்போது என்வனமுலைகமழ்வித்து" என்கிறபடியே ஸ்ரீகௌஸ்துபம் தன்முலையிலே அழுந்த அணைக்க ஆயிற்று இவள் ஆசைப்படுகிறது. இவள் மெலியாநின்றாள்; நான் என்செய்கேன்? இவளுடைய அவஸ்தை இருக்கிறபடியால் இவளைக் கிடைக்கமாட்டாதாயிராநின்றது; நான் எங்ஙனே ஜீவிக்கக்கடவேன்? என்கிறாள்.

ஈடு.—பத்தாம்பாட்டு.உன்மகள் நீயிட்ட வழக்கன்றோ? அவளுக்கு ஹிதம் சொல்லி மீட்கத் தட்டு என் உனக்கு? என்றவர்களைக்குறித்து நான் சொல்லிற்றுக் கேளாதே அவனையே ஆசைப்பட்டு மிகவும் அவஸந்நையாகாநின்றாள் என்கிறாள்.

[என்செய்கேன்] - இவள்தசை யிருந்தபடியால் இவளைக்கிடையாதாயிருந்தது; நான் என்செய்வேன்? [என்னுடைப்பேதை] - நான்சொல்லும் ஹிதவசநங் கேட்கும் பருவமல்லள். [என்கோமளம்] - 'சொன்னஹிதங்கேட்டிலள்' என்று கைவிட வொண்ணுதபடி, வ்யஸநஸஹமல்லாத ஸௌகுமார்யத்தை யுடையவள். [என்சொல்லுமல்லள், என்வசமுமல்லள்] - நான் சொன்ன ஹிதவசநங் கேட்பதும் செய்யாள்; எனக்கு ஹிதஞ்சொல்லலாம்படி யிருப்பதும் செய்யாள்.[நங்கைமீர்] - இதில் நீங்களறியாததில்லையிறே. [மின் செய் இத்யாதி] - மின்னுநின்றுள்ள ஸ்ரீகௌஸ்துபத்தை மார்விலேயுடைய க்ருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாய், பொன்னாலே செய்த ஆபரணங்களையுடைத்தாய் விரஹஸஹமல்லாத முலைக்கு; அன்றிக்கே, பொன்செய்திருக்கை - விவர்ணமாயிருக்கை; "மென்முலை பொன்பயந்திருந்த" என்னக்கடவதிறே. அந்த வைவர்ண்யத்தையே ஆபரணமாகவுடைய முலைக்கு என்றுமாம்; "அநிந்திதாம்" (அநிந்திதாம்)

---

பத்தாம்பாட்டு-'என்செய்கேன்' இத்யாதி. 'என்சொல்லுமென்வசமுமல்லள்' என்கையாலே பலிதமான ஶங்கையை அநுவதியாநின்றுகொண்டு, 'என்றுமெலியும்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை-'உன் மகள்' இத்யாதி.

'மென்முலைக்கென்றுமெலியும் - என்செய்கேன்' என்று அந்வயித்து ஹாவம் - 'இவள்தசை' இத்யாதி. கோமளம் - ஸௌகுமார்யம். 'அல்லள்' என்கிறவிது - இரண்டிடத்திலும் கூட்டுவது. இப்போது சொன்னது கேளாவிட்டால், மேலொருகால்தான் ஹிதம்சொல்லி மீட்கிறோமென்னில்; - அதுவுமில்லை யென்கிறாள்.- 'எனக்கு' என்றுதொடங்கி. 'நங்கைமீர்' என்று - ஜ்ஞாநபூர்த்தி சொல்லுகிறது. பூண் - ஆபரணம். அத்தாலே - கௌஸ்துபம் சொல்லுகிறது. பொன் - ஸ்வர்ணமும், வைவர்ண்யமும். முந்தினஅர்த்தத்துக்கு - இப்போது ஆபரணமில்லையீ! என்ன, விஶ்லேஷாத் பூர்வமுண்டானத்தைச் சொல்லுகிறதென்றபடி. 'பொன்' என்றால் - வைவர்ண்யத்தைச் சொல்லுமோ? என்ன, 'மென்முலை' இத்யாதி. ம்ருதுவான முலை, பொன்பயந்திருந்த - வைவர்ண்யமடைந்திருந்த இத்யர்த்தः. இரண்டாம்பத்தில் "திவளும்" எ

என்னுமாபோலே. [மின்செய் பூண் மார்பினன் - பொன்செய்பூண்மென்முலே] - அவன் பும்ஸ்த்வத்துக்கு லக்ஷணமான கௌஸ்துபம்போலேயாயிற்று,ஸ்த்ரீத்வத்துக்கும் வைவர்ண்யம்; அபிமத விரஹத்தில் இப்படி பொன்பயக்கையிறே ஸ்த்ரீத்வலக்ஷணம். தனம்படைத்தாரில் இவளைப்போலே தனம்படைத்தா ருண்டோ? [மென்முலே] - தன்அபிமதனைப் பிரியமாட்டாமையாலே பொன்னிட்டுக்கொள்ளுகிறதிறே. "மென்முலைக்குவேணும்" என்று சொல்லட்புக்கு மெலிவோடே தலைக்கட்டும். (கூ0)

---

# ப தி ஞொ ரா ம் பா ட் டு.

---

மெலியும்நோய்தீர்க்கும் நம்கண்ணன்கழல்கள்மேல்
மலிபுகழ்வண்குருகூர்ச் சடகோபன்சொல்
ஒலிபுகழாயிரத்து இப்பத்தும்வல்லவர்
மலிபுகழ்வானவர்க்காவர் நற்கோவையே·

*ஆ.—(மெலியும்.) இப்படி தன்னோடு ஸம்ஶ்லேஷிக்க ஆசைப்பட்டுப் பெருமையாலே அத்யந்தம் அவஸந்நனை என்னுடைய அவஸாதமெல்லாம் போம்படி என்னோடே ஸம்ஶ்லேஷித்தருளின வண்துவரைப்பெருமாள்திருவடிகளிலே, தச்சேஷதைகரதித்வ மஹாயஶஸ்ஸையுடையனை வண்குருகூர்ச்சடகோபன் சொல் ஒலிபுகழாயிரத்து இப்பத்தும் வல்லவர் அயர்வறும்அமரர்களுடைய திவ்யபரிஷத்துக்கு ஒருபூஷணமாவர் என்கிறார்.*

*ஒ.—நிகமத்தில், ஆழ்வாருக்கு இனியில்லையென்ன வந்த அவஸாதமெல்லாம் தீரும்படி ஸம்ஶ்லேஷித்தருளின க்ருஷ்ணன் திருவடிகளிலே தாம் அருளிச்செய்த ஆயிரத்திலும் இத்திருவாய்மொழி வல்லார் அயர்வறும்அமரர்களுக்கு ஸத்ருஶராவர் என்கிறார்*

---

*திருமொழி, ஆறும்பாட்டு—"தன்குடிக்கேதும்" இத்யாதி. 'அன்றிக்கே' இத்யாதி வாக்யவிவரணம் – 'அந்த வைவர்ண்யத்தை' இத்யாதி. 'வைவர்ண்யம் ஆபரணமா யிருக்குமோ?' என்ன, 'அநிந்திதாம்' இத்யாதி.* "தயாமதாஙாம் வ்யதிதாஉநிந்திதாம் வ்யவெதஹஷ்பூம வஸிநீநஉாநஸாழ I ஸூஹாஙி த்தாநிஸூஹாநிஹெஜிரெ நாஸ ஸ்ரீயாஜஷ்ஷ த்ிவொவஜீவிநஃ" *இதி ஸுந்தரகாண்டே ஏகோநவிம்ஶே வால்மீகிவசநம். அதாவது – "வ்யதிதாம்" என்று அழகழிந்திருக்கிற தசையிலேயிறே, பிராட்டியை "அநிந்திதாம்ஸூபாம்" என்று-அழகுடையவளாகச் சொல்லிற்று; ஆகையாலே, அபிமதவிஶ்லேஷத்தில் வைவர்ண்யம் ஆபரணமா யிருக்கு மென்று தாத்பர்யம். ஆபரணமாகையாவது – 'அவனைப்பிரிந்து விவர்ணையாயிருப்பதே; 'இவளுடைய பாதிவ்ரத்யம் இருந்தபடியென்?' என்று நாட்டார்கொண்டாடுகை யாலே தேஜஸ்கரமாயிருக்கை. இவ்விசேஷணங்களால் பலிதம் – 'மின்செய்' இத்யாதி. அவனுக்குக் கௌஸ்துபத்தைச் சொல்லி, இவளுக்கு வைவர்ண்யத்தைச்சொல்லுகையாலே – அது புருஷோத்தமத்வலக்ஷணம், இது பாதிவ்ரத்யலக்ஷண மென்கிறார்-'அவன்' இத்யாதி. இது பாதிவ்ரத்யலக்ஷணமானபடியை உபபாதிக்கிறார் – 'அபிமத' இத்யாதி. ரஸோக்தி – 'தனம்' இத்யாதி. தனம் – ஸ்தநமும், தநமும். 'பொன்செய்பூண் முலே' என்றபோதே இளப்பு ஸித்தமாயிருக்க, 'மென்முலே' என்கிறது புநருக்தமன்றோ? என்ன, மென்முலேயாகையாலே பொன்செய்த தென்று ஹேது ஹேதுமத்பாவத்தாலே பரிஹரிக்கிறார் – 'தன் அபிமதனை' இத்யாதி. மென்மையாவது-அபிமதனைப் பிரியமாட்டாமை. 'பொன்னிட்டுக்கொள்ளுகிறதிறே' – 'காந்தன் கடாக்ஷிக்க வேணும்' என்று பொன்னைப் பூட்டிக்கொள்ளுகிறதிறே. என்னுடைப்பேதை இத்யாரப்ய, மெலியும்; என் செய்கேன்? இத்யர்வயஃ.* (கூ0)

[மலிபுகழ் என்று தொடங்கி.] - எட்டாதநிலத்தையும் அநுபவிக்கைக்கு அபிநிவேஶித்தாரென்னும் புகழ் மிக்கிருந்துள்ள ஆழ்வார் அருளிச்செயலாய் எம்பெருமானுடைய கல்யாணகுணங்களை வ்யக்தமாகச் சொல்லுகிற இத்திருவாய்மொழி வல்லவர்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி கற்றார் நித்யஸூரிகளோடு ஒருகோவையாவர்கள் என்று பலத்தை அருளிச்செய்கிறார்.

மெலியும் - இப்படி சிதிலராகைக்கு அடியான, நோய் - விரஹவ்யதையை, தீர்க்கும்- போக்கும், நம்-ஆஶ்ரிதஸுலபனான, கண்ணன் - க்ருஷ்ணன், கழல்கள்மேல் - திருவடிகள் விஷயமாக, மலி - (விப்ரக்ருஷ்டாநுபவத்திலும் அபிநிவிஷ்டரென்னும்படி) வளர்ந்த, புகழ் - புகழையுடையராய்,—வண்-ஶ்லாக்யமான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, ஒலி - கொண்டாடப்பட்ட, புகழ் - குணபௌஷ்கல்யத்தையுடைத்தான, ஆயிரத்து-ஆயிரந்திருவாய்மொழியிலும், இப்பத்தும் - இப்பத்தையும், வல்லவர் - (ஹாவயுக்தமாக அப்யஸிக்க) வல்லவர்கள், மலி - அபிவ்ருத்தமான, புகழ் - பகவதநுபவப்ரதையையுடைய, வானவர்க்கு - ஸூரிகளுக்கு, நல் - ஶ்லாக்யராய்க்கொண்டு, கோவை ஆவர் - ஒருகோவையாவர்கள். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்க வல்லார் நித்யஸூரிகளுக்கு ஸத்ருஶராவர் என்கிறார்.

[மெலியும்நோய் இத்யாதி] - இவ்வவஸாதமெல்லாம் தீரும்படிவந்து முகங்காட்டின க்ருஷ்ணன்திருவடிகளிலே 'மெலியும் என்செய்கேன்?' என்று கைவிட்டாள் திருத்தாயார்; உடையவர்கள் கைவிடார்களிறே. [நம்கண்ணன்] - "தாஸஸாவிரஹ-ஔஸி:" என்று இப்படிப்பட்ட ஆபத்துக்களிலே வந்து முகங்காட்டு மென்னும் ப்ரமாணப்ரஸித்தி. [மலிபுகழ்]- 'கிட்டாதவற்றையும் அநுபவிக்க ஆசைப்பட்டார்' என்னும் புகழ் மிக்கிருக்கிற ஆழ்வார் சொன்னது. [ஒலிபுகழ் இத்யாதி] - ஆர்த்தியை விளைக்கவல்லவன், பரிஹரிக்க வல்லவன்; அது தன் பேறாயிருக்கவல்லவன் என்கிற கல்யாணகுணங்களை வ்யக்தமாகச் சொல்லுகிற இப்பத்தையும் அப்யஸிக்க வல்லவர்கள். [மலிபுகழ்வானவர்க்கு] - நித்யாநுபவம்பண்ணாநிற்கச்செய்தே விடாய்மிக்கிருப்பர் என்னும் புகழையுடைய நித்யஸூரிகளுக்கு. [நற்கோவையாவர்] - நல்ல சேர்த்தியாவர்.

ஈடு.—பதினோராம்பாட்டு. நிகமத்தில் - இத்திருவாய்மொழி அப்யஸிக்கவல்லார் நித்யஸூரிகளுக்கு ஸத்ருஶராவர் என்கிறார்.

[மெலியும்நோய்தீர்க்கும்] - 'மெலியும்' என்று தாயார் கைவாங்கினாள், பின்னையும் உடையவன் கைவிடானே. "பெற்றார்பெற்றொழிந்தார்" இத்யாதி. [நங்கண்ணன்]- "தாஸஸா

நிகமம் - 'மெலியுநோய்' இத்யாதி. 'வானவர்க்கு - நற்கோவை - ஆவர்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை.

'மெலியும்' என்ற அநந்தரம் தாயார்வார்த்தை யில்லாமையாலே - கைவாங்கினமை வித்தம். உடையவன் - ஸ்வாமி. உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம் - 'பெற்றார்' இத்யாதி. திருமொழி எட்டாம்பத்து ஒன்பதாந்திருமொழி எழாம்பாட்டு. பெற்றார்பெற்றொழிந்தார் - சரீரமாத்ரத்தை உத்பாதித்தவர் பெற்றவளவிலே விட்டுப்போனார். பின்னும் அடியேனுக்கு உற்றானாய் நின்று வளர்த்து - பின்பும் எனக்கு ஸர்வவிதபந்துவுமாய் நின்று வளர்த்து. என்னுயிராகிநின்றானை-எனக்கு தாரகனுமானவனை இத்யர்த்த:"கண்ணன்-மெலியு

விரஹ-ஸூளரி:"(தாஸாம்ாவிரஹூச்சௌரி:) என்று இப்படிப்பட்ட ஆபத்துக்களிலே வந்து முகங் காட்டுமென்னும் ப்ரமாணப்ரஸித்தி. இப்படி ஶிதிலையாகைக்கு அடியான விரஹவ்யதையைப் போக்கும் ஆஶ்ரிதஸுலபனான க்ருஷ்ணன்திருவடிகள்விஷயமாக. [மலிபுகழ்] - 'தேசகாலங் களால் விப்ரக்ருஷ்டமான அவன்படிகளையும் இப்போதே பெறவேணும்' என்று விடாய்க்கும் படி பகவத்விஷயத்திலே விடாய்க்கையால் வந்த புகழிறே. இப்படிப்பட்ட புகழையுடைய ஆழ் வார் அருளிச்செய்தது. [ஒலிபுகழாயிரத்திப்பத்தும்வல்லவர்] - இவரை இப்படிவிடாய்ப்பித்த வன் அவ்விடாய் போனவிடம் தெரியாதபடி பரிஹரிக்கவல்லனேன்கிற கல்யாணகுணங்களை வ்யக்தமாகச் சொல்லுகிற இப்பத்தையும் அப்யஸிக்கவல்லவர்கள். [மலிபுகழ்வானவர்க்காவர் நற்கோவையே] - இவ்வாழ்வாரோடு ஒப்பர்களாயிற்று அவர்களும். நித்யாநுபவம் பண்ணுநிற்கச் செய்தே அவர்கள் விடாய்க்க வல்லராம்படி, பகவத்விஶ்லேஷத்தால் விடாய்க்கைக்கு ஸம்பா வனையில்லாத ஸம்ஸாரத்திலே யிருந்து இவர் விடாய்க்கவல்லரானாற்போலேயாயிற்று. வானவ ரோடு, [நற்கோவையாவர்] - நல்ல சேர்த்தியாவர். (கக)

---

நோய்தீர்க்கும்" என்றதுக்கு ப்ரமாணம் - 'தாஸாம்' இத்யாதி. "தாஸாமாவிரபூச்சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ: । பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மத:" இதி ஶ்ரீபாகவதே தஶமே கோபிகாகீதா நந்தரே. 'நம்' என்ற அஸ்மச்சப்தம் - ப்ரஸித்தியிலே. புகழுக்கு மலிவு ஏது? என்ன, 'தேசகாலங்களால்' இத் யாதி. மலிபுகழ்-வளர்புகழ். 'ஒலிபுகழ்' - "புகழ் - ஒலி" என்று அந்வயம். புகழை வ்யக்தமாகச்சொல்லுகிற என்றபடி. 'மலிபுகழ்வண்குருகூர்ச்சடகோபன், மலிபுகழ்வானவர்' என்றதுக்கு பாவம் - 'இவ்வாழ்வார்' இத்யாதி. 'ஒப்பர்கள்' என்கிறது, எவ்வாகாரத்தாலே? என்ன, 'நித்யாநுபவம்' இத்யாதி. அதாவது-பகவத் விஶ்லேஷத்தால் விடாய்க்கைக்கு ஸம்பாவனையில்லாத ஸம்ஸாரத்திலே யிருந்து இவர் விடாய்க்குமாபோலே யாயிற்று, நித்யாநுபவம்பண்ணுநிற்கச்செய்தே அவர்கள் விடாய்க்க வல்லபடி ; ஆகையாலே, அஸம்பாவித மான விடாய் இருவருக்கும் ஒத்திருக்கையாலே 'ஒப்பர்கள்' என்கிற தென்றபடி. இத்தால் - இவருடைய புகழும் மலிந்திருக்கு மென்றதாயிற்று. நித்யஸூரிகளுக்கு விடாயாவது - உத்தரோத்தராநுபூஷை. மெலியுநோய் - சிதிலராகைக்குஅடியான விரஹவ்யதை. மெலிவு - ஶைதில்யம்- அதாவது - சரீரகார்ஶ்யம். மலிபுகழ் வண்குருகூர்ச்சடகோபன் - மெலியுநோய்தீர்க்கும் நங்கண்ணன்கழல்கள்மேல்-சொன்ன - ஆயிரத்தி லும்-புகழை-ஒலிக்கிற-இப்பத்தும் வல்லவர்-மலிபுகழ்வானவர்க்கு-நற்கோவை-ஆவ ரென்று அந்வயம். (கக)

த்ரவிடோபநிஷத் ஸங்கதி.—தம் ப்ராப்ஷ்டும் த்விதாயாம் ப்ரணயிநி ஸ்வதஶாம் ஸோகவேகாதநிச்சந் ஸம்ஸ்ப்ருஷ்டாநஸுக்லேஶ இதி ஶிதிலதநுர் நந்தஸூநோர் விசிந்த்ய । ஸம்ஸ்லேஷோத்தம் ஶ்ரீ ஹரிர் தநுமநோஹாரி ஹாவப்ரகாஶை: ஸர்வாந்மோஹயந்தம் ஸ்மரதி ஹ ॥

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.—[illegible] ॥

| | |
|---|---|
| திருவாய்மொழி நூற்றந்தாதி. | பாலரைப்போற்சீழ்கிப் பரனளவில்வேட்கையால்<br>காலத்தால்தேசத்தால்கைகழிந்த - சால<br>அரிதானபோகத்தில் ஆசையுற்றுநைந்தான்<br>குருகூரில்வந்துதித்தகோ. |

---

# மூன்றாந்திருவாய்மொழி - கோவைவாயாள் : ப்ரவேஶம்.



**ஆ.**—(கோவைவாயாள்.) இப்படி அவஸந்நரான தம்முடைய அவஸாதமெல்லாம் போம்படி தம்மோடேகலந்தருளின எம்பெருமானுடைய ப்ரணயித்வகுணாநுபவ ஜநித ப்ரீதியாலே அந்த ப்ரணயித்வத்தைப் பேசுகிறார்.

ஒ.—மூன்றாந்திருவாய்மொழியில், தாம் ஆசைப்பட்டபடியே எல்லாம் பெற்றாராம்படி தம்மோடே ஸம்ஶ்லேஷித்தருளின எம்பெருமானுக்குத் தம்பக்கலுண்டான ப்ரணயித்வத்தை அநுஸந்தித்து அத்யந்தப்ரீதரான ஆழ்வார், அந்தப்ரீதிப்ரகர்ஷத்தாலே அவனுடைய ப்ரணயித்வகுணத்தைப் பேசியருளுகிறார்.

ப.—மூன்றாந்திருவாய்மொழியில் - இவருடைய ஆர்த்தி தீரும்படி ஸம்ஶ்லேஷித்த ஸர்வேஶ்வரன் இவருடைய அபிநிவேஶஹேதுவான அநுராகவிஶேஷத்தைக் கண்டு அவனும் இவர்பக்கலிலே அத்யந்தாபிநிவிஷ்டனாம்படி அநுரக்தனாம்படியை அநுஸந்தித்த இவர், அவனுடைய ப்ராப்தி ப்ரதிபந்தக ஸமஸ்தவிரோதிநிவர்த்தகத்வத்தையும், ரக்ஷகத்வப்ரயுக்த ஸம்பந்தத்தையும், ஸர்வாத்மஹாவாதியால் வந்த நாராயணத்வத்தையும், அநுகூலஶத்ரு நிரஸந ஸாமர்த்யத்தையும், ஸௌஶீல்யாதி குணயோகத்தையும், ரக்ஷணோபகரணவத்தையையும், அநந்யார்ஹமாக்கி அடிமைகொள்ளும் ஸ்வபாவத்தையும், ஸர்வவ்யாபகத்வத்தையும், பாரமார்த்திகபாத்வௌஜ்ஜ்வல்யத்தையும், அபரிச்சேத்யமாஹாத்ம்யத்தையும் அநுபவித்து, ஏவம்விதனான ஸர்வேஶ்வரன் தம்முடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் ஸ்ரக்வஸ்த்ராபரணங்கராகாதிகளோபாதி தனக்கு அதிஶயித போக்யமாம்படி விரும்பின ப்ரணயித்வத்தை அருளிச்செய்து ஸந்துஷ்டராகிறார்.

**இ.**—மூன்றாந்திருவாய்மொழியில், தாம் ஆசைப்பட்டபடியே எல்லாம்பெற்றாராம்படி தம்மோடேகலந்து அவனுக்குத் தம்பக்கலுண்டான ப்ரணயித்வத்தை அநுஸந்தித்துப்ரீதராய் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே அந்தப்ரணயித்வகுணத்தைப் பேசுகிறார். இதுதன்னை மூன்றுபடியாக நிர்வஹிப்பர்கள்; எம்பார் - தேஶகாலவிப்ரக்ருஷ்டங்களைப் பெற ஆசைப்பட்ட இவர்க்கு ஒருகுணாவிஷ்காரத்தைப் பண்ண, அத்தாலே கீழ்ப்பிறந்த இழவெல்லாம் மறந்து அந்தக் குணத்தையே அநுபவிக்கிறார் என்பர்; திருமலைநம்பி - ஸர்வேஶ்வரன் முகத்தைப் பார்த்து அபேக்ஷித்தபடியே செய்யக்கடவோம் என்ன, பெற்றாராய் க்ருதார்த்தராகிறார் என்பர். பட்டர் - தேஶகால்விப்ரக்ருஷ்டங்களை ஆசைப்பட்ட இவர்க்குக் காலத்ரயத்திலும் உபாதியைக் கழித்து வர்த்தமாநகாலம்போலே ஒருபோகியாக்கிக் கொடுக்க, எல்லாம் பெற்றாராய் அநுபவிக்கிறார் என்பர். ஸர்வஶக்தியாகையாலும், காலத்துக்கு நியாமகனாகையாலும், செய்யமுடியாதது இல்லையிறே. தேஶகாலவிப்ரக்ருஷ்டங்களை ஆசைப்படுவார் ஒருவரைப் பெறுகையாலே இவர் ஸத்தையே தனக்கு எல்லாமாம்படியிருக்கிற ப்ரணயித்வகுணத்தை யநுபவித்து ப்ரீதராகிறார். ஈஶ்வரனுடைய "பாலனாயேழுலகு" - இத்திருவாய்மொழி.

ஈடு.—எல்லாத்தேசத்திலும் எல்லாக்காலத்திலு முண்டான அவன்படிகளெல்லாம் இப்போதே பெற்று அநுபவிக்கவேணுமென்று விடாய்ப்பாரொருவரைப் பெறுகையாலே, இவர் ஸத்தையே தனக்கு எல்லாமாம்படியிருக்கிற தன் ப்ரணயித்வகுணத்தைக் காட்டிக்கொடுக்கக்

---

'கோவைவாயாள்' ப்ரவேஶே, கீழோடே நேரேஸங்க்ரஹஸங்கதி - 'எல்லாத்தேசத்திலும்' இத்யாதி. 'ஸர்வேஶ்வரனுடைய பாலனாயேழுலகு' என்றது - பாலனாயேழுலகிலே ஆழ்வாருடைய ப்ரணயித்வகுணம் சொன்னாற்போலே, இத்திருவாய்மொழியில் ஆழ்வார்பக்கல் ஈஶ்வரனுக்கு உண்டான ப்ரணயித்வகுணம் சொல்லுகிற தென்றபடி. ப்ரணயித்வகுணமாவது - வ்யாமோஹம்.

கண்டு, இவரும் எல்லாம்பெற்ருராய் அநுபவிக்கிருர். ஸர்வேஸ்வரனுடைய பாலனுயேழுலகு- இத்திருவாய்மொழி. இதுதனக்கு மூன்றுபடியாக நிர்வஹிப்பர்கள் நம்முதலிகள்; எம்பார், “அம் புலியம்மானைப் பிடித்துத்தரவேணும்’ என்று அழுத ப்ரஜைக்குத் தேங்காயைக்கொடுத்து அழு கையை ஆற்றுவாரைப்போலே, வேருருகுணுவிஷ்காரத்தைப் பண்ணி அநுபவிப்பிக்க அநுபவிக்கிருர்” என்று அருளிச்செய்வர். திருமலைநம்பி, “ஒருவன் ஒன்றை அபேக்ஷித் தால், அவனும் அதுசெய்வானுகத் தலைதுலுக்கினுல், பெற்ருனுய்ப் பின்பு பின்னிலிழவுதோன் றும்படியன்று இருப்பது; ஆகையாலே, அவனும் ‘அப்படி செய்கிருேம்’ என்னக் கீழிலிழவை மறந்து எல்லாம் பெற்ருராய் அநுபவிக்கிருர்” என்று; ஸ்ரீகௌஸல்யையார், ‘பெருமாள் வநத்துக்கு எழுந்தருளுகிறபோது ‘ஏகபுத்ரையான நான் உம்மைப்பிரிந்திருக்கமாட்டேன்; கூடப்போமித் தனை’ என்ன, ‘ஆச்சீ, நீர் சொல்லுகிற இவை தர்மஹாநிகிடீர்’ என்று முகத்தைப்பார்த்து ஒரு வார்த்தை அருளிச்செய்ய, இழவைமறந்து மங்களாஸாஸநம்பண்ணி மீண்டாளிறே; க்ருஷ்ணன் “மாஸுச:” (மாஸுச:) என்று ஒருவார்த்தை அருளிச்செய்ய, அர்ஜுநன் “ஸ்திதோஸ்மிகத ஸந்தேஹ:” (ஸ்திதோஸ்மிகதஸந்தேஹ:) என்று தரித்தானிறே. பட்டர், “காலத்ரயத்திலுள்

---

‘எல்லாத்தேசத்திலும்’ இத்யாதி ப்ரதமவாக்யம் - எம்பார்நிர்வாஹத்திலேயாய், அத்தை விஸ்தரியா நின்றுகொண்டு நிர்வாஹாந்தரமும் அருளிச்செய்கிருர் - ‘இதுதனக்கு’ இத்யாதி, அநுபவிக்கிருரென்று அரு ளிச்செய்வரென்னுமளவும்; லோகத்தில் ஒருவர் ஒருவரை ஒன்று அபேக்ஷித்தால் அதை மறக்கப்பண்ணி வே ருென்றைக் கொடுப்பது; அன்றிக்கே, ‘அத்தையே கொடுக்கிருேம்’ என்றுசொல்லுவது; கையிலேகொடுத்து விடுவது; ஆக இம்மூன்று ப்ரகாரமாக நடக்கக்கடவதிறே; அம்மூன்று ப்ரகாரத்தையும் அடைவே காட்டு கிருர், ‘எம்பார்’ இத்யாதி. அம்புலியம்மான் - சந்த்ரன். வேருருகுணுவிஷ்காரத்தை - ப்ரணயித்வகுணத் தை. துலுக்கினுல் - அசைத்தால். அப்பா என்ருல், உச்சிகுளிருமோ? தலைதுலுக்கினமாத்ரத்தாலே பெற்ற தாமோ? என்ன, த்ருஷ்டாந்தத்வயம்-‘ஸ்ரீகௌஸல்யையார்’ இத்யாதி. பேச்சினினிமை விஸ்வாஸஹேதுவான மைக்கு த்ருஷ்டாந்தம் - ‘ஏகபுத்ரா’ இத்யாதி வாக்யம். ‘க்ருஷ்ணன்’ இத்யாதி வாக்யம் - ப்ராமாண்யம் விஸ் வாஸஹேதுவானமைக்கு த்ருஷ்டாந்தம். ‘காலசக்கரத்தானுகையாலே’ என்றது - காலசக்ரநிர்வாஹகனுகை யாலே யென்றபடி. “காலசக்கரத்தான்” என்றதுக்கு மேலே வ்யாக்யாநத்தில் அருளிச்செய்த அர்த்தத்வயமன் றிக்கே, ருதுவத்ஸராதிரூபேண சக்ராகாரமான காலத்துக்கு நிர்வாஹகனென்று இவ்விடத்திலே விவக்ஷிதம். “காலஸ்ய ச ஹி ம்ருத்யோஸ்ச” இத்யாதி. யத்வா, திருவாழிக்குக் காலநிர்வாஹகத்வம் சொன்னபோதே ஈஸ் வரனுக்கும் அந்தநிர்வாஹகத்வம் அர்த்தஸித்த மென்னுதல். ஒருபோகியாக்கி - நடுத்தடையில்லாத வெளி யாக்கி; ஏகமாக்கி யென்றபடி. ஏககாலத்தில் பலமாக்கி யென்னுதல். அபேக்ஷித்தபடியே அநுபவிக்கிரு ரென்றதுக்குச் சந்தைகள்; “தோளிசேர்” இத்யாதிக்கு - “கோவைவாயாள்” இத்யாதியும், “கொம்புபோல்” இத்யாதிக்கு - “மதிளிலங்கைக்கோவைவீய” இத்யாதியும், “பாலனுய்” இத்யாதிக்கு - “ஞாலமுற்றுமுண்டு மிழ்ந்த” இத்யாதியும், “தேவர்கள் மாமுனிவ ரிறைஞ்சநின்ற” இத்யாதிக்கு – “குரைகழல்கள்நீட்டி” இத் யாதியும், மற்றும் இப்புடைகளிலே கண்டுகொள்வது. பட்டர்நிர்வாஹத்துக்கு நிதாநம் - “காலசக்கரத்தா னுக்கு” என்றது. ‘எல்லாத்தேசத்திலும்’ இத்யாதியும், ‘இதுதனக்குமூன்றுபடியாக’ இத்யாதியும் - தனித் தனியே ஸங்கதியாய், நாலுவிதஸங்கதியாகவுமாம். ‘ஏகபுத்ரையான நான் உம்மைப்பிரிந்திருக்கமாட்டேன், கூடப்போமித்தனை’ என்றது - “ந க்ருத்ஸ்நாவிநாவத்ஸ த்வயாஹம்ஜீவிதுமுத்ஸஹே । க்ஷயம்ஹியே நூவஸம்வத்ஸம்ஹவநுஜேஷா நமஹவதி । ஸஹாநாநமுசிஷ்யாமிய த்வா ஜிஷ்யஸி” என்றத் தைக் கடாக்ஷித்து. ‘தர்மஹாநிகிடீர்’ என்றது - “ஹதாஸ்க்ரீவமிதுஹோஹநாஸ்ஸம்ஸ:கேவலம்ஸு யா: । ஸஹவத்யா நகதந்த்வ்யோ நஸாவிவிமஹி த: । யாவஜ்ஜீவதிகாகுத்ஸ்த:விதாஜேஜம: வதி: । ஸுஸ்ரூஷாகியதாஹாவதஹியஉஸநாத ந:” இத்யாதியைக் கடாக்ஷித்து. ‘மங்களா ஸாஸநம்பண்ணி’ என்றது - “யந்மங்களம்ஸஹஸ்ராக்ஷே” இத்யாதி, “தமேஹவதமுஜம்” இத்யாதி யைக் கடாக்ஷித்து. ‘மாஸுச’ இதி, சரமஸ்லோக:. ‘ஸ்திதோஸ்மி’ இத்யாதி - “நஷ்டோமோஹஸ்ஸ்

ளத்தையும் இப்போதே பெறவேணுமென்று விடாய்த்த இவர்க்கு அப்படியே அநுபவிக்கலாம்படி, காலசக்கரத்தானாகையாலே காலோபாதியைக் கழித்து, வர்த்தமாநகாலத்திற்போலே அநுபவயோக்யமாம்படி காலத்தை ஒருபோகியாக்கிக்கொடுக்க அநுபவிக்கிறார்'' என்று அருளிச்செய்வர்.

---

# முதற்பாட்டு.

**கோவைவாயாள்பொருட்டு ஏற்றினெருத்தமிறுத்தாய் மதிளிலங்கைக்**
**கோவைவீயச்சிலைகுனித்தாய் குலநல்யானைமருப்பொசித்தாய்**
**பூவைவீயாநீர்தூவிப் போதால்வணங்கேனேலும் நின்**
**பூவைவீயாம்மேனிக்குப் பூசும்சாந்துஎன்னெஞ்சமே.**

**ஆ.**—அதிபலவ்ருஷரூப அஸுரஸப்தகஸபுத்ரஜநபாந்தவதஶாஸ்யகுவலயாபீடகம்ஸாத்யாஶ்ரிதவிரோதிநிரஸநஜநிதமான உன்னுடைய ஶ்ரமாபநோதநார்த்தமான ஶிஶிரோபசாரங்களைத் தத்தத்காலங்களிலே உன்திறத்தில் நான் செய்யாதிருக்கச்செய்தேயும், என்னுடைய மநஸ்ஸானது ஶீதளமாய் நிரதிஶய ஸுகந்தமாய் புஷ்பஹாஸ ஸுகுமாரமான உன்னுடைய திருவுடம்புக்கு ஸத்ருஶமாய் ஸர்வஶ்ரமாபநோதநமான திவ்யாங்கராகமாவதே! இது என்ன ப்ரணயித்வம்? என்கிறார்.

**ஓ.**—முதற்பாட்டில், ஆஶ்ரிதவிரோதிநிரஸநங்களால் வந்த ஶ்ரமம் போகைக்கு ஈடான ஶிஶிரோபசாரங்கள் செய்யப்பெற்றிலேனேயாகிலும் என்ஹ்ருதயத்தினுடைய ஸத்தையே ஶிஶிரோபசாரமாய்விட்டது என்கிறார்

[கோவைவாயாள் என்று தொடங்கி.] - நப்பின்னைப்பிராட்டியினுடைய முறுவலுக்குத் தோற்று அவளோட்டைஸம்ஶ்லேஷத்துக்காக எருதுகளினுடைய பெரியகழுத்துக்களை முறித்தாய்; அப்ரத்ருஷ்யமான லங்காதிபதியான ராவணன் முடியும்படி வில்லைவளைத்தருளினாய்; நற்குலத்திலே பிறந்து ஸர்வலக்ஷணஸம்பந்நமாகையாலே ஒருவர்க்கும் கணிசிக்கமுடியாதேயிருக்கிற ஆனையினுடைய கொம்பை அநாயாஸேந முறித்தருளினாய். [பூவை என்று தொடங்கி] - பூவோடேகூடின நீரைக்கொண்டு ப்ராப்தகாலங்களிலே பரிசர்யைபண்ணப் பெற்றிலேனேயாகிலும். [பூவைவீயா என்று] - பூவையிட்டு என்றுமாம். [நின் பூவைவீயா மேனிக்கு] - பூவைப்பூவின் தன்மையான மேனிக்கு; பூவையொழியச் செல்லாத மேனி யென்றுமாம.

**ப.**—முதற்பாட்டில், ப்ராப்திவிரோதிகளை யழிக்கும் ஸ்வபாவனான ஸர்வேஶ்வரனை நோக்கி, 'என்நெஞ்சை உனக்கு அங்கராகமாகக் கொண்டாய்' என்கிறார்.

கோவை - கோவைப்பழம்போலே சிவந்த, வாயாள்பொருட்டு - அதரத்தையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக, ஏற்றின் - எருதுகளினுடைய, எருத்தம் - பிடரை, இறுத்தாய் - முறித்தவனாய்; மதிள் - மதிளையுடைய, இலங்கை-லங்கைக்கு, கோவை - நிர்வாஹகனான ராவணனை, வீய-முடியும்படியாக, சிலை-வில்லை, குனித்தாய்-வளைத்தவனாய்; குலம்-ஜாதிவைலக்ஷண்

---

திய_ுஙாகவுஷஸாஊாஙயாவ_ுத। ஷுெதாஷிமதஸநெஹஃகூரிஷெுவவநஜவ'' இதி கீதாயாம் அஷ்டாதஶே.

யத்தையும், நல்-லக்ஷண வைலக்ஷண்யத்தையுமுடைய, யானை-குவலயாபீடத்தினுடைய, மருப்பு-கொம்பை, ஒசித்தாய் - (அநாயாஸேந) முறித்தவனே! (இப்படி நப்பின்னைக்கும் ஜநகராஜன்திருமகளுக்கும் மதுரையில் பெண்பிள்ளைகளுக்கும் ப்ராப்திவிரோதியைப் போக்கின உன்னை), பூவை - புஷ்பத்தை, வீயா-அகலாத, நீர்-ஜலத்தை, தூவி -(ப்ரேமத்தாலே அக்ரமமாகப்) பணிமாறி, போது-உக்தகாலங்களிலே, வணங்கேனேலும் - வணங்கிற்றிலேனேயாகிலும், நின்-உன்னுடைய, பூவை வீயாம்-பூவைப்பூநிறத்தையுடைய, மேனிக்கு-திருமேனிக்கு, பூசும்- சாத்தத்தகுதியான, சாந்து-அங்கராகம், என்நெஞ்சமே - என்நெஞ்சாவதே! ஆஸ்ரய தோஷம்பாராதே அநுராகலேஸமே பற்றாசாக அங்கராகமாக்கினாய்; அதுக்குஅடி - அவஸ்தா ஸப்தகவிகாரத்தையும் கழித்து, தமேஸந்த்ரியாகநமான தீமனத்தையும் கெடுத்து,ப்ரவேஸவிரோதியான துர்மாநத்தையும் அழிக்குமவனாதலால் என்று கருத்து.

இ.—முதற்பாட்டில், ஆஸ்ரிதவிரோதிகளை நிரஸிக்கிற விடத்தில் வந்து முகங்காட்டி நான் உதவப்பெறாதிருக்க, என்னுடைய ஹ்ருதயத்தையே தனக்கு போக்யமாகக்கொள்வதே! என்கிறார்; நப்பின்னைப்பிராட்டியையும் ஸ்ரீஜநகராஜன்திருமகளையும் ப்ரணயிநிகளாகவுடையனாயிருக்க, என்ஸத்தையே தனக்கு எல்லாமாகக் கொள்வதே! என்கிறார் என்றுமாம்.

[கோவைவாயாள்பொருட்டு] - எருதடர்க்கைக்கு முன்புவந்தவர் கையிலே வெற்றி கிடக்கில் செய்வதென்? என்று விமுகையாயிருந்தவள் க்ருஷ்ணன்வந்தவாறே ஸ்மிதம்பண்ணினாள். அத்தைக்கண்டு ,,தவாஸ்மி'' என்றபடி. [ஏற்றின் எருத்தம் இறுத்தாய்]-அந்தஸ்மிதத்துக்குத் தோற்றுத் தன்னைப்பேணாதே மேல் விழுந்தபடி. எருத்தம் - அவற்றின்பிடர்; அவற்றுக்கு அபிமாநஹேது, அதுவிறே; அத்தைமுறித்தாய். ஆண்பிள்ளைகள்கையில் வில்லை ஸூரர் வெறுங்கையோடே சென்று வாங்கினாற்போலே யிருப்பதொன்றாய்த்து, அவற்றுக்கு அது. அப்போது 'கேவலருஷபங்களன்று, அஸுராவேஸமுண்டு' என்னப்பெற்றிலேன்; மாயமானின்பின்னே பெருமாள் தொடருகிறபோது இளையபெருமாள் 'கேவலம் மானன்று, ராக்ஷஸமாயை' என்றாற்போலே. [மதிளிலங்கை] - 'இவ்வூரும் மதிளும் நமக்கு உண்டு' என்னுமதனாலேயாயிற்று, அதிக்ரமங்களைப் பண்ணித் திரிந்தது. அதுதன்னை யழியச்செய்ய வருகிறவருடைய ஸங்கல்பத்தாலே யாயிற்று ரக்ஷகமாவது என்று அறிந்திலன்; ரக்ஷகனை எதிரியாகக் கொண்டான். மதிளைத் தனக்கு ரக்ஷகமாக நினைத்தான். இதுவிறே தான் தனக்குப்பண்ணிக் கொள்ளும் ரக்ஷை. அதுக்கு நிர்வாஹகனான ராவணன் முடிய. [சிலைகுனித்தாய்] - ராக்ஷஸர் மாயாப்ரயோகமல்லது அறியாதாபோலே செவ்வைப்பூசலல்லது அறியார் இவர். 'நீர் தர்மயுத்தத்தில் குஸலராயிருக்குமாபோலே ராக்ஷஸர் மாயாப்ரயோககுஸலர்' என்று ஸ்ரீவிபீஷணாழ்வான்மாத்ரம் அறிவிக்கப் பெற்றிலேன். [குலநல்யானைமருப்பொசித்தாய்] - ஆகரத்திற் பிறந்த ஆபிஜாத்யத்தையுடைத்தாய் ஸர்வலக்ஷணஸம்பந்நமாகையாலே ஒருவர்க்கும் கணிசிக்கஅரிதாயிருக்கிற குவலயாபீடத்தினுடைய கொம்பை அநாயாஸேந முறித்தாய்.அப்போது ,,நஸம்யுஜ்யதே ஹஸ்தி'' என்னப்பெற்றிலேன். [போதால் பூவைவீயாநீர்தூவி வணங்கேனேலும்]-அவ்வவகாலங்களிலே பூவையிடா நீரைத்தூவியென்னுதல்; பூவைவிடாதநீர்-பூவோடேகூடின நீர் என்னுதல். ஓர்அநுகூலன் திருவடிகளிலே வணங்கினால் ஸ்ரமமெல்லாம் தீரும்படியாயிற்று இருப்பது. இப்படி அக்காலங்களிலே ஸிஸிரோபசாரம் பண்ணப்பெற்றிலேனேயாகிலும். [நின்பூவைவீயாமேனிக்கு] - பூவையொழியாமேனிக்கு - பூவையொழியச்செல்லாத மேனி யென்னுதல்; பூவைவீ யுண்டு - பூவைப்பூ; அதான மேனி: காயாம்பூவின்தன்மையையுடைத்தாகை. புஷ்பஹாஸஸுகுமாரமான திருமேனி. [மேனிக்குப் பூசும் சாந்து என்

நெஞ்சமே] - அவ்வடிவுக்குப் பூசுஞ் சாந்து என்நெஞ்சமாய்விடுவதே; "ஸூக்ஷ்மஜ்ஞ," அப்படி சாந்தில் உள்மானம் புறமானம் அறியுமவனுக்குப் பூசுஞ் சாந்து என்நெஞ்சமாய்விடு வதே!

ஈடு.—முதற்பாட்டில் - நப்பின்னைப்பிராட்டி, ஸ்ரீஜநகராஜன்திருமகள் தொடக்கமானார் உனக்கு ப்ரணயிநிகளாயிருக்க, நீ அவர்கள்பக்கலிலேயிருக்கும் இருப்பை என்பக்கலிலே யிரு க்கும்படி என்ஸத்தையே உனக்கு எல்லாமாய்விட்டது என்கிறார். அன்றிக்கே, ஆஶ்ரிதவிரோதி களை நிரஸிக்கிறவிடங்களில் அவ்வவஸமயங்களில் வந்து முகங்காட்டி அடிமைசெய்யப்பெற்றி லேன் நான்; இங்ஙனேயிருக்கவும் என்ஹ்ருதயத்தையே உனக்கு போக்யமாகக் கோள்ளுவதே! என்கிறாராதல்.

[கோவைவாயாள்பொருட்டு]-தன்னைப்பேணாதே அவனுக்கு இவ்வேருதுகளின்மேலே விழவேண்டும்படியாயிருக்கும் அவயவஶோபை யென்கைக்காகச் சொல்லுகிறது. ருஷபங்களை முன்னிட்டு 'இவற்றையடர்த்தாருக்கு இவளைக் கொடுக்கக்கடவோம்' என்று, இவளை அலங்கரி த்து முன்னேகொண்டுவந்து நிறுத்தினார்கள்; 'இவளையணையலாமாகில் இவற்றை முறித்தாலா காதோ?' என்று, தன்னைப்பேணாதே அவற்றின்மேலே விழுந்தான். 'நம்பிமூத்தபிரான் முற்பட வந்து கிட்டினவிடத்து இவன்தலையிலே வெற்றிகிடந்தால் செய்வதேன்?' என்று வெறுப்பாலே அவாங்முகியாயிருந்தாள்; க்ருஷ்ணன் வந்து தோற்றினவாறே ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸ்மிதம்பண் ணினாள்; அப்போதை அதரத்தில் பழுப்பு இருந்தபடி. அந்தஸ்மிதத்திலே தோற்றுத் தன்னை அவளுக்கு ஆக்கினான். [ஏற்றினெருத்த மிறுத்தாய்] - ஏற்றின்கருத்தை முறித்தாய்: எருத்தம்- அவற்றின்பிடர். அவற்றுக்கு அபிமாநஹேது கருத்திறே; அத்தை முறித்தபடி. வீரராயிருப்பார் எதிரிகையில் ஆயுதத்தை வெறுங்கையோடே சென்று வாங்குமாபோலே யிருப்பதொன்றிறே, இவன்செய்தது; அவைதான் தலையான ஆயுதத்தோடேயிறே நிற்கிறது. மாயாம்ருகத்தின் பின்னே பெருமாள் எழுந்தருளுகிறபோது இளையபெருமாள் தெளிந்து நின்று, 'இது மாயாம்ரு கங்கிடீர்; ராக்ஷஸமாயை' என்றாற்போலே, நானும் அவ்வளவிலே நின்று 'இவை அஸுராவேஶ

---

முதல்பாட்டு—'கோவை' இத்யாதி. "கோவைவாயாள்" இத்யாரப்ய, "மருப்பொசித்தாய் - பூவை வீயாமேனிக்குப் பூசும்சாந்து என்னெஞ்சமே"என்று பூர்வார்த்தத்திலே நோக்காகவும், "பூவைவீயாநீர்தாவி" இத்யாத்யுத்தரார்த்தத்திலே நோக்காகவும் அவதாரிகாத்வயம் - நப்பின்னை இத்யாதி. ஈஶ்வரனுக்கு ஸ்வவிஷ யப்ரணயித்வகதநப்ரகரணத்திலே பிராட்டிமார்க்கு உதவினத்தையும் 'போதால் வணங்கேனேலும்' என்றும் சொல்லுவானேன்?" என்ன, 'நப்பின்னை' இத்யாதி வாக்யத்வயம் என்னுதல்.

"கோவைவாயாள்" என்று விசேஷித்ததுக்கு ஹாவத்ரயம்: முந்தினது - 'தன்னைப்பேணாதே' இத்யாதி. இரண்டாவது - 'ருஷபங்களை' இத்யாதி. மூன்றாவது - 'நம்பிமூத்த' இத்யாதி. அன்றிக்கே, 'கோவைவாய்' என்றதுக்கு இரண்டு தாத்பர்யமேயாய், "யாநஸுக்ஷ்மாவமாநா..." என்னும்படி யிருக்கிறவளுடைய அவயவஶோபை காணப்போமோ? என்ன, 'ருஷபங்களை' இத்யாதி என்னுதல். மூன்று தாத்பர்ய மென்ற பக்ஷத்திலே - ஸ்வாபாவிகமான சிவப்பைச் சொல்லுதல், அலங்காரத்தால் வந்த சிவப்பைச் சொல்லுதல், ஸ்மிதத்தால்வந்த சிவப்பைச் சொல்லுதல் என்று அர்த்த த்ரயம். அவயவஶோபை- ஸ்வாபாவிகமான ஶோபை. 'இவளை அலங்கரித்து' என்கையாலே - அலங்காரத்துக்காக ஆஹிதமான சிவப்பு என்றபடி- அவளுக்குஆக்கினான் - அவளுக்கு ஶேஷமாக்கினான். பிடர் - முசுப்பு. 'ஏற்றையிறுத் தாய்' என்னாதே, 'எருத்தம்' என்று விசேஷிக்கிறதென்? என்ன, 'அவற்றுக்கு' இத்யாதி. வெறுங் கையோடே முறித்தபடி யென்? என்ன, 'வீரராய்' இத்யாதி. அதுக்கு ஆயுதமுண்டாகிலிறே எருத்த மிறுத்ததுக்கு உடலாவது? என்ன, 'அவைதான்' இத்யாதி சாடு. 'தலையான'- தலையிலேயுள்ளதான என்றும், ஶ்ரேஷ்டமான ஆயுதம் என்றும்; அபிமாநஹேதுவாகையாலே, ஆயுத மென்றபடி. இரண்டாம் அவதாரி கைக்கு அநுகுணமாக, எருதேழடர்க்கிறவிடத்திலே உபசாரம் பண்ணுகையாவ தேது? என்ன, ஸ்திதர்ஶந

மூண்டு' என்னவிறே அடுப்பது; அது செய்யப்பெற்றிலேன் என்கிறார். [மதிளிலங்கை] - 'இம்மதிளும் ஊரும் உண்டே நமக்கு' என்று சக்ரவர்த்திதிருமகனை எதிரிட்டானாயிற்று. ஸர்வரக்ஷகரான பெருமானை விட்டு, மதிளை 'ரக்ஷகம்' என்றிருந்தானாயிற்று; இதிறே தான் தனக்குப் பண்ணிக்கொள்ளும் ரக்ஷை. [இலங்கைக்கோவை வீய]-"லங்காம்ராவணபாலிதாம்" (லங்காம்ராவணபாலிதாம்).மண்பாடுதானே ஒருவர்க்கும் ப்ரவேசிக்க அரிது; அதுக்குமேலே உள்நின்றுநோக்குகிறவனுடைய பலம். 'மதிளையுடைத்தான லங்கைக்கு நிர்வாஹகனல்லேனோ?' என்று அபிமானித்திருக்கிற ராவணன் முடிய. [சிலைகுனித்தாய்] - ராக்ஷஸர் மாயாப்ரயோகமல்லது அறியாதாபோலே, செவ்வைப்பூசலல்லது அறியார் இவர்; 'நீர் தர்மயுத்தத்திலே குசலராயிருக்குமாபோலே, ராக்ஷஸர் மாயாப்ரயோககுசலர்கிடீர்' என்று ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே அறிவிக்கப்பெற்றிலேன். [குலநல்யானைமருப்பொசித்தாய்] - ஆகரத்திலேபிறந்து ஸர்வலக்ஷணோபேதமான குவலயாபீடத்தினுடைய கொம்பை அநாயாஸேந முறித்தவனே! அவ்வளவிலே ஸ்ரீமதுரையில் பெண்களோடொக்க நின்று "நஸமம்யுத்தமித்யாஹு:" (நஸமம்யுத்தமித்யாஹு:) என்னப்பெற்றிலேன். [பூவை வீயா நீர்தூவி] - பூவைத் திருவடிகளிலே பணிமாறி நீரைத்தூவியென்னுதல்; அன்றிக்கே, பூவையொழியா நீர் - பூவோடேகூடின நீர், அத்தைத் தூவி. [போது] - அவ்வவகாலங்களிலே பூவைவீயாநீர்தூவி வணங்கிற்றிலேனாகிலும். எருதேழடர்க்கை தொடக்கமான காலங்களிலே பிறந்த ஶ்ரமம் மாற ஶிஶிரோபசாரம்பண்ணிற்றிலேனாகிலும். [நின்பூவைவீயாமேனிக்கு] - பூவாலல்லது செல்லாத திருமேனிக்கு. அன்றிக்கே, பூவைப்பூவோடொத்த மேனி யென்னுதல். வீயென்று-பூவுக்குப் பேர். புஷ்பஹாஸஸுகுமாரமான மேனிக்கு. [மேனிக்

---

மாக அருளிச்செய்கிறார், 'மாயாம்ருக' இத்யாதி. "ஶ்ரேமாஹோத்யவம்வியோராதவிதிதோநாஸிராவவ। ஜமதராஜமதீநாயஊரமெயெஷாஹிநவாமய:! தமெமெவநஊஹுமெநஊரீவரக்ஷவம்ஶ்ரமழ" என்கிற ஶ்லோகம் அநுஸந்தேயம். அடுப்பது - ப்ராப்தம். 'ஊரும்' என்றது-'இலங்கை' என்றத்தைப் பற்ற. ஈடுபாடு -'ஸர்வரக்ஷகரான' இத்யாதி. சேதநன் தனக்கு நன்மை பார்க்கிறபோலே, பண்ணும் ரக்ஷை இப்படியிருக்கும் கிடிகோள் என்கிறார் - 'இதிறே' இத்யாதி. 'இலங்கை' என்றும், 'கோ' என்றும் சொல்லுகிறதுக்கு ப்ரமாணபூர்வகமாக ஹாவம் - 'லங்காம்' இத்யாதி. "யதாராவணநிஊகுஶதஶ ரஸ்ஶநவிகஊஃ। மவேதஅஊதிஷ்யாதியூராவணபாலிதாம்" இதி ஸுந்தரகாண்டே ப்ரதமே மாருதி:. எடுத்த ப்ரமாணத்துக்கு அர்த்தம் - 'மண்பாடு' இத்யாதி. சப்தார்த்தம் - 'மதிளை' இத்யாதி. "சிலைகுனித்தாய்" என்றதுக்கு ஹாவம்-'ராக்ஷஸர்' இத்யாதி. செவ்வைப்பூசல் - ருஜுயுத்தம். இவ்வவஸ்தையிலே இவர் ஶிஶிரோபசாரம்பண்ணும்படியை ஸநிதர்ஶநமாக அருளிச்செய்கிறார் - 'நீர்' இத்யாதி. சப்தார்த்தம் - 'ஆகரத்திலே' இத்யாதி. மருப்பு - கொம்பு. ஆகரம் - உத்பத்திஸ்தாநம். ஸ்வரூபசிக்ஷை - 'அவ்வளவிலே' இத்யாதி. "ஹுஹுஸ்யவராஸ்யமஸஸ்யவரக்ஷஸ:। நஸமம்யுத்தமித்யாஹுமெவகநவுநவா:" இதி யுத்தகாண்டே பூர்வமேவ லிகிதம். 'வீயா' என்று - ஸமர்ப்பிக்கையாய், பணிமாறி என்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, வீயா - ஒழியா, விடாத என்றாய், பூவோடேகூடின நீரைத்தூவி யென்றபடி. த்விதீயார்த்தவிவரணம் - 'பூவோடே' இத்யாதி. போது - காலங்களிலே. ஆல் - அசை. 'அவ்வவகாலம்' என்றத்தை இன்னதென்று விவரியாநின்றுகொண்டு, இக்காலங்களில் பூவையும் நீரையும் தூவுகிறதுக்கு ப்ரயோஜநம் - 'எருதேழடர்க்கை' இத்யாதி. "பூவைவீயாமேனிக்கு" என்றதுக்கு முந்தின அர்த்தம், வீயாவென்று - ஒழியாவென்றாய், பூவாலல்லது செல்லாத மேனி என்றபடி. த்விதீயார்த்தத்துக்கு-பூவையென்று - காயாவாய், வீயென்று - பூவாய், ஆம்மேனியென்று - அத்தோடொத்த மேனி யென்றாய், பூவைப்பூவோடொத்த மேனி யென்றபடி.பூவைப்பூ-காயாம்பூ. இரண்டாமர்த்தத்தால் பலிதம்-'புஷ்பஹாஸ' இத்யாதி. சாந்துபூசுவது உடம்பிலேயாயிருக்க, 'மேனிக்கு' என்று விசேஷிக்கிறதென்?என்ன, 'ஆவயோ:'

குப் பூசும்சாந்து]-"ஆவயோர்க்காத்ரஸத்ருஶம்"(ஆவயோர்க்காத்ரஸத்ருஶம்)என்கிறபடியே. நம்பி மூத்தபிரானும் தானுமாக ஸ்ரீமதுரையிற்போய்ப் புக்கவாறே கூனியைக் கண்டு, 'அண்ணர்க்கும் நமக்கும் பூசலாம்படி சாந்துஇடவல்லையோ?' என்ன, வழக்கனுயிருக்கிற சாந்தைக் கொடுத்தாள்; [ஸுகந்தமேதத்]-இது உனக்காயிருந்தது; அதுக்கு மேல்தரமா யிருப்பதோன்றைக் காட்டினாள்; [ராஜார்ஹம்]-இது கம்ஸனுக்காம். அதுக்கு மேல்தரமாயிருப்பதோன்றைக் காட்டினாள்; [ருசிரம்] - நிறமே இதில் உபஜீவிக்கலாவது. இப்படி அருளிச்செய்தவாறே, 'வெண்ணெய்நாற்றத்திலே பழகினார் இரண்டுமூவர் சாந்தின்வாசி அறிந்தபடிஎன்?' என்று, அத்தால் வந்த ஹர்ஷம் தோற்ற ஸ்மிதம் பண்ணினாள்; [ருசிராநநே]-நல்லசாந்திடுகைக்காக இது ஒருமுகமிருந்தபடி என்தான்! என்கிறான்: [ஆவயோர்காத்ரஸத்ருஶம் தீயதாம்] - நற்சரக்குப் பரிமாறுவார், அது கொண்டு விநியோகங்கொள்ளுவா ருடம்பு வாசி யறியவேணுங்காண்; நம்உடம்புக்கும் அண்ணருடம்புக்கும் ஈடான சாந்து தா. இப்படி தரம்இட்டுப் பூசுந் திருமேனிக்குப் பூசுஞ் சாந்து என் ஹ்ருதயமாய்விடுவதே! (௧)

# இரண்டாம்பாட்டு.

பூசும்சாந்துஎன்னெஞ்சமே புனையும்கண்ணிஎனதுடைய
வாசகம்செய்மாலையே வான்பட்டாடையும்அஃதே
தேசமானஅணிகலனும் என்கைகூப்புச்செய்கையே
ஈசன்ஞாலமுண்டுமிழ்ந்த எந்தைஏகமூர்த்திக்கே.

---

இத்யாதி. "ஸுகந்தமேதத்ராஜார்ஹம்ருசிரம்ருசிராநநே। ஆவயோர்காத்ரஸத்ருஶம் தீயதாம் அநுலேபநம்" இதி பஞ்சமேம்ஶே குப்ஜாம்ப்ரதி க்ருஷ்ண꞉. நம்பிமூத்தபிரான் - பலராமன். வழக்கன் - செலவுக்கு யோக்யம். 'ஸுகந்தம்' என்கையாலே - ஸ்வாபாவிககந்தமன்று; புஷ்பாதிகளால் வந்த ஔபாதிககந்த மென்றபடி. ஸ்வாபாவிககந்தமாகில், ஸுகந்தியென்று இருக்கவேணும். இதுக்கு வ்யாகரணஸூத்ரம் - "கந்தஸ்யேதுத்பூதிஸுஸுரபிப்ய꞉" "உத்ஸ்வாபாவிககந்தஸ்ய ஏகாராதேஶஸ்யாத்" "கந்தஸ்யேத்வே தததேகாந்தக்ரஹணம் கர்தவ்யம்" இதி வார்த்திகம். கேசித்து "உதாதபூஸுஸுரபிப்யோ ஸ்வாபாவிககந்தவாசகஸ்ய, உபமாநவாசகாத்பராஸ்ய ஸ்வாபாவிககந்தவாசகஸ்யாதிகாராதேஶ꞉ஸுகந்திர்வாயுரிதி. ஔபாதிககந்தவாசகாந்நாயம்ஆதேஶ꞉; ததுக்தம்-"ஔபாதிகஸ்ய ஸுகந்தஸ்ய" இதி; தத்வ்யாக்யாநேச "ஔபாதிககந்தவாசக ஸ்வாபாவிககந்தவாசகஸ்ய ஏகாராதேஶ꞉, கந்தஸ்யேத்வம் இதிவாதி ஸுகந்த꞉" இதி ஸ்ம்ருதம்" இத்யாஹு꞉. இப்படி தரமிட்டுச்சொல்லுகிறதுக்கு வ்யஞ்ஜகம் - "ஏதத்" என்கிற நிர்த்தேஶமும், "ராஜார்ஹம்" என்றுவைத்து, "ஆவயோர்காத்ரஸத்ருஶம்" என்கிற நிர்த்தேஶமும், "ருசிராநநே" என்கிற நிர்த்தேசமும். "ஸுகந்தம்-ஏதத், ராஜார்ஹம்-ஏதத், ருசிரம்-ஏதத்" என்று மூன்றிலும் அநுஷங்கிக்கிறது. கூனியன்றோ ஸ்மிதம்பண்ணினாள்; அது விக்ருதமாயன்றோ இருப்பது? என்ன, 'நல்லசாந்து' இத்யாதி. "ருசிராநநே" என்றதுக்கு பாவமாதல். "ராஜார்ஹம்" என்கையாலே-சர்வோத்தமனுகையாலே ஏதானாலும் விநியோகங்கொள்ளு மென்றபடி. 'நெஞ்சம்' என்று - ஹ்ருதயவ்யாபாரம் சொல்லாமையாலே, ஸத்தாமாத்ரமே யெல்லா மென்றபடி. (௧)

ஆ.—(பூசும்சாந்து.)நிகிலபுவநநிர்மாணைக்ரணவகத ஸர்வேஶ்வர ஸ்வபாவனாய், ஸைதகரூபனைக்கொண்டு ஸ்ரீவைகுண்டநிலயனா யிருந்த எம்பெருமானுக்கு, ஸ்வவிஷயமாக மத்க்ருதமான ஸ்ம்ருதிகீர்த்தநாஞ்ஜலி ப்ரப்ருதி ஏகைக வ்ருத்தியே திவ்யகந்தாநுலேபந திவ்ய மால்யாம்பர நிரதிஶயதீப்தியுக்த திவ்யபூஷணாதி ஸர்வபோகோபகரணங்களு மாயின; ஒருவனுடைய வ்யாமோஹம் இருக்கும்படியே! என்கிறார்.

ஒ.—இரண்டாம் பாட்டில், 'என்னுடைய ஸ்ம்ருத்யாதிகள் அவனுக்கு அங்கராகாதிகளாய் விட்டதே' என்று இனியராகிறார்.

[பூசும் சாந்து] - பூசியல்லது தரிக்கவொண்ணாத சாந்து. [புனையும் கண்ணி] - விரும்பிச் சூடும் பூமாலை. [வான் பட்டாடை] - அதிஶ்லாக்யமான * திருப்பரிவட்டம். [தேசமான அணிகலன்] - தேஜஸ்கரமான திருவணிகலன்கள். [ஈசன் என்று தொடங்கி] - ஸர்வேஶ்வரனாய் ஜகத்துக்குப் பலபடியாலும் ரக்ஷகனாய் அச்செயலாலே விஶேஷித்து எனக்கு ஸ்வாமியுமாய் விலக்ஷணமான திருமேனியை யுடையவனுக்கு.

ப.—அநந்தரம், 'ஸர்வநியந்தாவாய் ஸர்வரக்ஷகனான ஸ்வாமிக்கு என் கரணத்ரயமும் போக்யமாகாநின்றது' என்கிறார்.

ஈசன் - நிருபாதிகநியந்தாவாய், ஞாலம் உண்டு உமிழ்ந்த - (ப்ரளயாபத்திலே) உண்பது உமிழ்வதாகையாலே ஸமஸ்தபதார்த்தத்துக்கும் ஸர்வ ப்ரகார ரக்ஷகனாய், எந்தை - (இவ்வபதாநத்தாலே என்னை யடிமைகொண்ட) அஸ்மத்ஸ்வாமியாய், ஏகம் - (நிரதிஶய போக்யமாகையாலே) அத்விதீயமான, மூர்த்திக்கு - விக்ரஹத்தையுடையவனானவனுக்கு, பூசும் - (கூனியிட்ட சாந்துபோலே) தகுதியான, சாந்து - சாத்துப்படி, என்நெஞ்சம் - என் நெஞ்சாகாநின்றது; புனையும் - (ஸ்ரீமாலாகாரர் மாலைபோலே உகந்து) சாத்தும், கண்ணி - திருமாலை,எனதுடைய - என்னுடைய, வாசகம் - வாக்வ்ருத்தியான சப்தத்தாலே, செய்-தொடுக்கப்பட்ட, மாலை- மாலையாயிராநின்றது ; ("பூம்பட்டாம்" என்கிறபடியே திருவநந்தாழ்வான் ஸமர்ப்பித்ததென்னலாம்படி), வான் - சீரியதான, பட்டாடையும்-பரிவட்டமும், அஃதே-அந்த வாக்வ்ருத்தியே; தேசமான - தேஜஸ்கரமாம்படி, அணி-அணியப்பட்ட, கலனும்-ஆபரணமும், என் - என்னுடைய, கைகூப்புச்செய்கையே - அஞ்சலிபந்தமே. வாசகம் பட்டாடையாவது- ஒப்பனைக்குப் பௌஷ்கல்யகரமாகை. அஞ்சலி ஆபரணமாகையாவது - இவர் தலையிலே வைத்த அஞ்சலி அவன் திருமுடியில் அபிஷேகாத்யாபரணங்களோபாதி அவனுக்கு ஔஜ்ஜ்வல்யாவஹமாகை.

இ.—இரண்டாம்பாட்டில், விடாய்த்த என்னுடைய கரணகார்யமான ஸ்ம்ருத்யாதிகளே பூர்ணனானவனுக்கு போகோபகரணங்க ளெல்லாமாய்விடுவதே! என்கிறார்.

அசேதநமான கரணத்தை போக்யமாக விரும்பினபடியைக் கண்டு அந்தப்ரீதியாலே பின்நாடிப் பின்னையும் 'பூசுஞ்சாந்து என்நெஞ்சமே' என்கிறார். [பூசும்சாந்து என்நெஞ்சமே] - இவருடைய ஹாவபந்தம் அவனுக்குப் பரிமளிதமான அங்கராகமே யாயிற்று. வழக்கனான மாலையன்றிக்கே ஆதரித்துச் சூடும் மாலை - என்னுடைய உக்திமாத்ரமே. இவர்நெஞ்சிலும் பரிமளிதமாயிற்று இவர்வாக்கு - வாக்கான மாலையிறே. சாந்துக்குப் பூக்கட்டியிறே மணங்கொடுப்பது. [வான்பட்டாடையும் அஃதே] - ஒன்று ஒருபோகோபகரணமாகை தவிர்ந்தது; அவனுக்குப் பும்ஸ்த்வாவஹமான பரிவட்டமும் என் உக்தியாவதே! [வான்பட்டாடை] - பெருவிலையனானதிருப்பரிவட்டம். [தேசமான இத்யாதி] - தேஜஸ்கரமான திருவாபரணமும்

* 'திருப்பரியட்டம்' என்று வழங்குவர். மேல்வருமிடங்களிலெல்லாம் இப்படியே கண்டுகொள்வது.

என்னுடைய அஞ்சலியாவதே! ராஜமஹேந்த்ரன்படிபோலே இவருடைய அஞ்சலி அவனு க்கு உத்கர்ஷஹேதுவாயிருக்கிறபடி. 'இவருடைய அஞ்சலி தேஜஸ்கரமாயிருக்கிறது ஒரு குறைவாளனுக்கோ?' என்னில்:—[ஈசன்] - ஸர்வேஸ்வரனுக்கு. ரக்ஷகனென்னும் பேரே யாய் உடைமை நோவுபட விட்டிருக்குமோ? என்னில்,—[ஞாலமுண்டுமிழ்ந்த] - ஜகத்துக்கு ஸர்வப்ரகாரரக்ஷகன். [எந்தை] - அந்தரக்ஷணத்தாலேஎன்னை எழுதிக்கொண்டவன். [ஏக மூர்த்திக்கு] - அத்விதீயமான திருமேனியையுடையவனுக்கு. ‹‹ஸுஷுமாகு›› என்கிற விக் ரஹத்தையுடையவனுக்குப் பூசும் சாந்து என்நெஞ்சமாவதே! என்கிறார்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. என்னுடைய கரணகார்யமான ஸ்ம்ருத்யாதிகளே பரிபூர் ணனானவனுக்கு போகோபகரணங்களெல்லாமாயிற்று என்கிறார்.

[பூசும்சாந்து என்நெஞ்சமே] - இத்திருமேனியினுடைய வைலக்ஷண்யத்தையும், அவ னுக்குத் தம்பக்கலுண்டான விருப்பத்தையும் அநுஸந்தித்துப் பின்னடித் திரியவுஞ் சொல்லுகிறார். [புனையுங்கண்ணி] - வழக்கனான மாலை யன்றிக்கே சாத்தப்படும் மாலை. [எனதுடைய வாசகஞ் செய்மாலையே]-இவர் 'அவனுக்கு' என்று சொல்லவேண்டா; இவருடைமையாகில் அவனுக்கே யாயிருக்கும். [வாசகஞ்செய்மாலையே] - இவர்நெஞ்சிற்காட்டிலும் வாக்கு பரிமளம் விஞ்சியிருக் கும்போலே காணும். பூக்கட்டியிறே சாந்து மணங்கொடுப்பது. [வான்பட்டாடையுமஃதே] - அந்த உக்திதானே அவனுக்குப் பும்ஸ்த்வாவஹமான பரிவட்டமும். இவருடைய பா, நல்லநூலா கையாலே வான்பட்டாடையாயிற்றுக்காணும். 'நல்லநூலாகவேணும்' என்று அடியிலே நோற்று நூற்றவரிறே. [தேசமான அணிகலனும்] - தனக்குத் தேஜஸ்கரமான ஆபரணமும். [என்கைகூப் புச்செய்கையே] - சேரபாண்டியன்தம்பிரானேபோதி, அவனுக்குத் தேஜஸ்கரமாகாநின்றது இவ ருடைய அஞ்சலி. இவற்றாலே நிறம்பெற்றானாயிருக்கிறவன்தான் ஒருகுறைவாளனா யிருக்கப் பெற்றதோ! [ஈசன்] - ஸர்வேஸ்வரன். 'ரக்ஷகன்' என்னும் பேரேயாய் உடைமை நோவுபட

---

இரண்டாம்பாட்டு-'பூசும்சாந்து'இத்யாதி. "வாசகம்செய்மாலை, என்கைகூப்புச்செய்கையே"என்று- மேலே கரணகார்யம் சொன்னதுக்குச் சேர, "நெஞ்சம்" என்றத்தை - ஸ்ம்ருதிபரமாக்கி அருளிச்செய்கிறார், 'என்னுடைய கரண' இத்யாதி.

அன்றிக்கே, உக்தாநுவாதபரமாக அர்த்தாந்தரம்-'இத்திருமேனி' இத்யாதி. பின்னாடி-அதாவது - முதற்பாட்டிலும் இப்பாட்டிலும் 'நெஞ்சம்' என்று - நெஞ்சு தன்னையே சொல்லுகிறதாய், அது பின்னடு கிறதென்று அர்த்தாந்தரமாகவுமா மென்றபடி. 'கண்ணி' என்ன அமைந்திருக்க,'புனையும்' என்று விசேஷித் ததுக்குஹாவம் -'வழக்கனான' இத்யாதி. வழக்கனான - செலவுக்கு யோக்யமான. வாக்காலே செய்யப்பட்ட என்னுடைய மாலை யென்றபடி. மமகாரம்பண்ணலாமோ? என்ன,'இவர் அவனுக்கு'இத்யாதி."யானே நீ என் னுடைமையும் நீயே" என்றிருக்குமவராகையாலே தம்மையிட்டுச் சொன்னாலும், ‹‹யஸ்யைதே தஸ்ய தத்தநம்›› என்கிறபடியே இவருடைமையாகில் அவனுக்கேயாயிருக்கு மென்றபடி. வாசகங்கள் புஷ்பங்க ளாய் -அவற்றால் செய்யப்பட்ட மாலை யென்றதுக்கு ஹாவம் - 'இவர்நெஞ்சிற்காட்டிலும்' இத்யாதி. விஞ்சி யிருக்கைக்கு அடியேது? என்ன, 'பூக்கட்டி' இத்யாதி. இத்தால் வாக்பரிமளமே மநஸ்ஸுக்கும் பரிமளம் கொடுப்ப தென்றதாயிற்று. 'பும்ஸ்த்வாவஹமான' என்றது - 'வான்' என்றத்தைப் பற்ற. வான்-பெருமை. அதாவது - புருஷோத்தமத்வ லக்ஷண மென்றபடி. பும்ஸ்த்வம் - புருஷோத்தமத்வம். வாசகம் பட்டாடையாம் படி யெங்ஙனே? என்ன, சாடுவாலே அருளிச்செய்கிறார் - 'இவருடைய' இத்யாதி. பா-சந்தஸ்ஸும், தந்து ஸமுதாய விசேஷமும். நூல் - சாஸ்த்ரமும், தந்துவும். நல்லநூலாகையாலே யென்றத்தை உபபாதிக்கிறார் - 'நல்லநூலாக' இத்யாதி. 'நோற்று நூற்றவரிறே' என்றது-"வண்டமிழ்நூற்கநோற்றேன்" என்றத்தைப்பற்ற. நோற்கை - ஸாதநாநுஷ்டாநம்பண்ணுகை. நூற்கை - பண்ணுகையும், நூற்கையும். தேஜஸ்கரமான ஆபர ணமேது? என்ன, 'சேரபாண்டியன்' இத்யாதி. சேரபாண்டியன்தம்பிரானென்று - பெருமாளுடைய ஒரு திருப்பதக்கத்துக்குப் பேர். மேலுக்குஅவதாரிகை- 'இவற்றாலே' இத்யாதி. 'ஈசன்' என்றத்தாலே - ரக்ஷகத் வம் அர்த்தாத் ஸித்தம். சாந்துபூசுவது திருமேனியிலே யாகவேண்டுகையாலே, மூர்த்திசப்தத்துக்கு-விக்ரஹ

விட்டிருக்குமோ? என்னில்,-[ஞாலமுண்டுமிழ்ந்த] - ஜகத்துக்கு ஸர்வப்ரகார ரக்ஷகன். [எந்தை]-அந்த ரக்ஷணத்தாலே என்னை எழுதிக்கொண்டவன். [ஏகமூர்த்திக்கு]-அத்விதீயமான திருமேனியையுடையவனுக்கு. [ஏகமூர்த்திக்கு - பூசும் சாந்து என்நெஞ்சமே] - ‘‘ஸவ௱஗நஃ’’ (ஸர்வகந்தஃ) என்கிற திருமேனிக்கு இது சேருமே? (உ)

# மூன்றும்பாட்டு.

ஏகமூர்த்தியிருமூர்த்தி மூன்றுமூர்த்திபலமூர்த்தி
யாகிஐந்துபூதமாய் இரண்டுசுடராய்அருவாகி
நாகமேறிநடுக்கடலுள்துயின்ற நாராயணனே! உன்
ஆகமுற்றுமகத்தடக்கி ஆவியல்லல்மாய்த்ததே.

**ஆ.**—(ஏகமூர்த்தி.) அப்ராக்ருதநித்யஸித்த திவ்யரூபவிஶிஷ்டனாய், ஸ்ரீவைகுண்டநிலயனாய்க்கொண்டு ப்ரக்ருதிமஹத்த்ரிவிதாஹங்காரமநஃப்ரப்ருதிகரண பஞ்சபூதசந்த்ரஸூர்யாதி பதார்த்தங்களுக்கும் தததர்வர்த்திசேதநஜாதத்துக்கும் ஸ்ரஷ்டாவாய், அவற்றினுடைய ஸ்தித்யர்த்தமாக அந்தர்யாமிதயாவஸ்திதனாய், ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி நாகபர்யங்கஶாயியாயிருந்த நாராயணனே! உன் திருமேனிக்கு அபேக்ஷிதமான ஸர்வபோக்யங்களும் நான் உன்திறத்துப்பண்ணும் ஸ்ம்ருதிகீர்த்தநாதி வ்ருத்திகளேயாகக் கொண்டிருக்கிற உன்னுடைய மஹாகுணத்தை அநுபவித்து என்னுடைய க்லேஶமும் தீர்ந்தேன் என்கிறார்.

**ஓ.**—மூன்றும்பாட்டில், தம்மோட்டை ஏவம்விதப்ரணயத்தால் எம்பெருமானுக்கு உண்டான கார்த்தார்த்த்யம் சொல்லுகிறார்

[ஏகமூர்த்தி என்று தொடங்கி.] - ஸ்ருஷ்டிக்குமுன்பு ஸ்வாஸாதாரணமான திருமேனியையுடையையாய், ப்ரக்ருதிமஹான்களையும் த்ரிவிதஅஹங்காரத்தையும் மநஃப்ரப்ருதிகரணங்களையும் ஐந்துபூதங்களையும் சந்த்ர ஸூர்யாதிகளையும் ஸ்ருஷ்டித்து அவற்றினுடைய தாரணார்த்தமாக அவற்றுக்கு ஆத்மாவாய். [நாகம் என்று தொடங்கி]-உன்னாலே ஸ்ருஷ்டரான ப்ரஹ்மாதிகளுக்கு ஸமாஶ்ரயணீயனுகைக்காகத் திருப்பாற்கடலின் நடுவே திருவநந்தாழ்வான்மேலே ஏறிக் கண்வளர்ந்தருளி ஸமஸ்தஜந்துக்கள்பக்கலிலும் அநுக்ரஹஶீலனானவனே! உன்னுடைய திருமேனிக்கு வேண்டும் தாரகபோஷகாதிகளெல்லாம் என்னுடைய மநஃப்ரப்ருதிகளேயாகக் கொண்டு உன்னுடைய மநஸ் நிர்த்துஃகமாயிற்றே; [ஆவி அல்லல் மாய்த்ததே] - நான் நிர்த்துஃகனானேன் என்றுமாம்.

**ப.**—அநந்தரம், ஸர்வாத்மஹாவாதியால் வந்த ஸம்பந்தத்தையுடைய உன் வடிவழகை இப்படியநுபவித்து என் ஆத்மாவானது கீழ் ப்ரக்ருததுஃகம் தீரப்பெற்றதே என்கிறார்.

---

பரமாக அர்த்தம் அருளிச்செய்தது. ‘நெஞ்சமே’ என்ற ஸ்வரத்துக்கு ஹாவம் – ‘ஸர்வகந்த’ இத்யாதி. சேருமே - சேருமோ? சேராதென்றபடி. பாட்டிலே அடிதோறும் ‘ஏ’ என்கிற இது - ஸ்வரத்திலே. கைகூப்புச்செய்கை - அஞ்சலி. ஈசனித்யாதி- ஏகமூர்த்திக்கு - என்னெஞ்சமே - பூசும்சாந்து; எனதுடைய வாசகம்செய்மாலையே - புனையுங்கண்ணி. அஃதே - வான்பட்டாடையும்; என்கைகூப்புச்செய்கையே - தேசமான அணிகலனும் இத்யந்வயஃ. (உ)

ஏகமூர்த்தி-(ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்டமாய் "ஏகமேவ" என்கிறபடியே) காரணரூபத்தையுடையனாய், இருமூர்த்தி - (அந்த அவ்யக்தகார்யமான) மஹதஹங்காரங்களை வடிவாகவுடையனாய், மூன்றுமூர்த்தி - ("ஸாத்விகோராஜஸஶ்சைவ தாமஸஶ்ச த்ரிதாமஹாந்" என்றும், "வைகாரிகஸ்தைஜஸஶ்ச பூதாதிஶ்சைவ தாமஸ:" என்றும் அந்த மஹதஹங்காரங்களினுடைய த்ரைவித்யஹேதுவான) ஸத்த்வரஜஸ்தமோரூபகுணத்ரயவைஷம்யங்களை ப்ரகாரமாகவுடையனாய், பலமூர்த்தியாகி-(வைகாரிககார்யமான) ஏகாதஶேந்த்ரியங்களை ப்ரகாரமாகவுடையனாய், ஐந்துபூதமாய் - (பூதாதியான தாமஸாஹங்காரகார்யங்களான) பஞ்சபூதங்களை ப்ரகாரமாகவுடையனாய், இரண்டுசுடராய் - (அண்டாந்தர்வர்த்தியான வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்கு உதாஹரணமான "ஸூர்யாசந்த்ரமஸௌ" என்றுசொல்லப்பட்ட) சுடரிரண்டையும் வடிவாகவுடையனாய், அருவாகி - (அவற்றுக்கு அந்தராத்மதயா அநுப்ரவேஶித்து) ஸூக்ஷ்மபூதனாய், (ஸ்ருஷ்டமான ஜந்துக்களினுடைய ரக்ஷணார்த்தமாக), நாகம் - திருவநந்தாழ்வான்மேலே, ஏறி - ஏறி, நடுக்கடலுள் - திருப்பாற்கடல்நடுவே, துயின்ற - கண்வளர்ந்தருளி, நாராயணனே - (இந்த அந்தராத்மத்வத்தாலும் ஸமுத்ரஶாயித்வத்தாலும் ஸித்தமான) நாராயணஶப்தத்துக்கு வாச்யனானவனே! (கீழ்ச்சொன்ன ப்ரக்ரியையாலே), உன் - உன்னுடைய, ஆகம் - வடிவையும், முற்றும் - (என்ஸகலகரணங்களையும் உனக்கு ஸர்வாலங்காரமுமாகக்கொண்ட) அழகையுமெல்லாம், அகத்து-என் நெஞ்சுக்குள்ளே, அடக்கி-கபளீகரித்து அநுபவித்து, ஆவி-என் ஆத்மாவானது, அல்லல் - (கீழிற்றிருவாய்மொழியிற்பட்ட) து:கத்தை, மாய்த்ததே - போக்கப்பெற்றதே!

'பலமூர்த்தி' என்னுமளவும் - பர வ்யூஹ விபவ விக்ரஹங்களைச் சொல்லி, 'ஐந்துபூத மிரண்டுசுடர்' என்கிற இடம் - லீலாவிபூதிஸம்பந்தத்தைச் சொல்லுகிறது என்பாருமுளர்; அதில், ஸர்வப்ரதாநமாய் ப்ராப்யமாகையாலே அத்விதீயமான வாஸுதேவமூர்த்தியாய், அதுதான் ஶாந்தோதிதநித்யோதித பேதத்தையுடைத்தாய்க்கொண்டு இருமூர்த்தியாய், நித்யோதிதவேஷந்தான் ஸங்கர்ஷணப்ரத்யும்நாநிருத்தபேதத்தாலே மூன்றுமூர்த்தியாய், அவைதாம் கேஶவாதி த்வாதஶமூர்த்தியாயும் தஶாவதாரரூபமாயும் பலமூர்த்தியாயிருக்கு மென்றபடி.

இ—மூன்றும்பாட்டில், தம்மோட்டை ஏவம்விதப்ரணயத்தாலே அவன் க்ருதார்த்தனானபடி சொல்லுகிறார்.

[ஏகமூர்த்தி] - தம்மை இவ்வளவாக்க அவன்பண்ணின யத்நம் சொல்லுகிறது. "ஸதேவ" என்று இவையில்லாத அன்றும் தான் உளனாய்த் தன்உண்மையாலே இவற்றினுடைய ஸத்பாவத்தையும் நிர்வஹித்துக்கொண்டு நிற்கிற நிலை. ஸ்ருஷ்டிக்குமுன்புத்தைஸ்வாஸாதாரணவிக்ரஹத்தைச் சொல்லிற்றாகவுமாம். [இருமூர்த்தி] - ஸ்ருஷ்ட்யுந்முகனாய் ப்ரக்ருதி மஹான்களை ஶரீரமாகக்கொண்டு நிற்கிற நிலை. [மூன்றுமூர்த்தி இத்யாதி]-த்ரிவிதஅஹங்காரங்களையும் ஸாத்விகஅஹங்காரகார்யமான ஏகாதஶேந்த்ரியங்களையும் தாமஸஅஹங்காரகார்யமான ப்ருதிவ்யாதிபூதங்களையும் தனக்கு ஶரீரமாகவுடையவன். [இரண்டுசுடராய்] - "ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்" என்கிறபடியே சந்த்ரஸூர்யர்கள் கார்யவர்க்கத்துக்கு உபலக்ஷணம். [அருவாகி] - "தத்ஸ்ருஷ்ட்வா, ததேவாநுப்ராவிஶத்" என்கிறபடியே இவற்றினுடைய தாரணார்த்தமாக அந்தர்யாமியாய். அசித்தைச் சொல்லிற்றாகில், அருவென்று ஆத்மாவைச் சொல்லிற்றானாலோ வென்னில்,— "அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய" என்று ஜீவாந்தர்யாமிக்கு அநுப்ரவேஶமாகையாலே அதுவும் சொல்லிற்றாயிற்று. [நாகம் இத்யாதி] - ஸ்ருஷ்டரான ப்ரஹ்மாதிகளுக்கு ஸமாஶ்ரயணீயனாகைக்காகத் திருப்பாற்கடலின்நடுவே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினவனே! [நாராயணனே] - இப்படி

ஸர்வகாலமும் ஒக்க அநுக்ரஹஶீலனாகைக்கு அடியான ப்ராப்தியைச் சொல்லுகிறது. [உன் ஆகமுற்றும் அகத்தடக்கி]-இதுக்கு ப்ரயோஜநம் உன்திருமேனிக்கு வேண்டும் போகோபகரண மெல்லாம் என்னுள்ளே யாம்படி பண்ணுகை; அத்தைச்செய்து. சாந்து பூமாலை பரிவட்டம் ஆபரணம் இவையெல்லாம் என்னுள்ளேயாம்படி பண்ணி. [ஆவி அல்லல் மாய்த்ததே] - உன் திருவுள்ளம் நிர்த்து:கமாயிற்றே; 'ஒருபடி கரைமரம் சேர்க்கவல்லேனே' என்று இருந்த உன் திருவுள்ளத்தில் பரகுபரகு கெட்டு க்ருதார்த்தனாயே! என்கிறார். என்னுடைய நெஞ்சில் து:கம் ஒருபடி போயிற்றே என்றுமாம். அவன்ப்ரணயித்வம் சொல்லுகிற ப்ரகரணமாகை யாலே, அவனுடைய து:கநிவ்ருத்தியே பொருளாக அமையும். இத்தைப் பர வ்யூஹ விபவங் களைச் சொல்லிற்றாக நிர்வஹிப்பாரு முண்டு.

ஈடு.—மூன்றாம்பாட்டு. 'இத்தலையை உனக்காக்கி அத்தாலே க்ருதக்ருத்யனாயிருக் கிறாயே' என்கிறார்.

[ஏகமூர்த்தி] - ''ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத்'' (ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்) என்கிறபடியே - ஸ்ருஷ்டே:பூர்வகாலத்திலே இதம்ஶப்தவாச்யமாய்க்கிடந்த ப்ரபஞ்சமடைய அழிந்து ஸதவஸ்தமாய் ஶக்த்யவஸ்த ப்ரபைபோலே இவையடையத் தன்பக்கலிலே கிடக்கத் தானொருவனுமேயாய் நிற்கும் நிலையைச் சொல்லுகிறது. * (ஸ்ருஷ்டிக்குமுன்புத்தை ஸ்வாஸாதா ரணவிக்ரஹத்தைச் சொல்லுகிறதாகவுமாம்.) ஆக, ஸ்ருஷ்ட்யுந்முகனாயிருக்குமிருப்பைச் சொல் லுகிறது. [இருமூர்த்தி] - ப்ரக்ருதிமஹான்களிரண்டையும் கடாக்ஷித்துக்கொண்டு அவற்றைத் திருமேனியாகக்கொண்டிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. கார்யகாரணங்களிரண்டையும் தனக்குத் திருமேனியாகவுடையனாயிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது; இரண்டுக்குமுண்டான அண்மையைப்பற்றச்சொல்லுகிறது. அவ்யக்தத்தினுடைய வ்யக்ததசையிறே மஹானாகிறது. [மூன்றுமூர்த்தி] - த்ரிவிதாஹங்கார ஶரீரனாயிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. ஸாத்த்விகமாயும், ராஜஸமாயும், தாமஸமாயும் மூன்றுவகைப்பட்டிறே அஹங்காரந்தான் இருப்பது. [பலமூர்த்தியாகி ஐந்துபூதமாய்] - கீழ்ச்சொன்ன அடைவன்று இங்குச் சொல்லுகிறது. ஸாத்த்விகாஹங்

மூன்றாம்பாட்டு - 'ஏகமூர்த்தி' இத்யாதி. ''ஆவியல்லல்மாய்த்ததே'' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'இத்தலையை' இத்யாதி.

'ஏகமூர்த்தி' என்று - அவிபக்ததமஸ்ஸோடேகூடியிருக்கு மிருப்பைச் சொல்லுகிறது. 'ஏக மூர்த்தி' என்றதுக்கு ப்ரமாணமாக - ''[illegible] தஸம்வூவெவ்வூாவெ[illegible] ஹாநு। வனகவிஷுதிவிஸ்ாாவஸத[illegible] யணஃவஈஃ'' இத்யாத்யநுஸந்தேயம். 'ஸதேவ' இத்யாதி - அஸ்யார்த்த:—அக்ரே - ஸ்ருஷ்டே:பூர்வகா லே, இதம் ஜகத், ஸதேவாஸீத் - ஸச்சப்தவாச்யமேவாஸீத்இதி. சக்த்யவஸ்தப்ரபை-பொடிமூடின தணல். ஶக்த்யவஸ்தப்ரபை யென்றும், விகாஸாவஸ்தப்ரபையென்றும் - ப்ரபை த்விவிதம். அதில், ஶக்த்யவஸ்த ப்ரபையாவது - நீறுபூத்த அங்காராவஸ்தையைச் சொல்லுகிறது. விகாஸாவஸ்த ப்ரபையாவது- ஜ்வாலாவ ஸ்தப்ரபையைச் சொல்லுகிறது. தானொருவனுமேயாய் நிற்கும் நிலையை - ''தம ஆஸீத்'' என்கிற அவிபக்த தமஶ்ஶரீரகனாய் நிற்கும் நிலை யென்றபடி. ஸ்ருஷ்ட்யுந்முகனாயிதி-'இருமூர்த்தி' என்றுதொடங்கி ஸ்ருஷ்டி யைச்சொல்லுகிறாராகையாலே, கார்யோந்முகாவஸ்தையைச் சொல்லுகிறதென்றபடி. 'ப்ரக்ருதிமஹான்க ளிரண்டையும் கடாக்ஷித்துக்கொண்டு' என்றது - விபக்ததமஸ்ஸையும் அக்ஷரத்தையும் அவ்யக்தத்தையும் அவிபக்ததமஸ்ஸான மூலப்ரக்ருதிக்குள்ளே அந்தர்ப்பவிப்பித்து; ஆக, ப்ரக்ருதியும் தத்கார்யமான மஹானு மாகிற இரண்டையும் கடாக்ஷித்துக்கொண்டு என்றபடி. கடாக்ஷித்துக்கொண்டு-முன்னோட்டுக்கொண்டு. விவ

* குண்டலிதம் க்வாசித்க மென்பர்.

காரகார்யம் - ஏகாதஶேந்த்ரியங்கள் : தாமஸாஹங்காரகார்யம் - ப்ருதிவ்யாதிபூதங்கள்: இரண்டுக்கும் உபகாரகமாய்நிற்கும் - ராஜஸாஹங்காரம்; ஆக, ஏகாதஶேந்த்ரியங்களையும், ஸகுணமான பூதபஞ்சகங்களையும் சொல்லி, அவற்றைத் திருமேனியாகவுடையனாயிருக்கும்படி சொல்லுகிறது. [இரண்டுசுடராய்] - "ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்" (ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்) என்கிறபடியே, சந்த்ராதித்யர்கள் - கார்யவர்க்கத்துக்கு உபலக்ஷணம். [அருவாகி] - இவற்றையுண்டாக்கி, "தத் ஸ்ருஷ்ட்வா, ததேவாநுப்ராவிஶத், ததநுப்ரவிஶ்ய, ஸச்சத்யச்சாபவத்" (தத்ஸ்ருஷ்ட்வா, ததேவாநுப்ராவிஶத், ததநுப்ரவிஶ்ய, ஸச்சத்யச்சாபவத்) என்கிறபடியே, இவற்றினுடைய வஸ்துத்வநாமபாக்த்வங்களுக்காகத் தான் அநுப்ரவேசித்து நிற்கும் நிலையைச் சொல்லுகிறது. அசித்தைச் சொல்லிற்றாகில் - கீழ், அருவென்று - ஆத்மாவைச் சொல்லிற்றனலோ? என்னில்; "அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய" (அநேநஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய) என்று - ஜீவாந்தர்யாமிக்கு அநுப்ரவேஶமாகையாலே, அதுவும் சொல்லிற்றாயிற்று. [நாகமேறி] - ஸ்ருஷ்டரான ப்ரஹ்மாதிகளுக்கு ஸமாஶ்ரயணீயனாகைக்காகத் திருப்பாற்கடலின்நடுவே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினவன். பயிரைச்செய்து செய்த்தலையிலே குடிகிடக்குமாபோலே, ஸ்ருஷ்டங்களான பதார்த்தங்களினுடைய

---

ரணம் – 'கார்யகாரணங்கள்' இத்யாதி. அஹங்காராதிகளும் ப்ரக்ருதிகார்யமாயிருக்க, ப்ரக்ருதிக்கு அநந்தரம் மஹானைச்சொல்லுவானென்? என்ன, 'இரண்டுக்கும்' இத்யாதி. அண்மை எப்படி? என்ன, 'அவ்யக்தத்தினுடைய' இத்யாதி. அவ்யக்தமாவது - ப்ரக்ருதியினுடைய அவஸ்தாபேதம். ப்ரக்ருதிதான்-அவிபக்ததமஸ் என்றும், விபக்ததமஸ்என்றும், அக்ஷரமென்றும், அவ்யக்தமென்றும் நாலுவிதமாயிருக்கும்; அந்த அவ்யக்தத்தினுடைய வ்யக்ததசை - மஹான் என்றபடி. "ஸத்த்வாதிஹிதபீஜஸ்தாநீயவிஹஸ்தம் தத:, ஸ்ருஷ்டிஸ்தபீஜவதிஹந்தம் தத:, ஸர்வஸம்ஸ்ருஷ்டா[illegible]ப்ரதிமாவயவபீஜதந்மாத்ரக்ஷோபம், உத்பந்நபீஜஸம்ஸ்தாநாகாராவஸ்த்ரம், அஹங்காரஸ்தாநீயோஹங்காரம்" என்னக்கடவதிறே. அஹங்காரம்த்ரிவிதமாயிருக்குமோ? என்ன,'ஸாத்த்விகம்' இத்யாதி."ஸாத்த்விகோ ராஜஸஶ்சைவ தாமஸஶ்ச த்ரிதாஹங்கார:। வைகாரிகஸ்தைஜஸஶ்ச பூதாதிஶ்சைவ தாமஸ: । த்ரிவிதோயமஹங்கார:" இத்யாத்யநுஸந்தேயம். 'கீழ்ச் சொன்ன அடைவன்று' என்றது - "ஏகமூர்த்தி" என்றுதொடங்கிச் சொன்ன கார்யகாரணபாவமான அடைவன்று என்றபடி. அடைவல்லாதபடி எப்படி? என்ன, 'ஸாத்த்விக' இத்யாதி, ஸாத்த்விகாஹங்காரகார்யம் ஏகாதஶேந்த்ரியங்களென்னுமதுக்கு ப்ரமாணம் - "தைஜஸாநீந்த்ரியாண்யாஹுர்தேவா வைகாரிகா தஶ । ஏகாதஶம் மநஶ்சாத்ர தேவா வைகாரிகா: ஸ்ம்ருதா:" இத்யாதி. தேவா: - இந்த்ரியாணீத்யர்த்த:. தாமஸாஹங்காரகார்யம் ப்ருதிவ்யாதி பூதங்களென்னுமதுக்கு ப்ரமாணம் - "பூததந்மாத்ரஸர்க்கோயமஹங்காராத்து தாமஸாத்" இத்யாதி. ஸகுணமான பூதபஞ்சகங்களென்றது - வேதவ்யாஸருடையபக்ஷத்தைப் பற்ற. அதாவது - ஸகுணமான என்கையாலே - தந்மாத்ராவிஶிஷ்டமான பூதத்தை ஏகமாக்கி "ஐந்துபூதம்" என்று சொல்லுகிறதென்று கருத்து. இந்தப்பக்ஷத்தில், ஏகாதஶேந்த்ரியங்களும், தந்மாத்ராவிஶிஷ்டமான பூதங்களைந்தும், ஶப்தாதிகுணங்களைந்தும், ப்ரக்ருதி மஹதஹங்காரங்கள் மூன்றும், ஆக இருபத்துநாலு தத்வங்கள். பராஶரபக்ஷே, ஏகாதஶேந்த்ரியங்களும், தந்மாத்ரைகளைந்தும், பூதங்களைந்தும். ப்ரக்ருதிமஹதஹங்காரங்களும் கூட இருபத்துநாலென்று கண்டுகொள்வது. ஆக, 'ஐந்துபூதமாய்' என்கிறவளவும்-ஸமஷ்டிஸ்ருஷ்டியை அருளிச்செய்தார். 'இரண்டுசுடராய்' என்று தொடங்கி-வ்யஷ்டிஸ்ருஷ்டியும்அருளிச்செய்தாரென்றபடி. அருவாகி-அந்தராத்மதயா அநுப்ரவேசித்து; ஸூக்ஷ்மரூபதனை என்று ஶப்தார்த்தம்- அசித்தை இத்யாதி-அருவாகிஎன்று ஆத்மாவைச் சொல்லில் அநுப்ரவேசம் ஸித்தியாமையாலும், அநுப்ரவேஶகதநத்தில் ஜீவாந்தர்யாமிக்கு அநுப்ரவேஶமாகையாலே ஆத்மாஸித்திக்கையாலும், அநுப்ரவேஶத்தையே சொல்லுகிறதென்றபடி. ஸ்ருஷ்டிசொன்ன அநந்தரம் க்ஷீராப்திஶாயித்வகதநத்துக்குத் தாத்பர்யத்வயம்-'ஸ்ருஷ்டரான' இத்யாதிவாக்யவத்யேந.செய்த்தலை-கழனித்தலை. ப்ரணயித்வகுணகதநப்ரகரணத்திலே

ரக்ஷணார்த்தமாகக் கண்வளர்ந்தருளினு னென்னவுமாம். [நாராயணனே] - இப்படி ஸர்வகாலமும் ஒருபடிப்பட அநுக்ரஹஶீலனுகைக்கு அடியான ப்ராப்தி சொல்லுகிறது. [உன்ஆகமுற்றும் அகத்தடக்கி] - ஆகம் - உடம்பு. உன்திருமேனிக்கு வேண்டும் சாந்து பூமாலை பரிவட்டம் ஆபரணங்கள் இவையெல்லாம்; அகத்தடக்கி - என்னுள்ளே யுண்டாம்படி பண்ணி. இதிறே ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம். இப்படிச்செய்தத்தால் நிர்த்துஃகரானார் ஆர்? என்னில்,—அவனுயிற்று. [ஆவியல்லல்மாய்த்ததே] - உன்திருவுள்ளத்திலுண்டான அல்லல் ஒருபடி நசிக்கப்பெற்றதே. இத்தலையை ஒருபடி கரைமரஞ்சேர்த்து நீ க்ருதக்ருத்யனுனுயே! அன்றிக்கே, என் ஆவியானது நிர்த்துஃகமாயிற்று என்றுமாம். அதவா, ஏகமூர்த்தி யென்று - பரத்வத்தைச் சொல்லி, இருமூர்த்தி யென்று-வ்யூஹத்தைச் சொல்லி வாஸுதேவஸங்கர்ஷணர்களை நினைத்து, மூன்றுமூர்த்தி யென்று - ப்ரத்யும்நரைச் சொல்லிற்றுய், பலமூர்த்தி யென்று - விபவங்களைச் சொல்லிற்றுய், ஐந்துபூதமா யிரண்டுசுடரா யென்று - இன்னார் ஸ்ருஷ்டிக்குக்கடவர், இன்னார் பாலநத்துக்குக் கடவர் என்கிறபடியாலே சொல்லுகிறதென்று நிர்வஹிப்பாரு முண்டு. (ங)

# நான்காம்பாட்டு.

மாய்த்தலெண்ணி வாய்முலைதந்த மாயப்பேயுயிர்
மாய்த்த ஆயமாயனே! வாமனனே! மாதவா!
பூத்தண்மாலைகோண்டு உன்னைப்போதால்வணங்கேனேலும் நின்
பூத்தண்மாலைநெடுமுடிக்குப் புனையும்கண்ணிஎனதுயிரே.

*ஆ.—(மாய்த்தல்.) ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனுய், ஆஶ்ரிதஸமீஹிதப்ரதனுய், ஶ்ரிய:பதியாயிருந்த உன்னை ப்ராப்தகாலங்களிலே பூத்தண்மாலைகொண்டு வணங்காதிருக்கச் செய்தேயும், உன்னுடைய பூத்தண்மாலை நெடுமுடிக்கு என்னுடைய ஆத்மாவே புனையுங் கண்ணியாயிற்று என்கிறார்.*

---

*ஸ்ருஷ்டியை எதுக்காகச் சொல்லுகிறது? என்ன, 'இதிறே' இத்யாதி. அதாவது-இப்படி விநியோகங்கொள்ளுகையே ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநமென்று தோன்றுகைக்காக அருளிச்செய்தா ரென்றபடி. இதிறே - இப்படிவிநியோகிக்கப்படுகையிறே. 'ஆவியல்லல்' இத்யாதிக்கு அவதாரிகை - 'இப்படி' இத்யாதி. 'அகத்தடக்கி' என்று அவன் அவ்யவதாநேந ப்ரஸ்துதனுகையாலே அருளிச்செய்கிறார் - 'உன்திருவுள்ளத்தில்' இத்யாதி. 'அகத்தடக்கி' என்றதோடே கூட்டி பாவம் - 'இத்தலையை' இத்யாதி. 'அன்றிக்கே' இத்யாதி - இன்னாராவியென்னுதே, ஸாமாந்யேந 'ஆவி' என்கையாலே - 'என்னுவியானது நிர்த்துஃகமாயிற்று என்றுமாம்' என்றபடி. முந்தின அர்த்தத்திலே, 'மாய்த்ததே' என்ற ஏகாரம் - ஸ்வரத்திலேயாய், க்ருதார்த்தனுனுயே யென்றபடி. 'அதவா', இத்யாதி - ஏகமூர்த்தி-பரவாஸுதேவர்; இருமூர்த்தி - வ்யூஹவாஸுதேவரும், ஸங்கர்ஷணரும்; மூன்றுமூர்த்தியென்று - மூன்றும்மூர்த்தியென்றாய், ப்ரத்யும்நரைச் சொல்லுகிறது; 'ஐந்துபூதமாய்' இத்யாதியாலே - ப்ரத்யும்நக்ருத்யமான ஸ்ருஷ்டியையும், 'நாகமேறி' இத்யாதியாலே - அநிருத்தரையும் தத்க்ருத்யமான பாலநத்தையும் சொல்லுகிறது; ஸங்கர்ஷணக்ருத்யமான ஸம்ஹாரமும், ஸ்ருஷ்டி அப்யயபூர்விகையாகையாலே ஸ்ருஷ்டிசொன்னபோதே அர்த்தாத்ஸித்தம். 'கடவர்' என்கிறபடியாலே சொல்லுகிறது-வ்யூஹங்களைச் சொல்லுகிறதென்றபடி. 'நிர்வஹிப்பாருமுண்டு'என்றது - இது ஸ்வாரஸிகமன் றென்றபடி. இன்னார் ஸ்ருஷ்டிக்குக் கடவ ரென்றவிடத்திலே - "ஷாட்குண்யாத்வாஸுதேவ: பரஇதிஸபவாந்" இத்யாதி ஶ்லோகம் அநுஸந்தேயம்.* (ங)

ஒ.—நாலாம்பாட்டில், பூதநாஸ்தந்யபாநாதி வ்யாபாரங்களா லுள்ள ஆயாஸத்துக்கும் ஸ்ரிய:பதியான உன்னுடைய ஸௌகுமார்யத்துக்கும் ஈடான ஶிஶிரோபசாரத்துக்கும் என்னுடைய ப்ராணன் ஆய்விட்டதே! என்று ப்ரீதராகிறார்

[பூத்தண்மாலை என்று தொடங்கி.] - குளிர்ந்த பூமாலையைக்கொண்டு ப்ராப்தகாலத்திலே வந்து ஸந்நிஹிதனாய், பரிசர்யைபண்ணமாட்டிற்றிலேனேயாகிலும் குளிர்ந்ததிருமாலையாலல்லது செல்லாத உன் திருமுடிக்குச் சாத்தும் திருமாலை என்னுடைய ப்ராணனாய்விட்டதே!

ப.—அநந்தரம், அநுகூலஶத்ருவான பூதனையை நிரஸித்து என்னை அநந்யார்ஹமாக்கிக்கொண்ட ஸ்ரிய:பதியான உனக்கு என்ப்ராணன் திருமுடிக்கு விஶேஷாலங்காரமாவதே! என்கிறார்.

மாய்த்தல் - முடிப்பதாக, எண்ணி - நினைத்து, வாய்-திருப்பவளத்திலே, முலைதந்த-முலையை வைத்த, மாயம் - (அநுகூலமான) மாத்ருவேஷபரிக்ரஹத்தையுடைய, பேய் - வஞ்சப்பேயினுடைய, உயிர் - ப்ராணனை, மாய்த்த - முடித்துவிட்ட, ஆயன் - கோபாலபாலகத்வத்தில் புரையற்ற, மாயனே - ஆஶ்சர்யபூதனே! வாமனனே-(இந்த அபதாநத்தாலே "ரக்ஷ ஸர்வஜகதாம் ப்ரபோ" என்று ஜகத்தை அநந்யார்ஹமாக்கும் ஸ்வாமித்வத்தை ப்ரகாஶிப்பிக்கிற) வாமநாவதாரத்தையும் ஸபலமாக்கி, மாதவா - (ஸ்வாபாவிகமான) ஸ்ரிய:பதித்வத்தையும் நிலைநிறுத்தினவனே! உன்னை - (இப்படி அநுகூலஶத்ருநிராஸகனான) உன்னை, பூ-விலக்ஷணபுஷ்பயுக்தமாய், தண் - குளிர்ந்த, மாலை கொண்டு - மாலைகளைக் கொண்டு, போது - அவஸ்தாநுரூபமாக, வணங்கேனேலும் - ஆராதிக்கப்பெற்றிலேனேயாகிலும், நின் - உன்னுடைய, பூ-புஷ்பமயமாய், தண் - செவ்வியையுடைத்தான, மாலை - மாலையாலே அலங்க்ருதமாய், நெடு - (ஆதிராஜ்யஸூசகமான) ஓக்கத்தையுடைய, முடிக்கு-திருமுடிக்கு, புனையும் - அலங்காரமாகச் சாத்தும், கண்ணி - மாலை, எனது உயிரே - என்னுடைய ப்ராணனாவதே!

இ.—நாலாம்பாட்டில், பூதநாதிகளுடைய நிரஸநஸமயத்தில் ஶ்ரமம் தீர ஶிஶிரோபசாரம்பண்ணப் பெற்றிலேனே யாகிலும் ஶிஶிரோபசாரத்தாலல்லது செல்லாத ஸுகுமாரமான திருமேனிக்கு ஶிஶிரோபசாரம் என்ப்ராணனாய்விடுவதே! என்கிறார்.

[மாய்த்தலெண்ணி] - ஜகதுபஸம்ஹாரம் பண்ணவாயிற்றுக் கோலி வந்தது; ப்ரகாரியை நலிந்தால் ப்ரகாரவஸ்துவுக்கு ஸ்திதி யுண்டோ? உயிர்நிலையிலே நலிந்தால் அவயவந்தோறும் நலியவேண்டாவிறே. "க்ஷுதாநுஹஞ்ஜம் நஸம்ஶய:" என்றாரிறே மஹாராஜர். [வாய் முலை தந்த]-ஆழ்வார் தம்திருப்பவளத்திலே, முலைதந்தாற்போலே யிருக்கையாலே 'தந்த' என்கிறார். தருகையும் கொடுக்கையும் பர்யாயமாய், கொடுத்த என்றுமாம். [மாயப்பேய்] - ஜந்மத்தால் வந்த அறிவுகேட்டுக்கும் மேலே வஞ்சநபரையாய் வந்தாள்; அதாவது -பேயாய்த்தோற்றாதே தாயாய்த் தோற்றினபடி.[உயிர்மாய்த்த]-ஜகதுபஸம்ஹாரத்தைக் கோலிவர அத்தை ஒரு வ்யக்தியிலே பர்யவஸிப்பித்தான். இவன் பிள்ளையாயே முலையுண்டான், ஆஸுரவர்க்கத்துக்கு நஞ்சாமவனாகிற வஸ்துஸ்வபாவத்தாலே முடிந்த இத்தனை. [ஆய மாயனே] - ஆஶ்சர்யயுக்தனான ஆயனே! [வாமனனே] - பூதநாஸ்தந்யபாநத்துக்கு ப்ரத்யௌஷதமாகத் தன் முலையில் அம்ருதத்தைக் கொடுக்கைக்கு ஒருதாய் உண்டாயிற்று ; அதுவுமில்லையே இவ்வவதாரத்துக்கு; மாதாபிதாக்கள் தபஸ்ஸிலே அந்யபரர்; பிறந்தவன்றே அஸுரர்களிருந்தவிடத்தே சென்று கிட்டினான் ; அவ்வவஸ்தையிலும் உதவப்பெற்றிலேன். [மாதவா] - இருவரும் சேர இருந்தால், 'இச்சேர்த்திக்கு என்வருகிறதோ?' என்று மங்களாஶாஸநம் பண்ணவேண்டி

யாயிற்று இருப்பது. "வடிவாய்நின்வலமார்பினில்வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்னக்கடவதிறே. [பூத்தண்மாலை] - குளிர்ந்த பூமாலையைக்கொண்டு பூதனை வந்துகிட்டினபோதாதல், அஸுரர்களிருந்த இடத்தே தான் சென்றபோதாதல், பிராட்டியும் தானுமா யிருந்தபோதாதல்அவ்வவகாலங்களிலே வணங்கேனேலும்: திருவடிகளிலே விழுந்து ஶிஶிரோபசாரம் பண்ணப்பெற்றிலேனேயாகிலும். [பூத்தண்மாலை நெடுமுடிக்கு] - குளிர்ந்த பூமாலையோடே நித்யஸித்தமாய்ச் செல்லுகிற உன்னுடைய திருவபிஷேகத்துக்கு ஆதரித்துச் சாத்தும் மாலை என் ப்ராணனுவதே! ப்ராணன் - ஸத்தை.

ஈடு.—நாலாம்பாட்டு. பூதநாதிகளுடைய நிரஸநஸமயத்தில் ஶ்ரமங் தீர ஶிஶிரோபசாரம் பண்ணப்பெற்றிலேனேயாகிலும் ஶிஶிரோபசாரத்தாலல்லது செல்லாத உன் ஸுகுமாரமான திருமேனிக்குச் சாத்தும் மாலை என்ஸத்தையேயாய்விடுவதே! என்கிறார்.

[மாய்த்தலெண்ணி]-அவள்கோலிவந்தபடி அவஶ்யம் சிலர்பரியவேண்டும்படியாயிற்று. இன்னாரை மாய்த்தலெண்ணி யென்னாமையாலே - ஜகதுபஸம்ஹரணம்பண்ணக்கிடீர் இவள் கோலிவந்தது என்கிறார்; ஶரீரியைநலிந்தால் ஶரீரம் தன்னடையே நசிக்குமிறே; உயிரிலே நலிந்தால் அவயவங்தோறும் தனித்து நலியவேண்டாவிறே; உலகங்கட்கெல்லாம் ஓருயிரிறே. "அஸ்மாந்ஹந்தும்நஸம்ஶய:" (அஸ்மாங்ஹந்தும்நஸம்ஶய:) என்றாரிறே மஹாராஜர். [வாய்முலைதந்த] - அவன் திருப்பவளத்திலே நஞ்சைக்கொடுத்தது தம்முடைய திருப்பவளத்திலே நஞ்சைக் கொடுத்தாற்போலே யிருக்கையாலே - 'தந்த' என்கிறாராதல்; அன்றிக்கே, தருகையும், கொடுக்கையும் - பர்யாயமாய், கொடுத்த என்னும் பொருள்பெற்றுக்கிடக்கிற தாகவுமாம். [மாயப்பேய்]-ஜந்மத்தால்வந்த அறிவுகேட்டுக்குமேலே, வஞ்சநபரையாயும் வந்தாள். அதாவது - பேயாய் வருகை யன்றிக்கே, தாயாய்வருகை. "தாயாய்வந்தபேய்" என்னக்கடவதிறே. [உயிர்மாய்த்த] - அவள் கோலிவந்ததுதன்னை அவள்தன்னோடே போக்கினபடி. [ஆய மாயனே] - ஆஶ்சர்யஶக்தியுக்தனான ஆயனே! இவனும் பிள்ளையாயே முலையுண்டான், அவளும் தாயாய்

---

நாலாம்பாட்டு - 'மாய்த்தல்' இத்யாதி. "போதால் வணங்கேனேலும் – புனையுங்கண்ணி எனதுயிர்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'பூதநாதி' இத்யாதி. ஆதிஶப்தத்தால் - பலிசக்ரவர்த்தியைச் சொல்லுகிறது. 'எனதுயிர்' என்கையாலே, 'என்ஸத்தையேயாய்' என்றது.

'மாய்த்தலெண்ணி' என்கிறவருடைய ஹார்த்தபாவம் - 'அவள்கோலி' இத்யாதி. க்ருஷ்ணனை யென்னுமல், ஸாமாந்யேந 'மாய்த்தலெண்ணி' என்றதுக்கு பாவம் - 'இன்னாரை' இத்யாதி- க்ருஷ்ணனை நலிந்தால் ஜகதுபஸம்ஹாரமாமோ? என்ன, இரண்டுவகையாக அருளிச்செய்கிறார், 'சரீரியை' இத்யாதி வாக்யத்வயத்தாலே. அவன்தா னுயிரோ? என்ன, 'உலகங்கட்கு' இத்யாதி. உயிர் - ப்ராணன். அவனை முடிக்கவந்தது தம்மை முடிக்கவந்ததாகத் திருவுள்ளம்பற்றி 'மாய்த்த லெண்ணி' என்றாராகவுமா மென்று விவக்ஷித்து அதுக்கு ப்ரமாணம் - 'அஸ்மாங்' இத்யாதி. "ஹஷஸவுாயாயொவெதஸுதாஹிபூ ஸஹராக்ஷஸெஸ: । ராக்ஷஸொஹெ்திவஸுபூஸொநஜுாஂநஸஂஶய:" இதி விபீஷணம் த்ருஷ்ட்வா ஸுக்ரீவ:. கொடுத்த என்னாதே, 'தந்த' என்றதுக்கு இரண்டுவகையாக பாவம் – 'அவன் திருப்பவளத்தில்' இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'பேய்' என்னாதே, 'மாயப்பேய்' என்றதுக்கு பாவம் - 'ஜந்மத்தால்' இத்யாதி. மாயந்தான் இன்னதென்கிறார் – 'அதாவது' இத்யாதி. தாயாய்வந்ததுக்கு ப்ரமாணம் - 'தாயாய்' இத்யாதி. திருமொழி முதற்பத்து ஐந்தாந்திருமொழி ஆறும்பாட்டு. "தாயாய்வந்தபேயுயிரும் தயிரும்இழுதுமுடனுண்டவாயான்"–தாய்வடிவுகொண்டுவந்த பூதனையுடைய உயிரையும் யசோதைப்பிராட்டியினுடைய தயிரையும் வெண்ணெயையும் ஒக்க அமுதுசெய்த திருப்பவளத்தையுடையவனென்று பாசுரத்துக்கு அர்த்தம். 'மாய்த்தலெண்ணி' என்றத்தைக் கடாக்ஷித்து அர்த்தம் – 'அவள்' இத்யாதி. "மாயனை-ஆயனே" இத்யந்வய:. மாயன்-ஆஶ்சர்யஶக்தியுக்தன். ஆயனாயிருக்கச்செய்தே ஆஶ்சர்யஶக்தி எது? என்ன, 'இவனும்' இத்யாதி. ஆனல் முடியும்படி எப்படி? என்ன, 'வஸ்துஸ்வபாவ' இத்யாதி. ஆயன் மாயனாகை.

முலேகொடுத்தாள்; வஸ்துஸ்வபாவத்தாலே முடிந்த இத்தனை. [வாமனனே] - அந்த அவதாரத்தில், பூதனை முலேகொடுத்தால் அதுக்கு ப்ரத்யௌஷதமாக முலேகொடுக்கைக்கு ஒரு தாயாகிலும் உண்டிறே அங்கு. "வெங்கொங்கையுண்டானைமீட்டாய்ச்சியூட்டுவான், தன்கொங்கைவாய்வைத்தாள்சார்ந்து" என்றும், "பேய்ச்சிபாலுண்டபெருமானைப் பேர்ந்தெடுத்து, ஆய்ச்சி முலேகொடுத்தாளஞ்சாதே" என்றும். அதுவுமின்றிக்கே, இவனைப் பெற்றிட்டுவைத்துத் தாயும் தமப்பனும் தபஸ்ஸிலே அந்யபரராக, ஆஸுரப்ரக்ருதிகளிருந்தவிடத்தே தானே போய்க் கிட்டும்படியாயிறே இருப்பது. அவர்கள் தான் இருந்தவிடத்தே வந்துகிட்டினாற்போலேயன்றிறே தான் எதிரிகளிருந்தவிடத்தே சென்று கிட்டுமது; மிகவும் வயிறெரித்தலுக்கு உடலாயிருக்குமிறே. அத்தையிறே "சீராற்பிறந்துசிறப்பால்வளராது, பேர்வாமனுகாக்கால்-பேராளா" என்று வயிறுபிடித்தது. [மாதவா] - 'தீநாள் திருவுடையார்க்கில்லே' என்கிறபடியே, இவ்வபாயங்களில் இவன் தப்பிற்று அவள்நெஞ்சோடே கடாக்ஷிக்கையிறே. ஓரபாயமுமில்லேயேயாகிலும் பெரியபிராட்டியாரும் அவனுமான சேர்த்திக்கு மங்களாஶாஸநம்பண்ணுவார் தேட்டமாயிருக்குமிறே; "வடிவாய்நின் வலமார்பினில்வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்னுநின்றார்களிறே பரிவர். [பூத்தண்மாலேகொண்டு]- குளிர்த்தியையுடைத்தான பூமாலேயைக்கொண்டு. பூதநாதிகள் வந்துகிட்டின அவ்வவகாலங்களிலே திருவடிகளிலே வந்துவிழுந்து ஶிஶிரோபசாரம்பண்ணப் பெற்றிலேனேயாகிலும். [நின்பூத்தண்மாலேநெடுமுடிக்கு] - உன்னுடைய குளிர்ந்தபூமாலேயாலல்லது செல்லாதபடியாய் ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்துக்கு விரும்பிச்சாத்தும் மாலே, என்ப்ராணன் - என்ஸத்தையாய்விட்டது. (ச)

---

யாலே யென்றபடி. வாமனனே யென்றது-அதிலும் இதுபரியவேண்டுகையாலே என்கிறார், 'அந்த அவதாரத்தில்' இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - 'வெங்கொங்கை' இத்யாதி. பூதனையுடைய வெவ்விய முலேயை அமுதுசெய்தவனை அவள்பக்கல்நின்றும் மீட்டு யசோதைப்பிராட்டி புஜிப்பிக்கைக்காகப் பிள்ளை யிருந்தவிடத்தளவும் சென்றுகிட்டித் தன்னுடையமுலேயை அவன்திருப்பவளத்திலே கொடுத்தாளென்றபடி. ஊட்டுவான் - புஜிப்பிக்கைக்காக. சார்ந்து - சேர்ந்து, சென்றுகிட்டி. மூன்றாந்திருவந்தாதி எழுபத்து நாலாம்பாட்டு - "நலமே வலிதுகொல்" இத்யாதி. 'பேய்ச்சிபாலுண்ட' இத்யாதி - பூதனையுடைய முலேப் பாலேயுண்ட உபகாரகனைத் தான் நின்றவிடத்தில்நின்றும் பேர்ந்துவந்து கிட்டியெடுத்து யசோதைப் பிராட்டி பயப்படாதே முலேகொடுத்தாளென்று பாசுரத்துக்கு அர்த்தம். மூன்றாந்திருவந்தாதி இருபத்தொன் பதாம்பாட்டு. தானே போய்க் கிட்டுமது பயஹேதுவோ? என்ன, 'அவர்கள்' இத்யாதி. அப்படி வயிறெரிந் தாருண்டோ? என்ன, 'அத்தையிறே' இத்யாதி. அத்தையிறே - அத்தைப்பற்றவிறே. அதாவது-இவன் பிறந்தபோதே மாதாபிதாக்கள் இவனைவிட்டுப் போனத்தைப்பற்றவிறே யென்றபடி. பெரியதிருவந்தாதி பதினாலாம்பாட்டு-"சீரால்"இத்யாதி. சக்ரவர்த்திதிருமகனைப்போலே சீர்மையோடே பிறந்து உபலாலநத்தோடே வளராதே, பேரும் "ஶ்ரிய:பதி" என்னுமாற்போலன்றிக்கே சிறுமைக்குவாசகமான 'வாமநன்' என்னும் திருநாமத்தையுடையையாகாதொழிந்தால், ஜகத்ரக்ஷணத்திலே நிரவதிகவ்யாமோஹத்தையுடையவனே! இத்யர்த்த:. வாமன் - வாமநன். ஆகாக்கால் - ஆகாதொழிந்தால். திருவுடையார்க்குத் தீநாளில்லே யென்றபடி - திருவுடையார் - ஸ்ரீமான்கள். தீநாள் - பொல்லாநாள்; கெடுநாளென்றபடி. நெஞ்சோடே என்றது - சாடு. நெஞ்சோடே - திருமார்பிலேயிருந்தென்று ஸ்வபாவார்த்தம்; சாடுவுக்கு - ஸஹ்ருதயமாக வென்றபடி. "மாதவா - பூத்தண்மாலேகொண்டு உன்னைப் போதால்வணங்கேனேலும்" என்று மேலேகூட்டித் தாத்பர்யாந்தரம் - 'ஓரபாயமும்' இத்யாதி. அபாயம்இல்லாவிடிலும் அதிசங்கையாலே மங்களாஶாஸநம்பண்ணின பேருண்டோ? என்ன, 'வடிவாய்' இத்யாதி. திருப்பல்லாண்டு. உனக்குநிறமாய்-தேஜஸ்கரையாய், உன்வல மார்பிலே நித்யவாஸம்பண்ணுகிற பெரியபிராட்டியாரும் நித்யஸ்ரீயாய்ச்செல்லவேணு மென்றபடி. வடிவு-நிறமும், அழகும். பூத்தண்மாலே - "தண்-பூமாலே" இத்யந்வய:. மேலும், இப்படியே அந்வயிப்பது. நெடுமுடி - நீண்டதிருவபிஷேகம். 'மாதவா' என்றதின் முந்தின அர்த்தமான 'தீநாள்' இத்யாதி வாக்யத்திலே- "[illegible] ।[illegible]" என்கிற ஶ்லோகம் அநுஸந்தேயம். க்ரமேண அந்வய:.

(ச)

# ஐந்தாம்பாட்டு.

கண்ணிஎனதுயிர் காதல்கனகச்சோதிமுடிமுதலா
எண்ணில்பல்கலன்களும் ஏலுமாடையுமஃதே
நண்ணிமூவுலகும் நவிற்றுங்கீர்த்தியுமஃதே
கண்ணனெம்பிரானெம்மான் காலசக்கரத்தானுக்கே.

ஆ.—(கண்ணி.) ப்ரதிகூலநிரஸநஸ்வபாவனான திருவாழியுடையனான கண்ணனுக்கு, தன்திருவடிகளிலும் திருமார்விலும் திருத்தோளிலும் சாத்தியருளக்கடவ திருத்துழாய் என்னுடைய ஆத்மா; அஸங்க்யேயநாநாவித திவ்யபூஷணங்களும், ஸ்வோசிததிவ்யபீதாம்பரமும், ஸர்வலோகங்களும் சொல்லியேத்தும் தன்னுடைய கீர்த்தியும், மற்றுமெல்லாம் என் காதலே என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், தம்முடைய ஸ்நேஹாதிகளானவை ஒரோவொன்றே அவனுக்கு ஆபரணாதி ஸர்வபரிச்சதங்களும் என்கிறார்

[காதல் என்று தொடங்கி.] - விலக்ஷணமான திருவபிஷேகம் முதலாக அஸங்க்யேயமான திருவணிகலன்களும் திருவரைக்குத் தகுதியான திருப்பரிவட்டமும் இருந்ததேகுடியாக ஆதரித்து ஏத்தும் தன்னுடைய கீர்த்தியும் இவையெல்லாம் என்னுடைய காதலே: காலத்தை நடத்தக்கடவ திருவாழியைத் திருக்கையிலேயுடையனாய் அவ்வழகைக் காட்டி எனக்கு அநந்யபரத்வ பேரமாபகாரத்தைப் பண்ணும் ஸ்வபாவனாய் எனக்கு ஸ்வாமியான க்ருஷ்ணனுக்கு.

ப.—அநந்தரம், போக்யனாய் ஸ்வாமியாய் உபகாரகனாய் ஸுலபனான க்ருஷ்ணனுக்கு என்னுடைய ப்ரேமாதிகள் ஆபரணாதிஸமஸ்தமு மாகாநின்றன என்கிறார்.

காலம் - காலநிர்வாஹகமான, சக்கரத்தான் - திருவாழியையுடையனாய், எம்மான் - (அவ்வழகைக்காட்டிக் காலவஶ்யனாகாதபடி) என்னையடிமைகொண்ட ஸ்வாமியாய், எம்பிரான் - (காலமுள்ளதனையும் அவ்வழகை அநுபவிப்பிக்கும்) மஹோபகாரகனாய், கண்ணனுக்கு - (காலாநுரூபமாக அவதரித்து ஸுலபனான) க்ருஷ்ணனுக்கு, எனது - என் அபிமாநாந்தர்ப்பூதமான, உயிர் - ஆத்மவஸ்து, கண்ணி - (ஶிரஸாவாஹ்யமான) மாலையாகாநின்றது; காதல் - (ஆத்மதர்மமான) ப்ரேமமானது, கனகம் - கநகமயமாய், சோதி - (ஆதிராஜ்யஸூசகமான) ஔஜ்ஜ்வல்யத்தையுடைய, முடி முதலா - முடிமுதலாக, எண் இல் பல் - அஸங்க்யேயமான, கலன்களும் - ஆபரணங்களு மாகாநின்றது; ஏலும் - அநுரூபமாய் (ஸர்வஸ்மாத்பரத்வஸூசகமான), ஆடையும் - திருப்பீதாம்பரமும், அஃதே - அதுவே: மூவுலகும் - த்ரிவிதாத்மவர்க்கமும், நண்ணி - கிட்டி, நவிற்றும் - வாய்புலற்றக்கடவ, கீர்த்தியும் - கீர்த்தியும், அஃதே - அதுவே. இவருடைய ப்ரேமத்துக்குத் தான் விஷயீபவிக்கையை, பேரொப்பனையாகவும் பெரும்புகழாகவும் நினைத்தானென்று கருத்து.

இ.—அஞ்சாம்பாட்டில், என்னுடைய ஸ்நேஹாதிகள் ஒரோவொன்றே ஆபரணாதி ஸர்வமு மாவதே! என்கிறார்.

[கண்ணி எனது உயிர்] - நான் என்னது என்று இருக்கிறத்தைக் கிடீர் அவன் தனக்கு மாலையாகக் கொள்ளுகிறது. "மார்வத்துமாலை" என்கிறவளைத் தனக்கு மாலையாகக் கொள்ளுகை ப்ராப்தம்; அது ஒழிய என்ஸத்தையைக்கிடீர் தனக்கு மாலையாகக் கொள்ளு

கிறது. [காதல் இத்யாதி] - ஸ்ப்ருஹணீயமாய் ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகம் முதலாக எண்ணிறந்த பலவகைப்பட்ட திருவாபரணங்களும் என்னுடைய காதல். இவர் ஸ்நேஹத்துக்கு விஷயமாகப்பெற்ற இத்தையே ஸர்வாபரணபூஷிதனாக அவன் நினைத்திருக்கை. [ஏலும் ஆடையும் அஃதே] - தன் திருவரைக்குத் தகுதியாய்ப் புருஷோத்தமலக்ஷணமான திருப்பீதாம்பரமும் என்னுடைய காதலே. "அறியாக்காலத்துள்ளே யடிமைக்கண் அன்பு செய்வித்து" என்று இவருடைய காதல் ஸத்தாப்ரயுக்தமாயிறே இருப்பது. திருப்பரிவட்டம் வெளுப்பித்த ஸ்ரீவைஷ்ணவவண்ணாத்தான்வார்த்தை. "ஜஹாரரஜகம்வாஸ:". பொய்யில் பாடலாகையாலே, 'இது கூடுமோ?' என்னவேண்டாவிறே. [நண்ணி இத்யாதி] - கிட்டி இருந்ததே குடியாக ஏத்தும் தன்னுடைய கீர்த்தியும். [அஃதே] - காதலே. அவனுடைய புகழென்றால் ஒருவர் அறிந்து ஒருவர் அறியாதே யிருக்குமதன்றிறே. ஆகையாலே, எல்லாரும் ஒக்க இருந்ததேகுடியாக ஏத்துகை. இவர் தன்னை ஸ்தோத்ரம்பண்ண அது எல்லாரும் தன்னை ஸ்தோத்ரம்பண்ணினார்களாக நினைத்திருக்கிறான். காதலுக்கு க்ருஷிபண்ணின படி சொல்லுகிறது. [காலசக்கரத்தான் எம்பிரான் எம்மான் கண்ணனுக்கு] - கையும் திருவாழியுமான அழகைக் காட்டி எனக்கு அநந்யபரத்வமஹோபகாரத்தைப் பண்ணித் தொழுதெழும்படி பண்ணின ஸ்வாமியான க்ருஷ்ணனுக்கு. "பேரமர்காதல் கடல்புரையவிளைவித்த காரமர்மேனி நங்கண்ணன்" என்னக்கடவதிறே. [காலசக்கரம்] - காலத்தை நடத்துகிற திருவாழி; காலவஶ்யதையைத் தவிர்க்கும் திருவாழி யென்னுதல். "நாவஷ்யிஷ்ணி" என்கிற காலத்திலும் திருக்கையோட்டைச் சேர்த்தியாலே ருசிஜநகமான திருவாழி.

ஈரு.—அஞ்சாம்பாட்டு. தம்முடைய ஸ்நேஹாதிகள் ஒரோன்றே ஆபரணாதி ஸர்வ *பரிச்சதங்களுமாயிற்று அவனுக்கு என்கிறார்.

[கண்ணி எனதுயிர்]-நான் 'என்னது' என்றிருக்கிறதைக்கிடீர் அவன் தனக்கு மாலையாகக் கொண்டது. "மார்வத்துமாலை" என்கிறவளைத் தனக்கு மாலையாகக் கொள்ளுகை ப்ராப்தம்; அது ஒழிய என்ஸத்தையைக்கிடீர் தனக்கு மாலையாகக் கொள்ளுகிறது. [காதல் இத்யாதி] - ஸ்ப்ருஹணீயமாய் ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகம் முதலான எண்ணிறந்து பலவகைப்பட்ட திருவாபரணங்களும் என்னுடைய காதல். இவருடைய ஸ்நேஹம் ஆபரணமாவதேன்? என்னில்,—இவருடைய ஸ்நேஹத்துக்குத் தான் விஷயமாகப்பெற்ற இத்தையே, தனக்கு அநேகாபரணங்கள் சாத்தினாற் பிறக்கும் புகருண்டாக அவன் நினைத்திருக்கையாலே, அத்தைப்பற்றச் சொல்லுகிறது. [ஏலும்ஆடையும்அஃதே] - திருவரைக்குத் தகுதியான திருப்

அஞ்சாம்பாட்டு - 'கண்ணியெனது' இத்யாதி. பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'தம்முடைய' இத்யாதி. 'ஸ்நேஹாதிகள்' என்ற ஆதிஶப்தத்தாலே - உயிரைச் சொல்லுகிறது. 'ஆபரணாதி' என்ற ஆதிஶப்தத்தாலே வஸ்த்ராதிகளைச் சொல்லுகிறது.

மேலும் 'கண்ணியெனதுயிர்' என்றுவைத்து மீளவும் சொல்லுவானென்? என்ன, 'நான்' இத்யாதி. நான் என்னது என்றது - பூர்வவ்ருத்தம். பின்னை யாரை மாலையாகக்கொள்ளவேணும்? என்ன, 'மார்வத்து' இத்யாதி. 'எனதுயிர்' என்றதுக்குத் தாத்பர்யாந்தரமாதல். 'கனகச்சோதி' என்ற பதத்துக்கு ஹாவம்- 'ஸ்ப்ருஹணீயமாய்' இத்யாதி. தாம் ஒரு ஸம்ஸாரியாயிருக்க, தம்முடையகாதலை ஆபரணாதிகளாய்க்கொண்டு அதிஶபகரங்க ளென்னலாமோ? என்று ஶங்காதாத்பர்யம். உத்தரம் - 'இவருடைய' இத்யாதி. ஏலுமாடை- திருவரைக்குத் தகுதியான ஆடை யென்னுதல்; புருஷோத்தமத்வத்துக்குத் தகுதியான ஆடை யென்னுதல். முந்தின அர்த்தத்துக்கு ஸம்வாதம் - 'ஒருநாள்' இத்யாதி. வண்ணாத்தான் - ரஜகன். வாட்டி - திருத்தி. 'ஏலுமாடையும், கீர்த்தியும்' என்கிற ஶப்தத்துக்கு ஹாவம் - 'ஏகஜாதீயங்கள்' இத்யாதி. அதாவது -

* பரிச்சதம் - உபகரணம்; அங்கமாயிருப்பது.

பீதாம்பரமும் அக்காதலே. ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவவண்ணத்தான், திருப்பரிவட்டங்களை அழகியதாக வாட்டிக்கொண்டுவந்து எம்பெருமானார்க்குக் காட்ட, போர த்ருப்தராய் அவனைப் பெருமாள்திருவடிகளிலே கைப்பிடித்துக்கொண்டுபுக்கு 'நாயன்தே! இவன் திருவரைக்கு ஈடாம்படி வாட்டின படி திருக்கண்சாத்தியருளவேணும்' என்று இவற்றைக் காட்டியருள, கண்டு உகந்தருளி உடையவரை அருள்பாடிட்டருளி, 'இவனுக்காக ரஜகன் நம்திறத்தில்செய்த குற்றம் பொறுத்தோம்' என்று திருவுள்ளமாயருளினார். [ஏலுமாடையுமஃதே]-ஏகஜாதீயங்கள் பலவாகை தவிர்ந்து, விஸஜாதீயங்களும் பலவாகத்தொடங்கிற்று. புருஷோத்தமலக்ஷணமான திருப்பீதாம்பரமும் அக்காதலே. இவர் நெடுங்காலங்கூடிப் பண்ணுகிற திருவாபரணமும் திருப்பரிவட்டமுமிறே. ''அறியாக்காலத்துள்ளே யடிமைக்கண்அன்புசெய்வித்து'' என்று இவருடைய காதல் ஸத்தாப்ரயுக்தமிறே. *''ஐஹாரஜதம்வாஸ:'' (மஹாரஜதம்வாஸம்). பொய்யில்பாடலாகையாலே, 'இதுகூடுமோ?' என்று ஸம்ஶயிக்கவேண்டா. [நண்ணிமூவுலகும் இத்யாதி] - விஶேஷஜ்ஞரேயன்றிக்கே, மூவுலகிலுள்ளாரும் வந்து கிட்டிக் கடல்கிளர்ந்தாற்போலே ஸ்துதிக்கிற கீர்த்தியும் அக்காதலே. 'இவர்காதலித்தபின்பு அந்யபரரும் அநந்யபரராய் ஏத்தாநின்றார்கள்' என்றாயிற்று அவன் நினைத்திருக்கிறது. இக்காதலுக்குக் கைதோட்டு க்ருஷிபண்ணினபடி சொல்லுகிறது மேல்; வ்ருத்தவான்களைக் காட்டிக்காணும இவரை வ்ருத்திபர- ராக்கிற்று. [காலசக்கரத்தான் எம்பிரான் எம்மான் கண்ணனுக்கு]-கையும் திருவாழியுமான அழகைக் காட்டி எனக்கு அநந்யபரத்வ மஹோபகாரத்தைப் பண்ணி, ''கழிவதோர்காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதல்'' என்னப்பண்ணின என்ஸ்வாமியான க்ருஷ்ணனுக்கு. [காலசக்கரம்] - பகலை இரவாக்க வல்லவனிறே. காலத்தைநடத்துகிற திருவாழி. காலவஶ்யதையைப்போக்கும் திருவாழி யென்னுதல்.

காதலானது ஏகஜாதீயங்களான திருவாபரணங்கள் பலவகையாகை தவிர்ந்து, விஸஜாதீயங்களான திருப்பரிவட்டம்கீர்த்திதொடக்கமானவை பலவாகத் தொடங்கிற்று என்றபடி. த்விதீயார்த்தம் - 'புருஷோத்தம' இத்யாதி. 'அஃதே' என்று - அவதரிக்கிறதென்? அல்லாதார்காதலும் இவையாகமாட்டாதோ? என்ன, 'நெடுங்காலம்' இத்யாதி. நெடுங்காலம் கூடிப் பண்ணினமைக்கு ப்ரமாணம் - 'அறியா' இத்யாதி. ஸ்பஷ்டோர்த்த:. பும்ஸத்வலக்ஷணமான திருப்பீதாம்பரஸத்பாவத்துக்கு பரமாணம - 'மஹாரஜதம்' இத்யாதி. இந்தஶ்ருதி - விக்ரஹத்ருஷ்டாந்தமாகிலும், இவ்விடத்தில் இவர்க்கு இப்படி விவக்ஷிதம். ப்ருஹதாரண்யகே கார்க்கிப்ரஶ்நே, ''தஸ்யஹைதஸ்ய புருஷஸ்ய ரூபம் யதா மஹாரஜதம் வாஸ:'' இதி. ஶ்லாக்யமான பீதாம்பரமுண்டு என்றபடி. இவர் காதல் ஆபரணமாகக்கூடுமோ? இது அர்த்தவாதமன்றோ? என்ன, 'பொய்யில்பாடல்' இத்யாதி. ப்ரயோஜநாந்தரபரர் ஸ்துதிக்கிற கீர்த்தியை அநந்யப்ரயோஜநரான தம்முடையகாதலென்னலாமோ? என்ன, 'இவர்காதலித்த' இத்யாதி. காதலித்த பின்பு - காதல்பண்ணினபின்பு. அதாவது - ''ஊரும்நாடும்'' இத்யாதிப்படியே தமமைப்போலே திருந்துகையாலே ப்ரயோஜநாந்தரபரரும் அநந்யப்ரயோஜநராய் ஏத்துகிறார்களென்றாயிற்று அவன் நினைத்திருக்கிறதென்றபடி. 'சக்கரம்' என்றதைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - 'இக்காதலுக்கு' இத்யாதி. இப்பதத்தை உட்கொண்டு சாடு - 'வ்ருத்தவான்களை' இத்யாதி. வ்ருத்தம் - நடைவடியும், வளையமும். அநந்யபரத்வமஹோபகார மேது? என்ன, 'கழிவதோர்' இத்யாதி; ''தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதல்'' இத்யாதி - அநாதியான வாத்ஸல்யத்தையுடையவனைக் கண்கள்நிறையும்படி அநுபவித்துக் காலம் கழியும்படி அத்விதீயமான ஆசையிலே நின்றவர்களுக்கும் அவன்பக்கல் வைத்த கண்கள் செம்பளிக்கைக்கு விரகுஉண்டோ? இத்யர்த்த:. திருவிருத்தம் தொண்ணூற்றேழாமபாட்டு, ''எழுவதும்மீண்டே'' என்கிற பாட்டு. காலத்தைநடத்துகிற திருவாழியென்று விவக்ஷித்து, திருவாழியோ காலத்தைநடத்துகிறது? என்ன,

* ,ஊஹாரஜதம்' என்பதே ப்ரஸித்தபாடமாகிலும், பகவத்விஷய ஸ்ரீகோஶங்களிலெல்லா 'ஐஹாரஜதம்' என்றே காண்கையாலே இதுவும் ஶ்ருதிக்குப்பாடாந்தரமென்பர்.

"நாவடியிஷ்யந்தி" (நார்ச்சயிஷ்யந்தி) என்கிற காலத்திலும் இருள்தருமாஞாலத்திலும் இருளை யோட்டி அருளார் திருச்சக்கரமாய், திருக்கையைத் தான் பிரியாதாற்போலே திருவடிகளை நான் பிரியாதபடியான ருசிஜநகமான திருவாழி. அவன்கையிலேநின்றே, இவன்காலிலே விழும் படி பண்ணுமவனிறே. (ரு)

---

## ஆறும்பாட்டு.

**காலசக்கரத்தோடு வெண்சங்கம்கையேந்தினாய்**
**ஞாலமுற்றும்உண்டுமிழ்ந்த நாராயணனே என்றென்று**
**ஓலமிட்டுநானழைத்தால் ஒன்றும்வாராயாகிலும்**
**கோலமாம்என்சென்னிக்கு உன்கமலமன்னகுரைகழலே.**

**ஆ.**—(காலசக்கரத்தொடு.) - ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாயிருந்த உன்னாலும் விஸ்லேஷிக்கவொண்ணாததொருபடி என்னோடே ஸம்ஸ்லேஷித்தருளினா யென்கிறார். ஆஸ்ரித விரோதி நிரஸநஸ்வபாவமான சங்கசக்ராதிதிவ்யாயுதோபேதனாய், காருண்யஸௌஹார்த்த ஸௌசீல்யாதி கல்யாணகுணவிசிஷ்டனாயிருந்த நீ இப்படி என்னோடு ஸம்ஸ்லேஷியாதொழிந் தாலும் உன்னுடைய ஸத்தையே எனக்கு ஸர்வபோக்யமாம்படி என்னைப் பண்ணியருளினாய் என்னவுமாம்.

ஒ—'ஆறும்பாட்டில், இப்படி ப்ரணயியாயிருந்துள்ள நீ என்னோடு ஸம்ஸ்லேஷித் திலேயேயாகிலும் உன்னுடைய ஸத்தையே எனக்குத் தாரகாதிகளெல்லாம் என்கிறார். தம் முடைய ப்ரணயித்வம் பேசுவானென்? என்னில்,—எம்பெருமானுடைய ப்ரணயித்வாதிசயம் தம்மையும் ப்ரணயியாம்படி பண்ணிற்றென்னும் கணக்காலே.

[காலசக்கரம் என்று தொடங்கி] - ப்ரதிபக்ஷநிரஸநமே ஸ்வபாவமான திருவாழியோடே திருநிறத்துக்குப் பகைத்தொடையான வெண்மையையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை அழகிய திருக்கையிலே ஏந்தியருளினவனே யென்று அழகைச் சொல்லியும் ஸ்வசேஷமான ஜகத்தையெல்லாம் உண்பது உமிழ்வதாய் அவற்றுக்குத் தத்தத்காலோசிதமான ரக்ஷைகளைப் பண்ணாநின்றுகொண்டு அவற்றின்பக்கலிலே மிகவும்வத்ஸலனானவனே யென்று நான் கூப்பிட்டு அழைத்தக்கால் வருகைக்கு ப்ரஸங்கமில்லையேயாகிலும். [கோலம் என்று தொடங்கி] - உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகள் எனக்குப் போக்யமாம்.

---

'பசலை' இத்யாதி. த்விதீயார்த்தத்துக்குபாவம்-'நார்ச்சயிஷ்யந்தி' இத்யாதி. "க்ஷௌஜமதுர்திம்விஷ்ணும்ஸவக்ஷஃ ஷராஸநீஷ்வூ। நாவடியிஷ்யந்திஜெதெத்ருயவாஷணோவஹதாஜநாஃ" இதி ஷஷ்டேம் சே- காலவஸ்யதையைப்போக்கு மென்றது - தேசதோஷத்தைப் போக்குமதுக்கும் உபலக்ஷணம்; 'இருள் தருமாஞாலத்திலும்' என்கையாலே. அருளார்திருச்சக்கரம் - அருள்மிக்க திருவாழி. திருவிருத்தம் முப்பத்து மூன்றும்பாட்டு- "தஷ, பச" என்றே இவன் ருசிஜநகனாவது? என்ன, அவன் திருக்கையிலே நிற்கிற அழகாலே யென்கிறார் - 'அவன்கையிலே' இத்யாதி. காலசக்காத்தான் - எம்பிரானெம்மான் - கண்ணனுக்கு- எனதுயிர் — கண்ணி, கனகச்சோதிதொடங்கி - பல்கலன்களும் - காதல், எலுமாடையுமஃதே, நண்ணி தொடங்கி, கீர்த்தியுமஃதே இத்யந்வயஃ. (சு)

ப.—அநந்தரம், ஆஶ்ரிதவிரோதிநிரஸநபரிகரத்தையுடைய ரக்ஷகனை நீ என் அபேக்ஷாநுரூபமாக முகங்காட்டிற்றில்லையேயாகிலும், உன்திருவடிகளில் ஸம்பந்தமே இத்தலையில் ஸத்தைக்கு அதிஶயகரமென்று, ப்ரணயியான அவன்பக்கல் தமக்கு உண்டான ப்ரணயத்தை அருளிச்செய்கிறார்.

காலன் - (விரோதிகளையழிக்கைக்குக்) காலனும்படியான ஸ்வபாவத்தையுடைய, சக்கரத்தொடு - திருவாழியோடே, வெள் சங்கு - (பரபாகரஸாவஹமான) வெளுப்பையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, அம் - (அவற்றுக்குஶோபாவஹமான) அழகிய, கை - திருக்கையிலே, ஏந்திநாய் - ஏந்தினவனாய், (இப்படி ரக்ஷணபரிகரவானாயிருக்கச்செய்தே), ஞாலம் - (ரக்ஷ்யமான) ஜகத்துக்கு (ஆபத்து வந்தால் அந்தப்ரளயாபத்தில் அகப்படாதபடி), முற்றும் - ஒன்றுமொழியாமல், உண்டு - தன்வயிற்றிலேவைத்து ரக்ஷித்து, உமிழ்ந்த - (அதுபோனவாறே வெளிநாடுகாண) உமிழ்ந்த, நாராயணனே - (நிருபாதிகபந்தத்தையுடைய) நாராயணனே! என்று என்று - என்று இந்தஸ்வபாவங்களைத் தனித்தனியேசொல்லி, ஓலமிட்டு - கூப்பிட்டு, நான் - (இருந்தவிடத்தில்நின்றும் எழுந்திருந்து வருகைக்கு யோக்யதையில்லாத)நான், அழைத்தால்- அழைத்தாலும், ஒன்றும் - ("அருகும்சுவடும்தெரிவுணரோம்" என்கிறபடியே நீமுகங்காட்டுகைக்கு ஈடாயிருப்பது) ஒரு அடையாளம் தெரியாதபடி, வாராயாகிலும் - வாராதிருந்தாயேயாகிலும், என்சென்னிக்கு - ("அன்பேபெருகும்மிக" என்கிற கணக்கிலே உன்னையொழியச் செல்லாத ஸத்தையையுடைய) என்தலைக்கு, உன் - (ஶேஷியான) உன்னுடைய, கமலம்அன்ன - கமலம்போலேநிரதிஶயபோக்யமான, குரை - (ஆஶ்ரிதரக்ஷணப்ரஸித்திதோற்றும்படி) த்வநிக்கிற வீரக்கழலையுடைய, கழல் - திருவடிகள், கோலம் ஆம் - அலங்காரமாய்க்கொண்டு தேஜஸ்கரமாகாநின்றது. உன்திருவடிகளிலே ப்ரேமம் எனக்கு ஸத்தாப்ரயுக்தமென்று கருத்து.

இ.—ஆறும்பாட்டில்,'இப்படி ப்ரணயியாயிருந்துள்ள நீ என்னைக் கிட்டாதொழிந்தாயே யாகிலும் உன்ஸத்தையே எனக்கு தாரகாதிகள்' என்கிறார். நான் உதவப்பெற்றிலேனேயாகிலும் என்ஸத்தை உனக்கு தாரகாதிகளானாற்போலே நீ வாராயாகிலும் உன்ஸத்தை எனக்கு தாரகாதிகள் என்கிறார். அவன் ப்ரணயித்வம் சொல்லுகிறதின்நடுவே தம் ப்ரணயித்வம் சொல்லுவானென்? என்னில்,—அவனுடைய ப்ரணயித்வாதிஶயம் தம்மையும் ப்ரணயியாக்கிற்று என்கைக்காக.

[காலசக்கரம் இத்யாதி]-ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுவான திருவாழியாழ்வானோடே திருநிறத்துக்குப் பரபாகமான வெண்மையையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் அவற்றையும் ஆபரணமாக்கும் கையிலே ஏந்தினவனே! ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்கு வெளுப்புப்போலேயாயிற்று, திருவாழிக்கு ப்ரதிகூலநிரஸநம் நிரூபகமாயிருக்கும்படி. [ஞாலமுற்றும் இத்யாதி] - ப்ரளயாபத்திலே வரையாதே திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்து ஸ்ருஷ்டிகாலத்திலே வெளிநாடுகாண உமிழ்ந்த. [நாராயணனே] - வரையாதே ரக்ஷிக்கைக்கும் ப்ரத்யுபகாரநிரபேக்ஷமாக ரக்ஷிக்கைக்கும் அடியான ப்ராப்தி இருந்தபடி சொல்லுகிறது. [என்று என்று] - கையும் ஆழ்வார்களுமான அழகையும் காலாநுகூலமான ஆபத்ஸகத்வத்தையும் இவையில்லாதபோதும் விடவொண்ணாத ப்ராப்தியையும் சொல்லி. வீப்ஸையாலே தனித்தனியே ஆழங்காற்பட்டபடி. [ஓலமிட்டு இத்யாதி] - நான் கூப்பிட்டு அழைத்தக்கால். பலஹீநனை நான் நீ இருந்த இருப்பை நிலைகுலைந்து வந்து முகங்காட்டும்படி கூப்பிட்டு, "காணவாராய்" என்று அழைத்தக்கால். [ஒன்றும் வாராயாகிலும்] - "கூ³ஶஸ்ஐெநிவஸதிஸமு த்³ராதஸிஹெஷ ஷ்ரூதி" என்று புறப்பட்டான் அங்கே இங்கே விட்டானென்று வருகைக்கு ப்ரஸங்கம் ஒன்

றும் இல்லையேயாகிலும். "நாராயணாய ஸ்ரீ தஸ்காரஹரயுதி:" என்னக்கடவ திறே. [கோலம் இத்யாதி] - ப்ராப்தமுமாய் போக்யமுமான திருவடிகள். "ஸிரஸாயாரயிஷ்யாமி நமேஸாஸ்திஹிவிஷ்யதி" என்னும் என் சென்னிக்கு போக்யமாம். தாரகாதிகளுக்கும் உபலக்ஷணம். குரை - பரப்பு; போக்யதாப்ரகர்ஷத்தைச் சொல்லுதல்; ஆபரணத்வநியைச் சொல்லுதல்.'வாராயாகிலும் கோலமாம்' என்பானென்? என்னில்,—'வாராதொழிகை கூடாது; கூடிலும் என்நினைவு இது' என்கிறார். என்னை இப்படியாக்கினாய் என்று கருத்து.

ஈடு.—ஆறும்பாட்டு. இப்படி ப்ரணயியா யிருந்துள்ள நீ என்னைக் கிட்டாதேயொழிந்தாயேயாகிலும் உன்ஸத்தையே எனக்கு தாரகாதிகள் என்கிறார். உனக்கு நான் உதவப்பெற்றிலேனாகிலும் என் ஸத்தை உனக்கு தாரகாதிகளானாற்போலே, நீ வாராயாகிலும் உன்ஸத்தை எனக்கு தாரகாதிகள் என்கிறார். அவன்ப்ரணயித்வம் சொல்லாநிற்க, நடுவே தம்முடைய ப்ரணயித்வம் சொல்லுவானேன்? என்னில்;—இரண்டுசேதநர் கூடிக்கலந்து பரிமாறாநின்றால், பிறக்கும் ரஸங்களும் இரண்டு தலையிலும் உண்டாயிருக்குமிறே; அதில், கீழெல்லாம் அவன்ப்ரணயித்வம் சொல்லிக்கொண்டு போந்தார்; இப்போது அவன்ப்ரணயித்வாதிஸயம் தம்மையும் ப்ரணயியாக்கிற்று என்கைக்காக.

[காலசக்கரம் இத்யாதி] - இதுவாயிற்று இவர் கூப்பிட்ட பாசுரந்தான். ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவாந் திருவாழியோடே கூட, ஸ்யாமளமான திருமேனிக்குப் பரபாகமான வெண்மையையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியிருக்கிற அழகிய திருக்கையிலே பூவேந்தினாற்போலே ஏந்தினவனே! ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்கு வெளுப்பு நிரூபகமானாற்போலேகாணும், திருவாழிக்கு ப்ரதிகூலநிரஸநமும் நிரூபகமாயிருக்கும்படி. [ஞாலமுற்றும் இத்யாதி]- இவற்றை ஆபரணமாகக்கொண்டு ஒப்பித்து, விபூதிநோவுபடத் தான் ஒப்பனையழியாதே யிருக்கையன்றிக்கே, ஆபத்ஸகனாயிருக்கும். ப்ரளயாபத்திலே வரையாதே திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்து, அதுகழிந்தவாறே வெளிநாடு காணப் புறப்பட விட்டு இப்படி வரையாதே ரக்ஷிக்கும். [நாராயணனே] - இப்படி வரையாதே ரக்ஷிக்கவும் 'இவன் நம்மை ரக்ஷித்தான்' என்று ப்ரத்யுபகாரம்தேடி நெஞ்சாறல்படவும் வேண்டாதபடி ப்ராப்தி இருந்தபடி. 'மாதா நம்மை

---

ஆறும்பாட்டு - 'காலசக்கரத்து' இத்யாதி. கீழிற்பாட்டுக்களிற்சொன்ன ப்ரணயித்வத்தை அநுவதியாநின்றுகொண்டு, 'வாராயாகிலும் கோலமாம் என்சென்னிக்கு' என்றதத்தால் பலிதத்தை அருளிச்செய்கிறார் - 'இப்படி' இத்யாதி. உக்தார்த்தத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - 'உனக்கு' இத்யாதி. சங்கை - 'அவன் ப்ரணயித்வம்' இத்யாதி. பரிஹாரம் - 'இரண்டுசேதநர்' இத்யாதி. ஆனால், தம்முடைய ப்ரணயித்வத்தை முந்துறச்சொல்லவொண்ணாதோ? என்ன, 'அதில் கீழ்' இத்யாதி. 'ப்ரணயியாக்கிற்றுஎன்கைக்காக' என்றஅநந்தரம், 'தம்முடையப்ரணயித்வம் சொல்லுகிறார்' என்று ஸேஷம்.

'நான் அழைத்தால்' என்னுமளவுக்கும் ஸாவம் - 'இதுவாயிற்று' இத்யாதி. இதுவாயிற்றென்றது - 'ஞாலம்' இத்யாதி மாத்ரமேயன்று; இதுதொடங்கிக் கூப்பிட்ட பாசுரமாயிற்று என்றபடி. இவ்விடத்திலே, 'காலன்' என்றதுக்கு - 'ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவாம்' என்றது - மேலே 'வாராய்' என்கையாலே, 'வரும்போது ப்ரதிபந்தக முண்டு' என்று சொல்லாமைக்காக. 'வெண்சங்கு' என்றாற்போலே திருவாழிக்கும் ஒரு நிரூபக மிட்டுச் சொல்லாதே, 'காலசக்கரம்' என்பானென்? என்ன, 'ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்கு' இத்யாதி. கீழோடேகூட்டி இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம் - 'இவற்றை' இத்யாதி. 'முற்றும்' என்கையாலே 'வரையாதே' என்கிறது. வரையாதே - வரம்பிடாதே. 'நாராயணன்' என்று ப்ராப்திசொன்னதுக்கு இரண்டு ஸாவம் - இப்படி ரக்ஷிக்கைக்கீடான ப்ராப்தியென்னுதல், இப்படிசெய்திலனாகிலும் விடவொண்ணாத ப்ராப்தியென்னுதல். மூந்தினத்தை அருளிச்செய்கிறார் -'இப்படி வரையாதே' இத்யாதி. நெஞ்சாறல் - மநஸ்தாபம். ப்ராப்தியுண்டானால் நெஞ்சாறல் படவேண்டாவோ? என்ன, 'மாதா நம்மை' இத்யாதி. அப்படியே-தாயைக்

வயிற்றிலே ரக்ஷித்தாள், என்செய்வோம் நாம் இவளுக்கு ?' என்று நெஞ்சாறல்படுவாரில்லையிறே ; ப்ராப்தியிறே அதுக்குஅடி; அப்படியேயிறே அவனும் * தாயிருக்கும்வண்ணமே உம்மைத்தன்வயிற்றிருத்தி உய்யக்கொண்டவனிறே. [என்றுஎன்று]-கையும்ஆழ்வார்களுமான அழகையும், காலாநுகூலமான ஆபத்ஸகத்வத்தையும், இவையில்லாவிடிலும் விடவோண்ணாத ப்ராப்தியையும் சொல்லி. வீப்ஸையாலே - தனித்தனியே ஆழங்காற்பட்டபடி. [ஓலமிட்டு நான் அழைத்தால்] - பலஹீநனான நான் கூப்பிட்டு அழைத்தக்கால். பரமபதத்திலே இருந்தாலும் நிலை குலைந்து வர வேண்டும்படி பெருமிடறுசெய்து கூப்பிட்டால். [ஒன்றும்வாராயாகிலும்]-"குஶஸ்தலேநிவஸதி ஸப்ராதரிஹைஷ்யதி" (குஶஸ்தலேநிவஸதிஸப்ராதரிஹைஷ்யதி) என்கிறபடியே அங்கு நின்றும் புறப்பட்டான், இங்கே வந்துவிட்டான் என்று வருகைக்கு ப்ரஸங்கமில்லையேயாகிலும். "நாமக்ராஹஞ்ச நாதஸ்ய ஶீதலஃ காஹளத்வநிஃ" (நாமக்ராஹஞ்சநாதஸ்யஶீதலஃகாஹளத்வநிஃ) என்னக்கடவதிறே. [கோலமாம் என்சென்னிக்கு] - "ஶிரஸா தாரயிஷ்யாமி ந மே ஶாந்திர் பவிஷ்யதி" (ஶிரஸாதாரயிஷ்யாமிநமேஶாந்திர்ப்பவிஷ்யதி) என்றிருக்கிற என்சென்னிக்குக் கோலமாம். [உன்கமலமன்ன] - 'செவ்விப்பூச் சூடவேணும்' என்று ஆசைப்படுவாரைப்போலே. [குரைகழலே] - குரையென்று பரப்பாய், அத்தாலே போக்யதா ப்ரகர்ஷத்தைச் சொல்லிற்றுதல்; ஆபரணத்வநியைச் சொல்லிற்றுதல். "வாராயாகிலும் கோலமாம்" என்பானேன்? என்னில்,-வாராதொழியக்கூடாது, கூடாததுகூடிலும் என் நினைவு இது வென்கிறார். என்னை அடியிலே இப்படியாக்கினையே என்று கருத்து. அடிவிடில், "நின்னலாலிலேன்காண்" என்பரே. (சு)

*போலே. தாய்போலே ரக்ஷிக்குமோ? என்ன, 'தாயிருக்கும்' இத்யாதி. பரஜையை வயிற்றில் வைத்துக் கொண்டிருக்கும் தாயைப்போலே உங்களைத் தன்வயிற்றிலே வைத்து ரக்ஷித்தவனென்றபடி. திருமொழி - பதினோராம்பத்து ஆறாந்திருமொழி ஆறாம்பாட்டு, "பேயிருக்கும்" இத்யாதி. "நாராயணன்" என்றதுக்கு இரண்டாம்பாவம் - 'இவையில்லாவிடிலும்' இத்யாதி. முந்தின தாத்பர்யம் - 'ஞாலம்' இத்யாதிக்கு சேஷமாக. இரண்டாவது - 'என்று' என்கிறதுக்கு ஶேஷமாக. 'என்று' என்கிறமாத்ரத்துக்கு பாவம் -'கையும்' இத்யாதி. வீப்ஸைக்கு பாவம் - 'வீப்ஸையால்' இத்யாதி. பாலனுயேழுலகிலே - விஶ்லேஷவ்யஸநம் சொல்லுகையாலே 'பலஹீநனான நான்' என்றது. ஓலமிட்டு - பெருமிடறுசெய்துகூப்பிட்டு. 'ஓலமிட்டு' என்றதுக்கு பாவம் -'பரமபதத்திலே' இத்யாதி. 'ஒன்றும்' என்று விஶேஷித்ததுக்கு பாவம்-'குஶஸ்தலே' இத்யாதி. "உபப்லாவ்யாதிஹ க்ஷத்தா உபயாதோ ஜநார்த்தநஃ" இதி பூர்வார்த்தம். உத்யோகபர்வணி த்ருதராஷ்ட்ரோ விதுரம்ப்ரதி. ஒன்றும்வாராயாகிலும் - நீ வருகைக்கு ஸூசகமாயிருப்பதொரு அடையாளமொன்றும் உண்டாம்படி வாராயாகிலும் என்றபடி. பின்னையும் ஓரடையாளம்-'நாமக்ராஹஞ்ச' இத்யாதி. நாதஸ்ய நாமக்ராஹம்யதாபவதி ததாஶீதலஃ காஹலத்வநிஃ - க்ருஷ்ணனுடைய நாமக்ராஹத்தை யுடைத்தாயிருக்குமதொருபடியான காஹளத்வநியானது - திருச்சின்னவோசையானது, சீதளமாயிருக்கு மென்றபடி. இக்காஹளத்வநி அவன்வரவுக்கு ஹேதுவாயிருக்குமே, அது இல்லையேயாகிலு மென்றபடி. நாமக்ராஹம் - நாமக்ரஹணம். 'என்சென்னிக்கு' என்றதுக்கு பாவம் - 'ஶிரஸா' இத்யாதி. கமலஶப்தஸ்வாரஸ்யம் - 'செவ்வி' இத்யாதி. குரை - பரப்பும், த்வநியும். விரோதத்தைஶங்கித்துப் பரிஹரிக்கிறார் - 'வாராயாகிலும்' இத்யாதி. உமக்கு இப்படி ருசியைப்பிறப்பித்தார் ஆர்? என்ன, 'என்னை' இத்யாதி. 'அடியிலே' என்று சாடு. ஆதியிலே, திருவடிகளிலே யென்றும். ஆகையாலே, இது ஸத்தாப்ரயுக்தமென்கிறார் - 'அடிவிடில்' இத்யாதி. காலசக்கரத்தொடு இத்யாரப்ய, ஒன்றும் வாராயாகிலும் - உன்கமலமன்ன குரைகழல் - என்சென்னிக்கு - கோலமாமித்யந்வயஃ.* (சு)

# ஏழாம்பாட்டு.

குரைகழல்கள்நீட்டி மண்கொண்டகோலவாமனு!
குரைகழல்கைகூப்புவார்கள் கூடநின்றமாயனே!
விரைகொள்பூவும்நீரும்கொண்டு ஏத்தமாட்டேனேலும் உன்
உரைகொள்சோதித்திருவுருவம் என்னதாவிமேலதே.

**ஆ.**—(குரைகழல்கள்.) ப்ரணதஜநபரித்ராணார்த்தமாக அவதீர்ணனாய், அத்யத்புத திவ்யசேஷ்டிதனாய், பக்த்யேகஸமதிகம்யனான உன்திருவடிகளிலே அதிசீதள புண்யகந்தபுஷ்ப தோயாதிகளைக்கொண்டு நான் சிலவ்ருத்திகளைப்பண்ணினால் அவை உனக்கு போக்யமாகையன்றிக்கே, நான் ஒரு வ்ருத்திபண்ணாதிருக்கச்செய்தேயும் வாங்மநஸாபரிச்சேத்ய தேஜோமய திவ்யரூபனான உனக்கு என்னுடைய ஆத்மஸத்தையே தாரகமும் போக்யமுமாயிற்று என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், ஸ்நேஹமும் ஸ்நேஹாநுரூபவ்ருத்திகளு மின்றிக்கேயிருக்கிலும் என்னுடைய ஸத்தையே உனக்கு ஜீவநஹேது வாகாநின்றது ; ஒரு ப்ரணயித்வம் இருக்கும்படியே ! என்று விஸ்மிதராகிறார்

[குரைகழல்கள் என்று தொடங்கி.] - குரைகழல்கள் - பெருத்த திருவடிகள்; த்வநிக்கிற என்றுமாம். [குரைகழல் என்று தொடங்கி] - அல்பாபிமுக்யம்பண்ணினவருக்கும் ப்ராபிக்கலாம்படிநின்ற ஆஶ்சர்யபூதனே! [விரை இத்யாதி] - நல்லஉபஹாரங்களைக்கொண்டு பரிசர்யைபண்ணமாட்டேனேயாகிலும் பேச்சுக்கு நிலமல்லாதபடியிருக்கிற தேஜோரூபமான உன்னுடைய திருவடிவுக்கு என்னுடைய ஆத்மஸத்தையே தாரகமாயிற்று ; இது என்ன ஆஶ்சர்யம் !

**ப.**—அநந்தரம், நான்அகிஞ்சித்கரனாயிருக்கிலும் அநந்யார்ஹமாக்கி அடிமைகொள்ளும் ஸ்வபாவத்தையுடைய உன் வடிவு என்ஆத்மாவை விஷயீகரித்திராநின்றது என்கிறார்.

குரை-(அநந்யார்ஹதாபாதநப்ரஸித்திக்குஇட்ட) வீரக்கழலையுடைய, கழல்கள்-திருவடிகளை, நீட்டி - நிமிர்த்து, மண் - ஜகத்தை, கொண்ட - அளந்துகொண்ட, கோலம் - வடிவழகையுடைய, வாமனா-வாமநனாய், ("[illegible]" என்கிறபடியே), குரைகழல் - அத்திருவடிகளை உத்தேசித்து, கைகூப்புவார்கள்-ஓர்அஞ்சலிபந்தம்பண்ணினார், கூட - (தன்னையே) ப்ராபிக்கும்படி, நின்ற - (உபாயமும்உபேயமுமாய்) நின்ற, மாயனே - ஆஶ்சர்யபூதனே! விரைகொள் - பரிமளப்ரசுரமான, பூவும் - புஷ்பத்தையும், நீரும் - (பாத்யாதி) ஜலத்தையும், கொண்டு - கொண்டு, ஏத்தமாட்டேனேலும் - (உன்னையாராதிக்கைக்குஉறுப்பாக ஆபிமுக்யார்த்த) ஸ்தோத்ரம் பண்ண ஶக்தனல்லேனாகிலும், உரை - வேதாந்தவசநங்களால், கொள் - அபரிச்சேத்யமான, சோதி - தேஜஸ்ஸையுடைய, உன் - உன்னுடைய, திருஉருவம் - திருமேனியானது, என்னது ஆவிமேலது - என் ஆத்மாவின்மேலே அபிநிவிஷ்டமாயிராநின்றது.

**இ.**—ஏழாம்பாட்டில், கீழ்ச்சொன்ன ப்ரேமமும் தததநுகூலப்ரவ்ருத்திகளு மின்றிக்கே யிருக்கிலும் என்ஸத்தையே உனக்கு ஜீவநஹேது வாவதே! என்கிறார்.

[குரைகழல்கள்] - மிக்க போக்யதையையுடைய என்னுதல்; ஆபரணத்வநி என்னுதல். [நீட்டி மண்கொண்ட] - "மண்முழுதும் அகப்படுத்து" என்கிறபடியே பூமியை அடங்க

உள்ளேயாம்படி. [கோலவாமனு] - இந்த்ரனுக்கு ராஜ்யம் கூறுபட்டாற்போலே தமக்கு அழகு கூறுபட்டபடி. கீழ் ப்ராப்தியைச் சொல்லிற்றாய், அஞ்ச மாத்ரஸாத்யம் என்கிறது. [குரை இத்யாதி] - குரைகழலிலே கைகூப்புவார்கள் உன்னைக் கூட என்னுதல்; உன்னைக் கை கூப்புவார் குரைகழலைக் கூட நின்ற என்னுதல். திருவடிகள் அஞ்சலிக்கு விஷயமாய் அஞ்சலி ஸாத்யமுமாயிறே இருப்பது. [மாயனே]-அஞ்சலிமாத்ரஸாத்யனான ஆஶ்சர்யம். ஸௌரிபோக்ய மான விஷயம் அஞ்சலிமாத்ரஸாத்யமாவது ஆஶ்சர்யமிறே. [விரைகொள் இத்யாதி] - இப்படி ஸுலபனாய் அஞ்சலிமாத்ரஸாத்யனானால் புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு அடிமைசெய்கை யிறே ப்ராப்தம், அது செய்திலேனாகிலும். பரிமளத்தையுடைத்தான நீரும் பரிமளத்தையுடைத் தான பூவும். "ஹிரண்ந்தவஸாயாம்க்ருத்ஸ்நாம்ஹிஶீத்நவாரிணா". [உன் உரைகொள் இத் யாதி] - உரைகொள்ளுகையாவது - காண ஆசைப்பட்டு 'அது அது' என்று வாய்புலற்றும்படி யாயிருக்கை. "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:। ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி;" பேச்சுக்கு அவிஷய மென்றுமாம். மாற்றும் உரையும் அற்ற திருமேனி யென்னவுமாம்;"சுட்டுரைத்த நன்பொன்" என்னக்கடவதிறே. [என்னதாவி மேலதே]-உன்னு டைய திருமேனி என்னுடைய ஸத்தையின் மேலது. ஸௌரிபோக்யமான வடிவுக்கும் தாரகாதி கள் என் ஆத்மஸத்தை யாவதே!

ஈடு.—ஏழாம்பாட்டு. கீழ்ச்சொன்ன ப்ரேமமும் ததநுகூலமான வ்ருத்திகளு மின்றிக் கேயிருக்கிலும் என்ஸத்தையே உனக்கு ஜீவநஹேதுவாவதே! என்கிறார்.

[குரைகழல்கள்நீட்டி]-"மண்முழுதுமகப்படுத்துநின்ற" என்கிறபடியே, பூமிப்பரப்படை யத் திருவடிகளுக்குள்ளேயாம்படி திருவடிகளை நிமிர்த்து. 'குரை' என்பது - பரப்பும், ஓசையும். [மண்கொண்டகோலவாமனு] - மண்கொண்டபின்பும் வாமநவேஷம் இவர்திருவுள்ளத்திலே ஊற்றிருந்தபடி. இந்த்ரனுக்கு ராஜ்யங்கொடுக்கையன்றிக்கே, தம்மையநுபவிப்பிக்கைக்காக அவ் வடிவுகொண்டா னென்றிருக்கிறார். கீழ் - ப்ராப்தியைச் சொல்லிற்றாய், அஞ்சலிமாத்ரஸாத்ய மே ன்கிறது - மேல். [குரைகழல்கைகூப்புவார்கள்]-உன்திருவடிகளிலே அஞ்சலிபண்ணினவர்கள்,உ ன்னைக் கூட நின்ற என்னுதல்; உன்னைக் கைகூப்புவார்கள் குரைகழல்கள் கூட நின்ற மாய னென்னுதல்; திருவடிகள்தான் அஞ்சலிஸாத்யமுமாய் அஞ்சலிக்கு விஷயமுமாயிறே இருப்பது. இந்த்ரனுக்கு ராஜ்யம் கூறுபட்டாற்போலே இவர்க்கும் அத்திருவடிகளிலழகு கூறுபட்டது. அவ

---

ஏழாம்பாட்டு - 'குரைகழல்கள்' இத்யாதி. கீழிற்பாட்டில் "ஓலமிட்டோனழைத்தால்" என்றத் தைக் கடாக்ஷித்து 'கீழ்ச்சொன்ன ப்ரேமமும்' என்கிறார். 'விரைகொள்பூ' இத்யாரப்ய 'எத்தமாட்டேனேலும்' என்றத்தைக் கடாக்ஷித்து, 'ததநுகூலமான' இத்யாதி. வ்ருத்தியில்லை யென்றபோதே ப்ரேமமுமில்லை யென்று அர்த்தாத் ஸித்தம்.

'குரை' என்றதுக்கு பாவம் - 'மண்முழுதும்' இத்யாதி. பூமிமுதலான ஊர்த்வலோகங்களையும் அளந்து ஸ்வாதீநமாக்கிக்கொண்டு க்ருதக்ருத்யனாய்நின்ற என்ஸ்வாமி என்றபடி. திருநெடுந்தாண்டகம் - ஐந்தாம்பாட்டு, "ஒண்மிதியில்" இத்யாதி. நீட்டி - பரப்பி; அத்தை 'நிமிர்த்து' என்கிறார். த்ரிவிக்ரமனா யன்றோ பூமியளந்தது? 'வாமனன்' என்கிறதென்? என்ன, 'மண்கொண்டபின்பும்' இத்யாதி. 'கோலம்' என்று விசேஷித்ததுக்கு பாவம் - 'இந்த்ரனுக்கு' இத்யாதி 'கீழ் ப்ராப்தியைச்சொல்லிற்றாய்' இதி - 'மண்கொண்ட' என்று திருவடிகளை நீட்டி லோகத்தையெல்லாம் காற்கீழேயிட்டுக்கொள்ளுகையாலே ப்ராப்தியைச் சொல்லிற்று என்றபடி. வ்யுத்க்ரமேண அர்த்தத்வயபலிதம் - 'திருவடிகள்தான்' இத்யாதி. 'குரை' என்று விசேஷித்ததுக்கு பாவம்-'இந்த்ரனுக்கு' இத்யாதி. 'குரை'என்று - பரப்பாய், அழகால்வந்த பரப்பைச் சொல் லுகையாலே, அழகு கூறுபட்டதென்றபடி. கூறு - பாகம். விவரணம் - 'அவனுக்கு' இத்யாதி. பூமியை

னுக்கு ஸாதநமானது இவர்க்கு ஸாத்யமாயிற்று.[மாயனே] - ஓரஞ்சலிமாத்ரத்தாலே த்வத்ப்ராப்தி யாம்படி யிருப்பதே! இதுஎன்ன ஆஶ்சர்யந்தான்! என்கிறார். [விரை இத்யாதி]-ஓரஞ்சலிமாத்ரத்தாலே உன்னை ப்ராபிக்கலாம்படி நீ இருந்தால், புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு அடிமைசெய்ய விறே சேதநனுக்கில் ப்ராப்தம்; அப்படிசெய்யப்பெற்றிலேனேயாகிலும். பரிமளத்தையுடைத்தான பூவையும் நீரையுங் கொண்டு, "ஸிஞ்சந்துவஸுதாம் க்ருத்ஸ்நாம் ஹிமஶீதேந வாரிணா" (ஸிஞ்சந்துவஸுதாம்க்ருத்ஸ்நாம்ஹிமஶீதேநவாரிணா) என்கிறபடியே வகுத்தஅடிமை செய்யமாட்டிற்றிலேனேயாகிலும். [உன்உரைகொள்சோதித்திருவுருவம்]—உரைகொள்ளுகையாவது - 'அது அது' என்று வாய்புலற்றும்படியாயிருக்கை; "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா: । ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி" (ராமோராமோராம இதிப்ரஜாநாமபவங்கதா:। ராமபூதம்ஜகதபூத்ராமேராஜ்யம்ப்ரஶாஸதி) என்னுநிற்பர்களிறே. அன்றிக்கே, பேச்சுக்கு அவிஷயமான திருமேனி யென்னுதல்; மாற்றும் உரையும் அற்ற திருமேனி யென்னுதல்: "சுட்டுரைத்தநன் பொன்னுன்திருமேனியொளியொவ்வாது" என்னக்கடவதிறே. [என்னதுஆவிமேலதே]-இப்படி விலக்ஷணமான உன்திருமேனி என்ஸத்தையின்மேலது. ஸௌரிபோக்யமான வடிவுக்கு தாரகாதிகள் என்ஆத்மஸத்தையாவதே! "கலியர் சோற்றின்மேலே மனம்"என்னுமாபோலே. இவர்தாம் "அஹமந்நமஹமந்நமஹமந்நம்" (அஹமந்நமஹமந்நமஹமந்நம்) என்றிருக்குமவரிறே. (எ)

## எட்டாம்பாட்டு.

என்னதாவிமேலையாய் ஏர்கொளேழுலகமும்
துன்னிமுற்றுமாகிநின்ற சோதிஞானமூர்த்தியாய்
உன்னதென்னதாவியும் என்னதுன்னதாவியும்
இன்னவண்ணமேநின்றாய் என்றுரைக்கவல்லேனே.

---

யளந்துகொண்டு அவனுக்கு ஸாதித்துக்கொடுக்கையாலே அவனுக்கு ஸாதநமான திருவடிகள் இவர்க்கு ஸாத்யமாயிற்று. என்றபடி. 'மாயன்' என்றதுக்கு ஹாவம் -'ஓரஞ்சலி' இத்யாதி. கீழ்ப்பதத்திற்சொன்ன குணத்தைத் தளமாக்கிக்கொண்டு மேலுக்கு அவதாரிகை - 'ஓரஞ்சலிமாத்ரத்தாலே' இத்யாதி. ஶப்தார்த்தகதநபூர்வகமாக ஏத்தும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் - 'பரிமளத்தை' இத்யாதி. 'விரைகொள்' என்றது - நீருக்கும் விசேஷணம். 'விரை' என்று பூவோடும் நீரோடும் விசேஷிக்கையாலே 'ஸிஞ்சந்துவஸுதாம் க்ருத்ஸ்நாம்' என்கிறார். "ததோ ஹ்யபிஷேக்ஷ்யமாணம் ..." இத்யுத்தரார்த்தம்; யுத்தகாண்டே ராமம்பரத்வாஜாஶ்ரமகதம்ஶ்ருத்வா ஶத்ருக்ந:. வகுத்த - ப்ராப்தமான. 'உரைகொள்'-கொள்கை - உடைத்தாகை; ஶப்தத்தையுடைத்தாயிருக்கை. த்விதீயார்த்தத்துக்கு, ஶப்தத்தை ஜயித்திருக்கையென்றாய், பேச்சுக்கு அவிஷய மென்றபடி. த்ருதீயார்த்தத்துக்கும், கொள்கை - வெல்லுகையாய், உரையை வென்றிருக்கிற வென்றாய், உரையற்ற என்றபடி. இப்படி வாய்புலற்றினாருண்டோ? என்ன, 'ராமோ ராம:' இத்யாதி. மாற்று - வர்ணம். உரை - கல்லிலேஉரைக்கை. உக்தார்த்தஸ்ய ப்ரமாணம் - 'சுட்டுரைத்த' இத்யாதி. விவரணம் - 'ஸௌரி' இத்யாதி. "ஸூரயஸ்ஸதா பஶ்யந்தி" இத்யாதியைப் பற்ற, 'ஸௌரிபோக்யமான' என்றது. 'ஆவிமேலது' என்றால், தாரகாதிகள் ஆத்மஸத்தையென்று காட்டுமோ? என்ன, 'கலியர்' இத்யாதி. கலியர் - பசியர். இவர்தாம் அவனுக்கு தாரகமோ? என்ன, 'இவர்தாம்' இத்யாதி. சோதித்திருவுருவம் தேஜஸ்ஸையுடைய திருமேனி. என்னதாவிமேலது - என் ஆத்மாவின்மேலே அபிநிவிஷ்டமாயிராநின்றது குரைகழல்கள்நீட்டி இத்யாதியாலே - சேஷித்வப்ரதாநமான ப்ரணவார்த்தமும், குரைகழல்கைகூப்புவானென்று - நமஶ்ஶப்தார்த்தமும், கூடவென்று - நாராயண ஶப்தார்த்தமும் சொல்லுகிறது ; ஆக திருமந்த்ரார்த்தம் சொல்லுகிறது. க்ரமேண அந்வய:. (எ)

**ஆ.**—(என்னதாவி.) நியந்த்ருதயா ஸர்வலோகாந்த:ப்ரவிஷ்டனாய், அவாப்தஸமஸ்த காமனாயிருந்துவைத்து மதேகதாரகனாயிருந்தவனே! என்னுடையஆத்மா நீ இட்டவழக்காய் உன்னுடைய திவ்யாத்மஸ்வரூபமும் நான் இட்டவழக்காம்படியாக என்னுடனே கலந்தருளினாயென்று தம்மோடே கலந்தருளின படியைப் பேசி, அது ஒன்றும் போராமையாலே பின்னையும், இன்னபடி என்னோடே கலந்தருளினாய் என்று ஒன்றும் சொல்ல நிலமல்ல என்கிறார்.

**ஒ.**—எட்டாம்பாட்டில், ஒருவர்க்கு ஒருவராலே ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திகளாம்படி எம்பெருமானுக்கும் தமக்கும் விளைந்த ஸம்ஶ்லேஷம் பேச்சுக்கு நிலமன்று என்கிறார்

[என்னதாவி என்று தொடங்கி.] - என்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காக எனக்குத் தப்பவொண்ணாதபடி ஸர்வகதனாய், ததர்த்தமாக அறிவையே ஸ்வரூபமாகவுடையவனே! என்னோட்டை ஸம்ஶ்லேஷஜநித ஹர்ஷப்ரகர்ஷத்தாலே புதுக்கணித்த விபூதியை யுடையையாய் அவற்றுக்குள்ளே பூர்ணமாய்க்கொண்டு வ்யாப்தமான ஜ்ஞாநத்தை ஸ்வரூபமாகவுடையவனே! என்றுமாம். [உன்னதென்னதாவியும் என்று தொடங்கி] - என் ஆத்மாவும் நீ இட்ட வழக்கு; உன்னுடைய திவ்யாத்மஸ்வரூபமும் நான் இட்ட வழக்காயிற்று. [இன்னவண்ணமே நின்றாயென்றுரைக்க வல்லேனே]- நீயே நோக்கவந்து நிற்கிறபடி இன்னபடி நின்றாயென்று சொல்ல நிலமன்று.

**ப.**—அநந்தரம், எனக்காக ஸர்வலோகத்தையும் வ்யாபித்து என்னை அங்கீகரித்த உன்படியைச் சொல்லப்போமோ? என்கிறார்.

என்னது ஆவிமேலையாய் - என் ஆத்மவஸ்துவின்மேலே அபிநிவிஷ்டனாய்க்கொண்டு, (உனக்கு வ்யாப்யபூதமான), ஏர்கொள் - ஔஜ்ஜ்வல்யத்தை ஸ்வபாவமாகவுடைய, ஏழ் உலகமும் - ஸப்தவிதமான ஸர்வலோகங்களிலும், துன்னி - பூர்ணமாக வ்யாபித்து, முற்றும் - ஸமஸ்தபதார்த்தங்களும், ஆகி - (தனக்கு) ப்ரகாரமாம்படியாய், நின்ற - நின்ற, சோதி - ஸ்வயம்ஜ்யோதீரூபமான, ஞானம் - ஜ்ஞாநத்தை, மூர்த்தியாய் - ஸ்வரூபமாகவுடையவனே! என்னது ஆவி - என் ஆத்மஸ்வரூபம், உன்னதும் - உனது போக்யமும், உன்னது ஆவி - உன் திவ்யாத்மஸ்வரூபம், என்னதும் - எனதுபோக்யமுமான, இன்னவண்ணமே - இப்படியிலே, நின்றாய் - நின்றாய், என்று உரைக்க வல்லேனே - இதுக்கு என்னபாசுரமிட்டுச்சொல்லுவேன்? என்று உபயாநுராகமும் சொல்லிற்றாயிற்று.

**இ.**—எட்டாம்பாட்டில், ஒருவரையொழிய ஒருவருக்குச் சொல்லாதபடி பிறந்த கலவி பேச்சுக்கு நிலமன்று என்கிறார்.

[என்னதாவி மேலையாய்] - என்னைப்பெறுகைக்கு உண்டான அபிநிவேஶத்தாலே ஒருவனைப்பிடிக்க நினைத்தவன் ஒரூரை வளையுமாபோலே ஸர்வகதனானானென்னுதல்; இவரைப் பெற்ற ப்ரியத்தாலே வ்யாப்தியிலேயும் ஒரு பௌஷ்கல்ய முண்டாயிற்று என்னுதல். இவரைப்பெறுகையாலே விபூதித்வயமும் புதுக்கணித்தது. [துன்னி முற்று மாகிநின்ற] - எங்குமொக்க நெருங்கி வ்யாபித்துநின்ற நிலை; ஜாதி, வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலே. விஶததமமான ஜ்ஞாநஸ்வரூபனானவனே! என்னுடைய ஆத்மா நீயிட்டவழக்காய் உன்னுடைய திவ்யாத்மஸ்வரூபம் நானிட்ட வழக்காம்படி யானோம். 'ஸ்வதந்த்ரன் இட்ட வழக்காவது என்?' என்னில்,—'கூடில் கூடுவது அது; இது விசாரவிஷயமன்று' என்று அருளிச்செய்தார் ஆளவந்தார். பாபம் மேலிட்டபோது, அல்லேன் என்னும் இவன்; அவன் தன்னைச் சிலர்க்கு ஆக்குவோமென்றால், நிவாரகரில்லை; நிலைநிற்பது அதுவே. [இன்னவண்ணமே

நின்றாய்] - இப்படியே நின்றாய். [என்று உரைக்க வல்லேனே] - இது என்றால் பாசுரமிட்டுச் சொல்லாலயோ இருக்கிறது?

ஈடு.—எட்டாம்பாட்டு. ஒருவரையொழிய ஒருவர்க்குச் செல்லாதபடி பிறந்த கலவி, பேச்சுக்கு நிலமன்று என்கிறார்.

[என்னதாவிமேலையாய்] - என்ஸத்தையைப்பெற்று அத்தால்வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தையுடையையாய் என்னுதல்; என்னைப்பெறவேணும் என்னும் அபிநிவேஶத்தை யுடையையாய் என்னுதல். என்னதாவிமேலையா யென்று ஸம்போதநமாதல். [ஏர்கோள் இத்யாதி] - இவரைப்பெற்ற ப்ரீதியாலே வ்யாப்தியும் புதுக்கணித்த தென்னுதல்; ஒருவனைப்பிடிக்க நினைத்து அவன்பக்கலுண்டான அபிநிவேஶத்தாலே ஊரைவளைவாரைப்போலே, தம்மையகப்படுத்துகைக்காக வ்யாப்தனானன் என்று இருக்கிறாராதல். [ஏர்கோள் ஏழுலகமும்]-இவரோடேவந்துகலந்த பின்பு ஜகத்துக்குப் பிறந்த புதுக்கணிப்பு. "உண்டியுடல்காட்டும்" என்னுமாபோலே, ஶரீரி பூர்ணனானவாறே ஶரீரமும் புதுக்கணிக்குமிறே; ஜகச்சரீரியிறே அவன். [துன்னிமுற்றுமாகிநின்ற]- ஜாதி, வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலே குறைவற வ்யாபித்துநின்றபடி. [சோதிஞானமூர்த்தியாய்]-ஜ்யோதீரூபமான ஜ்ஞாநத்தை ஸ்வரூபமாகவுடையவனே! [உன்னதென்னதாவியும் என்னதுன்னதாவியும்] - என்னுடைய ஆவி உன்னது, உன்னுடைய ஆவி என்னது. என் ஸ்வரூபம் நீயிட்ட வழக்கு, உன்ஸ்வரூபம் நானிட்ட வழக்கு. இவ்விடத்தை ஆளவந்தார் அருளிச்செய்யாநிற்கச்செய்தே இருந்த முதலிகளிலே சிலர், 'இவ்வாத்மாவின் ஸ்வரூபம் அவனிட்ட வழக்கென்றால் கூடுமே; அவன்ஸ்வரூபம் இவனிட்டவழக்காகையாவது என்?' என்றுகேட்க, இவன் 'தன்னை அவனுக்காக்குவன்' என்றஅன்று சர்மம் தகையவுங்கூடும்; ஸர்வேஶ்வரன் தன்னை இவனிட்டவழக்காக்குமன்று நிவாரகரில்லை; ஆனபின்பு அதுவே நிலைநிற்பது. இன்னம், 'இவன்ஸ்வரூபம் அவனிட்ட வழக்காகக்கூடுமோ? என்று இதிலேகாணும் ஸந்தேஹிக்கவேண்டுவது' என்று அருளிச்செய்தார்.] இன்னவண்ணமேநின்றாய்] - இப்ப்ரகாரத்திலே நின்றாய். [என்று உரைக்கவல்லேனே] - இப்படிப்பட்ட உன்ப்ரணயித்வகுணத்தை என்னால் பாசுரமிட்டுச் சொல்லலாயிருந்ததோ? என்கிறார். (அ)

---

எட்டாம்பாட்டு - 'என்னதாவி' இத்யாதி. 'உன்னதென்னதாவியும்' இத்யாரப்ய 'என்றுரைக்க வல்லேனே' என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை - 'ஒருவரை' இத்யாதி.

முந்தின அர்த்தத்துக்கு 'பெற்று' என்ற பதம் அத்யாஹார்யம். என்னதாவி - என்ஆத்மாவைப் பெற்று, மேலையாய்-அத்தால்வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தையுடையையாய். ஸம்போதநபக்ஷத்திலே-கீழ்ச்சொன்ன அர்த்தத்வயமும் விவக்ஷிதம். கீழ்ப்பதத்தின் ஸம்போதநபரமல்லாத அர்த்தத்வயாநுகுணமாகத் தாத்பர்ய த்வயம் – இவரைப்பெற்ற இத்யாதி வாக்யத்வயத்தாலே. ஏர்-அழகு. 'ஏர்கொள்' என்றதுக்கு முந்தின அர்த்தத்துக்குச் சேர ஹாவம்-'இவரோடே' இத்யாதி. இவரோடே கலந்தத்தால் ஈஶ்வரனுக்கொழிய, ஜகத்துக்குப் புதுக்கணிப்பு ஏது? என்ன, 'உண்டி' இத்யாதி. புதுக்கணிப்பு-நவீநகாந்தி. அவன் ஶரீரியோ? என்ன, 'ஜகச்சரீரி' இத்யாதி. 'துன்னி' - குறைவறப் பூர்ணமாக வ்யாபித்து முற்றுமாகிநின்ற-ஸமஸ்தமும் தனக்கு ப்ரகாரமாம்படி நின்ற. ஏழுலகமும்-ஏழுலோகங்களிலும். நானிட்ட வழக்கு - மததீநம். தத்வகதையைப் பற்ற முதலிகள்ஶங்கை. ப்ரணயித்வத்தைப் பற்ற, ஆளவந்தார்பரிஹாரம்; "ஐஊஸ" இத்யாதி, "ஸுவாஸம் ஸுஹஜிஹ ரதி" "வி யெணஸெ நாவதி நா ந வெஜி தஐ" இத்யாத்யநுஸந்தேயம். 'இன்னவண்ணமே நின்றாய்'—அவதாரிகையிலே - பரஸ்பரஸ்நேஹம்சொல்லி, இவ்விடத்திலே - ஈஶ்வரப்ராவண்யமே சொல்லுகிறது; இத்திருவாய்மொழியிலே-ப்ராதாந்யேந ஈஶ்வரனுடைய ப்ரணயித்வம் சொல்லுகையாலே. க்ரமேண அந்வயः. (அ)

## ஒன்பதாம்பாட்டு.

உரைக்கவல்லேனல்லேன் உன்னுலப்பில்கீர்த்திவெள்ளத்தின்
கரைக்கணென்றுசெல்வன்நான் காதல்மையலேறினேன்
புரைப்பிலாதபரம்பரனே பொய்யிலாதபரஞ்சுடரே
இரைத்துநல்லமேன்மக்களேத்த யானுமேத்தினேன்.

ஆ.—(உரைக்க.) நான் உரைக்கவல்லே னல்லேன். வல்லஅம்ஶத்தைச் சொன்னாலோ? என்னில்;—என்னோடே நீ கலந்த கலவியாகிற உன்னுடைய நிரவதிககீர்த்திவெள்ளத்தின் கரையினருகேதான் செல்ல முடியுமோ? இப்படி அபூமியான கீர்த்தியைச் சொல்லுவானென்? என்னில்;—உன்னை உள்ளபடியே எனக்குக் காட்டித் தந்து, பின்னை அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு என்னோடுகலந்த கலவியையே நிரவதிகதேஜஸ்ஸாக வுடையவனே! இந்தக்கலவியைப் பரமபக்தியுக்தரான அயர்வறுமமரர்கள் அபிநிவேஶத்தாலே எங்ஙனே பித்தேறியேத்தினார்கள், அப்படியே நானும் என்னுடைய அபிநிவேஶாதிஶயத்தாலே பித்தேறி யேத்தினேன் என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், 'உன்னுடைய ப்ரணயித்வப்ரகர்ஷம் என்னுடைய பேச்சுக்கு நிலமன்று' என்கிறார்.

உன் உலப்பில் கீர்த்தி வெள்ளத்தின் கரைக்கண் என்று செல்வன் நான்? வல்ல அம்ஶத்தைச் சொன்னாலோ வென்னில், - உன்னுடைய அபரிச்சேத்யமான ப்ரணயித்வகுணத்தின் கரையிலும் ஒருநாளும் செல்லமுடியாது. [காதல் மையலேறினேன்] - நீர் பின்னை உபக்ரமிப்பானென்? என்னில்,—ஸ்நேஹத்தாலே மதிகெட்டேன். [புரைப்பிலாத பரம்பரனே பொய்யிலாத பரஞ்சுடரே] - உன்னுடைய ப்ரணயித்வகுணத்தில் ஒன்றும் குறையாமே எனக்குக் காட்டி என்னோடேகலந்த கலவியையே நிரவதிகதேஜஸ்ஸாகவுடையவனே! ப்ரணயித்வப்ரகர்ஷமும் அத்தால்வந்த ஹர்ஷப்ரகர்ஷமும் வடிவிலே காணலாம்படி யிருக்கிறபடியென்றுமாம். [இரைத்து நல்ல மேன்மக்க ளேத்த யானு மேத்தினேன்] - பரமபக்தி யுக்தரான அயர்வறுமமரர்கள் யதாபலம் வருந்தியேத்தினாற்போலே நானும் ஏத்தினேன்.

ப.—அநந்தரம், 'பாரமார்த்திக பரத்வௌஜ்ஜ்வல்யத்தையுடைய உன்படி என்னாற் பேசிமுடிக்கப்போமோ?' என்கிறார்.

உரைக்கவல்லேன் அல்லேன் - (ஆஶ்ரிதவிஷயத்தில் உன் ப்ரணயகுணத்தை நான் பாசுரமிட்டுச்சொல்ல) ஶக்தன் அல்லேன்; (அது எத்தாலேயென்னில்),—உலப்பு இல் - முடிவு இல்லாத, உன் - உன்னுடைய, கீர்த்தி - ப்ரணயித்வப்ரதையாகிற, வெள்ளத்தின் - ஸமுத்ரத்தினுடைய, கரைக்கண் - கரையிடத்து, நான் - நான், என்று - என்று, செல்வன் - செல்வன்? (அடியிலே பேச இழிந்தது), காதல் - (என்) ப்ரேமத்தாலே, மையலேறினேன் - மிக்க கலக்கத்தையுடையேனானேன்; புரைப்பு இலாத - புரை யற்ற, பரம்பரனே - பாரமார்த்திக ஸர்வஸ்மாத்பரத்வத்தையுடையனாய், (என்னோட்டைக்கலவியில்), பொய் இலாத - பொய் இல்லாமையாலே, பரஞ்சுடரே-(அம்மேன்மையோபாதி) நிரதிஶயமான ஔஜ்ஜ்வல்யத்தையுடையனானவனே! நல்ல - விலக்ஷணஜ்ஞாநாதிஸ்வபாவராய், மேல் - ஸர்வோத்க்ருஷ்டரான, மக்கள் - நித்யஸூரிகள், இரைத்து - (பெருங்கடல் கிளர்ந்தாற்போலே) கோஷித்து, ஏத்த -

("ஹாஉவுஹாஉவுஹாஉவு") என்று ஏத்த, யானும் - (ப்ரேமபரவசனான) நானும், ஏத்தினேன் - ஏத்தினேனித்தனை.

இ.—ஒன்பதாம்பாட்டில், 'அநுபூதமானது பேசத் தட்டு என்?' என்ன,—'உன் ப்ரணயித்வப்ரகர்ஷம் என்னுடைய பேச்சுக்கு நிலமன்று' என்கிறார்.

[உரைக்க இத்யாதி] - எனக்கு ஶ்ரத்தையுண்டு என்று, ப்ரணயித்வகுணத்துக்கு என்னால் பாசுரமிட்டுச்சொல்லப்போமோ? வல்ல கொற்றம் பேசினாலோ வென்னில்,—உன்னுடைய முடிவில்லாத ப்ரணயித்வத்தால் வந்த கீர்த்தியின் வெள்ளத்தின் கரையிலே என்று செல்லக்கடவேன்? ஒருகாலத்திலும் முடியாது. 'ஆனால், நீர் பேச உபக்ரமிப்பானென்?' என்னில்,—'ப்ரேமாந்தனாய் ப்ரமித்தேன். ப்ரமாலம்பநம் ஏது?' என்ன, நித்யஸூரிகள் ஏத்தக் காண்கையாலே பேசினேன்; நித்யஸூரிகளோடு இவரோடு வாசியற்றிறே விஷயமிருப்பது. [புரைப்பிலாத பரம்பரனே பொய்யிலாத பரஞ்சுடரே] - நிரவதிகமான ப்ரணயித்வகுண ஸத்பாவத்தில் கண்ணழிவில்லாதாப்போலே என்னோட்டை ஸம்ஶ்லேஷத்திலும் புரையின்றியே அத்தால்வந்த புகர் வடிவிலே தோற்ற இருக்கிறவனே! 'ஸர்வஸ்மாத்பரன்' என்னுமதில் கண்ணழிவில்லாதாப்போலே என்னோடு ஸம்ஶ்லேஷித்து உண்டான புகரிலும் கண்ணழிவற்றிருக்கிறவனே யென்றுமாம். [இரைத்து இத்யாதி] - பரமபக்தியுக்தரான நித்யஸூரிகள் கடல் கிளர்ந்தாற்போலே இரைத்துஏத்தக் காண்கையாலே நானும் ஏத்தினேனித்தனை போக்கி நான் ஶக்தனாய்ப் பேசினேனோ? என்கிறார்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. 'அநுபூதமானது பேசத் தட்டு என்?' என்ன, 'உன்ப்ரணயித்வப்ரகர்ஷம் என்னுடையபேச்சுக்கு நிலமன்று' என்கிறார்.

[உரைக்க வல்லேனல்லேன்]-உன்ப்ரணயித்வகுணத்தை அநுபவித்துக் குமிழிநீருண்டு போமித்தனைபோக்கிப் பேசித் தலைக்கட்ட மாட்டுகிறிலேன். எல்லாம்பேசவொண்ணாதாகில் பேசலாம் அம்ஶம் பேசினாலோ? என்னில்,—[உன்இத்யாதி] - உன்னுடைய முடிவில்லாத ப்ரணயித்வத்தால் வந்த கீர்த்திஸாகரத்தினுடைய கரையிலேதான் என்னாலே செல்லப்போமோ? இப்படி கரைமருங்கும் செல்ல அரிய விஷயத்தில் நீர் பேசுவதாக உத்யோகிப்பானென்! என்னில்,—[காதல்மையலேறினேன்] - என்ப்ரேமத்தாலே மிக்க கலக்கத்தை யுடையனானேன். பிச்சேறினாரை 'நீ இப்படி செய்வானேன்?' என்னக்கடவதோ? இவ்விஷயத்தில் நீர் ப்ரமிப்பானேன்! ப்ரமிப்பார்க்கு ஓராலம்பநம் வேண்டாவோ? என்ன,—'நித்யஸூரிகள் பித்தேறி யேத்தக் கண்டேன்;

---

ஒன்பதாம்பாட்டு - 'உரைக்கவல்லேன்' இத்யாதி. 'கரைக்கணென்றுசெல்வன் நான்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'அநுபூதமானது' இத்யாதி. 'ப்ரணயித்வ ப்ரகர்ஷம்' என்றது - 'பொய்யிலாத பரஞ்சுடர்' என்றத்தைப் பற்ற.

'உரைக்கவல்லேனல்லேன்' என்றத்துக்கு வாஸனை - 'உன்ப்ரணயித்வ' இத்யாதி. குமிழிநீருண்டு - மக்னனாய். 'கரைக்கண் என்று செல்வன் நான்' என்றதுக்கு அநுகுணமாக ஸங்கதி - 'எல்லாம்' இத்யாதி. கரைக்கணென்று செல்வன்நான்-கரையிடத்து என்று நான்செல்லுவேன்? என்று ஶப்தார்த்தம். பாடாந்தரத்திலே, "கரைக்கண் - செல்ல - நின்ற நான்" என்று அந்வயம். கரை - கரையருகு என்றபடி. அருகு - ஸமீபம். காதல்மையலேறினேன் - ப்ரேமத்தாலே பிச்சேறினேன். மையல் - பிச்சு. 'இவ்விஷயத்தில்' இத்யாதிவாக்யம் - 'இரைத்து' இத்யாதிக்கு அவதாரிகை. 'இரைத்து' இத்யாதிக்கு 'காதல்மையல்' என்றத்தோடே ஸங்கதி. 'ப்ரமிப்பார்க்கு' இத்யாதிக்குத் தாத்பர்யம் - ப்ரமிக்கும்போதும் சிறிது பேர் ஏத்தக் கண்டு ஏத்துவதாக உத்யோகிக்கவேண்டாவோ? என்றபடி. அவர்களுக்குத்தான் அவிஷயமோ? என்ன, 'நல்ல' என்று - பக்தியைச்சொல்லி, அவர்களும் பக்திபரவஶராய் ஏத்தினார்களித்தனை யொழிய அவர்களுக்கும்

அத்தாலே செய்தேன்' என்கிறார். நித்யஸூரிகளோடு இவரோடு அவன்தன்னோடு வாசியற்றிறே இவ்விஷயம் இருப்பது. ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியான தான் அறியப்புக்காலும் தனக்கும் தன் தன்மை அறிவுஅரியனாயிறே இருப்பது; தன்னை யறியப்புக்க வேதங்கள் பட்டது படுமத்தனை தானும். [புரைப்பிலாதபரம்பரனே பொய்யிலாதபரஞ்சுடரே] - நீ ஸர்வஸ்மாத்பரனா யிருக்கிற இருப்பில் புரையில்லாதாப்போலே, என்னோட்டைக்கலவியால் வடிவிற்பிறந்த புகரிலும் புரை யின்றிக்கே யிருக்கிறவனே! அன்றிக்கே, நிரவதிகமான ப்ரணயித்வகுண ஸத்பாவத்தில் கண் ணழிவில்லாதாப்போலே என்னோட்டைக்கலவியிலும் பொய்யின்றிக்கே அத்தால் வந்த புகர் வடிவிலேதோற்ற இருக்கிறவனே! என்னுதல்.[இரைத்து இத்யாதி]-பரமபக்தியுக்தராய்க்கொண்டு கடல் கிளர்ந்தாற்போலே இரைத்துக்கொண்டு நித்யஸூரிகள் ஏத்தக் காண்கையாலே நானும் ஏத்தினேனல்லது நான் ஶக்தனாய் ஏத்தினேனோ? என்கிறார். (கூ)

## பத்தாம்பாட்டு.

யானுமேத்தி ஏழுலகும்முற்றுமேத்திப் பின்னையும்
தானுமேத்திலும் தன்னையேத்தவேத்தவெங்கெய்தும்
தேனும்பாலும்கன்னலும் அமுதுமாகித்தித்திப்ப
யானும்எம்பிரானையேஏத்தினேன் யானுய்வானே.

ஆ.—(யானுமேத்தி.) ஏத்தவல்லீராய் ஏத்தினீரானலோ? என்னில்,—நானும் ஸர்வலோகவர்த்திகளான ஸர்வாத்மாக்களும் ஸ்வாபாவிக ஸார்வஜ்ஞாதி குணவிஶிஷ்டனான எம்பெருமான் தானும் கூடநின்று ஸர்வகாலமும் ஏத்தினால்தான் அவனுடைய நிரவதிகமான கீர்த்திஸமுத்ரத்தினருகே செல்லமுடியுமோ? இப்படி எம்பெருமான்தன்னாலுங்கூட ஏத்தமுடி யாத அவனுடைய கீர்த்தியை நீர் ஏத்துவானேன்? என்னில்,—இனிதாயிருந்தவாறே ஏத்தி னேன். இனிதென்றால் முடியாததொன்று தொடங்குவாருளரோ? என்னில்,—நான் ஏத்தி யல்லது தரிக்கமாட்டாமையாலே ஏத்தினேன் என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், 'என்னாலும் ஸமஸ்தலோகங்களாலும் ஸர்வேஶ்வரனான தன் னாலும் புகழ்ந்து முடிக்கவொண்ணாத ப்ரணயித்வகுணவிஶிஷ்டனான தன்னை ரஸ்யதையின் மிகுதியாலே விடமாட்டாதே நான் உஜ்ஜீவிக்கைக்காக ஏத்தினேன்' என்கிறார்.

---

விஷயமன்று என்றபடி. நித்யஸூரிகள் அஸங்குசித ஜ்ஞாநரன்றோ? அவர்களுக்கு அவிஷயமென்கிற தென்? என்ன, 'நித்யஸூரிகளோடு' இத்யாதி. 'அவன்தன்னோடு' என்றத்தை விவரிக்கிறார், 'ஸர்வஜ்ஞனாய்' இத்யாதி. தன்தன்மை - தன்ஸ்வபாவம். வேதங்கள்பட்டது - "யதோவாசோநிவர்த்தந்தே" என்று மீளுகை. ஸர்வாதிகனாயிருக்கிறவன் ப்ரணயித்வத்தாலே வந்து கலந்தத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்கிறா னென்னு மிது கூடுமோ? என்ன, 'புரைப்பிலாத' இத்யாதி. புரைப்பு - புரை; பொய் என்றபடி. த்விதீயார்த் தத்துக்கு; ப்ரணயித்வகுணத்தாலே பரம்பரனாகையில் புரையில்லாதாப்போலே யென்றபடி. ஶப்தார்த் தம் - 'பரமபக்தி' இத்யாதி. 'நல்ல' என்றதுக்கு அர்த்தம் - 'பரமபக்தியுக்தராய்' என்று. மேன்மக்கள் - ஸர்வோத்க்ருஷ்டரான ஸூரிகள். இரைத்து - கோஷித்து.

புரைப்பிலாத இத்யாரப்ய, பரஞ்சுடரே, உரைக்கவல்லேனல்லேன் இத்யாரப்ய, மையலேறினேன்; நல்ல மேன்மக்கள் ஏத்த யானும் ஏத்தினே னித்யந்வய:. நித்யஸூரிகளுக்கு, உத்தரோத்தராநுபவேச் சை - பரபக்தி, அநுபவம் - பரஜ்ஞாநம், விஶ்லேஷாஸஹத்வம் - பரமபக்தி. (க)

ப.—அநந்தரம், 'ஒருவராலும் எல்லைகாணவொண்ணுத அபரிச்சேத்ய மாஹாத்ம்யத்தையுடையவனை என்ஸத்தாஸித்யர்த்தமாக ஏத்தினேன்' என்கிறுர்.

யானும் - (அவன் மயர்வறமதிநலமருளப்பெற்ற) நானும், ஏத்தி - ஏத்தி, முற்றும் - அஜ்ஞஸர்வஜ்ஞவிபாகமற, ஏழுலகும் - இந்தலோகங்களெல்லாம், ஏத்தி-ஏத்தி, பின்னையும் - அதுக்குமேலே, தானும் - (ஸர்வஜ்ஞனுய் ஸர்வர்க்கும் ஜ்ஞாநப்ரதனுன) அவன்தானும், ஏத்திலும்-ஏத்தினுலும், தன்னை - (அபரிச்சிந்நஸ்வபாவனுன) தன்னை, ஏத்தஏத்த - (ஒருகால்சொன்னவிடம் ஒருகால்சொல்லாமல்) மேன்மேலென ஏத்தினுல், எங்கு - எங்கே, எய்தும் - முடிவெய்தும்? (ஆகிலும் ஏத்துகைக்கடி), தேனும் - தேனும், பாலும்-பாலும், கன்னலும் - கன்னலும், அமுதுமாகி - அமுதம்போலே, தித்திப்ப - (ஸர்வப்ரகாரத்தாலும்) ரஸிக்க, எம்-என்னையநுபவிப்பித்த, பிரானையே - மஹோபகாரகனையே, யான்-நான், உய்வான் - உஜ்ஜீவிக்கைக்கு, யானும்-யானும், ஏத்தினேன் - ஏத்தினேன்.

இ.—பத்தாம்பாட்டில், 'ஸ்வபரவிபாகமின்றிக்கே ஈஶ்வர ஈஶிதவ்ய விபாகமின்றிக்கே ஏககண்டராய் ஏத்தினுலும் ஏத்தப்போகாத விஷயத்தை என்னுடைய செல்லாமையாலே ஏத்தினேன்' என்கிறுர்.

[யானுமேத்தி இத்யாதி]-மயர்வறமதிநலமருளப்பெற்ற நானும், அந்யபரராய் அஜ்ஞரானவர்களோடு அநந்யபரராய் ஜ்ஞாநாதிகரானவர்களோடு வாசியறவும், ஸ்வவ்யதிரிக்தருடைய ஜ்ஞாநத்துக்கு ஊற்றுய் ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனுய்த் தொடங்கின கார்யம் தலைக்கட்டவல்ல ஸர்வஶக்தியான தானும் ஏத்தினுலும். [தன்னை இத்யாதி] - ஏத்தின அம்ஶம் அளவுபட்டு ஏத்தாத அம்ஶம் விஞ்சும்படியிருக்கும். [எங்கு எய்தும்] - எங்கே கிட்டும்? 'இப்படி அபரிச்சிந்நமென்று அறிந்த நீர் இவ்விஷயத்தில் இழிவானென்?' என்னில்,—"ஸர்வரஸ:" என்கிற ரஸ்யதையாலும் தன்ப்ரணயித்வகுணத்தை உபகரித்த உபகாரஸ்ம்ருதியாலும் இழிந்தேன்; 'திருப்பாவாடை ரஸித்தது' என்று, தன்வயிறு அறியாதே பரிச்சேதிக்க இழிவாருண்டோ? என்னில்,—கலியர் மேல்விழும்போது விவேகித்தோ இழிவது? [யான் உய்வானே] - தேஶகாலவிப்ரக்ருஷ்டமான அவனுடைய படிகளைக் காணவேணுமென்று ஆசைப்பட்ட நான் உஜ்ஜீவிக்கைக்காக; பரிச்சேதிக்கைக்காக வன்று.

ஈடு.—பத்தாம்பாட்டு. 'நானும், ஸமஸ்தலோகங்களும், ஸர்வேஶ்வரனும் ஏககண்டராய் ஏத்தினுலும் ஏத்தப்போகாத விஷயத்தை என்செல்லாமையாலே ஏத்தினேன்' என்கிறுர்.

[யானும் ஏத்தி] - மயர்வறமதிநலமருளப்பெற்ற நானும் ஏத்துவது. [ஏழுலகும்முற்றுமேத்தி] - விஶேஷஜ்ஞரோடு அவிஶேஷஜ்ஞரோடு வாசியற 'சிறியார் பெரியார்' என்னுதே ஸர்வரும் ஏத்துவது. [பின்னையும் தானுமேத்திலும்] - ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனுய், தொடங்கின கார்யம் செய்துதலைக்கட்டுகைக் கீடான ஸர்வஶக்தியுமான தானும் ஏத்துவது. இப்படி எல்லாரும்

---

பத்தாம்பாட்டு - 'யானுமேத்தி' இத்யாதி. 'யானுமேத்தி' இத்யாரப்ய, 'எங்கெய்தும், யானுய்வான்' என்கிறத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை—'நானும்' இத்யாதி. 'என்செல்லாமையாலே' என்றது-'யானுய்வானே' என்றத்தைப் பற்ற.

'யானும், ஏழுலகும், தானும்' என்ற ச ஶப்தங்கள் - ப்ராதாந்யத்திலே. 'முற்றும்' என்றதுக்கு அர்த்தம் - 'சிறியார்' இத்யாதி. சிறியார்பெரியாரென்றது-மநுஷ்யர்களும் தேவர்களும். விஶேஷஜ்ஞர் அவிஶேஷஜ்ஞ ரென்றது - இரண்டுகோடியிலும். 'தானும்' என்கிறப்ரஸக்திக்கு பாவம் - 'ஸ்வத:' இத்யாதி. எங்கெய்தும் - எங்கே கிட்டும்? முடிவுகாணப்போகா தென்றபடி. இத்தால் பலிதம் - 'இப்படி' இத்யாதி.

ஒருமிடறாய் ஏத்தினாலும், பின்னையும் ஏத்தினவிடம் அளவுபட்டு ஏத்தாத இடம் விஞ்சியாயிற்று இருப்பது விஷயம். அந்யபரரோடு அநந்யபரரோடு அளவுடையாரோடு அளவிலிகளோடு வாசியில்லை, விஷயத்தை எல்லைகாண வொண்ணாமைக்கு. ஆனால், நீர் ஏத்த இழிவானேன்? என்னில், - [தேனும் இத்யாதி]. "ஸர்வரஸ:" என்கிற விஷயத்தினுடைய ரஸ்யதையாலும், 'நாம் இவ்விஷயத்திலே இழிந்து ஏத்துவோம்' என்னும்படி தன்ப்ரணயித்வகுணத்தை உபகரித்த உபகாரகனாகையாலும் ஏத்தினேன். இனிதென்றும் உபகாரகனென்றும் அஶக்தரான நீர் இதிலிழியக்கடவீரோ? என்ன, - [யான் உய்வானே]—ஏத்தாவிடில் பிழையாதாரேத்து மத்தனையன்றோ? (௧0)

---

# பதினோராம் பாட்டு.

> உய்வுபாயம்மற்றின்மைதேறிக் கண்ணனொண்கழல்கள்மேல்
> செய்யதாமரைப்பழனத் தென்னன்குருகூர்ச்சடகோபன்
> பொய்யில்பாடலாயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள்
> வையம்மன்னிவீற்றிருந்து விண்ணும்ஆள்வர் *மண்ணூடே.

**ஆ.**—(உய்வுபாயம்.) 'பொய்யில்பாடல்' என்றது - இப்படி எம்பெருமான் நிரவதிகமான அபிநிவேஶத்தோடேகூட என்னோடு கலந்து பரிமாறின பரிமாற்றம் இத்தனையும் மெய் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், 'ஈஶ்வரனுடைய உபயவிபூதியும் இத்திருவாய்மொழி யப்யஸித்தார் இட்டவழக்காம்' என்கிறார்

[உய்வுஉபாயம் என்று தொடங்கி.]-ப்ரணயித்வம் பேசியல்லது வேறு தரிக்கைக்கு உபாயமில்லாமையை அநுஸந்தித்து நிரதிஶயபோக்யமான க்ருஷ்ணனுடைய திருவடிகளிலே சிவந்திருந்த தாமரையையுடைய பழனத்தையுடைத்தான தென்னாட்டுத்திருநகரியையுடைய ஆழ்வாருடைய ஆயிரந்திருவாய்மொழியிலும் 'இப்படி எம்பெருமான் நிரவதிகமான அபிநிவேஶத்தோடே கலந்து பரிமாறின பரிமாற்றத்தில் ஒருபொய் இல்லை; மெய்' என்று சொல்லுகிற இத்திருவாய்மொழி வல்லார். [வையம் மன்னி வீற்றிருந்து] - வைஷ்ணவஶ்ரீயோடே கூடி நெடுங்காலம் பூமியிலே இருந்து.

---

ஒருமிடறாய்-ஏககண்டராய். ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனுக்கு அல்லாதாரில் வாசியில்லையோ? என்ன-'அந்யபரரோடு' இத்யாதி. 'அந்யபரரோடு' என்றது - 'ஏழுலகும்' என்றத்தைப் பற்ற. 'அநந்யபரரோடு' என்றது - 'யானும்' என்றத்தைப் பற்ற. 'அளவுடையார்' என்றது - 'தானும்' என்றத்தைப் பற்ற. 'அளவிலிகளோடு' என்றது - 'முற்றும்' என்றத்தைப் பற்ற. 'ஆனால், நீர் ஏத்துகிறதும் எத்தாலே?' என்ன, - 'தேனும்பாலும்' என்ற போக்யதையாலும், 'பிரான்' என்ற உபகாரத்தாலும், ஸத்தையில்லாமையாலும் என்று மூன்று ஹேதுக்கள். இவற்றை உபபாதிக்கிறார், 'ஸர்வரஸ:' என்று தொடங்கி, 'அத்தனையன்றோ' என்னுமளவும். இவ்விடத்திலே, 'யானும்' என்றது - வார்த்தைப்பாடு; 'யானும்' என்கிற ஶப்தத்துக்குப் பொருளில்லை. தித்திப்ப - ரஸிக்க. 'ஏத்தாவிடில்' - இனிமையாலும் உபகாரகனாகையாலும் அவனை ஏத்தாவிடி லென்றபடி. உய்வான் - உஜ்ஜீவிக்கைக்காக. "ஶ்ருதிஶதஸஹஸ்ராணி..." 'புகழ்வோம்' இத்யாத்யநுஸந்தேயம். "எங்கண்மால் கண்டாயிவை" என்றாரிறே. க்ரமேண அந்வய:. (௧0)

---

* மண்ணோடே என்று உரைக்குப் பாடம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி வல்லவர்கள் உபயவிபூதியும் ஸ்வநியமநத்திலே நிர்வஹிப்பார்களென்று பலத்தை அருளிச்செய்கிறார்.

உய்வு உபாயம் - உஜ்ஜீவநோபாயம், மற்று இன்மை - வேறு இல்லாமையை, தேறி - அறுதியிட்டு, கண்ணன் - (ஆஶ்ரிதப்ரணயியான) க்ருஷ்ணனுடைய, ஒள் - பரமபோக்யமான, கழல்கள்மேல் - திருவடிகள்விஷயமாக, செய்ய - சிவந்த, தாமரை - தாமரையையுடைய, பழனம் - நீர்நிலங்களையுடைத்தாய், தென் - தெற்குத்திக்கில், நல் - ஶ்லாகநீயமான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடைய, (ப்ரணயித்வகுணத்தில்), பொய் இல் - பொய் இல்லாதபடி, பாடல் - பாடின, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியில், இவை பத்தும் - இவைபத்தையும், வல்லார்கள் - (அர்த்தாநுஸந்தாநத்தோடே), அப்யஸிக்கவல்லவர்கள், வையம் - பூமியிலே, மன்னி - சிரகாலம்ஸ்திரமாம்படி, வீற்றிருந்து - (தங்கள்வ்யாவ்ருத்திதோன்ற) இருந்து, மண்ணோடே - இந்தபூமியோடே, விண்ணும் - பரமபதத்தையும், ஆள்வர் - (தங்கள் நியமநத்தின்படி) நிர்வஹிப்பர்கள். இது - அறுசீராசிரிய விருத்தம்.

இ.—நிகமத்தில், 'அவனுடைய உபயவிபூதியும் இத்திருவாய்மொழி யப்யஸித்தார் இட்டவழக்கு' என்கிறார்.

[உய்வு உபாயம் இத்யாதி] - அவன் ப்ரணயித்வகுணத்தைப் பேசாவிடில் உஜ்ஜீவநோபாய மில்லையென்று தெளிந்து. [மற்றுஇன்மை]-வேறுஇல்லாமை. அவதரித்துத் தன்ப்ரணயித்வகுணத்தை ஆவிஷ்கரித்த க்ருஷ்ணன்திருவடிகளிலே. [செய்ய இத்யாதி] - ஆழ்வார் ப்ரணயித்வகுணாநுஸந்தாநத்தாலே தரித்தவாறே ஊரும் தளிரும் முறியுமாயிற்று; "அகாலபலிநோவ்ருக்ஷா:." சிவந்த தாமரையையுடைய பழனங்களையுடைத்தாய்த் தெற்குத்திக்குக்கு ஶ்லாக்யமான திருநகரியையுடைய ஆழ்வார். "நதேவாம் நூதாகாலேம்ருகாவிஹ ஹவிஷ்யதி" என்கிறபடியே திருவாய்மொழியெல்லாவற்றுக்கு மாதல், 'அவாப்தஸமஸ்தகாமன் ஒருஸம்ஸாரியினுடைய ஸத்தாதிகளே தனக்குபோகோபகரணமாக இருந்தான்' என்கிற ப்ரணயித்வத்தில் ஒருபொய்யின்றிக்கேயிருக்கிற பத்து என்னுதல். [வையம் இத்யாதி] - 'பூமியிலே எம்பெருமானார் எழுந்தருளியிருந்த காலம் குறைவற்ற ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயோடே இருந்தது, நம்மைப்போலே 'வாய்புகுசோற்றைப் பறிகொடாதே' என்று சீயர் உருத்தோறும் அருளிச்செய்வர். [விண்ணும் இத்யாதி] - இங்கே இருக்கச்செய்தே பரமபதம் தங்கள்சிறுமுறிப்படியே செல்லும்படி ஆள்வர்கள்; அங்ஙனே சென்றால், "ஆண்மின்கள்வானகம்" என்னுமளவன்று.

ஈடு.—நிகமத்தில் - 'ஈஶ்வரனுடைய உபயவிபூதியும் இத்திருவாய்மொழி அப்யஸித்தார் இட்ட வழக்கு' என்கிறார்.

[உய்வுஉபாயம்மற்றின்மைதேறி]-அவனுடைய ப்ரணயித்வகுணத்தைப் பேசித் தலைக்கட்டவல்லராயன்று இவர்பேசிற்று: இது ஒழிய தரிக்கைக்கு உபாயமில்லை யென்று தெளிந்து. [கண்ணனொண்கழல்கள்மேல்] - பரமப்ரணயியானத்தை அவதரித்து ஆவிஷ்கரித்த க்ருஷ்ணன் திருவடிகளிலே. [செய்ய இத்யாதி] - அவனுடைய ப்ரணயித்வகுணாநுஸந்தாநத்தாலே இவர் தரித்தவாறே, ஊரும் "அகாலபலிநோவ்ருக்ஷா:" (அகாலபலிநோவ்ருக்ஷா:) என்கிறபடியே யாயிற்று. சிவந்ததாமரையையுடைய பழனங்களையுடைத்தாய்த் தெற்குத்திக்குக்கு ஶ்லாக்யமான

---

நிகமம்-'உய்வுபாயம்' இத்யாதி. "விண்ணுமாள்வர்மண்ணூடே" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - 'ஈஶ்வரனுடைய' இத்யாதி.

'ப்ரணயித்வத்தையன்றோ பேசிற்று?'என்ன,'அவனுடைய'இத்யாதி. தாத்பர்யபூர்வகமாக ஶப்தார்த்தம்-'பரம' இத்யாதி. வர்ணித்ததுக்குஹாவம்-'அவனுடைய' இத்யாதி. சப்தார்த்தம் 'சிவந்த'இத்யாதி. பழனங்

திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. [போய்யில்பாடல் இத்யாதி] - "நதேவாகங்ருதாகாவ்யேகாசிதத்ரபவிஷ்யதி" (நதேவாகங்ருதாகாவ்யேகாசிதத்ரபவிஷ்யதி) என்கிறபடியே திருவாய்மொழியெல்லாவற்றுக்குமாதல்; அவாப்தஸமஸ்தகாமனை ஸர்வேஶ்வரன் ஒருநித்யஸம்ஸாரியோடே இப்படி விரும்பிவந்து கலந்து,இவருடைய ஸத்தாதிகளே தனக்கு போகோபகரணமாக இருந்தானென்கிற ப்ரணயித்வகுணத்தில் பொய்யின்றிக்கேயிருக்கிற பத்து என்னுதல். 'பொய்யில்லாத ஆயிரம்' என்றபோது, அவ்வோபாதி இதுக்கும் வருமிறே. [வையம்மன்னி இத்யாதி] - பூமியிலே எம்பெருமானாரைப்போலே ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயோடே நெடுங்காலம் இருந்து. [விண்ணும்ஆளவர்மண்ணூடே] - இங்கேயிருக்கச்செய்தே பரமபதம் தங்கள் சிறுமுறிப்படி செல்லும்படி ஆள்வர்கள்; அங்கே போனல் * "ஆண்மின்கள்வானகமாழியான்தமர்" என்கையன்றிக்கே இங்கேயிருக்கச்செய்தே தாங்களிட்ட வழக்காகப் பெறுவர். 'வையம்மன்னிவீற்றிருந்து' என்கிறவிடத்தே "நம்மைப்போலே வாய்புகுசோருகப் பறிகோடாதே, நெடுங்காலம் பூமியிலே ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயோடே † "நாட்டாரோடியல்வொழிந்து" என்கிறபடியே தங்கள்வ்யாவ்ருத்தி தோற்ற இருக்கப் பெறுவர்கள்" என்று சீயர் உருத்தோறும் அருளிச்செய்வர். பால்யத்திலே பட்டரைப்பறிகோடுத்தாரிறே அவர். (கக)

---

கள் - நீர்நிலங்கள். பொய்யில்லாமை-ஆயிரத்துக்குமாதல், இப்பத்துமாத்ரத்துக்காதல் விஶேஷணம். ஆயிரத்துக்கு விஶேஷணமானாலும் ப்ரணயித்வகுணத்தில் பொய்யில்லாமையை ஸாதிக்கிருர்-'பொய்யில்லாத' இத்யாதி.'மன்னி'யின்தாத்பர்யம்-'பூமியிலே'இத்யாதி. சிறுமுறிப்படி-சீட்டுப்படி. 'மண்ணூடே' என்ற அவதாரணர்த்தம் - 'அங்கேபோனல்' இத்யாதி. ப்ராஸங்கிகம்-'வையம்மன்னி' இத்யாதி. வாய்புகுசோருக-வாயிலே புகாநிற்கிற சோருக; அதாவது - உபக்ரமத்திலே யென்றபடி. நாட்டாரோடியல்வொழிந்து - ப்ராக்ருதரோட்டை ஸம்பந்தமற்று. அப்படி பறிகொடுத்தாரோ? என்ன, 'பால்யத்திலே' இத்யாதி. உய்வுபாயம்மற்றின்மைதேறி-உஜ்ஜீவநோபாயம்வேறில்லாமையை அறுதியிட்டு. ஒண்கழல்கள்-அழகிய கழல்கள். வையம்மன்னி வீற்றிருந்து - பூமியிலே சிரகாலம் ஸ்திரமாம்படி தங்கள்வ்யாவ்ருத்தி தோற்ற இருந்து. "ககாஸம[illegible]நா வ்ருக்ஷாஸ்ஸுஹாவிஜ்யாஸ்ஸு வாஃ । ஸவஹுஸாமெ[illegible]" இதியுக்த காண்டாங்தே. "நதேவாகங்ருதாகாவ்யேகாசிதத்ரபவிஷ்யதி । [illegible]" இதி பாலகாண்டே வால்மீகிம்ப்ரதி ப்ரஹ்மா. க்ரமேணஅந்வயஃ. (கக)

---

த்ராவிடோபநிஷத்ஸங்கதி.—[illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.—[illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி

கோவானவீசன்குறையெல்லாந்தீரவே
ஓவாதகாலத்துவாதிதனை—மேவிக்
கழித்தடையக்காட்டிக்கலந்தகுணமாறன்
வழுத்துதலால்வாழ்ந்ததிந்தமண்.

ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே சரணம்.

---

* திருவாய்மொழி - ௧௦-௯-௯. † ஷை ௧௦-௯-௨.

## நான்காந்திருவாய்மொழி - மண்ணையிருந்து : ப்ரவேஶம்.



ஆ.—(மண்ணையிருந்து.) இப்படி ப்ரணயஸ்வபாவனான எம்பெருமானை விஶ்லேஷித்தா ளொரு பிராட்டி அந்த விஶ்லேஷவ்யஸநத்தாலே பிச்சேறிச்சொல்லுகிற பாசுரங்களை அவளுடைய திருத்தாயார் சொல்லி அலற்றுகிறாள்.

ஒ.—நாலாந்திருவாய்மொழியில், இப்படிப்பிறந்த ப்ரணயித்வாநுஸந்தாந ஜநித ப்ரீதி ஸாத்மிக்கைக்காக இவருடைய ப்ரக்ருதி யறிந்திருந்துள்ள எம்பெருமான் இவரோட்டைக் கலவியை நெகிழநிற்க, இப்படி ப்ரணயியான இவனைக் காணப்பெறாமையாலே பிச்சேறி ஏதேனும் ஒருபடியாலே அவனோடு ஸத்ருஶமான பதார்த்தங்களையும் அவனோடு ஸம்பந்திகளான பதார்த்தங்களையுங் கண்டு சிறிதுதேறி அவனைக் காணப்பெறாமையாலே வ்யஸநப்படாநின்ற ஆழ்வார் தம்முடைய தஶையை அந்யாபதேஶத்தாலே பேசியருளுகிறார்.

ப.—நாலாந்திருவாய்மொழியில், இப்படி மாநஸஸம்ஶ்லேஷத்தாலே அநுபவிப்பித்துக் கற்பித்த ஈஶ்வரனுடைய ப்ரணயித்வகுணத்தை அநுஸந்தித்த ஆதராநுரூபமான பாஹ்யாநுபவாபிநிவேஶத்தைப் பண்ணி அது கிட்டாமையாலே ஆர்த்தரான இவர், தம்முடைய ஆர்த்திஶாந்திஹேதுவான ஸ்வபாவங்களையுடையனான ஈஶ்வரனுடைய விபூதித்வயயோகத்தையும், ஸர்வஸமாஶ்ரயணீயத்வத்தையும், ப்ரதாபாநுக்ரஹத்தையையும், உஜ்ஜ்வலமாய் உத்துங்கமாய் ஶ்ரமஹரமான விக்ரஹவைலக்ஷண்யத்தையும், ரக்ஷணார்த்த ப்ரவ்ருத்திகளையும், அநுஹாவ்யசேஷ்டிதங்களையும், பரத்வசிஹ்நங்களையும், ஐஶ்வர்யாபிரூப்ய விஶிஷ்டமான ஆதரணீயத்வத்தையும், ஆஶ்ரிதவிஷயத்தில் உபகாரகத்வத்தையும், ஸௌலப்யபாரம்யத்தையும் அநுஸந்தித்து, ஏவம்விஶிஷ்டனான ஸர்வேஶ்வரனுக்கு ஸம்பந்திகளாயும் ஸத்ருஶங்களாயுமுள்ள பதார்த்த தர்ஶநத்தாலே ஈடுபட்ட ப்ரகாரத்தை பார்ஶ்வஸ்தரான பரிவர் சொன்ன பாசுரத்தை, நாயகனைப்பிரிந்த தலைவியுடைய ஆற்றாமை கண்ட நற்றாய் வார்த்தையாலே அருளிச்செய்கிறார்.

இ.—நாலாந்திருவாய்மொழியில், இப்படி ப்ரணயித்வாநுஸந்தாநத்தாலுள்ள நிரவதிக ப்ரீதியாலே ஆஶ்ரயம் அழியும்படி வர, இவர் ப்ரக்ருதியை அறியுமவனாகையாலே ப்ரீதி அரையாறுபட்டு ஸாத்மிக்கைக்காக அவன் பேரநிற்க, பிரிந்தது அவனையாகையாலே ஆற்றாமை மேலிட்டு தநலுப்தர் கிழிச்சீரையை விழவிட்டால் போலியான முடிகளை 'அது அது' என்று ப்ரமிக்குமாபோலே அவனோடு ஸத்ருஶமாயும் ஸம்பந்திகளாயு மிருந்த பதார்த்தங்களை 'அவன் அவன்' என்று பிச்சேறும்படியாகத் தமக்குப்பிறந்த அவஸாதத்தை, கலந்து பிரிந்து பிரிவாற்றாமையாலே இப்படி அலமாக்கிறாளொரு பிராட்டி தஶையை அநுஸந்தித்தாள் ஒரு திருத்தாயார்பாசுரத்தாலே அருளிச்செய்கிறார். திருத்தாயார் இவள் க்லேசத்தைச் சொல்லுவது, இவள் பாசுரத்தைச் சொல்லுவது, இத்தால் தனக்கு உண்டான நலிவைச் சொல்லுவதாய்க் கொண்டு கைவாங்குமளவிலே வந்து முகங்காட்டி ஆஶ்வஸிப்பித்தானா யிருக்கிறது.

ஈடு.—கீழில் திருவாய்மொழியில் - அவனுடைய ப்ரணயித்வகுணத்தை அநுஸந்தித்துப் பிச்சேறினார். இவர்க்குக் கீழ்ப்பிறந்த நிரவதிகப்ரீதியானது *இருவருடைய ஆஶ்ரயமும் அழியுமென்

மண்ணையிருந்துப்ரவேஶே, ஸங்க்ரஹசங்கதி - 'கீழில்' இத்யாதி. இத்திருவாய்மொழியிலே 'பிச்சேறினார்' என்றபடி. கீழ் நிர[illegible]திகப்ரீதியாயிருக்க, இதில் பிச்சேறுகைக்கு அடியேது? என்ன, 'இவர்க்

* அரும்பதத்தி[illegible] 'இரண்டாஶ்ரயமும்' என்று பாடமுமுள்ளதாகக்காண்கிறது.

னும்படியாயிற்று; அந்த ரஸத்தை அரையாறுபடுத்தி ஸாத்மிப்பிக்கைக்காக அக்கலவியை அல்பம் நெகிழநின்றான் ஈஸ்வரன். ஆனாலும், பிரிந்தது அவனையாகையாலே அது தன்கார்யம் செய்தன்றி நில்லாதே; ஆற்றாமை மீதூர்ந்து, நாலுப்புறனவன் கிழிச்சீரையைக் கெடுத்தால் அத்தோடு போலியான முடிகளெல்லாம் அவிழ்த்தவிழ்த்துப் பார்க்குமாபோலே; * "வைப்பாம்மருந்தாம்" என்னும்படியே இவர்க்குச் சேமநிதியிறே அவன்; ஆகையாலே, அவனோடு ஸத்ருஸபதார்த்தங்களையும் ஸம்பந்திபதார்த்தங்களையும் அகப்பட அவனாகக்கொண்டு ப்ரமித்துக் கிட்டிப்பார்த்து அவனன்றிக்கே யொழிந்தால் மீளவும் மாட்டாதே நோவுபட்டுச் செல்லுகிறது. "[illegible]" (க்வசிதுத்ப்ரமதேவேகாத் க்வசித்விப்ரமதேபலாத் | க்வசிந்மத்தஇவாபாதிகாந்தாந்வேஷணதத்பர:) என்கிறபடியே - பிராட்டியைப்பிரிந்த அநந்தரம் ஆற்றாமையாலே மேல்நோக்கிப் பார்த்து விலங்க ஸஞ்சரிப்பது, அதுதானும் மாட்டாதொழிவது, ஒருவ்ருக்ஷத்தில்நின்றும் வ்ருக்ஷாந்தரத்திலே சென்று கிட்டுவது, 'மைதிலி

---

*குக்கீழ்' இத்யாதி. இது ப்ரகரணோசிதம். அன்றிக்கே, "காதல்மைய லேறினேன்" என்றிருக்கையாலே, கீழில்திருவாய்மொழியில் பிச்சேறினா ரென்னுதல். இது, 'பிச்சேறினார்' என்ற பூதநிர்த்தேசத்தோடு சேரும். விஸ்தாரஸங்கதி - 'இவர்க்குக் கீழ்ப்பிறந்த' இத்யாதி என்னுதல். 'இரண்டாஸ்ரயமும் அழியுமென்னும்படியாயிற்று' என்றது - இவருடைய நிரவதிகப்ரீதியானது ஸ்வஸ்வரூபத்தாலும் தன்னைக்கண்ட ஈஸ்வரனுடைய ப்ரீதிமுகத்தாலும் இரண்டாஸ்ரயமும் அழியுமென்னும்படியாயிற்று என்றபடி. ஆஸ்ரயம் - ஸ்வரூபம். 'இருவருடைய ஆஸ்ரயமும்' என்றும் பாடமுண்டு. அப்போதும், கீழ்ச்சொன்னதே அர்த்தம். 'இவருடைய ஆஸ்ரயமும் அழியும்' என்றும் பாடமுண்டாயிருக்கிறது. ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸ்வரூபமழியுமென்றவிடத்திலே - 'ஒரு அம்மையார், தானும் தன்னுடைய பிள்ளையுமாய் அத்யந்தம் ரிக்தையாயிருக்க, பிள்ளை வித்வானாய் உபயதோமுகியென்ற கோதாநம்பிடித்து தநம் நிரம்பக்கொண்டுவர, அத்தைக்கண்டு அந்த ப்ரீதியாலே சரீரம்விட்டாள்' என்று ஓரைதிஹ்யம் அருளிச்செய்வர். 'என்னும்படியாயிற்று' என்ற அநந்தரம் - நாயகனானவன், அறிவு நிறைவு ஓர்ப்பு கடைப்பிடிகளையு முடையனாய், "[illegible]" என்று ஜ்ஞாநஸம்பூர்ணனுமாகையாலே பாவ்யர்த்தத்தை அநுஸந்தித்து என்று சிலகூட்டி, அநந்தரம் - 'அந்தரஸத்தை அரையாறுபடுத்தி' இத்யாத்யநுஸந்திப்பது. அரையாறுபடுத்தி - குறையப்பண்ணி. 'ஸாத்மிப்பிக்கைக்காக நெகிழநின்றான்' என்னுமிடம் இவர் அறிந்திருக்க, பின்னை துக்கப்படுவானென்? ஆறியிருக்கவொண்ணாதோ? என்ன. 'ஆனாலும்' இத்யாதி. ஆனாலும் - ஸாத்மிக்க வந்த பிரிவேயாகிலும். ஆகையாலே, 'ஆற்றாமைமீதூர்ந்து' என்றுகூட்டுவது. மீதூர்ந்து - அதிகமாய். இதுக்கு - 'நோவுபட்டுச் செல்லுகிறது' என்று மேலோடே அந்வயம். 'மீதூர்ந்து' என்ற அநந்தரம். 'தாமானதன்மைபோய் ஒரு பிராட்டிதசையை ப்ராப்தராய்' என்று அத்யாஹார்யம். அவன்தான் தநமோ? என்ன, 'வைப்பாம்' இத்யாதி. 'ஸத்ருஸ' இத்யாதி - ஸத்ருஸபதார்த்தங்களை அவனாகவும், ஸம்பந்திஸத்ருஸபதார்த்தங்களை ஸம்பந்திகளாகவும் ப்ரமித்து என்றபடி. ஸத்ருஸபதார்த்தங்களாவன - "கரும்பெருமேகங்கள்", "பெரும் புலவாநிரை,", "உருவுடைவண்ணங்கள்", "விரும்பிப்பகவரை" இத்யாதி. ஸம்பந்தி ஸத்ருஸபதார்த்தங்களாவன - "ஆய்ச்சியர்வெண்ணெய்கள்," "கோமளவான்கன்று", "வாய்த்தகுழலோசை" இத்யாதி. 'அவனாகக்கொண்டு ப்ரமித்து' - அவனாகவும், அவனிருக்கிறதாகவும் ப்ரமித்து என்றபடி. 'அவனன்றிக்கே யொழிந்தால்' - அவனன்றென்றும், அவனில்லையென்றும் அறிந்தாலென்றபடி. இப்படி நோவுபட்டாருண்டோ? என்ன, 'க்வசித்' இத்யாதி. ஆரண்யகாண்டே ஷஷ்டிதமே. ப்ரமமாவது - சுழலுகை. உத்ப்ரமமாவது - சுற்றும் முகந்திருப்பி மேலேபார்க்கை. விப்ரம: - விவிதோப்ரம:. 'அதுதானும் மாட்டாதொழிவது' என்றது - உத்ப்ரமவிப்ரமங்களுக்கு பிந்நமானதாக வேணுமே; வ்யாபரிக்கவும் மாட்டாதொழிவதென்றபடி. உந்மத்தன் செய்யுமதிறே இது. "[illegible]" என்றத்தைப் பற்ற-'ஒரு வ்ருக்ஷத்தில்நின்றும்'இத்யாதி. "[illegible]" என்றத்தைப்பற்ற - 'மைதிலியை'*

---

* திருவாய்மொழி. க-எ-௨.

யைக் கண்டிகோளோ?' என்றுகேட்பது, ஆறுறுபெண்ணுறுக ளோன்றின்றிக்கே தேடுவதாய் அவர்பட்டாற்போலே இவளும் அப்படியே படுகிறாள் இப்போது. இப்படி நோவுபடுகிற இவள் தசையை அநுஸந்தித்த திருத்தாயார், இவள்படுகிற பாடுகளையும் இவள் சொல்லுகிற வார்த்தைகளையும் சொல்லி, இதுகண்டு தான்பொறுக்கமாட்டாமே நோவுபடுகிறபடியும் சொல்லி இவள் கைவாங்குமளவாக, அவன் வந்து முகங்காட்டி ஆஶ்வஸிப்பிக்கத் தரித்ததாய்த் தலைக்கட்டுகிறது, இத்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

மண்ணையிருந்துதுழாவி வாமனன்மண்ணிதுவென்னும்
விண்ணைத்தொழுதுஅவன்மேவு வைகுந்தமென்றுகைகாட்டும்
கண்ணையுண்ணீர்மல்கநின்று கடல்வண்ணனென்னுமன்னே! என்
பெண்ணைப்பெருமயல்செய்தார்க்கு என்செய்கேன்பெய்வளையீரே.

ஆ.—(மண்ணையிருந்து.) எம்பெருமானைப் பிரிந்த வ்யஸநத்தை ஆற்றமாட்டாதே, பண்டு எம்பெருமான் இந்தலோகத்தை அளந்தருளினபோது அவன்திருவடிகளோடே ஸம்பந்தித்தது இம்மண்ணென்று பார்த்து இந்தமண்ணைக்கொண்டு ஆஶ்வஸித்து அந்தப்ரீதியாலே, அடியேன் வாமனன் மண் இதுவென்னும். ஆகாஶத்தை நாமஸாம்யத்தாலே திருநாடாகக் கருதித் தொழுது, அடியேன் அவன்மேவு வைகுந்தமென்று கைகாட்டும். அவனைக்காணு தொழிந்தவாறே, கண்ணையுண்ணீர்மல்கநின்று கடல்வண்ணனென்று அழைக்கும். இப்படி என்பெண்ணைப் பெருமயல்செய்தார்க்கு என்செய்கேன் பெய்வளையீரே? என்று அலற்றுகிறாள்.

ஒ.—முதற்பாட்டில், வினவவந்தவர்களுக்குத் தன் மகள் படிகளை அறிவியாநின்று கொண்டு 'இப்படி இவளை எம்பெருமான் பிச்சேற்றினான்; இதுக்கு 'என் செய்வேன்?' என்று திருத்தாயார் துக்கிக்கிறாள்

[மண்ணை என்று தொடங்கி.] - பூமியைப் பலகாலும் ஸ்பர்ஶிக்கிறது ஸ்ரீவாமநன் அளந்த மண் என்னும் ஆதாரத்தாலே என்று கருத்து. [விண் என்று தொடங்கி] - நாமஸாம்யத்தாலே ஆகாசத்தைத் தொழுது அவன் நிரந்தரவாஸம் பண்ணுகிற வைகுந்தம் என்று சொல்லப்புக்கு பலஹாநியாலே மாட்டாதொழிந்து ஹஸ்தசேஷ்டையாலே காட்டாநிற்கும். திருநாட்டில் அவன் இருக்கிறபடியைக் காணப்பெறாமையாலே கண்ணீர் மல்கும்படி நின்று தன் ஆற்றாமையாலே ஶ்ரமஹரமான திருநிறத்தை நினைத்து 'கடல் வண்ணன்' என்னும். [அன்னே] - செயலறுதியாலே சொல்லும் சொல்; 'மன்னே' என்றபோதும் இதுவே பொருள்.

---

இத்யாதி. ''நதாநதீ'' என்றத்தைப் பற்ற 'ஆறுறு' இத்யாதி. ஆறுறு - நதம். பெண்ணுறு - நதி. நதங்களென்று பேர்பெற்று மேற்குநோக்கிப்போமவை - ஆறுறுகள்; நதியென்று பேர்பெற்றுக் கிழக்கு நோக்கிப்போமவை - பெண்ணுறுகள். பாட்டுக்களின் ப்ரமேயம். 'இப்படி' இத்யாதி. 'கைவாங்குமளவாக' என்றது - ''என்செய்கேன் வல்வினையேனே'' என்றத்தைப் பற்ற. ''வல்வினைதீர்க்கும் கண்ணனே'' என்றத்தைப் பற்ற, 'அவன் வந்து முகங்காட்டி' என்றது. ஸம்பந்திபதார்த்தங்களைத் தேடுகிறதுக்குத் தாத்பர்யம் - இவர்பகவத்பாகவதர்களிருவரையும் உத்தேஶ்யராக நினைத்திருக்குமவராகையாலே, பகவத் விஶ்லேஷமானால் பாகவதர்களோடேகூடியாகிலும் தரிக்கலாமென்று தேடுகிறுரென்றபடி.

[பெய்வளையீரே] - உங்களைப்போலே கையும் வளையுமாயிருக்க இவளைக் காணவல்லேனே! என்று கருத்து.

ப.—முதற்பாட்டில், வினவ வந்த அயலார்க்கு, அவனுடைய விபூதித்வயஸம்பந்தத்தை அநுஸந்தித்து பூம்யந்தரிக்ஷங்களைக் கண்டு விக்ருதையாகாநின்றாள் என்கிறாள்.

மண்ணை-பூமியை, இருந்து - இருந்து, துழாவி - துழாவி, இது - இது, வாமனன் - (அந்யாபிமாநம் வாராதபடி) வாமநனுய் அவனிரந்தளந்துகொண்ட, மண் - மண், என்னும் - என்னுநிற்கும்; விண்ணை - (ஊர்த்வமான) ஆகாசத்தை, தொழுது - (நோக்கி) அஞ்சலிபண்ணி, அவன் - அவன், மேவு - நித்யவாஸம்பண்ணுகிற, வைகுந்தம் - (பரமவ்யோமஶப்தவாச்யமான) ஸ்ரீவைகுண்டம், என்று - என்றுசொல்லி, (அபரோக்ஷித்தாரைப்போலே), கை-ஹஸ்தமுத்ரையாலே, காட்டும் - (பிறர்க்கும்) காட்டாநிற்கும்; உள் - அகவாயில், நீர் - அஶ்ருஜலமானது, கண்ணை - கண்ணையும்விஞ்சி, மல்க - புறப்படும்படி, நின்று - நின்று, (இப்படிதன்னோடுஸம்பந்தித்த விபூதித்வயமும் எனக்கு விஷயமாம்படி), கடல் - கடல்போலே ஶ்ரமஹரமான, வண்ணன் - தன்வடிவழகைக்காட்டி அநுபவிப்பித்த அபரிச்சிந்நஸ்வபாவன், என்னும் - என்னும்; அன்னே - அம்மே! என் - என்னுடைய, பெண்ணை - (முக்தையான) பெண்ணை, பெரு - இப்படி அதிஶயிதமான, மயல் - பிச்சை, செய்தார்க்கு-பண்ணினவருக்கு, பெய் வளையீரே - (இவள்வளைபோலே கழலுகையன்றியே) இடப்பட்ட வளையையுடையவர்களே! என் - எத்தை, செய்கேன் - செய்வேன்?

அவரை யழைத்துக் கொடுக்கமாட்டுகிறிலேன், அவர்தாமே வருமளவும் இவள்பிச்சைத் தணிக்கமாட்டுகிறிலே னென்று கருத்து. அன்னேயென்று-வெறுப்பைக் காட்டுகிறது. பெய்வளையீரே என்கையாலே-நீங்கள் கையும் வளையுமாயிருக்க, இவள் கை நிலம் துழாவும்படியாவதே! என்கை. விண்ணென்று பூதாகாஶமாயிருக்க, அவ்வளவும் ப்ரகாசித்தபடி.

இ.—முதற்பாட்டில், வினவ வந்தவர்களுக்குத் தன்மகளை அவன் பிச்சேற்றினபடிகளைச் சொல்லி 'இதுக்கு என்செய்கேன்?' என்கிறாள்.

[மண்ணை] - பூமியை ப்ராதேஶிகமான அளவன்று: "மண்முழுது மகப்படுத்து நின்ற" என்கிறபடியே திருவடிகளுக்கு உள்பட்ட பூமி அடங்க. "யோ-[illegible]" 'இருந்து' என்கையாலே, முன்பு ஸ்திதிகமநஶயநாதிகளிலே அரதியாய்ச் சென்றமை தோற்றுகிறது. [துழாவி] - பித்தோபஹதர் சந்தநபங்கத்திலே கை வைக்குமாபோலே விரஹாக்நி நலியாமைக்குத் தத்ஸம்பந்தமுள்ள தொன்றிலே கையைவைக்கிறாள். [வாமனன் மண் இது என்னும்] - 'பிச்சேறினாற்போலே மண்ணைத் துழாவுகிறதென்?' என்ன, அத்யாதரத்தோடே 'ஸ்ரீவாமனன தன்றோ?'' என்னாநின்றாள்; மஹாபலியது மன்று, இந்த்ரனது மன்று; தத்ஸம்பந்தமே யாயிற்று, இவளுக்குத் தோற்றுகிறது. [இது என்னும்] - 'ப்ரத்யக்ஷத்திலும் ஸம்ஶய முண்டோ?' என்னாநின்றாள். பூதகாலத்தி லுள்ளதும் வர்த்தமாந காலத்திற்போலே தோற்றுகிறதிறே, இவளுக்கு; ஆனாலும், அளந்தவனைக் காணவொண்ணாதே இப்போது. [விண்ணை இத்யாதி] - ஆகாசத்தைத் தொழுது 'என்னோட்டைக் கலவி போலேயும் அவதாரம் போலேயும் பிரிவோடே வ்யாப்தமாயிருக்கையன்றிக்கே அவன் நித்ய வாஸம்பண்ணும் பரமபதம் என்றுசொல்லப் புக்கு, பலஹாநியாலே தலைக்கட்டமாட்டாதே ஹஸ்தசேஷ்டையாலே காட்டாநிற்கும். ஆகாஶத்தைத் தொழுகிறது,நாமஸாம்யத்தாலும் ஊர்த்வதையாலும். [அவன்மேவு வைகுந்தம்] - பூதகாலத்திலுள்ளது காண்கிறாப்போலே லோகாந்

தாத்திலுள்ளதும் காணவல்லளா யிருக்கிறபடி. ஆர்ஷ்டிஷேணாஶ்ரமத்திலே நிற்க, பாம பதம்தோற்றுகிறதிறே பாவபந்தத்தாலே. [என்று கைகாட்டும்]-நித்யஸூரிகளநுபவத்தைஅநு ஸந்தித்துத் தனக்கும் ப்ராப்தி ஒத்திருக்கக் கிடையாமையாலே நா தளர்ந்து குறைபும்; ஹஸ்த முத்ரையாலே காட்டாநின்றாள். [கண்ணை உள்நீர்மல்க நின்று]-'ப்ராப்தி ஒத்திருக்க இவ்வநுப வத்தை இழப்பதே!' என்று கண்ணநீர் பாயாநின்றாள். கீழ் அவதாரத்தை அநுஸந்தித்த போது கண்ணநீர் பாய்ந்திலள். அவர்களிலே பிரிகதிர்ப்பட்டுப் போந்தாளொருத்தி யென்னும் படியிறே இவள்படி. [கடல்வண்ண னென்னும்] - அத்தேஶத்திலிருக்கும் ஶ்ரமஹரமான வடிவைச் சொல்லாநின்றாள்; இவளைப் பிச்சேறப் பண்ணின வடிவாயிற்று. [அன்னே] - அம் மே! என்னுதல்; மன்னே என்னுதல். இரண்டும் - விஷாதஸூசகமான அவ்யயம்.[என் பெண் ணைப் பெருமயல் செய்தார்க்கு] - கலவிக்கும்உட்படமாட்டாத பருவமாயிருக்க, கலந்தார்க்கும் அவ்வருகான ஆர்த்தியையாயிற்று விளைத்தது. [என் பெண்ணை] - நாட்டார் பிச்சையுந் தவிர்க்கவல்ல என்மகளைக் கிடீர். [பெருமயல்] - பெரும்பிச்சு. ஶத்ருஶபதார்த்தத்தையும் ஸம் பந்திபதார்த்தத்தையும் அவனாக ப்ரமிக்கும் பிச்சு. [என் செய்கேன்] - அவனை வரப்பண்ணு வேனோ? இவளை ஆறியிருக்கப் பண்ணுவேனோ? நான் பொறுத்திருப்பேனோ? [பெய்வளை யீரே] - கையிலே இடப்பட்ட வளையையுடைய நீங்கள் இவள் கையில் வளை தொங்கும் மருந்து சொல்லவல்லிகோளே.

ஈடு.—முதற்பாட்டு. வினவவந்தவர்களுக்குத் தன்மகள்செய்தியை அறிவியாநின்று கொண்டு, 'இப்படி இவளை எம்பெருமான் பிச்சேற்றினான்; நான் இதுக்கு என்செய்வேன்?' என்கிறாள்.

[மண்ணையிருந்துதுழாவி]-"மண்முழுதுமகப்படுத்துநின்றவெந்தை"என்கிறபடியே அவன் திருவடிகளுக்கு உட்பட்ட பூமிப்பரப்படைய இருந்து துழாவாநிற்கும். அவன்ஸம்பந்தங்கொண் டே இத்தை விரும்புகிறது; அது ப்ராதேசிகமன்றே. "[Grantha text]" (மயாதுபக்த்யாதஸ்யைவவாமநஸ்யோபபுஜ்யதே). 'முன்புதோற்றுகிற சோலை யென்னென்பது?' என்று பெருமாள் கேட்டருள, பண்டு 'ஸித்தாஶ்ரமம்' என்று ஸ்ரீவாமநன் எழுந் தருளியிருந்த தேஶமாயிற்று; அவன் எழுந்தருளினபின்பு அவன்பக்கல் பக்தியாலே விடமாட் டாமே அம்மண்ணை மோந்துகொண்டு கிடப்பன்' என்றானிறே விஶ்வாமித்ரன். "[Grantha text]

---

முதற்பாட்டு - 'மண்ணை' இத்யாதி. பாட்டையெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - 'வினவ' இத் யாதி. வினவ - விசாரிக்க. செய்தி - செயல்.

'வாமனன்மண்' என்றதுக்குச் சேர, 'மண்' என்றதுக்கு - பூமியெல்லாமென்று அர்த்தம் - 'மண் முழுதும்' இத்யாதி; பூமிமுதலான ஊர்த்வலோகங்களை யெல்லாம் அளந்து ஸ்வாதீநமாக்கிக்கொண்டு க்ருத க்ருத்யனாய்நின்ற என்ஸ்வாமி யென்றபடி. 'மண்ணைத் துழாவி' என்றால் - பூமியெல்லாம் துழாவினதாக வேணுமோ? என்ன, 'அவன்ஸம்பந்தம்' இத்யாதி. அது - ஸம்பந்தம். அவன் ஸம்பந்தங்கொண்டு விரும்பி னாருண்டோ? என்ன, 'மயா' இத்யாதி. "[Grantha text]"

இதி பூர்வார்த்தம்; பாலகாண்டே தாடகாநிரஸநாநந்தரம் ராமம்ப்ரதி கௌஶிக:. என்னென்பது - ஏது; யத் ஸம்பந்தி யென்றபடி. "[Grantha text]" என்றதுக்கு அர்த்தம் - 'மோந்துகொண்டுகிடப்பன்' என்று. 'விடமாட்டாமே' என்றது - 'புஜ்யதே' என்கிற வர்த்தமாநார்த்தம். ப்ரமாணாந்தரம்-'விஷ்ணோ:' இத்யாதி. ஆரண்யபர்வணி பீமஸேநம்ப்ரதி ஹநூமாந்: "[Grantha text]" இதி பூர்வார்த்தம். இஶ்ஶ்லோகத்தால் - திருவடியும் பீமஸேநனோடே 'பெருமாள் ஸஞ்சரித்தருளினத்தை விட மாட்டாமலிருக்கிறேன்' என்று அருளிச்செய்தாரிறே. இந்தஶ்லோகத்தில் இந்த அர்த்தம் இல்லாவிட்டா

"ஷாஜிவெண ……" (விஷ்ணுர்மாநுஷரூபேணசசாரவஸுதாதலே) என்று அவன்பக்கல்ருசியுடையார் விடமாட்டார்களிறே. [இருந்து]-இவ்விருப்புக்குப்பூர்வக்ஷணத்தில் ஸ்திதிகமநஶயநாதிகளில் ஒருநியதியின்றிக்கே நோவுபட்டமை தோற்றுகிறது. [துழாவி] - இது தன்னை விடமாட்டாமையும் தோற்றுமிறே; பித்தோபஹதன் சந்தபங்கத்தில்நின்றும் கைவாங்க மாட்டாதாப்போலே; கைவாங்கில் விரஹாக்நியாலே வேம்போலே. தாங்கள்தெளிந்திருக்கிறார்களாய் 'இவள் ப்ரமித்தாரைப்போலே செய்கிறதென்னேன்புது?' என்பர்களே, அவர்களை 'நீங்கள் ப்ரமித்திகோளோ?' என்னுமாயிற்று இவள். [வாமனன்மண்இதுவென்னும்] - வாமனன்மண்ணன்றே இது? என்னும். 'அடியிலேபிறந்துடைய கந்தமன்றே?' என்னுநின்றாள். "……" (கந்தவதீப்ருதிவீ) என்றிறே நாட்டில் ப்ரஸித்தி; "……" (ஸர்வகந்தஃ) என்கிற விஷயத்தோட்டைஸம்பந்தமேயாயிற்று இவள் அறிவது. அவன் இரந்து தனக்காக்கிக்கொண்டதன்றே என்னுநின்றாள். அவனதானால் இந்த்ரனுக்குப்போலே கொடுக்கவேண்டாகாணும் இவளுக்கு; அவனதானபோதே இவளதாயேயிருக்கும். 'அவனதன்றுகாண்' என்று இவளை மீட்கவொண்ணாதே. [இதுவென்னும்] - ப்ரத்யக்ஷத்திலும் உங்களுக்கு ஸம்ஶயம் அநுவர்த்தியாநின்றதோ? என்னும்.பூதகாலத்திலுள்ளதும் இவளுக்கு வர்த்தமாநகாலத்திற்போலே தோற்றுகிறவித்தனைபோக்கி, அளந்தவனை இப்போது காணவொண்ணாதே. [விண்ணைத்தொழுது] - கழிந்தகாலத்திலுள்ளதும் வர்த்தமாநகாலத்திற்போலே தோற்றுகிறாப்போலே, லோகாந்தரத்திற்பரிமாற்றமும் இங்கே தோற்றாநின்றது. "அக்கரை, இக்கரை" என்னும்படி, அவர்களுக்கு இவ்விடத்திலும் அவ்விடம் அணித்தாய்த்தோன்றுமிறே; நமக்கு அவ்விடத்திலும் இவ்விடம் அணித்தா யிருக்குமாபோலே.

---

லும் அர்த்தாத் ஸித்தம்; ஆகையாலே, 'அவன்பக்கல் ருசியுடையார் விடமாட்டார்களிறே' என்றது. இப்போது 'இருந்து' என்றதுக்கு பாவம் - 'இவ்விருப்புக்கு' இத்யாதி. 'துழாவி' - என்றதுக்கு-துழாவாநிற்குமென்று வர்த்தமாநார்த்தம் - 'இதுதன்னை' இத்யாதி. இதுதன்னை - பூமியை. ஸம்பந்தங்கொண்டு விரும்புமளவன்றிக்கே தாரகத்வேநவும் விரும்பு மென்றபடி. 'மாட்டாமையும்' என்ற சப்தம் - கீழ் 'பூமிப்பரப்புடைய'என்றத்தை ஸமுச்சயிக்கிறது.விடமாட்டாதபடியைத்ருஷ்டாந்தமுகேந காட்டுகிறார் 'பித்தோபஹதன்' இத்யாதி. வ்யதிரேகேண தாத்பர்யம் 'கைவாங்கில்' இத்யாதி. மேலுக்கு அவதாரிகை - 'தாங்கள்' இத்யாதி. வாமநன்ஸம்பந்தங்கொண்டு துழாவுகிற என்னை 'ப்ராந்தை' என்ற நீங்களேயன்றோ ப்ராந்தைகளென்றபடி. என்னென்புது என்பர்களே - என்னவாயிருக்கிறது என்பர்களே யென்றபடி. இதுக்கு நியாமகமேது? என்ன, 'அடியிலே' இத்யாதி. அடியிலே யென்றது-சாடு. ஆதியிலே, திருவடிகளிலே யென்றும், "…… ……" இறே. உடைய கந்தமன்றே - கந்தமுடைய ப்ருதிவியன்றே. திருவடிகளிலே பிறக்கையாலே வந்த கந்தமன்றே வென்றபடி. பூமிக்கு கந்தம் ஸ்வதஸ்ஸித்தமாயிருக்கச்செய்தே, திருவடிகளோட்டை ஸம்பந்தத்தாலே வந்த கந்தமென்று இவளுக்கு நினைவென்கிறார்.'கந்தவதி'இத்யாதி வாக்யத்வயத்தாலே. த்ரிவிக்ரமன தன்றே மண், 'வாமனன்மண்' என்கிறதென்கொண்டு? என்ன, 'அவன் இரந்து' இத்யாதி. அவன் தனக்காக்கிக்கொண்டால் இவளுக்கு ப்ரயோஜநமேது? என்ன, 'அவனதானால்' இத்யாதி வாக்யத்வயத்தாலே. அவதாரிகை - 'அவனதன்று' இத்யாதி. கீழே 'மயாதுபக்த்யா' என்று தொடங்கி 'விடமாட்டார்களிறே' என்னுமளவும், சேஷபூதனுக்கு தத்ஸம்பந்தமுண்டானவை ததீயத்வேந உத்தேஶ்யமாயிருக்கு மென்று ஸ்வாபதேஶம் அருளிச்செய்தார்; அவனதானுலென்று தொடங்கி - அந்யாபதேஶம். ப்ரத்யக்ஷித்தாளாகில் அநுபவிக்க வொண்ணாதோ? என்ன, 'பூதகாலத்தில்' இத்யாதி. விண் - பரமபதமென்னுதல், இந்த ஆகாசமென்னுதல். பரமபதமென்று அர்த்தமானபோது பரமபதத்தை ப்ரத்யக்ஷிக்கக்கூடுமோ? 'கைகாட்டும்' என்கிறதென்? என்ன, 'கழிந்தகாலத்தில்' இத்யாதி. ஜ்ஞாநவைஶத்யத்தாலே தோற்றுமென்று ஸ்வாபதேஶம் - 'அக்கரை' இத்யாதி. அக்கரை - ஸம்ஸாரம். இக்கரை - பரமபதம். பெரியாழ்வார்திருமொழி அஞ்சாம்பத்து மூன்றாந்திருமொழி ஏழாம்பாட்டு: - "அக்கரையென்னுமனத்தக்கடலுளழுந்தி" இத்யாதி. அப்படி கண்ட

ஆர்ஷ்டிஷேணனுஶ்ரமத்திலேநின்று பரமபதங் கண்டார்களிறே சிலர். நாமஸாம்யத்தாலும், ஊர்த்வாகாரத்தாலும், இவ்வாகாஶத்தைப் பரமபதமென்று தொழாநிற்கும். [அவன்மேவு வைகுந்தம்] - என்னோடேகலந்து அகன்றவிடம்போலே பிரிவோடே வ்யாப்தமாயிராதே அவன் நித்யவாஸம்பண்ணும் தேசம் என்னுநின்றாள். அவதாரவ்யாவ்ருத்தியும் தனக்கு இழக்க வேண்டாமையும். [கைகாட்டும்] - அவன் ஏகரூபமாயிருக்கிற இருப்பை அநுஸந்தித்து, அவ் விருப்பிலும் தான் அநுபவிக்கப் பெறாமையாலே நடுவே தளர்ந்து, சொல்லப்புக்க வார்த்தை தலைக்கட்டமாட்டாதே ஹஸ்தமுத்ரையாலே தலைக்கட்டாநின்றாள்: 'பரமபதத்திலே நித்ய ஸூரிகள் நித்யாநுபவம்பண்ணுநிற்க, அவர்களோடொத்த ப்ராப்தி நமக்கும் உண்டாயிருக்க, நாம் இழப்போமே' என்று தளர்ந்து தொடங்கின வார்த்தை தலைக்கட்டமாட்டுகிறிலள். [கண்ணையுண்ணீர்மல்கநின்று]- அவதாரம்போலன்றிக்கே என்று மொக்க அநுபவிக்கலாம்படி யிருக்கிற பரமபதத்திலிருப்பிலும் நான் இழப்பதே! என்று கண்ணீர்மல்குமாயிற்று. [கடல்வண்ணனென்னும்] - அவ்வடிவைக்காட்டிக்காணும் இவளை அவன் பிச்சேற்றிற்று; இவளும் தன்னைப் பிச்சேற்றினபடியே சொல்லாநின்றாள். ஒருகருங்கடல்வடிவுகொண்டு செவ்வேயிருந்தாற்போலே அங் கிருக்கு மிருப்பைச் சொல்லும். [அன்னே] - 'அம்மே' என்று, விஷாதாதிஶய ஸூசகமாயிருப்ப தொரு அவ்யயம். மன்னே என்னவுமாம். [என்பெண்ணை] - "யுவதிஶ்ச குமாரிணீ" (யுவதிஶ்சகுமாரிணீ) என்கிறபடியே கலவியிலும் உட்புகமாட்டாத பருவமாயிற்று இவளது. [பெருமயல் செய்தார்க்கு] - தம்மைக் கலந்து பிரிந்தார் படும் வ்யஸநத்தளவுமல்ல இவளைப்படுத்திற்று. ஸத்ருஶ பதார்த்தத்தைக் கண்டு கலங்கினாள் இவளேயிறே. [என்செய்கேன்] - இவளாற்றாமைதீர அவனை வரப்பண்ணவோ? 'அவன்வருமளவும் க்ரமப்ராப்தி பார்த்து ஆறியிருக்கவேணுங்காண்'

---

பே றுண்டோ? என்ன, 'ஆர்ஷ்டிஷேணன்' இத்யாதி. சிலர் - தர்மபுத்ரன். ஆர்ஷ்டிஷேணனென்பானொரு ருஷி தன்னுடைய ஆஶ்ரமத்திலேநின்று தர்மபுத்ரனுக்குப் பரமபதத்தைக் காட்டினானென்றபடி. ப்ராந்தி தஶையிலே கைகாட்டக்கூடுமோ? என்ன, ' "தேறியுந்தேறாது மாயோன்திறத்தனள்" என்கையாலே கூடும்" என்று அருளிச்செய்வர். ப்ராந்த்யநுகுணமாக 'விண்' என்றதுக்கு - ஆகாசமாக இரண்டாமர்த்தம் - 'நாமஸாம்யத்தாலும்' இத்யாதி. 'மேவுவைகுந்தம்' என்றதுக்கு வ்யாவர்த்யபூர்வகமாக அர்த்தம் - 'என்னோடே' இத்யாதி. 'மேவு'என்றதுக்கு பலிதம் - 'அவதார' இத்யாதி. 'வைகுந்தம்' என்றத்தைப் பற்ற, 'தனக்கு இழக்கவேண்டாமையும்' என்றது. அவன் - முன்பு தன்னோடேகலந்த குணாதிகன். 'கைகாட்டும்' என்றதுக்கு வாஸநை - 'அவன் ஏகரூபமாய்' இத்யாதி. தாத்பர்யாந்தரமாதல், கீழ்வாக்யவிவரணமாதல்—'பரமபதத்திலே' இத்யாதி. ஏகரூபமாயிருக்கும் ப்ரகாரம் இன்னதென்று விவரியாநின்றுகொண்டு, இதுவே கண்ணீர்மல்குகைக்கு ஹேதுவென்கிறாராதல், கீழெல்லாம்கடாக்ஷித்து ஸாவமாதல் - 'அவதாரம்' இத்யாதி. 'கண்ணை' என்கிற ஐகாரம் - அவ்யயம்; கண்ணுள் நீர்மல்க வென்றபடி. 'பெருமயல்' என்றத்தைக் கடாக்ஷித்து இதுக்கு ஸாவம் - 'அவ்வடிவை' இத்யாதி. ஆகையாலே, இவள் அத்தையே சொல்லாநின்றாளென்கிறார்-'இவளும்' இத்யாதி. த்விதீயபாதத்தையும் உட்கொண்டு ஸாவம் - 'ஒருகருங்கடல்' இத்யாதி. செவ்வே - ஊர்த்வமாக. 'அங்கிருக்கு மிருப்பு' என்றது - 'வைகுந்தம்' என்றத்தைப் பற்ற. பரமபதத்திலிருப்பென்றபடி. 'மன்னே யென்னவுமாம்' இதி; அதுவும் - அப்பாவென்று விஷாதாதிஶய ஸூசகமா யிருப்பதொரு அவ்யயம். ஆக, இத்தால் - அம்மே அப்பா என்னுமாபோலே யென்கை. 'சிறுமான்' என்றத்தைக் கடாக்ஷித்து இதுக்கு ஸாவம் - 'யுவதிஶ்ச' இத்யாதி. பெருமைக்கு அர்த்தம் - 'தம்மைக்கலந்து' இத்யாதி. 'கலந்துபிரிந்தார்படும் வ்யஸநத்தளவல்ல' என்றது - "மையலேற்றிமயக்க" என்ற ஆண்டாளையும், "உந்மாதஜோவிகாரோவா" என்ற பிராட்டியையும் வ்யாவர்த்திக்கிறது. பிராட்டியும் ஆண்டாளும் இப்படி கலங்கினார்களில்லையே யென்று கருத்து. இவளுக்கு வாசியேது? என்ன, 'ஸத்ருஶ' இத்யாதி. 'என்செய்கேன்' - அவன் ஸ்வதந்த்ரனாகையாலும் இவள் அதிப்ரவணையாகையாலும் தனக்கு அஶக்யமென்றபடி. பெய்தல் - இடுதல். இவளு

என்று இவளைத் தரிப்பிப்பேனோ? [பெய்வளையீரே] - இடப்பட்ட வளையையுடையீர்! ப்ரளயத்திலே புறவடிநனையாமேயிருப்பாரைப்போலே, இவ்வளவிலும் கையும் வளையுமா யிருப்பதே நீங்கள்! நீங்கள் வளைதோங்குகைக்குச் செய்த பரிஹாரத்தைச் சொல்லவல்லிகோளே; நானும் கைமேலே அநுஷ்டித்துப்பார்க்க. (க)

## இரண்டாம்பாட்டு.

பெய்வளைக்கைகளைக்கூப்பிப் பிரான்கிடக்குங்கடலென்னும்
செய்யதோர்ஞாயிற்றைக்காட்டிச் சிரீதரன்மூர்த்திஈதென்னும்
நையுங்கண்ணீர்மல்கநின்று நாரணனென்னுமன்னே! என்
தெய்வவுருவிற்சிறுமான் செய்கின்றதொன்றறியேனே.

*ஆ.*—(பெய்வளை.) இக்கடலை அவன்கண்வளர்ந்தருளுகிற திருப்பாற்கடலாகக் கருதி, தன்னுடைய பெய்வளைக்கைகளைக் கூப்பி, பிரான்கிடக்கும் கட லென்னும். எம்பெருமானும் பிராட்டியும், ஆதித்யனும் அவனுடைய ப்ரபையும்போல இருக்கையாலே, அந்த ஆதித்யனைக் காட்டி, சிரீதரன்மூர்த்தி ஈதென்னும். தன்கைக்கு அவன் எட்டாதொழிந்தவாறே நையும். அந்தவ்யஸநத்தை ஸஹிக்கமாட்டாமையாலே கண்ணீர்மல்க நின்று, நாரணனென்னும். ஆஶ்சர்யபூதையான இவள் செய்கிற செயல்ஒன்றும் தெரிகிறதில்லை யென்கிறாள்.

*ஒ.*—இரண்டாம் பாட்டில், 'அப்ராக்ருதரூபையான இவள் செய்கிறன ஒன்றும் தெரிகிறதில்லை' என்கிறாள்.

[பெய்வளைக் கைகளை] - 'கடல் வண்ணன்' என்று அநுஸந்திக்கையாலே பூரித்த வளைகளையுடைத்தான கைகளை. [பிரான்] - உபகாரஶீலன். [செய்யது என்று தொடங்கி] - ஆதித்யனும் ப்ரபையும் சேர்ந்திருக்கிறபடியைக் கண்டு 'இது ஸ்ரீதரனுடைய வடிவு' என்று ஹ்ருஷ்டையாம். 'பெரிய பிராட்டியார் ஸந்நிஹிதையாயிருக்கச்செய்தே நான் அவனைப் பெறுதொழிவதே!' என்று ஶிதிலையாம். அந்தஶைதில்யத்தாலே கண்ணீர்மல்கநின்று தன்னுடைய தாரணார்த்தமாகத் தன்னோடு அவனுக்கு உண்டான ஸம்பந்தத்தை நினைத்து, நாராயணனென்னும்.

*ப.*—அநந்தரம், 'அவனோடு ஸம்பந்தமுடைய கடலையும் ஆதித்யனையுங் கண்டு ஶிதிலையாகாநின்றாள்' என்கிறாள்.

பெய் - (பலகாலும் கழன்று) இடப்படாநிற்கிற, வளை - வளைகளையுடைய, கைகளை - கைகளை, கூப்பி - கூப்பி அஞ்சலிபண்ணி, (தன்முன்பே கோஷிக்கிற கடலைப்பார்த்து), பிரான் - (ஶரணம்புக்க தேவர்களுக்கு முகங்காட்டும்) உபகாரகனானவன், கிடக்கும் - (எனக்கு முகங்

---

டைய துஃகாதிஶயஞ் சொல்லுகிறவளவிலே 'பெய்வளையீரே' என்கிறவளுடைய ஹார்த்தபாவத்தை இரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - 'ப்ரளயத்தில்' இத்யாதி வாக்யத்வயத்தாலே. புறவடி - புறங்கால். இந்த வ்யஸநம் கண்ட உங்களுக்குத் துஃகமில்லை யென்றபடி. தாத்பர்யாந்தரம் - 'நீங்கள்' இத்யாதி. கைமேலே யென்றது - ரஸோக்தி. கைமேலே வளைதொங்கும்படி பரிஹாரத்தைப்பண்ணிப் பார்க்கவென்று ஸ்வரஸார்த்தம்; ஸத்யஃ அநுஷ்டித்துப்பார்க்க வென்று த்வநி. பெய்வளையீரே இத்யாரப்யார்வயஃ. (க)

காட்டக்) கிடக்கிற, கடல்-கடல், என்னும் - என்னாநிற்கும்; (ராத்ர்யவஸாநத்திலே உதித்து), செய்யது - சிவந்த ஒளியாலே, ஓர் - அத்விதீயனான, ஞாயிற்றை - ஆதித்யனை, காட்டி - கை காட்டி, சிரீதரன் - ("விஷ்ணுஸஹாயவஷூரோஜோஹிதா ஸுஸம்ஸ்நாத ந்ஜ" என்று பெரியபிராட்டியாரோடே கூடி உபாஸ்யனான) ஸ்ரீதரன் இருக்கிற, மூர்த்தி - வடிவு, ஈது - இது, என்னும்-என்னாநிற்கும்; நையும் - (இப்படி ஶரண்யனுமாய் உபாஸ்யனுமானவனைக் கிட்டி அநுபவிக்கப்பெறாமையாலே) ஶிதிலையாகாநிற்கும்; (அந்தஶைதில்யத்தாலே), கண்ணீர் - கண்ணீர், மல்க-மல்க, நின்று-நின்று, நாரணன் - (நிருபாதிகஸம்பந்தயுக்தனான) நாராயணன், என்னும் - என்னாநிற்கும்; அன்னே - அம்மே! என் - என்னுடைய, தெய்வவுருவில் - ஸூரிகள்வடிவுபோலே அப்ராக்ருதமான வடிவையுடையளாய், சிறு-முக்தமான, மான் - மான்போலே இளையபருவத்தையுடையளான இவள், செய்கின்றது - செய்கிறது, ஒன்று-ஒன்றும், அறியேன்-அறிகிறிலேன்.

ஶரண்யஸ்தலத்தை அஞ்சலிபண்ணாநின்றாள், உபாஸ்யஸ்தலத்தைக் காட்டாநின்றாள், ஒன்றிலேநின்றாளாக அறியப்போகிறதில்லை யென்று கருத்து.

இ.—இரண்டாம்பாட்டில், 'அப்ராக்ருதரூபையான இவள் செய்கிறன ஒன்றும் தெரிகிறதில்லை' என்கிறாள்.

[பெய்வளைக் கைகளைக் கூப்பி] - "கடல் வண்ணன்" என்று அநுஸந்தித்தவாறே கழன்ற வளைக ளொழியச் சரிந்த வளைகள் பூரித்தன; தொழுவிக்கைக்கு ஒப்பித்துத் தான் தொழ நின்றாள். அவனைத் தொழுவிக்கைக்கிறே ஒப்பித்தது; வீரக்கழலோடே எதிரிகள் கையிலே நோவுபடுவாரைப்போலே. "வம்ஸாம்ஷ்ணுவிவிதாவஹாரிணஂ" என்று வன்னெஞ்சானவர்களையும் அழிக்கும் விஷயமிறே. [பிரான் இத்யாதி] - கடலோசை வந்து செவிப்பட்டது, என்ஆர்த்தி தீர்க்கைக்காக உபகாரகனானவன் வந்து கிடக்கிற கடல் என்னாநின்றாள். [செய்யதோர் இத்யாதி] - ராத்ரியெல்லாம் ஸமுத்ரகோஷத்துக்கு ஆடல் கொடுத்து ஆதித்யன் உதித்தவாறே ஆதித்யனும் ப்ரபையும் சேர்ந்திருக்கிற படியைக் கண்டு 'இது ஸ்ரீதரனுடைய வடிவு' என்று ஹ்ருஷ்டையாகாநின்றாள். ப்ரபாப்ரபாவான்களுடைய சேர்த்திமாத்ரத்தையே கொண்டு சொல்லாநின்றாள். "ஹாஸ்கரேண ப்ரபாயதா" என்னக்கடவதிறே. [செய்யதோர் ஞாயிற்றை] - அழகியதாய் அத்விதீயமான நாயிறு. தாயும் தமப்பனும் சேர இருந்த ஸந்நிதியிலே பசித்த ப்ரஜைகளைப்போலே ஶிதிலையாகாநின்றாள். புருஷகாரபூதை ஸந்நிஹிதையாயிருக்க, 'இனி யார் புருஷகாரமாகப் பெற இருக்கிறேன்?' என்று ஶிதிலையாகாநின்றாள். [கண்ணீர் மல்க நின்று நாரணனென்னும்] - அந்தஶைதில்யத்தாலே கண்ணீர் மல்க நின்று தன்னோடே அவனுக்கு உண்டான ஸம்பந்தத்தை நினைத்து 'நாரணன்' என்னும். 'சிரீதரன்' என்னா, 'நாரணன்' என்பதற்கு முன்னே ஶிதிலையாகா நின்றாள். ஸ்ரீமந் நாராயணனென்று கூடச் சொல்லமாட்டுகிறிலள். [அன்னே] - 'அம்மே' என்பாரைப்போலே. 'மைத்ரேய' என்பாரைப்போலே தளர்த்திக்கு ஊற்றங்கோல் தேடுகிறாள். [என்தெய்வவுருவில்] - ஸத்ருஶமாகவும் ஸம்பந்தியாகவு முள்ள பதார்த்தங்களை அவனாக அநுஸந்திக்க நித்யஸூரிகள் வடிவுபோலே இவள்வடிவும் அப்ராக்ருதமாயிருக்கிறபடி. [சிறுமான்] - அவர்களிற்காட்டில் இவளுக்கு வாசி, பருவத்தாலே இளையளாய் முக்தையாயிருக்கும். அவர்கள் "வ்ருத்தஜாவெ வாராணா:" என்னும்படியிறே இருப்பது. [செய்கின்றது ஒன்று அறியேனே] - 'இவள் தொடங்குகிறது எது? தலைக்கட்டுகிறது எது?' என்று ஒன்றும் தெரிகிறதில்லை.

ஈடு.—இரண்டாம்பாட்டு. 'அப்ராக்ருதரூபையான இவள் செய்கிறன ஒன்றும் தெரிகிறதில்லை' என்கிறாள்.

[பெய்வளைக்கைகளைக்கூப்பி] - அவனைத்தொழுவித்துக்கொள்ளும் பரிகரத்தையுடையவள், தான்தொழாநின்றாள். அவனைத்தொழுவித்துக்கொள்ளப்போலேகாணும் கையில் வளையிட்டது. 'கடல்வண்ணன்' என்றவாறே கழன்ற வளைகளொழியச் சரிந்தவளைகள் பூரித்தனகாணும். கையிலே ப்ரஹ்மாஸ்த்ரமிருக்கப் படும் பாடே இது. வீரக்கழலோடே பட்டுக்கிடப்பாரைப் போலேயிறே இவள்கிடக்கிற கிடை. இங்ஙனே நோவுபடாநிற்கச்செய்தே கடலோசை வாராச் சேவிப்படுமே. [பிரான்கிடக்குங்கடலென்னும்] - 'திருப்பாற்கடலிலே சாய்ந்தால் நம் ஆர்த்திக்குக் கடுக உதவவொண்ணாது' என்று, அணித்தாக இக்கடலிலே சாய்ந்தருளின மஹோபகாரகனென்னும். இப்படி ராத்ரியெல்லாம் கடலோசையோடே அலைந்து, விடிந்தவாறே ஆதித்யன்வாராத் தோற்றுமே. [செய்ய இத்யாதி]-உதயகாலத்தில் ஆதித்யனைக் கண்டு, ஸ்ரீதரனுடைய வடிவு இது என்னும். ஸர்வதாஸாத்ருஶ்யம் வேண்டாதே, அல்பஸாத்ருஶ்யம்அமையாநின்றதாயிற்று, இவள் ப்ரமிக்கைக்கு. ப்ரபாப்ரபாவான்களைக் கண்டவாறே, அவளும் அவனுமாக இருக்கும் இருப்பை நினையாநின்றாள்; "ராஸ்கரேணப்ரபாயதா" (பாஸ்கரேணப்ரபாயதா). [நையும்] - மாதாபிதாக்கள் சேரஇருக்க, அவர்கள்ஸந்நிதியிலே பசித்த ப்ரஜைகளைப்போலே ஶிதிலையாகாநின்றாள். "புருஷகாரபூதை அருகேயிருக்கப்பெறாத நான் இனி யார் புருஷகாரமாகப் பெற இருக்கிறேன்?" என்று ஶிதிலையாகாநின்றாள். [கண்ணீர்மல்கநின்று] - தளர்த்தியின் மிகுதியாலே கண்ணீர் வெள்ளமிடாநின்றது. [நாரணனென்னும்] - 'அம்மே' என்பாரைப்போலே. "ஸ்ரீமந்நாராயணன்" என்றுகூடச் சொல்லமாட்டாதே தளர்ந்து, கண்ணீராலே கைகழுவி, பின்னை நாரண

---

இரண்டாம்பாட்டு-'பெய்வளை' இத்யாதி. 'தெய்வவுருவிற்சிறுமான்' இத்யாதி மேலெல்லாங் கடாக்ஷித்து அவதாரிகை - 'அப்ராக்ருத' இத்யாதி.

'பெய்வளை' என்று வைத்து'கைகளைக்கூப்பி' என்றவளுடைய ஹார்த்தபாவம்-'அவனை' இத்யாதி. தொழுவித்துக்கொள்ளும் பரிகரமோ? என்ன, 'அவனைத் தொழுவித்துக்கொள்ள' இத்யாதி. விஶ்லேஷதசையில் வளையுண்டோ? என்ன, 'கடல்வண்ணன்' இத்யாதி. கழன்ற-நழுவின. சரிந்த-நழுவாநின்ற. 'அவனை' இத்யாதி வாக்யத்வயவிவரணம் - 'கையிலே ப்ரஹ்மாஸ்த்ரம்' இதயாதி வாக்யத்வயம். இது பரிஹாராநந்தரமாதல். அதாவது – பூர்வாவஸ்தையில் வளைக ளென்றபடி. விஶ்லேஷதசையில் உபகாரமேது? என்ன, 'திருப்பாற்கடலிலே' இத்யாதி. அணித்தாக - ஸமீபமாக. 'இக்கடலிலே' என்றது - "நீலக்கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தான்" என்றத்தைப் பற்றவாதல்; "இதுவும் கடலன்றோ, இங்கேயும் கிடவானோ" என்று இருக்கிறாளாதல். அலைந்து - க்லேஶித்து. வாரா - வந்து. ஸாம்யமுண்டாய் ப்ரமிக்கவேண்டாவோ? ஶ்யாமமான விக்ரஹத்தையுடையவனை ஆதித்யனாக ப்ரமிக்கக்கூடுமோ? என்ன, 'ஸர்வதா' இத்யாதி. அல்பஸாத்ருஶ்யமேது? என்ன, 'ப்ரபா' இத்யாதி. செய்யது – சிவந்த. உதிக்கிற ஆதித்யனாகையாலே 'சிவந்த' என்கிறது. உதயகாலத்தில் சிவந்தவொளியால் அத்விதீயனான ஆதித்யனைக் காட்டி இத்யர்த்த:. 'இவள் ப்ரபாஸ்தாநீயையோ?' என்ன, 'பாஸ்கரேண' இத்யாதி. "கூ.ந.ந ராஹீயோஷீ தாஹாஸ்ரேண ஹாயயா" இதி யுத்தகாண்டே ராம:; "கூ.ந.ந ராராவபவெணாஹஂஹாஸ்ரெண ஹாயயா" இதி ஸுந்தரகாண்டே ராவணம்ப்ரதி ஸீதா. அவளும் அவனுமான சேர்த்தி சொன்னதுக்கு ஹாவம் - 'மாதாபிதாக்கள்' இத்யாதி. தார்ஷ்டாந்திகத்திலே, பிராட்டியைச் சொன்ன அநந்தரம் இவள் ஶிதிலையாம் ப்ரகாரத்தை உபபாதிக்கிறார் - 'புருஷகார' இத்யாதி. 'புருஷகாரபூதை' என்றது 'சிரீதரன்' என்றவிடத்தில் சிரீயின் தாத்பர்யம். 'நையும்' என்றத்தைக் கூட்டி ஹாவம் - 'தளர்த்தியின்' இத்யாதி. 'அம்மேயென்பாரைப்போலே' இதி:ஸம்பந்தம் - நாராயணஶப்தார்த்தமிறே யென்று கருத்து. 'சிரீதரன்' என்ற அநந்தரம் 'நாரணன்' என்னாதே, 'நையும்' இத்யாதிபதத்வயவதாநத்துக்குத் தாத்பர்யம் - 'ஸ்ரீமந்நாராயணன்' இத்யாதி. 'கண்ணீராலே கைகழுவி' இதி—

னென்னுநின்றாள். [அன்னே] - "மைத்ரேய" என்னுமாபோலே, தனக்கு ஒருற்றங்கோல் தேடுகிறாள். [என்தெய்வவுருவில்] - ஸத்ருஶபதார்த்தங்களையும் ஸம்பந்திபதார்த்தங்களையும் அநுஸந்திக்க அநுஸந்திக்க, நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகள்வடிவிற் பிறக்கும் புகர் பிறவாநின்றதாயிற்று இவளுக்கு; அவர்களில் இவளுக்கு வாசியுண்டு:—[சிறுமான்]-"வ்ருத்தா:" (புராணஃ)என்றும், "விண்ணாட்டவர்மூதுவர்" என்றுஞ் சொல்லுகிறபடியே பழையராயிருப்பர்களிறே அவர்கள். [செய்கின்றதொன்றறியேனே] - இவள் தொடங்குகிறது எது? தலைக்கட்டுகிறது எது? என்று ஒன்றும் தெரிகிறதில்லை. (உ)

## மூன்றாம்பாட்டு.

அறியும்செந்தீயைத்தழுவி அச்சுதனென்னும்மெய்வேவாள்
எறியும்தண்காற்றைத்தழுவி என்னுடைக்கோவிந்தனென்னும்
வெறிகொள்துழாய்மலர்நாறும் வினையுடையாட்டியேன்பெற்ற
செறிவளைமுன்கைச்சிறுமான் செய்கின்றதென்கண்ணுக்கொன்றே.

ஆ.—(அறியும்.) எல்லாராலும் தாஹகஸ்வபாவத்வேந அறியப்படுகிற செந்தீயை அதினுடைய ஔஜ்ஜ்வல்யத்தாலே எம்பெருமானாகக் கருதிச் சென்று ஸம்ஶ்லேஷித்து அந்த ஸம்ஶ்லேஷஜநிதப்ரீதியாலே, அச்சுதனென்னும்; மெய்வேவாள்; அதினுடைய ஶைத்யாதிஶயத்தாலே நிரஸ்த ஸமஸ்தஸந்தாபையாயிருக்கும். அதிஶீதளமாய்க்கொண்டு வருகிற தென்றலை, பசுமேய்க்கப்பெற்றுவருகிற வண்டுவரைப்பெருமானென்று நிஶ்சயித்து அக்காற்றைத் தழுவி, அடியேன் இவன் என்னுடைய கோவிந்தனென்னும். வெறிகொள்துழாய்மலர் நாறும். இப்படி எம்பெருமானைப் பிரிந்துபடுகைக்கு அர்ஹையன்றியேயிருக்கச்செய்தே, இவள் என்னுடைய பாபத்தாலே பிச்சேறிச் செய்கிற செயல்கள் இவ்வளவோ! என்கிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், இவளுடைய அதிப்ரவ்ருத்திகளைச் சொல்ல என்று புக்கு 'அவற்றுக்கு எண்ணில்லை' என்கிறாள்

[அறியும் என்று தொடங்கி.] - 'மந்த்ராதிகளாலே ப்ரதிபத்தஶக்திகமன்று' என்று அறியப்படுகிற செந்தீயை ஔஜ்ஜ்வல்யத்தாலே எம்பெருமானாகக் கருதித் தழுவி 'நாம் மங்களாந

---

ஶிஷ்டர்கள் ஒரு வைதிகக்ரியை செய்யும்போது முந்துற ஹஸ்தப்ரக்ஷாளநம் பண்ணிக்கொண்டு, பின்னையிறே செய்வது; அப்படியே இவள் முந்துறக் கண்ணீர்விட்டு, பின்னைச் சொல்லாநின்றாளென்றபடி. தனக்கு - தாயாரான தனக்கு. ஊற்றங்கோல் - ஊன்றுகோல். 'மையும்' என்றுவைத்து 'தெய்வவுரு' என்கிறதென்? என்ன, 'ஸத்ருஶ' இத்யாதி. இங்கு தெய்வசப்தம்-"திவு-க்ரீடா" இத்யாதி தாதுவிற் சொல்லுகிற காந்தியைச் சொல்லுகிறது. தெய்வவுரு - காந்திமத்தான வடிவு. உருவில் - உருவை யுடையவள். 'அப்ராக்ருதமான வடிவையுடையவள்' என்று உரை. சிறுமான்-முக்தமான மான்போலே இளையபருவத்தையுடையவள். அவர்கள் வ்ருத்தர்களோ? என்ன, 'புராணஃ' இத்யாதி. பழையராயிருப்பர்களிறே அவர்கள்: ஆகையாலே, அவர்களுக்கு ப்ரமிக்கைக்கு ஹேதுவில்லை. இவள் அதிமுக்தையாகையாலே மிகவும் கலங்குகைக்கு உடலாயிருக்குமென்றபடி. ஸந்தோஷமும் து:கமு முண்டாகையாலே, 'ஒன்றும் தெரிகிறதில்லை' என்கிறாள். 'தெய்வவுரு' என்ற காந்தியைச் சொல்லுகையாலே, ஸந்தோஷம்; 'பெய்வளை' என்று பலகாலும் கழன்றிடப்படாநிற்கிற வளையென்கையாலே, து:கம். 'விண்ணாட்டவர் மூதுவர்' என்று திருவிருத்தம், இரண்டாம்பாட்டு; "செழுநீர்த்தடத்து" இத்யாதி; பரமபதத்திலிருக்குமவர்களாய்ப் பழையராயிருக்குமவர்கள் இத்யர்த்த:. க்ரமேண அந்வய:. (உ)

படி வந்து ஸந்நிஹிதனானன்' என்று சொல்லாநின்றுகொண்டு அதக்தகாத்ரையுமாம். [எறியும் என்று தொடங்கி] - இனிதாகவீசும் காற்றைப் பசுமேய்த்துத் தன்னோடே ஸம்ஶ்லேஷிக்க வருகிற க்ருஷ்ணனைக் கொண்டு தழுவி ப்ரீதி உள்ளடங்காமையாலே 'என்னுடைய கோவிந்தன்' என்னாநின்றாள். உடம்பெல்லாம் அதிபரிமளமான திருத்துழாய் நாறாநிற்கும். [வினை என்று தொடங்கி] - இவளை இங்ஙனே காண்கைக்கு ஈடான பாபத்தைப் பண்ணின என் வயிற்றிலே பிறந்த. 'செறிவளை முன்கைச் சிறுமான்' என்றது, விஶ்லேஷவ்யஸநத்தில் புதியது உண்டாதவ ளென்றும், தன்கையையும் வளையையும் கண்டார் படும் பாட்டைத் தான் படாநின்றாள் என்றுமாம்.

ப.—அநந்தரம், அவனுடைய ப்ரதாபாநுக்ரஹங்களை நினைத்து, அக்நியையும் வாயுவையும் அவன்தானாக ப்ரதிபத்திபண்ணி மேல்விழாநின்றாள் என்கிறாள்.

அறியும் - சுடுமென்று அறிந்துபோரப்படுவதாய், செம் - சிவந்தநிறத்தையுடைத்தான, தீயை - நெருப்பை, தழுவி - (தேஜோமயவிக்ரஹத்தை யுடையவனைக்கொண்டு மேல் விழுந்து) அணைத்து, அச்சுதன் - என்னைவிடாதவனன்றோ? என்னும் - என்னும்; (இப்படி தாஹகமான அக்நியை மேல்விழச்செய்தே ப்ரஹ்லாத ஶரீரம்போலே), மெய் - உடம்பு, வேவாள்- வேகிறிலள்; (இவள் ப்ரமித்தாலும் அவனுக்கு அஞ்சுகையாலே தஹியாதிறே); எறியும்-வீசுகிற, தண் - குளிர்ந்த, காற்றை - தென்றலை, தழுவி - (அணைத்து அதுகுளிர்ந்திருக்கையாலே ப்ரணயியான அவனாக நினைத்துத்) தழுவி, என்னுடை - எனக்குஸ்வயனான, கோவிந்தன் - கோவிந்தன் (பசுமேய்க்கப்போய் 'நான் க்லேஶிக்கிறேன்' என்று காற்றிற்கடியனாய் வந்ததென்?) என்னும் - என்னும்; (இவள்), வெறிகொள் - பரிமளப்ரசுரமான, துழாய்மலர்-திருத்துழாய், நாறும் - நாறாநிற்கும்; ("ஓர்தண் தென்றல் வந்து - அம்பூந்துழாயின் இன்தேன் புயலுடைநீர்மையினால் தடவிற்று என்புலன்கலனே" என்கிறபடியே இவள் உயவிடம்பெற்று உய்கைக்காகக் காற்றோடே கலந்துபுகுந்தாராகக்கூடும்); வினையுடையாட்டியேன்-இப்படி ப்ரமிக்கக் காணும்படியான) பாபத்தையுடைய நான், பெற்ற-பெற்றவளாய், செறி - (போலிகண்டு அவனாகநினைத்து மேல்விழுகையாலே பூரித்துச்) செறிந்த, வளை - வளையையுடைத்தான, முன்கை - முன்கையையுடையளாய், சிறு - முக்தமான, மான்-மான்போலேயிருக்கிற இவள், செய்கின்றது - செய்கிற வ்யாபாரம், என் கண்ணுக்கு - என் கண்ணுக்கு, ஒன்றே - ஒன்றாக இருக்கிறதில்லை; [பஹுவிதமாயிருக்கிறது.]

நெருப்புச் சுடாமையாலே லோகத்தார்படி யல்லள்; காற்றுச் சுடாமையாலே பிரிந்தார்படி யல்லள்; போலிகண்டு ப்ரமிக்கையாலே கூடினார் படியல்லள்; திருத்துழாய் மணக்கையாலே கூடாதார்படி யல்ல ளென்று கருத்து.

இ.—மூன்றாம் பாட்டில், இவளுடைய அதிப்ரவ்ருத்திகளைச் சொல்லப்புக்கு 'அவற்றிற்கு எண் இல்லை' என்கிறாள்.

[அறியும் செந்தீயைத் தழுவி] - தாஹகமென்று அறிந்து போருமத்தைத் தழுவாநின்றாள். மந்த்ரௌஷதாதிகளாலே ப்ரதிபந்தகஶக்திதான் உண்டாய்த் தழுவுகிறா ளன்றே. [செந்தீயைத் தழுவி] - "தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்" என்று ஒளியுடைமையைப் பார்த்துத் தழுவாநின்றாள். "பொருநீர்க்கடல் தீப்பட்டு எங்குந்திகழ மெரியொடு செல்வதொப்ப" என்னுமா போலே, மாணிக்கப்படி சாத்திவந்து தன்னோடே அணைவதாக நிற்கிறானைக் கொண்டு தழுவாநின்றாள். [அச்சுதனென்னும்] - இத்தஶையிலே வந்து ஸந்நிஹிதனாய் 'என்னை மங்காமே நோக்கினான்' என்னாநின்றாள்; 'எல்லா அவஸ்தையிலும் உள்ளவர்கள் உடைமையை நழுவ

விடார்களிறே' என்னுநின்றாள். [மெய்வேவாள்]-அதக்தகாத்ரையாய் இராநின்றாள். இவள் ப்ரமித்தால் அது தன் கார்யம் செய்தாலாகாதோ? "வஸ்ரூஹிவஃ ஹஸ்ரணாஸ்ரூ தாநிஸீ தாநிஸவஹா ணிஷிஸாஃ வாதி" என்னக்கடவதிறே. "ஸீதொரஹவ" என்றாரும் இல்லைகிடீர். "ஸீதோரஹவ" என்றவள்தானேயிறே இங்ஙனே செய்கிறாள். [எறியும் இத்யாதி] - வீசுகிற குளிர்ந்த காற்றைத் தழுவி, 'பசுக்களை மேய்த்துத் தன் ஆர்த்தி தீர வந்தான்' என்னுநின்றாள். "நஜீவெயா க்ஷணமபி" என்கிறபடியே நைந்திருக்கையாலும், தன்ஸத்தை பரார்த்தமா யிருக்கையாலும் ப்ரமிக்கிறாள். லௌகிகர்படியுமன்று, விரஹிணிகள்படியுமன்று. லௌகிகர் படியாகில் நெருப்புச் சுடவேணும்; விரஹிணிகள் படியாகில் காற்றுச் சுடவேணும்: இரண்டும் கண்டிலோமென்கை. [வெறிகொள் துழாய்மலர் நாறும்] - இத்தசையிலே ஸம்ஶ்லேஷஸூசகமான இந்தப் பரிமளம் எங்ஙனே உண்டாம்படி? என்னில்,—காற்றோடே புகுந்து அணைந்தாரென்று கார்யத்தைக் கொண்டு கல்பித்தல், "கோவைவாயா"ளில் அநுபவம் பத்துக்குளிக்கு நிற்கும்' என்னுதல், 'வந்தேறி கழிந்தால் ஆத்மஸ்வரூபம் பகவத்ஸம்பந்தியாயிருக்கும்' என்னுதல்; "அன்றி மற்றோருபாயமென் இவளந்தண்துழாய் கமழ்தல்" என்னக்கடவதிறே. [வினையுடையாட்டியேன் பெற்ற] - பிரிவிலும் திருத்துழாய்மணம் மாறாதபடி அவகாஹித்துப் போவிகண்டு ப்ரமிக்கும்படி ப்ரமமேயாய்விட்டது, பாபத்தைப் பண்ணின என்வயிற்றில் பிறப்பிறே. பாக்யபலத்தைப் பாபபலமாகச் சொல்லுகிறாளிறே, இழவைப் பற்ற. [செறிவளை முன்கை] - முன்கையிலே செறிந்த வளையையுடையவள். முன்பு இருக்கும்படியாதல்; பின்பும் இப்படியே யிருக்கத்தகுமவள் என்னுதல். செறிவளை - விஶ்லேஷம் கணுக்கண்டு அறியாதவளை. [சிறுமான்] - கலக்கும் பருவமுமல்லாத முக்தை. [செய்கின்றது என் கண்ணுக்கு ஒன்றே] - ஒன்று அன்று, பல. 'விரஹிணி' என்னவொண்ணாது, திருத்துழாய் நாறுகையாலே. 'ஸம்ஶ்லிஷ்டை' என்னவொண்ணாது, போலியான காற்றைத் தழுவுகையாலே. 'லௌகிகை' என்ன வொண்ணாது, நெருப்புச் சுடாமையாலே.

ஈடு.—மூன்றாம்பாட்டு. இவளுடைய அதிப்ரவ்ருத்திகளைச் சொல்லப்புக்கு, அவற்றுக்கு எண்ணில்லை என்கிறாள்.

[அறியும்செந்தீயைத் தழுவி]-'ஒன்றால் அவிக்கவொண்ணாது, தாஹகம்' என்று அறியும் நெருப்பைத் தழுவாநின்றாள். இவள்தானும் ப்ரமத்துக்குமுன்பு அறிந்து பரிஹரித்துப் போநதொ யிற்று; 'மந்த்ரௌஷதாதிகளாலே ப்ரதிபத்தஶக்திகம்' என்று தான் தழுவுகிறாளோ? [செந்தீயைத்தழுவி]- "தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்" (தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்) என்று ஒளியுடைமையையே பார்த்துத் தழுவாநின்றாள். * "பொருநீர்க்கடல் தீப்பட்டெங்கும் திகழுமெரியோடு செல்வ

மூன்றாம்பாட்டு—'அறியும்' இத்யாதி. "செய்கின்றதென் கண்ணுக்கொன்றே" என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'இவளுடைய' - இத்யாதி. 'ஒன்றே' என்கிற ஏகாரம் - †பிரிநிலையிலேயாக்கி, எண்ணில்லை யென்கிறாளென்றது.

ஸர்வரும் 'தாஹகம்' என்று அறியும் செந்தீயென்று அர்த்தம் - 'ஒன்றால் அவிக்க' இத்யாதி. 'செய்' என்றதின் அர்த்தம் - 'தாஹகம்' என்றது. இவள்தான் தாஹகமென்று அறியுமென்று அர்த்தாந்தரம் - 'இவள்தானும்' இத்யாதி. செம்மைக்கு அர்த்தம். 'மந்த்ரௌஷத' இத்யாதி. செந்தீக்கு அக்நயோடே ஸாம்யமுண்டாயே ப்ரமிக்கவேணுமே; எவ்வாகாரத்தாலே ஸாம்யம் ? என்ன, த்ரேதா பரிஹரிக்கிறார் க்ரமேண—'தேஜஸாம்' இத்யாதி வாக்யத்ரயத்தாலே. "ஸ ஏவ ஏவ ஸாஹஸ்ர நம தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்" இதி ப்ரதமேம்ஶே பூர்வமேவ லிகிதம். 'பொருநீர்க்கடல்' இத்யாதி - அலைபொராநின்றுள்ள நீரை

* திருவாய்மொழி. அ - க - ரு.

† ப்ரஶ்நத்திலே என்பதற்கு ப்ரதியாக, பிரிநிலையிலே என்று அரும்பதத்தில் வழங்கியுள்ளார்.

தோப்ப'' என்னுமாபோலே. இப்போது தனக்காக ஒரு மாணிக்கப்படி சாத்தி அணைக்கைக் காக வந்தா னென்றிருக்கிருள் இவள். [அச்சுதனேன்னும்] - உடைமையை மங்கக்கொடாமைக் காக வந்ததே! என்னும். [மெய்வேவாள்] - இவள்தான் ப்ரமத்தாலே கட்டிக்கொள்ளுகிருள்: அது பின்னை ஸ்வகார்யம் செய்யாதொழிவானேன்? என்னில்;—அச்சுதன்முகத்தாலே வந்த தாகையாலே; ''முகாதிந்த்ரஸ்சாக்நிஸ்ச'' (முகாதிந்த்ரஸ்சாக்நிஸ்ச) இறே. [செந்தீயைத்தழுவி அச்சுதனேன்னும் மெய்வேவாள்] - இவளுடைய அக்நிஸ்தம்பநமந்த்ரம் இருக்கிறபடி. [மெய்வே வாள்] - ''தத்ஸ்ம்ருத்யாஹ்லாதஸம்ஸ்த்திதஃ'' (தத்ஸ்ம்ருத்யாஹ்லாதஸம்ஸ்த்திதஃ) என்கிறபடியே, அவ னுடைய ஸ்ம்ருதியாலே நனைந்திருக்கையாலே சுடமாட்டுகிறதில்லை; ''பஸ்யாமிபத்மாஸ்தரணஸ்த்ருதாநிஸீதாநி ஸர்வாணிதிஸாம்முகாநி'' (பஸ்யாமிபத்மாஸ்தரணஸ்த்ருதாநிஸீதாநி ஸர்வா ண்திஸாம்முகாநி) என்றானிறே ப்ரஹ்லாதன். ''ஸீதோபவ'' என்றாரும்இல்லைகிடீர், ''ஸீதோபவ'' (ஸீதோபவ) என்றவள்தானிறே இங்ஙனேசெய்கிருள். வாயுபுத்ரனைத் தழுவுகை நாயகனுக் கும் நாயகிக்கும் பணியிறே விஸ்லேஷத்தில்; ''பரிஷ்வங்கோஹநுமதஃ'' (பரிஷ்வங் கோஹநுமதஃ) ''வாயோரக்நிஃ'' (வாயோரக்நிஃ) இறே. [எறியும் இத்யாதி] - வீசுகிற குளிர்ந்த காற்றைத் தழுவி. இதிறே ஆஸ்சர்யம்; விரஹிணிகளைச் சுடுமேதிறே காற்று. இக்காற்றும் அவனு டைய ப்ராணபூதமாயிருப்ப தோன்றிறே; ஆகையாலே, அதுவும் சுட்டதில்லை; ''ப்ராணாத்வாயு ரஜாயத'' (ப்ராணாத்வாயுரஜாயத) இறே. [என்னுடைக்கோவிந்தனேன்னும்] - ''நஜீவேயம்க்ஷண

---

யுடைய கடலானது நெருப்புக்கொளுந்தி எங்கும்விளங்குகிற ஜ்வாலைகளோடே நடப்பதுபோல வென்று அர்த்தம். திவ்யாயுத விஸிஷ்டமான வடிவுக்குப் போலியான ஆகாரத்தாலே தழுவுகிரு ளென்றபடி. மாணிக் கப்படி - ரத்நாங்கி. ஆஸ்ரிதாந் ந ச்யாவயதீத்யச்யுதஃ என்கிற வ்யுத்பத்தியைப் பற்ற - 'உடைமையை' இத்யாதி. வேவாதிருக்கைக்கு ஹேதுவைச் சதுர்த்தா அருளிச்செய்கிருர். முந்தினது - 'அச்சுதன்முகத் தாலே' இத்யாதி. இது - சாடு. தழுவும்படி வ்யாமோஹத்தைப்பண்ணினவன் இது செய்யமாட்டாமை யில்லையிறே யென்று ப்ரக்ருதார்த்தம். முகத்தாலே வந்தமைக்கு ப்ரமாணம் - 'முகாத்' இத்யாதி. இரண்டா வது - 'இவளுடைய' இத்யாதி. இத்தால் - ஸப்தமாத்ரந்தானே போருமாயிற்று வேவாமைக்கு என்றபடி. மூன்றாவது - 'தத்ஸ்ம்ருதி' இத்யாதி. ''ஸக்ஷாஸக்ஷ்திக்ஷ்யஷேதஸஹ்யோநாஹேமரஃ । நவி வேஷாதேநாமாஸ்ம தத்ஸ்ம்ருத்யாஹ்லாதஸம்ஸ்த்திதஃ'' இதி ப்ரதமேம்ஸ ஸப்ததஸே. தத்ஸ்ம்ருதி யாலே சுடாதிருக்கு மென்னுமதுக்கு ப்ரமாணம் - 'பஸ்யாமி' இத்யாதி. ''தாமேதஷவஹ்நிஃவவநேஸ தோவிநோஹதஸ்த்ருதுஸஜ்ஞதோஹு'' இதி பூர்வார்த்தம் தத்ரைவ ப்ரஹ்லாதஃ. இவ்விடத்திலே - ''ஸோயாஸஜமவஹ்நஸஸ்ஹேஸாஹாஸரோநயஃ । க்ஷாந்திஃக்ஷமோ வாவஸ்யநாவேஸஹ்தஞ்நம ஹரேஃ'' என்றது அநுஸந்தேயம். நாலாவது - 'ஸீதோபவ' இத்யாதி. ''யதிஸ்திவக்திஸப்த்யேஷா யதிவாஸ்திதவஃ । யதிவாஸேஸ்ருகவக்ஷ்ம்ஸீதோபவஹநுமதஃ'' இதி ஸுந்தரகாண்டே. வஸ்தா. இங்ஙனே செய்கிருள் - தீயைத் தழுவாநின்ரு ளென்றபடி. இத்தால் ஸ்வஸக்தியாலே வேவா திருந்தா ளென்றபடி. ''செந்தீயைத்தழுவி'' என்றதுக்குச் சாடு - 'வாயுபுத்ரனை' இத்யாதி. வாயுபுத்ரன் - அக் நியும், திருவடியும். வாயுபுத்ரனை நாயகன் தழுவினதுக்கு ப்ரமாணம் - 'பரிஷ்வங்கஃ' இத்யாதி. அக்நி வாயு புத்ர னென்னுமதுக்கு ப்ரமாணம் - 'வாயோரக்நிஃஇறே' என்று. 'இதிறே ஆஸ்சர்யம்' என்றது- 'தண்' என் றதின் தாத்பர்யம். 'விரஹிணிகளைச்சுடுமேதிறே' என்றதுக்கு ப்ரமாணத்வேந ''அறைகூய் யாமங்கங்கடோ றெரிவீசும்'' இத்யாத்யநுஸந்தேயம். சுடாமைக்கு ஹேது ஏது? என்ன, 'இக்காற்றும்' இத்யாதி. 'ப்ராண பூதமாய்' 'என்றது-சாடு. ப்ராணமாயென்றும், ப்ராணுதத்பூதமாயென்றும். இதுக்கு ப்ரமாணம் - 'ப்ராணாத்' இத்யாதி. 'என்னுடை' என்றதுக்கு பாவம் - 'நஜீவேயம்' இத்யாதி. ''நஜீவேயம்க்ஷணமபிவிநாதா

ஊலி"(நஜீவேயம்க்ஷணமபி)என்கிறபடியே பிரிவில் பொறுக்கவல்லனே? அவனுண்மை பரார்த்த மாயன்றே இருப்பது என்றுசொல்லாநிற்கும். [என்னுடைக்கோவிந்தனென்னும்]-கன்றுமேய்த்த வடிவோடே என்ஆர்த்திதீர அணைக்கவந்தா னென்னும். லௌகிகர்படியுமன்று, விரஹிணிகள் படியுமன்று; லௌகிகர்படியாகில் நெருப்புச் சுடவேணும்; விரஹிணிகள் படியாகில் காற்றுச் சுட வேணும்; இரண்டும் கண்டிலோமென்கை.

[வெறிகொள்துழாய்மலர்நாறும்] - "கோவைவாயா" ளில் கலவியால் வந்த பரிமளம் பத்தெட்டுக்குளிக்கும் நிற்குமிறே, அத்தாலேயாதல்; வந்தேறி கழிந்தால் ஆத்மஸ்வரூபம் பகவதர் ஹமாயிறே இருப்பது, அத்தாலேயாதல். அன்றிக்கே, காற்றேடே கலந்துவந்து புகுந்து அணைந் தானென்று காரியத்தைக்கொண்டு கல்பித்தல். "அன்றிமற்றேருபாயமென்இவளந்தண்துழாய் கமழ்தல்" என்னக்கடவதிறே. [வினையுடையாட்டியேன்பெற்ற] - இவள் இத்தனை அவகாஹி த்தது நான் பண்ணின பாபமிறே. அநேகஜந்மஸஞ்சிதமான புண்யபலத்தைப் பாபபலமாகச் சொல்லுகிறளிறே, இப்போதையிழவைப் பற்ற. பிரிவிலும் வடிவு திருத்துழாய் நாறும்படி அவ காஹித்து, பின்பு போலிகண்டு ப்ரமிக்கும்படி ப்ரமமேயாய் விடுகைக்கு அடி, பாபத்தைப்பண் ணின என்வயிற்றிற் பிறப்பிறே. பகவத்விஷயத்தில் அவகாஹித்தவர்கள் பெற்றவர்களுக்கு ஆகார்களிறே; "அன்னையுமத்தனுமென்றடியோமுக்கிரங்கிற்றிலள்" என்னக்கடவதிறே. [செறி வளைமுன்கைச்சிறுமான்] - இதுகிடீர் இருக்கத்தகும்படி! இவள் வளைத்தழும்பு அவனுடம்பிலே காண்கையன்றிக்கே, இவளுடம்பிலே அவனுடம்பில் திருத்துழாய் காணுமத்தனையாவதே. [சிறுமான்] - முன்கையிலே செறிந்த வளையையுடையவள். முன்பிருக்கும்படியாதல், பின்பும் அப்படியேயிருக்கத் தகுமவ ளென்னுதல். [சிறுமான்] - இதுக்கெல்லாம் ஆஶ்ரயம் எங்குத்து? அதிமுக்தை. [செய்கின்றதென்கண்ணுக்கொன்றே]-ஒன்றன்று, அநேக மென்கிறள். நெருப்பைக்

---

*ஊலிதெக்ஷணாஂ" இதி ராமஃ. 'அவனுண்மை' என்றது - 'கோவிந்தன்' என்றதின் ஹாவம். அதாவது - ஶாம்பூமிம்பாதீதி - கோவிந்தஃ என்றுய், பெருமா ளென்றபடி. அர்த்தாந்தரம் - 'கன்றுமேய்த்த' இத்யாதி. கோவிந்தன் - க்ருஷ்ணன். இத்தால் - பசுக்களை ரக்ஷிக்கையாலே பரோபகார சீலதையைச் சொல்லுகிறது; வாயுவுக்கும் பரோபகாரசீலதையுண்டே; அம்மாத்ரம் ஸாம்யம் கொள்வது. கீழிரண்டுபாதங்களையும் உப ஸம்ஹரிக்கிறது - 'லௌகிகர்படியும்' இத்யாதி.*

*பிரிவிலே வடிவு திருத்துழாய்நாறும்படியென்? என்ன, 'கோவைவாயாளில்' இத்யாதி. இரண்டாம்ஹேது 'வந்தேறி' இத்யாதி ஸ்வாபதேசத்திலே. வந்தேறி - அவித்யாதிகள். ஆத்மஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்தால், அது பகவதர்ஹ மென்று ஜ்ஞாதமாயிருக்கும்; அந்த பகவத்ஸம்பந்த ஜ்ஞாநத்தை - 'நாறும்' என்று விவ க்ஷிக்கிறதென்றபடி. காரியத்தைக்கொண்டு கல்பித்த இடமுண்டோ? என்ன, 'அன்றிமற்றேர்' இத்யாதி; பகவத்ஸம்பந்தஸூசக மென்றபடி. அவன் ஸம்பந்தமன்றிக்கே வேறொரு உபாயமேது? இவள் அழகிய தாய்க் குளிர்ந்த திருத்துழாய்கமழ்தைக்கு என்று அர்த்தம். ஹார்த்தபாவம் - 'இவள் இத்தனை' இத்யாதி. பிரிவிலும் ப்ரமிக்கும்படி அவகாஹித்தது புண்யபலமன்றே? என்ன, 'அநேகஜந்ம' இத்யாதி- 'இவள் இத் தனை அவகாஹித்தது' என்ற வாக்யவிவரணம் - 'பிரிவிலும்' இத்யாதி. 'வினையுடையாட்டியேன்' என்னும் படி தாயாரை நோவுபடுத்தவேணுமோ? பகவத்விஷயாவகாஹநத்தைத் தவிர்ந்தாலோ? என்ன, 'பகவத்விஷ யத்தில்' இத்யாதி. 'பெற்றவர்களுக்கு ஆகார்கள்' என்னுமதுக்கு ப்ரமாணம் - 'அன்னையும்' இத்யாதி. அடியோமான எங்களுக்குத் தாயுந் தமப்பனுமென்று பேரிட்டு இரங்கிற்றிலளென்றபடி. திருமொழி, மூன் ரும்பத்து, ஏழாந்திருமொழி, ஏழாம்பாட்டு. 'இதுகிடீர் இருக்கத்தகும்படி' என்றது - இவள் கையும் வளையு மாயன்றே இருக்க அடுப்பது? அதின்றிக்கே யிருப்பதே என்றபடி. தாத்பர்யாந்தரமாதல், விவரணமாதல் - 'இவள்வளைத்தழும்பு' இத்யாதி. இங்கே. 'சிறுமான்' என்கிற ப்ரதிகோபாதாநம் - லேககதோஷக்ருதம். இவ ளுக்கு இப்போது வளையுண்டோ? என்ன, 'முன்பு' இத்யாதி. 'ஒன்றே' என்ற ஏகாரம் - ஸ்வரத்திலேயாய்.*

கட்டிக்கொள்வது, காற்றைத் தழுவுவது, திருத்துழாய் நாறுவதாகாநின்றாள். 'லௌகிகை' என்று நிஶ்சயிக்கவொண்கிறதில்லை, நெருப்புச்சுடாமையாலே; 'ஸம்ஶ்லிஷ்டை' என்னவொண்ணாது, போலியான காற்றைத் தழுவுகையாலே; 'விரஹிணி' என்னவொண்ணாது, திருத்துழாய் நாறுகையாலே; ஆகையால், ஒன்றிலே வைக்கப்பட்டிருக்கிறதோ இவள்படி? (ரு)

## நான்காம்பாட்டு.

ஒன்றியதிங்களைக்காட்டி ஒளிமணிவண்ணனேயென்னும்
நின்றகுன்றத்தினைநோக்கி நெடுமாலே! வாவென்றுகூவும்
நன்றுபெய்யும்மழைகாணில் நாரணன்வந்தானென்றுஆலும்
என்றினமையல்கள்செய்தார் என்னுடைக்கோமளத்தையே.

ஆ.—(ஒன்றிய.) அதிஶீதள ப்ரஹ்லாத பூர்ணசந்த்ரனைக் காட்டி, இவன் ஒளிமணிவண்ணனே யென்னும். நின்றகுன்றத்தினை நோக்கி, இந்த லோகத்தை அளந்தருளுகைக்காக மண்ணும் விண்ணும் நிறைய மலர்ந்த எம்பெருமானென்று நிஶ்சயித்து, நெடுமாலே வா வென்று கூப்பிட்டழைக்கும். இலங்கொலிநீர் பெரும்பௌவம் மண்டியுண்ட பெருவயிற்ற கருமுகிலைக் காணில், நாரணன்வந்தா னென்று மயில்கள் நின்றுஆலுமாபோலே ஆலும். என்று இப்படியே பித்தேறப்பண்ணினான் என்னுடைக் கோமளத்தை என்கிறாள்.

ஒ.—நாலாம் பாட்டில், வ்யஸநஸஹை யன்றியே இருக்கிற இவளை இப்படி நோவு படுத்தினா னென்று கேதிக்கிறாள்

[ஒன்றிய என்று தொடங்கி.]-பூர்ணசந்த்ரனைக் காட்டி 'இவன் ஶ்ரமஹரமான நிறத்தையுடைய எம்பெருமானே' என்னாநின்றாள். நின்றதொருமலையைப் பார்த்து ஸகல லோகங்களையும் அளக்கைக்கு வளர்ந்தருளின எம்பெருமா னென்றே கொண்டு 'என் ஆர்த்தி தீர வாராய்' என்று அழைக்கும். ஸாபராதனாய்க் கிட்டவர அஞ்சிநிற்கிறானாகக் கொண்டு 'உன்னுடைய ஸ்நேஹாதிஶயம் அறியோமோ? வாராய்' என்று க்ஷேபபூர்வமாக அழைக்கும் என்றுமாம். [நன்று என்று தொடங்கி] - அபேக்ஷிதமான தஶையில் வர்ஷிக்கும் மேகத்தைக் கண்டால், மயில்கள் நின்று ஆலுமாபோலே 'நாராயணன் வந்தான்' என்று ஸம்ப்ரமியா நிற்கும். [என்றினமையல்கள்] - து:காநுபவத்துக்குப் பாத்தமில்லாத என்மகளை, சொன்ன இப்படியே பிச்சேறப் பண்ணினான்; அதிபாலையாயிருக்கிற இவளை என்று இப்பாடு படுத்தினான் என்றுமாம்.

ப.—அநந்தரம், உஜ்ஜ்வலமாய் உத்துங்கமாய் ஶ்ரமஹரமான வடிவையுடையவனை அநுஸந்தித்து, சந்த்ரனையும் மலையையும் மேகத்தையும் கண்டு அவனாக ப்ரமியாநின்றாள் என்கிறாள்.

---

ஒன்றேயோ? அநேக மென்ற படி. 'ஒன்றே' என்றதுக்குத் தாத்பர்யாந்தரம்—'லௌகிகையென்று' இத்யாதி. அதாவது - 'ஒன்றே' என்று - ஒருவகையிலே அடைக்கப்பட்டதோ? அன்றே என்றபடி. கீழே 'விரஹிணிகள்படியாகில் காற்றுச்சுடவேணும்' என்றது - 'தண்காற்று' என்றத்தைப் பற்ற. இங்கு 'போலியான காற்றைத் தழுவுகையாலே' என்றது - 'காற்றைத்தழுவி' என்றத்தைப் பற்ற. க்ரமேண அந்வய:. (ரு)

ஒன்றிய - (எல்லாக்கலைகளாலும்) ஒன்றப்பட்ட, திங்களை - சந்த்ரனை, காட்டி -
(அருகுநின்றார்க்குக்) காட்டி, ("ஶ்ரீமஹீஶ்வரீகலஷா") என்கிறபடியே), ஒளி-ஒளியையுடைத்
தான, மணி - ஸ்படிகமணிபோன்ற, வண்ணனே - வடிவையுடையவனே! என்னும் - என்னாநிற்
கும்; நின்ற - (அந்தச்சந்த்ரபதத்தளவும் உயர்ந்து முன்னே) நிற்கிற, குன்றத்தினை - மலையை,
நோக்கி - பார்த்து, நெடு மாலே - (உன்னுடையவடிவுபோலே) நெடிதான ஸ்நேஹத்தையுடை
யவனே! வா - (ஸாபராதரைப்போலே தேங்கிநிற்கிறதென்? கேளாமற்போன நீ யாரைக்கேட்
டுப் புகுருகைக்கு நிற்கிறது?) வாராய்; என்று - என்று, கூவும் - ('தன்ப்ரணயம்' தோன்ற)
அழையாநிற்கும்; நன்று - (உருவின பயிர் கொந்தளிக்கும்படி) நன்றாக, பெய்யும் - வர்ஷிக்கும்,
மழை - மேகத்தை, காணில் - காணில், நாரணன் - நாரஶப்தவாச்யமான அப்புக்களையுடைய
நாராயணன், வந்தான் - (நம்உருவுதல்தீர) வந்தான், என்று - என்று, ஆலும் - ('மேகஸந்நிதி
யில் மயில் ஆலிக்குமாபோலே ஹர்ஷஶப்தத்துடன்) ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணாநிற்கும்;
என்னுடை - என்னுடைய, கோமளத்தை - ம்ருதுஸ்வபாவையான பெண்பிள்ளையை, என்று-
என்றுகாண், இன - இப்படிப்பட்ட, மையல்கள் - ப்ரமங்களை, செய்தா - பண்ணினார்? இவ்
வவஸ்தையிலே இதுக்கெல்லாம் கலமுண்டோ? என்று கருத்து.

இ·—நாலாம்பாட்டில், வ்யஸநஸஹையல்லாத இவளை இப்படி நோவுபடுத்துவதே!
என்கிறாள்.

[ஒன்றிய திங்களை] - கலைகளெல்லாம் ஒன்றிப் பூர்ணனான சந்த்ரனை, காட்டி -
அருகு நின்றார்க்குக் காட்டி. [ஒளிமணிவண்ணனே என்னும்] - ஸம்போதியாநின்றாள்:
புகரையுடைத்தான ரத்நம்போலே குளிர்ந்தவடிவோடே அணைக்கவந்ததே! என்னும். 'இவன்
ஔஜ்ஜ்வல்யத்தையுடைய ஸர்வேஶ்வரனே' என்று அவர்களுக்குச் சொல்லாநின்றாள். 'இம்
மழுங்கல்சந்த்ரன் அவனாகையாவது என்?' என்பார்கள். [ஒளிமணிவண்ணனே] - [illegible]
என்னாநின்றாள். [நின்ற இத்யாதி]-நின்றதொருமலையைப் பார்த்துத் திருவுலகளந்த [illegible]
நிமிரவளர்ந்து நிற்கிறவனாகக்கொண்டு 'என்ஆர்த்திதீரவாராய்' என்று அழைக்கும் [illegible]
ளான் நிர்வஹிக்கும். 'மால்' என்று, ஸர்வஶேஷியான பெருமை. நெடுமையாவது - [illegible]
ளின பெருமை. வ்யாமோஹாதிஶயத்தாலே கால்வாங்கமாட்டாதே ஸாபராதரை[illegible]
யாலே லஜ்ஜித்துப் புகுரமாட்டாதே நிற்கிறானாகக் கொண்டு 'வாராய் என்னாநின்றாள்' [illegible]
சீயர் நிர்வஹிப்பர். போதுமறுத்துப் புறமேவந்துநிற்கிற ஹை நினைக்கிறாள். [நெடுமாலே] -
அதிவ்யாமோஹம். அப்போது போகவல்ல உமக்கு இப்போது புகுர லஜ்ஜிக்க [illegible]
போனபோதே ஸ்நேஹம் கண்டோமிறே. ப்ரணயிகளுக்கன்றோ அபராதம்? ஸாபராதரன்
றோ லஜ்ஜிப்பார்? நீர் வாரீர் என்னாநின்றாள். [நன்று இத்யாதி] - கெட்டேமையான [illegible]
நீர்ச்சாவியிலே வர்ஷிக்கும் மேகத்தைக் கண்டால் 'நீர்தானாகமாக [illegible]
வந்தான்' என்று மயில்கள் வர்ஷாகாலத்தில் ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுமாபோலே [illegible]
மியா நின்றாள், [என்று] - இப்படிகளைச் சொல்ல. [இன மையல்கள் செய்தார்] - [illegible]
பிச்சுக்களைப் பண்ணினார்; இப்படி பிச்சேற்றிற்று என்று? என்றுமாம். எனக்கு [illegible]
தவிர்ந்தபின்பு இதுக்கெல்லாம் காலமுண்டோ? என்கிறாள் [என்னுடைக் கோமளத்தை] -
அதுதான் செய்யும்போது ஆஶ்ரயம் வேண்டாவோ? கலவியும் பொறாத அதிபால்யைக்கிவள்
விஶ்லேஷத்துக்கு இரையாக்கிற்று.

ஈ·டு.—நாலாம்பாட்டில் வ்யஸநஸஹையல்லாத இவளை இப்படி நோவுபடுத்துவதே!
என்கிறாள்.

---

நாலாம்பாட்டு - 'ஒன்றிய' இத்யாதி. 'என்னுடைக்கோமளத்தை - இனமையல்கள் செய்தார்' என்
றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'வ்யஸநஸஹையல்லாத' இத்யாதி.

[ஒன்றிய திங்களைக் காட்டி] - எல்லாக்கலைகளும் நிரம்பின சந்த்ரனைக் காட்டி அருகு நின்றவர்களுக்கு. [ஒளிமணிவண்ணனேயென்னும்] - ஒளிமணிவண்ணனே! என்று ஸம்போதியாநின்றாள். புகரையுடைத்தான ரத்நம்போலே குளிர்ந்த வடிவோடே அணைக்கவந்ததே யென்னும். இவன் ஔஜ்ஜ்வல்யத்தையுடைய ஸர்வேஶ்வரனென்று அவர்களுக்குச் சொல்லா நிற்கு மென்றுமாம். 'இம்மழுங்கல் சந்த்ரன் அவனாகையாவ தென்?' என்பர்களே. [ஒளிமணி வண்ணனே] - ஸாநிஶ்சிதம், இவன் அவனே யென்னா நின்றாள். [நின்றகுன்றத்தினை நோக்கி] - இவ்வளவிலே ஏதேனுமொரு மலை வாராக் கண்ணுக்குத் தோற்றுமே; அத்தைப் பார்த்து. [நெடுமாலே வாவென்று கூவும்] - வடிவில் பெருமையைக் கண்டவாறே, 'ஜகத்தையடையத் தன் திருவடிகளின் கீழே இட்டுக்கொள்ளும்படி பெரிய வடிவையுடைய திருவுலகளந்தருளின ஸர்வேஶ்வரன்' என்று நினைத்து, 'இங்ஙனே வாராயோ? என்று அழைக்கும்' என்று பிள்ளான் பணிக்கும்; அங்ஙனன்றிக்கே, சீயர் "மலை பேரமாட்டாதே பலகால் வர்ஷிக்கையாலே அழுக்கற்றுப் பசுகுபசுகு என்றிருக்குமே; அத்தைக் கண்டு, 'அவன் ஸாபராதனாகையாலே லஜ்ஜித்து, வந்து கிட்ட மாட்டாமையாலே பச்சைப்படாத்தையிட்டு முட்டாக்கிட்டு நிற்கிறான்' என்று, 'ஆனைக்கூட்டத்துக்குக் கதவிடிலன்றோ உமக்கு லஜ்ஜிக்கவேண்டுவது? இங்ஙனே போரீர்' என்னாநின்றாள்" என்று. [நன்று இத்யாதி] - கெட்டுமழையன்றிக்கே ப்ராப்தகாலத்தில் வர்ஷத்தைக் கண்டவாறே, நிர்ஹேதுகமாக ஸத்தைநோக்குமவன் வந்தானென்று, மயில்கள் வர்ஷா காலத்திலே ஸஸம்ப்ரம ந்ருத்தம் பண்ணுமாபோலே ஸம்ப்ரமியாநின்றாள். [என்று] - இப்படி

---

'அருகுநின்றவர்களுக்கு - காட்டி' என்று அந்வயம். ஸம்போதநபக்ஷத்தில், 'காட்டி' என்றது - கண்டு என்றபடி. சந்த்ரனை, ஒளிமணிவண்ணனே யென்றது, ஸாத்ருஶ்யஸாம்யத்தாலே. 'ஒளிமணிவண்ணனே' என்ற ஶப்தம்-ஸம்போதநமாம்போது, 'வாராய்' என்று அத்யாஹார்யம். ஸம்போதநத்துக்கு ப்ரயோஜநம் - 'புகரையுடைத்தான' இத்யாதி. ஒளிமணிவண்ணனென்று சொல்லாநிற்கு மென்ற பக்ஷத்தில், அவதாரணத்துக்குத் தாத்பர்யம் - 'இம்மழுங்கல்' இத்யாதி. வாரா - வந்து. இது - வார்த்தைப்பாடு. பிள்ளான் நிர்வாஹத்துக்கு - 'குன்றம்' என்ற பத ஸ்வாரஸ்யத்துக்காக, 'நெடு' என்று - வடிவிற்பெருமையாய், 'மால்' என்று - ஸர்வேஶ்வரனாய், திருவுலகளந்தருளினவ னென்றபடி என்று அரும்பதாந்தரங்களில் நிர்வாஹம். 'நெடுமால்' என்று - பெரியோ னென்றபடி. 'நெடுமை - சேஷித்வத்தாலே வந்த பெருமை' என்று-அப்பு அரும்பதத்தில் நிர்வாஹம். 'மால் - வடிவிற்பெருமை' என்று* பெரியவாச்சான்பிள்ளை. சீயர்நிர்வாஹத்துக்கு, 'நின்ற' என்ற பதஸ்வாரஸ்யத்துக்காக, நெடுமை- மிகுதியாய், 'மால்' என்று - வ்யாமோஹமாய், மிக்கவ்யாமுக்த னென்றபடி. பேர - சலிக்க. பசுகுபசுகென்று - ஶ்யாமமா யென்றபடி. 'நஜீவேயம்' என்னும் விஷயத்தைப் பிரிகையாலே அவன் ஸாபராதனாய்க்கொண்டு, "ஹ்ரீரேஷாஹி" என்று லஜ்ஜித் தென்றபடி. பச்சைப்படாத்தை - பச்சைப்பச்சைவடத்தை. 'நிற்கிறானென்று'—என்று புத்தி பண்ணி. 'ஆனைக்கூட்டத்துக்குக் கதவிடில்' என்ற வாக்யத்துக்குத் தாத்பர்யம் - 'அதுக்கு லஜ்ஜை புண்டானாலன்றோ உமக்கும் லஜ்ஜையுண்டு' என்று ஒரு அரும்பதத்தில் நிர்வாஹம். ஆனைக்கூட்டம் - ஆனையினுடைய ஸம்ஶ்லேஷம். கூட்டம்-கூட்டரவு. 'ஆனைக்கூடம்' என்று பாடமாகில், ஆனைக்கூடம் - ஆனைகட்டுகிற சாலையாய், அதுக்குக் கதவிடிலன்றோ என்றபடி. 'ஆனைக்கூட்டத்துக்குக் கதவிடில் - மைதுநாவரணமிடில்; அதாவது-ப்ரோகப்ரதிபந்தகம் பண்ணில் லென்றபடி' என்று அரும்பதாந்தரத்தில் நிர்வாஹம். 'நன்று' இத்யாதி-உபகாரமும் கருமையும் குளிர்த்தியும் ஸாத்ருஶ்யம். 'நன்று' என்றதுக்கு அர்த்தம் - 'கெட்டுமழையன்றிக்கே' என்றது. நிர்ஹேதுகமாக ஸத்தை நோக்குமவ னென்றது - 'நாரணன்' என்றத்தைப் பற்ற. ஆலும் - ஸம்ப்ரமியாநின்றாள். இப்படிகளை, சொல்ல - சொல்லும்படி. இப்படிகளாவன - "ஒளிமணிவண்ணன், நெடுமால், நாரணன் வந்தான்" என்று சொல்லுமவைகள். 'இப்படி பிச்சுக்களை' என்றது - இப்படிசொல்லும்படி பிச்சுக்களைப்பண்ணினா ரென்ற

---

* இருபத்துநாலாயிரப்படியில், மால் - வடிவிற் பெருமை யென்று அருளிச்செய்ததாகக் காணப் படவில்லை.

களைச் சொல்ல. [இன மையல்கள் செய்தார்] - இப்படி பிச்சுக்களைப் பண்ணினார். இப்படி பிச்சேற்றிற்று என்று? என்றுமாம். இவள் எனக்கு பவ்யையாகை தவிர்ந்தபின்பு இதுக்கெல்லாம் காலமுண்டோ? என்கிறாள். "என்சொல்லுமென்வசமுமல்லள்" என்றது எப்போது? இப்படி இவளைப் பிச்சேற்றிற்று எப்போது? [என்னுடைக் கோமளத்தையே] - அதுதான் செய்யும்போது ஆஶ்ரயம் வேண்டாவோ? கலவியும் கூடப் பொறாத ஸுகுமாரியைப் பிரிவு பொறுக்கப் பண்ணுவதே! (௪)

## ஐந்தாம்பாட்டு.

கோமளவான்கன்றைப்புல்கிக் கோவிந்தன்மேய்த்தனவென்னும்
போமிளநாகத்தின்பின்போய் அவன்கிடக்கைஈதென்னும்
ஆமளவொன்றுமறியேன் அருவினையாட்டியேன்பெற்ற
கோமளவல்லியைமாயோன் மால்செய்துசெய்கின்றகூத்தே.

ஆ.—(கோமளம்.) கோமளவான்கன்றுகளைப்புல்கி, இவை கோவிந்தன்மேய்த்தன என்னும். போம் இளநாகத்தின்பின் போய் அத்தைப்புல்கி, 'இவ்விளமையும் மார்த்தவமும் அழகும் எம்பெருமானோடுகலந்த திருவநந்தாழ்வானுக் கல்லது கூடாது; ஆதலால், அவன் கிடக்கை ஈது' என்னும். அருவினையாட்டியேன் பெற்ற கோமளவல்லியை மாயோன் மால் செய்து செய்கின்ற கூத்து என்னாய்விளையுமென்று அறிகிலேன் என்கிறாள்.

ஓ.—அஞ்சாம் பாட்டில், 'இவளுக்கு இவ்வவஸாதம் எவ்வளவாய் முடியக்கடவது'? என்று அறிகிறிலேன் என்கிறாள்.

[கோமளவான் என்று தொடங்கி] - ஸுகுமாரமான ஆன்கன்றுகளைத் தழுவி க்ருஷ்ணனுடையாய் 'இவற்றுக்கு இப்பௌஷ்கல்யம் உண்டாயிற்று க்ருஷ்ணன் மேய்க்கையாலே' என்னாநின்றாள். போகிறதோர் இளம்பாம்பைத் தொடர்ந்து 'இது அவன் படுக்கை' என்று நின்றாள். [அருவினையாட்டியேன் என்று மேலுக்கு] - இவ்வவஸ்தாபந்நையாக இவளைக் காண்கைக்கு ஈடான பாபத்தைப் பண்ணின நான் பெற்ற ஸுகுமாரையான என் பெண்பிள்ளையைத் தன் ப்ரணயித்வத்தைக் காட்டிப் பிச்சேற்றி யடிக்கிற ஆட்டம்.

ப.—அநந்தரம், அவனுடைய ரக்ஷணப்ரவ்ருத்திகளை அநுஸந்தித்து, கன்றுகளையும் ஸர்ப்பத்தையும் கண்டு, அவன்ரக்ஷித்தவை யென்றும், ரக்ஷணார்த்தமாக வந்து கிடக்கும் படுக்கையென்றும் சொல்லாநின்றாள் என்கிறாள்.

கோமளம் - இளையவாய், வான் - பெரியவான, கன்றை - கன்றுகளை, புல்கி - தழுவி கோவிந்தன் - (பசுமேய்க்கமுடிசூடின) கோவிந்தன், மேய்த்தன-(இனிதாக மேய்த்த) மேய்த்தன, என்னும் - என்னாநிற்கும்; போம் - (ஸ்வைரஸஞ்சாரமாகப்) போகாநிற்கிற, இளம் நாகத்தின் -

---

படி. இனமையல்கள், என்று செய்தார் - எப்போதுசெய்தார்? என்று இரண்டாமர்த்தம். ஏதுபபாதகம்- 'இவள் எனக்கு' இத்யாதி. ஏன்? காலமில்லையோ? என்ன, 'என்சொல்லும்' இத்யாதி. 'கலவியுங்கூடப் பொறாத' என்றது - காடாலிங்கநார்த்தமாக விட்டணைக்கவுங் கூடப் பொறாத வென்றபடி. ஒன்றிய - எல்லாக் கலைகளாலும் ஒன்றப்பட்ட. க்ரமேண அந்வயঃ. (௪)

இளையதான நாகத்தின், பின் - பின்னே, போய் - ('இதுபோனவிடத்திலே அவனையும் காண லாம்' என்று நினைத்துப்) போய், அவன் கிடக்கை - அவன் கிடக்கிற படுக்கை, ஈது - இது, என்னும் - என்னாநிற்கும்; அரு - (அநுபவித்துமுடிக்க) அரிய, வினையாட்டியேன் - பாபத்தை யுடையேனான நான், பெற்ற - (இப்படிஈடுபடுகைக்கு உறுப்பாகப்) பெற்ற, கோமளம் - ம்ருது ஸ்வபாவையாய், வல்லியை - (கொள்கொம்பில்லாத) கொடிபோலே தரைப்படுகிற இவளை, மாயோன் - ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களையுடையவன், மால்செய்து - பிச்சேற்றி, செய்கின்ற - பண்ணுகிற, கூத்து - கூத்தாட்டு, ஆமளவு-எவ்வளவாமென்று, ஒன்றும் - ஒன்றும், அறியேன் - அறிகிறிலேன். இவள் பாம்பின்வாயிலே அகப்பட்டு முடியுமாகில் அவனும்அவன்விபூதியுங்கூட முடியுமிறே யென்று கருத்து. கிடக்கை - படுக்கை. 'ஆண்கன்றை' என்று பாடமாகவுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், 'இவளுக்கு இவ்வவஸாதம் எவ்வளவாய் முடியக்கடவ தென்று அறிகிறிலேன்' என்கிறாள்.

[கோமளவான்கன்றைப் புல்கி] - பருவத்தால் இளையதாய் வடிவால் பருத்திருக்கிற கன்றுகளைத் தழுவி என்னுதல்; ஸுகுமாரமாய்ப் பருத்த கன்றுகளைத் தழுவி. க்ருஷ்ணனுடைய பருவம் போலே யாயிற்று, இவற்றின் பருவம் இருப்பது. கிட்டினருக்கு ஸாம்யாபத்தியிறே பலம்; "வத்ஸயூதம்பானரஃ". [கோவிந்தன் மேய்த்தன என்னும்]-இவற்றினுடைய ரக்ஷணத் துக்கு முடிசூடினவன் மேய்த்தவை என்னும். ப்ராப்தனானவன் உணர்ந்துநோக்கினவை யென்று தோற்றுகிறதாயிற்று, இவற்றின் வடிவில் பௌஷ்கல்யம். "கன்றுமேய்த்தினிதுகந்த காளாய்" என்னக்கடவதிறே. [போம் இளநாகத்தின்பின் போய் அவன்கிடக்கை ஈதென்னும்]- போகிறதொரு ஸர்ப்பத்தைத் தொடர்ந்துபோய் 'இது அவன்படுக்கை' என்னாநின்றாள். இள நாகம் - நிரந்தரபகவதநுபவத்தால்வந்த இளமையென் றிருக்கிறாள். பின்போய் - படுக்கை யானது புக்கவிடத்தே அவனைக் காணலாமென்று தொடர்ந்துபோகாநின்றாள். தாயார் ஸர்ப் பம் என்று இருக்கிறாள்; இவள் திருவநந்தாழ்வான் என்று இருக்கிறாள். [ஆமளவு ஒன்றும் அறியேன்] - ஸர்ப்பமென்று மீளமாட்டுகிறிலள்; 'இது என்னாய் விழக்கடவது' என்கிறாள். இவளைக் கிடையாதொழிய அவனைக் கிடையாது; அவனைகி கிடையாதொழிய உபயவிபூதியும் கிடையாது. ஸர்வஸம்ஹாரமாகப் புகுகிறதோ? என்கிறாள். [அருவினையாட்டியேன்]-இவளை இவ்வவஸ்தாபந்நையாகக் காண்கைக்கு அடியான பாபத்தைப் பண்ணினேன்; "நெடுங்கால மும் கண்ணன்நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்கிறபடியே செய்துமுடிக்கப்போகாத புண் யங்களைப் பண்ணிப் பெற்ற ஸுகுமாரையான இவளை என்றுமாம். [வல்லியை] - "வதி ஸம்யோகஸாஹம்வயஃ" என்கிறபடியே உபக்ரத்தோடே சேர்க்கவேண்டும் பருவம். [மா யோன்] - ஆஶ்சர்யமான ப்ரணயித்வத்தைக் காட்டி இவளைப் பிச்சேற்றினவன். [மால்செய்து]- பிச்சேற்றி. [செய்கின்ற கூத்து] - அடிக்கிற ஆட்டம். ஆமளவு ஒன்றும் அறியேன் என்று அந்வயம்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. 'இவளுக்கு இவ்வவஸாதம் எவ்வளவாய் முடியக்கடவது? என்று அறிகிறிலேன்' என்கிறாள்.

---

அஞ்சாம்பாட்டு - 'கோமளம்' இத்யாதி. 'ஆமளவொன்றுமறியேன்' என்றத்தைச் சடாக்ஷித்து அவதாரிகை - 'இவளுக்கு' இத்யாதி.

[கோமளவான்கன்றைப்புல்கி] - பருவத்தால் இளையதாய் வடிவால் பெருத்திருக்கிற கன்றுகளைத் தழுவி யென்னுதல், மாணிக்கம்போலே அறவிலக்ஷணமாய்ப் பெருத்திருக்கிற கன்றுகளைப் புல்கி யென்னுதல். கோமளமென்று - மாணிக்கத்துக்கும், இளமைக்கும் பேர். ஆக, இப்படி தர்சநீயமுமாய் ஸுகுமாரமுமான கன்றுகளைத் தழுவி. க்ருஷ்ணன்பருவம்போலே யாயிற்று இவற்றின் பருவம் இருக்கும்படி; கிட்டினார்க்கு ஸாம்யாபத்தியிறே பலம். [கோவிந்தன் மேய்த்தனவென்னும்] - "வத்ஸமத்யகதம்பாலம்" (வத்ஸமத்யகதம்பாலம்] என்று, "கன்றுமேய்த்தினிதுகந்தகாளாய்" என்கிறபடியே, இவற்றினுடைய ரக்ஷணத்துக்கு முடிசூடினவன் உகந்து ரக்ஷித்தவை யென்னும். 'ப்ராப்தனானவன் உணர்ந்துநோக்கினவை' என்று தோற்றுகிறதாயிற்று, இவற்றின்வடிவில் பௌஷ்கல்யம். கன்றின் கழுத்தைக் கட்டிக்கொண்டவாறே அது துள்ளிப் போகாநிற்குமே; அவன்பரிகரமாயே யிருந்த தென்னும். அவ்வளவிலே ஒரு ஸர்ப்பம் போகாநிற்குமே; அதின்பின்னே போகாநிற்கும். இவளுடைய போகப்ராவண்யம் இருக்கும்படி: [இளநாகம்] - முக்தர் பஞ்சவிம்ஶதிவார்ஷிகராயிருப்பர்களிறே, நிரந்தரபகவதநுபவத்தாலே; அவ்விளமை இதுவென்றிருக்கும். 'கன்றைப்புல்கினாள்' என்றது, 'இதின்பின்னே போனாள்' என்றது; இத்தனை யுணர்த்தி யுண்டோ? என்னில் - அது ஓரிடத்தே நிற்கையாலே கழுத்தைக் கட்டிக் கொள்ளும்; இது ஓடாநிற்குமே அம்புக்கு எட்டாதபடி; ஆகையாலே, பின்னே போகாநிற்கும். 'அதுபுக்கவிடத்திலே அவன்வரவு தப்பாது' என்று காண்கைக்காக அதின்பின்னே போகாநிற்கும். அவன்தானும் பரமபோகியா யிருப்பா னொருவனிறே. [அவன்கிடக்கை யீதென்னும்] - அது ஒருதூற்றிலே போய்ப்புகுமே; அத்தை நோக்கிக்கொண்டு கிடக்கும், அவன்வந்தால் காண்கைக்கு. [ஆமளவொன்றுமறியேன்]-ஜகதுபஸம்ஹாரம் பிறக்கப் புகுகிறதோ? அறிகிறிலேன்.

---

'கோமளம்' என்று - இளமையாய், 'வான்' என்று - பெருமையாகையாலே, இரண்டுக்கும் அவிரோதேந அர்த்தம் - 'பருவத்தால்' இத்யாதி. 'மேய்த்தன' என்ற பன்மைக்குச் சேர, 'கன்றை' என்ற ஏகவசநம்-ஜாத்யபிப்ராய மென்கிறார், 'கன்றுகளைத்தழுவி' என்று. உக்தார்த்த த்வயத்துக்கும் நியாமகம் - 'கோமளமென்று' இத்யாதி. கோமளஶப்தம்-மாணிக்யவாசியாம்போது தர்ஶநீயதையும், இளமை பாம்போது ஸௌகுமார்யமு மாக்கி, இரண்டர்த்தத்தையும் கூட்டி நிகமிக்கிறார்-'ஆக' என்றுதொடங்கி. 'ஸுகுமாரமுமான' என்றது 'கோமளம்' என்றதுக்கு மூன்றாமர்த்தமாதல். இளையதான கன்றுகளைத் தழுவுகைக்கு அடியேது? என்ன, 'க்ருஷ்ணன்பருவம்' இத்யாதி. இவற்றுக்கு க்ருஷ்ணன் பருவம் வருகைக்கு அடியேது? என்ன, 'கிட்டினார்க்கு' இத்யாதி. க்ருஷ்ணன்மேய்த்தானோ? அவனும் கன்றுகளும் ஒத்த பருவமாயிருக்குமோ? என்ன, 'வத்ஸமத்ய' இத்யாதி. மத்யகத மென்றது - மேய்த்ததுக்கு ப்ரமாணம். வத்ஸ, பாலம், கன்று, காளாயென்றது - ஒத்தபருவத்துக்கு ப்ரமாணம். "ஸஉஉஶூதநாகக்ஷ்ரைமஹாஹமிநமவாழ ! வ[illegible] ஶாவஅஂநீமொதஉஉஉவிழ" இதி பஞ்சமேமஶே ஸப்ததமஶே அக்ரூர:. 'கன்றுமேய்த்தினிதுகந்தகாளாயென்றும்' - கன்றுகளை மேய்த்து மிகவுமுகந்த இளகிப்பதித்த பருவத்தையுடையவனே! என்றும் அர்த்த:. திருநெடுந்தாண்டகம் பதினாறாம்பாட்டு. கோவிந்தன் மேய்த்தன வாகையாலே-'வான் கன்று' என்று விவக்ஷித்து ஸாவம் - 'ப்ராப்தனானவன்' இத்யாதி. 'கோவிந்தன் மேய்த்தன' என்றதுக்கு வெறுப்பூகத் தாத்பர்யாந்தரம் - 'கன்றின்கழுத்தை' இத்யாதி. துள்ளிப்போகாநிற்குமே யென்றது - 'கோமளவான்' என்றதின் தாத்பர்யம். அவன் ஓடுமாபோலே இதுவும் ஓடாநின்ற தென்று கருத்து. ஸர்ப்பத்தின் பின்னே போகைக்கு ஹேதுவை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - 'இவளுடைய' இத்யாதி. போகம் - ஸர்ப்பத்தினுடலும், அநுபவமும். 'இளநாகம்' என்றதுக்கு - திருவநந்தாழ்வானை ப்ரமிக்கிறாளென்று விவக்ஷித்து, இவ்விளமைக்கு ஸாவம் - 'முக்தர்' இத்யாதி. தடஸ்த ஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார், 'கன்றை' இத்யாதி. பின்னேபோகிறது எதுக்காக? என்ன, 'அதுபுக்கவிடத்திலே' இத்யாதி. அப்படி அவன் வரவு தப்பாதோ? என்ன, 'அவன்தானும்' இத்யாதி. பரமனான போகியை யுடையவ னென்றும், பரமனான போகியென்றும் இரண்டர்த்தம். 'ஈதீ' என்றதுக்கு ஸாவம் - 'அது ஒருதுற்றிலே' இத்யாதி. தாத்பர்யாந்தரம் - 'ஸர்ப்பமே

'ஸர்ப்பம்' என்று மீளமாட்டுகிறிலள், இது என்னாய் விளையக்கடவது? என்கிறாள். பாம்போடு ஒருகூரையிலே பயின்றாற்போலேயிறே திருத்தாயார்க்கு இருக்கிறது. இவளை இழக்கவே ஜகத் காரணமானவனைக் கிடையாது; காரணம் இல்லாமையாலே கார்யம் தன்னடையே இல்லையா மிறே. [அருவினையாட்டியேன்பெற்ற] - இவளுக்கு இங்ஙனே ஒருபுத்தி பிறந்து படுகிறது நான் பண்ணினபாபமிறே. அன்றியே, "நெடுங்காலமும்கண்ணனீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்கிற படியே செய்து முடிக்கவொண்ணாத புண்ணியங்களைப் பண்ணிப்பெற்ற ஸுகுமாரையான இவளை யென்றுமாம். [பெற்ற] - "பிறந்திட்டாள்" என்கிறபடியே, அக்கரையளாய் இவள் தனக்கு அலப்யலாபமா யிருக்கிறபடி. [கோமளவல்லியை]-கேவலம் வல்லியல்ல, கோமளவல்லியாயிற்று. உபக்நத்தோடே சேர்க்கவேண்டும் பருவம்; பிள்ளைப்பருவம். [மாயோன்] - தன்னைக்கண்டால் தந்தாமையறியாதபடி பண்ணவல்ல ப்ரணயித்வகுணத்தை யுடையவன். [மால்செய்து] - பிச் சேற்றி. [செய்கின்ற கூத்து]-அடிக்கிற ஆட்டம். 'ஆமளவு ஒன்றுமறியேன்' என்று அந்வயம். (ரு)

## ஆறாம்பாட்டு.

கூத்தர்குடமெடுத்தாடில் கோவிந்தனாமெனாஓடும்
வாய்த்தகுழலோசைகேட்கில் மாயவனென்றுமையாக்கும்
ஆய்ச்சியர்வெண்ணெய்கள்காணில் அவனுண்டவெண்ணெய்ஈதென்னும்
பேய்ச்சிமுலைசுவைத்தார்க்கு என்பெண்கொடியேறியபித்தே!

ஆ.—(கூத்தர்.) கூத்தர் குடமெடுத்தாடில், 'கோவிந்தனல்லன்காண்' என்றாலும்; ஆங்காணென்னா ஓடும்; அன்றியே ஒழிந்தவாறே தளரும். 'அழகியகுழலோசைகேட்கில், இவளைப் பெறவொண்ணாது' என்று கேளாததொருபடி காத்துச் செல்லாநிற்கச்செய்தே, எங்கேனுமோரிடத்திலே பின்னையும் லப்தமானவாறே, அடியேன் மாயவ னென்று ஓடும்; அவனன்றியே யொழிந்தவாறே மோஹிக்கும். பின்னையும், ஆய்ச்சியர்வெண்ணெய்கள் கா ணில், அவனுண்ட வெண்ணெய் ஈதென்னும். மாய்த்தலெண்ணி வாய்முலைதந்த பேய்ச்சியை மாய்த்த இச்செயல்கிடர் இவளை இப்பாடு படுத்துகிறது என்கிறாள்.

ஒ.—ஆறாம்பாட்டில், தன்மகளுடைய பிச்சுக்கு நிதாநம் இன்னது என்கிறாள்.

[கூத்தர் என்று தொடங்கி.] - குடக்கூத்தாடுவாரைக் காணில் கோவிந்தனென்றே 'காணுவோம்' என்று ஓடும். நேர்பட்ட குழலோசை கேட்கில் 'ஒருவன்குழலூதும்படியே!'

---

ன்று' இத்யாதி. ஸர்ப்பத்தைத் தழுவாதிருக்க, 'என்னாய்விளையக்கடவது' என்பானென்? என்ன, 'பாம்போடு' இத்யாதி. ஸர்ப்பத்துடனே ஒருச்ருஹத்திலே வஸிப்பாரைப்போலே இத்யர்த்தः. திருமொழி பதினே ராம்பத்து "மாற்றமுள" என்கிற திருமொழி, மூன்றாம்பாட்டு, "தூங்கார்" இத்யாதி. ஜகதுபஸம்ஹாரமாம் படி யென்? என்ன, 'இவளை' இத்யாதி. பிச்சேறுகிற இவளதன்றோ பாபம்? என்ன, 'இவளுக்கு' இத்யாதி. 'அருவினையேன்' என்றதுக்குப் புண்யமாக அர்த்தாந்தரம் - 'நெடுங்காலமும்' இத்யாதி. 'நானுண்டாக்கின' என்னாதே 'பெற்ற' என்கிறதுக்கு பாவம் - 'பிறந்திட்டாள்' இத்யாதி. பெற்ற-'நிதிபெற்ற' என்னுமாபோ லே. 'கோமளவல்லி' என்றதுக்கு-'ஸுகுமாரையான' என்று ஓரர்த்தஞ் சொல்லி, இளம்பருவ மென்று அர்த் தாந்தரம் - 'உபக்நத்தோடே' இத்யாதி. கிடக்கை - படுக்கை, ஆமளவொன்றுமறியேன் - எவ்வளவாமெ ன்று ஒன்றும் அறிகிறிலேன். 'செய்கின்றகூத்து - ஆமளவொன்றுமறியேன்' என்று அந்வய மென்றபடி.

என்று எம்பெருமானைக் கொண்டு மோஹிக்கும். [ஆய்ச்சியர் என்று தொடங்கி] - இடைச்சிகள் கையிலே வெண்ணெய்கள் காணில் 'அவன் அமுதுசெய்த வெண்ணெயோடு ஸஜாதீயம்' என்று விரும்பும். பூதனையை முலையுண்கிறானாய் முடித்த உபகாரம்நிமித்தமாக, அத்யந்தவிலக்ஷணையான என்மகள் ஏறின பிச்சுக்கள் இவை.

ப.—அநந்தரம், 'அவனுடைய மநோஹரசேஷ்டிதங்களை அநுஸந்தித்து, அவற்றுக்குப் போலிகண்டு ப்ரமியாநின்றாள்' என்கிறாள்.

கூத்தர் - கூத்தாடுமவர்கள், குடம் எடுத்து - குடம் எடுத்து, ஆடில் - ஆடினார்களாகில், கோவிந்தன் - (கோஸம்ருத்தியையுடையனானகையாலே செருக்குமிக்குக் கூத்தாடுகையே ஸ்வபாவமாகவுடைய) க்ருஷ்ணன், ஆம் - ஆம், என - என்று, ஓடும் - (காண்கைக்கு) ஓடாநிற்கும்; வாய்த்த - நன்றாய் நெஞ்சைவருத்தும், குழலோசை - குழலோசை, கேட்கில் - கேட்டாளாகில், மாயவன் - (இடைப்பெண்களுடைய ப்ரணயரோஷமாறும்படி தன்தாழ்ச்சியைத் தூதும் குழலோசையையுடைய ஆஸ்சர்யபூதனான) க்ருஷ்ணன், என்று-என்று, மையாக்கும்-மோஹியாநிற்கும்; ஆய்ச்சியர் - இடைச்சிகள்கையிலே, வெண்ணெய்கள் - வெண்ணெயை, காணில்-கண்டாளாகில், அவன் உண்ட-அவன் அமுதுசெய்த, வெண்ணெய்-வெண்ணெயோடு ஸஜாதீயம், ஈது-இது, என்னும்-என்னாநிற்கும்; பேய்ச்சி-பூதனையுடைய, முலை-முலையை, சுவைத்தார்க்கு - ப்ராணனோடே சுவைத்துத் தம்மை லோகத்துக்குக்கொடுத்த மஹோபகாரகர்க்கு, கொடி - கொடிபோலே மெல்லியவடிவையுடைய, என் பெண் - என் பெண் பிள்ளை, ஏறிய - தலைமண்டையிடும்படிகொண்ட, பித்து - பிச்சு இருந்தபடி.

இ.—ஆறும் பாட்டில், தன் மகளுடைய பிச்சுக்கு நிதாநம் இன்னது என்கிறாள்.

[கூத்தர் இத்யாதி] - கேவலம் கூத்துக்கு விக்ருதையாகாள். குடக்கூத்தாவது - இடையர் செருக்குக்குப் போக்குவீடாவது ஒன்று. 'ஆடில்' என்கையாலே, இவள் இருந்த ஊரில் குடக்கூத்து விலக்கியாயிற்றுக் கிடப்பது, இவள் ப்ரமிக்குமென்று; வழிப்போக்கர் புகுந்து ஆடுவர்களாகில் ஆடுமித்தனை. [கோவிந்தன்] - குடக்கூத்தாடுகைக்குச் செருக்குக்கு அடியான கோஸம்ருத்தியையுடையவன். 'இரந்து திரிகிறவர்கள் அவனாகையாவது என்?' என்பர்கள். ஆமென்று, 'அவனன்றுகாண்' என்னுமவர்கள் வார்த்தை செவிப்படாதே காண ஓடும். [வாய்த்த இத்யாதி] - இசையாலே விஶேஷஜ்ஞரோடு அவிஶேஷஜ்ஞரோடு வாசியற எல்லாரையும் வருத்தும் குழலோசையைக் கேட்கில். [மாயவனென்று மையாக்கும்] - பசு மேய்க்கப் போய்த் தாழ்த்தால் பெண்கள் நெஞ்சில் மறம் மாறும்படி தாழ்ந்த சொற்களை வைத்து ஊதும்படியை அநுஸந்தித்து மோஹியா நிற்கும். [ஆய்ச்சியர் இத்யாதி] - ப்ராக்ருத மணிகள் வெண்ணெய் கண்டால் அவிக்ருதையாயிருக்கும். இடைச்சிகள் கையில் முடைநாறுகிற வெண்ணெயைக் காணில் அவன் அமுது செய்த வெண்ணெயோடு ஸஜாதீயமென்று விரும்பும். இவள் இப்படி பிச்சேறுகைக்கு அவன் இவளுக்குப் பண்ணின உபகாரத்தைச் சொல்லுகிறது: [பேய்ச்சிமுலை சுவைத்தார்க்கு] - தாய் உதவாத தனிமையிலே பூதனை தாய் வடிவுகொண்டு நலியப்புக அவளை முடித்துத் தன்னை உபகரித்த உபகாரத்துக்குத் தோற்றாயிற்று, இவள் பிச்சேறிற்று. பூத்தருபுணர்ச்சி, களிறுதருபுணர்ச்சி, ஆறுதருபுணர்ச்சி: அசிந்திதமாகக் கையிலே பூவைக் கொடுத்தல், ஆனையின் கையிலே அகப்பட்டவர்களை மீட்டல், ஆற்றிலே அமிழாநிற்க எடுத்தல் செய்தவர்களுக்கு அவர்கள் அநந்யார்ஹைகள். தந்தாமை யுண்டாக்கினவர்களுக்கிறே அங்கு; அவன் தன்னை உண்டாக்கித் தந்ததுக்குத் தன்னை அநந்யார்ஹமாக்கினாள். [என் பெண்கொடி] - நிருபாதிகமான ஸ்த்ரீத்வத்தையுடைய என்மகள் ஏறிய பிச்சு.

ஈடு.—ஆறும்பாட்டு. தன்மகள் பிச்சுக்கு நிதாநத்தையும் அதடியாகவந்த பிச்சுத் தன்னையும் சொல்லுகிருள்.

[கூத்தர் குடமெடுத்தாடில்] - இவள்ப்ரக்ருதி அறிந்திருக்கையாலே 'இவளைக்கிடை யாது' என்று கூத்துவிலக்கிப்போலே காணும் கிடப்பது. இடையர் செருக்குக்குப் போக்குவிட் டாடுவதொரு கூத்தாயிற்று - குடக்கூத்தாகிறது. விளைவதறியாதே வழிப்போக்கர் புகுந்து ஆடா நிற்பர்களே, அத்தைக்கண்டு, [கோவிந்தனுமெனு ஓடும்] - இக்குடக்கூத்தாடும்போது கோஸம் ருத்தியையுடைய க்ருஷ்ணனுகவேணு மென்று காண ஓடும். இரந்துதிரிகிற இவர்கள் அவனு கையாவதேன்? என்பர்களே; [ஆமெனுஓடும்]-அவன் க்ருஷ்ணனேயென்று காண ஓடும். [வாய் த்தகுழலோசை கேட்கில்] - 'விஶேஷஜ்ஞர், அவிஶேஷஜ்ஞர்' என்று வாசியின்றிக்கே எல்லா ரையுமொக்க ஈடுபடுத்தும், குழலின் நல்லிசை வந்து செவிப்படில். [மாயவனென்று மையாக்கும்]- *"நுடங்குகேள்வியிசை" என்னக்கடவதிறே அவன்தன்னை. அதவா, 'பகலெல்லாம் பசுக் களின்பின்னே போனேன், பித்ராதிகளுக்குப் பரதந்த்ரனுனேன், பிரிந்தேன், ஆற்றேன், † "ஒரு பகலாயிரமூழி" ' என்றாற்போலே சொல்லி ஸாந்த்வநம்பண்ணிக்கொண்டுவந்து தோற்றுமவனென் று, அவன் குழலிலே வைத்துச்சொல்லும் தாழ்ந்தசொற்களை நினையா மோஹிக்கும். [ஆய்ச்சியர் வெண்ணெய்கள்காணில்] - 'ப்ராஹ்மணிகள் ஸ்பர்ஶித்த வெண்ணெய் இது' என்றால் கொள் ளாள்; முடைநாற்றம் மிக்க வெண்ணெய்கள் காணில்; [அவனுண்ட வெண்ணெயீதென்னும்]- களவுகாணப்புக்கு வாயதுகையதாக அகப்பட்டபோது ஶேஷித்த வெண்ணெயோடே ஸஜாதீய மான வெண்ணெய் ஈதென்னும். இவள் இப்படி கலங்குகைக்கு நிதாநமேன்? என்னில்,— [பேய்ச்சிமுலைசுவைத்தார்க்கு] - அவன் முன்பே ஒரு உபகாரத்தைப் பண்ணிவைத்தான்; அத்லே

ஆறும்பாட்டு - 'கூத்தர்' இத்யாதி. பிச்சுக்கு நிதாநம் - பேய்ச்சிமுலைசுவைத்தது. ஶேஷமெல்லாம்- பிச்சுக்கள்.

'ஆடில்' என்ற யதிசப்தார்த்தம்-'இவள்ப்ரக்ருதி' இத்யாதி. விலக்கிப்போலே - விலக்கியிருந்தாற் போலே. இக்கூத்தாடினுல் இவளைக்கிடையாமைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் - 'இடையர்' இத்யாதி. 'இடையர்குடமெடுத்தாடில்' என்னுதே, 'கூத்தர்' என்று விசேஷித்ததுக்கு பாவம் - 'விளைவதறியாதே' இத் யாதி. 'கோவிந்தன்' என்றதுக்கு 'விந்துலாபே' என்கிற தாதுவை உட்கொண்டு அர்த்தம்-'இக்குடக்கூத் தாடும்' இத்யாதி. 'வ்யதிதையாயிருக்கிறவள் பாட்டுக்கேட்டுத் திரிகிறுளென்றே' என்ன, 'கேட்கில்' என்கிற யதிசப்தார்த்தம் - 'விசேஷஜ்ஞர்' இத்யாதி. போக்யதாஸாம்யத்தாலே 'மாயவன்' என்று மோஹிக்கு மென்ற படி. ஆனுல், அவன் குழலோசைபோலே போக்யனுயிருக்குமோ? என்ன, 'நுடங்குகேள்வியிசை' இத்யாதி. கேட்டாரை ஈடுபடுத்தும் கேள்வியையுடைய காந மித்யர்த்த:. 'குழல் - வாய்த்தவோசை' இத்யந்வய:. வாய் த்த - நன்றான. மாயவன் - ஆஶ்சர்யபூதன். மாயவனுடைய குழலோசையென்று மையாக்கு மென்று அர்த் தாந்தரம் - 'அதவா பகலெல்லாம்' இத்யாதி. இப்போது 'மாயவன்' என்றதுக்கு - வ்யாமோஹமுடையவ னென்று ஶப்தார்த்தம். தாழ்ந்த சொற்கள் - நீசோக்திகள். நினையா - நினைத்து. முந்தினது - அவனுக்குப் போலியானதுகொண்டு, இரண்டாவது - அவனுடைய பேச்சுக்குப் போலியானதுகொண்டு என்று கண்டு கொள்வது. மையாக்கும் - மோஹியாநிற்கும். 'ஆய்ச்சியர்வெண்ணெய்கள்' என்றதுக்கு வ்யாவர்த்யம் - 'ப்ராஹ்மணிகள்' இத்யாதி. அவனுண்டுவிட்ட தென்னவொண்ணுது, அவனுண்டுசேஷித்த தென்னவொண் ணுது, காலாந்தரமாகையாலே அதுவும் அநுபபந்நமென்று விவக்ஷித்து அவிரோதேந அர்த்தம் - 'களவுகாண' இத்யாதி. 'அவனுண்டு சேஷித்த வெண்ணெயோடு ஸஜாதீயமான வெண்ணெயைக் காணில் அவன் உண்டு சேஷித்த வெண்ணெயென்னும்' என்று பெரிய சீயர் அருளிச்செய்வர். ஸம்பந்தி ஸத்ருஶபதார்த்தங்களைக் காணில் ஸம்பந்திபதார்த்தங்களென்று ப்ரமிக்கிறதுக்குச் சேரவேண்டுகையாலே. ஶேஷித்தவெண்ணெ யோடுஸஜாதீயமான வெண்ணெயை அந்த ஶேஷித்த வெண்ணெய் ஈதென்னும்ஈ - தென்று ப்ரமியாநிற்கு

* திருவாய்மொழி ரு - ச - ரு. † ஷை - ௧௦ - ரு - ௧.

தோற்றவன்று தொடங்கி இவள் பிச்சேறத் தொடங்கினாள். தாயுங்கூட உதவாத ஸமயத்திலே பூதனை வந்து முலைகொடுக்க, அவ்வளவிலே உணர்த்தியுண்டாய் அவளை முடித்துத் தன்னை நோக்கித் தந்தானே; அவ்வுபகாரத்திலே தோற்று அன்று தொடங்கி இவள் பிச்சேறினாள். "பூத்தருபுணர்ச்சி, புனல்தருபுணர்ச்சி, களிறுதருபுணர்ச்சி" என்றிவை புணர்ச்சிக்கு ஹேது. அதாவது - எட்டாதகொம்பிலே நின்ற தொரு பூவை ஆசைப்பட்டால் இவன் தன்னைப்பேணுதே இவளாசையை முடித்துக்கொடுக்கை, 'இவன் தன்னைப்பேணுதே நம்நினைவை முடித்தானே' என்று அதுக்காகத் தன்னைக்கொடுக்கை - பூத்தருபுணர்ச்சி. ஆற்றிலேயழுந்துகிற இவளைத் தான் புக்கு ஏறவிட்டதுக்காகத் தன்னைக்கொடுக்கை - புனல்தருபுணர்ச்சி. அசிந்திதமாக ஆனையின் கையிலே அகப்பட்டவளை மீட்டுக்கொடுத்ததுக்காகத் தன்னைக்கொடுக்கை - களிறுதருபுணர்ச்சி. இவையொன்றுமல்ல; அவன் தன்னைநோக்கினதுக்கு இவள் தன்னை யெழுதிக்கொடுக்கிறாள். [என்பெண்கொடி] - அவர்களில் வ்யாவ்ருத்தி, நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடையவள். [ஏறியபித்து] - இவள்கொண்ட பிச்சு. (சு)

---

## ஏழாம்பாட்டு.

ஏறியபித்திநோடு எல்லாவுலகும்கண்ணன்படைப்பென்னும்
நீறுசெவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும்
நாறுதுழாய்மலர்காணில் நாரணன்கண்ணியீதென்னும்
தேறியும்தேறுதும்மாயோன் திறத்தனளே இத்திருவே.

*ஆ.—(ஏறிய.) எத்தனையேனும் பித்தேறினாலும் எல்லாவுலகும் கண்ணன் படைப்பென்னும்; இதொன்றும் தப்பாமல் சொல்லும். த்ரவ்யம் ஏதேனுமாகிலும் ஊர்த்வமாக இடக்காணில், நெடுமாலடியாரென்று ஓடும். ததீய வஸ்துஸாத்ருஶ்யத்தாலே ததீயமல்லாதவற்றையும் ததீயமாகக் கருதிப் பிதற்றுகிற இவள் அவனுக்கு அஸாதாரண லேஷபூதமான திருத்துழாயைக் கண்டால் என்படும்! பலசொல்லியென்? இனி, தேறியும் தேறாதும் மாயோன் திறமல்லதறியாள் இத்திரு என்கிறாள்.*

*ஒ.—ஏழாம் பாட்டில், 'தேறினபோதோடு தேறாதபோதோடு வாசியின்றிக்கே எப்போதும் அவன் திறமல்லது அறிகிறிலள்' என்கிறாள்*

[ஏறிய என்று தொடங்கி.] - பிச்சேறியிருந்தாலுந்தே இஜ்ஜகத்தெல்லாம் க்ருஷ்ணனாலே ஸ்ருஷ்டமாயிற்றென்று தத்ஸம்பந்த நிபந்தநமாக விரும்பிச் சொல்லாநிற்கும். பஸ்மத்தைக்கொண்டு மேல்நோக்கியிடினும் கலக்கத்தின் மிகுதியாலே ஸ்ரீவைஷ்ணவர்களாகத்

---

மென்று கூட்டிக்கொள்வது' என்றும் அருளிச்செய்வர். கீழ் வாக்யவிவரணம் - 'தாயுங்கூட' இத்யாதி. அவன் தன்னை நோக்கினதுக்குப் பிச்சேறவேணுமோ? என்ன, இது லோகவ்யாவ்ருத்த மென்கிறார் - 'பூத்தரு' இத்யாதி. வாக்யஷட்கத்தாலே உபபாதநம் - 'அதாவது' இத்யாதி. இவையொன்றுமல்ல என்றது - இவர்களெல்லாரும் தங்களைரக்ஷித்த உபகாரத்தாலே தோற்றுத் தங்களை எழுதிக்கொடுப்பர்கள்; இவள்உத்தமநாயகியாகையாலே, அவன்தன்னை நோக்கினதுக்குத் தன்னை யெழுதிக்கொடுக்கிறாளென்றபடி. விவரணம் - 'நிருபாதிக' இத்யாதி. பெண்கொடி - கொடிபோலே ம்ருதுவான வடிவையுடைய என்பெண்பிள்ளை. என்பெண்கொடி - பேய்ச்சிமுலைசுவைத்தார்க்கு - பித்து - ஏறி - கூத்தரித்யாரப்ய அந்வயః. (சு)

கொண்டு அவர்கள் நின்ற விடம் ஏற ஓடா நிற்கும். [இத்திரு] - பெரியபிராட்டியாரோடு விகல்பிக்கலாம் ஸ்வஹாவையான இவள்.

ப.—அநந்தரம், அவனுடைய பரத்வ சிஹ்நங்களை அநுஸந்தித்துக் கலங்கினபோதோடு தேறினபோதோடு வாசியற அவன்படிகளிலே உள்ளாயிராநின்றாள் என்கிறாள்.

ஏறிய - மிகைத்த, பித்தினோடு - ப்ரமத்தோடே கூடியிருக்கச்செய்தே, (வேதாந்த வித்துக்கள் சொல்லுமாபோலே "க்ருஷ்ண ஏவஹி லோகாநாமுத்பத்திः" என்று), எல்லாவுலகும் - ஸர்வலோகமும், கண்ணன் - க்ருஷ்ணனுடைய, படைப்பு-ஸ்ருஷ்டி, என்னும் - என்னாநிற்கும்; நீறு - பஸ்மத்தைக்கொண்டு, செவ்வே - செவ்விதாக, இட - இட, காணில் - கண்டாளாகில், ('த்ரவ்யம் இன்னது' என்று அறியாதே ஊர்த்வபுண்ட்ரமே அடையாளமாக), நெடுமால் - (ஆஶ்ரிதர்பக்கல்) அத்யந்தவ்யாமுக்தனை ஸர்வேஶ்வரனுடைய, அடியார் - அடியார், என்று - என்று ப்ரமித்து, ஓடும் - (அவர்களிருந்தவிடத்தை நோக்கி) ஓடா நிற்கும்; நாறு - பரிமளோத்தரமான, துழாய் மலர் - திருத்துழாயின் பூந்தாரை, காணில் - காணில், நாரணன் - ஸர்வஸ்வாமியான நாராயணனுடைய, கண்ணி - மாலை, ஈது - இது, என்னும்-என்னாநிற்கும்; (இப்படி), தேறியும் - தேறினவளவிலும், தேறாதும் - கலங்கினவளவிலும், இத்திரு - ("நாத்யர்த்தம் க்ஷுப்யதே" என்றும், "தத்ஸ்யஸத்ருஶாபவெஸ" * என்று மென்னும்படி மிகவும் கலங்காத அந்தத் திருவைப்போலன்றியே பிரிந்ததசையில் ஸத்ருஶ வஸ்துக்களையும் ஸம்பந்திபதார்த்தங்களையும் கண்டு கலங்கும்) இத்திருவானவள், மாயோன் - ஆஶ்சர்யமான பரத்வசிஹ்நங்களையுடையவன், திறத்தனள் - திறத்திலே யாகாநின்றாள்.

அநபாயிநியான ஸம்பத்தாயிருக்கை இருவர்க்கும் ஒக்குமிறே.

இ.—ஏழாம்பாட்டில், 'தேறினபோதோடு தேறாதபோதோடு வாசியற எப்போதும் அவன் திறமல்லது அறிகிறிலள்' என்கிறாள்.

[ஏறிய பித்தினோடு இத்யாதி] - இவள் பிச்சேறி யிருக்கிற தசையிலே இஜ்ஜகத்தெல்லாம் க்ருஷ்ணனாலே ஸ்ருஷ்டமாயிற்று என்னும்; "க்ருஷ்ண ஏவஹி லோகாநாமுத்பத்திः" என்னாநின்றாள். அவன் ஆதரித்து ஸ்ருஷ்டித்தது என்று தத்ஸம்பந்தத்தாலே விபூதியையும் விரும்பாநின்றாள். ஏதேனும் ஒரு பதார்த்தமும் தத்ஸம்பந்த மொழியத் தோற்றாதாயிருக்கிறபடி. ப்ராஹ்மணர் பிச்சேறினாலும் ஒத்துச்சொல்லுமாபோலே கலங்கினபோதும் வாஸநையாலே இவ்விஷயமேயா யிருக்கிறபடி. [நீறு செவ்வே] - பஸ்மத்தைக்கொண்டு மேல்நோக்கி இட்டவர்களைக் காணில் கலக்கத்தின் மிகுதியாலே த்ரவ்யஸ்வரூபத்தை நிரூபிக்க அறியாதே மேல் நோக்கியிட்ட மாத்ரத்தைக் கொண்டு அநுகூலஜநங்களாகக்கொண்டு "பேராளன்பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரிகிலேன்" என்று அவர்களிருந்த விடத்தே செல்லாநின்றாள். 'நெடுமாலடியார்' என்று - ஊதவிநுதஶாஜி. [நாறு துழாய் இத்யாதி] - போலி கண்டு ப்ரமிக்குமவள் அதுதன்னைக் கண்டால் விடாளிறே; பரிமளிதமாய்ச் செவ்வியையுடைத்தான திருத்துழாயைக் காணில், 'உபயவிபூதியுக்தன் தன்ஐஶ்வர்யஸூசகமாக இட்ட தனிமாலை இது' என்னாநின்றாள். [தேறியும் தேறாதும்] - 'நீறு செவ்வே' என்ற இடம் - தேறாமை; 'நாரணன் கண்ணி யீது' என்ற இடம் - தேற்றம். 'கோவைவாயாள்' - தேற்றம்; இத்திருவாய்மொழி - தேறாமை. [மாயோன் திறத்தனளே] - ஜ்ஞாநம் அப்ரயோஜகமாம்படி ஆஶ்சர்யமான

* 'என்றும் சொல்லும்படி' என்று இருக்கலாம்.

ப்ரணயித்வத்தையுடையவன்திறத்தனள். [இத்திரு] - 'இத்திரு' என்றும், 'அத்திரு' என்றும் விகல்பிக்கலாம்படி யிருக்கிறது. அநபாயிநிகளாயிருக்கிற ஆகாரம் இருவருக்கும் ஒக்கும். அவளுக்கு அவனே உத்தேஶ்யன்; இருவரும் உத்தேஶ்யரான ஏற்றமுண்டே இவளுக்கு.

ஈடு.—ஏழாம்பாட்டு. தேறினபோதோடு தேறாதபோதோடு வாசியற எப்போதும் அவன் திறமல்லது அறியாளே என்கிருள்.

[ஏறியஇத்யாதி] - இவள் பிச்சேறிச்சொல்லும் வார்த்தை கேட்கைக்கு, மைத்ரேயாதிகளைப்போலே தொடர்ந்துதிரியவேண்டிக்காணும் திருத்தாயார்க்கு இருக்கிறது. "விஷ்ணோஸ்ஸகாஶாதுத்பூதம் ஜகத்" (விஷ்ணோஸ்ஸகாஶாதுத்பூதம்ஜகத்) என்றுநின்ருள். ப்ராஹ்மணர் பித்தேறினலும் ஓத்துச்சொல்லுமாபோலே இவ்விஷயத்தில் வாஸனை யிருக்கிறபடி. "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய:" (க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய:) என்கிற இதில் ஒருகாலும் கலக்கமில்லை; இவள் பிச்சேறியிருக்கிற தசையிலே, இஜ்ஜகத்தெல்லாம் க்ருஷ்ணனாலே ஸ்ருஷ்டமாயிற்றுஎன்னும். [நீறுசெவ்வேயிடக்காணில்] - ப்ராயஶ்சித்தப்ரகரணங்களிலே ப்ரஹ்மஹத்யாதி பாபங்களைப் பண்ணினர்க்கு ப்ராயஶ்சித்தமாக விதித்த த்ரவ்யத்தைத் தாமஸபுருஷர்கள் தரித்துப்போந்தார்கள்; அந்த த்ரவ்யத்தைப் பாராதே செவ்வைமாத்ரத்தைக் கொண்டு ப்ரமிக்குமாயிற்று இவள்; அது பொடிபட்டுக்கிடக்கிறதென்று அறிகிறிலள். அவர்கள் செவ்

---

ஏழாம்பாட்டு - 'ஏறியபித்து' இத்யாதி. 'தேறியும்தேறாதும்மாயோன்திறத்தனள்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'தேறினபோதோடு' இத்யாதி.

'இவள்பிச்சேறி' இதி. ஸ்ரீபராஶரபகவான் தெளிந்திருந்து வஸிஷ்ட புலஸ்த்ய வரதாந லப்த பரதேவதாபாரமார்த்ய ஜ்ஞாநத்தோடே சொன்ன வார்த்தை கேட்க மைத்ரேயனுக்குத் துவளவேண்டினாற்போலே இருக்கிறது, இவளுக்கும் இவள் பிச்சேறிச்சொல்லும் வேதாந்தரஹஸ்யமான வார்த்தை கேட்கைக்கு என்றபடி. அவன் தெளிந்திருந்து சொல்லும் வார்த்தையாயிற்று, இவள் பிச்சேறிச்சொல்லுகிறது. மைத்ரேயாதிகளுக்குச் சொன்ன வார்த்தையேது? என்ன, 'விஷ்ணோ:' இத்யாதி. ப்ரதமேம்ஶே ப்ரதமே. மைத்ரேயன் ஸ்ரீபராஶரபகவானை ப்ரஶ்நம்பண்ணினது - "யந்மயஞ்ச ஜகத்ப்ரஹ்மந் யதஶ்சைதச்சராசரம் । லீநமாஸீத்யதா யத்ர லயமேஷ்யதி யத்ர ச" என்கிற ஶ்லோகம். அதுக்கு உத்தரம் - "விஷ்ணோஸ்ஸகாஶாதுத்பூதம் ஜகத்தத்ரைவ ச ஸ்திதம் । ஸ்திதிஸம்யமகர்த்தாஸௌ ஜகதோஸ்ய ஜகச்ச ஸ:" என்கிற ஶ்லோகம். இவளும் ஸ்ரீபராஶரபகவானைப்போலே சொல்லுகிருளென்றபடி. "ஸகாஶாத்" என்றதுக்கு மூன்று அர்த்தம்; அதாவது - "காஶ்ரு-தீப்தௌ" என்று தீப்திவாசகமாய், ப்ரகாஶரூபஸங்கல்பஜ்ஞாந விஶிஷ்டாத் விஷ்ணோருத்பூதமென்னுதல்; "ஸோஹியஸ்யாயஶரீரஸ்ஸ்தாத" என்று இருக்கையாலே, ப்ரகாஶமயஶரீரவிஶிஷ்டாத் விஷ்ணோ: என்னுதல்; இதுக்கும் கீழ்ச்சொன்னதே தாது; ஸகாஶாத்-காஶஸஹிதாத் என்றபடி; அன்றிக்கே, ஸகாஶமென்று - ஸமீபமாய், விஷ்ணுஸமீபாத் என்னுதல். விஷ்ணுபதம் - பூர்வார்த்தத்வயத்தில், பஞ்சம்யந்தம்; த்ருதீயார்த்தே, ஷஷ்ட்யந்தம். ப்ராந்திஸமயத்தில் அடுக்கைகூடுமோ? என்ன, 'ப்ராஹ்மணர்' இத்யாதி. "விஷ்ணோஸ்ஸகாஶாத்" என்றாற்போலே சொல்லாதே "கண்ணன்படைப்பு" என்பானென்? என்ன, 'க்ருஷ்ணஏவஹி' இத்யாதி. ராஜஸூயே பீஷ்ம:. "க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விஶ்வம் சராசரம்" இத்யுத்தரார்த்தம். ஶப்தார்த்தம் – 'இவள்பிச்சேறி' இத்யாதி. நிஷித்தமான நீற்றை இடலாமோ? என்ன, 'ப்ராயஶ்சித்த' இத்யாதி. த்ரவ்யத்தை-சாம்பலை. "ஶபாகக்ருஷ்கா ஶநாராஜாராஷ்க்ஷ்ருகஷாவஸ்ராராஶீக்ஷாவஹ்ருஹத்யாணகக்ருஷா । ஸஹஸ்ரநாஹவஸ்மஸ்யஶமாநோராஜ்யாயீபாவ்யதைவத்வாகெ:" இதி ஶாதாதபஸ்ம்ருதௌ ப்ராயஶ்சித்தப்ரகரணேக்தம் அநுஸந்தேயம். 'பொடிபட்டு' என்கிற இது - சாடு. தூளியா யென்றும், பராஹதமா யென்றும். அவர்

வேயிடுவர்களோ? என்னில்,—அதுவுமன்றிக்கே * (இதுவுமன்றிக்கே), மஶகப்ராயராயிருப்பார்கள் தரிப்பர்களிறே. அல்பஸாம்யம்அமையுமாயிற்று இவளுக்கு ப்ரமிக்கைக்கு. இந்த ஊர்த்வதாமாத்ரத்தையே கொண்டு "உத்ருதாஸிவராஹேண"(உத்த்ருதாஸிவராஹேண)இத்யாதியிற் சொல்லுகிறபடியே, என்றுமொக்க பகவத்ஸம்பந்தம் மாருத தேஶத்தில் மண்ணைக்கொண்டு தரித்துப்போருமவர்களாகக் கொண்டு ப்ரமித்து, இவர்கள் ஸர்வேஶ்வரனடியார் என்று ஓடாநிற்கும். அதஸ்மிந்தத்புத்தி இருக்கிறபடி. [நாறுதுழாய்மலர்காணில்] - அதல்லாதத்தை அதாக ப்ரமிக்கிறவள் அதுதானனவற்றைக் கண்டால் விடாளிறே. அவன் ஶிரஸாவஹித்து அடியார்க்குக்கொடுக்குமதிறே அதுதான். அதாவது - ஸ்ரீஶடகோபனுக்குச் சாத்துகையிறே. சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயிறே. பரிமளத்தையுடைத்தான திருத்துழாயைக் காணில், உபயவிபூதியுக்தனை ஸர்வேஶ்வரன் ஐஶ்வர்யத்துக்கு இட்ட தனிமாலை ஈதென்னும். [தேறியும்இத்யாதி] - 'தேறியும்' என்கிறது - 'துழாய்மலர்காணில்' என்றத்தை; 'தேருதும்' என்கிறது - 'நீறுசெவ்வேயிடக்காணில்' என்றத்தை. அன்றிக்கே, "கோவைவாயா"ளிற்படியும், இத்திருவாய்மொழியிற்படியுமாகவுமாம். [மாயோன்இத்யாதி] - பிறந்த ஜ்ஞாநம் கலக்கத்துக்கு உடலாம்படி பண்ணவல்ல ஆஶ்சர்யபூதன். † அவனிடையாட்டத்திலாள் இத்திரு. [இத்திரு]-அநபாயிநியான அவளோடொக்க விகல்பிக்கலாம்படிகாணும் இவள்படிகள்தான். அவளுக்கு அவன் உத்தேஶ்யன், இருவரும் உத்தேஶ்யரான சேர்த்தியுண்டு இவளுக்கு. (எ)



கள் செவ்வேயிடுவர்களோ? என்றது - திர்யக்புண்ட்ரமாகவன்றோ இடுவர்களென்றபடி. அதுவுமன்றிக்கே - நியமேந திர்யக்காகவுமன்றிக்கே. மசகப்ராயராயிருப்பார்கள் - அஜ்ஞராயிருப்பார்கள்; "பஸ்மத்தைத் திர்யக்காகவும், ம்ருத்தை ஊர்த்வபுண்ட்ரமாகவும் தரிக்கவேணும்" என்று அறியாதவர்களென்றபடி. ஸாம்யமுண்டாயே ப்ரமிக்கவேண்டாவோ? என்ன, 'அல்பஸாம்யம்' இத்யாதி. அல்பஸாம்யமேது? என்ன, 'இந்த ஊர்த்வதா' இத்யாதி. நெடுமாலடியார் தரிக்கிற த்ரவ்யம் இன்னதென்று காட்டாநின்றுகொண்டு, அவர்களாக ப்ரமிக்கு மென்கிருர், 'உத்த்ருதாஸி' இத்யாதி. ஜ்ஞாநாதிகரான இவர் அவர்களை "நெடுமாலடியார்" என்னலாமோ? என்ன, 'அதஸ்மிந்' இத்யாதி. பித்தேறி அருளிச்செய்த வார்த்தை யென்றபடி. 'அதஸ்மிந்தத்புத்தி' என்று - 'எல்லாவுலகும் கண்ணன்படைப்பு' என்றதில் வ்யாவ்ருத்தி சொன்னபடி. பூர்வப்ரதிகோடியாக ஹாவம் - 'அதல்லாதத்தை' இத்யாதி. பகவத்ஸம்பந்தமுடையதல்லாதவற்றை விட்டுத் திருத்துழாய் சொல்லுகிறது, அதினுடைய கௌரவ்யதையைப் பற்ற வென்கிருர்-'அவன் ஶிரஸா' இத்யாதி. அடியார்களில் வைத்துக்கொண்டு ஆழ்வார் ப்ரதாநராகையாலே 'நமக்கன்றி நல்கான்' என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிருர் - 'அதாவது' இத்யாதி. அத்தைத் தான் சூட ஆசைப்படுகிருளென்று கருத்து. ஶிரஸாவஹிக்கிறதுக்கு ப்ரமாணம் - 'சுடர்முடிமேலும்' என்றது. அடியார்க்குக் கொடுக்குமதுக்கு ப்ரமாணம் - 'தாளிணைமேலும்' இத்யாதி. ஈஶ்வரனுக்கு ஆழ்வார் திருவடிகளிறே. ஶப்தார்த்தம் - 'பரிமளத்தை' இத்யாதி. தத்புருஷஸமாஸார்த்தம் - 'உபயவிபூதி' இத்யாதி. "கோவைவாயா" ளிற்படி - ஜ்ஞாநகார்யம். இத்திருவாய்மொழியிற்படி - ப்ரமகார்யம். த்விதீயார்த்தத்துக்குச் சேர அர்த்தம் - 'பிறந்த' இத்யாதி. இடையாட்டத்திலாள் - இடையாட்டத்திலே யிருக்குமவள். "திரு" என்றதுக்கு ஹாவம் - 'அநபாயிநி' இத்யாதி. 'இத்திரு' என்கிற வைலக்ஷண்யமேது? என்ன, 'அவளுக்கு' இத்யாதி. தேறியும்-தெளிந்தவளவிலும். தேருதும் - கலங்கினவளவிலும். திறத்தனள் - தத்விஷயகவ்யாபாரவதீத்யர்த்த:. ஏறிய பித்திளேடு - ஏறின ப்ரமத்தோடே யிருக்கச்செய்தே. 'மிகைத்த ப்ரமத்தோடே கூடியிருக்கச்செய்தே' என்றுஉரையில் ஶப்தார்த்தம். படைப்பு - ஸ்ருஷ்டி. க்ரமேண அந்வய:. (எ)

* குண்டலிதம் ப்ரக்ஷிப்தம். † அவனிடையாட்டத்திலாள் - அவன்விஷயத்திலே ஈடுபட்டவள்.

## எட்டாம்பாட்டு.

திருவுடைமன்னரைக்காணில் திருமாலைக்கண்டேனேயென்னும்
உருவுடைவண்ணங்கள்காணில் உலகளந்தானென்றுதுள்ளும்
கருவுடைத்தேவில்களெல்லாம் கடல்வண்ணன்கோயிலேயென்னும்
வெருவிலும்வீழ்விலு * மோவாக் கண்ணன்கழல்கள்விரும்புமே.

ஆ.—(திருவுடை.) ஸ்ரீமான்களான ராஜாக்களைக் காணில், 'ஏவம்விதையான ஸ்ரீமத்தையானது ஸ்ரிய:பதியான ஸர்வேஸ்வரனுக்கல்லது கூடாதாதலால் 'இவன் ஸ்ரிய:பதியே' என்று நிஸ்சயித்து, திருமாலைக்கண்டேனே யென்னும்; அழகிய நீலமேகங்கள் குவளைகள் காயாமலர்கள் கடல் என்னும் இவற்றைக் காணில், உலகளந்தானென்று துள்ளும்; கருவுடைத்தேவில்களெல்லாம் கடல்வண்ணன் கோயிலே என்னும்; அங்கேபோய்ப் புக்கு அவனன்றியேயொழிந்தவாறே ஏங்கிவிழும்; பின்னையும் தவிராதே கண்ணன்கழல்கள் விரும்பும் என்கிறாள்.

ஓ.—எட்டாம் பாட்டில், அத்யந்தம் துர்த்தசையை வர்த்தியாநின்றாலும் இவள் ததேகபரையாயிருக்கும் என்கிறாள்.

[திருவுடை என்று தொடங்கி] - ஸ்ரீமான்களான ராஜாக்களைக் காணில் 'ஸ்ரிய:பதியைக் கண்டேனே' என்று த்ருப்தையாம். காயாம்பூ முதலான பதார்த்தங்களுடைய நல்ல நிறங்களைக் கண்டால் 'இச்செவ்வியுள்ளது திருவுலகளந்தருளின எம்பெருமானுக்கு' என்றே அத்யவஸித்து ப்ரீதியாலே ஸம்ப்ரமிக்கும். [கருவுடை என்று தொடங்கி] - ப்ரதிமாவத்தான தேவாலயங்களெல்லாம் 'கடல்வண்ணன் கோயிலே' என்னும். பந்துக்களைக்கண்டு அஞ்சுந்தசையிலும் மோஹித்த தசையிலும் அகப்பட நிரந்தரமாக க்ருஷ்ணனுடைய திருவடிகளை விரும்பாநிற்கும்.

ப.—அநந்தரம், அவனுடைய ஐஸ்வர்யாபிரூப்யாகாரிகத்வங்களை அநுஸந்தித்து, போலிகண்டாலும் ஸர்வாவஸ்தையிலும் அவனையே விரும்பாநின்றாள் என்கிறாள்.

திரு - பூர்ணமான ஐஸ்வர்யத்தை, உடை - உடைய, மன்னரை - ராஜாக்களை, காணில் - காணில், திருமாலை - (பரிபூர்ணவிபூதிகனான) ஸ்ரிய:பதியை, கண்டேனே - கண்டேனே, என்னும் - என்னாநிற்கும்; (கடலும் காயாவும் கருவிளையும் தொடக்கமான), உரு - விலக்ஷணரூபங்களை, உடை - உடையவாயுள்ள, வண்ணங்கள் - பதார்த்தங்களை, காணில் - காணில், உலகளந்தான் - திருவுலகளந்தருளினபோது ஒருநாளை வளர்ந்தருளின செவ்வியையுடைய ரூபஸோபையையுடையவன், என்று - என்று, துள்ளும் - ஸம்ப்ரமித்து ஆடாநிற்கும்; கரு - ப்ரதிமாகர்ப்பத்தை, உடை - உடைத்தான, தேவில்கள் எல்லாம் - தேவக்ருஹங்கள் எல்லாம், (ஆஸ்ரிதர் ஆதரிக்கைக்காக), கடல் வண்ணன் - கடல்போலே தர்ஸநீயமான வடிவையுடைய ஸர்வேஸ்வரன், கோயிலே - (ஸந்நிதிபண்ணின) கோயில்களே, என்னும் - என்னாநிற்கும்; வெருவிலும் - (பந்துஸந்நிதியால்) அஞ்சினபோதோடு, வீழ்விலும் - ஆர்த்தியாலே மோஹித்த போதோடு வாசியற, ஓவாள் - இடைவிடாதாளாய்க்கொண்டு, கண்ணன் - க்ருஷ்ணன், கழல்கள் - திருவடிகளை, விரும்பும் - ஆதரியாநிற்கும்.

வெருவுதல் - அஞ்சுதல். வீழ்தல் - மோஹித்தல்.

---

* ஓவாள் என்று உரையின் பாடம்.

இ.—எட்டாம் பாட்டில், 'அத்யந்த துர்த்தசை வர்த்தியா நின்றாலும் இவள் ததேக பரையாயிருக்கும்' என்கிறாள்.

[திருவுடை இத்யாதி] - குறைவற்ற ஐஶ்வர்யத்தையுடைய ராஜாக்களைக் காணில் ஶ்ரிய:பதியைக் காணப்பெற்றேன் என்னும். குறைவற்ற ஐஶ்வர்யமுடையான் ஶ்ரிய:பதியிறே. 'பெரியமுதலியார் ஒருராஜாவைக் கண்டு அவன் பின்னே தொடர்ந்துபோனார்' என்னவும், 'ஒருஸாமந்தன் தலையிலே அடியிட்டு ஆனையிலே ஏறுகிறபோது அத்தைக் கண்டு மோஹித்தார்' என்னவும் கடவதிறே. [உருவுடைவண்ணங்கள் காணில்] - காயா குவளை கடல் இவையாதல், உருப்பெற எழுதின சித்ரங்களாதல் காணில்,'இச்செவ்வியுள்ளது, த்ரைவிக்ரமக்ரமம் பண்ணின ஸர்வஸுலபனுக்கு' என்று ஸம்ப்ரமியாநின்றாள். [கருவுடைத் தேவில்] - ப்ரதிமாவத்தான தேவாலயங்களை யெல்லாம் கண்டால், 'பெரியபெருமாள் உள்ளே கண்வளர்ந்தருளுகிறார்' என்றுநின்றாள். [வெருவிலும்] - தெளிவுடையளாய் பந்துக்களுக்கு அஞ்சினபோதோடு. [வீழ்விலும்] - அறிவழிந்து மோஹித்தபோதோடு வாசியற க்ருஷ்ணன் திருவடிகளை விரும்பா நிற்கும். அல்லாதவை அஸ்திரமாய் இவளுக்கு இது ஸ்திரமாய்ச் செல்லாநின்றது. வெருவுகை - அஞ்சுகை. வீழ்கை - மோஹிக்கை.

ஈடு.—எட்டாம்பாட்டில் - 'அத்யந்த துர்த்தசை வர்த்தியாநின்றாலும் இவள் ததேக பரையாயிருக்கும்' என்கிறாள்.

[திருவுடைமன்னரைக்காணில்] - குறைவற்ற ஐஶ்வர்யங்களையுடையரான ராஜாக்களைக் காணில்,ஶ்ரிய:பதியை ஒருபடி காணப்பெற்றேனே யென்னும். நாதமுனிகள், ராஜா ஸாமந்தன்தலையிலே அடியையிட்டு ஆனைக்கழுத்திலே புக்க படியைக் கண்டு, 'ஸர்வேஶ்வரன் ப்ரஹ்மாதிகள்தலையிலே அடியிட்டுப் பெரியதிருவடியை மேற்கொள்ளும்படி இது வாகாதே' என்று மோஹித்தா ரென்று ப்ரஸித்தமிறே; ராஜா ஸபரிகரமாக கங்கைகொண்டசோழபுரத்தேறப் போகச்செய்தே, பெரியமுதலியார் மன்னனார் திருவடிகளிலே ஸேவித்திருக்கச்செய்தே பெண்பிள்ளை வந்து 'நம்அகத்திலே ஒருகுரங்கும் இரண்டுவில்லிகளும் ஒருபெண்ணுமாக வந்து புகுந்தார்கள்' என்றவாறே, 'பெருமாளும் இளையபெருமாளும் பிராட்டியும் ஐந்த்ரவ்யாகரணபண்டிதனும்' என்று புத்திபண்ணிப் பின்தொடர்ந்துபோய், முன்னேபோய், 'போகிறார்கள், போகிறார்கள்' என்னக் கேட்டுக் கீழைவாசலிலே சென்றவாறே, 'இப்படிபோகிறவர்களைக் கண்டிகோளோ?' என்று வாசலிலவர்களைக் கேட்க, அவர்கள் 'கண்டிலோம்' என்ன, அதுவே ஹேதுவாகத் திருநாட்டுக்கு எழுந்தருளினாரிறே. [உருவுடைவண்ணங்கள்காணில்] - நீலம் குவளை காயா உருப்பெறஎழுதினசித்ரம் இவற்றைக் காணில், நிறம்மாத்ரத்தையும் மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கு

---

எட்டாம்பாட்டு - 'திருவுடை' இத்யாதி. "வெருவிலும் வீழ்விலு மோவாக் கண்ணன் கழல்கள் விரும்பும்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'அத்யந்த' இத்யாதி.

'திருவுடை' என்கிற இடத்தில் மதுப்பு பூமாவிலே யென்கிறார் - 'குறைவற்ற' இத்யாதி. கண்டேன் என்னாதே, 'கண்டேனே' என்றதுக்கு பாவம்-'ஒருபடி காணப்பெற்றேனே' என்றது. இப்படி ஸத்ருஶதர்ஶநத்தாலே ப்ரமித்தாருண்டோ? என்ன, 'நாதமுனிகள்' இத்யாதி. ஸம்வாதாந்தரம் - 'ராஜா' இத்யாதி. பெரிய முதலியார் - நாதமுனிகள். 'உருவுடைவண்ணங்கள்' என்றது - அழகுடைய நிறத்தையுடைத்தான நீலம் முதலான வஸ்துக்களாதல், உருப்பெற எழுதின சித்ரங்களாதல். இரண்டர்த்தத்தையுங் கூட்டி அருளிச்செய்கிறார் - 'நீலம்குவளை' இத்யாதி. உருப்பெற - அழகுபெற. முந்தின அர்த்தத்தில், வண்ணங்கள் - நிறமுடைய வஸ்துக்கள்; இரண்டாமர்த்தத்தில், வண்ணங்கள் - வர்ணகலாபங்கள். அன்றிக்கே, ஏகார்த்தமாகவுமாம். நீலம் - நீலமணி. குவளை - கருநெய்தல். தேவதாந்தரப்ரதிமைகளைக் கண்டால் த்ருணீகரித்தி

விஷயமான ஸௌலப்யத்தையுங் கோண்டு, குணகுண நிரூபணம்பண்ணுதே எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்தவ னென்று, பசுவினருகே கட்டிவைத்த கன்று துள்ளுமாபோலே ஸஸம்ப்ரமவ்யாபாரத்தைப் பண்ணுநிற்கும். [கருவுடை இத்யாதி] - கல் புதைத்துக்கிடக்கும் ஸ்தாநங்கள் காணில், அவையெல்லாம் பெரியபெருமாள் பள்ளிகோண்டருளுகிற கோயிலே என்னும். இவற்றுக்கு உள்ளீடு ஸர்வேஶ்வரனுகையாலே, இவற்றை 'கரு' என்கிருர். "திசைமுகன்கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட கருமங்களும்" என்கிறபடியே. * (கருவென்று - கர்ப்பத்துக்கும், கர்ப்பாதாரத்துக்கும் பேர். ப்ரதிமையையுடைத்தான, தேவில்கள் - தேவாலயங்களேல்லாம் கண்டால்.) [வெருவிலும்இத்யாதி] - தெளிவுடையளாய் பந்துக்களைக் கண்டு அஞ்சியிருக்கும் போதோடு அறிவழிந்து மோஹித்த ஸமயத்தோடு வாசியற, இடைவிடாதே க்ருஷ்ணன் திருவடிகளை விரும்பாநிற்கும். இது என்றும் ஏகரூபமாயிருக்கும். மாறுடிவருவது மோஹமும் உணர்த்தியும்; ஸ்தாயியாயிருப்பது இதுவே. இத்தால் - பகவத்ப்ராவண்யம் இவர்க்கு ஸத்தாப்ரயுக்தமேன்கை. (அ)

## ஒன்பதாம்பாட்டு.



விரும்பிப்பகவரைக்காணில் வியலிடமுண்டானேயென்னும்
கரும்பெருமேகங்கள்காணில் கண்ணனேன்றேறப்பறக்கும்
பெரும்புலவாநிரைகாணில் பிரானுளனேன்றுபின்சேல்லும்
அரும்பெறல்பேண்ணினைமாயோன் அலற்றியயர்ப்பிக்கின்றுனே.

**ஆ.**—(விரும்பி.) - அபரிமித பகவத்ஜ்ஞாநவிஶிஷ்டராய் அதஏவ பகவத்வ்யதிரிக்த விஷயங்களில் நிரபேக்ஷராயிருப்பாரைக் காணில், ஏவம்வித நைரபேக்ஷ்யம் எம்பெருமானுக்கல்லது கூடாததலால், வியலிடமுண்டானேயென்று ஸாதரமாகச் சொல்லும். கரும்பெரு மேகங்கள் காணில், அடியேன்கண்ணனென்று தன்னுடைய ப்ரீத்யதிஶயமே சிறகாகக் கொண்டு ஏறப்பறக்கும்; தனக்கு எட்டாதொழிந்தவாறே தளரும். பின்னையும் லப்தஸம்ஜ்ஞையாய், அதிஶமக்ரமான பசுநிரை காணில், அடியேன்பிரான்உளனென்று அவற்றின்பின் செல்லும். இப்படி என்னுடைய அரும்பெறற்பெண்ணினை மாயோன் தன்னை அலற்றி யயர்க்கும்படி பண்ணுநின்றுன் என்கிருள்.

**ஒ.**—ஒன்பதாம் பாட்டில், பெறுதற்கரியளான இப்பெண்பிள்ளையை இவ்வளவன்றிக்கே நோவுபடுத்தாநின்றுன் என்கிருள்.

[விரும்பி என்று தொடங்கி] - பகவத்ப்ரவணராய் இதர விஷயங்களில் நிரபேக்ஷராயிருக்கும் பகவான்களைக் காணில் அவர்களை ஆதரித்து அவர்களுடைய நைரபேக்ஷ்யத்தாலே

ருக்குமவராகையாலே 'கல்புதைத்துக்கிடக்கும் ஸ்தாநம்' என்கிருர். தேவதைகளை - 'கரு' என்னலாமோ? என்ன, 'இவற்றுக்கு உள்ளீடு' இத்யாதி. அப்படி அந்தர்யாமியா யிருக்குமோ? என்ன, 'திசைமுகன்' இத்யாதி. உள்ளே பதார்த்தாந்தரத்தை யுடைத்தானதுக்கு - கருவென்று பேர். தேவில் - தேவாலயம். வெருவு - பயமும், தெளிவும். வீழ்வு - கலக்கம். 'ஓவாக்கண்ணன் கழல்கள் விரும்பும்' என்றதுக்கு பாவம் - 'இதுஎன்றும்' இத்யாதி. பலிதம் - 'இத்தால்' இத்யாதி. 'கருவுடை - ப்ரதிமாகர்ப்பத்தை யுடைத்தான' என்று உரையில் ஶப்தார்த்தம். க்ரமேண அந்வய:. (அ)

* . குண்டலிதக்ரந்தம் க்வாசித்க மென்பர்.

ஜகத்தினுடைய ப்ரளயாபத்தைத் தீர்த்து நிர்ப்பரனான எம்பெருமானே! என்னாநிற்கும். கறுத்துப் பெருத்திருக்கும் மேகங்களைக் காணில் எம்பெருமானென்று நினைத்து ஹர்ஷப்ரகர்ஷத்தாலே அங்கே செல்லப் பறப்பாரைப்போலே அலமாராநிற்கும். [பெரும்புலம் என்று தொடங்கி] - ஸமக்ரமாய்த் தர்ஸநீயமான பசுநிரையைக் காணில், 'ஆஸ்ரிதாநுக்ரஹபரனான க்ருஷ்ணனும் உடனே எழுந்தருளுகிறான்' என்று அதன் பின்னே செல்லும். பெறுதற்கரிய பெண்ணினைத் தன்னுடைய ப்ரணயித்வாதி கல்யாண குணங்களைக் காட்டி ப்ரலாபித்து மோஹிக்கும்படியாகப் பண்ணாநின்றான்.

ப.—அநந்தரம், ஆஸ்ரிதர்பக்கல் அவனுடைய உபகாரகத்வத்தை அநுஸந்தித்து, தத்ஸத்ருஸ ஸம்பந்திகளைக் கண்டு வாய்புலற்றி மோஹிக்கும்படி பண்ணினான் என்கிறாள்.

பகவரை - (ஜ்ஞாநாதிகுணபூர்த்தியாலே ஆஸ்ரிதரை ஸ்வாபிமாநாந்தர்க்கதராக்கி ரக்ஷிப்பாராயுள்ள) பகவத்ரூபரான மோக்ஷாஸ்ரமிகளை, காணில் - காணில், விரும்பி - அத்யாதரத்தைப்பண்ணி, வியல் இடம் - விஸ்தீர்ணமான ஜகத்தை, உண்டானே - வயிற்றிலே வைத்து நோக்கின ஸர்வரக்ஷகனே,(இது நிஸ்சிதம்), என்னும் - என்னாநிற்கும்; கரு - கறுத்து, பெரு - பெருத்த, மேகங்கள் - மேகங்களை, காணில் - காணில், கண்ணன்-(ஜ்ஞாநஅஜ்ஞாநவிபாமமறத் தன் வடிவைக்காட்டி உபகரிக்கும்) க்ருஷ்ணன், என்று - என்று, எற - மேலேயெழ, பறக்கும் - பறக்கத் தேடாநிற்கும்; பெரு - அதிப்ரபூதமாய், புலம் - தர்ஸநீயமான, ஆநிரை - பசுத்திரளை, காணில் - கண்டாளாகில், பிரான் - (இவற்றை வயிறு நிறையமேய்த்து ரக்ஷிக்கும்) மஹோபகாரகன், உளன் - கூடவருகிறான், என்று - என்று, பின் - அவற்றின்பின்னே, செல்லும் - போகாநிற்கும்; பெறல் அரும் - பெறுதற்கு அரியளான, பெண்ணினை-இப்பெண்ணை, மாயோன் - (இப்படி உபகாரசேஷ்டிதங்களையுடைய) ஆஸ்சர்யபூதன், அலற்றி - வாய்விட்டலற்றும்படி பண்ணி, அயர்ப்பிக்கின்றான் - (அதுக்குமேலே) மோஹிக்கும்படி பண்ணாநின்றான்.

பகவர் - ஸந்ந்யாஸிகள்.

இ.—ஒன்பதாம் பாட்டில், 'பெறுதற்கரிய இவளைத் தன்னையே வாய்வெருவி மோஹிக்கும்படி பண்ணாநின்றான்' என்கிறாள்.

[விரும்பி இத்யாதி] - ஜ்ஞாநாதிகுணபரிபூர்ணராய் ஸப்தாதி விஷயங்களில் விரக்தரான ஸந்ந்யாஸிகளைக் காணில் க்ருஷ்ணனென்று நினைத்து அவர்களை ஆதரித்து விஸ்மயநீயமான பூமியை ப்ரளயாபத்திலே ரக்ஷித்தவனே என்னும்; ரக்ஷ்யத்தில் ஒன்றும் நோவுபடாமல் நோக்கி நிரபேக்ஷனாயிருக்கும் நைரபேக்ஷ்யஸாம்யமாத்ரத்தாலே சொல்லுகிறாள். [வியலிடம்] - விஸ்மயநீயமான பூமி. [கரும் இத்யாதி] - கறுத்துப்பெருத்த மேகங்களைக் காணில் க்ருஷ்ணனென்று நினைத்துப் பறப்பாரைப்போலே அலமாராநிற்கும். இவளுக்கு மேகதர்ஸநத்திலே சிறகெழும்போலே. ராஜேந்த்ரசோழனிலே திருவாய்க்குலத்தாழ்வார் வயல் பார்த்த வார்த்தை. ஸமக்ரமாய்த் தர்ஸநீயமான பசுநிரையைக் காணில் அநுக்ரஹஸீலனான க்ருஷ்ணனும் உடனே வருகிறானென்று அவற்றின் பின்னே செல்லும். பெறுதற்கரிய பெண்ணினை "ஜேதா தவஸாரா:" என்று தன்னைப் பெறப்பட்டதன்று கிடீர், இவளைப் பெறுகைக்கு நான் பட்டது. [மாயோன்] - ப்ரணயித்வாதி கல்யாண குணங்களைக் காட்டிப் பெற்றாரை உறவறுக்குமவன். "ஸாரவ:கிம்கரிஷ்யதி" என்னக் கடவதிறே. எப்போதும் தன்னையே வாய்வெருவும்படி பண்ணி அவ்வளவிலு மன்றிக்கே மோஹிப்பியாநின்றான்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. பெறுதற்கரிய இவள், தன்னையே வாய்வெருவி மோஹிக்கும்படி பண்ணாநின்றான் என்கிறாள்.

[விரும்பிப் பகவரைக் காணில்] - (பகவரைக்காணில் விரும்பி) - ஜ்ஞாநாதிகுணங்களால் பூர்ணராய் இதரவிஷயங்களில் விரக்தராயிருக்கும் ஸந்யாஸிகளைக் காணில்ஆதரித்து,ப்ரளயாபத்திலே ஜகத்தையடைய வயிற்றிலேவைத்து நோக்கி, ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்தைப் பண்ணுகையாலே வந்த நைரபேக்ஷ்யம் தோற்ற இருக்கிற ஸர்வேஶ்வரனென்னும். வியலிடம் - விஸ்மயநீயமான பூமி. நின்றகுன்றத்தினை நோக்கி "நெடுமாலே" என்று ப்ரமித்தவோபாதி காணும் ஶேஷபூதரை ஶேஷியாகக்கொண்டு ப்ரமிக்கிற இதுவும். [கரும்பெரு மேகம் இத்யாதி] - கறுத்துப்பெருத்து ஶ்ரமஹரமான மேகத்தைக் கண்டவாறே, அவ்வடிவையுடைய க்ருஷ்ணனென்று பறப்பாரைப்போலேயிருக்க ஸம்ப்ரமியாநிற்கும். மேகதர்ஶநத்தில் சிறகெழும்போலேகாணும். மேகத்தைக் கண்டவாறே ஒருபக்ஷபாத முண்டாகக்கடவதிறே. ராஜேந்த்ர சோழனிலே திருவாய்க்குலத்தாழ்வாரென் றொருத்த ருண்டு; அவர் வர்ஷாவிலே 'பயிர்பார்க்க' என்று புறப்பட்டு மேகதர்ஶநத்திலே மோஹித்து விழுந்தார்; இவர்விழுந்தத்தைக் கண்டு நின்ற குடிமகன் ஓடிவந்து அவரையெடுத்துக் கொண்டுவந்து க்ருஹத்திலே விட்டு, 'இவர்ப்ரக்ருதி யறிந்திருந்தும் இந்நாளிலே இவரை வயல்பார்க்கப் புறப்படவிடுவா ருண்டோ?' என்றான். [பெரும் புலம் இத்யாதி] - அளவுபட்டிருக்கையன்றிக்கே பெருத்து தர்ஶநீயமாயிருக்கிற பசுநிரைகளைக் காணில், என்தசையறிந்து வந்து உதவுகைக்காகக் கடைக்கூழையிலே வாராநின்றானென்று,அவற்றுக்குப்பின்பு ஏறப் போகாநிற்கும். அன்றிக்கே, அவற்றின் திரளுக்குள்ளே அவனையும் காணலாமென்று அவற்றின்பின்னே போகாநிற்கு மென்றுமாம். [அரும்பெறல்பெண்ணினை] - "மஹதா தபஸாராம" (மஹதாதபஸாராம) என்று தம்மைப்பெற்றவர்கள் பட்ட வருத்தமல்லகிடீர் நான்

---

ஒன்பதாம்பாட்டு - 'விரும்பி' இத்யாதி. "அரும்பெறற்பெண்ணினை" என்று தொடங்கி மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - 'பெறுதற்கரிய' இத்யாதி.

ஜ்ஞாநஶக்த்யாதி குணபூர்த்தியுள்ள விடத்திலேயிறே - பகவச்சப்தம் வர்த்திப்பது; இனித்தான் "வைராக்ய ஜ்ஞாநாதி விபூதிநா" என்கையாலே, ஹ்பகவச்சப்தம்-வைராக்யத்தையும் அர்த்தாத் சொல்லிற்றுமிறே; இவைகளுள்ளது ஸந்யாஸிகளுக்காகையாலே, பகவச்சப்தத்தாலே-ஸந்யாஸிகளைச் சொல்லுகிறது. பகவரை - பகவான்களை. 'உண்டான்' என்ற பூதநிர்த்தேஶத்துக்கு பாவம் - 'நைரபேக்ஷ்யம் தோற்ற' என்றது. ஶேஷபூதரான ஸந்யாஸிகளை ஶேஷியென்னலாமோ? என்ன, 'நின்றகுன்றத்தினை' இத்யாதி. அதாவது - ஶேஷபூதரை ஶேஷியென்று சொன்னது - அதஸ்மிந்தத்புத்தியாகையாலே, ஐக்யம் வாராது; 'நின்றகுன்றத்தினைநோக்கி' என்றபோது - அசித்துக்கும் ஈஶ்வரனுக்கும் பேதமுண்டாயிருக்கச் செய்தேயும், ஐக்யம் ப்ரமகார்யமானாற்போலே இதுவும் ப்ரமகார்ய மென்றபடி. 'ஶ்ரமஹரமான' என்றது - "மிஹ-ஸேசநே" என்கிற தாதுவிலே மேகஶப்தம் உத்பந்நமாகையாலே. பறக்கும்போது சிறகுவேண்டாவோ?என்ன, 'மேகதர்ஶநத்தில்' இத்யாதி. 'பறக்கும்' என்றதுக்கு ரஸோக்தி—'மேகத்தை' இத்யாதி. மேகத்தைக்கண்டு கண்ணனாக ப்ரமித்ததுக்கு ஸம்வாதம் - 'ராஜேந்த்ர' இத்யாதி. ராஜேந்த்ரசோழன் - ஒருக்ராமவிஶேஷம். குடிமகன் - குடியானவன். அளவுபட்டு - அல்பமாய். 'புலம்' என்றது - புலப்படும தென்றதாய், தர்ஶநீயமான என்றபடி. 'என்தசையறிந்து'-எனக்குத் தன்பக்கல் ப்ரேமமுண்டோ? என்றறிந்து. கடைக்கூழை - எல்லார்க்கும்பின்னே வருகிற திரள். 'பின்செல்லும்' என்றதுக்குஅர்த்தத்வயம்: முந்தினது - முன்னேயிருந்தவள், 'க்ருஷ்ணன் பசுக்களின்பின்னே வாராநின்றான்' என்று பின்னே போகாநிற்கு மென்று. இரண்டாவது 'நடுவேஇருப்பான்' என்று பின்னே போகாநிற்குமென்று. இரண்டாமர்த்தம் - 'உளன்' என்றதுக்குச் சேரும். த்விதீயார்த்தத்திலே, பின் செல்லுகையாவது - அவற்றுடனே செல்லு மென்றபடி. நடுவே செல்லு மென்றபடி. அவர்களைப்பற்றத் தனக்கு வ்யாவ்ருத்தியேது? என்ன, 'அடியிலே' இத்யாதி. 'பாதம்

இவளைப் பெறப் பட்டது; அடியிலே நெடுங்காலமும் தபஸ்ஸுபண்ணியிறே இவளைப்பெற்றது இவள். [மாயோன்] - "சூரவஃகிம்கரிஷ்யந்தி" (சூரவஃகிங்கரிஷ்யந்தி) என்று பெற்றவர்களைக் கைவிடும்படி பண்ண வல்லவன். [அலற்றி அயர்ப்பிக்கின்றான்] - எப்போதும் தன்னையே வாய் வெருவும்படி பண்ணி, அவ்வளவிலுமன்றிக்கே மோஹிக்கும்படி பண்ணாநின்றான். (கூ)

## பத்தாம்பாட்டு.

அயர்க்கும்சுற்றும்பற்றிநோக்கும் அகலவேநீள்நோக்குக்கொள்ளும்
வியர்க்கும்மழைக்கண்துளும்ப வெவ்வுயிர்கொள்ளும்மெய்சோரும்
பெயர்த்தும்கண்ணாஎன்றுபேசும் பெருமானேவாவென்றுகூவும்
மயற்பெருங்காதலென்பேதைக்கு என்செய்கேன்வல்வினையேனே.

*ஆ.*—(அயர்க்கும்.) வ்யஸநாதிஶயத்தாலே அறிவழிந்து கிடக்கும். பின்னையும், நெடும்போது கூட ப்ரபுத்தையாய், தன்னருகேவந்தானாகக் கருதிச் சுற்றும் பற்றிநோக்கி, அருகு காணாதொழிந்தவாறே அகலவே நீள்நோக்குக்கொள்ளும். தூரத்திலும் காணாதொழிந்தவாறே நீராய்உருகும். மழைக்கண் துளும்ப வெவ்வுயிர் கொள்ளும். மெய்சோரும். பின்னையும் கண்ணாவென்று பேசும். பெருமானே வாராயென்று கூப்பிட்டழைக்கும். இப்படி காதல் மையலேறின என்பெண்பேதைக்கு என்செய்கேன் பாவியேன்? என்று அலற்றுகிறாள்.

ஒ.—பத்தாம்பாட்டில், ஸ்மாரகபதார்த்தாநுஸந்தாந க்ஷமமல்லாதபடியான வ்யஸநாதிஶயத்தாலே தன்பெண்பிள்ளைக்குப் பிறந்த விக்ருதிகளைச் சொல்லி 'நான் என்செய்வேன்?' என்கிறாள்

[அயர்க்கும் என்று தொடங்கி.] - சிந்தாவ்யாபாரமின்றியே யிருக்கும். அதுக்கு மேலே காற்றடிக்கிலும் அவன் வந்தானாகக்கொண்டு சுற்றும் ஸாதரமாக நோக்கும்; அங்குக் காணாமையாலே ப்ரதமபரிஸ்பந்தம் தொடங்கிக் காணலாம்படி பெரும்பரப்பாகக்கொண்டு அவன் இருக்க ஸம்பாவனையுள்ள தேஶத்தளவும் தூரநோக்கும். அங்குக்காணாவிட்டவாறே 'நான் இப்படி நோவுபடாநிற்க, வாராதொழிவதே!' என்று குபிதையாய் வேர்க்கும். கோபமும் ஆறி ஶோகத்தாலே அழும். அதுவும் போய்ச் செயலற்று மூச்செறியும். பின்னையும் மிகவும் மயங்கிப் பரவஶகாத்ரையாம். பின்னையும் உணர்ந்து தன் ஆற்றாமையாலே 'க்ருஷ்ணா!' என்று சொல்லும். இவ்வழியேபிறந்த அநுஸந்தாந ப்ரகர்ஷத்தாலே யுண்டான உருவெளிப்பாட்டாலே அவன் வந்தானாகக்கொண்டு அவனை ஸம்போதித்து 'வரலாகாதோ?' என்று அழைக்கும். இப்படி தான் மதிகெடுகைக்கு ஈடான அதிஸ்நேஹத்தைப் பண்ணி ஹிதம் சொன்னால் கேட்கும் பருவமின்றிக்கே யிருக்கிற என்னுடைய பாலைக்கு மஹாபாபியான நான் செய்வதொன்றும் காண்கிறிலேன்.

---

பரவிப்பெற்ற' என்றத்தைப் பற்ற, 'அடியிலே' என்றது. இது-சாடு. ஆதியிலே, திருவடிகளிலே யென்றும். "ஸஹதா தபஸா ராம ஸஹதா சாபி கர்மணா । ராஜ்ஞா தஶரதேநாஸி லப்தோ அம்ருதமிவாமரை:" இத்யாரண்யகாண்டே ஷட்ஷஷ்டிதமே ராமம்ப்ரதி லக்ஷ்மண:. "ஶூரா: ஶௌர்யேண ஸம்ஸக்தா: கிம் கரிஷ்யந்தி ந: க்ஷமே । ஶூரவ: கிங்கரிஷ்யந்தி ஜ்யாநாம் விரஹாம்தரே" இதி பஞ்சமேம்ஶே பரஸ்பரம் கோபிகா:. க்ரமேண அந்வய:. (க)

ப.—அநந்தரம், அவனுடைய ஸௌலப்யாதிஶயத்தை அநுஸந்தித்து ஸத்ருஶ ஸம்பந்திவஸ்துக்களையும் காண்கைக்கு யோக்யதையில்லாத ஆர்த்தி விஞ்சினபடியைச் சொல்லி 'இவளுக்கு என்செய்வேன்?' என்கிறாள்.

அயர்க்கும் - (துல்யஸம்பந்திவஸ்துக்களையும் காணவொண்ணாதபடி) மோஹியா நிற்கும்;(உணர்த்திவந்தவாறே, 'இவ்வவஸ்தையில் அவன் வாராதொழியான்' என்று நினைத்து), சுற்றும் - சுற்றும், பற்றி நோக்கும் - பலகாலும் பாராநிற்கும்; (அவ்வளவிலும் காணவிட்டவாறே தூரத்திலேநிற்கிறானாக நினைத்து), அகல - (பார்த்தகண்ணை) ஓட்டி, நீள்நோக்குக் கொள்ளும் - நெடும்போது பாராநிற்கும்; வியர்க்கும் - (அங்கும் காணாமையாலே ப்ரணயரோஷத்தாலே)வேர்த்து நீராகாநிற்கும்; மழை-மழைபோலே, (அருவிச்சொரிகிற கண்ணீரானது கோபாக்நியாலே சுவறி அடியற்று), கண்-கண்ணளவிலே, துளும்ப - துளும்பும்படி, வெம் - அவ்வெம்மைதோன்ற, உயிர்கொள்ளும் - நெடுமூச்செறியும்; மெய்-(அந்தப்பரிதாபத்தாலே) ஶரீரம் தரிக்கமாட்டாமல், சோரும் - சோரும்; பெயர்த்தும் - பின்னையும், (ஆசை பேசாதிருக்கவொட்டாமையாலே), கண்ணா - (பெண்களுக்கு ஸர்வகாலஸுலபனான) க்ருஷ்ணனே! என்று - என்று, பேசும் - ஸம்போதித்துச் சொல்லாநிற்கும்; (இப்பேர் கேட்டவாறே வந்தானாக நினைத்து), பெருமானே - (என்நினைவளவன்றியே அதிஶயிதமாக உபகரிக்கும் என்னுடைய) நாதனே! வா - வரலாகாதோ? என்று - என்று, கூவும் - அழையாநிற்கும்; மயல் - (இப்படி) பிச்சேறும்படி, பெரு காதல் - பெரிய காதலையுடைய, என் பேதைக்கு - என் சொற்கேளாப் பெண்ணுக்கு, வல்வினையேன்- (இவளை இப்படிகாண்கைக்கு அடியான) அதிப்ரபலபாபத்தை யுடைய நான், என்செய்கேன் - எத்தைச்செய்வேன்?—வாராதவனை வரப்பண்ணுவேனோ? இதுகண்டு பொறுத்திருப்பேனோ? என்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், ஸத்ருஶபதார்த்தங்களை அநுஸந்திக்க க்ஷமமல்லாத வ்யஸநாதிஶயத்தாலே இவளுக்குப் பிறந்த விக்ருதிகளைச் சொல்லி, 'நான் என்செய்வேன்?' என்கிறாள்.

[அயர்க்கும்] - நின்றாற்போலே நில்லா, சிந்தாவ்யாபாரம் ஒவி இவள் மோஹியா நின்றாள். [சுற்றும் பற்றி நோக்கும்] - பின்னையும் அறிவுகுடிபுகுந்து தன்னுடைய தஶையே ஹேதுவாக ஸாதரமாகச் சுற்றும் பாரா நின்றாள். பின்னையும் காணாமையாலே, ப்ரதமபரிஸ்பந்தமே தொடங்கிக் காணலாம்படி அகலவிட்டு அவன் இருக்க ஸம்பாவனையுள்ள தேஶத்தளவும் தூரநோக்காநின்றாள். [வியர்க்கும்] - அங்குக் காணவிட்டவாறே 'இத்தஶையில் வாராதொழிவதே!' என்று குபிதையாய் வியராநின்றாள். விரஹத்தில் ஸ்வேதம் கோபத்தாலே யிறே. [மழைக்கண் துளும்ப] - கோபம் ஶோகமாய்ப் பரிணமித்து அதுதான் ஸ்வேதமாய்ப் பரிணமித்து அது கண்ணீராய் ப்ரவஹியாநின்றது. அதுவும் போய்ச் செயலறுகையாலே நெடுமூச்செறியாநிற்கும். [மெய்சோரும்] - அகவாயிலுள்ளது நேராகக் கழிந்தவாறே பரவஶகாத்ரை யாகாநின்றாள். அறமுடியவொட்டாதே ஆஶாபந்தம்; பின்னும் உணர்ந்து 'தன்னாற்றாமையே செப்பேடாக வரும்' என்று கொண்டு ஸம்போதியாநின்றாள். அந்தப்பேர்வழியே பிறந்த அநுஸந்தாநப்ரகர்ஷத்தால் வந்த உருவெளிப்பாட்டாலே வந்தானாகக்கொண்டு ஸம்போதித்து 'வரலாகாதோ!' என்னாநின்றாள். [மயல்பெருங்காதல்] - மதிகெடுகைக்கு உடலான அதிப்ரேமத்தை யுடையவள். ஆஶாலேஶமுடையார்க்கு அநுபவிக்கலாம் விலக்ஷணவிஷயங்கிடீர், இவளுக்கு விபரீதபலமாயிற்று. இவளுடைய அதிமாத்ரப்ரேமம் பேற்றுக்குஉடலாகை யன்றிக்கே மயலுக்கு உறுப்பாவதே! [என்பேதைக்கு] - 'இவ்வதிமாத்ரப்ரேமம் ஆகாது'

என்றால், கேட்கும் பருவமன்று. [என்செய்கேன்] - இவளை மோஹியாமற் பண்ணவோ? அவனை வரப்பண்ணவோ? நான் இத்தைப் பொறுத்திருக்கவோ? [வல்வினையேனே] - இவளை இப்படி காணும்படி மஹாபாபத்தைப் பண்ணினேன்.

ஈடு.—பத்தாம்பாட்டு. ஸத்ருஶபதார்த்தங்களை அநுஸந்திக்க க்ஷமமல்லாத வ்யஸநாதிஶயத்தாலே இவளுக்குப் பிறந்த விக்ருதிகளைச் சொல்லி, நான் என்செய்வேன்? என்கிறாள்.

[அயர்க்கும்] - நின்றாற்போலே நில்லா, சிந்தாவ்யாபாரமற்று மோஹிக்கும். [சுற்றும் பற்றிநோக்கும்] - பின்னையும் அறிவுகுடிபுகுரா, தன்னுபத்தே செப்பேடாக அவன்வரவை அத்யவஸித்து வந்து அருகேநின்றானாக ஸாதரமாகச் சுற்றும் பாராநிற்கும். அங்குக் காணாமையாலே, 'ஸர்வதா இவ்வளவில் புறப்படாதொழியான்' என்று ப்ரதமபரிஸ்பந்தந் தொடங்கிக் காண்கைக்காகப் பரக்கக்கொண்டு பரமபதத்தளவும் செல்லப் பாராநிற்கும். அங்குக் காணாமையாலே, 'என்னளவுஇதுவாயிருக்க, வாராதொழிவதே!' என்று நொந்து, [வியர்க்கும்] - இளைப்பாலே வேராநிற்கும். [மழைஇத்யாதி] - ஸ்வேதமாய்ப் புறப்பட்டுப் புறப்படாதது கண்ணீராய்ப் புறப்படும்; கண்ணீராய்ப் புறப்படாதது நெடுமூச்சாய்ப் புறப்படும். மழைபோலே அருவிச்சொரிகிற கண்ணநீரானது கோபாக்நியாலே சுவறிஅடியற்றுக் கண்ணளவிலே துளும்பும்படி அவ்வெம்மை தோன்ற நெடுமூச்செறியும். [மெய்சோரும்] - அகவாயிலுள்ளது நேராகப்போனவாறே பரவஶகாத்ரையாம். இவள்படியே இப்படி துவளுவது! அறமுடியவொட்டாதே ஆஶாபந்தம்! [பெயர்த்தும் கண்ணாவென்றுபேசும்] - திரியவும் க்ருஷ்ணனேயென்று ஸம்போதித்து, அந்தத்திருநாமத்தாலே பிறந்த அநுஸந்தாநப்ரகர்ஷத்தாலே வந்த உருவெளிப்பாட்டாலே வந்தானாகக் கொண்டு. [பெருமானே வாவென்று கூவும்] - பின்னையும் 'உடையவன் உடைமையை இழக்கவிடுமோ? நாம் படுவது காண மறைய நின்றானத்தனை' என்று வாவென்னும். [மயல்இத்யாதி] - மயலைப்பண்ணக்கடவதான பெரியகாதலையுடைய என்பாலைக்கு. [என்செய்கேன்] - இவள் மோஹியாதபடி பண்ணவோ? அவனை வரப்பண்ணவோ? நான் இத்தைப் பொறுத்திருக்கவோ? [வல்வினையேனே] - இவளை இப்படிகாணும்படி மஹாபாபத்தைப்பண்ணினேன். ஆழ்வான்திருநயனங்கள் நோவுபட்ட

---

பத்தாம்பாட்டு - 'அயர்க்கும்' இத்யாதி. பாட்டெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - ஸத்ருஶ இத்யாதி.

நின்றாற்போலே நில்லா - நிற்கச்செய்தே இத்யர்த்தஃ. மோஹித்தவள் சுற்றும் பார்க்கைக்கு ஹேது வேது? என்ன, 'பின்னையும்' இத்யாதி. அறிவுகுடி புகுரா-ஜ்ஞாநம் வந்தவாறே. செப்பேடு - தாம்ரஶாஸநம். பற்றிநோக்கும் - ஸாதரமாக நோக்கும். 'அகலவே நீள்நோக்குக் கொள்ளும்' என்றதுக்கு அர்த்தம் - 'அங்குக் காணாமையாலே' இத்யாதி. அகலவே நீள்நோக்குக்கொள்ளும் - பரக்க நீட்சியாகப்பார்க்கு மித்யர்த்தஃ. வியர்க்கை - வேர்க்கை; ஸ்வேதிக்கை யென்றபடி. 'மழைக்கண்துளும்ப' என்றதுக்குத் தாத்பர்யத்வயம்: முந்தினது - கண் மழைபோலே துளிக்க வென்று; இரண்டாவது-மழைபோலே குளிர்ந்த கண் துளிக்க வென்று. ஸம்பிவ்யாஹாரதாத்பர்யம் - 'ஸ்வேதமாய்' இத்யாதி. 'மழைக்கண்துளும்ப - வெவ்வுயிர்கொள்ளும்' என்ற சேர்த்திக்கு பாவம் - 'கண்ணீராய்' இத்யாதி. துளும்புவானென்? என்ன, 'கோப' இத்யாதி நேராக-யாவத்தும். தாயாருடைய ஈடுபாடு - 'இவள்படியே' இத்யாதி. படி ஶரீரமும், ப்ரகாரமும். முடிந்து பிழைக்கவொண்ணாதோ? என்ன, 'அறமுடிய' இத்யாதி. பெயர்த்தும் - திரியவும்; புநஶ்சேத்யர்த்தஃ. உருவெளிப்பாடு - ஜ்ஞாநவைஶத்யம். 'பெருமானே வா' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்: உருவெளிப்பாட்டாலே வந்தானாகக்கொண்டு என்றது ஒன்று, இரண்டாவது - மறையநின்றானென்று. இத்தை அருளிச்செய்கிறார் - 'பின்னையும் உடையவன்' இத்யாதி. முந்தின தாத்பர்யம் - பாவநாப்ரகர்ஷத்தாலே முன்னேதோன்றுகையாலே வாவென்று அழைக்கிறாளென்றபடி; இரண்டாவது - இவ்வவஸ்தையிலே, உடையவன் நம்மைவிட்டுப்போகான், அண்டையிலே மறைய நிற்கிறானென்று நினைத்து வாவென்று அழைக்கிறாளென்றபடி.

பின்பு எம்பெருமானுர் திருவுள்ளம் நோவுபட்டாற்போலேகாணும், திருத்தாயார்திருவுள்ளமும் படுகிறது. (௧௦)

## பதிஞராம் பாட்டு.

வல்வினைதீர்க்குங்கண்ணனை வண்குருகூர்ச்சடகோபன்
சொல்வினையாற்சொன்னபாடல் ஆயிரத்துள் இவைபத்தும்
நல்வினையென்றுகற்பார்கள்* நலனிடைவைகுந்தம்நண்ணித்
தொல்வினைதீரஎல்லாரும் தொழுதெழவீற்றிருப்பாரே.

**ஆ.**—(வல்வினைதீர்க்கும்) ஆஶ்ரிதஜந ஸமஸ்த து:காபநோதந ஸ்வபாவனும் ஆஶ்ரித ஸுலபனுமிருந்த எம்பெருமானைச் சொல்வினையாற் சொன்ன பாடல் ஆயிரத்துள் இவைபத்தும் அநந்யப்ரயோஜநராய்க் கொண்டு கற்பார்கள் நலனுடைவைகுந்தம் நண்ணி எல்லாரும் தொழுதெழ வீற்றிருப்பார் என்கிறார்.

ஓ.—நிகமத்தில் இத்திருவாய்மொழிகற்பார் ஸம்ஸாரதுரிதம்நீங்கி பகவத்விஶ்லேஷகந்தமில்லாத திருநாட்டிலே எல்லாரும் ஶிரஸாவஹிக்கும்படி பெருவீறோடே யிருப்பார் என்கிறார்

[வல்வினை என்று தொடங்கி.] - ஆஶ்ரிதருடைய து:காபநோதந ஸ்வபாவனை க்ருஷ்ணனை ஆழ்வார் குணபலாத்காரத்தாலே அருளிச்செய்த ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி ஸ்நேஹமில்லையேயாகிலும் நன்று என்றாகிலும் கற்பார்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி அப்யஸித்தவர்கள் நித்யஸூரிகளாதரிக்கும்படியாக ஸ்வஶேஷத்வ ஸாம்ராஜ்ய ப்ரதிஷ்டிதராவர்கள் என்று பலத்தை அருளிச்செய்கிறார்.

வல் - ஆஶ்ரிதர் தன்னை ஸம்ஶ்லேஷிக்கைக்கு விலக்கான, வினை - ஸகலபாபங்களையும், தீர்க்கும் - (“ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி” என்று) போக்கும் ஸ்வபாவனை, கண்ணனை - க்ருஷ்ணனை, வண் - ஸர்வஸம்பத் ஸம்ருத்தமான, குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல்வினையால் - வாசிகஶேஷவ்ருத்திரூபத்தாலே, சொன்ன - அருளிச்செய்த, பாடல் - கானரூபமான பாட்டுக்கள், ஆயிரத்துள்-ஆயிரத்துள், இவைபத்தும் - இவைபத்தையும், நல்வினை - விலக்ஷணவ்ருத்திவிசேஷம், என்று - என்று, கற்பார்கள் - கற்குமவர்கள், நலன் - பகவதநுபவாநந்தத்தை, உடை - உடைத்தான, வைகுந்தம் - பரமபதத்தை, நண்ணி - கிட்டி, தொல் - அநாதிஸித்தமான, வினை - அவித்யாதிதோஷங்கள், தீர - மறுவலிடாதபடி, எல்லாரும் - அங்குள்ள ஸூரிகளெல்லாரும், தொழுது - (தங்களுடைய ஶேஷத்வம் தோன்றும்படி) தாழ்ந்து ஆதரித்து, எழ-(ஸம்ப்ரமத்தாலே) பெரியகிளர்த்தியையுடையராம்படியாக, வீற்று இருப்பார்-(தங்கள் ஶேஷத்வஸாம்ராஜ்யத்தாலுள்ள) வேறுபாடுதோன்ற இருக்கப்பெறுவார்கள்.

இது - அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

---

மயலை - பிச்சை. ‘என்செய்கேன்’ என்ற பதத்துக்கு ஸம்வாதம் - ‘ஆழ்வான்’ இத்யாதி. ‘என்செய்கேன்’ என்று திருத்தாயார் திருவுள்ளமும் படுகிறது என்றபடி. க்ரமேண அந்வய:. (௧௦)

* ‘நலனுடை’ என்றும் பாடமுள்ளதாகத் தோன்றுகிறது.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்பார் விஶ்லேஷமில்லாத திருநாட்டிலே எல்லாரும் விரும்பி ஶிரஸாவஹிக்கும் மேன்மையோடே இருக்கப்பெறுவர் என்கிறார்.

[வல்வினைதீர்க்கும் கண்ணனை]-பெற்றவர்கள் கைவிட்டால் கைப்பிடித்தார் விடாரே. ஆஶ்ரிதருடைய விஶ்லேஷஹேதுவான மஹாபாபத்தைப் போக்கும்ஸ்வபாவனான க்ருஷ்ணனை. பரமோதாரரான ஆழ்வார். [சொல்வினையால் சொன்ன பாடல்] - சொல்லியல்லது நிற்கவொண்ணாத பக்திபாரவஶ்யத்தாலே என்னுதல், பகவத்குணபலாத்காரத்தாலே என்னுதல், சொல்தொழிலாலே என்னுதல்; அதாகிறது - வாசிகமான அடிமை. [நல்வினையென்று கற்பார்கள்] - இவருடைய ப்ரேமபாரவஶ்யமில்லையேயாகிலும் விலக்ஷணக்ருத்யமென்று கற்குமவர்கள். [நலனுடை வைகுந்தம் நண்ணி] - விஶ்லேஷகந்தமில்லாத பரமபதத்தை லபித்து, ஶத்ருஶ பதார்த்தங்களைக் கண்டு பிச்சேறவேண்டாதே பகவதநுபவமே யாத்ரையாயிருக்கும் நித்ய ஸூரிகள்நடுவே சென்று. [தொல்வினை தீர] - அநாதியான அவித்யாதிகள் நீங்கி. [எல்லாரும் தொழுது எழ] - அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளும் தொழுது ஆதரிக்க. "பதியினில் பாங்கினில் பாதங்கள்கழுவினர்" என்கிறபடியே அவர்களும் அநுவர்த்தித்து ஆதரிக்கும்படி யாவர்கள். [வீற்றிருப்பாரே] - அவன் ஶேஷித்வத்துக்கு முடிசூடியிருக்குமாபோலே இவர்களும் ஶேஷத்வஸாம்ராஜ்யத்துக்கு முடிசூடியிருக்கப்பெறுவார்கள். "ஸஸ்வராட் பவதி" என்னக்கடவதிறே.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றார், ஸம்ஸாரதுரிதமும் போய் பகவத் விஶ்லேஷகந்தமில்லாத திருநாட்டிலே எல்லாரும் ஶிரஸாவஹிக்கும் மேன்மையோடே இருக்கப் பெறுவர் என்கிறார்.

[வல்வினைதீர்க்கும்கண்ணனை] - பெற்றவர்கள் கைவிட்டால் பிடித்தவர்கள் கை விடார்களே. ஆஶ்ரிதருடைய விஶ்லேஷஹேதுவான மஹாபாபத்தைப் போக்கும் ஸ்வபாவனான க்ருஷ்ணனை. [வண்குருகூர்ச்சடகோபன்] - பரமோதாரரான ஆழ்வார். இன்று நாமுங்கூட இருந்து பகவத்குணாநுஸந்தாநம்பண்ணும்படி பண்ணின ஔதார்யமிறே. [சொல்வினையால் சொன்னபாடல்] - சொல்லியல்லது நிற்கவொண்ணாத பக்திபாரவஶ்யத்தாலே யென்னுதல், பகவத் குணபலாத்காரத்தாலே யென்னுதல், சொற்றொழிலாலே யென்னுதல்; அதாவது - வாசிகமான அடிமை. [ஆயிரத்துள்ளிவைபத்தும்] -ஆயிரம் திருவாய்மொழியிலும், இவர்ஸத்ருஶபதார்த்தங்களைக் கண்டு அவனாகப்பிச்சேறின இத்திருவாய்மொழி. இப்படி பிச்சேறினஇது எல்லார்க்கும் கூடவே தோன்றன்றிறே; ஆனபின்பு, [நல்வினையென்றுகற்பார்கள்] - இது பாவநமென்றாகிலும் அப்யஸிக்க வல்லவர்கள். இது விலக்ஷணக்ருத்யமென்று கற்குமவர்க ளென்றுமாம். [நலனிடைவைதந்தம்

---

நிகமம் - 'வல்வினை' இத்யாதி. அவதாரிகைக்கு - உத்தரார்த்தத்திலே நோக்கு

'என்செய்கேன்' என்று கைவாங்கின வநந்தரம், 'வல்வினைதீர்க்குங் கண்ணனை' என்றதுக்கு பாவம் - 'பெற்றவர்கள்' இத்யாதி. ஔதார்யமேது? என்ன, 'இன்றுநாமும்' இத்யாதி. 'வினை' என்றதுக்கு மூன்று அர்த்தம் : பக்தியாதல், பகவத்குணமாதல், வினையென்று - வ்யாபாரமாய், சொற்றொழிலாதல். முந்தினஅர்த்தத்தில், வினையென்று - கர்மஸாத்யையான பக்தியை லக்ஷிக்கிறது ; இரண்டாமர்த்தத்தில், சேஷ்டிதங்களாலே குணம் ப்ரகாசிக்க வேண்டுகையாலே, வினையென்று - குணங்களைச் சொல்லுகிறது ; மூன்றாவது - ஸ்பஷ்டம். பாவநம் - உபாயம். போக்யதா புத்தியில்லையேயாகிலும் பாவநமென்றாகிலும் அப்யஸிக்க வல்லவர்க ளென்றபடி. நல்வினை - ஸுக்ருதம். இரண்டாமர்த்தத்தில், நல்லவர்கள் வினையென்றாய், விலக்ஷணக்ருத்யம் என்றபடி. விலக்ஷணக்ருத்யம் - போக்யம். நலனிடை - நன்மையினிடத்திலேயான·

நண்ணி] - விஶ்லேஷகந்தமில்லாத பரமபதத்தைக் கிட்டி. [தோல்வினைதீர] - அநாதியாய்வருகிற அவித்யாதிகள் தீர்ந்து. [எல்லாரும்தொழுதெழ] - அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளும் தொழுதுஆதரிக்க. பணியாஅமரருங்கூட, "பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்" என்கிறபடியே, அவர்கள் அநுவர்த்தித்துஆதரிக்கும்படி யாவர்கள். "தொழுதெழென்மனனே" என்று - அநாதிகாலம் "ஜுஸந்நேவ" (அஸந்நேவ) என்னும்படி போந்தவர் அவனைத்தொழுது உஜ்ஜீவித்தாற்போலேகாணும், இவர்பாடின திருவாய்மொழியைக் கற்றவர்களைத் தொழுது நித்யஸூரிகள் உஜ்ஜீவிக்கும்படி. [வீற்றிருப்பாரே] - அவன் ஶேஷித்வத்துக்கு முடிசூடி இருக்குமாபோலே, இவர்களும் ஶேஷத்வஸாம்ராஜ்யத்துக்கு முடிசூடியிருக்கப்பெறுவர்கள். "ஸஸ்வராட்பவதி" (ஸஸ்வராட்பவதி) என்னக்கடவதிறே. வீற்றென்பது - வேறுபாடு. (கக)

---

நன்மையாவதேது? என்ன, 'விஶ்லேஷ' இத்யாதி. 'நலனுடை' என்று பாடமானபோது - நன்மையையுடைய என்றபடி. தீர - தீர்ந்து. 'தீரப்பெற்று' என்று அத்யாஹார்யமாதல். நித்யஸூரிகள் பணியா அமரான்றோ? அவர்கள் தொழுவார்களோ? என்ன, 'பணியாவமரர்' இத்யாதி. 'தொழுதெழ' என்றதுக்கு ஸாவம் - 'தொழுதெழு' இத்யாதி. 'வீற்றிருப்பார்' என்று - முழுச்சொல்லாய், அத்தாலே - முடிசூடி யிருக்கை யென்று அர்த்தம் - 'அவன் ஶேஷித்வத்துக்கு' இத்யாதி. ஸ்வராட் - ஸ்வதந்த்ர꞉. அகர்மவஶ்ய꞉. அர்த்தாந்தரம் - 'வீற்றென்பது வேறுபாடு' என்று. அதாவது - இதரரில் உத்க்ருஷ்டராக வேறுபட்டிருப்பர்களென்றபடி. பலிதார்த்தம் ஒன்று. க்ரமேண அந்வய꞉. (கக)

---

த்ராவிடோபநிஷத்ஸங்கதி — [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி — [illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி**

மண்ணுலகில்முன்கலந்துமால்பிரிகையால்மாறன்
பெண்ணிலைமையாய்க்காதல்பித்தேறி யெண்ணிடில்முன்
போலிமுதலானபொருளையவனாய்நினைந்து
மேல்விழுந்தான்மையல்தனின்வீறு.

ஆழ்வார் திருவடிகளே சரணம். எம்பெருமானார் திருவடிகளேசரணம், சீயர் திருவடிகளே சரணம்.

## ஐந்தாந்திருவாய்மொழி - வீற்றிருந்து : ப்ரவேஶம்.



ஆ.—(வீற்றிருந்து.) ஶ்ரீவைகுண்ட நிலயனாய் அநந்தபோகிநி ஶ்ரியாஸஹாஸீநனாய் ஶேஷஶேஷாஶநவைநதேய ப்ரப்ருத்யபரிமித பரிஜநபரிவ்ருதனாயிருந்த எம்பெருமானை அவனுடைய நிரவதிக காருண்யத்தாலே கண்களாலே கண்டு, கைகளாரத்தொழுது, வாயாலே திருவாய்மொழி பாடப்பெற்ற எனக்கு இனியென்ன குறையுண்டு? என்கிறார்.

ஒ.—அஞ்சாந்திருவாய்மொழியில், எம்பெருமான் ஆழ்வாரோடு விஶ்லேஷிக்கையாலே அத்யந்தம் அவஸந்நரான ஆழ்வாருக்குத் தன்னைப்பிரிகையாலே அக்ஷணத்திலே தன்னைப் பூர்ணமாகப் புஜிப்பிக்கைக்கு ஈடான பக்த்யாரோக்யம் பிறந்தபடியைக் கண்டு; ஶ்ருதீதிஹாஸாதிகளுக்குத் தாத்பர்ய பூமியாய் ப்ரஹ்மாதிகளாலே அறியமுடியாதே ஶாஸ்த்ரபாஶ்ரயப்ரகரணங்களிற் சொல்லுகிறபடிகளாலே எப்போதும் த்யாநம் பண்ணப்படுவானுமாய்த் தனக்கே அஸாதாரணமான ஐஶ்வர்யத்தை யுடையனாய் ஶ்ரீவைகுண்டதிவ்யலோகத்திலே அயோத்யை என்றும், அபராஜிதை என்றும் ஶ்ருதிகளிற் பேசப்படுகிற திருநகரியிலே ஆநந்தமயமான திவ்யாஸ்தாநத்திலே திவ்யபர்யங்கத்திலே ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் ஸர்வபூஷண பூஷிதனாய் ஸர்வாயுதோபேதனாய் அயர்வறுமமரர்கள் நித்யஸேவை பண்ணப் பெரிய பிராட்டியாரோடு கூட வீற்றிருந்தருளி அவ்விருப்பிலே உபயவிபூதியையும் நடத்துவதும் செய்து ப்ரணதஜந பரித்ராணார்த்தமாகத் தேவமநுஷ்யாதிரூபேண அவதீர்ணனாய் அகிலஜநமநோநயநஹாரி திவ்ய சேஷ்டிதவிஶிஷ்டனாய் ஆத்மேஶ்வரனாய் ஆத்மாவுக்கு ஶரண்யமாய் ஆத்மாவுக்கு நிரதிஶய போக்யமாயிருக்கிற தன்னைத் தன்னுடையக்ருபையாலே ஸாக்ஷாத்கரிப்பிக்க, இவரும் வந்தந ஸ்தோத்ரபூர்வகமாக அடிமைகளையெல்லாம் செய்து தாம் க்ருதக்ருத்யராய் எம்பெருமானைப் பெற்றாரில் உபயவிபூதியிலும் என்னோடு ஒப்பாரில்லை என்று அதிப்ரீதராகிறார்.

ப.—அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ் - ஶத்ருஶமாயும் ஸம்பந்தியாயுமுள்ள வஸ்துக்களுடைய தர்ஶநத்தாலே ப்ரமிக்கும்படி இவர்க்குஉண்டான ஆர்த்த்யதிஶயம் தீருகைக்காக ஸர்வேஶ்வரன் தன்னுடைய நிரதிஶயபோக்யமான ஸ்வரூபரூபகுணங்களையும், மஹிஷீபூஷாயுத பரிஜநாதிரூபமான விபூதிவைலக்ஷண்யத்தையும், மஹோதாரசேஷ்டிதங்களையும் அநுபவிப்பிக்க அநுபவித்து ப்ரீதராய், அவனுடைய அகிலலோக நிர்வாஹகத்வத்தையும், அதுக்கு அடியான லக்ஷ்மீபதித்வத்தையும், உபயஸித்தமான ஆநந்தாதிகுண யோகத்தையும், இக்குணதி போக்தாக்களைக் காத்தூட்டும் வாஹநாயுதவத்தையையும், போகாநுகுணமான ஜ்ஞாநப்ரேமாதி ப்ரதத்வத்தையும், அஸ்கலிதஜ்ஞாநர்க்கு அநுஸந்தேயமான விக்ரஹவைலக்ஷண்யத்தையும், இந்த போக்யதைக்கு ஸர்வாவஸ்தையிலும் ஒத்தாரும் மிக்காரு மில்லாத மேன்மையையும், அதுக்கு உபபாதகமான விபூதித்வயயோகத்தையும், தத்விஷயமான வ்யாப்த்யாதிகளையும், வ்யாப்யரக்ஷணார்த்தமான தர்ஶநீயவ்யாபாரங்களையும் அநுஸந்தித்து, இப்படி பரிபூர்ணனான ஸர்வேஶ்வரனை அநுபவித்துப் பிறந்த ஹர்ஷாதிஶயத்தாலே ஸூரிகளைப்போலே வாய்விட்டுப் புகழ்ந்து, இந்த ளத்தில் தாமரைபோலே இங்கே இந்த அநுபவங் கிடைக்கையாலே எனக்கு ஶத்ருஶருண்டோ? என்று தமக்குப்பிறந்த செருக்கை அருளிச்செய்கிறார்.

இ.—அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ்ஶத்ருஶபதார்த்தங்களையும் ஸம்பந்திபதார்த்தங்களையும் கண்டு பிச்சேறின இவர் விடாயின்மிகுதிதீர உபயவிபூதியோடேகூடத்தன்னைக்காட்டிக் கொடுத்தாலும் பூர்ணாநுபவம்பண்ணுகைக்கு ஈடான பக்த்யாரோக்யம் பிறந்தபடியைக் கண்டு

'அயோத்யை' என்றும், 'அபராஜிதை' என்றும் சொல்லப்படுகிற திவ்யநகரத்தையும் ஆநந்தமயமான திவ்யாஸ்தாநத்தையும் திவ்யபர்யங்கத்தையுமுடைத்தானபரமபதத்திலே, ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய் ஸர்வபூஷணஆயுதபரிஜநோபேதனாய்ப் பெரியபிராட்டியாரோடேகூடி வீற்றிருந்தருளியிருக்கிற இருப்பையும், ஆவது அழிவதான லீலாவிபூதியிலுள்ளாரையும் நித்யஸூரிகள்படியாக்குகைக்காக ஜகத்ஸ்ருஷ்டியைப்பண்ணி, ஸ்ருஷ்டமானஜகத்திலே "தஸ்யைவா நுவ்ருத்ர விபூஜ" என்று முகந்தோற்றாமல் வந்து ரக்ஷிக்குமளவன்றிக்கே தேவமநுஷ்யாதிரூபேண வந்து அவதரித்து நிகிலஜநமநோநயநஹாரியான குணசேஷ்டிதங்களையுடையனாயிருக்கிறபடியையும், ஆக இப்படி உபயவிபூதியுக்தனான தன்படிகளையெல்லாவற்றையும் இவருடைய இழவுகளெல்லாம் தீரும்படி காட்டிக்கொடுக்கக் கண்டு மங்களாஶாஸநம்பண்ணி க்ருதக்ருத்யராய் உபய விபூதியிலும் இவ்விஷயத்தை ஏத்தப்பெற்றாரில் என்னோடொப்பாரில்லையென்று த்ருப்தராகிறார். "நீறு செவ்வேயிடக்காணில் நெடுமாலடியார்" என்று ப்ரமித்தவர்க்கு "தூவியம்புள்ளுடையான், அடலாழியம்மான்" என்று நித்யஸூரிகளைக் காட்டிக்கொடுத்தான்; "செய்யதோர் ஞாயிற்றைக்காட்டிச் சிரீதரன்மூர்த்தியீதென்னும்" என்று பிராட்டியும் தானுமான சேர்த்திக்குப் போலிகண்டு ப்ரமித்தவர்க்கு "மையகண்ணாள் மலர்மேலுறைவாளுறைமார்பினன்" என்று தானும் பிராட்டியுமான சேர்த்தியைக் காட்டிக் கொடுத்தான். "திருவுடைமன்னரைக்காணில்" என்று அல்பைஶ்வர்யம் கண்டு ப்ரமித்தவர்க்கு உபயவிபூதியுக்தனாயிருக்கிற இருப்பைக் காட்டிக்கொடுத்தான். "விரும்பிப்பகவரைக்காணில் வியலிடமுண்டானே யென்னும்" என்று ஆநந்தலேஶமுடையாரைக் கண்டு ப்ரமித்தவர்க்கு "வீவிலின்பம்மிக எல்லை நிகழ்ந்த நம்அச்சுதன்" என்று ஆநந்தமயனாயிருக்கிற இருப்பைக் காட்டிக்கொடுத்தான். "என்செய்கேன்" என்று பிறர்வாயாலே சொன்ன இவரைத் தம்வாயாலே "இனியென்னகுறை யெழுமையும்" என்னப் பண்ணினான். இப்படி இவர்விடாயைக்கண்டு தன்படிகளை யெல்லாம் காட்டிக்கொடுக்கக் கண்டு மங்களாஶாஸநம்பண்ணி த்ருப்தராகிறார்.

ஈடு.—கீழில்திருவாய்மொழியிலே அப்படி விடாய்த்தவர் "இனியென்னகுறையெழுமையுமே" என்னப்பெறுவதே! பொய்ந்நின்ற ஞானம் தொடங்கிக் கீழெல்லாம்-"மண்ணையிருந்து துழாவி" யில் விடாய்க்க க்ருஷிபண்ணினபடி; அப்படி விடாய்க்கப்பண்ணின க்ருஷியின்பலம் சொல்லுகிறது இதில். பேற்றுக்கு இதுக்கு அவ்வருகு சொல்லலாவது இனியொன்றில்லை. "சூழ்விசும்பணிமுகிலுக்கு அநந்தரம் இத்திருவாய்மொழியாகப் பெற்றதில்லையே" என்று அருளிச்செய்வர் சீயர். பெருமாளும் இளையபெருமாளுமான இருப்பிலே பிராட்டிக்குப் பிரிவுஉண்டாக,

---

"வீற்றிருந்து" ப்ரவேஶே, கீழ் - உக்மஸ்தகமான அப்ரீதியையும், இதில் - உக்மஸ்தகமான ப்ரீதியையும் அநுஸந்தித்து வ்யாக்யாதாவின்ஈடுபாடு-'கீழிற்றிருவாய்மொழியிலே' இத்யாதி. கீழுண்டான ஆர்த்தியொன்றும் தோற்றாதே எப்போதும் ப்ரீதனானேனென்று சொல்லும்படியாவதே! என்று ஆஶ்சர்யப் படுகிறாரென்றபடி. "இனியென்னகுறை" என்று ஈடுபடுகிறதென்? "பொய்ந்நின்றஞானம்" தொடங்கி இவ்வளவும்-ஸம்ஶ்லேஷவிஶ்லேஷமாயன்றோ சென்றது? அவற்றைப்பற்றஇவ்விரண்டுதிருவாய்மொழிகளுக்கும் அதிசயமேது' என்ன, 'பொய்ந்நின்றஞானம்' இத்யாதி. அர்ச்சிராதிமார்க்கம்முதலாகபலம்பெறவேண்டியிருக்க, இத்தையே பலமாகச் சொல்லுகிறதென்? என்ன, 'பேற்றுக்கு' இத்யாதி. அதாவது - அங்குப்போய்ச் செய்யும் அடிமைகளை இங்கேயிருந்தே செய்யும்படி தன்ஸ்வரூபாதிகளை விஶதமாகக்காட்டிக்கொடுத்தானுகையாலே அவ்வருகுசொல்லலாவதில்லை யென்றபடி. 'பேற்றுக்கு இதுக்கு அவ்வருகுசொல்லலாவதில்லை' என்னுமதுக்கு ஸம்வாதம்-'சூழ்விசும்பு' இத்யாதி. அதாவது – இத்திருவாய்மொழியிலுண்டான அநுபவகைங்கர்யங்கள் அர்ச்சிராதிகதிக்கு அநந்தரம் ஸித்திக்குமதாகையாலே, தத்ப்ரதிபாதகமான சூழ்விசும்புக்கு அநந்தரமாகப்பெற்றதில்லை யென்றபடி. கீழில் திருவாய்மொழியோடே ஸங்கதி - 'பெருமாளும்' இத்யாதி. கீழே

மஹாராஜரையும் பரிகரத்தையும் கூட்டிக்கொண்டு சென்று விரோதிவர்க்கத்தைக் கிழங்கெடுத்து அவளோடே கூடினாற்போலே போலிகண்டு இவர் ப்ரமித்த இழவெல்லாம் போம்படி, நித்ய விபூதியையும் லீலாவிபூதியையு முடையனாயிருக்கிற தன்படிகளொன்றும் குறையாதபடி கொண்டு வந்து காட்டிக்கொடுத்து, 'கண்டீரே நாமிருக்கிறபடி? இந்த ஐஶ்வர்யமெல்லாம் ஒன்றாய்த் தலைக் கட்டுவது, நீர் உம்முடைய வாயாலே ஒருசொல்லுச் சொன்னால்காணும்' என்று இவர்திருக்கையிலே தாளத்தைக் கொடுக்க, அவ்விருப்புக்கு மங்களாஶாஸநம்பண்ணு * (உபயவிபூதியிலும் என்னோடொப்பாரில்லையென்று அதிப்ரீதரா) கிறார். "நின்றகுன்றத்தினைநோக்கி" என்று ப்ரமித்ததுக்கு, வானமாமலையான தன்னைக் காட்டிக்கொடுத்தான்; நீறுசெவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றோடினதுக்கு, "தூவியம்புள்ளுடையா னடலாழியம்மான்" என்கிற நித்யஸித்த புருஷர்களைக் காட்டிக்கொடுத்தான்; செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன்மூர்த்தியீதென்றதுக்கு, "மையகண்ணாள் மலர்மேலுறைவா ளுறைமார்பினன்" என்று தானும் பெரிய பிராட்டியாருமாக இருக்கிற இருப்பைக் காட்டிக்கொடுத்தான். "திருவுடைமன்னரைக்காணில் திருமால்" என்றதுக்கு, உபயவிபூதியுக்தனான தன் ஐஶ்வர்யத்தைக் காட்டிக் கொடுத்தான்; பிறர்வாயாலே 'என்செய்கேன்' என்றத்தைத் தவிர்த்து, தம்வாயாலே "என்னகுறையேழுமையும்" என்னப் பண்ணினான்; "விரும்பிப் பகவரைக்காணில் வியலிடமுண்டான்" என்று - ஆநந்தலேஶமுடையாரைக் கண்டு ப்ரமித்தவர்க்கு, "வீவிலின்பமிக வெல்லைநிகழ்ந்த நம்மச்சுதன்" என்று - ஆநந்தமயனாயிருக்கிற இருப்பைக் காட்டிக்கொடுத்தான்.

## முதற்பாட்டு.

வீற்றிருந்துஏழுலகும் தனிக்கோல்செல்லவீவில்சீர்
ஆற்றல்மிக்காளும்அம்மானை வெம்மாபிளந்தான்தன்னைப்
போற்றியென்றேகைகளாரத் தொழுதுசொல்மாலைகள்
ஏற்றநோற்றேற்கு இனியென்னகுறைஎழுமையுமே?

*ஆ.—ஸ்ரீவைகுண்டத்திலே திருவநந்தாழ்வான்மேலே தன்னுடைய ஸர்வலோகாதிராஜ்யமெல்லாம் தோன்றும்படி யிருந்தருளி, ஸ்வஸங்கல்ப ஸஹஸ்ரைகதேஶத்தாலே நிர்*

*விடாய்த்தமைக்கு "[illegible]" இத்யாதியாலே பெருமாளை த்ருஷ்டாந்தமாக்கினாற்போலே விடாய்தீர்ந்தமைக்கும்பெருமாளைத்ருஷ்டாந்தமாக்குகிறார். இச்சேர்த்திக்குவயஸ்யர்கள் கூட இருக்கச்செய்தே பிரிகையும், போலிகண்டு ப்ரமிக்கையும், அநுரூபமான பரிகரத்தைக்கொண்டு பரிஹரிக்கையும் இரண்டிடத்திலு முண்டாகையாலே த்ருஷ்டாந்ததார்ஷ்டாந்திகஸாம்யம். அங்கு அச்சேர்த்திக்குவயஸ்யர்கள் இளையபெருமாள், இங்கு நித்யஸூரிகள். அங்கு ம்ருகத்தின் போலி, இங்கு அவன்போலி. அங்குப் பரிகரம் - மஹாராஜப்ரப்ருதிகள்;இங்கு யாதோ ராகாரத்தைக்கண்டு ப்ரமித்தது, அந்த ஆகாரவிஶிஷ்டவேஷத்தைக் காட்டுகை. அவளோடேகூடி ஹர்ஷித்தாற்போலே இவர்கையிலே தாளத்தைக்கொடுக்க இவரும் ஹர்ஷித்து மங்களாசாஸநம் பண்ணுகிறா ரென்றபடி. "வீற்றிருந்தேழுலகும்" இத்பாதியைக் கடாக்ஷித்து - 'நித்யவிபூதியையும்' இத்யாதி. ஒருசொல்லுச் சொன்னால் காணும் என்றதுக்கு - "சொன்மாலைகளேற்ற" என்றதிலே நோக்கு. 'தாளத்தைக்கொடுக்க' என்றது - 'போற்றி' என்றும், 'இசைமாலைகளேத்தி' என்றும் இத்யாதியைப் பற்ற. "போற்றியென்றே" என்றத்தைப் பற்ற,'மங்களாசாஸநம் பண்ணுகிறார்' என்றது. 'போலிகண்டு இவர் ப்ரமித்த இழவெல்லாம் போம்படி' என்றதின் உபபாதகம் - 'நின்றகுன்றத்தினை' இத்யாதி. வானமாமலையான தன்னை யென்றது - ஸ்வஸூசகநம். பிறர்வாயாலே - திருத்தாயார்பாசுரத்தாலே.*

* குண்டலிதம் பாடாந்தரம் என்பர். இதைச்சேர்த்துக்கொள்ளும்போது 'பண்ணி' என்று அநுஸந்திக்கவேணும்.

வாஹிதஸர்வலோகனாய், நித்யநிர்த்தோஷ நிரவதிக கல்யாணகுணவிஶிஷ்டனாய், இப்படி பரிபூர்ணனாயிருக்கச்செய்தே அநுத்ரிக்த ஸ்வபாவனாய், ஆஶ்ரிதபரித்ராணார்த்தமாக வஸுதேவக்ருஹே அவதீர்ணனாய் ஆஶ்ரிதவிரோதிநிரஸநைகஸ்வபாவனாயிருந்த எம்பெருமானைத் திருப்பல்லாண்டுபாடிக்கொண்டு என்கைகளினுடைய விடாயெல்லாம் தீரும்படி தொழுது, 'திருவாய்மொழிபாடுகைக்கு பாக்யம்பண்ணினேன்; எனக்கு இனி ஒருநாளும் ஒருகுறையில்லை' என்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், ஸர்வேஶ்வரனாய்வைத்து மநுஷ்யஸஜாதீயனாய்வந்து திருவவதாரம் பண்ணியருளி ஆஶ்ரிதஸம்ரக்ஷணம் பண்ணியருளுகிற க்ருஷ்ணனைக் கவிபாடப்பெற்ற எனக்கு ஒருநாளும் ஒருகுறையில்லை என்கிறார்

[வீற்றிருந்து என்று தொடங்கி] - ஸர்வேஶ்வரனை வேறுபாடு தோற்றும்படி இருந்து ஸகலலோகங்களும் தன்னுடைய ஶாஸநம் செல்லும்படி. ஏழென்று லீலாவிபூதிக்கு உபலக்ஷணம். [வீவில்சீராற்றல்மிக்காளுமம்மானை]-ஒருநாளும் அழிவில்லாத நித்யவிபூதியை அநுத்தனாய் ஆளுமவனை; சுத்தஸத்த்வமயமாயும் ரஜஸ்தமோமிஶ்ரமாயுமுள்ள ப்ரக்ருதித்வயமும் இரண்டினுடைய கார்யங்களுமாக நாலும் நித்யஸித்த பத்தமுக்த கோடித்ரயமுமான சேதநர்களுமாக ஏழுலோகம் என்றுமாம். 'வீவில்சீர்' என்று கல்யாணகுணங்களென்றும் சொல்லுவர். [வெம்மா பிளந்தான்தன்னை] - இவ்வவதாரத்தை ஆற்றல் மிக்கு ஆள்கைக்கு உதாஹரணமென்றும், ஆற்றல்மிக்கு ஆளுமவன் இன்னானென்று சொல்லுகிறது என்றும் சொல்லுவர். [போற்றி என்று தொடங்கி] - போற்றியென்று நிரந்தரமாகச் சொல்லாநின்றுகொண்டு, கைகளின்விடாய்களெல்லாம் தீரத் தொழுது நல்லஸ்ரக்குக்கள்போலே ஶிரஸாவஹிக்கும்படியாகத் திருவாய்மொழி பாடுகைக்கு ஈடான பாக்யம் பண்ணின எனக்கு.

ப.—முதற்பாட்டில், ஸமஸ்தலோக நிர்வாஹகனான ஸர்வேஶ்வரனை மங்களாஶாஸநம்பண்ணி ஸ்துதிக்கப்பெற்ற எனக்கு ஸர்வகாலத்திலும் ஒருகுறையில்லை என்கிறார்.

வீற்று - (ஸர்வாதாரத்வ ஸர்வநியந்த்ருத்வ ஸர்வஶேஷித்வ ஸர்வவ்யாபகத்வாதிகளாலே) ஸ்வேதரஸமஸ்தவ்யாவ்ருத்தனாய்க்கொண்டு, இருந்து - (லோகாநாமஸம்பேதார்த்தமாக திவ்யவிபூதியிலே திவ்யபர்யங்கத்திலே) இருந்து, ஏழுலகும் - (வ்யக்தாவ்யக்தகாலரூபமாயும் ஶுத்தஸத்த்வரூபமாயும் சதுர்விதமான அசேதநவர்க்கமும் பத்த முக்த நித்யரூபேண த்ரிவிதமாயுள்ள சேதநவர்க்கமுமாகிற) ஏழுவகைப்பட்ட லோகங்களிலும், தனி-(ஸ்வஸங்கல்பரூபமாய்) அத்விதீயமான, கோல்-செங்கோல், செல்ல-நடக்கும்படி, வீவில்-அப்ரதிஹதமான, சீர் - (ஜ்ஞாநஶக்த்யாத்யஸங்க்யேய) கல்யாணகுணகனாய்க்கொண்டு, ஆற்றல்மிக்கு - (ஸ்வாபாவிகமாகையாலே மதோத்ரேகரஹிதமாய்) நிரவதிகமான ஶாந்தியோகத்தாலே, ஆளும் - (இது ஸாத்ம்யமாம்படி) ஸ்வரூபவைபவத்தையுடையனாய்க்கொண்டுபோருகிற, அம்மானை - ஸர்வஸ்வாமியாய், வெம் - (ரக்ஷணீயவர்க்கத்துக்கு விரோதியாய் "மஹாரௌத்ர:" என்கிறபடியே) வெம்மையே நிரூபகமான, மா - (கேசியாகிற அஸுராவிஷ்டமாயுள்ள)குதிரையை, பிளந்தான் தன்னை -("நிவவாதஶியாமூர்த:" என்னும்படியே இருகூறாய்விழும்படி) வாய்பிளந்த ஸர்வேஶ்வரனை, போற்றி என்றே - போற்றிபோற்றியென்று இப்பெருமைக்கு மங்களாஶாஸநம் பண்ணிக்கொண்டே, கைகள் - ("விண்ணைத்தொழுது") என்ற கைகள், ஆர - வயிறுநிறையும்படி, தொழுது - அஞ்சலிபந்தம்பண்ணி, சொல்-ஶப்தஸந்தர்ப்பரூபமான, மாலைகள்-மாலைகளை, ஏற்ற - (அவன்ஶிரஸாவஹிக்கும்படி) ஸமர்ப்பிக்கைக்கு, நோற்றேற்கு - ("விதிவாய்க்கின்று"

என்கிறபடியே அவனுடைய நிர்ஹேதுக க்ருபாரூபபுண்யத்தை யுடைய எனக்கு, இனி-இனி மேல், எழுமையும் - ("ஸப்த ஸப்த ஸப்த" என்கிறபடியே) ஏழேழுபடிகாலான ஜந்மமுண்டாகிலும், என்ன குறை - என்ன குறையுண்டாம்?

ஶரீரவிமோசந தேஶப்ராப்த்யாதிகளாகிற குறை யுண்டாகா தென்று கருத்து. ஆற்றல் - பொறையும், மிடுக்கும்.

இ.—முதற்பாட்டில், ஸர்வேஶ்வரனுய் வைத்து ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக மநுஷ்ய ஸஜாதீயனுய் வந்து அவதரித்த க்ருஷ்ணனைக் கவிபாடப் பெற்ற எனக்கு ஒருநாளும் ஒரு குறையில்லை என்கிருர்.

[வீற்றிருந்து] - வேறுபாடு தோற்ற இருந்து; ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தவஸ்துக்களுக்கும் ஶேஷியென்று தோற்ற இருக்கை; ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தபதார்த்தங்களையும் ஶேஷமாக வுடையனுகையாலுண்டான ஆநந்தத்தால் வந்த இறுமாப்புத் தோற்ற இருக்கை. சேதநர்க்குப் பரஸ்பரம் பேதமுண்டாகிலும் ஜ்ஞானைகாகாரதையாலும் பகவச்சேஷத்வாகாரதையாலும் ஸாம்யமுண்டு. விபுத்வநியந்த்ருத்வஶேஷித்வாதிகள் இவனுக்கே உள்ளது. [இருந்து] - இப்படி நிர்வஹிப்பது சுற்றும்பயணம்வந்து வன்னியமறுத்தோ? என்னில்,—தான் இருந்த இருப்பிலே தனியாணை செல்லும்படியாயிற்று இருப்பது. [ஏழுலகும்]-உபயவிபூதியையும் சொல்லிற்றுதல், லீலாவிபூதியைச்சொல்லிற்றுதல். உபயவிபூதிபரமானபோது,சதுர்விதப்ரக்ருதியும் த்ரிவிதஆத்மவர்க்கமும்; லீலாவிபூதிபரமானபோது,பாதாளாதிகளும் பூமியும்கூட ஒன்றுய் அந்தரிக்ஷாதிகள் ஆறுமாகக்கடவது. அப்போது 'வீவில்சீர்'—நித்யவிபூதியாகக்கடவது. உபயவிபூதிபரமான போது, கல்யாணகுணமாகக்கடவது. [தனிக்கோல்செல்ல] - தன்னுடைய அத்விதீயமான ஶாஸநம் செல்லும்படி. [வீவில்சீர்] - முடிவில்லாத கல்யாணகுணங்கள். ஒருநாளும் அழிவில்லாத நித்யவிபூதி யென்னவுமாம். [ஆற்றல்மிக்கு ஆளும்] - இப்படி உபயவிபூதியையும் உடையனுயிருந்தால் அணுகவொண்ணுதபடி யிருக்குமோ? என்னில்,—ஒன்றுமில்லாதாரைப்போலே அநுத்ததனுய் ஆளும். "ராமோ ராஜ்யமுபாஸித்வா". "ஜாமெ॒ணா மதாம் க்ஷீம் ஸ்ராவெ॒ வா நுபவஜீ ரதஃ" என்கிறபடியன்றே. ஆற்றல் என்று வலியாய், உபயவிபூதியையும் நிர்வஹிக்க வல்ல ஸாமர்த்யத்தை யுடையவனென்றும் சொல்லுவர். இது, சொல்லிப்போருமதன்று. [அம்மானை] - ஸ்வேதரஸகலபதார்த்தங்களுக்கும் ஶேஷியானவனை; உடையவனுகையாலே ஸாத்மித்திருக்குமிறே. [வெம்மா பிளந்தான் தன்னை] - 'ஆற்றல்மிக்கு ஆளுகிறபடியைச் சொல்லுகிறது' என்று பட்டர். 'ஆற்றல் மிக்கு ஆளுமவன் இன்னுன் என்கிறது' * என்பர் எம்பார். உபயவிபூதியுக்தனுனல் 'ஊஹ பச' என்று நிர்வஹிக்கையன்றிக்கே ஸஜாதீயனுய் வந்து அவதரித்து அவர்கள் பண்ணும் பரிபவங்களைப் பொறுத்து அவர்களுடைய விரோதிவர்க்கத்தைப் போக்கி ரக்ஷிக்குமவனை. ஸ்யமந்தகமணிப்ரப்ருதிகளிலே பரிபவம் ப்ரஸித்தம். "ஊாவஸ்ர [illegible] வாஜெ நஜ்ஜாதீ நாம்வகரொரா ஹம்" என்றும் "ஐய ஹோக்தாவஹோமா நாம்வா [illegible] ரக்தா நிவக்ஷஜெ" என்றும் அருளிச்செய்தானிறே. [வெம்மாபிளந்தான்] - "வ்யாஜி தா ஹொராஹாரள [illegible] ஷொவாஸ ரக்ஷ்ணூ வாஹ நா। நிவவாதவியாஹ பிதொவெஷ்ரூதெ நயயா [illegible]". [போற்றி என்றே] - கேஶிகையிலகப்பட்ட அதுக்கு இன்று இருந்து மங்களாஶாஸநம் பண்ணுகிருர். ஸமகாலம்போலே யாயிற்று இவருக்கு இருக்கிறது. [என்றே] - ஒருகால் 'பல்லாண்டு' என்று விடுகையன்றிக்கே அத்தையே பலகாலும் சொல்

* 'என்றும் பிள்ளான்' என்று சில ஸ்ரீகோஶம்.

லுகை. "நஜஐதெ௱வவாஷிநஃ" என்கிறபடியே. [கைகளாரத்தொழுது] - "வைகுந்த மென்று கைகாட்டும்", "தாயவனேயென்று தடவு மென்கைகள்" என்னும் கைகளின்விடாய் தீரும் படி தொழுது. [சொல்மாலைகள்] - வாடாத மாலைகள். [ஏற்றநோற்றேற்கு] - "ஹ்ருணாதிஸிர ஸாவுயுஃ" என்கிறபடியே ஸிரஸாவஹிக்கும்படியாக பாக்யம்பண்ணின எனக்கு. இவர் கவிபாட்டு ஈஸ்வரனுக்கு அலங்காரமா யிருக்கையாலே 'மாலை' என்கிறது இவருக்கு நோன்பாகிறது-"மண்ணையிருந்து துழாவி"யில் விடாயாதல், பகவத்ப்ரஸாதமாதல். தம்முடைய பேற்றுக்கு அடியாக "மயர்வறமதிநல மருளினன்" என்றாரிறே. பூர்வக்ஷணவர்த்தியிறே ஒன் றுக்கு ஹேதுவாவது. [இனி என்னகுறை எழுமையுமே]-இங்கே ஸ்வரூபாநுரூபமான கிஞ்சித் காரம் பண்ணின எனக்குப் பின்பு ஒருநாளும் ஒரு குறைவில்லை. 'தேஹஸம்பந்தம் அற்றதில்லை, ஒரு தேஶவிஶேஷம் ஸித்தித்ததில்லை' என்கிற குறைவுகள் ஒன்றுமில்லை. 'இது எத்தனைகுளிக்கு நிற்கும்?' என்ன, [எழுமையுமே] - என்றும் ஒக்க; "ஸஹஸஹஸஹ", "ஓமவ-ஙிவஙாநு ஶாவுராநு" என்றதிறே.

ஈ. டு.—முதற்பாட்டில் - ஸர்வேஶ்வரனாய்வைத்து ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக மநுஷ்ய ஸஜாதீயனாய்வந்து அவதரித்த க்ருஷ்ணனைக் கவிபாடப் பெற்ற எனக்கு ஒருநாளும் ஒருகுறை யில்லை யென்கிறார்.

[வீற்றிருந்து] - வீற்றென்று - வேறுபாடாய், தன்வேறுபாடு அடங்கலும் தோற்ற இருக் கை. ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களும் தனக்கு ஶேஷமாகத் தான் ஶேஷியாகையாலே வந்த வ்யாவ்ருத்தி தோற்ற இருக்கை; இங்ஙனன்றாகில், பரஸ்பரம் வ்யாவ்ருத்தி எல்லார்க்கு முண்டிறே. ஸகலாத்மாக்களுக்கும் அவனோடு ஜ்ஞானைகாகாரதயா ஸாம்யமுண்டாயிருக்கச்செய் தேயும், விபுத்வ ஶேஷித்வ நியந்த்ருத்வங்களாகிற இவை அவ்வாஶ்ரயமொன்றிலுமே கிடக்கு மவையிறே. தன்னையொழிந்தாரடையத் தனக்குக் கிஞ்சித்கரிக்கக்கடவனாய், தான் ஸர்வகத னாய், ஆகாஶவ்யாப்திபோலன்றிக்கே ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலே

---

முதற்பாட்டு - 'வீற்றிருந்து' இத்யாதி. 'அம்மானை' என்று தொடங்கி மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை – 'ஸர்வேஶ்வரனாய்' இத்யாதி. 'க்ருஷ்ணனைக் கவிபாட' என்றது – 'வெம்மாபிளந்தான் தன்னை' என்றத்தைப் பற்ற.

வேறுபாடாவது - உத்க்ருஷ்டதயா வ்யாவ்ருத்தி யென்று விவக்ஷித்து, அதுதான் - விபுத்வஶே ஷித்வ நியந்த்ருத்வ ரூபேண த்ரிவிதமாயிருக்கையாலே 'வேறுபாடடங்கலும்' என்கிறார். வ்யாவ்ருத்தி எவ் வாகாரத்தாலே? என்ன, 'ஸ்வவ்யதிரிக்த' இத்யாதி வாக்யத்வயம். ஸகலாத்மாக்களும் ஈஶ்வரனோடு ஜ்ஞானை காகாரதயா ஸமராயிருக்க, வ்யாவ்ருத்தி சொல்லும்படி எங்ஙனே? என்கிற ஶங்கையையும் பரிஹரியாநின்று கொண்டு, 'வேறுபாடடங்கலும்' என்றதில் விவக்ஷிதாகார விஶேஷங்களையும் காட்டுகிறார் - 'ஸகலாத்மாக் களுக்கும்' இத்யாதி. 'வ்யாவ்ருத்திதான் சொல்லவேண்டுவது ஸாம்யமுண்டாகிலிறே' என்ன, அதுக்காக ஸாம்யஞ் சொல்லுகிறது. "யொவொகத்ருயமாவிஶ்யபிஹத்யவ்யயஃஈஶ்வரஃ" என்றத்தைக் கடா க்ஷித்து 'விபுத்வஶேஷித்வ நியந்த்ருத்வங்கள்' என்றது. இதில், ஈஶ்வரஶப்தம் - ஸ்வாமிவாசகம். "ஜுஹி ஶரிஶாஷெதநாஶஷோதஃ । வ்யாவநாஹ்ரணாகாஹ்நஃவஹுமொதி தஃ" என்று ஆளவந்தார் கீதார்த்த ஸங்க்ரஹத்திலே அருளிச்செய்கையாலே. விபுத்வ ஶேஷித்வ நியந்த்ருத் வங்களை வ்யுத்க்ரமேண விவரிக்கிறார் - 'தன்னையொழிந்தார்' இத்யாதியாலே. ஈஶ்வரசப்தார்த்தம் – 'தன்னை யொழிந்தார்' இத்யாதி. ஈஶ்வரத்வமும், ஶேஷித்வமும் - பர்யாயமாகையாலே, கிஞ்சித்கார ப்ரதிஸம்பந்தி த்வேந அருளிச்செய்தது. ஆவிஶ்யவுக்கு அர்த்தம்-'தான் ஸர்வகதனாய்'என்றது இதுக்கு விவரணம்-'ஆகாஶ'

வர்த்திக்கக்கடவனாய், இப்படி வ்யாபரிக்கிறதுதான் நியமநார்த்தமாகவிறே. ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களையுமுடையனாகையால் வந்த ஆநந்தம் தோற்ற இருக்கிற இருப்பைச் சொல்லு கிறது. வீற்றிருந்தென்று இவ்வருகுள்ளாரையடையக் கலங்கப்பண்ணக்கடவதான அஜ்ஞாநாதி களையடையத் தன்னாஸநத்திலே கீழேயமுக்குண்ணும்படி அவற்றை அதிஷ்டித்துக்கொண்டிருக் கும்படியைச் சொல்லுகிறது. [ஏழுலகும் தனிக்கோல் செல்ல] - சுற்றுப்பயணம்வந்து ஜகந்நிர் வாஹம்பண்ணுகையன்றிக்கே, இருந்த இருப்பிலே லோகமடையச் செங்கோல்செல்லும்படியாக வாயிற்று இருப்பது. ஏழுலகென்று - விபூதித்வயத்தையும் சொல்லிற்றாகில், 'வீவில்சீர்' என்கிற இடம் - கல்யாணகுணவிஷய மாகக்கடவது; அன்றிக்கே, ஏழுலகென்று - லீலாவிபூதிமாத்ரத் தைச் சொல்லிற்றாகில், வீவில்சீரென்கிறவிடம் - நித்யவிபூதிவிஷய மாகக் கடவது. உபயவிபூதி யையும் சொல்லிற்றானபோது, த்ரிவிதசேதநரையும் சதுர்விதப்ரக்ருதியையும் சொல்லிற்றாகிறது. சதுர்வித ப்ரக்ருதியாகிறது - கார்யகாரணரூபமான த்வைவித்யம் அங்கு; இங்கும், அப்படியுண் டான த்வைவித்யம். லீலாவிபூதிமாத்ரத்தைச் சொல்லிற்றான பக்ஷத்தில், பாதாளாதிகளையும் பூமி யோடேகூட்டி ஒன்றாக்கி, பரமபதத்துக்கு இவ்வருகுள்ளத்தை ஆறாக்கி,—ஆக ஏழையும்சொல் லிற்றாகிறது. [வீவில்சீர்]-நித்யமான குணங்களைச் சொல்லுதல், நித்யமான விபூதியைச் சொல்லு தல். இப்படி உபயவிபூதியுக்தனான செருக்காலே தன்பக்கல் சிலர்க்குக் கிட்டவொண்ணாதபடி யிருக்குமோ? என்னில்,—[ஆற்றல்மிக்காளும்] - அநுத்ததனாயிற்று ஆள்வது; "ராமோ ராஜ்ய முபாஸித்வா" (ராமோராஜ்யமுபாஸித்வா) என்கிறபடியே; ராஜ்யத்தை ஸவிநயமாக நடத்துகை யாலே ராஜ்யத்தை உபாஸித்தா ரென்றதிறே. வழியல்லாவழியே வந்த ஐஶ்வர்யமுடையவன் பிறர்க்குத் திரியவொண்ணாதபடி நடக்குமிறே; உடையவனுடைய ஐஶ்வர்யமாகையாலே ப்ராப்த

---

இத்யாதி. பிபர்த்திக்கு அர்த்தம் - 'இப்படி' இத்யாதி. "வ்ராவ நாராயணாஸ்ராவாக" என்றாரிறே. 'வீற் றிருந்து' என்று - முழுச்சொல்லாக்கி, ராஜாவாயென்று அர்த்தாந்தரம்-'ஸ்வவ்யதிரிக்த' இத்யாதி. மூந்தின அர்த்தத்திலே 'இருந்து' என்றதுக்கு அர்த்தம் - 'இவ்வருகுள்ளாரை' இத்யாதி. தர்மாதிபீடம் விவக்ஷிதம். அஜ்ஞாநாதிகளாவன - ஜ்ஞாநதர்ம வைராக்யைஶ்வர்யங்களும், அஜ்ஞாந அதர்ம அவைராக்ய அநைஶ்வர்யங்க ளும். "[illegible]" என்னக்கடவதிறே. 'இருந்து' என்ற பதத்தையுங் கூட்டி பாவம் - 'சுற்றுப்பயணம்' இத்யாதி. சுற்றுப்பயணம் வந்து என்றவிடத்திலே - "[illegible]" இத்யாத்யநுஸந்தேயம். செங்கோல் – ஆஜ்ஞை. 'ஏழுலகு' என்ற பதத்துக்கு - த்ரிவிதசேதநரையும், சதுர்வித ப்ரக்ருதிகளையும் சொல்லுதல்; அன்றிக்கே, பூமியோடேகூடக் கீழெல்லா மொன்று, மேலாறுங்கூட ஏழென்னுதல். இரண்டு அர்த்தமாக விவக்ஷித்துக் கொண்டு, 'சீர்' என்கிற பதத்துக்கு அர்த்தத்வயம் - 'ஏழுலகென்று விபூதித்வயத்தையும்' இத்யாதி. மூந்தின அர்த்தத்திலே ஏழுலகுக்கும் வகை அருளிச்செய்கிறார் - 'த்ரிவித' இத்யாதி. 'கார்யகாரணரூபமான த்வை வித்யம் அங்கு' என்றது - விமாநகோபுராதிகள் கார்யம், திவ்யாஸித்து – காரண மென்றபடி. 'இங்கும் அப் படி யுண்டான' என்றது - ப்ரக்ருதியும், தத்கார்யமான மஹதாதிகளு மென்றபடி. நித்யவிபூதியைச் சொன்ன பக்ஷத்தில், 'வீவில்சீர்' என்றது - நித்யஸ்ரீ யென்றபடியாய், அத்தாலே நித்யவிபூதியைச் சொல்லு கிறது. இரண்டாமர்த்தத்திலே அப்பதத்துக்கு வகை அருளிச்செய்கிறார் - 'பாதாள' இத்யாதி. செருக்கு - கர்வம். ஆற்றல் - க்ஷமை. 'அநுத்ததனாய்' இதி - 'வீற்றிருந்து' இத்யாதி ஸமபிவ்யாஹார ப்ரஸக்தமான ஔத்தத்யத்தினுடைய ஆறுதல் இங்கு விவக்ஷித மென்றபடி. அநுத்ததனாய் - ஸவிநயனாய். 'அநுத்ததனா யாளும்' என்றதுக்கு ப்ரமாணம் - 'ராமோராஜ்யம்' இத்யாதி. "[illegible] ராமோ ராஜ்யமுபாஸித்வா [illegible]" இதி ஸங்க்ஷேபே. பெருமாள் உபா ஸித்தாரோ? என்ன, 'ராஜ்யத்தை' இத்யாதி. ஆற்றல் மிக்காளுகைக்கு ஹேதுஏது ? என்ன, அம்மானாகை யாலே யென்கிறார் - 'வழியல்லா' இத்யாதி. இவ்விடத்திலே- "[illegible]"

மாயிருந்தபடி. அன்றிக்கே, ஆற்றலென்றது - வலியாய், 'இத்தையடைய நிர்வஹிக்கைக்கு அடியான தாரணஸாமர்த்யத்தையுடையனாயிருக்கும்' என்று சொல்லுவாருமுண்டு. [அம்மானை] - நியந்த்ருத்வத்தால் வந்த ஐஸ்வர்யம் தோற்ற இருக்கிற ஸர்வேஸ்வரனை. [வெம்மாபிளந்தான் தன்னை] - 'ஆற்றல்மிக்காளும்படி சொல்லுகிறது' என்று பட்டர் அருளிச்செய்யும்படி. 'ஆற்றல்மிக்காளுமம்மான் ஆரென்றால், இன்னானென்கிறது' என்று அம்மங்கியம்மாள் நிர்வஹிக்கும்படி இவற்றையடைய உடையவனானால், இருந்தவிடத்தே யிருந்து "ஆஹ வஹ" என்று நிர்வஹிக்கை யன்றிக்கே, இவற்றோடே ஸஜாதீயனாய் வந்து அவதரித்து, இவர்கள் பண்ணும் பரிபவங்களை அடையப் பொறுத்து, களைபிடுங்கி ரக்ஷிக்கும்படி சொல்லுகிறது. ஸ்யமந்தகமணி ப்ரப்ருதிகளிலே பரிபவம் ப்ரஸித்தம்; "தாஸ்யமைஸ்வர்யவாதேந ஜ்ஞாதீநாஞ்சகரோம்யஹம்" (தாஸ்யமைஸ்வர்யவாதேந ஜ்ஞாதீநாஞ்சகரோம்யஹம்) என்றும், "அர்த்தபோக்தாசபோகாநாம் வாக்துருக்தாநிசக்ஷமே" (அர்த்தபோக்தாசபோகாநாம் வாக்துருக்தாநிசக்ஷமே" என்றும் அருளிச்செய்தான். [வெம்மாபிளந்தான்]-கேசி பட்டுப்போகச்செய்தேயும், தம்வயிறெரித்தலாலே 'வெம்மா' என்கிறார் இவர். "வ்யாதிதாஸ்யோ மஹாரௌத்ரஸ் ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா। நிபபாதத்விதாபூதோ வைத்யுதேநயதாத்ருமஃ" (வ்யாதிதாஸ்யோ மஹாரௌத்ரஸ் ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா। நிபபாதத்விதாபூதோ வைத்யுதேநயதாத்ருமஃ) கேசி, வாயை அங்காந்துகொண்டு வந்தபோது, சிறுப்ரஜைகள் த்வாரம்கண்டவிடங்களிலே கையைநீட்டுமோபோலே, இவன் * மௌக்த்யத்தாலே அதின்வாயிலே கையைநீட்டினான்; அபூர்வதர்ஸநத்தாலே,

யவஜிதஃ" என்றும், "ஆஸ்ரயஸ்ய மநஸ்" என்றும் இத்யாத்யநுஸந்தேயம். ப்ராப்தமாயிருந்தபடி - ஸ்வாபாவிகசேஷ மென்றபடி. ஆற்றல் - பொறையாதல், வலியாதல். 'அம்மான்' என்றதுக்கு அபராவியாக அர்த்தாந்தரம் - 'நியந்த்ருத்வத்தால்' இத்யாதி. அதாவது - ஆளுகையாலே அம்மானானென்றபடி. 'அம்மான்' என்ற பதத்துக்கும் பூர்வபாவியாக அர்த்தம் அருளிச்செய்தது - 'ஆற்றல்மிக்காளும்' என்றவிடத்தில் - பொறையென்கிற அர்த்தத்துக்குச் சேரக் கண்டுகொள்வது; 'அம்மான்' என்ற பதத்துக்கு அபரபாவியாக அர்த்தம் அருளிச்செய்தது - வலியென்கிற அர்த்தத்துக்குச் சேரக் கண்டுகொள்வது. 'ஆற்றல்' என்றதினுடையவும் 'அம்மான்' என்றதினுடையவும் அர்த்தத்வயாநுகுணமாக மேலுக்கு அவதாரிகாத்வயம் - 'ஆற்றல்மிக்காளும்படி' இத்யாதி. பட்டர்நிர்வாஹம் - 'ஆற்றல்' என்றதுக்கு - பொறையென்ற அர்த்தத்துக்குச் சேர. இரண்டாவது - வலியென்கிற அர்த்தத்துக்குச் சேர. இந்த நிர்வாஹத்தில், இன்னானென்கிறது- க்ருஷ்ணனென்றபடி. பட்டர்நிர்வாஹத்துக்கு, 'வெம்மாபிளந்தான்' என்கிறதுக்கு - விரோதிநிரஸநத்திலே தாத்பர்யம். பட்டர்நிர்வாஹ விவரணம் - 'இவற்றையடைய' இத்யாதி. அவர்கள் பரிபவங்களைப் பண்ணுகிறதுக்கும், இவன் அத்தைப் பொறுத்துக் களைபிடுங்கி ரக்ஷிக்கிறதுக்கும் - ப்ரமாணமுண்டோ? என்ன, 'ஸ்யமந்தகமணி' இத்யாதி. களைபிடுங்கி ரக்ஷிக்கிறதுக்குப் பூர்வார்த்தம் ப்ரமாணமாகையாலே, 'என்றும்' என்றது. பரிபவங்களைப் பொறுக்கிறதுக்கு ப்ரமாணம் - உத்தரார்த்தம். "தாஸ்யம்-கரோமி", என்கையாலே - களைபிடுங்கி ரக்ஷிக்கை. 'தாஸ்யம் ஐஸ்வர்ய' இத்யாதி - மஹாபாரதே. 'வெம்' என்றதுக்கு பாவம் - 'கேசி பட்டு' இத்யாதி. அவன்படி க்ரூரமாயிருக்குமோ? என்ன, 'வ்யாதிதாஸ்ய' இத்யாதி. "வ்யாதிதாஸ்யோ மஹாரௌத்ரஸ் ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா। நிபபாதத்விதாபூதோ வைத்யுதேநயதாத்ருமஃ" இதி பஞ்சமேம்சே. ஸ்லோக தாத்பர்யம் - 'கேசிவாயை' இத்யாதி. "பாஹுநா" என்ற ஏகவசநத்துக்கு பாவம் - 'இவன் மௌக்த்யத்தாலே' இத்யாதி. புத்திபூர்வகமாக 'பிளக்கவேணும்' என்றிருந்தால் இரண்டுகையையும் நீட்டவேணுமென்று கருத்து. பூரித்து - பெருத்து. புரிந்து - திரும்பி. "நூறுபிராயம்புகுவீர்" என்றாற்போலே சொல்லாதே, 'போற்றி' என்கிறதென்? என்ன, 'ஸ்வ

* மௌக்த்யம்-பேதைமை.

கை பூரித்துக்கொடுத்தது, கையைப் புரிந்துவாங்கினுன், அவன் இருபிளவாய் விழுந்தான். [போற்றி]-ஸ்வரூபாநுரூபமாயிறே பரிவுகள் இருப்பது. கேசி பட்டுப்போகச்செய்தேயும் ஸமகாலத் திற்போலே வயிறெரிந்து படுகிருராயிற்று இவர். [என்றே] - ஒருகால் ''பல்லாண்டு'' என்ருல், பின்னையும் ''பல்லாண்டுபல்லாண்டு'' என்னுமத்தனை. ''நமஇத்யேவவாதிநঃ'' (நமஇத்யேவ வாதிநঃ) என்னுமாபோலே. [கைகளாரத்தொழுது] - ''வைகுந்தமென்று கைகாட்டும்'' என்று வெறுமாகாசத்தைப் பற்றித் தொழுத கைகளின் விடாய் தீர்ந்து வயிறுநிறையும்படி தொழுது. [சொல்மாலைகள்] - வாடாத மாலைகள். அநஸூயை கொடுத்த மாலைபோலே செவ்வியழியாத மாலைகள். [ஏற்ற] - திருக்குழலிலே ஏற்றும்படியாக. ''க்ருஷ்ணாதிஶிரஸாஸ்வயம்'' (க்ருஷ்ணுதி ஶிரஸாஸ்வயம்) என்கிறபடியே. [நோற்றேற்கு] - இவர் இப்போது நோற்ருராகச்சொல்லுகிறது - ''மண்ணையிருந்துதுழாவி''யில் விடாயையாதல், பகவத்க்ருபையையாதல்; பூர்வக்ஷணவர்த்தி யிறே ஒன்றுக்கு ஹேதுவாவது. [இனியென்னகுறை] - அவ்வருகுபோனுலும் கிஞ்சித்காரத்தா லேயாகில் ஸ்வரூபம்; அத்தை இங்கே பெற்ற எனக்கு ஒருகுறையுண்டோ? இது எத்தனைதளிக்கு நிற்கும்? என்னில், - [எழுமையுமே] - முடியநிற்குமவற்றை எவ்வேழாகச் சொல்லக்கடவதிறே. ''தஶபூர்வாந்தஶாபராநாத்மாநஞ்ச'' (தஶபூர்வாந்தஶாபராநாத்மாநஞ்ச). ''ஸப்தஸப்தஸப்த

ரூப' இத்யாதி. அதாவது - ஶேஷத்வாநுகுணமாகப் பரிந்து 'போற்றி' என்று மங்களாசாஸநம் பண்ணுகிறு ரென்றபடி. கீழே 'கேசி பட்டு' இத்யாதி வாக்யவிவரணம் - 'கேசிபட்டுப்போக' இத்யாதி. ஏவகாரார்த்தம் 'ஒருகால்' இத்யாதி. இப்படி பலகால்சொன்னபேருண்டோ? என்ன, 'நமঃ' இத்யாதி. ''ஸக்ருத்ப்ரஸங்கக்ஷணம்ஹ்ருதஸ்ருஜ்ஜீவவாஸிநாம் । நித்யாஜ்ஞவிலோஹாஷா நமஇத்யேவவாதிநঃ''

இதி நாராயணீயே. வாடாத மாலைகளுண்டோ? என்ன 'அநஸூயை' இத்யாதி. ''ஊஃஜிவ்யம்வஸம்ஶாஸ்யம் வஸ்தாஹாரணாநிவ'' இத்யாரப்ய, ''கூநஸூஜிவஉஸம்க்லிஷ்டம்நித்யஜெவஹவிஷ்ஷ்தி'' இத்யந ஸூயா. ஏற்ற - ஶிரஸா தரிக்கும்படி. ''திருக்குழலிலே ஏற்றும்'' என்கிறதுக்கு ப்ரமாணம் - 'க்ருஷ்ணுதி' இத்யாதி. ''சுஹொஹொர்காஷிநஸ்வந்ணாதிஹரவாநுஹரிঃ । விபிஸ்யஸ்தூரம்வஜாம்வ க்ருஷ்ணாதிஶிரஸாஸ்வயம்'' இதி ஸ்ரீஸாத்த்வதே. 'பகவத்க்ருபையையாதல்' - ''நன்றருட்டும்விதி யெய்தினம்'' என்ற பகவத்க்ருபையையாத லென்றபடி. மண்ணையிருந்து துழாவியில் விடாயை ஸாதந மாகச் சொல்லலாமோ? என்ன, அந்த ஆர்த்தியைக் கண்டு அநுபவிப்பிக்கையாலே பூர்வக்ஷணவர்த்தித்வ மாத்ரத்தைக்கொண்டு அருளிச்செய்கிற தொழிய உபாயமன்றென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறுர், 'பூர்வக்ஷணவர்த்தி' இத்யாதி. ஈஶ்வராபிப்ராயத்தாலே ஹேது வென்றபடி. 'இனியென்னகுறை' என்னலாமோ? பரமபதப்ராப்தி முதலானவை வேண்டாவோ?' என்ன, 'அவ்வருகு' இத்யாதி. 'கிஞ் சித்காரத்தாலே' என்றது, ''சுஹஂபெஶாககூஜ'' என்றத்தை நினைத்து. 'எழுமையும்' என்றதுக்கு - ஸர்வகாலமு மென்று விவக்ஷித்து, அதுக்கு ஶப்தம் வசிக்குமோ? என்ன, 'முடிய நிற்கும்' இத்யாதி. பனை நிழல்போலே உம்மை யொருவரையும் நோக்கிச்கொண்ட மாத்ரமோ? என்கிற ஶங்கையிலே அர்த்தாந்தரம் - 'தஶபூர்வாந்' இத்யாதி. அதாவது - ஏழேழுதலைமுறைக்கும் குறையில்லை யென்றபடி. ''தஶபூர்வாந்தஶாபராநாத்மாநஞ்சைகவிம்ஶதிம்வ்ருஷூநாதி'' இதி போதாயநதர்மே. ''வநகாஷவேபிகள் ஜெயஷவிஷ்ஜேஷகஂகூரா । கூஂதாரயதெதாதஸப்தஸப்தஸப்தஸப்த'' இதி பாரதே தர்ம ஸூநும்ப்ரதி பீஷ்மঃ. 'இனியென்னகுறை' என்றதுக்கு 'சொன்மாலைகளேற்ற நோற்றேற்கு' என்ற பதத் தோடே கூட்டி ஸாவம் அருளிச்செய்து, 'போற்றி' என்ற பதத்தோடே கூட்டித் தாத்பர்யார்த்தரம் - 'இங்கே

வ" (ஸப்தஸப்தசஸப்தச). இங்கேயிருந்தே அங்குத்தையநுபவத்தை அநுபவிக்கப் பெற்ற எனக்கு 'அங்கே போகப்பெற்றிலேன்' என்கிற குறையுண்டோ? அங்கேபோனாலும் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டேயிறே. (க)

## இரண்டாம்பாட்டு.

மையகண்ணாள்மலர்மேலுறைவாள் உறைமார்பினன்
செய்யகோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்தன்னை
மொய்யசொல்லால் இசைமாலைகளேத்தி உள்ளப்பெற்றேன்
வெய்யநோய்கள்முழுதும் வியன்ஞாலத்துவீயவே.

*ஆ.—(மையகண்ணாள்.) இப்படி ஸர்வலோகாதிராஜ்யத்தைச் செலுத்திக்கொண்டு ஶேஷபோகபர்யங்கத்திலே, விஶாலஶிந்தீவரலோசனையாயிருந்த பெரியபிராட்டியாரோடேகூட ஸமாஸீநனாய், தத்ஸம்ஶ்லேஷஜநித நிரதிஶய ப்ரீதியாலே செய்யகோலத்தடங்கண்ணனாய், அநந்த வைநதேய விஷ்வக்ஸேந ப்ரப்ருதிஅஸங்க்யேய திவ்யபரிஜந பரிவ்ருதனாயிருந்த எம்பெருமானை என்னுடைய வெய்யநோய்கள் முழுதும் இந்த ப்ரக்ருதியிலே யிருக்கச்செய்தே வீயும்படி, அழகியசொல்லாலே இசைமாலைகளேத்தி உள்ளப்பெற்றேன் என்கிறார்.*

*ஒ.—இரண்டாம்பாட்டில், இந்த மஹைஶ்வர்யத்துக்கு நிதாநமான லக்ஷ்மீநாதத்வத்தை அருளிச்செய்கிறார்.*

*[மைய கண்ணாள் என்று தொடங்கி] - அஸிதேக்ஷணையாய் மலரின்மேலே உறையக்கடவ பெரியபிராட்டியார் மலரிற்காட்டில் விரும்பித் தன் திருக்கண்களாலே வர்ஷித்துக்கொண்டு நித்யவாஸம்பண்ணுகிற திருமார்பையுடையனுமாய், அவளோட்டைஸம்ஶ்லேஷாதிஶயத்தாலே மதுபாநமத்தரைப்போலே சிவந்து அழகியதான திருக்கண்களையுடையனாய், இவ்வழகு காட்டில் எறித்த நிலாவாகாமே இதுக்குப் போக்தாக்களான நித்யஸூரிகளையுடையவனைச் செறிந்தசொற்களாலே இசைமாலைகளைக்கொண்டு ஏத்தி நினைக்கப்பெற்றேன். [வெய்ய நோய்கள் என்று தொடங்கி]- இப்பூமியிலே இருக்கச்செய்தே ஸாம்ஸாரிக ஸகலதுரிதங்களும் போம்படி; லோகத்தில் துரிதங்களுமெல்லாம் நசிக்கும்படி என்றுமாம்.*

*ப.—அநந்தரம், இந்தமேன்மைக்கு அடியான லக்ஷ்மீஸம்பந்தத்தையுடையவனை ஜகத்ஸம்பந்தியான ஸகலக்லேஶமும் தீரும்படி புகழப்பெற்றேன் என்கிறார்.*

---

*யிருந்தே' இத்யாதி. அங்குத்தையநுபவமேது? என்ன, 'அங்கேபோனாலும்' இத்யாதி. ஆக்ராயேஶ்வரகாந்தமித்யாதி. - ஹேஈஶ - ஸ்ரீரங்கநாத! இந்த்ராதயஸ்தவேஶ்வரான்யமாவஹாயதவஸத்ருஶம்மந்யா: முஹ்யந்தி_ இந்த்ராதிதேவர்கள் தேவரீருடைய ஐஶ்வர்யத்துக்குள்ளே ஒருதிவலையையுடையராய் தேவரீருக்கு ஸத்ருஶமாக நினைத்துக்கொண்டு மோஹியாநிற்பர்கள். நிரவதேர்ப் பூம்ந: கணேஹத்யத்வம்அநாவில இதியத், அத்ர நசித்ரீயேமஹி - நிரவதிகமாயிருக்கிற ஸம்பத்தை அநாதரித்து தேவரீர் கர்வமின்றிக்கே யிருக்கிறீரென்பது யாதொன்று உண்டு, இதிலே ஆஶ்சர்யப்படுகிறோமில்லை. இதுக்கு ஹேதுவேது? என்ன, ரங்கஶவிகேத்யாதி.—ஹேரங்கஶவிக! வைபுல்யாத் த்வம் த்வந்மஹிம்ந: பர: - தேவரீருடைய ஸ்வரூபம் விபுவாகையாலே, தேவரீர் தேவரீருடைய ஐஶ்வர்யத்திலும் பரராயிருப்பீர். அன்றிக்கே, உஹிஉஹாஹாவஉகிவா - ஈது நவித்ரீயேஶஹி-தேவரீருக்கு ஐஶ்வர்யம் ஸ்வபாவமென்றுகொண்டு அதிலே ஆஶ்சர்யப்படுகிறோமில்லை. இப்படியாகையாலே, தேந ஸாத்ம்யம் கிந்நாம - தேவரீருக்கு ஸாத்ம்யமன்றிக்கேயிருக்கிறது உண்டோ? என்றபடி. பூம்ந:கணேஹத்ய - பூமாம்அநாத்ருத்யேத்யர்த்த:. பூம்ந இதி-கர்மணிஷஷ்டீ. க்ரமேண அந்வய:.*

மைய - (அவன் மார்பிலே எப்போதும் கணிசமாகையாலே அவ்வடிவு நிழலிட்டதடியாக அஸிதேக்ஷணையான ஸ்வபாவத்துக்குமேலே) மையணிந்த தென்னலாம்படியான, கண்ணாள் - கண்ணையுடையளாய், (இந்த ஆபிரூப்யத்துக்குமேலே), மலர்மேல் உறைவாள் - தாமரைப்பூவில் பிறப்பாலும் வாஸத்தாலும் அபிஜாதையுமாய்ப் பரிமளம்வடிவுகொண்டாற்போலே போக்யபூதையுமான லக்ஷ்மி, உறை - நித்யவாஸம் பண்ணும்படி நிரதிசயபோக்யமான, மார்பினன் - மார்பையுடையனாய், செய்ய - (பத்மவர்ணையான அவளை அநுபவிக்கையாலே பழைய சிவப்புக்குமேலே) சிவந்து, கோலம் - அழகையுடைத்தாய், தடம் - (ப்ரேமபாரவஶ்யத்தாலே) விஸ்தீர்ணமான, கண்ணன் - திருக்கண்களையுடையனாய், விண்ணோர் - (இப்படி பரஸ்பரஸம்ஶ்லேஷஸாரஸ்யத்தைப்) பரமபதவாஸிகளுக்கு அநுபவிப்பித்து, பெருமான்தன்னை - (அவர்களுக்கு) அதிபதியாயிருக்கிற ஸர்வேஶ்வரனை, மொய்ம்ப - (அவர்கள் ஸாமகாநம்பண்ணுமாபோலே) செறிந்த, சொல்லால் - சொற்களாலே சமைந்ததாய், இசை - இசையையுடைத்தான, மாலைகள் - மாலைகளாலே, வியல் - விஸ்தீர்ணமான, ஞாலத்து - ஜகத்திலேயிருக்கச்செய்தே, வெய்ய - ("நதத்ர ஶோகோ ந ஜரா" என்னுமாபோலே) பரிதாபஹேதுவாயிருக்கிற, நோய்கள் முழுதும் - (அவித்யாகர்மவாஸநாருசிப்ரக்ருதி ஸம்பந்தங்களான) ஸமஸ்தக்லேசங்களும், வீய - (நாட்டிலேநடையாடாதபடி ஸ்வயமேவ) நசிக்கும்படியாக, ஏத்தி - ஏத்தி, உள்ள-(ஸ்தவப்ரியனான அவனுடைய முகமலர்த்தியை) என்னெஞ்சாலே அநுபவிக்க, பெற்றேன் - பெற்றேன்.

மையகண்ணாள், செய்யகோலத்தடங்கண்ணன் என்கிறவிடம் - அவள்கண் நிழலீட்டாலே இவனுடைய ஶ்யாமளத்வமும், இவன் கண்நிழலீட்டாலே அவளுடைய பத்மவர்ணமு மென்று கருத்தாகவும் சொல்லுவர்கள்; ஆகிலும், கண்ணுக்கு விஷயாதீநத்வம் உசிதம்.

ஈடு.—இரண்டாம்பாட்டில், இம்மஹைஶ்வர்யத்துக்குஅடியான ஶ்ரிய:பதித்வத்தை அருளிச்செய்கிறார்.

[மையகண்ணாள்]-அஸிதேக்ஷணையிறே. இவள் ஸர்வேஶ்வரனை ஒருகால்நோக்கினால் ஒருபாட்டம் மழைவிழுந்தாற்போலே அவன்திருமேனி திமிர்க்கும்படியாயிற்று இருப்பது; மழைக்கண்மடந்தையிறே. இது இவளுடைய அவயவஶோபை. [மலர்மேல் இத்யாதி]- இவள் ஸௌகுமார்யத்தைச் சொல்லுகிறது. பரிமளம் உபாதாநமாகப் பிறந்தவள். [உறைமார்பினன்]- ஜந்மபூமியான பூவிற்காட்டில் பொருந்திவர்த்திப்பது மார்பிலேயாயிற்று. மார்பில்சுவடறிந்த பின்பு பூ நெரிஞ்சிமுள்ளோபாதியாயிற்று. பெருமானைக் கைப்பிடித்தபின்பு பிராட்டி ஸ்ரீமிதிலையை நினையாதாப்போலேயும், முக்தன் "நோபஜநம் ஸ்மரந் இதம் ஶரீரம்" என்று ஸம்ஸாரயாத்ரையை நினையாதாப்போலேயும். 'மலர்மேலுறைவாள்' என்ற இடம் - குந்தி அடியிட்டதென்றும், 'உறைமார்பினன்' என்ற இடம் - திருமார்பிலே பொருந்திவர்த்திக்குமென்றும் இயலிலே தோற்றியிருக்கிறது. [செய்யகோலத்தடங்கண்ணன்] - இவள் கடாக்ஷத்தாலே அவன்திருவுள்ளத்தில் பௌஷ்கல்யத்தைக் கோள்சொல்லித் தருகிற திருக்கண்களையுடையவன். மதுபாநமத்தரைப்போலே சிவந்து அழகியதாய்ப் பெருத்த கண்களையுடையவன். இம்மிதுநமிறே இவர்பாட்டுக்கு விஷயம். அவள் - மையகண்ணாள்; இவன் - செய்யகோலத்தடங்கண்ணன். அவள் அடுத்துப்பார்க்கையாலே அவள்கண்ணின் வாஸநை ஊறி இவன் திருமேனி ஶ்யாமமாயிருக்கும். இவன்கண்ணிற்சிவப்புஊறி அவள்திருமேனி சிவந்திருக்கும். இவள்கடாக்ஷமுண்டாகையாலிறே, அவன் புண்டரீகாக்ஷனாயிற்று. அது இல்லாமையாலேயிறே, அல்லாதார் விரூபாக்ஷராயிருக்கிறது. "நஶ்ரீமந் நாயகைர்யுக்த விஹித: ... | ஶ்ரீமதே

ஸிதவ்ருஷேவஷிக்ருநிஷ்ரோஹதஷிஃஜமஷ". ஒருவன் அழகிய மணவாளப்பெருமாளா யிருக்கிறதும், ஒருவன் பிக்ஷுகனுயிருக்கிறதும். [விண்ணோர் பெருமான் தன்னை] - இச்சேர்த்தியழகு காட்டிலெறித்த நிலாவாகாதபடி அநுபவிக்கைக்கு போக்தாக்களையுடையவனை. அவர்களுக்கு நியாமகனுய் அத்தாலே மேனணித்திருக்கிறபடி. இக்கண்குமிழியின்கீழே விளைகிற நாடு இருக்கிறபடி. [மொய்ப இத்யாதி] - மொய் என்று - வலியாதல், பெருமையாதல்; வலியானபோது, ஸிதிலமாயிராதே சொல்செறிந்து கட்டுடைத்தாயிருக்கை; பெருமையானபோது, இவ்விஷயத்தை விளாக்குலைகொள்ளவற்ருயிருக்கை. "யதோவாவொநிவத்ந்தெ" என்று மீளாதே இவ்விஷயத்துக்கு நேரே வாசகமாயிருக்கை. [இசைமாலைகள்] - பரிமளப்ரசுரமான பூமாலைகள் போலே கேட்டார் நெஞ்சு பிணிப்புண்ணும்படி இசைவிஞ்சியிருக்கை. அவனும் அவளும் நித்யஸூரிகளுமாயிருந்து கேட்டுக் கொண்டாடப் பிறந்த ப்ரபந்தமிறே; ஸ்ரீராமாயணத்தைக்காட்டில் இப்ப்ரபந்தத்துக்கு ஏற்றம்-பகவத்ஹ்ருதயத்தைப் பின்சென்ற ப்ரஹ்மா அடியாக நாரதாதிகள் முன்னிலையாகப் பிறந்த ப்ரபந்தமன்றிக்கே "கேட்டாரார்வானவர்கள்", "தென்னுவென்னுமென்னம்மான்" என்கிறபடி தானும் நித்யஸூரிகளும் கேட்டுக் கொண்டாடும்படியிருக்கை. [ஏத்தி உள்ளப்பெற்றேன்] - "ஊநஃவ-மிவெ-ரவாமஃ-த்ரஃ" என்கிற நாட்டார்படியன்று, இவர்படி; ஏத்திப் பின்னையாயிற்று நினைத்தது. கவிபாடுகைக்கு நினைவு அத்தலையிலேயானாலும் பேறு தம்மதாயிருக்கிறபடி. "மாஸஹம்வ்யொக்ரி" என்கிற இடமன்றியிலே இருக்கிறபடி. "முடியானே"யில் விடாய்த்தபோது தனித்தனியே கரணங்கள் விடாய்த்தாற்போலே இங்குத் தனித்தனியேயாயிற்று அநுபவிக்கிறது. ஈஸ்வரன் நினைவாலே பாடுகிற கவியாகையாலே,தாமும் கரணங்களோபாதி அந்வயித்தார். [வெய்யநோய்கள் இத்யாதி] - க்ரூரமான ஸாம்ஸாரிக ஸகல துஃகங்களும் பூமியிலே யிருக்கப் போம்படி. வியன்ஞாலத்திலேயிருக்கையாலுண்டான வெய்ய நோய்களென்னுதல், லோகத்தில் துரிதங்களெல்லாம் நஸிக்கும்படி யென்னுதல், பாவநாப்ரகர்ஷத்தாலே தாம் பரமபதத்திலே இருக்கிறாராய்ப் பூமியிலுள்ள துஃகங்களும் போம்படி யென்னுதல். "வஸூஃவஸ்ஷிஹமீமதாநு" என்று சீயர் அருளிச்செய்தார்.

ஈடு — இரண்டாம்பாட்டு. இம்மஹைஸ்வர்யத்துக்கு அடியான ஸ்ரிய:பதித்வத்தை அருளிச்செய்கிறார். ஸர்வேஸ்வரன் ப்ரஸாதத்தாலே அவன் கருத்தறிந்து நடத்தும் ப்ரஹ்மாவின் ப்ரஸாதமடியாக, நாரதாதிகள் முன்னிலையாக வாயிற்று ஸ்ரீமத்ராமாயணம் ப்ரஸ்துதமாயிற்றது; இப்படிப்பட்ட ஸ்ரீராமாயணத்திற்காட்டில் தாம் அருளிச்செய்த ப்ரபந்தத்துக்கு ஏற்றம் அருளிச்செய்கிறார். "திருமாலாலருளப்பட்ட சடகோபன்" என்கிறபடியே அவர்களிருவருடையவும் ப்ர

---

இரண்டாம்பாட்டு - 'மையகண்ணாள்' இத்யாதி இப்பாட்டில் ஸ்ரிய:பதித்வம் சொல்லுகிறதுக்கு ஸாலு தாத்பர்யம். முந்தினது - 'இம்மஹைஸ்வர்யத்துக்கு' இத்யாதி. 'மையகண்ணாள்' என்கிற பதத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை. 'இம்மஹைஸ்வர்யம்' என்றது - 'வீற்றிருந்தேழுலகும்' இத்யாதியைக் கடாக்ஷித்து. பின்னையும் பலரும் கவி பாடாநிற்க, இவர்கவிக்கு ஆதிக்யமேது? என்ன, 'ஸர்வேஸ்வரன்' இத்யாதி. "ஊஹநாஜெவதெவஹநு" இத்யாதியைக் கடாக்ஷித்து 'ப்ரஹ்மாவின்' இத்யாதி. "ஊநெவ க்ஷ்ரூஹம்வஊ" இத்யாதியைப் பற்ற-'நாரதாதிகள்' இத்யாதி. முன்னிலையாக-தத்புரஸ்காரேண-ஏவம்பூதமான ஸ்ரீராமாயணத்திற்காட்டில் வ்யாவ்ருத்தமாயிருக்கும் ப்ரகாரத்தை இப்பாட்டிலே அருளிச்செய்கிறாரென்கிறார் - 'இப்படிப்பட்ட' இத்யாதி. தம்முடைய இப்ப்ரபந்தத்துக்கு ஏற்றமேது? என்ன, 'திருமாலால்' இத்யாதி. ஆக, இவர் அருளிச்செய்த ப்ரபந்தத்துக்குப் பெரியபிராட்டியாருடைய ப்ரஸாதம் ஹேது

ஸாதமடியாகவாயிற்று இப்ப்ரபந்தங்கள் பிறந்தது. "ஸீதாயாஸ்சரிதம் மஹத்" (ஸீதாயாஸ்சரிதம் மஹத்) என்கிறது இரண்டேக்கும் ஒக்கும்; "திருமாலவன்கவியாதுகற்றேன்" என்றாரிறே இவரும். அவன் பாடித் தனியே கேட்பித்தான்; அவளோடேகூடக் கேட்பித்து அச்சேர்த்தியிலே மங்களாசாஸநம்பண்ணப் பெற்றார் இவர்; மையகண்ணாள் மலர்மேலுறைவா ளுறை மார்பினனானவனை யாயிற்றுக் கவிபாடிற்று.

[மையகண்ணாள்] - "அஸிதேக்ஷணா" (அஸிதேக்ஷணா) என்னக்கடவதிறே. பெரியபிராட்டியார் திருக்கண்களாலே ஒருகால் கடாக்ஷித்தால், ஒருபாட்டம் மழைவிழுந்தாற்போலே ஸர்வேஸ்வரன்திருமேனி குளிரும்படியாயிற்று இருப்பது; "மழைக்கண் மடந்தை"யிறே. இவள் கடாக்ஷ மில்லாமையிறே அல்லாதார் விரூபாக்ஷராகிறது. "நமஸ்ஸ்ரீரங்கநாயக்யை யத்ப்ரூவிப்ரமபேதத꞉ । ஈஸேஸிதவ்யவைஷம்யநிம்நோந்நதமிதம் ஜகத்" (நமஸ்ஸ்ரீரங்கநாயக்

---

*வென்று - ஸ்ரீய·பதித்வம் சொல்லுகிறதுக்கு இரண்டாம் தாத்பர்யம். கவிக்கு விஷயம் பிராட்டியும் அவனும் என்கிற இது - ராமாயணத்துக்கும் இதுக்குமொக்குமென்று மூன்றாம் தாத்பர்யம். ஸீதாயாஸ்சரிதம்' இத்யாதி-"காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாஸ்சரிதம் மஹத், பௌலஸ்த்யவதமித்யேவம் சகார சரிதவ்ரத꞉" இதி பாலகாண்டே. இவர் கவிக்கு விஷயம் பிராட்டியும் அவனுமென்கிற இது இவர்திவ்யஸூக்தியிலே காணலா மென்கிறார் - 'திருமாலவன்' இத்யாதி. யாதொன்று நான் கற்றேன், அது திருமாலவன்கவி-ஸ்ரீய·பதியினுடைய கவி. அவளும் அவனுமான சேர்த்திக்குத் தகுதியான கவி யென்றபடி. தம்முடைய கவிக்கு விஷயம் பிராட்டியும் அவனு மென்றபடி. திருவிருத்தம் நாற்பத்தெட்டாம்பாட்டு - "மெல்லியல்" இத்யாதி. கவி கேட்பித்தது பிராட்டியும் அவனுமான சேர்த்தியிலே யென்று ஸ்ரீயபதித்வம் சொல்லுகிறதுக்கு நாலாம்தாத்பர்யம் - 'அவன்பாடி' இத்யாதி. "திருமாலவன் கவி யாது கற்றேன்" என்றத்தை விவரிக்கிறார் - மையகண்ணாள்' இத்யாதி. யத்வா, இப்பாட்டுக்கு நாலுதாத்பர்யம் சொல்லலா யிருந்ததேயாகிலும், கவிக்கு விஷயம் அவளும் அவனுமான சேர்த்தி யென்னுமதுவே இப்பாட்டுக்கு முக்யார்த்த மென்னுமிடம் தோன்ற அருளிச்செய்கிறார் - 'மையகண்ணாள்' இத்யாதி என்னுதல். ஆக, கவிக்கு விஷயம் - ராமாயணத்துக்கும் இதுக்கும் ஒக்கும்; கவிக்கு ஹேது அவளும் அவனுமாகையாலும், பாடின கவி கேட்டது அவனும் அவளும் ஆகையாலும், இரண்டும் இப்ப்ரபந்தத்துக்கு ஏற்ற மென்றபடி. ஆக, ஸ்ரீராமாயணத்தில் வ்யாவ்ருத்தி இரண்டாகாரத்தாலே; ஓராகாரத்தாலே ஸாம்யம். ஆக, இப்பாட்டிலே 'மையகண்ணாள்' என்று தொடங்கி ஸ்ரீய·பதித்வத்தை அருளிச்செய்ததுக்கு நாலு ப்ரயோஜநம். அதாவது - கீழ்ப்பாட்டிற்சொன்ன ஐஸ்வர்யஹேதுத்வேந வாதல், தம்முடைய கவிக்கு ஹேதுத்வேந வாதல், கவிக்கு விஷயத்வேந வாதல், கவிக்குஸ்ரோத்ருத்வேந வாதல் என்றதாயிற்று.*

*'மை' என்று கறுப்பைச் சொல்லுகிறதென்று அதுக்கு ப்ரமாணம் - 'அஸிதேக்ஷணா' இத்யாதி. "தமஸ்யாஸீம" இத்யாதி, ஸ்லோகத்து அடி. இத்தால், ஸ்வாபாவிகமான கறுப்பைச் சொல்லுகிறது; அவயவஸோபையைச் சொன்னபடி. அன்றிக்கே, 'மை' என்று கறுப்பாய், அத்தாலே குளிர்த்தியை விவக்ஷித்து பாவம் - 'பெரிய பிராட்டியார்' இத்யாதி. ஒருபாட்டம் - ஒருபாறல்; ஒருகால் மஹத்தான என்றுமாம். மழை - வர்ஷம். 'மழைபெய்தாற்போலேயிருக்குமோ திருக்கண்கள்குளிர்த்தி?' என்ன, 'மழைக்கண்' இத்யாதி. மழைபோலே குளிர்ந்த கண்ணையுடையளாய், மடப்பம் முதலான ஸ்த்ரீத்வகுணத்தையுமுடையவ ளென்றபடி. திருவிருத்தம் ஐம்பத்திரண்டாம்பாட்டு - "அழைக்கும் கருங்கடல்" இத்யாதி "செய்யகோலத்தடங்கண்ணன்" என்றத்தைக் கடாக்ஷித்து பாவம் - 'இவள் கடாக்ஷம்' இத்யாதி. இவள்கடாக்ஷமுண்டாகில் புண்டரீகாக்ஷனாகையும், அது இல்லாவிடில் விரூபாக்ஷனாகையு மாகிற இதுக்கு நியாமகமேது? என்ன, 'நம' இத்யாதி. ஸ்ரீரங்கராஜஸ்தவே, "நமஸ்ஸ்ரீரங்கநாயக்யை யத்ப்ரூவி*

யையந்ப்ருவிப்ரமபேததஃ | ஈஶேஶிதவ்யவைஷம்ய நிம்நோந்நதமிதம்ஜகத்;) ஒருவன் அழகியமண வாளப்பெருமாளா யிருக்கிறதும், ஒருவன் பிக்ஷுகனு யிருக்கிறதும். [மலர்மேலுறைவாள்] - செவ்வித்தாமரைப்பூவில் பரிமளம் உபாதாநமாகப் பிறந்தவள். அவயவஶோபை அது, ஸௌகுமார்யம் இது. [உறைமார்பினன்] - பூவிலும் கூசி அடியிடுமவள் பொருந்திவர்த்திக்கும் மார்வு படைத்தவன். ஸ்ரீஜநகராஜன்திருமகள் பெருமாளைக் கைப்பிடித்தபின்பு ஸ்ரீமிதிலையை நினையாதாப்போலே, இவளும் இவன்மார்வில் சுவடறிந்தபின்பு தாமரையை நினையாதபடி; "நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்" (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்று முக்தர் ஸம்ஸாரயாத்ரையை ஸ்மரியாதாப்போலே, இவள் பூவை ஸ்மரியாதபடி. [செய்யகோலத்தடங்கண்ணன்] - ஒருசாயையிலே மேகம் வர்ஷியாநின்றால் அவ்விடம் குளிர்ந்திருக்குமாபோலே, இவள்திருக்கண்ணிலே அவன் திருமேனியில் நிறமூறி இவள்மையகண்ணளாயிருக்கும்; "மைப்படிமேனி"யிறே. அத்தை ஒருபடியே பார்த்துக்கொண்டிருக்குமிறே இவள். அவளை ஒருபடியே கடாக்ஷித்துக்கொண்டிருக்கையாலே அவள்திருமேனியில்சிவப்பூறி இவன் புண்டரீகாக்ஷனாயிருக்கும்; * "செய்யாள் திருமார்பினில் சேர் திருமா"லிறே. இருவர்படியும் இருவர்கண்ணிலும் காணலாம்; அவன்படி இவள்கண்ணிலே காணலாம், இவள்படி அவன்கண்ணிலே காணலாம். இவர்களுடைய கண்கலவி இருக்கிறபடியிறே இது. சிவந்து தர்ஶநீயமாய்ப் பரப்பையுடைத்தான திருக்கண்களையுடையவன். இவர் கவி விண்ணப்பம்செய்யக் கேட்டு அத்தாலேவந்த ப்ரீதிக்குப் போக்குவிட்டு அவன் பிராட்டியைப் பார்க்க, அவள் 'அந்யபரதைபண்ணுதே அத்தைக் கேட்கலாகாதோ?' என்று ப்ரேரிக்க, இப்படிகாணும் கேட்டது. [விண்ணோர்பெருமான்தன்னை] - இக்கண்ணின்குமிழிக்கீழே விஸையும் நாட்டைச் சொல்லுகிறது. இக்கண்ணழகும் இச்சேர்த்தியழகும் காட்டிலெறித்த நிலாவாகாமே அநுபவிக்கைக்கு போக்தாக்களையுடையவனை; "தாமரைக்கண்ணனை விண்ணோர்பரவும்

---

ஈஶேஶிதவ்யவைஷம்ய நிம்நோந்நதமிதம்ஜகத்". இஸ்லோகார்த்தம் - 'ஒருவன்' இத்யாதி. 'பிக்ஷுகனுயிருக்கிறதும்' இதினுடைய ஸத்பாவாஸத்பாவமிறே யென்று கூட்டுவது. 'மலர்மேல்' என்றதுக்கு அர்த்தம் - 'செவ்வி' இத்யாதி. கீழ்ப்பதத்தையும் கூட்டி பாவம் - 'அவயவ' இத்யாதி. "வாஜாரோஹணாத்ஜவ" இத்யாதியைக் கடாக்ஷித்து 'பூவிலும்கூசி' என்றது. 'உறை' என்கிற வர்த்தமானத்துக்கு த்ருஷ்டாந்தமுகேந அர்த்தம் - 'ஸ்ரீஜநகராஜன்' இத்யாதி. த்ருஷ்டாந்தாந்தரம் - 'நோபஜநம்' இத்யாதி. 'மையகண்ணாள்' என்றத்தைக் கடாக்ஷித்து, இவள் மையகண்ணளாகைக்கும் அவன் செய்யகோலத்தடங்கண்ணனாகைக்கும் ஹேதுவை அருளிச்செய்கிறார் - 'ஒருசாயையிலே' இத்யாதி. சாயை - ப்ரதேசம். அவன் திருமேனி கறுத்திருக்கு மென்கைக்கு ப்ரமாணம்-'மைப்படி' இத்யாதி. திருவிருத்தம் - தொண்ணூற்று நாலாம்பாட்டு, "மைப்படி மேனியும்" இத்யாதி. அஞ்சநத்தின்படியான திருமேனியும், கண்டார்கண் குளிரும்படியான வடிவு மென்றபடி. திருமேனியைப் பார்த்திருக்குமோ? என்ன, 'அத்தை ஒருபடியே' இத்யாதி. இவள்திருமேனி சிவந்திருக்குமோ? என்ன, 'செய்யாள்' இத்யாதி. செய்யாள்-சிவந்திருக்குமவள். 'இருவர்படியும்' என்ற வாக்யம் - சாபேக்ஷியாய், கீழுக்கு விவரணம். கீழ்வாக்யவிவரணம் - 'அவன்படி' இத்யாதி. இங்ஙனன்றிக்கே மாறுடி; இவள் கடாக்ஷத்தாலே அவன் திருமேனி கறுத்தும், அவன் கடாக்ஷத்தாலே இவள் திருமேனி சிவந்து மிருக்கு மென்கிறார் - 'இவர்களுடைய' இத்யாதி. கண்கலவி - சக்ஷுஸ்ஸம்யோகமும், சக்ஷுப்ரீதியும். கண்களின் நிறம் திருமேனிகளிலேயூறிச் செய்யாளானதும், மைப்படி மேனியானது மென்று தாத்பர்யம். இவ்வர்த்தம், "மையார்கருங்கண்ணி" என்கிற பாட்டிலே வ்யக்தம். சப்தார்த்தம் - 'சிவந்து' இத்யாதிஃ இருவர்கண்ணழகையும் வர்ணிக்கிறதுக்கு பாவம் - 'இவர்கவி' இத்யாதி. 'இக்கண்ணின் குமிழ்க்கீழே' இதி, ஸ்வாமித்வப்ரயுக்தமான ரக்ஷகத்வம் சொன்னபடி; தாரகத்வமும் போஷகத்வமும் சொன்னபடி. குமிழி - மதகுமோழை. தாத்பர்யாந்தரம் - 'இக்கண்ணழகும்' இத்யாதி. இந்த அர்த்தத்தில், 'பெருமான்' என்று போக்யதை அளவிறந்தமை சொல்லுகிறது. இவர்கள் கண்ணழகுக்கு போக்தாக்களோ? என்ன, 'தாம

---

* திருவாய்மொழி - க; ச; க.

தலைமகனை" என்கிறபடியே. பெரியபிராட்டியாரும் அவனுங் கூடவிருக்க, நித்யஸூரிகளோ லக்கங் கொடுக்கவாயிற்றுக் கவி கேட்பித்தது. [மொய்யசொல்லால்]-விஷயவைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து 'கவிபாட' என்று ஒருப்பட்டு, "யதோவாசோநிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்று மீளுகையன்றிக்கே விஷயத்துக்கு நேரானபாசுரமிட்டுக் கவி பாடப்பெற்றேன். மொய்என்று செறிவைச் சொல்லுதல், பெருமையைச்சொல்லுதல்: ஶப்தபந்தமாயிருக்கையன்றிக்கே கட்டுடைத்தா யிருக்கையாதல், விஷயத்தை விளாக்குலைகொள்ளவற்றாயிருக்கையாதல். [இசைமாலைகள்]-பரிமளப்ரசுரமான மாலைபோலே, கேட்டார் துவக்குண்ணும்படி இசைவிஞ்சி யிருக்கை. [ஏத்தியுள்ளப்பெற்றேன்]-"மநஃபூர்வோவாகுத்தரஃ" (மநஃபூர்வோவாகுத்தரஃ) என்கிற நியதியில்லையாயிற்று இவர்பக்கல். நினைத்தன்று போலேகாணும் ஏத்திற்று. அவன்நினைவு மாறுமையாலே இது சேர விழுமிறே; "என்முன்சொல்லும்" என்றாரிறே. நாமுதல்வந்துபுகுந்து நல்லின் கவிதூமுதல்பத்தர்க்குத் தான் தன்னைச்சொன்னதாகையாலே சேரவிழுமிறே. "முடியானே"யில் கரணங்கள் விடாய்த்தாற்போலே, இங்கும் தனித்தனியேயாயிற்று அநுபவிக்கிறது. தாமும் கரணங்களோபாதி அந்வயித்தார். "நாட்டினாயென்னையுனக்குமுன்தொண்டாக" - அடிமையில் சுவடறியாத என்னை, 'இவன் நம்முடையான்' என்று அங்கே நாட்டென்று நிறுத்திவைத்தாய் ; உன்னுடைய அங்கீகாரத்தைக்கொண்டு என் ப்ராக்தநமான கர்மங்களை வாஸனையோடே போக்கினேன். "பாட்டினால் இத்யாதி" - பாடின கவிவழியாலே, ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாயிருக்கிற நீ என்ஹ்ருதயத்திலே யிருந்தமையை ப்ரகாஶிப்பித்தாய். "கண்ணபுரத்துறையம்மானே" - பாடுவித்த ஊர் திருக்கண்ணபுரம். பாடுவித்த முக்கோட்டை இருக்கிறபடி. அப்படியே இவர் வாக்குக் கவிபாட, இவர்தாம் நம்மோபாதி அநுஸந்தித்தாரித்தனை. [வெய்யநோய்கள்முழுதும்] - "அவஶ்யமநுபோக்தவ்யம்" (அவஶ்யமநுபோக்தவ்யம் (என்கிறபடியே அநுபவித்தாலல்லது நசிக்

---

*னைக்கண்ணனை' இத்யாதி. கீழெல்லாவற்றையும் கூட்டி ஸாவம்-'பெரியபிராட்டியாரும்' இத்யாதி. விஷயத்துக்கு நேரான பாசுர மென்றது - 'பெருமையை' என்ற இரண்டாமர்த்தத்துக்குச் சேர. செறிவையும் பெருமையையும் விவரிக்கிறார் - 'ஶப்தபந்தம்' இத்யாதி வாக்யத்வயத்தாலே. விளாக்குலைகொள்ள-கபளீகரிக்க. மாலை என்னுதே, 'இசைமாலை' என்றதுக்கு ஸாவம் - 'பரிமள' இத்யாதி. உள்ளி யேத்தப் பெற்றேனென்னுதே, ஏத்தியுள்ளப்பெற்றேன்' என்கிறதுக்கு ஸாவம் - 'மந' இத்யாதி. இயம் யஜுஸ்ஸம்ஹிதாயாம். 'நியதியில்லையாயிற்று'-ப்ரீதி வழிந்த சொல்லாகையாலே யென்றபடி. பலிதம் - 'நினைத்தன்று' இத்யாதி. ஆனால், கவி சேரவிழுந்தபடி எப்படி? என்ன, 'அவன்நினைவு' இத்யாதி; அவன் நினைவு மாறாமலிருக்குமென்னுமதுக்கு ப்ரமாணம் - 'என்முன்சொல்லும்' இத்யாதி வாக்யத்வயமும். 'நாமுதல்' — இத்யாதி என்நாக்கிலே முற்பாடனாய்வந்து புகுந்து லக்ஷணோபேதமான இனிய கவிகளை அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யமாம்படி தானே தன்னைச் சொன்ன இத்யர்த்தஃ. தாத்பர்யாந்தரம் முடியானேயில்' இத்யாதி. முந்தின அர்த்தத்துக்கு, வாய்வெருவினபடியைச் சொல்லுகிறது. அன்றிக்கே ஏகார்த்தமென்னுதல். கரணங்கள் தனித்தனியே அநுபவிக்கிறனவாகில் "முடியானே" யிற்போலே அவற்றைக் கர்த்தாக்களாகச் சொல்லாதே 'ஏத்தியுள்ளப்பெற்றேன்' என்னக்கூடுமோ? என்ன, 'தாமும்' இத்யாதி. கரணங்களோபாதி அந்வயித்ததுக்கு ப்ரமாணம் - 'நாட்டினாய்' இத்யாதி. திருமொழி எட்டாம்பத்து பத்தாந்திருமொழி, ஒன்பதாம்பாட்டு. இப்பாட்டுக்கு அர்த்தம் - 'அடிமையில்' இத்யாதி. நாட்டுகை-ஓலையில் எழுத்தாணியை நாட்டுகை; அதாவது - எழுதுவிக்கை. நாட்டென்று - எழுதென்று. "பாட்டினா லுன்னை யென்னெஞ்சத்திருந்தமை காட்டினாய்" என்றபோதே - வாக்கே ஸ்வதந்த்ரமாய்ப் பாடினதென்று தோற்றுகிறது. ஆக, 'ஏத்தியுள்ளப்பெற்றேன்' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம் - 'நாமுதல்வந்துபுகுந்து' என்று, அவனுள்ளே யிருந்து சொல்லுகையாலே யென்று ஒன்று; இரண்டாவது - கரணங்கள் 'முடியானே' யில் தனித்தனியே கூப்பிட்டாற்போலே அநுபவத்திலும் பரஸ்பரநிரபேக்ஷமாக அநுபவிக்கிறதென்று முக்கோட்டை - எல்லார்க்கும் கவி தோற்றுவிக்கும் விநாயகஸ்தலம். இத்தால் பலிதம் - 'அப்படியே' இத்யாதி. வியன்ஞாலத்திலே*

*"விதிசூழ்ந்ததால்" என்றதிறே. [என்னகுறை நமக்கே] - 'ரக்ஷமாமி'க்குஇலக்காகாதே க்ருபைக்கு விஷயமான நமக்கு ஒருகுறையுண்டோ? நமக்கு ஒருகுறையுண்டாகையாவது - க்ருபையைப் பரிச்சிந்நமாக்குகையிறே. "ஸ:" (ஸ:)-ரக்ஷணமே ஸ்வரூபமாயிருக்குமவர். "தம்" (தம்)-ப்ராதிகூல்யத்திலே முதிர நின்றவனை. "நிபதிதம்பூமௌ" (நிபதிதம்பூமௌ)-தேவத்வத்தாலே தரையில் கால்பாவாதவன் போக்கற்றுத் தரையிலே வந்து விழுந்தான். ப்ரஜை தீம்புசெய்தால் பிதா ஶிக்ஷிக்கத் தொடர்ந்தால் மாதாவின்காலிலே விழுமாபோலே காணும், இவன் பூமியிலே விழுந்தது. "ஶரண்ய:" (ஶரண்ய:)-ஏதேனும் தசையிலும் சரணவரணார்ஹரானவர். "ஶரணாகதம்" (ஶரணாகதம்)-கண்வட்டத்திலே அநந்யகதித்வம் தோற்றவிழுந்துள்ளவனை. "வதார்ஹமபி" (வதார்ஹமபி) - பெருமாள் ஸித்தாந்தத்தாலும் வதார்ஹனே. "காகுத்ஸ்த:" (காகுத்ஸ்த:) - குடிப்பிறப்பால்வந்த நீர்மையாலே ரக்ஷித்தார். 'குடிப்பிறப்பு தண்டயரை தண்டிக்கைக்கும் உடலாயிராதோ?' என்னில்,—"க்ருபயா" (க்ருபயா)-நாம தொடங்கின கார்யம் ப்ரபலகர்மத்தால் தலைக்கட்டவொண்ணாதாப்போலே, அவரும் க்ருபாபரதந்த்ரராகையாலே நினைத்தவை தலைக்கட்டமாட்டார். அவன் க்ருபை விளையும் ஸமயமதனைன், அதுக்குமேலே க்ருபை விளைந்தது, இனி அவர் எவ்வழியாலே தண்டிப்பர்? [என்னகுறைநமக்கே] - எனக்குக் குறை யுண்டாகையாவது - அவன் க்ருபை பரிச்சிந்நவிஷயமாகையிறே. (எ)

## எட்டாம்பாட்டு.

நமக்கும்பூவின்மிசைநங்கைக்கும் இன்பனை ஞாலத்தார்
தமக்கும்வானத்தவர்க்கும்பெருமானைத் தண்தாமரை
சுமக்கும்பாதப்பெருமானைச் சொல்மாலைகள் சொல்லுமாறு
அமைக்கவல்லேற்கு இனியாவர்நிகர்அகல்வானத்தே.

'நமக்கு' இத்யாதி. ப்ரயோகம் காட்டுகிறார் 'விதிசூழ்ந்தது' இத்யாதி. க்ருபாவிஷய பூதராகையைக்கொண்டு 'ஒருகுறையுமில்லை என்றார்; குறையில்லாமையை வ்யதிரேகத்தாலே த்ருடீகரிக்கிறார் - 'நமக்கு' இத்யாதி. 'க்ருபை அவனுக்குத் தவிரப்போகாது' என்றதுக்கு ப்ரமாணம் - 'ஸ:' இத்யாதி. "ஸ தம் நிபதிதம் பூமௌ ஶரண்ய: ஶரணாகதம் । வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்" இதி ஸுந்தரகாண்டே (ஸர். ௩௮.) ஹநூமந்தம்ப்ரதி ஸீதா. தச்சப்தம்-ரக்ஷகத்வப்ரஸித்தியிலே. "பர்யபாலயத்" என்றதைக் கடாக்ஷித்து, 'ரக்ஷணமே' இத்யாதி. த்விதீய தச்சப்தம் - ப்ராதிகூல்யப்ரஸித்தியிலே. "நிபதிதம்" என்கிற பதஸாமர்த்யங்கொண்டு பூமியி லென்கிறது ஸித்தமாயிருக்க, 'பூமௌ' என்று விசேஷித்ததுக்கு ஹாவம் - 'தேவத்வத்தாலே' இத்யாதி. பாவாத - வைக்கப்போகாத. போக்கற்று - கதிகெட்டு. பூமியிலே விழுகைக்கு ஹேத்வந்தரம் - 'ப்ரஜை' இத்யாதி; ரஸோக்தியாதல். 'கண்வட்டத்திலே' இதி. "ஶரணம்" என்று - க்ருஹமாய், அதாவது - இவர்கண்வட்டத்தைச் சொல்லுகிற தென்றபடி. "வதார்ஹமபி" இத்யாதியைக் கடாக்ஷித்து அபிஶப்தத்துக்கு அர்த்தம் - 'பெருமாள்' இத்யாதி. 'அபி'-ப்ராணனோடே யிருக்கப்பண்ணும் தண்டத்துக்கு அர்ஹனன்றிக்கே வதத்துக்கே அர்ஹனாலு மென்றபடி. குடிப்பிறப்பால்வந்த நீர்மையாவது - ஶரணாகதனை இந்த்ரனுக்காக அஸுரர்களை நிக்ரஹித்த தயை. அவனை வதியாமைக்கு ஹேத்வந்தரம் - 'அவன்' இத்யாதி. விளைந்தது - விளைந்தால் தண்டிப்பாரில்லையே யென்று த்வநி. ப்ரமாணமயநாநந்தரமும் குறையில்லாமையை த்ருடீகரிக்கிறார் - 'எனக்கு' இத்யாதி. "தேஹாத்ஸம்பவ ஸம்பவாதிநிஜா [illegible] க்ஷுத்பிபாஸாதிவராதிகா: । யத்ஸேவா பிஶதே நாஸி நக்ஷத்ரஶீஸ்வரே" இதி ஸ்ரீவாராஹே. க்ரமேண அந்வய:. (எ)

* திருவாய்மொழி - ௨, ௭, ௯.

**ஆ.**—(நமக்கும்.) இன்று தன்திருவடிகளை ஆஶ்ரயித்த நாமும் பெரியபிராட்டியாரு மானால், பெரியபிராட்டியார்பக்கலிற்காட்டிலும் நம்பக்கலிலே வ்யாமுக்தனாய், அநாஶ்ரிதரான தேவர்களுக்கும் மநுஷ்யர்களுக்கும் ஒருவாசியின்றியே ஒக்க அரியனாய், விதளாருணாரவிந்தாதிக ஸௌகுமார்ய சரணயுகளனாயிருந்த எம்பெருமான் என்னை 'ஒன்று சொல்லுங்காண்' என்று அருளிச்செய்தருளினால், சொல்லலாம்படி சொல்மாலைகள் அமைக்கவல்லேற்கு இனித் திருநாட்டிலேதான் நிகருண்டோ? என்கிறார்.

**ஒ.**—எட்டாம்பாட்டில், எம்பெருமானுக்குத் தம்பக்கல்உண்டான ஸங்காதிஶயத்தை அநுஸந்தித்து, இப்படியிருக்கிற ஸர்வேஶ்வரனைக் கவிபாடவல்ல எனக்குத் திருநாட்டிலும் நிகரில்லை என்கிறார்.

[நமக்கும் பூவின்மிசை நங்கைக்கு மின்பனை] - தன்திருவடிகளை ஆஶ்ரயித்த நம்திறத்தில் பெரியபிராட்டியார்பக்கலிற்காட்டிலும் ஸ்நிக்தனானவனை. [ஞாலத்தார்தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானை] - எம்பெருமான் இப்படி ஸ்நேஹிக்கைக்குக் காரணம் நிரூபக ஸித்தமான ஶேஷஶேஷிபாவம். [தண்தாமரை சுமக்கும் பாதப்பெருமானை] - குளிர்ந்திருந்துள்ள ஆஸநபத்மத்தாலல்லது செல்லாதபடியான ஸௌகுமாரமான திருவடிகளையுடைய ஸர்வேஶ்வரனை. ஆஸநபத்மத்தோடு ஒக்க என்சொல்மாலைகளும் அவனுக்கு ஸ்ப்ருஹணீயமென்று கருத்து. [சொல்மாலைகள் சொல்லுமாறு அமைக்க வல்லேற்கு] - எம்பெருமானுடைய குணங்களை நினைத்துக் கலங்கச்செய்தே கவிபாடுகைக்கு ஈடாக நெஞ்சை நிலைநிறுத்தி அதிலே உபக்ரமிக்கக்கடவ எனக்கு. 'ஒருகவிசொல்' என்றால், அப்போதே சொல்லவல்ல எனக்கு என்றும் சொல்லுவர்.

**ப.**—அநந்தரம், உபயவிபூதியுக்தனான ஸர்வேஶ்வரனை ஸ்துதிக்கிற எனக்குப் பரமபதவாஸிகளில் ஸத்ருஶருண்டோ? என்கிறார்.

நமக்கும் - (அநாத்யஜ்ஞாநாதி ஸம்ஸர்க்கத்தாலே நித்யஸம்ஸாரிகளுக்கும் இவ்வருகான) நமக்கும், பூவின்மிசை நங்கைக்கும் - பூவிற்பிறப்பால்வந்த போக்யதையாலும் ஆத்மகுணபூர்த்தியாலும் நித்யஸூரிகளுக்கும் அவ்வருகான பிராட்டிக்கும், இன்பனை - (தன்போக்யதாதிஶயத்தாலே) ஆநந்தஜநகனானவனாய், (இவ்விரண்டாகாரத்துக்கும் உபபாதகமாய்) ஞாலத்தார்தமக்கும் - (அவிஶேஷஜ்ஞரான) லீலாவிபூதியிலுள்ளாரோடு, வானத்தவர்க்கும் - (விஶேஷஜ்ஞரான) பரமபதவாஸிகளோடு வாசியற, பெருமானை - நிருபாதிகமான ஸர்வஶேஷித்வத்தையுடையனாய், (இந்தபோக்யதைக்கும் மேன்மைக்கும் மேலே ஸௌந்தர்யஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்யாதி குணங்களுக்குத் தோற்று), தண் - செவ்வியையுடைய, தாமரை - தாமரை, சுமக்கும் - சுமக்கும்படியான, பாதம் - திருவடிகளையுடையனான, பெருமானை - ஸர்வாதிகனை, (இவ்வாகாராநுஸந்தாநத்தாலே உடைகொலைப்படாதே), சொல்மாலைகள் - ஶப்தஸந்தர்ப்பங்களை, சொல்லும்ஆறு - சொல்லும்படியாக, அமைக்க வல்லேற்கு - (நன்றாக அமைத்து) தரிக்கவல்ல எனக்கு, அகல்-அதிவிஸ்தீர்ணையான, வானத்து - த்ரிபாத்விபூதியில், யாவர் - (அவிகாராகாரராய் அநுபவிக்கிறவர்கள்) ஆர்தான், இனி - இனி, நிகர் - ஒப்பார்?

இந்தளத்தில் தாமரைபோலே இருள்தருமாஞாலத்திலே அநுபவிப்பார்க்கு, தெளிவிசும்பி லநுபவிப்பார் ஸத்ருஶரல்லர்களென்று கருத்து.

**இ.**—எட்டாம்பாட்டில், ஈஶ்வரனுக்குத் தம்பக்கலுண்டான ஸங்காதிஶயத்தை அநுஸந்தித்து இப்படி அவனுடைய உபயவிபூதியோகத்துக்கும் ஸௌகுமார்யத்துக்கும் தகுதியாகக் கவிசொல்லவல்ல எனக்கு நித்யஸூரிகளும் ஒப்பல்லர் என்கிறார்.

[நமக்கும்] - இன்று தன்திருவடிகளை ஆஶ்ரயித்த நமக்கும்; நித்யஸம்ஸாரிகளுக்கும் இவ்வருகான நமக்கும். "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்றாரிறே. [பூவின்மிசைநங்கைக்கும்] - நித்யஸூரிகளுக்கும் அவ்வருகாய் ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் பூர்ணையாயிருந்துள்ளவளுக்கும். [பூவின்மிசை நங்கை] - புஷ்பத்தில் பரிமளத்தை வகுத்தாற்போலேயிருந்துள்ள ஸௌகுமார்யத்தையும் போக்யதையையுமுடையவள். இத்தலை நிறைவின்றிக்கேயிருக்கிறப்போலேயாயிற்று, அத்தலையில் குறைவற்றிருக்கிறபடி. [இன்பனை] - ஸ்நேஹித்து இனியனுமிடத்தில் முற்பட்டிருப்பது நம்பக்கலிலே. "க்ஷயிஷ்ணுஷு ஸ்நேஹவதீ". ஒருத்தனுக்கு ப்ரஜைகள் பலரானால் அவிலக்ஷணர்பக்கலிலேயிறே ஸ்நேஹம் மிக்கிருப்பது. [ஞாலத்தார் இத்யாதி] - இப்படி நெடுவாசிபட்ட விஷயங்களில் ஸ்நேஹம் ஒத்திருக்கைக்கு அடி ஸம்பந்தம் ஒத்திருக்கை என்கிறது. [தண்தாமரை இத்யாதி] - குளிர்ந்த ஆஸநபத்மத்தாலே தரிக்கப்பட்ட திருவடிகளையுடைய ஸர்வேஶ்வரனை. திருவடிகளில் மென்மை குளிர்த்தி நாற்றம் தொடக்கமான போக்யதைக்குத் தோற்றுச் சுமக்கிறபடி. ஆஸநபத்மத்தாலல்லது தனக்கு ஸ்திதியில்லாதாப்போலே என்கவியாலல்லது தரிக்கமாட்டாதிருக்கை. [சொல்மாலைகள் இத்யாதி] - ஈஶ்வரன் அழைத்து 'நமக்கு ஒருகவி சொல்' என்றால், அப்போதே சமைக்கவல்ல எனக்கு என்று பூர்வர்கள் நிர்வாஹம்; பகவத்குணங்களிலே உடைகுலைப்பட்டிருக்கிற நெஞ்சை தரித்து நின்று கவிசொல்லவல்லேனாம்படி அமைக்கவல்ல எனக்கு என்று பட்டர் நிர்வாஹம். ஈஶ்வரன் விஷயீகரித்துக் குளிரநோக்கினால் அவ்வழகிலே சுழியாறுபடவேண்டியிறே இருப்பது. [இனி யாவர் நிகர் அகல்வானத்தே] - "ஹாவு ஹாவு ஹாவு" என்று களிக்கிறவர்கள்தான் எனக்கு எதிரோ? த்ரிபாத்விபூதி யென்னு, இங்கே இருந்து கவிசொல்லுகிற எனக்கு ஒத்தார்களோ? தெளிவிசும்பாகையாலே அந்நிலந்தானே சொல்லுவிக்கும்; இருள்தருமாஞாலமாகையாலே இந்நிலம் அத்தைத் தவிர்ப்பிக்கும். "சீதனையே தொழுவார் விண்ணுளாரிலுஞ் சீரியர்" என்னக்கடவதிறே.

ஈடு.—எட்டாம்பாட்டு. எம்பெருமானுக்குத் தம்பக்கலுண்டான ஸங்காதிஶயத்தை அநுஸந்தித்து, அவனுடைய உபயவிபூதியோகத்துக்கும் ஸௌகுமார்யத்துக்கும் தகுதியாகக் கவிசொல்லவல்ல எனக்குத் திருநாட்டிலும் நிகரில்லை யென்கிறார்.

[நமக்கும்] - இன்று தன்திருவடிகளை யாஶ்ரயித்த நமக்கும். நித்யஸம்ஸாரிகளுக்கும் இவ்வருகாயிருக்கிற நமக்கும். "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்றாரிறே. [பூவின்மிசை நங்கைக்கும்] - நித்யஸூரிகளுக்கும் அவ்வருகாய், ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் பூர்ணையாயிருக்கிறவளுக்கும். [பூவின்மிசைநங்கை] - புஷ்பத்தில் பரிமளத்தை வகுத்தாற்போலே யிருந்

---

எட்டாம்பாட்டு - 'நமக்கும்' இத்யாதி. பிராட்டிக்கு முன்னே தம்மை எடுத்து, 'ஸ்நிக்தனனவன்' என்றதால் பலிதத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, 'ஞாலத்தார்' என்று தொடங்கி மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - 'எம்பெருமானுக்கு' இத்யாதி.

'நித்யாஶ்ரிதை' என்றதுக்கு ப்ரதிகோடித்வேந ஒருதாத்பர்யம் - 'இன்று' இத்யாதி. 'நங்கை' என்று - குணபூர்த்திசொல்லுகிறதுக்கு ப்ரதிகோடித்வேந தாத்பர்யாந்தரம் - 'நித்யஸம்ஸாரிகளுக்கும்' இத்யாதி. 'நித்யஸம்ஸாரிகளுக்கும் இவ்வருகு' என்றதுக்கு ப்ரதிகோடியை அருளிச்செய்யாநின்றுகொண்டு, 'நங்கை' என்றதுக்கு அர்த்தம் - 'நித்யஸூரிகளுக்கும்' இத்யாதி. 'அவ்வருகாய்' என்றது - 'பூவின்மிசை' என்ற பதார்த்தமான ஸௌகுமார்யபோக்யதாதிகளாலே நித்யஸூரிகளில் விலக்ஷணை யென்றபடி. 'நங்கை' என்ற பதத்தின் அர்த்தம் - 'ரூபகுணத்தாலும்' இத்யாதி. 'பூவின்மிசை' என்றதுக்கு பாவம் – 'புஷ்பத்தில்' இத்யாதி. 'நமக்கும்'என்றதின் இரண்டாமர்த்தத்துக்கு ப்ரதிகோடித்வேந 'நங்கை' என்றதுக்கு

துள்ள ஸௌகுமார்யத்தையும் போக்யதையையு முடையவள். இத்தலை நிறைவின்றியிலே யிருக்கிறுப்போலேயாயிற்று, அத்தலை குறைவற்றிருக்கிறபடி. [இன்பனை]-இன்பனுமிடத்தில், முற்பாடு இங்கேயாய்ப் பின்பாயிற்று அவளுக்கு ஸ்நேஹித்திருப்பது. "**த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம**" (த்வயிகிஞ்சித்ஸமாபந்நேகிம்கார்யம்ஸீதயாமம) - பெருமாள் எழுந்தருளிநிற்கச்செய்தே ராவணன் கோபுரசிகரத்திலே வந்து தோற்றினவாறே, 'ராஜத்ரோஹியான பையல் திருமுன்பே நிற்கையாவதேன்?' என்று மஹாராஜர் அவன்மேலே எழப்பாய்ந்து வென்று வந்தபோது பெருமாள் அருளிச்செய்கிறுர்; "**ஏவம் ஸாஹஸயுக்தாநி ந குர்வந்தி ஜநேஶ்வரா:**" (ஏவம்ஸாஹஸயுக்தாநிநகுர்வந்திஜநேஶ்வரா:)-சிலர்மேல்விழ வேண்டினால், பரிகரபூதர் நிற்க ப்ரதாநரோ மேல்விழுவார்? "**லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி**" (லோகநாத:புராபூத்வாஸுக்ரீவம்நாதமிச்சதி) - கிடைப்பது கிடையாதொழிவது, இச்சியாநின்றுர். "**ஸுக்ரீவம் ஶரணம் கத:**"(ஸுக்ரீவம்ஶரணம்கத:) - 'ஸ்ரீவிபீஷணுழ்வானைப் புகுரவொட்டேன்' என்றுர், மஹாராஜர்; 'இவன் புகுராவிடில் நாம் உளோமாகோம்' என்கிறுர் பெருமாள்; இப்படி இருவரும் விப்ரதிபத்திபண்ணின இதுக்குக் கருத்தேன்?' என்று சீயர் கேட்க, 'இருவரும் ஶரணுகதரானவர்களை விடோம் என்று விப்ரதிபத்திபண்ணுகிறுர்கள்காணும்' என்று பட்டர் அருளிச்செய்த வார்த்தை. "**ஸுக்ரீவம் ஶரணம் கத:**" (ஸுக்ரீவம்ஶரணங்கத:) என்றத்தை நடத்தப்பார்த்தார் மஹாராஜர்; "**ராவணம்**

ஹாவம் -'இத்தலை' இத்யாதி. 'நமக்கும்' என்று முற்படச் சொன்னதுக்கு ஹாவம் - 'இன்பனுமிடத்தில்' இத்யாதி. முற்பாட்டினெல்லைக்கு ப்ரமாணம்-'த்வயிகிஞ்சித்' இத்யாதி. இதம் அஶக்ருச்லிகிதம். எடுத்த ஶ்லோகத்துக்குஅவதாரிகை - 'பெருமாள்' இத்யாதி. இதுக்குக் கீழில் ஶ்லோகத்திலே ஒர்த்தவிஶேஷ முண்டாகையாலே அத்தைஎடுத்து அருளிச்செய்கிறுர், 'ஏவம்' இத்யாதி. "அஸம்ப்ருஷ்ய மயா ஸார்த்தம் தவேதம் ஸாஹஸம் க்ருதம்" இதிபூர்வார்த்தம்.யுத்தகாண்டே (௪௧-௨)பையல்-க்ஷுத்ரன்-எழப்பாய்ந்து-கிளம்பிக்குதித்து. வென்று - ஜயித்து. "ஜநேஶ்வரா:-ந குர்வந்தி" என்கையாலே - தம்மைப் பரிகரமாக நினைத்துச் சொல்லுகிறு ரென்கிறுர் - 'சிலர்' இத்யாதி. இத்தால் - பரிகரபூதனுன நான் நிற்க, என்னையேவி, என்கையிலே கார்யமாகாவிடிலன்றே நீர் மேல்விழவேண்டுவ தென்று அருளிச்செய்தா ரென்று கருத்து. தம்மைப் பரிகரமாக நினைத்திருப்ப ரென்னுமதுக்கு ப்ரமாணம் - 'லோகநாத:' இத்யாதி. "ஸர்வலோகஶரண்யாய ராகவாய மஹாத்மநே । லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி ॥ பிதா யஸ்ய புரா ஹ்யாஸீச்சரண்யோ தர்மவத்ஸல: । தஸ்ய புத்ர: ஶரண்யஶ்ச ஸுக்ரீவம் ஶரணம் கத:" இதி கிஷ்கிந்தாகாண்டே(௪-க அ,க௬)பம்பாதீரே ஹநுமந்தம் ப்ரதி லக்ஷ்மண:. த்வாப்ரத்யயம் அங்கத்வவிதாயகம்.'இச்சதி' என்றதுக்கு ஹாவம்-'கிடைப்பது' இத்யாதி. பரிகரபூதரென்னுமதுக்கு ப்ரமாணுந்தரம் - 'ஸுக்ரீவம்' இத்யாதி. ப்ரஸங்காதைதிஹ்யம்-'ஸ்ரீவிபீஷணுழ்வானை' இத்யாதி. 'புகுரவொட்டேன்' என்றது-"வத்யதாம்" என்றத்தை நினைத்து. உளோமாகோம் என்றது - "ந த்யஜேயம் கதஞ்சந" என்றத்தைப்பற்ற. 'இப்படி இருவரும்' இத்யாதி-ப்ராஸங்கிகஶோக்தி.'விப்ரதிபத்தி' இதி-மஹாராஜரும் பெருமாளும் பரஸ்பரம் ஶேஷபூதராக நினைத்திருக்க, ஒருவர்சொல்லிற்று ஒருவர் கேளாதே, ஸ்ரீவிபீஷணுழ்வானைப் 'புகுரவேணும்' என்றும், 'புகுரவொட்டேன்' என்றும் இங்ஙனே விருத்தப்ரதிபத்தி பண்ணின இதுக்குக் கருத்தென்? என்றபடி. பரிஹாரம் - 'இருவரும்' இத்யாதி; பரிவாலே யென்றபடி. அல்லது, தத்த்வஸ்திதியில், மஹாராஜரை 'ஶரண்யர்' என்னப்போகாதிறே. 'ஸுக்ரீவம்ஶரணங்கத:' என்றதுவும் - ரஸோக்தியித்தனை. உக்தார்த்த விவரணம் - 'ஸுக்ரீவம்' இத்யாதி. அதாவது - பெருமாள் தன்னை ஶரணம்புகுருகையாலே, 'பெருமாளுடைய மௌக்த்யத்தாலே ராக்ஷஸனைப் புகுரவிட்டால் என்னதீங்குவருகிறதோ?' என்று எற்கவே அவரை நோக்கப் பார்த்தா ரென்றபடி. பட்டர் பெருமாளுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தைப் பற்ற ரஸோக்தியாலே பரிஹரித்தாரேயாகிலும்; மஹாராஜர் பெருமாளுக்குத் தம்மை ஶேஷபூதராக நினைத்திருக்கையாலே, ஶேஷியான பெருமாளுக்குப் பரிவராகையாலே, 'விபீஷணுழ்வானைப் புகுரவொட்டேன்' என்றுரென்று பட்ட

ஶரணம் கத:" (ராகவம்ஶரணங்கத:) என்றத்தை நடத்தப் பார்த்தார் பெருமாள்: ஆகையிறே, "ஆநய" (ஆநய) என்று-அவரை இடுவித்து அழைத்துக்கொள்ளவேண்டிற்று. "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே" (த்வயிகிஞ்சித்ஸமாபந்நே)-'நீர் மஹாராஜரான தரம் குலைய அவன் ஒருவார்த்தைசொல்லுமாகில், நீர் தேடிப்போகிற சரக்குத்தான் நமக்குஎன்செய்ய?' என்றாரிறே. 'இப்படி அவன்இருக்கைக்கு அடியேன்'? என்னில்,—[ஞாலத்தார் இத்யாதி]-இப்படி நெடுவாசிபட்ட விஷயங்களிலே ஸ்நேஹம் ஒத்திருக்கைக்குஅடி, இரண்டிடத்திலுள்ளாரோடும் ஒத்திருக்கச்செய்தே ப்ராப்தி, இவர்படுக்கைப் பற்றிலுள்ளவராகையாலே. அவன் ஶேஷியான நிலையும் இத்தலை பரதந்த்ரமான நிலையும் ஒத்திருக்கையாலே. மாதாபிதாக்கள் ப்ரஜைகளில் குறைவாளர்பக்கலிலேயிறே இரங்குவது; அத்தாலே ஸம்ஸாரிகள் முற்பட வேண்டுகிறது. அவ்விபூதியும் உண்டாயிருக்கவிறே, "ஸஹைகாகீ நரமேத" (ஸஹகாகீநரமேத) என்கிறது. [தண்தாமரைசுமக்கும் பாதப்பெருமானை] - குளிர்ந்த ஆஸநபத்மத்தாலே தரிக்கப்பட்ட திருவடிகளையுடைய ஸர்வஸ்வாமியை. குளிர்த்தியாலும் பரிமளத்தாலும் செவ்வியாலும் தாமரை திருவடிகளுக்குத் தோற்றுச் சுமக்கிறாப்போலே யாயிற்று இருக்கிறது. *"தாமரைநின்கண்பாதம்கையோவ்வா" என்றதிறே. [சொல்மாலைகள்]-"ஸர்வேஶ்வரன் 'ஆழ்வீர்!

---

ருக்குத் தத்த்வஸ்திதியைப்பற்ற ஹார்த்தஹாவமென்றபடி. "ஸோஹம் பருஷிதஸ்தேந தாஸவச்சாவமாநித: । த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் ஶரணம் கத:" (யுத். ௧௭, ௧௪) இதி விபீஷண:. பெருமாள் "ராகவம் ஶரணம் கத:" என்றத்தை நடத்தப் பார்த்தாராகில், மஹாராஜர்க்குத் தம்மை ஶேஷமாக நினைத்திருக்கும் நிலை குலையாதோ? என்ன, 'ஆகையிறே' இத்யாதி. அதாவது-மஹாராஜர்க்கு ஶேஷமாக நினைத்திருக்கையாலேயிறே, 'ஆநயைநம்ஹரிஶ்ரேஷ்ட' என்று மஹாராஜர்முன்னிலையாக அங்கீகரிக்க வேண்டிற்று என்றபடி. "ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட தத்தமஸ்யாபயம் மயா । விபீஷணோ வா ஸுக்ரீவ யதி வா ராவண: ஸ்வயம்" இதி ராம:. ப்ரக்ருத ஶ்லோகார்த்தகதநார்த்தமாக எடுக்கிறார், 'த்வயிகிஞ்சித்' இத்யாதி. 'கிஞ்சித்' என்றதுக்கு அர்த்தம் 'ஒருவார்த்தை சொல்லுமாகில்' என்றது. ஒருவார்த்தையாவது-ஜாதிநிரூபணம்பண்ணுகை. தரம்-அதிஶயம். தேடிப்போகிற சரக்கு - பிராட்டி. 'இப்படி அவனிருக்கைக்கு அடியென்? என்னில்' என்கிற அவதாரிகாவாக்யத்துக்கு த்வேதா யோஜநா. அதாவது -'முற்பட இவர்பக்கலிலே ஸ்நேஹிக்கைக்கு அடியென்? என்னில்' என்னுதல்; ஸம்ஸாரிகளுக்கும் இவ்வருகான நமக்கும் ரூபகுணங்களாலும் ஆத்மகுணங்களாலும் பூர்ணையான இவளுக்கும் ஸ்நேஹம் ஒத்திருக்கைக்கு அடியென்னென்னில்' என்னுதல். 'இப்படி' என்றது -'நமக்கும் பூவின்மிசை நங்கைக்கு மின்பன்' என்றத்தைக் கடாக்ஷித்து. த்விதீயஶங்கையை அநுவதிக்கிறார்-'இப்படிநெடுவாசிபட்ட விஷயங்களிலே ஸ்நேஹம் ஒத்திருக்கைக்கு அடி' என்று. முந்தின ஶங்கைக்குப் பரிஹாரம் - 'இரண்டிடத்திலுள்ளாரோடும்' இத்யாதி. ப்ராப்தி - ஒத்திருக்கச்செய்தே இத்யந்வய:. த்விதீயஶங்கைக்குப் பரிஹாரம் - 'அவன்ஶேஷியான' இத்யாதி. இந்தப்பரிஹாரங்களுக்கு - 'ஞாலத்தார்தமக்கும் வானத்தவர்க்கும் பெருமான்' என்கிற பதங்களிலே நோக்கு. 'படுக்கைப்பற்று' என்றது - 'ஞாலம்' என்று பூமியாய், அத்தாலே - ஸ்ரீபூமிப்பிராட்டியைச் சொல்லி, அவளுடைய விபூதியாகையாலே இது படுக்கைப்பற்று என்றபடி. முந்தினஶங்கைக்குப் பரிஹாராந்தரம் - 'மாதாபிதாக்கள்' இத்யாதி. ஆக, 'நமக்கும்' இத்யாதியைப் பற்ற ஶங்கித்து, 'ஞாலத்தார்தமக்கும் வானத்தவர்க்கும்பெருமான்' என்றத்தைப் பற்றப் பரிஹரித்தாராயிற்று. குறைவாளர்பக்கலிலே முற்பட இரங்கு மென்னுமதுக்கு நியாமகம் ஏது? என்ன, 'அவ்விபூதியும்' இத்யாதி. 'தரிக்கும்' என்னாதே, 'சுமக்கும்' என்றதுக்கு பாவம்-'குளிர்த்தியாலும்' இத்யாதி. 'தோற்றுச்சுமக்கும்' என்றதுக்கு ஸம்வாதமாக "ஸஞ்சிந்தயந் பகவதஶ்சரணாரவிந்தம் ..." இத்யாதி ஶ்லோகம் அநுஸந்தேயம். தாமரை திருவடிகளுக்குத் தோற்றிருக்குமோ? என்ன, 'தாமரைநின்' இத்யாதி. பூர்வர்கள்நிர்வாஹம் - 'அமைக்கவல்லேற்கு' என்றது - ஆஶுகவித்வம் சொல்லிச் சமைக்கவல்லேனை எனக்கு என்றபடி; பட்டர்நிர்வாஹம், தரித்து

* திருவாய்மொழி - ௩, ௧, ௨.

நம்மை ஒருகவி சொல்லும்' என்றால், அப்போதே கவிசொல்லிச் சமையும்படியாக வல்ல எனக்கு என்கிறார்" என்று முன்புள்ள முதலிகள் நிர்வஹிக்கும்படி; அங்ஙனன்றிக்கே, பட்டர், "என்னாகியே தப்புதலின்றித் தனைக் கவிதான்சொல்லி" என்கிறபடியே-ஸர்வேஶ்வரன் கவிபாடினானாகையாலே கவிபாடத் தட்டில்லை; அவன் அங்கீகரித்துத் திருக்கண்களாலே குளிரக்கடாக்ஷித்து, 'நீர் ஒருகவி சொல்லும்' என்றால், ப்ரீதியாலே உடைகுலைப்படாதே தரித்துநின்று சொல்லவல்லேனான எனக்கு" என்று அருளிச்செய்வர். அவனுடைய உபயவிபூதியோகத்தால் வந்த ஐஶ்வர்யத்துக்கும் ஸௌகுமார்யத்துக்கும் தகுதியாம்படியான கவிபாடவல்ல எனக்கு. [இனி யாவர்நிகரகல்வானத்தே] - பரமபதத்திலே தரித்துநின்று, "அஹமந்நமஹமந்நமஹமந்நம்" அஹமந்நமஹமந்நமஹமந்நம்) என்னுமவர்கள் எனக்கு என்கொண்டார்? த்ரிபாத்விபூதியாய்ப் பரப்புடைத்தாமத்தனையோ வேண்டுவது? *தெளிவிசும்பாகையாலே அந்நிலம் தானே சொல்லுவிக்கும், † இருள்தருமாஞாலமாகையாலே இந்நிலம் அத்தைத் தவிர்ப்பிக்கும்; "சீதனையேதொழுவார் விண்ணுளாரிலும் சீரியர்" என்னக்கடவதிறே. (அ)

## ஒன்பதாம்பாட்டு.

வானத்தும்வானத்துள்ளும்பரும் மண்ணுள்ளும்மண்ணின்கீழ்த்
தானத்தும் எண்திசையும்தவிராதுநின்றான் தன்னை
கூனற்சங்கத்தடக்கையவனைக் குடமாடியை
வானக்கோனைக் கவிசொல்லவல்லேற்கு இனிமாறுண்டே.

நின்று சொல்லவல்லேனான எனக்கு என்றபடி. உடைகுலைப்படாதே - பாரவஶ்யம் பெறாதே. 'சொல்மாலைகள்' இத்யாதிக்கு - ஶப்தஸந்தர்ப்பங்களை, சொல்லுமாறு - சொல்லும் ப்ரகாரம், அமைக்கவல்லேற்கு - சொல்லிமுடிக்கவல்ல எனக்கு என்று முந்தின நிர்வாஹத்துக்கு ஶப்தார்த்தம்; பட்டர்நிர்வாஹத்துக்கு—ஶப்தஸந்தர்ப்பங்களை, சொல்லும்படியாக அமைக்க தரித்துநின்று, வல்லேற்கு - கவிசொல்ல வல்ல எனக்கு என்று ஶப்தார்த்தம். 'ஞாலத்தார்' இத்யாதியைக் கடாக்ஷித்து பாவம் - 'அவனுடையஉபயவிபூதி' இத்யாதி. இவ்விடத்திலே - முதலிகள், 'கீழேதானே, ஞாலத்தார்தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானாகையாலே-நமக்கும் பூவின்மிசைநங்கைக்குமின்பனை' என்று ஹேதுவாகச் சொல்லியிருக்க; இவ்விடத்திலும், 'உபயவிபூதியோகத்தால் வந்த ஐஶ்வர்யத்துக்கும் ஸௌகுமார்யத்துக்கும் தகுதியாம்படியான கவிபாடவல்ல எனக்கு' என்று சொல்லுகிறபடி யெங்ஙனே?' என்று கேட்க, 'காகாக்ஷிந்யாயேந அந்வயிக்கக்கடவது' என்று அருளிச்செய்தார். அதாவது - 'ஞாலத்தார்தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானாகையாலே - நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும்இன்பனை-ஞாலத்தார்தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானைத் தண்டாமரைசுமக்கும் பாதப்பெருமானை - சொன்மாலைகள் சொல்லுமாறு அமைக்கவல்லேற்கு' என்று இங்ஙனே வாக்கடவதென்றபடி. என்கொண்டார் - என்ன ஸத்ருஶர்? ஸத்ருஶரோ? என்றபடி. அகல்வானத்தே இனி யாவர் நிகர்? அகல்வானத்தே உமக்கு எதிரில்லாதிருக்குமோ? என்ன, 'த்ரிபாத்விபூதியாய்' இத்யாதி. "அஹமந்நம்" என்று அவர்களும் கவி சொல்லாநிற்க, அவர்களில் தமக்கு அதிசயமேது? என்ன, 'தெளிவிசும்பு' இத்யாதி. தெளிவை விளைக்கும் விசும்பு இத்யர்த்தம். இங்கேயிருந்து கவிபாடுகிறவர்கள் நித்யஸூரிகளிற்காட்டில் அதிகரோ? என்ன, 'சீதனையே' இத்யாதி. இந்தளத்தில் தாமரைபோலே இருள்தருமாஞாலத்திலே அநுபவிப்பார்க்குத் தெளிவிசும்பிலே அநுபவிப்பார் ஸத்ருஶரல்லரென்று கருத்து. 'சீதனையேதொழுவார்' இத்யாதி: திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிற ஸ்ரீதளஸ்வபாவனானவனையே அநுபவிக்கப் பெற்றவர்கள் பரமபதவாஸிகளான ஸூரிகளிலும் கனத்தவர்களென்றபடி. திருவிருத்தம், எழுபத்தொன்பதாம்பாட்டு, "வேதனை" இத்யாதி. க்ரமேண அந்வயம். (அ)

* திருவாய்மொழி கூ, எ, ரு. † ஷை க௦, சு, க.

ஆ.—(வானத்தும்.) ஸ்வர்க்காத்யுபரிதநலோகங்களுக்கும் ப்ருதிவ்யாதி அதஸ்தந லோகங்களுக்கும் ததந்தர்வர்த்யகிலசராசரங்களுக்கும் ஆத்மபூதனாய், ஶங்கசக்ரகதாதரனாய், ஆஶ்ரிதபரித்ராணார்த்தமாக மநுஷ்யாதிரூபேண அவதீர்ணனாய், அதிமநோஹர திவ்யசேஷ்டிதனாய், ஸ்ரீவைகுண்டநாதனாயிருந்த எம்பெருமான்தன்னைக் கவிசொல்லவல்ல என்னோடு ஒக்குமோ, ஸர்வேஶ்வரனான எம்பெருமான்தான்? என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், அவனுடைய வ்யாப்த்யவதாராதிகளில் எங்கும்புக்குக் கவி சொல்ல வல்லேனென்று ஹ்ருஷ்டராகிறார்.

[வானத்து என்று தொடங்கி] - ஸ்வர்க்கம் தொடக்கமான மேலில் லோகங்களிலும் பூமிதொடக்கமான கீழில்லோகங்களிலும் அவ்விடங்களிலெல்லாம் உண்டான தேவமநுஷ்யாதி பதார்த்தங்களெல்லாவற்றிலும் நிரந்தரமாக வ்யாபித்துநின்றவனை. [கூனல்சங்கம் என்று தொடங்கி] - ஶங்கசக்ரகதாதரனாய்க்கொண்டு அப்ராக்ருததிவ்யதேஹத்தோடே ஆஶ்ரிதபரித்ராணார்த்தமாக மநுஷ்யாதிரூபேண வந்து திருவவதாரம்பண்ணியருளி அதிமநோஹரமான குடக்கூத்து முதலான திவ்யசேஷ்டிதங்களையுடையனான ஸ்ரீவைகுண்டநாதனைக் கவி சொல்ல வல்ல எனக்கு எதிருண்டோ ?

ப.—அநந்தரம், வ்யாப்திதஶையோடு அவதாரதஶையோடு வாசியற விளாக்குலை கொண்டு ஸ்துதிக்கவல்ல எனக்கு ஶத்ருஶருண்டோ? என்கிறார்.

வானத்தும் - ஆகாஶஶப்தவாச்யமான ஸ்வர்க்கத்திலும், உள் வானத்து - ஊர்த்வ காஶவர்த்திகளான, உம்பரும் - உபரிதநலோகங்களிலும், மண்ணுள்ளும் - பூமிக்குள்ளும், மண்ணின்கீழ் தானத்தும் - பூமியின்கீழ் பாதாளஸ்தாநங்களிலும், எண் திசையும் - (இவற்றிலுண்டான தேவாதி ஜாதிபேதத்தாலும் ப்ராஹ்மணாதி வர்ணபேதத்தாலும்) அஷ்டவிதமான பதார்த்தங்களிலும், தவிராது - ஒன்றும் நழுவாதபடி, நின்றான்தன்னை - வ்யாபித்துநின்ற ஸ்வரூபத்தையுடையனாய், (இப்படி முகந்தோன்றாமேநின்று ரக்ஷிக்கையன்றியே), கூன்-புடையுடைமையாலே கூனியாய், நல் - தர்ஶநீயமான, சங்கம் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடைய, தட - பெரிய, கையவனை - திருக்கையையுடையனாய், குடமாடியை - குடக்கூத்துமுகத்தாலே ஸர்வஜநமநோஹாரியான சேஷ்டிதங்களையுடையனாய், (இந்நிலையிலே), வானம்கோனை - நித்யஸூரிகளும் அநுபவிக்கும் மேன்மையையுடையனானவனை, (வ்யாப்தியோடு அவதாரத்தோடு சேஷ்டிதத்தோடு பரத்வத்தோடு வாசியறக் கபளீகரித்து), கவி சொல்ல வல்லேற்கு - கவி சொல்லவல்ல எனக்கு, இனி - இனி, மாறு - எதிர், உண்டே - உண்டோ ?

ஓரோராகாரத்தை ஸ்துதிக்கப்புக்குப் பிற்காலிக்கும் உபயவிபூதியிலும் எதிரில்லையென்று கருத்து.

இ.—ஒன்பதாம்பாட்டில், அவனுடைய வ்யாப்த்யவதாராதிகள் எங்கும் புக்குக் கவி சொல்லவல்ல எனக்கு எதிருண்டோ? என்கிறார்; அங்குள்ளார் பரத்வத்தில் போக்யதையிலே கால்தாழ்ந்து இங்கு அறியார்கள். இங்குள்ள பராஶரபாராஶர்யாதிகள் ஓரோதுறைகளிலே மண்டியிருப்பார்கள். இவர் அங்ஙனன்றியே அங்கோடு இங்கோடு வாசியற பகவத்விஷயத்தில் புகைபுக்கவிடமெங்கும் புக்குக் கவிசொல்லி யநுபவிக்கவல்லராகையாலே என்னோடு ஒப்பாருண்டோ? என்கிறார்.

[வானத்தும்] - ஸ்வர்க்கத்திலும். [வானத்துள் உம்பரும்] - அதுக்குள்ளாய்ப் பெரியதாயிருக்கிற மஹர்லோகாதிகளிலும். [மண்ணுள்ளும் இத்யாதி] - பூமியிலும் கீழுண்டான பாதாளாதிகளிலும். [எண்திசையும்] - ஸர்வதேஶங்களிலுமுண்டான தேவாதிஸகலபதார்த்

தங்களிலும். [தவிராதுநின்றான்] - ஜாதிபோலே வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்கிறவனை. இத்தால், அணுத்ரவ்யங்களிலும் விபுவான ஆகாஶாதிகளிலும் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. அணுவுக்கு ஸர்வத்ர வ்யாப்தி இல்லை; விபுத்ரவ்யத்துக்கு நியந்த்ருதயா வ்யாப்தி இல்லை. [கூனற் சங்கத்தடக்கையவனை] - ஶங்கசக்ரகதாதரனாய்க்கொண்டு ஆஶ்ரிதபரித்ராணார்த்தமாக மநுஷ்ய ஸஜாதீயனாய் வந்து அவதரிக்கும். "ஜாதொஸி தெவதெவெஶ". [கூனற் சங்கம்] - "ப்ராஜ்ஞம் ப்ரஹ்வீக்ருத" என்ற இளையபெருமாளைப்போலே பகவதநுபவத்தால் வந்த ஹர்ஷத்தாலே ப்ரஹ்வீகரித்திருக்கை. [குடமாடியை] - ஊரிலுள்ளாரெல்லாருக்கும் காட்சிகொடுக்கைக்காகக் குடமாடினபடி. சேஷ்டிதங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். [வானக்கோனை] - ஒருநாளவன்றியிலே ஒருநாட்டுக்காகக் காட்சிகொடுத்துகொண்டிருக்கிறபடி, இப்படிப்பட்டவனைக் கவிசொல்ல வல்ல எனக்கு. [இனி மாறு உண்டே] - 'அகல்வானம்' என்று விஶேஷிக்கவேணுமோ? உபயவிபூதியிலும் எதிரில்லை.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. அவனுடைய வ்யாப்த்யவதாராதிகள் எங்கும்புக்குக் கவி சொல்லவல்ல எனக்கு எதிருண்டோ? என்கிறார். நித்யஸூரிகள் தாங்கள் அநுபவிக்கிற விஷயத்தில் போக்யதாப்ரகர்ஷத்தாலே வேறொன்று அறியார்கள்; முக்தர் "நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்" (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்று ஸம்ஸாரயாத்ரையை ஸ்மரியாதே நிற்பர்களாகையாலே, அவர்களும் நித்யரோடு ஒப்பர்கள்; இங்குள்ள பராஶரபாராஶர்யாதிகள் ஓரோதுறையிலே மண்டியிருப்பர்கள்; ஸ்ரீவால்மீகிபகவான் ராமாவதாரமல்லது அறியாதேயிருக்கும். ஸ்ரீபராஶரபகவானும் ஸ்ரீவேதவ்யாஸபகவானும் க்ருஷ்ணாவதாரமல்லது அறியார்கள்; ஸ்ரீஶௌநகபகவான் அர்ச்சாவதாரத்திலே ப்ரவணனாயிருக்கும்; அங்ஙனன்றிக்கே, ஸர்வேஶ்வரனை எங்கும்புக்குக் கவிபாடப்பெற்ற என்னோடு ஒப்பாருண்டோ? என்கிறார்.

[வானத்தும்] - ஸ்வர்க்கத்திலும். [வானத்துள்ளும்பரும்] - அதுக்குள்ளாய்ப் பெரியதாயிருக்கிற மஹர்லோகாதிகளிலும். [மண்ணுள்ளும்] - பூமியிலும். [மண்ணின்கீழ்த்தானத்தும்] - கீழிலுண்டான பாதாளாதிகளிலும். [எண்திசையும்] - எட்டுத்திக்கிலும். [தவிராது நின்றான் தன்னை] - அவ்வவதேசங்களிலும் அவ்வவதேஶவர்த்திகளான தேவாதிஸகலபதார்த்தங்களிலும், கடல்கோத்தாற்போலே எங்குமொக்க வ்யாபித்துப் பூர்ணமாக வர்த்திக்கிறவனை. இத்தால், அணுத்ரவ்யங்களிலும் விபுத்ரவ்யங்களிலும் வாசி சொல்லுகிறது. அணுவான ஆத்மா ஶரீரமெங்

---

ஒன்பதாம்பாட்டு - 'வானத்தும்' இத்யாதி. 'வ்யாப்த்யவதாராதிகள்' என்ற ஆதிஶப்தத்தாலே - பர வ்யூஹார்ச்சைகளைச் சொல்லுகிறது. 'தவிராதுநின்றான்' என்றத்தைப் பற்ற, 'வ்யாப்தி' என்றது. 'குடமாடி' என்றத்தைப்பற்றி, 'அவதாரம்' என்றது. 'வானக்கோனை' என்றத்தைப் பற்றப் பரத்வம். இம்மூன்றும் - வ்யூஹார்ச்சைகளுக்கும் உபலக்ஷணமென்றபடி. 'எதிருண்டோ' என்கிறதென்? மற்றும் பலரும் கவிபாடுகிறார்களில்லையோ? என்ன, 'நித்யஸூரிகள்' இத்யாதி. "யத்ர நாந்யத்பஶ்யதி" இத்யாதியைப் பற்ற, 'வேறொன்றறியார்கள்' என்றது. 'நோபஜநம்' இத்யாதி - உபஜநம் - ஜநஸமீபே வித்யமாநம், இதம் ஶரீரம் நஸ்மரந்; ஶரீரத்தை ஸ்மரியாதது-ப்ரக்ருதிப்ராக்ருதங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். 'இங்குள்ள' இத்யாதி வாக்யவிவரணம் - 'ஸ்ரீவால்மீகி' இத்யாதி.

'அதுக்குள்ளாய்' வானத்திற்காட்டில், உள்ளாய் - பெரிதாயிருக்கிற மஹர்லோகாதிகளிலும். "உள்ளும் மனமும் இடமும் மேலும்". இவ்விடத்தில் இடத்தைச் சொல்லி, அத்தாலே - பெருமையைச் சொல்லுகிறது. 'உம்பர்' என்று - மேலாய், அத்தாலே மேலுண்டான மஹர்லோகாதிகளைச் சொல்லுகிறது. அவ்வவதேசவர்த்திகளான லோகங்களைச் சொன்னது - தத்ஸ்தர்களுக்கும் உபலக்ஷணம். 'தவிராது' என்றதுக்குஅர்த்தம் - 'கடல்கோத்தாற்போலே' இத்யாதி. 'தவிராதுநின்றான்' என்றத்தால் ப்லிதம் - 'இத்தால்' இத்யாதி. 'வாசிசொல்லும்படி எங்ஙனே?' என்ன, 'அணுவான' இத்யாதி. ஈஶ்வரனுக்கு நியந்த்ருதயா

கும் வ்யாபிக்கமாட்டான்; விபுவான ஆகாசத்துக்கு நியந்த்ருதயா வ்யாப்தியில்லை. அதவா, [வானத்தும் இத்யாதி] - ஸ்வர்க்காத்யுபரிதநலோகங்களிலும் அதுக்குள்ளே மேலாயிருக்கிற ப்ரஹ்மாதிகளிலும் என்றுமாம். [கூனல்சங்கத்தடக்கையவனை] - இப்படி எங்கும் வ்யாபித்துநிற்கிறவன் வ்யாப்யமான பதார்த்தங்களோடுஒக்க வந்து அவதரிக்கும்படி சோல்லுகிறது. இப்படிஅவதரிப்பது தான் இதரஸஜாதீயனையோ? என்னில்;—*"ஆதியஞ்சோதியுருவைஅங்குவைத்திங்குப்பிறந்த" என்கிறபடியே தன்னுடைய †அப்ராக்ருததிவ்யஸம்ஸ்த்தாநத்தை இதரஸஜாதீயமாக்கிக்கோண்டாயிற்று. "ஜாதோஸிதேவதேவேஶ ஶங்கசக்ரகதாதர" (ஜாதோஸிதேவதேவேஶஶங்கசக்ரகதாதர) என்றுசோல்லும்படியாயிற்று. [கூனல்சங்கம்] - "ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநம்" (ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநம்) என்கிற இளையபெருமாளைப்போலே, பகவதநுபவத்தால்வந்த ஹர்ஷத்தாலே ‡ப்ரஹ்வீகரித்திருக்கை. வாயதுகையதாக அநுபவிக்கிறவனே [தடக்கையவனை]-உபயவிபூதியும் வந்து ஒதுங்கினாலும் பின்னையும் கைவிஞ்சியிருக்குமாயிற்று. [குடமாடியை] - எங்குமொக்க வ்யாபித்துநின்றாற்போலே, ஓரூராகக் காணும்படி குடக்கூத்தாடினபடி. சேஷ்டிதங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். [வானக்கோனை] - ஓரூரளவன்றிக்கே ஒருநாட்டுக்காகக் காட்சிகொடுத்துக்கோண்டிருக்கிறபடி. [கவிசோல்லவல்லேற்கு] - இப்படியிருக்கிறவனை எங்கும்புக்குக் கவி சோல்ல வல்ல எனக்கு. [இனி மாறு உண்டே] - 'அகல்வானம்' என்று விசேஷிக்கவேணுமோ? உபயவிபூதியிலும் எதிரில்லை. (கூ)

## பத்தாம்பாட்டு.

உண்டும்உமிழ்ந்தும்கடந்தும் இடந்தும் கிடந்தும்நின்றும்
கோண்டகோலத்தோடுவீற்றிருந்தும் மணங்கூடியும்
கண்டவாற்றால் தனதேயுலகெனநின்றான்தன்னை
வண்தமிழ்நூற்கநோற்றேன் அடியார்க்கு இன்பமாரியே.

---

வ்யாப்தி சொன்னது - வ்யாப்தி நியமநார்த்தமாகையாலே அர்த்தாத் ஸித்தம். த்விதீயார்த்தத்துக்கு, 'வானத்துள்ளும்பரும்'—வானத்திலே, உள்ளாயிருக்கிற - மேலாயிருக்கிற, ஶ்லாக்யராயிருக்கிற, உம்பரும் - ப்ரஹ்மாதிகளு மென்றபடி. 'உம்பர்' என்று - தேவர்களைச் சொல்லுகிறது. 'உள்' என்று - மேலைச் சொல்லுகிறது. 'கூனல்' இத்யாதி பதோபாதாநாநந்தரம், 'குடமாடி' என்றதுக்கு ஸாவம் - 'இப்படியெங்கும்' இத்யாதி. 'கூனற்சங்கம்' இத்யாதிக்கு ஸாவம் - 'இப்படிஅவதரிப்பது' இத்யாதி. 'இதரஸஜாதீயனையோ? - ப்ராக்ருத ஶரீரனையோ? என்றபடி. 'ஆதியஞ்சோதி' இதி - இதரஸஜாதீயனையிருந்தாலும், த்ரவ்யம் ப்ராக்ருதமன்றிக்கே, 'திவ்யம்' என்கிறபடியே அப்ராக்ருதமாயிருக்கு மென்றபடி. அப்ராக்ருதஸம்ஸ்த்தாநத்தை இதரஸஜாதீயமாக்கினதுக்கு ப்ரமாணம் - 'ஜாதோஸி' இத்யாதி. பஞ்சமேம்ஶே வஸுதேவ: — "திவ்யம் [illegible] தேவஸ்ய ஸாதோ நாவஸம்ஹார" இத்யுத்தரார்த்தம் "[illegible]" இதி அயோத்யாகாண்டே. (ச, சஉ) இவனுக்கு பகவதநுபவமுண்டோ? என்ன, "உண்பதுசொல்லில்" என்கிற பாட்டைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - 'வாயது' இத்யாதி. இது சாடு. 'அநுபவிக்கிறவனே' என்றது - அநுபவிக்கிறவனன்றோ? என்றபடி. "[illegible]" இத்யாதியைக் கடாக்ஷித்து ஸாவம் - 'உபயவிபூதியும்' இத்யாதி. 'குடமாடி' என்றது - ராமாவதாரத்துக்கும் உபலக்ஷணம். 'தவிராதுநின்றான்' என்ற வ்யாப்தியை த்ருஷ்டாந்தீகரித்து, இப்பதத்துக்கு ஸாவம் - 'எங்கும்' இத்யாதி. ஓரூர் - திருவாய்ப்பாடி. ஒருநாடு - பரமபதம். 'எங்கும் புக்கு' என்றது - 'வானத்தும்' இத்யாதியைப் பற்ற. 'மாறுண்டே' என்று - ஸ்தாநவிசேஷஞ் சொல்லாமைக்கு ஸாவம் - 'அகல் வானம்' இத்யாதி. க்ரமேண அந்வய:. (கூ)

---

* திருவாய்மொழி-ரு, ரு, ரு. ‡ ப்ரஹ்வீகரித்திருக்கை - (ஶரீரத்தை) வணக்கிக்கொண்டிருக்கை.
† அப்ராக்ருததிவ்யஸம்ஸ்த்தாநம் - திவ்யமங்களவிக்ரஹம்.

ஆ.—(உண்டும்.) நிகிலஜகந்நிரஜ்ஜோத்தரண க்ரமஜ்ஜோத்தரண ஸமாநஸ்தாநாஸந ஸம்ஶ்லேஷாதி ஸ்வகீயதிவ்யசேஷ்டிதங்களாலும், ஸ்வாஸாதாரண திவ்யஸௌந்தர்யத்தாலும், ஸ்வகீயதிவ்யரூபத்தாலும் தனதே உலகென நின்றான்தன்னைத் திருவாய்மொழிபாடுகைக்கு ஒரு மஹாஸாமர்த்யம் பண்ணினேன். பகவத்ஸ்வரூப ரூபகுணவிபூதியாதாத்ம்யப்ரதர்ஶகமாய் அதிமதுரமாய் அதிரமணீய ஸௌந்தர்யமாய் அதிமதுரஸ்வரமாயிருந்த இத்திருவாய்மொழியை, எம்பெருமானுக்கு நல்லராயிருப்பார் கேட்டால் என்படுவாரோ? என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், தாம் பாடுகிற கவிகளின் இனிமையைத் தாம் அநுஸந்தித்து, எம்பெருமானுக்கு நல்லராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் இவற்றைக்கேட்டால் எங்ஙனே இனியாராகிறரோ? என்கிறார்.

[உண்டும் என்று தொடங்கி] - உண்பது உமிழ்வது தொடக்கமாகவுண்டான திவ்ய சேஷ்டிதங்களெல்லாவற்றாலும் கண்டபடியால் தனக்கே ஶேஷம் இஜ்ஜகத் என்று சொல்லும் படி நின்ற ஸர்வேஶ்வரனை. கொண்டகோலத்தொடு வீற்றிருக்கையாவது - எல்லாருடைய மநோநயநஹாரியாம்படி ஒப்பித்து வீற்றிருக்கை. மணம்கூடுகையாவது - பூமிக்குஅபிமாநிநியான பிராட்டியோடே ஸம்ஶ்லேஷிக்கை. [வண்தமிழ்நூற்கநோற்றேன்] - திருவாய்மொழி பாடுகைக்கு பாக்யம் பண்ணினேன்; வண்தமிழாகையாவது - எம்பெருமானை உள்ளபடி காட்டவற்றாகை. [இன்பமாரி] - இன்பத்தை யுண்டாக்கும் மேகம்.

ப.—அநந்தரம், வ்யாப்யவிஷய ரக்ஷணார்த்தமான மநோஹாரி சேஷ்டிதங்களையுடையவனை, ஆஶ்ரிதர்க்கு ஆநந்தாவஹமாம்படி கவிபாட பாக்யம் பண்ணினேன் என்கிறார்.

உண்டும் - (ப்ரளயாபத்திலே) வயிற்றிலேவைத்தும், உமிழ்ந்தும் - (அநந்தரத்திலே) உமிழ்ந்தும், கடந்தும் - (அந்யாபிமாநம்போம்படி) அளந்து காற்கீழேயிட்டும், இடந்தும் - (அவாந்தரப்ரளயத்திலே வராஹரூபியாய்) இடந்தெடுத்தும், கிடந்தும்-("ஶிஶ்யே ஶ்ரீமான் இஹோதயே:" என்று கடற்கரையிலே) கிடந்தும், நின்றும் - ("ஸர்வலோகநிகேதநம்" என்று ராவணவதாநந்தரம் தேவர்களுக்குக் காட்சிகொடுத்து) நின்றும், கொண்ட - மீண்டுவந்து திருவபிஷேகம்பண்ணின, கோலத்தொடு - திருக்கோலத்தோடே, வீற்றிருந்தும்-எழுந்தருளியிருந்தும், மணம் - நித்யோத்ஸவமாம்படி, கூடியும் - (பூமியுடனே) ஸம்ஶ்லேஷித்து ராஜ்யம் பண்ணியும், கண்ட - இப்படி ப்ரத்யக்ஷஸித்தமான, ஆற்றால் - சேஷ்டிதப்ரகாரங்களாலே, ("வஶிம்விஶ்வஸ்ய" என்கிற ப்ரமாணநிரபேக்ஷமாக), உலகு - லோகம், தனதே - தனக்கே ஶேஷம், என - என்று நாடாகச் சொல்லும்படி, நின்றான்தன்னை - நின்ற ஸர்வேஶ்வரனைப்பற்ற, வண்தமிழ் - விலக்ஷணமாய் ஸர்வாதிகாரமான த்ராவிடப்ரபந்தத்தை, நூற்க - நிர்மிக்கைக்கு, நோற்றேன் - (அவனுடைய அங்கீகாரமாகிற) புண்யத்தைப் பண்ணினேன்; அடியார்க்கு - அவனுக்கு அடியாரான பாகவதர்க்கு, (இப்ப்ரபந்தம்), இன்பமாரி-ஆநந்தவர்ஷியான மேகமாயிறே இருக்கிறது.

இ.—பத்தாம்பாட்டில், அவன்சேஷ்டிதங்கள் அடங்க என்சொல்லுக்குள்ளே யாம்படி கவிபாடவல்லேனாய் ப்ராப்தவிஷயத்திலே வாசிகமான அடிமை செய்யப் பெற்றவளவன்றிக்கே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஆநந்தாவஹனானேன் என்கிறார்.

[உண்டும்] - ப்ரளயாபத்திலே திருவயிற்றிலே வைத்து நோக்கியும். [உமிழ்ந்தும்] - திருவயிற்றிலேயிருந்து நெருக்குப்படாதபடி வெளிநாடுகாண உமிழ்ந்தும். [கடந்தும்] - மஹாபலிபோல்வார் பருந்துஇருஞ்சிறைப்போலே பறித்துக்கொண்டால் எல்லைநடந்து மீட்டும்.

[இடந்தும்] - ப்ரளயங்கொண்ட பூமியை மஹாவராஹமாய் அண்டபித்தியிலே செல்ல முழுகி யெடுத்துக்கொண்டு ஏறியும். [கிடந்தும்] - "பாஹும் புஜகபோகாபம் உபதாயாரிஸூதந: । அஞ்சலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிஶிஶ்யே மஹோததே:" என்று கிடந்த கிடையிலே லங்கை குடிவாங்கும்படியாக ஒருகடல் ஒருகடலோடே சீறிக்கிடந்தாற்போலே கடற்கரையிலே கிடந்தபடி. [நின்றும்] - "அவஷ்டப்ய ச திஷ்டந்தம் ததர்ஶ தநுரூர்ஜிதம்" என்று நின்ற நிலை. [கொண்டகோலத்தொடு வீற்றிருந்தும்] - "உடஜே ராமமாஸீநம்" என்று இருந்த இருப்பாதல், க்ஷாத்ரமான ஒப்பனையோடே பதினோராயிரம் ஆண்டு இருந்த இருப்பாதல். [மணங்கூடியும்] - பதினோராயிரம் ஆண்டு பூமியை ரக்ஷிக்கையாலே பூமிக்கு அபிமாநிநியான பிராட்டி விரும்பியணைக்க அவளோடே ஸம்ஶ்லேஷித்தும். [கண்டவாற்றால் இத்யாதி] - ப்ரமாணங்கொண்டு அறியவேண்டாதே அநாத்யநுபவமேகொண்டு இவனதென்று அறியலாயிருக்கை. ஒருவன் ஒருக்ஷேத்ரத்தைத் திருத்துவது எருவிடுவது க்ருஷிபண்ணுவதாகாநின்றால் இது இவனது என்று அறியலாமிறே. [வண்தமிழ் நூற்க நோற்றேன்] - திருவாய்மொழி பாடுகைக்கு பாக்யம்பண்ணினேன். வண்தமிழாவது - பழையதாகச் செய்தவை இவர் பேச்சாலே இன்றுசெய்த செயல்போலே ஸ்பஷ்டமாயிருக்கை. "சிரநிவ்ருத்தமப்யேதத் ப்ரத்யக்ஷமிவ தர்ஶிதம்". [அடியார்க்கு இன்பமாரியே] - ப்ராப்தவிஷயத்திலே அடிமைசெய்யப்பெற்ற இதுவேயோ? இது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஆநந்தாவஹமுமாயிற்று. [இன்பமாரி] - இன்பத்தையுண்டாக்கும் மேகம். இது எனக்கு இருக்கிறபடி கண்டால் உகக்கிறவர்களுக்கு எங்ஙனேயிருக்கிறதோ ? என்கை. "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்சொன்னேன்".

ஈடு.—பத்தாம்பாட்டு. அவன்சேஷ்டிதங்களடங்க என்சொல்லுக்குள்ளே யாம்படி கவிபாட வல்லேனாய், ப்ராப்தவிஷயத்திலே வாசிகமாக அடிமை செய்யப்பெற்ற வளவன்றிக்கே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஆநந்தாவஹனானேன் என்கிறார்.

[உண்டும்] - ப்ரளயாபத்திலே திருவயிற்றிலேவைத்து நோக்கியும். [உமிழ்ந்தும்] - திருவயிற்றிலேயிருந்து நெருக்குப்படாதபடி வெளிநாடுகாணப் புறப்பட விட்டும். [கடந்தும்] - மஹாபலிபோல்வார் பருந்துஇருஞ்சிறைற்போலே பறித்துக்கொண்டால் எல்லைநடந்து மீட்டும். [இடந்தும்] - ப்ரளயங்கொண்ட பூமியை மஹாவராஹமாய் அண்டபித்தியிலேசெல்ல முழுகி எடுத்துக்கொண்டு ஏறியும். [கிடந்தும்] - "பாஹும் புஜகபோகாபம் உபதாயாரிஸூதந: । அஞ்சலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிஶிஶ்யே மஹோததே:" (பாஹும்புஜகபோகாபமுபதாயாரிஸூதந: । அஞ்சலிம்ப்ராங்முக:க்ருத்வா ப்ரதிஶிஶ்யேமஹோததே:) என்று கிடந்த கிடையிலே லங்கை குடிவாங்கும்படியாக, ஒருகடல் ஒருகடலோடே சீறிக்கிடந்தாற்போலே கடற்கரையிலே கிடந்தபடி. [நின்றும்] - "அவஷ்டப்ய ச திஷ்டந்தம் ததர்ஶ தநுரூர்ஜிதம்" (அவஷ்டப்யசதிஷ்டந்தம் ததர்ஶதநுரூர்ஜிதம்) என்று நின்ற நிலை. [கொண்டகோலத்தொடு வீற்றிருந்தும்] - "உடஜே ராமமாஸீநம்" (உடஜேராமமாஸீநம்) என்றிருந்த இருப்பாதல், க்ஷாத்ரமான ஒப்பனை

---

பத்தாம்பாட்டு - 'உண்டும்' இத்யாதி. பாட்டெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - 'அவன்சேஷ்டிதங்கள்' இத்யாதி. 'தனதேயுலகு' என்றதைப் பற்ற, 'ப்ராப்த விஷயத்திலே' என்றது. 'அடியார்க்கின்பமாரி' என்றத்தைப் பற்ற, 'ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு' இத்யாதி.

"அரிஸூதந:" என்றதுக்கு அர்த்தம் - 'கிடந்த' இத்யாதி. 'ப்ரதி' என்றதுக்கு அர்த்தம் - 'ஒருகடல்' இத்யாதி. உடஜம் - பர்ணசாலை. உடஜத்தி லிருப்பானபோது, 'கொண்டகோலம்' என்றது-

யோடே பதினோராயிரமாண்டு இருந்த இருப்பாதல். [மணங்கூடியும்] - பதினோராயிரமாண்டு தன்படுக்கைப்பற்றான பூமியை ரக்ஷிக்கையாலே ஸ்ரீபூமிப்பிராட்டி அணைக்க, அவளோடே கலந்தும். [கண்ட ஆற்றால் இத்யாதி] - ப்ரமாணங்கொண்டு அறியவேண்டாதே, அநாத்யநுபவங்கொண்டு 'இவனுக்கே சேஷம்' என்று அறியலாயிருக்கை; ஒருவன் ஒருக்ஷேத்ரத்தைத் திருத்துவது கமுகுவைப்பது எருவிடுவதாய்க் க்ருஷிபண்ணுநின்றால் 'இதுஇவனது' என்று அறியலாமிறே; "பெய்தகாவுகண்டீர் பெருந்தேவுடைமூவுலகு" என்னக்கடவதிறே. [வண்தமிழ்நூற்கநோற்றேன்] - திருவாய்மொழி பாடுகைக்கு பாக்யம்பண்ணினேன். வண்தமிழாவது - உதாரமாயிருக்கை; தன்னை அநுஸந்தித்தமாத்ரத்திலே ஸகலபலப்ரதமாயிருக்கை. அன்றிக்கே, பழையதாகச்செய்தவை இவர்பேச்சாலே இன்றுசெய்த செயல்போலே ஸ்பஷ்டமாயிருக்கை. "சிரநிர்வ்ருத்தமப்யேதத்ப்ரத்யக்ஷமிவதர்சிதம்" (சிரநிர்வ்ருத்தமப்யேதத்ப்ரத்யக்ஷமிவதர்சிதம்). கண்டவாற்றா லென்று - ப்ரத்யக்ஷமாயிருக்கிறதிறே. [அடியார்க்குஇன்பமாரியே] - ஸர்வேச்வரனைக் கவிபாடப்பெற்ற இதுவேயோ? இது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஆநந்தாவஹமுமாயிற்று. [இன்பமாரி] - இன்பத்தையுண்டாக்கும் மேகம். இது எனக்கு இருக்கிறபடி கண்டால், இது உகக்குமவர்களுக்கு எங்ஙனேயிருக்கிறதோ? என்கை. "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றாரிறே. (௧௦)

ஏறிட்டுக்கொண்ட கோல மென்றபடி; அதாவது - ஜடாதிகள். க்ஷாத்ரமான - க்ஷத்ரிய ஸம்பந்தியான; அதாவது - கிரீடாதிகள். மணம் - ஸம்ச்லேஷம். ஸ்ரீபூமிப்பிராட்டி அணைக்க, கூடியும் - அவளோடே கலந்தும். 'மணம்' என்று - உத்ஸவமாய், 'நித்யோத்ஸவமாம்படி பூமியுடனே ஸம்ச்லேஷித்து ராஜ்யம்பண்ணியும்' என்று உரையில் சப்தார்த்தம். 'ஸ்ரீபூமிப்பிராட்டி அணைக்க'என்றது - பரமபதத்துக்கு எழுந்தருளுகிறபோது, "ராஜஸ்ய்ஹக்ஷிணேபார்ச்வேஸ்ரீஸ்ஸாக்ஷாத் ஸமுபஸ்திதா । ஸவ்யேதுஹ்ரீர்விசாலாக்ஷீவ்யவஸாயஸ்ஸுராக்ரத:" என்றதைப்பற்ற. கண்டவாற்றால் - இப்படி ப்ரத்யக்ஷஸித்தமான; 'உண்டுமுமிழ்ந்தும்' இத்யாதி சேஷ்டித ப்ரகாரங்களாலே என்றபடி. சேஷ்டிதங்களெல்லாம் சொல்லி, 'தனதேயுலகென நின்றான்' என்கையாலே, வ்யாவர்த்யபூர்வகமாக அர்த்தம் - 'ப்ரமாணங்கொண்டு' இத்யாதி. அநாத்யநுபவமாகிறது -ஜகத்விஷயமாக ஈச்வரனுக்குஉண்டான அநாத்யநுபவம். அதுகொண்டு 'இவனுக்கே சேஷம்' என்று அறியுமதுக்கு லௌகிகத்ருஷ்டாந்தம் - 'ஒருவன்' இத்யாதி. ஒற்றிலேத்திலன்றிக்கேயாயிற்று கமுகுவைப்பது;ஆகையாலே, அத்தை த்ருஷ்டாந்தமாக எடுத்தது. ஆனால்; இது அவனுடைய உத்யானமோ? என்ன, 'பெய்தகாவு' இத்யாதி. வண்தமிழ் - உதாரமான தமிழ். ஔதார்யமாவது - பலப்ரதத்வமும், ஸ்பஷ்டமாக அர்த்தப்ரதிபாதநமும். ஸகலபலப்ரத மென்றது - அத்வேஷம்தொடங்கிக் கைங்கர்யபர்யந்தமான பலங்களை. இரண்டாம்அர்த்தத்துக்கு, வண்தமிழ் - அழகிய தமிழ். வண்மை - அழகு. ஆனால், பழையதாகச் செய்தவை இன்றுசெய்த செயல் போலே ஸ்பஷ்டமாயிருக்குமோ? என்ன, 'சிரநிர்வ்ருத்தம்' இத்யாதி. சிரநிர்வ்ருத்தமபி - நெடுங்காலத்திலே நிறைவேறியிருக்கச்செய்தேயும், ப்ரத்யக்ஷமிவ தர்சிதம் - ப்ரத்யக்ஷம்போலே காட்டப்பட்டது. இதுவும் அப்படி ப்ரத்யக்ஷமாயிருக்குமென்கைக்கு நியாமகமுண்டோ? என்ன, 'கண்டவாற்றால்' இத்யாதி. 'அறிந்தவாற்றால்' என்னாதே, 'கண்டவாற்றால்' என்கையாலே - ப்ரத்யக்ஷமென்னலாம்படி யிருக்கிற தென்றபடி பரபுத்தே ரப்ரத்யக்ஷத்வாத்அவர்களுக்குஆநந்தாவஹமென்று அறிந்தபடி எப்படி? என்ன, 'இது எனக்கு' இத்யாதி· இது - இத்திருவாய்மொழி. எனக்குஇருக்கிறபடி - எனக்கு ரஸிக்கிறபடி. இப்படி அவர்களுகப்பர்களோ? என்ன, 'தொண்டர்க்கு' இத்யாதி. அடியார்க்கின்பமாரியான வண்தமிழ் நூற்க நோற்றே னென்று அந்வயிப்பது. நூற்கை - நிர்மிக்கை. நோற்றேன் - பாக்யம்பண்ணினேன்; த்ராவிடப்ரபந்தத்தை நிர்மிக்கைக்கு பாக்யம்பண்ணினே னென்றபடி. உண்டுமிழ்ந்தாரப்ய, நின்றான்தன்னைப்பற்ற - அடியார்க்கின்பமாரியான - வண்தமிழ் நூற்க நோற்றேன் இத்யந்வய.(௧௦)

# பதிற்றாம்பாட்டு.

மாரிமாருததண்ணம்மலை வேங்கடத்தண்ணலை
வாரிமாருதபைம்பூம்பொழில்சூழ் குருகூர்நகர்க்
காரிமாறன்சடகோபன் சொல்லாயிரத்து இப்பத்தால்
வேரிமாருதபூமேலிருப்பாள் வினைதீர்க்குமே.

ஆ.—(மாரிமாருத.) ஸம்ஸாரதாவாக்நி தப்தஸர்வஜந்து ஸந்தாபநாஶகரமான தண்திருமலையைத் தனக்கு திவ்யதாமமாக வுடையனான திருவேங்கடமுடையானுடைய ஆஶ்ரித வாத்ஸல்யாதி கல்யாணகுண ப்ரதிபாதகமான இத்திருவாய்மொழி வல்லாருடைய ஸமஸ்த து:கங்களையும், பகவதாஶ்ரித வாத்ஸல்யாதி கல்யாணகுணைகபோகையான பெரியபிராட்டியார் போக்கும் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், 'நமக்கும் பூவின்மிசைநங்கைக்கும்' என்கிற இம்மஹாகுணத்திலே ஈடுபட்டிருக்கிற பெரியபிராட்டியார் இக்குணத்தையறிந்தருளின ஆழ்வாரைத் தமக்குத்துணையாகப் பெற்றோமென்னும் ப்ரீதியாலே இவர் அருளிச்செய்த இக்குணப்ரதிபாதகமான இப்பத்தையும் கற்றவர்களைத் தனக்கே பாரமாகக்கொண்டு ஸமஸ்த து:கங்களையும் போக்கி ரக்ஷித்தருளும் என்கிறார்.

[மாரிமாருத என்று தொடங்கி]- நிரந்தரவர்ஷத்தாலே ஶ்ரமஹரமான திருமலையைத் தனக்கு திவ்யதாமமாகவுடையனான திருவேங்கடமுடையானை. [வாரிமாருத என்று தொடங்கி]- தாம் எம்பெருமானைப் பெறுகையாலே ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வார். வேரி- பரிமளம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக, இதில் அந்வயமாத்ரத்தாலே பகவதநுபவ விரோதியான ஸகலபாபங்களையும் தன்கடாக்ஷத்தாலே லக்ஷ்மி போக்கியருளும் என்கிறார்.

மாரி மாருத - வர்ஷம் மாறாதபடியாலே, தண் - குளிர்ந்து, அம் - தர்ஶநீயமாய், வேங்கடம் - திருவேங்கடமென்று திருநாமமான, மலை - திருமலையிலே, (தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காக வந்து நிற்கிற ஶீலத்தையுடைய), அண்ணலை - திருபாதிகஸ்வாமியை, வாரி மாருத - (பாதபாதிகளுக்கு ஸிஸிரோபசாரம்பண்ணுகிற) ஜலஸம்ருத்தி மாறாத, பைம்பூம்பொழில் - தர்ஶநீயமான புஷ்பஸம்ருத்தியையுடைய பொழிலாலே, சூழ் - சூழப்பட்ட, குருகூர் நகர் - திருநகரியில், காரி - காரியென்றுபேரான பித்ருஸம்பந்தத்தையுடையராய், மாறன் - மாறனென்னும் குடிப்பேரையுடைய, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்த, ஆயிரத்து - ஆயிரத்தில், இப்பத்தால் - இப்பத்தாலே, வேரிமாருத - மதுப்ரவாஹம் மாறாத, பூமேல் - தாமரையிலே, இருப்பாள் - நித்யவாஸம்பண்ணுகிற லக்ஷ்மி, வினை - (அநுபவவிரோதியான) ஸமஸ்தபாபங்களையும், தீர்க்கும் - (தன்கடாக்ஷத்தாலே) போக்கும்.

இவள் கடாக்ஷித்த விஷயத்தில் ஈஶ்வரனுடைய அபராதஸஹத்வம் அவர்ஜநீயமென்று கருத்து. இது - கலித்துறை.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றாரைப் பிராட்டிதானே தனக்கே பாரமாகக்கொண்டு ஸமஸ்தது:கங்களையும் போக்கும் என்கிறார்.

[மாரி இத்யாதி] - நிரந்தரமாக வர்ஷிக்கையாலே ஶ்ரமஹரமான திருமலையையுடைய ஸர்வேஶ்வரனை. 'நமக்கும்பூவின்மிசைநங்கைக்குமின்பனை' என்றுகொண்டு நித்யாநபாயிநியான பிராட்டிக்கு முன்னே நித்யஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுக்கு மென்னும் ஶீலவத்தையைச் சொல்லிற்றாகையாலே ஶீலத்துக்கு எல்லையான திருவேங்கடமுடையானை யாயிற்றுக் கவி பாடிற்று. [வாரி இத்யாதி] - திருமலை மாரி மாறாதாப்போலே திருநகரி வாரிமாறாதே யிருக்கும். இதுக்கு அடி - திருநகரிக்கு ஸஹ்யம் திருமலையாகையாலே. [காரிமாறன் இத்யாதி] - சொன்ன அர்த்தத்தில் அதிஶங்கை பண்ணாமைக்கு ஆப்தயதிஶயம் சொல்லுகிறது. [வேரி இத்யாதி] - இத்திருவாய்மொழி கற்றார்க்கு பலம் கொடுப்பாள் பெரியபிராட்டியார் என்கிறது. திருமலை மாரிமாறாது; திருநகரி வாரிமாறாது; பிராட்டியுடைய ஆஸநபத்மம் வேரிமாறாது; வேரி - பரிமளம். இதுக்கு இவள் பலம்கொடுக்க வேண்டுவா னென்? என்னில்,-தனக்குமுன்பே தான் காட்டிக்கொடுத்த ஸம்ஸாரியை விரும்பும் ஶீலமாயிற்று,இதில் சொல்லிற்று; இந்த ஶீலகுணம் ஒருவர்க்கும் நிலமன்று. தான்அறிதல், மயர்வற மதிநலம் அருளப்பெற்ற இவர் அறிதல் செய்யுமித்தனையாயிற்று. இப்ர஭ாவத்தை யறிந்து இவர் வெளியிட்டாரென்னும் ப்ரஸாதாதிஶயத்தாலே ஸர்வேஶ்வரன் பலம்கொடுக்கிற தசையிலே அவனை விலக்கி 'நானே இதுக்கு பலம்கொடுக்கவேணும்' என்று தனக்கு ஭ரமாக ஏறிட்டுக் கொண்டு பலம் கொடுக்கும். [வினைதீர்க்குமே] - இத்திருவாய்மொழி கற்றாருடைய பகவதநுபவ விரோதியான ஸகலப்ரதிபந்தகங்களையும் போக்கும். இத்திருவாய்மொழி கற்றார்க்கு அந்தப்புரத்திலே படியும் நடையும் என்கை.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றாரைப் பெரியபிராட்டியார் தமக்கே ஭ரமாகக்கொண்டு ஸமஸ்தது:கங்களையும் போக்குவர் என்கிறார்.

[மாரிஇத்யாதி] - நிரந்தரமாக வர்ஷிக்கையாலே ஶ்ரமஹரமாய் தர்ஶநீயமான திருமலையையுடைய ஸர்வேஶ்வரனையாயிற்றுக் கவிபாடிற்று; "விண்முதல்நாயகன் நீள்முடி வெண்முத்தவாசிகைத்தாய் மண்முதல்சேர்வுற்று அருவிசெய்யாநிற்கும் மாமலை" யாகையாலே, அறற்றலையாய் தர்ஶநீயமாயிறே இருப்பது. "நமக்கும் பூவின்மிசைநங்கைக்கு மின்பனை" என்று - நித்யாநபாயிநியான பெரியபிராட்டியாருக்கு முன்பே நித்யஸம்ஸாரிகளுக்கும் முகங்கொடுக்கும் ஶீலவத்தையைச் சொல்லிற்றாகையாலே, சீலத்துக்கு எல்லையான திருவேங்கடமுடையானையாயிற்றுக்

---

நிகமம் - 'மாரி' இத்யாதி. 'பூமேலிருப்பாள் வினைதீர்க்கும்' என்றதிலே நோக்காக அவதாரிகை - 'இத்திருவாய்மொழிகற்றாரை' இத்யாதி.

'மாரிமாறாமையாலே தண்ணம்மலை' என்று விவக்ஷித்து அர்த்தம் - 'நிரந்தரமாக' இத்யாதி. திருமலை அப்படி ஶ்ரமஹரமாய் தர்ஶநீயமாயிருக்குமோ? என்ன, 'விண்முதல்' இத்யாதி. விண்ணுக்கு - பரமபதத்துக்கு, ப்ரதாநநாயகனானவனுடைய திருவபிஷேகத்தில் வெளுத்த முத்துவாசிகைபோலே, பூமிப்ரதேசமான மலையடியிலே சேரும்படியான அருவியைப் பண்ணாநிற்கிற பெரியதிருமலை யென்று பாசுரத்துக்கு அர்த்தம். திருவிருத்தம் ஐம்பதாம்பாட்டு, "ஒண்ணுதல்மாமை" இத்யாதி. முத்துவாசிகை-முத்தொழுங்கு; முத்துமாலை யென்றபடி. வாசிகைத்தாய்-வாசிகையோடு ஒத்து என்றபடி. * 'அறற்றலையாய்' என்றது - சாடு. அறற்றலை-ஜலம்மாறாத ப்ரதேசம். சாடுவுக்கு—தர்மத்தைத் தலையிலே யுடைய தென்றபடி. அறம் - தர்மம். "க்ருஹேஷு யஜ்ஞம்ஸநாதநம்" என்னக்கடவதிறே. திருவேங்கடமுடையானையோ கவிபாடிற்று? பரமபதநாதனை யன்

---

* அறல்-நீர்: தலை - தன்னிடத்திலுடையது; எனவே, அறற்றலை - ஜலம் மாறாத ப்ரதேஶம் என்றதாயிற்று; அறத்தலை என்ற தொடர்—தர்மத்தைத் தலையிலேயுடையது என்று பொருள்படும். உச்சரிக்கையில் றகரத்தைத் தகரமாக உச்சரிக்கும் பெரும்பான்மைவழக்குப்பற்றி, இத்தொடரை 'சாடு' என்றது.

கவிபாடிற்று. [வாரி இத்யாதி] - திருமலை மாரிமாருதாப்போலே திருநகரியும் வாரிமாருதிருக்கும். இதுக்கடி - திருநகரிக்கு ஸஹ்யம் திருமலை யாகையாலே. அழகியதாய் தர்ஶநீயமாயிருந்துள்ள பொழிலாலே சூழப்பட்ட திருநகரி. [காரிமாறன் இத்யாதி] - சொன்ன அர்த்தத்தில் அதிஶங்கைபண்ணுமைக்கு *ஆப்த்யதிஶயம் சொல்லுகிறது. [வேரி இத்யாதி] - இத்திருவாய்மொழி கற்றார்க்கு பலங்கொடுப்பாள் பெரியபிராட்டியா ரென்கிறது. திருமலை மாரிமாருதாகையாலே, திருநகரி வாரிமாருது. ஆருக்கயமாகையாலே பிராட்டியுடைய ஆஸநபத்மம் வேரிமாருது. வேரியென்பது - பரிமளம். இதுகற்றார்க்கு இவள் பலம்கொடுக்கவேண்டுவா னேன்? என்னில் ;— தனக்குமுன்பே தான்காட்டிக்கொடுத்த ஸம்ஸாரியை விரும்பும் ஶீலகுணமாயிற்று, இதில் சொல்லிற்று ; இஶ்ஶீலகுணம் ஒருவர்க்கும நிலமல்ல ; தான் அறிதல், மயர்வறமதிநலம்பெற்றவர் அறிதல்செய்யும் அத்தனையாயிற்று; 'இப்ப்ரஹாவத்தை யறிந்து இவர் வெளியிட்டார்' என்னும் ப்ரஸாதாதிஶயத்தாலே, ஸர்வேஶ்வரன் பலம் கொடுக்கிற தசையிலே அவனைவிலக்கி 'நானே இதுக்கு பலங் கொடுக்கவேணும்' என்று தனக்கு ஹரமாக ஏறிட்டுக்கொண்டு பலம்கொடுக்கும். [வினைதீர்க்குமே] - இத்திருவாய்மொழி கற்றாருடைய பகவதநுபவ விரோதியான ஸகலப்ரதிபந்தகங்களையும் போக்கும். இத்திருவாய்மொழி கற்றார்க்கு அந்தஃபுரத்திலே படியும் நடையுமென்கை. (கக)

---

ரோ? என்ன, 'நமக்கும்' இத்யாதி. கீழ்ச்சொன்ன அர்த்தத்தை த்ருஷ்டாந்தமாக்கி அர்த்தம் - 'திருமலை' இத்யாதி. வாரி மாருதிருக்கைக்குஅடியேது? என்ன, 'இதுக்குஅடி' இத்யாதி. ஸஹ்யம்-ப்ரவாஹமூலமான மலை. பை-அழகு. பூ-தர்ஶநீயதை. இரண்டாலும் மிகவும்தர்ஶநீய மென்றபடி. திருக்காரியாரையிட்டு நிரூபித்ததுக்கு ஹாவம் - 'சொன்னஅர்த்தத்தில்' இத்யாதி. தாத்பர்யம் - 'இத்திருவாய்மொழி' இத்யாதி. ரஸோக்தி - 'திருமலை' இத்யாதி. 'ஆருக்கயமாகையாலே' என்றது - திருநகரி வாரிமாருமையாலே யென்றபடி. ஆருக்கயம் - வற்றுத மடு. ஒருவர்க்கும் - மற்றொருவர்க்கும். 'வினைதீர்க்கும்' என்ற இதுக்கு 'பலங்கொடுக்கும்' என்றது - ப்ரதிபந்தகம் நிவ்ருத்தமானால் பலஸித்திக்கு விளம்பமில்லை யென்றதைப் பற்ற. ஹார்த்தஹாவம் - 'இத்திருவாய்மொழிகற்றாருடைய' இத்யாதி. படியும் நடையும் - அநுபவமும் கைங்கர்யமும். படி - ஜீவநம். நடை - வ்ருத்தி. க்ரமேண அந்வயஃ. (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி:—[illegible] ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி—[illegible] ।
[illegible]
[illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி

விற்றிருக்கும்மால்விண்ணில் மிக்கமயல்தன்னை
ஆற்றுதற்காத்தன்பெருமையானதெல்லாம்—தோற்றவந்து
நன்றுகலக்கப்போற்றிநன்குகந்துவீ றுரைத்தான்
சென்றதுயர்மாறன்தீர்ந்து.

ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம்.

---

* ஆப்தி - உண்மையுரைக்கை : அதிஶயம் - மிகுதி.

## ஆறுந்திருவாய்மொழி - தீர்ப்பாரை : ப்ரவேஶம்.



**ஆ.**—(தீர்ப்பாரையாமினி.) ஏவம்பூதனாயிருந்த எம்பெருமானை விஶ்லேஷித்து அத்யந்தம்அவஸன்னையாய் மோஹதஶாபன்னையாயிருந்த பிராட்டி திருத்தாயாரும் உறவுமுறையாரும் இவளுடைய அவஸாதத்தைக் கண்டு 'இவளுக்கு இந்த அவஸாதம் எத்தாலே வந்தது?' என்றும், 'இதுக்குப் பரிஹாரமென்?' என்றும் ஒருகட்டுவிச்சியைக் கேட்க, அவளும் 'க்ஷுத்ரதேவக்ருதம்' என்றும், 'இதுக்குப் பரிஹாரம் தத்ப்ரீணநம்' என்றும் சொல்ல, அவர்களும் அதுகேட்டு இவள்பக்கலுள்ள ஸ்நேஹாதிஶயத்தாலே 'ஏதேனும்ஒரு தைவத்தை ஆஶ்ரயித்தாகிலும் இவளைப் பெறில் அதுவே எங்களுக்கு ஆத்மலாபம்' என்று பார்த்து அந்த க்ஷுத்ர தேவப்ரீணநத்திலே ப்ரவ்ருத்தராய்ச் செல்லாநிற்க, இப்பிராட்டியினுடைய திருத்தோழியானவள் 'நீங்கள் கருதுகிறவை ஈடல்ல, பரிஹாரமுமல்ல; நோயும் நீங்கள் கருதுகிறதல்ல; இன்னது நோய், இன்னது பரிஹாரம்' என்று சொல்லி அவர்களை நிவர்த்திப்பிக்கிறாள் என்கிறது.

ஒ.—ஆறுந்திருவாய்மொழியில், முன்பில்திருவாய்மொழியில் தாம் அநுபவித்த அநுபவம் மாநஸாநுபவமாத்ரமாய் பாஹ்யகரணயோக்யமல்லாமையாலே ஆழ்வார் அத்யந்தம் அவஸன்னராய் வேறேசிலர் அநுஸந்தித்துப் பரிஹரிக்க வேண்டும்படி தமக்குப்பிறந்த தஶையை அந்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார். ஏவம்விதனான எம்பெருமானைப் புணர்ந்துபிரிந்தாளொரு பிராட்டி ஸ்ரீபரதாழ்வான் ஶ்ருங்கிபேரபுரத்திலே பெருமாள்வ்ருத்தாந்தத்தைக் கேட்டு மோஹித்தாற்போலே மோஹித்துக்கிடக்க, இவளுடைய பந்துஜநங்கள் மிகவுங்கலங்கி நோய் இன்னதென்றும், நோய்க்கு நிதாநம் இன்னதென்றும் அறியாதே ஒருகட்டுவிச்சியை 'இது என்ன நோய்?' என்றும், 'இந்நோய்க்கு நிதாநம் என்?' என்றும் கேட்டு, அவள் சொற்படியே, பாஹ்யாகமம் த்ருஷ்டியாகவும், அதிக்ஷுத்ரமாயிருக்கிறது ஒன்றையே தேவதையாகவும், நிந்த்யமான த்ரவ்யங்களை உபகரணமாகவும் கொண்டு இவள்பக்கலுண்டான ஸ்நேஹாதிஶயத்தாலே ஏதேனும் ஒரு வழியாலே இவள் பிழைக்க அமையுமென்று அமரக்கங்களாலே சிகித்ஸிக்க உபக்ரமிக்க, இவளுடைய ரோகத்தையும் இவளுடைய ப்ரக்ருதியையும் [illegible] தோழியானவள் 'நோயும் பரிஹாரமும் நீங்கள் நினைக்கிறவையல்ல' என்று அவர்களை நிவர்த்திப்பித்து, 'இவளுடைய நோய் இன்னது' என்றும், 'இந்நோய்க்கு அறுக்கும் மருந்து இன்னது' என்றும் சொல்லி வைஷ்ணவகோஷ்டியில் ப்ரஸித்தமான பகவத்நாமஸங்கீர்த்தநாதிகளாலே இவளைப் பிழைப்பியுங்கோள் என்கிறாள்.

ப.—ஆறுந்திருவாய்மொழியில், கீழில்திருவாய்மொழியில் இவர்க்குப் பிறந்த ப்ரீதிப்ரகர்ஷம் மாநஸாநுபவஜநிதமாகையாலே தததநுரூபமாக அவனுடைய அவலோகநாதிமுகத்தாலே ஸம்ஶ்லேஷித்து அநுபவிக்கப்பெறாத அவஸாதம் அதிஶயிக்க, அவனுடைய ஆஶ்ரிதவிஷயபக்ஷபாதத்தையும், ஆகிஞ்சந்யைகஸுலபமான [illegible], அதிசயிதபோக்யத்வத்தையும், ஆபத்ஸகத்வத்தையும், விரோதிநிவர்த்தகத்வத்தையும், விலக்ஷண விக்ரஹயோகத்தையும், அத்யாஶ்சர்யமான உபகாரகத்வத்தையும், [illegible]வத்தையும், நிரதிஶயஸௌலப்யத்தையும், நித்யப்ரமாணப்ரதிபாத்யத்வத்தையும் அநுஸந்தித்து, 'ஏவம்விதனானவன் நம்மையநுபவிப்பியாதொழிவதே!' என்று அப்ரக்ருதிஸ்தராய் மோஹிக்க, பார்ஶ்வஸ்தரான பரிவர் இவரை ஆஶ்வஸிப்பிக்கத் தேடி, ''ஸ்வஸ்த்யயநம் க்ருஷ்ணஸ்ய'' என்கிற கணக்கிலே பரிவின் கனத்தாலே 'அமரக்கங்களாலேயாகிலும் பரிஹரிக்கப்போமோ?' என்று உத்யோகிக்க, இவர்ப்ரக்ருதியறிந்த ப்ரமஸஹ்ருத்துக்களான ஸ்ரீமதுரகவிபோல்வார்

அத்தைவிலக்கி, பகவந்நாமஸங்கீர்த்தந ததீயபாதபராக³ஸ்பர்ஶாதிகளாலே பரிஹரணீயமென்று ப்ரதிபாதித்த பாசுரத்தை,—நாயகனைப்பிரிந்து ஆற்றுளாகிய தலைமகள் வேறுபாடு கண்டுப் திர, பந்தபாஷிணியாயிருப்பாளொரு கட்டுவிச்சி வார்த்தை கேட்டு வெறியாட்டாலே பரிஹரிக்கத் தொடங்கின செவிலிதொடக்கமானாரைப்பார்த்து,இவள்ப்ரக்ருதியறிந்தப்ர௩ல்பையானதோழி, அவர்களுத்யோகத்தை விலக்கித் தான் இப்போது நிரூபித்து நோயின்நிதாநமறிந்தாளாக பாவித்து, 'க்ருஷ்ணனடியாக வந்த நோவுக்கு அவனையநுஸந்தித்துப் பிழைப்பிக்குமதொழிய இது பரிஹாரமல்ல' என்று வெறிவிலக்கின பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

இ.—ஆறுந்திருவாய்மொழியில், முன்பு "வீற்றிருந்தேழுல" கில் தாம் அநுபவித்த அநுபவம் மாநஸாநுபவமாத்ரமாய் பாஹ்யகரண யோக்யமல்லாமையாலே அத்யந்தம் அவஸந்நரானார். எத்தனையேனும் உயரஏறினால் தகரவிழுகைக்கு உறுப்பாமாபோலே மோஹங்கதராய், பிறர் அநுஸந்தித்துப் பரிஹரிக்கவேண்டும்படி தமக்குப்பிறந்த தஶையை அந்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார்.ஸர்வேஶ்வரனோடே கலந்துபிரிந்தாளொரு பிராட்டி மோஹித்துக்கிடக்க, இவள்தஶையைக் கண்ட பந்துஜநங்கள் மிகவும்கலங்கி 'நோய் இன்னது' என்றும், 'நோய்க்கு நிதாநம் இன்னது' என்றும் அறியாமையாலே வேரறிவார் மந்த்ரமறிவார் ஔஷதமறிவார் புகுந்து பரிஹாரம்பண்ணிச் செல்லாநிற்க, அவ்வளவிலே தேவதாந்தரஸ்பர்ஶமுடையாளொரு கட்டுவிச்சி புகுந்து "ஸ்ரவ்யம் நிந்த்யஸாதநாநி தேவதாக்ஷுத்ரத்ருஷ்டிபாஹ்ய மஜோ த்ருஷ்டிஜைவகாஸ்வைஸிகஜநா:" என்கிறபடியே பாஹ்யாக³மத்தை த்ருஷ்டியாகவும், நிந்த்யமான த்ரவ்யங்களை உபகரணங்களாகவும் கொண்டு க்ஷுத்ரதேவதையாலே ஆவிஷ்டையாய் அம்முகத்தாலே சிகித்ஸிக்க உபக்ரமிக்க, பந்துக்களும் 'இவளைப்பெறலாமோ?' என்னும் ஆசையாலே அநுமதிபண்ண, இத்தஶையிலே இவள்ப்ரக்ருதியையும் நோவையும் நேரே அறிந்த தோழியானவள் 'ஒடுகிறநோவைத் தான் அறிந்தாளாகச் சொல்லில் தன்காவல் சோர்வாம்; பேசாதிருக்கில் இவளை இழக்க வரும்' என்று இவர்களோபாதி தானும் நிரூபித்து அறிந்தாளாய், 'நோவும் பரிஹாரமும் நீங்கள் நினைக்கிறவையல்ல; நோய் இன்னது, நோய்க்கு நிதாநமும் க்ருஷ்ணனே' என்று சொல்லி, 'நீங்கள் பண்ணுகிற பரிஹாரம் இவளுடைய ஸத்தையையும்கூட இழக்கைக்கு உறுப்பாமத்தனை; பரிஹாரம்பண்ணப் பார்த்திகோளாகில் வைஷ்ணவகோஷ்டியில் ப்ரஸித்தமான பகவந்நாமஸங்கீர்த்தநாதிகளாலே இவளைப் பிழைப்பியுங்கோள்' என்கிறாள். இத்திருவாய்மொழியால் சொல்லிற்றாயிற்று, அஜ்ஞாநதஶையிலும் தேவதாந்தரஸ்பர்ஶமும் ததீயஸ்பர்ஶமும் விநாஶஹேதுவாய் அத்தஶையிலும் பகவத்ஸ்பர்ஶமும் பாகவதஸ்பர்ஶமும் ஸத்தாதாரகமாம்படி இவருடையவைஷ்ணவத்வம் அதிஶயித்தபடி சொல்லுகிறது.

ஈடு.—கீழ் "வீற்றிருந்தேழுல" காயிருக்க, அநந்தரம் "தீர்ப்பாரையாமினி" யாயிருக்கிறதிறே! எம்பார் கீழில்திருவாய்மொழியையும் இத்திருவாய்மொழியையும் அநுஸந்தித்து, 'மோருள்ளதனையும் சோறேயோ? அதிலே - அப்படி நிரவதிக ப்ரீதியாய்ச் சென்றது; இதில் - இப்படி மோஹத்தோடே தலைக்கட்டிற்று; இதுக்கு இருந்து அடைவுசொல்லுவேனோ? இதுக்கு

தீர்ப்பாரையாமினி ப்ரவேஶே - வ்யாக்யாதாவின் ஈடுபாடு - 'கீழ் வீற்றிருந்து' இத்யாதி. அதாவது - கீழ் நிரதிஶயப்ரீதியாய், இதிலே நிரதிஶயது:கமா யிருக்கிறதிறே என்றபடி. இதுக்கு ஸம்வாதம் - 'எம்பார்' இத்யாதி. 'மோருள்ளதனையும் சோறேயோ' என்னுமாபோலே யென்று கூட்டுவது. அதாவது - ஒருவன் நாழியரிசியைக்கொண்டுவந்து ஓரம்மையார்கையிலே 'எனக்கு இத்தைச் சமைத்து இடவேணும்' என்றுகொடுக்க, அப்படியே அவளும் சமைத்து இலையைப்படுத்திட, இவனும் அருகே ஒருபாத்ரத்திலே மோ

அஸங்கதிரேவ ஸங்கதி:’என்று அருளிச்செய்வராம். ‘‘பொய்ந்நின்றஞான’’த்திலே-ப்ரக்ருதிதோஷத்தை அநுஸந்தித்து அஞ்சி, ஸ்ரீபரதாழ்வான் ‘பெருமாள் திருவபிஷேகத்துக்கு நம்மையழைத்து வந்தது’ என்று,‘அவரைத் திருமுடிசூட்டி அடிமைசெய்யக்கடவோம்’ என்று பாரித்துவரக்கொண்டு, கைகேயி ‘‘ராஜ்ந’’-‘ராஜ்ந்’ என்று ‘உனக்குமுடிவாங்கிவைத்தேன்’என்றபோது அவன் துடித்தாற்போலே துடித்தாராயிற்று; ‘நான் அவரடியேனன்றோ? அவர் என்சொல்லை மறுப்பரோ? இப்போதே மீட்டுக்கொண்டுவந்து திருவபிஷேகம்பண்ணுகிறேன்’ என்று திருச்சித்ரகூடத்திலே கிட்டுமளவும் பிறந்த தரிப்புப்போலேயாயிற்று - திருவாசிரியத்திற் பிறந்த தரிப்பு; பின்பு, பதினாலாண்டுகூடி ஆசை வளர்ந்தாற்போலேயாயிற்று - திருவந்தாதியில் ஆசை பெருகினபடி; ‘‘என்னெஞ்சினார்தாமே யணுக்கராய்ச் சார்ந்தொழிந்தார்,’’ ‘‘முயற்றிசுமந்தெழுந்து’’ என்னும்படியிறே ஆசை பெருகினபடி. மீண்டுஎழுந்தருளி ‘‘திருவபிஷேகம் பண்ணி அவன்மநோரதம் தலைக்கட்டினாற்போலேயாயிற்று - திருவாய்மொழியில் இவரை அநுபவித்தபடி. கீழ் ‘‘வீற்றிருந்தேழுல’’கில் பிறந்த நிரவதிகப்ரீதி மாநஸாநுபவமாத்ரமாய் பாஹ்யகரணயோக்யமல்லாமையாலே, எத்தனையேனும்உயரஏறினது தகரவிழுகைக்கு உடலாமாபோலே மோஹத்துக்கு உறுப்பாய்த் தலைக்கட்டிற்று. இப்படியிருக்கிற தம்தசையை, ஸர்வேஶ்வரனோடே கலந்து பிரிந்து நோவுபடுகிறாளொரு பிராட்டி தன்ஆற்றாமையாலே மோஹித்துக்கிடக்க, இவள்தசையை அநுஸந்தித்த பந்துவர்க்கமும் மோஹித்து, ‘இது தேவதாந்தரங்களாலே வந்ததோ?’ என்று தேவதாந்தரஸ்பர்ஶமுடையாரைக்கொண்டு புகுந்து பரிஹாரம்பண்ணப் புக, இவள்ப்ரக்ருதியறிந்த தோழியானவள்,‘நீங்கள் பாரிக்கிறவை இவள் நோவுக்குப் பரிஹாரமல்ல; விநாஶத்துக்கு உடலாமித்தனை; ஆனபின்பு, பகவந்நாமஸங்கீர்த்தநத்தாலும் பாகவதபாதரேணுவாலும் பரிஹரிக்கப் பாருங்கோள்’ என்கிற அவள்பாசுரத்தாலே ஸ்வதசையைப் பேசுகிறார். இவர்தாம், ‘‘நவஶீதாகுயாஹீநா’’

---

ரைக்கொண்டுவந்து வைத்திருந்து மோரைவார்த்துக்கொண்டு, ‘அம்மையாரே! மோர் விஞ்சிற்று. சோறிடும்’ என்று ஒருகால் இருகால் இங்ஙனே சொல்லுகையாலே அம்மையார் அலுத்து ‘நீ கொண்டுவந்த மோர் தொலையாததாயிருந்தது, மோருள்ளதனையும் சோறிடுவேனோ?’’ என்றாளாம். இத்தால் தாத்பர்யமேதென்னில்; கீழ்ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களுக்கெல்லாம் ஒருபடி ஸங்கதிசொல்லிக்கொண்டு போந்தோம்; இதிலே வந்தவாறே சால நிம்நோந்நதமாயிருந்தது. இது என்னாலே சொல்லலாயிருந்ததோ? இதுக்கு அஸங்கதிரேவ ஸங்கதி: என்று அருளிச்செய்வராமென்றபடி. இந்த ப்ரீத்யப்ரீதிகள்தான் திருவிருத்தம் தொடங்கி முனியே நான்முகனளவும் அநுவர்த்திக்கிறதென்று திருவுள்ளம்பற்றி, ப்ரபந்தசதுஷ்டயத்திலும் இவர்க்குண்டான அவஸ்தைகள் ஸ்ரீபரதாழ்வானுடைய தசையோடு போலியாயிருந்ததென்கிறார் - ‘பொய்ந்நின்ற’ இத்யாதி. அஞ்சியென்றது - ‘இனியாமுறாமை’ என்கையாலே. வரக்கொண்டு-வந்தபின்பு. திருவந்தாதியில் ஆசைபெருகிக் கிடந்தபடியைச் சொல்லிற்றோ? என்ன, ‘என்னெஞ்சினார்’ இத்யாதி. என்னுடைய நெஞ்சினார், தாமே அந்தரங்கராய்க் கிட்டிவிட்டாரித்யர்த்த:. பெரிய திருவந்தாதி - ஏழாம்பாட்டு, ‘‘யாமேயருவினையோம்’’ இத்யாதி. முதற்பாட்டு - ‘‘முயற்றி’’ இத்யாதி. ‘‘முயற்றிசுமந்தெழுந்துமுந்துற்றநெஞ்சே’’; அவனைப்பேசுகையில் உத்ஸாஹத்தைச் சுமந்துகொண்டு அத்தாலே விகாஸத்தையுடையையாய்க்கொண்டு என்னிலும் முற்பட்டுப் பதறுகிற நெஞ்சே! இத்யர்த்த:. ஆசைபெருகினபடி யென்றது-‘‘அன்பேபெருகும்மிக’’ என்றதைப்பற்ற. ஆனாலும், ஒரு ஸங்கதி சொல்லவேணுமிறே; ஆகையாலே, கீழில் திருவாய்மொழியோடே ஸங்கதி - ‘கீழ்வீற்றிருந்து’ இத்யாதி ‘ஸ்வதசையைப்பேசுகிறார்’ என்னுமளவும் ஸங்க்ரஹம் தகரவிழுகைக்கு - அத:பதிக்கைக்கு. ‘பந்துவர்க்கமும் மோஹித்து’ என்றது - கலங்கியென்றபடி. ‘பகவந்நாம ஸங்கீர்த்தநத்தாலும்’ என்றது - ‘‘பேர்சொல்லகிற்கில்’’ ‘‘களிறட்டபிரான் திருநாமத்தால்’’ இத்யாதியைப் பற்ற. ‘பாகவதபாதரேணுவாலும்’ என்றது - ‘‘மாயன்தமரடிநீறு’’ என்றத்தைப் பற்ற. ஸ்வதசை - மற்றொருதெய்வம் தொழாத தசை. பிராட்டிதசை இவருக்கு வரக்கூடுமோ? என்ன, பிராட்டிமாத்ரமன்றிக்கே எல்லாரோடும் ஒப்பரென்கிறார் - ‘இவர்தாம்’ இத்யாதி. ‘‘ஸர்வஷாமேவ லோகாநாம் ஸர்வேஷாமேவ தேஹிநாம்’’

(நசஸீதாத்வயாஹீநா) என்றும், "குருஷ்வமாமநுசரம்" (குருஷ்வமாமநுசரம்) என்றும் சொல்லுகிறபடியே, வ்யதிரேகத்திலே தரியாமைக்கு இளையபெருமாளோ டொப்பர்; அவன்போ கட்டவிடத்தே கிடக்கைக்கும் குணாநுஸந்தாநத்தாலே ஜீவித்திருக்கைக்கும் ஸ்ரீபரதாழ்வானோ டொப்பர்; எத்தனையேனும் ஆற்றாமை கரைபுரண்டாலும் 'அத்தலையாலே பேறு' என்றிருக்கைக் குப் பிராட்டியோ டொப்பர். முதல்திருவாய்மொழியிலும் பரத்வமிறே பேசிற்று; அநந்தரம் அவதாரஸௌலப்யத்தை அநுஸந்தித்து மோஹிக்கச் செய்தேயும், "அஞ்சிறையமடநாரை" யிலே தூதுவிட வல்லராம்படி உணர்த்தியுடையரானார்; "வீற்றிருந்தேழுல" கில் பரத்வத்தை அநுஸந் தித்தஅநந்தரம், தாமும் மோஹித்துத் தம்தசையை அநுஸந்தித்த பந்துவர்க்கமும் மோஹித்து தேவதாந்தரஸ்பர்ஶமுடையார் புகுந்து கலக்கினாலும் உணர்த்தியறும்படியாயிற்று. பகவல்லா பத்திலுணர்த்தியும் அலாபத்தில் மோஹமுமாய்ச் செல்லும் இது, இவ்வாழ்வாரோருவர்க்குமே யுள்ள தோன்றாயிற்று. மற்றும் ஜ்ஞாநாதிகராய் பகவத்விஷயத்திலே கைவைத்தாராயிருக்கு மவர்களிலும் ஸ்ரீவஸிஷ்டபகவான் புத்ரவியோகத்திலே வந்தவாறே கடலிலே புகுவது, மலை யிலே யேறி விழுவதானான்; ஸ்ரீவேதவ்யாஸனும் சாயாசுகனைக்கொண்டு ஜீவித்தான்; பகவத் விஷயத்தில் லாபாலாபமே பேறிழவாயிருக்கும் இது இவ்வாழ்வாரோருவர்க்குமேயிறே உள்ளது.

இப்படி இவள் மோஹித்துக்கிடக்க, இவளைக் கண்ட உறவுமுறையாருமெல்லாம் நாகபாசபத்தரைப்போலே மோஹித்து யுக்தாயுக்தநிரூபணக்ஷமரன்றிக்கே கலங்கிக்கிடக்க, அங்குப் போலே உணர்ந்திருந்து நோக்குகைக்கு ஸ்ரீஜாம்பவன்மஹாராஜர் திருவடிபோல்வாரு மில்லை யாயிற்று; "ஶத்ருக்நோநந்தரஸ்த்திதঃ" (ஶத்ருக்நோநந்தரஸ்த்திதঃ) என்னும் இதுவும் இல்லை யாயிற்று. "அஸ்யராஜகுலஸ்யாத்யத்வததீநம் ஹி ஜீவிதம்" (அஸ்யராஜகுலஸ்யாத்யத்வததீநம்

என்கிற ஶ்லோகத்தில், "த்வதீநம்" என்ற பதம் இங்கு வேண்டுவது. ஆனால், விஶ்லேஷத்தில் முடிந்து பிழைக்கவொண்ணாதோ' என்ன, 'அவன்போகட்டவிடத்தே' இத்யாதி. நகரையினுடைய அநுவ் ருத்திக்கும், அத்தாலே போகட்ட விடத்திலே கிடந்து குணாநுஸந்தாநத்தாலே தரித்திருக்கைக்கும் இந்த த்ருஷ்டாந்தம். இப்படி ஆசையும் மிக்குத் தரிப்புண்டானால், ப்ராப்யஸித்திக்கு அநுகுணமாக யத்நம்பண்ண விறே அடுப்ப தென்ன, 'எத்தனையேனும்' இத்யாதி. 'அத்தலையாலே பேறென்றிருக்கைக்கு' என்றவிடத்தி லே, "ஶரண்யஸ்வாகாரம்" இத்யாத்யநுஸந்தேயம். உயர்வறவுயர்நலத்திலும் வீற்றிருந்தேழுல குக்கு விஶதாநுபவமுண்டாகையாலே, அஞ்சிறையமடநாரையிலும் இதில் வ்யஸநம் அதிஶயித்தது என்கி றார் - 'முதல் திருவாய்மொழியிலும்' இத்யாதி. அவஸாதத்தினுடைய பர்வபேதங்கள் அந்யாபதேஶவைசித்ரி யைப் பிறப்பிக்கு மென்று கருத்து. ஸ்வாபதேசத்திலே வ்யாக்யாதாவின் ஈடுபாடு - 'பகவல்லாபத்தில்' இத் யாதி. 'ஒருவர்க்குமே' என்கிறதென்? அல்லாதார்க்குமில்லையோ? என்ன, 'மற்றும்' இத்யாதி. 'கடலிலே புகுவது' என்றதுக்கு ப்ரமாணம் - "[illegible] ஶோகாவிஷ்டாஹாநிঃ । [illegible] விவாதத[illegible]ஸி" இதி. 'மலையிலே யேறிவிழுவது' என்றதுக்கு ப்ரமாணம் - "[illegible] இதி பாரதே. 'சாயாசுகனைக்கொண்டு' என்கிறது - வ்யாஸருடைய மோஹத்தைக் கண்டு ருத்ரன் ப்ரதிமாரூபமாக ஸ்ருஷ்டித்துக்கொடுத்தது. இங்கே - "[illegible]" இத்யாத்யநுஸந்தேயம்.

விஸ்தரஸங்கதி - 'இப்படி' இத்யாதி. நாகபாஶபத்தர் - ப்ரஹ்மாஸ்த்ரபத்தர். ஜாம்பவன்மஹா ராஜரும் திருவடியும் உணர்ந்திருந்து நோக்கினது ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே மோஹித்த தசையாகை யாலும், நாகபாசத்தால் எல்லார்க்கும் மோஹமில்லாமையாலும் இப்படிகொள்ளவேணும். மோஹித்துஎன் றது - ஸ்வரூபத்தை உணரமாட்டாதே கலங்கி யென்றபடி. அங்குப்போலே யென்றது ப்ரஹ்மாஸ்த்ரத்தில் த்ருஷ்டாந்தத்தைப்பற்ற. த்ருஷ்டாந்தாந்தரம் - 'ஶத்ருக்ந' இத்யாதி. நாயகி மோஹித்தால் இவள்தசை யைக் கண்ட பந்துவர்க்கமும் மோஹிக்கிறதென்? என்ன, இவளைக்கொண்டே ஜீவிக்க இருக்கிறார்களாகையா லே யென்று விவக்ஷித்து, அதுக்கு த்ருஷ்டாந்தம் - 'அஸ்ய' இத்யாதி. "[illegible]

ஹிஜீவிதம்) - ‘பெருமாள் காடேற எழுந்தருளினர்; சக்ரவர்த்தி துஞ்சினன்; இனி நீயேயிறே ராஜ்யத்துக்குக் கடவாய்; உன்னைக்கொண்டன்றே நாங்கள் ஜீவிக்கவிருக்கிறது’ என்கிருர்களல்லர்; ‘உன்முகத்திலுருவுதல் காணக்காண உன்னையிழக்கமாட்டார், அவர்வரவுஅணித்து என்றன்றே நாங்கள் ஜீவிக்கிறது’ என்கிருர்களாயிற்று; அப்படியே இவளைக்கொண்டே ஜீவிக்க இருக்கிருர்களாகையாலே எல்லாருமொக்க இவள்தசையைக் கண்டு கலங்கிக்கிடக்க, இவ்வளவிலே நாட்டிலே வேரறிவார் விறகறிவார் மந்த்ரமறிவார் ஔஷதமறிவா ரடங்கலும் வந்துபுகுர, அவ்வளவிலே தேவதாந்தரஸ்பர்ஶமுடையார் ‘வைஷ்ணவக்ருஹத்தை தூஷிக்க நமக்கு நல்லஅளவு’ என்று வந்துபுகுர, இவளுடைய பந்துவர்க்கத்திலுள்ளார் கலங்கியிருக்கையாலே, ‘இவளுடைய நோய் இன்னது’ என்றும், ‘பரிஹாரம் இன்னது’ என்றும் அறியாதே, அவர்களிலே ஒருத்தி ஒருகட்டுவிச்சியை, ‘இவள்நோய்எது? நோய்க்கு நிதாநம் எது?’ என்று கேட்டு, அவள் சொற்படியே, “த்ரவ்யம் நிந்த்யஸுராதி தைவதமதிக்ஷுத்ரஞ்ச பாஹ்யாகமோத்ருஷ்டிர்தேவலகாஶ்ச தேஶிகஜநா:” (த்ரவ்யம்நிந்த்யஸுராதி தைவதமதிக்ஷுத்ரஞ்ச பாஹ்யாகமோத்ருஷ்டிர்தேவலகாஶ்ச தேஶிகஜநா:) என்கிறபடியே, நிந்த்யமான த்ரவ்யத்தை இவள்ரக்ஷணத்துக்குப் பரிகரமாகக் கொண்டு, க்ஷுத்ரதேவதை ஆவேசித்ததாகக் கொண்டு, பாஹ்யாகமங்களை த்ருஷ்டியாகக் கொண்டு, தேவதாந்தரஸ்பர்ஶமுடையாரை தேசிகராகக் கொண்டு, இவள்பக்கலுண்டான ஸ்நேஹாதிஶயத்தாலே, ‘இவள்ஜீவிக்குமாகில் ஏதேனும் ஒரு வழியாலேயாகிலும் பரிஹரிக்க அமையும்’ என்று வழியல்லாவழியிலே இழிந்தார்கள். அப்படி கலங்கப்பண்ணுமிறே பரிவு; “ஸர்வாந்தேவாந்நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யஶஸ்விந:” (ஸர்வாந்தேவாந்நமஸ்யந்திராமஸ்யார்த்தே யஶஸ்விந:) என்ருர்களிறே திருவயோத்யையிலுள்ளார். இத்தைக்கண்ட உயிர்த்தோழியானவள், “இவர்கள்செய்கிற இவை இவளகவாயில் கிடக்கிற ஸத்தையையும் இழக்குமித்தனை; இனி நாம் இத்தை அறிந்தோமாகச் சொல்லில் ‘உன்காவற்சோர்வாலே வந்ததன்றே?’ என்று சொல்லுவர்கள்; நாம் கைவாங்கியிருந்தோமாகில் இவளையிழக்கவரும்; இனி இதுக்குப் போக்கடியேன்?” என்று விசாரித்து, “இவர்கள் தாங்களும் ‘இதுதான் ஏதோ?’ என்று ஆராயாநின்ருர்களிறே; அவ்வோபாதி நாமும் நிரூபணத்திலேயிழிந்து இவள்ப்ரக்ருதியைக்கொண்டு சொன்னேமாகச் சொல்லுவோம்” என்று பார்த்து, “நீங்கள் இவளுக்குஉடேகிறநோவும்அறிந்திலிகோள்; நிதாநமும்அறிந்திலிகோள்; பரிஹாரமும் அறிந்திலிகோள்; நீங்கள் பரிஹாரமாகச்செய்கிறவை, கருமுகைமாலையைச்

---

நகராஸ்தித: । வஸிஷ்஠ப்ரமுகாஸ்ஸர்வே யாவத்ஸம்பந்திநோ ஜநா: ...”, “ஸர்வஸ்ய ஜகதோ ஸ்யாஜ்யே ... ஹிஜீவிதம் । க்வாத்ய ... ஜீவாமி ...” இத்ய யோத்யாகாண்டே. இஶ்ஶ்லோகத்துக்கு அர்த்தம் - ‘பெருமாள்’ இத்யாதி. அவர் வரவு - பெருமாளுடைய வரவு. கலங்கிக்கிடக்க - ‘பரிஹாரம் இன்னது’ என்று அறியாதே கலங்கிக்கிடக்க. இது - “... தே” என்றத்தைப்பற்ற. “அரும்நாடும்” இத்யாத்யநுஸந்தேயம். வேர் - பச்சைமூலிகை. விறகு - ... மூலிகை. நல்லஅளவு - நல்லஅவகாஶம். ‘இன்னதென்று அறியாதே’ என்றது-அறியாதிருக்கை என்றபடி. த்ருஷ்டி: - சக்ஷுர்ப்பூதமான சாஸ்த்ரம். தேவலகா: - பூஜகா:. “த்ரவ்யம் நிந்த்யஸுராதி தைவதமதிக்ஷுத்ரஞ்ச பாஹ்யாகமோத்ருஷ்டிர்தேவலகாஶ்ச தேஶிகஜநாயி ... ஷா ... । ... தேஶிகஜநா: ... தேவதாஜநம் ... யாவ ... தவ்யா ... தே”. இப்படிகலங்குகைக்குஹேதுவேது? என்ன, ‘அப்படி’ இத்யாதி. பரிவாலேகலங்கினபேருண்டோ? என்ன, ‘ஸர்வாந்’ இத்யாதி. “ஸ்த்ரியோ வ்ருத்தாஸ்தருண்யஶ்ச ஸாயம்ப்ராத: ஸமாஹிதா: । ஸர்வாந்தேவாந்நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யஶஸ்விந:” இதிஅயோத்யாகாண்டே ராமகுணகதந ப்ரகரணே. என்ருர்களிறே-என்றதுசெய்தார்களிறே யென்றபடி. அகவாயில்-உள்ளே. காவற்சோர்வு ரக்ஷாச்யுதி. போக்கடி-கதி. பழைய

சேவ்விபேறுத்த என்று நெருப்பிலே இடுவாரைப்போலே இவளையிழக்கைக்கு உடலாமித்தனை; ஆனபின்பு, இவற்றைவிட்டு, இக்குடியிலே பழையதாகச் செய்துபோரும் பரிஹாரத்தைப் பண்ணப் பாருங்கோள்; *"உலகேழுமுண்டான் சொன்மொழிமாலையந் தண்ணந்துழாய்கொண்டு சூட்டுமினே" என்றும், "தண்ணந்துழாய்த்தாராயினும் தழையாயினும் தண்கொம்பதாயினும் கீழ்வேராயினும் நின்ற மண்ணுயினுங் கொண்டுவீசுமினே" என்றுமிறே முன்பும் விதித்தது; அங்கு,"நின்ற மண்ணுயினும்" என்றாள்; இங்கு, "மாயன்தமரடிநீறு" என்றாள்; இதிறே அடிப்படச்செய்து போந்த பரிஹாரம். ஆயிட்டு, இவள்நோய் இது, நோய்க்கு நிதாநமும் இது; இதுக்குப் பரிஹாரமும் - பகவந்நாமஸங்கீர்த்தநமும் பாகவதபாதரேணுவை ஸ்பர்ஶிப்பிக்கையும்" என்றுசொல்லி, அவர்கள் செய்கிறவற்றை நிவர்த்திப்பிக்கிறாளாய்ச் செல்லுகிறது.

இதுதன்னி லோடுகிற தேன்? என்னில்;—அஜ்ஞாததசையிலும் தேவதாந்தரஸ்பர்ஶமும் ததீயஸ்பர்ஶமும் ஸத்தயா பாதகமாய், பகவந்நாமஸங்கீர்த்தநமும் பாகவதஸஹவாஸமும் ஸத்தயா தாரகமாம்படி ஆழ்வார்க்கு வைஷ்ணவத்வம் முறுகினபடி சொல்லுகிறது. 'ராவணன் மாயாஶிரஸ்ஸைக்காட்டினபோது பிராட்டியும் அல்லாத ஸ்த்ரீகளோபாதி மோகித்துக் கண்ணநீர் விழவிட்டிருந்தாளாயிருந்தது; இதுக்கு அடியேன்? இதுகேட்டபோதே முடியவன்றே ப்ராப்தம்' என்று சீயரைக் கேட்க, 'அவதாரத்தில் மெய்ப்பாட்டாலே 'மெய்' என்றே மோகித்தாள்; ஜ்ஞாநமின்றியிலே ஜீவிக்கைக்கு ஹேது அவருடைய ஸத்தையாகையாலே உளளாயிருந்தாள்; இவ்வர்த்தம் மெய்யாகில் ஸத்தையுமில்லையாம்' என்று அருளிச்செய்தார்.



நாகச்செய்யும் பரிஹாரமேது' என்ன, 'உலகேழும்' இத்யாதி. உலகேழையுமுண்டவனுடைய திருநாமங்களைச் சொல்லுங்கோள், அழகிய குளிர்ந்த திருத்துழாய்மாலையைக் கொண்டுவந்து சூட்டுங்கோ ளென்றபடி. திருவிருத்தம், இருபதாம்பாட்டு, "சின்மொழி" இத்யாதி. 'தண்ணந்துழாய்' இத்யாதி - குளிர்ந்து அழகியதான திருத்துழாயினுடைய விகஸிதமான பூவாகிலும், அதினுடைய தழையாகிலும், குளிர்ந்த கிளையாகிலும், அதன் கீழ்வேராகிலும், அதுக்கு வாஸஸ்தாநமான பூமியில் மண்ணாகிலும் கொண்டுவந்து வீசுங்கோ ளென்றபடி. திருவிருத்தம்-ஐம்பத்துமூன்றாம்பாட்டு, "வாராயின" இத்யாதி. இதுக்கு நியாமகமேது' என்ன, 'அங்கு' இத்யாதி. அடிப்பட வென்றதுக்கு - முன்புதொடங்கி யென்றும், "நின்றமண்" என்கையாலே அடிப்பட்டதென்றும், "தமரடிநீறு" என்கையாலே திருவடிகளிற் பட்டதென்றும் மூன்று அர்த்தம். ஆயிட்டு - ஆனபின்பு. "தேர்ப்பாகனார்க்கு" என்கையாலே - நோயும் தந்நிதாநமும்.

இத்திருவாய்மொழிக்கு ஸ்வாபதேசம் - 'இதுதன்னில்' இத்யாதி. இதுதன்னில் - இந்த அந்யாபதேசத்தில். ஸத்தயா - அபுத்திபூர்வக ஸ்பர்ஶமாத்ரேண. 'அஜ்ஞாத தசையிலும் ஸத்தயாதாரகம்' என்றதுக்கு ஸம்வாதம்-'ராவணன்' இத்யாதி. இதுக்குஅடி - கண்ணநீர் விழவிட்டிருந்தமாத்ரத்துக்குஹேது. ஜ்ஞாநமின்றியிலே - 'பெருமாள் ஸத்தையோடேயிருக்கிறார்' என்கிற ஜ்ஞாநமின்றியிலே யென்றபடி. இவ்வர்த்தம் அவர் முடிவு. இத்திருவாய்மொழி - வெறிவிலக்கென்று ஒருதுறை. இத்திருவாய்மொழியால் - தேவதாந்தரஸ்பர்ஶ நிஷேதம்பண்ணுகிறார். 'ஸ்ரீஜாம்பவந்மஹாராஜர் திருவடிபோல்வாருமில்லை' என்னுநிற்கச்செய்தே, 'ஒருத்திபரிஹாரம்பண்ணுகிறாள்' என்கிறது சேரும்படி யெங்ஙனே? என்னில்,-"ஸஹோஷ்ட்ராவஸ்ரக்ஷோபி:" என்னுநிற்கச்செய்தேயிறே "உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்த்வதர்ஶிந:" என்றது; ஆகையாலே, ஜ்ஞாநியினுடைய தௌர்லப்யம் சொன்ன இத்தனையொழியக் கேவலநிஷேதத்திலே தாத்பர்யமில்லாமையால் விரோதமில்லை' என்று அருளிச்செய்வர்.

* 'உலகேழுமுண்டான்' என்பதுமுதல் 'பரிஹாரம்' என்னுமளவும் - வ்யாக்யாதா அருளிச்செய்த இடைப்பிறவரல்.

## முதற்பாட்டு.

தீர்ப்பாரையாம் இனி எங்ஙனம்நாடுதும் ? அன்னைமீர்!
ஓர்ப்பால் இவ்வொண்ணுதல் உற்றநல்நோயிதுதேறினோம்
போர்ப்பாகுதான்செய்து அன்றைவரைவெல்வித்த மாயப்போர்த்
தேர்ப்பாகனார்க்கு இவள்சிந்தைதுழாய்த்திசைக்கின்றதே.

ஆ.—(தீர்ப்பாரை.)'இவளுக்குஇந்தநோய் எங்ஙனேவந்தது?' என்று நிரூபித்து,'அந் நிரூபணத்தாலே இவளுற்ற நன்னோயை அறிந்தோம்; இது எத்தாலே வந்தது?' என்னில்,— 'துர்யோதநாதிகள் நடுங்கும்படி ஸேனையை அணிவகுத்து அன்று ஐவரை வெல்வித்த மாயப் போர்த்தேர்ப்பாகனாரை ஆசைப்பட்டுப் பெருமையால் வந்தது. இந்தநோய் தீர்ப்பாரை நாம் எங்கே தேடுவோம்? அன்னைமீர்!' என்றுகொண்டு, அவர்கள் பரிஹாரமாகச்செய்கிற செயல்களை இவளுடைய தோழி நிவர்த்திப்பிக்கிறாள்.

ஒ.—முதற்பாட்டில், இப்பிராட்டியுடைய தோழியானவள், இந்நோய்க்கு நிதாநத் தைச் சொல்லி 'நீங்கள் பரிஹாரமாக நினைத்துச் செய்கிறவை பரிஹாரமன்று' என்று அவற் றை நிவர்த்திப்பிக்கிறாள்.

[தீர்ப்பாரை என்று தொடங்கி] - நம்மைப்போலேயன்றியே தரித்துநின்று இனி நோய்தீர்ப்பாரை நாம் எங்ஙனே தேடுவோம்? [ஓர்ப்பால் என்று தொடங்கி]-அதிலோகமான அழகையுடைய இவள் உற்ற ஸ்ப்ருஹணீயமான இந்தநோய் நிரூபணத்தாலே அறிந்தோம். [போர்ப்பாகு என்று தொடங்கி] - ஸேநையை அணிவகுக்கை தொடக்கமாக யுத்தத்துக்கு வேண்டும் நிர்வாஹமெல்லாம் தானேபண்ணி தர்மபுத்ராதிகள்ஐவரையும் வெல்விப்பதும் செய்து ஆஶ்சர்யமான யுத்தத்திலே திருத்தேரை நடத்தின க்ருஷ்ணனைப் பெறுகைக்காக இவளந்தஃகரணம் கலங்கி மதிகெடுகிறது.

ப.—முதற்பாட்டில், 'இவள் பாண்டவபக்ஷபாதியான க்ருஷ்ணனுக்கு ஈடுபட்டா ளென்னுமிடம் நிரூபித்தறிந்தோம்; ஆனபின்பு, இவள்நோய்தீர்ப்பாரை எங்கே தேடுவோம்?' என்று தோழியானவள் தாயாரைக்குறித்துச் சொல்லுகிறாள்.

அன்னைமீர் - (இவள்பக்கல்பரிவாலே 'ஏதேனும் ஒருவழியாலும் இவள்நோய் தவிர்ப் பிக்கவேணும்' என்றிருக்கிற) அன்னைமீர் ! இனி - அநுபரிஹாரமாகாதபின்பு, தீர்ப்பாரை - (இந்நோய்) தீர்ப்பாரை, யாம்-(என்னோடுஉங்களோடு வாசியற நோயினையறியாத) நாம், ('எல் லாருங்கூடவாராய' என்றாலும்), எங்ஙனம்-எங்ஙனே, நாடுதும் - ஆராய்வோம்? (இப்படிச்சொல் லுகிற நீ அறிந்தாயோ? என்னில்), ஓர்ப்பால்-இப்போது நிரூபிக்கையாலே, இவ்வொண்ணுதல்-இந்த அழகிய நுதலையுடையவள், உற்ற - உள்ளுறப்பெற்ற, நல்-ஶ்லாக்யமான, இது-இந்த, நோய் - நோயை, தேறினோம்-('இவள்ஸ்வபாவத்தாலும் இவளைப்பற்றியிருப்பாராலும் நோய் ஆக்ரமமாக உற்றபடியாலும் வேறொருசரீரரோகமல்ல, விலக்ஷணவிஷயமடியாக வந்த ஶ்லாக்யமான நோய்' என்று)அறுதியிட்டோம்; (இதுஎந்தவிஷயமடியாக வந்தது? என்னில்),— போர்-யுத்தத் துக்குவேண்டும், பாகு - நிர்வாஹங்களையுடைய, தான் - ("யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தந:" என்று) தானே, செய்து-செய்து, அன்று - (துர்யோதநாதிகள் பாண்ட வர்களைமேலிட்ட) அன்று, (அவர்களை), ஐவரை - ஐவரும், வெல்வித்த - வெல்லும்படியாகப்பண்

ணின, மாயம்-('ஆயுதமெடேன்' என்று ஆயுதமெடுத்தும் பகலை இரவாக்கியும் பண்ணின) க்ருத்ரிம ரூபமான ஆஶ்சர்யசேஷ்டிதங்களையுடைய, போர் - யுத்தத்திலே, தேர் - அர்ஜுநன்தேரிலே, பாகனார்க்கு - ("வாய-ம்ஸஹ்ராது" என்று எதிரிகளம்பு தன்மேலேபடும்படி முன்னே) ஸாரதியாய்நின்றவனுக்கு, இவள் - இவளுடைய, சிந்தை - நெஞ்சானது, துழாய் - ப்ரமித்து, திசைக்கின்றது - அறிவழியாநின்றது.

தேறிேனுமென்ற பன்மையால் - அவர்கள்கலக்கம் தனக்குமொத்தவோபாதி, தன் தெளிவே அவர்களுக்கும் தெளிவென்று கருத்து.

இ.—முதற்பாட்டில், தோழியானவள் இவள்நோய்க்கு நிதாநத்தைச் சொல்லி, 'நீங்கள் செய்கிறவை பரிஹார மன்று' என்று அவற்றை நிவர்த்திப்பிக்கிறாள்.

[தீர்ப்பாரை யாம் இனி எங்ஙனம் நாடுதும்] - இவர்கள் பரிஹாரம்பண்ணாநிற்கச் செய்தே தீர்ப்பாரைத் தேடுகிறது-செய்கிறவை பரிஹாரமன்று என்கை. தீர்ப்பாரைத்தேடு கையாலே இவள் பரிஸரத்தில் பரிஹரிக்கைக்கு ஆளில்லை; மோஹிக்கைக்கு ஆளுண்டித்தனை யென்கை. 'யாம்' என்று தன்னையும் கூட்டிக்கொள்ளுகிறாள், இவர்களோபாதி தானும் நிரூபிக் கிறாளாய்த் தோற்றுகைக்காக; கலக்கத்துக்கு இவர்களோடு தன்னோடு வாசியில்லை யென்று தோற்றுகைக்காக என்றுமாம். [இனி] - "கடல்வண்ண ரிதுசெய்தார் காப்பாரார்" என்று ஔஷதமே ரோகஹேதுவானால் பரிஹாரமுண்டோ? நச்சுமாமருந்தமிறே மோஹிக்கப் பண்ணுகிறது. "நிவர்த்தமாணம் ஹேஷஜம் விஷகா". ஆனபின்பு, [எங்ஙனம் நாடுதும்] - எங்ஙனே தேடுவோம்? [அன்னைமீர்] - இவளுக்குக் கடவோம் என்று இத்தைப் பரிஹரிக்கப்போமோ? பரிஹாரம் தேடுவது நோயறிந்தாலன்றோ? அது நீ அறிந்தாயோ? என்ன, [ஓர்ப்பால் இப்பாதி] - உங்களோபாதி நானும் இப்போது விசாரித்துப்பார்த்து அறிந்தேன் என்கிறாள். [ஓர்ப்பால்]-ஓருகையாலே; ஆராயப்புக்கால் ஒருகூரத்தாழ்வானோடு ஒக்குங்காணும் இத்தோழி படி. [இவ்வொண்ணுதல்] - இவ்வடிவழகையுடையவள் மோஹிக்கும்போது விலக்ஷணவிஷய மாகவேண்டாவோ? ஸ்ரீபரதாழ்வான் நோயென்றால் ராமவிரஹமாயிருக்குமத்தனை போக்கிச் சாதுர்த்திகமாயிராதே. ஒள்ளிய நுதலையுடையவள். அம்புபட்டு முடிந்தார் முகம்போல் இராதிறே, தீரிலே புக்கு முடிந்தார் முகம். குணாதிகவிஷயத்தை ஆசைப்பட்டுப் பெருமையா லுண்டான மோஹமாகையாலே முகத்தில் செவ்விக்கு ஆலத்திவழிக்கவேண்டும்படியாயிற்று இருக்கிறது. [உற்ற] - வேறொன்றால் பரிஹரிக்கவொண்ணாதபடி மறுபாடுருவக்கொண்ட நோய். [நல்நோய்] - "ஸ்வரஸவஸ்வரஸஹ:" என்கிறபடியே அடிக்கழஞ்சுபெற்ற நோய். "ஸ்வர்ஆகவநந்யஸாஸக்ய:" என்கிறபடியே இந்நோய் கைப்பட்டபோதே பரிஹாரமும் கைப் பட்டது என்கிறாள். நான் இந்நோய் கொள்ளப்பெறாதே இதுக்குப் பரிஹாரம் பண்ண இருப்பதே! என்கிறாள். [தேறினோம்] - தெளிந்தோம். இக்கோஷ்டிக்குத் தெளிவு தேட்ட மாயிறே இருப்பது; ருஷிகள் கோஷ்டியில் கலக்கம் தேட்டமாயிருக்குமாபோலே. 'அறிந் தாயாகில் சொல்லிக்காண்' என்ன, [போர்ப்பாகு தான் செய்து] - போருக்குவேண்டும் நிர்வாஹ மெல்லாம் தானே பண்ணி, "யஸ்யஜ்ஞீவமொவ்ராய" என்று எதிரிகள் பறித்துக்கொண்ட பரிகரமெல்லாம் தானேயாய் நின்றபடி. [தான்] - "வீற்றிருந்தேழுல"கில் தானிறே வந்து கை யாளாய் நின்றான். [செய்து] - ஸங்கல்பத்தாலே இருந்த இருப்பிலே உபயவிபூதியையும் நடத்தக்கடவ அவனிறே கைதொடனானான். இப்படிப்பட்ட ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்திலே யாயிற்று, இவள் மோஹித்தது. [அன்று ஐவரை வெல்வித்த]-"நகாங்க்ஷே விஜயம்க்ருஷ்ண" என்று இவர்கள்தாங்களும் யுத்தத்துக்கு ஆளாகாதபடியான தசையிலே நூற்றுவர் எதிரிகளாக

ஐவரான பாண்டவர்கள் வெல்லும்படி பண்ணினன். அப்பக்ஷபாதத்திலே யாயிற்று, இவள் ஈடுபட்டது. துர்யோதநாதிகளைத் தோற்பிக்கிலும் இவளைத் தோற்பிக்கை அரிது. அவர்களை ஸ்வாதந்த்ர்யாபிமாநத்தாலே தோற்பிக்கவொண்ணாது; இவளை ஸ்த்ரீத்வாபிமாநத்தாலே தோற்பிக்கவொண்ணாது. [மாயப்போர்] - ஆஶ்சர்யமான யுத்தமென்னுதல், வஞ்சநங்களையுடைய யுத்தமென்னுதல். 'ஆயுதமெடேன்' என்று ஆயுதமெடுத்தும், பகலை இரவாக்கியும் இரண்டுமிறே வஞ்சநம்: [தேர்ப்பாகனார்க்கு] - அர்ஜுநனை அழியச்செய்ய நினைத்தவர்களுடைய அஸ்த்ரஶஸ்த்ரங்கள் முகப்பிலே தன்மேலேயாம்படி உடம்புக்குஈடு இடாதே நின்று தேரை நடத்ினவனுக்கு. [இவள்] - அவனுடைய ஸாரத்யவேஷம் இவள்வடிவிலே நிழலிட்டுத் தோற்றுகிறதில்லையோ? "[illegible]". [சிந்தை துழாய்த் திசைக்கின்றதே] - இவள்சிந்தை-'கடல்கலங்கிற்று' என்றால் மந்தரத்தாலே யென்று வா? வள் அந்தஃகரணம் கலங்கி மதிகெடுகிறது க்ருஷ்ணனைப் பெறுகைக்காக. மயர்வறமதிநலம் அருளப்பெற்றவளாகையாலே பரமபதத்தில் முதனமைக்கு ஈடுபடுமவளன்றிறே.

ஈடு.—முதற்பாட்டு. தோழி, இவள்நோய்க்கு நிதாநத்தைச் சொல்லி, 'நீங்கள்செய்கிறவை பரிஹாரமன்று' என்று விலக்குகிறாள்.

[தீர்ப்பாரை யாம்இனி எங்ஙனம் நாடுதும்] - இதுக்கு மூன்றுபடியாக அருளிச்செய்தருளுவர்; 'தீர்ப்பாரை-எங்ஙனம்நாடுதும்' என்கையாலே-'நீங்கள்செய்கிறவை பரிஹாரமல்ல'என்று அவற்றை நிஷேதிக்கையிலே தாத்பர்யம்: இவர்கள் பரிஹரியாநிற்கப் பரிஹரிப்பாரை எங்கே தேடுவோமென்கை - இது பரிஹாரமல்ல வென்றதாய் வருமிறே. அங்ஙனன்றிக்கே, இவளோடொக்க மோஹிப்பாரைக் கிடைக்குமத்தனைபோக்கிப் பரிஹாரம்பண்ணுவாரை எங்கே தேடுவோம்?ஊரும்நாடும் உலகமும் தன்னைப்போலஆக்கிக்கொண்டிறே இருப்பது. அன்றிக்கே, தானும் இப்போது பரிஹரிப்பாரை ஆராயாநிற்கிற ளென்று தோற்றியிருந்தது. அன்றிக்கே, "கடல்வண்ணரிதுசெய்தார்காப்பாரார்" என்கிறபடியே, ஔஷதமே அபத்யமானால் பரிஹாரமுண்டோ? நச்சுமாமருந்தமிறே அபத்யமாகிறது; "[illegible]" (நிர்வாணம்பேஷஜம்பிஷக்) என்கிறவனாயிற்று பாதகனாகிறான். [யாம்] - "அன்னைமீர்" என்றுநிற்கச்செய்தேயிறே 'யாம்' என்கிறது ; தாய்மார்க்கும் தோழிமார்க்கும் வாசியற்றபடி. தாய்மார் மங்களாஶாஸநம்பண்ணி

முதற்பாட்டு - 'தீர்ப்பாரை' இத்யாதி. 'தேர்ப்பாகனார்க்கு' இத்யாதியைப்பற்ற, 'நிதாநத்தைச் சொல்லி' என்றது. நீங்கள்செய்கிறவை பரிஹாரமன்றென்றது - 'தீர்ப்பாரையாமினி யெங்ஙனம் நாடுதும்' என்றத்தைப் பற்ற.

'மூன்றுபடியாக' என்றத்தை விவரிக்கிறார் - 'தீர்ப்பாரை' இத்யாதி. 'அது எப்படி?' என்ன, 'இவர்கள்' இத்யாதி. இவள் மோஹித்தால் எல்லாரும் மோஹிக்கவேணுமோ? என்ன, 'ஊரும்நாடும்' இத்யாதி. 'எங்ஙனம்' என்றது-இரண்டர்த்தத்திலும் ஆக்ஷேபாபிப்ராயம்; மூன்றாமர்த்தத்தில் - ப்ரஶ்நாபிப்ராயம். 'மூன்றர்த்தம்' என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, பின்னையும் ஓரர்த்தம் தோற்றுகையாலே அருளிச்செய்கிறார், 'அன்றிக்கே, கடல்வண்ணர்' இத்யாதி. அன்றிக்கே, இவ்வாக்யம்-'நோயின்னதென்றறிந்தபின்பு' என்கிற வாக்யாந்தரம், 'இனி' என்றதுக்குத் தாத்பர்யாந்தரத்வேந கோசாந்தரங்களிலே இருக்கிறது. 'யாம்' என்கிற பஹுவசநம்-தாய்மாரையும் கூட்டியென்று விவக்ஷித்து, 'அன்னைமீர்' என்றால் நீரென்னுதே 'யாம்' என்கிறதென்? என்ன, 'அன்னைமீர்' இத்யாதி. அதாவதேது? என்ன, 'தாய்மார்க்கும்' இத்யாதி. இத்தால், பெண்

மீளாநிற்க, "ஶோகபாரேண சாக்ராந்தாஶ்ஶயநம் நஜஹுஸ்ததா" (ஶோகபாரேணசாக்ராந்தாஶ்ஶயநம்நஜஹுஸ்ததா) என்று அதுவும் மாட்டாதே கிடந்தார்களிறே தோழன்மார்; ஆகையாலே, தாய்மார்க்கும் தோழிமார்க்கும் வாசியறுக்கும் விஷய மென்னுதல்; தோழிமார்க்கு ஏற்றம் சொல்லுகிறதாதல். [இனி] - "நோயின்னது" என்று அறிந்தபின்பு. [எங்ஙனம் நாடுதும்] - இனிப் பரிஹாரமுண்டோ? 'எங்கேதேடக்கடவோம்?' என்றவாறே, 'இவள்கையது நம்கார்யம், இவள் அறிந்தாளாகஅடுக்கும்'என்று பார்த்து பந்துவர்க்கமடைய இவள்மேலே ஒருமுகம்செய்தது; 'இனி நாம் முன்னேயறிந்தோமாகச் சொல்லில் நம்காவற்சோர்வாலே வந்ததாம்; நாம் இப்போது நிரூபித்தோமாவோம்' என்று பார்த்து, [ஓர்ப்பால்] - இப்போது ஓர்ந்துபார்த்தவிடத்து. நீங்களும் ஆராயாநின்றிகோளிறே; உங்களோபாதி நானும் ஆராய்ந்துபார்த்தவிடத்தில் இங்ஙனேதோற்றிற்று. இவள்தான் ஒரு கூரத்தாழ்வானோடு ஒக்குங்காணும்; மநஸ்ஸை ப்ரத்யக்ஷவிஷயமாக்கினால் தத்த்வத்ரயத்தையும் அலகலகாகக் காணவல்லளாயிற்று. [இவ்வொண்ணுதல்] - இவ்விலக்ஷண மான நுதலையுடையவள். இம்முகத்தையுடையவளுக்கு முகாந்தரத்தாலே வருவதோரு நோயுண் டோ? "கண்ணன்கோளிழைவாண்முகமாய்க் கொடியேனுயிர்கோள்கின்றது" என்கிறபடியே அம்முகத்தாலே வரவேண்டாவோ? இவள்நோயென்றால் அவன்அடியாகவேண்டாவோ? பரதாழ்வான் நோயென்றால் சாதுர்த்திகமாயிருக்குமோ? ராமவிரஹத்தாலே வந்ததென்று

பிள்ளையிடத்தில் துஃகத்தில் வந்தால் தாய்மார்க்கும் தோழிமார்க்கும் வாசியில்லை யென்றபடி. தோழிமா ரைப் பற்றத் தாய்மார்க்கு வாசியில்லையோ? இருவர்க்கும் ஸாம்யம்சொல்லலாமோ? என்ன, ஸாம்யமாத்ரமன்றிக்கே, தாய்மாரிற்காட்டில் தோழிமாருக்கு வ்யாவ்ருத்தி உண்டென்று, ஸப்ரமாணமாக அருளிச்செய்கிறார், 'தாய்மார்' இத்யாதி. 'மங்களாஶாஸநம்பண்ணி' என்றது - "யத்ஸர்வம் ஸாவணஸ்ய" இத்யாதியைப் பற்ற. "யேத ராஜ்ஞஸ்ஸஹஸ்ராக்ஷ தத்ர ஶோகபாரேண சாக்ராந்தாஶ்ஶயநம் நஜஹுஸ்ததா" இத்யயோத்யாகாண்டே வநவாஸப்ரயாணாநந்தரே. ஆகையாலே, 'யாம்' என்று - அன்னையர்க்கும் தங்களுக்கு முண்டான ஸாம்யத்தாலே அவர்களையுங் கூட்டிக்கொண்டு சொல்லுகிறதாதல், அவர்களிற்காட்டில் தங்களுக்கு உண்டான ஏற்றத்தாலே தங்களைச் சொல்லிற்றாதல். த்விதீயார்த்தத்துக்கு, 'யாம்' என்று - ஆத்மநி பஹுவசநம். 'நோய்இன்னதென்று' என்றது - தேர்ப்பாகனார் விஷயமென் றென்றபடி. 'இனி' என்றதுக்குத் தாத்பர்யார்த்தம் - 'அன்றிக்கே கடல்வண்ணர்' இத்யாதி. இது, கோசாந்தரங்களில் பாடக்ரமபக்ஷத்திலே; அவளுமேலே வந்ததென்று தாத்பர்யம். 'கடல்வண்ணர்' இத்யாதிக்கு - ஸ்பஷ்டோர்த்தம். திருநெடுந்தாண்டகம் — பதின்மூராம்பாட்டு, "பட்டுடுக்கும்" இத்யாதி. 'அவன் துழாய்' என்னுமதுக்கு ப்ரமாணத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, அபத்யமாம் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் - 'தன்சுமாமருந்தும்' இத்யாதி. 'மருந்து' என்னுமதுக்கு ஸஹஸ்ரநாமத்தில் ப்ரமாணமும் காட்டுகிறார், 'நிர்வாணம்' இத்யாதி. நிர்வாணம்-ஆநந்தம். அன்றிக்கே, கடல்வண்ணரித்யாதி வாக்யத்ரயமும்- 'அன்றிக்கே நானும் இப்போது பரிஹரிப்பாரை' இத்யாதி வாக்யாநந்தரத்திலேயே இருக்கிறது. முன் பின்னாயிருந்தபோதும், அவதாரிகை இத்தசொன்னபடியே. மேலுக்குஅவதாரிகை - 'எங்கேதேட' இத்யாதி. 'அன்னைமீர்' என்கிற பஹுவசநார்த்தம் - 'பந்துவர்க்கம்' இத்யாதி. ஆராய்ந்தமாத்ரத்தாலே, 'தன்காவற்சோர்வாலே வந்தது' என்கிற தோஷம் போமோ? என்ன, 'நீங்களும்' இத்யாதி. உக்தார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தம் - 'இவள்தான்' இத்யாதி. இவள்தான் - இத்தோழிதான். த்ருஷ்டாந்தகதர்மத்தை தார்ஷ்டாந்திகத்திலே காட்டுகிறார் - 'மநஸ்ஸை' இத்யாதி. அலகலகாக - வ்யக்தமாக. ஸ்வாபாவிகமான அழகையுடைய நுதலென்று அர்த்தம்அருளிச்செய்கிறார் - 'இவ்விலக்ஷண' இத்யாதி. 'இ' என்றத்தை - முகத்துக்கு விசேஷணமாக்கி ஆர்த்தம் - 'இம்முகத்தை' இத்யாதி. இது - ரஸோக்தி. பின்னை எம்முகத்தாலே வரவேணு மென்ன, 'கண்ணன்' இத்யாதி. க்ருஷ்ணனுடைய தன்னொளிதானே ஆபரணமாம்படி உஜ்ஜ்வலமான திருமுகமாய்க்கொண்டு பாபத்தின்கொடுமையை யுடைய என் ப்ராணனை அபஹரியாநின்றது இத்யர்த்தஃ. கோள் - ஒளி. இழை - ஆபரணம். வாள் - ஔஜ்ஜ்வல்யம். 'இ' என்றத்தை - நுதலையுடையவளுக்கு விசேஷணமாக்கி அர்த்தாந்தரம் - 'இவள்நோய்' இத்யாதி. உக்தார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தம் - 'ஸ்ரீபரதாழ்

ப்ரஸித்தமன்றோ? இவளை இப்படி படுத்துவது ஒருவிஷயமாக வேண்டாவோ? அம்பு பட்ட வாட்டத்தோடே முடிந்தாரையும், நீரிலேபுக்குமுடிந்தாரையும் முகத்திலே தெரியாதோ? குணதிகவிஷயத்தை ஆசைப்பட்டுப் பெருமையாலுண்டான மோஹமாகையாலே முகத்தில் செவ்விக்கு ஆலத்திவழிக்கவேண்டும்படி யாயிற்று இருக்கிறது. [உற்ற] - பரிஹாரமில்லாதபடி மறுபாடுருவக்கொண்ட நோய். [நல்நோய்] - இந்நோவுதான் பரிஹரிக்க வேண்டா. கைக்கூலிகொடுத்துக் கொள்ளவேண்டும் நோய்; பரிஹரிக்கவேண்டா. இந்நோய் கொள்ளுகைக்கிறே முமுக்ஷுக்கள் புருஷகாரம்பண்ணுகிறது. இந்நோய்கொள்ளுகையன்றிக்கே, பரிஹாரம்சொல்ல இருப்பதே நான்! ஜ்ஞாநம்பிறந்தபின்பு ஶரீராவஸாநத்தளவும் செல்ல தேஹயாத்ரைக்குஉறுப்பாய், பின்பு தானே நித்யப்ராப்யமான நோயிறே. இதரஸாதநாபேக்ஷயா ப்ராபகமாய், ஸாதநபுத்தி கழிந்தவன்று தானே ப்ராப்யமாயிருக்குமிறே. "பரமாபதமாபந்ந:" (பரமாபதமாபந்ந:) - அடிக்கழஞ்சுபெற்ற ஆபத்தாயிற்று. இடர்ப்பட்டவிடத்திலே ஸர்வேஶ்வரன் அரைகுலையத் தலைகுலைய வந்து விழும்படியான ஆபத்தாயிற்று இது. "பக்த்யாத்வநந்யயாஶக்ய:" (பக்த்யாத்வநந்யயாஶக்ய:) என்கிற இது உண்டானால் பின்னை அவன் கைப்பட்டானேயன்றோ? [தேறினோம்] - இவர்கள்கோஷ்டியில் தெளிவு அரிதாயாயிற்று இருப்பது, ருஷிகள்கோஷ்டியில் கலக்கம் அரிதாயிருக்குமாபோலே. 'இதரவிஷயப்ராவண்யம் ஆகாது' என்கிற தெளிவிறே ருஷி

---

வான்' இத்யாதி. 'தேர்ப்பாகனார்க்கு' என்றத்தைக் கடாக்ஷித்து ஸாவம் - 'இவளை இப்படி' இத்யாதி. 'ஒண்ணுதல்' என்றதுக்கு - ஸ்வாபாவிகமான ஒண்மையாகக் கீழருளிச்செய்து, பகவதநுபவத்தால் வந்த ஒண்மையென்று அர்த்தாந்தரம் - 'அம்புபட்ட' இத்யாதி. ப்ரக்ருதத்திலேயேதென்ன, 'குணதிக' இத்யாதி. குணாதிகவிஷயமாகையாலே அவனடியாக வந்ததாய். அத ஏவ ஆகந்துகமென்றபடியாய், அவனுள்ளே யிருக்கையாலே மோஹதசையிலும் காந்தி போகாதென்றபடி. இந்தஅர்த்தத்துக்கு. "ஸஸ்திஹநு-ஸ[illegible] ஸம்வ:" இத்யாதியை ப்ரமாணமாகக் கண்டுகொள்வது. 'கைக்கூலிகொடுத்து' [illegible] தேசத்திலே, ஸாதநாநுஷ்டாநத்தைப் பண்ணி யென்றபடி. 'நோய்' என்றதுக்கு - [illegible], பக்தியென்று விவக்ஷித்து, இதுஇப்படி ப்ரார்த்யமாயிருக்குமோ? என்ன, 'இந்நோய்' இத்யாதி. 'புருஷகாரம் பண்ணுகிறது' என்றது - "தைவம்புருஷகாரேண நிவர்த்யிதும்ஶக்யதே" என்கிற ந்யாயத்தாலே; புருஷகாரமென்றது - யத்நமாய், "ஸக்திஶேவிஷயஸ்மே" "ஸமாஸக்தயாஸங்கோஸஷ" என்று யத்நித்து ப்ரார்த்திக்கிறதென்றபடி. புருஷகாரமாவது - புருஷன்பண்ணும் வ்யாபாரம். [illegible] - 'இந்நோய்கொள்ளுகை யன்றிக்கே' இத்யாதி. இந்நோய்க்கு [illegible] என்ன, 'ஜ்ஞாநம்பிறந்த' இத்யாதி. யத்வா, உபாஸகர்க்குப்போலே இவர்க்கு இது ஸாதநமோ? என்ன, 'ஜ்ஞாநம்பிறந்த' இத்யாதி. 'தேஹயாத்ரைக்குறுப்பாய்' என்றதுக்கும், 'பின்பு தானே நித்யப்ராப்யம்' என்றதுக்கும் [illegible] தெரியாதே; 'தேஹயாத்ராசேஷம்' என்கிறதென்? ஸாதநத்வமில்லையோ? என்ன, 'இதரஸாதநா' [illegible] 'இதரஸாதநாபேக்ஷயா' என்றது-ப்ரபத்திக்குஇதரமான ஸாதநமாக அபேக்ஷித்தபோது என்றபடி. '[illegible]' என்றதுக்கு - ஶ்லாக்யமான நோயென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - 'பரமாபதம்' இத்யாதி. [illegible] தம் - இவ்விடத்தில் ஶ்லாக்யதையிலே. அத்தை அருளிச்செய்கிறார்-'அடிக்கழஞ்சு' இத்யாதி. [illegible] பெற்ற - ஶ்லாக்யமான. அதுக்குஹேது - 'இடர்' இத்யாதி. "பரமாபதமாபந்நோ [illegible]ஸி" இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே. 'இது' என்கைக்கு அப்படி ஶ்லாக்யமாயிருக்குமோ? என்ன, 'பக்த்யா' இத்யாதி. "பக்த்யாத்வநந்யயாஶக்யஅஹமேவம்விதோர்ஜுந" இதிகீதாஸ[illegible] யிது என்ன அமைந்திருக்க, 'தேறினோம்' என்கிற இதுக்கு - இந்தத்தேற்றந்தான் [illegible] அரிதென்று [illegible] தாத்பர்யமென்கிறார்-'இவர்கள்கோஷ்டியில்' இத்யாதி. இவர்கள்—ஆழ்வார்கள். பகவத்பாகவதவிஷயங்களில் ப்ராவண்யாதிஶயத்தாலே 'ஸர்வாந்தேவாந்' என்கிறபடியே வழியல்லாவழியேயாகிலும் நடக்கப் பார்க்குமவர்களாகையாலே, 'இதரவிஷயங்களாகாது' என்னும்தெளிவுஅரிது என்றபடி. தெளிவரிதாகில் கலக்கம் த்யாஜ்யமன்றோ? என்ன, 'இதர' இத்யாதி. இது ஶ்லாக்யதாவஹமென்று கருத்து. விஷயதோஷதர்ஶநமே ப்ரதாநம் ருஷி

களுக்கு உள்ளது; பகவத்ப்ராவண்ய மடியாக வந்த கலக்கமிறே இது. 'ஆகில், அதுசொல்லிக் காணாய்' என்ன, [போர்ப்பாகுஇத்யாதி] - இரண்டுதலைக்கும் உறவாய்ப் பொருந்தவிடச் சென்று, வினைத்தலையிலே வந்தவாறே, "யஸ்யமந்த்ரீசகோப்தாச" (யஸ்யமந்த்ரீசகோப்தாச) என்கிறபடியே - அவர்கள்பறித்துக்கொண்ட பரிகரமெல்லாம் தானேயாய் நின்றானாயிற்று. போர்க்கு வேண்டும் நிர்வாஹமெல்லாம் தானே செய்து. பாகு என்று - நிர்வாஹகர்செய்யும் தொழில். [தான்செய்து] - ஏழுலகும் தனிக்கோல்செல்ல வீற்றிருந்த தான் செய்து. தன் ஆஸநபலத்தாலே ஸர்வத்தையும் நடத்தக்கடவ தான் செய்து கைதொடனாய். தானென்று - மேன்மை சொல்லிற்று. இவள்மோஹிக்கிறது அவனுடைய ஸௌலப்யத்துக்கிறே. எளியவனெளிமைக்கு அகப்படுமேவளன்றே இவள், அம்மேன்மையுடையவன் தாழநின்றதிலே அகப்படுமேவளிறே இவள். [தான்செய்து அன்றுஐவரைவெல்வித்த] - அவர்கள் நூற்றுவராய் துர்வர்க்கமடங்க அங்கே திரண்டு, இவர்கள்தாங்கள்ஐவராய் வெருவியராய் நின்ற அன்று; தான் கையும் அணியும் வகுத்து, படைபொருத்தி, ஸாரத்யம்பண்ணி, குதிரைகள் இளைத்தவிடத்திலே வாருணாஸ்த்ரங்கள் விடலாமிடங்கள் காட்டி விடுவித்து, அங்கே குதிரைகளைவிட்டு நீரூட்டிப் பூட்டி வென்றானென்னுமிடம். அர்ஜுநன் மேலே யாகவேண்டும் வ்யாபாரங்களையடையத் தானே செய்தானிறே. [ஐவரைவெல்வித்த] - துர்யோதநாதிகளைத் தோற்பித்தவதிலும் அரிதுகாணும் பாண்டவர்களை வெல்வித்தது. அவர்களை துர்மாநத்தாலே தோற்பிக்கை அரிது; இவளை ஸ்த்ரீத்வாபிமாநத்தாலே தோற்பிக்கை அரிது; அப்படியே, "நகாங்க்ஷே விஜயம்க்ருஷ்ண" (நகாங்க்ஷேவிஜயம்க்ருஷ்ண) என்ற இவர்களை ஜயிப்பிக்கையும் அரிதிறே. *(துர்யோதநாதிகளைத் தோற்பிக்கலாம், இவளைத் தோற்பிக்கை அரிது; அவர்களை ஸ்வாதந்த்ர்யாபிமாநத்தாலே தோற்பிக்கை அரிது, அப்படியே இவளை ஸ்த்ரீத்வாபிமாநத்தாலே தோற்பிக்கை அரிது.) [மாயப்போர்] - ஆஶ்சர்யமான யுத்தமென்னுதல், க்ருத்ரிமயுத்தமென்னுதல். பகலைஇரவாக்குவது, 'ஆயுதமெடேன்' என்று ஆயுதமெடுப்பது ஆனவை இத்தலையிலும் உண்டு; மஹாரதர்அநேகர் கூடி அபிமந்யு ஒருவனை நிரஸித்தவை தொடக்கமானவை அத்தலையிலும் உண்டு; இவற்றைச் சொல்லிற்றாகவுமாம். [தேர்ப்

களுக்கு, பகவத்விஷயவைலக்ஷண்யஜ்ஞாநமே ப்ரதாநம் ஆழ்வார்களுக்கு என்றபடி. போர்ப்பாகுசெய்த ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார் - 'இரண்டுதலைக்கும்' இத்யாதி. பொருந்தவிட - ஸந்திபண்ண. வினைத்தலை - யுத்தபூமி. "யஸ்யமந்த்ரீசகோப்தாச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தந:" இதி ராஜஸூயே த்ருதராஷ்ட்ர:. ஆளிட்டுச்செய்யாதே தானே செய்தென்று ஓரர்த்தம் அருளிச்செய்து, 'தான்' என்றதுக்கு ஸர்வாதிகனை தானென்று அர்த்தாந்தரம் - 'ஏழுலகும்'இத்யாதி. எடுத்த சந்தைக்கு அர்த்தம் - 'தன்ஆஸநபலத்தாலே' இத்யாதி; விவரண மென்னவுமாம். கைதொடனாய் - கையாலே தொட்டுச் செய்கிற ஸஹாயபூதனாய். இவள் மோஹிக்கிறது அவன் ஸௌலப்யத்துக் காயிருக்க, மேன்மையைச் சொல்லுகிறது எதுக்கென்ன, 'இவள் மோஹிக்கிறது'இத்யாதி. அவனுடைய - பரனானவனுடைய. விவரணம் - 'எளியவன்' இத்யாதி. 'தான்' என்றதுக்கு பாவார்த்தம் - 'அவர்கள் நூற்றுவர்' இத்யாதி. அதாவது - அர்ஜுநாதிகளும் தானுமன்றிக்கே தானே யென்றபடி. 'ஐவர்' என்றதுக்கு இரண்டுதாத்பர்யம் - வெருவியராயிருக்குமவரென்று ஒன்று, "நகாங்க்ஷே" என்றிருக்குமவரென்று இரண்டாவது. வெருவியராய் - அல்பஸஹாயராய். கையும்அணியும் வகுத்து - வ்யூஹவிபாகம்பண்ணி. படைபொருத்தி - யுத்தம்பண்ணுவித்து. பூட்டி - தேரிலேகட்டி, 'வெல்வித்த' என்று - அகடிதம்போலே சொல்லுகைக்கு அப்படியரிதோ? என்ன, 'துர்யோதநாதி' இத்யாதி மேலில்விவரணவாக்யாநுகுணமாக 'துர்யோதநாதிகளையும் இவளையும் தோற்பித்தவதிலும்' என்று கூட்டிக்கொள்வது. விவரணம் - 'அவர்களை'இத்யாதி. யத்வா, 'அரிதானபடி எப்படி? என்ன, 'அவர்களை' இத்யாதி என்னுதல். 'சிந்தைதுழாய்த்திசைக்கின்றதே' என்கையாலே இவள் தோல்வியும் வித்தமிறே. "நகாங்க்ஷே விஜயம்க்ருஷ்ண நசராஜ்யம்ஸுகாநிச கிந்நோராஜ்யேநகோவிந்த கிம்போகைர்ஜீவிதேநவா" இதி கீதாஸு ப்ரதமே. க்ருத்ரிமமெது? என்ன, 'பகலை' இத்யாதி. ஸாரதிலக்ஷணத்தைக் காட்டுகிறார்

* குண்டலித க்ரந்தம் க்வாசித்கம்.

பாகனார்க்கு]-அர்ஜுநனை எதிரிகள் சீறினால் அழியச்செய்வது தன்னையாம்படி, உடம்புக்கீடிடாதே வெறுங்கையோடே தேர்த்தட்டிலே முன்னே நின்று ஸாரத்யம்பண்ணினபடியைச் சொல்லுகிறது. "அயமஸ்மி" (அயமஸ்மி) - நான் உன்அடியானன்றோ ? ஏவிக் கார்யங்கொள்ளலாகாதோ? என்னும். [இவள்] - அப்பாகிலே பிடிபட்ட இவள். "நிர்க்குணஃபரமாத்மாஸௌதேஹந்தேவ்யாப்ய திஷ்டதி" (நிர்க்குணஃபரமாத்மாஸௌதேஹந்தேவ்யாப்யதிஷ்டதி) என்கிறபடியே, ஸாரத்ய வேஷம் இவள்வடிவிலே நிழலெழுந்து தோற்றுகிறதில்லையோ? இவள் நெஞ்சுகலங்கி மோஹிக்கிறது தேர்ப்பாகனார்க்கு; 'கடல்கலங்கிற்று' என்றால், 'மந்தரத்தாலே' என்று இருக்கவேண்டாவோ? ஸாரத்யவ்ருத்தாந்தத்தை யொழிய, பரமபதத்தில் முதன்மைக்கு மோஹிக்குமோ? மயர்வறமதிநலமருளப்பெற்ற இவள். மயர்வறமதிநல மருளப்பெற்றார் கலங்கும்போது அவனுடையஆஸ்ரிதபாரதந்த்ர்யத்திலே ஆகவேண்டாவோ? ஒருவனுக்கு ஶோகநிவர்த்தகனானவன் காணுங்கோள்இவளுக்கு ஶோகத்தை விளைத்தான். ஆணுக்கு ஶோகத்தைப்போக்கினான்; அபலைக்கு ஶோகத்தை விளைத்தான். (க)

## இரண்டாம்பாட்டு.

திசைக்கின்றதேஇவள்நோய் இதுமிக்கபெருந்தெய்வம்
இசைப்பின்றி நீரணங்காடும் இளந்தெய்வமன்றிது
திசைப்பின்றியே சங்குசக்கரமென்றிவள்கேட்க நீர்
இசைக்கிற்றிராகில் நன்றேயில்பெறுமிதுகாண்மினே.

'அர்ஜுநனை' இத்யாதி. ஈடுஇடாதே - கவசம்தரியாதே. பாகனுக்கு உடம்புக்கீடு [illegible]. ஸாரத்யத்தாலே - பாரதந்த்ர்யத்தை விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - 'அயமஸ்மி' இத்யாதி. [illegible] ஸஹஸ்ரஹஸ்தாவார்ஹஸ்ய ஸஹிதஸ்ய விவக்ஷிதஃ। காரிஷ்யாமிஹிதஞ்சாஸ்ய [illegible]" இத்யுத்யோகபர்வணியேகஸப்ததிதமே யுதிஷ்டிரம்ப்ரதி க்ருஷ்ணஃ. இதுக்குஅர்த்தம் - [illegible] இத்யாதி. 'இவள்' என்றதுக்கு மூன்றுதாத்பர்யம் - 'அப்பாகிலே' இத்யாதி வாக்யத்ரயத்தாலே. முன்னது - [illegible] ஸாவியாக 'அப்பாகிலே பிடிப்பட்டஇவள்' என்றது. இது - சாடு; ஸாரத்யவேஷத்திலே [illegible] றபடி இரண்டாவது - ப்ரகாஶமா நத்வத்தைப் பற்ற. நிர்க்குணஃ என்றது - [illegible] னென்றபடி. "நிர்க்குணஃபரமாத்மாஸௌதேஹந்தேவ்யாப்யதிஷ்டதி। [illegible] நாவஸநேந்த்ரயஜ்ஞயே" இத்யாரண்யபர்வணி [illegible]. மூன்றாவது - [illegible] வேந. த்ருதீயார்த்தோபபாதநம் - 'கடல்' இத்யாதி. அன்றிக்கே, [illegible] - '[illegible]' என்றதற்கு த்ருதீயார்த்தமாய்; 'இவள்நெஞ்சுகலங்கி' இத்யாதி வாக்யம் [illegible] மென்னுதல். திசைக்கின்றதே யென்ற 'ஏகாரத்தை' - 'தேர்ப்பாகனார்க்கு' [illegible] அவதாரண தாத்பர்யம் - 'ஸாரத்ய' இத்யாதி. விவரணம் - 'மயர்வற' இத்யாதி. [illegible] ஆகவேண்டாவோ? என்றது - 'எத்திறம்' என்றதைப் பற்ற. [illegible] இத்யாதியால் [illegible] னாலாமர்த்தத்தை இங்கே காட்டுகிறார் - 'ஒருவனுக்கு' இத்யாதி வாக்யத்ரயத்தாலே. [illegible] - நெஞ்சு, துழாய் - கலங்கி, ப்ரமித்து, திசைக்கின்றது - அறிவழியாநின்றது. '[illegible]' என்ற பன்மைக்கு - அவர்கள் கலக்கம் தனக்கொத்தவோபாதி, தன்தெளிவே அவர்களுக்கும் [illegible]யென்று கருத்து. தூர்ப்பாம் இவ்வொண்ணுதல் இத்யாரப்ய, திசைக்கின்றது - இனி அன்னைமீர்! பாய் - தீர்ப்பாரை - எங்ஙனம்நாடுதும்? இத்யந்வயஃ. (க)

**ஆ.**—(திசைக்கின்றதே.) நீங்கள் இவளுடைய நோயினை ஒன்றும் அறிகிறிலீர்; இந்நோய் மிக்கபெருந்தெய்வத்தாலே வந்தது. விஸத்ருஶமாக நீங்கள் நின்று அணங்காடுகிற க்ஷுத்ர தைவ க்ருத மல்ல. இதுக்குப் பரிஹாரம் என்? என்னில்;—சொல்லுவார் சொல்லிற்றைக் கேட்டுத் திகையாதே, சங்குசக்கரம் என்று இவள்கேட்க நீர் இசைக்கிற்றிராகில் நன்றே இவளைப்பெறலாம். இப்போதே இப்பொருளை ப்ரத்யக்ஷிக்கலா மென்கிறாள்.

**ஒ.**—இரண்டாம்பாட்டில், 'க்ஷுத்ரதேவதாஶாந்திகளால் இவ்வ்யாதி போக்குகை அரிது; நீங்கள் கலங்காதே எம்பெருமானுடைய திறம் சொல்லில் இவளைப் பெறலாம்' என்கிறாள்.

[திசைக்கின்றதே என்று தொடங்கி] - இவள்நோய் நீங்கள் அறிகிறிலீர்; இது பரதேவதையாலே வந்தது. ஒரு ஸங்கதியின்றியே நீங்கள் தேவதையேறியாடுகிற க்ஷுத்ர தைவத்தால் வந்ததன்று, இது. [திசைப்பின்றியே] - ப்ரமியாதே. [இசைக்கிற்றிராகில்] - சொல்லவல்லிகோளாகில். [இல்பெறும்] - ஜீவிக்கும். இல் - உடம்பு.

**ப.**—அநந்தரம், இவள்நோய் க்ஷுத்ரதேவதாமூலமல்ல, ஸர்வாதிகதேவதாமூலம்; அவனுடைய அஸாதாரணசிஹ்நங்களைச் சொல்லில் இவளைக் கிடைக்கலாம் என்கிறாள்.

திசைக்கின்றது - (இவளோடு உங்களோடு வாசியற) மதிகெடுகிறது; இவள்நோய் இவள்நோயாலாயிருக்கும், இது-இது, மிக்க பெரும் தெய்வம் - ஸர்வாதிகமாய் அபரிச்சேத்ய மாஹாத்ம்யத்தையுடைய தேவமூலம்; இது - இது, இசைப்புஇன்றி - (உங்களுக்கும் இவள் தனக்கும் நோய்க்கும்) சேராதபடி, நீர்-நீங்கள், அணங்காடும்-தைவாவிஷ்டராயாடுகிற, இளந் தெய்வம் - அல்பதேவதை, அன்று - அன்று; திசைப்புஇன்றியே - (புறம்புசொல்லுவார் வார்த்தையைக்கேட்டு) ப்ரமியாதே, சங்குசக்கரம் - (அந்தஸர்வாதிகதேவதைக்கு அஸாதாரணசிஹ்நங்களான) சங்கசக்ரங்கள், என்று - என்று, இவள் - (மோஹித்துக்கிடக்கிற) இவள், கேட்க-கேட்க, நீர் - நீங்கள், இசைக்கிற்றிராகில் - சொல்ல வல்லீர்களாகில், நன்றே - நன்றாகவே, (இவள்), இல் பெறும் - இல்லிருப்புப்பெறும்; இது - இத்தை, காண்மின் - (அபரோக்ஷித்துக்) காணுங்கோள்.

இல்லென்று - இருப்பிடமாய், இவ்விடத்திலே இவள் ஸத்தையோடே யிருக்கப் பெறு மென்றபடி. அன்றியே, நாயகன்பக்கலிலே இல்வாழ்ச்சையைப் பெறு மென்றுமாம்.

**இ.**—இரண்டாம்பாட்டில், க்ஷுத்ரதேவதாஶாந்தியாலே இவள்நோய் போக்குகை அரிது; பகவத்விஷயத்தைச் சொல்லில் இவளைப் பெறலாம் என்கிறாள்.

[திசைக்கின்றதே இவள்நோய்] - இவள் நோய் நிமித்தமாக அறிவு கெடாநின்றீகோள். 'தாய்மார் கௌரவ்யைகளாகையாலே, அறிவுகெடுகிறதே நாம்' என்கிறாள். அவன் குணம்நிமித்தமாக இவள் அறிவுகெடாநின்றாள். நீங்கள் இவள்நோய்நிமித்தமாக அறிவு கெடாநின்றிகோள். 'நாங்கள் அறிந்திலோமாகில், அறிந்த நீ சொல்லிக்காணாய்' என்ன, [இது மிக்கபெருந்தெய்வம்] - "வானோர்தலைமகனும் சீராயின தெய்வநன்றோ யிது", "ஶ்ரீ ஶ:ஶ்ரிய:" என்கிறபடியே அபரிச்சிந்நமாய் ஸர்வாதிகமான தெய்வமடியாக வந்தது. இது பரதேவதையடியாக வந்த நோயாகையாலே, கனவிய நோய். [இசைப்பின்றி] - சேர்த்தியின்றி. உங்களுக்கும் இச்செயலுக்கும் என்ன ஸங்கதி யுண்டு? இவள்படிக்கும் இந்நோய்க்கும் நீங்கள் செய்கிறவற்றுக்கும் ஒருசேர்த்தியில்லை. உங்கள் ஸ்வரூபத்துக்கும் இச்செயலுக்கும் சேர்த்தியில்லை. இச்செயல் உங்கள்ஸ்வரூபத்துக்குச் சேராது; இவள்ஸ்வரூபத்துக்

கும் சேராது; இவள்நோய்க்கும் சேராது. [நீர்] - பகவத்விஷயத்திலே விக்ருதைகளாகக் கடவ நீங்கள். [அணங்காடும் இளந்தெய்வமன்று] - தேவாவிஷ்டராய் ஆடுகிற க்ஷுத்ரதேவதை யடியாக வந்த நோயன்று இது. [திசைப்பின்றியே] - நோயறியாதாப்போலே பரிஹாரத்திலும் அறிவுகெடாதேகொள்ளுங்கோள். 'நோய்க்கு நிதாநத்தைச் சொன்னாற்போலே பரிஹாரத்தையும் சொல்லாய்'என்ன, [சங்குசக்கரமென்று] - ["சங்கென்னும் சக்கரமென்னும்" என்றிறே இவள்நோய் இருப்பது. நோய்வந்தவழி இது வானால் அவ்வழியாலே பரிஹாரம்பண்ணவேண்டாவோ? [இவள்கேட்க நீர் இசைக்கிற்றிராகில்] - மோஹித்துக்கிடக்கிற இவள் கேட்கவல்லளாகிலாயிற்று, இவர்கள் சொல்ல வல்லராவது. இவள் அவ்விஷயத்திலே மோஹித்துக் கிடக்கிறபோலேயாயிற்று, இவள் நோயிலே இவர்கள் அறிவுகெட்டுக் கிடக்கிறபடி. [நன்றே] - நன்றாய்த் தலைக்கட்டும்; நன்மை எவ்வளவு உண்டாமென்னில்,—[இல் பெறும்] - ஆத்மாவுக்கு போகாயதநமான சரீரத்தைப் பெறும். ஒருதமிழன் 'இல்லாகப் பெறும்' என்றான்; க்ருஹிணியாகப்பெறும் என்கை. "ந்ருஹிணீ ந்ருஹமுச்யதே". நன்று ஏ யில் பெறும் என்று ஆய், ஏயில் என்று காநமாய், வார்த்தைசொல்லப்பெறும் என்கை. "பண்ணைவென்ற இன்சொல்மங்கை" இறே. "ஙயாஙயாரவா". [இதுகாண்மினோ] - நீங்கள் செய்கிறவற்றுபாதி இத்தையும் செய்துபார்க்கமாட்டிகோளோ? இது நதிமாத்ருகம் போலே பலவ்யாப்த மென்னவுமாம்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. க்ஷுத்ரதேவதாஸாந்தியால் இந்நோய்போக்குகை அரிது, பகவத்விஷயத்தைச் சொல்லில் இவளைப் பெறலாம் என்கிறாள்.

[திசைக்கின்றதே இவள்நோய்] -இவள் அவன்குணநிமித்தமாக அறிவுகெடாநின்றாள்; நீங்கள் இவள்நோய்நிமித்தமாக அறிவுகெடாநின்றிகோள். இவள் நோவுக்கு நிதாநம் நீங்கள் 'அவனடியாக வந்தது' என்று அறியமாட்டுகிறிலிகோள். 'திசைக்கின்றதே'என்கையாலே - தாய்மாராகையாலே கௌரவித்து வார்த்தைசொல்லவேணுமிறே. இவள்நோய்நிமித்தமாக அறிவு கெடுவதே நாம்! 'நாங்கள் அறிந்திலோமாகில், இதுக்கு நிதாநமறிந்தாயாயிருக்கிற நீ பின்னைச் சோல்லிக்காணாய்' என்ன,—[இது மிக்கபெருந்தெய்வம்] - "ஸ்ரீஸ்வாஸௌதேவ:" (கம்பீர: பரமோதேவ:) என்றும், "வானோர்தலைமகனும் சீராயின தெய்வநன்னோய்" என்றும் சொல்லு

இரண்டாம்பாட்டு - 'திசைக்கின்றதே' இத்யாதி. 'அணங்காடுமிளந்தெய்வமன்றிது' என்றத்தால் பலிதத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, 'சங்குசக்கரமென்றிவள்கேட்க நீரிசைக்கிற்றிராகில் நன்றேயில் பெறும்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'க்ஷுத்ர' இத்யாதி. சாந்தி - ஆராதநம்.

கீழிற்பாட்டிலும் 'திசைக்கின்றதே' என்றுவைத்து, இங்கும், 'திசைக்கின்றதேயிவள்நோய்' என்றதுக்கு ஹாவம் - 'இவள்அவன்' இத்யாதி. குணநிமித்தமாக-'தேர்ப்பாகனார்க்கு' என்ற ஸௌலப்யகுணநிமித்தமாக. திசைக்கின்றதே - ப்ரமிப்பதே. இவள்நோய் - இவள்நோய்நிமித்தமாக. 'பெருந்தெய்வம்' என்றத்தைக் கடாக்ஷித்து ஹாவம் - 'இவள்நோவுக்கு' இத்யாதி. திசைக்கின்றிகோளென்னாதே, 'திசைக்கின்றதே' என்கிறதென்? என்ன, 'திசைக்கின்றதேயென்கையாலே' இத்யாதி. நாமென்றது - நீங்களென்றபடி; தேவரீர்களென்றபடி. 'திசைக்கின்றதே' என்கிற இது - பூஜ்யோக்தி; எழுந்தருளித்தென்றுமாபோலே. "ஸ்ரீஸ்வாஸௌதேவ:" என்றதுக்கு ப்ரமாணத்திரட்டில் ஆகரம் காணேனும்; ஆகரம் கண்டுகொள்வது. 'வானோர்தலைமகனும்' இத்யாதிக்கு - நித்யஸூரிகளுக்குத்தலைவனான ஸர்வேஶ்வரனுடையதான குணங்களடியாக வுண்டாய் திவ்யமாய் போகபலமான நோயாயிருக்கு மிதென்று சப்தார்த்தம். திருவிருத்தம் - ஐம்பத்து மூன்றாம்பாட்டு, "வாராயின" இத்யாதி. அவனடியாக வந்த நோ யென்னாதே, ஸாமாநாதிகரண்யேந சொல்லுவானென்? என்ன, 'இவள்நோவுக்கும்' இத்யாதி. கார்யகாரணபாவேந உண்டான ஸாமாநாதிகரண்யத்தைப்

கிறபடியே, ஸர்வேச்வரனடியாக வந்த கனவிய நோவு இது; இவள்நோவுக்கும், இந்நோவுக்கு நிதாநபூதனானவனுக்கும் உண்டான அபேதத்தை புத்திபண்ணி, 'இது மிக்கபெருந்தெய்வம்' என்று இதுதன்னை அவனாகச் சொல்லுகிறாள். [இசைப்பின்றி இத்யாதி] - நீங்கள் பண்ணுகிற பரிஹாரத்துக்கும் உங்களுக்கும் ஒருசேர்த்தி யில்லை; இந்நோய்க்கும் இவளுக்கும் ஒருசேர்த்தி யில்லை. முதல் தன்னிலே பகவத்விஷயத்திலே கைவைத்தார் கோள்ளுகைக்கு ஸம்பாவனையுடைய நோவன்று இதுதான். ஒருவழியாலும் ஒருசேர்த்தியின்றிக்கே: இது உங்களுக்குச் சேர்ந்ததல்ல; உங்கள்மகளாய் நோவுகொண்ட இவளுக்குச் சேர்ந்ததல்ல; நோவுக்கு நிதாநபூதனானவனுக்குச் சேர்ந்ததல்ல; இதரதேவதைகள் இந்நிலத்தில் வந்து புகுரமாட்டாமையாலே நீங்கள் நினைக்கிற தேவதைகளுக்குச் சேர்ந்ததல்ல. இங்கே அருளிச்செய்யும் வார்த்தை - பிள்ளையுறங்காவில்லிதாஸர் குடிமகனொருவனுக்கு ஐயனார் ஏறி வலித்து நலிந்தவாறே, 'உனக்கு வேண்டுவ தென்?' என்றுகேட்க, 'எனக்குப் பாலும் பழமுமாக உண்ணவேணும்; சாந்தும் புழுகும் பூசவேணும்; நல்லபுடைவை உடுக்கவேணும்; நல்ல ஆபரணம் பூணவேணும்; தண்டேறவேணும்; அணுக்கனிடவேணும்' என்ன, அவர்களும் 'அப்படியே செய்கிறோம்' என்று, பிள்ளைதிருமாளிகையிலே வந்து, சாந்து புழுகு ஆபரணாதிகளை வாங்கிக்கோண்டுபோய் அவற்றை அலங்கரித்து சாந்தியும் பண்ணிவிட்டு வந்த அவ்விரா, பண்டையிலும் இரட்டியாக அவனை வலிக்க, 'இதுஎன்?' என்றுகேட்க, 'பிள்ளைசாத்துகிறவற்றையெல்லாம் கோண்டுவந்திகோள்; அவர்க்குச் சாத்துகிற அணுக்கனை யிட்டிகோள்; நான் அதின்கீழே போவேனோ? என்னை வெயிலிலே கோண்டுபோனிகோள், என் உடம்பிலே நெருப்பை வழியட்டினாற்போலே அவர் சாத்துகிறவற்றைப் பூசினிகோள், அரிகண்டமிட்டாற்போலே அவர் சாத்துகிற ஆபரணத்தைப் பூட்டினிகோள்; நீங்கள் செய்த செயலுக்கு இவனைக்கோண்டல்லது போகேன்' என்று வலித்ததாம். ஆகையால், அவற்றுக்குச் சேராது. [நீர்] - பகவத்விஷயத்திலே விக்ருதராகக்கடவ நீங்கள். [அணங்காடும் இளந்தெய்வமன்று இது] - தேவாவிஷ்டராய்க்கோண்டு ஆடுகிற மறுமுட்டுப் பொறாத க்ஷுத்ரதேவதையடியாக வந்த நோயன்று இது.

[திசைப்பின்றியே] - இவள்நோய்க்கு நிதாநத்தில் அறிவுகெட்டாற்போலே பரிஹாரத்திலும் மதிகெடாதே. நிதாநத்தில் கலக்கம்பிறந்தாலும் பரிஹாரத்தில் கலக்கம்பிறவாதொழிய

---

*பற்ற - 'பெருந்தெய்வம்' என்கிற தென்றபடி. அபேதத்தை - ஹேதுஹேதுமத்பாவேந உண்டான அபேதத்தை. உங்களுக்கும் - 'நீர்' என்கையாலே, பகவத்விஷயத்திலே விக்ருதராகக்கடவ உங்களுக்கும். இந்நோய்க்கும் - நீங்கள் நினைத்த நோய்க்கும். இந்நோய்க்கும் இவளுக்கும் ஒருசேர்த்தி யில்லாமையைக் காட்டுகிறார் - 'முதல்தன்னிலே' இத்யாதி. இன்னார்க்கு இசைப்பின்றி யென்னாதே, ஸாமாந்யமாகச் சொன்னதுக்கு பாவம் - 'ஒருவழியாலும் ஒருசேர்த்தியின்றிக்கே' என்றது. ஒருவழியாலும் சேர்த்தியில்லாமையைக் காட்டுகிறார் - 'இது உங்களுக்கு' இத்யாதி. நிதாநபூதனானவனுக்கு - நிதாநபூதனான ஈச்வரனுக்கு. நிக்ரஹஹேதுவாகையாலே அவனுக்குச் சேர்ந்ததல்ல வென்றபடி. 'இளந்தெய்வம்' என்றத்தைப் பற்ற, 'இந்நிலத்தில் வந்து புகுரமாட்டாமையாலே' என்றது. இதரதேவதைகள் பாகவதக்ருஹங்களிலே வந்து புகுரமாட்டாதென்கைக்கு ஐதிஹ்யம் - 'பிள்ளையுறங்காவில்லி' இத்யாதி. குடிமகன் - படியாள். ஐயனார் - சாஸ்தா. தண்டு - ஆந்தோளிகை. அணுக்கன் - குடை. அவ்விரா - அன்று ராத்ரி. வலிக்க - பாதிக்க. வழியட்டினாற்போலே - வழியவிட்டாற்போலே. மறுமுட்டுப்பொறாத - பின்னை ஒருகார்யத்துக்கு ஆகாத. 'இளந்தெய்வம்' என்கிற ஸாமாநாதிகரண்யம் - கார்யகாரணபாவ நிபந்தநம்.*

*திசைப்பின்றியே - கலக்கமின்றிக்கே. பரிஹாரத்தில் கலக்கமில்லாமைகொண்டு கார்யகரமாமோ? என்ன, 'நிதாநத்தில்' இத்யாதி. நிதாநம் - சங்குசக்கரம். பரிஹாரம் - அத்தைச்சொல்லுகையே. சங்குசக்க*

வே நோவு பரிஹ்ருதமாமிறே. நாங்கள் நிதாநத்தில் அறிவுகேட்ட அம்ஶமென்? பரிஹாரத்தில் அறிவுகேடாத வழியென்? என்னில்,—[சங்கு இத்யாதி] - "சங்கேன்னும் சக்கரமேன்னும்" என்றிறே இவள் நோய் இருப்பது ; நீங்களும் சங்குசக்கரமென்று பரிஹரிக்கப் பாருங்கோள். நோவு வந்தவழியை அறிந்து பரிஹரிக்கவேண்டாவோ ? "சங்கேன்னும் சக்கரமேன்னும்" என்று நீங்கள் சொல்லவன்றோ நானும் அறிந்தது; இப்போது பரிஹாரத்திலே வந்தவாறே அறிவு கெடுகிறதேன் ? அது செய்யுமிடத்தில் குளப்படியிலே கடலை மடுத்தாற்போலேயாகாமே, "சங்கேன்னும் சக்கரமேன்னும்" என்று இவள் சொன்னாற்போலே சொல்லப் பாருங்கோள். [இவள் கேட்க நீர் இசைக்கிற்றிராகில்] - மோஹித்துக்கிடக்கிற இவள் கேட்க வல்லளா மன்று காணும், தெளிந்திருக்கிற இவர்கள் சொல்லவல்லராவது ; ஆகையிறே, 'திசைப்பின்றியே' என்றது. இவளுக்கு இங்ஙன்சொல்லுமதொழிய மற்றொன்றுதான் சேவிப்படாதுகாணும். இவள் சேவியிலே படும்படி, நீங்கள் தரித்துநின்று ஒருக்திமாத்ரம் சொல்லவல்லிகோளாகில். ஆய்ச்சிமகனுடைய அந்திமஸமயத்திலே பட்டர் 'அறிய' என்று எழுந்தருளியிருந்தாராய், தம்மையறியாதே கலங்கிக் கிடக்கிறபடியைக் கண்டு, பெருமாளுக்கு இவர் ஸ்நேஹித்திருக்கும்படியை அறிந்திருக்கையாலே, மெள்ளச் சேவியிலே யூதினாற்போலே 'அழகியமணவாளப்பெருமாளே ஶரணம்' என்றாராம்; அநந்தரம் அதிலே உணர்த்தியுண்டாய் நெடும்போதெல்லாம், 'அழகியமணவாளப்பெருமாளே ஶரணம்' என்று திருநாட்டுக்கு நடந்தாராம். "பெற்றமக்கள்பெண்டிரேன்றிவர் பின்னுதவாதறிந்தேன் - பிறிந்தேன்". சரமதசையிலேயிருந்து 'பொன்வைத்தவிடம் சொல்லிக்காணாய்' என்னுமித்தனைபோக்கி, திருநாமத்தை அருகேயிருந்து சொல்லுவாரைக் கிடையாதிறே: * சோர்வினால் பொருள்வைத்ததுஉண்டாகில் சொல்லு சொல் என்று சுற்றுமிருக்குமித்தனையிறே. [நன்றே] - இது சால அழகியது ! சால நன்றாம். நன்மைக்கு அவதியேது? என்ன, - [இல்பெறும்] - ஆத்மாவுக்கு ஆயதநமான ஶரீரத்தைப் பெறுமென்னுதல் ; ஒருதமிழன் இட்டுவைக்கிறான், 'இல் - கிழந்

ரம் நிதாநமென்றுஅறியும்படி எப்படி? என்ன, 'சங்கென்னும்' இத்யாதி. நோய் அதுவானால் பரிஹாரமும் அதுவாகவேணுமோ? என்ன, 'நோவுவந்தவழியை' இத்யாதி. எங்களுக்கு நோவுவந்தபடி யறியும் ப்ரகாரமேது? என்ன, 'சங்கென்னும்' இத்யாதி. தனித்தனியாகச் சொன்னதுக்கு ஸாவம் - 'அது செய்யுமிடத்தில்' இத்யாதி. சங்குசக்கரங்களென்று சொல்லாமல், 'சங்கு, சக்கரம்' என்று - எகவசனமாகச் சொன்னதின் ஸாவம் இது. மடுத்தாற்போலே - அடக்கினாற்போலே. 'ஆகில்' என்ற யதிஶப்தத்துக்கு ஸாவம் - 'மோஹித்து' இத்யாதி. தெளிந்திருக்கிற இவர்களென்றது - ப்ரமித்துக்கிடக்கிறவர்களென்றபடி. சங்குசக்கரமேயாகவேணுமோ? வேறொன்றைச் சொன்னாலாகாதோ? என்ன, 'இவளுக்கு' இத்யாதி. இது - 'கேட்க' என்றதுக்கு ஸாவம். சப்தார்த்தம் - 'இவள்சேவியிலே' இத்யாதி. 'சங்கு சக்கரம்' என்கிறதொழிய மற்றொன்று சேவிப்படாததுக்கு ஹேது அதில் ப்ராவண்யமென்று விவக்ஷித்து, இதுக்கு ஐதிஹ்யம் - 'ஆய்ச்சிமகன்' இத்யாதி. யத்வா, மோஹதசையிலே திருநாமம் சொன்னால் தரிக்கலாயிருக்குமோ? என்ன, ஐதிஹ்யம் - 'ஆய்ச்சிமகன்' இத்யாதியென்னவுமாம். [illegible]ல் - சொல்லவல்லிகோளாகில். 'ஆகில்' என்கிற யதிசப்தத்தாலே, திருநாமம் சொல்லுவாரை [illegible]துக்கு ப்ரமாணம் - 'பெற்றமக்கள்' இத்யாதி. பெற்றமக்கள் - புத்ரர்கள். பெண்டிர் [illegible] - ஸ்த்ரீகள். [illegible]கள். பின் - பின்பு. உதவாதென்றறிந்தேன் - நமக்கு உதவார்களென்றறிந்தேன். பிறிந்தேன் - ஆகையாலே அவர்களைவிட்டேனென்று அர்த்தம். திருமொழி-ஆறாம்பத்து - இரண்டாந்திருமொழி - [illegible]பாட்டு. [illegible]மான ப்ரமாணத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - 'சரமதசையிலே' இத்யாதி. பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து, அஞ்சாந்திருமொழி, மூன்றாம்பாட்டு — 'சோர்வினால்' இத்யாதி. காணாமல் பொருள் வைத்தது உண்டாகில் சொல்லுசொல்லென்று பலகாலும் சொல்லி, 'இவன் ஒருத்தரை யொருத்தர் அறியாமல் கொடுக்கில் செய்வதென் ?' என்று விடாதே சுற்று மிருந்து இத்யர்த்தம். அவதாரணதாத்பர்யமாக விவரணம் - 'சாலநன்றாம்' என்று. கிழத்தி - உத்தமநாயகி. "நஶ்யஹம் ஶ்யஹஜிஹ்ராஹ—ஶ்ஷ்யுஹிணீஶ்யஹம்—

தியாய், க்ருஹிணியாகப்பெறும்' என்று ; அன்றிக்கே, 'ஏயில்பெறும்' என்றாய், ஏயிலென்று - காநமாய், *பண்ணைவென்ற இன்சொல் மங்கையாகையாலே, இவள் வார்த்தை சொல்லு மென்று; "மதுராமதுராலாபா" (மதுராமதுராலாபா) என்னக்கடவதிறே. ஆக, ஶரீரத்தைப் பெறு மென்னுதல், க்ருஹிணியா மென்னுதல். வார்த்தைசொல்ல வல்லளா மென்னுதல். [இதுகாண் மினே] - தேவதாந்தரஸ்பர்ஶமுடையாரும் புகுந்து ஸ்பர்ஶிக்கஇராநின்றீகோளிறே ; அவ்வோ பாதி நான் சொன்ன பரிஹாரத்தையும் செய்துபார்க்க மாட்டிகோளோ? நான் இது கைகண்டன் றே சொல்லுகிறது ; நீங்களும் இத்தைச்செய்துபார்க்கமாட்டிகோளோ? ஒன்றேயோ பரிஹாரம்? இது நதீமாத்ருகம்போலே பலவ்யாப்தம். அதவா, [இதுகாண்மினே] -†"வெள்ளைச்சுரிசங் கொடாழியேந்தித் தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே, புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீர்" என்னுமாபோலே இவள் தன்நெஞ்சிலே ப்ரகாசிக்கிற படியை, 'நான்சொன்ன மருந்து இவளு க்குச் செய்விகோள், தவிருவிகோள்; செய்தபடிசெய்ய, இப்போது இத்தைப்பாருங்கோள்' என்று காட்டுகிறாளாகவுமாம். அப்போதைக்கு, நன்றேயில்பெறுமென்று - பாட்டு முடியும் ; இது காண்மி னென்று - தனியே வாக்யம். (உ)

---

## மூன்றாம்பாட்டு.

இதுகாண்மின்அன்னைமீர் ! இக்கட்டுவிச்சிசொற்கொண்டு நீர்
எதுவானும்செய்து அங்கோர்கள்ளும் இறைச்சியும்தூவேன்மின்
மதுவார்துழாய்முடி மாயப்பிரான்கழல்வாழ்த்தினால்
அதுவேஇவளுற்றநோய்க்கும் அருமருந்தாகுமே.

**ஆ**.---(இதுகாண்மின்.) இக்கட்டுவிச்சி சொற்கொண்டு நீர் எதுவானுமொன்றைச் செய்து அங்கு ஓர் கள்ளும் இறைச்சியும் தூவேன்மின். மற்றுச் செய்வதென்? என்னில்,

---

வு) தெ" என்றத்தைப்பற்ற, 'க்ருஹிணியாகப்பெறும்' என்றது. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - 'மதுரா' இத்யாதி. "மதுராமதுராலாபா கிமாஹ ஸுமுகீ" இத்யாதி, ஸுந்தரகாண்டே ஹநூமந்தம்ப்ரதி ராம:. உக்தார்த்தங்களை புத்திஸமாதாநார்த்தமாகச் சேர்க்கிறார் - 'ஆக' இத்யாதி. பண்ணைவென்றஇன்சொல் மங்கை - பாட்டை வென்றிருக்கிற இனியபேச்சையும் பருவத்தையுமுடைய பிராட்டியுடைய இத்யர்த்த:. திருச்சந்தவிருத்தம், நூற்றைந்தாம்பாட்டு ; "மண்ணையுண்டுமிழ்ந்து" இத்யாதி. 'இதுகாண்மின்' என்ற துக்கு மூன்றுதாத்பர்யம். முந்தினது - 'தேவதாந்தர' இத்யாதி ; அதாவது - நான்சொல்லுகிறஇத்தையும் ஒருபரிஹாரமாகக் காணுங்கோ ளென்றபடி. உக்தார்த்தத்வயவிவரணம் - 'ஒன்றேயோ' இத்யாதி. இரண்டா மர்த்தத்திலே, 'கைகண்டு'என்றது - சாடு. இதுக்கு - "சங்குசக்கரம்" என்றதிலே நோக்கு, ப்ரத்யக்ஷமாகக் கண்டென்றும். மூன்றாமர்த்தம் - 'அதவா' இத்யாதி : அதாவது - "வெள்ளைச்சுரிசங்கு" என்று தொடங்கி, 'காணீர்' என்னுமாபோலே, இவளுடைய நெஞ்சிலே சங்குசக்கரங்களோடே யிருக்கிற இது காண்மி னென்றபடி. 'பாட்டுமுடியும்' என்றது - இந்தப்பக்ஷத்திலே, 'திசைக்கின்றதே' என்றுதொடங்கி, 'இளந் தெய்வமன்றிது; இதுகாண்மின், சங்குசக்கரமென்று ஆவள்கேட்க - திசைப்பின்றியே - நீர்இசைக்கிற்றிராகில் நன்றேஇல்பெறும்' என்று அந்வயம் முடியுமென்றபடி. மற்றஇரண்டர்த்தத்துக்கும் இருந்தபடியே அந்வயம். 'பிறிந்தேன்'இத்யாதி : பின்னுதவாது - மரணதசையில் உதவார். பின்னுதவாதென்ற பதம் இங்கு வேண்டுவது. இதுக்கு பாவம் - மரணதசையில், 'ஏதேனுமுண்டானதுசொல்' என்னுமதொழிய, இவனுக்கு தாரகமான பகவத்விஷயத்தைச் சொல்லுவாரில்லை யென்றபடி. (உ)

---

† திருவாய்மொழி, எ, ௩, க.

மதுவார்துழாய்முடி மாயப்பிரான் கழல் வாழ்த்துங்கோள் ; வாழ்த்தினுல், அதுவே இவளுற்ற நோய்க்கு அருமருந்துமாம்; யுக்தமும் அதுவே; இது நிஸ்ஸிதம் என்கிருள்.

ஒ·—மூன்றும்பாட்டில், 'அயுக்தங்களைச் செய்யாதே எம்பெருமான்திருவடிகளை வாழ்த்துங்கோள்; வாழ்த்தவே, இவளுடைய துக்கங்களெல்லாம் போம்' என்கிருள்.

[இக்கட்டுவிச்சி என்று தொடங்கி] - அதிக்ஷுத்ரையான கட்டுவிச்சியுடைய அவிஸ்வஸநீயமான சொல்லைக்கொண்டு விலக்ஷணைகளான நீங்கள் அஸங்கதப்ரவ்ருத்திகளைப் பண்ணி த்ர்த்ரவ்யங்களாலே 'இந்தவைஷ்ணவக்ருஹத்தை தூஷியாதே கொள்ளுங்கோ ளென்று முகத்தைத் திரியவைத்து நிஷேதிக்கிருள். [மது வார் என்று தொடங்கி] - நிரதிஶயபோக்யமான திருத்துழாயைத் திருமுடியிலேயுடைய ஆஶ்சர்யமான திருவழகையுடைய ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளுக்கு மங்களாஶாஸநம் பண்ணினுல், இவள் தான் உகந்து யுக்தமாயிருக்கிற. அதுவே இவள்உற்ற நோய்க்கு ஶ்லாக்யமான மருந்தாகும். இவள்உற்ற நோய்க்கும் - உங்கள்நோயும் இவள்நோயும் தீரும் என்றுமாம்.

ப.—அநந்தரம், நிந்த்யமான ஸுராமாம்ஸங்களைக்கொண்டு இதரதேவதா ஶாந்தி பண்ணுதே, நிரதிஶயபோக்யனுனவன் திருவடிகளை ஏத்தினுல், அதுவே இவள்நோய்க்கு பேஷஜமாய் போக்யமுமாம் என்கிருள்.

அன்னைமீர் - அன்னைமீர்! (பெற்றுவளர்த்தோமென்கிற மேன்மையாலே சொல்விற்றுக் கேளாதிராதே), இது - (நான்சொன்ன) பரிஹாரத்தைப் பண்ணி, காண்மின் - (பலத்தைக்) காணுங்கோள் ; இ - இந்தத் தண்ணியளான, கட்டுவிச்சி - கட்டுவிச்சியுடைய, சொல் - (தகுதியில்லாத) வார்த்தையை, கொண்டு-கைக்கொண்டு, நீர்-உங்கள்ஸ்வரூபத்தைப் பாராதே, எதுவானும் - (ஹேயதேவதாநுவ்ருத்திரூபமானது) ஏதேனுமொன்றை, செய்து - அநுஷ்டித்து, அங்கு - அந்தஸ்தலத்திலே, ஓர்-(ஹேயமாயிருப்பது) ஒரு, கள்ளும்-மதுவையும், இறைச்சியும் - மாம்ஸத்தையும், தூவேன்மின் - தூவி தூஷியாதே கொள்ளுங்கோள் : (அதுல் பரிஹாரமேதென்னில்); - ("பானுமாய் மருந்துமாய்" என்னுமாபோலே), மதுவார் - மதுஸ்யந்தியான, துழாய் - திருத்துழாயாலே அலங்க்ருதமான, முடி - முடியையுடையனுய், மாயம் - ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களை, பிரான் - ஆசைப்பட்டார்க்கு அநுபவிப்பிக்கும் மஹோபகாரகனுடைய, கழல்-திருவடிகளுக்கு, வாழ்த்தினுல்-மங்களாசாஸநம்பண்ணினுல், அதுவே - அந்தமங்களாஶாஸநம் உங்கள்ஸ்வரூபாநுரூபமாமளவன்றியே, இவள் உற்ற - இவள் உள்ளுற்றக்கொண்ட, நோய்க்கு - நோய்க்கு, அரு - பெறுதற்கரிய, மருந்துமாகும் - மருந்துமாய் இவளுக்கு போக்யமுமாய், இவள் நோய் கண்டு நீங்கள்படுகிற கலக்கத்துக்கும் பரிஹாரமுமாம்.

இ·—மூன்றும்பாட்டில், அயுக்தங்களைச் செய்யாதே அவன்திருவடிகளை ஏத்துங்கோள்; அதுவே இந்நோய்க்கு பேஷஜம் என்கிருள்.

[இதுகாண்மின் அன்னைமீர்]-'நீங்கள் நியாமிகைகள்' என்று, நான் சொன்ன ஹிதம் கேளாதொழியவேணுமோ? ஆரேனும் சொல்லிலும் நல்வார்த்தைகள் ஸ்வீகரிக்கவேண்டாவோ? "யுக்தியுக்தம் உபாதேயம்" என்னுமதுவும் கேட்டிலிகோளோ? [இக்கட்டுவிச்சி சொல்கொண்டு] - ஒருபரிஹாரம் பண்ணவேணுமென்னும் நிர்ப்பந்த முண்டோ? இவளைக் காண்பதே! இவள்சொன்ன வார்த்தையைக் கேட்பதே! நான் சொன்ன வார்த்தையையே இவளும் சொன்னுல் கேட்கக்கடவதோ? நீசையான இவளுடைய அவிஸ்வஸநீயமான வார்த்.

தையைக் கொண்டு. [நீர்] - அதிவிலக்ஷணைகளான நீங்கள். உங்களைத்தான் அறிந்திலிகளோ? தத்வதர்ஶிகளான ஜ்ஞாநிகளன்றோ உங்களுக்குச் சொல்லக்கடவர்? [ஏதுவானும் செய்து] - ஏதேனும் ஒன்றைச் செய்து; அஸங்கதங்களைச் செய்து. ஏதுவானும்-ஏதேனுமாகிலும். [அங்கு ஓர் கள்ளும் இறைச்சியும் தூவேன்மின்] - துர்த்ரவ்யங்களாலே வைஷ்ணவக்ருஹத்தை தூஷியாதே கொள்ளுங்கோள். 'அங்கு' என்று தான் காணமாட்டாமையாலே முகத்தை மாற வைத்துச் சொல்லுகிறாள். 'இது பரிஹாரமன்றாகில், பரிஹாரத்தைச் சொல்லாய்' என்ன, [மதுவார்துழாய்முடி] - ஸ்வஸ்பர்ஶத்தாலே மதுஸ்யந்தியான திருத்துழாயைத் திருமுடியிலே யுடையவன். [மாயப்பிரான்] - ஸௌந்தர்யகுணசேஷ்டிதங்களாலே ஆஸ்சர்யபூதனானவன்; பிரான் - இவையடங்க "ஸ்தநாம்" என்று இருக்கும் உபகாரகன். [கழல்வாழ்த்தினால்] - அவனுடைய திருவடிகளுக்கு மங்களாஶாஸநம் பண்ணினால். கழல்வாழ்த்தப்பெறாமையாலே யிறே மோஹித்தது; 'போற்றி' என்னப்பெறாமையாலே வந்த நோய். [அதுவே] - ப்ராப்தமுமாய் போக்யமுமான அதுவே. [இவள்உற்ற நோய்க்கும்] - பரிஹாரமில்லை யென்று மீளும்படி மறுபாடுருவக் கொண்ட நோய்க்கும். [அருமருந்து ஆகுமே] - பெறுதற்கு அரிய மருந்தாம். ஸ்பர்ஶவேதியான மருந்தாம். உங்கள்நோயும் இவள்நோயும் தீரும் என்றுமாம்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. அயுக்தங்களைச் செய்யாதே அவன்திருவடிகளை ஏத்துங்கோள், அதுவே இந்நோய்க்கும் பேஷஜம் என்கிறாள்.

[இதுகாண்மின்அன்னைமீர்] - வயிற்றிலே பிறந்தவர்களென்னுங் காட்டில் சொன்ன ஹிதம் கேளாதொழியவேணுமோ? நியாமிகைகளென்னு மித்தனையோ வேண்டுவது? வயிற்றிலே பிறந்தவர்களாகிலும் சொன்ன வார்த்தை நன்றாயிருக்குமாகில் கைக்கொள்ளவேண்டாவோ? திருமாலைப் பாடக் கேட்டு வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளும் உங்களிலே ஒருத்தியன்றோ? அது கிடக்க; "புத்ரகா இதிஹோவாச" (புத்ரகா இதிஹோவாச) இல்லையோ? ஆரேனும் சொல்லிலும் வார்த்தை நன்றாகில்

மூன்றாம்பாட்டு - 'இதுகாண்மின்' இத்யாதி. 'கள்ளுமிறைச்சியுந்தூவேன்மின், வாழ்த்தினால் அதுவே இவளுற்ற நோய்க்கும் அருமருந்தாகும்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'அயுக்தங்களை' இத்யாதி. 'நோய்க்கும்' என்கிற ச சப்தத்தாலே - ஸ்வரூபாநுரூபமும் என்றபடி.

கீழேயும் 'இதுகாண்மின்' என்றுவைத்து, பின்னையும் சொன்னதுக்கு பாவம் - 'வயிற்றிலே' இத்யாதி. என்னுங்காட்டில் - என்றமாத்ரத்திலே. 'அன்னைமீர்' என்றதுக்கு பாவம் - 'நியாமிகைகள்' இத்யாதி. வயிற்றிற்பிறந்தவர்கள்வார்த்தை கேட்ட பேருண்டோ? என்ன, 'திருமாலை' இத்யாதி. திருவெஃகாவிலே கண்வளர்ந்தருளுகிற ஸ்ரிய:பதியைப் பாடக்கேட்டு, உன்னைவளர்த்தத்தால் ப்ரயோஜநம்பெற்றேன்; அருகே வா என்றுஅழைத்து, பவ்யமான கிளியைக் கைகூப்பி வணங்கினாளித்யர்த்த:. திருநெடுந்தாண்டகம், பதினாலாம்பாட்டு, "முளைக்கதிரை" இத்யாதி. அம்மாத்ரமன்றிக்கே, ஜ்ஞாநோபதேசம்பண்ணினாருமில்லையோ? என்கிறார், 'அதுகிடக்க' இத்யாதி. 'அதுகிடக்க'என்றது - உங்கள்வார்த்தையேயன்றிக்கே ருஷிகள்கோஷ்டியிலும் இப்படியிறே யென்றபடி. "அத்யாபயாமாஸ பித்ரூந் ஶிஶுராங்கிரஸ: கவி: । புத்ரகா இதிஹோவாச ஜ்ஞாநேந பரிக்ருஹ்ய தாந் । தே தமர்தமப்ருச்சந்த தேவாந் ஜாதமந்யவ: । தேவாஶ்சைதாந் ஸமேத்யோசுர் ந்யாய்யம் வஶ்ஶிஶுருக்தவாந் । அஜ்ஞோ பவதி வை பால: பிதா பவதி மந்த்ரத: । அஜ்ஞம் ஹி பாலமித்யாஹு: பிதேத்யேவ து மந்த்ரதம்" இதி மாநவே. அதாவது - ப்ரஹ்மா பித்ராதிகளைப்பார்த்து 'மூடராய்ப்போங்கோள்' என்று சபிக்க, அவர்கள் சுக்ரன்பக்கலிலே அத்யயநம்பண்ண, அவர்களைப்பார்த்து, 'பிள்ளைகாள்! வாரிகோள்' என்றானிறே சுக்ரனென்றபடி. குலமர்யாதையும் சாஸ்த்ரமார்க்கமு மாகையாலே, ஆர் சொன்னதேயாகிலும் நல்லவார்த்தையாகில் கேட்கவேணு

கைக்கோள்ளவேண்டாவோ? [இக்கட்டுவிச்சி] - "காணிலுமுருப்பொலார்". [சொற்கொண்டு]- "செவிக்கினுதகிர்த்தியார்". [இக்கட்டுவிச்சிசொற்கொண்டு] - பரிஹாரம்சொல்லுகிற இவள்படி கண்டிகோளே, இவள்வார்த்தை கேட்டிகோளே, இத்தையே ஆதரிப்பது ! நான்சொல்லுகிற வார்த்தையையே இவள்சொன்னுலும் கைக்கொள்ளக்கடவதோ? இவள்சொன்ன வார்த்தையை நான்சொன்னுலும் என்னையுங்கூட த்யஜிக்கும்படியன்றே வார்த்தையின் பொல்லாங்கு. [நீர்] - "பேய்முலைநஞ்சூணகவுண்டானுருவொடுபேரல்லால் காணகண் கேளாசெவி" என்றிருக்கக்கடவ நீர். நாஸ்திகரான பௌத்தார்ஹதாதிகளும் 'பரஹிம்ஸை ஆகாது; கள் ஆகாது' என்பர்களிறே ; அவ்வழியாலே கைக்கொள்ளுமவர்களோ நாம்? நஹிம்ஸ்யாத்ஸர்வாபூதானி யோபாதி வைதஹிம்ஸையும் கைக்கோள்ளவேண்டாவோ ? [இக்கட்டுவிச்சி இத்யாதி] - "ஜ்ஞாநிநஸ்தத்த்வதர்ஶிநஃ" (ஜ்ஞாநிநஸ்தத்த்வதர்ஶிநஃ) என்னுமவர்களன்றே உங்களுக்கு உபதேசிப்பார்? [எதுவானும்செய்து] - அதுவுமாமிறே உங்களாசாரத்தோடு சேர்ந்திருக்கப் பெற்றதாகில். ஏதேனும் அஸங்கதங்களைச் செய்து. "செய்யாதனசெய்யோம்" என்றும், "மேலையார் செய்வனகள் வேண்டுவன" என்றுமன்றே உங்கள்நிஷ்டை. [அங்குலர் இத்யாதி] - நிஷித்தத்ரவ்யங்களைக்கொண்டு வைஷ்ணவக்ருஹத்தை தூஷியாதே கோள்ளுங்கோள். அங்கு என்று - முகத்தை மாறவைத்துச் சொல்லுகிறுள். ஆகில், தவிருகிறேம்; பரிஹாரத்தைச் சொல்லிக் காணுயென்ன, [மதுவார்இத்யாதி] - "விரைமட்டலர் தண்டுழா யேன்னும்" என்று நீங்கள் சொல்லவன்றே நான் கேட்டது? திருக்குழலில் ஸ்பர்ஶத்தாலே மதுஸ்யந்தியாநின்றுள்ள திருத்துழாயைத் திருவபிஷேகத்திலே யுடையனுய், ஸௌந்தர்ய ஶீலாதிகளால் ஆஶ்சர்யபூதனுய்,

மென்கிறுர் 'ஆரேனும்' இத்யாதி. 'இக்கட்டுவிச்சி, இச்சொல்' என்று - பரிஹாரம்பண்ணுகிறவளுடைய தேவதாந்தர சிஹ்நங்களை தரிக்கையாலே வந்த தண்மையையும், க்ரூரவ்யாபாரங்களுடைய தேவதாந்தரங்களை ஸ்தோத்ரம்பண்ணுகிறவளுடைய க்ரூரவார்த்தைகளையும் சொல்லுகையாலே பலிதங்களை அருளிச்செய்கிறுர் - 'காணிலும்' இத்யாதி. திருச்சந்தவிருத்தம் - அறுபத்தொன்பதாம்பாட்டு. "காணிலுமுருப்பொலார் செவிக்கினுதகீர்த்தியார்" இத்யாதி - முமுக்ஷுவுக்கு த்ரஷ்டவ்யரன்றிக்கேயிருக்கிற க்ஷுத்ர தாமஸதேவதைகளைக் கண்டாலும் அவர்கள் விரூபாக்ஷத்வாதிகளாலே வடிவுபொல்லாதாயிருப்பர்கள்; பித்ருவதப்ரஸித்தி, பிக்ஷாடநப்ரஸித்தி, அத்வரத்வம்ஸநப்ரஸித்தி முதலான ஶ்ரவணகடுவான கீர்த்தியை யுடையரா யிருப்பர்கள் இத்யர்த்தஃ. 'இக்கட்டுவிச்சி, இச்சொல்' என்று இரண்டிடத்திலும் கூட்டி ஶாவம்- 'பரிஹாரம் சொல்லுகிற' இத்யாதி. 'இக்கட்டுவிச்சி, இச்சொல்' என்றத்தால் சொன்ன நிஷீசதைவிஷசாமாவதியைக் காட்டுகிறுர் - 'நான் சொல்லுகிற' இத்யாதி. 'காணிலுமுருப்பொலார்' இத்யாதிக்கு ப்ரதிகோடியான ஆகாரம் இவர்களுக்கு உண்டென்னுமத்தை ஸப்ரமாணமாக அருளிச்செய்கிறுர்-'பேய்முலை' இத்யாதி. பூதனையுடைய முலையில் விஷத்தை தாரகமாக அமுதுசெய்தவனுடைய வடிவையொழியக் கண்காணுது, குண சேஷ்டிதாதிகளுக்கு வாசகமான திருநாமங்களையொழியச் செவி கேளா தென்றபடி. முதல்திருவந்தாதி - பதினோராம்பாட்டு, "வாயவனையல்லது" இத்யாதி. இக்கட்டுவிச்சி சொல்லாநிறது அறிதவசகமாயிருந்ததாகில் கேட்கலாகாதோ? என்ன, 'நாஸ்திகரான' இத்யாதி. அவ்வழியாலே - தடுபதேசத்வாரா. அவ்வழியாலே கைக்கொண்டாலோ? என்ன், 'நஹிம்ஸ்யாத்' இத்யாதி. அப்போது வைதஹிம்ஸாத்யாகமும் கைக்கொள்ளவேண்டிவருமென்றபடி. ஆனுல், ஆர் வார்த்தை கேட்கக்கடவது? என்ன, 'ஜ்ஞாநிந:' இத்யாதி. "தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா । உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்த்வதர்ஶிநஃ" இதி கீதாஸு சதுர்த்தே. அதுவுமாமிறே - அவள்சொன்னது கேட்கவுமாமிறே. அஸங்கதமாகச் செய்யுமது எது? என்ன, 'செய்யாதன' இத்யாதி. பெரியோர்கள் செய்யாதத்தைச் செய்யக்கடவோமல்லோம்- 'மேலையார்' இத்யாதி - பூர்வர்கள் செய்துபோருமவையாய் அபேக்ஷிதமா யிருப்பன வென்றபடி. இந்தப்ரமாணத்வயத்தாலும் - பூர்வர்களுடைய அநநுஷ்டாநாநுஷ்டாநங்கள் த்யாஜ்யோபாதேயங்க ளென்றதாயிற்று. இறைச்சி-மாம்ஸம். 'இது பரிஹாரம்' என்று நீயறிந்தபடியென்? என்ன, 'விரை மட்டலர்' இத்யாதி. சப்

அந்தஸௌந்தர்யாதிகளை ஆஶ்ரிதார்த்தமாக்கிவைக்கும் உபகாரகன் திருவடிகளை வாழ்த்தினால். இவர்கள் திருநாமம் சொல்லுவதுதான் மங்களாஶாஸநமுகத்தாலே யாயிற்று. ''உன்சேவடிசெவ்வி திருக்காப்பு'' என்றிறே வாழ்த்துவது. (கெண்டையொண்கணும் துயிலும்) - உறக்கத்தாலல்லது செல்லாதபடியாய் முக்தமாய் ஸுகுமாரமான கண்ணும் உறங்கும். (என்னிறம்பண்டுபண்டு போலொக்கும்) - அதாவது - கலப்பதற்கு முன்புபோலேயாம். கலக்கையாகிறது ஆற்றாமைக்கு அடியிடுகிறதிறே. ஒருவிஷயத்தில் வாசியறியாதார் நிரபேக்ஷரிறே. கண்ணுறங்குவதும், நிறம் பழையபடியேயாவதும் என்செய்தால் ? என்னில்,—(மிக்கசீர் இத்யாதி)-அநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர்களிட்ட திருத்துழாயில் பரிமளத்தை வண்டு கொண்டுவந்து ஊதுமாகில். இப்படி சீயர் அருளிச்செய்தவாறே, '' துளவின்வாசமே' என்ன அமையாதோ ? ' மிக்கசீர்த்தொண்டர் ' என்கிற இவ்விசேஷணத்துக்குக் கருத்தேன்?' என்று நான் கேட்டேன் ; இவள்தான் நோவு படுகிறது 'அத்தலைக்குப் பரிவரில்லை' என்றாயிற்று; 'அங்கே அநந்யப்ரயோஜநர் பரிமாறாநின்றார்கள்' என்றவாறே உறங்காத கண்ணும் உறங்கும்; பழையநிறமும் வருங்காண்'' என்று அருளிச்செய்தார். [அதுவே] - ப்ராப்தமுமாய் போக்யமுமான அதுதானே. [இவளுற்றநோய்க்குமருமருந்தாகும்] - இவள்மறுபாடுருவக் கொண்ட நோய்க்கும் அருமருந்தாகும் - பெறுதற்கரிய மருந்தாம். மேல்காற்றிலே காட்டப் பரிஹாரமாம். (௩)

## நான்காம் பாட்டு.

மருந்தாகுமென்று அங்கோர்மாயவலவைசொற்கொண்டு நீர்
கருஞ்சோறும்மற்றைச்செஞ்சோறும் களனிழைத்தென்பயன்?
ஒருங்காகவேஉலகேழும் விழுங்கியுமிழ்ந்திட்ட
பெருந்தேவன்பேர்சொல்லகிற்கில் இவளைப்பெறுதிரே,

ஆ.—(மருந்தாகும்.) மருந்தாகுமென்று, வஞ்சகையாய்த் தோற்றிற்றுச்சொல்லக் கடவளாயிருப்பா ளொரு கட்டுவிச்சிசொற்கொண்டு நீர் கருஞ்சோறும் மற்றைச்செஞ்சோறும்

---

தார்த்தம்- 'திருச்குழலில்' இத்யாதி. வாழ்த்தினால் - மங்களாசாஸநம்பண்ணினால். ஏத்தினா லென்னாதே, 'வாழ்த்தினால்' என்பானென்? என்ன, 'இவர்கள்' இத்யாதி. 'மங்களாஶாஸநமுகத்தாலே' என்றத்தைக் காட்டுகிறார்- 'உன்சேவடி' இத்யாதி. உன்னுடைய சிவந்ததிருவடிகளுடைய காந்திக்குக் குறைவற்ற ரக்ஷையாய்ச் செல்லவேணும் இத்யர்த்தː. மங்களாசாஸநபரதைக்கு ப்ரமாணாந்தரம் - 'கெண்டை' இத்யாதி. ''கெண்டையொண்கணும் துயிலுமென்னிறம், பண்டுபண்டுபோலொக்குமிக்கசீர்த், தொண்டரிட்ட பூந்துளவின்வாசமே, வண்டுகொண்டுவந்தூதுமாகிலே''-திருமொழி, பதினோராம்பத்து-முதல்திருமொழி-ஒன்பதாம்பாட்டு. இதுக்கு அர்த்தம் - 'உறக்கத்தால்' இத்யாதி. ஒண்-ஸௌகுமார்யம். 'பண்டுபண்டு' என்ற த்விருக்திக்கு பாவம் –'அதாவது' இத்யாதி. பண்டு - விஶ்லேஷாத்பூர்வம்; இரண்டாம்பண்டாவது - அதுக்குப் பூர்வாவஸ்தையாய், பால்யாவஸ்தையைச் சொல்லுகிறது. 'கலப்பதற்குமுன்பு' என்று விசேஷிக்கிறதென்? என்ன, அருளிச்செய்கிறார் - 'கலக்கை' இத்யாதி வாக்யத்வயத்தாலே. ப்ராஸங்கிகம் - 'இப்படி' இத்யாதி. துளவின்வாசமேயென்ன அமையாதோ? என்றது - விஶ்லேஷவ்யஸநம் தீருகைக்கு 'அவன்ஸம்பந்தமுள்ள திருத்துழாய்' என்ன அமையாதோ? என்றபடி; இவளுக்குத் தன்ஆற்றாமை தீருகிற மாத்ரமே ப்ரயோஜநமாகையன்றிக்கே அத்தலைக்குப் பரிகையும் மங்களங்களை ஆஶாஸிக்கையும் அவஶ்யாபேக்ஷிதமாகையாலே இப்படி விசேஷிக்கிறா ளென்று பரிஹாரம். 'பரிவரில்லையென்றாயிற்று' என்றது - தன்விஶ்லேஷவ்யஸநத்திற்காட்டிலுமென்றபடி. விவரணம் - 'மேல்காற்றிலே' இத்யாதி. க்ரமேண அந்வயː. (௩)

களனிழைத்து என்ன ப்ரயோஜநமுண்டு? ஒருங்காகவே உலகேழும் விழுங்கியுமிழ்ந்திட்ட பெருந்தேவனுடைய திருநாமத்தைச் சொல்லில் இவளைப் பெறலாம் என்கிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், வஞ்சகையாய்த் தோற்றிற்றுச் சொல்லக்கடவாளொரு கட்டுவிச்சியின் வார்த்தையைக் கொண்டு ரஜஸ்தமஃப்ரசுரரான தேவதைகளுக்கு நாநாவர்ணமான சோற்றைத் தூவி என்ன ப்ரயோஜநமுண்டு? ஆபத்ஸகனான ஸர்வேஶ்வரனுடைய திருநாமஸங்கீர்த்தநத்தைப் பண்ணவல்லிகோளாகில், இவளை உங்களுக்குக் கிடைக்கும் என்கிறாள்.

[களனிழைத்து] - தேவதைகள்ஸந்நிதிபண்ணும் ஸ்தலங்களிலே அவள்சொன்ன நியமங்களாலே இட்டு. [ஒருங்காகவே] - ஒருகாலே. [பேர்சொல்லகிற்கில்] - பேர்சொல்ல வல்லிகோளாகில்.

ப.—அநந்தரம், க்ருத்ரிமையான கட்டுவிச்சி சொல்லிற்றுச் செய்து ஒருப்ரயோஜநமில்லை; ஆபத்ஸகனான ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தைச் சொல்லில் இவளைக் கிடைக்கும் என்கிறாள்.

(பரிஹாரமில்லாதத்தை), மருந்துஆகும் என்று - பரிஹாரம் என்று ப்ரதிபத்தி பண்ணி, அங்கு ஓர் - 'இன்னவிடத்திலாள், இன்னாள்' என்று சொல்லவுமொண்ணாதாளொரு, மாயம் - க்ருத்ரிமையாய், வலவை - ப்ரதிபந்நபாஷிணியானவளுடைய, சொல் - வார்த்தையை, கொண்டு - விஶ்வஸித்து, நீர் - (தேவதாந்தரஸ்பர்ஶயோக்யதையில்லாத) நீங்கள், (இவள்பக்கல்பரிவாலேகலங்கி, ஸாத்த்விகாந்நமான சுத்தாந்நமன்றியே தாமஸமாயும் ராஜஸமாயுமுள்ள), கருஞ்சோறும் - கருஞ்சோற்றையும், மற்றை - தத்வ்யதிரிக்தமான, செஞ்சோறும் - செஞ்சோற்றையுங்கொண்டு, களன் - தேவதாந்தரஸந்நிதாநஸ்தலத்திலே, இழைத்து - (அவற்றுக்குப்ரீணநமாம்படி சொல்லுகிற கணக்கிலே) இட்டால், என் பயன் - என்ன ப்ரயோஜநமுண்டு? உலகுஏழும் - (ஆஶ்ரிதாநாஶ்ரிதவிபாகமற) ஸர்வலோகங்களையும், ஒருங்காகவே - ஒருகாலே, விழுங்கி - (ப்ரளயம்விழுங்காதபடி) தான்விழுங்கி ரக்ஷித்து, உமிழ்ந்திட்ட - (அது போனவாறே) மீளஉமிழ்ந்த, பெருந்தேவன் - பரதேவதையினுடைய, பேர் - திருநாமத்தை, சொல்லகிற்கில்- சொல்ல வல்லீர்களாகில், இவளை - (விலக்ஷணையான) இவளை, பெறுதிர் - பெறுதிகோள்.

இ.—நாலாம்பாட்டில், வஞ்சகையான இவளுடைய ப்ரவ்ருத்தியால் ஒருப்ரயோஜநமில்லை; ஸர்வேஶ்வரன்திருநாமத்தைச் சொல்லில் இவளைக் கிடைக்கும் என்கிறாள்.

[மருந்தாகும் என்று] - அபத்யஸேவைபண்ணாநின்றால் பத்யமென்று ப்ரமாணிக்க வேணுமோ? மருந்தாம் என்றபடி. [என்று] - ஈதவிநுதஃவாக்கி. [அங்குஓர்] - அங்கே ஒருத்தியென்று அநாதரோக்தி. [மாய வலவை சொல்கொண்டு] - வஞ்சகையாய் ப்ரதிபந்நங்களைச்சொல்லுகிற இவள்வார்த்தையைக் கொண்டு. [நீர்] - ருஜாக்கனாய் நிருபகாரமான ஸாத்த்விகர்வார்த்தை கேட்கக்கடவ நீங்கள்; ஸாத்த்விகாந்நமல்லது ஸ்பர்ஶியாத நீங்கள். [கருஞ்சோறும்] - தாமஸாந்நமும். [மற்றைச்செஞ்சோறும்] - அத்தோடு தொள்கிண்டியான ராஜஸாந்நமும். [களனிழைத்து என்பயன்] - அந்ததேவதைகள் வந்து ஸந்நிதிபண்ணும் நாற்சந்தி முதலான ஸ்தலங்களிலே அவற்றுக்குச் சொல்லுகிற நியமங்களோடே இட்டு என்னப்ரயோஜநமுண்டு? களன் - களம். 'இதில் ப்ரயோஜநமில்லையாகில் ப்ரயோஜநமுள்ளதொன்றைச் சொல்லிக்காண்' என்ன, [ஒருங்காகவே இத்யாதி] - ஆஶ்ரிதஅநாஶ்ரிதவிபாகமின்றிக்கே ஸர்வலோகங்களையும் ஒருகாலே ப்ரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்து நோக்கி அத்தனைபோதும் மறையஇருந்ததுபொறுக்கமாட்டாமையாலே புறப்படவிட்ட பரதேவதை. களனிழைக்க வேண்டா; அர்த்திக்கவேண்டா; ஆர்த்தியே பரிகரமாக ரக்ஷிக்குமவனைப் பற்றுங்கோள்.

அந்தப்ரளயம் தீர்த்தவனே வேணும், இந்த ப்ரளயத்துக்கும். நம்மோடொக்க ப்ரளயத்திலே அழுந்தும் க்ஷுத்ரதேவதையையோ பற்றுவது? வரையாதே ஸர்வரக்ஷகனான ஸர்வாதிகனையன்றோ பற்றுவது. [பேர்சொல்லகிற்கில்] - திருநாமத்தைச் சொல்லவல்லிகோளாகில். இந்த துஶ்ஶீலைகளான தேவதைகளைப்போலே துராராதனல்லன் இவன்; இங்குத்தைக்கு விஷயீகாராபேக்ஷாஸூசகமாயிருப்பதொன்று அமையும். [இவளைப் பெறுதிரே] - நேர்த்தி அல்பமாகிலும் இவளைப்பெறுகிற மஹாலாபத்தைப் பெறலாம். நீங்கள் இழிந்த துறையில் பெருநேர்த்திபட்டாலும் ஒருபயனில்லை.

ஈடு.—நாலாம்பாட்டு. வஞ்சகையாய்த் தோற்றிற்றுச் சொல்லுகிற இவளுடைய பஹுஜல்பாதிகளை விட்டு, ஆபத்ஸகனான ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தைச் சொல்ல வல்லிகோளாகில் இவளைக் கிடைக்கும் என்கிறாள்.

[மருந்தாகுமென்று] - அபத்யஸேவைபண்ணுவார் 'பத்யம்' என்று வ்யவஹரித்துக் கோள்ளவும் வேணுமோ? மருந்தா மென்றபடி. [அங்கு ஓர்] - அங்கே யோருத்தி என்று அநாதரோக்தி. [மாய வலவை சொற்கொண்டு] - வஞ்சகையாய் ப்ரதிபந்நங்களையே சோல்லக் கடவளான இவள்வார்த்தையைக் கேட்டு. [நீர்] - ஸாத்த்விகராய், பகவத்விஷயமல்லது சொல்லக்கடவரன்றிக்கே ருஜுக்களாயிருக்குமவர்கள் வார்த்தையைக் கேட்கக்கடவ நீங்கள் படும் எளிவரவே! [நீர்] - "போனகம்செய்தசேடம்தருவரேல் புனிதமன்றே" என்ற ஸாத்த்விகர் அமுதுசெய்த ப்ரஸாதவைபவமறியும் நீர்; ஸாத்த்விகாந்நமல்லது ஸ்பர்ஶிக்கக்கடவரல்லாத நீர். [கருஞ்சோறும்இத்யாதி] - தாமஸாந்நமும், அத்தோடு தோள்தீண்டியான ராஜஸாந்நமும். [களனிழைத்து என்பயன்] - களனென்றது - கள மேன்றபடி. இழைக்கை - இடுகை. அதாவது - க்ஷுத்ரதேவதைகள்வந்து ஸந்நிதிபண்ணும் ஸ்தலங்களிலே - நாற்சந்திதொடக்கமானவற்றிலே, இழைத்து - அவற்றுக்குச்சோல்லுகிற நியமங்களோடே இட்டு. ராஜஸ தாமஸ தேவதைகளுக்கு, அவ்வோதேவதைகள் வந்து ஸந்நிதிபண்ணும் ஸ்தலங்களிலே ராஜஸமாயும் தாமஸமாயுமுள்ள அந்நங்களைக்கொண்டு இடச்சோல்லுகிற க்ரமத்திலே இட்டால் என்னப்ரயோஜநமுண்டு? ப்ரயோஜநமில்லாமையேயன்று; விநாசத்தோடே பலிக்கும். ப்ரளயகாலத்தில் ஸர்வரக்ஷகனை

---

நாலாம்பாட்டு - 'மருந்தாகும்' இத்யாதி. 'மாய வலவை' என்றுதொடங்கி மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - 'வஞ்சகையாய்' இத்யாதி.

மருந்தென்னாதே 'மருந்தாகும்' என்கிற வ்யங்க்யோக்திக்கு பாவம் - 'அபத்ய' இத்யாதி; மருந்தாகாதத்தை 'மருந்தாகும்' என்றுசொல்லி என்றபடி. 'ஆகும்' என்றது - ஆ மென்றபடி. வலவை - ஜல்பாகை. 'நீர் - மாயவலவைசொற்கொண்டு' என்றுகூட்டி, 'மாயவலவை' என்றதுக்கு ப்ரதிகோடியாக 'நீர்' என்றதுக்கு அர்த்தம் - 'ஸாத்த்விகராய்' இத்யாதி. எளிவரவு - தைந்யம். 'நீர் - கருஞ்சோறும்' என்று மேலே கூட்டித் தாத்பர்யம் - 'போனகம்' இத்யாதி. ததுச்சிஷ்ட பக்ஷணம் அர்த்த விஹிதம். முந்தினது - ஜ்ஞாநிகள்பக்கல் கேட்கக்கடவ நீரென்று பாவம்; இரண்டாவது - "தருவரேல் புனிதமன்றே" என்ற ப்ரஸாதவைபவம்அறிந்த நீ ரென்றபடி. 'போனகம்'இத்யாதி–அமுதுசெய்த சேஷம் தருவராகில் அப்போதே பரிசுத்த மித்யர்த்தம். திருமாலை - நாற்பத்தோராம்பாட்டு, "வானுளார்" இத்யாதி. 'களனிழைத்து' என்றதிலே - ததுச்சிஷ்டபோஜநபர்யந்தம் விவக்ஷிதம். 'கருஞ்சோறும்' என்றதிலே நோக்காக 'நீர்' என்றதுக்கு பாவம்–'ஸாத்த்விகாந்நம்' இத்யாதி. நிறத்தைப்பற்ற, தாமஸாந்நமும், ராஜஸாந்நமு மென்றது. தோள்தீண்டியான - ஸமமான. 'களம்' என்றதுக்கு அர்த்தம் - 'அதாவது' இத்யாதி. ஸ்தலங்களைக்காட்டுகிறார், 'நாற்சந்தி' இத்யாதி. கீழுக்தமான அர்த்தத்தையெல்லாம் கூட்டி அருளிச்செய்கிறார், 'ராஜஸதாமஸதேவதைகளுக்கு' இத்யாதி. 'என்பயன்' என்றவிடத்திலே, என்என்கிற இத்தை ஆக்ஷேபமாக்கி அர்த்தம் - என்னப்ரயோஜநமுண்டு? என்று; 'என்' என்றத்தை – ப்ரஶ்நபரமாக்கித் தாத்பர்யாந்தரம் - 'ப்ரயோஜநமில்லாமையே' இத்யாதி. 'விழுங்கியுமிழ்ந்து' என்றத்தை - கீழுக்கு த்ருஷ்டாந்தமாக்கி பாவம் - 'ப்ரளயகாலத்தில்' இத்யாதி. 'பேர்' என்றதுக்கு பாவம் - 'இதில்ப்ரயோஜநம்'

ஸர்வேஶ்வரனையொழிய ப்ரளயாபத்து ரக்ஷிக்கலாமாகிலாயிற்று, இவளை க்ஷுத்ரதேவதைகளைக் கொண்டு ரக்ஷிக்கலாவது. 'இதில் ப்ரயோஜநமில்லையாகில், மற்று ப்ரயோஜநமுண்டாக நீ நினைத்தத்தைச் சொல்லாய்' என்ன, 'உங்களுக்கு ஒருபேரிறே நான்சொல்லுகிறது செய்விகோளாகில்'என்கிறாள். [ஒருங்காகவே]-ஒருவர்களனிழையாதிருக்கச்செய்தே வந்து, வரையாதே ரக்ஷிக்குமவனைப் பற்றப் பாருங்கோள். ஒருவர் அர்த்தியாதிருக்க, ஆபத்தே ஹேதுவாக வந்து உதவுமவனாயிற்று. [உலகேழும்] - அதுதன்னிலும், 'ஆஶ்ரிதர், அநாஶ்ரிதர்' என்று பாராதே எல்லாரையுமொக்க ஏககாலத்திலே திருவயிற்றிலேவைத்து நோக்கி, ப்ரளயம்கழிந்தவாறே வெளிநாடு காணப் புறப்படவிட்ட. [பெருந்தேவன்] - பரதேவதை. ஸர்வரக்ஷகனாகையாலே ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரன்; தளர்ந்தார்தாவளமாயிற்று; முன்பு முகந்தோற்றாதே நின்றானாகிலும் ஆபத்து வந்தவாறே முகங்காட்டி ரக்ஷிக்குமவனாயிற்று அவன் இப்படியிருப்பானொருவனாகையாலே ஸ்வாராதன்; நீங்கள் ஆஶ்ரயிக்கிற தேவதைகளைப்போலே துஶ்ஶீலமாய், 'அட்டதொழியச் சுட்டதுகோவோ' என்னும் துராராதனல்லன். தான் ரக்ஷிக்குமிடத்தில் இத்தலையில் ஆநுகூல்யத்துக்கு ஸூசகமான அப்ரதிஷேதமேயாயிற்று வேண்டுவது. [உலகேழும் இத்யாதி] - அந்த ப்ரளயம் தீர்த்தவனேகாணும் இந்தப்ரளயத்துக்கும். நம்மோடொக்க ப்ரளயத்திலே அழுந்தும் க்ஷுத்ரதேவதையையோ பற்றுவது? வரையாதே ஸர்வரக்ஷகனானவனையன்றோ பற்றுவது? [பேர்சொல்லகிற்கில்] - திருநாமத்தைச் சொல்லவல்லிகோளாகில். இப்படி நேர்த்தியற்றிருக்குமாகில் பலமும் அளவுபட்டிருக்குமோ? என்னில்,—[இவளைப்பெறுதிரே] - அங்கு - நேரவேண்டுவதெல்லாம் நேர்ந்தாலும், என்பயன்? என்று ப்ரயோஜநமில்லையாகச் சொல்லிற்று; இங்கு நேர்த்தி திருநாமமாத்ரம் சொல்லுகையாய், பேற்றில்வந்தால் இவளைப்பெறுகையாகிற பெரியபலத்தைப் பெறலாம். பேர்சொல்ல வல்லிகோளாகில் இவளைப் பெறலாம்; இல்லையாகில், இழக்குமித்தனை. (௬)

இத்யாதி. 'உலகேழும்விழுங்கியுமிழ்ந்து' என்றதுக்கு - 'ப்ரளயகாலத்தில்' இத்யாதி வாக்யத்தாலே ஒருதாத்பர்யம் அருளிச்செய்து, தாத்பர்யாந்தரம் - 'ஒருவர் களனிழையாதிருக்க' இத்யாதி. இப்போது 'விழுங்கியுமிழ்ந்து' என்றது - மேலுக்கு விசேஷணம். வரையாதே - தாரதம்யம்பாராதே. 'உலகு' என்ற அசேதநஸமாதிக்கு பாவம் – 'ஒருவர்அர்த்தியாதிருக்க' இத்யாதி. 'உலகேழும் ஒருங்காகவே விழுங்கியுமிழ்ந்திட்ட' என்றதுக்கு ஶப்தார்த்தம் - 'அதுதன்னிலும்' இத்யாதி. ஒருங்காகவே - ஏககாலத்திலே; ஒருகாலேயென்றுமாம். 'உலகேழும் விழுங்குகையாலே - பெருந்தேவன்' என்று அபரஹாவியாக அர்த்தம்அருளிச்செய்கிறார்- 'ஸர்வரக்ஷகன்' இத்யாதி வாக்யத்வயத்தாலே. தளர்ந்தார்தாவளம் - ஆர்த்தரக்ஷகன். தாவளம் - ஆஶ்ரயம். 'பெருந்தேவனாயிருந்துவைத்து - உலகேழும்விழுங்கினான்' என்று பூர்வஹாவியாகத் தாத்பர்யாந்தரம் -'முன்பு முகம்' இத்யாதி. 'பெருந்தேவன்' என்றதுக்கு அர்த்தாந்தரம் - 'ஸ்வாராதன்' என்று. அட்டதொழியச் சுட்டதுகொடுவா என்னும் - சமைந்தத்தைவைத்துச் சமையாதத்தைக் கொண்டுவா வென்று மென்றபடி. 'அட்டமாம்ஸத்தையொழியச் சுட்ட தலையைக் கொண்டுவா' என்று ருத்ரன் வார்த்தை. ஆனால், பேர் சொல்லுவானென்? 'என்ன, 'தான்ரக்ஷிக்குமிடத்தில்' இத்யாதி. 'இவளைப்பெறுதிரே' என்னுமளவுக்கும் பாவம் - 'அந்தப்ரளயம்' இத்யாதி. இந்தப்ரளயத்துக்கும் கடவனென்றபடி. பூர்வஹாவியாக 'பெருந்தேவன்' என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் - 'நம்மோடு' இத்யாதி நேர்த்தி - ப்ரயாஸம். அளவுபட்டு - அல்பமாய். அங்கு - க்ஷுத்ரதேவதாவிஷயத்திலே. நேரவேண்டுவதெல்லாம் - செய்யவேண்டுவதெல்லாம். 'பேர்சொல்லகிற்கில் இவளைப்பெறுதிரே' என்றதுக்கு பாவம் - 'பேர்சொல்ல' இத்யாதி. 'பேர்சொல்லகிற்கில்' என்கையாலே - சொல்லமாட்டாதபோது விநாச மென்றபடி. க்ரமேண அந்வய:• (௬)

―•―

# ஐந்தாம்பாட்டு.

இவளைப்பெறும்பரிசு இவ்வணங்காடுதலன்றந்தோ
குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும்பயந்தனள்
கவளக்கடாக்களிறட்டபிரான் திருநாமத்தால்
தவளப்பொடிக்கொண்டு நீர் இட்டிடுமின் தணியுமே.

ஆ.—(இவளை.) க்ஷுத்ரதைவாவிஷ்டராய் நின்று நீர் அணங்காடுகிற இது இவளைப்பெறுகைக்கு உபாயமன்று. இவள் குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும் பயந்தனள்; ஆனபின்பு, ஈண்டு, கவளக்கடாக்களிறட்ட பிரான்திருநாமத்தைச் சொல்லிப் பரிசுத்தமான பொடியைக்கொண்டு நீங்கள் இடுங்கோள்; இடவே இவள்நோய் தணியும் என்கிருள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், இவளுடையநோய்க்கு யோக்யமான பரிஹாரம் சொல்லுகிருள்.

[இவளை என்று தொடங்கி] - இவளைப்பெறுகைக்கு உபாயம் இந்த க்ஷுத்ரதேவதாவேஶப்ரவ்ருத்த விகட ந்ருத்தமன்று. இது பரிஹாரமாகாமையன்றிக்கே குவளைநிறம் போலேயாய் அறப்பெருத்த கண்ணும் கோவைப்பழம்போலே சிவந்த வாயும் கண்டார்க்கு தயநீயமாம்படி விவர்ணமாயிற்று. [கவளக்கடாம் என்று தொடங்கி] - கவளங்கொண்டு மதமுதிதமான குவலயாபீடத்தை முடித்த க்ருஷ்ணனுடைய திருநாமத்தைச் சொல்லி ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய பாதரேணுவை இவள்மேலே இடவே, இவள்நோய் தவிரும். திருநாமஸங்கீர்த்தநம், தேவதாந்தரஸம்பந்தத்தாலே வந்த நோய்க்குப் பரிஹாரம்; ஸ்ரீவைஷ்ணவர்கள் பாதரேணு, தேவதாந்தரஸம்பந்திகள் ஸந்நிதாநத்தால் வந்த நோய்க்குப் பரிஹாரம்.

ப.—அநந்தரம், நீங்கள்பண்ணுகிற பரிஹாரம் இவள்நோய் விஞ்சாநின்றது; ப்ரபல விரோதி நிவர்த்தகனை க்ருஷ்ணனுடைய திருநாமத்தை உச்சரித்துப் பரிசுத்தசூர்ணத்தை ஸ்பர்ஶிப்பியுங்கோள் என்கிருள்.

இவளை - (நிரதிஶயவைலக்ஷண்யத்தையுடைய) இவளை, பெறும் - பெறும், பரிசு - ப்ரகாரம், இ அணங்காடுதல் அன்று - இந்த அணங்கேறியாடுதல் அன்று; அந்தோ - ஐயோ! (இவளுக்குநோய்விஞ்சினபடி), குவளை தட கண்ணும் - குவளைப்பூப்போலே மைத்துப் பரப்பையுடைத்தான கண்களும், கோவை செம் வாயும் - கோவைப்பழம்போலே சிவந்த அதரமும், பயந்தனள் - தன்னிறமழிந்து பயந்தநிறத்தையுடையவாம்படி யானுள்; (இனி இதுக்குப் பரிஹாரமாவது), - கவளம் - (மதகரமான மருந்துகளைக்) கவளங்கொண்டு, கடாம்- கடமிழியும்படி மதித்த, களிறு - (குவலயாபீடமாகிற) ஆனையை, அட்ட - கொன்று, ("ஸவ்யஃ வஶ்யதக்ஷஸ்யைவ" என்று மதுரையிற் பெண்களுக்கு முகங்கொடுத்த), பிரான் - மஹோபகாரகனுடைய, திருநாமத்தால் - (விரோதிநிரஸநஸூசகமான) திருநாமோச்சாரணத்தாலே, ("ப்ராஹ்மணாஃ வாஹி தொலெய்யாஃ"என்கிறபடியே ப்ரஹ்மநிஷ்டரான பாகவதருடைய) தவளம் - பரிசுத்தமான, பொடி - பாததூளியை, கொண்டு - கொண்டு, நீர் - (இவள்பக்கல் பரிவாலே வழியல்லாவழியேயாகிலும் பரிஹரிக்கத்தேடுகிற) நீங்கள், இட்டிடுமின் - (இவள் ஸ்பர்ஶிக்கும்படி சடக்கென) ப்ரயோகியுங்கோள்: தணியும் - (இவளுக்கு விஞ்சியிருக்கிற வைவர்ண்யம்) தணியும். குவளை - நெய்தல். கடாம்-மதமாதல், ஆனையின்கதுப்பாதல். தவளமென்று - வெளுப்பாய், சுத்தியைச் சொல்லுகிறது.

இ.—அஞ்சாம்பாட்டில், நீங்கள் பண்ணுகிற பரிஹாரம் நோவை மிகப்பண்ணுகின்றது; நோய்க்கு யோக்யமான பரிஹாரத்தைப் பண்ணுங்கோள் என்கிருள்.

[இவளை இத்யாதி] - இந்நற்சரக்கைப் பெறுகைக்கு இந்நிஷித்தாநுஷ்டாநத்தையோ பண்ணுவது? விலக்ஷணையாயிருக்கிற இவளைப் பெறுகைக்கு உபாயம் இந்த தேவதாவிஷ்டமாய் ஆடுகிறது அன்று. [அந்தோ] - இவள் இப்படிசொன்னாலும் அவர்கள் இதில்நின்றும் மீளாமையாலே, 'அந்தோ!' என்கிருள். அந்தோ - விபரீதபலம் ஆகாநின்றது; இவளை இழந்தேபோமித்தனையாகாதே! என்கிருள். இது பரிஹாரமாகாதொழியு மித்தனை போக்கி இழக்கவேண்டுவதென்? என்ன, இவள் கண்ணும் முறுவலும் ஆனபடி பார்த்திகோளே என்கிருள் : குவளைபோலேயாய் போக்தாக்களளவன்றிக்கே பரப்பையுடைத்தான கண்ணும் கோவைபோலேயிருக்கிற அதரமும் விவர்ணமாயிற்று. [பயந்தனள்] - 'பசந்தனள்' என்பார்கள் தமிழர். பகவத்விஶ்லேஷத்திலும் அகஞ்சுரிப்படாத அழகுகள் தேவதாந்தர ஸ்பர்ஶத்தாலே அழிவதே! இனிச்செய்ய அடுப்பதென்? என்ன, - [கவளக்கடாம் இத்யாதி] - கவளங்கொண்டிருப்பதாய், கடாம்உண்டு-மதஜலம்; அது ஒழுகாநிற்பதான குவலயாபீடத்தை முடித்த உபகாரகன். வலிய ப்ரதிபந்தகங்களை வருத்தமறப் போக்கவல்லவனுடைய திருநாமத்தைச் சொல்லுங்கோள். [தவளம் இத்யாதி] - ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய பாதரேணுவைக் கொண்டு இவள்மேலே நீங்கள் இடுங்கோள். தவளப்பொடி - சுத்தமான பொடி. [நீர் இட்டிடுமின்] - பாபம்பண்ணுகைக்கு ஸஹகரித்தவர்களுக்கும் ப்ராயஶ்சித்தம் பண்ணவேணும். தேவதாந்தர ஸ்பர்ஶத்துக்குப் பரிஹாரம் - திருநாமஸங்கீர்த்தநம். ததீயஸந்நிதிக்குப் பரிஹாரம் - ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாததூளி. [தணியுமே] - கண்ணும் முறுவலும் தன்நிறம் பெறும்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. நீங்கள்பண்ணுகிற பரிஹாரம் நோயை மிகப்பண்ணுகின்றது; அத்தைவிட்டு, நோய்க்கு யோக்யமான பரிஹாரத்தைப் பண்ணுங்கோள் என்கிருள்.

[இவளைப்பெறும்பரிசுஇவ்வணங்காடுதல்அன்று] - இந்நற்சரக்கைப்பெறப் பார்ப்பார் இந்நிஷித்தாநுஷ்டாநத்தாலேயோ பெறப் பார்ப்பது? இவ்விலக்ஷணமாயிருக்கிற இவளைப் பெறுகைக்கு உபாயம் இத்தேவதாவிஷ்டமாயாடுமதன்று. இவள்இப்படிசொன்னவிடத்திலும் அவர்கள் மீளாதொழிகையாலே, [அந்தோ] - ஐயோ! இவளைஇழந்தோமாகாதே யென்கிருள். இதுஅநுவர்த்திக்குங்காட்டில் இவளையிழக்கவேணுமோ! என்ன, பார்க்கமாட்டிகோளோ! [குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும்பயந்தனள்] - அவனுடைய வாய்புகுசோறன்றோ பறியுண்கிறது? "தோண்டையஞ்செங்கனிவாய்நுகர்ந்தானை" என்றும், "மணநோக்கமுண்டான்"

அஞ்சாம்பாட்டு - 'இவளை' இத்யாதி 'அணங்காடுதல் பயந்தனள், தவளப்பொடி, இட்டிடுமின்' என்ற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'நீங்கள்' இத்யாதி.

'இவளை, இவ்வணங்கு' என்கிறவிடத்தில், 'இ' என்றது - உத்கர்ஷத்திலும், நிகர்ஷத்திலுமாய் அருளிச்செய்கிருர் - 'இந்நற்சரக்கு'இத்யாதி. சப்தார்த்தம் - 'இவ்விலக்ஷணமாய்' இத்யாதி. 'ஐயோ' என்றதுக்கு ஹாவம் - 'இவளை'இத்யாதி. இவளுடைய கண்ணையும் வாயையும் வர்ணிக்கிறவனுடைய நாரத்ஹாவத்தை அருளிச்செய்கிருர் - 'அவனுடைய' இத்யாதி. அவனுக்கு வாய்புகு சோறுயிருக்குமோ இவளுடையகண்ணும் வாயும்? என்ன, 'தொண்டை' இத்யாதி. கோவைப்பழம்போலே சிவந்து அழகியகனிபோலே இனிதான வாயை புஜித்தவனை யென்றபடி. திருமொழி - மூன்றாம்பத்து - ஏழாந்திருமொழி - இரண்டாம்பாட்டு. "பண்டிவன்" இத்யாதி. எட்டாம்பத்து - பத்தாந்திருமொழி - முதற்பாட்டு. "உண்டார் பூமாமலர்மங்கைமணநோக்கமுண்டானே" இத்யாதி. வண்டுகள் படிந்திருப்பதாய் தர்ஶநீயமாய்ப் பரப்பையுடைத்தான தாமரைப்பூவைப் பிறப்பிடமாகவுடைய பெரியபிராட்டியாருடைய செவ்வியையுடைய கண்ணழகை புஜிக்கிறவனே! இத்யர்த்தః. மணம் - செவ்வி. குவளையைக் கண்ணுக்கு ஒப்பாகச்சொன்ன

என்றும் இவையிறே அவனுக்கு ஊண். "குவளையங்கண்ணி" என்னக்கடவதிறே; குவளைப் பூப்போலேயாய் ஹோக்தாக்களளவல்லாத பரப்பையுடைத்தான கண்ணும்; கோவைவாயாளிறே, கோவைப்பழம்போன்ற சிவந்தஅதரமும் விவர்ணமாயிற்றின; பசந்தன ளென்றபடி. பகவத் விரஹத்துக்கும் அகஞ்சுரிப்படாதவை, தேவதாந்தர ஸ்பர்ஶத்தாலும் ததீயஸ்பர்ஶத்தாலுமாக விவர்ணமாயிற்றின வென்றபடி. ஆனால், பரிஹாரம் சொல்லா யென்ன; நீங்களேயன்றோ "நெடுங்காலமும் கண்ணன்நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்று சொன்னிகோள்; அப்படியே க்ருஷ்ணன் திருவடிகளை ஆஶ்ரயித்து அவனாலே பரிஹ்ருதமாகவேணு மென்கிறாள். [கவளம் இத்யாதி] - இரண்டு அநீதி யுண்டு இங்கேபுகுந்தது; அவ்விரண்டுக்கும் இரண்டையுங்கொண்டு பரிஹரிக்கப் பாருங்கோள். கவளங்கொண்டிருப்பதாய், தூர்த்ரவ்யங்களைப் * பருக்கிப் பிச்சேற்று வித்து நிறுத்தினார்களாயிற்று. கடாம் என்று - மதஜலம். மதஜலமொழுகாநின்றுள்ள குவலயா பீடத்தை முடித்த உபகாரகன். ப்ரபலப்ரதிபந்தகங்களை அநாயாஸேந போக்கவல்லவன் திரு நாமத்தாலே பரிஹரிக்கப் பாருங்கோள். [தவளப்பொடிக்கொண்டு] - பரிசுத்தமான பொடியைக் கொண்டு. [நீர்] - பாபம்பண்ணுகைக்கு ஸஹகரித்தார்க்கு, ப்ராயஶ்சித்தத்துக்கும் கூட்டுப்பட வேண்டாவோ? [இட்டிடுமின்] - இவள்மேலே இடுங்கோள். தேவதாந்தரஸ்பர்ஶமுண்டான துக்கு பகவந்நாமத்தைச்சொல்லிப் பரிஹரிக்கப் பாருங்கோள்; தேவதாந்தரஸ்பர்ஶமுடையா ருடைய ஸ்பர்ஶத்துக்கு ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுவைக்கொண்டு பரிஹரிக்கப் பாருங்கோள். இப்படிசெய்தால் பரிஹாரப்படுமோ? என்ன, [தணியுமே] - இவள்கண்ணும் விழித்து நிறமும் வரும்படி காட்டித் தரக்கடவேன். (ரு)

*துக்கு ஸம்வாதம் - 'குவளையங்கண்ணி' இத்யாதி. குவளைப்பூப்போன்ற கண்ணழகையுடையவ ளித்யர்த்தஃ. திருமொழி-இரண்டாம்பத்து-ஏழாந்திருமொழி-முதற்பாட்டு, "திவளும்" இத்யாதி. ஶப்தார்த்தம் - 'குவளைப் பூப்போலே' இத்யாதி. பயந்தனள் - பசந்தனள். 'கடங்கண்ணும், செவ்வாயும்' என்ற ஶப்தத்தை - ப்ராதாந்யத்திலேயாக்கி ஹாவம் – 'பகவத்விரஹத்துக்கும்' இத்யாதி. 'பகவத்விரஹத்துக்கும் அகஞ்சுரிப்படா தவை' என்றது - "மாழைநோக்கொன்றும் வாட்டேன்மின்" என்றத்தைப் பற்ற. அன்றிக்கே, "தீர்ப்பா ரையாமினி" யில் விரஹத்துக்கும் அகஞ்சுரிப்படாதவை யென்னுதல். அகஞ்சுரிப்படுகை - குறைகை. 'களிறட்டபிரான்திருநாமத்தால்' என்னுமளவுக்கும் அவதாரிகை, 'ஆனால்' இத்யாதி. ஸர்வேஶ்வரன் திரு நாமத்தா லென்னாதே, 'க்ருஷ்ணன்திருநாமத்தால்' என்றதுக்கு ப்ரயோஜநம் – 'நீங்களே' இத்யாதி. 'நெடுங்காலமும்' இத்யாதி – அநேககாலங்களும் க்ருஷ்ணனுடைய ஸர்வஸமாஶ்ரயணீயமாய் நிரதிஶய போக்யமான திருவடிகளைக் கீர்த்தநாதிமுகத்தாலே ஆஶ்ரயித்துப் பெறப்பட்ட வித்யர்த்தஃ. திருவிருத்தம்-முப்பத்தேழாம்பாட்டு, "கொடுங்காற்சிலையர்" இத்யாதி. க்ருஷ்ணன்திருநாமஞ்சொன்னாற் போராதோ? "தவளப்பொடி" என்கிறது எதுக்கு? என்ன, 'இரண்டு அநீதி' இத்யாதி. கவளம் - கபளம். அவ்வபதாநத் தைச் சொன்னதுக்கு ஹாவம் - 'ப்ரபல' இத்யாதி. திருநாமத்தாலே யென்றது - திருநாமத்தைச் சொல்லி யென்றபடி. 'தவளப்பொடி' என்றது - ஸாமாந்யஶப்தமானாலும், தேவதாந்தரததீயஸ்பர்ஶத்துக்குப் பரிஹாரமாக பாகவதபாதரேணுவைச் சொல்லுகிறது. 'இட்டிடுமின்' என்னாதே, 'நீர்' என்றுவிசேஷித்த தக்குஹாவம் - 'பாபம்'இத்யாதி. "இட்டிடுமின்" என்று முழுச்சொல்லு; இடுங்கோ ளென்றபடி. 'இரண்ட நீதி' இத்யாதி வாக்யவிவரணம்- 'தேவதாந்தர' இத்யாதி. தணியும் - சமிக்கும். அவதாரணத்துக்கு அர்த்தம் – 'இவள்கண்ணும்' இத்யாதி. க்ரமேண அந்வயஃ (ரு)*

---

* பருக்கி - குடிப்பித்து.

# ஆறும்பாட்டு.

தணியும்பொழுதில்லை நீரணங்காடுதிர்அன்னைமீர் !
பிணியும்ஒழிகின்றதில்லை பெருகுமிதுவல்லால்
மணியினணிநிறமாயன் தமரடிநீறுகொண்டு
அணியமுயலின் மற்றில்லைகண்டீர் இவ்வணங்குக்கே·

ஆ.—(தணியும்.) தவளப்பொடியாகிறது இன்னதென்கிறது. நீர் அணங்காடுகிற இத்தால் ஒருக்ஷணமாத்ரம் இவளுக்கு ஒரு ஸுகலேஶமும் பிறக்கிறதில்லை. அதுவேயோ? பிணியும் ஒழிகின்றதில்லை, பெருகுகிற இத்தனையல்லது. ஆனபின்பு, மணியின் அணிநிற மாயன்தமரடிநீறுகொண்டு அணிய முயலுமித்தனையல்லது மற்று இவளுக்கு ஒரு பரிஹாரமும் இல்லை என்கிறாள்.

ஒ.—ஆறும்பாட்டில், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய் பாததூளியைக்கொண்டு இட உபக்ரமிக்கப்பெறில், அதுவே பரிஹாரம்; மற்று இவள் நோய்க்குப் பரிஹாரமில்லை என்கிறாள்.

[தணியும் என்று தொடங்கி] - விடாதே நீங்கள் அணங்காடாநின்றீகோள்; இதுக்காக வ்யாதி வர்த்திக்கிறதித்தனை போக்கிக் குறைந்து காட்டுகிறதில்லை. [மணியினணிநிற மாயன்தமர்] - எம்பெருமானுடைய அழகுக்கும் குணங்களுக்கும் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள்.

ப.—அநந்தரம், நீங்கள் இடைவிடாமல் அணங்காடுகிற இத்தால் இவள்நோய் வளருகிறதொழிய மீளுகிறதில்லை; ஆதலால், விலக்ஷணவிக்ரஹ விஶிஷ்டனை ஸர்வேஶ்வரன்பக்கலிலே பந்தவான்களான பாகவதருடைய சரணரேணுவை தரிப்பிக்கையிலே உத்யோகியுங்கோள் என்கிறாள்.

அன்னைமீர் - அன்னைமீர் ! (பெற்றியோளான பக்வைதயாலே 'பாலையன்றோ இவள்?' என்று என்வார்த்தைகேளாதே), தணியும்பொழுது - தவிருவதொருபொழுது, இன்றி- இன்றி, நீர் - நீங்கள், அணங்காடுதிர் - அணங்காடாநின்றீகோள் : இது - இதுகாரணமாக, பிணியும் - இவள்நோயும், பெருகும் அல்லால் - பெருகிவருகிறதொழிய, ஒழிகின்றது இல்லை-தவிருகிறது இல்லை : (இனி ரக்ஷைக்குப் பரிஹாரம்), மணியின்-நீலரத்நத்திற்காட்டில், அணி - நிரதிசயவிலக்ஷணமான, நிறம் - நிறத்தையுடையனும், மாயன் - ஆஶ்சர்யசேஷ்டிதனுமான க்ருஷ்ணன்விஷயமாயுள்ள, தமர் - ஶேஷத்வஸம்பந்தஜ்ஞாகவான்களான பாகவதருடைய, அடி நீறு - ('தவளப்பொடி' என்றுசொல்லப்பட்ட) பாததூளியை, கொண்டு அணிய - தரிப்பிக்கும்படி, முயலின் - உத்யோகிக்கப்பெறில், இ அணங்குக்கு - இந்த திவ்யஸ்வரூபையான பெண்பிள்ளைக்கு, மற்று - இத்தோடொக்க வேறொருபரிஹாரம், இல்லைகண்டீர் - இல்லை காணுங்கோள்.

இது ப்ரயோகித்தபோதே ஆஶ்வாஸங்கண்டிகோளன்றோ என்று கருத்து. அழகுக்கு ஈடுபட்ட இவளுக்குப் பரிஹாரம் அத்துறையிலகப்பட்டாருடைய அநுபாத்தமேயென்றபடி. மணியினென்கிற ஐந்தாம்வேற்றுமை - உவமையாகவுமாம்.

இ.—ஆறும்பாட்டில, இந்தப்பெருநேர்த்தியெல்லாம் வேண்டா; தவளப்பொடியென்று சொன்ன ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாததூளியை இவள்மேலே இட உத்யோகிக்க அமையும் என்கிறாள்.

[தணியும் இத்யாதி] - நான் நிஷேதிக்கநிஷேதிக்க உச்சிவீடும் விடாதே நீங்கள் அணங்காடாநின்றிகோள். [அன்னைமீர்]-நீங்கள் பக்வைகள் என்னு, இளையவர்கள் வார்த்தை கேட்கலாகாதோ? என்கிருள். [பிணியும் இத்யாதி] - உங்கள்பரிஹாரத்தால் நோய்போகை தவிர்ந்து பழையநிலையிலும் நில்லாதே ப்ரவ்ருத்தமாய் வாராநின்றது. காரணுநுவ்ருத்தி யாலே கார்யம் அநுவர்த்திக்கிறபடி. இது விபரீதபலமாயிற்றதாகில், பரிஹாரந்தான் ஏதென் னில்,—[மணியின் இத்யாதி] - நீலமணியிற்காட்டில் அழகிதான வடிவையுடையனுய் குண சேஷ்டிதங்களால் ஆம்சர்யபூதனுனவன். [தமரடிநீறுகொண்டு] - அவனுடைய அழகுக்கும் குணங்களுக்கும் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் பாததூளியைக்கொண்டு. வடிவழகுக் குத் தோற்று மோஹித்த இவளுக்கு அவர்களுடைய பாதரேணுவே பரிஹாரமாமித்தனை; ஸௌந்தர்யஶீலங்களாலே மோஹித்த இவளுக்கு அவற்றிலே தோற்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாதரேணுவே இடுங்கோள். [அணிய முயலின்] - அணியவேண்டா, உத்யோகிக்க அமை யும். 'தவளப்பொடிக்கொண்டு நீரிட்டிடுமின்' என்று விஶிஷ்டகுலத்திலே பிறந்த அபவாத மாகையாலே கனக்க விதித்தேனித்தனை. அதன்ப்ரபாவம் பார்த்தால் இட உபக்ரமிக்க அமையும். "தொண்டரடிப்பொடியாட நாம் பெறில்" என்னக்கடவதிறே. தேர்ப்பாகனுர் க்கு மோஹித்த இவளுக்கு மாயன்தமரடிநீறுகொண்டு பரிஹாரமானபடி என்? என்று பிள்ளை சியரைக் கேட்க, 'மோர்க்குழம்புகேட்குமளவிலே கொடுக்கப்பெருதாப்போலே ஆசைப்பட்ட வளவிலே அவனைக் கொடுவந்து காட்டப்பெருமையாலே மோஹித்தால் சுக்கிட்டு ஊதி உணர் த்தியுண்டாக்க வேண்டுமாபோலே, ஸ்ரீவைஷ்ணவஸ்பர்ஶத்தாலே உணர்த்தியுண்டாக்கி ஆஶ் வஸிப்பிக்க வேண்டுகையாலே' என்று அருளிச்செய்தார். [மற்றில்லை கண்டீர்] - இவளைப்பெறு கைக்கு வேறு பரிஹாரமில்லை. [இவ்வணங்குக்கு]-இவ்வப்ராக்ருதஸ்வபாவைக்கு மற்றொன்று பரிஹாரமாகாதே; இதுவே பரிஹாரமாம்படியன்றோ இவள்வைலக்ஷண்ய மென்கை.

௬௫.—ஆரும்பாட்டு. இப்பெருநேர்த்தியெல்லாம் வேண்டா; 'தவளப்பொடி' என்று சொன்னது இன்னதென்று விசேஷித்து அத்தைச்செய்ய உத்யோகிக்கவே இவள்நோய் தீரும் என்கிருள்.

[தணியும்இத்யாதி] - நிஷேதிப்பாருண் டாகையாலே 'இன்னபோது தவிரச்சொல்லு வர்கள்' என்றுஅறியாமையாலே, உச்சிவீடுவிடாதே அவர்கள்ஆடத் தொடங்கினுர்கள். [பிணியும் இத்யாதி] - காரணுநுவ்ருத்தியாலே கார்யமும்அநுவர்த்தியாநின்றது. [பெருகும் இதுவல்லால்] - கிண்ணகப்பெருக்குப்போலே மேன்மேலெனக் கிளர்ந்து வாராநின்றது. [மணியின்இத்யாதி] - நீல மணிபோலே அழகியநிறத்தையுடையனுய், குணசேஷ்டிதங்களால் ஆம்சர்யபூதனுனவனுடை

---

ஆரும்பாட்டு.—'தணியும்' இத்யாதி. 'மாயன்தமரடிநீறுகொண்டு' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'இப்பெருநேர்த்தி' இத்யாதி 'தவளப்பொடியென்றுசொன்னது இன்னது என்று விசேஷி த்த - இப்பெருநேர்த்தியெல்லாம் வேண்டா - அத்தைச்செய்ய உத்யோகிக்கவே இவள்நோய்தீரும்' என்று அந்வயிப்பது. 'நீரிட்டிடுமின்' என்கிற பெருநேர்த்தியெல்லாம் வேண்டா வென்றபடி.

தணியும் பொழுதில்லை - இல்லையாம்படி; இன்றிக்கே யென்றபடி. தணியும் பொழுது - தவிருவ தொரு பொழுது. தணியாதே யாடுகிறது எதுக்கென்ன, 'நிஷேதிப்பார்' இத்யாதி. பிணி - வ்யாதி. காரணு நுவ்ருத்தி-ரோகமூலகாரணமாகச் செய்கிற ஆட்டம் தத்காரணமாய் அநுவர்த்திக்கிறதாகையாலே யென்றபடி. பெருகுமிதுவல்லால் - பெருகுமதொழிய. மணியின்' என்ற பஞ்சமி - உபமார்த்தேயாய், மணிபோ லென்ற படி: "எல்லைநீக்கமேதுவமை" என்று உபமார்த்தே பஞ்சமி தமிழுக்குள்ள தொன்று; எல்லை - ஆக்ராம மென்றது ; நீக்கம் - வ்ருக்ஷாத்பர்ணம் பததி யென்றது ; ஏது - ஹேது. தூமவத்த்வாத் என்றது; உவமை -

யாருடைய பாதரேணுவைக் கோண்டுவேந்து அணிய உத்ஸாஹிக்கில். விஶிஷ்டகுலத்திற்பிறந்த அபவாதமாகையாலே ப்ராயஶ்சித்தத்தைக் கனக்க விதித்தோ மத்தனே; அதுதன்னின் ப்ரஜாவத்தைப் பார்த்தால் இதேல்லாம் வேண்டா ; உத்யோகமாத்ரம் அமையும். ''தோண்டரடிப்பொடியாட நாம் பெறில் கங்கைநீர்குடைந்தாடும் வேட்கை யென்னாவதே'' என்றுரிறே. “ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப꞉ ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்” (ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப꞉ ப்ராதிகூல்யஸ்யவர்ஜநம்) - ஆநுகூல்யத்தில் ஸங்கல்பமாத்ரமே அமையும் ; ப்ராதிகூல்யத்தில் வர்ஜ்ஜநமே வேணும். [மாயன்தமரடிநீறுகோண்டு] - வண்டரும் *சோண்டரும் என்கிறவர்களுக்கு அரையன்சோன்ன வார்த்தைக்குப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் பரிஹாரம் பண்ணின படியை நினைப்பது. அதாவது - அகளங்கநாட்டாழ்வான் இவர்களுக்கு அமணன்பாழியில் ஸிம்ஹத்தைக் காட்டி 'திருமுற்றம் : திருவடிதொழுங்கோள்' என்ன, அவர்களும் மெய்யென்று திருவடி தொழுது, 'அதுஅமணன்பாழி' என்றுஅறிந்தவாறே மோஹித்து விழ,பிள்ளையுறங்காவில்லிதாஸர்தம்ஸ்ரீபாததூளியை அவர்களுக்கு இட, உணர்ந்து எழுந்திருந்தார்கள். திருக்கோட்டாரத்தினருகே கைந்நிரைகட்டிக் கோண்டிருக்கிற நாளிலே, சீயர் இத்திருவாய்மோழி யருளிச்செய்கிறுராய் இவ்வளவிலே வந்தவாறே, '''தேர்ப்பாகனுர்க்கு' என்று நோவுக்கு நிதாநம் சோன்னுளாகில், அவனையிட்டுப் பரிஹரியாதே 'மாயன்தமரடி நீறுகோண்டுஅணியமுயலின்' என்று இத்தைப்பரிஹாரமாகச் சோல்லுவானென்? நோவுக்கு நிதாநமோன்றும் பரிஹாரமோன்றுமாயோ இருப்பது?'' என்று நான் கேட்டேன் ; ''மோர்க்குழம்பு இழியாதே மோஹித்துக்கிடந்த ஸமயத்தில் சுக்கிட்டூதிப் பின்பு மோர்க்குழம்பு கோடுத்துப் பரிஹரிப்பாரைப்போலே, 'தேர்ப்பாகனுர்க்கு' என்றபோதே அவரைக்கோடுவந்து காட்டப்பேறுமையாலே, முற்பட இவ்வழியாலே ஆஶ்வஸிப்பித்துப் பின்னை அவனைக்கோடுவந்து காட்டுவதாகக் காணும்'' என்று அருளிச்செய்தார். [மணியின்இத்யாதி] - ஸௌந்தர்ய

---

மணியி னென்றது. முயலுகைபோருமோ? என்ன, 'விசிஷ்டகுலத்தில்' இத்யாதி. யத்வா, கீழே பாட்டிலேமிக என்றுவைத்து, இங்கே 'அணியமுயலின்' என்றால் வ்யாஹதமன்றோ' என்ன, 'விசிஷ்டகுலத்தில்' இத்யாதி என்னுதல். 'முயலின் நோய்தீரும்' என்கையாலே - அதினுடைய பரமபாவநத்வம் பலிதமென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - 'தொண்டரடி' இத்யாதி. பெருமாள்திருமொழி இரண்டாந்திருமொழி - மூன்றாம் பாட்டு, ''தோடுலா'' இத்யாதி. ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுக்களிலே அவகாஹிக்கப்பெறில், கங்காஜலத்திலே புக்கு அவகாஹிக்கவேணு மென்கிற ஆசையால் என்ன ப்ரயோஜநமுண்டு? என்றபடி. தேவதாந்தரஸ்பர்ஶத்தை நேராக விடச்சொல்லி, இத்தை உத்யோகிக்கச்சொன்னதுக்கால் பலித்ததை அருளிச்செய்கிறுர் - 'ஆநுகூல்யஸ்ய' இத்யாதி. தேவதாந்தர ஸ்பர்ஶத்தால் வந்த அசுத்திக்கு பாகவதபாததூளி பரிஹாரமென்றதுக்கு ஆப்தஸம்வாதம் - 'வண்டரும்' இத்யாதி. அரையன் - ராஜா. அதாவது - அகளங்க இத்யாதி. அமணன்பாழி - ஜைநதேவாலயம். 'மாயன்தமரடி நீறுகொண்டணியமுயலின் - தீரும்' என்று கீழே கூட்டுவது. தேவதாந்தரஸ்பர்ஶத்தால் வந்த அசுத்திக்குப் பரிஹாரமாயவென்றவிக்கே. மூன்றாம் பாட்டில்சொன்ன பகவத்விஶ்லேஷத்தால் வந்த நோய்க்கும் இதுவேபரிஹாரமென்னுமிடத்தை ஐதிஹ்யமுகத்தாலே தர்சிப்பிக்கிறுர் - 'திருக்கொட்டாரத்தின்' இத்யாதி. ஆக, இவ்விரண்டுபாட்டாலும் - பாகவதபாதரேணு, தேவதாந்தரபாருடைய ஸ்பர்ஶத்தால் வந்த அசுத்திக்கும், பகவத்விஶ்லேஷத்தால் வந்த நோய்க்கும் ஶாமகமென்றதாயிற்று. ஒருகலஹத்திலே திருக்கொட்டாரத்தினருகே கைந்நிரைகட்டிக்கொண்டிருக்கிற நாளிலே யென்றபடி. கைந்நிரை - நிரைச்சல். இத்திருவாய்மொழியிலே - தேவதாந்தர ததீயஸ்பர்ஶத்தாலும் பகவத்விரஹத்தாலுமாக நோவு த்விவிதமாகையாலே, அதில் பகவத்விரஹவ்யஸநத்துக்கு இது பரிஹாரமாம்படியென்? என்று - ஶங்காவாக்யம். மோர்க்குழம்பிலும் சுக்கு ப்ரசஸ்யமாய் ஆஶ்வாஸகமாயிருக்குமாபோலே, பகவானிலும் பாகவதர்கள் அத்யந்தோத்க்ருஷ்டராகையாலே முற்பட அவர்களையிட்டுப் பரிஹரித்து, பின்பு வண்டுவரா பதிமன்னனைக்கொண்டு பரிஹரிக்கிறதென்று தாத்பர்யம். ஆக, இத்தால் - தேவதாந்தரஸ்பர்ஶ ததீயஸ்பர்ஶ பகவத்விஶ்லேஷவ்யஸநங்களாகிற மூன்றுக்கும் பாகவதபாதரேணு, பரிஹார

---

* 'சுண்டரும்' என்று பாடாந்தரம்.

ஶீலாதிகளாலேயாயிற்று இவள்மோஹித்தது; நீங்களும் ஸௌந்தர்யஶீலாதிகளிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுவைக்கொண்டு பரிஹரிக்கப் பாருங்கோள். பொடிபடத் தீரும். [மற்றுஇத்யாதி] - இதல்லது பரிஹாரமில்லாதபடியான வைலக்ஷண்யத்தையுடைய இவளுக்கு இத்தையே பரிஹாரமாகப் பாருங்கோள். (சு)

## ஏழாம்பாட்டு.

அணங்குக்கருமருந்தென்று அங்கோராடும்கள்ளும்பராய்ச்
* சுணங்கையெறிந்து நம்தோள்குலைக்கப்படும்அன்னைமீர்!
உணங்கல்கெடக் கழுதையுதடாட்டம்கண்டுஎன்பயன்?
வணங்கீர்கள்மாயப்பிரான்தமர் வேதம்வல்லாரையே.

ஆ.—(அணங்குக்கு.) இவள் தளராநிற்க, இவளுக்கு அருமருந்தென்று அங்கு ஓர் ஆடும் கள்ளும் பராய்ச் சிலஅஸங்கதங்களைப் பண்ணினால் உங்களுக்கு என்ன ப்ரயோஜநமுண்டு? ஆனபின்பு, இவளுடைய நோயெல்லாம் தீரும்படி வேதவித்ச்ரேஷ்டரான ஸ்ரீவைஷ்ணவர்களைச் சென்று ஆஶ்ரயியுங்கோள் என்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், இதரதேவதைகளை ஆஶ்ரயித்தால் இவளுடைய விநாஶமே பலித்துவிடுவது; இவள் பிழைக்கவேண்டியிருந்திகோளாகில், வைஷ்ணவர்களை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[அணங்குக்கு என்று தொடங்கி] - அப்ராக்ருதஸ்வபாவையான இவளுக்கு ஒருவராலும் செய்யவொண்ணாத மருந்து செய்கிறோமென்று த்ரவ்யங்களை ப்ரார்த்தித்துத் திரளநின்று கையைத்தட்டித் தோளைக்குலைத்து ஆடுகிற அன்னைமீர்! [உணங்கல் என்று தொடங்கி]- ஜீவநஸாதநமான வ்ரீஹ்யாதிகள் சேதப்படும்படி கழுதையைத் தின்னவிட்டு அதனுடைய உதடாட்டம் கண்டு போதுபோக்கியிருப்பாரைப்போலே, இவள் நோவுபடாநிற்க அஸங்கத ப்ரவ்ருத்திகளாலே போதுபோக்கியிருந்தால் என்ன ப்ரயோஜந முண்டு?

ப.—அநந்தரம், இவள் ஸத்தை யழியும்படி தேவதாந்தரவிஷயப்ரவ்ருத்தி பண்ணினால் ப்ரயோஜநமில்லை; ஆஶ்சர்யபூதனான ஸர்வேஶ்வரனுக்கு ஶேஷபூதரான வைதிகாக்ரேஸரரை ஆஶ்ரயியுங்கோள் என்கிறாள்.

அன்னைமீர் - அன்னைமீர்! (உங்கள்பக்வதைபாராதே), அணங்குக்கு - திவ்யையான பெண்பிள்ளைக்கு, அரு மருந்து என்று - பெறுதற்கரிய மருந்துஎன்று நினைத்து, அங்கு - அந்ததேவதாந்தரவிஷயமாக, ஓர் ஆடும் - நிஷித்தமான ஆடறுக்கவும், கள்ளும் - மதுநிவே

மென்றதாயிற்று. ‘மணியினணிநிறம்’என்று விசேஷித்ததுக்கு பாவம் ‘ஸௌந்தர்ய’ இத்யாதி. சாடு - பொடிபடத்தீரும் என்று. ஸ்ரீபாததூளி படவென்று ஸ்வபாவார்த்தம், தூளிபாய்ப்போமென்று சாடுவுக்கு அர்த்தம். அணங்கு - தெய்வப்பெண். அன்னைமீர் - தணியும்பொழுதில்லை நீர்அணங்காடுதிர், பெருகுமிதுவல்லால் - பிணியும் ஒழிகின்றதில்லை, மணியின் என்றுதொடங்கி, முயலின் - பிணியும் - தணியும், இவ்வணங்குக்கு - மற்றில்லை கண்டீர் இத்யந்வய:. மற்றில்லைகண்டீர் - இத்தோடொத்த வேறொருபரிஹாரமில்லை காணுங்கோள் என்று சப்தார்த்தம். “க்ருதாநுக்ரஹஸ்ய ஸ்ஸ்தித்யாதி ஶ்ரஸ்ய ஸஜ்ஜநஸ்ய । ரக்ஷிஷ்ய திவிஶாலோ தோஹகவாரணதயா” இத்யாதி பகவச்சாஸ்த்ரே. (சு)

* துணங்கையென்றும் பாடமுண்டு.

திக்கவும், பராய் - ப்ரார்த்தித்து, (அத்தேவதாவேசத்தாலே உடம்பு), சுணங்கை எறிந்து - மயிர்க்கோள் எறிந்து, நும் தோள் - உங்கள் தோள்கள், குலேக்க - அசைத்தாட, படும் - படா நின்றது; உணங்கல் - உணங்குகிறநெல்லு, கெட - கெட, கழுதை - (அது தின்கிற) கழுதையி னுடைய, உதடு ஆட்டம் - உதடாட்டத்தை, கண்டு-கண்டு, என் பயன் - என்ன ப்ரயோஜந முண்டு? (அதுபோலே இவள் ஸத்தையழிய தேவதாந்தரவிஷயவ்யாபாரத்தால் ப்ரயோஜந மில்லே; ஆனால் என் செய்யப்பெறுமென்னில்),—மாயம்-ஆஶ்சர்யகுண சேஷ்டிதங்களை, பிரான்-இவளுக்குஉபகரித்துஅநுபவிப்பித்தவனுடைய, தமர் - அடியாராய், வேதம்வல்லாரை - வைதி காக்ரேஸரரான பாகவதரை, வணங்கீர்கள் - வணங்கும்படி பாருங்கோள். சுணங்கை-மயிர்க் கோள். 'துணங்கை' என்று பாடமாய் - துணங்கை யென்ற கூத்தாகவுமாம். "சுணம் கை யாலே யெறிந்து" என்றுஞ் சொல்லுவர்.

இ.—ஏழாம்பாட்டில், இதரதேவதைகளை ஆஶ்ரயித்தால் இவளுடைய விநாஶமே பலம். பிழைக்கவேண்டியிருந்திகோளாகில், ஸ்ரீவைஷ்ணவர்களை ஆஶ்ரயியுங்கோள் என்கிருள்.

[அணங்குக்கு அருமருந்து என்று] - அப்ராக்ருதஸ்வபாவையான இவளுக்குப் பெறுதற்கரிய மருந்தென்று. இவள் வைலக்ஷண்யம் அறிந்திலிகோள்; செய்கிறதின் தண்மை யும் அறிந்திலிகோள் ; "சூருமணங்குந்தெய்வப்பெண்பெயர்" என்னக்கடவதிறே. [அங்கு ஓர் ஆடும் கள்ளும் பராய்] - நிஷித்தத்ரவ்யங்களை ப்ரார்த்தித்து. பராய் - பரவி; ப்ரார்த்தித்து. [துணங்கையெறிந்து] - துணங்கைக்கூத்தென்று கையைத் தட்டியாடுவதொன்று உண்டு; அதாதல் : சுணம் என்றத்தைச் சுண்ணம் என்று ஆக்கி மஞ்சட்பொடியை ஒருவர்மேலே ஒருவர் எறிந்து ஆடுமதாதல். [நும்தோள் குலேக்கப்படும்] - பகவத்விஷயத்திலே அஞ்ஜலி பண்ணும் கையைக்கொண்டு நீங்கள்படும் எளிவரவே இது! ஸாதநார்த்தமாக ஓர் அஞ்ஜலியும் மிகையென்று இருக்கக்கடவ நீங்களே இந்த பறைவ்யாபாரங்களைப் பண்ணுகிறீர்கோள். [உணங்கல் இத்யாதி] - ஜீவநஹேதுவான வ்ரீஹி நசித்துப்போகக் கழுதையினுடைய உதட்டின் வ்யாபாரத்தைக் கண்டிருக்கிற இத்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? அதுபோலே உங்களுக்கு ஜீவநஹேதுவான இவள் நசியாநிற்க, தேவதாந்தரஸ்பர்ஶமுடையாருடைய வ்யாபாரங் களைக் கண்டிருக்கிற இத்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? [வணங்கீர்கள் இத்யாதி] - வேதம் வல்லாரான மாயப்பிரான்தமரை ஆஶ்ரயியுங்கோள்? அவனுடைய ஆஶ்சர்யகுணசேஷ்டிதங் களுக்குத் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை ஆஶ்ரயியுங்கோள்: 'வேதம்வல்லார்' என்கிறது- "நாராயணபராவேதா:", "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்று ஸகல வேததாத் பர்யமும் கைப்பட்டவர்களென்கை. ஸகலவேதங்களுக்கும் பகவத்பரத்வம் ஒருவருக்கும் அவர்க ளுக்குத் தனித்து உயிரில்லையென்று இருக்குமவர்கள் வேதம்வல்லார்கள்.

ஈடு—ஏழாம்பாட்டு. இதரதேவதைகளை ஆஶ்ரயித்தால் இவளுடைய விநாஶமே பலித்துவிடும்; இவள் பிழைக்கவேண்டியிருந்திகோளாகில், ஸ்ரீவைஷ்ணவர்களை ஆஶ்ரயியுங் கோள் என்கிருள்.

[அணங்குக்குஅருமருந்தென்று] - அணங்கென்று - தெய்வப்பெண். "சூரு மணங்குந் தெய்வப்பெண்பெயர்" என்னக்கடவதிறே. அப்ராக்ருத ஸ்வபாவையான இவளுக்குத் தகுதி

---

ஏழாம்பாட்டு - 'அணங்குக்கு' இத்யாதி. 'கழுதையுதடாட்டங்கண்டென்பயன், மாயப்பிரான்தமர் வேதம்வல்லாரை - வணங்கீர்கள்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - 'இதரதேவதைகளை' இத் யாதி. 'என்பயன்' என்ற பதத்தைக் கடாக்ஷித்து - அவதாரிகையிலே, 'விநாசமேபலித்துவிடும்' என்றது.

'அணங்கு' என்றால் - தெய்வப்பெண்ணைச் சொல்லுமோ? என்ன, 'சூரும்' இத்யாதி. சப்தார்த்தம்- 'அப்ராக்ருத' இத்யாதி. இப்பதத்தை ப்ரயோகிக்கிறவளுடைய ஹார்த்தபாவம் - 'இவள்' இத்யாதி. 'தகுத்

யான பெறுதற்கரிய மருந்தென்று. இவள்வைலக்ஷண்யமும் அறிந்திலிகோள், செய்கிறதின் தண்மையும் அறிந்திலிகோள். [அங்கோராடும் கள்ளும் பராய்] - நிஷித்தத்ரவ்யங்களை ப்ரார்த்தித்து. பராய் - பராவி ப்ரார்த்தித்து. [துணங்கையெறிந்து] - துணங்கையென்று ஒரு ந்ருத்த விசேஷம். எறிதல் - இடுதல். ஆடலிட்டு என்றபடி. துணங்கைக்கூத்தென்று - கைதட்டியாடுவ தொரு கூத்துஉண்டு, அத்தைச் சொல்லிற்றுதல்; * மஞ்சட்பொடியைக் கையிலேபிடித்து ஒருவர்க்கொருவர் எறிந்து ஆடுவதொன்று உண்டு, அத்தைச் சொல்லிற்றுதல். [நும்தோள் இத்யாதி]- பகவத்விஷயத்தில் பண்ணின அஞ்சலிமாத்ரமும் 'ஶரண்யன்நீர்மையாலே மிகை' என்றிருக்கக் கடவ நீங்கள் படும் எளிவரவே இது! "தொழுது - எழுதுமென்னுமிது மிகை" என்றிறே இவர்கள் இருப்பது. [உணங்கல்இத்யாதி] - ஜீவநஸாதநமான வ்ரீஹியானது நசித்துப்போம்படிக்கு ஈடாக, அத்தைத் தின்கிற கழுதையினுடைய உதட்டின்வ்யாபாரம் கண்டிருந்தால் என்ன ப்ரயோஜநமுண்டு ? அப்படியே இவளைக்கொண்டு ஜீவிக்கவிருக்கிற நீங்கள் இவள்விநாசத்தைப்பலிப்பிப்பதான தேவதாந்தரஸ்பர்ஶமுடையார் வ்யாபாரம் கண்டிருக்கிற இத்தால் என்ன ப்ரயோஜநமுண்டு ? ப்ரயோஜநமில்லாமையே யன்று; விநாஶமே பலிப்பது. அன்றிக்கே, ஐயன் திருக்குருகைப்பெருமாளரையர் நிர்வஹிக்கும்படி - "உணங்கல்கெட - இவளுடைய உணங்குதல் கெட, இவளிளைப்புத் தீர: கழுதென்றது - பேய், கழுதை - பேயை. உதடாட்டம் கண்டு என்பயன் - நீங்கள் ஆடும் கள்ளும் ப்ரார்த்தித்துக்கொடுக்க, அத்தை அது விநியோகம்கொள்ளும்போது அதினுடைய உதடாடுகிறத்தைக் கண்டிருக்கிறத்தா லென்ன ப்ரயோஜநமுண்டு?" என்று. "கழுது பேயும் பரணும்" என்றுனிறே. 'இதில் ப்ரயோஜநமில்லையாகில், ப்ரயோஜநவத்தாயிருக்குமத்தைச் சொல்லாய்'என்ன, [வணங்கீர்கள்]-அவர்கள் திருவடிகளிலே விழப் பாருங்கோள். அவர்களென்கிறது ஆரை ? என்ன, [மாயப்பிரான் இத்யாதி] - குணசேஷ்டிதங்களால் ஆஶ்சர்யபூதனானவனுடையகுணங்களிலேஈடுபட்டிருக்கும்ஸ்ரீவைஷ்ணவர்களை. "வெதெ[illegible]ஸவெ[illegible] ரஹமெவவெ[illegible]ஃ" (வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்யஃ) என்றும், "ஸவெ[illegible]வெடாயதெ[illegible]கம

---

தவிசேஷம்' என்றதின் விவரணம் - 'துணங்கைக்கூத்து' இத்யாதி; த்விதீயார்த்தமாதல். த்ருதீயார்த்தம்- 'மஞ்சட்பொடி' இத்யாதி. இவ்வர்த்தத்தில், சுணமென்று - சூர்ணமாய், மஞ்சட்பொடி யென்றபடி. சுணங்கையெறிந்து - சூர்ணத்தைக் கையிலேபிடித்தெறிந்து. 'நும்' என்றதுக்கு வாஸனை - 'பகவத்விஷயத்தில்' இத்யாதி. எளிவரவு - ஹீநதை. அஞ்சலிமாத்ரமும் மிகையென்றிருப்பார்களோ? என்ன, 'தொழுதெழுதும்' இத்யாதி. தொழுது உஜ்ஜீவிப்போமென்னுமிது அதிகமித்யர்த்தஃ. ஒன்றேயோ பரிஹாரம்? நாங்களும் இந்தப் பரிஹாரத்தைச் செய்து பார்க்கிறோமென்ன, 'உணங்கல்' இத்யாதி. உணங்கல் - புழுங்கல். ப்ரக்ருதத்திலே யேதென்ன, 'அப்படியே' இத்யாதி. த்விதீயார்த்தத்திலே, அசரீரங்களானவை உதடாட்டுகையாவது - அவற்றை ஒருவன் பக்கலிலே ஆவேசிப்பித்துப் பக்ஷ்யங்களையிட்டு அதினுடைய ஓஷ்ட்டஸ்புரணம் கண்டு என் பயன்? என்றபடி. 'கழுது' என்று - பேயைச் சொல்லுமோ? என்ன; நிகண்டு - 'கழுது' இத்யாதி. கீழே, 'மாயன்தமர்' என்கையாலே, ததநுகுணமாக ஹ்வாநம் - 'அவர்கள்' இத்யாதி. 'வேதைஶ்சஸர்வைஃ' இத்யாதி—கீதாஸு பஞ்சதஶே. "ஶதம[illegible]ஹ[illegible]ணியதெ[illegible]கம்ஸவதி । ஸவெ[illegible]வெடாயதெ[illegible]கம்ஸவதி । ஸவெ[illegible]ஹொதாரொயதெ[illegible]கம்ஸவதி" இதி தைத்திரீயகே. ய[illegible]ணிஶதெகம்ஸவதி - பரிசுத்தங்களாயிருக்கிற நூறுகள் யாதொரு ஸர்வேஶ்வரனிடத்திலே ஏகீபவித்

---

* 'சுணங்கையெறிந்து' என்ற பாடத்துக்கு அருளிச்செய்ததாகும் இது என்று தோன்றுகிறது. சுணங்கையென்றுஒருகூத்திருப்பதாகத் தெரியவில்லை யாதலால் இப்படிக்கொள்வது உசிதம். பன்னீராயிரப்படியையும் காண்க.

ஸவந்தி" (ஸர்வேவேதாயத்ரைகம்பவந்தி) என்றும், "நதாஸ்ஸ்மஸர்வவசஸாம் ப்ரதிஷ்டாயத்ர ஶாஶ்வதீ" (நதாஸ்ஸ்மஸர்வவசஸாம் ப்ரதிஷ்டாயத்ரஶாஶ்வதீ) என்றும் சொல்லுகிறபடியே வேததாத்பர்யம் கைப்பட்டிருக்குமவர்களை. 'வேதம்வல்லாரையே' என்கிற இவ்விஶேஷணத்துக்குக் கருத்தேன்? என்னில்; - தேவதாந்தர ஸ்பர்ஶமுடையார் புகுந்து சிகித்ஸிக்கிறதுக்குப் பரிஹாரமிறே இவள்சொல்லஇழிந்தது; அதில், 'அவனையொழிந்ததொரு தேவதைக்குத் தனித்தோருயிர்ப்பில்லை: அவனே உத்தேஶ்யம்' என்றிருக்குமவர்கள்காலிலே விழுங்கோளென்கை. 'தேவதைகள்தோறும் தனித்தனியே கார்யமுண்டு' என்றிராதே, 'ஸகலசப்தங்களும்ஏகார்த்தவாசகம்' என்றிருக்குமவர்களை ஆஶ்ரயிக்கப் பாருங்கோள். (எ)

## எட்டாம்பாட்டு.

> வேதம்வல்லார்களைக்கொண்டு விண்ணோர்பெருமான்திருப்
> பாதம்பணிந்து இவள்நோயிது தீர்த்துக்கொள்ளாதுபோய்
> ஏதம்பறைந்துஅல்லசெய்து கள்ளூடுகலாய்த்தூய்க்
> கீதமுழவிட்டு நீரணங்காடுதல்கீழ்மையே.

ஆ.—(வேதம்.) ஸ்ரீவைஷ்ணவர்களை ஆஶ்ரயித்தல், ஸ்ரீவைஷ்ணவர்களைப் புருஷகாரமாகக்கொண்டு எம்பெருமானை ஆஶ்ரயித்தல்செய்து இவள் நோயிது தீர்த்துக்கொள்ளாது போய் அவாச்யங்களைச்சொல்லி அக்ருத்யங்களைச்செய்து கள்ளூடுகலாய்த் தூய்க் கீதமுழவிட்டு நீர் அணங்காடும்இது சாலத்தண்ணியது என்கிறாள்.

ஒ.—எட்டாம்பாட்டில், வைஷ்ணவர்களைப் புருஷகாரமாகக்கொண்டு ஸர்வேஶ்வரன்திருவடிகளிலே ஶரணம்புக்கு இவளுடைய நோயைத் தீர்த்துக்கொள்ளுகையைத் தவிர்ந்து க்ஷுத்ரதேவதைகளை ஆஶ்ரயிக்கை உங்களுக்குக் கீழ்மையைப் பண்ணுமென்கிறாள்.

[ஏதம் என்று தொடங்கி] - வக்தவ்யமல்லாதவற்றைச் சொல்லி அக்ருத்யங்களைப் பண்ணி தூர்த்ரவ்யங்களைக் கலந்து தூவிப் பொல்லாத பாட்டோடுங்கூடின வாத்யங்களை ப்ரவர்த்திப்பித்து நீங்கள் தைவாவேஶத்தாலே ஆடுகிற இது உங்களுக்கு அவத்யாவஹம்.

ப.—அநந்தரம், பாகவதபுருஷகார பூர்வகமாக ஸர்வேஶ்வரன் திருவடிகளை ஆஶ்ரயித்து இவள்நோயைப் பரிஹரியாதே, இதரதேவதா ப்ரீணநமான அணங்காடல் உங்களுக்குக் கீழ்மை என்கிறாள்.

வேதம்வல்லார்களை - ஸகலவேததாத்பர்ய நிர்வாஹகரான பாகவதரை, கொண்டு - (புருஷகாரமாகக்) கொண்டு, விண்ணோர்பெருமான் - நித்யஸூரிஸேவ்யனான ஸர்வேஶ்வரனுடைய, திரு பாதம் - நிரதிஶயபோக்யமான திருவடிகளை, பணிந்து - ஆஶ்ரயித்து, இவள் -

திருக்கிறது. "நதாஸ்ஸ்மஸர்வவசஸாம் ப்ரதிஷ்டாயத்ரஶாஶ்வதீ । தமாஹுர்ஜ்ஞேயமஜ்ஞேயம் ஜ்ஞாநவைராக்யஸம்பந்நம்" இதி ப்ரதமேம்ஶே சதுர்த்தஶே. வேததாத்பர்யமென்றது - தாத்பர்யபூதனான ஸர்வேஶ்வரனென்றபடி. உயிர்ப்பு - ப்ராணநம். 'தமர், வேதம்வல்லார்' என்கிற இரண்டுபதங்களையும்பற்ற. 'அவனை' இத்யாதி. வாக்யத்ரயமும் ஸகலஶப்தங்களும் ஏகார்த்தவாசகங்களாகையாலே அவனையொழிந்ததொரு தேவதைக்குத் தனித்து உயிர்ப்பில்லை யென்றிருக்குமவர்களென்றபடி. க்ரமேணாந்வய:. (எ)

(அத்யந்தவிலக்ஷணையான) இவளுடைய, இது நோய் - லோகவ்யாவ்ருத்தமான இந்நோயை, தீர்த்துக்கொள்ளாது - ஶமிப்பித்துக்கொள்ளாதே, போய் - (இதரதேவதாபரராய்க்கொண்டு கைகழியப்) போய், ஏதம் - (ஸ்வரூபஹாநிகரமான) இதரதேவதாபரஶப்தங்களை, பறைந்து - சொல்லி, அல்ல செய்து - அகர்த்தவ்யங்களான ததநுவ்ருத்திகளைப் பண்ணி, ஊடு - நடுவேநடுவே, (ஆராதநோபகரணங்களோடே), கள் - ஸுரையை, கலாய் - கலசி, தூய் - தூவி, கீதம் - (ததீயமான) கீதங்களுக்கீடாக, முழவு இட்டு - வாத்யகோஷத்தைப்பண்ணி, நீர் - (இவளோடு அநுபந்தமுடைய) நீங்கள், அணங்கு ஆடுதல் - தைவாவிஷ்டைகளாய் ஆடுகிறது, கீழ்மையே - (இக்குடிக்கு) இழுக்கேயாம்.

இ—எட்டாம்பாட்டில், ஸ்ரீ வைஷ்ணவர்களைப் புருஷகாரமாகக்கொண்டு ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ஶரணம்புக்கு இவளுடைய நோயைத் தீர்த்துக்கொள்ளுகையைத் தவிர்ந்து க்ஷுத்ரதேவதாஸமாஶ்ரயணம்பண்ணுமது உங்களுக்குக் கீழ்மையைப்பண்ணும்என்கிறாள்.

[வேதம்வல்லார்களைக்கொண்டு]-ஸர்வேஶ்வரனே ப்ராப்யமும் ப்ராபகமும் என்கிற வேததாத்பர்யம் கைப்பட்டவர்களைப் புருஷகாரமாகக்கொண்டு. "வேறாகவேத்தியிருப்பாரை வெல்லுமே" என்கிறபடியே அவர்கள்தாங்களே ஆஶ்ரயணீயர், ஸஜாதீயஹாவத்தாலே அத்தனை ருசிவிஶ்வாஸங்கள் வாராதாகில் அவர்களைப் புருஷகாரமாக வாகிலும் கொள்ளப் பாருங்கோள் "வில்லிபுதுவைவிட்டுசித்தர்தங்கள்தேவரை", "விதாஉஹம் நாயஊ நிம்வியொக்ஷ்ய வூஷ" [விண்ணோர் இத்யாதி] - அயர்வறும் அமரர்களதிபதி திருவடிகளிலே பணிந்து. [இவள் நோய் இது] - நோய்கொள்ளுகிறாள் இவள், நோய்தான் இது. [தீர்த்துக்கொள்ளாது] - அநாயாஸேந போக்கிக்கொள்ளாதே. [போய்] - அப்ராப்தவிஷயங்களிலே கைகழியப் போய். [ஏதம்பறைந்து] - வக்தவ்யமல்லாதவற்றைச் சொல்லி. [அல்லசெய்து] - கர்த்தவ்யமல்லாதவற்றைச் செய்து; நிஷித்தங்களைச் செய்து. [கள்ளூடுகலாய்த்தூய்] - நிஷித்ததரவ்யங்களை வஸ்துக்களுக்குள்ளே கலந்து தூவி. [கீதமுழவிட்டு] - நிஷித்தமான கீதத்தோடு கூடின வாத்யங்களை ப்ரவர்த்திப்பித்து. கீதமுழவு - பாட்டோடுகூடின வாத்யம். [நீர் அணங்காடுதல்] - நீங்கள் தேவாவிஷ்டராய் ஆடுகிற இது. [கீழ்மையே] - உங்களுக்கு அவத்யாவஹம். இது உங்கள்ளவிலே போகிறதல்ல. "[illegible]", "[illegible]".

ஈடு.—எட்டாம்பாட்டு. ஸ்ரீவைஷ்ணவர்களைப் புருஷகாரமாகக்கொண்டு ஸர்வேஶ்வரன்திருவடிகளிலே ஶரணம்புக்கு இவளுடைய நோயைத் தீர்த்துக்கொள்ளுகை தவிர்ந்து, க்ஷுத்ரதேவதா ஸமாஶ்ரயணம் உங்களுக்குக் கீழ்மையைவிளைக்கும் என்கிறாள்.

---

எட்டாம்பாட்டு—'வேதம்வல்லார்களை' இத்யாதி. 'வேதம்வல்லார்களை' என்று தொடங்கி, 'தீர்த்துக்கொள்ளாது, நீரணங்காடுதல் கீழ்மை' என்னுமளவும் கடாக்ஷித்து அவதாரிகை-'ஸ்ரீவைஷ்ணவர்களை' இத்யாதி. கீழ்மையை - நீசதையை.

[வேதம்வல்லார்களைக்கொண்டு] - 'ஸர்வேஶ்வரனே ப்ராப்யமும் ப்ராபகமும்' என்கிற வேததாத்பர்யம் கைப்பட்டவர்களைக்கொண்டு. *"வேறுகவேத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சார்த்தியிருப்பார்தவம்" என்கிறபடியே, அவர்கள்காலிலே விழப்பெறில் ஆஸந்நமாக நோவு பரிஹ்ருதமாம். அது கூடாதிறே; ஸஜாதீய ப்ரதிபத்திபண்ணி யிருக்கையாலே ருசிவிஶ்வாஸங்கள் அவர்கள்பக்கல் கனக்கப்பிறவாதிறே; ஆனபின்பு, அவர்களைப் புருஷகாரமாகக்கொண்டு அவனை ஆஶ்ரயிக்கப் பாருங்கோள். இங்குஇருக்கும் நாளைக்குப் புருஷகாரமாக முமுக்ஷுக்கள்உண்டு; அங்குத்தானே நித்யஸூரிகள்உண்டிறே. "ஸஏ நாநுப்ரஹ்மகமயதி" (ஸஏநாந்ப்ரஹ்மகமயதி) என்று - அவர்கள் கொடுபுக்கிருத்தவிறே அவ்வோலக்கத்தில் இருப்பது வேததாத்பர்யம் கைப்பட்டிருக்குமவர்களைக்கொண்டு. [விண்ணோர்பெருமான் திருப்பாதம் பணிந்து] - அபர்வமமரர்களதிபதி திருவடிகளிலே பணிந்து. [இவள்நோயிது தீர்த்துக்கொள்ளாது] - நோய்கொள்ளுகிறள் இவள், நோய்தான் இது; இதுக்கீடான பரிஹாரத்தைப் பண்ணுதே. [போய்] - நம்முடைய நிலைக்கு அதிதூரமாய் அப்ராப்தமானதிலே கைகழியப்போய். [ஏதம்பறைந்து] - உங்களுக்குக் குற்றமானவற்றை நீங்கள் சொல்லி. [அல்லசெய்து] - செய்பக்கடவதல்லாதத்தைச் செய்து. [கள்ளுடகலாய்த்தூய்] - நிஷித்தத்ரவ்யங்களைக்கொண்டு க்ருஹமெங்கும்கலந்துதூஷித்து. நிஷித்த த்ரவ்யத்தை ஸ்பர்ஶித்தவோபாதியாயிற்று தேவதாந்தரஸ்பர்ஶமும். 'விண்ணோர்பெருமான் திருப்பாதம்பணிந்து இவள் நோயிது தீர்த்துக்கொள்ளாது' என்கையாலே - அவனைக்கொண்டு

---

கீழே, 'வேதம்வல்லாரை - வணங்கீர்கள்' என்று வைத்து, இங்கே - அவர்களைப் புருஷகாரமாகக்கொண்டு என்கிறதென்? என்ன, 'வேறுக' இத்யாதி. இந்தநிஷ்டையுண்டாகில் சீக்ரமே பலிக்கும். இது கூடாதே, புருஷகாரமாகவாகிலும் பற்றுங்கோளென்று பாவம். 'வேறுக' இத்யாதி - [illegible] வ்யாவ்ருத்தமாக எத்திபிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை ஜயிக்குமே. அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை [illegible] அபாஶ்ரயமாகப்பற்றி அங்கே ந்யஸ்தபரராயிருக்கும் சரமாதிகாரிகளுடைய இவ்வ்யவஸாயம் [illegible] பகவத்விஷயீகாரமாகிற தபஸ்ஸென்று பாசுரார்த்தம். வேறுக - அநந்யப்ரயோஜநமாக. ஆஸந்நமாக - [illegible]மாக. அது - வைஷ்ணவ ஸமாஶ்ரயணம். விவரணம் - 'ஸஜாதீய' இத்யாதி. [illegible] ண்டு ஸர்வேஶ்வரன் திருப்பாதமென்னுதே, 'விண்ணோர்பெருமான்' என்று - [illegible] னென்கிறுரிறே, அவர்களும் புருஷகாரபூதரென்னுமிடம் தோற்ற; [illegible] முமுக்ஷுத்வாவஸ்தையிலும் முக்தாவஸ்தையிலு மென்கிறுர். இங்கிருக்கும் [illegible] அப்படி இவர்கள்தான் புருஷீகரிப்பர்களோ? என்ன, 'ஸஏநாந்' இத்யாதி. [illegible]

இத்யாதி. ஸ: - அமாநவ:. அமாநவனைச் சொன்னது - [illegible] "முடியுடைவானவர் முறைமுறை யெதிர்கொள்ள" என்னக்கடவதிறே. [illegible] போய்வைக்க. சப்தார்த்தம் - 'வேத' இத்யாதி. உங்களுக்குக் குற்ற[illegible] என்றது - ஸ்வரூபஹாநிகரமான இதரதேவதாபரசப்தங்களைச் சொல்லி [illegible]; தெளித்து. ஆழ்வார்ஸமீபத்திலே நிஷித்தத்ரவ்யபாகமாக ப்ரஸக்தி யேது? என்ன, [illegible] இத்யாதி. 'அல்லசெய்து' என்றதுக்கு முந்தின அர்த்தம் - தேவதாந்தர[illegible] மர்த்தம் - கர்மகலாபபரம். தேவதாந்தரஸ்பர்ஶம் த்யாஜ்யமென்ற ப்ரகரணத்தில் - [illegible] மும் த்யாஜ்யமென்று விவக்ஷித்து, சப்தநிர்வாஹம் காட்டுகிறுர் - 'விண்ணோர்' இத்யாதி [illegible] தேவதாந்தரங்களுடைய 'த்யாஜ்யதையும், ததாராதநத்திலுடைய த்யாஜ்யதையும் [illegible]; இத்தை விட்டு, ஶ்ரேஷ்டமாயிருப்பதொன்றைப் பற்றுங்கோள்' என்னுமிடத்தில், காம்யகர்மமாகில் தேவதாந்தரமித்வமாதல் உத்தேஶ்யமாகச் சொல்லுகையன்றிக்கே, 'விண்ணோர்பெருமான் திருப்பாதம் பணிந்து' என்று-

---

* நான்முகன் திருவந்தாதி - கஅ

பேறப்பாராதே, அவனுக்குப்புறம்புமாய் அஹங்காரமமகாரகர்ப்பமான க்ரியாகலாபங்களாலே பேறப்பார்க்கையும் அத்தோபாதியாயிற்று. அறமேலாயிருக்கும் மருந்திறே இவள்சோல்லிற்று; அத்தையிறே இவர்கள் உதாஸித்துநிற்கிறது. [கீதம்இத்யாதி] - நிஷித்தமான கீதத்தோடே கூடின வாத்யங்களை ப்ரவர்த்திப்பித்து. [நீர்இத்யாதி] - பகவத்குணாநுபவத்தாலே, "உண்டு களித்தேற்கும்பரேன்குறை" என்னக்கடவ நீங்கள் தைவாவிஷ்டராய்க்கோண்டு ஆடுவது. [சீழ்மையே]-சாலத் தண்ணிது. உங்களளவில் போமதல்ல, உங்கள்ஸந்தாநத்துக்கும் கோத்தை. ஊடு - உள்ளே. கலாய் - கலர்ந்து. தூய் - தூவி. (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

---

கீழ்மையினால்அங்கு ஓர்கீழ்மகனிட்டமுழவின்கீழ்
நாழ்மைபலசோல்லி நீரணங்காடும்போய்காண்கிலேன்
ஏழ்மைப்பிறப்புக்கும்சேமம் இந்நோய்க்குமீதேமருந்து
ஊழ்மையில்கண்ணபிரான் கழல்வாழ்த்துமின்உன்னித்தே,

*ஆ.*—(கீழ்மையினால்.) கீழ்மையினால்அங்கோர் கீழ்மகன்இட்ட முழவின்கீழ் நாழ்மை பலசொல்லி நீர் அணங்காடும் இந்த வ்யர்த்தப்ரவ்ருத்திகளால் ஒருப்ரயோஜநமுங் காண்கிறிலேன். இனி மெய்யாகப் பார்க்கில், எற்றைக்கும் இவளுக்கு ரக்ஷை, இந்நோய்க்கும் இதுவே மருந்து, இத்தை நீங்கள் நிரூபித்துச் செய்யுங்கோள். அது ஏதென்னில், - கண்ணபிரான்கழல் வாழ்த்துமின் என்கிறாள்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், நீங்கள் அணங்காடுகையாகிற நிஷ்பலப்ரவ்ருத்தி நான் காணமாட்டேன்; க்ருஷ்ணன் திருவடிகளை நினைந்து வாழ்த்துங்கோள், இவள்பிழைக்கவேண்டியிருந்திகோளாகில் என்கிறாள்.

---

அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனான ஸர்வேஸ்வரனையே உபாயோபேயமாக ஸ்வீகரியுங்கோ ளென்கையாலே, நிஷ்க்ருஷ்டவேஷத்தையுடைய அதிகாரிகளுக்கு விஹிதோபாயவ்யதிரிக்தங்களான உபாயாந்தர தேவதாந்தர்யாமித்வங்களெல்லாம் கீழ்ச்சொன்ன க்ஷுத்ரதேவதைகளும் தத்ஸமாராதநமும் போலே அத்யந்தஹேயங்களாய் த்யாஜ்யங்களென்னுமிடம் ஸூசிதம். 'விண்ணோர்பெருமான்' என்றதுக்கு பாவம் - 'அறமேலாய்' இத்யாதி. 'கீதம்' என்றது - வாத்யத்துக்கும் உபலக்ஷணம். அவதாரணார்த்தம்-சாலத்தண்ணிதென்று. அதுக்குவிவரணம்-'உங்கள்இத்யாதி. 'நிஷித்தத்ரவ்யங்களை' இத்யாதி வாக்யத்திலே ஸங்க்ருஹீதங்களான பதங்களுக்கு அர்த்தத்தை அருளிச்செய்கிறார் - 'ஊடு' இத்யாதி. ஊடு - ஆராதநோபகரணங்களோடே, கள்கலாய் - கள்ளோக்கலந்து, தூய் - தூவி, தெளித்து என்று பதார்த்தம். க்ரமேண அந்வய:. (அ)

[கீழ்மை என்று தொடங்கி] - உங்களுடைய கீழ்மையாலே நிஹீநகுலஜனாயிருப்பா ஞெருவன் ப்ரவர்த்திப்பித்த வாத்யத்தின்கீழே பலமேனாணிப்புச்சொல்லி தேவதைகள் தாமுடைமை சொல்லி என்றவாறு. [ஏழ்மை என்று தொடங்கி] - இவளுக்குக் காலமுள்ள தனையும் ரக்ஷையாம். இந்நோய்க்கும் இதுவே பரிஹாரம். [ஊழ்மையில்] - யுக்தமானபடியாலே.

ப.—அநந்தரம், நீங்கள் ஸ்வதந்த்ரமாகப் பண்ணுகிற நிஷ்ப்ரயோஜந ப்ரவ்ருத்திகள் காணமாட்டுகிறிலேன்; இவள்நோய் ஶமிக்கைக்கு, ஸுலபனான க்ருஷ்ணன்திருவடிகளிலே மங்களாஶாஸநம் பண்ணுங்கோள் என்கிறாள்.

கீழ்மையினால் - (அநிரூபணமடியாக வந்த) நிகர்ஷத்தாலே, அங்குஓர் - 'இன்னவிடத்திலான், இன்னான்' என்று சொல்லவொண்ணாத, கீழ்மகன் - நீசன், இட்ட - ப்ரவர்த்திப்பித்த, முழவின்கீழ் - வாத்யாநுவ்ருத்தியைப்பண்ணி, நாழ்மைபல - தேவதாந்தரோத்கர்ஷங்களை மேனாணித்துப் பலபடியாக, சொல்லி - சொல்லி, நீர் - நீங்கள், அணங்கு ஆடும்-தைவாவிஷ்டைகளாய் ஆடுகிற, பொய் - நிரர்த்தகப்ரவ்ருத்தி, காண்கிலேன் - காணமாட்டுகிறிலேன்; ஏழ்மைப் பிறப்புக்கும் - ("ஸப்த ஸப்த ஸப்த" என்று) ஏழுவகையால் வரக்கடவ ஸகலஜந்மங்களுக்கும், சேமம் - க்ஷேமரூபமாயிருந்துள்ள, ஈதே - இதுவே, இந்நோய்க்கும் மருந்து - இந்நோய்க்கும் மருந்து: ஊழ்மையில் - ஸ்வரூபப்ராப்தமாய்ப் [illegible] போருகிற ப்ரகாரத்தைத் தப்பாதபடி, கண்ணபிரான் - ஸௌலப்யத்தாலே [illegible] க்ருஷ்ணனுடைய, கழல் - திருவடிகளை, உன்னித்து - அநுஸந்தித்து, வாழ்த்துமின் - மங்களாஶாஸநம்பண்ணுங்கோள்.

நாழ்மை - தகுதியில்லாத மேனாணிப்பு, ஊழ்மை - பழமை, உன்னித்து - நினைத்து.

இ.—ஒன்பதாம்பாட்டில், நீங்கள்பண்ணுகிற நிஷ்பலப்ரவ்ருத்திகள் [illegible] காணமாட்டேன். க்ருஷ்ணன்திருவடிகளை நினைந்து வாழ்த்துங்கோள்; இவள் [illegible] யிருந்திகோளாகில் என்கிறாள்.

[கீழ்மையினால்] - உங்கள்தண்மையாலே. இவர்களுக்கு [illegible] தமஸ்ஸுக்களாலே அபிபூதராகை. [அங்கு ஓர் கீழ்மகன் இட்ட முழவின்கீழ்] - [illegible] ப்ரவர்த்திப்பித்த வாத்யத்தின்கீழே இருந்து. [நாழ்மைபலசொல்லி] - [illegible]. அவற்றுக்கில்லாத ஏற்றங்களைப் பலவும் சொல்லி. "[illegible]" என்று அவனைச்சொல்லும் ஏற்றங்களையிறே சொல்லுவது. [illegible] சொல்லுகை குற்றமிறே. நாழ்மை - தறுவட்டாணித்தனம் என்றபடி. [ஏழ்மைப்பிறப்புக்கும் பொய்காண்கிலேன்] - நீங்கள் தேவாவிஷ்டராய் ஆடுகிற நிஷ்பலப்ரவ்ருத்திகளை நான் காண மாட்டுகிறிலேன். பகவத்ஸஹகாரமொழிய ஒருதேவதைக்கு உயிருண்டாகில் [illegible] பாரம் இவள்கண்ணில் படுவது. இது நிஷ்பல ப்ரவ்ருத்தியாகில் நீ சொல்லுகிறதுக்குத் தான் பலமென்? என்ன,—[ஏழ்மைப்பிறப்புக்கும் சேமம்] - ஸப்தஜந்மங்களுக்கும் ரக்ஷை.

மேலுண்டான ரக்ஷோபாயங்கள் தேடுகிறது? இந்நோவுபோகையன்றோ உத்தேஶ்யம் என்ன,—[இந்நோய்க்கும் ஈதே மருந்து] - இவள் பிழைக்கைக்கும் இதுவே பரிஹாரம்; இது ஸகலபேஷஜமன்றோ? "ஸகலைஷதமைவு[illegible]ஹரிவிஷ்ணு:" இறே. [ஊழ்மையில்] - இவளைப் பிழைப்பிக்கையே அன்று, ப்ராப்தம் செய்த தாகவுமாம். ஊழ்மை - முறைமை. [கண்ணபிரான் இத்யாதி] - கண்ணபிரான்கழல்உன்னித்து வாழ்த்துங்கோள்; உபகாரஶீலனான க்ருஷ்ணன் திருவடிகளை அநுஸந்தித்து வாழ்த்தப் பாருங்கோள். "[illegible]" என்று ஸம்ருதிமாத்ரத்தாலே போம்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. நீங்கள்பண்ணுகிற நிஷ்பலப்ரவ்ருத்தி நான் காணமாட்டேன்; க்ருஷ்ணன்திருவடிகளை நினைத்து வாழ்த்துங்கோள், இவள்பிழைக்கவேண்டியிருந்தீர்கோளாகில் என்கிறாள்.

[கீழ்மையினால்] - உங்கள்தண்மையினாலே, இவர்களுக்குத் தண்மையாவது - ரஜஸ்தமஸ்ஸுக்களாலே அபிபூதராகை. ஆகையாலேயிறே, இக்கார்யம் செய்கிறது. [அங்குஓர் இத்யாதி] - 'இன்னவிடத்திலான், இன்னான்' என்று சொல்லவோண்ணாத ஒருசண்டாலன் ப்ரவர்த்திப்பிக்கிற வாத்யத்தின்கீழே புக்கிருந்து. [நாழ்மை பலசொல்லி] - நாழ்மை - குற்றம், அவற்றுக்கில்லாத ஏற்றங்களைப் பலவும் சொல்லி. "உண்டு முமிழ்ந்தும் கடந்து மிடந்தும்" என்று ஸர்வேஶ்வரனைச் சொல்லுமாபோலே, 'இவன் இன்னதுசெய்தான், இன்னது செய்தான்' என்று சொல்லாநிற்பர்களிறே. நாழென்று - குற்றத்துக்கும், இல்லாததுசொல்லுகைக்கும், 'நான்' என்று அபிமாநித்திருக்கைக்கும் பேர். [நீர்இத்யாதி] - நீங்கள் தைவாவிஷ்டைகளாயாடுகிற இப்போய் என்கண்ணுக்கு ஒரு வஸ்துவாய்த் தோற்றுகிறதில்லை. "நேஹ நாநாஸ்தி கிஞ்சந" (நேஹநாநாஸ்திகிஞ்சந) என்று, 'அவனையொழிந்ததோரு தேவதைக்கு வஸ்துத்வ முண்டு' என்றிருக்கிலிறே அவர்கள்செய்கிறது 'மெய்' என்று தோற்றுவது. 'நாங்கள்செய்கிறவை பொய்யாகில், நீசொல்லுகிறது மெய்யாய் எவ்வளவு பலிக்கும்?' என்ன, [ஏழ்மைப்பிறப்புக்கும் சேமம்] - ஏழ்

ஒன்பதாம்பாட்டு - 'கீழ்மையினால்' இத்யாதி. 'பொய்' என்கிறத்தைப் பற்ற, 'நிஷ்பலப்ரவ்ருத்தி' என்றது. 'கண்ணபிரான்' இத்யாதியைக் கடாக்ஷித்து, 'க்ருஷ்ணன் திருவடிகளை' இத்யாதி.

ஆகையாலே - ரஜஸ்தமோபிபூதராகையாலே. 'ஓர்' என்றதுக்கு 'இன்னவிடத்திலான் இன்னான் என்று சொல்லவொண்ணாத' என்று ஸாரம். 'நாழ்மை' என்றதுக்கு - பொய்யென்று அர்த்தாந்தரம் - 'அவற்றுக்கு' இத்யாதி. முந்தின அர்த்தம், - 'நாழ்மை' என்று குற்றமாய் ஸ்வரூபவிருத்தங்களைச் சொல்லி யென்றபடி. அது ஏது? என்ன, 'உண்டுமுமிழ்ந்தும்' இத்யாதி. இப்பதம் இரண்டையுஞ் சொல்லுமோ? என்ன, 'நாழென்று' இத்யாதி. 'பொய்' என்றத்துக்கு-'நிஷ்பலப்ரவ்ருத்தி' என்று அவதாரிகையிலே அருளிச்செய்த அர்த்தமொழிய இங்கே அர்த்தாந்தரம் கண்டுகொள்வது. தோற்றாமைக்கு ஹேது ஏது? என்ன, 'நேஹநாநாஸ்தி' இத்யாதி. "நேஹ நாநாஸ்தி கிஞ்சந" இதி-கடவல்யாம். வஸ்துத்வம் - ஸ்வதந்த்ரவஸ்துத்வம். 'ஏழ்மைப் பிறப்புக்கும்' என்றது - ஸர்வஜந்மங்களையுஞ் சொல்லுகிறதென்று விவக்ஷித்து, அதுகாட்டும்படி எங்ஙனே?

மை - ஒருநன்மையுண்டானல் அத்தை ஏழேழாகச் சொல்லக்கடவதிறே. எல்லாஜந்மங்களிலும் ரக்ஷையாம். ஏழ்மை - தண்மை. தண்ணிதான ஜந்ம மென்னவுமாம். நாங்கள் ஜந்மங்களில் ரக்ஷையாமதுவோ தேடுகிறது? இவள்நோய்க்குப் பரிஹாரமன்றே? அத்தைச் சொல்லாதே மற்றொன்றைச் சொல்லுகிறதேன்? என்ன;—ஆகில், * சம்பறுத்தார்க்கைக்குப் போகவேணுமோ? [இந்நோய்க்கும் ஈதேமருந்து] - அடிபற்றின மருந்தன்றே? ஊழ்மையில் - முறையிலே. ஊழென்பது - முறை. நீங்கள்செய்கிறவைபோலன்றிக்கே முறையிலே செய்ததாகவுமாம். [கண்ண பிரான் இத்யாதி] - உபகாரகனை க்ருஷ்ணன்திருவடிகளை வாழ்த்தப் பாருங்கோள். அடிக் கழஞ்சுபெறும் மருந்திறே. அதுசெய்யுமிடத்தில் - [உன்னித்து] - "ஸ்ம்ருதோயச்சதிஶோபநம்". (ஸ்ம்ருதோயச்சதிஶோபநம்). எல்லாருமொக்க அநுஸந்தித்து வாழ்த்தப் பாருங்கோள். இப்படி செய்யவே, எல்லாஜந்மங்களிலும் ரக்ஷகமாய் இவள் நோய்க்கும் பரிஹாரமாம்; ப்ராப்தம் செய்தது மாகலாம். (௯)

## பத்தாம்பாட்டு.

> உன்னித்துமற்றொருதெய்வம்தொழாள் அவனையல்லால்
> நும்மிச்சைசொல்லி நும்தோள்குலைக்கப்படும்அன்னைமீர்!
> மன்னப்படுமறைவாணனை வண்துவராபதி
> மன்னனை ஏத்துமின் ஏத்துதலும்தொழுதாடுமே.

ஆ.—(உன்னித்து.) இவளுக்கு அவனையல்லது மற்றொரு தைவத்தைத் [illegible] அஸம்பாவிதமானாற்போலே, மற்றொரு தைவத்தை ஸ்வப்நத்திலுங்கூட [illegible]

---

என்ன, 'ஒருநன்மை' இத்யாதி. ஆகையாலே. எல்லாஜந்மங்களிலும் ரக்ஷையாம் [illegible] மருந்தென்றது - திருவடிகளைப்பற்றின மருந்தென்று [illegible] மூல மென்றுமாம். அடிபற்றின மருந்தென்றது - 'கழல்வாழ்த்துமின்' [illegible] இரண்டோடே ஸமுச்சயம் - 'நீங்கள்செய்கிறவை' இத்யாதி. [illegible] ஒரு ரஸோக்தி - 'அடிக்கழஞ்சு' இத்யாதி. அடிக்கழஞ்சு என்றது - [illegible] ஸ்வரூபாநுரூபமாகையாலே ஶ்லாக்ய மென்றபடி. ஸ்மரணம்போருமோ? என்ன. [illegible] யாதி. "க்ஷுத்ப்ராவஸ்கலநகொலஸ்ம்ருதோய [illegible] திஶோபநம் : வாவக்ஷய [illegible] ஹநிஶம்" இதி ப்ரதமேம்மே ஸப்தமே அஸாப்த்ராப்தி [illegible] பஹுவசநார்த்தம் - 'எல்லாரும்' இத்யாதி. இப்படிசெய்யவே - உன்னித்து வாழ்த்தவே. [illegible] முழவு - வாத்யம். அங்கோர் கீழ்மகனிட்ட - 'இன்னவிடத்திலான், இன்னான்' என் [illegible] நீசன் ப்ரவர்த்திப்பித்த வென்றபடி. கீழ்மையின விஸ்தாரப்ப, காணகிலேன், [illegible] - உன்னித்து, வாழ்த்துமின், ஏழ்மைப்பிறப்புக்கும் சேமம், இந்நோய்க்கு மீதே மருந்து, ஊழ்மையில் இத்யாதி [illegible]

---

* சம்பறுத்தாரர்க்கைக்கு என்றும் பாடம்.

விதம். இப்படி தேவதாந்தரஸம்பந்த கந்தமின்றியேயிருந்த இவளுடைய நோய் தீர்க்கைக்கு, வேதபாஹ்யமான க்ஷுத்ரதைவத்தை வ்யர்த்தமாய் விரோதியுமாயிருந்த வேதபஹிர்ப்பூத மார்க்கத்தாலே தொழுது து:கப்படாதே, ஸாங்கஸகலவேதவேத்யனாய் ஆஶ்ரிதவாத்ஸல்யாத்ய நவதிககல்யாணகுணகண மஹோததியா யிருந்த வண்துவராபதிமன்னனை ஏத்துங்கோள்; ஏத்தவே உஜ்ஜீவிக்கும் என்கிறாள்.

ஒ.—பத்தாம்பாட்டில், இவளுக்கு க்ருஷ்ணன்திருவடிகளி லுண்டான ஐகாந்த்யத்தை அநுஸந்தித்து அதுக்கீடாக அவனை வாழ்த்துங்கோள்; வாழ்த்தவே, இவள் உஜ்ஜீவிக்கும் என்கிறாள்.

[உன்னித்து என்று தொடங்கி] - அவனையொழிய மற்றொருதெய்வம் உண்டென்று அறிதல் தொழுதல் செய்யும் ஸ்வபாவையல்ல. உங்களுக்கு ப்ரதிபந்நங்களைச் சொல்லி அலமாக்கிற அன்னைமீர்! [மன்ன என்று தொடங்கி] - ஸூத்ருடப்ரமாணமான வேதப்ரதி பாத்யனாய்வைத்து க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம்பண்ணியருளி, வண்துவராபதிக்கு ராஜாவானவனை. நீரேறுண்டு மோஹித்தார்க்கு நீரே பரிஹாரமாமாப்போலே நோய்க்கு நிதாநமான க்ருஷ்ணகுணகீர்த்தநமே பரிஹாரமென்று கருத்து.

ப.—அநந்தரம், நித்யவேதப்ரதிபாத்யனான க்ருஷ்ணன்பக்கலிலே பாரமைகாந்த்யத்தை யுடைய இவள், நீங்கள் அவனை ஸ்துதித்தபோதே ஆஶ்வஸ்தையாம் என்கிறாள்.

அவனையல்லால் - அவனையொழிய, (இவள்), மற்று ஒரு தெய்வம் - வேறு ஒரு தேவதையை, உன்னித்து - நினைத்து, தொழாள் - தொழும்படியல்லள்: (இப்படியிருக்க), அன்னைமீர் - பெற்றவர்களான நீங்கள் (இவளளவிற் பரிவாலே கலங்கி), நும் இச்சை - உங்கள் அபிமதங்களை, சொல்லி - சொல்லி, நும்தோள் - (பகவத்பரிசர்யோபகரணங்களான) உங்கள் தோள்கள், குலைக்க - (தேவதாந்தரவிஷயமாக) வ்யாபரிக்க, படும் - படாநின்றன; (அத்தைத் தவிர்ந்து), மன்ன - நித்யதயா, படும் - (நெஞ்சிலே) படுவதான, மறைவாணனை - வேதத்துக்கு ப்ரதாநதயா ப்ரதிபாத்யனாய், (ஆஶ்ரிதர்க்கு முகங்கொடுக்கைக்காக), வண்துவராபதி மன்னனை - ஸ்ரீமத்த்வாரகைக்கு அதிபதியான க்ருஷ்ணனை, ஏத்துமின் - ஸ்தோத்ரம்பண்ணுங்கோள்; ஏத்துதலும் - அந்தஸ்துதிஸமகாலத்திலே ப்ரபுத்தையாய், தொழுது - (அவனைத்) தொழுது, ஆடும் - ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணாநிற்கும்.

இ.—பத்தாம்பாட்டில், இவளுக்கு க்ருஷ்ணன்திருவடிகளிலுண்டான ஐகாந்த்யத்தை அநுஸந்தித்து அவனை ஏத்துங்கோள்; இவள் உஜ்ஜீவிக்கும் என்கிறாள்.

[உன்னித்து இத்யாதி] - உன்னித்து - மதித்து; நெஞ்சாலே ஒன்றாக நினைத்து க்ருஷ்ணனையொழிய வேறொருதேவதையைத் தொழாள். வேறொன்றை தேவதையென்று மதித்தல் தொழுதல் செய்யுமவளல்லள். தேவதாந்தரஸ்பர்ஶம்பொறாத இவளுக்கே இந்தப் பரிஹாரம் பண்ணுவது. [நும் இச்சை சொல்லி] - உங்களுக்கு ப்ரதிபந்நங்களைச் சொல்லி,

இவளுக்குத் தகாது என்று அறியாதே தோற்றிற்றுச் சொல்லி. [நும்தோள் இத்யாதி] - நீங்களே இவ்விஷயத்திலே விக்ருதைகளாவுதிகோள். உங்கள்தோளே இதுக்கு உபகரணமாவது. ப்ராப்தவிஷயத்திலும் அவிக்ருதராய்ப்போரும் குடி படும் பாடே இது; [மன்னப்படு மறை] - அப்யஸிக்கப்படும் மறை; அத்யயநப்ராப்தமான வேதம்; நித்யமான வேத மென்றுமாம். [மறைவாணனை] - நித்யமான வேதத்திலே ஸர்வாதிகனாக ப்ரதிபாதிக்கப்பட்டவனை. [வண்துவராபதிமன்னனை] - இப்படி ஓலைப்புறத்தே கேட்டுப்போகாமே கண்டு அநுபவிக்கலாம்படி ஸ்ரீமத்த்வாரகைக்கு ராஜாவாகப் பிறந்தவனை. [ஏத்துமின்] - வாய்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி ஏத்துங்கோள். அவனை ஆஸ்ரயிக்கக்கடவ நீங்களே க்ஷுத்ரதேவதையின் காலிலே விழுவுதிகோள். [ஏத்துதலும் தொழுது ஆடுமே] - உங்கள்ஸ்வரூபலாபமேயன்று; "சுயுவொஷாயுமதொஹவதி" என்கிறபடியே எத்தின ஸமநந்தரத்திலே ப்ரபுத்தையாய் வ்யாபாரக்ஷமையுமாம். இவள்உணர்ந்தால் செய்வது தொழுதல் விக்ருதையாதல் போலே காணும். நீரேறுண்டு மோஹித்தார்க்கு நீரே பரிஹாரமாமாப்போலே நோவுக்கு அடியான க்ருஷ்ணனுடைய குணகீர்த்தநமே பரிஹாரமென்று கருத்து.

ஈடு.—பத்தாம்பாட்டு. இவளுக்கு க்ருஷ்ணன்திருவடிகளில்உண்டான ஐகாந்த்யத்தை அநுஸந்தித்து அவனையேத்துங்கோள்; இவள் உஜ்ஜீவிக்கும் என்கிறாள்.

[உன்னித்து மற்றொருதெய்வம் தொழாள்அவனையல்லால்] - இன்னார்க்கு இன்னபரிஹாரமென்றில்லையோ? அதுஅறிந்து பரிஹரிக்கவேண்டாவோ? முழங்கால் தகர [illegible] ஈரச்சீரை கட்டுமாபோலே யன்றோ நீங்கள் பண்ணுகிற பரிஹாரம்? 'தேவதாந்தர [illegible] இவளுக்குப் பொருது' என்று அறியவேண்டாவோ? தன்னெஞ்சாலே மதித்து வேறொரு [illegible] வத்தைத் தொழுதறியாள் இவள். "[illegible]" ([illegible]) என்கிறபடியே, பிறைதொழும் பருவத்திலும் பிறைதொழுதறியாள். "[illegible]

---

பத்தாம்பாட்டு - 'உன்னித்து' இத்யாதி. [illegible] லால், வண்துவராபதிமன்னனை யேத்துமின் ஏத்துதலும் [illegible] கை - 'இவளுக்கு' இத்யாதி. ஐகாந்த்யமாவது - [illegible] திருக்கை.

'உன்னித்து'-தன்னெஞ்சாலே மதித்து: [illegible] லால் - உன்னித்து மற்றொருதெய்வந் தொழாள்' என்கிறதுடைய தாத்பர்யம் [illegible] இன்னார்க்கு இன்ன பரிஹாரமென்றில்லையோ? என்றது - [illegible] மிருப்பதென்றபடி. ப்ரக்ருத்யநுகுணமான பரிஹாரம் பண்ணுகை [illegible] மென்னுமதுக்கு ஒருத்ருஷ்டாந்தம்-'முழங்கால்'- இத்யாதி. [illegible] 'தேவதாந்தர' இத்யாதி. சப்தார்த்தம்-'தன்னெஞ்சாலே' இத்யாதி. தொழுதறியாள் பால்யத்தில் [illegible] தறியாள். "வெஸகூஸஹிவ திஷெயஃ". பால்யத்தில் தொழு ப்ரஸக்தியுண்டோ' என்ன, 'பால்யாத்' இத்யாதி. பூர்வமேவ லிகிதம். பால்யாத்ப்ரப்ருதி பகவத்விஷயமல்லது அறியாமைக்கு ப்ரமாணம்-'முலையோ'

முற்றும்போந்தில - பெருமான்மலேயோ திருவேங்கடமேன்று கற்கின்றவாசகம் - இவள்பரமே " என்று நீங்கள்ஆஶ்சர்யப்படும்படியன்றே அப்பருவத்திலும்; இனி இப்போது பர்வதத்தைவிட்டுப் பதர்க்கூட்டைப் பற்றுமோ? "அநந்யதைவத்வம்" - (அநந்யதைவத்வம்) - 'வேறேயோரு ஆஶ்ரய தேவதை உண்டு, அது ரக்ஷிக்கிறது' என்று நினைக்க விரகில்லேகிடீர் எனக்கு. "ஸஹபத்ந்யா" (ஸஹபத்ந்யா) என்று - பெரியபெருமாள் திருவடிகளில் இவர்புகும்போதும் இவர்க்கு எடுத்துக் கைநீட்டப்புகுமத்தனை போக்கி, பெரியபெருமாள்தாம் உத்தேஶ்யமாகப் புக்கறியேன். "இயம் க்ஷமாச" (இயம்க்ஷமாச)-ராவணனுடைய ஜல்பங்களையும் ராக்ஷஸிகளுடைய தர்ஜநபர்த்ஸநங்களையும் பொறுத்திருந்ததும் 'அவரது ஒரு இன்சொல் கேட்கலாம்' என்றுகிடீர். "பூமௌசஶய்யா" (பூமௌசஶய்யா) - இத்தரைக்கிடை கிடந்ததும் "தவாங்கேஸமுபாவிஶம்" (தவாங்கேஸமுபாவிஶம்) என்கிறபடியே 'அவர்மடியி லிருப்பு ஒருகால் ஸித்திக்குமோ?' என்னுமத்தாலேகிடீர். "நியமஶ்சதர்மே" (நியமஶ்சதர்மே) - 'ரக்ஷகத்வதர்மம் அவர்தலையிலே' என்னுமத்தாலேகிடீர் நான் இருந்தது; "நத்வாகுர்மிதஶக்ரீவ பஸ்மபஸ்மார்ஹதேஜஸா" (நத்வா குர்மிதஶக்ரீவ பஸ்மபஸ்மார்ஹதேஜஸா) என்றதும் அவரைப் பார்த்து. "பதிவ்ரதாத்வம்" (பதிவ்ரதாத்வம்) - "ஏதத்வ்ரதம்மம" (ஏதத்வ்ரதம்மம) என்றவருடைய வ்ரதமொழிய, 'எனக்கு' என்ன ஒருஸங்கல்பத்தையுண்டாக்கி இவற்றையழிக்க நினைத்திலேன்கிடீர். "விபலம்மமேதம்" (விபலம்மமேதம்)-தப்பாதவையும் தப்பிற்றின. ஆர்க்குப்போலேயென்னில்,—"மாநுஷாணாம் - க்ருதக்நேஷு - க்ருதமிவ" (மாநுஷாணும் - க்ருதக்நேஷு - க்ருதமிவ) - "ஆத்மாநம்மாநுஷம்மந்யே" (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) என்றவர்க்கும் உண்டிறே மனிச்சு; அவரையொழிந்தார் திறத்துச் செய்தவற்றேபாதியாய் விழுந்தது. தப்பாதது தப்பிற்று, அதுக்குஅடியேன்?என்னில், - "மமேதம்" (மமேதம்) - அவர்பக்கல் குறையில்லை; அதுக்கு இலக்கு நானுகையாலே. [நும்

இத்யாதி. யௌவநஸூசகமான முலையானவை மிகவும் முழுக்கத் தோற்றினவில்லை, ஸ்வாமியானவனுடைய மலையோ திருவேங்கடமென்றுஅப்யஸிக்கிற பாசுரம் இவளுக்குப் பரமோ? என்றபடி. திருவிருத்தம், அறுபதாம்பாட்டு. 'மலேயோ திருவேங்கடம்' என்றதைக் கடாக்ஷித்து ரஸோக்தி-'இனி இப்போது' இத்யாதி. "மற்றொருதெய்வந்தொழாள்"என்றதுக்கு ப்ரமாணம்-'அநந்யதைவத்வம்' இத்யாதி. "அநந்யதைவத்வமியம்க்ஷமாசபூமௌசஶய்யாநியமஶ்சதர்மே। பதிவ்ரதாத்வம்விபலம்மமேதம்க்ருதம்க்ருதக்நேஷ்விவமாநுஷாணாம்"இதி ஸுந்தரகாண்டே அஷ்டாவிம்ஶேஸீதா. விஶ்லேஷவேளையிலே'நான்தேவதாந்தர ப்ரவணையல்லேன்' என்று சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் - 'வேறே' இத்யாதி. பெரியபெருமாளை யாஶ்ரயிக்க வில்லையோ? என்ன, 'ஸஹபத்ந்யா' இத்யாதி. "ஸஹபத்ந்யாவிஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்" இத்யயோத்யாகாண்டே. எடுத்துக்கைநீட்டுகையாவது - பரிசர்யை பண்ணுகை. "இயம் க்ஷமாச" என்றதுக்கு ஹார்த்தபாவம் - 'ராவணனுடைய' இத்யாதி. "பூமௌசஶய்யா"என்றதுக்கு ஹார்த்தபாவம் - 'இத்தரைக்கிடை' இத்யாதி. "தஸ்யாவநஷண்டேஷு நாநாவாஷ்பஸுகந்திஷு। விஹ்ருத்யஸலிலக்லிந்நா தவாங்கேஸமுபாவிஶம்" இதி ஸுந்தரகாண்டே ஹநுமந்தம்ப்ரதி ஸீதா. இவற்றை - உக்தங்களை. 'இதம்' என்று - உக்தங்களைப் பராமர்ஶிக்கிறது. 'மமேதம்' என்கையாலே,

இச்சைசொல்லி] - உங்களுக்கு இஷ்டமானவற்றைச் சொல்லி. அர்த்ததத்த்வத்தைப்பார்த்தாலும் இவனைப் பார்த்தாலும் தேவதாந்தரஸ்பர்ஶம் பொருந்தாயிருந்ததிறே, இனியுள்ளது உங்களுக்கு ப்ரதிபந்நங்களைச் சொல்லுகையாயிற்றிறே. [நுந்தோள்குலைக்க] - இவற்றுக்கு விக்ருதராமவர்களே நீங்கள். துர்வ்ருத்தர்செய்வதை வ்ருத்தவான்கள் செய்வர்களோ? ''தோளவனையல்லால் தொழா'' என்றன்றோ நீங்கள் சொல்லுவது. ஆனால், செய்யஅடுப்பதேன்? என்ன, [மன்னஇத்யாதி] - வேதைகஸமதிகம்யனானவனைப் பற்றப் பாருங்கோள். ஆகமாதிகளில் சொன்னவற்றைக் கொண்டோ பரிஹரிக்கப் பார்ப்பது? மன்னுகையாவது - அப்யாஸமாய், அத்யயந விதிப்ராப்தமானத்தையாதல்; அன்றிக்கே, நித்யத்வமாய், புருஷபுத்தி ப்ரபவமல்லாமையாலே விப்ரலம்பாதிதோஷ ஸம்பாவனையின்றிக்கே, பூர்வபூர்வோச்சாரணக்ரமத்திலே உத்தரோத்தரோச்சார்யமாணத்வத்தைப் பற்றச் சொல்லிற்றுதல். நித்யமான வேதப்ரதிபாத்யனாகையாலே வந்த ஏற்றத்தை யுடையவனை. [வண்துவராபதிமன்னனை] - கேட்டார்வாய்க் கேட்டுப்போகாமே

---

'ஆர்க்குப்போலே' என்கிறது. பகவத்வ்யதிரிக்தரெல்லாரும் க்ருதக்நரன்றோ? 'மாநுஷேஷு' என்ன அமையாதோ? 'க்ருதஜ்ஞேஷு' என்று விஶேஷிக்கிறதென்? என்ன, 'ஆத்மாநம்' இத்யாதி. அதாவது - ''மாநுஷாணாம்'' என்ற ஶப்தம் - ஸாமாந்யமாகையாலே, ''ஆத்மாநம் மாநுஷம் மந்யே'' என்ற பெருமாளுக்கும் மநுஷ்யத்வமுண்டானாலும், ''வ்யாகஃபுராஜஃக்ருதஜ்ஞஸ்ச'' என்று இவர் க்ருதஜ்ஞராகையாலே, ''மாநுஷாணாம் மத்யே - க்ருதஜ்ஞேஷு'' என்று இவரை விஶேஷித்து-இவரையொழிந்தார் [illegible] பண்ணின உபகாரம்போலே யென்றபடி. 'தப்பாதவையும்' இத்யாதி வாக்யவிவரணம் - 'தப்பாதது' என்று தொடங்கி, 'நானுகையாலே' இத்யந்தம். க்ருதஜ்ஞாநாம் க்ருதவேதி ஸகலக்ருதஜ்ஞேஷு க்ருதவிதிஷ்வபி மத்யே விதயமேவதி ஶாவஃ. அதுக்குஅடியென்? என்னில் - பலியாமைக்கு ஹேதுவென்? என்னில்? 'அர்த்தஸ்திதி இப்படியன்றோ?' என்ன, 'அர்த்ததத்த்வத்தை' இத்யாதி. அர்த்ததத்த்வம் - யாதார்த்யம். நீங்கள் - ததேகஶேஷத்வ ஸ்வரூபரான நீங்கள். துர்வ்ருத்தரென்கிற வாக்யத்துக்கு - பகவத்ஸம்பந்தமில்லாதார் செய்வதை பகவத்ஸம்பந்தமுடையவர்கள் செய்வார்களோ? என்று தாத்பர்யம். துர்வ்ருத்தர் - சக்ராதிலாஞ்சந மில்லாதார். வருத்தவான்கள் ளென்கிறது - சாடு; ஸத்வ்ருத்தரென்றும், [illegible] றும். வ்ருத்தவான்கள் செய்வதேது? என்ன, 'தோள்' இத்யாதி. என்னுடைய தோள்களானவை அந்த ஸர்வேஶ்வரனையல்லது தொழுகிறனவில்லை யித்யர்த்தஃ. முதல்திருவந்தாதி, [illegible]. அடுப்பது - ப்ராப்தம். தாத்பர்யம் 'வேதைக' இத்யாதி. ''வேதைகஸமதிகம்யம்'' [illegible] கொடித்வேந அருளிச்செய்கிறார் - 'ஆகமாதிகளில்' இத்யாதி. ஆகமாதிகளில் - சைவாகமாதிகளில். மன்னப்படுகை - அத்யயநம்பண்ணப்படுகையாதல், நித்யத்வமாதல். இரண்டையும் அடைவே அருளிச்செய்கிறார் - 'மன்னுகை' இத்யாதி. 'நித்யத்வமாய்' இத்யாதி - ''நித்யத்வாத் அபௌருஷேயத்வாத், அபௌருஷேயத்வாத் தோஷராஹித்யம். ஸர்வஸ்ய வேதஸ்ய தச்சாயஸ்யாயிகாதத்வம் நித்யத்வாஸ்ய, ஆநுபூர்வீ நித்யத்வாஹ''-'பூர்வபூர்வ' இத்யாதி. சப்தார்த்தம்-'நித்யமான' இத்யாதி. இந்தப்பக்ஷத்தில், 'மன்னப்படும்' என்கிற கர்மணி ப்ரயோகத்துக்கு - தானிஷ்டயமில்லை; 'நித்யதயா நெஞ்சிலே படுவதான வேதத்துக்கு ப்ரதிபாத்யதயா ப்ரதாநனானவனை' என்று உரையில் சப்தார்த்தம். 'வண்துவராபதிமன்னனை' என்றதுக்கு பாவம் - 'கேட்டார்' இத்யாதி. 'வண்துவராபதிமன்னனை எத்து

கண்ணாலேகண்டு அநுபவிக்கலாம்படி வந்து அவதரித்தவனை. நீரிலேபுக்கு அழுந்தினரை முகத்திலே நீரைத்தெளித்துப் பரிஹரிக்குமாபோலே, தேர்ப்பாகனார்க்கு மோஹித்த இவளை, வண்துவராபதிமன்னன்திருநாமத்தைச் சொல்லி ஆச்வஸிப்பிக்கப் பாருங்கோள். [ஏத்துமின்] - வாய்படைத்த ப்ரயோஜநம் பெற ஏத்துங்கோள். "சீர்பரவாது உண்ண, வாய்தா னுறுமோ வொன்று" என்றன்றோ நீங்கள் சொல்லுவது? [ஏத்துதலும்] - நீங்கள் க்ருதார்த்தைகளாமளவேயன்று; "அதஸோऽபயங்கதோ பவதி" (அதஸோபயங்கதோபவதி) என்கிறபடியே, ஏத்தின ஸமநந்தரத்திலே ப்ரபுத்தையாய். [தொழுதாடுமே] - உணர்த்தியுண்டானால் செய்வது அதுபோலே காணும். தரித்து வ்யாபாரக்ஷமையுமாம்.

## பதினோராம்பாட்டு.

தொழுதாடித்தூமணிவண்ணனுக்கு ஆட்செய்துநோய்தீர்ந்த
வழுவாததொல்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்சொல்
வழுவாதஆயிரத்துள் இவைபத்துவெறிகளும்
தொழுதாடிப்பாடவல்லார் துக்கசீலமிலர்களே.

*ஆ—(தொழுதாடி.) 'வண்துவராபதிமன்னன்' என்கிற இந்த ம்ருதஸஞ்ஜீவநமான திருநாமத்தைக்கொண்டு ஜீவித்து நோய்தீர்ந்து தொழுது ஆடிப்பாடித் தூமணிவண்ணனுக்கு ஆட்செய்த வழுவாத தொல்புகழ் வண்குருகூர்ச் சடகோபன் சொல்வழுவாத ஆயிரத்துள் தேவதாந்தரபஜநநிவ்ருத்திபரமான இவைபத்தும் தொழுதாடிப்பாடவல்லார் துக்கசீலமிலர்கள் என்கிறார்.*

*மின்' என்கிறவளுடைய ஹார்த்தபாவம் - 'நீரிலேபுக்கு' இத்யாதி. துவராபதி - த்வாரவதீ. "ஸ்ரீஸம்ப்ராயநிவேதிதாங்க்ரி" என்றதைப் பற்ற, 'வாய்படைத்த' இத்யாதி. 'வாய்படைத்தப்ரயோஜநமேத்துகை' என்றதுக்கு ப்ரமாணம் - 'சீர்பரவாது' இத்யாதி. அவனுடைய குணங்களை அக்ரமமாகப்பேசாதே வாகிந்த்ரியமானது வேறொன்றையுண்ண ஆசைப்படுமோ? என்றபடி. பெரியதிருவந்தாதி, ஐம்பத்திரண்டாம் பாட்டு, "மாண்பாவித்து" இத்யாதி. ஏத்துதலும் - ஏத்தினவுடனே. 'ஏத்துதலும்' என்கையாலே - ஏத்துகையே ப்ரயோஜநமெனறபடி. 'தொழுது என்றால்- 'ப்ரபுத்தை' என்னுமத்தைக் காட்டுமோ? என்ன-'உணர்த்தியுண்டானால்' இத்யாதி. அது - தொழுதாடுகை. பலிதம் - 'தரித்து' இத்யாதி. 'அவனைத் தொழுது ஸஸம்ப்ரம ந்ருத்தம் பண்ணுகிற்கும்' என்று உரையில் சப்தார்த்தம். க்ரமேண அந்வய:. (க0)*

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாக அப்யஸிக்குமவர்கள் தாம் எம்பெருமானைப் பிரிந்து பட்ட வ்யஸநம் படார் என்கிறார்.

[தொழுது என்று தொடங்கி] - திருநாமத்தாலே உஜ்ஜீவித்து நோய்தீருவதும் செய்து மோஹதஶையிலும் தேவதாந்தரஸ்பர்ஶம் ஸஹியாமையும் அத்தஶையிலும் பகவத் குணங்களை உஜ்ஜீவநமாகவுடைய ரென்னும் ஸ்வாபாவிகமான புகழைப் புஷ்கலமாகவுடைய ஆழ்வாருடைய சொல்லான. [வழுவாத ஆயிரம் என்று தொடங்கி] - ஆயிரந்திருவாய்மொழி யிலும் பகவத்குணங்கள் ஒன்றும் ஒழியாமே ப்ரதிபாதித்த வெறிவிலக்கான இத்திருவாய் மொழியை ஸஹ்ருதயமாக அநுஸந்திப்பார். [தொழுதாடி என்று தொடங்கி] - மோஹம் தீரப்பெறுகையாலே எல்லாம் பெற்றதாக அநுவதிக்கிறது.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை ப்ரேமத்தாலே விக்ருதராய் அநுஸந்திப்பார் பகவத்விஶ்லேஷாதி துঃகரஹிதராவர்கள் என்று பலத்தைஅருளிச்செய்கிறார்.

தொழுது- (ஶேஷத்வாநுரூபமான) அஞ்சலியைப்பண்ணி, ஆடி - (அந்தப்ரீதியாலே) ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி, தூ மணி - உஜ்ஜ்வலமான நீலரத்நம்போலே யிருக்கிற, வண்ண னுக்கு - நிறத்தையுடைய க்ருஷ்ணனுக்கு, ஆள் செய்து-இதுதானே கைங்கர்யமாகச் செய்து, நோய் தீர்ந்த-தத்விஶ்லேஷதுঃகரூப வ்யாதி ஶமிக்கும்படியாய், வழுவாத-(ஸர்வப்ரகாரத்தாலும் தேவதாந்தர ஸம்ஸர்க்கமாகிற) வழுவுதலின்றியே, தொல் புகழ் - ஸ்வாபாவிகமான பகவத் சேஷத்வப்ரதையையுடையராய், வண் குருகூர் - விலக்ஷணமான திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்ததாய், வழுவாத-(பகவத்ஸ்வரூபாதிகளில் ஒன் றும்) நழுவாதபடி ப்ரதிபாதிக்குமதான, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே, வெறி கள் - வெறியாட்டுவிஷயமாக விலக்கியுரைத்த, இவை பத்தும் - இவை பத்தையும், தொழுது - (இதில் அர்த்தாநுஸந்தாநவித்தராய்க்கொண்டு) தொழுது, ஆடி - ஆடி, பாட - (ப்ரேமபரவஶ்ய த்தாலே) பாட, வல்லார் - வல்லவர்கள், துக்கம் - பகவத்விஶ்லேஷஜநிதமாயும் தத் பரிஹாரார்த்ததேவதாந்தராநுவ்ருத்திதுঃகமு முண்டாகும், சீலம் - ஸ்வபாவம், இலர்கள்- இல்லாதவர்களாவர்கள். இது - கலித்துறை.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாக அப்யஸிக்கவல்லார் தாம் பிரிந்துபட்ட வ்யஸநம் படார் என்கிறார்.

[தொழுது ஆடி இத்யாதி]-தொழுது அந்தஹர்ஷத்தாலே ஆடி ஆள்செய்து நோய் தீர்ந்த.கீழ்ப்பிறந்த அவஸாதாதிஶயத்தாலேபிறந்த உணர்த்தியைக் குவாலாகச் சொல்லுகிறது. மேல் "சீலமில்லாச்சிறிய" னுகையாலே, உணர்ந்து கூப்பிடுகைக்கு வேண்டுமளவேயிறே பிறந்தது. 'வண்துவராபதிமன்னனை ஏத்துமின்' என்று தோழி சொன்னமாத்ரமே அமைந்தது, இவள் ப்ரபுத்தையாகைக்கு. இத்தோழிதானும் பகவத்ப்ரபாவம் அறிந்திலள். தானும் சொல்லி அவர்களும் சொல்லவேணும் என்று இருந்தாள். இதுஎல்லாம் வேண்டிற்றில்லையே. [வழுவாத தொல் புகழ்] - அஜ்ஞாநதஶையிலும் தேவதாந்தரஸ்பர்ஶம் விநாஶஹேதுவாய் இத்தஶையிலும் பகவத்ஸ்பர்ஶம் ஸத்தாதாரகமாம்படியான ஸ்வாபாவிகமான வைஷ்ணவ ஸ்ரீயிலே நிலைநின்ற புகழையுடையவர். [வழுவாத ஆயிரத்துள் இவை பத்து வெறிகளும்] - ஒருத்தனுக்கு ஜ்ஞாதவ்யார்த்தங்களில் ஒன்றும்குறையாமல் அருளிச்செய்த ஆயிரத்திலும், வெறிவிலக்கான இத்திருவாய்மொழியை. வெறிவிலக்காவது - ஒருவனை ஆசைப்பட்டு மோஹித்துக்கிடக்க இவளை தேவாவிஷ்டையென்று ஆடாறுப்பது பலியிடுவதாக, தோழி ஒருவனுக்கு மோஹித்துக்கிடக்கிருள் என்று அவர்களை விலக்குகை என்று தமிழர் சொல்லுவது ஒரு துறை. [தொழுது ஆடிப் பாடவல்லார்] - ஸஹ்ருதயமாக அநுஸந்திப்பார். [துக்கசீலமிலர்களே] - து:கஸ்வபாவமின்றிக்கே யொழிவர். ஶீலம் - ஸ்வபாவம்.

ஈ௰—நிகமத்தில், இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாக அப்யஸிக்கவல்லார், தாம் பிரிந்துபட்ட வ்யஸநம் படாதே பலத்திலே அந்வயிப்பர் என்கிருர்.

[தொழுது ஆடித் தூமணிவண்ணனுக்கு ஆட்செய்து நோய்தீர்ந்த] - என்றதுக்கு அம்மங்கியம்மாள் பணிக்கும்படி - "மோஹித்தவள் அல்டம் ஆஶ்வஸித்தவாறே, 'மோர்க்குழம்பு குடித்தாள், தரித்தாள், கண்விழித்தாள், வார்த்தைசொன்னுள்' என்பர்களிறே ; அதுபோலே காணும்" என்று. முன்புபிறந்த அவஸாதாதிஶயத்தாலே பிறந்த உணர்த்தியைக் குவாலாகச் சொல்லுகிறது; மேல் "சீலமில்லாச்சிறிய"னுகையாலே, உணர்ந்து கூப்பிடவேண்டுமளவேயிறே

நிகமம் - 'தொழுது' இத்யாதி. 'இவைபத்து' இத்யாரப்ய, மேலெல்லாம் கடாக்ஷித்துஅவதாரிகை - 'நிகமத்தில்' இத்யாதி. 'தொழுதாடிப்பாடவல்லார்' என்கையாலே, 'ஸஹ்ருதயம்' என்றது. அஹ்ருதயமான போது இவையெல்லாங் கூடாதிறே.

தெளிந்து தொழுதாடும்படி ஸம்ஶ்லேஷித்தாளோ? என்ன, 'தொழுதாடி' இத்யாதி. அதாவது - மோஹம் நிவ்ருத்தமானபடியைப் போரப்பொலியச் சொல்லுகிற தென்றபடி. பலிதம் - 'முன்புபிறந்த' இத்யாதி. 'தொழுதாடித் தூமணிவண்ணனுக் காட்செய்து நோய்தீர்ந்த' என்று - ஶாப்தமாக, தேறினளென்றிருக்க, 'அல்பாஶ்வாஸத்தைக் குவாலாகச் சொல்லுகிறது' என்று அம்மாள்நிர்வஹிக்கைக்கு அடியேது? என்ன, 'மேல்' இத்யாதி. 'ஏத்துமின்' என்றஅநந்தரம் அவர்களேத்தாதிருக்க, 'தொழுதாடி' என்கையாலே

பிறந்தது [தொழுதுஇத்யாதி] - இத்தோழிதானும் அறிந்திலள்காணும் பகவத்ப்ரஸாவம்; அவர்களை 'ஏத்துங்கோள்' என்றுளே; அதெல்லாம் வேண்டாதே,தான்'ஏத்துங்கோள்' என்றஇதுதானே அமைந்தது இவளுணருகைக்கு.பகவத்ப்ரஸாவம் புறம்புள்ளார்க்குஅறியவொண்ணுதவோபாதி, உட்புகுந்தாராய் அறிந்தார்களாயுள்ளவர்களுக்கும் 'இவ்வளவு' என்று அறிய வொண்ணுதாய்க் காணும் இருப்பது.வழுவாத தொல்புகழாகிறது-அஜ்ஞாநதசையிலும் தேவதாந்தரஸ்பர்ஶமும் ததீயஸ்பர்ஶமும்ஸத்தயாவிநாஶஹேதுவாய், அவ்வளவிலும் பகவந்நாமமும் ததீயஸ்பர்ஶமும் ஸத்தயா தாரகமுமாம்படியான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயிலே நிலைநின்ற புகழ். ஒருவன் வைஷ்ணவனுகையாவது-இது; 'ஸர்வேஶ்வரன் ரக்ஷகன்' என்று ஒருவன்பக்கலிலே ஒருவார்த்தை கேட்டுவிட்டு, தேவதாந்தரஸ்பர்ஶமும் அபாகவதஸ்பர்ஶமும் உண்டாயிருக்க, வைஷ்ணவனுக விரகில்லையிறே. பூர்வார்த்தத்தை அநுஸந்தித்தால் இத்தலையால் ஒருதுரும்புநறுக்கவும் ப்ராப்தியில்லாதபடியாயிருக்கும் ; உத்தரார்த்தத்தை அநுஸந்தித்தால் - இளையபெருமாளைப்போலே கண்ணுறங்கவும் விரகில்லையாயிருக்கும். "கழிவதோர்காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதல்'' என்றிறே இருப்

*பலிதம் - 'இத்தோழிதானும்' இத்யாதி. ப்ரஸாவம்' என்று பாடமானுல் - ஈஶ்வரனுடைய ப்ரபாவத்தையென்றபடி. அதுதானேது? என்ன, 'அவர்களை' இத்யாதி. உட்புகுந்த தோழிக்கு அறியவொண்ணுதோ? என்ன, 'பகவத்ப்ரஸாவம்' இத்யாதி. சேஷத்வாநுரூபமாகத் தொழுது, அந்தப்ரியாமலே ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி, உஜ்ஜ்வலமான நீலரத்நம்போன்ற திருநிறத்தையுடைய க்ருஷ்ணனுக்கு அடிமை செய்து தத்விஶ்லேஷ துஃகரூப வ்யாதி தீர்ந்த தென்று சப்தார்த்தம். வழுவாத தொல்புகழ் - நழுவாத ஸ்வாபாவிகமான புகழ். 'ஒருவன்வைஷ்ணவனுகையாவது இது': இதுவென்று - உக்தத்தைப் பராமர்ஶிக்கிறது. 'இது' என்கிற நிர்ப்பந்தமேது? என்ன, வ்யதிரேகத்தாலே இவ்வர்த்தத்தை ஸாதிக்கிறார் - 'ஸர்வேஶ்வரன்' இத்யாதி. ஒருவன் பக்கலிலே - ஆசார்யன்பக்கலிலே. ஒருவார்த்தை - த்வயார்த்தமாதல், சரமஶ்லோகார்த்தமாதல்.ப்ரபந்நனுக்கு தேவதாந்தரஸ்பர்ஶமும் அபாகவதஸ்பர்ஶமும் பரிஹரியாதவன்று வைஷ்ணவத்வமில்லையென்றார்; இனி ப்ரபந்நனுக்கு தேவதாந்தரஸ்பர்ஶம் பரிஹரணீயமானுற்போலே உபாயாந்தரஸ்பர்ஶமும் பரிஹரிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, இப்படியானுல் ஸர்வகர்மங்களுக்கும் [illegible] நித்யநைமித்திகங்களும் தேஶவாஸாதிகளும் த்யாஜ்யமாகாதோ? என்ன, 'பூர்வார்த்தத்தை' இத்யாதி. ப்ராப்ய புத்த்யா செய்கையாகையாலே த்யாஜ்யமாகா தென்றபடி. பூர்வார்த்தம், உத்தரார்த்த மென்றது - பூர்வோத்தரவாக்யங்களென்றுய், 'சரணௌ' என்ற த்விவசநத்தாலே - உபாயாந்தரங்களுடைய [illegible] த்யாக மார்த்தமாகக் கண்டுகொள்வது.அன்றிக்கே,சரமஶ்லோகத்தில் பூர்வோத்தரார்த்தங்களென்னவுமாம். துரும்பு நறுக்கவும் ப்ராப்தியில்லை யென்றது-'பூர்வகண்டமும் பூர்வார்த்தமும் [illegible] ப்ரதிபாதகமாகையாலே. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - 'கழிவதோர்' இத்யாதி. ஸர்வேஶ்வரனைக் கண்கள் [illegible] யும்படி அநுபவித்துக் காலங்கழியும்படி அத்விதீயமான ஆசையிலே நின்றவர்களுக்கும் அவன்பக்கல் வைத்த கண் செம்பளிக்க விரகுண்டோ? இத்யர்த்தஃ. திருவிருத்தம்-தொண்ணூற்றேழாம்பாட்டு, "எழுவதும்'' இத்யாதி. ஆக, பூர்வார்த்தத்தை அநுஸந்தித்தால் இத்யாதிவாக்யத்தால் - உபாயபுத்த்யா எல்லாம் விடவேணும், உபேயபுத்த்யா எல்லாம்செய்யவேணு மென்றதாயிற்று.'வைஷ்ணவனுக விரகில்லையிறே' என்று*

பது. 'ஸ்வரூபம்இது' என்று அறிந்தால் ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தமும் அதுக்குவிரோதியான வற்றைக் காற்கடைக்கொள்ளுமதுவும் இல்லையாகில், ஜ்ஞாநம் பிறந்ததில்லையாமித்தனையிறே. இதில்லையாகில் ஆழ்வார்கள்போனவழியில் அந்வயித்திலனுமித்தனையிறே ; * "திருவடிதன் னாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்றும், † "திருவில்லாத்தேவரைத் தேறேன்மின் தேவு" என்றும், ‡"எண்ணுதமானிடத்தை யெண்ணுத்போதெல்லா மினியவாறு"என்றும், $"பேராளன் பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரிகிலேன்" என்றுமிறே இவர்கள்படி. அநாதிகாலம் இவன்சூழ்த்துக்கொண்ட பாபங்கள் போகையும், நித்யகைங்கர்யம் பெறுகையுமாகிற இப் பேற்றுக்கு இவ்வளவாகிலும் செய்யாதிருக்க விரகுண்டோ? [வழுவாத இத்யாதி] - இவ்வாத் மாவுக்கு ஜ்ஞாதவ்யமான அர்த்தங்களிலொன்றும் தப்பாதபடி சொன்ன வெறிவிஷயமான இப் பத்தும். "வெறிவிலக்கு" என்று ஒருதுறையுண்டு தமிழரது : விரஹஜ்வரத்தாலே நோவுபடுகிற வளுக்கு ஆடறுப்பது கள்ளுகுப்பது பலியிவேதாய்ப் பரிஹரிக்கப் புக, தோழியானவள் 'இது ஒரு விஷயத்தில் ஸாவஙைஶ்யமடியாக வந்த நோயாயிற்று, மற்றொன்றாலன்று' என்று அவர்கள் செய்கிற வற்றை விலக்குகை. [தொழுது ஆடிப் பாடவல்லார்] - பெண்பிள்ளையினுடைய மோஹம்

---

*கீழே, தேவதாந்தர ததீயஸ்பர்ஶ ராஹித்யஞ் சொன்னது - ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளுக்கும் உபலக்ஷண மென்று விவக்ஷித்து, இவையெல்லாம் வேணுமோ? ஸக்ருத்கர்த்தவ்யமான ஸ்வீகாரமாத்ரமே போராதோ? என்ன, 'ஸ்வரூபம்' இத்யாதி. இதுவென்று - கீழ்ச்சொன்ன ததேகாக்ஷபத்வத்தைப் பராமர்ஶிக்கிறது. 'அவனே உபாயம், மற்றொன்று உபாயமன்று, அவன்திருவடிகளிற்பண்ணும் கைங்கர்யமே உபேயம், மற் றொன்று உபேயமன்று' என்று ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால், தேவதாந்தரமும் உபாயோபேய பஹிர்ப்பூதமாகை யாலே தத்விரோதித்யாகம் ஆவஶ்யகமிறே யென்று கருத்து. ஜ்ஞாநம்பிறந்ததில்லையாம் - கார்யகரமல்லா மையாலே, பிறந்த ஜ்ஞாநம் அஜ்ஞாநகல்பமென்றபடி. ஜ்ஞாநம்பிறந்ததில்லையாமித்தனை யென்கையாலே - இவை ப்ரபத்த்யங்கத்வேந அநுஷ்டேயங்களன்று, அவஶ்யாதஸ்வேஷம்போலே ஸம்ஹாவித ஸ்வஹா வங்களென்று தோற்றுகிறது. இதில், ப்ரஸ்துதமான தேவதாந்தரஸ்பர்ஶமும் அபாகவதஸ்பர்ஶமும் ஆகாதென்னுமதுக்கு ப்ரமாணங்காட்டுவதாக அதிஷ்டிகையிடுகிறார் - 'இதில்லையாகில்' இத்யாதி. 'அநந்யார்ஹ சேஷத்வமே ஸ்வரூபம்' என்றுஅறிந்து த்யாஜ்யத்தை விட்டு உபாதேயத்தைச் செய்யாதபோது ஜ்ஞாநம் பிறந்ததில்லை, ஆழ்வார்கள் போனவழியில் அந்வயித்திலனுமித்தனை யென்றபடி. ஆழ்வார்கள் போனவழி யேது? என்ன, 'திருவடி' இத்யாதி. ஆபிமுக்யமாத்ரம் பண்ணலாமொழிய, ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தமும் தத்விரோதித்யாகமும் வேண்டினல் இதரஸாதநங்களோபாதி ப்ரபத்தியும் துஷ்கரமாயிராதோ? இது ஸுகர மானபடி எப்படி? என்ன, 'அநாதி'இத்யாதி. இவ்வளவாகிலும் - விரோதித்யாகத்தையாகிலும். 'வெறி விஷயமான' என்றத்தை விவரிக்கிறார் - 'வெறிவிலக்கு'இத்யாதி. அத்துறைதானேது? என்ன, 'விரஹ' இத்யாதி. உகுப்பது - தெளிப்பது. 'தொழுதாடி' என்றும், 'தொழுதாடிப்பாடவல்லார்' என்றும் இரண்டுக்*

---

* நான்முகன்திருவந்தாதி - ௬௮
† நான்முகன்திருவந்தாதி - ௫௩.
‡ பெரியதிருமொழி - கக, ௬, எ.
$ பெரியதிருமொழி - எ, ௪, ௪.

தீர்ந்தால் பந்துக்களுக்குள்ள ப்ரியம் 'இதுகற்றார்க்குமுண்டு' என்றிருக்கிறாராயிற்று இவர். [துக்க சீலமிலர்களே] - மோஹித்தவிடத்து தேவதாந்தரஸ்பர்ஶமுண்டாகையும், பாகவதஸ்பர்ஶமின்றிக் கே யொழிகையுமாயிற்று - துக்கமாகிறது. அதில்லாமையே ஸ்வபாவமாக வுடையராவர். சீல மென்று - ஸ்வபாவம். (கக)



---

*கும் ஶப்தம் ஒத்திருந்தது; பெண்பிள்ளையுடைய ஆகாரம் இவர்களுக்குப் பிறக்கக்கூடுமோ? என்ன 'பெண் பிள்ளையினுடைய' இத்யாதி. 'துக்கம்-இல் - சீலம் இர்கள்' என்று அந்வயித்து அர்த்தம்-'மோஹித்த' இத்யாதி. வழுவாத ஆயிரத்துள் - ஜ்ஞாதவ்யார்த்தங்களிலொன்றும் தப்பாதபடி சொன்ன ஆயிரத்துக்குள்ளே. இவை பத்துவெறிகளும் - வெறியாட்டுவிஷயமாக விலக்கியுரைத்த இப்பத்தையும். 'திருவடி' இத்யாதி - ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தை ஒருகால் கற்றுப் பின்னை மறந்தார்களாகிலும் தத்வ்யதிரிக்த க்ஷுத்ரதேவதைகளைத் தொழாத மஹாங்களை இத்யர்த்தः. 'திருவில்லா' இத்யாதி - ஸ்ரீஸம்பந்தமில்லாத க்ஷுத்ரதேவதைகளை ஸமாஶ்ரயணீய தேவதைகளாக விஶ்வஸியாதே கொள்ளுங்கோளித்யர்த்தः. 'எண்ணுதல்' இத்யாதி-திருக்கண்ணமங்கைக்கு நிர்வாஹகனானவனை ஹ்ருதயத்திலே எண்ணுத மநுஷ்யரை எண்ணுத போதெல்லாம் இனியதாயிருக்குமித்யர்த்தः. 'பேராளன்' இத்யாதி-ஸர்வாதிகனானவனுடைய திருநாமங்களை அநுஸந்திக்கும் மஹாபாகவதர்களை ஒருக்ஷணகாலமும் பிரிய க்ஷமனல்லேனித்யர்த்தः. க்ரமேண அந்வயः. (கக)*



*த்ரவிடோபநிஷத்ஸங்கதி:*— [illegible]



*த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.*— [illegible]

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

*தீர்ப்பாரினிதுமையால் திரக்கலக்குமால்*
*[illegible]*
*அறிவழிந்த [illegible]*
*அறிவுபெற்ற மாறன் சீலம்.*



ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## ஏழாந்திருவாய்மொழி - சீலமில்லா: ப்ரவேசம்.

**ஆ.**—(சீலமில்லா.) பரமபுருஷ விஶ்லேஷ ஜநித நிரவதிக வ்யஸநத்தாலே மோஹ உபாபந்நரான ஆழ்வார், அம்ருதகல்பமான ததீயதிவ்யநாமங்களினுடைய ஶ்ரவணத்தாலே லப்தஸம்ஜ்ஞராய், அந்தவிஶ்லேஷவ்யஸநம் அஸஹமாநராய் "காணவாராய்" என்று எம்பெருமானைக் கூப்பிட்டு அழைக்கிறார்.

**ஒ.**—ஏழாந்திருவாய்மொழியில் "வர்ஷேணபீஜம்ப்ரதிஸஞ்ஜஹர்ஷ" என்னும் படியாலே ம்ருதஸஞ்ஜீவநமான பகவந்நாமஶ்ரவணத்தாலே உணர்ந்து, பொறுக்கவொண்ணாத படி தமக்குவந்த அலாபத்தை அநுஸந்தித்த ஆழ்வார், ரக்ஷகனாய்,ஸர்வஜ்ஞனாய், ஆத்மநாதனாய், எப்போதும் தர்ஶநீயனாயிருந்துள்ள எம்பெருமானைக் காணவேணுமென்று கூப்பிடுகிறார்.

**ப.**—ஏழாந்திருவாய்மொழியில், கீழ் "ஏத்துதலும்தொழுதாடும்" என்று பகவந்நாமஶ்ரவணத்தாற் பிறந்த ஆஶ்வாஸம் அவனைக் கிட்டியநுபவிக்கைக்கு உடலன்றியே அலாபத்தாலே ஆர்த்தராகைக்கு உடலாகையாலே அபிநிவேஶாதிஶயத்தையுமுடைய இவ்வாழ்வார் தமக்கு அநுபாவ்யனான ஸர்வேஶ்வரனுடைய - அகிலவஸ்து ஸத்தையும் அழியாமல் நோக்கும் அஸாதாரண ஸம்பந்தத்தையும், அநர்ஹனாக்கி அநுபவிப்பிக்கும் ஔதார்யத்தையும், அநர்ஹமான ஆஶ்ரிதர்பக்கல் அத்யந்தபவ்யதையையும், அவர்களுக்கு ஆஶாஜநகமான ஆபிரூப்யாதிஶயத்தையும், அருந்தொழில் செய்தும் ஆஶ்ரிதர்க்கு அபேக்ஷிதங் கொடுக்கும்படியையும், ஆசைக்கு தீபகமான ஆந்தரஸ்திதியையும்,அந்த அவஸ்த்தாநத்தினுடைய அதிஶயிதபோக்யதையையும், போக்யதாநிபந்தநமான அபிநிவேஶாதிஶயஜநகத்வத்தையும், அபிநிவிஷ்டர்க்கு அநுஸாவ்யமான அஸாதாரணசிஹ்நவத்தையையும், அகிலவேதவேத்யத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்விஶிஷ்டனான போக்யபூதன்பக்கல் அநுஸவாபிநிவேஶத்தாற் பிறந்த ஆர்த்யதிஶயத்தை அருளிச்செய்கிறார்.

**இ.**—ஏழாந்திருவாய்மொழியில், "வாதாதபக்லாந்திவப்ரணஷ்டம் வர்ஷேண பீஜம்ப்ரதிஸஞ்ஜஹர்ஷ" என்னும்படியாலே ம்ருதஸஞ்ஜீவநமான பகவந்நாமஶ்ரவணத்தாலே மோஹம் போய் உணர்த்தி பிறந்தது. இத்தாலே மோஹத்தையும் இழந்த இத்தனையிறே. மோஹித்தபோது க்லேஶமில்லை; உணர்த்திபிறந்தது பேற்றுக்கு உறுப்பாகை யன்றியே அலாபத்தை அநுஸந்தித்து க்லேஶப்படுகைக்கு உறுப்பாயிற்று. பொறுக்கவொண்ணாதபடி தமக்குப் பிறந்த அலாபத்தை அநுஸந்தித்த ஆழ்வார் ஆபத்ஸகனாய் ஆபத்துக்கு நிதாநமறிந்து பரிஹரிக்கைக்கு அடியான ஸார்வஜ்ஞத்தையுடையனாய் உதவுகைக்கு அடியான ப்ராப்தியையுடையனாய் உதவிற்றிலனேயாகிலும் விடவொண்ணாதபடியான வடிவழகையுடையனாயிருந்துள்ளவனைக் காணவேணுமென்று கேட்டாரடங்க நீராம்படி கூப்பிடுகிறார்.

**ஈடு.**— "வர்ஷேணபீஜம்ப்ரதிஸஞ்ஜஹர்ஷ" (வர்ஷேணபீஜம்ப்ரதிஸஞ்ஜஹர்ஷ) என்று வர்ஷம்விழுந்தால் தன் உணர்த்தியாலன்றிறே பீஜம் பருவம்செய்கிறது; அப்படியே திருநாமப்ரஸங்கத்திலே உணர்ந்தாரே. "வண்துவராபதிமன்னனையேத்துமின்" என்று அம்ருதஸஞ்

"சீலமில்லா" ப்ரவேஶ - கீழ் மோஹமாயிருக்க, இங்கே உணர்த்திவருகைக்கு ஹேதுவேது? என்ன, வர்ஷேண இத்யாதி. "ஸமீக்ஷ்ய தாம் பூர்வமதீவ ஹ்ருஷ்டாம் ப்ரபோதிதாம் பத்மவனேவ நீலீம் ப்ரஹ்லாதயா மாஸ ஸ தாம் ப்ரிய ஸைஸ்ஸமாகமே வாக்யை: | வாதாதபக்லாந்திவப்ரணஷ்டம் வர்ஷேணபீஜம்ப்ரதிஸஞ்ஜஹர்ஷ" இதி ஸுந்தரகாண்டே ஏகோநத்ரிம்ஶே. பீஜமென்று தத்கார்யமான ஸஸ்யம் சொல்லப்படுகிறது. "வாதாதபக்லாந்திவப்ரணஷ்டம்" என்கிற த்ருஷ்டாந்தவிசேஷணமே 'ஸஸ்யம்' என்னுமதுக்கு நியாமகம். கீழே திருநாமப்ரஸங்கமுண்டோ? என்ன, வண்துவராபதி இத்யாதி. பசியன் உண்ணுமா

ஜீவநியான திருநாமப்ரஸங்கமே ஶிஶிரோபசாரமாக உணர்த்தியுண்டாயிற்று; அத்தால் பெற்ற பலம் - முன்புத்தைமோஹத்தையும் இழக்கைக்கு உறுப்பான வித்தனை. மோஹதசையில் அநநுஸந்தாநத்தாலே க்லேஶமில்லை. பிறந்த உணர்த்தி பேற்றுக்கு உடலல்லாமையாலே க்லேஶத்தை விளைக்க, அத்தாலே கூப்பிடுகிறார். உறக்கத்தில் பசி பொறுக்கலாம்; உணர்ந்தால் உண்டன்றி நிற்கவொண்ணாதிறே. உணர்ந்த அநந்தரம் பொறுக்கவொண்ணாதபடி தமக்குப்பிறந்த அலாப க்லேஶத்தை யநுஸந்தித்து, அவன் ஆபத்துக்கு உதவும் ஸ்வபாவனாயிருக்கிறபடியையும், ஆபத்துக்கு நிதாநமறிந்துபரிஹரிக்க *வல்லனேன்றும்,ஆபத்துக்கு உதவுகைக்கீடான ப்ராப்தியையுடையனாவது; பிரிந்தால் பொறுக்கவொண்ணாதபடியான வடிவழகையுடையனாவது; ஆபத்துக்களிலே விரோதியைப்போக்கி உதவுகைக்கூடான ஶக்தியையுடையனாவது, அதுக்கீடான பரிகரமுடையனாவது, வரையாதே எல்லாரையுமொக்க ரக்ஷிக்கவல்லனாவது; இப்படியிருக்கத் தம் ஆற்றாமைக்கு உதவக்காணாமையாலே, பரமபதத்திலே யிருந்தானாகிலும் அவ்விருப்பு நிலைகுலைந்து வந்து முகங்காட்டும்படி ஆர்த்தியாலே, நிரம்பிற்று ஒருகடல் கையெடுத்துக்கூப்பிட்டாற்போலே கேட்டாரடைய நீராம்படி கூப்பிடுகிறார்; "ஹாராமஹாலக்ஷ்மணஹாஸுமித்ரே" (ஹாராமஹாலக்ஷ்மணஹாஸுமித்ரே) என்றாற்போலே; "ததாபிஸூதந" (ததாபிஸூதந) இத்யாதி - ஸ்ரீகௌஸல்யையார் பெருமாளைப் பிரிந்த ஆற்றாமையாலே கூப்பிட, ஸ்ரீஸுமந்த்ரன் 'அவரைப் பிரிந்தோம் என்று கூப்பிடவேண்டாகாணும்; தாமே வந்து புகுருவர்காணும்' என்று ஆஶ்வாஸவசநம்பண்ணினான். "ஸூதந" (ஸூதந) - சொன்னவார்த்தை 'ஆப்தம்' என்று கைக்கொள்ளவேண்டும்படி அந்தரங்கனாவது .ஸாரதிகள் சொல்லுமதெல்லாம் ஆப்தமிறே. "ஸுயுக்தவாதிநா" (ஸுயுக்தவாதிநா) - அதில்லையேயாகிலும் வார்த்தையைக் கேட்டால்

---

போலே உணர்ந்தால் அனுபவிக்குமத்தனையன்றோ? என்ன, அதுகிடையாமையாலே வ்யஸநம் அதிகரித்து முன்புத்தை மோஹத்தை நல்லதாக்கிற்று என்கிறார் - அந்நாலபெற்ற இத்யாதி. அதேன், உணர்த்தியைப் பற்ற மோஹம் நல்லதோ? என்ன, மோஹதசையில் இத்யாதி. மோஹதசை அநுகூலமென்றதுக்கு த்ருஷ்டாந்தம் - உறக்கத்தில் இத்யாதி. 'அத்தாலே கூப்பிடுகிறார்' என்றதைத் விஸ்தரிக்கிறார் - உணர்ந்த அநந்தரம் இத்யாதி. 'ஞாலமுண்டாய்' என்றதைப்பற்ற - ஆபத்துக்குதவும் ஸ்வபாவன் என்றது. 'ஞான மூர்த்தீ' என்றதைப்பற்ற - நிதாநமறிந்து என்றது. 'நாராயணா' என்றதைப்பற்ற, ப்ராப்தி என்றது. 'கோலம்' என்றத்தைப்பற்ற, வடிவழகு என்றது. 'ஆழ்கடலைக்கடைந்த துப்பனே' என்றதைப்பற்ற, ஶக்தியையுடையனாவது என்றது. 'அடலாழியானே' என்றத்தைப்பற்ற, பரிகரமுடையனாவது என்றது. 'வையங்கொண்டவாமனா' என்றத்தைப்பற்ற, வரையாதே இத்யாதி. 'வாராயோ!' [illegible] என்றத்தைப்பற்ற, கூப்பிடுகிறார் என்றது. இவ்விஷயத்தைப் பிரிந்து ஆற்றாமையாலே கூப்பிட்டதுக்கு த்ருஷ்டாந்த த்வயம் - ஹாராம இத்யாதி. முந்தினது - பர்த்ருவிஶ்லேஷத்தில் பிராட்டி கூப்பிட்டது; இரண்டாவது - புத்ரவிஶ்லேஷத்தில் ஸ்ரீகௌஸல்யையார் கூப்பிட்டது. "[illegible] ஸுமித்ரே ஹாராமோ ஹலக்ஷ்மணேத்யேவ [illegible] நாதிவலோவாதா" இதி ஸுந்தரகாண்டே அஷ்டாவிம்ஶஸர்க்கே. "ததாபிஸூதேந ஸுயுக்தவாதிநா நிவார்யமாணா ஸுதஶோககர்ஶிதா ந சைவ தேவீ விரராம கூஜிதாத் ப்ரியேதி புத்ரேதி ச ராகவேதி ச" இத்யயோத்யாகாண்டே. 'ததாபிஸூதேந' இத்யாதிக்கு வ்யாக்யாநம் - ஸ்ரீகௌஸல்யையார் இத்யாதி. நிவார்யமாணையத்யபி. ததாபி யென்றபடி. 'ஸூதன்' என்றால் - ஆப்ததை தோன்றுமோ? என்ன, ஸாரதிகள் இத்யாதி. இவனைப்போரப்பொலியச் சொல்லுங்காட்டில் - 'ஸூதேந' என்றும், 'ஸுயுக்தவாதிநா' என்றும், ஸுமந்த்ரனைப் போரப்பொலியச் சொல்லுங்காட்டி

---

* வல்லனென்றும் என்பதற்கு - வல்லனென்பதையும் என்று பொருள்கொண்டு, அநுஸந்தித்து என்று ஒருசொல் வருவித்து, வாக்யத்தை அந்வயிக்கவேணு மென்று தோன்றுகின்றது.

'இது அப்படியே' என்று விஶ்வஸித்து ஓடுகிற ஶோகம் தீரும்படி வார்த்தைசொல்லவல்லனுவது. "நிவார்யமாணா" (நிவார்யமாணு) - இவனாலே 'இதுவேண்டா' என்று தடுக்கப்படாநிற்கச் செய்தேயும். "ஸ்ம்ருதஶோககர்ஶிதா" (ஸ்ம்ருதஶோககர்ஶிதா) - இப்படி இவன் இவளைப் போரப்போலியச் சொல்லுங்காட்டில் நிவ்ருத்தமாகாதிறே, இவள் பிரிந்த விஷயத்தில் ஆற்றாமை நெடுநாள் கூடிப்பெற்ற பிள்ளையைப் பிரிந்தால் தரிக்கப்போகாதிறே. "நசைவதேவீவிரராம கூஜிதாத்" (நசைவதேவீவிரராமகூஜிதாத்) - பிறர்கண்ணீரையும் மாற்றி, இதுக்குமுன்பு ஶோகமும்புதியதுண்ணுதே போந்தவள், கூப்பிடுகிற கூப்பீட்டில்நின்றும் ஓவிற்றிலள்; கூப்பிடுகிற போதுதான் கேட்டார்க்கடைய இரக்கம் பிறக்கும்படி குயில்கூவினாற்போலேகாணும் கூப்பிடுவது. கூப்பிட்ட பாசுரம் "ப்ரியேதிபுத்ரேதிஸராகவேதிச" (ப்ரியேதிபுத்ரேதிசராகவேதிச) - பிரிந்தால் தரிக்கவொண்ணுதபடி எனக்குஇனியவரே! உம்மைப்பிரிந்தாருடைய ஆற்றாமைக்கு நிவர்த்தகரானவரே! ஸர்வரக்ஷகர்குடியிலே பிறந்து பெற்றதாயை நலியலாமோ! என்று அவள் கூப்பிட்டாற்போலே இவரும் கூப்பிடுகிருர்.



## முதற் பாட்டு.

சீலமில்லாச்சிறியனேலும் செய்வினையோபெரிதால்
ஞாலமுண்டாய் ஞான * மூர்த்தீ! நாராயணு! என்றென்று
காலந்தோறும்யானிருந்து கைதலைபூசலிட்டால்
கோலமேனிகாணவாராய் கூவியும்கொள்ளாயே.

ஆ.—ஆர்த்தருடைய ஆர்த்தியைப் போக்காதாயல்லை, ஆர்த்தியை அறியாதாயல்லை, ஆர்த்தியைப் போக்கமாட்டாதாயல்லை யென்றென்று காலந்தோறும் நான் இருந்து உன்னைத் தொழுது இரந்தால் கோலமேனி காண வருகிறிலை; உன்பாடே என்னைக் கூவியும் கொள்ளுகிறிலை; இப்படி உன் க்ருபைக்கு விஷயமல்லாதபடி என்னை அகற்றின இந்த மஹாபாபத்துக்கெல்லாம் சிடாதிகளிலும் அதிக்ஷுத்ரனான நான் ஆஶ்ரயமானபடி எங்ஙனேயோ? என்கிருர்.

ஒ.—முதற்பாட்டில்; நெடுங்காலம் கூப்பிடச்செய்தே நீ என்னை விஷயீகரியாதபடியாக நான்பண்ணின பாபத்தின்மிகுதி இருந்தபடி யென்? என்கிருர்.

[சீலம் என்று தொடங்கி] - நன்மையொன்றுமின்றிக்கே அதிக்ஷுத்ரனாயிருந்தேனேயாகிலும் சிதசிதீஶ்வரதத்த்வத்ரயத்திலும் பெரிது,நான்பண்ணின பாபம்.[ஞாலமுண்டாய் என்று தொடங்கி] - ஆபத்துக்குஉதவும் ஸ்வபாவனே! ஆபந்நிவாரணேபாயம் அறியுமவனே! நிருபாதிக பந்துவே! என்று பலகாலும் சொல்லி க்ஷணந்தோறும் நிரந்தரமாகத் தொழுது இருந்தால். கைதலைபூசலிடுகையாவது - தலையிலே கையைவைத்துக் கூப்பிடுகை யென்றுமாம். [கோலமேனி காணவாராய் கூவியும் கொள்ளாயே] - உன்னுடைய அழகிய திருவடியைக் காண வருவதும் செய்கிறிலை; நீ வராவிட்டால் என்னை அங்கே அழைத்துக்கொள்வதும் செய்கிறிலை.

---

லென்றபடி. போரப்போலிய - மிகவும் பூர்ணமாக. 'மஹதாதபஸா' என்றத்தைப்பற்ற, நெடுநாள் இத்யாதி. 'தேவீ' என்றதுக்கு பாவம் - பிறர் இத்யாதி. புதியது - நூதநமானது; ஸ்வல்பமென்றுமாம். ப்ரலாபாத் என்னுதே, 'கூஜிதாத்' என்றதுக்கு பாவம்-கூப்பிடுகிறபோது இத்யாதி. "கோகிலாநாதகூஜிதம்" என்னக்கடவதிறே. இரக்கம் - ஆர்த்ரதை. 'ப்ரிய' இத்யாதிக்கு பாவம் - பிரிந்தால் இத்யாதி. பெருமாளைப்பெற்றவளுக்கு நரகமில்லையாகையாலே, விஶ்லேஷதுஃகநிவர்த்தகத்வத்தை - புத்ரஶப்தார்த்தமாக அருளிச்செய்கிருர் - உம்மை இத்யாதி.

---

* மூர்த்தியென்றும் பாடமுண்டு.

ப·—முதற்பாட்டில், அகிலஸத்தையையும் நோக்கும் அஸாதாரண ஸம்பந்தத்தை யுடைய நீ என்னை அங்கீகரியாதொழிகைக்கு நான் பண்ணின பாபாதிஶயம் இருந்தபடியென்? என்கிறார்.

(அபேக்ஷாநிரபேக்ஷமாக ப்ரளயாபத்திலே), ஞாலம் - அகிலபதார்த்தத்தையும், உண்டாய் - அமுதுசெய்து ஸத்தையைநோக்கினவனே! ஞானம் - ஏவம்விதமான ரக்ஷணத்துக்கு விரகறிகைக்குறுடான விலக்ஷணஜ்ஞாநத்தை, மூர்த்தீ - வடிவாகவுடையவனே! நாராயணா - இப்படி விரகறிந்து ரக்ஷிக்கைக்கீடான அப்ருதக்ஸித்தஸம்பந்தத்தையுடையனானவனே! என்றுஎன்று - என்றென்று பலபடியும் உன் ஸ்வபாவத்தைச் சொல்லி, காலந்தோறும் - ஒருகாலமொழியாமல் எல்லாக்காலத்திலும், யான் - (வ்யதிரேகத்திலழியும்படியான ஸ்வரூபத்தையுடைய) நான், இருந்து - ('உன்னைக்காணவேணும்' என்கிற ஆசாபந்தமடியாக) வருந்தியிருந்து, கைதலை பூசலிட்டால்—கை தலையிலேயாம்படி மஹார்த்தியாகக் கூப்பிட்டால், கோலம்மேனி - தர்ஶநீயாகாரமான உன்வடிவை, காண - நான் கண்டு அநுபவிக்கும்படி, வாராய் - வருகிறிலை; (அது உன் தரத்துக்குப் போராதாகில்), கூவியும் கொள்ளாய் - என்னை அங்கே அழைத்துங்கொள்ளுகிறிலை; (ஆதலால், நான்), சீலம் இல்லா சிறியன் ஏலும் - நன்றான சரிதம் இன்றியே அறிவிலியான க்ஷுத்ரனாயிருந்தேனேயாகிலும், செய்வினை-(நீ ஜகத்ஸ்ருஷ்டிபண்ணுமோபாதி ஸங்கல்பமாத்ரத்தாலன்றியே) காயிகபர்யந்தமாக அநுஷ்டித்த பாபம், பெரிதால் - அதிமஹத்தாயிருந்ததிறே.

ஓ என்னும் அசை - வெறுப்பின்மிகுதியைக் காட்டுகிறது. சீலம்-ஶுசியான சரிதம்.

இ·—முதற்பாட்டில், 'நெடுங்காலம் கூப்பிடச்செய்தேயும் விஷயீகரியாதபடியாக நான்பண்ணின பாபத்தின்மிகுதி இருந்தபடி என்! என்கிறார்.

[சீலமில்லா] - ஶீலம் - வ்ருத்தம். 'இல்லா' என்கிறது-இல்லாமை; அதாகிறது - நன்மை யொன்றுமின்றிக்கேயிருக்கை. [சிறியனேலும்] - இதுக்குமுன்பு நன்மையில்லாவிட்டால் 'நன்மையுண்டாக்குவோம்'என்றாலும், அதுக்கும் ஆஶ்ரயமின்றிக்கேயிருக்கிறபடி. ஸ்வரூபம் அணுவாய் ஜ்ஞாநத்தாலே விபுவாயிருக்கிற ஆத்மவஸ்து ஆற்றாமையாலே அந்தஜ்ஞாநத்தையும் அழிந்து அணுபரிமாணமான ஸ்வரூபமேயாயிருக்கை. இப்படி அதிக்ஷுத்ரனாயிருந்தேனே யாகிலும். [செய்வினையோ பெரிதால்] - நான்பண்ணின பாபம் நிரங்குஶஸ்வாதந்த்ர்யத்திலும் பெரிது. ஈஶ்வரனைப்போலே ஸங்கல்பத்தாலே உண்டாக்கினேனல்லேன். என்ஸ்வாதந்த்ர்யத்தி லுள்ளது ஒன்றன்று; நான் சூழ்த்துக்கொண்ட பாபம். அவன் தந்த அறிவையும் கிளர்த்திக் கொண்டு அவனுடைய க்ஷமாதிகுணங்களுக்கும் அவ்வருகாம்படியிறே என்பாபத்தின் பெருமை. அவன்தந்த ஶக்திரூபாபந்நஜ்ஞாநமும் கார்யகரமன்றிக்கே அவன்குணங்களுக்கும் அவிஷயமா யிருக்கை. 'ஓ' என்றது, ஆஶ்ரயத்தின்சிறுமையையும், பாபத்தின்பெருமையையும் பார்த்து ஆஶ்சர்யத்திலேயாதல், விஷாதாதிஶயத்திலேயாதல். திருநாமஶ்ரவணத்தாலே உணர்த்தியிருந்ததாகில் இப்போது இவருக்குப் பாபமென்? என்னில்;—ஸத்தாதாரகமான விஷயத்தைப் பிரிந்திருக்கும்போது இதுக்கு அடியாயிருப்பதொரு பாபம் உண்டாகவேண்டாவோ? பெரிது என்றதுக்குத் தன்னைபோக்கிப் பரிச்சேதிக்கவொண்ணாது. "ஸமேநாவவிதஸ்தாநம்". தம்முடைய பாபப்ராசுர்யத்தை அநுஸந்தித்த அநந்தரம் அதுக்குப் பரிஹாரமாக அவனுடைய ஆபத்ஸகத்வத்தை அநுஸந்திக்கிறார். [ஞாலமுண்டாய்] - தந்தாமால் பரிஹரிக்க வொண்ணாத ஆபத்துக்கு உதவு மவனே! ஜகத்துக்காக வந்த நோவு ஒருவனுக்கே உண்டானால் உதவலாகாதோ? ஆபத்தில் கூப்பிட அறியாதார்க்கோ உதவலாவது? அறிந்து கூப்பிடுவார்க்கு உதவலாகாதோ? ப்ரளயங்கொள்ளை யான பூமி தன்னை யெடுத்துக்கொள்ளிலன்றோ நான் பாபத்தைப் போக்குகைக்கு ப்ராப்தியுள்ளது. [ஞானமூர்த்தீ] - ஆபத்ஸகனானாலும் ஆபந்நிவாரணோபாயம் அறியானாகில் ப்ரயோஜந மில்லையே என்னில்,—அக்குறையுமில்லை. நித்யஸம்ஸாரியாகச் சூழ்த்துக்கொள்ளும் அறிவு இத்

லாநின்றதிறே. பேணுகை - ஆசைப்படுகை. அத்தாலே - உபாஸநத்தைச் சொல்லுகிறது. பேணி வானோர்காணமாட்டாப் பீடு உண்டு - பெருமை; அத்தையுடைய ஸர்வேஸ்வரனை - நாணமில்லாச் சிறுதகையேன் நான் இங்கு அலற்றுவதேன்? ப்ரஹ்மாதிகளும் நித்யஸூரிகளுடைய கோடியிலேயாம்படியாகவிறே இவர் தம்மைச் சிறுக நினைத்திருக்கும்படி. (ச)



## ரு தாம் பாட்

அப்பனே' அடலாழியானே' ஆழ்கடலைக்கடைந்த
துப்பனே உன்தோள்கள்நான்கும் கண்டிடக்கூடுங்கொலென்று
எப்பொழுதும்கண்ணநீர்கொண்டு ஆவிதுவர்ந்துதுவர்ந்து
இப்பொழுதேவந்திடாயென்று ஏழையேன்நோக்குவனே.

ஆ.—(அப்பனே) இப்படி ப்ரஹ்மாதிகளுக்குங்கூட துர்த்தர்ஶனாயிருக்கச் செய்தே உன்னையே 'அப்பனே! ஆஶ்ரிதவிரோதி நிரஸநஸமாத்தமான திருவாழியையுடையவனே! ஆஶ்ரிதஸமீஹித நிர்வர்த்தநஶீலனே! உன்தோள்கள் நான்கும் கண்டிடக்கூடுங்கொல்?' என்று எப்பொழுதும் கண்ணநீர்கொண்டு ஆவிதுவர்ந்துதுவர்ந்து, இப்பொழுதே வந்திடாயென்று அபேக்ஷித்து உன்வரவு பார்த்திருப்பன்; என்ன சபலனோ? என்கிறார்.

ஒ.— அஞ்சாம்பாட்டில், ப்ரஹ்மாதிகளுக்கும் காணமுடியாதிருக்கிற உன் அழகைக் காணவேணுமென்று ஆசைப்பட்டு தரிக்கமாட்டாமையாலே 'இப்பொழுதே வந்திடாய்' என்று அபேக்ஷித்து, வரும்போது தப்பாமே காணவேணுமென்று பார்த்திருப்பன். என்னுடைய சாபலம் இருந்தபடி யென்? என்கிறார். [அப்பனே என்று தொடங்கி] - உபகாரகனே! ப்ரதிகூலநிரஸநஸ்வபாவமான திருவாழியை யுடையவனே! ஆஶ்ரிதருடைய அபேக்ஷிதங்கள் செய்து கொடுக்கைக்கு ஈடான ஸாமர்த்யத்தையுடையவனே! அழகிய தோளும் கையும் திருவாழியும் காணக்கூடுமேயோ? என்று. [எப்பொழுதும் என்று தொடங்கி] - உன் அழகை நினைத்து எப்போதும் கண்ணநீர் பாயாநின்றுகொண்டு ப்ராணன் அற உலர்ந்து.

ப.—அநந்தரம், தேவர்களுக்கும் துர்லபனாயிருக்கச்செய்தேயும் ஆஶ்ரிதரானவர்களுக்கு அருந்தொழில் செய்தும் அபேக்ஷிதங்கொடுத்தவனென்று நினைத்து, காண்கைக்கு மிகவும் த்வரியாநின்றேன் என்கிறார்.

அப்பனே - (ஆஶ்ரிதவிஷயத்தில் ஸத்தையேதொடங்கி) உபகரிக்கும் ஸ்வபாவனே! அடல் ஆழியானே - அவர்களுக்கு விரோதியைநிரஸிக்கும் ஸ்வபாவத்தையுடைய திருவாழியையுடையவனே! ஆழ்கடலை - அகாதமான கடலை, கடைந்த - கடைந்து அவர்களுக்குஅபேக்ஷிதங்கொடுக்கும், துப்பனே-பெருமிடுக்கனே! (அக்காலத்திலவர்களுக்குஅநுபாவ்யமான), உன் தோள்கள் நான்கும் - உன்தோள்கள் நாலையும், கண்டிட கூடுங்கொல் - கண்டதாய்விடக் கூடுமோ?

ப்ரதமாத்யாயே-த்ருதீயபாதே(-உ௯)இதம் ஸூத்ரம்.மயர்வறமதிநலமருளப்பெற்ற இவர், ஹேயரான ப்ரஹ்மாதிகளும் காணமாட்டாதவனை நான் அலற்றுவதென்? என்று அவர்களிலும் தம்மைத் தாழச்சொல்லலாமோ? என்ன, ப்ரஹ்மாதிகளும் இத்யாதி. ஆணிசெம்பொன்மேனியெந்தாய் - என்கண்முகப்பே-காணவந்து - தாமரைக்கண்பிறழ - நின்றருளாயென்றென்று - பேணியென்று தொடங்கி, அப்பனே - நான் இங்கலற்றுவதென்? நாணமில்லாச்சிறுதகையேன் இத்யந்வயஃ. செம்பொன் - சிவந்தபொன். (ச)

என்று - என்றுநினைத்து, எப்பொழுதும் - ஸர்வகாலமும், கண்ணநீர்கொண்டு - கண்ணும் கண்ணீருமாய், ஆவி - ப்ராணனானது, துவர்ந்து துவர்ந்து - உலர்த்திமேலுலர்த்தியாக ஶோஷித்து, இப்பொழுதே - (ஸத்தையழிவதற்குமுன்னே) இக்ஷணத்திலே, வந்திடாய்-வரவேணும், என்று - என்று த்வரித்து அபேக்ஷித்து, ஏழையேன் - சபலனான நான், நோக்குவன் - ('இவ்வவஸ்த்தையில் வரக்கூடும்' என்றுநினைத்து ஸம்஭ாவனையுள்ள ப்ரதேசத்தைப்) பாராநின்றேன்.

இ.—அஞ்சாம்பாட்டில், இப்படி துர்ல்லபமான விஷயத்தைக் காண ஆசைப்பட்டு தரிக்கமாட்டாமையாலே காண்கையிலே த்வரிக்கிறது என்னுடைய சாபலாதிஶயமிறே என்கிறார்.

[அப்பனே] - நீ முகம்காட்டாதவளவிலும் உன்னையே சொல்லிக் கூப்பிடும்படி புகுரநிறுத்தின மஹோபகாரகனே! [அடல் ஆழியானே] - ப்ரதிகூலநிரஸநஸ்வபாவார்ணவமாய் தர்ஶநீயமான திருவாழியையுடையவனே! [ஆழ்கடல் இத்யாதி] - உன்னை உகவாதே ப்ரயோஜநத்தைக் கணிசித்தார்க்கு அகாதமான கடலைக் கடைந்து அபேக்ஷிதங்களைச் செய்யும் ஸாமர்த்யத்தையுடையவனே! [உன்தோள்கள் இத்யாதி] - கடல்கடைகிறபோது வ்யாபரித்த தோள்களை யாயிற்று இவர்கள் ஆசைப்படுகிறது; உன்தோள்கள் நாலையும் கண்டுவிடக்கூடுமோ? என்று. [எப்பொழுதும் இத்யாதி] - ஸர்வகாலமும் கண்ணும் கண்ணநீருமாய்க்கொண்டு; கிடைக்கைக்கு ஸம்஭ாவனையுள்ள விஷயத்திற்போலே க்லேஶப்படுகை. [ஆவி துவர்ந்துதுவர்ந்து] - ப்ராணனானது பசையற உலர்ந்து. [இப்பொழுதே வந்திடாய் என்று]-ஆர்த்தியே செப்பேடாக இனிஒரு க்ஷணமும் தாழாதே இப்போதே வரவேணுமென்று ஆசைப்படாநின்றேன். [ஏழையேன் நோக்குவனே] - வர ஸம்஭ாவனை யின்றிக்கே யிருக்கச் சாபலாதிஶயத்தாலே வரும்போது காணவேணுமென்று அத்திக்கைப் பாராநின்றேன்.

ஈடு.— அஞ்சாம்பாட்டு. ப்ரஹ்மாதிகளுக்கும் காணமுடியாதிருக்கிற உன்னுடைய வடிவழகைக் காணவேணும் என்று ஆசைப்படாநின்றேன். என்சாபலம் இருந்தபடியேன்? என்கிறார்.

[அப்பனே] - நீ முகங்காட்டாதபோதும் நான் உன்னையேசொல்லிக் கூப்பிடும்படி எனக்கு இவ்வளவான மஹோபகாரத்தைப் பண்ணினவனே! [அடல்இத்யாதி] - அடல் - மிடுக்கு. எப்போதுமொக்க யுத்தோந்முகமாய், விரோதிநிரஸநஶீலமாய், என் ப்ரதிபந்தகத்தைப் போக்குகைக்குப் பரிகரமான திருவாழியை யுடையவனே! [ஆழ்கடல்இத்யாதி] - 'உன்னைஉகவாதே ப்ரயோஜநாந்தரமேஅமையும்' என்னுமவர்களுக்கும், "[illegible]" (அப்ரமேயோமஹோததி) என்று - ஒருவரால் அளவிட வொண்ணாதபடியான கடலைக் கடைந்து கொடுத்த ஸாமர்த்யத்தையுடையவனே! [உன் இத்யாதி] - அவர்களைப்போலே உப்புச்சாறு கொண்டு போமவரல்லரே இவர். அக்கடலைக் கடைகிறபோது வ்யாபரித்த தோள்களைக் காணக்

---

அஞ்சாம்பாட்டு - அப்பனே இத்யாதி. 'வானோர்காணமாட்டா' என்று கீழே நோக்காக, 'உன்தோள்கள்நான்குங்கண்டிடக்கூடுங்கொல், ஏழையேன்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - ப்ரஹ்மாதிகளுக்கும் இத்யாதி.

பிரிந்துநோவுபடாநிற்க, 'அப்பனே' என்கிறதென்? என்ன, நீ முகம் இத்யாதி. 'அடல்' என்றதுக்கு அர்த்தாந்தரம் - எப்போதுமொக்க யுத்தோந்முகமாய் என்று. அடல் - மிடுக்கும், யுத்தோந்முகத்வமும். பலிதார்த்தம - விரோதிநிரஸநஶீலமாய் என்று. மிடுக்கைச்சொன்னதுக்கு ஭ாவம் - என்ப்ரதிபந்தகத்தை இத்யாதி. கீழ்ப்பதத்தோடே இதுக்கு ஸங்கதி அருளிச்செய்யாநின்றுகொண்டு ஶப்தார்த்தம் - உன்னையுகவாதே இத்யாதி "[illegible] । [illegible]" இதி விபீஷண꞉. உன்னை - அடலாழியானான உன்னை. அளவிட பரிச்சேதிக்க. துப்பன் - ஸமர்த்தன். 'ஆழ்கடலை' இத்யாதியைக் கூட்டி ஭ாவம் - அவர்களைப்போ( இத்யாதி. பின்னை எப்படிப்பட்டவர் இவர்? என்ன, அக்கடலை இத்யாதி. அப்படி தோள்கள் ஆகர்ஷகமா

காணும் இவர் ஆசைப்படுகிறது. மதுரக்கோழஞ்சாறுகொண்ட சுந்தரத்தோளிறே. உன் தோள்கள் நாலையும் கண்டேனுய்விடக் கூடுமோ? என்று. [எப்போழுதும்] - கிடைக்கைக்கு ஸம்பாவனையுள்ள நிலம்போலே கண்ணநீர் பாயாநிற்பராயிற்று. [ஆவி] - என்ப்ராணனுனது. [துவர்ந்து துவர்ந்து] - பசையறஉலர்ந்து; இங்ஙனேஉலர்ந்து முடிந்துபோகவும்பெறுதே, குணுதிகவிஷயமாகையாலே 'காணலாம்' என்னும் நசை முடியவும் ஒட்டாமையாலே, தரிப்பது திரிய உலருவதான நிலை உருவச்சேல்லுமாயிற்று; 'சென்றற்றது, சென்றற்றது' என்னும்நிலை உருவச்சேல்லுமாயிற்று. [இப்போழுதே வந்திடாயேன்று] - தம் ஆர்த்தியே சேப்பேடாக அரைக்ஷணம் தாழாதே வரவேணு மென்று. [நோக்குவனே] - வர ஸம்பாவனையுள்ள திக்கைப் பாராநிற்பன். வருகைக்கு அவன்பக்கலிலும் ஏதேனும் நினைவு உண்டாயோ இவர் இப்படி செய்கிறதென்னில், [ஏழையேன்] - அதோன்றில்லை, என்சாபலமேயிறே உள்ளது. ஆழ்வான் பணித்த வரதராஜஸ்தவத்திலே ஒருஶ்லோகத்தைக் கேட்டு *எம்பெருமானுர் 'இப்பாசுரங்கேட்டால் பெருமாள் இரங்காமையில்லை; ஆழ்வான், உன்முகத்தைக் காட்டிக்காணுய்' என்று பார்த்தருளினுர். (ரு)



## ஆரும் பாட்டு.

நோக்கிநோக்கிஉன்னைக்காண்பான் யானெனதாவியுள்ளே
நாக்குநீள்வன்ஞானமில்லை நாள்தோறும்என்னுடைய
ஆக்கையுள்ளும்ஆவியுள்ளும் அல்லபுறத்தினுள்ளும்
நீக்கமின்றிஎங்கும்நின்ருய் நின்னையறிந்தறிந்தே.

யிருக்குமோ? என்ன, மதுரக்கோழ இத்யாதி. நாய்ச்சியார்திருமொழி - ஒன்பதாந்திருமொழி - முதற்பாட்டு. 'சிந்துரச்செம்பொடி' இத்யாதி. மந்தரம்நாட்டிஅன்று மதுரக்கொழுஞ்சாறு இத்யாதி - மந்தரபர்வதத்தைக் கடலில் நடுவேநட்டு, இந்த்ரன் துர்வாஸஶ்ஶாபோபஹதனுன அன்று, மதுரமாய் - போக்யமான அழகிய அம்ருதமாகிற ஸாராம்ஶத்தைக் கொண்ட ஸுந்தரமான தோள்களையுடையவனென்றபடி. கொழுமை - அழகும், பெருமையும், செவ்வியும்: சப்தார்த்தம் - உன்தோள்கள் இத்யாதி. 'துவர்ந்து துவர்ந்து' என்கிற வீப்ஸைக்கு இரண்டர்த்தம். முந்தினது - மீமிசையாய், 'பசையறவுலர்ந்து' என்று. அதாவது - மிகவுமுலர்ந் தென்றபடி. பசையற உலர்ந்தால், மேல் 'இப்பொழுதேவந்திடாய்' இத்யாதி சொல்லக்கூடுமோ? என்கிற ஶங்கையிலே, வீப்ஸைக்கு அர்த்தாந்தரம் - இங்ஙனே இத்யாதி. உருவச்சேல்லும் - முடியச்செல்லும். விவரணம் - சென்றற்றது இத்யாதி. சேப்பேடு - தாம்ரஶாஸநம். அது - நினைவு. கிடையாததிலும் சாபலம் நடந்துபார்க்கிறதுக்கு ஸம்வாதம் - ஆழ்வான் இத்யாதி. பணித்த - அருளிச்செய்த. ஒருஶ்லோகத்தை - 'நீலமேகநிபம்' இத்யாதி ஶ்லோகத்தை. 'அப்பனே' என்றுதொடங்கி நோக்குவன், ஏழையேன் இத்யந்வயః. (ரு)

* இவ்விடத்துக்கு அடையவளைந்தான். எம்பெருமானுரித்யாதி:— அதாவது - எம்பெருமானுர் ஆழ்வானுக்குவந்த ஆபத்தைக் கண்டு திருவுள்ளம் மிகவும் புண்பட்டு ஆழ்வானைப்பார்த்தருளி 'ஆழ்வான்! நான் உம்மை இப்படி காணமாட்டுகிறேனில்லை; ஸ்வரூபவிருத்தமானுலும் ஆகியிடுக. நீர் பெருமாள்ஸந்நிதியிலே சென்று ஸ்தோத்ரம்பண்ணி நம் அபீஷ்டத்தைப் பெற்றுவாரீர்' என்ன, இவரும் சென்று ஸ்தோத்ரம்பண்ணித் திரும்பியெழுந்தருள, 'இரங்கியருளினுரோ?' என்று கேட்டருள, 'இரங்கியருளினுரில்லை' என்று விண்ணப்பஞ்செய்ய, 'உம்முடைய அபேக்ஷிதோத்ற விண்ணப்பஞ் செய்தீரோ?' என்ன, 'அப்படியே விண்ணப்பஞ் செய்தேன்' என்ன, ஆனுல், அதிலே ஒரு ஶ்லோகஞ்சொல்லீரென்று அத்தைக் கேட்டருளி 'இப்பாசுரம் கேட்டால் பெருமான் இரங்காமையில்லை; ஆழ்வான்! முகத்தைக்காட்டிக்காணுய்' என்று பார்த்தருளினுராம். இது சாபலாதிஶயமிறே. விண்ணப்பஞ்செய்த ஶ்லோகமாவது - த்வாமுஷாரஹஸ்ஜம் என்ற இதுவும்.

**ஆ.**—(நோக்கி.) என்னுடைய ஆக்கையுள்ளும் ஆவியுள்ளும் அல்லபுறத்தினுள்ளும் நீக்கமின்றி எங்கும் ஸந்நிஹிதனாய் நின்றுவைத்து உன்னை எனக்குக் காட்டாதொழிகிறது உன்னைக்காட்ட நினையாமையென்னுமிடம் அறிந்துவைத்து, பின்னையும் நோக்கிநோக்கி உன்னைக் காண்பான் நான் என்னுள்ளே ஆசைப்படாநிற்பன்; என்ன அஜ்ஞனோ? என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், என்பக்கலிலே ஸதா ஸந்நிஹிதனாயிருந்து வைத்து உன்னைக் காட்டாதொழிகிறது நீ உன்னைக்காட்ட நினையாமை என்று அறிந்துவைத்தே ப்ரதிக்ஷணம் காணவேணுமென்று ஆசைப்படாநின்றேன்; அதுக்கு அடி; அறிவுகேடு என்கிறார்.

[நோக்கி என்று தொடங்கி] - உன்னைக்காண்கைக்காக எங்கும்பார்த்து உன்னைக் காணவேணுமென்று வாயாரச்சொல்லமாட்டாதே என்நெஞ்சினுள்ளே மிகவும் ஆசைப்படாநின்றேன். ஞானமில்லை - அறிவில்லை. [நாடோறும் என்று மேலுக்கு] - என்றுமொக்க என்னுடைய ஆத்மாவிலும் ஶரீரத்திலும் மற்றும் இந்த்ரியாதிகளிலும் பிரியாதே எங்கும் ஸந்நிஹிதனாயிருந்துவைத்துச் செய்யாதொழிகிறது செய்யநினையாமையிறே என்று மிகவும் அறிந்து

பு.—அநந்தரம், என்பக்கலிலே ஸர்வதா ஸந்நிஹிதனாய்க்கொண்டு என்னுள்ளே நிற்கும்படி அறிந்திருக்க, 'கண்ணாலே காணவேணும்' என்று ஆசைப்படுகிறது என் அறிவுகேடிறே என்கிறார்.

நாடோறும் - ஒருநாள் ஒழியாமல், என்னுடைய - என்னுடைய, ஆக்கையுள்ளும்-சரீரத்துக்குள்ளான ஹ்ருதயத்திலும், ஆவியுள்ளும் - (அதுக்கபிமாநியான) ஆத்ம ஸ்வரூபத்தினுள்ளும், அல்ல - (அதுக்குக்கரணங்களாய்) இவையிரண்டுமென்றியே, புறத்தினுள்ளும் - (ஸ்வரூபபஹிர்ப்பூதமான) இந்த்ரியாதிகளிலும், நீக்கம் இன்றி - ஒன்றையும் விடாதே, எங்கும் - எல்லாஸ்தலத்திலும், நின்றாய் - (அந்தராத்மாவாய்) நின்றவனே! (இப்படி ஸதாஸந்நிஹிதனாக), நின்னை - உன்னை, அறிந்து அறிந்து - எப்போதும் அறிந்துவைத்து, உன்னை - (போக்யமான வடிவையுடைய) உன்னை, காண்பான் — கண்ணாலேகாண்கைக்காக, நோக்கிநோக்கி - பலகாலும் பார்த்து, யான் — (சபலனான) நான், எனது - என்னுடைய, ஆவியுள்ளே - நெஞ்சுக்குள்ளே, நாக்கு நீள்வன் - ஆசைப்படாநின்றேன்: ஞானம் - ('அந்தராத்மாவானவன் அதீந்த்ரியன்' என்கிற) அறிவு, இல்லை - இல்லாமையாலே. நாக்குநீளுகையாவது - ஆசைப்பாட்டுக்கு ஸூசகம்.

**இ.**—ஆறும்பாட்டில், என்பக்கலிலே ஸதாஸந்நிஹிதனாய்வைத்து உன்னைக் காட்டாதொழிகிறது காட்ட நினையாமையிறே என்று அறிந்திருக்கச்செய்தேயும் பின்னையும் ஆசைப்படுகிறது என் அறிவுகேடிறே என்கிறார்.

[நோக்கி நோக்கி] - அடுத்து அடுத்துப் பார்த்து. [உன்னைக்காண்பான்] — ஸர்வாதிகனாய் துர்லபனான உன்னைக் காண்கைக்காக. [யான்] - அதிசபலனான நான். [எனது ஆவியுள்ளே நாக்குநீள்வன்] — வாயாற் சொல்லமாட்டாதே, நெஞ்சினுள்ளே ஆசைப்படாநின்றேன். [ஞானமில்லை] - இதுக்கு அடி என் அறிவுகேடிறே. இவ்விஷயத்தில் ஆசையும் அறிவுகேடாகிறபடி என்? என்னில்,—'ஸதாஸந்நிஹிதனாய் ஶக்தனாயிருக்க முகங்காட்டாதொழிகிறது - வர நினையாமை' என்று இருக்கமாட்டாதொழிகிறது அறிவுகேட்டாலேயன்றோ? [நாடோறும்] - ஸர்வகாலமும். [என்னுடைய ஆக்கையுள்ளும்] - பேற்றுக்கு ப்ரதிபந்தகமான ஶரீரத்தினுள்ளும். [ஆவியுள்ளும்] - பெறுகைக்கு இருக்கிற ஆத்மாவினுள்ளும். [அல்லபுறத்தினுள்ளும்] - மற்றும் இந்த்ரியங்களிலும். [நீக்கமின்றி] — பிரியாதே எங்கும் வ்யாபித்து நின்றாய். [நின்னை அறிந்து அறிந்தே] - இப்படி ஸந்நிஹிதனாய்வைத்துச் செய்யாதொழிகிறது செய்ய நினையாமையென்று மிகவும் அறிந்துவைத்தே ஆசைப்படுகிறது மதிகேடிறே.

ஈடு.— ஆறும்பாட்டு. 'என்பக்கலிலே ஸதாஸந்நிஹிதனாயிருந்தே உன்னைக் காட்டா தொழிகிறது நீ நினையாமை' என்று அறிந்துவைத்தே, காண ஆசைப்படாநின்றேன்; அதுக்கு அடி என் அறிவுகேடு என்கிறார்.

[நோக்கிநோக்கி] - அடுத்தடுத்து அவன் வரும் திக்கையே பார்ப்பராயிற்று. இப்படி பார்க்கிறது என்னப்ரயோஜநத்துக்கு? என்னில்,—[உன்னைக்காண்பான்]-உன்னைக் காணவேணு மென்னும் நசையாலே [யான்இத்யாதி] – ஒருவிஷயத்திலே சபலரானாரை, 'இவன் இவ்விஷ யத்திலே நாக்குநீட்டாநின்றான்' என்பர்களிறே; அப்படியே என் ஹ்ருதயத்திலே ஆசைப்படா நின்றேன்; வாய்விட்டுச் சொல்லமாட்டாதே. அதுக்குஅடியேன்? என்னில்,— [ஞானமில்லை] - இது இருந்தபடியால் என்தனை யறிவுகேடரில்லை 'இவ்விஷயத்தைக் காணவேணும்' என்று ஆசைப்படுகிற இது அறிவுகேடாகவேண்டுகிற தேன்? என்னில்,—[நாடோறும்இத்யாதி]-எல்லாக் காலத்திலும் உன்னைப் பெறுகைக்கு ப்ரதிபந்தகமான என்ஶரீரத்திலும், பெறவிருக்கிற ஆத்மாவி லும்; இவை யொழிந்த ப்ரதிபந்தகமான கரணங்களிலும் விடாதே எங்கும் புக்குநின்றாய். கிழிச் சீரையிலே தனம் கிடக்கப் புறங்கால் வீங்குவாரைப்போலே காணும் இவர்படி. [நின்னைஅறிந்தறி ந்து] - 'இதின்ரக்ஷணத்துக்கு ப்ராப்தனாவது, நிதானமறிந்து பரிஹரிக்கைக்கு ஸர்வஜ்ஞனாவது, தொடங்கினது தலைக்கட்டவல்ல ஸர்வஶக்தியாவது 'ஐயோ' என்று இரங்குகைக்கு நீர்மையுடை யனாவது, ஸதாஸந்நிதியுண்டாவது; இப்படியிருக்க, இவன் முகங்காட்டாதொழிகிறது, செய்யநினை யாமையிறே' என்று இருக்கமாட்டாதொழிகிறது என்அறிவுகேடா மித்தனையிறே. நான் ப்ராப்த னாய் நீ அப்ராப்தனாயிருக்கிறாயல்லை; நான் ஸர்வஜ்ஞனாய் நீ அஜ்ஞனாயிருக்கிறாயல்லை நான் ஸர்வ ஶக்தியாய் நீ அஶக்தனாயிருக்கிறாயல்லை, நான் விபுவாய் நீ அணுவாயிருக்கிறாயல்லை;இத்தலை நோவு படவிட்டு நிர்க்ருணனாயிருக்கிறாயல்லை; 'உடையவனாய்வைத்து உடைமை நோவுபடவிட்டிருக் கிறது செய்ய நினையாமையிறே' என்று ஆறியிருக்கமாட்டாதொழிகிறது என்அறிவுகேடா மித்தனை யிறே. (சு)

---

ஆறும்பாட்டு - நோக்கி இத்யாதி. 'நின்னையறிந்தறிந்தே, நாக்குநீள்வன், ஞானமில்லை' என்ற திலே நோக்காக அவதாரிகை - என்பக்கலிலே இத்யாதி.

அடுத்தடுத்து - புந:புந:. காண்பான் - காண்கைக்காக. 'நாக்குநீள்வன்' என்றதுக்கு - சாபலம் பண்ணுவனென்று அர்த்தம் விவக்ஷித்து; அதுக்கு லௌகிக ஸம்மதியைக் காட்டுகிறார் - ஒருவிஷயத்திலே இத்யாதி. 'எனதாவியுள்ளே' என்றதுக்கு ஹாவம் - வாய்விட்டு இத்யாதி. அதுக்கு அடி - சாபலம்பண்ணு கைக்கு அடி. அப்ரஹாவியாக அர்த்தாந்தரம் - இதிருந்தபடியால் இத்யாதி. சரீரம் புண்யபாபகர்மமூல மாகையாலே உன்னைப்பெறுகைக்கு இத்யாதி அருளிச்செய்கிறார். 'ஆக்கையுள்ளும்' என்று தொடங்கி, 'நீக்கமின்றியெங்கும்நின்றாய் - உன்னைக்காண்பான் - நாக்குநீள்வன்' என்றதுக்கு வ்யாக்யாதா ஸ்வாபிப்ரா யமாக அருளிச்செய்கிறார் - கிழிச்சீரை இத்யாதி. கிழிச்சீரை - சாளிகை. 'நாராயணா' என்றதைப்பற்ற. ப்ராப்தனாவது என்றது. 'ஞானமூர்த்தி' என்றதைப்பற்ற, ஸர்வஜ்ஞன் என்றது. 'அப்பனே' என்றத் தைப்பற்ற, ஸர்வஶக்தி என்றது. 'ஞாலமுண்டாய்' என்றதைப்பற்ற, ஐயோவென்று இத்யாதி. 'நீக்க மின்றியெங்கும்நின்றாய்' என்றதைப்பற்ற, ஸதாஸந்நிதியுண்டாவது என்றது. இப்படி இருக்க இத்யா திக்கு ஹாவம் - 'செய்யநினையாமையிறே' என்றறிந்தாறியிருக்கமாட்டாதே 'காணவேணும்' என்று ஆசைப் படுகிறது என் அறிவுகேடாமித்தனை யென்று கீழுக்தத்தை முகபேதேந விவரிக்கிறார் - நான் ப்ராப்தனாய் இத்யாதி. 'நீக்கமின்றியெங்குமின்றாய்' என்றதைப்பற்ற. நான்விபுவாய் இத்யாதி. நின்னையறிந்தறிந்து - இப்படி ஸதாஸந்நிஹிதனான உன்னை எப்போதும் அறிந்தென்றபடி. "யிமஶவிஓ" இத்யாத்யநுஸந் தேயம். நாடோறும் என்று தொடங்கி, நின்னை அறிந்தறிந்தே, நோக்கிநோக்கி என்றுதொடங்கி நாக்கு நீள்வன் ஞானமில்லை இத்யந்வய:. (சு)

# ஏழாம் பாட்டு.

அறிந்தறிந்துதேறித்தேறி யானெனதாவியுள்ளே
நிறைந்தஞானமூர்த்தியாயை நின்மலமாகவைத்துப்
பிறந்தும்சேத்தும் * நின்றிடறும் பேதைமைதீர்ந்தொழிந்தேன்
நறுந்துழாயின்கண்ணியம்மா! நானுன்னைக்கண்டுகொண்டே.

ஆ.—(அறிந்தறிந்து.) ஜந்மஜராமரணாதி ஸாம்ஸாரிகதுஃகம் அபிபவிக்கிற தென்னும் பயத்தாலே கூப்பிடுகிறீரோ? ஏன்தான் இப்படி ஆர்த்தராய்க்கிடந்து நீர்கூப்பிடுகிறது? என்னில்,—ஜ்ஞாநஶக்தி பலைஶ்வர்யாதி குணங்களாலும் ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்யாதி கல்யாண குணங்களாலும் பரிபூர்ணனான உன் திறத்திலுள்ள விஶத விஶததர விஶததம ப்ரத்யக்ஷதாபந்ந நிரதிஶயஹக்திரூப ஜ்ஞாநத்தாலே, என்னுடைய அந்த ஸாம்ஸாரிகதுஃகமெல்லாம் நிரஸ்தமாயிற்றிறே; அதுக்கன்று நான் இப்போது படுகிறது என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், 'நீர் கிடந்து கூப்பிடுகிற தென்? நம்மையறிவித்து உம்முடைய ஸம்ஸாரதுஃகமெல்லாம் கெடுத்தோமிறே' என்ன, 'அத்தால் போராது' என்கிறார்.

[அறிந்து என்று தொடங்கி] - உன்னுடைய ப்ரஸாதத்தாலே அறிவுபிறந்து அது ஒருகாலுக்கு ஒருகால் அந்தஃகரணம் தெளிவதுஞ்செய்து தெளிந்த மநஸ்ஸிலே பரிபூர்ணஜ்ஞாநஸ்வரூபனான உன்னை விஶததமமாக அநுபவித்து. [பிறந்தும் என்று தொடங்கி] - நிரஸ்தஸாம்ஸாரிக துஃகனானேன். அதிபரிமளமான திருத்துழாய்மாலையையுடைய ஸர்வேஶ்வரனான உன்னை நான் கண்டுகொண்டு.

ப.—அநந்தரம், என்நெஞ்சுக்குள்ளே நிற்கச்செய்தே ப்ரகாசிப்பித்த உன்வடிவழகை அநுஸந்தித்து ஸாம்ஸாரிகமான அறிவுகேடு தீர்ந்தேனித்தனை; அந்த போக்யமான வடிவைக் கண்ணாலே காணவேணுமென்றன்றோ இப்போது ஆசைப்படுகிறது என்கிறார்.

நறு - பரிமளப்ரசுரமான, துழாய் - திருத்துழாயையுடைத்தான, கண்ணி - திருமாலையையுடைய, அம்மா - ஸர்வாதிகனே! நான் - (உன்போக்யதையிலே சபலனான) நான், உன்னை - (நிரதிசயபோக்யனாய் ப்ராப்தனான) உன்னை, கண்டுகொண்டு - (நீ ப்ரகாசிப்பிக்க என் நெஞ்சாலே அபரோக்ஷித்துச்) கண்டுகொண்டு, அறிந்து அறிந்து - இப்படி தந்த மயர்வறமதிநலத்தாலே உன்னுடைய ப்ராப்யஹாவத்தையும் ப்ராபகஹாவத்தையும் அறிந்தறிந்து, தேறித்தேறி-(தத்தத்விஷயமான வ்யவஸாயபர்யந்தமான) தெளிவுகளை யுடையேனாய், யான் - (இப்படி லப்தஜ்ஞாநவ்யவஸாயனான) நான், எனது ஆவியுள்ளே - என் ப்ராணாஶ்ரயமான நெஞ்சுக்குள்ளே, நிறைந்த ஞானமூர்த்தியாயை - பரிபூர்ணஜ்ஞாநஸ்வரூபனான உன்னை, நின்மலமாக -ஸம்ஶயவிபர்யயமாகிற மலம் அறும்படி, வைத்து — (ப்ரதிஷ்டிதமாக) வைத்து, பிறந்தும்செத்தும் - பிறப்பதுசாவதாய், நின்று-நின்று, இடறும் - † அலமருகிற, பேதைமை - அறிவுகேடு, தீர்ந்தொழிந்தேன் - தீர்ந்துவிட்டேனித்தனை. மார்வும் மாலையுமான வடிவழகைக் கண்ணிட்டுக் காணப்பெற்றிலேனென்று வாக்யஶேஷம்.

இ.—ஏழாம்பாட்டில், நம்மைஅறிவித்து உம்முடையஸம்ஸாரதுஃகத்தைக் கெடுத்தோமாகில், நீர்கூப்பிடுகிறதென்? என்ன, 'பெற்றஅம்ஶம்இதுஉண்டு, அத்தால்போராது' என்கிறார்.

---

* 'நின்றலறும்' என்றும் பாடமென்பர். † 'அலற்றும்' என்றும் காண்கிறதென்பர்.

[அறிந்து அறிந்து தேறித் தேறி] - பரத்வமென்ன, பஜநீயத்வமென்ன, ஸௌலப்யமென்ன, அபராதஸஹத்வமென்ன: இவ்வடைவிலே ஜ்ஞாநம்பிறக்கப்பிறக்க அந்தஃகரணமும் க்ரமத்தாலே தெளிந்து. [யான்] - ஜ்ஞாநம்பிறந்த நான். [எனது ஆவியுள்ளே] - தெளிந்த மநஸ்ஸிலே. பரிபூர்ணஜ்ஞாநத்தையே ஸ்வரூபமாகவுடைய உன்னை விஶதமாக அநுபவித்து. [பிறந்தும் இத்யாதி] - பிறப்பது இறப்பதாய் நின்று தடுமாறித்திரிகிற அறிவுகேடு போகப்பெற்றேன். "இங்நின்றநீர்மையினியாமுறாமை" என்று நான் அபேக்ஷித்தது பெற்றேன். [நறுந்துழாயின் கண்ணி அம்மா] - இவ்வளவு பிறக்கைக்கு முதல் காட்சியைச் சொல்லுகிறார். வைத்த வளையத்தைக் காட்டியாயிற்று, இவரை அநந்யார்ஹ ராக்கிற்று. [நான்] - பெற்ற அம்ஶத்தாலே த்ருப்திபிறவாத நான். [உன்னைக் கண்டுகொண்டு] - நிரதிஶயபோக்யனான உன்னைக் கண்டுகொண்டு. அறிந்து அறிந்து தேறித் தேறி யென்று அந்வயம்.

௭டு.— ஏழாம்பாட்டு. 'நீர் நம்மைப் போர இன்னாதாகாநின்றீர்; உமக்கு ஒன்றும்உதவிற்றிலோமோ? நாம் ஒன்றும் உபகரித்திலோ மென்றேயோ நீர் நினைத்திருக்கிறது?' என்ன, 'சிறிது செய்தமை உண்டு; இம்வம்ஶம்பெற்றேன்; எனக்குஇத்தால் போராது' என்கிறார்.

[அறிந்துஅறிந்து தேறித்தேறி] - முதல் திருவாய்மொழியிலே பரத்வத்தை அநுஸந்தித்தார்: அதுவிஷயமானவாறே பிறப்பதோரு தெளிவுண்டிறே; அநந்தரம்-பஜநீயனென்று அநுஸந்தித்தத்தாலே பிறப்பதோரு தெளிவும், அநந்தரம் – ஸுலபனென்று அநுஸந்தித்தத்தாலே பிறப்பதோரு தெளிவும், பின்பு - அபராதஸஹனென்று அநுஸந்தித்தத்தாலே பிறப்பதோரு தெளிவும்; இப்படி க்ரமத்திலேயிறே திருவாய்மொழி முடியநடந்தது; இதெல்லாம் மாநஸாநுபவமிறே. அன்றிக்கே, [அறிந்துஅறிந்து தேறித்தேறி] - நீ மயர்வறமதிநலம் அருளுகையாலே, பரஸ்வரூபம் - "மனனுணர்வளவிலன், பொறியுணர்வவையிலன்; எதிர்நிகழ்கழிவினு மினனிலன், மிகுநரையிலன், உணர்முழுநலம், இனன்" என அறிந்து, அந்தப்பரஸ்வரூபத்தினுடைய யாதாத்ம்யம் - "அது நமதுவிதிவகையே" "நெஞ்சினால்நினைப்பான் யவ னவனாகும் நீள்கடல்வண்ணன்" என்கிறபடியே "அர்ச்சாவதாரபர்யந்தமான ஆஶ்ரிதபாரதந்த்ர்யம்" என்றுஅறிந்து அத்தாலேபிறப்பதோரு தெளி

---

ஏழாம்பாட்டு - அறிந்தறிந்து இத்யாதி. இத்திருவாய்மொழியிலே கீழும்மேலும் விஶ்லேஷமாயிருக்க, இப்பாட்டு - ப்ரீதியாய்ச் சொல்லுமது ப்ரகரணவிருத்தமாகையாலே, ப்ரகரணத்துக்குச் சேர அநவாப்தியாக அவதாரிகை - நீர் இத்யாதி. போர - மிகவும். இன்னாதாகாநின்றீர் - வெறுத்தீராய்நின்றீர். இவ்வம்சம் பெற்றே னென்றது - மயர்வறமதிநலமருள, அத்தாலே, சாவதுபிறப்பதான அறிவுகேடு தவிரப் பெற்றே னென்றபடி.

வீப்ஸாத்வயத்துக்கு அர்த்தம் - முதல் இத்யாதி. பஜநீயனென்றது - 'வீடுமின்முற்ற'த்திலே. ஸுலபனென்றது - 'பத்துடையடியவ'ரிலே. அபராதஸஹனென்றது - 'அஞ்சிறை'யிலே. 'அறிந்து - தேறி, அறிந்து தேறி' என்று அந்வயிப்பது. இப்படி திருவாய்மொழிதோறும் அறிவும் தெளிவுமாய்ச் சென்றால் அநுபவமுண்டே; கூப்பிடுகிறதென்? என்ன, இதெல்லாம் இத்யாதி. அர்த்தபஞ்சகபரமாக்கி வீப்ஸைக்குத் தாத்பர்யாந்தரம் - அன்றிக்கே அறிந்தறிந்து இத்யாதி. அதாவது - பரஸ்வரூபத்தையறிந்து தேறி, அந்தப் பரஸ்வரூபத்தினுடைய யாதாத்ம்யத்தை யறிந்து தேறி யென்றபடி. இப்படியே மற்ற நாலுக்கும் கண்டுகொள்வது. பரஸ்வரூபத்துக்குச் சிதசித்வைலக்ஷண்யம் தொடக்கமானவை - அஸாதாரண தர்மங்கள். ஜ்ஞாநாநந்தங்கள் தொடக்கமானவை - ஆத்மாவுக்கு அஸாதாரணதர்மங்கள். பரஸ்வரூபத்துக்கும், ஸ்வஸ்வரூபத்துக்கும் யாதாத்ம்யம் - ஆஶ்ரிதபாரதந்த்ர்யமும், ததீயசேஷத்வமும். ஸ்வீகாரமென்

வும்;ஸ்வஸ்வரூபம் - "சென்றுசென்று பரம்பரமா யாதுமின்றித்தேய்ந்தற்று நன்றுதீதென்றறிவரிதாய் நன்ருய்ஞானம்கடந்திருக்கும்" என்றுஅறிந்து, அதினுடைய யாதாத்ம்யம் - "சிறுமாமனிசரா யென்னையாண்டா ரிங்கேதிரிய – நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப் புகுதல் - உறுமோ" என்றும், "தம்மடியாரடியோங்களே" என்றும் "ததீயசேஷத்வபர்யந்தமாயிருக்கும்" என்றுஅறிந்து அத்தாலே பிறப்பதோரு தெளிவும்; உபாயஸ்வரூபம் - "நாகணைமிசைநம்பிரான்சரணே சரண்நமக்கு" என்றுஅறிந்து, அதினுடைய யாதாத்ம்யம்-"சைதந்யக்ருத்யமாய் அதிகாரிவிசேஷணமான ஸ்வீகாரத்தையும் பொறுத ஸஹகாரிநைரபேக்ஷ்யம்" என்றுஅறிந்து அத்தால் பிறப்பதோரு தெளிவும்; பலஸ்வரூபம் - "ஒழிவில்காலமெல்லாம் உடனாய்மன்னி வழுவிலாவடிமைசெய்கை" என்று அறிந்து, அதினுடைய யாதாத்ம்யம் – "உன்தன்திருவுள்ள மிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்க வின்புறுதும்" என்றுஅறிந்து அத்தாலே பிறப்பதோரு தெளிவும்; விரோதிஸ்வரூபம் – "யானே யென்தனதேஎன்றிருக்கை" என்றுஅறிந்து; அதினுடைய யாதாத்ம்யம் - "கைங்கர்யத்திலஹங்காரகர்ப்பமான மமகாரம்" என்றுஅறிந்து, அத்தாலே பிறப்பதோரு தெளிவும். [யான்] - இப்படி நீயறிவிக்க அறிந்த யான். [எனதாவியுள்ளே] - என்னுடைய ஹ்ருதயத்தினுள்ளே. [நிறைந்தஞான மூர்த்தியாயை]-பரிபூர்ணஜ்ஞாந ஸ்வரூபனை உன்னை. பெற்றஅம்சத்தால் த்ருப்தனாகவொண்ணாதபடியான வைலக்ஷண்யத்தையுடைய உன்னை. [நின்மலமாகவைத்து] - விசததமமாக அநுஸந்தித்து. [பிறந்தும்இத்யாதி]-அறிவுபிறந்தஅநந்தரம், "இந்நின்றநீர்மை யினியாமுருமை" என்று அபேக்ஷித்த அதுபெற்றேன். சாவதுபிறப்பதாய்க்கொண்டு தடுமாறுகிற அறிவுகேடு தவிரப்பெற்றேன். [நறுந்துழாய்இத்யாதி] - இவ்வறிவு பிறக்கைக்கு அவனிட்ட பச்சை இருக்கிறபடி. வைத்த வளையத்தைக் காட்டி அவ்வடிவிலே குருகுலவாஸத்தைப் பண்ணுவித்து அறிவுபிறப்பித்தாயிற்றுத் தனக்கு ஆக்கிக்கொண்டது *(பரிமளப்ரசுரமான திருத்துழாயையுடைத்தான திருமாலையையுடைய ஸர்வாதிகனே!) [நான் உன்னைக் கண்டுகொண்டு] - உன் போக்யதையை அறிந்த நான், நிரவதிகபோக்யபூதனை உன்னைக் கண்டுகொண்டு. நறுந்துழாயின் கண்ணியம்மா! நான் உன்னைக் கண்டுகொண்டு - அறிந்தறிந்து தேறித்தேறி யான் எனதாவியுள்ளே நிறைந்தஞானமூர்த்தியாயை நின்மலமாக வைத்து, பிறந்தும் செத்தும் நின்றிடறும் பேதைமை தீர்ந்தொழிந்தேன்; இது நான்பெற்ற அம்சம் என்கிறார். (எ)

---

கிறது - ப்ரபத்தியை. உபாயத்தில் ஸ்வரூபஜ்ஞாநம் - 'அவன் உபாயம்' என்று அறிகை. அவதாரணார்த்தம் - யாதாத்ம்யஜ்ஞாநம். 'சரணே' என்கிற அவதாரணத்துக்குத் தாத்பர்யம் - சைதந்யக்ருத்யமாய் இத்யாதி. பலத்தில், 'கைங்கர்யம் புருஷார்த்தம்' என்றது - ஸ்வரூபஜ்ஞாநம்; யாதாத்ம்யம் - தனக்கும் அவனுக்கும் பொதுவன்றிக்சே அவனுக்காகவே செய்கை 'அஹங்காரமமகாரங்கள் விரோதி' என்று அறிகை - விரோதிஜ்ஞாநம்; 'கைங்கர்யத்தில் அஹங்காரமமகாரங்கள் விரோதி' என்று அறிகை - விரோதி யாதாத்ம்யஜ்ஞாநம். யாதாத்ம்யம் - அதினுடைய சரமகாஷ்டை. கீழேசொக்காக ஹாவம் - இப்படி இத்யாதி. ஆவி - ஹ்ருதயம். ஶப்தார்த்தம் - பரிபூர்ண இத்யாதி. மூர்த்தி - ஸ்வரூபம். 'நறுந்துழாயின்கண்ணியம்மா' என்றத்தைக் கடாக்ஷித்து, 'நிறைந்த' இத்யாதிக்குப் பலிதம் - பெற்ற அம்சத்தால் இத்யாதி. 'பேதைமைதீர்ந்தொழிந்தேன்' என்றதுக்கு ஹாவம் - அறிவு இத்யாதி. அபேக்ஷித்தஅதுபெற்றேன் - தேஹநிவ்ருத்தியுண்டாகப்பெற்றேன். சப்தார்த்தம் - சாவது இத்யாதி. பேதைமை - அறிவுகேடு. ரஸோக்தி - இவ்வறிவு இத்யாதி. பச்சை - உபஹாரம். ஶ்யாமளதை - வாஸ்தவார்த்தம். உக்தார்த்தோபபாதநம் - வைத்த இத்யாதி. 'நறுந்துழாயின்கண்ணியம்மா' என்றத்தைக் கடாக்ஷித்து - நிரவதிகபோக்யபூதனை உன்னை என்றது. இப்பாட்டு வாக்யசேஷமாய்க் கிடக்கிறது. அதாவது - பேதைமை தீர்ந்தொழிந்தேனித்தனை, மார்பும்மாலையுமான வடிவழகைக் கண்ணிட்டுக் காணப்பெற்றிலேனென்று வாக்யசேஷம். அந்வயப்ரகாரம் - நறுந்துழாய் இத்யாதி. (எ)



---

* குண்டலித வாக்யம் - க்வாசித்கமும் அரும்பதத்தி லெடுக்கப்படாதது மென்பர்.

# எட்டாம் பாட்டு.

**கண்டுகோண்டேன்கைகளார நின்திருப்பாதங்கள்மேல்**
**எண்டிசையுமுள்ளபூக்கோண்டு ஏத்தியுகந்துகந்து**
**தோண்டரோங்கள்பாடியாடச் சூழ்கடல்ஞாலத்துள்ளே**
**வண்டுழாயின்கண்ணிவேந்தே ! வந்திடகில்லாயே.**

**ஆ.**—(கண்டுகொண்டு.) உம்முடைய ஸாம்ஸாரிக துஃகமெல்லாம் போயிற்றாகில், மற்று எதுக்காகக் கூப்பிடுகிறது? என்னில்;— உன்னை என்கண்களாலே கண்டுகொண்டு என்கைகளார நின்திருப்பாதங்கள்மேல் எண்திசையுமுள்ள பூக்கொண்டு ஏத்தி உகந்துகந்து ஸ்ரீவைஷ்ணவர்களோடே கூடநின்று பாடியாடவேணு மென்று ஆசைப்பட்டிறே கூப்பிடுகிறது; வண்துழாயின்கண்ணிவேந்தே ! நான் இப்படி படாநிற்கச்செய்தே வந்தருளுகிறிலை என்று எம்பெருமானை இன்னாதாகிறார்.

**ஒ.**—எட்டாம்பாட்டில், 'இனி உமக்குச் செய்யாதது என்?' என்னில்,—இஸ்ஸம்ஸாரத்திலே தேவரீரைக்கண்டு அடியோங்கள் எல்லாவடிமைகளும் செய்து உஜ்ஜீவிக்கும்படி வருகிறிலை என்கிறார்.

[கண்டுகொண்டு என்று தொடங்கி] - என்கண்கள் விடாய்தீரக் கண்டுகொண்டு, என் கைகள் பூரிக்கும்படி நிரதிஶய போக்யமான உன் திருவடிகளிலே மிகவும் அடிமை செய்து நிரவதிகப்ரீதியாலே ஸ்ரீவைஷ்ணவர்களோடே நான் பாடியாட. [சூழ் என்று தொடங்கி] - ஸம்ஸாரத்தினுள்ளே ஸர்வேஶ்வரத்வஸூசகமான திருத்துழாய்மாலையையுடைய ஸர்வேஶ்வரனான நீ.

**ப.**—அநந்தரம், உக்தமான போக்யதையில் அபிநிவேசத்தாலே கண்டு அநுபவித்து அடிமைசெய்ய ஆசைப்படுகிறார்.

கண்டுகொண்டு - ("நானுன்னைக்கண்டுகொண்டு" என்கிற நெஞ்சிற்காட்சியளவன்றியே கண்ணாலே) பரிபூர்ணமாகக்கண்டு அநுபவித்து, என்கைகள்-("தாயவனேயென்றுதடவும்") என் கைகள், ஆர - பூர்ணமநோரதமாம்படி, நின் - (ப்ராப்தனான) உன்னுடைய, திருப்பாதங்கள் மேல் — திருவடிகளின்மேலே, (ஆதராநுரூபமாக), எண்திசையும் - ஸகலதிக்குக்களிலும், உள்ள - உண்டான, பூக்கொண்டு - புஷ்பங்களை ஸம்பாதித்து, ஏத்தி - ஸ்தோத்ரபூர்வமாகப் பரிமாறி, உகந்துஉகந்து - தத்தத்ப்ரவ்ருத்திகள்தோறும் ப்ரீதிபரவசராய், தொண்டரோங்கள் - (உன்பக்கலிலே) அத்யந்தாபிநிவேஶரூபபக்தியையுடைய நாங்கள், பாடியாட - (ப்ரீதிக்குப்போக்குவீடாகப்) பாடுவதாடுவதாம்படி, கடல்சூழ் ஞாலத்துள்ளே - கடல்சூழ்ந்த பூமியான ஸம்ஸாரத்துக்குள்ளே, (முன்புஎனக்குநெஞ்சில்ப்ரகாசிப்பித்த),வள் - விலக்ஷணமான, துழாய்க்கண்ணி - திருத்துழாய்மாலையையுடைய, வேந்தே - நாயகனே ! வந்திடகில்லாய் - வந்திடுகிறிலை.

**இ.**—எட்டாம்பாட்டில், பெற்ற அம்ஶம் சொன்னாராய், பெறாத அம்ஶம் இது என்கிறார்.

[கண்டுகொண்டு] - "காணவிரும்புமென்கண்களே" என்று விடாய்த்த கண்களின் விடாய் தீரக் கண்டுகொண்டு. [என்கைகள் ஆர] - "தடவுமென்கைகளே" என்று உறாவின என்கைகளின் விடாய் தீர; 'வயிறார உண்ணவேணும்' என்னுமாபோலே. [நின்திருப்பாதங்கள் மேல்] - அப்ராப்தவிஷயத்தில் அநுவர்த்தநம் முன்பும் உண்டிறே. ப்ராப்தமாய் நிரதிஶய

போக்யமான திருவடிகளிலே. [எண்திசையும் உள்ள பூக்கொண்டு ஏத்தி] - தம்விடாய்க்கும் விஷயவைலக்ஷண்யத்துக்கும் அநுரூபமாக. [உகந்துஉகந்து] - ப்ரவ்ருத்தி தோறும் ப்ரீதனாய். [தொண்டரோங்கள் பாடி ஆட] - அடிமையில் சுவடறிந்த நாங்கள் ப்ரீதிப்ரேரிதராய்ப் பாடுவது ஆடுவதாம்படியாக. "கேசவன்தம"ருக்குப்பின்பு தனியரல்லரே. 'இது, ஒருதேசவிசேஷத்திலே "ஸாதகா ஸாமகாய நாஸ்தே" என்று களிக்குமதன்றோ?' என்ன, அங்ஙனாகவொண்ணாது. [சூழ்கடல் ஞாலத்துள்ளே] - ஸம்ஸாரத்துக்குள்ளே வரவேணும். எங்கேனும் விடாய்த்தாரை எங்கேனும் விடாய் தீர்க்கவோ? [வண்துழாய் இத்யாதி] - ஸர்வைஸ்வர்யஸூசகமான திருத்துழா பாலே அலங்க்ருதனான ஸர்வேஸ்வரனே! இங்கே வரவும் வேணும்: அங்குள்ளார்க்குக் காட்சி கொடுக்கும் ஒப்பனையோடே வரவேணும் என்கை. [வந்திடகில்லாயே] – வருகிறிலை.

ஈடு.— எட்டாம்பாட்டு. பெற்றஅம்சம் சொன்னாராய், பெறாத அம்சம் இதுவென்கிறார் இதில்.

[கண்டுகோண்டு] - "காணவிரும்பு மென்கண்கள்" என்று காணப்பெறாதே பட்டினி விட்ட கண் பட்டினி தீரும்படி கண்டுகோண்டு. "அரவிந்தம்போன்று நீண்டகண்ணனைக் கண்ணாரக்கண்டுகோண்டு" என்கிறபடியே, இக்கண்களின் வயிறாரக் கண்டுகோண்டு. [என்கைகளார] - "தாயவனேயென்றுதடவுமென்கைகள்" என்கிற கைகளின் உறுவுதல் தீரும்படியாக; கலியர் 'வயிறாரவுண்ண' என்னுமாபோலே. [நின்திருப்பாதங்கள்மேல்] - உனக்கு தாரகமுமாய் போக்யமுமான திருவடிகளிலே. பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக்கமலமிறே, தாரகம் தானேயாய் நின்றதிறே. அன்றிக்கே, எனக்கு ப்ராப்தமுமாய் போக்யமுமான உன்திருவடிகளிலே. உன் தேனேமலரும் திருப்பாதத்திலே. முன்பும்அநுவர்த்தித்துப்போருமதுஉண்டிறே விஷயங்களிலே;அங்ஙனன்றிக்கே, ப்ராப்தனான உன்திருவடிகளிலே. "த்வத்பாதபங்கஜபரிக்ரஹ நந்யஜந்மா ஸாபயாஸம்" (த்வத்பாதபங்கஜபரிக்ரஹதங்யஜங்மாபூயாஸம்) என்கிறதுக்கு ஆளவந்தார் 'வார்த்தை அழகிது, வகுத்தவிஷயத்திலே யாகப் பெற்றிலோம்' என்று அருளிச்செய்தார். [எண்திசை

---

எட்டாம்பாட்டு - கண்டுகோண்டு இத்யாதி. 'வந்திடகில்லாயே' என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை - பெற்றஅம்சம் இத்யாதி.

கண்டு என்னாதே, 'கண்டுகொண்டு' என்றதுக்கு பாவம் - காணவிரும்பும் இத்யாதி. 'கண்டுகொண்டு' என்றால் 'வயிறுநிறையும்படி' என்கிற அர்த்தம் காட்டுமோ? என்ன, அரவிந்தம் இத்யாதி. அரவிந்தம்போலே நீண்ட கண்ணையுடையவனைக் கண்ணிறையக்கண்டுகொண்டே னித்யர்த்தः திருமொழி - இரண்டாம்பத்து - அஞ்சாந்திருமொழி - எட்டாம்பாட்டு, 'பெண்ணாகி' இத்யாதி. 'கைகளார' என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - கலியர் இத்யாதி. கலியர் - பசியர். 'திரு' என்று - போக்யதையும், 'பாதம்' என்று - தாரகத்வமும் விவக்ஷித்துத் தாத்பர்யம் - உனக்கு இத்யாதி. அவனுக்கு தாரகமாய் போக்யமுமாயிருக்குமோ அவன்திருவடிகள்? என்ன, பிடித்து இத்யாதி. திருக்கையாலேபிடித்துத் திருப்பவளத்திலே வைத்து ஆஸ்வாதித்து புஜிக்கும் திருவடிகளென்றபடி. பெரியாழ்வார் திருமொழி - மூன்றாந்திருமொழி- முதற்பாட்டு, 'சீதக்கடல்' இத்யாதி. தாரகமென்றது - 'உண்ணும்' என்றதின் தாத்பர்யம். இங்கே - "வடிவமயிஸயத்யாஜ்யாநு" இத்யாத்யநுஸந்தேயம். ப்ராப்தமுமாய்போக்யமுமான இதி: ப்ராப்ததையும், போக்யதையும் - 'நின்' என்றதிலே விவக்ஷிதம். இவர்க்கு போக்யமாயிருக்குமோ? என்ன, உன்தேனே இத்யாதி. போக்யமானவென்றால் போராதோ? 'ப்ராப்தமுமாய்' என்றதுக்குக் கருத்தென்? என்ன, முன்பும் இத்யாதி. போக்யதையுண்டானாலும் அப்ராப்தமா யிருக்குமாகில் அது த்யாஜ்யமென்னுமதுக்கு ப்ரமாணம் - த்வத்பாத இத்யாதி. "த்வத்பாதபங்கஜபரிக்ரஹநந்யஜந்மாஸாபயாஸமித்யபிநிவேசகல்பிதோநः | ஹாத்ருந்ருதோஷவணநாயவமெதஸாவாகணாமீராஷிதாநிகவாமதாஸி" இதி மாலதீமாதவநாடகே. ஒருதிக்கென்னாதே, 'எண்டிசையும்' என்று - அசக்யமாகச்

யும் இத்யாதி] - விஷயாநுரூபமாகவும் என்னுடைய அபிநிவேசாநுரூபமாகவும். தம்முடையஆஶாநுரூபமாக 'ஆசையிலுள்ளவையெல்லாம் வேணும்' என்கிறார். அவ்வாசைதான் திக்குப்பட்டிறேயிருப்பது. அங்ஙனேயிறே கைங்கர்யருசியுடையார் வார்த்தை யிருப்பது; கலியர் 'கலஅரிசிச்சோறு உண்ணவேணும்' என்னுமாபோலே. "ஸஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்றிறே இருப்பது. [உகந்துஉகந்து] - ப்ரீதி மாறாதே செல்லும்படியாக. [தொண்டரோங்கள்]- இக்கைங்கர்யத்திலே சுவடறிந்த நாங்கள், "கேசவன்தமர்"க்குப் பின்பு தனியரல்லரிறே. [பாடியாட] - ப்ரீதிப்ரேரிதராய்ப் பாடுவேது ஆடுவேதாம்படி. இதுவாகில் முன்பே நாம்செய்வதாக இருந்ததோன்றன்றோ? இஶ்ஶரீரஸம்பந்த மற்றால் ஒரு தேஶவிசேஷத்திலே கொண்டுபோய், "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்னும்படி பண்ணுகிறோ மென்ன; அதுவோ நான்அபேக்ஷிக்கிறது? [சூழ்கடல்ஞாலத்துள்ளே] - எங்கேனும் விடாய்த்தாரை எங்கேனும் விடாய் தீர்க்கவோ? சூழ்கடல்ஞாலத்துள்ளே நான் காண வரவேணும். [வண்துழாயின்கண்ணி வேந்தே] - ஸம்ஸாரத்துக்குள்ளே காட்டுமிடத்தில், அங்குள்ளாருக்குக் காட்சிகொடுக்குமாபோலே காட்டவும் வேணும்; நித்யஸூரிகளுக்குக் காட்சிகொடுக்கும் ஒப்பனையோடே காட்டவும் வேணும். [வந்திடகில்லாயே] - "கூவியுங்கொள்ளாய்" என்றது பற்றாதேன்கிறார். வந்திடுகிறிலை. இது நான்பெறாத அம்ஶம். இதுதான் இருந்தபடி யேன்? ப்ரக்ருதிஸம்பந்தமற்றமையும் இல்லை, கைங்கர்யம் பெற்றமையும்இல்லை; இங்ஙனேயிருக்க 'இவ்வம்ஶம் பெற்றேன், இவ்வம்ஶம் பெற்றிலேன்' என்கிறபடி என்? என்னில்;— ஒன்று உத்தேஶ்யமாய், மற்றையது அதுக்கு உறுப்பாக வருமதிறே. 'நாமும் முதலிலே 'இந்நின்றநீர்மை யினியாமுறாமை' என்றோமாகில் அவனும் ஶக்தனுயிருந்தானாகில், இது கழிந்ததேயன்றோ' என்று அத்தைப் பெற்றாராக நினைத்திருந்தார்; கைங்கர்யம் அவஶ்யம் பெற்றல்லது நிற்கவோண்ணாமையாலே, அது கைப்புகுராமையைப் பற்றப்பெற்றிலோ மேன்கிறார். (௮)

---

*சொல்லக் கூடுமோ? என்ன, விஷயாநுரூபம் இத்யாதி. ரஸோக்தி - தம்முடைய இத்யாதி. ஆசை - திக்கும். திக்குப்பட்டென்றது - 'எண்டிசையும்' என்றத்தைப் பற்ற. இதுக்கு பலிதம் - அங்ஙனேயிறே இத்யாதி. இப்படி அஶக்யத்தைச் சொன்ன பேருண்டோ? என்ன, கலியர் இத்யாதி. 'கைங்கர்யருசியுடையார்வார்த்தை' என்றதுக்கு ப்ரமாணம் - அஹம்ஸர்வம் இத்யாதி. 'உகந்துகந்து' என்கிற இது விஶிஷ்டவிதி. அதாவது - உகக்கைக்காகவும், பாடியாடுகைக்காகவு மென்றபடி. கீழே நோக்கி ஶாவம்- இக்கைங்கர்யத்திலே இத்யாதி. 'தொண்டரோங்கள்' என்று பஹுவசநமாகச் சொல்லுவானேன்? என்ன, கேசவன்தமர் இத்யாதி. 'சூழ்கடல்' இத்யாதிக்கு அவதாரிகை - இதுவாகில் இத்யாதி. முன்பே- 'இந்நின்றநீர்மையினியாமுறாமை' என்றபோதே. 'வந்திடகில்லாய்' என்றதுக்கு பலிதம் - காணவரவேணும் என்றது. வேந்தே - ஸ்வாமிந்! விவரணம் - நித்யஸூரிகளுக்கு இத்யாதி. வண்டுழாயின்கண்ணி வேந்தே - அழகிய திருத்துழாய்மாலையையுடைய நாயகனே! இதி சப்தார்த்தஃ. வந்திடகில்லாயே - வருகிறிலை. இதுக்கு ஶாவம் - கூவியும் இத்யாதி. பற்றாது - போராது. தடஸ்த்தசங்கை - இதுதான் இத்யாதி. இரண்டும் அவிஶிஷ்டமாயிருக்க 'பிறந்தும்செத்தும்' இத்யாதியாலே ப்ரக்ருதிஸம்பந்த நிவ்ருத்திரூபமான அம்ஶம் பெற்றேன், இது பெறாத அம்ஶ மென்று சொல்லுகிறபடி யென்? என்று ஶங்காதாத்பர்யம். பரிஹாரம் - ஒன்று இத்யாதி. ஒன்று - கைங்கர்யம். மற்றையது - ப்ரக்ருதிஸம்பந்தநிவ்ருத்தி. அதுக்கு உறுப்பாய் - கைங்கர்யத்துக்கு சேஷமாய். விவரணம் - நாமும் இத்யாதி- ஆகையாலே, நாமும் என்று கூட்டுவது. க்ரமேண அந்வயஃ.* (அ)



# ஒன்பதாம் பாட்டு.

இடகிலேனென்றட்டகில்லேன் ஐம்புலன்வெல்லகில்லேன்
கடவனகிக்காலந்தோறும் பூப்பறித்தேத்தகில்லேன்
மடவன்னெஞ்சங்காதல்கூர வல்வினையேன் அயர்ப்பாய்த்
தடவுகின்றேன்எங்குக்காண்பன் சக்கரத்தண்ணலையே?

**ஆ.**—(இடகிலேன்.) எம்பெருமானைக் காண்கைக்கு உபாயத்வேந பரிக்லுப்தமான கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்க ளொன்றும் எனக்கு இன்றியேயிருக்கச்செய்தே, பகவத் குணங்களிலே விழும் ஸ்வபாவமாய் விழுந்தால் எம்பெருமான்தன்னாலும் எடுக்கவொண்ணாத வன்மையை யுடைத்தாயிருந்த என்நெஞ்சம் காதல்கூர, அதினாலே அறிவழிந்து தடவாநின் றேன்; எங்ஙனே காணும்படி? என்கிறார்.

ஒ.—ஒன்பதாம் பாட்டில், எம்பெருமானைக் காண்கைக்கு ஈடான கர்மயோகாத்யு பாயங்களின்றிக்கே யிருக்கிற நான் காணவேணு மென்று ஆசைப்பட்டால் காண்கைக்கு உபாய முண்டோ? என்கிறார்.

[இடகிலேன் என்று தொடங்கி] – எம்பெருமான் இனியனாம்படி பசித்தார்க்குச் சோற்றையிடுதல், தாஹித்தார்க்குத் தண்ணீர்வார்த்தல் செய்யமாட்டுகிறிலேன். அர்த்தலோபத் தாலே அவை செய்யாவிட்டால் இந்த்ரியங்களை வெல்லவும் மாட்டுகிறிலேன். [கடவனாகி] - அதிலே கடவனாய். [மடவல்நெஞ்சம் என்று தொடங்கி]–பகவத்குணங்களிலே விழும் ஸ்வபாவ மாய் விழுந்தால் எம்பெருமான்தன்னாலும் எடுக்கமுடியாதபடியான நெஞ்சில் ஸ்நேஹம் மிக் குத் திருவடிகளில் தாஸ்யரஸத்தை அறிந்துவைத்தே நினைத்தபடி கிடையாமைக்கு ஈடான பாபத்தைப் பண்ணின நான்; ஐஸ்வர்யஸூசகமான திருவாழியை யேந்தின அழகையுடைய ஸர்வேஸ்வரனை.

ப.—அநந்தரம், அநுபாவ்யமான திருவாழியையுடைய என்நாயனை அகிஞ்சநனாய் வைத்து ஆசைப்பட்ட நான் எங்கே காண்பேன்? என்கிறார்.

ஒன்றுஇடகிலேன் ஒன்றுஅட்டகில்லேன் - பசியும் தாஹமு முடையார்க்கு ஒருபிடி சோற்றை யிடுதல் ஒருமிடறுதண்ணீர்வார்த்தல் செய்யமாட்டுகிறிலேன்; (இப்படிதாநரூபமான கர்மயோகமில்லாமையாலே, ஜ்ஞாநயோகத்துக்கு உறுப்பாக), ஐம்புலன் - இந்த்ரியங்களைந்தை யும், வெல்லகில்லேன் - (விஷயங்களிற்போகாமல்) நியமிக்க மாட்டுகிறிலேன்; கடவனாகி - (அதடி யான பக்தியோகசரீரத்தில் அந்வயிக்கும்படி) நியதனாய்க்கொண்டு, காலந்தோறும்-(ஆராதநாநு ரூபமான) காலந்தோறும், பூப்பறித்து - புஷ்பங்களை ஸம்பாதித்து, ஏத்தகில்லேன் - ஆராதித்து ஸ்துதிக்க மாட்டுகிறிலேன்; (இப்படி அகிஞ்சநனாயிருக்கச்செய்தே), மடம்-(பற்றினவிஷயத்திலே) ப்ரவணமாய், வல் - ஒருவராலும் விடுவிக்கவொண்ணாத சிக்கனவையுடைத்தான, நெஞ்சம்- நெஞ்சானது, காதல்கூர - அபிநிவேசம் விஞ்சிவர, வல்வினையேன் - (ததநுரூபமான அநுபவத் தைப்பண்ணப்பெறாத) ப்ரபலபாபத்தையுடைய நான், அயர்ப்பாய் - அறிவுகேட்டையுடையே னாய்க்கொண்டு, சக்கரம் - போக்யமான திருவாழியையுடைய, அண்ணலை - நாதனை, தடவுகின் றேன் - ('காணலாம்' என்று) தேடாநின்றேன்; எங்குக்காண்பன் - எங்கே காணக்கடவேன்?

**இ.**—ஒன்பதாம் பாட்டில், காண்கைக்கு முதலின்றிக்கேயிருக்க, சாபலத்தாலே கூப் பிட்டால் காண்கைக்கு உபாயமுண்டோ! என்கிறார்.

[இடகிலேன் ஒன்று அட்டகில்லேன்] - பசித்தார்க்குச் சோற்றையிடுதல் தாஹித்தார்க்குத் தண்ணீர்வார்த்தல் செய்யமாட்டுகிறிலேன். "யஜ்ஞதானதபஃகர்ம" என்கிறபடியே தாநம் கர்மயோகாந்தர்ப்பூதமாயிருக்க, அதுக்கு ஆளாகிறிலேன் என்கை. [ஐம்புலன் வெல்லகில்லேன்]- அர்த்தலோபத்தாலே அவை செய்யாவிட்டால் இந்த்ரியங்கள் விஷயத்தில் பட்டிபுகாதபடி நியமிக்க மாட்டிற்றிலேன். [கடவனாகி] - நியதனாய். [காலந்தோறும்] - ஸமாராதநத்துக்கு விஹிதமான காலத்திலே. [பூப்பறித்து] — திருப்பள்ளித்தாமம் பறித்தல் பரிமாறுதல் செய்யப்பெற்றிலேன். [ஏத்தகில்லேன்] - "ஸததங்கீர்த்தயந்தஃ" என்கிறபடியே திருநாமஸங்கீர்த்தநம் பண்ணிற்றிலேன். இவை உண்டாயிற்றாகில் பக்தி ஶரீரத்திலே நிவேஶிக்கலாம்; அதுவுமில்லை என்கிறார். இவற்றினுடைய ஸ்வரூபநிஷேதம் பண்ணுகிறதன்று, உபாயத்வத்தை நிஷேதிக்கிறது. [மடவல் நெஞ்சம்] - மடமென்று-மென்மை; பகவத்குணப்ரஸங்கத்திலே ஶிதிலமாகை. வல்நெஞ்சம் — பகவத்குணங்களிலே விழுந்தால் ஈஶ்வரனாலும் மீட்கமுடியாதிருக்கை. [காதல்கூர]-ஸ்நேஹம் மிக. [வல்வினையேன்] - ப்ரேமாநுரூபமாகக் காணப்பெறாதபடி பாபத்தைப் பண்ணின நான். காதலுக்கு விஷயம் பெற்றேனல்லேன். இத்தை அகஞ்சுரிப்படுத்தப் பெற்றேனல்லேன். ஆஶாலேஶமுடையார்க்கு முகங்கொடாதவனாய் இழந்தேனல்லேன். என் பாபம் இருந்தபடி என்? [அயர்ப்பாய்] - அறிவுகேட்டையுடையேனாய் முன்னேவந்து நின்றாலும் காணமாட்டாதபடி தடவாநின்றேன். "நதத்ருஶ்வாம்ஶிகாஸஸ்ரு" என்கிறபடியே. [எங்குக்காண்பன்] - ஒருகைம்முதலின்றிக்கே யிருக்கக் கூப்பிடாநின்றேன்; எங்கே காணப்பெறுகிறேன்? [சக்கரத்தண்ணலையே]- கையுந் திருவாழியுமான சேர்த்தியிலேயாயிற்று இவர் அகப்பட்டது.

ஈடு.— ஒன்பதாம்பாட்டு. எம்பெருமானைக் காண்கைக்கு ஈடான கர்மயோகாத்யுபாயங்களொன்றுமின்றிக்கே யிருக்கிற நான் 'காணவேணும்' என்று ஆசைப்பட்டால், காண்கைக்கு உபாயமுண்டோ? என்கிறார்.

[இடகிலேன்] - ஆர்த்தவிஷயத்தைக் கண்டால் 'ஐயோ!' என்று இரங்கிச் சிலஇடில், அது ஸர்வேஶ்வரன் திருவுள்ளத்துக்குச் சாலவுகப்பிறே; அங்ஙனொன்றும் செய்யப்பெற்றிலேன். [ஒன்றுஅட்டகில்லேன்] - கையில் த்ரவ்யத்தை அவிழ்த்திடாவிட்டால், உடம்புநோவத் தண்ணீர் சுமந்து வார்க்கலாமிறே; அதுவும் செய்திலேன். [ஐம்புலன்வெல்லகில்லேன்] - 'பிறர்க்குஒன்று வேணும்' என்று இராவிட்டால், 'எனக்கு' என்னுமதுதான் தவிரப்பெற்றேனோ? ஶ்ரோத்ராதிகள் விஷயங்களிலே பட்டிபோகாதபடி பரிஹரித்திலேன். [கடவனாகி] - சாஸ்த்ரங்களிற் சொல்லுகிறபடியே, அடைத்த காலங்களிலே புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு தேவர் திருவடிகளிலே ஸமாராதநம் பண்ணிற்றிலேன். இவர் ஸமாராதநம்பண்ணியறியாரோ? என்னில்;— நூல்பிடித்தாற்போலே சாஸ்த்ரங்களில் ஸாதநரூபமாகச் சொல்லுகிற ஸமாராதநத்தில் இவர்க்கு

---

ஒன்பதாம்பாட்டு - இடகிலேன் இத்யாதி. பூர்வார்த்தத்தையும், 'எங்குக்காண்பன்' என்ற பதங்களையும் கடாக்ஷித்து அவதாரிகை - எம்பெருமானை இத்யாதி. 'இடகிலேன்' இத்யாதியாலே - கர்மயோகாஹாவமும், 'ஐம்புலன்வெல்லகில்லேன்' என்று ஜ்ஞாநயோகாஹாவமும், 'கடவனாகி' இத்யாதியாலே தத்கார்யமான பக்தியோகாஹாவமும் சொல்லுகிறது.

இடுகையும் பகவத்ப்ரஸாதஹேதுவோ? என்ன, ஆர்த்தவிஷயத்தை இத்யாதி. இடகிலேன் - இடமாட்டுகிறிலேன். அட்டகில்லேன் - வார்க்கமாட்டுகிறிலேன். தாத்பர்யம் - பிறர்க்கு இத்யாதி. சப்தார்த்தம் - ஶ்ரோத்ராதிகள் இத்யாதி. பட்டி - பயிர்மேய்கை. கடவனாகி - கர்த்தவ்யபுத்தியையுடையனாய்: சாஸ்த்ரவஶ்யனா யென்றபடி- கடவன் - யோக்யன். அடைத்த-ப்ராப்தமான. கீழே 'எண்டிசையுமுள்ள பூக்கொண்டேத்தி' என்றத்தைக் கடாக்ஷித்து, இவர் ஸமாராதநம்பண்ணியறியாரோ? என்றது. நூல்பிடித்தாற்போலே யென்றது - சாடு. நூல் - சாஸ்த்ரமும், தந்துவும்; க்ரமம் தப்பாமே யென்றபடி.

அந்வயமில்லை; தேஹயாத்ரைக்கு உடலாகச் செய்யுமது உண்டு. இவை யுண்டாயிற்றாகில் பக்தி ஶரீரத்திலே நிவேஶிப்பிக்கலாம், அதுவுமில்லை யென்கிறார். இவற்றினுடைய ஸ்வரூபநிஷேதம் பண்ணுகிறதன்று, உபாயத்வத்தை நிஷேதிக்கிறது. [மடவல்நெஞ்சம்] - மடப்பத்தால் மென்மையை நினைக்கிறது; அதாவது - 'பகவத்விஷயம்' என்றால் கடுகவிழுந்துகொண்டுநிற்கை. வன்மையாவது - விழுந்தால் பின்னை அங்குநின்றும் மீட்க அரிதாயிருக்கை. [காதல்கூர] - இப்படிப் பட்ட நெஞ்சானது ஸ்நேஹம் மிக. [வல்வினையேன்] - ஸ்நேஹாநுகூலமாகக் காணப்பெறாத பாபத்தைப் பண்ணினேன். காதலுக்கு விஷயம் பெற்றேனல்லேன்; இத்தை அகஞ்சுரிப்படுத்தினேனல்லேன், ஆஶாலேஶமுடையார்க்கு முகங்கொடாதவனாய் இழந்தேனல்லேன்; என் பாபம் இருந்தபடியென்? [அயர்ப்பாய்] - அறிவுகேட்டை யுடையேனாய். [தடவுகின்றேன்] - முன்னே வந்து நின்றாலும் காணமாட்டாதபடி தடவாநின்றேன். "நக்ஷா வஶ்யாமிகௌஸல்யே" (நத்வாபஶ்யாமிகௌஸல்யே) என்கிறபடியே. [எங்குக்காண்பன்] - ஒருகைம்முதலின்றிக்கே யிருக்கக் கூப்பிடுகிற நான் எங்கே காணக்கூப்பிடுகிறேன்? [சக்கரத்தண்ணலையே] - கையிலே திருவாழியை யுடைய ஸர்வேஶ்வரனை, எங்கே காணக்கடவேன்? யஶோதைப்பிராட்டி கையும் வெண்ணெயுமாகப் பிடித்துக்கொண்டாற்போலே, கையும் நெய்யாராழியுமாகப் பிடித்துக்கொள்ளவாயிற்று இவர் ஆசைப்படுகிறது. (௯)

---

தேஹயாத்ரைக்கு - கைங்கர்யத்துக்கு; அதாவது - செய்யாதபோது தரிக்கமாட்டாமையாலே செய்து கொண்டு நிற்பர். இத்தால் - ப்ராப்யபுத்தியாலே செய்யுமது உண்டென்றபடி. இவையுண்டாயிற்றகில் - பூப்பறித்தேத்துகிற இவை யுண்டாயிற்றாகில். பக்திஶரீரத்திலே நிவேஶிப்பிக்கலாம் - பக்திஸ்வரூபத்திலே அந்வயிப்பிக்கலாம். ஆனால், கர்மயோகாதிகளுடைய ஸ்வரூபத்யாகம் சொல்லுகிறதோ? என்ன, இவற்றினுடைய இத்யாதி. கூர்தல் - மிகுதி. 'வல்வினையேன், எங்குக்காண்பன்' என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - ஸ்நேஹாநுகூலமாக இத்யாதி. இதுதன்னை விவரிக்கிறார் - காதலுக்கு இத்யாதி. 'கூர' என்றத்தைப் பற்ற அருளிச்செய்கிறார் - இத்தைஅகஞ்சுரி இத்யாதி. அகஞ்சுரிப்படுத்தினேனல்லேன் - குறைக்கவல்லேனல்லேன். கூரவென்று - மிகுதியைச் சொல்லுகையாலே, அல்பமாக்கவல்லேனல்லேனென்றபடி. 'வல்வினையேன்' என்றத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - ஆஶாலேஶம் இத்யாதி. ஆஶாலேஶமுடையார்க்கு என்றது-அவன் ஆபத்துக்களிலே யுதவும் ஸ்வபாவனாகையாலே அர்த்தாத்ஸித்தம். அயர்ப்பாய் - கலங்கி. காணமாட்டாதபடியான அவஸாதாதிஶயத்தாலே யென்றபடி. தடவாநின்றேன் - 'இத்தசையில் வாராதிரான்' என்றாயிற்று தடவுகிறது. முன்னே நின்றாரையும் காணமாட்டாமைக்கு த்ருஷ்டாந்தம்-நக்ஷா இத்யாதி. "ராமெ[illegible] நக்ஷா வஶ்யாமிகௌஸல்யே[illegible]" இதி தஶரதஃ. 'இடகிலேன்' இத்யாதியைக் கடாக்ஷித்து ஹாவம் - ஒருகைம்முதல் இத்யாதி. சப்தார்த்தம் - கையிலே இத்யாதி. 'அண்ணலை - எங்குக்காண்பன்' என்னாதே, 'சக்கரத்தண்ணலை' என்று விசேஷிக்கையாலே ஒரு ரஸம் அருளிச்செய்கிறார் - யஶோதை இத்யாதி. நெய் யென்று - கூர்மையும், நெய்யும். நெய்யாராழி - கூர்மைமிக்க திருவாழி. ஆர்தல் - மிகுதி. 'தடவுகின்றேன்' என்ற அநந்தரம் 'எங்குக்காண்பன்' என்கையாலே, 'காண்பன்' என்றதுக்கு - ஸ்பார்ஶநப்ரத்யக்ஷத்தை விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - பிடித்துக்கொள்ளவாயிற்று என்று. யஶோதைப்பிராட்டி இத்யாதிக்கு - 'ஆனயர்தாயவனேயென்று தடவுமென்கைகளே' என்றதிலே நோக்கு. க்ரமேண அந்வயஃ. (௯)

# பத்தாம் பாட்டு.

சக்கரத்தண்ணலேயென்று தாழ்ந்துகண்ணீர்ததும்பப்
பக்கம்நோக்கிநின்றலந்தேன் பாவியேன்காண்கின்றிலேன்
மிக்கஞானமூர்த்தியாய வேதவிளக்கினை என்
தக்கஞானக்கண்களாலே கண்டுதழுவுவனே.

**ஆ.**—(சக்கரத்தண்ணல்.) சக்கரத்தண்ணலே யென்று தாழ்ந்து கண்ணீர்ததும்பப் பக்கம்நோக்கிநின்று சாலத் தளர்ந்தேன்; பாவியேன் காணப்பெறுகிறிலேன்; ஸர்வஜ்ஞனாய் ஸகல வேதவேத்யனாயிருந்த எம்பெருமானை, எனக்குத் தக்க சில ஞானக்கண்களாலே கண்டு தழுவுவன்; நான் எங்ஙனே தரிக்கும்படி? என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், காணப்பெறாவிட்டால் மறந்து ஸுகமேயிருக்கவொண்ணாதபடி எனக்குத் தக்கதொரு ஜ்ஞாநத்ருஷ்டி எங்ஙனே உண்டாயிற்று? என்று இன்னாதாகிறார்.

[சக்கரத்தண்ணலே என்று தொடங்கி] - திருவாழியைக்காட்டி என்னை எழுதிக்கொண்டவனே! என்று இவ்வுக்தியோடேகூடத் தரைப்பட்டுக் கண்ணநீர்ததும்பும்படி நீ வந்து தோற்றியருள ஸம்பாவனையுள்ளதொரு பார்ஶ்வத்தை நோக்கி நின்று சாலத்தளர்ந்தேன். மஹாபாபியாகையாலே, காணப்பெறுகிறிலேன். [மிக்கஞான மூர்த்தி என்று தொடங்கி] - பரிபூர்ண ஜ்ஞாநாகாரனாய் வேதைகஸமதிகம்யனாயிருக்கிறவனை. [கண்டு தழுவுவனே] – கண்டு அநுபவிப்பன்.

**ப.**—அநந்தரம், வேதவேத்யனானவனைக் கையும்திருவாழியுமாகக் காண ஆசைப்பட்டுக் கிடையாதொழிந்தால், மறந்து பிழைக்கவொண்ணாதபடி மாநஸஜ்ஞாநத்துக்கு விஷயமாய் ப்ரகாசிக்கவேணுமோ? என்கிறார்.

சக்கரம் - கையும்திருவாழியுமான வடிவைக்காட்டி, அண்ணலே - அடிமைகொண்ட ஸ்வாமியே! என்று - என்றுசொல்லி, தாழ்ந்து - (அவனையநுபவிக்கப்பெறாமையாலே) தரைப்பட்டு விழுந்து, கண்நீர்ததும்ப - கண்கள்நீர் மிகைக்கும்படி, பக்கம்நோக்கி - சுற்றும் பார்த்து, நின்று – நின்று, அலந்தேன் - க்லேஶித்தேன்; பாவியேன் - (காண்கைக்கு ப்ரதிபந்தகமான) பாபத்தைப்பண்ணின நான், காண்கின்றிலேன் - காணப்பெறுகிறிலேன்: (இவ்வளவில்மறந்துவிடவொண்ணாதபடி), மிக்கஞானமூர்த்தியாய - அபரிச்சிந்ந ஜ்ஞாநஸ்வரூபனான, வேதம் விளக்கினை - வேதமாகிற தீபத்தாலே காணப்படுமவனை, என் - (கண்ணிட்டுக்காண ஆசைப்பட்டு க்லேஶிக்கிற) எனக்கு, தக்க-தகுதியான, ஞானம்-ஜ்ஞாநமாகிற, கண்களாலே-கண்ணாலே, கண்டு-கண்டு, தழுவுவன் - ஸம்ஶ்லேஷியாநிற்பன். காணப்பெறாமையாலே ப்ரேமம் து:கஹேதுவான வோபாதி ஆந்தரப்ரகாசத்தாலே ஜ்ஞாநமும் து:கஹேதுவாயிற்றென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், காணப்பெறாவிட்டால் மறந்து பிழைக்கவொண்ணாதபடி எனக்குத் தக்கதொரு ஜ்ஞாநத்ருஷ்டி எங்ஙனே உண்டாயிற்று? என்கிறார்.

[சக்கரத்து அண்ணலே என்று தாழ்ந்து] – திருவாழியைக் காட்டி என்னை எழுதிக்கொண்டவனே! என்று இவ்வுக்தியோடே தரைப்பட்டு. [கண்ணீர் ததும்ப] - இவருடைய அவஸாதத்தினுடைய எல்லை காண்பது கண்ணநீரிலே யாயிற்று. [பக்கம்நோக்கி நின்று] – வரு

கைக்கு ஸம்பாவனையுண்டான திக்கைப் பார்த்தே நின்று. [அலந்தேன்] - வெறுத்தேன். "பரமாபதமாபந்ந:" என்னுமளவிறே. [பாவியேன் காண்கின்றிலேன்] – ஆபத்ஸகனுயிருக்க மஹாபாபியாகையாலே நான் காணப்பெறுகிறிலேன்; காணப்பெறுதொழிந்தால் மறந்துபிழைக்கலாம்படி நெஞ்சில் ப்ரகாஶியாதொழியத்தான் பெற்றேனே! [மிக்க ஞானமூர்த்தியாய] - பரிபூர்ணமான ஜ்ஞாநத்தையே ஸ்வரூபமாகவுடைய. [வேதவிளக்கினை] - வேதமாகிற விளக்காலே காணப்படுமவனை. [என் தக்க இத்யாதி] – எனக்குத் தக்காற்போலே ஒருஜ்ஞாநத்ருஷ்டியுண்டாய் அத்தாலே கண்டு அநுபவிப்பன். காணப்பெறுமையாலே ப்ரேமம் க்லேஶஹேதுவாகிறுப்போலே நெஞ்சில் ப்ரகாஶமும் க்லேஶஹேதுவாகாநின்றது. "மதிநலமருளினன்" என்கிற ஜ்ஞாந ஶக்திகளிரண்டும் கழுத்துக்கட்டியாய் விட்டது.

ஈடு.—பத்தாம்பாட்டு. காணப்பெறுவிட்டால் மறந்துபிழைக்கவொண்ணுதபடி எனக்குத் தக்கதொரு ஜ்ஞாநத்ருஷ்டி எங்ஙனேயுண்டாயிற்று? என்கிறுர்.

[சக்கரத்தண்ணலே என்று தாழ்ந்து] - திருவாழியைக்காட்டி என்னையெழுதிக்கொண்டவனே! என்று இவ்வுக்தியோடே தரைப்பட்டு. [கண்ணீர்ததும்ப] - கண்கள் நீர் மிகைக்கும்படி. இவருடைய * அவஸாதத்தினுடைய எல்லை காண்பது கண்ணநீரிலே. [பக்கம்நோக்கிநின்று அலந்தேன்] - வருகைக்கு ஸம்பாவனையுள்ள திக்கைப் பார்த்துநின்று வெறுத்தேன். "பரமாபதமாபந்ந:" (பரமாபதமாபந்ந:) என்னுமளவிறே. [பாவியேன் காண்கின்றிலேன்] - ஆபத்ஸகனுயிருக்க, மஹாபாபியாகையாலே நான் காணப்பெறுகிறிலேன். காணப்பெறுதொழிந்தால் மறந்து பிழைக்கலாம்படி நெஞ்சில் ப்ரகாஶியாதொழியத்தான் பெற்றேனே? [மிக்கஞானமூர்த்தியாய] - பரிபூர்ணமான ஜ்ஞாநத்தையே ஸ்வரூபமாகவுடையனுன. [வேதவிளக்கினை] - வேதமான விளக்காலே காணப்படுமவனை; வேதப்ரகாஶகனுனவனை யென்றுமாம். [என்தக்கஇத்யாதி] - எனக்குத் தக்காற்போலே ஒரு ஜ்ஞாநத்ருஷ்டியுண்டாய், அத்தாலே கண்டு அநுபவிப்பன். காணப்பெறுமையாலே ப்ரேமம் க்லேஶஹேதுவாகிறுப்போலே, நெஞ்சில் ப்ரகாஶமும் க்லேஶஹேதுவாகாநின்றது. "மயர்வறமதிநலமருளினன்" என்கிற ஜ்ஞாநஶக்திகளிரண்டும் கழுத்துக்கட்டியாய்விட்டது. மறந்துபிழைக்கவொண்ணுதபடி எனக்குத் தக்காற்போலே ஒரு ஜ்ஞாநமும் வேணுமோ? என்கிறுர். (கo)

பத்தாம்பாட்டு - சக்கரத்தண்ணலே இத்யாதி. 'கண்டுதழுவுவன்' என்கையாலே ப்ரீதி தோற்றினும், ப்ரகரணோசிதமாக இன்னுப்பாக அவதாரிகை - காணப்பெறவிட்டால் இத்யாதி. எனக்குத்தக்கதொரு - ப்ரேமாநுகூலனுன எனக்கு யோக்யமானதொரு.

ததும்ப - வ்யாபிக்க. கீழ்ப்பதத்தையும் கூட்டி ஶாவம் - இவருடைய இத்யாதி. வெறுத்தேன்- து:கித்தேன். வெறுக்கிறதென்? க்ஷணம் தரிக்கவொண்ணுதோ? என்ன; பரமாபத இத்யாதி. 'அலந்தேன்' என்று ஆபத்தின்மிகுதி சொல்லுகையாலே, அர்த்தாத் அவன்ஆபத்ஸகத்வத்தை அருளிச்செய்கிறுர், †அவன்ஆபத்ஸகனுய் இத்யாதி.மேலுக்கெல்லாம் அவதாரிகை-காணப்பெறதொழிந்தால் இத்யாதி.வேதத்தைத் தனக்கு விளக்காகவுடையவனை யென்று முந்தின அர்த்தம்; வேதப்ரதிபாத்ய னென்றபடி. இரண்டாவது - வேதத்துக்கு விளக்கு; "வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி" என்று உபதேஶமுகத்தாலே வேதப்ரகாஶக னென்றபடி. தழுவுகை - அநுபவிக்கை. ஞானக்கண்களாலே காண்கை நல்லதன்றோ வென்ன, காணப்பெறமையாலே இத்யாதி. கீழே 'காதல்கூர வல்வினையேன்' என்று ப்ரேமம் க்லேஶஹேதுவாகிறுப்போலே யென்றபடி. ஏதத் விவரணம்-மயர்வற இத்யாதி. 'காதல்கூர,' 'தக்கஞானக்கண்கள்'என்கையாலே, ஜ்ஞாநபக்திகளிரண்டும் என்றது. கழுத்துக்கட்டி - கழுத்தைக்கட்டுமது: பாதக மென்றபடி; அதாவது - கண்டநுபவிக்கவு மொட்டாது, மறந்து பிழைக்கவு மொட்டா தென்றபடி. உத்தரார்த்தத்துக்கு ஶாவம்-மறந்து இத்யாதி. க்ரமேண அந்வய:. (கo)



*அவஸாதம் - துக்கம். † இதற்குஏற்றபடியான வாக்யத்தைக் கோஶாந்தரங்களிற் கண்டுகொள்க.

# பதிற்றாம்பாட்டு.

தழுவிநின்றகாதல்தன்னால் தாமரைக்கண்ணன்தன்னைக்
குழுவுமாடத்தென்குருகூர் மாறன் * சடகோபன் சொல்
வழுவிலாதவொண்தமிழ்கள் ஆயிரத்துளிப்பத்தும்
தழுவப்பாடியாடவல்லார் வைகுந்தமேறுவரே.

ஆ.—(தழுவிநின்ற.) 'முடிவேன்' என்றாலும் முடியவொட்டாதிருந்த காதலாலே சொன்ன இத்திருவாய்மொழியை இஷிஹாவயுக்தமாகப் பாடி ஆடவல்லார் வைகுந்தமேறுவர் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் எம்பெருமானோடே நித்யஸம்ஶ்லேஷம் பண்ணலாம் திருநாட்டிலே செல்லுவர் என்கிறார்.

[தழுவி என்று தொடங்கி] - நான் விடுவேனென்றாலும் விடவொண்ணாதபடி அவனைத் தழுவிநின்ற அதிமாத்ரஸ்நேஹத்தாலே இப்படிப்பட்ட ஸ்நேஹத்தை விளைப்பித்த திருக்கண்களையுடையவனை. [குழுவு என்று தொடங்கி] - ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வாரருளிச்செயலாய் ஹகவத்குணங்களுக்கும் பூர்ணமாக வாசகமாய் ஸுபோதமான ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழியை. [தழுவ] - இதில் ஓடுகிற கருத்தோடே கூட.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை அநுஸந்தித்து ப்ரேமபரவஶராமவர்கள் பரமபதத்திலே யேறப்பெறுவர்களென்று பலத்தை அருளிச்செய்கிறார்.

தழுவி - ஸ்வரூபத்தோடு அவிநாபூதமாய், நின்ற - ஸ்திரமான, காதல்தன்னால்-ஹகவதநுஹவாஹிநிவேஶத்தாலே, தாமரைக் கண்ணன்தன்னை - அவ்வபிநிவேஶத்துக்கு நிதாநமாய் நிரதிஶயஹோக்யமான தாமரைபோன்ற திருக்கண்களையுடையவனைப்பற்ற, குழுவும் - திரண்ட, மாடம் - மாடங்களையுடைத்தான, தென்குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, மாறன் - குடிப்பிறப்பையுடைய, சடகோபன் - ஆழ்வாருடையதாய், வழுஇலாத - (ஹகவத்குணங்களிலொன்றும்) வழுவாதபடியான, ஒள் தமிழ்கள் - போதகத்வவைலக்ஷண்யத்தையுடைத்தாய் ஸர்வாதிகாரமான த்ராமிடரூபமான, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியில், இப்பத்தும் - இப்பத்தையும், தழுவ - (ஹாவவ்ருத்தியோடு) நெஞ்சுபொருந்தும்படி, பாடி - பாடி, ஆட - (ப்ரேமபாரவஶ்யத்தாலே) விக்ருதராய்ஆட, வல்லார் - வல்லவர்கள், வைகுந்தம் ஏறுவர் - (அஸங்குசிதாநுபவஸ்தலமான) பரமபதத்திலே ஏறப்பெறுவர்கள். இது - அறுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் அவனோடே நித்யஸம்ஶ்லேஷம்பண்ணலாம் திருநாட்டிலே செல்லப்பெறுவர் என்கிறார்.

[தழுவிநின்ற காதல்தன்னால்] - நான் விடுவேனென்னிலும் விடவொண்ணாத உடன்வந்தியான அதிமாத்ரப்ரேமத்தாலே. [தாமரைக்கண்ணன்தன்னை] - இக்காதலுக்கு க்ருஷிபண்ணினானைச் சொல்லுகிறார். கண்ணாலே குளிரநோக்கியாயிற்று, இவருக்குக் காதலை விளைத்தது. "செந்தாமரைக்கண்ணொடு மறப்பற என்னுள்ளே மன்னினான்" என்னக்கடவதிறே. இதிறே, மயர்வற மதிநலம்அருளினபடி. [குழுவுமாடத்தென்குருகூர் மாறன் சடகோபன்]-ஸம்ருத்தமான திருநகரியையுடைய ஆழ்வார். ஸ்ரீ பரதாழ்வான் ஆர்த்தியைக் கண்டு பெருமாள்வரவை நிஶ்சயித்துத் திருவயோத்தியிலுள்ளார் தளராதிருந்தாற்போலே திருநகரியிலுள்ளார் தளராதிருந்தபடி.

* இப்பொழுது காணப்படுகிற பன்னீராயிரப்படிக்கு 'மாறன் சடகோபன், வழுவிலாத' என்றே பாடம் என்று தோன்றுகின்றது.

“க்ஷுடிபீநம் ஹிஜீவிதம்” என்றார்களிறே. அங்ஙனன்றியிலே, விபரீதலக்ஷணையாய் இவருடைய தசையைக் கண்டு ஶூந்யமாய்க் கிடந்தபடி என்றுமாம். [வழுவிலாத ஒண்தமிழ்கள்] - பகவத் குணங்களில் ஒன்றும் குறையாதபடியுமாய் ஸ்வபோதமுமாயிருக்கை. [தழுவப் பாடி ஆடவல்லார்] - இதில் இவர்க்கு ஓடுகிற பாவத்திலே பாடே பக்கமே பாடுமவர்கள். இவருடைய ஹர்ஷம் நேரே சிலர்க்கு உண்டாகாதிறே. தழுவப்பாடி - இதில் ஓடுகிற கருத்தோடே கூடப் பொருந்தப் பாடி என்றுமாம். [வைகுந்தமேறுவரே] - “பக்கம்நோக்கி நின்றலந்தேன் பாவியேன் காண்கின்றிலேன்” என்று ஶோகிக்கவேண்டாதே ஸதாதர்ஶநத்துக்கு யோக்யமான தேஶத்தைப் பெறுவர்.

ஈடு.— நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் எம்பெருமானோடே நித்யஸம்ஶ்லேஷம் பண்ணலாந் திருநாட்டிலே செல்லப்பெறுவர் என்கிறார்.

[தழுவிநின்ற காதல்தன்னால்]-‘நான் விடுவேன்’ என்றாலும் விடவொண்ணாதபடியாய், உடன்வந்தியான அதிமாத்ரமான காதலாலே. [தாமரைக்கண்ணன்தன்னை] - இக்காதலுக்கு க்ருஷிபண்ணின நேத்ரபூதரைச் சொல்லுகிறார். [குழுவுமாடத்தேன்குருகூர்] - “ஸர்வஞ்சகுஶலம் க்ருஹே” (ஸர்வஞ்சகுஶலம்க்ருஹே) என்னுமாபோலே, ‘ஆழ்வார்க்கு ஆர்த்தி மிகமிக ஸர்வேஶ்வரன்வரவு தப்பாது’ என்று திருநகரி *குடிநெருங்கிக் குளிர்ந்து தேறினபடி. †([மாறன்] - ஸம்ஸாரத்தை மாற்றினவர். [சடகோபன்] - பகவத்விமுகருக்கு ஶத்ரு.) [சொல்வழுவிலாத] - பகவத்விஶ்லேஷத்தாலே கூப்பிடுகிற இந்நன்மையில் ஒன்றுந் தப்பாதபடி†(யாய், ஸ்வபோதமுமாய், ஸர்வாதிகாரமுமாம்படி) சொன்ன. ஆயிரத்துள்இப்பத்தும் [தழுவப்பாடியாடவல்லார்] - ஆழ்வார் பாவவ்ருத்தி ஒருவர்க்கும் பிறக்கமாட்டாதிறே; அதிலே சிறிதுஅணைய நின்றாகிலும் இத்தை அப்யஸிக்க வல்லவர் †(களாய், பாரவஶ்யத்தாலே விக்ருதராய் ஆடவல்லார்) கள். [வைகுந்தம் ஏறுவரே] - காணஆசைப்பட்டுக் கூப்பிடுகிற ஸம்ஸாரத்தைக் கழித்து; நித்யாநுபவம்பண்ணலாம் நித்யவிபூதியிலே புகப்பெறுவர். குழுவுமாடம் - நெருங்கின மாடம். தேன்குருகூர் - அதஏவ அழகிய திருநகரி. (கக)

---

நிகமம் - தழுவிநின்ற இத்யாதி. ‘வைகுந்தமேறுவர்’ என்ற பதத்தைப் பற்ற - அவதாரிகை.

கீழ்வாக்யவிவரணம் - உடன்வந்தியான என்றது. உடன்வந்தி - உத்பத்திஶிஷ்டம். ‘தன்னால்’ என்றதுக்கு அர்த்தம் - அதிமாத்ரமான என்று. நேத்ரபூதரையென்றது - சாடு; அந்தரங்கரை, நேத்ரமானவரை யென்றும். இவர் ஆற்றாமையாலே கிந்நராயிருக்க, திருநகரிக்குக் குளிர்த்தி எங்ஙனே? என்ன, ஸர்வஞ்ச இத்யாதி. ஸ்ரீபரதாழ்வான் பங்க திக்தனான படியைக் கண்டு பெருமாள் வரவை நிஶ்சயித்து தரித்தபடியாலேயிறே, ‘குஶலம்’ என்றது. ‘தேன்’ என்று - அழகாய், அத்தால் - குளிர்த்தியைச் சொல்லுகிறது. அன்றிக்கே, ‘குழுவுமாடம்’ என்றவிடத்திலே - குளிர்த்தி விவக்ஷிதமென்னுதல். குழுவு - ஸமூஹம். “வஜ்ரப்ருஷ்ட்யா ஜடிலோ ஹஸ்தஸ்நாதோ ஹ்யநிக்ஷித: | பாதுகே தே புரஸ்க்ருத்ய ஸர்வஞ்ச குஶலம் க்ருஹே” இதி யுத்தகாண்டே ராமம்ப்ரதி பரத்வாஜ:. *குடிநெருங்கினபடி யென்றது - ‘குழுவு’ என்று ஸமூஹமாய், அத்தால் நினைப்பது நெருக்கத்தையாய், ‘நெருங்கின’ என்று மாடங்களினுடைய செறிவைச் சொல்லுகிறதென்றபடி. கீழேநோக்காக ஶப்தார்த்தம் - பகவத் இத்யாதி. ‘தழுவப்பாடி’ என்று - நன்றான பாவவ்ருத்தியோடே பாடி யென்கிறதோ? என்ன, ஆழ்வார் இத்யாதி. ‘தழுவிநின்ற காதல்’ என்றாற்போலே தழுவிநின்று பாடவல்லாரென்னுதொழிவானென்? என்ன, ஆழ்வார் இத்யாதி என்னுதல். தழுவுதல் - ஸ்பர்ஶித்தலாய், ஆழ்வாருடைய பாவவ்ருத்தியிலே அல்பாந்வயத்தையுடையராய்க்கொண்டு என்றபடி. ஒண் - போதகத்வ வைலக்ஷண்யத்தையுடைய. க்ரமேண அந்வய:. (கக)



---

* இங்கே, ஈட்டுக்கும், அரும்பதத்துக்கும் பேதம் காணப்படுகிறது. † குண்டலிதம் மூன்றும் க்வாசித்க மென்பர்.

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.**— [illegible] ||

---

**த்ரவிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.**— [illegible] ||

[illegible] ||

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

சீலமிகுகண்ணன்திருநாமத்தாலுணர்ந்து
மேலவன்தன்மேனிகண்டுமேவுதற்குச்—சால
வருந்தியிரவும்பகலுமாறுமறக்கூப்பிட்டு
இருந்தனனேதென்குருகூரேறு.

*ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், சீயர் திருவடிகளே ஶரணம்.*



## எட்டாந்திருவாய்மொழி—ஏருளும்: ப்ரவேஶம்.

**ஆ.**—(ஏருளும்.) இப்படி எம்பெருமானை விஶ்லேஷித்து அத்யந்தம்அவஸந்நராய்க் கிடந்து தாம் கூப்பிடாநிற்கச்செய்தேயும் அவன்எழுந்தருளாமையாலே தம்மைஉபேக்ஷித்தானாக நிஶ்சயித்து, 'இனிஅவனால்உபேக்ஷிதமான ஆத்மாத்மீயங்களால் ஒரு ப்ரயோஜநமில்லை; இவை முடிந்துபோக அமையும்' என்றுகொண்டு அந்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார்.

**ஒ.**—எட்டாந்திருவாய்மொழியில், இப்படிஅவஸந்நராய்க் கூப்பிடச்செய்தே ஸௌஶீல்யாதிகுணோததியாய் ப்ரதிகூலநிரஸநஸமர்த்தனை எம்பெருமான் வாராதொழிந்தவாறே தம்மை உபேக்ஷித்தானாகக் கருதின ஆழ்வார் ததர்த்தமாக வுண்டான ஆத்மாத்மீயங்கள் அவனுக்கு ஆதரணீயங்களல்லவாகில் எனக்கும் அவற்றால் கார்யமில்லை யென்று அவற்றில் தாம் நசையற்றபடியை அந்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார்.

**ப.**—எட்டாந்திருவாய்மொழியில், கீழ் இவர் ஆசைப்பட்டுக் கூப்பிட்டபடியிலே வந்து முகங்காட்டக் காணாமையாலே அவன் அநாதரித்தானாக நினைத்து, ஆஶ்ரிதாநாஶ்ரிதவிஷயங்களில் அபிமம்பத்வ அப்ரத்ருஷ்யத்வத்தாலுண்டான உபாயபாவத்தையும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தால் வந்த உபேயத்வபூர்த்தியையும், உபாயகார்யமான அநுகூலஶத்ருநிரஸநத்தையும், அபிமதவிரோதி மர்தநத்தையும், அஸஹ்யவிரோதிநிரஸநத்தையும், அர்த்தோபதேஶத்தாலும் அநந்யார்ஹமாக்கும் அறிவுடைமையையும், உத்துங்கவிரோதி விதாரணத்தையும், விரோதிஶத விநாஶகத்வத்தையும், விரோதிஶரீர விஹஸ்ததாகரணத்தையும், அஶேஷவிரோதி

கண்டநத்தையும் அநுஸந்தித்து, 'இப்படி ஆஶ்ரிதோபகாரகன் அநாதரித்த ஆத்மாத்மீயங்க ளாலே எனக்கு ஒருகார்யமில்லை' என்று தமக்குப் பிறந்த அநாதரவிஶேஷத்தை, நாயகனான ஈஶ் வரன் ஆதரியாத ஆத்மாத்மீயங்களை அநாதரிக்கிற நாயகிவார்த்தையாலே அருளிச்செய்கிறார்.

இ·—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி அவஸந்நராய்க் கூப்பிடச்செய்தேயும் அவன் வந்து முகங்காட்டக் காணாமையாலே ப்ராப்தனாய் ஶீலவானாய் விரோதிநிரஸநஸமர்த்தனா யிருக்கிறவன் உதவாதொழிகிறது இத்தலையை வேண்டாதொழிகையிறே. அவனுக்காகக் கண்ட என்னுடைய ஆத்மாத்மீயங்கள் அவனுக்கு ஆதரணீயமன்றாகில் எனக்கும் அவற்றால் கார்யமி ல்லை யென்று அவற்றில் தாம் நசைபற்றபடியை அந்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார். "கோவைவாயா" ளிற்படி விரும்பினவன் இப்படி உபேக்ஷித்தபின்பு என்னுலும் என்உடைமை யாலும் எனக்குத்தான் என்னகார்ய முண்டு? என்கிறாள். ஆத்மாத்மீயங்களை அவன்விரும்பின வழியாலே விரும்பவாயிற்று ப்ராப்தம். அல்லது, தானுகந்த வழியாலே விரும்புமது தேஹாத் மாபிமாநத்தோடு ஒக்குமத்தனை. முந்துற ஆத்மாவை வேண்டேன் என்னாதே 'உடைமையை வேண்டேன்' என்றது, இவள்தன்னிலும் இவளுடைமையை அவன் விரும்புகையாலே அவன் விரும்பின அடைவே உபேக்ஷிக்கிறாள். என்னுடைமையை வேண்டேனென்று திரளச்சொல் லாதே வ்யக்திதோறும் வேண்டேன் என்கிறது என்? என்னில்;—அவன் வ்யக்திதோறும் விரு ம்புகையாலே. "நதேஹம் நவ்ராணாந்", "நஹிஜீவிதம் தநாய", "நதேவமோகாக்ஷணு".

ஈடு.— கீழில் திருவாய்மொழியிலே - கேட்டாரடைய நீராம்படி கூப்பிட்டார் ; 'இப் படி கூப்பிடச்செய்தேயும் ஸர்வேஶ்வரன் நமக்கு முகம் தாராதிருந்தது நம்பக்கல் உபேக்ஷை யாலேயாக அடுக்கும்' என்றுபார்த்து, 'ப்ராப்தனுமாய் ஸுஶீலனுமாய் விரோதிநிரஸந ஶீலனு மாயிருக்கிறவன் 'இதுவேண்டா என்றிருக்குமாகில் எனக்கோதான் இது வேண்வேது' என்று விடப்பார்த்து, 'அவனுக்கு வேண்டாத நானும் என் உடைமையும் வேண்டா எனக்கு' என்று ஆத்மாத்மீயங்களில் நசையற்றபடியை அந்யாபதேஶத்தாலே அருளிச்செய்கிறார். அவன் விரும் பின வழியாலேகாணும் ஆத்மவஸ்துவை விரும்ப ப்ராப்தி யுள்ளது; இங்ஙன் விரும்பாதவன்று பழைய தேஹாத்மாபிமாநத்தோபாதியாமிறே; "நதேஹம்" (நதேஹம்) - இத்தனை சாந்துநாற்றத்

எருளுமிறையோன் ப்ரவேஶே, ஸங்க்ரஹஸங்கதி- கீழில்திருவாய்மொழியிலே இத்யாதி. ப்ராப் தனுமாய் என்றது - 'அடியேனைப்பணிகொண்ட' என்றத்தைப்பற்ற. ஸுஶீலனுமாய் என்றது - 'கூருளும் தனியுடம்பன்' என்றத்தைப்பற்ற. விரோதிநிரஸநஶீலனுமாய் என்றது - 'அசுரர்களை நீருகும்படியாக' என்றத்தைப்பற்ற. 'உயிரினல்குறைவிலம்' 'உடம்பினல்குறைவிலம்' என்றத்தைப்பற்ற, ஆத்மாத்மீயங் களில் நசையற்ற என்றது. அந்யாபதேஶம் என்றதுக்கு ஸூசகம் - 'வரிவளையால்குறைவிலம்' என்றது. "ஸுஹம்ஸுவீஹவெயஂ,உ஦ஶீஶாஹவஂ" என்றிருக்கவேண்டாவோ? அவன் உபேக்ஷித்தானென் றால் அதுக்காகத் தன்னை உபேக்ஷிக்கக்கூடுமோ? என்ன, அவன்விரும்பின இத்யாதி. அன்றிக்கே, அல் பாஸ்த்திரங்களான ஆத்மீயங்களை விட்டாலும், நித்யமான ஆத்மவஸ்துவை விடலாமோ? என்ன, அவன் விரும்பின இத்யாதி என்னுதல். ஆத்மா ஸ்வதோபோக்யனாயிருக்க, அவன்விரும்பினவழியாலே விரும்புகிற தென்? என்ன, இங்ஙன் இத்யாதி. அவனுக்கு உறுப்பல்லாத ஆத்மாத்மீயங்களில் இப்படி நசையற்றா ருண்டோ? என்ன, ஆளவந்தாரும் பிராட்டியுமென்கிறார் - நதேஹம் இத்யாதி. இது தன்னை நாயகநாயகீ ஸமாதியிலும், "காதலர்நயந்தது யாமுடைநயப்பே, காதலர்வேண்டின யாம்வேண்டினமே, காதலரெம்மை வேண்டா வெனில், யாமும் வேண்டலமினியே" என்று சங்கத்தாரும் சொன்னாரிறே. 'நதேஹம்' இத்யா

துக்காக நிலைநின்ற அத்ருஷ்டத்தையுங்கூட அழியமாறும்படியிறே தேஹத்தில் பண்ணியிருக்கும் அபிமாநம்; அப்படிப்பட்ட தேஹம் வேண்டா. "நப்ராணாந்" (நப்ராணாந்) - தேஹந்தன்னை ஆதரிக்கிறது ப்ராணனுக்காக; அப்ப்ராணன்களும் வேண்டா. "நசஸுகம்" (நசஸுகம்) - ப்ராணன்களை விரும்புகிறது ஸுகத்துக்காக; அந்த ஸுகமும் வேண்டா. இதுக்கு உறுப்பாக வருமல்லாதவையும் எனக்கு வேண்டா. இவையெல்லாம் புருஷார்த்தமாவது-ஆத்மாவுக்கிறே; அவ்வாத்மாதானும் வேண்டா. இங்ஙன் பிரித்துச் சொல்லுகிறதேன்? உன்திருவடிகளில் சேஷத்வ ஸாம்ராஜ்யத்துக்குப் புறம்பானவை யாவை சில, அவையொன்றும் எனக்கு வேண்டா. "நாத" (நாத) - உடையவனுக்குப் புறம்பாயிருக்குமவற்றை விரும்ப ப்ராப்தியுண்டோ? அங்ஙனேயாமாகில் க்ரமத்தாலே கழித்துத் தருகிறோம் என்ன, 'ஒருக்ஷணமும் பொறுக்கமாட்டேன். இவை தன்னைத் தவிர்த்துக் கடக்க வைக்கவொண்ணாது, நசித்துப்போம்படி பண்ணவேணும். இது கண்டாதூர்த்வமான வார்த்தையன்றோ?' என்ன,"தத்ஸத்யம்" (தத்ஸத்யம்)-மெய். "மதுமதந" (மதுமதந) – இங்ஙனன்றாகில் தேவர்முன்பு பொய்யரானார் பட்டது படுகிறேன். "நஹிமேஜீவிதேநார்த்தோ நைவார்த்தைர்நசபூஷணை: | வஸந்த்யாராக்ஷஸீமத்யே விநாராமம்மஹாரதம்" (நஹிமேஜீவிதேநார்த்தோநைவார்த்தைர்நசபூஷணை: | வஸந்த்யாராக்ஷஸீமத்யே விநா ராமம்மஹாரதம்)-ப்ராணாதிகளால் கார்யமின்றிக்கே யொழிகிறதேன்? என்னில்;— இருக்கிறது ராக்ஷஸிகள்நடுவே; பிரிகிறது பெருமாளை; இவற்றால் என்ன ப்ரயோஜநமுண்டு?



## முதற்பாட்டு.

ஏருளுமிறையோனும் திசைமுகனும்திருமகளும்
கூறுளுந்தனியுடம்பன் குலங்குலமா அசுரர்களை
நீறாகும்படியாக நிருமித்துப்படைதொட்ட
மாறாளன்கவராத மணிமாமைகுறைவிலமே.

*ஆ.—நிரவதிகஸௌசீல்யஆச்ரிதவிரோதிநிரஸந ஸாமர்த்த்யாதி கல்யாணகுண மஹோததியாயிருந்த எம்பெருமான் விரும்பாத என்னுடைய மணிமாமையால் எனக்கு ஒரபேக்ஷையுமில்லை; இது முடிந்துபோக அமையும் என்கிறாள்.*

---

*திக்கு விசேஷணமிட்டு வ்யாக்யாநம்பண்ணினது - த்யாகத்தின் அருமை தோற்றுகைக்காக. "ஸுகஸாதநம்" என்று - ஸுகஸாதநதர்மங்களைச் சொல்லுகிறது. இதுக்கு - ஸுகத்துக்கு. உறுப்பாக - ஸாதநமாக. 'அந்யத்' என்று - "விதாநாந்தராந்" இத்யாதிப்படியே சொல்லுகிற ப்ராப்யாந்தரங்களைச் சொல்லுகிறது. "சேஷத்வவிஹீநம்" என்று - ஹேதுகர்ப்பவிசேஷணம். உன்னுடைய கைங்கர்யத்துக்கு உபகரணமல்லாதபோது என்னையும் என்னுடைய ஸம்பந்திகளையும் வேண்டேனென்றபடி; ஆனால், கடக்கவைக்கிறோமென்ன, இவைதன்னை இத்யாதி. "நஹிமேஜீவிதேநார்த்தோ நைவார்த்தைர்நசபூஷணை: | வஸந்த்யாராக்ஷஸீமத்யே விநாராமம்மஹாரதம்" இதி ஸுந்தரகாண்டே (உக, ரு.) நஹிமே இத்யாதி - பிரிவுக்கு அநுபயுக்தமாகையாலே பூஷணாதிகளால் ப்ரயோஜநமில்லை யென்னலாம்; அப்படியல்லவிறே ஜீவநம். "ஜீவந்நரோ பத்ராணிபச்யதி" என்கிறபடியே ப்ராணன்கிடந்தால் சில நாளைக்காகிலும் அவனுக்கு உபயோகிக்கலாமிறே யென்ன, அப்படியே யரித்திருக்கலாயிற்றிறே அநுகூல ஸஹவாஸ முண்டாகில்; அதிலேயிறே யென்கிறாள் - ராக்ஷஸீமத்யே வஸந்த்யா: என்று. அர்த்தசப்தம் - ப்ரயோஜநபரம்.*

ஒ.—முதற்பாட்டில், அத்யக்தம் குணவானுமாய் விரோதிநிரஸநஸமர்த்தனுமா யிருக்கிற எம்பெருமான் விரும்பாத ஶ்லாக்யமான நிறங்கொண்டு ஒருகருமமில்லை யென்கிருள்.

[கூருளும்] - ஒரோப்ரதேஶத்தைக் கூருகக்கொள்ளும். [தனியுடம்பு] - இப்படி பரார்த்தமாகையாலே அத்விதீயமான உடம்பு. [நிருமித்துப்படைதொட்ட மாருளன்] - ஸங்கல்பித்து ஆயுதக்ரஹணம்பண்ணின ஆண்பிள்ளை.

ப.—முதற்பாட்டில், ஆஶ்ரிதர்க்கு அபாஶ்ரயமான ஶீலவத்தையையும், அநாஶ்ரிதர்க்கு விநாஶகமான ஆண்பிள்ளைத்தனத்தையுமுடைய உபாயபூதன் ஆதரியாத அழகியநிறத்தால் எனக்கு ஒரு கார்யமில்லை யென்கிருள்.

ஏறு ஆளும் - ருஷபவாஹநத்தை யுடையனுய், இறையோனும் - ("ஶர்வமேஶாஹம் ஸவஜெஹிநாமு" என்று நாட்டுக்கு) ஈஶ்வரனைத் தன்னை யபிமாநித்திருக்கும் ருத்ரனும், திசைமுகனும் - பஹுமுகமாக ஸ்ருஷ்டியைப்பண்ணுகைக்கு யோக்யனை சதுர்முகனும், (ஈஶ்வராபிமானிகளான இவர்களோடொக்க), திருமகளும் - தனக்கு நித்யாநபாயிநியான ஸம்பத்தாயுள்ள லக்ஷ்மியும், கூறு - ப்ரதிநியதமாம்படி, ஆளும் — அநுபவித்துத் தங்களுக்கிருப்பிடமாக அபிமாநித்துக்கொண்டுபோருமதாய், தனி — அத்விதீயமாம்படி அப்ராக்ருதவைலக்ஷண்யத்தை யுடைத்தான, உடம்பன் - திருமேனியையுடையனுய், (ஆஶ்ரிதவிஷயத்தில் 'அபிமாநதூஷிதர்' என்றும், 'அநபாயிநி' என்றும் வாசிவையாத ஶீலத்துக்குமேலே அவர்கள் விரோதியைப் போக்குமிடத்தில்), குலம்குலமா - திரள்திரளாக, அசுரர்களை - அஸுரர்களை, நீருகும்படியாக-தூளிசேஷமாய்ப்போம்படி, நிருமித்து — திருவுள்ளத்தாலே அறுதியிட்டு, படைதொட்ட-ஆயுதமெடுத்து வ்யாபரித்த, மாருளன் - ஶாத்ரவநிர்வாஹகனுனவன், கவராத - விரும்பாத, மணி மாமை - ஒளியையுடைய நிறத்தால், குறைவு இலம் - நமக்கு ஒரு கார்யமில்லை.

நிருமித்தல் - நிரூபித்தல். மாருளன் - எதிர்த்தலையுடையவன். கவர்தல் - விரும்புதல். மணியென்று - ஒளியைக் காட்டுகிறது. மாமை - நிறம். குறைவிலமென்றது - இத்தால் கொள்ளுவதொரு ப்ரயோஜநமுண்டாய் அக்குறை கிடப்பதில்லை யென்றபடி; இது - எல்லாப் பாட்டிலு மொக்கும்.

இ.—முதற்பாட்டில், அத்யந்தகுணவானுய் விரோதிநிரஸநஸமர்த்தனுமாயிருக்கிறவன் விரும்பாத ஶ்லாக்யமான நிறத்தால் எனக்கு ஒருகார்யமில்லை யென்கிருள்.

[ஏருளும் இறையோனும்] - வேதாத்மாவான பெரியதிருவடிக்கு எதிராக ஒரு எருத்தை வாஹநமாகக்கொண்டு திரியுமவன். [ஆளும்]-இவனுடைய உபயவிபூதி இருக்கிறபடி. [இறையோனும்] - உபயவிபூதிநாதன் "ஈஶ்வரோஹம்" என்றுன் என்ன, தானும் மஹாவ்ருக்ஷம்போலே 'ஈஶ்வரோஹம்' என்று இருக்கை. [திசைமுகனும்] - அவனுக்கும் ஜநகனுய் "ஸஹஸ்ரிதிவ்யாஹாஸ:" என்கிறபடியே நாலுவேதங்களையும் உச்சரிக்கைக்கு நாலுமுகத்தையுடைய ப்ரஹ்மாவும், 'ஈஶ்வரோஹம்' என்று இருப்பாரும் அணைகிற உடம்பை 'அடியேன்' என்றிருக்கிற நான் இழப்பதே! ஸ்வதந்த்ரபுத்தி பண்ணுவார் பெற்ற உடம்பை ப்ரகாரமாகபுத்திபண்ணியிருக்கிற நான் இழப்பதே? [திருமகளும்] - "ஶ்ரீநந்யா" என்கிற பிராட்டியும். [கூறு ஆளும்] - கூறிட்டுஆளும்; அதிகாரிபுருஷர்களென்று பிராட்டியிடத்திலே நலிதல், படுக்கைப்பற்றிலுள்ளாரென்று அவர்களிடத்திலே நலிதல் செய்யாதபடி ஸமமாயிருக்கை. "தவவஸாதொஷிதவேநவிஷ்ணுநாவஹவிஷ்ணுநா । ஶவாஶெஸுஜெக்ஷிணெஶஜ்ஞ:நிவாஸஃவஶிகஷு தஃ" என்னும்படி கூறிட்டுக்கொடுத்தானிறே. [தனி உடம்பன்] - திவ்யாத்மஸ்வரூபத்துக்கு நிறங்கொடுக்கும்

உடம்பு. இவ்வுடம்பிறே வரையாதே எல்லார்க்கும் அணையலாயிருக்கிறது. இப்படி ஶீலவானாயிருக்க இழப்பதே! [குலம்குலமா அசுரர்களை] - விரோதிகள் பல்கினபடியாலே திரள்திரளாக வாயிற்று அஸுரவர்க்கத்தை அழிப்பது. [நீருகும்படியாக] - "ஸிஞ்ஜம்ஸிஞ்ஜம்..." என்கிறபடியே தூளியாக. [நிருமித்துப்படைதொட்ட] - "..." என்கிறபடியே அழிக்கக்கடவதாக ஸங்கல்பித்து ஆயுதமெடுக்குமவன். நிருமித்து - நிர்மித்து. ஸ்ருஷ்ட்யாதிகளை ஸங்கல்பத்தாலே நிர்வஹிக்குமவன் ஆஶ்ரிதவிரோதிகள் என்றவாறே ஸாயுதனாய் மேல்விழும். ஸ்ருஷ்ட்யாதிகளில் ஸத்யஸங்கல்பனாயிருக்கும். ஆஶ்ரிதவிரோதிகளளவில் அஸத்யஸங்கல்பனாயிருக்கும். "..." - என்னை மிடறுபிடித்தாரையும் என்உயிர்நிலையிலே நலிவாரையும் நலிவேன் என்னுமவன். [மாறுளன்] - மாற்றான்; எதிரியென்னுதல்; பெருமிடுக்கனென்னுதல். "..." [நிருமித்துப் படைதொட்ட] - ஸங்கல்பத்திலே விரோதிவர்க்கம் தூளியாயிற்று; அவதாரத்திலும் ஆழ்வார்கள் ஸ்வரூபஸித்த்யர்த்தமாக ஆழ்வார்களை தரித்த இத்தனை என்றுமாம். [மணிமாமை குறைவிலமே] - இப்படி ஶீலவானாய்ப் பெருமிடுக்கனானவன் விரும்பாத இந்நிறத்தால் என்னகார்யமுண்டு? "..." என்னக்கடவதிறே. மணி - ஒளி.

௫௫.— முதற்பாட்டு. அத்யந்தகுணவானுமாய் விரோதிநிரஸந ஸமர்த்தனுமாயிருக்கிற எம்பெருமான் விரும்பாத ஶ்லாக்யமான நிறங்கொண்டு எனக்கு ஒரு கார்யமில்லை என்கிறாள்.

[ஏருளும்இத்யாதி] - 'நான், நான்' என்பாருக்கும் அணையலாம்படியான உடம்பைக் கிடீர் நான்இழந்திருக்கிறது என்கிறாள். கண்ட காபாலிகந்தர் பெற்றுப்போகிறதுகிடீர் எனக்கு அரிதாகிற தென்கிறாள். [ஏருளும்] - ஸர்வேஶ்வரன் வேதாத்மாவான பெரியதிருவடியை வாஹநமாகவுடையனாயிருக்குமாகில், தானும் கைக்கோள்ளாண்டிகளைப்போலே 'ஒரு எருத்தையுடையேன்' என்று அபிமாநித்திருக்கும். [ஆளும்] - இவனுடைய உபயவிபூதி யிருக்கிறபடி. [இறையோனும்] - அவன் உபயவிபூதிக்கும் கடவனாய் ஸர்வேஶ்வரனாயிருக்கும்; கள்ளியை 'மஹாவ்ருக்ஷம்' என்கிறவோபாதி, தானும் 'ஈஶ்வரன்' என்றிருக்கும். தர்மதர்மிகளுக்கு ஐக்யமுண்

---

முதற்பாட்டு - ஏறளும் இத்யாதி. அத்யந்தகுணவானுமாய் என்றது - 'ஏருளும்'தொடங்கி, 'தனியுடம்பன்' என்னுமளவுங் கடாக்ஷித்து. குணமாவது - ஸௌஶீல்யம். 'குலங்குலமா' என்று தொடங்கி, 'படைதொட்ட' என்னுமளவையும்பற்ற, 'விரோதிநிரஸந' இத்யாதி. 'மாறுளன்' இத்யாதியைப்பற்ற, எம்பெருமான் இத்யாதி மேலெல்லாம்.

ருத்ரன் ப்ரஹ்மா என்னாதே, 'ஏருளும், திசைமுகனும்' என்றதுக்குக் கருத்து - நான் இத்யாதி. இவ்விஶேஷணங்களைச் சொன்னதுக்கு ஹேது - அவர்களுடைய உத்கர்ஷத்தைச் சொல்லுகையன்றிக்கே, அஹங்காரிகளான அதிஹேயருக்கும் ஸுலபமானது எனக்கு துர்லபமாயிற்றென்கைக்காக வென்றபடி. உக்தத்தை ரஸோக்தியாலே விவரிக்கிறார் - கண்டஇத்யாதி. காபாலி - கபாலத்தையுடையவன், கந்தன் - கந்தையையுடையவ னென்று, இரண்டும் - ருத்ரனைச் சொல்லுதல்; அன்றிக்கே, கந்தனென்று - ஜகத்துக்கெல்லாம் கந்தமான திருநாபீகமலத்திலே பிறந்த ப்ரஹ்மாவைச் சொல்லுதல். 'ஏறு' என்றதுக்கு ஹாவம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. உடையவனென்னாதே, 'ஆளும்' என்றதுக்கு ஹாவம் - இவனுடைய இத்யாதி. இறையோனென்னாதே, 'இறையோனும்' என்று ஊன்றிச்சொல்லுகிறதுக்கு ஹாவம் - அவன் இத்யாதி. யத்வா, "பதிம் விஶ்வஸ்ய" என்று ஈஶ்வரன் இருக்க, இவனை - 'இறையோன்' என்கிறதென்? என்ன, அவன் உபய இத்யாதி. 'இறையோன்' என்கிறதும் - வாஸ்தவமான ஆகாரமல்ல, அவனபிமானித்திருக்கும் ஆகாரத்தை யிட்டுச் சொல்லுகிற தென்றபடி. கள்ளியை மஹாவ்ருக்ஷமென்கிறவோபாதி - "..." என்னக்கடவதிறே. "..." 'சிவனயனனாய்' என்று - ஐக்யம் சொல்லாநிற்க, 'இறையோன், திசைமுகன்' என்று பேதமாகச் சொல்லுவானென்? என்ன, தர்மதர்மிகளுக்கு இத்யாதி. அதாவது - 'தேவன்'என்றால்-தேவசரீரத்துக்கும், சரீரியான ஆத்மாவுக்கும் ஐக்யம்

டித்தனைபோக்கி, தர்மித்வயத்துக்கு ஐக்யமில்லை. [திசைமுகனும்] - ஸ்ருஷ்டிக்குஉறுப்பாக நாலு வேதங்களையும் உச்சரிக்கைக்கூடான நாலுமுகத்தை யுடையனாய், 'நான் ஸ்ரஷ்டா' என்று அபிமானித்திருக்கிற சதுர்முகனும். [திருமகளும்] - "அநந்யாராகவேணாஹம்" (அநந்யாராகவேணாஹம்) என்றுசொல்லுகிறபடியே யிருக்கிற பெரியபிராட்டியாரும். [கூருளும் இத்யாதி] - இவர்கள் கூறிட்டாளும்படி அத்விதீயமான உடம்புபடைத்தவன். 'நாங்கள் அதிகாரிபுருஷர்களுடையவர்கள்' என்று பிராட்டி பரிஸரத்திலே புக்குச் சிலர் அழிவுசெய்தல், 'நாங்கள் படுக்கைப்பற்றிலுள்ளோம்' என்று சிலர் அவர்களெல்லையிலே புக்கு அழிவுசெய்தல் செய்யவொண்ணாதபடி ஆளுமாயிற்று. திவ்யாத்மஸ்வரூபத்திலும் வீறுடையது திருமேனியிறே. ஸர்வாபாஶ்ரயமாயிறே திருமேனிதான் இருப்பது. இப்படி சீலவானாயிருக்கிறவனைக்கிடீர் நான் இழந்திருக்கிறது. [குலங்குலமா] - அணைக்கைக்கு ப்ரதிபந்தகமுண்டாய்த்தான் இழக்கிறேனோ? "கோந்வஸ்மிந்ஸாம்ப்ரதம்லோகேகுணவாந்" (கோந்வஸ்மிந்ஸாம்ப்ரதம்லோகேகுணவாந்) என்றாற்போலே கீழ்; "வீர்யவாந்" (வீர்யவாந்) என்றாற்போலே இது. குலங்குலமாக அஸுரவர்க்கத்தை [நீறுகும்படியாக நிருமித்து] - "நிஹதா:பூர்வமேவ" (நிஹதா:பூர்வமேவ) என்கிறபடியே, 'உறவு வேண்டோம்' என்றபோதே பஸ்மமாய்ப்போம்படி ஸங்கல்பித்து. [படைதொட்ட] - ஜகத்ஸ்ருஷ்டியில்வந்தால் ஸங்கல்பமேகொண்டு நிர்வஹிக்குமவன், ஆஶ்ரிதவிரோதிகளை அழியச்செய்யுமிடத்தில் ஸாயுதனாய்க்கொண்டு மேல்விழும். ஸ்ருஷ்ட்யாதிகளில் ஸத்யஸங்கல்பனாயிருக்கும், ஆஶ்ரிதவிரோதிகளளவில் அஸத்யஸங்கல்பனாயிருக்கும். [நீறுகும்படியாக] - "நிஹதா:

---

சொல்லுகிறாப்போலே, இவர்கள் சரீரமாயும் அவன் சரீரியாயுமிருக்கையாலே ஐக்யம்சொன்னதித்தனை போக்கி, ஸ்வரூபைக்யம் சொல்லவில்லை யென்றபடி. தர்மதர்மிகளுக்கு என்றது - தர்மதர்மிஹாவேச வென்றபடி. ஸ்ருஷ்டிக்குஉறுப்பாக இதி - "நாராயண்வக்த்ராந்நாத்" இத்யாதி விவக்ஷிதம். உக்த ப்ரதிகோடியாக ஹாவம்-அநந்யா இத்யாதி. "ஶக்யா லோபயிதும் நாஹமைஶ்வர்யேண தநேந வா। அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" இதி ராவணம்ப்ரதி ஸீதா. ஶப்தார்த்தம் - இவர்கள் கூறிட்டு இத்யாதி. 'ஆளும்' என்னாதே, 'கூறுளும்' என்றதுக்கு ஹாவம் - நாங்கள் இத்யாதி. அழிவு - பீடை. படுக்கைப்பற்றிலுள்ளோம் - அந்த:புரஸம்பந்திகளாயிருந்தோம். "நதத்ஸம" என்று ஸ்வரூபமன்றோ அத்விதீயமாயிருப்பது? திருமேனியை - 'தனியுடம்பு' என்னலாமோ? என்ன, திவ்யாத்ம இத்யாதி. அநந்யையான பிராட்டிக்கு ஒழிய, அஹங்காரிகளான இவர்களுக்கு இருப்பிடமென்னலாமோ? என்ன, ஸர்வ இத்யாதி. "வஸ்த்ராதிஷு" இத்யாத்யநுஸந்தேயம். இப்போது 'கூறுளுந்தனியுடம்பன்' என்றதுக்கு ஹாவம் - இப்படி இத்யாதி. விரோதிநிரஸநஶீலதையைச் சொல்லுகிறவனுடைய ஹார்த்த ஹாவம்- அணைக்கைக்கு இத்யாதி. ஸௌஶீல்யகதநாநந்தரம் வீர்யம்சொன்னதுக்கு த்ருஷ்டாந்தம் - கோந்வஸ்மிந் இத்யாதி. "கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கஶ்ச வீர்யவாந்" இதி ஸங்க்ஷேபே. ப்ரத்யேககுணப்ரகரணமாகையாலும், குண்யதஇதி - குண: என்கிற வ்யுத்பத்தியாலும், 'குணவாந்' என்று ஶீலகுணத்தைச் சொல்லுகிறது. குண்யதஇதி குண: என்றது - எல்லாராலும் கொண்டாடப்படு மென்றபடி. ஶப்தார்த்தம் - குலங்குலமாக இத்யாதி. நிருமித்து - ஸங்கல்பித்து. ஸங்கல்பித்தபோதே நீறுகும்படி ஸங்கல்பித்ததுக்கு ப்ரமாணம் - நிஹதா இத்யாதி. "தஸ்மாத் த்வமுத்திஷ்ட யஶோ லபஸ்வ ஜித்வா ஶத்ரூந் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம்। மயைவைதே நிஹதா:பூர்வமேவ நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசிந்" இதி கீதாஸ்வேகாதஶே. ஸங்கல்பமாத்ரமே போராதோ, ஆயுதமெடுப்பானென்? என்ன, ஜகத்ஸ்ருஷ்டியில் இத்யாதி. ஆஶ்ரிதவ்யாமோஹத்தா லென்றபடி. பாரதஸமரவிவக்ஷயா 'படைதொட்ட' என்றதுக்கு ஹாவம் - ஸ்ருஷ்ட்யாதிகளில் இத்யாதி. அஸத்யஸங்கல்பனாய் என்றது - 'ஆயுதமெடேன்' என்று ப்ரதிஜ்ஞைபண்ணிவைத்து ஆயுதமெடுத்ததைப் பற்ற. யத்வா, பூர்வோக்தவிவரணம் - ஸ்ருஷ்ட்யாதிகளில் இத்

…தக்தம்" (சிந்நம்பிந்நம்ஶரைர்தக்தம்) என்கிறபடியே, தூளியாம்படியாக ஸங்கல்பித்து ஆயுத மெடுக்குமவன். "யஜ்ஞவிக்நகரம் ஹந்யாம் பாண்டவாநாஞ்ச துர்ஹ்ருதம்" (யஜ்ஞவிக்நகரம்ஹந்யாம் பாண்டவாநாஞ்சதுர்ஹ்ருதம்) - தன்னை மிடற்றைப்பிடித்தாரையும், உயிர்நிலையிலே * நலிந்தாரையும் நலியுமவன். [மாறாளன்] – மிடுக்க னென்னுதல், எதிரி யென்னுதல். துர்யோதநன் 'அமுது செய்யவேணும்' என்ன, "த்விஷதந்நம் நபோக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத்" (த்விஷதந்நம் நபோக்தவ்யம் த்விஷந்தம்நைவபோஜயேத்) என்று ஆஶ்ரிதவிரோதிகளைத் தனக்கு விரோதிகளாகக் கொண்டு வழக்குப்பேசுமவன். [கவராத] - விரோதிகளை அழியச்செய்து விடாய்த்து 'தண்ணீர் தண்ணீர்' என்று அவன்வந்தணையாத நல்லநிறத்தால் ஒருஅபேக்ஷை யுடையோமல்லோம். நிறத்திலே அவன் ஆதரிக்குமன்றன்றோ இத்தால் கார்யமுள்ளது? அல்லது நிறக்கேடாமித்தனையிறே. (க)

## இ ர ண் ட ா ம் ப ா ட் டு.

மணிமாமைகுறைவில்லா மலர்மாதருறைமார்பன்
அணிமானத்தடவரைத்தோள் அடலாழித்தடக்கையன்
பணிமானம்பிழையாமே அடியேனைப்பணிகொண்ட
மணிமாயன்கவராத மடநெஞ்சால்குறைவிலமே.

ஆ.—(மணிமாமை.) நிரதிஶயஸௌந்தர்யநிதியான திருத்தோள்களையுடையனாய் ஶங்கசக்ராதி திவ்யாயுதபூஷிதனாயிருந்த எம்பெருமான் பெரியபிராட்டியாரோடு கலந்தருளுமா போலே என்னோடு பண்டு கலந்தருளினான்; அப்படியே எனக்கு ஸுலபனாயிருந்தவன் கவராத மடநெஞ்சால் குறைவிலம் என்கிறாள்.

---

யாதி என்னுதல். இந்தப்பக்ஷ, ஸங்கல்பமாத்ரமன்றியே அதுக்குமேலேயும் கார்யம்செய்யு மென்றபடி. 'நீறாகும்' இத்யாதிக்கு ஶப்தார்த்தம் - சிந்நம் இத்யாதி. "சிந்நம் பிந்நம் ஶரைர்தக்தம் ப்ரபக்நம் ஶஸ்த்ரபீடிதம் | பலம் ராமேண தத்ருஶு: ந்யஸ்தாஸ்ஸர்வா: ஸ்த்ரியோ நிஶாசரீணாம்" இதி யுத்தகாண்டே சதுர்நவதிதமே. ஸங்கல்பத்தாலன்றிக்கே தானே அழியச்செய்யுமென்றதுக்கு ப்ரமாணம் - யஜ்ஞவிக்நகரம் இத்யாதி. அதுக்கு அர்த்தம் - தன்னை இத்யாதி. இந்தப்ரமாணத்துக்கு உத்தரார்த்தமும் ஆகாமுங் காணோம். "கண்டம் ஹி ஸம்யஜ்ஞநாம் ஹோதா" என்றத்தைப்பற்ற "யஜ்ஞவிக்நகரம்" என்றதுக்கு - தன்னை மிடற்றைப்பிடித்தாரையும் என்று அர்த்தம் அருளிச்செய்தது. "ஜீவப்ராணா ஹி பாண்டவா:" என்கையாலே "பாண்டவாநாஞ்ச துர்ஹ்ருதம்" என்றதுக்கு 'உயிர்நிலையிலே நலிந்தாரையும்' என்று அர்த்தம் அருளிச்செய்தது. இப்படி பஸ்மமாம்படி ஸங்கல்பித்துப் படைதொட்டு நலியவேண்டுகிறதென்? என்ன, மாறாளன் இத்யாதி. ஸர்வபூதஸுஹ்ருத்தான தனக்கு எதிராகைக்கு சத்ருக்களுண்டோ? என்ன, துர்யோதநன் இத்யாதி. ஆஶ்ரிதவிரோதிகள் தனக்குவிரோதிக ளென்றபடி. "த்விஷதந்நம் நபோக்தவ்யம் த்விஷந்தம் நைவபோஜயேத் | பாண்டவாந் த்விஷஸே ராஜந் மம ப்ராணா ஹி பாண்டவா:" இதி பாரதே. வழக்கு - ந்யாயம். "தத்ருஷ்ட்வா" என்கிற ஶ்லோகத்தை உட்கொண்டு அருளிச்செய்கிறார் - விரோதிகளை இத்யாதி. அழகியநிறமாகில் 'வேண்டா' என்கிறதென்? என்ன, நிறத்திலே இத்யாதி. இது - சாடு. அதாவது - நிறத்திலே, முறையிலே யென்றபடி. நிறக்கேடாம் - காந்திஹீநமாமென்று ஸ்வஹாவார்த்தம்; சாடுவுக்கு, முறையிலே செய்ததன்றிக்கே ஒழியுமத்தனை யென்றபடி. ஆத்மாத்மீயங்களை விடும்போது, முன்னே ஆத்மீயங்களை விடுகைக்கு ஹேது எது? என்ன, அவன் விரும்பின அடைவிலே விடுகிறாள்; முற்பட ஆத்மீயங்களை விரும்புகையாலே. குறைவிலமென்றது - இத்தால் கொள்ளுவதொரு ப்ரயோஜநமுண்டாய்க் குறைகிடப்பதில்லை யென்றபடி. இப்படி - எல்லாப்பாட்டுக்கும் ஒக்கும். க்ரமேண அந்வய:. (க)

---

* 'நலிவாரையும்' என்று பல ஸ்ரீகோஶங்கள்.

ஒ.— இரண்டாம்பாட்டில், பெரியபிராட்டியார் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்பையுடையனுமாய் அழகிதாய்க் கொழுந்துவிட்டுத் திரட்சிபெற்றுச் சிக்கென்றிருந்த திருத்தோளையும் ப்ரதிபக்ஷத்தையடக்கும் ஸ்வபாவமான திருவாழியாலே பூர்ணமான கையையுமுடையனாய். [பணிமானம் என்று தொடங்கி] - அடிமைகொள்ளுமிடத்தில் பெரியபிராட்டியாரோடு ஒக்க என்னை அடிமைகொள்ளுவதும் செய்து இந்த்ரநீலம்போலே கறுத்த திருநிறத்தையுடையனானவன்.

ப.—அநந்தரம், பிராட்டியோடுகூடின விக்ரஹவைலக்ஷண்யத்தைக் காட்டி அடியிலே என்னை அடிமைகொண்ட உபேயபூதன் ஆதரியாத நெஞ்சால் ஒருகார்யமில்லை யென்கிறாள்.

மணி - (நித்யஸம்ஶ்லேஷத்தாலே) நிரதிஶயௌஜ்ஜ்வல்யமான, மாமை - நிறத்துக்கு, குறைவில்லா - குறையற்றிருப்பாளாய், (இந்தஆபிரூப்யத்துக்குமேலே), மலர்மாதர் - பூவிற்பிறந்த ஆபிஜாத்யத்தால் வந்த ஸௌகுமார்யாதிகுணவிஶிஷ்டையான போக்யதையையுடைய நாரீணாமுத்தமையானவள், உறை - நிரந்தரவாஸத்தைப்பண்ணுகிற, மார்பன் - திருமார்பையுடையனாய், அணி - ஆபரணஶோபிதமாய், மானம் - ஆயதமாய், தடம் - ஸுவ்ருத்தமாய், வரை - மலையைக் கணையமாக வகுத்தாற்போலே சிக்கென்ற, தோள் - தோள்களையுடையனாய், அடல்—விரோதிநிரஸநஶீலமான, ஆழி-திருவாழியையுடைத்தான, தட கையன்-பெரிய கையையுடையவனாய், பணிமானம் - கைங்கர்யவ்ருத்திகளில் ஓரளவும், பிழையாமே - தப்பாதபடி, அடியேனை-அடியேனான ஸ்வரூபத்தையுடைய என்னை, பணிகொண்ட - அதுக்கீடாக அடிமைகொண்ட, மணிமாயன் - நீலரத்நம்போற் கறுத்தநிறத்தையுடையனானவன், கவராத - விரும்பாத, மடநெஞ்சால் - விதேயமான நெஞ்சால், குறைவுஇலம் - ஒருகார்யமுடையோமல்லோம்.

அணி-ஆபரணம். மானம்-அளவுடைமை. தடம்-சுற்றுடைமை. மாயன்-கரியவன்.

ஈ.—இரண்டாம்பாட்டில், இஶ்ஶீலத்துக்கும் அடியான பிராட்டியோடே கூடின வடிவழகைக் காட்டி அடிமைகொண்டவன் விரும்பாத பவ்யமான நெஞ்சால் என்ன கார்யமுண்டு? என்கிறாள்.

[மணிமாமைகுறைவில்லா] - நித்யஸம்ஶ்லேஷத்தாலே விலக்ஷணமாய்ப் பூர்ணமான திருநிறத்தையுடையவள், அநபாயிநியாகையாலே 'மணிமாமைகுறைவிலம்' என்று அறியாதவள். [மலர்மாதர்] - நிறமேயன்றிக்கே பிரியத்தகாத ஸௌகுமார்யத்தையுடையவள். பரிமளத்தை வடிவாக வகுத்தாற்போலே யிருக்கை. [உறைமார்பன்] - நித்யவாஸம்பண்ணுகிற திருமார்பையுடையவன். பூவிற்பிறப்பேயாய் நித்யவாஸம்பண்ணுவது திருமார்பிலேயாயிருக்கை. தான்பிறந்த பூ நெருஞ்சிமுள்ளோபாதியாம்படி மார்புபடைத்தவன். பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்தபின்பு ஸ்ரீமிதிலையை நினைக்கிலாயிற்று, இவள் பூவை நினைப்பது. அவள் 'அகலகில்லேன்' என்கிற வடிவை நான் இழப்பதே! "நகஸ்ஶீஷநாவபாயூஜி" என்கிறவள் நித்யவாஸம்பண்ணா நிற்க, நான் இழப்பதே! [அணிமானத்தடவரைத்தோள்] - அணியென்று ஆபரணம், மானமென்று அளவு. 'ஆபரணத்துக்கு ஆபரணமான தோள்' என்று சீயர் அருளிச்செய்வர். 'அணிபெருகிய தோள்' என்று ஒருதமிழன். "ஆஜாநுபாஹும்" என்று அழகிதாய், "ஆயதாஸு" என்று நீண்டு, "ஸுவ்ருத்தாஸு" என்று திரட்சிபெற்று "பரிவோபமா:" என்று திண்ணிதான தோள். [அடலாழித்தடக்கையன்] - அவளும் அவனுமான சேர்த்திக்கும் அத்தோளழகுக்கும் கல்மதிளிட்டாற்போலே ரக்ஷகமான திருவாழி. ப்ரதிபக்ஷத்தை அடர்க்கும் ஸ்வபாவமான திருவாழியாலே பூர்ணமான திருக்கையையுடையவன். [பணிமானம்பிழையாமே] - பணி - கைங்கர்யம், மானம் - அளவு. "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" என்றிறே பாரிப்பது. அதில் ஒன்றும் தப்பாமே. [அடியேனைப் பணிகொண்ட] - ராஜாபுத்ரனுக்கு ராஜ்யத்தைக்கொடுத்தாற்

போலே ஶேஷஶஶதனை எனக்கு ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைத்தந்து. [பணிகொண்டமணிமாயன்] - பிராட்டியும் தானும் சேர இருந்து கையுந்திருவாழியுமான அழகையும் ப்ராப்தியையும் காட்டியாயிற்று அடிமைகொண்டது. கையிலே திருவாழியையுடைய வஸ்துவிறே ப்ராப்யவஸ்து. [மணிமாயன்] - நீலரத்நம்போலேயிருக்கிற, மாயன் - மாயோன்; கரியோன். [கவராத மடநெஞ்சால் குறைவிலமே]-"நஜீவெயம்க்ஷணமபி"என்று அவன் மேல்விழாத பவ்யமான நெஞ்சால் எனக்கு என்னகார்யமுண்டு? "கோவைவாயா" வில் "பூசும்சாந்து என்நெஞ்சமே" என்னும்படி விரும்பினவன் உபேக்ஷித்த நெஞ்சால் எனக்கு என்னகார்யமுண்டு? என்கிருள் என்று இவ்விடத்திலே சீயர் அருளிச்செய்வர். 'உடையவன் தன்உடைமையைப் பேணுகில் நானோ இத்தை நோக்குவேன்?' என்கிருள்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. இஶ்ஶீலத்துக்கும் அடியான பிராட்டியோடேகூட வடிவழகைக் காட்டி அடிமைகொண்டவன் விரும்பாத பவ்யமான நெஞ்சால் என்னகார்யமுண்டு? என்கிருள்.

[மணிமாமைகுறைவில்லா] - 'மணிமாமைகுறைவிலமே' என்ன வேண்டாதவள். அவளுடைய நித்யஸந்நிதியாலே என்னை அடிமைகொண்டவன். "நகஶ்சிந்நாபராத்யதி" (நகஶ்சிந்நாபராத்யதி) என்கிறவளும் கூட இருக்கச்செய்தே என்னை உபேக்ஷித்திருக்குமாகில், என்னுடைமையால் எனக்குத்தான் ப்ரயோஜநமேன்? [மலர்மாதர்] - நிறமேயன்றிக்கே பிரியத்தகாத ஸௌகுமார்யத்தையுடையவள். புஷ்பத்தில் பரிமளத்தை வடிவாக வகுத்தாற்போலேயிருக்கை. [உறைமார்பன்] - அவள் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வையுடையவன். பூவில் பிறப்பேயாய், நித்யவாஸம்பண்ணுவது மார்விலேயாயிருக்கை. தான்பிறந்த பூ நெருஞ்சிக்காடாம்படியான மார்வு படைத்தவன்."அனிச்சமும் அன்னத்தின்தூவியும் மாத,ரடிக்கு நெருஞ்சிப்பழம்" என்றுனிறே. முக்தன் ஸம்ஸாரயாத்ரையை ஸ்மரியாதாப்போலே பூவை நினையாதே வர்த்திக்கும் மார்வுபடைத்தவன். பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்தபின்பு ஸ்ரீமிதிலையை நினைக்கிலா

---

இரண்டாம்பாட்டு. - மணிமாமை இத்யாதி. பாட்டெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - இஶ்ஶீலத்துக்கும் இத்யாதி. கீழ்ப்பாட்டைக் கடாக்ஷித்து 'இஶ்ஶீலத்துக்கும்' என்றது. இஶ்ஶீலத்துக்கும் அடியான வென்றது - "ஸ்வயம்ஹி தத்தேஜஸாஜநகாத்மஜா" என்றத்தைப் பற்ற. தத்தேஜஃ - தஸ்ய தேஜஃ.

'மலர்மாதர்' என்ன அமைந்திருக்க, 'மணிமாமைகுறைவில்லா' என்று விஶேஷிக்கிறதென் ? என்ன, மணிமாமைகுறைவிலமே இத்யாதிவாக்யத்தாலே. ஆக, இவ்வாக்யத்வயத்தாலும் பலித்தது - ப்ராப்யதசையிலும் புருஷகாரபூதை யென்றபடி. அவளுடைய இத்யாதிக்கு - 'மலர்மாதருறைமார்பன் - அடியேனைப்பணிகொண்ட' என்று அந்வயத்திலே தாத்பர்யம். ஆக, பிராட்டி ஸம்பந்தம் சொன்னதுக்கு மூன்று ஶாவம். 'மாதர்' என்றதுக்கு ஶாவம் - நிறமே இத்யாதி. மாது - ஸௌகுமார்யம். ஸௌகுமார்யத்தையுடையவளென்றது - மார்த்தவத்தையுடையவளென்றபடி. 'மலர்மாதர்' என்றதுக்கு அர்த்தம் - புஷ்பத்தில் இத்யாதி. 'உறை' என்ற வர்த்தமாநார்த்தம் - பூவில் இத்யாதி. பூவில் ஸம்பந்தமாத்ரமே சொல்லி, அவ்விடம்போலே மாதர்மார்ப னென்னுமல், 'உறைமார்பன்' என்றதிறே. 'மலர்மாதர்' என்றதிலே நோக்காக உக்தத்தை விவரிக்கிருர் - தான்பிறந்த இத்யாதி. அன்றிக்கே, பூவைவிட்டுத் திருமார்விலே யிருக்கைக்கு ஹேது வேது ? என்ன, தான்பிறந்த இத்யாதி என்னுதல். பூ நெருஞ்சிக்காடாயிருக்குமோ ? என்ன, அனிச்சமும் இத்யாதி. அனிச்சமாவது - அனிச்சப்பூவென்று ஒரு புஷ்பவிஶேஷம். அது நோக்கக் குழையும். அன்னத்தின்தூவி - அன்னத்தின் சிறகு. தூவி - சிறகு. அது அதிம்ருதுவாயிருக்கும். இவளையும் - 'மாதர்' என்றதிறே. 'அனித்தம்' என்றொரு பாடமுண்டு. அனித்தமாவது நாகமல்லிகை. 'தான்பிறந்தபூ நெருஞ்சிக்காடு' என்றத்தால் பலிதத்தை ஸஹிதர்ஶநமாக அருளிச்செய்கிருர் - முக்தன் இத்யாதி. நினையாமைக்கு த்ருஷ்டாந்தாந்தரேண த்ருடீகரணம் - பிராட்டி இத்யாதி. வர்த்த

யிற்று, இவள் பூவைகளைப்பது. அவள் "அகலகில்லேன்" என்கிற வடிவை நான் இழப்பதே! [அணிமானத்தடவரைத்தோள்] - அணியேன்று - ஆபரணம். மானமேன்று - அளவு. "ஸர்வபூஷணபூஷார்ஹா:" (ஸர்வபூஷணபூஷார்ஹா:) என்கிறபடியே "ஆபரணத்துக்கு ஆபரணமான தோள்" என்று சீயர் அருளிச்செய்வர். 'அணியேன்று - அழகாய், மானமேன்று - பெருமையாய், அணிபெருகியதோள்' என்று ஒருதமிழன். அத்தாலும் - "ஆபரணஸ்யாபரணம்" (ஆபரணஸ்யாபரணம்) என்கிறபடியாயிருக்கை. "ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச" (ஆயதாஶ்சஸு- வ்ருத்தாஶ்ச) என்கிறபடியே, அளவுடைத்தாய்ச் சுற்றுடைத்தாய் ஒருவரால் சலிப்பிக்கவொண்ணுத தோள்படைத்தவன். [அடலாழித்தடக்கையன்] - பிராட்டியும் தானுமான சேர்த்திக்கு அஸ்த்தாநே பயஶங்கைபண்ணி எப்போதுமோக்க யுத்தோந்முகமாய் ப்ரதிபக்ஷத்தையடர்க்கும் ஸ்வபாவமான திருவாழியைப் பூர்ணமான கையிலே யுடையவன். இவனுடைய வ்ருத்தம் கைமேலே காணலாயிருக்கிறபடி. [பணிமானம்பிழையாமே] - பணியேன்று கைங்கர்யம். மானமேன்று - அளவு. அதில் ஓரளவும் குறையாமே. "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (அஹம்ஸர் வம்கரிஷ்யாமி) என்கிறபடியே. [அடியேனைப் பணிகோண்ட] - இளையபெருமாளை அடிமை கோண்டாற்போலே, இருவருங் கூட இருந்துகாணும் இவரை அடிமைகோண்டது. [அடியேனை] - குமரிருந்துபோகாமே. பரதந்த்ரஜந்மமாயிருக்க வகுத்தவனுக்கு உறுப்பன்றிக்கே போகாமே. இங்கே அருளிச்செய்யும் வார்த்தை:—'எழுந்தருளியிருக்கிற மடத்திலே ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுது

---

*மாநிர்த்தேசத்துக்கு ஹார்த்தபாவம் - அவள்அகலகில்லேன் இத்யாதி. அன்றிக்கே, ஸ்ரிய:பதித்வகதநத்துக்கு நாலாம் தாத்பர்யமாதல். அளவென்று - தைர்க்யம். இன்னதுக்கு அணியென்று விஶேஷியாமையாலே ஆபரணத்துக்கு ஆபரணமென்று விவக்ஷித்து, இத்தை ப்ரமாணகதநபூர்வகமாக அருளிச்செய்கிறுர். ஸர்வபூஷண இத்யாதி. ஸர்வபூஷணைர்பூஷயிதும்அர்ஹா: என்றன்றிக்கே, ஸர்வபூஷணுநிபூஷயிதுமர்ஹா: என்று இங்கு விவக்ஷிதம். தமிழன் நிர்வாஹத்திலே அழகின்மிகுதியைச் சொல்லி, ஆபரணத்தை விஞ்சியிருக்கு மென்றபடி. இந்தப்பக்ஷத்துக்கும் சீயர் அருளிச்செய்ததே ஸித்திக்கு மென்கிறுர் - அத்தாலும் இத்யாதி. சீயர்நிர்வாஹத்திலே சப்தார்த்தம் - ஆயதாஶ்ச இத்யாதி. "ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச பாஹவ: பரிகோபமா: | ஸர்வபூஷணபூஷார்ஹா: கிமர்த்தம் ந விபூஷிதா:" இதி கிஷ்கிந்தாகாண்டே ஹநுமான். "ஆபரணஸ்யாபரணம் ப்ரஸாதநவிதே: ப்ரஸாதநவிஶேஷ: | உபமாநஸ்யாபி ஸகே ப்ரத்யுபமாநம் வபுஸ்தஸ்யா:" இதி விக்ரமோர்வஶீயநாடகே. அளவுடைத்தாய் - தீர்க்கமாய். சீயர்நிர்வாஹத்திலே, அணியென்று - ஆபரணமாயிருப்பதாய்; "ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச" என்கிறபடியே, மானமென்று - அளவுடைத்தாய், தடமென்று - சுற்றுடைத்தாய், வரையென்று - ஒருவரால் சலிப்பிக்கவொண்ணுத தோள் படைத்தவ னென்று சப்தார்த்தம். ஆக, 'அணிமானம்' என்றதுக்கு அர்த்தத்வயம். 'அணிமானத்தடவரைத்தோள்' என்றதும், 'ஆயதாஶ்ச' இத்யாதியும் - ஏகார்த்தம். அதாவது, அணியென்று - ஸர்வபூஷணபூஷார்ஹா: என்கிறத்தை நினைக்கிறது; மானமென்று - அளவாய், அத்தாலே - 'ஆயதாஶ்ச' என்றத்தையும்; தடமென்று - ஸுவ்ருத்தா: என்றத்தையும்; வரையென்று - பரிகோபமா: என்றத்தையும் நினைக்கிறதென்றபடி. 'மலர்மாதருறைமார்பன்' என்றதுக்கு அநுகுணமாக 'அடலாழி' என்றதுக்கு ப்ரயோஜநத்தை அருளிச்செய்யா நின்றுகொண்டு, ஶப்தார்த்தம் - பிராட்டியும் இத்யாதி. ரஸோக்தி-இவனுடைய இத்யாதி. வ்ருத்தம் - ஆசாரமும், திருவாழியும். கைமேலே- ப்ரத்யக்ஷமாக வென்றும். 'பணிமானம்' என்றவிடத்திலே, மானமென்று - அளவாய், அத்யல்பதையைச் சொல்லுகிறது. ஓரளவுங்குறையாமே - அத்யல்பமும் குறையாமே. இத்தால் பலிதம் - அஹம்இத்யாதி. 'மலர்மாதருறைமார்பன் - அடியேனைப்பணிகொண்ட' என்று கூட்டி, "பவாம்ஸ்து ஸஹவைதேஹ்யா" என்கிற வசநத்தை உட்கொண்டு பாவம் - இளைய இத்யாதி. 'மலர்மாதருறைமார்பன் - அடியேனைப்பணிகொண்ட' என்கிற வாக்யதாத்பர்யத்தை அருளிச்செய்து 'அடியேனை' என்கிற பத தாத்பர்யத்தை அருளிச்செய்கிறுர் - அடியேனை இத்யாதி. குமர்இருந்துபோகாமே - 'அடியேனை' என்கிற ஶேஷத்வம் வ்யர்த்தமே போகாதே. இத்தை விவரிக்கிறுர், பாதந்த்ர இத்யாதி. உக்தார்த்தத்தை ஆப்தஸம்வாதத்தாலே த்ருடீகரிக்*

செய்யாநிற்க, ஆச்சான் தண்ணீரமுது பரிமாறுகிறவர், ஓரருகே சாயநின்று பரிமாறினார்; அத்தை உடையவர் கண்டு ஓரடிவந்து முதுகிலே மோதி, 'நேரேநின்றன்றோ வுடோ பரிமாறுவது?' என்றார்; என்ன, ஆச்சான் "பணிமானம்பிழையாமேயடியேனைப்பணிகோண்ட" என்று பணித்தான். [பணிகோண்ட மணிமாயன்] - "தஹ, பச" என்றல்ல அடிமைகோண்டது; பிடாத்தை விழவிட்டு வடிவைக்காட்டி. நீலரத்நம்போன்ற கறுத்தநிறத்தையுடையவன். [கவராத] - வடிவில் சுவட்டையறிவித்து என்னை அநுபவிப்பியாளுகில், பவ்யமான நெஞ்சால் எனக்கு என்னகார்யமுண்டு? சீயர் இவ்விடத்திலே அருளிச்செய்வதோரு வார்த்தை உண்டு - " 'பூசும்சாந்தென்னெஞ்சமே' என்கிறபடியே அன்று அப்படியே இத்தை விரும்பினவன் இன்று இப்படியே உபேக்ஷிக்கையாலே, 'நாயகன் வரவுதாழ்த்தான்' என்று அவன்முன்னே சாந்தைப் பரணியோடே உடைப்பாரைப்போலே என்நெஞ்சுஎனக்குவேண்டா' என்கிறாள்" என்று. பிராட்டி அவனோடே சேர இருந்திலளாகில் நான் ஆறியிரேனோ? தோளழகை எனக்குக் காட்டிற்றிலனாகில், நான் ஆறியிரேனோ? கையும்திருவாழியுமான அழகைக் காட்டிற்றிலனாகில் 'அப்ராப்தவிஷயம்'என்று ஆறியிரேனோ? வடிவழகாலன்றி குணத்தாலே என்னை விஷயீகரித்தானாகில் நான் ஆறியிரேனோ? என்கிறாள். (உ)



## மூன்றாம் பாட்டு.

மடநெஞ்சால்குறைவில்லா மகள்தாய்செய்தோருபேய்ச்சி
விடநஞ்சமுலைசுவைத்த மிகுஞானச்சிறுகுழவி
படநாகத்தணைக்கிடந்த பருவரைத்தோட்பரம்புருடன்
நெடுமாயன்கவராத நிறைவினாற்குறைவிலமே.

*ஆ.—(மடநெஞ்சால்.) நாமபர்யங்கஶாயியாய், தத்ஸம்ஸ்பர்ஶநிரவதிகஸுகத்தாலே வளர்ந்த திருத்தோள்களையுடையனாய், புருஷோத்தமனாய், திருத்தாயாரானயஶோதைப்பிராட்டி நெஞ்சும்வடிவும்போலே தன்னுடையநெஞ்சையும் வடிவையும் அநுகூலமாகப்பண்ணிக்கொண்டு வந்த பேய்ச்சி முடியும்படி நஞ்சமுலை சுவைத்த மிகுஞானச்சிறுகுழவியா யிருந்த நெடுமாயன் கவராத நிறைவினால் குறைவிலம் என்கிறாள்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், அத்யந்தவிலக்ஷணனாயிருந்துவைத்துப் பண்டு என்பக்கலிலே அத்யபிநிவேஶத்தைப் பண்ணினவன் விரும்பாத அடக்கம் எனக்கு வேண்டா என்கிறாள்.*

*[மடநெஞ்சால் என்று தொடங்கி]-பரிவையுடைய யஶோதைப்பிராட்டியைப்போலே ஒருஸ்த்ரீவேஷத்தைக்கொண்டு நிக்ருதிபரதைக்குத் தன்னோடொப்பாரில்லாத பூதனை முடியும்படி நஞ்சையுடைய முலையைச் சுவைத்த பிள்ளைத்தனத்திலே தாய்முலையன்று என்று அறிந்த*

---

*கிறார் எழுந்தருளியிருக்கிற இத்யாதி. உடையவர் எழுந்தருளியிருக்கிற வென்றபடி. பிடாத்தை - பச்சைவடத்தை. சப்தார்த்தம் - நீலரத்நம் இத்யாதி. மாவென்று - கறுப்பாய், அத்தையுடையவன் - மாயனென்றபடி. மாயன் - கரியவன். 'மடநெஞ்சால்குறைவிலம்' என்று ப்ரயோகிக்கிறவளுடைய ஹார்த்தஹாவத்தை ஆப்தஸம்வாதத்தாலே தர்ஶிப்பிக்கிறார் - சீயர் இத்யாதி. 'பூசும்சாந்தென்னெஞ்சமே' என்றவிடத்திலே நெஞ்சின்கார்யமான ஸ்ம்ருதியைச் சாந்தாகச்சொன்னத்தைப்பற்ற - நெஞ்சைச் சாந்துப்பரணியாக விவக்ஷித்து சாந்தைப் பரணியோடே யுடைப்பாரைப்போலே என்று த்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார். நெஞ்சு பரணியாகவும், அதிலுண்டான ஸ்ம்ருதி சாந்தாகவும் விவக்ஷிதம். இவ்வாக்யம் - ரஸோக்தி. 'மலர்மாதருறைமார்பன்' இத்யாதி விசேஷணங்களுக்கு வ்யங்க்யார்த்தங்கள் - பிராட்டி இத்யாதி. க்ரமேண அந்வய:.* (உ)

பேரறிவையுடையவன். [படநாகத்து என்று தொடங்கி] - தன்னுடைய ஸ்பர்ஶத்தாலே பணம் விரித்திருந்துள்ள திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகையாலே மலைபோலே வளர்ந்த தோள்களையுமுடையனைப் புருஷோத்தமனுமா யுள்ளான்.

ப.—அநந்தரம், உபாயகார்யமான அநிஷ்டநிவ்ருத்யாதிகளை மேல் முழுக்க ப்ரதிபாதிப்பதாக, முதலிலே அநுகூலஶத்ருவான பூதநாநிரஸநத்தைச் சொல்லி, ஆஶ்ரிதார்த்தமாக நாகபர்யங்கத்தில்நின்றும்வந்த க்ருஷ்ணன் விரும்பாத அடக்கத்தால் ஒரு காரியமில்லை என்கிறாள்.

மடம் நெஞ்சால் - (முலையுண்கிறபிள்ளைபக்கலிலே) ப்ரவணமான நெஞ்சால், குறைவில்லா - குறைவற்றிருக்கிற, தாய்மகள் - (யசோதையாகிற) தாய்மகளாக, செய்து-தன்னைப்பண்ணி வந்தவளாய், ஒரு - (எதிர்த்தலையை) நலிகைக்கு அத்விதீயையாயிருக்கிற, பேய்ச்சி - பேய்ச்சியுடைய, விடம் நஞ்சம் முலை - (நாட்டில் விஷங்கள் அம்ருதமென்னலாம்படி) மிக்கவிஷத்தையுடைத்தான நச்சுமுலையை, சுவைத்த - பசையறச்சுவைத்த, மிகுஞானம் - மிக்கரஸஜ்ஞாநத்தையுடைய, சிறுகுழவி - முக்தஶிஶுவாய், (இப்படிவந்த விரோதியை நிரஸிக்கைக்காக ஏலக்கோலி), படம்நாகத்துஅணை-(ஸ்வஸ்பர்ஶத்தாலே விரிந்த) பணத்தையுடைய நாகபர்யங்கத்திலே,கிடந்த-கண்வளர்ந்தவனுய், பரு வரை தோள் - பெரிய மலைபோலேவளர்ந்த தோளையுடையவனுய், பரம் புருடன்-("உத்தம: புருஷ:" என்னும்) பரமபுருஷனுய், நெடுமாயன்-நிரவதிகமான ஆஶ்சர்ய குணசேஷ்டிதங்களையுடைய க்ருஷ்ணன், கவராத - விரும்பாத, நிறைவினால் - ஸ்த்ரீத்வபூர்த்தியாலே, குறைவுஇலம் - என்னகாரியமுண்டு? நிறைவாவது - நெஞ்சு பிறரறியாமல் அடக்கும் நிரப்பம். விடநஞ்சமென்றது - மீமிசை. 'பேய்ச்சிவிடவென்று - அவள்நசிக்க' என்றும் சொல்லுவர்.

இ.—மூன்றாம்பாட்டில், விரோதிநிரஸநஸமர்த்தனுய் அத்யந்தவிலக்ஷணனுய் முன்பு என்பக்கல் அபிநிவிஷ்டனானவன் விரும்பாத அடக்கம் எனக்கு வேண்டா என்கிறாள்.

[மடநெஞ்சால் குறைவில்லா] - மடப்பம் - மார்த்தவம். முலையுண்ணும்போது யசோதைப்பிராட்டிக்குப் பிறக்கும் பரிவையும் ஏறிட்டுக்கொண்டு வந்தபடி. வடிவை மாறுகையன்றிக்கே நெஞ்சிலே க்ரௌர்யத்தையும் மாறுடினபடி. [மகள் தாய்செய்து] - தாய்மகளாகச் செய்து. பேயான தன்னை மநுஷ்யையாக்குகையன்றிக்கே தாயாகவும் பண்ணினுள். மக்களென்னக்கடவதிறே, மநுஷ்யரை. [ஒருபேய்ச்சி] - நிக்ருதிக்கு அத்விதீயை யென்கை; அதாவது - கொடுமை. 'நலியவந்தாள்' என்னும் சிவிட்காலே அநாதரோக்தியாகவுமாம். [விடநஞ்சமுலைசுவைத்த] - விடமென்றும் நஞ்சமென்றும் மீமிசையாய், நாட்டில் விஷங்களெல்லாம் அம்ருதகல்பமென்னலாம்படியான விஷ மென்னுதல். [பேய்ச்சி விட] - பேயானவள் உயிரை விடும்படி, நஞ்சமுலை சுவைத்த என்னுதல். சுவைத்த - பசையற உண்டபடி. "ப்ராணஸஹிதம்பபௌ". [மிகுஞானச்சிறுகுழவி] - மௌக்த்யத்தில் குறைவற்றிருக்க ரஸஜ்ஞாநத்தாலே இது வேற்று முலையென்று அறிந்த பேரறிவையுடையவன். இவளை முடித்தது ஐஶ்வரமான ஜ்ஞாநத்தாலன்று; ரஸஜ்ஞாநத்தாலே சிவிட்குப் பிறந்து. அஸுரவர்க்கம் கிட்டினால் முடியக்கடவதான வஸ்துஸ்வபாவத்தாலே முடிந்தாளித்தனை. [படநாகத்தணைக் கிடந்த] - இவ்விரோதிகளை நிரஸித்துப் போய்ப் படுக்கையிலே சாய்ந்தபடி யென்னுதல்: அப்படுக்கையை விட்டு வந்து விரோதி நிரஸநம்பண்ணினபடி யென்னுதல். "நாமவயஹ்ஸேஷுஜ" என்னக்கடவதிறே. படநாகம்-ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான படத்தையுடையனகை. அஸுரவர்க்கம் கிட்டினால் முடியுமாபோலேயாயிற்று, அநுகூலவர்க்கம்கிட்டினால் வாழும்படியும். [பருவரைத்தோள்] - திருவநந்

தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகையாலே தோள்கள் மலைபோலே வளர்ந்தபடி. பேஷபூத னுக்குப் பிறந்த விக்ருதிபோலே பேஷிக்குப் பிறந்த விக்ருதி சொல்லுகிறது. கர்மநிபந்தநமான விக்ருதியிறே குறையாவது; ஆஸ்ரிதஸம்ஸ்லேஷங்களில் வரும் விகாரங்கள் குணமிறே. [பரம் புருடன்] - தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே அவன்மேலே சாய்ந்தபின்பாயிற்று, ஸர்வா திகத்வம் தோற்றுகிறது. [நெடுமாயன்] - அப்படுக்கையை உபேக்ஷித்துக் கிடீர் என்பக்கல் வ்யா முக்தனாயிற்று; "பனிக்கடலிற்பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்து". [கவராத நிறைவினால் குறைவிலமே]-அப்படி அளவற ஆதரித்தவன் இப்படி உபேக்ஷிக்க நான் ஸ்த்ரீத்வத்தை நோக்கி யிருக்கவோ? தன்அகவாயிலுள்ளது பிறர்க்குத் தெரியாதபடியிருக்கும் அடக்கம் - ஸ்த்ரீத்வ மாவது.

ஈடு.— மூன்றாம்பாட்டு. விரோதிநிரஸநஸமர்த்தனாய் அத்யந்த விலக்ஷணனாய், முன்பு என்பக்கல் அத்யபிநிவிஷ்டனானவன் விரும்பாத அடக்கம் எனக்கு வேண்டா என்கிறாள்.

[மடநெஞ்சால் குறைவில்லா] - மடப்பமாவது - மென்மை; அதாவது - நெஞ்சில் நெகிழ்ச்சி. அதாவது - முலையுண்ணும்போது யசோதைப்பிராட்டிக்குப் பிறக்கும் பரிவையும் ஏறிட்டுக்கொண்டு வந்தபடி. அகவாயிலுள்ளது த்வேஷமாயிருக்கச்செய்தே, அத்தைமறைத்துக் கொண்டு ஆநுகூல்யம் தோற்ற வந்தாளாயிற்று. [மகள்தாய்செய்து] - தாய் மகள்செய்து; மக்க ளென்று - மநுஷ்யர்க்குப் பேர். பேயான தான் மநுஷ்யவேஷத்தைக்கொண்டு, அதுதன்னிலும் "பெற்றதாய்போல்" என்கிறபடியே தாய்வடிவைக்கொண்டு. [ஒருபேய்ச்சி] - இதென்ன நிக் ருதிதான்? நிக்ருதிக்கு அத்விதீயை யென்கை. 'நலியவந்தாள்' என்னுஞ் சிவிட்காலே அநாத ரோக்தியாகவுமாம். [விடநஞ்சம்] - விடமென்றும், நஞ்சமென்றும் மீமிசையாய், நாட்டில் விஷங் களெல்லாம் அம்ருதகல்பமாம்படியான விஷமென்னுதல். [பேய்ச்சி விட] - பேயானவள் உயி ரைவிடும்படி. [நஞ்சமுலை சுவைத்த] - நச்சுமுலையை அமுதுசெய்த. அம்முலைவழியே "உயிரை வற்ற வாங்கியுண்ட வாயான்" என்கிறபடியே, பாலும் உயிரும் ஒக்க வற்றிவரும்படி சுவைத்த; "ப்ராணஸஹிதம்பபௌ"(ப்ராணஸஹிதம்பபௌ) என்கிறபடியே பசையறும்படியாக. [மிகு ஞானச்சிறுகுழவி] - மௌக்த்யத்தில் கண்ணழிவற்றிருக்கச்செய்தேயும், ரஸஜ்ஞாநத்தாலே 'இது

---

மூன்றாம்பாட்டு - மடநெஞ்சால் இத்யாதி. பேய்ச்சி விடநஞ்சமுலைசுவைத்த, பரம்புருடன், நெடு மாயன் இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - விரோதி இத்யாதி. விலக்ஷண னென்றது - 'பரம் புருடன்' என்றதைப் பற்ற. 'அத்யபிநிவிஷ்டன்' என்றது - 'நெடுமாயன்' என்றதைப் பற்ற.

பூதனைக்கு நெஞ்சு நெகிழ்ச்சியுண்டோ? என்ன, முலையுண்ணும்போது இத்யாதி. ஏறிட்டுக் கொண்டு வந்தபடியை உபபாதிக்கிறார் - அகவாயில் இத்யாதி. தாய்மகள்செய்து - பேயான தான் தாய் போலே மநுஷ்யவேஷத்தைக் கொண்டுவந் தென்றபடி. 'பெற்றதாய்போல்வந்தபேய்ச்சி' இதி ஸ்பஷ் டோர்த்தঃ. திருமொழி - மூன்றாந்திருமொழி, முதற்பாட்டு, 'முற்றமூத்து' இத்யாதி. 'மடநெஞ்சால்' இத் யாதியைக் கடாக்ஷித்து வ்யாக்யாதாவின் ஈடுபாடாதல், 'ஒரு' என்றதுக்கு பாவமாதல் - இதென்ன இத்யாதி. நிக்ருதி-காபட்யம். சிவிட்கு-கோபம். உயிரைவிடும்படிசுவைத்ததுக்கு ப்ரமாணத்வயம் - அம்முலைவ ழியே இத்யாதி. பெற்றதாய்போல்வந்த பேய்ச்சி பெருமுலையூடுஉயிரைவற்றவாங்கியுண்டவாயான் - பெற்ற தாய்போல்வந்த பூதனையுடைய பெரியமுலைவழியே ப்ராணனும் பாலோடொக்க வற்றும்படியாக முலையை வாங்கிப் புஜித்த வாயையுடையவ னித்யர்த்தঃ. "[illegible] ஹீகாப்ராணஸஹிதம்பபௌகோபஸந்நிதः" இதி பஞ்சமேம்சே. 'சிறுகுழவி' என்னுகிற் கச்செய்தே, 'மிகுஞானம்' என்கிறதென்? என்ன, மௌக்த்யத்தில் இத்யாதி. இத்தால், 'மிகுஞானம்'

தாய்முலையல்ல, வேற்றுமுலை' என்று அமுதுசெய்தான். அவள் தாயாய்வந்தாலும், இவன் 'தாய்' என்றே முலையுண்டாலும், வஸ்துஸ்வபாவத்தாலே வருமது தப்பாதிறே; அத்தாலே தப்பிற்றித்தனை. [படநாகத்தணைக்கிடந்த] - உணவுக்கீடாகக் காணும் கிடந்தபடியும். நஞ்சையுண்டு நச்சரவிலேயிறே கிடக்கிறது. நஞ்சுக்கு நஞ்சு மாற்றிறே. விரோதியை யழியச்செய்துபோய்ப் படுக்கையிலே சாய்ந்தபடியாதல்: அன்றிக்கே, ''நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய'' (நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய)என்கிற படுக்கையை விட்டுப்போந்து விரோதியைப் போக்கினபடியாதல். ஆஶ்ரிதர் ஆர்த்த நாதங்கேட்டால் போகத்திலே நெஞ்சு பொருந்தாதிறே. ஸர்வேஶ்வரன் திருமேனியிலே சாய்கையா லுண்டான ஹர்ஷத்தாலே விகஸிதமான பணங்களையுடையனாயிருக்கும். அஸுரவர்க்கம் கிட்டினால் ''வாய்ந்தமதுகைடபரும் வயிறுருகிமாண்டார்'' என்று முடியுமாபோலேயாயிற்று, அநுகூலவர்க்கம் கிட்டினால் வாழும்படி. [பருவரைத்தோள்] - திருவநந்தாழ்வானோட்டை ஸ்பர்ஶத்தாலே; ஏகரூபமான விக்ரஹத்துக்குப் பிறக்கும் விகாரத்தைச் சொல்லுகிறது. கர்ம நிபந்தநமான விகாராதிக ளில்லையென்ற இத்தனை போக்கி, ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்தில் விகார மில்லையென்னில், அவ்வஸ்துவை அணைய ஆசைப்படவேண்டாவே. [பரம்புருடன்] - தகட்டி லழுத்தின மாணிக்கம் நிறம்பெறுமாபோலே, திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தபின்பாயிற்று, 'ஸர்வாதிகன்' என்று தோற்றிற்று. [நெடுமோயன்] - என்மடியிற் சுவடறிந்தபின்பு படுக்கையிற்

என்று - ஸர்வஜ்ஞத்வமன்று, ரஸஜ்ஞாநமாத்ரத்தைச் சொல்லுகிறது; அதினாலே 'வேற்றுமுலை' என்றறிந்து ப்ராணஸஹிதமாக வுண்டா னென்றபடி. 'மிகுஞானம்' என்று - பேய்பக்கலிலும் 'தாய்' என்றே நினைத்து முலையுண்ட அறிவைச் சொல்லுகிற தென்று அர்த்தாந்தரத்தை விவக்ஷித்து, இப்படியானால் அவள் முடியவும் இவன் பிழைக்கவும் கூடுமோ? என்ன, அவள்தாய் இத்யாதி. அத்தாலே-வஸ்துஸ்வபாவத்தாலே. நஞ்சமுலையுண்ட அநந்தரம் நச்சரவிலே கிடந்தது - 'ஸ்தாவரமான விஷத்துக்கு ஜங்கமமான விஷம் பரிஹாரமாம்' என்னும்நினைவாலே என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - உணவுக்கீடாக இத்யாதி வாக்ய *த்வயத்தாலே. உணவுக்கு - போஜநத்துக்கு. 'முலைசுவைத்த - படநாகத்தணைக்கிடந்த' என்று கூட்டி, பாவம் - விரோதியை இத்யாதி. 'படநாகத்தணைக்கிடந்த - பரம்புருடன் - முலைசுவைத்த' என்றுகூட்டி அருளிச்செய்கிறார் - அன்றிக்கே இத்யாதி. ''ஹர்ஷ நாராயணஸ்ரீமாநுத்தஸ்தௌ ... | நாக பர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்'' இதி ஹரிவம்ஶே. படுக்கையைவிட்டு வரக்கூடுமோ? என்ன, ஆஶ்ரிதர் இத்யாதி. போகத்திலே யென்றது - சாடு. போகத்திலே - திருவநந்தாழ்வானுடம்பிலே யென்றும், நாகம் படமின்றிக்கேயிருக்குமோ? விசேஷிக்கிறதென்? என்ன, ஸர்வேஶ்வரன் இத்யாதி. ஸர்வேஶ்வரனைக் கிட்டினார்க்கெல்லாம் ஹர்ஷமுண்டாகக்கூடுமோ? என்ன, ஸநிதர்ஶநமாக அருளிச்செய்கிறார் - அஸுரவர்க்கம் இத்யாதி. வாய்ந்த இத்யாதி - வந்துகிட்டின மதுகைடபர்களும் குடலழுகி முடிந்துவிட்டார்க ளித்யர்த்தः. மூன்றாந்திருவந்தாதி - அறுபத்தாறும்பாட்டு, 'காய்ந்திருளை' இத்யாதி. இப்பாட்டிலே - திருவநந்தாழ்வான் நிஶ்வாஸாக்நியாலே அவர்கள் முடிந்தார்க ளென்றிருக்க, ஈஶ்வரனைக் கிட்டி முடிந்தார்க ளென்றது - ''ராஜவத்ருத்திணாவாஹ:'' என்னும் ந்யாயத்தாலே, ஶேஷபூதன் செய்தது ஶேஷி செய்ததாமென்னுமத்தைப் பற்ற. 'படநாகத்தணைக்கிடந்த' என்ற அநந்தரம் 'பருவரைத்தோள்' என்றதுக்கு பாவம் - திருவநந்தாழ்வானோட்டை இத்யாதி. ஏகரூபமான விக்ரஹத்துக்குத் திருவநந்தாழ்வானோட்டை ஸ்பர்ஶத்தாலே பிறக்கும் விகாரத்தை என்று அந்வயிப்பது. ஆனால், 'அவிகாராய' என்றதுக்குக் கருத்தென்? என்ன, கர்மநிபந்தந இத்யாதி. 'பரம்புருடன்' என்றதுக்கு இரண்டர்த்தம்: முந்தினது - அழகால்வந்த பரத்வம். இத்தை அருளிச்செய்கிறார் - தகட்டிலழுத்தின இத்யாதி. இப்போது - 'பரம்' என்ற சப்தம் - பரபாகத்தாலேவந்த ஶ்ரைஷ்ட்யத்தைச் சொல்லுகிறது. இரண்டாவது - அநந்தசாயித்வத்தால் வந்த ஸர்வாதிகத்வம். இத்தை அருளிச்செய்கிறார் - திருவநந்தாழ்வான் மேலே இத்யாதி. 'நெடுமோயன்' என்றதுக்கு - என்பக்கலிலே மிக்க வ்யாமோஹத்தையுடையவ னென்று விவக்ஷித்து மிக்கவ்யாமோஹத்தையுடைய னாகையாவதேது? என்ன, என்மடியில் இத்யாதி. 'படநாகத்தணைக்

* 'த்ரயத்தாலே' என்று இருப்பின் மூலத்துக்குப் பொருந்துமென்று தோன்றுகின்றது.

பொருந்தி யறியாதவன். * (பெரியமலைபோலேவளர்ந்த தோளுடையவன்; 'உத்தமஃபுருஷஃ' என்னும் பரமபுருஷனாய், நிரவதிகமான ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களையுடைய க்ருஷ்ணன்.) [கவராத] - அப்படி ஆதரித்தவன் இப்படி உபேக்ஷித்தபின்பு, எனக்கு என்னுடைய ஸ்த்ரீத்வத்தால் என்னகார்யமுண்டு? [நிறைவு] - அடக்கம். அதாவது - தன்னகவாயிலோடுகிறது பிறர்க்குத் தெரியாதபடி யிருக்கும் ஸ்த்ரீத்வம். (ங)

## நான்காம் பாட்டு.

நிறைவினாற்குறைவில்லா நெடும்பணைத்தோள்மடப்பின்னை
பொறையினான்முலையணைவான் பொருவிடையேழடர்த்துகந்த
கறையினார்துவருடுக்கைக் † கடையாவின்கழிகோற்கைச்
சறையினார்கவராத தளிர்நிறத்தாற்குறைவிலமே.

ஆ.—(நிறைவினால்.) ஆத்மகுணங்களாலும் ரூபகுணங்களாலும் பூர்ணையாய் போகம்போக்பவையாயிருந்த நப்பின்னைப்பிராட்டியோடே ஸம்ஶ்லேஷிக்கைக்காக அந்தபோகுலோசிதமான வேஷத்தாலே பூஷிதனாய்,தத்ஸம்ஶ்லேஷோபாயமான வ்ருஷபஸப்தகநிரஸநத்துக்கு அநுகுணஸாமர்த்யத்தையுடையனாய் அவற்றை நிரஸித்து ப்ரஹ்ருஷ்டனானவன் கவராத தளிர்நிறத்தால் குறைவிலம் என்கிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், ஸ்வாஶ்ரிதார்த்தப்ரவ்ருத்திகளெல்லாம் தனக்கு போக்யமாகவுடையனான க்ருஷ்ணன் விரும்பாத தளிர்போலே யிருக்கிற நிறத்தால் காரியமில்லை என்கிறாள்.

மடப்பம் - மார்த்தவம். [பொறையினால் என்று தொடங்கி] - ஸம்ஶ்லேஷிக்கைக்காக வ்யஸநஸஹனாய், ஹிம்ஸ்ரமாய்வந்து மேல்விழுகிற விடையேழையும் அநாயாஸேந நிரஸிப்பதும்செய்து மிகவும் கறையேறியிருக்கிற சிவந்ததோலை உடையாகவுடையராய், கறக்கும் மூங்கிற்குழாயையும் பிடிக்கும் வீசுகோலையும் கையிலேயுடையராய், வடிவுபேணாதே பசுக்களின் பின்பே திரிகையாலே சறைந்திருந்துள்ளவர். 'சறை' என்றது, சறைமணி: சறையினாராகிறார் - அது உடையர் என்றுமாம்.

ப.—அநந்தரம், அபிமதையான நப்பின்னைப்பிராட்டியை புஜிக்கைக்காக, ஆஸுரமான எருதேழடர்த்தவன் விரும்பாத நிறத்திற்செவ்வியால் ஒரு ப்ரயோஜநமில்லை யென்கிறாள்.

நிறைவினால்-ஸ்த்ரீத்வபூர்த்தியால், குறைவில்லா - குறைவற்றிருப்பாளாய், நெடும்பணைத்தோள் - நீண்டுபணைத்ததோளையுடையளாய், மடம்-ப்ரணயவிஷயத்தில் ஸவ்யையான, பின்னை-நப்பின்னைப்பிராட்டி, முலை - முலையை, அணைவான் - அணைக்கைக்காக, பொறையினால் - (தன்னுடைய வ்யஸநஸஹமான) மிடுக்காலே, பொருவிடைஏழ் - யுத்தோந்முகமான ருஷபங்கள்ஏழையும், அடர்த்து உகந்த - அடர்த்து ('அபிமதம்பெற்றோம்' என்று) உகந்தவராய், (இவளைப்பெறுகைக்கிடான ஜாத்யுசிதவ்ருத்தியாலே), கறையின்ஆர் - (காட்டில்பழம்பறித்திட்ட) கறைநிரம்பி,

கிடந்த-நெடுமோயன்' என்கிற ஸமபிவ்யாஹாரத்தாலே - படுக்கையைவிட்டுத் தன்மடியிலே பொருந்தினமை தோற்றுகிறது. என்மடியில் சுவடறிந்தபின்பு என்றவிடத்திலே, "கண்ணனென்னெக்கலையான்" என்றது அநுஸந்தேயம். பருவரைத்தோள் - பெரியமலைபோலே வளர்ந்த தோளையுடையவனித்யர்த்தஃ. க்ரமேண அந்வயஃ. (ச)

* குண்டலிதம் ப்ரக்ஷிப்த மென்பர். † 'கடையாலின்' என்று இருக்கலா மென்பர்.

துவர் - துவரூட்டின, உடுக்கை - உடைத்தோலையும், கடையாவின் -(பசுக்கறக்கைக்கு ஸாதந மான) கடையாவையும், கழிகோல் - கழிகோலையும், கை - கையிலேகொண்டு, சறையினர்-(அரை யிற்கட்டின) சறைமணியையுடையரானவர், கவராத - விரும்பாத, தளிர் நிறத்தால் - தளிர்போ லே செவ்விய நிறத்தால், குறைவிலம் - (நமக்குஒரு) ப்ரயோஜநமில்லை. நெடும்பணையென்று - நீண்டமூங்கி லென்றுமாம். துவருடுக்கை - துவரூட்டின உடைத்தோல். கடையா - கறக்கும் மூங்கிற்குழாய். கழிகோல் - பசுக்கள்பாயாமல் வீசுங் கோல். சறைமணி - பசுக்கள் த்வநிகேட்டு வருகைக்குத் தன் அரையிற் கட்டின மணி. சறையனென்று - உடம்பைப்பேணுதவ னென்று மாம். தளிரென்று - தளிர்போன்ற செவ்வியை நினைக்கிறது.

இ.—நாலாம்பாட்டில், தன்னைப் பேணுதே பெண்பிறந்தாரைப் பேணும் க்ருஷ் ணன் விரும்பாத நிறம் எனக்கு வேண்டா என்கிருள்.

[நிறைவினுல் குறைவில்லா] - க்ருஷ்ணன் தன்னைப்பெறுகைக்கு எருதுகளின்மேலே விழுகிற வ்யாபாரங்களில் தான் அவிக்ருதையாயிருக்கிற ஸ்த்ரீத்வத்தால் குறைவற்றிருக்கை. விகாரஹேது உண்டாயிருக்க, அவிக்ருதையாயிருந்தபடி. [நெடும்பணைத்தோள்] - கீழ் ஆத்ம குணம் சொல்லிற்று; இங்கு ரூபகுணம் சொல்லுகிறது. நெடிதாய்ப் பணைத்த தோளென்னு தல், நெடியவேய்போலே யிருந்த தோளென்னுதல். அரியனசெய்தும் பெறவேண்டும்படி அழகு. [மடப்பின்னை] - ம்ருதுஸ்வஹாவை. [முலைஅணைவான்] - ஸம்ஶ்லேஷிக்கைக்காக. [பொறையி னுல்] - வ்யஸநஸஹனுய், எருதுகளின் கொம்பாலும் குளம்பாலுமாக நெருக்குண்ட இத்தை அவளுடைய முலையாலே பிறந்த விமர்த்தமாக நினைத்திருந்தான். [பொருவிடை] - கேவல ருஷபங்களல்ல; அஸுராவேஶத்தாலே யுத்தோந்முகமான ருஷபங்கள். [ஏழு]-ஒன்று இரண் டல்ல. [அடர்த்து] - ஏழையும் ஒருகாலே ஊட்டியாகநெரிக்கை. [உகந்த] - அவை நிரஸ்தமா ன வாறே இனி இவளை லபித்தோமென்று உகந்தான். மடப்பின்னை முலையணைவான் பொறை யினல் பொருவிடையேழ் அடர்த்து உகந்த. [கறையினர் துவருடுக்கை] - கறைமிக்குத் துவரூ ட்டின சிவந்ததோலாயிற்று, உடுக்கை. இடையர் காட்டிலே போனல் முள்கிழியாமைக்கு உடுக் கும் உடைத்தோலைச் சொல்லுகிறது. ‘துவர்’ என்னச்செய்தே ‘கறையினர்’ என்கிறது, காட்டில் பழங்களை அறுத்து இடுகையாலே கறைமிக்கிருக்கை. [கடையாவின்] - கடையாவை யும்: கறக்கும் மூங்கிற்குழாயையும். [கழிகோல்கை] - கழிகோலாகிறது - வீசுகோல். கடையா வையும் வீசுகோலையும் கையிலேயுடையவர். காலத்திற் கறக்கவொட்டாத பசுக்களைப் பாங் கானபோது கறக்கைக்கு ஒருகடையாவையும், அபவ்யமான பசுக்களை நியமிக்கைக்கு ஒருவீசு கோலையும் கொண்டு திரிகை. கழிகோல் - கன்றுகள் பசுக்களோடே போனல் முலையுண்ணு மைக்கு வாயிலே கட்டும் கொறுக்கோ லென்றுமாம். [சறையினர்] - சறைகைமணியென்று ஒருமணி; இடையர் அரையிலேசேர்த்துக்கட்டிப் பசுக்கள் த்வநிவழியே வருகைக்காக முன்னே ஓடுவர்கள்; அத்தையுடையவ ரென்னுதல். சறையென்று தாழ்வாய், தாழ்ந்த இடை ஜந்மத் திலே பிறந்தவரென்னுதல்; சுருப்பியிருக்கையாய், உடம்பைப் பேணுதிருக்கையென்னுதல்; பசுக் களின்பின்னே திரிகையாலே தன்னைப்பேண அவஸரமின்றிக்கே யிருக்கை. ரக்ஷ்யவர்க்கத்தினு டைய ரக்ஷணத்துக்காகத் தன்னைப்பேணுத அவ்வடிவையாயிற்று, இவள் ஆசைப்படுகிறது. “தீக்ஷிதம் வ்ரதஸம்பன்னம் வராஜிநதரம் ஶுசிம் । குரங்கஶ்ருங்கபாணிம் ச பஶ்யந்தீ பர்யுபாஸத” அவன்விரும்பாத தளிர்நிறத்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? கீழ் ‘மணிமாமை’ என்ற இடம் - அழகியநிறம் என்றது; இங்கு ‘தளிர்நிறம்’ என்றது, ஸ்நிக்தமான நிறத்தைச் சொல் லுகிறது.

ஈடு.— நாலாம்பாட்டு. தன்னைப்பேணுதே, பெண்பிறந்தாரைப் பேணும் க்ருஷ்ணன் விரும்பாத நிறம் எனக்கு வேண்டா என்கிறுள்.

[நிறைவினுல்குறைவில்லா] - க்ருஷ்ணன் தன்னைப்பெறுகைக்கு எருதுகளின்மேலே விழுகிற வ்யாபாரங்களில் தான் அவிக்ருதையாயிருக்கிற ஸ்த்ரீத்வத்தால் குறைவற்றிருக்கை. விகாரஹேது வுண்டாயிருக்கத் தான் அவிக்ருதையா யிருந்தபடி. [நெடும்பணைத்தோள்] - கீழ் ஆத்மகுணம் சொல்லிற்று; இங்கு - ரூபகுணம் சொல்லுகிறது. [நெடும்பணை இத்யாதி] - நெடிய தாய்ப் பணைத்த தோளென்னுதல், நெடிய வேய்போலே யிருந்த தோளென்னுதல். அரியன செய்தும் பெறவேண்டும்படிகாணும் வடிவழகு. [மடப்பின்னை] - ம்ருதுஸ்வபாவை. [முலேயணைவான்] - ஸம்ஸ்லேஷிக்கைக்காக. [பொறையினுல்] - வ்யஸநஸஹனுய். எருதுகளின் கொம்பாலும் குளம்பாலும் நெருக்குண்ட இத்தை, அவள்முலேயாலேபிறந்த விமர்த்தமாக நினைத்திருந்தான். [பொருவிடை] - கேவலம் வ்ருஷபமல்லகிடீர், அஸுராவேஸத்தாலே யுத்தோந்முகங்களாய் வந்தவை. ஒன்றிரண்டல்ல; ஏழையும் ஒருகாலே ஊட்டியாக நெரிக்கை. [உகந்த] - 'இனி நாம் இவளை லபித்தோமே' என்று உகந்தான். நப்பின்னைப்பிராட்டியை, விடைகொண்டு வந்து காணும் கைப்பிடித்தது. நிறைவினுல் குறைவில்லா நெடும்பணைத்தோள் மடப்பின்னை முலேயணைவான் பொறையினுல் பொருவிடையேழடர்த்துகந்த. [கறையினுர்துவருடுக்கை] - கறைமிக்குத் துவரூட்டின சிவந்த தோலாயிற்று உடுக்கை. இடையர் காட்டேக்குப் போம்போது முள்கிழியாமைக்கு உடுக்கும் உடைத்தோலைச் சொல்லுகிறது. 'துவர்' என்னுநிறக, கறையினுரென்கிறது - காட்டில் பழங்களைப் பறித்து இடுகையாலே கறை மிக்கிருக்கும்; அத்தாலே கறை மிக்க துவராயிற்று, உடுக்கை. அரையிற் பீதகவண்ணவாடை வேண்டாளாயிற்று இவள்; மோரக்ஷணம்பண்ணின வடிவோடே அணையக் கணிசிக்கிறுள். [கடையா] - ப்ராப்தகாலங்களிலே

---

*நாலாம்பாட்டு - நிறைவினுல் இத்யாதி. 'பின்னை முலேயணைவான் பொருவிடையே ழடர்த்துகந்த, கறையினுர் கவராத தளிர் நிறத்தால்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - தன்னைப்பேணுதே இத்யாதி.*

*நிறைவினுல்-அடக்கத்தால். அடக்கத்துக்கு லக்ஷணம்-விகாரஹேது உண்டானுலும் அவிக்ருதையா யிருக்கை. நப்பின்னைக்கு நிறைவேது? என்ன, க்ருஷ்ணன் இத்யாதி. நிறைவுக்கு லக்ஷணம் விகாரஹேது இத்யாதி. பணைத்த - ஸஞ்ஜாத ஶாகமான: விஸ்த்ருதமான வென்றபடி. த்விதீயார்த்தத்தில், பணை-மூங்கில். 'பொருவிடை யேழடர்த்து' என்கிறத்தையும் கூட்டி ஸாவம் - அரியன இத்யாதி. மடப்பம்-மென்மை. பொறை-க்ஷமை. ஶப்தார்த்தம்-வ்யஸநஸஹனுயென்றது. தாத்பர்யார்த்தம் - எருதுகளின் இத்யாதி. விடையென்னுதே; 'பொருவிடை' என்றதுக்கு ஸாவம் - கேவலம் இத்யாதி. ஊட்டியாக நெரிக்கை, ஊட்டி - கழுத்து. ஏழெருதினுடையகழுத்தையும் கூட்டி ஒருகாலே நெரிக்கை யென்றபடி. விடைகொண்டு என்றது - சாடு. வ்ருஷபங்களைக்கொண் டென்று ஸ்வபாவார்த்தம்; போக்யத்வந் தோன்ற வென்று சாடு. அந்வய்ப்ரகாரம் - நிறைவினுல் இத்யாதி. துவருட்டின-சாயமேற்றின. 'துவருடுக்கை' என்றதிலே-தோல் அர்த்தாத் ஸித்தம். துவருடுக்கை-துவரூட்டின சிவந்ததோ லென்றபடி. புடவையில்லேயோ உடுக்கைக்கு? சிவந்ததோல் ஏதுக்கு? என்ன, - இடையர் இத்யாதி. உடைத்தோல் உடுக்கும் சர்மம். பௌநருக்த்யத்தைப் பரிஹரிக்கிறுர் - துவர் இத்யாதி. துவராயிற்று-சிவந்த தோலாயிற்று. உடுக்கை-உடுக்கும் வஸ்த்ரம். திருப்பீதாம்பரத்தைச் சொல்லாதே, தோலைச் சொல்லுவானென் என்ன, அரையில் இத்யாதி. அரையில் பீதகவண்ணவாடை - திருவரையிற் சாத்துகிற திருப்பீதாம்பரம். பீதகவண்ண வாடை - பொன்னிறமான வஸ்த்ரம். நாய்ச்சியார்திருமொழி, பதின்மூன்றுந் திருமொழி, முதற்பாட்டு, ''கண்ணனென்னும்'' இத்யாதி. 'கறையினுர்' என்றத்தைக் கடாக்ஷித்து ஸாவம் - மோரக்ஷணம் இத்யாதி. கடையாவைக் கொண்டு நிர்வகைக்கு ப்ரஸங்கம் அருளிச் செய்கிறுர் - ப்ராப்த இத்யாதி. 'இன்' சாரியைச்*

கறக்கைக்குக் கையிலே கடையாவும் கொண்டாயிற்றுத் திரிவது. கடையா - மூங்கிற்குழாய். [கழிகோல்கை] - கழிகோலாவது - வீசுகோல். கடையாவையும் வீசுகோலையும் கையிலேயுடையவர். [கடையாவின்கழிகோற்கை] - கோடுவைப்பசுக்களை நியமித்துக் கறக்கைக்காக வீசுகோலைக் கையிலேகொண்டு திரியுமவ ரேன்றுமாம். [கழிகோல்] - முன்னணைக்கன்று பசுக்களோடேபோனால் முலையுண்ணுமைக்கு, கோறுக்கோலேன்று அதின்மூஞ்சியிலே கட்டிவிடுவர்கள்; அத்தைச் சொல்லுதல். ஸந்யாஸிகள் தந்தாமுக்கென்ன ஓரிருப்பிடம் இல்லாமையாலே மாத்ரைதொடக்கமானவற்றைக் கையிலே கூடக்கொண்டு திரிவர்களாயிற்று, அதுபோலே பசுக்களுக்குப் புல்லும் நீரும் உள்ளவிடத்திலே தங்குமித்தனையிறே இவர்களும். [சறையினர்] -சறைகைமணியென்று ஒருமணி யுண்டாயிற்று, இடையர் அரையிலே கோத்துக்கட்டி முன்னேபோகாநின்றால் அந்தத்வநிவழியே பசுக்களெல்லாம் ஓடிவரும்படியா யிருப்பதொன்று; அத்தையுடையவ ரென்னுதல். அன்றிக்கே, சறையென்று - தாழ்வாய், ப்ரதாநவர்ணங்களி லொக்க எண்ணவொண்ணாத தாழ்ந்த இடைக்குலத்தே பிறந்தவ னென்னுதல். சறையென்று - சுறும்புகையாய், அல்லாத இடையர் விஷ்வயநஸங்க்ரமணங்களுக்கு உடம்பிருக்கத் தலைகுளித்தல், உடம்பிலே துளிநீ ரேறிட்டுக்கொள்ளுதல் செய்வர்களாகில், அதுக்கும் அவஸரமற்றிருக்குமாயிற்றுப் பசுக்களின்பின்னே திரிகையாலே. ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்துக்காகத் தன்னைப் பேணாத அவ்வடிவை அணைக்கைக்காயிற்று இவள் ஆசைப்படுகிறது. "தீக்ஷிதம் வ்ரதஸம்பந்நம் வராஜிநதரம் ஶுசிம் । குரங்கஶ்ருங்கபாணிஞ்ச பஶ்யந்தீ த்வாபஜாம்யஹம்" (தீக்ஷிதம்வ்ரதஸ்ம்பந்நம்வராஜிநதரம்ஶுசிம் । குரங்கஶ்ருங்கபாணிஞ்சபஶ்யந்தீத்வாபஜாம்யஹம்). [கவராத தளிர்நிறத்தால் குறைவிலம்] - அவன்விரும்பாத ப்ரஹ்மசாரி நிறத்தால் என்னகார்ய முண்டு? ராவணவதாநந்தரம் பிராட்டி திருமஞ்சனம்பண்ணி யெழுந்தருளினபோதை நிறம்போலே அவனுக்கு உபேக்ஷாவிஷயமான நிறம் நமக்கு என்செய்ய? இவளைப்போலே இப்படி நிறத்திற் சொன்னாரில்லையே, மற்றைப்பிராட்டிமாரில். முதற்பாட்டிலே "மணிமாமைகுறைவிலம்" என்றது,

---

சொல்லு: நிரர்த்தகாவ்யய மென்றபடி. கடையான ஆ என்றாய், கொடுவைப்பசு என்றபடி. கடை-கொடுவை; பொல்லாத பசுக்களை யென்றபடி. "கழிகோல்" என்றதுக்கு அர்த்தாந்தரம் - முன்னணை இத்யாதி. கோறுக்கோல்-முட்குத்தின கோல். ஆக, 'கடையா' என்றதுக்கு அர்த்தத்வயம்-மூங்கிற் குழாயும், துஷ்டபசுவும். 'கழிகோல்' என்றதுக்கு அர்த்தத்வயம் - வீசுகோலும், கன்றுகளின் வாயிலே கட்டுகிற கொறுக்கோலும். இவற்றோடே கூடத் திரிவானென்? என்ன, ஸந்யாசிகள் இத்யாதி. மாத்ரை-பிக்ஷாபாத்ரமான சிக்கம் முதலானவை. சறைகைமணி-மர்மணி. மூன்றுமர்த்தம் - சறையென்று - சறம்புகை இத்யாதி. சறம்புகை-பேணாமை. ஆக, 'சறையினர்' என்றதுக்கு அர்த்தத்ரயம்-சறைகைமணியுடையவ ரென்னுதல், நிஹீநஜாதீய ரென்னுதல், சுறும்புகையை-பேணாமையை-அழுக்கூறுகையை யுடையவ ரென்னுதல். அழுக்கடைந்த உடம்புடையவ ரென்றபடி. அழுக்கடைந்த உடம்பை எதுக்காக இச்சிக்கிறாள்? என்ன, ரக்ஷ்யவர்க்க இத்யாதி. இவள்-நப்பின்னைப்பிராட்டி. இதுக்கு நியாமகம் - 'ஆசார நிர்ப்பந்தமில்லாத இடைக்குலத்திலே பிறந்தவளாகையாலே' என்ற வாக்யம். இவள் ஆசைப்பட்டது பிராட்டி ஆசைப்பட்டாற் போலே யிருக்கிறதென்று விவக்ஷித்து, ஸூக்தியைக் காட்டுகிறார் - தீக்ஷிதம் இத்யாதி. "தீக்ஷிதம் வ்ரதஸம்பந்நம் வராஜிநதரம் ஶுசிம் । குரங்கஶ்ருங்கபாணிஞ்ச பஶ்யந்தீ த்வாபஜாம்யஹம்" இத்யயோத்யாகாண்டே அபிஷேகார்த்தம் ப்ரயாந்தம் ராமம்ப்ரதி ஸீதா. 'தளிர்நிறம்' என்றது-தளிர்போன்ற நிறமென்றாய், ஸ்நிக்தமான நிறத்தைச் சொல்லுகிறது. 'அவன் விரும்பாத நிறம்' என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - ராவணவத இத்யாதி. இவளைப்போலே இப்படி நிறத்தில் சொன்னாரில்லையே யென்றது-சாடு. இவளை யென்றது-ஆழ்வாரான பிராட்டியை. நிறமென்றது-முறையும், ரூபமும். முறையிலே யென்று த்வ்யர்த்தம். மற்றைப் பிராட்டிமார்

இங்கே "தளிர்நிறத்தால் குறைவிலம்" என்றது: இவற்றுக்கு வாசியேன்? என்னில்;— அங்கு, மணிமாமையென்று - அழகையும் மேன்மையையும் சொல்லிற்றாய், இங்கு - நிறத்தைச்சொல்லிற்றாகவுமாம்; அங்கு - நிறத்தைச் சொல்லிற்றாகில், இங்கு - ஸ்நிக்தமான நிறத்தைச் சொல்லுகிறது.

[தீக்ஷிதம்இத்யாதி] – பிராட்டி ஆசார ப்ரதாநமான ஜநககுலத்திற் பிறப்பாலே அவ் வடிவை விரும்பினாள்; ஆசாரநிர்ப்பந்தமில்லாத இடைக்குலத்திலே பிறந்தவளாகையாலே இவ் வடிவை விரும்பினாளாயிற்று இவள். "தீக்ஷிதம்" (தீக்ஷிதம்) - உறுப்புத்தோலும் வெண்ணெய் பூசின உடம்புமான யஜமாநவேஷத்தோடே நின்ற நிலையைக் காண ஆசைப்படாநின்றேனென்கிறாள். "வ்ரதஸம்பந்நம்" (வ்ரதஸம்பந்நம்) - ருஷி ஒரு பட்டினிவிடச் சொன்னானாகில், 'இவன் நம்முடைய ஸௌகுமார்யத்துக்குப் பொறுது என்று சொன்னானித்தனை' என்று நாலு பட்டினிவிட ஒருப்படவேராயிற்று, தர்மஶ்ரத்தையாலே. "வராஜிநதரம்" (வராஜிநதரம்) - கூறையுடையையும் காற்கடைக்கொள்ளவேண்டும்படியாயிருக்கை. "ஶுசிம்" (சுசிம்) - *'ஒருஸ்த்ரீகளையும் தீண்டலாகாது; தர்மபத்நியாகையாலே பிராட்டியைத் தீண்டினால் வருவதொரு சேதமில்லையிறே; ஆனபின்பு, அதொழியப் பரிஹரிப்பது' என்றால், அதுதன்னிலும் அதிஶங்கை பண்ணி, பிராட்டியுடைய திருப்பரிவட்டம் தாக்கினாலும் முழுகத்தேடாநிற்பர். "குரங்கஶ்ருங்கபாணிஞ்ச" (குரங்கஶ்ருங்கபாணிஞ்ச) - "ஏகவஸ்த்ரதரோதந்வீ" (ஏகவஸ்த்ரதரோதந்வீ) என்னுமதிற்காட்டிலும், கையும் கலைக்கொம்புமாயிருக்குமதுதானே போந்திருக்கை. "பஶ்யந்தீத்வாபஜாம்யஹம்" (பஶ்யந்தீத்வாபஜாம்யஹம்) - மேல்வரும்பலத்தை அபேக்ஷிக்கவே, நடுவுள்ளது ஆநுஷங்கிகமாய் வருமிறே' என்னுமத்தைப் பற்றச் சொல்லுகிறாள்: "பஶ்யந்தீத்வாபஜாம்யஹம்" (பஶ்யந்தீத்வாபஜாம்யஹம்) - பகவத்பஜநம்பண்ணுவார் பண்ணுவதெல்லாம் த்ருஷ்டத்துக்கிறே; ஆகையாலே, த்ருஷ்டத்துக்காக பஜிக்கிறாள்காணும். ஸதாபஶ்யந்தியிறே அங்கும். 'வழிப்போக்கில் கண்

---

*என்றது - "நஹிஜெஜீவிதேநார்த்த: இத்யாதியாலும்; நிறம் வேண்டா என்னாத ஜநகராஜன் திருமகள் தொடக்கமான பிராட்டிமாரென்றபடி. இப்பாட்டிலே இவ்வர்த்தம் அருளிச்செய்தது - சாடுவுக்காக. 'மாமை' என்று-மென்மையும் ஓரர்த்தமாக அருளிச் செய்கிறார் - அங்கு மணிமாமை இத்யாதி. 'மணி' என்று-அழகு. 'மாமை' என்று-மார்த்தவம்.*

*மேலெடுத்த ஶ்லோகத்துக்கு வ்யாக்யாநம் பண்ணுவதாக ப்ரதீகோபாதாநம் - தீக்ஷிதம் இத்யாதி. பிராட்டியைப்போலே 'இவ்வடிவைக் காணவேணும்' என்று இவள் ஆசைப் படாமைக்கு ஹேதுவேது? என்ன, பிராட்டி இத்யாதி. உறுப்புத்தோல்-க்ருஷ்ணாஜிநம். "வ்ரதத்தால் பூர்ணர்" என்றதுக்கு ஹாவம் ருஷி இத்யாதி. "வராஜிநதரம்" என்று அஜிநத்துக்கு ஶ்ரைஷ்ட்ய மேது? என்ன, கூறையுடையையும் இத்யாதி. கூறை-திருப்பீதாம்பரம். காற்கடைக்கொள்ள - உபேக்ஷிக்க. "ஶுசிம்" என்றதுக்கு வாஸனை - ஒருஸ்த்ரீகளையும் இத்யாதி. ஏகவஸ்த்ரேதி: "ஶ்ருணாம்விக்ருதிரவிஶிஷ்யம்...நா..." என்கிற ந்யாயத்தாலே "ஏகவஸ்த்ரதரோதந்வீ" என்றிருக்கும் இருப்பிலுங்காட்டில் கையும் கலைக் கொம்புமாயிருக்கிற இருப்பு போக்யமாயிருக்கை. குரங்கஶ்ருங்கம்-கலைக் கொம்பு. வழிப்போக்கில் கண்ணெச்சில் வாராமல் மங்களாஶாஸநம் பண்ணுகிற ப்ரகரணத்திலே, திருவபிஷேகத்துக்கு அங்கமான வற்றை ஆசைப்படுவானென்? என்ன, மேல்வரும் இத்யாதி. அநுபவிப்பேனென்னாதே, 'பஶ்யந்தீ' என்றதுக்கு வாஸனையை ரஸோக்தியாக அருளிச் செய்கிறார் - பகவத்பஜநம் இத்யாதி. த்ருஷ்டத்துக்கிறேயென்றது - சாடு. வாஸ்தவார்த்தம் - தர்ஶநம். ரஸம்-த்ருஷ்டப்ரயோஜநம். தர்ஶநார்த்தமோ பகவத்பஜநம்? என்ன, ஸதா இத்யாதி. 'மேல்வரும் பலத்தை' இத்யாதி வாக்யத்தை நடுவுள்ளது இன்னதென்று காட்டாநின்று கொண்டு விவரிக்கிறார் - வழிப்போக்கில் இத்யாதி. ஆந்தராளிகபலார்த்தமாக மேல்வரும் பலத்தை*

---

* 'ஒரு ஸ்த்ரீயையும்' என்னவேண்டியது, வார்த்தைப்பாட்டினால் இவ்வாறு வந்தது.

ணேச்சில் வாராதொழியவேணும்' என்றிறே மங்களாசாஸநம்பண்ணுகிறது; அது தன்னடையே வருமிறே, மேல்வரும் பலத்தை அபேக்ஷிக்கவே. ஸாவித்ரி தன்பர்த்தாவைக் காட்டி, 'இவனுக்கு நான் அநேகம் பிள்ளைகளைப் பெறவேணும்' என்று வேண்டிக்கொண்டாளிறே. (ச)



# ஐந்தாம் பாட்டு.

தளிர்நிறத்தாற்குறைவில்லாத் தனிச்சிறையில்விளப்புற்ற
கிளிமொழியாள்காரணமாக் கிளரரக்கன்நகரெரித்த
களிமலர்த்துழாயலங்கல்கமழ்முடியன் கடல்ஞாலத்து
அளிமிக்கான்கவராத அறிவினாற்குறைவிலமே.

ஆ.—(தளிர்நிறத்தால்.) அபரிமித ஸௌந்தர்ய மஹோததியாய் கலபாஷிணியாயிருந்த பிராட்டி அசோகவநிகையிலே எழுந்தருளி யிருந்தமை திருவடி விண்ணப்பஞ்செய்யக் கேட்டருளி, அப்போதே ஸம்ஶ்லேஷவிரோதியான ராவணனை ஸபுத்ரஜநபாந்தவ நகர மாகமாராக்நியாலே உத்தீபமாக்கிப் பிராட்டியோடேகூட எழுந்தருளியிருந்து லோகத்தை ரக்ஷித்து, பின்னைத் திருமஞ்சநமாடியருளி நிரதிசயஸுகந்த திவ்யமால்யாநுலேபநாலங்க்ருதனாய் திவ்ய பூஷண பூஷிதனா யிருந்தவன் கவராத அறிவினால் குறைவிலம் என்கிறாள்.

ஒ.—அஞ்சாம் பாட்டில், பரமப்ரணயியான தசரதாத்மஜன் விரும்பாத அறிவினால் ஒருப்ரயோஜந மில்லை என்கிறாள்.

[தளிர் நிறம் என்று தொடங்கி] - தளிர்போலே யிருக்கிற நிறத்தால் பரிபூர்ணையாய் ராக்ஷஸீமத்யத்திலே நிருத்தையா யிருந்தா ளென்று திருவடிவாயாலே விண்ணப்பஞ்செய்யப்பட்ட. ஆஶ்ரிதர்க்காக லோகப்ரஸித்தமாகச் சிறையிருந்தபடி என்றும் சொல்லுவர். [கிளிமொழி என்று தொடங்கி] - இனிய பேச்சையுடைய பிராட்டி நிமித்தமாக ராவணனுடைய ஸம்ருத்தமான நகரத்தை தஹிப்பதும்செய்து, தேனையுடைத்தாய் மலர்ந்திருந்துள்ள திருத்துழாய் மாலையாலே கமழாநின்றுள்ள திருமுடியை யுடையான். இது, மீண்டு எழுந்தருளி ஒப்பித்திருக்கிறபடிக்கு உபலக்ஷணம். [கடல் ஞாலத்து அளிமிக்கான்] - ஸம்ஸாரிகள்பக்கலிலே மிகவும் அநுக்ரஹஶீல னானவன்.

---

ப்ரார்த்தித்த பேருண்டோ? என்ன, ஸாவித்ரி இத்யாதி. அதாவது - ஸாவித்ரி யென்பாளொரு பெண்பிள்ளையை மாதாபிதாக்கள் ஒருவனுக்குக் கொடுக்க என்று உத்யோகிக்கிறவளவிலே, நாரதர் வந்து, 'இவனுக்கு ஆயுஸ்ஸு குறைந்திருக்கும்' என்று சொல்ல, அவர்களும் அத்தைக் கேட்டு இருய்க்க, அந்த ஸாவித்ரியானவள் 'எனக்கு அவனே யாகவேணும்; அவனுக்கு என்னைக் கொடுங்கோள்; அவனாயுஸ்ஸுக்கு நான் கடவேன்' என்று சொல்ல, அத்தைக் கேட்டு அவர்களும் அவனுக்கு அவளை நீர்வார்த்துக் கொடுக்க, சில நாள் சென்றவாறே இவனைக் கொண்டுபோக யமபடர் வந்து கொண்டுபோகிறவளவிலே, அவளும் கூடப்போய் யமனுலக்கத்திலே செல்ல, யமனும் தூதர்களைப் பார்த்து 'இவளை என் கூட்டிக்கொண்டு வந்திகோள்?' என்று வெறுத்து, அந்த ஸாவித்ரியைப் பார்த்து, 'உனக்கு என்ன வேணும்?' என்ன, 'பர்த்தா வேணும்' என்ன, 'அவனை யொழிந்தத்தைக் கேள்' என்ன, 'ஆகில், அவனுக்கு நான் அநேகம் பிள்ளைகளைப் பெறவேணும்' என்று வேண்டிக்கொள்ள, அவனும் அப்படியே அவளபிமதத்தைத் தலைக்கட்டினான். க்ரமேண அந்வய:. (ச)

ப.—அநந்தரம், ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்காக, அஸஹ்யாபராதியான ராவணனை அழியச்செய்த சக்ரவர்த்திதிருமகன் விரும்பாத அறிவால் என்ன காரியமுண்டு? என்கிறாள்.

தளிர் நிறத்தால்-தளிர்போலே தர்ஸநீயமாய் ஸுகுமாரமான நிறத்தால், குறைவில்லா-பரிபூர்ணையாய், தனிச்சிறையில் - (ப்ரபாப்ரபாவான்களைப் பிரிக்குமா போலே பிரிக்கப்பட்டுத்) தனியே (ராக்ஷஸீமத்யத்திலே) நிருத்தையாய், விளப்புற்ற-(லோகமடைய 'ஒருத்திசிறையிருந்து ரக்ஷிக்கும்படியே' என்றுகொண்டாடும்படி) ப்ரஸித்தையாய், ("யோ-ராயே-ராஜாவா" என்னும்படி), கிளிமொழியாள்-கிளிபோலே இனிய மொழியை யுடையளான பிராட்டி, காரணமா-காரணமாக, கிளர்-அநீதியாலே பெரிய கிளர்த்தியையுடையனை, அரக்கன்-ராவணனுடைய, கிளர் நகர்-ஸம்ருத்தமான நகரத்தை, எரித்த-நெருப்புக்கிரையாக்கினவனாய், (மீண்டு வந்து முடிசூடி), களிமலர்-தேனையுடைத்தாய் மலர்ந்த, துழாயலங்கல்-திருத்துழாய் மாலையாலே, கமழ்-பரிமளோத்தரமான, முடியன்-அபிஷேகத்தை யுடையனாய்; கடல் ஞாலத்து-கடல்சூழ்ந்த பூமியிலே, அளிமிக்கான்-தண்ணளி விஞ்சும்படி எழுந்தருளியிருந்தவன், கவராத-விரும்பாத, அறிவினால்-அறிவால், குறைவிலம் - ஒருகாரியமுடையோ மல்லோம். களி-தேன். அலங்கல்-மாலை. அளி-தண்ணளி; உபகாரமாகவுமாம்.

இ.—அஞ்சாம் பாட்டில், பரமப்ரணயியாய் ஸர்வரக்ஷகனான தஸரதாத்மஜன் விரும்பாத அறிவினால் என்ன ப்ரயோஜநமுண்டு? என்கிறாள்.

[தளிர் நிறத்தால் குறைவில்லா]-"[illegible]" என்று பத்துத் திக்கிலுமுண்டான அந்தகாரத்தைப் போக்கும் ஒளியை யுடைய நிறத்தால் பூர்ணையானவள். [தனிச்சிறையில்] - ப்ரபையையும் ப்ரபாவானையும் பிரித்தாற்போலே பெருமாளைப் பிரிந்து ராக்ஷஸீமத்யத்திலே நிருத்தையா யிருந்தபடி. [விளப்புற்ற] - "[illegible]" என்று திருவடியாலே பெருமாளுக்குச் சொல்லப்பட்டவள். தேவஸ்த்ரீகள் காலில் விலங்கு கழற்றுகைக்குத் தான் சிறையிருந்தா ளென்று லோகத்திலே ப்ரஸித்தையானவ ளென்றுமாம். [கிளிமொழியாள் காரணமா] - "யோ-ராயே-ராஜாவா" என்று அவள்பேச்சை அவன்வார்த்தை வழியே நினைத்து அவள் நிமித்தமாக. [கிளர் அரக்கன்] - தாயையும் தமப்பனையும் சேர இருக்கவொட்டாதே பிரித்த மிகையை யுடையவன். [நகர் எரித்த] - ராவணனுடைய ஸம்ருத்தமான நகரத்தை தக்தமாக்கினவன். [களிமலர் இத்யாதி] - ராவண வதாநந்தரம் மீண்டு எழுந்தருளி முடிசூடி வைத்த வளையமும் தாமுமா யிருந்தபடி. தேனையுடைத்தாய் மலர்ந்திருக்கின்ற திருத்துழாய்மாலையாலே கமழாநின்றுள்ள திருமுடியை யுடையவன். களி - தேன். அலங்கல் - மாலை. அவன் இதரஸஜாதியனாய் வந்து அவதரித்தால் அத்திருத்துழாயும் அங்குத்தைக்கு அநுரூபமான புஷ்பங்களாகக்கடவது; அவன் கருமுகைமாலை சூடிலும் அத்தையே சொல்லக்கடவது. பாண்டியன் ஏதேனும் ஒன்றைச் சூடினாலும் வேப்பம்பூ என்னக் கடவதிறே. [கடல் ஞாலத்து அளிமிக்கான்] - ஸம்ஸாரிகள் பக்கலிலே தண்ணளி மிக்கவன். தேவர்கள் பிராட்டியைப் பிரிப்பது இளையபெருமாளைப் பிரிப்பதாய் எழுந்தருளுவிக்கும்படியிறே, ஸம்ஸாரிகள் நோவைக் கண்டு தண்ணளியாலே எழுந்தருளி யிருந்தபடி. [கவராத இத்யாதி] - இப்படி தண்ணளிமிக்கவன் விரும்பாத அறிவினால் எனக்கு என்ன கார்யமுண்டு?

ஏடு.— அஞ்சாம்பாட்டு. பரமப்ரணயியாய் ஸர்வரக்ஷகனான தஶரதாத்மஜன் விரும்பாத அழிவினால் என்ன ப்ரயோஜநமுண்டு எனக்கு? என்கிறாள்.

[தளிர்நிறத்தால் குறைவில்லா]-"குர்வந்தீம்ப்ரபயாதேவீம் ஸர்வாவிதிமிராதிஶ:" (குர்வந்தீம்ப்ரபயாதேவீம் ஸர்வாவிதிமிராதிஶ:) - பிராட்டி பத்துமாஸம் திருமஞ்சநம்பண்ணாமை யாலே திருமேனியில் புகர் அகஞ்சுரிப்பட்டபடி, பத்துத்திக்கிலுமுண்டான அந்தகாரத்தைப்போக் குமளவாயிற்று; "ஶோகதமோபஹம்" (ஶோகதமோபஹம்).[தனிச்சிறையில்]-ப்ரஜையையும் ப்ரஹாவானையும் பிரித்துவைத்தாற்போலே யிருப்பதொன்றிறே ராக்ஷஸீமத்யத்தில் இருந்தையா யிருந்தபடி. [விளப்புற்ற]-"க்ருஶாமநஶநேந ச" (க்ருஶாமநஶநேநச) என்றாற்போலே, தன்னைப் பேணுதேயிருந்தாள்' என்று திருவடியாலே பெருமாளுக்கு விண்ணப்பஞ் செய்யப்பட்டவ ளென்னுதல்; அன்றிக்கே, தேவஸ்த்ரீகள்காலில் விலங்கைவெட்டிவிடுகைக்காகத் தன்னைப்பேணுதே அங்கேபுக்குத் தன்காலிலே விலங்கைக் கோத்துக்கொண்டவ ளென்று நாட்டிலேப்ரஸித்தையா னவ ளென்னுதல். [கிளிமொழியாள் காரணமா] - திருவடிவாயிலே ஒன்றுதங்கிய அவள் வார்த் தையைக் கேட்டு, அவ்வழியாலே "மதுராமதுராலாபா" (மதுராமதுராலாபா) என்றாரிறே அத்தை ஸ்மரித்து; அப்படிப்பட்ட வார்த்தையை யுடையவள் ஹேதுவாக. [கிளரரக்கன்]-தாயும்

---

*அஞ்சாம்பாட்டு - தளிர்நிறத்தால் இத்யாதி. 'கிளிமொழியாள் காரணமா - நகரெரித்த' என்றத் தைப்பற்ற, பரமப்ரணயியாய் என்றது. 'கடல்ஞாலத்தளிமிக்கான்' என்றத்தைப்பற்ற, ஸர்வரக்ஷகனான என்றது.*

*விஶ்லேஷதஶையிலே 'தளிர்நிறம்' என்கிறதென்? என்ன, "குர்வந்தீம்" இத்யாதி. "[illegible] குர்வந்தீம்ப்ரபயாதேவீம் ஸர்வாவிதிமிராதிஶ:" இதி ஸுந்தரகாண்டே பஞ்சதஶே ஹநுமாந். இதுக்கு அர்த்தம் - பிராட்டி இத்யாதி. அகஞ்சுரிப்பட்டபடி - குறைவுபட்டபடி. அந்தகாரத்தைப்போக்குமென்றதுக்கு ப்ரமாணம் - "ஶோகதமோபஹம்" என்றது. இங்கு 'தமோபஹம்'என்கிறமாத்ரமே அபேக்ஷிதம். "... ஶோகதமோபஹம்" இதி ரகுவம்ஶே தஶமே த்விதீயஶ்லோக:. ராக்ஷஸிகள் நடுவேயிருக்கச்செய்தே தனியாவதென்? என்ன. ப்ரஜையையும் இத்யாதி. இவளுக்கு அவனோட்டைப்பிரிவொழிய வேறுதனியில்லை யென்றபடி. முந்தின அர்த்தத்துக்கு, விளப்புற்ற-சொல்லப்பட்ட. விளப்பு - சொல்லுகை. த்விதீயார்த்தத்துக்கு, விளப்புற்ற - ப்ரஸித்தியையடைந்த; ப்ரஸித்தை யென்றபடி. இந்த அர்த்தத்துக்கு - "..." இத்யாதியிலே நோக்கு. "... க்ருஶாமநஶநேந ச | ஶோக... ..." இதி ஸுந்தரகாண்டே. கிளிமொழியாள் - கிளிபோலே இனிய பேச்சையுடையவள். வார்த்தை மதுரமாயிருக்குமோ? என்ன, திருவடிவாயிலே இத்யாதி. "மதுராமதுராலாபா ... | ..." இதி சூடாமணி ப்ரதாநாநந்தரே ராம:. "க்ருஶாம்" இத்யாதி வாக்யத்தில், என்றாற்போலே யென்றபதம் - ஆதிஶப்தஸமாநார்த்தகம். ஒன்றுதங்கிவரும்போதும் "மதுராமதுராலாபா" என்றிருக்க,ஸாக்ஷாத் சொல்லும்போது போக்யதை சொல்லவேண்டாவிறே; ஆகையாலே, 'கிளிமொழியாள்' என்று அருளிச் செய்கிறா ரென்றபடி. அத்தை ஸ்மரித்து - பிராட்டிபேச்சினினிமையை ஸ்மரித்து. திருவடிவாயிலே இத் யாதி வாக்யம் - 'விளப்புற்றகிளிமொழியாள்' என்கிற ஸமபிவ்யாஹாரதாத்பர்யம். 'கிளர்' என்றத்தை அரக்கனுக்கு விஶேஷணமாக்கி அர்த்தம் - தாயும் இத்யாதி. தாயும் தமப்பனும் என்றது -"ஸ்வம் ...*

தமப்பனும் சேரஇருக்கப்போருதபடியான கிளர்த்தியிறே; "உதீர்ண ஸ்யராவணஸ்ய" (உதீர்ண ஸ்யராவணஸ்ய) என்கிறபடியே. [நகர்எரித்த] - பையல்குடியிருப்பை யழித்து மூலையடியே வழி நடத்தின. ராவணனுடைய ஸம்ருத்தமான நகரத்தை தக்தமாக்கின. [களிமலர்இத்யாதி] - களி - தேன். தேனையுடைத்தான மலரோடேகூடின திருத்துழாய்மாலை கமழாநின்றுள்ள திருவபிஷேகத்தையுடையவன். அவன்தான் இதரஸஜாதீயனாய்க்கொண்டு அவதரித்தால், அப்ராக்ருதமான பதார்த்தங்களும் அதுக்கீடான வடிவைக் கொண்டு வந்து தோற்றுமித்தனையிறே; ஆகையாலே, அவன் கலம்பகன்கொண்டு வளையம்வைத்தாலும் இவர்கள் சொல்லுவது திருத்துழாயை யிட்டிறே. அஸாதாரணமானவற்றை யிட்டிறே கவிபாடுவது; பாண்டியர்கள் மற்றையார் கருமுகைமாலையைக்கொண்டு வளையம்வைத்தாலும், அவர்களுக்கு அஸாதாரணமான வேம்பு மற்றையவற்றை யிட்டிறே கவிபாடுவது. [கடல்ஞாலத்துஅளிமிக்கான்] – ஸம்ஸாரத்திலே தண்ணளிமிக்கவனாயிற்று. ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை அநுஸந்தித்து, 'இத்தைப் போக்கவேணும்' என்று திருவுள்ளம் இங்கே வேரூன்றினபடி; பிராட்டியைப்பிரிப்பது, இளையபெருமாளை அகற்றுவதாய், அநந்தரம் 'அவதாரத்துக்குக் காலமாயிற்று' என்று தேவகார்யத்திலே ஒருப்படுவித்துக் கிளப்பவேண்டும்படியிறே. [கவராத இத்யாதி] - அப்படிப்பட்டவன் விரும்பாத, அறிவினால் கார்யமுடையோமல்லோம். பிராட்டியுடைய இரண்டாம்பிரிவுக்கு அடியான வநவாஸஜ்ஞாநம் போலேயிருக்கிற இவ்வறிவால் என்ன ப்ரயோஜநமுண்டு? பிரிவோடே ஸந்திக்கும்படியாயிறே அதுஇருப்பது. (ரு)

---

*ஸவ ஜொகா நாஂஜெவஜெவொஹரி:வி தா"* என்றத்தைப்பற்ற. அப்படி உதீர்ணனாயிருக்குமோ? என்ன, "உதீர்ணஸ்ய" இத்யாதி. "ஸஹீஜெவெரா தீர்ணஸ்யராவணஸ்யவயாயி ஹி: | கஷ்டு தொரா நாஷெஜொகெஜஜெவிஷா ஸ நாதநஃ" இத்யயோத்யாகாண்டே ஆதௌ. பையல்-க்ஷுத்ரன். மூலையடியே வழிநடத்துகையாவது - ஊர் பாழ்போனால் தடையில்லாதே மூலைக்கு மூலையாகச் சரிப்போனபடி நடக்கலாம்படி பண்ணுகை. 'கிளர்' என்றத்தை நகருக்கு விசேஷணமாக்கி அர்த்தம் - ராவணனுடைய இத்யாதி. 'கிளர்' என்றது - ராவணவிசேஷணமானபோது, கர்வபரம்; நகரவிசேஷணமானபோது, ஸம்ருத்திபரம். சக்ரவர்த்திதிருமகனுக்குத் திருத்துழாய்மாலையுண்டோ? என்ன, அவன்தான் இத்யாதி. கலம்பகன் - நாநாஜாதீயபுஷ்பஸமூஹம். பரிஹாராந்தரம் - அஸாதாரணமான இத்யாதி. த்ருஷ்டாந்தமுகேந விவரணம் - பாண்டியர்கள் இத்யாதி. மற்றையாரென்றது - சேரன் - சோழன் முதலானாரை. மற்றையவற்றைஇட்டிறேயென்றது - பனைத்தார், ஆத்தித்தார் முதலானவற்றை நினைத்து. தண்ணளிமிக்கதினுரப்பை அருளிச்செய்கிறார் - ஸம்ஸாரிகள் இத்யாதி. அளிமிக்கான் - க்ருபைமிக்கிருக்கிறவன். அளிக்கைக்கு அவதி பரமபதமென்று கருத்து. திருவுள்ளம் இங்கே வேரூன்றினபடி யென்றது - க்ருபாதிசயத்தாலே திருவுள்ளம் இங்கே யூற்றிருந்த ப்ரகார மென்றபடி. அந்த ஊற்றத்தை அருளிச்செய்கிறார் - பிராட்டியை இத்யாதி. அதாவது - தேவாதிகள் இவர் அங்கே யெழுந்தருளுகைக்காக. பிராட்டியைப் பிரிப்பது, இளையபெருமாளையகற்றுவதாய் என்று கூட்டிக்கொள்வது. கிளப்பவேண்டும்படியிறே - வேரூன்றினபடி என்று அந்வயம். விரும்புகை - ஆதரித்துமேல்விழுகை. ஜ்ஞாநம் உத்தேச்ய மன்றோ? என்ன, பிராட்டியுடைய இத்யாதி. ப்ரயோஜநமில்லையோ? என்ன, பிரிவோடே இத்யாதி. தளிர்போலே தர்சநீயமாய் ஸுகுமாரமான நிறத்தால் பரிபூர்ணையா யென்றபடி. க்ரமேண அந்வய:. (௫)



# ஆறாம் பாட்டு.

அறிவினற்குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய
நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தி
குறியமாணுருவாகிக் கொடுங்கோளால்நிலங்கொண்ட
கிறியம்மான்கவராத கிளரொளியாற்குறைவிலமே.

ஆ.—(அறிவினால்.) ஸ்வவிஷயஜ்ஞானமையுங்கூட இல்லாத ஆத்மாக்களெல்லாரும் அறியும்படி ஸ்வப்ராப்த்யுபாயங்களெல்லாவற்றையும் தத்ததிகாராநுகுணமாக எடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தியாய், இப்படி உபாயாநுஷ்டாநத்தாலே வரும் விளம்பம் பொறுக்க மாட்டாமை ப்ரதிகூலாநுகூலவிபாகமின்றியே ஸர்வாத்மாக்களுக்கும் 'காண்மின்களுலகீர்' என்று தன்னைக்காட்டிக்கொடுத்தருளினவன் கவராத கிளரொளியால் குறைவிலம் என்கிறாள்.

ஒ.—ஆறாம்பாட்டில், ஸகலலோகங்களுக்கும் ஸ்வப்ராப்தியுபாயங்களெல்லாம் தானே அருளிச்செய்து ஹிதோபதேசத்துக்குப் பாங்கல்லாதவர்களைத் தன் அழகாலே வசீகரிக்கும் ஸ்வபாவனான ஸ்ரீவாமநன் விரும்பாத மிக்கிருந்துள்ள லாவண்யத்தால் காரியமுடையோமல்லோம் என்கிறாள்.

[அறிவினால் என்று தொடங்கி] - தன்திறத்தில் அறிவுகொண்டு காரியமில்லாத ஸம்ஸாரிகள் அறியும்படி ப்ரபத்திபர்யந்தமான ஸகலோபாயங்களையும் வ்யக்தமாக அருளிச்செய்தருளின பரிபூர்ணஜ்ஞாநத்தை யுடையனாய் அத்விதீயஸ்வரூபனாயுள்ளான். [குறிய மாணுரு என்று தொடங்கி] - குறளான பிள்ளைவடிவையுடையனாய்க்கொண்டு மஹாபலியை அழகாலே மிகவும் நெருக்கிப் பூமியை வாங்கிக்கொண்ட விரகனான ஸர்வேஶ்வரன்.

ப.—அநந்தரம், உபதேசத்தாலும் அர்த்தித்வத்தாலும் தனக்கேயாக என்னைக் கொள்ளும் ஸர்வஜ்ஞன் விரும்பாத ஒளியால் ஒருகாரியமில்லை யென்கிறாள்.

அறிவினால் - ஜ்ஞாநத்தில் அபேக்ஷையில்லாமையாலே, குறைவில்லா - குறைவு பட்டிராத, அகல் ஞாலத்தவர் - விஸ்தீர்ணமான பூமியிலுள்ளார், அறிய - அறியும்படி, (ஸர்வலோகமும் திரண்ட படைக்குநடுவே), நெறியெல்லாம்-(கர்மயோகம் முதலாக ப்ரபத்திபர்யந்தமான) ஸகலோபாயங்களையும், எடுத்து உரைத்த -(வ்யக்தமாம்படி தானே) எடுத்து அருளிச்செய்த, நிறை ஞானத்து-பரிபூர்ணஜ்ஞாநவானான, ஒருமூர்த்தி - அத்விதீயஸ்வபாவனானவனாய், குறிய-மஹாமேருவை மஞ்சாடியாக்கினாற்போலே வாமநத்வத்தாலே ஆகர்ஷகமாய், மாணுருவாகி-(அர்த்தித்வமே நிரூபகமென்னலாம்படி) ப்ரஹ்மசாரிவேஷத்தையுடையனாய், கொடுங்கோளால்-(அழகைக்காட்டி மாறுதபடிபண்ணி,சிற்றடியைக்காட்டியிசைவித்து இப்படி)கொடிதாகவஞ்சித்தபரிக்ரஹத்தாலே, நிலம்கொண்ட - பூமியைத் தன்னதாக்கிக்கொண்ட, கிறி - நல்விரகையுடைய, அம்மான் - ஸர்வேஶ்வரன், கவராத - விரும்பாத, கிளர்ஒளியால் - கிளர்ந்த ஒளியால், குறைவிலம் - என்னப்ரயோஜநமுண்டு?. ஒளி - லாவண்யகுணமான ஸமுதாயசோபை.

இ.—ஆறாம்பாட்டில், அறிவில்லாதார்க்கு ஸ்வப்ராப்த்யுபாயங்களை உபதேசித்து அறிவு பிறக்கைக்கு யோக்யதையில்லாதாரை வடிவழகாலே தனக்கு ஆக்கிக்கொள்ளுமவன் விரும்பாத லாவண்யத்தால் என்ன கார்யமுண்டு? என்கிறாள்.

[அறிவினால் குறைவில்லா] - பகவத் விஷயத்தில் அறிவுகொண்டு ஒருகார்யமின்றிக்கேயிருக்கை. அங்கபாநாதிகள் பெறுவிடில் செல்லாதாயிருக்கும் அறிவொன்றிலுமாயிற்று

திரபேக்ஷராயிருப்பது. [அகல் ஞாலத்தவர்] - இந்தப் பூமிப்பரப்பிலுள்ளாரில் அறிவில் குறைபட்டிருப்பாரில்லை. [அவர் அறிய] - கல்லிலே துளையுண்டாக்கினாற்போலே ஸம்ஸாரிகள் அறியும்படி. [நெறியெல்லாம் எடுத்துரைத்த] - சேதநபேதத்தோபாதி போருமிறே உபாயபேதமும். கர்மயோகம் முதலாக ப்ரபத்திபர்யந்தமாக ஸகல உபாயங்களையும் வ்யக்தமாக உபதேசித்தபடி. கர்மஜ்ஞாநபக்திகள், அவதாரரஹஸ்யம், புருஷோத்தமவித்யை, ஸ்வரூபயாதாத்ம்யம், விரோதிநிவ்ருத்திக்கு ப்ரபத்தி, ஆத்மப்ராப்திக்கு ப்ரபத்தி, பகவல்லாபத்துக்கு ப்ரபத்தி இவற்றை அடங்க விசதமாக அருளிச்செய்த, [நிறைஞானத்தொரு மூர்த்தி] - நிறைந்தஞானத்தையுடைய அத்விதீயமான ஸ்வரூபத்தையுடையவன். ஜ்ஞாநாதிகன் சொன்னதிறே ப்ரமாணமாவது. எல்லாருடைய *ஜ்ஞாநத்துக்கும் அடியான ஜ்ஞாநபூர்த்தியை யுடையவன். [குறியமாணுருவாகி] - அறிவிக்கைக்கு அயோக்யராயிருப்பாரை அழகாலே அகப்படுத்தினபடி. [குறிய] - கோடியைக் காணியாக்கினாற்போலே வளர்ந்ததிலுங் காட்டில் வாமநவேஷமே ஆகர்ஷகமானபடி. [மாணுருவாகி] - 'முன்பும் இதுவேயோ ஸ்வரூபம்?' என்னும்படி பிறந்த அன்றே இரப்பிலே தகணேறினபடி. [கொடுங்கோளால்]-வெட்டிய கோளாலே. அழகைக்காட்டி 'அல்லேன்' என்னவொண்ணாதபடி. நெருக்கிக் கொள்கை; வஞ்சித்துக்கொண்ட என்றுமாம்: அதாகிறது—மூவடியென்று இரந்து ஈரடியிலே அடக்கியும் சிறியகாலைக் காட்டிப் பெரியகாலாலே அளந்தும் செய்தபடி. அவன் செவ்வைக்கேட்டுக்கு ஈடாகத் தானும் செவ்வைக் கேட்டாலே வாங்கினபடி. [நிலங்கொண்ட] - பூமியைத் தன்னதாக்கிக்கொண்ட. [கிறியம்மான்] - பெருவிரகனான ஸர்வேஶ்வரன். அவன் தரும் வழியை அறிந்துவாங்கின விரகு. [கவராத கிளரொளியால் குறைவிலமே] - ஆஸுரப்ரக்ருதிகளையும் வஞ்சித்துத் தன்னதாக்கிக்கொள்ளுமவன் ஆதரித்திருக்கிற என்னை உபேக்ஷிக்குமாகில் இந்த லாவண்யத்தால் என்ன கார்யமுண்டு? என்கை. [கிளரொளி] - மிக்க ஒளி; ஸமுதாயஶோபை.

ஈடு.— ஆரும்பாட்டு. அறிவில்லாதார்க்கு ஸ்வப்ராப்த்யுபாயங்களை உபதேசித்து, அறிவு பிறக்கைக்கு யோக்யதையில்லாதாரை வடிவழகாலே தனக்காக்கிக்கொள்ளுமவன் விரும்பாத லாவண்யத்தால் என்ன கார்யமுண்டு? என்கிறாள்.

[அறிவினால்குறைவில்லா] - நாட்டார் அந்நபாநாதிகளெல்லாவற்றாலும் கார்யமுடையராயிருப்பார்களிறே; அறிவொன்றிலுமாயிற்றுக் குறைவுபட அறியாதது. அறிவினால் குறைவுபட அறியாத. அறிவால் கார்யமின்றிக்கே யிருப்பாராயிற்று [அகல்ஞாலத்தவர்] - பரப்பையுடைத்தான பூமியில், அறிவில் குறைவுபட அறிவாரொருவருமில்லையாயிற்று. [அவர்அறிய] - கல்லைத் துளைத்து நீரைநிறுத்தினாற்போலே இவர்கள் நெஞ்சிலேபடும்படி. [நெறியெல்லாம்எடுத்துரைத்த] - சேதநபேதத்தோபாதி போருமிறே உபாயபேதமும். கர்மயோகம் முதலாக ப்ரபத்திபர்யந்த

ஆரும்பாட்டு - அறிவினால் இத்யாதி. பாட்டெல்லாம் கடாக்ஷித்து, கீதோபநிஷதாசார்யனையும் வாமநனையும் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநம் சொல்லுகிற வழியாலே அவதாரிகை அருளிச்செய்கிறார் - அறிவில்லாதார்க்கு இத்யாதி. வடிவழகாலே யென்றதுக்கு - குறியமாணுருவிலே தாத்பர்யம்.

'அகல்ஞாலத்தவரறிய' என்றதுக்குச் சேர, அறிவினால் ப்ரயோஜநமில்லாதவென்று அஜ்ஞாநபரமாக அருளிச்செய்கிறார் - நாட்டார் இத்யாதி. அந்நபாநாதிகளெல்லாவற்றாலும் கார்யமுடையராயிருக்கையாவது - அத்தால் ப்ரயோஜநமுடையராயிருப்பரென்றபடி. இவ்வாக்யாநந்தரம் - 'அறிவால் கார்யமின்றிக்கே யிருப்பாராயிற்று' என்ற வாக்யம் அநுஸந்திப்பது. ஆக, 'அறிவினால்குறைவில்லா' என்கிறதுக்குச் சொல்லிற்றாயிற்ற அர்த்தமேது? என்ன, 'பகவத்விஷயஜ்ஞாநம் நமக்கின்றிக்கே போயிற்றே' என்று குறைவுபட அறியார்களென்கிற அர்த்தம் சொல்லிற்றாயிற்றென்கிறார் - அறிவொன்றிலும் இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'அகல்ஞாலத்தவர்' என்றதுக்கு வாஸனை - பரப்பை இத்யாதி. அவர்கள் மூடராகையாலே அறிகை துஶ்ஶகம்; ஆகையாலே; அதுக்குஉபயுக்தமாகஹாவம்- கல்லை இத்யாதி. பக்திப்ரபத்திகள் இரண்டன்றோ வேதாந்தஸித்தமான உபாயங்கள்? 'நெறியெல்லாம்' என்கிறதென்? என்ன, சேதந இத்

* 'எல்லாருடைய ஜ்ஞாநமும் நசிக்கும்படியான' என்று பாடாந்தரம்.

மாக ஸகலோபாயங்களையும் வ்யக்தமாக உபதேசித்தபடி. கர்மஜ்ஞாநபக்திகள், அவதாரரஹஸ்யஜ்ஞாநம், புருஷோத்தமவித்யை, ஸ்வஸ்வரூபயாதாத்ம்யம், விரோதிநிவ்ருத்திக்குப்ரபத்தி, ஆத்மப்ராப்திக்குப்ரபத்தி, பகவல்லாபத்துக்குப்ரபத்தி இவற்றைஅடங்க விஶததமமாக அருளிச்செய்தவன். கர்மயோகத்தை உபதேசிக்க, அவன் 'இந்த்ரியஜயம்பண்ணுகைஅரிது' என்ன, 'ஆகில், என்பக்கலிலே நெஞ்சைவை' என்று கர்மத்தை அநுஷ்டித்தாரை ப்ரஸங்கியா, அந்தப்ரஸங்கத்தாலே அவதாரரஹஸ்யத்தை உபதேசியா, அநந்தரம் ஜ்ஞாநயோகத்தை உபதேசித்து, 'ஜ்ஞாநவைஶத்யத்துக்கு உறுப்பாக என்பக்கலிலே நெஞ்சைவை' என்று, அநந்தரம் பக்தியோகத்தை உபதேசித்து, அங்கு 'விரோதிபாபக்ஷயத்துக்கும் பக்திவிவ்ருத்திக்குமாக என்பக்கலிலே நெஞ்சை

---

யாதி. அதாவது-ஆத்மாக்கள் அநேகராகையாலே அந்தந்தச் சேதநர்க்குக் கர்மாநுகுணமாக ருசிபேதங்களும் உண்டிறே, அந்த ருச்யநுகுணமாக வென்றபடி. 'எடுத்து' என்கையாலே - 'நிதியெடுத்து' என்னுமா போலே, வேதாந்தகுஹ்யத்தை ப்ரகாசிப்பித்தா னென்று தோற்றுகிறது. 'நெறியெல்லாம்' என்ற வாக்யத்துக்கு - கர்மயோகம் முதலாக என்று தொடங்கி, வ்யக்தமாக உபதேசித்தபடி யென்னுமளவும் ஸங்க்ரஹம். கர்மஜ்ஞாநபக்திகளென்று தொடங்கி, விசததமமாக அருளிச்செய்தவ னென்னுமளவும் அத்தைப் பற்ற விஸ்தரம். கர்மயோகத்தை யுபதேசிக்கஎன்று தொடங்கி மிகவும் விஸ்தரம். "[illegible]" இத்யாதியாலே - கர்மயோகத்தையும், "[illegible]" இத்யாதியாலே - ஜ்ஞாநயோகத்தையும், "[illegible]" இத்யாதியாலே - பக்தியோகத்தையும், "[illegible]" இத்யாதியாலே அவதார ரஹஸ்யத்தையும், "[illegible]" என்று தொடங்கி, "[illegible]" என்னுமளவாக - புருஷோத்தமவித்யையையும், "[illegible]" இத்யாதியாலே - ஸ்வஸ்வரூபயாதாத்ம்யத்தையும், "[illegible]" இத்யாதியாலே - விரோதிநிவ்ருத்திக்குப்ரபத்தியையும், "[illegible]" இத்யாதியாலே - ஆத்மப்ராப்திக்குப்ரபத்தியையும், சரமஶ்லோகத்தாலே - பகவல்லாபத்துக்கு ப்ரபத்தியையும் உபதேசித்தா னென்றபடி. விரோதிநிவ்ருத்திக்கு என்றது - உபாயோத்பத்திவிரோதி நிவ்ருத்திக்கு என்றபடி. கர்மயோகத்தை உபதேசிக்கவென்றது- "[illegible]" இத்யாதியைப் பற்ற. இந்த்ரியஜயம் பண்ணுகை அரிதென்ன வென்றது- "[illegible]" இத்யாதியைப்பற்ற. என்பக்கலிலே நெஞ்சைவை யென்றது - "[illegible] | [illegible]" என்றத்தைப்பற்ற. கர்மத்தை அநுஷ்டித்தாரை ப்ரஸங்கியாவென்றது -"[illegible]" இத்யாதியைப்பற்ற. ப்ரஸங்கியா - ப்ரஸங்கித்து. அந்தப்ரஸங்கத்தாலே யென்றது- கர்மயோகப்ரஸங்கா நந்தர மென்றபடி. அதாவது - "[illegible] | [illegible] || [illegible] | [illegible] || [illegible] | [illegible]" என்று கேட்க, "[illegible] | [illegible]" இத்யாதியாலே - இப்படி ப்ராஸங்கிகமாக அவதாரரஹஸ்யத்தை உபதேசித்தா னென்றபடி. ஜ்ஞாநயோகத்தை உபதேசித்தென்றது - "[illegible]" இத்யாதியைப் பற்ற. ஜ்ஞாநவைசத்யத்துக்கு உறுப்பாக என்பக்கலிலே நெஞ்சைவை யென்றது - "[illegible] | [illegible]" என்றத்தைப்பற்ற. அநந்தரம் பக்தியோகத்தை யென்றது - "[illegible]" இத்யாதியைப் பற்ற. அந்த விரோதி பாபக்ஷயத்துக்கும் பக்திவிவ்ருத்திக்குமாக என்பக்கலிலே நெஞ்சைவைஎன்றது -

வை' என்று, அநந்தரம் ''யதஃப்ரவ்ருத்திஃப்ரஸ்ருதா புராணீ'' (யதஃப்ரவ்ருத்திஃப்ரஸ்ருதா புராணீ) ''தமேவஶரணம்கச்ச'' (தமேவஶரணம்கச்ச) ''மாமேவயே ப்ரபத்யந்தே'' (மாமேவயே ப்ரபத்யந்தே) என்றும் அவற்றுக்கு உறுப்பாக ப்ரபத்தியை விதியா, அவ்வழியாலே ஸ்வரூப ஜ்ஞாநத்தைப் பிறப்பித்து, ''பூமிராபோநலோவாயுஃ'' (பூமிராபோநலோவாயுஃ) என்று தொடங்கி ''ஜீவபூதாம்'' (ஜீவபூதாம்) என்கிற சேதநாசேதநங்கள் எனக்கு ஶரீரமென்று அவ்வழியாலே தன்பேற்றுக்குத் தனக்கு ஸாதநாநுஷ்டாநம்பண்ணுகையில் யோக்யதையின்றிக்கே யிருக்கிறபடியைக் காட்டி, 'இவைதான்செய்து தலைக்கட்டப்போகாது' என்று சொல்லும்படி இதின் அருமையை அவன்நெஞ்சிற்படுத்தி, அவன்தான் அறிந்து கேட்டவற்றுக்குப் பரிஹாரம் பண்ணி, அவன் அறியாதே கேட்கமாட்டாதவற்றையும் தானே அறிவித்து, ப்ரபத்திபர்யந்தமாக உபதேசித்தபடியைச் சொல்லுகிறது. [நிறைஞானத்துஒருமூர்த்தி]-'ஒருவன்சொன்னான்' என்னுங் காட்டில் அது ப்ரமாணமோ? ஆப்தமாக வேண்டாவோ ? என்னில்;— இத்தலையில் அஜ்ஞாநமும் அகிஞ்சித்கரமாம்படியான ஜ்ஞாநபூர்த்தியை யுடையவனாவது, ப்ரமாணமாய் எல்லார்க்கும் வெளிச்சிறப்பைப் பண்ணிக்கொடுப்பதான வேதத்தினுடைய நித்யத்வாபௌருஷேயத்வங்கள் ஸ்வாதீநமாம்படி அவற்றை ஸ்மரித்துச்சொல்லுமவனாயிற்று வேதார்த்தத்தை விசதீகரித்தானாயிற்று. பரிபூர்ணஜ்ஞாநத்தை யுடைத்தான அத்விதீயமான ஸ்வரூபத்தை யுடையவன். [குறிய இத்யாதி] - அறிவிக்கக் கேளாதாரை வடுகே விடுகமிட்டு வடிவழகாலே தனக்காக்கிக்கொள்ளுமவனாயிற்று. [குறிய]—கோடியைக் காணியாக்கிக்கொண்டாற்போலே, வளர்ந்தபோதையிற்காட்டி.

---

''உத்தவ்ய தத்ஸத்வ | உத்தவஸாநாநாணிஉதவ்ஸாநாதரிஷ்யஸி'' என்றத்தைப்பற்ற. அங்க ப்ரபத்திக்கு அடைவே ப்ரமாணத்ரயம்- ''யதஃப்ரவ்ருத்திஃ'' இத்யாதி. ப்ரவ்ருத்திஃ-ஸ்ருஷ்டிஃ. அவற்றுக்கு உறுப்பாக - அந்த உபாயாந்தரங்களுக்கு அங்கமாக. விதியா-விதித்து. அவ்வழியாலேஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித் தென்றது - ''பூமிராபோநலோவாயுஃ'' இத்யாதியைப்பற்ற. இந்த ஶ்லோகத்தில், மநஃ என்றது - ப்ரக்ருதி, புத்தியென்றது - மஹாந். செய்துதலைக்கட்டப்போகாதென்றது - ''ஜ்ஞாயவஸி வெதஉஹணஹெஉதாவைஜிஜநாஜநா | தத்திஂகஉணிவொஶோஂநியொஜயஸிகெஶவ'' என்றத்தைப்பற்ற. தான்அறிந்துகேட்டவற்றுக் கென்றது - ''கஜிஹொஹயவிஹஷஜ்ஞாஹஜி வநஶ்யதி'' இத்யாதியைப்பற்ற. பரிஹாரம்பண்ணி யென்றது - ''நஹிகஷ்யாணக்ருதஶிஜுமஜகிஂ தாதமஜ்ஜதி | ஶாஜீநாஂஸ்ரீஉதாஂஹெஹெ யொமஹாஷெரஹிஜாயதெ | அயவாயொமி நாஉெவ கயொஹெஉதியிஉதாம்'' என்றத்தைப்பற்ற. அவன் அறியாதே கேட்கமாட்டாதவற்றையும் தானே அறிவித் தென்றது - ''ஸவஸமஹ்யதஂஹியஶ்யணஉெவொஉஂவஃ | உஷொஸி ஒஜீஜஉதிதஉெதாவக்ஷ்யாஉிதெஹிதம்'' என்றத்தைப்பற்ற. உபாயாந்தரங்களை உபதேசிக்கிறவிடத்திலே ஸ்வஸ்வரூபயாதாத்ம்யத்தை உபதேசிக்கிறது - 'பரதந்த்ரனை எனக்குப் பிரியநின்று ஸாதநாநுஷ்டாநம்பண்ண ப்ராப்தியில்லை' என்று அவற்றிலே இவனுக்கு ஶோகம்பிறக்கைக்கு உடலாக வென்று கருத்து. அஜ்ஞாநமும்அகிஞ்சித்கரமாம்படி என்றது - இவனுடைய அஜ்ஞாநத்தாலே நாசம் வராதபடி யென்றபடி. நித்யமாய் அபௌருஷேயமான வேதமூலமானாலன்றோ ப்ரமாணமாவது, ஜ்ஞாநபூர்த்திமாத்ரம் போருமோ? என்ன, ப்ரமாணமாய் இத்யாதி. வெளிச்சிறப்பு - வைஶத்யம். கீதையும் வேதார்த்த மென்கிறார் - வேதார்த்தத்தை இத்யாதி. 'எடுத்துரைத்த' என்றதுக்கு பாவமாதல். ஶப்தார்த்தம் - பரிபூர்ண இத்யாதி.

கீழ்ப்பதத்தோடே கூட்டி இதுக்கு ஸங்கதி - அறிவிக்க இத்யாதி. வடுகவிடுகம் - வடுகன் கட்டும் கிட்டிக்கோல். நிலங்கொண்ட நெடிய உருவைச் சொல்லவேண்டியிருக்க, இந்த உருவைச் சொன்னதுக்கு ஹேது - கோடியை இத்யாதி. போலே என்ற அநந்தரம், இருக்கிறதென்று கூட்டுவது. வளர்ந்த

லும் ஆகர்ஷகமாயிருந்தபடி. [மாணுருவாகி] - பிறந்தபோதே இரப்பிலே யதிகரித்து, அதுவே வாஸிதமாயிருந்தபடியாலே,'பிறப்பதற்குமுன்புமெல்லாம் இதுவேயோ யாத்ரை?' என்னும்படிக்கு ஈடாகவாயிற்று. 'உண்டு' என்று இட்டபோதோடு, 'இல்லை' என்று சொல்லிக் கதவடைத்தபோதோடு வாசியற முகமலர்ந்துபோம்படிக்கு ஈடாகவாயிற்று இரப்பிலே தகணேறினபடி. [கோடுங்கோளால்] - வெட்டிய கோளாலே யென்றபடி. அதாவது - வடிவழகைக்காட்டி அவனை வாய்மாளப்பண்ணினபடி. அன்றிக்கே, கோடு என்றத்தைக் குறுக்கி, அத்தை 'கோடு' என்றதாய், அதாவது-விலங்குகையாய், செவ்வைக்கேட்டைநினைத்து மூன்றடியை அபேக்ஷித்து இரண்டடியாலே அளப்பது; சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே அளப்பதாகக் கொண்டு அவனை வஞ்சித்தபடியைச் சொல்லிற்றுதல். துஷ்டஸாதநப்ரயோகம் பண்ணினவர்களுக்கு அதுக்கு ஈடாக உத்தரம்சொல்லுவாரைப்போலே, அவன் செவ்வைக்கேட்டுக்கு ஈடாகத் தானும் செவ்வைக்கேடனாய்க் கொண்டபடி. [கிறியம்மான்] - அவன்தரும் விரகறிந்து வாங்கவல்ல பெருவிரகனான ஸர்வேஶ்வரன். 'பெருங்கிறியான்' என்னக்கடவதிறே. [கவராத இத்யாதி]-செவ்வைகேடவாகிலும் தன்னுடைமையைத்தனக்காக்கிக்கொள்ளுமவன்;முன்பேஇசைந்து தன்னை 'பெறவேணும்' என்றிருக்கிற எனக்கு வந்து முகங்காட்டித் தனக்காக்கிக்கொள்ளாதபின்பு எனக்கு இத்தால் கார்யமுண்டோ? கிளரொளி - மிக்கவொளி; ஸமுதாயமோபை. (௬)

---

போதையிற்காட்டிலும் ஆகர்ஷக மென்றது-பெரியதிருவடிவில் அநுபாவ்யமான ஸௌந்தர்யங்களையெல்லாம் சிறியவடிவிலே அநுபவிக்கலா யிருக்கையாலே ஆகர்ஷகமாயிருக்கு மென்றபடி. 'ஆகி' என்றதுக்கு ஹாவம் - பிறந்தபோதே இத்யாதி. இதுவே - இரப்பே. யாத்ரை - ஜீவநஸாதநம். ஈடாகவாயிற்று என்றதுக்கு - தகணேறினபடி என்றத்தோடே அந்வயம். தகண் - தழும்பு. 'கொடுங்கோளால்' என்றதுக்கு அர்த்தத்வயம்: கோடுவென்று - வெட்டிமையாய், கோளென்று - ஸ்வீகரிக்கையாய் பலாத்காரத்தாலே க்ரஹிக்கையென்று முந்தின அர்த்தம். இத்தை அருளிச்செய்கிறார் - வெட்டிய இத்யாதி. இரண்டாமர்த்தம்- அன்றிக்கே கோடு இத்யாதி. அதாவது - கோடு என்றத்தைக்குறுக்கி, 'கொடு' என்றதாய், அதாவது - விலக்குகையாய், அது - செவ்வைக்கேடாய், அதாவது -வஞ்சநமாய்; கோளென்று - கொள்கை, அதாவது-ஸ்வீகரிக்கையாய், வஞ்சநப்ரதிக்ரஹத்தாலே யென்றபடி. இரண்டடியாலே அளந்தது மூன்றாமடிக்கு அவனைச் சிறையிலே வைக்க நினைத்தாகையாலே அதுவும் செவ்வைக்கேடிறே என்று அந்த வஞ்சநத்தை விவரிக்கிறார் - மூன்றடி இத்யாதி. வஞ்சநத்துக்கு ஹேது - துஷ்ட இத்யாதி. "[illegible]" என்று - துஷ்டஸாதநப்ரயோகம். "[illegible]" என்று-அதுக்கீடாக உத்தரம். "துஷ்டம்" என்றறிந்தே பரமோஹார்த்தம் ப்ரயோகிக்கை - கௌடில்யமிறே; கௌடில்யம் பண்ணினார்க்குக் கௌடில்யம் பண்ணுகை உசிதமிறே யென்று கருத்து. அவன் செவ்வைக்கேட்டுக்கு - தான் பண்ணின மர்யாதையைக் குலைக்கையாலே அவன் செய்தது செவ்வைக்கேடிறே- அவனுக்குச் செவ்வைக் கேடாவது - தைவப்ரக்ருதியான இந்த்ரனுடைய ராஜ்யத்தை அபஹரிக்கை.விரகு-உபாயம். பெருவிரகன் - மஹாஸமர்த்தன். கிறி - ஸாமர்த்யம். 'கிறி' என்றால் பெருவிரகென்று காட்டுமோ? என்ன, பெருங்கிறியான் இத்யாதி. பெருவிரகனித்யர்த்தஃ. திருவிருத்தம், தொண்ணூற்றேராம் பாட்டு, "சுருங்குறி வெண்ணெய்" இத்யாதி. மஹாபலியில் இவளுக்கு உண்டான வ்யாவ்ருத்தியை அருளிச் செய்யா நின்றுகொண்டு ஏவம்பூதையான தன்னை விரும்பாமையாலே தன்னுடைய லாவண்யத்தை உபேக்ஷிக்கிறு ளென்கிறார் - செவ்வைகேடவாகிலும் இத்யாதி. "[illegible]" இதி கீதாஸு பஞ்சதஶே; "[illegible]" இத்யாதி. க்ரமேண அந்வயஃ. (௬)

# ஏழாம் பாட்டு.

கிளரொளியாற்குறைவில்லா அரியுருவாய்க்கிளர்ந்தெழுந்து
கிளரொளியவிரணியனது அகல்மார்பங்கிழித்துகந்த
வளரொளியகனலாழி வலம்புரியன்மணிநீல
வளரொளியான்கவராத வரிவளையாற்குறைவிலமே.

ஆ.—(கிளர்.) ஹிரண்யவிஷயநிரவதிகரோஷத்தாலே அத்யந்தம் அநபிபவநீயமாய் அதிதுஸ்ஸஹமாய் யுகபதுதிததிநகரஸதஸஹஸ்ர தேஜஸ்ஸத்ருஸமாயிருந்த தேஜஸ்ஸையுடையதொரு அரியுருவாய்க் கிளர்ந்தெழுந்து, அதிபலபராக்ரமனான ஹிரண்யனைத் தன்திருவுகிராலே பிளந்தருளிப்ரஹ்ருஷ்டனாய், நிஹதஹிரண்யனாகையாலேப்ரஸாந்தஅஸேஷரோஷனாய், அதினாலே அதிஸீதள ஸர்வாநுகூலநிரவதிக தேஜோவிஸிஷ்டனாய், திருவுகிர்களாலே முந்துறவே ஹிரண்ய வக்ஷஸ்தலம் விதாரிதமாகையாலே ததர்த்தமான ஸ்வோத்யோகம் நிர்விஷயமாதலால் அதிப்ரவ்ருத்தரோஷாந்வித ஸங்கசக்ராதி திவ்யாயுதோபேதனாயிருந்தவன் கவராத வரிவளையால் குறைவிலம் என்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், ஆஸ்ரிதவிரோதியான ஹிரண்யநிரஸநம் பண்ணுமிடத்தில் அவனளவல்லாதபடியாகச் சீறி அவனை முடிக்கும் ஸ்வபாவனானவன் விரும்பாத விலக்ஷணமான வளைகொண்டு காரியமுடையோமல்லோம் என்கிறாள்.

[கிளரொளி என்று தொடங்கி] - பெருகாநின்றுள்ள ஒளியால் மிக்க ஸிம்ஹரூபியாய்ச் சீறிக்கொண்டு தோன்றி மிக்க தேஜஸ்ஸையுடையவனாயிருந்துள்ள ஹிரண்யனுடைய விஸ்த்ருதமான மார்பை அநாயாஸேந பிளந்து 'ஆஸ்ரிதவிரோதி போகப்பெற்றது' என்று உகப்பதும் செய்து திருவுகிர்களாலே முந்துற ஹிரண்யன் முடிகையாலே தங்களுக்கு இரைபெறாத சீற்றத்தின் மிகுதியாலே நெருப்பையுமிழாநின்றுள்ள ஸங்கசக்ராதிதிவ்யாயுதோபேதனாய். [மணிநீலவளரொளியான்] - கோபமெல்லாம் தணித்த ஸீதளமான நிரவதிகதேஜஸ்ஸை யுடையவன்.

ப.—அநந்தரம், உத்துங்கவிரோதியான ஹிரண்யனைப் பிளந்த நரஸிம்ஹன் விரும்பாத வளையால் என்ன கார்யமுண்டு? என்கிறாள்.

மணி - ஸ்லாக்யமான, நீலம் - நீலரத்நத்தினொளிபோலே அத்யுஜ்ஜ்வலமாய், வளர் - அஸாதாரணமான, ஒளியான் - விக்ரஹதேஜஸ்ஸையுடையனாய், (ஆஸ்ரிதார்த்தமாக அவ்வடிவழகை அழியமாறி), கிளர் - ("ஜ்வலந்தம்" என்னும்படி) அபிவ்ருத்தமான, ஒளியால் - ஔஜ்ஜ்வல்யத்தால், குறைவில்லா -பரிபூர்ணமான, அரியுருவாய்-ஸிம்ஹரூபமாய்க்கொண்டு, கிளர்ந்து எழுந்து - ஸத்ருநிரஸநத்திலே உத்யோகித்து ஆவிர்ப்பவித்து, கிளர் ஒளிய - மிக்க தேஜஸ்ஸையுடையனான, இரணியனது - ஹிரண்யனுடைய, அகல் மார்பம் - விஸ்தீர்ணமான மார்பை, கிழித்து - (அநாயாஸேந) கிழித்து, உகந்த - (ஆஸ்ரிதவிரோதிபோனபடியாலே) உகந்தவனாய், (இரைபெறாத பாம்புபோலே சீறுகையாலே), வளர்ஒளிய-வளர்கிற ஜ்வாலையையுடைய, கனல் ஆழி-அக்நிபோலேயிருக்கிற திருவாழியையும், வலம்புரியன்-ஸ்ரீபாஞ்சஜந்யத்தையு முடையனானவன், கவராத - ஆதரியாத, வரிவளையால் - வரியையுடைய வளையாலே, குறைவிலம் - என்ன ப்ரயோஜநமுண்டு?

இ.—ஏழாம்பாட்டில், தமப்பன் எதிரியாக பாலனானவனுக்கு உதவினவன் தான் உதவாமே நோவுபடுகிற எனக்கு உதவானாகில் என்னுடைய ஆபரணங்களால் என்ன கார்யமுண்டு? என்கிறாள்.

[கிளரொளியால் குறைவில்லா] - பெருகாநின்றுள்ள ஒளியால் மிக்கிருக்கை. "ஜ்வலந்தம்" என்கிற மந்த்ரலிங்கம் தோற்றச் சொல்லுகிறாள். [அரியுருவாய்] - ஸிம்ஹரூபியாய், தன்னை அழிய மாறி உதவினபடி [கிளர்ந்து எழுந்து] - சீறிக்கொண்டு தோன்றி; "பிறையெயிற்றன் றடலரியாய்ப் பெருகினானை" என்கிறபடியே ஆஸ்ரிதவாத்ஸல்யத்தாலே சீறிக்கொண்டு கிளர்ந்த கிளர்த்தி. [கிளரொளிய இரணியன்] - மிக்க தேஜஸ்ஸையுடைய ஹிரண்யன். நரஸிம்ஹமும் பிற்காலிக்க வேண்டும்படியாயிற்று, அவன் கிளர்த்தி. [அகல்மார்பம்] - தேவர்களுடைய வரத்தை ஊட்டியாக இட்டுத் திருவுகிருக்கு இரை போரும்படி வளர்ந்த மார்பை. [கிழித்து] - நரஸிம்ஹத்தினுடைய தோற்றரவிலே ஒத்துப் பதம் செய்தது, அநாயாஸேந கிழித்தான். [உகந்த]-'சிறுக்கனுடைய விரோதி போகப்பெற்றது' என்று உகந்தபடி, "ஜகாம ஹர்ஷம் மஹதா" என்று இவன் கால்கட்டா தொழியப்பெற்றோமென்று உகந்தபடி. [வளரொளிய கனலாழி வலம்புரியன்] - கிளர்கிற அக்நிபோலே யிருக்கிற திவ்யாயுதங்களை யுடையவன். ஹிரண்யன் திருவுகிருக்கு இரையாய்ப் போகையாலே திவ்யாயுதங்களுக்கு அவகாஸமில்லை யாயிற்று; அத்தால் வந்த கிளர்த்தி. [மணிநீல வளரொளியான்] - நீலமணிபோலே வளரா நின்றுள்ள ஒளியை யுடையவன். வெளுத்த திருநிறமாயிருக்க நீலமாகச் சொல்லிற்று, விரோதி போனபின்பு பிறந்த குளிர்த்தியைப் பற்ற. சீற்றமெல்லாம் தெளிந்து ஸீதளமான நிரவதிக தேஜஸ்ஸையுடையவன். [கவராத இத்யாதி] - அவன் வாங்கித் தன்கையிலிட்டுக்கொள்ளாத விலக்ஷணமான வளையால் என்ன கார்ய முண்டு?

ஈடு.— ஏழாம்பாட்டு. பெற்ற தமப்பன் பகையாக பாலனானவனுக்கு உதவினவன் தான் உதவாமை நோவுபடுகிற எனக்கு உதவானாகில், நான் ஆபரணம் பூண்டு ஒப்பித்திருக்கிற இவ்வொப்பனை யார்க்கு? என்கிறாள்.

[கிளரொளி இத்யாதி] - "ஜ்வலந்தம்" (ஜ்வலந்தம்) என்கிற மந்த்ரலிங்கம் தோற்றச் சொல்லுகிறதாயிற்று. கிளர்ந்தவொளியால் குறைவின்றிக்கேயிருக்கிற நரஸிம்ஹமாய. [கிளர்ந் தெழுந்து] - சீறிக்கொண்டு தோற்றி. "பிறையெயிற்றன்றடலரியாய்ப்பெருகினானை" என்கிறபடியே, சிறுக்கன்மேலே அவன்முடுகினவாறே கிளர்ந்தபடி. [கிளரொளிய இரணியன்] - மிக்கதேஜஸ் ஸையுடைய ஹிரண்யன். ஆஸுரமான தேஜஸ்ஸு. நரஸிம்ஹமும் பிற்காலித்து வாங்கும் படியாயிற்று, பையல்கிளர்த்தி யிருந்தபடி. [அகல்மார்பம்] - தேவதைகளினுடைய வரத்தை ஊட்டியாக இட்டுத் திருவுகிருக்குஇரைபோரும்படியாக வளர்ந்த அகன்ற மார்வை. [கிழித்து]-

---

ஏழாம்பாட்டு-கிளரொளி இத்யாதி. 'கிளரொளியாற்குறைவில்லா அரியுருவாய்' இத்யாதியையும், 'கவராதவரிவளையால்குறைவிலம்' என்கிற பதத்தையும் கடாக்ஷித்து அவதாரிகை - பெற்றதமப்பன் இத்யாதி.

அவ்வவதாரத்தில் ஒளியுண்டோ? என்ன, ஜ்வலந்தம் இத்யாதி. மந்த்ரலிங்கம் - மந்த்ரார்த்தம். "உக்ரம் வீரம் மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம் ஸர்வதோமுகம் । ந்ருஸிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யும்ருத்யும் நமாம்யஹம்" இதி மந்த்ரః. சப்தார்த்தம்-கிளர்ந்த இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம் - பிறை யெயிற்று இத்யாதி. ஹிரண்யனாலே சிறுக்கன் நோவுபடுகிறவன்று பிறைபோலேயிருக்கிற எயிற்றையுடைய யுத்தோந்முகமான நரஸிம்ஹமாய்க்கொண்டு பெருகினவனை யித்யர்த்தః. திருமொழி - இரண்டாம்பத்து - அஞ்சாந்திருமொழி - எட்டாம்பாட்டு - 'பெண்ணாகி' இத்யாதி. முடுகினவாறே - துணிந்தவாறே. கிளர்ந்த படி - சீறினபடி. 'கிளரொளியாற் குறைவில்லா அரியுருவாய்' என்ற அநந்தரம் 'கிளரொளிய விரணியன்' என்றதுக்கு பாவம் - நரஸிம்ஹமும் இத்யாதி. ஊட்டியாக - போஜநமாக. இரை - லக்ஷ்யம். பொன்

நரஸிம்ஹத்தினுடைய மோறுந்த முகத்தையும், நா மடிக்கோண்ட உதட்டையும்; குத்த முறுக்கின கையையும்; அதிர்ந்தஅட்டஹாஸத்தையும் கண்டவாறே, பொசுக்கின பன்றிபோலே உருகினுயிற்று; பின்னை அநாயாஸேந கிழித்துப்போகட்டான். நெற்றியது கண்ணும் உச்சியது புருவமுமாய்க்கொண்டு தோற்றினபோது, கோடரகதமான அக்நிபோலே பயாக்நி உள்ளேநின்று எரியப்புக்கவாறே பதஞ்செய்யுமிறே. [உகந்த] - 'சிறுக்கனுடைய விரோதி போகப்பெற்றோமே' என்று உகந்தபடி. "'உ்தி தானஸ்ஸ த்ரு தம்வாவம்ஜெவதஸ்யவ்ரணஸ்யது'' (மத்பிதுஸ்தத்க்ருதம்பாபம் தேவதஸ்யப்ரணஸ்யது)என்று இவன்தான் காற்கட்டி யானையிடாதே, இவன்தானே 'கோல்லவேணும்' என்று இசையப்பெற்றோமிறே" என்று உகந்தானுயிற்று. [வளரொளிய கனலாழி வலம்புரியன்] - காவற்காட்டில் துஷ்டம்ருகங்களுக்கு ஊட்டியிட்டு வளர்க்குமாபோலே, தேவதைகளுடைய வரங்களை ஊட்டியாக இட்டு வளர்த்த பையலுடைய அகலமெல்லாம்திருவுகிருக்கு அரைவயிரும்படி யாயிற்றிறே; ஒருவன்கைபார்த்திருப்பார் அநேகருண்டானுல், அவர்களிலே சிலவர் இவனோடே கைசெய்து,அவனுக்குள்ள உடலையும் தாங்கள் கண்டபடி யழித்து, நீக்கியுள்ள உடலையும் கூறிட்டுத் தாங்களே கோண்டுவிட்டால், மற்றுள்ளார் கதகதென்னச் சோல்லவேண்டாவிறே. இவர்கள் தாம் நுனியாடிகளிறே. 'இப்படி இவர்கள் தாமேயாவதேன் நாமிருக்க?' என்று திவ்யாயுதங்கள் கிளர்ந்தனவாயிற்று. [மணிநீலவளரொளியான்] - நீலமணிபோலேவளராநின்றுள்ள ஒளியையுடையவன். கைமேலே இலக்கை பெறுதார்க்கு அன்றுடு படி விடவேணுமிறே; படிவிடாதபோது அரைக்ஷணம் நில்லார்களிறே அவர்கள். இவர்கள் வ்ருத்தவான்களாகையிறே கைமேலே இப்படிபெற்று ஜீவிக்கிறது; "படிகண்டறிதியே" என்கிறபடியே. இப்படி கண்டு ஜீவிக்குமதிறே. "ஸதாவஸ்யந்தி" (ஸதாபஶ்யந்தி) யிறே. "மணிநீலவளரொளி" என்பானுருவைக் கிழிக்கப்போமோ? என்ன,நரஸிம்ஹத்தினுடைய இத்யாதி. மோறுந்த - திறந்த. நாமடிக்கோண்ட - நாக்கு மடித்த. குத்த - குத்துகைக்கு. அதிர்ந்த - மஹாத்வநிசெய்கிற. போசுக்கின-நெருப்பிலே வாட்டின. உருக்குகைக்கு அக்நி யெங்கே? என்ன - நெற்றி இத்யாதி. ஹங்க்யந்தரேணோபபாதநமாதல். பயாக்நியாலே பதம்செய்ததென்று கருத்து. அக்நிபோலே - அக்நி உள்ளேநின்று தஹிக்குமாபோலே. உகப்புக்கு ஹேத்வந்தரம் - மத்பிதுஃ இத்யாதி. "ஜயிஷெநவெநாஹஷதம்ஸஸநாவஹ தெதவ | உ்தி தானஸ்ஸ த்ரு தம்வாவம் ஜெவதஸ்யவ்ரணஸ்யது" இதிப்ரதமேம்ஶ விம்ஶே ப்ரஹ்லாதஃ. இவன்தான் - ப்ரஹ்லாதன்தான். காற்கட்டி - ப்ரதிபந்தித்து. 'வளரொளிய' என்றது - ஆழிக்கும், வலம்புரிக்கும் விசேஷணம். 'கனல்' என்கிற விசேஷணத்துக்கு ஹாவம் - காவற்காட்டில் இத்யாதி. காவற்காடு - ரக்ஷகருண்டான தோட்டம். ஊட்டி - ஆஹாரம். அகலம் - மார்வு. சாடு - ஒருவன் இத்யாதி. கைபார்த்திருப்பார்-ஒருவனுக்குப் பரதந்த்ரராயிருப்பாரென்றும்,கையிலேயிருப்பாரென்றும். கைசெய்து என்றது-ஸஹாயம் செய்தென்றும், கையிலேயிருந்தென்றும். உடல் - தநமும், சரீரமும். கண்டபடி - கண்டப்ரகாரம். 'கிழித்து' என்கையாலே-அழிக்கையும், இரண்டு கூறுகையும் விவக்ஷிதமிறே. நீக்கியுள்ள - வ்யதிரிக்தமாயுள்ள. கூறிட்டு - கண்டித்து, பாகித்தென்றும். தாங்களே - நகங்களே. மற்றுள்ளார்-திருவாழியாழ்வான் தொடக்கமானுர். கதகதென்ன - கோபிக்கவென்றும், ஜ்வலிக்கவென்றும் அர்த்த த்வயம். இவர்கள் சீறிக்கொள்ளவேண்டுவானேன்? என்ன, இவர்கள் இத்யாதி. நுனியாடிகள் - ஹஸ்தாக்ரவர்த்திக ளென்றும், ஸேநாக்ரவர்த்திக ளென்றும் அர்த்தத்வயம். 'வளர்' என்றதுக்கு ஹாவம் - இப்படி இத்யாதி. தாமேயாவதேன் - தாமே கூறிட்டுக்கொள்ளுகிறபடி எப்படி? திவ்யாயுதங்கள் - திருவாழி தொடக்கமானவை. கைமேலே-ஸத்யஃ. இலக்கை - மாஸஜீவிதமான பணமும், லக்ஷ்யமும்; அர்த்தத்வயம். அன்றுடு - அன்றைக்கன்று. படி - அரிசிப்படி. கைமேலே யிருந்து வைத்து லக்ஷ்யம் பெறுதார்க்கு உகப்பிக்கைக்காகத் திருமேனி கொடுக்கவேணுமிறே யென்றபடி. ஆகையிறே, இவர்கள் கைமேலேயிருந்து பரிகையாலே இத்திருமேனிபெற்று ஜீவிக்கிற தென்றபடி. படியென்று - திருமேனியைச் சொல்லுமோ? என்ன, படி இத்யாதி. படிகண்டறிதியே-திருமேனியை ஸாக்ஷாத்கரித்தபடி யறியாயோ வித்யர்த்தஃ. இந்தப்பாட்டு முன்பே எழுதிற்று. மற்றைப்படி பாகம்பண்ணி ஜீவிக்குமதிறே, இந்தப்படிகண்டு ஜீவிக்குமது. இது கண்டு ஜீவிக்குமதா யிருக்குமோ? என்ன, "ஸதாவஸ்யந்தி" இத்யாதி. தடஸ்த்தஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்

னேன்? அப்போது திருமேனி வெளுத்தன்றோ இருப்பது? என்னில்;—'சிறுக்கனுர்த்தி தீரப்பேற்றோமே' என்று திருமேனி குளிர்ந்த படியைச் சொல்லுகிறது. [கவராதஇத்யாதி] - அவ்வடிவையுடையவன்தானே வந்து மேல்விழுந்து விரும்பி வாங்கியிட்டுக்கொள்ளாத இவ்வளையால் எனக்கு என்னகார்யமுண்டு? என்கிறாள். (எ)



## எட்டாம் பாட்டு.

வரிவளையாற்குறைவில்லாப் பெருமுழக்காலடங்காரை
எரியழலம்புகவூதி இருநிலமுன்துயர்தவிர்த்த
தெரிவரியசிவன்பிரமன் அமரர்கோன்பணிந்தேத்தும்
விரிபுகழான்கவராத மேகலையாற்குறைவிலமே.

ஆ.—(வரிவளையால்.) துர்யோதநாதிகளுடைய ஹ்ருதயத்திலே காலாக்நி புகும்படியாக அதிகம்பீரநாதமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை மடுத்துஊதி இருநிலமுன்துயர்தவிர்த்து, ப்ரஹ்மேஶாநாதி ஸர்வ தேவைஸ் ஸம்ஸ்துயமாந விஜயஸ்ரீகனாய்க்கொண்டு நின்றவன் கவராத மேகலையால் குறைவிலம் என்கிறாள்.

ஒ.—எட்டாம் பாட்டில், பாதகரானவர்களையெல்லாம் முடித்து லோகத்தினுடைய உபத்ரவத்தையெல்லாம் போக்கின குணத்திலே ப்ரஹ்மேஶாநாதிகளாலே ஸ்துயமாநனாயிருந்தவன் விரும்பாத மேகலையால் ஒரு காரியமில்லை என்கிறாள்.

[வரிவளை என்று தொடங்கி] - ப்ரதிபக்ஷத்தின் அளவல்லாத த்வநியையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருப்பவளத்திலே மடுத்து துர்யோதநாதிகளை மஹாபயம்ப்ரவேசிக்கும்படி ஊதிப் பண்டு இம்மஹாப்ருதிவியினுடைய துக்கத்தைப் போக்குவதும் செய்து, துர்ஜ்ஞேயரான ருத்ராதிகள் தன்னுடைய வீரஸ்ரீக்குத் தோற்றுத் திருவடிகளிலே விழுந்து ஏத்தும்படியான மிக்கிருந்துள்ள கீர்த்தியையுடையனானவன்.

ப.—அநந்தரம், ஸம்ஹாரநிர்ஹரணார்த்தமாக துர்யோதநாதிவிரோதிஶதத்தையும்நிரஸித்த நிரதிஶயகீர்த்தியை யுடையவன் விரும்பாத மேகலையால் என்னகார்யமுண்டு? என்கிறாள்.

வரி - (முகத்தில்) வரியையுடைய, வளையால் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலுண்டான; குறைவில்லாப் பெருமுழக்கால் - மஹாகோஷத்தாலே, அடங்காரை - அபவ்யரான ஶத்ருக்களை, எரி - கிளர்ந்தெரிகிற, அழலம்-பயாக்நியானது, புக - உள்ளே ப்ரவேசிக்கும்படியாக, ஊதி-ஊதி, முன் - முற்காலத்திலே, இருநிலம் - மஹாப்ருதிவியினுடைய, துயர்-பாரக்லேசத்தை, தவிர்த்த - தவிர்த்தவனாய், (இவ்வுபகாரத்தாலே), தெரிவரிய - (தன்னோடொக்க நினைத்து ப்ரமித்து) விவேகிக்க அரிய ப்ராதாந்யத்தையுடைய, சிவன் - ருத்ரன், பிரமன் - ப்ரஹ்மா, அமரர்கோன் - தேவநிர்வாஹகனான இந்த்ரன், பணிந்து ஏத்தும் - க்ருதஜ்ஞதாபரவஶராய்க்கொண்டு வணங்கி ஸ்தோத்ரம் பண்ணும்படி, விரி புகழான் - விஸ்தீர்ணமான புகழையுடையவன், கவராத - ஆதரியாத, மேகலையால் - காஞ்சீகுணத்தால், குறைவிலம் - என்ன ப்ரயோஜநமுண்டு? மேகலை - பரிவட்டத்தின்மேற் கட்டும் காஞ்சி; பரிவட்டமாகவுமாம்.

---

கிறார் - மணிநீல இத்யாதி. நீலஶப்தம் - குளிர்த்தியை லக்ஷிக்கிறது. வளரொளிய கனலாழி - வளர்கின்ற ஜ்வாலையையுடைய அக்நிபோலே யிருக்கிற திருவாழி யென்றபடி. க்ரமேண அந்வய:. (எ)

இ.—எட்டாம்பாட்டில், ஜகத்துக்காக உபகரிக்குமவன் தனக்கு அஸாதாரணையான என்னை உபேக்ஷிக்குமாகில் என் உடைமையைப் பேணியிருக்குமதுக்கு என்ன ப்ரயோஜநமுண்டு? என்கிறாள்.

[வரிவளையால்] - வளையென்று சங்கு; ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலே. [குறைவில்லாப் பெருமுழக்கால்] - ஶத்ருக்களளவல்லாத மஹாத்வநியாலே; "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்" என்கிறபடியே. [வரிவளையால் பெருமுழக்கால்] - "ஹஸ்தேந ராமேண" என்னுமாபோலே. [அடங்காரை எரியழலம் புக ஊதி] - எரிகிற அழலம் - எரிகிற அக்நி. எதிரிட்ட துர்யோதநாதிகள் நெஞ்சிலே பயாக்நி குடிபுகும்படி ஊதி. ஸ்ரீபாஞ்சஜந்ய த்வநிதான் ப்ரதிகூலர் மண்ணுண்ணும்படியாய் அநுகூலர் வாழும்படியாயிறே இருப்பது. "தேவாநாம் வர்த்தயந் தேஜோ த்விஷதாம் ச யஶோ ஹரந்", "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்". [இருநிலம்முன் துயர்தவிர்த்த] - பரப்பையுடைத்தான பூமிக்குப் பண்டு உண்டான துக்கத்தைப் போக்கினவன். [தெரிவரிய இத்யாதி] - பாரதஸமரத்தில் வீரஸ்ரீக்குத் தோற்று ப்ரஹ்மாதிகள் திருவடிகளிலே விழுந்து ஏத்தும் கீர்த்தியையுடையவன். [தெரிவரிய] - துர்ஜ்ஞேயராகை. ஈஶ்வரனோடே மசக்குப்பரலிடும்படியா யிருக்கை. [விரிபுகழான்] - எல்லாரும் ஏத்தினாலும் ஏத்தின இடம் அல்பமாய் ஏத்தாத இடம் மிக்கிருக்கை. [கவராதமேகலையால்] - அவன் மாறுபாடாத பரிவட்டத்தால் என்ன கார்யமுண்டு? ரக்ஷணத்தில் குறைந்த அம்ஶம் அவனுக்கு அவத்யம்; தன்உடைமைதனக்காயிருக்கிறது இவளுக்கு அவத்யம்.

ஈடு.— எட்டாம்பாட்டு. ஜகத்துக்காக உபகரிக்குமவன் தனக்கு அஸாதாரணையான என்னை உபேக்ஷிக்குமாகில் என்னுடைய மேகலையால் என்ன ப்ரயோஜந முண்டு? என்கிறாள்.

[வரிவளையால்] - வளையேன்று - சங்கு. *(முகத்திலே வரியையுடைய) ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலே. [குறைவில்லாப் பெருமுழக்கால்] - சத்ருக்களளவல்லாத மஹாத்வநியாலே; "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்" (ஸகோஷோதார்த்தராஷ்ட்ராணும் ஹ்ருதயாநிவ்யதாரயத்) என்கிறபடியே, "ஜகத்ஸபாதாலவியத்திகீஶ்வரம் ப்ரகம்பயாமாஸ" (ஜகத்ஸபாதாலவியத்திகீஸ்வரம்ப்ரகம்பயாமாஸ) என் கி ற ப டி யே. [வரிவளையால் - பெருமுழக்கால்] - "ஹஸ்தேந ராமேண" (ஹஸ்தேநராமேண) என்னுமாபோலே. [அடங்காரை] - அடங்காருண்டு-

எட்டாம்பாட்டு - வரிவளையால் இத்யாதி. ஜகத்துக்காக உபகரிக்குமவனென்றது-'இருநிலமுன் துயர்தவிர்த்த' என்றத்தைப் பற்ற. மேகலையால் - நல்லபரிவட்டத்தால். அல்லது, ஸாமாந்யேந 'மேகலையா லென்ன ப்ரயோஜநம்' என்று சொல்லக்கூடாதிறே.

'வரி' என்று - ஸௌந்தர்யமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலே என்று. ஸ்ரீஶப்தம் - ஸௌந்தர்யவாசி. 'குறைவில்லா' என்றுவைத்து, 'பெருமுழக்கால்' என்றதுக்கு ஹாவம் - சத்ருக்கள் இத்யாதி. உக்தத்துக்கு ப்ரமாணத்வயம் - ஸகோஷ இத்யாதி. பாண்டவாதிகள் ஶங்கத்வநிபண்ணின அநந்தரம் 'ஸகோஷ:' என்றிருந்தாலும் - ஸ்ரீபாஞ்சஜந்ய த்வநியென்றே இவர்க்கு விவக்ஷிதம். இது - வந்தவிடமெங்கும் கண்டுகொள்வது. "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத் | நபஶ்ச ப்ருதிவீம் சைவ துமுலோ வ்யநுநாதயந்" இதிகீதாஸப்ததமே. "ஸ பாஞ்சஜந்யாப்தவக்த்ரமாருதஶ்ஶங்கோ ஹரேர் ... | ஜகத்ஸபாதாலவியத்திகீஶ்வரம் ப்ரகம்பயாமாஸ ..." இதித்ரோணபர்வணி. வளையினுடைய பெருமுழக்கால் என்னாதே, த்ருதீயாத்வய கதநத்துக்கு த்ருஷ்டாந்தம் - ஹஸ்தேந இத்யாதி. 'அழலம்'

* குண்டலிதம் - அரும்பதவிருத்தம்.

சத்ருக்கள், அவர்களை. [எரி யழலம் புக வூதி] - எரியாநின்றுள்ள அக்நியானது அவர்கள்ஹ்ருத யத்திலே ப்ரவேசிக்கும்படி ஊதி. பயாக்நி கொளுந்தும்படி பண்ணி. ஆஸ்ரிதவிரோதிகளைக் கழியவூதிற்று இவளையிட்டிறே. [இருநில முன் துயர்தவிர்த்த] - பரப்பையுடைத்தான பூமியில் முன்பே யுண்டான துக்கத்தைப் போக்கின. முன்பே பிடித்து து:க்கநிவர்த்தகனுய்ப் போருமவ னின்றித் தலையை நோவுபடவிட்டிருக்குமாகில், பின்னை எனக்கு என்னுடைமைகொண்டு கார்ய மென்? ஸ்ரீபாஞ்சஜந்யகோஷமாகிற இதுதான் அநுகூலர் கேட்க ஆசைப்பட்டிருப்பதுமாய், ப்ரதி கூலர்முடிகைக்கு ஹேதுவுமாயிருப்ப தொன்றிறே; "தேவாநாம்வவ்ருதே தேஜ: ப்ரஸாதஸ்சைவ யோகிநாம்" (தேவாநாம்வவ்ருதேதேஜ:ப்ரஸாதஸ்சைவயோகிநாம்) "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்" (ஸகோஷோதார்த்தராஷ்ட்ராணம்ஹ்ருதயாநிவ்யதாரயத்) இத்யாதிவத். "பெரியாழ்வார் திருமகளுக்கும் விசேஷித்து ஜீவநமாயிருப்பதொன்றிறே இது. [பூங்கோள்இத்யாதி] - ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்கும் ருக்மிணிப்பிராட்டிக்கு முண்டான விடாய் தனக்கொருத்திக்கும் உண்டாகையாலே, அவர்களிருவரும் பெற்ற பேற்றை நானொருத்தியும் ஒரு காலே பெறவேணு மென்கிருள்: 'இது பட்டர் அருளிச்செய்ய நான் கேட்டேன்" என்று பிள்ளை அருளிச்செய்வர். சிசுபாலன் ஸ்வயம்வரத்திலே ப்ரவ்ருத்தனானபோது ருக்மிணிப்பிராட்டி, 'இவ்வளவிலே க்ருஷ்ணன் வந்து முகங்காட்டிற்றிலனாகில் நான் பிழையேன்' என்ன, அவள் கலங்கின ஸமயத்திலே புறச்சோலையிலே நின்று ஸ்ரீபாஞ்சஜந்யத்தை முழக்க, அது வாராச் சேவிப் பட்டது; ராவணன் மாயாஸிரஸ்ஸைக் காட்டினபோது பிராட்டி தமோற, அவ்வளவிலே ஜ்யா கோஷம் வாராச் சேவிப்பட்டது; அவ்விருவர் விடாயும் தனக்கொருத்திக்கும் உண்டாகையாலே, இரண்டும் ஒருகாலே பெறவேணு மென்று ஆசைப்படுகிருளாயிற்று இவள். [தெரிவரியஇத்யாதி] - பாரத ஸமரத்தை முடியநடத்தினபடியைக் காண்கையாலே, தங்களை துர்ஜ்ஞேயராக நினைத்திருப் பாருமாய்ப் பூமியில் கால்பாவாமையால் வந்த துரபிமாநத்தை யுடையருமான ருத்ரன் தொடக்க மானுர் பக்நாபிமாநராய்க்கொண்டு வந்து விழுந்துஏத்தும்படியான பரந்த புகழையுடையவன். ஒருகோசுகுத்திரள்இருந்ததென்னு,திருப்பாற்கடலில் ஒருமூலை சுவருதிறே; அப்படியே, இவர்கள்

---

என்றவிடத்தில், அம் என்றது - சாரியைச்சொல்லு. தாத்பர்யம் - பயாக்நி இத்யாதி. 'இவளையிட்டு' என் றது - சாடு. த்வந்யர்த்தம், இவளையிட்டென்று; ஸ்ரீபாஞ்சஜந்யமென்று ஸ்வஹாவார்த்தம்; இவ்வளையென்று வவ்வொற்றுக்குவது. வளை-சங்கம். இருமை - பெருமை. தாத்பர்யம் - முன்பேஇத்யாதி. அநுஹாவ்யமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, இவள் 'விரோதிநிராஸகம்' என்பானென்? என்ன, ஸ்ரீபாஞ்சஜந்யகோஷம் இத்யாதி. உக்தத்துக்கு ப்ரமாணம் - தேவாநாம் இத்யாதி. "யஸ்ய நாதேந தைத்யாநாம் பலஹாநிரஜாயத | தேவாநாம்வவ்ருதே தேஜ: ப்ரஸாதஸ்சைவ யோகிநாம்" இதி பஞ்சமேம்பே. இப்படி "ஸ்ரீபாஞ்சஜந்ய நியாமகம்" என்று ஆசைப்பட்ட பேருண்டோ? என்ன, பெரியாழ்வார் இத்யாதி. 'பூங்கொள்' இத்யாதி - நாய்ச்சியார் திருமொழி - ஒன்பதாந் திருமொழி - ஒன்பதாம்பாட்டு, 'கோங்கல ரும்' இத்யாதி. பூங்கொள் - அழகுடைய, திருமுகத்து மடுத்தூதிய - திருப்பவளத்திலே வைத்து ஊதின, சங்கொலியும் - ஸ்ரீபாஞ்சஜந்யத்வநியும், சார்ங்கவில்நாணொலியும் - ஸ்ரீசார்ங்கவில் நாணோசையும், தலைப் பெய்வது எஞ்ஞான்றுகொலோ - வந்துகிட்டுவது என்றோ? இத்யர்த்த:. அவர்கள் ஒன்றையபேக்ஷிக்க, ஆண்டாள் இரண்டையும் அபேக்ஷிக்கிறபடி என்? என்ன, ஸ்ரீஜநக இத்யாதி. இது - இவ்வர்த்தம். இவர் கள் ஆசைப்பட்டது எப்போது? என்ன, சிசுபாலன் இத்யாதி. முழக்க-த்வநிப்பிக்க. வாரா-வந்து. தமோற- க்லேசப்பட. உக்தத்தை ப்ரக்ருதத்திலே சேர்க்கிருர் - அவ்விருவர் இத்யாதி. இவள் - ஆண்டாள். 'பாரத ஸமரத்தை முடிய நடத்தினபடியைக் காண்கையாலே' என்றதுக்கு - 'பக்நாபிமாநராய்' என்றத்தோடே அந்வயம். 'தெரிவரிய' என்றதுக்கு - ப்ராதீதிகார்த்தம் அநுபபந்நமாகையாலே, தாத்பர்யார்த்தம் - தங்களை இத்யாதி. துரபிமாநத்தை - 'நாங்கள் தேவர்களன்றோ' என்கிற துரபிமாநத்தை. பணிந்து - ஸேவித்து 'விரி' என்றதுக்கு ஸத்ருஷ்டாந்தமாக ஹாவம்-ஒருகோசுத இத்யாதி. கோசுகுத்திரளென்று-கொசுகுஸமூ

ஏத்தாநின்றல் ஏத்தினவிடம் அளவுபட்டு ஏத்தாதவிடம் மிஞ்சும்படியான புகழையுடையவன். [கவராதஇத்யாதி] - அவன் விரும்பாதே நானே உடுத்து முசியும்படியான மேகலை எனக்கு என் செய்ய? உடைமாறுத பரிவட்டங்கொண்டு கார்யமென்? ரக்ஷகனாய்த் தான் வந்து புகழ்படைத்துப் போருகிறவன்; 'இத்தலையை ரக்ஷித்து வரும் புகழ் வேண்டா, அதுதவிர்ந்தால் வரும் அவத்யம் வரஅமையும்' என்றிருந்தானாகில், நான் எனக்கு அவத்யமாம்படி பரிவட்டம் பேணியிருக்கவோ? [வரிவளையால்] - வாயாடி, வாய்க்கரைப்பற்றை அடுத்தூணாக வுடையவன். எதிரிகள் முடுகினால்; இவன்தான் வாய்க்கரையிலே யிருந்து பண்ணும் ஆர்ப்பரவத்தைக் கேட்டு எதிரிகள் முழுக்காயாக அவியும்படியாயிருக்கும். அந்தப்புரத்திலுள்ளார் 'எங்கள்வாய்புகுசோற்றைப் பறித்து ஜீவியா நின்றான்' என்று முறைப்பட்டால், அவன் வாய்விடாச்சாதி யென்னலாம்படியிறே இருப்பது. ஓசையும் ஒளியு முடையனாய் எதிரிகளை ஊதப்பறக்கும்படி பண்ணியிறே யிருப்பது. அல்லாத ஆழ்வார்கள் சூரியரேயாகிலும் தடியர் கழுந்த ரென்னலாய், இவனைப்போலே ஸாக்ஷியுடையா ரில்லையிறே. மரங்கள்போல் வலிய நெஞ்சராகையாலே எரியழலம்புக ஊதிக்கொளுத்தினபடி. இப்படி ஆஶ்ரிதரக்ஷணம் பண்ணினவன் விரும்பாத மேகலையால் எனக்கு என்ன ப்ரயோஜநமுண்டு? (அ)



## ஒன்பதாம் பாட்டு.

மேகலையாற்குறைவில்லா மேலிவுற்றவகலல்குல்
போகமகள்புகழ்த்தந்தை விறல்வாணன்புயந்துணித்து
நாகமிசைத்துயில்வான்போல் உலகெல்லாம்நன்கொடுங்க
யோகணைவான்கவராத உடம்பினாற்குறைவிலமே.

*ஆ.—(மேகலையால்.) ஸ்வாஶ்ரித ஸமீஹிதஹஞ்ஜகனான பாணனுடைய தோள்களைத் துணித்துப் பின்னை நிர்ப்பயனாய், ஸர்வலோகமும் தன்னுடைய ஸங்கல்பத்தினுள்ளே செல்லும்படி செலுத்திக்கொண்டு நாகபர்யங்கத்திலே ஸ்வாத்மாநுஸந்தாநரூப யோகநித்ரை பண்ணுகிறவன் கவராத உடம்பினால் குறைவிலம் என்கிறாள்.*

---

*ஹத்தைச் சொல்லுகிறது, 'அமரர்' என்று - திரளை விவக்ஷித்து. அளவுபட்டு - குறைவுபட்டு. அர்த்தாந்தரம் - உடைமாறுத இத்யாதி. உடைமாறுத - மாறுடியுடாத. த்ருதீயஸாவம் - ரக்ஷகனாய் இத்யாதி. அதாவது - நல்ல புடைவையும் உடுத்திருக்கவோ? என்றபடி. சாடுகதநார்த்தம், புநஶ்சபதோபாதாநம். வாயாடி - வாசாலனும், வாயிலே வர்த்திக்கிறவனும். வாய்க்கரைப்பற்று - அதரமும், கடிஸீமையும். அடுத்தூணாகவுடையவன் - இலக்கைக்குவிட்ட ஸீமையாக வுடையவனென்று சாடு. இலக்கை - மாஸசம்பளம். அதரத்தை ஆஸந்நஜீவநமாக வுடையவனென்று ஸ்வஹாவார்த்தம். முடுகினால் - ஸங்க்ருத்தராளுல். முழுக்காயாக-மெத்திட்ட காயாக. வாய்விடாச்சாதி-வார்த்தைசொல்லமாட்டாதவனென்றும், வாயைவிடாதவனென்றும். 'வரி' என்றத்தையும், 'பெருமுழக்கால்'என்றத்தையும் கடாக்ஷித்து-ஓசையு[illegible]ளியும் என்றது. வார்த்தை சொல்லவல்லவனென்றும் தேஜஸ்வியென்றும் கண்டுகொள்வது. இத்தால்-லோ[illegible]திலே ஒருவன் வார்த்தைசொல்ல வல்லவனானால் தேஜஸ்ஸின்றிக்கே யிருக்கும், தேஜஸ்[illegible]ண்டாய் வார்த்தைசொல்லக்கூடாதிருக்கும்; அப்படியன்றிக்கே, ஓசையையும் ஒளியையுமுடையவனா யென்றபடி. ஊதப்பறக்கும்படி- ஊதினால்பறந்துபோம்படி. அல்லாத ஆழ்வார்களைப்பற்ற இவனுக்குஆதிக்யமேது? என்ன, அல்லாத இத்யாதி. சூரியர்-ஸௌக்ஷ்மபுத்திகளும், தீக்ஷ்ணர்களும். தடியர் - கதையும், முஷ்கரரும். கழுந்தர்-வில்கழுந்தும், சாடுவுக்கு, சப்பரைகளும். ஸாக்ஷி யென்று - ஜ்ஞாநமும், தொளையும், லஜ்ஜையுமாம். ஊதிக்கொளுத்துகிறபோது மரத்திலேயாக வேண்டாவோ? என்ன, மரங்கள்போல் இத்யாதி. மரங்கள்போலக் கடினமான நெஞ்ச ரென்றபடி. திருமாலை - இருபத்தேழாம்பாட்டு; 'குரங்குகள்' இத்யாதி. க்ரமேண அந்வயः. (அ)*

ஒ.—ஒன்பதாம் பாட்டில், ஆஶ்ரிதவிரோதியான பாணனுடைய பாஹுவநத்தைக் கழித்துத் திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுமவன்போலே ஸகலஜந்துக்களும் உஜ்ஜீவிக்கும் ப்ரகாரத்தைத் திருவுள்ளத்தாலே ஆராயாநின்றுள்ள எம்பெருமான் விரும்பாத உடம்புகொண்டு கார்யமில்லை என்கிறாள்.

[மேகலையால் என்று தொடங்கி] - ம்ருதுஸ்வபாவையாய் மேகலாலங்க்ருதமாய் விஸ்த்ருதமான நிதம்பப்ரதேஶத்தையுடையளாய் போகயோக்யையான உஷையுடைய தமப்பனுமாய் ஶௌர்யவீர்யாதிப்ரதையையுடையனுமாய்ப் பெருமிடுக்கனான பாணனுடைய பாஹுவநத்தைக் கழித்து.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதவிரோதியான பாணனை விஹஸ்தனாக்கின க்ருஷ்ணன் விரும்பாத ஶரீரத்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? என்கிறாள்.

மேகலையால் - உடையழகால், குறைவுஇல்லா - குறை இன்றியிலே, மெலிவு உற்ற - (அநிருத்தஸம்ஶ்லேஷத்தால் வந்த) துவட்சியை உடைத்தாய், அகல் அல்குல் - விஸ்தீர்ணமான நிதம்பவைலக்ஷண்யத்தை யுடையளாய், போகம் மகள் - ஹோகாநுகூலமான ஸ்த்ரீத்வத்தை யுடையாளான உஷைக்கு, தந்தை - பிதாவென்கிற, புகழ் - ப்ரதையையுடையனாய், விறல் - ஶௌர்யவீர்யாதிகளால் குறைவற்ற, வாணன்-பாணனுடைய,புயம்-("ஸாஹஸ்ரபாஹுநா" என்று யுத்தகண்டூதியையுடைத்தாகச் சொல்லப்பட்ட) தோள்களை, துணித்து - (தின்றவிடம் சொறிந்தாற்போலே) துணித்து, (அவதார கார்யாநந்தரம்), நாகமிசை - பழையநாகபர்யங்கத்திலே சாய்ந்து, துயில்வான்போல் - உறங்குவான்போலே, உலகெல்லாம் - ஸர்வலோகமும், நன்கு ஒடுங்க - (ஸ்வப்ராப்தியாகிற) நன்மையிலே ஒதுங்கும்படி, யோகு அணைவான் - உபாயசிந்தையைப் பண்ணுமவன், கவராத - விரும்பாத, உடம்பினால் — உடம்பால், குறைவிலம் - என்ன ப்ரயோஜநமுண்டு? யோகு-உபாயம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், ஆஶ்ரிதவிரோதிகளை அழியச்செய்து ஸர்வரும் உஜ்ஜீவிக்கும் வழி யெண்ணுமவன் விரும்பாத உடம்புகொண்டு கார்யமென்? என்கிறாள்.

[மேகலையால் குறைவில்லா] - உடை அழகிதாயிருக்கை. [மெலிவுற்ற] - ம்ருதுஸ்வபாவை; பிரியத்தகாதவள். [அகல் அல்குல்] - அகன்ற நிதம்பப்ரதேஶத்தையுடையவள். [போக மகள்] — போகயோக்யையான பெண். ஒப்பனையாலும் ஆத்மகுணத்தாலும் ரூபகுணத்தாலும் பருவத்தாலும் குறைவற்றவள். [புகழ்த்தந்தை] - உஷையினுடை பிதாவென்னும் வார்த்தைப்பாட்டை யுடையவனென்னுதல்; ஶௌர்யவீர்யாதி குணப்ரதையையென்னுதல். [விறல் வாணன்] - மிடுக்கையுடைய வாணன். "ஸாஹஸ்ரபாஹுநா" என்று யுத்தகண்டூதியாலே மிடுக்குக்குப் போக்குவிடவேண்டும்படியானவன். ஒருதேவதாஸந்நிதியில் ஸத்த்வம் உத்ரிக்தமாகை ப்ராப்தமாயிருக்க, பர்ஹிம்ஸையையிறே வேண்டிக்கொண்டது. [புயம் துணித்து] - தலையறுக்கைக்குக் குற்றம் போந்திருக்க உஷை பித்ருஹீனையாகவொண்ணாதென்று தோள்களைத் துணித்துவிட்டான். [நாகமிசைத்துயில்வான்போல்] - பூபாரமான விரோதிகள் போனபின்பாயிற்று, படுக்கையில் பொருந்திற்று. [துயில்வான்போல்] - கண்வளர்கிறானென்று பேர்; சேதநருடைய ஹிதசிந்தையாயிற்றுப் பண்ணுகிறது. [உலகெல்லாம் இத்யாதி] - 'ஸகலசேதநரும் நம்மோடே சேர்ந்து தலைக்கட்டவற்றே' என்று யோகநித்ரை பண்ணுகிறவன். [கவராத] - இப்படி ஸர்வரையும் ஆதரிக்கிறவன் என்னை ஆதரியானாகில் என் உடம்பைக் கட்டிக்கொண்டு கிடக்கவோ? அவன் "ஸக்தாநாம்" என்று இருக்குமாபோலே இவளும் 'அவன்து' என்றிறே இருப்பது.

ஈடு.— ஒன்பதாம்பாட்டு. ஆஶ்ரிதவிரோதியான வாணனை அழியச்செய்து, ஸர்வரும் உஜ்ஜீவிக்கும்வழி யெண்ணுமவன் விரும்பாத உடம்புகொண்டு கார்யமென்? என்கிறாள்.

[மேகலையால் குறைவில்லா] - 'உஷைக்குக் கூறையுடை அழகியதாயிருக்கும்போலே காண்' என்னுமாம் வங்கிப்புரத்துநம்பி. [மெலிவுற்ற] - ம்ருதுஸ்வபாவையாயுள்ளாள். பிரிந்து தனியிருக்கப் பொறுதவள். [அகல்அல்குல்]—அகன்ற நிதம்ப ப்ரதேஶத்தை யுடையளாயிருக்கை. [போகமகள்] - போகயோக்யையான பெண்பிள்ளை. [புகழ்த்தந்தை] - உஷைக்குப் பிதாவான வார்த்தைப்பாட்டாலுள்ள புகழையுடையவ னென்னுதல், ஶௌர்யவீர்யாதிகளாலுள்ள ப்ரதை யையுடையவ னென்னுதல். [விறல்வாணன்] – மிடுக்கையுடைய வாணன். ஒருதேவதை ஸந்நிதியிலே யிருந்தால் ஸத்வம்உத்ரிக்தமாயிருக்கக்கடவதாயிருக்குமிறே எல்லார்க்கும்; அவ்வள விலும் யுத்தகண்டூதி வர்த்தித்து 'எனக்கு எதிரியா யிருப்பானொருவனைக் காட்டவேணும்' என்று வேண்டிக்கொள்ளும்படியான பெருமிடுக்கனானவன். [புயம் துணித்து] - 'இவன் அறக் கைவிஞ் சினான்' என்று கரத்தைக் கழித்துவிட்டான். தலையை யறுத்துவைக்கவேண்டுங் குறையுண்டா யிருக்கச்செய்தேயும், 'உஷை பித்ருஹீநையாகவொண்ணாது' என்று உயிரை நிறுத்திவைத்துக் கழித்தானாயிற்று. [நாகம் இத்யாதி] - பாணனுடைய புஜவநத்தைத் துணித்த பின்பாயிற்று, போகத்தில் பொருந்திற்று. 'துயில்வான்போல்' என்பானென்? அங்ஙனன்றோ வென்னில்,— [உலகெல்லாம் நன்கொடுங்க யோகணைவான்]-'இன்னமும் பாணன்போல்வார் எதிரிட்டா ருண் டாகில் அவர்களையும் நிரஸித்து, லௌகிகர் நம்மையே பற்றிக் கரைமரம்சேரும் விரகேதோ?' என்று இத்தையே சிந்தித்துக்கொண்டு யோகநித்ரை பண்ணாநிற்கும். [கவராத] - இப்படி எல் லார்பக்கலிலும் பண்ணும் பரிவை அவன் என்பக்கலிலே பண்ணாதேயிருக்க, நான் என்னுடம் பைக் கட்டிக்கொண்டு கிடக்கவோ? அவனுக்காகக் கண்ட உடம்பாயிற்று, இவளது.

---

*ஒன்பதாம்பாட்டு - மேகலையால் இத்யாதி. 'விறல்வாணன்புயந்துணித்து, யோகணைவான்கவராத' என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - ஆஶ்ரித இத்யாதி.*

*அல்லாதார் நக்நைகளோ? இவளை 'மேகலையால்குறைவில்லா' என்கிறதென்? என்ன, உஷைக்கு இத்யாதி. 'மெலிவுற்ற' என்றதுக்கு ஶப்தார்த்தம் - ம்ருதுஸ்வபாவையாய் இத்யாதி. தாத்பர்யார்த்தம்- பிரிந்து இத்யாதி. ஆக, பதத்ரயத்தாலும் - ஒப்பனையழகாலும், ஆத்மகுணத்தாலும், பருவத்தாலும் குறை வற்றவளென்கை, வார்த்தைப்பாட்டால் - லௌகிகருடைய வசநத்தால். மிடுக்கின் காஷ்டாபூமி - ஒரு தேவதை இத்யாதி. ரஸோக்தி - இவன் இத்யாதி. அற - அத்யந்தம். கைவிஞ்சுகை - கைகளை பஹுவாக வுடையனாகையும், உத்ததனாகையும். ஸம்ஹரியாமல் புயந்துணிப்பானென்? என்ன, தலையை இத்யாதி. 'புயந்துணித்து - நாகமிசை' என்ற பதச்சேர்த்திக்கு பாவம் - பாணனுடைய இத்யாதி. துணித்த - கண் டித்த. 'போகத்தில்' இத்யாதி வாக்யம்-சாடு. போகம்-ஸர்ப்பத்தினுடலும், போகமும். அங்ஙனன்றோ வேன் றது - நித்ரைபண்ண வில்லையோ! என்றபடி. நன்கொடுங்க - நன்றாக ஆஶ்ரயிக்கும்படி. கரைமரம்சேரும்- கரையிலேமரம்சேரும். மரம் - மரக்கலம்; ஓடமென்றபடி. இத்தால் - 'உஜ்ஜீவிக்கும்விரகேதோ' என்று கருத்து. 'யோகணைவான்' என்றத்தோடே 'கவராத வுடம்பினால்' என்றதுக்கு ஸங்கதி - இப்படி இத் யாதி. பரிவு - ஸ்நேஹம். கட்டிக்கொண்டு-பேணிக்கொண்டு. தன் உடம்பு தனக்குப் பேணவேண்டாவோ? என்ன, அவனுக்காக இத்யாதி. "விவிதாந்தேஹஸம்பத்தீ:" இத்யாதிப்படியே எல்லாருடைய உடம்பும் ததர்த்தமாக ஸ்ருஷ்டமாயிருக்கச்செய்தேயும், அவர்கள் தரித்திருந்தவோபாதி இவளுக்கும் தரித்திருக்க*

அவனுக்குஉடலாகவிறே இவள்தான் இத்தை விரும்புவது. அவன்தான் தன்னுடம்பு "ஶக்தா நாம்" (பக்தாநாம்) என்றிருக்குமாபோலே ஶேஷிக்காகக் கண்ட உடம்பாயிற்று, இது. (௯)



## பத்தாம் பாட்டு.

உடம்பினுற்குறைவில்லா உயிர்பிரிந்தமலைத்துண்டம்
கிடந்தனபோல்துணிபலவா அசுரர்குழாந்துணித்துகந்த
தடம்புனலசடைமுடியன் தனியொருகூறமர்ந்துறையும்
உடம்புடையான்கவராத உயிரினுற்குறைவிலமே.

ஆ.—(உடம்பினுல்.) ஸுதர்ஶநஶக்லீக்ருதகாலநேமிப்ரப்ருத்யஸுரநிகரனுய், ஆஶ்ரிதஹதமான உத்கர்ஷநிகர்ஷம்பாராதே எல்லாரோடுமொக்கஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனுயிருந்த எம்பெருமானுடைய ஸௌந்தர்யஸௌஶீல்யாதி குணங்களாலும், அதிதைவ அதிமாநுஷமான திவ்யசேஷ்டிதங்களாலும் என்னேடே கலந்த கலவியாலும் உபஸ்க்ருதமாகாத என்னுடைய ஆத்மாவும் வேண்டா, இது முடிந்துபோக அமையும் என்கிருள்.

ஒ.—பத்தாம்பாட்டில், ப்ரதிபக்ஷம் எத்தனையேனும் மிக்கதேயாகிலும் போக்கும் ஸ்வபாவனுய் அத்யந்தஶீலவானுயுள்ள எம்பெருமான் கவராத உயிரினுல் கார்யமுடையோமல்லோம் என்கிருள்.

[உடம்பினுல் என்று தொடங்கி] - ஸப்ராணனுய்க்கொண்டு ஸஞ்சரிக்கிற பெரியபர்வதங்கள் ப்ராணஹீநமாய் முறிந்து விழுந்துகிடந்தாற்போலே பலதுணியாம்படி பேருடம்பையுடையரான அஸுரஸமூஹங்களைச் சேதித்து ஆஶ்ரிதவிரோதிநீங்குகையாலே நிரவதிகப்ரீதியுக்தனுவதும் செய்து பெருவெள்ளமான கங்காஜலத்தை ஏகதேஶத்தே அடக்கவற்றுன ஜடையோடு கூடின முடியையுடையனுன ருத்ரன் தனக்கு அடைத்த தேஶத்திலேதானே நிரந்தரவாஸம் பண்ணும்படியான திருமேனியை யுடையான்.

ப.—அநந்தரம், அஶேஷவிரோதிநிவர்த்தகனுன ஸர்வேஶ்வரன் விரும்பாத ஆத்மாவால் என்ன ப்ரயோஜந முண்டு? என்கிருள்.

உடம்பினுல் குறைவில்லா – ஶரீரபோஷணத்தாலே மஹாகாயரான, அசுரர்குழாம் – அஸுரஸமூஹங்களை, உயிர் பிரிந்த - (இந்த்ரச்சிந்நமாய்) நிஷ்ப்ராணமான, மலைத்துண்டம் - பர்வதகண்டங்கள், கிடந்தனபோல் - கிடந்தாற்போலே, பல துணியா - நாநாகண்டமாம்படி, துணித்து உகந்த-துணித்து (அத்தாலே 'ஜகத்விரோதிகழிந்தது' என்று) உகக்குமவனுய், தடம் புனல-அதிவிஸ்தீர்ணஜலையான கங்கையைத் தரிக்கிற, சடைமுடியன்-ஜடாமகுடத்தையுடையவனுகையாலே அதிஶயிதஶக்திகனுக அபிமாநித்திருக்கிற ருத்ரன், தனி அமர்ந்து-தனக்கபாஶ்ரயமாகப் பற்றி, ஒருகூறு-ஒருபார்ஶ்வத்திலே, உறையும் - நித்யவாஸம்பண்ணும்படியான, உடம்பு

வொண்ணுதோ? என்ன, அவனுக்குஉடலாக இத்யாதி இவள்தான் என்றது - அல்லாதாரைப்போலே அறியாதிருக்கையன்றிக்கே. ததர்த்தமாக 'ஸ்ருஷ்டம்' என்று அறியும் இவள்தா னென்றபடி. அவனுக்குஉடலாக - ததர்த்ததயா, தச்சரீரதயா ச வென்றபடி. 'அவனுக்குஶரீரதயா ஶேஷம்' என்றறிகை ஸ்வபாவார்த்தம். தன் உடம்பை 'அவனது' என்றிருக்குமென்னுமத்தை த்ருஷ்டாந்தத்தாலே காட்டுகிறுர் - அவன்தான் இத்யாதி. க்ரமேண அந்வயः. (௯)

உடையான் - திருமேனியை உடையவன், கவராத - விரும்பாத, உயிரினல் - ஆத்மாவால், குறைவிலம் - ஒருப்ரயோஜநமுடையோமல்லோம். "நவாஞ்சாநு" என்கிற கணக்கிலே அவன் விரும்பாத ஆத்மீயங்களோபாதி ஆத்மாவையும் வேண்டேனென்றபடி.

இ.—பத்தாம்பாட்டில், முதற்பாட்டிற் சொன்ன ஶீலகுணத்தையும் விரோதிநிவ்ருத்தியையும் சொல்லி 'அவன்விரும்பாத ஸத்தையால் எனக்கு என்ன கார்யமுண்டு?' என்று உபக்ரமத்தோடே சேர உபஸம்ஹரிக்கிருள்.

[உடம்பினல் குறைவில்லா அசுரர்] - ஆத்மவஸ்து குறைய உடம்பைக் குறைவறப் பேணுமவர்கள். ஆத்மவஸ்துவில் பண்ணும் அஹம்புத்தியை உடம்பிலே பண்ணி அதுக்கே நன்மைபண்ணிப் போந்தவர்கள். [உயிர்பிரிந்த இத்யாதி] - ப்ராணன்களோடே ஸஞ்சரித்துத் திரிந்த பர்வதங்கள் இந்த்ரன்கையில் வஜ்ராயுதத்தாலே துணியுண்டு பலஶகலங்களாய்க் கிடந்தாற்போலே திரள்திரளாகவந்த அஸுரஸமூஹத்தைத் துணித்து. [உகந்த] - ஆஶ்ரிதவிரோதிகள் போகப்பெற்றோமென்று உகந்தான். ப்ராப்தி ஒத்திருக்க அழியச்செய்து அவர்கள்விநாஶம் ப்ரியமாம்படியிறே ஆஶ்ரிதபக்ஷபாதம். [தடம்புனல சடைமுடியன்] - 'பெருவெள்ளமான கங்காஜலத்தை ஜடையில் ஏகதேஶத்திலே தரியாநின்றேன்' என்னும் அபிமாநத்தையுடைய ருத்ரன். [தனி ஒருகூறு அமர்ந்து உறையும்] - தானே தனக்கு அடைத்த கூற்றிலே நிரந்தரவாஸம் பண்ணும். [உடம்புடையான்] - பிராட்டி திருமார்பை அபிமாநித்திருக்குமாபோலே அபிமாநிக்கும் அணையலாம்படி உடம்பு கொடுத்திருக்குமவன். இப்படி பொதுவான உடம்போடே என்னை அணைக்கைக்கு அவன் மேல்விழாதபின்பு என்னுல் எனக்கு என்ன கார்யமுண்டு? முன்பு ஆத்மீயங்களையிறே வேண்டா என்றது; அதுக்கெல்லாம் ஆஶ்ரயமான ஆத்மவஸ்துவும் வேண்டா என்கிருள்.

ஈடு.—பத்தாம்பாட்டு. முதற்பாட்டிற் சொன்ன ஶீலகுணத்தையும் விரோதிநிரஸநத்தையும் சொல்லி, அவன்விரும்பாத ஸத்தையால் என்ன கார்யமுண்டு? என்று உபக்ரமத்தோடே சேர உபஸம்ஹரிக்கிருள். 'உடம்பினுற்குறைவில்லா வுயிர்பிரிந்த மலைத்துண்டம் கிடந்தனபோல் துணிபலவாஅசுரர்குழாந் துணித்து' என்றத்தால் - "நீறுகும்படியாக நிருமித்துப்படைதொட்ட" என்றத்தைச் சொல்லுகிறது. 'தடம்புனலசடைமுடியன் தனியொருகூறமர்ந்துறையு முடம்புடையான்' என்றத்தால் - "கூறுளும் தனியுடம்பன்" என்றத்தைச் சொல்லுகிறது.

[உடம்பினுற்குறைவில்லா] - அசுரர்குழாமாயிற்று. உயிரிலேயாயிற்று, குறையுண்டாகில் உள்ளது; உயிரைத்தேய்த்து உடம்பைவளர்த்திருந்தவர்கள் நித்யஸம்ஸாரிகளாய்ப் போமித்தனையிறே. [உயிர்இத்யாதி] - ஸப்ராணனுய்க்கொண்டு ஸஞ்சரிக்கிற பர்வதங்கள் இந்த்ரன் கையில் வஜ்ராயுதத்தாலே பலகூறும்படி துணியுண்டு கிடந்தாற்போலே அஸுரவர்க்கத்தைப்

---

பத்தாம்பாட்டு - உடம்பினல் இத்யாதி. முதற்பாட்டிற்சொன்ன ஶீலத்தையும் விரோதிநிரஸநத்தையும் இங்கே வ்யுத்க்ரமமாகக் காட்டுகிருர் - உடம்பினல் இத்யாதி.

இவ்விஶேஷணம் எத்தோடே அந்வயிக்கிறது? என்ன, உடம்பினல் இத்யாதி; தேஹபோஷணத்திலே ஒருஸங்கோசமின்றிக்கே யிருக்கிற அஸுரஸமூஹமென்றபடி. 'உடம்பினுற்குறைவில்லா' என்றதுக்கு வ்யதிரேகத்திலேதாத்பர்யம் - உயிரிலே இத்யாதி. உபபாதநம் - உயிரை இத்யாதி. உயிரைத்தேய்த்து - "யோऽந்யதா ஸந்தம்", "க்ஷுத்ரோ பவஸஹவதி" இத்யாதிப்படியே அஸத்ப்ராயமாக்கி யென்றபடி. ஶப்தார்த்தம்-ஸப்ராணனுய் இத்யாதி. துணி - துண்டம். அர்த்தாநுகுணமாக அந்வயிக்கிருர் - உயிர் இத்

பல்கூறும்படி துணித்து உகந்தானுயிற்று. உயிர்பிரிந்த மலைத்துண்டம் கிடந்தனபோல் - உடம்பினுல்குறைவில்லா - அசுரர்குழாம் - துணிபலவா - துணித்துகந்த. "தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யம்" (தேவாநாம் தாநவாநாஞ்சஸாமாந்யம்) என்கிற ப்ராப்தி எல்லார்பக்கலிலு முண்டாயிருக்க, 'இவர்கள் ஆஶ்ரிதவிரோதிகள்' என்னும் ஆகாரத்தாலே இவர்களை நிரஸித்து, 'ஆஶ்ரிதவிரோதிகளை அறப்பெற்றோமிறே' என்றத்தாலே உகந்தானுயிற்று. [தடம்புனல இத்யாதி] - திருமேனியிலே இடங்கொடுக்கச்செய்தே, இதுதன்னைக் குணமாக உபபாதிக்கும்படியாயிற்று, அவர்களுடைய துர்மாநம். அபிமாநபங்கர் அணையக்கடவ உடம்பிலேயாயிற்று அபிமாநிகளுக்கும் இடங் கொடுக்கிறது. மிக்கநீர்வெள்ளத்தையுடைத்தான கங்கையைத் தன் ஜடையில் ஏகதேசத்திலே தரிக்கையால்வந்த அபிமாநத்தையுடைய ருத்ரனுனவன், பிராட்டி திருமார்வைப் பற்றி 'இவ்விடம் என் இருப்பிடம்' என்று அபிமாநித்திருக்குமாபோலே, ஒருபார்ஶ்வத்தைப் பற்றி 'இவ்விடம் என் இருப்பிடம்' என்று அபிமாநிக்கும்படி அவனுக்கு இடங் கொடுத்துக் கொண்டிருக்கிற திருமேனியையுடையவன். [கவராத இத்யாதி] – இப்படி பொதுவான உடம்பு படைத்தவன் ஆசைப்பட்ட எனக்கு உதவானுகில், இவ்வாத்மவஸ்துவைக்கொண்டு என்னகார்யமுண்டு? என்கிருள். இதுக்கு முன்பெல்லாம் - தேஹத்தையும் தேஹாநுபந்தி பதார்த்தங்களையுமிறே 'வேண்டா' என்றது; அவைதான் அநித்யமாயிருக்கையாலே தன்னடையே கழியுமத்தை 'வேண்டா' என்றதாயிருக்குமிறே; அதுக்காக நித்யமான ஆத்மவஸ்துவையும் 'வேண்டா' என்கிருள். இத்தை 'வேண்டா'என்கிறதுக்கு அடியென்? என்னில்;இது கிடக்குமாகில், இன்னமும் ஒரு ஜந்மமுண்டாய்ப் பழையவையுமெல்லாம் வந்துதோற்றி முலையெழுந்து நோவுபடுகைக்கு உடலாயிருக்குமிறே. இனித்தான் அவனுடைய நித்யேச்சையாலேயிறே இதினுடைய நித்யத்வமும்; அவனுக்கு இச்சையில்லாதபோது பின்னை இதுதான் கொண்டு கார்யமில்லையிறே. (க௦)



## பதிற்ராம்பாட்டு.

உயிரினற்குறைவில்லா உலகேழ்தன்னுள்ளொடுக்கித்
தயிர்வெண்ணெயுண்டானைத் தடங்குருகூர்ச்சடகோபன்
செயிரில்சொல்லிசைமாலை ஆயிரத்துளிப்பத்தால்
வயிரஞ்சேர்பிறப்பறுத்து வைகுந்தம்நண்ணுவரே.

**ஆ.**—(உயிரினல்.) தேவாதி ஸ்த்தாவராந்த ஸகலபூதஜாத பரிபூர்ணஸர்வலோக பாலகனுயிருந்துவைத்து மநுஷ்யாதி ரூபேண அவதீர்ணனுய்க்கொண்டு ஆஶ்ரிதஸுலபனு

யாதி. ஹிம்ஸித்துஉகக்கலாமோ?என்ன - தேவாநாம் இத்யாதி. ஸர்வாபாஶ்ரயமான திருமேனியிலே ருத்ரனுக்கு இடங்கொடுத்தால் இது சீலமாகவேணுமோ? என்ன, திருமேனியிலே இத்யாதி. 'இதுதன்னைக் குணமாக உபபாதிக்கும்படியாயிற்று அவர்கள் துர்மாநம்' என்கிறதின்உபபாதநம்-அபிமாநபங்கர்இத்யாதி ஶப்தார்த்தம் - மிக்க இத்யாதி. 'ஒருகூறு - தனி - அமர்ந்துறையு முடம்புடையான்' என்று அந்வயித்து இதுக்கு ஹாவம் - பிராட்டி இத்யாதி. கீழ்விட்டவற்றைப்பற்ற ஆத்மவஸ்துவுக்கு ஏற்றமேது? என்ன, இதுக்குமுன்பு இத்யாதி. ஆத்மவஸ்துவை 'வேண்டா' என்ருல், 'அவன் விரும்பாதது வேண்டாவென்கிற உறைப்புத் தோற்றும்' என்னுமளவேயல்ல; தனக்கு விரஹதாபம் வாராமைக்கு உறுப்பாயிருக்கும் என்னுமத்தை ஶங்காபரிஹாரமுகேந அருளிச்செய்கிருர். - இத்தைவேண்டா இத்யாதி. பழையவையும் - பகவத் ஸ்வரூப ரூபகுணாத்யநுபவங்கள். முலையெழுந்துஎன்றதுக்கு - பக்தியுண்டாயென்று ஸ்வாபதேசம். நித்யமான ஆத்மவஸ்து 'வேண்டா' என்ருல், போமோ? என்ன, இனித்தான்இத்யாதி. தான் 'இதுவேண்டேன்' என்னவே அவனும் அப்படியே ஸங்கல்பிக்குமென்று கருத்து. க்ரமேண அந்வயः. (க௦)

யிருந்த எம்பெருமானைச் சொன்ன நிரவத்யமான இத்திருவாய்மொழி வல்லார், நிரஸ்தஸமஸ்த-ப்ரதிபந்தகராய் வைகுந்தம்நண்ணுவர் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், ஸர்வேஶ்வரனாயிருந்துவைத்து ஆஶ்ரிதஸுலபனான எம்பெருமானைச் சொன்ன இத்திருவாய்மொழியை வல்லார் காழ்ப்பேறின ஸம்ஸாரதுரிதமற்றுத் திருநாட்டிலே புகுவர் என்கிறார்.

[உயிரினால் என்று தொடங்கி] - அஸங்க்யரான ஆத்மாக்களையுடைய ஸமஸ்தலோக நிர்வாஹத்தை யெல்லாம் தன்ஸங்கல்பத்தாலேபண்ணி ஆஶ்ரிதக்ருஹங்களிலே வந்து திருவவதாரம்பண்ணி அவர்களுடைய வஸ்துக்களே யாரகமான தன்மையையுடையவன். செயிர் - குற்றம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக, பகவச்சேஷத்வ பூர்வகமான பரமபதப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

உயிரினால் - ஆத்மாக்களால், குறைவில்லா - குறைவில்லாத, ஏழுலகு - ஸமஸ்த லோகங்களையும், தன்னுள் ஒடுக்கி - ஸங்கல்பாந்தர்ப்பூதமாம்படி ரக்ஷிக்கும்பரத்வத்தையுடையனாய், (ரக்ஷையைகதேசத்திலே அவதீர்ணனாய், ஆஶ்ரிதருகந்த), தயிர் - தயிரையும், வெண்ணெய்-வெண்ணெயையும், உண்டானை - அமுதுசெய்த ஸௌலப்யத்தையுடையவனைப்பற்ற, தடம் குருகூர் - மஹாவகாசமான திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடைய, செயிர் இல் - (சப்தார்த்தங்களில்) குற்றம் அற்ற, சொல்-சொல்லாயிருக்கிற, இசை-இசையோடுகூடின, மாலை - ஸந்தர்ப்பமாயிருக்கிற, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளும், இப்பத்தால் - இப்பத்தாலே, வயிரம்சேர் - காழ்ப்பேறும்படி அநாதிஸித்தமான, பிறப்பு - ஸம்ஸாரஸம்பந்தத்தை, அறுத்து-அறுத்து, வைகுந்தம்-பரமபதத்தை, நண்ணுவர்-கிட்டப்பெறுவர்கள். இது—கலிவிருத்தம்; நாலடித்தாழிசையுமாம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் காழ்ப்பேறின ஸம்ஸாரத்தை அறுத்துப் பரமபதத்திலே புகப்பெறுவர் என்கிறார்.

[உயிரினால் இத்யாதி] - அஸங்க்யாதரான ஆத்மாக்களால் பூர்ணமான ஸமஸ்தலோகங்களுடைய நிர்வாஹத்தையும் தன்ஸங்கல்பத்தாலே பண்ணி. [தயிர்வெண்ணெய் உண்டானை]-ஆஶ்ரிதர்உகந்த த்ரவ்யமே யாரகமாகவுடையவனை. இத்தால், ஸர்வேஶ்வரனாய்வைத்து ஆஶ்ரிதஸுலபனானவனை யென்கை. [தடங்குருகூர்ச் சடகோபன்] - பரப்பையுடைத்தான திருநகரி. ஈஶ்வரன் விரும்பாத ஆத்மாத்மீயங்கள் வேண்டா வென்கிற இவர்படி காணத்திரண்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் இடம்போந்திருக்கை. செயிர் - குற்றம். இல் - இல்லாமை; குற்றமற்ற இப்பத்து. ஈஶ்வரன் விரும்பாத ஆத்மாத்மீயங்கள் வேண்டா என்கிற இடம் அங்கவாயிலும் உண்டாம்படியாயிருக்கை. [வயிரம்சேர்பிறப்பறுத்து] - தனக்கு அநிஷ்டமானால் தன்னால் கழிக்கவொண்ணாதபடி காழ்ப்பேறின ஸம்ஸாரத்தை அறுத்து. [வைகுந்தம் நண்ணுவரே] - இங்கேயிருந்து அவன்விரும்பாதவை வேண்டாவென்று க்லேஶப்படாதே அநேகஶரீரபரிக்ரஹம்பண்ணி அநுபவிக்கலாந் தேஶத்தைப் பெறுவர்கள்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழியை அப்யஸித்தவர்கள், காழ்ப்பேறின ஸம்ஸார துரிதமற்றுப் பரமபதத்திலே புகப்பெறுவர்கள் என்கிறார்.

---

நிகமம் - உயிரினால் இத்யாதி. நாலாம்பாசுரத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை. காழ்ப்பு - வயிரம்.

[உயிரினுல் இத்யாதி] - அஸங்க்யேயரான ஆத்மாக்களால் பூர்ணமாயிருந்துள்ள ஏழுலகத்தையும். [தன்னுள் ஒடுக்கித் தயிர்வெண்ணெயுண்டானை] - தயிரும் வெண்ணெயும் களவு காணப் புகுகிறபோது, 'செருப்புவைத்துத் திருவடி தொழுவாரைப்போலே அந்யபரதைக்கு உடலாகவொண்ணுது' என்று, எல்லாலோகங்களுக்கும் வேண்டும் ஸம்விதாநம் தன்ஸங்கல்பத்தாலே செய்து, பின்னையாயிற்று வெண்ணெய் அமுதுசெய்தது. [உலகேழ் தன்னுள் ஒடுக்கித் தயிர்வெண்ணெயுண்டானை] - கர்ப்பிணிகள் வயிற்றில் பிள்ளைக்கீடாக போஜநாதிகள் பண்ணுமாபோலே, உள்விழுங்கின லோகங்களுக்கு ஜீவநமாகத் தயிர்வெண்ணெயுண்டான். ஸர்வேஶ்வரனுயிருந்து வைத்து, ஆஶ்ரிதஸ்பர்ஶமுள்ள த்ரவ்யத்தாலல்லது செல்லாதபடி யிருக்குமவனுயிற்று; "ஸர்வஸ்யஜகதஃபாலேள வத்ஸபாலேள பபூவதுஃ" (ஸர்வஸ்யஜகதஃபாலேள வ்த்ஸபாலேளபபூவதுஃ) என்னுமாபோலே. [தடங்குருகூர்ச்சடகோபன்] - "ப்ருந்தம்ப்ருந்தமயோத்யாயாம்" (ப்ருந்தம்ப்ருந்தமயோத்யாயாம்) என்கிறபடியே 'பெருமாளுடைய திருவபிஷேக மங்கள மஹோத்ஸவத்தைக் காணவேணும்' என்று நாடடையத் திரண்டு கிடந்தாற்போலே, இவர் 'ஆத்மாத்மீயங்கள் வேண்டா' என்று கழித்திருக்கிற இருப்பைக் காண்கைக்காகத் திரண்ட ஸ்ரீவைஷ்ணவ ஜநத்துக்குஅடைய இடம் போரும்படியான பரப்பையுடைத்தான திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார். [செயிரில்சொல்லிசைமாலை] - 'செயிர்' என்று குற்றம்; 'இல்' என்று இல்லாமை: குற்றமின்றிக்கேயிருக்கை. அதாவது – 'ஆத்மாத்மீயங்கள்-வேண்டா' என்ற வார்த்தையில் புரையற்றிருக்கை. [வயிரஞ்சேர்பிறப்பறுத்து]-இவர் 'வேண்டா' என்று கழித்தாலும் விடாதபடி காழ்ப்பேறிக்கிடக்கிற ஸம்ஸாரத்தைக் கழித்து. [வைகுந்தம் நண்ணுவரே] - ஒருடம்பாய், 'இதுதானும்வேண்டா' என்று கழிக்கும்படியான இவ்வுடம்பை விட்டு, "ஸஏகதா பவதி த்ரிதா பவதி" (ஸஏகதாவபதித்ரிதாபவதி) என்கிறபடியே, அவனுடைய ஸங்கல்பாதீநமாகவும் அதடியான தன்ஸங்கல்பாதீநமாகவும் அநேகஶரீரபரிக்ரஹம்பண்ணி அடிமைசெய்யலாம் தேசத்திலே போய்ப் புகப்பெறுவர். பலபடியாலும் அடிமைசெய்யப்பெறுவர். 'அவன் விரும்பினபடி இது என்று அறியாதேயிறே இவர்தாம் 'வேண்டா' என்கிறது. (கக)

---

'உயிர்' என்கிற ஏகவசநம் - ஜாத்யபிப்ராய மென்கிறூர் – அஸங்க்யேயரான இத்யாதி. தன்னுள்-தன்ஸங்கல்பத்திலே. பௌர்வாபர்யத்துக்குஹாவம் - தயிரும் இத்யாதி. 'தன்னுள்' என்றதுக்கு - தன்ஸங்கல்பத்தி லென்று அர்த்தமருளிச்செய்து, தன்திருவயிற்றிலே யென்று அர்த்தாந்தரம் - கர்ப்பிணிகள் இத்யாதி. த்ருதீய தாத்பர்யம் - ஸர்வேஶ்வரனுய் இத்யாதி; யத்வா, அர்த்தத்வய பலிதமாதல். இத்தால் - பரத்வஸௌலப்யங்களிரண்டும் சொல்லிற்று. பரனுய்வைத்து ஸுலபனைதுக்கு ப்ரமாணம் - ஸர்வஸ்ய இத்யாதி. "காமேந நந்தகோபஸ்ய ஸ்வத்வயாஷ்ஹோவ்ரஜே । ஸர்வஸ்யஜகதஃபாலேள வத்ஸபாலேளபபூவதுஃ" இதி பஞ்சமேம்ஶே. பத்துப்பாட்டர்த்தத்துக்கும் அநுகுணமாக 'தடம்' என்றதுக்கு ஹாவம் - ப்ருந்தம்ப்ருந்தம் இத்யாதி. "ப்ருந்தம்ப்ருந்தமயோத்யாயாம் ராஜஶ்ரேஷ்ஹுதஃ । பஹிரேவாகமிஷ்யாமஃ காலேஹாஜநோத்தாஃ" இத்யயோத்யாகாண்டே. குற்றம் ஏது? என்ன, அதாவது இத்யாதி. புரை - மித்யை. 'வயிரம்சேர்' என்றதுக்கு வாஸநை - இவர்வேண்டாவென்று இத்யாதி. 'பிறப்பு' என்றதுக்கு - ஸம்ஸாரமென்று கீழே அருளிச்செய்து, உடம்பைவிட்டு என்று அர்த்தாந்தரம். சாடு - பலபடியால் இத்யாதி. படி - சரீரமும், ப்ரகாரமும். இவர் திருமேனியை நித்யமுக்தர் திருமேனியைப்போலே அவன் விரும்பாநிற்க, இவர் 'வேண்டா' என்பானென்? என்ன, அவன்விரும்பினபடி இத்யாதி. க்ரமேண அந்வயஃ (கக)



**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.** — [illegible]

---

**த்ரவிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.** — [illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

ஏறுதிருவுடையவீசனுகப்புக்கு
வேறுபடிலென்னுடைமைமிக்கவுயிர் — தேறுங்கால்
என்தனக்கும்வேண்டாவெனுமாறன் தாளைநெஞ்சே !
நந்தமக்குப்பேறுகநண்ணு.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானுர் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## ஒன்பதாந் திருவாய்மொழி—நண்ணுதார்: ப்ரவேஶம்.

**ஆ.**—(நண்ணுதார்.) இப்படி பரமபுருஷவிஶ்லேஷ ஜநித ஶோகாக்நியாலே தஹ்யமாநராயிருக்கச்செய்தே, அதின்மேலே, பகவத்ஸம்ஶ்லேஷ விஶ்லேஷைக ஸுகதுஃகத்வரஹிதராய், சேதநாசேதநாத்மக ஸமஸ்தவஸ்துநேத்ரு பகவச்சேஷதைகரதித்வஜ்ஞாநரஹிதராய், பகவத்வ்யதிரிக்த ப்ராக்ருதவிஷயலாபாலாபைக ஸுகதுஃகராயிருந்த அவைஷ்ணவர்களோடு உள்ள ஸஹவாஸமாகிற மஹாக்நியாலே தஹ்யமாநரான ஆழ்வார், 'இந்த அவைஷ்ணவஸஹவாஸத்தைக்காட்டிலும் முடிகையே நன்று; ஆனபின்பு, அடியேனைமுடித்தருளவேணும்' என்று எம்பெருமானை அபேக்ஷிக்கிறார்.

ஒ.—ஒன்பதாந்திருவாய்மொழியில், 'எம்பெருமான் விரும்பாத ஆத்மாத்மீயங்களால் கொள்வதொரு கருமமில்லை; அவனுக்கு உபயோகப்படாதவை நசிக்க அமையும்' என்று மநோரதித்திருந்த இடத்திலும் அது தாம் நினைத்தபடியல்லாமையாலே விரஹவ்யஸநத்தாலே மிகவும் தஹ்யமாநராய் ஸமதுஃகிகளோடே கூட ப்ரலாபித்துத் தரிப்போமென்று லோகத்தை அந்வேஷித்த இடத்தில், தம்மைப்போலே தத்ஸம்ஶ்லேஷ விஶ்லேஷைக ஸுகதுஃகரன்றிக்கே அந்யபரராய் ஶப்தாதிவிஷயங்களுடைய லாபாலாபங்களே ஸுகதுஃகங்களாகக் கொண்டிருக்கிற ஜந்துக்கள் படுகிற துஃகத்தை அநுஸந்தித்து மிகவும் நோவுபட்டு, தமக்கு எம்பெருமானோடு உள்ள விஶ்லேஷவ்யஸநத்தை மறந்து 'இஜ் ஜந்துக்களுடைய துஃகத்தைப் போக்கும் விரகு ஏது?' என்று அதிலே தத்பரராய், 'ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாய்ப் பரமோதாரனாய் என்றும் எல்லாருடைய ரக்ஷணத்திலே தீக்ஷிதனாய் ஸர்வாபராதஸஹனாய் நினைத்தது முடிக்கைக்கு ஈடான ஸாமர்த்யத்தை யுடைய ஸர்வேஶ்வரனை நீ உளனாயிருக்க, ஸமஸ்த ஜந்துக்களும் எண்ணிறந்த துஃகங்களாலே மிகவும் நலிவு படும்படியாக 'இது ஒரு லோகஸ்வபாவத்

நப் பண்ணும்படியே ! 'இவற்றை இங்ஙனே படுத்தியருளவொண்ணாது; இவர்களை நிர்த்துꣳகராம்படி பண்ணியருளுதல், இது கண்டு பொறுக்க மாட்டாதே யிருக்கிற என்னை முடித்தல் செய்தருள வேணும்' என்று ஆழ்வார் ஆந்ருஶம்ஸ்யத்தாலே நோவுபட்டு அர்த்திக்க, 'அவர்களுக்கு இச்சையின்றிக்கே ஒழிந்த பின்பு என்னால் செய்யலாவது உண்டோ?' என்று எம்பெருமான் அருளிச்செய்ய, 'அங்ஙனேயாகில், என்னை ஈண்டென விஷயீகரித்தருளவேணும்' என்ன, இவருக்கு ஸம்ஸாராநுஸந்தாநத்தால் வந்த க்லேஶமெல்லாம் நிவ்ருத்தமாம்படி பரமபதத்திலே அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான அயர்வறுமமரர்கள் அடிமை செய்யப் பெரிய பிராட்டியாரும் தானும் வ்யாவ்ருத்தனாக இருந்தருளினபடியைக் காட்டியருள, கண்டு அநுபவித்து க்ருதார்த்தராகிறார். 'உன்னையொழிய அந்யபரமான ஜகத்திலே இருக்கிற இருப்பு உன்னை விஶ்லேஷித்த வ்யஸநத்திற்காட்டிலும் மிகவும் துஸ்ஸஹமாயிராநின்றது; ஆன பின்பு, அவர்கள் நடு இராமே என்னை முடிக்கவேணும்' என்று எம்பெருமானைக் குறித்து விண்ணப்பஞ் செய்கிறார் என்றுமாம்.

ப.—ஒன்பதாந்திருவாய்மொழியில், இப்படி அவன்விரும்பாத ஆத்மாத்மீயங்களிலும் அநாதரம்பிறந்தவளவிலும் அநுபவம் ஸித்தியாமையாலே அத்யந்தம் ஆர்த்தரான தமக்கு உசாத்துணையாகைக்கு யோக்யரல்லாதபடி ஸம்ஸாரத்திலுள்ளாரும் அதிஶயிததுꣳகமக்நராய்க் கொண்டு க்லேஶிக்கிறபடியைக் கண்டு, ஸகலக்லேசநிவர்த்தகனாய் நிரதிஶயபோக்யனான ஸர்வேஶ்வரனுடைய அர்த்திதார்த்தகரணத்தையும், ஸாதாரணபந்தத்தையும், அபரிச்சிந்நஸௌந்தர்யத்தையும், அவ்வழகை அநுபவிப்பிக்கும் ஔதார்யத்தையும், அநுபவிப்பார்க்குக் கைக்கடங்கும்படியான ஸௌலப்யத்தையும், போக்யதாதிஶயத்தையும், ஸர்வாத்மஹாவத்தையும், ஸகலஜகத்காரணத்வத்தையும், ஆஶ்ரிதஸம்ஶ்லேஷஸ்வஹாவத்தையும், லக்ஷ்மீஸகத்வத்தால் வந்த பரமப்ராப்யத்வத்தையும் அநுஸந்தித்து 'ஏவம்விஶிஷ்டனான நீ அத்யந்தாஸஹ்யமாம்படி க்லேஶோத்தரமான ஸம்ஸாரத்திலே யிருத்தி என்னை க்லேஶிப்பியாதே, உன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளவேணும்' என்றுகூப்பிட்டு,இவர்அபேக்ஷாநுரூபமாக அவனும் பரமபதத்திலே "ஶ்ரியா ஸார்த்தம்ஜகத்பதிꣳ" என்றிருக்கிற இருப்பைக் காட்ட, மாநஸஜ்ஞாநத்தாலே கண்டு, ஐஶ்வர்யகைவல்யங்களினுடைய ஹேயதாப்ரதிபத்திபூர்வகமாக அவன்திருவடிகளையே பரமப்ராப்யமாகப்பற்றின படியை அருளிச்செய்கிறார்.

இ.—ஒன்பதாந் திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியிலே 'அவன் விரும்பாத ஆத்மாத்மீயங்களால் ஒருகார்யமில்லை; இவை நசிக்க அமையும்' என்று மநோரதித்த இடத்திலும் அது தாம் நினைத்தபடி முடிந்ததில்லை. பேற்றுக்கு அவன் வேண்டினவோபாதி முடிகைக்கும் அவன் கை பார்த்திருக்கவேண்டுகையாலே விரஹவ்யஸநம் மிக்கு ஸமதுꣳகிகளோடே கூடக் கூப்பிட்டு தரிக்கைக்காக ஸம்ஸாரிகளை அந்வேஷித்த இடத்தில், தாம் பகவத்விஷயத்திலிருக்கிறப்போலே ஶப்தாதிவிஷயங்களினுடைய லாபாலாபங்களை ஸுகதுꣳகங்களாய் அவர்கள் படுகிற துꣳகத்தைக் கண்டவாறே தம்முடைய இழவை மறந்து இவர்கள் துꣳகநிவ்ருத்தியிலே தத்பரராய், 'ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாய்ப் பரமோதாரனாய் ஸர்வருடையவும் ரக்ஷணத்திலே தீக்ஷிதனாய் ப்ராப்தனான நீ உண்டாயிருக்க, இவை எண்ணிறந்த துꣳகங்களாலே நோவுபடும்படியாக இது ஒரு லோகஸ்வஹாவம் இருந்தபடி என்!' என்று விஷண்ணராய், 'இவர்களை நிர்த்துꣳகராம்படி பண்ணுதல், இது கண்டு பொறுக்கமாட்டாத என்னை முடித்தல் செய்தருளவேணும்' என்ன, 'அவர்களுக்கு இச்சை யில்லாமையாலே நாமும் உம்மோபாதி நொந்து காணும் இருக்கிறது' என்ன, 'ஆகில், இவர்கள் நடுவில் நின்றும் என்னை உன் திருவடிகளிலே வாங்கியருளவேணும்' என்ன, இவர்க்கு ஸம்ஸாராநுஸந்தாநத்தால் வந்த க்லேஶமெல்லாம்

ஷாறும்படி 'உம்முடைய இருப்பு இது காணும்' என்று பரமபதத்திலே அயர் வறும் அமரர்கள் அடிமை செய்யப் பிராட்டியும் தானும் வ்யாவ்ருத்தனுயிருக்கிற இருப்பைக் காட்டிக் கொடுக்கக் கண்டு அநுபவித்து க்ருதார்த்தராகிறுர். "ப்ரியம் ஜநவஸ்யஸீம் வஸ்யஸீம் ராக்ஷஸீ மண்டீ। ஸமணைநஜ்ரமீம் ஸீ நாம் ஸமணொணாவஜ தாவிவ" என்கிறபடியே உன்னையொழிய அந்யபரமான ஜகத்திலே இருக்கிற இருப்பு உன்னை விஶ்லேஷித்த வ்யஸநத்திற் காட்டிலும் அஸஹ்யமா யிராநின்றது. இவர்கள் நடுவே இராமே என்னை முடிக்கவேணும் என்கிறுர் என்னவுமாம்.

ஈடு.— 'உடம்பு வேண்டா, உயிர் வேண்டா' என்று இவற்றை உபேக்ஷித்துப்பார்த்தார்; தாம் 'வேண்டா' என்றவாறே தவிருமாகக்கொண்டு; அவை தவிர்ந்தனவில்லை; ஒன்றைப் பெறுகைக்கேயன்றிக்கே முடிகைக்கும் உன் தரவு வேணுமாகில் அத்தைத்தந்தருளவேணு மென்கிறுர். இவ்வமங்கள ஶப்தத்தைத் திருமுன்பே விண்ணப்பஞ்செய்யவேண்டும்படியாகக் காணும் இவர் ஸம்ஸாரத்தை வெறுத்தபடி. எம்பார், 'உன்னைப்பிரிந்திருந்து படுகிற க்லேஶத்தினளவல்ல உன்னையொழியப் புறம்பே பேறும்இழவுமாயிருக்கிற ஸம்ஸாரிகள்நடுவேயிருக்கிற இருப்பால் படுகிற் க்லேஶம்; இத்தைத் தவிர்த்தருள வேணு மென்கிறுர்' என்று அருளிச்செய்வர். "உத்பாதகதாபாணி:" (உத்ப்பாதகதாபாணி:) - ராவணனேடு பொருந்தாமை பிறந்தபின்பு, நெருப்புப் பட்ட தரையில் கால்பாவாதாப்போலே அவ்விடம் அடிகோதித்துப் போந்தானுயிற்று; "கதா" (கதா) - அங்குள்ளாரில் "நநமேயம்" (நநமேயம்) என்னுததது தடியொன்றுமேயாயிற்று.

---

நண்ணுதார் ப்ரவேஶ - இத்திருவாய்மொழிக்கு மூன்றுவிதமாக ஸங்கதி: அதில்முந்தினது - உடம்புவேண்டா இத்யாதி. இதுக்கு - 'சாமாறே - பணிகண்டாய்' என்றதிலே நோக்கு. மங்களாஶாஸநபரரான இவர் "நாஶ்ரீமங்கீதம்யேக" என்றிருக்க, திருமுன்பே 'சாமாறே - பணிகண்டாய்' என்னலாமோ? என்ன, இவ்வமங்கள இத்யாதி. தவிருமாகக்கோண்டு - நிவர்த்திக்குமென்று அநுஸந்தித்துக் கொண்டு. ஒன்றைப்பெறுகைக்கேயன்றிக்கே-ஒருபுருஷார்த்தத்தைப் பெறுகைக்கு உன்னுடைய ஸங்கல்பம் வேண்டினவளவேயன்றிக்கே. தரவு - சீட்டு. லோகயாத்ரையை அநுஸந்தித்து 'இவை கண்டிராதபடி என்னை அங்கீகரிக்கவேணும்' என்கிற இது பகவத்விஶ்லேஷத்தாலே நோவுபடுகிற ப்ரகரணத்தோடு பொருந்ாதீ! என்கிற ஶங்கையிலே, இதுக்கு இரண்டுபடியாக ஆசார்யர்கள் நிர்வஹிப்பரென்கிறுர் - எம்பார் இத்யாதி வாக்யத்தாலும், ஆழ்வான் இத்யாதி வாக்யத்தாலும். ஆக, மூன்றுவிதமாக ஸங்கதி. எம்பார் நிர்வாஹமாவது - 'நண்ணுதார்முறுவலிப்ப' என்று தொடங்கி 'இவையென்ன வுலகியற்கை' என்று இவர்களோட்டை ஸஹவாஸம் துஸ்ஸஹமென்கிறத்தை அநுஸந்தித்து, 'கண்ணுளாகடல்கடைந்தாய்! இனி இவர்கள் நடுவி லிருக்கக் கூடாதாகையாலே, உனகழற்கே வரும்பரிசு தண்ணுவாதடியேனே - சாமாறு - பணிகண்டாய்' என்று யதாஸ்திதம். இவர்நிர்வாஹத்துக்கு ஸ்வரக்ஷணத்துக்கு உடலாக, குணநுஸந்தாநம். ஆழ்வான்நிர்வாஹமாவது - 'கண்ணுளா கடல்கடைந்தாய்! நண்ணுதார் முறுவலிப்ப' என்றுதொடங்கி 'இவையென்னவுலகியற்கை' என்று அவன் குணங்களையும் சொல்லி ஸம்ஸாரிகளுடைய இழவையும் அநுஸந்தித்து, 'நீ இப்படி குணுதிகனுயிருக்க இவர்கள் யாத்ரை இருந்தபடியென்?' என்று விண்ணப்பஞ்செய்ய, அவனும் 'இத்தைவிட்டு உம்முடைய பலத்தை நீர் கண்டுகொள்ளும்' என்று அருளிச்செய்ய, 'ஆனுல் இவர்களோட்டை ஸஹவாஸம் துஸ்ஸஹம்; இவர்கள்நடுவி விராதபடி திருவடிகளிலே சேர்த்துக் கொண்டருளவேணும்' என்று ப்ரார்த்திக்கிருரென்று. இவர் நிர்வாஹத்துக்கு - பரரக்ஷணர்த்தமாக குணநுஸந்தாநம். ஆழ்வான் நிர்வாஹத்துக்குப் பாட்டுக்கள்தோறும் - குணவாசகசப்தங்கள் முன்னே வைத்து நிர்வஹிப்பது; எம்பார்நிர்வாஹத்துக்கு, அடைவே யோஜனை. க்லேசத்தினளவல்ல என்றவிடத்திலே - பிராட்டிக்கு இரண்டிடத்திலேயும் பிரிவு ஒத்திருக்க, லங்கையில் பிரிவு ராக்ஷஸிகள் ஸ்ஹவாஸத்தாலே துஸ்ஸஹமாயிருந்ததிறே என்று அருளிச்செய்வர். பகவத்விமுகரோட்டை ஸஹவாஸம் துஸ்ஸஹமென்னுமதுக்கு உதாஹரணம் - உத்பபாத இத்யாதி. "ஐத்துக்த்வாஸ-ஷம் வாக்யம் ஜ்யவாதீவிஷீஷண: । உத்பபாத கதாபாணிர்சதுர்பி: ஸஹ ராக்ஷஸை:" இதி யுத்த காண்டே ஶ்லோக. 'உத்' என்கிற உபஸர்க்கார்த்தம் - ராவணனேடு இத்யாதி. அங்குள்ளாரில் - லங்கையிலுள்ளாரில். "நநமேயம்" என்னுமை-அசேதநமாகையாலே. ராவணனை ஆர்த்தனையும் ஹிதம்சொல்லி

“வதாஹிம்ஸ,” (சதுர்ப்பிஸ) - அதுவும் எடுத்துத் தோளிலே வைக்கவேணுமே, அதுவும் வேண்டாதார் நால்வருமேயாயிற்று. இத்தால் ஒருவன் ‘பகவத்விரோதத்திலே நிலைநின்றான்’ என்று அறிந்தால் தன்னைக்கொண்டு அகலவிறே அடுப்பது. ஆழ்வான் அங்ஙனன்றிக்கே, “எருளுமிறை யோ” னில் தம்முடைய ஆற்றாமைக்குக் கூட்டாவார் உண்டோ? என்று லோகவ்ருத்தாந்தத்தை அந்வேஷித்து ஸம்ஸாரிகளைப் பார்த்தார்; அவர்கள், தாம் இவ்விஷயத்தில் ப்ரவணராயிருக்கிறாப் போலே ஶப்தாதிவிஷயங்களிலே ப்ரவணராய், அவற்றினுடைய பேறிழவுகளே லாபாலாபமாம்படி யிருந்தார்கள்; வாளேறுகாணத் தேளேறுமாய்ந்து, அத்தைகண்டவாறே தம்இழவை மறந்தார்; இவர்களுடைய இழவே நெஞ்சிலே பட்டது; ஸர்வேஶ்வரனைப் பார்த்தார்: அவன் ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாய்ப் பரமோதாரனாய் எல்லாருடையரக்ஷணத்திலேதீக்ஷித்திருக்குமவனாய் ஸர்வாபராதஸஹனாய் ஸர்வநியந்தாவா யிருந்தான்; அவன்படி இதுவாயிருக்க, இவை இப்படி நோவுபடுகைக்கு இவ்விடம் தன்னரசுநாடோ? என்று பார்த்து, ‘நீ ஸர்வேஶ்வரனாய் பரமக்ருபாவானாய் ப்ராப்தனுமாய் இவற்றின்க்லேஶம் அறிந்து பரிஹரிக்கைக்கு ஈடான ஜ்ஞாநஶக்தியையுடையையுமா யிருக்க, இவை இங்ஙனே கிடந்து நோவுபடுகை போருமோ? இவற்றைக் கரைமரஞ்சேர்க்க வேணும்’ என்று அவன் திருவடிகளைப் பிடிக்க, ‘நம்மால் செய்யலாவதுண்டோ ? இவை சேதநரானபின்பு இவைதனக்கே ருசியுண்டாகவேணுமே; நாம் கொடுக்கிற இது புருஷார்த்தமாகவேணுமே; புருஷன் அர்த்திக்கக் கொடுக்குமதிறே புருஷார்த்தமாவது; அசித்தாய் நாம் நினைத்தபடி கார்யங்கொள்ளுகிறோமல்லோமே; இவற்றுக்கு நம்பக்கலிலே ருசி பிறக்கைக்கு நாம் பார்த்து வைத்த வழிகளையடையத் தப்பினபின்பு நம்மாற் செய்யலாவதில்லைகாணும்; நீர் இத்தை விடும்’ என்று ஸமாதாநம்பண்ண, ‘நீ பண்ணின இது பரிஹாரமாய் நான் ஸமாஹிதனாவது ‘இவை தங் கார்யத்துக்குத் தாம்கடவவாய் நோவுபடுகிறன’ என்று உன்னால் சொல்லலாமன்றன்றோ’?என்ன, ‘இவை சேதநராகையாலே இவற்றின் வாசியறியவேணுமென்று நம்மை ஒருதட்டும் ஶப்தாதிகளை ஒருதட்டோமாகவைத்து உங்களுக்கு வேண்டிற்றொன்றைக் கொள்ளுங்கோள் என்ன, ஶப்தாதிகள் இருந்த தட்டு தாழ்ந்திருக்கையாலே அத்தட்டை ‘அமையும்’ என்று பற்றிற்றின; நாமும்

“க்ஷாமதாமி” என்றபின்பு விட்டுப்போருகையாலே பலிதமான தோர் அர்த்தவிஶேஷத்தை அருளிச் செய்கிறார் - இத்தால் இத்யாதி. இங்கே - “வஶம்ஹஸதவஹஜானா”, “விஷயஜநவேஶ்யநீம” இத்யாத்யநுஸந்தேயம். ஆழ்வான் என்றதுக்கு - மேலே பணிக்கும் என்றத்தோடே அந்வயம். ஆழ்வான் நிர்வாஹத்துக்கு மூன்றும்பாட்டு பேரச் சேர்ந்திருக்கும். வாளேறு - கட்கப்ரஹாரம். தேளேறு - தேள் விஷமேறுகை. மாய்ந்து - நசித்து. அவர்களுக்கு ஹிதம் அருளிச்செய்ய வொண்ணாதோ? என்ன, ஸர்வேஶ்வரனை இத்யாதி. அவன் ஸர்வஜ்ஞனா யென்றது - ‘ஆமாறொன்றறியேன்’ என்றதுக்கு ப்ரதிகோடித்வேந விவக்ஷித்து.ஸர்வஶக்தியாயென்றது - ‘கடல்கடைந்தாய்’ என்றத்தைப்பற்ற. பரமோதாரனாயென்றது - ‘வள்ளலே’ என்றத்தைப்பற்ற. எல்லாருடைய ரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்குமவ னென்றது-‘அரவணையாய்’ என்றத்தைப்பற்ற. ‘ஸர்வாபராதஸஹனாயென்றது - ‘வினையேனை உனக்கடிமை அறக்கொண்டாய்’ என்றத்தைப்பற்ற. ஸர்வநியந்தாவா யென்றது - ‘கண்ணாளா’ என்றத்தைப்பற்ற. தன்னரசுநாடு - அராஜகமாய் ஸ்வதந்த்ரமாயிருக்கிற தேஶம். ‘அம்மானே’ என்றத்தைப்பற்ற நீ ஸர்வேஶ்வரனாய் என்றது. ‘கண்ணாளா’ என்றத்தைப்பற்ற, பரமக்ருபாவானாய் என்றது. இதுக்கு-க்ருபாவானென்றும் ஒருயோஜனை யுண்டிறே. ப்ராப்தனுமா யென்றதும் ‘அம்மானே’ என்றத்தைப்பற்ற. போருமோ - கூடுமோ. வழிகளையடையத்தப்பின வென்றது - ஸ்ருஷ்டியும், அவதாரமும் சொல்லுகையாலே. ‘ஆயே இவ்வுலகத்து’ இத்யாதியைப்பற்ற-இவை தங்கார்யத்துக்க இத்யாதி. விபவார்ச்சாதிகளில் தான் ஸௌந்தர்யாதி விஶிஷ்டனாய் இவற்றின்கண்முன்னேநிற்குமத்தை நினைத்து, நம்மைஒருதட்டும் என்கிறார். ‘நம்மை ஒருதட்டும் சப்தாதிகளை ஒருதட்டும்’ என்றதுக்கு ஸூசகம் - ‘அறப்பொருளையறிந்தோரார்? என்றது. ‘சப்தாதிகளிருந்த தட்டுத் தாழ்ந்திருக்கையாலே’ என்றதில் தாழ்ந்திருக்கையென்றதுக்கு த்வர்யர்த்தம் - கப்பரையான

ஆந்தனையும்பார்த்து முடியாமைகாணும் கைவாங்கிற்று; இனி நம்மாற் செய்யலாவதில்லை; இனி நீரும் இத்தைவிடும்" என்ன, 'ஆகில், உன்னையொழியப் புறம்பே பேறும்இழவுமாயிருக்கிற இவர்கள் நடுவில் நின்றும் என்னை முன்னம் வாங்கவேணும்' என்ன, 'முன்பே உம்மை வாங்கினோமே; ஸம்ஸாரிகளோடு பொருந்தாதபடி பண்ணினோமாகில், ஸம்ஸாராநுஸந்தாநத்தாலே வந்த க்லேசமெல்லாம் போம்படி உம்முடைய இருப்பு இதுகாணும்' என்று பரமபதத்தில் அயர்வறும்மரர்கள் அடிமைசெய்யப் பெரியபிராட்டியாரும் நாமுமாக வ்யாவ்ருத்தமாக இருக்கிற இருப்பைக் காட்டித்தந்து 'அங்கே உம்முடைய நெஞ்சு ப்ரவணமாம்படி பண்ணினோமாகில், இனி உமக்குப் பேற்றுக்குக் குவாலுண்டோ? நாம் செய்யவேண்டுவதேன்?' என்ன, இவையிரண்டையும் அநுஸந்தித்து தரித்து க்ருதார்த்தராய்த் தலைக்கட்டுகிறார்" என்று பணிக்கும். *("மையகண்ணாள் மலர்மேலுறைவாளுறைமார்பினன்செய்யகோலத்தடங்கண்ணன்விண்ணோர் பெருமான் தன்னை" என்றுகண்டு அநுபவித்தாரிறே.) ஆழ்வான் தான் ஓரிடத்தே வழிபோகாநிற்க, ஒருஸர்ப்பம் தவளையைப் பிடித்துக் கூப்பிடாநிற்க, 'இது ஆர் அறியக் கூப்பிடுகிறது?' என்று மோஹித்தானும்; இவ் வாழ்வான் ப்ரக்ருதிக்குச் சேருமே இவர் நிர்வாஹமும்.



## முதற்பாட்டு.

நண்ணுதார்முறுவலிப்ப நல்லுற்றார்கரைந்தேங்க
எண்ணாரத்துயர்விளைக்கும் இவையென்னவுலகியற்கை?
கண்ணாளா! கடல்கடைந்தாய்! உனகழற்கேவரும்பரிசு?
தண்ணவாதடியேனைப் பணிகண்டாய்சாமாறே.

விட்டமென்று. ஸ்வஹாவார்த்தம்-தராசிலே இரண்டுதட்டிலும் படிக்கல்லைவைத்தால் தாழ்ந்த இடம் ஸ்லாக்யமென்று. ஆனாலும் விஷயங்களை ஸ்லாக்ய மென்கிறது-ஸம்ஸாரிகள்நினைவாலே; ரத்நத்தோடே பெரியகல்லை நிறுத்தால் தாழ்ந்திருந்தாலும் ஹேயமாமாபோலே ஸப்தாதிவிஷயங்களும் ஹேயமென்று கருத்து. ஆந்தனையும் - ஸக்யமானவளவும். என்னை முன்னம் வாங்கவேணு மென்றது - 'அங்கு - வாங்கு' என்றத்தைப் பற்ற. இதுக்குக் கருத்து - இவர்களநர்த்தம் நான்காணமாட்டேனென்று. 'வேட்கையெல்லாம்விடுத்து' என்றத்தைப் பற்ற, ஸம்ஸாரிகளோடு பொருந்தாதபடி இத்யாதி. இருப்புஇதுகாணு மென்றது - 'ஒண்டொடியாள்திருமகளும்' இத்யாதியைப்பற்ற. குவால் - அதிகம். இவையிரண்டையுமென்றது-ஸம்ஸாரிகளோடு பொருந்தாமையையும், பிராட்டியும் தானுமான இருப்பைக் காட்டித் தந்தத்தையும். 'இனியென்னாரமுதே' என்றிருக்கையாலே - அவன் ப்ரத்யுத்தரம்சொல்ல, தம்மை யழைத்துக் கொள்ள வேணுமென்றது ஸ்பஷ்டம். இவற்றைக் கரைமரம்சேர்க்கவேணுமென்று இத்யாதியாலே-த்விவாரம் உக்தி ப்ரத்யுக்தியாக அருளிச்செய்த இதுக்கு ஸப்தமேது? என்னில்; பலபாட்டுக்களிலும் 'இவையென்னவுலகியற்கை' என்று சொல்லுகையாலே. ஆழ்வான்நிர்வாஹத்துக்கு - இவற்றையும்திருத்தி நல்வழிபோக்காயென்று கருத்து. எம்பார்நிர்வாஹத்துக்கு - 'கொடுவுலகம்காட்டேல்' என்றதிலே நோக்கு. ஆழ்வான்நிர்வாஹத்துக்கு - 'இனி' என்றதிலே நோக்கு. ஆழ்வாருடைய தயாளுதாப்ரதிபாதகமான இந்நிர்வாஹம் பரம தயாளுவான ஆழ்வான் ப்ரக்ருதிக்குச் சேரு மென்கைக்காக ஐதிஹ்யம் - ஆழ்வான்தான் இத்யாதி. ஆழ்வான், திருக்காவேரியிலே குடமெடுத்து விடுவாரின்றியிலே க்லேசிக்கிற ஒரு ஸ்த்ரீக்குத் தண்ணீர்க்குடமெடுத்து விட்ட கதையையும் அருளிச்செய்வர். இவ்விடத்திலே - 'ஆழ்வாருக்கு மூன்றுவிதமாக ஆர்த்தியுண்டு' என்று அருளிச்செய்வர். அதாவது - ப்ரக்ருதிஸம்பந்த நிபந்தநமான ஆர்த்தி - முந்நீர்ஞாலத்திலே, பகவத்விஸ்லேஷ ப்ரயுக்தமான ஆர்த்தி - சீலமில்லாச்சிறியனிலே. ஸம்ஸாரிகளிழவைக் கண்டு வரும் ஆர்த்தி - இத்திருவாய்மொழியிலே.

* குண்டலிதக்ரந்தம் க்வாசித்க மென்பர்.

ஆ—'க்ருஹ க்ஷேத்ர தநாதி விஷய ஸ்ப்ருஹையாலே தநபஹரணாத்யநிஷ்டங்களைப் பண்ண ப்ரதிகூலர் உகக்கவும், அநுகூலர் இன்னாதாகவும், பிறர்க்கு துக்கங்களையே விளைத்து அந்யபரமாய், எம்பெருமான்திறத்துப் படக்கடவதன்றியே யிருந்த இந்த லோகப்ரஸ்தாரம் இருந்தபடி யென்! இந்தலோகத்தோடு எனக்கு இருப்பு அரிது; ஆனபின்பு, ஆஶ்ரிதஸமீஹித நிர்வர்த்தநைக ஸ்வபாவமாய் அபரிமிதகாருண்ய பரிபூர்ணமாய் அதிசீதளமான உன்னுடைய திருக்கண்களாலே என்னைக் குளிரப்பார்த்தருளி, இவர்கள் நடுவில்நின்றும் உன் திருவடிகளிலே என்னை வாங்கியருளுதல், அன்றியே ஈண்டென என்னை முடித்தருளுதல் செய்யவேணும்' என்று அபேக்ஷிக்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், 'நீ ஸர்வரக்ஷணஸமர்த்தனாய் ஸர்வநிர்வாஹகனாயிருக்க, இந்த ஸம்ஸாரிகள் அபரிமிததுக்கபாக்குக்களாயிருக்கிற படியைக் கண்டு நான் பொறுக்கமாட்டுகிறிலேன்; இவர்களார்த்தியைத் தீர்த்தல், இத்தை அநுஸந்தியாதபடி என்னை முடித்தல் செய்யவேணும்' என்று எம்பெருமானுக்கு விண்ணப்பஞ் செய்கிறார்.

[நண்ணுதார் என்று தொடங்கி] - ஶத்ருக்கள் ப்ரீதராய்ச் சிரிக்கும்படியாகவும், ஸ்நேஹிகளான பந்துக்கள் அவஸந்நராம்படியாகவும் எண்ணிறந்த துக்கங்களை விளைக்கிற இவை என்ன லோகயாத்ரை! [கண்ணாளா என்று தொடங்கி] - க்ருபாவானாய் மஹாயத்நம் பண்ணியும் ஆஶ்ரிதருடைய அபேக்ஷிதங்களை முடித்துக் கொடுக்குமவனே! உன் திருவடிகளிலே வரும்படி தாழாதே என்னை ஶரீரத்தை விஶ்லேஷிப்பித்தருளவேணும்.

ப.—முதற்பாட்டில், 'ஸம்ஸாரிகள் படுகிற துக்கம் அஸஹ்யமாயிராநின்றது; ஆன பின்பு, ஆஶ்ரிதர்க்கு அருந்தொழில்செய்தும் அபேக்ஷிதங்கொடுக்கும் நீ இத்துக்கங்காணாதபடி என்னை ஶரீரவிஶ்லேஷம் பிறப்பிக்கவேணும்' என்கிறார்.

நண்ணாதார் - ஶாத்ரவத்தாலே இவனை அணுகியிராதவர்கள், முறுவலிப்ப - (இவன் அநர்த்தத்துக்கு ப்ரீதராய்) ஸ்மிதம்பண்ணும்படியாகவும், நல் உற்றார்-ஸ்நேஹத்தாலே கிட்டியிருக்கிற பந்துக்கள், கரைந்து ஏங்க - இவன் அநர்த்தத்துக்கு ஶிதிலராய் "என்னாகிறதோ" என்று ஏங்கி க்லேசிக்கவும், எண் ஆரா - எண்ணுதலில் அடங்காத, துயர் - துக்கங்களை, விளைக்கும் - (தன்னில்தான்) விளைத்துக்கொண்டுபோருகிற, இவை உலகியற்கை - இந்த லோகயாத்ரைகள், என்ன-என்னாயிருக்கிறன? கண்ணாளா - (நிருபாதிகநிர்வாஹகனாகையாலே) காருணிகனாய், கடல் கடைந்தாய்-(ப்ரயோஜநாந்தரங்களை வேண்டிலும்) கடலைக் கடைந்துகொடுக்கும் ஸ்வபாவத்தையுடையவனே! (இந்தலோகக்லேஶம் காணாதே), உன கழற்கே - ப்ராப்தனான உன்திருவடிகளுக்கேயுறுப்பாய், வரும் பரிசு - நான் வரும்படி, தண்ணாவாது - விளம்பியாதே, அடியேனை - (உனக்கேஶேஷபூதனான) என்னை, சாமாறு - ஶரீரவிஶ்லேஷம் பிறக்கும்படி, பணிகண்டாய்-("மோக்ஷயிஷ்யாமி" என்கிறகணக்கிலே) ஒருவார்த்தை அருளிச்செய்யவேணும். ஸர்வபாபஶப்தத்திலே ஶரீரமும் அந்தர்ப்பூதமென்று கருத்து. கண்ணாளன் - கண்ணையுடைய ஆளனென்று, க்ருபையையுடைய நிர்வாஹகனென்றபடி.

இ.—முதற்பாட்டில், 'நீ உளையாயிருக்க, ஸம்ஸாரிகள் படுகிற துக்கம் அஸஹ்யமாயிராநின்றது; ஆனபின்பு, இவர்கள்நடுவே இராமே என்னை முடிக்கவேணும்' என்கிறார்.

[நண்ணாதார் முறுவலிப்ப] - ஶத்ருக்களானவர்கள் ஓர் அநர்த்தம் வந்தவாறே அது வேஹேதுவாக ப்ரீதராய்ச் சிரிப்பர்கள். [நல் உற்றார்] - ஸ்நேஹிகளான பந்துக்கள். [கரைந்து ஏங்க] - "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்துகும்" என்கிறபடியே அதிக்லேஶப்படாநிற்பர்கள். ஶத்ருக்கள் சிரிக்கிற சிரிப்போடு பந்துக்களுடைய அதிப்ராவண்யத்தோடு வாசியில்லை, இவர்க்கு அஸஹ்யமாமிடத்தில்; பகவல்லாபாலாபங்களே ஸுகதுக்கமாயிருக்கவிறே

அடுப்பது. பகவத்வ்யதிரிக்தவிஷயத்தில் மித்ராமித்ரகதை இல்லை யென்கை. "பேராளன் பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரிகிலேன்" என்று தத்ஸம்பந்தத்தாலே ப்ரீதி; "எண்ணுதைமானிடத்தை யெண்ணுதபோதெல்லா மினியவாறே" என்று அவைஷ்ணவவிஷயமிறே அநாதரம். [எண்ணாத் துயர் விளைக்கும்] - எண்ணிறந்த து:கங்களை விளைக்கும். அந்தமில் பேரின்பத்தை விளைக்கும். தேஶத்துக்கு எதிர்த்தலையாயிருக்கை. "ராஜ்யாத் ஸுக்ஷோமவனே வாஸ:"-அநுக்ரஹத்தாலே ரக்ஷணார்த்தமாகஇழிந்த இடத்திலே பட்டபாடிறே இது. [இவை]-ஒருவனுக்கு ஓர் அநர்த்தம் வந்தால் ஐயோ! என்னுமிடத்திலே ப்ரீதராகையும், ப்ராக்ருதஸம்பந்தங்களைப்பற்ற அதிப்ராவண்யம் பண்ணுகையும் இரண்டும் அப்ரயோஜகமாய், ஸ்வகர்மத்தால் வந்த து:கமே அநுபவிக்க வேண்டுகையும். [இவை என்ன உலகியற்கை] - இவற்றின் ஸ்வரூபத்துக்குச் சேராது, உன்னுடைய ரக்ஷணத்துக்குச் சேராது. இது என்னாற் பொறுக்கப் போகிறதில்லை. 'அவர்கள் தந்தாம் கர்மத்தாலே படுகிறார்களாகில், நம்மாற் செய்யலாவது உண்டோ?' என்ன, [கண்ணாளா] - ஸ்வஸ்வகர்மங்கள் தாம் தாமே அநுபவிக்கவேணுமாகில் உன் க்ருபைக்கு விஷய மேது? நீர்மையுடையவனை 'கண்ணுடையவன்' என்னக் கடவதிறே. கண் என்று நிர்வாஹகத்வமாய், தம்தாம் கர்மமேயாயிருக்க இது ஏதேனும் தன்னரசுநாடோ? என்கை. 'தாம் தாம் சூழ்த்துக்கொண்டவை அநுபவிக்க வேண்டாதபடி நாம் உதவ எங்கே கண்டீர்?' என்ன, [கடல் கடைந்தாய்] — துர்வாஸஶ்ஶாபத்தாலே வந்த அநர்த்தத்தைத் தப்புகைக்கு ப்ரயோஜநாந்தரபரர்க்கும் அரியனசெய்து உதவினவனன்றோ? 'அவர்களுக்கு இச்சையுண்டு; அநிச்சுக்களுக்கு நம்மால் செய்யலாவது உண்டோ?' என்ன, [உனகழற்கே இத்யாதி] - ஆகில்; இவர்கள் நடுவு நான் இராதபடி என்னை உன் திருவடிகளிலே வரும்படி பண்ணியருளவேணும். [தண்ணவாது] - தண்ணுக்கையாவது-தாழ்க்கை; தாழாது. செய்கிறோமென்று ஆறியிருக்கவொண்ணாது; செய்துகொடு நிற்கவேணும். [அடியேனை] - ஸ்வரூபஜ்ஞாநத்தாலே ஸம்ஸாரிகளோடு பொருந்தாத என்னை. [சாமாறேபணி கண்டாய்] - பணிக்கையாவது-சொல்லுகை. சொலவு நினைவோடே கூடியிறே இருப்பது. ஶரீரவிஶ்லேஷத்தைப் பண்ணும்படி பார்த்தருளவேணும்.

ஈடு.— முதற்பாட்டு. உன்னையொழியப் புறம்பே பேறும்இழவுமாயிருக்கிற இவர்கள் நடுவில்நின்றும் நான் உன்திருவடிகளிலே வந்து கிட்டும்படி எனக்கு இஶ்ஶரீரவிஶ்லேஷத்தைப் பண்ணித் தந்தருளவேணும் என்கிறார்.

[நண்ணுதார்முறுவலிப்ப] - பிறரநர்த்தங் கண்டு சிலர் உகக்கும்படியாவதே, இது என்ன விஸ்மயந்தான்! "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" (ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம்) - அர்ஜுநன் 'என் பரகுபரகு கேட்வது என்று?' என்ன, "நான் 'ஸர்வபூதஸுஹ்ருத்து'

---

முதற்பாட்டு - நண்ணுதார் இத்யாதி. 'இவையென்னவுலகியற்கை, உனகழற்கே வரும்பரிசு, சாமாறு - பணி' என்றதைக் கடாக்ஷித்து, எம்பார்நிர்வாஹத்திலே அவதாரிகை - உன்னையொழிய இத்யாதி. பேறும் இழவும் - லாபாலாபங்கள். இவர்கள் - ஸம்ஸாரிகள்.

'முறுவலிப்ப - இவையென்ன வுலகியற்கை' என்று விஷண்ணராகிறவருடைய ஹார்த்தபாவம்-பிறரநர்த்தம் இத்யாதி. பிறரநர்த்தம்கண்டால் பரிஹரிக்க வேண்டியிருக்க, உகக்குமது பகவதீயத்வ ஜ்ஞாநாபாவத்தாலேயிறே என்று கருத்து. பிறரநர்த்தம்கண்டால் பின்னை எப்படி யிருக்கவேணும்? என்ன, ஸுஹ்ருதம் இத்யாதி. "போக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம் | ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்சதி" இதி கீதாஸு பஞ்சமே. "ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்சதி" என்றதுக்கு ப்ரஸங்கம் அருளிச்செய்யாநின்று கொண்டு, அதுக்கு அர்த்தம்-அர்ஜுநன் இத்யாதி. பரகுபரகு-

என்று அறிந்தவாறே நீயும் என்னேபாதி என்விபூதிக்குப் பரியத் தேடுவதிகாண்" என்ருனிறே. நண்ணுதாரேன்று - ஶத்ருக்களுக்குப் பேர். ஒருவனுக்கு ஓரநர்த்தம் வந்தவாறே, அற்றைக்குமுன்பு வெற்றிலைதின்றறியார்களே யாகிலும் அன்ருக ஒருவெற்றிலைதேடித் தின்பது, ஒரு டேப்புவாங்கி யுடுப்பது, சிரிப்பதாகாநிற்பர்களாயிற்று. [நல்உற்ருர்] - ஸர்வேஶ்வரனே நிருபாதிக் பந்துவாய், அவனைப்பற்றினவர்களையே "அவன்தமரேவ்வினையராகிலு மெங்கோனவன்தமரே" என்று, "அவர்களை ஒருகாலும்பிரிகிலேன்" என்றிருக்கப்ராப்தமாயிருக்க ஶரீரஸம்பந்தநிபந்தநமாக வருகிறவர்களை நிருபாதிகபந்துக்களாக நினைத்து அவர்களுக்கு ஒன்றுவந்தவாறே, "நினைதோறும் சொல்லுந்தோறும் நெஞ்சிடிந்துகும்" என்று இவர் பகவத்விஷயத்தை நினைத்தல் சொல்லுதல் செய்யப் புக்கால் படுவதெல்லாம் படாநிற்பர்களாயிற்று. "ஸவ-஭ூதாத்மகே" (ஸர்வபூதாத்மகே). "கரைந்தேங்க, முறுவலிப்ப" என்ற இரண்டையுமிறே – "மித்ராமித்ரகதாகுத:" (மித்ராமித்ரகதாகுதஃ) என்றது. ராகத்வேஷங்களைப்பற்றி வருகையாலே, மைத்ரியோடு ஶாத்ரவத்தோடு வாசியில்லையிறே. "த்வந்த்வைர்விமுக்தாஸ்ஸுகது:கஸம்ஜ்ஞை:" (த்வந்த்வைர்விமுக்தாஸ்ஸுகதுஃகஸம்ஜ்ஞைஃ) என்று 'ஸுகதுஃகங்கள்' என்று சிலபேர்மாத்ரமேயிறே உள்ளது; இரண்டும் துஃகமாயிறே இருப்பது. இரண்டாய்வரும் துஃகங்களையடையநினைக்கிறது. "ராமமேவ" (ராமமேவ)-திருவயோத்யையிலுள்ளார், ஒருவரையொருவர் வேரோடே வாங்கிப் போகடவேண்டும்படியான ஶாத்ரவம் அநுவர்த்தியாநிற்கச்செய்தேயும் எல்லாரும் ஒருமிடருக அர்த்தித்தார்கள்; அதுக்கு அடியேன்? என்னில்;— ஶாத்ரவம் நெஞ்சிலேபட்டு அவர்களை நலியநினைத்தபோதாகப் பெருமாளை நினைப்பர்கள்; 'அவர்முகஞ்சுளியும்' என்னுமத்தாலே அதின்கார்யம் பிறக்கப்பெற்றதில்லை. "புஷ்பாங்கராகைஸ்ஸமம்" (புஷ்பாங்கராகைஸ்ஸமம்) என்றிறே இவ்விஷயத்தில்

---

*ராகத்வேஷங்களாலே தடுமாறித்திரிகை. கேடுவது - போகக்கடவது. 'ராகத்வேஷஶாந்தியையுடையவன்' என்கையாலே பலிதம் - என்னேபாதி இத்யாதி. முறுவலிக்கைக்கு ஹேதுவைக் காட்டுகிருர் - ஒருவனுக்கு இத்யாதி. உடுப்பு - வஸ்த்ரம். நன்மையாவது - நிருபாதிகத்வமென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரதிகோடியாக ஹாவம்-ஸர்வேஶ்வரனே இத்யாதி. அவன்தமர் இத்யாதி-அவனடியார் அக்ருத்யகரணநிரூபமான எவ்வகைப்பட்ட வினையையுடையராகிலும் நம்முடைய ஸ்வாமியானவனுடைய அடியாரித்யர்த்தஃ. முதற்றிருவந்தாதி ஐம்பத்தஞ்சாம்பாட்டு. ஒருகாலும் பிரிகிலேன் - ஒருகாலும் பிரிய க்ஷமனல்லேன். ஶாத்ரவமாகாதொழிய இரங்குகிறது நல்லதன்றே? என்ன, இரண்டும் த்யாஜ்யமென்கைக்கு ப்ரமாணம்-ஸர்வபூதாத்மக இத்யாதி. "ஸவ-஭ூதாத்மகே தாத ஜகந்நாதே ஜகந்மயே । பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ரகதா கதஃ" இதி ப்ரதமேம்ஶே ஹிரண்யம்ப்ரதிப்ரஹ்லாதஃ. இரண்டும் த்யாஜ்யமென்கைக்கு ஹேதுவேதென்ன, ராகத்வேஷங்களை இத்யாதி. 'வாசியில்லை' என்னலாமோ? மைத்ரி உத்தேஶ்யமன்றோ? என்ன, ஸுகமநுகூலமாயிருக்க, துஃகத்தோபாதி த்யாஜ்யமென்றதிறேயென்று அதுக்குப்ரமாணம் காட்டுகிருர் - த்வந்த்வைஃ இத்யாதி. "நிர்மாநமோஹா ஜிதஸங்கதோஷா அத்யாத்மநித்யா விநிவ்ருத்தகாமாஃ । த்வந்த்வைர்விமுக்தாஸ்ஸுகதுஃகஸம்ஜ்ஞைர்கச்சந்த்யமூடாஃ பதமவ்யயம் தத்" இதி கீதாஸு பஞ்சதஶே. அப்படியே ராகத்வேஷங்களும் த்யாஜ்யமென்று கூட்டுவது. அவனை - ஸர்வபூதஸுஹ்ருத் என்றறிந்து த்வேஷத்தை விட்டபே ருண்டோ? என்ன, ராமமேவ இத்யாதி. "ராமமேவாநுபஶ்யந்தோ நாப்யஹிம்ஸந்பரஸ்பரம் । அநுரக்தஸ்ய ஸர்வாணி தஸ்ய பௌர ஸஹஸ்ரிணஃ" இதியுத்தகாண்டே அயோத்யாம்ப்ரத்யாகதேஸதி ராமே பௌராஃ. பூர்வார்த்தத்துக்குஅர்த்தம் - திருவயோத்யையில் இத்யாதி வாக்யத்ரயமும். இவ்வர்த்தம் இவ்விபூதியில்மாத்ரமன்றிக்கே, நித்யவிபூதியிலு முண்டென்கிருர் - புஷ்பாங்கராகைஃ இத்யாதி. "ஶோபயாவஸ்திநாஞ்சீயக்ஷ்யா*

கைவைத்தார் இருப்பது. ஸர்வேச்வரன் பெரியபிராட்டியாரோடு பரிமாறும்போது மற்றுள்ள பிராட்டிமார், ஸ்ரக்சந்தநாதிகளோபாதி ஹோமோபகரணகோடியிலே அந்வயித்துநிற்பர்கள்; அவர்களோடு இவன் கலந்தால் பிராட்டி தான் தன்இடையிலும் முலையிலும் கலந்தாற்போலேயிருக்கும். "திருமகளும் மண்மகளு மாய்மகளும் சேர்ந்தால் திருமகட்கே தீர்ந்தவா றென்கொல்" - அவர்களோடே இவன்கலந்தால் பிராட்டிக்கே யற்றுணுயிருக்கும்; அதுக்கடி அத்தால்பிறக்கும் முகவிகாஸம் அவள்பக்கலிலே காண்கையாலே-அல்பம் குணதிக்யம் உள்ளவிடத்தேயும் "யதாயதாஹிகௌஸல்யா" (யதாயதாஹிகௌஸல்யா) என்கிறதிறே; ஸாபத்ந்யம்தோற்றுதபடி பரிமாறிப் போந்தாளிறே சக்ரவர்த்திக்கு. "*யதாயதாஹி*" (*யதாயதாஹி*) - காலந்தோறும் காலந்தோறும்

---

*ஸ்ரக்சந்தநாதிவதேஷாம் நிருபதப்ரணயாதிவாஹநவிதௌ நீளாதிதேவ்யஸ்ததா | தேவித்வா ஸ்தநாமுக்ஷணஸஹமஹீ தேவ்யஸ்ஸஹஸ்ரம் ததா யாபிஸ்ஸ்வஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ ஸ்வாத்மேப்*
*யஸம்ப்லாவலே"* இதி ஸ்ரீ குணரத்நகோசே. ஹேதேவி - வாரீர் ஸ்ரீ ரங்கநாயகியாரே! யாபி: - *யாவர் சிலர் நீளாதிதேவிமாராலே,* ஸ்வாபிஸ்ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ ப்ரியம்ப்லாகலே - *உம்முடையவைகளா யிருக்கிற ஸ்தநபாஹு த்ருஷ்டிகளாலே கலந்தாற்போலே நாயகனை உகப்பியாநின்றீர்;* த்வாமநு நீலயாஸஹமஹீ, ததாஸஹஸ்ரம்தேவ்ய: - *உமக்கு அநந்தரம் நீளையோடேகூட ஸ்ரீபூமிப்பிராட்டியும் அப்படியே அஸங்க்யாதரான தேவிமாரும்,* வாம் - *உங்களிருவருக்கும்,* நாந்தரீயகதயா புஷ்பாங்கராகை ஸ்ஸமம்போக்யா: - *விட்டிராமையாலே ஸ்ரக்சந்தநாதிகளோபாதி போகோபகரணங்களா யிருப்பர்கள்;* நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதௌ - *உங்களுடைய ஸம்ச்லேஷத்தாலுண்டான ப்ரணயத்தினுடைய அதிசயவிதியில்; அதாவது - உந்மஸ்தகரஸமான வளவிலே யென்றபடி.* பரீவாஹதாம்நீதாச்ச - *இந்த ரஸம் ஸாத்மிக்கைக்காகக் கடைப்பாய்ச்சலாகையை அடைவிப்பிக்கப்பட்டார்க ளென்றபடி. இத்தால் - நீளைதொடக்கமான தேவிமாரோடே ஈச்வரன் ஸம்ச்லேஷித்தபோது பெரியபிராட்டியார் தம்முடைய திருமுலையிலும் கண்ணிலும் கைகளிலும் கலந்தாற்போலே யிருப்பர்; மற்றைத்தேவிமாரும் பெரியபிராட்டியாரோடே கலக்கும்போது ஸ்ரக்சந்தநாதிகளோபாதி போகோபகரணங்களா யிருப்பர்கள்; ஆகையாலே, பரஸ்பரஸாபத்ந்யமின்றிக்கே யிருப்பார்க ளென்றதாயிற்று. "வாம் நாந்தரீயகதயா"* இத்யாதிக்கு *அர்த்தம் - ஸர்வேச்வரன் இத்யாதி. "ஸ்ரக்சந்தநாதிவதேஷாம்"* என்றதுக்கு ஸாவம் - ஸ்ரக்சந்தந *இத்யாதி. 'யாபி:' என்றதுக்கு அர்த்தம்-யாவர்சிலர் இத்யாதி. 'யாபி:' என்றதுக்கு ஸாவம்-* அவர்களோடுஇவன் *இத்யாதி. "ஸ்வாபிஸ்ஸ்தநபாஹுத்ருஷ்டிபிரிவ"* என்றதுக்கு ஸாவம்-தன்னிடையிலும் *இத்யாதி. அவர்களோடேகலந்தால் பிராட்டிக்கு ப்ரியம்செய்ததா யிருக்குமென்னுமதுக்கு ப்ரமாணம் -* திருமகளும் *இத்யாதி. பெரியபிராட்டியாரும் ஸ்ரீபூமிப்பிராட்டியாரும் நப்பின்னைப்பிராட்டியாரும் ஸாதரமாக ஸம்ச்லேஷித்தால்; பிராட்டியோடு கலக்குமிடத்திலும் மற்றைப்பிராட்டிமார் ஸாபத்ந்யகந்தமற புஷ்பாங்கராகாதிகளோபாதி போகோபகரணகோடியிலே நிற்கையாலும், அவர்களோடே கலக்குமிடத்தில் தன்முலையிலும் இடையிலும் கலந்தாற்போலே பிராட்டி நினைத்திருக்கையாலும், பெரியபிராட்டியாருக்கே அற்றுத் தீர்ந்ததாயிருக்கிறபடி யெங்ஙனேதான்! ஸர்வேச்வரனுடைய திருவுள்ளமென்று பாசுரார்த்தம். முதல்திருவந்தாதி - நாற்பத்திரண்டாம்பாட்டு. எடுத்த பாசுரத்துக்குஸாவம் -* அவர்களோடே *இத்யாதி. 'திருமகள் - சேர்ந்தால்' என்றது - த்ருஷ்டாந்தார்த்தம். அதாவது - ஈச்வரன் பிராட்டியோடே கலந்தால் அவளுக்கே அற்றுண யிருக்குமாபோலே, அல்லாதாரோடு கலந்தாலும் பிராட்டிக்கே அற்றுணுயிருக்குமென்றபடி. அல்லாதார்க்கொழிய, இப்படி மஹிஷிகளுக்கு ஸாபத்ந்யமின்றிக்கே யிருக்கக்கூடுமோ? என்ன,* அல்பம் *இத்யாதி.* குணதிக்யமுள்ளவிடம் - *கௌஸல்யை. "யதாயதாஹிகௌஸல்யா தாஸீவச்ச ஸகீவச்ச | பார்யாவத் பகிநீவச்ச மாத்ருவச்சோபதிஷ்டதி"* இத்யயோத்யாகாண்டே. 'ஸகீவ' என்

அவன் நினைவுக்கூடாகப் பரிமாறிப்போந்தாளாயிற்று தனக்கென்ன ஓர்ஆகாரமின்றிக்கே.ஶேஷம் பூர்வவத். [எண்ணாராத்துயர்விளைக்கும்] - முறுவலிக்கிறதும், கரைந்தேங்குகிறதும், இரண்டும் துயராய்த் தோற்றுகிறதாயிற்று இவர்க்கு. அந்தமில் பேரின்பத்துக்கு எல்லைகாணிலும் து:கத்துக்கு எல்லைகாணவொண்ணுதபடி யாயிற்று இருப்பது. அங்கு நிஷ்க்ருஷ்டஸுகமேயாயிருக்குமாபோலே இதுவும் நிரவதிகது:கமேயாய் இருக்குமாயிற்று. "ராஜ்யாத்ப்ரம்ஶ:" (ராஜ்யாத்ப்ரம்ஶ:) இத்யாதி - இவர்கள்படுகிற க்லேசத்தைக் கண்டு தன் க்ருபையாலே அவன் எடுக்கக் கைநீட்டினவிடத்திலே படுகிறபாடிறே இது. திருவபிஷேகம்பண்ண நாளிட்டவாறே, 'ராஜ்யம் எனக்கு வேணும்' என்றார்கள் சிலர். அத்தையிழந்தால் படைவீட்டிலே யிருக்கப் பெற்றதாகிலுமாமிறே. 'என்மகன் ராஜ்யம்பண்ணவேண்டா, பிக்ஷைபுக்காகிலும் என்கண்வட்டத்திலே இருக்க அமையும்' என்றாளிறே ஸ்ரீகௌஸல்யையார். "ஸீதா நஷ்டா" (ஸீதாநஷ்டா)-"பிராட்டியும் தாமுமாய் ஏகாந்தமாகபுஜிக்கலாம்" என்று போர, இருவரும் இரண்டிடத்திலேயாம்படியாய் விழுந்தது. பிராட்டிக்குத் தனியிடத்திலே உதவப்புக்க பெரியவுடையாரையும் இழந்தது. "ராஜ்யநாஶோபகர்ஷதி"(ராஜ்யநாஶோபகர்ஷதி)என்றும்,"வநவாஸோ மஹோதய:"(வநவாஸோ மஹோதய:) என்றும்சொல்லிப்போந்தவற்றை இப்போதுஅநர்த்தமாகச் சொல்லுகிறதேன்? என்னில்;—'ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்துக்கும், ருஷிகளையெடுக்கைக்கும்' என்றிறே போந்தது; அத்தோடே விரோதிக்கையாலேசொல்லுகிறார். பிராட்டியைப் பிரிகையாலும், பெரியவுடையாரிழவுபலிக்கை

---

*றதுக்கு ஹாவம்-ஸாபத்ந்யம் இத்யாதி. 'ஶேஷம்பூர்வவத்' என்றது-'ஸகீவ' என்றதுக்குப்போலே அல்லாதபதங்களுக்கும் இப்படியே அர்த்தம் கண்டுகொள்வ தென்னுதல்; "ஹாஸ்யாவாலி" என்கிற ஶ்லோகத்தில் பிராட்டிக்குச் சொன்ன குணங்களை இஶ்ஶ்லோகத்திலே ஸ்ரீ கௌஸல்யையார்க்கும் யோஜித்துக்கொள்வதென்னுதல். மாத்ராதி துல்யதை சொன்னபோதே - ஸாபத்ந்யம் தோற்றாமை ஸித்தமிறே. கரைந்தேங்குகிறதொழிய, முறுவலிக்கிறதும் துயரோ? என்ன, முறுவலிக்கிறதும் இத்யாதி. "நண்ணுதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க - இப்படி, எண்ணாராத் துயர்விளைக்கும்" என்று யோஜனை. 'எண்ணாரா' என்றதுக்கு அர்த்தம் - அந்தமில் இத்யாதி. முறுவலும் தமக்கு அத்யந்தாஸஹ்யமாய்த் தோற்றுகையாலே அத்தையும் 'எண்ணாரா' என்று விசேஷிக்கலாமிறே. துயரின்தாத்பர்யம் - அங்கு இத்யாதி. நிஷ்க்ருஷ்டஸுகம் - து:கம்கலசாதஸுகம். இன்னார்க்குத் துயர்விளைக்குமென்று விசேஷியாமையாலே அகர்மவஶ்யன் அவதரித்தாலும் அவனுக்கும் து:கஜநகமென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - ராஜ்யாத்ப்ரம்ஶ இத்யாதி. "ராஜ்யாத் ப்ரம்ஶோ வநே வாஸ: ஸீதா நஷ்டா ஹதோ த்விஜ: । ஈத்ருஶீயம் மமாலக்ஷ்மீர் நிர்தஹேதபி பாவகம்॥" இத்யாரண்யகாண்டே ஸப்தஷஷ்டிதமே. தன் இச்சையாலே இவர்கள் அநுக்ரஹார்த்தமாகப் பிறந்தவன் படும் து:கத்தை அநுஸந்தித்து வ்யாக்யாதாவின் ஈடுபாடு - இவர்கள் படுகிறஇத்யாதி. "ராஜ்யாத்ப்ரம்ஶ:, வநேவாஸ:" என்ற பதத்வயத்துக்கும் வாஸனை - திருவபிஷேகம் இத்யாதி வாக்யத்வயத்தாலே. ராஜ்யப்ரஷ்டனானவனுக்குப் படைவீட்டிலிருக்குமது ஸுகமென்னுமதுக்கு உதாஹரணம் - என்மகன் இத்யாதி. "வநேவாஸ:" என்றத்தோடே "ஸீதா நஷ்டா" என்ற பதத்துக்கு வாஸனை-பிராட்டியும் இத்யாதி. "ஸீதா நஷ்டா" என்றது-"ணஶ அதர்ஶநே" என்கிற தாதுவிலே அத்ருஷ்டையானா ளென்றபடி. "ஹதோ த்விஜ:" என்றதுக்கு வாஸனை - பிராட்டிக்கு இத்யாதி. பெரியவுடையார் - ஸ்ரீஜடாயுமஹாராஜர். தடஸ்த்தசங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - ராஜ்யநாஶ இத்யாதி. "நவாஸ்யேஹ தீர்க்கம்ராஜ்யநாஶோபகர்ஷதி । வொக்காதஸ்யாதகுகம்ஶீதாஸ்ரரிவக்ஷஃவா," "ஶ்ரவஹகிணஸஞாவஂகாஷீபூஜாக்ஷ்யாவிவஞ்யெ । ராஜ்யம் வாஸ வநாலெவாவாஸ வநவாஸோ மஹோதய:"* இத்யயோத்யாகாண்டே. "ந-அபகர்ஷதி" இத்யர்வய:. ராஜ்யப்ரம்ஶமும் வநவாஸமும் அன்று ஸுகமாகைக்கும் இன்று து:கமாகைக்கும் ஹேது அருளிச்செய்கிறார் - ஆஶ்ரித இத்யாதி வாக்யத்வயத்தாலே. ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்துக்கு - பிராட்டி ஸம்ஶ்லேஷத்

யாலும், இவற்றுக்கு அடியானவையும் இப்போது அநர்த்தமாய்த் தோற்றுகையாலே சொல்லுகிறுர். இவ்விரண்டாலும் வரும் துஃகங்களையுடைய நினைக்கிறது. "நிஃ...வகூ" (நிர்த்த ஹேதபிபாவகம்) - பிரியாத இளையபெருமாளையும் பிரிக்கவும் வற்றுயிறே இருக்கிறது. [இவை யென்னவுலகியற்கை] - உன்னையொழியப் புறம்பேயும் இந்தலோகம் பேறிழவாம்படி இது ஒரு லோகயாத்ரையை நீ பண்ணிவைத்தபடி யென்? பிரானே! 'நான் பண்ணுகையாவதென்? இவர்கள் தாங்கள் பண்ணின கர்மத்தினுடைய பலம் அநுவர்த்திக்கிற இத்தனையன்றே? நம்மால் வந்ததன்று காணும்' என்று பகவதபிப்ராயமாக, மேல்சொல்லுகிறுர்:—

[கண்ணுளா] - இவைபண்ணின கர்மம் தனக்கே யநுபவிக்க வேணுமாயிற்றதாகில், உன் க்ருபைக்குப் புறம்பு விஷயம் எங்கே? க்ருபாவானை - "கண்ணுடையவன்" என்னக்கடவ திறே. அன்றிக்கே கண்என்று - இடமாய், அத்தால் - *அகலிட மென்றபடியாய்; இது ஏதேனும் தன்னரசுநாடோ? நீ நிர்வாஹகனு யிருக்க இவை ஸ்வரூபவிரோதங்களிலே ப்ரவர்த்திக்கிறதென்? கண்ணென்று - நிர்வாஹகனுக்கும் பேர். தாந்தாம் சூழ்த்துக்கொண்ட கர்மம் தாந்தாம் அநுப விக்கவேண்டாதபடி நாம் உதவ எங்கேகண்டீர்? என்ன;— 'ஒருவெள்ளமன்றே' என்று உதா ஹரணம் காட்டுகிறுர்: [கடல்கடைந்தாய்] - துர்வாஸஶ்ஶாபத்தால் வந்த அநர்த்தத்தைத் தப்பு கைக்கு, ப்ரயோஜநாந்தரபரர்க்கும் அரியனசெய்து உதவுமவனன்றே. அவர்களுக்கு இச்சை யுண்டு; அநிச்சுக்களுக்கு நம்மாற் செய்யலாவதுண்டோ? என்ன,-ஆகில் இவர்கள் நடுவிராதபடி என்னை உன் திருவடிகளிலே வரும்படி பண்ணவேணும்; [உனகழற்கேவரும்பரிசு] - விலக்கடி களில் போகாமே, ப்ராப்தமுமாய் போக்யமுமான உன்திருவடிகளிலே வந்து கிட்டுவதோரு ப்ரகாரம். இவர்க்குக் காற்கூறு இச்சையுண்டாயிருந்தபடியாலே, 'அப்படிசெய்கிறேம்' என்றுன் ஈஶ்வரன். [தண்ணுவாது] - தண்ணுக்கையாவது - தாழ்க்கை. தாழாது. 'செய்கிறேம்' என்று ஆறியிருக்கவொண்ணுது; செய்துகொண்டு நிற்கவேணும். இப்படி பதறிச்செய்ய வேண்டு கிறதென்? நமக்கென்ன, [அடியேனை] - ஸ்வரூபஜ்ஞாநத்தாலே ஸம்ஸாரிகளோடு பொருந்தாத

துக்கு. "...."என்றதுக்கு அர்த்தம்-இவ்விரண்டால்இத்யாதி. "....., ...வாஸஃ" என்ற இரண்டால் வரும் துஃகங்களை யென்றபடி. நிர்தஹேதபிபாவகம் - பாவகமபி நிர்த்த ஹேத் - அக்நியையும் தஹிக்கு மென்றதிலே, அஸம்பாவிதத்தையும் ஸம்பவிக்கு மென்று பலிப்பித்து, அத இன்னதென்கிறுர்-பிரியாத இத்யாதி. அதாவது - தாஹகமான அக்நியைச் சுடுமாபோலே, விஶ்லே ஷிப்பிக்கப்போகாத இளையபெருமாளையும் விஶ்லேஷிப்பிக்கு மென்றபடி. 'இவையென்னவுலகியற்கை' என்று விஷண்ணராகிறவருடைய ஹார்த்தஹாவம் - உன்னையொழிய இத்யாதி. பேறு - த்ருஷ்டாந்தார்த் தம். இங்கு இழவேயிறே மூறுவலிக்கைக்கும் கரைந்தேங்குகைக்கும் ஹேதுவாகச் சொல்லுகிறது.

'கண்ணுளா' என்றதுக்கு மூன்று அர்த்தம்: கண் என்று - க்ருபையும், பூமியும், நிர்வாஹகத்வமு மென்று. பூவாசகமானபோது, 'ஆளர்' என்று-நிர்வாஹகனென்றபடி. மற்றையிரண்டர்த்தத்திலும், 'ஆளா' என்று - உடையவ னென்றபடி. 'கண்' என்று - க்ருபையைச் சொல்லுமோ? என்ன, க்ருபாவானை இத்யாதி. அன்றிக்கே இத்யாதி - *'அகலிடம்' என்று பாடமானபோது, அகலிடம் - பூமி. இப்ப்ரகரணத் திலே 'நிர்வாஹகன்' என்று சொல்லுகிறவருடைய ஹாவத்தை அருளிச்செய்கிறுர்-இது ஏதேனும் இத்யாதி. தன்னரசுநாடு-அராஜகமான தேசம். அவயவஶக்தியாலே, நிர்வாஹகனென்னுமத்தை தர்ஶிப்பித்த அநந்த ரம், ரூடியாலும் நிர்வாஹகத்வத்தைச் சொல்லுகிறதென்று அர்த்தாந்தரம் - கண்ணென்று இத்யாதி. 'கடல் கடைந்தாய்' என்றத்தைக் கடாக்ஷித்து ரஸோக்தியாகவும் தாத்த்விகமாகவும் உத்தரம் - ஒருவெள்ளம் இத் யாதி வாக்யத்வயத்தாலே. வெள்ளம் - ஸமுத்ரம். 'உனகழற்கே' இத்யாதிக்கு அவதாரிகை - அவர் களுக்கு இத்யாதி. ஏவகாரார்த்தம் - விலக்கடிகள் இத்யாதி. விலக்கடிகள் - ஐஶ்வர்யாதிகள். பரிசு-ப்ரகா ரம். காற்கூறு - நாலத்தொன்றும், திருவடிகளாகிற அம்ஶமும். 'தண்ணுவாது' என்கையாலே-ஈஶ்வரன் 'செய்கிறேம்' என்றது விஶித்தம். தண்ணுவாது - தாழாது, விளம்பியாதே. தாழாததினெல்லையை அருளிச் செய்கிறுர்-செய்கிறேம்என்று இத்யாதி. பதறி-த்வரித்து. ஸ்வரூபஜ்ஞாநத்தாலே-தாஸ்யம் ஸர்வஸாதாரண

* புகலிடமென்றபடியாய் என்று பாடம்; அகலிடமென்றபடியாய் என்று பாடாந்தரமென்பது, அடையவளைந்தான்ரும்பதத்தால் ஏற்படுகிறது.

என்னை. [பணிகண்டாய்சாமாறே] - பணிக்கையாவது - சொல்லுகை; சொலவு நினைவோடே கூடியிறே இருப்பது. சாமாறு பணிக்கவேணும். உனக்கு ஒருசொலவு; அடியேன் பெறுகிறது ஸத்தை. [சாமாறே - பணி] - ஶரீரவிஶ்லேஷத்தைப் பெறும்படி பார்த்தருளவேணும்; கேவலரைப்போலே இவ்வளவை அபேக்ஷிக்கிறதேன்? என்னில்; “வரம் ஹுதவஹஜ்வாலாபஞ்ஜராந்தர்வ்யவஸ்திதி: । நஶௌரிசிந்தாவிமுகஜநஸம்வாஸவைஶஸம்” (வரம்ஹுதவஹஜ்வாலாபஞ்ஜராந்தர்வ்யவஸ்திதி: । நஶௌரிசிந்தாவிமுகஜநஸம்வாஸவைஶஸம்) என்கிறபடியே, இவர்கள்நடுவிருக்கிற இருப்புத் தவிருகைதானே இப்போது தேட்டமாகையாலே. காட்டுத்தீயில் அகப்பட்டவனுக்கு நீரும் நிழலுமிறே முற்படத் தேட்டமாவது, பின்பிறே போக்யாதிகளில் நெஞ்சுசெல்வது; அப்படியே இப்போது இவர்கள் நடுவிருக்கைக்கு அடியான ஶரீரவிஶ்லேஷத்தைப் பிறப்பிக்கவேணு மேன்கிறார். (க)



## இரண்டாம் பாட்டு.

சாமாறும்கெடுமாறும் தமருற்றார்தலைத்தலைப்பெய்து
ஏமாறிக்கிடந்தலற்றும் இவையென்னவுலகியற்கை?
ஆமாறென்றறியேன் நான்அரவணையாய்அம்மானே!
கூமாறேவிரைகண்டாய் அடியேனைக்குறிக்கொண்டே.

*ஆ.*—(*சாமாறும்*) “*உன்னைக் காணப்பெறுகிறிலோம்*” *என்று அலற்றுதே, புத்ராதிமரணவிநாஶங்கள் காரணமாகத் தமர் உற்றார் தலைத்தலைப்பெய்து ஏங்கிக்கிடந்து அலற்றும் இவை என்ன உலகியற்கை? நானும் இங்கே லௌகிகரைப்போலேயாகில் செய்வதென்? ஆஶ்ரித ஸம்ஶ்லேஷைகபோகனே! பிரானே! ‘நம் அடியான் இவன்’ என்று அடியேனை உன் திருவுள்ளத்திலேகொண்டு ஈண்டென என்னைத் திருவடிகளிலே வாங்கியருளவேணும் என்கிறார்.*

*ஒ.*—*இரண்டாம் பாட்டில், சேதநருடைய மரணாத்யநர்த்தங்களைச் சொல்லி விஷண்ணராய், இவர்கள் து:கத்தைப் போக்கியருளாயாகில் நான் இது அநுஸந்தியாதபடி என்னை ஈண்டெனத் திருவடிகளிலே அழைத்தருள வேணும் என்கிறார்.*

---

*மாயிருக்க, அடிமையை ஹேதுவாக விவக்ஷிக்கையாலே - இந்த அர்த்தம் ஸித்தமிறே. ‘பணிகண்டாய்’ என்றதுக்கு அர்த்தத்வயம்; பணியென்று - சொலவாய், சொலவு நினைவோடே கூடியிருக்கையாலே, சொலவுக்கு அடியான ஸங்கல்பத்தைச் சொல்லுதல்; இத்தை அருளிச்செய்கிறார் - பணிக்கையாவது இத்யாதி வாக்யத்வயத்தாலே. கேவலம் வார்த்தையாக அர்த்தாந்தரம் - சாமாறுபணிக்கவேணும் இத்யாதி வாக்யத்வயத்தாலே. பணிக்கை-சொல்லுகை. பார்த்தருளவேணுமென்றவிடத்திலும்-ஸங்கல்பமாகிறது. அடியேன் பெறுகிறது ஸத்தை யென்றது - ஸமபிவ்யாஹாரஸித்தார்த்தம். செத்து உனகழற்கே வரும்பரிசு பணியென்று - திருவடிகளில் ப்ராப்தியை விதேயமாக்காதே, ‘சாமாறே - பணி’ என்று இத்தையே ப்ரதாநமாக நிர்த்தரிக்கையைப்பற்ற, கேவலரைப்போலே இத்யாதி ஶங்கை. இவ்வளவை-ப்ரக்ருதிவிமோக்ஷத்தை. வைஶஸம் - ஈரிவாள். த்ருஷ்டாந்தமுகேந விவரணம் - காட்டுத்தீ இத்யாதி. நண்ணுதார்முறுவலிப்ப - பிறரநர்த்தம்கண்டால் சத்ருக்களானவர்கள் ஸ்மிதம்பண்ணும்படியாகவும், நல்லுற்றார் கரைந்தேங்க - இவனுக்கு ஸ்நேஹிகளான பந்துக்கள் சிதிலராய் க்லேஶிக்கும்படியாகவும், எண்ணாராத் துயர்விளைக்கும் - இப்படி எண்ணுதலிலடங்காத து:கங்களைத் தன்னில் தான் விளைத்துக்கொண்டுபோருகிற, இவை என்ன உலகியற்கை - இந்தலோகயாத்ரை என்னுயிருக்கின்றன? எண்ணாராத்துயர் விளைக்குமிவையென்ன வுலகியற்கை - இப்படி எண்ணிமுடியாத து:கங்களை விளைத்துக்கொண்டுபோரும்படி இதொரு லோகயாத்ரையை நீ பண்ணிவைத்தபடி யென்? என்னுதல் என்று சப்தார்த்தம். க்ரமேண அந்வய:. (க)*

[தமர் என்று தொடங்கி] - ஜ்ஞாதிகளும் ஸம்பந்திகளும் மேல் விழுந்து மேல் விழுந்து துக்கிதராய்க் கிடந்து கூப்பிடுகையும் இவை என்ன லோகயாத்ரை? [ஆமாறு என்று தொடங்கி] - இந்த துக்கநிவ்ருத்திக்கு ஈடான உபாயம் நான் ஒன்றும் அறிகிறிலேன். ஸர்வேஸ்வரனுகைசுட்டி இவற்றினுடைய ரக்ஷணம் உனக்கு பாரமாகைபாலே அதுக்கு உறுப்பாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனே! [அடியேனைக் குறிக்கொண்டே] - என் ஸ்வஹாவத்தை அறிந்தருளி.

ப.—அநந்தரம், லௌகிகக்லேசம் என்னைப் முடியப்புகுகிறது? என்று அறிகிறிலேன்; நிருபாதிகஶேஷியான நீ என்னை அழைக்கும்படி விரையவேணும் என்கிறார்.

சாமாறும் - (சிரகாலம் ஜீவிக்கவிருக்க மத்யே)சாகிற ப்ரகாரமும், கெடுமாறும் - (ஐஶ்வர்யத்தைப்பாரிக்க அது) நசிக்கிற ப்ரகாரமும், (இதடியாக), தமர் - தமரான ஞ்ஜாதிகளும், உற்றார் - உற்றாரான ஸம்பந்திகளும், தலைத்தலைப்பெய்து - ஒருவர்க்கொருவர் மேல்விழுந்து, ஏமாறி-ஏங்குதலற்று, கிடந்து-கிடந்து, அலற்றும்-கூப்பிடுகிற கூப்பீடும் ஆகிற, இவை - இவை, என்ன உலகியற்கை-என்ன லோகயாத்ரைகளிருக்கிறனதான்? நான்-நான், ஆம் ஆறு-இதுஎன்ன எளிலேயாய் முடியப்புகுகிற ப்ரகாரம், ஒன்று - ஒன்றும், அறியேன் - அறிகிறிலேன், அரவணையாய் - ஶேஷபூதனான அநந்தனை ஶேஷ வ்ருத்தி கொள்ளுமவனாய், அம்மானே - அதுபோலே எல்லாரோடும் உறவொத்த ஸ்வாமியானவனே! அடியேனை - ஶேஷபூதனான என்னை, குறிக்கொண்டு - (துக்கஸஹனல்லன்) என்று குறிக்கொண்டு, கூமாறு - அழைக்கும்படி, விரைகண்டாய் - விரையவேணும். ஏமாற்றம் - க்லேசமாகவுமாம். தலைத்தலைப்பெய்தல் - தலையோடு தலை சேர்த்தலாகவுமாம்.

இ.—இரண்டாம் பாட்டில், 'எண்ணாராத் துயர்' என்று திரளச் சொன்னார் முதற் பாட்டில்; அவற்றிலே சில வகைகளைச் சொல்லி விஷண்ணராய் 'இவர்கள் துக்கத்தைப் போக்கியருளாயாகில், என்னை உன் திருவடிகளிலே அழைத்தருள வேணும்' என்கிறார்.

[சாமாறும்] - நீள ஜீவிக்கக்கடவோமென்று மநோரதியாநிற்க, நடுவே முடிந்துகொடுநிற்கும்படியும்; சிலரை அழியச் செய்யக்கடவோமென்று மநோரதியாநிற்க, தான் நடுவே கடுக முடிந்துகொடு நிற்கும்படியும். [கெடுமாறும்] - தன் உடைமையான தநாதிகளை ஸ்திரமென்று பார்த்துக்கொண்டிருக்கச் செய்தே நடுவே அபஹ்ருதமாய்க் கூப்பிடா நிற்கும்படியும். இவர்க்கும் ஒரு விஷயத்திலே உண்டிறே இவை. "நின்னலாலிலேன்காண்", "பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ", "கிறிசெய்தென்னைப் புறத்திட்டு இன்னங் கெடுப்பாயோ", "யஸ்ய ஸஹஸ்ரஶீர்ஷேக நிரயோயஸ்யாவிநா" என்றிறே பகவத்விஷயத்தில் கை வைத்தார் படி. [தமர் இத்யாதி] - தமர் - ஜ்ஞாதிகள். உற்றார் - ஸம்பந்திகள். [தலைத்தலைப் பெய்து] - மேல் விழுந்து மேல் விழுந்து; "தமர்கள் தமர்கள் தமர்களாம்" என்றிறே இவர் இருப்பது. [ஏமாறிக் கிடந்து அலற்றும்] - ஏ என்று ஏக்கமாய், அது மாறி, வாய் மாறாதே கூப்பிடுமென்னுதல். ஏமாற்றமென்று முழுச்சொல்லாய், துக்கப்பட்டுக் கூப்பிடும் என்னுதல்; "ஏமாற்றமென்னைத் தவிர்த்தாய்" என்னக் கடவதிறே. "கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண்பனிசோர நின்றால்" என்றிறே இவர் கூப்பிடுவது. [இவை] - ஶரீரவிஶ்லேஷத்தை விநாஶம் என்றும், அர்த்தஹாநியைக் கேடாகவும், ஜ்ஞாதிகளையும் ஸம்பந்திகளையும் உடன்கேடராகவும் இவை எங்கே தேடிக் கொண்டார்கள்? இது என்ன லோகயாத்ரை? ஸம்ஸாரிகள்படி கொண்டு கார்யமென்? உம்முடைய இழவுபேறு நாமேயாம்படி பண்ணினோமே என்ன, [ஆமாறொன்று அறியேன் நான்] - ஸம்பந்தம் ஒத்திருக்க அவர்களுக்கு அப்படிப்படவேண்டிற்று, ஶரீரஸம்பந்தத்தாலே யன்றோ? எனக்கும் அது கிடந்தபின்பு நானும் எதுக்குக் கூப்பிடப் புகுகிறேனென்று அறியாநின்றேனோ?

*இவர்கள் உஜ்ஜீவிக்கும் உபாயம் அறிகிறிலேன் என்றுமாம். துக்கநிவ்ருத்திக்கு உபாயம் நான் ஒன்றும் அறிகிறிலேன் என்றுமாம். [அரவணையாய்] - இவற்றினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளினவனே! [அம்மானே]-இவற்றி னுடைய ரக்ஷணம் உன் பேறும்படியான குடல்துடக்கை யுடையவனே! [கூமாறே விரை கண் டாய்] - கிட்டவந்து கண்வளர்ந்தருளுகிற பின்பு என்னை அழைத்துக் கொள்ளும் ப்ரகாரத்திலே த்வரிக்கவேணும். [அடியேனைக் குறிக்கொண்டே] - ஸம்ஸாரிகள் க்லேசம் பொறுக்கமாட் டாத என் வாசியைத் திருவுள்ளம்பற்றி, நம்மோட்டை ஸம்பந்தத்தை அறிவித்த பின்பு பாரார்த்தம் பொறுக்கமாட்டா னென்று திருவுள்ளம் பற்றி.*

ஈடு.—இரண்டாம்பாட்டு. "எண்ணாராத்துயர்" என்று திரளச்சொன்னார், முதற் பாட்டிலே; அவற்றிலே சிலவகைகளைச் சொல்லி விஷண்ணராய், 'இவர்கள் துக்கத்தைப் போக் காயாகில் என்னை உன் திருவடிகளிலே அழைத்தருளவேணும்' என்கிறார்.

[சாமாறும் கெடுமாறும்] - சாம்படியும் கெடும்படியும்: இதுக்குமேற்பட இவற்றிலே சிலப்ரகாரங்களு முண்டோ? என்னில்;— உருவ ஒருபடிப்பட ஜீவிக்கக்கடவனாகவும், தன்னோ டொக்க ஜீவிப்பாரை அழியச்செய்யக்கடவனாகவும் கோலிக்கொண்டு போராநிற்க, நினைவற முடிந்துகொடு நிற்கும்படியும்; நாலு சின்னம் கைப்பட்டவாறே 'நமக்கு இனிஉள்ளதனையும் ஜீவிக் கைக்கு ஒருகுறையில்லை' என்று நினைத்திருக்கச்செய்தே, அத்தையிழந்து க்லேசப்பட்டுக் கூப்பி டும்படியும் இவை. இவர்கள் இப்படிநோவுபடுகைக்கு வேறே சில உண்டாயிற்று; * "நின்னலா லிலேன்காண்" என்றும், † "பலநீகாட்டிப்படுப்பாயோ", ‡ "இன்னம்கெடுப்பாயோ" என்றும் பகவதலாபம் விநாசஹேது வென்றும், இதரவிஷயதர்சநம் அநர்த்தஹேது வென்று மாயிற்று, இவர்இருப்பது. 'இவர்கள் இவையொழியவிநாசமும் அநர்த்தமும் எங்கே தேடிக்கொண்டார்கள்? "என்னொருவர் தீக்கதிக்கண்செல்லும்திறம்"என்னுமவர்களிறே,இவர்கள்."குருஷ்வ"(குருஷ்வ) என்றும், "யஸ்த்வயாஸஹஸஸ்வர்க்க:" (யஸ்த்வயாஸஹஸஸ்வர்க்க:) என்றும் இவை விநாசமும் அநர்த்தமுமாகவிறே இவர்கள் நினைத்திருப்பது. [கெடுமாறும்] - தன் விநாசத்தையும் இசையும்,

---

*இரண்டாம்பாட்டு - சாமாறும் இத்யாதி. அடியே தொடங்கி, 'கூமாறேவிரைகண்டாய்' என்னு மளவும் கடாக்ஷித்து அவதாரிகை - எண்ணாராத்துயர் இத்யாதி. திரள - ஸமுதாயேந.*

*இதுக்கு மேற்பட - சாவுக்கும் கெடுகைக்கும் மேற்பட. அதாவது - சாவதும் கெடுவதுமென்றால் போராதோ? 'ஆறு' என்று ப்ரகார மென்கிறதுக்குக் கருத்தேது? என்னி லென்றபடி. உருவ - அநேக காலம். ஒருபடிப்பட - து:கமிச்ரமன்றிக்கே ஸுகமேயாம்படி. சின்னம் - காசு. உள்ளதனையும் - மேலு ள்ள காலமெல்லாம். இவை - ப்ரகாரங்கள். இவர்களை க்ஷேபிக்கைக்குத் தம் படி யேது? என்ன, இவர் கள் - இத்யாதி. இவர்கள் - ஆழ்வார்கள். 'இவர்கள்' என்னும்படியான ஏற்றம் ஏதுஎன்ன? நின்னலால் - இத்யாதி. 'சாமாறும் கெடுமாறும்' என்றவருடைய ஹார்த்தபாவம் - இவர்களிவையொழிய இத்யாதி. தாங்கள்போகிறதே மார்க்கமாய், 'அல்லாதது அமார்க்கம்' என்றிருப்பர்களோ? என்ன, என்னொருவர் - இத் யாதி. ஒருவர் துர்மார்க்கங்களிலே சென்று விழுகிற ப்ரகாரம் என்னுயிருக்கிறதோ? இதி பாசுரார்த்த:. முதல்திருவந்தாதி தொண்ணூற்றைந்தாம்பாட்டு, "நாவாயிலுண்டே" இத்யாதி. பகவதலாபம் விநாசம் இதரவிஷயதர்சநம் அநர்த்த மென்றதுக்கு ப்ரமாணங்கள் - குருஷ்வ இத்யாதி. "வைதேஹ்யா ந விநா" என்றதே இங்கு வேண்டுவது. "யஸ்த்வயாஸஹஸஸ்வர்கோ நிரயோயஸ்த்வயாவிநா | இதி ஜாநந் பராம் ப்ரீதிம் கச்ச ராமமயாஸஹ" இத்யயோத்யாகாண்டே ராமம்ப்ரதி ஸீதா. குருஷ்வ - இத்யாதி லக்ஷ்மணவாக்யம். யஸ்த்வயா ஸஹஸஸ்வர்க்க: என்றதுக்கு "நிரயோயஸ்த்வயாவிநா" என் றதிலே நோக்கு. வைதர்ம்யம் - உம்மைப்பிரிந்து தரிக்கையாகிற பாபம். கெடுமாறும் சாமாறும் என்னா தே, சாவுக்கநந்தரம் கேட்டைச் சொல்லுவானென்? என்ன, தன்விநாசத்தையும் - இத்யாதி. சாவிலும்*

---

* திருவாய்மொழி உ, ௩, எ. † ஷை ச, க, கூ. ‡ ஷை ஷை ஷை அ.

கையிலகப்பட்ட த்ரவ்யம் தப்பினால்; அத்தையேயிறே இவன் தஞ்சமாக நினைத்திருப்பது. ஒருத்தனை 'ராஜத்ரோஹி' என்று கையையும் காலையும் தறிக்க, இவனை வினவப்புகுந்தவர்கள், 'இப்படிப்பட்டதாகாதே' என்ன, 'ஆயிரம், ஐந்நூறென்று சிலகாசு தா' என்னாதே இவ்வளவோடே போயிற்று, உங்களநுக்ரஹமிறே' என்றானும். [தமருற்றார்] - இதொழியவே வேறே "தமர்கள் தமர்கள் தமர்கள்" என்று ஒரு உறவுமுறை உண்டாயிற்று இவர்க்கு; அங்ஙனன்றிக்கே, ஶரீரஸம்பந்தநிபந்தநமாக வந்தவர்களாய் 'ஜ்ஞாதிகள்' என்றும், 'ஸம்பந்திகள்' என்றும் சிலரை உறவாக நினைத்து நிர்ப்பரராயிருப்பர்களாயிற்று. [தலைத்தலைப்பெய்து] - மேல்விழுந்து மேல்விழுந்து. [ஏமாறிக்கிடந்தலற்றும்] - ஏவென்று - ஏக்கமாய், மாறுகை - தவிருகையாய், ஏங்காதே கூப்பிட்டென்னுதல்; அன்றியே, 'ஏமாற்றம்' என்று ஒருசொல்லாய், அதாவது - து:கமாய், து:கித்துக் கிடந்து கூப்பிட்டு என்னவுமாம். 'ஏவென்று - தெளிவு; ஏமாறுகை - தெளிவழிகை' * (என்று 'கலங்கிக் கூப்பிடாநிற்பர்கள்') என்று பிள்ளையமுதனார் பணிப்பர். "ஏமாற்றமென்னைத்தவிர்த்தாய்" என்னக்கடவதிறே. [இவையென்னவுலகியற்கை] - இதொரு லோகயாத்ரை இருக்கும்படியென்? ஜீவிக்க மநோரதியாநிற்க முடிவது; நாலுகாசு கையிலே யுண்டானவாறே 'இது நமக்குஉண்டு' என்றிருக்க, அது நசித்துப்போவது; ஶரீரஸம்பந்தநிபந்தநமாய் வருகிறவர்களையே தனக்கு ஸர்வவிதபந்துவுமாக நினைத்து, இவற்றுக்கு ஒன்று வந்தவாறே 'பட்டேன், கெட்டேன்' என்று கூப்பிட்டுஅலற்றுகிற இதுவும் ஒரு லோகயாத்ரையே பிரானே! என்கிறார். 'அவர்கள் என்படில் நல்லதுஉமக்கு? நீர் நம்மையே சொல்லிக்கூப்பிடும்படி பண்ணினோமே! "சீலமில்லாசிறிய"னில் கூப்பீடன்றோ உம்மது?' என்ன, [ஆமாறொன்றறியேன்நான்]-அவர்கள்தான் கூப்பிடுகிறது உன்னோடு ஸம்பந்தமில்லையாயோ? ப்ரக்ருதியோடே யிருக்கையாலேயன்றோ, அது என்னைத் தவிர்த்தாயோ? இவ்வுடம்பு கிடக்கையாலே, 'இன்னதுக்கு நான் கூப்பிடப்புகுகிறேன்' என்று அறியாநின்றேனோ? அன்றிக்கே, 'ஸம்ஸாரிகளுடைய இந்த து:கநிவ்ருத்திக்கு விரகேதோ?' என்று அறிகிறிலேனென்னுதல். 'நீஎனக்குப் பண்ணித்தந்த வாசி நான் இவர்களுக்குப் பண்ணிக் கொடுக்கும் விரகேதோ?' என்று அறிகிறிலேன்.

[அரவணையாய்அம்மானே] - இவற்றினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருவநந்தாழ்வான் மேலே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி, இவற்றினுடைய ரக்ஷணம் உன்பேறும்படியான குடல்துடக்கையுடையவனே! மெய்யான குடல்துடக்கிறே இவற்றுக்கு இவனோடு. இவனுடைய

---

தந்நாசமே து:கமாயிருக்குமென்று கருத்து. அதுக்குஹேது - அத்தையேயிறே இத்யாதி. "தஞ்சமாக நினைத்திருப்பது" என்றதுக்கு ஸம்வாதம் - ஒருத்தனை இத்யாதி. தறிக்க - சேதிக்க. வினவ - பராமர்ஶிக்க. இதொழிய - இத்தமர்களையும் உற்றார்களையும் ஒழிய. உறவுமுறை - பந்துத்வப்ராப்தி. தமர் - ஸம்பந்திகள். உற்றார் - ஜ்ஞாதிகள். "ஏமாறி" என்றதுக்கு அர்த்தத்ரயம் - ஏங்காதே யென்னுதல், து:கித்தென்னுதல், கலங்கி யென்னுத லென்று. முந்தினது - ஏவென்று இத்யாதி. மூன்றாமர்த்தம் - ஏவென்றுதெளிவு இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு ப்ரமாணம் - ஏமாற்றம் இத்யாதி. என்து:கத்தைப் போக்கின யித்யர்த்த. பெரியாழ்வார் திருமொழி. (௨,௭,௮.) 'இவை' என்றபஹுவசநார்த்தம்-ஜீவிக்க இத்யாதி. கூப்பிடும்படிபண்ணினதுக்கு நியாமகம்-சீலமி இத்யாதி. "ஆம்ப்ரகார மொன்றுமறியேன்" என்றவருடைய ஹார்த்தஹாவம்-அவர்கள்தான் இத்யாதி. ஆழ்வான்நிர்வாஹத்திலே அருளிச்செய்கிறார் - அன்றிக்கே இத்யாதி. கீழ்வாக்ய விவரணம் - நீஎனக்கு இத்யாதி.

குடல்துடக்கு - சரீரஸம்பந்தம். ரஸோக்தி - மெய்யான இத்யாதி வாக்யத்வயம். ஸத்யமான வென்று சாடு. சரீரமானவென்று ப்ரக்ருதார்த்தம். குடல்துடக்கு-ஶரீரஶரீரிஹாவஸம்பந்தம். இவனுடைய இத்யாதி "மெய்யான" என்றத்தோடே ப்ராஸங்கிகமாகச் சேர்ந்தது. க்ருஷ்ணாவதாரத்தில் - பொய். அதாவது - "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுக்கை. மெய் - ராமாவதாரத்தில் மெய். அதாவது - அபயப்ரதாநவ்ருத்தார்த்தம். மெய் பொய்யென்று சேதநாசேதநங்களைச் சொல்லி, அவை ரக்ஷணத்துக்கு விஷயமென்று சொல்லுதல்; அசேதநத்துக்கு ரக்ஷணமாவது - ஸ்திதி; ஸத்யாந்ருதங்களென்று சாடு; பொய்யோடு மெய்

---

* குண்டலிதத்ரந்தம் க்வாசித்கமென்பர்.

போய்யோடு மெய்யோடு வாசியற இவனுக்கு இரண்டும் உடலாயிருக்கும் ரக்ஷிக்கைக்கு. [கூமாறே விரை] - ஸுலபனாய் இவற்றினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே கூக்குரல் கேட்கைக்காகக் கிட்டிவந்து கிடக்கிற நீ, நான் உன் திருவடிகளை வந்துகிட்டும்படி என்னை அழைத்துக்கொள்கையிலே விரையவேணும். இப்படி விரைய வேண்டுகிறதேன்? என்னில்,—[கண்டாய்] - என்னைக்கண்ட உனக்கு விரையாதே யிருக்கலாயிருந்ததோ? பாராயென்று தம் வடிவைக் காட்டுகிறார். "ஏஹி பஶ்ய ஶரீராணி" (ஏஹிபஶ்யஶரீராணி) என்னுமாபோலே. ஆனாலும் அநாதிகாலம் நீர் பிரியில் தரியாதே போந்த உடம்பும் உற்றாருமன்றோ என்ன, [அடியேனைக் குறிக்கொண்டே] - இந்த லோகயாத்ரையால் செல்லாதபடியாயிருக்கிற என்வாசியைத் திருவுள்ளம்பற்றி யருளவேணும். உன் திருவடிகளில் ஸம்பந்தமறிந்தவன்று தொடங்கி உன்னோபாதி பரானர்த்தம் பொறுக்கமாட்டாதபடியான என்வாசியைத் திருவுள்ளம்பற்றியருளவேணுமென்னுதல். "கூமாறே விரைகண்டாய்" என்னுங்காட்டில் - பரானர்த்தம் பொறுக்கமாட்டாரேன்னுமிடம் தோற்றுமோ? என்னில்;— இவையென்ன உலகியற்கையென்று இந்த லோகயாத்ரையை அநுஸந்தித்து வெறுத்து, என்னை அங்கே அழைக்கவேணுமென்கையாலே தோற்றுமிறே. (௨)

## மூன்றாம் பாட்டு.

கொண்டாட்டும்குலம்புனைவும் தமருற்றார்விழுநிதியும்
வண்டார்பூங்குழலாளும் மனையோழியவுயிர்மாய்தல்
கண்டாற்றேனுலகியற்கை கடல்வண்ணா! அடியேனைப்
பண்டேபோற்கருதாது உன்னடிக்கேகூய்ப்பணிகொள்ளே.

*ஆ.—(கொண்டாட்டும்.) மரணதஶையிலும் "ஸம்பாவநாபிஜநஜ்ஞாதி பந்துபுத்ர களத்ரபவநாதிகளை யிழந்தோம்" என்று விஷண்ணராய், உன் திறத்துப் படாதே யிருக்கிற இந்த லோகத்தாருடைய ப்ரக்ருதியைக் கண்டு நான் படுகிற வ்யஸநம், உன்னைப்பிரிந்து நான் பண்டு பட்ட வ்யஸநம்போ லன்று; அதிதுஸ்ஸஹமாங்கிடாய். அபரிச்சேத்ய மாஹாத்ம்யனானவனே! இந்த வ்யஸநத்தில்நின்றும் ஈண்ட உன் திருவடிகளிலே கூவிப் பணிகொண்டருளவேணும் என்கிறார்.*

*ஓ.—மூன்றாம் பாட்டில், ஜந்துக்கள் ஆபிஜாத்யாதிகளெல்லாம் கிடக்க முடிகிற படியைக் கண்டு ஒன்றும் பொறுக்க மாட்டுகிறிலேன்; இத் துக்கங்களை அநுஸந்திக்க வேண்டாத உன் திருவடிகளிலே அழைத்து அடிமை கொள்ளவேணும் என்கிறார்.*

---

*யோ டென்றது - "ஸத்யாஸத்யே" என்றத்தைப்பற்ற.* **போய்யோடு** *- நாஸ்திஶப்தவாச்யமான அசித்தோடு.* **மெய்யோடு** *- அஸ்திஶப்தவாச்யமான ஆத்மவஸ்துவோடு.* **உடலாயிருக்கும்** *- சரீரமாயிருக்குமென்றும், ஹேதுவாயிருக்குமென்றும் அர்த்தத்வயம் கண்டுகொள்வது. 'அரவணையாய் - கூமாறேவிரை' என்றதுக்குபாவம் - ஸுலபனாய் இத்யாதி. 'கண்டாய்' என்றதுக்குஸம்வாதம்-ஏஹீத்யாதி. "ஏஹி பஶ்ய ஶரீராணி முநீநாம் பாவிதாத்மநாம் | ஹதாநாம் ராக்ஷஸைர் கோரைர் பஹூநாம் பஹுதா வநே" இத்யாரண்யகாண்டே ராமம்ப்ரதி தண்டகாரண்யவாஸிநோ முநய:.* **வாசியாவது**-*மயர்வற மதிநலம்பெறுகை. ஆழ்வான்நிர்வாஹத்திலே அருளிச்செய்கிறார்-உன்திருவடிகள் இத்யாதி. ஜிஜ்ஞாஸா ப்ரஸங்கத்தை உபக்ஷேபித்துப் பரிஹரிக்கிறார் - கூமாறேவிரை இத்யாதி.* **கூமாறே** *- அழைக்கும்படி.* **குறிக்கொண்டு** *- துஃகஸஹனல்லேனென்று திருவுள்ளம்பற்றி. அரவணையாயம்மானே, சாமாறுமென்று தொடங்கி, ஆமாறொன்றறியேன் நான்; அடியேனைக்குறிக்கொண்டு - கூமாறேவிரைகண்டா யித்யந்வய:* (௨)

[கொண்டாட்டும் என்று தொடங்கி] - ஶ்லாகையும் ஆபிஜாத்யமும் ஜ்ஞாதிகளும் ஸம்பந்திகளும் சீரியநிதியும் அத்யந்தபோக்யையான ஸ்த்ரீயும் இஸ் ஸம்பத்துக்கு ஈடான க்ருஹமும் இவையெல்லாம் கிடக்கத் தான் மாய்ந்து போம்படியான இந்தலோகயாத்ரையைக் கண்டு தரிக்கமாட்டுகிறிலேன். [கடல்வண்ணா என்று தொடங்கி] - இவர்கள் து:கோநுஸந்தாநத்தாற் படுகிற வ்யஸநம் உன்னைப் பிரிந்து நான் படும் வ்யஸநத்தோர்பாதியாக நினையாதே என்னுடைய க்லேஶம் தீர ஶ்ரமஹரமான உன்னுடைய வடிவைக் காட்டு.

ப.—அநந்தரம், தாங்கள் நன்மையாக நினைத்திருக்கிறவை யொழிந்துபோகத் தாங்கள் நசிக்கும்படி கண்டு பொறுக்கமாட்டுகிறிலேன்; அபரிச்சிந்ந ஸௌந்தர்யனான உன் திருவடிகளிலே அழைத்து அடிமைகொள்ளவேணும் என்கிறார்.

கொண்டாட்டும் - ஸம்பத்தடியாக நாட்டார் ஆரோபித்துச் சொல்லும் கொண்டாட்டமும், குலம்புனைவும்-(இல்லாத குலத்தை யேறிட்டுக்கொண்ட) ஆபிஜாத்யாபிமாநமும், தமர்-(ஐஶ்வர்யம் கண்டு வந்த) ஜ்ஞாதிகளும், உற்றார் - ஸம்பந்திகளும், (இதுக்கடியான) விழுநிதியும் - சீரிய அர்த்தஸஞ்சயமும் - (அதடியாக ஸ்வீகரித்த) வண்டு ஆர் பூ குழலாளும் - வண்டு நிறைந்த மாறாத குழலையுடையளாகையாலே போக்யபூதையான ஸ்த்ரீயும், மனை-போகஸ்த்தாநமாம்படி விலக்ஷணமாக எடுத்தமனையும், ஒழிய - (தன்னைவிட்டுக்) குறியழியாமலிருக்க,உயிர் மாய்தல் - ப்ராணவிநாஶம் பிறக்கையாகிற, உலகியற்கை – இந்த லோகயாத்ரை, கண்டு - கண்டு, ஆற்றேன் - பொறுக்க மாட்டுகிறிலேன்; கடல்வண்ணா - கடல்போல அளவிறந்த வடிவழகை யுடையவனே! அடியேனை -(உன் வடிவழகுக்குத் தோற்று) அடிமைபுகுந்த என்னை, பண்டே போல்-(உன்னைப்பிரிந்து கூப்பிட்ட) பண்டுபோலே, கருதாது - நினைத்திராதே, உன் அடிக்கே - உன் திருவடிகளுக்கேயாம்படி, கூவி-அழைத்து, பணிகொள் - அடிமை கொண்டருளவேணும்.

இ.—மூன்றாம்பாட்டில், ஆபிஜாத்யாதிகளெல்லாங் கிடக்க முடிகிறபடியைக் கண்டு பொறுக்கமாட்டுகிறிலேன்; து:கக்கந்தமில்லாத உன் திருவடிகளிலே அழைத்து அடிமைகொள்ளவேணும் என்கிறார்.

[கொண்டாட்டும்]-அவஸ்துவாய்ப் போந்தானொருவன் ஜீவிக்கப்புக்கவாறே, பிள்ளை, முதலியார் என்பர்கள்: "பயிலுந்திருவுடையார் என்றிறே" இவர் கொண்டாடும் விஷயம். [குலம்புனைவும்] - ஜீவிக்கப் புக்கவாறே ஒரு வம்ஶமுண்டாக்கிப் புகழத் தொடங்குவர்கள். குலந்தரும் வித்யையாலுண்டான வம்ஶமிறே இவர்க்கு வம்ஶமாயிருப்பது. [தமர்] - இவனோட்டை ஸ்பர்ஶத்தை மறைத்துத் திரிந்தவர்கள் இவன் ஜீவிக்கப்புக்கவாறே உறவு சொல்லத் தொடங்குவர்கள். [உற்றார்] - முன்பு ஸம்பந்தம் பண்ணத் தரம் போராது என்று இருந்தவர்கள் மேல் விழுந்து ஸம்பந்திக்கத் தேடுவர்கள். [விழுநிதியும்] - சீரியநிதியும்; இதுக்கு எல்லாவற்றுக்கும் அடி-சருகிலே திரண்டாற்போலே திரண்ட தநம். [வண்டார் பூங்குழலாளும்] - தநம் மிக்கவாறே செய்வது அறியாமை ஸ்த்ரீயை ஸம்பாதிக்கும். போக யோக்யையான ஸ்த்ரீயும். "சேலேய் கண்ணியரும்" என்கிறபடியே இவையெல்லாம் ஒருவிஷயமிறே தமக்கு. [மனை] - தன் இயற்றியெல்லாம் கொண்டு பலநிலமாக அகத்தை எடுக்கும். [ஒழிய உயிர் மாய்தல்] - இவை குறியழியாதிருக்கத் தாம் முடிந்துகொடு நிற்கும். [கண்டு ஆற்றேன் உலகியற்கை] - ஸம்ஸாரிகள் பாரிப்பும், இவர்கள் முடிந்து கிடக்கும்படியும் கண்டு என்னாற் பொறுக்கப் போகிறதில்லை. [கடல்வண்ணா] - இவர்களுடைய து:கோநுஸந்தாநத்தால் வந்த க்லேஶம் தீர ஶ்ரமஹரமான உன் வடிவைக் காட்டியருளாய். [அடியேனை] – ஸ்வரூபஜ்ஞாநமுடைய என்னை. [பண்டேபோல் கருதாது]-முன்பு உன்னையிழந்த க்லேஶம்;இப்போது அவைஷ்ணவஸஹவாஸத்தாலே வந்த க்லேஶமன்றோ? முன்பு என் இழவு; இப்போது பராநர்த்தம் பொறுக்கமாட்டாத க்லேஶம். இவர்க்

காகில், சேர்க்கைப்பல்லிபோலே இது பணி யென்று இருக்கவொண்ணாது என்கிறார். [உன் அடிக்கே கூய்ப் பணிகொள்ளே] - உன் திருவடிகளிலே அழைத்து அடிமை கொண்டருள வேணும்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. ஆபிஜாத்யாதிகளெல்லாம் கிடக்க, இவை முடிகிறபடியைக் கண்டு பொறுக்கமாட்டுகிறிலேன்; துஃகஸந்தமில்லாத உன் திருவடிகளிலே அடிமைகொள்ளவேணும் என்கிறார்.

[கொண்டாட்டும்] - முன்பு 'இன்னான்' என்று அறியவொண்ணாதபடி அவஸ்துவாய்ப் போந்தானொருவன் அல்பம் ஜீவிக்கப்புக்கவாறே 'முதலியார்' என்றாற்போலே சொல்லுவர்கள். "பயிலுந்திருவுடையார்" என்றிறே தாங்கள் கொண்டாடும் விஷயம். [குலம்புனைவும்] - ஜீவிக்கப்புக்கவன்று தொடங்கி இவனுக்கு ஒருகுல முண்டாகத் தொடுத்துச் சொல்லுவர்கள். [தமர்] - "அவன்தமர்" என்று இவர்களுக்குத் தமர் புறம்பேயிறே. முன்பு 'இவனோடு நமக்குஒருறவு உண்டாகச் சொல்லுமது நமக்குச் சாலத்தண்ணிது' என்று போனவர்கள், இவன் ஜீவித்தவாறே உறவு சொல்லிக்கொடுவேந்து கிட்டுவர்கள். [உற்றார்] - முன்பு 'இவனோடு ஸம்பந்திக்கை தரமன்று; நிறக்கேடாம்' என்று போனவர்கள் இப்போது 'இவனோடே ஒருஸம்பந்தம் பண்ணினோமாகவல்லோமே' என்று ஆதரித்து மேல்விழாநிற்பர்கள். [விழுநிதியும்] - நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே சருகிலை திரளுமாபோலே சீரிய நிதி வாராக் கைப்புகுரும்; அதுக்குப் போக்கடி காணாமையாலே செய்வதறியாமை அத்தையிட்டு ஒருஸ்த்ரீயை ஸ்வீகரிக்கும். அவள்தான் - வண்டார் பூங்குழலா ளாயிற்று. இவள்சேவ்வி வண்டே புஜித்துப்போமித்தனை போக்கித் தான் புஜிக்கமாட்டான். போகயோக்யதை யில்லாத பருவத்திலேயாயிற்று ஸ்வீகரிப்பது. சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய்தந்தையும் இவையெல்லாம் ஏகவிஷயமிறே தமக்கு. [மனையொழிய] - அவளுக்கும் தனக்கும் ஏகாந்தமாக அநுபவிக்கைக்கு, தன் இயற்றியெல்லாங்கொண்டு பலநிலமாக அகத்தை யெடுக்கும். [உயிர்மாய்தல்]-இவை குறியழியாதிருக்க, இவனைக் கூட்டோடேகொடுத்து, இப்படி பாரித்த தான் முடிந்துகொடுநிற்கும். [கண்டாற்றேன் உலகியற்கை] - இப்படிப்பட்ட லோகயாத்ரை என்றால் பொறுக்கலாயிருக்கிறதில்லை.

---

*மூன்றாம்பாட்டு* - **கொண்டாட்டும்** *இத்யாதி. பாட்டெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை* - **ஆபிஜாத்யாதிகளெல்லாம்** *இத்யாதி. 'விஶோகஃ' இத்யாதியைப்பற்ற 'உன்' என்றதுக்கு ஸாவம்* - **துஃகஸந்தமில்லாத** *என்று.*

**இன்னான்** - *ஏவம்விதஃ. என், இது கொண்டாட்டமன்றோ?* **என்ன; பயிலுந்திருவுடையார் இத்** *யாதி. அதாவது - 'ஸர்வேஶ்வரனடியார்கள்' என்று அவர்களைக் கொண்டாடவேண்டியிருக்க,* **இவர்கள்** *ஒரு கொண்டாட்டத்தை உண்டாக்கிக்கொள்வதே யென்று கருத்து.* **குலம்புனைவும்** - *குலம் தொடுக்கையும். வித்யையாலுண்டான வம்ஶமிறே, இவர்க்கு வம்ஶம்.* **தமர்** - *ஜ்ஞாதிகள். ப்ரதிகோடியாக ஸாவம்* - **அவன்தமர் இத்யாதி.** *பதப்ரயோகத்துக்கு ஸாவம் -* **முன்பு** *இத்யாதி.* **முன்பு** - *தாரித்ர்யகாலத்திலே.* **உறவு** - *ஜ்ஞாதித்வேந ஸம்பந்தம்.* **தண்ணிது** - *தாழ்வு.* **உற்றார்** - *பந்துக்கள்.* **தரம்** - *அதிசயம்.* **விழுநிதி** - *சீரியநிதி.* **சீரிய** - *ஶ்ரேஷ்ட்டமான.* **வாரா** - *வந்து. செய்வதறியாமையாவது - 'நாமோ வ்ருத்தனாயிருக்கிறோம், நமக்கு ஒரு ஸ்த்ரீயை ஸ்வீகரித்தால் போகயோக்யதை யில்லை; அதில் ஒருதர்மத்தைப்பண்ணி உஜ்ஜீவிப்போம்' என்கையின்றிக்கே, இத்தையிட்டு ஒரு ஸ்த்ரீயை ஸ்வீகரிக்கு மென்றபடி. "வண்டார் பூங்குழலாள்" என்று விசேஷிக்கிறதுக்குத் தாத்பர்யம்-* **இவள்சேவ்வி** *இத்யாதி. தான் புஜிக்கமாட்டாமைக்கு ஹேதுஎது?* **என்ன, போகயோக்யதை** *இத்யாதி. அதாவது - வ்ருத்தனானால் யோக்யதை யில்லையிறே. கீழுக்கத்துக்கெல்லாம் ப்ரதிகோடி* - **சேலேய்கண்ணியரும்** - *இத்யாதி.* **இயற்றி** - *சக்தி.* **பலநிலமாக** - *உபரிகைமேல் உபரிகையாக. 'வலநிலமாக' என்று பாடாந்தரமானபோது - தளத்தின்மேல் தளமாக வென்றபடி; அர்த்தமொன்றே. இவை குறியழியாதிருக்க வென்றது - 'கொண்டாட்டும்'* **இத்யாதிகளை.** **கூட்டோடே** - *அவனுடைய சரீரத்தோடே; கூண்டோடே என்று பாடமானாலும்* **அர்த்தம் இதுவே. கண்டு ஆற்றேன்** - *கண்டு*

[கடல்வண்ணா] - இந்த லோகயாத்ரையின்படி யன்றிக்கே அநுபவிக்கலாவதும் ஒருபடியுண்டே. இவர்கள் து:காநுஸந்தாநத்தால் வந்த க்லேஶந் தீர ஶ்ரமஹரமான உன்வடிவைக் காட்டியருளாய். [அடியேனைப் பண்டேபோல் கருதாது] - "போய்நின்ற ஞான"த்தில் "இந்நின்றநீர்மை யினியாமுறாமை" என்றவளவாக என்னைத் திருவுள்ளம்பற்ற வொண்ணாது. இதர விஷயங்களினுடைய தோஷதர்ஶநம் பண்ணிச் சொல்லுகிறவளவன்றிறே, பகவத்விஷயத்தில் அவகாஹித்துச் சொல்லுகிறது. சிற்றாள்கொண்டார், 'இவர்க்காகில் இது சேர்க்கைப்பல்லிபோலே பணியன்றோ என்றிருக்கவொண்ணாது' என்றாராம். அன்றிக்கே, கீழ் உன்னைப்பிரிந்து நான் கூப்பிட்ட அவ்வளவாக நினைக்கவொண்ணாது, பராநர்த்தங்கண்டு கூப்பிடுகிற இத்தை. [உன்இத்யாதி] - உன் திருவடிகளிலே அழைத்து என்னை அடிமைகொண்டருளவேணும். உன் திருவடிகளிலே அழைத்தாலும், அடிமைச்சுவடுஅறியிலிறே நான் மீளாதொழிவது; ஆனபின்பு, என்னை நித்ய கைங்கர்யங் கொண்டருளவேணும். [கூய்ப்பணிகொள்ளே] - 'சோற்றையிட்டுப் பணிகொள்' என்னுமாபோலே. (௩)



## நான்காம் பாட்டு.

கொள்ளென்றுகிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம்நெருப்பாகக்
கொள்ளென்றுதமம்மூடும் இவையென்னவுலகியற்கை?
வள்ளலே! மணிவண்ணா! உனகழற்கேவரும்பரிசு
வள்ளல்செய்தடியேனை உனதருளால்வாங்காயே.

*ஆ.—(கொள்ளென்று.) உன்னை ஆசைப்படாதே, அதிக்ஷுத்ரமாய் அநர்த்தகரமாயிருந்த ஐஶ்வர்யத்தை ஸ்வாஜ்ஞதையாலே ஆசைப்படுகிற இந்த லௌகிகரோடு எனக்குள்ள ஸஹவாஸத்தைத் தவிர்த்து, பரமோதாரனே! பரமகாருண்யத்தாலே ஆஶ்ரிதஸுலபனானவனே! உன்னுடைய பரமௌதார்யத்தாலும் பரமகாருண்யத்தாலும் அடியேனை உனகழற்கே வரும் பரிசு வாங்கியருளவேணும் என்கிறார்.*

*ஒ.—நாலாம்பாட்டில், அதிஸம்ருத்தமான ஐஶ்வர்யமே தங்களுக்கு அநர்த்தஹேதுவாயிருக்கச்செய்தே பின்னையும் அத்தை ஆசைப்படுகிற லோகத்தினுடைய பொல்லாங்கை அநுஸந்தித்து இத்து:காநுஸந்தாநகந்தமில்லாத உன் திருவடிகளிலே என்னைக் கொண்டுபோகவேணும் என்கிறார்.*

---

பொறுக்கமாட்டுகிறிலேன். 'கடல்வண்ணா' என்றதுக்கு, எம்பார்ஆழ்வான் நிர்வாஹங்களைப்பற்ற ஸாவத்வயம்- இந்த லோகயாத்ரை இத்யாதி வாக்யத்வயமும். படி - ப்ரகாரமும், திருமேனியுமென்று சாடு. 'கடல்வண்ணா' என்றத்தைக் கடாக்ஷித்து ஸாவம் - போய்நின்ற இத்யாதி வாக்யத்வயம். வாசிதன்னைக் காட்டுகிறார் - இதரவிஷயங்களின் இத்யாதி- உக்தத்துக்கு ஆப்தஸம்வாதம்-சிற்றாள்கொண்டார் இத்யாதி. சேர்க்கைப்பல்லி - நிலைப்பல்லி. சேர்க்கைப்பல்லியானது ஒருவிடத்திலே பலகாலும் சொல்லிக்கொண்டிருக்கும்; அந்தப்பல்லிபோலே இதுபணியன்றோ வென்றிருக்க வொண்ணா தென்றா ரென்றபடி. ஆழ்வான் நிர்வாஹத்துக்கு அநுகுணமாக அருளிச்செய்கிறார் - அன்றிக்கே இத்யாதி. உன்னடிக்கே கூவாயென்னாதே 'பணிகொள்' என்றதுக்குக் கருத்தேது? என்ன்-உன்திருவடிகளிலே யழைத்தாலும் இத்யாதி. "கூய்ப்பணி கொள்" என்றதுக்கு ஸாவாந்தரம் - சோற்றையிட்டு இத்யாதி. பரமபதத்திலே யழைத்துக் கைங்கர்யம் கொள்ளவேணுமென்று - மூந்தினது; இரண்டாவது, கூவுதல் - ஏவுதலாய், ஏவிப்பணிகொள்ளவேணுமென்று. அதாவது - வார்த்தை தாரக மென்றபடி. தமர் - தமரும், உற்றார் - உற்றாரும், மனை - மனையும். ஒழிய - தன்னைவிட்டுக் குடியழியாமலிருக்க. பண்டேபோல் கருதாது - உன்னைப்பிரிந்த பண்டுபோலே நினைத்திராதே. க்ரமேண அந்வய:.

(௩)

[கொள் என்று தொடங்கி] - ஒருகாலுக்கு ஒருகால் ஸம்ருத்தமான ஸம்பத்து அநர்த்தஹேதுவாகப் பின்னையும் ஸஹ்ருதயமாக இவ்வைச்வர்யத்தை ஆசைப்படுகைக்கு ஈடாகத் தமஸ்ஸு அபிபவிக்கும்படியான இந்த லோகயாத்ரை பொறுக்க வொண்கிறதில்லை. 'கொள்' என்று ப்ரேரிக்கிறது மநஸ் ஆகவுமாம். [வள்ளலே என்று தொடங்கி] - பரமோதாரனாய் ஆச்ரிதவாத்ஸல்யனான நீ உன் க்ருபையாலே குணகுணநிரூபணம் பண்ணாதே என்னை விஷயீகரித்து உன் திருவடிகளிலே வாங்கவேணும்.

ப.—அநந்தரம், நச்வரமான ஐச்வர்யத்தை ஆதரிக்கிற லோகயாத்ரையைக் காணாதபடி உன் வடிவை எனக்கு உபகரித்த மஹோதாரனான நீ என்னை அங்கே ஸ்வீகரிக்கிற ஔதார்யத்தையும் பண்ணவேணும் என்கிறார்.

கொள் என்று - 'என்னைக்கொள் என்னைக்கொள்' என்று, கிளர்ந்து எழுந்த - மேன்மேலெனஅபிவ்ருத்தமாய்த்தோற்றுகிற, பெரு செல்வம் - பெரிய ஐச்வர்யம், நெருப்பாக - (விநாசாதிகளாலும் ப்ரதிபக்ஷங்களபிபவிக்கைக்கு ஹேதுவாகையாலும் பரிதாபகரமாய்க்கொண்டு) அக்நிகல்பமாகச் செய்தே, (வாஸனையாலும் சாபல்யத்தாலும்), கொள் என்று - ('பின்னையும் இத்தையே) ஸ்வீகரி' என்று, தமம் மூடும் - அஜ்ஞாநதமஸ்ஸானது அபிபவியாநிற்கிற, இவை - இவை, என்ன உலகியற்கை - என்ன லோகயாத்ரைகள்? வள்ளலே - நிரதிசயௌதார்யத்தையுடையையாய், மணி வண்ணா - நீலரத்நம்போலேதர்சநீயமான வடிவையுடையவனே! உனகழற்கே - (ஏவம்பூதனான) உன் திருவடிகளிலே, வரும் பரிசு - வரும்படி, வள்ளல் செய்து - இதுக்கென்னவும் ஓர் ஔதார்ய விசேஷத்தைப்பண்ணி, அடியேனை - (உனக்கே அநந்யார்ஹனான) என்னை, உனது அருளால் - உன்க்ருபையாலே, வாங்காய் - கைக்கொண்டருளவேணும்.

இ.—நாலாம்பாட்டில், ஐச்வர்யத்தை விரும்பி அது விநாசஹேதுவாகக் காணாநிற்க, பின்னையும் அத்தையே விரும்புகிற இவர்கள்நடுவில்நின்றும் உன்திருவடிகளிலே என்னை வாங்கியருளவேணும் என்கிறார்.

[கொள் என்று இத்யாதி] - இவன் அர்த்தியாதிருக்கத் தானே 'என்னைக்கொள், என்னைக் கொள்' என்று மேன்மேலெனக் கிளர்ந்துவருகிற நிரவதிக ஸம்பத்தானது. [நெருப்பு ஆக] - நிச்சேஷமாக நசிக்க என்னுதல்; தனக்கு விநாசஹேதுவாக என்னுதல். [கொள்ளென்று தமம்மூடும்] - இது விநாசஹேதுவென்று அறிந்திருக்கச்செய்தேயும் பிறர் கொள் என்று ப்ரேரித்தவாறே தமோபிபூதனாய் துராசையாலே முன்பு விநாசஹேதுவானத்தைவிரும்பும், கொள் என்று ப்ரேரிக்கிறது மநஸ் ஆகவுமாம். "ஹதஹீஷ்டஹதஷ்வ்ராணஹத [illegible] | சுசாவவுவதீராஜநு ஶரெய்யாஜெஷ்ய்திவாஷவாநு". [இவை என்ன உலகியற்கை] - ப்ரத்யக்ஷமும் அகிஞ்சித்கரமாம்படி இருப்பதே! [வள்ளலே] - இந்தத்தமோபிபூதியைத் தவிர்த்து, இது அஸஹ்யமாம்படி பண்ணின மஹோதாரனே! [மணிவண்ணா] - ஐச்வர்யாதிகளில் குத்ஸையைப் பிறப்பித்தது ஒரு ஸாதநாநுஷ்டாநத்தாலேயோ? வடிவழகைக் காட்டியன்றோ. பண்ணின ஔதார்யந்தன்னைச் சொல்லிற்றாகவுமாம். [உனகழற்கே வரும் பரிசு வள்ளல்செய்து] - ஜ்ஞாநத்தையுண்டாக்கினாற்போலே உன்னை லபிக்கைக்கும் ஔதார்யம் பண்ணவேணும். [அடியேனை] - ஆரேனும் உடைமையையோ நான் நோக்கச் சொல்லுகிறது. [உனது அருளால்] - மயர்வறமதிநலம் அருளினவோபாதி ப்ராப்திக்கும் தனியே ஒருக்ருபை பண்ணியருளவேணும். [வாங்காயே] - 'வாங்காயே' என்று அசித்ஸமாதியாலே சொல்லுகிறார்; பரமபக்தியுண்டானாலும் பேற்றுக்கு அவன்க்ருபையே ஹேதுவென்று இருக்கிறார்.

ஈடு. — நாலாம்பாட்டு. சேதநர், ஐஶ்வர்யத்தை விரும்பினால்-அது விநாஶஹேதுவாகக் காணாநிற்கச்செய்தே, திரியவும் அந்த ஐஶ்வர்யத்தை விரும்புகையே ஸ்வபாவமாம்படி யிருக்கிற இதுக்கு ஹேது ஏதோ? நான் இதுகண்டு பொறுக்கமாட்டுகிறிலேன்; என்னை முன்னம் இவர்கள் நடுவில்நின்றும் வாங்கவேணும் என்கிறார்.

[கொள்ளென்றுஇத்யாதி]-இவன்தான் அர்த்தியாதிருக்கச்செய்தேயும், 'கொள், கொள்' என்று மொண்டெழுபானைபோலே கிளர்ந்துவருகிற நிரவதிகஸம்பத்தானது. [நெருப்பாக]-நிஶ்ஶே ஷமாக நசிக்க வென்னுதல்; தனக்குவிநாஶஹேதுவாக வென்னுதல். ஐஶ்வர்யம் விநாஶஹேது வாகையாவதேன்? என்னில்,— 'இவன் ஜீவிக்கிறான்' என்கிற இது கேட்டுப் பொறுக்கமாட்டா மையிறே பிறர் இவனை அழியச்செய்வது. இப்படி ஐஶ்வர்யம் விநாஶஹேதுவாகக் காணச்செய் தேயும், பிறர் இவனை 'கொள், கொள்' என்று ப்ரேரிக்க, தமோபிபூதனாய், துராசையாலே முன்பு விநாஶஹேதுவான அத்தை ஸ்வீகரியாநிற்கும். திரியவும் அத்தை ஸ்வீகரிக்கிறது தமோகுணாபி பூதராயிறே. அன்றிக்கே, கொள்ளென்று ப்ரேரிக்கிறது - மநஸ்ஸாகவுமாம்; அன்றிக்கே, 'இது விநாஶஹேதுவாம்' என்று அறியச்செய்தேயும், தன்னுடைய ஹ்ருதயமானது தமோகுணாபிபூத மாய், அத்தைக்கொள் என்று ப்ரேரித்து இவனை ஸ்வீகரிப்பிக்கும், இதினுடைய பலம். "ஹதே பீஷ்மே ஹதே த்ரோணே ஹதே கர்ணே மஹாரதே | ஆஶா பலவதீ ராஜந் ஶல்யோ ஜேஷ்யதி பாண்டவாந்" (ஹதேபீஷ்மேஹதேத்ரோணே ஹதேகர்ணேமஹாரதே | ஆஶாபலவதீராஜந் ஶல் யோஜேஷ்யதிபாண்டவாந்) - அதிரதமஹாரதரடையப் பட்டுப்போகாநிற்கச்செய்தேயும், பின்னை யும் சல்யனைக்கொண்டே பாண்டவர்களை ஜயிக்கப்பார்த்தானிறே துர்யோதநன். [இவையென்ன வுலகியற்கை] - இவை சிலலோகயாத்ரை இருக்கிறபடியே! [வள்ளலே] - 'ஐஶ்வர்யம் விநாஶ

---

நாலாம்பாட்டு - கொள்ளென்று இத்யாதி. பூர்வார்த்தத்தால் பலிதத்தை அருளிச்செய்யாநின்று கொண்டு, 'வாங்காய்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - சேதநர் இத்யாதி. 'நெருப்பாக' என்றத் தைப்பற்ற, அது விநாச இத்யாதி. 'கொள்ளென்றுதமமூடும்' இத்யாதியைப்பற்ற, திரியவும் இத்யாதி.

மொண்டெழுபானை - ஏற்றப்பானை. நெருப்பாக - நெருப்புப்போலேயாகக் கண்டிருக்கச்செய்தே நெருப்பு அவிந்தால் நிஶ்ஶேஷமாக அவியுமாபோலே, இதுவும் நிஶ்ஶேஷமாக நசிக்க வென்றபடி. நெருப்பு ஆஶ்ரயாஶீ யாகையாலே, அப்படியே தனக்கு ஆஶ்ரயமான சேதநனை நசிப்பிக்குமென்று விவ க்ஷித்து அருளிச்செய்கிறார் - தனக்கு இத்யாதி. பிறர் இவனை அழியச்செய்வதென்றவிடத்திலே "அஶோ ப்யதிநிகூடஸ்ய ஶ்ரியம் ஸம்ப்ராப்தஸ்ய | விரோதமாவாந் பநவேராயாமீதேகஸ்யுவுபாஜாந தாயர்திஃ" என்றது அநுஸந்தேயம். 'கொள்ளென்றுதமமூடும்' என்றவிடத்திலே, கொள்ளென்றது க்கு மூன்றுபாவம்: அதாவது - பிறர் இவனை 'கொள்கொள்' என்று ப்ரேரிக்க, தமோகுணாபிபூதனாய் ஸ்வீக ரிக்கு மென்னுதல்; இத்தைக்காட்டுகிறார் - இப்படிஐஶ்வர்யம் இத்யாதி. சேதநருடைய தமோகுணாபிப வம் இவர்அறிந்தபடி யெங்ஙனே? என்ன, திரியவும் இத்யாதி. அன்றிக்கே, மநஸ்ஸானது தமோகுணாபி பூதமாய் ப்ரேரிக்க, அத்தை ஸ்வீகரிக்கு மென்னுதல்; இத்தை அருளிச்செய்கிறார் - அன்றிக்கே இத்யாதி. அன்றிக்கே, ஐஶ்வர்யமானது இவனுடைய ஹ்ருதயத்தைத் தமோகுணாபிபூதமாக்கி 'கொள்கொள்' என்று ப்ரேரிக்க, அத்தை ஸ்வீகரிக்கு மென்னுதல்; இத்தை அருளிச்செய்கிறார் - அன்றிக்கே, இது விநாச இத் யாதி. இதினுடையபலம் - ஐஶ்வர்யத்தினுடையபலம். விநாஶஹேதுவானத்தை ஸ்வீகரிக்கைக்கு அடி யேது? என்ன, துராசையென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - ஹதேபீஷ்மே இத்யாதி. "ஹதே பீஷ்மே ஹதே த்ரோணே ஹதே கர்ணே மஹாரதே | ஆஶா பலவதீ ராஜந் ஶல்யோ ஜேஷ்யதி பாண்டவாந்" இதி பாரதே. இதுக்கு அர்த்தம் - அதிரத இத்யாதி. 'இவையென்ன வுலகியற்கை' என் றத்தைக் கடாக்ஷித்து பாவம் - ஐஶ்வர்யம் விநாச இத்யாதி. "மணிவண்ணா - வள்ளலே" என்றகூட்டித் தாத்பர்யாந்தரம்-மாணிக்கம் இத்யாதி. ஆக, "வள்ளலே" என்றதுக்கு இரண்டுபாவம். ஐஶ்வர்யம் விநாஶ

'ஹேது' என்னுமிடத்தை என்னெஞ்சிலே படுத்தி எனக்கு ஔதார்யத்தைப் பண்ணினவனே ! [மணிவண்ணா] - மாணிக்கப்பண்டாரத்தையிறே ஔதார்யம்பண்ணிற்று. ஸாதநாநுஷ்டாநம், மற்றொன்றைப் பண்ண வன்றாயிற்று. அன்றிக்கே, ஐஶ்வர்யாதிகளில் குத்ஸையைப் பிறப்பித்தது, பிடாத்தை விழவிட்டு வடிவழகைக் காட்டியாயிற்று. [உனகழல் இத்யாதி] - ஜ்ஞாநலாப மாத்ரத்தால் போருமோ ? ப்ராப்தியைப்பண்ணித் தர வேண்டாவோ ? மயர்வறமதிநலமருளின வோபாதி துயரறுசுடரடிதொழுதெழப்பண்ணவேண்டாவோ? பசியைவிளைத்தால் சோறிடவேண்டாவோ? [வள்ளல்செய்து] - உன் திருவடிகளிலே நான் வந்துகிட்டும்படியாக ஔதார்யத்தைப் பண்ணி. 'இவன்இப்பேற்றைப் பெறுவான்' என்று விஷயீகரித்து. [அடியேனை] - 'பிறருடைமை *(யையோ நான் நோக்கச்சொல்லுகிறது?' 'உன்னுடைமை) நசியாமல் நோக்கவேணும்' என்று ப்ரார்த்திக்கிறனென்னை. [உனதருளால்] - மயர்வற மதிநல மருளினவோபாதி, ப்ராப்திக்கு ஈடாயிருப்பதும் ஓரருளைப்பண்ணவேணும் [வாங்காயே] - 'வாங்காய்' என்று - அசித்ஸமாதியாலே சொல்லுகிறார். அதுக்கு அடி - இத்தலையிலே பரமபக்திபர்யந்தமாகப் பிறந்தாலும், பெறுகிற பேற்றின் கனத்தைப் பார்க்க, அத்தலையில் க்ருபையாலே பெற்றதாம்படி யிருக்கையாலே. (ச)

# ஐந்தாம் பாட்டு.

வாங்குநீர்மலருலகில் நிற்பனவும்திரிவனவும்
ஆங்குயிர்கள்பிறப்பிறப்புப் பிணிமூப்பால்தகர்ப்புண்ணும்
ஈங்கிதன்மேல்வெந்நரகம் இவையென்னவுலகியற்கை ?
வாங்கெனைநீமணிவண்ணா ! அடியேனைமறுக்கேலே.

**ஆ.**—(வாங்கும்.) த்வத்விஶ்லேஷது:கரன்றியே, ஜந்மஜராமரணாதி வ்யாத்யாதி து:கரான இவ்வாத்மாக்கள் வர்த்திக்கிற இந்தலோகத்தில்நின்றும் அடியேனை மறுகப்பண்ணாதே, ஈண்ட என்னை வாங்கியருளவேணும் என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஜந்மஜராதிது:கங்களையுடையரான இவ்வாத்மாக்கள் வர்த்திக்கிற இந்தலோகத்தினின்றும் அடியேனை இதன்படியைக் காட்டி மறுகப்பண்ணாதே வாங்கியருளவேணும் என்கிறார்.

[வாங்குநீர் என்று தொடங்கி] - ஸ்வகார்யவர்க்கத்தையடையத் தன்பக்கலிலே உபஸம்ஹரிப்பதான நீரிலே பிறந்த லோகத்தில் ஸ்தாவரஜங்கமாத்மகமான ஆத்மாக்கள் ஜராமரணாதிகளாலே நலிவுபடுவர்கள். இஹலோகத்தில் இந்தஶரீரம் போனால் பின்னைக் கொடியநரகங்களை

ஹேதுவென்று காட்டின ஔதார்யம் - முந்தினது ; அன்றிக்கே, விக்ரஹௌதார்யம் பண்ணினதென்று - இரண்டாவது. "மாணிக்கப்பண்டாரத்தை" என்று கீழ் அருளிச்செய்த வாக்யவிவரணம் - ஸாதநாநுஷ்டாநம் இத்யாதி. மற்றொன்றை - ஆசார்யோபதேசாதிகளை. பிடாத்தை - போர்த்த பச்சைவடத்தை. 'வள்ளலே' என்றதின் முந்தின அர்த்தத்துக்குச் சேர ஹாவம் - ஜ்ஞாநலாபம் இத்யாதி. ஜ்ஞாநலாபம்பண்ணினால் ப்ராப்தியைப்பண்ணித் தரவேணுமோ? என்ன, மயர்வற இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - பசியை இத்யாதி. தாத்பர்யம் - இவன் இப்பேற்றை இத்யாதி. 'அடியேனை' என்றதுக்கு ஆழ்வான் நிர்வாஹத்திலே அருளிச்செய்கிறார் - பிறருடைமை இத்யாதி பிறருடைமை உன்னுடைமை. அருளினபின்பும், 'அருளால்' என்கிறதென்? என்ன, மயர்வற இத்யாதி. அழையாயென்னாதே, 'வாங்காய்' என்றதுக்கு ஹாவம் - வாங்காய்என்று இத்யாதி. அதுக்கடி - அசித்ஸமாதியாலே சொல்லுகைக்கு அடி. பெறுகிறபேறு - அத்வேஷம்தொடங்கிக் கைங்கர்யபர்யந்தமாக வருகிற பலம். அத்தலையில் - ஈஶ்வரனிடத்தில். கிளர்ந்தெழுந்த - மேன்மேலென அபிவ்ருத்தமாய்த் தோற்றுகிற. க்ரமேண அந்வய:. (ச)

* குண்டலிதக்ரந்தம் அரும்பதத்துக்குச் சேராது.

அநுபவிப்பர்கள். இது ஒருலோகயாத்ரையே! ஶ்லாக்யமான உன்னுடைய திருவழகை யநுபவிக்கலாம்படி உன் திருவடிக்கீழிலே வாங்கியருளவேணும். [வாங்கு நீர்மலருலகில்] - வளைந்தநீரையுடைத்தாய் மலரைத் தலையாகவுடைய லோகத்தில் என்றுமாம். ஆங்கு வாங்கு என்று கூட்டிக்கொள்வது.

ப.—அநந்தரம், ஜந்மஜராமரணாதி க்லேஶங்கள் நடையாடுகிற தேஶத்தில் இராதபடி ஆஶ்ரிதஸுலபமான வடிவையுடைய நீ அங்கீகரிக்கவேணும் என்கிறார்.

வாங்கும் - (திரைக்குளகப்பட்ட பதார்த்தங்களை) உள்ளே வாங்கும்; நீர் - ஸமுத்ர ஜலத்தையுடைய, மலருலகில் - விஸ்தீர்ணபூமியில், நிற்பனவும் - நிற்பனவும், திரிவனவும் - திரிவனவுமான, ஆங்கு - அந்தஸ்த்தலங்களிலே வர்த்திக்கிற, உயிர்கள் - ப்ராணாஶ்ரயமான ஆத்மாக்கள், ஈங்கு - இவ்விடத்தில், பிறப்புஇறப்புபிணிமூப்பால் - ஜந்மமரணவ்யாதிஜரைகளாலே, தகர்ப்புண்ணும் - நெருக்குண்ணாநிற்கும்; இதன்மேல் - இதற்குமேல், வெம்நரகம் - க்ரூரமான ரௌரவாதி நரகங்களாயிருக்கும்; இவை - இவை, என்ன உலகியற்கை - என்ன லோகயாத்ரைகள்? மணி - (ஆஶ்ரிதர்க்குமுடிந்தாளலாம்படி) நீலரத்நம்போலே தர்ஶநீயமாய் ஸுலபமான, வண்ணா - வடிவையுடையவனே! நீ - நீ, எனை - (இந்ததுக்கம்பொறுக்கமாட்டாத) என்னை, வாங்கு - அங்கீகரித்தருளவேணும்; அடியேனை - (உன் அடியேனான) என்னை, மறுக்கேல் - மறுகப் பண்ணாதேகொள். மறுக்குதல் - கலக்குதல்.

இ.—அஞ்சாம்பாட்டில், ஜந்மஜராதிகளாலே நோவுபடுகிற ஸம்ஸாரிகள்நடுவில்நின்றும் இது நடையாடாத தேஶத்திலே அழைத்துக்கொண்டருளவேணும் என்கிறார்.

[வாங்குநீர்மலருலகில்] - தனக்குஇவ்வருகுண்டான கார்யஜாதத்தைத் தன்பக்கலிலே உபஸம்ஹரிப்பதான நீரிலே விஸ்த்ருதமான லோகத்தில். கார்யத்துக்குக் காரணத்திலேயிறே உத்பத்தியும் லயமும். வாங்குதல் - வளைதலாய், நீராலே சூழப்பட்டுத் திருநாபீகமலத்திலே பிறந்த லோகம் என்றுமாம். [நிற்பனவும் திரிவனவும்] - ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும். [ஆங்குஉயிர்கள்] – அவ்வவஶரீரங்களிலே வர்த்திக்கிற ஆத்மாக்கள் என்னுதல்; 'ஆங்கு'என்றது கிடக்க, நிற்பனவும் திரிவனவுமான உயிர்கள் என்னுதல். [பிறப்பு இத்யாதி] - உத்பத்திமரணாதிகளாலே நலிவுபடும் இங்கு. [இதன்மேல் வெம்நரகம்] - இங்கு மூலையடியே திரிந்ததற்கு பலாநுபவம் பண்ண நிஷ்க்ருஷ்டதுக்கமேயான நரகத்தை ப்ராபிக்கும். இஹலோகத்தில் ஸுகப்ராந்தியாகிலும் உண்டு; அதுவுமில்லை அங்கு. இது ஒரு லோகஸ்வபாவம் இருக்கும்படியே! [ஆங்கு வாங்கு எனை நீ] – இந்த துரிதமில்லாத பரமபதத்திலே இது அஸஹ்யமான என்னை அழைக்கவேணும். விஷயபரரான இவர்கள்நடுவில்நின்றும் "ஹஶ்ரீசேஹயா மவஶெதஷு ஹ" என்கிற திரளிலே கொடுபோகவேணும். [மணிவண்ணா] - கண்டபோதே இத்துக்கமெல்லாம் தீரும்படியான வடிவையுடையவனே! [அடியேனை மறுக்கேலே] – ஶேஷபூதனான என்னை இதின்படியைக் காட்டிக் கலங்கும்படி பண்ணாதொழியவேணும். அஸாதாரணரையும் கொண்டு லீலாரஸம் அநுபவிக்கக்கடவதோ?

ஈடு.— அஞ்சாம்பாட்டு. ஜந்மஜராமரணாதிகளாலே நோவுபடுகிற ஸம்ஸாரிகள் நடுவினின்றும், இதுநடையாடாத தேஶத்திலே அழைத்துக்கொண்டருளவேணும் என்கிறார்.

---

அஞ்சாம்பாட்டு - வாங்குநீர் இத்யாதி. 'பிறப்பு' இத்யாதியைப்பற்ற, ஜந்ம இத்யாதி. 'வாங்கெனை' என்கையாலே - இதுநடையாடாத இத்யாதி.

[வாங்குநீர்மலருலகில்] - கார்யங்களுக்கெல்லாம் காரணத்திலே லயமாகக்கடவதிறே; இவ்வருகுண்டான கார்யவர்க்கத்தையடையத் தன்பக்கலிலே வாங்காநின்றுள்ள நீரிலே விஸ்த்ருத மாகாநின்றுள்ள லோகத்திலே யென்னுதல்; *அப்யயபூர்விகையாயிறே ஸ்ருஷ்டி இருப்பது; அன்றிக்கே, வாங்குதல் - வளைதலாய், நீராலே சூழப்பட்டுத் திருநாபிகமலத்திலே பிறந்த லோக மென்றுமாம். [நிற்பனவும் திரிவனவும்] - ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும். [ஆங்குஉயிர்கள்] - அவ்வவஶரீரஸ்த்தமான ஆத்மாக்கள். அன்றிக்கே, ஆங்கு என்கிற இது-மற்றேரிடத்திலே அந்வ யிப்பதாக விட்டுவைத்து, 'நிற்பனவும் திரிவனவுமான - உயிர்கள்' என்றுய், ஸ்த்தாவரஜங்கமாத் மகமான ஆத்மாக்கள். [பிறப்பு இத்யாதி] - ஜந்மஜராமரணுதிகளாலே நெருக்குண்ணுநிற்பர்கள், ஸம்ஸாரத்தில் வர்த்திக்கும் நா ளித்தனையும். [இதன்மேல் வெங்நரகம்] - இதுக்குமேல் போனல் கோடிதான நரகம். இங்கு இருந்த நாள் மூலையடியே ஸுகாநுபவம்பண்ணித் திரிந்தார்களாம்படி யன்றிறே, அங்குப்போனல் படும் துஃகம். ஸுகப்ராந்தியாகிலும் உண்டு இங்கு; அங்கு நிஷ்க்ருஷ்ட துஃகமேயாயிற்று உள்ளது. †உயிர்க்கழுவி லிருக்குமவன், பிபாஸையும் வர்த்தித்துத் தண்ணீரும் குடித்து த்ருப்தனு மோபாதியிறே இங்குள்ளவை; அதுவுமில்லை, அங்கு. இதோரு லோகயாத் ரையைப் பண்ணிவைக்கும்படியே! ஆனல், உமக்குச்செய்யவேண்டுவதுஎன்? என்ன, [ஆங்கு வாங்கு எனை] "ஶ்ரீயாஸார்த்தம்ஜகத்பதி꞉ । ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்பாகவதைஸ்ஸஹ" (ஶ்ரீயாஸார்த்தம்ஜகத்பதி꞉। ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்பாகவதைஸ்ஸஹ) என் கிறபடியே, ஏழுலகும் தனிக்கோல்செல்ல நீ விற்றிருக்கிறவிடத்திலே என்னை வாங்கவேணும். [மணிவண்ணு] - ஶப்தாதிவிஷயங்களிலே ப்ரவணனுய் அவற்றின் வடிவிலே துவக்குண்டிருக்கிற என்னை, "அவ்வடிவை நாய்க்கிடாய்" என்னும்படியான உன்வடிவைக் காட்டிக்கொண்டு போகவேணும். "மனைப்பால் - பிறந்தார்பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் - துறந்தார்தொழுதாரத் தோள்" என்கிறபடியே, இவன்படியைக் கண்டால் வேறேன்றும் பிடியாதிறே. [அடி யேனை] - உன்படியறிந்த என்னை, நீயும் அவ்வோலக்கமுமா யிருக்கிற இருப்பில் சுவடறிந்த

---

வாங்குதல் - க்ரஸிக்கையாய், க்ரஸிக்கிற நீரென்று விவக்ஷித்து, நீரோ எல்லாவற்றையும் வாங்கு கிற தென்ன, கார்யங்களுக்கு இத்யாதி. சப்தார்த்தம் - இவ்வருகுண்டான இத்யாதி. ஸ்ருஷ்டியைச்சொல்லி, பின்பு ஸம்ஹாரத்தைச் சொல்லவேண்டாவோ? என்ன, அப்யய இத்யாதி. 'மலர்' என்று - புஷ்பமாய், அத்தாலே திருநாபீகமல மென்று இரண்டாமர்த்தம். ஆங்கு - கீழுக்தமான ஸ்தாவரஜங்கமாத்மக சரீரங் களிலே யுண்டான வென்றபடி. பிறப்பு - ஜந்மம். இறப்பு - நாசம். பிணி - வ்யாதி. மூப்பு - ஜரை. ஈங்கு - இவ்விடத்திலே; இத்தை அருளிச்செய்கிறார் - ஸம்ஸாரத்தில் இத்யாதி. 'வெங்நரகம்' என்றதுக்கு வாஸனை - இங்கிருந்தநாள் இத்யாதி. மூலையடியே - யதேச்சம். இங்கு துஃகமேயன்றோ உள்ளது; இத்தைப் பற்ற அங்கு அதிசயமேது? என்ன, ஸுகப்ராந்தி இத்யாதி. 'இங்கு ஸுகப்ராந்தியாவானென்? ஸுகாநு பவம் காணுநின்றோமே' என்ன, உயிர்க்கழுவில் இத்யாதி. 'ஆங்கு' என்றதுக்கு - 'வாங்கு' என்றத்தோடே அந்வயம் காட்டுகிறார் - ஆங்குவாங்கேனை என்று. 'ஆங்கு' என்றது - ப்ரமாணப்ரஸித்தியாலே, பரமபதத் தைச் சொல்லுகிறது. ப்ரமாணங்களைக் காட்டுகிறார் - ஶ்ரீயாஸார்த்தம் இத்யாதி. "வைகுண்டே து பரேலோகே ஶ்ரீயாஸார்த்தம்ஜகத்பதி꞉" இத்யாதி. 'எனைமணிவண்ணு - வாங்கு'என்று அந்வயித்து அர்த்தம்-சப்தாதி இத்யாதி. அவன்வடிவழகைக் கண்டவாறே இதரவிஷயங்களை த்யஜிக்கலாயிருக்குமோ? என்ன, மனைப்பால் இத்யாதி. அந்தத்தோளைத் தொழுதவர்கள், மனையிடத்துப் பிறந்தவர்கள் பிறந்து ப்ராபிக்கும் நிரதிசய ஸுகமெல்லாவற்றையும் பரித்யஜித்தவர்களாவர்கிடீர்; தோளழகுதானே மற்றுள்ள இன்பங்களைத் துறக்கும்படி பண்ணுமென்கை இதி பாசுரார்த்தஃ. இரண்டாந்திருவந்தாதி - நாற்பத்திரண் டாம்பாட்டு, 'நினைப்பன்' இத்யாதி. சாடு - இவன்படியை இத்யாதி. 'மணிவண்ணு' என்றத்தைக் கடா க்ஷித்து ஸாவம் - உன்படி இத்யாதி. 'ஆங்கு' என்றத்தைக் கடாக்ஷித்து ஸாவம் - நீயும் இத்யாதி. 'அடி யேன்' என்றதுக்கு மூன்றர்த்தம்: அதாவது - சப்தாதிவிஷய ப்ரவணனுயிருக்கிற என்னை யென்னுதல். உன்படியறிந்தஎன்னை: அதாவது - நீயும் அவ்வோலக்கமுமா யிருக்கிற இருப்பில் சுவடறிந்த என்னை என்

---

* அப்யய பூர்விகை - லயத்தை முன்னிட்டது. † உயிர்க்கழு - உயிரை வாங்கும் கழுமரம்.

என்னை. [மறுக்கேலே] - ஜந்மஜராமரணாதிகளாலே நெருக்குண்கிற இவர்கள் நடுவே யிருந்து என்னெஞ்சு மறுகாதபடி பண்ணவேணும். என்னைக் கலங்கப்பண்ணுதேகோள். தெளிவிசும்பிலே வாங்கியருளவேணும். [அடியேனை மறுக்கேலே]- அஸாதாரணராய் மோக்ஷபூதரா யிருப்பாரையுங் கொண்டு லீலாரஸம் அநுபவிக்கக் கடவதோ? (ரு).

# ஆ று ம் பா ட் டு.

மறுக்கிவல்வலைப்படுத்திக் குமைத்திட்டுக்கொன்றுண்பார்
அறப்பொருளையறிந்தோரார் இவையென்னவுலகியற்கை?
வெறித்துளவமுடியானே! வினையேனையுனக்கடிமை
யறக்கொண்டாய் இனியென்னாரமுதே! கூயருளாயே.

**ஆ.**—(மறுக்கி.) என்னுடைய விமோக்ஷதோஷாஸ்பதத்வத்தை ஒன்றும் பாராதே உன்னுடைய நிரவதிகஸௌந்தர்யாவிஷ்கார த்தாலே என்னை தவ தாஸ்ய ஸைகைகஸங்கியாக்கியருளினாய்; இனி என்னாரமுதே! நிர்க்ருணராய் பரஹிம்ஸைக ப்ரவ்ருத்திகராய் த்வதௌந்முக்ய லேமரஹிதராயிருந்த இவர்கள்நடுவில்நின்றும் ஈண்ட என்னை வாங்கியருளவேணும் என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், ஸம்ஸாரிகளுடைய பகவத்வைமுக்யாதி தோஷங்களை அநுஸந்தித்து இவர்களைச் சுட்டி எம்பெருமானை இன்னாதாகை தவிர்ந்து, இவர்களோட்டை ஸஹவாஸத்தை விடும்படி என்னை உன் திருவடிகளிலே அழைத்தருளவேணும் என்கிறார்.

[மறுக்கி என்று தொடங்கி] - இஜ்ஜந்துக்கள் அர்த்தாபஹாரம் பண்ணுகைக்காக நிரபராதரா யிருப்பார்க்கு மஹாபயஹேதுக்களை உத்பாதித்து மநஸ் மறுகும்படி பண்ணி நலிந்து அவர்களை ஹிம்ஸித்து ஜீவிப்பர். [அறம் என்று தொடங்கி] - தர்மதத்த்வத்தை அறிந்து 'நமக்கு வேணும்' என்று அத்யவஸாயம் பண்ணுவாரில்லை. இது ஒரு லோகஸ்வபாவம் இருந்தபடி என்? [ஓரார்] - பரஹிம்ஸையினின்றும் நீங்கார் என்றும் சொல்லுவர். அர்த்த புருஷார்த்தத்திலே மிகவும் ப்ரவணராய் மற்றொரு நன்மை தீமைகள் ஆராயார் என்றுமாம். [வெறி என்று தொடங்கி] - இங்ஙனேயான பின்பு இனி இவர்களுக்கு மோகித்து ப்ரயோஜநம் என்? உன்னுடைய நிரதிசயபோக்யமான வடிவழகைக் காட்டி விஷயப்ரவணனான என்னை உனக்கேயாம்படி பண்ணின நீ.

**ப.**—அநந்தரம், பரபீடாகரமான ஸம்ஸாரஸ்வபாவத்தைக் காணாதபடி, நிரதிசய போக்யனான நீ என்னை அழைத்துக்கொண்டருளவேணும் என்கிறார்.

மறுக்கி - (பயஹேதுக்களான வார்த்தைகளைச் சொல்லி இவன் நெஞ்சைக்) கலக்கி, (பயநிவ்ருத்திக்குத் தன்னையே தஞ்சமாகப் பற்றும்படி தன்வசமாக), வல்வலைப்படுத்தி - சிக்கென்ற வலையிலே அகப்படுத்தி, குமைத்திட்டு - (இவன் தன்பதார்த்தங்களை ஸ்வயமேவ நெகிழும்படி) பிடித்து, கொன்று-பின்தொடர்த்தியறும்படி கொன்று, உண்பர் - தங்கள்வயிறுவளர்க்

னுதல். மோக்ஷத்வஜ்ஞாநமுடைய என்னை என்னுதலென்று. மறுகுதல் - கலங்குகை. ஆழ்வான் நிர்வாஹத்துக்குச் சேர, ஜந்மஜரா இத்யாதி. எம்பார் நிர்வாஹத்துக்குச் சேர அர்த்தம் - என்னைக்கலங்க இத்யாதி. அதாவது - ஸம்ஸாரிகள் வ்யாபாரங்களைக் கண்டு கலங்காதபடி பண்ணவேணு மென்றபடி. 'ஆங்கு - வாங்கெனை' என்றத்தைக் கடாக்ஷித்து ஹாவம் - தெளிவிசும்பிலே இத்யாதி. 'மறுக்கேல்' என்றால், லீலைக்கு விஷயம் எங்கே? என்ன, அஸாதாரணர் இத்யாதி. தகர்ப்புண்கை-நெருக்குண்கை. க்ரமேண அந்வயः. (ரு)

காநிற்பர்கள்; அறம்பொருளை - தர்மமாகிற ப்ரதமபுருஷார்த்தத்தை, அறிந்து - அறிந்து, ஓரார்- ('இதுவே நமக்குஉஜ்ஜீவநஹேது' என்று) நிரூபியார்; இவை என்ன உலகியற்கை - இவை என்ன லோகயாத்ரைகள்? வெறி துளவம் - பரிமளோத்தரமான திருத்துழாயை யுடைத்தான, முடியானே - திருமுடியையுடையவனே! (இந்த போக்யதையைக் காட்டி), வினையேனை - பாபமே நிருபக மென்னலாம்படியான என்னை, உனக்கு - உனக்கு, அற - அநந்யார்ஹமாக, அடிமை கொண்டாய் - அடிமைகொண்டவனே!என் - எனக்கு, ஆர் - பரிபூர்ணமாய் நித்யபோக்யமான, அமுதே - அம்ருதமானவனே! (இனி ஸம்ஸாரத்திலே அத்யந்தார்த்திபிறந்த பின்பு), கூயருளாய்- அழைத்துக்கொண்டருளவேணும். அறப்பொருளை யறிந்தோரா ரென்று - மிகவும் பொருளையே யறிந்து வேறொன்றையும் விசாரியா ரென்றுமாம்.

இ.—ஆறும்பாட்டில், ஸம்ஸாரிகளுடைய பகவத்வைமுக்யாதி தோஷங்களை அநுஸந்தித்து ஈஸ்வரனை இன்னாதாகை தவிர்ந்து ஜீவநார்த்தமாகப் பரஹிம்ஸை பண்ணுகிற ஸம்ஸாரிகள் நடுவில்நின்றும் என்னை உன் திருவடிகளிலே அழைத்தருளவேணும் என்கிறார்.

[மறுக்கி] - க்ராமணிகள் த்ரவ்யார்ஜநம் பண்ணும்படி: தன்னை அபாஸ்ரயமாகப் பற்றினானொருவனைக் குறித்து 'உன்னைச் சில பழி சொல்லிச் சிலர் அழியச்செய்ய நினையாநின்றார்கள்' என்னும்; அவன் இவனை ஆப்தனாக நினைத்து 'எனக்குச் செய்ய அடுப்பதென்?' என்னும்; 'உன் உடைமைகளை என்வசமாக்கி வைத்து நீ ஸுகமே இரு' என்று இப்படி கலங்கும்படி பண்ணி. [வல்வலைப்படுத்தி] - இவனுடைமையை ஸ்வாதீநமாக்கி மீளவொண்ணாதபடி சூழ்க்கும். [குமைத்திட்டு] - அவன்பேரிலே கடமையையிட்டு அடிப்பது கட்டுவதாகப் பண்ணும். [கொன்று] - 'இவன் இருக்கில் அநர்த்தம்' என்று ஹிம்ஸிக்கும். [உண்பர்] - இப்படி செய்து வயிறு வளர்ப்பர்கள். [அறப்பொருளை அறிந்து ஓரார்] - தர்மதத்த்வத்தை ரக்ஷகமாக அறிந்து அதனுடைய நிரூபணத்தைப் பண்ணார்கள். [ஓரார்] - பரஹிம்ஸையில்நின்றும் நீங்கார்கள் என்றுமாம். ஓர்தல் - ஒருவுதலாய், நீங்குதலாய், அதில் நின்றும் நிவ்ருத்தராகார். அர்த்தபுருஷார்த்தத்திலே மிகவும் ப்ரவணராய் வேறொன்றை ஆராயார் என்றுமாம். இது ஒரு லோகயாத்ரையைப் பண்ணிவைக்கும்படியே! [வெறி இத்யாதி] - இவர்களிலே அந்யதமனான என்னை உன்போக்யதையைக் காட்டி விஷயாந்தரங்களில் போக்யபுத்தியைத் தவிர்த்து உனக்கே ஸேஷமாக்கிக்கொண்டாய்; வெறி - பரிமளம். [வினையேனை] — முன்பு விஷயாந்தரப்ரவணனாய்ப் போந்த என்னை. [அடிமை அறக்கொண்டாய்] - அநந்யார்ஹமாக ஸேஷமாக்கிக்கொண்டாய். [இனி] — உனக்கே ஸேஷமாக்கிக்கொண்டபின்பு. இனி என்? என்றுமாம். அப்போது, உன்னைக் காட்டி ஸம்ஸாரிகள் நோவை மீட்கவொண்ணாதானபின்பு இவர்களுக்கு ஸேஷித்து ப்ரயோஜநமென்? என்கை. [என் ஆரமுதே] - உன் போக்யதையை எனக்குக் காட்டினவனே! [ஆரமுதே] - நீ நிரதிஸயபோக்யனா யிருக்க, நான் இவர்கள்நடுவே யிருக்கிற இத்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? உன் திருவடிகளிலே அழைத்துக்கொண்டருளவேணும்.

ஈடு.—ஆறும்பாட்டு. ஸம்ஸாரிகளுடைய பகவத்வைமுக்யாதிதோஷங்களை அநுஸந்தித்து ஈஸ்வரனை இன்னாதாகை தவிர்ந்து, ஜீவநார்த்தமாகப் பரஹிம்ஸைபண்ணுகிற ஸம்ஸாரிகள்நடுவினின்றும் என்னை உன் திருவடிகளிலே அழைத்தருளவேணும் என்கிறார்.

---

ஆறும்பாட்டு - மறுக்கி இத்யாதி. இப்பாட்டிலும் 'இவையென்ன வுலகியற்கை, கூயருளாய்' என்று - இன்னாதாகாநிற்க, இன்னாதாகை தவிர்ந்தென்றது - 'இனி' என்றிருக்கையாலே. 'கொன்றுண்பர்' என்றத்தைப்பற்ற, ஜீவநார்த்தமாக இத்யாதி.

[மறுக்கி இத்யாதி] - க்ராமணிகள் த்ரவ்யார்ஜநம்பண்ணும்படி: 'ஸாது' என்று தோற்ற வர்த்திப்பானொருவன், 'ஒருதேசத்திலே வர்த்தியாநின்றால் ஓராபாஶ்ரயத்தைப் பற்றியிருக்கவேணும்' என்று ஒருக்ராமணிபாடே சென்று சேரும்; 'இவன் ஸாது' என்று தோற்றினவாறே 'உன்னை இன்னாரும் இன்னாருமாக இன்னபடி சொன்னார்கள்:' என்னும்; அவன் ஸீதனாய், 'இவன் நமக்கு ரக்ஷகன்' என்று விஶ்வஸித்தபடியாலே,'அதுக்குப்பரிஹாரமேன்?' என்று இவன் தன்னையே கேட்கும்; 'உனக்கு ஒன்று வந்தால் சொல்லலாவதில்லாதபடி என்னகத்திலே உனக்குள்ள அர்த்தத்தையும் போகட்டு உன்க்ஷேத்ரத்தையும் என்பேரிலே திரியவிட்டுவை' என்னும்; இப்படி இவன் நெஞ்சை மறுகப்பண்ணி. [வல்வலைப்படுத்தி] – இவனுக்கு இனி இவை கொண்டு தப்பவொண்ணாதபடி தன்பக்கலிலே அகப்படுத்தி. [குமைத்திட்டு] - பின்பு இவனிட்டகாசுதன்னையடையத் தன்பேரிலே செலவு எழுதிச் சிகைக்கடிப்பிக்கும். [கொன்று] - 'இவன் இருக்குமாகில் ஒருநாள்வரையில் சிலரை ஆஶ்ரயித்துத் தொடரிலோ?' என்று, இவனை ஹிம்ஸிக்கும். [உண்பர்] - இப்படிசெய்தால் தான் செய்வது வயிறுவளர்க்கையிறே. [அறப்பொருளையறிந்து]-'தேஹாத்வ்யதிரிக்தமாயிருப்பதொரு ஆத்மவஸ்துஉண்டு; நாம் இப்போது செய்கிறவை அதிலேவந்தவாறே தட்டுப்படும்' என்று யர்மதத்த்வத்தையறிந்து. [ஓரார்]-அதினுடைய நிரூபணத்திலே முதலிலே இழியார்கள். அன்றிக்கே, பரஹிம்ஸையில்நின்றும் நீங்காரென்றுமாம். ஓருதல்—ஒருவுதலாய், ஒருவுதல்—நீங்குதலாய், அந்தப்பரஹிம்ஸையில்நின்றும் நிவ்ருத்தராகார். அன்றிக்கே, அர்த்தபுருஷார்த்த மொன்றையுமே அறவிரும்பி, நன்மை தீமை நிரூபணம்பண்ணாரென்னுதல். இது ஒருலோகயாத்ரை யிருக்கும்படியே பிரானே! [வெறி இத்யாதி] - இஸ்ஸம்ஸாரிகள் நடுவே யிருக்கிற என்னை உன்னுடைய போக்யதையைக் காட்டி அடிமைகொண்டாய். பரிமளிதமான திருத்துழாயை முடியிலே யுடையவனே! [வினையேனை] - சப்தாதிவிஷய ப்ரவணராயிருக்கிற இவர்களிலே ஒருவனாய்ப் பிறக்கைக்கு அடியான பாபத்தையுடைய என்னை. நான் நின்ற நிலைக்குக் சேராதபடியான நின்திருவடிகளில் அடிமையை நிர்ஹேதுகமாக என்னைக் கொண்டருளினாய். [இனி] - அடிமைகொண்டபின்பு. [என்ஆரமுதே] - எனக்கு நிரதிஶயபோக்யனானவனே!

---

த்ரவ்யார்ஜநம்பண்ணும் ப்ரகாரம் எப்படி? என்ன, ஸாதுஎன்று இத்யாதி. தோற்றினவாறே - க்ராமணிக்குத் தோற்றினவாறே. அவன் - ஸாது. இவன் - க்ராமணி. திரியவிட்டு - எறிட்டெழுதி. அதாவது - தன்னுடையபேரிலே எழுதினத்தை வேறொருத்தன்பேரிலே யெழுதுகை. மறுகப்பண்ணி - கலங்கப்பண்ணி. வல்வலை - வலிதான வலை. வலையின் ஸ்வபாவத்தைப்பற்ற பாவம் - இவனுக்கு இத்யாதி. சிகைக்க - வட்டிக்கு. குமைத்திட்டு - நலிவுபடுத்தி. கொன்று - முடித்தென்றபடி. இப்படிசெய்தால் - அர்த்தத்துக்காக ஹிம்ஸித்தால். 'அறப்பொருளை யறிந்தோரார்' என்றதுக்கு மூன்றர்த்தம்: தர்மதத்த்வத்தை யறிந்து, ஓரார் - அதினுடைய நிரூபணத்தி விழியார்க ளென்னுதல்; அன்றிக்கே, தர்மதத்த்வத்தை யறிந்து பரஹிம்ஸையில்நின்றும் நீங்கா ரென்னுதல்; அன்றிக்கே, பொருளை - அற - அறிந்தோரார்: அதாவது - அர்த்தமென்ற புருஷார்த்த மொன்றையுமே மிகவிரும்பி, நன்மைதீமை நிரூபியாரென்று. முந்தினது - தேஹாத்வ்யதிரிக்தம் இத்யாதி. அதிலேவந்தவாறே - தர்மதத்த்வத்தை விசாரிக்கி லென்றபடி. தட்டுப்படும் - தர்மமாகாதே அதர்மமாயே பர்யவஸிக்குமென்றபடி. இரண்டாமர்த்தம் - அன்றிக்கேபரஹிம்ஸையில் இத்யாதி. இப்பதம் இவ்வர்த்தத்தைக் காட்டும்படி யெங்ஙனே? என்ன, ஓருதல் - ஒருவுதல் இத்யாதி. மூன்றாமர்த்தம் - அன்றிக்கே அர்த்த புருஷார்த்தம் இத்யாதி. ஆக, 'அறப்பொருளை யறிந்து' என்றதுக்கு இரண்டர்த்தம். 'ஓரார்' என்றதுக்கு இரண்டர்த்தமுமாகக் கண்டுகொள்வது. 'வெறித்துளவம்' இத்யாதிக்கு பாவம் - இஸ்ஸம்ஸாரிகள் இத்யாதி. சப்தார்த்தம் - பரிமளிதமான இத்யாதி. 'அறப்பொருளையறிந்தோரார்' என்றதின் இரண்டாமர்த்தத்திலே நோக்காக அருளிச் செய்கிறார் - ஶப்தாதிவிஷய இத்யாதி. 'அற' என்றதுக்கு - ஒருஹேது அறக் கொண்டாயென்று அர்த்தமாக்கி அருளிச்செய்கிறார் - நிர்ஹேதுகமாக இத்யாதி. எம்பார்நிர்வாஹத்திலே அடிமைகொண்ட இத்யாதி. ஆழ்வான்நிர்வாஹத்துக்குச் சேச

நான் இவர்கள் நடுவே யிருக்கிற இருப்பைவிட்டு உன் திருவடிகளிலே சேரும்படி அழைத்துக் கொண்டருளவேணும். அன்றிக்கே, [இனியேன்] - அவர்கள் ஒருபடியாலும் அத்ருஷ்டத்தில் நெஞ்சுவையாரானபின்பு, நான் அவர்களநர்த்தத்துக்குக் கரைந்ததுக்கு ப்ரயோஜநமேன்? அத்தை விடலாகாதோ? என்னை முதல் அங்கே அழைத்துக்கோண்டருளவேணும். (௬)



# ஏழாம்பாட்டு.

ஆயேயிவ்வுலகத்து நிற்பனவுந்திரிவனவும்
நீயேமற்றொருபொருளு மின்றிநீநின்றமையால்
நோயேமுப்பிறப்பிறப்புப் பிணியேயென்றிவையொழியக்
கூயேகொள்ளடியேனைக் கொடுவுலகங்காட்டேலே.

**ஆ.**—(ஆயே.) த்வதாத்மகமாகையாலே த்வச்சேஷதைகரஸமா யிருக்கச்செய்தே த்வச்சேஷதைகரஸத்வஜ்ஞாநரஹிதமாய் த்வத்விஶ்லேஷைக து:கத்வரஹிதமுமாய் ஜந்மஜரா வ்யாதி மரணாதி து:கமுமாயிருந்த இந்தப்பொல்லாதலோகத்தை என்கண்ணால் காணமாட்டுகிறிலேன். இங்குநின்றும் ஈண்ட அடியேனை வாங்கியருளவேணு மென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், அபேக்ஷிதம் தாம் நினைத்தபோதே கிடையாவிட்டவாறே 'நீரே யத்நம்பண்ணி வாரீர்' என்று எம்பெருமான் பேசாதிருந்தானாகக் கொண்டு ஸகலபதார்த்தங்களினுடைய ஸ்வரூபஸ்தித்யாதிகளெல்லாம் த்வததீநமானபின்பு த்வத்விமுகமான ஸம்ஸாரத்தைக் காட்டாதே நான் உன் திருவடிகளிலே வரும்படி நீயே பார்த்தருளவேணும் என்கிறார்.

[ஆயே என்று தொடங்கி] - இந்தலோகத்தில் ஸ்வதந்த்ரமாய் ஜீவிப்பது ஒருபதார்த்தமுமின்றிக்கே ஸ்தாவரஜங்கமாத்மகமான ஸகலபதார்த்தங்களும் த்வததீநஸ்வரூபஸ்தித்யாதிகளாம்படியாயே நீ நின்றமையாலே. [ஆயே] – பரிவனே! என்றுமாம். [இறப்பிறப்பு] - இறப்பு பிறப்பு. [கூயேகொள்] – அழைத்துக்கொள்.

**ப.**—அநந்தரம், ஸர்வாத்மபூதனான நீ, க்ரூரமான து:கோத்தரஜகத்தைக் காணாதபடி என்னை அழைத்துக்கொண்டருளவேணும் என்கிறார்.

இ உலகத்து - இந்தலோகத்தில், நிற்பனவும் - நிற்பனவும், திரிவனவும் - திரிவனவும், நீயே ஆய் - நீயே ஆய், மற்று ஒருபொருளும் - வேறு ஒருபதார்த்தமும், இன்றி - இன்றி, நீ – நீ, நின்றமையால் - நின்றபடியாலே, (ஸ்வஶரீரத்தில் வ்யாத்யாதிகளை ஶரீரி தானே சமிப்பிக்குமோபாதி), நோயே - நோய், மூப்பே - மூப்பு, பிறப்பே - பிறப்பு, இறப்பே - இறப்பு, பிணியே - பிணி, என்ற - என்றுசொல்லப்பட்டுத் தனித்தனியே து:கத்துக்குநிரபேக்ஷஹேதுவான, இவை - இவை, ஒழிய - போம்படியாக, அடியேனை - (உனக்கு) அடியேனான என்னை, கூயே கொள் - அழைத்துக்கொண்டருளவேணும்; (இவற்றாலே ஈடுபடுகையாலே), கொடு - கொடிதாய் (க்லேஶோத்தரமான), உலகம் - ஜகத்தை, காட்டேல் - (என்கண்ணுக்கு) இலக்காக்காதொழியவேணும். மூப்பு பிறப்பு என்கிற சொற்கள் - * ஸந்திகார்யத்தாலே, புகரம் மறைந்து மூப்பிறப்பு என்று கிடக்கிறது. பிணியென்று - தாரித்ர்யத்துக்கும் பேர்.

---

அர்த்தம் - அவர்கள் இத்யாதி. கரைந்ததுக்கு - க்லேஶிக்கைக்கு. 'அத்தைவிடலாகாதோ' என்றது - ஸ்வகதம். அங்கே - பரமபதத்திலே. க்ரமேண அந்வய:. (௬)

---

* விகாரத்தால் என்று இருக்கலாம்.

இ.—ஏழாம்பாட்டில், அபேக்ஷிதம் அப்போதே கிட்டாதொழிந்தவாறே பேறு தம்மதான பின்பு தானே யத்நம்பண்ணி வருகிறார் என்று நினைத்திருந்தானாகக் கொண்டு, ஸகல பதார்த்தங்களும் த்வததீநமானபின்பு நீயே உன்னைக் கிட்டும் வழி பார்த்தருளவேணும் என்கிறார்.

[ஆயே] - ஆயே என்றது - தாயே என்றதாய், தாய்போல் பரிவனானவனே! "மாதா பிதா ப்ராதா". நீயே ஆயே என்று கூட்டவுமாம். இந்த லோகத்தில் ஸ்தாவரஜங்கமாத்மகமாயுள்ள ஸகல பதார்த்தங்களும் நீ யென்கிற சொல்லுக்குள்ளே யாம்படியாய்; "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம". [மற்று இத்யாதி] - வேறு ஸ்வதந்த்ரமா யிருப்பதொரு பதார்த்தம் இல்லாதபடி ஸர்வத்தையும் ப்ரகாரமாகக் கொண்டு நீ ப்ரகாரியாய் நிற்கையாலே. "நேஹ நாநாஸ்தி கிஞ்சந". ஶரீரத்தில் வந்த து:கங்கள் ஶரீரி போக்குமாபோலே எனக்கு வரும் து:கங்கள் போக்குகை உனக்கே பரமென்கை. [நோயே இத்யாதி] - இறப்பிறப்பு - இறப்புப் பிறப்பு, நோய் - பிணி. ஆதி - வ்யாதி. [இவை ஒழிய] - இவற்றாலே நோவுபடுகிற ஸம்ஸாரிகள் நடுவில் நின்றும். [கூயேகொள்] - கூவிக்கொள்; அழைத்துக்கொள். [கொடுவுலகம் காட்டேலே] — கொடுவுலகம் - கொடிதானலோகம், ஶப்தாதிவிஷயப்ரவணமாய் த்வத்விமுகமான லோகம். காட்டேலே - த்ருஷ்டிவிஷம்போலே காணவே முடிவன் என்கிறார்.

ஈடு.—ஏழாம்பாட்டு. அபேக்ஷிதம் அப்போதே கிட்டாமையாலே, 'பேறு தம்மதானபின்பு தாமே யத்நம்பண்ணிவருகிறார்' என்று நினைத்தானாகக்கொண்டு, 'ஸகல பதார்த்தங்களும் த்வததீநமான பின்பு நீயே உன்னைக்கிட்டும்வழி பார்த்தருளவேணும்' என்கிறார்.

[ஆயே]- தாயே யென்றபடியாய், "மாதா பிதா"(மாதாபிதா) என்கிறபடியே எனக்கு ஸர்வவிதபந்துவர்க்கமுமானவனே! அன்றிக்கே, [இவ்வுலகத்து நிற்பனவும் திரிவனவும் நீயே - ஆயே]-இந்தலோகத்தில் ஸ்த்தாவரஜங்கமாத்மகமான ஸர்வபதார்த்தங்களும், 'நீ' என்கிற சொல்லுக்குள்ளேயாம்படி ப்ரகாரமாயற்று, நீ யொருவனுமே ப்ரகாரியாய். [மற்றோருபொருளுமின்றி] - "நேஹ நாநாஸ்தி"(நேஹநாநாஸ்தி) "ஆத்மைவாபூத் தத்கேந கம் பஶ்யேத்" (ஆத்மைவாபூத் தத்கேநகம்பஶ்யேத்) என்றும் சொல்லுகிறபடியே, அப்ரஹ்மாத்மகமாய் ஸ்வதந்த்ரமா யிருப்பதோரு பதார்த்தங்களை யாயிற் றில்லை யென்கிறது. [நீ நின்றமையால்] - நீ இப்படி நின்றபின்பு. [நோயித்

---

ஏழாம்பாட்டு - ஆயே இத்யாதி. 'நீயே - கூயேகொள்' என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - அபேக்ஷிதம் இத்யாதி.

'ஆயே' என்று-தாயாய், மற்றபந்துக்களுக்கும் உபலக்ஷணமாக்கி அருளிச்செய்கிறார்-தாயே இத்யாதி. "மாதா பிதா ப்ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" இத்யாதி ஸுபாலோபநிஷதி. இந்தப்பக்ஷத்திலே 'ஆயே' என்று-ஸம்புத்தி; நீயே-நீயேயாய்க்கொண்டு. இரண்டாம்பக்ஷத்தில், 'நீயே-ஆயே' என்று அந்வயமாய், ஏகாரம்-அசையாய், நிற்பனவும் திரிவனவும் நீயேயா யென்று அர்த்தம். ஸாமாநாதிகரண்யம் - ப்ரகாரப்ரகாரிபாவநிபந்தநம். இதுக்கு ப்ரமாணம் - ஆத்மைவாபூத் இத்யாதி. 'மற்றொரு பொருளுமின்றி' என்று ஸ்வரூபைக்யம் சொல்லுகிறதோ? என்ன, நேஹ இத்யாதி. "ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பஶ்யதி। மநஸைவேதமாப்தவ்யம் நேஹ நாநாஸ்தி கிஞ்சந" இதி கடவல்ல்யாம். அஸ்யார்த்த: ய: - இஹ - ஜகதி. நாநேவ பஶ்யதி - ப்ரஹ்மாத்மகதாபாவேந பஶ்யதி, ஸ:, ம்ருத்யோர் ம்ருத்யுமாப்நோதி - புந:புநர்ஜநநமரணாதீந் ப்ராப்நோதீத்யர்த்த:. "ப்ரஹ்ம நந்தி தத்ஸதுபாஸ்யம் விதி" இத்யத்ர, ப்ரத்யக்ஷஸித்தஸ்ய ஜாநதோ தத்ப்ரஹ்மாத்மகத்வாத் உக்தமர்த்தம் த்ருடீகரோதி 'மநஸைவேதம்' இத்யாதிநா. இஹ-ஜகதி, நாநா-நாநாஸ்தி ஏதந்மநஸைவாப்தவ்யமிதி. "யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத்கேந கம் பஶ்யேத்" இதி ப்ருஹதாரண்யகே. அஸ்யார்த்த: - யத்ர - யதா, அஸ்ய - வேதநஸ்ய, ஸர்வம் - ஜகத், ஆத்மைவாபூத் - ப்ரஹ்மாத்மகமிதி ஜ்ஞாதா, தத் - ததா, கேந - ப்ரஹ்மாத்மகேந கேந கரணேந, கம்-ப்ரஹ்மாத்மகம், பஶ்யேதித்யர்த்த இதி. இப்போது ப்ரகாரப்ரகாரிபாவம் சொன்ன

யாதி] - ஶரீரத்துக்கு வந்தவற்றுக்கு ஶரீரியான ஆத்மா ஸுகித்தல் துக்கித்தல் செய்யுமோபாதி, எனக்கு வந்தவற்றுக்கு ஸுகித்தல் துக்கித்தல் செய்வாய் நீயாம்படி ஸம்பந்தமுண்டா யிருந்த பின்பு; ஜந்மநிபந்தநமான இவ்வ்யஸநங்களைக் கழித்து. நோயும் பிணியுமென்று - ஆதிவ்யாதிகள். [கூயேகொள்] - 'இவன் தானே வருகிறான்' என்றிராதே நீயே அழைத்துக்கொண்டருளவேணும். [கோடேவுலகம்] - உன்னைவிட்டு ஶப்தாதிகளாலே போதுபோக்கியிருக்கிற லோகம். [காட்டேலே] - த்ருஷ்டிவிஷம்போலே, காணில்முடிவன். இந்தலோகயாத்ரை என்கண்ணுக்கு இலக்காகா தொழியவேணும். என்கையாலே - இந்தலோகயாத்ரை இவர்கண்ணில் பட்டதில்லையாயிருந்தபடி. மயர்வறமதிநல மருளினவோபாதி ஸர்வஶக்தியானவன் இத்தைக்காட்டில், காணுமித்தனை. ஆனால், "இவையென்னவுலகியற்கை" என்றத்தோடு சேரும்படியென்? என்னில்,—"பரஹிதம்" என்கிற புத்தியாலே முன்பு அநுஸந்தித்தார்; 'இதுதான் என்னைவந்து கிட்டாதபடி பண்ணவேணும்' என்கிறார் இதில். (எ)

## எட்டாம்பாட்டு.

காட்டிநீகரந்துமிழும் நிலம்நீர் தீவிசும்புகால்
ஈட்டிநீவைத்தமைத்த இமையோர்வாழ்தனிமுட்டைக்
* கோட்டையினிற்கழித்தென்னை உன்கொழுஞ்சோதியுயரத்துக்
கூட்டரியதிருவடிக்கள் எஞ்ஞான்றுகூட்டுதியே?

**ஆ.**—(காட்டி.) உன்னுடைய ஸ்ருஷ்ட்யாதிலீலைக்கு உபகரணபூதமாய் த்வததிஷ்டித ப்ருதிவ்யாதி பஞ்சபூதாரப்தமாய் ப்ராக்ருதவிஷயைகபோக ப்ரஹ்மாதிக்ஷேத்ரஜ்ஞவர்க்க பரிபூர்ணமாயிருந்த அண்டத்தைக் கழித்து, நிரவதிகதேஜோமயமாய் ஸத்வகுணாத்மகமாய் ப்ரக்ருதே: பரஸ்தாத்வர்த்தமாநமான ஸ்ரீவைகுண்டத்திலே கொண்டுபோய், **ஸ்வயத்நதுர்லபமான உன்திருவடிகளிலே என்னை என்று கூட்டுவது? என்கிறார்.**

ஒ.—எட்டாம் பாட்டில், எம்பெருமான் 'நீர் அபேக்ஷித்தபடியே செய்கிறோம்' என்ன, 'என்று செய்வது?' என்கிறார்.

[காட்டி என்று தொடங்கி] - நீ ஸ்ருஷ்டித்துத் திருவயிற்றிலே வைத்துப் புறப்படவிடும் ப்ருதிவ்யாதிபூதங்களைந்தாலும் சமைத்துவைப்பதும் செய்த ப்ரஹ்மாதிகளுக்கு போகஸ்தாநமாய் அத்யந்தவிலக்ஷணமான அண்டமாகிற கோட்டையினின்றும் புறப்படவிட்டு. [என்னை என்று தொடங்கி] - விலக்ஷண தேஜோரூபமாய் மற்றும் எல்லாப்படியாலும் மேற்பட்டிருந்துள்ள திருநாட்டிலே தந்தம் மிடுக்கால் துஷ்ப்ராபமான உன்திருவடிகளை.

துக்கு பாவம் - சரீரத்துக்கு இத்யாதி. நோய்க்கும் பிணிக்கும் பேதமேது? என்ன, நோயும் இத்யாதி. ஒழிய - ஒழித்து. 'கூயே' என்ற ஏவகாரார்த்தம் - இவன்தானே இத்யாதி. கொடுமையை உபபாதித்துக் கொண்டு, 'காட்டேல்' என்கைக்குக் காட்டினால் வந்த அநர்த்தமேது? என்ன, த்ருஷ்டிவிஷம் இத்யாதி. பலிதம் - இந்த இத்யாதி. ஆனால் இப்போது லோகயாத்ரையை அநுஸந்திக்கைக்கு ஹேதுவேது? என்ன, மயர்வற இத்யாதி. 'காட்டேல்' என்கையாலே, ஈஶ்வரன்தானே காட்டுவதற்கு முன்பு இவர் காணாமையும், ஈஶ்வரனே காட்டினானென்கையும் தோற்றுகிறது. அவன் காட்டினால், 'காட்டேல்' என்று - துஸ்ஸஹமாகச் சொல்லுவானென்? என்று ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் - ஆனால் இத்யாதி. 'மூப்பிறப்பு' என்றவிடத்தில், - ஸந்திகார்யத்தாலே புகரம் மறைந்து மூப்பிறப்பென்று கிடக்கிறது. 'பிணி' என்று-தாரித்ர்யத்துக்கும் பேர். நின்றமையால் - நின்றபடியால். க்ரமேண அந்வய:. (எ)

* 'கோட்டையினைக்கழித்து' என்பது உரையின் பாடம்.

ப.—அநந்தரம், 'ஸகலஜகத்காரணபூதனான நீ, இந்த ஜகதந்தர்பாவத்தைக் கழித்து என்னை உன்திருவடிகளிலே கூட்டுவது என்று?' என்கிறார்.

காட்டி - (பூர்வஸ்ருஷ்டியிலே) ப்ரகாசிப்பித்து, நீ – நிரபேக்ஷகாரணபூதனான, நீ,— கரந்து - (ஸம்ஹ்ருத்யவஸ்த்தையிலே "தமஃ – ஏகீபவதி" என்கிறபடியே நாமரூப விபாக ரஹிதமாம்படி ஸ்வரூபத்திலே) மறைத்து, உமிழும் - (ஸ்ருஷ்டிதசையிலே "யதா பூர்வம் அகல்பயத்" என்கிறபடியே) உண்ட துமிழ்ந்தாற்போலே உருக்குலையாதபடி ஸ்ருஷ்டிக்கும், நிலம் நீர் தீ விசும்பு கால் - ப்ருதிவ்யாதிபூதங்களைந்தையும், ஈட்டி - (பஞ்சீகரணப்ரகாரத்தாலே) திரட்டி, வைத்து - (இவற்றைப் புறவாயிலே ஆவரணமாகவும்) வைத்து, (அகவாயிலே), இமையோர் - ப்ரஹ்மாதிகளான அநிமிஷர்க்கு, வாழ் - வாஸஸ்த்தானமாம்படி, அமைத்த - சமைத்த, தனி முட்டை - அத்விதீயமான அண்டமாகிற, கோட்டையினை - முட்டுக்கோட்டையை, கழித்து - கழித்து, என்னை - (இதிலிருப்பு துக்கமாய் உன்னைப்ப்ராபிக்கையிலே) ஆசையுடைய என்னை, உன் கொழுஞ் சோதி - உனக்கு அஸாதாரணமாய் அதிசயிததேஜோரூபமாய், உயரத்து - ("விஶ்வதஃ ப்ருஷ்டேஷு ஸர்வதஃ ப்ருஷ்டேஷு" என்கிறபடியே எல்லாவற்றுக்கும்) மேலான பரமபதத்திலே, (வித்துபஶிவஸநகாதிகளுக்கும் அத்யந்ததூரமாம்படி), கூடு அரிய – பெறுதற்கு அரிதான, திருவடிக்கள் - திருவடிகளை, எஞ்ஞான்று - எக்காலம், கூட்டுதி - கூட்டுதி? காலம் அறிந்தேனாகில் தரித்திருக்கலாமென்று கருத்து. 'கரந்துமிழுமென்று - உண்டுமிழ்ந்து' என்றுஞ் சொல்லுவர்கள்.

இ.—எட்டாம் பாட்டில், 'நீர் அபேக்ஷித்தபடியே செய்கிறோம்' என்ன, 'என்று செய்வது?' என்கிறார்.

[காட்டி] - ஸ்ருஷ்டித்து; நாமரூபங்கள் அழிந்து ஸதவஸ்தமான ஜகத்தை "யதா பூர்வமகல்பயத்" என்கிறபடியே நாமரூபங்களை உண்டாக்கி. [நீ கரந்து உமிழும்] - ஸ்ரஷ்டாவான நீயே ப்ரளயம் கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்து உள்ளேயிருந்து தளராதபடி உமிழும். [நிலம் இத்யாதி] - பஞ்சபூதங்களையும்; "தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதமேகைகாம் கரவாணி" என்கிறபடியே த்ரிவ்ருத்கரித்து; "ஸமேத்யாந்யோந்யஸம்யோகம் பரஸ்பரஸமாஶ்ரயா:" என்னக் கடவதிறே. [வைத்து அமைத்த] - சமைத்து வைத்த. [இமையோர் இத்யாதி] - ப்ரஹ்மாதிகளுக்கு போகஸ்தானமாய் "ஈஶ்வரோஹம்" என்று வன்னியம் செய்கிற தேசமாய் அத்விதீயமான வைலக்ஷண்யத்தை யுடைத்தான அண்டமாகிற அரணினின்றும் புறப்படவிட்டு. புக்காருக்குப் புறப்படவொண்ணாத அரணிறே. [என்னை] - 'இம் முட்டுக்கோட்டையிலே அகப்பட்டேன்' என்று இருக்கிற என்னை. [உன்கொழுஞ்சோதி] - விலக்ஷணதேஜோரூபமாய். [உயரத்து] - 'ஸர்வோத்தரம்' என்னுதல்; 'ஸர்வப்ரகாரத்தாலும் உத்க்ருஷ்டம்' என்னுதல். [கூட்டரிய திருவடிக்கள்] - துஷ்ப்ராபமான திருவடிகளிலே. என்னால் ஸாத்யமன்றிக்கே நீயே தர காணுமது என்கை. [எஞ்ஞான்று கூட்டுதியே] - இன்னநாள் செய்யக் கடவோமென்று எல்லைபெறிலும் தரிக்கலாம். "சதுர்தஶ வர்ஷாணி" என்று ஒரு வார்த்தை பெறிலும் "ஜீவிதாஶா மம ததஸ்ச" என்று தரிக்கலாம். "பூர்ணே சதுர்தஶே வர்ஷே" என்று நாளெல்லை பெற்ற ஸ்ரீபரதாழ்வானைப்போலே. விரோதியைப் போக்கிலும் தன்னைப் பற்றிப் போக்கவேணும்; தன்னைப் பெறிலும் தன்னாலே பெறவேணும். "நாஶயேயம் ஸ்வதேஜஸா", "ஶரணம் வ்ரஜ".

௬௰.—எட்டாம்பாட்டு. நாமே செய்யப்புக, நீர் "வேண்டா" என்றவாறேயன்றோ தவிர்ந்தது; இதுக்கு நம்மைக் காற்கட்டவேணுமோ? என்ன, 'செய்யக்கடவதாகில் அது என்று செய்வது?' என்கிறார். "எம்மாவீட்டுத் திறமும் செப்பம்" என்றாரே.

[காட்டி] - ஐந்த்ரஜாலிகரைப்போலே; முன்பு தானேதானும்படி இவற்றையடைய்த் தன்பக்கலிலே உபஸம்ஹரித்து ஸதவஸ்த்தமான ஜகத்தை, "யாதா யபூர்வமகல்பயத்," (தாதாயதாபூர்வமகல்பயத்) என்கிறபடியே, இத்தை யுண்டாக்கிக் காட்டி. [நீ கரந்துமிழும்] - ஸ்ரஷ்டாவான நீயே ப்ரளயம்வந்தவாறே உள்ளேவைத்து ரக்ஷித்து, அதுகழிந்தவாறே வெளிநாடுகாண உமிழும். அன்றிக்கே, நீ கரந்து - காட்டி, உமிழ்ந்து - காட்டு மென்றுமாம். இப்படி உண்பது உமிழ்வதான ப்ருதிவ்யாதிகளாலே, [ஈட்டி] - திரட்டி. த்ரிவ்ருத்கரணத்தைச் சொன்னபடி. "ஸமேத்யாந்யோந்யஸம்யோகம்பரஸ்பரஸமாச்ரயாঃ," (ஸமேத்யாந்யோந்யஸம்யோகம்பரஸ்பரஸமாச்ரயாঃ) - இவை தனித்தனியும் காரியத்தைப் பிறப்பிக்கமாட்டா; கூடினாலும்

எட்டாம்பாட்டு - காட்டிநீ இத்யாதி. 'என்னான்றுகூட்டுதி' என்று காலாவதி கேட்கும்போது, செய்கை நிச்சிதமாக வேண்டுகையாலே, ததநுகுணமாக அவதாரிகை - நாம்செய்ய இத்யாதி. அவன் செய்யப்புக, இவர் 'வேண்டா' என்றாரோ? என்ன, எம்மாவீடு இத்யாதி.

உண்டாக்கி என்னாதே, 'காட்டி' என்கையாலே ஐந்த்ரஜாலிகரைப்போலே என்றது. இவ் வாக்யத்தால் - அஸத்கார்யவாதத்தை நிரஸித்தபடி. ஐந்த்ரஜாலிகரைப்போலே - ஒருவரையும் அறியாமல் சிலபதார்த்தங்களை விழுங்கி அத்தைப் புறப்படவிடுமாபோலே யென்றபடி. தானேதானும்படியாவது - தானே உபஸம்ஹரிக்குமிடத்தில், தானும்படிஇவற்றையடையத் தன்பக்கலிலே உபஸம்ஹரித் தென்றபடி. "யாதாயபூர்வமகல்பயத்" என்கிறபடியே - ஐந்த்ரஜாலிகரைப்போலே இத்தையுண்டாக்கிக் காட்டி என்று அந்வயிப்பது. ஐந்த்ரஜாலிகரைப்போலே யென்கையாலே அநாயாஸேந உண்டாக்கினபடியும் சொல்லுகிறது. 'காட்டி' என்றதுக்கும், 'அமைத்த' என்றதுக்கும் புநருக்தி வாராமைக்காக, 'அமைத்து - காட்டி' என்று அந்வயித்து அர்த்தம் - உண்டாக்கிக்காட்டி என்று. அன்றிக்கே நீ கரந்துகாட்டி யுமிழ்ந்து காட்டுமென்றுமாம் என்றது - "கரந்துகாட்டி, உமிழ்ந்துகாட்டி' என்று - முழுச்சொல்லாய், நிகரணோத்கிரணங்களைச் சொல்லுகிறதென்றபடி. முந்தின யோஜனைக்கு,'காட்டி' என்று - ஜகத்தையுண்டாக்கி யென்று ஸ்ருஷ்டியைச் சொல்லி, அது அப்யயபூர்விகையாகையாலே அத்தையும் சொல்லிற்றாய், 'கரந்துமிழும்' என்று - அவாந்தரப்ரளயத்தைச் சொல்லுகிறது; இந்தயோஜனையில், 'நீ கரந்துமிழும்' என்று தொடங்கி, 'நீயமைத்து - காட்டி - வைத்த' என்று அந்வயிப்பது; அமைத்துக்காட்டிவைத்த - உண்டாக்கி ப்ரகாசிப்பித்துவைத்த. இரண்டாம்யோஜனையில், 'கரந்துகாட்டி, உமிழ்ந்துகாட்டி' என்கிறவிடத்தில், காட்டியென்கிறதுக்கு - அர்த்தமில்லை. கரந்துகாட்டி - கரந்து; உமிழ்ந்துகாட்டி-உமிழ்ந் தென்றபடி; 'செய்துகாட்டும், வந்துகாட்டும்' என்னுமாபோலே. ஆக, இரண்டாம்யோஜனையில், கரந்தென்று - ஸம்ஹாரத்தையும், உமிழுமென்று - ஸ்ருஷ்டியையும் சொல்லுகிறது. த்ரிவ்ருத்கரணமாவது - தேஜோபந்நங்களைக் கூட்டுகை. அந்நம் - ப்ருதிவி. இது - பஞ்சீகரணத்துக்கும் உபலக்ஷணம். "ஸேயம் தேவதைக்ஷத ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணீதி | தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதமேகைகாம் கரவாணீதி | ஸேயம் தேவதேமாஸ்திஸ்ரோ தேவதா அநேநைவ ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரோத் |" இத்யாதிப்படியே பஞ்சீகரணக்ரமம் கண்டுகொள்வது. பஞ்சீகரணந்தான் வேணுமோ? என்ன, ஸமேத்ய இத்யாதி. "நாநாவீர்யாঃ ப்ருதக்பூதாஸ்ததஸ்தே ஸம்ஹதிம் விநா | நாசக்நுவந் ப்ரஜாঃ ஸ்ரஷ்டுமஸமாகம்ய க்ருத்ஸ்நசঃ | ஸமேத்யாந்யோந்யஸம்யோகம் பரஸ்பரஸமாச்ரயாঃ | மஹதாத்யா விசேஷாந்தா ஹ்யண்டமுத்பாதயந்தி தே" இதி ப்ரதமேம்சே த்விதீயே. "ப்ருதக்பூதாঃ" என்றதுக்குஅர்த்தம் - இவைதனித்தனியும் இத்யாதி. "ஸம்ஹதிம் விநா" என்றதுக்கு அர்த்தம் - கூடினாலும் இத்யாதி. "பரஸ்பரஸமாச்ரயாஸ

ஸமப்ரதாநமாய் நிற்கில் காரியம் பிறப்பிக்கமாட்டாது; சேதுகையும் மண்ணையும் நீரையுங் கூட்டி குலாலாதிகள் வடாதிகளைப் பிறப்பிக்குமாபோலே; பரஸ்பரம் காரணம் ஏகரூபமாய்நிற்கில் கார்யமும் ஏகரூபமாயிருக்குமிறே; தேவாதிகார்யநாநாவித்யம் பிறக்கும்படி குணப்ரதாநபாவேந நிற்கும். இப்படி இவற்றைத் திரட்டி இவற்றாலே. [நீவைத்தமைத்த] - நீசமைத்துவைத்த. [இமையோர் இத்யாதி] - ப்ரஹ்மாதிகள் வன்னியம்செய்கிற அத்விதீயமான அண்டமாகிற கோட்டையினின்றும் என்னைப் புறப்படவிட்டு. கோட்டையாவது - புறம்புள்ளாரால் புகுரவொண்ணாததுமாய், உள்ளுள்ளாரால் புறப்படவுமொண்ணாதே, புக்கவிடமும் புறப்பட்டவிடமும் தெரியாதாயிருக்குமதிறே. "[Grantha] " (துரத்யயா) என்றானிறே தானும். [என்னை] - இக்கோட்டையிலே யகப்பட்டுப் புறப்பட வழியறியாதிருக்கிற என்னை. "[Grantha]" (மாமேவயேப்ரபதயந்தேமாயாமேதாந்தரந்திதே) என்று நீ சொன்னபடியே உன்னையே பற்றின என்னை. உம்மை இத்தைக் கழித்துக்கொடுபோகச் சொல்லுகிறது எங்ஙனே? என்ன, [உன்கொழுஞ்சோதியுயரத்து] - அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தமாய் சுத்தஸத்த்வமயமாய் நிரவதிக தேஜோரூபமான பரமபதத்திலே. [கூட்டரிய திருவடிக்கள்] - ஸ்வயத்நத்தால் துஷ்ப்ராபமான திருவடிகளை. [எஞ்ஞான்று] - "[Grantha]" (மாசுச:) என்று ஒருவார்த்தை சொல்லிலும், "[Grantha]" (ஸ்த்திதோஸ்மி) என்றிருக்கலாயிறே இருப்பது; அப்படியே 'நான் கூட்டக்கடவேன்' என்று ஒருவார்த்தை அருளிச்செய்யவேணும். "[Grantha]" (ஆருரோஹரதம்ஹ்ருஷ்ட:) என்னலாம்படி, "[Grantha]" (பூர்ணேசதுர்த்தசேவர்ஷே) என்கிறவோபாதி வார்த்தை அருளிச்செய்தருளவேணும். 'இத்தைக்கழிக்கவேணும்' என்றிருக்கிற என்னை, நீ உகந்தாரைக் கொடுபோய் வைக்கும் தேசத்திலே, ஸர்வசக்தியான நீயே என்று கொடுபோய் வைக்கக்கடவை? இக்கோட்டையிட்ட இவன்தானே கழிக்கவேணுமிறே.

---

[Grantha]" என்றதுக்கு ஸத்ருஷ்டாந்தமாக அர்த்தம்- சேதுகையும் இத்யாதி. சேதுகு - பதரும், கூளமும். "[Grantha]" என்ற ஆஸ்ரயாஸ்ரயிபாவம். - ந்யூநாதிபாவநிபந்தநமென்று விவக்ஷித்து, ஸமப்ரதாநபாவமானால் வந்ததேது? என்ன, பரஸ்பரம் காரணம் இத்யாதி. கார்யமும்ஏகரூபமாயிருக்கும் - கார்யபேதமின்றிக்கே யிருக்கும்; ஆகையாலே, தேவாதி என்று கூட்டுவது. வடாதிகளைப் பிறப்பிக்குமாபோலே என்றதுக்கு - 'நாநாவித்யம்பிறக்கும்படி' என்றத்தோடே அந்வயம். குணப்ரதாநபாவேந - அப்ரதாந ப்ரதாநபாவேந. "[Grantha]" இத்யமர:. 'வாழ்' என்றதின்அர்த்தம் - வன்னியம்செய்கிற என்றது. வன்னியம் - குறும்பு. முட்டை - அண்டம். புறப்படவிடவேணுமோ, தானேபுறப்பட்டாலாகாதோ? என்ன, கோட்டையாவது இத்யாதி. கோட்டை - ப்ராகாரம். இதுவும் அப்படி புறப்படவொண்ணாதோ? என்ன, துரத்யயா இத்யாதி. அர்த்தாந்தரம் - "[Grantha]" இத்யாதி. 'உயரம்' என்றத்தைப்பற்ற - அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தமாய் என்றது. 'கொழுஞ்சோதி' என்ற பதத்தாற் சொன்ன தீப்த்யதிசயத்தை ஹேதுபூர்வகமாக அருளிச்செய்கிறார் - சுத்தஸத்த்வ இத்யாதி. உன்கொழுஞ்சோதி யுயரத்து - உன்னுடைய அதிசயித தேஜோரூபமாய் எல்லாவற்றுக்கும் மேலான பரமபதத்திலே. திருவடிக்கள் கூட்டவேணு மென்னாதே, 'எஞ்ஞான்று' என்று கேட்கிறதென்? என்ன, [Grantha] இத்யாதி வாக்யத்வயம். 'எஞ்ஞான்று' என்கையாலே காலஸங்க்யை பெறில் தரிக்கலா மென்னுமிடம் பலிக்கிறதென்று விவக்ஷித்து அதுக்கு ப்ரமாணம் - [Grantha] இத்யாதி. "[Grantha]" "[Grantha]" இத்யயோத்யாகாண்டே. 'என்னை' என்றுதொடங்கி, 'எஞ்ஞான்று கூட்டுதி' என்னுமளவுக்கும் ஸப்தார்த்தம் - இத்தைக்கழிக்க இத்யாதி. 'கோட்டையினில்கழித்து - திருவடிக்களெஞ்ஞான்றுகூட்டுதி' என்றதுக்குத் தாத்பர்யம் - இக்கோட்டை இத்யாதி. 'கோட்டையினில் கழித்து

விரோதியைப் போக்கிலும் இவனைப்பற்றவேணும், தன்னைப்பெறிலும் தன்னாலே பெறவேணும்; "ஶாமேவயே ப்ரபத்யந்தே" (மாமேவயேப்ரபத்யந்தே) "தமேவஶரணம் கச்ச" (தமேவஶரணம் கச்ச.) பிள்ளைதிருநறையூரரையர், "ஒருகுருவி பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்கவோண்கிற தில்லை; ஒருஸர்வஶக்தி, கர்மாநுகூலமாகப் பிணைத்த பிணையை, அவனைக் காற்கட்டாதே, இவ் வெலியெலும்பனான ஸம்ஸாரியால் அவிழ்த்துக்கொள்ளப்போமோ?" என்று பணிப்பர். (அ)

# ஒன்பதாம் பாட்டு.

கூட்டுதிநின்குரைகழல்கள் இமையோரும்தொழாவகைசெய்து
ஆட்டுதிநீஅரவணையாய் அடியேனு * மதுவறிவன்
வேட்கையெல்லாம்விடுத்தென்னை உன்திருவடியேசுமந்துழலக்
கூட்டரியதிருவடிக்கள் கூட்டினைநான்கண்டேனே.

**ஆ.**—(கூட்டுதி.) ப்ரஹ்மாதிகளுக்கும் கூட துர்லபனாயிருந்து வைத்து, எத்தனை யேனும் தண்ணியரேயாகிலும் ஆஶ்ரிதரை உன் திருவடிகளோடே கூட்டுதி யென்னுமிடம் அடியேனுங்கூட அறியும்படி லோகத்திலே ப்ரதிதமா யிருக்குமத்தை, நீ என் பக்கலிலே செய் தருளக் கண்டேன். எங்ஙனே யென்னில்;—ப்ராக்ருதவிஷயைகபோக லௌகிக ஜநஸஹவாஸ ஜநித நிரவதிக து:கமெல்லாம் போம்படி, ப்ராக்ருதவிஷயவைராக்யபூர்வகமாக என்னை உன் திருவடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிகளோடே கூட்டினாய் என்கிறார்.

**ஒ.**—ஒன்பதாம் பாட்டில், இவருடைய வ்யஸநமெல்லாம் நிவ்ருத்தமாம்படி திரு நாட்டிலிருந்த இருப்பைக் காட்டியருளக் கண்டு த்வத்வ்யதிரிக்தங்களில் ருசியை யெல்லாம் தவிர்த்தருளி 'துஷ்ப்ராபமான உன் திருவடிகளை எனக்குத் தந்தாய்; நான் அநுபவிக்கப் பெற் றேன்' என்று த்ருப்தராகிறார்.

[கூட்டுதி என்று தொடங்கி] - ஓரளவில்லாதாரையும் நீ நினைத்தாரை உன்னுடைய திருவடிகளோடே திருவநந்தாழ்வானைப்போலே கூட்டுதி. எத்தனையேனும் அளவுடை யாரேயாகிலும் நீ நினையாதாரைக் காணவொண்ணாதபடி விஷயங்களைக்காட்டி அகற்றி அல மந்து திரியப் பண்ணுதி. லோகவேதங்களில் ப்ரஸித்தமான உன்னுடைய இந்தப்படியை நானும் அறிவன். [வேட்கை என்று தொடங்கி] - 'நீர் அறிந்தபடி எங்ஙனே?' என்னில்,— பாஹ்யவிஷயஸங்கத்தை யெல்லாம் அறுத்து உன் திருவடிகளில் கைங்கர்யமே பண்ணி வர்த் திக்கும்படி ஸ்வபாஹுபலத்தால் துஷ்ப்ராபமான உன் திருவடிகளைக் கூட்டினாய், நான் அநுபவிக்கப் பெற்றேனாகையால், அறிந்தேன்.

**ப.**—அநந்தரம், இவருடைய ஆர்த்தி தீரும்படி பரமபதத்திலிருப்பை ப்ரகாசிப் பிக்க, ஆஶ்ரிதஸம்ஶ்லேஷ ஸ்வபாவனான நீ என்னை உன் திருவடிகளை ப்ராபிப்பிக்கக் கண்டே னென்று த்ருப்தராகிறார்.

---

என்னை' என்று தொடங்கி, 'எஞ்ஞான்றுகூட்டுதி' என்கையாலே பலிதம் - விரோதியை இத்யாதி. இப் படி இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரங்களுக்கு அவனைப் பற்றவேணுமென்னுமதுக்கு ப்ரமாணம் - ஶாமே வயே இத்யாதி. "தமேவஶரணம் கச்ச" என்கிற ஶ்லோகத்தில் "ஸர்வபாவேந" என்கிற பதத் திலே தாத்பர்யம். "ஸர்வலோகஶரண்யாய ராகவாய மஹாத்மநே" இதி ந்யாயாம் அஷ்டாத ஶே. விரோதியைப்போக்கிலும் அவனையிட்டுப் போக்கவேணு மென்கிறதுக்கு ஸம்வாதம் - பிள்ளைதிரு நறையூர் இத்யாதி. பிணைத்த பிணை - பந்தித்த பந்தநம். அவிழ்க்க - விடுக்க. எலியெலும்பன் - அல்ப ஶக்திகன். நீ கரந்துமிழு மென்றுதொடங்கி, ஈட்டி நீ - அமைத்து - காட்டி - வைத்த - கோட்டையினில் என்றுதொடங்கி அந்வயம். த்விதீயார்த்தத்துக்கு, கரந்துகாட்டி யென்று - முழுச்சொல்லு. (அ)

* 'மஸிந்தறிவன்' என்றும் பாடம்.

நீ-(ஸர்வஶக்தியான) நீ, (கூட்ட நினைத்தாரை அளவிலிகளேயாகிலும்); குரை - நிரதிஶயபோக்யமான, நின் கழல்கள் - உன்திருவடிகளை, கூட்டுதி - சேர்த்துக்கொள்ளுதி; (ஸ்வயத்நத்தாலே காண நினைக்கில்), இமையோரும் — (விஶதஜ்ஞாநரான) தேவர்களும், தொழாவகை - கண்டநுபவியாதபடி, செய்து - பண்ணி, ஆட்டுதி - அலமருவிப்புதி; அரவு - (ஆஶ்ரிதர்க்கு அக்ரமண்யனான)திருவநந்தாழ்வானை, அணையாய்- படுக்கையாகக்கொண்டவனே! அது-ஆஶ்ரிதாநாஶ்ரிதவிஷயத்தில் ஸௌலப்யதௌர்லப்ய ரூபமான ஸ்வபாவத்தை, அடியேனும் - ஶேஷபூதனான நானும், அறிவன்-அறிவன்; (எங்ஙனே யென்னில்), வேட்கை எல்லாம் - இதர விஷயங்களில் அபிநிவேஶத்தை யெல்லாம், விடுத்து-ஸவாஸநமாகக் கழித்து, என்னை - உன்னை யொழியச் செல்லாத ஆசையையுடையேனான என்னை, திரு - நிரதிஶயபோக்யமான, உன் அடி - உன் திருவடிகளை, சுமந்து - ஶிரஸாவஹித்து, உழல - "யெநயெநயாதாஹ்நி" என்கிற படியே அநுஸஞ்சரணம் பண்ணும்படியாக, கூட்ட - (எத்தனையேனும் அளவுடையார்க்கும்) கூட்டிக்கொள்ள, அரிய - அரிய, திருவடிக்கள் - திருவடிகளிலே, கூட்டினை - கூட்டிக்கொண்டாய்; நான்-(ப்ராப்தாவான) நான், கண்டேன் - (இந்தப்ராப்யத்தை) அபரோக்ஷித்து அநுபவித்தேன். ஏ - நிஶ்சிதமென்று கருத்து.

இ.—ஒன்பதாம் பாட்டில், இவருடைய ஸம்ஸாராநுஸந்தாநத்தால் வந்த வ்யஸநமெல்லாம் தீரும்படி திருநாட்டிலிருக்கிற இருப்பைக் காட்டியருள, கண்டு அநுபவிக்கப்பெற்றேனென்று த்ருப்தராகிறார்.

[கூட்டுதி நின்குரைகழல்கள்] - ஒரளவில்லாதாராகவுமாம். நீ உகந்தாரை உன் திருவடிகளிலே சேர்த்துக் கொள்ளுதி; தேவர்களேயாகிலும் நீ நினையாதாரை உன்னை யநுபவிக்க வொண்ணாதபடி விஷயங்களைக் காட்டி அலமந்து திரியப் பண்ணுதி. [அரவணையாய்] - திருவடிகளிலே கூட்டிக் கொள்ளும்படிக்கு உதாஹரணம். [அடியேனும் அது அறிவன்] — லோக வேதங்களிலே ப்ரஸித்தமான உன்னுடைய இந்தப்படியை நானும் அறிவன். எத்தாலே?என்ன,—என்திறத்தில் செய்தருளின படியாலே. [வேட்கை யெல்லாம் விடுத்து] - உன்னை யொழிந்த ஸகல பதார்த்தங்களிலு முண்டான ஸங்கத்தை விடுவித்து: நான் எனக்கு என்று இராதபடி பண்ணி. [என்னை] - ருசியுடைய என்னை, உன் திருவடிகளிலே கைங்கர்யம் பண்ணி வர்த்திக்கும்படி. [கூட்டரிய திருவடிக்கள் கூட்டினை] — அநந்யஸாத்யமான திருவடிகளிலே கூட்டினாய். [நான் கண்டேனே] - கேட்டார் வாய்க் கேட்கையன்றிக்கே நான் அநுபவிக்கப் பெற்றேனாகையாலே அறிந்தேன்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. இவருடைய ஸம்ஸாராநுஸந்தாநத்தாலே வந்த வ்யஸநமெல்லாம் தீரும்படி, திருநாட்டிலிருந்த இருப்பைக் காட்டியருள, கண்டு அநுபவிக்கப்பெற்றேனென்று த்ருப்தராகிறார்.

[கூட்டுதி நின்குரைகழல்கள்] - அளவிலிகளாகவுமாம், நீ உகந்தாரை உன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளுதி. குரையென்று - பெருமையாதல், ஆபரணத்வநியாதல். [இமையோர் இத்யாதி] - ப்ரஹ்மாதிகளேயாகிலும், நீ நினையாதாரை வந்துகிட்டாதபடி பண்ணி யலைப்

---

ஒன்பதாம்பாட்டு - கூட்டுதி இத்யாதி. 'வேட்கையெல்லாம்விடுத்து, கூட்டரிய திருவடிக்கள்கூட்டினை' என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை - இவருடைய இத்யாதி.

'இமையோரும்' என்ற ஸமப்தார்த்த ப்ரதிகோடித்வே - அளவிலிகளாகவுமாம் என்றது. நீ உகந்தாரையென்றது - அத்யாஹார்யம். குரையென்று பெருமையாதல் என்றது - போக்யதா ப்ரகர்ஷமென்றபடி. இமையோரும் - ஸர்வோத்க்ருஷ்டரான ப்ரஹ்மாதிகளேயாகிலும். ஆட்டுதி - அலைப்புதி.

புதி. [அரவணையாய்] - 'கூட்டுதி' என்றதுக்கு உதாஹரணம். [அடியேனும் அதுவறிவன்] - லோகவேதங்களிலே ப்ரஸித்தமான உன்படியை நானும் அறிவேன். அறிந்தபடிதான் என்? என்னில்; — [வேட்கையெல்லாம் விடுத்து] - எனக்கு உன்னையொழிந்தவை யா மத்தனை யன்றோ ஆசைப்படுகைக்கு; உன் விபூதியில் நான் 'எனக்கு, எனக்கு' என்றுததுண்டோ? யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை நல்வீடுசெய்திலையோ? [உன்திருவடியே சுமந்துழல] - வாஹ்ய விஷயங்களிலுண்டான ஆசையெல்லாம் உன்பக்கலிலே யாய், உன்திருவடிகளையே நான் ஆதரித்து, அதுவே யாத்ரையாய்ச் செல்லும் படிக்காக. [கூட்டரிய இத்யாதி] - யாவர்சிலர்க்கும் தந்தாமால் சேர்த்துக்கொள்ளவரிய திருவடிகளை நான் சேரும்படி என்னைச் சேர்த்துக்கொண்டாய். இது நான் கேட்டார்வாய்க் கேட்டுச் சொல்லுகிறேனல்லேன்; அநுபவத்தாலே சொல்லுகிறேன். (௯)

## பத்தாம் பாட்டு.

கண்டுகேட்டுற்றுமோந்து உண்டுழலுமைங்கருவி
கண்டவின்பம்தெரிவரிய வளவில்லாச்சிற்றின்பம்
ஒண்டொடியாள்திருமகளும் நீயுமேநிலாநிற்பக்
கண்டசதிர்கண்டொழிந்தேன் அடைந்தேனுன்திருவடியே.

*ஆ.—(கண்டு.) விஷயரஸங்களிலும், கைவல்யாநுபவரஸத்திலும் வைராக்யம் பிறந்தது எத்தாலே என்னில்;—நித்யநிர்த்தோஷநிரவதிக கல்யாணகுணைகதாநராய் தவைவோசிதராயிருந்த லக்ஷ்ம்யாதி திவ்யமஹிஷீ ஜநங்களும், ஸ்வபாவதஏவ நிரஸ்த ஸமஸ்தஸாம்ஸாரிக ஸ்வபாவ த்வத்பரிசர்யைகபோகரான ஶேஷஶேஷாஶநாத்யஸங்க்யேய திவ்யபரிஜநங்களும், நீயுமேயாயிருந்த இந்தமநோஹரமான இருப்பைக் கண்டு, அந்த ஐஶ்வர்ய கைவல்யங்களை யொழிந்து, ததேகபோக த்வத்பராங்முக ஜநஸஹவாஸ ஜநிததுக்கமெல்லாம் போம்படி உன் திருவடிகளை அடைந்தேன் என்கிறார்.*

*ஒ.—பத்தாம் பாட்டில்; 'விட்டது இன்னது, பற்றிற்று இன்னது' என்று ப்ரீத்யதிஶயத்தாலே வ்யக்தமாக அருளிச்செய்கிறார்.*

---

*திருவநந்தாழ்வானை அளவிலியாகச் சொன்னது - திர்யக்ஸமாதியாலே. 'அடியேனும்' என்ற சஶப்தம் - திருவநந்தாழ்வானை ஸமுச்சயிக்கிறதாதல். லோகவேதப்ரஸித்தியை ஸமுச்சயிக்கிறதாதல்; இத்தை அருளிச்செய்கிறார் - லோகவேதங்களிலே இத்யாதி. [illegible] 'அது' என்கிறதுக்கு ப்ரஸித்தி எங்ஙனே? என்ன, லோகவேதங்களிலே என்றது. அறிந்தபடிதான் என்னேன்னில் என்றது - சாஸ்த்ரமுகத்தாலே கேட்டறிந்தீரோ? என்றபடி. வேட்கை - ஆசை. 'எல்லாம்' என்றதுக்கு அர்த்தம் - எனக்குஉன்னை இத்யாதி. 'விடுத்து என்றதுக்கு அர்த்தம் - யாதானும் இத்யாதி. ப்ரக்ருதிப்ராக்ருதங்களிலே ஏதேனுமொன்றைப்பற்றி பகவத்விஷயத்தைவிட்டே போம்படியான ஸம்ஸாரிசேதநனுடைய ஸங்கல்பத்தை நன்றாக விடுவிக்குமவன் இத்யர்த்தः. திருவிருத்தம் - தொண்ணூற்றைந்தாம்பாட்டு, 'யாதானுமோராக்கை' இத்யாதி. விடுத்து - விடுவித்து. சுமக்கை - ஆதரிக்கை. 'நான்கண்டேனே' என்கிற அவதாரண தாத்பர்யம் - இதுநான் இத்யாதி. அரவணையாய், வேட்கையெல்லாம் விடுத்தென்று தொடங்கி, நான்கண்டேன்; ஆகையாலே, நீ கூட்டுதி நின்குரைகழல்கள்; இமையோரும் தொழாவகை செய்தாட்டுதி; அடியேனும் அதுவறிவன் இத்யந்வயः.* (௯)

[கண்டு என்று தொடங்கி]-இப்பாட்டுக்கு, கண் செவி முதலான இந்த்ரியங்களாலே அநுபவிக்கப்பட்ட ஸுகத்தையும் ஸம்ஸாரிகளுக்குதுர்ஜ்ஞேயமாய் ஐந்த்ரியஸுகத்திற்காட்டில் பெருத்து பகவத் கைங்கர்ய ஸுகத்திற்காட்டில் சிறுத்திருந்துள்ள ஆத்மாநுபவஸுகத்தையும் ஒழிந்தேன்; திருநாட்டிலே வேறொருவர் அபிமாநிக்கக் கடவரின்றிக்கே எல்லாரும் உங்கள் அபிமாநத்திலே அடங்கும்படியாகப் பெரியபிராட்டியாரும் நீயுமே வர்த்திக்கக் கடவதாகக் கண்டுவைத்த நேர்பாட்டைக் கண்டு திருவடிகளை அடையவும் பெற்றேன். ஒண்தொடி - அழகிய வளை.

ப.—அநந்தரம், உமக்கு இதரபுருஷார்த்தங்களைக்கழித்து பரமபுருஷார்த்தத்தைக் கூட்டின கணக்கென்னென்ன; ஐஶ்வர்யகைவல்யங்களை நானேவிட்டு, ஸ்ரீய:பதியான உன்னையே புருஷார்த்தமாக நிஶ்சயித்து ப்ராபிக்கும்படியானேன் என்கிறார்.

கண்டு - (ரூபகுணத்தைக்) கண்டும், கேட்டு - (சப்தகுணத்தைக்) கேட்டும், உற்று - (ஸ்பர்ஶகுணத்தைக்) கிட்டியும், மோந்து - (கந்தகுணத்தை) மோந்தும், உண்டு - (ரஸகுணத்தை) புஜித்தும், உழலும் - (லப்தவிஷயத்தில் பசைபோராமல் ஸஜாதீயவிஷயந் தேடி) அலமாக்கும், ஐங்கருவி - ஐந்திந்த்ரியங்களாலேயும், கண்ட - பரிச்சேதித்து அநுபவித்த, இன்பம் - ஐஶ்வர்யஸுகமும், தெரிவு - இந்த இந்த்ரியங்களுக்கு க்ரஹித்து அநுபவிக்க, அரிய - அரிதாய், அளவில்லா - (இவ்வைஶ்வர்யஸுகத்திற்காட்டில் நித்யத்வாதிகளாலே) அபரிச்சின்னமாய், சிறு இன்பம் - ஹுவதநுபவத்தைப் பற்ற அத்யல்பமான ஆத்மாநுபவஸுகமும், ஒண் தொடியாள் - விலக்ஷணமான முன்கைச்சரியை யுடையளாய், திருமகளும் — ஸர்வஸம்பத்ஸமஷ்டிபூதை யாகையாலே திருவென்று சொல்லப்பட்ட நாரீணமுத்தமையும், நீயுமே - (புருஷோத்தமனான) நீயுமே, நிலா நிற்ப - (அந்த ஸம்பத்தும் ஆத்மஸ்வரூபமும் உபயப்ரகாரமுமாம்படி) ஒருபடிப்பட்டு நிற்கும்படியாக, கண்ட - நிரூபித்துவைத்த, சதிர் - நல்விரகை, கண்டு - அபரோக்ஷித்துக்கண்டு, ஒழிந்தேன் - (கேவலைஶ்வர்யத்தையும் கேவலாத்மாநுபவத்தையும்) ஒழிந்தேன்; உன் திருவடி - (ஸகலபதார்த்தமும் உனக்குள்ளேயாம்படி ஸ்ரீய:பதியாய் பரமபுருஷார்த்தபூதனான) உன்திருவடிகளை, அடைந்தேன் — (அநுபவமுகத்தாலே) ப்ராபித்தேன்.

இ.—பத்தாம்பாட்டில், கீழே 'விடுத்து' என்றும், 'கூட்டினை' என்றும் ப்ரஸ்துதமான பேற்றை, ப்ரீத்யதிஶயத்தாலே, 'விட்டது இது, பற்றிற்று இது' என்று வ்யக்தமாக அருளிச் செய்கிறார்.

[கண்டு கேட்டு இத்யாதி] - ரூபாதிகளை க்ரஹிக்கைக்குக் கருவியான சக்ஷுராதிகளால் அநுபவிக்கப்பட்ட ஸுகம். ஆத்மாவுக்கு நித்யதர்மமான ஜ்ஞாநம் கர்மத்தாலே ஸங்குசிதமாகையாலே உழக்காலே அளக்குமாபோலே இந்த்ரியத்வாரா ப்ரஸ்ருதமான ஜ்ஞாநத்தால் வந்த ஐஹிகஸுகம். [தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்] - ஸம்ஸாரிகளுக்கு துர்ஜ்ஞேயமாய் ஐந்த்ரியிகஸுகத்திற்காட்டில் பெருத்து பகவத்கைங்கர்யஸுகத்தைப்பற்ற அத்யல்மான ஆத்மாநுபவஸுகம் இவற்றை, [ஒழிந்தேன்] - விட்டேன். [ஒண்தொடியாள் இத்யாதி] - தொடி - முன்கைவளை. ஒண்மையாவது - ஒருகாலும் கழலாதொழிகை. விஶ்லேஷிக்கிலிறே கழலுவது; இவள் நித்யாநபாயிநியிறே. நீயும் அவளுமே என்னும்படி இருவருடையவும் அபிமாநத்துக்குள்ளே ஒரு விபூதியாக அடங்கும்படி யிருக்கை. "நாநயோர்வித்யதே பரம்" என்னு நிற்க, வாசல்கள் தோறும் ஈஶ்வரர்களாயிருக்கிற அதுபோலன்றிக்கே யிருக்கை. நிலாவுகை - வர்த்திக்கை. [கண்டசதிர்] - பார்த்துவைத்த வாய்ப்பு. உங்களிருவருடைய அது

*பவமும் நித்யமாய்ச் செல்லும்படி நீ பார்த்துவைத்த வாய்ப்பைக் கண்டு; அதாவது - அவ் விபூதியிலுள்ளார் சந்தாநுவர்த்திகளாம்படி பண்ணி வைத்த சதிர்; அத்தைக்கண்டு. [அடைந்தேன் உன் திருவடியே] - உன் திருவடிகளை அடையவும் பெற்றேன்.*

ஈடு.—பத்தாம்பாட்டு. கீழ்ப்பாட்டில், 'விடுத்து' என்றும், 'கூட்டினை' என்றும் ப்ரஸ்துதமான பேற்றை, ப்ரீத்யதிஶயத்தாலே விட்டது இது, பற்றினது இது வென்று வ்யக்தமாக அருளிச்செய்கிறார்.

[கண்டு இத்யாதி] - காட்சிக்குக் கருவியாயிருக்கும் கண், கேட்கைக்குக் கருவியாயிருக்கும் செவி, ஸ்பர்ஶித்தறிகைக்குக் கருவியாயிருக்கும் த்வகிந்த்ரியம், ஗ந்தக்ரஹணத்துக்குக் கருவியாயிருக்கும் க்ராணேந்த்ரியம், ரஸனை ரஸாநுபவத்துக்குக் கருவியாயிருக்கும். கண்டு, கேட்டு, உற்று, மோந்து, உண்டு, இப்படி இதுவே யாத்ரையாய்ப் போருகைக்கு ஸாமக்ரியாயிருக்குமிறே சக்ஷுராதி கரணங்கள். [ஐங்கருவிகண்ட வின்பம்] - உழக்காலே யளக்குமாபோலே பரிச்சிந்நவஸ்து க்ராஹகமான இந்த்ரியங்களாலே அநுபவிக்கப்பட்ட ஐஹிகஸுகம். ஆத்மாவுக்கு நித்யதர்மமாய் ஜ்ஞாநம், அதுதான் ஸங்குசிதமாயிருக்கக்கடவது; கர்மநிபந்தநமாக ஸங்குசிதமாய், மநஸ்ஸடியாகப் புறப்பட்டு, பாஹ்யேந்த்ரியத்வாரா விஷயங்களை க்ரஹிக்கக்கடவதாயிறே இருப்பது. [தெரிவரிய வளவில்லாச்சிற்றின்பம்] - இவ்வருகிலநுபவத்தைப் பற்றத் தான் தெரிவரியதாய் - துர்ஜ்ஞேயமாய், அளவிறந்து-அவ்வருகில் ஭஗வதநுபவத்தைப் பற்றத் தான் அளவிலியாய், அணுவான ஆத்மவஸ்துவைப்பற்ற வருகிற ஹோகமாகையாலே ஸ்வரூபதஃ பரிச்சிந்நமாயிருக்கிற ஆத்மாநுபவஸுகம். இவற்றை [ஒழிந்தேன்] - விட்டேன். [சிற்றின்பம்] - அந்தமில்பேரின்பத்துக்கு எதிர்த்தட்டானதிறே. விட்டது இதுவாகில் பற்றிற்றுஎது? என்னில்,- [ஒண்தொடியாள் இத்யாதி] - பெரியபிராட்டியாரும் நீயுமாய்ச் சேரவிருக்கிற உங்களிருவருடையவும் அபிமாநத்திலே ஒருவிபூதியாக அடங்கியிருக்கிற இருப்பைக் கண்டேன். தொடியென்பது - முன்கைவளை. அதுக்கு ஒண்மையாவது-இவளைக் கைகழியாதிருக்கை. நித்யாநபாயிநி யாகையாலே, முன்பு ஒருகால் கழன்று பின்பு ஸாத்மிக்கவேண்டும்படி யிருப்பதில்லையிறே. "சங்குதங்கு முன்கை நங்கை" என்னக்கடவதிறே. [திருமகளும்நீயுமே] – இப்படியிருக்கிற பிராட்டியும்,

*பத்தாம்பாட்டு - **கண்டு இத்யாதி**. விட்டது இது வென்றது - 'சிற்றின்பம்' என்னுமளவும் கடாக்ஷித்து. 'ஒண்டொடியாள்' என்று தொடங்கி, 'அடைந்தே னுன் திருவடி' என்றத்தைப் பற்ற, பற்றினது இது என்றது.*

*__கருவி__-ஸாதநம். சேதநனுக்குக் கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலுகைக்கு ஸாதநமாயிருக்கிற சக்ஷுராதி கரணங்களித்யர்த்தஃ. "ஐங்கருவிகண்டவின்பம்" என்றத்தாலே - ஸாம்ஸாரிகஸுகங்களினுடைய பரிச்சிந்நத்வம் ஸித்திக்கிறதென்னுமத்தை ஸநிதர்ஶநமாக அருளிச்செய்கிறார்-உழக்காலே இத்யாதி. __கண்டவின்பம்__ - அநுபவிக்கப்பட்ட ஸுகம். __இன்பம்__ - இன்பத்தையும். நித்யமாய் விபுவான தர்மபூதஜ்ஞாநமிருக்க, இந்த்ரியங்களாலே யநுபவிக்கிறதென்? என்ன, __ஆத்மாவுக்கு__ இத்யாதி. ஜ்ஞாநம் ஆத்மாவுக்கு நித்யதர்மமாய் என்று அந்வயிப்பது. இப்படியிருக்கச்செய்தேயும் கர்மநிபந்தநமாக என்று கூட்டிக்கொள்வது. __விவரணம்__ - துர்ஜ்ஞேயமாய் என்றது. __விவரணம்__ - அவ்வருகில் இத்யாதி. __அளவிலியாய்__ - ஆதிக்யமில்லாததாய். அளவிலியா யிருப்பானென் என்ன, __அணுவான__ இத்யாதி. __ஸ்வரூபதஃ__-ஸ்வரூபத்தினாலே. __இவற்றை__ - வைஷயிகாநந்தத்தையும், ஆத்மாநுபவஜநிதாநந்தத்தையும். அந்வயங் காட்டுகிறார் - __ஒழிந்தேன்__ என்று. 'அளவில்லா' என்றுவைத்து, 'சிற்றின்பம்' என்றதுக்கு ஹாவம் - __அந்தமில்__ இத்யாதி. __இது__ - உபயாநந்தங்கள். தாத்பர்யதோர்த்தம் - __பெரியபிராட்டியாரும்__ இத்யாதி. __ஒருவிபூதி__ - நித்யவிபூதி. சப்தார்த்தம் - __தொடியென்பது__ இத்யாதி. கழலாமைக்கு ஹேதுவேது? என்ன, __நித்யாநபாயிநி__ இத்யாதி. இவள் வளை கழலா திருக்குமோ? என்ன, __சங்கு__ இத்யாதி. வளைதங்குகிற முன்கையை யுடைய பூர்ணை யித்யர்த்தஃ. திருச்சந்தவிருத்தம் ஐம்பத்தேழாம்பாட்டு. __இப்படியிருக்கிற__ - வளைகழலாதிருக்கிற. "ஒண்டொடியாள்"*

அவள்தானுங் கூட "இறையும் அகலகில்லேன்" என்னும்படியிருக்கிற நீயும். [நீயுமே நிலா நிற்ப] - இருவருடையவும் அபிமாநத்துக்குள்ளே த்ரிபாத்விபூதியாக அடங்கிக்கிடக்கும். "நாநயோர்வித்யதேபரம்" (நாநயோர்வித்யதேபரம்) என்னுநிற்க, வாசல்தோறும் ஈஶ்வரர்களிறே இங்கு. [நிலாநிற்பக் கண்டசதிர்]-உங்களிருவருடையவும் அபிமாநத்திலே கிடக்குமதுவே யாத்ரையாம்படி நீபார்த்துவைத்த, சதிருண்டு - நேர்பாடு; "வைகுண்டே" (வைகுண்டே) இத்யாதிப்படியே நீபார்த்துவைத்த வாய்ப்பு, அத்தைக்கண்டு. [உன் திருவடியே - அடைந்தேன்]- "அநித்யஸூரிகளோடே ஒரு கோவையாய் உன் திருவடிகளிலே அடிமைசெய்யவேணும்" என்று உன்திருவடிகளைக் கிட்டினேன். இது நான் உற்றது, கீழ்ச்சொன்னவை நான் விட்டது. ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே யென்னும் காட்டில் நித்யவிபூதியோகத்தைச் சொல்லிற்றோ? என்னில்;—"அடியார்கள் குழாங்களை உடன் கூடுவது என்றுகொலோ?" என்று இவர் சொல்லுகையாலும் "பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ" (பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ) என்று ப்ரமாணாந்தரங்க ளுண்டாகையாலும். இனித்தான் "நிற்பனவும் திரிவனவும் நீயே மற்றோருபொருளுமின்றி" என்று வைத்து 'கோடுவுலகங்காட்டேல்' என்றவோபாதி, அவர்களிருவருமே என்ற விடத்தில் - அவர்களபிமாநத்திலே அடங்கிக் கிடப்பதோரு விபூதியுண்டாகச் சொல்லத் தட்டில்லையிறே. அதுதான் இதுவானாலோ? என்னில்;-அஸாதாரண விக்ரஹத்தோடே, "பவாம்ஸ்துஸஹவைதேஹ்யா" (பவாம்ஸ்துஸஹவைதேஹ்யா) என்கிறபடியே தானும் பிராட்டியுமாக இருந்து "க்ரியதாம்" (க்ரியதாம்) என்று சொல்லுகிறபடியே இளைய பெருமாளை அடிமைகொண்டாற்போலே,இவரை அடிமைகொள்ளுவதோரு தேஶவிசேஷத்திலே யாயிருக்குமிறே. (௧௦)

---

என்றாற்போலே ஒருவிஶேஷணமிடாதே 'நீயும்' என்றதுக்கு பாவம் - அவள்தானும் இத்யாதி. இறையும்- க்ஷணகாலமும். 'நீயுமே' என்கிற அவதாரணத்தாலே - நித்யமுக்தரில்லை யென்கிறதோ? என்ன, இருவருடைய இத்யாதி. உபயவிபூதியும் சேஷமாயிருக்க, நித்யவிபூதிமாத்ரத்தை இருவருடையவும் அபிமானத்துக்குள்ளே யடங்கிக் கிடக்குமென்று சொல்லுவானென்? என்ன, "நாநயோ:" இத்யாதி. அதாவது- "ஈஶ்வரோஹம்" என்றுகொண்டு பாரதந்த்ர்யத்தை இசையாதேயிருப்பர்களிறே இவர்கள்; அவர்கள் பாரதந்த்ர்யத்தை இசைந்திருக்கையாலே விஶேஷித்துச்சொல்லுகிறா ரென்றபடி. "தேவதிர்யங்மநுஷ்யேஷு வாஸுதேவாத்ஸமஸ்யதி| ஸ்ரீநாதேநஜகத்ஸ்ரஷ்ட்ரா நாநயோர்வித்யதேபரம்" இதி ப்ரதமேஶ்லோகம். 'இருவருடையவும் அபிமாநத்திலே கிடக்கும்' என்னுமதுக்கு ப்ரமாணம் - "வைகுண்டே" இத்யாதி. நிலாநிற்ப - வர்த்திக்கத்தக்கதாக. கண்டசதிர் - நீபார்த்துவைத்த சாதுர்யம். 'கண்டசதிர்கண்டு - உன்திருவடி - அடைந்தேன்' என்றதுக்குப் பலிதார்த்தம் - அநித்யஸூரிகள் இத்யாதி. தடஸ்த்தசங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - ஒண்டொடியாள் இத்யாதி. நித்யவிபூதியோகத்தை - நித்யஸூரியோகத்தை. 'ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே' என்றால் - ஸ்வதந்த்ரமாய் ஒரு வஸ்துவில்லை, பரதந்த்ரமாயுண்டென்று நிஶ்சயித்தபடியென்? என்று சங்காதாத்பர்யம். இவருடைய திவ்யஸூக்தியாலும், சாஸ்த்ரத்தாலும், 'நிற்பனவுந் திரிவனவும்' என்று தொடங்கி அருளிச்செய்த த்ருஷ்டாந்தத்தாலும் உண்டென்று ஸ்த்தாபிக்கிறார் - அடியார்கள் இத்யாதி. யத்வா, ப்ரமாணவிருத்தத்தை உபபத்தியாலும் காட்டுகிறார் - இனித்தான் இத்யாதி. 'கொடுவுலகம்' என்கையாலே - லீலாவிபூதியானாற்போலே 'ஒண்டொடியாள்திருமகளும்நீயுமே' என்கையாலே - ததபிமாநாந்தர்க்கதமான நித்யவிபூதி யென்னக் குறையில்லை யென்றபடி. ஶங்காந்தரம் - அதுதான் இத்யாதி. அதுதான்இதுவானாலோ - பிராட்டியும் நித்யஸூரிகளும் தானுமாயிருக்கிற ஸ்த்தாநம் இவ்விபூதியிலேயானாலோ? இத்தைப் பரிஹரிக்கிறார் - அஸாதாரண இத்யாதி. 'அஸாதாரணவிக்ரஹத்தோடே' என்றதுக்கு - 'இவரையடிமைகொள்ளுவது' என்றத்தோடே அந்வயம். "ஸதாபஶ்யந்தி" என்று ஸதாதர்ஶநம் பண்ணக்கூடாமையாலும், "தமஸ:பரஸ்தாத்", "ரஜஸ:பராகே", 'கோட்டையினிற்கழித்து' என்று ப்ரக்ருதிக்கப்பாலே ஒருதேஶவிஶேஷத்திலே யென்னும்சொல்லுகையாலும், இதுதான் ஜ்ஞாநாநந்தங்களுக்குத்திரோதாயகமாய் விபரீதஜ்ஞாநஜநகமுமாகையாலும் கூடாது; பரமபதத்திலேயாகவேணு மென்றபடி. ஒண்டொடியாளென்று தொடங்கி, கண்டசதிர்கண்டு - கண்டுகேட்டுற்றென்றுதொடங்கி, சிற்றின்பம் - ஒழிந்தேன்; உன்திருவடி - அடைந்தேன் இத்யந்வய:.- (௧௦)

# பதினோராம் பாட்டு.

திருவடியைநாரணனைக் கேசவனைப்பரஞ்சுடரைத்
திருவடிசேர்வதுகருதிச் செழுங்குருகூர்ச்சடகோபன்
திருவடிமேலுரைத்ததமிழ் ஆயிரத்துளிப்பத்தும்
திருவடியேயடைவிக்கும் திருவடிசேர்ந்தொன்றுமினே.

ஆ.—(திருவடியை.) எம்பெருமானைக்கண்ட ப்ரீத்யதிஶயத்தாலே அவனையேத்தின இத்திருவாய்மொழி வல்லாரை, இத்திருவாய்மொழிதானே எம்பெருமான் திருவடிகளை யடைவிக்கும். திருவடிகளிலே திவ்யரேகைபோலே போய்ச் சேருங்கள் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தாரை இத் திருவாய்மொழி தானே எம்பெருமான் திருவடிகளிலே சேர்க்கும்; ஆன பின்பு, இத்தை அப்யஸித்து அவன் திருவடிகளைச் சேர்ந்து உஜ்ஜீவியுங்கோள் என்கிறார்.

[திருவடியை என்று தொடங்கி] - எல்லாருக்கும் ஸ்வாமியாய், வத்ஸலனாய் ஸ்வாஶ்ரிதஸம்ஶ்லேஷவிரோதியான கேஶிப்ரப்ருத்யஸுர நிரஸநத்தைப் பண்ணும் ஸ்வபாவனாய், திருவவதாரம் பண்ணின விடத்தில் ஐஶ்வரமான படியிற்காட்டிலும் உஜ்ஜ்வலமான தேஜஸ்ஸையுடையவனைத் திருவடிகளைச் சேரவேணுமென்னுங் கருத்தாலே. [செழுங்குருகூர்']-தம்முடைய து:கத்தை எம்பெருமான் கெடுத்தருளுகையாலே ஸம்ருத்தமான திருநகரி.

ப.— அநந்தரம், இத்திருவாய்மொழி, அப்யஸித்தவர்களை அவன் திருவடிகளை அடைவிக்குமென்று பலத்தை அருளிச்செய்கிறார்.

திருவடியை-ஸர்வஶேஷியாய், நாரணனை-ஶேஷித்வநிர்வாஹகமான அந்தராத்மத்வத்தை யுடையனாய்; கேசவனை-ஶேஷபூதருடைய விரோதிகளைக் கேஶிநிரஸநம் பண்ணினாற்போலே போக்குமவனாய், பரஞ்சுடரை - (ஸம்பந்தத்தாலும் வாத்ஸல்யத்தாலும் விரோதிநிரஸநத்தாலும் ஸித்தமான) நிரதிஶயௌஜ்ஜ்வல்யத்தையுடைய க்ருஷ்ணனை உத்தேசித்து, திருவடி - அவன் திருவடிகளை, சேர்வது - பற்றவேணுமென்கிற;கருதி - அபிஸந்தியை யுடையராய்க் கொண்டு, செழும் குருகூர் - நிரதிஶய போக்யமான திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன்-ஆழ்வார், திருவடிமேல் - ("பரனடிமேல்"என்று ப்ராப்யமான) அவன் திருவடிகளின்மேலே, உரைத்த - அருளிச்செய்த, தமிழ் ஆயிரத்துள் - தமிழ் ஆயிரத்துள், இப்பத்தும் - இப்பத்தும், திருவடியே- அந்தத் திருவடிகளைத் தானே, அடைவிக்கும் - ப்ராபிப்பிக்கும்;(இத்திருவாய்மொழியில் அந்வயமுடைய நீங்கள்,) திருவடி - அத்திருவடிகளை,. சேர்ந்து - ப்ராபித்து, ஒன்றுமின் - (ப்ருதக்ஸ்திதியில்லாதபடி) அடிமைசெய்யப் பாருங்கோள். இது - நாலடித்தாழிசை; கலிவிருத்தமுமாம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தாரை இதுதானே அவன் திருவடிகளிலே சேர்ப்பிக்கும் என்கிறார்.

[திருவடியை இத்யாதி] - தமக்கு அவன் பண்ணின உபகாரத்திலே தோற்று ஏத்துகிறார்; [திருவடியை] - ஸர்வஸ்வாமியானவனை. [நாரணனை] - ஸ்வாமியாய்ப் பிரியநிற்கையன்றிக்கே 'அல்லோம்' என்றாரையும் விடமாட்டாத வத்ஸலனை. [கேசவனை] - இதரஸஜாதீயனாய் வந்து அவதரித்து 'ஆவோம்' என்றாருடைய விரோதிகளைப் போக்குமவனை. [பரஞ்சுடரை] - அவதரித்தவிடத்திலும் மநுஷ்யத்வேபரத்வம் இருக்கிறபடி. பரமபதத்திற்காட்டிலும் உஜ்ஜ

வலமான நீர்மையால் வந்த தேஜஸ்ஸையுடையவனை. [திருவடி சேர்வது கருதி] - திருவடிகளைச் சேரவேணுமென்று மனோரதித்து. [செழுங்குருகூர்] – தம்முடைய துக்கத்தை அவன் போக்குகையாலே ஸம்ருத்தமான திருநகரியென்னுதல், இவர்க்கு இவ்வாசிக்கு அடி அவ்வூரில் பிறப்பு என்னுதல்; திருவயோத்தியிலுள்ளார்க்கு மண்பாட்டாலே ராம பக்தியுண்டாமாபோலே [திருவடிமேல் இத்யாதி] - திருவடிகளிலே வைத்துச் சொன்ன ஆயிரமென்னுதல்; இப்பத்தென்னுதல். இவ் விசேஷணங்களை ஆயிரத்திலும் இட்டு நிர்வஹிப்பர்கள் பூர்வாசார்யர்கள், பட்டர் அவ்வோ திருவாய்மொழியிலே இட்டு நிர்வஹிப்பர், [திருவடியே என்று தொடங்கி] - இத்திருவாய்மொழி தானே திருவடிகளிலே சேர்விக்கும். [திருவடி சேர்ந்து] - திருவடிகளை ப்ராபித்து. [ஒன்றுமினோ] - "ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே" என்றும் "யே நயே நயாதா ஹ்ருதி தேந தேநஸஹ ஹ்ருதி" என்றும் சொல்லுகிறபடியே இளையபெருமாளைப்போலே பிரியாதே நின்று எல்லா அடிமைகளும் செய்யப் பாருங்கோள்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தாரை இதுதானே அவன் திருவடிகளிலே சேர்க்கும் என்கிறார்.

புறம்புண்டான ருசியைப்போக்கித் தன்பக்கலிலே ருசியைப்பிறப்பித்த உபகாரத்தை அநுஸந்தித்து ஏத்துகிறார்; [திருவடியை] - ஸர்வஸ்வாமியாயுள்ளவனை. [நாரணனை] - கேவலம் ஸ்வாமித்வமேயன்றிக்கே இவை "அல்லோம்" என்றவன்றும் தான் விடமாட்டாதபடி வத்ஸலனாயுள்ளவனை. [கேசவனை] - வத்ஸலனாய்க் கடக்க இருக்கையன்றிக்கே இவற்றோடே ஸஜாதீயனாய் வந்து அவதரித்து அவர்கள்விரோதிகளைப் போக்குமவனை. [பரஞ்சுடரை] - இப்படி அவதரித்துநின்றவிடத்திலே உண்டான மநுஷ்யத்வே பரத்வத்தைச் சொன்னபடி. [திருவடி சேர்வதுகருதி] - அவன்திருவடிகளைக் கிட்டிடுமையாகவேணு மென்னும் மனோரதத்தை யுடையராய். அடியேபிடித்து மனோரதம் இதுவேயிறே, "துயரறுசுடரடிதொழுதெழு" என்று. [செழுங் குருகூர்ச்சடகோபன்] - அவ்வூரில் பிறப்பாயிற்று இவர்க்கு இந்த ப்ராவண்யத்துக்கு அடி; திருவயோத்யையில் மண்பாடுதானே ராமபக்தியைப் பிறப்பிக்குமாபோலே. [திருவடிமேலுரைத்த இத்யாதி] - அவன் திருவடிகளிலே சொன்ன தமிழாயிரத்திலும் வைத்துக்கொண்டு இந்தப்பத்தும் அவன் திருவடிகளிலே சென்று அடைவிக்கும்; நீங்களும் அதுக்கு உறுப்பாகத் திருவடிகளிலே சென்று கிட்டுங்கோள். அவன் திருவடிகளிலே கிட்டக்கோள்ள, அடிசிற்பானைபோலே, உங்களுக்குமாயிராதே அவன் திருவடிகளில் நித்யகைங்கர்யத்திலே அந்வயிக்கப் பாருங்கோள். "ஸாயுஜ்யம் ப்ரதிபந்நாயே" (ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே) என்றும், "யே நயே நயாதா ஹ்ருதி

---

நிகமம் - திருவடியை இத்யாதி. 'திருவடியேயடைவிக்கும்' இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை. இதுதானே - இத்திருவாய்மொழிதானே.

'திருவடியை' இத்யாதியாலே விசேஷணமிட்டேத்துகிறது? எதுக்காக? என்ன, புறம்புண்டான இத்யாதி. உபகாரத்தை - கீழ்ப்பாட்டிற்பண்ணின உபகாரத்தை. பஹுவ்ரீஹியைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - கேவலம் இத்யாதி. விரோதிகளைப்போக்குமவனென்றதுக்கு - கேசிஹந்த்ருத்வத்திலே நோக்கு. மனோரதம் என்று தொடங்கி? என்ன, அடியேபிடித்து இத்யாதி. 'செழும்' என்றதுக்கு ஹாவம் - அவ்வூரில் இத்யாதி. மண்பாடு - பூஸ்வபாவம். 'ஒன்றுமின்' என்றதுக்கு - அவன்நினைவுக்கீடாக நித்ய கைங்கர்யத்திலே அந்வயியுங்கோளென்று அர்த்தாந்தரம் - அவன்திருவடிகளிலே இத்யாதி. அடிசிற்பானைபோலே - நித்யகைங்கர்யத்திலே யந்வயிக்கப்பாருங்கோள் என்று அந்வயிப்பது. உங்களுக்குமாயிராதே - ஸ்வாதந்த்ர்யம் கொண்டாடாதே. அடிசிற்பானைபோலே யென்றது - பாரதந்த்ர்யம் கொண்டாடி யென்றபடி. 'ஒன்றுமின்' என்று - "தஸ்மிந்நைவ ஸ்வயமாளர்" என்கிறபடியே ஐக்யம்போலே யிராநிற்க, அவனோடேசேர்ந்து அடிமைசெய்யுங்கோளென்று சொல்லுகிறபடியெங்ஙனே? என்ன, ஸாயுஜ்ய இத்

“தேநதேநஸஹ கச்சதி” (யேநயேந தாதா கச்சதி தேநதேநஸஹகச்சதி) என்றும் சொல்லுகிறபடியே, இளையபெருமாளைப்போலே பிரியாதே நின்று அவன் நினைவுக்கீடாக அடிமைசெய்யப் பாருங்கோள். இப்படி அடிமை செய்வார்க்கு, இவர் விட்டவையும் விட்டுப் பற்றிற்றும் பற்றவேணுமோ? என்னில்,—இவர் அருளிச்செய்த இந்தத்திருவாய்மொழியை அநுஸந்திக்கவே, தன்னடையே சப்தாதிகளில் விரக்தியையும் பிறப்பித்து அவன் திருவடிகளிலே சேரவிடும் இது தானே. (கக)

---

*யாதி. “ஸாயம் ப்ராதர் த்விஜாதீநாம் அஶநம் ஶ்ருதிசோதிதம்... கிங்கராஸ்தே ...”. “யேநயேந தாதா கச்சதி தேநதேநஸஹ கச்சதி” இதி பரமஸம்ஹிதாயாம். ‘கிங்கராः’ என்று - முன்னேபோகிறவ னொருவனும், பின்னேசெல்லுகிறவ னொருவனுமாகச் சொல்லாநின்றதிறே யென்று கருத்து. ‘இப்பத்தும்’ என்கிற ச ஶப்தம் - அவதாரணார்த்த மென்கிறத்தை ஶங்கை முன்னாகக் காட்டுகிறார், ஸிம்ஹாவலோகநந்யாயத்தாலே - இப்படி இத்யாதி. அதாவது - ‘திருவடியேயடைவிக்கும்’ என்னுதல், ‘திருவடிசேர்க்தொன்றுமின்’ என்னுதல் அமைந்திருக்க இரண்டுஞ் சொல்லுகையாலே இப்படி அடிமைசெய்வார்க்கு இவர் விட்டவையும் விட்டுப் பற்றிற்றும் பற்றவேணுமோ? என்ன, இத்திருவாய்மொழியை அநுஸந்திக்கவே, சப்தாதிகளில் விரக்தியைப்பிறப்பித்துத் தன்னடையே அவன் திருவடிகளிலே சேர்த்துவிடும் இதுதானே; நீங்களும் இறக்குவாதம் பிடித்தாற்போலே யிராதே இசையப் பாருங்கோளென்றபடி. க்ரமேண அந்வயः. (கக)*



**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.** — ஶௌலப்யாதி ஸகலகுண ஸம்பத் ... ஶ்ரீதரஸ்ய விஷ்ணோः । ... [illegible]

---

**த்ரவிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.** — [illegible Grantha text] ॥ [illegible Grantha text] ॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

நண்ணாதுமாலடியைநானிலத்தேவல்வினையால்
எண்ணாராத்துன்பமுறுமிவ்வுயிர்கள் — தண்ணிமையைக்
கண்டிருக்கமாட்டாமல் கண்கலங்கும் மாறனருள்
உண்டுநமக்குற்றதுணையொன்று.

**ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.**



[illegible]”, “[illegible]”, “[illegible]” இத்யாதி ப்ராஹ்ம வாமந வாராஹாதி புராண வாக்ய ப்ரதிபாத்யமாந அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணகணனான ஸர்வேஶ்வரன் எழுந்தருளியிருந்த திருநகரியை ஆஶ்ரயியுங்கள் என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், அவனாலே ஸ்ருஜ்யராமிடத்தில் உங்களோடு நீங்கள் ஆஶ்ரயிக்கிற தேவதைகளோடு வாசியில்லை; ஆனபின்பு, நித்யஶ்ரீயான ஸர்வேஶ்வரன் நின்றருளுகிற திருநகரியை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[நாடிநீர்வணங்கும் என்று தொடங்கி] - வசநாபாஸங்களாலும் யுக்த்யாபாஸங்களாலும் மேலாக உபபாதித்து நீங்கள் ஆஶ்ரயிக்கிற தேவதைகளையும் உங்களையும் கண்டு படைப்பதும் செய்து அவற்றைப்போலே யன்றிக்கே நித்யமான ஶ்ரீயையும் புகழையுமுடைய ஜகத் காரணபூதனான ஸர்வேஶ்வரன் நிரந்தரவாஸம்பண்ணுகிற கோயில். பரந்து - ஸர்வதோதிக்கமாக.

ப.—அநந்தரம், அந்ததேவர்களோடு உங்களோடு வாசியற ஸ்ருஷ்டிக்கைக்கடியான நித்யமங்களகுணாஶ்ரயபூதன் வர்த்திக்கிற திருநகரியை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

நீர் - (ரஜஸ்தமஃப்ரசுரரான) நீங்கள், நாடி - (உங்கள்குணாநுகுணமாக) நிரூபித்து, வணங்கும் - ஆஶ்ரயிக்கும், தெய்வமும் - தேவதைகளையும், உம்மையும் - (ஆஶ்ரயணோந்முகரான) உங்களையும், முன் - ஸ்ருஷ்டிகாலத்திலே, படைத்தான் - உத்பாதித்தவனாய், வீடில்சீர் - (அதுக்கடியான) ஜ்ஞாநஶக்த்யாதி நித்யகல்யாணகுணங்களையுடையனாக, புகழ் - (வேதாந்தப்ரஸித்தமான) புகழையுடைய, ஆதிப்பிரான் அவன் - ப்ரதமோபகாரகனானவன், மேவி - (ஆஶ்ரிதாபிமுக்யார்த்தமாகப்) பொருந்தி, உறை - வர்த்திக்கிற, கோயில் - ஸ்தாநமாய், மாடம் - மாடங்களும், மாளிகை - மாளிகைகளும், சூழ்ந்து - சூழ்ந்து, அழகாய - அத்தாலே அழகையுடைத்தான, திருக்குருகூரதனை - திருநகரிதன்னை, பல் உலகீர் - (குணருசிபேதங்களால்) பலவகைப்பட்ட லோகங்களிலுள்ளீர்! (ப்ரீதிப்ரேரிதராய்), பாடி - பாடி, ஆடி - (ஹர்ஷத்தாலே) விக்ருதராய் ஆடி, பரவி - (பஹுமுகமாக) ஸ்துதித்து, பரந்து செல்மின்கள் - (உகப்பாலே) ஸர்வப்ரதேசத்திலும் வ்யாபரியுங்கோள்.

இ.—இரண்டாம்பாட்டில், ஆஶ்ரயிக்கிற உங்களோடு ஆஶ்ரயணீயரானஅவர்களோடு வாசியற எல்லாரையும் உண்டாக்கினவன் நின்றருளுகையாலே ப்ராப்யமான திருநகரியை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[நாடி] - ஸ்வதஃ உத்கர்ஷமின்றிக்கேயிருக்க வசநாபாஸங்களாலும் யுக்த்யாபாஸங்களாலும் பொரிபுறந்தடவி மேலாகஉபபாதித்து. ஆஶ்ரயிக்கிறவர்கள் தாங்கள் உத்கர்ஷம் தேடிக்கொடுக்க வேண்டும்படியிறே இருப்பது. [நீர்] - ராஜஸராயும் தாமஸராயுமுள்ள நீங்கள். [வணங்கும் தெய்வமும் உம்மையும்] - முற்பட அவர்களை ஸ்ருஷ்டித்துப் பின்பு உங்களை ஸ்ருஷ்டித்தான். “[illegible]” அவன் ஸ்ருஷ்டித்திலனாகில் நீங்கள் எங்ஙனே ஆஶ்ரயிக்கும்படி? ‘நீர்’ என்று தம்மோடு தொற்றறச்சொல்லுகிறார். [முன் படைத்தான்] - ப்ரதமத்தில் ஸ்ருஷ்டித்தான். [வீடில் சீர்] - ஸ்வதஸ்ஸித்தமான ஸம்பத்து. நீங்கள் ஆஶ்ரயிக்கிறவர்களுடைய ஐஶ்வர்யம் கர்மமடியாக வந்ததாகையாலே அஸ்திரம். நித்யஸித்த கல்யாணகுணங்களை யுடையவன் என்றுமாம். [புகழ்] - எல்லாரையும் ரக்ஷித்ததத்தாலே வந்த புகழையுடையவன். ரக்ஷகனாய்ப் புகழ்படைத்தவனன்றோ ஆஶ்ரயணீயனாவான்? “[illegible]

க்ஷாஜநழ". [ஆதிப்பிரான்] - ரக்ஷியாதே பழிப்படைத்தாலும் விடவொண்ணாத ப்ராப்தியைச் சொல்லுகிறது. "காரணந்து த்யேய:" என்கிறபடியே காரணவஸ்துவேயிறே உபாஸ்யம். [அவன மேவி யுறை கோயில்] - இவற்றையுண்டாக்கினவன் ஆஶ்ரயணார்த்தமாகப் பொருந்திவர்த்திக்கிற தேஶம். பரமபதத்தில் கரம்பறுக்கவேண்டாமையாலே ஸந்நிதிமாத்ரமே அமையும்; ரக்ஷாபேக்ஷையுள்ளது இங்கே ஆகையாலே பொருந்திவர்த்திக்கும் தேஶமென்கை. நல்லபடுக்கையும் போக்யங்களும் உண்டாயிருக்க, தொட்டில் கால்கடையி லல்லது பொருந்தாத தாயைப் போலே. [மாடமாளிகை இத்யாதி] - மாடங்களாலும் மாளிகைகளாலும் சூழ்ந்து தர்ஶநீயமான திருநகரி; ப்ராப்ய பூமியென்று தோன்றும்படியாயிற்று இருப்பது. [அதனைப்பாடிஆடி] - "நின்ற வாதிப்பிரான்" என்றது மிகையா யிருக்கை. "விஷ்ணோராயதநாநி" "தேவாயதநாநி..." ப்ரீதிப்ரேரிதராய்ப்பாடி, அவ்வளவில் பர்யாப்தமாகாமையாலே அக்ரமமாகப்புகழ்ந்து, இதுவேயாத்ரையாய் வர்த்தியுங்கோள். இத்தேஶமென்றால் எல்லார்க்கும் தன் திருவுள்ளம் போலேயென்று இருக்கிறார். [பல் உலகீர்] - தாந்தனுஞ் ஸமிதபாணியாய் வந்தவனுக்கு ஹிதஞ் சொல்லுகிறாரன்றே; "இவையென்ன வுலகியற்கை" என்று லோகமடங்க நோவுபடுகிறபடியைக் கண்டு சொல்லுகிறாராகையாலே, எல்லாரையும் காலைப்பிடிக்கிறார். [பரந்தே] - பெரியதிருநாளுக்கு வந்தேறுமாபோலே ஸர்வதோதிக்கமாகச் சென்று ஆஶ்ரயியுங்கோள் பல்உலகீர் பரந்து பாடியாடிப் பரவிச்செல்மின்கள் என்று அந்வயம்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. ஆஶ்ரயிக்கிற உங்களோடு, ஆஶ்ரயணீயரான அவர்களோடு வாசியற எல்லாரையும் உண்டாக்கினவன் நின்றருளுகையாலே ப்ராப்யமான திருநகரியை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[நாடிநீர்வணங்கும்தெய்வமும்]-வசநாபாஸங்களாலும்;யுக்த்யாபாஸங்களாலும்,ஸ்வத: உத்கர்ஷமில்லாமையாலே அவை தான் இருயாநிற்கச்செய்தே, நீங்கள் பொரிபுறந்தடவி வருந்திச் சேமம் சாத்திவைத்து ஆஶ்ரயிக்கிற தேவதைகளையும். [நாடி] - கள்ளரைத் தேடிப் பிடிக்குமா போலே, தேடிப்பிடிக்கவேண்டி யிருக்கிறபடி. ஆடுதிருடின கள்ளரிறே இவர்கள்தான்; அணங்குக்கு அருமருந் தென்று அங்கே ஆடு கட்டினவர்களாகையாலே தேடிப்பிடிக்கவேணுமே. 'கள்ள ரச்சம் காடுகொள்ளாது' என்று, தன்னைஆஶ்ரயிக்க வருகிறவர்களையும் தன்னைக்கட்ட வந்தார் களாகக் கொண்டுபோகிறபடி. [நீர்] - ராஜஸராயும் தாமஸராயுமுள்ள நீர். நீரென்று - அவர்க

---

இரண்டாம்பாட்டு - நாடிநீர் இத்யாதி. 'தெய்வமுமும்மையும்' என்றதைப்பற்ற, ஆஶ்ரயிக்கிற இத்யாதி. 'திருக்குருகூரதனைப் பாடி - பரவி' இத்யாதியைப்பற்ற, திருநகரியை இத்யாதி.

'நீர் - நாடி - வணங்குந்தெய்வமும்' என்று அந்வயக்ரமம். 'நீர் - நாடி' என்கையாலே - அவற்றுக்கில்லாதத்தை நாடியென்று தோற்றும்; அத்தைக்காட்டுகிறார் - வசந இத்யாதி. வசநாபாஸங்களாவன - "..." இத்யாதிகள். யுக்த்யாபாஸங்களாவன - க்ருஷ்ணனுக்கு வரப்ரதத்வம் முதலானவை. பொரிபுறந்தடவுகை - ஸ்பர்த்தையை ஆரோபணம்பண்ணுகை. அதாவது - உள்ஒருபடியாயிருக்க, பதார்த்தாந்தரங்களாலே மினுக்கப்பண்ணி வைப்பர்களிறே; அத்தைச் சொல்லுகிறது. சேமம்சாத்தி - ரக்ஷைசெய்து. வசநாபாஸங்களாலும் யுக்த்யாபாஸங்களாலும் - பொரிபுறந்தடவி என்று அந்வயம். பதஸ்வாரஸ்யம் - கள்ளரை இத்யாதி. ஆடுதிருடினது எங்கே? என்ன, அணங்குக்கு இத்யாதி. ஆடு கட்டினவர்களாகையாலே - ஆடுகேட்டுவித்துக் கொண்டவர்களாகையாலே யித்யர்த்த:. பெரியவர்களை யறியாமல் சிறியவர்களைக்கொண்டு ஒன்று வாங்கினால், அவர்களை - 'கள்ளர்' என்னக்கடவதிறே. ஆஶ்ரயிக்கிறவர்கள் தேடிப்பிடிக்கும்படி போகிறதென்? என்ன, கள்ளரச்சம் இத்யாதி. கள்ளர்க்கு உண்டான பயம் மஹாகஹநத்துக்கும் இடம்போராதென்றபடி. 'நீர்' என்றத்தை - மேலும் மேலுங் கூட்டுவது. 'நீர்' என்றதுக்கு இரண்டு தாத்பர்யம் - நீரென்று இத்யாதி வாக்யத்வயத்தாலே. முன்

ளோடு தமக்கு ஒட்டறச் சொல்லுகிருர். உங்கள்ப்ரதிபத்தியோழிய அவற்றின்பக்கல் ஓருயிரில்லே. [நீர்வணங்கும்தெய்வமும் உம்மையும்] - நீங்கள்ஆஶ்ரயிக்கிற ராஜஸராயும் தாமஸராயுமுள்ள தேவதைகளேயும் உங்களேயும் படைக்கிறவிடத்தில். [முன்படைத்தான்] - ஸ்ருஷ்டிக்கிறவிடத்தில் முற்பட அவர்களே ஸ்ருஷ்டித்துப் பின்னே உங்களே ஸ்ருஷ்டித்தான். "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்" (யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்) என்கிறபடியே ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்துப் பின்பிறே இவ்வருகுள்ளாரை ஸ்ருஷ்டித்தது. [நீர்வணங்கும்தெய்வமும் உம்மையும் முன்படைத்தான்] - அவன் ஸ்ருஷ்டித்திலனுகில் நீங்கள் இதரதேவதைகளே ஆஶ்ரயிக்கும்படி யெங்ஙனே? [படைத்தான்] - அவன் படைத்திலனுகில் எங்ஙனே உண்ணவிருந்திகோள்? உங்களுக்கு ஆஶ்ரயணீயத்வ முண்டாமன்றிறே, அவர்கள் ஆஶ்ரயணீயராவது. [வீடில்சீர் இத்யாதி] – நீங்கள்தேடியாஶ்ரயிக்கிற தேவதைகளுடைய ஐஶ்வர்யம்போலே ஒருவனுடைய புத்த்யதீநமாய் அவன் நினைத்திலனுகில் இல்லையாய், அதுதனக்குஅடி கர்மமாய், அக்கர்மக்ஷயம் பிறந்தவாறே நசிக்கையன்றிக்கே ஸ்வதஸ்ஸித்தமான ஸம்பத்தையுடையவன். [வீடில்சீர்] - நீங்கள் ஆஶ்ரயிக்கிறவர்களுடைய ஸம்பத்துப்போலே ஸாவதியல்ல; கர்மமடியாய் அதிலே ஒன்று குறையக் குறைதல், பலப்ரதனுனவனுடைய அநுக்ரஹம் குறையக் குறைதல் செய்யுமதில்லையிறே. "பலமத:" (பலமத:) இறே. [வீடில்சீர்] - நித்யஸித்த கல்யாணகுணங்களே யுடையவ னென்னுதல். "தஸ்மிந்

---

ப்ர.— (வீடில் சீர்) - உத்தரமீமாம்ஸாயாம் த்ருதீயஸ்ய த்விதீயே, [ஸூ-௩௭] "பலமத உபபத்தே:". "உக்தமேவாவிஶிஷ்டவஜநநாயகத்வம் ஜீவஸ்யஸர்வஸ்வாஸ்ய ஸர்வேஷாம், ப்ராப்யஸ்ய பரஸ்யாஷ்டஸ்ய நிகிலாஷ்கம் கல்யாணகுணாகரத்வம் ஸர்வஸ்யாஶ் பரத்வம்ச; இத:பரம்பராஸநம் விலக்ஷணமவாஸீநாநாம் பரஸ்யாதேவாஸ்யாஶ் பராஷாத்தத்வாப்ரியர்த்தவ்யம் பலமிதி ஸம்ப்ரதிபத்யதே. தஸ்யாந்யாய தயாராஸ்யாமைஹிகாமுஷ்மிக பலம் பலமத ஏவ பரஸ்யாஶ் பராஷாத்வதீதி - ஸாமா நேந 'பலமத:' உத்பத்யதே, கஸ்மாத்? (உபபத்தே:) — ஸர்வஜ்ஞஸ்ய ஸர்வஶக்தேர்மஹோதாரஸ்ய யாகதாநஹோமாதிபிராராதிதஸ்யைவ ஹி காலாந்தரஸ்தாமிக ஹோமஜாதம், ஸ்வர்கம்ராபவர்கம் வா தாதுமீஷ்டே; நஹ்யசேதநம் க்ஷணத்வம்ஸி கர்மகாலாந்தரபாவிபலஸாதநம் பவிதுமர்ஹதி."

---

படைத்தமைக்கு ப்ரமாணம் - யோப்ரஹ்மாணம் இத்யாதி. 'படைத்தான்' என்றதுக்கு பாவம் - அவன் ஸ்ருஷ்டித்திலனுகில் இத்யாதி. சாடு - அவன்படைத்திலனுகில் இத்யாதி. நீர் வணங்குந்தெய்வம் படைத்தானென்னுதே, 'உம்மையும் - படைத்தான்' என்று இவர்களே ஸமுச்சயிக்கிறதுக்கு பாவம் - உங்களுக்கு இத்யாதி. 'வீடில்சீர்' என்றவிடத்தில், 'சீர்' என்றதுக்கு அர்த்தத்வயம் - ஸம்பத்தும், குணங்களும். ஸம்பத்பக்ஷ, 'வீடில்' என்றதுக்கு பாவத்வயம்: அதாவது - வீடென்று - நாஶமாய், இல்லென்று - இல்லாமையாய், நித்யமான ஸம்பத்தென்னுதல்; இத்தை அருளிச்செய்கிருர் - நீங்கள்தேடி இத்யாதி. அன்றிக்கே, வீடென்று - விடப்படுமதாய், அதாவது - குறைதலாய், அல்பதையைச் சொல்லி, அதில்லாமை - மஹத்தையாய், நிரவதிகஸம்பத்தென்னுதல்; இத்தை அருளிச்செய்கிருர் - நீங்களாஶ்ரயிக்கிறவர்களுடைய இத்யாதி. அவதியில்லாமைக்கு ஹேது எது? என்ன, கர்மம் இத்யாதி. கர்மமொழிய அவனே பலப்ரதனென்ன, பலமத இத்யாதி. உத்தரமீமாம்ஸாயாம் த்ருதீயஸ்ய த்விதீயே. "பலமத உபபத்தே:"; அஸ்யார்த்த:; ஸர்வேஶ்வரம் - அத: - பரஸ்மாதேவ ஹ்யுபாஸ்ய ஸம்ஸமுதி; கஸ்மாத்:, உபபத்தே: - பலப்ரதத்வோபயோகிஜ்ஞாநஶக்தி ஸம்பந்நத்வஸ்ய ப்ரஹ்மண உபபத்தி. இவ்விடத்திலே குணங்களே அருளிச்செய்யுமதுக்குக் கருத்து எது? என்ன, தஸ்மிந் இத்யாதி. புகழ்சொன்னதுக்கு ப்ரயோஜநம் -

யதஸ்தஸ்ததுபாஸிதவ்யம்” (தஸ்மிந்யதந்தஸ்தததுபாஸிதவ்யம்) என்கிறபடியே, அவன்தன்னை பாதி அவன்குணங்களும் உபாஸ்ய மென்னுமிடம் சோல்லுகிறது. [புகழ்] - எல்லாரையும் ரக்ஷித்து, அந்தரக்ஷணத்தால் வந்த புகழையுடையவன். ரக்ஷணத்தால் புகழ்படைத்தவனன்றோ ஆஸ்ரயணீயனுவான்? “யஶஸஶ்ஶ்சைகபாஜநம்” (யஶஸஶ்சைகபாஜநம்). [ஆதிப்பிரான்] - ரக்ஷித்துப் புகழைப்படையாதே பழிபடைத்தாலும் விடவோண்ணுத ப்ராப்தியைச் சொல்லுகிறது. [பிரான்] - கேவலம் ப்ராப்தியேயல்ல, உபகாரகன். உபகாரகனுமாய் ப்ராப்தனுமாய் யஶஸ்வியுமாய்; ஐஶ்வர்யம், நித்யஸித்தமான கல்யாணகுணங்களென்ன, இவற்றையுடையவனை யொழிய, இவையில்லாதாரை ஆஶ்ரயிக்க ப்ராப்தியில்லை. காரணவஸ்துவிறே உபாஸ்யமாவது; “காரணந்து த்யேய:” (காரணந்துத்யேய:) என்னுநின்றதிறே. [அவன்மேவியுறைகோயில்] - அவன் பரமபதத்தில் உள்வேதுப்போடேபோலே காணும் இருப்பது. ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை யநுஸந்தித்து; ‘இவை என்படுகிறனவோ?’ என்கிற திருவுள்ளத்தில் வெறுப்போடே யாயிற்று அங்கு இருப்பது. “நோபஜநம் ஸ்மரந்” (நோபஜநம்ஸ்மரந்) என்றுகொண்டு - இங்குத்தை துஃகத்தை நினையாதொழியவேண்வேது; பண்டு துஃகியாயிருந்து ஸம்ஸாரத்தில்நின்றும் போனவனுக்கிறே. இங்குத்தை துஃகத்தை நினைக்குமாகில் அநுபவிக்கிற ஸுகத்துக்குக் கண்ணழிவாகாதோ? என்னும் கண்ணழிவில்லையிறே அவனுக்கு. ‘பரமபதத்திலும் ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை அநுஸந்தித்துத் திருவுள்ளத்தில் வெறுப்போடே யாயிற்று எழுந்தருளியிருப்பது’ என்று பட்டர் அருளிச்செய்ய; ‘ஆச்சானும் பிள்ளையாழ்வானும் இத்தைக்கேட்டு பரமபதத்திலே ஆநந்தநிர்ப்பரனுயிருக்கிற இருப்பிலே திருவுள்ளத்திலே ஒருவ்யஸநத்தோடேயிருந்தானென்கை உசிதமோ? என்றார்கள்’ என்று ‘பண்டிதர்’ என்கிறவர் வந்து விண்ணப்பம்செய்ய, “வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி து:கித:” (வ்யஸநேஷுமநுஷ்யாணும்ப்ருஶம்பவத்துஃகித:) என்றது

---

ரக்ஷணத்தால் இத்யாதி. அப்படி புகழையுடையவனே? என்ன, யஶஸஶ்ச இத்யாதி. “நிராவயவ் ரக்ஷாயாம் நாராவணா நாரம்வணாமதி! ஞாநாநாம்ஸம் யஶஸ்வ யஶஸஶ்சைகபாஜநம்” இதி கிஷ்கிந்தாகாண்டே தாரா. சோல்லுகிறது - ‘ஆதி’ என்கிறத்தாலே யென்றபடி. சப்தார்த்தம் - ப்ராப்தனும் உபகாரகனு மென்று. உக்தார்த்தத்தை அவரோஹக்ரமத்தாலே நிகமிக்கிறார் - உபகாரகனுமாய் இத்யாதி. ‘நாடிநீர்’ என்றுதொடங்கி, ‘படைத்தான்’ என்னுமளவும் ஆஶ்ரயணீயதைக்குறுப்பாக நிகமிக்கிறார் - காரணவஸ்துவிறே இத்யாதி. இத்தால் - கீழ்ப் பதங்களெல்லாவற்றுக்கும் ப்ரயோஜநம் காட்டினராயிற்று. காரணவஸ்துவிறே இத்யாதி வாக்யத்துக்கு - ‘படைத்தான்’ என்றதிலே நோக்கு. ‘மேவியுறைகோயில்’ என்றதுக்கு வ்யாவர்த்யம் - பரமபதத்தில் இத்யாதி. மேவி - ப்ரீதியோடேபொருந்தி. உறைகோயில் - வர்த்திக்கிற கோயில். உள்வேதுப்பு - மநஸ்தாபம். உள்வெதுப்பேதென்ன ? ஸம்ஸாரிகள் இத்யாதி. பரமபதத்திலே இப்படி வெறுப்போடே யிருந்தால் ஆநந்தநிர்ப்பரதைக்குக் கொத்தையன்றோ ? என்ன, நோபஜநம் இத்யாதி. ஆனால் பின்னை, நிரதிசயாநந்தியாயிருந்து துஃகத்தை அநுஸந்தித்தால் ஸுகத்துக்குக் கண்ணழிவுவாராதோ ? என்ன, இங்குத்தை இத்யாதி. அவனுக்கு - அநுகூலஹ நிரதனும் அகர்மவஶ்யனுமானவனுக்கு. ஸ்வத:துஃகமின்றிக்கே, ஸம்ஸாரிகளுக்கு இரங்கி துஃகிக்கிறனுகையாலே ஆநந்தத்துக்குக் கொத்தையில்லையென்று கீழ்அருளிச்செய்து ; அங்ஙனன்றிக்கே, ஆநந்தத்துக்குக் கொத்தையானுலும் அது குணமவா மென்னும் பரிஹாராந்தரத்தைப் பரமாசார்யவசநத்தாலே ஸாதிக்கிறார் - பரமபதத்திலும் இத்யாதி. பட்டர் பண்டிதர்க்கு அருளிச்செய்ய, அவரும் இத்தை ஆரிடத்திலே சிந்தனைபண்ணிக்கொண்டிருக்கிறவளவிலே, ஆச்சானும் பிள்ளையாழ்வானும் ‘இது கூடுமோ?’ என்ன, பண்டிதர் அதுக்கு உத்தரமருளிச்செய்யமாட்டாதே ‘இவர்கள் இப்படி சொன்னார்கள்’ என்று பட்டருக்கு விண்ணப்பம் செய்யவென்று கண்டுகொள்வது. இத்தைக்கேட்டு என்றது - பட்டர் அருளிச்செய்ததாகப் பண்டிதரென்கிறவர் அருளிச்செய்யக் கேட்டு என்றபடி. ஸம்ஸாரிகள் துஃகத்தைக்கண்டு துஃகிக்குமது குணப்ரகாரபடித மாகையாலே குணமானுலும், அவதாரத்திலே சொன்னதித்தனையன்றோ?

குணப்ரகரணத்திலேயோ? துஃகப்ரகரணத்திலேயோ? என்று கேட்க மாட்டிற்றிலீரோ? இது குணமாகில், 'குணம்' என்று பேர்பெற்றவற்றில் அங்குஇல்லாததொன்றுண்டோ?' என்று அருளிச்செய்தார். ''ஸமஸ்தகல்யாணகுணாத்மகோஸௌ'' (ஸமஸ்தகல்யாணகுணாத்மகோஸௌ) என்னக்கடவதிறே. தன்னிச்சையொழிய கர்மநிபந்தநமாகவருமவை இல்லையென்னுமத்தனை போக்கி, அநுக்ரஹகார்யமாய் வருமவை இல்லையென்னில், முதலிலே சேதநனன்றிக்கே யொழியுமிறே. ''ஸஏகாகீ நரமேத'' (ஸஏகாகீநரமேத) என்றது நித்யவிபூதியும் குணங்களு முண்டாயிருக்கச் செய்தேயிறே. [ஆதிப்பிரானவன்மேவியுறைகோயில்] - பரமபதத்தில் தன்னில்குறைந்தா ரில்லாமையாலே அவ்விடத்தை விட்டு, நல்ல படுக்கையையும் போகத்துக்கு ஏகாந்தமானவற்றையும் காற்கடைக்கொண்டு ப்ரஜையினுடைய தொட்டிற்காற்கடையிலே கிடக்கும் தாயைப் போலே, ரக்ஷாபேக்ஷரான ஸம்ஸாரிகள் இருக்கிற இட மாகையாலே விரும்பி வர்த்திக்குமிடம் இவ்விடமாயிற்று. [மாடமாளிகை இத்யாதி] - உங்களுக்குத்தான் நல்லதேசம் தேட்டமே; 'முக்தப்ராப்யதேஶம்' என்று தோற்றுகிறதில்லையோ? மாடங்களாலும் மாளிகைகளாலும் சூழ்ந்து தர்ஶநீயமாயிருக்கும் திருக்குருகூர். [அதனைப்பாடியாடி] - ''அதனுள்நின்ற ஆதிப்பிரான்'' என்றவிடம் மிகையென்கிறார். 'விஷ்ணோராயதநேவஸேத்'' (விஷ்ணோராயதநேவஸேத்) ''தேஶோயம்ஸர்வகாமதுக்'' (தேஶோயம்ஸர்வகாமதுக்) என்கிறபடியே இதுதானே ப்ராப்யம். [பாடியாடி இத்யாதி] – ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு பாடி, உடம்பு இருந்தவிடத்திலிராமை ஆடி, அக்ரமமாகக் கூப்பிட்டுக்கொண்டு. அத்தேசமென்றால் தம்திருவுள்ளம் இருக்குமாபோலே இருக்குமென்றிருக்கிறார்காணும் ஸர்வர்க்கும். [பல்லுலகீர்] - ஒருவன் ஸமித்பாணியாய் ஶாந்தனாய் வர, அவனுக்கு ஹிதோபதேசம் பண்ணுகிறானன்றே; ''இவையென்னவுலகியற்கை'' என்று லோகம் க்லேசப்படுகிற படியைக் கண்டு எல்லார்க்கும் சொல்லுகிறாரிறே. [பரந்தே] - பெரியதிருநாளுக்கு ஸர்வதோதிக்கமாக வந்தேறுமாபோலே, நாநாதிக்கமாகப் பாடியாடிப் பரவிச்சென்மின்கள். (உ)

---

என்ன, இதுகுணமாகில் இத்யாதி. 'பரமபதநாதன் குணபூர்ணன்' என்னுமதுக்கு ப்ரமாணம் - ஸமஸ்த இத்யாதி. இப்படியாகில், ''விஶோகஃ'' என்கிற ஶ்ருதியோடே விரோதியாதோ? என்ன, தன்னிச்சையொழிய இத்யாதி. பரமசேதநனுடைய இச்சையாலே இவ்வநுக்ரஹகார்யம் ஸ்வரூபாநுபந்தியாயிருக்குமென்று கருத்து. 'உள்வெதுப்போடிருக்கும்' என்னுமதுக்கு உபபத்திகாட்டி, ப்ரமாணமுங் காட்டுகிறார்-''ஸஏகாகீ'' இத்யாதி. ''ஸஏகாகீ நரமேத'' இத்யாதி மஹோபநிஷத். போகஸ்த்தாநமான பரமபதத்திலே எழுந்தருளியிருக்கச்செய்தேயும், ஆர்த்தரான ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை யநுஸந்திக்கையாலே பொருத்தமற்றிருக்கு மங்கு என்று ஒரு தாத்பர்யம் கீழேஅருளிச்செய்து; ரக்ஷாபேக்ஷையின்றிக்கே தன்னோடு ஸாம்யாபந்நர்க்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கையாலே பொருத்தமில்லை அங்கு, ரக்ஷாபேக்ஷரான ஸம்ஸாரிகளை ரக்ஷிக்கையாலே பொருந்தி வர்த்திப்பது இங்கே யென்று தாத்பர்யாந்தரம் - பரமபதத்தில் இத்யாதி. விசேஷணத்துக்கு ஸாவம் - உங்களுக்கு இத்யாதி. சப்தார்த்தம் - மாடங்களாலும் இத்யாதி. மாடங்கள் - சந்த்ரசாலாதிகள். மாளிகைகள் - க்ருஹங்கள். பூர்வவாக்யத்திற்காட்டில் விசேஷம் - அதனுள் இத்யாதி. ஸர்வேஶ்வரன் ப்ராப்யனுமதொழிய, அவனிருந்த தேசமும் ப்ராப்யமாயிருக்குமோ? என்ன, விஷ்ணோஃ இத்யாதி; ''நகிஞ்சிதவிகாமஸ்ய ஆமணோ விஷ்ணோராயதநேவஸேத்'' இத்யாதி. ''வவித்ரம்வரஸம்வூண்யம்தேஶோயம்ஸர்வகாமதுக் | யஸிந்வாஸஸரோதேஹ்ணவாஸம் விஷ்ணுதாம்நயனாத் | ஹயாநுயாவிநஶ்யாமஸ்ரோஹ்ஹோஹாதயோஜ்ஜ'' இதி காருடபுராணே ஏகாதஶோத்யாயே நாகதந்தம்ப்ரதி வ்யாஸஃ. ஸர்வகாமதுக் என்றது - ஸர்வேஶ்வரனையுங் கொடுக்குமென்றபடி. இவர்களுக்குப் பாடியாடக்கூடுமோ? என்ன, அத்தேஶமென்றல் இத்யாதி. 'பல்லுலகீர்' என்று எல்லாருக்கும் சொல்லுகிறது எதுக்கு? என்ன, ஒருவன் இத்யாதி. பரந்து - எங்கும்வ்யாபித்து. பரவி - ஸ்துதித்து. 'அவன்மேவியுறைகோயில்' என்கையாலே - பாவநத்வம் சொல்லிற்று. 'மாடமாளிகைசூழ்ந்து' என்கையாலே - போக்யத்வம் சொல்லிற்று. பல்லுலகீர், சீர் - நாடி - வணங்குந்தெய்வமும் என்று தொடங்கி, திருக்குருகூரதனைப் பரந்தே - பாடியாடிப் பரவிச்சென்மின்களென்று அந்வயம். (உ)



# மூன்றும் பாட்டு.

**பரந்ததெய்வமும்பல்லுலகும்படைத்து அன்றுஉடனேவிழுங்கிக்**
**கரந்துமிழ்ந்துகடந்திடந்தது கண்டும்தெளியகில்லீர்**
**சிரங்களாலமரர்வணங்கும் திருக்குருகூரதனுள்**
**பரன்திறமன்றிப்பல்லுலகீர்! தெய்வம்மற்றில்லைபேசுமினே.**

ஆ.— (பரந்த.) ‘‘[illegible]’’ இத்யாதி வாக்யஸித்தஸர்வேஶ்வரத்வ ஸூசகநிகிலஜகந்நிகரணோத்கிரண க்ரமணோத்தரணாதி நாராயண திவ்யசேஷ்டிதங்களைக் கண்டு, ‘இவனே ஸர்வேஶ்வரன்’ என்று அறியமாட்டுகிறிலீர். அவனல்லது மற்றொரு தைவமில்லை; உண்டாகில் அத்தை ஒரு ப்ரமாணத்தாலே ஸாதியுங்கோள் என்கிறார்.

ஒ.—மூன்றும் பாட்டில், ஜகந்நிகரணாதி திவ்யசேஷ்டிதங்களாலும் இவனே பரன்; இது இசையாதார் என்னோடே வந்து பேசிக் காணுங்கோள் என்கிறார்.

[பரந்த என்று தொடங்கி] - ஈஶ்வரத்வஶங்கை பண்ணலாம்படி விஸ்த்ருதமான பல தேவதைகளையும் அவர்களுக்குப் போரும்படியான பல லோகங்களையும் உண்டாக்கி. [தெளியகில்லீர்] - தெளியமாட்டுகிறிலீர். [பரன் என்று தொடங்கி] - ஸர்வஸ்மாத்பரனாய் பொலிந்து நின்றபிரானுக்கு ஶேஷமாயல்லது ஸ்வதந்த்ரமாயிருப்பது வேறொரு தேவதை யில்லை; உண்டாகில், அதுக்கு உபபத்திகளைச் சொல்லுங்கோள்.

ப.—அநந்தரம், ‘கார்யரூபஜகத்தினுடைய ரக்ஷணார்த்தவ்யாபாரங்களை பரத்வப்ரதிபாதகங்கள்’ என்கிறார்.

பரந்த - (ஸ்வவிபூதிநியமநத்தாலே ஈஶ்வரத்வஶங்கைபண்ணும்படி) **விஸ்தீர்ணமான**, **தெய்வமும்** - **தேவதாவர்க்கத்தையும்**, **பல்உலகும்** - (அவர்களுக்கு விபூதியான) **பஹுவித லோகங்களையும்**, **படைத்து** - ஸ்ருஷ்டித்து, **அன்று** - (ப்ரளயம்வந்த) **அன்று**, **உடனே** - (இ

மம்பாராதே) கூட, விழுங்கி - விழுங்கி, கரந்து - (ப்ரளயங் காண வொண்ணுதபடி) ஒளித்து வைத்து, உமிழ்ந்து - (ப்ரளயாநந்தரம் வெளிநாடுகாண) உமிழ்ந்து, கடந்து - (மஹாபலியபிமாநம் கழியும்படி அளந்துகொண்டு) அநந்யார்ஹமாக்கி, இடந்தது - (அவாந்தரப்ரளயத்திலே வராஹரூபியாய்) இடந்தெடுத்த இது, கண்டும் - (ப்ரமாணமுகத்தாலே விசதமாகக்) கண்டிருக்கச்செய்தேயும், (ரஜஸ்தமோபிபவத்தாலே), தெளியகில்லீர் - நிர்ணயிக்கமாட்டுகிறிலீர்; அமரர் - (நித்யரான ப்ரஹ்மாதி)தேவர்கள், (தங்கள் பதவிஷ்யர்த்தமாக பஹுமுகமாக), சிரங்களால்-தலைகளாலே, வணங்கும் - வணங்கும், திருக்குருகூரதனுள் - திருநகரிக்குள்ளே நிற்கிற, பரன் - ஸர்வஸ்மாத்பரனுக்கு, திறமன்றி - ப்ரகாரமாயல்லது, மற்று - வேறு ஸ்வதந்த்ரமா யிருப்பதொரு, தெய்வம் - தைவம், இல்லை - இல்லை; பல் - (நாநாமதிபேதங்களாலே) பலவகைப்பட்ட, உலகீர் - லோகத்திலுள்ளீர்! பேசுமின் - (உண்டாகில் வந்து) சொல்லுங்கோள்.

இ.—மூன்றும் பாட்டில், ஜகந்நிகரணாதி திவ்யசேஷ்டிதங்களாலும் இவனே பரன்; இது இசையாதார் என்னோடே வந்து பேசிக்காணுங்கோள் என்கிறார்.

[பரந்த தெய்வமும்] - கொள்கொம்பு மூடப் பரந்து கைவிஞ்சின தேவஜாதியும், நியாமகனோடொக்கப் பரத்வஶங்கை பண்ணி நான் எடுத்துக் கழிக்கவேண்டும்படி யிருக்கை; பிதாவையும் புத்ரனையும் பிரிக்க அரிதாமாபோலே உத்பாதகனுக்கு அவ்வருகே கைவிஞ்சினபடி. [பல் உலகும் படைத்து] - அவர்கள் தனித்தனியே நியாமகராய்ப் போரும்படி நியாம்யமான லோகங்களையும் ஸ்ருஷ்டித்து: ஸ்ருஷ்டியிலே கர்மீபவிக்கைக்கு நியாமகரானவர்களோடு நியாம்யங்களோடு வாசியில்லை யென்கை. [அன்று] - எல்லாருக்கும் இவன் கை பார்த்திருக்க வேண்டும் ஆபத்தஶையிலே. [உடனே விழுங்கி] - ஸ்ருஷ்டிகாலம்போலே க்ரமம் பார்த்திருக்க வொண்ணாதே ஆபத்ஸமயத்தில். [கரந்து] - ப்ரளயம் வந்து தேடினாலும் அதுக்கு எட்டாதபடி கரந்து. திருவயிற்றிலே வைத்திருக்கச் செய்தே பண்டையிலும் இளைத்துக் காட்டலாம்படி யிருக்கை. [உமிழ்ந்து] - உள்ளே யிருந்து நோவுபடாதபடி உமிழ்ந்து. மஹாபலிபோல்வார் அபஹரிக்க எல்லைநடந்து மீட்டுக்கொண்டு நைமித்திகப்ரளயத்திலே மஹாவராஹமாய் பூமியை ப்ரளயத்தினின்றும் எடுத்தது. [கண்டும்] - ப்ரத்யக்ஷத்திலும் விஶதமா யிருக்கிறதாயிற்று இவர்க்கு ஶாஸ்த்ரம். [தெளியகில்லீர்] - இவ்வதிமாநுஷ சேஷ்டிதங்களாலே ஆஶ்ரயணீயனென்று அறியலாயிருக்க, ஶக்தராகிறிலிகோள். இவர்கள் ஜ்ஞாநாஜ்ஞாநங்கள் ஒழிய அர்த்தத்தில் மாறாட்டமில்லை யென்கை. அவர்களை ஈஶ்வரர்களாக்குதல், இவனை அநீஶ்வரனாக்குதல் செய்யவொண்ணாதா யிருக்கை. [சிரங்களால் இத்யாதி] - ஸ்ருஷ்ட்யாதி அபதாநங்கள் கிடக்க ஆஶ்ரயணீய தேவதைகள் அவனை ஆஶ்ரயிக்கக் கண்டால் உங்களுக்கு விஶ்வாஸம் பிறக்கத் தட்டுண்டோ? [சிரங்களால் அமரர் வணங்கும்] - நித்யத்வாதிகளால் வந்த துர்மாநத்தைப் போகவிட்டுத் தலைபடைத்த ப்ரயோஜநம் பெற்றோமென்று ஆஶ்ரயிக்கை. "[illegible]". [திருக்குருகூரதனுள் பரன்] - பரமபதத்திலும் வ்யாப்தியிலுங்காட்டில் திருநகரியில்நின்ற நிலையிலே பரத்வம் மிக்கிருக்கிறபடி. மநுஷ்யத்வே பரத்வத்துக்கும் அவ்வருகேயொன்றிறே இது. வஸ்துவுக்குக் குணாதிக்யத்தாலேயாகில் உத்கர்ஷம், அது மிக்கவிடத்திலே பரத்வம் உறைத்துத்தோற்றக்கடவதிறே. [திறமன்றி] - அவனுக்கு ப்ரகாரமாய்க் கொண்டல்லது. திறம் - ப்ரகாரம். [தெய்வம் மற்றில்லை] - ஸ்வதந்த்ரமா யிருப்பதொரு தெய்வ மில்லை. தேவதைகளுடைய ஸ்வரூபநிஷேதம் பண்ணுகிறாரல்லர்; ஈஶ்வரவிபூதியாகையாலே ஸ்வாதந்த்ர்ய நிஷேதம் பண்ணுகிறார். அவனுக்கு ப்ரகாரமென்று ஆஶ்ரயிக்கில் அவனுடைய ஆஶ்ரயணீயத்திலே புகும். ஸ்வதந்த்ர புத்தி பண்ணில் ஸ்வதந்த்ரமா யிருப்பதொன்றில்லை. "[illegible]",

“யெயஜனி”. [பேசுமினே] - அவனுக்கு ப்ரகாரமா யல்லது ஸ்வதந்த்ரமா யிருப்பதொரு தெய்வமில்லை யென்று சொன்ன என்முன்னே ஸர்வாதிகனை ப்ரகாரமாகவுடையதொரு தெய்வ முண்டு என்று சொல்ல வல்லாருண்டாகில் சொல்லுங்கோ ளென்கிறார்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. ஜகந்நிகரணாதி திவ்யசேஷ்டிதங்களாலும் இவனே பரன்; இது இசையாதார் என்னோடேவந்து கலந்து பேசிக்காணுங்கோள் என்கிறார்.

[பரந்ததெய்வமும்] - கோள்கோம்பு முடப் படர்ந்து நியாமகரோடொக்க எடுத்துக் கழிக்கவேண்டும்படி, கைவிஞ்சின தேவஜாதியும். [பல்உலகும்] - அவர்கள் பரப்புக்கெல்லாம் போரும்படியான லோகங்களும். அவர்கள் நியாமகராகைக்கு அடியாக நியாம்யரான அல் லாத சேதநரையும். [படைத்து] - ஸ்ருஷ்டித்து. இவர்தமக்கு அவர்களோடு அல்லாதாரோடு வாசியற்றிருக்கிறபடி. [அன்று உடனேவிழுங்கி] - ஸ்ருஷ்டிக்கிறபோது க்ரமத்திலே ஸ்ருஷ்டித் தான்; “யொ ப்ரஹ்மாணம்விஜ்யாதி பூர்வம்” (யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்) என்று, ஆபத்து வந்தால் அங்ஙன் க்ரமம்பார்த்திருக்கவொண்ணாதே. ப்ரளயாபத்திலே ஒருகாலே வயிற் றிலே வைத்து, ப்ரளயம் வந்தாலும் ‘இங்குண்டோ?’ என்று இளைத்துக்காட்டலாம்படி கரந்து; ‘உள்ளேயிருந்து நோவுபடுகிறனவோ?’ என்று வெளிநாடுகாண உமிழ்ந்து, நடுவே மஹாபலிபோல் வார் பருந்திருஞ்சிறைப்போலே பறித்துக்கொள்ள எல்லைநடந்து மீட்டுக்கொண்டு, ப்ரளயத்திலே யழுந்தி அண்டபித்தியிலே சேர்ந்த இத்தை மஹாவராஹமாய்ப் புக்கு ஒட்டுவிடுவித்து எடுத்து இப்படி செய்த இவற்றை. [கண்டும்] - ப்ரத்யக்ஷத்திலும் விசதமாயிருக்கிறதுகாணும் இவர்க்கு ஶாஸ்த்ரம். இவ்வதிமாநுஷசேஷ்டிதங்களைக்கொண்டே ‘அவன் ஆஶ்ரயணீயன்’ என்று அறிய லாயிருக்க, அறியமாட்டுகிறிலிகோள். [தெளியகில்லீர்] - இவர்கள் தெளிகையும் தெளியாமை யும் ஒழிய, அர்த்தஸ்த்திதியில் மாறுபாட்ட மற்றிருக்கிறபடி. அவனை அநீஶ்வரனாக்குதல்; இவர்களை ஈஶ்வரர்களாக்குதல் செய்யவொண்ணாதிறே, உங்கள் தெளிவும் கலக்கமு மொழிய. [சிரங்கள் இத்யாதி] - ‘ஸர்வஸ்ரஷ்டாவுமல்லன், ஆபத்ஸகனுமல்லன்’ என்று இருந்திகோளாகிலும், நீங்கள் ஆஶ்ரயிக்கிற தேவதைகள் செய்கிறது முன்னம் உங்களுக்குக் கண்டால் தெளியலாமே; அவர்கள் ‘தலைபடைத்த ப்ரயோஜநம் பெற்றோம்’ என்று வணங்குகிறபடியைக் கண்டாகிலும் நீங்கள் ஆஶ்ரயிக்கப் பாருங்கோள். “பாதெ நகஸ்ராமெ நவ ப்ரஹ்ம ருத்ராதிமகுடங்கள்” (பாதேந

மூன்றாம்பாட்டு - பரந்ததெய்வமும் இத்யாதி. த்விதீயசதுர்த்தபாதங்களைக் கடாக்ஷித்து அவதாரி கை - ஜகந்நிகரணாதி இத்யாதி.

‘பரந்ததெய்வமும்’ என்றதுக்கு - ஸ்வவிபூதி நியமநத்தாலே ஈஶ்வரத்வசங்கை பண்ணலாம் படி விஸ்தீர்ணமான தேவதாவர்க்கத்தையு மென்று சப்தார்த்தம். இவர்களுடைய ஈஶ்வராபிமாநத்தாலே வந்த விஸ்த்ருதியினுடைய உரப்பை அருளிச்செய்கிறார் - கோள்கோம்பு இத்யாதி. லோகசப்தம் ஜகவாசி யாக அர்த்தாந்தரம் - அவர்கள் நியாமகர் இத்யாதி “லோகஸஹ ஹ லோகே” என்னக்கடவதிறே. அசேதநமான லோகத்தோடே தேவதைகளையும் சொன்னதுக்கு ஹாவம் - இவர்தமக்கு இத்யாதி. அவர்க ளோடு - ப்ரஹ்மாதிகளோடு. அன்று - ப்ரளயாபத்தசையிலே. ‘உடனே’ என்றதுக்கு ஹாவம் - ஸ்ருஷ்டிக் கிறபோது இத்யாதி. க்ரமஸ்ருஷ்டிக்கு ப்ரமாணம் - யோப்ரஹ்மாணம் இத்யாதி. அழுந்தி - முழுகி. இடந்து - ஒட்டுவிடுவித்து. கேட்டுமென்னாதே, ‘கண்டும்’ என்றதுக்கு ஹாவம் - ப்ரத்யக்ஷத்திலும் இத் யாதி. ‘கரந்து’ என்று தொடங்கி ‘தெளியகில்லீர்’ என்னுமளவும் கூட்டி ஹாவம் - இவ்வதிமாநுஷ இத் யாதி. ‘அறியமாட்டிகோள்’ என்றதுக்கு ஹாவம் - இவர்கள்தெளிகையும் இத்யாதி. விவரணம் - அவனை இத்யாதி. உங்கள்தெளிவும் கலக்கமுமொழிய - அவனை அநீஶ்வரனாக்குதல் என்று அந்வயிப்பது. ‘சிரங்க ளால்’ இத்யாதிக்கு அவதாரிகை - ஸர்வஸ்ரஷ்டாவுமல்லன் இத்யாதி. ‘சிரங்களால் - வணங்கும்’ என் கிற விசேஷணத்துக்கு ஹாவம் - அவர்கள்தலைபடைத்த இத்யாதி. ப்ரஹ்மருத்ராதிகள் தாம்வணங்குவர்க ளோ? என்ன, பாதேந இத்யாதி. “வஹுஸஹ ஸ்ரீகாக்ஷஸ்ரீஶ்ரா வாஹஹ ஸஹ பாதெந

கமலாபேசப்ரஹ்மருத்ரார்ச்சிதேசுச) "பின்னிட்டசடையானும் பிரமனு மிந்திரனும் துன்னிட்டேப்புகலரிய;" "நாத்தழும்பநான்முகனுமீசனுமாய் முறையாலேத்த." [திருக்குருகூரதனுள்பரன்]- மநுஷ்யத்வே பரத்வத்துக்கும் அவ்வருகே ஒரு பரத்வமிறே இது. இவ்வருகே போரப்போர உத்கர்ஷம் மிகுமத்தனை. குணத்தாலேயிறே வஸ்துவுக்குஉத்கர்ஷம்; குணாதிக்யமுள்ளது இங்கேயிறே. [அதனுள் பரன்] - "அநஶ்நந்நந்ய:" (அநஶ்நந்நந்ய:) என்று சேதநர் ப்ரக்ருதியோடே கலசக்கலச ஒளிமழுங்கி வாராநிற்கச்செய்தே, அவனுக்கு நியாமகத்வத்தால் வந்த புகர் அற விஞ்சிவருமாபோலே; ஸம்ஸாரிகள்நடுவே போரப்போரவாயிற்று பரத்வம் ப்ரகாசிப்பது. [திறமன்றி] - அவனுக்கு ப்ரகாரமாயல்லது. திறம் - ப்ரகாரம். [தேய்வம்மற்றில்லை] - தேவதைகளுடைய ஸ்வரூபநிஷேதம் பண்ணுகிறாரன்றிறே, 'அவனுக்கு விபூதி வேணும்' என்றிருக்கிறவராகையாலே; அவர்களுடைய ஸ்வாதந்த்ர்யநிஷேதம் பண்ணுகிறார். ஸ்வதந்த்ரமாய்த் தனக்கு உரித்தாயிருப்பதோரு தேவதை யில்லை. அவனுக்கு ப்ரகாரபுத்தி பண்ணி ஆஶ்ரயித்திகோளாகில் அவனுடைய ஆஶ்ரயணத்திலே புகும்; ஸ்வதந்த்ரபுத்திபண்ணி ஆஶ்ரயித்திகோளாகில் ஸ்வதந்த்ரமா யிருப்ப தொன்றில்லை; "நேஹநாநாஸ்தி" (நேஹநாநாஸ்தி) "யேயஜந்தி" (யேயஜந்தி) இத்யாதி. [பேசுமினே] - நான் 'அவனுக்கு ப்ரகாரமாயல்லது ஸ்வதந்த்ரமாயிருப்பதோரு தேவதை யில்லை' என்றேன்; 'இப்படி அநந்யாதீநமாயிருக்கிற நியாமகத்வத்தை யுடையனாயிருக்கிற இவனைத் தனக்கு ப்ரகாரமாக வுடையதோரு தைவ முண்டு' என்று சொல்ல வல்லார் உண்டாகில் வாய்படைத்தார் என்முன்னே நின்று சொல்லிக்காணுங்கோள் என்கிறார். (௮)

---

கமலாபேசப்ரஹ்மருத்ரார்ச்சிதேசுச". பின்னிட்டசடையானும் இத்யாதி - பின்னேநாலப்பட்ட ஜடையையுடைய ருத்ரனும் ப்ரஹ்மாவும் இந்திரனும் ஒருவர்க்கொருவர் முன்புகவேண்டி நெருக்குகையாலே புகஅரிதாயிருக்கிற வைகுந்தத்திருவாசலிலே யித்யர்த்த:. துன்னிட்டு - நெருங்கி. பெருமாள் திருமொழி - முப்பத்துமூன்றாம்பாட்டு. நாத்தழும்ப இத்யாதி - நாவானது தழும்பேறும்படி சதுர்முகனும் ருத்ரனுமாய்த் தங்கள் சேஷத்வமுறையாலே யேத்த வித்யர்த்த:. திருமொழி எழாந்திருமொழி எட்டாம் பாட்டு. விசேஷணகர்ப்பிதாம் வ்யாவ்ருத்திம் தர்ஶயதி - மநுஷ்யத்வே இத்யாதி. 'கடந்து' இத்யாதியாற் சொன்ன மநுஷ்யத்வே பரத்வத்துக்கு மென்றபடி. இது - திருநகரியிலே யிருக்குமிது. பரனாயிருக்கு மாகாரம் அவ்விபூதியி லொழிய இங்கு உண்டோ? என்ன, இவ்வருகே இத்யாதி. அதுக்கு ஹேது எது? என்ன, குணத்தாலே இத்யாதி. அர்ச்சாவதாரத்திலே குணமுண்டோ? என்ன, குணாதிக்யம் இத்யாதி. "வஶிவத்ஸ்வவஶோ" இத்யாதியிலே ஹ்ருதயம். இவ்வருகே போந்தால் குணங்கள் ஸங்குசிதமாமதொழிய, அதிசயிக்கக்கூடுமோ? என்ன, ஸத்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறார் - அநஶ்நந் இத்யாதி. ஆக, 'திருக்குருகூரதனுள்பரன்' என்றதுக்கு அர்த்தத்வயம். - குணாதிக்யத்தால் வந்த பரத்வத்தைச் சொல்லுதல், ஸம்ஸாரிகள்நடுவே வந்திருக்கச்செய்தேயும் ஸங்கோசமின்றிக்கே யிருக்கிறபடியைச் சொல்லுதல். 'தெய்வம்மற்றில்லை' என்றால் போராதோ? 'திறமன்றி' என்பானென்? என்ன, தேவதைகளுடைய இத்யாதி. 'மற்றில்லை' என்கிற பதத்தால் விவக்ஷித்த அர்த்தத்தை அருளிச்செய்கிறார் - ஸ்வதந்த்ரமாய் இத்யாதி. 'பல்லுலகீர்' என்று - அவர்களை ஸம்போதித்து, 'திறமன்றி' என்றும், 'மற்றில்லை' என்றும் விசேஷிக்கிறவருடைய ஹார்த்த ஭ாவம் - அவனுக்கு இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'ஸ்வதந்த்ரவஸ்து வில்லை' என்றதுக்கு ப்ரமாணம்-நேஹ இத்யாதி. 'ப்ரகாரபுத்த்யா ஆஶ்ரயித்தால் ததாஶ்ரயணத்திலே புகும்' என்றதுக்கு ப்ரமாணம் - யேயஜந்தி இத்யாதி. "யேயஜந்தி பித்ரூந் தேவாந் ப்ராஹ்மணாந் ஸஹுதாஶநாந் | ஸர்வபூதாந்தராத்மாநம் விஷ்ணுமேவ யஜந்தி தே" இதி தக்ஷஸ்ம்ருதௌ. பேசுமின் - உபபத்திசொல்லுங்கோள். உபபத்திசொல்லுகிற ப்ரகாரம் - இப்படிஅநந்யாதீநயாய் இத்யாதி. இவனை - நாராயணனை. க்ரமேண அந்வய:. (௮)

# நான்காம் பாட்டு.

**பேசநின்றசிவனுக்கும் பிரமன்தனக்கும்பிறர்க்கும்**
**நாயகனவனே கபாலநன்மோக்கத்துக்கண்டுகொண்மின்**
**தேசமாமதிள்சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள்**
**ஈசன்பாலோரவம்பறைதல் என்னாவது? இலிங்கியர்க்கே.**

ஆ.— (பேசநின்ற.) ப்ரஹ்மருத்ரர்களுடைய ஸர்வேஶ்வரத்வம் அநுமாநஸித்தமிறே யென்னில்;— அந்த அநுமாநம், “தத்ர நாராயணஶ்ஶ்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசித꞉ | ததஸ்தேந ஸ்வகம் பார்ஶ்வம் நகாக்ரேண விதாரிதம் | மஹதீ ஸ்ரவதீ தாரா தஸ்ய ரக்தஸ்ய நிஸ்ஸ்ருதா | [illegible] | திவ்யம் வர்ஷஸஹஸ்ரம் து ஸா தாரா ப்ரவாஹிதா | [illegible] | விஷ்ணுப்ரஸாதாத் ஸுஶ்ரோணி கபாலம் தத் ஸஹஸ்ரதா | ஸ்புடிதம் பஹுதா யாதம் ஸ்வப்நலப்தம் யதா தநம்”, “[illegible]”, “[illegible]” இத்யாதி ஶாஸ்த்ர பாதிதமாகையாலே, உங்களால் ஈஶ்வரத்வேந சொல்லப்படுகிற ப்ரஹ்மருத்ரர்களுக்கும் நாயகன் அந்தநாராயணனே என்கிறார்.

ஒ.—நாலாம் பாட்டில், வ்யோமாதீத நையாயிக வைஶேஷிகாதிகள் வந்து ப்ரத்யவஸ்திதராய் ‘ஸாவயவமான ஜகத்து கார்யம்’என்றும், ‘கார்யமாகையாலே கர்த்ருமத்’ என்றும், கர்த்ருவிஶேஷாபேக்ஷை பண்ணில் உபநிஷத்துக்கள் ‘ஈஶன்’ என்றும், ‘ஈஶாநன்’ என்றும்சொல்லுகிற பேரைத் துணையாகக் கொண்டு கீழ்ச்சொன்ன அநுமாந முகத்தாலும் மற்றும் அவ்வர்த்தத்துக்கு ஸாதகமான உபபத்திகளாலும் ‘ருத்ரதத்வம் பரம்’ என்று அவர்கள் ஸாதிக்க, ‘ஒருவன் தான் ப்ராணனோடேயிருக்கத் தன் தலையை யறுக்கக் கொடுக்க, ஒருவன் அத்தாலே பாதகியாய்க் கபாலபாணியாய் இரந்து ஶரீரதாரணம் பண்ணித் திரிய, ஸர்வேஶ்வரன் க்ருபையாலே கபாலமோக்ஷாதிகளைப் பண்ணி ரக்ஷித்தான்’ என்று இதிஹாஸபுராணாதிகளில் ப்ரஸித்தமான லிங்கத்தையும் அகாரார்த்தத்தை ஸர்வேஶ்வரனாகச் சொல்லுகிற ஶ்ருதியையும் காட்டி அவற்றின் ஸந்நிதியில் நிலைநிற்கமாட்டாதே துர்ப்பலையான ஸமாக்யையைத் தள்ளி இந்த ஶ்ருதிலிங்கங்களையே ஈஶ்வராநுமாநத்துக்கும் காலாத்யயாபதிஷ்டமான தூஷணத்துக்கு உடலாக முன்னிட்டு இப்புடைகளாலே அவர்களை நிராகரித்து ப்ரஸித்தமான உபநிஷந்மர்யாதையாலே எம்பெருமான் ஸர்வேஶ்வரன் என்று ஸாதித்து குத்ருஷ்டிகளான உங்களுக்கு ஒரு ப்ரயோஜநமில்லை என்கிறார்.

[பேசநின்ற என்று தொடங்கி] - நீங்கள் ஈஶ்வரன் என்று பேசுகிற ருத்ரனுக்கும் அவனுக்கு ஜநகனான ப்ரஹ்மாவுக்கும் மற்றுமுள்ளார்க்கும் ஈஶ்வரன் உபநிஷத்ப்ரஸித்தனான நாராயணனே; இவ்வர்த்தத்தை ப்ரஸித்தமான கபாலமோக்ஷத்திலே கண்டு கொள்ளுங்கோள். [தேசமாமதிள் என்று தொடங்கி] - அநபிபவநீயமாம்படி தேஜஸ்ஸை யுடைத்தாய் அரண

கப் போரும்படி மதிள் சூழ்ந்து அழகிதான திருநகரியில் நின்றருளின ஈஸ்வரன்பக்கல் குத்ருஷ்டிகளாய் ஆநுமாநிகரான உங்களுக்கு அநீஸ்வரத்வ ஸாதகமான ஆபாஸயுக்திகள் தேடிச் சொன்னால் நிஷ்பலம்.

ப.—அநந்தரம், ஈஸ்வரதயா ப்ரஸித்தமான தேவதாந்தரங்களுக்கும் ஈஸ்வரனை நிர்த்தோஷப்ரமாணோபபத்திஸித்தனான ஸர்வேஸ்வரன் விஷயத்தில் அநீஸ்வரத்வம் சொல்லுகிற ஆநுமாநிகேஸ்வரவாதிகளான நையாயிகாதிகளுக்கு என்ன ப்ரயோஜநமுண்டு? என்கிறார்.

பேசநின்ற-(ப்ரமாணாபாஸங்களாலும் ஸமாக்யைகளாலும் ஈஸ்வரத்வப்ரஸங்கை பண்ணிச்) சொல்லப்பட்ட, சிவனுக்கும்-ருத்ரனுக்கும், பிரமன்தனக்கும் - (அவனுக்கும் உத்பாதகனாய் ஸ்வஸ்ருஜ்யமான விஸ்தீர்ணவிபூதியுக்தனான) ப்ரஹ்மாதனக்கும், பிறர்க்கும்-(இவர்களுக்கும் ஏவிற்றுச்செய்யும்) அல்லாத தேவாதிகளுக்கும், நாயகன் - (தத்ஸ்வரூபவிபூதி நிர்வாஹகனாய்க் கொண்டு) நாயகனானவன், அவனே — (நிர்த்தோஷ ப்ரமாணவேதாந்த ஸித்தனான) ஸர்வேஸ்வரனே; (இவ்வர்த்தத்தை), கபாலம் - (ப்ரஹ்மாவினுடைய சிரஸ்ஸையறுத்துப் பாதகியான ருத்ரன்கையில் பிக்ஷார்த்தமான) அந்த ப்ரஹ்மகபாலத்தை, நல் - (ஸஹஸ்ரதாவாக ஸ்புடதமாம்படி) நன்றாக, மோக்கத்து - போக்கின (அபதாநத்தை யெழுதுகிற பஞ்சமவேதமான) மஹாபாரதத்திலே, கண்டுகொண்மின் - அபரோக்ஷித்துக் கண்டு கொள்ளுங்கோள். (இப்படி யிருக்க), தேசம் - * தேஜோமயமாய், மா - அத்யுந்நதமான, மதிள் - மதிளாலே, சூழ்ந்து - சூழப்பட்டு, அழகாய - அத்தாலே அழகையுடைத்தான, திருக்குருகூரதனுள் - திருநகரிக்குள்ளே, ஈசன்பால்-(அந்தக் கபாலவிமோசகத்வம் தோற்ற எழுந்தருளியிருக்கிற) நிருபாதிக ஸர்வேஸ்வரன் விஷயத்திலே, ஓர் அவம் - அநீஸ்வரத்வாபக்ருஷ்டோக்திகளை, பறைதல் - பண்ணுகிற இத்தால், இலிங்கியர்க்கு - லிங்கப்ரமாணவாதிகளான ஆநுமாநிகர்க்கு, என்னாவது - என்ன லாபமுண்டு? ப்ரபல ப்ரமாணபாதிதமாகையாலே அநுமாநத்தால் ஸ்வாபிமதேஸ்வரஸித்தி யில்லையென்று கருத்து.

இ.—நாலாம்பாட்டில், வ்யோமாதீத நையாயிக வைஸேஷிகாதிகள் வந்து ப்ரத்யவஸ்திதராய் "ஜகத்து ஸாவயவத்வாத் கார்யம்; ஆகையாலே, கர்த்ருமத்து" என்றும், கர்த்ருவிஸேஷாபேக்ஷையிலே உபநிஷத்திலே 'ஈஸன்' என்றும் 'ஈஸாநன்' என்றும் சொல்லுகிற ஸம்ஜ்ஞையைத் துணையாகக் கொண்டு கீழ்ச்சொன்ன அநுமாநத்தாலும் அதுக்கு ஸாதகமான உபநிஷத்துக்களாலும் 'ருத்ரதத்த்வம் பரம்' என்று ஸாதிக்க, இதிஹாஸ புராணாதிகளில் ப்ரஸித்தமான பிக்ஷாடந தத்பரிஹாராத்மகமான லிங்கத்தையும், அகாரார்த்தத்தை ஸர்வேஸ்வரனாகச் சொல்லுகிற ஸ்ருதியையும் காட்டி 'ஆக இப்புடைகளாலே ஸகலோபநிஷத் ப்ரஸித்தனான நாராயணனே பரதேவதை' என்று காலாத்யயாபதிஷ்டமாகிற தூஷணத்தாலே அவர்களை நிராகரிக்கிறார்.

[பேசநின்ற சிவனுக்கும்] - கர்மவிதிஸேஷமாகையாலே அந்யபரமா யிருக்கிற அர்த்தவாதங்களாலே சொல்லலாம்படி முட்டப் பொறுத்து நிற்கிற ருத்ரனுக்கும், நீங்கள் "ஈஸ்வரன்" என்று பேசுகிற ருத்ரனுக்கும் என்றுமாம். [பிரமன் தனக்கும்] - அவனுக்கும் ஜநகனான ப்ரஹ்மாவுக்கும் "ப்ரஹ்மணே ஜ்யேஷ்டாய ஜ்யேஷ்டாய ஸ்ரேஷ்டாய" "ப்ரஹ்மணஸ்ஸாவிலஸஹித: ஸிவ:" ருத்ரனுடைய ஈஸ்வரத்வம் ஹரவத்ப்ரஸாதாயத்தம், "ஹோமிச்சதேவதேவஸ்ய ஹரா ஹரா தாம் தேவதேவோ ஸஹஸ்ரவ". [பிறர்க்கும்] - இவர் கருத்தால் இவர்களோடு பிறரோடு வாசியில்லை. இவரேயன்று, ஸத்த்வம் தலையெடுத்தால் அவர்களும் அப்படியே நினைத்திருப்பது: "தவாங்காநி ஸர்வா தேவா: ஸம்ஜ்ஞிதா:" என்றானிறே ருத்ரனை நோக்கி ப்ரஹ்மா. [நாயகன் அவனே] - அவனென்று ஸ்ருதிப்ரஸித்தி. அநந்யபரமான நாராயணாநுவாக ப்ரஸித்தியையும் "யோவேதாதௌஸ்வர: ப்ரோக்த:" என்கிற அகாரார்த்த ப்ரஸித்தியையும் நினைக்கிறார். ஜகத்

* "பேரொளியையுடைத்தாய்ப்பெருத்த" என்று பாடாந்தரம்.

தாகிற கார்யத்துக்கு அநுரூபமான கர்த்ருத்வத்தைக் கற்பிக்கிலும் இவனே நிர்வாஹகனாக வேணும் என்னவுமாம். இவ்வர்த்தத்தைக் கபாலமோக்ஷத்திலே கண்டுகொள்ளுங்கோள். [நன் மோக்கம்] - எதிரிகளுக்கும் ஸம்ப்ரதிபந்நமான அநீஶ்வரத்வஹேது என்னுதல். ஈஶ்வரன் அவன் துரிதத்தை ஸவாஸநமாகப் போக்கினபடியாதல். [கண்டுகொண்மின்] - உங்கள் ஆபந் நிவ்ருத்திக்கு ஆபந்நரையோ பற்றுவது, ஆபத்ஸகனை யன்றோ? நீங்கள் பரத்வஶங்கை பண்ணு கிற இருவரும் நின்ற நிலையைப் பாரிகோள்: தலையறுப்புண்டு நிற்பானொருவனும், தலையை அறுத் துப் பாதகியாய் நிற்பானொருவனுமாயிறே இருக்கிறது. "பிக்ஷுபுக்கான்" என்பது, அவனுக்கே பரத்வத்தைச் சொல்லுவதாகில், நீங்கள் எழுதிவைத்த க்ரந்தங்களைப் பார்த்துக்கொள்ளுங்கோள் என்கிறார். "ததோ நாராயணம் ஶ்ரீமாநு யாசிக்ஷாம்வ்யாஸிதஃ । ததஸ்தஸ்ய நவாம்.... [illegible] நவாமந்த்ரணவிதாரிதஃ । விஷ்ணுப்ரஸாதாத் ஸுஶ்ரோணி கபாலம் ததஹஸ்ரயா । ஸ்ஃ.... ப்திதம் ஸஹஸ்ரதா தம் ஸ்வப்நஸம்ய நயயா." [தேசமாமதிள் இத்யாதி] - ஶத்ருக்களுக்கு அநபிபவநீயமாய் அரணுகப்போரும்படியான மதிளையுடைத்தாய் தர்ஶநீயமான. [திருக்குரு கூரதனுள் ஈசன்பால்] - அஜஹத்ஸ்வபாவனுகையாலே இஸ்ஸௌலப்யத்திலேயும் மேன்மை குறைபாதிருக்கிறபடி "ய வாஸுதேவ: பரமேஶ்வர:" என்றும் "பரமாத்மா ஸநாதந:" என்றும் ப்ரமாண ப்ரஸித்தனான ஸர்வேஶ்வரன். ஈசன், ஈஶாநன் என்கிற இது "மஹாவ்ருக்ஷம்" என்று மாபோலே ஸமாக்யா மாத்ரமேயாய் அர்த்தமின்றிக்கேயிருக்கை. [ஓர் அவம்பறைதல்] - ஆநீ ஶ்வரத்வஸாதகமாக ஏதேனும் ஒரு ஆபாஸயுக்திகளைச் சொல்லுகிறது. அந்நைத் தாம் சொல்லமாட்டாமையாலே 'அவம்' என்கிறார். பறைதல் - ஸ்வகோஷ்டிகளிலே ரஹஸ்யமாகச் சொல்லுமதன்று. [என்னாவது சொல்லுதொழிய ஸதஸ்பமன்றிக்கே யிருக்கை; என்முன்பே சொல்லுமதன்று. [என்னாவது இலிங்கியர்க்கே] - ஆநுமாநிகர்க்கு என்ன ப்ரயோஜன முண்டு? அந்த தேவதைகளுக்கு ஓர் உத்கர்ஷம் பெற்றிகோளன்று; ஸமாஶ்ரயணத்துக்கு ஓர் பலம் பெற்றிகோளன்று. உங்கள் அநு மாநம் ஶ்ருதிஸந்நிதியில் ஜீவிக்கமாட்டாது. நீங்கள் சொல்லுகிற ஸமாக்யை கபாலமோக்ஷமா கிற அர்த்தஸாமர்த்யத்தின் முன்பு நிற்கமாட்டாது.

ஈடு.—நாலாம்பாட்டு. வ்யோமாதீத நையாயிக வைஶேஷிகாதிகள் வந்து ப்ரத்யவஸ்த் திதராய், "ஜகத்து ஸாவயவத்வாத் கார்யரூபமா யிராநின்றது; ஆகையாலே, இதுக்கு ஒருகர்த்தா

---

நாலாம்பாட்டு - பேசநின்ற இத்யாதி. 'நாயகனவனே' என்று - ஶ்ருதிப்ரஸித்தியையும் "கபா லநன்மோக்கத்துக்கண்டுகொண்மின்" என்று - அர்த்தஸாமர்த்யரூபலிங்கத்தையும் அருளிச்செய்கையாலே, அதுக்கீடாக அவதாரிப்பிக்கிறார் - வ்யோமாதீத இத்யாதி. கீழே 'பேசுமின்' என்கையாலே வந்துப்ரத்ய வஸ்த்திதராய் என்கிறார். வ்யோமஶப்தவாச்யனான ஸர்வேஶ்வரனை அதிக்ராந்தமானதொரு தத்த்வத்தைச் சொல்லுகையாலே வ்யோமாதீதரென்று பாசுபதரைச் சொல்லுகிறது. இவர்கள் 'ஈஶன், ஈஶாநன்' என் கிற ஸமாக்யையாலே ருத்ரபரத்வத்தை ஸாதிப்பர்கள்; நையாயிகவைசேஷிகர்கள் அநுமாநத்தாலே ருத்ர காரணத்வத்தை ஸாதிப்பர்கள். ஆக, வ்யோமாதீதர்க்கு ஸமாக்யாப்ராதாந்யம், நையாயிகவைசேஷிகா திகளுக்கு அநுமாநப்ராதாந்யம். நையாயிகவைசேஷிகர்க ளென்கிறது - தார்க்கிகரில் அவாந்தரபேதம். வைஶேஷிகாதிதி - ஆதிஶப்தேந - [illegible] நாம நஞ்ஞேயம் ப்ராணஃ, [illegible] ஷாத்யக்ஷ ஶரீரத்வம் இதி. [illegible] ஸ்வஹஸ்தாத்ஷட்காரேண நிவேதிதஃ. லிங்கிகரை - ஆநுமாநிகரென்றும், ஸமாக்யாப்ர தாநரென்றும் இரண்டு வகையாகப் பிரித்து, இவர்களில், ஸமாக்யாப்ரதாநராகிறார் - 'ஆகாஶஶப்தவாச்ய னைவிஷ்ணுவுக்குப் புறம்பே ருத்ரதத்த்வமுண்டு' என்று சொல்லுகிற பாசுபத ரென்றும், அநுமாநப்ரதாந ராகிறார் - நையாயிகவைசேஷிகாதிக ளென்றும் ப்ரதிஜ்ஞைபண்ணி, இவர்களிருவரும் அநுமாநஸமாக்யைக ளாலே ருத்ரகாரணத்வத்தை ஸாதிக்கும் ப்ரகாரத்தைக் காட்டுகிறார் - ஜகத்து இத்யாதி. "யஸ்ய ஸுவா

வேணும்; இஜ்ஜகத்துத்தான் விசித்ரஸந்நிவேசத்தை யுடைத்தாயிருக்கையாலே இதுக்குத் தக்க "உபாதாநோபகரணஸம்ப்ரதாநப்ரயோஜநாபிஜ்ஞ: கர்த்தா" (உபாதாநோபகரணஸம்ப்ரதாநப்ரயோஜநாபிஜ்ஞ: கர்த்தா) என்கிறபடியே - உபாதாநமும் உபகரணமும் ஸம்ப்ரதாநமும் ப்ரயோஜநமும் அறிகைக்கீடான விசித்ரமான ஜ்ஞாநஶக்த்யாதிகளை யுடையனாயிருப்பானொருவன் கர்த்தாவாகவேணும்" என்று இங்ஙனே அநுமாநத்தாலே ஒருவனைக் கல்பித்து, வேதத்தை ஆப்தவசநமாக்கி இதுக்கு ஸஹகரிக்கிறதாகக்கொண்டு - அநுமாநப்ராதாந்யத்தாலே ஈச்வரனை ஸாதித்து, 'அவனுகிறான், 'ஈஶன், ஈஶாநன்' என்று இங்ஙனே வேதத்திலே ப்ரஸித்தவந்நிர்த்தேஶமுண்டா யிராநின்றது; இந்த ஸமாக்யையாலே அவற்றால் சொல்லப்படுகிற அவனே ஈஶ்வரனுகிறான்' என்று, அநுமாநத்தாலும் ஸமாக்யையாலுமாக பகவத்வ்யதிரிக்தனொருவனுக்கு உத்கர்ஷத்தை ஸாதித்தார்கள்; அவர்களைப்பார்த்து:—'நீங்கள் சொல்லுகிற அநுமாநம் ஶ்ருதியின்முன்பு நேர்நில்லாது; லிங்கத்தின்முன்பு ஸமாக்யை நேர்நில்லாது' என்று ஶ்ருதி லிங்கங்களாலே அநுமாநத்தையும் ஸமாக்யையையும் தள்ளி பகவத்பரத்வத்தை ஸாதிக்கிறார். அதுசெய்கிறவழிதான்

---

*ப்ர.— நையாயிகா வாதமுடைய அநுமாநம்:— க்ஷித்யாதிகம் கார்யம், ஸாவயவத்வாத், கடவத். க்ஷித்யாதிகம் ஸகர்த்ருகம், கார்யத்வாத், கடவத். க்ஷித்யாதிகம் விசித்ரஶக்திகர்த்ருகம், விசித்ரகார்யத்வாத், ராஜமந்திராதிவத். உபாதாநோபகரணஸம்ப்ரதாநப்ரயோஜநாபிஜ்ஞகர்த்ருகம்.*

---

*யவம் தத்கார்யம், யதா கட:" என்று, கார்யரூபமென்கைக்கு ஸாவயவத்வம் நியாமகம்; ஜகத்து மஹீமஹீதராதிரூபேண ஸாவயவமிறே யென்றபடி. ஆகையாலே, இதுக்கொரு கர்த்தா வேணுமென்றது - "க்ஷித்யாதிகம் ஸகர்த்ருகம், கார்யத்வாத், கடவத்" என்ற அநுமாநத்தைப்பற்ற. அந்தக் கர்த்தா ஸர்வஜ்ஞனாகவேணுமென்று காட்டுகிறார் - ஜகத்துத்தான் இத்யாதி. உபாதாநம் - ம்ருத்பிண்டம். உபகரணம் - தண்டசக்ராதிகள். ஸம்ப்ரதாநமாவது "ஸம்ப்ரதாநே சதுர்த்தீ" என்று "ப்ராஹ்மணாய காம் ததாதி" என்று சொல்லுகிறபடியே இத்தை விநியோகங்கொள்ளுமவனைச் சொல்லுகிறது. ஸம்ப்ரதாநம் - விநியோகம். ப்ரயோஜநம் - உதகாஹரணாதி. "க்ஷித்யாதிகம் ஸ்வோபாதாநோபகரணஸம்ப்ரதாநப்ரயோஜநாபிஜ்ஞவிசித்ரஶக்திகர்த்ருகம், விசித்ரஸந்நிவேஶயுக்தத்வாத், ராஜமந்திராதிவத்" என்று ஸர்வஜ்ஞனே கர்த்தாவென்னுமதுக்கு அநுமாநம். இப்படி அநுமாநத்தாலே ஸாதிப்பானென்? ஸ்வத:ப்ரமாணமான வேதம் இருக்கிறதே யென்ன, வேதத்தை இத்யாதி. ஆப்தவசநமாக்கி - ஈஶ்வரப்ரணீதமாக்கி. ஈஶன் ஈஶாநன் என்றது- "ஶம்புஸ்ஸர்வஸ்ய ஜகத ப்ரஹ்மணோ ஶ்ரீணாதி", "ஈஶாநஸ்ஸர்வவித்யாநாமீஶ்வரஸ்ஸர்வபூதாநாம்" இத்யாதியைப்பற்ற. இந்தக்கர்த்தா தேவதாந்தரத்திலே ரூடங்களான ஈஶேஶாநாதி ஶப்தங்களுக்கு வாச்யனாகையாலே பகவத்வ்யதிரிக்தனொருவனுக்கென்றது. அநுமாநம் ஶ்ருதியின்முன்பு நேர்நில்லாதென்றது-"ஶ்ருதிலிங்கவாக்யப்ரகரணஸ்தாநஸமாக்யாநாம் ஸமவாயே பாரதௌர்ப்பல்யமர்த்தவிப்ரகர்ஷாத்" என்று-பூர்வபூர்வப்ராபல்யமும் உத்தரோத்தரதௌர்ப்பல்யமுஞ் சொல்லுகையாலே, பூர்வோபாத்தமான ஶ்ருதியின்முன்பு அநுமாநம் நேர்நில்லாது; சரமோபாத்தமான ஸமாக்யையும் லிங்கத்தின்முன்பு நேர்நில்லாதென்றபடி. அர்த்தவிப்ரகர்ஷம் - விலம்பிதப்ரஹேதுத்வம். அதாவது - அநுமாநத்துக்குமுன்னே ஶ்ருதி தோற்றுகையாலே அநுமாநம் விலம்பிதப்ரஹேது, விலம்பிதப்ரஹேதோஶ்ஶீக்ரப்ரஹேதுர்ப்பலீயாந். லிங்கமென்றும், அநுமாநமென்றும்-பர்யாயம். ஏகபத ஸாமர்த்யம் - ஶ்ருதி:. அர்த்த ஸாமர்த்யம் - லிங்கம். 'நாயகனவனே' என்கையாலே - ஶ்ருதிப்ரஸித்தி. 'கபாலநன்மோக்கத்து' என்று லிங்கம். இரண்டையும் உபபாதிப்பதாக, தஜ்ஜிஜ்ஞாஸாப்ரஶ்நத்தை அநுவதிக்கிறார்-அதுசெய்கிறவழிதானேன்னேன்னில் என்று. அதுசெய்கிறவழி ஶ்ருதிலிங்கங்களாலே அநுமாந*

என்? என்னில் - [யத்வேதாதௌ] (யத்வேதாதௌ) - வேதாதியிலும் வேதாந்தத்திலும் சொல்லப் பட்ட ஸ்வரமாகிறது - ப்ரணவம்; லோகத்தில் வாசகஜாதமடைய அதிலே லீநமாயிருக்கிறது; அது தான் ஸ்வப்ரக்ருதியான அகாரத்திலே லீநமாயிருக்கிறது; அதுக்கு வாச்யதயா பரனாயிருக்கிறான் யாவனொருவன், அவன் மஹேஶ்வரன் என்கிற ஶ்ருதியாலும்; 'ஈஶன், ஈஶாநன்' என்கிற ஸமாக்யைகளால் தோற்றுகிறவர்களும் தலையறுப்புண்பாரும் தலையறுத்துப் பாதகியாய் நிற்பாருமாயிராநின்றார்கள்; இவன் அவர்களுக்கு து:கநிவர்த்தகனாயிராநின்றான்; ஆனால் அவர்களை 'பரன்' என்னவோ? இவனை 'பரன்' என்னவோ? என்று, ஶ்ருதியாலும் லிங்கத்தாலுமாக அநுமாநத்தையும் ஸமாக்யையையும் தள்ளி பகவத்பரத்வத்தை ஸ்தாபிக்கிறார். ஆக, இப்படிகளாலே ஸகலோபநிஷத்ப்ரஸித்தனான நாராயணனே பரதத்த்வம் என்று நிஷ்கர்ஷித்து காலாத்யயாபதிஷ்டமாகிற தூஷணத்தாலே அவர்களை நிராகரிக்கிறார்.

[பேசநின்ற சிவனுக்கும்]-'நீர் ஶ்ருதி சொன்னீராகில் நாங்களும் ஒரு ஶ்ருதி சொல்லுகிறோம்' என்று; 'அநந்யபரமான நாராயணாநுவாகஸித்தன்' என்று நான்சொன்னால் அதுக்கு ப்ரதியாக, புறம்பே விநியுக்தமாய் கர்மவிதிசேஷமாயிருப்பன சில அர்த்தவாதங்களாலும் தாமஸபுராணங்களாலும் சொல்லலாம்படி முட்டப்பொறுத்து நின்ற ருத்ரனுக்கும்; நீங்கள் 'பரன்' என்று பேசுகிற ருத்ரனுக்கும் என்னவுமாம். அர்த்தம் முட்டப்பொறாது; பேசுகைக்கு ஆலம்பநமாத்ரமே உள்ளதென்கை. அல்லாதாரை 'ஈஶ்வரர்கள்' என்னாதே இவர்களைச் சொல்லலாம்படி யிருக்கிறது ஓரேற்ற முண்டிறே. [பிரமன் தனக்கும்] - அவனுக்கும் ஜநகனான ப்ரஹ்மாவுக்கும்.

---

ஸமாக்யைகளைத் தள்ளி, பகவத்பரத்வத்தை ஸாதிக்கிற ப்ரகாரமித் யர்த்த:. ஶ்ருத்யபேக்ஷயா அநுமாநத்தினுடைய தௌர்பல்யத்தை உபபாதிக்கிறார் - யத்வேதாதௌ இத்யாதி. வேதாதியிலும் வேதாந்தத்திலும்-அத்யயநாதியிலும் அத்யயநாந்தத்திலும். "தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய" என்றதுக்கு அர்த்தம் - லோகத்தில் இத்யாதி. 'மஹேஶ்வரன்' என்றால் - ஸர்வேஶ்வரனென்னுமதுக்கு நியாமகமேது? என்ன, அந்த மஹேஶ்வரசப்தவாச்யனுக்கு அகாரவாச்யத்வஞ் சொல்லுகையாலே, "அக்ஷராணாமகாரோஸ்மி" என்றும் "அகாரோ விஷ்ணுவாசக:" என்றும் "அ இதி ப்ரஹ்ம" என்றும் - அகாரவாச்யன் விஷ்ணுவென்கையாலே, இங்கு அகாரவாச்யனான மஹேஶ்வரன் ஸர்வேஶ்வரனென்னுமது ஸித்தம். லிங்கத்தாலே ஸமாக்யையைத் தள்ளுகிறார் - ஈஶனீஶாநன் இத்யாதி. உக்தத்தை நிகமியாநின்று கொண்டு, இவ்வநுமாநம் காலாத்யயாபதிஷ்டதூஷணக்ரஸ்தமென்கிறார் - ஆக இப்படிகளாலே இத்யாதி. காலாத்யயாபதிஷ்டமாகிற தூஷணமாவது-ப்ரபலப்ரமாணபாதிதத்வரூபதூஷணமென்றபடி. இதுக்கு ப்ரமாணம் - "காலாத்யயாபதிஷ்டஸ்து ப்ரமாணபாதித:" என்றது. இதுக்குதாஹரணம்- "வஹ்நிரநுஷ்ண: க்ருதகத்வாத் ஜலவத்" என்று. அக்நியினுடைய உஷ்ணத்வக்ராஹியான ப்ரத்யக்ஷத்தாலே அநுஷ்ணத்வரூபஸாத்யபாதம்.

பேசநின்ற - ப்ரமாணாபாஸங்களாலே பேசநின்ற வென்னுதல், நீங்கள்தான் பேசும்படிநின்ற வென்னுதல். பேசநிற்கையை வெளியிடுகிறார்-நீர் ஶ்ருதிசொன்னீராகில் இத்யாதி. கர்மவிதிசேஷமாயிருக்கிற அர்த்தவாதமாவது - "வாயவ்யம் ஶ்வேதமாலபேத" என்ற கர்மவிதி; அதுக்கு சேஷமான அர்த்தவாதமாவது - "வாயுர்வை க்ஷேபிஷ்டா தேவதா வாயுமேவ ஸ்வேந பாகதேயேநோபதாவதி ஸ ஏவைநம் பூதிம் கமயதி" இத்யாதி; அப்படியே "ஏகஏவ ருத்ரோ ந த்விதீயாய தஸ்தே" இத்யாதியான ருத்ரதைவத்ய கர்மத்தில் த்விதீயநிஷேதகங்களான வாக்யங்கள். 'நின்ற' என்றதுக்கு அர்த்தம் - முட்டப்பொறுத்துநின்ற என்று; முட்டப்பொறுத்துநின்ற - ஸமர்த்தத்வேந நின்ற. இரண்டாமர்த்தத்துக்கு பாவம் - அர்த்தம் இத்யாதி. பேசுகைக்கு ஆலம்பநத்வமாத்ரமல்லாதார்க்குமில்லையோ வென்ன, அல்லாதாரையித்யாதி. சொல்லலாம்படி - பாமரர்க்குச் சொல்லலாம்படி. 'தனக்கும்' என்கிற ப்ராதாந்யம் எத்தாலே யென்ன, அவனுக்கும் இத்யாதி. 'அவனுக்கும் ஜநகனான' என்றதுக்கு ப்ரமாணம் -

"ப்ரஹ்மணஃபுத்ராயஜ்யேஷ்டாயஶ்ரேஷ்டாய" (ப்ரஹ்மணஃபுத்ராய்ஜ்யேஷ்டாயஶ்ரேஷ்டாய) என்றும், "ப்ரஹ்மணஶ்சாபிஸம்பூதஶ்ஶிவஃ" (ப்ரஹ்மணஶ்சாபிஸம்பூதஶ்ஶிவஃ) என்றும்சொல்லாநின்றதிறே ருத்ரனுடைய ஈஶ்வரத்வம் ஸகவத்ப்ரஸாதாயத்தம், "மஹாதேவஸ்ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வாத்மாநம்தேவதேவோபபூவ" (மஹாதேவஸ்ஸர்வமேதேமஹாத்மா ஹுத்வாத்மாநம்தேவதேவோபபூவ). [பிறர்க்கும்] - இவர்தந்திருவுள்ளத்தால் அவர்களோடு இவர்களோடு வாசியற்றிருக்கிறபடி. அவர்கள் தாங்கள் தங்கள் நினைவாலும் அப்படியேயிறே, "தவாந்தராத்மாமமசயேசாந்யேதேஹிஸம்ஜ்ஞிதாஃ" (தவாந்தராத்மாமமசயேசாந்யேதேஹிஸம்ஜ்ஞிதாஃ) என்றுனிறே ருத்ரனைநோக்கி ப்ரஹ்மா. [பேசநின்ற சிவனுக்கும் பிரமன்தனக்கும் பிறர்க்கும் நாயகனவனே] - இக்கார்யத்துக்கு அநுரூபமான காரணத்தைக் கல்பிக்கிலும் அவனையே கோள்ளவேணும். அவனே யென்று - ஶ்ருதிப்ரஸித்தி. அநந்யபரமான நாராயணநுவாக ப்ரஸித்தியையும், "யஃபரஸ்ஸமஹேஶ்வரஃ" (யஃபரஸ்ஸமஹேஶ்வரஃ) என்கிற அகாரார்த்த ப்ரஸித்தியையும் நினைக்கிறுர். 'அவனே' என்பானேன்? இவனையும் ஒக்கச் சோல்லாநிற்கவேன்னில், [கபாலநன்மோக்கத்துக் கண்டுகோண்மின்] - என்று கையோடே காட்டிக்கோடுக்கிறுர். நீங்கள் இப்படிசோன்னுல் மறுமாற்றம் சோல்லுகைக்கு இதோன்று உண்டாகப்பெற்றோமே. "தத்ரநாராயணஶ்ஶ்ரீமாந்மயாபிக்ஷாம்ப்ரயாசிதஃ" (தத்ரநாராயணஶ்ஶ்ரீமாந்மயாபிக்ஷாம்ப்ரயாசிதஃ) - 'தாந்தாம்பண்ணின கர்மபலம் தாந்தாம் அநுபவிக்கிறுர்களாகில் நாமேன்?' என்றிருக்கும் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யம் ஜீவியாதபடி "நகஶ்சிந்நாபராத்யதி" (நகஶ்சிந்நாபராத்யதி) என்பாரும் அருகேயுண் டேன்கிறுன். "விஷ்ணுப்ரஸாதாத்ஸுஶ்ரோணிகபாலம்தத்ஸஹஸ்ரதா | ஸ்புடிதம்பஹுதாயாதம்ஸ்வப்நலப்தம்யதாதநம்" (விஷ்ணுப்ரஸாதாத்ஸுஶ்ரோணிகபாலம்தத்ஸ

---

ப்ரஹ்மண: இத்யாதி. "ப்ரஹ்மணஃபுத்ராய" இத்யாதி ஸாமவேதே. சதுர்முகஜந்யனுகில், இவனுக்கு ஈஶ்வரத்வ முண்டானபடி யெங்ஙனே? என்ன, ருத்ரனுடைய இத்யாதி. இதுக்குப்ரமாணம் - மஹாதேவ இத்யாதி. "மஹாதேவஸ்ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வாத்மாநம்தேவதேவோபபூவ | விஶ்வாந்லோகாந்வ்யாப்யவிஷ்டப்யகீர்த்யாவிராஜதேத்யுதிமாந்க்ருத்திவாஸாஃ" இதி மஹாபாரதே ராஜதர்மே. 'ப்ரஹ்மருத்ரர்களுக்கு நாயகன்' என்று ப்ரதிபாதித்தபோதே - பிறர்க்கும் நாயகனென்னுமது ஸித்தமன்றோ, இவர்களை விசேஷிப்பானென்? என்ன, இவர்நம் இத்யாதி. தங்கள்நினைவாலும் அல்லாதாரோபாதியாக விசாரித்துக்கொண்டிருப்பர்களோ? என்ன, தவாந்தராத்மா இத்யாதி. "ஸர்வேஷாம் ஸாக்ஷிபூதோஸௌ நக்ராஹ்ய: கேநசித்க்வசித்" இத்யுத்தரார்த்தம். இதம் ப்ரஹ்மருத்ரஸம்வாதே ருத்ரம்ப்ரதி ப்ரஹ்மோக்தம். 'அவனே' என்ற அவதாரணத்துக்கு ஹாவம். - இக்கார்யத்துக்கு இத்யாதி. இக்கார்யத்துக்கு - விசித்ரஸந்நிவேஶயுக்தஜகத்ரூப கார்யத்துக்கு. 'அவனே' என்கிற அவதாரணம்- ப்ரஸித்தியைப்பற்ற. ப்ரஸித்தி எங்ஙனே? என்ன, அநந்யபரமான இத்யாதி. இவனையுமொக்கச் சொல்லாநிற்க வென்றது - 'ஶிவஃ' என்றத்தைப்பற்ற. யத்வா, "ஶம்பும்நஸ்வவிஷ்ணும்நாராயணஸ்ஸர்வ ஹ்ருதாநாம்" என்று - இவனையும் ஸர்வேஶ்வரனேடொக்க நாயகனுகச் சொல்லாநிற்க வென்றபடி. ரஸோக்தி - கையோடே என்றது. கையில், ஒட்டின -கபாலத்தை; கைமேலே யென்றும். மறுமாற்றம்- ப்ரத்யுத்தரம். கபாலமோக்ஷத்துக்கு ப்ரமாணம்-தத்ர இத்யாதி. "தத்ரநாராயணஶ்ஶ்ரீமாந்மயாபிக்ஷாம் ப்ரயாசிதஃ | ததஸ்தேநஸ்வகம்பார்ஶ்வம் நகாக்ரேணவிதாரிதம் | மஹதீஸ்ருதரீயாரா தஸ்யாரக்தஸ்ய நிஸ்ஸ்ருதா | விஷ்ணுப்ரஸாதாத்ஸுஶ்ரோணிகபாலம்தத்ஸஹஸ்ரதா | ஸ்புடிதம்

ஹஸ்ரதா । ஸ்புடிதம்பஹுதாயாதம்ஸ்வப்நலப்தம்தநம்யதா) "ஸுஶ்ரோணி" (ஸுஶ்ரோணி) - உன்வடிவழகால் வந்த ஸௌபாக்யம் நான் ஸர்வேஶ்வரன்பக்கலிலே சென்றவளவிலே உதவிற்றுக்காண். "ஸ்வப்நலப்தம்" (ஸ்வப்நலப்தம்) - அநுபவம் செல்லாநிற்கச் செய்தே விழித்துப்பார்க்கும் காட்டில் இல்லையாயிருந்தது; ஆகையாலே, நன்மோக்கம் என்கிறது. உங்களுக்கு இப்போது மறுமாற்றம் சொல்லலாம்படியாக இதோன்று உண்டாயிற் றென்கிறாதல், "ஸ்வப்நலப்தநம்யதா" (ஸ்வப்நலப்ததநம்யதா) என்று போனவழி தெரியாமே போயிற்றென்றாதல். நீங்கள் ஈஶ்வரர்களாக சங்கித்தவர்களிருவரும் நின்ற நிலை கண்டதே; ஒருவன் தலை கேட்டு நின்றான், ஒருவன் ஓடுகொண்டு ப்ராயஶ்சித்தியாய் நின்றான். ஓட்டையோடத்தோடு ஒழுகலோடமாய், உங்கள்குறை தீரப் பற்றுகிற நீங்கள் உங்களிலும் பெருங்குறைவாளரையோ பற்றுவது? 'பாதகியாய் பிக்ஷுக்குத் திரிந்தான்' என்று நீங்களே சொல்லிவைத்து, அவனுக்கே பரத்வத்தைச் சொல்லவோ? ஒருவனுடைய ஈஶ்வரத்வம் தலையோடே போயிற்று. மற்றவனுடைய ஈஶ்வரத்வம் அவன் கையோடே காட்டிக் கொடுக்கிறார்; [கண்டுகொள்மின்] - உந் தாமகங்களிலே நீங்கள் எழுதியிட்டுவைத்த க்ரந்தங்களைப் பார்த்துக்கொள்ள மாட்டிகோளோ? முன்னே நின்று பிதற்றாதே யென்கிறார்.

[தேசமாமதிள் இத்யாதி] - சத்ருக்களுக்கு அநபிபவநீயமான தேஜஸ்ஸையுடைத்தாய், அரணுகப்போரும்படியான மதிளையுடைத்தாய், தர்ஶநீயமாயிருக்கிற. [திருக்குருகூரதனுள் ஈசன்பால்] - அஜஹத்ஸ்வபாவனுகையாலே, ஸௌலப்யத்திலே அம்மேன்மை குலையாதிருக்கிற படி. [ஈசன்பால்] - "யஃபரஸ்ஸமஹேஶ்வரஃ" (யஃபரஸ்ஸமஹேஶ்வரஃ) என்கிற ஸர்வேஶ்வரன் பக்கலிலே. கீழே நாராயணஶப்தார்த்தத்தை ப்ரஸ்தாவித்துவைத்து, அகாரவாச்யனுப்ப பர

வஹுதாயாதம்ஸ்வப்நலப்தம்யதா" இதி மாத்ஸ்யாதிஷு. 'ஸ்ரீமான்' என்றதுக்கு பாவம் - தாந்தாய் இத்யாதி. உன்வடிவழகால் வந்த இத்யாதி வாக்யத்துக்குக் கருத்து - உன்னுடையலக்ஷண ஸௌபாக்யவத்தாலே ஆபத்து நிவ்ருத்தமாயிற்றென்று. அதாவது -நாட்டிலே, 'ஸ்த்ரீகள் ஸுலக்ஷணைகளாகில் அவர்களாலே புருஷனுக்கு நன்மையாகக்கடவது' என்னுமது உண்டாகையாலே; அன்றிக்கே, ஈஶ்வரன் ஆபத்தைப் போக்குகையாலே ஸபலமாயிற் றென்றபடி யாதல். நன்மோக்கம் - 'நல்ல மறுமாற்றமான மோக்கமென்னுதல், போனவழிதெரியாதபடி போன மோக்கமென்னுதல்' என்றுசொன்ன அர்த்தத்வயத்தையும் அடைவே விவரிக்கிறார் - உங்களுக்கு இத்யாதி வாக்யத்வயேந. அநேநைவ - [illegible] மனேபி நிராஸ இத்யபிப்ராயேணாஹ - நீங்கள் இத்யாதி. தத்கநமித்யத்ர [illegible] - ஒருவன் இத்யாதி. ஹாவமாஹ - ஓட்டையோடத்தோடு இத்யாதி. ஓட்டையோடம் - மஹாசித்ரமான ஓடம். ஒழுகலோடம் - அல்பசித்ரமான ஓடம். உக்தார்த்தவிவரணம் - பாதகியாய இத்யாதி. 'கண்டுகொள்மின்' என்றதுக்கு அவதாரிகை - ஒருவனுடைய இத்யாதி. ஸ்வரவிஶேஷம் [illegible] - உந்தாமகங்களிலே இத்யாதி. முன்னேநின்று பிதற்றாதே - உந்தாமகங்களிலே இத்யாதி [illegible]. "வரகூரதிம்ஸாரயிஷ" இத்யாதியைப்பற்ற-அஜஹத்ஸ்வபாவனுகையாலே என்றது. அர்த்தாந்தரமாகையாலே, ஸௌலப்யத்திலே என்றது. 'ஈசன்' என்கிற பதஸ்வாரஸ்ய லப்தார்த்தம் - அம்மேன்மை இத்யாதி. பால் - இடம். 'ஈசன்' - உதி [illegible] ஸ ஹதாகஷயஹ - யஃபர உதி. [illegible] [illegible] தவ [illegible] வாக்ஷ; [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] நாய [illegible] [illegible] - கீழே இத்யாதி. கீழே நாராயணஶப்தார்த்தத்தை ப்ரஸ்தாவித்து வைத்தென்றது - இந்த "யமேஷாநுப" என்கிற ஶ்ரு

னைவனேயே மஹேஶ்வரனென்கையாலே, நாராயணனே மஹேஶ்வரஶப்தவாச்யனென்று ஶ்ருதியாலே ஸித்தமாயிருக்கையால்; இந்த ஶ்ருதியாலே உன்னுடைய அநுமாநம் அபஹ்ருதவிஷயம்; 'கண்டுகோண்மின்' என்கிற அர்த்தஸாமர்த்யத்தோடு விரோதித்த ஸமாக்யை ஜீவியாது: ஆகையால். இவனே பர னென்கிறார். [ஓர் அவம்பறைதல்] - மற்றுள்ள க்ஷேத்ரஜ்ஞரோடொக்க அநீஶ்வரத்வ ஸாதகமாக ஏதேனும் ஓராபாஸயுக்திகளைச் சொல்லுமது. அது தம்வாயால் சொல்லமாட்டாமையாலே, 'அவம்' என்கிறார். [பறைதல்] – ஸ்வகோஷ்டிகளிலே ரஹஸ்யமாகச் சொல்லுமதொழிய ஸதஸ்யமன்றிக்கே யிருக்கை. "[Grantha]" (யதா மே ஶிரஸஶ்சேதாதிதம்குருதரம்வச:) மஹாபலி ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான்பக்கலிலே வந்து 'ராஜ்யமடைய ஒளிமழுங்கிவாராநின்றது;என்பலமும் குறைந்து வாராநின்றது இதுக்குஅடியேன்?' என்ன, 'நீ ஸர்வேஶ்வரன்பக்கல் பண்ணின அபராதத்தாலேகாண்' என்ன "[Grantha]" (கோயம்விஷ்ணு:) என்றாற்போலே சில அநாதரோக்திகளைப் பண்ண; என்தலையை யறுத்து என் கையிலே தந்தாயாகில் 'என்பேரன்பண்ணின உபகாரம்' என்று இருக்கலாயிற்று; 'என்முன்பே பகவந்நிந்தையைப் பண்ணினாய், நீ ராஜ்யப்ரஷ்டனாவாய்' என்று சபித்துவிட்டான். இத்தை இப்படியே பட்டர் அருளிச்செய்தவாறே, 'ப்ரக்ருதிபுருஷவிவேகம் பண்ணியிருக்கிற இவன் ஆத்மாவுக்கு ஸங்கோசம் வருவதொன்றை ஶபியாதே "[Grantha]" (ராஜ்யப்ரஷ்டஸ்ததாபத) என்பானேன்? என்றுகேட்க, நாயைத் தண்டிக்கையாகிறது அமேத்யத்தை விலக்குகையன்றோ, சாந்தை விலக்குகை அதுக்கு அநபிமதன்றே; இவனுக்கு அநிஷ்டம் செய்கையாவது இதிறே' என்று அருளிச்செய்தார். [என்னாவதிலிங்கியாக்கு]–ஆநுமாநிகர்க்கு என்ன ப்ரயோஜநமுண்டு? அந்தத்தேவதைக்கு உத்கர்ஷம் பெற்றிகோளன்று, ஸமாஶ்ரயணத்துக்கு ஒரு பலம் பெற்றிகோளன்று, உங்களுக்கு இத்தாலே தான் ஒரு உத்கர்ஷம் பெற்றிகோளன்று, என்றியப் பட்டிகோள்: என்கிறார். (௪)

---

திக்குக் கீழாக, "[Grantha]" என்றும், "[Grantha]" என்றும். "[Grantha]" என்றும், "[Grantha]" என்றும் இத்யாதிகளாலே காரணத்வ ஸமுத்ரஶாயித்வ நியாமகத்வங்களாகிற நாராயணசப்தார்த்தத்தை ப்ரஸ்தாவித்துவைத் தென்றபடி. "[Grantha]" - தஸ்யகர்சக சேஷ்டே இத்யர்த்த:. "[Grantha]" இத்யாதி நிர்வசநத்தாலே, ஸர்வகாரணத்வம் - நாராயணசப்தார்த்தம். "[Grantha]" என்கையாலே, ஸமுத்ரஶாயித்வமும் - நாராயணசப்தார்த்தம், பறைவர்திறியாலே சரீரசரீரிபாவம் சொல்லுகையாலே, ஸர்வநியாமகத்வமும் - நாராயணஶப்தார்த்தம். இந்தஶ்ருதியாலே - 'யச்சகிஞ்சித்' என்கிற ஶ்ருதியாலே. அபஹ்ருதவிஷயம் - பாதிதவிஷயமித்யர்த்த:. அர்த்தஸாமர்த்யத்தோடு - லிங்கத்தோடு. அநீஶ்வரத்வஸாதகமாக - நாராயணனுக்கு அநீஶ்வரத்வ ஸாதகமாக. அவம் - குற்றம். பறைதல் - ஏகாந்தமாகச்சொல்லுகை. தம்வாயால்சொல்லப்போகாமைக்கு ஹேது அதிலுண்டான அஸஹ்யபறையென்று விவக்ஷித்து, இதுக்கு ப்ரமாணம் - யதாமே இத்யாதி "[Grantha]" இதுக்கு அர்த்தம் - மஹாபலி இத்யாதி. ஒளிமழுங்கி - தேஜோஹீநமாய். ப்ராஸங்கிகம் - இத்தை இத்யாதி. இலிங்கியர் - ஆநுமாநிகர். 'என்னாவது' என்றத்தை விவரிக்கிறார் - அந்த இத்யாதி. 'நாயகனவனே' என்றத்தைக் கடாக்ஷித்து, அந்தத்தேவதைக்குஇத்யாதி. 'கபாலநன்மோக்கத்துக் கண்டுகொண்மின்' என்றத்தைக் கடாக்ஷித்து, ஸமாஶ்ரயணத்துக்கு இத்யாதி. 'ஓரவம் பறைதல்' என்றத்தைப் பற்ற, உங்களுக்கு இத்யாதி. ஓரவமித்யநேந பகவதோऽபரத்வ ஸாதகயுக்த்யாபாஸஸ்ய தௌர்லப்யஞ்ச ஸூச்யதே. க்ரமேண அந்வய:. (௪)



# ஐந்தாம் பாட்டு.

இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும்சாக்கியரும்
வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநந்தெய்வமுமாகிநின்றுன்
மலிந்துசெந்நெல்கவரிவீசும் திருக்குருகூரதனுள்
பொலிந்துநின்றபிரான்கண்டீர் ஒன்றும்பொய்யில்லைபோற்றுமினே.

**ஆ.**—(இலிங்கத்திட்ட.) லைங்கபுராண நிஷ்டரான நீங்களும், மற்றும் ஶாக்யோலூக்யாக்ஷபாத க்ஷபண கபில பஞ்சலிமதாநுஸாரிகளானவர்களும், மற்றும் உங்களுடைய தைவங்களுமெல்லாம் நாராயணாத்மகம்; இவ்வர்த்தத்தில் ப்ரமாணமென்? என்னில்;—"ஏஷ ஸர்வ விஷ்ணுராஜானாம ஸர்வாத்மா," "ஏஷாம் ஸர்வ ஸர்வஸ்ய ஸர்வம் நாராயணாத்மகம்", "தவாஸ்ய ஸர்வ யெவா ந்யெஷிஸஂஜ்ஞாதா" இத்யாதி வாக்யங்கள். ஆதலால், அவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறுர்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், லைங்கபுராண நிஷ்டர் தொடக்கமான நீங்களும் உங்களுடைய தேவதைகளு மெல்லாம் நாராயணாத்மகரா யிருக்கிறீர்கள்; ஆனபின்பு, அவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறுர்.

[இலிங்கத்து என்று தொடங்கி] — ருஷிக்குத் தமஃப்ரசுரதஶையிலே லிங்கப்ரஶம்ஸார்த்தமாக ப்ரவ்ருத்தமான புராணநிஷ்டரான உங்களுக்கும் மற்றும் யுக்திகளைச் சொல்லி வலிந்து பிணங்கா நின்றுள்ள க்ஷபண ஶாக்யமதாநுஸாரிகளான உங்களுக்கும் உங்கள் தேவதைகளுக்கும் ஆத்மதயா நின்றுன். [மலிந்து என்று மேலுக்கு] - செந்நெற் கதிர்கள் வந்து கவரி வீசினுற்போலே அசைந்து வருகிற திருநகரியுள்ளே எழுந்தருளி நின்றருளின பொலிந்து நின்ற பிரானே கிடிகோள்; இவ்விடத்தில் ஓர் அர்த்தவாத மில்லை.

**ப.**—அநந்தரம், பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸித்து, திருநகரியில் நிற்கிற ஸர்வேஶ்வரனே ஸர்வஸ்மாத்பரன் என்கிறுர்.

இலிங்கத்து இட்ட - லிங்கார்ச்சநத்தை உத்தேஶ்யமாக ப்ரதிபாதிக்கிற, புராணத்தீரும் - தாமஸபுராணநிஷ்டராகையாலே குத்ருஷ்டிகளான நீங்களும், சமணரும் - (பாஹ்ய ஸ்ம்ருதிநிஷ்டரான) அமணரும், சாக்கியரும் - பௌத்தரும், வலிந்து - ஶுஷ்கதர்க்கங்களாலே மேலிட்டு, வாதுசெய்வீர்களும் - வாதஞ்சொல்லுகிற வைசேஷிகாதிகளான நீங்களும், மற்றும் - வேறு, நும் - உங்களுக்கு உத்தேஶ்யமாக ப்ரதிபத்திபண்ணி யிருக்கிற, தெய்வமும் - தத்தத் தேவதாவிசேஷங்களும், ஆகி - ஸ்வாதீநமாம்படி ப்ரவர்த்திப்பித்து, நின்றுன் - நின்றுன்,—செந்நெல் - செந்நெலானது, மலிந்து - மிகுந்து, கவரிவீசும் — (கன்கதிர்க்கனத்தாலே) கவரிபோலே அசைகிற, திருக்குருகூரதனுள் - திருநகரிக்குள்ளே, பொலிந்து நின்ற - (பரத்வப்ரகாஶகமான குணங்களோடே சில ஸௌலப்யாதிகளுங் கூடி ப்ரகாசிக்கும்படி) பரிபூர்ணனுய் நிற்கிற, பிரான் கண்டீர் - ஸர்வேஶ்வரனே காணுங்கோள்; (அர்ச்சாவதாரத்தில் பரத்வம்ப்ரகாசிக்குமோ? என்று ஶங்கிக்கவேண்டா, "தாஉவ—யெசு" இத்யாதி ப்ரமாணத்தாலே இவ்வர்த்தத்தில்), ஒன்றும்-ஒன்றும், பொய் இல்லை - பொய் இல்லை; போற்றுமின் - (ஆகையால் உங்கள் பாஹ்யகுத்ருஷ்டி ஸ்பர்ஶங்களை விட்டு அவனையே) ஸ்துதியுங்கோள்.

**இ.**—அஞ்சாம்பாட்டில், லைங்கபுராணம் தொடக்கமான குத்ருஷ்டி ஸ்ம்ருதிகளையும் பாஹ்யஸ்ம்ருதிகளையும் ப்ரமாணமாகக் கொண்டு வந்தவர்களை நிஷேதிக்கிறுர்.

[இலிங்கத்திட்ட புராணத்தீரும்] - லிங்கமென்று ஒரு வ்யக்தியை விசேஷித்து அதுக்கு உத்கர்ஷம் சொல்லுகையிலே ப்ரவ்ருத்தமான தாமஸபுராணநிஷ்டரும். ஸாத்த்விக புராணங்களிற்காட்டில் ராஜஸ தாமஸ புராணங்களுக்கு வாசி இது. "[Grantha]" என்று ஸாமாந்யத்திலே ப்ரஸ்தமாக "[Grantha]" என்று கோல்விழுக் காட்டாலே பரிஹாரமா யிருக்கையிறே ஸாத்த்விகபுராண லக்ஷணம். ருஷிக்குத் தமஃப்ரசுர தசையிலே தமோபிபூதன் கேட்கப் பிறந்த தாகையாலே அவ்வோ தேவதைகளினுடைய உத்கர்ஷத்துக்கு ப்ரமாணமாகமாட்டாது. [சமணரும்] - ஆர்ஹதரும். [சாக்கியரும்] - பௌத்தரும். [மற்றும் வலிந்து வாது செய்வீர்களும்] – ஐயமேஷலமான ஶுஷ்கதர்க்கங்களைக் கொண்டு அர்த்தநிஶ்சயம் பண்ணுகிற ஶேஷித்த பாஹ்யரும். "[Grantha]". ஶாஸ்த்ரமும் அதுக்கு அநுக்ராஹகதர்க்கமுமிறே அர்த்தநிர்ணயத்துக்குப் பரிகரம். பாஹ்யகுத்ருஷ்டிகளை ஒக்கச் சொல்லிற்று, ஃபலஸாம்யத்தாலே; "[Grantha]". [நும் தெய்வமுமாகி நின்றான்] - உங்களோடு நீங்கள் ஆஶ்ரயிக்கிற தேவதைகளோடு வாசியற ஆத்மதயா நின்றான் ஈஶ்வரனே. அத் தேவதைகளுக்கு உத்கர்ஷம் சொல்லும் போதும் அவற்றினுடைய ஸ்வரூபஸ்தித்யாதிகள் இவனதீநமாகையாலே இவனுடைய பரத்வத்தை இசையவேணும் ருத்ரனுடைய அதிமாநுஷம் ஸ்வாத்மஸ்வாவத்தாலே யென்றதிறே; "[Grantha]"; அதர்வஶிரஸ்ஸில் ருத்ரன் தன்னுடைய ஸர்வாத்ம ஸ்வாவம் சொல்லுகைக்கு அடி "[Grantha]" என்று பரமாத்மாநுப்ர வேஶத்தாலே யென்று ஶ்ருதிதானே பரிஹரித்தது. "[Grantha]", "[Grantha]" என்கிற உபாஸகர்பக்கலிலே பரத்வஶங்கை பண்ணினொயிற்று, ருத்ரன்பக்கல் பரத்வஶங்கை பண்ணலாவது. [மலிந்து இத்யாதி] - செந்நெல் கதிர்க்கனத்தாலே அசைந்து வருகிற திருநகரி சேதநாசேதநவிஶாமமறப் பொலிந்து நின்ற பிரானுக்கு அநுகூல வ்ருத்திகளைப் பண்ணுமாயிற்று. [அதனுள் பொலிந்து நின்ற பிரான்கண்டீர்] – பரமபதத்தை விட்டு இவ்வருகே நாமு நிற்க நிற்கக் குணங்கள் மேன்மேலென விஞ்சி வருகிறபடி. சொன்னார் சொன்ன யுக்திகளெல்லாவற்றுக்கும் அவ்வருகாய் நிற்கை என்னவுமாம். [ஒன்றும் பொய் யில்லை] - இதர தேவதைகள் பக்கல் உத்கர்ஷமெல்லாம் பொய்யா யிருக்குமாபோலே இவ் விஷயத்தில் சொல்லுகிற உத்கர்ஷத்துக்கு ஒன்றும் பொய்யில்லை. [போற்றுமினே] - சடக்கென ஆஶ்ரயியுங்கோள். நீங்கள் அபேக்ஷியாதிருக்க நான் சொல்லுகிறது, உங்கள் துர்த்தசையைப் பற்ற.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. லிங்கபுராணம்தொடக்கமான குத்ருஷ்டிஸ்ம்ருதிகளையும், பாஹ்யஸ்ம்ருதிகளையும் ப்ரமாணமாகக் கொண்டு வந்தவர்களை நிஷேதிக்கிறார்.

[இலிங்கத்திட்ட புராணத்தீரும்] - ராஜஸமாயும் தாமஸமாயுமுள்ள புராணங்களுக்கு ஸாத்த்விக புராணங்களிற்காட்டில் வாசி இதுவாயிற்று. அவற்றினுடைய நிஷ்கர்ஷம் அந்த அந்தப்

அஞ்சாம்பாட்டு - இலிங்கத்திட்ட இத்யாதி. கீழிற்பாட்டில் - அநுமானத்தை ப்ரமாணமாகக்கொண்டு வந்தவர்களைத் தள்ளினார்; இதில் - ஆகமத்தை ப்ரமாணமாகக்கொண்டு வந்தவர்களைத் தள்ளுகிறார். பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - லிங்கபுராணம் இத்யாதி. பாஹ்யஸ்ம்ருதிகள் - ஜைந சார்வாக பௌத்தாதி ஸ்ம்ருதிகள்.

இலிங்கத்திட்டபுராணத்தீரும் - லிங்கவிஷயமாக இடப்பட்ட புராணத்தையுடைய நீங்களும். 'இலிங்கத்திட்ட' என்று விசேஷிக்கையாலே ராஜஸதாமஸபுராணங்களினுடைய பக்ஷபாதித்வமும், ஸாத்விகபுராணங்களினுடைய அபக்ஷபாதித்வமும் தோற்றுகிற தென்கிறார் - ராஜஸமாயும் இத்யாதி. வாசிஇது வாயிற்றென்றது - லிங்கவிஷயமாகக் கல்பித்துச்சொன்ன தாகையாலே, நிகர்ஷமே வாசியென்றபடி; இவர் அருளிச்செய்த நிகர்ஷம் தெரியும்படி எப்படி என்ன, அவற்றினுடைய இத்யாதி. தன்நிகர்ஷம் உபக்ர

புராணங்களினுடைய உபக்ரமத்திலே காணலாயிருக்கும்; “[illegible]” (யந்மயஞ்சஜகத் ப்ரஹ்மங்) என்று பொதுவிலே ப்ரஶ்நம்பண்ண, “[illegible]” (விஷ்ணோஸ் ஸகாஶாதுத்பூதம்) என்றுகொண்டு கோல்விழுக்காட்டாலே பரிஹாரமாயிருக்கையன்றிக்கே, ஒருவ்யக்தியை நிர்த்தேஶித்து ‘அதுக்கு உத்கர்ஷத்தைப் பண்ணித்தரவேணும்’ என்று சொன்னவனும் தமோகுணபிபூதனுய்ச் சொல்லி கேட்டவனும் தமோகுணபிபூதனுய்க் கேட்க, ஒரு லிங்கவிஷயமாக இடப்பட்ட புராணமாயிற்று. ‘இளிகண்ணனைப் புண்டரீகாக்ஷனாகக் கவிபாடித் தரவேணும்’ என்றும், ‘எருமையை யானையாகக் கவிபாடித் தரவேணும்’ என்றும் சொல்ல, அப்படியே கவிபாடுவோரைப்போலே யிருப்பதொன்றிறே, அவர்களுக்கு இல்லாத உத்கர்ஷங்களை யிட்டுச் சொல்லுமது; தான் சொல்லப்புக்க வஸ்துவுக்கு உத்கர்ஷத்தை ஸாதிக்கமாட்டாதே, மற்றுள்ளவற்றினுடைய உத்கர்ஷத்தைக் கழிக்கமாட்டாதே யிருப்பதொன்றாயிற்று. [சமணரும்] - ஆர்ஹதரும். [சாக்கியரும்] - பௌத்தரும். [மற்றும் வலிந்துவாதுசெய்வீர்களும்] - உத்க்ருஷ்டதமமான ப்ரமாணத்தை அங்கீகரித்துக்கொண்டு நின்று ப்ரமாணநுக்ராஹகமான தர்க்கங்களை யொழியக் கேவலதர்க்கங்களைக்கொண்டு அர்த்தத்தை ஸாதிக்கப் பார்க்கும் பாஹ்யரில் ஶேஷித்துள்ளாரும். “[illegible]” (யாவேதபாஹ்யாஸ்ஸ்ம்ருதய꞉) இத்யாதியாலே-தாமஸத்வம் எல்லார்க்கும் அவிசிஷ்டமிறே; ஆகையாலே, பாஹ்யகுத்ருஷ்டிகளை யொக்கச் சொல்லு

---

மத்திலே காணலாயிருக்குமது வாசியென்றபடி. உபக்ரமத்திலே தோற்றும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்- யந்மயஞ்ச இத்யாதி. “[illegible] । [illegible]”, [illegible] । [illegible]” இதி ப்ரதமாம்ஶோபக்ரமே. கோல்விழுக்காட்டாலே - தைவகத்யா. ஒருவ்யக்தியை - லிங்கத்தை. இவ்விடத்திலே - “[illegible] । [illegible]” என்றது அநுஸந்தேயம். “[illegible]” என்றது கொண்டு அதுக்குஉத்கர்ஷத்தைப் பண்ணித்தரவேணும் என்றது, ஒருவ்யக்தியைநிர்த்தேசித்து என்று தொடங்கி வாக்யம் முன்பின்னாயிருக்கையாலே இங்ஙனே நிர்வஹிக்கும்படி; அதாவது - ஒருவ்யக்தியை நிர்த்தேசித்து அதுக்கு உத்கர்ஷத்தைப் பண்ணித்தரவேணுமென்று கேட்டவனும் தமோகுணபிபூதனுய்க்கேட்க, இவன் தான் தமோகுணபிபூதனுய்க் கேட்டால் தத்வ [illegible]த்திதியைச் சொல்லுகையன்றிக்கே சொன்னவனும் தமோகுணபிபூதனுய்ச்சொல்லி ஒருலிங்கவிஷய மாக இடப்பட்ட புராணமாயிற்று என்று. இத்தால் இவனுடைய அவிவேகித்வமே ப்ரகடிதமித்[illegible]க்கி, பரத்வஸாதநமாகமாட்டா தென்னுமத்தைப் பரிஹாஸமாக அருளிச்செய்கிறார் - இளிகண்ணனை இத்யாதி. அப்படிசொல்லுகிறவர்களைப் பரிஹாஸம்பண்ணுவானென்? என்ன, தான்சொல்லப்புக்க இத்யாதி. சமணரும் - ஆர்ஹதரும், ஜைநரும். வலிந்துவாதுசெய்வீர்களும் என்று - பலாத்காரத்தாலே வாதம்பண்ணுவர்க ளென்கையாலே; கேவலதர்க்கத்தாலொழிய, ப்ரமாணத்தாலும் ப்ரமாணநுக்ராஹக தர்க்கங்களைக்கொண்டும் ஸாதியாரென்னுமது விவக்ஷிதமாகையாலே, அத்தை அருளிச்செய்கிறார்-உத்க்ருஷ்டதமமான இத்யாதி. இப்படியாயும், ‘வேதம் ப்ரமாணம்’ என்கையாலே குத்ருஷ்டிகள் பாஹ்யரில் வ்யாவ்ருத்தரன்றோ? பாஶுபதராகிற குத்ருஷ்டிகளையும் பாஹ்யரையும் கூட்டிச்சொல்லலாமோ? என்ன, யாவேதபாஹ்யா இத்யாதி. “[illegible] । [illegible]” இதி மாநவே தர்மஶாஸ்த்ரே. தாமஸத்வம் - தமோகுணபிபூதத்வம். அது இவர்களுக்கும் ஒக்குமிறே. இங்கே - “[illegible]

கிறது. [நுந்தேய்வமுமாகிநின்றுன்] - உங்களோடு நீங்களாஶ்ரயிக்கிற தேவதைகளோடு வாசியற ஆத்மதயா நின்றுன். நீங்கள் அவ்வவர்க்கு உத்கர்ஷம் சோல்லும்போது ஸகவத்பரத்வத்தை அங்கீகரித்துக்கோண்டு நின்று சோல்லவேணும். அதுக்கு அடியேன்? என்னில்;—அவ்வவருடைய ஸ்வரூபஸ்தித்யாதிகள் அவனதீநமாயிருக்கையாலே. இனித்தான் பக்ஷங்கள்தோறும், 'ஸர்வஜ்ஞன்' 'ஈஶ்வரன்' என்றுற்போலே ஓரோதேவதைகளையும் கோள்ளக்கடவர்களாயிருக்குமிறே. 'அவர்களுடைய ஸ்வரூபஸ்தித்யாதிகள் அவனதீநம்' என்ற இது ஸ்வபக்ஷத்தாலே சோல்லுகிறதோ, பரபக்ஷத்தாலே சோல்லுகிறதோ வென்னில்;—இரண்டுமோழிய ப்ரமாணமதியாலே சோல்லுகிறது. ஒருதேவதைபக்கலிலே அதிமாநுஷமாயிருப்பதோரு வ்யாபாரத்தைக் கண்டு, 'இதுக்கு அடியேன்?' என்ன, "[illegible]" (விஷ்ணுராத்மாபகவதோபவஸ்ய) என்று ஸர்வேஶ்வரன் அந்தராத்மாவாய் நிற்கையாலே யேன்றதிறே; அதர்வஶிரஸ்ஸிலே நின்று, ருத்ரன், ஸர்வேஶ்வரன் தன் ஸர்வாத்மபாவத்தைச் சோல்லுமாபோலே தன்படிகளைச் சோல்லா, 'அவன்தானே இங்ஙனே சோல்லுகைக்கு அடியேன்?' என்று ஶங்கியா, "[illegible]" (ஸோந்தராதந்தரம்ப்ராவிஶத்) என்று பரமாத்மப்ரவேஶத்

---

ப்ர.— [illegible] — "[illegible]". [illegible]

---

[illegible] என்றது அநுஸந்தேயம். 'ஆகிநின்றுன்' என்கிற ஸாமாநாதிகரண்யம் - ஶரீராத்ம பாவ நிபந்தநமென்கிறுர்-உங்களோடு இத்யாதி. பலிதார்த்தம் - நீங்கள் அவ்வவர்க்கு இத்யாதி. பாஹ்யாதிகள் தேவதையை அங்கீகரிப்பர்களோ நுந்தெய்வம் என்கைக்கு ? என்ன, இனித்தான் பக்ஷங்கள் இத்யாதி. பக்ஷங்கள் - மதங்கள். பௌத்தாதிகள் "[illegible]" என்றசொல்லப்பட்ட ஸர்வஜ்ஞனை தேவதையாக அங்கீகரித்தார்களிறே; ஶைவனுக்கு ருத்ரன் தேவதை. ஸ்வபக்ஷத்தாலோ சோல்லுகிறதோ இத்யாதிக்குத் தாத்பர்யம்-ஸ்வபக்ஷத்தாலே சொல்லில், 'பக்ஷபாதத்தாலே சொன்னது' என்று அவன் அநங்கீகாரத்துக்கு உடலாம்; பரபக்ஷத்தாலே சொல்லவொண்ணுது, அவன் அப்படி அங்கீகரியாமலிருக்கையாலே யென்று. ப்ரமாணந்தான் அப்படி சொல்லுகிறதோ ? என்ன, ப்ரமாணத்வயங் காட்டுகிறுர் - ஒருதேவதை இத்யாதி. அதிமாநுஷ வ்யாபாரம் - த்ரிபுரதஹநம். "[illegible]". அதர்வசிரஸ்ஸிலே நின்று - அதர்வசிகையிலே ப்ரதிபாத்யனாய் நின்று. தன்படிகளைச்சொல்லா வென்றது - "[illegible]" இத்யாரப்ய, "[illegible]" என்று சொன்னனிறே யென்றபடி. "[illegible]" - [illegible]

தாலே சோன்னே னென்ருனிறே; “ஏதத்ஸர்வமஹம்ஸர்வம்” (மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்) என்ருனிறே ப்ரஹ்லாதன்; ப்ரஹ்லாதன்பக்கல் பரத்வ முண்டாமன்ருயிற்று, இவர்கள்பக்கல் பரத்வ முள்ளது. [மலிந்து இத்யாதி] - இப்படி ஸர்வாந்தராத்மாவா யிருக்கிற ஸர்வேஶ்வரன் ‘அஸந்நிஹிதன்’ என்னும் கண்ணழிவு மில்லாதபடி திருநகரியிலே வந்து ஸந்நிஹிதனுனன். ஸர்வஸமாஶ்ரயணீயனுன அவன் இங்கேவந்து நிற்கையாலே, சேதநாசேதந விபாகமற, “ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய” (ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய) என்று சொல்லப்பட்ட இளையபெருமாளைப்போலே அநுகூலவ்ருத்திகளைப் பண்ணுநிற்குமாயிற்று. செந்நெலானது கதிர்க்கனத்தாலே அவ்வருகுக்கு இவ்வருகு அசைகிறபோது சாமரைவீசினுற்போலே யாயிற்று இருப்பது. [பொலிந்துநின்றபிரான்கண்டீர்] - பரமபதத்தைவிட்டு ஸம்ஸாரிகள்நடுவே வந்து புகுந்தவிடத்தில் அவர்கள் படுகிற க்லேஶத்தைத் தானும் ஒக்கப்படுகையன்றிக்கே ஸ்வரூபரூப குணவிபூதிகள் இவ்வருகே போரப்போர மேன்மேலென விஞ்சிவாராநின்றதாயிற்று. சொன்னுர்சொன்ன யுக்திகளுக்கு அவ்வருகாயிருக்கு மென்னுதல். [ஒன்றும் பொய்யில்லை] - இதரதேவதைகளுக்குச் சோல்லும் உத்கர்ஷம் ஒன்ருெழியாமல் பொய்யாயிருக்குமாபோலே, இவ்விஷயத்திற் சொல்லுமவற்றில் ஒன்றும் பொய்யில்லை. அவ்வோதேவதைகளுக்கு ஸ்வதஃ உத்கர்ஷமில்லாமையாலே மெய்யொன்று மில்லை; இவனுடைய உத்கர்ஷத்துக்கு அவதியில்லாமையால் பொய்சொல்லுகைக்கு அவகாசமில்லை. [போற்றுமினே] - நீங்கள் அபேக்ஷியாதிருக்க, நானே இப்படி சொல்லுகிறது; எனக்கு உங்கள்பக்க லுண்டான அநுக்ரஹாதிஶயத்தாலேயிறே; அவ்வநுக்ரஹகார்யம் பிறக்கவேணுமே: ‘க்ரமத்திலே செய்கிறேம்’ என்று ஆறியிராதே, சடக்கென அவன் திருவடிகளை ஆஶ்ரயிக்கப் பாருங்கோள். (௫)

---

*யவஶிவாயாஃ”. இப்படி பரமாத்ம ப்ரவேசத்தாலே சொன்ன பேருண்டோ? என்ன, மத்தஸ்ஸர்வம் இத்யாதி. “ஏதத்ஸர்வமஹம்ஸர்வம்மயிஸர்வம்ஸநாதநே । ஸஹஸ்ரோவ்யயோநந்தோவாஸாதாதஸம்ஶ்ரயஃ” இதி ப்ரதமேம்ஶே ஏகோநவிம்ஶே. ப்ரஹ்லாதனை த்ருஷ்டாந்தமாகச் சொன்னதுக்குக் கருத்து எது? என்ன, ப்ரஹ்லாதன்பக்கல் இத்யாதி. கீழோடேகூட்டி பாவம் - இப்படி இத்யாதி. அசேதநமானசெந்நெல் கவரிவீசக்கூடுமோ? என்ன, ஸர்வஸமாஶ்ரயணீயன் இத்யாதி. துரும்பு எழுந்தாடும்படியான வடிவழ கென்றபடி. தாத்பர்யாந்தரம் - செந்நெலானது இத்யாதி. ப்ரதமதாத்பர்யத்தில், ‘செந்நெல்’ என்று - அசேதநங்களுக்கெல்லாம் உபலக்ஷணம்; ‘கவரிவீசும்’ என்றதும் - அநுகூலவ்ருத்திகளுக்கெல்லாம் உபலக்ஷணம். இளையபெருமாளை த்ருஷ்டாந்தமாகச் சொன்னது - “ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய” என்றிருக்கையாலே. செந்நெல் மலிந்து கவரிவீசும் - செந்நெலானது கதிர்க்கனத்தாலே சாமரம்போலே யலைகிற தித்யர்த்தஃ. திருக்குருகூரதனுள் இதி ஹேதுகர்ப்பவிசேஷணம். ‘பொலிந்து’ இத்யத்ர நிருபபதத்வஞ்ச ஹ்ருதிநிதாய, ததுபயஸூசிதமர்த்தம் வ்யாவர்த்யபூர்வகம் தர்ஶயதி-பரமபதத்தை இத்யாதிநா. ‘பொலிந்துநின்ற’என்றதுக்கு-ஐஶ்வர்யம் ஸம்ருத்தமாம்படி நின்றவென்று ப்ராதமிகார்த்தஃ. ‘வலிந்துவாதுசெய்வீர்களும்’ என்றத்தோடே சேர்த்துத் தாத்பர்யாந்தரம் - சொன்னுர் இத்யாதி. அதாவது - இவர்கள் சொன்ன யுக்திகளால் பாதிதனுயிருக்கையன்றிக்கே, ஸ்வரூபகுணங்களால் பூர்ணனுயிருக்கை யென்றபடி. இதரதேவதைகளுக்குச் சொல்லும் உத்கர்ஷம் பொய்யாயிருக்கைக்கும் இவ்விஷயத்தில் பொய்யில்லாமைக்கும் அடி எது? என்ன, அவ்வோதேவதை இத்யாதி. ‘போற்றுமின்’ என்று நீர்சொல்லுமது ‘ஆப்தம்’ என்று விஶ்வஸிக்கைக்கு ஹேது எது? என்ன, நீங்கள் இத்யாதி. ஏகாரார்த்தம் - க்ரமத்திலே இத்யாதி. வலிந்துவாதுசெய்வீர்களும் - ஶுஷ்கதர்க்கங்களாலே மேலிட்டு வாதம்பண்ணுகிற வைஶேஷிகாதிகளான நீங்களும். க்ரமேண அந்வயஃ. (௫)*



# ஆறாம் பாட்டு.

போற்றிமற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டு உம்மைஇன்னே
தேற்றிவைத்தது எல்லீரும்வீடுபெற்றால்உலகில்லையென்றே
சேற்றிற்செந்நெல்கமலமோங்கு திருக்குருகூரதனுள்
ஆற்றவல்லவன்மாயங்கண்டீர் அதறிந்தறிந்தோடுமினே.

ஆ.—(போற்றி.) இப்படி நாராயணனே ஸர்வநியந்தாவாகில், தன்னையே ஆஶ்ரயிக்கும்படி எங்களைப்பண்ணாதே வேறொருதெய்வங்களை யாஶ்ரயிக்கும்படி பண்ணுவானென்? என்னில்;—போற்றி மற்றோர் தெய்வம் பேணப் புறத்திட்டு உம்மை இன்னேதேற்றி வைத்தது எல்லீரும் வீடுபெற்றால் ஸதஸத்கர்மயுக்த ஜந்துக்கள் தத்தத்கர்மாநுகுணஃபலங்களை அநுபவிக்கக் கடவதான இந்தலோகமர்யாதை யழியு மென்று இந்த லோகமர்யாதாஸித்யர்த்தமாக, அஸத்கர்மகாரிகளான உங்களை அந்த அஸத்கர்மாநுகுணமாக இப்படி தேவதாந்தரத்தை ஆஶ்ரயித்து ஸம்ஸரிக்கும்படி ஸர்வஶக்தியான பரமபுருஷன் தானே பண்ணி யருளினான்; ஆதலால், அத்தை யறிந்து, இந்த ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமான பரமபுருஷ கைங்கர்யார்த்தமாக அவனை ஈண்டச் சென்று ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

ஒ.—ஆறாம்பாட்டில், எம்பெருமானே ஸர்வேஶ்வரனாகில் எங்களை தேவதாந்தர ப்ரவணராக்கி வைப்பானென்? என்னில்;—இங்ஙனே செய்தது ஸதஸத்கர்மகாரிகளான ஜந்துக்கள் அவ்வவகர்மாநுகுண ஃபலங்களை அநுபவிக்கக்கடவதான ஶாஸ்த்ரமர்யாதை அழியுமென்று; ஆனபின்பு, இத்தையறிந்து எம்பெருமானை ஸமாஶ்ரயித்து அவன் வஞ்சநத்தைத் தப்புங்கோள் என்கிறார்.

[போற்றி என்று தொடங்கி] - தன் பக்கல் நின்றும் அகற்றி இதர தேவதைகளை விரும்பி ஸமாஶ்ரயிக்கும்படி உங்களுக்கு இவற்றின் பக்கலிலே இப்படி விஶ்வாஸம் பிறப்பித்து வைத்தது, தன்னையே ஸமாஶ்ரயித்து எல்லாரும் முக்தரானால் புண்யபாபரூபகர்மங்களைப் பண்ணினவர்கள் அவ்வவகர்மபலங்களைப் பெறக் கடவதான ஶாஸ்த்ரமர்யாதை கெடுமென்று. [ஆற்ற வல்லவன் என்று மேலுக்கு] - அதிஶயிதஶக்திகனானவனுடைய வஞ்சநம் கிடிகோள்.

ப.—அநந்தரம், இவ்வர்த்தம் உங்களுக்கு ப்ரகாஶியாதொழிகிறது கர்மாநுரூபமாக அவன் ஸம்ஸாரத்தை நிர்வஹிக்கிற ஸாமர்த்யம் என்கிறார்.

மற்று ஓர் - வேறு ஒரு, தெய்வம் - தேவதையை, போற்றி - ஸ்தோத்ரம்பண்ணி, பேண - ஆதரிக்கும்படியாக, புறத்திட்டு - (தனக்குப்) புறம்பாக்கி, உம்மை - (தத்ப்ரவணரான) உங்களை, இன்னே - (நான் தன்விஷயத்திலே விஶ்வஸித்திருக்குமாபோலே) இப்படி, தேற்றி வைத்தது - (இதரதேவதா விஷயத்திலே) விஶ்வஸிப்பித்து வைத்தது, எல்லீரும் - எல்லாரும், வீடுபெற்றால் - ஃபகவத்ப்ராப்திரூபமோக்ஷத்தைப் பெற்றால், உலகு - ('கர்மாநுரூபமாக ஃபல போக்தாக்களாய் நடக்கக்கடவர்கள்' என்கிற) லோகமர்யாதை, இல்லை - குலையும், என்றே -

என்றுயிருக்கும்; (அதுக்குமூலம்) - சேற்றில் - சேற்றுநிலத்தில்; செங்நெல் - செங்நெலும், கமலம் - கமலமும், ஓங்கு - இசலி வளரக்கடவ, திருக்குருகூரதனுள் - திருநகரியிலே வர்த்திக்குமவனாய், ஆற்றவல்லவன் - அதிஶயித விவிதஶக்தியுக்தனாய்க் கொண்டு கர்மபலாநுபவத்தைப் பண்ணுவிக்கிறவனுடைய, மாயங்கண்டீர் - (ஸ்ரீலோபகரணமாய் தாத்யயையாய்) மாயாஶப்தவாச்யமான ப்ரக்ருதியோடு உண்டான ஸம்பந்தமாயிருக்கும்; அது - அத்தை, அறிந்து அறிந்து - அறிந்து (தந்நிஸ்தரணோபாயமான ப்ரபத்திஜ்ஞாநத்தை) உடையீர்களாய், ஓடுமின் - (அந்த மாயாநிஸ்தரணத்தைப் பண்ணிக்) கடக்கப் பாருங்கோள். உலகில்லையென்றே யென்று - லோகமில்லையாமென்று நினைத்தோ; அதல்லவிறே, ப்ரக்ருதிஸம்பந்த மிறே யென்றுஞ் சொல்லுவர்.

இ.—ஆறும்பாட்டில், பகவத்பரத்வம் நீர் அருளிச்செய்யக் கேட்டபோது வெளிச் சிறத்து, அல்லாதபோது தேவதாந்தர ப்ராவண்யம் உண்டாகா நின்றது; இதுக்கு அடி யென்? என்ன,—உங்கள் பாபம் எனகிறார். எம்பெருமானே ஸர்வேஶ்வரனாகில் எங்களைத் தேவதாந்தரப்ரவணராக்கி வைப்பானென்? என்னில்,—உங்களை இங்ஙனே வைத்தது ஸதஸத்கர்மகாரிகளான ஜந்துக்கள் அவ்வோகர்மாநுகுணபலங்களை அநுபவிக்கக் கடவதான ஶாஸ்த்ரமர்யாதை அழியு மென்று. ஆனபின்பு, இத்தை யறிந்து எம்பெருமானை ஆஶ்ரயித்து அவனை வஞ்சநத்தைத் தப்புங்கோள் என்கிறார்.

[போற்றி இத்யாதி] - உங்களுடைய ஆஶ்ரயணத்தில் ஒரு குறையில்லை; அப்ராப்தமானதுவே குறை. "யெவ்யநூெவ தாஹக:" .[பேண] - ஆஶ்ரயிக்கிற தேவதைகளுக்கு உத்கர்ஷம் ஸம்பாதிக்கை உங்களுக்கே பரம் என்கை. [புறந்து இட்டு] - இவ்விஷயத்துக்குப் புறம்பாம்படி பண்ணி; தேவதாந்தரங்களை இவ்வளவு அவகாஹிக்கும்படி பண்ணி. [உம்மை இன்னே தேற்றிவைத்தது] - தேற்றி - தெளியப்பண்ணி. "ஜநநூ ஸெவ்ரூ ஹெ விஷாநு, நஸிமெஹகிகாதஸூந" என்று பகவத்விஷயத்திலே நான் பண்ணின விஶ்வாஸத்தை யிறே காற்கட்டான தேவதாந்தரங்கள் பக்கலிலே பண்ணிவைத்தது. [எல்லீரும் வீடு பெற்றால் உலகில்லை என்றே] - 'ஸதஸத்கர்மங்களைப் பண்ணுவாரைக் கர்மாநுகூலமாக ஈஶ்வரன் அநுபவிப்பிக்கும்' என்கிற ஶாஸ்த்ரமர்யாதை குலையு மென்று. லோகமென்று, ஶாஸ்த்ரம். "கூெதாஷிமெ ா கெவெெஊ". "வெணூ் வெணூ நகஜெணா வாவ வொமெ ந" என்கிற வ்யவஸ்தை குலையு மென்கை. தேவதாந்தரபஜநத்துக்கு பலம் ஸம்ஸாரிகளா யென்கை. [சேற்றில் செங்நெல்] - அவ்வூரில் பதார்த்தங்கள் இசலி வளராநிற்கு மென்கை. "ஊம்பெற்று மலர்க்கமல முலகளந்த சேவடிபோ லுயர்ந்து காட்ட, வரம்புற்ற கதிர்ச்செந்நெல் தாள் சாய்த்துத் தலைவணக்குந் தண்ணரங்கமே." [ஆற்றவல்லவன்] - மிகவும் வல்லவன்; அதிஶயிதஶக்திகன். சேதநர் பண்ணின புண்யபாபங்கள் கலசாதபடி பலாநுபவம் பண்ணுவிக்க வல்லவன். [மாயம் கண்டீர்] - "ஜஜாயாஉஈதூயா" என்கிறபடியே தான் அகற்ற நினைத்தாரைத் தன் பக்கல் கிட்டாதபடி ப்ரக்ருதியை இட்டு வஞ்சித்து வைத்தபடி கிடீகோள். [அது அறிந்து அறிந்து ஓடுமினே] - அத்தையறிந்து மாயாதரணோபாயமான ப்ரபத்தியைப் பண்ணி ஸம்ஸாரத்தைத் தப்பப் பாருங்கோள். "ஜாமெவயெவூவஷூெஜ" என்கிறபடியே அவனையே காற்கட்டி அவனை வெல்லப் பாருங்கோள் என்கிறார்.

ஈடு.—ஆறும்பாட்டு. பகவத்பரத்வம் நீர் அருளிச்செய்யக் கேட்டபோது வெளிச்சிறத்து அல்லாதபோது தேவதாந்தர ப்ராவண்யம் உண்டாகாநின்றது; இதுக்கு அடி எது? என்ன,—உங்கள்பாபமென்கிறார். எம்பெருமானே ஸர்வேஶ்வரனாகில் எங்களை தேவாந்தரப்ரவணராக்கிவைப்பானேன்? என்ன;—உங்களை இங்ஙனே வைத்தது, ஸதஸத்கர்மகாரிகளான ஜந்துக்கள் அவ்வோ கர்மாநுகுணபலங்களை யநுபவிக்கக்கடவதான ஶாஸ்த்ரமர்யாதை யழியு மென்று; ஆனபின்பு, அத்தையழிந்து எம்பெருமானை ஸமாஶ்ரயித்து அவன் வஞ்சநத்தைத் தப்புங்கோள் என்கிறார்.

[போற்றி] - நான் பகவத்விஷயத்தில் செய்யுமதடைய நீங்கள் இதரதேவதைகள் பக்கலிலே செய்து போருவதிகோள்; உங்கள்பக்கல் ஒருகுறையில்லை; அப்ராப்தமானதுவே குறை. [மற்றோர்தெய்வம்] -“யெவ்யாந்யதெவதாஹக்தா:” (யேப்யந்யதேவதாபக்தா:) என்னுமாபோலே. [பேண] - அவை தனக்கென்ன ஒன்றில்லாமையாலே, ஆஶ்ரயிக்கிற உங்களுக்கே பரமிறே, அவற்றுக்கு உத்கர்ஷத்தை ஸாதிக்கை. [புறத்திட்டு] - தனக்குப் புறம்பாம்படி பண்ணி. [உம்மை இன்னே தேற்றிவைத்தது] - உங்களை இப்படியே, தெளியும்படிபண்ணிவைத்தது. “நபிபெதிகுதஶ்சந” (நபிபேதிகுதஶ்சந) என்கிறபடியே நான் மேல்வரும் அநர்த்தங்களுக்கு அஞ்சாதே நிர்ப்பரனாயிருக்கிறாப்போலே, ஓட்டையோடத்தோடு ஒழுகலோடமான இதரதேவதைகளை ஆஶ்ரயித்து உங்களுக்கு அவர்கள்பக்கலிலே ருசிவிஶ்வாஸங்களுண்டாம்படி பண்ணிவைத்தது. [எல்லீரும் இத்யாதி] - எல்லாரும் இருந்ததே குடியாக மோக்ஷத்தைப் பெற்றால், லீலைக்கு அடியான ஶாஸ்த்ரம் நிரர்த்தகமாய்விடும். ஸத்கர்மத்தைப் பண்ணுவாரும் அஸத்கர்மத்தைப் பண்ணுவாருமாயிறே நாடுதான் இருப்பது; பாபம்பண்ணினவர்களும் புண்யம்பண்ணினவர்களுடைய பலத்தை யநுபவிக்கு மன்று, “புண்ய: புண்யேந கர்மணா பாப: பாபேந” (புண்ய:புண்யேநகர்மணா - பாப:பாபேந) என்கிற ஶாஸ்த்ரமர்யாதை குலையு

---

ஆறும்பாட்டு - போற்றி இத்யாதி. 'எல்லீரும் வீடுபெற்றால்உலகில்லை' என்றதிலே நோக்காக அவதாரிகை - பகவத்பரத்வம் இத்யாதி. பாட்டெல்லாம் கடாக்ஷித்து உக்தவிவரணம் - எம்பெருமானே இத்யாதி. 'மாயம்' என்றத்தைப் பற்ற, வஞ்சநத்தை என்றது.

நான் பகவத்விஷயத்தில் இதி - போற்றியென்றே கைகளாரத் தொழுது நான் பகவத்விஷயத்திலே செய்யுமதென்றபடி. 'மற்றோர் தெய்வம் - போற்றி - பேணப்புறத்திட்டு' என்று அந்வயிப்பது; வேறொரு தேவதையை ஸ்தோத்ரம்பண்ணி ஆதரிக்கும்படியாகத் தனக்குப் புறம்பாக்கி யென்று சப்தார்த்தம். ஒரு தெய்வமென்னாதே, 'மற்றோர் தெய்வம்' என்று இவர்களைத் தனியே ஸ்வதந்த்ரராக்கிச் சொல்லுகிறதென்? என்ன,—அவர்கள் தங்களை ஸ்வதந்த்ரமாக அபிமாநித்துக் கொண்டிருக்கையாலே யென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - யேப்யந்ய இத்யாதி. “யெவ்யந்யதெவதாஹக்தா: யஜந்தெ ஶ்ரத்தயாந்விதா:। தெவி மாமெவ கௌந்தெய யஜந்த்யவிதிபூர்வகம்॥” இதி கீதாஸு நவமே. பேண - தத்ததுத்கர்ஷஸாதநார்த்த மித்யர்த்த:. ததுபபாதயதி - அவைதனக்கென்ன இத்யாதி. தனக்கு - ஸர்வஶரீரியான தனக்கு. 'இப்படியே தெளியும்படி பண்ணி' என்றத்தை விவரிக்கிறார் - ந பிபேதி இத்யாதி. 'எல்லீரும்' என்ற சேதநர்க்கு உண்டான பரஸ்பர வைஷம்யத்தைக் காட்டுகிறார் - ஸத்கர்மத்தை இத்யாதி. 'வீடுபெற்றால்உலகில்லை' என்றதுக்கு அர்த்தம் - பாபம் பண்ணினவர்களும் இத்யாதி. ஆகையாலே, பாபம்பண்ணினவர்கள் அதின்பலத்தை யநுபவிக்கவும் என்று கூட்டுவது. ஸதெந - தெவதாஹஜநஸ்யாஹம் ஸம்ஸாராஜத்யாகம் ஹவதி. 'உலகு' என்றால் - சாஸ்த்ரவாசியாமோ? என்ன, அதோஸ்மி இத்யாதி. “யதாகாரீ யதாசாரீ ததா பவதி ஸாதுகாரீ ஸாதுர்பவதி பாபகாரீ பாபோ பவதி புண்ய: புண்யேந கர்மணா பவதி பாப: பாபேந” இத்யாதி ப்ருஹதாரண்யகே.

மேன்கை. பாபம்பண்ணினவர்கள் அதின்பலத்தை அநுபவிக்கவும், புண்யம்பண்ணினுர் அதின் பலத்தை அநுபவிக்கவு மாகிற ஶாஸ்தரமர்யாதை குலையாதபடியாக. ' அதோஸ்மிலோகேவேதேச ப்ரதிதஃபுருஷோத்தமஃ" (அதோஸ்மிலோகேவேதேசப்ரதிதஃபுருஷோத்தமஃ)என்கிறவிடத்தில், லோகஶப்தத்தால் - ப்ரமாணத்தைச் சொல்லிற்றென்று கொண்டவோபாதி, இங்கும் லோகஶப்தம் - ஶாஸ்த்ரத்தைச் சொல்லுகிறது. [சேற்றில் இத்யாதி] - அவ்வூரிலே பதார்த்தங்களில் ஒன்றி லொன்று குறைந்திருப்பதில்லையாயிற்று. "உரம்பெற்றமலர்க்கமலம்" இத்யாதிபோலே. அவ்வூரில் பதார்த்தங்களுள்ளவையடைய ஒன்றுக்கொன்று இசலி வளராநிற்கும். [ஆற்றவல்லவன்] - மிகவும் வல்லவன். அதிஶயிதஶக்திகன். ஸம்பந்தமொத்திருக்கச்செய்தே, புண்யம் பண்ணினுர் அதின்பலம் அநுபவிக்கவும் பாபம்பண்ணினுர் அதின்பலம் அநுபவிக்கவும் பண்ண வல்லவன். [மாயங்கண்டீர்] - "மமமாயாதுரத்யயா" (மமமாயாதுரத்யயா) என்கிறபடியே தான் அசற்ற நினைத்தாரைத் தன்பக்கல் வந்துகிட்டாதபடி ப்ரக்ருதியையிட்டு வஞ்சித்துவைத்த படி கிடிகோள். [அது அறிந்து] - இது அவனுடைய மாயமென்னுமத்தை அறிந்து. [அறிந்தோடுமினே] - "மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாந்தரந்திதே" (மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாந்தரந்திதே) என்கிறபடியே, மாயாதரணோபாயமான ப்ரபத்தியையும் தானே அருளிச் செய்துவைத்தான்; அத்தையறிந்து, அவ்வழியாலே அவனைப்பற்றித் தப்பப் பாருங்கோள் இந்த மாயையை. இது அவன் செய்துவைத்ததான பின்பு, அவனைவெல்லவேண்டில் அவனோடு பிரிய நின்று வெல்லப்பாராதே அவனையே காறகட்டி இத்தைத்தப்பப் பாருங்கோள். (சு)

---

"யஸ்மாத்க்ஷரமதீதோஹம் அக்ஷராதபிசோத்தமஃ | அதோஸ்மிலோகேவேதேசப்ரதிதஃ புருஷோத்தமஃ" இதி கீதாஸு பஞ்சதஶே. "லோக்யதேநேநேதி லோகஃ - ஶாஸ்த்ரமிதி பாவஃ. உலகில்லையென்றே - சாஸ்த்ரமர்யாதை குலையு மென்று மிருக்கும். செந்நெலுங் கமலமும் நுங்குகையாலே குறைந்திருப்பதில்லை யாயிற்று என்றது இதுக்கு ஸம்வாதம் - உரம்பெற்ற இத்யாதி. உரம்பெற்ற - சேற்றுவாய்ப்பாலே உரம்பெற்றிருக்கிற, மலர்க்கமலம் - தாமரைப்பூவானது, உலகளந்த சேவடிபோல் - திருவுலகளந்தபோது மேலெடுத்த சிவந்த திருவடிபோலே, உயர்ந்து காட்ட - கிளர்ந்து வளர்ந்து ப்ரகாசித்துநிற்க; அப்போது தேவர்கள் முதலானவர்கள் திரண்டு காலேபிடித்துத் தலையைவணங்கித் தெண்டனிட்டுக் கிடந்தாற்போலே, வரம்புற்ற - வரம்பிலே சேர்ந்துவளர்ந்து நிற்கிற, கதிர்ச்செந்நெல் - செந்நெல் கதிர்களானவை, தாள்சாய்த்து - தாள்களை சீட்டி, தலைவணங்கும் - தலையைவணக்கும் சிறப்பையும், தண்ணரங்கமே-ஸர்வர்க்கும் தாபஹரமான குளிர்த்தியையுமுடைய திருவரங்கமே இத்யர்த்தம். பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து மரவடியில் எட்டாம்பாட்டு, 'உரம்பற்றி' இத்யாதி. தாத்பர்யம், அவ்வூரில் இத்யாதி. இசலி - ஸ்பர்தித்து. சேற்றுநிலத்திற்செந்நெலும் கமலமும் இசலி வளர்கைக்கு [illegible] இதி ஶப்தார்த்தஃ. 'செந்நெல்' "இத்யாதவத்ர [illegible] இதி", 'ஓங்கும்' இத்யத்ர - "[illegible] நிரதிஶயோஜ்ஜ்வல்யம் [illegible] இதி பாவஃ". அதிஶயிதஶக்திமத்தையைக் காட்டுகிறது - ஸம்பந்தம் இத்யாதி. "ஸவிஶேஷம் [illegible]" மாமேவ இத்யாதி. அறிந்து - மாயாதரணோபாயமறிந்து என்று இரண்டாம் அறிந்துக்கு அர்த்தம். அவனைப்பற்றி - இந்த மாயையைத் தப்பப்பாருங்கோள் என்று அந்வயிப்பது. 'ஆற்றவல்லவன்' இத்யாதிக்கு பாவம் - இது அவன் இத்யாதி. மாயங்கண்டீர் - ப்ரக்ருதிஸம்பந்தம் கிடிகோள். ப்ரக்ருதியையிட்டு வஞ்சித்தபடி கிடிகோ ளென்றபடி. ஓடுமினே - தப்பப்பாருங்கோள். க்ரமேண அந்வயஃ. (சு)

# ஏழாம் பாட்டு.

ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து மற்றோர்தெய்வம்
பாடியாடிப்பணிந்து பல்படிகால்வழியேறிக்கண்டீர்
கூடிவானவரேத்தநின்ற திருக்குருகூரதனுள்
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக்கு அடிமைபுகுவதுவே.

*ஆ.*—(ஓடியோடி.) தேவதாந்தரத்தை ஆஶ்ரயித்தால் மோக்ஷாதி ப்ரயோஜநங்கள் ஸித்தியாதோ? என்னில் ;—'இவ்வளவும் வர இவ்வநாதிகாலமெல்லாம் தேவதாந்தரத்தை ஆஶ்ரயித்து என்னப்ரயோஜநம்பெற்றீர் ? ஆனபின்பு, இந்த தேவதாந்தரங்களை விட்டு, பொலிந்து நின்றபிரான் திருவடிகளை ஆஶ்ரயிப்பது' என்கிறார்.

*ஒ.*— ஏழாம்பாட்டில், 'அபிலஷித புருஷார்த்தங்களுக்காக தேவதாந்தரங்களை ஆஶ்ரயித்தாலோ?' என்னில்,—'நெடுங்காலம் அவர்களை ஆஶ்ரயித்துப்பெற்ற பலமிறே இனி ஆஶ்ரயித்தாலும் பெறுவது ; ஆனபின்பு, அவற்றைவிட்டுப் பொலிந்துநின்றபிரானை ஸமாஶ்ரயியுங்கோள்' என்கிறார்.

[ஓடி என்று தொடங்கி] - இனி ஆராய வேண்டாதபடி கர்மாநுகுணமாகப் போய்ப் போய் பலபிறவிகளும் பிறந்து தேவதாந்தரங்களை ஸாதரமாக ஆஶ்ரயித்து அநேகபர்யாயம் அவை தரும் புருஷார்த்தங்களையும் பெற்று அப்புருஷார்த்தம் இருக்கும்படியும் அறிந்தீகோள். [கூடி வானவர் என்று தொடங்கி] - 'ஆகில், செய்ய அடுப்பது என்?' என்னில்,—நீங்கள் ஈஶ்வரர்களாக பாங்கிக்கிற தேவதைகளெல்லாம் ஏககண்டராய் ஆஶ்ரயிக்கும்படி திருநகரியிலே நின்றருளின ஸர்வேஶ்வரமேஷைத்வாநுஸந்தாந ஜநித ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே ஆடாநின்றுள்ள பெரிய திருவடியை ரக்ஷகத்வக்யாபநத்வஜமாகவுடைய ஜகத்காரணமான ஸர்வேஶ்வரனுக்கு அடிமை புகுங்கோள்.

*ப.*—அநந்தரம், நீங்கள் இதற்குமுன்பு ஆஶ்ரயித்துப்பெற்ற பலமிறே இனி ஆஶ்ரயித்தாலும் பெறுவது ; ஆனபின்பு, பரத்வசிஹ்நமான கருடத்வஜத்தையுடைய ஸர்வகாரண பூதனுக்கு அடிமைபுகுங்கோள் என்கிறார்.

மற்றுஓர் தெய்வம் - வேறே சொல்லப்பற்றுதவொரு தேவதையை, பாடியாடி - (ப்ரீதிப்ரேரிதராய்க் கொண்டு) பாடுவது ஆடுவதாய், பணிந்து - வணங்கி, பல்படிகால் - பலப்ரகாரத்தாலும், வழி - (ஆஶ்ரயிக்கச்சொல்லுகிற)ஶாஸ்த்ரமார்க்கத்தாலே, ஏறி - மேன்மேலும் ஆஶ்ரயித்து, ஓடியோடி - (அத்யல்பமான கர்ப்பநரகங்களிலே) ஓடி, பலபிறப்பும்பிறந்து - பலவகையாகப்பிறந்து, கண்டீர் - அபேக்ஷித்துக் கண்டீர் ; (ஆனபின்பு), வானவர் - (நீங்கள் ஆஶ்ரயிக்கிற) தேவர்களெல்லாரும், கூடி - கூடி, ஏத்த - (தங்களாபந்நிவ்ருத்யாதிகளுக்காக) ஸ்தோத்ரம்பண்ணி ஆஶ்ரயிக்கும்படி, திருக்குருகூரதனுள் - திருநகரியிலே, நின்ற - நிற்குமவனாய், ஆடு - (பகவதநுபவப்ரீதியாலே) ஆடிவருகிற, புள் - பெரியதிருவடியை, கொடி - (பரத்வப்ரகாஶகமான) கொடியாகவுடையனாய், ஆதி மூர்த்திக்கு - ஸர்வகாரணபூதனான ஸர்வேஶ்வரனுக்கு, அடிமைபுகுவது - அடிமைபுகுங்கோள். புகுவதென்றது - புகுகவென்றாய், விதியாயிருக்கிறது.

*இ.*—ஏழாம்பாட்டில், 'நெடுநாள் பச்சையிட்டுப் போந்த நாங்கள் இட்ட பச்சை வ்யர்த்தமாகாதபடி அபிலஷிதபுருஷார்த்தங்களுக்காக இன்னம் சிலநாள் ஆஶ்ரயித்தாலோ ?' என்

னில்,—'முன்பு ஆஶ்ரயித்துப் பெற்றதிறே இனி ஆஶ்ரயித்தாரும் பெறுவது: ஆனபின்பு, பொலிந்துநின்றபிரானை ஆஶ்ரயியுங்கோள்' என்கிறார்.

[ஓடி ஓடி] - "கதாகதம் காமகாமா லபந்தே" என்கிறபடியே கர்மாநுகூலமாகத் தட்டித்திரிந்த இத்தனையிறே. [பல்பிறப்பும் பிறந்து] - ஸகல யோநிகளிலும் அஸங்க்யாதமான ஜந்மங்களைப்பண்ணி. ஆத்மா நித்யன், காலம் அநாதி, இடைவிடாமல் பிறந்து போந்த இதில் பலித்ததிறே இனி பலிப்பது. தங்களுடைய ஜந்மபரம்பரைகளடைய இவர்வாயாலே கேட்கவேண்டும்படியிறே இவர்களுக்கு அவிஶதமாயிருக்கிறபடி. [மற்றுஓர் தெய்வம்] - ஈஶ்வரனை யொழியுமித்தனையே வேண்டுவது; ஆரேனுமாக அமையும். [பாடியாடிப்பணிந்து] - ஆஶ்ரயணத்தில் குறையாலே பலியாதிருக்கிற தன்று; அதில் குறையில்லை. ப்ரீதிப்ரேரிதராய்ச் சொல்லி அவ்வளவில் பர்யவஸியாதே விக்ருதராய் "ரோதிஷ்யந்தி" என்று பகவத்விஷயத்தில் அவகாஹிக்குமளவு உள்புக்கு. [பல்படிகால்] - ஒருபடியிலே ஆஶ்ரயித்துவிட்டிகோளோ? [வழியேறிக் கண்டீர்] - அத்தேவதைகளை ஆஶ்ரயிக்கச் சொல்லுகிற ஶாஸ்த்ரமர்யாதை தப்பாமல் ஆஶ்ரயித்து அதன் பலமும் கண்டிகோளன்றோ? [கூடி இத்யாதி]-'ஆகில், செய்ய அடுப்பதென்?' என்ன,—'நீங்கள் உகந்திருக்கிற தேவதைகள் ஆபத்துவந்தவாறே அந்யோந்யம் ஶாத்ரவங்கள் செல்லாநிற்க, ஏககண்டராய் ஆஶ்ரயிக்கிற திருநகரியிலே. தலையை அறுப்பாரும், தலை யறுப்புண்பாருமாயிறே ஶாத்ரவங்கள் இருப்பது. உங்களைக் கும்பீடுகொள்ளுகிறவர்கள் செய்கிறத்தைக் கண்டாகிலும் ஆஶ்ரயிக்கப் பாருங்கோள். [ஆடுபுள் கொடி] - மோக்ஷத்வாநுஸந்தாநத்தால் வந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே ஆடாநின்ற பெரியதிருவடியை ரக்ஷகத்வக்யாபநத்வஜமாக வுடையவன். ஆஶ்ரிதரக்ஷணத்துக்குக் கொடிகட்டி ரக்ஷிக்குமவனென்கை. கருடவாஹநத்வம், பரத்வலக்ஷணமிறே. [ஆதிமூர்த்திக்கு] - "காரணந்து த்யேய:" என்கிறபடியே ஜகத்காரணவஸ்துவிறே உபாஸ்யமாவது. [அடிமைபுகுவதுவே] - அவனுக்கு அடிமைபுகப் பாருங்கோள். செய்யவேண்டுவது ஒன்றில்லை. "பாடியாடிப் பணிந்து" என்கிறதெல்லாம் வேண்டா. ஸர்வரக்ஷகனுய் ஸர்வஜ்ஞனுய் ஸர்வாந்தர்யாமியான அவனுடைமையை அவனுக்காக இசைய அமையும். 'பல்படிகால்வழியேறிக் கண்டீர் அடிமை புகுவதுவே' என்று விதிக்கிறார்.

ஈடு.—ஏழாம்பாட்டு. 'அது செய்கிறோம், இதரதேவதைகளுக்கும் சில உத்கர்ஷமுண்டு' என்று நெடுநாள் அவற்றுக்குப் பச்சையிட்டுப் போந்தோம்; அப்பச்சை வெறுமனாகாமே இன்னம் சிலநாள் அவை பலிக்கும்படி கண்டு பின்னை பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணுகிறோம்' என்ன, 'அவையும் எல்லாம் செய்து கண்டிகோளிறே; இனி அமையும் காணுங்கோள்' என்கிறார்.

[ஓடியோடி இத்யாதி] - "கதாகதம் காமகாமா லபந்தே" (கதாகதம் காமகாமா

---

ஏழாம்பாட்டு - ஓடியோடி இத்யாதி. 'மற்றோர்தெய்வம் பாடியாடிப்பணிந்து பல்படிகால்வழியேறி ஓடியோடி - கண்டீர்; அடிமைபுகுவதுவே' என்றதுக்கு அநுகுணமாக ப்ரஶ்நப்ரதிவசநரூபேண அவதாரிகை - அதுசெய்கிறோம் இத்யாதி.

'ஓடியோடி' என்கிற வீப்ஸைக்கு அர்த்தம் - கதாகதம் இத்யாதி. "தே தம் புக்த்வா ஸ்வர்கலோகம் விஶாலம் க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி। ஏவம் த்ரயீதர்மமநுப்ரபந்நா கதாகதம் காமகாமா லபந்தே" இதி கீதாஸு நவமே. ஓடியோடி - திரிந்துதிரிந்து; 'ஓடியோடி' என்கிற பதத்வயமும் - கமநாகமநபரம். அதாவது - பலாநுபவார்த்தமாகப் போவது, ஜந்மபரிக்ரஹார்த்தமாக வருவதாய்த் திரிந்துதிரிந்து என்றபடி. 'ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து' என்றது - ஸாமாந்யமாய் ஸ்வர்க்கநரக ஸாதாரணமாயிருக்க, "கதாகதம் காமகாமா லபந்தே" என்கிற ப்ரமாணத்தில், கீழே "திவ்யாந்திவி தேவ போகாந்" என்று ஸ்வர்க்கத்துக்கு ஏகாந்தமாயிருக்க, அந்தக்ரந்தம் இங்கு ஸாதாரணத்திலே ப்ரமாணம்

லபந்தே)என்கிறபடியே, போவது, ஜந்மங்களோடே வருவதாய்த் திரிந்ததித்தனையிறே. [பல பிறப்பும்பிறந்து] - ஆத்மா நித்யன்; அசித்தும் அப்படியே; அசித்ஸம்ஸர்க்கமும் நித்யமாய், கர்ம ப்ரவாஹத்தாலே ஜந்மபரம்பரையும் உருவப்போருகிறது; நீங்கள் முன்னும் பின்னும் அறியாம லிறே 'இது ஒரு ஜந்மமே யுண்டாயிற்று' என்று இருக்கிறது. [மற்றுஓர் இத்யாதி] - இப்படி அநாதியாய்ப் போருகிற ஜந்ம பரம்பரைகளில் ஒரு ஜந்ம மொழியாமல் இதர தேவதாஸமாஶ்ரயணம் பண்ணிப்போந்திகோள். அதுசெய்கிற விடத்தில் த்ரிவித கரணங்க ளாலும் செய்தும். ஆஶ்ரயணத்தில் குறையால் பலியாதிருந்ததன்று, அதில் குறையில்லை. ப்ரீதிப்ரேரிதராய்ச் சொல்லி, அவ்வளவில் பர்யவஸியாதே விக்ருதராய். "மாம்நமஸ்குரு" (மாம்நமஸ்குரு) என்று பகவத் விஷயத்தில் அவகாஹிக்குமளவும் உட்புகுந்து. [பல்படி கால்] - ஒருபடியாஶ்ரயித்துவிட்டிகோளோ? அநேகம் ப்ரகாரங்களாய் ஆஶ்ரயித்து. [வழி யேறிக்கண்டீர்] - அத்தேவதைகளை ஆஶ்ரயிக்கச்சொன்ன ஶாஸ்த்ரமர்யாதை தப்பாமல் ஆஶ்ரயி த்து அதன்பலமும் கண்டிகோளன்றே? 'பல்படிகால் வழியேறிக்கண்டீர்' என்கைக்கு, 'இவர்கள் ஒரு ஜந்மத்திலும் பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணிற்றிலர்கள்' என்று அறிந்தபடி எங்ஙனே இவர்? என்னில்; - இப்போது தாம் இவ்வர்த்தம் உபதேசிக்க வேண்டும்படி இவர்களிருக்கக் காண்கை யாலே, 'இதுக்குமுன்பு பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணிற்றிலர்கள்' என்று அறியத் தட்டில்லையிறே; "மோக்ஷமிச்சஜ்ஜநார்த்தநாத்" (மோக்ஷமிச்சேஜ்ஜநார்த்தநாத்) என்கிறபடியே பகவத்ஸமா ஶ்ரயணம் பண்ணினார்களாகில் முக்தராவர்களிறே. இதரதேவதாஸமாஶ்ரயணம் பண்ணு கையாலே இவ்வளவும்வர ஸம்ஸரித்துப்போந்திகோள். "ப்ரஹ்மாணம் ஶிதிகண்டஞ்ச" (ப்ரஹ்மாணம் ஶிதிகண்டஞ்ச)இத்யாதி, "ப்ரதிபுத்தாநஸேவந்தே"(ப்ரதிபுத்தாநஸேவந்தே).

எப்படியாம்? என்ன, ப்ரகரணபலத்தாலே, இங்கும் ஸ்வர்க்கபலத்திலே தானே ஒதுக்கிக்கொள்ளவேணும். அது எப்படியென்ன, 'மற்றோர்தெய்வம் பாடியாடிப்பணிந்து பல்படிகால்வழியேறி' என்று தேவதாந்தரஸமாஶ்ர யணமும் பண்ணி தத்பலமும் கண்டிகோ ளென்கையாலே, இது ஸ்வர்க்கபோக்தாவுக்கொழியக் கூடாதிறே; காம்யே இதி காமா: - ஸம்ஸாரிணோமதா:, தேஷு காம: ஜ்யாயேஷாஞ்சே காமகோமா:. சமநாகமநபரமான 'ஓடியோடி' என்கிற பதத்வயோபபாதகம் - கதாகதம் இத்யாதி. ஜந்மங்களோடேவருவதாய்- ஜந்மபரிக்ரஹார்த்தமாக வருவதாய். இப்போது ஒருபிறவி பிறந்திருக்க, பலபிறவியுண்டோ? என்ன, ஆத்மா இத்யாதி. பலபிறப்பும்பிறந்து - ஸகலயோநிகளிலும் அஸங்க்யாதமாக ஜந்மங்களைப்பண்ணி. மற்றோர்தெய்வம் ஈஶ்வரவ்யதிரிக்தத்வ மாத்ரமே அபேக்ஷிதம்; விஷயநியமமில்லை யென்றபடி. 'பிறந்து' என்கிற ல்யப்பினாலே - ஜந்மங்களுக்கு தேவதாந்தர ஸமாஶ்ரயணஶேஷத்வம் ஸூச்யதே; ததாஹ-இப்படி அநாதியாய் இத்யாதி. 'பாடி யாடிப்பணிந்து' என்கையாலே 'த்ரிவிதகரணங்களாலும் செய்தும்' என்றது. 'பணிந்து' என்கிற இது-மாநஸ வ்யாபாரத்தைக் காட்டுகிறது. கரணத்ரயவ்யாபாரத்தையும் சொன்னதுக்குத் தாத்பர்யம் - ஆஶ்ரயணத்தில் இத்யாதி. சப்தார்த்தம் - ப்ரீதிப்ரேரிதராய் இத்யாதி. இந்தப் பக்ஷத்தில், 'ஆடி, பணிந்து' என்கிற இரண்டும் காயிகத்தைக் காட்டிற்றாகில் - "உந:ஶ்ரேஷ்டவாமந்தர:" என்கிற கணக்கிலே, மாநஸவ்யாபாரமும் தன்னடையே ஸித்திக்கும். படி - ப்ரகாரம். பல்படிகால் - பலப்ரகாரங்களால். ப்ரகாரங்களாவன - தர்ப்பண ஜப ஹோம ப்ராஹ்மணபோஜநாதிகள். வழியேறி - ஶாஸ்த்ரமார்க்கத்திலே நின்று ஆஶ்ரயித்து. கண்டீர் - அதன்பலமும் கண்டிகோள். தடஸ்த்தஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் - பல்படிகால் இத்யாதி. 'பலஜந்மங்களிலும் இதரதேவதைகளைப்பணிந்து அதன்பலமும் கண்டீர்' என்றபோதே ஒருஜந்மத்திலும் பக வத்ஸமாஶ்ரயணம் பண்ணவில்லை என்றபடியாயிற்றே யென்று ஶங்காதாத்பர்யம். பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணி னால் உபதேசிக்கவேண்டும்படியிராதே முக்தராவர்களோ? என்ன, மோக்ஷமிச்சேத் இத்யாதி. "ஆரோக்யம் பாஸ்கராதிச்சேத் [illegible] ஶங்கராதிச்சேத் மோக்ஷமிச்சேஜ்ஜநார்த்த நாத்" இதி ப்ரஹ்மாண்டபுராணே. விபர்யயே பர்யவஸாநம் ப்ரகாரணநுகுண்யேந தர்ஶயதி - இதரதேவதா இத்யாதி. 'தேவதாந்தரபஜநம் ஸம்ஸாரஹேது' என்னுமதுக்கு ப்ரமாணம் - ப்ரஹ்மாணம் இத்யாதி.

'மோக்ஷபலம் ஸித்திக்கவேணும்' என்றிருக்கிறவர்கள் க்ஷுத்ர தேவதைகளைப் பின்செல்லார்களிறே; அதுக்குஅடி - அவை தரவல்லது அநித்யபலங்களாகையாலே. "ஸ்கந்தருத்ரமஹேந்த்ராத்யாঃ ப்ரதிஷித்தாஸ்துபூஜநே" (ஸ்கந்தருத்ரமஹேந்த்ராத்யாঃ ப்ரதிஷித்தாஸ்துபூஜநே) என்றதிறே. "த்வயாபிப்ராப்தம்"(த்வயாபிப்ராப்தம்)இத்யாதி-ஒருவன் பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணு நிற்கச்செய்தே,'இவன்ஸமாதி நின்றநிலை அறியவேணும்'என்று பார்த்து ஸர்வேஶ்வரன் இந்த்ரவேஷபரிக்ரஹம்பண்ணி ஐராவதத்திலே ஏறிவந்து முன்னேநின்று, 'உனக்கு வேண்டுவதேன்?' என்ன, 'ஒருபுழுவும் தானுமாய் வந்து நிற்கிறவன் ஆர்'? 'என்றான்; 'ஸர்வேஶ்வரன் பெரிய திருவடியை மேற்கொண்டு வந்தான்' என்னுமிடம் அறியானிறே, கொண்டேந்த வேஷம் இதுவாகையாலே; அவனைப்பார்த்து, 'நீ யாவனொருவனை ஆஶ்ரயித்து இந்த ஐஶ்வர்யமுடையப் பெற்றாய், அப்படிப் பட்டவனைக் காண் நான் ஆஶ்ரயிக்கிறது; இப்படி வழி போவார்க்கெல்லாம் பச்சையிட்டுத் திரியுமவனல்லேன்காண்; இப்போது முகங்காட்டாதே போகவல்லையே பிரானே! உன்னைக் கும்பிடுகிறேன்' என்றானிறே. பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணி ஜ்ஞாநாதிகரா யிருப்பா ரொருவர் இருந்து தம்முடைய வஸ்த்ரத்தைப் புரையா நின்றாராய், அவ்வளவிலே தேவனும் தேவியுமாகப் போகா நிற்க அநாதரித்திருந்தாராய், தேவியானவள், 'நீர் ஸர்வாதிகரா யிருக்க, உம்மைக்கண்ட விடத்தில் இவன் அநாதரித்துக் காலைநீட்டிக்கொண்டிருந்தானே' என்ன, 'அவன் பகவத்பக்தன்போலே காண்' என்ன, 'அதுதான் இருக்கிறபடி அறிவோம்' என்று இருவரும் இவர்பக்கலிலே வந்து, 'நீ என்? தேவர்களை மநுஷ்யர்கள் கண்டால் அநுவர்த்தித்து வேண்டும் வரங்களும் வேண்டிக் கொள்ளக் கடவர்களா யிருப்பர்கள்; நீ நம்மைக் கண்டவிடத்தில் நீட்டின காலை முடக்குதல், சில உபசாரங்களைப் பண்ணுதல், சிலவற்றை வேண்டிக்கொள்ளுதல் செய்யாதே யிருந்தாய்' என்ன, 'அழகிது! அவை யெல்லாம் செய்யக்கடவேன், மோக்ஷம் தரலாமோ?' என்ன, 'அது நம்மாலே செய்யலாமதன்று; பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணி அவன் ப்ரஸாதத்தாலே பெறவேணும்' என்ன, 'ஆகில், இன்று சாவாரை நாளைச் சாவப்பண்ணலாமோ'? என்ன, 'அதுவும் கர்மாநுகுணமாயிறே யிருப்பது; நம்மால் செய்யப்போகாது' என்ன, 'ஆகில், நீ செய்யுமது, ஸூசி போனவழியே நூலும்போம்படி அநுக்ரஹித்து நடக்குமித்தனை' என்ன, தேவனும் கோபத்தாலே நெற்றியிற்கண்ணைக்காட்ட, இவரும் காலிலே அநேகங்கண்ணை உண்டாக்கிக் காட்டினார். [கூடி இத்யாதி] - நீங்கள் ஆஶ்ரயிக்கிற தேவதைகள் இவ்வளவும் உங்களைக் கூட்டிக்கொண்டு, ஒருத்தனைபோதுபோய் அங்கே ஆஶ்ரயியா நிற்பர்கள். அவர்கள் செய்கிறவற்றைக் கண்டாகிலும் நீங்க

---

"ப்ரஹ்மாணம் ஶிதிகண்஠ஞ்ச யாஶ்சாந்யா தேவதாঃ ஸ்ம்ருதாঃ। ப்ரதிபுத்தா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம்" இதி நாராயணீயே. "ஸ்கந்தருத்ரமஹேந்த்ராத்யாঃ ப்ரதிஷித்தாஸ்து பூஜநே। ஆத்யதேவம் ஹரிம் ஹித்வா ஸாக்ஷான்மோக்ஷப்ரதம் விபும்", "ப்ரதிபுத்தா ந ஸேவந்தே முமுக்ஷவঃ" என்கையாலே, ப்ரதிபுத்தராகிறார் - மோக்ஷாதிகாரிகள்; அத்தை அருளிச்செய்கிறார் - மோக்ஷபலம் இத்யாதி. "யஸ்மாத்பரிமிதம் பலம்" என்றதுக்கு அர்த்தம் - அதுக்கடி இத்யாதி. இதரதேவதாஸமாஶ்ரயணம் பரிமிதபலப்ரதமாகையேயன்றிக்கே நிஷித்தமுமென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - ஸ்கந்த இத்யாதி. புராணவிஹிதம் இதம் ப்ரமாணம். 'முமுக்ஷுக்கள் இதரதேவதைகளை பஜியார்கள்' என்றதுக்கு அநுஷ்டாநங்களைக் காட்டுகிறார் - த்வயாபி இத்யாதி. "த்வயாபி ப்ராப்தமைஶ்வர்யம் யேநைவாராதிதேந வை। ஸோऽபி த்வயாபி ப்ராப்தவ்யஸ் தஸ்மாத் தோஷய தம் ப்ரபும்" இதி வைஷ்ணவே தர்மே. ஒருவன் - அம்பரீஷன். புழு - ஐராவதம். ஒருவர் - திருமழிசைப்பிரான். புரையாநின்றாராய் - தையா நின்றாராய். தேவனும் தேவியும் - ருத்ரனும் பார்வதியும். இவரும் - ஆழ்வாரும். அக்ஷபாதராகையாலே யென்றபடி. தாத்பர்யம் - நீங்கள் இத்யாதி. 'கூடி' என்று விசேஷிக்கையாலே - பரஸ்பரவிரோதமுண்டென்னுமத்தையும், இப்படி விரோதமுண்டா

ளும் அவனை யாஶ்ரயிக்கப் பாருங்கோள்; தலையறுப்பாரும் அறுப்புண்பாருமாய், க்ராமணிகளைப் போலே ஒருவரை யொருவர் வேரோடே அலம்பிப்போகடவேண்டும்படியான விரோதம் செல்லா நிற்கச்செய்தேயும், ஆபத்து எல்லார்க்கு மொத்திருக்கையாலே எல்லாரும் ஒரு மிடறாய் ஆஶ்ரயிப்பர்கள். பரஸ்பரவிரோதமுங் கிடக்கச்செய்தே 'ஊராகக் கூடிவந்தது' என்பார்களிறே. [ஆடுபுட்கோடி] - வெற்றிப்புட்கோடி. ஆடு - வெற்றி. வெற்றிப்புள்ளைக் கொடியாக வுடையவன். 'ஸர்வேஶ்வரவாஹநம்' என்கிற ஹர்ஷப்ரகர்ஷத்தாலே மதித்து ஆடாநின்ற புள் என்றுமாம். ஆஶ்ரிதவிரோதி நிரஸநத்துக்கு ஸர்வேஶ்வரனுக்குச் செய்யவேண்டுவதில்லை; திருவடி திருத்தோளிலே சலியாமல் இருக்குமத்தனையே வேண்டுவது. 'கருடத்வஜன், கருடவாஹநன்' என்று சொல்லப்படுமவனுயிற்று மோக்ஷப்ரதனுவான். [ஆதிமூர்த்திக்கு] - "**காரணம் து த்யேய:**" (காரணந்துத்யேய:) என்கிறபடியே. ஜகத்காரணவஸ்துவேயிறே உபாஸ்யமாவது மோக்ஷப்ரதனுமாய் ஸர்வநியந்தாவுமான ஸர்வேஶ்வரனுக்கு. [அடிமை புகுவதுவே] - அடிமைபுகுமதுவே கர்த்தவ்யம். உங்களுக்குச் செய்யவேண்டுவ தொன்றில்லை; அவனுடைமையை அவனுக்காக இசைய அமையும். அவன் இத்தை 'என்னுடைமை' என்றிருக்க, நீங்களும் 'என்னுடைமை' என்றிராதே 'அவனது' என்று இசைய அமையும். அடிமை புகுவது என்கிற இடம் - விதியாய், கண்டீரேன்கிற இடம் - அதுவும் செய்து பார்த்திகோளிறே; இனி இவன் திருவடிகளிலே அடிமைபுகப் பாருங்கோ ளென்கிறார். யயாதிசரித்தை பட்டர் வாசித்துப்போந்திருக்கச் செய்தே, பிள்ளைவிழுப்பரையரும் ஆப்பான்திருவழுந்தூரரையருங் கூட 'வேதோபப்ரும்ஹணார்த்தமாக ப்ரவ்ருத்தமான ப்ரபந்தங்களில் இது எவ்வர்த்தத்தை விஶதீகரிக்கிறது ?' என்று கேட்க, 'க்ஷுத்ரதேவதைகள் தந்தாமை ஆஶ்ரயித்துப் பெற்றலும் பிறர்பக்கலிலே ஓர் உத்கர்ஷம் கண்டால் அது பொறுக்கமாட்டார்க ளென்றும், ஸர்வேஶ்வரனே 'பிறர்வாழ்வு நம் வாழ்வு' என்று நினைத்திருப்பானென்றும் சொல்லி, ஆனபின்பு, இதரதேவதைகள் ஆஶ்ரயணீயரன்று, இவனொருவனுமே ஆஶ்ரயணீய னென்னு மர்த்தத்தைச் சொல்லுகிறது' என்று அருளிச் செய்தார். '**ஊளஸ்ம**' (இமௌஸ்ம) என்று தாழ நிற்கவல்லான் இவனேயிறே. 'யாதவர்கள் முடிவிலே வந்தவாறே வாட்கோரையை யிட்டு ஒருவரை யொருவர்

*யிருக்கக் கூடுகைக்கு ஹேதுவையும் ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்* - **தலையறுப்பாரும்** இத்யாதி. *எல்லாமானுலும், பரஸ்பரவிரோதமாயிருக்க, கூடும்படி யெப்படி? என்ன,* **பரஸ்பர** இத்யாதி. 'ஆடுபுட்கொடி' என்று *விஶேஷித்ததுக்கு பாவம்* - **ஆஶ்ரித** இத்யாதி. 'அடிமை புகுவதுவே' என்றதுக்கு அநுகுணமாக விசேஷண *கர்ப்பிதம் ஹேத்வாவமாஹ* - **கருடத்வஜன்** இத்யாதி. *காரணத்வகதநத்துக்கு* **பலிதம்** - **காரணந்து** இத்யாதி. 'ஆடுபுட்கொடி, கூடிவானவரேத்தநின்ற' *என்கிற விசேஷணங்களாலே பலித்த குணங்களை அருளிச்செய்கிறார்*- **மோக்ஷப்ரதனுமாய்** இத்யாதி. **ஆதிமூர்த்திக்கு** - *காரணபூதனை ஸர்வேஶ்வரனுக்கு.* 'அடிமை' இத்யாதிக்கு *அர்த்தம்* - **அடிமைபுகுமதுவே கர்த்தவ்யம்** *என்று.* **கர்த்தவ்யமென்று** *அத்யாஹார்யம். ஏவகாரவ்யவச்சேத்ய விசேஷம் தர்ஶயதி* - **உங்களுக்கு** இத்யாதி. *'பாடியாடிப்பணிந்து'* இத்யாதிகள் வேண்டாவென்று கருத்து. *அவனுடைமை யென்றதுக்கு* - 'ஆதிமூர்த்தி' *இத்யத்ர ஹ்ருதயம்.* **தத்விஶதயதி** - **அவன் இத்தை** இத்யாதி. 'அடிமைபுகுவதுவே' என்றதும், 'கண்டீர்' என்றதும் அந்வயிக்கிறபடி யெங்ஙனே? என்ன, **அடிமைபுகுவது என்கிறவிடம்** *இத்யாதி. மோக்ஷப்ரதத்வம் அவர்களுக்கில்லையேயாகிலும், ஸ்வர்க்காதி புருஷார்த்தப்ரதத்வமாகிற* **அதிசயமுண்டே** *யென்ன, அவர்கள் ஸ்வாஶ்ரிதர்பக்கல் அஸூயாளுக்களாகையாலே அவ்வழியாலும் அவர்களுக்கு உத்கர்ஷமில்லை யென்னுமத்தை ஆப்தஸம்வாதத்தாலே காட்டுகிறார்* - **யயாதி** இத்யாதி. **ஆஶ்ரிதர்** *வாழ்வை தனக்கு வாழ்வாகக் கொண்டு நினைத்திருக்குமோ? என்ன, அவ்வளவேயன்று, அவர்களை* **உத்க்ருஷ்டராக்கித்** *தன்னைத் தாழநினைக்கு மென்கிறார்* - **இமௌஸ்ம** இத்யாதி "ஊளஸ்ம [illegible]

**ஸ** [illegible] | **[illegible]** " இதி பாலகாண்டே விஶ்வாமித்ரம்ப்ரதி [illegible]. *'இதரதேவதாஸமாஶ்ரயணம் பண்ணிக் கண்டிகோளே, பலமில்லை' என்று சொன்னீர்; பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணினார்க்கும் பலத்தில் தட்டுப்பிறந்ததே யென்று சங்கித்துப் பரிஹரிக்கிறார்* - **யாதவர்கள்** இத்யாதி. **முடிவிலே** - *அவஸாநத்திலே.* **வாட்கோரை**-*கத்திக்கோரை.* *க்ரமேண அந்வய:.*

எறிந்து முடிந்துபோனார்கள்' என்று கேட்டவாறே, 'க்ருஷ்ணன் இவர்கள் விஷயமாக ஶங்கநிதி பத்மநிதி தொடக்கமானவற்றைக் கொடுவந்து கொடுத்துச் செய்யாதனவில்லை; பின்னையும் முடிவிலே வந்தவாறே இப்படியேயாயிருந்தது; 'நம்முடைய பகவத்ஸமாஶ்ரயணத்துக்கும் பலம் அங்ஙனேயாகிறதோ? என்று அஞ்சியிருந்தோம்' என்ன, 'அங்ஙனாகாது; அஞ்சவேண்டா; அவர்கள், 'இவன் என்தோழன், மைத்துனன்' என்று தேஹ ஸம்பந்தத்தைக்கொண்டு விரும்புகையாலே அவர்களுக்கு தேஹாவதியாய் விட்டது; நாம் ஸ்வரூபஜ்ஞாநத்தாலே, நித்யனான ஆத்மாவுக்கு வகுத்த பேறு பெறவேணும் என்று பற்றுகையாலே பேறும் யாவதாத்மபாவியா யிருக்கும்' என்று அருளிச்செய்தார். (எ)

## எட்டாம் பாட்டு.

புக்கடிமையினால்தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை
நக்கபிரானுமன்றுய்யக்கொண்டது நாராயணனருளே!
கொக்கலர்தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள்
மிக்கவாதிப்பிரான்நிற்க *மற்றைத்தெய்வம்விளம்புதிரே.

**ஆ.**—(புக்கடிமையினால்.) ருத்ரனை யாஶ்ரயித்தன்றோ மார்க்கண்டேயன் ஸ்வாபிலஷிதம்பெற்றது என்னில்,—அவனும் ஸ்வாபிலஷிதம்பெற்றது நாராயணனுடைய ப்ரஸாதத்தாலே; அவ்விடத்தில் ருத்ரன் புருஷகாரமாத்ரமே; ஆதலால், இப்படி ஸர்வேஶ்வரனான நாராயணனையொழிய மற்றென்ன தைவத்தைக் கொண்டாடுகிறீர்? என்கிறார்.

**ஒ.**—எட்டாம்பாட்டில், 'மார்க்கண்டேய பகவான் ருத்ரனை ஆராதித்து ஸ்வப்ரார்த்திதத்தைப் பெற்றிலனோ?' என்னில்,—'அவ்விடத்தில் ருத்ரன் புருஷகாரமாத்ரமே. அவனுடைய ப்ரார்த்திதம் கொடுத்தருளினான் எம்பெருமானே' என்கிறார்.

[புக்கடிமையினால் தன்னைக்கண்ட]- அடிமையாலே புக்குத் தன்னைக்கண்ட. [அருளே]- ப்ரஸாதத்தாலே. [கொக்கலர் என்று மேலுக்கு] - கொக்கின் நிறம்போலே யிருக்கிற பூக்களையுடைய பெரிய தாழைகளை வேலியாகவுடைய திருநகரியில் தன்னுடைய ஐஶ்வர்யாதிகளால் ஸம்ருத்தனான ஜகத்காரணமான ஈஶ்வரன் நிற்க, மற்று என்ன தேவதைகளைப் பேசுகிறீர்கோள்?

**ப.**—அநந்தரம், மார்க்கண்டேயனுக்கு ருத்ரன் பலப்ரதனாயிற்றும் ஈஶ்வரனருளாலே யென்று, 'இதரதேவதைகளுக்கும் பலப்ரதாநசக்த்யாதாயகன் அவனே' என்றுமிடத்தை உதாஹரணநிஷ்டமாக்கி அருளிச்செய்கிறார்.

அடிமையினால் - சேஷவ்ருத்திமுகத்தாலே, புக்கு - உட்புக்கு, தன்னை - (ஆஶ்ரயணீயனான) தன்னை, கண்ட - அபரோக்ஷித்துக்கண்ட, மார்க்கண்டேயன் - மார்க்கண்டேயனென்று, அவனை - புராணப்ரஸித்தனானவனை, நக்கன் - திகம்பரனாகையாலே நக்நனென்று பேராய், பிரானும் - (ஆஶ்ரிதருக்கு ம்ருத்யுவைஜயித்து நித்யத்வத்தைக் கொடுத்த) உபகாரகனானானும், அன்று - ப்ரளயதசையிலே, உய்யக்கொண்டது - பிழைப்பித்து பகவத்பரனாக்கி உஜ்ஜீவிப்பித்தது, நாராயணன் - (அந்தராத்மபூதனான) நாராயணன், அருளே - (அவனுக்குப்பலப்ரதனாம்படி தன்னைப்பண்ணிவைத்த) க்ருபையாலேயாயிருக்கும்; (ஆதலால்), கொக்கு-கொக்கின் நிறம்போலே,

* 'மற்றெத்தெய்வம்' என்றும் பாடம்.

அலர் - அலருகிற பூவையுடைய, தடம் - பெரிய, தாழை - தாழைகளை, வேலி - வேலியாக வுடைய, திருக்குருகூர் அதனுள் - திருநகரிக்குள்ளேநிற்கிற, மிக்க-ஸர்வாதிகனாய், ஆதி - நிரபேக்ஷ காரணபூதனான, பிரான் - மஹோபகாரகன், நிற்க-நிற்க, எ மற்று தெய்வம் - வேறு தத்ஸாபேக்ஷமான எத்தை தைவமாக, விளம்புதிர் - சொல்லுகிறிகோள் ?

இ.—எட்டாம்பாட்டில், 'மார்க்கண்டேயன் ருத்ரனை ஆச்ரயித்து ஸ்வாபேக்ஷிதம் பெற்றிலனோ?' என்ன, 'அது இருந்தபடியைக் கேட்கலாகாதோ?' என்கிறார்.

[புக்கடிமையினால்] - அடிமையினால்புக்கு ; வகுத்தசேஷிபக்கல் செய்யுமத்தை ருத்ரன்பக்கலிலே செய்தான். இத்தால், ஆச்ரயணத்தில் குறையாய் இழந்தானல்ல னென்கை. [தன்னைக் கண்ட] - ஆச்ரயணீயனைக் காணப்பெறுமையாலே இழந்தானுமல்லன்; [மார்க்கண்டேயனவனை]- மார்க்கண்டேயனானவனை. [நக்கபிரான்] - நக்கன் - நக்நன். பிரான் என்று ஸ்வகோஷ்டியில் ப்ரஸித்தி. [அன்று உய்யக் கொண்டது] - மார்க்கண்டேயனானவனை ஆபத்தசையிலே ரக்ஷித்தது. [நாராயணனருளே] - ஸர்வஸ்வாமியான அவன் ப்ரஸாதத்தாலே யென்று த்ருதியையாதல் ; இவன் புருஷகாரமாக அவன் ப்ரஸாதத்தைப் பண்ணிக்கொடுத்து என்று த்விதீயையாதல்; 'நாராயணன்' என்கையாலே, அவனுக்கு சேஷமாமிடத்தில் உன்னோடு என்னோடு ஒருவாசியில்லை யென்று அவன் திருவடிகளிலே காட்டிக்கொடுத்தா னென்கை. [கொக்கலர் இத்யாதி] - கொக்குப்போலே வெளுத்த நிறத்தையுடைய பூக்களை யுடைத்தான பெரியதாழைகளை வேலியாகவுடைய திருநகரி. நிலத்து இயல்பு இருக்கிறபடி. [அதனுள் மிக்க ஆதிப் பிரான் நிற்க] - ஸர்வாதிகனாய் ஜகத் காரண பூதனானவன் திருநகரியிலே ஸுலபனாய் நிற்க. [மிக்க] - ஆச்ரயணகாலத்தில் ஆச்ரயிப்பித்துக்கொண்டு ஃபலவேளையிலே வேறொருவன் வாசலிலே கொடுபோகவேண்டும்படி குறைவாளனன்றிக்கேயிருக்கை. [மற்றைத் தெய்வம்] நாமங்களிலே ஒன்றை ஈச்வரனென்று பற்றவோ ? ப்ரகாரமாய்க் கொண்டல்லது வஸ்துத்வமில்லாதவற்றை ப்ரகாரியாக ப்ரமிக்கிறிகோளிறே. [விளம்புதிரே] - இவனையொழிய வ்யவஹார யோக்யமாயிருப்பது ஒன்றில்லை யென்று இருக்கிறார்.

ஈடு.—எட்டாம் பாட்டு. இங்ஙனே யிருக்கச்செய்தேயும், இதரதேவதாஸமாச்ரயணம் பண்ணியன்றோ மார்க்கண்டேயாதிகள் ஸ்வாபிலஷிதம்பெற்றது என்ன,—ஆகில் அது இருந்தபடியைக் கேட்கலாகாதோ ? என்கிறார்.

[புக்க அடிமையினால்] - அடிமையினால் புக்கு. 'ஸர்வேச்வரனுக்கு அடிமை' என்று புக்கானல்லன்; 'ருத்ரனுக்கு அடிமை' என்று புக்கானாயிற்று. [தன்னைக்கண்ட] - காணப்பெறுமையாலே தான் இழந்தானல்லன் ; [புக்க இத்யாதி] - ஆச்ரயணக்குறையா லிழந்ததல்ல; காணப்பெறுமையால் இழந்ததல்ல. [மார்க்கண்டேயனவனை] - மார்க்கண்டேயனானவனை. [நக்கபிரான்] - நக்கனென்றது - நக்நனென்றபடி. ஸ்வகோஷ்டிக்கு உபகாரகனா யிருக்கையாலேயாதல்,

---

எட்டாம்பாட்டு - புக்கடிமையினால் இத்யாதி. பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - இங்ஙனேயிருக்கச்செய்தேயும் இத்யாதி. இங்ஙனே யிருக்கச்செய்தேயு மென்றது - இதரதேவதைகள் ஸம்ஸாரவர்த்தகராய், 'ஸர்வேச்வரன் மோக்ஷப்ரதன்' என்று ப்ரஸித்தியுண்டாயிருக்கச்செய்தேயு மென்றபடி.

'புக்கடிமையினால் தன்னைக்கண்ட' என்றிருக்கையாலே அருளிச்செய்கிறார் - ஸர்வேச்வரனுக்கு இத்யாதி. ஸர்வேச்வரனுக்கு - ப்ராப்தவிஷயத்துக்கு என்றபடி. 'தனக்கு - அடிமையினால் - புக்கு - தன்னைக்கண்ட' என்று அந்வயிப்பது. தன்னை - ருத்ரனை. இரண்டு பதத்தையுங் கூட்டி அர்த்தம் - ஆச்ரயண இத்யாதி. மார்க்கண்டேயனவனை - மார்க்கண்டேயனான அவனை. ஜ்ஞாநப்ரதத்வத்தை யென்றது - மார்க்கண்டேயவிஷயத்திலே யென்றபடி. "ஜ்ஞாநமிச்சேத் மஹேச்வராத்" என்று - ஜ்ஞாநப்ரதத்வமுண்டிறே அவ

ஜ்ஞாநப்ரதத்வத்தைப் பற்றவாதல் - பிரானேன்கிறது. மேல் நாராயணனேன்கையாலே - 'அவனுக்கு மோக்ஷமாமிடத்தில் உன்னோடு என்னோடு வாசியில்லை' என்று அவன்திருவடிகளிலே காட்டிக்கோடுத்தா னேன்கை. [அன்று உய்யக்கோண்டது] - ஆபத்தசையிலே ரக்ஷித்தது. [நாராயணனருளே] - 'நீ நெடுநாள் பச்சையிட்டு ஆஶ்ரயித்தாய்; அவ்வாஶ்ரயணம் வெறுமன் போயிற்றதாக வொண்ணாது'' என்று அவனையழைத்து, 'நானும் உன்னோபாதி ஒருவனை ஆஶ்ரயித்துக்காண் இப்பதம் பெற்றது. இனி ஊண்கோடுத்தல், உபதேசங்கோடுத்தலிறே' அவனைக் கோண்டுபோய் ஸர்வேஶ்வரன் பக்கலிலே காட்டிக்கோடுத்தானாயிற்று. அருளேன்கிறவிடம் - எல்லாவிபத்தியிலும் ஒட்டலாயிருக்கையாலே, அருளாலே யேன்னுதல்; அவன் இவனை ரக்ஷித்துக்கோண்டது ஸர்வேஶ்வரன் ப்ரஸாதத்தைப் பண்ணிக்கோடுத் தேன்னுதல். [கோக்கலர் இத்யாதி] - கோக்குப்போலே வெளுத்த நிறத்தையுடைய அலரையுடைத்தா யிருப்பதாய்ப் பெருந்திருந்துள்ள தாழைகளை வேலியாக வுடைத்தாயிருந்துள்ள திருநகரியாயிற்று. நிலத்தியல்பு இருக்கிறபடி. [மிக்கஆதிப்பிரான்நிற்க] - ஸர்வாதிகனாய் ஜகத்காரணபூதனானவன் நிற்க. [மிக்க] - சோல்லும்போது கனக்கச் சோல்லி, கிட்டினவாறே குறைந்திரா தொழிகை. நெடுநாள் ஆஶ்ரயிப்பித்துக்கோண்டு, பின்பு கார்யகாலத்திலே வந்தவாறே வேறே யோருவன் வாசலேறக் கோண்டுபோக வேண்டாதிருக்கை. [மற்றைத் தெய்வம் விளம்புதிரே] - ப்ரகாரங்களிலே ஒன்றை ஈஶ்வரனாகச் சோல்லுகிறிகோளே; அவனுக்கு ப்ரகாரமாயல்லது ஒன்றுக்கும் வஸ்துத்வ மின்றிக்கே யிருக்க, ப்ரகாரியாகச் சோல்லி அநர்த்தப்படுகிறிகோளே கேடுவிகாள்! [விளம்புதிரே] - 'வ்யவஹரிக்கைக்கும் யோக்யதை யில்லை' என்று இருக்கிறாராயிற்று இவர். (அ)

னுக்கும். 'அன்றுய்யக்கொண்டது' என்று அவ்வாபத்திலே உஜ்ஜீவிப்பித்தது தானேயோ? என்ன, (மேல் நாராயணன் இத்யாதி. அதாவது - அவனுடைய திருவடிகளைக் காட்டி உஜ்ஜீவிப்பித்தா னென்றபடி. [illegible], நாராயண சப்தார்த்தம் - தத்புருஷ ஸித்தமான சேஷித்வம். வாசியில்லையென்று ஜ்ஞாநோபதேசத்தைப்பண்ணி யென்று கூட்டி நிர்வஹிப்பது. நாராயணனருளை உபதேச முகத்தாலே அவனுக்குப் பண்ணிக்கொடுத்த ப்ர காரத்தை விஶதமாக அருளிச்செய்கிறார் - நீ நெடுநாள் இத்யாதி. (வெறுமன் - வ்ருதாவாக. [illegible] து' என்ற அநந்தரம், 'ஆகையாலே இனி உன்னுடைய அபீஷ்டம் நம்மால் செய்து தரக்கடவது' என்று கூட்டி, அநந்தரம் - இனி ஊண் கொடுத்தல் இத்யாத்யநுஸந்திப்பது. 'உபதேசங்கொடுத்தலிறே' [illegible] தரம்' 'என்று' என்று கூட்டுவது. ஊண்கொடுத்தல் உபதேசங்கொடுத்தலாவது - [illegible] ஒருவன் பசியாளனாய்வந்து 'எனக்கு க்ஷுத்பாதை யாற்றவேணும்' என்றால், [illegible] விடில் 'இன்னாரகத்தே பசியாளர்க்கு இடுவார்; அங்கே போ' என்று சொல்லுதல் செய்வார்கள்; [illegible] லுகிறது. ஒட்டலாய் - கூட்டலாய். த்விதீயார்த்தத்தில், அருளைப் பண்ணிக்கொடுத் தென்றபடி. [illegible] ப்ருஹத்வஹேதும் தர்ஶயதி - நிலத்தியல்பு இருக்கிறபடி என்று. இயல்பு - [illegible]. '[illegible]' என்று காரணத்வஞ் சொன்னபோதே - ஸர்வாதிகத்வம் ஸித்தமாயிருக்க, 'மிக்க' என்று [illegible] ஹாவம் - சோல்லும்போது இத்யாதி. அப்படி குறைந்திருக்க [illegible]' என்ன, (நெடுநாள் இத் யாதி. கீழ்ச்சொன்ன நாராயணபத ஸித்தமான பகவத்வ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்[illegible] அநுஸந்தித்து, 'விளம்புதிரே' என்கிற க்ஷேபோக்திக்கு ஸாவம் - ப்ரகாரங்களிலே இத்யாதி. [illegible] - அவனுக்கு இத்யாதி. ப்ரகாரியாக- அந்ய தேவதையை ப்ரகாரியாக. 'விளம்புதிரே!' என்ற [illegible] ஸாவம் - வ்யவஹரிக்கைக்கும் இத்யாதி. விளம்புதல் - சொல்லுதல். 'மற்றைத்தெய்வம்' என்று [illegible]போது - மற்றெத்தையாகிலு மொன்றைத் தெய்வமாக வென்று சப்தார்த்தம். அடிமையினால் - புக்கு - தன்னை யென்று தொடங்கி, நாராயணனருளே; ஆகையாலே, கொக்கலர்தடமென்று தொடங்கி, விளம்புதிரே இத்யந்வயம். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

விளம்பும்ஆறுசமயமும் அவையாகியும்மற்றும்தன்பால்
அளந்துகாண்டற்கரியனாகிய ஆதிப்பிரானமரும்
வளங்கொள்தண்பணைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை
உளங்கொள்ஞானத்துவைம்மின் உம்மைஉய்யக்கொண்டுபோகுறிலே.

**ஆ.**—(விளம்பும்.) க்ஷுத்ரதைவங்களை விட்டு, வேதபாஹ்யகுத்ருஷ்டி ப்ரப்ருதி ஸமஸ்த துஸ்தர்க்க துரபஹ்நவ ஸ்வரூப ரூபகுண விபூதிகனான பரமபுருஷன் எழுந்தருளியிருக்கிற திருநகரியை ஆச்ரயியுங்கோள், உஜ்ஜீவிக்க வேண்டியிருந்திகோளாகில் என்கிறார்.

**ஒ.**—ஒன்பதாம்பாட்டில், வேதபாஹ்யரும் குத்ருஷ்டிகளும் பண்ணும் துஸ்தர்க்கங்களால் அழிக்கவொண்ணாத ஐச்வர்யத்தை யுடைய எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற திருநகரியை ஆச்ரயியுங்கோள், பிழைக்கவேண்டியிருந்திகோளாகில் என்கிறார்.

[விளம்பும் ஆறு சமயமும்] - இப்பாட்டுக்கெல்லாம் பேச்சுப் போக்கி உள்ளீடின்றிக்கே யிருக்கிற பாஹ்யஸமயங்களாறும் விழுக்காட்டில் அவற்றோடு ஒத்திருக்கிற மற்றுள்ள குத்ருஷ்டிகளாலும் அவிசால்யமான ஸ்வரூபரூபகுண விபூதிகளையுடைய ஸர்வேச்வரன் நிரந்தர வாஸம் பண்ணுகிற வளவிதான நீர்நிலத்தையுடைத்தாய் அதிரமணீயமான திருநகரியை மாநஸஜ்ஞாந விஷயமாக்குங்கோள் ; உங்களை நீங்கள் பிழைப்பித்துக்கொண்டுபோகவேண்டில்.

**ப.**—அநந்தரம், இதர துரவபோயன் வர்த்திக்கிற திருநகரியை உங்களுக்கு உஜ்ஜீவநார்த்தமாக அநுஸந்தியுங்கோள் என்கிறார்.

விளம்பும் - (தர்க்ககோலாஹலத்தாலே) சப்தமாத்ரஸாரமாயிருக்கிற, ஆறு சமயமும்- (சார்வாக சாக்ய க்ஷபணக வைசேஷிக ஸாங்க்ய பாசுபத ரூபமான) ஆறு பாஹ்யஸமயமும், மற்றும் - மற்றுமுள்ள குத்ருஷ்டிவர்க்கமும், அவையாகியும் - ஸபையாகத்திரண்டாலும், தன்பால்- (அபரிச்சிந்நஸ்வபாவனான) தன்விஷயத்தில், அளந்து - (நிஷேத்யதயாவும்) பரிச்சேதித்து, காண்டற்கு - காண்கைக்கு, அரியனாகிய - அரிதான ஸ்வபாவத்தையுடைய, ஆதிப்பிரான் - ஸர்வ காரணபூதனான மஹோபகாரகன், அமரும் - பொருந்தி வர்த்திக்கும் தேசமாய், வளம்கொள் - தர்சநீயமாய், தண் - சரமஹரமான, பணை - நீர்நிலங்களாலே, சூழ்ந்து - சூழப்பட்டு, அழகாய- நிரதிசயபோக்யமான, திருக்குருகூரதனை - திருநகரியை, (நீங்கள்), உம்மை - உங்களை, உய்யக்கொண்டு - உஜ்ஜீவிப்பித்துக்கொண்டு, போகுறில் - நடக்கவேண்டியிருந்தீர்களாகில், உளம்கொள் ஞானத்து - உங்கள் மாநஸஜ்ஞாநத்துக்குள்ளே, வைம்மின் - வையுங்கோள்.

**இ.**—ஒன்பதாம் பாட்டில், உங்களுடைய உஜ்ஜீவநத்துக்கு அவனளவும் செல்ல வேணுமோ? அவன் வர்த்திக்கிற திருநகரியை உங்கள் ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்க அமையாதோ? என்கிறார்.

[விளம்பும் ஆறு சமயமும்] - பேச்சே போக்கி உள்ளீடான அர்த்த மொன்று மின்றிக்கே யிருக்கிற பாஹ்யஸமயங்கள் ஆறும். ப்ரமாணாநுகுணமன்றிக்கே சுஷ்கதர்க்கங்களாகையாலே யுக்திஸாரமேயாயிருக்கை. [அவைபாகியும் மற்றும்] - மற்றும் அவற்றோடு ஒத்த குத்ருஷ்டிகளும். "தமோநிஷ்டாஹிதா ஸ்ம்ருதா:." [தன்பால் அளந்துகாண்டற்கு அரியனாகிய] - தன்பக்கல் வந்தால் அவர்கள் இல்லை யென்கைக்கும் இவ்வளவென்று பரிச்சேதிக்கவும் ஒண்ணாதபடி

